**பல்லடம் மாதவாச்சார்**

**என்னும்**

**ஸ்ரீபத்மனாப தாசரின்,**

**பாவபிரகாசிகை**

**(ஸ்ரீஜகன்னாத்தாசரின் ஸ்ரீஹரிகதாம்ருதசாரத்தின் உரை)**

**தமிழில் மொழிபெயர்த்தவர்:**

**‘ஜகன்னாத கேசவ’ சத்ய நாராயணன்**

**8904458276. sathyatv123@gmail.com**

**jagannathakesava.blogspot.com**

## ஸ்ரீஹரிகதாம்ருதசார - பாவபிரகசிகா வியாக்யானம்
## ஓர் அறிமுகம்

**By**

## ‘ஸ்ரீகர கேசவ’ - குரோம்பேட்டை R.ஸ்ரீதரன்

**தா[3]சவர்யம் த[3]யாயுக்த[1]ம் து[3]ரீக்ருத[1] து[3]ராஷிஷம்**
**ஹரிகதாம்ருத வக்தா[1]ரம் ஜகன்னாத கு[3]ரும்ப[4]ஜே ।**

ஸ்ரீப்யாகவடி ஜகன்னததாசர் தாச ஸ்ரேஷ்டர். அவர் 1727CEயிலிருந்து 1809CE வரை வாழ்ந்த மகானுபாவர். ஸ்ரீவிஜயதாசர், ஸ்ரீகோபாலதாசர் இவர்களால் அருளப்பட்டவர். கன்னட தாச சாகித்யத்தின் மேரு கிருதியான ஸ்ரீஹரிகதாம்ருதசாரம் என்கிற 988 பாமினி ஷட்பதி பத்யங்களைக் கொண்ட 32 சந்திகளையுடைய கிரந்தத்தை இயற்றியவர். அந்த நூல் தத்வவாத சித்தாந்தத்தின் பிரமேயங்களை உள்ளடக்கிய ஒரு கலைக் களஞ்சியம் ஆகும். It is Theological Compendium of TattvaVaada. அந்த நூலை விரிவுரை இல்லாமல் படித்து, புரிந்து கொள்ள முடியாது.

இதற்கு இரண்டு நூற்றாண்டுகளாக பல விளக்கவுரைகள் சம்ஸ்கிருதத்திலும், கன்னடத்திலும் வேறு மொழிகளிலும் வந்துள்ளன. அதில் ஒன்றுதான் ஸ்ரீபத்மனாப தாசர், ’ஸ்ரீபத்மனாப விட்டல’ அங்கிதர், உரை நடையில் எழுதிய விரிவுரை. 1965ம் ஆண்டு, என் குருநாதர், ஸ்ரீ குப்பம் கிருஷ்ணகிரி ராகவேந்திர ஆச்சார், இரண்டு தொகுதிகள் உள்ள நூலை எனக்குக் கொடுத்துப் படிக்கச் சொன்னார். நான் படித்த முதல் விளக்கவுரை இதுவே. இப்போது 55 ஆண்டுகள் ஓடிவிட்டன.

தற்போது, என் நண்பர் மற்றும் ஹரிதாசர் ஆகிய ‘ஸ்ரீஜகன்னாத கேசவ’ சத்ய நாராயணன், இந்த கோர கொரோனா வியாதி காலத்தில், ஐந்தே மாதங்களில் அதை கன்னடத்திலிருந்து தமிழில் மொழிபெயர்த்து, ஈ-புக் (ebook), 27-08-2020 அன்று வரும் ஸ்ரீஜகன்னாததாசர் ஆராதனையை முன்னிட்டு வெளியிடலாம் என்று உத்தேசித்துள்ளார். என்னை ஓர் அறிமுகம் எழுதக் கேட்டுக் கொண்டார்.

இந்த மொழிபெயர்ப்பினை, ஸ்ரீஹரிகதாம்ருதசார கிரந்த விற்பன்னர், ஸ்ரீமுரளிதர தாசர் படித்துப் பார்த்து, சரி செய்துக் கொடுத்துள்ளார். அவர் இதில் ஒரு 'Authority' ஆகையால், நான் அவரின் நகலை ஆமோதிக்கிறேன். தமிழில் ஏற்கனவே திருமதி. அஞ்ஜனா பாய், திருமதி. ரேணுகா குருராஜன், திருமதி. சரஸ்வதி ஸ்ரீபதி, திருமலை திருப்பதி தாச சாகித்ய திட்டம் ஆகிய அனைவரும் விரிவுரை வெளியிட்டுள்ளார்கள். ஆனால், இந்த பத்பனாப தாசரின் விளக்கத்தில் அனைத்தும் எளிமையாக, இனிமையாக விளக்கப்பட்டுள்ளது.

இது ஈ-புக்கக இருப்பதால் அனைவரும் விலையில்லாமல் படிக்கமுடியும் என்று என் நண்பர் கூறுகிறார். இதற்காக அவர் பட்ட இன்னல்க்ள் எனக்குத் தெரியும். என்னுடைய முக்கியக் குறிக்கோளே, எல்லா மாத்வ சாஸ்திர நூல்களும் அடுத்த தலைமுறைக்கு, atleast e-bookஆகவாவது கிடைக்க வேண்டும் என்பதே.

இந்த பத்மனாப தாசர், தமிழ் நாட்டைச் சேர்ந்தவரே. பல்லடம் பகுதியைச் சேர்ந்தவர். ஏதோ ஒரு காரணத்தால், வாழ்க்கையில் வெறுப்பு ஏற்பட்டு, சன்யாசி ஆகிவிட்டார். பின்பு, மனம் மாறி, கிருகஸ்தராக மாறினார். ஆனால், அது பெரும் பாவம் என்ற சிந்தனை அவர் மனதை உறுத்தியது. அதற்கு என்ன பரிகாரம் செய்யலாம் என்றபொழுது, ஸ்ரீவிஜயதாசர் பரம்பரையைச் சேர்ந்த 'ஸ்ரீதந்தெமுத்து மோகனவிட்டலதாசர்' (பரமப்ரிய சுப்பராய தாசர்) என்பவர் - நீ ஹரிகதாம்ருத சாரத்திற்கு வியாக்யானம் எழுதுக என்று சொல்லி, அவருக்கு 'ஸ்ரீபத்மனாப விட்டலா' என்கிற அங்கிதத்தைக் கொடுத்தார். அதன்படி அவர் 32 சந்திகளுக்கும் மற்றும் பலஸ்ருதி சந்திக்கும் வியாக்யானம் எழுதினார். அதன் பலன், அவருக்கு பாவம் நீங்கி அபரோக்ஷம் கிடைத்தது.

ப[4]வ ஜனித துக்கக[3]ள களெவுது[3] - என்பதற்கு ஸ்ரீபத்மனாப தாசரின் ஜீவனமே நிதர்சனம். எல்லோரும் இந்த வியாக்யானத்தைப் படித்து, ஸ்ரீஹரிவாயுகுருகளின் அருளுக்குப் பாத்திரர்கள் ஆகவேண்டும் என்று பிரார்த்திக்கிறேன்.

ஸ்ரீகிருஷ்ணார்ப்பணமஸ்து.

**'ஹரிதாச பாதபாம்ஸு'**
**குரோம்பேட்டை R. ஸ்ரீதரன்**
**'ஸ்ரீகர கேசவ'**

சென்னை 600044
20-08-2020
சார்வரி பாத்ரபத சுத்த பிரதமை
வியாழக்கிழமை

# மொழிபெயர்ப்பாளர் உரை

ஜலஜேஷ்ட நிபா³காரம் ஜகதீ³ஷ ப¹தாஸ்ரயம்
ஜகதீ¹த¹ல விக்2யாத¹ம் ஜகன்னாத கு³ரும்ப⁴ஜே ।

இந்த மொழிபெயர்ப்பினை செய்யவேண்டும் என்று பல நாட்களாக நினைத்திருந்தாலும், 2020 ஜனவரியில் பர்யாய சமயத்தில் உடுப்பியில் ஸ்ரீகிருஷ்ண தரிசனம் செய்தபோது, இதனை உடனடியாக செய்து முடிக்க வேண்டும் என்று அவனின் ப்ரேரணை வந்தது. விசேஷம் என்னவெனில் அன்றே (18-01-2020), ஸ்ரீஜகன்னாததாசருக்கு ஆயுள் தானம் வழங்கிய மகானுபாவர் ஸ்ரீகோபாலதாசரின் புண்ய தினம்.

அன்றிலிருந்து துவங்கி, இதே ஆண்டு ஸ்ரீஜகன்னாததாசரின் புண்ய தினத்திற்குள் முடிக்க வேண்டும் என்று சங்கல்பம் செய்து, தினம் சில பத்யங்களாக https://hks-bhavaprakashike.blogspot.in ல் வெளியிட்டு வந்தேன். மார்ச் மாத இறுதியில் வந்த Lockdownல் உதவியால், ஒரு நாளில் மேலும் பல மணி நேரங்கள் இதற்காக ஒதுக்க முடிந்தது.

இப்படியாக ஸ்ரீஜகன்னாததாசரின் புண்ய தினத்திற்குள் (27-08-2020) முடிக்க வேண்டும் என்று நினைத்து துவக்கிய இந்த மொழிபெயர்ப்பு, ஸ்ரீஜகன்னாததாசரின் சிஷ்யரான ஸ்ரீதவிட்டலரின் புண்ய தினத்தன்றே (01-07-2020) முடிந்தது என்பது, ஸ்ரீகிருஷ்ணனின் செயலேயன்றி வேறில்லை.

இரு முறை நம் குருவிடமிருந்து ஹரிகதாம்ருதசாரம் பாடம் ஆகியிருந்தாலும், ஸ்ரீபத்மனாப தாசரின் உரையினை மொழிபெயர்ப்பது சுலபமாக இருக்கவில்லை. அருகில் சம்ஸ்கிருத அகராதி, கன்னட அகராதி மற்றும் அவ்வப்போது நம் குருவிடமும் சந்தேகங்களைக் கேட்டுக்கொண்டு இதனை எழுதி முடித்தேன்.

கன்னட உரையை படித்து, தமிழில் மொழிபெயர்த்து, சரிபார்த்து, இறுதி வடிவத்தைக் கொண்டு வருவதற்கு 500+ மணி நேரங்கள் ஆகியிருக்கின்றன. இவ்வளவு நேரம் பகவந்தனின் சிந்தனையில் என்னை இருக்கச் செய்ததற்கு அந்த ஜகன்னாத விட்டலனுக்கே நன்றி சொல்ல வேண்டும். இதையே புத்தகமாக அச்சிடலாம் என்றால், அதற்குத் தேவைப்படும் பணம் என் சக்திக்கு மீறியதாக இருப்பதால், முதலில் PDF வரட்டும். பின்னர் பகவந்தனின் பிரேரணை இருந்தால் புத்தகமாக வரட்டும் என்று தீர்மானித்தோம்.

இந்த கன்னட உரையை எழுதிய ஸ்ரீபத்மனாப தாசர், தமிழகத்தைச் சேர்ந்தவர் (பல்லடம்) என்பதில் நமக்கு கூடுதல் மகிழ்ச்சி. இதில் மற்றொரு உரையாளரான, தமிழ்நாட்டில் வசித்து பிருந்தாவனஸ்தரான, ஸ்ரீசங்கர்ஷண ஒடெயரு அவர்களின் உரையையும் தாசர் அங்கங்கே மேற்கோள் காட்டியிருப்பதில் மேலும் மகிழ்ச்சி.

எனக்கு ஹரிகதாம்ருதசார பாடம் எடுத்த நம் குருகளான ஜாம்பவதிப்ரியவிட்டல தாசர் (திரு.ஹரதி பிரகலாதாசார், பெங்களூரு), இதனை எழுத ஊக்குவித்த திரு. குரோம்பேட்டை ஸ்ரீதரன் அவர்கள், திருமதி. நிர்மலா நரசிம்மன் அவர்கள் ஆகியோருக்கு எனது சிரம் தாழ்ந்த வணக்கங்கள். இந்த மொழிபெயர்ப்பை முழுவதுமாக படித்து, பிழைகளைக் களைய உதவிய ஸ்ரீமுரளிதர தாசருக்கு அனந்தானந்த நன்றிகள்.

இந்த தமிழ் மொழிபெயர்ப்பில் சொற்பிழை, பொருட்பிழை ஏதேனும் இருந்தால், தயவு செய்து எனக்கு சொல்லவும்.

குருவந்தர்கத பாரதிரமண முக்யபிராணாந்தர்கத ஸ்ரீஜகன்னாத கேசவ ப்ரீயதாம். ஸ்ரீகிருஷ்ணார்ப்பணமஸ்து. நாஹம் கர்தா ஹரி: கர்தா.

**‘ஜகன்னாத கேசவ’ சத்ய நாராயணன்**

**8904458276 haridasa.vijayam@gmail.com**

**jagannaathakesava.blogspot.com**

**19-08-2020**

**பெங்களூரு**

## கெரெய நீரனு கெரகெ செல்லி

## ஒரு வேண்டுகோள்

**இந்த ஈ-புத்தகம் உங்களுக்குப் பயன்படுமானால், இதன் பின்னால் இருக்கும் 500+ மணி நேர உழைப்பிற்கு ஏதேனும் உதவி செய்ய விரும்பினால்,**

*** எங்கள் இதர புத்தகங்களை வாங்கிப் படிக்கலாம்.**

*** நவராத்திரி சமயத்தில் இந்த புத்தகங்களை வாங்கி, தாம்பூலத்தில் வைத்து அளிக்கலாம்.**

*** அதிக ஆஸ்வீஜ மாதத்தில் 33 புத்தகங்களை வாங்கி தானம் செய்து, சிறந்த பலன்களைப் பெறலாம்.**

*** ஹரிதாச விஜயம் தமிழ் மாத இதழுக்கு subscribe செய்து படிக்கலாம்.**

*** உங்கள் பங்காக 5 பேர் subscribersஐ சேர்த்து விடலாம்.**

*** அல்லது இயன்ற அளவு பொருளுதவியாகவும் செய்யலாம்.**

**நீங்கள் செய்யும் உதவிகள் மறுபடி வேறு புதிய புத்தகங்களாக, ஈ-புத்தகங்களாக நமது தமிழ் மாத்வ மக்களுக்குப் பயன்படுமாறு திரும்பி வரும்.**

**நாஹம் கர்தா ஹரி: கர்தா**

**ஹரே ஸ்ரீநிவாஸா!!**

**'ஜகன்னாத கேசவ' சத்ய நாராயணன்**
**89044 58276 haridasa.vijayam@gmail.com**
**jagannathakesava.blogspot.com**

ஸ்ரீஹரி சர்வோத்தமா வாயு ஜீவோத்தமா

**ஜகன்னாத கேசவ பப்ளிகேஷன்ஸ்**

380, 2a Main, 16th Cross
JP Nagar 4th Phase, Bengaluru 560078
Ph: 89044 58276. haridasa.vijayam@gmail.com
Jagannaathakesava.blogspot.com

## இதுவரை வெளியாகியுள்ள புத்தகங்கள்

1. ஸ்ரீஹரியின் 40 அவதாரங்கள். 352 பக்கங்கள். ரூ.200
2. 5 பரிசுத்த தேவதைகள் (பரசுக்ல த்ரயர்கள்) 290 பக். ரூ150
3. தந்தெமுத்து மோகனதாசர் (பரமப்ரிய சுப்பராய தாசர்). 270 பக்கங்கள். ரூ.150
4. ஸ்ரீசத்யவீர தீர்த்தர். 64 பக்கங்கள். ரூ.40
5. ஸ்ரீசத்யபோத தீர்த்தர். 164 பக்கங்கள். ரூ.70
6. ஸ்ரீசத்யத்யான தீர்த்தர். 216 பக்கங்கள். ரூ.110
7. மத்வகதாம்ருதம். 200 பக்கங்கள். ரூ.100
8. இந்தா குருகள காணேனோ. 48 பக்கங்கள். ரூ.30
9. ஸ்ரீவாதிராஜரின் ஸ்வப்னபத 120 பக்கங்கள் ரூ.70
10. ஸ்ரீமோகனதாசரின் கோலுஹாடு 120 பக்கங்கள் ரூ.70

## ஹரிதாச விஜயம் தமிழ் மாத இதழ்

### சந்தா விவரம் (36 பக்கங்கள்)

1 ஆண்டுக்கு ரூ.200/- 3 ஆண்டுகளுக்கு ரூ.500/-

5 ஆண்டுகளுக்கு ரூ.900/- 10 ஆண்டுகளுக்கு ரூ.1700/-

### வங்கி விபரம்:

Sathya Narayanan, ICICI Bank - Savings account

A/c. No. 000101043177. IFSC: ICIC0000001

Cenotaph Road Branch, Chennai 18

## ஹரிகதாம்ருதசார உரை - தமிழ் மொழிபெயர்ப்பு

https://hks-bhavaprakashike.blogspot.in என்னும் இணைய தளத்தில் ‘பாவபிரகாசிகை’ என்னும் (ஹரிகதாம்ருதசாரத்தின்) கன்னட உரையின் தமிழாக்கம் - தினம் ஒரு பத்யம் - என்று வெளியிடப்பட்டு வருகிறது. ஹரிகதாம்ருத சாரத்தில் ஈடுபாடுள்ள அனைத்து தமிழ் மாத்வர்களுக்கும் இதனை தயவு செய்து தெரிவிக்கவும்.

2020 ஆண்டில் வரும் அதிக ஆஸ்வீஜ மாதத்தில், புத்தக தானம் செய்யலாம். புத்தகங்கள் Bulkகாக வாங்கினால் தகுந்த தள்ளுபடி கிடைக்கும். மேலும் புத்தகங்கள் வருவதற்கும் இந்த நற்செயல் பயன்படும்.

ஸ்ரீஹரி சர்வோத்தமா வாயு ஜீவோத்தமா

**எமது Android app - "VEDHANIDHI"**

* மத்வ சித்தாந்தத்தைப் பற்றி அறிய உதவும் செயலி
* 35 தலைப்புகளில் 5,000 Objective type கேள்வி பதில்கள்.
* தமிழ், ஆங்கிலம் மற்றும் கன்னடத்தில் கேள்வி பதில்கள்
* Google Play Store சென்று VEDHANIDHI என்று தேடவும்.
* செயலி தரவிறக்கக் கட்டணம் ரூ.150.
* தரவிறக்கினால் உடனடி புத்தகப் பரிசு உண்டு.
* செயலியில் சரியான விடைகளைக் கொடுத்தாலும் பரிசு.
* இன்றே VEDHANIDHIஐ தரவிறக்கி, பயன்பெறவும்

**ஹரிதாச விஜயம் - மாத இதழ் - ஆன்லைனில் படிக்க**

* ‘Readwhere' Android appனை Download செய்யவும்
* Search Boxல் 'Haridasa Vijayam' என்று தேடவும்.
* 1 மாத இதழ் மட்டும் படிக்க: ரூ.10. 1 ஆண்டு மின்னிதழ் சந்தா : ரூ.100
* அங்கேயே ‘Subscribe' க்ளிக் செய்து, பணத்தைக் கட்டவும்.
* மாதாமாதம் Readwhere appல் ‘Shelf'ல் புது இதழ், பிரதி 25ம் தேதி வெளியாகும்.
* eBook சந்தா பணத்தை எங்களுக்கு அனுப்பக்கூடாது.

**e-books (மின் புத்தகங்கள்)**

இன்னும் புத்தகங்களாக வராத நமது மேலும் பல தமிழ்ப் புத்தகங்கள், மின் புத்தகங்களாக அமேசான் தளத்தில் கிடைக்கின்றன. Amazon Kindle கருவியிலோ, Kindle செயலியிலோ இவற்றை தரவிறக்கி படிக்கலாம். மேலும் தகவல்களுக்கு, தொடர்பு கொள்ளவும்.

| | |
|---|---|
| ஹரிதாச சாகித்யத்தில் கேசவ நாமா | ஸ்ரீவித்யாபிரசன்ன தீர்த்தர் நாடகங்கள் |
| ஜகன்னாததாசர் கட்டுரைகள் - 3 பாகங்கள் | ஸ்ரீவித்யாபிரசன்ன தீர்த்தர் கட்டுரைகள் |
| கோவிந்தாஷ்டகம் | பலவிது பாள்துதக்கெ |
| நாராயண பஞ்சர - அர்த்தத்துடன் | ஸ்ரீரகூத்தம தீர்த்தர் |
| மத்வ நாமா - அர்த்தத்துடன் | குருபக்திசுதா |
| அக்ஷரமாலிகா ஸ்தோத்திரங்கள் | குருகோவிந்த விட்டலதாசர் சரிதம் |
| ஜாம்பவதிப்ரிய விட்டல தாசர் கட்டுரைகள் | ஹரிதாச ஹ்ருதய |

**பரமப்ரிய ஸ்ரீசுப்பராயதாசரின் (ஸ்ரீதந்தேமுத்துமோகனவிட்டலதாசரின்)**
**சிறு அறிமுகம்**

ஸ்ரீசுப்பராயதாசர் பெங்களூர் ஜில்லா டாபஸ்பேட் பக்கத்தில் நர்சிப்புர் என்னும் கிராமத்தில் கிபி1865ல் க்ரோதன நாம சம்வத்ஸரம் சிராவண சுத்த சதுர்தசி (இதை சதுர்தசி, தேதி 6.8.1865 இருக்கலாம் என்று எண்ணுகிறோம்) ஞாயிற்றுக்கிழமை சிராவண நட்சத்திரத்தில், பாரத்வாஜ கோத்திரத்தைச் சேர்ந்தவரான சேஷப்பா மற்றும் லட்சுமிதேவம்மா என்னும் தம்பதியருக்கு பிறந்தார். காடி சுப்ரமணியரின் அந்தயாமியான ஜெயாசங்கர்ஷணனின் அருளால் பிறந்தவராகையால், சுப்பராய என்னும் பெயர் இடப்பட்டார். அட்சராப்யாசம் மற்றும் 8வது வயதில் பிரம்மோபதேசம் ஆகியவை, குந்தாபுர வியாஸராஜ மடத்தின் அப்போதைய அதிபரான ஸ்ரீலட்சுமிப்ரிய தீர்த்தரின் ஆசியால் நடைபெற்றன. நர்சிப்புர் மற்றும் கானகானஹல்லியில் துவக்கப்பள்ளிப் பாடங்கள் நடைபெற்றன. இரண்டு ஆண்டுகள் அங்கு ஆசிரியராகவும் பணிபுரிந்தார். 14வது வயதில் வேங்கட நாராயணாச்சார் மற்றும் ஸ்ரீமதி லட்சுமி நரசம்மா அவர்களின் புதல்வியான 6-7 வயதான அச்சம்மா என்பவருடன் திருமணம் நடந்தது.

சுப்பராயர் சிறு வயது முதலே வைராக்கியமும் ஆன்மிக சிந்தனையும் கொண்டிருந்தார். பெங்களூரில் கற்றறிந்த அறிஞரான திரு.சிஞ்சோலே வெங்கடாசார்யரிடத்தில், ஸ்ரீமதாசார்யரின் சர்வமூல கிரந்தங்கள் 37யும், சுமத்வவிஜயமும் படித்து முடித்தார். இதன் மங்கள நிகழ்ச்சியை நர்சிபுரத்தில் மிகவும் விமரிசையாக நடத்தினார்.

ஸ்ரீவிஜயதாசரின் சரித்திரத்தை படித்து, தாமும் அவரைப்போலவே ஹரிதாசர் ஆகவேண்டும் என்ற எண்ணம் கொண்டார். ஒரு தம்புரியையும் வாங்கினார். கரிகிரி நரசிம்மரின் சன்னிதியில் பஜனைகள் செய்துவந்தார். ஸ்ரீ நரசிம்மாச்சார் என்பவர் இவருக்கு குருவின் அவசியத்தை உணர்த்தினார். ஸ்ரீவிஜயதாசரின் சிஷ்யரான ஸ்ரீவேணுகோபாலதாசரின் தாச பரம்பரையில் வந்த ஸ்ரீவரவிட்டலதாசரின் சிஷ்யரான தொட்டபெல்லாபுரத்தின் முத்துமோகனவிட்டலதாசர் தன் பயணத்திற்கு நடுவில் நர்சிபுரத்திற்கு வந்தார். ஸ்ரீசுப்பராயரை சோதித்து, அவரை தும்கூர் வியாசராஜ மடத்திற்கு வருமாறு சொல்லி, அங்கு ஒரு சுபமுகூர்த்தத்தில் ‘தந்தேமுத்துமோகனவிட்டலா’ என்னும் அங்கிதத்தை வழங்கி, அவர் தலையில் கைவைத்து உபதேசம் செய்தார்.

இப்படியாக, ஸ்ரீதந்தேமுத்துமோகனவிட்டலதாசர், வியாச-தாச என்று இரண்டு வழிகளிலும் தேர்ந்தவராகி, பல பயணங்களை மேற்கொண்டு, ஜாதிமத பேதமில்லாமல், சஜ்ஜனர்களுக்கு அங்கிதம் வழங்கி வந்தார். அங்கிதம் வாங்கியவர்களில் முதலாமவர் ஸ்ரீ பிராணநாதவிட்டலா என்று அங்கிதம் பெற்றவரான ஸ்ரீபாகேபல்லி சேஷதாசர். இறுதியானவர் ஸ்ரீகுருகோவிந்தவிட்டலா அங்கிதம் பெற்றவரான மைசூர் கோவிந்த ராவ் அவர்கள்.

இவர்களுக்கு நடுவில் அங்கிதம் வாங்கியவர்களில் முக்கியமானவர்கள் கீழ்வருமாறு:
ஸ்ரீபத்மனாபதாசர்
ஸ்ரீஉரகாத்ரிவிட்டலதாசர்
ஸ்ரீரமாகாந்தவிட்டலதாசர்
ஸ்ரீகோபாலகிருஷ்ணவிட்டலதாசர் (ஸ்ரீமதி அம்பாபாய்)
ஸ்ரீநித்யானந்தவிட்டலதாசர்

ஆகியோர். ஸ்ரீதாசர் மொத்தம் 1165 பேருக்கு அங்கிதம் வழங்கியுள்ளார். தாசபரம்பரையில் இவ்வளவு பேருக்கு அங்கிதம் வழங்கியவர் இவர் மட்டுமே எனலாம். வைராக்கியத்தில் சன்யாசம் வாங்கி, மறுபடி சம்சாரத்தில் நுழைந்த தோஷம் பரிகாரத்திற்காக ஸ்ரீதாசரை அணுகி அவரது அருளை வேண்டி, அவர் சொல்லிய வண்ணம், ஹரிகதாம்ருதசாரத்திற்கு பாவப்ரகாசிகை என்னும் உரையை எழுதிய பத்மனாபதாசர் எனப்படும் பல்லடம் மாதவாச்சார் இவரது சிஷ்யர்களில் முக்கியமானவர்களில் ஒருவராவார். ஸ்ரீதாசரின் முக்கிய சிஷ்யரான ஸ்ரீஉரகாத்ரிவிட்டலதாசரின் சிஷ்யர், ஸ்ரீதந்தேவேங்கடேசவிட்டலா அங்கிதத்தை வாங்கியவரான சித்ரதுர்காவின் ஸ்ரீ R.ராமசந்திரராவ் ஆவார்.

கரிகிரியில் நரசிம்மனின் அருளால் கிடைத்த ஒரு காலி மனையில், ஸ்ரீதாசர் தாசகூடசபாவை கிபி1900ம் ஆண்டில் நிறுவினார். ஒவ்வொரு ஆண்டும் ரதோத்ஸவ காலத்தில் கரிகிரிக்கு வந்து சபாவில், ஆன்மிக நிகழ்ச்சிகள், அன்னதானம் ஆகியவற்றை நடத்திவந்தார். சிஷ்யர்களின் ஆதி-வியாதிகளை 'என்ன பின்னவ கேளோ தன்வந்திரி தயமாடோ' என்னும் பாடலின் மூலமும், ஸ்ரீஹரிவாயுஸ்துதி புனஸ்சரணத்தின் மூலம் தீர்த்து வந்தார். தூரத்தில் இருப்பவர்களுக்கு தம் கருத்துகள் போய்ச் சேரவேண்டும் என்ற எண்ணத்தில் 'பரமார்த்த சந்திரோதய' என்னும் மாதப் பத்திரிக்கையை துவக்கினார்.

முளபாகில் ஸ்ரீஸ்ரீபாதராஜ மடத்தில், சாம்ராஜ்பேட் பிராணதேவரின் கோயிலில், மற்றும் மல்லேஸ்வர மடத்தில் 10 மாதங்கள் பாடம் சொல்லியும், திரு.M.மூர்த்திராவ் அவரின் ஹரிக்ருபா இல்லத்திலும், ஹரிகதாம்ருதசார உபன்யாசங்களை நடத்தினார். பெங்களூர் மத்திய சிறைச்சாலையில், தர்மபோதகராக, அரசால் நியமிக்கப்பட்டு அங்கிருந்த கைதிகளுக்கு வாரத்திற்கு ஒருமுறை தத்வ உபதேசங்கள் செய்துவந்தார். இதனால் பல கைதிகள் திருந்தி நல்வாழ்க்கைக்கு திரும்பினர்.

ஸ்ரீசத்யத்யான தீர்த்தர், ஸ்ரீதாசரின் உபன்யாசங்களைக் கேட்டு மகிழ்ச்சியடைந்து திருப்பதி மத்வசித்தாந்த ஒன்னாஹினி சபையில் நடைபெறும் தாசசாகித்ய தேர்வுக்கு ஸ்ரீதாசரை மேற்பார்வையளாராக நியமித்தார். புத்திகே மடத்து அதிபரிடமிருந்து பரமப்ரிய என்னும் விருதையும் ஸ்ரீதாசர் பெற்றார். ஸ்ரீதாசரின் ஆஜானுபாகுவான உருவம், அவரின் ஞானம், சொற்பொழிவுத் திறமை ஆகியவற்றால் கவரப்பட்டு அவரின் சிஷ்யரான முக்கியஸ்தர்கள் பின்வருமாறு:

ஸ்ரீவாய்கர் கிருஷ்ணாசார்,
ராஜசபாபூஷண ஸ்ரீ கர்பூர ஸ்ரீனிவாசாச்சார்,
ஸ்ரீசுபோத ராமராயர்,
ஸ்ரீபேலூர் கேசவதாஸ்,
ஸ்ரீதொட்டபேலே நாராயண சாஸ்திரிகள்,
ஸ்ரீஹொஸகெரெ சிதம்பரம் அவர்கள்,
ஸ்ரீ D.K. பாரத்வாஜர்,
ஸ்ரீ தேஷ்முக் ஷ்யாமராயர்,
ஸ்ரீ B.D. ராகவேந்திர

ஆகியோர்.

கரிகிரி வருபவர்கள் வணங்குவதற்காக, கதருமண்டலகியிலிருந்து தருவிக்கப்பட்ட பிராணதேவரின் சிலையை, கரிகிரியிலேயே இருந்த ஸ்ரீகிருஷ்ணதாச தீர்த்தர் மூலமாக, பிரமாதி நாம சம்வத்ஸரம் பால்குள பகுள பஞ்சமியன்று தேதி 28.3.1940, மிகவும் விமரிசையாக பிரதிஷ்டை செய்தார். தினசரி பூஜை செய்தவதற்கான ஏற்பாடுகளையும் செய்தார். இதற்கடுத்த சில நாட்களிலேயே, ஸ்ரீதாசர் தாம் இவ்வுலகிற்கு வந்த வேலை முடிந்தது என்று தெரிந்து, விக்ரம சம்வத்ஸரம் சைத்ர சுத்த நவமி ஸ்ரீராமநவமி தேதி 16.4.1940 செவ்வாய்க்கிழமையன்று மதியம் சுமார் 12 மணிக்கு இறைவனடி சேர்ந்தார்.

இன்றும் அவரது அருளால் தாசகூடசபா நிகழ்ச்சிகள் நடைபெற்று வருகின்றன. பிராணதேவரின் பூஜை, வந்த அதிதிகளுக்கு அன்னதானம், ரதோத்ஸவம், ராமநவமி, நரசிம்மஜயந்தி ஆகிய பல விசேஷ நாட்களில், அறிஞர்களால் உபன்யாசம், ஹரிதாச தாசிகள் மூலமாக பஜனை நிகழ்ச்சிகள் நடைபெற்று வருகின்றன.

ஸ்ரீதாசரின் பற்றிய விரிவான தகவல்களுக்கு - ஸ்ரீகுருகோவிந்தவிட்டலதாசர் எழுதிய ‘பரமப்ரிய சுப்பராயதாசர்’ மற்றும் ஸ்ரீஜயசிம்ஹ அவரின் ‘தந்தேமுத்துமோகன விட்டலா’ என்னும் புத்தகங்களைப் படிக்கலாம்.

***

**பாவப்ரகாசிகே’விற்கு சம்பந்தப்பட்ட சில விசேஷமான தகவல்கள்**

1.
பரமார்த்த சந்திரோதய மாதப் பத்திரிக்கை பிரமோதூத நாம சம்வத்ஸரம் சிராவண மாதம் தொகுப்பு 4 இதழ் 5 ஆகஸ்ட் 1930 இதழில் பிரசுரிக்கப்பட்ட கடிதம்.

குருசேவா

என் நம்பிக்கைக்குப் பாத்திரரான பாகேனஹல்லி பிராணநாதவிட்டலா அங்கிதத்தைப் பெற்றவரான திரு சேஷதாசர், சுமார் 6-7 ஆண்டுகளுக்கு முன் மல்லேஸ்வரத்தில் நடந்த ரதோத்ஸவத்தின்போது என்னிடம் சொன்ன விஷயம்

பின்வருமாறு. நம் குருவான திரு சுப்பராயதாசரிடம் வேண்டிக்கொண்டு, அவர் மூலமாக ஸ்ரீராம பட்டாபிஷேகத்தின் கதையை உபன்யாசம் செய்வித்தால் மிகவும் நன்றாக இருக்கும். அவர் கேட்டுக்கொண்டபடியே சீதாகல்யாண மகோத்ஸவத்தை செய்து முடித்தோம். அங்கு வந்திருந்து உபன்யாசத்தைக் கேட்ட அனைவரும் மிகவும் மகிழ்ந்து, தாசரை மல்லேஸ்வர மடத்தில் ஹரிகதாம்ருதசார பாடத்தை எடுக்குமாறு கேட்டுக்கொண்டனர். ஸ்ரீதாசரும் அதை மிகவும் மகிழ்ச்சியுடன் ஏற்றுக்கொண்டு, 'ஹரிக்ருபா' ஆலயத்தில் சுமார் 10 மாதங்கள் சில சிஷ்யர்களுக்கு பாடம் எடுத்தார்.

ஆனால் அதற்கும் திருப்தி அடையாத நாங்கள், ஹரிகதாம்ருதசார காவியத்திற்கு பாவபிரகாசிகெ என்னும் உரையை எழுதி வெளியிடவேண்டும் என்ற எங்கள் ஆசையை தெரிவித்தோம். மிகவும் வயதாகிவிட்டதால் தம்மால் இந்த வேலையை செய்ய முடியாது. இந்த வேலைக்கு மிகவும் கற்றறிந்த அறிஞரான, தன் அருளுக்கு பாத்திரரான சிஷ்யரையே கேட்கிறேன் என்று கூறினார்.

அதன்படியே இப்போது அந்த உரையை எழுதிக்கொண்டிருக்கும் ஸ்ரீதந்தேமுத்துமோகனவிட்டல அங்கிதத்தைப் பெற்றவரான சுப்பராயதாசரின் சிஷ்யரான ஸ்ரீபத்மனாபதாசரை தேர்ந்தெடுத்தார். ஸ்ரீதாசரின் அருளைப் பெற்று இந்த உரையானது தற்போது எழுதப்பட்டு வருகிறது. இதுவரை 14 இதழ்களில் வெளியிடப்பட்டுள்ளது.

இதுவரை இந்த காவிய பிரசாரத்திற்கு உதவி செய்து வரும் நல்லுள்ளங்களுக்கு எனது சாஷ்டாங்க வணக்கங்களை தெரிவித்துக் கொள்கிறேன்.

பக்தசேவகன்
M. மூர்த்திராவ்

2.
பரமார்த்த சந்திரோதய மாதப் பத்திரிக்கை சுக்ல நாம சம்வத்ஸரம் சைத்ர மாதம் தொகுப்பு 3 இதழ் 1 ஏப்ரல் 1929 இதழில் பிரசுரிக்கப்பட்ட கடிதம்.

பலமுறை பாரத பாகவத புராணங்களை நன்றாக படித்து தெரிந்துகொண்டு, உபன்யாசங்களை செய்து, வியாசகூடத்தை நன்றாக அறிந்துகொண்டு பிறகு தாசகூடத்தைப் பற்றிய ஸ்ரீசுப்பராயதாசரின் சிஷ்யரான பத்பனாபதாசரால் இயற்றப்பட்டது இந்த உரை. திருப்பதி சபாவில் ஹரிகதாம்ருதசார தேர்விற்கு மேற்பார்வையாளராக இருந்து, பலமுறை ஹரிகதாம்ருதசார பாடத்தை எடுத்திருக்கும் ஸ்ரீசுப்பராயதாசரிடமிருந்தும், பல ஆண்டுகளாக பாகவதாதி புராண உபன்யாசங்களை சொல்லிக்கொண்டிருக்கும் பண்டிதரான போடேனஹல்லி ஸ்ரீகிருஷ்ணமூர்த்தி ஆச்சாரிடமும் காட்டி ஒப்புதல் பெற்றுள்ளார். வியாசகூட தாசகூட என்று இருவருக்கும் வரும் சந்தேகங்களை, பாரத பாகவத புராணங்களிலிருந்து மேற்கோள்களை எடுத்துக் காட்டி தீர்த்துவைத்துள்ளார். மேலும் அங்கங்கே தக்க உதாரணங்களைக் கொடுத்து, ஒவ்வொரு சொல்லுக்குமான பொருள், பொருளுரை, விசேஷமான பொருள் ஆகியவற்றைக்

கொடுத்துள்ளார். மல்லேஸ்வரத்தில் வசிக்கும் ஸ்ரீமூர்த்திராயர் மற்றும் ஆற்காடு ஸ்ரீனிவாசராயர் தெருவில் வசிக்கும் ஸ்ரீவெங்கடராவ், நிஜகல், இவர்களுடன்

தற்போது குறைந்திருக்கும் தாசபரம்பரையை மறுபடி அதிகரிக்கும்படியான நோக்கத்துடன் இந்த உரையை குறைந்த லாபத்தில் அச்சடித்து, குறைந்த விலைக்கே மக்களுக்கு கொடுக்க வேண்டும் என்று நிச்சயித்துள்ளனர்.

நிறுவனர்.

3.
பாவப்ரகாசிகாவைப் பற்றி ஸ்ரீதந்தேமுத்துமோகனதாசரின் சிஷ்யரான ஸ்ரீவரதேசவிட்டல அங்கிதத்தைப் பெற்றவரான ஸ்ரீவாமன கிருஷ்ண தேஷ்பாண்டே எழுதிய கடிதம். பரமார்த்த சந்திரோதய பத்திரிக்கை ஜூலை 1930ல் வெளிவந்தது.

தங்களின் பிரிய சிஷ்யரான ஸ்ரீபத்பனாபதாசர், ஹரிகதாம்ருதசாரத்திற்கு எழுதிய பாவபிரகாசிகே என்னும் உரையைப் படித்தேன். இரண்டாம் பகுதியில் 'ஸ்ரீரமணி கரகமலபூஜித' இந்த பதத்திற்கு எழுதியுள்ள நீண்ட விளக்கத்தை & கொடுத்துள்ள உதாரணங்களைக் கண்டு, மகிழ்ச்சியில் மூழ்கியுள்ளேன். இதைப் படித்ததால் என் இந்த ஜென்மம் சார்த்தகமாயிற்று என்று எண்ணுகிறேன். இந்த உரையை எவ்வளவு படித்தாலும் திருப்தி ஆவதேயில்லை. இப்படிப்பட்டவருக்கு பண்டிதரத்ன என்னும் பட்டத்தைக் கொடுப்பது தகுதியானதே. இப்படிப்பவருக்கு குருவாக இருக்கும் தங்களின் புகழ், பரமார்த்த சந்திரனின் கதிர்களைப் போல் எப்போதும் வளர்ந்துகொண்டே இருக்கட்டும். பத்மனாபதாசரை நான் வணங்குகிறேன். மேலும் நீங்கள் செய்த உதவியை நான் எக்காலத்திற்கும் மறக்காமல் இருக்கவேண்டி மதுசூதனின் காலடிகளைப் பற்றி வணங்குகிறேன்.

***

ஸ்ரீஹரிகதாம்ருதாசர பாவபிரகாசிகா வியாக்யானத்தை எழுதிய
ஸ்ரீ பத்பநாபதாசர் (பல்லடம் மாதவாச்சார்) குறித்து ஒரு அறிமுகம்

மாதவாச்சார் கோயம்பத்தூர் அருகில் உள்ள பல்லடம் கிராமத்தில் பிறந்தவர். பாகவத மற்றும் சுதா ஆகியவற்றில் திறமை பெற்று அப்போதைய உத்தராதி மடாதீசரான ஸ்ரீசத்யத்யான தீர்த்தரின் பூரண நல்லாசியைப் பெற்றிருந்தார். கிருகஸ்தராக இருந்தபோது இரு மக்களை பெற்றிருந்தார். ஒரு நாள் சன்யாச ஆஸ்ரமத்தையும் பெற்றார். சிறிது காலம் சன்யாசியாக இருந்து பின்னர் மறுபடி தன் மனைவி மக்களுடன் குடும்பம் நடத்த ஆரம்பித்தார். இதற்காக ஏதேனும் பிராயச்சித்தம் இருக்கிறதா என்று ஸ்ரீசத்யத்யானரிடம் இவர் கேட்க, அவர் சன்யாசி ஆசிரமத்தை விட்டவருக்கு தேகத்யாகமே (மரணம்) பிராயச்சித்தம் என்று கூறியதாக தெரிய வருகிறது. முக்கியமான பீடாதிபதிகளாக இருந்து, சாஸ்திரத்தில் சொல்லப்பட்டிருந்தபடி ஒரு பிராயச்சித்தம் சொன்னாலும், அதை ஆசாரியரால் கடைப்பிடிக்க முடியவில்லை. இதனால், ஸ்ரீபாதங்களவராலும், தம் நண்பர்களாலும்

பகிஷ்காரம் செய்யப்பட்டு, தம் அன்றாட வாழ்க்கையை நடத்துவதற்காக ஆசாரியர் ஒரு அச்சகத்தையும், புத்தகத்தை பைண்ட் செய்யும் தொழிலையும் நடத்தலானார்.

இப்படி இருந்தபோது, தந்தெமுத்துமோகனதாசரின் சிஷ்யரான ஸ்ரீராமபுரத்தின் கே.சேஷகிரிராவ் அவர்களின் பரிச்சயம் ஆசாரியருக்குக் கிடைத்தது. தாசரின் உபன்யாசங்களை சேகரித்து வந்த சேஷகிரிராவ் அவர்கள் அவற்றை பைண்ட் செய்வதற்காக ஆசாரியரின் கடைக்கு வந்து கொடுத்தார். அவற்றை பைண்ட் செய்யும்போது, ஆசாரியரின் பார்வை அந்த புத்தகத்திலிருந்த தாசரின் உபன்யாசங்களின் மேல் விழுந்தது. சேஷகிரிராயரிடமிருந்து தாசரின் மகிமைகளை அவ்வப்போது கேட்டுவந்தாலும், ஆசாரியருக்கு தாசரின் மேல் நல்ல அபிப்பிராயம் இன்னும் வந்திருக்கவில்லை. மேலும் தாசரி நடை உடை பாவனைகள், ஆசாரியருக்கு விசித்திரமாக தோன்றின.

பாண்டித்யம் (திறமை) இல்லாதவர்கள் செய்யும் தந்திரமே இவை (விசித்திரமான நடை, உடை ஆகியன) என்னும் தப்பான அபிப்பிராயமே தாசர் மேல் அவருக்கு இருந்தது. ஆனால், தாசரின் தங்குதடையற்ற உபன்யாசத் திறமை, அதற்காக அவர் சாஸ்திரங்களிலிருந்து எடுத்துக் கொடுக்கும் உதாரணங்கள், அவரின் சிறந்த ஸ்ரீஹரி பக்தி, மிகவும் கடினமான விஷயங்களை மிகவும் சுலபமான நடையில் சொல்லும் திறமை, குறுகிய மனதுடையவர்களை தெளிய வைத்து விசாலமானதாக்கும் அவரது பாடல்கள் - இவையெல்லாவற்றையும் சேர்த்து அவர் வழங்கிய உபன்யாசங்களைப் படித்த ஆசாரியர் - தாசர் ஒரு அபூர்வமான பண்டிதர் மட்டுமல்ல, பாண்டித்யத்தை மீறிய ஞானிவரேண்யர் - என்று புரிந்துகொண்டார். பரந்த அறிவுடைய இத்தகைய மகானைப் பற்றி இவ்வளவு காலம் தப்பான அபிப்பிராயம் கொண்டிருந்தேனே என்று எண்ணி ஆசாரியர் மிகவும் வருந்தினார். இப்படிப்பட்ட தாசரை குருவாகப் பெற்ற சேஷகிரிராவ் எவ்வளவு பாக்கியசாலி என்று எண்ணினார். தாமும் தாசரை சந்தித்து வணங்கி, அவரிடமிருந்து தாசதீட்சை பெறவேண்டும் என்று ஆசைகொண்டார். தம் விருப்பத்தை ஆசாரியர் சேஷகிரிராயரிடம் சொல்ல, அவரும் - ஆசார்யரே, மிகவும் சந்தோஷம். நான் இந்த விஷயத்தை தாசரிடம் கூறி, பின் அவரின் பதிலை உங்களுக்கு தெரிவிக்கிறேன். ஆனாலும், தாங்கள் இது விஷயமாக தாசருக்கு ஒரு விண்ணப்பக் கடிதம் எழுதவும் - என்றார். அப்படியே ஆசாரியரும் தன் மனதில் உள்ளவற்றை தாசருக்கு ஒரு கடிதத்தில் எழுதினார். அந்தக் கடிதம் இப்படியாக இருந்தது:

ஸ்ரீமத்சமீர சாஸ்திர ப்ரவீண துரீணரான, ஸ்ரீமத்புரந்தர, விஜயதாச, சிரேஷ்டமுக கமல க்ஷீராப்திஜாத அம்ருதாந்தசராத, அஸ்மத்குருமர்யாதரான ஸ்ரீஸ்ரீதாசராயரவரின் பாதகமலங்களுக்கு சிஷ்டகோடி ப்ரவீண தாசானுதாசனாத பல்லடம் மாதவ செய்யும் சாஷ்டாங்க வணக்கம் மற்றும் ஒரு வேண்டுகோள்.

ஒன்றிரண்டு ஆண்டுகள் முன்பு தங்களிடமிருந்து வரதமோகனவிட்டலா என்ற அங்கிதத்தைப் பெற்றவரான திரு.சேஷகிரிராயரின் நட்பு எனக்கு உண்டாயிற்று. தங்களைப் பற்றி அவரிடமிருந்து பலமுறை கேட்டிருந்தாலும், பல தாசர்களில் தாங்களும் ஒருவர் என்ற எண்ணமே கொண்டிருந்தேன். தங்கள் மகிமையை நான்

உணர்ந்திருக்கவில்லை. அதை தெரிந்து கொள்ளவேண்டும் என்னும் ஆசையும் இருந்திருக்கவில்லை. ஒரு நாள் மல்லேஸ்வரத்தில் கம்பௌண்டர் திரு சுப்பராயர் வீட்டிற்கு தாங்கள் வந்திருந்தபோது, நானும் உபன்யாசம் செய்வதற்காக அங்கு வந்திருந்தேன். அப்போது தங்களைக் கண்டு இவர் யார் என்று கேட்க, இவரே (தாங்களே) திரு.சேஷகிரிராயரின் குரு என்று தெரிய வந்தது. தங்களின் வேடத்தைப் பார்த்து, எனக்கு அவநம்பிக்கையே தோன்றியது. ஆகவே, தங்களை கண்டும் காணாததுபோல் திரும்ப வந்துவிட்டேன். அதற்கான காரணம் என்னவென்றால், தங்களின் மகிமையைக் கேட்ட காதுகளிலேயே, தங்களை திட்டுவோர் கூறுவதும் விழுந்தது. அம்ருதத்தில் கலந்த விடம் போல் அது என் மனதை கலைத்தது.

இப்படி இருக்கும்போது, தெய்வாதீனமாக தங்கள் சிஷ்யரான திரு.சேஷகிரிராவ் அவர்கள் தங்கள் உபன்யாசங்களைக் கொண்ட ஒரு புத்தக மூட்டையை பைண்டிங் செய்யவேண்டி என்னிடம் கொண்டு வந்தார். புத்தகங்களை பைண்ட் செய்யும்போது அவற்றில் ஒன்றிரண்டு உபன்யாசங்களைப் படித்தேன். அதைப் படிக்கையிலேயே எனக்கு விசித்திரமான மகிழ்ச்சியும், கண்ணிலிருந்து ஆனந்தக் கண்ணீரும் வந்தன. மேலும் தங்களுக்கு நான் செய்த அவமரியாதையும் நினைவுக்கு வந்தது. உடனே தங்களைக் காண வேண்டுமென்ற ஆவலும் வந்தது. அன்றிரவே, நம் திரு.சேஷகிரிராயரிடம் இதைப் பற்றி சொல்லி, எனக்கும் உபதேசம் மற்றும் அங்கிதம் வேண்டும் என்றும் தெரிவித்தேன். அவரும் தங்களைக் கேட்டுச் சொல்வதாகக் கூறினார்.

ஆனால் அதற்குள் என் கெட்ட காலமாக வெளியூர் செல்ல நேரிட்டது. மூன்று மாதங்களுக்குப் பிறகே இங்கு திரும்பி வந்தேன். அந்த சமயம் நம் ராயர் காசி யாத்திரைக்குச் சென்றிருந்ததால், அவரின் வருகைக்காகக் காத்திருந்தேன். அவரும் - எனக்குத் தோன்றியவாறு ஒரு கடிதத்தை எழுதி வருமாறு கூறினார். என்னை தங்களிடம் அழைத்துச் செல்வதாகக் கூறினார். அவர் சொன்னதைப் போலவே, நானும் என் மனதில் தோன்றியதை எழுதியுள்ளேன். நான் படித்த தங்களின் ஒன்றிரண்டு உபன்யாசங்களின் மூலம் எனக்குத் தெரிந்தது என்னவென்றால் - தாசர் சாதாரண மனிதரல்ல. ஒரு மகாபுருஷர் ஆவார்.

ஸ்ரீமதாசாரியரின் கிரந்தங்களிலும், அதற்கான டீகா கிரந்தங்களிலும், தத்வவாதம் நிரம்பியிருந்தாலும் அவை எப்படி இருக்கிறதென்றால் - கரும்பின் மேலிருந்து கீழ்வரை நற்சுவையே இருந்தாலும், பல்லில்லாத முதியவர் அதை எப்படி சுவைக்க முடியாதோ, அந்த கரும்பையே ரசமாக்கிக் கொடுத்தால், எப்படி சுவைத்து ரசித்து அதை குடிப்பாரோ - அதைப்போலவே, கரும்பைப்போல உள்ள பாரதம் ஆகிய கிரந்தங்களில் காணப்படும் தத்வவாத என்னும் சுவை, தங்களின் வாக்கின் இனிமையில் இன்னும் சுவை மிகுந்து சர்க்கரையைப் போல் இனிக்கிறது என்பது நிச்சயமாகத் தெரிகின்றது.

நானும் பலமுறை பாரதம், பாகவத கிரந்தங்களை உபன்யாசத்தில் சொல்லியிருக்கிறேன். ஆனால் கரும்பில் மறைந்திருக்கும் சுவையைப் போல்,

எனக்கும் அவற்றில் மறைந்திருக்கும் தத்வவாதங்கள் புலப்படவில்லை. தங்களில் உபன்யாசம் என்னும் சர்க்கரையை சிறிதே சுவைத்தவுடன், அதை முழுவதும் சுவைத்துக்கொண்டே இருக்கவேண்டும் என்ற ஆவல் எழுந்து, எந்நேரமும் தங்களை எப்போது பார்ப்பேன், தங்களிடமிருந்து எப்போது உபதேசதம் மற்றும் அங்கிதம் பெறுவேன் என்றே சிந்தித்துக் கொண்டுள்ளேன்.

ஆகவே, பரமஏழையான என்மேல் தாசர் கருணை காட்டி தம் அம்ருதவாக்கினால் என்னை பவித்ரன் ஆக்கி, உபதேசம் மற்றும் அங்கிதத்தைக் கொடுத்து, தாசகூட்டத்தில் என்னையும் தங்களின் தாசனாகிக் கொள்ளவேண்டுமென்று வேண்டிக்கொள்கிறேன். பரமஞானியான உங்களுக்கு எதுவும் அறியாத என்னால் அதிகம் எழுதத் தோன்றவில்லை. சாஷ்டாங்கமாக வணங்கும், உங்களின் தாசனின் தாசன் - பல்லடம் மாதவன். (விபவ சம்வத்சரம் புஷ்ய சுத்த சஷ்டி புதன்கிழமை - 16-01-1929).

மேற்கண்ட கடிதத்தைக் கண்ட கருணாபூரணரான தாசர், விரைவிலேயே ஆசாரியருக்கு தன் தரிசனத்தைத் தந்தார். ஆஜானுபாகுவான தாசரைக் கண்டதும், மகிழ்ச்சியடைந்த ஆசாரியர், நெடுஞ்சாண்கிடையாக விழுந்து வணங்கி - தாம் அவசரப்பட்டு சன்யாசாஸ்ரமம் பெற்றதும், பின்னர் மறுபடி குடும்பஸ்தராக ஆனது, மடத்தினால் பகிஷ்காரம் செய்யப்பட்டு மன உளைச்சலுக்கு ஆளானது என தம் முழுக்கதையையும் தாசரிடம் சொல்லி, கண்ணீர் வடித்தார். தம்மை அனுக்கிரகித்து காப்பாற்றவேண்டும் என்று தாசரின் பாதங்களை கெட்டியாகப் பிடித்து வேண்டிக்கொண்டார்.

இப்படியாக மனம் வருந்திய ஆசாரியரைக் கண்டு தாசர் மிகவும் அனுதாபம் கொண்டார். அவரை கைத்தூக்கி எழுப்பி ஆறுதல் கூறினார். பயப்படவேண்டாம். ஸ்ரீஹரி காப்பாற்றுவான். ஸ்ரீஹரியால் மன்னிக்க முடியாத குற்றங்களை மனிதனால் செய்யவே முடியாது. பக்தர்களின் பாவச்செயல்களை மன்னித்து அருளுவதில் ஸ்ரீலட்சுமிபதிக்கு சமமானவர் இந்த உலகில் வேறு யாருமே இல்லை.

பாபகர்மவ சஹிசுவொடே ல
குமிபதிகே சமராத திவிஜர
நே பயோஜபவாண்டதொளகாவல்லே நாகாணே
கோபகுருவின மடதி ப்ருகு நக
சாப மொதலாதவரு மாடித ம
ஹாபராதகளெணிசிதனே கருணாசமுத்ர ஹரே

என்னும் ஹரிகதாம்ருதசார வசனத்தை நீங்கள் கேட்டதில்லையா? பாரதம், பாகவத புராணங்களின் ரகசியங்களை நன்கு அறிந்தவரான நீங்கள், மோட்சத்தைக் கொடுக்கக்கூடிய கிரந்தமாகிய ஸ்ரீஜகன்னாததாசர் எழுதிய ஹரிகதாம்ருதசாரத்திற்கு ஒரு விளக்க நூலை நீங்கள் எழுதவும். இதனால் உங்களின் பாவங்கள் நீங்கி, வாழ்க்கையும் அர்த்தமுள்ளதாக ஆகிவிடும். பக்தர்களின் கஷ்டத்தைப் போக்குபவனான ஸ்ரீஹரியின் கருணை உங்களுக்குக்

கிடைக்கும் என்று சொல்லி ஆசாரியருக்கு 'பத்பனாப விட்டலா' என்று அங்கிதோபதேசமும் அருளினார்.

ஆசாரியர் மிகவும் மகிழ்ச்சியடைந்தார். தம் இன்னலுக்கு தீர்வளித்த குருவின் கருணையை எண்ணி மகிழ்ந்தார். தம் குருவை வணங்கி குரு ஸ்தோத்ரத்தை கன்னடத்தில் இயற்றினார். அந்தப் பாடல் பின்வருமாறு:

தாசவர்யரே நிம்ம கருணகேனெம்பே

ஸ்ரீவாச தந்தேமுத்துமோகனவிட்டலாக்யா

பந்துகளு எனகில்லா பதுகினலி சுகவில்லா
நிந்து நொந்தெனோ பஹள பயதொளகே
தந்தே குருவர நிம்ம கருணதிந்தலி பவத
பந்த முக்திய பொந்தி சுகியாதே நானீக

அபரோக்ஷதல்லி தம்ம நிஜ ரூபவனெ தோரி
ஸ்வரோக்ஷதல்லி திவ்ய அங்கிதவ கொட்டு
சாபவாதத பாப சங்கவனு சுட்டென்ன
காபாடிதா மஹிமெ பொகளலென்னொசவே

தைத்யாரி ஸ்ரீ பத்பனாயவிட்டலன ரூப
நித்யாபரோக்ஷதல்லி நோடி சுகதி
மத்தெல்ல சிஷ்யனு தத்வபோதெயிந்த
நித்ய சலஹுவ திவ்ய தேவாம்ச சம்பூத

தன் குருவின் மகிமைகளைப் புகழ்ந்து கொண்டாடி பத்பனாபதாசர் சமஸ்கிருதத்திலும் குருஸ்தவனத்தை இயற்றியுள்ளார். அதற்கான பொருளுரையையும் அவரே வழங்கியுள்ளார். (ஆதாரம்: பரமார்த்த சந்திரோதய, எண்:4 இதழ்: 5, பிரமோதூத, சிராவண - 10.8.1930). அந்த ஸ்லோகங்கள் பின்வருமாறு உள்ளன.

தத்வஞானம் வஹந்தீம் சுஜன சுதயிதாம்
பூர்ணபோதார்ய சாஸ்திர க்ஷீராம்போதிம்
ப்ரவிஷ்டாம் சகல பத சுளாதி த்வைத ஹம்சாதி
யுக்தாம் | சுப்ரமண்யாக்ய சுரேஸ்ஸுமுக
கமலஜம் சர்வ பாபாப ஹந்தீம் | வந்தே
வாக்தேவதாக்யம் சகல பதித சங்கம்
பாவயந்திம் துய்யகங்காம் ||1||

பொருள்:

தத்வஞானம் வஹந்தீம் = தத்வஞான என்னும் கடலிலிருந்து
சுஜன சுதயிதாம் = சஜ்ஜனர்களுக்கு மிகவும் பிடித்தமான

பூர்ணபோதார்ய சாஸ்திர க்ஷீராம்போதிம் ப்ரவிஷ்டாம் = ஸ்ரீபூர்ணப்ரக்ஞாசார்யர் அவர்களின் சாஸ்திரம் என்னும் பாற்கடலில் சங்கமிக்கும்
சகல பத சுளாதி த்வைத ஹம்சாதி யுக்தாம் = சுளாதிகள் என்னும் ஹம்ச பட்சிகள்
சர்வ பாபாப ஹந்தீம் - வணங்கும் அனைவரின் பாவங்களையும் போக்கும்
சகல பதித சங்கம் பாவயந்தீம் - அனைத்து மக்களின் பாவங்களையும் போக்கும்
சுப்ரமண்யாக்ய சுரே: - சுப்பராயர் என்னும் ஞானியின்
சுமுககமலஜம் - இனிய மங்கலமான தாமரையைப் போன்ற முகமுள்ள
வாக்தேவதாக்யம் - வாக்தேவதா எனப்படும்
துய்யகங்காம் - ஆகாச கங்கையான
வந்தே - வணங்குகிறேன்.

உரை:

இந்த ஸ்லோகம், ஸ்ரீதாசரின் சரளமான வாக்கினை, கங்கையாக பாவித்து வணங்குகிறது. கங்கை என்று சொன்னால், இதன் உற்பத்தி எங்கு நடக்கிறது? எங்கு முடிகிறது? எப்படி பாய்கிறது? இந்த கங்கையினால் பயன்பெறுகிறவர்கள் யார்? இந்த கேள்விகளுக்கு இந்த ஸ்லோகத்தில் பதில் கிடைக்கிறது.

ஸ்ரீதாசரின் முக-கமலத்திலிருந்து பிறக்கும் சொற்களே கங்கையாகும். அவர் வழங்கும் தத்வஞானோபதேசமே கங்கை பாயும் வழியாகும். சஜ்ஜனர்களின் மனதை மகிழ்ச்சிப்படுத்துகிறது. ஸ்ரீமதாசார்யரின் சாஸ்திரங்கள் என்னும் பாற்கடலில் போய் சேருகிறது என்றால், இவரின் தாசகூட உபன்யாசங்கள் எல்லாம் ஸ்ரீமதாசார்யரின் சாஸ்திரங்களில் போய் சேருகிறது என்று பொருள். தாசரின் பாடல்களே, சூளாதிகளே ஹம்சாதி பறவையைப் போல, இவரது வாய் வழியே வந்து அலங்கரிக்கின்றது. கங்கையைப் போலவே இவரது உபன்யாசமும் நம் அனைவரின் பாவங்களையும் போக்கி, அனைவரையும் புனிதப்படுத்துகிறது. இத்தகைய கங்கையை வணங்குகிறேன். இதுவே இந்த ஸ்லோகத்தின் பொருள்.

யம்ஹி தாசார்ய வியாசார்ய ஜாதே
பார்யே குணான்விதே |அஸ்பர்தயாபி
சேவந்த்யௌ பதிமேகந்தமாஷ்ரயே ||2||

பொருள்:
யம் ஏகம் பதிம் - இந்த தாசரானவர்
தாசார்ய வியாசார்ய ஜாதே - தாசகூட மற்றும் வியாசகூட இரண்டிலும் சேர்ந்தவரான
குணான்விதே - நற்குணங்களைக் கொண்ட
பார்யே - பிரமேய ரூபங்களர்களான இரு பெண்கள்
அஸ்பர்தயாபி - கொஞ்சம்கூட யாரிடமும் த்வேஷம் பாராட்டாமல்
சேவந்த்யௌ - வணங்கிக் கொண்டிருப்பவர்
தம் - அத்தகைய தாசராயரை

ஆஷ்ரயே - வணங்குவேன்.

விளக்கம்:
தாசகூடத்தின் நோக்கத்தையே அறியாமல் அதாவது தாசராயரை பார்க்காமலேயே, உலகத்தில் பலர் அவரை ஏளனம் செய்கிறார்கள். போலவே, தாசகூடத்தை சேர்ந்த சிலரே, தாசத்வேஷிகளாக மாறி, தாசரின் பத-சூளாதிகளுக்கு சரியான பொருளை புரிந்துகொள்ளாமல், ஸ்ரீமதாசார்யரின் கிரந்தங்களுக்கும், டீகைக்கும் பொருந்தாத அர்த்தத்தை சொல்லிக்கொண்டு, ஸ்ரீமதாசார்யரின் துரோகத்திற்கு காரணமாகின்றனர். அபரோக்ஷ ஞானிகளான ஸ்ரீபாதராயர், சந்திரிகாவை இயற்றிய ஸ்ரீவியாசராஜர் ஆகியோர், தாசவியாசகூடம் என்று இரண்டிலும் அறிஞர்களாக விளங்கியிருந்ததை இவர்கள் மறந்தேவிட்டனர்.

நம் தாசராயர், தற்போதைய பல தாசர்களைப் போலல்லாமல், தாசரின் பத-சூளாதிகளுக்கு வேதாந்த சாஸ்திரங்களில் தேடி அவற்றிலிருந்து விளக்கங்களை சொல்கிறார். தற்போதைய தாசர்களில், ஒருவர் தாசகூடத்தை சேர்ந்தவர் என்றால், அவருக்கு வியாசகூடத்தவர் மேல் த்வேஷம் வந்துவிடுகிறது. ஆனால், நம் தாசர் இரண்டிலும் சிறந்தவர் ஆகையால், நான் அவரையே வணங்குகிறேன்.

சுப்பராயேதி விக்யாதம், சுப்ரமண்யாக்ய ஷண்முகம்
அஞ்ஞான சுரஹந்தாரம் ஞானசேனாபதீம் பஜே ||3||

சுப்பராயதாசரின் பெயருக்கு தக்க காரணத்தை விளக்குகிறது இந்த ஸ்லோகம்.

பொருள்:
அஞ்ஞான சுரஹந்தாரம் - அஞ்ஞானம் என்னும் தைத்யரை நாசம் செய்யும்
ஞானசேனாபதிம் - ஞானம் என்னும் சைன்யத்திற்கு அதிபதியான
சுப்பராயேதி விக்யாதம் - சுப்பராய தாசர் என்று உலகத்தில் புகழ்பெற்றிருக்கும்
சுப்ரமண்யாக்ய ஷண்முகம் - சுப்ரமண்யன் என்னும் ஷண்முகனை
பஜே - வணங்குகிறேன்.

விளக்கம்:
ஷண்முகனுக்கு சுப்ரமன்யன் என்றும் சுப்பராயன் என்றும் பெயர்கள் இருப்பது பொருத்தமே. சுப்பராய சஷ்டி, சுப்ரமண்ய சஷ்டி, ஸ்கந்த சஷ்டி என்று மக்கள் கொண்டாடுவதால், இதைப் பற்றி நாம் மேலும் விளக்கவேண்டியதில்லை. நம் தாசராயருக்கும், இதே பெயர் இருப்பதனால், இந்த பெயர் வெறும் ஒரு குறியீடு என்றில்லாமல், அவருக்கு காரணப்பெயராகவே அமைந்துவிட்டது. ஆகையால், இவரை ஷண்முகனின் அம்சம் என்று கூறினால் மிகையாகாது. இது ஈசனின் விருப்பம் என்றே அறியவேண்டும். எப்படியென்றால், ஒரு சேனாதிபதியாக இருந்து ஷண்முகன் எப்படி தைத்யர்களை அழிப்பது அவனின் கடமையாகிறதோ, அது போலவே நம் தாசராயரும் தத்வஞானம் என்னும் தேவதா சைன்யத்திற்கு தலைவராகி, அஞ்ஞானம் என்னும் தைத்ய சைன்யத்தை சின்னாபின்னமாக நாசப்படுத்துகிறார். ஆனால், ஷண்முகன் என்றால் ஆறு தலைகளைக் கொண்டவன் என்று பொருள். இவருக்கு ஆறு தலை எங்கே இருக்கிறது என்று கேட்டால்,

ஷண்முகனுக்கு ஆறு, ருத்ரருக்கு ஐந்து என்று தலைகள் இருந்தாலும், எப்போதும் அவற்றை அவர்கள் காட்டுவதில்லை. எப்போதும் அவர்கள் ஒரே தலையுடன் இருந்து, பக்தர்கள் யாருக்கேனும் சந்தேகம் வந்தால்மட்டுமே, ஐந்து அல்லது ஆறு தலைகளுடன் காட்சி தருவார்கள்.

இதைப்போலவே, நம் தாசராயருக்கும் நமக்குத் தெரியாது ஆறு முகங்கள் கண்டிப்பாக இருக்கும். அது அஞ்ஞானிகளுக்கு தெரிவதில்லை. அவை என்னவென்றால்: ஞான, பக்தி, வைராக்கியம், தர்ம, அர்த்த, காம என்னும் ஆறு முகங்களே ஆகும். இந்த முகங்கள் இருக்கும் வரிசை என்னவென்றால், முக்கிய முகங்கள் மூன்று, இதர முகங்கள் மூன்று. இதே வரிசையில் அவை உள்ளன: ஞான, பக்தி, வைராக்கியம், தர்ம, அர்த்த, காம. முக்கியமான ஞான, பக்தி, வைராக்கியங்களுக்கு, உதவியான தர்ம, அர்த்த, காம - என்றால் இதன் பொருள் என்ன?

ஞானத்திற்கு -> தர்மம். அதாவது, இவரிடத்தில், வர்ணாசிரமத்திற்குத் தக்க தர்மங்களே நிரம்பியிருக்கின்றன. அதாவது, பக்தர்களுக்கு பகவத் தத்வங்களை உபதேசம் செய்வது, மற்றவர்களுக்கு தம்மால் எவ்வித தொந்தரவுகளும் ஆகாமல், பாவ/புண்ணியம் முதலானவற்றை பொறுத்துக் கொள்ளும்படியான தர்மம் இவரிடத்தில் முக்கிய குணங்களாக இருக்கின்றபடியால், ஞானத்திற்கு பொருத்தமாக தர்மத்தைக் குறிப்பிடுகிறோம்.

பக்தி என்னும் தலைக்கு, அர்த்த என்னும் தலை பொருத்துகிறோம். இதன் பொருள் என்னவென்றால், அதிக செல்வங்களை சேர்த்து, மனைவி மக்களுக்கு அதிகப்படியான ஆபரணங்களை சேர்த்து வைக்கும் நோக்கம் இவருக்கு இல்லை. ஸ்ரீஹரியின் விசேஷமான பக்தியை செய்து, அதிலிருந்து கிடைக்கும் புருஷார்த்த ரூபமான அர்த்தமே இவரிடம் இருக்கிறது.

வைராக்கியம் என்னும் தலைக்கு, ஆறாவது தலையான காமத்தை பொருத்துகிறோம். காமம் என்றால் ஆசை. இவருக்கு தற்காலிகமான சுகங்களைப் பெறுவதில் ஆசையில்லை. வைராக்கியத்திற்கு சேர்ந்த காமம் என்றால், மகாபாரத்தில் பீமசேனர், காமத்திற்கு இணையானது வேறொம்றும் இல்லை என்று நிரூபித்திருப்பார். அது என்ன காமம் என்றால், முக்திக்கு முக்கிய காரணமான ஸ்ரீஹரியின் பரம பிரசாதத்தை விரும்புவது. அதன்படியே, இவருக்கு வாழ்க்கையில் வைராக்கியமும், ஸ்ரீஹரியின் பரம பிரசாதத்தின் மேல் விருப்பமும் இருப்பதால், வைராக்கியத்திற்கு பொருத்தமான தலையாக காமத்தைக் கூறுகிறோம்.

இப்படியாக ஆறு முகங்களைக் கொண்டிருப்பதால், இவரை ஷண்முகர் என்று சொல்வதில் எவ்வித சந்தேகமும் இல்லை. ஸ்ரீஹரியின் விருப்பத்தினாலே இத்தகைய பொருளை நான் எழுதியிருப்பதால், இதை யாரும் ஒப்பிக் கொண்டாலும், ஒப்பிக் கொள்ளவில்லையென்றாலும், அதில் எனக்கு எவ்வித லாப நஷ்டங்களும் இல்லை. 'சுப்ரமண்யாக்ய ஷண்முகம்' என்று மூலத்தில் இருக்கும்

சுப்ரமண்ய சொல்லின் பொருளை விளக்கியிருக்கிறேன். அதாவது, பிராமண என்னும் சொல்லிற்கு, யக்ஞோபவீத முதலான சின்னங்களே காரணம் இல்லை; 'பிரம்ம அணதீதி பிராம்மண:' என்று சாஸ்திரகாரர்கள் விளக்கம் அளிக்கிறார்கள். பரபிரம்மனை அடையும் சாதனை செய்பவனே பிராம்மணன். இத்தகையவரிடம் அன்பு செலுத்துகிறவன் பிரம்மண்யன் அல்லது மேலே கூறிய பிராமண லக்ஷணங்களை உடையவன். சுப்ரமண்யன் என்றால், பிரம்மனை அடைவதற்கு சிறப்பான சாதனைகளை செய்பவன் என்று பொருள்.

ஞான பக்தி வைராக்கியங்களினால், தர்மார்த்த காமங்களை பின்பற்றுபவன் என்றால்: ஸ்ரீஹரியை அடைவது ஒன்றே முக்கியமான செயலென்று தெரிவதால், சுப்ரமண்ய என்னும் சொல்லிற்கும், ஷண்முக என்னும் சொல்லிற்கும் ஒரே பொருள் என்று தெரிகிறது. 'சுப்பராயேதி விக்யாதம்' என்றால், மக்கள் இவரை சுப்பராய தாசர் என்று அழைக்கின்றனர் என்று பொருள்.

சு என்றால் சுகம். வாதி என்றால் நாசம் என்று பொருள். தற்காலிக சுகங்களை நாசம் செய்யும் அஞ்ஞானம் என்று பொருள். 'சுவம்வாதீசுவ: பவயோரபேதரதேவசுப்ப:' என்றால், சுகத்தை நாசம் செய்யும் அஞ்ஞானம். அத்தகைய அஞ்ஞானத்தை ஞானோபதேசத்தினால் பரிகாரம் செய்பவருக்கு சுப்ப என்று பெயர். சம்ஸ்கிருதத்தில் 'ப''வ' இரண்டிக்கும் வேறுபாடு இல்லாததால், சுவ்வ என்னும் சொல்லே, சுப்ப என்றாயிற்று. ரா என்றால் செல்வம். மொத்தத்தில், அஞ்ஞானத்தைப் போக்கி ஞானத்தைக் கொடுப்பவர் என்று சுப்பராயர் என்னும் சொல்லிற்கு பொருள் வந்தது. இத்தகைய மகானுபாவரான, ஷண்முக சொல்லினால் குறிப்பிடுபவரான சுப்பராய தாசரை வணங்குவேன் என்பதே இந்த ஸ்லோகத்தின் பொருள்.

சுப்ரமண்யாக்ய சூர்யந்தம் ஸ்வாந்த த்வாந்த
நிக்ருந்தகம் | தத்வஞான கரை: பூர்ணம்
குருவர்யம் அஹம் பஜே ||4||

விளக்கம்:
இந்த ஸ்லோகம், தாசராயரை சூரியன் என்று வர்ணிக்கிறது. சூரியன், புற இருட்டினை அழிப்பவன். இவரோ, 'ஸ்வாந்த த்வாந்த நிக்ருந்தகம்' - அக அஞ்ஞானத்தை அழிப்பவர். தத்வஞான கரை: பூர்ணம் - தத்வஞானம் என்னும் கிரணங்களால். குருவர்யம் - சிறந்த குருவான. தம் - முன் சொன்ன மகிமைகளைக் கொண்டவரான. சுப்ரமண்யாக்ய சூர்யம் - சுப்ரமண்ய பெயரைக் கொண்டவரான சூரியனை, அஹம் - நான், பஜே - வணங்குகிறேன்.

சதுஸ்லோகாத்மகம் இதம் குரோ: சுகுண
சம்ஸ்தவம் | பத்மனாபாக்ய தாசேன
க்ருதம் ஸ்ரீ குருவனுக்ரஹாத் ||5||

விளக்கம்:

நான்கு ஸ்லோகங்களினால் குருவின் மகிமைகளைக் கொண்டாடும் இந்த கிருதி, அந்த குருவின் அருளாலேயே, அவரின் சிஷ்யன் என்று பெயர் பெற்றுள்ள பத்மனாப தாசனால் இயற்றப்பட்டு, குருவின் சரணகமலங்களில் சமர்ப்பிக்கப்பட்டுள்ளது.

ஸ்ரீ குருவந்தர்கத ஸ்ரீ தந்தேமுத்துமோகனவிட்டல: ப்ரீயதாம் ||

இப்படியாக, மிகவும் அற்புதமான நடையில் இயற்றப்பட்டுள்ள அவரது குரு வணக்கம் மற்றும் அதன் பொருளில் பக்திரசம் ததும்பியது, பத்பனாப தாசரின் பாண்டித்யத்திற்கு மற்றும் அவரது குருபக்திக்கு சாட்சியாக இருக்கிறது.

அங்கித உபதேசமான பிறகு, குருவின் ஆணைக்கு கட்டுப்பட்டு, ஹரிகதாம்ருதசாரத்திற்கு மிகச்சிறந்த உரையை இயற்றினார். தம் உரையை குருகளின் சமர்ப்பித்த சில நாட்களிலேயே, பத்மனாப தாசர் இறைவனடி சேர்ந்தார்.

ஹரிகதாம்ருதசாரத்திற்கு பத்பனாபதாசர் இயற்றியுள்ள உரை மிகவும் அபூர்வமானது. பண்டித பாமரர்களால் கொண்டாடப்படுகிறது. மூல பாகவத ஸ்லோகங்கள் மற்றும் புராண வாக்கியங்களை உதாரணம் கொடுத்து ஹரிகதாம்ருதசாரத்தின் உட்பொருளை சரியாக விளக்கும் இந்த உரையானது தற்போதும் அனைவராலும் படிக்கப்படுகிறது. தந்தெமுத்துமோகனதாசரின் பேரன்பினால் இத்தகைய அபூர்வமான உரை ஹரிதாச உலகத்திற்கு கிடைத்துள்ளது.

ஸ்ரீதாசர், தமது உரையை ஸ்ரீபிரமோத நாம சம்வத்சரம் மாக பகுள ஏகாதசி வியாழக்கிழமையன்று (13-3-1931) முடித்து, தமது குருகளிடம் சமர்ப்பித்தார். சன்யாச ஆசிரமத்தை துறந்த சமயத்தில், ஸ்ரீஸ்ரீ சத்யத்யான தீர்த்தர் கூறியதை பின்பற்றாமல் கவலைப்பட்டு, அதன் பரிகாரமாக என்று சொல்வதைப் போல, ஸ்ரீ பத்பனாபதாசர், தம் குருகள் சொன்னதைப் போல, இந்த வேலையை செய்துமுடித்து, சில நாட்களிலேயே இறைவனடி சேர்ந்தார்.

ஆதாரங்கள்:

1. பரமார்த்த சந்திரோதயத்தில் வெளிவந்த கட்டுரைகள்.
2. 'பரமப்ரிய சுப்பராய தாசர்', குருக்ருபா கிரந்தமாலை, மைசூர்
3. தந்தெமுத்துமோகன தர்சன - பரிமள பிரகாஷன, பெங்களூரு. 50.

***

ஸ்ரீஹரிகதாம்ருதசாரத்திற்கு ஸ்ரீஜகன்னாததாசர் எழுதிய பலஸ்ருதி என்று சொல்லக்கூடிய ஒரு பாடல்

ராகம்: வராளி
தாளம்: அட்ட

தாரகவிது ஹரிகதாம்ருதசார ஜனகே

கோரதர அபார சம்சாரவெம்ப
நக சரதிகெ (தாரகவிது)

ஸ்வான சுகராதி நீச யோனிகளலி பந்து நொந்து
வைனதேய வாஹனன சன்னிதான பேகு எம்புவரிகெ (தாரகவிது)

ப்ரிய வஸ்துகளொளு பாண்டவ சகனெ அதிக ப்ரஹ்ம
வாயு உச்ச சுரரு தந்தெ தாயி எந்து அரிதவரிகெ (தாரகவிது)

க்ஞேய க்ஞான க்ஞாத்ரு பாதராயணாக்ய ஹரிய வசன
காய மனதி மாடத கர்ம ஸ்ரீயரஸனிகர்பி ஸுவகெ (தாரகவிது)

ஸ்ரீமுகுந்த சர்வமம ஸ்வாமி அந்தராத்ம பரந்தாம
தீனபந்து புண்ய நாம வெந்தரிதவரிகெ (தாரகவிது)

பூதபவ்ய பவத்ப்ரபு அனாத ஜனர பந்து ஜகன்னாத
விட்டல பாஹியெந்து மாதுமாதிகெம்புவரிகெ (தாரகவிது)

ஸ்ரீகிருஷ்ணார்ப்பணமஸ்து

குரு வணக்கம்

லட்சுமி நாராயணம் நத்வா பூர்ணபோதாதி சத்குரூன்
ஸ்ரீபாதராஜ வியாசார்ய புரந்தர குரோனபி

விஜயார்ய குரும் ஸ்ரீமஜ்ஜகன்னாத குரும் ததா
வியாகுர்வீஹம் ஹரிகதாம்ருதசாரம் யதா மதி

பாந்து மாம் சுப்பராயார்ய பாதத்வந்த்வாப்ஜ ரேணவ:
மை: பூதஸ்யபவேச்பக்திர்கந்த தாத்பர்ய வர்ணனே

குரோர் அனுக்ரஹான்யூனம் யத்கிஞ்சித் லிக்யதே மயா
தச்சாபி குருரேவாஸ்யத்வ்ருதிஸ்தித்வா கரோத்வத:

***

முன்னுரை

இந்த கலியுகத்தில் பெரும்பாலானவர்கள், சுகத்தை மட்டுமே வேண்டியவாறு, அந்த சுகத்தை அடையும் வழியை அறியாமல், சஜ்ஜனர்களும்கூட துர்ஜனர்களின் நட்பினால் அஞ்ஞானத்தைப் பெற்று கெட்டுப்போவதைக் கண்டு, த்வாபர யுகத்தின் இறுதியில் பிரம்மாதி தேவர்கள், ஸ்ரீஹரியிடம் சென்று வேண்டினார்கள். ஸ்ரீஹரி, மகாதபஸ்வியான பராசரர் மூலமாக சத்யவதியிடம் வேதவியாசராக அவதரித்து,

குறைந்த புத்தியுடைய மக்கள் அனைத்து வேதங்களையும் படிப்பது அசாத்தியம் என்று அறிந்து, அவற்றை ரிக்வேத, யஜுர்வேத, சாமவேத, அதர்வணவேத என்று நான்கு பாகங்களாகப் பிரித்தார். அந்த நான்கு வேதங்களே மேலும் பற்பல பாகங்களாகப் பிரித்து உலகத்தில் புகழ்பெற்றன. இந்த வேதங்களின் ஒரேயொரு பாகத்தையாவது படித்து, மக்கள் கடைத்தேறட்டும் என்பது வேதவியாசரின் விருப்பம். ஆனாலும், 'சதுர்வேத்யபி யோ விப்ரோ வாசுதேவம் நவிந்ததி | வேதபார பராக்ராந்த:சவை ப்ராஹ்மண கார்தப:' என்று சொல்வதைப் போல, எவ்வளவு வேதங்களைப் படித்தாலும், அந்த வேதங்கள் புகழ்வது ஸ்ரீஹரியையே என்று அறிந்து, அதன் அர்த்தங்கள் ஸ்ரீஹரியின் மகிமையையே விளக்குகின்றன என்று அறியாவிட்டால், அவன், வேதம் என்னும் பாரத்தை சுமக்கும், பிராமணன் ரூபத்தை சுமக்கும் கழுதை என்று மேற்கண்ட ஸ்லோகம் சொல்கிறது.

ஆகையால், வேதத்தின் பொருளான தத்வஞானத்தை அறிவது மிகவும் கடினம் என்று தெரிந்து வேதவியாசர் 'பிரம்ம சூத்திரத்தை' இயற்றினார். பிறகு, வேதம் படிப்பதற்கு அதிகாரம் இல்லாத பெண்கள், சூத்திரர் இவர்களின் சாதனைக்காக ஐந்தாவது வேதமாகிய, ஸ்ரீஹரியின் மகிமைகளை சிறப்பாக விளக்கக்கூடிய, மகாபாரதத்தை இயற்றினார். இவ்வளவு செய்தும், தம் அவதாரத்தின் நோக்கம் நிறைவேறவில்லை என்று கவலைப்பட்டு சிந்திக்கையில், ஸ்ரீஹரியின் சிந்தனையை அறிந்திருந்த நாரதர், வேதவியாசரிடம் வந்து, அவரால் மிகவும் வணங்கப்பட்டு, - 'ஸ்வாமி! வேதங்களைப் பிரித்துக் கொடுத்து மந்தமதிகளை கடைத்தேற்றினீர்கள். வேதங்களை படிக்க முடியாதவர்களுக்காக, மகாபாரதத்தை இயற்றினீர்கள். ஆனால் 'யதாதர்மா தயோஹ்யர்த்தா' - பாரதத்தில் தர்மத்தை எவ்வளவுக்கு எவ்வளவு விளக்கியிருக்கிறீர்களோ, அவ்வளவு வாசுதேவனின் மகிமைகளை சொல்லவில்லை. ஆகையால், மக்களின் மேம்பாட்டிற்குத் தேவையான ஞானம் அதிலிருந்து கிடைக்கவில்லை. ஆகவே, பாகவத தர்மத்தை விளக்கும்படியான பாகவதத்தை தாங்கள் இயற்றவேண்டும்' என்று நாரதர் வேதவியாசரிடம் வேண்டினார்.

இதன்பிறகே, வேதவியாசர், பாகவதத்தை இயற்றினார் என்று பாகவத முதல் ஸ்கந்தத்தில் விளக்கியிருக்கிறார். பிறகு, பிரம்மசூத்திரம், பாரதம், பாகவதங்களையும் அவற்றின் உட்கருத்துகளை அறியாமல், குழப்பத்தில் ஆழ்ந்த மக்கள், அதையே விவாதித்து கஷ்டப்படும்போது, ஸ்ரீஹரியின் கட்டளைப்படி, வாயுதேவரே ஸ்ரீமதாசார்யராக அவதரித்து அவற்றின் தத்வ நிர்ணயத்தை செய்தார். அந்த கிரந்தங்களுக்கு டீகாசார்யரே முதலான அபரோக்ஷ ஞானிகள், மிகவும் அற்புதமான உரைகளை எழுதினர். அந்த கிரந்தங்களுக்கு பற்பல விளக்க கிரந்தங்கள் வெளிவந்து உலகப்புகழ் பெற்றன. ஆனால், இவை அனைத்தும் வெறும் சம்ஸ்கிருத வித்வாம்சர்களுக்கு மட்டுமே புரியுமே தவிர, வேறு யாருக்கும் பயன்படவில்லை. வித்வாம்சராக இல்லாதவர்களுக்கு அந்த கிரந்தங்கள் எதையும் நல்வழியையும் காட்ட முடியவில்லை. தைத்யர்களிடம்கூட பாண்டித்யம் இருக்கிறது. ஞான சாதனை மட்டும் ஆவதில்லை.

ஆகையால், தகுதி பெற்றவர்கள் மட்டுமே சுதாதி கிரந்தங்களைப் படித்து முக்தி அடைகிறார்களே தவிர, தகுதி இல்லாத மற்றவர்களுக்கு அவை பயன்படவில்லை. ஜயதீர்த்த விஜயத்தில் 'சேஷாதீனாமகம்யம் தவ முகஜனிதம் சாஸ்திரமாலோட்ய கீவா வியாக்யாஸ்ம்ருந்தீதி ப்ருஷ்ட:' என்னும் வாக்கியத்தில், சேஷாதி தேவர்களுக்கும்கூட இதன் தத்வஞானம் கிடைப்பதில்லை என்று சொல்கிறார்கள். ஆனால், சாதாரண வித்வாம்சர்கள் இந்த கிரந்தம் ஞானசாதனைக்கு பயன்படாமல், 'சுதா கிரந்தத்தில் நான் சிறந்தவன். எனக்கு சமமானவர்கள் யாரும் இல்லை' என்று சொல்லி, தமது பாண்டித்யத்தை வெளிக்காட்டியவாறு திரிவதற்கு பயன்படுமே தவிர அவர்களுக்கும் ஞானசாதனை ஆவதில்லை.

ஆகையால், சுதாதி கிரந்தங்களுக்கு டிப்பணிகளை எழுதிய வியாசராஜர் (சந்திரிகாசார்யர்), ஸ்ரீபாதராஜர், ஸ்ரீவாதிராஜர் ஆகிய யதிசிரோமணிகள் கலந்தாலோசித்து, சம்ஸ்கிருதம் அறியாத மற்றவர்கள், மிகவும் சுலபமாக ஞான, பக்தி, வைராக்கியங்களை பெறுவதற்காக கன்னட மொழியில் பத, சூளாதிகளை இயற்றி, இந்த வழியிலேயே மக்களை மேம்படுத்த வேண்டும் என்றெண்ணியபோது, ஸ்ரீஹரியின் ஆணைப்படி சாக்ஷாத் நாரதரே, பண்டரிபுரத்தின் அருகில் புரந்தரகட என்னும் இடத்தில், வணிக குலத்தில் பிறந்து, அதிக செல்வத்தினால் கர்வியாக கஞ்சனாக இருந்தபோது, ஸ்ரீஹரி அவருக்கு அருளி, வைராக்கியத்தைக் கொடுத்து, தம் பற்பல கோடி மதிப்புள்ள செல்வத்தை தானம் செய்து, தாசத்வத்தை பின்பற்றி, ஸ்ரீவியாசராஜ ஸ்வாமிகளின் சன்னிதானத்திற்கு வந்தார். ஸ்வாமிகளும் மிகவும் மகிழ்ச்சியுற்று அவரை வரவேற்று, அவர் மூலமாக தாசபரம்பரையை வளர்க்கவேண்டும் என்று எண்ணி, அவருக்கு புரந்தரவிட்டலா என்னும் அங்கிதத்தைக் கொடுத்து, சாஸ்திரங்களின் சாரத்தை பதங்கள் சூளாதிகள் மூலமாக மொழிபெயர்த்து, மக்களை மேம்படுத்தி, தாசத்வம் பரம்பரையாக வளர்வதற்கு வழிசெய்யவும் என்று ஆணையிட்டார்.

இதற்கு முன்னரே, ஸ்ரீவியாசராயரும், ஸ்ரீஸ்ரீபாதராயரும் கன்னட பதங்களை இயற்றியிருந்தாலும், அவர்கள் யதிகளாக இருந்ததாலும், வேதாந்த கிரந்தங்களுக்கு டிப்பணி எழுதக்கூடிய கடமைகள் அவர்களுக்கு இருந்ததாலும் தாசர் என்னும் பெயர் அவர்களுக்கு வரவில்லை. ஆகையால், புரந்தரதாசரே தாசகூடத்திற்கு மூலபுருஷர் என்று சொல்லவேண்டியதாகிறது. இதற்கு முன்னர், தாசர் என்னும் சொல் இல்லாமல், ஆசார்யர் என்றே சொல் இருந்தது. ஆசார்யர் என்றால் உபதேசித்த குரு என்ற பொருள் வருகிறது. அதற்கு தகுதி இருந்தால் மட்டுமே, ஆசார்யர் என்னும் சொல் அதற்குத் தக்க பொருள் தருகிறது. இக்காலத்தில், தகுதி இல்லாதவர்களும், ராம என்னும் சொல்லின் பொருள் தெரியாதவர்கள்கூட, ஆசார்யர் என்று அழைத்தாலே கர்வம் கொள்கிறார்கள். மகானுபாவரான ஸ்ரீஜகன்னாததாசரின் வாழ்க்கையே இதற்கு சரியான உதாரணமாகிறது. அதற்காகவே, புரந்தரதாசர், தாசர் என்று அழைத்துக் கொண்டார். ஆசார்யர் போல தாசர் குரு ஸ்தானத்தை கொடுக்கவில்லை. மாறாக தான் எல்லோரைவிடமும் குறைந்தவன் என்ற எண்ணத்தைக் கொடுக்கக்கூடியது. ஆகவே தானும், தனக்குப் பின்னால் வரக்கூடிய பரம்பரையும் ஹரிதாசர்கள் என்றே அழைக்கப்படுவர்

என்றார். ஆகவே, புரந்தரதாசருக்குப் பிறகு, தாசகூட, வியாசகூட என்று இரண்டு வழிகள் தோன்றின.

குறைந்த புத்தி உள்ளவர்கள் மட்டுமே இந்த தாசகூட, வியாசகூட இருவருக்கிடையே குழப்பம் / சண்டை விளைவிக்கின்றரே தவிர, ஞானிகள் எப்போதும் அப்படி நினைப்பதில்லை. சுளாதி கிரந்தங்களைப் படித்து, ஸ்வாமிகளின் சிஷ்ய பரம்பரையில் சேர்ந்து, வேதாந்த கிரந்தங்களைப் படித்து வரும் ஆசார்யர்கள் அனைவரும் வியாசகூடத்தவர் என்றும், வேதாந்த கிரந்தங்களுக்கு உரை எழுதும்போது கன்னடத்தில் பதம், சுளாதி போன்றவற்றை இயற்றி, சிஷ்ய பரம்பரையில் அங்கிதத்தைப் பெற்றவர்களை தாசகூடத்தவர் என்றும் நினைக்கவேண்டுமே தவிர, ஸ்ரீமதாசார்யரின் சித்தாந்தங்களுக்கு எதிராக, தாசகூடத்தவர்கள் ஒரு எழுத்தையும் எழுதவில்லை என்று நம்பவேண்டும்.

புரந்தரதாசர், பற்பல சாஸ்திரங்களை படித்து, மிகச்சுலபமாக பகவத்பக்தி பிறக்கும் வழியினை எடுத்துக்கட்டும் கன்னட பதங்களை இயற்றினார். இந்த பதங்கள் எவ்வளவு சுலபமாக இருந்தாலும், குருகளிடமிருந்து உபதேசம், அங்கிதம் பெற்று, குருவின் அருளுக்கு பாத்திரராகிருந்தால் மட்டுமே, அபரோக்ஷமோ, முக்தியோ கிடைப்பதற்கு சாத்தியம் என்று சொல்லி, அதற்கேற்ப பல பாடல்களை இயற்றியுள்ளார். அதில் ஒன்றை மட்டும் இங்கே பார்ப்போம்.

ராகம்: நாதநாமக்ரியை
தாளம்: சாபு

சுலபவல்லவோ மஹானந்த ||ப||
அதர வலஹ திளியபேகோ குரு தயாதிந்த ||அப||

பெக்கன்னு இலி நுங்கோதனக |கடு
ரக்கசிய கண்டு கிளி நுங்கோதனக ||
மக்கள பக்ஷிசோதனக |மத
சொக்கித கஜவன்னு நரி நுங்கோதனக ||1||

இப்பரு ஒந்தாகோதனக |மூரு
ஹப்பித பெட்டவ நொண நுங்கோதனக |
ஒப்பள கொடோதனக |கெட்ட
குப்பியு ராஜஹம்ஸனாகோதனக ||2||

ஔஹொர கொந்தாகோ தனக |
தா கண்டேனெம்போ பாவ பைலாகோ தனக |
பௌகினொளகெ காணோதனக |
சிரி புரந்தரவிட்டலன தய பாஹோதனக ||3||

இதன் பொருள்:

மஹானந்த = முக்தி. இதனை அடையவேண்டுமெனில் 'அதர வலஹ திளியபேகோ குரு தயாதிந்த' - குருவின் பரிபூர்ண அருளுக்குப் பாத்திரராகி, அவரின் உபதேசத்தினால் மோட்சத்தின் வழியை அடையவேண்டும். அப்படியில்லை எனில், 'சுலபவல்லவோ மஹானந்த'. அப்படி குருவின் அருளினால் மிகச் சுலபமாக முக்தியை அடையலாம். இதன் ரகசியமென்ன? 'பெக்கன்னு இலி நுங்கோதனக' எலியைப் பிடிப்பதற்காக காத்திருக்கும் பூனையைப் போல, நாம் கஷ்டப்பட்டு சேகரித்திருக்கும் புண்ணியத்தை அழிக்கக் காத்திருக்கும் கர்வம், தற்பெருமை (நான், எனது என்னும் பாவம்) ஆகியவை முக்திக்கு பெரும் தடையாக இருக்கின்றன. எலியானது பூனையை பிடித்து உண்பது எப்படி சாத்தியமில்லையோ, அப்படியே கர்வம், தற்பெருமை ஆகியவற்றை ஒழிப்பது கஷ்டமே ஆயினும், மனம் என்னும் எலிக்கு இறையருள் என்னும் பலத்தைக் கொடுத்து, குருவின் அருளினால் தைரியத்தை அதிகமாகப் பெற்று, நான், எனது என்னும் பூனையை தின்பதுபோல செய்யவேண்டும். குருவின் அருளினால் உண்டாகும் இறையின் பிரசாதத்தினாலேயே நான், எனது என்னும் எண்ணங்களை போக்கவேண்டும். சாதாரண முயற்சிகளால் இது சாத்தியம் இல்லை என்பது பொருள்.

மோட்சத்திற்கான முதல் படி:
நான், எனது - என்னும் சுயநலத்தை விட்டுவிடவேண்டும்.

இரண்டாவது படி:
பெரிய அரக்கியைப் போல வாயைத் திறந்துகொண்டு நம்மை தின்ன வருவதைப் போல வருவது காமம் ஆகும். இந்த ஆசை, மனிதர்களை அழிக்கவல்லது. அரக்கியை அழிப்பது எப்படி மிகவும் கஷ்டமோ, அதைப் போலவே இந்த ஆசையை விடுவதும் மிகவும் கஷ்டமாகும். இந்த ஆசையை கொஞ்சம் கொஞ்சமாக அழித்து, அந்த அரக்கியை அழிக்கவேண்டும். அதற்கு குருவருள், ஸ்ரீஹரியின் கருணை தேவையாகும்.

மூன்றாவது படி:
சுக துக்கங்கள் இரண்டும் கோடை, குளிர் காலங்களைப் போல மாறி மாறி அனைவரது வாழ்க்கையில் வரக்கூடியவை. அவற்றிலிருந்து வரும் சுகம், துக்கங்களே ஒருவருடைய மக்கள் என்று நினைக்கவேண்டும். அவற்றை கடக்க வேண்டுமெனில், சுக, துக்கங்களுக்கு கட்டுப்படாமல், மன உறுதியுடன் அவற்றை அங்கங்கேயே விட்டுவிடவேண்டும். அதாவது, ஆசையை விடவேண்டும் என்று சொல்வது போல் ஆகிறது. அது எப்படியெனில்:

மாத்ரா ஸ்பர்ஷஸ் து கௌந்தேய சீதோஷ்ண சுகதுக்கதா: - என்று கீதையில் சொன்னதைப் போல, சுக துக்கங்கள் அஞ்ஞானிகளை மட்டுமே பாதிக்கும். அவை ஞானிகளை பாதிப்பதில்லை. உறவினர்களான மனைவி, மக்கள் மேல் அதிக அன்பு செலுத்தி, மகிழ்ச்சி / துக்கங்களைப் பெறுவர் மக்கள். இந்த உடல் அழியக்கூடியது. ஜீவனுக்கு அழிவில்லை. 'பின்ன ஜீவ, பின்ன கர்ம' என்று சொல்லியிருப்பதால், மனைவி மக்கள் என்னும் சம்பந்தம் ஜீவனுக்கு இல்லை என்னும் தெளிவு

இல்லையெனில், யாருடைய பேச்சும் நம்மை பாதிப்பதில்லை. ஆகையால், மோகத்தை விடவேண்டும் என்ற பொருள் வருகிறது.

நான்காவது படி:
'மத சொக்கித கஜவன்னு நரி நுங்கோதனக'. மதயானையைப் போல இருப்பது கோபம். 'க்ருத்தோ ஹன்யாத்குரூனபி' அதாவது ஸ்வரூபத்தை மேம்படுத்துவதற்கு, தேகத்தைக் கொடுத்த பெற்றோர்களை, ஞானோபதேசம் செய்த வித்யாகுருகளை, கோபத்திற்கு ஆளானவன் கொன்று விடுகிறான். ஆகையால், கோபம் நமக்கு மிகப்பெரிய எதிரி. நம் மனம் நரியைப் போல பேராசை கொண்டது. (இது அனைவரது மனதின் சுபாவமே ஆகும்). இத்தகைய மனதிற்கு ஹரிகுருகளின் அருள் என்னும் பலத்தைக் கொடுத்து, மதயானையைப் போலிருக்கும் கோபத்தை அடக்கவேண்டும் என்பது பொருள்.

ஐந்தாவது படி:
'இப்பரு ஒந்தாகோதனக'. இப்பரு என்றால் இருவர். பரமாத்மா ஒருவன். இவ்வுலகில் இருக்கும் அனைத்தும் மற்றொன்று. இந்த இரண்டையும் ஒன்றாக நினைக்கவேண்டும். இதை ஞானிகள் 'பாவாத்வைத' என்பர். அதாவது:

'கார்ய காரண வஸ்வைக்ய தர்ஷனம் படதந்துவத் | அவஸ்துத்வா த்வகல்பஸ்ய பாவாத்வைதம் ததுச்யதே' ||. காரண காரியங்களின் ஐக்கிய சிந்தனையே பாவாத்வைதம். உதாரணத்திற்கு: காரியபூதமான ஆடைக்கு காரணம் நூல். இந்த நூலே பின்னர் ஆடை எனப்படுகிறது. ஆனாலும், நூலுக்கும், ஆடைக்கும் வேறுபாடு இருக்கிறது. ஆடையைப் பார்த்து, இது நூல் என்று யாரும் சொல்வதில்லை. அப்படியே நூலைப் பார்த்து ஆடை என்றும் யாரும் சொல்வதில்லை. எப்படி நூலே, ஆடையாகி மாறியிருக்கிறதோ, அதைப்போலவே பரமாத்மன் காரணனாகியும், இந்த உலகம் கார்யமாகவும் இருப்பதனால், பரமாத்மனே விஷ்வரூபத்தினால் இவ்வுலகில் வியாபித்து (இவ்வுலகிலிருந்து வேறுபட்டு), பிரபஞ்சரூபியாக இருக்கிறான். இப்படியாக நினைப்பதற்கு, பாவாத்வைதம் என்று பெயர். உலகத்தில் இருக்கும் பகவத் ரூபத்தையும், பகவந்தனின் மூல ரூபத்தையும், ஒன்றாக நினைக்கும்வரை முக்தி சுலபமல்ல.

இதைப்போலவே க்ரியாத்வைதத்தையும், கிரஹணாத்வைதத்தையும் புரிந்துகொள்ள வேண்டும். க்ரியாத்வைதம் என்றால் என்ன? 'யத்ப்ரம்மணே பரே சாக்ஷாத் சர்வ கர்ம சமர்ப்பணம் | மனோவாக் தனுபி: பார்த்த க்ரியாத்வைதம் ததுச்யதே'. மனம், வாக்கு, தேகத்தினால் நாம் செய்யும் அனைத்து செயல்களையும் ஸ்ரீஹரிக்கு சமர்ப்பணம் செய்தவாறு, ஸ்ரீஹரியே நமக்குள் இருந்து அச்செயல்களை செய்விக்கிறான் என்று நினைப்பதே க்ரியாத்வைதம். இருவர் ஒன்றாவதைப் போல இரண்டும் ஒன்றாகிறது என்று பொருள். நாம் செய்யும் செயல்களை நமக்குள் இருக்கும் ஸ்ரீஹரியே செய்கிறான் என்று நினைக்கும்போது இரண்டும் ஒன்றாகிறது என்கிற எண்ணம் வருகிறது.

த்ரவ்யாத்வைதம் என்றால் என்ன? 'ஆத்ம ஜாயா சுதாதீனாமன்யேஷாமபி தேஹினாம் | யத்ஸ்வார்த்த காமயோரைக்யம் த்ரவ்யாத்வைதம் ததுச்யதே'. 'ன்ருகோ கராஷ்வமர்காகி சரீஸுபவிமக்ஷிகான் | ஆத்மன: புத்ரவத்பஷ்யே த்ரைரேஷாமந்தரம் கியத்' மனிதன், பசு, கழுதை, குதிரை, குரங்கு, எலி, பாம்பு போன்ற மிருகங்களையும், புழு, பூச்சி போன்றவற்றையும் தன் மக்களைப் போலவே நினைக்கவேண்டும். அதாவது, குதிரை, கழுதை போன்றவற்றிக்கும் தனக்கும் எவ்வளவு சம்பந்தம் இருக்கிறதோ, அவ்வளவே சம்பந்தம், தனக்கும் தன் மக்களுக்கும் இருக்கிறது என்று நினைப்பதே த்ரவ்யாத்வைதம். இப்படி மூன்று விதமாக 'எரடன்னு ஒந்தாகி பாவிசபேகெம்புவதே' என்னும் வரியின் விளக்கத்தை அறியலாம்.

ஆறாவது படி:
மூரு ஹப்பித பெட்டத நொண நுங்கோதனக - கஞ்சத்தனம், மதம், கர்வம் என்னும் இம்மூன்றும் மூன்று மலைகளைப் போல வளர்ந்து, நாம் செய்த புண்ணியங்கள் அனைத்தையும் நாசம் செய்கின்றன. இம்மூன்றும், சிறிய கிருமியைப் போல இருக்கும் நம் மனதினை கட்டுப்படுத்துகின்றன. மனக் கட்டுப்பாட்டின் மூலமே இவற்றை ஜெயிக்கவேண்டும் என்று பொருள். இதில் கொடுக்கப்பட்டுள்ள உதாரணங்களைப் பார்த்தால், இது மிகவும் சுலபமான விஷயம் என்று நாம் நினைக்கக்கூடும். ஆனால், எலி முதலான சிறிய பிராணிகளைப் பிடிக்கவேண்டுமானாலும் மிகப்பெரிய விஷயங்களை செய்வதுபோல, கடினமான வேலைகளை செய்தே மனக் கட்டுப்பாட்டினை கொண்டுவர வேண்டுமே தவிர, இது சுலபமாக முடியக்கூடியது அல்ல. குருவருள் முதலான விஷயங்களினாலேயே மேற்படி விஷயம் முடியும் என்று பொருள்.

ஏழாவது படி:
'ஒப்பள கூடோதனகா" ஒப்பளு - என்றால் புத்தி. மனைவியை வசப்படுத்துவது போல் அதனை வசப்படுத்த வேண்டும். தவறுகளை திருத்தி உடன் வைத்துக்கொண்டு, நற்சாதனைகளை செய்யவேண்டும் என்று பொருள்.

எட்டாவது படி:
'கெட்ட குப்பியு, ராஜஹம்ஸ னாகோதனகா'. பரமாத்மனுக்கு பிரதிபிம்பனான ஜீவன், தான் ஸ்வதந்திரன் என்று நினைத்து, ஹம்ஸ ரூபியான (தோஷங்கள் அற்ற) பரமாத்மனுக்கு தான் பிரதிபிம்பன் ஆகையால், தானும் ஹம்ஸன் என்னும் ஞானமில்லாமல் வீணாக குருவி போல் வாழ்க்கையை கழிக்கிறான். இந்த நினைப்பை விட்டு, பிம்ப பிரதிபிம்ப பாவத்துடன், தானும் ஹம்ஸனைப் போன்றவனே என்று அறியவேண்டும் என்பதே பொருள். இப்படி சொல்வதால், பரமாத்மனின் சாரூப்யத்தை மட்டுமே சொல்கிறார் என்றும், பரமாத்மனில் ஐக்ய பாவத்தை சொல்லவில்லை என்றும் புரிந்துகொள்ள வேண்டும்.

ஒன்பதாவது படி:

’ஔஹொரகொந்தாகுவதன’. தன்னுள் இருக்கும் பகவத் ரூபத்திற்கும், பிரதிமைகள், பிராமணர்கள் ஆகிய அனைவரிலும் இருக்கும் பகவத்ரூபத்திற்கும் அபேத சிந்தனை செய்யும்வரை என்று பொருள்.

பத்தாவது படி:
’தா கண்டேனெம்போ பாவ பைலாகுவ தனக’. இதுவரை நாம் தற்காலிக விஷயங்களில் மனதை பறிகொடுத்து அதுவே சுகம் என்று நினைத்து வந்திருக்கிறோமோ அவை சுகமல்ல, அவை நிரந்தர சுகமல்ல என்ற நினைவு நம் மனதிற்கு வரும்வரை என்று பொருள். இதையே பகவத்கீதையில் - ‘யா நிஷா சர்வபூதானாம் தஸ்யாம் ஜாகர்த்தி சம்யமே | யஸ்யாம் ஜாக்ரதி பூதானி சா நிஷா பஷ்யதோ முனே:’ என்று கூறியிருக்கிறார். இதன் பொருள்: பகவத் விஷயங்களில் அனைத்து பிராணிகளுக்கும் இரவானது, யோகிகளுக்கு அதுவே காலைப் பொழுதாகும். அப்போது அனைத்து பிராணிகளும் தெளிந்து விழிக்கின்றரோ, அப்போது யோகிகள் தூங்குகின்றனர். இதே பொருளையே இந்த இடத்தில் அறியவேண்டும்.

பதினொன்றாவது படி:
’பௌகினொளகெ காணுவதனக’. ஞானம் என்னும் ஒளியால் பகவத்ரூபத்தை, அபரோக்ஷத்தில் காணும்வரை என்று பொருள்.

பன்னிரெண்டாம் படி:
’சிரி புரந்தரவிட்டலன தய பாஹோ தனகா’. ’ நாயமாத்மா ப்ரவசனேன லப்யோ நமேதயா நபஹுனா ஸ்ருதேன | யம்யைவேஷ வ்ருணுதே தேன லப்ய: தஸ்ம்யைஷ ஆத்மா விவ்ருணுதே தனூம் ஸ்வாம் ||. அதாவது, எவ்வளவு பெரிய பண்டிதரானாலும், ஸ்ரவண மனனங்களை செய்தாலும், அதனால் மட்டுமே அபரோக்ஷம் கிடைப்பதில்லை. எதையும் எதிர்பாராத பக்திக்கு ஸ்ரீஹரி மெச்சி, தன்னை காட்டிக்கொள்வான் என்று நமக்கு புரியும்வரை. அதாவது, ஸ்ரீபரமாத்மனின் பரம பிரசாதம் கிடைக்கும்வரை முக்தி சுலபமல்ல என்று பொருள்.

அதற்காக தாசர்கள், முக்திக்கான வழியென்று - ‘அஹம் மமதா த்யாக’. நான் என்பதை விடுங்கள் என்றனர். பரமாத்மனின் பரமபிரசாதம் கிடைப்பதற்கான சாதனமாக 12 படிகள் இருந்தாலும் அவற்றை ஒரே சொற்றொடராக சுலபமாக சொல்லி புரியவைத்தனர். இதையே, பாகவதம் 4வது ஸ்காந்தம், 22வது அத்தியாயம், 21ம் ஸ்லோகத்தில் சனத்குமாரர்கள் ப்ருது ராஜனுக்கு உபதேசம் செய்யும்போது ‘சாஸ்திரேஷ்டியானேவ சுனிஸ்சிதோ ந்ருணாம்’ என்றனர். அதாவது, அனைத்து சாஸ்திரங்களையும் கரைத்துக் குடித்து பார்த்தால், இப்போது நாம் சொல்லும் இந்த விஷயமே சாரமாக இருக்கிறது என்று சொல்லி, 10-15 ஸ்லோகங்களில் முக்திக்கான சாதனங்கள் அனைத்தையும் போதித்தனர். தாசராயரும் அதே கருத்தை மனதில் வைத்து, முக்கியமான வழியை இந்த பதத்தில் சொல்லியிருக்கின்றனர்.

இப்படியாக புரந்தரதாசர் முதலானவர்கள் இயற்றிய கிரந்தங்களில் இருந்தாலும், அனைத்து வேத, பாரத, பாகவதத்தைப் படிக்கத் தகுதியற்றவர்களுக்கும் முக்திக்கான சாதனமான தத்வஞான, வைராக்யம் கிடைப்பதற்கான ஒரு கிரந்தத்தை இயற்றி, அனைத்து பாமர மக்களையும்கூட மேம்படுத்தும் யோசனையுடன், விஜயதாசரின் பிரசிஷ்யரும், பாகண்ண தாசரின் சிஷ்யருமான ஜகன்னாததாசரின் கனவில், ஸ்ரீபாதராயர், ஸ்ரீவியாசராயர், ஸ்ரீவாதிராஜர் மற்றும் ஸ்ரீபுரந்தரதாசர் ஆகியோர் வந்து - பாரத, பாகவத மற்றும் அனைத்து புராண சாஸ்திரங்களின் சாரமாக - மோட்சத்திற்கு உதவி செய்யும் ஒரு கிரந்தத்தை இயற்றுங்கள் என்று ஆணையிட்டனர். அதற்கேற்ப ஜகன்னாததாசரும் அற்புதமான 'ஹரிகதாம்ருதசார' என்னும் கிரந்தத்தை இயற்றினார்.

அப்படியெனில், மேலே கூறியவற்றை கவனித்துப் பார்த்தால், பாரதத்தினால் மக்கள் மேம்படமாட்டார்கள் என்றும், நாரதரின் வேண்டுகோளுக்கிணங்க ஸ்ரீவேதவியாசர் பாகவதத்தை இயற்றினார். அதனாலும் மக்கள் மேம்படமாட்டார்கள் என்றும், இந்த ஹரிகதாம்ருதசார கிரந்தத்தை இயற்றினார் என்றால் - இதன் பொருள் என்ன? வேதம், பாரதம் ஆகியவற்றைவிட பாகவதம் சிறந்தது என்றும், பாகவதத்தைவிட இந்த கிரந்தம் (ஹரிகதாம்ருதசாரம்) சிறந்தது என்றும் சொல்லலாமா? அப்படி சொன்னால், ஸ்ரீமதாசார்யரின் வாக்கிற்கு எதிராக பொருள் வருகிறது. பாரதத்தில் சொல்லப்படாத பகவந்தனின் மகிமைகள் வேறு எந்த சாஸ்திரங்களிலும் சொல்லப்படவில்லை. வேறு எந்த சாஸ்திரங்களிலும் சொல்லப்படாத பகவன் மகிமைகளை பாரதத்தில் காணலாம். 'தஸ்மாத்யத் பாரதேனோக்தம், தத்தினைவாஸ்தி குத்ரசித் | அத்ரோக்தம் சர்வ சாஸ்திரேஷு நஹி சம்யகுதாஹ்ருதம் ||' என்று ஸ்ரீமதாசார்யர் மகாபாரத தாத்பர்ய நிர்ணயத்தில் சொல்கிறார். இதிலிருந்து பாரதம், சர்வோத்தம கிரந்தம் என்று தெரியவருகிறது.

அப்படியெனில் நாரதர் - 'யதா தர்ம தயோஹ்யர்த்தா: ' இந்த ஸ்லோகத்தில், பாரதத்தில் தர்மாதி விஷயங்களை எவ்வளவு அதிகம் சொல்லப்பட்டிருக்கிறதோ அவ்வளவுக்கு வாசுதேவனின் மகிமைகளை சொல்லவில்லை என்றிருக்கிறார். எனில் அவரது அபிப்பிராயம் என்ன? பாரதம் என்பது அனைத்தையும்விட சிறந்த கிரந்தம்தான். ஆனால் 'வாசுதேவஸ்ய மஹிமா பாரதே நிர்ணயோதித: பாஷாஸ்து த்ரிவிதாஸ்தத்ர மயாவ்யை சம்ப்ரதர்ஷிதா:, உக்தயோ மஹிமா விஷ்ணோ: சதோக்தோஹி சமாதினா'. இந்த ஸ்லோகம் ஹரிவம்சம் - பவித்யத் பர்வத்தில் சொல்லப்பட்டிருக்கும் வியாஸ வாக்கியம். நான், வாசுதேவனின் மகிமைகளை பாரதத்தில் விசேஷமாக நிர்ணயம் செய்திருக்கிறேன். ஆனால் அதில் பொதுவான மொழி, ரகசிய மொழி மற்றும் சமாதி மொழி என்று மூன்று விதங்களில் அதன் பொருளை சொல்லியிருக்கிறேன். விஷ்ணு மகிமைகளை மட்டும் சமாதி மொழியிலேயே சொல்லியிருக்கிறேன் என்பதை நிர்ணயத்தில் சொல்லியிருக்கிறார்.

இந்த வாக்கியத்தினால், பொதுவான மொழியினால் தெரியும் பாண்டவர்களின் கதை என்னும் ஒரு அர்த்தத்தை மட்டுமே மனிதர்கள் தங்களின் தகுதிக்கேற்ப புரிந்துகொள்ள முடியுமே தவிர, பகவந்தனின் மகிமைகளால் கூடிய ஆத்யாத்ம

பாரதத்தின் உள் அர்த்தத்தை தேவதைகளாலும் புரிந்து கொள்வதற்கு சாத்தியமில்லை. நிர்ணய 2வது அத்தியாயத்தில்:

’ஏவமத்யாத்ம நிஷ்டாம் ஹி பாரதம் சர்வமுச்யதே | துர்விக்ஞேய மதஸ்சர்வைர் பாரதந்து சுரைரபி | ஸ்வயம் வ்யாஸோஹி தத்தேவ தத்பிரசாதத:. ததாபி விஷ்ணுபரதா, பாரதே சாரசங்க்ரஹ:’

இப்படியாக பாரதத்தின் உள்-அர்த்தத்தை ஆத்யாத்ம அர்த்தத்தை தேவதைகளாலும் புரிந்துகொள்வதற்கு சாத்தியம் இல்லை. அதன் அர்த்தத்தை வேதவியாசதேவர் மட்டுமே அறிவார். அவரின் அருளால் பிரம்மதேவர் அறிவார். ஆனாலும், பாரதம் முழுக்க விஷ்ணுவைப் பற்றியே சொல்லப்பட்டிருக்கிறது என்று சொல்லலாம்.

ஆகையால், பாரதத்தில் எவ்வளவு பகவன் மகிமைகள் இருந்தாலும், அதைப் படிக்க தகுதியற்ற மனிதர்களுக்கு அதனால் என்ன பயன்? ஆகவே, பகவந்தனின் விருப்பப்படி, பாரதத்தில் பகவந்தனின் மகிமைகள் சொல்லப்பட்டிருந்தாலும், நாரதர் பாகவத்தை இயற்றும்படி வேண்டினார்.

இதாவது வெறும் தேவாதிகாரியாகவே இருக்கிறது. அதனால், பாரதமானது துவக்கம் முதல் கடைசிவரை சாறு நிறைந்த கரும்பினைப் போன்று இனிக்கிறது. இப்படியாக, பாரதம் என்னும் கரும்பானது, 18 கண்களைக் கொண்டு, ஒவ்வொரு பர்வமும் சிறப்பான சாற்றினை முழுமையாகக் கொண்டுள்ளது. என்னதான் கரும்பில் சுவை இருந்தாலும், பல் முளைக்காத குழந்தைகளும், பல் விழுந்த வயதானவர்களும் அதை சுவைக்க முடியாது. அப்படியே பாரதம் படிப்பதும் மனிதர்களுக்கு சாத்தியம் இல்லை என்று நினைத்து, கரும்பைப் பிழிந்து சாற்றினை பிரித்தெடுப்பதைப் போல பாகவதத்தை இயற்றினார். ஆகவே பாகவதம் ‘அம்ருதத்ரவ சம்யுதம்’ அமிர்த ரசத்தினால் (முக்தி ரசத்தினால்) ஆனது என்று சொல்கின்றனர். இந்த பாகவதமும்கூட சாமான்ய மனிதர்களுக்கு ஞானத்திற்கான சாதனை அல்ல. ஏனெனில் ’நிர்மத்ஸராணாம் சதாம் வேத்யம்’ என்னும் வசனத்தால் தன்னைவிட உத்தமரிடம் பொறாமை கொள்ளாதவர்களே பாகவதம் படிப்பதற்கு தகுதியானவர் என்று சொல்லியிருப்பதால், ஸ்வரூப ஞானம் உள்ள தேவதைகளே பாகவதம் படிப்பதற்கு முக்கிய அதிகாரிகள் என்று சொல்லவேண்டியதாயிற்று. பாரதத்திற்கு பிரம்மதேவரே அதிகாரி என்றும், பாகவதத்திற்கு தேவதைகளே அதிகாரிகள் என்று மேலே சொன்னவைகளிலிருந்து தெரிய வருகிறது. ஆகையால், ஒரு பாத்திரத்தில் கரும்பு சாற்றினை வைத்தால், அதை களங்கமான தண்ணீர் என்று நினைத்து, அதன் உண்மையான ருசியை அறியாமல், புருஷர்கள் எப்படி அதை குடிக்காமல் இருப்பார்களோ அப்படி பாகவதத்தின் மகிமைகளை அறியாமல்; மற்றும் சம்ஸ்கிருதத்தை அறியாத மனிதன் அதிலிருக்கும் ரசத்தை குடிக்கமாட்டான். ஆகையால் பாகவதத்தில் ‘ரசிகா பாவிபாவுகா:’ பாகவதத்தின் ருசியை அறிந்தவர் யாரோ, அவரே இதை குடியுங்கள் என்று கூறினார். ஆகையால், பாகவதமும்கூட அனைவரும் படிக்கக்கூடியதாக இல்லை. ஆகையால், கன்னட மொழியிலேயே தத்வஞானம் தெரிவதற்கு, சுலபமாக

வைராக்கியம் கிட்டுவதற்கு சாதனமான இந்த கிரந்தத்தை இயற்றுவதற்கு பகவத் அனுமதி கிடைத்தது. இந்த கிரந்தத்திற்கு ‘ஹரிகதாம்ருதசார’ என்று பெயரிட்டார்.

இதன் பொருள் என்ன? ஹரிகதை என்னும் அம்ருத ரசத்தினால், ஒரு கரும்பைப் போல இருக்கின்றன வேதங்கள், பாரதம் ஆகியவை. இவற்றிற்கு ஹரிகதை என்று பெயர். அம்ருதம் என்றால் அவற்றின் சாரம். ஆக, ஹரிகதாம்ருத என்றால் பாகவதம் என்று சொல்லலாம். அதன் சாரம் என்றால், கரும்பினை காய்ச்சி சர்க்கரை எடுப்பதைப் போல இந்த கிரந்தமும் இருக்கிறது. பாரதாதி கிரந்தங்கள் கரும்பு. அதன் சாறு பாகவதம். அதிலிருந்து கிடைக்கும் சர்க்கரை போன்றது இந்த கிரந்தம். வெல்லம் அல்லது சர்க்கரை இவற்றைப் பார்த்தால் உடனடியாக அடையாளம் கண்டுகொள்வர். போலவே, பகவத் பக்தரான பாமரர்களும் பண்டிதர்களும் கூட இந்த கிரந்தத்தை படிப்பதற்கு தகுதியானவர்கள் என்று சொல்வது போலாயிற்று.

ஸ்ரீஜகன்னாததாசர் இந்த கிரந்தத்தை 32 சந்திகளாக பிரித்து, தொன்று தொட்டு வரும் பழக்கமாக கிரந்தத்தின் துவக்கத்தில், மூன்று வரிகளில் பொருள் நிறைந்த பல்லவியை இயற்றியிருக்கிறார்.

***

## பாவபிரகாசிகை : சந்தி 1 : மங்களாசரண சந்தி

**ஹரிகதா$^{2}$ம்ருதசார கு$^{3}$ருக$^{3}$ள**
**கருணதிந்தா$^{3}$பனிது பே$^{1}$ளுவே**
**பரம ப$^{4}$கவத்$^{3}$ப$^{4}$க்தரித$^{3}$னாத$^{3}$ரதி கேளுவுது$^{3}$**

ஹரிகதாம்ருதசார = ஹரிகதாம்ருதசாரம் என்னும் இந்த கிரந்தத்தை
குருகள = எனக்கு உபதேசம் செய்தவரை
கருணதிந்தா = அவரது கருணையினால்
ஆபனிது = எனக்கு தெரிந்தவரையில்
பேளுவே = கூறுவேன்
பரம = பலாபலன் பார்க்காமல்
பகவத்பக்தரு = ஸ்ரீஹரியிடம் பக்தி செய்பவர்கள் (எந்த தடையுமில்லாமல் பக்தி செய்பவர்கள்)
இதன = இந்த கிரந்தத்தை
ஆதரதி = மிகவும் நம்பிக்கையுடன்
கேளுவுது = கேட்கலாம்.

முதலில் மங்களாசரணத்தை செய்யாமல், கூறுவேன் என்று சொல்லி, பிறகு மங்களாசரணத்திற்காக ஒரு சந்தியையே இயற்றியிருக்கிறார். ‘நத்வா சூத்ரார்த்த உச்யதே’ என்று ஸ்ரீமத்வர் பல கிரந்தங்களை மங்களாசரணத்துடன் துவக்கியிருக்கிறார். மேலும் ஒரு கிரந்தத்தை படைக்க வேண்டுமென்றால்,

அதற்கான விஷயம், பலன், அதிகாரி, சம்பந்தம் என்னும் நான்கு லட்சணங்களை சொல்லாமல், அந்த கிரந்தத்தை துவக்கக்கூடாது என்பது ஸ்ரீமத்வரின் சம்பிரதாயம். இதையே ஸ்ரீதாசரும் இந்த கிரந்தத்தின் துவக்கத்தில் கூறுகிறார்.

நாராயணம் நமஸ்க்ருத்ய - என்னும் மங்களாசரண ஸ்லோகத்துடன் துவங்கும் பாரதாதி கிரந்தங்களின் பொருளை விளக்கிக் கூறும் வகையில், 'மங்களாசரண சந்தி' என்று ஒரு சந்தியையே இயற்றியதோடு மட்டுமல்லாமல், ஒவ்வொரு சந்தியும் துவக்கும்போது படிப்பவரின் சௌகரியத்துக்காக மங்களாசரண பல்லவியை உருவாக்கி, சாதனசதுஷ்டய என்னும் விஷயத்தை தெரிவிக்கிறார். அது என்னவென்றால்:

மங்களாசரணம் என்றால், நான் நமஸ்கரிக்கிறேன் என்று சொல்வது மட்டுமல்ல. மங்களகரமான எழுத்தையோ அல்லது சொல்லையோ முதலில் பயன்படுத்தினால், அதுவும் மங்களாசரணம் என்றே சொல்லப்படுகிறது. 'அதாதோ பிரம்மஜிக்ஞாஸா' என்னும் ஸ்லோகத்தில், 'அ' என்னும் எழுத்தும், 'அத' என்னும் சொல்லும் மங்களாசரணம் என்று நிர்ணயம் செய்திருக்கிறார்கள். பாகவதம் இரண்டாம் ஸ்கந்தத்தில், சுகாச்சாரியர் பாகவத்தை சொல்லத் துவங்கும்போது, புதியதாக வேறொரு மங்களாசரணம் செய்யாமல் 'வரீயானீஷ தே ப்ரஷ்ன:' என்று துவக்கியிருப்பார். அங்கு 'வரீயான்' என்னும் சொல்லே மங்களாசரணம் என்று சொல்லியிருப்பார். அப்படியே, ஸ்ரீதாசரும் 'ஹரி' என்னும் சொல்லை முதலில் பயன்படுத்தியிருக்கிறார். அனைத்து பாவங்களையும், கஷ்டங்களையும் தீர்க்க வல்லவன் ஆகையால் அவனுக்கு 'ஹரி' என்று பெயர். இதைவிடவும் மங்களம் வேறு என்ன இருக்கமுடியும்? மேலும் இந்த கிரந்தத்தில் சொல்லப்படும் விஷயமாக ஸ்ரீஹரியே இருப்பதால், 'ஹரி' என்று துவக்கியிருக்கிறார். மேலும் இந்த கிரந்தத்தில் ஸ்ரீஹரியின் சரித்திரத்தையே சொல்லியிருப்பதால், 'ஹரிகதா' என்றும் சொல்லியிருக்கிறார். அம்ருதம் என்றால் மோட்சம் என்று பொருள். அப்படிப்பட்ட மோட்சத்தை அடைவதே இந்த கிரந்தத்தைப் படிப்பதால் கிடைக்கும் பலன். 'சாரம்' என்றால் கிடைக்கக்கூடிய பலன் அல்லது தீர்வு. பரம பகவத்பக்தர்களே அதைப் பெற வல்லவர்கள். 'சவை பும்சாம் பரோதர்மோ யதோ பக்தரதோக்ஷஜே! அஹைதுக்ய வைவஹிதா மயாத்மாஷு ப்ரஸீததி' என்னும் பாகவத வாக்கியத்தின்படி, பலாபலன் எதிர்பார்க்காமல் தொடர்ந்து ஸ்ரீஹரியிடம் பக்தி செய்பவர்களே அவனின் கருணையைப் பெற தகுதியானவர்கள். இத்தகைய பக்திக்கு பரம பக்தி என்று பெயர். பரம பக்தர்களே இத்தகைய பலனைப் பெற தகுதியானவர்கள் என்றதால், சாதாரண மக்களுக்கு இந்த கிரந்தத்தைப் படிக்க அதிகாரம் இல்லை என்று பொருளில்லை. சாதாரண பக்தியென்றால் தொடர்ந்து ஸ்ரீஹரியின் மகிமைகளைக் கேட்பது, படிப்பது ஆகியவற்றை செய்து, ஸ்ரீஹரியின் பரமபக்தர்களாகி, அவனின் பிரசாதத்தை பெறுகிறார்கள் என்று பொருள். ஆகவே பகவத்பக்தர்களே இந்த கிரந்தத்தைப் படிக்க அதிகாரிகள் என்று சொல்லியிருக்கிறார். கேளுவுது என்னும் சொல்லின் மூலம் சம்பந்தத்தை சொல்கிறார். ஆகவே ஸ்ரீஹரியின் கதைகளைக் கேட்பது, அதனால் விளையும் ஞானம், ஆகியவற்றால் பயனடைவார்கள் என்று இந்த சொல்லின் மூலம் விளக்குகிறார்.

**மங்களாசரண சந்தியின் சாராம்சம்**

ஸ்ரீதாசர் ஒவ்வொரு சந்தியிலும் மங்களாசரணத்தை சொல்வதற்காக பல்லவியை உருவாக்கி, அதன் மூலம் விஷய சதுஷ்டயங்களை சொல்லி, தாம் இயற்றியுள்ள ஹரிகதாம்ருதசாரத்தில் உள்ள 32 சந்தியிலும், நிர்விக்னம் ஏற்படக்கூடாதென்றும், இஷ்டார்த்தங்கள் கிடைக்கவேண்டுமென்றும், கிரந்தத்தின் துவக்கத்தில் மங்களாசரணத்தை வைத்து விளக்கியது ஏன் என்றால், பாரதத்தை இயற்றிய வேதவியாசரும் அனைத்து தேவதைகளை நமஸ்கரித்தே பாரதத்தை எழுதத் துவங்கினார். எப்படியென்றால் :

நாராயணம் நமஸ்க்ருத்ய நரஞ்சைவ நரோத்தமம் |
தேவீம் சரஸ்வதீம் சைவ (வியாசம்) ததோஜய (கிரந்தம்) முதீரயேத் ||

முதலில் சர்வோத்தமனான நாராயணனை வணங்க வேண்டும். பிறகு 'ஸ்ரீதேவீம்' லட்சுமிதேவியை, அதற்குப் பிறகு 'சரஸ்வதிம்', பிறகு சேஷாதி தேவதைகளைவிட உத்தமரான வாயுதேவரை, பிரம்மதேவரை, 'சரஸ்வதிம்' - சரஸ்வதி பாரதிதேவிகளை, நரம் = அஹங்கார தத்வாபிமானி தேவதைகளான கருட, சேஷ, ருத்ரதேவர்களை வணங்க வேண்டும். நர என்னும் சொல், குறிப்பாக சேஷதேவரை குறிப்பதாக இருந்தாலும், இந்த மூவரும் (கருட, சேஷ, ருத்ரர்) தாரதம்யத்தின்படி ஒரே வகுப்பில் இருப்பவர்களாகையால், மூவரையும் குறிப்பதாக வைத்துக் கொள்ளலாம். பிறகு வேதவியாசரை வணங்கி, கிரந்தத்தைத் துவக்க வேண்டும் என்று சொல்லியிருப்பார். வேதவியாசர் இந்த ஸ்லோகத்தில் 'தேவீம் சரஸ்வதீம் சைவ' என்று இயற்றியிருந்தாலும், அவரது சிஷ்யரான ஸ்ரீமத்வர் 'சைவ' என்பதற்கு பதில் 'வியாச' என்று மாற்றி எழுதினார்.

ஸ்ரீமன் நாராயணனும் ஸ்ரீவேதவியாசரும் ஒன்றேயானாலும், கிரந்தத்தின் கருப்பொருள்/ விஷயமான ஸ்ரீமன் நாராயணனுக்கே முதல் வணக்கம். குரு ஸ்தானத்தில் இருப்பவராகையால் வேதவியாசரையும் வணங்கினார் - ஆக ஸ்ரீஹரியை இரு முறை வணங்கினார் என்று புரிந்துகொள்ள வேண்டும். (இதே விஷயத்தை ஏழாம் ஸ்லோகத்தில் 'வேதபீடவிரிஞ்சிபவ' இன்னும் விரிவாக விளக்கியுள்ளோம்). பாரதாதிகளில் நாராயணன் முதலானவர்களுக்கு வணக்கம் வைக்க வேண்டும் என்று சொல்லியிருக்கிறார்களே தவிர, ஏன் வணங்க வேண்டும்? அப்படி வணங்குவதால் என்ன பலன்? என்ற கேள்விக்கெல்லாம் பதில் இல்லை. ஸ்ரீமத்வர் இந்த விஷயங்களை சிறிது விளக்கியிருப்பார். அது எப்படியென்றால் : முக்கியமாக ஒருவரை வணங்க வேண்டுமென்றால் அவரைப் பற்றிய ஞானம் / தெரிந்திருத்தல் மிகவும் அவசியம். ஆகையால், ஸ்ரீதாசர் மேலே உள்ள ஸ்லோகத்தில் இருக்கும் தேவதைகள் அனைவரின் மகிமைகளை விளக்கி, அந்த தேவதைகளின் மூலம் கிடைக்கும் பலன்களைச் சொல்லி, இந்த கிரந்தத்தை படிக்கும், கேட்கும் மக்களுக்கு தேவையான சிரத்தையை தரவேண்டும் என்று அந்த தேவதைகளை வேண்டி மங்களாசரண சந்தியை இயற்றியுள்ளார். அதில் முதலாம் ஸ்லோகத்தின் மூலம் தன் இஷ்ட தெய்வம், குல தெய்வம் மற்றும்

உபாசனாமூர்த்தியான ஸ்ரீலட்சுமி நரசிம்ம ஸ்வாமியையும், இந்த கிரந்தத்தின் விஷயமும் சர்வோத்தமனும் ஆன, ஸ்ரீமன் நாராயணனையும் - இருவரையும் ஒரே ஸ்லோகத்தில் வணங்கியிருக்கிறார்.

**ஸ்ரீரமணி க$^{1}$ர க$^{1}$மல பூஜித**
**சாருசரண சரோஜ பி$^{3}$ரம்ம ச**
**மீர வாணி ப$^{2}$ணீந்த்$^{3}$ர வீந்த்$^{3}$ர ப$^{4}$வேந்த்$^{3}$ர முக$^{2}$ வினுத |**
**நீரஜ ப$^{4}$வாண்டோ$^{3}$த$^{3}$ய ஸ்தி$^{2}$தி**
**காரணனே கை$^{1}$வல்ய தா$^{3}$யக**
**நாரசிம்மனே நமிபே$^{1}$ க$^{1}$ருணிபுதெ$^{3}$மகெ$^{3}$ மங்க$^{3}$ளவ ||1**

ஸ்ரீரமணி = ஸ்ரீ ஆகிய மனைவியின்
கர = கைகளினால்
கமல = தாமரையினால்
பூஜித = பூஜை செய்துக்கொள்ளப்படும்
சாரு = அழகான
சரண = பாதங்கள்
சரோஜ = தாமரையைப் போன்ற
பிரம்ம = பிரம்மர்
சமீர = வாயுதேவர்
வாணி = சரஸ்வதி (& பாரதிதேவி)
பணீந்த்ர = சேஷதேவர்
வீந்த்ர = பறவைகளில் சிறந்தவரான கருடர்
பவ = ருத்ரதேவர்
இந்த்ரமுக = இந்திரன் முதலான அனைத்து தேவதைகள்
வினுத = வணங்கப்படுபவரான
நீரஜபவாண்ட = இந்த பிரம்மாண்டம்
உதய = படைத்தல்
ஸ்திதி = காத்தல்
காரணனே = காரணனான
கைவல்ய = பிரளய காலத்தில் இருக்கும் ‘கேவல’ நாமக ஸ்ரீஹரி
தாயக = கொடுப்பவன்
நாரசிம்ஹ = கம்பத்திலிருந்து வெளிவந்த ஸ்ரீலட்சுமி நரசிம்மன். மேலும் தோஷங்கள் இல்லாத முக்த ஜீவர்களுக்கு முக்தியை வழங்கக்கூடிய, நரசிம்மன் என்று அழைக்கப்படும் நாராயணனே (நான் உன்னை)
நமிபே = வணங்குகிறேன்
எமகே = இந்த கிரந்தத்தை படித்து, கேட்பவர்களுக்கு மற்றும் நம் சிஷ்யர்கள் என அனைவருக்கும்
மங்களவா = எந்தவித விக்னங்களில்லாத மங்களங்களை மற்றும் இந்த கிரந்தத்தை படித்து, கேட்பதால் கிடைக்கும் முக்தி என்னும் மங்களத்தை
கருணிபுது = கருணை காட்டுவாயாக

பொருள்:

நரசிம்மனே! ஸ்ரீமன் நாராயண! நீயே இந்த பிரம்மாண்டத்தின் படைத்தல், காத்தல் மற்றும் அழித்தலுக்கு காரணம். ஜீவர்களுக்கு முக்தியை கொடுப்பவனும் நீயாக இருக்கிறாய். சாக்சாத் ஸ்ரீலட்சுமியே உனக்கு மனைவியாக இருக்கிறாள். பிரம்ம ருத்ர ஆகிய அனைத்து தேவதைகளால் வணங்கப்படுகிறாய். இப்படிப்பட்ட உன்னை வணங்குகிறேன். எனக்கு மற்றும் என் சிஷ்யர்கள் அனைவருக்கும் மற்றும் இந்த கிரந்தத்தை கேட்கும், படிக்கும் அனைவருக்கும் முக்தி / மோட்சம் எனப்படும் மங்களத்தை வழங்குவாயாக.

விசேஷமான பொருள்:

கிரந்தங்களை துவக்கும்போது செய்யப்படும் மங்களாசரணத்தில் வணங்கப்படும் தேவதைகள் இரண்டு விதம். கிரந்தத்தில் போற்றப்படும் தேவதை மற்றும் இஷ்ட தேவதை. ஜோதிடம் முதலான கிரந்தங்களை இயற்றும்போது சூரியன் மற்றும் நவக்கிரஹ தேவதைகளை வணங்கி அந்த கிரந்தங்களை தொடங்குவது வழக்கம். இந்த கிரந்தத்திற்கு அந்த பரமாத்மனே சொல்லப்படும் விஷயமாக இருப்பதால், நாரசிம்மனே நமிபே என்று அவரையே வணங்கி துவக்குகிறார். நாரசிம்மனே என்னும் சம்-புத்தி சொல்லுடன், நின்னன்னு என்னும் சொல்லை சேர்த்து, நமிபே என்னும் உத்தமபுருஷக்ரியாபத (Third person verb - படர்க்கை, வினைச்சொல்) உடன் சேர்த்து, நான் என்னும் செய்பவரையும் சேர்த்து பொருள் கொள்ளவேண்டும்.

நரசிம்மனே, நான் உன்னை வணங்குகிறேன் என்று சொல்வதுபோல் ஆயிற்று. ஆனால், இந்த கிரந்தத்தின் கருப்பொருள் / விஷயம் ஸ்ரீமன் நாராயணன் ஆவான். பாகவத 7ம் ஸ்கந்தத்தில் வரும் நரசிம்ம சரித்திரத்தை மட்டும் இந்த கிரந்தத்தில் சொல்லவில்லை. மேலும் நரசிம்ம ரூபமானது, சர்வேஷ்ட தேவதை என்று போற்றப்படுவதில்லை. சிலர் ராம ரூபத்தை, சிலர் கிருஷ்ணாதி ரூபங்களை தங்களின் இஷ்ட தேவதையாக நினைத்து பூஜிப்பது வழக்கம்.

இந்த கிரந்தத்தில் போற்றப்படும் ரூபமும் இல்லை, சர்வேஷ்ட ரூபமும் இல்லை. அப்படியிருக்கும்போது, ஸ்ரீதாசர் நரசிம்மனை எதற்கு முதலில் வணங்குகிறார் என்றால், ஸ்ரீஜகன்னாததாசரின் குலதெய்வம் மற்றும் இஷ்டதெய்வம், ஸ்ரீலட்சுமி நரசிம்மர். மேலும் தாசரின் உபாசனா மூர்த்தியும் நரசிம்மனே. 'பிம்பரூபோபாஸனம் சகார்யம் சத்பக்தி பூர்வகம்' என்னும் பிரமாண வாக்கியத்தின் அடிப்படையில் இந்த ரூபத்தை முதலில் வணங்குகிறார். மேலும் நரசிம்ம ரூபம் தேவையற்றதை கொடுக்காமல், வேண்டியதை மட்டும் கொடுக்கும் ரூபமாகும். இதற்காகவும் நரசிம்மருக்கும் முதல் வணக்கம் அவசியமாகிறது.

இந்த கிரந்தத்தின் கருப்பொருள் / விஷயம் ஸ்ரீமன் நாராயணன் ஆவான். ஆகவே இரண்டு ரூபங்களுக்கும் ஒரே முறையில் வணங்க வேண்டியதாயிற்று. ஸ்ரீஹரியின் மூலரூபத்திற்கும், ராம கிருஷ்ணாதி அவதாரங்களுக்கும் எந்தவித பேதமும் இல்லை. அப்படியென்றால் இது ராமன், இது கிருஷ்ணன், இது மத்ஸ்யன் என்று பெயரில் மட்டும் எதற்கு பேதம் வருகிறது? ஏனென்றால் 'நஹிவிக்ருதம்

த்யஜந்திகனகஸ்ய ததாத்மதயா' என்னும் வேதவாக்கியத்துக்கேற்ப, தங்கத்தினால் காப்பு, தோடு முதலான அணிகலன்களை செய்தால், அவை வெவ்வேறு தோற்றம் உள்ளதாகவும், அணியும் அங்கங்களினால் வெவ்வேறு பெயர்களைப் பெறுகின்றவே தவிர, மூலப்பொருளான தங்கத்தில் எப்படி வேற்றுமை இல்லையோ அதைப் போலவே, மத்ஸ்ய கூர்மாதி ரூபங்களில் பெயர் மட்டுமே வெவ்வேறாக இருக்கின்றதே ஒழிய குணங்கள் முதலானவைகளில் பகவத்ரூபங்களுக்கு எந்தவித பேதங்களும் இல்லை. ஆனால், மக்கள் அனைவருக்கும் அனைத்து ரூபங்களையும் பூஜிக்க அதிகாரம் இல்லை.

தத்ராபி ஹயக்ரீவ நாரசிம்ஹ வராஹகா: |
பார்கவஸ்சாதுராசாரை:னைவசேவ்யா: கதஞ்சன ||
ஏதன்மந்த்ரோபாஸகாயே யதிஸ்யை: பரதாரிண: |
மந்த்ரக்ஷோபோபவேத்தேஷாம் தத்காலேஷு பிஷாசகா: ||

விலம்பேனாபகாரூபி ஜாயதே நாத்ரசம்ஷய: |
ராமகோபாலகிருஷ்ணாத்யா ஹரிதாபூதராச்யுதா: ||
மத்ஸ்யவாமனகூர்மாத்யா: சர்வேஸ்யு: சௌம்யமூர்த்தய: |
நகுப்ஸந்தீதுராசாரை: சதாசாரை: பலாதிகா: ||

மேற்கண்ட விஷ்ணுரகஸ்யத்தின் வாக்கியங்களின்படி, ஹயக்ரீவ, நரசிம்ம, வராகாதி ரூபங்களை வணங்குவோர் மிகவும் ஆசாரத்துடன் இருக்கவேண்டும். அத்தகைய ஆசாரம் இல்லாதவர்கள், மேற்கண்ட ரூபங்களை வணங்கவேகூடாது. அப்படியே இந்த ரூபங்களை வணங்கி, நரசிம்ம மந்திரங்களை ஜபிப்பவர்கள், பிறன் மனை நோக்குபவர்களாக இருந்தால், பிசாசாக அலைவார்கள். அத்தகையவர்களுக்கு பைத்தியம் பிடிக்கும். இன்னும் அதிகமான கெட்டபலன்கள் நேரலாம்.

ராம, கிருஷ்ண, வாமனாதி அமைதியான ரூபங்களை குறைந்த ஆசாரத்துடன் வழிபட்டாலும், அவர்களுக்கு கோபம் உண்டாவதில்லை. அதையே ஆசாரத்துடன் செய்தால், அதிக பலன் கிடைக்கும். ஆகவே, இந்த ரூபங்களை யார் வேண்டுமானாலும் வணங்கலாம் என்று சிந்தாந்தத்தில் சொல்லப்பட்டிருக்கிறது. இதிலிருந்து யார் யாருக்கு எந்த ரூபங்களை வணங்குவதற்கு அதிகாரம் உள்ளது என்று தெரிய வருகிறது.

'நாராயணாய பரிபூர்ண குணார்ணவாய', "த்யேயஸ்ஸதா ஸவித்ருமண்டல மத்யவர்த்தி" இந்த மந்திரங்களினால் மூலரூபங்களை வணங்குவதற்கு எந்தவித விதிகளும் இல்லை. ஆகவே பாரதாதி கிரந்தங்களில் 'நாராயணம் சுரகுரும்' மற்றும் 'பரந்தீமஹி' என்ற வாக்கியங்களால் மங்களாசரணம் செய்திருக்கிறார்.

ஸ்ரீதாசரின் இஷ்டதெய்வம் மற்றும் உபாஸனா மூர்த்தி இரண்டும் ஸ்ரீநரசிம்மரே ஆவார். கிரந்தத்தில் பூஜிக்கப்படுபவன் - ஸ்ரீமன் நாராயணன். இந்த இரண்டு ரூபங்களையும் ஒரே சொல்லில் வணங்குவதற்காக - 'நாரசிம்மனே' என்னும் சொல்லை பயன்படுத்தியிருக்கிறார். நரசிம்ம என்னும் சொல், மூலரூபமான

நாராயணனைக் குறிக்கும் சொல்லாக ஏற்றுக்கொள்ள முடியாது. நரசிம்ம என்னும் சொல்லை மூலரூபத்தையும் கூடவே அவதார ரூபத்தையும் குறிக்கும் சொல்லாக ஏற்றுக்கொள்ளலாம். நரனின் உடல் மற்றும் சிம்மத்தின் தலை சேர்ந்து நரசிம்மம் ஆனது என்று அவதார ரூபத்தை ஏற்றுக்கொள்ளலாம். இதுவே மூலரூபத்திற்கும் பொருந்தும். எப்படியென்றால் - அரா: என்றால் தோஷங்கள் இல்லாதவர். நாரா: என்றால் முக்தர்கள் என்று பொருள். இவர்களுக்கு சிம்மன் என்றால், சிறந்தவன் என்று பொருள். முக்தர்களால் வணங்கப்படுபவன் அல்லது முக்தர்களுக்கு அபயம் அளிப்பவன் என்று பொருள். இன்னொரு பொருள் என்னவென்றால், நார = தோஷங்கள் இல்லாதவன். சிம்ம = ரமா, பிரம்மா ஆகியோரைவிடவும் உத்தமன் என்று பொருள்.

விளக்கம்: சிம்ம என்னும் சொல்லின் மூலச்சொல்லான 'ம்ருகேந்திர' என்னும் சொல்லை இங்கே பயன்படுத்தினால், 'ம்ருகயந்தீ இதி ம்ருகா:'. ம்ருகா: என்றால் ரமா பிரம்மாதி தேவதைகள் என்று பொருள். 'யோம்ருகைதி ஹஸ்தக்ருஹீதபத்யயா' மற்றும் 'தமேவ தத்ஷாஸ்ரய ப்ருத்யவத்ஸலம் முமுக்ஷுபிர்ம்ருகை பதாப்ஜ பத்ததீம்' ஆகிய பாகவத வாக்கியங்களே இதற்கு ஆதாரம் எனலாம். ம்ருகாணாம் இந்திர: = ம்ருகேந்திர: என்றால் ரமா பிரம்மாதிகளால் வணங்கப்படுபவன்.

'நாரஷ்சாசௌ சிம்ஹஸ்ச நாரசிம்ஹ' தோஷங்கள் இல்லாதவன், ரமா பிரம்மாதிகளால் வணங்கப்படுபவன் என்பதால் நரசிம்மன் என்று பெயர். அல்லது 'நாரம் ததாதி நார:', நார என்றால் தோஷமில்லாத வைகுண்டம் என்று பொருள். தன் பக்தர்களுக்கு இதை கொடுப்பவன் ஆகையால் நார என்று பெயர். இங்கு 'நாரம் ததாதி இதி நாரத:' என்றும் சொல்லமுடியும். 'நாரம் ததாதி இதி நார:' - இது எப்படியென்றால் - சுதா கிரந்தத்தில், வைகுண்ட என்னும் சொல்லை பரமாத்மா என்று பொருள் கொள்ளுமாறு, 'வைகுண்ட ததாதி இதி வைகுண்ட:' - வைகுண்டத்தை கொடுப்பவன் ஆகையால், பரமாத்மனுக்கு வைகுண்டன் என்று பெயர் சொல்லி அங்கேயே நிர்ணயம் செய்தார்.

வைகுண்டத்தைக் கொடுப்பவன் வைகுண்டன் என்றால், கடத்தைக் கொடுப்பவன் கடன் என்று பொருள் கொள்ளலாமா?

ப்ரயோகேசதி நிமித்தானுசரணம்
நதுநிமித்தேசதி ப்ரயோகானுசரணம்

பிரயோகம் இருந்தால், வெவ்வேறு சந்தர்ப்பங்களில் வெவ்வேறு பிரயோகங்களை செய்யக்கூடாது என்று பொருள்.

எப்படியென்றால், யாராவது ஒருவர் தெருவில், தயிர், காய்கறி விற்றுக்கொண்டு வந்தால், அவர் பெயர் நமக்குத் தெரியாவிட்டால், அவரை ஏ தயிர், ஏ காய்கறி என்று கூப்பிடும் வழக்கம் உண்டு. அப்படியென்றால் அவரே தயிரா? அவரே காய்கறியா? என்று யாரேனும் கேட்டால், எனக்கு அவர் பெயர் தெரியாது. அவர் தயிர், காய்கறி விற்பதால், அவரை அப்படியே கூப்பிடுகிறேன் என்று சொல்லலாம்.

ஆகவேதான், பிரயோகம் இருந்தால் சந்தர்ப்பத்தை அனுசரித்து பயன்படுத்த வேண்டும் என்று பொருள்.

இதே உதாரணத்தை வைத்துக்கொண்டு, தயிர் கொண்டு வா என்று ஒரு இடையனைச் சொல்லக்கூடாது. ஆகவே பிரயோகத்தை சந்தர்ப்பத்தை அனுசரித்து பயன்படுத்த வேண்டும் என்று ஸ்ரீமன்நியாயசுதாவில் சொல்லியிருக்கிறார்கள்.

இதைப் போலவே, நார(வைகுண்ட)வை கொடுப்பவன் ஆகையால், பரமாத்மனுக்கு நார என்று பெயர். சிம்ம என்னும் சொல்லுக்கு ஏற்கனவே பொருளைப் பார்த்தோம். ஆகவே, நாரசிம்மன் என்னும் பெயர் மூலரூபத்தைக் குறிக்கும் சொல் என்று பொருள் கொள்ளலாம். ஆனால் இது அவதார ரூபத்தையே குறிக்கிறது என்று ஏன் சொல்லக்கூடாது? ஸ்ரீதாசர் மூலரூபத்தையே நினைத்து அப்படிச் சொன்னார் என்று ஏன் சொல்லவேண்டும் என்றால் -

'நீரஜபவாண்டோதய ஸ்திதி காரணனே' என்று உரிச்சொற்களைப் பயன்படுத்தி ஸ்ரீதாசர் பாடியிருப்பதால், மூலரூபத்தை வணங்குகிறார் என்று சொல்லலாம். அவதார ரூபங்களுக்கு பிரம்மாண்டத்தின் உருவாக்கல் போன்ற வேலைகள் இல்லை. பாகவத முதல் ஸ்கந்தத்தில், ஸ்ரீகிருஷ்ணன் ஹஸ்தினாபுரத்திலிருந்து துவாரகைக்குப் போகும்போது, பிராமணர்கள் பரமாத்மனை வணங்கும்போது, 'அஷ்ரோயந்தாஷிஷ: சத்யாஸ்தத்ரதத்ர த்விஜேரிதா: | நானு ரூபானுரூபாஸ்ச நிர்குண்ஸ்யைகுணாத்மன: ||' என்று வணங்கினர். இதன் பொருள் என்னவென்றால், பிராமணர்கள் சொல்லும் ஸ்தோத்திரங்கள், ஆங்காங்கே ஸ்ரீகிருஷ்ணனின் காதுகளில் கேட்டுக்கொண்டிருந்தன. துஷ்டர்களை கொல். சாதுக்களை காப்பாற்று என்னும் பிரார்த்தனைகள், நிர்குணனான அதாவது பிரம்மாண்டத்திற்கு வெளியே வைகுண்டவாசியாக, சத்வ முதலான குணங்கள் நிரம்பிய, எதன்மேலும் பற்றற்று இருந்த மூலரூபத்திற்கு கேட்டது.

படைத்தல் தொழிலாகட்டும், துஷ்டர்களை கொல்லும் செயலாகட்டும், தன் பக்தர்களை காப்பாற்றும் செயல்களாகட்டும் இத்தகைய அவதார ரூபங்களை எடுத்தே செய்வேன் என்று தீர்மானம் செய்துகொண்டிருப்பவன் ஆகையால், அதை எப்போதும் அவன் மீறுவதில்லை.

ஒருமுறை தீர்மானித்துவிட்டால் இந்த மொத்த உலகத்தையே அழிக்கவல்லவன் ஸ்ரீஹரி. ஆனாலும் ராமாவதாரம் செய்து ராவணனை அழிப்பேன் என்றும், கிருஷ்ணாவதாரம் செய்தே கம்சாதி துஷ்டர்களை அழிப்பேன் என்றும் அவனின் சங்கல்பம். ஆகையால் அவனது சங்கல்பத்தை அவனே மீறுவதில்லை.

ஆகையால் பிரம்மாண்டத்தின் உள்ளே எடுக்கப்பட்ட அவதாரங்கள், சத்வாதி குணங்களை ஏற்றுக்கொண்டு, துஷ்டர்களை அழிக்கும் அவதாரங்கள் ஆகையால், பிராமணர்களின் ஸ்லோகங்கள் / வேண்டுகோள்கள் ஸ்ரீகிருஷ்ணனுக்கு ஒப்புதல் ஆயிற்று. இதுவே பாகவத ஸ்லோகத்தின் பொருளாகும். இதைப்போலவே ஹிரண்யகசிபுவை அழித்து, பிரகலாதனை காப்பாற்றுவதற்காக அவதாரம் எடுத்த

நரசிம்ம ரூபம், பிரம்மாண்டத்தின் படைத்தல் ஆகிய தொழில்களுக்கு ஏற்ற ரூபம் அல்ல.

ஆகையால், இங்கு ஸ்ரீதாசர் சொல்லியிருக்கும் நீரஜபவாண்ட முதலான உரிச்சொற்கள், மூலரூபத்தையே குறிப்பதாகையால், ஸ்ரீதாசரின் அபிப்பிராயம், மூலரூபம் மற்றும் அவதாரரூபம் இரண்டையும் சேர்த்து வணங்குகிறார் என்று இந்த ஸ்லோகத்திலிருந்து தெரிகிறது.

நமிபே (வணங்குகிறேன்) என்ற சொல்லிலிருந்து, வணங்குவதை முக்கியமான செயலாகச் சொல்கிறார். 'அதாதோ பிரம்மஜிக்ஞாசா', 'சத்யம் பரம் தீமஹி', 'பர்கோ தேவஸ்ய தீமஹி', ஆகிய பிரம்மசூத்ர, பாகவத, காயத்ரி ஸ்லோகங்களிலிருந்து, தியானமே முக்திக்கு வழி என்று தெரிவதால், மங்களாசரணத்தில் தியானத்திற்கு முக்கியத்துவம் கொடுத்திருக்கிறார்.

'நமஸ்கரிசுத்தேனே' என்று இந்த கிரந்தத்தில் வணக்கத்திற்கு முக்கியத்துவம் கொடுப்பதற்கு காரணம் என்னவென்றால், அதிகாரிகளைப் பொறுத்து, செய்யக்கூடிய செயல்களும் மாறுபடும். பிரம்மசூத்திரம், பாகவதாதிகளுக்கு தேவதைகளே அதிகாரிகள் என்று சொல்லியிருக்கிறார். பாகவதத்தில், 'நிர்மத்ஸராணாம் சதாம்வேதம்' என்று அதிகாரிகளைப் பற்றி சொல்லும்போது, தன்னைவிட உயர்ந்தவர்களிடத்தில் பொறாமை கொள்ளாதவர்கள் யாரோ, அவரே அதிகாரிகள் என்று சொல்லியிருப்பதால், உத்தமர்கள் மற்றும் தாழ்ந்த ஜீவர்கள் என்று யாரையும் கண்டுபிடிக்க முடியாததாலும், அத்தகைய உயர்ந்த ஞானம் தேவாம்சம் பொருந்தியவர்களுக்கு மட்டுமே இருக்கும்; மனிதர்களுக்கு இருக்காது என்ற காரணத்தினால், தேவதைகளே அல்லது தேவதை அம்சம் பொருந்தியவர்கள் மட்டுமே இதற்கு தகுதியானவர்கள் என்று சொல்வதாக ஆயிற்று.

ஆகவே பாகவதத்தில் சொல்லப்பட்டிருக்கும் தியானமானது, உத்தமஜீவிகளான ஞானியோகிகளுக்கும் பக்தியோகிகளுக்கும் மட்டுமே சாத்தியம் ஆகுமே தவிர, சாதாரண செயல்களைச் செய்துவரும் மனிதர்களுக்கு 'கர்மணா ஞானமாதனோதி' 'கர்மண்யைவஹி சம்ஸித்திமாஸ்திதா ஜனகாதய: குருகர்மைவ கௌந்தேய' என்று பல ஸ்லோகங்களில் சொல்லி, பிறகு படிப்படியாக பக்தி அதிகரித்து, பகவானின் மகிமைகளை அறிந்து அதன்பிறகு தியானம் செய்வதற்கு தகுதி பெறுவார்கள் என்று சொல்வதற்காகவே 'நமிபே' என்னும் சொல்லை பயன்படுத்தியிருக்கிறார் ஸ்ரீதாசர்.

நமஸ்காரம் என்பதும்கூட தியானம் இல்லாமல் தனியாகச் செய்யப்படுவது இல்லை. வெறும் கை கூப்புவதோ, கீழே விழுந்து வணங்குவதோ இல்லை. சாஷ்டாங்கமாக விழுவதே நமஸ்காரம். சாஷ்டாங்கம் என்றால் - உரஸா ஷிரஸா த்ருஷ்ட்வா மனஸா வசஸா ததா | பத்ப்யாம் கராம்ப்யாம் ஜானுப்யாம் ப்ரணாமோஷ்டாங்க ஈரித: - இதயம், தலை, பாதங்கள், கைகள், கால் முட்டிகள் ஆகியவை நிலத்தில் பதியுமாறு, கண்களால் பார்த்தவாறு, மனதினால் நினைத்தவாறு, வாயினால் ஸ்தோத்திரம் செய்தவாறு செய்யும் நமஸ்காரத்திற்கு

சாஷ்டாங்கம் என்று பெயர். மனுஷ்யோத்தமர்களுக்கு இதுவே முக்திக்கான வழி. இதைப் பற்றி ஸ்ரீமதாசார்யர் சொல்வது:

ஏகோபி கிருஷ்ணஸ்ய சக்ருத்ப்ரணாமோ தஷாஷ்வ மேதாவப்ருதேனதுல்ய: |
தஷாஷ்வமேதீ புனரேதி ஜன்ம க்ருஷ்ணப்ரணாமோ நபுனர்பவாய||

பொருள்:

ஸ்ரீஹரியைக் குறித்து ஒரே ஒரு நமஸ்காரத்தையாவது விதிப்படி சாஷ்டாங்கமாக செய்தால், 10 அஸ்வமேத யாகம் செய்து, அவப்ருத ஸ்னானம் செய்தவனுக்கு எவ்வளவு பலன் வருமோ, அவ்வளவு பலன் வரும். ஆனால், பத்து அஸ்வமேத யாகம் செய்தவன் சுவர்க்கத்திற்குச் சென்று அவனின் புண்ணியம் குறையும் வரைக்கும் இருந்து, பின் மறுபடி பூமியில் பிறப்பான். ஸ்ரீகிருஷ்ணனை வணங்கியவன், முக்தியை அடைந்து, பத்து அஸ்வமேத யாகம் செய்தவன் சுவர்க்கத்தில் அனுபவித்த பலன்களை, இவன் நிரந்தரமாக அனுபவிப்பான். இவனுக்கு மறுஜென்மம் கிடையாது என்பதே இந்த ஸ்லோகத்தின் பொருள்.

ஆகையால், முதலில் தியானத்துடன் கூடிய நமஸ்காரங்களை செய்து, இறையருளைப் பெற்று, பிறகு, தியானத்தினாலேயே முக்தியைப் பெறமுடியும் என்ற சிந்தனையுடன் தாசராயர், நமிபெ என்று சொல்லியிருக்கிறார் என்று நினைக்கவேண்டும். இதன் கருத்து என்னவென்றால், இந்த கிரந்தத்தை கேட்க, படிக்க முயலும்போது, நமஸ்காரங்களை செய்து, இறையருளைப் பெற்று, அடுத்தடுத்த சந்திகளைப் படித்து வந்தால், தியானம் மற்றும் ஞானம் இரண்டும் கிடைக்கும். ஆகவே முதலிலேயே 'நமிபெ' என்னும் சொல்லை பயன்படுத்தியிருக்கிறார் தாசராயர் என்று நினைக்கவேண்டும். இப்படி நினைத்து இந்த படிகளை ஏறியவரே, பாகவதாதிகளைப் படிப்பதற்கு தகுதி பெற்றவர் என்று சொல்வதாயிற்று.

'நாரசிம்ஹனே நமிபெ' என்று சொன்னதாலேயே மங்களாசரணம் சொன்னது போலாயிற்று. அடுத்தடுத்த சொற்களை ஏன் சொன்னார்?

பரமாத்மனை தியானம் செய்து நமஸ்காரங்களை செய்யவேண்டுமெனில், வஸ்து ஞானம் தேவைப்படுகிறது. எல்லா இடங்களிலும் இருப்பவனான பகவந்தனை தியானம் செய்வது என்றால் எப்படி? அதற்கு அந்த பரமாத்மனின் ஸ்வரூப ஞானம் அவசியம். ஸ்வரூப ஞானம் என்பது உபதேசம் மூலம் தெரிந்து கொள்ளமுடியும். எப்படியெனில்: ஒருவன் தான் எப்பொழுதும் கண்டிராத ஒரு பொருளைக் கண்டால், அதைப் பற்றி தெரிந்தவர்களிடம் கேட்டுத் தெரிந்து கொள்ள வேண்டுமே தவிர, தானே அதனை தெரிந்து கொள்வது சாத்தியம் இல்லை. ஒரு பொருளை நாம் பார்த்திராவிடினும், அதன் லட்சணங்களை யாரேனும் நமக்கு உபதேசம் செய்திருந்தால், அத்தகைய பொருளை நாம் பார்த்தால், நாம் உபதேசம் பெற்ற பொருள் இதுவே என்று தெரிந்து கொள்ளலாம்.

உதாரணம்: பசுவைப் பார்த்திராத ஒரு குழந்தைக்கு பசுவைக் காட்டினால், அந்தக் குழந்தை அந்த பசுவின் வெள்ளை வண்ணத்தை வைத்தே அடையாளம் கொள்ளும். ஆகையால், பசுவைக் காட்டி சொல்வதைவிட, அதன் லட்சணங்களை நன்கு விளக்கிவிட்டால், அடுத்த முறை அந்தக் குழந்தை பசுவைப் பார்க்கும்போது தானே அடையாளம் கண்டுகொள்ளும்.

அதாவது: 'சாஸ்னாதி மான் கௌ:' - எந்த பசுவின் கழுத்தில் தோல் தொங்கிக் கொண்டிருக்கிறதோ, அதுவே பசு என்று உபதேசம் செய்தால், இந்த லட்சணம் பசுவை விட்டு வேறு எந்த மிருகத்திற்கும் இருப்பதில்லை. ஆகையால் யாராக இருந்தாலும், இந்த அடையாளத்தினாலேயே பசுவை கண்டுகொள்ள முடியும். ஆகையால், எந்த லட்சணம் பரமாத்மனின் ஸ்வரூபத்தைக் காட்டுகிறதோ, பரமாத்மனைத் தவிர வேறு யாருக்கும் பொருந்தாதோ, அத்தகைய லட்சணத்தை உபதேசம் செய்தால், இத்தகைய லட்சணங்கள் உள்ளவன் பரமாத்மன் மட்டுமே என்று நிச்சயமான ஞானத்தினால் அந்த பரமாத்மனைக் குறித்து உபாசனை செய்யமுடியும். ஆகவே இங்கு தாசராயர், 'ஸ்ரீரமணி கரகமல பூஜித' என்னும் வாக்கியத்தினால் ஸ்ரீபரமாத்மனின் லட்சணங்களை நமக்கு விளக்கியிருக்கிறார்.

பரமாத்மனின் லட்சணங்கள் என்று, தாசராயர் தனது கற்பனையில் வந்தவற்றை சொல்லவில்லை. ஸ்ரீவேதவியாசர் தமது பிரம்மசூத்திர பாகவதாதி கிரந்தங்களில், எந்த லட்சணங்களை, 'ஜன்மாத்யஸ்யயத:' என்னும் சூத்திரத்தினாலும், 'ஜன்மாத்யஸ்ய யதோன்வயாத்' என்னும் ஸ்லோகத்தினாலும் விளக்கியிருக்கிறாரோ, அத்தகைய லட்சணங்களையே இங்கும் சொல்லியிருக்கிறார். அதாவது: 'நீரஜபவாண்டோதய ஸ்திதி காரணனே கைவல்யதாயக' என்கிறார். 'கேவலோ பகவான்விஷ்ணு: கைவல்யம் பரமம்பதம்' - அதாவது அனாதி காலத்திலிருந்து முடிவில்லா காலம் வரைக்கும் பரமாத்மனே சுதந்திரமாக தான் மட்டுமே இருப்பதனால், 'கேவலன்' என்று அவனுக்கு பெயர் வந்தது. அவன் வசிக்கும் இடத்திற்கு கைவல்ய என்று பெயர். அதாவது அதுவே வைகுண்டம் என்று அறியவேண்டும். அப்படியே பிரளய காலத்திலும், பரமாத்மன் ஒருவனே தனியாக வசிப்பதால், பிரளயத்திற்கும் கைவல்ய என்றே பெயர் உண்டு.

இதிலிருந்து நமக்கு தெரியவருவது என்னவென்றால், 'நீரஜபவாண்டோதய ஸ்திதி காரணனே' என்னும் வாக்கியத்தினால், பிரம்மாண்டத்தின் படைப்பிற்கும், காத்தலுக்கும் மட்டுமே பகவந்தன் காரணன் என்று தெரிகிறது. ஆனால் பிரளயத்திற்கும் அவனே காரணன். ஆகையால், 'கைவல்யதாயக' என்னும் சொல்லினால், பிரளய காலத்திற்கும், முக்தியைக் கொடுப்பதற்கும் அவனே காரணன் என்று சொல்வதற்காக, கைவல்ய என்னும் ஒரு சொல்லே போதும் என்பதால், பிரளயம் மற்றும் முக்தியை தனித்தனியாக சொல்லாமல், தாசராயர், கைவல்யதாயக என்றே சொல்கிறார். ஆனால் நாம் கைவல்யதாயக என்னும் சொல்லை இரு முறை சொல்லி பொருள் கொள்ளவேண்டும் என்பது மறைபொருள்.

நீரஜபவாண்ட என்றால் பிரம்மாண்டம். அதன் உதயம் என்றால், படைத்தல், காத்தல். இதனுடன் நாசம் (பிரளயம்) மற்றும் நியமனம், ஞான, அஞ்ஞான, பந்த, மோக்ஷ என்னும் ஐந்தையும் சேர்த்துக் கொண்டு, படைத்தல் முதலான எட்டு வித வேலைகளையும் பரமாத்மாவினுடையதே என்று சொல்லவேண்டும். இப்படி எட்டு வித வேலைகளை ஏன் சொல்லவேண்டும் என்றால், ஸ்ரீமதாசார்யர், பிரம்மசூத்ர பாஷ்யத்தில் 'உத்பத்தி ஸ்திதி சம்ஹாரானியதிர்ஞான மாவ்ருதி: | பந்த மோக்ஷௌச புருஷாத்யஸ்யாத் ஸஹரிரேகராட்' என்று சொல்லியிருக்கிறார்.

இந்த ஆதாரத்தினாலேயே, அஷ்ட கர்த்ருத்வவும் பரமாத்மாவினுடையதே என்று சொல்லவேண்டும். ஆனால், தாசராயர், படைத்தல், காத்தல், அழித்தல் ஆகிய மூன்றை மட்டுமே சொல்லியிருக்கிறார். ஏன் எட்டு வேலைகளையும் சொல்லவில்லை என்றால், எப்போது படைத்தல், காத்தல், அழித்தல் ஆகிய மூன்று முக்கியமான வேலைகளை சொன்னாரோ, இதர ஐந்து வேலைகளும் பரமாத்மாவினுடையதே என்று தானாக அறிந்து கொள்ளலாம் என்பதால் அவற்றை விட்டுவிட்டார்.

அப்படியெனில், ஸ்ரீமதாசார்யர் ஏன் எட்டினையும் தனித்தனியாக சொன்னார் என்றால், எந்தவொரு இடத்திலும் இவற்றை தெளிவாக சொல்லவில்லையெனில், அவற்றிற்கு வேறு யாரும் காரணம் என்ற நினைப்பு வந்துவிடுமோ என்ற எண்ணத்தில், தெளிவாக சொல்லிவிட்டார். ஆனால், இவற்றிற்கு பரமாத்மனே காரணம் என்று எந்த ஆதாரத்தில் சொல்லவேண்டும்?

எந்தவொரு சித்தாந்தத்தையும் விளக்கவேண்டுமெனில், பிரத்யக்ஷம், அனுமானம், ஆகமம் - இம்மூன்றில் ஒன்றை சொல்லவேண்டும். இப்பொது இந்த உலகத்தை பிரத்யக்ஷமாக பார்க்கிறோம். இதை யாரோ ஒருவர் படைத்திருக்கவேண்டும் என்பது அனுமானம். தாய் தந்தையர் இல்லாமல் குழந்தைகள் வரமுடியாது என்றும், யாரேனும் கட்டாமல் கட்டிடம் வராது என்பதும் நம் அனுபவத்திலிருந்து தெரிய வருகிறது. ஒருவரைப் பார்த்தால் இவருக்கு ஒரு பெற்றோர் இருக்கவேண்டும் என்றும், ஒரு கட்டிடத்தைப் பார்த்தால், இதைக் கட்டியவர் ஒருவர் இருக்கவேண்டும் என்று நினைக்கிறோம். அதன்படியே, பிரத்யக்ஷமான இந்த உலகத்தைப் பார்த்தால், இதனை படைத்தவர் ஒருவர் இருக்கவேண்டும் என்று நினைக்க வேண்டும். இதற்கு ஸ்ருதி ஸ்ம்ருதி வாக்கியங்களே ஆதாரமாகக் கொள்ளவேண்டும். பரமாத்மனே இந்த உலகத்தைப் படைத்து காத்து வருகிறான் என்பதற்கு வேதங்களையே ஆதாரமாகக் கொள்ளவேண்டும்.

'யதோவா இமானிபூதானிஜாயந்தே | யோனஜாதானி ஜீவந்தியஸ்சயந்த்யபி சம்விஷந்தீதி ||'
'அஹம்சர்வஸ்ய பிரபவோ மத்தஸ்சர்வம் ப்ரவர்ததே | ஸ்ரஷ்டாபாதா ததைவாத்தா நிகிலஸ்யைக ஏவது ||'

மேற்கண்ட வேத வாக்கியங்களே தகுந்த ஆதாரங்களாகும். அப்படியெனில், இதே வேதங்களில், பிரம்மதேவரே படைப்பவர் என்றும், ருத்ரரே அழிப்பவர் என்றும்

சொல்லப்பட்டிருக்கிறதே. இதில் எது உண்மை? எது பொய் என்றால், வேதங்களில் வெகுசில இடங்களில் மட்டுமே இப்படி சொல்லப்பட்டிருக்கிறது. பெரும்பாலும் அனைத்து வேதங்களும், ஸ்ரீமன் நாராயணனே படைத்தல் முதலான தொழில்களை செய்பவன் என்றும், வேதங்களால் புகழப்படுபவன் என்றும் சொல்கின்றன. ஓரிரு இடங்களில் பிரம்ம ருத்ரரைப் பற்றி சொல்பவை, அந்தப் பெயர்களினால் அழைக்கப்படும் ஸ்ரீமன் நாராயணனையே சொல்கின்றனவே தவிர, பரமாத்மனின் நாபிக் கமலத்திலிருந்து பிறந்த பிரம்மதேவரையோ, அவரிடமிருந்து பிறந்த ருத்ரரையோ சொல்வதில்லை. இந்த விஷயத்திற்கும் வேதங்களில் ஆதாரம் உண்டு.

'யோதேவானம் நாமதா ஏகஏவ'. பிரம்ம ருத்ரர் இந்திராதி அனைத்து தேவதைகளின் பெயர்களையும் தாங்கி, யார் அனைவருக்கும் தந்தையாகி இருக்கிறானோ, தாயாகி இருந்து அனைத்து உலகத்தையும் படைத்திருக்கிறானோ, அனைத்தையும் அழிப்பவனாகவும் இருக்கிறானோ, அத்தகையவனை நாம் வணங்குவோம்.

'ருஜந்த்ராவயதே யஸ்மாத்ருத்ர ஐத்யபிஷப்த்யதே'. அனைத்து நோய்களையும் தீர்க்கக்கூடியவன் ஆகையால், பரமாத்மனுக்கே ருத்ரர் என்று பெயர். 'பிரம்மபூர்ணா வித்யஸ்மாத்தாதோ:'. அனைத்து நற்குணங்களையும் கொண்டவன் ஆகையால், பரமாத்மனுக்கே பிரம்மன் என்று பெயர். 'பிரம்ம விஷ்ண்வேஷரூபாணி த்ரீணி விஷ்ணோர்மஹாத்மன: பிரம்மணி பிரம்மரூபர்ஸ் சஷிரூபி ஷிவேஸ்மித:' ஸ்ரீவிஷ்ணுவிற்கு பிரம்மா, விஷ்ணு, மஹேஸ்வர என்று மூன்று பெயர்கள் உண்டு.

நான்முக பிரம்மதேவரிடம் பிரம்ம பெயர் கொண்ட பரமாத்மன் இருந்து, படைத்தலை செய்கிறான். ருத்ரர் என்னும் பெயர் கொண்ட பரமாத்மன், ருத்ரரிடம் இருந்து, சம்ஹாரத்தை செய்கிறான். ஆகையாலேயே, பிரம்மதேவர் படைக்கும் தொழிலை செய்கிறார் என்றும், ருத்ரர் சம்ஹாரத்தை செய்கிறார் என்றும், ஸ்ருதி ஸ்ம்ருதிகளில் சொல்லப்பட்டிருக்கின்றன. இத்தகைய பற்பல ஆதாரங்களினால், பரமாத்மனையே வேதங்கள், பிரம்ம ருத்ரர் ஆகிய சொற்களினால் புகழ்கின்றன என்று தெரிந்து கொள்ளலாம்.

அனைத்து பெயர்களாலும் அழைக்கப்படுபவனாகிய ஸ்ரீபரமாத்மன், நாராயணன் முதலான சில பெயர்களை மட்டும் தான் வைத்துக்கொண்டு, பிரம்ம, ருத்ரர் முதலான தன் பெயர்களையே பிற தேவதைகளுக்கு கொடுத்திருப்பதால், அவர்களுக்கு அத்தகைய பெயர்கள் வந்திருக்கின்றன என்று அறியவேண்டும். இந்த விஷயத்தை ஸ்ரீமதாசார்யர் பிரம்மசூத்திர பாஷ்யத்தில் மிகவும் விளக்கமாகக் கூறியிருக்கிறார். மேலும் 'கைவல்யதாயக' என்னும் காரணப் பெயர், மோட்சத்தைக் கொடுக்கக்கூடிய விஷ்ணு ஒருவருக்கு மட்டும் உண்டே தவிர வேறு எந்த தேவதைகளுக்கும் இல்லை.

'விஷ்ணுர்ஹிதாதாமோக்ஷஸ்ய வாயுஸ்ததனுக்ஞயா' அதாவது வழியைக் காட்டுபவன் ஒருவனே. விஷ்ணுவின் அனுமதியைப் பெற்று வாயுதேவர் கொடுக்கிறார் என்னும் ஆதாரத்தினால், பரமாத்மனே சர்வோத்தமன் என்றும், ஜகத்

ஜன்மாதி காரியங்களை செய்பவன் என்றும், தாசராயர் கூறுகிறார். ‘பிரம்மசமீரவாணி பணீந்திரவீந்திர பவேந்திரமுகவினுத’ - பிரம்மன் முதலான அனைத்து தேவதைகளினால் வணங்கப்படுபவன் என்று சொல்வதாலும், ஸ்ரீவிஷ்ணுவின் சர்வோத்தமத்வத்தை நிர்ணயிக்கிறார்.

பாகவதத்தில் 12ம் ஸ்கந்தத்தில் வரும் - ‘யம் பிரம்மாவருணேந்திர ருத்ரமருத: ஸ்துன்வந்தி திவ்யைஸ்தவை:’ என்னும் வாக்கியம் இதற்கு ஆதாரமாக உள்ளது. மேலும் இரண்டாம் ஸ்கந்தத்தில், பிரம்மதேவர் தனது மகனான நாரதருக்கு உபதேசம் செய்யும் நேரத்தில் இவ்வாறு சொல்கிறார். ‘ஸ்ருஜாமி தன்னியுக்தோஹம் ஹரோஹரதி தத்வஷ: | விஷ்வம்புருஷரூபேண பரிபாதி த்ரிஷக்திபுக்’. நான் அந்த பரமாத்மனின் அதீனத்தில் இருந்து படைத்தல் தொழிலை செய்கிறேன். ருத்ரர் அவனின் அதீனத்தில் இருந்து அழிக்கின்றான். புருஷ ரூபத்தில் இருந்து விஷ்ணுவே அனைத்தையும் காக்கிறான். இப்படியாக, படைத்தல், காத்தல், அழித்தல் ஆகிய மூன்று வித வேலைகளும் பரமாத்மனுடையதே ஆகும். அதாவது, என்னுள் இருந்து படைப்பவனும், ருத்ரரின் உள் இருந்து அழிப்பவனும், அவனே. ஆகையால் இந்த மூன்று வேலையும் பரமாத்மனுடையதே என்று அறி.

நாஹம், நயூயம்பததத்கதிம் விதுர்னவாமதேவ: கிமுதாபரேசுரா: |
யன்மாயயா மோஹித புத்தயஸ்விதம் வினிர்மிதம் ஸ்வாத்மசமம் விசக்ஷ்மஹே ||

நான் அந்த பகவத் ரூபத்தை முழுமையாக அறிய முடியாது. உன்னாலும் முடியாது. வாமதேவன் என்னும் ருத்ரதேவரால் அவரை அறிய முடியாது. இப்படிப்பவர்களாலே முடியவில்லை என்றால், மற்ற தேவதைகளைப் பற்றி என்ன சொல்ல? அவனின் சக்தியில் கட்டுப்பட்டு, அவனால் உருவாக்கப்பட்ட இந்த உலகத்தை அவனுக்கு சமமாகவே நினைக்கிறோம். அல்லது இதை உருவாக்கிய பகவந்தனை ‘ஸ்வாத்மசமம் விசக்ஷ்மஹே’. நம் தகுதிக்கேற்பவே அறிந்து கொள்கிறோம். இப்படியாக பிரம்மன் தனது மகனான நாரதருக்கு உபதேசம் செய்திருப்பதால், இந்த வசனமே, பரமாத்மன் பிரம்மாதி அனைத்து தேவதைகளாலும் வணங்கப்படுபவன் என்பதற்கு சிறந்த ஆதாரமாகும்.

மேலும் இன்னொரு விஷயத்தையும் இந்த இடத்தில் உதாரணமாகக் காட்டுகிறார் தாசராயர். ‘ஸ்ரீரமணி கரகமல பூஜித சாருசரண சரோஜ’. இந்த வாக்கியம் லட்சுமிவல்லபனைத் தவிர வேறு யாருக்கும் பொருந்தாது. தன் மனைவியான லட்சுமிதேவியின் மூலமாக பூஜிக்கப்படும் அழகான பாதங்களைக் கொண்டவன் என்று சொல்வது, பிரம்மாதி தேவதைகளால் பூஜிக்கப்படுபவன் என்பதையும் சொல்கிறது. எப்படியெனில், அம்ப்ரிணி சூக்தத்தில் இருக்கும் லட்சுமிதேவியின் வாக்கியம். ‘யம் காமயேதம் தமுக்ரம் க்ருணோமிதம் பிரம்மாணம் தம்ரிஷிம் தம்சுமேதாம்’. அதாவது யாரை ருத்ரராக நியமிக்க வேண்டும் என்று நான் விரும்புகிறேனோ அவரை ருத்ரராக நியமிக்கிறேன். யாரை பிரம்மனாக நியமிக்க வேண்டும் என்று நான் விரும்புகிறேனோ அவரை பிரம்மனாக நியமிக்கிறேன்.

இப்படியாக லட்சுமிதேவி, பிரம்மருத்ரர்களை நியமிக்கும் உரிமை தனக்கு இருக்கிறது என்று சொல்லி இறுதியில், 'மமயோனி ரப்ஸ்வா அந்தஸ்சமுத்ரே' இப்படிப்பட்ட எனக்கு தலைவனானவன், சர்வாந்தர்யாமியான, பாற்கடலில் படுத்திருக்கும் ஸ்ரீபரமாத்மனே. அத்தகையவனின் அருளினாலேயே எனக்கு இந்த சக்தி உண்டாயிற்று என்று சொல்லியிருப்பார். இப்படி, பிரம்ம ருத்ரர்களை படைக்கும் ஆற்றல் கொண்ட ரமாதேவியால் பூஜை செய்யப்படும் பாதங்களைக் கொண்டவன் என்று சொன்னபிறகு ஹரி சர்வோத்தமன் என்று சொல்லும் விஷயத்திற்கு வேறு ஆதாரம் வேண்டுமா என்ன?

இத்தகைய நற்குணங்களைக் கொண்டவனான, தோஷங்கள் அற்றவனான ஸ்ரீமன் நாராயணனே ! நான் உன்னை வணங்குகிறேன். எனக்கு மங்களத்தை அளிப்பாயாக என்பதே இந்த ஸ்லோகத்தின் சாரம் ஆகும்.

'ஜன்மாத்யஸ்ய யதோன்வயாதிதரத:' என்னும் பாகவதத்தின் மங்களாசரண ஸ்லோகத்தில் எந்த அர்த்தத்தை சொல்லியிருப்பாரோ, அதே அர்த்தத்தையே மேலும் விளக்குமாறு பாகவத தாத்பர்ய நிர்ணயத்தில் ஸ்ரீமதாசார்யர் சொல்லியிருப்பார்.

ஸ்ருஷ்டிஸ்தித்யப்யயே ஹானியதித்தஷிதமோ பந்தமோக்ஷாஸ்ச யஸ்மா
தஸ்ய ஸ்ரீபிரம்மருத்ர பிரப்ருதிசுரநரத்தீஷ ஷத்வாத்மகஸ்ய |
விஷ்ணோர்யஸ்தா: சமஸ்தா: சகலகுணநிதி: சர்வதோஷவ்யபேத:
பூர்ணானந்தோவவ்யயோ யோ குருரபி பரமஸ்சிந்தயே தம் மஹாந்தம் ||

பொருள்:
பிரம்ம, ருத்ர முதலான தேவதைகள், மனிதர்கள், தைத்யர்கள் மற்றும் அசையும், அசையாப் பொருட்களைக் கொண்ட இந்த உலகத்தை, எந்த இறைவன் படைத்தல், காத்தல், அழித்தல், ஞானம், அஞ்ஞானம், பந்தம், மோட்சம் ஆகிய அனைத்தையும் அவரவர்களின் தகுதிக்கேற்ப கொடுக்கிறானோ, யார் அனைத்து குணங்களின் நிதியாகி இருக்கிறானோ, எந்தவித தோஷங்களும் அற்றவனோ, ஜகத்குருவாக இருக்கிறானோ, சர்வோத்தமனோ அத்தகைய மகானை நான் வணங்குகிறேன்.

இதே பொருளையே ஒரு வரியும் விடாமல், ஸ்ரீமதாசார்யரின் சொல்லிற்கு உரையைப் போல, தாசராயர் தனது மங்களாசரண ஸ்லோகத்தில் எழுதியிருக்கிறார்.

'ஸ்ரீரமணி கரகமல பூஜித' என்னும் வாக்கியத்தின் பொருளை உணர்ந்தால், மேற்கண்ட ஸ்லோகத்தின் பொருள் அப்படியே வந்திருப்பதை உணரலாம். மேலும் இந்த ஸ்லோகத்தின் பொருளையும், சொற்களின் பொருளையும் விளக்கிக் கொண்டே போனால், இந்த கிரந்தம் மேலும் நீளமாகிவிடும் என்னும் காரணத்தினால், நாம் மேலும் எழுதவில்லை.

காயத்ரி வேதங்களின் தாய் என்று கருதப்படுகிறாள். இந்த வேதாந்தங்களின் பொருள் அனைத்தும் இந்த கிரந்தத்திலேயே இருக்கிறது என்று சொல்வதற்காக

இந்த ஸ்லோகத்தில் காயத்ரியின் பொருளும் இருப்பதை பார்க்கலாம். அதாவது - 'தத்சவிதுர் வரேண்யம் ! பர்கோ தேவஸ்ய தீமஹி ! தியோயோன: ப்ரசோதயாத்'. இதன் பொருள்.

ய: - யார்.
ந: - நமக்கு.
திய: - அறிவை.
ப்ரசோதயாத் - கொடுக்கிறானோ.
தஸ்ய - அப்படிப்பட்ட.
தேவஸ்ய - படைத்தல் முதலான தொழிலை விளையாட்டாக (எந்தவித ஆயாசமும் இல்லாமல்) செய்பவன்.
சவிது: - படைப்பவனான சூரிய நாமகனான ஸ்ரீமன் நாராயணன்
வரேண்யம் - பிரம்மாதி அனைத்து தேவதைகளால் வணங்கப்படுபவனான.
பர்க: - ஒளியின் ரூபமான
வபு: - உடலை
தீமஹி - வணங்குகிறேன்

இதுவே காயத்ரியின் பொருள். இதையே தாசராயர் முதல் ஸ்லோகத்தில் விளக்கியிருப்பார். அதாவது, 'தியோயோன: பிரசோதயாத்' என்பதற்கு நிகராக 'கருணிபுதெமகெ மங்களவ' என்று சொல்லலாம். எந்த பரமாத்மன் நமக்கு நல்லறிவைக் கொடுத்து, அந்த வேலைகளை செய்வித்து, அதற்கான பலன்களையும் கொடுக்கிறானோ, அத்தகைய பரமாத்மன் நமக்கு மங்களத்தை தரட்டும் என்று கேட்கிறார் என்பதை அறியவேண்டும். (யார் நமக்கு புத்தியைக் கொடுக்கிறானோ, அவனை வணங்குகிறேன். எனக்கு மங்களத்தையும் கொடுக்க வேண்டும் என்று அவனையே வேண்டுகிறேன்).

தேவஸ்ய சவிது: என்னும் சொற்களுக்கு படைத்தல் முதலான தொழிலை செய்பவன் என்று பொருள். இதற்கு சமமாக 'நீரஜபவாண்டோதய ஸ்திதி காரணனே' எனலாம். வரேண்யம் என்றால் அனைத்து தேவதைகளாலும் வணங்கப்படுபவன் என்று பொருள். இதற்கு சமமாக - 'பிரம்ம சமீரவாணி பணீந்திர வீந்திர பவேந்திர முகவினுத' எனலாம். பர்க: என்றால் கஷ்டங்களைப் போக்குபவன், ஒளிமயமானவன் என்று பொருள். இதற்கு சமமாக - 'நாரசிம்மனே' எனலாம். அஞ்ஞானத்தை விலக்கும் விஷயத்தில் சிம்மத்தைப் போலிருப்பவன். அல்லது நாரனாக (தோஷங்கள் இல்லாதவன்), முக்தர்களின் நடுவில் அவர்களுக்கு தலைவனாக, ஒளிமயமாக இருப்பவன் என்று பொருள்.

தீமஹி என்னும் சொல்லிற்கு, பிரம்மசூத்திரத்தில் இருக்கும் 'அதாதோ பிரம்மஜிக்ஞாஸா ! ஜன்மாத்யஸ்யயத: ! சாஸ்திரயோனித்வாத் ! தத்து சமன்வயாத்' என்னும் நான்கு சூத்திரார்த்தங்களை இந்த ஸ்லோகத்தில் சொல்லியிருக்கிறார். ஆக, பாகவத, பாரத, நிர்ணயாதி கிரந்தங்களும் இதில் அடங்கியிருக்கின்றன என்று உணரலாம். இந்த ஸ்லோகத்தை 'சந்தி சூசனை'

என்று சொல்லியிருக்கிறார். அதாவது, இந்த சந்தியில் எதை விளக்குகிறேனோ, அதன் பொருளையே இந்த ஸ்லோகத்தில் அடக்கியிருக்கிறேன் என்கிறார்.

மத்வ மதத்தினர் முக்கியமாக அறிந்துகொள்ள வேண்டிய விஷயங்களை இந்த சந்தியில் அடக்கியிருக்கிறார். அது என்னவென்றால் - 'ஸ்ரீமன் மத்வமதே ஹரி: பரதர: சத்யம் ஜகத்தத்வதோ பேதா ஜீவகணா: ஹரேரனுசரா: நீசோச்ச பாவம் கதா: ! முக்திர்னைவ சுகானுபூதிரமலாம் பக்திஸ்ச தத்சாதனம் ஹ்யக்ஷாதி த்ரிதயம் பிரமாணமகிலம் நாயைக வேத்யோ ஹரி:'

இதன் பொருள்:
ஸ்ரீமன் மத்வ மதத்தில், ஹரியே சர்வோத்தமன். ஜகத் சத்தியம் (உண்மை). ஜீவகணர்களில் பேதம் உள்ளது. அவர்கள் பரமாத்மனின் கிங்கரர்கள் (அதீனர்கள்). தாரதம்யத்தில் இருப்பவர்கள். ஸ்வரூபானந்தத்தைக் காண்பதே முக்தி. திடமான பக்தியே முக்திக்கு சாதனம். பிரத்யட்சம், ஆகமம், அனுமானம் என்பவை மூன்று ஆதாரங்கள். இந்த விஷயங்களையே இந்த பத்யத்தில் விளக்கியிருக்கிறார். நாரசிம்ஹனே என்னும் பதத்தினால் 'ஹரி' சர்வோத்தமன் என்பதை நிரூபித்திருக்கிறார். 'நாரசிம்ஹ' என்னும் சொல்லின் வியாக்யானத்தால் இந்த அர்த்தங்கள் படிப்பவர்களுக்கு தெரிந்திருக்கலாம்.

பிரளய காலத்திலும்கூட முக்தர்கள் இருப்பதால், அப்போது அவர்களுக்கு ஆதரவு அளிப்பவன் பரமாத்மனே. ஆக, பரமாத்மனும், முக்த பிரம்மாதிகளும் அனாதி காலத்திலும் இருப்பதால் 'ஜகத் மித்யா' என்று சொல்வதற்கில்லை. ஆகையால், ஜகத் சத்யம் என்று அறியவேண்டியிருக்கிறது. பிரம்மாதி ஜீவகணங்களால் கூடிய, சேதன அசேதனர்களால் நிரம்பிய இந்த உலகம் உண்மையானது என்னும் விஷயத்தில், நாரசிம்ஹ என்னும் சொல்லினால், முக்தியில் ஆதரவு கொடுப்பவன் என்னும் குணங்களை குறிப்பதாலும், பிரம்மாதி தேவதைகளால் வணங்கப்படுபவன் என்று சொல்வதாலும், ஜகத் சத்யம் என்று சொல்ல வேண்டும்.

பிரபஞ்சம் பஞ்ச பேதாத்மகம் என்பதை ஸ்ரீரமணிகரகமலபூஜித, பிரம்ம சமீர வாணி இத்யாதி வர்ணனைகளால், லட்சுமி பிரம்மாதி ஜீவராசிகளுக்கும் பரமாத்மனுக்கும் பேதம் இருக்கிறது என்று சொல்லியாயிற்று. அரசன் மற்றும் அரசனின் கீழ் இருப்பவர்களுக்கு எப்படி பேதம் இருக்கிறதோ, அப்படியே ஸ்வாதந்த்ர - அஸ்வாதந்த்ர பேதங்களால், ஜீவ பரமாத்மனுக்கு நடுவில் பேதம் இருக்கிறது என்று அறியவேண்டும். பிரம்ம, சமீரவாணி என்று சொல்லி, லட்சுமி, பிரம்ம, வாயு என்னும் இவர்களிடமும், அதாவது ஜீவ ஜீவர்களுக்கு இடையே பேதம் இருக்கிறது என்றும் சொல்லியாயிற்று.

நீரஜபவாண்டோதய ஸ்திதி காரணனே என்று சொல்லி, பிரம்மாண்டாதி ஜடங்களுக்கும், பரமாத்மனுக்கும் பேதம் இருக்கிறது என்று சொல்கிறார். பானைக்கும் பானை செய்பவருக்கும் எப்படி பேதம் இருக்கிறதோ, அப்படியே பரமாத்மனிடமிருந்து ஸ்ருஷ்டியான பிரம்மாண்டத்திற்கும் பரமாத்மனுக்கும் பேதம் உள்ளது. பிரம்மாண்டாதி ஜடங்களுக்கும் பிரம்மாதி ஜீவராசிகளுக்கும்

பேதம் இருக்கிறது என்று மேற்சொன்ன விஷயங்களிலிருந்தே அறியலாம். பிரம்ம, சமீரவாணி முதலான வாக்கியங்களால் பிரம்ம, வாயு ஆகியோரின் ஜடதேகங்களுக்கும் பரஸ்பரம் பேதம் இருக்கிறது.

இப்படியாக : 1. ஜீவ பரமாத்ம பேத. 2. ஜீவ ஜீவ பேத. 3. ஜீவ ஜட பேத. 4. ஜட பரமாத்ம பேத. 5. ஜட ஜட பேத. என்னும் ஐந்து பேதங்களை முக்கியமாக அறியவேண்டும் என்று சொல்கிறார். மேலே சொல்லப்பட்டுள்ள வார்த்தைகளிலேயே அதாவது: ஸ்ரீரமணி, பிரம்ம, சமீர, ஆகிய சொற்களால் ரமா பிரம்மாதிகள் அனைவரும் பரமாத்மனின் கிங்கரர்கள் என்று அறியலாம். மற்றும் இதிலிருந்தே 'பவேந்திரமுகவினுத' என்னும் சொல்லால் ரமா, பிரம்மாவிலிருந்து இந்திரன் வரை தாரதம்யத்தை சொல்லி, 'இந்திரமுகவினுத' - 'முக' என்று சொல்லி, மனுஷ்யோத்தமர்கள் வரை தாரதம்யத்தை சொல்லியிருக்கிறார் என்று அறியவேண்டும். இப்படியான தாரதம்யத்தை தெளிவாக அறிந்துகொள்வதால், தூய்மையான பக்தி உண்டாகிறது. {இதை நிறுவும் பிரத்யட்சம் முதலான ஆதாரங்கள், இந்த பத்யத்தின் துவக்கத்திலேயே விளக்கப்பட்டுள்ளது).

ஆகையால், ஸ்வரூபானந்தத்தைக் கொடுப்பவனான என்பதை கைவல்யத்தைக் கொடுப்பவனான (கைவல்ய தாயக) என்று சொல்லலாம். ஸ்வரூபானந்தத்தைக் கொடுப்பவன் என்பதை மங்களத்தைக் கொடுப்பவன் என்னும் சொல் விளக்குகிறது. இப்படி, முதல் பத்யத்திலேயே சந்தியின் நோக்கத்தை முழுமையாக காட்டியிருக்கிறார் தாசர் என்பதை அறியலாம்.

இப்படியாக, சாட்சாத், ஜகதீஷ்வரனான ஸ்ரீபரமாத்மனுக்கு முதல் பத்யத்திலிருந்து, மங்கள ரூபமான நமஸ்காரத்தை செய்து, பிறகு பாக்யத்தைக் கொடுக்கக்கூடிய ரமாதேவியரை வணங்கியிருக்கிறார். 'ஸ்ரீரமணிகரகமல பூஜித' என்னும் பத்யத்தில், லட்சுமிதேவியரால் வணங்கப்படுபவனான பரமாத்மனை தானும் வணங்கியிருக்கிறார். ஆகையால், லட்சுமிதேவியருக்கு தனியாக நமஸ்காரத்தை செய்யாமல் 'ஸலஹலி' (காப்பாற்றட்டும்) என்று மட்டும் சொல்லியிருக்கிறார்.

லட்சுமி நரசிம்மன் என்று ஏன் சேர்த்து வணங்கவேண்டும்? லட்சுமிதேவிக்கு தனியாக ஏன் நமஸ்காரம் செய்யவில்லை என்றால், லட்சுமிதேவியை விட்டு, பரமாத்மனுக்கு தனியாக பூஜை முதலானவைகளை செய்தால், அதை பரமாத்மன் ஏற்றுக் கொள்வதில்லை என்றும், பரமாத்மனை விட்டு லட்சுமிதேவிக்கு பூஜைகளை செய்தால், அதை அவள் ஏற்றுக் கொள்வதில்லை என்றும், பாகவதம் மற்றும் ஹரிவம்சங்களில் சொல்லப்பட்டிருக்கிறது. ஹரிவம்சத்தில் 'ஆஸ்சர்யோபாக்யானம்' என்னும் இதிகாசம் உண்டு. அதை நிர்ணயத்தின் 20வது அத்யாயத்தில் 33 முதல் 77 வரையிலான ஸ்லோகங்களில் ஸ்ரீமதாசார்யர் சொல்லியிருப்பார். அதன் விஷயம் என்னவென்றால்:

ஒரு முறை ஸ்ரீகிருஷ்ணன் துவாரகையில் வசித்திருந்தபோது, அதன் அழகினைக் கண்டு மகிழவேண்டும் என்று பல தேசங்களிலிருந்து பல அரசர்கள் அங்கு வந்தனர். அவர்களில் பாண்டவர்கள், கௌவர்களும் இருந்தனர். இவர்கள்

அனைவரையும் ஸ்ரீகிருஷ்ணன், ரைவத பர்வதத்திற்கு அழைத்து வந்து, தகுந்த உபசாரங்களை செய்து, அவர்களுடன் பேசியவாறு அமர்ந்திருந்தான். அப்போது அந்தரிக்ஷத்திலிருந்து இறங்கி வந்து, நாரதர், ஸ்ரீகிருஷ்ணனைப் பார்த்து, 'நீ ஆச்சரியன். தன்யன்' என்று கூறினார். 'நீயே சர்வோத்தமன். உனக்கு சமமானவர்கள் யாரும் இல்லை' என்பதே இதன் பொருள். அதற்கு ஸ்ரீகிருஷ்ணன் 'தக்ஷிணாபிஸ்ஸாகம்' என்று பதிலளித்தான். நாரதர் அதனை ஆமோதித்தார்.

இதற்கு என்ன பொருள் என்று அங்கிருந்த அரசர்கள் புரியாமல் முழிக்க, அவர்களுக்கு அதை விளக்கவும் என்று நாரதரிடம் ஸ்ரீகிருஷ்ணன் கேட்டுக்கொண்டான். அப்போது நாரதர் 'அரசர்களே கேளுங்கள். ஒரு நாள் நான் கங்கை நதியில், மலை போன்ற ஒரு பெரிய ஆமையைக் கண்டேன். அதைக் கண்டு வியப்படைந்தேன். அதனிடம் 'நீ மிகவும் ஆச்சரியமான பிராணி. நீயே தன்யன்' என்றேன். அதற்கு அந்த ஆமை 'ஹே நாரதரே. அல்பனான என்னை எப்படி வர்ணித்தீர்? இந்த கங்கையைப் பார். என்னை போன்ற எவ்வளவு பிராணிகளைக் கொண்டிருக்கிறது. அவளுக்கு முன் நான் எவ்வளவு சிறியவன்' என்று சொன்னது. அப்போது நான் கங்கையை வணங்கி 'நீ மிகவும் ஆச்சரிய ஸ்வரூபள். நீயே தன்யள்' என்றேன். அதற்கு கங்கையானவள் 'என்னைப் போல பல நதிகளைக் தன்னுள் அடக்கியிருக்கும் கடல் எவ்வளவு பெரியது?. அதற்கு முன் நான் மிகவும் சிறியவள்' என்றாள்.

நான் அங்கிருந்து புறப்பட்டு நேராக வருணனிடம் சென்று 'ஆச்சரியன், தன்யன்' என்றேன். அப்போது வருணன், தன்னைப் போன்ற பல கடல்களை தன்னுள் அடக்கியிருக்கும் பூமியைக் காட்டினான். பின், பூமி ஸ்வரூபளான உமாதேவியை வணங்கினேன். 'என்னை ஒரு பாய் போல சுற்றிக் கொண்டிருக்கின்றன பர்வதங்கள்' என்றாள். பர்வதா அபிமானிகளான கருட, சேஷ, ருத்ர தேவதைகளைக் கண்டு 'நீங்கள் ஆச்சரிய ஸ்வரூபர்கள். தன்யர்' என்றேன். அதற்கு அவர்களோ ' நம்மைப் போல பல பர்வதங்களைக் கொண்டிருக்கும் பிரம்மாண்டம் இருக்கும்போது நம்மை ஏன் புகழ்கிறீர்கள்?' என்றனர். ஆகவே நான், பிரம்மாண்டத்தையே தேகமாகக் கொண்டிருக்கும் பிரம்மதேவரே உத்தமர் என்று அறிந்து, அவரை வணங்கினேன். அவரோ, வேதங்களே உத்தமமானவை என்று கூறினார். ஆகவே, வேதரூபமான லட்சுமிதேவியை வணங்கினேன். அவளோ யக்ஞத்தை போற்றினாள்.

யக்ஞரூபியான ஸ்ரீமன் நாராயணனே, ஸ்ரீகிருஷ்ணரூபியாக அவதரித்திருக்கிறான். அவனிடம் சென்றால் என் பிரச்னை தீரும் என்று நினைத்து நான் இங்கு வந்து ஸ்ரீகிருஷ்ணனை வணங்கி 'நீ ஆச்சர்ய ஸ்வரூபன். நீயே தன்யன்' என்றேன். அதற்கு ஸ்ரீகிருஷ்ணன் 'தக்ஷிணாபிஸ்ஸாகம்' என்று பதிலளித்தார். இங்கு என் பிரச்னை தீர்ந்தது. இதன் பொருள் என்னவென்றால், யக்ஞத்தையே பெரியது என்று நினைத்தால், தக்ஷிணையுடன் கூடிய யக்ஞமே பெரியதாகும். யக்ஞம் என்றால் பரமாத்மன். அவனே ஸ்ரீகிருஷ்ணன். அந்த ஸ்ரீகிருஷ்ணன் சொன்னது 'தக்ஷிணைகளால் கூடிய நான் தன்யன்'. தக்ஷிணை என்றால் ஸ்ரீலட்சுமிதேவியின் பெயர். அது எப்படி என்றால் (மகாபாரத தாத்பர்ய நிர்ணய அத்தியாயம் 20) :

சர்வோத்தம: கிண்டுயதாது ஸாமே வாமார்த்தரூபா தக்ஷிணா நாமதேயா |
யஸ்மாத்தஸ்யா: தக்ஷிணத: ஸ்திதோஹம் தஸ்மான்னாம்னா தக்ஷிணேத்யேவ ஸாஸ்யாத் ||73

இதன் பொருள் என்னவெனில்: நான் எப்போதும் உத்தமனே ஆனாலும், ஸ்ரீலட்சுமிதேவி எப்போதும் என் இடது பக்கத்தில் பாதி சரீரத்தைக் கொண்டு, எனது பாதி உடலாகவே காட்டிக்கொள்கிறாள். அவள் என் தக்ஷிண பாகத்தில் (எப்போதும் வலது பக்கத்தில் இருப்பதால், அவளுக்கு தக்ஷிணா என்றும் பெயர் உண்டு. அவள் என் உடலில் பாதியை எடுத்துக் கொண்டிருப்பதால், அவளுக்கு அர்த்த நாராயணி என்றும் பெயர் உண்டு) எப்போதும் இருக்கிறாள் என்று பரமாத்மா சொல்கிறார். ஆகையால், தான் எப்போதும் லட்சுமிதேவியுடனேயே பூஜையை ஏற்றுக்கொள்பவன் என்று சொல்கிறான்.

''தக்ஷிணாபிஸ்ஸாகம்' தக்ஷிணைகளால் என்று பன்மை எதற்கு? அதாவது, அவதார ரூபங்களை, மூல ரூபங்களை வணங்குவதற்காக, லட்சுமிதேவி பல ரூபங்களை தரித்திருக்கிறாள்' என்று நாரதர் கூறினார். பிறகு, அங்கிருந்த அனைவரும் ருக்மிணி சமேத ஸ்ரீகிருஷ்ணனை வணங்கினர் என்று நிர்ணயாதி கிரந்தங்களில் சொல்லப்பட்டிருக்கிறது. இதிலிருந்து, லட்சுமி சமேதனான பரமாத்மனையே பூஜிக்க வேண்டும் என்ற் விதியின்படி, தாசர் லட்சுமி சமேதனான பரமாத்மனை முதலாம் பத்யத்தில், பாக்யத்தைக் கொடுப்பவளான ரமாதேவியிடம், தமது இஷ்டார்த்த சித்திகளைக் கொடுக்குமாறு வேண்டுகிறார்.

**ஜக3து3த3ரனதி1 விமலகு3ண ரூ**
**ப1களனாலோசனதி3 பா4ரத**
**நிக3மத1திகளதிக்ரமிஸி க்ரியாவிசேஷக3ள |**
**ப3கெ3ப3கெ3ய நூத1னவ கா1ணுத1**
**மிகெ3 ஹருஷதி3ம் பொ1க3ளி ஹிக்கு3வ**
**த்ரிகு3ணமானி மஹாலகுமி ஸந்தெயிஸலனுதி3னவு ||2**

ஜகதுதரன = இந்த உலகங்கள் அனைத்தையும் தன் உதரத்தில் வைத்துக்கொண்டிருக்கும் பரமாத்மனின், அதி அற்புதமான குணரூபங்களை.
அதி விமல = அற்புதமான.
குண = ஆனந்தாதி குணங்கள்.
ரூபகளன = மத்ஸ்யாதி அனந்தானந்த ரூபங்களை.
க்ரியா விசேஷகள = மூலரூப, அவதார ரூபங்களால் செய்யும் சிறந்த செயல்களை.
பாரத நிகமததிகளதிக்ரமிஸி = பாரத = ஐந்தாம் வேதம் என்று அழைக்கப்படும் பாரதத்தை.
நிகமததிகள = வேதராசிகளை.
அதிக்ரமிஸி = மீறி (பாரதத்திலும், வேதங்களிலும் சொல்லப்பட்டிருக்கும் பகவத் மகிமைகளைவிட அதிகமானதாக)
ஆலோசனதி = ஆலோசனையுடன்

பகெபகெய = பற்பல விதமான
நூதனவ = புதுப்புது மகிமைகளை பார்த்தவாறு
மிகெஹருஷதிம் = மிகுந்த மகிழ்ச்சியுடன்
பொகளி = வணங்கி, போற்றி
ஹிக்குவ = பூரிப்படையும்
த்ரிகுணமானி = ஸ்ரீ, பூ, துர்கா என்னும் மூன்று ரூபங்களால், சத்வ, ரஜஸ், தமஸ் என்னும் மூன்று குணங்களுக்கு அபிமானியாக இருக்கும்.
மஹாலகுமி = மகாலட்சுமி
அனுதினவு = தினந்தோறும்
சந்தைஸலி = கிரந்தத்தை முடிக்கும் வேலை முதலான இஷ்டார்த்தங்களை நிறைவேற்றி அருளட்டும்.

பொருள்:
மகாலட்சுமியானவர், சத்வ, ரஜஸ், தமோ குணங்களுக்கு அபிமானியாகி, ஸ்ரீதேவி, பூதேவி, துர்காதேவி என்னும் மூன்று குணங்களால், ஸ்ருஷ்டி காலத்திலும், பாதுகாக்கும் காலத்திலும், உலகத்தை தன் உதரத்தில் வைத்துக்கொண்டு படுத்திருக்கும் பரமாத்மனை, பிரளய காலத்திலும் அரை க்ஷணமும் விடாமல் வணங்கிக்கொண்டிருக்கிறாள். அந்த பரமாத்மன் தன் அவதார மற்றும் மூல ரூபங்களால் எந்தெந்த வேலைகளை செய்துவருகிறாரோ, அந்தந்த வேலைகளில் சிறப்புகளை, அவனின் குணரூபங்களை ஆலோசனை செய்து அறிந்தவாறு; பாரதத்திலும், வேதராசிகளிலும்கூட சொல்லப்பட்டிருக்காத புதுப்புது பகவத் மகிமைகளை, குணரூபங்களை, ஒவ்வொரு நொடியும் கண்டவாறு, அந்த பரமாத்மனை போற்றிப் புகழ்ந்தவாறு, அவனின் மகிமைகளை எவ்வளவு பார்த்தாலும் அவனிடம் இருக்கும் மகிமைகளின் ஒரு சிறிய அம்சத்தைப் பார்ப்பதற்கும் சாத்தியம் இல்லை என்று வியப்படைகிறாள். இத்தகைய ரமாதேவி, நான் மேற்கொண்டிருக்கும் இந்த காவியத்தை முடித்துவைத்து, நமக்கு தினந்தோறும் அருளட்டும்.

சிறப்புப் பொருள்:
முந்தைய ஸ்லோகத்தில் தாசர், லட்சுமியுடன்கூடிய ஸ்ரீபரமாத்மனை வணங்கியவாறு, இங்கு லட்சுமிதேவியிடம் தான் விரும்புவதை வேண்டுகிறார். அது என்னவெனில்: இந்த கிரந்தத்தை முடித்தல்; பகவந்தனிடம் திடமான பக்தி; அபரோக்ஷத்தில் பரமாத்மனை காணுதல்; முக்தி - இவை அனைத்தும் லட்சுமிதேவியின் அருளால் மட்டுமே ஆகவேண்டும். ஆகையால், 'ஸந்தெயிஸலி' என்றி சொல்லி, மேலே சொன்ன விஷயங்களை வேண்டுகிறார்.

ஸ்ரீபரமாத்மனின் அருளைப் பெறவேண்டுமென்றாலும், அவனை அபரோக்ஷத்தில் காணவேண்டுமென்றாலும், ஸ்ரீலட்சுமிதேவியின் அருள் தேவை ஆதலால், மோகனதாசர், 'வெங்கடாத்ரி நிலயன, பங்கஜநாபன, தோரவ்வா லகுமி' என்று பாடினார். நம் தாசரும் இதே அபிப்பிராயத்தில் 'ஸந்தெயிஸலி' என்று சொல்லியிருக்கிறார் என்று அறியவேண்டும்.

‘த்ரிகுணமானி’ என்னும் சொல்லால், பிரம்மாதி எந்த தேவதைகளும் இல்லாத பிரளய காலத்திலும், ஸ்ரீதேவி, பூதேவி, துர்காதேவி என்னும் மூன்று ரூபங்களால் த்ரிகுணங்களுக்கு அபிமானியாகி; அதாவது சத்குண அபிமானி = ஸ்ரீதேவி; ரஜோகுண அபிமானி = பூதேவி; தமோகுண அபிமானி = துர்காதேவி என்று த்ரிகுணமானியாகி, மூன்று ரூபங்களால் பரமாத்மனை சேவை செய்துவருகிறாள்.

’ஸ்ரீ பூர்மிரிதி ரூபாக்யாம் ப்ரக்ருதிர்விஷ்ணுனா ஸஹ || ஷேதே ஸ்ருதிஸ்வரூபேண ஸ்தௌதிப்ரஹ்மலயே ஹரிம்’ என்னும் பாகவத 10ம் ஸ்கந்த தாத்பர்ய நிர்ணயத்தின் வாக்கியத்தின்படி, பிரளயகாலத்தில் பூதேவி படுக்கை ரூபத்தில் வடபத்ர (ஆல இலை) ரூபத்தைப் பெறுகிறாள். ஸ்ரீதேவி, பரமாத்மனுடன் படுத்திருக்கிறாள். துர்காதேவி ஸ்ருதி ரூபமாக பரமாத்மனை ஸ்தோத்திரம் செய்துகொண்டிருக்கிறாள். ‘ந கடத உத்பவ: ப்ரக்ருதி புருஷயோரஜயோ:’ - பிறப்பு இறப்பு இல்லாத, ப்ரக்ருதி புருஷ நாயகரான லட்சுமி நாராயணனுக்கு, அழிவு என்பதே இல்லை. இவர்கள் இருவரும், பிரளய காலத்திலும்கூட கண்டிப்பாக இருக்கிறார்கள் என்று சொல்லப்பட்டிருக்கிறது. அதே ஸ்ருதி வாக்கியத்தில் ‘உபய யுஜோர்பவந்த்யஸுப்ருதோ ஜலபுத்புதவத்’ - இவர்கள் இருவரும் சம்பந்தத்தாலேயே - நீரினால் நீரை அடித்தால் அலைகள் உருவாவதைப் போல, பிரம்மாதி ஜீவராசிகள் உருவாகிறார்கள் என்று சொல்லப்பட்டிருக்கிறது.

இன்னொரு வேத வாக்கியத்தில் ‘யத உதகா த்ருஷிரனு தேவகணா உபயே’ எந்த காரணத்தால் ’ரிஷி:’ ஞானியான பிரம்மதேவர் உன்னிடமிருந்து பிறந்தாரோ, மற்றும் அனு = அவரைத் தொடர்ந்து, தேவகணா உபயே = பிரம்மாதி பதவியைப் பெறாதவர்கள், பின்னர் அந்தப் பதவிக்கு வரப்போகிறவர்கள் என இந்த இரு விதமான தேவதைகளும் பிறந்தனரோ, அந்த காரணத்தாலேயே இந்த உலகத்தில் படைப்பு, அழிப்பு ஆகியவை இல்லாதவன், உன்னைத் தவிர வேறு யாரும் இல்லை. பிறப்பு இறப்பு உள்ளவர்கள், அது இல்லாத உன்னைப் பற்றி முழுமையாக அறியமாட்டார்கள். உன் மகிமைகளை முழுமையாக நீ ஒருவன் மட்டுமே அறிவாய் என்று வேதங்கள் கூறுகின்றன.

பிரளய காலத்தில், பரமாத்மனின் சேவையை செய்தவாறு லட்சுமிதேவியானவர் மட்டும் இருப்பாரே தவிர பிரம்மாதி தேவதைகள் யாரும் இருப்பதில்லை என்று நிரூபித்ததைப் போலவும் ஆயிற்று. மேலும் ‘ஜகதுதரன’ என்று சொல்லி பிரளய காலத்தில் பரமாத்மனின் ஸ்திதி நிலையைக் காட்டுகிறார். அது எப்படியெனில்: ’ஸம்ஷாந்த ஸம்விதகிலம் ஜடரே நிதாய லட்சுமி புஜாந்தரகத: ஸ்வரதோபிஜாக்ரே’ என்ற மகாபாரத தாத்பர்ய நிர்ணய ஸ்லோகத்தின்படி, இந்த உலகத்தை தன் உதரத்தில் வைத்துக்கொண்டு, லட்சுமிதேவியரால் வணங்கப்பட்டு, பிரளய காலத்தில் பரமாத்மன் இருக்கிறான் என்று தெரியவருகிறது.

மேலும் ‘தஸ்யோதரஸ்த ஜகத:’ என்னும் நிர்ணய ஸ்லோகத்தினால், ஸ்ரீபரமாத்மன் பிரளய காலத்தில், தன் உதரத்தில் இருக்கும் ஜீவகணர்களை, ஸ்ருஷ்டிக்குக் கொண்டு வந்து, அவரவர்களின் தகுதிக்கேற்ப சாதனைகளை செய்வித்து,

அதற்கேற்ப பலன்களைக் கொடுத்து, அருளவேண்டும் என்று, பிரளயத்தின் முடிவில் நிச்சயித்தான் என்று சொல்லியிருக்கிறார்கள்.

இதிலிருந்து தெரிய வரும் விஷயங்கள் என்னவெனில்: பிரம்மாதிகள் இல்லாத பிரளய காலத்தில், பகவத் வியாபாரங்கள் எப்படி இருந்தன என்று பிரம்மாதிகளுக்கு தெரியாது. அப்போதும் ரமாதேவியர்கள் இருந்ததால், அப்போதைய அபாரமான பகவத் மகிமைகளை தொடர்ந்து பார்த்திருப்பதால், ஸ்ரீலட்சுமிதேவியர் மகாமகிமைகளைக் கொண்டவர்கள். லட்சுமிதேவியரின் ஞானத்தில் சிறிதளவுகூட பிரம்மாதிகளுக்கு இல்லை என்று இதிலிருந்து தெரியவருகிறது. உலக விஷயங்களைப் பற்றி பிரம்மதேவர் யோசித்தால், உள்ளங்கை நெல்லிக்கனி போல அவருக்கு அனைத்தும் தெள்ளத்தெளிவாக தெரிய வருகிறது. அதே சமயம், ரமாதேவியருக்கு அந்த விஷயத்தை யோசிக்காமலேயே தெரிந்து கொள்ளும் மகிமை இருக்கிறது. அப்படியிருந்தும், பரமாத்மனின் அதிவிமல குணரூபங்களை, மூலரூப அவதார ரூபங்களால் அவர் செய்யும் அபாரமான செயல்களை, பாரதத்திலும், வேத ராசிகளிலும் சொல்லப்பட்டிருக்கும் அந்த விஷயங்களைப் பற்றி யோசித்தே தெரிந்து கொள்கிறார். ஆனால், எவ்வளவு யோசித்தாலும், அந்த குணங்களைப் பற்றி முழுமையாக அறியமாட்டார் . இந்த விஷயத்தைப் பற்றி பாகவத பத்தாம் ஸ்கந்தத்தில் இப்படி சொல்லப்பட்டிருக்கிறது.

நனாமரூபே குணகர்மஜன்மபி
ர்னிரூபிதவ்யெஷவதஸ்ய ஸாக்ஷிண: |
மனோவசோப்யாமனுமேயவர்த்மனோ
தேவக்ரியாயா; ப்ரதியந்த்யதாபிஹி || (பாகவத 10-3-37)

தேவகியின் கர்ப்பத்தில் இருக்கும் பரமாத்மனை, பிரம்மதேவர் ஸ்தோத்திரம் செய்யும் சந்தர்ப்பத்தில், அவர் சொல்வது: ‘எலே ஈஷா! உன்னுடைய நாம ரூபங்களை, செயல்களாலோ, பிறவிகளை எடுத்தோ, குணங்களாலோ காண்பது சாத்தியமில்லை. குண, கர்ம, பிறவிகளால் அக்னியை காணமுடியும். எப்படியெனில், ஒளிமயமான காந்தியைக் கொண்டவன் என்ற குணங்களாலும், எதையும் எரிக்கும் சக்தி உள்ளவன் என்னும் செயலாலும், மரங்களை அழிக்கவல்லவன் என்று பிறப்பினாலும் அக்னியின் ஸ்வரூபத்தைக் காணமுடியும். இப்படி உன்னுடைய ஸ்வரூபத்தைக் காண்பதற்கு சாத்தியமில்லை. அப்படியெனில், குணரூபங்களே இல்லை என்பதா? உன்னுடைய குணரூபங்களை நீ மட்டுமே காண்பதற்கு சாத்தியம். நீ கண்டுகொண்டிருப்பதை பொய் என்று எப்படி சொல்வது? இதற்கு ஆதாரம் என்னவெனில்: ‘சர்வ நாமா, சர்வகர்ம, ரிக்மவர்ணம், கர்த்தாரமீஷம்’ என்னும் வேத மந்திரங்களின் ஆதாரத்தினாலும், மனதினாலும், வசனங்களாலும், நீ அபரிமிதமான குண நாமங்களைக் கொண்டவன் என்று அனுமானிக்க சாத்தியம் உள்ளதை பொய் என்று சொல்வதற்கு வாய்ப்பில்லை என்பதே இதற்கு ஆதாரம்.

வேதங்களில் பகவத் மகிமைகளைப் பற்றி எவ்வளவு சொல்லப்பட்டிருக்கிறதோ, பிரம்மாதிகள் அவ்வளவு மட்டுமே அறிந்து, அவ்வளவே மகிழ்ச்சியை அடைகின்றனர். லட்சுமிதேவியரோ, வேதங்களில் சொல்லப்பட்டிருக்கும் பகவத் மகிமைகளை, யோசிக்காமலே அறியும் சக்தியைப் பெற்றிருக்கின்றனர். அவற்றில் சொல்லப்பட்டிருக்கும் அபாரமான குணங்களை யோசித்தவாறு, பரமாத்மனின் அனந்தானந்த ரூபங்களைப் பற்றி, ஒவ்வொரு ரூபங்களுக்குள்ளும் இருக்கும் அனந்தானந்த பாகங்களைப் பற்றி, ஒவ்வொரு பாகங்களுக்குள்ளும் இருக்கும் அனந்தானந்த செயல்களைப் பற்றி, ஒவ்வொரு செயல்களில் இருக்கும் புதுப்புது விஷயங்களைப் பற்றி, ஒரு நொடியின் அனந்தானந்த பாகங்களில், ஒரு பாகத்தின் மிகச்சிறிய காலத்தில் மிகத்தெளிவாக அறிந்து, ஒரு முறை கண்ட வியப்பினை மற்றொரு முறை காணாமல், புதிதுபுதிதான விஷயங்களையே காண்கிறார் என்றும், அந்த மகிழ்ச்சியிலேயே மூழ்கி, ஸ்தோத்திரம் செய்தவாறு, மெய்மறந்து, பூரிப்படைந்தவாறு இருக்கிறார்.

பிரம்மாதிகள், வேதங்களில் சொல்லப்பட்டிருக்கும் பகவந்தனின் மகிமைகளையே அபாரமாக அறிந்திருக்கின்றனர். அவர்கள் அறிந்திருக்கும் இத்தகைய மகிமைகள், லட்சுமிதேவியருக்கு மிகவும் குறைவானதாக தெரியும். இத்தகைய மகிமையுள்ள ரமாதேவி, மிகக்குறைந்த காலத்தில், பகவந்தனின் அபாரமான மகிமைகளைக் காணும் சக்தியுள்ளவர். புதிதுபுதிதாக பகவந்தனின் மகிமைகளை அவர் கண்டாலும், இன்னும் அவருக்குத் தெரியாத அத்தகைய மகிமைகள் ஏராளமாக இருக்கின்றன. ஆகையால், பகவந்தனிடம் இருக்கும் அபார குணங்களில் மிகச்சிறிய அளவையே மகாலட்சுமி அறிந்திருக்கிறார் என்று நாம் அறியவேண்டும். பரமாத்மன் ஒருவனே தன்னுடைய மகிமைகளை முழுமையாக அறிய வல்லவன் என்றும் அறியவேண்டும். இதே பொருளையே ‘சத்தத்வ ரத்னமாலா’ என்னும் கிரந்தத்தில் ‘விஷ்ணோர்குணா ந நந்தாம்ஷ்சத்ரஷ்டும் ஷக்தாபி ஹிஸ்புடம் | க்ஷணேக்ஷணே நவனவ சுவிஷேஷோபலம்பத ’ (ஸ்லோகம் 126) ஆகிய வாக்கியங்களால் அறிந்து கொள்ளலாம்.

இத்தகைய மகிமைகளைக் கொண்ட ரமாதேவியின் அருள், நமக்கு கிடைக்குமாறு செய்து, தினந்தோறும் அவரை நம் அபரோக்ஷத்தில் காணுமாறு செய்து, நிர்விக்னத்துடன் இந்த கிரந்தத்தை முடிக்க வைத்து, நமக்கு அருளட்டும்.

இப்படியாக இதுவரை, பாக்யத்தைத் தரக்கூடியவரான மகாலட்சுமியை பிரார்த்தித்த தாசராயர், அடுத்து சதுர்முக பிரம்ம, வாயு இருவரும் வகுப்பில் சமமானாலும், பதவியில் சிறிது சிறந்தவரான பிரம்மதேவரைக் குறித்து வேண்டிக் கொள்கிறார்.

**நிருபமானந்தா$^{3}$த்ம ப$^{4}$வ நி**
**ர்ஜர ஸபா$^{4}$ஸம்ஸேவ்ய ருஜுக$^{3}$ண**
**த$^{3}$ரஸெ ஸத்வப்ரசுர வாணிமுக$^{2}$ஸரோஜேன |**
**கருட ஸேஷ ஷஷாங்கத$^{3}$ல சே**
**கரர ஜனக ஜகத்கு$^{3}$ரவே த்வ**
**ச்சரணகளிக$^{3}$பி$^{4}$ வந்திஸுவே பா$^{1}$லிபு$^{1}$து$^{3}$ ஸன்மதிய ||3**

பொருள்:
நிருபமானந்த = உவமைகள் அற்ற அற்புத ஆனந்தத்தைக் கொண்ட.
ஆத்மபவ. ஆத்ம = பரமாத்மனிடமிருந்து.
பவ = தோன்றிய. அல்லது.
நிருபமானந்தாத்மபவ = உவமைகள் அற்ற ஆனந்த ரூபமான பரமாத்மனின் நாபி கமலத்திலிருந்து தோன்றிய.
நிர்ஜரசபா சம்ஸேவ்ய. நிர்ஜர = தேவதைகளின்.
சபா = குழுவிடமிருந்து.
சம்ஸேவ்ய = நன்றாக வணங்கப்படும்.
ருஜுகணதரஸெ = பிரம்ம பட்டத்திற்கு தகுதி பெற்ற கணங்களுக்கு தலைவனான.
ஸத்வப்ரசுர = சத்வகுணங்கள் நிரம்பியவரான.
வாணிமுகசரோஜேன. வாணி = சரஸ்வதி.
முகஸரோஜேன = முக கமலத்திற்கு
இன = சூரியனைப் போலிருக்கும்
கருட, சேஷ, ஷஷாங்கதள சேகரர = கருட, சேஷ, ருத்ரர்களின்
ஜனக = தந்தையான
ஜகத்குருவே = உலகத்திற்கு முக்கிய குருவான, ஹே பிரம்மனே
த்வச்சரணகளிகெ = உன் பாதாரவிந்தங்களை
அபிவந்திஸுவெ = வணங்குகிறேன்
ஸன்மதிய = (ஸ்ரீபரமாத்மனின் பாதாரவிந்தங்களில் என் மனம் லயிக்குமாறு) நல்ல புத்தியை
பாலிபுது = அருள் புரிவாயாக.

விளக்கம்:
யார் உவமைகள் கொடுக்க சாத்தியமில்லாத ஆனந்த ஸ்வரூபத்தைக் கொண்ட ஸ்ரீபரமாத்மனின் சாக்ஷாத் சேவகனாக இருக்கிறாரோ, யார் மொத்த தேவ கணங்களால் வணங்கப்படுகிறாரோ, யார் நிர்மலமான சத்வ ஸ்வரூபனாக இருக்கிறாரோ, யார் சரஸ்வதிதேவியின் முக-கமலத்திற்கு தாமரையைப் போல இருக்கிறாரோ, யார், கருட, சேஷ, ருத்ரர்களுக்கு தந்தையாக இருக்கிறாரோ, அத்தகைய ஜகத்குருவான பிரம்மனின் பாத-பத்மங்களை நான் வணங்குகிறேன். எனக்கு நற்புத்தியைக் கொடுத்து அவர் அருளட்டும்.

சிறப்பு விளக்கம்:
பொதுவாக, மனஸ், புத்தி, சித்த ஆகிய மூன்றையும் ஒன்றாகவே நினைத்து நாம் பயன்படுத்தி வந்தாலும், இவை மூன்றும் வெவ்வேறு தத்வங்களாகவும், வெவ்வேறு தேவதைகள் அங்கு அபிமானியாகவும் இருக்கின்றனர். மனஸ் என்றால் முதன்முதலில் பிறக்கும் சஞ்சல நிலை. புத்தி என்றால் அதை நிச்சயம் செய்யும் நிஸ்சல நிலை. சித்த என்றால் சத்-வ்ருத்தி. சந்திரன், மனோபிமானியாவார். புத்திக்கு அபிமானி ப்ருஹஸ்பதி மற்றும் உமாதேவி. சித்தத்திற்கு அபிமானி பிரம்ம மற்றும் வாயு. வாயுதேவரே அடுத்த கல்பத்தில் பிரம்ம பட்டத்திற்கு வருகிறார். இவர்கள் இருவரும் சமமே. ஆனாலும், பதவியில் வாயுவைவிட

பிரம்மன் சிறிது அதிகமாக இருப்பதால், முதலில் பிரம்மதேவரை வணங்குகிறார் தாசர். ’நிருபமானந்த’ என்னும் பதத்தினால் உன் சரணங்களை வணங்குவேன் என்று கூறுகிறார். பிரம்மதேவருக்கு ஜகத்குரு பதவி எப்படி வந்தது என்றால்:

‘ஜகத்குருத்வமாதிஷ்டம் மயாதே கமலோத்பவ’. என்னால் உனக்கு ஜகத்குருத்வம் கொடுக்கப்பட்டுள்ளது என்று பரமாத்மன், பிரம்மதேவருக்கு சொல்லியிருப்பதாக, தாத்பர்ய நிர்ணய 9ம் அத்தியாயத்தில் சொல்லப்பட்டிருக்கிறது. நிர்ணயத்தில் இன்னொரு இடத்தில் ‘ஷண்ணவத்யங்குலோயஸ்து ந்யக்ரோதபரிமண்டல: சப்தபாதஷ்சதுர்ஹஸ்தோ த்வாத்ரிம்ஷல் லக்ஷணைர்யுத: அஸம்ஷய: சம்ஷயஸ்சித்குருக்தோ மனீஷிபி: தஸ்மாத்பிரம்மா குருர்முக்ய: சர்வேஷாமேவ சர்வதா’ என்றும் சொல்லியிருக்கிறார். இதன் பொருள் என்னவெனில்:

குருவின் லட்சணத்தை சொல்கிறார். 96 அங்குலம் உயரம் இருக்கவேண்டும். இரு கைகளை நீட்டினாலும் இதே அளவு இருக்கவேண்டும். 24 அங்குலத்திற்கு ஒரு முழம் என்று பெயர். அத்தகைய 4 முழங்கள் 96 அங்குலங்கள் ஆகின்றன. 4 முழங்களை காலடிகளால் அளந்தால் 7 காலடி ஆகவேண்டும். இப்படி இரு கைகள் நீட்டினால் வரும் அளவும், உயரமும் ஒன்றாக இருந்தால், அதற்கு ’ந்யக்ரோத பரிமண்டலம்’ என்பார்கள். 32 லட்சணங்கள் இருக்கவேண்டும். தனக்கு சந்தேகங்கள் எதுவும் இருக்கக்கூடாது. மற்றவர்களின் சந்தேகங்களை சரியாக தீர்ப்பவராக இருக்கவேண்டும். இத்தகைய குணங்கள் உள்ளவரே குரு ஆவார். இத்தகைய அனைத்து லட்சணங்களையும் கொண்ட குரு பிரம்மன் ஒருவரே. வாயுதேவர், பிரம்மனுக்கு சமமானவர் என்பதாலும், பின்னர் இவரே பிரம்ம பதவிக்கு வரப்போகிறவர் என்பதாலும், வாயுதேவரும் குரு எனப்படுகிறார். இதற்கு நிர்ணய வாக்கியம் இருப்பதால் ‘ஜகத்குருவே’ என்று அழைத்திருப்பதாக அறியவேண்டும்.

’நிருபமானந்தாத்மபவ’ என்று, பரமாத்மனின் நாபி கமலத்திலிருந்து பிறந்திருக்கும் மகாமகிமர் என்று சொல்லியிருக்கிறார். மன்மதன்கூட பரமாத்மனின் மகனே. ‘நிர்ஜரசபா சம்ஸேவ்ய’ என்கிறார். தேவேந்திரன், தேவகணங்களால் வணங்கப்படுபவன். ‘முகாதிந்த்ராஸ்சாக்னிஸ்ச’ என்னும் வாக்கியத்தின்படி தேவேந்திரனும் பரமாத்மனின் மகனே. இப்படி இருக்கையில், பிரம்மதேவர் எப்படி சிறந்தவர் ஆகிறார் என்றால், ‘ருஜுகணதரஸெ’ என்றார். இந்த அதிகாரம் பிரம்மதேவரைத் தவிர வேறு யாருக்கும் இல்லை. அதனாலேயே, பிரம்மர் ஜீவோத்தமர் என்று சொல்லப்பட்டிருக்கிறது. இதைத்தவிர, ருத்ராதி தேவர்களில் ரஜோகுணம் அதிகமாக காணப்படுகிறது. இவரில் அப்படி இல்லை என்பதற்காக ‘சத்வப்ரசுர’ என்கிறார். ‘விஷுத்தசத்வம் பிரம்மாக்யம்’ என்னும் பாகவத வசனத்தின்படி, இவரிடம் சத்வகுணம் அதிகமாக காணப்படுகிறது என்பதை நினைவூட்டுகிறார். இத்தகைய வாக்கியங்களால், இவருக்கு அசுராவேஷமோ, அஞ்ஞானாதி தோஷங்களோ இல்லை என்றும் சொல்லப்படுகிறது.

மேலும், நமக்கு ஒரு பெரிய அதிகாரியினால் ஒரு வேலை ஆகவேண்டுமெனில், நேரடியாக அவரிடமே போய் அதைப்பற்றி கேட்டால், அது நடக்காமல் போக வாய்ப்பிருக்கிறது. ஆகையால், முதலில் அதிகாரியின் அன்பைப் பெற்ற ஒருவரின்

கருணையைப் பெற்று, அவர் மூலமாக அந்த அதிகாரியைக் கண்டால், அந்த வேலை நடக்க அதிக வாய்ப்பிருக்கிறது என்பதை உலக வழக்கத்தில் பார்க்கிறோம். இதன்படியே, தாசராயரும், பிரம்மனின் பரிவாரங்களில் மூத்தவரான அவரது மனைவியின் மூலமே அவரின் பிரசாதத்தைப் பெறவேண்டும் என்று உத்தேசித்து 'வாணிமுக ஸரோஜேன' என்கிறார். சூரியனைக் கண்ட தாமரை எப்படி மலர்கிறதோ, அதன்படியே பிரம்மன் என்னும் சூரியனைக் கண்ட சரஸ்வதியின் முக- கமலம் மலர்கிறது என்னும் சிந்தனையுடன் இந்த பதத்தை பயன்படுத்தியுள்ளார். பொதுவாக கணவரின் முகத்தைக் கண்டால், மனைவிக்கு ஆனந்தம் உண்டாகிறது. இதிலிருந்து, அவரின் பதிவிரதமும், அவர்கள் இருவரின் மகிழ்ச்சியான தாம்பத்யத்தையும் அறியலாம். இப்படி வர்ணித்திருப்பதால், சரஸ்வதிதேவியரின் பிரசாதமும் கிடைத்து, அவர் மூலமாக, பிரம்மதேவரின் பிரசாதமும் கிடைக்கிறது என்பது தாசராயரின் அபிப்பிராயம்.

மேலும், 'கருட, சேஷ, ஷஷாங்கதள சேகரர ஜனக' - கருட, சேஷ, ருத்ரர்களின் தந்தை என்று சொல்கிறார். இதற்கு ஆதாரம் என்னவெனில்: மகாபாரத தாத்பர்ய நிர்ணயத்தின் 3ம் அத்தியாயத்தில் 'வ்யூடஸ்சதுர்தாபகர்வா' என்னும் 9ம் ஸ்லோகத்திலிருந்து 'தௌவாஹனம் ஷயனம் சைவவிஷ்ணோ:' என்னும் 13ம் ஸ்லோகம் வரைக்கும் இவரின் சிறப்பினை விளக்கியிருக்கிறார் ஸ்ரீமதாசார்யர். இதன் பொருள் என்னவெனில்: ஸ்ரீபரமாத்மன், வாசுதேவ, சங்கர்ஷண, ப்ரத்யும்ன, அனிருத்தன் என்னும் 4 ரூபங்களை எடுத்திருக்கிறார். லட்சுமிதேவியும் 4 ரூபங்களை தரித்து, 4 ரூபங்களை எடுத்த பரமாத்மனுக்கு மனைவியாகிறார். அதில், வாசுதேவ நாமகனான ஸ்ரீஹரியின் ரூபத்தை அடையும் மாயாதேவி புருஷனைப் படைத்தார். சங்கர்ஷண நாமகனான ஸ்ரீஹரியின் ரூபத்தை அடையும் ஜயாதேவி, ஸூத்ரனைப் (Soothra) படைத்தார். 'ஸூத்ரம் ஸவாயு: புருஷோவிரிஞ்சி:'. ஸூத்ரனே வாயுதேவர். புருஷன் பிரம்மதேவர். பிரத்யும்ன நாமகனான ஸ்ரீஹரியின் ரூபத்தை அடையும் கிருதிதேவி இரு பெண் மக்களைப் படைத்தார். முதலாமவள் ப்ரக்ருதி, இரண்டாமவள் ஷ்ரத்தா. இவர்கள் இருவரே சரஸ்வதி பாரதியர்கள். பிரம்மதேவரிடமிருந்து சரஸ்வதி ஜீவன், வாயுதேவரிடமிருந்து பாரதி காலனையும் பெற்றனர். இவர்களில் ஜீவனே சேஷன். காலனே கருடன். இவர்கள் இருவரில் ஒருவர் பரமாத்மனுக்கு படுக்கையானார். இன்னொருவர் வாகனமானார் என்று நிர்ணயத்தில் சொல்லப்பட்டிருக்கிறது.

இதே அர்த்தமே விஷ்ணுரகசியத்திலும் சொல்லப்பட்டிருக்கிறது. பிரம்மதேவரிட மிருந்து ருத்ரதேவர் பிறந்தார் என்பதற்கு பாகவத நிர்ணயாதிகள் ஆதாரமாக இருக்கின்றன. சேஷ கருடர், பிரம்ம வாயுகளின் மக்கள் ஆனாலும், வாயுதேவரே கல்பத்தின் முடிவில் பிரம்மன் ஆகிறார் ஆகையால் தாசராயர், கருட, சேஷ, ருத்ரர்களை பிரம்மதேவரின் மக்கள் என்று சொல்கிறார். இத்தகைய பிரம்மதேவருக்கு நமஸ்காரங்களை சொல்லி, நல்லறிவைக் கொடுக்கட்டும் என்று வேண்டுகிறார்.

அடுத்த பத்யத்திலிருந்து, உலகத்திற்கு முக்கிய குருகளான ஹனும, பீம, மத்வ அவதாரங்களினால் ராம, கிருஷ்ண, வேதவியாஸரின் சேவையை செய்து, ஹரி

சர்வோத்தம, வாயு ஜீவோத்தம என்னும் ஞானத்தினால் பஞ்சபேத, தாரதம்யாதிகளை அறிந்து பரமாத்மனை உபாசனை செய்வதே முக்திக்கு சாதனை என்று நிர்ணயித்து, ஜகத்குரு என்று அழைக்கப்பெற்ற வாயுதேவரை பிரார்த்திக்கிறார்.

**ஆரு மூரெரடொா$^{3}$ந்து$^{3}$ ஸாவிர**
**மூரெரடு$^{3}$ ஷத ஷ்வாஸ ஜபக$^{3}$ள**
**மூருவித$^{3}$ ஜீவரொாளக$^{3}$ப்ஜஜ கல்பபரியந்த |**
**தா$^{1}$ ரசிஸி ஸாத்வரிகெ$^{3}$ ஸுக$^{2}$ ஸம்**
**ஸார மிஸ்ரரிக$^{3}$த$^{4}$ம ஜனரிக$^{3}$**
**பார து$^{3}$க்க$^{2}$க$^{3}$ளீவ கு$^{3}$ருபவமான ஸலஹெம்ம ||4**

பொருள்:
ஆறுமூரெரடொந்து சாவிர மூரெரடு ஷத ஸ்வாஸ ஜபகள = ஆறு மூரு (6x3=18) எரடொந்து (2+1=3) ஸாவிர, மூரெரடு ஷத = (3x2x100=600) ஆக மொத்தம் 21,600 ஷடக்ஷராத்மக ஹம்ஸ மந்திர ஜபத்தினை தினந்தோறும்.
மூரு வித ஜீவரொாளகெ = சாத்விக, ராஜஸ, தாமஸ என்னும் மூன்று வித ஜீவர்களுக்குள்ளும் இருந்து
அப்ஜஜகல்ப பர்யந்த = பிரம்மகல்ப முடியும்வரை
தா ரசிஸி = தான் செய்து
ஸத்வரிகெ = சாத்விகர்களுக்கு
சுக = முக்தி சுகத்தை
மிஷ்ரரிகெ = ராஜஸர்களுக்கு
சம்சார = சுக, துக்கங்கள் கலந்த நித்ய சம்சாரத்தை
அதமரிகெ = தாமஸ ஜனர்களுக்கு
அபார துக்ககள = சகிக்கமுடியாத துக்கங்களைக் கொண்ட அந்தந்தமஸ்ஸினை
ஈவ = கொடுக்கிறார்
குருபவமான = குருமுக்யபிராண
யம்ம = நம்மை
ஸலஹு = பஞ்சபேத தாரதம்யாதி ஞானங்களைக் கொடுத்து அருள்வாயாக.

விளக்கம்:

ஹே பவமானனே. ஸாத்விக, ராஜஸ, தாமஸ என்னும் மூன்று வித ஜீவர்களுக்குள்ளும் இருந்து, தினந்தோறும் 21,600 ஷ்வாஸ ஜபம் என்னும் ஹம்ஸ மந்திர ஜபங்களை, பிரம்ம கல்பத்தின் முடிவு வரைக்கும் செய்து, ஸாத்விகர்களுக்கு முக்தியையும், ராஜஸர்களுக்கு சம்சாரத்தையும், தாமஸர்களுக்கு அந்தந்தமஸ்ஸையும் வழங்குவதற்கு காரணமாக இருக்கிறாய். அத்தகைய நீ எமக்கு அருள்வாயாக.

சிறப்புப் பொருள்:

'த்வச்சரணகளிகபிவந்திஸுவெ பாலிபுது சன்மதிய' என்று பிரம்மதேவரிடம் நற்புத்தியை வழங்குமாறு வேண்டிய தாசராயர், அப்படியே வாயுதேவரிடமும் வேண்டாமல் 'குருபவமான ஸலஹெம்ம' என்று மட்டும் வேண்டியது எதற்காக? வாயுதேவரே அடுத்து பிரம்மபதவிக்கு வருகிறார் ஆகையால், பிரம்ம என்னும் சொல்லாலேயே வாயுதேவரை வணங்கியாயிற்று என்று சிந்தித்து வாயுதேவருக்கு என்று தனியாக வணங்கவில்லை. வாயுதேவரை தனியாக வணங்கக்கூடாது என்று விதி எதுவும் இல்லை. ஏன் செய்யவில்லையெனில், வாயுதேவருக்கும் பிரம்மதேவருக்கும் பதவியில் மட்டுமே பேதமே தவிர வேறு எந்த பேதமும் இல்லை. வாயுதேவரே பிரம்மதேவர் என்று மக்களுக்கு தெரிவிப்பதற்காகவே வாயுதேவரை தனியாக வணங்கவில்லை. ஆனாலும், வாயுபதவியில் இருந்துகொண்டு மக்களுக்கு உதவும் விதமே வேறு. பிரம்மபதவியில் இருந்துகொண்டு மக்களுக்கு உதவும் விதமே வேறு. ஆகையாலேயே, பிரம்மதேவரிடமிருந்து சித்த சுத்தியை மட்டும் வேண்டிக்கொண்டு, வாயுதேவரிடமிருந்து மக்களுக்கு உண்டாகும் மிகப்பெரிய உதவியை தெரிவித்து, அவரிடமிருந்து, தமக்கும் இந்த கிரந்தத்தைப் படிக்கும், கேட்கும் மக்களுக்குத் தேவையான உதவிகளை வேண்டுகிறார்.

வாயுதேவரால் மக்களுக்கு ஆகும் உபகாரம் என்னவெனில்: உலகத்தில் அனைத்து பிராணிகளும் மூச்சு விடுகிறார்கள்தானே? அந்த மூச்சினை வாயுதேவரே பிராணிகளில் இருந்துகொண்டு செய்விக்கிறார். அது ஒரு நாளுக்கு சுமார் (அதாவது 60 நாழிகைகளுக்கு) 21,600 என்று ஆகிறது. ஜீவராசிகள், தேவமனுஷ்யாதி வேறுபாட்டினால், சாத்விக, ராஜஸ, தாமஸ என்று மூன்று விதமாக இருக்கின்றனர். ஸ்வாஸத்தில் ஸ்வாஸ, உஸ்வாஸ, நிஸ்வாஸ என்று மூன்று விதங்கள் உண்டு. ஸ்வாஸ என்றால் மூக்கிலிருந்து காற்றை வெளியில் விடுவது. உஸ்வாஸ என்றால் காற்றை உள்ளிழுப்பது. நிஸ்வாஸ என்றால் இந்த இரண்டுக்கும் இடைப்பட்ட காலம். இன்று மூன்றும் சேர்ந்து ஸ்வாஸ எனப்படுகிறது. இதை மனுஷ்யாதிகள் ஒரு நாளைக்கு 21,600 முறை செய்கின்றனர்.

இந்த ஸ்வாஸமானது வெறும் ஸ்வாஸம் என்று அழைக்கப்படாமல், ஸ்வாஸ ரூபமான ஹம்ஸ மந்திர ஜபம் என்று அழைக்கப்படுகிறது. இந்த ஹம்ஸ மந்திர ஜபத்தை, மூன்று வித ஜீவர்களுக்குள்ளும் இருந்து, வாயுதேவரே செய்து, ஜீவர்களால் செய்விக்கிறார். பிராணிகள் விடும் மூச்சினை ஹம்ஸ மந்திர ஜபம் என்று எப்படி சொல்வது என்றால், ஹம்ஸ மந்திரமானது 'ஹம்ஸ: ஸோஹம் ஸ்வாஹா' என்னும் ஆறு எழுத்துக்களால் ஆனது. ஹம்ஸ என்னும் இரு எழுத்துக்கள் இடைப்பட்ட காலம். ஸோஹம் என்னும் இரு எழுத்துக்கள் உஸ்வாஸ காலம். ஸ்வாஹா என்னும் இரு எழுத்துக்கள் ஸ்வாஸ காலம்.

இந்த சோதனையை அனைவரும் செய்து பார்க்கலாம். வாயை நன்றாக மூடிக்கொண்டு மூக்கினால் மட்டுமே மூச்சு விடவேண்டும். மூச்சை இழுத்துப் பிடிக்கும்போது 'ஹம்ஸ' என்னும் இரு எழுத்துக்களை மனதில் சொல்லிக் கொள்ளவும். காற்றை இழுக்கும்போது 'ஸோஹம்' என்றும், காற்றை விடும்போது 'ஸ்வாஹா' என்றும் சொல்லவும். இதுவே ஹம்ஸ மந்திர ஜபமாகும். மூன்று வித

ஜீவர்களுக்குள் இருந்துகொண்டு வாயுதேவர் இந்த ஹம்ஸ மந்திரத்தை ஜபித்துக் கொண்டிருந்தாலும், அந்த மந்திர ஜபத்தின் பலனை, அந்த மூன்று ஜீவர்களுக்கும் மூன்று விதமாகக் கொடுக்கிறார்.

அது ஏனெனில், மந்திரத்தின் உபாஸனையின் வேறுபாட்டினால், அதன் பலன்களும் வேறுபடுகின்றன. சாத்விகர்கள் தாம் விடுவது வெறும் காற்று மட்டும் அல்ல, அது ஹம்ஸ மந்திர ஜபம் என்று அனுசந்தானம் (சிந்தனை) செய்கிறார்கள். இது எப்படியென்றால்: தந்திரசாரத்தில் சொல்லப்பட்டுள்ள 32 மஹாமந்திரங்களில் இது ஒரு முக்கிய மந்திரமாகும். 'பூர்வேத்யு: ப்ராத: சூர்யோதயமாரப்ய அத்யஸூர்யோதய பர்யந்தம் மத்தேஹஸ்தித முக்ய ப்ராணக்ருதேன, முக்யப்ராணப்ரேரிதேன மயாக்ருதேனச ஷட் ஷதாதிக ஏகவிம்ஷ சஹஸ்ர சங்க்யாக ஸ்வாஸ ரூப ஷடக்ஷர ஹம்ஸமஹாமந்திரஜபேன பகர்வா முக்ய பிராணாந்தர்கத ஹம்ஸரூபி ஸ்ரீலட்சுமி நாராயண: ப்ரியதாம்'. இதன் பொருள் என்னவெனில்: நேற்றைய சூர்யோதயத்திலிருந்து இன்றைய சூர்யோதயத்தின் வரை நம்முள் இருக்கும் வாயுதேவர் செய்த மற்றும் அவரின் ப்ரேரணையினால் நான் செய்த 21,600 எண்ணிக்கையிலான ஸ்வாஸ ரூபங்களான 6 எழுத்துக்களால் கூடிய ஹம்ஸ மஹாமந்திர ஜபங்களால், முக்யபிராணனின் அந்தர்யாமியான ஸ்ரீலட்சுமி நாராயணன் ப்ரீதியாகட்டும்' என்ற பொருளை சிந்தித்து, செய்த ஸ்வாஸங்களை பரமாத்மனுக்கு ஜப பாவனையுடன் சமர்ப்பித்து, இந்த ஸ்லோகத்தை சொல்வார்கள்.

முக்யபிராணேன மத்தேஹே மந்த்ர த்ரயஜபஸ்ஸதா
அனுக்ரஹாயமே விஷ்ணு ப்ரீதயே க்ரியதேஹிஸ: |
ஏகவிம்ஷத் ஸஹஸ்ராத்மா ஸஷட்ஷதமஹர்னிஷம்
தத்ஸர்வம் விஷ்ணுபூஜாஸ்து ப்ரீயதாம் ப்ராணமாபதே ||4

இதன் பொருள்:
முக்யபிராண தேவர், என் தேகத்தில் இருந்துகொண்டு, ஹம்ஸ: ஸோஹம் ஸ்வாஹா என்னும் மூன்று மந்திரங்களின் ஜபங்களை, எனக்கு அருள்வதற்காகவும், விஷ்ணு ப்ரீத்யர்த்தமாகவும் செய்துவருகிறார். இப்படியாக நான் இரவும் பகலுமாக செய்துவரும் 21,600 ஸ்வாஸ ரூபங்களான ஜபங்கள் அனைத்தும் விஷ்ணு பூஜையாகட்டும். இதனால், பிராணதேவருக்கும், லட்சுமிதேவிக்கும் தலைவனான ஸ்ரீபரமாத்மன் ப்ரீதனாகட்டும்.

இதைப் போலவே இன்னொரு ஸ்லோகமும் உண்டு. அதன் பொருளை மட்டும் தருகிறோம். இன்றைய சூர்யோதயத்திலிருந்து நாளைய சூர்யோதயம் வரைக்குமான 21,600 ஸ்வாஸரூப ஹம்ஸ மந்திர ஜபங்களை நம் தேகத்தில் இருந்துகொண்டு, தாமும் செய்து, நம்மிடமிருந்தும் செய்விக்க வேண்டும் என்னும் ஆசைகொண்ட முக்யபிராணதேவரின் விருப்பப்படி, நான் செய்வேன் என்று அடுத்து செய்யவிருக்கும் ஸ்வாஸ ஜபங்களுக்கு சங்கல்பம் செய்வர். என் தேகத்தில் இருக்கும் பிராண நாமக வாயுதேவரின் மற்றும் அபான நாமக வாயுதேவரின் உதவியாலும், தியான யோகத்தினாலும், இந்த ஸ்வாஸரூப

ஹம்ஸமந்திர ஜபங்களை செய்வேன். இதிலிருந்து, ஹம்ஸரூபி பரமாத்மன் ப்ரீதனாகட்டும். என்று சங்கல்பம் செய்வர்.

இதற்கு வேறு மந்திரமில்லை. இவர் விடும் ஸ்வாச்சோஸ்வாஸங்களே ஜபங்கள் என்று அறியவேண்டும். ஹம்ஸ: ஸோஹம்: ஸ்வாஹா என்னும் மந்திரத்தின் அர்த்தத்தை, சாத்விகர்கள் அறிந்திருக்கும் விதம் எப்படியெனில்: ஹம்ஸ: = 'துக்கம் சர்வம் ஹந்தீதி ஹம்ஸ:'. அனைத்து துக்கங்களையும் நாசம் செய்பவனாகையால் அவன் ஹம்ஸன் என்று அழைக்கப்படுகிறான். 'ஸோஹம்' என்றால், அந்த ஹம்ஸனின் பிரதிபிம்பமே நான். ஆகையால் ஹம்ஸ என்னும் சொல் என்னையும் குறிக்கும். இது எப்படியென்றால், கண்ணாடியில் என் பிரதிபிம்பத்தைப் பார்த்தால், அது நம்மைப் போலவே தோன்றுகிறது ஆகையால், நானே அது என்று பிரதிபிம்பத்தை நினைக்கிறோம். நம் புகைப்படத்தை எடுத்து, அது யாருடைய படம் என்று கேட்டால், நம் பெயரையே சொல்கிறோம். ஆனால், அந்த புகைப்படத்திற்கும், அந்த படத்தில் இருப்பவருக்கும் எப்படி வேறுபாடு இருக்கிறதோ அப்படியே ஸோஹம் என்னும் சொல்லால், அவனே நான் என்னும் அர்த்தம் இல்லை. அவனின் பிரதிபிம்பம் நான் என்று அறியவேண்டும். ஸ்வாஹா என்னும் சொல் வணக்கத்தைக் குறிப்பதாகும். இப்படியாக இந்த மந்திரத்தின் அர்த்தத்தை புரிந்துகொண்டு சாத்விகர்கள் உபாசனை செய்வதால், அவர்கள் சுக ஸ்வரூபமான முக்தியைப் பெறுகிறார்கள்.

தாமஸர்கள் இதற்கு எதிர்ப்பதமாக இருக்கின்றனர். அதாவது: 'யோஹம்ஸ: யார் ஹம்ஸனோ, ஸோஹம் - அவனே நான். ஸ்வாஹா - முன்னர் சொன்னதைப் போலவே. இப்படியாக, பரமாத்மனே நான் என்று உபாசனை செய்வதால், துக்க ஸ்வரூபமான தமஸ்ஸினை அடைகின்றனர்.

ராஜஸர்கள் இதன் சரியான அர்த்தத்தை அறியாமல், சந்தேகத்துடன் இருந்து, சுக துக்கத்தின் கலவையான நித்ய சம்சாரத்திற்கு தள்ளப்படுகின்றனர்.

இப்படி, மூன்றுவித ஜீவர்களும் தங்களின் வெவ்வேறான அனுசந்தானத்தினால், அதற்குத்தக்க பலன்களைக் கொடுக்கும் 'குரு பவமான', நம்மை காப்பாற்றட்டும். ராஜஸ, தாமஸ புத்திகளை விடுவித்து, சாத்விக பாவத்துடன் உபாசனை செய்வித்து, சத்கதியைக் கொடுத்து அருளட்டும் என்று தாசராயர் வேண்டிக்கொள்கிறார்.

அடுத்து, வாக்கிற்கு அபிமானியான சரஸ்வதிதேவியை வணங்குகிறார்.

**சதுரவத$^{3}$னராணி அதிரோ**
**ஹித விமலவிக்ஞானி நிக$^{3}$ம**
**ப்ரததிக$^{3}$ளிக$^{3}$பி$^{4}$மானி வீணாபாணி பி$^{3}$ரம்மாணி |**
**நதிஸி பே$^{3}$டு$^{3}$வெ$^{4}$ ஜனனி லகுமி**
**ப$^{1}$திய கு$^{3}$ணக$^{3}$ள துதிபுத$^{3}$கெ ஸன்**
**மதி$^{1}$ய பாலிஸி நெலெஸு நீ மத்வத$^{3}$ன ஸதனத$^{3}$லி ||5**

பொருள்:
சதுரவதனனராணி = சதுர்முக பிரம்மனின் மனைவியான
அதிரோஹித விமலவிக்ஞானி. அதிரோஹித = திரோஹித என்றால் மறந்து போகுதல். அதிரோஹித என்றால் அது இல்லாமை. அதாவது, எல்லாம் நன்றாக நினைவில் இருத்தல்.
விமல = அழகான
விக்ஞானி = சிறந்த ஞானமுள்ள
நிகமப்ரததிகளிகபிமானி = நிகம = வேதங்களின். ப்ரததிகளிகெ = குழுக்களுக்கு. அபிமானி = அபிமானியான. வீணாபாணி = வீணையைக் கொண்ட கைகளை உடைய.
பிரம்மாணி = வேதங்களின் உபதேசங்களான அல்லது ஜகத்குருவான பிரம்மதேவரின் மனைவி
ஜனனி = தாயான சரஸ்வதி
நின்னன்னு நதிஸி = வணங்கி
பேடுவெ = வேண்டுவேன்
லகுமீபதிய = லட்சுமிபதியான ஸ்ரீமன் நாராயணனின்
குணகள = குணங்களை
துதிபுதகெ = ஸ்தோத்திரம் செய்வதற்கு
ஸன்மதிய = சிறந்த புத்தியை
பாலிஸி = கருணையுடன் கொடுத்து
நீ = நீ
மத்வதனசதனதலி = மத் = என்னுடைய. வதன = முகம் என்னும். ஸதனதலி = வீட்டில். நெலஸு = குடியிருப்பாயாக.

பொருள்:
தாயே, சரஸ்வதி, நீ பிரம்மதேவரின் மனைவி. உனக்கு மிகத்தெளிவான ஞானம் எப்போதும் நிறைந்திருக்கிறது. வேத சமூகங்களுக்கு நீயே அபிமானியாக இருக்கிறாய். உன் கையில் எப்போதும் வீணை இருக்கிறது. (அந்த வீணையால், உன் கணவரைப் போற்றியவாறு, பகவத் குணங்களை மக்களுக்கு போதித்துக்கொண்டிருக்கிறாய்). குருபத்னி எனப்படுகிறாய். லட்சுமிபதியை ஸ்தோத்திரம் செய்வதற்கு நான் முயன்று வருகிறேன். அந்த விஷயத்தில் தவறான ஞானம், சந்தேகங்கள் வராமலிருக்க ஸ்ரீ பரமாத்மனின் குணங்கள் அனைத்தும் எனக்கு கிட்டுமாறு, எனக்கு நற்புத்தியை கருணையுடன் அருள்புரிவாயாக. அதுமட்டுமல்லாமல், நீயே ஒரு ரூபத்தினால் என்னுடைய வாக்கினில் நின்று பகவத் விஷயங்களை நன்றாக பேசவைக்க வேண்டும் என்று வேண்டிக்கொள்கிறேன்.

சிறப்புப் பொருள்:
பிரம்ம தேவருக்கு, சர்வ தேவோத்தமத்வமும், ஜகத்குருத்வமும் எப்படி சொல்லியிருக்கிறார்களோ அவை சரவஸ்வதி தேவிக்கும் இருக்கின்றன என்ற சிந்தனையில் 'ராணி' என்னும் சொல்லால் தேவோத்தமத்வமும், 'பிரம்மாணி'

என்னும் சொல்லால் குருபத்னித்வமும் இருக்கின்றன என்று சொல்கிறார். இதனால், புனருக்தி தோஷம் இல்லை என்று அறிய வேண்டும்.

அடுத்து, ஜகத்குருவான வாயுதேவரின் நியத பத்னியான மற்றும் வாக்கிற்கு அபிமானியான பாரதி தேவியிடம், ஹரிகதாம்ருதசாரத்தை சொல்வதற்கு நற்புத்தியைக் கொடு என்று வேண்டுகிறார்.

**க்[1]ருதிரமண ப்ரத்[3]யும்ன நந்த[3]னெ**
**சதுரவிம்ஷதி த[1]த்[1]வப[1]தி தே[3]**
**வதெக[3]ளிகெ[3] கு[3]ருவெனிஸுதிஹ மாருதன நிஜபத்னி |**
**ஸத[1]த[1] ஹரியலி கு[3]ருக[3]ளலி ஸ**
**த்ரதிய பாலிஸி பா[4]க[3]வத பா[4]**
**ரத[1] புராண ரஹஸ்ய த[1]த்வக[3]ளருபு[1] கருணத[3]லி ||6**

க்ருதிரமண ப்ரத்யும்ன நந்தனெ = க்ருதி நாமகளான ரமா தேவியரின். ரமண = கணவனான ப்ரத்யும்ன = ப்ரத்யும்ன நாமகனான ஸ்ரீபரமாத்மனின். நந்தனெ = மகளான.
சதுரவிம்ஷதி தத்பதி தேவதெகளிகெ = 24 தத்வாபிமானிகளான தேவதைகளுக்கு
குருவெனிஸுதிஹ = குரு என்று அழைக்கப்படும்
மாருதன = வாயுதேவரின்
நிஜபத்னி = நியத பத்னியான பாரதி தேவியே
ஸதத = எப்போதும்
ஹரியலி = ஸ்ரீபரமாத்மனிடம்
குருகளலி = பிரம்மதேவரில் துவங்கி நம் குருகளின் வரை, தாரதம்யத்தின்படி அனைத்து குருகளிடமும்
ஸத்ரதிய = விசேஷமான பக்தியை
பாலிஸி = கொடுத்து
கருணதலி = என் மேல் கருணையுடன்
பாகவத பாரத புராண ரஹஸ்யகள = பாகவத பாரதாதி புராணங்களில் அடங்கியிருக்கும் / மறைந்திருக்கும் அரிய பகவத் தத்வங்களை
அருபு = தெரியப்படுத்து.

பொருள்:
முந்தைய பத்யத்தில் சரஸ்வதி தேவியரை வணங்கி நற்புத்தியை வேண்டி, பின் அடுத்த கல்பத்தில் சரஸ்வதி பதவிக்கு வரப்போகும் பாரதி தேவியிடம் தன் இஷ்டார்த்தங்களை இப்படியாக வேண்டுகிறார். தாயே! பாரதி! நீ பிரத்யும்ன ரூபியான பரமாத்மன் மற்றும் கிருதி என்னும் லட்சுமிதேவியின் ரூபத்திலிருந்து பிறந்தவள். ஆகையால் உனக்கு லட்சுமி நாராயணரே தாய் தந்தையாக இருக்கின்றனர். உன் பதியோ 24 தத்வாபிமானி தேவதைகளுக்கும் குரு எனப்படுகிறார். இத்தகைய உன்னை நான் வேண்டிக் கொள்கிறேன். ஸ்ரீபரமாத்மனிடமும், அவரின் பரம பக்தர்களான உன் கணவர் முதலான அனைத்து குருகளிடமும் எனக்கு திடமான பக்தியைக் கொடு. மேலும் என்னிடம்

தயைகூர்ந்து, நான் எழுத முற்பட்டுள்ள இந்த ஹரிகதாம்ருதசார என்னும் கிரந்தத்திற்குத் தேவையான, பாரத பாகவத புராணங்களில் அடங்கியிருக்கும் / மறைந்திருக்கும் பகவத் தத்வங்களை எனக்கு புரியுமாறு / என் நினைவுக்கு வருமாறு எனக்கு அருள்புரிவாயாக.

சிறப்புப் பொருள்:
பாரதி தேவியே பின்னர் சரஸ்வதிதேவியராக இருப்பார் என்பதை குறிக்கும் வகையில், பாரதி தேவிக்கு தனியாக நமஸ்காரங்களை செய்யவில்லை. அதிகார பேதம் இருப்பதால், பலன்களை மட்டும் தனியாக வேண்டியிருக்கிறார் என்பதை அறியவேண்டும். இந்த பாரதி தேவியர், கருட, சேஷ, ருத்ராதி தேவதைகளைவிட உத்தமர் என்பதை தெரிவிப்பதற்காக 'க்ருதிரமண ப்ரத்யும்ன நந்தனெ' என்னும் பதத்தை உபயோகம் செய்திருக்கிறார்.

ஸ்ருஷ்டியின் துவக்கத்தில் பரமாத்மன், வாசுதேவன், சங்கர்ஷண, ப்ரத்யும்ன, அனிருத்த என்னும் 4 ரூபங்களை தரித்தார். அப்போது, பகவத் ஆணையின்படி ரமாதேவியும்கூட மாயா, ஜயா, க்ருதி, ஷாந்தி என்னும் 4ரூபங்களை தரித்து, பரமாத்மனின் அந்த நான்கு ரூபங்களுக்கு முறையே பத்னியானார். வாசுதேவ + மாயாவிடமிருந்து புருஷ என்னும் மகன் தோன்றினார். சங்கர்ஷண + ஜயாவிடமிருந்து ஸூத்ரன் (Soothra) என்னும் மகன் தோன்றினார். பிரத்யும்ன + க்ருதியிடம், ப்ரக்ருதி, ஸ்ரத்தா என்று இரு பெண் குழந்தைகள் பிறந்தனர். புருஷனுக்கு ப்ரக்ருதியும், ஸூத்ரனுக்கு ஸ்ரத்தாவும் மனைவியர் ஆயினர். இந்த புருஷனே பிரம்மதேவர். ப்ரக்ருதியே சரஸ்வதி. 'ஸூத்ரம்ஸவாயு: புருஷோவிரிஞ்சி: ப்ரத்யும்னதஸ்சாத க்ருதௌ ஸ்த்ரியௌ த்வே' என்னும் மகாபாரத தாத்பர்ய நிர்ணயத்தின் 3ம் அத்தியாயத்தின் வாக்கியம் இதற்கு ஆதாரமாகின்றது. ஸூத்ர நாமகரான பிரம்ம வாயுகளிடமிருந்து ஸூக்ஷ்மத்தில் கருட, சேஷ, ருத்ராதிகள் பிறந்தனர். இவர்களைவிட பாரதிதேவி உத்தமர் என்று சொல்வதைப் போலாயிற்று.

கருடசேஷஷாங்கதள சேகரர ஜனக - என்னும் மூன்றாம் பத்யத்தில் பிரம்மதேவர் கருடாதிகளுக்கு தந்தை என்று சொல்கிறார். 24 தத்வாபிமானிகளில் ஒருவரான வாயுதேவரை குரு என்று இந்த பத்யத்தில் சொல்கிறார். 24 தத்வங்கள் என்னவெனில்: ப்ருத்வ்யாதி மஹாபூதங்கள் 5, ஷப்தாதி தன்மாத்ரங்களான குணங்கள் 5, ஞானேந்திரியங்கள் 5, கர்மேந்திரியங்கள் 5, சித்த, புத்தி, மனஸ், அஹங்கார தத்வங்கள் என மொத்தம் 24 தத்வங்கள் உள்ளன. இதில் சித்த தத்வத்திற்கு அபிமானியானவர் வாயுதேவர். இவரே அனைவரைவிடவும் உத்தமர். இந்த விஷயத்தைப் பற்றி பாகவதத்தில் மற்றும் விஷ்ணு ரகசியத்தில் சொல்லப்பட்டுள்ளது. அது என்னவெனில்:

ஒரு சமயம், 24 தத்வாபிமானிகளும் (வாயுதேவரைத் தவிர) தமக்குள் தாமே உத்தமர் என்று சொல்லி சண்டை போடத் துவங்கினர். அப்போது பரமாத்மன், 'ஹே தேவதைகளே, ஏன் இப்படி சண்டை போடுகிறீர்கள்? உமக்குள் இருக்கும் சக்தியை வைத்து யார் உத்தமர் என்று பார்ப்போம். இங்கே விழுந்திருக்கும் மிகப்பெரிய

சரீரமானது, உம்மில் யார் நுழைந்தால் உயிர்பெற்று எழுகிறதோ, மேலும் யார் வெளியேறுவதால் உயிரற்று விழுகிறதோ அவரே உத்தமர் என்று நிர்ணயிப்போம். இப்போது உங்கள் சக்தியைக் காட்டுங்கள்' என்றார். அப்படியே ஒவ்வொருவராக 23 தத்வாபிமானி தேவதைகள் நுழைந்தாலும், அந்த தேகம் எழுந்திருக்கவில்லை.

'சித்தேனஹ்ருதயம் சைத்ய: க்ஷேத்ரக்ஞ: ப்ராவிஷத்யதா |
விராட்ததைவ புருஷ: ஸலிலாதுதஷ்டத: ||'

என்று சித்தத்தின் அபிமானியான வாயுதேவர் அந்த உடலின் இதயத்தில் நுழைந்த உடனேயே அந்த உடல் எழுந்தது. அடுத்து அனைத்து தத்வாபிமானியும் வெளியேறியபிறகும் அந்த உடல் விழவில்லை. வாயுதேவர் வெளியேறிய உடனேயே அந்த உடல் கீழே விழுந்தது. அப்போது கண் முதலான தத்வாபிமானி தேவதைகள், நாங்கள் 23 தேவதைகள் இல்லையெனில், வாயுதேவர் மட்டும் உடலில் இருந்து என்ன செய்வார்? என்று கேட்டனர். அதற்கு வாயுதேவர், தான் மட்டும் அந்த உடலில் நுழைந்து, 23 தத்வாபிமானிகளின் வேலைகளையும் தான் ஒருவரே செய்து காட்டினார். அதைக் கண்ட பிற அனைத்து தத்வாபிமானி தேவதைகளும், வாயுதேவரிடம் மன்னிப்பு கேட்டு, அவரிடம் சரண் புகுந்தனர்.

இது பாகவதாதிகளில் மிகவும் விஸ்தாரமாக சொல்லப்பட்டிருக்கிறது. இந்த ஆதாரத்தின் பேரிலேயே, தாசராயர், வாயுதேவரை தத்வாபிமானி தேவதைகளின் குரு என்றிருக்கிறார். 'நிஜபத்னி' என்றதால், அவதார ரூப, மூல ரூபங்களிலும் கூட பாரதி தேவியரே வாயுதேவருக்கு மனைவியாகிறார் என்று அறியவேண்டும். இத்தகைய நற்குணங்களைக் கொண்ட பாரதியே! எங்களுக்கு ஹரி குருகளில் சத்பக்தியைக் கொடுத்து அருள்வாயாக என்று வேண்டுகிறார் தாசராயர்.

இப்படியாக தாசராயர் 'நாராயணம் நமஸ்க்ருத்ய நரஞ்சைவ நரோத்தமம் | தேவீம் சரஸ்வதிம் வ்யாஸம்' என்னும் வசனத்தின்படி, பாரதி தேவியின் வரை தாரதம்யத்தின்படி வரிசையாக வேண்டினார். அடுத்து, பரமாத்மனின் அவதார ரூபமான மற்றும் பாரதாதி கிரந்தங்களை இயற்றியவரான ஸ்ரீ பாதராயண (வேதவியாஸ) தேவரை குருவாக நினைத்து வணங்குகிறார். ஸ்ரீமன் நாராயணனே வேதவியாஸராக இருந்தாலும், கிரந்தத்திற்கு காரணமானவனும், சர்வோத்தமனும் ஆன ஸ்ரீமன் நாராயணனுக்கு முதலில் வணக்கம் செலுத்தினார். அதிகார பேதத்தினால், அதாவது ஒரு குருவைப் போன்றவரான ஸ்ரீவேதவியாஸருக்கு தற்போது நமஸ்காரம் செய்கிறார் என்று அறியவேண்டும்.

'வியாஸோகஸ்சனருஷி:' என்று சில தாமஸ புராணங்களின் ஆதாரத்தில், சிலர் வேதவியாசரை வெறும் ஒரு சாதாரண ரிஷி என்று சொல்கின்றனர். அப்படிப்பட்டவர்கள் அப்படி நினைத்தே, தமது தமஸ் சாதனையை செய்துகொள்ளட்டும் என்று தற்போது வேதவியாசரை வணங்குகிறார் என்று கருட புராணத்தில் ஸூதர் ஷௌனகாதிகளுக்கு சொல்லியிருக்கிறார்.

ஸூதரின் வாக்கு:
த்த்ராபிகாரணம் வக்ஷ்யேஸாதரேண முனீஷ்வரா |

வ்யாஸஸ்து கஷ்சனரிஷி: புராணே தாமஸேஸ்ம்ருத: ||
இதி ஞானாவலம்பேன தைத்யாதைத்யானுகாஸ்ஸதா |
ப்ரவிஷேயு:ர்ஹ்யந்ததம இஹிஹ்யந்தெ நமஸ்க்ருதம் ||
இதஞ்ச பரமம்கோப்யம் ஹ்ருதிதார்யன் நஸம்ஷய: ||

என்னும் வாக்கியங்களே மேலே சொன்ன விஷயத்திற்கு ஆதாரம் என்று அறியவேண்டும். இந்த காரணத்தினாலேயே தற்போது தாசராயர், வேதவியாஸ தேவரை வணங்குகிறார்.

**வேதபீ[1]ட[2] விரிஞ்சி ப[4]வ ஷ**
**க்ராதி[3]ஸுர விக்ஞானதா[3]யக**
**மோத[3] சின்மயகா[3]த்ர லோக[1]பவித்ர ஸுசரித்ர |**
**ச்சேத[3] பே[4]த[3] விஷாத[3] கு[1]டி[1]லா**
**ந்தாதி[3] மத்[4]ய விதூ[3]ர ஆதா[3]**
**நாதி[3] காரண பாத[3]ராயண பாஹி ஸத்[1]ராண ||7**

பொருள்:
வேதபீட - வேதங்களை பீடமாகக் கொண்ட
விரிஞ்சிபவ ஷக்ராதிசுர = விரிஞ்சி = பிரம்மதேவர். பவ = ருத்ரர். ஷக்ர = இந்திரன். ஆதி = ஆகிய. சுர = தேவதைகளுக்கு
விக்ஞானதாயக = விக்ஞான = விசேஷ ஞானம். தாயக = கொடுப்பவர்
மோதசின்மயகாத்ர = மோத = ஆனந்தம். சின்மய = ஞானம். காத்ர = தேகத்தைக் கொண்ட.
லோக = மூன்று உலகங்களையும்
பவித்ர = பவித்ரமாக மாற்றும்
ஸுசரித்ர = உத்தமமான மகிமைகளைக் கொண்ட
சேதபேத விஷாத குடிலாந்தாதி மத்யவிதூர = சேத = கத்தி முதலான ஆயுதங்களால் சரீரத்தை சேதப்படுத்துதல். பேத = பாணங்களால் சரீரத்தை சேதப்படுத்துதல். விஷாத = துக்கமடைதல். குடில = நோய்களால் உடல் ஹீனமடைதல். இவற்றிலிருந்து, விதூர = இவை எவையும் பாதிக்காமல் தூரமாக இருப்பவன். (அதாவது மேற்சொன்ன தோஷங்கள் எதுவும் இல்லாதவன் என்று பொருள்).
ஆதானாதிகாரண = ஆதானாதி = பிரம்மாதிகளிடமிருந்து பூஜையை ஏற்றுக்கொள்ளல். காரண = காரணனான. சத்ராணா = ஸஜ்ஜனர்களை பாதுகாக்கும். பாதராயண = பதரி வ்ருக்ஷங்களால் சூழப்பட்ட. வனத்திற்கு பாதர என்று பெயர். அதையே தன் இருப்பிடமாகக் கொண்டிருப்பதால் இவருக்கு பாதராயண என்று பெயர். (அதாவது பதரிகாஸ்ரம-வாசி என்று பொருள்). அப்படிப்பட்ட வேதவியாச தேவரே,
பாஹி = உங்களுடைய சாஸ்திரங்களை சொல்வதற்கு புறப்பட்டுள்ள எனக்கு நற்புத்தியைக் கொடுத்து அருள்வீராக.

பொருள்:

'விதிஷக்ர பூர்வகீர்வாண விக்ஞானத மானதோஸ்மி' என்னும் தந்திரசாரத்தின் வாக்கியத்திற்கேற்ப 'விரிஞ்சிபவ ஷக்ராதி சுரவிக்ஞானதாயக' ஆகிய சொற்களால் 'வேதவியாஸர் ஒரு சாதாரண ரிஷி' என்னும் பேச்சு நிராகரிக்கப்பட்டுள்ளது.

இப்படியாக வேதவியாசதேவரைப் பிரார்த்தித்து, தாரதம்யத்தின்படி முதலில் வாயுதேவரை வணங்கினாலும், த்வைத மதத்தை நிறுவியவரான, முக்திக்கு முக்கிய சாதனங்களான பஞ்சபேத தாரதம்யாதிகளை விளக்கிக் காட்டிய, வாயுதேவரின் அவதாரரான, சத்வைஷ்ணவர்களுக்கு முக்கிய குருகளான ஸ்ரீமத்வாசார்யரை இரண்டு பத்யங்களால் வணங்குகிறார் தாசராயர்.

**க்ஷிதி$^{1}$யொளகெ மணிமந்த$^{1}$ மொத$^{3}$லா**
**த$^{3}$தி$^{1}$து$^{3}$ராத்$^{1}$மரு ஒந்த$^{3}$தி$^{4}$க விம்**
**ஷதி குபா$^{4}$ஷ்யவ ரசிஸெ நடுமனெயெம்ப$^{3}$ பி$^{3}$ராம்மணன |**
**ஸதிய ஜடரதொ$^{3}$ளவதரிஸி பா$^{4}$**
**ரதிரமண மத்$^{4}$வாபி$^{4}$தா$^{3}$னதி$^{3}$**
**சதுரத$^{3}$ஷ லோகத$^{3}$லி மெரெத$^{3}$ப்ரதிமகொ$^{3}$ந்திஸுவெ ||8**

பொருள்:
மணிமந்த மொதலாத = மணிமந்தன் முதற்கொண்டு
அதி துராத்மரு = தமோ யோக்யரான தைத்யர்கள்
க்ஷிதியொளகெ = பூமியில் பிறந்து
ஒந்ததிகவிம்ஷதி குபாஷ்யவ = பிரம்மசூத்திரத்திற்கு 21 குபாஷ்யங்களை
ரசிஸெ = இயற்றியபோது
பாரதிரமண = பாரதிபதியான வாயுதேவர்
நடுமனெயெம்ப = மத்யகேஹ பட்டர் என்னும் பிராமணரின்
ஸதிய = மனைவியின்
ஜடரதொளு = வயிற்றில்
அவதரிஸி = பிறந்த குழந்தையின் தேகத்தில் பிரவேசித்து
மத்வாபிதானதி = மத்வாசார்யர் என்னும் பெயரால்
சதுரதஷ லோகதலி = 14 உலகங்களிலும்
மெரெத = புகழடைந்த
அப்ரதிமெகெ = ஒப்புமை இல்லாத (அவரை)
வந்திஸுவெ = வணங்குவேன்.

பொருள்:

'ஏகவிம்ஷதி குபாஷ்ய தூஷகம்' என்று மத்வவிஜயத்தில் சொல்லியிருக்கும்படி, ஸ்ரீமதாசார்யர் 21 குபாஷ்யங்களை நிராகரித்து, பிரம்மசூத்திரத்திற்கு 22வது பாஷ்யத்தை இயற்றினார். 'நடுமனெ எம்ப பிராமணன ஸதிய ஜடரதொளவதரிஸி' என்று சொல்லியதால், பொதுவாக நமக்கு மத்யகேஹ பட்டரின் மனைவியின் கர்ப்பத்தில் குழந்தையாக வந்து பிறந்தார் என்று தோன்றும். ஆனால், இவர் சுக்ல ஷோணித சம்பந்தங்களினால் கர்ப்பவாசத்தில் வந்து பிறந்தவரல்ல.

பிறகு எப்படி பிறந்தார் என்றால்: மத்யகேஹ பட்டரின் மனைவி கர்ப்பவதியாகி, அழகான, மன்மத ஸ்வரூபனான ஒரு குழந்தையைப் பெற்றார். அப்போது வாயுதேவர் அங்கு வந்து, ஒரு நாட்டினை வென்ற அரசன், ஏற்கனவே அங்கு இருந்த அரசனை வெளியேற்றிவிட்டு தான் உள்நுழைந்து சிம்மாசனத்தில் அமர்வதைப் போல, அந்த குழந்தையின் உள்ளேயிருந்த ஜீவனை வெளியேற்றிவிட்டு, தான் உள்ளே பிரவேசித்தார். ஆகையால், அந்த குழந்தையின் உடல் மட்டுமே மத்யகேஹ பட்டரின் மனைவியின் கர்ப்பத்திலிருந்து வந்தது. பிறந்தபிறகு வாயுதேவரின் பிரவேசம். 'ராஜீவ ஸத்சுரவரம் புவனாதிராஜோ நிஷ்காஸர்ய பரமஸௌபகர்வா விவேஷ' என்னும் மத்யவிஜயத்தின் வாக்கியத்தின்படி இது தெளிவாகிறது.

தாசராயர் 'ஜடரதொளவதரிஸி' என்று ஏன் சொன்னார் என்றால், இவரின் உடல் அந்த பெண்மணியின் கர்ப்பத்திலிருந்து வந்தது என்று அறியவேண்டும். 'சதுரதஷலோகதலி மெரெத' என்றால், இவரின் கீர்த்தி / புகழ் 14 உலகங்களிலும் வியாபித்திருக்கிறது என்று பொருள்.

**ப[1]ஞ்சபே[4]தாத்மக ப்ரபஞ்சகெ**
**பஞ்சரூபாத்மகனெ தை[3]வக**
**பஞ்சமுக[2] சக்ராதிக[3]ளு கிங்கரரு ஶ்ரீஹரிகெ[3] ।**
**பஞ்சவிம்ஷதி த[1]த்வ தரதம**
**பஞ்சிகெக[3]ளனு பே[1]ள்த[3] பா[4]வி வி**
**ரிஞ்சியெனிபானந்த[3] தீர்த்தர நெனெவெனனுதி[3]னவு ।।9**

பொருள்:
பஞ்ச பேதாத்மக ப்ரபஞ்சகெ = 5 பேதங்களைக் கொண்ட இந்த உலகத்திற்கு
பஞ்ச ரூபாத்மகனெ தெய்வக = அனிருத்தாதி 5 ரூபங்களைக் கொண்ட ஶ்ரீபரமாத்மனே தெய்வம்
ஶ்ரீஹரிகெ = இத்தகைய பரமாத்மனுக்கு
பஞ்சமுக ஷக்ராதிகளு கிங்கரரு = பஞ்சமுக = ஐந்து முகங்களைக் கொண்ட ருத்ரதேவர். ஷக்ர = தேவேந்திரன். ஆதிகளு = இவர்களிலிருந்து அனைவரும். கிங்கரரு = சேவகர்கள்.
பஞ்சவிம்ஷதி தத்வதரதம பஞ்சிகெகள = பஞ்சவிம்ஷதி = 25 தத்வங்கள். தர, தம = தேவதைகளில் உத்தம, மத்யம என்னும் தாரதம்யம் இவைகளை.
பஞ்சிகெகள = மகிமைகளை
பேளித = தெரிவித்த
பாவிவிரிஞ்சியெனிப = அடுத்த கல்பத்தில் பிரம்மன் என்று சொல்லப்படும் வாயுதேவரின் அவதாரரான
ஆனந்த தீர்த்தர = ஶ்ரீமதானந்த தீர்த்தரை
அனுதினவு = தினந்தோறும்
நெனெவெனு = நினைப்பேன்.

பொருள்:

பஞ்சபேதங்களால் ஆன உலகம் என்றதன் விவரம். ஜீவ ஈஸ்வர பேதம், ஜீவ ஜீவ பேதம், ஜீவ ஜட பேதம், ஜட ஈஸ்வர பேதம், ஜட ஜட பேதம் என்று ஐந்து பேதங்கள். பஞ்சரூபங்கள் = அனிருத்த, பிரத்யும்ன, சங்கர்ஷண, வாசுதேவ, நாராயண என்னும் பரமாத்மனின் 5 ரூபங்கள். இப்படி ஐந்து பேதங்களைக் கொண்ட உலகத்திற்கு, 5 ரூபங்களைக் கொண்ட ஸ்ரீபரமாத்மனே தலைவன் என்று பொருள். 'த்யேய: பஞ்சமுகோ ருத்ர:' என்னும் தந்திரசார வாக்கியத்தால், பஞ்சமுக என்றால் ருத்ரதேவர் என்று நிர்ணயம் ஆகிறது.

25 தத்வங்கள் என்னவெனில்: பஞ்சபூதங்கள் 5, பஞ்ச தன்மாத்ரங்கள் 5, ஞானேந்திரியங்கள் 5, கர்மேந்திரியங்கள் 5, அஹங்கார, மனஸ், புத்தி, சித்த தத்வங்கள் 4, என மொத்தம் 24 தத்வங்கள். பரமாத்மன் 1. ஆகமொத்தம் 25 தத்வங்கள். தரதம என்றால், விஷ்ணு சர்வோத்தமன். அவனுக்கு அடுத்தவர், ரமாதேவி. பிறகு பிரம்ம வாயுகள். அடுத்து சரஸ்வதி பாரதி என்ற பேதங்களைக் காட்டுவதே தாரதம்யம். இப்படியாக 25 தத்வங்களையும், பஞ்சபேதங்களையும், தாரதம்யங்களையும் உலகத்தில் பரப்பினார் என்பது கருத்து. வாயுதேவரே அடுத்த கல்பத்தில் பிரம்ம பதவிக்கு வருகிறார் ஆகையால் 'பாவி-விரிஞ்சி' என்று சொல்லியிருக்கிறார் என்று அறியவேண்டும்.

அடுத்து, அஹங்கார தத்வத்திற்கும் மனஸ்ஸிற்கும் அபிமானிகளான ருத்ர தேவரை, இரு ஸ்லோகங்களில் வணங்குகிறார்.

**வாமதே3வ விரிஞ்சித1னய உ**
**மாமனோஹர உக்3ர தூ4ர்ஜடி**
**ஸாமஜாஜின வஸனபூ4ஷண ஸுமனஸோத்தம்ஸ |**
**கா1மஹர கைலாஸமந்தி3ர ஸோம**
**ஸூர்யானல விலோசன**
**காமித1ப்ரத3 கருணிஸெமகெ3 ஸதா3 ஸுமங்க3லவ ||10**

பொருள்:

வாமதேவ = சாந்தமான ஸ்வபாவமுள்ள அல்லது தனது இடதுபாகத்திலிருக்கும் பரமாத்மனை எப்போதும் உபாசனை செய்துகொண்டிருப்பதால் வாமதேவ என்ற பெயர் கொண்ட,
விரிஞ்சிதனய = பிரம்மனின் மகனான
உமா மனோஹர = பார்வதி தேவியின், மனோஹர = மனதைப் பறிக்கும் (அதாவது உமாபதியான என்று பொருள்)
உக்ர = எதிரிகளுக்கு உக்ர ஸ்வரூபனான, அல்லது பிரளய காலத்தில் உக்ர ரூபத்தினால் பிரபஞ்சத்தை எரிப்பதால் உக்ர என்று பெயர் பெற்றவர்
துர்ஜடி = கங்கையைக் கொண்ட ஜடையுள்ள
ஸாமஜாஜின வஸன = ஸாமஜ = யானை. அஜின = தோலினால். வஸனெ = ஆடை.

பூஷண = அணிகலன்களாக உள்ள
ஸுமனஸோத்தம்ஸ = தேவோத்தமனான
காமஹர = மன்மதனை எரித்தவனான
கைலாஸ மந்திர = கைலாயத்தையே வீடாகக் கொண்ட
ஸோமசூர்யானலவிலோசன = ஸோம = சந்திரன். சூர்ய = சூரியன். அனல = அக்னி. என்று மூன்று தேவதைகளைக் கொண்ட மூன்று கண்களையுடையவன் (இட வல கண்களில் சந்திர சூரியர்கள். நெற்றிக்கண்ணில் அக்னி என்று அறியவேண்டும்).
காமிதப்ரத = வேண்டுபவர்களின் இஷ்டார்த்தங்களை நிறைவேற்றுபவர்.

**க்ருத்திவாஸனெ ஹிந்தெ[3] நீ நா**
**ல்வத்து[1] க[1]ல்ப ஸமீரனலி ஸி**
**ஷ்யத்வ வஹிசகி[2]ளாக[3] மார்த்தக[3]ளோதி[3] ஜலதி[4]யொளு |**
**ஹத்து கல்பதி[3] தபவகை[3]தா[3]**
**தி[3]த்யரொள கு[3]த்தமனெனிஸி புரு**
**ஷோத்தமன பரியங்க பத[3]வைதி[3]தெ[3]யோ மஹதேவ ||11**

க்ருத்திவாசனே = புலித்தோலை ஆடையாக உடுத்தியவனே
மஹதேவ = தேவோத்தமனே
நீ = நீ
ஹிந்தே = ருத்ர பதவிக்கு வருவதற்கு முன்னர்
நால்வத்து கல்ப = 40 பிரம்ம கல்பத்தின் வரைக்கும்
ஸமீரனலி = வாயுதேவரிடம்
சிஷ்யத்வ = சிஷ்யனாக
வஹிஸி = இருந்து
அகிளாகமார்த்தகள = அனைத்து வேத சாஸ்திரங்களைப் படித்து
ஜலதியொளு = சமுத்திரத்தில்
ஹத்துகல்பதி = 10 பிரம்ம கல்பத்தின் வரைக்கும்
தபவகெய்து = தவம் செய்து
ஆதித்யரொளகெ = அதிதியின் மக்களான தேவதைகளிடம்
உத்தமனெனிஸி = உத்தமன் என்று போற்றப்பட்டு
புருஷோத்தமன = க்ஷாக்ஷரர்களில் சிறந்தவரான ஸ்ரீமன் நாராயணனின்
பர்யங்க = படுக்கையாக இருக்கும் சேஷனின்
பதவ = பதவியை
யைதிதெயோ = பெற்றாயே, இப்படியான நீ
எமகெ = எமக்கு
சதா = எல்லா காலங்களிலும்
மங்களவ = மங்களகரமான உத்தம ஞானத்தை
கருணிஸு = தயவுசெய்து அருள்வாயாக

பொருள்:

கருட புராண பிரம்ம காண்டத்தில், ருத்ரதேவருக்கு வாமதேவ என்ற பெயர் வந்ததற்கான காரணம் சொல்லப்பட்டிருக்கிறது.

ஈஷான்யகோணே சம்ஸ்திதோயஸ்து ருத்ரோஹ்ய வாமதேவோ வாமதேவேதி சம்ஞாம் |
ஸ்வவாமபாகே சம்ஸ்திதம் வாசுதேவம் ஸ்வயோக்யபக்தா பூஜதே சர்வதெய்வ ||

இதன் பொருள்:

ஸ்ரீபரமாத்மன் நடுவில் மேற்கு நோக்கி அமர்ந்திருக்க, ருத்ரர் பரமாத்மனுக்கு ஈசான்ய மூலையில் (அதாவது பரமாத்மனின் பின்னே, வலது புறத்தில், மேற்கு நோக்கி அமர்ந்து), தம் இடது பக்கத்தில் இருக்கும் பரமாத்மனை, தம் தகுதிக்கேற்ப பக்தியுடன் பூஜித்திருப்பதால் அவருக்கு வாமதேவ என்ற பெயர் வந்தது. கிருத்திவாஸனெ என்னும் பதத்தினால் பொதுவாக தோல், ஆடை என்று பொருள் வந்தாலும், 'வியாக்ர சர்மாம்பர தரம்' என்னும் பாகவத வசனத்தினாலும், புரந்தரதாசரின் பதத்தில் இருக்கும் 'உட்டத்து ஹுலி தொடலு பென்ன மேலெ ஹொத்த ஆனெய தொகலு' என்னும் வாக்கியத்தாலும், 'சாமஜாஸின வஸன பூஷண கிருத்திவாஸனே' என்று இரு வேறு விஷயங்களைச் சொல்லி, மேற்சொன்ன அர்த்தத்தையே தாசராயர் குறிப்பிட்டிருக்கிறார். இதில் புனருக்தி தோஷம் இல்லை. ருத்ரதேவர், 40 பிரம்மகல்ப சாதனையை செய்துகொண்டு மேலும் 10 பிரம்மகல்ப தவத்தை செய்திருக்கிறார். மொத்தம் 50 பிரம்மகல்ப சாதனை என்று தாசராயர் சொல்லியிருக்கிறார்.

இதற்கு ஆதாரமான ஸ்ரீமதாசார்யரின் 'ததைவ சத்வாரிம்ஷத்பி: பதம் ஷைவஞ்ச ஜன்மபி:' என்னும் பாகவத தாத்பர்ய நிர்ணய வசனத்தாலும், 'தஷகல்ப தபஸ்சீர்ணம் ருத்ரேண லவணார்ணவெ' என்னும் அனுவியாக்யான வசனத்தாலும், ருத்ர தேவருக்கு 50 கல்ப சாதனை இருக்கிறது என்று தெரியவருகிறது. மேலும் பாகவத 4ம் ஸ்கந்த தாத்பர்யத்தில் மேற்கோள் காட்டியிருக்கும் அனுவியாக்யான வாக்கியத்தில்

பிரம்மணாம் ஷதகாலத்து பூர்வ வாரப்ய சம்க்ஷய |
பிரம்மணஸ்த்வேவதாவத்வம் பஞ்சாஷத் பிரம்மஸ்ததா |
ருத்ரஸ்ய விம்ஷதேவஸ்யாச் சக்ரஸ்யார்காதி கேதஷ: |

என்று சொல்லியிருக்கிறார்கள். இதனால் ருத்ரதேவருக்கு 50 கல்ப சாதனை இருக்கிறது என்று நிர்ணயம் ஆகிறது. இதே அபிப்பிராயத்தையே தாசராயரும் தம் கிரந்தத்தில் சொல்லியிருக்கிறார்.

ஒருவேளை புராணங்களில் சொல்லப்பட்ட வாக்கியங்கள், ஸ்ரீமதாசார்யரின் நிர்ணயத்திற்கு எதிராக இருந்தால், அதை அவர் சொன்ன மாதிரியே புரிந்து கொள்ளவேண்டும். ஏனெனில், புராணங்களில் பல இடங்களில் கற்பனையாகவோ, அஞ்ஞானிகளை ஏமாற்றவோ பல விஷயங்கள் எதிர்ப்பதமாக சொல்லப்பட்டிருக்கின்றன. அவற்றை சரிசெய்வதற்காகவே ஸ்ரீமதாசார்யர், தாத்பர்ய

நிர்ணயாதி கிரந்தங்களை செய்திருக்கிறார். ஆகையால், புராணங்கள் நமக்கு எப்படி தெரிந்தாலும், அவர் கூறிய அர்த்தத்தையே உண்மை என்று அறியவேண்டும். இந்த விஷயத்தில் 'நாஸ்மதுக்தி சத்ருஷம் ஹிதரூபம்' என்னும் ஸ்ரீமதாசார்யரின் வாக்கியத்தினால் இந்த அர்த்தம் தெளிவாகிறது.

மேலும்

ருகாதயஸ்ச சத்வார: பாரதம் பஞ்சராத்ரகம் |
மூல ராமாயணம் சைவ சாஸ்த்ரமித்யபிதீயதே ||

ருகாதி 4 வேதங்கள், பாரத, பாஞ்சராத்ர ஆகம, மூல ராமாயண இவற்றிற்கு சாஸ்திரங்கள் என்று பெயர். மீதம் இருக்கும் பாகவதாதி புராணங்கள் இவற்றை சார்ந்து இருந்தால் அவையும் சாஸ்திரங்களே ஆகும். இல்லையேல் இல்லை. ஆகையால், ஸ்ரீமதாசார்யர் பாரதாதிகளை அனுசரித்து பாகவத புராணத்திற்கு வியாக்யான ரூபமாக பாகவத தாத்பர்யம் என்னும் கிரந்தத்தை இயற்றினார்.

ஆனால் இன்று சில அஞ்ஞானிகள் தாசவேடம் தரித்து, தாசகூடத்திற்கும் வியாசகூடத்திற்கும் சண்டையை உண்டு பண்ணி, தாசராயர், ஸ்ரீமதாசார்யரின் சிஷ்யர் இல்லை என்று பொருள்படவும் சொல்வதுண்டு. அதில் உண்மையில்லை. ஏனெனில், ஸ்ரீமதாசார்யரின் வாக்கியத்திற்கு எதிராக அவர் என்றும் எதையும் சொல்லியதில்லை. ஆகையால், ஸ்ரீமதாசார்யரின் கிரந்தங்களுக்கு இந்த கிரந்தம், வியாக்யானமாக இருக்கிறது என்றே நினைக்கவேண்டும்.

இப்படியிருக்கையில், ஒரு வியாக்யானகாரர் தமது ஸ்ரீஹரிகதாம்ருதசார வியாக்யானத்தில், தாசரின் அபிப்பிராயம் ருத்ரதேவருக்கு 50 கல்ப சாதனை என்று எழுதி, அதற்கு ஆதாரமாக ஸ்ரீமதாசார்யரின் வாக்கியங்களை உதாரணம் கொடுத்து, 50 கல்ப சாதனையை நிர்ணயித்து, இறுதியாக கருட புராணத்து வாக்கியம் ஒன்றை எடுத்துக்காட்டி, அந்த வரிகளுக்கு சரியான அர்த்தத்தை புரிந்துகொள்ளாமல், ருத்ர தேவருக்கு 50 கல்ப சாதனை என்று யார் சொல்வார்களோ அவர் தமோயோக்யர் என்று சொல்லி, ஸ்ரீமதாசார்யர் மற்றும் ஸ்ரீதாசராயர் இருவரும் தமோ யோக்யர் என்று சொல்லியிருக்கிறார். இது கண்டனத்திற்குரியதாகும். பிரம்ம காண்டத்தில் ருத்ரதேவருக்கு 50 கல்ப சாதனை என்று அறிபவர்கள் தமோ யோக்யர்கள் என்று இருந்தாலும், ஆசார்யரின் மதத்தை அனுசரித்து அதை விளக்க வேண்டுமே தவிர, புராணங்களை நம்பி ஸ்ரீமதாசார்யரின் எதிர்ப்பை சம்பாதிக்கக்கூடாது. அப்படி ருத்ர தேவருக்கு 50 கல்ப சாதனை என்று அறிந்தவர்கள் தமோ யோக்யர்கள் என்று கருட புராணத்தில் சொல்லவேயில்லை. அங்கிருக்கும் வாக்கியம் என்னவென்றால் :

பஞ்சாஷீதி பிரம்மகல்பம் யே விஜானந்திதே த்விஜ |
அந்தந்தம: ப்ரவிஷ்யந்தி சத்யம் சத்யம் மயோதிதம் ||

என்று இருக்கிறது. இதில் இருக்கும் பஞ்சாஷீதி என்னும் சொல்லுக்கு 50 என்னும் அர்த்தம் என்று எந்த அகராதியைப் பார்த்து அவர் அறிந்தாரோ நான் அறியேன்.

இத்தகைய சிறந்த கிரந்தத்திற்கு பற்பல ஆதாரங்களை உதாரணம் கொடுத்து, புகழடைந்த பல வியாக்யானகாரர்கள், பஞ்சாஷீதி என்னும் சொல்லுக்கு 50 என்றே பொருள் சொல்லியிருக்கின்றனர். இவர்களுக்கு ஏதோ குழப்பம் வந்திருக்கும் என்றே நினைக்கத் தோன்றுகிறது. சம்ஸ்கிருதத்தில் 'பஞ்சாஷத்' என்றால் 50 என்றும் 'பஞ்சாஷீதி' என்றால் 85 என்றும் அர்த்தம். இவர் தாம் உதாரணம் கொடுத்த ஸ்லோகத்தில் பஞ்சாஷீதி என்று இருக்கையில், பஞ்சாஷத் மற்றும் பஞ்சாஷீதி இரு சொற்களுக்கும் வித்தியாசம் உணராமல், ஒரு வித மயக்கத்தில் 50 என்று அர்த்தம் கொடுத்து, ஸ்ரீமதாசார்யரையும் தமோயோக்யராக மாற்றிவிட்டார்.

கருட புராணத்தின் வாக்கியம் என்னவென்றால்:

கருட உவாச:
பஞ்சாஷீதி பிரம்ம கல்பம் சமாரப்ய மஹாப்ரபு |
ருத்ரஸ்ய ஹ்யபரோக்ஷம் ஸ்யாத்ததாஹ்யரப்த சம்க்ஷய: |
இதிஸ்ருதம் மயா ப்ரம்ம |||

கிருஷ்ண உவாச:
பஞ்சாஷீதி பிரம்மகல்பம் மேவிஜானந்தி ... ||

கருடனின் கேள்வி: 'ருத்ரதேவருக்கு 85 கல்பங்கள் முதலில் பிராரப்தமும் பின் அபரோக்ஷமும் ஆகும் என்று நான் பிரம்மதேவரிடமிருந்து கேட்டிருக்கிறேன். ஆனால் நீயோ 50 கல்ப சாதனை என்று சொல்கிறாயே, இதனால் எனக்கு சந்தேகம் வருகிறது. உங்கள் இருவரும் அபிப்பிராயமும் எப்படி வேறுபடும். இதற்கு என்ன காரணம்?'. அதற்கு ஸ்ரீகிருஷ்ணன் - 'ஹே கருடனே! ருத்ரதேவருக்கு 85 கல்பசாதனை என்று சொல்பவர்கள் தமோயோக்யர்கள். என் வாக்கியத்திற்கும், பிரம்மன் சொன்னதற்கும் வேறுபாடு சொல்பவர்கள் அஞ்ஞானிகள் என்று அறிவாயாக. நாங்கள் இருவரும் சொல்வதை ஒன்று என்றே ஞானிகள் சொல்வார்கள்'. எப்படியெனில் - பிரம்மதேவர் சொன்ன 85ஐ எழுத்தில் எழுதினால், அந்த இரு எண்களையும் பெருக்கினால் 8 x 5 = 40 வருகிறது. இதுவே பிரம்மதேவர் சொன்ன பஞ்சாஷீதி என்னும் சொல்லுக்கு அர்த்தமாகும். இதுவே கருட புராணத்தின் வாக்கியத்திற்கு அர்த்தமாகும்.

இருக்கட்டும். அப்படியும், ஜகன்னாததாசர் சொல்வது 50 கல்ப சாதனை என்று. கருட புராணத்தின்படி 40தானே வருகிறது. இதிலும் வேறுபாடு இருக்கிறதே என்றால். ஸ்ரீமதாசார்யரோ, ஜகன்னாததாசரோ இருவரும் ருத்ரதேவருக்கு 50 என்று சொல்லவில்லை. 40 கல்ப சாதனை என்றும் பிறகு தனியாக 10 கல்ப சாதனை என்றும் சொல்லியிருக்கிறார்கள். இதன் விளக்கம் என்னவெனில்: ருத்ர பதவிக்கு வரவேண்டுமெனில், 40 கல்ப சாதனையையும், சேஷ பதவியை பெற்றபிறகு முக்தியை அடைவதற்காக 10 கல்பத்தை தனியாக சாதனை செய்யவேண்டும். நிர்ணய வியாக்யானத்தில் 'தஷகல்பஸ்ய மோக்ஷ விசேஷார்த்தம் தப: பரத்வமுக்தம்' என்று சொல்லப்பட்டிருக்கிறது. இப்படியிருக்கையில், 40 கல்பங்கள்

என்று சொல்லும் கிரந்தங்கள் அவை ருத்ர பதவிக்கு வருவதற்கு மட்டுமே என்றும். 50 கல்பங்கள் என்று சொல்பவை அது மோட்ச சாதனையையும் சேர்த்து சொல்லப்பட்டிருக்கிறது என்று அறியவேண்டும். இப்படி சொல்வதால், ஆசார்யரின் வாக்கியத்திற்கும், தாசராயரின் வாக்கியத்திற்கும், கருட புராணத்து வாக்கியத்திற்கும் எவ்வித வேறுபாடும் தோன்றுவதில்லை.

புருஷோத்தமன பர்யங்க பதவைதிதெயோ மகாதேவா = என்று சேஷதேவரையும் சேர்த்து வணங்கியதைப் போல ஆயிற்று என்று நினைக்கவேண்டும்.

**பாக$^{1}$ஷாசன முக்$^{2}$ய ஸகல தி**
**வௌகசரிக$^{3}$பி$^{3}$னமிபெ ருஷிக$^{3}$ளி**
**கே$^{3}$கசித்ததி$^{3}$ பித்ருக$^{3}$ளிகெ$^{3}$ க$^{3}$ந்த$^{4}$ர்வ க்ஷிதிபரிகெ$^{3}$ |**
**ஆ க$^{1}$மலனாபா$^{4}$தி$^{3}$ யதிக$^{3}$ள**
**நீக$^{1}$கானமிஸுவேனு பி$^{3}$டதெ$^{3}$ ர**
**மா களத்ரன தா$^{3}$ஸவர்க$^{3}$க்கெ நமிபெனவரத ||12**

பாகஷாஸன முக்ய சகல திவௌகஸரிகெ = தேவேந்திரன் முதலான அனைத்து தேவதைகளுக்கு
ஏக சித்ததி = ஒரு மனத்துடன் புத்தியை அவர்களிடமே வைத்து
அபினமிபெ = சாஷ்டாங்க நமஸ்காரத்தை செய்து
ருஷிகளிகெ = விஸ்வாமித்ர, மரீச்யாதி ரிஷிகளுக்கு
பித்ருகளிகெ = பித்ரு கணங்களுக்கும்
கந்தர்வ = தேவ கந்தர்வ, மனுஷ்ய கந்தர்வர்களுக்கு
க்ஷிதிபரிகெ = ப்ரியம்வ்ரத முதலான அரசர்களுக்கு
ஆ கமலனாபாதி யதிகள = (ஸ்ரீமன் மத்வாசார்யரின் சிஷ்யரான) பத்மனாப தீர்த்தரே முதலான யதிகளுக்கு
ஆனீககெ = குழுவிற்கு
ஆனமிசுவெனு = நன்றாக வணங்குவேன்
பிடதெ = யாரையும் விடாமல்
ரமாகளத்ரன = ஸ்ரீலட்சுமிதேவியையே மனைவியாகக் கொண்ட ஸ்ரீபரமாத்மனின்
தாச வர்க்க்கெ = தாச சமூகத்திற்கு
அனவரத = என்றைக்கும்
நமிபெ = வணங்குவேன்

இந்திராதி அனைத்து தேவதைகளுக்கும் நமஸ்காரம் செய்வேன். ரிஷிகளுக்கும், பித்ருகளுக்கும், கந்தர்வர்களுக்கும், அரசர்களுக்கும், பத்பனாப தீர்த்தர், நரஹரி தீர்த்தர் முதலான யதிஸ்ரேஷ்டர்களுக்கும், ஹரிதாசர்களான புரந்தர, விஜய முதலான தாச வர்க்கத்தவர்களுக்கும் ஒருமுகப்படுத்திய மனதுடன் வணக்கம் செலுத்துவேன். என்று தாரதம்யத்தின்படி ஸ்வோத்தமர் அனைவருக்கும், இந்த பத்யத்தில் நமஸ்காரங்களை செய்திருக்கிறார் ஸ்ரீதாசராயர்.

சிறப்புப் பொருள்:

’நாராயணம் நமஸ்க்ருத்ய’ என்னும் ஸ்லோகத்தில் சொல்லியபடி, தாரதம்யத்தின்படி ஸ்ரீமன் நாராயணனிலிருந்து ருத்ரர் வரை வணக்கங்களை சொல்லி, பிறகான இந்திராதி தேவதைகளை சொல்லி மனுஷ்யோத்தமர்களின் வரை இதில் நமஸ்காரங்களை சொல்கிறார்.

‘பாகஷாஸன முக்ய சகல திவௌகசரிகெ’ என்னும் வாக்கியத்தினால் பாகஷாசன என்றால் இந்திரன். இந்திரன் முதலான தேவதைகள் என்றால் - இந்திர காமன், அனிருத்த, ரதி, மனுகுரு, தக்ஷ, ஷசி, ப்ரவஹ, யம, ஷதரூபா, சந்திர, சூர்ய, வருணன் வரைக்குமான அனைத்து தேவதைகளுக்கும் வணக்கங்களை செலுத்துகிறார் என்று பொருள்.

ரிஷிகளிகெ என்று சொல்வதால் - நாரதர், ப்ருகு, அக்னி, ப்ரஸூதி, விஷ்வாமித்ர, மரீசி ஆகிய பிரம்மதேவரின் மகன்களும், புஷ்கரன் என்னும் கர்மஜதேவதையும், அஜானஜ என்னும் தேவதைகளும் என அனைவரையும் எடுத்துக் கொள்ளவேண்டும்.

அஜானஜர் என்றால் தேவகுலத்தில் பிறந்து, தத்வங்களுக்கு அபிமானியாகாமல், சோமபானத்திற்கு தகுதி பெறாமல் இருக்கும் தேவதைகள். தும்புரு முதலான முக்கிய கந்தர்வர்கள் 100 பேர், நாரதர் முதலான உசத்யர் வரைக்கும், மேலே தாரதம்யத்தில் சொல்லப்பட்டிருக்கும் ரிஷிகளை விட்டு வேறு ரிஷிகள் இவர்கள் அனைவரும் அஜானஜர் என்று அழைக்கப்படுகிறார்கள். ரிஷி என்றால் இவர்கள் அனைவருமே ஆவர்.

பித்ருகளிகெ என்றால் பித்ரு கணங்களில் சில கணங்கள் உத்தம கணங்கள் என்று சொல்லப்படுகின்றன. (இந்த தாரதம்யத்தின் மேலதிக தகவல்கள் ‘ப்ருஹத் தாரதம்ய சந்தி’யில் வருகிறது). அந்த பித்ருகளை விட்டு மிச்ச பித்ரு கணங்களை இங்கு எடுத்துக் கொள்ளவேண்டும். கந்தர்வ என்னும் சொல்லால் அஜானஜரில் சேர்ந்த தும்புரு முதலான முக்கிய கந்தர்வர்களை விட்டு மிச்ச கந்தர்வர்கள் அனைவரையும் சேர்த்துக் கொள்ளவேண்டும். க்ஷிதிபர் என்றால் ப்ரியம்வ்ரதாதி உத்தமாதிகாரிகளைத் தவிர மிச்ச அரசர்களை, மனுஷ்யோத்தமர்கள் வரை எடுத்துக் கொள்ளவேண்டும். இதுவரை சொல்லியவர்கள் அனைவருக்கும் வணக்கங்களை சொல்லி, குரு பரம்பரையை வணங்குகிறார் தாசராயர்.

‘ஆ கமலனாபாதி யதிகள நீககா நமிஸுவெனு’ என்று ஸ்ரீமதாசார்யரின் நேரடி சிஷ்யர்களான பத்பனாப தீர்த்தர், நரஹரி தீர்த்தர், மாதவ தீர்த்தர், அக்ஷோப்ய தீர்த்தர் என்ற நான்கு யதிகளையும், இவரின் பரம்பரையில் வரும் டீகாராயர் (ஜயதீர்த்தர்), ஸ்ரீபாதராஜர், வியாசராஜர், வாதிராஜர், ஸ்ரீராகவேந்திர ஸ்வாமிகள் ஆகிய யதிகளை வணங்குகிறார் என்று அறியவேண்டும். தமக்கு வியாசகூடத்தினவர் மேல் அபிமானம் இருக்கிறது என்பதையும், வியாசகூடத்தவரகளுக்கும், தாசகூடத்தவர்களுக்கும் வேறுபாடு இல்லை என்பதையும், தற்போது பேதங்களை சொல்பவர்கள் அஞ்ஞானிகள் என்பதையும் தெளிவாக எடுத்துக் காட்டுமாறு, வியாசகூடத்தவர்களுக்கு முதலில்

நமஸ்காரங்களை சொல்லி பிறகு தாசவர்க்கத்தவர்களுக்கு நமஸ்காரங்களை செய்கிறார்.

‘பிடதெ ரமாகளத்ரன தாசவர்கக்கெ நமிபெ நனவரத’ என்று ‘ரமாகளத்ரன’ என்று பரமாத்மன் கிருஹஸ்தாஸ்ரமியாக, ஜகத்குடும்பியாக சொல்லியாயிற்று. பகவத் தாசர்களில் பரமாத்மனுக்கு அதிக ப்ரீதி இருக்கிறது என்பதை ‘ரமாகளத்ரன’ என்று சொல்லி விளக்கியாயிற்று. ‘நாஹம்வஸாமி வைகுண்டே நயோகி ஹ்ருதயே ரவௌ | மத்பக்தா யத்ரகாயந்தி தத்ரதிஷ்டாமி நாரத’. ’ஹே நாரத ! நான் வைகுண்டத்திலோ அல்லது இதயங்களில் மட்டுமே இருக்கிறேன் என்று நினைக்க வேண்டாம். என் பக்தர்கள் எங்கெங்கெல்லாம் பாடிக்கொண்டிருக்கிறார்களோ, அங்கு நான் எப்போதும் நிலைத்திருக்கிறேன்’ என்று பரமாத்மன் சொல்லியிருக்கிறார். இந்த பகவத் வாக்கியமானது, பரமாத்மனுக்கு தாசர்களில் இருக்கும் அன்பினை எடுத்துக் காட்டுகிறது. தாசவர்கக்கெ என்னும் சொல்லினால், புரந்தரதாசர், விஜயதாசர், பாகண்ணதாசர் என்று ஜகன்னாததாசரைவிட உத்தமர்களான தாசவர்கத்தினவருக்கு நமஸ்காரங்களை சொல்கிறார் தாசராயர்.

இப்படி முதல் சந்தியின் நோக்கத்தினை சொல்லும்போதே பார்த்த, முக்திக்கு முக்கிய காரணங்களான பஞ்சபேத, தாரதம்ய, 24 தத்வங்களை சொல்லி, தற்போது சந்தியை முடித்தவாறு, மங்கள ஸ்தோத்திரமாக தம் அந்தர்யாமியான பிம்பரூபி ஸ்ரீஜகன்னாதவிட்டல நாமக ஸ்ரீபரமாத்மனை வணங்குகிறார்.

**ப1ரிமளவு ஸுமனக3ளொளக3னல**
**நரணியொளகி3ப்பந்தெ தா3மோ**
**த3ரனு பிரம்மாதி3க3ள மனத3லி தோரி தோரத3லெ |**
**இருதிஹ ஜகன்னாத2விட்டலன**
**கருண படெ3வ முமுக்ஷு ஜீவரு**
**பரமபா4க3வதரனு கொண்டா3டு3வுது ப்ரதிதி3னவு ||13**

தாம = வயிறு
தாமோதரன் = யசோதையால் கயிற்றால் கட்டப்பட்ட வயிற்றை உடையவன்
பிரம்மாதிகள = பிரம்மதேவரே முதலான அனைத்து தேவதைகளின்
மனதலி = மனதில்
சுமனதொளகெ = புஷ்பத்தில்
பரிமளவு = வாசனையானது வருவதைப் போல
தோரி = காட்டி
அரணியொளகெ = நெருப்பு மறைந்திருப்பதைப் போல
தோரதலெ = கண்ணுக்குத் தெரியாமல்
இருதிஹவு = இருக்கின்றது.
இந்தஹ ஜகன்னாதவிட்டலன = ஜகன்னாததாசரின் பிம்பரூபியான ஜகன்னாதவிட்டலனான பரமாத்மனின்
கருணபடெவ = கருணையைப் பெறவேண்டும் என்னும் விருப்பமுள்ள
முமுக்ஷுஜீவரு = மோட்சத்திற்கு யோக்யரான ஜீவர்கள் அனைவரும்

ப்ரதிதினவு = தினந்தோறும்
பரமபாகவதரன = பிரம்ம வாயு ஆகியோரில் துவங்கி மனுஷ்யோத்தமர் வரை, தாரதம்யத்தின்படி, இந்த சந்தியில் சொல்லப்பட்டிருக்கும் பரம பகவத் பக்தர்களை
கொண்டாடுவது = நமஸ்காராதிகளை செய்து ஸ்தோத்திரங்களால் கொண்டாட வேண்டும்.

பொருள்:

மல்லிகை போன்ற புஷ்பங்கள் மலர்ந்தவுடன், அதன் வாசனையானது எப்படி அனைத்திடங்களிலும் பரவி, அனைவருக்கும் அது சென்று சேர்கிறதோ, அப்படி பிரம்ம வாயுகளுக்கு, அபரோக்ஷத்தில் பரமாத்மன் எப்போதும் காட்சியளித்துக் கொண்டேயிருக்கிறான். யாகசாலையில் அக்னியை வளர்ப்பதற்கு ஒரு அரச காஷ்டத்தை வைத்திருப்பர். அதை இன்னொரு காஷ்டத்துடன் உரசினால் நெருப்பு வரும். எனில் காஷ்டத்தில் இருக்கும் நெருப்பு நம் கண்ணிற்குத் தெரிவதில்லை. அப்படியே, ருத்ராதி தேவதைகளில் பரமாத்மன் இருந்தாலும், எப்போதும் நம் கண்ணுக்குத் தெரியாமல், தியானம் செய்யும்போது மட்டும் அபரோக்ஷத்தில் தன்னை காண்பித்துக் கொள்வான். ஆகையால், முக்தியோக்யர்கள் அனைவரும், தாரதம்யத்தின்படி பரம பகவத்பக்தர்களான பிரம்மாதி அனைத்து தேவதைகளுக்கும், தம்மைவிட உத்தமர்களான மனுஷ்யோத்தமர் வரை அனைவருக்கும் நமஸ்காரங்களை செலுத்தி அவர்களின் அருளைப் பெற்றால், பகவத் பிரசாதம் கிடைக்கும் என்று அறியவேண்டும்.

மங்களாசரண சந்தியின் தாத்பர்யம் இத்துடன் நிறைவுற்றது.
ஸ்ரீகிருஷ்ணார்ப்பணமஸ்து.

***

## பாவபிரகாசிகை : சந்தி 2 : கருணா சந்தி

**ஹரிகதா²ம்ருதசார கு³ருக³ள**
**கருணதிந்தா³பநிது பே¹ளுவே**
**பரம ப⁴கவத்³ப⁴க்தரித³னாத³ரதி³ கேளுவுது³**

**<u>சந்தியின் நோக்கம்:</u>**

முதலாம் சந்தியில் மங்களாசரணம் செய்தவாறு மத்வ சித்தாந்தத்தின்படி, முக்திக்கு முக்கிய சாதனைகளான பஞ்சபேத, தாரதம்யங்களை அறிந்து, ஹரி சர்வோத்தமத்வம் என்பதை அறிந்து உபாசனை செய்யவேண்டும் என்னும் விஷயத்தை குறிப்பிட்டுள்ளார். இந்த சந்தியில், பரமாத்மன், அவதார மற்றும் மூல ரூபங்களால், பக்தர்களில் எவ்வளவு கருணையைக் காட்டுகிறார் என்பதை தெரிவிக்கிறார். இந்த விஷயங்களை பாரத பாகவதாதி கிரந்தங்களில் இதிகாச ரூபங்களாக மிகவும் விளக்கமாக சொல்லப்பட்டவையே ஆகும். அவை

அனைத்தும் மிகவும் விளக்கமான கிரந்தங்களாகையால், ஒவ்வொரு சம்பவங்களையும் படித்து, பரமாத்மனின் கருணை நம் மேல் எவ்வளவு அதிகம் இருக்கிறது என்பதை அறிவதற்கு நம் இந்தப் பிறவி போதாது. ஆகையால், உலகத்திற்கு நன்மை செய்யவேண்டும் என்பதாலேயே தாசராயர், பாரத, பாகவதாதிகளில் பக்தர்கள் பரமாத்மனிடமிருந்து பெற்றிருக்கும் கருணையை, அதன் சிறப்பு அம்சங்களை மட்டும் எடுத்து, தாசராயர் கருணா சந்தி என்னும் இந்த சந்தியை இயற்றியிருக்கிறார். இந்த சந்தியின் முதலாம் ஸ்லோகத்தில், இந்த சந்தியின் நோக்கத்தை, கதா ஸ்ரவணத்தின் நற்பலன்களை விளக்கியிருக்கிறார்.

**ஸ்ரவண மனனானந்த3வீவுது3**
**ப4வஜனித து3க்க2க3ள க1ளெவுது3**
**விவித4 போ4க3வ னிஹபரங்களலித்து ஸலஹுவுது3 ।**
**பு4வனபாவன நெனிப லகுமி**
**த4வன மங்க3ள க1தெ2ய பரமோ**
**த்ஸவதி3 கி1விகொ3ட்டாலிபுது3 பூ4ஸுரரு தி3னதி3னதி3 ||1**

ஸ்ரவண = பகவத்கதையைக் கேட்பது
மனகெ = மனதிற்கு
ஆனந்தவ = மகிழ்ச்சியை
ஈவுது = கொடுப்பது
பவஜனித துக்ககள = பவ = சம்சார சம்பந்தத்தை. ஜனித = அதிலிருந்து வரும். துக்ககள = பிறப்பு இறப்பு சுழற்சியை
களெவுது = பரிகரிக்கும்
இஹபரங்களலி = இந்த பூலோகத்திலும் பரலோகத்திலும் கூட
விவித போகங்கள = பற்பல விதமான சுகங்களை
இத்து = கொடுத்து
சலஹுவுது = காப்பாற்றும்
புவனபாவனனெனிப = உலகத்தில் பவித்ரமானவன் என்றிருக்கும்
லகுமிதவன = லட்சுமிபதியின்
மங்கள கதெய = பரம மங்களமான கதையை
பரமோத்ஸவதி = மிகுந்த மகிழ்ச்சியுடன் (மரியாதையுடன்)
கிவிகொட்டு = ஸ்ரவண இந்திரியத்தை வேறு எந்த விஷயத்திலும் ஈடுபடுத்தாமல், ஒருமனத்துடன் இதற்கு காது கொடுத்து
பூஸுரரு = பிராமணர்கள்
தினதினதி = தினந்தோறும்
ஆலிபுது = கேட்கவேண்டும்.

பொருள்:
பரமாத்மனின் கதைகளைக் கேட்கும்போது பேரானந்தம் ஆகிறது. நவகாதம்பரிகளை (நவீன நாவல்களை) படிக்கும்போதுகூட மகிழ்ச்சியே ஆகிறது. அதனால் என்ன என்று கேட்டால், அதில் கர்ணானந்தம் (கேட்கும் மகிழ்ச்சி) மட்டுமே ஆகும். இதில் சம்சாரத்திலிருந்து விடுதலையும் ஆகிறது.

இதுமட்டுமல்லாமல், அனைத்து துக்கங்களையும் பரிகரித்து பரலோகத்திலும் பற்பல விதமான போகங்களைக் கொடுத்து சுகத்தையும் கொடுக்கிறது. ஆகையால், இத்தகைய லோகபாவனனான, ஸ்ரீரமாபதியின் மங்கள கதையை மிகுந்த மகிழ்ச்சியுடன் பக்தர்கள் அனைவரும் கேட்கவேண்டும்.

சிறப்புப் பொருள்:
இந்த பதத்தை, சந்தி சூசனை (சந்தியின் நோக்கத்தை சொல்லும் பதம்) என்று சொல்வதால், இந்த சந்தியில் சொல்லப்போகும் விஷயத்தின் சாரத்தை இதில் அடக்கியிருக்கிறார் தாசராயர் என்று சொல்லவேண்டும். அது என்ன? பகவத் கதையைக் கேட்பதால், துக்கங்கள் பரிகாரமாவதுடன், இஹபரங்களில் பரம சுகங்கள் உண்டாகின்றன. முக்கியமாக, பகவத்பக்தர்கள் பரமாத்மனின் கதைகளைக் கேட்டு உண்மையான ஞானத்தினால் அவனை ஆராதித்தால், அவன் அவர்களுக்கு பரமானுக்கிரகம் செய்து இஹபரங்களில் சுகங்களைக் கொடுக்கிறான் என்னும் விஷயத்தையே சொல்லியிருக்கிறார். ஆகையால், இந்த பதத்திற்கு சந்தி சூசனை என்று சொல்வது நியாயமே என்று அறியவேண்டும்.

மேலும் இந்த சந்தியில் பாரதாதி கிரந்தங்களில் சொல்லப்பட்டிருக்கும் கதைகளையே சொல்லியிருக்கிறார். பாரதம் முழுக்கவும் படித்தால் நமக்கு என்ன பலன் கிடைக்குமோ அதுவே கிடைக்கும் என்கிறார். அது எப்படி என்று யோசிப்போம்.

முதன்முதலில், பாண்டவர்கள் வனத்தில் பிறந்து, குந்திதேவியுடன் கஷ்டப்பட்டுக் கொண்டிருந்தபோது, ஸ்ரீபரமாத்மனே கதி என்று நினைத்து வணங்கியபோது, வியாசரூபியான பரமாத்மனே அவர்களுக்கு தரிசனம் தந்து, அவர்களை ஹஸ்தினாபுரத்திற்கு அழைத்து வந்து அருளினார். பிறகு, காண்டவ வனத்தின் தகனம் சமயத்திலும், திரௌபதி வஸ்திர அபஹரண சமயத்திலும், வனவாசத்திலும், அஞ்ஞான வாசத்திலும், போர் காலத்திலும் பக்தவஷ்யனன ஸ்ரீபரமாத்மன், ஸ்ரீகிருஷ்ண ரூபத்தினால் பாண்டவர்களுக்கு நண்பனாக இருந்து, தூதனாக இருந்து, உறவினனாக இருந்து, சாரதியாக இருந்து அவர்களை காப்பாற்றிய கதைகளின் முக்கிய சாராம்சம் என்ன? பரமாத்மன் தன் பக்தர்களை எந்த காலத்திலும் எல்லா விதங்களிலும் காப்பாற்றுவான் என்பதுதானே? பாகவதத்தைப் பாருங்கள்.

த்ருவ, பிரகலாதன், அம்பரீஷ, முசுகுந்த ஆகியோரின் கதைகளிலும், ஸ்ரீபரமாத்மனின் மத்ஸ்ய, கூர்ம, ராம, கிருஷ்ணாதி அவதார சரித்திரங்களிலும் நமக்குத் தெரியும் செய்தி என்ன? ஸ்ரீபரமாத்மன் கருணைக்கடல், பக்தர்களை மேம்படுத்துபவன் என்றுதானே தெரிகிறது? இவை அனைத்தையும் யோசித்து தாசராயர், பாரத, புராணங்கள் அனைத்தும் 4 லட்சம் கிரந்தங்கள். இவை அனைத்தையும் படித்தால் என்ன பலன் கிடைக்குமோ, அதை தாசராயர் இந்த கருணா சந்தியிலேயே அடக்கியிருக்கிறார்.

த்ருவாதி சரித்திரங்களைக் கேட்டு அவற்றிலிருந்து தெரியவேண்டிய முக்கிய கருத்துக்களை புரிந்துகொள்ளாவிடில், சாதாரண காதம்பரிகளைக் கேட்டு மகிழ்ச்சியடைவதைப் போலவே ஆகுமே தவிர, அதிலிருந்து நற்பலன் என்ன கிடைக்கும்? ஆகையால், நற்கதைகளின் சாராம்சத்தை புரிந்து கொள்ளவேண்டும். த்ருவனின் சரிதையைக் கேட்டால் நமக்கு புரியவேண்டிய கருத்து என்ன? ஆஹா. ஐந்து வயதுக் குழந்தை, தாய் தந்தைகளை விட்டு வனத்திற்குச் சென்று, பரமாத்மனைக் குறித்து தவம் செய்து, வெறும் 4 மாதம் அவன் செய்த தவத்தில் மெச்சி, பரமாத்மன் காட்சியளித்து, இங்கு 36,000 ஆண்டுகள் அரச பதவியையும், பரத்தில் த்ருவலோகாதிபத்யத்தையும் கொடுத்தான். இதிலிருந்து நாம் அறியவேண்டிய கருத்து என்ன? பகவந்தனை பக்தியுடன் யார் வணங்கினாலும், கருணா சமுத்திரனான ஸ்ரீஹரி, அவரை காப்பாற்றுவான். இந்த கருணா ரசத்தையே இந்த சந்தியில் சொல்லியிருப்பதால், இந்த சந்திக்கு 'கருணா சந்தி' என்றே பெயர் வைத்தார் தாசராயர்.

இந்த சந்தியை கேட்டாலும்கூட மிகச்சிறந்த பலன் கிடைக்கும் என்பதை குறிப்பதற்காக, முதல் பத்யத்தில் ஸ்ரவணத்தின் பலனை சொல்கிறார். ஸ்ரவணத்தினால் இந்த கலியுகத்தில் கிடக்கும் பலன்களானது, வேறு எதை செய்தாலும் கிடைக்காது என்பது தாசராயரின் அபிப்பிராயம். ஆனால், இந்த அபிப்பிராயம், வியாசகூடத்தவரின் கருத்துக்கு எதிர்மறையானது என்று சொல்லக்கூடாது. வியாச வாக்கியமும் இதையே சொல்கிறது. பாகவத 12ம் ஸ்கந்தத்தில்

யஷ: ஸ்ரீயாமேவ பரிஸ்ரம: பரோவர்ணாஸ்ரமாசாரதப: ஸ்ருதாதிஷு |
அவிஸ்ம்ருதி: ஸ்ரீதரபாதபத்ம யோகானுவர்ணானுவாத ஸ்ரவணாதிபிர்ஹரே: ||
அவிஸ்ம்ருதி: கிருஷ்ணபதாரவிந்தயோ: க்ஷிணோத்யபத்ராணி ஷமந்தனோதிச: |
ஸத்வஸ்ய ஷுத்திம்பரமாஞ்ச பக்திம் ஞானஞ்ச விஞான விராகயுக்தம் ||

என்று சொல்லப்பட்டிருக்கிறது. இதன் பொருள் என்னவென்றால்:

மனிதர்கள் வர்ணாசிரம தர்மங்களை பின்பற்றுவதாலும், தவத்தினாலும், த்ருவன் முதலானவர்களின் சரித்திரங்களை அடக்கிய பாகவதங்களின் சாராம்சங்களை அறியாமல், வெறும் ஸ்ரவணாதிகளை செய்வதால் வரும் பலன் என்னவென்றால்: உலகத்தில் இவர் பெரியவர். தன் ஸ்னான, ஜப, தப, ஆகியவற்றை செய்துகொண்டு இருக்கிறார் என்னும் நற்பெயரும், தான் தானத்தை இவருக்கே கொடுக்கவேண்டும் என்று கிருஹ தானம், பூமி தானம், கோ-தானம் ஆகியவை இவர்களுக்குக் கிடைப்பதே இதற்கான பலன். அதாவது, வர்ணாசிரம தர்மங்களை பின்பற்றுவதால், புகழும் செல்வமும் கிடைக்கும் என்பது அர்த்தம்.

ஸ்ரவணம் செய்யும்போது, அதன் கருத்துக்களையும் அறிந்து, மகாத்ம்ய ஞானத்துடன், பகவந்தனின் ஸ்மரணையையும் செய்தது போலாயிற்று. இந்த செயல், இந்த உலகத்தில் வரும் கஷ்டங்கள் அனைத்தையும் போக்கி, பர லோகத்தில் சுகங்களைக் கொடுத்து, ஞான பக்தி வைராக்கியங்களை அதிகரித்து,

முக்திக்கு வழிகாட்டுகிறது என்பதே அந்த பாகவத ஸ்லோகத்தின் தாத்பர்யம் ஆகும். இதையே தாசராயர், மிக ஆணித்தரமாக இந்த முதல் பத்யத்தில் சொல்கிறார்.

பாகவதம் சொல்கிறவர்கள் அதில் வரும் ஒவ்வொரு கதையையும் சொல்லி முடித்தவுடன், அதன் பலனையும் சொல்பவராக இருக்கவேண்டும். ஆனால், பலர் அப்படி சொல்வதில்லை. ஒருவேளை அப்படி அவர் அந்த பலன்களை சொன்னாலும், அங்கு அமர்ந்து கேட்பவர்கள் அனைவரும் அதை புரிந்துகொண்டனர் என்று சொல்வதற்கில்லை. ஒரு சிலரே அந்த பலன்களை புரிந்து கொள்வர். பலர் புராணம் முடிந்தவுடன், வீட்டுக்குப் புறப்பட்டுப் போவதிலேயே குறியாக இருப்பர். நாம் தினம் பார்க்கும் காட்சி இதுவே. ஆகவே, தாசராயர், இவை அனைத்தையும் அறிந்து, சிந்தித்து, அந்த நற்பலன்களையெல்லாம் எடுத்து இந்த கிரந்தத்தில் இயற்றியிருக்கிறார்.

இத்தகைய மிகப்பெரிய உபகாரத்தை செய்து, மக்களை மேம்படுத்திய மகானுபாவரான நம் தாசராயரை எவ்வளவு கொண்டாடினாலும் அது போதாது. முதல் பத்யத்தில், சந்தி சூசனையைக் கொடுத்து, சிரவணத்தின் மகிமைகளை புரியவைத்து, இந்த கிரந்தத்தை தாம் பேசுமொழியில் செய்திருப்பதால், மகாத்மர்கள் இதை உதாசீனம் செய்யக்கூடாது என்று சொல்லி, அவசியமாக இந்த கிரந்தம் பார்க்கத்தக்கது (படிக்கத்தக்கது) என்று இதன் மகிமைகளை தெரியப்படுத்தியிருக்கிறார்.

**மளெய நீரோணியலி ப$^{1}$ரியலு**
**ப$^{3}$ளஸரூரொளகி$^{3}$த்த$^{3}$ ஜனரா**
**ஜலவு ஹெத்தொ$^{3}$ரெகூ$^{3}$டே$^{3}$ மஜ்ஜன பான கை$^{3}$த$^{3}$பரு ।**
**கலுஷ வசனக$^{3}$ளாதொ$^{3}$டெ$^{3}$யு பா$^{3}$**
**ம்பொ$^{3}$ளெய பெ$^{1}$த்தன பா$^{1}$த$^{3}$மஹிமா**
**ஜலதி$^{3}$ பொக்குத$^{3}$ரிந்த$^{3}$ மாண்த$^{3}$பரெ மஹிஸூரரு ।।2**

மளெயநீரு, ஓணியல்லி = தெருவின் ஓரத்தில், சாக்கடைகளில் மழைநீர்
பரியலு = ஓடிக்கொண்டிருப்பதை, ஊரில் இருக்கும் மக்கள்
பளஸலு = பயன்படுத்த மாட்டார்கள்
ஆ ஜலவு = அதே நீரானது
ஹெத்தொரெகூடெ = பெரிய ஆற்றில் போய் சேர்ந்தால்
மஜ்ஜனபான கெய்தபரு = குளித்து, குடிப்பதற்கு பயன்படுத்துவர். அதுபோலவே,
இவு = இந்த கிரந்தத்தில் இருக்கும் என் வசனங்கள்
கலுஷவசனகளாதரு = பேசுமொழியில் எழுதப்பட்டிருந்தாலும்
பாந்தொளெயபெத்தன = கங்கையைப் பெற்ற ஸ்ரீபரமாத்மனின் பாத மகிமைகளைப் போல
பொக்கதரிந்த = பாத மகிமை என்னும் கடலைப் பற்றி சொல்லியிருப்பதால்
மஹிசுரரு = பிராமணர்கள்

மாள்தபரெ = ஏற்றுக்கொள்ளாமல் இருப்பார்களோ? (அதாவது ஏற்றுக்கொள்வர் என்று பொருள்)..

பொருள்:
மழை பெய்யும்போது, அந்த நீரானது, சந்து தெருக்களின் ஓரத்தில் ஓடும்போது, அதை யாரும் பயன்படுத்துவதில்லை. அதே தண்ணீரானது, பெரிய ஆற்றினில் போய் சேரும்போது, எப்படி அதில் ஸ்னானாதிகளை செய்கின்றனரோ, அதுபோலவே, என் கிரந்தங்களில் என்ன தோஷங்கள் இருந்தாலும் இது சம்ஸ்கிருத மொழியாக இல்லாதிருந்தாலும், ஸ்ரீபரமாத்மனின் பாத சரித்திரத்தைப் பற்றி பேசுவதினால், அதாவது, இதில் பகவந்தனின் மகிமைகளே சொல்லியிருப்பதால், பிராமணர்கள் இதனை ஏற்றுக்கொள்ளாமல் இருக்கமாட்டார்கள்.

சிறப்புப் பொருள்:
ஸ்ரீமத் டீகாசார்யர் (ஜயதீர்த்தர்) சொல்வது இது.

கங்கா சங்கேன நைர்மல்யம் ரத்யாத்பிர்லப்யதேயதா |
வாசோவிஷுத்திஸித்யர்த்தம் சங்கம்யந்தே குரோர்கிர: ||

அதாவது, தெரு ஓரத்தில் ஓடும் மழை நீரானது, கங்கையை சேர்ந்தவுடன் எப்படி புனிதமாக கருதப்படுகிறதோ, அதைப் போலவே நம் வாக்கு புனிதமடைவதற்கு, டீகா ரூபமான இந்த வாக்கியங்களை, குருகளின் மூல கிரந்தத்தில் சேர்க்கிறோம். - என்று பிரம்மசூத்ர பாஷ்யத்தின் டீகா கிரந்தமான தத்வபிரகாசிகையில் சொல்லியிருக்கிறார். அதே கருத்தினையே தாசராயர் இந்த பத்யத்தில் குறிப்பிட்டிருக்கிறார்.

மழை நீரானது தெருவோரங்களில் ஓடும்போது, மக்கள் அதனை பயன்படுத்தாமல் இருந்தாலும், அதே நீரானது ஒரு பெரிய ஆற்றினை அடைந்ததும் அதை எப்படி பயன்படுத்தத் துவங்குகின்றனரோ, அதைப்போலவே இந்த கிரந்தமானது பேசுமொழியான கன்னடத்தில் இருந்தாலும், அப்ராக்ருதமான பகவந்தனின் மகிமைகளையே பேசுவதால், இதனை ப்ராக்ருதம் என்று உதாசீனம் செய்யாமல் ஏற்றுக்கொள்வர் என்னும் நம்பிக்கையில் இதை இயற்றியிருக்கிறேன் என்கிறார் தாசராயர்.

சிலர் சம்ஸ்கிருத கிரந்தங்களே சிறந்தவை என்றும், பேசுமொழியில் இருக்கும் கிரந்தங்களை படிக்கக்கூடாது என்றும் சொல்வர். ஆனால் இந்த அபிப்பிராயம் உள்ளவர்கள், புராணங்களில் அங்கங்கு சொல்லப்பட்டிருக்கும் சம்ஸ்கிருத சொற்களை சரியாகப் புரிந்துகொள்ளாமல், வெறும் மொழியின் ஆசையில் அதை புரிந்துகொண்டு, அநியாயமாக பெரியவர்களின் துரோகத்தை சம்பாதித்துக் கொள்கின்றனர். உலகத்தில் சம்ஸ்கிருதமே சிறந்த மொழி என்றும், அதற்கே மகிமைகள் உள்ளன என்றும் அறிந்து, சம்ஸ்கிருதம் அறிந்தவர்களே முக்திக்கு செல்வர் என்றும் சொல்வர். கன்னட மொழி ஒதுக்கப்பட்ட மொழியாக இருந்திருந்தால், ஸ்ரீபாதராஜர், ஸ்ரீவியாசராஜர், ஸ்ரீவாதிராஜர்களே ஆகட்டும்

கன்னடத்தில் பதங்களை செய்திருப்பதால், அவர்கள் அனைவரும் நரகத்திகுச் செல்வர் என்று சொல்வது போலாயிற்று. சம்ஸ்கிருதம் வராத உத்தமரான தாசராயர்கள் அனைவருக்கும் தமஸ்ஸே கிடைக்கவேண்டுமாயிற்று. ஆகையால், சம்ஸ்கிருத சொற்களுக்கு, தவறான விளக்கங்களை புரிந்துகொள்பவர்களைப் பார்த்து வருத்தப்பட வேண்டியதாகிறது.

பாகவத 11ம் ஸ்கந்தத்தின் தாத்பர்யத்தில் 'கர்தபயானம சம்ஸ்க்ருத வாணி இத்யாதே:' என்று பொருளின் புனிதம், புனிதத்தன்மை இல்லாமை ஆகியவற்றை சொல்லும்போது சம்ஸ்கிருதம் இல்லாத வாக்கியத்தை கழுதையின் வாகனத்திற்கு சமமாக சொல்லியிருக்கின்றனர். ஆனால், பண்டிதர்கள், சுதாதி கிரந்தங்களுக்கும், புராணங்களுக்கும் அர்த்தம் சொல்வதானால், அதை இந்த பேசுமொழியிலேயே சொல்லவேண்டியதாக இருக்கிறது. வீட்டில் குடும்பத்தினருடன் பேசும்போது பேசுமொழியிலேயே பேசவேண்டியதாக இருக்கிறது. இதையெல்லாம் கழுதையின் மேல் அமர்ந்தாற்போல என்று சொல்லமுடியுமா? இதையெல்லாம் யோசிக்காமல் மனதிற்கு தோன்றினாற்போல பேசினால், அனர்த்தமே ஆகும். பெரியவர்களின் துரோகமும் கூடவே வரும். ஆகவே, சம்ஸ்கிருத சொற்களுக்கு பேசுமொழியில் அர்த்தங்களை சொல்லியே ஆகவேண்டும்.

மேலும் 11ம் ஸ்கந்தத்தில், 'புராணை: ப்ராக்ருதைரபி' ப்ராக்ருதத்தினாலும் பரமாத்மனை ஸ்தோத்திரம் செய்யவேண்டும். இதுமட்டுமல்லாமல்

நயத்வஷஸ்சித்ரபதம் ஹரேர்யதோ ஜகத்பவித்ரம் ந க்ருணீத் கர்ஹிசித ।
தத்வாயஸம் தீர்த்தமுஷந்தி மானஸானயத்ர ஹம்ஸான்ய வன்மிகன்ஷயா ।।
சவாக்விஸர்கோஜன தாக விப்லவோ யஸ்மின்ப்ருதி ஸ்லோகமபத் பவத்யபி ।
நாமன்யனந்தஸ்ய யஷோங்கிதானியஸ் புண்யந்தி காயந்தி க்ருணந்தி ஸாதவ: ।।

என்னும் பாகவத வசனத்திற்கேற்ப, எந்தவொரு கிரந்தமும், எந்த மொழியில் இருந்தாலும், கேட்பதற்கு இனிமையாக இருந்தாலும் , அதில் பகவத் மகிமை இல்லாதிருந்தால், அந்த கிரந்தத்தை, காக்கைகள் குடிக்கும் நீர்நிலையில் மானச சரோவரத்தில் நீர் குடிப்பவைகளான அன்னப்பறவைகள் நீர் குடிக்க எப்படி விருப்பப்படாதோ, அதுபோலவே, பெரியவர்களான 'ஹம்ஸ' என்றால் சன்யாசிகளான சனகாதிகள் முதலானவர்கள் விரும்பமாட்டார்கள். அதனை அவர்கள் வயிற்றுப்பிழைப்பிற்காக பயன்படுத்தப்படுவது என்று நினைப்பார்கள். மாறாக, ஒவ்வொரு ஸ்லோகத்திலும் எதுகை மோனை ஆகியவை இல்லாதிருந்தாலும், அதில் பகவத் மகிமைகள் சொல்லப்பட்டிருந்தால், சன்யாசிகள் அந்த கிரந்தத்தை படித்துக் கேட்பதில் மகிழ்ச்சியடைவார்கள். இப்படியாக, பகவத் மகிமைகள் உள்ள கிரந்தத்தின் மகிமைகளை சொல்லியிருக்கிறார்கள்.

இப்படியிருக்கையில், சம்ஸ்கிருத மொழி ப்ராக்ருத மொழி என்றால் என்ன அர்த்தம்? சம்ஸ்கிருதத்தில் எழுதப்பட்டிருந்தாலும் காதம்பரி காவியங்கள் ஆகியன பகவத் மகிமைகளைப் பற்றி பேசாததால், ப்ராக்ருத கிரந்தங்கள் என்றும்;

கன்னடத்தில் எழுதப்பட்ட கிரந்தமானது அப்ராக்ருதனான பரமாத்மனின் மகிமைகளைப் பற்றி பேசினால் அவை சம்ஸ்கிருத கிரந்தங்களே என்பது ஸ்ரீமதாசார்யரின் வாக்கு என்று நினைக்கவேண்டும்.

மேலும் அ-காராதி 51 எழுத்துக்களே கன்னடத்திலும் இருப்பதால், அஜாதி பரமாத்மனின் ரூபங்களே இந்த எழுத்துக்களுக்கும் ப்ரதிபாத்யனாக இருக்கிறான் என்றும், இத்தகைய சிறந்த கிரந்தத்தை கன்னட மொழி என்று உதாசீனம் செய்பவர்கள், ஹரிகுருகளின் துரோகத்திற்கு ஆளாகிறார்கள் என்பதில் சந்தேகமே இல்லை.

இதைப்போலவே, பழங்கால மகாராஷ்டிரத்து கவி/பக்தர்களான துக்காராம், துளசிதாஸ், நாமதேவ, ஞானதேவ் என்று மிகச்சிறந்த பக்தர்கள் என்று புகழ்பெற்றிருக்கும் பலர் தத்தம் மொழிகளுக்கு முக்கியத்துவம் கொடுத்திருப்பர். அவர்களைப் போலவே, நம் தாசராயரும் இதை கலுஷவசன என்று எண்ணாமல், பகவத் மகிமை என்னும் கடலில் நுழைந்திருப்பதால், அனைத்தும் ஏற்றுக்கொள்ளத்தக்கதே என்று நினைக்கவேண்டும் என்கிறார். இவ்வளவு விளக்கங்களை சொல்லியும், மக்களுக்கு இதன்மேல் மரியாதை உண்டாகவில்லை எனில், அது குரங்கின் கையில் கிடைத்த பூமாலை போல என்று எண்ணவேண்டும். பரமாத்மன் ஒவ்வொருவரின் தகுதிக்கேற்ப அவரவர் மூலமாக சாதனைகளை செய்விக்கிறான். இதற்கு மேல் சொல்வதற்கு என்ன இருக்கிறது?.

**ஸ்ருதி த[1]திகளபி[4]மானி லகுமி**
**ஸ்துதிக[3]ளிகெ[3] கோ[3]சரிஸத[3]ப்ரதி**
**ஹத மஹைஸ்வர்யாத்யகி[2]ள ஸத்[3]கு[3]ண கணாம்போ[4]தி[3] |**
**ப்ரதிதி[3]வஸ தன்னங்க்[4]ரி ஸேவா**
**ரத மஹாத்மரு மாடு[3]தி[1]ஹ ஸம்**
**ஸ்துதிகெ[3] வஷனாகு[3]வனிவன காருண்யகேனெம்பே[3] ||3**

ஸ்ருதிததிகளிகெ = வேத சமூகங்களுக்கு
அபிமானி = அபிமானியான
லகுமி ஸ்துதிகளிகெ = லட்சுமிதேவி செய்யும் ஸ்தோத்திரங்களுக்கு
கோசரிசத = தரிசனம் அளிக்காத
அப்ரதிஹத மஹைஸ்வர்யாதகிள குணகணாம்போதி = அப்ரதிஹத மஹைஸ்வர்யாதி = ஒப்புமை இல்லாத பெருஞ்செல்வங்கள். அகிள = அனைத்து. சத்குணகள = நற்குணங்கள். அம்புதி = கடல் போன்றவனான ஸ்ரீபரமாத்மன்
ப்ரதிதிவஸ = தினந்தோறும்
தன்னங்க்ரி சேவாரத மஹாத்மரு = தன்னங்க்ரி = தன் பாதங்களின். சேவா = சேவையில். ரத = ஈடுபட்டுள்ள. மஹாத்மரு = மஹனீயர்கள்.
மாடுதிஹ = செய்துகொண்டிருக்கும்.
சம்ஸ்துதிகெ = ஸ்தோத்திரத்திற்கு வசமாகும்
காருண்யக்கெ = (இவனது) கருணையை
ஏனெம்பெ = என்னவென்று வர்ணிப்பேன்?

பொருள்:
எந்த பரமாத்மனை ஸ்தோத்திரம் செய்து அவனது தரிசனத்தைப் பெறுவதற்கு, ஸ்ரீலட்சுமிதேவியருக்கும் சாத்தியம் இல்லையோ, யார் எப்போதும் நாசம் இல்லாமல் ஒரே மாதிரியான கருணைக்கடலாக இருக்கிறானோ, அத்தகைய மகானுபாவன், தன் பாதங்களை வணங்குபவர்களான மகாத்மர்கள் செய்யும் ஸ்தோத்திரத்திற்கு வசமாகிறான். இத்தகைய மகானுபாவனின் கருணையை நான் என்னவென்று வர்ணிப்பேன்?

சிறப்புப் பொருள்:
தன் பாதங்களை வணங்குபவரகளின் ஸ்தோத்திரங்களுக்கு பரமாத்மன் வசமாகிறான் என்று தாசராயர் சொல்கிறார். இதற்கு என்ன ஆதாரம் என்றால். தாசர் தன்னுடைய அனுபவத்தினால், பெரியவர்களின் வாக்கின் ஆதாரத்தினாலும் அப்படி சொல்லியிருக்கிறார். சொந்த அனுபவம் என்றால், விஜயதாசர், பாகண்ணதாசர் இருவரும், ஜகன்னாததாசர் உடம்பு சரியில்லாதிருந்தபோது, அவரை அழைத்துக் கொண்டு திருப்பதி க்ஷேத்திரத்திற்கு சென்றனர். அங்கு, மிகவும் சோர்வுற்றிருந்த தாசரை விட்டுவிட்டு, பாகண்ணதாசர் ஆகியோர் பகவந்தனின் தரிசனத்தைப் பெறுவதற்கு கோயிலுக்குச் சென்றனர். அங்கிருந்த ஹரிதாசர்கள் அனைவரும், பஜனைப் பாடல்களைப் பாடியவாறு, நர்த்தன சேவையிலும் ஈடுபட்டு, அங்கு படுத்திருந்த ஜகன்னாததாசரை மறந்தனர். ஜகன்னாததாசரோ பசியில் துடித்தவாறு, சிலர் இங்கு பாடியவாறு இருக்க, பலர் வேங்கடனின் தரிசனத்திற்காகச் சென்று, தன்னை மறந்தனரே, தம் நிலைமை இப்படியாகிவிட்டதே என்று துயரப்பட்டவாறு, ஸ்ரீபரமாத்மனை இடைவிடாமல் தியானம் செய்து, ஸ்தோத்திரம் செய்யலானார்.

அப்போது பரமாத்மன், பாகண்ணதாசராக வேடம் தரித்து, திவ்யமான பக்ஷ்ய போஜ்யங்களுடன் அன்னத்தைக் கொண்டு வந்து தாசரிடம் தந்தான். அதை உண்டவுடன், இவருக்கு இருந்த சோர்வு நீங்கி, மிக்க மகிழ்ச்சியுடன் பரமாத்மனை துதிக்கத் துவங்கினார். அங்கு வெகு நேரத்திற்குப் பிறகு பாகண்ணதாசருக்கு ஜகன்னாததாசரின் நினைவு வந்தது. உடனே அவர் ‘ஆஹா. நோய்வாய்ப்பட்ட நம் சிஷ்யனை அப்படியே மறந்துவிட்டோமே. பசியினால் எவ்வளவு கஷ்டப்படுகிறானோ’ என்று கவலைப்பட்டவாறு வேகவேகமாக வீட்டுக்கு வந்து பார்த்தால், அங்கு மகிழ்ச்சியுடன் அமர்ந்திருக்கும் சிஷ்யனைக் கண்டு ‘நான் உம்மை மறந்து பஜனையில் இருந்துவிட்டேன். பசியினால் நீ என்ன செய்கிறாரோ என்று கவலைப்பட்டு ஓடோடி வந்தேன். இதென்ன, இன்று நீ எதையும் சாப்பிடாமல் இருந்தாலும், இவ்வளவு தெம்பாக, மகிழ்ச்சியாக இருக்கிறாயே? எழுந்து அமரும் சக்தி உனக்கு எப்படி வந்தது?’ என்றார்.

அதற்கு ஜகன்னாததாசர் வியப்புடன், ‘இதென்ன இப்படி சொல்கிறீர்கள்? இப்போதுதானே நீங்கள் எனக்கு சுவையான உணவைக் கொண்டு வந்து கொடுத்தீர்கள்? அத்தகைய சுவையான உணவை நான் என்றும் உண்டதேயில்லை.

அதன் மகிமையாலேயே எனக்கு எழுந்து அமரும் சக்தி வந்திருக்கிறது' என்றார். இதைக் கேட்ட பாகண்ணதாசர், 'ஸ்ரீனிவாசனே வந்து உனக்கு உணவு கொடுத்திருக்கிறான். நான் உன்னை மறந்தேவிட்டேன். உன் பக்தியை மெச்சி பரமாத்மனே அருளியிருக்கிறான்' என்று சொல்லி, இருவரும் பரமாத்மனின் ஸ்தோத்திரங்களை செய்தனர், என்பதை ஜகன்னாததாசரின் வாழ்க்கைச் சரிதத்தில் பார்க்கிறோம். இது தாசராயருக்கு ஏற்பட்ட ஸ்வானுபவம் (சொந்த அனுபவம்) ஆகும்.

கனகதாசர் உடுப்பி கிருஷ்ணனின் தரிசனத்திற்கு சென்றபோது, அவர் நான்காம் வர்ணத்தவர் என்று கூறி அவரை கோயிலுக்குள் அனுமதி மறுத்துவிட்டனர். அவர் கோயிலின் பின்புறத்தில் அமர்ந்து, பகவந்தனை புகழ்ந்து பாட, கோயிலின் மேற்குச் சுவர் உடைந்து ஸ்ரீகிருஷ்ணன் அவருக்கு தரிசனம் அளித்தான். இன்றும் அதே வழியில் 'கனகன கிண்டி' என்னும் சன்னலில் இருந்தே, நாமும் கிருஷ்ணனின் தரிசனத்தைப் பெறுகிறோம். இத்தகைய பல சம்பவங்கள் விட்டல பக்தர்களின் வாழ்வில் வந்திருப்பதை அறிகிறோம்.

ஆகையால் தாசராயர், தமது சொந்த அனுபவத்தினாலேயே 'தன்னங்க்ரி சேவாரதரு மாடுதிஹ சம்ஸ்துதிகெ வஷனாகுவனு' என்று சொல்லியிருப்பார். இதற்கு உதாரணமாக 'ஸ்ருதிதேவ' மற்றும் 'பஹளாஸ்வராஜ' என்னும் புராண கதைகளை சொல்லலாம். ஒருவேளை மக்களுக்கு புராண கதைகள் அசுவாரசியமாக இருந்தால், அக்பர் சக்ரவர்த்தியின் காலத்தில் நடந்த உதாரணங்களை மனதில் வைத்தே தாசராயர் இந்த வரிகளை இயற்றியிருப்பார். 'இவன காருண்யகேனெம்பெ' என்று மேலே சொன்னவற்றை வைத்து, பரமாத்மனின் கருணையை வியந்து போற்றியிருக்கிறார்.

**மனவசனகதிதூ3ர நெனெவர**
**நனுஸரிஸி தி1ருகு3வனு ஜான்ஹவி**
**ஜனக1 ஜனரொளகி3த்து3 ஜனிஸுவ ஜக3து3த3ர தா1னு ।**
**க4னமஹிம கா3ங்கே3யனு1த கா3**
**யனவ கே1ளுத க3க3னசர வா**
**ஹன தி3வௌக1ஸரொட3னெ திருகு3வனு மனெமனெக3ளலி ||4**

ஜான்ஹவிஜனக = கங்கையைப் பெற்ற பரமாத்மன்
மனவசனகதிதூர = மனதிற்கும், வாக்கிற்கும் காட்சியளிக்காத, ஆனாலும்
நெனெவரன = நினைப்பவர்களை
அனுசரிஸி = அவர்களுக்கேற்ப, நடப்பான்.
ஜகதுதர = உலகத்தையே தன் வயிற்றில் வைத்துக் கொண்டிருப்பவன்
ஜனரொளகித்து = அனைத்து பிராணிகளிலும் இருந்து
ஜனிஸுவ = பிராணிகள் கர்ப்பத்திலிருந்து பிறக்கும்போது, தானும் அவர்களுடன் பிறப்பான்
காங்கேயனுத = பீஷ்மாசார்யரால் புகழப்பட்ட
கனமஹிமெ = அபாரமான மகிமை உள்ளவன்

ககனசரவாஹன = கருட வாகனான ஸ்ரீபரமாத்மன்,
காயனவன = தன் பக்தர்கள் பாடும் ஸ்தோத்திரங்களை
கேளுத = கேட்டவாறு
திவௌகஸரொடனெ = தேவதைகளுடன்
மனெமனெகளலி = பக்தர்களின் வீடுகளில்
திருகுவனு = சஞ்சரித்திருப்பான்.

பொருள்:
கங்கையைப் பெற்றவனான ஸ்ரீபரமாத்மன், மனதிற்கும், வாக்கிற்கும் காட்சியளிக்காதவன் ஆனாலும், அபாரமான மகிமையுள்ளவன். சாதாரண பக்தர்கள் தன்னை துதித்தால், அவர்களை காப்பாற்றுவதற்கு அவர்களுடனே அவர்களுக்கேற்ப நடப்பான். உலகத்தையே தன் வயிற்றில் வைத்துக்கொண்டிருப்பவனான அவன், மக்களிடம் இருந்து, கர்ப்பத்திலிருந்து அவர்கள் பிறக்கும்போது, தானும் பிறக்கிறான். பீஷ்மாசார்யரால் வணங்கப்படுபவனான, மகானுபாவனான அவன், தன் சாதாரண பக்தர்கள் செய்யும் ஸ்தோத்திரங்களை கேட்டவாறு, கருடவாகனனாக, தேவதைகளுடன் கூடி, பக்தர்களின் வீடுகளில் சஞ்சரித்திருக்கிறான். ஆகையால், தாசராயர் 'இவன காருண்யகேனெம்பெ' என்று போற்றியிருக்கிறார்.

சிறப்புப் பொருள்:
முந்தைய ஸ்லோகத்தில் 'இவன காருண்யகேனெம்பெ' என்று பாடிய தாசராயர், இங்கு மற்றும் இந்த ஸ்லோகத்திலிருந்து அதன் உதாரணங்களைக் கொடுத்திருக்கிறார்.

ஜான்ஹவி ஜனக - என்று சொல்வதில் ஸ்ரீபரமாத்மனின் பாத மகிமைகளை, அதன் பவித்ரத்தை குறிப்பிடுகிறார். அது எப்படியெனில்: பாகவத ஐந்தாம் ஸ்கந்தத்தில்:

'தத்ர பகவஸ்ஸாக்ஷாத் யக்ஞலிங்கஸ்ய விஷ்ணோர்விக்ரமதோவாமபாதாங்குஷ்ட நகனிர்பின்னோர்த்வாண்ட கடாஹ விவரேணாந்த: ப்ரவிஷ்டயா ஜலதரா' - ஸ்ரீபரமாத்மன் வாமன அவதாரம் எடுத்து, பலி சக்கரவர்த்தியிடமிருந்து மூன்று அடி நிலத்தை தானம் வாங்கி, அதை அளக்கும்போது த்ரிவிக்ரம ரூபம் எடுத்து, தன் ஒரு அடியால் பூமண்டலத்தை அளந்து, இரண்டாம் அடியால் அந்தரிக்ஷ லோகத்தை அளக்கும்போது, அந்த காலடியானது, புவல்லோக முதற்கொண்டு சத்யலோக வரைக்கும் இருக்கும் ஆறு உலகங்களைத் தாண்டி, மேலிருக்கும் பிரம்மாண்டத்தின் கூரையை இடித்தது. அப்போது பரமாத்மனின் இடது கால் கட்டை விரலின் நகம், அந்த கூரையை இடித்தவுடன், அது உடைந்து வெளியிலிருந்த நீர் உள்ளே நுழைந்தது. அந்த தண்ணீர், பரமாத்மனின் காலைத் தொட்டு, கழுவியவாறு வந்ததால், நதிகளில் உத்தமள் என்று பெயர் பெற்றாள். விஷ்ணுவி என்னும் பெயரினால் உலகத்தை பவித்ரமாக்கினாள் என்று சொல்வர். இதனால் ஜான்ஹவியைப் பெற்றவன் என்று பரமாத்மனை சொல்வதற்கு காரணம் வந்தது.

யச்சௌசனி: ஸ்ருதஸரித்ப்ரவரோதகேன தீர்த்தேன மூர்த்யதிதேன ஷிவ: ஷிவோபூத் |
த்யாதுர்மன: ஷமல ஷைல நிஸ்ருஷ்டவஜ்ரம் த்யாயோசீரம் பகவதஸ்சரணாவிந்தம் ||
(பாகவத மூன்றாம் ஸ்கந்தம்)

இந்த ஸ்லோகத்தில்: 'எந்த பரமாத்மனின் காலைத் தொட்டு புறப்பட்ட தண்ணீரை' என்று சொல்லப்பட்டிருக்கிறது. கங்கையை பாதத்தை கழுவிய நீர் என்று சொல்வதற்கு இன்னொரு காரணமும் உண்டு. வெளியில் இருந்த நீர், உள்ளே பாய்ந்தபோது, முதலில் பரமாத்மனின் காலைக் கழுவியபிறகே உள் நுழைந்தது என்று சொன்ன காரணத்தைத் தவிர இன்னொரு காரணமும் உண்டு. அது என்னவெனில்:

பரமாத்மன் பூமியை அளந்தபோது, சத்யலோகத்திற்கு வந்தபோது, பிரம்மதேவர், பரமாத்மனைக் கண்டு மகிழ்ந்து, அந்த பரமாத்மனின் காலிலிருந்து வந்த தண்ணீரையே தன் கமண்டலத்தில் பிடித்து, பரமாத்மனின் கால்களை விதிப்படி பூஜித்து, அந்த கால்களை கழுவினார்.

தாது: கமண்டலுஜலந்ததுருக்ரமஸ்ய பாதாவனே ஜனபவித்ரத யானரேந்த்ர
ஸ்வர்தூன்ய பூன்யபஸிஸாபததே நிமார்ஷ்டே லோகத்ரயம் பகவதோ விஷதேவகீர்தித:
(பாகவத எட்டாம் ஸ்கந்தம்)

அதாவது, அந்த கமண்டலத்திலிருந்து வந்த தண்ணீரானது, பவித்ரம் கொண்டு, ஆகாயகங்கை என்று பெயர் பெற்று, மூன்று உலகங்களையும் பவித்ரமாக ஆக்கியது என்கிறார். ஆகையால், மூன்றாம் ஸ்கந்தத்தில் சொல்லப்பட்டுள்ள விஷயம் இதற்கு எதிரானதாக இல்லை என்று நினைக்கவேண்டும். மூன்றாம் ஸ்கந்தத்து ஸ்லோகார்த்தம் என்னவென்றால்: எந்த பரமாத்மனின் பாதங்களைக் கழுவி, பவித்ரமான கங்கையை, தன் தலையில் ஏந்தியதால் ருத்ரருக்கு ஷிவ என்று பெயர் வந்ததோ, யாருடைய பாதத்தை சிந்திப்பவரின் மனக்கஷ்டங்கள் என்னும் மலையானது தூள்தூளாக போகின்றதோ, அத்தகைய ஶ்ரீபரமாத்மனின் சரண கமலங்களை நாம் சிந்திக்கவேண்டும். இதுவே 'யச்சௌசனி:' என்னும் மூன்றாம் ஸ்கந்தத்து ஸ்லோகத்தின் அர்த்தமாகும்.

மஹனீயர்களே! பாருங்கள்! சாதாரணமாக நாம் கால், நகம், முடி ஆகியவை நீரிலோ, பதார்த்தங்களிலோ பட்டுவிட்டால், அந்த பதார்த்தங்களை தவிர்க்கவேண்டும் என்கிறார்கள் சாஸ்திரகாரர்கள். ஆனால், பரமாத்மனின் விஷயத்தில் இது எப்படி மாறுபடுகிறது என்று பாருங்கள். 'ஏதோஷா: இதரத்ராபிதே குணா: பரமே மதா:' - எது மக்களிடம் தோஷம் எனப்படுகிறதோ, அதுவே பரமாத்மனிடம் நற்குணம் எனப்படுகிறது. இதுவே வேதவாக்கியமாக இருக்கிறது. இந்த உதாரணத்திலிருந்து அது தெளிவாக விளக்கப்பட்டுள்ளது. பரமாத்மனின் இடது கால் கட்டைவிரல் நகத்திலிருந்து உற்பத்தியாகி,, அந்த

பரமாத்மனின் கால்களைக் கழுவி, ருத்ர தேவர் மூலமாக, அனைத்து உலகத்தையும் பவித்ரமாக ஆக்கியது என்றபிறகு, அந்த பரமாத்மனின் பாத மகிமையை எப்படி வர்ணிப்பது? பரமாத்மன் இத்தகைய மகிமையைக் கொண்டவன் என்று காட்டுவதற்காக 'ஜான்ஹவிஜனக' என்று தாசராயர் சொல்லியிருக்கிறார்.

மேலும் 'மனவசனகதிதூர நெனெவரனனுசரிஸி திருகுவனு'. இந்த வாக்கியத்தால் பரமாத்மனின் கருணையை விளக்குகிறார். அது எப்படியெனில்: பாகவத பத்தாம் ஸ்கந்தத்தில் - 'மனோவசோப்யாமனுமேய வர்த்மனோ தேவக்ரியாயா: ப்ரதியந்த்யதாபிஹி' - பிரம்மாதி தேவதைகள்கூட பகவத் மகிமைகளை முழுமையாக அறியமுடியாது. பகவந்தனின் ஸ்வரூபம் எத்தகையது என்றால், மனம், வாக்கு ஆகியவற்றால் அவன் புலப்படமாட்டான். அதாவது, உலகம் இருக்கிறது என்றால், அதைப் படைத்தவன் ஒருவன் இருக்கவேண்டும். அவன் யார்? வேதங்களில், பரமாத்மனே ஸ்ருஷ்டிகர்த்தன் என்று சொல்லியிருப்பதால், அவனே படைத்தவன் என்று அறியவேண்டும். பிரம்மாதிகளும் இதுவரைக்கும் அல்லது இதைவிட கொஞ்சம் அதிகமாக, தத்தம் தகுதிக்கேற்ப, பகவந்தனின் விருப்பப்படியே (ப்ரேரணையுடன்), பகவந்தனின் மகிமைகளை காண்பரே தவிர, அதை முழுமையாக அறிவதற்கு சாத்தியமில்லை.

அப்படியெனில், தாசராயர் 'சுலபனோ ஹரி' என்றிருக்கிறாரே? அது எப்படி? 'யமேவைஷ வ்ருணுதேதேனலப்ய:' யாருக்கு அருளவேண்டும் என்று பரமாத்மனுக்கு இச்சை வருகிறதோ, அவருக்கு பரமாத்மன் சுலபமானவன். இதன் பொருள் என்னவெனில்: பிரம்மாதிகளுக்கு காட்சியளிக்காத ஸ்வாமியை, சாதாரண பக்தர் பார்ப்பது என்றால் என்ன? ரமாதேவியிடம் இருக்கும் பகவத் அருள் பிரம்மனுக்கு இருப்பதில்லை. பிரம்மனுக்கு இருக்கும் அருள் ருத்ராதி தேவதைகளுக்கு இல்லை. பிரம்மாதிகள் பகவத் ஸ்வரூபத்தை முழுமையாக அறிந்திருப்பதில்லை என்றபிறகு, அவரைவிட அதிகமாக பகவத் ஸ்வரூபத்தை அறிந்த பக்தர்கள் இருக்கிறார்கள் என்று யோசிப்பதில் அர்த்தமேயில்லை. இதற்கு சரியான ஒரு உதாரணத்தைப் பார்ப்போம்.

அம்பரீஷ ராஜன் மிகச்சிறந்த பகவத் பக்தனாக இருந்தார். அவனின் பக்திக்கு மெச்சி, ஸ்ரீபரமாத்மன் அவனின் பாதுகாப்பிற்காக, தன் சக்ராயுதத்தையே கொடுத்திருந்தான். ஒவ்வொரு துவாதசி தினத்தன்றும் அவர், லட்ச பிராமணர்களுக்கு போஜனத்தை செய்வித்து, பாரணை காலத்திற்குள் தானும் பாரணம் செய்யவேண்டும் என்னும் ஒரு விசேஷ விரதத்தை மேற்கொண்டிருந்தான். இப்படியிருக்கையில், ஒரு துவாதசியன்று, பிராமணர்களின் போஜனத்தை செய்வித்த ராஜன், அவர்களின் அனுமதியைப் பெற்று, தானும் பாரணைக்கு அமரும்போது, சரியாக அந்த நேரத்தில், துர்வாச ரிஷிகள், அந்த விரதத்தை பங்கம் செய்யும் முயற்சியாக தன் 10,000 சிஷ்யர்களுடன் அங்கு வந்தார். ராஜன் தான் பாரணை செய்வதைவிட்டு, அவரை உணவுக்கு அழைத்தான்.

துர்வாசரும் அந்த அழைப்பை ஏற்று, ஸ்னானம் செய்து வருவதாக யமுனா நதிக்கரைக்குச் சென்று, ஸ்னானம் செய்து, தியானத்தில் அமர்ந்துவிட்டார். பாரணை

முடியும் காலம் ஆகிவிட்டது, ஆனால் துர்வாசர் வரவேயில்லை என்று ராஜன் கவலைப்பட்டவாறு, அங்கிருந்த பிராமணர்களின் அனுமதியைப் பெற்று, தீர்த்தத்தைக் குடித்து, பாரணை செய்ததாக அறிந்து, விரதத்தை முடித்துவிட்டார். பின்னர் அங்கு வந்த துர்வாசர், நிலையை அறிந்து, மிகுந்த கோபம் கொண்டு, ஒரு சக்தியை உருவாக்கி, ராஜனைக் கொல்வதற்கு அதற்கு ஆணையிட்டார். ராஜன், பகவத் தியானத்தை செய்தவாறு நின்றுவிட்டான்.

உடனடியாக பகவத் சக்கரமானது, அந்த சக்தியை சுட்டுப் பொசுக்கிவிட்டு, துர்வாசரைக் கொல்லும் நோக்கில் அவரிடம் வந்தது. துர்வாசரும் பயந்தவாறு, பிரம்மனிடம், ருத்ரரிடம் சென்று முறையிட, அவர்களோ, பகவத் சக்கரத்திலிருந்து உங்களைக் காப்பாற்ற எங்களுக்கு சாத்தியமில்லை என்று சொல்லிவிட்டனர். பிறகு, வைகுண்டவாசியான பரமாத்மனிடமே சரணாகதி அடைந்தார் துர்வாசர். பரமாத்மனோ 'நான் பக்தர்களின் வசமானவன். நானும் இதை தடுக்கமுடியாது. நீங்கள் அம்பரீஷ ராஜனிடமே சென்று கேளுங்கள்' என்றார். அதன்படி துர்வாசரும், அம்பரீஷனை சரணடைய, அம்பரீஷனும் சக்கரத்தை வேண்டிக்கொண்டு, துர்வாசரைக் காப்பாற்றினார். ஆனால் இந்த சம்பவத்திற்கு ஒரு ஆண்டு காலம் ஆகிவிட்டது. அதுவரைக்கும், அம்பரீஷ ராஜன், உபவாசத்துடனே காத்திருந்து, அவருக்கு பாரணை செய்வித்து, பின்னர் தான் பாரணம் செய்து விரதத்தை முடித்தார்.

இதனாலேயே 'யயாவிரிஞ்சாதி மதஸ்சகார' அதாவது, பக்தியில் அம்பரீஷன், பிரம்மாதிகளைக்கூட மீறியவன் என்று பாகவதத்தில் சொல்லப்பட்டிருக்கிறது. அம்பரீஷனின் சக்கரத்திலிருந்து காப்பாற்றுவதற்கு, பிரம்ம ருத்ராதிகளுக்கும்கூட சாத்தியமில்லை என்று இந்த கதையிலிருந்து தெரிகிறது. ஆனால், இது சித்தாந்தத்திற்கு எதிரானது என்று ஸ்ரீமதாசார்யர், இதற்கு விளக்கம் அளித்திருக்கிறார். அது என்னவெனில்:

பிரம்மாதி பக்திகோட்யம்ஷாதம்ஷோனை வாம்பரிஷகே ।<br>
தாத்காலிகோ பசேயத்வாக்தேபாம் யஷஸ ஆதிராட் ॥<br>
பிரம்மாதயஸ்ச தத்கீர்த்திம் வ்யஞ்சயாயாஸுருத்தமாம் ॥

பிரம்மாதி தேவதைகளின் பக்தியில் கோடியில் ஒரு அம்சம்கூட அம்பரீஷ ராஜனிடம் இல்லை. ஆனால், பிரம்மாதிகளாலும் சாத்தியமாகாத ஒரு காரியத்தை மனுஷ்யோத்தமனான அம்பரீஷன் மூலமாக செய்விக்க வேண்டும் என்பது பரமாத்மனின் இச்சையாக இருந்தது. இந்த விஷயம் பிரம்மாதிகளுக்கும் தெரிந்திருந்தது. ஆகையாலேயே, அவர்கள் துர்வாசரை காப்பாற்றாமல், அம்பரீஷனின் பக்தியை சோதித்தனர் என்று பாகவத வாக்கியம் சொல்கிறது. இதை நாம் சமூகத்திலும்கூட காணலாம். யாராவது ஒரு வேலையாள் மேல் முதலாளிக்கு அதிக நம்பிக்கை இருந்தால், மக்கள் சொல்வது என்னவெனில் : 'இவருக்கு தம் மனைவி, மக்கள் மீதுகூட இவ்வளவு நம்பிக்கை இல்லை. ஆனால் இந்த வேலையாள் மேல் இருக்கிறது'. ஆனால், இப்படி சொல்லியதால், மனைவி மக்களுக்கு இருக்கும் ஸ்வாதந்த்ர்யம், இந்த வேலையாளுக்கு இருக்கிறது என்று

சொல்ல முடியுமா? அப்படியே அம்பரீஷனின் விஷயத்திலும் சொல்லவேண்டும். பக்தனிடம் தனக்கு அதிக கருணை இருக்கிறது என்பதை காட்டுவதற்காக பரமாத்மன், இந்த நாடகத்தை நடத்தியிருக்கிறான். அதாவது, பக்தர்களை கஷ்ட காலத்தில் மட்டும் காக்கிறான். பிரம்மாதிகளுக்கு எந்த நேரத்திலும் தரிசனம் அளித்துக்கொண்டே இருக்கிறான் என்று அறியவேண்டும்.

எப்போதும் மகாராஜனையே பார்த்திருக்கும் திவான் முதலானவர்களுக்கு, ராஜன் காட்சியளித்துவிட்டால் அதில் என்ன ஆச்சரியம்? இப்படி இல்லாமல், ஏழை மக்களிடம் மகாராஜா அன்பு வைத்து, அவர்களை மேம்படுத்தினால், அத்தகைய ராஜனை கருணைக்கடல் எனவேண்டும். அப்படியே பரமாத்மன், சாதாரண பக்தர்களுக்கு வசமாகிறான் ஆகையால் அவனை 'கருணாளு' என்று கொண்டாடியிருக்கிறார் தாசராயர்.

அடுத்து: மனம், வாக்கிற்கு காட்சியளிக்காத, மகாமகிமையுள்ள பரமாத்மன், தன்னை நினைப்பவர்களுக்கு, அவர்களுக்கேற்ப, தன்னை காட்டிக்கொள்வான் என்று தாசராயர் சொல்கிறார். இது எப்படி? அதாவது பாண்டவர்களின், அதிலும் அர்ஜுனனின் கதையை பார்ப்போம். பாண்டவர்கள் கஷ்ட காலத்தில் இருக்கும்போது, அவனை நினைத்தவுடன், ஸ்ரீகிருஷ்ண ரூபத்திலும், வியாச ரூபத்திலும், உடனடியாக வந்து அவர்களுக்கு தரிசனம் அளித்திருந்தான். அர்ஜுனனுக்கு சாரதியாக இருந்து, அவன் நண்பனாக, குருவாக, தூதனாக என இரவும் பகலும் அவனுடனேயே இருந்து காப்பாற்றினான்.

ஒருவேளை இதை புராண கதை என்றுவிட்டால், சரி. நம் புரந்தரதாசர், கனகதாசர் ஆகியோருக்கும், இவர்களைவிட முந்தையவர்களான மகாராஷ்டிரத்தின் துக்காராம், நாமதேவ், ஞானதேவ, ராமதாஸ் ஆகியவர்களை எப்படி அருளினான் என்பதை பார்த்தால், ஜகன்னாததாசரின் 'நெனெவவரனனுசரிஸி திருகுவனு' என்னும் வாக்கு எவ்வளவு உண்மை என்பது தெரியவருகிறது. கிரந்தம் நீண்டுவிடும் என்னும் பயத்தினால் அவை அனைத்தையும் இங்கு எழுதுவதற்கு சாத்தியமில்லை.

அடுத்து: 'ஜகதுதரன தானு ஜனரொளகித்து ஜனிஸுவனு' என்றிருக்கிறார். இதன் பொருள் என்னவெனில்: பரமாத்மன், பிம்பரூபியான காரணத்தால், உபாதியான ஜீவனின் ஸ்வரூபத்தை விடாமல் எப்போதும் அவனுடனேயே இருக்கிறார். இதனால், பிரதிபிம்பனான ஜீவன், நித்யன் ஆனான். அப்படியில்லையெனில், பிம்பனின் சன்னிதானம் இல்லையெனில், பிரதிபிம்பனுக்கு அநித்யத்வம் வருகிறது. நாம் கண்ணாடியைப் பார்த்து நின்றால், நம் பிரதிபிம்பம் கண்ணாடியில் தெரியும். கண்ணாடிக்கும் நமக்கும் சம்பந்தம் இல்லையெனில், எப்படி கண்ணாடியில் நம் பிரதிபிம்பம் தெரியாதோ, அதைப்போலவே, கண்ணாடியைப் போல இருப்பது, ஜீவனின் ஸ்வரூப தேகம். பிம்பன் பரமாத்மன். இவர்கள் இருவரின் சம்பந்தத்தினால் பிரதிபிம்பம் தெரிகிறது. இந்த சம்பந்தம் இல்லையெனில், பிரதிபிம்பம் இல்லாமல் போகிறது. ஆகையால், ஜீவன் பிறக்கும்போதே பரமாத்மன் அவனுடன் பிறக்கிறான். பாகவத 10ம் ஸ்கந்தத்தில்:

'குணேஷு மாயா ரசிதேஷு தேஹ்ய ஸௌப்ரபத்யமானஸ்ஸஹதேன ஜாயதே'. மரண காலத்தில், பிரகருதி சம்பந்தமான சத்வ, ரஜஸ், தமோ குணங்களில், தத்தம் தகுதிக்கேற்ப, அதாவது, தான் சாத்விகனோ, ராஜஸனோ, தாமஸனோ அந்த தகுதிக்கேற்ப, பரமாத்மனின் ப்ரேரணையால் (விருப்பத்தால்), தேவ, அசுர, கந்தர்வ, மனுஷ்யாதி யோனிகளில் மனம் வைப்பான். மரண காலத்தில் எந்த யோனியை சிந்தித்து தேகத்தை விடுகிறானோ, அடுத்த பிறவியில் அதே யோனியில், பரமாத்மனுடன் பூமியில் பிறப்பான். ஆனால், கர்ப்பம் முதலான செயல்கள் எல்லாம், ஜீவனுக்கு மட்டுமே தவிர, பரமாத்மனுக்கு இல்லை. எப்படியெனில், தண்ணீரில் சூரியனின் பிரதிபிம்பம் விழும்போது, காற்று அடித்தால், அந்த சூரியன் உடைந்தது போல காணப்படும். ஆனால், பிம்பரூபனான சூரியனுக்கு தண்ணீரில் சம்பந்தம் இல்லாததால் அவன் எந்தவொரு களங்கமும் இல்லாமல் இருக்கிறான். அப்படியே, தேக சம்பந்தமில்லாத பரமாத்மனுக்கு, தேகத்திற்கு சம்பந்தப்பட்ட எந்தவொரு துக்கமும் இல்லை, என்று அறியவேண்டும்.

காங்கேயனுத, ககனசரவாஹன என்ற இரு சொற்கள் பரமாத்மனின் அபாரமான மகிமைகளை எடுத்துக் காட்டுகிறது. எப்படியெனில்: கங்கா புத்ரனான பீஷ்மாசார்யர் 'பீஷ்மாஸ்தவராஜ' என்னும் ஸ்தோத்திரத்தை செய்தார் என்று பாரத அனுஷாஸன பர்வத்தில் சொல்லப்பட்டிருக்கிறது. அதில் விசேஷமான பகவன் மஹிமைகளை சொல்லியிருப்பார். பாரதத்தில் ஐந்து ரத்தினங்கள் என்று சிலவற்றை சொல்லியிருக்கிறார்கள். அது என்னவெனில்:

கீதா சஹஸ்ர நாமைவஸ்தவராஜோஹ்யனுஸ்ம்ருதி: |
கஜேந்திரமோக்ஷணம்சைவ பஞ்சரத்னானி பாரதே ||

1. பகவத்கீதை. 2. விஷ்ணு சஹஸ்ர நாமம் 3. பீஷ்மஸ்தவராஜ 4. அனுஸ்ம்ருதி மற்றும் 5. கஜேந்திர மோட்சம். இவையே ஐந்து ரத்னங்கள் எனப்படுகின்றன. இவற்றில் இரண்டு ரத்னங்கள் பீஷ்மாசார்யர் இயற்றியவை. 1. கிருஷ்ணனை பிரத்யட்சமாக ஸ்தோத்திரம் செய்தது பீஷ்மஸ்தவராஜ. 2. அனுஸ்ம்ருதி - பீஷ்மாசார்யர் தேகத் தியாகம் செய்தபோது, அந்தர்யாமி பரமாத்மனையும், ஸ்ரீகிருஷ்ணனையும் ஐக்கிய சிந்தனை செய்து, பகவத் மகிமைகளை வெளிப்படுத்தினார். ஆக, 5 ரத்னங்களில் ஸ்தவராஜ, அனுஸ்ம்ருதி இந்த இரண்டும் பீஷ்மர் இயற்றிய ஸ்தோத்திரங்கள். இந்த இரு ஸ்தோத்திரங்களின் பிரதிபாத்யனும் ஸ்ரீபரமாத்மனே ஆகும். அந்த ஸ்தோத்திரங்களை படித்தால், பரமாத்மனின் அபாரமான மகிமைகள் நமக்குத் தெரிய வருகின்றன. ககனசரனான கருட வாகனானவன் என்று சொல்கிறார். இத்தகைய மகிமைகள் வேறு யாருக்கு இருக்கிறது? சிந்திப்போம். முதலில் கருடனின் மகிமைகள் புரிந்தால், பின்னர் அவரை வாகனமாக வைத்திருப்பவனின் மகிமைகள் தானாக புரியவரும். கருடனின் மகாமகிமைகளை புராணங்கள் இப்படி சொல்கின்றன.

கருடஸ்ய ஜாதமாத்ரேண த்ரயோலோகா: ப்ரகம்பிரே |
ப்ரகம்பிதா மஹி சர்வாசஷைல வனகானனா ||

ககனன்னஷ்டாசந்த்ரார்க்கம் ஜ்யோதிஷனப்ரகாஷத |
தேவதாபய பீதாஸ்து மாருதோன ப்ரகம்பத ||

இதன் பொருள்:
கருடன் பிறந்தபோது மூன்று உலகத்து மக்களும் நடுநடுங்கிப் போயினர். மலைகளைக் கொண்ட பூமி நடுங்கியது. ஆகாயத்தில் சூர்ய சந்திரர்கள் தங்களின் ஒளியை இழந்தனர். தேவதைகள் அனைவரும் பயந்தனர். காற்று அடிக்கவில்லை. என்று மேற்கண்ட ஸ்ருதி வாக்கியம் சொல்கிறது.

மேலும் பாரதத்தில் கருடனின் மகிமைகளை ஏராளமாக சொல்லியிருக்கின்றனர். அதனை இங்கு விளக்கமாக சொல்லமுடியாவிட்டாலும், சிறிது மட்டும் பார்ப்போம்.

தாயான வினதாதேவியின் அடிமைத்தனத்தை விடுவிப்பதற்காக, பிறந்தவுடனேயே அமிர்தத்தைக் கொண்டு வர புறப்பட்டார் கருடன். அந்த சமயத்தில் அவருக்கு ஆகாரம் கிடைக்காமல் தாயைக் கேட்க, அவர் கடலில் ஒரு ஓரத்தில், மகா பாபிகளான, உலகத்தை அழிக்க வல்லவர்களான, ஆயிரக்கணக்கான விஷதர்கள் வசித்து வருகின்றனர். அவர்களைக் கொன்று தின்றுவிட்டு, அமிர்தத்தைக் கொண்டு வா என்றார். கருடனும் அவ்வாறே செய்தார். அப்படியும் அவருக்கு வயிறு நிரம்பவில்லை. அப்படியே கவலையுடன் வரும்போது, தந்தையான கஷ்யபரைக் கண்டு, 'தாய் ஆகாரம் கொடுத்தாலும், எனக்கு வயிறு நிரம்பவில்லை. வேறு எங்காவது இருக்கும் ஆகாரத்தை காட்டுங்கள்' என்று வேண்டினார்.

அதற்கு கஷ்யபர் அங்கிருந்த ஏரியைக் காட்டி, இங்கு ஒரு யானையும், ஆமையும் இருக்கின்றன. இந்த இருவரும் முந்தைய பிறவியில் அண்ணன் தம்பியாக இருந்து, சொத்து விஷயத்தில் இருவருக்கும் விவாதம் வந்து, ஒருவருக்கொருவர் சாபம் கொடுத்து, யானை ஆமைகளாக பிறந்திருக்கின்றனர். யானை 6 காத உயரமும், 12 காத அகலமும் இருக்கிறது. ஆமை 3 காத உயரமும், 10 காத சுற்றளவும் இருக்கிறது. முந்தைய பிறவியின் சண்டையினால், இப்பிறவியிலும் இருவரும் எதிரிகளாகவே பிறந்திருக்கின்றனர். அவர்கள் இருவரையும் கொன்று தின்று உன் வேலையைப் பார் என்று கஷ்யபர் சென்றார். கருடன் அந்த இரண்டு பிராணிகளையும் தன் கால்களில் பிடித்து, எங்கு அமர்ந்து தின்னலாம் என்று யோசித்தவாறு, மரங்களையெல்லாம் பார்த்தவாறு வரும்போது அவைகளெல்லாம் நடுநடுங்கின. அங்கு ஒரு பெரிய மரம் இருந்தது.

அந்த மரம் கருடனை பார்த்து - 'கருடா, யோசிக்கவேண்டாம். என் கிளைகள் அனைத்தும் 100 காததூரங்கள் வரைக்கும் இருக்கின்றன. அந்த ஒரு கிளையில் அமர்ந்து நீ யானை, ஆமைகளை தின்னலாம்' என்றது. கருடனும் மகிழ்ச்சியுடன், அந்த 100 காததூரம் உள்ள கிளையில் அமரப் போகும்போது, அந்த கிளையானது சடசடவென்று முறிந்து கீழே விழப்போனது. அதில் அமர்ந்து தவம் செய்துகொண்டிருந்த நூற்றுக்கணக்கான ரிஷிகளை கருடன் பார்த்தார். கிளை முறிந்து கீழே விழுந்தால், இவ்வளவு பேரின் உயிருக்கும் ஆபத்து வரும் என்று

நினைத்து, அந்த கிளையை அப்படியே தன் மூக்கில் தாங்கிப் பிடித்தவாறு பறந்துவிட்டார். அப்படியே பல காத தூரங்கள் பறந்தார்.

கஷ்யபர் தன் மகனின் சாகசத்தைப் பார்த்து வியந்து, அந்த கிளையில் அமர்ந்திருந்த ரிஷிகளைக் கண்டு வணங்கி, அவர்கள் அந்த இடத்தை விட்டுப் போகுமாறு செய்து, அந்த கிளையை, மலையின் மேல் போட்டுவிடுமாறு சொன்னார். அதே போல, கருடனும் அந்த கிளையை ஒரு பெரிய மலையின் மேல் போட, அந்த மலை 100 துண்டுகளானது. அங்கு அமர்ந்து அந்த யானை, ஆமையைத் தின்று பின், அமிர்தத்தைக் கொண்டு வருவதற்குப் போனார் என்று சொல்லியிருக்கிறார். இதிலிருந்து கருடனின் மகிமை எப்படிப்பட்டது என்று தெரியவருகிறது. இத்தகைய கருடனை, தன் வாகனமாக வைத்திருப்பதென்றால், சாமான்யர்களுக்கு சாத்தியமா?

'காங்கேயனுத' 'ககனசரவாஹன' என்னும் இரு சொற்களால் பரமாத்மனின் சிறந்த மகிமைகளை நிரூபணம் செய்தாயிற்று. இப்படிப்பட்ட மகிமைகளைக் கொண்டவனாயினும், 'காயனவ கேளுத, திவௌகஸரொடனெ திருகுவனு மனெமனெகளல்லி' என்று சொல்லி, பகவந்தன் சர்வக்ஞர் ஆனாலும், பக்தர்கள் பாடும் கானங்களைக் கேட்டவாறு, தேவதைகளுடன் பக்தர்களை மகிழ்வித்தவாறு அவர்களின் வீடுகளில் சஞ்சரித்தவாறு, ஆபத்துகள் வரும்போது அவர்களை காப்பாற்றுகிறான். இந்த வாக்கியத்தால், பரமாத்மனுக்கு பக்தர்களிடம் இருக்கும் வாத்ஸல்யத்தை (பிரியத்தை) விளக்கியது போல ஆயிற்று. இத்தகைய ஆதாரங்களினாலேயே தாசராயர் 'இவன காருண்யகேனெம்பெ' என்றிருக்கிறார்.

பக்தர்களின் வீடுகளில் சஞ்சரிக்கிறான் என்பதற்கு கோபிகா ஸ்த்ரியர்களை விட்டால் வேறு உதாரணமே தேவையில்லை. கோபாலனாக கோபிகா ஸ்த்ரியர்களின் வீடுகளில் திரிந்து, அவர்களின் துதிகளை / பாடல்களைக் கேட்டவாறு, தயிர் பானைகளை உடைப்பது, பால் வெண்ணைகளை திருடித் தின்பது, ஆகிய பால சேஷ்டைகளால் அவர்களை மகிழ்வித்து, அவர்களுக்கு வந்த ஆபத்துகளை பரிகரித்து, அவர்களுக்கு அங்க-சங்கங்களைக் கொடுத்துக் காப்பாற்றிய உதாரணமே இதற்கு சாலப் பொருந்தும்.

மேலும் பக்தவத்ஸலனான ஸ்வாமி, தாயான யசோதை தன்னை கயிற்றில் கட்ட முயன்றபோது, எவ்வளவு நீளமான கயிறைக் கொண்டுவந்தாலும், எப்போதும் இரு அங்குல கயிறு குறைவாகவே இருக்கும்படியான நிலையைக் கண்டு, ஆச்சரியப்பட்ட யசோதையின் மகிழ்ச்சி, வியப்பு ஆகியவை, பிரம்மாதி தேவதைகளுக்கும் கிட்டவில்லை என்றே நினைக்க வேண்டியிருக்கிறது. இதே அர்த்தத்தை பாகவதத்தின் கீழ்க்கண்ட ஸ்லோகத்திலும் சொல்லியிருக்கின்றனர்.

நேமம் விரிசிர்னபவோ ந ஸ்ரீரப்யங்க சம்ஸ்ரயா |
ப்ரஸாதம் லேபிரேகோப்யோ யத்ப்ராப விமுக்திதாத் ||

இதன் முக்கியக் கருத்து என்ன? ஏகாந்த பக்தரும், மனைவி மக்களுமான ரமா பிரம்மாதிகளில், பரமாத்மனின் சம்பூர்ண அனுக்கிரங்கள் இருப்பதில் வியப்பு

ஒன்றுமில்லை. அதுவே சாதாரண மனிதர்களில் அவனின் அருள் மிகச்சிறியதாகவே இருந்தாலும், அவர்களின் யோக்யதைக்கு அது மிகவும் அதிசயமாகவே காணப்படும். ரமா பிரம்மாதிகளில் இருக்கும் அவனது அருளில் கோடியில் ஒரு பங்குகூட இந்த சாதாரண மனிதர்களில் இல்லை. ஆனாலும், அவர்களில் பகவந்தன் வைக்கும் அன்பைக் கண்டு யாரும் பகவந்தன் கருணாளு என்று சொல்வதில்லை. சாமான்ய மக்களின் கஷ்டங்களைப் பரிகரிக்கும்போது, பரமாத்மன் காட்டும் அருளே, அவனது அதிசயமான கருணையை வெளிப்படுத்துகிறது.

இந்த ஸ்லோகத்தில் வரும் ‘மனெமனெகளலி திருகுவனு’ என்னும் பதத்திற்கு சில வியாக்யானகாரர்கள், ‘இந்திரியங்கள் என்னும் வீடுகளில் பிம்பரூபியாக திரிகிறான்’ என்று சொல்லியிருக்கிறார்கள். ஆனால், தாசராயரின் அபிப்பிராயம் அப்படி இருந்ததாக தெரியவில்லை. ஏனெனில் ‘காயனவ கேளுத’ என்பது, பக்தியுடன் பாடல் பாடுபவர்களைக் குறிக்கிறது. பிம்பரூபியான பரமாத்மன் இந்திரியாதிகளில் திரிகிறான் என்றால், பசு, பறவைகளிலும், தமோ யோக்யர்களான ஜீவராசிகளிலும் அந்தர்யாமியாக இருக்கிறான். இப்படியிருக்கையில் அந்த அர்த்தமானது பொருந்துவதில்லை.

**மலகி3 பரமாத3ரதி3 பாட3லு**
**குளிது1 கேளுவ குளிது1 பாட3லு**
**நிலுவ நிந்தரெ நலிவ நலித3ரெ ஒலிவெ நிமகெ3ம்ப3 ।**
**ஸுலப4னோ ஹரி தன்னவரனர**
**க4ளிகெ3 பிட்டக3லனோ ரமாத4வன**
**ஒலிஸலரியதெ3 பாமரரு ப3ளலுவரு ப4வதொ3ளகெ3 ।।5**

மலகி = படுத்தவாறு
பரமாதரதி = பக்தியுடனான மரியாதையுடன்
பாடலு = பகவன் மகிமைகளைக் குறித்து பாடல்களைப் பாட
குளிது கேளுவ = ஸ்ரீபரமாத்மன் அமர்ந்துகொண்டு அதைக் கேட்பான்
குளிது பாடலு = அமர்ந்து பாடினால்
நிலுவ = ஸ்ரீஹரி நின்றவாறு கேட்பான்
நிந்தரெ = நாம் நின்றவாறு பாடினால்
நலிவ = நடனமாடியவாறு கேட்பான்
நலிதரெ = நாம் நடனமாடியவாறு பாடினால்
ஒலிவெ நிமகெம்ப = நான் உங்களுக்கு தரிசனம் அளிப்பேன் என்று சொல்லி, சிலருக்கு அபரோக்ஷத்தையும், சிலருக்கு பிரத்யக்ஷமாகவும் என, அவரவர்களின் தகுதிக்கேற்ப தரிசனம் அளிக்கிறான்.
(ஆகையால்) சுலபனோ ஹரி = ஹே பக்தர்களே, ஸ்ரீஹரி மிகவும் சுலபமானவன் என்று, இரு கைகளையும் மேலே தூக்கி தீர்மானமாக சொல்கிறார்.
தன்னவரன = தன் பக்தர்களை
அரகளிகெ = அரை நாழிகை காலமானாலும்
பிட்டகலனு = விட்டு நீங்குவதில்லை

பாமரரு = சாமான்ய மனிதர்கள்
ரமாதவன = லட்சுமிபதியை
ஒலிஸலரியதெ = அவனது தரிசனத்தைப் பெறும் விதத்தை அறியாமல்
பவதொளகெ = சம்சாரத்தில்
பளலுவரு = கஷ்டப்படுகின்றனர்.

பொருள்:
நாம் படுத்தவாறு, பரமாத்மனை பக்தியுடன் புகழ்ந்து பாடினால், அவன் நம்மேல் வைத்திருக்கும் அன்பினால், நம்மருகே அமர்ந்து அதைக் கேட்பான். அதுபோலவே, நாம் அமர்ந்து பாடினால், அவன் நின்று கேட்பான். நாம் நின்று பாடினால், பரமாத்மன் நர்த்தனம் ஆடியவாறே கேட்பான். நாம் நர்த்தனம் ஆடியவாறே பாடினால், அவன் பிரத்யட்சம் ஆகிறான். இதுபோல, தன் பக்தர்களின் தகுதிக்கேற்ப அபரோக்ஷத்தில் தரிசனம் அளிக்கிறான். சிலர் அவதார ரூபங்களையே பிரத்யட்சமாகக் காண்கின்றனர். ஆகையால், ஸ்ரீஹரி பரம சுலபன் என்று கோஷத்துடன் சொல்கிறார் தாசராயர். ஆகவே, ‘சுலபனோ ஹரி’ என்று மிகத் தீர்மானமாக சொல்கிறார். இல்லையேல், அவன் சுலபன் என்று சாதாரணமாகவே சொல்லியிருக்கலாம். ஆனால், இவற்றையெல்லாம் (பரமாத்மனின் தரிசனத்தைப் பெறும் வழியினை) அறியாமல், மக்கள் இன்னும் சம்சாரத்தில் உழல்கின்றனர்.

சிறப்புப் பொருள்:
பரமாத்மனை வழிபடுவதற்கு நேரம், காலம், இடம் ஆகியவை பொருட்டல்ல. எந்த இடத்திலும், காலத்திலும், எந்த நிலையிலும் பரமாத்மனை வழிபடலாம் என்பதற்கே ‘மலகி பரமாதரதி’ என்றிருக்கிறார். பாகவத ஏழாம் ஸ்கந்தத்தில், பிரகலாதனின் கதையில், அவன் எந்த நிலையில் இருந்தான் என்பதை ‘ஆஸீன: பர்யடன்னர்ஷ்னஷயான: ப்ரபிர்ப | நானு ஸந்தத விதானிகோஒவிந்த பரிரம்பித:’. ’அவன் அமர்ந்திருந்தபோதும், திரிந்தபோதும், சாப்பிடும்போதும், படுத்திருந்தபோதும், குடிக்கும்போதும்கூட, பரமாத்மனிடம் மிகவும் பக்தியுடன் தியானித்தவாறு இருந்தால், அவன் நிலையே அவனுக்கு மறந்துவிடும்’ என்பதே இதன் அர்த்தம்.

இப்படியாக ஏகாந்த பக்தர்கள் அவனை பஜிப்பதற்கு, நேரம், காலம், இடம், நிலை, ஆகியவை காரணம் ஆவதில்லை என்னும் அபிப்பிராயத்தையே தாசராயர் இந்த பத்யத்தில் சொல்லியிருக்கிறார். இது மட்டுமல்லாமல், இங்கு, படுத்துப் பாடுவதற்கும், அமர்ந்து பாடுவதற்கும், நின்று பாடுவதற்கும், நடனமாடி பாடுவதற்கும், தாரதம்யத்தை சொல்லியிருக்கிறார். இதற்கு ஆதாரமாக ப்ருஹன் நாரதிய புராணத்தில் இப்படி சொல்லியிருக்கின்றனர்:

ய: ஸ்வபிதாது ஷயனேஹரிஞ்சிந்தயதே வர: |
ஸஹரி: கீர்த்தனந்தஸ்ய சந்திர்ஷ்ட ஸ்ருணுதேஸ்தவம் ||
யஸ்திர்ஷ்ட கீர்த்தயேத்தேவம் பக்தாயுக்தோனரோத்தம: |
ஸ்வயமுத்தாயதேவேஷோ பக்தஸ்ய ஸ்ருணுதேஸ்தவம் |
யஸ்ஸமுத்தாய மதிர்யா ஜகதாதாரமீஷ்வரம் |
கீர்த்தயேத் விவிதைர்கீதை மஹாபக்தி ஸமன்வித: ||

ஸஹரி: ஷ்ருணுதே ஸ்தோத்திரம் ந்ருத்யமானோதி ஹர்ஷித: |
ய:புர்மா ந்ருத்யமானர்ஸ்ஸ விலஜ்ஜோகியதேயதி ||
ஸஹரி: பரமப்ரீதோ ப்ரத்யக்ஷோ பவதித்ருவம் ||

இதன் அர்த்தத்தயே 'மலகி பரமாதரதி' என்னும் பதத்தில் தெளிவாக, சுருக்கமாக அடக்கியிருக்கிறார் தாசராயர். இதன் முக்கிய கருத்து என்னவென்றால்: நல்ல வலிமையுடன் இருக்கும் செல்வந்தனான ஒருவன், தன் மனதை இறைவனிடம் செலுத்தாமல், எவ்வளவு ஸ்தோத்திரம் செய்தாலும், அவனுக்கு ஸ்ரீஹரியின் அருள் கிடைக்காது. பகவத் தியானத்தை செய்யும்போதும், பாடும்போதும், மெய்மறந்து, தன்னிலை தனக்கே மறந்து போகுமாறு, அமர்ந்தோ படுத்தோ பாடல்களைப் பாடிக்கொண்டிருந்தால் அவனுக்கு ஸ்ரீஹரியின் அருள் கிடைக்கிறது. பரமாத்மனிடம் மனதை நிலைநிறுத்துவதே முக்கியம்.

ஒரு வேளை, நோய்களாலோ, வேறு பிரச்னைகளாலோ, அமரவோ, நிற்கவோ சாத்தியம் இல்லாவிடில், இருக்கும் நிலையிலேயே அவனைக் குறித்து பஜித்தால், அவனுக்கு பகவத் அருள் கிடைக்கிறது. இதற்கு உதாரணம் பீஷ்மாசார்யர். அம்புப் படுக்கையில் படுத்திருந்தபோது அவனைக் குறித்து ஸ்தோத்திரம் செய்ய, பரமாத்மன் ஸ்ரீகிருஷ்ணன் அங்கு அமர்ந்து அதனைக் கேட்டான். புண்டலீகன் அமர்ந்து துதிப்பதை, ஸ்ரீஹரி நின்று கேட்டான். பிரகலாதன் நின்று துதிக்க நரசிம்ம ரூபத்தினால் நடனமாடியவாறே வந்து அதனைக் கேட்டான். நாரதர் நடனமாடியவாறே பாடியதால், அவருக்கு ஸ்ரீஹரி தரிசனம் அளித்தார் என்னும் உதாரணங்களை சில உபன்யாசகர்கள் இந்த பத்யத்தை விளக்கும்போது சொல்கின்றனர்.

பீஷ்மாசார்யர் முதலானவர்களை உதாரணமாகக் கொடுப்பதன் சாதக பாதக அம்சங்கள் என்னவென்றால்: 'மலகி பரமாதரதி' என்னும் வாக்கியத்தாலும், இதற்கு ஆதாரமான பிரம்ம நாரதிய புராண வாக்கியத்திலும், தெரியவரும் விஷயம் இதுவே. படுத்துப் பாடினால், படுத்திருப்பவரின் கண்களுக்குத் தெரிந்தவாறு அமர்ந்தோ, நின்றோ கேட்கிறானா? அல்லது கண்மறைவாக (தரிசனம் அளிக்காமல்), மறைந்திருந்து நின்று கேட்கிறானா? என்றால், எதிரிலேயே நிற்கிறான் என்று சொல்வது போலவே ஆயிற்றல்லவா?

'நலிதரெ ஒலிவெ நிமகெம்ப' என்பதன் பொருள் என்ன? நர்த்தனம் ஆடியவாறு பாடினால், அவனுக்கு தரிசனம் அளிப்பேன் என்று சொல்கிறான் அல்லவா? இதில் நமக்கு சந்தேகம் இருந்தால் 'ய:புர்மா ந்ருத்யமானர்ஸ்ஸ விலஜ்ஜோகியதேயதி || ஸஹரி: பரமப்ரீதோ ப்ரத்யக்ஷோ பவதித்ருவம் ||' என்னும் வாக்கியத்தில், யாரொருவன் வெட்கப்படாமல், நாட்டியமாடியவாறு பாடுகிறானோ, அவனிடம் மிகவும் ப்ரியத்துடன் நிச்சயமாக காட்சியளிப்பேன் என்று சொல்கிறான். இதிலிருந்து தெரியவேண்டியது என்ன?

படுத்திருப்பருக்கும், அமர்ந்திருப்பவருக்கும், பரமாத்மன் அமர்ந்து, நின்று பிரத்யட்சம் ஆகிறான் என்பதே. ஆனால் 'நலிதரெ ஒலிவெ' என்று சொல்வது எதற்காக? மேலும்

பீஷ்மாசார்யர், புண்டலீகன், பிரகலாதன்,, நாரதர் முதலான அனைவருக்கும் கிருஷ்ணன், விட்டலன், நரசிம்ம, நாராயணர்கள் பிரத்யட்சமாக காட்சியளித்திருக்கின்றனர். அப்படியிருக்கையில் இந்த தாரதம்யத்திலிருந்து நமக்கு அறியவரும் செய்தி என்ன? பீஷ்மாசார்யர் அம்புப்படுக்கையில் படுத்திருக்கும்போது, எழுந்துகொள்ளவும், அமரவும் சாத்தியம் இல்லாதபோது, அவர் படுத்த நிலையிலேயே அவருக்கு காட்சியளித்தான்.

புண்டலீகன் தன் பெற்றோரின் சேவையில் இருந்தபோது, எழுந்துகொள்ளவும் சாத்தியமில்லாமல், அந்த நிலையிலேயே பரமாத்மனை தியானிக்க, விட்டல ரூபத்தில் அவனுக்கு தரிசனம் அளித்தான். பிரகலாதனுக்கு நின்று பாடுவதற்கு சாத்தியம் இருந்ததால், அவனுக்கு நரசிம்ம ரூபத்தில் வந்து காட்சியளித்தார். நாரதர் எப்போதும் நாட்டியமாடியவாறே இருந்ததால், அவர் எந்தெந்த ரூபத்தை பார்க்கவேண்டும் என்று விருப்பப்படுகிறாரோ, அந்த ரூபத்தினாலேயே அவருக்கு தரிசனம் அளித்தான். இப்படி இவர்கள் அனைவருக்கும் பிரத்யட்சம் ஆகியிருப்பதால், இந்த பதமானது இவர்களுக்கு மட்டுமே பொருந்துகிறது என்று நமக்கு தோன்றுகிறது. ஆனால் உண்மை அப்படியா?

அபரோக்ஷத்தை விரும்புபவர்களான பகவத் பக்தர்கள், அபரோக்ஷத்தைப் பெறும் முன்னர், பரமபக்தியுடன் - படுத்திருக்கும்போதோ, அமர்ந்தோ, நின்றோ - இடைவிடாமல் பகவத் மகிமைகளை பாடிக்கொண்டிருந்தால், அவர்களின் கண்ணுக்குத் தெரியாமல், ஸ்ரீபரமாத்மன்,, படுத்துப் பாடினால் அமர்ந்தும், அமர்ந்து பாடினால் நின்றும், நின்று பாடினால் நர்த்தனம் ஆடியும், இறுதியில் மிதமிஞ்சிய பக்தியினால் மெய்மறந்து ஆடிப்பாடினால், அப்போது அவர்களுக்கு அபரோக்ஷத்திலும், ப்ரத்யட்சத்திலும், தரிசனம் அளிக்கிறான். இப்படியாக புரந்தரதாசர், விஜயதாசர், ஜகன்னாததாசர், நாமதேவ, ஞானதேவ ஆகியவர்களின் சரிதைகளில், அவரவர்களுக்கு வெவ்வேறு நிலைகளில் பிரத்யட்சம் ஆகியிருக்கிறான் என்று தெரியவருகிறது.

'மலகி பரமாதரதி' ஆகிய பதங்களுக்கு சில வியாக்யானகாரர்கள் அவை மயக்க, சமாதி நிலை என்று விளக்கியிருக்கிறார்கள். தாசராயரும் அதே சிந்தனையில் இருந்திருந்தால் 'சுலபனோ ஹரி' என்று சொல்லியிருப்பது எதிர்ப்பதம் ஆகும். போலவே

'கலேர்தோஷ நிதேராஜன்னஸ்திஹ்யேகோ மஹான் குண: |
கீர்த்தனாதேவ க்ருஷ்ணஸ்யமுக்தபந்த: பரம்வ்ரஜேத் ||

கலியுகத்தில் தோஷங்கள் நிறைந்திருந்தாலும் அதில் மிகப்பெரிதான நற்குணம் ஒன்று உண்டு. அது என்னவெனில்: பரமாத்மனை கீர்த்தனை செய்தால், முக்தராக பரமாத்மனிடமே சேரமுடியும். இந்த பாகவத வாக்கியமும் இதற்கு எதிர் என்றே தோன்றுகிறது. மேலும் ஆறாம் ஸ்கந்தத்தில், மனிதர்கள் மனம், வாக்கு, உடலினால் செய்த பாவங்களுக்கு பிராயச்சித்தம் செய்யவில்லையெனில், நரகம் நிச்சயம் என்கின்றனர்.

ப்ராயஸ்சித்தானி ஜீர்ணானி நாராயணபராங்முகை: |
நவைபுனந்திராசேந்த்ர சுராகும்பாமிவாபகா: ||

நாராயணனைப் பார்க்காதவர்கள், பிராயச்சிதம் செய்துகொண்டாலும், சாராயம் நிரம்பிய மண் குடத்தை எப்படி பெரிய ஆறுகளும் சுத்தம் செய்ய முடியாதோ, அதுபோலவே, அந்த பிராயச்சித்தமும் அவர்களை பவித்ரம் ஆக்குவதில்லை.

நனிஷ்க்ருதைருதித்யை ப்ரம்மவாதிபிஸ்ததா விஷுத்தத்யத்யவானுவ்ரதாதிபி: |
யதாஹரேர் நாமரூபை ருதாஹ்ருதைஸ்த துத்தமஸ்லோக குணோபலம்பகம் ||

உத்தம ஸ்லோகனான ஶ்ரீபரமாத்மனின் ஆனந்தாதி குணங்களால் கூடியிருக்கும் பெயர்களை மிகுந்த பக்தியுடன் நினைப்பவர்கள், பாதத்தினால் முக்தர் ஆவர். வேதங்களில் சொல்லப்பட்டுள்ள விரத நியமாதி பிராயச்சித்தங்கள் எவற்றிற்கும் இத்தகைய சக்தி இல்லை -- என்பது பாகவத வாக்கியம். ஆறாம் ஸ்கந்தம், மூன்றாம் அத்தியாயத்தின் முன்னுரையில் விஜயத்வஜ ஆசார்யரின் வாக்கியம் இப்படியாக இருக்கிறது.

'பக்திபூர்வகம் நாம சங்கீர்த்தனம் முக்திஸாதன மித்யெததஸ்மின்னத்யாயே அபிதீயதே' - பக்திபூர்வகமான பகவன்னாம சங்கீர்த்தனையே முக்தி சாதனம் என்பதை இந்த அத்தியாயத்தில் சொல்கிறார், என்கிறார். இத்தகைய பல புராணங்களின் ஆதாரங்களில் 'மலகி பாடலு குளிது கேளுவ' என்னும் உண்மையான வியாக்யானமே தாசராயரின் சிந்தனை என்று அறிகிறோம். 'ஹரியு சுலபனு' என்று தாசராயர் சொல்கிறார். இந்த வாக்கியத்தாலும், நம்மால் செய்யமுடியாத சாதனை நிலையிலான தியானங்கள் தேவையில்லை என்று உறுதியளிக்கிறார்.

அனன்ய சேதாஸ்ஸததம் யோமான்ஸ்மரதி நித்யஷ: |
தஸ்யாஹம் சுலப: பார்த்தனித்யயுக்தஸ்ய யோகின: || (கீதை 8-14).

ஹே அர்ஜுனா! யார் அவன் மனதை சிதறடிக்காமல், ஒருமுகப்படுத்தி, தினந்தோறும் என்னை நினைக்கிறானோ, அவனே என்னை அடைவதற்குத் தேவையான முழுமையான வழிகளை அறிந்திருக்கிறான். அவனுக்கு நான் சுலபமாக கிடைக்கிறேன் - என்று ஶ்ரீகிருஷ்ணன் சொல்கிறான். 'யோகி' என்னும் சொல்லுக்கு, ஞானோபாயத்தை அறிந்தவன் என்னும் அர்த்தத்தை சொல்கிறார். ஆகையாலேயே 'ஒலிஸலரியதெ பாமரரு பளலுவரு பவதொளகெ' என்று சொல்கிறார். இதனால், கீதையில் சொல்லப்பட்ட 'நித்யயுக்தஸ்ய யோகின:' என்றால், 'முழுமையான வழிமுறைகளை அறிந்தவனுக்கு நான் சுலபன்' என்று ஶ்ரீகிருஷ்ணனின் வாக்கியத்திற்கும், தாசராயரின் வாக்கியத்திற்கும் சரியாக ஒத்துப்போகிறது என்று அறியவேண்டும்.

'தன்னவரனரகளிகெ பிட்டகலனு' என்னும் தாசராயரின் வாக்கியத்திற்கு, பிம்பரூபத்தினால் எப்போதும் கூடவே இருக்கிறான் என்னும் அர்த்தம் கொண்டால், பக்தர்களிலும், அ-பக்தர்களிலும்கூட பிம்பரூபத்தினால் கண்டிப்பாக

இருக்கிறான் என்று பொருள் வருவதால் 'தன்னவரன' என்னும் சொல் தேவையற்றதாகிறது. பக்தர்களை காப்பதற்காக கிருஷ்ணாதி ரூபங்களினால், அர்ஜுனாதி பக்தர்களை காப்பாற்றுவதைப் போலவே, தன் ஏகாந்த பக்தர்களைக் காப்பாற்றுவதற்காக, அவர்களின் கண்ணுக்குத் தெரியாமல், எப்போதும் அவர்களின் அருகிலேயே இருந்து, அவர்களை காப்பாற்றுவான் என்னும் அர்த்தம் தெளிவாக புரிகிறது. இதற்கு ஸ்ரீவாதிராஜர், துளசிதாசர், புரந்தரதாசர் ஆகியோரின் சரிதங்களே சாட்சியாக இருக்கின்றன.

**மனதொ3ளகெ3 தானித்து3 மனவெ**
**ந்தெ3னிஸிகொம்ப3னு மனத3 வ்ருத்திக3**
**ளனுஸரிஸி போ4க3க3ளனீவனு த்ரிவித4 சேத1னக்கெ |**
**மனவனித்தரெ த1ன்னனீவனு**
**த1னுவ த3ண்டி3ஸி தி3னதி3னதி3 ஸா**
**த4னவ மாள்பரிகி3த்தபனு ஸ்வர்க்கா3தி3 போ4க3க3ள ||6**

மனதொளகெ = மனதின் உள்ளே
தானு = ஸ்ரீபரமாத்மன்
இப்ப = இருக்கிறான் (ஆகையால்)
மனவெந்து = மனம் என்று
எனிஸிகொம்பனு = அழைத்துக் கொள்கிறான்
த்ரிவித சேதனக்கெ = சாத்விக, ராஜஸ, தாமஸ என்னும் மூன்று வித ஜீவராசிகளுக்கு
மனத வ்ருத்திகளனுஸரிஸி = அவரவர்களின் யோக்யதைக்கேற்ப இருக்கும் மனோவ்ருத்தியை அனுசரித்து
போகங்கள = சுக, துக்க, சுகதுக்க என்னும் மூன்று வித அனுபவங்களையும்
ஈவனு = கொடுக்கிறான்
மனவனு = மனதினை
இத்தரெ = கொடுத்தால் (பரமாத்மனிடம் மனதை வைத்தால்)
தன்னனு = தன் ரூபத்தையே
ஈவனு = கொடுக்கிறான் (காட்டுகிறான்)
தனுவ = சரீரத்தை
தண்டிஸி = சாந்திராயணாதி விரதங்களினால் தண்டித்து
தினதினதி = தினந்தோறும்
சாதனவ மாள்பரிகெ = சாதனையை செய்பவர்களுக்கு
ஸ்வர்க்காதி போககள = ஸ்வர்க்காதி போகங்களை
இத்தபனு = கொடுக்கிறான்.

பொருள்:
ஸ்ரீபரமாத்மன், அனைவரின் மனங்களிலும் இருந்து, மனம் என்னும் பெயரில் அழைக்கப்படுகிறான். சாத்விக, ராஜஸ, தாமஸ என்னும் மூன்றுவித ஜீவராசிகளுக்கு அவரவர்களின் தகுதிக்கேற்ப மனதைக் கொடுத்து, கர்மங்களை செய்வித்து, பலன்களைக் கொடுக்கிறான். மனதினை ஒருமுகப்படுத்தி

பரமாத்மனில் நிலைநிறுத்தி பஜிப்பவர்களுக்கு தன் ரூபத்தை காட்டுகிறான். உடலை வருத்தி, விரதங்களை செய்பவர்களுக்கு ஸ்வர்க்கத்தை மட்டுமே கொடுக்கிறான். ஆகையால் மனதினை பரமாத்மனில் வைத்து பஜிப்பவர்களுக்கு மட்டும், பகவந்தனின் பரமானுக்கிரகம் ஆகிறது என்பதே இந்த பத்யத்தின் பொருள்.

'மனதொளகெ தானித்து மனவெந்தெனிஸி கொம்பனு' பாகவத 3ம் ஸ்கந்தத்தில் 'மனோமயம் தேவமயம் விகார்யம்' என்று சொல்லப்பட்டிருக்கிறது. மனோமயம் என்றால் மனதில் நிறைந்திருப்பவன் என்று பொருள். அதாவது, மனதினுள் இருந்து, அதே பெயரில் அழைக்கப்படுபவன். அதே ஸ்லோகத்தின் பாகவத தாத்பர்யத்தில்

மனஸ்திதோ ஹரிர்நித்யம் சர்வதேவேஷு சம்ஸ்தித: |
தேவ ப்ரதானர்கா லோர்கா கரோத்யனுகத: சதேதிவாராஹே ||

ஸ்ரீஹரி மனதில் இருந்து மனோநியாமகனாகி, அனைத்து தேவதைகளிலும் இருந்து, தேவதைகளை முன்னிறுத்தி அனைத்து மக்களின் மூலமாக காரியங்களை செய்ய வைக்கிறான். இதற்கு ஆதாரமாக வராக புராணத்து வாக்கியம் ஒன்று இருக்கிறது.

தத்தத்வஸ்துஷு ஸர்வேஷு தத்ததாகாரத: ஸ்தித: |
தத்தத்ஷப்தைஸ்ச பகவானோச்யதே நிஜஷக்தித: ||

ஸ்ரீபரமாத்மன் ஒவ்வொரு பொருட்களிலும் இருந்து அதன் வடிவத்தைப் பெற்று, அந்தந்த பெயரில் அழைக்கப்படுகிறான். அதாவது குடத்தில் குடமாக இருக்கிறான். படத்தில் படமாக இருந்து அப்படியே அழைக்கப்படுகிறான். 'ஸர்வநாமா சர்வகர்மா' என்னும் ஸ்ருதி வாக்கியத்தை அனுசரித்து, அனைத்து பெயர்களும் பரமாத்மனுடையதே ஆகியிருக்கின்றன. மனங்களில் மனோ நியாமகனாக இருப்பதால், அவனுக்கு மனம் என்று பெயர் வந்தது.

வர்ணஸ்தோ வர்ண நாமாஸௌஸ்வரஸ்த: ஸ்வர: நாமக |
மனஸ்தஸ்சமனோ நாமா தன்னாமா சக்ஷுராதிக: ||
(பாகவதம் 11ம் ஸ்கந்தம்)

இந்த ஆதாரத்தின்படி மேற்சொன்ன அர்த்தம் நிரூபணமாகிறது. இதற்கு பரமாத்மனின் பரம சாமர்த்தியமே காரணம். 'மனத மன: ததாதீதி மனத:' அதாவது, மூன்றுவித ஜீவர்களின் கர்மங்களை அனுசரித்து மனதைக் கொடுப்பவனாகையால், மனத - மனதைக் கொடுக்கும் பரமாத்மன் என்று பொருள். சாத்விக, ராஜஸ, தாமச ஜீவிகளுக்கு அவரவரகளின் யோக்யதைக்கேற்ப, மனதைக் கொடுத்து, அதற்கேற்ப பலன்களைக் கொடுப்பவன். இதிலிருந்து அனைவரின் மனதிற்கும் காரணம் பரமாத்மனே என்பது சித்தமாகிறது. இதிலிருந்து அனைத்து இந்திரியங்களின் செயல்களும் பரமாத்மனாலேயே ஆகின்றன என்றும் சொல்லவேண்டும். அப்படியெனில், தத்வாபிமானி தேவதைகளின் வேலை என்ன?

தத்வாபிமானி தேவதைகள் இந்திரியங்களை வழிநடத்துகின்றன என்று பல ஆதாரங்கள் சொல்கின்றன. ஆகையாலேயே, நாம் தினமும் காலையில் எழுந்தவுடன்

நமோஸ்து தாத்விகாதேவா: விஷ்ணு பக்தி பராயணா: |
தர்ம மார்க்கெ ப்ரேரயந்து பவந்த: சர்வ ஏவஹி: ||

’ஹே விஷ்ணு பக்தர்களான தத்வாபிமானி தேவதைகளே! உங்களை வணங்குகிறேன். நீங்கள் அனைவரும் என் இந்திரியங்களை அதர்ம வழியில் செல்லவிடாமல், தர்மத்தின் வழியிலேயே நிறுத்துங்கள்’ என்று பிரார்த்திக்க வேண்டும் என்று ஸ்ம்ருதி வாக்கியம் இருக்கிறது மற்றும்

ஆத்மனோ பஜனே வ்ருத்திமுத்தாப்ய பலதாஸுரா: |
உத்தமானாம் ஜனானாந்து நிக்ருஷ்டானாம் நிபர்யய: ||
(பாகவத 11ம் ஸ்கந்தம்)

உத்தம ஜீவர்களின் நலனுக்காக தேவதைகள் பரமாத்மனை சர்வோத்தமன் என்று அறிந்து பஜனை செய்வதுடன், தாரதம்யத்தின் வழி தம்மை வணங்குமாறும் வேண்டி, கர்மங்களை செய்வித்து, பலன்களைக் கொடுக்கின்றனர். அயோக்யர்களுக்கு இதற்கு எதிர்ப்பதமாக, அதாவது, பரமாத்மனிடமும் தம்மிடமும் த்வேஷ புத்தியை உண்டாக்கி, அதற்குத் தக்க பலன்களையே கொடுக்கின்றனர் என்று சொல்லப்பட்டிருக்கிறது. இதிலிருந்து, தத்வாபிமானி தேவதைகளுக்கு நற்காரியங்களில் புத்தியை செலுத்தக்கூடிய ஸ்வாதந்த்ர்யம் இருக்கிறது என்பதை அறியலாம்.

இப்படியிருக்கையில், தாசராயரின் வியாக்யானமும், அதற்கு அவர் கொடுத்திருக்கும் ஆதாரங்களையும் பார்த்தால், மேற்சொன்னதற்கு எதிர்ப்பதமாக இருப்பதைக் காணலாம். இதற்கு என்ன பரிகாரம் எனில்:

மனதிற்கும், பிற இந்திரியங்களுக்கும், தத்வாபிமானி தேவதைகளே வழி நடத்துபவர்களாக இருந்தாலும், அந்த தத்வாபிமானி தேவதைகளிலும், இந்திரியங்களிலும், அந்தந்த ரூபங்களில் இருந்து பரமாத்மனே முக்கிய ப்ரேரகனாக (வழி நடத்துபவனாக) இருக்கிறான். ஸ்ரீபரமாத்மன் தத்வாபிமானி தேவதைகளில் இருந்து வழி நடத்துவதால், தத்வாபிமானி தேவதைகளே ப்ரேரகர்கள் என்று பெயர் பெற்றனர்.

ஒரு அரசாட்சியில், அதிகாரிகளின் மேற்பார்வையில் மக்கள் எப்படி செயல்களை செய்கின்றனரோ, அது அரசனின் ஆணையில்லாமல் நடக்காது. அப்படியே, தத்வாபிமானி தேவதைகளுக்கு ஸ்வதந்த்ரமாக வழி நடத்தும் திறன் இல்லையாகையால், பரமாத்மனே ஸ்வதந்த்ர ப்ரேரகன் என்று அறியவேண்டும். த்ரிவித ஜீவர்கள் அவரவர்களின் தகுதிக்கேற்ப வழி நடத்தப்படுகின்றனர். பக்தர்களில் உத்தமர், மத்யமர், அதமர் என்று மூன்று விதங்கள் உண்டு. உத்தம பக்தர் என்றால்:

பூர்ணத்வாதாத்மஷப்தோக்த: கஸ்சித்ஸர்வ நரோத்தம |
ஸோபி நாராயணோ நான்ய: ஸ ச சர்வேஷு சம்ஸ்தித: ||
தத்வஷா இதரேஸர்வே ஸ்ரீ பிரம்மேஷ புரஸ்ஸரா: |
ஸஏவது ஸ்வபக்தேஷு ஸ்தித்வானுக்ரஹ காரக: ||
அஞ்ஞேஷ்வ ஞானயந்தாச த்விபத்ஸு த்வேஷகாரக: |
அதஸ்தத் ப்ரேரணா தேவ ப்ரேமாத்யாம மஜக்ஞரே ||
இதி பஷ்யதியோ புத்த்யாஸது பாகவதோத்தம: ||
(பாகவத 11ம் ஸ்கந்தம்)

இதன் பொருள்:
பரமாத்மன் பூர்ணன் ஆகையால், அவனுக்கு ஆத்மன் என்று பெயர். அவன் அனைத்து பிராணிகளைவிட உத்தமன். அவனே ஸ்ரீமன் நாராயணன். அவன் அனைத்து பிராணிகளிலும் நிலைத்திருக்கிறான். ரமா பிரம்மாதிகள் அனைவரும் அவன் வசமே இருக்கின்றனர். அவனே தன் பக்தர்களுக்கு அருள் புரிபவன். அஞ்ஞானிகளுக்கு அஞ்ஞானத்தைக் கொடுப்பவன். த்வேஷிகளில் த்வேஷத்தை உண்டுபண்ணுபவன் அவனே. மேலும் அவனது வழி நடத்துவதன் பேரிலேயே, ஒருவருக்கு அவன் மேல் அபிமானம் வருகிறது என்று யார் அறிந்திருக்கிறார்களோ அவனே பாகவதோத்தமன்.

பாற்கடலில் வசிப்பவனான பரமாத்மன் சர்வோத்தமன் என்று அறிந்து அவனில் அன்பு வைத்து, அவன் பக்தர்களிடம் நட்பு பாராட்டுவர். பரமாத்மனின் ஸ்வரூபத்தை அறியாத மக்களிடம் - கருணை, பகவத் விஷயங்களில் ஸ்ரத்தை என இவை அனைத்தும் இருந்தாலும், உலகம் அனைத்தும் பகவத் அதீனம் என்பதை அறியாமல் இருப்பவன் மத்யம பக்தன். அதம பக்தன் என்றால்: பிரதிமைகளில் மட்டுமே பகவந்தன் இருக்கிறான் என்று அறிந்து, பிற அனைத்து இடங்களிலும் அவனே இருக்கிறான் என்பதை அறியாமலும், அவனின் பக்தர்களில் தாரதம்யத்தை அறியாமல் இருப்பதும், தானே சிறந்த பக்தன் என்று அவன் பக்தர்களை புறக்கணித்தலும், அல்லது, பரமாத்மனின் முக்கிய பக்தர்களை நினைக்காமல் அவர்களை எதிர்ப்பதும், பிரம்மாதிகளை மனிதர்களைவிட கொஞ்சம் உயர்ந்தவர்களாக இருக்கலாம் என்று அறிதலும், விஷ்ணுகூட நம்மைவிட கொஞ்சம் உத்தமராக இருக்கலாம் என்று அறிதலும் உள்ளவனே அதம பக்தன்.

இவரது பக்திக்கு உத்தமரான தேவதைகளின் விருப்பப்படி நரகவாசம் கிடைக்கிறது. மத்யம பக்தர் நரகத்திற்குப் போவதில்லை. ஸ்வரக்க பலன்களையே பெறுகின்றனர். சில காலம் கழித்து, மனிதனாகப் பிறந்து சுகத்தை அனுபவிக்கிறான். யார் பாகவதோத்தமனோ அவனே உத்தமமான முக்தியைப் பெறுகிறான். உத்தம பாகவதர் அனைவரும் சாத்விகராகவே இருப்பர். மத்யம பக்தரே ராஜசர். அதம பக்தர்களை தாமச ராஜஸர் என்று அறியலாம். அது ஏனென்றால்: பிரம்மாதி தேவதைகளை புறக்கணிப்பதால். அது மிகவும் பாவமான செயலாகும். இத்தகையவர்கள் ஒருவேளை பரமாத்மனிடம் பக்தி செய்தாலும், அந்த பக்தியை பரமாத்மனே அழித்துவிடுவான். இப்படியாக பரமாத்மனிடமே

த்வேஷத்தைக் கொண்டு, இறுதியாக தமஸ்ஸிற்குப் போகும் நிலை வந்துவிடும். ஆகையால், தேவதைகளை தாரதம்யத்திற்கேற்ப அறிந்து பூஜிக்கவேண்டும்.

தாமசர்கள்? அவரே தமோயோக்யர் என்று பெயர் பெற்றவர்கள். அவர்களின் லட்சணம் எவை? பரமாத்மனுக்கும் தமக்கும் பேதம் இல்லையென்றும், தாமே அவன் என்றும் உபாசனை செய்வர். இவர்களின் நட்பைக்கூட விரும்பக்கூடாது. இவர்களின் நண்பர்களும் தமஸ்ஸிற்கே போவார்கள். பாகவத ஐந்தாம் ஸ்கந்தத்தில் 'தமோத்வாரம் யோஷிதாம் ஸங்கி ஸங்கம்' - அதாவது, 'ஸ்த்ரி'களின் சேர்பவர்களின் நட்பே தமஸ்ஸிற்குக் காரணம் என்று அர்த்தம். மேலும் 11ம் ஸ்கந்தத்தில் 'ஸ்த்ரி சங்க சங்கினாம் சங்க த்வாக்ச தூரத ஆத்மர்வா' - பெண்களுடன் சேர்பவர்களின் நட்பைக் கொண்டவர்களை விலக்கவேண்டும். இதனால் சாமான்யரான கிருஹஸ்தர்களின் நட்பையே விடவேண்டுமா என்ற சந்தேகம் வரலாம். அல்லது, பிற பெண்களுடன் சேர்பவர்களின் நட்பை விடவேண்டும் என்று மட்டும் அர்த்தம் செய்யலாம். ஆனால், அதுகூட தவறான அர்த்தத்தையே தருகிறது. ஏனெனில், சாமான்யர்களான பர-ஸ்த்ரி-சங்கத்தினால் சில காலம் நரகவாசம் ஆகுமே தவிர, தமஸ் வருவதில்லை. இப்படியிருக்கையில், ஸ்த்ரி சங்கம் வைத்திருப்பவர்களின் நட்பை தமஸ்ஸிற்கான காரணம் என்று சொன்னால், அது சித்தாந்தத்திற்கு எதிராகிறது.

இதற்கு ஸ்ரீமதாசார்யர், தாத்பர்யத்தில் விளக்கம் அளித்திருக்கிறார். 11ம் ஸ்கந்தத்தின் 'ஸ்த்ரி சங்க சங்கினாம்' என்னும் ஸ்லோகத்தின் தாத்பர்யத்தில் 'சேஷவேத்யன்யதா புத்தி: ஸ்யைவ ஸ்த்ரி பரிகீர்த்திதா' - பரமாத்மனிடம் பக்தி இல்லாமை. அதாவது, உண்மையான விஷயங்களான, பரமாத்மன் ஸ்வதந்த்ரன், நான் அஸ்வதந்த்ரன். அனாதி காலத்திலிருந்து பரமாத்மனுக்கும் ஜீவனுக்கும் பேதம் இருக்கிறது ஆகியவற்றிற்கு எதிராக, நானே பரமாத்மன் என்று அ-பேத சிந்தனை செய்யும் புத்திக்கு 'ஸ்த்ரீ' என்று பெயர். இந்த புத்தி யாருக்கு இருக்கிறதோ, அவனே 'ஸ்த்ரீ' சங்கம் அடைந்தவன். அவனது நட்பு தமஸ்ஸிற்கு வழியாகும். இப்படி, ஸ்த்ரி சங்கத்தின் நட்பிற்கு தமஸ் என்று சொன்னபிறகு, ஸ்த்ரி சங்கத்திற்கு தமஸ் என்று தனியாக சொல்லவேண்டுமா? பர-ஸ்த்ரி சங்கத்திற்கு தமஸ் இல்லை என்றபோதிலும், 'ஸ்த்ரி' சொல்லுக்கு புத்தி என்று ஒரு அர்த்தமும் இருக்கிறது என்று மத்வாசார்யர் சொல்லியிருக்கிறார். ஆசார்யர், பர-ஸ்த்ரி சங்கத்திற்கு நரகம்தான் பலனே தவிர, தமஸ் ஆவதில்லை என்று எந்த ஆதாரத்தின் பேரில் சொல்லியிருக்கிறார் என்றால், ஆசார்யர், தர்ம தத்வங்களில் இருக்கும் ஆதாரங்களை உதாரணம் தருகிறார். அது என்னவெனில்:

பரதாரத்ருஷிப்ரோக்தா க்ஷுத்ரபாதக சங்ஞிதா |
உபபாதகம் தட்கதிஸ்சவர்ண பாஹ்யேஷு பாதகம் ||
மஹாபாதக சஞ்ஞுந்து பித்ராதேர்தார தக்ஷணம்|
தாரத்ருஷ்டி: ஸ்வோத்தமானாம் மானுஷாணாம் ஸ்வபாவத: ||
ஸமஹா பாதகம்ப்ரோக்ஷம் தத்கதி: சுமஹத்தர: |
ரிஷிதாரேஷு மனஸோ கதிரேவததோதிகா ||
தேவதாராபி காமானாம் சங்கி சங்கஸ்ததோதிக: |

கிமுவிஷ்ணோஸ்ததோ யோஷித்ஸங்கஸ்யவ்யத்யயஸ்திதே: ||
ந சமம் பாதகம்க்வாபி நஹிஸ்வ ஸ்த்ர்யபிகாமின: |
அவஞ்ஞதா மாதவாதேஸ்த ஸ்மாத்தந்தூரத ஸ்த்யஜேத் ||
மானஷோஷூது து:கித்வம் க்ஷூத்ரபாதக ஜங்கலம் |
உபபாதக தஸ்சாபி நரகம் யுகமாத்ரகம் |
சதுர்யுகாவஸானந்து பாதகஸ்ய பலம் ஸ்ம்ருதம் ||
மஹாபாதக ஜன்யஞ்ச கல்பாவதி ஸமீரிதம் |
சுமஹாபாத காஸ்சாபியாவத்பிரம்ம லயோபவேத் ||
தத்பராணாம் பாதகானாம் பலமந்தம் தம: ஸ்ம்ருதம் |
அதோதோது:க்க மதுலம் விஷ்ணு தாராபிமர்ஷனம் |
வராதபிஹி தாராணாம் தக்ஷணம் கோப காரணம் |
தஸ்மாத்தேய: ஸதாவந்த்யா அக்னிவன்னாபி காமத ||

இந்த வாக்கியங்களினால் நரக பலன் கிடைக்கக்கூடிய பாவங்கள் எவை? தமஸ் கிடைக்கக்கூடிய மகாபாவங்கள் எவை என்பதை விவரிக்கிறார்.

பர-ஸ்த்ரியரை சங்கம் செய்யவேண்டும் என்னும் சிந்தனையுடன் பார்க்கும் செயல் ‘க்ஷூத்ரபாதகம்’ என்று அழைக்கப்படுகிறது. அந்த சங்கத்தை செய்த பாவம் உபபாதகம். நான்கு வர்ணத்தவர்களை தவிர மற்ற, ம்லேச்ச, சாண்டால ஆகிய ஸ்த்ரிகளை சங்கமித்தால் அது பாதகம் என்று அழைக்கப்படுகிறது. தந்தை போன்றவர்கள் சங்கமித்த பெண்களை தான் சங்கமித்தால் அதற்கு மஹாபாதகம் என்று பெயர். தன்னைவிட உத்தமரானவரின் மனைவியை விரும்பி பார்ப்பது மஹாபாதகம் எனப்படுகிறது. அவர்களை சங்கமிப்பது அதைவிட கொடிய பாவம் ஆகும். அதைவிட ரிஷி மனைவிகளிடம் மனம் வைப்பது பெரிய பாவம் ஆகும். அதைவிட பெரிய பாவம், தேவதா ஸ்த்ரியர்களை விரும்புவது மற்றும் அவர்களிடம் நட்பு பாராட்டுவது. இதைவிட, பரமாத்மனின் மனைவியான லட்சுமிபதி தானே ஆவேன் என்பவனின் நட்பு அனைத்தையும்விட கொடிய பாவமாகும். இதற்கு சமமான பாவம் உலகத்தில் இல்லவேயில்லை. அதற்காகவே, ’ஸ்த்ரி’ என்பதற்கு தவறான ஞானம் என்று அர்த்தம் செய்தார். அப்படியில்லையெனில், சொந்த ஸ்த்ரியை சங்கமம் செய்தால்கூட தமஸ் கிடைக்கிறது என்று சொல்லவேண்டும் என்று, பல ஆதாரங்களின்படி விவரித்திருக்கிறார். மேலும் இந்த பாவங்களின் பலன்களை தாரதம்யத்தின்படி விளக்குகிறார்.

க்ஷூத்ர பாதகத்தின் பலன், மனிதப்பிறவியில் சில காலம் துக்கங்களை அனுபவிப்பதாகும். மேலும் பல ஆண்டுகளுக்கு நரகவாசம் அனுபவிப்பதாகும். உபபாதகத்திற்கு ஒரு யுகம் வரைக்கும் நரகவாசமே பலன். பாதகத்திற்கு நான்கு யுகங்கள் வரைக்கும் நரகவாசம். மஹாபாதகத்திற்கு பிரம்மதேவரின் ஒரு தின கல்பத்தின் வரைக்கும் நரகவாசம் என்று அறியவேண்டும். சுமஹாபாதகத்தின் பலன் ஒரு பிரம்மகல்பத்தின் வரைக்கும் நரகம். இதையும்விட அதிகமான பாதகங்களுக்கே மறுபடி திரும்பமுடியாத அந்தந்தமஸ் ஆகும். ஆகையால், இவற்றைவிட குறைந்த தவறுகளுக்கு தமஸ் இல்லை என்று நிரூபணம் ஆகிறது.

மேலும் ஐந்தாம் ஸ்கந்தத்தில் 'தமோ த்வாரம் யோஷிதாம் சங்கி சங்கம்' - ஸ்த்ரி சங்கத்திற்கு தமஸ் சாதனையென்று சொல்லியிருப்பதால், ஸ்த்ரி என்றால் தவறான புத்தி என்று அறியவேண்டும்.

பாவங்கள் அதிகரிக்க, அதற்கேற்ப துக்கங்களும் அதிகரிக்கும். நானே பரமாத்மன் என்று சொன்னால், லட்சுமிக்கு நானே கணவன் என்று சொன்னது போல ஆகிறதல்லவா? உலகத்தில் 'உன் மனைவி' என்று சொன்னால் எவ்வளவு கோபம் வருமோ, 'உன்னை கொல்வேன்' என்று சொன்னால்கூட அவ்வளவு வருவதில்லை. ஆகையால், இது அனைத்தையும்விட அதிகமான பாவம். ஆகையாலேயே, இத்தகையவரின் நட்பும்கூட தமஸ்ஸிற்கு வழி என்று அறியவேண்டும். இதுவே பாகவத தாத்பர்யத்தின் ஸ்லோக அர்த்தம்.

இப்படியாக பரமாத்மன், ஜீவனின் யோக்யதையை, செயல்களை அறிந்து, அவன் மனதினை வழிநடத்தி, அவனில் இருந்து, செயல்களை செய்து, செய்வித்து, மூன்றுவித ஜீவர்களுக்கு அவரவர்களின் செயல்களுக்கேற்ப பலன்களைக் கொடுக்கிறான். ஜீவன் எப்படி அனாதியோ, அவனது கர்மங்களும் அனாதியே. எப்படி மாம்பழத்தில் இனிப்பும், வேப்பங்காயில் கசப்பும் தாமாகவே இருக்கின்றதோ, அப்படியே, சாத்விகர், ராஜஸர், தாமஸர் என்னும் த்ரிவித ஜீவர்களும் அனாதியானவர்கள். ஆகையால், அவரவர்களின் தகுதிக்கேற்ப அவர்கள் செய்யும் பக்தி, த்வேஷங்களுக்கு, முக்தி, தமஸ் ஆகியவற்றைக் கொடுக்கக்கூடிய குலத்திலேயே அவர்களை பிறக்கவைத்து அதற்கேற்பவே மனதினையும் கொடுத்து, செயல்களை செய்வித்து, முக்தியையோ, மிஸ்ர-லோகத்தையோ, தமஸ்ஸினையோ கொடுக்கிறார்.

செயல்களுக்கேற்ப பலன்களைக் கொடுப்பதால், பரமாத்மனுக்கு வைஷம்ய, நைர்குண்ய ஆகிய தோஷங்கள் சேர்வதில்லை என்று அறியவேண்டும். 'மனவனித்தரெ தன்னவீவனு'. பாகவத 10ம் ஸ்கந்தத்தில், கோபிகா ஸ்த்ரியர், ஸ்ரீகிருஷ்ணனின் அங்க சங்கத்தினால் திருப்தியடைய, பரமாத்மன் அவர்களுடைய கர்வத்தை அடக்க, அவர்களின் கண்களிலிருந்து மறைந்தான்.

அப்போது கோபியர்கள் வனத்தில் எங்கு தேடினாலும் ஸ்ரீகிருஷ்ணன் கிடைக்கவில்லை. பிறகு அவர்கள் தத்தம் செயல்களை விட்டுவிட்டு, பரமாத்மனின் பாதாரவிந்தங்களிலேயே மனதை வைத்து, அந்த கிருஷ்ணனின் விஷயங்களைப் பற்றியே பேசியவாறு, அது சம்பந்தமான செயல்களையே செய்தவாறு, தம் உயிர்களை அவனிடம் ஒப்படைத்து, அவனின் குணங்களையே பாடியவாறு, வீடுகளைத் துறந்து, பைத்தியங்களைப் போல, தம் தேகங்களையே மறந்து பரமாத்மனை துதிக்க, பரமாத்மன் பிரத்யட்சமானான். எனில், அவர்களுக்கு தன்னையே கொடுத்தான். இஹத்தில், ஆலிங்கனங்களை செய்து அவர்களுக்கு தன்னையே கொடுத்தான். பரத்தில், தன் உலகத்தையே அவர்களுக்குக் கொடுத்தான். இதே கோபியர்களுக்கு, பரமாத்மன் தன்னை உபாசனை செய்யும் கிரமத்தை உபதேசிக்கிறான்.

யதா அதனோலப்ததனே வினஷ்டே தச்சிந்தயான்யன்னிப்ருதன்னவேத |
ஏவம் மதார்த்தார்பித லோகவேத ஸ்வானாம்ஹி வ்யோமய்யனு வ்யத்தயோ பலா: ||

ஹே கோபிகா ஸ்த்ரியர்களே. எப்படி ஒரு ஏழைக்கு செல்வம் கிடைத்து அது தொலைந்தும் போனால், அவன் எந்தவொரு வேலையும் செய்யாமல், அதைப் பற்றியே சிந்தித்து அமர்ந்திருப்பானோ, அதைப்போல அனைத்தையும் என்னிடம் ஒப்படைத்த உங்கள் மனது வேறைதையும் பற்றி சிந்திக்காது. இப்படி பல உதாரணங்களைச் சொல்லலாம். ஆகையாலேயே தாசராயரும் 'மனவனித்தரெ தன்னனீவனு' என்று சொல்லியிருக்கிறார்.

தனுவ தண்டிஸி தினதினதி சாதனவ மாள்பரிகித்தபனு ஸ்வர்க்கதி லோககள:

நற்பலன்களுக்காக மக்கள் உபவாசம், சாஸ்திரங்களில் சொல்லப்பட்டிருக்கும் விரத நியமங்கள், யாக தானங்களை தங்கள் உடலை வருத்தி சாதனைகளை செய்தால், அவர்களுக்கு ஸ்வர்க்காதி லோகங்களைக் கொடுக்கிறான். அவர்களின் யோக்யதையும் அவ்வளவே. அவர்களின் மனது பரமாத்மனின் த்ருட பக்தியினால் நிற்பதில்லை. இதற்கு ஒரு உதாரணம் கொடுக்கலாம். பாகவத 10ம் ஸ்கந்தம். ஸ்ரீகிருஷ்ணன் தன் சக இடையர்களுடன் ஒரு நாள் மாடுகளை மேய்த்தவாறு, கோகுலத்தை விட்டு பல தூரம் வந்துவிட்டிருந்தான். அனைவரும் சரியான பசி. 'கிருஷ்ணா! கிருஷ்ணா! எங்களுக்கு பசி அதிகரித்துக் கொண்டே போகிறது. எங்களுக்கு சாப்பிடுவதற்கு ஏதாவது ஏற்பாடு செய்' என்றனர். 'ஹே கோபாலகர்களே. இங்கு கொஞ்சம் தூரத்தில் சில பிராமணர்கள் ஒரு யாகத்தை செய்கின்றனர். அவர்களிடம் போய், நான் இங்கு வந்திருக்கிறேன் என்று சொல்லி, அன்னம் வாங்கிக் கொள்ளுங்கள்' என்றான்.

க்ஷுத்ரா ஷாபூரி கர்மாண: பாலிஷா வ்ருத்தமானின: |
தத்பிரம்மபரமம் ஸாக்ஷாத் பகவந்த மதோக்ஷஜம் ||
மனுஷ்யா புத்யாதுஷ்ப்ரக்ஞா மர்த்யாத்மனோ நஜக்ஞரே ||

அப்படியே அந்த சிறுவர்களும் போய் உணவைக் கேட்க, அல்பமான ஆசையுள்ளவர்களாகவும், மிகவும் கஷ்டமான செயல்களை செய்பவர்களாகவும், சிறுபுத்தி உள்ளவர்களாகவும், தாமே பெரியவர்கள் என்னும் சிந்தனையில் அந்த பிராமணர்கள் இருந்ததினாலும், அந்த பரபிரம்ம ஸ்வரூபனான ஸ்ரீகிருஷ்ணனை சாதாரண மனிதன் என்று எண்ணி, அவர்களுக்கு உணவைக் கொடுக்க மறுத்தனர். வருத்தத்துடன் திரும்பி வந்த சிறுவர்கள், ஸ்ரீகிருஷ்ணனிடம் அந்தக் கதையைக் கூற, ஸ்ரீகிருஷ்ணனோ 'நன்று. நீங்கள் மறுபடி அங்கு போய், அந்த பிராமணர்களின் மனைவிகளிடம் நான் வந்திருப்பதாகச் சொல்லி, உணவைக் கேளுங்கள்' என்றான். அப்படியே அந்த சிறுவர்களும் அந்த பிராமணர்களின் மனைவிகளிடம் உணவைக் கேட்டனர்.

ஸ்ருத்வாச்யுத முபாயாந்தம் நித்யம் தத்தர்ஷனோத்ஸுகா: |
தத்கர்த்தக்ஷிப்த மனஸோ பபூவுர்ஜாத ஸம்ப்ரமா: ||

சதுர்வீதம் பஹுகுண மன்னமாதாய பாஜனை: |
அபிஸஸ்ரு: ப்ரியம் சர்வா: சமுத்ரமிவனிம்மகா: ||
நிஷித்யமானா: பதிபிர்ப்ராத்ருபிர் பந்து பிஸ்ஸுதை: |
பகவத்யுத்தம ஸ்லோகே தீர்க்க ஸ்ருதப்யுதாஷயா: ||

ஸ்ரீகிருஷ்ணன் அவர்களுக்குப் பக்கத்திலேயே வந்திருக்கிறான் என்ற செய்தியைக் கேட்ட அந்த பிராமணர்களின் மனைவிகள், தினந்தோறும் அவனைக் காணவேண்டுமென்றே பூஜைகளை செய்து வந்த காரணத்தால், உடனே அவனைக் காணப் புறப்பட்டனர். தினந்தோறும் அவனின் மகிமைகளைக் கேட்டுக்கேட்டு, மனம் முழுவதும் பரமாத்மனிடமே நிலைத்திருந்தது. உடனடியாக பக்ஷ்ய, போஜ்யங்களை எடுத்துக்கொண்டு, பெரிய ஆறுகள் கடலைச் சேரும் வேகத்தில் புறப்பட்டேவிட்டனர். அவர்களின் கணவர்கள் எவ்வளவு தடுத்தாலும், அவற்றைக் கேட்காமல், புண்யகீர்த்தியான பரமாத்மனின் மகிமைகளை பல நாட்களாகக் கேட்டு, அவன் மேல் வைத்திருக்கும் பூரண நம்பிக்கையினால், கிருஷ்ணன் இருக்குமிடத்திற்கு வந்தனர். ஸ்ரீபரமாத்மன், அவர்களை வரவேற்று அவர்கள் கொடுத்த உணவினை ஏற்றுக்கொண்டு, அவர்களுக்கு அருள் புரிந்து, ஞானோபதேசத்தைக் கொடுத்து அனுக்கிரத்தான்.

இந்தப் பெண்கள் பரமாத்மனைக் கண்டு திரும்பி வந்திருப்பதைப் பார்த்த அந்த கணவர்கள், மிகுந்த கவலையுடன் ‘அடடா. இந்தப் பெண்களுக்கு பரமாத்மனிடம் இருக்கும் பக்திகூட நமக்கு இல்லையே. இவர்களுக்கு, பிராமணர்களின் தகுதியான உபநயனம், சம்ஸ்காரங்கள், குருகுலவாசம், தவம், மீமாம்ஸாதி சாஸ்திர ஞானம் இவை எதுவுமே இல்லையென்றாலும், பரமாத்மனிடம் திடமாக பக்தி மட்டும் இருக்கிறது. நாம் அவை அனைத்தையும் பெற்றிருந்தாலும், நமக்கு இத்தகைய பக்தி இல்லையே. நம் பிறப்பிற்கும், கல்விக்கும், செயலுக்கும் சம்பந்தமே இல்லையே. ஸ்ரீபரமாத்மன், நமக்கு தன் மகிமைகளை நினைவுபடுத்தி, நமக்கு அருள்வதற்காகவே இந்த உணவைக் கேட்டிருக்கிறான். இல்லையேல், பூர்ணகாமனான பரமாத்மனுக்கு நம் உணவுதான் வேண்டியிருந்ததா?’ என்றெல்லாம் சிந்தித்து தாமும் தன்யராகவேண்டும் என்று நினைத்தனர்.

ஆகையால், வெறும் தேக தண்டனை செய்து, காம்ய விரதாதிகளை செய்வதனால் கிடைக்கும் பலன், தற்காலிகமான ஸ்வர்க்கமே என்று இதிலிருந்து அறியவேண்டும். ஆனால், நித்யகர்மங்களான சந்தியாவந்தனம், ஏகாதசி முதலான விரதங்கள் ஆகியவற்றை விடவேண்டும் என்று பொருள் அல்ல.

நகர்மணா மனாரம்பான் ம்யைஷ்யர்ம்யம் புருஷோஷ்னுதே |
நசஸன்யஸனா தேவஸித்திம் ஸமதிகச்சதி ||
நியதம் குருகர்மத்வம் கர்மஜ்யாயோஹ்ய கர்மண: |
ததர்த்தம் கர்மகௌந்தேய முக்தஸங்க: ஸமாசர ||
(பகவத் கீதை)

அனைத்து கர்மங்களையும் விடுவதே நைஷ்காம்யம் என்றில்லை. காம்யகர்மங்களை விடுவதாலேயே புருஷர்கள் சத்கதியை அடைவதில்லை. வர்ணாசிரமத்திற்கேற்ப நித்யகர்மங்களை செய். 'தஸ்மாதஸக்த: ஸததம் கார்யம் கர்ம ஸமாசர' அதாவது, கர்மத்தின் பலனை எதிர்பார்க்காமல், ஸ்ரீவிஷ்ணு ப்ரீதிக்காக கர்மத்தை செய் என்று பொருள். இதுவே கீதா ஸ்லோகத்தின் சாமான்ய பொருள் ஆனாலும், இதற்கு ஸ்ரீராகவேந்திர ஸ்வாமிகள் தனது வியாக்யானத்தில் இவ்வாறு விளக்கம் அளித்திருக்கிறார்.

'நசேதிஸன்யஸனாத் காம்யகர்மா கரணாதேவ । தன்மாத்ராதிதி யாவத் । அனேன நிவ்ருத்த கர்மகரண முபலக்ஷ்யைதே । நிவ்ருத்த கர்மகரண மாத்ரத்ஸித்தி மோக்ஷம் புருஷோ ந ஸமதிகச்சதி । நப்ராப்னோதி । கிந்து தேனாந்த: கரண ஷுத்தி விஷய வைராக்யஸ்ரவண மனனத்யான ஞானத்வாரைவ । நசஸன்யஸனாதேவ ।'

காம்ய கர்மங்களை விடுவதால் மட்டும் முக்தி கிடைக்காது. அதாவது, விதிக்கப்பட்ட கர்மானுசரணங்களை செய்தே ஆகவேண்டும் என்று குறிப்பிடுகிறார். ஆனாலும், இத்தகைய கர்மானுஷ்டானங்களை செய்வதால் மட்டுமே புருஷர்கள் முக்தியை அடைவதில்லை. பின் வேறு எதனால் முக்தி என்றால், அந்த:கரண சுத்தியினாலும், விஷய சுகங்களில் வைராக்கியங்களாலும், பரமாத்மனின் கதைகளைக் கேட்டு, அதை மனனம் செய்வதாலும், மெய்மறந்து தியானம் செய்வதாலும், அதிலிருந்து கிடைக்கும் ஞானத்தினால் மட்டுமே முக்தி கிடைக்கிறது என்கிறார்.

ஆகவே, முக்கியமான நித்யகர்மங்களை செய்தவாறு, பரமாத்மனின் மகிமைகளை பிறர் பாடும்போது தானும் கேட்டவாறு, கேட்டவற்றின் உண்மையான அர்த்தத்தினை புரிந்துகொண்டு, மனதில் தியானம் செய்துகொண்டிருப்பதாலேயே, முக்தி கிடைக்கிறது என்பதே தாசராயரின் அபிப்பிராயம் என்று அறியவேண்டும். இதே அபிப்பிராயத்தையே ஸ்ரீஜகன்னாததாசர் தன் இன்னொரு பத்யத்தில் 'ஸ்வோசித கர்மங்களா சரிசுதபலு' என்றிருக்கிறார். இவற்றிலிருந்து தெரிய வந்த விஷயங்கள் என்னவெனில் : அகத்தூய்மை, விஷய வைராக்யம், ஸ்ரவணம், மனனம், த்யானாதிகள் இல்லாமல் வெறும் தேகத்தை தண்டித்து செய்யும் விரதங்களால் ஆவதில்லை. இந்த விரத நியமங்களின் பலன், வெறும் ஸ்வர்க்கமே தவிர, அவை முக்திக்கு சாதனம் ஆவதில்லை.

பரமஸத்[1] புருஷார்த்த[2] ரூபனு
ஹரியு லோக[1]க்கெ[1] யெந்து[3] பரமா
த[3]ரதி[3] ஸது[3]பாஸனெய கை[3]வரிகி[3]த்தப[1]னு தன்ன ।
மரெது[3] த[3]ர்மார்த்தக[3]ள காமிஸு
வரிகெ[3] நகு[3]த[1]தி[3] ஷீக்[4]ரதி[3]ந்த[3]லி
ஸுரபத[1]னய ஸுயோத[4]னரிகி[3]த்தந்தெ கொடு[3]திப்ப ।।7

ஹரியு = ஸ்ரீபரமாத்மன்.

லோககெ = உலகத்திற்கு.
பரம சத்புருஷார்த்த ரூபனு = அத்யந்த சுகங்களான மோக்ஷாதி புருஷார்த்தங்களைக் கொடுக்கக்கூடிய ஸ்வதந்த்ர ஸ்வரூபத்தைக் கொண்டவன், என்று
பரமாதரதி = மிகுந்த பக்தியுடன்
ஸதுபாசனெய = எந்தவொரு பலன்களையும் எதிர்பார்க்காமல் வெறும் பகவத்ப்ரீதிக்காகவே உபாசனைகளை
கைவரிகெ = செய்பவர்களுக்கு
தன்ன = தன்னை எப்போதும் பார்க்கக்கூடியதான உலகத்தை, அதாவது முக்தியை
இத்தபனு = கொடுக்கிறான்.
தன்ன = தன்னை
மரெது = மறந்து
தர்மார்த்தகள = தர்ம = யாகாதி தர்மங்களினால் ஆகும். அர்த்தகள = பலரூபமான சுகங்களை மட்டும்
காமிஸுவவரிகெ = விரும்புபவர்களுக்கு
அதி ஷீக்ரதிந்தலி = மிக விரைவாக
சுரபதனய சுயோதனனிகெ = சுரபதனய = இந்திரனின் மகனான அர்ஜுனனுக்கும். சுயோதனனிகெ = துரியோதனனுக்கும்
இத்தந்தெ = கொடுத்ததைப் போல
கொடுதிப்ப = கொடுப்பான்.

ஸ்ரீபரமாத்மன் ஸ்வதந்த்ரன். ரமா பிரம்மாதி சராசரர்கள் நிறைந்த உலகத்திற்கு அதிபதி. அனைத்து சேதனர்களுக்கும் தர்ம, அர்த்த, காம, மோக்ஷ என்னும் நான்கு புருஷார்த்தங்களைக் கொடுப்பவன். அனைத்து பிராணிகளும் அவனின் அதீனமே என்று அறிந்து, உபாசனை செய்பவர்களுக்கு மோட்சத்தைக் கொடுத்து அருள்கிறான். பரமாத்மனை மறந்து, வெறும் தர்மங்களை செய்து, அதற்கான பலன்களை விரும்புபவர்களுக்கு, அர்ஜுன துர்யோதனர்களுக்கு கொடுத்ததைப் போல, அவர்களுக்கேற்ற பலன்களை மிகவும் விரைவாகக் கொடுக்கிறான்.

சிறப்புப் பொருள்:

ததர்த்தம் கர்ம கௌந்தேய முக்தஸங்க: ஸமாசர |
கர்மண்யேவாதிகாரஸ்தே மாபலேஷு கதாசன ||
மாகர்ம பல ஹேதுர்பூ மாதே சங்கோஸ்த்வ கர்மணி ||

என்னும் கீதா வாக்கியத்தைப் போல, பலன்களை விரும்புவதை விட்டு, கர்மங்களை செய். ஹே அர்ஜுனா! செயல்களை செய்வதற்கு மட்டுமே உனக்கு அதிகாரமே தவிர, பலன்களைப் பெறும் சுதந்திரம் இல்லை. (பலன்களைக் கொடுக்கும் அதிகாரம் பரமாத்மனுடையது மட்டுமே என்று பொருள்). ஆகையால், கர்மத்தின் பலனுக்கு நீயே அதிகாரி என்று நினைக்காதே. அப்படியெனில், கர்மங்களையே செய்யவேண்டியதில்லை என்று விடக்கூடாது - என்று ஸ்ரீகிருஷ்ணன் அர்ஜுனனுக்கு உபதேசிக்கிறான். இது போல, பலன்களை

விரும்பாமல் கர்மங்களை செய்வதற்கு, நைஷ்கர்ம்ய என்று பெயர். இத்தகைய நிஷ்காம கர்மானுஷ்டானங்களிலிருந்தே முக்தி ஆகிறது என்பது கீதா வாக்கியத்தின் பொருள்.

ஸ்ரீராகவேந்திர ஸ்வாமிகளின் கீதாவிவ்ருத்தி என்னும் வியாக்யானத்தில் இதன் அர்த்தத்தை, அபிப்பிராயத்தை, உபாசனா கிரமத்தை நன்கு விளக்கமாக சொல்லியிருக்கிறார். இடம் அதிகமாகிவிடும் என்பதால் அவற்றை இங்கு எழுதுவதற்கு சாத்தியமில்லை.

பாகவத முதலாம் ஸ்கந்தத்தில் 'நைஷ்கர்ம்யமப்யச்யுத பாவ வர்ஜிதம் நஷோபதே ஞானமலம் நிரஞ்சனம்' நிஷ்காம கர்மானுஷ்டானங்களையே செய்துகொண்டிருந்தாலும், அதிலிருந்து கிடைத்த ஞானம் தெளிவான ஞானமாக இருந்தாலும், பரமாத்மனில் திடமான பக்தி இல்லையெனில், அந்த தெளிவான ஞானமும், நிஷ்காம கர்மமும் முக்திக்கு வழியாகாது என்று சொல்லப்பட்டிருக்கிறது. ஆகையால், பக்தியில்லாமல் செய்யப்படும் செயல்கள் தக்க பலன்களைக் கொடுக்காது. பரமாத்மனை பரம பக்தியினால் உபாசனை செய்வதாலேயே முக்தி ஆகிறது என்பதை 'பரம சத்புருஷார்த்த ரூபனு ஹரியு' என்னும் வாக்கியத்தால் குறிப்பிடுகிறார்.

இதற்கான ஒரு அர்த்தம் மேலே சொல்லப்பட்டிருக்கிறது. இன்னொரு அர்த்தமும் இதற்கு உள்ளது. பரமசத்புருஷ = பரம பகவத் பக்தர்களுக்கு, அர்த்தரூபனு = செல்வம் கொடுப்பவன். அதாவது, பக்தர்கள் தாம் குசேலனைப் போல ஏழையாக இருந்தாலும், பரமாத்மனே நமக்கு செல்வம், அவனைவிட வேறு செல்வத்தை நாம் விரும்புவதில்லை என்பர். பாகவத 4ம் ஸ்கந்தத்தில் 'ஹரிரதனாத்ம தனப்ரியோரஸக்ஞ:' தன் பக்தர்களின் யோக்யதையை அறிந்த பரமாத்மன், அவர்கள் பரம ஏழையாக இருந்தாலும், தன்னையே செல்வம் என்று நினைப்பவர்கள் யாரோ - அதாவது, செல்வத்தின் மேல் அவர்களுக்கு இருக்கும் அன்பைவிட அதிகமான அன்பு தன்னிடம் வைத்து, செல்வத்தை கல், மண் ஆகியவற்றைப் போல நினைப்பார்கள் என்று அர்த்தம். பரமாத்மன் அத்தகையவர்களில் அன்பு செலுத்துவான். இதனால், பரமாத்மனை 'அதனாத்ம தனப்ரிய' என்று பாகவதத்தில் சொல்லியிருக்கிறார்கள்.

அதே அர்த்தத்தையே தாசராயர் 'ஸத்புருஷார்த்தரூப' என்று சொல்கிறார். அதுமட்டுமல்லாமல் பரமாத்மன் ஸ்வதந்த்ரன். ஜீவன் அஸ்வதந்த்ரன். பரமாத்மன் துக்கங்கள் அற்றவன். ஜீவன், ஜனன மரணாதி பற்பல துக்கங்களைக் கொண்டவன் என்று இதைப் போன்ற பல்வேறு வேறுபாடுகள் பரமாத்மன் மற்றும் ஜீவர்களிடையே இருக்கிறது என்றும், ரமாபிரம்மாதிகள் அனைவரும் பரமாத்மனின் அதினத்திலேயே இருக்கின்றனர் என்பதை அறிந்து, உபாசனை செய்வதே ஸதுபாசனை. இத்தகைய ஸதுபாசனையை செய்பவரகளுக்கு இஹபரங்களில் பரமாத்மன் தன் தரிசனத்தை கொடுக்கிறான்.

முந்தைய பத்யத்தில் சொன்ன ‘தனுவ தண்டிஸி தினதினதி சாதனவ மாள்பரிகித்தபனு ஸ்வர்க்காதி போககள’ என்னும் வாக்கியத்திலும் ‘பரம சத்புருஷார்த்த ரூபனு ஹரி’ என்று உபாசனை செய்பவர்களுக்கு தன் தரிசனத்தை எப்போதும் கொடுக்கிறான் என்னும் அர்த்தத்தினாலும் அறியவேண்டிய அர்த்தம் என்னவெனில் : தேகத்தை தண்டித்து தவம் செய்வது, நித்யமான பலன்களுக்கு அல்ல. ஏனெனில், எந்த நோக்கத்திற்காக அவன் தவம் செய்கிறானோ, அந்த வரத்தைப் பெற்ற உடனேயே அந்த தேக தண்டனையை / தவத்தை நிறுத்தி, தன் விஷய போகங்களில் ஈடுபட்டுவிடுகிறான். அப்படியில்லாமல், எந்நேரமும் மனதை பரமாத்மனிடமே வைத்து, தான் ஸ்னானம் செய்வது பகவத்சேவா, எழுவது, அமர்வது, பேசுவது என அனைத்தும் பகவத் சேவை என்றே சிந்தித்து, எப்போதும் அவனை நினைத்திருப்பவர்களுக்கு நித்யமான பலன் கிடைக்கிறது.

ஏதத்ஸம்ஸூசிதம் ப்ரம்மன் தாபத்ரய சிகித்ஸிதம் |
யதீஷ்வரே பகவதி கர்மப்ரம்மணி பாவிதம் ||
ஆமயொயஞ்ச பூதானாம் ஜாயதே யேன சுவ்ரத |
ததேவஹ்யாமயத்வர்யம் தத்புனாதி சிகித்ஸிதம் |
ஏவம் ந்ருணாம் க்ரியா யோகா: சர்வே சம்ஸ்ம்ருதி ஹேதவ: |
த ஏவாத்ம வினாஷாய கல்பந்தே கல்பிதா: பரே ||

பாகவத முதலாம் ஸ்கந்தத்தில் நாரதர் ஸ்ரீவேதவியாசரைக் குறித்து சொல்வது: ஹே பிராமணோத்தமரே! என் அனுபவத்தினால் எனக்குத் தெரிந்த விஷயம் என்னவெனில், நாம் செய்யும் அனைத்து கர்மங்களையும் பகவத் சேவையென்று நினைப்பதே நம் கஷ்டங்களுக்கான மருந்து. மனிதனைக் கொல்லக்கூடிய விஷங்களை நன்றாக சுத்தம் செய்து, மாத்திரைகளாக்கி, பெரிய நோய்களுக்கு அவற்றையே மருந்தாக மருத்துவர்கள் பயன்படுத்துகின்றனர். அதுபோலவே, தேக சுகத்திற்காக நாம் செய்யும் செயல்கள் அனைத்தும் நரகத்திற்கே சாதனமாகின்றன. அதே செயல்களை, பகவத்சேவை என்று நினைத்து செய்தால், சுத்தம் செய்த விஷ மருந்துகளைப் போல, பவரோகத்தை பரிகரித்து முக்தியைக் கொடுக்கவல்லதாகும்.

அது எப்படியெனில், நாம் ஸ்னானம் செய்யும்போது, தேகத்தை சுத்தம் செய்வதற்காக குளிக்கிறோம் என்று நினைக்காமல், தேகமானது பரமாத்மன் வசிக்கும் ஒரு ரதம் என்றும், அந்த ரதத்தை சுத்தம் செய்வதற்காக குளிக்கிறோம் என்று நினைத்தால், அதுவே முக்திக்கு சாதனையாகும். போலவே, தேகத்தை அலங்கரிப்பது, மக்கள் நம்மை புகழ்வதற்கு என்று நினைத்தால், அது நரக-சாதனை. பகவந்தன் அமரும் ரதமாகையால், பரமாத்மனை மகிழ்விப்பதற்காக ரதத்தை அலங்கரிக்கிறேன் என்று நினைத்தால் அது முக்தி-சாதனை. பக்ஷ்ய-போஜனங்களை தனக்காக செய்தால், அது நரக-சாதனை. அதே பக்ஷ்யாதிகளை, பரமாத்மனின் நிவேதனைக்காக என்று எண்ணி செய்தால், பரமாத்மன் மகிழ்ச்சியடைந்து அது முக்திக்கு சாதனையாகிறது.

இப்படி, தான் செய்யும் ஒவ்வொரு செயல்களும் சுகத்திற்காக என்று நினைத்தால், அது நரகத்திற்கே சாதனையாகும். அதையே பகவத் ப்ரீத்யர்த்தமாக செய்தால், அது

முக்திக்கு சாதனையாகிறது. இதுவே நாரதரின் வாக்கியத்திற்கு அர்த்தமாகும். இதற்கு உதாரணம், த்ருவன் மற்றும் பிரகலாதனுக்குமிடையே இருக்கும் வேறுபாடுதான்.

த்ருவன் ஐந்து மாதங்கள் தன் தேகத்தை தண்டித்து மிகவும் கஷ்டமான தவத்தினை செய்தான். பரமாத்மன், அவனுக்கு பிரத்யட்சம் ஆகி, 36,000 ஆண்டுகள் வரை பூமியை ஆள்வதற்கும், அதற்குப்பிறகு த்ருவ லோகத்தின் அதிபதியாகவும் நியமித்து வரமளித்தான். த்ருவஸ்தானமானது, ஸ்வர்க்க லோகத்தைவிட கீழான இடமாகும். 5 மாதங்கள் தவத்திற்குப் பிறகு பரமாத்மன் தரிசனம் அளித்து, என்ன வரம் கொடுத்தாரோ அதுவே அதற்குப் பலன். மறுபடி அவனுக்கு பகவத் தரிசனம் இல்லை. ஆனால், பிரகலாதன் இத்தகைய தேக தண்டனையினால் தவம் எதுவும் செய்யவில்லை.

ஆஸீன: ப்ரயடன்னஸ்னன் ஷயான ப்ரபிபன் ப்ருவன் |
நாம ஸந்தத ஏதானி கோவிந்த பரிரம்பித: ||

அமர்ந்திருக்கும்போதும், சஞ்சரிக்கும்போதும், படுத்திருக்கும்போதும், குடிக்கும்போதும், பேசும்போதும் என எப்போதும் கோவிந்தனிடம் மனதை வைத்து, மெய்மறந்து, தான் என்ன நிலையில் இருக்கிறோம் என்று தனக்கே தெரியாமல் இருந்தான். அவனுக்கு இஹத்தில் (பூமியில்) ஒரு மன்வந்தர காலத்திற்கு ஆயுளையும், அரசாட்சியையும் கொடுத்து, அதன்பிறகு, முக்தியைக் கொடுத்தான். இந்த உலகத்தில் ஒரு மன்வந்தர காலம் ஆயுளைக் கொடுத்தாலும், த்ருவனைப் போல அவனுக்கு பகவத் தரிசனம் இல்லாமல் இல்லை (அதாவது எப்போதும் இருந்தது). வாமன ரூபியான பரமாத்மனை எப்போதும் பார்த்திருந்தான். இந்த விஷயத்தில் த்ருவ, பிரகாலத இருவர் மட்டுமே இந்த உதாரணத்திற்கு பொருந்துகின்றனர் என்று நினைக்கக்கூடாது.

த்ருவனைப் போலவே தேகத்தை தண்டித்து, பிரம்மதேவரை, ருத்ரதேவரை, விஷ்ணுவைக் குறித்து தவம் புரிந்த ராவணன், ஹிரண்யகசிபு முதலான பலர் வரங்களைப் பெற்ற கதைகளைக் கேட்டால் இந்த விஷயம் புலப்படுகிறது. மேலும், சுதபஸ் என்பவன் தேவமானத்தினால் 12,000 ஆண்டுகள் தவம் செய்து, ப்ருத்னிகர்ப்ப என்னும் புத்ரனைப் பெற்றார். அந்த மகன் பரமாத்மனின் அவதாரமே ஆகும். ஆனாலும், அவரை பஜிக்கவில்லை. இந்த தம்பதிகளே அடுத்த பிறவியில் கஸ்யப - அதிதிகளாகப் பிறந்து கடினமான பயோ-விரதத்தை செய்து வாமனரூபியான பரமாத்மனை மகனாகப் பெற்றனர். அப்போதும் அவரை அவதாரமாகப் பார்க்காமல், புத்ர பாசத்தில் இருந்துவிட்டதால், அவர்களே மறுபடி வசுதேவ தேவகியாகப் பிறந்தனர். அந்தப் பிறவியிலும் பரமாத்மனிடம் த்ருடமான பக்தி வந்தபிறகே, அவர்களுக்கு முக்தி கிடைத்தது.

விஸ்வாமித்திரர் கடுந்தவம் புரிந்து பிரம்மரிஷி ஆனார். இத்தகைய உதாரணங்கள் பல இருக்கின்றன. நாரதர், அம்பரீஷ, பிரகலாதன் ஆகியோர் வெறும் பக்தியினாலேயே, அதாவது கடுந்தவம் முதலான தேகத்தை தண்டிக்கக்கூடிய

செயல்களை செய்யாமலேயே பரமாத்மனின் தரிசனத்தைப் பெற்ற கதைகளைக் கேட்டால், இதன் அர்த்தம் மேலும் தெளிவாகப் புரிகிறது. பரிக்ஷித் ராஜன் வெறும் ஸ்ரவண, மனனத்தினாலேயே முக்தியை அடையவில்லையா? இவற்றையெல்லாம் உத்தேசித்தே தாசராயர், தேகத்தை தண்டித்து சாதனை செய்பவர்களுக்கு ஸ்வர்க்காதி போகங்களையும், ஹரியை சத்புருஷார்த்தன் என்று பஜிப்பவர்களுக்கு தன்னையே கொடுக்கிறான் என்றும் கூறுகிறார்.

இப்படியாக, பரமாத்மன், முக்தியைக் கொடுப்பவன் என்பதை மறந்து 'தர்மார்த்தகளனு காமிஸுவவரிகெ' - அதாவது, யாக தானாதி தர்மங்களை செய்பவர்களுக்கு வரும் பலன் என்ன? ஐஸ்வர்யாதி சுக, செல்வங்கள் கிடைக்குமா? அதை மட்டுமே வேண்டுபவர்களுக்கு, சிரித்தவாறு (அதாவது, குபேரனிடம் சென்று ஏழை ஒருவன் ஒரு வேளை உணவிற்கு காசு கேட்பதைப் போல, முக்தியைக் கொடுக்கக்கூடிய தன்னிடம், இப்படி தற்காலிகமான பலன்களைக் கேட்கிறானே என்று சிரித்தவாறு), மிக விரைவாக துரியோதனனுக்கு பலன்களைக் கொடுத்ததைப் போல கொடுப்பான்.

தர்மாத்தங்களைக் கேட்காமல், உன் அருளே எனக்கு வேண்டும் என்று கேட்பவர்களுக்கு, இந்திரனின் மகனான அர்ஜுனனுக்கு கொடுப்பதைப் போல கொடுப்பான் என்கிறார் தாசராயர். 'சுரபதனய சுயோதனரிகித்தந்தெ கொடுதிப்ப' என்கிறார். பாரதத்தில் உத்யோக பர்வத்தில் வரும் ஒரு சம்பவத்தை இது நமக்கு தெரிவிக்கிறது. அது என்னவெனில்:

பாண்டவர்கள் தங்கள் அஞ்ஞான வாசத்தை முடித்து, விராடராஜனின் பட்டணத்தில் அபிமன்யுவின் திருமணத்தை முடித்துக்கொண்டு, உபப்லாவ்ய பட்டணத்தில் வசித்திருந்தபோது, தம் பாகமான நிலத்தை துரியோதனன் கொடுக்கப்போவதில்லை என்றும், தமக்கும் துரியோதனாதிகளுக்கும் போர் உண்டாகப்போவது நிச்சயம் என்று அறிந்தபிறகு, அர்ஜுனன், ஸ்ரீகிருஷ்ணனை போருக்கு உதவுமாறு அழைப்பதற்காக துவாரகைக்குப் புறப்பட்டான். இதை தன் ஒற்றர்கள் மூலம் அறிந்த துரியோதனன், அர்ஜுனனுக்கு முன்னர் தானே ஸ்ரீகிருஷ்ணனைக் கண்டு அவன் உதவியைப் பெறவேண்டும் என்று நினைத்து, உடனடியாக துவாரகைக்குப் புறப்பட்டான். இந்த இருவரும் ஒரே சமயத்தில் புறப்பட்டாலும், தந்திரனனான துரியோதனன் தானே முதலில் அங்கு போய் சேரவேண்டும் என்று தன் ரதத்தை மிகவும் விரைவாக செலுத்தி துவாரகைக்கு வந்து சேர்ந்தான். இவர்கள் இருவரும் ஒரே நோக்கத்துடன் தன்னைக் காண வருகிறார்கள் என்பதை அறிந்த ஸ்ரீகிருஷ்ணன், அவர்களின் யோக்யதைக்கேற்ப பலன்களைக் கொடுப்பதற்காக, தன் மெத்தை மேல் படுத்து தூங்குவதாக காட்டிக்கொண்டான்.

முதலில் அங்கு வந்த துரியோதனன், ஸ்ரீகிருஷ்ணன் படுத்திருப்பதைக் கண்டு, தான் ராஜாதிராஜன் என்னும் கர்வத்தினால் ஸ்ரீகிருஷ்ணனின் தலைமாட்டில் இருந்த ஒரு இருக்கையில் சென்று அமர்ந்தான். சிறிது நேரத்தில் அங்கு வந்த அர்ஜுனன், ஸ்ரீகிருஷ்ணன் படுத்திருப்பதைக் கண்டு, பக்தி மரியாதையுடன் அவன்

கால்மாட்டில் நின்றுகொண்டான். இதிலிருந்து அர்ஜுன துரியோதனர்களின் யோக்யதை (தகுதி) தெரிகிறதல்லவா?. ஶ்ரீகிருஷ்ணனும் தன் தூக்கத்திலிருந்து விழிப்பதைப் போல விழித்து, தன் எதிரே நின்றிருந்த அர்ஜுனனைக் கண்டு, ‘அர்ஜுனா! எப்போது வந்தாய்?’ என்று கேட்டான். உடனடியாக துரியோதனன், ‘கிருஷ்ணா! நானும் வந்திருக்கிறேன். நான்தான் முதலில் வந்தேன்’ என்றான். கிருஷ்ணன் ‘ஓஹோ. மிகவும் சந்தோஷம். ஆனால், நீ முதலில் வந்தாய் என்று சொல்ல வேண்டியதில்லை. நீ அமர்ந்த ஆசனத்திலிருந்தே அது தெரிகிறது. அர்ஜுனன் முதலில் வந்திருந்தால், இருந்த ஒரு ஆசனத்தில் அவன் அமர, நீ நின்றிருக்க வேண்டியிருக்கும். இதிலிருந்தே நீ முதலில் வந்திருக்கிறாய் என்று எனக்கு புரிகிறது. உங்கள் இருவரின் கோரிக்கைகளை முழுமையாக நிறைவேற்றுவதே என் கடமை. ஆனாலும், நான் முதலில் பார்த்தது அர்ஜுனனையே. ஆகவே, அவன் கோரிக்கையை முதலில் கேட்டுவிட்டு பிறகு உன்னிடம் வருகிறேன், துரியோதனா. சரி அர்ஜுனா, நீ இங்கு வந்த நோக்கம் என்னவென்று சொல்’. என்றான்.

அர்ஜுனன் : எங்களுக்கும் கௌரவர்களுக்கும் நடக்கப்போகும் போரில் நீ எங்களுக்கு உதவவேண்டும் என்று கேட்கவே வந்தேன்.

கிருஷ்ணன் : துரியோதனா, நீ வந்த நோக்கம் என்ன?

துரியோதனன் : நானும் அதைக் கேட்கவே வந்தேன்.

கிருஷ்ணன் : ஒரே விஷயத்தில் நீங்கள் இருவரும் என்னை சிக்க வைத்திருக்கிறீர்கள். ஆனாலும் பிரச்னையில்லை. உங்கள் இருவருக்குமே உதவுகிறேன் என்று முதலிலேயே சொல்லியிருக்கிறேன் அப்படியே செய்வேன். அர்ஜுனா! நிராயுதபாணியாக நான் ஒருவனே ஒரு பக்கத்தில் நிற்பேன். கோபிகா ஸ்த்ரீயர்களிடம் பிறந்த என் மக்களான 10 லட்சம் பேர் ஆயுதங்களை ஏந்தி ஒரு பக்கத்தில் நின்று போரிடுவர். இதில் நீ எதை விரும்புகிறாய்?

அர்ஜுனன் : நிராயுதபாணியான நீயே எனக்கு வேண்டும்.

துரியோதனன் : எனக்கு வேண்டியது சைன்யங்களே. அதனால் நான் மகிழ்ச்சியடைவேன். (மனதில்) நிராயுதபாணியான கிருஷ்ணனால் எனக்கு என்ன உதவி கிடைத்துவிடப் போகிறது. அர்ஜுனன் ஏமாந்துவிட்டான் என்று எண்ணி, சைன்யங்களுடன் அங்கிருந்து புறப்பட்டான். ஶ்ரீகிருஷ்ணனின் உதவியால் பாண்டவர்கள் அந்தப் போரினில் வென்றனர். அர்ஜுன துரியோதனர்களின் பக்தி பாவத்தை உலகிற்குத் தெரியப்படுத்தவே ஶ்ரீகிருஷ்ணன் இந்த நாடகத்தை நடத்தினான். இதே அர்த்தத்தையே தாசராயர் ‘சுரபதனய சுயோதனனகித்தந்தெ கொடுதிப்பனு’ என்றிருக்கிறார்.

**ஜக³வனெல்லவ நிர்மிஸுவ நா**
**ந்மொகனொளகெ³ தானித்து³ ஸலஹுவ**
**க³க³னகேஷனொளித்து ஸம்ஹரிஸுவனு லோகக³ள ।**

**ஸ்வக³தபே⁴த³ விவர்ஜிதனு ஸ**
**ர்வக³ ஸதா³னந்தெ³ய்கதே³ஹனு**
**ப³கெ³ப³கெ³ய நாமத³லி கரெஸுவ ப⁴குதரனு பொரெவ ||8**

(ஸ்ரீஹரி) ஜகவனெல்லவ = உலகங்கள் அனைத்தையும்
நான்மொகனொளகெ = நான்முக பிரம்மனில் உள்ளே, இருந்துகொண்டு
நிர்மிஸுவ = படைப்பான்
ஸலஹுவ = தான் காப்பாற்றுவான்
ககன கேஷனொளித்து = ருத்ரதேவரில் இருந்து
லோககள = அனைத்து உலகங்களையும்
சம்ஹரிஸுவனு = அழிப்பான்
ஸ்வகதபேதவிவர்ஜிதனு = தன் ரூபங்களில் பரஸ்பரம் வேறுபாடுகள் இல்லாதவன்
சர்வக = அனைத்து இடங்களிலும் இருப்பவன்
சதானந்தைக தேஹனு = அனைத்து காலங்களிலும் ஆனந்த ஸ்வரூபம் உள்ளவன்
பகெபகெய நாமதலி = அனைத்து எழுத்துக்களாலும் அழைக்கப்படுபவன். பிரம்ம, ருத்ர, இந்திரன் முதலான பெயர்களும் அவனையே குறிக்கின்றன. மத்ஸ்ய, கூர்ம, ராம, கிருஷ்ண என பல பெயர்களால்
கரெசுவ = அழைக்கப்படுகிறான்
பக்தரனு = தன் பக்தர்களை
பொரெவ = காப்பாற்றுகிறான்

ஸ்ரீபரமாத்மன், பிரம்மதேவருக்குள் இருந்து அனைத்து உலகங்களையும் படைக்கிறான். தானே விஷ்ணு ரூபத்தினால் அனைவரையும் காக்கிறான். ருத்ர தேவருக்குள் இருந்து அனைத்தையும் அழிக்கிறான். தன் அவதார, மூல, பிம்ப, க்ரியா ரூபங்களுக்குள்ளும், தன் தேகத்தில் இருக்கும் உறுப்புகளுக்குள்ளும் எவ்வித வேறுபாடுகளும் இல்லாதவன். அனைத்து இடங்களிலும் நிலைத்திருப்பவன். சச்சிதானந்த ஸ்வரூபன். பற்பல பெயர்களால் அழைக்கப்படுபவன். தன் பக்தர்களை பல விதங்களில் காப்பாற்றுபவன்.

பிரம்மணிஸ்தோ ஸ்ருஜத்விஷ்ணு: ஸ்தித்வா ருத்ரேத்வ பக்ஷயத் |
ப்ருதக் ஸ்தித்வா ஜகத்பாதி தத்பிரம்மாத்யயோ ஹரி: ||

ஸ்ரீபரமாத்மன் பிரம்மதேவரின் தேகத்தில் இருந்து படைக்கிறான். ருத்ரதேவரில் நின்று அழிக்கிறான். தான் தனியாக நின்று அனைத்தையும் காக்கிறான். இப்படி விஷ்ணுவே, பிரம்ம, ருத்ரன் என்று அழைத்துக்கொண்டு ஸ்ருஷ்ட்யாதிகளை செய்கிறான் என்று பிரம்மாண்ட புராணத்தின் வாக்கியம் சொல்கிறது. மேலும்,

விஷ்ணுரேவ ஹரிஸ்ஸாக்ஷாத் தாவுபௌன ஹரி: ஸ்ம்ருதௌ |
ஆவிஷ்டரூபௌ விக்ஞேஸௌ ப்ரம்மருத்ராபிதாயகௌ ||

என்னும் விஷ்ணு ரகசியத்தின் ஆதாரத்தினால் தெரிய வரும் விஷயம் என்னவெனில்: பிரம்மருத்ரரே விஷ்ணு என்று அறியக்கூடாது. விஷ்ணு

நாமகனான பரமாத்மனே பிரம்ம, ருத்ரர்களில் ஒரு விசேஷ அம்சத்துடன் இருந்து, பிரம்ம, ருத்ரர் என்று அழைத்துக் கொள்கிறான் என்று நினைக்கவேண்டும்.

ஸ்வகதபேத விவர்ஜித - மகாபாரத தாத்பர்ய நிர்ணயத்தில்

நிர்தோஷ பூர்ண குணவிக்ரக ஆத்மதந்த்ரோ நிஸ்சேதனாத்மக ஷரீர குணைஸ்சஹீன ।
ஆனந்தமாத்ர கரபாத முகோதராதி; சர்வத்ர ச ஸ்வகதபேத விவர்ஜிதாத்மா ।।

என்று சொல்லியிருக்கிறார். இதன் பொருள்:

ஸ்ரீஹரி, தோஷங்கள் அற்ற அனேக குணங்களை பூரணமாக உள்ள ஸ்வரூபன். ஸ்வதந்த்ரன். சேதனாத்மக சரீரம் இல்லாதவன். வெறும் ஆனந்தத்தையே கொடுக்கக்கூடிய கை, பாதம், முகம், வயிறு ஆகியவற்றைக் கொண்டவன். அனைத்து இடங்களிலும் இருக்கக்கூடிய ரூபங்களில் பேதங்கள் இல்லாதவன். தன் அங்கங்களில், நம்மைப் போல கண்களாலேயே பார்க்க வேண்டும், காதுகளாலேயே கேட்க வேண்டும் என்னும் தர்மங்கள் அவனுக்கு இல்லை. நாம் கை, கால்களினால் செய்யக்கூடிய வேலைகளை, பரமாத்மன் தன் ஒரு முடியினாலும், நகத்தினாலும் கூட செய்யத்தக்கவன். ஆகையால் 'ரோமஸ்ச பூர்ண: நகஸ்சபூர்ண:' ஆகிய வாக்கியங்களால் பரமாத்மனை வேதங்கள் புகழ்கின்றன.

சர்வக - அனைத்து இடங்களிலும் நிலைத்திருப்பவன். 'அந்தர்பஹிஸ்ச தத்சர்வம் வியாப்த நாராயணாஸ்தித:' என்னும் வேத வாக்கியத்தின்படி, உள்ளே, வெளியே, அனைத்து இடங்களிலும் என பரமாத்மன் வியாபித்திருக்கிறான். 'ஸதானந்தைக தேஹனு' அனைத்து காலங்களிலும் ஆனந்தத்தை மட்டுமே அனுபவிக்கும் சரீரத்தை உள்ளவன் என்று பொருள். இதற்கு ஆதாரம், பாகவத 11ம் ஸ்கந்தத்தின் தாத்பர்யத்தில் :

அனத்ருத்வம் ஹரேர் து:கானத்ருத்வா துச்யதே ஸதா ।
விஷயான்விதாபி பூர்ணத்வாத்ஸ்வரூபானந்த போகின: ।
ஸுகமத்தேவஹி ஸதா ஸர்வத்ராபிதம் விபு: ।।
என்று சொல்லியிருக்கிறார்.

மற்றும்:

த்வா ஸு பர்ணா சயுஜா சகாயா சமானம் வ்ருக்ஷம் பரிஷஸ்வஜாதே ।
தயோரன்ய: பிப்பலம் ஸ்வாத்வத்வனஷ்னன்னயோ அபிஷாகதீதி ।।

என்னும் ஸ்ருதியில், ஒரு மரத்தில் இரு பறவைகள் இரு கூடுகளை கட்டிக்கொண்டு வசித்துவந்தன. அதில் ஒரு பறவை அந்த மரத்தில் இருந்த சுவையான பழங்களை சாப்பிட்டுவந்தது. ஆனாலும் அது பலவீனமாக இருந்தது. மற்றொரு பறவை அந்த பழங்களை தின்னாவிட்டாலும், அது திடகாத்திரமாக இருந்தது. இந்த வாக்கியத்தில், ஜீவ, பரமாத்மனின் சிறப்புகள்

சொல்லப்பட்டிருக்கின்றன. இதில் ஜீவன், உலகம் என்னும் மரத்தில் இருக்கும் தேகம் என்று கூட்டில், பாவ புண்ணியங்களின் பலன்களான, சுக துக்கங்களை அனுபவித்து வாழ்கிறான் என்று சொல்லப்பட்டிருக்கிறது.

பரமாத்மன் பலன்களை உண்பதில்லை. அதாவது, அவனுக்கு சுக துக்கங்கள் இரண்டும் கிடையாது என்பது பொருள். ஸ்ரீமதாசார்யர் உதாரணத்துடன் சொல்லும் விஷயம் என்னவெனில்: பரமாத்மன் 'அனத்தா' அதாவது உண்பவனல்ல. துக்கத்தை அனுபவிப்பதில்லை ஆதலால் 'அனத்தா' என்று அவருக்குப் பெயர். 'அத்தா' என்னும் பெயரும் உண்டு. விஷய போகங்கள் இல்லை என்றாலும், ஸ்வரூபானந்தத்தை தினந்தோறும் அனுபவித்துக் கொண்டிருக்கும் ஸ்வாமி, அனைத்து ஜீவர்களில் இருக்கும் சுகங்களை மட்டும் தினந்தோறும் அனுபவித்து வருகிறான். 'ஸ்வாத்வத்தி' என்னும் பதத்தினால் ஜீவன்கூட சுவையான பழங்களை மட்டுமே உண்கிறான் என்று வேதங்களில் சொல்லப்பட்டிருக்கிறது. இதன் பொருள் என்னவெனில்: சுவையில்லாத பதார்த்தங்களை சுவையுள்ளவையாக சிந்தித்து ஜீவன் உண்கிறான். ஆகையால், ஆனந்த ஸ்வரூபமான தேகத்தினால் கூடியிருக்கிறான் என்று அறியவேண்டும். இதுவே மேற்சொன்ன பாகவத ஸ்லோக அர்த்தம். இதையே தாசராயர் - சதானந்தைக தேஹனு என்று பாடியிருக்கிறார்.

பக்தரனு பொரெவ - அனைத்து விதங்களிலும் பக்தர்களைக் காக்கிறான். அல்லது 'பகெபகெய நாமதலி கரெசுவ பகுதரனு' என்று ஒரே வாக்கியமாக இதை சொல்லலாம். ராம, கிருஷ்ண, வேதவியாஸ, விட்டல, ஸ்ரீனிவாஸ, நாரசிம்ம ஆகிய பற்பல பெயர்களால் பரமாத்மனை அழைத்தவாறு, பஜனை செய்துகொண்டிருக்கும் தன் பக்தர்களை 'பொரெவ' அனைத்து காலங்களிலும் காப்பாற்றுவான் என்று பொருள்.

**ஒப்ப$^{3}$னலி நிந்தா$^{1}$டு$^{3}$வனு ம**
**த்தொப்ப$^{3}$னலி நோடு$^{3}$வனு பே$^{3}$டு$^{3}$வ**
**நொப்ப$^{3}$னலி நீடு$^{3}$வனு மாதாடு$^{3}$வனு பெ$^{3}$ரகா$^{3}$கி$^{3}$ |**
**அப்ப$^{3}$ரத$^{3}$ ஹெத்தெ$^{3}$ய்வனிவ ம**
**த்தொப்ப$^{3}$ரனு லெக்கி$^{1}$ஸனு லோகதொ$^{3}$**
**ளொப்ப$^{3}$னெ தா பா$^{3}$த்$^{4}$ய பா$^{3}$த$^{4}$கனாஹ நிர்பீ$^{4}$த ||9**

ஒப்பனலினிந்து = ஒருவரின் சரீரத்தில் இருந்துகொண்டு
ஆடுவனு = ஆடுவான்
மத்தொப்பனலி = இன்னொருவரின் சரீரத்தில் இருந்துகொண்டு
நோடுவனு = பார்க்கிறான்
பேடுவ = வேண்டுகிறான்
ஒப்பனலி = இன்னொருவரில் இருந்துகொண்டு
நீடுவனு = கொடுக்கிறான்
பெரகாகி = வியப்புடன், பேசுகிறான்
இவ = இவன்
அப்பரத = இடியுடன்

ஹெத்தெய்வ = தேவோத்தமன்
மத்தொப்பரனு = தேவ, தைத்ய ஆகியோரை
லெக்கிஸனு = லட்சியம் செய்வதில்லை
நிர்பீத = எப்போதும், எந்த இடத்திலும், யாரிடமும் பயப்படாதவன் இந்த பரமாத்மன்
பாத்ய பாதகனு = சம்பந்தப்பட்டவனாக
ஆஹ = இருக்கிறான்

பொருள்:
ஒருவன் உள்ளிருந்து விளையாடுகிறான். இன்னொருவரின் உள்ளிருந்து பார்க்கிறான். மற்றொருவரின் உள்ளிருந்து வேண்டுகிறான். இன்னொருவரின் உள்ளிருந்து கொடுக்கிறான். ஒருவருக்குள் இருந்து வியப்படைகிறான். பயங்கரமாக அனைவரையும் பயமுறுத்தும் காளி முதலான தேவதைகளைவிட மிகப்பெரிய தேவனாக இருக்கிறான். ஒருவரையும் லட்சியம் செய்யாதவன். பயமில்லாமல் தான் ஒருவனே இந்த உலகத்தில் பாத்யனாக (சம்பந்தப்பட்டவனாக) இருக்கிறான்.

சிறப்புப் பொருள்:
ஒப்பனலி நிந்தாடுவனு - சிறுவர்களில் இருந்துகொண்டு பாலலீலைகளை செய்கிறான். தந்தை போன்றவரில் நின்று, அதை பார்க்கிறான். அல்லது, 'ஒப்பனலி நிந்து' என்றால் கிருஷ்ணாதி ரூபனாக இருந்து பாலலீலைகளை செய்கிறான். வசுதேவரில் இருந்து அதை பார்க்கிறான். யாசகனின் உள்ளிருந்து வேண்டுகிறான். கொடுக்கும் மனிதரில் இருந்து அதை கொடுக்கிறான். அல்லது, வாமனாதி ரூபங்களால் வேண்டுகிறான். பலி சக்ரவர்த்தியின் உள்ளிருந்து கொடுக்கிறான். கிருஷ்ணாதி ருபங்களால் கோவர்த்தன மலையைத் தூக்கி, காளிங்க மர்த்தன ஆகியவற்றை செய்து, நந்தகோபி, யசோதை ஆகிய கோபியர்களில், ரிஷி முனிவர்களில் இருந்து அதைப் பார்த்து வியந்து மகிழ்ச்சியடைகிறான்.

தைத்ய தானவர்களுக்கு நாரசிம்ம ரூபத்தினால் பயங்கர சப்தம் செய்தவாறு, இவனைவிட வேறு பெரிய தேவதை இல்லை என்று சொல்லியவாறு, அவர்களைக் கொல்கிறான். பயம் என்பதே இல்லாமல், ஒருவரில் நன்மையாகவும் இன்னொருவரில் கேடாகவும் இருக்கிறான். அதாவது, ராவண, கம்சர்களில் இருந்து கொன்று, கொல்லப்படுகிறான். ராம கிருஷ்ணாதி ரூபங்களால் கொல்லுகிறான். பாகவத 7ம் ஸ்கந்தத்தில் 'ஸ்வமாயா குணமாவிஷ்ய பாத்ய பாதகதாங்கத:' ஸ்லோகத்திலிருந்து மேற்கண்ட பொருள் விளங்குகிறது. கேடு விளைவிப்பவர்களின் தேகத்தில் கேடாக இருப்பதால், பரமாத்மனுக்கு சரீர சம்பந்தமான துக்கங்கள் வருகின்றதோ என்னவோ என்னும் சந்தேகத்தை, ஸ்ரீமதாசார்யர் தகுந்த ஆதாரத்தினால் நிவர்த்தி செய்கிறார்.

மேற்சொன்ன ஸ்லோகத்தின் தாத்பர்யத்திலேயே 'பாத்யாதிஸ்தோ ஹரிர்நித்யம் பாத்யதாதிக தேத்யபி | கீயதேனது பாத்யத்வாதி தோஷயுதத்வத: இதிபவிஷ்யத்வர்வணி'. தேகத்தில் கேடாக இருக்கிறான் என்று சொல்கிறானே தவிர, உண்மையாக அவனே பாதிக்கப்படுவதில்லை. ஏனெனில், சரீரகரமான

எவ்வித துக்கங்களும் பரமாத்மனை பாதிப்பதில்லை. அனைவரின் தேகங்களிலும் நிர்லிப்தனாக (சம்பந்தமில்லாமல்) பரமாத்மன் இருக்கிறான். மேலும் : 'ததிஸ்த க்ருதவத்காஷ்டே வன்ஹிவச்ச ஜனார்த்தன: | தேஹேந்திரியாஸூ ஜீவேப்யோ விவிச்ய ஞாயதேனத்விதிச '. தயிருக்குள் வெண்ணையும், கட்டைக்குள் நெருப்பும் எப்படி மறைந்திருக்கிறதோ, தயிரைக் கடைந்து காய்ச்சினால் எப்படி நெய் வேறாக வெளிவருகிறதோ, அதுபோலவே பரமாத்மனும் எல்லா இடத்திலும் இருந்தாலும் மறைந்திருந்து, தியானாதிகளால் பூஜிக்கும் பக்தர்களுக்கு மட்டும் காட்டிக் கொள்கிறான் என்று ஹரிவம்சத்தில் பவிஷ்ய பர்வத்தில் சொல்லப்பட்டிருக்கிறது என்று ஸ்ரீமதாசார்யர் சொல்கிறார்.

ஆனால், ஒரு தேகத்தில் பரமாத்மன் இருக்கிறான் என்றால், அந்த தேகத்திற்கு வரும் துக்கங்கள் பரமாத்மனை எப்படி பாதிக்காது என்று சொல்கிறீர்கள் என்று கேட்டால்: தாத்பர்ய மூன்றாம் ஸ்கந்தத்தில்,

துர்பகாதி ஷரீரஸ்தஸ்யாபி தத்தோஷாஸ்பர்ஷ ஏவன்மஹிமெத்யர்த்த: |
கதம் நதுக்கே ஸபவேத்துக்கெசேத்தீஷ்வர: குத: மஹிமா பரமஸ்யெஷ யத்தேஹஸ்தோ நபாத்யதே |
யததுக்கேஸ ஈஷானோ யாயேதி மஹிமோச்யதே ||

அதாவது, நிர்பாக்யமான மக்களில் தேகத்தில் இருந்தாலும், அந்த தேகத்திற்கு வரும் தோஷங்களின் சம்பந்தம் இல்லாமல் இருப்பதே அவனது மகிமையாகும். ஒரு தேகத்தில் இருந்தபிறகு, அந்த தேகத்திற்கு சம்பந்தமான பந்தனங்களில் சம்பந்தப்படாமல் இருப்பது எப்படி? துக்கமடையாமல் இருப்பது எப்படி? அப்படி துக்கமடைந்து விட்டால் அவன் எப்படி ஈஸ்வரன் ஆனான்? பரமாத்மன் தேகத்தில் இருந்தாலும், நிர்லிப்தனாக (தனக்கும் அதற்கும் சம்பந்தம் இல்லாமல்) இருக்கிறான் என்று பல ஸ்ருதி ஸ்ம்ருதி வாக்கியங்கள் சொல்கின்றன. இப்படியாக, தேகங்களில் இருந்தாலும், அதற்கு வரும் துக்கங்களில் சம்பந்தப்படாமலேயே இருக்கிறான் என்பதே அவனது மகாமகிமை என்று மேற்கூறிய ஸ்லோகத்தின் அர்த்தமாகும். இதே அர்த்தத்தையே தாசராயர், 'தானொப்பனெ பாத்யபாதகனாஹ நிர்பீத' என்ற வாக்கியத்தில் விளக்குகிறார்.

**ஷரணஜன மந்தா³ர ஸாஸ்வத**
**க¹ருணி கமலாகாந்த காமத³**
**பரமபாவனதர ஸுமங்க³லசரித பா¹ர்த்தஸக² |**
**நிருபமானந்தா³த்ம நிர்க³த¹**
**து³ரிததே³வ வரேண்யனெந்தா³**
**த³ரதி³ க¹ரெயலு ப³ந்தொ³த³கு³வனு த¹ன்னவர ப³ளிகெ³ ||10**

ஷரணஜன மந்தார = தன்னை சரணடைந்தவர்களுக்கு ஸ்ரீஹரி கல்பவ்ருக்ஷம் போலிருப்பவன்
சாஸ்வத கருணி = பக்தர்களில் திடமான கருணையுள்ளவன்
கமலாகாந்த = லட்சுமியின் கணவன்

காமத = நம் விருப்பங்களை பூர்த்தி செய்பவன்
பரமபாவனதர = அத்யந்த பவித்ர ரூபத்தைக் கொண்டவன் (அல்லது)
பரமபாவனதர சுமங்கலசரித = அத்யந்த பவித்ரமான, சுமங்கலமான சரிதங்களைக் கொண்டவன்
பார்த்தசக = அர்ஜுனனின் நண்பன்
நிருபமானந்தாத்ம = உவமைகளே இல்லாத ஆனந்த ஸ்வரூபன்
நிர்கததுரித = துக்கங்கள் இல்லாதவன்
தேவவரேண்யனெந்து = பிரம்மாதி தேவதைகளால் வணங்கப்படுபவன் என்று
ஆதரதி = பக்தி / மரியாதையுடன்
கரெயலு, தன்னவர பளிகெ = அழைத்தால், தன் பக்தர்களின் சமீபத்தில்
பந்து ஒதகுவனு = ஆபத்து காலங்களில் பக்தர்களைக் காப்பாற்றுவதற்கு வந்து நிற்பான்.

பொருள்:
பக்தர்கள் தங்களின் ஆபத்து காலங்களில், 'ஹே, அபயம் கேட்பவர்களின் கல்பவ்ருக்ஷனே, திடமான கருணை உள்ளவனே. லட்சுமிபதியே. பக்தர்களின் இஷ்டார்த்தங்களை நிறைவேற்றுபவனே, பரம பவித்ரமான மங்கல சரித்திரங்களைக் கொண்டவனே. ஹே பார்த்தனின் நண்பனே. உவமையில்லாத ஆனந்த ஸ்வரூபனே. துக்கங்களை போக்குபவனே. தேவதைகளால் வணங்கப்படுபவனே. என்னை காப்பாற்று' என்று பக்தியுடன் அழைத்தால், உடனடியாக பக்தர்களின் அருகில் வந்து, அவர்களை காப்பாற்றுவான்.

சிறப்புப் பொருள்:
பக்தவத்ஸலனான ஸ்ரீபரமாத்மனை யார் தமது ஆபத்து காலங்களில், தமது ஸ்வதந்த்ர கர்த்ருத்வ புத்தியை விட்டு, நீயே கதி என்று அவனடி சேர்ந்தால் உடனடியாக அவர்களை காப்பாற்றுகிறான். இதற்கு உதாரணம்: திரௌபதியின் வஸ்த்ர அபஹரண சமயத்தில், துச்சாதனன் அவளது புடவையை இழுக்க, அவள் தன் மானத்தை காக்க முற்பட்டபோது, ஸ்ரீகிருஷ்ணன் அவளை காப்பாற்ற வரவில்லை. எப்போது இரு கை கூப்பி 'ஹே கிருஷ்ணா! த்வாரகா வாசனே! யாதவ நந்தனனே! என்னைக் காப்பாற்று' என்று தன் முயற்சியை விட்டு வேண்டினாளோ, அப்போது ஸ்ரீகிருஷ்ணன் அவளது வஸ்திரத்தை முடிவில்லாததாக மாற்றி அவள் மானத்தை காப்பாற்றினான்.

கஜேந்திரன் முதலையிடம் அகப்பட்டு ஓராயிரம் ஆண்டுகள் வரை தான் அதிலிருந்து வெளிவர முயன்றும் முடியாமல், இறுதியில் 'நாராயணா அகிளகுரோ பகவன் நமஸ்தே' என்று பரமாத்மனை வேண்டினானோ, உடனடியாக அப்போதே பரமாத்மன் தரிசனம் அளித்து முதலையைக் கொன்று கஜேந்திரனை காப்பாற்றினான். பிரகலாதனை, ஹிரண்யகசிபு தான் கொல்வதாக தீர்மானித்து, மகனிடம் இப்படி கேட்டான்.

ஹிரண்யகசிபு : ஹே துராத்மா! என்னை விட உத்தமனான ஈஸ்வரன் இருக்கிறான் என்று சொல்கிறாயே, அவன் எங்கு இருக்கிறான்?

பிரகலாதன்: தந்தையே! ‘சர்வத்ர’ அவன் எல்லா இடங்களிலும் இருக்கிறான்.

ஹிரண்யகசிபு : ’யதி ஸ ஸர்வத்ர! கஸ்மாத் ஸ்தம்பே நத்ருஷ்யதே?’ அப்படி எல்லா இடங்களிலும் இருப்பது உண்மையானால், இந்த கம்பத்தில் ஏன் தெரிவதில்லை?

பிரகலாதன்: ’ஸ்தம்பேன த்ருஷ்யதே’. ’ஸ்தம்பதரஸே! அல்லியு காணுவனு’ ஹே தூணின் அரசனே, கண்டிப்பாக இந்த தூணிலும் இருக்கிறான். (ஸ்தம்பதரஸே என்று சொல்வது, பரமாத்மன் தன்னில் இருக்கிறான் என்று எப்படி அந்த ஜடமான தூணுக்குத் தெரியாதோ, அதைப் போலவே நீயும் ஜடமாக இருக்கிறாய். அதாவது, ஞானசூன்யமாக இருக்கிறாய். ஆகையால், அவன் உனக்குத் தெரியவில்லை - என்று பொருள்).

ஹிரண்யகசிபு: ஹே அறிவுகெட்டவனே. கண்டபடி பேசும் உன் தலையை, இதோ இந்த வாளினால் கத்தரிக்கிறேன். அந்த ஹரி இருப்பது நிஜமானால் உன்னை காப்பாற்றட்டும். என்று சொல்லி வாளேந்தி ஹிரண்யகசிபு வர, பிரகலாதன் பயமே இல்லாமல், தன் நலனை பரமாத்மனிடம் ஒப்படைத்து, தியானித்தவாறு நின்றுவிட்டான். அப்போது பரமாத்மன் நரசிம்ம ரூபத்தினால் ஹிரண்யகசிபுவைக் கொன்று பிரகலாதனை காப்பாற்றினான். இவையெல்லாம் புராண கதைகள் என்று சொல்லி உதாசீனம் செய்யக்கூடாது.

தற்போது 100-200 ஆண்டுகளுக்கு முன்பாகவும்கூட இத்தகைய அற்புதங்கள் நடந்திருக்கின்றன என்று பக்தர்களின் சரித்திரங்களைப் பார்த்தால் தெரிகிறது. ராமதாசர், அரசுப் பணத்தை பயன்படுத்தி பத்ராசல ராமதேவரின் கோயிலைக் கட்டிவிட, அந்தப் பகுதியின் அரசன் கோபம் கொண்டு, ராமதாசரை சிறையில் அடைக்க, ராம லட்சுமணரே அந்த அரசனிடம் வந்து, ராமதாசர் செலவு செய்த பணத்தை அந்த அரசனுக்கு திருப்பிக் கொடுத்து, ராமதாசரை காப்பாற்றினர் என்னும் சரித்திரத்தை பார்க்கிறோம்.

இத்தகைய சரித்திரங்களை பக்தி விஜயம் என்னும் கிரந்தத்தில் நிறைய பார்க்கலாம். இதே ஜகன்னாததாசர், நோயினால் கஷ்டப்பட்டவாறு தன் குருகளுடன் திருப்பதிக்கு வந்தபோது, இவரை மட்டும் வீட்டில் விட்டுவிட்டு அனைவரும் கோயிலுக்கு சென்றுவிட, வீட்டில் இவர் பசி தாங்காமல் பகவந்தனை தியானம் செய்தவாறு இருக்க, ஶ்ரீஶ்ரீனிவாசனே இவரின் குருகளின் ரூபத்தில் வந்து ருசியான உணவினை இவருக்கு அளித்து, சாப்பிட வைத்து, முழு சக்தியைக் கொடுத்துச் சென்றான் என்பதை தாசராயரின் வாழ்க்கைச் சரிதத்தில் பார்க்கிறோம். ஆகையால், தாசராயர் ‘ஆதரதி கரெயலு பந்ததொகுவனு தன்னவர பளிகெ’ என்று சொல்கிறார். ‘ஷரணஜன மந்தார’ தன்னை வேண்டிய பக்தர்களுக்கு கல்பவ்ருக்ஷத்தைப் போல, அவர்கள் வேண்டிய வரங்களைக் கொடுக்கிறான் என்று பொருள்.

இந்த விஷயத்தைப் பற்றி சொல்லும்போது ஒரு வியாக்யானகாரர், இந்த அர்த்தமானது முக்தியில் மட்டுமே பொருந்துகிறது - அதாவது பரமாத்மன் முக்தர்களுக்கு மட்டுமே கல்பவ்ருக்ஷமாக இருக்கிறான். பிரளய காலத்தில் இது பொருந்தாது என்று சொல்லியிருக்கிறார். நமக்குத் தோன்றுவது என்னவென்றால்:

கல்பவ்ருக்ஷத்திடம் பலன்களை வேண்டுபவர்கள் நிஷ்காமர்கள் அல்ல. அவர் காம்ய பலன்களையே வேண்டுகிறார்கள். இந்த கல்பவ்ருக்ஷம் கூட காம்யமான இஷ்டார்த்தங்களை நிறைவேற்றுகிறதே தவிர, முக்தியோ அதற்கு இணையான நிரந்தர சுகமோ கொடுக்கும் தகுதி அதற்கு இல்லை. ஆகையால் இந்த கல்பவ்ருக்ஷ உவமையினால் நாம் அறியவேண்டியது என்னவெனில்: 'கைவல்ய தாயக' என்னும் சொற்களால், மேலே பல பதங்களில் பரமாத்மன் முக்தியைக் கொடுப்பவன் என்று சொல்லியிருப்பார். இதிலிருந்து என்ன தெரிகிறது என்றால் - பரமாத்மன் முக்தியை மட்டுமே கொடுக்கிறான் ஐஹிக சுகங்களை அவன் கொடுப்பதில்லை என்னும் சந்தேகங்கள் பக்தர்களுக்கு உண்டாகிறதோ என்னும் நோக்கத்துடன் தாசராயர், கல்பவ்ருக்ஷமானது எப்படி வேண்டுவதை கொடுக்கிறதோ, அப்படியே காம்யத்தை வேண்டுபவர்களுக்கு அவற்றை கண்டிப்பாகக் கொடுக்கிறான் என்பதைக் குறிப்பதற்காக 'ஷரணஜன மந்தார' என்று சொல்லியிருக்கிறார். தாசராயரின் அபிப்பிராயம் இதுவே என்று எப்படி சொல்லலாம் என்றால், சில உதாரணங்களைப் பார்க்கலாம். தாசராயரின் பரமகுருகளான ஸ்ரீவிஜயதாசரின் ஒரு பதத்தைப் பார்க்கலாம்.

இந்தா பிரபுவ காணேனோ
ஈ ஜகதொளகிந்தா பிரபுவ காணேனோ

பேடித வரவ (பேடிதிஷ்டார்த்தவ) கொடுவ
பக்தர தப்பு நோடதெ பந்து பொரெவ
காடிகாரனு, கருடாரூட குணவந்த மஹாப்ரௌட
ப்ரதாப ஜகதி கூடாதி சஞ்சரிப

பாடி பொகளி கொண்டாடுவவர முன்
தாடுதலிப்பனு காடொளகித்தனு ....

என்று சொல்கிறார்.

ஜகன்னாததாசர் சொல்லியிருக்கும் 'ஷரணஜன மந்தார' என்னும் பதத்தின் அர்த்தமானது, விஜயதாசரின் பதத்தின் அர்த்தத்தையே சொல்லியிருக்கிறது என்று நினைக்கலாம். 'பேடித வரவ கொடுவ' என்னும் சொல் 'ஷரணஜன மந்தார' என்னும் சொல்லின் அர்த்தத்தையே குறிக்கிறது. எப்படியெனில், காமிதத்தைக் கொடுப்பதற்கு கல்பவ்ருக்ஷம் என்று பெயர். இதன் அர்த்தமானது ஏன் முக்தர்களைக் குறித்து சொல்லக்கூடாது என்று கேட்கலாம். ஆனால், அது கொடுப்பதில்லை. ஏனெனில் 'பேடித வரவ கொடுவ' என்றிருக்கிறார். முக்தியில், இஷ்டார்த்தங்களை வேண்டுவது என்னும் நிலையே இல்லை.

'யம்யம் சுகே காமயதீர்த்த மத்ர சங்கல்ப மாத்ராத்ஸகலோபி ஸஸ்யாத்' - முக்தியில் இருக்கும் ஆனந்தஸ்வரூபமான முக்தர்கள், எதை விரும்புகின்றரோ அவை அனைத்தும் அவர்கள் நினைத்த மாத்திரத்திலேயே அவர்களுக்குக் கிடைக்கிறது என்று வேதங்கள் சொல்லியிருக்கிறன. (மத்வ விஜயம் 11-76 ஸ்லோகத்தைப் பார்க்கலாம்). 'பேடித வரவ கொடுவ' என்று விஜயதாசர் சொல்வது முக்தர்களின் வரங்கள் அல்ல. மேலும் கல்பவ்ருக்ஷத்தைப் பற்றி பாகவத 10ம் ஸ்கந்தத்தில் 'ததைவ மத்த: பலஸம்பத:ஸ்யு: உச்சாவசா: கல்பதரோரிவார்த்தினாம்' (இது கோபியர்களைக் குறித்து ஸ்ரீகிருஷ்ணன் சொல்வது). கல்பவ்ருக்ஷத்திடம் வேண்டுபவர்களுக்கு அவர்களின் தகுதிக்கேற்ப உத்தம / அதம பலன்கள் கிடைக்கின்றன என்கிறார். முக்தர்களுக்கு புதிதாக பலன்கள் கிடைக்கும் சந்தர்ப்பமே இல்லை. ஆகையால், இது அமுக்தர்களின் விஷயமே ஆகும்.

மேலும் 8ம் ஸ்கந்தத்தில், சுகாசார்யர் பரிக்ஷித் ராஜனைக் குறித்து சொல்லும் வாக்கியம்:

ததோ பவத்பாரிஜாத: சுரலோக விபூஷண: |
பூரயத்யர்த்தினோ யோர்த்தை: ஷஷ்வத்புவியதா பர்வா ||

தேவலோகத்திற்கு அலங்காரம் சேர்க்கும் பாரிஜாதம் (கல்பவ்ருக்ஷம்) உற்பத்தி ஆயிற்று. பூலோகத்தில் வேண்டுபவர்களின் வேண்டுதல்களை நீ எப்படி நிறைவேற்றுகிறாயோ, அப்படியே இந்த மரம் அனைத்து உலகங்களிலும் இருக்கும் மக்களின் வேண்டுதல்களை நிறைவேற்றுகிறது. இவை அனைத்தையும் பார்த்தால், வேண்டியவர்களுக்கு (குசேலனுக்கு) கொடுத்ததைப் போல, ஐஹிக சுகங்களைக் கொடுக்கிறது என்று அர்த்தம் உண்டாகிறது.

காமித - என்றால் பக்தர்களின் வேண்டுதல்களை நிறைவேற்றுபவன் என்று பொருள். அதனால், ஷரணஜன மந்தார, காமத ஆகிய இரு சொற்களுக்கும் ஒரே அர்த்தம் என்று தெரிகிறது. ஆனாலும் 'புனருக்தி தோஷம்' வந்திருக்கிறது என்று நினைக்கக்கூடாது. ஷரணஜன = வேண்டும் பக்தர்களுக்கு. மந்தார = கல்பவ்ருக்ஷம் எப்படி காமிதமோ அதைப் போல பரமாத்மனும் காமித-ப்ரதன் என்று பொருள் கொண்டால், புனருக்தி தோஷம் வருவதில்லை. மேலும், பரமாத்மன், கல்பவ்ருக்ஷத்தைப் போல ஐஹிக வரங்களை மட்டும் கொடுப்பவனல்ல என்பதைக் காட்டுவதற்காக 'சாஸ்வத கருணி' என்று சொல்லியிருக்கிறார்.

இப்படி சொல்லியிருப்பதால் என்ன தெரியவருகிறது என்றால், குசேல, பிரகலாதர்களுக்குக் கொடுத்ததைப் போல, இஹத்தில் பல போகங்களைக் கொடுத்து, பரலோகத்தில் முக்தியையும் கொடுப்பவன் என்று அர்த்தம். ஆகையால், பரமாத்மனின் பிரசாதமானது நிரந்தரமானது என்று சொல்லியாயிற்று. 'பரமபாவனதர சுமங்கள சரித' பரமாத்மனின் சுமங்கல சரித்திரமானது, மிகவும் பவித்ரமானது என்று பொருள்.

இதே சந்தியின் முதல் பத்யத்தில் ‘புவன பாவனனெனிப லகுமிதவன மங்கள கதெய’ என்று சொல்லியிருக்கும் அர்த்தத்தையே இங்கும் கொள்ளவேண்டும். மேலும் பாகவத 10ம் ஸ்கந்தத்தில்

வாசுதேவ கதாப்ரஷ்னம் புருஷாம் ஸ்த்ரிஸ்புனாதிஹி |
வக்தாரம் ப்ருச்சகம் ஸ்ரோத்ரூன் ஸ்தத்பாத சலிலம்யதா ||

பரமாத்மனின் கதாபிரஸ்னமானது, கேள்வியைக் கேட்பவர்களுக்கும், சொல்பவர்களுக்கும், கேட்டுக் கொண்டிருப்பவர்களுக்கும், விஷ்ணு பாதோதகமானது (கங்கை அல்லது சாலிகிராம தீர்த்தம்) எப்படி அதில் ஸ்னானம் செய்பவர்களை பவித்ரமாக்குகிறதோ, அது போலவே ஆக்குகிறது என்று சொல்லப்பட்டிருக்கிறது. அதே அர்த்தத்தையே தாசராயர் ‘பரமபாவனதர சுமங்கள சரித’ என்று சொல்லியிருக்கிறார்.

‘பார்த்தசக’ என்றதால் பரமாத்மன் பக்தர்களின் வசம் என்று சொல்கிறார். பரமாத்மனின் பக்தர்கள் பலர் இருந்தாலும், அர்ஜுனனின் பக்திக்கு கட்டுப்பட்டதைப் போல வேறு யாரின் பக்திக்கும் கட்டுப்படவில்லை. அர்ஜுனனைவிட பீமசேனர், பரமாத்மனுக்கு வேண்டியவராக இருந்தாலும், அவர் நிஷ்காம பக்தர். ஆகையால், அவர் பரமாத்மனிடம் எதையும் வேண்டாமல் பரமாத்மனுக்கு தாசராகவே இருந்துவிட்டார். அர்ஜுனன் வேண்டிக்கொண்டதைப் போல, அவனுக்கு சாரதியாகவும், நண்பனாகவும், தூதனாகவும் இருந்து தன் தேகத்தையே அவனிடம் ஒப்படைத்தான். ஆகையாலேயே, ’பார்த்தசக’ என்றார் தாசராயர்.

’நிருபமானந்த’ பிரம்மாதிகளைவிட அதிகமான, உவமையில்லாத ஆனந்தம் ரமாதேவிக்கு இருந்தாலும், அவரும் பராதீனரே ஆவார். பரமாத்மனுடையது, ரமாதேவியரின் ஆனந்தத்தைவிட அத்யதிகமாக இருக்கிறது. தான் ஸ்வதந்த்ரனாகையாலும், இந்த ஆனந்தம் வேறு யாருக்கும் இல்லை. பிரம்மசூத்ர பாஷ்யத்தில் ‘நாராயணம் குணைஸ்ஸர்வை ருதீர்ணம் தோஷவர்ஜிதம்’ என்று சொல்லியிருக்கிறார். பரமாத்மன் அனைத்து குணங்களினாலும் பூர்ணனாக இருக்கிறான். ஆகையால், உவமையில்லாத ஆனந்தஸ்வரூபன் என்று சொல்கிறார். ஆனந்தஸ்வரூபம் மட்டுமே இல்லை.

’நிர்கததுரித’ தோஷங்கள் அற்றவன் என்று சொல்கிறார். பிரம்மாதிகளுக்கும்கூட பராதீனத்வம், தேஹ நாசம் ஆகிய தோஷங்கள் உள்ளன. இவை யாவும் பரமாத்மனுக்கு இல்லை என்று பொருள். ஆகையால் ‘தேவவரேண்ய’ - பிரம்மாதிகளால் வணங்கப்படுபவன். வரேண்ய என்றால் நம்மை காப்பாற்றுவதற்கு நம்மால் வணங்கத் தகுதி படைத்தவன் என்று பொருள். இதனாலேயே வரேண்ய என்றால் வணங்கப்படுபவன் என்று அர்த்தம் கொள்ளவேண்டும்.

**இட்டிகல்லனு ப[4]குதியிந்த[3]லி**
**கொட்ட ப[4]குதகெ[3] மெச்சி தன்னனெ**
**கொட்ட ப[3]ட[3]பிராமணன ஒப்[1]பிடி[3]யவலி க[3]கி[2]லார்த்த |**
**கெட்ட மாதுக[3]ளந்த[3] சைத்[3]யன**

**பொட்டெயொளகி$^{3}$ம்பி$^{3}$ட்ட பா$^{3}$ணத$^{3}$**
**லிட்ட பீ$^{4}$ஷ்மனவ கு$^{3}$ணக$^{3}$ளெணிஸித$^{3}$னெ கருணாளு ||11**

இட்டிகல்லனு = செங்கல்லை
பகுதியிந்தலி = பக்தியுடன்
கொட்ட = நிற்பதற்காகக் கொடுத்த
பகுதகெ = புண்டலீகன் என்னும் பக்தனுக்கு
மெச்சி = தரிசனம் அளித்து
தன்னனெ = விட்டலன் என்னும் ஸ்வரூபத்தையே
கொட்ட = கொடுத்த
படபிராமணன = குசேலன் என்னும் ஏழை பிராமணன் கொடுத்த
ஒப்பிடி = ஒரு பிடி
அவலிகெ = அவலுக்கு
அகிளார்த்த = நான்குவித புருஷார்த்தங்களையும் கொடுத்தான்.
கெட்ட மாதுகளிந்த = தன் மனம் போல திட்டிய
சைத்யன = சிசுபாலனை
பொட்டெயொளு = தன் வயிற்றில்
இம்பிட்டு = சேர்த்துக்கொண்டான்
பாணதலிட்ட = பாணங்களால் துளைத்த
பீஷ்மன = பீஷ்மாசார்யரின்
அவகுணகள = தவறுகளை
எணிஸதலெ = தவறாக எண்ணாமல்
கருணாளு = கருணாபூர்ணன் ஆனவன்.

பொருள்:
புண்டலீகன் என்னும் பக்தன், தான் நிற்பதற்காக பக்தியுடன் கொடுத்த செங்கல் மேல் நின்று, விட்டல ரூபத்தினால் அவனுக்கு தரிசனம் அளித்து, பண்டரிபுரத்தில் நின்றுவிட்டான். பரம ஏழையான குசேலன் என்னும் பிராமணன், பக்தியுடன் கொண்டு வந்திருந்த ஒரு பிடி அவலை ஏற்றுக்கொண்டு, அவனுக்கு சதுர்வித புருஷார்த்தங்களைக் கொடுத்தான். சிசுபாலன் அசுராவேஷத்தினால் ஸ்ரீகிருஷ்ணனை மனம் போல திட்டியும், அவனைக் கொன்று, தன் வயிற்றில் வைத்துக் கொண்டான். போர்க்களத்தில் அம்புகளால் தன்னை துளைத்த பீஷ்மாசார்யரை, அவரின் தவறுகளை மன்னித்தான். ஆகையால், இவனது கருணையை எவ்வளவு வர்ணித்தாலும் அது மிகக்குறைவே என்று பொருள்.

சிறப்புப் பொருள்:
செங்கலைக் கொண்டு வந்து கொடுத்த பக்தன் என்று தாசராயர் சொல்லும் புண்டலீகனின் கதையை அனைவரும் அறிந்திருப்பர். ஆனாலும், பக்தர்களின் கதையை எவ்வளவு முறை கேட்டாலும், அவை பாவங்களை போக்கவல்லவை என்பதால், சுருக்கமாக அந்த கதையை இங்கு சொல்கிறோம்.

முன்னர் பண்டரிபுரத்தில் புண்டலீகன் என்னும் பிராமணன் இருந்தான். பரம அயோக்யனாகவும், மாதா பித்ரு துரோகியாகவும் இருந்தான். சத்விஷயங்கள் அவனுக்கு கெட்டதாகவே தோன்றின. இப்படியிருக்கையில், அந்த ஊர் மக்கள் அனைவரும் காசி க்ஷேத்திரத்தின் மகிமையை அறியவேண்டும் என்று, ஒரு புராணிகரை அழைத்து, அவர் மூலமாக அந்தக் கதையை கேட்பதற்கு தயாராயினர். அப்போது புண்டலீகனின் மனைவியானவள், ஊர் மக்கள் அனைவரும் அங்கு போவதைக் கண்டு, தானும் அங்கு போய் கதையைக் கேட்க வேண்டும் என்று ஆவல் கொண்டாள். அப்படி அந்த கதையைக் கேட்டபிறகு, காசிக்குப் போகவேண்டும் என்றும் ஆசை கொண்டாள் அந்த பதிவிரதை. அதைக் கேட்ட புண்டலீகன் காசிக்குப் புறப்பட்டான். இதைக் கேட்ட புண்டலீகனின் வயதான பெற்றோர், தாம் அவனைவிட்டு பிரிந்திருக்க முடியாது என்று சொல்லி, தாமும் அவனுடன் காசிக்குப் புறப்படத் தயாராயினர். அவர்களை சமாதானப்படுத்திய புண்டலீகன், அவர்களை நிறுத்திவிட்டு, தன் மனைவியுடன் தான் மட்டுமே புறப்பட்டுவிட்டான். புத்ர பாசத்தால் அவனது பெற்றோரும் அவர்களின் பின்னாலேயே காசிக்குப் புறப்பட்டு, அவர்கள் போய்த் தங்கிய ஊர்களிலேயே தங்கி, கிடைத்த உணவை மட்டுமே உண்டு, மெதுவாக பயணத்தில் இருந்தனர். இப்படியாக பயணப்பட்ட புண்டலீகன், காசிக்கு சற்றுமுன் ஒரு கிராமத்தில் அன்றிரவு ஒரு சத்திரத்தில் தங்கினான். அங்கு வேறு பல யாத்ரிகர்களும் வந்திருந்தனர். அந்த ஊரின் குக்கட மகரிஷிகளின் கதைகளைச் சொல்லி அவர்கள் அவரை புகழ்வதைக் கேட்ட புண்டலீகன், அவரைப் பார்க்க எண்ணி, சத்திரத்தின் எதிரில் இருந்த ஆசிரமத்திலேயே அவர் இருக்கிறார் என்பதை அறிந்தான். எப்போது அடுத்த நாள் விடியும், எப்போது அந்த மகரிஷியைப் பார்க்கலாம் என்று எண்ணியவாறு ஆவலுடன் படுத்திருந்தான்.

அடுத்த நாள் விடியலிலேயே எழுந்து, சத்திரத்து வாசலில் அமர்ந்திருக்க. 6-7 கருப்பான, குரூபிகளான பெண்கள் அந்த குக்குட ஆசிரமத்தில் நுழைந்து, அங்கு பெருக்கி, துடைத்து, சுத்தம் செய்து, கோலங்களைப் போட்டு அலங்காரங்களை செய்தனர். சில மணியிலேயே அந்தப் பெண்கள் அழகிய சுந்தரிகளாயினர். இதனைக் கண்டு வியப்படைந்த புண்டலீகன், உடனடியாக அந்தப் பெண்களை விழுந்து வணங்கி, குக்குட மகரிஷி எங்கிருக்கிறார் என்று கேட்க, அவர்களும் அவர் இங்கேதான் இருக்கிறார் பார் என்றனர். இவனும் அங்கு தேடினால், அவர் கிடைக்கவேயில்லை. மறுபடி இவர்களிடம் ‘என்னம்மா, பொய் சொல்கிறீர்கள்? அவர் இங்கு இல்லவேயில்லையே?’ என, அவர்களோ, ’ஹே பாபி, அவர் உன் கண்களுக்குத் தெரியவில்லை. அவர் இங்கேதான் தன் பெற்றோரின் சேவையை செய்துகொண்டிருப்பார். நீ பரம பாபி, உன் வயதான பெற்றோர் உனக்காக அங்கு கஷ்டப்பட்டுக்கொண்டிருக்க, நீ அவர்களை தவிக்க விட்டு, மிகப்பெரிய பாவத்தை செய்திருக்கிறாய். உன்கூட பேசினால்கூட எங்களுக்கு பாவம் வந்து சேரும். உன்னை நாங்கள் பார்க்கக்கூட விரும்பவில்லை’ என்றனர்.

அப்போது புண்டலீகன் ‘அம்மா! நீங்கள் யார்? தெய்வஸ்த்ரீகளைப் போல காட்சியளிக்கிறீர்களே? இந்த ஆசிரமத்தை சுத்தம் செய்யக் காரணம் என்ன? தயவு செய்து சொல்லுங்கள்’ என்றான். அப்போது அந்த பெண்கள் இவனுடன் பேச

விருப்பமில்லை என்றாலும், இவனுக்கு அருளவேண்டும் என்னும் நோக்கத்தில் இப்படி சொல்லத் தொடங்கினர்.

'ஹே பாபி! கேள். நாங்கள் கங்கா, கோதாவரி முதலான ஏழு நதிகள். நம்மிடம் பற்பல பாவிகள் ஸ்னானம் செய்து அவர்களின் பாவங்கள் அனைத்தையும் எங்களில் கரைத்து விடுகின்றனர். அத்தகைய பாவங்களை போக்கிக்கொள்வதற்காக, பெற்றோரின் சேவையில் சிறந்தவரான இந்த மஹானுபாவருக்கு சேவை செய்து, எங்கள் பாவத்திலிருந்து முக்தராகி, பின் புறப்பட்டுச் செல்கிறோம். பாவங்களுடன் இங்கு வரும்போது குரூர ரூபத்துடன் இருக்கும் நாங்கள், இங்கு செய்யும் சேவையினால், அந்த பாவங்களிலிருந்து முக்தராகி, வெளியே செல்லும்போது அழகான வடிவங்களைப் பெறுகிறோம். இந்த மகரிஷிக்கு, தன் பெற்றோரின் சேவையினாலேயே இந்த கீர்த்தியும், சக்தியும் வந்திருக்கிறது. நீ உன்னுடைய முக்கியமான தர்மத்தை விட்டு காசிக்குப் போனால் என்ன? வேறெங்கு போனாலும் என்ன? உன் பாவங்கள் தீராது' என்றனர்.

இதைக் கேட்டு வருந்திய புண்டலீகன், உடனடியாக அவர்களை வணங்கி, அங்கிருந்து புறப்பட்டு தன் பெற்றோர்களிடம் வந்து, அவர்களை வணங்கி, நடந்ததையெல்லாம் தெரிவித்து, அன்றிலிருந்து தன் பெற்றோரின் சேவைக்கு முன் வேறெந்த சேவையும் இல்லை என்று உணர்ந்து தன் சேவையை செய்யத் தொடங்கினான். பெற்றோரைவிட வேறு தெய்வம் இல்லை என்று உணர்ந்து, அவர்களின் சேவையை செய்யத் துவங்கினான். அப்போது அவனுக்கு, பரமாத்மனிடம் திடமான பக்தியும் உண்டாகி, திவ்யமான ஞானோதயமாயிற்று. அந்த தாய்தந்தையரின் சேவையினாலேயே அவர்களின் அந்தர்யாமியான பரமாத்மன் மகிழ்வான் என்ற திடமான நம்பிக்கையினால், அவர்களை திரும்ப ஊருக்கு அழைத்து வந்து அவர்களின் சேவையினை தொடர்ந்து செய்து வந்தான்.

இப்படி இருக்கையில், ஒரு நாள், சந்திரபாகா நதியில் தன் பெற்றோரை ஸ்னானம் செய்வித்த புண்டலீகன், அவர்களுக்கு மாற்றுவதற்கு ஆடை கொடுத்துவிட்டு, அவர்களை உபசரித்தவாறு நின்றிருந்தபோது, ஸ்ரீபரமாத்மன், அவனது பக்தியை பரிசோதிப்பதற்காக, அவன் அங்கு சேவை செய்திருக்கும்போது வந்து அவன் பின்னால் நின்றான். பகவானின் காலடி சத்தத்திலேயே அவரை அடையாளம் கண்டு கொண்ட புண்டலீகன் 'ஆஹா, ஸ்வாமி! வந்துவிட்டீர்களா, எனக்கு நிற்பதற்குக்கூட நேரமில்லை. அங்கங்கு குப்பைகள் இருக்கின்றன, சுத்தம் செய்யவேண்டும்' என்றவாறு, அங்கிருந்த ஒரு செங்கல்லை எடுத்து வைத்தவாறு, 'ஸ்வாமி, இதன் மேல் நில்லுங்கள். நான் என் பெற்றோரை வீட்டில் விட்டுவிட்டு விரைவில் திரும்பி வருகிறேன்' என்றவாறு அவர்களை அழைத்து வீட்டில் விட்டு, அவர்களுக்கு உணவினைக் கொடுத்து, அவர்களின் உத்தரவை வாங்கியவாறு ஸ்ரீஹரி நின்றிருந்த இடத்திற்கு வந்தான்.

ஸ்ரீபரமாத்மன் புண்டலீகனின் வழியைப் பார்த்தவாறு நின்றிருந்தான். புண்டலீகன் அங்கு வந்து அவரை சாஷ்டாங்கமாக நமஸ்கரித்து - 'ஸ்வாமி, உன்னை வெகு நேரம் காக்க வைத்துவிட்டேன். மன்னித்து விடுங்கள்' என்று வேண்டினான்.

பரமாத்மனும் அவனது பக்திக்கு மெச்சி ‘உனக்கு வேண்டியதைக் கேள். வரம் அளிக்கிறேன்’ என்றார். ‘ஸ்வாமி, உனக்கு பல பக்தர்கள் சேவை செய்யவேண்டும். எனக்கு நீ எப்போதும் இதே நிலையில் தரிசனம் அளிக்கவேண்டும்’ என்றும் வேண்டினான். ஸ்வாமியும் விட்டலன் என்ற பெயரில், ருக்மிணியுடன், புண்டலீகனின் விருப்பப்படி அங்கேயே நின்றுவிட்டான். இதையே தாசராயர் ‘இட்டிகல்லனு பகுதியிந்தலி கொட்ட பகுதகெ மெச்சி தன்னனெ’ என்றிருக்கிறார்.

குசேலன் என்னும் ஏழை பிராமணன், பகவத் பக்தனாக தற்காலிக விஷயங்களில் ஈடுபாட்டினைத் துறந்து, சம்சார பிரச்னைகளை மனதில் வைத்துக்கொள்ளாமல், எப்போதும் ஹரிதியானத்தில் இருக்க, இவரது மனைவியானவர், பசியில் அழுதுகொண்டிருந்த குழந்தையின் வலியை தாங்காமல், ஸ்ரீகிருஷ்ணனின் தரிசனம் பெற்று வாருங்கள் என்று பல முறை கணவரிடம் சொல்லி வந்தார். பகவான் தரிசனம்தானே செய்யச் சொல்கிறாள், அதுவும் நல்லதுதானே என்றவாறு, தன் மனைவி எங்கிருந்தோ வாங்கி வந்திருந்த நான்கு பிடி அவலினை ஒரு மூட்டையாகக் கட்டிக்கொண்டு, பரமாத்மனை பார்ப்பதற்கு வந்தான். ஸ்ரீகிருஷ்ணன் இவனது பக்திக்கு மெச்சி, 4 பிடி அவலில் ஒரு பிடி அவலை மட்டும் தான் எடுத்துக்கொண்டு அவனுக்கு பரம ஐஸ்வர்யத்தையும், தன் வீட்டைப் போலவே திவ்யமான வீட்டினையும் கொடுத்து, இறுதியில் முக்தியையும் கொடுத்தான். இதையே தாசராயர் ‘கொட்ட படபிராமணன ஒப்பிடி அவலிககிலார்த்த’ என்று பாடியிருக்கிறார்.

’கெட்ட மாதுகளிந்த சைத்யன பொட்டெயொளகிம்பிட்ட’. தர்மராஜன் ராஜசுய யாகத்தை செய்தபோது, அக்ரபூஜையை ஸ்ரீகிருஷ்ணனுக்கு செய்வதைக் கண்ட சிசுபாலன், ஸ்ரீகிருஷ்ணனை வெகுவாக தூஷிக்க, ஸ்ரீகிருஷ்ணன் அவனை தன் சக்ராயுதத்தால் கொன்றான். உடனடியாக அனைவரும் பார்த்திருக்க, சிசுபாலனின் தேகத்திலிருந்து ஒரு ஜ்யோதி புறப்பட்டு, ஸ்ரீகிருஷ்ணனின் பாத-அங்குஷ்டத்தில் வந்து சேர்ந்தது. சிசுபாலன் இரு ஜீவ-த்வய-ஆவேசம் உள்ளவனாக இருந்தான். பிரம்மபுத்ரனான ஆதிஹிரண்யன் என்னும் தைத்யனின் ஆவேசத்தினால் கூடி, விஷ்ணுவின் துவாரபாலகனாக ஜயன் என்னும் பெயரில் இருந்தவன் சிசுபாலனே. அசுர ஆவேசத்தின் பலனால் பரமாத்மனை த்வேஷித்து வந்திருந்தான். இதனை அறிந்த பரமாத்மன், தன் பக்தனான ஜயன், அசுர ஆவேசத்தில் செய்த தவறினை மன்னித்து அவனை தன்னில் சேர்த்துக்கொண்டான். இதுவே இந்த வாக்கியத்தின் அபிப்பிராயம் ஆகும்.

‘பாணதலிட்ட பீஷ்மனவ குணகளெனிஸிதனெ’. பீஷ்மாசார்யர் தனது இறுதிக் காலத்தில் பரமாத்மனை துதித்த - பாகவதத்தின் 9ம் அத்தியாயத்தின், இரு ஸ்லோகங்களால் பகவான் அவருக்கு தரிசனமளித்தான். அந்த ஸ்லோகங்களை இங்கு பார்ப்போம்.

ஸ்வனியமமபஹாய மத்ப்ரதிக்ஞாம்ருதமதிகர்துமவப்லுதோ ரதஸ்த: |
த்ருதரத சரணோப்ய யாத்பலாக்ரேஹரி ரிவஹந்துமிதம் கதோத்தரீய: ||
ஷித விஷிகஹ்தோ விஷீர்ணதம்ஸ: க்ஷதஜ பரிப்லுத ஆததாயினோமே |

ப்ரஸப மபிஸஸார மத்வதார்த்தம் ஸபவதுமெ பகவான்முதே முகுந்த: ||28

பாரதப் போரில் தான் ஆயுதம் ஏந்துவதில்லை என்று ஸ்ரீகிருஷ்ணன் சொல்லியிருந்தான். 'உன் கையில் ஆயுதம் ஏந்தவைப்பேன்' என்று பீஷ்மாசார்யார் சபதம் செய்திருந்தார். இப்படியிருக்கையில், பீஷ்மருக்கும் அர்ஜுனனுக்கும் பலத்த போர் நடைபெற்றது. மிகப்பலமான ஆயுதங்களால் பீஷ்மர், கிருஷ்ண அர்ஜுனர்களை துளைத்துக் கொண்டிருந்தார். வயதானவர், பிதாமகர் என்னும் அபிமானத்தால் அர்ஜுனன் மெதுவாக போரிட்டுக் கொண்டிருந்தான். ஸ்ரீகிருஷ்னன், அர்ஜுனனின் இந்த செயலால் கோபம்கொண்டு, சக்கரத்தை தன் கையில் ஏந்தி, வேகமாக ரதத்தில் குதித்து, உடனடியாக பீஷ்மரைக் கொல்வேன் என்று கூவியவாறு அவரை நோக்கிப் பாய்ந்தான். தன்னை மன்னிக்குமாறு வேண்டியவாறு அர்ஜுனன் ஸ்ரீகிருஷ்ணனை தடுத்து நிறுத்தினான். இப்படி பாரத யுத்தத்தில் நடந்த விஷயத்தை நினைத்துக்கொண்டு, தற்போது தன் எதிரில் அமர்ந்திருக்கும் ஸ்ரீகிருஷ்ணனை பீஷ்மாசார்யர் ஸ்தோத்திரம் செய்தார்.

'ஹே கிருஷ்ணா! நீ செய்த சபதத்தை துறந்து, உன் பக்தனான நான் செய்த சபதத்தை உண்மையாக்குவதற்காக, சக்கரத்தை ஏந்தி, ரதத்திலிருந்து குதித்து, யானைமேல் சிங்கம் குதிப்பதைப் போல, பார்ப்பவர்களுக்கு என்னைக் கொல்ல வருகிறாயோ என்ற சந்தேகத்தை ஏற்படுத்தியவாறு, உன் மெய் மேல் இருந்த பீதாம்பரம் கீழே விழுந்ததைக்கூட பொருட்படுத்தாமல், என் எதிரே ஓடி வந்தாய். மேலும் என் கூர்மையான அம்புகளால் துளைக்கப்பட்ட கவசங்களைக் கொண்டவனாக, ரத்தத்தில் குளித்ததைப் போல உடம்பு ரதத்தில் நனைந்திருக்க, என்னைக் கொல்ல வந்துகொண்டிருந்தாய். அப்போது அர்ஜுனன் உன்னைத் தடுத்து 'பீஷ்மரைக் கொல்லவேண்டாம்' என்று வேண்டியதையும் பொருட்படுத்தாமல் ஓடி வந்தாயே, அப்படிப்பட்ட நீ இப்போது இங்கு வந்தது எனக்கு முக்திக்கான வழியாயிற்று' என்று பீஷ்மாசார்யர் கூறினார். 'பாணதலிட்ட பீஷ்மனவ குணகளெனிஸிதனெ' என்பதற்கு இதுவே பொருள்.

ஸ்ரீகிருஷ்ணன் ஆயுதம் ஏந்துவதில்லை என்று சபதம் செய்திருக்க, ஆயுதத்தை உன் கையில் பிடிக்கவைப்பேன் என்று பீஷ்மர் செய்த சபதம், மிகப்பெரிய துரோகம். மேலும், பரசுராம ருபியான பரமாத்மன், அம்பையை திருமணம் செய்துகொள்ள வேண்டும் என்று பீஷ்மரை வேண்ட, அவர் அவனுடன் போர் புரிந்தார். பாரத தாத்பர்ய நிர்ணய 18ம் அத்தியாயத்தில் 'பீஷ்மஸ்து பார்கவம் ராமமவமேனேயுலோதச' - போரில் பீஷ்மாசார்யர் பரசுராமனை அவமானம் செய்தார் என்று சொல்லப்பட்டிருக்கிறது.

திரௌபதி வஸ்த்ர அபஹரண சமயத்தில், அவள் எவ்வளவு முறையிட்டாலும், நியாய தர்மங்களைக்கூட பொருட்படுத்தாமல், பீஷ்மாசார்யர் அமைதியாக இருந்தது, ஸ்ரீகிருஷ்ணனுக்கு சரியாகப் படவில்லை. இந்த விஷயத்திற்கு நிர்ணயம் 24ம் அத்தியாயத்தின் வாக்கியம் ஆதாரமாக இருக்கிறது. மேலும், ஸ்ரீகிருஷ்ணன் பாண்டவ கௌரவர்களுக்கு இடையே தூதுவனாக ஹஸ்தினாபுரம் வந்தபோது, துரியோதனன் கிருஷ்ணனை தன் வீட்டிற்கு சாப்பிட அழைத்தான். 'எனக்கு

பிரியமான பாண்டவர்களுக்கு துரோகம் இழைத்த உன் வீட்டில் நான் சாப்பிட மாட்டேன்' என்று ஸ்ரீகிருஷ்ணன் கூறிவிட்டு, விதுரனின் வீட்டிற்குச் செல்ல, பீஷ்மர் ஆகியோரும் ஸ்ரீகிருஷ்ணனை தன் வீட்டிற்கு வருமாறு அழைத்தனர். அப்போது -

ஸபீஷ்மபூர்வைரபியாசிதோபி ஜகாம நைஷாம் க்ருஹமாதி தேவ: |
உபேக்ஷிதா திரௌபதீத்ய ப்ரமேயோ ஜகாமகேஹம் விதுரஸ்ய ஷீக்ரம் ||

'பீஷ்மர் போன்றோர் ஸ்ரீகிருஷ்ணனை தன் வீட்டிற்கு வரவேண்டும் என்று வேண்டிய போதிலும், திரௌபதிக்கு துன்பம் வந்தபோது அமைதியாக இருந்த உங்களின் வீட்டிற்கு நான் வருவதில்லை என்று சொல்லி, விதுரனின் வீட்டிற்கு புறப்பட்டான்' என்று சொல்கிறது மேற்கண்ட ஸ்லோகம். இதிலிருந்து திரௌபதிக்கு இவர்கள் யாரும் உதவவில்லை என்னும் விஷயம் ஸ்ரீகிருஷ்ணனுக்கு வேதனையைத் தந்திருக்கிறது என்பதை அறியலாம். இதுமட்டுமல்லாமல், பாண்டவர்களுக்கு எதிராக போரிட்ட துரியோதனனின் அணியில் நின்று போரிட்டது இன்னொரு குற்றமாகும். இதுபோன்ற பல தவறுகள், பீஷ்மாசார்யரிடம் இருந்தாலும், அவற்றை பொருட்படுத்தாமல், அவருக்கு தரிசனம் அளித்து, அவரால் வணங்கப்பட்டு, முக்தியைக் கொடுத்தான். ஆகையாலேயே, தாசராயர் 'கருணாளு' என்ற சொல்லை பயன்படுத்தியிருக்கிறார். இந்த சம்பவத்தால், பரமாத்மன் மிகக் கருணாமயி என்பது நிரூபணமாகியிருக்கிறது என்பதே தாசராயரின் அபிப்பிராயம்.

**த4னவ ஸம்ரக்ஷிஸுவ ப2ணி தா**
**நுணதே3 மத்தொ1ப்ப3ரிகெ3 கொட3த3னு**
**தி3னதி3 நோடு3த ஸுகிஸுவந்த3தி3 லகுமிவல்லப4னு |**
**ப்ரணதரனு காய்தி3ஹனு நிஷ்கா1**
**மனதி3 நித்யானந்த3மய து3**
**ர்ஜனர ஸேவேயனொல்லன ப்ரதிமல்ல ஜக3க்கெல்ல ||12**

தனவ = நிலத்தில் புதைந்திருக்கும் செல்வத்தை
சம்ரக்ஷிசுவ = காத்துக்கொண்டு, காவலுக்கு இருக்கும்
பணி = பாம்பு
தானுணதெ = தானும் உண்ணாமல்
மத்தொப்பரிகெ கொடதெ = வேறு யாருக்கும்கூட கொடுக்காமல்
அனுதினதி = தினந்தோறும் பார்த்தவாறு
சுகிசுவந்ததி = சுகப்படுவதைப் போல
லகுமிவல்லபனு = லட்சுமிபதியான ஸ்ரீபரமாத்மன்
ப்ரணதரன = தன்னை வணங்குபவர்களை
நிஷ்காமனதி = அவரிடமிருந்து பிரதிபலன்களை எதிர்பாக்காமல்
காதிஹனு = காத்துக்கொண்டிருக்கிறான்
நித்யானந்தமய = நித்யானந்த ஸ்வரூபமான ஸ்ரீபரமாத்மன்
ஜகக்கெல்ல = இந்த அனைத்து உலகங்களுக்கும்
அப்ரதிமல்ல = யாரும் தனக்கு சமம் இல்லாதவன்
துர்ஜனர = தமோயோக்யர் செய்யும்

சேவெய = சேவையை
ஒல்ல = ஏற்றுக்கொள்கிறான்

பொருள்:
நிலத்தில் புதைந்திருக்கும் செல்வத்தை பாதுகாத்து வரும் பாம்பானது, அதில் இருக்கும் ஒரு காசையும், தானும் பயன்படுத்தாமல், யாரையும் பயன்படுத்த விடாமல் எப்படி பாதுகாத்து வருகிறதோ, அதைப்போலவே, ஒப்புமை இல்லாத, அனைவரையும் விட உத்தமமான (யாரும் அவனுக்கு சமம் இல்லாத), எப்போதும் நித்யானந்த ஸ்வரூபமான ஸ்ரீபரமாத்மன், பக்தர்களிடமிருந்து எந்தவொரு பிரதிபலன்களையும் விரும்பாமல், தன்னை வணங்குபவர்களை காத்துக்கொண்டு, அவர்களுக்கு எந்தவொரு ஆபத்துகளும் வராமல் காப்பாற்றுவான். தமோயோக்யர் செய்யும் சேவைகளைக்கூட ஏற்றுக்கொள்கிறான்.

சிறப்புப் பொருள்:
செல்வம் நிறைந்த புதையலை பாம்பு காத்துக்கொண்டிருக்கும் என்பது பரவலான நம்பிக்கை. அந்த பாம்பிற்கு, அந்தப் புதையலால் எந்தவொரு பயனும் இல்லை. அந்த புதையலை வைத்தவனுக்கும், அதை கண்டுபிடித்து எடுப்பவனுக்கும், அந்த பாம்பு உதவுவதும் இல்லை (எடுக்க விடுவதில்லை). அப்படியிருந்தும், எந்தவொரு பிரதிபலனும் எதிர்பார்க்காமல், எப்படி அந்த பாம்பு அந்த புதையலை பாதுகாத்து வருகிறதோ, அப்படியே, பரமாத்மனும் தன் பக்தர்களை காத்து வருகிறான். அந்த பக்தரிடமிருந்து பரமாத்மனுக்கு எந்தவொரு பிரதிபலனும் இல்லை. அவரின் பக்திக்கு மெச்சி, அவர்களை காக்கிறான். 'தேவஸ்யைஷ: ஸ்வபாடோயமாத்ம காயஸ்ய காஸ்வ்ருஹா' பரமாத்மனுக்கு இது ஸ்வபாவ குணமே தவிர, பூர்ணகாமனான ஸ்வாமிக்கு வேறொருவரால் ஆகவேண்டிய வேலைதான் என்ன? (ஒன்றும் இல்லை) என்று ஸ்ருதி சொல்கிறது.

அப்படியெனில், பரமாத்மன் பக்தர்களிடமிருந்து எதையும் பெற்றுக்கொள்ளாமல், அனைவரையும் தானே ஏன் அருளக்கூடாது? என்று கேள்வி வரலாம். உதாரணத்திற்கு: குசேலன் அவலைக் கொடுத்தான். இப்படியே யார் பரமாத்மனை பஜிக்க வேண்டுமென்றாலும், பத்ர, புஷ்ப, பல, தூபதீபாதிகளால் பூஜிக்கின்றனர்.

பத்ரம் புஷ்பம் பலம் தோயம் யோமே பக்த்யா ப்ரயச்சதி |
ததஹம் பக்த்யுபஹ்ருதமஷ்னாமி ப்ரயதாத்மன: ||

இலைகளால், பூக்களால், நீரினால் யார் பக்தியுடன் என்னை வணங்கினால் (அவற்றை எனக்குக் கொடுத்தால்) அதை நான் அன்புடன் ஏற்றுக்கொள்கிறேன் என்று பரமாத்மனே சொல்லியிருக்கிறான். இப்படியிருக்கையில், பக்தர், ஏதாவது ஒன்றை கொடுத்தால் மட்டுமே அவர்களுக்கு அருளுவான் என்று தெரிகிறது.

பாண்டவர்கள் வனவாசத்தில் இருந்தபோது, அவர்களிடம் ஒரு அக்ஷயபாத்திரம் இருந்தது. அதன் சிறப்பு என்னவெனில், திரௌபதி, சமையல் செய்வதற்கு முன் அதில் என்ன வைத்தாலும், அது அனைத்தும் அக்ஷயமாக வளர்ந்து வந்தன. திரௌபதியும், உண்டு முடித்துவிட்டு, அந்த பாத்திரத்தைக் கழுவிவிட்டால், மறுபடி

அதே நாளில் அந்த அக்ஷயபாத்திரம் உதவிக்கு வருவதில்லை. இந்த விஷயத்தை அறிந்திருந்த துரியோதனன், பரம கோபசாலிகளான துர்வாசரை அழைத்து, அவரை உபசரித்து, மகிழ்வித்து, பிறகு அவரை பாண்டவர்களிடம் அனுப்பி அவர்களுக்கு அவர் மூலமாக சாபம் வாங்கித்தர வேண்டுமென்று நினைத்தான். அவரிடம் 'நீங்கள் வனத்திலிருக்கும் பாண்டவர்களிடம் செல்லுங்கள். திரௌபதியின் போஜனத்திற்குப் பிறகு, சென்று அன்னத்தை யாசியுங்கள்' என்றான்.

அதன்படியே துர்வாசரும், திரௌபதியின் போஜனத்திற்குப் பிறகு, பாண்டவர்களிடம் வந்து, அன்னத்தை யாசிக்க, தர்மராஜனும், கொடுக்கிறேன் என்றான். திரௌபதியோ, பாத்திரத்தில் அன்னம் இல்லை, கொடுக்கவில்லையெனில், துர்வாசர் சாபம் கொடுப்பார், என்ன செய்வது என்று கவலைப்பட்டு, ஸ்ரீகிருஷ்ணனை நினைக்க, ஸ்ரீகிருஷ்ணனும் அங்கு வந்தான். 'எனக்கு பயங்கர பசியாக இருக்கிறது. நான் சாப்பிட உட்கார்வதற்குள் நீ என்னை அழைத்துவிட்டாய். நானும் அப்படியே வந்துவிட்டேன். எனக்கு சாப்பாடு போடு' என்றான். திரௌபதியோ 'என்ன ஸ்வாமி, என்னை சங்கடத்தில் ஆழ்த்துகிறாயே? இப்போதே துர்வாசருக்கு அன்னம் அளிக்கமுடியாத கவலையில் உன்னை அழைத்தேன். நீயே அன்னத்தைக் கேட்டால் நான் என்ன செய்வேன்?' என்றாள்.

கிருஷ்ணனும் 'திரௌபதி, கவலை வேண்டாம். அந்த பாத்திரத்தைக் கொண்டு வா' என்றான். திரௌபதியும் அந்த பாத்திரத்தைக் கொண்டு வந்து காட்ட, ஸ்ரீகிருஷ்ணனும் அந்த பாத்திரத்தில் ஒட்டிக்கொண்டிருந்த ஒரு கீரைத் துண்டினை எடுத்துத் தின்றான். அங்கு ஸ்னானத்திற்காக சென்றிருந்த துர்வாச ரிஷிகளுக்கு வயிறு திடீரென்று நிரம்பிவிட்டது போல் ஆயிற்று. சாப்பிட வரவேண்டும் என்று அழைக்க வந்துகொண்டிருந்த பீமசேனரைப் பார்த்த உடனேயே, பயந்து தன் சிஷ்யர்களுடன் ஓடிப்போனார் என்று பாரத கதை சொல்கிறது. இப்படி திரௌபதி பத்ரத்தைக் கொடுத்து தன்யன் ஆனாள்.

கஜேந்திரன் முதலையால் பிடிக்கப்பட்டு கஷ்டப்படும்போது பரமாத்மனை வேண்ட, பரமாத்மனும் பிரத்யட்சம் ஆனபோது, ஒரு புஷ்பத்தை அவருக்கு சமர்ப்பித்தான். சபரி ராமனுக்கு பழங்களைக் கொடுத்து தன்யன் ஆனாள். த்ருவன் வெறும் நீரினால் ஷோடஷோபசார பூஜையை செய்தான். பரமாத்மன் அவனுக்கும் அருளினான். ஆகையாலேயே, பரமாத்மன், 'பத்ரம் புஷ்பம் பலம் தோயம்' என்றிருந்தான்.

இப்படியிருக்கையில், பக்தர்களிடமிருந்து எதையும் எதிர்பார்க்காமல் பரமாத்மன் அவர்களுக்கு உதவுவான் என்று பாம்பின் உதாரணத்தையும் கொடுத்து தாசராயர் விளக்கியது எப்படி என்றால்: பாகவத 7ம் ஸ்கந்தத்தில் பிரகலாதனின் கதையில்,

நைவாத்மன: ப்ரபுரயம் நிஜலாப பூர்ணோ யானம் ஜனாடவிதுஷ: கருணோ வ்ருணீதெ |
யத்யஜ்ஜனோ பகவதே விததீத யானம் தச்சாத்மனே ப்ரதிமுகஸ்ய யதா முகஸ்ரீ ||
(ஸ்லோகம் 3-9-11)

ஸ்ரீபரமாத்மன் ஆனவர், தன் பக்தர்கள் ஞானிகளோ அல்லது அஞ்ஞானிகளோ எப்படி இருந்தாலும், அவர்கள் செய்யும் பூஜாதிகளை ஏற்றுக்கொண்டு, அதன் அங்கமாக அவர்கள் சமர்ப்பிக்கும் பதார்த்தங்களை தன்னுடைய சுகத்திற்காக ஏற்றுக்கொள்வதில்லை. பின் அவற்றை ஏன் ஏற்றுக்கொள்கிறான் என்றால், பூஜையை செய்பவரின் நலனுக்காகவே அவன் அவற்றை ஏற்றுக்கொள்கிறான். பூர்ணகாமனான பரமாத்மனுக்கு இவர்கள் கொடுக்கும் பதார்த்தங்களால் ஆகக்கூடிய பலன்தான் என்ன? எப்படி நாம் அலங்காரங்களை செய்துகொண்டு, கண்ணாடி முன் நின்றால், கண்ணாடியில் தெரியும் உருவமும் அலங்கரித்துக் கொண்டிருப்பதைப் போல தெரிகிறதோ அப்படியே, பிம்பரூபியான பரமாத்மனை பூஜிக்க, பிரதிபிம்பனான ஜீவனுக்கு சுகம் உண்டாகிறது.

மகாராஜாவைப் பார்க்க செல்லும் மக்கள், புஷ்ப பழங்களை எடுத்துச் சென்றால், அதை ராஜன் ஏற்றுக்கொள்வது தன்னிடம் அவை இல்லை என்பதற்காக இல்லை. மக்களின் அன்பிற்காகவே. அதைப் போலவே, பக்தர்களை அருள்வதற்காக அவர்களின் சேவையை ஏற்றுக்கொள்கிறான். அவனுக்கு இதனால் எந்தவொரு பலன்களும் இல்லை. அதனாலேயே தாசராயர், பரமாத்மன் நிஷ்காமத்தினால் பக்தர்களுக்கு அருள்கிறான் என்றார்.

துர்ஜனர சேவெயனொல்ல.

அபக்தோதாஹ்ருதம் நைவ பலதாத்ருபவிஷ்யதி |
பூர்யப்யபக்தோபஹ்ருதம் நமேதோஷாய கல்பதே ||

இப்படிப்பட்ட வாக்கியங்களால், பக்தர்கள் செய்யும் பூஜையை பரமாத்மன் ஏற்றுக்கொள்கிறான் என்பது தெளிவாகிறது. மேலும் கீதா வாக்கியம் சொல்வது:

தானஹம் த்விஷத: க்ரூரான் சம்சாரேஷு நராதர்மா |
க்ஷிபாம்யஜ ஸ்ரமசுரானா சுரீஷ்வேவ யோனிஷு ||
அசுரீரி யோனிமாபன்ன மூடா ஜன்மனி ஜன்மனி |
மாமப்ராப்யைவ கௌந்தேய ததோயாந்த்ய தயாங்கதிம் ||

என்மேல் ஒருமுறை த்வேஷம் செய்தாலும், அவரை நிரந்தர அசுர லோகத்தில் தள்ளுவேன். இப்படி பல பிறவிகளில் தொடர்ந்து தைத்ய குலத்தில் பிறந்து, என்மேல் த்வேஷத்தையே செய்து, என்னை வந்து அடையாமலேயே இறுதியில் கோரமான தமஸ்ஸிற்கு சென்றுவிடுவர் என்று ஸ்ரீகிருஷ்ணன் அர்ஜுனனிடம் சொல்கிறான். இதிலிருந்து தமோயோக்யரின் பூஜையை பரமாத்மன் ஸ்வீகரிப்பதில்லை என்பது தெளிவாகிறது. ஆகையாலேயே தாசராயர் 'துர்ஜனர சேவயனொல்ல' என்று சொல்லியிருக்கிறார்.

**ஜனனியனு கா1ணதி3ஹ பா3லக**
**நெனெனெனெது3 ஹலபு3திரெ கத்தலெ**
**மனொயொளட3கி3த்த3வன நோடு3த நகு3த ஹருஷத3லி |**
**தனயனம்பி3கி3த3ப்பி ரம்பி3ஸி**

**கனனிகெய களெவந்தெ மதுஸூ**
**த4னனு தன்னவரித்தெடெ3கெ3 ப3ந்தொ3த3கி3 ஸலஹுவனு ||13**

ஜனனியனு = தாயை
காணதிஹ = காணாமல்
ஹலபுதிரெ = அழும்போது
கத்தலெ மனெயொளகெ அடகித்து = இருட்டு அறையில் ஒளிந்திருந்து
அவன = அந்தக் குழந்தையை
நோடுத நகுத ஹருஷதலி = மகிழ்ச்சியுடன்
தனயனம் = அந்த குழந்தையை
பிகிதப்பி = கட்டிக்கொண்டி
ரம்பிஸி = சமாதானம் செய்து
கனலிகெய = தன்னை பற்றிய பயத்தை
களெவந்தெ = களைவதை போல
மதுஸூதனனு = மது நாமக தைத்யனைக் கொன்ற பரமாத்மன்
தன்னவரு = தன் பக்தர்கள்
இத்தெடெகெ = இருக்கும் இடத்திற்கு
பந்து சலஹுவனு = வந்து காப்பாற்றுவான்.

பொருள்:
தான் இல்லாவிட்டால் தன் குழந்தை என்ன செய்கிறது என்பதைக் காண, தாயானவள் அக்குழந்தையை வெளியில் விட்டு, தான் மறைவாக உள்ளே ஒரு இருட்டு அறையில் ஒளிந்து பார்த்திருக்க, தாயைக் காணாத அக்குழந்தை அவளை நினைத்தவாறு அழுவதைக் கண்டு, மகிழ்ச்சியுடன் ஓடிவந்து அக்குழந்தையைத் தூக்கி கட்டியணைத்து, அதன் பயத்தைப் போக்கி சமாதானம் செய்வதைப் போல, ஸ்ரீபரமாத்மனும் தன் பக்தர்கள் தன்னைக் காணாமல் தவிப்பதைப் பார்த்து, அதாவது பஜிப்பதைப் பார்த்து மகிழ்ச்சியுடன் அவர் அருகில் வந்து அவர்களை காப்பாற்றுகிறான்.

சிறப்புப் பொருள்:
பொதுவாக வீடுகளில், சிறு குழந்தைகளை அதன் தாயானவள் கீழே படுக்கவைத்துவிட்டு, அவர்களின் கண்களில் தான் படாமல் நிற்பதும், அல்லது இருட்டு மூலையில் மறைந்தவாறு தான் மட்டும் குழந்தையைப் பார்க்குமாறும், அக்குழந்தை தன்னை பார்க்காதவாறும் நின்றுகொண்டு பார்ப்பதும், அதனால் குழந்தை தான் படுத்திருந்த இடத்திலேயே திரும்பி, சுற்றுமுற்றும் பார்த்து, தாயைக் காணாமல் அழத் தொடங்குவதைப் பார்க்கும் தாய்க்கு மகிழ்ச்சிகரமான விஷயமாகும். அப்படி குழந்தை அழத் தொடங்கும்போது, அந்தத் தாய் ஓடிவந்து அதை சமாதானம் செய்து கொஞ்சுவது என இவை அனைத்தும், குழந்தையைப் பெற்றவர்களுக்கு அனுபவத்தில் வந்ததாகும். இதைப் போலவே பரமாத்மனும் தன் பக்தர்களை பரிட்சை செய்து, அதன்பிறகு அவர்களை காப்பாற்றுகிறான்.

இதற்கு வியாக்யானம் செய்த ஒருவர் - இருட்டு அறையில் குழந்தை அழுதுகொண்டிருந்தால், தாயானவள் ஓடி வந்து கொஞ்சி சமாதானம் செய்கிறாள் - என்றார். இந்த விளக்கமானது, உவமை, உவமானங்களுக்கு பொருந்துவதில்லை. ஏனெனில், இருட்டு அறையில் இருப்பவன், வெளிச்சத்தில் இருப்பவர்களை பிரச்னையின்றி காணமுடியும். அதே வெளிச்சத்திலிருந்து இருட்டு அறைக்குள் இருப்பவரை காணமுடியாது. ஆகவே, குழந்தை இருட்டில் படுத்திருந்தால், வெளிச்சத்தில் இருக்கும் தன் தாயை தாராளமாக பார்த்திருக்கும். வெளிச்சத்தில் இருந்த தாய், இருட்டறையில் படுத்திருக்கும் குழந்தையை பார்க்கமுடியாது. அதுமட்டுமல்லாமல், இருட்டு அறையில் குழந்தையை தன்னந்தனியாக எந்தவொரு தாயும் விட்டுவருவதில்லை. அப்படி இருந்தால், குழந்தை பயப்படும் என்பது அந்த தாய்க்கு தெரியும். சிறு குழந்தை, இருட்டு அறையில் தனியாக படுத்திருப்பது என்பது உலகத்தில் நடக்காத ஒன்றாகும். ஆகையால், இருட்டு அறையில் படுத்திருந்த குழந்தை என்று அர்த்தம் செய்துகொள்வதற்கு பதில், இருட்டு அறையில் மறைந்திருந்த தாய் / ‘அவன்’ என்று பரமாத்மனை சொல்வதே சரி என்று படுகிறது.

இதே உவமான உவமைகள் பக்தர்களின் விஷயத்தில் எப்படி பொருந்துகிறது என்றால்: ஜீவனிடம் இருக்கும் அஞ்ஞானம் என்னும் இருட்டில் பரமாத்மன் மறைந்திருக்கிறான். அதாவது மனிதன் தனது அஞ்ஞானத்தினால் ஜீவனுக்கும் தேகத்திற்கும் இருக்கும் வேறுபாட்டினை அறியாமல், ஜீவனே தேகம் என்று நினைத்து, கர்வம் பொறாமைகளால், வெளிச்சமாகத் தெரியும் தற்காலிக சுகங்களில் மூழ்கி, அஞ்ஞானம் என்னும் தன் இருட்டில் அடங்கியிருக்கும் பரமாத்மனை காண்பதில்லை. பரமாத்மனோ, இவனின் அஞ்ஞானம் என்னும் இருட்டில் மறைந்து நின்று, எப்போது சத்-சங்கத்தால் மனிதனின் சித்தத்தில் ஞானம் என்னும் சூரியன் உதிக்கிறதோ, எப்போது இந்த மனிதன் தன்னை இடைவிடாமல் துதிக்கிறானோ, அப்போது தான் அபரோக்ஷத்தில் தரிசனம் அளிக்கிறான். அல்லது பக்தர்கள் தங்களுக்கு கஷ்டம் வந்தபோது ஸ்ரீபரமாத்மனை வணங்கினாலும், ஸ்வ-கர்த்ருத்வ அபிமானத்தில் எவ்வளவு காலம் வரைக்கும் முயற்சி செய்து வருகின்றனரோ, அதுவரைக்கும் பரமாத்மன் அவர்களது அஞ்ஞானம் என்னும் இருட்டில் அவர்கள் கண்ணில் விழாமல் மறைந்திருக்கிறான். பிறகு எப்போது அந்த பக்தர், ஸ்வ-கர்த்ருத்வ என்னும் பாவத்தை விட்டு, நீயே கதி என்று முழுமையான சரணாகதர் ஆகின்றனரோ அப்போது மகிழ்ச்சியுடன் சிரித்தவாறு பக்தரிடம் வந்து, திரௌபதி முதலானவர்களை ஆபத்து காலத்தில் எப்படி காப்பாற்றினாரோ, அப்படியே காப்பாற்றுவார்.

இந்த விஷயத்தில் இன்னொரு இதிகாச சம்பவமும் உள்ளது. அது என்னவெனில்: பைடபா நகரத்தில் கூர்மதாஸ என்னும் பிராமணர் ஒருவர் இருந்தார். பிறக்கும்போதே அவனுக்கு கை, கால்கள் இருக்கவில்லை. பரம பகவத்பக்தனாக இருந்தான். எங்காவது ஹரிதாசர்கள் பஜனை செய்துவந்தால், எப்படியாவது பாடுபட்டு இவன் அங்கு போய், மிகவும் மகிழ்ச்சியுடன் அந்தப் பாடல்களை கேட்டு, அவர்களுடன் பாடி, காலத்தை கழித்து வந்தான். இப்படியிருக்கையில், ஹரிதாசர் ஒருவர் பண்டரிபுரத்து மகிமைகளைப் பற்றி சொல்லிக்கொண்டிருக்க, அதனைக்

கேட்ட கூர்மன் தானும் பண்டரிபுரத்திற்குச் செல்லவேண்டும் என்று ஆசைப்பட்டான். இதைக் கேட்ட அங்கிருந்த மக்கள், உனக்கோ கால்களே இல்லையே, நீ எப்படி அங்கு போவது சாத்தியம்? என்று கேட்டனர். அப்படியும், மனம் தளராத கூர்மதாஸ், எப்படியோ தவழ்ந்தவாறு விட்டலனை தியானித்தவாறு பாதி தூரம் வந்துவிட்டான். மிகவும் பசி, தாகம், சோர்வு ஆகியவை ஆனதால், அதற்கு மேல் ஒரு அடியும் நகரமுடியாமல், 'ஹே பாண்டுரங்கா. உன் இஷ்டம் போலவே செய்' என்று சொல்லியவாறு தன் ஸ்வாதந்த்ர்யத்தை மறந்து, அங்கேயே அமர்ந்துவிட்டான்.

அப்போது விட்டலன் ஒரு செல்வந்தரைப் போல வேடமிட்டு இவனிடம் வந்து உணவினையும், இருக்க இடத்தையும் கொடுத்து இவ்வாறு கூறினார். நீ பண்டரிபுரம் போகும் வரை உனக்கு உணவு, இடம் கொடுப்பது என் கடமை. நீ இப்படியே போய்க்கொண்டிரு. தினமும் உன்னிடம் வந்து உனக்கு நான் உணவு அளிக்கிறேன்' என்று சொல்லி, அங்கிருந்து மறைந்தான் விட்டலன். அதைப்போலவே கூர்மதாசனும் தினமும் பயணத்தில் முன்னேறிக் கொண்டிருக்க, பரமாத்மனும் செல்வந்தரின் ரூபத்தில் வந்து அவனுக்கு உதவிகளைச் செய்து வந்தான்.

'ஐயா, பார்த்தீரா? பரமாத்மனுக்கு தன் பக்தர் மேல் எவ்வளவு கருணை?' என்று கூர்மதாஸ புகழ்ந்தான். பண்டரிபுரத்திற்குச் செல்ல கூர்மதாஸ்க்கு இன்னும் 6 நாட்கள் தேவைப்பட்டன. அதற்குள், ஆஷாட சுத்த ஏகாதசி (பண்டரிபுரத்தில் உற்சவங்கள் நடக்கும் நாள்) வந்துவிட்டது. பண்டரிபுரத்தில் மக்கள் வெள்ளம். இதை அறிந்த கூர்மதாஸ், 'இவ்வளவு நாட்கள் நான் தவழ்ந்து வந்துவிட்டேன், இனி நான் வாழ்வது கடினம். இங்கேயே என் தேகத்தை விடுகிறேன். என்னை உன் பாதாரவிந்தங்களில் சேர்த்துக்கொள்' என்று புலம்பினான். இதைக் கேட்ட விட்டலன் கருணையுடன் தன் நான்கு கரங்களுடன், பீதாம்பரதாரியாகி, அவனுக்கு தரிசனம் அளித்தார். தினந்தோறும் செல்வந்தரின் ரூபத்தில் தரிசனம் அளித்தும் இவனுக்கு அது புரியவில்லை. பண்டரிபுரத்தில் எந்த ரூபத்தில் காட்சி அளிக்கிறாரோ, அதே ரூபத்தில் அன்று கூர்மதாஸின் விருப்பப்படி பரமாத்மன் தரிசனம் அளித்தான். அதே வகையில், அன்றிலிருந்து இன்று வரை அங்கும் பண்டரிபுரத்தைப் போலவே அனைத்து உற்சவங்களும் நடைபெறுகின்றன. இப்படி செய்வதால்தான் பரமாத்மனுக்கு பக்தவத்ஸலன் என்று பெயர். இத்தகைய கதைகள் பற்பல உண்டு. உதாரணத்திற்காக ஒரேயொரு கதையை இங்கு சொல்லியிருக்கிறோம்.

இவை அனைத்தையும் அறிந்ததாலேயே தாசராயர் 'ஜனனியனு காணதிஹ பாலகனு' என்ற பதத்தினை பயன்படுத்தியிருக்கிறார்.

**பா³லக¹ன க¹லபா⁴ஷெ ஜனனியு**
**கே¹ளி ஸுக²படு³வந்தெ லகுமி**
**லோல ப⁴குத¹ரு மாடு³திஹ ஸம்ஸ்துதிகெ³ ஹிக்³கு³வனு ।**
**தாள தன்னவரல்லி மாடு³வ**

**ஹேளனவ ஹெத்தை$^3$ய்வ விது$^3$ரன**
**ஆலயதி$^3$ பாலுண்டு$^3$ கு$^3$ருபன மானவனெ கொண்ட$^3$ ||14**

ஜனனியு = தாயானவள்
பாலகன = குழந்தையின்
கலபாஷெ = மழலைப் பேச்சினை
கேளி = கேட்டு
லகுமி லோல = லட்சுமிபதியான பரமாத்மன்
பகுதரு மாடுதிஹ = பக்தர்கள் செய்யும்
சம்ஸ்துதிகெ = சொல்லும் ஸ்தோத்திரங்களுக்கு / செய்யும் பூஜைகளுக்கு
ஹிக்குவனு = மகிழ்வான்
சுகபடுவந்தெ = மகிழ்ச்சி அடைவதைப் போல
தன்னவரல்லி = தன் பக்தர்களில்
ஹேளனவ = அவமானங்களை / திட்டுதல்களை
தாள = சகித்துக்கொள்ள
ஹெத்தெய்வ = தேவோத்தமன்
விதுரன ஆலயதி = விதுரனின் வீட்டில்
பாலுண்டு = உணவு உண்டு
குருபன = குருகுலபதியான துரியோதனனின் (அல்லது) திருதராஷ்டிரனின்
மானவெ = மானத்தை
கொண்ட = கொண்டான் (வாங்கினான்).

பொருள்:
தன் குழந்தையின் மழலைப் பேச்சினைக் கேட்டு தாயானவள் மகிழ்ச்சியடைவதைப் போல, லட்சுமிவல்லபன் தன் பக்தர்கள் செய்யும் மிகச்சிறிய ஸ்துதிகளைக் கேட்டு மகிழ்கிறான். தன் பக்தர்களை யாராவது அவமானம் செய்தால், அதைக்கண்டு சகிக்க மாட்டான். ஆகையால், பாண்டவர்களுக்கு அவமானம் செய்த துரியோதனனின் (திருதராஷ்டிரனின்) வீட்டில் உண்ணாமல், விதுரனின் வீட்டில் உணவை உண்டு துரியோதனனுக்கு அவமானம் செய்தான்.

சிறப்புப் பொருள்:
'லகுமிலோல' என்னும் சொல், பரமாத்மனின் உன்னத பதவியைக் குறிக்கிறது. எவரின் மகிமைகளை ரமாபிரம்மாதிகள் முழுமையாக அறிந்து ஸ்தோத்திரம் செய்ய முடியாததாக இருக்கிறதோ, அத்தகைய மகிமைகளைக் கொண்டவன் என்னும் அர்த்தத்தைக் கொடுக்கிறது இந்த சொல். இத்தகைய மகிமைகளைக் கொண்டிருந்தாலும், சாமான்யரான பக்தர்கள் செய்யும் அல்ப ஸ்தோத்திரங்களாலேயே மகிழ்ச்சியடைகிறான் ஸ்ரீபரமாத்மன். சிறு குழந்தைகள் பேசும் மழலைப் பேச்சுகளுக்கு, தாயானவள் மிகவும் சந்தோஷப்படுகிறாள். தாய்க்கு குழந்தையிடம் இருக்கும் பிரியமே அதற்குக் காரணம். அதேபோல, பரமாத்மனுக்கு பக்தர்களிடம் இருக்கும் பிரியத்தை இந்த உவமை விளக்குகிறது. ஹிரண்யகசிபுவின் சம்ஹாரத்திற்குப் பிறகு, பிரம்மதேவர் கேட்டுக் கொண்டதைப் போல, பிரகலாதன் நரசிம்ம ரூபி பரமாத்மனிடம் வந்து ஸ்தோத்திரம்

செய்துகொண்டிருந்தபோது, பரமாத்மன் மிகவும் மகிழ்ச்சியுடன் அதைக் கேட்டு, இவ்வாறு கூறினார்.

பிரஹ்லாத பத்ர பத்ரந்தெ ப்ரீதோஹந்தேऽஸுரோத்தம |
ய ஏதத்கீர்த்தயேன்மஹ்யம் த்வயா கீதமிதம் நர: ||
த்வாஞ்சமாஞ்ச ஸ்மரன்காலே கர்மபந்தாத்விமுச்யதே ||

'ஹே மங்களஸ்வரூபனான, தைத்யர்களில் ஸ்ரேஷ்டனான பிரகலாதனே, நீ செய்த ஸ்தோத்திரத்திற்கு நான் மிகவும் மகிழ்ந்தேன். நீ செய்த இந்த ஸ்தோத்திரத்தை யார் படிக்கின்றரோ, யார் என்னையும், உன்னையும் காலையில் நினைக்கின்றரோ, அத்தகையவர்களை கர்ம பந்தனங்களிலிருந்து நான் விடுவிக்கிறேன்' என்று பரமாத்மன் கூறினார்.

இப்படியே கஜேந்திரன் செய்த அனைத்து ஸ்தோத்திரங்களையும் கேட்டு மகிழ்ச்சியடைந்தான் பரமாத்மன். சித்ரகேது ராஜா, த்ருவ, அதிதி ஆகியோர் பரமாத்மனை துதித்தபோது, அவன் அவர்கள் முன் நின்று அவற்றைக் கேட்டு மகிழ்ச்சியடைந்து அவர்களுக்கு வரங்களைக் கொடுத்தான் என்பதை பக்தர்களின் சரித்திரங்களிலிருந்து படிக்கிறோம். அதனாலேயே 'பக்தரு மாடுதிஹ சம்ஸ்துதிகெ ஹிக்குவனு' என்று தாசராயர் கூறுகிறார்.

'தாள தன்னவரல்லி மாடுவ ஹேளனவ' ஸ்ரீகிருஷ்ணன் பாண்டவர்களின் தூதனாக துரியோதனனிடம் வந்தபோது, துரியோதனன் உணவை தயார் செய்து, ஸ்ரீகிருஷ்ணனை உணவு உண்ண அழைத்தபோது, ஸ்ரீகிருஷ்ணன், 'நான் உன் வீட்டில் உணவு உண்பதில்லை' என்றான். அதற்கான காரணம் கேட்டபோது - 'த்விஷதன்னம் நபோக்தவ்யம் த்விஷந்தம் நைவ போஜயேத்'. த்வேஷிகளின் வீட்டில் உணவு உண்ணக்கூடாது. த்வேஷிகளை தன் வீட்டிற்கு அழைக்கவும்கூடாது என்னும் நீதி சாஸ்திரம் உண்டு. ஆகையால், உன் வீட்டில் நான் உணவு உண்ண மாட்டேன் - என்றான். அதற்கு துரியோதனன் - 'எனக்கும் உனக்கும் விரோதம் இல்லை. அப்படியிருக்கையில், என் வீட்டில் சாப்பிடாமல் இருக்க என்ன காரணம்?' என்று கேட்க, ஸ்ரீகிருஷ்ணன் 'பாண்டர்வா த்விஷஸே ராஜ்ய மம ப்ராணாஹி பாண்டவா:' - 'நீ பாண்டவர்களிடம் த்வேஷத்தை காட்டுகிறாய். பாண்டவர்கள் என் உயிருக்கு நிகரானவர்கள். ஆகையால், எனக்கும் நீ த்வேஷியே. 'யர்ஸ்தா த்வேஷி சமாம் த்வேஷியஸ்தானனு சமாமனு' யார் அவர்களிடம் த்வேஷம் காட்டுவார்களோ, அவர்கள் எனக்கு த்வேஷிகளே. யார் அவர்களிடம் நட்பு பாராட்டுகிறார்களோ, அவர்கள் என்னிடமும் நட்பு பாராட்டுவார்கள் என்று தெரிந்துகொள்' என்றான். ஆகையால் 'தாள தன்னவரல்லி மாடுவ ஹேளனவ' என்கிறார் தாசராயர்.

விதுரன மனெயலி பாலுண்டு - இந்த வாக்கியத்தால் விதுரனின் வீட்டில் பால் மட்டும் குடித்தான் என்று தாசராயர் சொல்வது போல இருக்கிறது. அப்படி நினைத்தால், அது பாரதத்தின் வாக்கியத்திற்கு விரோதமாகும். பாரதத்தின் உத்யோக பர்வத்தில் :

தத:க்ஷணத்தான்னபானானி ஷுசீனி குணவந்திச ।
உபாஹரதனேகானி கேஷவாய மஹாத்மனே ।
தைஸ்தர்பயித்வா ப்ரதமம் பிராம்மணான்மதுசூதன: ।
ததோனுயாயிபி: சார்த்தம் மருத்பிரிவவாஸவ: ।
விதுரான்னானி புபுஜே ஷுசீனி குணவந்திச।।

இதன் பொருள்:
ஸ்ரீகிருஷ்ணனுக்காக தயார் செய்த, ருசிகரமான, அற்புதமான உணவுகளை விதுரன் ஸ்ரீகிருஷ்ணனுக்கு படைத்தான். ஸ்ரீகிருஷ்ணன் முதலில் பிராமணர்களுக்கு உணவளித்து, பின் அந்த ருசிகரமான உணவினை ஸ்ரீகிருஷ்ணன் உண்டான். அப்படியெனில், தாசராயர் சொன்னதற்கு என்ன அர்த்தம்? என்றால், தாசராயர் சொன்ன 'பாலு' என்னும் சொல்லுக்கு சுவையான அல்லது தூய்மையான என்று அர்த்தம் கொள்ளவேண்டும். சுவையான என்று பொருள். தாசராயர் 'உண்டனு' என்று சொன்னதால், அது உணவை உண்டான் என்றே குறிக்கும். இல்லையேல் பால் 'குடிதனு' என்று அவர் சொல்லியிருக்க வேண்டும். உண்டனு என்பது பொதுவாக உணவை உண்பதற்கே பயன்படுத்தப்படுகிறதே தவிர, பால் உண்டனு என்று நாம் சொல்வதில்லை. இதிலிருந்து பாரத வாக்கியங்களுக்கும் நிர்ணய வாக்கியத்திற்கும் வேறுபாடு வருவதில்லை. இப்படியாக விதுரனின் வீட்டில் உணவை உண்டு, திருதராஷ்டிரனின் அல்லது துரியோதனின் மானத்தை அழித்தான் (வாங்கினான்) என்றதால், அவர்களை நிராகரித்து விதுரனின் வீட்டுக்கு வந்தது அவர்களுக்கு அவமானமானது என்று சொல்வதாக அறியலாம்.

**ஸ்மரிஸுவவ ரப$^{1}$ராத$^{4}$கள தா**
**ஸ்மரிஸ ஸகலேஷ்ட பிரதா$^{3}$யக**
**மரளி தனக$^{3}$ர்ப்பிஸலு கொட்டுத$^{3}$னந்த மடி$^{3}$ மாடி$^{3}$ ।**
**ப$^{1}$ரிபரியலிந்து$^{3}$ணிஸி ஸுக$^{2}$ ஸா**
**க$^{3}$ரதி$^{3}$ லோலாடி$^{3}$ஸுவ மங்க$^{3}$ல**
**சரித சின்மயகா$^{3}$த்ர லோக$^{1}$பவித்ர ஸுசரித்ர ।।15**

ஸ்மரிசுவவ = தன்னை நினைப்பவர்களின்
அபராதகள = தவறுகளை
தா ஸ்மரிஸ = லட்சியம் செய்வதில்லை
சகலேஷ்ட பிரதாயக = அவர்களின் மனோபீஷ்டங்களை நிறைவேற்றுபவன் (பகவத் ப்ரீதிக்காக அவர்கள் செய்யும் கர்மங்களை)
மரளி = மறுபடியும்
தனகர்ப்பிஸலு = அதை அவர்கள் அர்ப்பித்தால்
அத = அதனை
அனந்த மடி மாடி = அனந்த குணங்களை பல மடங்கு ஆக்கி
பரிபரியலி = பலவிதங்களாக
உண்டு = பக்தர்களில் இருந்து, தான் அவற்றை உண்டு
உணிஸி = பக்தர்களை உண்ண வைத்து
மங்களசரித = மங்களகரமான மகிமைகளைக் கொண்டவன்

சின்மயகாத்ர = சிதானந்த ஸ்வரூபனான
லோகபவித்ர = லோக பவித்ரனான
சுசரித்ர = மிகச்சிறந்த சரித்திரத்தைக் கொண்ட ஸ்ரீபரமாத்மன்
சுகசாகரதி = சுகம் என்னும் கடலில்
லோலாடிசுவ = மிதக்குமாறு செய்வான்.

பொருள்:

தன்னை எப்போதும் நினைத்துக் கொண்டிருக்கும் பக்தர்கள் என்ன அபராதம் செய்தாலும் அதை பரமாத்மன் நினைவுக்குக் கொண்டு வருவதில்லை (மறந்துவிடுகிறான்). பிரதிபலனாக அவர்களின் மனோபீஷ்டங்களை நிறைவேற்றுகிறான். மங்களகரமான சரித்திரங்களைக் கொண்டவனும், சிதானந்த ஸ்வரூபனும், லோக பவித்ரனும், உத்தம மகிமைகளைக் கொண்டவனுமான ஸ்ரீஹரி, தன் பக்தர்கள் செய்யும் பூஜாதி கர்மங்களை, அந்த பரமாத்மனுக்கே கிருஷ்ணார்ப்பணம் என்பவர்களுக்கு, அதனை பல மடங்காக்கி, அதன் பலன்களை, அவர்களில் இருந்து தான் உண்டு, அவர்களையும் உண்ண வைத்து, அவர்களை சுக சமுத்திரத்தில் நீந்தி கரைசேருமாறு செய்கிறான்.

சிறப்புப் பொருள்:
'ஸ்மரிசுவர அபராதகள தா ஸ்மரிஸ' - தன் பக்தர்கள் சில நேரங்களில் அசுர ஆவேசத்தினால் தவறுகளை செய்வர். ஒருமுறை ஸ்ரீகிருஷ்ணன் யாகம் செய்துகொண்டிருந்தபோது, அங்கு வந்த ஒரு பிராமணன், தனக்குப் பிறக்கும் குழந்தைகள் அனைவரும் பிறந்தவுடன் இறந்து விடுகின்றனர். அப்படி இறந்த தன் குழந்தைகளை மறுபடி உயிர்ப்பித்துக் கொடுக்குமாறு கேட்கிறார். ஸ்ரீகிருஷ்ணன் யாகம் செய்துகொண்டிருந்ததால், எதுவும் பதில் அளிக்காமல் அமைதியாக இருந்தான். அப்போது அங்கிருந்த அர்ஜுனன் எழுந்து, அக்குழந்தைகளை தான் காப்பாற்றுவதாகக் கூறினான்.

அதற்கு ஸ்ரீகிருஷ்ணன் 'பெரிய பூதம் வந்திருக்கிறது. அது அக்குழந்தையை கவர்ந்து கொள்ளும். ஆகவே அக்குழந்தையைக் காப்பாற்றுவது உன்னால் முடியாதது. யாகம் முடிந்தபிறகு நாம் இருவரும் போய் அந்த வேலையைச் செய்வோம்' என்றான். ஆனால் அதைக் கேட்காத அர்ஜுனன், அந்த பிராமணரிடம் சென்று, தான் அக்குழந்தைகளை காப்பாற்றுவதாகவும், அப்படி செய்யமுடியவில்லையெனில், தான் அக்னிப் பிரவேசம் செய்வதாகவும் சபதம் செய்தான். நம்பிக்கையற்ற அந்த பிராமணருக்கு, நம்பிக்கை ஊட்டி, அங்கு சென்று முயன்றாலும், அவனால் அக்குழந்தைகளை மீட்க முடியவில்லை. ஆகையால் தன் சபதத்திற்கேற்ப, அக்னிப் பிரவேசத்திற்கு தயாரானான்.

அப்போது ஸ்ரீகிருஷ்ணன் வந்து, அனந்தாசனத்தில் இருந்த அக்குழந்தைகளைக் கொண்டு வந்து பிராமணரிடம் கொடுத்து, அர்ஜுனனையும் சமாதானப்படுத்தினான். இப்படியாக, அர்ஜுனன் ஸ்ரீகிருஷ்ணனை புறக்கணித்தாலும், அவன் அர்ஜுனனின்

தவறினை கவனத்தில் கொள்ளாமல், அவன் அக்னிப் பிரவேசம் செய்யும் காலத்தில் அங்கு வந்து அதனைத் தடுத்து, அவனைக் காப்பாற்றினான்.

பூதனி, சிசுபாலன் ஆகியோரில் முறையே ஊர்வசி, ஜய ஆகியோர் இருந்தாலும், அசுர ஆவேசத்தினால் அவர்கள் செய்த தவறுகளை மன்னித்து, அவர்களுக்கு திவ்ய கதியையே கொடுத்தான். இத்தகைய உதாரணங்கள் பல உண்டு. கிரந்தம் அதிகமாகிவிடும் என்பதால் அனைத்தையும் இங்கு விளக்கவில்லை. இத்தகைய கதைகளைக் கேட்டு, பக்தர்களே இந்த விஷயத்தை ஊகிக்க முடியும். ஆகையால் தாசராயர் 'ஸ்மரிசுவர அபராதகள தா ஸ்மரிச' என்றிருக்கிறார்.

'மரளி தனகர்ப்பிஸலு கொட்டுதனந்த மடிமாடி' பக்தர்கள் செய்த அபராதங்களை பரமாத்மனுக்கு அர்ப்பிக்க, அதனை பன்மடங்காக்கி, சுகங்களைக் கொடுக்கிறான் என்பதை மக்களுக்கு தெரிவிப்பதற்காக, குசேலன் கொடுத்த ஒரு பிடி அவலைப் பெற்றுக்கொண்டு, அவனுக்கு இஹத்தில் பெருஞ்செல்வத்தைக் கொடுத்து, பரலோகத்தில் முக்தியைக் கொடுத்தான். இதைப் போல, நாம் செய்யும் கர்மங்களை பரமாத்மனுக்கு ஒப்படைத்தால், அவன் அதை ஏற்றுக்கொண்டு, அவற்றை பன்மடங்காக்கி, அதன் பலன்களைத் திருப்பித் தருவான் என்பது கருத்து.

இதற்கு ஆதாரமாக மத்வாசார்யரின் வாக்கியம் ஒன்று இருக்கிறது. துவாதச ஸ்தோத்திரத்தில் : 'அக்ஷயம் கர்மயஸ்மின் பலே ஸ்வர்ப்பிதம் ப்ரக்ஷயம் யாந்தி துக்கானியன் நாமத:' - 'எந்த பரமாத்மனிடம் நாம் செய்யும் கர்மங்களை சமர்ப்பிப்பதால், அந்த பலன் அக்ஷயமாகிறதோ, யாரின் நாமோச்சாரணை செய்தால் மட்டும் துக்கங்கள் அனைத்தும் நாசமாகிறதோ, அத்தகைய பரமாத்மனை பக்தியுடன் அடைவோமாக' என்கிறார். இதே அபிப்பிராயத்தை தாசராயர் இங்கு சொல்லியிருக்கிறார்.

பரியபரியலுண்டுனிஸி - பரமாத்மன் ஜீவர்களை ஸ்ருஷ்டித்து, காப்பாற்றியவாறு, ஜீவர்களில் இருந்து, ஸ்தோத்ராதிகளைப் பெற்றுக்கொண்டு, விஷய சுகங்களை தான் உண்டு, அவர்களுக்கும் கொடுக்கிறான் என்று பொருள். பாகவத 1ம் ஸ்கந்தத்தில் 'பூதேஷு ஜாந்தர்ஹித ஆத்ம தந்த்ர: பாட்வர்கிகம் ஜிப்ரதி ஷட்குணேஷ:' என்று சொல்லப்பட்டிருக்கிறது. இந்த ஸ்லோகம் மேற்சொன்ன அர்த்தத்தையே கொடுக்கிறது. ஆனால் பரமாத்மன் ஸ்வதந்த்ரனாகையால், தேகங்களில் இருந்தாலும், துக்கங்களை விட்டு, சுகங்களை மட்டுமே ஸ்வீகரிக்கிறான்.

புங்க்தே பூதேஷு தத்குணார்த்த - என்று குணங்களை அதாவது சுபங்களை, சுகங்களை மட்டுமே ஸ்வீகரிக்கிறான் என்னும் பொருள் தெளிவாகிறது. 'சுகசாகரதி லோலாடிசுவ' இஹத்திலும் தன் பக்தர்களுக்கு தன் அபரோக்ஷத்தைக் காட்டி, அவர்களை மகிழ்ச்சிக் கடலில் ஆழ்த்துவான். பாகவத 1ம் ஸ்கந்தத்தில் நாரதரின் வாக்கியம் - 'ஆனந்த சம்ப்லவேலினோ நாபஷ்யமுபயம்முனே'. 'அந்த பகவந்தனைப் பார்த்த மாத்திரத்திலேயே நான் மகிழ்ச்சிக் கடலில் மூழ்கிவிட்டேன். எனக்கு இஹபரம் என்பதே தெரியவில்லை' என்று நாரதர் வியாசரைப் பார்த்து

சொல்கிறார். ஆகையால், பக்தர்களுக்கு இஹத்திலேயே இத்தகைய ஆனந்தத்தைக் கொடுக்கிறான் என்றபிறகு முக்தியில் ஆனந்தத்தைக் கொடுப்பதைப் பற்றி கேட்கவேண்டுமா? அதையும் கொடுப்பான் என்பதே கருத்து. லோகபவித்ர, சுசரித்ர ஆகியவை 'பிரத்யக்ஷம்யாந்தி து:க்கானியன் நாமத:' - நாமஸ்மரணையால் மட்டுமே துக்கங்களை நாசம் செய்வேன் என்ற துவாதச ஸ்தோத்திரத்தின் வாக்கியத்தையே தாசராயர் இங்கு குறிப்பிட்டிருக்கிறார்.

**ஏனு கருணாநிதி$^4$யோ ஹரி ம**
**த்தேனு ப$^4$க்தாதீ$^3$னனோ இ**
**ந்னேனு ஈதன லீலெ இச்சாமாத்ரத$^3$லி ஜக$^3$வ ।**
**தானெ ஸ்ருஜிஸுவ பாலிஸுவ நி**
**ர்வாண மொத$^3$லாதகி$^2$ல லோக**
**ஸ்தா$^2$னத$^3$லி மத்தவரனிட்டா$^3$னந்த$^3$ ப$^3$டிஸுவனு ||16**

ஹரியு = ஸ்ரீபரமாத்மன்
ஏனு கருணாநிதியோ = எப்படிப்பட்ட கருணாமயியோ
மத்தேனு பக்தாதீனனோ = இன்னும் எப்படிப்பட்ட பக்தர்களின் வசமானவனோ
இன்னேனு ஈதன லீலெ = இப்படிப்பட்டவனின் லீலைகளை என்னவென்று சொல்லுவேன்
இச்சாமாத்ரதலி = தன் விருப்பத்தின்படி
ஜகவ = உலகத்தை
தானே ஸ்ருஜிசுவ = தானே உருவாக்குவான்
பாலிஸுவ = காப்பாற்றுகிறான்
நிர்வாண = வைகுண்ட முதலானவைகளை
லோகஸ்தானகளலி = ஆகிய இடங்களில் வைத்து,
ஆனந்த படிசுவனு = அவர்களை மகிழ்ச்சிப்படுத்துவான்

பொருள்:
ஸ்ரீஹரிக்கு சமமான இன்னொரு கருணாமயி இல்லை. அதேபோல பக்தர்களின் வசமாகும் தேவர்கள் வேறு யாரும் இல்லை. இத்தகையவனின் லீலைகளை விவரிக்கும் சாத்தியம் இல்லை. ஸ்ரீஹரி அவன் தன் மனதில் நினைத்தவுடனேயே, தன் விருப்பப்படி, ஸ்ருஷ்டி, ஸ்திதி, லய, மோக்ஷாதிகள் ஜீவராசிகளுக்குக் கிடைக்கின்றன.

சிறப்புப் பொருள்:
பக்தாதீனன் என்றால் பக்தர்களின் இஷ்டார்த்தங்களை நிறைவேற்றுபவன் என்று பொருள். மத்வாசார்யர் பதரிகாசிரமத்தில் நாராயணரூபியை தரிசனம் செய்தபோது - 'அமராமரானுக நராசுராதிர்கா ! ஸ்ருஜிஸி ப்ரபாலயஸி ஹம்ஸி சந்ததம் ஸ்வகதிம் ப்ரயாபயஸி சைஷலீலயா' என்று ஸ்தோத்திரம் செய்தார். இதன் பொருள்: ஸ்வாமி நீங்கள் அமராமரானுக நராசுராதிர்கா, அமரானுக = உபதேவதைகள். நர = மனுஷ்யர்கள், அசுராதிர்க = அசுரர்களே முதலானவர்களை, லீலயா = விளையாட்டாக, ஸ்ருஜிஸி = படைத்து, ப்ரபாலயஸி = காப்பாற்றி,

ஹம்ஸி = அழித்து, ஸ்வகதிம் = ஜீவனின் யோக்யதைக்கேற்ப அதாவது மோட்சம், நித்ய சம்சாரம், அந்தந்தமஸ் ஆகியவற்றை, ப்ரயாபயஸி = கொடுக்கிறாயே' என்று மத்வவிஜயத்தில் சொல்லப்பட்டிருக்கிறது. இந்த விஷயத்தையே தாசராயர் இங்கு சொல்கிறார்.

**ஜனப மெச்சித$^{3}$ரீவ த$^{4}$ன வா**
**ஹன விபூ$^{4}$ஷண வசன பூமிய**
**தனு மனக$^{3}$ளித்தா த$^{3}$ரிபருண்டேனு லோகதொ$^{3}$ளு ।**
**அனவரத நெனெவவரனந்தா**
**ஸனவே மொத$^{3}$லாதாலயதொ$^{3}$ளி**
**ட்டணுக$^{3}$னந்த$^{3}$தி$^{3}$ அவர வஷனாகு$^{3}$வ மஹாமஹிம ।।17**

ஜனப = அரசன்
மெச்சிதரெ = மகிழ்ச்சியடைந்தால்
தன வாஹன விபூஷண வசன பூமிய = பொருட்களை, குதிரை முதலான வாகனங்களை, நகைகளை, ஆடைகளை, நிலங்களை
ஈவ = கொடுப்பான்
லோகதொளு = உலகத்தில்
தனு = தன் சரீரத்தை
மனகள = தன் மனதையும்
இத்து = கொடுத்து
ஆதரிபருண்டேனு = ஆதரிப்பவர்கள் உண்டா என்று யோசித்துப் பார்
மஹாமஹிம = மிகச்சிறந்த புகழைக் கொண்ட ஸ்ரீபரமாத்மன்
அனவரத நெனெவவர = எப்போதும் தியானித்திருப்பவர்களை
அனந்தாஸனவெ மொதலாதாலயதலி = அனந்தாசன, ஸ்வேதத்வீப, வைகுண்ட ஆகிய தன் இல்லங்களில் வைத்து
அணுகனந்ததி = சிறு பாலகனைப் போல ஸ்ரீபரமாத்மன்
அவர வஷனாகுவ = அவர்களின் வசமாவான்.

பொருள்:
ஒரு அரசன், தன் சேவகனின் சேவையை மெச்சினால், அவனுக்கு பொருள், வாகனங்கள், நகைகள், ஆடைகள், நிலங்கள் ஆகியவற்றைக் கொடுத்து அவனை மகிழ்விப்பான். மகாமகிமையுள்ள ஸ்ரீபரமாத்மன், தன்னை எப்போதும் பஜிப்பவர்கள், தன்னைப் பார்த்து மகிழ்ச்சியடைவதற்காக, தன் தரிசனத்தையே கொடுக்கிறான். அவர்களை முக்தராக செய்து, அனந்தாசனம் முதலான தன் வீடுகளில் அவர்களை வைத்து மகிழ்ச்சியளிப்பான். இத்தகைய பிரபு இந்த உலகத்தில் வேறு யார் உளர்? ஆகையால், ஸ்ரீஹரியே தயா சமுத்திரன் என்கிறார்.

சிறப்புப் பொருள்:
தனுமனகளித்ததரிபருண்டேனோ - இங்கு தனு என்றால், சாத்விக மக்களுக்கு தேவதாதி சரீரங்களைக் கொடுத்து, முக்தி சாதனங்களைக் கொடுத்து, வைகுண்டாதி தன் இடங்களில் வைத்து ஆதரிக்கிறான் என்ற ஒரு அர்த்தத்தை சொல்லலாம்.

இன்னொரு அர்த்தம் - அவன் பக்தாதீனன் ஆகையால், அர்ஜுனாதிகளுக்கு தன் சரீரத்தையே கொடுத்து சாரதியாக இருந்து, அவர்களைக் காத்தான். நாரதாதிகளுக்கு அவர்கள் நினைத்த இடங்களிலேயே தரிசனம் கொடுத்திருந்தான். இதையே 1ம் ஸ்கந்த பாகவதத்தில் 'அஹோ இவமே ஷீக்ரம் தர்ஷனம்யாதி சேதஸி' - நான் பாடல்களைப் பாடத் துவங்கியவுடன், எதிரில் இருப்பவரை அழைத்தால் எப்படி உடனே வருவாரோ, அதுபோல, ஸ்ரீஹரி என் சித்தத்தில் தரிசனம் அளிப்பான் - என்று நாரதர் கூறுகிறார்.

தற்போது 400-500 ஆண்டுகளுக்கு முன்னர்கூட ஸ்ரீஹரி தன் அற்புத மகிமைகளைக் காட்டியிருக்கிறார். மகாராஷ்டிரத்தில் கொல்லாபுரத்தில் 'சதி சக்குபாய்' என்பவர் விட்டலனிடம் பரம பக்தியைக் கொண்டு, அவனை எப்போதும் ஆராதித்தவாறு இருந்து, பண்டரிபுரத்தில் ஒவ்வொரு ஆண்டும் ஆஷாட சுத்த ஏகாதசியன்று நடக்கும் விழாவிற்காக போகும் தாசர்களுடன் தானும் அங்கு போவதற்கான முயற்சியை செய்துகொண்டிருக்க, அவளின் அத்தை, அவளை மிகவும் கண்டித்து, தண்டித்து, ஒரு தூணில் அவளைக் கட்டிப்போட்டு, 15 நாட்கள் வரை அவளுக்கு சாப்பாடு கொடுக்காமல் துன்புறுத்தினாள். சக்குபாய், ஸ்ரீஹரியிடம் தன் மனம், உடலை ஒப்படைத்து தொடர்ந்து அவனை நினைத்து வந்தாள்.

ஸ்ரீஹரியும் அவளுக்கு விடுதலையைக் கொடுத்து, அவளை பண்டரிபுரத்திற்கு அனுப்பிவிட்டு, அவள் யாத்திரையை முடித்துவரும் வரையில், தான் சக்குபாயைப் போல அந்த தூணில் கட்டப்பட்டு, அவள் திரும்பி வந்தபிறகு, மாயமானான். சக்குபாயின் அத்தை ஆகியோர் நடந்த விஷயங்களைக் கேள்விப்பட்டு, வியந்து வருத்தப்பட்டு, அவளிடம் அவர்களை மன்னிக்குமாறு வேண்டியவாறு, அவளின் அருளின்படி அனைவரும் இஹத்தில் சுகங்களை அடைந்தனர். இப்படி பரமாத்மன் பக்தர்களுக்கு தன் சரீரத்தையே கொடுப்பதால் 'தனுமனகளித்தா' என்று தாசராயர் கூறுகிறார்.

சிறிய குழந்தை எப்படி தன் பெற்றோரின் வசத்தில் இருக்குமோ, அப்படியே பரமாத்மனும் பக்தர்களின் வசத்தில் இருக்கிறான் என்பது பொருள். ஆகையாலேயே இவனை மகாமகிமை உள்ளவன் என்றும், கருணைக்கடல் என்றும் அழைக்கின்றனர்.

**பு[4]வனபாவன சரித புண்ய**
**ஸ்ரவணகீர்த்தன பாபநாஷன**
**கவிபி[3]ரீடி[3]த கைரவதல ஷ்யாம நிஸ்ஸீம |**
**யுவதிவேஷதி[3] ஹிந்தே[3] கௌ[3]ரி**
**த[4]வன மோஹிஸி கெடி[3]ஸி உளிஸித[3]**
**இவன மாயவ கெ[3]லுவனாவனு ஈ ஜக[3]த்ரயதி[3] ||18**

புவனபாவன சரித = 14 உலகங்களையும் பவித்ரமாக ஆக்கும் சரிதத்தைக் கொண்டவன்

புண்யஸ்ரவணகீர்த்தன = புண்யகரமான ஸ்ரவண கீர்த்தனைகளைக் கொண்டவன் (கதை கேட்பதும், அவனைப் பற்றி பாடுவதும்கூட புண்ணியகரமானது). அவனின் மகிமைகளை ஸ்ரவணம் செய்பவர்களுக்கும், பாடுபவர்களுக்கும் புண்ணியத்தைக் கொடுப்பவன் என்னும் கருத்து.
பாபனாஷன = பாவங்களை நாசம் செய்பவன்
கவிபிரீடித = பிரம்மாதிகளால் வணங்கப்படுபவன்
கைரவதளஷ்யாம = குவளை மலரின் இதழ்கள் போல நீல வண்ண தேகமுடையவன்
நிஸ்ஸீம = அபரிமிதமான குணரூபங்களைக் கொண்டவன்
ஹிந்தெ = முன்னர், சாக்ஷுஷ மன்வந்தரத்தில்
யுவதிவேஷதி = பெண்ணின் ரூபத்தில்
கௌரிதவன = உமாபதியான ருத்ரதேவரை
மோஹிஸி, கெடிஸி = அவரை தன் மேல் ஆசைப்பட வைத்து
உளிஸிதனு = பின் அவரைக் காப்பாற்றினான்
ஈ ஜகத்ரயதி = மூன்று உலகங்களிலும்
அவனு = எந்த புருஷன் (யாரும்)
இவன மாயவ = இவனின் மாயையை
கெலுவனு = வெல்பவன் யாருமில்லை.

பொருள்:
ஸ்ரீபரமாத்மன் 14 உலகங்களையும் பவித்ரமாக ஆக்கும் சரித்திரத்தைக் கொண்டவன். தன் கதையை கேட்பவருக்கும், கொண்டாடுபவர்களுக்கும் புண்ணியத்தைக் கொடுப்பவன். அவர்களின் பாவத்தை போக்குவான். பிரம்மாதிகளால் போற்றப்படுபவன். குவளை மலர் இதழ்களைப் போல உத்தமனான நீல வர்ண தேகத்தைக் கொண்டவன். அபரிமிதமான நாம ரூபங்களைக் கொண்டவன் ஆகையால், நிஸ்ஸீம என்ற பெயர் பெற்றவன்.

யுவதி வேஷதி ஹிந்தெ கௌரிதவன மோஹிஸி - க்ருதயுகத்தில் தேவ தைத்யர்கள் அனைவரும் சேர்ந்து பாற்கடலைக் கடைந்தபோது ஸ்ரீபரமாத்மன், தைத்யர்களை ஏமாற்றி தேவதைகளுக்கு அமிர்தத்தை பங்கிட்டுக் கொடுத்தான் என்னும் விஷயத்தை ருத்ரதேவர் கேட்டு, ஸ்ரீபரமாத்மனிடம் வந்து ஸ்தோத்திரம் செய்து 'நீ தைத்யர்களை ஏமாற்றுவதற்காக எடுத்த ஸ்த்ரீ ரூபத்தை எனக்குக் காட்டுவாயாக' என்றார். அதற்கு பரமாத்மன் 'ஈஸ்வரா! தைத்யர்கள் தேவதைகளிடமிருந்து அமிர்த கலசத்தை அபகரித்துப் போக, அவர்களை வஞ்சித்து, தேவதைகளுக்கு அமிர்தத்தை பகிர்ந்து கொடுக்க, அந்த ரூபத்தை நான் எடுத்தேன். அது அவர்கள் பார்த்து ஏமாற்றம் அடைவதற்காக எடுத்த ரூபம். ஆனாலும், நீ விரும்பியதால், உனக்கு அதை காட்டுகிறேன்' என்று சொல்லி, ஸ்ரீஹரி மறைந்தார். ருத்ரதேவர் பார்வதி சமேதராக, அனைத்து இடங்களிலும் ஸ்ரீஹரியை தேடினார்.

அப்போது பக்கத்தில் இருந்த ஒரு தோட்டத்தில், பாட்டு பாடும் ஒலியும், அதற்கேற்ப நடனமாடுவதும், கைகளில் இரு பந்துகளை ஏந்தி விளையாடியவாறு, அற்புத அழகினைக் கொண்ட ஒரு பெண் வருவதை ருத்ரதேவர் கண்டார்.

ஸ்ரீஹரியின் மாயையை வெல்பவர் யார்? உடனடியாக ருத்ரர் காமத்திற்கு அடிமையானார். அதற்குள் அந்தப்பெண் ருத்ரதேவருக்கு அருகில் வர, காற்று அவளின் வஸ்திரத்தை அபகரித்தது. 'பவான்யா அபி பஷ்யந்த்யாகதஹ்ரீ ஸ்தத்பதன்யயௌ' - பார்வதிதேவி பார்த்திருக்க, ருத்ரதேவர், அந்தப் பெண்ணை நெருங்கி, அவள் முடியில் கைவைத்துப் பிடித்து, அவளை கட்டியணைக்க முயன்றார். அவளோ அவரிடமிருந்து தப்பி ஓடியபோது, ருத்ரரும் அவளை துரத்திப் பிடிக்க முயல, அவரால் அது முடியவில்லை.

வெகு சமீபத்தில் ஓடிக்கொண்டிருந்த பெண்ணைப் பார்த்ததால், அவரது மனம் சஞ்சலப்பட்டு, அவரது வீர்யம் வெளிப்பட்டது. அந்த இடங்கள் அனைத்தும் சிவ-ஸ்தலங்கள் ஆயின. சில காலம் கழித்து, ருத்ரருக்கு, அந்தப் பெண் ஸ்ரீபரமாத்மனே என்கிற உண்மை புலப்பட்டது. உடன் பெண் மறைந்தாள். ருத்ரரும் வெட்கத்துடன் தலைகுனிந்து, பார்வதியிடம் வந்தார். அப்போது ஸ்ரீபரமாத்மன் தன் உண்மை ரூபத்தினால் ருத்ரருக்கு தரிசனம் அளித்து, அவரை சமாதானப்படுத்தி மறைந்தார். மகானுபாவரான மன்மதனையே தகித்த ருத்ரரின் கதியே இப்படியானால், உலகத்தில் வேறு யார் இவரது மகிமைகளை வெல்லமுடியும்? இதே அபிப்பிராயத்தையே தாசராயர் இங்கு சொல்லியிருக்கிறார்.

**பாபகர்மவ ஸஹிஸுவொடெ3 லகு**
**மீபதிகெ3 ஸமராத3 தி3விஜர**
**நீ பயோஜப3வாண்ட3 தொ3ளகா3வல்லி நா காணே |**
**கோப கு3ருவினமட3தி3 ப்4ருகு3 நக3**
**சாப மொத3லாத3வரு மாட்3த ம**
**ஹாப1ராத4களெ ணிஸித3னெ கருணாஸமுத்3ர ஹரி ||19**

பாபகர்மவ = பாவ கர்மங்களை
சஹிசுவடெ = மன்னிப்பதில்
லட்சுமிபதிகெ சமராத = லட்சுமிபதிக்கு இணையான
திவிஜரனு = தேவதைகளை
ஈ பயோஜபவாண்டதொளகெ = இந்த பிரம்மாண்டத்தில்
ஆவல்லி = எங்கும்
நாகாணெ = என்னால் பார்க்கமுடியவில்லை
கோப = ஸ்வர்க்க அதிபதியான இந்திரன் (அல்லது சந்திரன்)
குருவின மடதி = பிருகஸ்பதி ஆசார்யரின் மனைவியான தாரா
ப்ருகு = ப்ருகு முனிவர்
நகசாப = மலையையே வில்லாக ஏந்திய ருத்ரர்,
மொதலாதவரு = ஆகியோர்
மாடித = செய்த
மஹாபராதகள = மிகப்பெரிய தவறுகளை
எணிஸிதனெ = எண்ணிப் பார்த்தானா? (இல்லை)
கருணா சமுத்ர ஹரி = கருணைக்கடலான ஹரி.

பொருள்:
பக்தர்கள் செய்யும் பாவ கர்மங்களை மன்னிப்பதில், லட்சுமிபதியான, கருணைக்கடலான ஸ்ரீஹரியை விட்டால், இந்த பிரம்மாண்டத்தில் எங்கு தேடினாலும், வேறு யாரும் கிடைக்கமாட்டார்கள். தேவேந்திரன், சந்திரன், பிருஹஸ்பதி ஆச்சார்யரின் மனைவியான தாரா, ப்ருகுரிஷி, ருத்ரதேவர் ஆகியோர் செய்த மகா அபராதங்களை (தவறுகளை), கண்டுகொள்ளாமல் இருந்தானே? ஆகையாலேயே, அவனுக்கு கருணைக்கடல் என்று பெயர் வந்தது.

சிறப்புப் பொருள்:
'கோப' என்றால் அது இந்திரனையும், சந்திரனையும்கூட குறிக்கலாம். எப்படியெனில் 'கௌர்னாகே வ்ருஷபே சந்திரே வாக் பூதிக்தேனு ஷுஸ்த்ரியா மித்யமர:' கோ என்றால் ஸ்வர்க்கம், பசு, எருது, சந்திரன், வாக்கியம், பூமி, திசை என இவற்றைக் குறிக்கும் என அமரகோசத்தில் சொல்லப்பட்டிருக்கிறது. 'த்வயோஸ்து ரஷ்மித்ருக்பாண ஸ்வர்கவஜ்ராம்பு லோமஸு' என்னும் வாக்கியத்தில் கோ என்றால் ரஷ்மி அதாவது கிரணங்களுக்கும்கூட பொருந்தும். 'காம்பாதீதி கோப:' ஸ்வர்க்கத்திற்கு அதிபதியானதால், தேவேந்திரனுக்கு கோப என்று பெயர். தன் கிரணங்களால் பிராணிகளை காப்பாற்றுவதால் சந்திரனுக்கும் கோப என்று பெயர். இந்திரன், அகலிகையை மயக்கியதால், மிகப்பெரிய பாவத்தை சம்பாதித்தான். பாரிஜாத மரத்தின் அபஹரண காலத்தில் கிருஷ்ணனுடன் போர் புரிந்தான். கோபாலகர்கள் செய்யத் தீர்மானித்த இந்திர யாகத்தை ஸ்ரீகிருஷ்ணன் தடுத்தான் என்ற கோபத்தினால் கோகுலத்தை மூழ்கடிக்க முயன்றான். இப்படி பல தகாத செயல்களால் சம்பாதித்த பாவங்களை எல்லாம் பரிகரித்து அவனை காப்பாற்றினான் ஸ்ரீபரமாத்மன்.

சந்திரன், குருபத்னியான தாரையை மயக்கினாலும், அதற்கேற்ப தண்டனையான நரகதண்டனையை ஸ்வாமி சந்திரனுக்கு விதித்தானா? இல்லை. 'குருவின மடதி' பிருஹஸ்பதியின் மனைவியான தாரையை சந்திரன் மயக்கி, மிகப்பெரிய பாவத்தை சம்பாதித்தாலும், அதனை கவனத்தில் கொள்ளாமல், அவனுக்கு அருளினான்.

யார் சர்வோத்தமன் என்று சோதிப்பதற்காக ப்ருகுரிஷிகள் பரமாத்மனை அவன் மார்பில் எட்டி உதைத்தார். இதற்கான தண்டனையை பரமாத்மன் அவருக்கு கொடுத்தானா? இல்லை. 'நகசாப' - நக என்றால் மலைகள். அத்தகைய மலைகளை தனுஸ்ஸாக வைத்துக் கொண்டிருப்பவன் என்று பெயர். இதே ஜகன்னாததாசர் செய்த, ருத்ர தேவரைக் குறித்த இன்னொரு ஸ்தோத்திரத்தில், 'த்ருத டமருக ஸாரங்க நின்னயபாத ஷதபத்ரார்ச்சிபர சங்க ஸதத பாலிஸொ ஜகன்னாத விட்டலன சம்ஸ்துதிசுவெ நீக்ஷிதிரத பூதரதன்வி' என்று சொல்லியிருக்கிறார். பூதரதன்வி என்றால் நகசாப என்னும் அர்த்தமே வருகிறது. த்ரிபுராசுரர்களின் சம்ஹார காலத்தில் ருத்ரதேவருக்கு பூமியே ரதமாக ஆனது என்றும், நான்கு வேதங்களே குதிரைகள் ஆனது என்றும், பிரம்மதேவர் சாரதியானார் என்றும், மேரு பர்வதமே தனுஸ் ஆனது என்றும், ஸ்ரீஹரி பாணமாக ஆனார் என்றும் பாரதத்திலும், ஹரிவம்ச, பவிஷ்யோத்தர புராணங்களிலும் கதை உண்டு.

ஆகையாலேயே, நகசாப என்றார். இத்தகைய ருத்ரதேவர், பாணாசுரனுக்கும் ஸ்ரீகிருஷ்ண பரமாத்மனுக்கும் உஷாவிற்காக போர் நடந்தபோது பாணாசுரனின் சார்பாக, ஸ்ரீகிருஷ்ணனுடன் போர் புரிந்தார்.

இது மட்டுமல்லாமல், ராமாவதார சமயத்தில், ராவணனின் சம்ஹாரம் ஆனபிறகு, பிரம்மதேவர் தேவதைகளுடன் சேர்ந்து ராமனைக் குறித்து ஸ்தோத்திரம் செய்துகொண்டிருக்க, ருத்ரர் ராமனைக் குறித்து 'யாராலும் கொல்லப்படக்கூடாது என்ற வரத்தை என்னிடமிருந்து பெற்றிருந்த ராவணனை, என் வரத்தை மீறி கொன்றாய். ஆகையால், என்னுடன் போருக்கு வா' என்றார். இந்த விஷயத்தில் நிர்ணய வாக்கியம் இப்படி இருக்கிறது.

இதீரிதேத்வப்ஜ பவேனஷூலி சமாஹ்வய த்ராகவ மாஹவாய |
வரம் மதீயம் த்வகணய்ய ரக்ஷோ ஹதம் த்வயாதேன ரணாய மைஹி || (8-218)

இதிலிருந்து மேற்கூறிய அர்த்தம் புலப்படுகிறது. பாரிஜாத அபஹரண காலத்தில், இந்திரனுடன் சேர்ந்து ருத்ரதேவர், ஸ்ரீகிருஷ்ணனுக்கு எதிராக போர் புரிந்தார். இப்படியாக ருத்ரதேவர் பலமுறை ஸ்ரீபரமாத்மனுடன் போர் புரிந்திருக்கிறார் என்று புரிகிறது. நகசாப மொதலாதவரு - என்று சொல்லியதால், ருத்ரதேவருடன், பலராம, அர்ஜுன, திருதராஷ்டிர, பீஷ்மாசார்யர், துரோணர் ஆகியோரையும் சேர்த்து சொல்லியிருக்கிறார் என்று புரிந்துகொள்ள வேண்டும்.

இவர்கள் அனைவரும் செய்த அபராதங்கள் மிகப்பெரியதாக இருப்பினும், அவற்றை கவனத்தில் கொண்டுவராமல், இவர்கள் அனைவருக்கும் ஸ்ரீபரமாத்மன் இஹ பரங்களில் சுகங்களைக் கொடுக்கிறார். ஆகையால், ஸ்ரீஹரி கருணைக்கடல் என்று சொல்கிறார் தாசராயர்.

இவர்களின் தவறுகளையெல்லாம் மன்னித்ததைப் போல, நம் தவறுகளையும் (பாவங்களையும்) கூட ஸ்ரீபரமாத்மன் மன்னிக்காமல் இருந்தால், அவனை பக்ஷபாதி (ஒருதலைப் பட்சமானவன்) என்று சொல்ல முடியுமா என்றால் அப்படியல்ல. பாவம் செய்தவர்களின் தகுதி (யோக்யதை), தேவதாகார்ய சாதனை, பாவம் செய்தவர்களின் சுயபச்சாதாபம் ஆகியவையே அந்த பாவங்களுக்காக மன்னிப்பதற்கும், தண்டிப்பதற்காகவும் காரணமாக அமைந்திருக்கிறது தவிர, பரமாத்மனை பக்ஷபாதி என்று சொல்லமுடியாது.

**அங்கு$^{3}$டாக்$^{3}$ரதி$^{3}$ ஜனிஸித$^{3}$மர த**
**ரங்கி$^{3}$ணியு லோகத்ரயக$^{3}$ளக$^{4}$**
**ஹிங்கி$^{3}$ஸுவ ளவ்யாக்ருதா காஷாந்த வியாபிஸித$^{3}$ |**
**இங்க$^{3}$டல மக$^{3}$ளொடெயனங்கோ$^{3}$**
**பாங்க$^{3}$க$^{3}$ள லிப்பமலனந்த ஸு**
**மங்க$^{3}$ளப்ரத$^{3}$நாம பாவன மாள்புதே$^{3}$னரிது$^{3}$ ||20**

அங்குடாக்ரதி = ஸ்ரீபரமாத்மனின் இடது காலின் கட்டைவிரல் முனையில்
ஜனிஸித = பிறந்த

அமரதரங்கிணியே = தேவ நதியான கங்கை
லோகத்ரயகள = மூன்று உலகத்தின் மக்களின்
அக = பாவங்களை
ஹிங்குசுவளு = பரிகரிப்பாள்
அவ்யாக்ருதாகாஷாந்த = பிரம்மாண்டத்தின் வெளிப்புறத்தில் இருக்கும் லட்சுமி ஸ்வரூபமான, சர்வதந்த்ர ஸ்வதந்த்ரரான,
இங்கடல மகள = பாற்கடலின் பிரதியான ரமாதேவி
ஒடெயன = தலைவனான ஸ்ரீபரமாத்மனின்
அங்கோபாங்ககளலி = அங்க = கை கால்களில். உபாங்க = நகம், முடிகளில்.
இப்ப = வியாபித்திருக்கும்
அமல = தோஷங்கள் அற்ற
அனந்த = அபரிமிதமான
சுமங்களப்ரத = உத்தமமான மங்களத்தைக் கொடுக்கும்
நாம = பகவந்தனின் நாமம்
பாவனமாள்பது = பவித்ரமாக ஆக்குகிறது
யேனரிது = என்ன ஆச்சரியம்?

பொருள்:
ஸ்ரீபரமாத்மனின் இடது கால் கட்டைவிரல் நகத்தின் முனையிலிருந்து பிறந்த கங்கையே, பூலோக, புவர்லோக, சுவர்லோகத்தில் இருக்கும் அனைவரின் பாவங்களையும் போக்குகிறாள். இப்படியிருக்கையில், பாற்கடலின் மகளான லட்சுமிக்கு பதியான, லட்சுமிஸ்வரூபனான, பிரம்மாண்டத்தின் வெளியும் உள்ளேயும் வியாபித்திருக்கும் ஸ்ரீபரமாத்மனின், மகிமையுள்ள நாமம் அதாவது பரமாத்மனின் தேகத்தில் கை, கால்களில், நகம், முடிகளிலும், இவற்றின் ஒவ்வொன்று பாகங்களிலும் அபரிமிதமான குணநாமங்கள் வியாபித்திருக்கின்றன.

இந்த விஷயம் முதல் சந்தியில் இரண்டாம் பத்யத்தில் 'க்ரியா விசேஷகள, பகெபகெய நூதனவ காணுத' என்னும் பதத்தின் விளக்கத்தில் பார்த்திருக்கிறோம். அதை பார்த்துக்கொள்ளவும். இத்தகைய தோஷங்கள் அற்ற, நிர்மலமான பகவன் நாமமானது, மூன்று லோகங்களையும் பவித்ரமாக மாற்றுகிறது என்றால் அதில் வியப்பென்ன? அது மிகவும் சாதாரணமான விஷயமாகும்.

சிறப்புப் பொருள்:
அங்குடாக்ரதி ஜனிஸிதமர தரங்கிணியு - இந்த விஷயத்தில், பாகவத 5ம் ஸ்கந்தத்தில் 'தத்ர பகவத: சாக்ஷாத்யக்ஞ லிங்கஸ்ய விஷ்ணோர்விக்ரமதோ வாமபாதாங்குஷ்ட நக நிர்பினோர்த்வாண்ட கடாஹ விவரேணாந்த: ப்ரவிஷ்டாயா:' என்று சொல்லப்பட்டிருக்கிறது. இந்த வாக்கியத்திலிருந்து, பரமாத்மனின் இடது பாத கட்டைவிரலானது, மேலிருக்கும் பிரம்மாண்டத்தில் தாக்கி, அது உடைய, வெளியில் இருக்கும் நீரானது உள்ளே பாய்ந்தது. அதையே தேவ நதி என்றும் கங்கை என்றும் அழைக்கிறோம்.

கங்கா கங்கேதி யோப்ரூயாத் யோஜனானாம் ஷதைரபி ।

முச்யதே சர்வபாபேப்யோ விஷ்ணுலோகம் சகச்சதி ||

என்ற வேத வாக்கியத்தின்படி, கங்கை அனைத்து பாவங்களையும் போக்குபவள் என்று புலனாகிறது.

அவ்யாக்ருதாகாஷாந்த என்றால், நம் கண்ணுக்குத் தெரியும் ஆகாயம் இல்லாமல், பிரம்மாண்டத்தின் வெளிப்புறத்தில் பிரளய காலத்திலும்கூட இருக்கும் ஆகாயம் என்று பொருள். ஆனால் பிரளய காலத்தில் 'நாஸதாஸீன்னோ ஸதாஸீத்ததானீ' - எந்தவொரு பொருளும் இருக்காது என்று சொல்லப்பட்டிருக்கிறது. இப்படியிருக்கையில், ஆகாயம் இருக்கும் என்று இந்த வேத வாக்கியத்தில் சொல்லப்பட்டிருப்பது தவறானது என்றால், பிரளய காலத்தில் ப்ராக்ருத முதலான ஆகாயமும், நீர் முதலான விஷயங்களும் இருக்காது என்று அர்த்தமே தவிர, அவ்யாக்ருதாகாஷவு இருக்காது என்று அர்த்தம் அல்ல.

அது ஏன் என்றால், பிரளய காலத்தில் லட்சுமிதேவி கண்டிப்பாக இருக்கிறாள் என்னும் விஷயத்தை 'ஜகதுதரன' என்னும் பத்யத்தில் விளக்கமாக பார்த்திருக்கிறோம். அந்த லட்சுமிதேவியே அவ்யாக்ருதாகாஷ ரூபத்தில் இருந்து, தமோ ரூபத்தைக் கொண்டு, ஜலரூபளாகவும் இருக்கிறாள். ஆகையால், மேற்சொன்ன ஸ்ருதிக்கு களங்கம் வரவில்லை. இப்படியாக, அவ்யாக்ருதாகாஷமானது பிரம்மாண்டத்திற்கு வெளியே, அனைத்து இடங்களிலும் வியாபித்திருக்கிறது.

இந்த ஆகாயமானது, எங்கெங்கு வியாபித்திருக்கிறதோ, அதன் இறுதிப்பகுதி வரைக்கும் பரமாத்மன் வியாபித்திருக்கிறான். இத்தகைய பரமாத்மனின் கை, கால் முதலான அங்கங்களிலும், முடி, நகம் முதலான அங்கங்களிலும்கூட, அனந்தானந்தமாக அவனது குண நாமங்கள் நிரம்பியிருக்கின்றன. இத்தகைய நாமாதிகளில் ஒரு முடியை பல பாகங்களாக பகுத்தாலும், அதன் ஒரு பாகத்தில் இருக்கும் குண நாமங்களில், ரமாதேவியானவர், தினந்தோறும் புத்தம்புதிய விஷயங்களையே பார்த்து வந்தாலும், அதை பார்த்து முடிக்க அவரால் முடியவில்லை என்ற பிறகு, அந்த பரமாத்மனின் நாமத்தின் மகிமைகளை என்னவென்று சொல்லி வியப்பது? இத்தகைய நாமமானது உலகத்தை பவித்ரமாக மாற்றுவதில் என்ன வியப்பு? இதையே தாசராயர் இந்த பத்யத்தில் விளக்குகிறார்.

**காமதே[4]னு ஸுகல்பதரு சி**
**ந்தாமணிக[3] ளமரேந்த்[3]ர லோகதி[3]**
**காமிதார்த்தக[3] ளீவுவல்லபெ[3] ஸேவெமாள்பரிகெ[3] |**
**ஶ்ரீமுகுந்த[3]ன பரமமங்க[3]ல**
**நாம நரகஸ்த[3]ரனு ஸலஹிது**
**பாமரர பண்டி[3]தரெனிஸி புருஷார்த்த[2] கொடு[3]திஹுது[3] ||21**

காமதேனு = காமிதார்த்தங்களைக் கொடுக்கவல்ல, பாற்கடலில் தோன்றிய பசு
சுகல்பதரு = காமிதார்த்தங்களைக் கொடுக்கவல்ல, பாற்கடலில் தோன்றிய, தேவலோகத்து பாரிஜாத மரம்

சிந்தாமணி = காமிதார்த்தங்களைக் கொடுக்கவல்ல ஒரு மாணிக்கம்
இவற்றையெல்லாம்,
அமரேந்த்ரலோகதி = தேவேந்திரனின் உலகத்தில் (ஸ்வர்க்கத்தில்)
ஸேவெமாள்பரிகெ = சேவைகளை செய்பவர்களுக்கு
காமிதார்த்தகள = இஷ்டார்த்தங்களான விஷயங்களை
கொடுவவல்லதெ = கொடுக்குமே தவிர (வேறு எதை கொடுக்கும்?)
ஶ்ரீமுகுந்தன = மோட்சத்தைக் கொடுக்கக்கூடிய ஶ்ரீபரமாத்மனின்
பரமமங்கள = பரம மங்களகரமான
நாம = நாமமானது
நரகஸ்தரன = நரகவாசிகளை
ஸலஹிது = அருளியது
பாமரர = அஞ்ஞானிகளை
பண்டிதரெனிஸி = பண்டிதர் என்று புகழ்பெறச்செய்து
புருஷார்த்த = சதுர்வித புருஷார்த்தங்களை
கொடுதிஹுது = கொடுக்கிறது.

சிறப்புப் பொருள்:

உலகத்தில் இஷ்டார்த்தங்களை பூர்த்தி செய்கின்றன என்று புகழ்பெற்றவை மூன்று விஷயங்கள். அவை காமதேனு என்னும் பசு, கல்பவ்ருக்ஷம் மற்றும் சிந்தாமணி என்னும் பாரிஜாத மரம். இவை மூன்றும் ஸ்வர்க்கத்தில் இருப்பவை. சேவை செய்யும் ஸ்வர்க்கவாசிகளுக்கு மட்டும் காமிதார்த்தங்களைக் கொடுக்கின்றன. அது ஸ்வர்க்கத்தில் இருக்கும்வரைக்கும் அனுபவிக்கத் தகுந்த தற்காலிக சுகங்களை மட்டுமே, அதாவது, அழியக்கூடிய செல்வங்கள், ஸ்த்ரீ முதலான போகங்கள் ஆகியவற்றை மட்டுமே தரக்கூடியவை. பரமாத்மனின் மங்களகரமான நாமமானது, 14 உலகங்களில் வசிக்கும் அனைவருக்கும் காமிதார்த்தங்களை - அதாவது தர்ம, அர்த்த, காம, மோட்ச என்னும் சதுர்வித புருஷார்த்தங்களைக் கொடுக்கிறது.

ஒருமுறை நாரதர், யமலோகத்திற்குச் சென்று, அங்கு நரகத்தின் துக்கங்களை அனுபவித்திருக்கும் பாபிகளைப் பார்த்து மிகவும் கருணையுடன் ‘நாராயணானந்தஹரே முராரே தாமோதர மாதவேதி’ என்று ஒரு பெரிய சிலை மேல் நின்று, மிகவும் உச்ச ஸ்வரத்தில், அனைவரும் கேட்குமாறு கூவினார். இந்த சப்தமானது அனைவரின் காதுகளில் விழுந்த உடனேயே, அந்த பாபிகள் அனைவரும் பாவங்களிலிருந்து முக்தராகி, விமானத்தில் ஏறி ஸ்வர்க்கத்திற்குச் சென்றனர். நரகலோகமே காலியானது.

காமதேனு முதலாதவைகளால் ஸ்வர்க்க லோகத்தில் இருப்பவர்களுக்கு மட்டுமே பயனே தவிர, வேறு லோகத்தில் இருப்பவர்களுக்கு ஏதேனும் பயன் உண்டா? இல்லை. பரமாத்மனின் நாமத்திற்கு எந்த உலகமானால் என்ன? எங்கு இருந்தாலும், பக்தியுடன் அவன் நாமத்தை சொன்னால், இஹபரங்களில் சுகத்தைத் தருகிறான். அஞ்ஞானிகளை மிகப்பெரிய ஞானியாக மாற்றி, பண்டிதராகவும்

மாற்றுகிறது. பிரகலாதன் எந்த குருகளின் சேவையை செய்து எந்த கல்வியைக் கற்றான்? த்ருவன் யாரிடம் கல்வியைக் கற்றான்? இவர்கள் அனைவரும் ஞானிகளாகி, பண்டிதரும் ஆனது எதனின் உதவியால்? வெறும் பகவன் நாமத்தினால் மட்டுமே அல்லவா? ஆகையால், அனைவருக்கும் பகவத் நாமமானது புருஷார்த்தங்களைக் கொடுக்கிறது என்பதில் சந்தேகத்திற்கு இடமேயில்லை.

**மனதொ$^{3}$ளகெ$^{3}$ ஸுந்த$^{3}$ர பதார்த்த$^{2}$வ**
**நெனெது$^{3}$கொ$^{1}$டெ$^{3}$ கைகொ$^{1}$ண்டு$^{3}$ ப$^{3}$லு நூ**
**தன ஸுஷோபி$^{4}$த$^{1}$ க$^{3}$ந்த$^{4}$ ஸுரஸோபே$^{4}$த$^{3}$ பலராஸி |**
**த்$^{3}$யுனதி$^{3}$ நிவஹக$^{3}$ளந்தெ$^{1}$ கொட்டவ**
**ரனு ஸதா$^{3}$ ஸந்தயிஸுவனு ஸ**
**த்கு$^{3}$ணவ க$^{1}$த்த$^{3}$வரக$^{4}$வ க$^{1}$தி$^{3}$வனு அனக$^{4}$னெந்தெ$^{3}$னிஸி ||22**

மனதொளகெ = (பக்தன்) தன் மனதில்
சுந்தர பதார்த்தவ = அழகான பூஜைக்குப் பயன்படும் பதார்த்தங்களை
நெனெது = நினைத்து
கொடெ = கொடுக்க
கைகொண்டு = அதனை ஏற்றி
பலு நூதன = மிகவும் புதியதான
சுஷோபித = மிகவும் மங்களகரமான
கந்த = நறுமணத்தாலும்
ஸுரஸ = நல்ல சுவையையும்
உபேத = கொண்ட
பலராஷி = பழங்களை
த்யுனதி = கங்கையின்
நிவஹகளந்தெ = நீரினைப் போல
கொட்டு அவரன்னு சதா = எப்போதும்
சந்தெயிஸுவனு = சமாதானம் செய்கிறான் (மகிழ்விக்கிறான்)
சத்குணவ = பரமாத்மனின் ஆனந்தாதி குணங்களை
கத்தவர = அபகரித்தவர்களை (சித்தத்தில் வைத்திருப்பவர்களை, அதாவது, மனதில் அவனின் குணங்களை தியானித்திருப்பவர்கள் என்று பொருள்)
அகவ = பாவங்களை
கதிவனு = போக்குவான்
அனகனெந்தெனிஸி = தான் பாவங்கள் அற்றவன் என்று சொல்லிக்கொண்டு

பொருள்:
பரமாத்மனை பூஜிக்க வேண்டுமெனில் பாக்யவந்தர்களே ஆகவேண்டும். பூஜை சாமான்கள் இருந்தால் மட்டுமே பூஜை செய்யவேண்டும் என்று இல்லை. யாரேயாயினும் பரமாத்மனை பக்தியுடன் தன் மனதில் சிந்தித்து, தியான ஆவாஹனாதி ஷோடஷோபசார பூஜைகளை, வெளியில் காணும் பிரதிமைகளை பூஜிப்பதைப் போலவே, தம் மனதிலும் பூஜித்து, பக்ஷ்ய போஜ்யாதி பதார்த்தங்கள் போன்ற நைவேத்தியப் பொருட்களை மனதிலேயே சிந்தித்து, சமர்ப்பித்து மானஸ

பூஜையை செய்தால், பரமாத்மன் அதனை ஸ்வீகரித்து, நாம் இதுவரை எங்கும் காணாத புதிதான அதிஅற்புதமான நறுமணம் மற்றும் சுவையைக் கொண்ட பழங்களை, கங்கையில் நீர்த்துளிகளை எண்ணினால் எவ்வளவு வருமோ அவ்வளவு, அதாவது அபரிமிதமான அளவிற்குக் கொடுத்து, நம்மை அனைத்து காலங்களிலும் மகிழ்ச்சிப்படுத்துவான். தன் ஆனந்தாதி குணங்களை மனதில் அடக்கிக்கொண்டு தியானம் செய்பவர்களின் பாவங்களை போக்குகிறான். ஸ்வயம் தானும் எப்போதும் பாவங்கள் (தோஷங்கள்) அற்றவன் என்னும் பெயரைப் பெற்றிருக்கிறான் என்பது பொருள்.

சிறப்புப் பொருள்:
'மனதொளகெ சுந்தர பதார்த்தவ நெனெது கொடெ', 'சஞ்சிந்தயேத் பகவதச்சரணாரவிந்தம் வஜ்ராங்குச த்வஜசரோருஹ ராஞ்சனாட்யம்', 'த்யாயேத்தரின்மணி நிபம் ஜகதேகவந்த்யம்', 'த்யேயஸ்ஸதா சவித்ருமண்டல மத்யவர்த்தி' - ஆகிய ஸ்தோத்திரங்களால், எந்த ரூபியான பகவந்தனை தான் (பகவந்தன்) ஆராதிக்க வேண்டுமென்று ஆசை உண்டாகிறதோ, அந்த ரூபத்தை மனதில் நினைத்து, தியான ஆவாஹனாதிகளால், மானசிகமான பதார்த்தங்களால் பூஜிக்கவேண்டும். அல்லது தனது உபாஸ்ய மூர்த்தியான ராம கிருஷ்ணாதிகளை, தன் பிம்பமூர்த்தியான பரமாத்மனில் ஐக்கிய சிந்தனை செய்து, அந்த ரூபத்தை பாதம் முதல் சிரம் வரைக்கும் நினைத்து, மனதிலேயே மண்டபங்களை, பக்ஷ்ய போஜ்யாதி உபகரணங்களை சிந்தித்து, துளசி, புஷ்பங்களை மனதில் நினைத்து, கந்த புஷ்ப நைவேத்தியங்களால், மனதிலேயே பூஜிக்கவேண்டும். இந்த விஷயம் தந்த்ரசாரத்தின்படி சொல்லப்பட்ட பூஜாவிதிகளில் இப்படியாக சொல்லப்பட்டிருக்கிறது.

ஸௌவர்ணை: ஸ்தாலிவர்ணை: மணிகண ரசிதை: கோக்ருதா சுபக்வா
பக்ஷ்யான் போஜ்யான்ஸ்ச லேஹ்யானபி பரமஹசோஷ்யமன்னம் நிதாய
நானாஷாகைருபேதந்ததிமது சு க்ருதம் க்ஷீர பானீய யுக்தம்
தாம்பூலஞ்சாபி விஷ்ணோ: ப்ரதி திவஸமஹம் மானஸே சிந்தயாமி ||

வீட்டில் தேவரபூஜை செய்யும்போது அனைவரும் இந்த ஸ்லோகத்தை சொல்வதுண்டு. ஆனால் நாம் மனதை வேறொரு இடத்தில் வைத்துவிட்டு, வாயில் ஸ்லோகத்தைமட்டும் சொல்லிவிட்டால் அது பலன்களைத் தருவதில்லை. பசிக்கிறது. சீக்கிரம் சாப்பிடவேண்டும் என்று சொன்ன மாத்திரத்திலேயே வயிறு நிரம்பிவிடுகிறதா? சாப்பாட்டை சாப்பிட்டே ஆகவேண்டும். நான் சாப்பிடப் போகிறேன் என்று மட்டும் சொன்னால் நிரம்பாத வயிறு, சாப்பிட்டபிறகுதான் நிரம்புகிறது. அதைப்போலவே இந்த ஸ்லோகமும் மனப்பாடமாக தெரிந்தாலும் தெரியாவிட்டாலும், அதில் சொல்லியிருப்பதைப் போல, மனதினை பரமாத்மனின் பாதாரவிந்தங்களில் வைத்து, தியானத்தில் இருந்து, அந்த பதார்த்தங்களை நினைக்கவேண்டும்.

அது ஏனென்றால்: நவரத்னங்களாலான தங்கத் தட்டு, கிண்ணங்களில், உத்தமனான பசுவின் நெய்யால் செய்ப்பட்ட பக்ஷ்ய போஜ்யங்களை, சாம்பார், ரசம், கூட்டு, பால்,

தயிர், நெய், தேன் ஆகியவற்றை வைத்திருக்கிறேன் என்று மனதால் அந்த பாத்திரங்களில் இந்த பதார்த்தங்களை வைத்திருப்பதாக நினைக்கவேண்டும். நாம் கண்களை மூடிக்கொண்டு அப்படி அவற்றை சிந்திக்கும்போது, அந்த பாத்திர பதார்த்தங்கள் அப்படியே நம் திருஷ்டிக்கு தென்படவேண்டும். அதாவது, ஒரு கிண்ணத்தில் நாம் நெய் வைத்திருக்கிறோம் என்று நினைக்கவேண்டுமெனில் அந்த பாத்திரத்தை, பதார்த்தத்தை அப்படியே நினைக்கவேண்டும். இப்படி சிந்திப்போம். ஒரு கிலோ அளவிற்கு உள்ள ஒரு பாத்திரம் எப்படி இருக்கவேண்டும் என்பதை நாம் மனதில் நினைத்தால் அது அப்படியே நம் கண்களுக்குத் தெரியவேண்டும். தங்கத்தால் செய்யப்பட்ட அந்த கிண்ணத்தில், வைரத்தால் இழைக்கப்பட்டால் எப்படி இருக்கும் என்று எண்ணி, அதையே நம் மனதில் நினைக்கவேண்டும். அதில் நெய் ஊற்றினால் எப்படி இருக்கும் என்பதை நினைக்கவேண்டும். இப்படியே சிரோடி முதலான பக்ஷ்ய போஜ்யாதிகளை, அதன் உருவங்களை அந்த பாத்திரங்களில் சிந்தித்து, ஒவ்வொரு பதார்த்தத்தையும் தனித்தனியாக பரிமாறுவதைப் போல, பரமாத்மனுக்கு சமர்ப்பிக்க வேண்டும். பிறகு தாம்பூலங்களை சிந்திக்க வேண்டும். இப்படியே தினந்தோறும் செய்யவேண்டும் என்பதே அந்த ஸ்லோகத்தின் அர்த்தம்.

இப்படியாக சிந்திக்க வேண்டுமே தவிர, வெறும் ஸ்லோகத்தை சொல்லிவிட்டால் எந்தவித பிரயோஜமும் இல்லை. வெளிப்புற பூஜாதி ஆடம்பரத்தைவிட மானசிக பூஜைக்கு பலன் அதிகம் என்பதே தாசராயர் அபிப்பிராயம். அதற்காக வெளியே செய்யும் பூஜையை விட்டுவிட வேண்டும் என்பது அர்த்தமல்ல. வெளிப்புற பூஜையை செய்தாலும், மானசிகமான பக்தி இல்லையேல், பிரயோஜனம் இல்லை. மானசிகமான பதார்த்தங்களை சிந்தித்து பூஜையை செய்வதால், கங்கையில் இருக்கும் நீர்த்துளிகள் எப்படி அளவுக்கதிகமாக இருக்கிறதோ, அதைப்போல (அவ்வளவு அதிகமாக) பரமாத்மனின் அருளால் இஹபரங்களில் சுகம் கிடைக்கிறது.

இதற்கு உதாரணமாக, த்ருவ, பிரகலாதர்களின் கதையை பார்க்கலாம். த்ருவன் தவம் செய்யும்போது எந்த பிரதிமைகளை பூஜித்தான்? பக்ஷ்ய போஜ்யாதி எந்த பதார்த்தங்களை அவன் சமர்ப்பித்தான்? மானசிக சங்கல்பத்தினாலேயே இஹ பரங்களில் பரம சுகங்களை அவன் பெறவில்லையா? பிரகலாதனும் இப்படியே செய்து பரமானந்தத்தைப் பெற்றான்.

இப்படி பலர் பகவந்தனை மனதில் சிந்தித்து, தன்யர் ஆகியிருக்கின்றனர். சுகாசார்யர் முதலான அனேக ஞானிகள், தத்தம் தகுதிக்கேற்ப பரமாத்மனின் குணங்களை போற்றி வந்தனர். புரந்தரதாசர், விஜயதாசர் ஆகியோர் பரமாத்மனின் குணங்களை மனதார நினைத்தவர்களே. ஆகையால், பரமாத்மன் அவர்களின் பாவங்களைப் போக்கினான். இல்லையேல், அவர்கள் முக்தியை அடைந்தது எப்படி? இப்படிப்பட்ட விஷயங்களையே இந்த பத்யத்தில் தாசராயர் சொல்லியிருக்கிறார்.

**சேதனாசேதன விலக்ஷண**
**நூத[1]ன பதா[3]ர்த்த[2]க[3]ளொளகெ[3] ப[3]லு**

**நூத[1]னதி[1] ஸுந்த3ரகெ1 ஸுந்தர ரஸக்கெ1 ரஸரூப |**
**ஜாத1ரூபோத3ர ப4வாத்[3]யரோ**
**ளாததப்ரதி1ம ப்ரபா4வ த4**
**ராத1ளதொ3 ளெம்மொட[3]னெ ஆடுத1லிப்ப1 நம்மப்ப1 ||23**

சேதனாசேதன விலக்ஷண = ஜீவர்கள், ஜட பதார்த்தங்கள் இவற்றிலிருந்து வேறுபட்டும்,
நூதன பதார்த்தகளொளகெ = புதிதாகத் தோன்றும் பொருட்களில்
பலு நூதன = புத்தம் புதிதானவன்
சுந்தரகெ = அழகான பதார்த்தங்களுக்கு
சுந்தர = அழகானவன்
ரஸகெ = பொருட்களுக்கு
ரஸரூப = அந்த பொருட்களின் ரூபம் கொண்டவன்
ஜாத ரூபோதர = பிரம்மன், தங்கத்தை வயிறாகக் கொண்டவன்
பவாத்யரொளு = ருத்ரதேவர் ஆகியோரில்
அதத = நிலைத்திருப்பவன்
அப்ரதிமப்ரபாவ = அபாரமான மகிமையுள்ளவன்
தராதளதொளு = பூமண்டலத்தில்
நம்மப்ப = நம்மைப் படைத்த ஸ்ரீபரமாத்மன்
எம்மொடனெ = நம்முடன்
ஆடுதலிப்ப = ஆட்டம் ஆடிக்கொண்டிருப்பான்

பொருள்:

நம்மைப் படைத்தவனான ஸ்ரீபரமாத்மன், ஜீவ ஜட பதார்த்தங்களிலிருந்து வேறுபட்டவன். புதிய பதார்த்தங்களில் புதிதாக இருப்பவன். அழகான பதார்த்தங்களில் அழகாக இருப்பவன். திரவ பதார்த்தங்களில் திரவமாக இருப்பவன். பிரம்ம ருத்ரர்களில் நிலைத்திருப்பவன். அபாரமான மகிமையுள்ளவன். ஆனாலும், அவன் எப்போதும் நம்முடன் ஆட்டம் ஆடிக்கொண்டிருப்பவன்.

சிறப்புப் பொருள்:
சேதன, அசேதன பதார்த்தங்களிலிருந்து பரமாத்மன் வேறுபட்டவன் என்றபிறகு, அவன் எந்த குழுவில் சேர்ந்திருப்பவன் என்னும் சந்தேகம் வரலாம். பரமாத்மனுக்கு சேதனத்வம், பாவத்வம், நித்யத்வம் ஆகியவை தன்னுடைய ஸ்வாதந்த்ர்யத்தாலேயே வருகிறது. அந்த ஸ்வாதந்த்ர்யத்தினாலேயே, ஜீவ ஜட பதார்த்தங்களிலிருந்து வேறுபட்டவனாக இருக்கிறான். பாகவத 8ம் ஸ்கந்தத்தில் :

ஸவைனதேவாஸுரமர்த்ய திர்யக்னஸ்த்ரி நஷண்டோன புமான்யஜந்து: |
நாயம் குண: கர்மன ஸன்னவானன்னிஷேத சேஷோஜயதாதசேஷ: ||

அந்த பரமாத்மன் தேவதையும் அல்ல, அசுரனும் அல்ல, மனுஷ்யனும் அல்ல, ஜந்துவும் அல்ல, ஸ்த்ரியும் அல்ல, புருஷனும் அல்ல, நபும்சகனும் அல்ல, எந்த பிராணியும் அல்ல. அவன் பிராக்ருத குணரூபங்களைக் கொண்டவன் அல்ல.

கர்மரூபனும் அல்ல. ஸத்-வஸ்துவும் அல்ல, அ-ஸத்-வஸ்துவும் அல்ல. அப்படியெனில் அவனது ஸ்வரூபத்தை என்னவென்று சொல்வது? என்று கேட்டால் மேலே சொன்னவற்றைத் தவிர வேறு என்ன பொருள் உள்ளதோ, அதுவே பகவத் ஸ்வரூபம். அதாவது, அப்ராக்ருத ஸ்வரூபமானவன் என்று பொருள். பரமாத்மன் எல்லா பொருட்களிலும் இருப்பவனாகையால் 'அஸேஷன்' என்று பரமாத்மனுக்கு பெயர் உண்டு என்கிறார் தாசராயர். இதனாலேயே, 'சேதனாசேதன விலக்ஷணனு' என்கிறார் தாசராயர்.

நூதன பதார்த்தகளொளகெ பலு நூதனதி
சுந்தரகெ சுந்தர ரஸகெ ரஸரூப

ஸ்ரீபரமாத்மன் அணுரேணு த்ருணகாஷ்டாதிகளில் அந்தந்த ரூபமாக, அந்தந்த உருவமாக, அதற்கு சம்பந்தப்படாமல் இருக்கிறான். ஆனால், அனைத்து பதார்த்தங்களின் முக்கிய குணங்கள் என்னவாக இருக்கிறதோ, அதுவே பகவத் ஸ்வரூபம் என்று நினைக்க வேண்டும். கீதை 7ம் அத்தியாயத்தில் :

ரஸோஹ மப்ஸு கௌந்தேய ப்ரபாஸ்மி ஷஷி ஸூர்யயோ: |
புண்யோகந்த: ப்ருதிவ்யாஞ்ச தேஜஸ்சாஸ்மி விபாவஸௌ ||

ஹே அர்ஜுனா! நீரில் இருக்கும் சுவையை நான் என்று அறி. சூர்ய சந்திரரில் இருக்கும் ஒளியினை நான் என்று அறி. பூமியிலிருக்கும் மணத்தை நான் என்று அறி. நெருப்பில் இருக்கும் தேஜஸ் நானே. பலசாலிகளில் இருக்கும் பலமும் நானே என்கிறான் ஸ்ரீகிருஷ்ணன். இனிப்பு பொருட்களில் இருக்கும் இனிப்பு, அழகான பெண்களில் இருக்கும் அழகு அனைத்தும் பரமாத்மனே. அந்தந்த பதார்த்தங்களில் இருந்து, அவற்றின் ரூபாதிகளை அவற்றிற்குக் கொடுப்பதால், அந்த ரூப குணாதிகள் அனைத்தும் பரமாத்மனின் விபூதி என்று அறியவேண்டும் என்பதே இதன் பொருள்.

ஜாதரூபோதர பவாத்யதொள் ஆததப்ரதிம ப்ரபாவ - பிரம்ம ருத்ராதி அனைத்து தேவதைகளிலும் அந்தந்த ரூபமான வியாபித்திருக்கிறான். பாகவத 3ம் ஸ்கந்த தாத்பர்யத்தில் :

ஸ்வாயம்புவோ மனஸ்சைவ ப்ருதுஸ்சைவ அர்ஜுனாவபி |
பிரம்மசேஷாவிபா ருத்ர இந்த்ர ருஷ்யாதயஸ்ததா ||
விஷ்ண்வாவேஷயாதாஸ் ஸர்வேனது விஷ்ணு ஸ்வரூபகா இதி தத்வ நிர்ணயே ||

ஸ்வாயம்புவமனு, ப்ருது சக்ரவர்த்தி, கார்த்தவீர்யார்ஜுன, அர்ஜுன, பிரம்ம, சேஷ, கருட, ருத்ர, இந்திர, ரிஷி ஆகியோர் அனைவரும் விஷ்ணுவின் விசேஷமான அம்சத்தைப் பெற்றிருக்கின்றனர். அவர்கள் விஷ்ணு ஸ்வரூபர்கள் அல்லர். இப்படி தத்வ நிர்ணய வாக்கியம் இருக்கிறது. என்று ஸ்ரீமதாசார்யர் சொல்லியிருக்கிறார். இதனால் தாசராயர் சொல்லிய 'பவாத்யரொளு' என்ற 'ஆதி' சொல்லினால் மன்வாதிகளை அறிந்துகொள்ள வேண்டும்.

நம்மொடனெ ஆடுதலிப்ப நம்மப்ப - ஸ்ரீபரமாத்மன் நம்மை ஸ்ருஷ்டித்து, நம் குழந்தைகளில் இருந்து, பாலலீலைகளைக் காட்டி, நமக்குள் இருந்து நம்மை மகிழ்ச்சிப்படுத்துகிறான். இதனால், பரமாத்மனுக்கு பிரயோஜனம் எதுவும் இல்லை. இப்படி விளையாடுவதே அவனின் ஸ்வபாவமாக இருக்கிறது. ஆகையாலேயே, தாசராயர் பரமாத்மனை ‘நம்மப்ப’ என்கிறார்.

**தந்தெ$^3$தாய்க$^3$ளு தம்ம ஸிஷுவிகெ$^3$**
**ப$^3$ந்த$^3$ ப$^4$யக$^3$ள பரிஹரிஸி நிஜ**
**மந்தி$^3$ரதி$^3$ பே$^3$டி$^3$து$^3$த$^3$னித்தா$^1$ த$^3$ரிஸுவந்த$^3$த$^3$லி ।**
**ஹிந்தெ$^3$முந்தெ$^3$ட$^3$ப$^3$லதி$^3$ ஔஹொர**
**கி$^3$ந்தி$^3$ரேஷனு த$^1$ன்னவர னெ**
**ந்தெ$^3$ந்து$^3$ ஸலஹுவனாக$^3$ஸத$^3$ வோலெத்த$^3$ நோடி$^3$த$^3$ரு ||24**

தந்தெதாய்களு தம்ம சிசுவிகெ = பெற்றோர், தம் மக்களுக்கு
பந்த பயகளபரிஹரிஸி = வந்த பயங்களைப் போக்கி
நிஜமந்திரதி = தம் வீட்டில்
பேடிதுதனித்து = வேண்டியதைக் கொடுத்து
ஆதரிசுவந்ததலி = ஆதரிப்பதைப் போல
தன்னவரனு = தன் பக்தர்களை
ஹிந்தெமுந்தெடபலதி = முன்னும், பின்னும், இடம், வலத்திலும்
ஔஹொரகெ = உள்ளே வெளியேயும்
இந்திரேஷனு = லட்சுமிபதியான ஸ்ரீபரமாத்மன்
அகஸதவோல் = ஆகாயத்தைப் போல
எத்த நோடிதரு = அனைத்து இடங்களிலும் வியாப்தனாக
எந்தெந்து = எப்போதும்
சலஹுவ = தன் பக்தர்களை காப்பாற்றுவான்.

குழந்தையானது, ஏதாவது சிறு பிராணியைப் பார்த்து பயம் கொண்டால், பெற்றோர் ஆனவர், உடனடியாக அந்தக் குழந்தையின் அருகில் இருக்கும், அதற்கு பயம் உண்டாகக் காரணமான பிராணியை தூர ஓட்டி, குழந்தையை வீட்டில் அழைத்துப்போய், அதை சமாதானம் செய்து, அக்குழந்தை விரும்பியதைக் கொடுத்து அதை ஆதரிப்பர். அது போலவே, ஸ்ரீபரமாத்மனும் தன் பக்தர்களின் முன்னும் பின்னும், இட வலதில், உள்ளும் வெளியேயும் என அனைத்து இடங்களிலும் நின்று வியாபித்திருக்கிறான். அப்படியாக இருந்து அவர்களை எந்நேரமும் காக்கிறான்.

அக்ரத: ப்ருஷ்டதஸ்சைவ பார்ஷ்வதஸ்ச மஹாபலௌ ।
ஆகர்ணபூர்ண தன்வானௌ ரக்ஷேதாம் ராமலட்சுமணௌ ||

பயணத்திற்குப் போகும்முன் இந்த ஸ்லோகத்தை சொல்லும் வழக்கம் நம்மில் உண்டு. ஆனால் இதன் பொருள் என்ன? முன்னும், பின்னும், இட, வலதில், காது வரைக்கும் இழுத்துக் கட்டப்பட்ட வில்லை ஏந்தியிருக்கும் ராம லட்சுமணர்கள்

நம்மை காப்பாற்றட்டும் - என்பதே ஆகும். இப்படியாக பரமாத்மன் தன் பக்தர்களை காக்கிறான் என்பதையே தாசராயர் விளக்குகிறார்.

**ஒட$^3$ல நெளலந்த$^3$த$^3$லி ஹரி ந**
**ம்மொட$^3$னெ திருகு$^3$வ னொந்த$^3$ரெக்ஷண**
**பி$^3$டதெ$^3$ பெ$^3$ம்ப$^3$லனாகி$^3$ ப$^4$க்தாதீ$^4$னனெந்தெ$^3$னிஸி |**
**த$^1$டெ$^3$வ து$^3$ரிதெள$^1$க$^4$க$^3$ள கா$^1$மத$^3$**
**கொ$^1$டு$^3$வ ஸக$^1$லேஷ்ட$^1$க$^3$ள ஸந்த$^1$த$^1$**
**நடெ$^3$வ நம்மந்த$^3$த$^3$லி நவஸுவிசேஷ ஸன்மஹிம ||25**

நவசுவிசேஷ சன்மஹிம = புதிதான, மிகவும் விசேஷமான, சிறந்த, மகிமைகளைக் கொண்ட
ஹரியு = ஸ்ரீபரமாத்மன்
ஒடலனௌலந்ததலி = தேகத்தின் நிழலில்
பெம்பலனாகி = நம்மை எப்போதும் இடைவிடாமல் காப்பாற்றுபவனாக
பக்தரதீனனெந்தெனிஸி = தான் பக்தர்களுக்கு வசப்பட்டவன் என்று நினைத்து
ஒந்தரக்ஷணபிடதெ = ஒரு நொடியும் விடாமல்
நம்மொடனெ = நம்முடனேயே
துரிதௌககள = கஷ்ட, பிரச்னைகளை
தடெவ = வராதவாறு தடுக்கிறான்
காமத = நாம் விரும்பும்
சகலேஷ்டகள = நம் யோக்யதைக்கேற்ப அனைத்து இச்சைகளையும் கொடுக்கும்
நம்மந்ததலி = நம்மைப் போலவே
சந்தத = எல்லா காலத்திலும்
நடெவ = நடப்பான்.

பொருள்:
எப்போதும் புதிதுபுதிதான மகிமைகளைக் கொண்ட ஸ்ரீபரமாத்மன், நம் நிழலானது எப்போதும் நம்முடனேயே இருப்பதைப் போல, அவனும் நம்முடன் இருந்து, நமக்கு வரும் ஆபத்துகளை பரிகரிக்கிறான். நம் தகுதிக்கேற்ப நாம் வேண்டும் அனைத்து வேண்டுதல்களையும் நிறைவேற்றுவான்.

சிறப்புப் பொருள்:
விஷஜலாஷயாத்வ்யாள ராக்ஷஸாத்வர்ஷ மாருதாத்வைர்யுதானலாத் |
வ்ருஷயயாத்பயாத்வஸ்வதோ முகாத்வ்ருஷபதேவயம் ரக்ஷிதாமுஹு: ||

கிருஷ்ணாவதாரத்தில் ஸ்ரீபரமாத்மன், கோப கோபியர்களுடன் எந்நேரமும் இருந்து, அவர்களுக்கு வந்த ஆபத்துகளை பரிகரித்தான். காளிந்தி மடுவில் இருக்கும் விஷ நீரினைக் குடித்து, கோப கோபாலகர்கள் அனைவரும் மரணமடைய, அவர்களைக் காப்பாற்றினான், உயிர் பிழைக்க வைத்தான். த்ருணாவர்த்த என்னும் அரக்கனிடமிருந்து, சூறாவளிக் காற்றிலிருந்து, காட்டுத்தீயிலிருந்து, வத்ஸாசுர ஆகியோரிடமிருந்து என பல பிரச்னைகளிலிருந்தும் அவர்களைக்

காப்பாற்றியிருக்கிறான். 'நான்கு திசைகளிலிருந்தும் வந்த அனைத்து ஆபத்துகளிலிருந்தும் உன்னால் நாங்கள் காப்பாற்றப்பட்டோம்' என்று கோபிகா ஸ்த்ரியர்கள் ஸ்ரீகிருஷ்ணனை துதிக்கின்றனர். மேலும் பாகவத 1ம் ஸ்கந்த 8ம் அத்தியாயத்தில், குந்திதேவி ஸ்ரீகிருஷ்ணனை துதிக்கும்போது:

விஷான்மஹாக்னே: புருஷாததம்ஷனாத ஸத்ஸ பாயா:வனவாஸ க்ருச்சத: |
ம்ருதேம்ருதேsனேக மஹாரதாஸ்த்ரதோ த்ரௌண்யஸ்த்ரதஷ்சாஸ்ம ஹரேsபிரக்ஷிதா: ||

பீமசேனனைக் கொல்வதற்காக துரியோதனன் அவனுக்கு விஷம் கலந்த பக்ஷ்யங்களைக் கொடுத்தபோது அந்த விஷத்திலிருந்தும், எங்களைக் கொல்வதற்காக அந்த வீட்டில் வைக்கப்பட்ட நெருப்பிலிருந்தும், ஹிடிம்ப, பக ஆகிய அசுரர்களின் தொல்லைகளிலிருந்தும், பீமசேனனை பாம்புகள் கொல்ல வந்தபோது அவற்றைக் கொன்றும், அயோக்யனான துரியோதனனின் சபையில் திரௌபதிக்கு நடந்த மானபங்க சமயத்தில் அவள் மானத்தைக் காத்தும், வனவாச, அஞ்ஞானவாச ஆகிய காலங்களில் வந்த கஷ்டங்களிலிருந்தும், போரின்போது எதிரிகள் விட்ட விஷ பாணங்களிலிருந்தும், அஸ்வத்தாமன் ஏவிய பிரம்மாஸ்திரத்திலிருந்தும், உன் அருளாலேயே நாங்கள் காப்பாற்றப்பட்டோம் - என்கிறார்.

ஆனால் பாரதாதிகளில் எங்கும் ஸ்ரீகிருஷ்ணனே வந்து இந்த கஷ்டங்களிலிருந்து காப்பாற்றினான் என்று சொல்லப்படவில்லை. இப்படியிருக்கையில், குந்திதேவி, 'உன்னாலேயே நாங்கள் காப்பாற்றப்பட்டோம்' என்று எப்படி சொன்னார் என்றால், ஆபத்து வந்த ஒவ்வொரு சந்தர்ப்பத்திலும் பாண்டவர்கள் ஸ்ரீகிருஷ்ணனை நினைத்தவாறு செயல்களை செய்ததால், ஸ்ரீகிருஷ்ணன் சில கஷ்டங்களை மறைந்திருந்தும், சில கஷ்டங்களை பிரத்யட்சமாக நேரில் நின்றும் பரிகரித்தான். இந்த விஷயத்தை குந்திதேவி நன்றாக அறிந்திருந்தார். ஆகையாலேயே அவர் இப்படி ஸ்தோத்திரம் செய்தது நியாயமே என்று அறியவேண்டும். அதனால்தான் தாசராயர் 'தடெவ துரிதௌககள காமத கொடுவ' என்றார்.

மகாமகிமையுள்ள பரமாத்மன் 'நம்மந்ததலி நடெவ' - நமக்குள் இருந்து செயல்களை செய்வதற்கு தீர்மானித்து, நம்மிடமிருந்து அவற்றை செய்விக்கிறான், செய்கிறான். பாகவத தாத்பர்யத்தில் - 'அதஸ்தத்ப்ரேரணாதேவ ப்ரேமாத்யாமமஜக்ஞிரே' அவன் மேல் வைக்கும் பக்தியும் அவனுடைய விருப்பத்தாலேயே ஆயிற்று என்று பாகவதோத்தமர்கள் நினைப்பார்கள் என்று சொல்லியிருக்கிறார். மேலும் 'நா அஹம் கர்த்தா ஹரி: கர்த்தா' - எந்த செயலையும் நான் செய்வதில்லை. என் உள்ளிருந்து பரமாத்மனே செய்விக்கிறான்' என்று பரமத்மனை பிரார்த்தனை செய்யவேண்டும் என்று சொல்லியிருக்கின்றனர். 'நம்மந்ததலி நடெவ' என்னும் வாக்கியத்திற்கு இந்த அர்த்தம் பொருந்துகிறது.

**பி3ட்ட1வர ப4வபா1ஷதி3ந்த3லி**
**க1ட்டு1வனு ப3ஹுகடி2ணனிவ ஸி**

**ஷ்டே[1]ஷ்ட[1] னெந்த[3]ரித[1]னவரத[1] ஸத்ப[4]க்தி பாஷத[3]லி |**
**கட்டுவர ப[4]வகட்டு பி[3]டி[3]ஸுவ**
**ஸிட்டிரவனிவனல்ல கா[1]மத[3]**
**கொ[1]ட்டு கா[1]வனு ஸகல ஸௌக்யவ னிஹபரங்க[3]ளல்லி ||26**

பிட்டவர = தன்னை வணங்காமல் விட்டவர்களை
பவபாஷதிந்தலி = சம்சாரம் என்னும் கயிற்றில் கட்டுவான்
இவ = இந்த பரமாத்மன்
பஹுகடிணனிவ = மிகவும் கடினமானவனைப் போல இருப்பான்
சிஷ்டேஷ்டனெந்து = பக்தர்களின் தெய்வம் என்று
அனவரத = அனைத்து காலங்களிலும்
சத்பக்தி பாஷதலி = உத்தமமான பக்தி என்னும் கயிற்றில்
கட்டுவர = தன்னை கட்டுபவர்களின்
பவகட்டு = சம்சாரம் என்னும் கட்டினை
பிடிசுவ = விடுவிக்கிறான்
சிட்டிரவனிவனல்ல = இவன் (அவர்களின் விஷயத்தில்) கோபப்படுபவன் அல்ல
இஹபரங்களல்லி = இஹ, பர லோகங்களில்
காமத = அவர்கள் விரும்பும் அனைத்து விஷயங்களையும் கொடுத்து
காவனு = காப்பாற்றுகிறான்.

பொருள்:
ஸ்ரீபரமாத்மனை யார் பஜிக்காமல் விட்டுவிடுகிறார்களோ, அவர்களை சம்சாரம் என்னும் கயிற்றில் கட்டுகிறான். அவர்களின் விஷயத்தில் மிகக்கடினமானவனாக (கடுமையானவனாக) காட்டிக்கொள்கிறான். தன் பக்தர்களின் ஆபத்துகளை, எப்போதும் பஜித்தவாறு பக்தி என்னும் கயிற்றால் அவனைக் கட்டினால், அத்தகையவர்களுக்கு இருக்கும் சம்சார பந்தங்களை விடுவிக்கிறான். அவர்களிடம் கொஞ்சம்கூட கோபத்தைக் காட்டுவதில்லை. அவரவர்களின் தகுதிக்கேற்ப, அவர்கள் வேண்டும் அனைத்து விதமான விஷயங்களையும் இஹ பரங்களிலும் கொடுத்து, அவர்களை காப்பாற்றுகிறான் (அவர்களுக்கு அருள்கிறான்).

சிறப்புப் பொருள்:
பிட்டவர பவபாஷதிந்தலி கட்டுவனு பஹு கடினனிவ - என்னும் தாசராயரின் வாக்கிற்கு ஆதாரமாக பாகவதத்தில்:

தானஹம் த்விஷத: க்ரூரான் சம்ஸாரேஷுனராதர்மா |
க்ஷிபாம்யஜஸ்ரமஷுபானாசுரேஷ்வேவயோனிஷு: ||
ஆஸுரீம் யோனிமாபன்னாமூடா ஜன்மனி ஜன்மனி |
மாம ப்ராப்யைவ கௌந்தேய ததோ யாந்த்யதமாங்கதிம் ||

’ஹே பார்த்தா! என்னை த்வேஷிக்கும் க்ரூரனான அந்த நர-அதமர்களை நிரந்தரமாக தைத்ய குலத்திலேயே பிறக்க வைக்கிறேன். மூடர்களான அந்த த்வேஷிகள் தொடர்ந்து அனைத்து பிறவிகளிலும் அசுர யோனிகளிலேயே பிறந்து,

என்னை த்வேஷித்து, இறுதியில் என்னை சேராமல், அந்தம் தமஸ்ஸிற்குப் போய் சேர்கிறார்கள்' என்கிறார் ஸ்ரீகிருஷ்ணன். இதிலிருந்து தன்னை விட்டவரை சம்சார பந்தனத்தில் கட்டுகிறான். அவர்களின் விஷயத்தில் கடினன் என்று தீர்மானமாக சொல்கிறான். பக்தி என்னும் கயிற்றால் தன்னைக் கட்டிய பிரகலாதன், பலி, குசேல முதலானவர்களுக்கு, இஹத்தில் பலவித போகங்களைக் கொடுத்து, அவர்களை சம்சார பந்தனங்களிலிருந்து விடுவித்து, பரலோகத்தில் தன் பாதார விந்தங்களைக் கொடுத்து, பலவித போகங்களைக் கொடுக்கிறான்.

சிட்டினவனிவனல்ல - தன் பக்தர்கள் தவறுகளை செய்தால் அவர்கள் மேல் கோபம் கொள்ளமாட்டான். பாகவத 1ம் ஸ்கந்தம் 14ம் அத்தியாயத்தில் - அர்ஜுனன் சொல்வது: 'சக்ய: சகேவ பித்ருவத்தனயஸ்யசர்வம் சேஹேமஹாமஹித யாகுமதேரகம்மே' - நண்பன் செய்யும் தவறுகளை நண்பன் எப்படி மன்னிக்கிறானோ, மகனின் தவறுகளை தந்தை எப்படி மன்னிக்கிறாரோ, அப்படி குறைந்த மதியுடைய நான் செய்யும் அனைத்து தவறுகளையும், மகாமகிமையுள்ள ஸ்வாமி மன்னிப்பான் என்று கூறுகிறான். இதிலிருந்து பக்தர்கள் மேல் பகவந்தன் எப்போதும் கோபம் கொள்ளமாட்டான் என்று புலனாகிறது. ஆனால், சில இடங்களில், பரமாத்மன் இந்திராதிகளின் மேல் கோபம் கொண்டதாக கதை இருக்கிறது. அதன் பொருள் என்னவெனில்: பக்தர்கள், அசுர ஆவேசத்தின் பலனாகவோ, கர்வத்தினாலோ தன்னை நிராகரித்தால், அதனை பரிகரித்து, அவர்களுக்கு அருள்வதற்காக அவர்களிடம் கோபம் கொள்வதாக காட்டிக்கொள்கிறான்.

நந்தகோபர்கள் செய்துவந்த யாகத்தைக் கெடுத்து, அவர்களை அவமானம் செய்து, பிரளய காலத்தைப் போல மழை சூறாவளியை இந்திரன் வரச்செய்தபோது, கோவர்த்தன மலையை தன் ஒரு விரலில் ஏந்தி, இந்திரனுக்கு மானபங்கம் செய்து, அவன் கர்வத்தைப் போக்கி, அருளினான். கோபிகா ஸ்த்ரியர்களுக்கு கர்வம் வந்தபோது, அவர்களின் கண்களிலிருந்து மறைந்து, அவர்களை அலைக்கடித்து, கர்வத்தை அடக்கி, பின் அவர்களுக்கு அருளினான். இப்படி பக்தர்களுக்கு அருள்வதற்காகவே அவர்களை திருத்துவான். இது உண்மையான கோபத்தின் காரணமல்ல. ஆகையால் 'சிட்டினவனிவனல்ல' என்று சொல்லியிருக்கிறார் தாசராயர்.

**க1ண்ணிகெ3வெயந்த3த3லி கை1 மை**
**தி1ண்ணிகொ3தகு3வ தெ1ரதி1 ப1ல்க3ளு**
**ப1ண்ணு ப4லக3ளனகி3து3 ஜிஹ்வெகெ3 ரஸவனீவந்தெ1 ।**
**பு1ண்ய ப4லவீவந்த3த3லி நுடி3**
**வெண்ணி நாண்மாண்ட3தொ3ளு லக்ஷமண**
**நண்ணனொத3கு3வ ப4க்தரவசன கமரக3ணஸஹித ।।27**

கண்ணிகெவெயந்ததலி = கண்ணிற்கு இரப்பைகள் உதவி செய்வதைப் போல
கை = கைகள்
மைதிண்ணிகெ = உடம்பில் அரிப்பு ஏற்படும்போது

ஒதகுவந்ததி = உதவி செய்வதைப் போல
பல்களு = பற்கள்
பண்ணு பலகளனகிது = பழம், கரும்பு ஆகியவற்றைக் கடித்து
ஜிஹ்வெகெ = நாக்கிற்கு
ரசவனீவந்தெ = சாற்றினைக் கொடுப்பதைப்போல
நுடிவெண்ணின = வாக்தேவதையான சரஸ்வதிதேவியை
ஆண்ம = ஆளும் பிரம்மதேவர் (என்னும் பெயர் கொண்ட)
அண்டதி = பிரம்மாண்டத்தில்
புண்யபலகளனீவந்தெ = பிரம்மஜனர்களுக்கு புண்யபலன்களைக் கொடுப்பதைப்போல
லட்சுமணனண்ண = ஸ்ரீராமதேவர்
அமரகண சஹித = தேவதைகளுடன் சேர்ந்து
பக்தரவரகெ = பக்தர்களுக்குத் தேவைப்படும்போது சரியாக வந்து உதவுவான்

பொருள்:
கண்ணில் தூசு விழுந்தால், உடனடியாக இரப்பைகள் கண்களை மூடி அதனை காப்பாற்றிவிடுகிறது. அதே இரப்பைகள், கண்களிடமிருந்து எந்தவித பிரதிபலன்களையும் எதிர்பார்ப்பதில்லை. உடம்பில் எங்காவது அரிப்பு ஏற்பட்டால், உடனடியாக கை அங்கு சென்று அதை தீர்த்துவைக்கிறது. அந்த உதவிக்கு எந்த பிரதிபலனையும் கை எதிர்பார்ப்பதில்லை. பழம், கரும்பு ஆகியவற்றை பற்கள் கடித்து, அவற்றின் சாற்றினை நாக்கிற்கு அனுப்புகிறது. அவையும் எந்தவித பிரதிபலன்களையும் எதிர்பார்ப்பதில்லை. இவற்றைப்போலவே, ஸ்ரீபரமாத்மன் பிரம்மாண்டத்தில் இருக்கும் மக்களுக்கு புண்ய பலன்களைக் கொடுப்பதற்கு, தேவதைகளுடன்கூடி, பக்தர்களுக்கு தேவைப்பட்ட நேரத்தில் சரியாக வந்துவிடுகிறார்.

**கொ$^{1}$ட்டுத$^{3}$னு கைகொம்ப$^{3}$ரக்ஷண**
**பி$^{3}$ட்ட$^{1}$க$^{3}$ல த$^{1}$ன்னவர து$^{3}$ரித$^{1}$க$^{3}$**
**ளட்டுவனு தூ$^{3}$ரத$^{3}$லி து$^{3}$ரிதா$^{1}$ரண்ய பா$^{1}$வக$^{1}$னு |**
**பெ$^{3}$ட்ட பெ$^{3}$ன்னிலி ஹொரிஸித$^{3}$வரொளு**
**சிட்டு மாடித$^{3}$னேனு ஹரி க**
**ங்கெ$^{1}$ட்ட ஸுரரிகெ$^{3}$ ஸுதெ$^{3}$யனுணிஸித$^{1}$ முரித$^{3}$னஹித$^{1}$ரனு ||28**

துரிதாரண்ய பாவகனு = பாவங்கள் என்னும் காட்டிற்கு நெருப்பைப் போல இருக்கும் ஸ்ரீபரமாத்மன்
கொட்டுதனு = பக்தர்கள் கொடுப்பதை
கைகொம்ப = பெற்றுக் கொள்வான்
அரக்ஷணபிட்டகல = பக்தர்களை அரை நொடியும் விட்டு விலக மாட்டான்
தன்னவர = தன் பக்தர்களை
துரிதகள = பாவங்களை (கஷ்டங்களை)
தூரதலி = வெகு தூரத்திற்கு
அட்டுவனு = ஓட்டுவான்

ஹரி = ஶ்ரீஹரி
பெட்ட = மந்த்ர பர்வதத்தை
பென்னலி = முதுகின் மேல்
ஹொரஸிதவரொளு = ஏற்றிய தேவதைகள் மேல்
சிட்டு மாடிதனேனு = கோபம் கொண்டானா? (இல்லை)
கங்கெட்ட சுரரிகெ = தன்னிலிருந்து வேறுபட்டிருக்கும் தேவதைகளுக்கு
சுதெய = அமிர்தத்தை
உணிஸித = குடிக்க வைத்தான்
அஹிதரன = அவர்களின் எதிரிகளான தைத்யர்களை
முரிதனு = சம்ஹரித்தான் (கொன்றான்)

பொருள்:
தன் பக்தர்கள் கொடுக்கும் சிறியதான பத்ர, புஷ்பங்களை மிகவும் மகிழ்ச்சியுடன் ஏற்றுக்கொள்கிறான். அரை நொடிகூட அவர்களை விட்டு இருப்பதில்லை. பக்தர்களின் பாவங்கள் என்னும் காட்டினை சுடும் விஷயத்தில் நெருப்பைப்போல இருக்கும் ஶ்ரீபரமாத்மன், அவற்றை தூர ஓட்டுகிறான். பாற்கடலை கடையும் நேரத்தில் மந்தர மலையை தன் முதுகின் மேல் ஏற்றி வைத்த தேவதைகள் மேல் கோபம் கொண்டானா பரமாத்மன்? (இல்லை). அதே தேவதைகளுக்கு அந்த அமிர்தத்தை பகிர்ந்தளிக்கவும் செய்தான். அவர்களின் எதிரிகளான தைத்யர்களைக் கொன்றான்.

சிறப்புப் பொருள்:
'கொட்டதனு கைகொம்ப' - குசேலன் கொடுத்த ஒரு பிடி அவலைப் பெற்றுக்கொண்டான். கஜேந்திரன் கொடுத்த ஒரு தாமரை மலரைப் பெற்றான். இப்படி பரமாத்மன், தன் பக்தர்கள் கொடுக்கும் சிறிய அளவிலான பொருட்களையே பெரியதாக நினைத்து அன்புடன் அவற்றை ஏற்றுக்கொள்கிறான். நம்பியவர்களின் கஷ்டங்களை பரிகரிக்கிறான்.

ஒருமுறை தேவதைகள், துர்வாசரின் சாபத்தின் பலனாக, ராஜ்யத்தை இழந்து, பரமாத்மனிடம் தஞ்சம் புகுந்தனர். ஶ்ரீபரமாத்மன், தேவ-தைத்யர்களை பாற்கடலைக் கடையுமாறும், அமிர்தத்தை எடுக்குமாறும் சொல்ல, மத்தாக இருந்த மந்தரமலை பாரமாக இருந்த காரணத்தால் நீரில் மூழ்கத் தொடங்கியது. தேவதைகளும் பரமாத்மனிடம் அந்த மலையை மேலே தூக்கிக் கொடுக்குமாறு வேண்ட, அவர்களின் ஆசையை நிறைவேற்ற பரமாத்மன் கூர்ம ரூபத்தினால் அந்த மலையைத் தாங்கிப் பிடித்தான். இப்படி மலையை தன் மேல் வைக்கக் காரணமாக இருந்த தேவதைகளை மன்னித்து, அந்த அமிர்தத்தை அவர்களுக்கே பகிர்ந்தளித்தான் பரமாத்மன்.

இதையே தாசராயர் பெட்ட பென்னலி' என்னும் வாக்கியத்தால் சொல்லியிருக்கிறார். அதே பாற்கடலைக் கடையும் சந்தர்ப்பத்தில் தேவதைகளை ஏமாற்ற எண்ணிய தைத்யர்களை ஏமாற்றி போரில் அவர்களைக் கொன்றார். அதையே தாசராயர் 'முரிதனஹிதரன' என்றார்.

**கே2த3 மோத3 ஜயாப1ஜய மொத3**
**லாத3 தோ3ஷக3ளில்ல சின்மய**
**ஸாத3ரதி3 தன்னங்க்4ரி க1மலவ நம்பி ஸ்து1தி1ஸுவர |**
**கா1து3கொ1ண்டிஹ பரமக1ருண ம**
**ஹோத3தி4யு த1ன்னவரு மாட்த3ப**
**ராத3க3ள நோட3த3லெ ஸலஹுவ ஸர்வகா1மத3னு ||29**

கேத = (ஸ்ரீபரமாத்மனுக்கு) அழிவில்லை
மோத = மகிழ்ச்சித்தன்மை
ஜயாபஜய = வெற்றி, தோல்வி
மொதலாத = ஆகிய
தோஷகளில்ல = தோஷங்கள் இல்லை
சின்மய = சித்-ஸ்வரூபம்
சாதரதி = பக்தியுடன்
தன்னங்க்ரி கமலவ = தன் பாதாரவிந்தங்களை
நம்பி துதிசுவர = நம்பி வணங்குபவர்களுக்கு
காதுகொண்டிஹ = எப்போதும் காத்துக்கொண்டிருப்பான்
பரம கருண மஹோததியு = அத்யந்த கருணைக்கடலான
சர்வகாமதனு = அனைத்து விருப்பங்களையும் பூர்த்தி செய்யும் ஸ்ரீபரமாத்மன்
தன்னவரு = தன் பக்தர்கள்
மாடிதபராதகள = செய்த தவறுகளை
நோடதலெ = எண்ணிப் பார்க்காமல்
சலஹுவ = காப்பாற்றுவான்.

பொருள்:
சிதானந்த ஸ்வரூபனான ஸ்ரீபரமாத்மனுக்கு, ஏதோ ஒரு பதார்த்தம் கிடைத்தால் மகிழ்ச்சியோ, அது தொலைந்து போனால் துக்கமோ, வெற்றி, தோல்வி இவைகளால் கிடைக்கும் சுக துக்கங்கள் எதுவும் கிடையாது. தன் பாத கமலங்களை நம்பி துதிப்பவர்களைக் காப்பாற்றுவதற்காக எப்போதும் அவர் அருகிலேயே காத்துக் கொண்டிருக்கிறான். பரம கருணைக்கடலும், அனைத்து விருப்பங்களையும் நிறைவேற்றுபவனான ஸ்ரீபரமாத்மன், தன் பக்தர்கள் செய்யும் தவறுகளை கவனிக்காமல், அவர்களுக்கு அருள்வான்.

சிறப்புப் பொருள்:
கேத மோத ஜயாபஜெய மொதலாத தோஷகளில்ல - என்று தாசராயர் சொல்லியிருக்கிறார். ஆனால், பரமாத்மனின் அவதார ரூபங்களில் சுக துக்கங்கள், மகிழ்ச்சி சோகங்கள் ஆகியவை இருப்பது போன்று, பாகவத, ராமாயண காவியங்களைப் படித்தால் நமக்குத் தோன்றும். அதாவது: ராமாயணத்தில் ராவணன் சீதையை அபகரித்துச் சென்றபிறகு, சீதையைப் பிரிந்த சோகத்தில் ஸ்ரீராமன் புலம்பியதாக சொல்லப்பட்டிருக்கிறது. ஆனால் இவை அஞ்ஞானிகளை

மயக்குவதற்காக செய்யப்பட்ட நாடகமே தவிர, உண்மை அல்ல. இந்த விஷயத்தில் நிர்ணய முதலாம் அத்யாயத்தில்:

அவதாரேஷு யத்கிஞ்சித் தர்ஷயென்னரவத்தரி: |
தச்சாஸுராணாம் மோஹாய தோஷாவிஷ்ணோர் நஹிக்விசித் ||36
அஞ்ஞத்வம் பாரவச்யம் வாவேத பேதாதிகம்ததா |
ததாப்ராக்ருத தேஹத்வம் தேஹத்வாகாதிகம் ததா ||38
அனீஷத்வம் சது:கித்வம் சாம்யமன்யைஸ்ச ஹீனதாம் |
ப்ரதர்ஷயதி மோஹாய தைத்யாதீனாம் ஹரி:ஸ்வயம் ||39
சதஸ்ய கஸ்சித்தோஷோஸ்தி பூர்ணாகிள குணோஹ்யஸௌ ||

ஸ்ரீபரமாத்மன் தன் அவதார ரூபங்களில், மனிதர்களைப் போலவே இருக்கிறான். அவை வெறும் அசுர ஜனர்களின் மோஹனத்திற்காகவே - மனிதர்களைப் போல சுக துக்கங்கள் அவனுக்குக் கிடையாது. சில சமயங்களில் எதுவும் தெரியாததைப் போல அவனும் மற்றவர்களுடன் சேர்ந்து யோசிப்பான். இது எப்போது என்றால், பாகவத 10ம் ஸ்கந்தத்தில்: சுதர்மனின் சபையில் உத்தவாதி மந்திரிகளுடன் ஸ்ரீகிருஷ்ணன் சபையில் அமர்ந்திருந்தபோது, இதற்குமுன் சந்தித்திராத ஒரு மனிதர், ஸ்ரீகிருஷ்ணனின் ஆணையின் பேரில் சபையில் நுழைந்து, ஸ்ரீகிருஷ்ணனைப் பார்த்து - 'தேவா! பாவியான ஜராசந்தன் 20,800 அரசர்களை கைது செய்து அவர்களை கிரிவ்ரஜ என்னும் பட்டணத்தில் வைத்திருக்கிறான். இவர்கள் அனைவரையும் ஈஸ்வரனுக்கு பலி கொடுக்க திட்டமிட்டிருக்கிறான். அந்த அரசர்கள் உன்னிடம் முறையிடுகின்றனர். நீயே ஜராசந்தனைக் கொன்று, அந்த அரசர்களை விடுவிக்க வேண்டும்' என்று வேண்டினார்.

ராஜதூதனான அந்த பிராமணன் இப்படி சொல்லிக் கொண்டிருக்கையில், நாரதர் அங்கு வந்து கிருஷ்ணனைக் குறித்து இவ்வாறு கூறுகிறார். 'கிருஷ்ணா! உன் அத்தை மகனான தர்மராஜன் ராஜசுய யாகம் செய்யத் திட்டமிட்டிருக்கிறான். நீ இல்லாமல் அந்த வேலை முடிவதில்லை. நீ இந்திரபிரஸ்தத்திற்கு சென்று அந்த வேலை செய்து முடிக்கவேண்டும். அந்த தர்மராஜனுக்கு தூதனாகவே நான் இங்கு வந்திருக்கிறேன்' என்றார்.

இப்படி ஒரே நேரத்தில் இரண்டு பேர் இரு வேலைகளுக்காக வேண்டுகையில், ஸ்ரீகிருஷ்ணன் அந்த இரண்டில் எதை முதலில் செய்யவேண்டும் என்று புரியாமல் சிந்திக்கும்போது, சபையினரிடமும், ஸ்ரீகிருஷ்ணனிடம் உத்தரவு பெற்று, உத்தவன் சொல்வது : 'சபையினரே, தர்மராஜன் செய்யத் தீர்மானித்திருக்கும் ராஜசுய யாகம் முடியவேண்டுமெனில் ஜராசந்தனின் வதம் ஆகவேண்டியிருக்கிறது. ராஜர்களை விடுவிக்க வேண்டும் என்றாலும் அதே காரியம் ஆகவேண்டும். இப்படி ஜராசந்தனின் வதம் இரு வேலைகளுக்கும் தேவையே ஆகியிருக்கிறது. அதற்காக, நாம் இப்போது இந்திரபிரஸ்தத்திற்குச் சென்று ராஜசுய யாகத்திற்காக, பீமசேனன் மூலமாக ஜராசந்தனைக் கொல்வதற்கு ஆக வேண்டிய காரியங்களைப் பார்ப்போம்' என்றார். அனைவரும் இதனை ஒப்புக்கொண்டு அதைப் போலவே செய்வோம் என்றனர்.

ராமாயண காலத்தில் ஸ்ரீராமன், தெற்கு கடற்கரையில் தர்ப்பசயனத்தில் இருந்தபோது, விபீஷணன் ஸ்ரீராமனிடம் சரணாகதி அடைவதற்கு வர, ஸ்ரீராமனோ இவரை ஏற்றுக்கொள்ளலாமா வேண்டாமா என்று சுக்ரீவர்களுடன் ஆலோசனை செய்தான். அவர்களோ கூடாது என்றபிறகு, ஸ்ரீஹனுமந்தன் மட்டும் விபீஷணனை ஏற்றுக்கொள்வதே நியாயம் என்றான். ஸ்ரீராமனும், நான் சரணாகதி அடைந்தவர்களை என்றும் விடுவதில்லை என்று சொல்லி, விபீஷணனுக்கு அபயம் அளித்ததாக ராமாயணத்தில் சொல்லப்பட்டிருக்கிறது.

இப்படி அங்கங்கு பரமாத்மன் அஞ்ஞானத்தை காட்டியிருக்கிறான். இவை அனைத்தும் அசுரர்களின் மோகனத்திற்காகவே (அவர்களை மயக்குவதற்காகவே) என்று நினைக்க வேண்டும். சில நேரங்களில் தான் பராதீனனாக இருப்பதாக காட்டிக் கொள்கிறான். அது எப்போது என்றால், சுபத்திரையின் திருமண சந்தர்ப்பத்தில், அவளை அர்ஜுனனுக்குக் கொடுப்பதற்கு பலராமனுக்கு இஷ்டம் இல்லாதபோது, தான் உலக மக்களைப் போல அவதாரம் எடுத்திருப்பதால், அண்ணனின் பேச்சை மீறமுடியாதவாறு இருந்து, அர்ஜுனனை யதி வேடம் தரித்து வருமாறு சொல்லி, பலராமாதி யாதவர்கள் அனைவரும் ரைவத பர்வதத்திற்கு சென்றிருக்கும்போது, இவர்கள் இருவருக்கும் திருமணம் செய்வித்து, இந்திரபிரஸ்தத்திற்கு அனுப்பி, தான் எதுவும் அறியாதவனைப் போல இருந்தான்.

இது மட்டுமல்லாமல், வசுதேவ, தேவகி, நந்தகோப, யசோதை, சாந்திபனி ஆகியோரின் வசத்தில் தான் இருப்பதாக காட்டினான். பீஷ்மாசார்யர் பாணம் விட்டபோது, தன் தேகத்தில் அந்த அம்பு பட்டு ரத்தம் வந்ததாக காட்டிக் கொண்டான். நரகாசுரனுடன் சண்டை போட்டபோது, அவன் விட்ட ஆயுதத்தினால் தான் மூர்ச்சையானது போல காட்டி, சத்யபாமாவினால் காப்பாற்றப்பட்டான். தன் தேகத்தை ப்ராக்ருத சரீரம் என்பதுபோல காட்டிக்கொண்டான். ராமாயணத்தில் ராவணனின் சம்ஹாரம் ஆனபிறகு, சீதையின் அக்னிப்பிரவேச காலத்தில், ஸ்ரீராமனை பிரம்மாதிகள் ஸ்தோத்திரம் செய்திருந்தபோது, ஸ்ரீராமன் தான் யார் என்றே தெரியாதவனைப்போல 'ஆத்மானம் மானுஷம் மன்யே ராமம் தஷரதாத்மஜம்' - நான் தசரத ராஜன் என்னும் அரசனின் மகனான மனுஷ்யன் என்கிறான். அப்போது பிரம்மதேவர் - 'அப்படியல்ல. நீ ஸ்ரீமன் நாராயணன். சீதை ஸ்ரீமகாலட்சுமி. நாங்கள் அனைவரும் உன்னை வேண்டியதால், ராவணாதிகளைக் கொல்வதற்காக நீ அவதரித்திருக்கிறாய்' என்றார்.

கிருஷ்ணாவதாரத்தில் தன் தேகத்தை விட்டுப் போவதாக பாகவதத்தில் சொல்லப்பட்டிருக்கிறது. பாண்டவர்களின் வனபிரவேச காலத்திலும், சத்யபாமாவின் தந்தையை ஷததன்யன் கொன்றான் என்று கேள்விப்பட்ட சமயத்திலும், ராமாவதாரத்தில் சீதையைப் பிரிந்திருந்த காலத்திலும், அதிக துக்கமுள்ளவனான காட்டிக்கொண்டான். மேலும் ராம கிருஷ்ணாவதார காலத்தில் தசரத வசிஷ்டாதிகள், நந்தகோப, வசுதேவ, பலராம, தர்மராஜ, குந்தி ஆகியோருக்கு தான் நமஸ்கரித்து, அவர்களைவிட தான் சிறியவன் என்று காட்டிக்கொண்டான். இவை அனைத்தையும் அசுர மோகனத்திற்காகவே பரமாத்மன் செய்தான் என்று

அறியவேண்டுமே தவிர, பூர்ண குணமுள்ள பரமாத்மனுக்கு எவ்வித தோஷங்களும் இல்லை என்று நிர்ணயத்தில் சொல்லப்பட்டிருக்கிறது. ஆகையால் 'கேத மோத ஜயாபஜய மொதலாத தோஷகளில்ல' என்று தாசராயர் சொல்கிறார்.

சாதரதி தன்னங்க்ரி கமலவ நம்பி துதிசுவர காதுகொண்டிஹ - பலிசக்ரவர்த்தி தன்னை முழுவதுமாக நம்பியிருக்கையில், வாமனாவதாரம் எடுத்து அவனை பூமிதானம் கேட்டு, அதன்மூலம் அனைத்தையும் வாங்கி, அவனை சுதல லோகத்திற்கு தள்ளி, அடுத்த மன்வந்தரத்தில் அவனுக்கு இந்திர பதவியைக் கொடுப்பதாக வாக்கு கொடுத்து, அதுவரைக்கும் அவனின் வீட்டு வாயிலை தான் காத்து வருவதாக சொல்லி, இப்போதும் வாமன ரூபத்தில் அப்படியே இருப்பதாக பாகவதம் சொல்கிறது. ஆகையால் தாசராயர் 'பரமகருண மஹோததி' என்கிறார். 'தன்னவர மாடிதபராதகள நோடதலெ சலஹுவ' என்னும் விஷயத்தில், பீஷ்மாதிகளின் உதாரணத்தைக் காட்டி ஏற்கனவே விளக்கியிருக்கிறோம். மேலும், பலிசக்ரவர்த்தி தானம் கொடுக்க முயன்றபோது, சுக்ராசார்யர் அவனை தடுத்தார். அதனையும் மீறி அவன் வாமனுக்கு தானம் கொடுத்ததால், அவனுக்கு அவர் சாபம் கொடுத்தார். ஆனாலும், ஸ்ரீபரமாத்மன் அவர் செய்த தவறுகளை மன்னித்து, அவருக்கு அருளினான்.

**மீனகூர்ம வராஹ நரப**
**ஞ்சானனாது[1]லஷௌர்ய வாமன**
**ரேணுகா[1]த்மஜ ராவணாரி நிஷாசரத்[3]வம்ஸி |**
**தே[4]னுகா[1]ஸுர மத[2]ன த்ரிபு[1]ரவ**
**ஹானிகை[3]ஸித[3] நிபுண க[1]லிமுக[2]**
**தா[3]னவர ஸம்ஹரிஸி த[4]ர்மதி[3] கா[1]ய்த[3] ஸுஜனரனு ||30**

மீன = மத்ஸ்யாவதாரம்
கூர்ம = கூர்ம அவதாரம்
வராஹ = வராக அவதாரம்
அதுள ஷௌர்ய = அளவிடமுடியாத பராக்ரமசாலியான
நரபஞ்சானன = நரசிம்ம அவதாரம் (பஞ்சானன = விஸ்தாரமான முகத்தைக் கொண்ட)
வாமன = வாமன அவதாரம்
ரேணுகாத்மஜ = ரேணுகாவின் மகனான அவதரித்த பரசுராம அவதாரம்
ராவணாதி நிஷாசரத்வம்ஸி = ராவணாதி அசுரர்களைக் கொன்ற ராமாவதாரம்
தேனுகாசுர மதன = தேனுகாசுரனைக் கொன்ற பலராமனில் நிலைத்திருந்த ஸ்ரீகிருஷ்ண அவதாரம்
த்ரிபுரவ ஹானிகைஸித நிபுண = தந்திரத்தால் த்ரிபுராசுரர்களின் மனைவிகளின் விரதத்தை பங்கம் செய்து, அவர்களுக்கு நஷ்டம் விளைவித்த பௌத்தாவதாரம்
கலிமுகதானவர = கலியுகத்தில் கீழ்த்தரமாக கலியைப் பின்பற்றிய அசுராவேசத்தைக் கொண்ட அயோக்யர்களான அரசர்களைக் கொன்று
தர்மதி = தர்மத்தினால்
சுஜனரன = பக்தர்களுக்கு

காய்த = அருளிய கல்கி அவதாரம்
(இப்படி பத்து அவதாரங்களை எடுத்த மகிமை கொண்ட ஸ்ரீஹரியை வணங்குகின்றேன்).

**ஸ்ரீமனோஹர ஷமலவர்ஜித[1]**
**கா[1]மித[1]ப்ரத[3] கை[1]ரவத[3]ள**
**ஷ்யாம ஷபல ஷரண்ய ஷாஸ்வத[1] ஷர்க[1]ராக்ஷஸக[2] |**
**ஸாமஸன்னுத[1] ஸகலகு[3]ணக[3]ண**
**தா[4]ம த்ரிஜகன்னாத[2]விட்டல**
**நீ மஹியொளவத[3]ரிஸி ஸலஹித ஸகல ஸுஜனரன ||31**

ஸ்ரீமனோஹர = லட்சுமிதேவியின் மனதை பரிகரிக்கும்
ஷமலவர்ஜித = தோஷங்கள் அற்றவனான
காமிதப்ரத = விருப்பங்களை நிறைவேற்றும்
கைரவதள ஷ்யாம = குவளை மலரின் இதழைப் போன்ற நீல நிறத்தைக் கொண்ட
ஷபலஷரண்ய = பிராமணாதி வர்ணத்தவர்க்கு அருள்பவனான
சாஸ்வத = நிரந்தரமானவனான
ஷர்கராக்ஷ சகா = தேவதைகளுக்கு நண்பனான
சாமசன்னுத = சாமவேதத்தால் வணங்கப்படுபவனான
சகலகுணகணதாம = அனைத்து நற்குணங்களால் நிறைந்தவனான
ஸ்ரீஜகன்னாதவிட்டல = என் பிம்பமூர்த்தியான ஸ்ரீஜகன்னாதவிட்டலன் என்னும் ஸ்ரீபரமாத்மன்
ஈ மஹியொளவதரிஸி = இந்த பூமியில் 10 ரூபங்களால் அவதரித்து
சகலசுஜனரன = அனைத்து யோக்யர்களை
சலஹித = அருளினான்.

எந்த ஸ்ரீபரமாத்மன் மத்ஸ்ய, கூர்ம, வராஹ, நரசிம்ம, வாமன, ரேணுகா புத்ரனான பரசுராம, ராவணாதிகளைக் கொன்ற தசரதராமன், தேனுகாசுரர்களைக் கொன்ற பலராமனில் இருக்கும் ஸ்ரீகிருஷ்ணன், புத்த, கல்கி ஆகிய அவதாரங்களால் சஜ்ஜனர்களுக்கு அருள்கிறானோ;

மேலும் எந்த பரமாத்மன் லட்சுமி மனோஹரமானவனோ, தோஷங்கள் அற்றவனோ, பக்தர்களின் விருப்பங்களை நிறைவேற்றுகிறானோ, குவளை மலரைப் போல நீலவர்ணம் கொண்டவனோ, பிராமணாதி வர்ணத்தவர்களால் வணங்கப்படுபவனோ, அனாதி நித்யனோ, தேவதைகளுக்கு நண்பனாக இருக்கிறானோ, சாமவேதத்தால் வணங்கப்படுகிறானோ, அனைத்து நற்குணங்களால் நிரம்பியவனோ, யார் இந்த பூமியில் அனேக ரூபங்களால் அவதரித்து சஜ்ஜனர்களுக்கு அருள்கிறானோ அவனே என் பிம்பமூர்த்தியான ஸ்ரீஜகன்னாதவிட்டலன் என்னும் ஸ்ரீபரமாத்மன் - என்னும் மங்கள ஸ்லோகங்களால் இந்த சந்தியை முடிக்கிறார் தாசராயர்.

தாசராயர் தசாவதாரங்களைப் பற்றி சொல்லும்போது, கிருஷ்ணாவதாரத்தைக் குறித்து 'தேனுகாசுர மதன' என்கிறார். தேனுகாசுரனை பலராமன் கொன்றான் என்று பாகவதத்தில் சொல்லப்பட்டிருக்கிறது. கிருஷ்ணாவதாரத்தைக் குறிக்கும் பூதனா, த்ருணாவர்த்த, கம்ஸ ஆகியோரைக் கொன்றவன் என்று சொல்லாமல், பலராமனைக் குறிப்பதான தேனுகாசுரனை சொல்லி, பலராமனை எடுத்து, ஸ்ரீகிருஷ்ணனை விட்டுவிட்டதாக தோன்றுகிறது. தசாவதாரத்தில் ராமானுஜ மதத்தவர்கள் -

மத்ஸ்யகூர்ம வராஹஸ்ச நாரசிம்ஹஸ்ச வாமன: |
ராமோராமஸ்ச ராமஸ்ச கிருஷ்ண: கல்கீசதேதஷ: ||

என்று மத்ஸ்ய முதல் வாமன வரைக்குமான 5 அவதாரங்கள், பரசுராம, தசரதராம, பலராம, கிருஷ்ண, கல்கி என 5, மொத்தம் 10 அவதாரங்கள் என்று சொல்கின்றனர். ஸ்ரீமதாசார்யரின்படி பார்கவ, ராம, கிருஷ்ண, கல்கி என்று பலராமனை விட்டு புத்தாவதாரத்தை சேர்த்து மொத்தம் 10 அவதாரங்கள் என்று சொல்கிறார். ஆனால், தாசராயரோ இரண்டு மதங்களையும் விட்டு, பலராம, புத்த, கல்கி என்று சொல்லி முக்கியமான கிருஷ்ணாவதாரத்தையே விட்டுவிட்டார். இது ஸ்ரீமதாசார்யரின் மதத்திற்கு எதிராக இருக்கிறது மட்டுமல்லாமல், தாசகூட வியாஸகூடத்தவர்களின் வேறுபாட்டைக் காட்டுகிறது என்று அறியக்கூடாது. தாசராயர் வியாசகூடத்திற்கு எதிராக எப்போதும் ஒரு சொல்கூட சொல்லியவரல்ல என்று அறியவேண்டும். அப்படியிருக்கையில், இப்படி சொல்வதற்கு என்ன காரணம் என்றால்:

இந்த விஷயத்தில் சிறிது கவனத்துடன் படித்தால் உண்மை புலப்படும். பாகவத 1ம் ஸ்கந்தத்தில் - பரமாத்மனின் முக்கிய அவதாரங்களைப் பற்றி பேசும்போது - '

ஏகோனவிம்ஷே விம்ஷதமேவ்ருஷ்ணிஷு ப்ராப்யஜன்மனி |
ராமக்ருஷ்ணாவிதிபுவோ பகவானஹரத்பரம் ||

19 மற்றும் 20வது அவதாரங்களாக, பலராம மற்றும் கிருஷ்ண என்னும் ரூபங்களால், வ்ருஷ்ணி வம்சத்தில் அவதரித்து, பூமியின் பாரத்தைக் குறைத்தார் என்று சொல்கிறார். இந்த வாக்கியத்தால், ராமகிருஷ்ணாதி ரூபங்களைப் போல, பலராம அவதாரமும்கூட, பரமாத்மனின் அவதாரங்களில் 19 மற்றும் 20தாக சேர்த்துக் கொள்வதால், இவையும் பரமாத்மனின் அவதாரங்களே என்று எண்ணவேண்டும். இப்படியிருக்கையில், நிர்ணயத்தில் ஸ்ரீமதாசார்யர் சொல்லியிருக்கும் வாக்கியத்திற்கு இது எதிராக இருக்கிறது. நிர்ணயத்தில் - 2ம் அத்தியாயம், 25ம் ஸ்லோகம்) - பரமாத்மனின் மத்ஸ்ய, கூர்மாதி அவதாரங்களை சொல்லியவாறு, 28ம் ஸ்லோகத்தில்,

ததைவ படவாவக்த: கல்கி தன்வந்த்ரி ப்ரபு: |
இத்யாத்யாகேவலோ விஷ்ணுர்னிஷாம் பேத: கதஞ்சன || என்கிறார்.

இந்த ஸ்லோகத்தின் பொருள் என்னவெனில்: மத்ஸ்ய, கூர்ம, வராக, நரசிம்ம, வாமன, பார்க்கவராம, கிருஷ்ண, புத்த, வேதவியாஸ, கபில, தத்தாத்ரேய, ரிஷப,

சிம்சுமார, ரிஷி புத்ரரான நர நாராயணர், ஹரி, தாபஸ என்னும் மனு, மஹிதாஸ, ஹம்ஸ, மோகினி, ஹயக்ரீவ, பெண் குதிரையின் ரூபம், கல்கி, தன்வந்த்ரி - இந்த அவதாரங்கள் எல்லாம் பரமாத்மனின் சாட்சாத் அவதாரங்களே. இந்த அவதாரங்களில் பரஸ்பரம் பேதங்களை சிந்திக்கக்கூடாது என்று சொல்லி, பிறகு:

கயஸ்சலக்ஷ்மி ணாத்யாஸ்சத்ரயோ ரோஹிணி நந்தன: |
ப்ரத்யும்னோ ரௌக்மிணேயஸ்ச தத்புத்ரஸ்சானிருத்தக: ||
நர:பல்குன இத்யாத்யாவிசேஷாவேஷினோஹரே: ||

என்று பரமாத்மனின் விசேஷாம்ச அவதாரங்களை சொல்கிறார். இதில் லட்சுமண, பரத, ஷத்ருக்ன, பலராம ஆகியோரும் பரமாத்மனின் விசேஷாம்ச அவதாரர்கள் என்று தெரிகிறது. பலராமன், பரமாத்மனின் சுக்லகேஷாவேஷத்தால் கூடிய சேஷதேவர் என்று பாகவத வாக்கியம் சொல்கிறது. இப்படியாக, ஒரு இடத்தில் பலராமனை பரமாத்மனின் சாட்சாத் அவதாரம் என்றும், இன்னொரு இடத்தில் விசேஷ அம்சம் என்றும் சொல்லியதுபோல தோன்றுகிறது. இந்த இரண்டு வாக்கியங்களையும் ஒரே வாக்கியமாக சேர்ப்பதற்காகவே தாசராயர் 'தேனுகாசுர மதன' என்று கூறுகிறார். இதன் பொருள் என்னவெனில்:

ப்ரலம்பாசுர, தேனுகாசுர ஆகியோரைக் கொன்றது வெறும் பலராமனின் செயல் அல்ல. சுக்லகேஷாவேஷத்தினால் பலராமனுக்குள் நிலைத்திருக்கும் பரமாத்மனே தேனுக முதலானவர்களைக் கொன்றான் என்று பாகவத தாத்பர்ய வாக்கியத்தால் அறிகிறோம். பலராமனுக்குள் இருந்த எந்த பரமாத்மன் தேனுகாசுரர்களைக் கொன்றானோ, அதே பரமாத்மன், ஸ்ரீகிருஷ்ண ரூபத்தினால் கம்சாதிகளைக் கொன்றான் என்று சொல்வதற்காக 'தேனுகாசுரனைக் கொன்றவன் கிருஷ்ணனே' என்று புரியவைப்பதற்காக, கிருஷ்ணாவதாரத்திற்கு, 'தேனுகாசுரமதன' என்கிறார்.

புத்தாவதாரத்தை சொல்லும்போது 'த்ரிபுரர ஹானிகைஸித நிபுண' என்று தாசராயர் சொல்கிறார். உலகத்தில் த்ரிபுராரி என்று ருத்ரருக்கே பெயர் உண்டு. ஹரிவம்ச, பாரதாதிகளிலும், ருத்ரரே த்ரிபுராசுரர்களைக் கொன்றிருக்கிறார் என்று சொல்லப்பட்டிருக்கிறது. இப்படியிருக்கையில், 'த்ரிபுரவ ஹானிகைஸித' பௌத்தாவதாரியான பரமாத்மன் என்று ஏன் சொல்கிறார்? இதன் விளக்கம்: பிரம்ம, விஷ்ணு ஆகியோரின் உதவியினால், ருத்ரதேவர் த்ரிபுரத்தைக் கொன்றது உண்மையானாலும், இந்த தைத்யர்கள் அனைவரும் பூமியில் மறுபடி பிறந்தனர். அது எப்போது என்றால், பாண்டவரின் வம்சத்தவர், வியாசரின் அருளால் தர்மபரிபாலனை செய்து வந்தபோது, பூமியில் அனைவரும் நற்சாஸ்திரங்களைப் படித்து வாழ்ந்து வந்தபோது, தைத்யர்கள் பூமியில் பிறந்து, ரிஷிகளுக்குத் தெரியாதவாறு அவர்களின் நடுவில் இருந்து, ஞானத்தை சம்பாதித்துக்கொண்டு, சத்சம்பிரதாயங்களை பின்பற்றத் துவங்கினர்.

வேதவியாச தேவருக்குப் பிறகும் நற்கல்வியினால் கெட்ட ஆகமங்கள் அனைத்தும் அழிந்துபோனதால், தைத்யர்கள்கூட நல்ல ஆகமங்களையே பின்பற்றத் துவங்கினர். அவிர்பாகத்தை உண்பதற்கு ஒரு நாய்க்கு எப்படி

யோக்யதை இல்லையோ, அதைப்போலவே, தமஸ்ஸில் அபார துக்கங்களை அனுபவிக்க தகுதியானவர்களான தைத்யர்களுக்கு, சரியான சாதனைகளை செய்வித்து, அவரவர்களுக்கு சரியான கதியை கொடுக்கவேண்டுமென்று பரமாத்மனை தேவதைகள் வேண்டிக்கொண்டனர். பரமாத்மன் தேவதைகளுக்கு அபயம் அளித்து, ஒரு அழகான குழந்தையின் ரூபத்தை எடுத்தார்.

அந்த சமயத்தில் பூமியில் ஒரு அசுரனிடம் ஒரு அசுரன் சுத்தோதனன் என்னும் பெயரில் பிறந்தான். அவன் த்ரிபுராசுரர்களின் மூலபுருஷன். அதாவது பூமியில் அவர்கள் அனைவருக்கும் முன்னாடியே பிறந்தவன். அவனுக்கு ஜித என்றும் ஒரு பெயர் இருக்கிறது. இவனுக்கு கயெ என்னும் மனைவியிடம் ஒரு குழந்தை பிறந்தது. (அல்லது கயா க்ஷேத்திரல் பிறந்தது என்றும் அர்த்தம் கொள்ளலாம்). பரமாத்மன் அந்த சிசுவை விலக்கி, அந்த இடத்தில் தான் படுத்துக் கொண்டான். இதனை சுத்தோதனன் அறியாமல், அக்குழந்தையை தனது என்றே பாவித்தான். அந்த சமயத்தில், அந்த தைத்யர்கள் வைதிக கர்மங்களை பின்பற்றி வந்தனர். அதைக்கண்ட அக்குழந்தை சிரிக்க, அப்போதே பிறந்த குழந்தை சிரிப்பதைக் கண்டு, அதற்கான காரணத்தை கேட்டனர்.

அதற்கு அக்குழந்தை, நான் உங்களுக்கு தக்க ஞானோபதேசத்தை செய்வேன் ஆகையால், எனக்கு புத்தன் என்று பெயர். நீங்கள் பயத்துடன் செய்யும் வைதிக கர்மங்களைப் பார்த்து எனக்கு சிரிப்பு வருகிறது. இந்த கர்மங்கள் என்றும் சுகங்களை அளிப்பவையல்ல. என் உபதேசத்தின்படி நீங்கள் நடந்தால், உங்களுக்கு நன்மை உண்டாகும் என்று சொல்லி, சாஸ்திரத்திற்கு எதிரான சூன்ய மதத்தைப் போதித்தான். அதனை தைத்யர்கள் நம்பவில்லை. அப்போது, பகவத் ஆணையின்படி ருத்ராதி தேவதைகள் அனைவரும் அங்கு வந்து, தைத்யர்களுக்கு புத்தனின் வாக்கியத்தில் நம்பிக்கை வருவதற்காக, தத்தம் ஆயுதங்களை அக்குழந்தையின் மேல் பிரயோகிக்க, அனைத்தையும் அக்குழந்தை விழுங்கிவிட்டது. ஸ்ரீவிஷ்ணு தன் சக்கரத்தை பிரயோகிக்க, அதனைப் பிடித்து அக்குழந்தை தன் ஆசனமாக ஆக்கி, அதன்மேல் அமர்ந்துவிட்டது.

அப்போது தேவதைகள் அனைவரும் அக்குழந்தையை வணங்கி, அங்கிருந்து புறப்பட்டனர். அப்போது அங்கிருந்த தைத்யர்கள் அனைவரும் புத்த மதத்தை அங்கீகரித்து, பரமாத்மனின் மாயையில் மயங்கி, சத்தர்மங்களை விட்டு, சூன்யவாதிகளாகி தமஸ்ஸை அடைந்தனர். இதற்கு ஆதாரம் நிர்ணய வாக்கியம் 32ம் அத்தியாயத்தில் 'தக்தா: புராயே த்ரிபுரங்கத்யைவ ருத்ரேண ஜாதா: ப்ருதிவீதலேதே' என்னும் 140 ஸ்லோகத்திலிருந்து 152 ஸ்லோகம் வரை இதே அர்த்தத்தையே சொல்லியிருக்கிறார். அதன் 148ம் ஸ்லோகத்தில்

யஸ்த்ரை புராணம் ப்ரதமோத்ர ஜாத: ஷுத்தோதனேத்யேவ ஜினேதி ஜோக்த: |
க்ஷேத்ரே கயாக்யேஸ்ய ஷிசும் ப்ரஜாதம் சம்ப்ராஸ்யதூரேத்ர பபூவ விஷ்ணு: ||

என்று சொல்லப்பட்டிருக்கிறது. இப்படி பௌத்த அவதாரத்தினால், த்ரிபுராசுரனை நாசம் செய்திருப்பதால் 'த்ரிபுரவ ஹானி கைஸித' என்று எழுதுவதற்கு ஆதாரம்

கிடைத்தது. இதைத்தவிர, த்ரிபுராசுரர்களின் மனைவியர் தன் பதிவிரதத்தைப் பாதுகாத்து, பார்வதியை பூஜித்து, தமக்கு தீர்க்க சௌமங்கல்யத்தை தருமாறு வேண்ட, பார்வதியும், உங்களின் பதிவிரதத்திற்கு பிரச்னை வரும்வரை உங்கள் சௌமாங்கல்யத்திற்கு பிரச்னை இல்லை. விரதம் பங்கமானால், உங்களுக்கு விதவை நிலை வந்துவிடும் என்று வரமளித்தார். இந்த வரத்தினால், த்ரிபுராசுரர்கள் அழிக்கப்படமுடியாமல் இருந்தனர். ஸ்ரீபரமாத்மன் பௌத்த ரூபத்தினால் அந்தப் பெண்களை மோகித்து அவர்களின் விரதங்களை பங்கம் செய்தார். ஆகையால், த்ரிபுரவாசிகளான அசுரர்கள், நாசமடைந்தனர் என்று ஒரு கதையும் இருக்கிறது.

இதற்கு கனகதாசர் தனது ஒரு கீர்த்தனையில் பரமாத்மனின் பத்து அவதாரங்களை, மூன்று சரணங்களில் பாடியிருக்கிறார். அதில் பௌத்தாவதாரத்தை துதித்திருக்கும் விதம் இப்படியாக இருக்கிறது.

ராகம்: ஆனந்தபைரவி. தாளம்: ரூபகம்

சித்தஜ கோடி லாவண்ய முப்புரத
உத்தம ஸ்த்ரியர வ்ரதவளிதெ
மத்தெ கல்கியாகி மதுபர கெடஹீத
ஹத்தாவதாரத ஹரியெம்பெனல்லதெ |

பத்தலெ நிந்தவனெந்தெனெ தேஜியனேரி வத்திஹாரிதனெந்தெனெ
பாரி பாரிகெ சத்துஹுட்டிதவனெந்தனெ ஆதிகேசவ |
பக்தவத்ஸலனெந்து பொகளுவெனல்லதெ நின்ன
நானேனெந்தெனோ ரங்கய்யா ரங்க நின்ன |

என்று சொல்லியிருக்கிறார். இதில் 'முப்புரத உத்தம ஸ்த்ரீயர வ்ரதவளிதெ' என்னும் வாக்கியம், மேற்சொன்ன கதைக்கு பொருந்துகிறது. இந்த காரணத்தினாலும், பௌத்தாவதாரத்தினால் த்ரிபுராசுரனை நாசம் செய்தான் என்று சொல்லமுடியும்.
'கலிமுக தானவர சம்ஹரிஸி தர்மதி காய்த சுஜனரன' இது கல்கி அவதாரத்தைக் குறிக்கிறது. பாகவத 12ம் ஸ்கந்தம் 3ம் அத்தியாயத்தில் :

இத்தம் கலௌ கதே ப்ராயே ஜனேஷு பரதர்ம ஸு |
தர்மத்ராணாய சத்வேன பகவானவதரிஷ்யதி ||
ஷம்பலாக்ராம முக்யஸ்ய ப்ராஹ்மணஸ்ய மஹாத்மன: |
பவனே விஷ்ணுயஷஸ: கல்கி: ப்ராதுர்பவிஷ்யதி ||
அஷ்வமாஷுகமாருஹ்ய தேவதத்தம் ஜகத்பதி: |
அஸினாஸாதுதமன மஷ்ட்யைஷ்வர்ய குணான்வித: ||
விசரன்னஸிர்மாக்ஷோண்யாம் ஹயேனாப்ரதிமத்யதி: |
ந்ருப லிங்கச்சதோதஸ்யோன் கோடிஷோ நிஹனிஷ்யதி ||

இப்படி பாவிகளால் நிறைந்த கலியுகம் முடியும்போது, மக்கள் அனைவரும் ம்லேச்சாசாரிகளாக இருப்பதை அறிந்து ஸ்ரீபரமாத்மன் தர்மத்தை காப்பதற்காக

பூமியில் அவதரித்தான். ஷம்பல என்னும் கிராமத்தில், முக்யஸ்தனாக இருக்கும் விஷ்ணுயஷஸ் என்னும் பிராமணனின் வீட்டில் கல்கி என்னும் பெயரில் பரமாத்மன் அவதரித்து, அதிவேகமாக ஓடும் ‘தேவதத்த’ என்னும் குதிரைமேல் அமர்ந்து அஷ்ட ஐஸ்வர்யத்தால் நிறைந்து, வாளினை ஏந்தி பூமண்டலத்தில் சுற்றியவாறு, அரசனைப் போல வேடமணிந்த திருடர்களை கொல்வான். அப்போது கிருதயுகம் பிறக்கும். தொடர்ந்து நான்கு பாத தர்மத்தையும் நிர்ணயிப்பான் என்று சொல்லியிருக்கிறார்.

தாசராயரின் ‘கலிமுகதானவர சம்ஹரிஸி’ என்னும் வாக்கியத்தை பார்த்தால், கலி முதலான தைத்யர்களை கொன்றவன் என்ற அர்த்தம் வருகிறது. மேற்சொன்ன பாகவத வாக்கியத்தில் அரசர்களைப் போல வேடமணிந்த திருடர்கள் என்று அர்த்தம் வருகிறது. இந்த இரண்டையும் பொருத்திப் பார்த்தால், ‘கலிமுக’ என்றால், கலியை பார்த்திருப்பவன் என்று பொருள் வருகிறது. அதாவது, கலியுகத்தின் பலனாக அசுர ஆவேசத்தினால், பூமியில் பிறந்து, பாவங்களை செய்து, அரசன் என்று பெயர் பெற்ற திருடர்களைக் கொல்வேன் என்று பொருள்.

‘ஷர்க்கராக்ஷ சக’ என்றால் சூக்ஷத்ரிஷ்டி உள்ளவர்கள் அதாவது தேவதைகள் என்று பொருள். கீதா தாத்பர்யத்தில் இதற்கான விளக்கம் இருக்கிறது.

அனைத்து வேதங்களும் பரமாத்மனையே துதித்திருந்தாலும் ‘ஸாமசன்னுத’ சாம வேதத்தினால் வணங்கப்படுபவன் என்று எதற்கு சொன்னான் என்றால், தேவதைகள் அனைவரும் தன்னை கொண்டாடினாலும் கானரூபமான சாமவேதத்தில், பகவன் மகிமை மிகவும் விசேஷமாக சொல்லப்பட்டிருப்பதால், சாமகான ப்ரியன் என்று பரமாத்மனுக்கு பெயர் வந்திருக்கிறது. மேலும், கீதையில் ‘வேதானாம் சாமவேதோஸ்மி’ - வேதங்களில் என் விபூதி ரூபத்தை சாம வேதத்தில் அறிவாயாக - என்று ஸ்ரீகிருஷ்ணன் சொல்லியிருக்கிறார்.

கருணா சந்தி என்னும் இரண்டாம் சந்தியின் தாத்பர்யம் இத்துடன் நிறைவுற்றது.
ஸ்ரீகிருஷ்ணார்ப்பணமஸ்து.

***

## பாவபிரகாசிகை : சந்தி 3 : வியாப்தி சந்தி

**ஹரிகதா2ம்ருதசார கு3ருக3ள**
**கருணதிந்தா3பநிது பே1ளுவே**
**பரம ப4கவத்3ப4க்தரித3னாத3ரதி3 கேளுவுது3**

**புருஷரூபத்1ரய பு1ராத1ன**

**புருஷ புருஷோத்த1ம க்ஷராக்ஷர**
**புருஷபூஜிதபாத3 பூர்ணானந்த3 ஞானமய |**
**புருஷஸூக்த1ஸுமேய தத்த**
**த்1 பு1ருஷஹ்ருத் புஷ்க3ர நிலய மஹ**
**புருஷ ஜாண்டந்த1ரதி3 ப3ஹிரதி3 வ்யாப்த1 நிர்லிப்த1 ||1**

புருஷரூப த்ரய = மூன்று புருஷ ரூபங்களை தரித்த
புராதன புருஷ = ஆதி புருஷனான
புருஷோத்தம = க்ஷராக்ஷர புருஷர்களைவிட சிறந்தவனான
க்ஷராக்ஷர புருஷ பூஜிதபாத = க்ஷர = பிரம்மாதி தேவதைகள். அக்ஷர = ரமாதேவி. இந்த இரண்டுவித புருஷர்களால் பூஜிக்கப்படும் பாதங்களைக் கொண்ட
பூர்ணானந்த ஞானமய = முழுமையான ஆனந்தத்தையும், ஞானத்தையும் ஸ்வரூபமாகக் கொண்ட
புருஷசூக்த சுமேய = புருஷசூக்தத்தினால் நன்றாக விளக்கப்படும்
தத்தத்புருஷ ஹ்ருத்புஷ்கர நிலய = க்ஷர அக்ஷர புருஷர்களின் இதயங்களை தன் வீடாகக் கொண்ட, அவர்களின் நடுவில்
மஹாபுருஷ = புருஷர்களின் சிறந்தவர்களான ஸ்ரீபரமாத்மனால்
ஜாண்டந்தரதி பஹிரதி = உருவாக்கப்பட்ட பிரம்மாண்டத்தின் உள்ளேயும் வெளியேயும்
வியாப்த = வியாப்தனாக இருந்தாலும்
நிர்லிப்த = அதற்கும் அவனுக்கும் சம்மந்தம் இல்லாதவனைப் போல இருக்கிறான்.

ஸ்ருஷ்டி காலத்தில் ஸ்ரீபரமாத்மன் மூன்று புருஷ ரூபங்களை தரித்தான். இவன் புராண புருஷன். ரமா பிரம்மாதி, அனைத்து தேவதைகளையும்விட, கருட சேஷ கந்தர்வ ஆகிய எல்லோர்களையும்விட உத்தமன். க்ஷரா அக்ஷரர்களாகிய ரமா பிரம்மாதிகளால் வணங்கப்படும் பாதங்களைக் கொண்டவன். பூர்ணானந்த ஞானத்தைக் கொண்டவன். புருஷ சூக்தத்தினால் விளங்கிக் கொள்ளப்படுபவன். அந்தந்த புருஷர்களின் இதய கமலத்தில் வசித்திருப்பவன். பிரம்மாண்டத்தின் வெளியேயும் உள்ளேயும் என அனைத்து இடங்களிலும் வியாப்தனாக இருந்தாலும், எதற்கும் சம்பந்தப்படாதவன்போல இருப்பவன்.

புருஷரூபத்ரய - ஸ்ரீபரமாத்மன், மூன்று புருஷ ரூபங்களை தரித்த சந்தர்ப்பம் எப்போது என்றால்: பாகவத மூன்றாம் ஸ்கந்தம், ஆறாம் அத்தியாயத்தில்: 'பகவானேக ஆஸேதமக்ர ஆத்மாத்மனாம் விபு:' - அனைத்து ஜீவராசிகளுக்கும் பிரபுவான ஸ்ரீபரமாத்மன், ஸ்ருஷ்டிக்கு முன்னர் தான் ஒருவனே இருந்தான் என்று சொல்லி, அப்போது இந்த உலகத்தை படைக்க வேண்டும் என்று சிந்தித்தான் என்னும் விஷயத்தை 2ம் & 3ம் ஸ்லோகத்தில் சொல்லப்பட்டிருக்கிறது.

4ம் ஸ்லோகம்:
காலவ்ருத்யாந்து மாயாயாம் குணமய்யா மதோக்ஷஜ: |
புருஷேணாத்ம பூதேன வீர்யமாதத்த வீர்யர்வா ததோபவன் மஹத்தத்வ அவ்யக்தாத்கால ஜோதிதாத் ||

காலத்திற்கேற்ப பகவத்சேவை செய்துகொண்டிருக்கும் சத்வரஜோதமோ குணங்களைக் கொண்ட மாயா என்னும் பெயரைக் கொண்ட ப்ரக்ருதியில் தானே புருஷ ரூபத்தை ஸ்வீகரித்த ஸ்ரீபரமாத்மன் வீர்யதானம் செய்தான். அப்போது அவ்யக்த தத்வமும், ப்ரக்ருதியிலிருந்து மஹத் தத்வமும் பிறந்தது என்று சொல்லப்பட்டிருக்கிறது. இப்படி முதல் ஸ்ருஷ்டியின் சமயத்தில், மஹத் தத்வாதிகளை படைக்க எடுத்த ரூபமே முதலாம் புருஷரூபம். பிறகு மஹத்தத்வத்திலிருந்து வைகாரிக, தைஜஸ, தாமஸ என்னும் மூன்று விதமான அஹங்கார தத்வம் பிறந்தது. அதன்பிறகு பஞ்சமஹா பூதங்கள், தன்மாத்ர குணங்கள், ஞானேந்திரியங்கள், கர்மேந்திரியங்கள், சித்தபுத்தி, மனஸ், அஹங்காரம் என்னும் 24 தத்வங்களும், அதன் அபிமானி தேவதைகளும் பிறந்தனர். அந்த தேவதைகள் அனைவரும் சேர்ந்து வசிப்பதற்கு ஒரு இடத்தை படைப்பதற்கு முயற்சித்து, அது முடியாமல், பரமாத்மனை ஸ்தோத்திரம் செய்த விஷயத்தை இந்த அத்தியாயத்தில் விளக்கியிருக்கிறார்.

ஆறாம் அத்தியாயத்தில், ஸ்ரீபரமாத்மன், தத்வாபிமானி தேவதைகளால் வணங்கப்பட்டு, சித்தாபிமானியான வாயுதேவருடன் சேர்ந்து, 23 தத்வங்களிலும் ஒரே நேரத்தில் நுழைந்து, அவர்களில் நிலைத்திருந்தான். '

ப்ரபுத்த கர்மாதெய்வேன த்ரயோவிம்ஷதிகோகண: |
ப்ரேரிதோ ஜனயத் ஸ்வாபிர்மாத்ராபிரபி புருஷம் ஹிரண்மய: ஸபுருஷ: சஹஸ்ர பரிவத்ஸர்யா அண்டகோஷ உவாஸாப்ஸு சர்வ சர்வோபப்ரும்ஹித: ||

பரமாத்மன் நுழைந்ததால் இந்த 23 தத்வங்களும், பகவத் ப்ரேரணையினாலும், தன்மாத்ரா குணங்களின் உதவியுடனும், ஒரு புருஷ ரூபத்தை ஸ்ருஷ்டித்தது. அந்த தங்க மயமான புருஷ ரூபமே, பிரம்மாண்டத்தின் உள்ளே இருந்து, ஓராயிரம் ஆண்டுகள் வரை தண்ணீரில் இருந்தது. அதன் பிறகு, பிரம்மாண்டத்தை 14 உலகங்களாக பிரித்தான் என்று சொல்கிறார்கள். இதிலிருந்து, பிரம்மாண்டத்தில் நுழைந்த புருஷ ரூபம் இரண்டாவது என்று தெரிகிறது.

முதலாம் ஸ்கந்தத்தில்:

ஜக்ருஹேபௌருஷம் ரூபம் பகவான் மஹதாதிபி: |
சம்பூதம் ஷோடஷ கலமாதௌ லோக ஸிஸ்ருக்ஷயா |
யஸ்யாம்பஸி ஷயானஸ்ய யோகனித்ராம் விதன்வத: |
நாபி ஹ்ருதாம்புஜாதாஸீத்பிரம்மா விஸ்வஸ்ருஜாம் பதி: |
பஷ்யாந்ததொரூப மதப்ரசக்ஷுஷ: சஹஸ்ரபாதோரு புஜானனாத்புதம் |
சஹஸ்ர மூர்த்த ஸ்ரவணாக்ஷினாஸிகம் சஹஸ்ர மௌல்யம்பர குண்டலோல்லஸத் ||

ஸ்ருஷ்டி காலத்தில் ஸ்தூல ஸ்ருஷ்டியை செய்வதற்கு, மஹத்தத்வ மஹாபூதங்கள் 5, ஞானேந்திரியங்கள் 5, கர்மேந்திரியங்கள் 5, மஹத் தத்வாதி 16 கலைகளைக் கொண்ட புருஷ சம்பந்தமான ரூபத்தை தரித்தான். இந்த

புருஷரூபியான ஸ்ரீபரமாத்மன், பிரளயோதய காலத்தில் படுத்து, யோக நித்திரையை முடிக்கும் காலத்தில், அவனின் நாபியிலிருந்து தோன்றிய தாமரையிலிருந்து, பிரஜைகளை ஸ்ருஷ்டிப்பவனான பிரம்மதேவர் தோன்றினார். அத்தகைய 'சஹஸ்ர சீர்ஷாபுருஷ:' என்னும் புருஷ சூக்தத்தில் சொல்லப்பட்டிருப்பதைப் போல, ஆயிரம் பாதங்கள், தோள்கள், காதுகள், கண்கள், மூக்குகள், ஆயிரம் கிரீடங்கள், குண்டலங்கள் ஆகியவற்றால் அலங்கரிக்கப்பட்ட ஸ்ரீ பரமாத்மனின் புருஷரூபத்தை, அல்பஞானிகள் அல்லாத, மகாத்மர்களான பிரம்மாதிகள் தற்போதும் பார்த்துக் கொண்டிருக்கின்றனர் என்று சொல்லப்பட்டிருக்கிறது.

இப்படி மஹத்தத்வாதிகளின் படைப்பிற்குக் காரணமான புருஷரூபம் 1, பிரம்மாண்டத்தில் நுழைந்த ரூபம் 2, நாபி கமலத்திலிருந்து பிரம்மதேவரைப் படைத்து, பத்பனாப என்னும் பெயரைப் பெற்ற புருஷ சூக்தத்தில் புகழப்பட்டுள்ள ரூபம் 3, என மூன்று புருஷ ரூபங்களை பாகவதம் விளக்குகிறது. இதே விஷயத்தை 'பிரதமம் மஹதஸ்ருஷ்டு த்விதீயம் த்வண்ட ஸம்ஸ்திதம் | த்ருதீயம் தேஹினாந்தேஹே' என்று விஷ்ணு புராண வசனம் சொல்கிறது. இந்த வாக்கியத்தில் முதலாவது மஹத் தத்வத்தை ஸ்ருஷ்டித்த ரூபம் என்றும், இரண்டாவது பிரம்மாண்டத்தில் நுழைந்த ரூபம் என்றும் சொல்கிறது. இந்த இரண்டு ரூபங்களும் பாகவதத்தின் விளக்கத்திற்கு சரியாக பொருந்துகிறது. மூன்றாவது மட்டும் 'தேஹினாம் தேஹே' அனைத்து தேஹிகளின் தேகத்திலும் இருக்கும் புருஷ ரூபம் என்கிறது. ஆனால் பாகவதத்தில் பிரம்மதேவருக்கு மூலபூதமான சரீரம் என்று சொல்லப்பட்டிருக்கிறது.

ஆக இந்த மூன்றாவது தேகத்தின் விஷயத்தில் இங்கு வேறுபாடு வருகிறது என்றால்: முதலாம் ஸ்கந்தத்தில் இதற்கு சம்பந்தமாக:

ஏதன்மானாவதாராணாம் நிதானம் பீஜமவ்யயம் |
யஸ்யாம்ஷாம்ஷேன ஸ்ருஜ்யந்தெ தேவதியக்ஞனராதய: ||

'நாபியில் கமலம் இருப்பதால் பத்பனாபன் என்று பெயர் பெற்றுள்ள இந்த புருஷ ரூபம், அனைத்து அவதாரங்களுக்கும் விதையைப் போலவும், நிரந்தரமானதாகவும் இருக்கிறது. இந்த பரமாத்மனின் அம்சங்களிலிருந்தே, தேவதைகள், பறவை, மிருகங்கள், மனிதர்கள் ஆகியவை படைக்கப்பட்டிருக்கின்றன' என்று சொல்கிறது. இதனால், ரமா பிரம்மாதி அனைத்து ஜீவராசிகளிலும், பின்ன-அம்சத்தினால் புருஷ ரூபத்தினால் ஸ்ரீபரமாத்மன் நிலைத்திருக்கிறான் என்று நிரூபணம் ஆகிறது. இதன் சுருக்கம் என்னவென்றால், எந்த புருஷரூபமானது, பிரம்மதேவர் உருவாக காரணமாக, பத்பனாபன் என்று பெயர் பெற்றதோ, அந்த ரூபமே அனைத்து ஜீவராசிகளிலும் இருக்கிறது என்று தெரியவருகிறது. ஆகையால், பாகவத வாக்கியத்திற்கும், விஷ்ணு புராண வாக்கியத்திற்கும் வேறுபாடு இல்லை என்று அறியவேண்டும்.

அல்லது புருஷரூபத்ரய என்பதை புருஷ, ரூபத்ரய என்று பிரித்தும் படிக்கலாம். புருஷ என்றால் 'பூர்ண ஷட்குணத்வாத்புருஷ:' ஆறு நற்குணங்களால்

நிரம்பியவனாகையால் அவனுக்கு புருஷன் என்று பெயர். அல்லது 'புருஸரதீதி புருஷ:' புர என்றால் தேகம். அவன் மத்ஸ்ய, கூர்மாதி, கிருஷ்ண ரூபங்களை எடுத்திருப்பதால் புருஷன் என்று பெயர் பெறுகிறான். ரூபத்ரய = உலகப்புகழ் பெற்ற மூன்று ரூபங்களை தரித்தவன்.

பாகவத முதலாம் ஸ்கந்த தாத்பர்யத்தில்

பிரம்மா விஷ்ண்வேஷ ரூபாணித்ரீணி விஷ்ணோர்மஹாத்மன: |
பிரம்மணி பிரம்மருபஸன் ஷிவரூபீ ஷிவேஸ்தித: ||

ஸ்ரீவிஷ்ணுவிற்கு 'பிரம்ம விஷ்ணு மஹேஸ்வர' என்று மூன்று ரூபங்கள் உண்டு. பிரம்மதேவரில் பிரம்ம ரூபத்திலும், ருத்ர தேவரில் ருத்ரரூபத்திலும் இருந்து, ஸ்ருஷ்டி சம்ஹாரங்களை செய்கிறார். ஸ்வயம் விஷ்ணு ரூபத்தில் இருந்து அனைத்தையும் நிர்வகிக்கிறான். இப்படியாக ரூப த்ரயங்கள் பரமாத்மனுக்கு இருக்கிறது. அல்லது, பரமாத்மனின் அவதாரங்களில் மூன்று விதங்கள் உண்டு. பாகவத எட்டாம் ஸ்கந்த 3ம் அத்தியாயத்தில் - 'நம: ஷாந்தாய கோராய மூடாய குணகர்மணே' என்று சொல்வதால், சாந்தமான, கோரமான, மூடாவதாம் என்று மூன்று விதங்கள் இருக்கிறது என்பதை அறியலாம். வாசுதேவாதி ரூபங்கள் சாந்தமான ரூபங்கள். பரசுராமாதி அவதாரங்கள் கோரமான ரூபங்கள். மத்ஸ்யாதி அவதாரங்கள் மூடாவதாரங்கள். இந்த அவதாரங்களில் பரஸ்பரம் வேறுபாடுகள் இல்லை என்றாலும், இடம் காலத்திற்கேற்ப இப்படி சொல்லலாம். இங்கு ரூபத்ரய என்றால், மொத்தம் மூன்றே ரூபங்கள் என்று பொருளல்ல. அனேக ரூபங்கள் என்று நினைக்க வேண்டும்.

'புராதன புருஷ' என்றால் - 'ஏகோ நாராயண ஆஸீன்ன பிரம்மானச சங்கர:' என்னும் வசனத்திலிருந்து பிரம்மாதிகள் அனைவரும் பிறப்பதற்கு முன்னரும்கூட ஸ்ரீபரமாத்மன் இருந்தார் என்றதால் தாசராயர் 'புராதன புருஷ' என்றார். புருஷோத்தமன் என்னும் சொல்லுக்கு பொதுவாக

த்வாவியௌ புருஷௌ லோகே க்ஷரஷாக்ஷர ஏவச |
க்ஷரஸ்ஸர்வாணி பூதானி கூடஸ்தோக்ஷர உச்யதே |
உத்தம: புருஷஸ்வன்ய: பரமாத்மேத்யுதாஹ்ருத: ||

உலகத்தில் புருஷ என்னும் சொல்லால் அழைக்கப்படுபவர்கள் - க்ஷர மற்றும் அக்ஷர என்று இருவர் இருக்கின்றனர். க்ஷர என்றால் ஸ்தூல சரீரத்தைப் பெற்று, அதை இழக்கும் நிலையைப் பெறுபவர்கள். சரீர நாசம் இல்லாதவர்கள் அக்ஷரர். அது ரமாதேவி மட்டுமே.

ஸ்த்ரி ஸ்வரூபளான ரமாதேவிக்கு புருஷ என்று எப்படி சொல்வது என்றால், சாந்தோக்ய பாஷ்யத்தில் 'புல்லீங்கேனோச்யதே ஸ்த்ரீபும்வசத்புகிமதீயத:' ரமாதேவி ஸ்த்ரீயாக இருந்தாலும், புருஷ சக்தி உள்ளவளாகையால், புல்லிங்க (ஆண்பால் பெயர்) பொருந்துகிறது என்று சொல்லப்பட்டிருக்கிறது. இப்படி க்ஷர புருஷர்களான பிரம்ம, சிவாதிகளைவிட, அக்ஷரளான ரமா தேவியைவிட

உத்தமனான புருஷன் இன்னொருவன் இருக்கிறான், அவனே புருஷோத்தமன். கீதையில் சொல்லியபடி, க்ஷராக்ஷர புருஷர்களான ரமா பிரம்மாதிகளைவிட உத்தமனாகையால் அவன் புருஷோத்தமன் என்று சொல்லப்பட்டிருக்கிறது. ஆனாலும் இந்த இடத்தில் அர்த்தம் சரியாக பொருந்தவில்லை எனலாம்.

தாசராயர் சொல்லும் 'க்ஷராக்ஷர புருஷ பூஜித பாத' என்னும் வாக்கியத்தால் க்ஷராக்ஷர புருஷரான ரமா பிரம்மாதிகளால் வணங்கப்படுபவனான பாதங்களைக் கொண்டவன் என்னும் அர்த்தம் வருவதால் புனருக்தி தோஷம் (இரு முறை விளக்கும்) வருகிறது. க்ஷராக்ஷர புருஷர்களால் வணங்கப்படும் பாதங்களைக் கொண்டவன் என்று சொன்னபிறகு, க்ஷராக்ஷர புருஷர்களைவிட உத்தமன் என்பது தானாகவே தெளிவாகிறது. ஆகையால், புருஷோத்தமன் என்னும் சொல் இங்கு தேவையேயில்லை. புருஷோத்தம என்னும் சொல்லாலேயே க்ஷராக்ஷர புருஷர்களால் வணங்கப்படுபவன் என்று தெரிந்தபிறகு, மறுபடி 'க்ஷராக்ஷர புருஷ பூஜித பாத' என்று ஏன் இரண்டாம் முறை சொல்லவேண்டும்? இந்த காரணத்தால், புருஷோத்தமன் என்னும் சொல்லுக்கு வேறொரு அர்த்தம் சொல்லவேண்டியதாகிறது. 24 தத்வாபிமானி தேவதைகளுக்கும் புருஷ என்னும் பெயர் உண்டு. எப்படியெனில், புருஷரூபியான பரமாத்மன், ஆதியில் அவர்களில் நுழைந்து பிரம்மாண்டத்தை ஸ்ருஷ்டித்ததால், அவர்களுக்கு புருஷ என்று பெயர் வந்தது. அல்லது 'புருஷ பஹுஷு ஷீதீதி புருஷ:' என்னும் வாக்கியத்தால் அனைத்து பஞ்ச-பௌதிக சரீரத்திலும் தத்வாபிமானிகள் இருந்தே இருக்கின்றனர். ஆகையால், தத்வாபிமானி தேவதைகளுக்கு புருஷ என்று பெயர்.

ஸ்ரீபரமாத்மன் அந்த 24 தத்வாபிமானி தேவதைகளைவிட உத்தமனாக தான் இருப்பதால், புருஷோத்தமன் என்று பெயர் பெற்றான். அல்லது புருஷோத்தம என்னும் சொல்லுக்கு, கீதையின்படி 'க்ஷரஸ்ஸர்வாணி பூதானி' என்று பிரம்மரிலிருந்து துவங்கி அனைவருமே க்ஷர என அழைக்கப்படுகின்றனர். அக்ஷர என்றால் அது ரமாதேவி. பரமாத்மன் இவர்களைவிட உத்தமன் என்று அர்த்தம் சொல்லி, 'க்ஷராக்ஷர பூஜித பாத' என்னும் சொல்லுக்கு அர்த்தம் சொல்லவேண்டும். எப்படியெனில், விஷ்ணு தத்வ நிர்ணயத்தில் :

பிரம்மா ஷிவஸ்ஸுரேஷாத்யா: ஷரீர க்ஷரணாத்க்ஷரா: |
லட்சுமீரக்ஷர தேஹத்வாத க்ஷராத்பரதோ ஹரி: ||

பிரம்மா ருத்ர இந்திராதிகள், சரீர நாசம் கொண்டவர்கள் ஆகையால், க்ஷர என்று அழைக்கப்படுகிறார்கள். ரமாதேவியருக்கு சரீர நாசம் இல்லாததால் அவருக்கு அக்ஷர என்று பெயர். இவர்களைவிட உத்தமன் பரமாத்மன். இந்த ஆதாரத்தினால், க்ஷர சொல்லுக்கு, பிரம்ம ருத்ராதி ஜீவர்களை மட்டும் எடுத்துக் கொள்ளவேண்டும். கீதையின்படி, கலி முதலான தமோ யோக்யர்களைவிட பரமாத்மன் உத்தமனே ஆகியிருந்தாலும், அவர்களால் வணங்கப்படும் பாதங்களைக் கொண்டவன் அல்ல. தைத்யர்கள் பரமாத்மனை த்வேஷிக்கின்றனரே தவிர, பூஜிப்பதில்லை. ஆகையால், ரமா பிரம்மாதி ஜீவர்களால் பூஜிக்கப்படும் பாதங்களைக் கொண்டவன் என்று மட்டுமே பொருள். இப்படி புருஷோத்தம

என்னும் சொல்லுக்கு ரமா பிரம்மாதி தகுதி உள்ளவர்களால் மட்டுமே வணங்கப்படும் பாதங்களைக் கொண்டவன் என்று பொருள் கொண்டால், அதில் புனருக்ஷி தோஷம் வருவதில்லை.

பூர்ணானந்த ஞானமய = முழுமையான ஆனந்த மற்றும் ஞானத்தைக் கொண்டவன். மணிமஞ்சரியில் - 'வந்தே கோவிந்தமானந்த ஞானதேஹம் பதிம் ஸ்ரிய:' என்று சொல்லப்பட்டிருக்கிறது. அது மட்டுமல்லாமல் 'ஆனந்தோ பிரம்மேதி வ்யஜானாத் விக்ஞானம் பிரம்மேதி வ்யஜானாத்' என்னும் உபநிஷத் வாக்கியங்களால் ஆனந்த ஸ்வரூபன் பிரம்மன், விக்ஞான ஸ்வரூபன் பிரம்மன் என்று தனித்தனியாக சொல்லியிருக்கும் பிரம்ம ஸ்வரூபத்தை இங்கு தாசராயர், ஒரே வாக்கியத்தில் 'பூர்ணானந்த ஞானமய' என்று சொல்கிறார். அனைத்து சூக்தங்களும் பரமாத்மனின் ஸ்வரூபத்தையே விளக்குகின்றன என்றாலும்,

யதைவ பௌருஷம் சூக்தம் விஷ்ணோரேவாபிதாயக |
ந ததா சர்வவேதாஷ்ச வேதாங்கானி ச நாரத ||

எப்படி புருஷ சூக்தமானது வெறும் விஷ்ணு ஸ்வரூபத்தை மட்டுமே வர்ணிக்கிறதோ அது போல, அனைத்து வேத வேதாங்கங்களும்கூட சொல்வதில்லை என்று பிரம்மசூத்ர பாஷ்ய பிரமாணத்தின் அர்த்தத்திலிருந்து மேற்சொன்ன விஷயம் புரிகிறது. ஆகையால் தாசராயர் 'புருஷசூக்த சுமேய' என்றார்.

'தத்தத்புருஷ ஹ்ருத்புஷ்கர நிலய' அந்தந்த புருஷர்களின் இதய கமலங்களில் வாசம் செய்பவன் என்று பொருள். பரமாத்மன் அனைவரின் இதய கமலங்களில் கண்டிப்பாக இருந்தாலும், முதல் சந்தியின் இறுதி பத்யத்தில் 'பரிமளவு சுமனதொளகனலனு அரணியொளகிப்பந்தெ தாமோதரனு பிரம்மாதிகள மனதலி தோரிதோரதலெ இருதிஹனு' என்று சொன்னதைப் போல, பிரம்மாதி ஞானிகளுக்கும், யோகிகளுக்கும் தரிசனம் அளித்து, பிறருக்கு தரிசனம் கொடுக்காதிருப்பவன். ஞானிகள் அனைவரும் அவனை கண்டிப்பாக காண்பர். பாகவத நான்காம் ஸ்கந்தம் 9ம் அத்தியாயத்தில், நாரதர் த்ருவனுக்கு உபதேசம் செய்த சமயத்தில்:

ஸ்ரீவத்ஸாங்கம் கனஷ்யாமம் புருஷம் வனமாலிகம் |
ஷங்க சக்ர கதாபத்யைரபிவ்யக்த சதுர்புஜம் |
கிரீடினம் குண்டலினம் கேயூர மலயான்விதம் |
கௌஸ்துபாபரண க்ரீவம் பீதகௌஷேயவாஸம் ஸம் |
பத்ப்யாம் நகமணிஸ்ரேண்யா விலஸத்ப்யாம் சமர்ச்சதாம் |
ஹ்ருத்பத்ம கர்ணிகாதிஷ்ண்ய மாக்ரம்யாத்ம ந்யவஸ்திதம் |
ஸ்மயமானமபித்யாயேத் ஸாதுராகாவலோகனம் ||

மேகத்தைப் போன்ற கருப்பானவனும், அனைவரின் இதயத்தில் நிலைத்திருப்பவனும், வனமாலையை தரித்திருப்பவனும், சங்கு சக்ர கதா பத்மங்களை வைத்திருக்கும் நான்கு கரங்களைக் கொண்டவனும், கிரீட

குண்டலங்களை ஆபரணங்களாக ஏந்தியிருப்பவனும், கௌஸ்துப ஆபரணங்களை அணிந்த கழுத்தினைக் கொண்டவனும், பீதாம்பரத்தை தரித்திருப்பவனும், மணி போன்ற அழகான நகங்களைக் கொண்ட பாதங்களைக் கொண்டவனுமான பரமாத்மன், தன்னை அர்ச்சிப்பவர்களின் இதய கமலங்களை ஆக்ரமித்து, எப்போதும் புன்னகைத்தவாறு அவர்களை பார்த்துக் கொண்டிருப்பான் என்று நினைத்தவாறு அவனை தியானம் செய்யவேண்டும் - என்று நாரதர் த்ருவனுக்கு உபதேசிக்கிறார். த்ருவனும் அப்படியே செய்ததால், பரமாத்மனை அவனது இதய கமலத்தில் கண்டான்.

அதே ஸ்கந்தத்தில் 10ம் அத்தியாயத்தில்:

ஸவைதியாயோக விபாகதீவ்ரயா ஹ்ருத்பத்மகோஷேஸ்புரிதம் தடித்ப்ரபம் |
திரோஹிதம் ஸஹஸைடோபலக்ஷ்யை பஹிஸ்திதம் ததவஸ்தந்ததர்ஷ ||

த்ருவன் தன் தியானத்தினால், பக்குவத்தை அடைந்து, அதனால் தன் இதய கமலத்தில் மின்னலைப் போல பிரகாசிக்கும், தான் பார்த்திருந்த ரூபமே தன் எதிரில் நின்றிருப்பதைக் கண்டான். த்ருவனுக்கு வரத்தைக் கொடுப்பதற்காக பரமாத்மன் அவன் எதிரில் நின்று - ‘வத்ஸ, எழுந்திரு. உனக்கு வரமளிப்பதற்காக நான் வந்திருக்கிறேன்’ என்று சொல்ல, த்ருவனுக்கு தன் இதயத்தில் கண்டு வந்த பகவத் ரூபமானது மறைந்தது. அதே ரூபமானது, தன் எதிரிலேயே நின்றிருப்பதைக் கண்டு, பரமாத்மனை வணங்கினான் என்று சொல்லப்பட்டிருக்கிறது. இப்படி, பரமாத்மன் தன்னை தியானிப்பவர்களின் கண்ணிற்கு தெரிந்து, மற்றவர்களுக்கு தரிசனம் அளிக்காமல் இருக்கிறான் என்று அறியவேண்டும்.

மஹாபுருஷ ஜாண்டந்தரதி பஹிரதி வியாப்த - மகாபுருஷனான ஸ்ரீபரமாத்மனிடமிருந்து பிறந்த பிரம்மாண்டத்தின் உள்ளே மற்றும் வெளியே, எல்லா இடங்களிலும், மிகச் சிறிய பொருட்களிலிருந்து மிகப் பெரிய பொருட்கள் வரை அனைத்திலும், தேவ தைத்ய, பறவை விலங்குகளில் நிலைத்திருக்கிறான். ‘அந்தர்பஹிஸ்ச தத்ஸர்வம் வியாப்த நாராயணஸ்தித:’ என்னும் வேத வாக்கியம் இதற்கு ஆதாரமாக இருக்கிறது. ஆனாலும், சம்பந்தப்பட்ட குண தோஷங்களிலிருந்து சம்பந்தப்படாமல் இருக்கிறான். இதற்கு ஆதாரமாக பாகவத 11ம் ஸ்கந்தத்தில்:

தேஜோப்பன்ன மமைர்பாவைர்மே கோகைர்வாயுனேரிதை: |
நஸ்ப்ருஷ்யதே நபஸ்தத்வத் கால ஸ்ருஷ்டைர்குணை: புர்மா ||

நெருப்பினாலும், தண்ணீரினாலும், நிலத்தினாலும், காற்றினால் நகர்த்தப்படும் மேகங்களினாலும், ஆகாயமானது எப்படி தோஷங்கள் அற்றதாக இருக்கிறதோ, அது போலவே பரமாத்மன், நர, மிருக போன்ற அனைத்து பிராணிகளிலும், அவற்றின் சம்பந்தப்பட்ட குண தோஷங்களின் சம்பந்தம் இல்லாமல் இருக்கிறான் என்று பொருள். இதிலிருந்து ‘நிர்லிப்த’ என்னும் சொல்லுக்கு அர்த்தம் விளங்குகிறது.

இந்த சந்தியில் எந்தெந்த இடங்களில், எந்தெந்த ரூபங்களால் பரமாத்மன் வியாப்தனாக இருந்து, என்னென்ன விஷயங்களை செய்கிறான் என்னும் விஷயங்களை சொல்கிறார் தாசராயர். இந்த விஷயத்தையே இந்த பத்யத்தில் விளக்கியிருக்கிறார்.

**ஸ்த்ரீ நபு1ம்ஸக1 புருஷ பூ4 ஸலி**
**லானலானில க3க3ன மன ஷஷி**
**பா4னு கா1ல கு3ண ப்ரக்ருதியொளகொ3ந்து3 தா1னல்ல ।**
**ஏனு இவன மஹாமஹிமெ கடெ3**
**கா3ணரஜ ப4வ ஷக்ரமுக2ரு நி**
**தா3னிஸலு மானவரிக3ள வடு3வதே விசாரிஸலு ।।2**

ஸ்த்ரி, நபும்சகன், புருஷ, பூ = பூமி, ஸலில = தண்ணீர், அனல = நெருப்பு, அனில = வாயு, ககன = ஆகாயம், மன = மனஸ். மன என்னும் சொல்லில், சித்த, புத்தி, அஹங்கார, ஞானேந்திரியங்கள் 5, கர்மேந்திரியங்கள் 5, இவை அனைத்தையும் குறிக்க வேண்டும். மேலும், ஷஷி = சந்திரன், பானு = சூரியன், கால, குண = சத்வ ரஜஸ் தமோ குணங்கள், ப்ரக்ருதி = குளாத்மகளான ப்ரக்ருதி, இவற்றில், ஒந்து = எவையும் இவன் அல்ல.

இவற்றிலிருந்து வேறுபட்டு, அவற்றின் அந்தர்யாமியாக இருக்கிறான். இவன மஹாமஹிமெ = மகாமகிமைகளை என்னவென்று வர்ணிப்பேன்? (அல்லது இவனது மகாமகிமை என்ன என்று வியப்புடன் பார்ப்பது).

அஜ பவ ஷக்ர முகரு = பிரம்ம, ருத்ர, இந்திர ஆகியோர்.
நிதானிஸலு = எவ்வளவு சிந்தித்தாலும்
கடெகாணரு = இறுதியை பார்க்க முடியாது
விசாரிசலு = சிந்தித்துப் பார்த்தால்
மானவரிகெ = மனிதர்களுக்கு
அளவடுவுதெ = சாத்தியம் ஆகுமா? (என்றும் சாத்தியமே இல்லை).

ஸ்ரீபரமாத்மனின் ஸ்வரூபம் எத்தகையது என்றால், அவன் ஸ்த்ரி அல்ல, நபும்ஸகன் அல்ல, புருஷன் அல்ல, ப்ருத்வி, அபு, முதலான பஞ்ச பூதங்கள் அல்ல, தன்மாத்ர குணங்களில் ஒன்றுக்கும்கூட சம்பந்தப்பட்டவன் அல்ல. சித்த, புத்தி, மனஸ், அஹங்கார ஆகியவற்றில் எதற்கும் சம்பந்தப்பட்டவன் அல்ல. அவன் சந்திரனும் அல்ல. சூரியனும் அல்ல. காலனும் அல்ல. குணப்ரக்ருதியும் அல்ல. இவற்றிலிருந்து வேறுபட்டவன். இவற்றைத் தவிர வேறு எது மீந்திருக்கிறதோ, அதுவே பகவத் ஸ்வரூபம். அவனின் மகிமைகளை என்னவென்று வர்ணிப்பேன்? எவ்வளவு யோசித்தாலும், பிரம்மா ருத்ராதி தேவதைகளும்கூட அவனது ஸ்வரூபத்தைப் பற்றி முழுமையாக அறியார். என்று சொன்னபிறகு மனிதர்களால் அது சாத்தியமாகுமா? என்றும் முடியாது என்பதே சொல்ல வந்த விஷயம்.

முந்தைய ஸ்லோகத்தில், பிரம்மாண்டத்தின் உள்ளேயும், வெளியேயும் நிலைத்திருந்து, அதற்கு சம்பந்தப்படாமல் ஸ்ரீபரமாத்மன் இருக்கிறான் என்று

சொல்லிவிட்டு, இந்த ஸ்லோகத்தில் அவன் ஸ்த்ரி அல்ல, புருஷன் அல்ல என்கிறார். இதே அர்த்தத்தை பாகவதம் எட்டாம் ஸ்கந்தம் 'ஸவ்யேன தேவாசுர மர்த்ய திர்யங்னஸ்த்ரி நஷண்டோ நபுமான்னஜந்து:' என்னும் ஸ்லோகத்தில் சொல்லியிருக்கின்றனர். இந்த இரண்டு ஸ்லோகங்களுக்கும் வேறுபாடு இருப்பதுபோல தெரிகிறது. ஏனென்றால், ஸ்ரீபரமாத்மன், அனைத்து இடங்களிலும் வியாப்தனாக இருப்பதால், சர்வஷப்த வாச்யனாக இருக்கிறான். பாகவத 11ம் ஸ்கந்தத்தில்:

கம்வாயு மக்னிம் ஸலிலம் மஹீஞ்ச ஜ்யோதீம்ஷி சத்வானி விஷோத்ருமார்தீ |
சரித்ஸமுத்ராம்ஸ்ச ஹரே:ஷரீரம் யத்கிஞ்ச பூதம் ப்ரணமேதனன்யம் ||

என்னும் ஸ்லோகத்தில், ஆகாயம், வாயு, அக்னி, தண்ணீர், பூமி, ஆகிய அனைத்தும் பகவந்தனின் சரீரம் என்று நினைக்கவேண்டும் என்று சொல்லப்பட்டிருக்கிறது. எட்டாம் ஸ்கந்தத்தில் 'ஸவைனதேவா' என்னும் ஸ்லோகத்தினாலும், 'ஸ்த்ரி நபும்சக' என்னும் பத்யத்தினாலும், இவை பரமாத்மனல்ல என்று சொல்லியிருக்கின்றனர். அப்படியெனில், இதில் எது உண்மை என்று நம்ப வேண்டும்?

அதாவது, 11ம் ஸ்கந்த ஸ்லோகத்தின்படி, ஸ்த்ரி, புருஷ, ஆகாச, வாயு ஆகியவற்றில், அந்த பொருட்களின் பெயரில், அதன் வடிவத்தில், அவற்றில் இருப்பதால், அவற்றில் இருக்கும் பகவத்ரூபங்களை சிந்தித்து பூஜிக்கவேண்டும். 8ம் ஸ்கந்த ஸ்லோகத்தின்படி மற்றும் இந்த பத்யத்தின்படியும், பரமாத்மன் ஆகாயம் முதலானவற்றில் இருந்தாலும், அதற்கு சம்பந்தப்பட்ட குண தோஷங்களுக்கு சம்பந்தப்படாமல் நிர்லிப்தனாக இருக்கிறான். அதுமட்டுமல்லாமல், அந்த ஆகாயங்களே பரமாத்மன் அல்ல. அவற்றிலிருந்து வேறுபட்டு, அவற்றின் உருவத்தைப் பெற்று மட்டும் இருக்கிறான். அவனது உண்மையான ஸ்வரூபம், அந்த ஆகாயம் முதலான ப்ராக்ருத வஸ்துகளில் எதுவும் அல்ல. பரமாத்மன் அப்ராக்ருதன் என்பதை சொல்லியிருக்கின்றனர். ஆகையால், இந்த இரண்டு வாக்கியங்களுக்கும் வேறுபாடு இல்லை என்பதை அறியவேண்டும்.

இவன மஹாமஹிமெ கடெகாணரஜபவ ஷக்ரமுகரு நிதானிஸலு - இப்படி இருக்கையில், மனிதர்கள் இவனின் மகிமைகளை காண்பரே? இதே அர்த்தத்தையே பாகவத 7ம் ஸ்கந்த 9ம் அத்தியாயம்

பிரம்மாதயஸ்ஸுரகணா முனயோத ஸித்தா: ஸத்வைக தானமதயோ வசஸாந்த்ரவாஹ்யை: |
நாந்தம் பரஸ்ய பரதோப்யதுனாபியாந்தி கிந்தோஷ்புமர்ஹதி ஸமே ஹரிருக்ரஜாதே: ||

பிரம்மாதி அனைத்து தேவதா கணங்கள், ரிஷிகள், சித்தர்கள் ஆகிய மஹனீயர்கள் உன் மகாமகிமைகளை, அவர்களது பிரவாகமான வாக்கினால் எவ்வளவு துதித்தாலும், இன்னும் அதன் இறுதியைக் காணமுடியாமல் இருக்கின்றனரோ, அத்தகைய நீ தைத்ய குலத்தில் பிறந்த எனக்கு நீ தரிசனம் அளித்தது உன்

விருப்பத்தினாலேயே தவிர வேறு காரணம் எதுவுமில்லை என்று பிரகலாதன் சொல்கிறான். இதே அர்த்தத்தையே தாசராயர் இங்கு சொல்லியிருக்கிறார்.

**க3ந்த4 ரஸ ரூப1 ஸ்பர்ஷ ஷ**
**ப்தொ3ந்து3 தா1னல்லத3ரத3ர பெஸ**
**ரிந்த3 க1ரெஸுத ஜீவரிகெ3 த1ர்பக1னு தா1னாகி3 |**
**பொ1ந்தி3 கொ1ண்டி3ஹ பரமக1ருணா**
**ஸிந்து4 ஷாஸ்வத1 மனவெ மொத3லா**
**தி3ந்த்3ரியக3ளொளகி3த்து3 போ4கி3ஸுதி1ஹனு விஷயக3ள ||3**

கந்த ரஸ ரூப ஸ்பர்ஷ ஷப்த = இந்த ஐந்து தன்மாத்ரா குணங்களுக்கு
ஒந்து தானல்ல = ஸ்ரீபரமாத்மன் இவை எவற்றிற்கும் சம்பந்தப்பட்டவன் அல்ல
அதரதர = அந்தந்த
பெஸரினிந்த = பெயர்களில்
கரெஸுத = அழைத்துக்கொண்டு
ஜீவரிகெ = ஜீவர்களுக்கு
தர்பகனு = திருப்தியைக் கொடுக்கிறான்
பொந்திகொண்டிஹ = சேர்த்துக் கொண்டிருக்கிறான்
ஷாஸ்வத = நிரந்தரமானவன்
பரமகருணாசிந்து = பரம கருணைக்கடலான ஸ்ரீஹரி
மனவெ மொதலாதிந்த்ரியகளொளகித்து = மனஸ், ஞானேந்திரியங்கள், கர்மேந்திரியங்கள் ஆகியவற்றில் இருந்து
விஷயாதிகள = விஷய போகங்களை
போகிஸுதிஹனு = ஜீவர்களின் சுகத்திற்காக தான் அனுபவித்துக் கொண்டிருக்கிறான்.

கந்த, ரஸ, ரூப, ஸ்பர்ஷ, ஷப்த என்னும் ஐந்து தன்மாத்ரா குணங்களில் ஸ்ரீபரமாத்மன் எதுவும் இல்லை. ஆனாலும், அவன் அவற்றில் இருந்து அவற்றினால் ஆகும் செயல்களை தானே செய்து, செய்விப்பதால் பரமாத்மனே கந்த ரஸாதி சொற்களால் அழைக்கப்படுகிறான் என்று வேதங்கள் சொல்கின்றன. ஆக, இந்த ஐந்து தன்மாத்ரங்களில் இருந்து, அவற்றினால் ஆகும் சுகங்களை ஜீவர்களுக்குக் கொடுத்து, திருப்திப்படுத்துகிறான். கருணைக்கடலான ஸ்வாமி, மனஸ், கண், காது ஆகிய இந்திரியங்களுக்குள் அதன் வடிவமாகவே இருந்து பார்க்கிறான், கேட்கிறான் - ஜீவர்களின் கர்மங்களுக்கேற்ப செயல்களை செய்வித்து, சுகங்களை மட்டும் தான் அனுபவிக்கிறான். அதுவும்கூட ஜீவர்களின் நலனுக்காகவே ஆகும். பூர்ணகாமனான ஸ்ரீஹரிக்கு இந்த சுகங்களினால் ஆவதென்ன? (எதுவும் இல்லை). பரமாத்மன், அந்த சுகங்களை ஸ்வீகரிக்காதிருந்தால், ஜீவர்களுக்கு சுகம் கிடைக்காது. ஆகையாலேயே, அவற்றை ஸ்வீகரிக்கிறான் என்று அறியவேண்டும்.

கந்தரஸாதி மாத்ரா குணங்களின் விவரம்:

பஞ்ச மஹாபூதங்களில், பூததத்வ மாத்ரா குணம் - கந்த. இந்த பூத-தத்வம், ஞானேந்திரியங்களில் ஒன்றான மூக்கில் இருக்கிறது. இதன் மாத்ரா குணமே கந்தம் ஆகையால், மனிதர்கள் நறுமணத்தையும், துர்மணத்தையும் வித்தியாசம் அறிகின்றனர். ஆகையால், கந்தகுணம் சிறந்த பூத-தத்வ குணம் என்று அறியவேண்டும். ஸ்ரீபரமாத்மன், மூக்கு இந்திரியத்தில், அதே உருவமாக, அதே பெயரில், அதில் அடங்கியிருக்கும் பூததத்வத்திலும், தன்மாத்ரா குணமான கந்தத்திலும் இருந்து, சுகந்தத்தை தான் ஸ்வீகரித்து, அதன் மூலம் ஜீவர்களை திருப்திப்படுத்துகிறான். துர்மணத்திலிருந்து வரும் துக்கத்தை, தான் ஏற்றுக்கொள்ளாமல், அதனை ஜீவர்களுக்கு அவர்களின் கர்மத்திற்கேற்ப கொடுக்கிறான்.

அது ஏனெனில், பரமாத்மனுக்கு ஏதோவொரு புண்ணியத்தைக் கொடுத்தால் ‘மரளிதனகர்ப்பிஸலு கொட்டுதனந்த மடிமாடி’ என்று தாசராயர் முன்னர் சொல்லியிருப்பதைப் போல, அந்த புண்ணியத்தை அவன் ஏற்றுக்கொண்டு, அதனை பன்மடங்காக்கி திருப்பிக் கொடுக்கிறான். இப்படி பக்தர்கள் கொடுக்கும் பாவங்களை தான் ஏற்றுக்கொண்டால், அதையே பன்மடங்காக்கி திருப்பி அவர்களுக்கே கொடுக்க வேண்டியிருப்பதால், பரமாத்மன், பக்தர்கள் தாங்கள் செய்த புண்ணிய பாவங்களை தனக்கு சமர்ப்பித்தால், அந்த பாவங்களை தான் ஏற்றுக்கொள்ளாமல் அவற்றை பஸ்மம் ஆக்கிவிடுகிறான்.

இதுமட்டுமல்லாமல், பரமாத்மன், ஆனந்தஸ்வரூபமானவன் ஆகையால், ஜீவர்கள் கொடுக்கும் ஆனந்தத்தை மட்டும் ஏற்றுக்கொள்கிறான். துக்கங்கள் இல்லாதவன் ஆகையால், பக்தர்கள் தனக்கு சமர்ப்பிக்கும் பாவங்களை சுட்டு பொடிப்பொடியாக்கி விடுகிறான். அந்த பக்தர்கள் செய்யும் பாவங்களினால் வரும் பலன்களை, அவர்களுக்கே திருப்பிக் கொடுக்கிறான். அவர்கள் கொடுக்கும் சுகங்களை, பக்தர்களின் நலனுக்காக, தன் விருப்பப்படி தான் ஸ்வீகரிக்கிறானே தவிர, அந்த புண்ணிய பாவங்கள், பரமாத்மனை எதுவும் செய்வதில்லை.

தண்ணீரானது அனைத்தையும் நனைக்கும் / மூழ்கடிக்கும் சக்தி கொண்டதாக இருந்தாலும், எப்படி தாமரை இலையை அது நனைப்பதில்லையோ, அப்படியே, கண் காது முதலான இந்திரியங்களால் வரும் சுகதுக்கங்கள் பரமாத்மனை பாதிப்பதில்லை. பரமாத்மன் எதற்கும் சம்பந்தப்படாதவனாக இருக்கிறான். இப்படியே மற்ற கர்மேந்திரியங்களின் செயல்களும் இருக்கின்றன என்று அறியவேண்டும். இந்த கண், காது ஆகியவற்றின் செயல்களுக்கு முக்கிய காரணம் - மனஸ். மனஸ் இல்லாமல் அந்த இந்திரியங்களின் செயல்கள் எதுவும் நடைபெறுவதில்லை.

நம் மனம் நம்மிடம் இல்லாதிருந்தால், நம் எதிரில் யார் இருந்தாலும் அவர் நமக்குத் தெரிவதில்லை. யார் எது சொன்னாலும், அது நமக்குக் கேட்பதில்லை. இது அனைவருக்குமே அனுபவத்தில் வந்த விஷயம்தான். ஆகையாலேயே, பாகவதத்தில் ‘மன ஏவ மனுஷ்யாணாம் காரணம் பந்தமோக்ஷயோ:’ என்று சொல்லியிருக்கின்றனர். ஆகையால், அனைத்து இந்திரியங்களையும்விட மனஸ்

என்னும் இந்திரியமே பெரியது. ஸ்ரீபரமாத்மன் மனோ-நாமகனாகி மனதில் இருந்து, ஞானேந்திரிய கர்மேந்திரியங்களால், கர்மங்களை செய்வித்து சுகங்களை தான் ஏற்றுக்கொண்டு, ஜீவர்களை திருப்திப்படுத்தி, துக்கங்களை ஜீவர்களுக்குக் கொடுத்து தான் எதற்கும் சம்பந்தப்படாமல் இருக்கிறான்.

**ஸ்ரவண நயன க்$^{4}$ராண த்வக்$^{3}$ரஸ**
**நிவுக$^{3}$ளலி வாக்பா$^{1}$ணி பா$^{1}$தா$^{3}$**
**த்$^{3}$யவயவக$^{3}$ளலி தத்கு$^{3}$ணக$^{3}$ளலி தத்ப$^{1}$தி$^{1}$க$^{3}$ளொளகெ$^{3}$ |**
**ப்ரதி$^{1}$த$^{1}$த$^{1}$னு தா$^{1}$னாகி$^{3}$ க்ருதி$^{1}$பதி$^{1}$**
**விவித$^{4}$க$^{1}$ர்மவ மாடி$^{3}$ மாடி$^{3}$ஸி**
**ப$^{4}$வகெ$^{1}$ கா$^{1}$ரணனாகி$^{3}$ தி$^{1}$ருகி$^{3}$ஸுதி$^{1}$ஹனு தி$^{1}$ளிஸத$^{3}$லெ ||4**

ஸ்ரவண நயன க்ராணத்வக்ரஸ = காது, கண், முக்கு, தோல், நாக்கு
இவுகளலி = இவற்றில்
வாக்பாணி பாதாதவயவகளலி = வாய், கை, கால், ஆகிய சொற்களால்
அவயவகளலி = அந்த உறுப்புகளில்
தத்குணகளலி = கேட்பது, பார்ப்பது, செய்வது, நடப்பது ஆகிய குணங்களில்
தத்பதிகளொளகெ = கண் முதலான இந்திரியாபிமானி தேவதைகளில்
ப்ரவிததனு = நிலைத்திருக்கிறான்
க்ருதிபதி = க்ருதி நாமகளான லட்சுமிதேவியின் பதியான ப்ரத்யும்ன நாமக ஸ்ரீபரமாத்மன்
விவிதகர்மவ = பற்பல (அனைத்து) செயல்களையும் செய்து, செய்வித்து
பவகெ = சம்சார பந்தனத்திற்கு
காரணனாகி = நிமித்த காரணனாகி
திளிஸதலெ = ஜீவர்களுக்கு தெரியாமல்
திருகுதிஹனு = பூ, ஸ்வர்க்க, நரகாதி உலகங்களில் திரிந்து கொண்டிருக்கிறான்.

காது, கண், மூக்கு, மெய், நாக்கு என்னும் ஐந்து ஞானேந்திரியங்களும், வாய், கை, பாதம், மல ஜல உறுப்புகள் என ஐந்து கர்மேந்திரியங்களும், அவுகள குணகள என்றால் கேட்பது, பார்ப்பது, குளிர் வெயில் மாற்றங்களை அனுபவிப்பது, உப்பு காரம் முதலான அறுசுவைகளை அறிவது, பேசுவது, நடப்பது, மலஜல விசர்ஜனங்களை செய்வது என இவையே பத்து இந்திரியங்களின் குணங்கள் ஆகும். இவுகளலி தத்பதிகள் என்றால், காதுக்கு அபிமானி தேவதைகள், திக்தேவதைகள், கண்ணிற்கு அபிமானி தேவதை சூரியன், மூக்கிற்கு அஸ்வினி தேவதைகள், மெய்க்கு வாயு, முகத்திற்கு அக்னி, கைகளுக்கு தேவேந்திரன், பாதங்களுக்கு ஜயந்த, மல ஜல உறுப்புகளுக்கு முறையே மித்ர, தக்ஷ ஆகிய தத்வாபிமானி தேவதைகளிலும் நிலைத்திருந்து, க்ருதிபதியான ப்ரத்யும்ன நாமக ஸ்ரீபரமாத்மன், ஜீவர்களின் அனாதி கர்மங்களுக்கேற்ப, சம்சாரத்திற்குக் காரணமான கர்மங்களை, தானும் செய்து, செய்வித்து, சம்சாரத்திலேயே ஜீவர்களை இருத்தி, அவர்களுக்குத் தெரியாமலேயே, அவர்களின் கர்மங்களுக்கேற்ப, அவர்களை பூமியில் பிறக்க வைப்பது, நரகத்தில் தள்ளுவது, ஸ்வர்க்கத்திற்கு போவது மறுபடி சம்சாரத்திற்கே வருவது என திரிந்து கொண்டிருக்கிறான்.

தத்வாபிமானி தேவதைகள் யார்யார் என்பதை பாகவத மூன்றாம் ஸ்கந்தம் ஏழாம் அத்தியாயத்தில்:

தஸ்யாக்னிராஸ்யம் நிர்பின்னம் லோகபாலோவிஷத்பதம் |
நிர்பின்னம் தாலுவருணோ லோகபாலோ விஷத்தரே: ||

இப்படி 12ம் ஸ்லோகத்தில் துவங்கி, 'பாதாவஸ்ய வினிர்பின்னௌ' என்னும் 22ம் ஸ்லோகத்தின் வரைக்கும் சொல்லியிருக்கின்றனர். அந்த ஆதாரத்தின் பேரிலேயே, தத்வாபிமானி தேவதைகளின் ஸ்தானம், குணங்கள் ஆகியவை எழுதப்பட்டிருக்கின்றன. கிருதிபதியான பிரத்யும்ன நாமக ஸ்ரீபரமாத்மன், இந்திரியங்களிலும், அவற்றின் குணங்களிலும், தத்வாபிமானி தேவதைகளிலும் நிலைத்திருந்து, ஜீவர்களின் அனாதி பிராரப்த கர்மங்களுக்கேற்ப, அறிவைக் கொடுத்து, அதற்கேற்ப செயல்களை செய்து, அவர்கள் மூலமாக செய்விக்கிறான். அவர்கள் மூலமாக சஞ்சித, ஆகாமி என அனைத்துவித கர்மங்களையும் செய்வித்து, ஸ்வர்க்க நரகாதி போகங்களைக் கொடுக்கிறான். சஞ்சித என்றால் அனாதியான பிராரப்த கர்மங்களை செய்துகொண்டிருக்கும்போதே, ஜீவன், மனோ வாக் காயங்களால், மறுபடி பத்து பிறவிகளை எடுக்கத் தேவையான கர்மங்களை செய்கிறான். முன்னர் செய்த கர்மங்களுக்கு சஞ்சித என்றும் பின்னர் செய்யப்போகும் கர்மங்களுக்கு ஆகாமி என்றும் பெயர்.

ஆக, தற்போது இந்த பிறவியில் நாம் அனுபவித்துக்கொண்டிருப்பது, சஞ்சித கர்மங்களின் பலன் என்றும், தற்போது செய்து கொண்டிருக்கும் கர்மங்களின் பலன்களை அடுத்த பிறவிகளில் அனுபவிப்போம் என்றும் அறியவேண்டும். இந்த கர்மங்கள் அனைத்தையும் செய்வித்து, ஜீவர்களை மறுபடி மறுபடி சம்சாரத்தில் அனுப்புவதற்கு பிரத்யும்ன நாமக பரமாத்மனே காரணம். இதன் காரணங்களை ஜீவர்கள் அறியமாட்டார்கள். ஸ்ரீபரமாத்மன் மட்டுமே அறிவான். ஆனால், பரமாத்மனே சம்சாரத்திற்குத் தேவையான கர்மங்களை ஜீவர்களால் செய்வித்தாலும், அவரவர்களின் அனாதி கர்மங்களுக்கேற்ப அவற்றை செய்விப்பதால், பரமாத்மனுக்கு வைஷம்யாதி எவ்வித தோஷங்களும் இல்லை என்று அறியவேண்டும்.

**கு$^3$ணி கு$^3$ணகளொளகி$^3$த்து$^3$ கு$^3$ணி கு$^3$ண**
**நெனிஸுவனு கு$^3$ணப$^3$த்த$^4$னாக$^3$தெ$^3$**
**கு$^3$ணஜ புண்யாபுண்ய ப2ல பிரம்மாதி$^3$ சேதனக்கெ |**
**உணிஸுதவரொளகி$^3$த்து$^3$ வ்ருஜினா**
**ர்த்த$^3$ன சிதா$^3$னந்தைக$^1$ தே$^3$ஹனு**
**கொ$^1$னெகெ$^3$ ஸசராசர ஜக$^3$த்புகு$^4$யெனிப னவ்யயனு ||5**

குணி குணகளொளகித்து = குணங்கள் உள்ளவர்களில் (சாத்விக, ராஜஸ, தாமஸ என்னும் ஜீவர்களில்)
குணபத்தனாகதெ = அந்த குணங்களுக்கு கட்டுப்படாமல்
குணிகுணனெனிஸுவனு = அந்த குணம் என்றே அழைக்கப்படுகிறான்

குணஜ = சத்வரஜஸ்தமோ குணங்கள் உள்ளவர்கள், அந்த குணங்களுக்கேற்ப செய்யும் செயல்கள்
புண்யாபுண்யபல = புண்ய, பாவ பலன்களை
பிரம்மாதி சேதனக்கெ = பிரம்மனில் தொடங்கி கலி வரைக்குமான சேதன சமூகத்திற்கு
அவரொளகிர்து = பிரம்மாதி ஜீவர்களில் இருந்து
உணிஸுத = சத்வ குணங்களால் வரும் புண்ய பலன்களை பிரம்மாதி தேவதா சேதனர்களுக்கும்; ரஜோ குணத்தால் வரும் சுகதுக்கம் கலந்த பலன்களை ராஜஸர்களான மனிதர்களுக்கும்; தமோகுணங்களால் வரும் பாவ பலன்களை தைத்ய தானவர்களுக்கும் கொடுத்தவாறு,
வ்ருஜினார்த்தன = பாவங்களை நாசம் செய்யும் (போக்கும்)
சிதானந்தைக தேஹனு = ஞானம், ஆனந்தம் இவற்றையே தேகமாகக் கொண்டிருக்கும் பரமாத்மன்
கொனெகெ = பிரளய காலத்தில் (ருத்ராந்தர்யாமியாக சங்கர்ஷண ரூபத்தில்)
ஸசராசரஜகத்புக் = சராசர பிராணிகளைக் கொண்ட உலகத்தை விழுங்கி (ருத்ரதேவரின் மூன்றாம் கண்ணிலிருந்து வந்த அக்னியால் சுடுகிறான் என்று பொருள்)
யெனிப = ஸசராசர என்னும் பெயரைப் பெறுகிறான்
அவ்யயனு = பிரளய காலத்திலும்கூட நாசம் இல்லாத பரமாத்மன்,
ஜகத்புக் = சராசர உயிரினங்களைக் கொண்ட இந்த உலகத்தை விழுங்கி, தன் உதரத்தில் வைத்துக்கொண்டு, ஸ்ரீமன் நாராயணன்
எனிப = என்று அழைத்துக் கொள்கிறான்.

குணங்கள் உள்ளவர்களுக்கு குணி என்று பெயர். இதில் சத்குணங்கள் அதிகமாக இருப்பவர்கள் சாத்விகர் எனப்படுகின்றனர் (பிரம்மாதி தேவதைகள்). ராஜஸர்களான மனிதர்கள் ரஜோகுணங்களைக் கொண்டவர்கள். தாமஸர் என்றால் தமோகுணம் கொண்ட தைத்ய தானவர்கள். இத்தகைய குணிகளான தேவ, மனுஷ்ய, தைத்யர்களிலும், சத்யரஜஸ்தமோ குணங்களிலும் நிலைத்திருந்து, அந்தந்த பெயர்களைப் பெறுகிறான். அதாவது, பிரம்ம தேவரில் பிரம்ம எனும் பெயரில் இருந்து, ருத்ர தேவரில் ருத்ர என்னும் பெயரில் இருந்து, இப்படியே இந்திராதி தேவதைகளிலும் இருந்து அந்தந்த பெயர்களில் அழைத்துக் கொள்கிறான். அப்படியே மனிதர்களிலும் இருந்து, அவர்களின் பெயர்களில் அழைக்கப்படுகிறான். தைத்ய தானவர்களில் இருந்து, அந்த பெயர்களில் அழைக்கப்படுகிறான்.

சத்குணத்தில் இருந்து சத்குணம் என்றும், ரஜோகுணத்தில் இருந்து ரஜோகுணன் என்றும், தமோகுணத்தில் இருந்து தமோகுணன் என்றும், பெயர் பெறுகிறான். இப்படி ப்ராக்ருதமான சத்வாதி குணங்களில் இருந்து, அந்தந்த பெயர்களைப் பெறுகிறானே தவிர, அந்த குணங்களினால் என்றைக்கும் தான் சிக்கமாட்டான்.

சாத்விகர்களான பிரம்மாதி தேவதைகளில் இருந்து, சத்வகுணத்தால் வரும் பலன்களை, அவரவர்களின் தகுதிக்கேற்ப அவர்களுக்கே கொடுக்கிறான்.

ராஜஸர்களான மனிதர்களில் இருந்து, ரஜோகுணத்தால் வரும் சுக-துக்கம் கலந்த பலன்களை, அவரவர்களின் தகுதிக்கேற்ப அவர்களுக்கே கொடுக்கிறான். தாமஸர்களான தைத்ய தானவர்களில் இருந்து, தமோகுணத்தால் வரும் பாப பலன்களை, அவரவர்களின் தகுதிக்கேற்ப அவர்களுக்கே கொடுக்கிறான். பிறரின் பாவங்களைப் பரிகரிப்பதால், பரமாத்மனுக்கு வ்ருஜினார்த்தன என்று பெயர். தானே பாவியாக இருந்தால், மற்றவர்களின் பாவங்களை எப்படி பரிகரிப்பது? பிறரின் பாவங்களைப் போக்குகிறான் என்று சொன்னதால், ஸ்வத: பாவங்கள் இல்லாதவன் என்று சொல்லத் தேவையேயில்லை. பாவங்கள் இல்லாதவனாகவும், ஞானானந்த ஸ்வரூபனாகவும் இருக்கிறான்.

ரமாபிரம்மாதிகளும்கூட ஞானாந்த ஸ்வரூபர்களே ஆகியிருந்தாலும், அவர்களின் ஞானானந்தத்திற்கு எல்லைகள் உண்டு. பரமாத்மனின் ஞானானந்தம் எல்லைகள் அற்றது. ஒப்புமைக்கு அப்பாற்பட்டது. அதுமட்டுமல்லாமல், வேறு ஒருவரின் உதவி இல்லாமலேயே, ஸ்வதந்த்ரமாக அனுபவிக்கக்கூடியது பரமாத்மனின் ஞானானந்தம். ரமாதிகளின் ஞானானந்தம், பரமாத்மனுக்குக் கட்டுப்பட்டவை. ஆகையால், பரமாத்மன் ஒருவனே, ஞானானந்த ஸ்வரூபர்களில் முக்கியமானவன் என்று அறியவேண்டும்.

ஸ்ரீபரமாத்மன், பிரளயம் துவங்கும்போது, ருத்ரனின் அந்தர்யாமியாக இருந்து, சங்கர்ஷண நாமகனாகி பிரபஞ்சத்தை எரிக்கிறான். இதற்கு ஆதாரமாக பாகவத 10ம் ஸ்கந்தத்தில் :

தத: ஸாம்வர்தகோ வன்ஹி சங்கர்ஷண முகோத்தித: |
தஹத்யனிலவேகோத்த: சூன்யான்பூவிவராந்ததா ||

பிறகு, சங்கர்ஷணனின் முகத்திலிருந்து வந்த அக்னி, சூன்யமான பூமியை தகிக்கிறது என்று சொல்லப்பட்டிருக்கிறது. சர பிராணிகள் என்றால் நடமாடிக்கொண்டிருக்கும் அனைத்து பிராணிகளும் என்று பொருள். அசல என்றால் நடமாடாத பிராணிகள் என்று பொருள். இவற்றைக் கொண்ட அனைத்து உலகங்களையும், பிரளய காலத்தில் பரமாத்மன் விழுங்கி, தன் வயிற்றில் வைத்துக்கொண்டு, வடபத்ரசாயியாக (ஆல இலை) படுத்திருக்கிறான். ஆகையால், பரமாத்மன் 'ஸசராசர ஜகத்புக்' என்று அழைத்துக் கொள்கிறான். ஆனாலும், அவனுக்கு எந்தவிதமான நாசமும் இல்லாத காரணத்தால் 'அவ்யயன்' என்றும் பெயர் பெறுகிறான்.

**வித்$^{3}$யெ தா$^{1}$னெந் தெ$^{3}$னிஸிகொ$^{1}$ம்ப$^{3}$ னி**
**ருத்த$^{4}$தே$^{3}$வனு ஸர்வஜீவர**
**பு$^{3}$த்தி$^{4}$யொளு நெலெஸித்து$^{3}$ க்$^{1}$ருதி$^{1}$பதி$^{1}$ பு$^{3}$த்தி$^{4}$யெனிஸுவனு |**
**ஸித்தி$^{4}$யெனிஸுவ ஸங்கருஷண ப்ர**
**ஸித்த$^{4}$னாமக வாஸுதேவ ன**
**வத்$^{3}$ய ரூப சதுஷ்டயக$^{3}$ளரித$^{1}$வனெ ப$^{1}$ண்டித$^{1}$னு ||6**

அனிருத்த தேவரு = அனிருத்த நாமக பரமாத்மன்

வித்யயந்து = ஜீவ பரமாத்மருக்கு பரஸ்பரம் பேதம் சொல்லும் வித்யை என்று அழைத்துக் கொள்கிறான்
க்ருதிபதி = க்ருதிதேவியின் பதியான பிரத்யும்ன ரூபி பரமாத்மன்
சர்வஜீவர = அனைத்து ஜீவர்களின்
புத்தியொள் = புத்தியில்
நெலெசித்து = நிலைத்திருந்து
புத்தியெனிஸுவனு = புத்தி என்று அழைத்துக் கொள்கிறான்
சங்கர்ஷண = சங்கர்ஷண நாமக பரமாத்மன்
சித்தியெனிஸுவ = சித்தி என்று அழைத்துக் கொள்ளும்
வாசுதேவ = வாசுதேவ என்று அழைக்கப்படும் ஸ்ரீபரமாத்மன்
ப்ரசித்தனாமக = புகழ்பெற்றவனான
அனவத்யரூப சதுஷ்டயகள = தோஷங்கள் அற்ற இந்த நான்கு ரூபங்களை
அரிதவனெ = அறிந்தவனே, பண்டிதன்.

வித்யைக்குள் இருந்து, அனிருத்த தேவன், வித்யை என்று அழைக்கப்படுகிறான். வித்யை என்றால் 'வித்யாத்மனிபிதாபோத:' என்னும் வாக்கியத்தினால், ஜீவ பரமாத்மரில் பரஸ்பர பேத சிந்தனை செய்வது. இந்த ஞானமானது பொதுவாக, வாயுமதத்தைப் பின்பற்றுகிறவர்களுக்கு மட்டுமே இருக்கிறது. ஜீவ பிரம்ம ஐக்யத்தை சொல்வது, அவித்யை என்று அறியவேண்டும். கீதையில் :

தெய்வோ விஸ்தரஷ: ப்ரோக்த: ஆ ஸுரீம் பார்த்தமேஸ்ருணு |
ஈஷ்வரோஹ மஹம் போகீ சித்தோஹம் பலவான் சுகீ ||
ஆட்யோபிஜினவானஸ்மி கோன்யோஸ்தி ஸத்ருஷோமயா |
யக்ஷ்யே தாஸ்யாமி மோதிஷ்யெ இத்யஞான விமோஹிதா: ||

'மேலும் தெய்வ விஷயங்களை சொல்கிறேன் கேள்! - நானே பரமேஸ்வரன். நானே போகி. நானே சித்தன். பலசாலி. சுகி. பாக்யவந்தன். ஜனவந்தன். எனக்கு சமம் என்று யார் இருக்கின்றனர்? யாகத்தை செய்வேன். தானத்தைக் கொடுப்பேன். மகிழ்ச்சியடைவேன். என்று இத்தகைய அஞ்ஞானத்தினால் இருப்பவர்களே அசுரர்கள்' என்று பல வாக்கியங்களால் பார்த்தனுக்கு ஸ்ரீகிருஷ்ணன் உபதேசம் செய்கிறான். இதுவே அவித்யை. இந்த வித்யை, அவித்யை இரண்டுமே அகங்காரத்தினாலேயே பிறக்கின்றன. நான் சேவகன். பரமாத்மன் ஜகத்பிரபு என்று அறிவதற்கும் அகங்காரமே காரணம். ஜீவ பிரம்மருக்கு பேதத்தை சொலும் வித்யைக்குள் இருந்து வித்யை என்னும் பெயரைப் பெறுபவன், அனிருத்த நாமக பரமாத்மன் என்று அறியவேண்டும்.

க்ருதிபதியான பிரத்யும்னன், புத்தியில் நிலைத்திருந்து புத்தி என்னும் பெயரைப் பெறுகிறான். புத்தி என்றால் 'புத்த்யா ஸ்வாம்ஷேனயேனாஸெள நிஸ்சயம் ப்ரதிபத்யதே' என்னும் பாகவத வாக்கியத்தால் - இதோ, அதோ என்று ஒரு தீர்மானத்திற்கு வரமுடியாமல், இதுவே அல்லது அதுவே என்னும் நிச்சய ஞானத்திற்கு புத்தி என்று பெயர். சங்கர்ஷண நாமக பரமாத்மன் சித்தி என்று பெயர் பெற்றிருக்கிறான். சித்தி என்றால், தூய்மையான சித்தத்தினால் உண்டான

பகவத் ப்ரசாதமாகும். சத்விஷயங்களில் ஸ்திரமாக நிற்பதே சித்தம். இதிலிருந்து உண்டாகும் பகவத் பிரசாதமே சித்தி. இத்தகைய சித்தியில் சங்கர்ஷணன் இருந்து, சித்தி என்னும் பெயரைப் பெற்றிருக்கிறான்.

அனைத்து இந்திரியங்களுக்கும் மனமே காரணம். பத்து இந்திரியங்களின் செயல்கள் நடைபெற வேண்டுமெனில், மனஸ் இல்லாமல் எந்த வேலையும் நடைபெறுவதில்லை. மனோ நிக்ரஹத்தினாலேயே மனிதன், ஜிதேந்திரியன் என்று ஆகிறான். மனோ நிக்ரஹம் செய்யாமல், தன் இஷ்டம் போல செயல்களை செய்பவன் பாவியாகிறான். இத்தகைய மனதைக் கட்டுப்படுத்தும் விஷயங்களில், வாசுதேவ நாமக பரமாத்மன் இருந்து, பிரசித்தன் என்னும் பெயரைப் பெறுகிறான்.

இப்படி அகங்காரத்தினால் வரும் வித்யை, புத்தியினால் வரும் நிச்சய ஞானம், சித்தத்தினால் ஆகும் சித்தி, மனதினால் ஆகும் பிரசித்தி என்னும் நான்கு இடங்களில் அனிருத்த, பிரத்யும்ன, சங்கர்ஷண, வாசுதேவ என்னும் நான்கு ரூபங்களால் ஸ்ரீபரமாத்மன், வித்யை, புத்தி, சித்தி, ப்ரசித்தி என்னும் நான்கு பெயர்களைப் பெற்று, அனவத்யனாக (யாராலும் வெல்லப்பட முடியாதவனாக) இருக்கிறான். மேலும், எவற்றின் சம்பந்தம் இல்லாமல், தோஷங்கள் அற்றவனாகவும் இருக்கிறான். இத்தகைய நான்கு ரூபங்களை அறிந்தவனே பண்டிதன் ஆகிறான்.

**த1னு சதுஷ்டயக3ளொளு நாரா**
**யணனு ஹ்ருத்க1மலாக்ய ஸிம்ஹா**
**ஸனதொ3ளு அனிருத்தா3தி3 ரூபக3ளிந்த3 ஷோபி3ஸுத |**
**தனகெ3 தா1னே ஸேவ்ய ஸேவக**
**நெனிஸி ஸேவாஸக்த ஸுரரொள**
**க3னவரத நெலெஸித்து3 ஸேவெய கொம்பனவரந்தே ||7**

தனு சதுஷ்டயகளொளு = அனிருத்த, பிரத்யும்ன, சங்கர்ஷண, வாசுதேவ என்னும் நான்கு ரூபங்களைக் கொண்ட தன் சரீரங்களில்
நாராயணனு ஹ்ருத்கமலாக்ய சிம்ஹாசனதொளு = இதயக் கமலம் என்னும் சிம்மாசனத்தில்
அனிருத்தாதி ரூபகளிந்த ஷோபிஸுத = அனிருத்தாதி ரூபங்களால் நிலைத்திருந்து
தானே = நாராயண ரூபியான தானே
சேவ்ய சேவ்யகனெனிஸி = நாராயண ரூபத்தினால் வணங்கப்படுபவனாகவும்; அனிருத்தாதி ரூபங்களினால் வணங்குபவனாகவும் இருந்து
சேவாசக்த சுரரொளு = தன்னையே வணங்குபவர்களான ரமா பிரம்மாதி தேவதைகளில்
அனவரத = எப்போதும்
நெலெஸித்து = நிலைத்திருத்து
அவரந்தெ = ரமா பிரம்மாதிகளைப் போலவே
சேவெயகொம்ப = சேவையை ஸ்வீகரிக்கிறான்

அல்லது, அவரந்தெ = ரமா பிரம்மாதிகள், இந்திராதிகளிடமிருந்து சேவையைப் பெற்றுக் கொள்வதைப் போல, தானும் அனைத்து தேவதைகளிடமிருந்து சேவைகளைப் பெற்றுக்கொள்கிறான்.

ஸ்ரீபரமாத்மன், நாராயண ரூபத்தினால் செய்யும் வேலைகள் என்னவெனில்:

அனிருத்த, பிரத்யும்ன, சங்கர்ஷண, வாசுதேவ எனும் நான்கு ரூபங்கள் உள்ள தன் சரீரங்களின் இதய கமலங்கள் என்னும் சிம்மாசனத்தில் அமர்ந்து, அவற்றின் நடுவில் காட்சியளிக்கிறான். அதாவது அனிருத்த நாமக பரமாத்மனின் தேகத்தின் இதய கமலத்தில் நாராயணன், அனிருத்தாதி நான்கு ரூபங்களால் சேவையை ஸ்வீகரித்தவாறு காட்சியளிக்கிறான். இதைப் போலவே, பிரத்யும்ன, சங்கர்ஷண, வாசுதேவ ரூபங்களின் நடுவில், ஒவ்வொரு ரூபத்தின் இதய கமலம் என்னும் சிம்மாசனத்திலும், நாராயண ரூபத்தில் நிலைத்திருந்து, அனிருத்தாதி நான்கு ரூபங்களால் வணங்கப்பட்டு காட்சியளிக்கிறான் என்று அறியவேண்டும்.

இப்படி அனிருத்தாதி ரூபங்களால் சேவை செய்தவாறு, நாராயண ரூபத்தினால் அந்த சேவையைப் பெற்றவாறு, தானே சேவ்ய சேவகன் என்று பெயர் பெற்றிருக்கிறான். இதுமட்டுமல்லாமல், தன்னை எப்போதும் வணங்கிக் கொண்டிருக்கும், ரமா பிரம்மாதி தேவதைகளின் இதய கமலம் என்னும் சிம்மாசனத்திலும், அனிருத்தாதி நான்கு ரூபங்களில் நிலைத்திருந்து காட்சியளித்தவாறு, ரமா பிரம்மாதிகள் மூலம் சேவையை செய்வித்து, அந்தர்யாமி ரூபத்தினால் சேவையைப் பெற்றுக் கொள்கிறான்.

தனுசதுஷ்டயகளொளு - என்னும் சொல்லுக்கு அனிருத்தாதி நான்கு தேகங்களில் என்று பொருள் சொல்வதோடு மட்டுமல்லாமல் இன்னொரு பொருளும் சொல்லலாம். ஒவ்வொரு ஜீவனுக்கும் தேகாவரணம் (மூடி) உண்டு. அதாவது ; முதலில் ஜீவனின் ஸ்வரூப தேகம், இரண்டாவது லிங்கதேகம். இது ஜீவனின் ஸ்வரூப தேகத்திற்கு மேல் மூடியைப் போல உள்ளது. இதன் மேல் அனிருத்த தேகம் மூடிக் கொண்டிருக்கிறது. இதன் மேல் இந்த ஸ்தூல தேகம் இருக்கிறது. ஸ்ரீமன் நாராயணன், இந்த நான்கு தேகங்களிலும், இதய கமல சிம்மாசனத்தின் மேல், அனிருத்தாதி நான்கு ரூபங்களால் காட்சியளித்தவாறு நிலைத்திருந்து, ஜீவனின் ரூபமாக ஜீவனில் இருந்து சேவை செய்து, ஸ்ரீநாராயண ரூபத்தினால் சேவையை ஏற்றுக்கொள்கிறான்.

**ஜாக3ர ஸ்வப்னங்களொளு வர**
**போ4கி3ஷயன ப3ஹுப்ரகார வி**
**பா4க3கை3ஸி நிரம்ஷஜீவர சிச்சரீரவனு ।**
**போ4க3வித்து ஸுஷுப்தி கா1லதி3**
**ஸாக3ரவ நதி3கூ1டுவந்தெ1 வி**
**யோக3 ரஹிதனு அம்ஷக3ளனேகத்ர வைதிஸுவ ।।8**

வரபோகிஷயன = உத்தமமான, சர்ப்பம் அதாவது சேஷதேவரே படுக்கையாக உள்ள ஸ்ரீபரமாத்மன்

ஜாகரஸ்வப்னங்களொளு = ஜீவர்கள் முழித்திருக்கும்போதும், ஸ்வப்ன அவஸ்தையிலும்
நிரம்ஷஜீவர = அம்சம் இல்லாத மனித ஜீவர்களின்
பஹுப்ரகார = பல விதங்களில்
விபாககையிஸி = பகுத்து (பிரித்து)
போகவித்து = போகங்களைக் கொடுத்து
சுஷுப்திகாலதி = தூங்கும்போது
வியோக ரஹிதனு = பிரியாமல் இருந்தாலும்
சாகரவ நதிகூடுவந்தெ = கடலை ஆறுகள் போய் சேர்வதைப் போல
அம்ஷகள = ஜீவர்களின் அம்சங்களை
ஏகத்ர = ஒரே இடத்தில்
ஐதிசுவ = சேர்த்து விடுவான்.

சேஷசயனனான ஸ்ரீபரமாத்மன், மனிதர்களுக்கு, ஜாக்ர அவஸ்தையில் அதாவது முழித்திருந்து வேலைகளை செய்திருக்கும் காலங்களில், நிரம்ஷ என்றால், மனிதர்கள் முதல் கிருமிகள் வரையில் என்று பொருள். இத்தகைய ஜீவர்களின் ஞானஸ்வரூபமான ஸ்வரூப தேகத்தை, மனிதன், யானை, குதிரை, பசு, எருமை ஆகியவையாக பிரித்து, ஜீவர்களின் யோக்யதைக்கேற்ப அவரவர்களுக்கு மனைவி, குழந்தைகள், தன தான்யங்கள் ஆகியவற்றைக் கொடுத்து போகங்களைக் கொடுக்கிறான்.

அதே பரமாத்மன், ஸ்வப்னாவஸ்தையில் நாம் காணும் இடங்களை, மக்கள், யானை, குதிரை ஆகிய நிரம்ஷ ஜீவர்களின் ஸ்வரூப தேகங்களை, ஸ்தூல தேகங்களை அம்சங்களாக பிரிக்கிறான். அதாவது, நாம் நம் கனவில் எந்த உறவினர்களைப் பார்க்கிறோமோ, யானை, குதிரைகளை பார்க்கிறோமோ, அவை உண்மையல்ல. அந்த கனவில் மட்டும் அவை உண்மையாக தெரிகின்றன. இதன் காரணம் என்னவெனில், ஸ்ரீபரமாத்மன், நாம் கனவில் பார்க்கும் மக்களின் அல்லது யானை, குதிரை ஆகிய ஜீவர்களின் அம்சங்களை பிரித்து, அவர்களின் ஸ்தூல தேகங்களைப் போல வேறு தேகங்களை ஸ்ருஷ்டித்து, அவற்றை கனவில் காட்டி போகங்களைக் கொடுக்கிறான்.

மறுபடி ஆழ்ந்த தூக்கம் வந்தபோது, தான் பிரித்த ஜீவர்களின் அம்சங்களை, எங்கிருந்து அந்த அம்சங்கள் பிரித்தெடுக்கப்பட்டனவோ, அங்கேயே மறுபடி சேர்த்துவிடுகிறான். அது எப்படியெனில், கடல் நீர் சூரிய ஒளியினால் ஆவியாகி, மேகங்களில் சேர்ந்து, மழையாக பெய்து, மறுபடி அதே நீரே கடலில் போய் சேர்கிறதோ, அது போலவே, பரமாத்மனிலிருந்து ஸ்ருஷ்டியான அம்சங்கள் மறுபடி ஜீவர்களிடமே போய் சேர்கின்றன என்று பொருள்.

சிறப்புப் பொருள்:
ஜீவர்களின் சாம்ஷர், நிரம்ஷர் என்று இரு விதங்கள் உண்டு. ஒரு அம்சத்தினால் தம் உலகங்களில் ஸ்தூல தேகங்களால் வசிப்பதோடு மட்டுமல்லாமல், தத்வாபிமானிகளாக சூக்ஷ்ம ரூபங்களால் அனைவரின் தேகங்களிலும்

தனித்தனியாக வசிக்கின்றனர் அல்லது ஒரு ரூபத்தினால் தம் உலகங்களில் இருந்துகொண்டு, பூமியில் ஒரு அம்சத்தினால் பிறக்கின்றனர். இந்த குணங்களைப் பெற்றவர்கள் சாம்ஷ ஜீவர்கள் என்று அறிய வேண்டும்.

உதாரணம்:
வாயுதேவர் மூலரூபத்தினால் தம் உலகத்தில் இருந்தாலும், அம்சத்தினால் ஹனும, பீம, மத்வ அவதாரங்களை எடுத்து, பூமியிலும் இருந்தார். அதே சமயத்தில், அனைவரின் சித்தத்திலும், சித்தாபிமானிகளாக வசித்திருந்தார். இப்படியே, இந்திரதேவரும் ஸ்வர்க்கத்தை காத்தவாறு அங்கு இருந்தாலும், அர்ஜுனனாகவும், வாலியாகவும் பிறந்தார். இது மட்டுமல்லாமல், அனைவரின் கரங்களுக்கு அபிமானியாகவும் அனைவரின் கரங்களில் சூக்ஷ்ம ரூபங்களில் இருந்து, கைகளால் செய்யப்படும் செயல்களை செய்து வருகிறார். இவர்கள் அனைவ்ரும் சாம்ஷர்களே.

மேலும் கலி முதலான தைத்யர்கள், ஸ்தூல தேகத்தினால் தம் உலகத்தில் இருந்தாலும், இந்திரியாபிமானிகளாக அனைவரின் இந்திரியங்களில் சூக்ஷ்ம ரூபத்தினாலும், துரியோதனாதிகளாக பூமியில் பிறந்தும் இருந்தனர். ஆகையால், இத்தகைய தைத்யர்கள்கூட சாம்ஷ ஜீவர்களே. மனிதன் முதல் கிருமி வரை மட்டும் இப்படி சாம்ஷர் அல்ல. அங்கு இருந்தால் இங்கு இல்லை. இங்கு இருந்தால் அங்கு இல்லை. ஆகையால், இவர்கள் நிரம்ஷ ஜீவர்கள் இல்லை என்று அறியவேண்டும். ஆனால், இவர்களுக்கும்கூட சில சமயங்களில் சாம்ஷத்வம் வருகிறது.

ஆதாரம்:
வாமன புராணத்தில்:
நிரம்ஷானாஞ்ச ஜீவானாம் க்வசித்ஸாம்ஷத்வமிஷ்யதே |
லோகாந்தரேஷு சாம்ஷத்வம் சுகாதேவ பவிஷ்யதி ||

நிரம்ஷரான ஜீவர்களுக்கும்கூட சில சமயங்களில் சாம்ஷத்வம் வருகிறது. இவர்கள் புண்ணிய சாதனங்களை செய்துகொண்டு, ஸ்வர்க்க லோகத்தில் வாசம் செய்தவாறு, தன் புண்ணிய பலன்களை போகித்திருக்கும்போது, சாம்ஷர்கள் ஆவர். பூலோகத்தில் என்றைக்கும் சாம்ஷர்கள் ஆகமாட்டார்கள் என்று சொல்லப்பட்டிருக்கிறது. ஆனாலும், பரமாத்மன், ஜீவர்களுக்கு கனவில், சுகதுக்கங்களைக் கொடுக்க விருப்பப்பட்டபோது, நிரம்ஷ ஜீவர்களைக்கூட, தன் விருப்பத்தின்பேரில் சாம்ஷ ஜீவர்களாக மாற்றுகிறான்.

அனம்ஷஸ்யாபி ஜீவஸ்ய விபாகம் பஹுதாஹரி: |
க்ருத்வாபோகான்ப்ரதாயைவ சைக்யமாபத்யதே புன: ||

நிரம்ஷரான ஜீவர்களுக்கு கனவில் இருக்கும்போது, படுத்திருக்கும் ஜீவனின் அம்சத்தை, ஸ்தூல தேகங்களைக் கொடுத்து, வேறு இடங்களுக்கு அழைத்துச் சென்று, அங்கு யானை குதிரைகளின் அம்சத்தைப் பிரித்து, அவற்றின் ரூபங்களைக் கொடுத்து, பரஸ்பர சம்பந்தத்தினால் சுக துக்காதிகளைக் கொடுத்து, மறுபடி

அந்தந்த ஜீவர்களின் அம்சத்தை அங்கேயே திரும்ப சேர்க்கிறான். இதுவே மேற்சொன்ன ஸ்லோகத்தின் அர்த்தமாகும். பிம்பக்ரியைகளை செய்தவாறு எப்போதும் ஜீவர்களில் இருப்பதால், பரமாத்மனுக்கு 'வியோக ரஹிதனு' என்று பெயர்.

**பா4ர்யரிந்தொ3டகூ3டி3 காரண**
**கார்ய வஸ்துக3ளல்லி ப்ரேரக**
**ப்ரேர்ய ரூபக3ளிந்த3 ப1ட1த1ந்து1க3ள வொலித்து3 |**
**ஸூர்ய கிரணக3ளந்தெ1 தன்னய**
**வீர்யதி3ந்த3லெ கொ1டு3த1 கொ1ளுதிஹ**
**நார்யரிகெ3 ஈதன விஹாரவு கோ3சரிபு1தே3னு ||9**

பார்யரிந்த = ஸ்ரீ பூ துர்கா என்னும் மனைவியர்களுடன்.
ஒடகூடி = சமேதனாக.
காரண = ஸ்ருஷ்டிக்குக் காரணமான ஜட ப்ரக்ருதியிலும்.
கார்யவஸ்துகளல்லி = காரியங்களை செய்யும் இடங்களான உலகங்களிலும்.
ப்ரேரக ப்ரேர்ய ரூபகளிந்த = தீர்மானம் செய்யும், நிறைவேற்றும் ரூபங்களிலும்
படதந்துகளவொல் = துணியில் இருக்கும் நூல்களைப் போல இருந்து
சூர்யகிரணகளந்தெ = சூரிய கிரணங்கள், கடல் நீரைக் குடித்து, மேகங்களில் வைத்து, மறுபடி மழையின் ரூபத்தில் கடலில் போய் சேர்ப்பதைப் போல
தன்னய வீர்யதிந்தலி = தன் சாமர்த்தியத்தாலேயே
கொடுத = ஜீவர்களுக்கு புண்ணிய பாவங்களின் பலன்களைக் கொடுத்து
கொடுதிஹனு = சேவையை ஸ்வீகரிக்கிறான்.
அனார்யரிகெ = நீசர்களுக்கு
இவன விஹாரவு = இவனின் விளையாட்டு
கோசரிபுதேனோ = தெரியுமோ?, அல்லது, 'கொடுதிஹனு ஆர்யரிகெ' என்று படித்தால், பிரம்மாதிகளுக்காவது முழுமையாக புரியுமோ? - அதாவது அவரவர்களின் யோக்யதைக்கேற்பவே பகவத் மகிமைகளை அவர்கள் அறிவர் என்று பொருள்.

பரமாத்மன், ஸ்ரீ பூ துர்கா என்னும் தன் மனைவிகளுடன்கூடி, காரண கார்யவஸ்துகளில் அதாவது, இந்த உலகத்தின் ஸ்ருஷ்டி காரணள் ஜடப்ரக்ருதி. மனிதர்களின் உற்பத்திக்காக சுக்லஷோணியான மனிதர்கள் கார்யம். மரங்கள் முதலான உற்பத்திக்கு விதை, மண், நீர் ஆகியவை காரணம். கார்யம் மரங்கள். இப்படி ஒவ்வொரு வஸ்துகளிலும் காரண காரியங்கள் வெவ்வேறாக இருப்பதுண்டு. காரண வஸ்துகளில் தீர்மானம் செய்பவனாகவும், கார்ய வஸ்துகளில் அதை நிறைவேற்றுபவனாகவும் இருந்து; நூலை குறுக்கும் நெடுக்குமாக நெய்வதால், அந்த நூலே ஆடையாக ஆவதைப் போல, பரமாத்மன் கார்ய காரண வஸ்துகளில் நிலைத்திருந்து, பிரபஞ்சத்திலிருந்து வேறுபட்டு, பிரபஞ்ச ரூபியாக இருக்கிறான்.

மேலும், சூரியன் தன் கிரணங்களால், கடலில் இருக்கும் தண்ணீரை ஸ்வீகரித்து, மேகங்களில் வைத்து, மழையைப் பெய்ய வைத்து, அதன் மூலம் மறுபடி கடலை நிரப்பச் செய்வது போல, பரமாத்மன் தன் சாமர்த்தியத்தினால் பக்தர்களின் சேவையைப் பெற்றுக்கொண்டு, அவர்களுக்கு அந்த பலன்களைக் கொடுக்கிறான். சாமான்யரான மக்களுக்கு இவனின் மகிமைகள் எப்படி புரியும்? புரியாது. பிரம்மாதி தேவதைகளுக்கே இவனின் மகிமைகளை முழுமையாக அறிந்துகொள்ள முடிகிறதா? அவரவர்களின் தகுதிக்கேற்பவே காண்கின்றனர்.

**ஜனக தன்னாத்மஜகெ[3] வரபூ[4]**
**ஷண து[3]கூ[1]லவ தொ[1]டி[3]ஸி தா[1] வ**
**ந்த[3]னெய கைகொளுதவன ஹரஸுத ஹருஷப[1]டு[3]வந்தெ ।**
**வனருஹேக்ஷண பூஜ்ய பூஜக[1]**
**நெனெஸி பூ[1]ஜாஸாத[4]னபதா[3]**
**ர்த்த[2]னுதனகெ[3] தா[1]னாகி[3] ப[2]லக[3]ள[3]னீவ ப[4]ஜக[1]ரிகெ[3] ||10**

ஜனக = தந்தை.
தன்னாத்மஜகெ = தன் மகனுக்கு.
வரபூஷண துகூலவ = சிறந்த ஆடை அணிகலன்களை
தொடிஸி = கொடுத்து
வந்தெனய = நமஸ்காரங்களை
கைகொளுத = ஏற்றுக்கொண்டு
அவன = அந்த மகனை
ஹரஸுத = ஆசிர்வாதம் செய்து
ஹருஷபடுவந்தெ = மகிழ்ந்திருப்பதைப் போல
வனருஹேக்ஷண = தாமரைக் கண்ணனான ஸ்ரீபரமாத்மன்
பூஜ்யபூஜகனெனிஸி = ஒருவனில் இருந்து வணங்கப்பட்டும்; இன்னொருவனில் வணங்குபவனாகவும் இருந்து
பூஜாஸாதன பதார்த்தனு = கந்த, புஷ்பாதி பூஜைக்குத் தேவையான பதார்த்தங்களை
தனகெ = தனது பூஜைக்கு
தானாகி = தானே ஆகி
பஜகரிகெ = தன்னை பஜனை செய்பவர்களுக்கு
பலகளனு = பலன்களை
ஈவ = கொடுக்கிறான்.

தந்தையானவர், தனது மக்களுக்கு உத்தமமான (மிகச் சிறந்த) ஆடைகளைக் கொடுத்து, அந்த மக்களிடமிருந்து நமஸ்காரங்களைப் பெற்று, அவர்களுக்கு ஆசிர்வாதங்களை செய்து, மகிழ்ச்சியடைவதைப் போல, ஸ்ரீபரமாத்மன் குருகளிடமிருந்து கொண்டு, பூஜைகளை ஏற்றுக்கொள்கிறான். சிஷ்யர்களிடம் இருந்துகொண்டு, பூஜைகளை செய்கிறான். தன்னால் ஸ்ருஷ்டி செய்யப்பட்ட மக்களாக இருக்கும் தன் பக்தர்களில் இருந்து, பூஜையை செய்து, அவர்களைவிட உத்தம மக்களில் இருந்து, ராம கிருஷ்ணாதி பிரதிமா ரூபத்திலும் பூஜையை

ஏற்றுக்கொண்டு, அவர்களுக்கு அதன் பலன்களாக, அன்ன ஆடை அணிகலன்களால் சௌக்யங்களைக் கொடுத்து, தந்தை மக்களிடமிருந்து நமஸ்காரங்களைப் பெற்றுக்கொண்டு, அவர்களுக்கு ஆசிர்வாதம் செய்வதைப் போல, பக்தர்களுக்கு வரங்களைக் கொடுத்து, அவர்களைப் பார்த்து மகிழ்ச்சியடைகிறான். மேலும், பூஜைக்குத் தேவையான உபகரணங்கள், பழம், புஷ்பம், கந்த, அக்ஷதை, தாம்பூலம் ஆகியவற்றில் இருந்து, அதன் ரூபியாக தானே இருந்து, தன் பூஜைக்கு தானே பொருட்களாகிறான். பூஜை செய்த பலன்களை மட்டும் ஜீவர்களுக்குக் கொடுக்கிறான்.

சிறப்புப் பொருள்:
மேற்கண்ட இரு பத்யங்களால், ஸ்ரீபரமாத்மனே விஷயங்களை தீர்மானிப்பராகவும், செய்பவராகவும், பூஜ்யனாகவும், பூஜை செய்பவனாகவும், பூஜைக்குத் தேவையான பொருட்களிலும் இருந்து, பூஜையை செய்து, செய்வித்து, பலன்களை ஜீவர்களுக்குக் கொடுக்கிறான் என்று சொல்வதிலிருந்து, ஜீவனுக்கு கர்த்ருத்வம் கொஞ்சம்கூட இல்லை என்றே தாசராயர் சொல்கிறார். ஆனால், அவரது அபிப்பிராயம் அப்படியில்லை. ஏனெனில், அது ஸ்ரீமதாசார்யரின் சித்தாந்தத்திற்கு எதிரானதாகும். சித்தாந்தத்திற்கு எதிராக தாசராயர் என்றும், எதையும் சொன்னதில்லை.

பகவத்கீதை 18ம் அத்தியாயத்தில்:

ஆதிஷ்டானம் ததா கர்ம காரணஞ்ச ப்ருதக்விதம் |
விவிதாச ப்ருதக்சேஷ்டா தைவம் சைவாத்ர பஞ்சமம் |
ஷரீர வாங்மனோபிர்யத்கர்ம ப்ராரபதெ நர: |
ந்யாய்யம்வா விபரீதம்வா பஞ்சைதே தஸ்யஹேதவ: ||

எண் கணித சாஸ்திரத்தில் சொல்லியிருப்பதைப் போல, ஜீவர்கள் புண்ய பாவங்கள் அனைத்தையும் செய்வதற்கு ஐந்து காரணங்கள் உண்டு. அவை என்னவென்றால்:

1. அதிஷ்டானம், அதாவது தேகம், பூமி ஆகியன.
2. கர்த்தா - விஷ்ணு
3. வேறு காரணங்கள் அதாவது இந்திரியங்கள், ஸ்ருக் ஸ்ருவங்கள்
4. பல்வேறு செயல்கள் அதாவது கை முதலான இந்திரியங்களால் செய்யப்படுவன, நடப்பது ஆகியன
5. தெய்வ அதாவது அதிர்ஷ்டம் அல்லது கர்த்தா - ஜீவ, தெய்வ அதாவது விஷ்ணு என்று பொருள்.

மனிதனின் மனோ வாக் காயங்களினால் செய்யப்படும் புண்ய காரியங்களாகட்டும், பாவ காரியங்களாகட்டும் அதற்கு மேற்சொன்ன ஐந்து காரணங்களே உண்டு.

தத்ரைவம் சதிகர்த்தாரமாத்மானம் கேவலந்துய: |
பஷ்யத்யக்ருத புத்தித்வான்னஸ பஷ்யதி துர்மதி: ||

இது இப்படியிருக்கையில், யாரொருவன், தானே கர்த்தன் என்று நினைத்துக் கொள்கிறானோ, அவன் புத்தி இல்லாதவனாகையால், அந்த துர்மதியை எதுவும் அறியாதவன் என்று நினைக்க வேண்டும்.

யஸ்யனாஹம் க்ருதோபாவோ புத்திர்யஸ்யனலிப்யதே |
ஹத்வாபிஸ இமானோகான்ன ஹந்தி நனிபத்யதே ||

யாருக்கு நான் என்னும் அகங்காரம் இருப்பதில்லையோ, யாருடைய புத்தி பலன்களில் விருப்பமில்லாமல், அதற்கு சம்பந்தப்படாமல் இருக்கிறதோ, அவன் இந்த உலகத்தையே அழித்தாலும், அதற்கான பாவம் அவனைச் சேர்வதில்லை. இப்படி பிரபஞ்சத்தை அழிக்கப் பிறந்தவர் ருத்ரதேவர், யமதேவர். இவர்களுக்கு ஸ்வ-கர்த்ருத்வ-அபிமானம் இல்லாததினால், உலகத்தை அழிக்கும் பாவம் இவர்களை சேர்வதில்லை. இந்திரன், வ்ருத்ராசுரனைக் கொன்று பாவத்தை அடைந்தான் என்று பாரதத்தில் சொல்லப்பட்டிருக்கிறது. அதற்கு மூலகாரணம் அவர்களின், சிறிதேயான, தற்காலிக அகங்காரமே ஆகும். இப்படி 14ம் ஸ்லோகத்தில் துவங்கி, 18ம் ஸ்லோகம் வரைக்கும் பகவத் கர்த்ருத்வத்தை அறிந்து, தன் கர்த்ருத்வ புத்தியை விடவேண்டும் என்று கூறியிருக்கின்றனர்.

18ம் ஸ்லோகத்தின் பொருள் (ஸ்ரீராகவேந்திர ஸ்வாமிகள் இயற்றிய கீதாவிவ்ருத்தி):

நனு ஜீவஸ்யஸ்வத: கர்த்ருத்வாபாவெ யஜேதேத்யாதி விதீனாம் தையர்த்யம் ஸ்யாத் |
ஜடேஷ்வர யுக்தானாம் தத்விஷயத்வாதித்யத அஹ ஞானமிதி ||

இந்த வாக்கியத்தின் ஆதாரத்தினால் ஜீவனுக்கு கர்த்ருத்வமே இல்லாதிருந்தால், 'ஸ்வர்க காமோயஜேத, அஹரஹஸ் சந்த்யாமுபாஸீத' ஸ்வர்க்கத்தை விரும்புபவன், ஜ்யோதிஷ்டோம என்னும் யாகத்தை செய்யவேண்டும். காலை மாலையில் சந்தியாவந்தனத்தை செய்யவேண்டும் - என்னும் விதி வாக்கியங்கள் அர்த்தமில்லாமல் போகும். ஜட பதார்த்தங்களுக்கும், ஈஷ்வரனுக்கும், முக்தர்களுக்கும் இந்த யாகங்கள் செய்யவேண்டும் என்று சொல்வது சரியல்ல. ஜீவர்களுக்காகவே இந்த விதி வாக்கியங்கள் வந்திருக்கவேண்டும். அவர்களுக்கும் ஸ்வத: கர்த்ருத்வம் இல்லை என்றபிறகு, இந்த வாக்கியங்கள் வெளிவந்திருக்காது.

ஞானம்ஞேயம் பரிஞாதா த்ரிவிதா கர்ம ஜோதனா |
கரணம் கர்மகர்தேதி த்ரிவித: கர்மசங்க்ரஹ: ||

யாகாதிகளை செய்யவேண்டும் என்னும் கர்மஜோதனா என்றால், கர்மங்களை தீர்மானித்தல், ஞானம், ஞேயம், பரிஞாதா என்று மூன்று விதங்கள் ஆகும். ஞானம் என்றால் விதி வாக்கியங்களுக்கு உட்பட்டு செய்யவேண்டியவை. அதாவது 'யஜீத' தியாகம் செய்யவேண்டும். 'உபாசீத' உபாசனை செய்யவேண்டும். 'ஞேயம்' என்றால் முயற்சி செய்வது. 'பரிஞாதா' யாரென்றால், சர்வக்ஞனும், சர்வ ப்ரேரகனுமான

ஸ்ரீபரமாத்மன் நிலைத்திருக்கும் ஜீவராசிகள். இந்த மூன்று விஷயங்களாலேயே, செயல்கள் நடக்கின்றன.

ததித்ரபு சம்ப்ரத்ய க்ஷோஜ்வர இத்யாதாவிவனிமித்த நிமித்தினோர பேதோபசாரேண நிமித்த த்ரைவித்யேன நைமித்திக ஜோதனாபி த்ரிவிதேத்யுபசர்யதே ।
யஜதேத்யாதி ஷ்ரௌதஸ்மார்த்தவிதௌஸதி ஸ்வாப்ரவ்ருத்தி விஷய ப்ரேரணாஞானம்பவதி ।
ததஷ்வேச்சாப்ரயத்னரூப ப்ரவ்ருத்திராத்ம சன்னிஹிதேஷ்வர ப்ரேரணயா புமர்த்தமுத்திஷ்ய கர்மணி ஜீவஸ்ய பவதி இதி விதிஞானாதே: ।
கர்ம ஜோதனயாஷ்ச நிமித்தனிமித்தி பாவோத்யேய: ||

உலகத்தில் ஜுரம் வந்த ஒருவன், தன் ஜுரத்திற்கான காரணத்தை ஆராய்கையில், தான் அதிகமாக தயிர் சேர்த்துக் கொண்டதே அதற்கான காரணம் என்று அறிகிறான். இதில் எது ஞானம்? தயிர். அதற்கு ஞேயம் என்றால் ஆதாரம் எது? தயிர் ஊற்றிக்கொண்ட ஈய பாத்திரம். தயிர் தானாக ஒரு ஆதாரம் ஆகமுடியாத காரணத்தால், அது போட்டு வைத்திருந்த ஈய பாத்திரமும் ஒரு நிமித்தமாயிற்று. இப்படி, ஜுரத்திற்கு காரணம் தயிராக இருந்தாலும், அதற்கு ஆதாரபூதமாக இருந்தது, அது போட்டு வைத்திருந்த ஈய பாத்திரம் ஆகும். இப்படியே விதி வாக்கியங்களின் பொருள், ஞானமானாலும், ஞேயமான தேகம் என்னும் பாத்திரம் இல்லாமல், அது செயல்பட முடியாது.

யாகாதிகளை செய்யவேண்டும் என்னும் விதி இருப்பதால், பரமாத்மன் ஸ்ருஷ்டி காலத்திலேயே, ஜீவனுக்கு கொடுத்திருக்கும் ஸ்வாதந்த்ர்யத்தினால், அவற்றை செய்யவேண்டும் என்னும் விருப்பம் மட்டும் பிறக்கிறது. அதன்பிறகு, ஜீவனில் இருக்கும் பரமாத்மன், ஜீவனின் சம்ஸ்காரத்திற்கேற்ப, அவனின் விருப்பத்தின்படி, அவனது புருஷார்த்தத்திற்கு சாதனமான கர்மத்தை செய்யத் தீர்மானிக்கிறான். அதாவது, ஜீவனின் அனாதி கர்மத்தையும், ஜீவனின் சம்ஸ்காரத்தையும் பார்த்து, தீர்மானிக்கிறான். அப்போது, ஜீவன், பரமாத்மனின் தீர்மானத்திற்கேற்ப அவற்றை செய்ய முற்பட்டால், உள்ளேயிருக்கும் தத்வாபிமானி தேவதைகளுக்கு பரமாத்மன் ஆணையிட்டு, அவர்களுக்குள் தான் இருந்து, செய்து, ஜீவனிடமிருந்து செய்விக்கிறான்.

இப்படியே, ஞானம் என்றால் விதிவாக்கியம், ஞேயம் என்றால் தேகம் மற்றும் பகவத் விருப்பம். பரிஞாதா என்றால் ஜீவன். ஆக, ஸ்வதந்த்ர கர்த்தா - பரமாத்மன். ஜீவனுக்கு விதிவாக்கியமும், பகவத் ப்ரேரணையும்கூட நிமித்த காரணங்களாக இருக்கின்றன என்று அறியவேண்டும்.

நசஸ்வத: கர்த்ருத்வாபாவாத்வராதீன கர்த்ரு ஜீவஸ்ய விதிஞானத்வாராகதம் ப்ரவ்ருத்யாத்யர்த்தம் விதிவிஷயத்வமிதிம் ஷக்யம்।

அபராதீன கர்த்ருத்வஸ்ய விதிவிஷயதாயாம் ப்ரயோஜகத்வேன க்யாப்யனுபலம்பேனான்வய வ்யதிரேகாப்யாம் பராதீன கர்த்ருஷக்திகஸ்யேவ விதிவிஷயத்வாவஷ்யம் பாவாத் ||

ஆனால் ஜீவன் எதையும் ஸ்வதந்த்ரமாக செய்வதற்கு சாத்தியம் இல்லை. பராதீனனாக இருந்து, பரமாத்மன் செய்வித்தபடியெல்லாம் செய்யும் ஜீவனுக்கு, விதிவாக்கியத்தால் என்ன பயன் என்று சந்தேகம் வரக்கூடாது. ஏனெனில், உலகத்தில் ஸ்வதந்த்ர கர்த்ருகளான ராஜர்களை விதிவாக்கியங்கள் என்றும் கட்டுப்படுத்துவதில்லை. பராதீனன் என்றால் தன் கட்டுப்பாட்டில் இருப்பவர்களை, இப்படி செய்யுங்கள், அப்படி செய்யுங்கள் என்று சொல்வதற்காகவே விதி வாக்கியங்கள் இருக்கின்றன என்று அனைவருக்கும் தெரியும். அதுபோலவே, ஜடர், ஈஷ்வர மற்றும் முக்தர்கள் இவர்கள் மூவருக்கும் விதிக்கு கட்டுப்பட்டவர்கள் இல்லை என்று தெரிவதால், அது ஜீவர்களுக்கு மட்டுமானதாகும் என்று தெரிகிறது. ஆகையால், ஜீவன் பராதீன கர்த்ரு ஆகிறான். ஆகையால், விதிகள் அவனுக்காகவே சொல்லப்பட்டிருக்கின்றன என்று தீர்மானம் ஆகிறது. இப்படியே கீதா வ்யாக்யானத்தை இயற்றிய ஶ்ரீராகவேந்திர ஸ்வாமிகள் சொல்லியிருக்கிறார். ஆகையால், தாசராயரின் அபிப்பிராயம் என்னவெனில், ஜீவனுக்கு ஸ்வதந்த்ர கர்த்ருத்வ மட்டுமே இல்லையே தவிர, அதனால் அவன் கர்த்தன் இல்லை என்று சொல்லக்கூடாது.

**தந்தெ3 ப3ஹுஸம்ப்4ரமதி3 த1ன்னய**
**ப3ந்து4ப3ளக3வ நெரெஹி மது3வெய**
**நந்த3னகெ3 தா1 மாடி3 மனெயொளகி3டு3வ தெ1ரனந்தெ1 |**
**இந்திராத4வ தன்ன இச்செ க3**
**ளிந்த3 கு3ணக3ள சேதனக்கெ ஸ**
**ம்ப3ந்த4கை3ஸி ஸுகா2ஸுகா2த்மக1 ஸம்ஸ்ருதியொளிடு3வ ||11**

தந்தெ = தந்தை
பஹு சம்ப்ரமதி = வெகு விமரிசையுடன்
தன்னய பந்துபளகவ = தன் உற்றார் உறவினர்களை
நெரஹி = அழைத்து
நந்தனகெ = தன் மகனுக்கு
மதுவெய = திருமணத்தை
தா = தான்
மாடி மனெயொளகிடுவ தெரனந்தெ = சம்சாரியாக மாற்றி வீட்டில் வைப்பது போல
இந்திராதவ = லட்சுமிபதியானவன்
தன்ன இச்செகளிந்த குணகள = சத்வ ரஜஸ் தமோ என்னும் மூன்று குணங்களின் சம்பந்தமான ப்ராக்ருத ஸ்தூல தேகங்களை
சேதனக்கெ = ஸ்வரூபதேக, லிங்கதேகங்களால் ஆன ஜீவனுக்கு
சம்பந்தகெயிஸி = சம்பந்தம் செய்து (கொடுத்து)

சுகாசுகாத்மக சம்ஸ்க்ருதியலி = சுகதுக்கங்களின் கலவையான சம்சாரத்தில் வைப்பான்.

தந்தையானவர், தன் மகனுக்கு திருமணத்தை செய்யவேண்டுமென்று சிந்தித்து, தன் உற்றார் உறவினர்களையெல்லாம் அழைத்து, வெகு விமரிசையுடன் திருமணத்தை செய்து, அந்த தம்பதிகளை ஒரு வீட்டில் வைத்து சம்சாரிகளாக்கி எப்படி பார்த்துக் கொள்கிறாரோ அப்படியே, ஸ்ரீலட்சுமிபதி தன் விருப்பத்திற்கேற்ப தன் மக்களைப் போல இருக்கும், சாத்விக, ராஜஸ, தாமஸ எனும் மூன்று வித ஜீவராசிகளுக்கும் புத்தி என்னும் மனைவியுடன் திருமணம் செய்விக்கிறான். தத்வாபிமானி தேவதைகளே உற்றார் உறவினர். ஸ்தூல சரீரமே வீடு. இதில், சாத்விகர்களுக்கு தேவதாதி சரீரங்களையும், ராஜஸர்களுக்கு மனித சரீரங்களையும், தாமஸர்களுக்கு தைத்யாதி சரீரங்களையும் கொடுத்து, அவரவர்களின் சாதனைகளை நிறைவேற்றுவதற்காக சுகதுக்கங்களின் கலவையான சம்சாரத்தில் அவர்களை வைக்கிறான்.

சிறப்புப் பொருள்:
இங்கு தாசராயர் 'குணகள சேதனகெ சம்பந்த கெய்ஸி சுகா சுகாத்மக சம்ஸ்க்ருதியொலிடுவ' என்கிறார். சத்வ ரஜஸ் தமோ குணங்களை சேதனர்களுக்கு சம்பந்தப்படுத்தி என்று அர்த்தம் கொண்டால், ஜீவர்கள் அனாதி காலத்திலிருந்தே சத்வாதி குண சம்பந்தமான ஸ்வரூப தேகத்தினால் கூடியிருக்கின்றனர். குணங்களை விட்டு சேதனர்கள் இல்லை என்று ஸ்ரீமதாசார்யரின் வாக்கியம் இருக்கிறது. மகாபாரத தாத்பர்ய நிர்ணயத்தில்

த்ருஷ்ட்வாஸசேதன கர்ணா ஜடரேஷயனானானந்த மாத்ரவ புஷ:ஸ்ருதி விப்ரமுர்க்தா |
த்யானங்கர்த்தா ஸ்ருதிகதாம்ஸ்ச சுஷுப்தி சம்ஸ்தா பிரம்மாதிர்கா கலிபர்ரா மனுஜாம்ஸ்ததைக்ஷத் ||

அதாவது, ஸ்ரீபரமாத்மன், தன் வயிற்றில் சயனம் கொண்டிருக்கும் பிரம்மதேவர் முதலான தேவதைகள், கலி வரைக்குமான தைத்யர்கள், மனிதர்கள் இந்த மூன்று வித ஜீவராசிகளையும், வெறும் மகிழ்ச்சியை மட்டும் கொண்ட முக்தர்களையும் பார்த்து, ஸ்ருஷ்டி செய்வதற்கு விருப்பப்பட்டான். இதிலிருந்து, அனாதி காலத்திலிருந்து ஜீவர்கள் த்ரிவிதர் என்று நிர்ணயம் ஆகிறது. மேலும் விஷ்ணு ரகசியத்தில் :

ஸ்ருஷ்ட்யாதிகுருதே சர்வமன்யதா தத்தயாளுதா |
வ்யாஹன்யேத ததாப்யன்யான் ஜீவான்மதாமர்ஸா |
ஸ்ருஜத்யவதி ஹந்த்யேவ பக்தானாம் பக்திவ்ருத்தயே |
ஏவம் சாத்விக மத்யஸ்த தாமஸாம்ஸ்த்ரி விதானபி |
ஸ்ருஜத்யவதி ஹந்தீஷோலீலயா பக்தவத்ஸல ||
அனாதிகால தத்ஸ்த்யேவ சங்கல்போ ஜகதீஷிது: ||

தயாளுவான ஸ்ரீபரமாத்மன் சர்வ ஜகத்தையும் ஸ்ருஷ்டி செய்கிறான். இது இல்லையென்றால், பரமாத்மனின் தயாளுத்வத்திற்கு கேடு வருகிறது. ஆகையால், பிரம்மாதி ஸாத்விகர்களை மட்டும் ஸ்ருஷ்டிக்காமல், மற்றவர்களான தாமஸர்களைக்கூட ஸ்ருஷ்டித்து, காப்பாற்றி, இறுதியில் சம்ஹரிக்கிறான்.

அனாதி காலத்திலிருந்து இதுவே அவனது சங்கல்பமாக இருக்கிறது என்கிறார். இந்த ஆதாரங்களின்படி ஜீவர்கள் அனாதியிலிருந்து த்ரிவிதர்கள் என்று தெரிகிறது. இப்படியிருக்கையில், ஸ்ருஷ்டி காலத்தில் பரமாத்மன் ஜீவர்களுக்கு குணங்களை சம்பந்தப்படுத்துகிறான் என்று தாசராயர் சொல்வதால், பரமாத்மன் ஜீவர்கள் சில பேரை சாத்விகர்களாகவும், சிலரை ராஜஸர்களாகவும், வேறு சிலரை தாமஸர்களாகவும் தன் இஷ்டத்திற்கேற்ப படைக்கிறான் என்று அர்த்தம் கொண்டால், அது ஸ்ரீமதாசார்யரின் சித்தாந்தத்திற்கு விரோதமாகிறது. ஆகையால், 'குணகள' என்றால், அது சம்பந்தமான ஸ்தூல ஷரீரங்கள் என்று அர்த்தம் கொள்ள வேண்டும்.

சாத்விக ஜீவர்களுக்கு சத்வகுண சம்பந்தமான தேவாதி சரீரங்களையும், ராஜஸர்களுக்கு ரஜோகுண சம்பந்தமான மனித சரீரங்களையும், தாமஸர்களுக்கு தமோகுண சம்பந்தமான தைத்யாதி சரீரங்களையும் கொடுக்கிறான் என்று அர்த்தம் கொண்டால், நிர்ணய வாக்கியத்திற்கும், விஷ்ணு ரகசிய வாக்கியத்திற்கும் சரியாக பொருந்தி வருகிறது. அல்லது, 'குணகள' என்றால் ஷப்த ஸ்பர்ஷாதி தன்மாத்ரா குணங்கள் என்றும் அர்த்தம் சொல்லலாம். தத்வ தேவதைகள் என்னும் உறவினர்களுடன் கூடிய சரீரங்கள் என்னும் வீட்டில் வைத்து, ஜீவர்களுக்கு ஷப்த, ஸ்பர்ஷாதி குணங்களைக் கொடுத்து, சுக துக்கங்களின் கலவையான சம்சாரத்தில் வைத்து, அவர்களின் சாதனை முடிந்தபிறகு, சாத்விகர்களுக்கு சுகாத்மகமான முக்தியைக் கொடுத்து, தாமஸருக்கு துக்காத்மகமான தமஸ்ஸைக் கொடுத்து, மத்யமருக்கு கலவையான நித்ய சம்சாரத்தைக் கொடுக்கிறான் என்று பொருள்.

**த்[1]ருணக்[1]ருதா[1]லய தொ[3]ளகெ[3] பொ[1]கெ[3] ஸ**
**ந்தணிஸி ப்ரதி[1]சி[1]த்ரத[3]லி பொ[1]ரம**
**ட்ட[1]னலனிரவனு தோ[1]ரி தோ[1]ரத[3]லிப்ப[1] தெ[1]ரனந்தெ[1] ।**
**வனஜஜாண்டதொ[3]ளகி[2]ல ஜீவர**
**த[1]னுவினொளஹொரகி[3]த்து[3] கா[1]ணிஸ**
**த[3]னிமேஸேஷனு ஸகலகர்மவ மாள்பனவரந்தே ।।12**

த்ருணக்ருதாலயதொளகெ = புல்லால் செய்யப்பட்ட வீட்டில்.
பொகெ = புகை
சந்தணிஸி = பரவி
ப்ரதிசித்ரதலி = ஒவ்வொரு இடத்திலும்
பொரமட்டு = வெளியே வந்து
அனலன = நெருப்பின்
இருவனு = இருப்பை
தோரி = காட்டுகிறது

தோரதலெ = பிரத்யட்சமாகத் தெரியாமல்
இப்பதெரனந்தெ = இருப்பதைப் போல
வனஜஜாண்டதொளு = பிரம்மாண்டத்தில்
அகிள ஜீவர = அனைத்து ஜீவர்களின்
தனுவின = தேகங்களின்
ஒளஹொரகித்து = உள்ளேயும் வெளியேயும் இருந்து
காணிஸதெ = ஜீவருக்குத் தெரியாமல்
அனிமிசேஷனு = தேவோத்தமனான ஸ்ரீபரமாத்மன்
சகல கர்மவ = அனைத்து புண்ய பாபாதி கர்மங்களை
அவரந்தெ = அந்த ஜீவனைப் போல
மாள்பனு = செய்கிறான்.

புல்லால் கட்டிய குடிசை வீட்டினுள் நெருப்பை வைத்தால், அது ஒவ்வொரு இடைவெளியிலும் புறப்பட்டு வெளியில் வந்து, உள்ளேயும் வெளியேயும் பரவியிருக்கும் புகையைப் பார்த்து, அந்த வீட்டில் நெருப்பு இருக்கிறது என்று நினைக்கலாம். ஆனால் நெருப்பைப் பார்க்கமுடியாமல் போகலாம். அதுபோலவே, பரமாத்மனும், பிரம்மாண்டத்தில் இருக்கும் ஜீவர்களின் ஸ்வரூப தேகங்களிலும், ஸ்தூல தேகங்களிலும், மற்றும் பிற அனைத்து இடங்களிலும், உள்ளேயும் வெளியேயும் வியாப்தனாக இருந்து, அந்த ஜீவர்களின் கண்களுக்குத் தெரியாமல், சாதாரண மனிதர்களைப் போலவே தானும் கர்மங்களை செய்கிறான். இந்த புகை உதாரணத்தால், அவன் அனைத்து இடங்களில் வியாப்தனாக இருந்தாலும், எதற்கும் சம்பந்தப்படாமல் இருக்கிறான் என்பதையும் காட்டுகிறார்.

**பா[1]த[3]ப[1]க[3]ளடி[3]கெ[3]ரெயெ ஸலிலவு**
**தோ[1]து[3] கொ[1]ம்பெ[3]களுப்பி[3] பு[1]ஷ்ப[1]**
**ஸ்வாது[3] ப[2]லவீவந்த[3]த[3]லி ஸர்வேஸ்வரனு ஜனரா**
**ராத[3]னெய கைகொண்டு[3] பி[3]ரம்ம ப[4]**
**வாதி[3]க[3]ள நாமத[3]லி ப[2]லவி**
**த்தா[1]த[3]ரிஸுவனு த[1]ன்ன மஹிமெய தோ[1]ரகொ[3]ட[3] ஜக[3]க்கெ ||13**

பாதபகள = மரங்களின்
அடிகெ = வேருக்கு
ஸலிலவு = நீரினை
எரியெ = ஊற்றினால்
தோது = பூமி நனைந்து
கொம்பெகளுப்பி = அதன் கிளைகள் வளர்ந்து
புஷ்ப = பூக்களை
ஸ்வாது பல = சுவையான பழங்களை
ஈவந்ததலி = கொடுப்பதைப் போல
சர்வேஷ்வரனு = அனைத்து உலகங்களுக்கும் ஈஸ்வரனான பரமாத்மன்
ஜனர = மக்கள் செய்யும்
ஆராதனெய = பூஜைகளை

கைகொண்டு = ஏற்றுக்கொண்டு
பிரம்ம பவாதிகள நாமதலி = பிரம்ம ருத்ராதி பெயர்களால்
பலவித்து = பலன்களைக் கொடுத்து அருள்கிறான்
ஜகெகெ = உலகிற்கு, (இந்த தத்வத்தை)
தோரகொட = காட்டிக் கொள்ள மாட்டான்.

பாகவத நான்காம் ஸ்கந்தத்தில் :

யதா தரோர்மூல நிஷேசனேன த்ருப்யந்தி தத் ஸ்கந்த புஜோபஷாகா: |
ப்ராணோபஹாராச்ச யதேந்த்ரியாணாம் ததைவ சர்வார்ஹணமச்யுதேஜ்யா ||

ஒரு மரத்தில் வேருக்கு நீர் ஊற்றினால், எப்படி அதன் கிளைகள் மகிழ்ந்து, வளர்கிறதோ, மற்றும் ஜீவாதாரத்திற்காக உணவு உண்டால், எப்படி கை கால்கள் முதலான இந்திரியங்கள் வளர்ந்து திடமாகிறதோ, அது போலவே, நமக்கு மூலபூதனான அதாவது வேர் போல இருக்கும் பிம்பரூபியான ஸ்ரீபரமாத்மனை பூஜித்தால், அதனால் உலகிற்கு சுகம் உண்டாகும்.

ஜனராராதனெய கைகொண்டு பிரம்ம பவாதிகள நாமதலி பலவித்தாதரிசுவனு - ஜீவர்களில் சாத்விகர், ராஜஸர் மற்றும் தாமஸர் என்று மூன்று வகையினர் உண்டு. அதில் சாத்விகர்களான த்ருவன், பிரகலாதன் ஆகியோர் நிஷ்காமர். விஷ்ணுவையே பஜிப்பவர்கள். ராஜஸர், சகாமர் என்றால் பலன்களை எதிர்பார்த்து பஜிப்பவர்கள். மற்றவர்களை துன்புறுத்த வேண்டும் என்னும் நோக்கத்துடன் பஜிப்பவர்கள் தாமஸர்கள். பாகவத 11ம் ஸ்கந்தத்தில் வரும் இந்த ஸ்லோகமே இதற்கு ஆதாரமானதாகும்.

மதர்பணம் நிஷ்பலம்வா சாத்விகம் நிஜகர்மதத் |
ராஜஸம் பலசங்கல்பம் ஹிம்ஸா ப்ராயாதி தாமஸம் ||

பலன்களை எதிர்பார்த்து பூஜிப்பவர்களாகட்டும், பிறரை இம்சிக்க வேண்டும் என்று நினைத்து பூஜிப்பவர்களாகட்டும், அவர்கள் விஷ்ணுவை பஜிப்பதில்லை. பிரம்மனையோ, ஈஸ்வரனையோ பஜிக்கிறார்கள். அது ஏனெனில்: பாகவத 10ம் ஸ்கந்தத்தில் :

ஷாபப்ரஸாதயோரீஷா: பிரம்மா விஷ்ணு ஷிவாதய: |
ஸத்ய: ஷாபப்ரஸாதோங்கஷிவ பிரம்மாச நாச்யுத: ||

சாபத்தைக் கொடுக்க வேண்டுமென்றாலும், வரங்களைக் கொடுக்க வேண்டுமென்றாலும், பிரம்ம, விஷ்ணு, சிவ ஆகியோரையே நினைக்க வேண்டும். இவர்கள் அனைவரும் அதிபதிகளே. ஆனால், சீக்கிரத்தில் தரிசனம் கொடுத்து, வரங்களைக் கொடுக்க வேண்டுமென்றாலும், சிறிய அபராதத்திற்கு கோபத்துடன் சாபத்தைக் கொடுப்பதானாலும், பிரம்ம ருத்ரரே அப்படி செய்வர். ஆனால், விஷ்ணு அப்படி அல்ல. (கஷ்டப்பட்டு வெகு காலம் ஆராதனை செய்தால், நிரந்தரமான பலன்களைக் கொடுப்பவர் விஷ்ணு). இப்படி இருக்கையில், மற்றவர்களை

துன்புறுத்த வேண்டும் என்னும் விருப்பத்தில், விரைவாக பலன்களைப் பெற வேண்டும் என்ற எண்ணம் இருப்பவர்கள், பிரம்ம ருத்ராதிகளை பஜிக்கிறார்கள். இவர்கள் எவ்வளவு விரைவாக பலன்களைப் பெறுகின்றனரோ, அவ்வளவு விரைவாக நாசமும் அடைகிறார்கள். சீக்கிரத்தில் கிடைக்கும் பலன்கள் அனைத்தும் தற்காலிகமே ஆகின்றன.

தற்போது சமூகத்தில், ஒரு வேலை ஆவதற்காக, ஒரு சாதாரண வேலையில் இருப்பவரையோ, அல்லது மிகப்பெரிய வேலயில் இருப்பவரையோ பார்க்க வேண்டுமெனில், அதற்கான பலன்களைப் பெறவேண்டுமெனில், எப்படி வித்தியாசம் இருக்கின்றதோ, அதுபோலவே, இதர தேவதைகளைக் கண்டு பலன்களைப் பெறுவதும், ஸ்ரீபரமாத்மனைக் கண்டு வரங்களைப் பெறுவதிலும்கூட வித்தியாசங்கள் இருக்கின்றன.

பாகவத 10ம் ஸ்கந்தத்தில், வ்ருகாசுரன் (பஸ்மாசுரன்) நாரதரிடம் கேள்வி கேட்டபோது,

வ்ருகோனாமாஸுர: புத்ரஷகுனே: பதினாரதம் த்ருஷ்ட்வாஷுதோஷம் பப்ரச்ச தேவேஷுத்ரி ஷுதுர்மதி: |
ச ஆதிதேஷகிரிஷ முபாதாவ ஸ்வஸித்தயே ||
ஸோல்பாப்யாம் குணதோஷாப்யாமாஷு துஷ்யதி குப்யதி ||

சகுனியின் மகனான வ்ருகாசுரன், நாரதரைக் கண்டு - 'ஸ்வாமி, நாரதரே, பிரம்ம விஷ்ணு சிவன் இவர்களில் விரைவாக வரங்களைக் கொடுப்பவர் யார்?' என்று கேட்டார். அதற்கு நாரதர் - 'ஹே அசுரனே, ருத்ரதேவரை பூஜிப்பாயாக. அவரே விரைவாக பலன்களைக் கொடுப்பவர். சிறிய தவறுகளுக்கும் தண்டனை கொடுப்பார். பாணாசுரன் முதலானவர் செய்த தவத்திற்கு மெச்சி, அவனின் வீட்டு வாயிலை காத்தவர் அவர்' என்று பதிலளித்தார். இந்த காரணத்தினாலேயே ராஜஸ தாமஸர்கள் பிரம்ம ருத்ராதிகளை வணங்குகின்றனர்.

ஆகாஷத் பதிதம் தோயம் யதா கச்சதி சாகரம் |
சர்வதேவ நமஸ்கார: கேஷவம் ப்ரதிகச்சதி ||

இந்த ஸ்லோகத்தின்படி, ஆகாயத்திலிருந்து விழும் நீர் அனைத்தும் எப்படி இறுதியில் கடலுக்குப் போய் சேர்கிறதோ, அது போலவே, எந்த தேவதையை நினைத்து வணங்கினாலும், அது ஸ்ரீபரமாத்மனையே போய் சேர்கிறது. அதாவது, ஸ்ரீபரமாத்மனே அந்த தேவதையின் ரூபத்தில், தேவதைகளில் இருந்து, பூஜையை ஏற்று, அவர்களுக்கு தக்க பலன்களைக் கொடுக்கிறார். இதே அபிப்பிராயத்தினாலேயே தாசராயர் - 'பிரம்ம பவாதிகள நாமதலி பலவித்து' என்று சொல்கிறார்.

ராவண, ஹிரண்யகசிபு ஆகியோர் பிரம்மதேவரைக் குறித்து தவம் செய்ய, ஸ்ரீபரமாத்மன், பிரம்மனின் அந்தர்யாமியாக இருந்து, தரிசனம் அளித்து, அவர்களுக்கு வரம் அளித்தான். வ்ருகாசுரன் முதலானோர் ருத்ரதேவரைக் குறித்து தவம்

செய்ய, ஸ்ரீபரமாத்மன், ருத்ரரில் அந்தர்யாமியாக இருந்து, தரிசனம் அளித்து, வரங்களை அளித்தான் என்பது பொருள். யோக்யரோ, அயோக்யரோ, அவர்களின் தவத்திற்கு தக்க வரங்களைக் கொடுத்து ஆதரிக்கிறான். ஆனால், பிரம்ம ருத்ரர்களில் இருந்து, வரங்களை அளித்தவன் தானே என்று யாரிடமும் சொல்லிக் கொள்ளாதவன். இந்த ரகசியங்களை ஞானிகள் மட்டுமே அறிவர்.

ஸ்ருதிததிக$^{3}$ளிகெ$^{3}$ கோ$^{3}$சரிஸத$^{3}$
பிரதிமஜா னந்தா$^{3}$த்மனச்யுத
விதத விஷ்வாதா$^{4}$ர வித்$^{4}$யாதீ$^{4}$ஷ விதி$^{4}$ஜனக$^{1}$ |
பிரதிதிவஸ சேதனரொளகெ3 ப்ரா
க்ருத புருஷனந்த$^{3}$த$^{3}$லி ஸஞ்சரி
ஸூத நியம்ய நியாமகனு தானாகி$^{3}$ ஸந்தெய்ப ||14

ஸ்ருதிததிகளிகெ = வேத சமூகங்களுக்கு
கோசரிஸத = முழுமையாக தரிசனமளிக்காத
அப்ரதிம = சமானம் இல்லாத
ஆனந்தாத்மனு = ஆனந்த ஸ்வரூபனான
அச்யுத = நாசம் இல்லாதவனான
விதத = அனைத்து இடங்களிலும் வியாப்தனான
விஷ்வாதார = உலகத்திற்கு ஆதாரமானவனான
வித்யாதீஷ = வித்யைக்கு அதிபதியான ரமாதேவியின் தலைவனான
அல்லது
விஷ்வாதார வித்யாதீஷ = உலகத்திற்கு ஆதாரமான வித்யைக்கு தலைவனான
விதிஜனக = பிரம்மதேவரின் தந்தையான ஸ்ரீபரமாத்மன்
ப்ரதிதிவஸ = தினந்தோறும்
சேதனரொளகெ = ஜீவர்களில் இருந்து
ப்ராக்ருத புருஷ நந்ததலி = சாமான்யரான பஞ்சபூத சரீரங்களைக் கொண்ட புருஷனைப் போல
நியம்ய = நண்பனைப் போல அவனுக்குக் கட்டுப்பட்டவனைப் போல
நியாமக = அதிபதிகளில் இருந்து, ஆணைகளை பிறப்பிப்பவனைப் போலவும்
சந்தெய்ப = மக்களுக்கு சமாதானம் அளிக்கிறான்.

வேத ஸ்வரூபளான, துர்கா ரூபியான ரமாதேவியும்கூட யாரின் குணரூப ஸ்வரூபங்களை முழுமையாக அறிவதில்லையோ, யார் தனக்கு ஒப்புமை இல்லாதவனோ, உத்பத்தி சூன்யனோ, ஆனந்த ஸ்வரூபனோ, நாசம் இல்லாதவனோ, அனைத்து இடங்களிலும் வியாப்தனோ, உலகத்திற்கு ஆதாரமானவனோ, அனைத்து வித்யைக்கும் தலைவனோ, பிரம்மனின் தந்தை என்று அழைத்துக் கொள்பவனோ, அத்தகைய ஸ்ரீபரமாத்மன், ப்ரக்ருதி சம்பந்தமான, மூன்று குணங்களுக்கும் சம்பந்தமான ஜீவர்களின் ப்ராக்ருத தேகத்தில், தானும் ப்ராக்ருத ரூபத்தைக் கொண்டு இருந்தவாறு, ஒருவனுள் இருந்து ஆணையைப் பிறப்பிக்கிறான், இன்னொருவனில் இருந்து அதை நிறைவேற்றுகிறான். இப்படி அரசாட்சி செய்பவர்களில் இருந்து ஆணையைப் பிறப்பித்து, மகிழ்ச்சியைக் கொடுக்கிறான்.

மற்றவர்களில் இருந்து அந்த ஆணையை நிறைவேற்றி, பரிசுகளைப் பெறவைத்து, மகிழ்ச்சியைக் கொடுக்கிறான்.

**மன விஷயதொ$^3$ளகி$^3$ரிஸி விஷயவ**
**மனதொ$^3$ளகெ$^3$ நெலெகொ$^3$ளிஸி ப$^3$லு னூ**
**தனவு சுஸமீசீன விது$^3$பாதே$^3$யவெந்த$^3$ருபி$^1$ |**
**கனஸிலாத$^3$ரு தன்ன பாத$^3$த$^3$**
**நெனெவனீயதெ$^3$ ஸர்வரொளகி$^3$**
**த்த$^3$னுப$^4$விஸுவனு ஸ்தூ$^2$லவிஷயவ விஷ்வனெந்தெ$^3$னிஸி ||15**

மன = மனதினை
விஷயதொளகெ = பிடித்தவற்றையே கேட்க வேண்டும், அழகானவற்றையே பார்க்க வேண்டும், சுவையானவற்றையே சுவைக்க வேண்டும் என்னும் விஷய சுகங்களில்
இரிஸி = இறக்கி
விஷயவ = அந்த விஷய சுகங்களை
மனதொளகெ = மனதில்
நெலெகொளிஸி = நிலைநிறுத்தி
இது = இந்த விஷய சுகங்கள்
பலுனூதனவு = மிகவும் புதியதாக இருக்கின்றன
சுசமீசீனவாதுது = மிகச் சிறந்தவை
உபாதேயவு = இதனால் சீக்கிரத்தில் சுகம் உண்டாகிறது
எந்தருபி = என்று ஜீவர்களுக்கு தெரியப்படுத்தி
கனஸிலாதரு = கனவிலாவது
தன்ன பாதத நெனெவனு = தன் பாதங்களை நினைப்பவர்களை
ஈயதெ = கொடுக்காமல்
சர்வரொளகித்து = அனைத்து பிராணிகளிலும் இருந்து
விஷ்வனெந்து = விஸ்வ என்று
எனிஸி = அழைக்கப்படுபவன்
ஸ்தூலவிஷயவ = ஸ்தூலமான விஷய போகங்களை அனுபவிப்பான்

சாத்விகர்களின் மனதை மட்டும் தன் பாதாரவிந்த ஸ்மரணையில் நிறுத்தி, விஷய சுகங்கள் தற்காலிகமானவை என்று சொல்லி, அவர்களுக்கு ஞானத்தைக் கொடுக்கிறான் ஸ்ரீபரமாத்மன். ராஜஸ தாமஸ மக்களை அப்படி செய்வதில்லை. அவர்களுக்கு எப்படி அருள்கிறான் என்பதையே இந்த பத்யத்தில் சொல்கிறார் தாசராயர்.

மனதினை விஷய சுகங்களில் நிலைநிறுத்துகிறான். அதாவது, சுவையான உணவுகளையே உண்ண வேண்டும். ஸ்த்ரீயர்களின் போகங்களை அனுபவிக்க வேண்டும் என்னும் விஷய சுகங்களில் அவர்கள் மனதினை வைத்து, இவை எப்போதும் புதியது, இவற்றையே நாம் எப்போதும் அனுபவிக்க வேண்டும் என்னும் எண்ணத்தை விதைத்து, அதையே திடமாக்கி, ஜாக்ர அவஸ்தையில் அதாவது

அவர்கள் விழித்திருக்கும்போது பகவத் ஸ்மரணையே வராமல், கனவில் கூட தன் பாதாரவிந்தங்களின் ஸ்மரணையைக் கொடுக்காமல், விஷ்வ என்று அழைத்துக் கொண்டு அனைத்து இடங்களிலும் இருந்து, ஸ்தூலமான சுகங்களை தான் அனுபவிக்கிறான்.

ஸ்வநிர்மிதேஷு நிர்விஷ்ணோ புங்க்தே பூதேஷு தத்குர்ணா - பிராணிகளில் தான் இருந்து அந்த தேகத்திற்கு சம்பந்தப்பட்ட சுகங்களை மட்டும் அனுபவிக்கிறான் என்னும் பாகவத வாக்கியமே இதற்கு ஆதாரமாக இருக்கிறது.

**தோ$^{1}$த$^{3}$க$^{1}$னு தானாகி$^{3}$ மனமொத$^{3}$**
**லாத$^{3}$ க$^{1}$ரணதொளித்து$^{3}$ விஷயவ**
**நைது$^{3}$வனு நிஜபூர்ண ஸுக$^{2}$மய க்$^{3}$ராஹ்ய க்$^{3}$ராஹக$^{1}$னு |**
**வேத$^{3}$வேத்$^{3}$யனு திளியத$^{3}$வனோ**
**பா$^{1}$தி$^{3}$ பு$^{4}$ஞ்சிஸுதெ$^{1}$ல்லரொளகா$^{3}$**
**ஹ்லாத$^{3}$ ப$^{3}$டு$^{3}$வனு ப$^{4}$க்தவத்ஸல பா$^{4}$க்யஸம்ப$^{1}$ன்ன ||16**

தோதகனு = எதையும் தீர்மானிப்பவன்
தானாகி = தானே ஆன
மனமொதலாத = மனது முதலான
கரணதொளித்து = இந்திரியங்களில் இருந்துகொண்டு
விஷயவனு = விஷய சுகங்களை
ஐதுவனு = (பரமாத்மன் தானே) அவற்றைப் பெறுகிறான்
நிஜபூர்ண சுகமய = பூர்ணானந்த ஸ்வரூபன் (ஆனாலும்)
க்ராஹ்யக்ராஹகனு = கந்த ரஸ முதலான வஸ்துகளில் இருந்து, க்ராஹ்ய என்று பெயர் பெறுகிறான், மூக்கு, நாக்கு ஆகிய இந்திரியங்களில் இருந்து க்ராஹக என்று பெயர் பெறுகிறான்.
பாக்யசம்பன்ன = ஷட்குணைஸ்வர்யங்களைக் கொண்டவனான, பக்தவத்ஸலனான ஸ்ரீபரமாத்மன்
திளியதவனோபாதியலி = ஒன்றும் தெரியாதவனைப் போல
புஞ்சிசுத = அவரவர தேகங்களில் சுகங்களை போகித்தவாறு
எல்லரொளகு = அனைவரின் தேகங்களிலும் இருந்து மகிழ்ச்சியடைகிறான்.

ஸ்ரீபரமாத்மன், மனம் முதலான இந்திரியங்களில் இருந்து, ஜீவர்களுக்கு விஷயாதிகளில் ஆசையை உருவாக்கி செய்யும் செயல்கள் என்ன?

ஸ்ரீபரமாத்மன், மனம் முதலான இந்திரியங்களில் இருந்து, அதாவது, கண்களில் இருந்து, ரூபங்களை பார்ப்பது, காதுகளில் இருந்து சத்தத்தைக் கேட்பது, மூக்கில் இருந்து வாசனையை ஸ்வாசிப்பது ஆகிய செயல்களை செய்கிறான். நாக்கினில் இருந்து ருசியை ஏற்றுக் கொள்கிறான். தோல் சர்மங்களில் இருந்து, குளிர் வெயில் ஆகியவற்றை உணர்கிறான். மேலும், கண் காது போன்ற இந்திரியங்களின் அபிமானிகளான தேவதைகளில் இருந்து பார்ப்பது, கேட்பது, உண்பது, ஜீர்ணிப்பது, குளிர் வெயில்களை உணர்வது என அந்தந்த செயல்களை செய்கிறான். இதன்

பொருள் என்னவெனில்: கண் முதலான அபிமானி தேவதைகளில் இருந்து பார்ப்பதற்கும், கேட்பதற்கும் தீர்மானிக்கிறான். கண் முதலான இந்திரியங்களில் இருந்து ரூப, சப்தங்களை ஏற்றுக்கொள்கிறான் என்று அறியவேண்டும்.

க்ராஹ்ய க்ராஹக என்றால்: கண்களால் பார்க்கத் தகுதியானவை அழகான வஸ்துகள். இதற்கு க்ராஹ்ய என்று பெயர். ரூபங்களை பார்ப்பவை கண் முதலான இந்திரியங்கள். ஸ்ரீபரமாத்மன் தானே க்ராஹ்ய ரூபியாகவும், க்ராஹக ரூபியாகவும் இருக்கிறான். இப்படி, தத்வாபிமானி தேவதைகளில் இருந்து, க்ராஹ்ய வஸ்துகளை ஏற்றுக்கொள்ளுமாறு சொல்லி, இந்திரியங்களில் இருந்து அவற்றை ஏற்றுக்கொண்டு, விஷய சுகங்களை அனுபவிக்கிறான். அவனோ, எப்போதும், பூர்ணானந்த ஸ்வரூபன். ஒருவரில் இருந்து ஆனந்தத்தை ஏற்றுக்கொள்வது அவனுக்கு பெரிய விஷயமில்லை. வேதங்களால் புகழப்படுபவன். ஆறு நற்குணங்களால் நிரம்பியவன். ஆனாலும், ஜீவர்களில் இருந்து, ஒன்றும் தெரியாதவனைப் போல, அந்தந்த தேகங்கள் ஏற்கும் சுகங்களை ஏற்று மகிழ்ச்சியடைகிறான்.

தனக்கு சுக அனுபவங்களின் விருப்பமே இல்லாவிட்டால், ஸ்ரீபரமாத்மன், ஜீவர்களில் இருந்து அந்த சுகங்களை ஏன் அனுபவிக்க வேண்டும்? அதாவது, அவன் பக்தவத்ஸலன் ஆகையால், ஜீவர்களை மேம்படுத்துவதற்காக (உத்தரிப்பதற்காக) தான் அவற்றை ஏற்றுக்கொள்கிறான். பாகவத 7ம் ஸ்கந்தத்தில், இவ்வாறு சொல்லப்பட்டிருக்கிறது.

நைவாத்மன: ப்ரபுரயம் நிஜலாபபூர்ணோ மானஞ்சனாதவிதுஷ: கருணோவ்ருணீதே |
யத்யஜ்ஜனோ பகவதே விததீதமானம் தச்சாத்மனே ப்ரதிமுகஸ்ய யதாமுகஸ்ரீ: ||

இந்த ஸ்லோகத்தை ஏற்கனவே ஒரு இடத்தில் உதாரணமாகப் பார்த்திருக்கிறோம். ஆனாலும், பேசும் விஷயத்திற்கு சம்பந்தப்பட்டிருப்பதால் மறுபடி இங்கே பார்க்கலாம். ஸ்ரீபரமாத்மனுக்கு தன் விருப்பத்தினாலேயே தனக்கு பூர்ணமான சுகம் இருக்கிறதே தவிர, ரமாதேவியர் மூலமாகக்கூட தனக்கு ஆகவேண்டியது ஒன்றும் இல்லை. அப்படி இருந்தாலும், தகுதியானவர்களில் இருந்து பூஜைகளை செய்வித்து, ஜீவர்களில் இருந்து அதை ஏற்றுக்கொள்கிறான். அது எதற்கு என்றால், அவன் கருணைக்கடல் ஆகையால், பக்தர்களின் பூஜையை ஏற்றுக்கொள்ளாமல் இருந்தால், பக்தர்களுக்கு திருப்தி ஆவதில்லை. அவர்களின் நலனுக்காகவே தான் அவற்றை ஏற்றுக்கொள்கிறான். நம் முகத்தின் அலங்காரத்தைப் பார்த்து மகிழவேண்டும் என்றால், அதை கண்ணாடியில் பார்த்து மகிழவேண்டுமே தவிர, நம் முகம் நமக்குத் தெரிவதில்லை. ஆனால், கண்ணாடியில் தெரியும் முகத்தின் பிரதிபிம்பத்திற்கு அலங்காரம் செய்வது சாத்தியமில்லை. ஆகையால், நம் முகத்திற்குத் தேவையான அலங்காரம் செய்துகொண்டு, கண்ணாடியில் அதைப் பார்த்து மகிழ்வதைப் போல, பிம்பனான பரமாத்மன் பூஜையை ஏற்றுக்கொண்டால் நமக்கு மகிழ்ச்சி உண்டாகிறது என்பதே இந்த ஸ்லோகத்தின் கருத்து.

மரங்களின் வேருக்கு நீர் இறைத்தால், அதன் கிளைகள் வளர்வதைப் போல், நம் தேகத்தின் இருந்து பரமாத்மன் சுகங்களை அனுபவித்தால், அது ஜீவனுக்கு திருப்தி ஆகிறது. இல்லையெனில், ஜீவன் சுகத்தைப் பெறுவதில்லை. ஆகையாலேயே, ஸ்ரீபரமாத்மன் தேகங்களில் இருந்து விஷய சுகங்களை அனுபவித்து, ஜீவனை திருப்திப்படுத்துகிறான் என்று அறியவேண்டும்.

**நித்ய நிக$^{3}$மாதீ$^{1}$த$^{1}$ நிர்கு$^{3}$ண**
**ப்$^{4}$ருத்$^{1}$யவத்ஸல ப$^{4}$யவினாஷன**
**ஸத்யகா$^{1}$ம ஷரண்ய ஷாமல கோ$^{1}$மலாங்க$^{3}$ ஸுகி$^{2}$ |**
**மத்த$^{1}$னந்த$^{3}$தி$^{3}$ மர்த்யரொளஹொர**
**கெ$^{3}$த்த$^{1}$னோட$^{3}$லு ஸுத்து$^{1}$தி$^{1}$ப்பனு**
**அத்யதி$^{4}$க$^{1}$ ஸந்த்ருப்த$^{1}$ த்ரிஜகத்$^{1}$வியாப்த$^{1}$ பரமாத்ம ||17**

நித்ய நிகமாதீத = நித்யமான வேதங்கள் கூட விளக்குவதற்கு சாத்தியமில்லாத குணரூபங்களைக் கொண்டவன்.
நிர்குண = சத்வரஜஸ்தமோ குணங்களுக்குக் கட்டுப்படாதவன்
ப்ருத்யவத்ஸல = பக்தர்களில் அன்பு கொண்டவன்
பயவினாஷன = பக்தர்களின் பயங்களைப் போக்குபவன்
சத்யகாம = உண்மையான விருப்பம் கொண்டவன்
ஷரண்ய = வேண்டுவதற்கு அருகதை கொண்டவன்
ஷாமலகோமலாங்க = கருப்பு வர்ணத்தைக் கொண்ட அழகான தேகத்தைக் கொண்டவன்
சுகி = சுக ஸ்வரூபன்
மத்தனந்ததி = மத்யபானங்களைக் குடித்து, சுயநினைவு இல்லாமல், பயமில்லாமல் சுற்றுபவனைப் போல
மர்த்யர = மனுஷ்யாதி பிராணிகளின்
ஔஹொரகெ = உள்ளே மற்றும் வெளியே
யித்தனோடலு = எங்கு பார்த்தாலும்
இப்பனு = இருக்கிறான்
அதி = மிகவும்
அதிக = அதிகமாக
சந்த்ருப்த = எப்போதும் திருப்தியாகவே இருக்கிறான்
த்ரிஜகத் வியாப்த = மூன்று உலகங்களிலும் வியாப்தனாக இருக்கிறான்
பரமாப்த = பக்தர்களுக்கு நண்பனானவன்.

ஸ்ரீபரமாத்மன், நித்யமான வேதங்களில் சொல்லப்பட்டிருப்பதைவிட அதிக குணரூபங்களைக் கொண்டவன். சத்யரஜஸ்தமோ என்னும் ப்ராக்ருத குணங்கள் அற்றவன். தன் பக்தர்களில் அதிக அன்பினைக் கொண்டவன். பக்தர்களுக்கு வரும் பயங்களை பரிகரிப்பவன். அவனின் சங்கல்பங்கள் என்றும் வீணாவதில்லை. சரணடைவதற்கு தகுதியுள்ளவன். கருமை நிறத்தவன். அழகான அங்கங்களைக் கொண்டவன். நித்யானந்த ஸ்வரூபன். எப்போதும் திருப்தியுடன் இருப்பவன். மூன்று உலகங்களின் உள்ளேயும் வெளியேயும் வியாப்தனாக இருப்பவன்.

பக்தர்களுக்கு நட்பானவன். மத்யபானங்களைக் குடித்தவர்கள், எப்படி மெய்மறந்து, சுய நினைவில்லாமல், பயமில்லாமல் சுற்றுவரோ, அதைப்போல, அனைத்து பிராணிகளின் உள்ளே, வெளியே மற்றும் அதன் சுற்றிலும் எங்கு பார்த்தாலும் அங்கு இருப்பவன். சந்திரமுகி என்னும் உதாரணத்தில், சந்திரனின் ஒளியை மட்டும் எப்படி உவமையாக எடுத்துக்கொள்கிறோமோ அப்படி, இங்கு மத்யபான உதாரணத்தில் இருக்கும் பயமில்லாமை என்னும் குணத்தை மட்டும் எடுத்துக் கொள்ளவேண்டும்.

**ப[1]வி ஹரின்மணி வித்[3]ருமத[1] ஸ**
**ச்சவிக[3]ளந்த[3]தி[3] ராஜிஸுத[1] மா**
**த[4]வ நிரந்தர தே[3]வ தா[3]னவ மானவரொளித்து[3] |**
**த்ரிவித[3]கு[3]ண கர்ம ஸ்வபா[4]வவ**
**பவனமுக[2] தே[3]வாந்தராத்மக[1]**
**தி[3]வஸ தி[3]வஸதி[3] வ்யக்த[1]மாடு[3]த[1] அவரொளித்து[3]ணிப[1] ||18**

பவி = வைரம்
ஹரின்மணி = நீலமணி
வித்ரும = பவளம்
சச்சவிகளந்ததி = மிகச்சிறந்த மணிகளைப் போல
ராஜிஸுவ = ஒளிர்ந்தவாறு
மாதவ = ஸ்ரீரமாபதி
நிரந்தர = எப்போதும்
தேவமானவதானவரொளித்து = தேவதைகளில், மனிதர்களில், தானவர்களில் இருந்து
த்ரிவித = மூன்று விதமான
குண = சத்வ ரஜஸ் தமோ என்னும் குணங்கள்
கர்ம ஸ்வபாவவ = மூன்று வித குணங்களின் ஸ்வபாவமான மூன்று வித கர்மங்களை
பவனமுக தேவாந்தராத்மக = வாயுதேவரில் தொடங்கி அனைத்து தத்வாபிமானி தேவதைகளில் அந்தர்யாமியாக இருந்து
திவசதிவசதி = தினந்தோறும்
வ்யக்திமாடுத = நிலைத்திருந்து
அவரொளித்து = த்ரிவித ஜீவர்களிலும், அந்தந்த தேவதைகளிலும் இருந்து
உணிப = த்ரிவித ஜீவர்களுக்கு சுக துக்கங்களின் கலவையான சுக துக்கங்களைக் கொடுக்கிறான்.

ஸ்ரீபரமாத்மன், சாத்விகர்களுக்கு வைரத்தைப் போல ஒளிபொருந்திய, ராஜசர்களுக்கு கருப்பு சேர்ந்த நீலமணி போலவும், தாமசர்களுக்கு பவளத்தைப் போலவும், இப்படி சிறந்த ஒளியுடன் ஒளிர்ந்தவாறு, தினந்தோறும் சாத்விகரான தேவதைகளிலும், ராஜஸரான மனிதர்களிலும், தாமசர்களான தானவர்களிலும் இருந்து, சாத்விகர்களால் சத்கர்மங்களையும், ராஜசர்களால் இருவித கர்மங்களையும், தாமசர்களால் கெட்ட செயல்களையும், அவரவர்களின் சுபாவத்திற்கேற்ப

செய்வித்து, வாயுதேவர் முதலான தத்வாபிமானி தேவதைகளுக்குள் அவரவர் ரூபியாகவே இருந்து, தினந்தோறும் அவரவர்களின் ஸ்வபாவிக கர்மங்களை செய்வித்தவாறு, சாத்விகர்களுக்கு சுகங்களை, ராஜசர்களுக்கு சுகதுக்கங்களின் கலவையையும், தாமசர்களுக்கு துக்கங்களையும் கொடுக்கிறான். (அவர்களின் அனுபவத்திற்குக் கொண்டு வருகிறான்).

இதில், பவி, ஹரின்மணி, வித்ரும என்றால் வைரம், நீலமணி, பவளம் என்னும் மூன்று வர்ணங்களை, சாத்விக, ராஜஸ, தாமஸர்களுக்கு ஒப்பிட்டால், பாகவதாதிகளில் சொல்லப்பட்ட விஷயங்களுக்கு வேறுபாடு வருகிறது. அது எப்படியெனில், பாகவத 10ம் ஸ்கந்தத்தில்:

ஸத்வந்த்ரிலோகஸ்திதயே ஸ்வமாயயாபிபர்தி ஷுக்லங்கலு வர்ணமாத்மன: |
ஸர்காய ரக்தம் ரஜசோப ப்ரும்ஹிதம் க்ருஷ்ணாந்துவர்ணம் தமஸாஜனாத்யயே ||

என்னும் ஸ்லோகத்தில், உலகத்தை காப்பாற்றுவதற்காக, நீ சத்வ குணத்தை பிரதிபலிக்கும் வெண்மை நிறத்தை ஏற்றாய். ஸ்ருஷ்டி செய்யும் காலத்தில், ரக்த வர்ணத்தை ஏற்றாய். மக்களை அழிக்கும் காலத்தில் தமோ குணத்தை பிரதிபலிக்கும் கருப்பு வர்ணத்தை ஏற்றாய் - என்கிறார். இதிலிருந்து ரஜோ குணரூபம் ரக்த வர்ணம் என்றும், தமோ குணரூபம் கருப்பு வர்ணம் என்றும் தெளிவாகிறது. தாசராயரின் வாக்கியத்திலிருந்து, சாத்விக ரூபம் வைரம் என்றும், ராஜ ரூபம் நீலமணி என்றும், தாமஸ ரூபம் பவள வர்ணம் என்றும் தெரிகிறது. இங்கு சொல்லப்பட்டிருக்கும் நீல வர்ணம் என்பது கருப்பு வர்ணத்திற்கும் பொருந்துகிறது. எப்படியெனில், ஸ்ரீகிருஷ்ணன் சில இடங்களில் கருப்பு வர்ணன் என்றும் சில இடங்களில் நீல வர்ணன் என்றும் வர்ணிக்கப்பட்டிருக்கிறான். சில சமயங்களில் கூந்தலை வர்ணிக்கும்போது ’நீலகுந்தல’ என்று சொல்லியிருப்பதால் கிருஷ்ண வர்ணத்திற்கு நீலம் என்றும் பெயருண்டு என்பது தெளிவாகிறது.

ஆக, தாசரின் வாக்கியத்திலிருந்து, வெண்மை, கருப்பு, சிவப்பு ஆகிய வர்ணங்களை வரிசையாக சொல்லி, தேவ, மானவ, தானவ என்று சொல்லியிருப்பதால், பாகவதாதி கிரந்தங்களில் சொல்லியிருப்பதற்கு வேறுபாடு தெரிகிறது. ஆகவே இந்த பத்யத்தில் ‘தேவ மானவ தானவ’ என்பதற்கு பதில் ‘தேவ தானவ மானவ’ என்று இருக்கலாம் என்று நினைக்கிறோம். அப்படி இருந்தால், சாத்விக, தாமஸ, ராஜஸ என்னும் வரிசையை வைத்துக்கொண்டால், மேற்சொன்ன பாகவத ஸ்லோகத்திற்கு பொருந்துகிறது. இதே விதமாகவே, உத்தம அதம மத்யம என்று நிர்ணயங்களில் ஏற்றுக் கொண்டிருக்கின்றனர்.

**அணு மஹத்தினொளிப்ப க4ன பர**
**மணு வினொளக3ட3கி3ஸுவ ஸூக்ஷ்மவ**
**முணுகி3ஸுவ தே1லிஸுவ ஸ்தூ2லக3ளிவன மாயவிது3 |**
**த3னுஜ ரக்க1ஸரெல்ல ரிவனொளு**
**முனிது3 மாடு3வதே3னுலூக2ல**
**வனிகெ1க3ளு தா4ன்யக3ள ஹணிவந்த3த3லி ஸம்ஹரிப ||19**

அணு = மிகவும் சிறிய பொருட்களில் அதைவிட சிறியதாகவும்
மஹத்தினொளு = மிகப்பெரிய பொருட்களில் அதைவிட பெரியதாகவும், அதில் அந்த பொருட்களின் உருவமாகவும்
இப்ப = இருக்கிறான்
கன = பெரிய பொருட்களை
பரமணுவினொளகெ = மிகச்சிறிய பொருட்களின் உள்ளே
அடகிஸுவ = அடங்கியிருக்கிறான்
சூக்ஷ்மவ = மிகச்சிறிய பொருட்களை
முணுகிசுவ = நீரில் மூழ்கடிக்கும்
ஸ்தூலகள = மிகப்பெரிய பொருட்களை
தேலிசுவ = மிதக்க வைக்கும்
இது = இந்த அபாரமான சக்தி
அவன = ஸ்ரீபரமாத்மனின்
தனுஜரக்கஸரெல்லரு = தைத்ய அசுரர்கள் அனைவரும் சேர்ந்து
இவனொளு = இந்த பரமாத்மனில்
முனிது = த்வேஷம் செய்து ஆவதென்ன?
உலூகவனிகெகளு = மிகப்பெரிய பாத்திரங்கள்
தான்யகள = அரிசி முதலான தானியங்களை
ஹணிவந்ததலி = உமியைப் பிரித்து தானியங்களை மட்டும் வைத்துக் கொள்வதைப் போல
சம்ஹரிப = தேகங்களை அழித்து, ஜீவர்களை மட்டும் வைத்துக் கொள்கிறான்.

மிகச்சிறந்த சக்தி பரமாத்மனுடையது என்றும், ஜீவனுக்கும் பரமாத்மனுக்கும் எப்போதும் பேதம் இருக்கிறது என்றும் இந்த பத்யத்தில் தாசராயர் சொல்லியவாறு, ஜீவ பரமாத்மனின் பேதத்தை தெரிவிக்கும் வேத அர்த்தங்களை இங்கு விவரிக்கிறார்.

பரமாத்மன் மிகச்சிறந்த சக்தி உடையவன். எப்படியெனில்: 'அணோரணீயான் மஹதோ மஹீயான்' என்னும் வேத மந்திரத்தில் சொல்லப்பட்டிருப்பதைப் போல, மிகவும் சிறிய பொருட்களில் அதைவிட சிறியதாகவும், மிகப்பெரிய பொருட்களில் அதைவிட பெரியதாகவும் இருந்து அதை காக்கிறான். பாகவத 3ம் ஸ்கந்தத்தில் இவ்வாறு சொல்லப்பட்டிருக்கிறது.

சரமஸ்து விஷேஷாணா மனோகாஸம்யுதஸ்யுய: |
பரமாணு: ஸவிக்ஞே யோன்ருணா மைக்யப்ரமோயத: ||
ஸதஏவபதார்த்தஸ்ய ஸ்வரூபாவஸ்திதஸ்யயத் |
கைவல்யம் பரம மஹானவிசேஷோ நிரந்தர: ||

இதன் பொருள் என்னவெனில்: ஏதேனும் ஒரு பொருளை, உதாரணத்திற்கு ஒரு தலைமுடியை முடியும்வரைக்கும் பிரித்து, அதை துண்டு துண்டாக வெட்டி, அதைவிட சிறியதாக முடி இருக்கமுடியாது என்று ஆக்கியபிறகு, அதையே

பரமாணு என்று சொல்லலாம். அத்தகைய பரமாணு வஸ்துவில் அதைவிட சிறியதாக பரமாத்மன் இருக்கிறான். அவ்வளவு சூக்ஷ்ம ரூபியானாலும், ஸ்ரீபரமாத்மன், சங்கு சக்கர கதா பத்மங்களை நான்கு கரங்களிலும் ஏந்தியும், பீதாம்பரதாரியாகவும், கிரீட குண்டலங்களை தரித்தும், ஸ்ரீலட்சுமிதேவியின் இருப்பிடமான ஸ்ரீவத்ஸங்களுடனும், கௌஸ்துபாபரணத்துடனும், வனமாலையை தரித்திருக்கிறான். ஸ்ரீலட்சுமிதேவி அந்த பரமத்மனின் வக்ஷஸ்தலத்தில் நிலைத்திருக்கிறாள். ஸ்ரீலட்சுமிதேவி பரமாணுரூபியான பரமாத்மனின் வக்ஷஸ்தலத்தில் மிகவும் சூக்ஷ்ம ரூபத்தில் இருக்கிறாள் என்றால், பரமாத்மனைவிட சிறிய ரூபமாக லட்சுமிதேவிக்கு சொல்லவேண்டுமே தவிர, பரமாத்மனுக்கு எப்படி சொல்லலாம் என்றால்; பரமாத்மன் தன் விருப்பத்தின்படியே லட்சுமிதேவிக்கு இத்தகைய சூக்ஷ்ம ரூபத்தைக் கொடுத்து, தன் வக்ஷஸ்தலத்தில் வைத்துக்கொண்டிருக்கிறான் ஆகையால், அதுவே பரமாத்மனின் சாமர்த்தியம் ஆகையால், அ-ஸ்வதந்த்ரளான லட்சுமிதேவியை அணுரூபி என்று சொல்ல முடியாது என்று அறியவேண்டும்.

இதைப் போலவே, அனைத்தையும்விட மிகப்பெரியதான பொருட்களைவிட, பெரியதாக, அந்த பெரிய பொருட்களை தன்னில் அடக்கிக்கொண்டு, தானே அனைத்தையும்விட பெரியவன் என்று சொல்லி, அதனால் கைவல்யன் என்று பெயர் பெறுகிறான். அவனைவிட பெரியதான பொருள் வேறெதுவும் இல்லை என்று அர்த்தம். இதே அர்த்தத்தையே தாசராயர் இங்கு சொல்லியிருக்கிறார்.

மேலும், மிகப்பெரிய பொருட்களை பரமாணுவில் அடக்குகிறான். பிரளய காலத்தில், ஆலயிலையில் ஒரு குழந்தையைப் போல படுத்திருக்கும்போது, மார்க்கண்டேயர் அக்குழந்தையின் மூக்கு துவாரத்தில் நுழைந்து, பிரம்மாண்டத்தின் அனைத்து வஸ்துகளையும் பார்க்கிறார். கிருஷ்ணாவதாரத்தில், கிருஷ்ணன் மண் தின்றான் என்று நினைத்து, யசோதை அவனை வாய் திறக்கச் சொல்லி கேட்க, அவன் வாயில், மொத்த உலகத்தையும் கண்டு, வியப்படைந்தாள் என்று பாகவதத்தில் சொல்லப்பட்டிருக்கிறது. ஸ்ரீபரமாத்மன், பரமாணு வஸ்துகளில் பரமாணுவாக இருந்தாலும், அந்த பரமாத்மனின் வயிற்றில் மிகப்பெரியதான பிரபஞ்சமே அடங்கியிருக்கிறது. ஆகையாலேயே, தாசராயர் 'கனபரமாணு வினொளகடடிசுவ' என்கிறார்.

சிறிய பொருட்களை தண்ணீரில் மூழ்கடிக்கிறான். பெரிய பொருட்களை மிதக்க வைக்கிறான். சிறிய பொருட்களான ராகி ஆகியவை தண்ணீரில் மூழ்கிவிடும். பெரியதான கப்பல்கள் மிதக்கின்றன. இவை அனைத்தும் அவனின் மாயை என்றே அறியவேண்டும். தானியங்களை உரலில் போட்டு, உலக்கையால் குத்தினால், உமிகள் பிரிந்து தானியங்கள் மட்டும் எப்படி தனியாக வருகின்றனவோ, அதுபோலவே, பரமாத்மன் தன்னை த்வேஷிக்கும் அசுர ராக்ஷசர்களின் தேகங்களை அழித்து, ஜீவர்களை பிரித்தெடுக்கிறான். இதனால், மூன்றுவித ஜீவர்களும் அனாதி காலத்திலிருந்தே பரமாத்மனிடமிருந்து வேறுபட்டிருக்கின்றனர் என்பது தெளிவாகிறது. இந்த விஷயத்தில் பாகவத 10ம் ஸ்கந்தத்தின், ஸ்ருதிகீதா தாத்பர்யத்தில், ஸ்ருதியை உதாரணம் காட்டியிருப்பர். அது எப்படியெனில்:

அபேதமேக மேகோஸ்மி நி:ஷ்ணாடபித்வாகி மூதித்ரய:கரந்தி |
களேன பர்ஷான் ப்ரதிஹன்மிபூரி கிம்மானிந்தந்தெ ஷத்ரவோனிந்த்ரா: ||
(ரிக்வேதம் 8-1-6)

இது ஸ்ரீபரமாத்மனின் வாக்கியம். இந்த உலகம் முழுக்க என்னுடன் போர் புரியவந்தால், நான் மட்டும் அதை எதிர்த்து நிற்பேன். இப்படிப்பட்ட உலகங்கள் இரண்டு என்னுடன் போர் புரிந்தாலும், நானே ஜெயிப்பேன். இத்தகைய உலகங்கள், மூன்று அல்லது அதைவிட அதிகம் ஆகட்டும், என்னை எதுவும் செய்யமுடியாது. உரலில் உலக்கையினால் குத்தி, தானியங்களை பிரித்தெடுப்பதைப் போல, அவர்களின் தேகங்களை நான் பிரித்தெடுக்கிறேன். உமி தனியாக வருவதைப் போல, அவர்களின் ஜீவன்களை பிரிக்கிறேன். அவர்கள் என்னை தூஷிக்கின்றனர்? தோஷங்கள் அற்றவனான என்னை என்ன சொல்லி தூஷிப்பர்? தோஷங்கள் இல்லையென்றாலும், ஏதோ ஒன்றை சொல்லி குற்றம் சாட்டுவர். ஆகையால் 'அனிந்த்ரா' சக்தி இல்லாதவர்கள் என்று ஸ்ருதி சொல்கிறது.

இந்த ஸ்ருதியை, ஸ்ருதிகீதையில் 16வது ஸ்லோக 'நஹிபரமஸ்ய' என்னும் ஸ்லோகத்தில் - 'அபரிமிதா த்ருவாஸ்தனுப்ய தோயதிஸர்வனஹி ஸஷாஷ்யதீதி நிகமோப்ரவ தேசததா' - என்னும் வாக்கியத்திற்கு ஸ்ரீமதாசார்யர் தாத்பர்யத்தில் உதாரணம் கொடுத்திருக்கிறார். ஜீவர்கள் அனாதி காலத்திலிருந்து, வாயுதேவரின் அதீனத்தில், ஸ்வரூப தேகங்களைக் கொண்டிருக்கின்றனர். அவர்கள் அனைவரும் உனக்கு கட்டுப்பட்டவர்களே. தற்போது மேலே சொன்ன 'அபேதம்' என்னும் ஸ்ருதியும் இதையே சொல்கிறது. இந்த வாக்கியத்தினாலும், இந்த ஸ்ருதி வாக்கியத்தினாலும், ஜீவர்கள் அனாதி காலத்திலிருந்தும், இருக்கின்றனர். அவர்களின் தேகங்களை மட்டும் நாசம் செய்கிறேன் என்று சொன்னதால், ஜீவர்கள் வேறு பரமாத்மன் வேறு என்று தெரிய வருகிறது.

**தே[3]வ மானவ தா[3]னவரு யெ**
**ந்தீ[3]வத[3]தி[3] ஆவாக[3] இப்ப[1]ரு**
**மூவரொளகி[3]வகி[3]ல்ல ஸ்னோஹோதா[3]ஸீன த்[3]வேஷ |**
**ஜீவ ரதி[4]காரானுஸாரத[3]**
**லீவ ஸுக[2] ஸம்ஸார து[3]க்கவ**
**தானுணதெ[3] அவரவரிகு[3]ணிஸுவ நிர்க[3]தாஷனனு ||20**

தேவமானவ தானவரு = தேவதைகள், மனிதர்கள் மற்றும் தைத்யர்கள்
எந்து ஈ விததலி = இந்த விதமாக
இப்பரு = இருக்கிறார்கள்
மூவரொளு = இந்த மூன்று வகையானவர்களில்
இவகெ = இந்த பரமாத்மனுக்கு
ஸ்னேஹ = தேவதைகளில் நட்பாகட்டும்
உதாசீன = மனிதர்களில் உதாசீனமாகட்டும்
த்வேஷா = தானவர்களில் த்வேஷம் ஆகட்டும், இல்லை

ஜீவர = த்ரிவித ஜீவர்களின்
அதிகாரானுசாரதலி = யோக்யதைக்கேற்ப
சுக = தேவதைகளுக்கு சுகங்களை
சம்சார = மனிதர்களுக்கு கலவையான சுக துக்கங்களை
துக்கவ = தைத்யர்களுக்கு நித்ய துக்கத்தை
தா = தான்
உணதலெ = கொடுக்காமல்
அவரவரிகெ = அவரவர்களுக்கு
உணிசுவ = கொடுக்கிறான்
நிர்கத = இல்லாமல்
அஷனனு = ஆகாரம் உள்ளவன்

த்ரிவிதா ஜீவஸங்காஸ்து தேவமானுஷ தானவா: |
தத்ர தேவாமுக்தி யோக்யா: மானுஷேஷோத்தமஸ்ததா ||
மத்யமா மானுஷாயேது ஸ்ருதியோக்யாஸ்ததைவஹி |
அதமா நிரயான்யைவ தானவாஸ்து தமோலயா: ||
முக்திர்னித்யா தமஸ்சைவ நாவ்ருத்தி: புர்னரேதயோ: ||
தேவானாம் நிரயோனாஸ்தி தமஸ்சாபி கதஞ்சன: |
நாசுராணாம் ததா முக்தி: கதாசித்கேனசித்க்வசித் ||
மானுஷாணாம் மத்யமானாம் நசைதத்வ்யமவாப்யதே ||
(மகாபாரத தாத்பர்ய நிர்ணயம் 1-86-89)

ஜீவராசிகளில் தேவதைகள் என்றும், மனிதர்கள் என்றும், அசுரர்கள் என்றும் மூன்று வகைகள் உள்ளன. இதில் தேவதைகள் அனைவரும் மனுஷோத்தமர்கள் முக்தி யோக்யர்கள் ஆவர். மனிதர்களில் மத்யமர் எப்போதும் நித்ய சம்சாரிகள். மனிதர்களில் அதமர் நரகத்தை அனுபவிப்பவர்கள் ஆவர். தானவர்கள் அனைவரும் தமோயோக்யர்கள் ஆவர். இதில் முக்திக்கு சென்றவர்களுக்கும், தமஸ்ஸிற்கு சென்றவர்களுக்கும் மறுபிறவி இல்லை. தேவதைகளுக்கு நரகமோ, தமஸ்ஸோ என்றும் இல்லை. அசுரர்களுக்கு, எந்த சாதனைகளை செய்தாலும், எந்த காலத்திலும் முக்தி கிடையாது. மனிதர்களில் மத்யமர்களுக்கு முக்தியோ, தமஸ்ஸோ கிடையாது. இந்த அபிப்பிராயத்தையே தாசராயர் இந்த பத்யத்தில் சொல்லியிருக்கிறார்.

இப்படி தேவ மனித தானவ என்னும் மூன்று வித ஜீவராசிகளில், தேவதைகளில் பரமாத்மனுக்கு நட்போ, மனிதர்களில் உதாசீனமோ, தானவர்களில் த்வேஷமோ இல்லை. அனைவரையும் சமமாகவே பாவிக்கிறான். அப்படியெனில் 'இந்த்ரஸ்யார்த்தெ கதம் தைத்யானவதீத்விஷமோயதா' என்னும் பாகவத 7ம் ஸ்கந்தத்தில் பரமாத்மன் அனைவருக்கும் சமமானவன். அன்பானவன். இப்படியிருக்கையில், இந்திரன் மேல் இருக்கும் அன்பினால், தைத்யர்களைக் கொன்றது எதற்காக? என்று பரிக்ஷித் ராஜன் கேட்க, சுகாசார்யர் இப்படியாக அதற்கு பதில் சொல்கிறார்.

தேஷகால குணாம்ஸ்சைவ பக்தாதீனப்யவேக்ஷ்யது |
யோக்யதாஞ்ச ததா கர்ம சம இத்யபிதீயதே ||

என்னும் பாகவத தாத்பர்யத்தின் வசனத்தின்படி, தேச, கால, குணங்கள் ஆகியன, அவரவர்களின் கர்ம, யோக்யதை, இவற்றை அனுசரித்து அவரவர் செய்யும் பக்தி த்வேஷாதிகளுக்கேற்ப பலன்களைக் கொடுப்பதற்கு சமம் என்று பெயர். பக்தி செய்பவருக்கும், த்வேஷம் செய்பவருக்கும் ஒரே பலன்களைக் கொடுப்பதற்கு சமம் என்று பெயரில்லை என்கிறார். ஆகையால், பஜிப்பவர்க்கு அவர்களது பக்திக்கு தக்கவாறு பலன்களை, த்வேஷிப்பவர்க்கு அவர்களது த்வேஷத்திற்குத் தக்கவாறு பலன்களை கொடுப்பதற்கு சமம் என்று பெயர்.

தேவதைகள் பரமாத்மனை ஆராதனை செய்வதால் அவர்களுக்கு சுகங்களைக் கொடுக்கிறான். தைத்யர்கள் த்வேஷம் செய்வதால், அவர்களுக்கு துக்க பலன்களைக் கொடுக்கிறான் என்று அர்த்தம். இதையே இன்னும் விளக்கமாக சொல்கிறார்.

த்ரிவித ஜீவர்களின் அதிகாரத்திற்கேற்ப, தேவதைகளுக்கும் மனுஷ்யோத்தமர்களுக்கும், நித்ய சுகமயமான முக்தியையும், மானவ மத்யமர்களுக்கு நித்ய சம்சாரிக உலகத்தையும், தானவர்களுக்கு நித்ய துக்கமயமான தமஸ்ஸினையும் கொடுத்து, அதை அவர்கள் ஏற்குமாறு செய்கிறார். ஆகாரங்களை ஏற்காத பரமாத்மன், த்ரிவித ஜீவர்களிலும் இருந்து, அவர்களுக்கு சம்பந்தப்படாமல், சுகதுக்கங்களின் சம்பந்தம் இல்லாதிருக்கிறான்.

ஆனால், இதே சந்தியில் முன்னர் ‘தோதகனு தானாகி’ என்னும் பத்யத்தில் ‘கரணதொளித்து விஷயவனைதுவனு திளியதவனோபாதி புஞ்சிஸுத’ ஆகிய பத்யங்களில், பரமாத்மன் ஜீவர்களில் இருந்து சுகங்களை அனுபவிக்கிறான் என்று சொல்லப்பட்டிருக்கிறது. இதனால் இங்கு பரஸ்பரம் வேறுபாடு வரவில்லையா? என்றால் அதற்கான தீர்வு பின்வருமாறு. ஜீவர்கள் தம் கர்மங்களை செய்தவாறு புண்ய சாதனங்களை செய்திருக்கும்போது, தம்முடைய சஞ்சித புண்ணியங்களை அனுபவிக்கின்றனர். அந்த ஜீவர்களுக்காக தானும் அந்த சுகங்களை பரமாத்மன் அனுபவிக்கிறான் என்பது முன்னர் பார்த்த பத்யத்தின் அபிப்பிராயம். இந்த பத்யத்தில், முக்தர் ஆனபிறகு, சுகமயமான ஸ்வரூபமுள்ள ஜீவர்களுக்கு சுகங்களைக் கொடுப்பது மட்டுமல்லாமல், தான் அதை ஏற்றுக்கொள்வதில்லை என்கிறார். இதனால் இதில் வேறுபாடு எதுவும் இல்லை என்று அறியவேண்டும்.

**எல்லி கே1ளித3ரல்லி நோடி3த3**
**ரல்லி பே3டித3ரல்லி நீடித3**
**ரல்லி ஓடித3ரல்லி ஆடித3ரல்லே இருதி1ஹறனு |**
**ப3ல்லித3ரிக3தி1 பல்லித3னு ஸரி**
**யில்ல இவகா3வல்லி நோட3லு**
**கு2ல்ல மானவரொல்லன ப்ரதி1மல்ல ஜகக்கெ1ல்ல ||21**

எல்லி கேளிதரு = எந்த இடத்தில் கதா ஸ்ரவணம் கேட்டுக் கொண்டிருந்தாலும்

எல்லி நோடிதரு = எந்த சல-அசல பிரதிமைகளில் பார்த்துக் கொண்டிருந்தாலும்
எல்லி பேடிதரு = எந்த பிரம்ம ருத்ராதி தேவதைகளை ஆராதனை செய்து அவர்களை வேண்டினாலும்
எல்லி நீடிதரு = பிரம்ம ருத்ராதிகள் யாரின் தவங்களை மெச்சி வரங்களைக் கொடுத்தாலும்
எல்லி ஓடிதரு = சம்சார சாகரத்தின் பிரச்னைகளை தாங்கமுடியாமல் எங்கு ஓடினாலும்
எல்லி ஆடிதரு = எந்த இடத்தில் பரமாத்மனின் நாமோச்சாரணை செய்து கொண்டிருந்தாலும் அல்லது பகவத் கதைகளை கேட்டுக் கொண்டிருந்தாலும்
அல்லி இருதிஹனு = அங்கு இருக்கிறான்
பல்லிதரிகெ = அறிந்தவர்களுக்கு
அதிபல்லிதனு = மிகவும் தெரிந்தவன்
ஆவல்லி நோடலு = எந்த விதத்தில் பார்த்தாலும் / இந்த உலகத்தில் எங்கு பார்த்தாலும்
இவகெ = இந்த பரமாத்மனுக்கு
சரியில்ல = சமம் இல்லை
குல்லமானவர = கர்வம், பொறாமைகளால் பூரணமான பக்தி இல்லாதவர்களின் / படாடோபமாக பூஜிப்பவர்களின் பூஜைகளை
ஒல்லனு = ஏற்றுக்கொள்வதில்லை
ஜகக்கெல்ல = அனைத்து உலகங்களிலும்
அப்ரதிமல்ல = யாராலும் வெல்லப்பட முடியாதவன்.

ஸ்ரீபரமாத்மனின் கதையைக் கேட்பவர்கள், எந்த இடத்தில் அமர்ந்து அதைக் கேட்டாலும், அங்கு பரமாத்மனும் கேட்பவர்களில் இருந்து, அவனும் கேட்டுக் கொண்டிருக்கிறான். திடமான பக்தியுடன் பரமாத்மனையே நம்பி அவன் கதையைக் கேட்பவர்களுக்கு அங்கேயே தரிசனம் அளிக்கிறான். ஜனக மகாராஜா, தான் பாகவத சப்தாஹம் கேட்பதற்காக கங்கை நதிக்கரையில் ஒரு அழகான பந்தலைக் கட்டி அங்கு ஒரு மனத்துடன் நின்று கதையைக் கேட்டுக் கொண்டிருந்தார். அந்த பந்தலில் ஆயிரக்கணக்கானவர்கள் நின்று கதையைக் கேட்டுக் கொண்டிருந்தனர். சனத்குமாரர் புராணத்தை சொல்லிக் கொண்டிருந்தனர். அப்படி கேட்பவர்களின் த்ருடபக்தியை சோதிப்பதற்காக, ஸ்ரீபரமாத்மன் திடீரென்று அந்த பந்தலுக்கு தீ பிடிக்குமாறு செய்தார். தீயைக் கண்டவுடன், அங்கு அமர்ந்திருந்தவர்கள் அனைவரும் பயந்தவாறு அனைத்து திசைகளிலும் ஓடத் துவங்கினர். சனத்குமாரர், மற்றும் கேட்டுக் கொண்டிருந்த ஜனக மகாராஜா இருவர் மட்டுமே அங்கு இருந்தனர்.

மக்கள், ராஜனைக் குறித்து - ‘ஹே ராஜனே, பந்தலில் தீ பிடித்திருக்கிறது. உடனடியாக எழுந்து வந்துவிடவும்’ - என்றனர். சனத்குமாரரை அவரின் உபன்யாசத்தை நிறுத்துமாறு கூறினர். ஆனால் அந்த இருவரும் இந்த கூக்குரல்களை கேட்காமலேயே அமர்ந்திருந்தனர். சனத்குமாரர் தொடர்ந்து சொல்லிக் கொண்டிருக்க, ராஜனோ அதை கேட்டவாறே இருந்தான். நெருப்பில் மண்டபம் முழுக்க எரிந்து போயிற்று. அந்த நெருப்பில், சனத்குமாரர் மற்றும்

ஜனக மகாராஜா இருவரும் எரிந்து போயினர் என்று மக்கள் நினைத்தனர். சிறிது நேரத்தில் நெருப்பு அடங்கியது. அப்போது அங்கு வந்து பார்த்த மக்கள், இந்த இருவரும் அப்படியே அமர்ந்திருக்க, புராணம் நடந்து கொண்டிருந்ததைக் கண்டனர்.

அதைக் கண்டு வருந்திய மக்கள், நாம் அநியாயமாக புராணத்தைக் கேட்காமல் ஓடிவிட்டோம், எங்கு கதா ஸ்ரவணம் நடக்கிறதோ, அங்கு பரமாத்மன் கண்டிப்பாக இருந்தே இருக்கிறான். அத்தகைய பரமாத்மனின் சன்னிதானத்தில் நெருப்பு என்ன செய்துவிட முடியும்? நமக்கு இது தோன்றவில்லையே? ராஜன் திடபக்தி உள்ளவன். அவனை நெருப்பு எதுவும் செய்யவில்லை என்று நினைத்தனர். 18 புராணங்களில் ஒன்றான பிரம்மவைவர்த்த என்னும் புராணத்தில் இந்த கதையை சொல்லியிருக்கின்றனர். ஜனகராஜன் சாட்சாத்தாக அங்கு பரமாத்மனை கண்டான். மற்றும் ஸ்ரீபரமாத்மன் எங்கு பார்த்தாலும் இருக்கிறான். சுகாசார்யர் முதலான ரிஷிகள், எந்த இடத்தில் எந்த பொருட்களில் பார்த்தாலும் அவை அனைத்தையும் பகவத் ஸ்வரூபமாகவே பார்த்தனர். ஆகையால், எங்கு பார்த்தாலும் அங்கு அவன் இருக்கிறான் என்றனர்.

எங்கு வேண்டினாலும் அங்கு இருக்கிறான். அதாவது, பாணாசுரன் ஈஸ்வரனையும், ராவணன் பிரம்மனையும், மற்றும் சிலர் பார்வதி முதலானவர்களையும் வேண்ட, ஸ்ரீபரமாத்மன், பிரம்மாதி தேவதைகளில் தத்ரூபத்தினால் மகிழ்ச்சியடைந்து வரங்களைக் கொடுக்கிறான். பிரம்மாதிகளே வரங்களைக் கொடுக்கின்றனர் என்று புராணங்களில் சொல்லப்பட்டிருந்தாலும், பரமாத்மனே தத்ரூபியாகி இருக்கிறான் என்பதற்கு என்ன ஆதாரம்?

தேன வினா த்ருணமபி ந சலதி - பரமாத்மன் இல்லாமல் பிரம்மாதிகளுக்கு அசையக்கூட சக்தி இருக்காது என்று புராணங்களில் சொல்லப்பட்டிருக்கிறது. இதே ஆதாரத்தின்படி, பரமாத்மனே அவர்களின் உள்ளிருந்து வரங்களைக் கொடுக்கிறான் என்று தெரிகிறது. மேலும் பக்தியில் எங்கு வேண்டினாலும் அங்கேயே தரிசனம் அளிக்கிறான் என்னும் இன்னொரு அர்த்தமும் இருக்கிறது. த்ருவன் காட்டினில் தவம் செய்து வேண்டிக்கொள்ள, அவனுக்கு அங்கேயே தரிசனம் அளித்தான்.

உடல் ஊனமான கூர்மதாஸன், ஆஷாட சுத்த ஏகாதசியன்று, பண்டரிபுரத்து பாண்டுரங்கனை தரிசனம் செய்யமுடியாமல் போய்விட்டதே என்று வருந்த, பாண்டுரங்கன் அவன் இருந்த இடத்திற்கே வந்து நின்றான். புண்டலீகனுக்காக ஆற்றங்கரையிலேயே தரிசனம் அளித்தான். இப்படி பல உதாரணங்கள் இருக்கின்றன. எந்த இடத்தில் இருந்தாலும் மக்கள் பக்தியுடன், இலையையோ, புஷ்பத்தையோ, நீரையோ, பழங்களையோ சமர்ப்பித்தால் அவற்றை அங்கேயே ஏற்றுக்கொள்கிறான்.

எங்கு ஓடினாலும் அங்கு இருக்கிறான். அதாவது, பாகவத 10ம் ஸ்கந்தத்தில் :

மர்த்யோ ம்ருத்யுவ்யாளபீத: பலார்ய லோகான்ஸர்வான்னிர்பயம் நாத்யகர்ப்ப |
த்வத்பாதாப்ஜம் ப்ராப்யயத்ருச்சயாத்ய ஸ்வஸ்த:ஷேதே ம்ருத்யுரஸ்மாதபைதி ||

மரணம் என்னும் பாம்பிற்கு பயந்து மனிதன் இந்த உலகத்தில் எங்கு ஓடினாலும் அங்கு அவனுக்கு மரணம் கண்டிப்பாக உண்டு. அதுவே உன் பாதாரவிந்தங்களில் சேர்ந்தால், அப்போது மரணம் அவர்களை விடுகிறது. அப்போது மனிதன் பயமில்லாமல் நிம்மதியாக தூங்குகிறான். இப்படி மரணத்திற்கு பயந்து, மனிதன் எங்கு ஓடினாலும் ம்ருத்யு ரூபியாக அங்கங்கு பரமாத்மன் கண்டிப்பாக இருக்கிறான். அந்த பரமாத்மனையே நம்பினால் அந்த பயம் தேவையற்றதாக ஆகிறது.

எல்லி ஆடிதரல்லி இருதிஹனு - ஆடிதரெ என்றால் சொன்னால் என்று பொருள். விளையாடு என்னும் இன்னொரு பொருளும் உண்டு. இங்கு இந்த அர்த்தங்களும் சரியாக பொருந்துகின்றன. சிறு குழந்தைகள் மழலைச் சொற்கள் பேசியவாறு விளையாடினால், அந்த குழந்தைகளில் நிலைத்திருந்து பரமாத்மனே விளையாடுகிறான். சக்குபாய் தன் சிறிய வயதில், பொம்மைகளை வைத்து விளையாடும்போது, பாண்டுரங்கனின் பிரதிமையை வைத்து விளையாடி, அவனை வணங்குவதே விளையாட்டு என்று நினைத்து விளையாடினால், அவருக்கு பாண்டுரங்கன் எதிரிலேயே நின்றிருப்பதைப் போல தெரிந்ததாம். ஆடிதரே என்னும் சொல்லுக்கு 'சொன்னால்' என்ற பொருளில், பிரகலாதன் தன் தந்தையைக் குறித்து - 'இந்தத் தூணிலும் பரமாத்மன் இருக்கிறான்' - என்று கூற, 'சத்யம் விதாதும் நிஜப்ருத்ய பாஷிதம்' உண்மையான பக்தனான பிரகலாதனின் வாக்கியத்தை உண்மையாக்குவதற்காக அந்த தூணிலிருந்தே வெளிவந்தான் பரமாத்மன்.

பல்லிதரகதி பல்லிதனு - வேதங்களின் அபிமானியான ரமாதேவி மற்றும் பிரம்மதேவருக்கு பல்லவர்கள் என்று பெயர். ஆனாலும், பகவத் விஷயங்களை முழுமையாக யாரும் அறிய மாட்டார்கள். பரமாத்மனோ, இவர்கள் அனைவரின் ஸ்வரூபங்களையும் நன்றாக அறிவான். இந்த உலகத்தில் எங்கு பார்த்தாலும் இவனுக்கு சமமானவர்கள் யாரும் இல்லை. நான், எனது என்னும் கர்வத்துடன், படாடோபத்துடன் செய்யும் பூஜைகளை அவன் ஏற்றுக் கொள்வதில்லை.

**த1ப்த1லோஹவு நோள்ப1 ஜனரிகெ3**
**ஸப்த1ஜிஹ்வன தெ1ரதி3 தோ1ர்பு1து3**
**லுப்த1பா1வக1 லோஹ கா1ம்பு3து3 பூ1ர்வதோ3பா1தி3 |**
**ஸப்த1வாஹன நிகி2ல ஜனரோ**
**ள் வியாப்தனாது3த3ரிந்த3 ஸர்வரு**
**ஆப்த1ராகி3ஹரெல்ல கா1லதி3 ஹித1வ கை1கொ1ண்டு3 ||22**

தப்தலோஹவு = சூடான இரும்பு
நோள்ப ஜனரிகெ = பார்க்கும் மக்களுக்கு
சப்தஜிஹ்வன தெரதி = ஏழு நாக்குகளுள்ள அந்த நெருப்பில்
தோர்புது = தெரியும்
லுப்தபாவக = நெருப்பு தணிந்தபிறகு
லோஹ = அந்த இரும்பு

பூர்வதோபாதி = முதலில் இருந்ததைப் போலவே இரும்பாக
காம்புது = தெரிகிறது (அது போலவே)
சப்தவாஹன = ஏழு குதிரைகளைக் கட்டிய ரதத்தைக் கொண்ட சூர்ய ரூபியான உருக்ரம நாமக ஸ்ரீபரமாத்மன்
நிகிளஜனரொளு = அனைத்து மக்களில் இருந்து
வ்யாப்தனாதுதரிந்த = வியாப்தனாக இருக்கும் காரணத்தினாலேயே
சர்வரு = அனைத்து மக்களும்
எல்லகாலதி = அனைத்து காலங்களிலும்
ஹிதவ கைகொண்டு = ஒருவருக்கொருவர் உதவிகளை செய்தவாறு
ஆப்தராகிஹரு = மனைவி, மக்கள், உற்றார், உறவினர் என்று அன்பாக இருக்கின்றனர்.

ஆஸ்யத்வயம் ஸுதாம்ரோஷ்டம் ஸப்தஜிஹ்வா சமன்விதம் |
தக்ஷிணாஸ்யே சதுர்ஜிஹ்வாதி ஸ்ரோவ்யே வாமவக்த்ரகே ||

சப்தஜிஹ்வன என்றால் அக்னி என்று பொருள். அக்னிரூபத்தை வர்ணிக்கும் இந்த வேத மந்திரத்தில், அக்னிதேவருக்கு இரு முகங்கள், ஏழு நாக்குகள் உள்ளன என்று சொல்லப்படுகிறது. வலது முகத்தில் நான்கு நாக்குகள்; இடது முகத்தில் மூன்று நாக்குகள் உள்ளன.

காய்ச்சிய இரும்பைப் பார்ப்பவர்களுக்கு அது நெருப்புத் துண்டு போலவே தெரியும். அதுவே ஆறிப்போனால், அது வெறும் இரும்புதான். அதுபோலவே, ஸ்ரீபரமாத்மன் அனைவரின் தேகத்தில் வியாப்தனாக இருப்பதால், மக்கள் அனைவரும் தனக்கு வேண்டியவர்கள் என்று நினைத்து, ஒருவருக்கு ஒருவர் உதவி செய்து, உதவி பெற்று வாழ்கின்றனர். பரமாத்மன் ஒருவருடைய தேகத்தில் இல்லையென்றால் அவன், ஆறிப்போன இரும்பு போல, அதாவது பிணம் போல, யாருக்கும் வேண்டாததாகிறான். மனைவியானவள்கூட பிணத்தைப் பார்க்க பயப்படுவாள். ஆகையால், மனிதர்கள் ஒருவருக்கொருவர் மரியாதையுடன் நடந்து கொள்வது, அவர்களுக்குள் பரமாத்மன் இருப்பதாலேயே என்று அறியவேண்டும்.

**வாரித3னு மளெகெ3ரெயெ பெ3ளெதி3ஹ**
**பூ4ருஹங்க3ள சித்ரப2லரஸ**
**பே3ரே பே3ரிப்ப1ந்தெ1 ப3ஹுவித4 ஜீவரொளகி3த்து3 |**
**மாரமணனவரவர யோக்யதெ1**
**மீரத3லெ கு3ண க1ர்மக1ள அனு**
**ஸார நடெ3ஸுவ தே3வனிகெ3 வைஷம்ய வெல்லிஹுதோ3 ||23**

வாரிதனு = மேகம்
மளெகெரெயெ = மழை பொழிந்தால்
பெளெதிஹ = விளைந்திருக்கும்
பூருஹங்கள = மரங்களின்
சித்ரபலரச = விதவிதமான பழங்கள் மற்றும் அவற்றின் சாறுகள்

பேரேபேரிப்பந்தெ = வெவ்வேறாக இருப்பதைப் போல
பஹுவித ஜீவரொளகித்து = அனைத்துவித ஜீவர்களிலும் இருந்து
மாரமண = லட்சுமிபதி
அவரவர யோக்யதெ மீரதலெ = அவரவர்களின் தகுதிக்கேற்ப
குண கர்மகள அனுசார = அவர்களின் குண, கர்மங்களுக்கேற்ப
நடெசுவ = பலன்களைக் கொடுப்பான்
தேவனுக்கு = ஸ்ரீஹரிக்கு
வைஷம்யவெல்லிஹுதோ = பாரபட்சம் எங்கிருக்கிறது? (இல்லை என்று பொருள்).

மேகங்கள் அனைத்து இடங்களிலும் ஒரே மாதிரி மழையைப் பொழிகிறது. ஆனால், அந்த நீரினால் விளைந்த மரங்களில் காய்க்கும் காய், பழம், மற்றும் அவற்றின் சாறு வெவ்வேறு விதமாக இருக்கின்றன. சில இனிப்பு, சில கசப்பு என வெவ்வேறாக இருக்கிறது. இதற்கு அந்த மரத்தின் ஸ்வரூபமே காரணமே தவிர, மண், நீர் இவையெல்லாம் எப்படி காரணம் ஆகாதோ, அப்படியே, ஸ்ரீபரமாத்மன், சாத்விகாதி மூன்றுவித ஜீவர்களிலும் இருந்து, அவரவர்களின் தகுதியை மீறாமல் (அதற்கேற்ப), சாத்விகர் மூலமாக சத்வ கர்மங்களையும், ராஜசர் மூலமாக பலவிதமான கலவையான (மிஸ்ர) கர்மங்களையும், தாமசர் மூலமாக தன்னில் த்வேஷங்களை உருவாக்கி, அந்தந்த கர்மங்களுக்கேற்ப பலன்களைக் கொடுக்கிறார். முக்கியமாக, ஜீவர்களின் சத்வாதி கர்மங்கள், கர்மபலன்கள், இவற்றிற்கேற்ப கர்மங்களை செய்து, பலன்களைக் கொடுக்கிறாரே தவிர, தனக்கு இவன் வேண்டியவன், இவன் வேண்டாதவன் என்னும் பாரபட்சத்தினால் பலன்களைக் கொடுப்பதில்லை. இதிலிருந்து பரமாத்மனுக்கு பாரபட்சம் இல்லை என்று தெரிகிறது.

**வாரிஜாப்த$^1$ன கி$^1$ரண மணிக$^3$ள**
**ஸேரி தத்த$^1$த்வர்ணக$^3$ளனு வி**
**கா$^1$ரகை$^3$ஸதெ$^3$ நோள்ப$^1$ரிகெ$^3$ க$^1$ங்கொ$^3$ளிசுவந்த$^3$த$^3$லி |**
**மாரமண லோக$^1$த்ரயதொ$^3$ளிஹ**
**மூருவித$^3$ ஜீவரொளகி$^3$த்து$^3$ வி**
**ஹார மாடு$^3$வனவர யோக்$^3$யதெ$^1$ க$^1$ர்மவனுஸரிஸி ||24**

வாரிஜாப்தன = தாமரைக்கு இஷ்டமான சூரியனின்
கிரண மணிகள = கிரணங்கள், சிகப்பு, பச்சை, நீலம் முதலான வண்ணங்களைக் கொண்ட ரத்னங்களின்
ஸேரி = மேல் விழுந்து
தத்தத்வர்ணகளனு = அந்தந்த ரத்னங்களின் வர்ணங்களுக்கேற்ப
விகாரகைசதெ = நிறங்களின் வித்தியாசங்களை செய்யாமல் (பார்க்காமல்)
நோள்பரிகெ = பார்க்கும் மனிதர்களுக்கு
கங்கொளிசுவந்ததலி = பளபளவென்று தெரிவதைப் போல
மாரமண = லட்சுமிபதியானவன்
லோகத்ரயதொளிஹ = மூன்று உலகங்களிலும் இருக்கும்
மூருவித ஜீவரொளகித்து = சாத்விக முதலான மூன்று வித ஜீவர்களிலும் இருந்து

அவர = அந்தந்த ஜீவர்களின்
கர்மவ = தகுதியை அனுசரித்து (அதற்கேற்ப)
விஹார மாடுவனு = நிலைத்திருப்பான் / சஞ்சரிப்பான்.

சூரியனின் கதிர்கள், சிகப்பு, நீல, பச்சை முதலான ரத்னங்களில் எந்தவித வித்தியாசமும் பார்க்காமல் விழுந்து, அந்தந்த ரத்னங்களின் நிறத்தை எப்படி மேம்படுத்திக் காட்டுகிறதோ, அது எப்படி பார்க்கும் மக்களுக்கு பளபளவென்று தெரிகிறதோ, அதுபோல, லட்சுமிபதியான பரமாத்மனும், சாத்விகாதி மூன்று வித ஜீவர்களுக்குள்ளும் இருந்து, அந்தந்த ஜீவர்களின் தகுதிக்கேற்ப, அவர்களில் நிலைத்திருப்பான் / சஞ்சரிப்பான்.

**ஜலவ னப1ஹரிஸுவ க3ளிகெ3 ப3**
**ட்ட1லனுளிது3 ஜைக4ண்டெ கை1பி1டி3**
**தெ3ளெது3 ஹொடெ3வந்த3த3லி ஸந்த1த1 க1ர்த்ரு தா1னாகி3 |**
**ஹலத4ராநுஜ புண்ய பாபத3**
**ப2லக3ளனு தே3வாஸுரர க3ண**
**தொ3ளு விபா4க3வ மாடி3 உணிஸுத ஸாக்ஷியாகி3ப்ப ||25**

ஜலவனபஹரிசுவ = நீர் பிடிக்கும்
களிகெ பட்டலு = நாழிகையைக் குறிக்கும் கிண்ணம் (பாத்திரம்)
உளிது = விட்டு
ஜைகண்டெ = ஜாங்கட வாத்தியத்தை
கைபிடிதெளெது = கை பிடித்து தன்னிடம் இழுக்கும்
ஹொடெவந்ததி = அடிப்பதைப் போல
ஸந்தத = எப்போதும்
தானு = ஸ்ரீபரமாத்மன்
கர்த்ரு = செய்பவனாக
ஹலதரானுஜ = பலராமனின் தம்பியான ஸ்ரீபரமாத்மன்
புண்யபாபத பலகளனு = அவரவர்களின் புண்ணிய பாவங்களின் பலன்களை
தேவாசுரர கணதொளு = தேவதைத்யர்களின் குழுவில்
விபாகவமாடி = பிரித்து
உணிசுத = கொடுப்பான்
சாக்ஷியாகிப்ப = அதற்கு தானே சாட்சியாகவும் இருப்பான்.

கடிகாரம் இல்லாத அந்த காலத்தில், காலத்தைக் கண்டுபிடிப்பதற்காக 4 அங்குல அகலம், 4 அங்குல ஆழமும், அடியில் ஒரு சிறிய துளை கொண்ட ஒரு பாத்திரத்தை (அதன் பெயரே 'களிகெ பட்டலு' - நாழிகையை சொல்லும் பாத்திரம்) வேறொரு பெரிய நீருள்ள பாத்திரத்தில் மூழ்குமாறு செய்வர். அந்த துளையுள்ள பாத்திரம் எப்போது முழுமையாக நீரில் மூழ்குகிறதோ, அப்போது ஒரு நாழிகை ஆகிவிட்டது என்று பொருள்.

இந்த பாத்திரத்தை செய்யும் விதத்தை பாகவதத்தில் இப்படி சொல்லியிருக்கின்றனர்.

த்வாதஷார்த்த பலோன்யானஞ் சதுர்பிச்ஷ துரங்குலை: ||
ஸ்வர்ணமாப்யை: க்ருதச்சித்ரம் யாவத் ப்ருஸ்தம் ஜலம்பிபேத் ||

ஆருபலகாளு என்றால் 18 தோலா (1 தோலா = 11.66கிராம்) அரிசி பிடிக்கும் ஒரு பித்தளை அல்லது தாமிர பாத்திரம். அதன் நடுவில் 4 அங்குல நீளத்திற்கு ஒரு துளையைப் போட்டு அந்த பாத்திரத்தை மேலிருந்து பிடிப்பதற்கு ஒரு கயிறு கட்டவேண்டும். ஒரு பெரிய பாத்திரத்தில் நீர் நிரப்பி, அதில் இந்த பாத்திரத்தை விட்டால், நடுவில் இருக்கும் துவாரத்தின் மூலமாக இதில் நீர் நிரம்பும். துளையுள்ள பாத்திரம் முழுதாக முழுகிவிட்டால், ஒரு நாழிகை ஆகிவிட்டது என்று பொருள். இப்படி ஒரு நாழிகை முடிந்தவுடன், பக்கத்தில் இருக்கும் நேரம் காப்பாளர், 1,2,3 என்று நாழிகைகளுக்கேற்ப ஜாங்கடையில் சத்தம் செய்து நேரத்தை தெரிவிப்பார். இப்படி நீர் நிரம்புகிறது என்பதை அந்த காப்பாளருக்குத் தெரியுமே தவிர, அந்த பாத்திரத்திற்கு தெரிவதில்லை. அப்படியே அந்த பாத்திரம் முழுகியபிறகு, மறுபடி அதை வெளியில் எடுத்து, நீரைக் கொட்டிவிட்டு, மறுபடி அந்த பெரிய பாத்திரத்தில் வைப்பார்.

ஜீவர்களின் விஷயத்தில் பரமாத்மனும் இந்த நேரம் காப்பாளரைப் போல இருப்பான். பெரிய பாத்திரத்தில் இருக்கும் நீரே, புண்ணிய பாவங்கள். ஜீவர்களின் ஸ்வபாவத்தை அறிந்து, அவர்களின் ஸ்தூல தேகத்தை ஸ்ருஷ்டித்து, பாத்திரத்து நடுவில் துளை போட்டு, அதில் நீர் நிரம்புவதைப்போல, பரமாத்மனும் ஜீவர்களின் ஸ்தூல தேகத்தில் அவர்களுக்கு சிறிது ஸ்வாதந்த்ர்யம் என்னும் துளையைக் கொடுத்திருக்கிறார். அதனால், சிறிது ஆசை மட்டும் தோன்றுகிறது.

பாத்திரம் தானாகவே நீரை நிரப்பினாலும், பாதுகாப்பாளர் அதன் அருகில் அமர்ந்து அது எவ்வளவு நீர் கொண்டிருக்கிறது என்பதை அறிவானோ, அது போல, ஜீவனும் அஸ்வதந்த்ரனாக பரமாத்மனால் அருளப்பட்டு, தேகத்தில் அவன் அளித்த அல்ப ஸ்வாதந்த்ர்யத்தால், தன் கர்மபலன்களுக்கு ஏற்ப, புண்ணிய பாவங்களை ஏற்றுக்கொள்கிறான். பாத்திரம் நிரம்பிவிட்டது என்பதை அறியும் காப்பாளர், ஜாங்கடவை அடிப்பது போல, பரமாத்மன், ஜீவர்களின் சாதனை முடிந்துவிட்டது என்பதை அறிந்து, அவர்களின் தகுதிக்கேற்ப பலன்களைக் கொடுக்கிறார்.

ஜாங்கடையில் எவ்வளவு முறை சத்தம் வருகிறது என்பதை வைத்து நேரத்தை மனிதர்கள் அறிவதைப் போல, ஜீவர்கள் தத்தம் புண்ணிய பாவ கர்ம பலன்களை அனுபவிக்கின்றனர். இப்படி நேரத்தை தெரிவிக்கும் காப்பாளர், அதற்கு எப்படி சாட்சியாக இருக்கிறாரோ, அதுபோலவே பரமாத்மனும், பலன்களை தேவ தைத்யர்களுக்கு பிரித்துக்கொடுத்து, தான் அதற்கு சாட்சியாக இருக்கிறார்.

**பொ$^{1}$ந்தி$^{3}$கொ$^{1}$ண்டி$^{3}$ஹ ஸர்வரொளு ஸ**
**ம்ப$^{3}$ந்த$^{3}$ வாக$^{3}$தெ$^{3}$ ஸக$^{1}$லக$^{1}$ர்மவ**
**ரந்த$^{3}$த$^{3}$லி தா$^{1}$ மாடி$^{3}$ மாடி$^{3}$ஸி தத்ப$^{2}$லக$^{3}$ளுணதெ$^{3}$ |**

**கு$^{1}$ந்த$^{3}$தெ$^{3}$ அணு மஹத்தெ$^{1}$னிப க$^{3}$ட$^{1}$**
**மந்தி$^{3}$ரதி$^{3}$ ஸர்வத்ர து$^{1}$ம்பி$^{3}$ஹ**
**பா$^{3}$ந்த$^{3}$ளத$^{3}$ தெ$^{1}$ரனந்தெ$^{1}$ இருதிப்பனு ரமாரமண ||26**

ரமாரமண = லட்சுமிபதியான பரமாத்மன்
சர்வரொளு = அனைத்து பிராணிகளிலும்
சம்பந்தவாகதெ = ஸ்தூலதேக சம்பந்தம் இல்லாமல்
சகல கர்மவ = அனைத்து கர்மங்களையும்
அவரந்ததலி = அந்த பிராணி செய்வதைப் போல தானும் செய்து, செய்வித்து
தத்பலகள = அந்த கர்மங்களின் பலன்களை
உணதே = தான் அனுபவிக்காமல்
அணுமஹத்தெனிப = சிறியதும், பெரியதுமான
கடமந்திரதி = குடம், பாத்திரம் ஆகியவற்றின் உள்ளே வெளியேயும்
சர்வத்ர = அனைத்து இடங்களிலும்
தும்பிஹ = நிலைத்திருக்கும்
பாந்தளத தெரனந்தெ = ஆகாயத்தைப் போல
இருதிப்பனு = இருக்கிறான்

ஸ்ரீபரமாத்மன், அனைத்து பிராணிகளிலும், அவர்களின் தேக இந்திரியங்களின் சம்பந்தம் இல்லாமல், ஜீவர்களிலும் இந்திரியங்களிலும், அவர்களின் ஸ்தூல தேகத்தில் வியாப்தனாக இருந்து, அவரவர்கள் செய்யும் கர்மங்களை அவர்களைப் போல தானே செய்து, அவர்களிடமிருந்து செய்வித்து, அந்த பலன்களை தான் உண்ணாமல், அவர்களுக்கே கொடுப்பான். சிறிய குடமோ, பெரிய குடமோ, அவற்றின் உள்ளே முழுவதுமாக ஆகாயம் எப்படி நிரம்பியிருக்கிறதோ அப்படியே ஸ்ரீபரமாத்மன் சூக்ஷ்மரான (சிறியவர்) ஜீவர்களிலும், பெரியவர்களின் ஜீவர்களிலும், தனக்கும் அதற்கும் சம்பந்தப்படாமல் (நிர்லிப்தனாக) வியாபித்திருக்கிறார்.

**கா$^{1}$த$^{3}$க$^{1}$ப்பிண ஹிடி$^{3}$து$^{3}$ ப$^{3}$டி$^{3}$யலு**
**வேத$^{3}$னெயு லோஹக$^{3}$ளிக$^{3}$ல்லதெ$^{3}$**
**ஆதுதே$^{1}$னை அனலகா$^{3}$வ்யதெ ஏனமாடி$^{3}$த$^{3}$ரு |**
**ஆதிதே$^{3}$வனு ஸர்வஜீவர**
**கா$^{1}$து$^{3}$ கொண்டி$^{3}$ஹனொளஹொரகெ$^{3}$ து$^{3}$:**
**க்கா$^{2}$திக$^{3}$ளூ ஸம்ப$^{3}$ந்த$^{3}$வாகு$^{3}$வவேனு சின்மயகெ$^{3}$ ||27**

காதகப்பிண = நெருப்பில் நன்றாக காய்ச்சிய இரும்பினை
ஹிடிது படியலு = பிடித்து அடித்தால்
வேதனெயு = அந்த அடியின் வலி, அந்த இரும்புக்கு மட்டுமே வலிக்கும்
ஏனு மாடிதரு = என்ன செய்தாலும்
அனலகெ = நெருப்புக்கு
ஆதுதேனை = என்ன ஆகப்போகிறது? (ஒன்றும் ஆகாது என்று பொருள்).
ஆதிதேவன் = அனாதி காலத்திலிருந்தும் இருக்கும் ஸ்ரீபரமாத்மன்
சர்வஜீவர = அனைத்து ஜீவர்களின் உள்ளே வெளியே

காதுகொண்டிஹ = காத்துக் கொண்டிருக்கிறான்
சின்மயகெ = சிதானந்த ஸ்வரூபனான ஸ்ரீபரமாத்மனுக்கு
துக்காதிகள சம்பந்தவு = தேக சம்பந்தமான துக்கங்களின் சம்பந்தம்
ஆகுவுதேனை = என்றைக்கும் ஆகாது (வராது).

இரும்பை நீளமாக்க வேண்டுமெனில், அதனை நன்கு காய்ச்சி அடிப்பர். அப்போது அந்த அடியானது, அந்த இரும்பிற்கு வலிக்குமே தவிர, அதற்குள் இருக்கும் அந்த நெருப்பிற்கு ஒன்றும் / எதுவும் ஆகாது. அதுபோலவே, பரமாத்மனும் அனைத்து ஜீவர்களின் உள்ளே வெளியே வியாப்தனாக இருந்தாலும், அவர்களுக்கு சம்பந்தப்படாமல், ஜீவர்களின் தேகங்களுக்கு ஆகும் துக்காதிகள், அந்த தேகத்தில் இருக்கும் பரமாத்மனுக்கு சம்பந்தப்படுவதில்லை.

**மளல மனெக$^{3}$ளமாடி$^{3}$ மக்களு**
**கெலவு காலதொ$^{3}$ளாடி$^{3}$ மோத$^{3}$தி$^{3}$**
**து$^{1}$ளிது$^{3}$ கெ$^{1}$டிஸுவ தெ$^{1}$ரதி$^{3}$ லகு$^{1}$மீரமண லோகக$^{3}$ள |**
**ஹலவு ப$^{3}$கெ$^{3}$யலி நிர்மிஸுவ நி**
**ஸ்சலனு தானாகி$^{3}$த்து$^{3}$ ஸலஹுவ**
**எலருணிய வோல் னுங்கு$^{3}$வவகெ$^{3}$ல்லிஹுதோ$^{3}$ ஸுக$^{2}$து$^{3}$க்க ||28**

மளல = மண் அல்லது மண்ணினால்
மனெகள மாடி = வீடுகளை செய்து
மக்கள் = குழந்தைகள்
கெலவுகாலதலாடி = சிறிது நேரம் விளையாடிவிட்டு
மோததி = மகிழ்ச்சியுடன்
துளிது கெடிசுவ தெரதி = அதை எட்டி உதைத்து உடைத்து விடுவதைப் போல
லகுமிரமண = ஸ்ரீபரமாத்மன்
லோககள = உலகங்களை
ஹலவுபகெயலி = பற்பல விதங்களில்
நிர்மிசுவ = ஸ்ருஷ்டித்து
நிஷ்சலனு தானாகி = அ-ஸ்திரமான ஜடங்களில் ஸ்திரமாக தான் இருந்து
சலஹுவ = அனைத்தையும் காப்பாற்றுவான்
எலருணியவோல் = காற்றை உண்ணும் பாம்பு, தன் முட்டைகளை தானே உண்ணுவதைப் போல
நுங்குவவகெ = உண்ணும் பரமாத்மனுக்கு
சுகதுக்க = தேகங்களில் இருக்கும் சுக துக்கங்கள்
எல்லிஹதோ = எங்கு இருக்கும்? (இருக்கவே இருக்காது என்று பொருள்).

குழந்தைகள் விளையாடுவதற்காக மணலில் வீடு கட்டி சிறிது நேரம் மகிழ்ச்சியுடன் அதனுடன் விளையாடிவிட்டு, பிறகு தங்கள் கால்களிலேயே அதை எட்டி உதைத்து, அந்த மணல் வீட்டை இடித்துவிடுவார்கள். அந்தக் குழந்தைகளுக்கு அந்த வீடு கட்டும்போதும் மகிழ்ச்சியே, விளையாடும்போதும் மகிழ்ச்சியே, அதை இடிக்கும்போதும் மகிழ்ச்சியே. அதை கட்டும்போது,

கட்டவேண்டுமே என்கிற ஆயாசம் இல்லை. அதை இடிக்கும்போது துக்கமும் இல்லை. அதுபோல, பரமாத்மனும் தன் லீலைகளால் கஜ துரகாதி 84 லட்ச யோனிகளில் அபரிமித ஜீவராசிகளை ஸ்ருஷ்டிக்கிறான். அதாவது, யானை குதிரை மனுஷ்யாதி ஸ்தூல சரீரங்களை ஜீவர்களின் லிங்க சரீரங்களின் மேல், ஒரு உறையாக ஸ்ருஷ்டிக்கிறான். அந்த தேகங்களில் அவர்களைப் போல இருந்து, கர்மங்களை செய்து, செய்வித்து, விளையாட்டினைப் போலவே அனைவரையும் காப்பாற்றுகிறான்.

கட்டிய வீட்டினை குழந்தைகள் இடிப்பதைப்போல, விளையாட்டினைப் போல அந்த சரீரங்களை தானே அழிக்கிறான். பூர்ணானந்த ஸ்வரூபனான ஸ்ரீபரமாத்மனுக்கு ஸ்ருஷ்டிப்பதால் மகிழ்ச்சியோ, நாசம் செய்வதால் வருத்தமோ இருப்பதில்லை. இதற்கு தாசராயர் இன்னொரு உவமையையும் கொடுக்கிறார். பாம்பு, தான் இடும் தன் முட்டைகளை, தானே தின்றுவிடுவதைப் போல, அப்போது அதற்கு சுக துக்கங்கள் எப்படி இல்லையோ, அதுபோல, ஸ்ரீபரமாத்மன் ஸ்ருஷ்டிக்கும்போதும், அழிக்கும்போதும், தான் அதற்கு சம்பந்தப்படாமல், அதாவது சுக துக்கங்களால் பாதிக்கப்படாமல் இருக்கிறான்.

**வேஷ பா4ஷெக3ளிந்த3 ஜனர ஸு**
**தோ1ஷகை3ஸுவ நட1புருஷனோ**
**ல் தோ3ஷதூ3ரனு லோக1தொ3ளு ப4ஹுரூப மாதி1னலி |**
**தோ3ஷிஸுவனவரவர மனத3பி4**
**லாஷெக3ள பூரயிஸுத1னுதி3ன**
**போ1ஷிஸுவ பூ1தா1த்ம பூர்ணானந்த3 ஞானமய ||29**

வேஷபாஷெகளிந்த = நாடகங்களில் ராம, கிருஷ்ண வேடங்களைப் போட்டு, தன் நடிப்பினாலும், வசனங்களாலும்
ஜனர = பார்த்துக் கொண்டிருக்கும் மக்களின்
ப்ரமோஷகைசுவ = மனதை ஈர்க்கும்
நடபுருஷனோல் = வேடம் போடும் மனிதர்களுக்கு
தோஷதூரனு = தோஷங்கள் இல்லாதவனான
பூதாத்ம = பவித்ரமான ஆத்மனைக் கொண்ட
பூர்ணானந்த ஞானமய = பூர்ணானந்தஞான ஸ்வரூபியான ஸ்ரீபரமாத்மன்
லோகதொளு = இந்த உலகத்தில்
பஹுரூப = பற்பல ரூபங்களை தரித்து. அதாவது ராம கிருஷ்ணாதி பல ரூபங்களை தரித்து, நடிப்பவர்களிலும், ரிஷிமுனிவர்களிலும் அந்தர்யாமியாக இருந்து பிம்பக்ரியைகளை நடத்தி.
மாதினலி = அந்தந்த ஜீவர்களின் தகுதிக்கேற்ப அவரவர்களில் நடவடிக்கைகளை செய்து
தோஷிசுவனு = மகிழ்விக்கிறான்.
அவரவர = அந்தந்த மக்களின்
மனதபிலாஷெகள = மனதில் இருக்கும் விருப்பங்களை
பூரைசுவ போஷிசுவ = நிறைவேற்றி அருள்வான்

நாடகங்களில் ராம கிருஷ்ணாதி வேடங்களை தரித்து, நாடகங்களில் நடிக்கும்போது, பார்ப்பவர்களுக்கு அவர்கள் ராம கிருஷ்ணர்களைப் போலவே தோன்றுவதைப் போல, அவர்களின் மனதை ஈர்த்துவிடுவதைப்போல, தோஷங்கள் அற்றவனும், மங்களாத்மகனும், பூர்ணானந்த ஞானஸ்வரூபனும் ஆன ஸ்ரீபரமாத்மன், ராமகிருஷ்ணாதி ப்ராக்ருத ரூபங்களை தரித்து, கௌஸல்யா முதலானவர்களுக்கு இவன் என் மகன் என்று தோன்றுவதைப்போல, தன் பேச்சு நடவடிக்கைகளால் அவர்களை மகிழ்விப்பதைப்போல, பிம்பரூபத்தினால் அனைத்து பிராணிகளின் அந்தர்யாமியாக இருந்து, ஜீவ-ஜீவர்களுக்கு பரஸ்பரம் சம்பந்தம் இல்லாதிருந்தாலும், தேக சம்பந்தத்தினால் இவள் என் மனைவி, இவன் என் கணவன், இவன் என் மகன் என்று பலவித அபிமானங்களைத் தோற்றுவித்து, ஒருவருக்கொருவர் மகிழ்ச்சியாக இருப்பதைப் போல செய்கிறான். ராமகிருஷ்ணாதி ரூபங்களால், தன்னை பஜிப்பவர்களின் இஷ்டார்த்தங்களை நிறைவேற்றுகிறான். கணவன் மனைவி இவர்களில் இருந்து, பரஸ்பரம் அவர்களின் இஷ்டார்த்தங்களை நிறைவேற்றுகிறான். அனைத்து ஜீவர்களிலும் இருந்து, அவர்களை காப்பாற்றுகிறான்.

**அத4ம மானவனோர்வ மந்த்ரௌ**
**ஷத3க3ளனு தா1னரிது3 பா1வக1**
**உத3க1க3ள சம்ப3ந்த3வில்லதெ3 இப்பனத3ரொளகெ3 |**
**பது3மஜாண்டோத3ரனு ஸர்வர**
**ஹ்ருத3யதொ3ளகி3ரெ கா1ல கு3ண க**
**ர்மத3 க1லுஷ ஸம்ப3ந்த3வாகு3வதே3 நிரஞ்சனகெ3 ||30**

அதம மானவனோர்வ = அதமனான மனிதன் ஒருவன்.
மந்த்ரௌஷகளனு = மந்திர, மாத்திரைகளை
தானரிது = தான் அறிந்து
பாவக உதககள = நெருப்பு, தண்ணீரின்
சம்பந்தவில்லதெ = சம்பந்தம் இல்லாமல்
அதரொளகெ = அந்த நெருப்பு மற்றும் தண்ணீரில் இருக்கிறான்.
பதுமஜாண்டோதரனு = பிரம்மாண்டத்தையே வயிற்றில் வைத்துக் கொண்டிருக்கும் பரமாத்மன்
சர்வர ஹ்ருதயதொளகிரெ = அனைவரின் இதயத்தில் இருக்கிறான்
காலகுணகர்மத = கிருத த்ரேதாதி யுககாலங்களில், சத்வாதி குணங்களில், புண்ய பாபாதி கர்மங்களில்
அல்லது
கால = வசந்த க்ரீஷ்மாதி காலங்களில், அதற்கேற்ப குணங்கள் என்றால் வெயில், மழை ஆகியவை, கர்மம் என்றால் வெயிலுக்கு குடை பிடிப்பது. விசிறியால் விசிறிக் கொள்வது ஆகியவை.
கலுஷ = அந்தந்த காலத்திற்கேற்ப செய்யும் செயல்களால் வரும் கஷ்டங்கள்
நிரஞ்சனகெ = தோஷங்கள் அற்றவனான ஸ்ரீஹரிக்கு இவை சம்பந்தம் ஆகுமோ? ஆகாது என்று பொருள்.

அதமனான ஒரு மனிதன், மந்திர தந்திரங்களை அறிந்து, அதனால், நெருப்புக்கு நடுவில் போய் நிற்பது, நெருப்பை கையில் பிடிப்பது, நீரில் நிற்பது, அதன் மேல் நடப்பது ஆகியவற்றை மக்களுக்குக் காட்டி, நெருப்பின் சம்பந்தத்தால் ஆகும் சுடுதன்மை, நீரின் சம்பந்தத்தினால் ஆகும் மூழ்கும்தன்மை ஆகியவை இல்லாதிருப்பான். பிரம்மாண்டத்தையே தன் வயிற்றில் வைத்துக்கொண்டிருக்கும், தோஷங்கள் அற்ற ஸ்ரீபரமாத்மன், அனைத்து ஜீவர்களின் இதயத்தில் இருந்து, சிறியதான பரமாணு முதல் மிகப்பெரிய பதார்த்தங்கள் வரை இருக்கும் காலத்தை படைத்து, பிறந்து, வாழ்ந்து, முதுமையை அடைந்து, இறந்து, இருக்கும்வரை அரசாண்டு, யாகங்களை செய்து, போரில் மூர்ச்சையாகி, தோற்று, வெயிலால் வாடி, தாகத்தால் தவித்து - என அனைத்து கால குண கர்மங்கள், அதனால் வரும் கஷ்டங்கள் இவை அந்த பரமாத்மனுக்கு சம்பந்தம் ஆகுமோ? என்றும் ஆகாது.

**ஒந்து3 கு3ணதொ3ளனந்த கு3ணக3ளு**
**ஒந்து3 ரூப1தொ3ளிஹவு லோக1க3**
**ளொந்து3 ரூப1தி த4ரிஸி த1த்த1த்தர்த்த3 தொளஹொரகெ3 |**
**பா3ந்த3ளத3 வோலித்து1 ப3ஹு பெஸ்**
**ரிந்த3 க1ரெஸுத1 பூர்ணஞானா**
**நந்த3மய பரிபரி விஹாரவ மாடி3 மாடி3ஸுவ ||31**

ஒந்து குணதொளு = பரமாத்மனுக்கு இருக்கும் அனேக குணங்களில் ஒரு குணத்தில்
ஒந்து ரூபதொளு = பரமாத்மனுக்கு இருக்கும் அனேக ரூபங்களில் ஒரு ரூபத்தில்
லோககளு = அனந்த லோகங்கள்
இஹவு = இருக்கிறது. அந்த லோகங்களை
ஒந்து ரூபதி தரிஸி = ஒரு ரூபத்தால் தாரணை செய்து
தத்கத பதார்த்ததொளஹொரகெ = அனைத்து பிராணிகளின் உள்ளே மற்றும் வெளியே
பாந்தளதவோலித்து = ஆகாயத்தைப் போல வியாப்தனாக இருந்து
பஹுபெசரிந்த = அனந்தானந்த நாமங்களால்
கரெசுத = அழைத்துக் கொள்ளப்படும்
பூர்ணா ஞானானந்தமய = பூர்ண ஞானானந்த ஸ்வரூபனான ஸ்ரீபரமாத்மன்
பரிபரிய விஹாரவமாடி = பற்பல விதங்களில் சஞ்சரித்து
மாடிசுவ = அனைவரின் உள்ளேயும் இருந்து செயல்களை செய்கிறான்.

ஸ்ரீபரமாத்மனிடம் இருக்கும் அனந்தானந்த குணங்களில் ஒன்றை மட்டும் எடுத்துக்கொண்டு பார்த்தால், அந்த ஒரு குணத்தில் அனந்தானந்த குணரூபங்கள் அடங்கியிருக்கின்றன. அதில் இருக்கும் ஒரு ரூபத்தை எடுத்துக்கொண்டு பார்த்தால், அந்த ரூபத்தில் அனந்தானந்த லோகங்கள் காணப்படுகின்றன. அந்த லோகங்களை ஒரு ரூபத்தால் தரித்து, அ லோகங்களில் இருகும் அனைத்து பதார்த்தங்களின் உள்ளேயும் வெளியேயும் அனைத்து இடங்களிலும் ஆகாயம் வியாபித்திருப்பதைப் போல, நிர்லிப்தனாக, ஸ்வயம் பூர்ணானந்த ஞானமயனாக

இருந்தாலும், அனைத்து பதார்த்தங்களின் நாமத்தினால் பற்பல விதங்களாக வடிவெடுத்து செயல்களை செய்விக்கிறான்.

அதாவது, மனிதர்களில் மனிதனின் வடிவத்தில் இருந்து, மனித நாமத்தை தரித்து, யானை குதிரைகளில், யானை குதிரைகளின் வடிவில் இருந்து, நாமத்தைப் பெற்று, மனிதர்களுக்கு வாகனங்களாக இருக்கிறான். மனிதர்களாக அமர்கிறான். யானை குதிரைகளில் இருந்து அவர்களை தூக்கிக் கொள்கிறான். மனிதர்களை யானை குதிரைகளின் மேல் அமரச் செய்கிறான். இப்படி பற்பல வித காரியங்களை, பிராணிகளில் இருந்து தானும் செய்து அவர்களாலும் செய்விக்கிறான்.

**எல்லரொளு தானிப்ப தன்னொள**
**கெ3ல்லரனு த3ரிஸிஹனு அப்ரதி1**
**மல்ல மன்மதஜனக ஜக3தா3த்யந்த3 மத்3யக3ள |**
**ப3ல்ல, ப4ஹுகு3ணப3ரித தா3னவ**
**த3ல்லண ஜகன்னாத2விட்டல**
**ஸொல்லனாலிஸி ஸ்தம்பதி3ந்த3லி ப3ந்த3 பகு1தனிகெ3 ||32**

அப்ரதிமல்ல = ஒப்புமையில்லாத வீரனான
மன்மதஜனக = மன்மதனின் தந்தையான
தானவதல்லண = தானவர்களைக் கொல்பவனான
ஜகன்னாதவிட்டல = ஜகன்னாத தாசராயரின் இதய கமலத்தில் இருக்கும் பிம்பரூபியான ஸ்ரீஜகன்னாத விட்டலன்
எல்லரொளு = அனைத்து பிராணிகளிலும்
தானிப்ப = தான் இருக்கிறான்
தன்னொளகெ எல்லரனு தரிசிதனு = தன்னில் அனைத்தையும் / அனைவரையும் அடக்கியிருக்கிறான்
ஜகதாத்யந்த மத்யகள = உலகத்தின் ஆதி, அந்த்ய, மத்யங்கள் என எல்லா பாகங்களையும்
பல்ல = அறிந்தவன்
பஹுகுணபரித = அனந்தகுண பரிபூர்ணன்
பகுதனிகெ = பக்தனுக்கு அருள்வதற்காக
சொல்லலாலிஸி = பிரகலாதன் தன் தந்தைக்கு, இந்தத் தூணிலும் பகவந்தன் இருக்கிறான் என்று சொல்லியதைக் கேட்டு
கம்பதிந்த பந்த = அந்தத் தூணிலிருந்து நரசிம்ம ரூபத்தில் வந்தான்
(அத்தகைய நரசிம்ம ரூபி பரமாத்மனை நான் வணங்குகிறேன்).

'எல்லரொளு தானிப்ப தன்னொளகெல்லரனு தரிசிஹனு' என்று இந்த சந்தியின் கடைசி பத்யத்தில் சொல்லியிருக்கிறார் தாசராயர். பரமாத்மனை உபாசனை செய்து வருபவர்கள், இறுதிக்காலத்திலும் இப்படியே உபாசனை செய்து, சத்கதியை அடைவார்கள் என்று சொல்வதற்காக இந்த பத்யத்தில் இப்படி சொல்லியிருக்கிறார்.

பாகவத மூன்றாம் ஸ்கந்தத்தில், கர்தமன் தன் இறுதிக்காலத்தில் செய்த தியானத்தை விளக்கும்போது:

ஆத்மானம் சர்வபூதேஷு பகவந்தமவஸ்திதம் |
அபஷ்யத்சர்வ பூதானி பகவத்யபிஜாத்மனி ||
வாசுதேவே பகவதி சர்வக்ஞே ப்ரத்யகாத்மனி பரேண பக்திபாவேனலப்யாத்மா முக்தபந்தன: |
இச்சாத்வேஷ விஹீனேன சர்வத்ர சமசேதஸா |
பகவத்பக்தி யோகேன ப்ராப்தே பாகவதீம் கதிம் ||

அனைத்து பிராணிகளிலும் அந்த பகவந்தன் இருப்பதையும், அந்த பகவந்தனில் அனைத்து பிராணிகளும் இருக்கின்றன என்பதையும், அந்த பரமாத்மன் தம்முள் இருக்கிறான் என்பதையும் தியான யோகத்தின் மூலமாக அறிந்தார். இப்படி, சர்வக்ஞனான, தமக்குள் பின்னனாக இருக்கும் வாசுதேவ நாமக ஸ்ரீபரமாத்மனிடம் பக்தி கொண்டு, அந்த பகவத் ஸ்வரூபத்தை அறிந்து, பந்தங்களிலிருந்து முக்தராகி, ஆசை த்வேஷம் ஆகியவற்றை விட்டு, அனைத்து இடங்களிலும் நிலைத்திருக்கும் பகவந்தனின் ரூபங்களில் அறிவை வைத்து, இதன் மூலம் பரமாத்மனின் லோகத்தை அடைந்தார் என்று சொல்லப்பட்டிருக்கிறது. ஆகையால், பரமாத்மனை அனைவரிடமும், அனைவரிடத்தில் பரமாத்மனையும், அதே பரமாத்மனை தனக்குள்ளும் இருக்கிறார் என்பதை அறியவேண்டும் என்று இந்த பதத்திலிருந்து தெரிந்து கொள்ளலாம்.

தனக்கு சமம் என்று யாருமே இல்லாத, மன்மதனின் தந்தையான, இந்த உலகத்தில் ஆதி, அந்தம், மத்யம் என அனைத்து காலங்களிலும் இருக்கக்கூடிய, அந்த அனைத்து காலங்களையும் நன்கு அறிந்தவனான, மற்றும்
என்னபஷ்யந்தி பஷ்யந்தம் சக்ஷுர்யஸ்யனரிஷ்யதி |
தம்பூத நிலயம் தேவம் சுபர்ணமுபதாவத ||

என்னும் பாகவத வசனத்திற்கேற்ப, அனேக சூரியர்களை ஒரே நேரத்தில் பார்த்தாலும், பரமாத்மனின் கண்களுக்கு கூச்சம் ஏற்படாது. பிறர் ஒரே ஒரு சூரியனைக்கூட நேராக பார்க்கமுடியாதவர்களாக இருக்கின்றனர். சூரியன் பரமாத்மனை பார்க்க வேண்டுமென்றாலும், கூச்சத்தில் தன் கண்களை மூடிக்கொள்கிறான். பரமாத்மன் அனேக கோடி சூர்யர்களின் ஒளியைக் கொண்டிருக்கிறான் என்பது பொருள். மேலும் அனந்த குணங்களைக் கொண்டவன். தானவர்களைக் கொல்பவன்.

தாசராயரின் உபாஸ்ய மூர்த்தி, நரசிம்ம தேவர் ஆனதால், சந்தியின் இறுதி பத்யத்தில் நரசிம்மனையே போற்றுகிறார். தன் பிம்பமூர்த்தியான ஜகன்னாதவிட்டலன், தன் பக்தனான பிரகலாதன், தன்னுடைய தந்தைக்குக் கூறிய வசனம்: 'க்வாஸௌ யதி சர்வத்ர கஸ்மாத் ஸ்தம்பேன த்ருஷ்யதே'.

ஹிரண்யகசிபு: உன்னுடைய கடவுள் எங்கும் இருக்கிறான் என்று சொல்கிறாயே, அவன் எங்கு இருக்கிறான்?.

பிரகலாதன், அவன் அனைத்து இடங்களிலும் இருக்கிறான்.

ஹிரண்யகசிபு: எல்லா இடங்களிலும் இருக்கிறான் என்றால் இந்தத் தூணில் ஏன் இல்லை?

பிரகலாதன்: ஹே ஸ்தம்பனே! (என்றால் ஜடப்பொருளின் அரசனே என்று பொருள்). எல்லா இடங்களிலும் பகவந்தன் இருக்கிறான் என்றபிறகு, ஜடமான கம்பத்திலும் இருந்தே இருக்கிறான் என்பதால், அதை நிரூபிப்பதற்காக 'ஹே ஸ்தம்பனே' என்று அழைக்கிறான்.

ஹிரண்யகசிபு: இப்போதே நான் உன்னை இந்த கதையால் அடிக்கிறேன். உன் ஸ்ரீஹரி இருப்பது உண்மையானால், வந்து உன்னை காப்பாற்றட்டும்.

என்று ஹிரண்யகசிபு பிரகலாதனை அடிக்க வரும்போது 'சத்யம் விதாதும் நிஜப்ருத்ய பாஷிதம்' உண்மையான பக்தனான பிரகலாதனின் வாக்கியத்தை உண்மையாக்குவதற்கு அந்த கம்பத்திலிருந்தே ஸ்ரீஹரி, நரசிம்ம ரூபத்தினால் வெளிவந்தான் -- என்னும் பாகவத வாக்கியத்தை தாசராயர் இங்கு குறிப்பிடுகிறார்.

இத்தகைய கருணைக்கடலான ஸ்ரீபரமாத்மனை நான் வணங்குகிறேன் என்று பொருள். இந்த சந்தி முழுக்க, பரமாத்மனின் வியாப்தியையே வர்ணித்திருப்பதால், இந்த கடைசி பத்யத்திலும் அந்த வியாப்தியையே சொல்லி, பகவன் மகிமையைக் கொண்டாடி, சந்தியை முடிக்கிறார் தாசராயர்.

வியாப்தி சந்தி என்னும் மூன்றாம் சந்தியின் தாத்பர்யம் இத்துடன் முடிவுற்றது.
ஸ்ரீகிருஷ்ணார்ப்பணமஸ்து. ***

## பாவபிரகாசிகை : சந்தி 4 : போஜன ரஸவிபாக சந்தி

**ஹரிகதா[2]ம்ருதசார கு[3]ருக[3]ள**
**கருணதிந்தா[3]பநிது பே[1]ளுவே**
**பரம ப[4]கவத்[3]ப[4]க்தரித[3]னாத[3]ரதி[3] கேளுவுது[3]**

**வனஜஜாண்ட[3]தொ[3]ளுள்ளகி[2]ல சே**
**தனரு பு[4]ஞ்ஜிப சதுரவித[4] போ[4]**
**ஜன பதா[3]ர்த்த[2]தி[3] சதுரவித[4] ரஸரூப தா[1]னாகி[3] |**
**மனகெ[1] ப[3]ந்துத[3]னுண்டுணிஸி ஸம்**
**ஹனனகு[1]ப[1]சய க[1]ரணகா[1]ன**
**ந்த[3]னிமேஷரிகா[3]த்ம ப்ரத[3]ர்ஷன ஸுக[2]வனீவ ஹரி ||1**

பிரம்மாண்டதொளுள்ள அகிலசேதனரு = பிரம்மாண்டத்தில் இருக்கும் அனைத்து பிராணிகளும்
புஞ்சிப = தின்னும்
சதுரவித = காத்ய, பேய, போஜ்ய, லேஹ்ய என்னும் நான்கு வகைகள். காத்ய = கடித்துத் தின்னும் பதார்த்தங்கள். பேய = குடிக்கும் பால் முதலியன. போஜ்ய என்றால் வாயில் போட்டு மெல்லும் பதார்த்தங்கள். லேஹ்ய என்றால் நாக்கில் நக்கி சாப்பிடுவது.
போஜனபதார்த்ததி = போஜன பதார்த்தங்களில்
சதுரவித ரசரூப = நான்கு வகையான பதார்த்தங்களின் ரச ரூபங்கள்
தானாகி = அந்த பரமாத்மனே ஆகி
மனகெபந்ததனு = அவரவர்களின் மனதிற்கு வேண்டியதை, உண்டு, உண்ணவைத்து, பிராணிகளில் இருந்து உண்டு,
சம்ஹனனகெ = தேகத்திற்கு
உபசய = புஷ்டியை / வலிமையை
கரணகெ = ஞானேந்திரிய, மனம் ஆகிய இந்திரியங்களுக்கு
ஆனந்த = சுகத்தை / மகிழ்ச்சியை
அனிமிஷரிகெ = தத்வாபிமானி தேவதைகளுக்கு
ஆத்மப்ரதர்ஷன = தன் ஸ்வரூப தரிசனமான
சுகவனீவ = சுகத்தை
கொடுவனு ஹரி = ஸ்ரீஹரி பரமாத்மன் கொடுக்கிறான்.

இந்த சந்தியில், போஜன பதார்த்தங்களில் எந்தெந்த பகவத் ரூபங்கள் உள்ளன என்னும் விஷயத்தை சொல்லியவாறு, அப்படி அறிவதன் பலன்களை இந்த பத்யத்தில் சொல்கிறார் தாசராயர். பிரம்மாண்டத்தில் இருக்கும் அனைத்து பிராணிகள் உண்ணும் நான்கு விதமான பதார்த்தங்களில், நான்கு விதமான ருசிகளும் தானே ஆகியிருக்கிறான். அறுசுவைகள் என்று நாம் பொதுவாக சொல்வதை, தாசர் நான்கு என்று சொல்வதற்கான காரணம்.

அறுசுவைகள் என்றால்: இனிப்பு, கசப்பு, புளிப்பு, துவர்ப்பு, கார்ப்பு மற்றும் உவர்ப்பு. இந்த ஆறும், தாசராயர் கூறியுள்ள நான்கில் அடங்கியுள்ளன. பக்ஷ்ய என்றால் இனிப்பு, கசப்பு கலந்தவை சில, உப்பு, காரம் கலந்தவை சில. இப்படி இந்த சுவைகளுள்ள பதார்த்தங்களில், ருசியாக தானே இருக்கிறான். அந்தந்த சேதனர்களின் உள்ளிருந்து, அவர்களுக்கு இந்த சுவைகளுள்ள பதார்த்தங்களை தான் உண்டு, அவர்களை உண்ணவைத்து, தேகத்திற்கு வலிமையைக் கொடுத்து, கண் காது போன்ற இந்திரியங்களுக்கு மகிழ்ச்சியைக் கொடுத்து, தத்வாபிமானி தேவதைகளுக்கு தன் ஸ்வரூப தரிசனத்தைக் கொடுத்து சுகங்களைக் கொடுக்கிறான் ஸ்ரீபரமாத்மன்.

**நீட[3]த[3]ந்த[3]த[3]லிப்ப லிங்க[3]க்கெ**
**ஷோடஷாத்மக[1] ரஸவிபா[4]க[3]வ**
**மாடி[3] ஷோட[3]ஷகலெக[3]ளிகெ[3] உபசயக[3]ளனெ கொடு[3]த |**
**க்ரோட[3]னெப்பத்தெரடு[3] ஸாவிர**
**நாடி[3]க[3]த[1] தே[3]வதெக[3]ளொளகி[3]**
**த்தா[3]டுதா[1] நந்தா[3]த்ம சரிஸுவ லோக[1]தொ[3]ளு தா[1]னு ||2**

நீடதந்தலிப்ப = பறவைகளின் கூடுகளைப்போல
இப்ப = இருக்கிறான்
லிங்ககெ = ஸ்தூல சரீரத்திற்கு
ஷோடஷாத்மக = மனம் 1, பஞ்சபூதங்கள் 5, ஞானேந்திரியங்கள் 5. கர்மேந்திரியங்கள் 5. ஆக 16 இந்திரியங்களிலும், அவற்றின் அபிமானி தேவதைகளிலும் அதன் ரூபனாக, அதன் உருவமாக இருப்பதால், ஸ்ரீபரமாத்மனுக்கு 'ஷோடஷாத்மக' என்று பெயர். இத்தகைய 'ஷோடஷாத்மகனான' ஸ்ரீபரமாத்மன்.
ரசவிபாகவ = காத்ய, பேய, பூஜ்ய, லேஹ்ய என்னும் நான்குவித பதார்த்தங்களில் இருக்கும் சுவைகளை வகுத்து, 16 கலைகளுக்கு, மேற்கூறிய 16 இந்திரியங்களுக்கு
உபசயகளனெ கொடுதா = புஷ்டியை / வலிமையைக் கொடுத்து
க்ரோட = வராஹ ரூபியான ஸ்ரீபரமாத்மன்
எப்பத்தெரடு சாவிர நாடிகத = 72,000 நாடிகளில் இருக்கும்
தேவதெகளொளகித்து = தேவதைகளில் இருந்து
ஆடுத = சஞ்சரித்தவாறு
ஆனந்தாத்ம = ஆனந்தஸ்வரூபனான
லோகதொளு = இந்த உலகத்தில்
சரிசுவ = சஞ்சரிக்கிறான்

பறவைகள் அதன் கூட்டில் வசிப்பதைப் போல, ஜீவன் அதற்கு பாதுகாப்பு அரணாக இருக்கும் ஸ்தூல சரீரத்திற்கு, ஷோடஷாத்மகனான ஸ்ரீபரமாத்மன், நான்குவித ரசங்களை (ருசிகளை) பிரித்து உண்ணக் கொடுக்கிறான். நான்குவித பதார்த்தங்கள் என்றால், காத்ய பதார்த்தங்களில், உப்பு, காரம் கலந்த பதார்த்தங்கள் சில உள்ளன. சில இனிப்பு பதார்த்தங்கள். அனைத்தும் காத்ய பதார்த்தங்கள் என்றே அழைக்கப்படுகின்றன. இதைப்போலவே பேய, போஜ்ய மற்றும் லேஹ்யத்திலும்

இருக்கின்றன. இத்தகைய சுவைகளை பிரித்து, ஷோடஷ கலைகளுக்குத் தேவையான வலிமையைக் கொடுக்கிறான். ஷோடஷ கலை என்றால், பாகவத 1ம் ஸ்கந்தத்தில்:

கலாஷ்ச பஞ்ச பூதானி ஞான கர்மேந்த்ரியாணிச|
பஞ்சபஞ்ச மனஷ்சேதி ஷோடஷோக்தோமனீஷிபி: ||

என்னும் வாக்கியத்தின்படி, மனஸ், பஞ்சபூதங்கள், ஞானேந்திரியங்கள், கர்மேந்திரியங்கள் என்னும் இந்த 16 இந்திரியங்களுக்கும் புஷ்டியைக் கொடுத்து வராகரூபியான ஸ்ரீபரமாத்மன், ஸ்தூல சரீரத்தில் இருக்கும் 72,000 நாடிகளின் அபிமானி தேவதைகளில் இருந்து, செயல்களை செய்தவாறு, ஆனந்தஸ்வரூபனாக லோகங்களில் சஞ்சரிக்கிறார்.

**வாரிவாச்யனு வாரியொளகி$^{3}$**
**த்தா$^{3}$ரு ரஸவெந்தெ$^{3}$னிஸி மூவ**
**த்தாருஸாவிர ஸ்த்ரீ புருஷநாடி$^{3}$யொளு தத்$^{3}$ரூப**
**தா$^{4}$ரக$^{1}$னு தானாகி$^{3}$ ஸர்வ ஷ**
**ரீரிக$^{3}$ளலி அஹஸ்ச ராத்ரி வி**
**ஹாரமாள்பனு ப்$^{3}$ருஹதியெம்ப$^{3}$ ஸுனாமதி$^{3}$ம் க$^{1}$ரெஸி ||3**

வாரிவாச்யனு = உதக நாமகனாகி ஸ்ரீபரமாத்மன்
வாரியொளகித்து = அந்த தண்ணீரில் இருந்து
ஆரு ரசவெந்தெனிஸி = அறுசுவை என்று அழைக்கப்பட்டு
மூவத்தாருசாவிர = 36,000 புருஷ, 36,000 ஸ்த்ரி நாடிகளிலும் இருந்து
தத்ரூப தாரகனு = நாடிகளின் ரூபத்தை தான் தரித்து
சர்வஷரீரிகளலி = அனைவரின் தேகத்திலும் இருந்து
அஹஸ்ச = பகல்
ராத்ரி = இரவுகளிலும் இருந்து
ப்ருஹதியெம்ப சுனாமதி = ப்ருஹதி என்னும் சந்தஸ்ஸின் சிறந்த பெயரில் இருந்து
கரெஸி = அழைக்கப்பட்டு
விஹாரமாள்பனு = செயல்களை செய்வான்.

தண்ணீரில் (அதன் தத்வத்தில்) அந்த தண்ணீரின் பெயரில் இருந்து, அந்த தத்வத்தின் மாத்ரா குணமான அறுசுவைகளில் அதாவது, இனிப்பு, கசப்பு, கார்ப்பு, துவர்ப்பு, புளிப்பு, உவர்ப்பு என்னும் அறுசுவைகளின் பெயர்களைப் பெற்றிருக்கிறான். மேலும், 36,000 ஸ்த்ரி நாடிகளிலும், 36,000 புருஷ நாடிகளிலும் அந்த நாடிகளின் ரூபத்தை தானே தரித்து அவற்றில் இருக்கிறான். இந்த தேகத்தில் வலது பக்கத்தில் 36,000 நாடிகளும், இடது பக்கத்தில் 36,000 நாடிகளும் உள்ளன. இடது பக்க நாடிகளுக்கு ஸ்த்ரி நாடிகள் என்றும், வலது பக்கத்து நாடிகளுக்கு புருஷ நாடிகள் என்றும் பெயர்.

ஓராண்டிற்கு 360 பகல், 360 இரவுகள் உண்டு. மனிதனின் பொதுவான ஆயுள் 100 ஆண்டுகள். மொத்தம் 36,000 பகல்கள், 36,000 இரவுகள் ஆகின்றன. அந்த பகல் இரவுகளின் அபிமானி தேவதைகளே, இந்த நாடிகளுக்கும் அபிமானி தேவதைகள் ஆவர். இந்த ஸ்த்ரி புருஷ நாடிகளுக்கு திவா நாடிகள் என்றும், ராத்ரி நாடிகள் என்றும் பெயர் உண்டு.

இந்த 72,000 நாடிகளிலும், நாடிகளின் தேவதைகளிலும், அந்தந்த பெயர்களில் இருப்பதால், ப்ருஹதி என்னும் பெயர் ஸ்ரீபரமாத்மனுக்கு வந்தது. இத்தகைய பெயரால் ஞானிகளால் அழைக்கப்பட்டு நாடிகளில் இருந்து செயல்களை செய்வான்.

**ஆரு ரஸ ஸத்வாதி3 பே4த3தி3**
**ஆரு மூராகி3ஹவு ஸாரா**
**ஸார நீதா1னீத1 க2ண்டாக2ண்ட3 சித்ப்ரசுர |**
**ஈரதி4க எப்பத்து ஸாவிர**
**மாரமணன ரஸாக்2யரூப ஷ**
**ரீரத3லி போ4ஜ்ய ஸுபதா3ர்த்த2தி3 தி1ளிது3 பு3ஞ்ஜிபுது3 ||4**

ஆருரஸ = இனிப்பு, கசப்பு, கார்ப்பு, துவர்ப்பு, புளிப்பு, உவர்ப்பு என்னும் அறுசுவைகள்
சத்வாதிபேததலி = சாத்விக, ராஜஸ, தாமஸ என்னும் மூன்று குணங்களால்
ஆரு மூராகிகவு = 6x3=18
ஸாராஸார = ஸார, அஸார என்ற பெயரில்
நீதானீத = நீத அனீத என்ற பெயரிலும்
கண்டாகண்ட = கண்ட, அகண்ட என்றும்
சித்ப்ரசுர = சித்ப்ரசுர என்ற பெயரிலும்
ஈரதிக எப்பத்துசாவிர = 72,000
மாரமணன = லட்சுமிபதியான
ரசாக்யரூப = 72,000 ரச ஷப்தத்தின் பெயரால் அழைக்கப்படும் ரூபங்களை
ஷரீரதலி = நம் தேகத்தில்
போஜ்ய சுபதார்த்ததி = போஜனம் செய்யும் உத்தம பதார்த்தங்களில்
திளிது = அறிந்து
பஞ்சிபுது = போஜனத்தை செய்யவேண்டும்.

அறுசுவைகளில் பகவத்ரூபங்களை சிந்திக்க வேண்டிய கிரமத்தை சொல்கிறார். இனிப்பு, கசப்பு, கார்ப்பு, துவர்ப்பு, புளிப்பு, உவர்ப்பு என்பவை அறுசுவைகள். இவற்றில் ஒவ்வொன்றிலும் சாத்விக பாகம் என்றும், ராஜஸ பாகம் என்றும், தாமஸ பாகம் என்றும் மூன்று பாகங்கள் உண்டு. இப்படி 6x3=18 பாகங்கள் ஆகின்றன. அவற்றில், சாராசார, நீதானீத, கண்டாகண்ட, சித்ரப்ரசுர என்னும் நான்கு த்வந்த்வங்கள் (இரு பாகங்கள்) சம்பந்தப்பட்டிருக்கின்றன.

அது எப்படியெனில், சாத்விக பாகம், ராஜஸரில் பாதி பாகம் கலந்த சாத்விக பாகம் - இது சார என்று அழைக்கப்படுகிறது. அசார என்றால், தாமஸ பாகம், ராஜஸ

கலந்த தாமஸ பாகம் எனப்படுகிறது. இப்படி ரஜோ குணத்தை இரு பாகங்களாக செய்து, சத்வகுணத்தில் பாதி பாகத்தையும், தமோகுணத்தில் பாதி பாகத்தையும் கொண்டு சேர்ப்பதினால், சார அசார என்று இரு பாகங்கள் உண்டாகின்றது. இந்த சாராசார பாகங்கள் இரண்டும், 18ல் 1 பாகம் ஆயிற்று. இதில் மற்றொரு பாகம் - நீத என்றும், அப்ரசுர என்றும் இரு பெயர்களைக் கொண்ட த்வந்த்வம் - இருக்கிறது.

அது எப்படியெனில்:

நீத என்றால் நாக்கிற்கு நன்றாக சுவை தெரியக்கூடிய இனிப்பு ஆகியவை. அப்ரசுர என்றால் இனிப்பு ஆகியவற்றில் சம்பந்தப்பட்டு நாக்கிற்கு நன்றாக சுவை தெரியும் இனிப்பு பதார்த்தங்கள் என்று பொருள். அதாவது, கசப்பு, இனிப்பு ஆகிய ஒவ்வொரு சுவைகளிலும் நன்றாக தெரியும் உப்பில் இருக்கும் உவர்ப்பு, புளியில் இருக்கும் கசப்பு என இவற்றைத் தவிர மற்ற 5 சுவைகளும் கலந்த சுவையே இது. இவை நாக்கிற்கு தெரிவதில்லை. உப்பில் இருக்கும் உப்பின் சுவைக்கு நீத என்றும், அதில் அடங்கியிருக்கும் மற்ற 5 சுவைகளுக்கு அப்ரசுர என்றும் பெயர். இவை இரண்டும் ஒன்றிலேயே அடங்கியிருப்பதால் இந்த இரண்டையும் ஒரே பாகம் என்று எடுத்துக் கொள்ளவேண்டும். இதில் கண்ட என்றும் அகண்ட என்றும் ஒரு த்வந்த்வ பாகம் உருவாகிறது. கண்ட என்றால் ஒரு சுவையில் இன்னொரு சுவையை சேர்த்து, அந்த சுவை மாற்றுவதற்கு பெயர். ரசம் முதலான பதார்த்தங்களில் புளி சேர்த்து, அதை மாற்றுவதற்காக உப்பு, காரம் ஆகியவற்றை சேர்ப்பது. இப்படி ஒரு பதார்த்தத்தில் பல சுவைகள் சேர்வதால், ருசி-பேதம் ஏற்படுவதற்கு கண்ட என்று பெயர். இனிப்பு முதலான பதார்த்தங்களில், வேறு எந்த சுவையையும் சேர்க்காததால், அதற்கு அகண்ட என்று பெயர். இவை இரண்டு சேர்ந்து ஒரு பாகமாகிறது. சத்வ, ரஜஸ் இவை கலந்த என்னும் சார பதார்த்தங்கள், பகவத் பக்தர்களுக்கு சுகங்களைக் கொடுப்பதால் சித் என்று பெயரைப் பெறுகிறது. தாமஸ ராஜஸ சம்பந்தமான அசார பதார்த்தங்கள், நீசர்களுக்கு நன்றாக புரிவதால், அவை ப்ரசுர என்று பெயரைப் பெறுகிறது.

ஆக, இந்த நான்கு த்வந்த்வங்களும், அந்த 18 ரசங்களில், பாதி சாத்விக ராஜசராகவும், பாதி தாமச ராஜசவாகவும் என இரு பாகங்களாக இருப்பதால், சாராசாராதி 4 த்வந்த்வங்களில் சாராதிகள், சாத்விக ராஜசத்திற்கும், அசாராதிகள் ராஜஸ தாமஸத்திற்கும் சேர்கின்றன.

ஆகையால், இந்த 4 த்வந்த்வங்களையும், 4 பாகங்களாக பிரிக்கின்றனர். ஆகையால், 18x4 = 72 ஆகிறது. இந்த 72 சுவைகளில் ஒவ்வொன்றிலும், விஷ்வாதி 1,000 பகவத் ரூபங்களை சிந்திக்க வேண்டும். அப்படி செய்தால், 72x1000=72,000 ஆகிறது. இதே மாதிரி லட்சுமிபதியான ஸ்ரீபரமாத்மனை நம் தேகத்தில் 72,0000 ரசரூபத்திலும், போஜனம் செய்யும் பதார்த்தங்களிலும் ரசரூபியான பரமாத்மனை சிந்தித்து, உணவினை உண்ணவேண்டும்.

**க்ஷீரக³த ரஸரூபக³ளு மு**
**ந்நூரு மேலைவத்து நாலகு**

**சாரு க்$^{4}$ருதக$^{3}$த ரூபக$^{3}$ளு இப்பத்தரொம்ப$^{3}$த்து ।**
**ஸார கு$^{3}$ட$^{3}$தொ$^{3}$ளகை$^{3}$து$^{3}$ ஸாவிர**
**னூர ஒந்து$^{3}$ ஸுரூப த்$^{3}$விஸஹ**
**ஸ்ராரெரடு$^{3}$ ஷத பஞ்சவிம்ஷதி ரூப ப$^{2}$லக$^{3}$ளலி ।।5**

க்ஷீரகத ரசரூபகளு = பாலில் இருக்கும் சுவையில் இருக்கும் பகவத் ரூபங்கள்
முன்னூரு மேலைவத்து நாலகு = 354
சாரு = மனோஹரமான (சுவையான)
க்ருதகத = நெய்யில் இருக்கும்
ரூபகளு = பகவத் ரூபங்கள்
இப்பத்தரொம்பத்து = 29
குடதொளகெ = வெல்லத்தில்
ஐதுசாவிர நூர ஒந்து = 5101
சுரூப = உத்தமமான பகவத் ரூபங்கள்
பலகளலி = பழங்களில்
த்விசஹஸ்ர = 2,000
ஆரெரடு ஷத = (6+2)x 100 = 800
பஞ்சவிம்ஷதி = 25. மொத்தம் 2,825
ரூப = பகவத் ரூபங்கள் இருக்கிறதென்று அறியவேண்டும்.

முந்தைய பத்யத்தின் சாரமாக, அறுசுவைகளில் அடங்கியிருக்கும் பகவத்ரூபங்களை சொல்லி, இப்போது பால் முதலியவற்றில் அடங்கியிருக்கும் பகவத்ரூபங்களை தனித்தனியாக சொல்கிறார். பாலில் இருக்கும் இனிப்புச் சுவையில் 354 பகவத்ரூபங்களை சிந்திக்கவேண்டும். சிறந்த பதார்த்தமமான நெய்யில் 29 பகவத்ரூபங்களையும், வெல்லத்தில் 5101 ரூபங்களையும், பழங்களில், பழச்சாறுகளில் 2825 ரூபங்களையும் சிந்திக்கவேண்டும்.

**விஷத$^{3}$ ஸ்திர தீக்ஷணவு நிரஹர**
**ரஸக$^{3}$ளொளு மூரைது$^{3}$ஸாவிர**
**த்ரிஷதனவ ரூபக$^{3}$ள சிந்திஸி பு$^{4}$ஞ்சிபுது$^{3}$ விஷய ।**
**ஷ்வஸன தத்$^{3}$வேஷரொளகி$^{3}$த்தீ$^{3}$**
**பெ$^{1}$ஸரினிந்த$^{3}$லி க$^{1}$ரெஸுவனு தே$^{3}$**
**நிசிதரீப$^{1}$ரி மனகெ பொ$^{1}$ளெவனு ப$^{3}$ல்ல விபு$^{4}$தரிகெ$^{3}$ ।।6**

ரசகளலி = மேலே கூறிய பால், நெய், வெல்லம், பழம் ஆகியவற்றில் முறையே விஷத = 354, ஸ்திர = 29, தீக்ஷண = 5101, நிரஹர = 2825 என்று சிந்தித்து,
மூரைதுசாவிர த்ரிஷதனவ ரூபகள = 3+5= 8*1000 + 3*100 + 9 = 8309 ரூபங்களை
சிந்திஸி = சிந்தித்து,
புஞ்சிபுது விஷய = உண்பதற்கு ஏற்ற உணவுகளை உண்ணவேண்டும்.
ஷ்வஸ தத்வேஷரொளகித்து = சித்தத்திற்கு அபிமானியான வாயுதேவரே முதலான தத்வாபிமானி தேவதைகளில் இருந்து
ஈ பெசரினிந்தலி = விஷத, ஸ்திர முதலான பெயர்களால்

கரெசுவனு = அழைத்துக் கொள்கிறான்
ஈ பரி = இந்த மாதிரி
தேனிசிதரெ = தியானம் செய்தால்
பல்ல = அறிந்த
விபுதரிகெ = ஞானிகளுக்கு
மனகெ = மனதில்
பொளெவெனு = காட்சியளிப்பான்.

எண் கணித சாஸ்திரத்தை இங்கு குறிப்பிட்டிருக்கிறார் தாசராயர். அது என்னவெனில்: 'காதினவ, டாதி பஞ்ச, பாதி பஞ்ச, யாதி தச'. இதன் பொருள்:

* க'வில் துவங்கி ஞ'வை விட்டு அதற்கு முன்னர் 'ஜ'வரை மொத்தம் 9 எழுத்துக்கள்.
* ட'வில் துவங்கி ண வரை மொத்தம் 5 எழுத்துக்கள்
* ப வில் துவங்கி ம வரை மொத்தம் 5 எழுத்துக்கள்
* ய முதல் க்ஷ வரை மொத்தம் 10 எழுத்துக்கள்

இப்படி எண்களை குறிக்கும் சம்பிரதாயம் இருக்கிறது. மேலும் 'அங்கானாம் வாமதோகதி:' என்று, எண்களை வலது பக்கத்திலிருந்து இடதிற்கு சேர்த்து படிக்கவேண்டும்.

அதன்படி இங்கு விஷத, ஸ்திர, தீக்ஷண, நிரஹர என்று சொல்லியிருக்கிறார். இதில் :

விஷத = வி=4 ஷ=5 த=3 என 453 வந்தாலும், அதை 354 என்று படிக்கவேண்டும். இதுவே பாலில் இருக்கும் பகவத்ரூபங்கள்
ஸ்திர = ஸ்=7 தி=2 ர=2. இதில் ஸ்+தி இரண்டும் சேர்ந்து இருப்பதால், 7+2=9. ஆக 92. இதை 29 என்று படித்து, இதுவே நெய்யில் இருக்கும் பகவத்ரூபங்கள்
தீக்ஷ்ண = தீ=1 க்ஷ=10 ண=5. இதில் 10ஐ தனியாக 01 என்று மாற்றினால், 5101 என்று வருகிறது. இதுவே வெல்லத்தில் இருக்கும் பகவத்ரூபங்கள்
நிரஹர = நி=5 ர=2 ஹ=8 ர=2. இது 5282. இதை 2825 என்று படித்து, இதுவே பழங்களில் இருக்கும் பகவத்ரூபங்கள் என்று சிந்திக்க வேண்டும்.

இந்த அனைத்து எண்களையும் கூட்டினால், மொத்தம் 8309 வருகிறது. உண்ணத் தகுதியான பதார்த்தங்களை உண்ணும்போது இந்த ரூபங்களை அந்தந்த சுவைகளில் சிந்தித்து உண்ணவேண்டும். இந்த தேகத்தில் இருக்கும் சித்த அபிமானியான வாயுதேவரே முதலான தத்வாபிமானி தேவதைகளில் இருந்து, பகவந்தன் விஷதாதி நாமங்களால் தன்னை அழைத்துக் கொள்கிறான். இப்படியாக சிந்தித்தால், கற்றறிந்த ஞானிகளுக்கு, அங்கங்கு அந்தந்த பகவத்ரூபங்கள் வெளிப்படும் (பகவந்தன் காட்சியளிப்பான்).

**கபில நரஹரி பா⁴ர்க³வ த்ரய**
**வபுஷ நேத்ரதி³ நாஸிகாஸ்யதி³**

**ஷபர நாமக ஜிஹ்வெயலி த$^{3}$ந்த$^{1}$த$^{1}$லி ஹம்ஸாக்$^{2}$ய |**
**த்ரிப$^{1}$தி$^{3}$பாத்$^{3}$ய ஹயாஸ்ய வாச்யதொ$^{3}$**
**ளப$^{1}$ரிமித$^{1}$ ஸுக$^{2}$பூர்ண ஸந்தத**
**க்ருபணரொளகி$^{3}$த்த$^{3}$வரவர ரஸஸ்வீகரிஸி கொடு$^{3}$வ ||7**

கபில = கபில நாமக பகவந்தன்
நரஹரி = நரஹரி ரூபியான பகவந்தன்
பார்கவ = பரசுராமன்
த்ரய = இந்த மூன்று ரூபங்கள்
வபுஷ = சரீரத்தின்
நேத்ரதி = கண்களிலும்
நாஷிக = மூக்கிலும்
ஆஸ்யதி = வாயிலும்
ஷபர நாமக = மத்ஸ்ய நாமகனான பரமாத்மன்
ஜிஹ்வெயலி = நாக்கினில்
ஹம்ஸாக்ய = ஹம்ஸ நாமக பரமாத்மன்
தந்ததலி = பற்களில்
த்ரிபதிபாத்ய = மூன்று வேதங்களாலும் புகழப்படும்
ஹயாஸ்ய = ஹயக்ரீவ நாமகனை
வாச்யதொள் = வாக்கியத்திலும்
ஹீகெ அபரிமித = எல்லைகள் இல்லாத
சந்தத = நிரந்தரமான
சுகபூர்ண = ஆனந்தபூர்ணனான ஸ்ரீபரமாத்மன்
க்ருபணரொள் = இந்திரியங்களை வெல்லமுடியாத மக்களில்
இத்து = இருந்து
அவரவர ரஸ = அந்தந்த ஜீவர்களில் / இந்திரியங்களில் இருந்து, ஏற்பதற்கு தகுந்த விஷயங்களை
ஸ்வீகரிஸி = தான் ஏற்றுக்கொண்டு
கொடுவ = ஜீவர்களுக்கு திருப்தியைக் கொடுக்கிறான்.

இந்த சரீரத்தின் கண்களில் கபில நாமக பரமாத்மனும், மூக்கினில் நரசிம்ம நாமக பரமாத்மனும், வாயில் பரசுராம நாமக பரமாத்மனும், என இந்த மூன்று ரூபங்களும் இந்த மூன்று இந்திரியங்களில் இருக்கின்றன. நாக்கினில் மத்ஸ்ய நாமக பரமாத்மனும், பற்களில் ஹம்ஸ நாமக பரமாத்மனும் இருக்கின்றனர். த்ரி என்றால் வேதங்கள் என்று பொருள். பாகவத முதலாம் ஸ்கந்தத்தில்: 'ஸ்த்ரீ ஷூத்ர த்விஜ பந்தூனாம் த்ரயீ நஸ்ருதி கோசரா', பெண்கள், சூத்திரர், பிராமணர் அல்லாதோர் இவர்களுக்கு த்ரயி = வேதங்கள் இவர்களுக்கு பொருந்தாது. இதே த்ரயீ என்னும் சொல்லை, இங்கு த்ரி என்று சொல்லியிருக்கிறார் தாசராயர். இத்தகைய வேதங்களால் புகழப்படும் ஹயக்ரீவன், வாக்கியங்களில் இருக்கிறான். இப்படி நிரந்தரமானவனான, எல்லைகளற்ற பூர்ணானந்தத்தைக் கொண்ட ஸ்ரீபரமாத்மன், 'க்ருபணயோஜிதேந்த்ரிய:' என்னும் பாகவத வாக்கியத்திற்கு ஏற்ப,

க்ருபணன் என்றால் இந்திரியங்களை தன் வசப்படுத்தாதவர்கள். இத்தகைய மக்களில் இருந்து, அவரவர்களின் சுவையை ஏற்றுக்கொள்கிறான்.

கண்களில் இருந்துகொண்டு பார்க்கிறான். மூக்கினில் இருந்து வாசம் பார்க்கிறான். வாயில் இருந்து உண்கிறான். இந்த செயல்களை ஸ்ரீபரமாத்மன் செய்து அவர்களை திருப்திப்படுத்துகிறான். அஜிதேந்திரியர்களில் என்று ஏன் சொல்லியிருக்கிறார் என்றால், ஜிதேந்த்ரியர்களுக்கு நிஷித்த (ஏற்கத்தகாத) பதார்த்தங்களில் ஆசை இருப்பதில்லை. ஆகையால், அஜிதேந்திரியர்களில் இருந்து அந்த விஷயங்களை ஸ்வீகரிக்கிறான். அப்படி தான் ஸ்வீகரிப்பதால், அவர்களுக்கு திருப்தியைக் கொடுக்கிறான்.

**நிருபமானந்தா3த்3ம ஹரி ஸ**
**ங்கருஷண ப்ரத்3யும்ன ரூபதி3**
**லிருதிஹனு போ4க்த்ருக3ளொளகெ3 தச்சக்தித3னு எனிஸி |**
**கரெஸுவனு நாராயணனிரு**
**த்தெ3ரடு3 நாமதி3 போ4ஜ்யவஸ்துக3**
**நிருத த1ர்ப1கனாகி3 த்ருப்தியனீவ சேதனகெ ||8**

நிருபமானந்தாத்ம = ஒப்புமை இல்லாத ஆனந்த ஸ்வரூபனான
ஹரி = ஸ்ரீபரமாத்மன்
சங்கருஷண பிரத்யும்ன ரூபதலிருதிஹனு = சங்கர்ஷண, பிரத்யும்ன ரூபங்களில் இருந்து
போக்த்ருகளொளகெ = போஜனம் செய்பவர்களுக்குள் இருந்து
இருதிஹனு = வாசம் செய்கிறான்.
தச்சக்திதனு = உணவு உண்ணும் சக்தியைக் கொடுக்கிறான் என்று
கரெசுவனு = சர்வபோக்தன் என்று ஞானிகளால் அழைத்துக் கொள்ளப்படுகிறான்
நாராயணனிருத்தெரடு நாமதி = நாராயண, அனிருத்த என்னும் இரு நாமங்களில்
போஜ்யவஸ்துக = உணவை உண்ணும் தகுதியுள்ள பதார்த்தங்களில் இருந்துகொண்டு
நிருத = தினந்தோறும் (எப்போதும்)
தர்ப்பகனாகி = ஜீவர்களை உணவினை உண்ணச்செய்து
த்ருப்தியனீவ = திருப்தியைக் கொடுக்கிறான்
சேதனகெ = ஜீவர்களுக்கு

ஒப்புமையில்லாத, ஆனந்த ஸ்வரூபியான ஸ்ரீபரமாத்மன், சங்கர்ஷண பிரத்யும்ன என்னும் இரு ரூபங்களில் உணவை உண்பவர்களில் இருந்து, உணவை உண்பதற்கான சக்தியை அவர்களுக்குக் கொடுத்து, 'போஜனசக்திப்ரதன்' என்னும் பெயரைப் பெறுகிறான். நாராயண அனிருத்த என்னும் இரு பெயர்களில், உணவை உண்ணும் தகுதியுள்ள பதார்த்தங்களில் இருந்துகொண்டு, அதனை ஜீவர்களை உண்ணச்செய்து, அவர்களுக்கு திருப்தியைக் கொடுக்கிறான்.

**வாஸுதே3வனு ஔஹொரகெ3 அவ**

**கா1ஷகொ1டு3வ நப4ஸ்த2னாகி3 ர**
**மாஸமேத விஹாரமாள்ப1னு பஞ்சரூபத3லி ।**
**ஆஸரோருஹ ஸம்ப4வாப4வ**
**வாஸவாதி3 ஸமஸ்தசேதன**
**ராஷியொளகி3ஹ னெந்த3ரிதவனு அவனே கோ1வித3னு ।।9**

வாசுதேவனு = வாசுதேவன நாமக பரமாத்மன்
ஔஹொரகெ = சரீரங்களின் உள்ளேயும் வெளியேயும் இருந்து
நபஸ்தனாகி = ஆகாயத்தில் இருந்து
அவகாஷ கொடுவனு = உள்ளே இருந்துகொண்டு ஸ்வாசத்தினை இழுப்பது, ஸ்வாசத்தினை விடுவது ஆகிய விஷயங்களை செய்கிறான்
பஞ்சரூபதலி = அனிருத்தாதி ஐந்து ரூபங்களால்
ரமா சமேத = ஷாந்தி, கிருதி முதலான 5 ரூபங்களைக் கொண்ட லட்சுமி சமேதனாக
விஹார மாள்பனு = இந்த சரீரத்தில் இருந்து செயல்களை செய்கிறான்
ஆ ஸரோருஹ சம்பவ = பரமாத்மனின் நாபிக் கமலத்திலிருந்து தோன்றிய பிரம்மதேவரில் தொடங்கி
பவ = ருத்ரர்
வாசவாதி = இந்திரனே முதலான என்றால், தேவ, தைத்ய, மனிதர்கள் என அனைவரும்
சேதனராசியொளகெ = சேதனர்களில்
இஹனெந்து = இருக்கிறான் என்று
அரிதவனு = யார் அறிகிறானோ
அவனே கோவிதனு = அவனே ஞானி.

வாசுதேவ நாமக பரமாத்மன், பாஞ்ச-பௌதிக சரீரமான நம் தேகத்தில் உள்ளே மற்றும் வெளியே இருந்துகொண்டு, உள்ளே அன்னம், தண்ணீர் ஆகியவற்றை ஏற்றுக்கொண்டும், ஸ்வாசத்தை இழுத்தும், வெளியே இருந்து அந்த ஸ்வாசத்தை விடுவதுமான செயல்களை செய்கிறான். இப்படி ஸ்ரீபரமாத்மன், ஷாந்தி, கிருதி, ஜயா, மாயா, லட்சுமி என்னும் 5 ரமாரூபங்களாக அவருடன், அனிருத்த, பிரத்யும்ன, சங்கர்ஷண என்னும் 5 தன்னுடைய ரூபங்களால் இந்த சரீரங்களில் இருந்து செயல்களை செய்கிறான்.

இப்படியாக பிரம்மன், ருத்ராதி அனைத்து தேவதைகளிலும், கலி முதலான தைத்யர்களிலும் இருந்து, மனுஷ்ய பறவை மிருகம் ஆகிய அனைத்து சேதனர்களிலும் இருந்து சஞ்சரிக்கிறான் / செயல்களை செய்கிறான் என்று அறியும் மனிதனே ஞானி என்று அறியவேண்டும்.

**வாஸுதே3வனு அன்னதொ3ளு நா**
**நா ஸுப4க்ஷ்யதி3 ஸங்கர்ஷண க்ரு**
**தீ1ஷ பரமான்னதொ3ளு க்4ருத1தொ3ளகி3ப்ப1 னனிருத்த3 ।**
**ஆ ஸுபர்ணாம்ஸக3னு ஸுபதி3**

**வாஸவானுஜ ஷாக[1]தொ[3]ளு மூ**
**லேஷ நாராயணனு ஸர்வத்ரத[3]லி நெலெஸிஹனு ||10**

வாசுதேவனு = வாசுதேவ நாமக பரமாத்மன்
அன்னதொளு = அன்னத்தில்
நானாசுபக்ஷ்யதி = பல வகைகளான சிறந்த பக்ஷயங்களில்
சங்கர்ஷண = சங்கர்ஷண நாமக பரமாத்மன்
க்ருதீஷ = பிரத்யும்ன நாமக பரமாத்மன்
பரமான்னதொளு = பாயசங்களில்
அனிருத்த = அனிருத்த நாமக பரமாத்மன்
க்ருததொளகெ = நெய்யில்
இப்பனு = இருக்கிறான்
ஆசுபர்ணாம்சகனு = கருட வாகனனான ஸ்ரீகிருஷ்ணன் (சுபர்ண = கருடன், அவனின் அம்சக = முதுகில் அமர்ந்திருப்பவன்)
சூபதி = பருப்புகளில்
வாசவானுஜ = இந்திரனின் தம்பியான உபேந்திரன் (வாமனன்)
ஷாகதொளு = பொரியல்களில்
மூலேஷ = மூல பிரக்ருதிக்கு தலைவனான, நாராயணன்
சர்வத்ரதலி = அனைத்து போஜ்ய பதார்த்தங்களில்
நெலெஸிஹனு = நிலைத்திருக்கிறான்.

அன்னத்தில் வாசுதேவ மூர்த்தியும்,
பற்பல வகைகளான சிறந்த பக்ஷ்யங்களில் சங்கர்ஷண மூர்த்தியும்,
பாயசத்தில், கிருதிபதியான பிரத்யும்ன மூர்த்தியும்,
நெய்யில் அனிருத்த மூர்த்தியும் இருக்கின்றனர்.
பருப்பில், கருட வாகனனான ஸ்ரீகிருஷ்ணனும்
பொரியல்களில் உபேந்திரனும்
அனைத்து போஜ்ய பதார்த்தங்களில் லட்சுமிபதியான ஸ்ரீ நாராயணனும் நிலைத்திருக்கின்றனர்.

இந்த சந்தியில் முதல் பத்யத்திலிருந்து துவங்கி இன்னும் அடுத்தடுத்த பத்யங்களில் சொல்லப்பட்டிருக்கும் வியாப்தி விஷயங்கள், ஐதரேய பாஷ்யத்தில் தெளிவாக விவரமாக விளக்கப்பட்டுள்ளது. அதையே தாசராயர் இங்கு சொல்லியிருக்கிறார். அதிலும், நிருபமானந்தாத்ம என்னும் 8ம் பத்யத்திலிருந்து 10ம் பத்யம் வரைக்கும் சொல்லியிருப்பதற்கான ஐதரேய உபநிஷத் வாக்கியங்கள் இவையே.

சங்கர்ஷண ப்ரத்யும்னௌ தத்ர போக்த்யஷு சம்ஸ்திதௌ |
போக்த்ய ஷக்திப்ரதௌ நித்யம் போக்தாதௌச விசேஷத: ||
நாராயணானிருத்தௌச போஜ்யவஸ்து ஷுசம்ஸ்திதௌ |
தர்ப்பகோ சர்வஜீவானாம் ||
(இது 8ம் பத்யத்தின் அர்த்தத்தை விளக்கும் உபநிஷத் வாக்கியம்).

அவகாஷப்ரதோ நித்யம் வாசுதேவோ நபஸ்தித: |
பஞ்சரூபாத்மகம் விஷ்ணும் ய உபாஸ்தெ சதைவஹி ||
(இது 9ம் பத்யத்தின் அர்த்தத்தை விளக்கும் உபநிஷத் வாக்கியம்).

வாசுதேவஸ்துஜான்னஸ்தோஹ்ய நிருத்தோக்ருக்தே ஸ்தித: |
நாராயணஸ்து சர்வத்ர ||
(இது 10ம் பத்யத்தின் அர்த்தத்தை விளக்கும் உபநிஷத் வாக்கியம்).

**அக[3]ணிதாத்ம ஸுபோ[4]ஜன பதா[3]**
**ர்த்த[2]கள ஒளகெ[3] அகண்ட[3]னொந்தொ[3]**
**ந்த[3]க[3]ளி னொளனந் தாம்ஷதி[3]ந்த[3]லி க[2]ண்ட[3]னெந்தெ[3]னிஸி |**
**ஜக[3]தி[3] ஜீவர த்ருப்திபடி[3]ஸுவ**
**ஸ்வக[3]தபே[4]த[3] விவர்ஜிதன இ**
**ப்ப[3]கெ[3]ய ரூபவனரிது பு[4]ஞ்சிஸி அர்ப்பிஸவனடி[3]கெ[3] ||11**

அகணிதாத்ம = எண்ணிக்கையில்லா ரூபங்களைக் கொண்ட
சுபோஜன பதார்த்தகள = போஜனம் செய்வதற்கு ஏற்ற பதார்த்தங்களின்
ஒளகெ = உள்ளே
அகண்ட = அகண்ட என்றும்
ஒந்தொந்தகளினொள் = ஒவ்வொரு அம்சத்திலும்
அனந்தாம்ஷதிந்தலி = அனந்தமான அம்சங்களில் இருந்து
கண்டனெந்தெனிஸி = கண்ட என்ற பெயரைப் பெற்று
ஜகதி = உலகத்தில்
ஜீவர த்ருப்திபடிசுவ = ஜீவர்களை திருப்திப்படுத்தும்
ஸ்வகதபேதவிவர்ஜிதன = தன் ரூபங்களில் பரஸ்பரம் பேதங்கள் அற்ற ஸ்ரீபரமாத்மன்
ஈ பகெய = கண்டாகண்ட என்னும் இரு விதங்களான
ரூபவனு = ரூபங்களை
அரிது = அறிந்து
புஞ்சிஸி = போஜனத்தை உண்டு
அவனடிகெ = பரமாத்மனின் பாதாரவிந்தங்களில்
அர்ப்பிஸு = சமர்ப்பணம் செய்.

அனந்தானந்த ரூபங்களைக் கொண்ட ஸ்ரீபரமாத்மன், உண்ணும் பக்ஷ்ய, பதார்த்தங்களில், அந்தந்த பெயர்களில் அகண்ட ரூபனாக இருந்து, அன்னத்தின் ஒவ்வொரு பருக்கையிலும், காய்கறிகளின் ஒவ்வொரு துண்டுகளிலும் கண்ட நாமகனாக இருக்கிறான். சிரோடி முதலான பக்ஷ்ய பதார்த்தங்களில் அகண்ட ரூபங்களில் இருக்கிறான். அதாவது, 100 சிரோடிகளை சேர்த்து வைத்தால், அந்த மொத்த பதார்த்தத்திலும் அகண்ட ரூபனாகவும், ஒவ்வொரு சிரோடியிலும் கண்டரூபனாகவும் இருக்கிறான். இப்படி கண்டாகண்ட ரூபங்களில் போஜ்ய வஸ்துகளில் இருந்தாலும், இந்த பகவத்ரூபங்களில் பரஸ்பரம் பேதங்கள்

இல்லாதவனாக இருக்கிறான். சிரோடி, ஜிலேபி, அன்னம், ரசம் ஆகிய பதார்த்தங்களுக்கு பரஸ்பரம் பேதங்கள் இருந்தாலும், அவற்றில் அந்தந்த உருவங்களில் இருக்கும் பகவத்ரூபங்களுக்கு, குணாதிகளில் பரஸ்பரம் பேதம் இல்லை என்பதே இதன் பொருள்.

இப்படியாக பதார்த்தங்களில் கண்ட, அகண்ட ரூபங்களில் இருந்து, அந்தந்த பதார்த்தங்களை உண்ணும் பிராணிகளை திருப்திப்படுத்துகிறான் என்று சிந்தித்து, உண்டு, அதனை பரமாத்மனுக்கே அர்ப்பிக்கவேண்டும்.

இதை கேட்போர், பின்பற்றுவோர் என பலர் இருந்தாலும், தாசராயர் சொல்லும்போது ஒருமையிலேயே செய், அறி என்று சொல்வது எதற்காக என்றால், 'சமுதாயைகவசன' என்னும் இலக்கணக் குறிப்பினால், தன் சிஷ்ய மண்டலியை ஒரே குழுவாக நினைத்து தாசராயர் அவர்களிடம் இப்படி சொல்வதாக அறியவேண்டும்.

**ஈப[1]ரியொளரிதும்ப[3] நர நி**
**த்யோப[1]வாஸி நிராமயனு நி**
**ஷ்பாபி நித்ய மஹத்ஸு யக்[3]ஞுக[3]ளா சரிஸித[3]வனு |**
**போ[1]பு[1]தி[3]ப்புது[3] ப[3]ப்பு[1]தெ[3]ல்ல ர**
**மாபதி க[3]தி[4]ஷ்டா[2]னவெனலு க்ரு**
**பா பயோனிதி[4] மாத[1]னாலிஸுவனு ஜனனியந்தே ||12**

ஈ பரியலி = இதுவரை சொன்னபடி
அந்து = அறிந்து
உம்ப = உண்ணும்
நர = மனிதன்
நித்யோபவாசி = நித்யோபவாச விரதத்தை அனுஷ்டிக்கும் பலனைப் பெறுகிறான்
நிராமயனு = நோய்கள் இல்லாதவன்
நிஷ்பாபி = பாவங்கள் இல்லாதவன்
நித்ய = நிரந்தரமாக (எப்போதும்)
மஹத் = பெரிதான
ஸு = சிறந்த
யக்ஞுகள = யாக யக்ஞங்களை
ஆசரிசிதவனு = செய்த பலன்களைப் பெறுகிறான்
போபுது = தன் கை விட்டுப் போகும் பதார்த்தங்கள்
இப்புது = தன்னிடமே இருப்பவை
பப்புது = வருங்காலத்தில் வரப்போகும் விஷயங்கள்
எல்ல = இவை அனைத்தும்
ரமாபதிகெ = ரமாபதியான பரமாத்மனுக்கு
அதிஷ்டானவெனலு = இருப்பிடம் என்று அறி
க்ருபா பயோனிதி = கருணைக்கடல்
ஜனனியந்தெ = தாயைப் போல

மாதனு = நம் பேச்சினை
ஆலிசுவனு = அன்புடன் காது கொடுத்துக் கேட்பான்.

மேலே கூறியபடி, ஸ்ரீஹரி கண்டாகண்ட ரூபங்களால், போஜ்ய பதார்த்தங்களில் நிலைத்திருக்கிறான் என்பதை அறிந்து, போஜனம் செய்பவன், நித்யோபவாச விரதத்தினால் வரும் பலன்களைப் பெறுகிறான். நோய் நொடிகள் இல்லாதவன் ஆகிறான். பாவங்கள் இல்லாதவனாகிறான். தினந்தோறும் அஸ்வமேத யாகங்களை செய்வதால் வரும் பலன்களைப் பெறுகிறான். இதுமட்டுமல்லாமல், என்னை விட்டுப் போன பதார்த்தங்களில் இருக்கும் பரமாத்மனே, எனக்குள்ளும் இருந்து, எனது செயல்களுக்கேற்ப, எனக்கு போகங்களைக் கொடுக்கிறான். இப்போதும் என் செயல்களாலேயே எனக்கும் அந்த பதார்த்தங்களுக்கும் சம்பந்தத்தை ஏற்படுத்துகிறான். இது அவனது லீலை என்றே நினைக்கவேண்டும். நம்மிடம் இருப்பதை மிகுந்த அபிமானத்துடன் பார்க்காமல், பரமாத்மனே அதன் ரூபத்தில் எனக்கு போகங்களைக் கொடுக்கிறான். அவனது விருப்பத்தில், எப்போது இது போதும் என்று நினைக்கிறானோ, அப்போது அந்த பதார்த்தத்தை என்னிடமிருந்து விலக்குகிறான். ஆக, அனைத்து பதார்த்தங்களிலும் இருப்பவை பகவத்ரூபங்களே என்று சிந்தித்து, நம் அனைத்து பாரத்தையும் அவன் மேலே போட்டுவிட்டால், தாய் தன் குழந்தைகளைக் கொஞ்சி, அன்புடன் அவர்களை பார்த்துக் கொள்வதைப் போல, நம் பேச்சுக்களை பரமாத்மன் கேட்டு நம்மைக் காப்பாற்றுவான்.

**ஆரெரடு$^{3}$ ஸாவிரத$^{3}$ மேலி**
**ந்னூர ஐவத்தொந்து$^{3}$ ரூபதி$^{3}$**
**ஸாரபோ$^{3}$க்த னிருத்த$^{3}$தே$^{3}$வனு அன்னமயனெனிப |**
**மூரெரடு$^{3}$வரெ ஸாவிரத$^{3}$ மே**
**ல் மூரதி$^{3}$க$^{1}$ நால்வத்து ரூபதி$^{3}$**
**தோ$^{1}$ருதி$^{1}$ஹ ப்ரத்$^{3}$யும்ன ஜக$^{3}$தொ$^{3}$ளு ப்ராணமயனாகி$^{3}$ ||13**

ஆரெரடு சாவிரத = 6+2=8 ஆயிரம்
மேலே இன்னூர ஐவத்தொந்து ரூபதி = + 251 ரூபத்தினால்
அனிருத்ததேவனு = அனிருத்த ரூபி பகவந்தன்
சாரபோக்த = போஜ்ய பதார்த்தங்களின் சாரத்தை ஏற்றுக்கொள்பவன்
அன்னமயனெனிப = அன்னமய என்று அழைத்துக் கொள்கிறான்
மூரெரடுவரெ சாவிரத = 3+2.5=5.5 ஆயிரம்
மேல் மூரதிக நால்வத்து ரூபதி = + 43 ரூபத்தில்
ப்ரத்யும்ன = பிரத்யும்ன ரூபியான பகவந்தன்
ஜகதொளு பிராணமயனாகி = பிராணமயனாக உலகில்
தோருதிஹ = நிலைத்திருக்கிறான்.

அனிருத்ததேவன், அன்னமயனாகி 8251 ரூபங்களால், அனைத்து பதார்த்தங்களின் சாரத்தையும் ஏற்றுக் கொள்பவன் என்று அழைக்கப்படுகிறான். இந்த எண்ணிக்கை, அனிருத்த என்ற சொல்லின் எண்ணிக்கைக்கு பொருந்துகிறது. அ=1 நி=5 ரு=2 த்த=8

ஆக 8251.பிரத்யும்னன், உலகத்தில், பிராணமயனாகி 5543 ரூபங்களால் நிலைத்திருக்கிறான். இங்கும் பிரத்யும்ன என்பதற்கு இந்த எண் சரியாகப் பொருந்துகிறது. ப்=1 ர=2 (1+2=3) த்யு=4 ம்=5 ன=5 ஆக 5543 என்று வருகிறது.

**எரடு$^3$ கோ$^1$ஷக$^3$ளொள ஹொரகெ$^3$ ஸ**
**ங்கருஷணைது$^3$ ஸுலக்ஷத$^3$ரவ**
**த்தெரடு$^3$ ஸாவிரதே$^3$ ளதிக$^1$ஷத$^1$ ரூபக$^3$ள த$^4$ரிஸி |**
**கரெசிகொம்ப$^3$ மனோமயனு யெ**
**ந்த$^3$ரவிதூ$^3$ரனு ஈரெரடு$^3$ ஸா**
**விரத$^3$ முன்னூராத$^3$ மேல் நால்கதி$^4$க எப்பத்து ||14**

எரடு கோஷகள = பிராண மற்றும் அன்ன என்னும் இரு கோஷங்களின்
ஒள ஹொரகெ = உள்ளே மற்றும் வெளியே
அரவிதூரனு = தோஷங்கள் அற்றவனான
சங்கர்ஷண = சங்கர்ஷண ரூபி பரமாத்மன்
ஐது சுலக்ஷதரவத்தெரடு சாவிரதேளதிக ஷத = 500000 + 62000 + 100 + 7 = 562107
ரூபகள தரிஸி = ரூபங்களை தரித்து
கரெசிகொம்ப மனோமயனு = மனோமயன் என்று அழைத்துக் கொள்கிறான்
ஈரெரடு சாவிரத = இந்த வாக்கியம் அடுத்த பத்யத்தில் சேர்ந்து கொள்கிறது. ஆகவே இவை அங்கு விளக்கப்படும்.

நம் தேகத்தில் அன்னகோஷம் என்றும், பிராணகோஷம் என்றும் இரு கோஷங்கள் இருக்கின்றன. போஜ்ய பதார்த்தங்கள் அனைத்தும் அன்னகோஷத்தில் சேர்கின்றன. பிராணகோஷத்தில் காற்று சஞ்சரிக்கிறது. இந்த இரு கோஷங்களின் உள்ளே மற்றும் வெளியே சங்கர்ஷணரூபியான ஸ்ரீபரமாத்மன், முன்னர் சொன்ன எண்ணிக்கையின்படி, ச=7 ங்=0 க=1 ரு=6 ஷ=2 ண=5 என வருகிறது. இதை வலமிருந்து படித்தால், 526107 ஆகிறது. இவ்வளவு ரூபங்களை தரித்து, மனோமயன் என்று அழைத்துக்கொண்டு வியாப்தனாக இருக்கிறான் ஸ்ரீபரமாத்மன்.

**ரூபதி$^3$ம் விக்ஞானமய னெ**
**ம்பீ$^3$பெ$^1$ஸரினிம் வாஸுதே$^3$வனு**
**வ்யாபிஸிஹ மஹதா$^3$தி$^3$ த$^1$த்வதி தத்ப$^1$தி$^1$க$^3$ளொளகெ$^3$ |**
**ஈ புருஷ நாமகன ஷுப$^4$ஸ்வே**
**தா$^3$பளொனிப ரமாம்ப$^3$ தா பி$^3$ர**
**ம்மா பரோக்ஷிக$^3$ளாத$^3$வர லிங்கா$^3$ங்க$^3$ கெடி$^3$ஸுவளு ||15**

ஈரெரடு சாவிரத முன்னூராத மேல் நால்கதிக எப்பத்து = (2+2)*1000=4000 + 300+80+4 = 4384
ரூபதிம் = ரூபங்களால்
விக்ஞானமய = விக்ஞானமய என்ற பெயரில்
வாசுதேவனு = வாசுதேவன் என்னும் பகவந்தன்
மஹதாதிதத்வ = மஹத் தத்வ முதலான தத்வங்களில்

தத்பதிகளொளகெ = மஹத் முதலான தத்வங்களின் அபிமானிகளான பிரம்மாதி தேவதைகளுக்குள்
வியாபிசிஹ = நிலைத்திருக்கிறான்
ஈ புருஷ நாமகன = இந்த புருஷ நாமகனான வாசுதேவன்
ஷுப = மங்களகரமான
ஸ்வேதாபளெனிஸி = வியர்வையிலிருந்து உதித்த விரஜா நதி
ரமாம்ப = ரமா நாமகளான ஜகன்மாதா
தா = தான்
பிரம்மாபரோக்ஷிகளாதவர = பிரம்ம அபரோக்ஷத்தைப் பெற்று, முழுமையான சாதனைகளை செய்தவர்களுக்கு, அவர்களின் முக்திகாலத்தில்
லிங்காங்க = லிங்க தேகத்தை
கெடிசுவளு = பங்கம் செய்கிறாள்.

வாசுதேவன் என்னும் பெயரை எண்ணிக்கையில் பார்த்தால், வா=4 சு=8 தே=3 வ=4. இதை வலதுபுறமாக படித்தால் 4384 என வருகிறது. வாசுதேவ நாமகனான ஸ்ரீபரமாத்மன் இவ்வளவு ரூபங்களால், விக்ஞானமயன் என்று பெயரில், மஹத் தத்வ, அஹங்கார தத்வ முதலான தத்வங்களிலும், தத்வாபிமானி தேவதைகளிலும் நிலைத்திருக்கிறான். இத்தகைய புருஷ நாமகனான வாசுதேவரூபி ஸ்ரீபரமாத்மனின் பத்னியான ஜகத்ஜனனியான ரமாதேவி, பரமாத்மனின் வியர்வையிலிருந்து, விரஜா நதி என்னும் பெயரில் பிறந்திருக்கிறாள். இவள், முக்தியோக்யரான அனைத்து ஜீவர்களும், பிரம்ம அபரோக்ஷத்தைப் பெற்று தங்களின் சாதனைகளை முடித்துக்கொண்ட பிறகு, பிரம்மலோகத்தை அடைந்து சில காலம் இங்கு இருந்து பின் முக்திக்கான காலம் வந்தபோது, பிரம்மனுடன் சேர்ந்து, விரஜா நதி என்னும் தன்னில் ஸ்னானம் செய்வித்து, அப்போது அவர்களின் லிங்கதேகத்தை பங்கம் செய்கிறாள்.

**ஐது$^{3}$ஸாவிரனூர இப்ப**
**த்தைது$^{3}$ நாராயணன ரூபவ**
**தா த$^{4}$ரிசிகொண் ட$^{3}$னுதி$^{3}$னதி$^{3}$ ஆனந்த$^{3}$மயனெனிப |**
**ஐது$^{3}$லக்ஷத மேலெ எம்ப$^{3}$**
**த்தை$^{1}$து$^{3}$ ஸாவிர நால்கு$^{1}$ஷதக$^{3}$ள**
**லைது$^{3}$ கோ$^{1}$ஷாத்மக விரிஞ்ச்யாண்ட$^{3}$தொ$^{3}$ளு தும்பி$^{3}$ஹனு ||16**

நாராயணன் = நாராயணரூபியான ஸ்ரீபரமாத்மன்
ஐதுசாவிரனூர இப்பத்தைது = 5125
ரூபவ = ரூபங்களை
தா = தான்
தரிசிகொண்டு = தரித்து
அனுதினதி = தினந்தோறும் (எப்போதும்)
ஆனந்தமயனெனிப = ஆனந்தமய என்று தன்னை அழைத்துக் கொள்கிறான்

இதுகோஷாத்மக = அன்னமய, பிராணமய, மனோமய, விக்ஞானமய, ஆனந்தமய என்று ஐந்து கோஷாத்மகனாகி, அனிருத்த, பிரத்யும்ன, சங்கர்ஷண, வாசுதேவ, நாராயண என்னும் 5 ரூபங்களால்
ஐதுலக்ஷத மேலெ எம்பத்தைது சாவிர நால்குஷதகள = 585400 ரூபங்களில்
விரிஞ்சாண்டதொளகெ = பிரம்மாண்டத்தில்
தும்பிஹனு = நிலைத்திருக்கிறான்.

நாராயண என்பதை எண்ணிக்கையில் பார்த்தால், நா=5 ரா=2 ய=1 ண=5 என வருகிறது. இதை வலப்பக்கமாக படித்தால், 5125 ஆகிறது. ஸ்ரீபரமாத்மன் இவ்வளவு நாராயண ரூபங்களில் ஆனந்தமய என்று அழைத்துக் கொள்கிறான். ஆக பரமாத்மன், அன்னமய, பிராணமய, மனோமய, விக்ஞானமய, ஆனந்தமய என்னும் பெயர்களில் அனிருத்த, பிரத்யும்ன, சங்கர்ஷண, வாசுதேவ, நாராயண என்னும் 5 ரூபங்களைக் கொண்ட பரமாத்மன் மொத்தம் 585400 ரூபங்களில் இந்த பிரம்மாண்டத்தில் அனைத்து இடங்களிலும் வியாபித்திருக்கிறான்.

**நூரவொந்து[3] ஸுரூபதி[3]ம் ஷா**
**ந்தீ[1]ரமண தானன்ன னெனிபை**
**நூருமேல் மூரதி[4]க[3]தச ப்ராணாக்[2]ய ப்ரத்[3]யும்ன |**
**தோருதிஹ னயிவத்து ஐது[3] வி**
**கா[1]ரமனதொ[3]ளு ஸங்கருஷணை**
**நூரு சதுராஷீதி விக்ஞானாத்ம விஷ்வாக்[2]ய ||17**

அன்னகோஷத்தில், அன்னாதிகளின் சமூகத்திற்கு (உதாரணம்: ஒரு பாத்திரத்தில் உள்ள மொத்த அன்னத்திற்கு) மய என்று பெயர். கோஷம் என்றால் அதற்கான உறை என்று பொருள். அதற்குள் முழுமையாக அன்னத்தை நிரப்பினால், அதை அன்னமய என்று அழைக்கலாம். கண்டரூபத்தினால் அன்னகோஷாதிகளில் இருக்கும் பகவத்ரூபங்களை முன்னர் கூறினார். இப்போது, அன்ன, பிராண ஆகிய சொற்களில் அழைக்கப்பட்டு அகண்ட ரூபங்களாக இருக்கும் பகவத்ரூபங்களை தெரிவிக்கிறார்.

ஷாந்திரமண = ஷாந்திதேவியின் பதியான அனிருத்த நாமக பரமாத்மன்
நூரவொந்து சுரூபதிம் = 101 ரூபங்களால்
அன்னனெனிபை = அன்னமய கோஷத்திற்கு அன்ன என்னும் பெயரில் ஆதாரபூதனாக இருக்கிறான்
ப்ரத்யும்ன = பிரத்யும்ன நாமகன்
ஐனூருமேல் மூரதிகதச = 513 ரூபங்களால்
ப்ராணாக்ய = பிராண என்னும் பெயரால் பிராணகோஷத்தை தரித்திருக்கிறான்
சங்கர்ஷண = சங்கர்ஷண நாமகன்
ஐவத்துஐது = 55 ரூபங்களால்
விகாரமனதொளு = சஞ்சலமான மனஸ் என்னும் கோஷத்திற்கு ஆதாரமாக மனஸ் என்னும் பெயரால் காணப்படுகிறான்
விஷ்வாக்ய = பிரபஞ்சத்தை காத்துக்கொண்டிருக்கும் வாசுதேவன்

ஐ நூருசதுராஷீதி = 584 ரூபங்களால்
விக்ஞானாத்ம = விக்ஞான கோஷத்திற்கு ஆதாரமாக விக்ஞான ஸ்வரூபனான இருக்கிறான்.

ஷாந்திரமணனான அனிருத்தன், சரீரத்தில் அன்னமயனாக அன்ன என்று அழைக்கப்படுகிறான். அதாவது, ஒவ்வொரு பருக்கையையும் தனித்தனியாக எடுத்துப் பார்த்தால், அது கண்ட எனப்படுகிறது. இப்படி பல கண்ட ரூபங்களால் ஆன ஒரு குழுவிற்கு, அகண்டமாக அன்ன என்று பெயர். முந்தைய பத்யத்தில் கண்ட ரூபத்தை சொல்லி, இங்கு அன்ன, பிராண என்னும் அகண்ட ரூபத்தை சொல்கிறார். அன்ன என்பதை எண்ணிக்கையில் சொன்னால், அ=1 ன்ன=10. இதை வலப்பக்கத்திலிருந்து படித்தால், 101 ரூபங்கள் ஆகிறது. இந்த ரூபங்களால் அனிருத்தன் அன்ன என்று அழைக்கப்படுகிறான்.

இதைப்போலவே, பிரத்யும்னன் பிராண என்பதை எண்ணிக்கையில் படித்தால், ப்ர=3 அ=1 ண=5 ஆகிறது. இதை வலப்பக்கத்தில் இருந்து படித்தால், 513 ரூபங்கள் ஆகிறது. இவ்வளவு ரூபங்களால் பிராணகோஷாதாரகனாகி பிராண எனப்படுகிறான்.

சங்கர்ஷணன் மனிதர்களுக்கு ஒவ்வொரு நொடியும் அழியும் தன்மையைக் கொடுக்கும் மனோகோஷத்திற்கு ஆதாரமாக, மன என்று அழைக்கப்படுகிறான். மன = ம=5 ன=5 என 55 என்று வருகிறது. 55 ரூபங்களால் மனஸ் என்று அழைத்துக் கொள்கிறான். விஷ்வாதாரனான வாசுதேவன் விக்ஞான கோஷத்திற்கு ஆதாரனாகி, வி=4, ஞா=8 ன=5 , அதாவது 584 ரூபங்களால் விக்ஞான என்று அழைத்துக் கொள்கிறான்.

**மூரு ஸாவிரத$^{3}$ர்த்தஷத மே**
**லீரதி$^{4}$க$^{1}$ ரூபக$^{3}$ள த$^{4}$ரிஸி ஷ**
**ரீரதொ$^{3}$ள கா$^{3}$னந்த$^{3}$மய நாராயாணாஹ்வயனு |**
**ஈரெரடு$^{3}$ ஸாவிரத$^{3}$மேல் மு**
**ந்னூருஜது$^{3}$ ஸுரூபதி$^{3}$ந்த$^{3}$லி**
**பா$^{4}$ரதீஷனொளிப்ப நவனீதஸ்த$^{2}$ க்$^{4}$ருத$^{1}$த$^{3}$ந்தெ ||18**

நாராயணாஹ்வயனு = நாராயண நாமகன்
மூரு சாவிரதர்தஷத மேலீரதிக = 3052
ரூபகள தரிஸி = ரூபங்களை தரித்து
ஷரீரதொளகெ = நம் தேகங்களில்
ஆனந்தமய = ஆனந்தமய கோஷாதாரனாகி, ஆனந்த என்று அழைத்துக் கொள்கிறான்
ஈரெரடு சாவிரதமேல் முன்னூரு ஐது = (2+2)=4*1000= 4000 + 305 = 4305
சுரூபதிந்தலி = சிறந்த ரூபங்களால்
நவனீதஸ்த = வெண்ணையில் (மறைந்து) இருக்கும்
க்ருததந்தெ = நெய்யைப் போல

பாரதீஷனொளு = பாரதிரமணனான முக்யபிராண தேவரில்
இப்ப = இருக்கிறான்

ஆனந்த என்னும் சொல்லின் எண்ணிக்கை. ஆ=2 நன்=50 த=3. இதை வலப்புறமாக படித்தால் 3052 ஆகிறது. ஸ்ரீ நாராயணன் இப்படி 3052 ரூபங்களை தரித்து, தேகத்தில் ஆனந்தகோஷ தாரகனாக ஆனந்த என்னும் பெயரில் இருக்கிறான். இது போலவே, அனிருத்தாதி 5 ரூபியான பரமாத்மன்,

அன்ன= 101,
பிராண = 513,
மன = 55,
விக்ஞான = 584,
ஆனந்த= 3052

இவ்வளவு ரூபங்களிலும் இவை அனைத்தையும் கூட்டினால், 4305 என்றும் ஆகிறது. இவ்வளவு ரூபங்களால், வெண்ணையில் இருக்கும் நெய்யைப் போல பாரதிரமண முக்யபிராணனில் முக்யபிராணரூபியாக இருக்கிறான். வெண்ணையில் நெய் இருந்தாலும், அது நெய் போல தோன்றாமல், அதை காய்ச்சினால் மட்டுமே தெரியும். அதுபோலவே, பிராணதேவரிடம் பரமாத்மன் இருந்தாலும், முக்யபிராணரூபியாகவே பரமாத்மன் காணப்படுகிறான்.

**மூரதி[4]க ஐவத்து ப்ராண ஷ**
**ரீர தொளக[3] நிருத்த[3]னிப்பை**
**நூரு ஹன்னொந்த[3]தி[4]க பா[1]னனொளிப்ப[1] ப்ரத்[3]யும்ன |**
**மூரனெ வ்யானனொளகை[3]த[3]ரெ**
**நூரு ரூபதி[3] ஸங்கருஷணை**
**நூருமூவத்தைது[3] தா[3]னனொளிப்ப[1] மாயேஷ ||19**

இப்போது, ப்ராண, அபானாதி பஞ்சப்ராணரில் இருக்கும் பகவத் ரூபங்களை சொல்கிறார்.
அனிருத்த = அனிருத்த ரூபி பகவந்தன்
ப்ராண ஷரீரதொளகெ = பிராண நாமக வாயுவின் ஸ்வரூப தேகத்தில்
மூரதிக ஐவத்து = 53 ரூபங்களால்
இப்ப = இருக்கிறான்
பிரத்யும்ன = பிரத்யும்ன நாமகன்
ஐனூரு ஹன்னொந்ததிக = 511 ரூபங்களால்
அபானனொளு = அபான நாமக பிராண சரீரத்தில்
இப்ப = இருக்கிறான்
சங்கர்ஷண = சங்கர்ஷண ரூபி பரமாத்மன்
மூரனெவ்யானனொளகெ = மூன்றாவதாக இருக்கும் வ்யான நாமக பிராண சரீரத்தில்
ஐதரெனூரு = 5+(100/2) = 55

ரூபதி = ரூபங்களால்
மாயேஷ = மாயாபதியான வாசுதேவன்
ஐனூரமூவத்தைது = 535 ரூபங்களால்
உதானனொளு = உதான நாமக பிராண சரீரத்தில்
இப்ப = இருக்கிறான்

பிராண = ப்ரா = 3 ண=5. பிராணிகளின் சரீரத்தில், பஞ்சபிராணனின் உள்ளே, அனிருத்தரூபி பரமாத்மன், பிராண நாமத்தில் 53 ரூபங்களால் இருக்கிறான். அபான = அ=1 பா=1 ன=5. 511 ரூபங்களில் பிரத்யும்னன் அபானனில் இருக்கிறான். மூன்றாவது பிராணனான வ்யான சரீரத்தில் வ்யானன் என்னும் பெயரில் சங்கர்ஷணன் இருக்கிறான். வாசுதேவன் உதான நாமக பிராணனில் - உ=5 த=3 ன=5 என 535 ரூபங்களில் இருக்கிறான்.

**மூல நாராயணனு ஐவ**
**த்தேளதி[4]க ஐனூரு ரூபவ**
**தா[1]ளி ஸர்வத்ரதி[3] ஸமானனொளிப்ப சர்வக்[3]ஞ |**
**லீலெகை[3]வனு ஸாவிரத[3] மே**
**லேளு னூர்ஹன்னொந்து[3] ரூபவ**
**தா[1]ளி பஞ்சப்ராணரொளு லோக[1]க[3]ள ஸலஹுவனு ||20**

மூல நாராயணன் = மூலரூபியான நாராயணன்
ஐவத்தேளதிக ஐனூரு ரூபவ = 557 ரூபங்களை
தாளி = தரித்து
சர்வத்ரதி = எல்லா பிராணிகளிலும்
சமானனொள் = சமான பிராண தேவருக்குள்
இப்ப = இருக்கிறான்
சர்வேஷ = அனைவருக்கும் ஈஷனான ஸ்ரீபரமாத்மன்
பஞ்சபிராணரொளு = பிராணாபானாதி பஞ்ச ப்ராணர்களில்
சாவிரத மேலேளுனூர்ஹன்னொந்து = 1711
ரூபவ தாளி = ரூபங்களை தரித்து
லீலெகைவனு = அனிருத்தாதி ரூபங்களால் சஞ்சரிக்கிறான்
லோககள = அனைத்து லோகங்களின் பிராணிகளை
சலஹுதிருவனு = காப்பாற்றுகிறான்.

சமான நாமக பிராணதேவருக்குள், ஸ்ரீமன் நாராயணன் சமான = ச=7 மா=5 ன=5, 557 ரூபங்களை தரித்து, அனைவரிடமும் வியாபித்திருக்கிறான். இப்படி சர்வேஸ்வரனான இந்த பரமாத்மன், அனிருத்தாதி ஐந்து ரூபங்களால், பிராண அபானாதி ஐந்து ரூபங்களில் முறையே,

பிராணனில் 53,
அபானனில் 511
வ்யானனில் 55

உதானனில் 535
சமானனில் 557,

என இவை அனைத்தையும் கூட்டினால், 1711 ரூபங்களை தரித்து, தன் லீலைகளால் உலக மக்களை காப்பாற்றுகிறான். 'ப்ராணாபானா விடாயாஞ்ச பிங்களாயாஞ்ச சர்வஷ:' என்னும் பாகவத 2ம் ஸ்கந்தத்தின் தாத்பர்ய வாக்கியத்திற்கேற்ப,
* மனிதர்களின் இளா, பிங்கள என்னும் நாடிகளில் ப்ராண, அபான நாமக வாயுதேவரும்
* நடுவில் இருக்கும் சுஷும்னா நாடியில் உதான வாயுதேவரும்,
* சந்தி நாடிகளில் சமான பிராணதேவரும்,
* தேகத்தில் அனைத்து இடங்களிலும் வியாபித்திருக்கும் நாடியில் வ்யான பிராணதேவரும் -
இருக்கிறார்கள் என்று அறியவேண்டும்.

**த்ரினவதி[1] ஸுரூபாத்மக[1] னிரு**
**த்த[4]னு ஸதா[3] யஜமானனாகி[3]**
**த்த[3]னல யம ஸோமாதி[3] பித்ருதே[3]வதெக[3]ளிகெ[3] அன்ன |**
**எனிபனா ப்ரத்[3]யும்ன ஸங்கரு**
**ஷண விபா[4]கவ மாடி[3]கொண்டு[3]**
**ண்டு[3]ணிப நித்யானந்த[3] போ[4]ஜனதா[3]யி துர்யாஹ்வ ||21**

த்ரினவதி சுரூபாத்மக = 93 ஸ்வரூபங்களால் ஆன
அனிருத்தனு = அனிருத்த நாமக பரமாத்மன்
சதா = எப்போதும்
யஜமானனாகி = ஸ்ரார்த்தங்களில் கர்த்ரு ரூபனாக
இர்த்து = கர்த்ருவின் உள்ளே இருந்து
ப்ரத்யும்ன = ப்ரத்யும்ன ரூபத்தினால்
அனல = அக்னி
யம சோமாதி = யமன், சந்திரன் முதலானவர்களே அதிபதிகளாக இருக்கும்
பித்ருதேவதெகளிகெ = பித்ரு தேவதைகளுக்கு
எந்தனு = தலைவன் என்று
எனிப = என்று சொல்லிக் கொள்ளும்
சங்கர்ஷண = சங்கர்ஷணன்
விபாகவ மாடி = பித்ரு பிதாமகர்களுக்கு பிரித்துக் கொடுத்து
கொண்டு = தானும் ஸ்வீகரித்து
உணிப = பித்ருகளுக்கு உண்ணக் கொடுப்பான்
துர்யாஹ்வ = நான்காம் வாயுதேவர்
நித்யானந்த போஜனதாயி = எப்போதும் ஆனந்தமயமான போஜனங்களைத் தருவான்.

பித்ருதேவதைகளுக்கு அன்னரஸங்களைப் பிரித்துக் கொடுக்கும் விதத்தை இங்கு சொல்கிறார்.

அனிருத்த நாமக பரமாத்மனும், 93 ஸ்வரூபங்களைக் கொண்டவனுமான பரமாத்மன். 93 எப்படியென்றால், விஸ்வே தேவதைகள் 10 பேர், ஸ்ரார்த்தாதிகளில் ஸ்வாஹாகாரத்தினால் ஆராதிக்கப்படுபவர்கள். புரூரவ, ஆர்த்ரா ஆகிய 5 பேர்களில் அனிருத்த ரூபமும், நாராயண ரூபமும் இருக்கிறது. பித்ரு தேவதைகளில், அமூர்த்தா கணங்கள் 3, மூர்த்த கணங்கள் 4, என மொத்தம் 7 கணங்கள் உள்ளன. இந்த ஒவ்வொன்று கணங்களிலும் பிரத்யும்ன, சங்கர்ஷண, வாசுதேவ என்னும் ரூபங்கள் இருக்கின்றன. இப்படி 3*7 = 21 ரூபங்கள் ஆகின்றன. இதற்கு விஸ்வே தேவதைகள் 10 பேரை சேர்த்தால், 21+10=31 ஆகிறது.

இந்த ஒவ்வொருவருக்கும் யஜமானன், அதாவது அதிபதி என்றால் அது, அக்னி, யமன் சந்திரன் இவர்கள் மூவர். ஆக மொத்தம் 31 * 3 = 93 ஆகிறது. இந்த 93 ஸ்வரூபங்களால் அனிருத்தாதி ஐந்து ரூபங்களைக் கொண்ட பரமாத்மன், அனிருத்த ரூபத்தினால் ஸ்ரார்த்த கர்த்ருவில் இருக்கிறான். விஷ்வே தேவதைகளில் அனிருத்த, நாராயண ரூபங்களால் இருக்கிறான். பித்ருதேவதைகளுக்கு அபிமானி தேவதைகளான அக்னி, யம, சந்திரர்களில் பிரத்யும்னன் இருந்து, அந்த பித்ருதேவதைகளுக்க்கு ப்ரேரகனாக (வழிநடத்துபவன் / தலைவன்) இருக்கிறான்.

சங்கர்ஷணன், ‘அமூர்த்தானாஞ்ச மூர்த்தானாம் பித்ருணாம் தீப்த தேஜனாம்’ என்னும் பிரமாணத்திற்கேற்ப தேவதைகள் செய்யும் ஸ்ரார்த்தாதிகளை அமூர்த்த பித்ருகணங்களுக்கும், மூர்த்தரான 4 கணங்களுக்கு பிராஹ்மண, க்ஷத்ரிய, வைஷ்ய, ஷூத்ர என்னும் 4 வர்ணத்தவர் செய்யும் ஸ்ரார்த்தங்களை பிரித்து, இந்த பித்ரு கணங்களிலும், விஷ்வே தேவதைகளிலும் வைத்து, தானும் அதை ஏற்றுக் கொள்கிறான். வாசுதேவன், விஷ்வே தேவதைகளுக்கும், பித்ரு கணங்களுக்கும் தான், நித்யானந்தகரமான போஜனங்களை உண்ணக் கொடுத்து, திருப்திப்படுத்துகிறான்.

**ஷண்ணவதி நாமக[1]னு வஸு மூ**
**க[1]ண்ண பா[4]ஸ்கரரொளகெ[3] நிந்து[1] ப்ர**
**பன்னரனுதி[3]ன நிஷ்க[1]பட[1] ஸத்ப[4]க்தியலி மாள்ப |**
**புண்யகர்மவ ஸ்வீகரிஸி கா**
**ருண்யஸாக[3]ர பித்ருக[3]ளிகெ[3] அ**
**க[3]ண்ய ஸுக[2]வித்தவர பொரெவனு எல்லகா[1]லத[3]லி ||22**

ஷண்ணவதி நாமகனு = 96 ஸ்வரூபங்களால், ஷண்ணவதி என்று அழைத்துக் கொள்ளும் ஸ்ரீபரமாத்மன்
வசுமூகண்ண பாஸ்கரரொளகெ = வசுகண, ருத்ரகண, சூர்யகண என இந்த மூன்று கணங்களுக்குள்ளும்
நிந்து = இருந்து

ப்ரபன்னரனு = தன்னை சரணடைந்தவர்களை
அனுதின = தினந்தோறும் (எப்போதும்)
நிஷ்கபட = கபடம் இல்லாமல்
சத்பக்தியலி = மிகச்சிறந்த பக்தியில்
மாள்ப = செய்யும்
புண்யகர்மவ = புண்ணிய கர்மங்களை
ஸ்வீகரிஸி = ஏற்றுக் கொண்டு
காருண்யசாகர = கருணைக்கடலான (பகவந்தன்)
பித்ருகளிகெ = அந்த பித்ருகணங்களுக்கு
அகண்ய சுகவித்து = அபரிமிதமான சுகங்களைக் கொடுத்து
எல்லகாலதலி = எப்போதும் (நிரந்தரமாக)
அவர = அந்த பித்ருகளை
பொரெவனு = காப்பாற்றுவான்.

பரமாத்மன் ஷண்ணவதி என்று அழைத்துக் கொள்வதற்கான காரணம்:

1 ஆண்டில் 96 ஸ்ரார்த்தங்கள் வருகின்றன. அவை எவை என்றால்:

மன்வாதிகள் 14
யுகாதிகள் 4
பாத்ரபத பகுள பிரதமை முதல் அமாவாசை வரை மகாலய பட்சம் 15
சங்க்ரமணங்கள் 12
அமாவாசைகள் 12
வியதிபாதங்கள் 13
வைத்ருதிகள் 13
திஸ்ராஷ்ட 12
இறந்த திதி 1
ஆக மொத்தம் 96 ஸ்ரார்த்த போக்தன் ஆகையால், பரமாத்மனுக்கு ஷண்ணவதி ஸ்வரூபி என்று பெயர் வந்தது. மேலும், பித்ரு, பிதாமஹ, ப்ரபிதாமஹர்களில் வசு, ருத்ர, ஆதித்ய ரூபங்களால் இருக்கிறான். பிரத்யும்னன் வசு ரூபமாகவும், சங்கர்ஷணன் ருத்ர ரூபனாகவும், வாசுதேவன் ஆதித்ய ரூபமாகவும் இருக்கிறான்.

வசுகள் 8
ருத்ரர் 11
ஆதித்யர் 12
மொத்தம் 31. இப்படி 31 ரூபங்களால் வசு ருத்ர ஆதித்யர்களின் தேகத்தில், வைகாரிக அஹங்கார இருக்கும் மனஸ், தைஜஸ அஹங்கார இருக்கும் இந்திரியங்கள், தாமஸ அஹங்கார இருக்கும் பஞ்சபூதங்கள், என வைகாரிகாதி மூன்று விதமான அஹங்காரங்களில் நிலைத்திருப்பதால், 31*3-93. பித்ரு, பிதாமஹ, ப்ரபிதாமஹ என 3 ஆக மொத்தம் 93+3=96 ரூபங்களால் பித்ருகளில் இருந்து, தன்னை சரணடைந்தவர்களை, அதாவது ஒருவனின் வம்சத்தில் இருந்த பித்ருகளுக்காக, கபடங்கள் இல்லாமல், பக்தியுடன், ஸ்ரார்த்தங்களை செய்தால்,

அவற்றை ஸ்வீகரித்து, கருணைக்கடலான ஸ்ரீஹரி, அந்த பித்ருகளுக்கு அனந்த சுகங்களைக் கொடுத்து, அனைத்து காலங்களிலும் அந்த பித்ருகளை, ஸ்ரார்த்தம் செய்பவர்களைக்கூட காப்பாற்றுகிறான்.

**ஸுத1ப1னேகோ1த்தர ஸுபஞ்சா**
**ஷத வரண க1ரணதி3 சதுரவிம்**
**ஷதி ஸுத1த்வதி3 தா4துக3ளொளித்த3விர த3னிருத்3த4 ।**
**ஜத1னமாள்பனு ஜக3தி3ஜீவ**
**ப்ரததி1க3ள ஷண்ணவதி நாமக**
**சதுரமூர்த்தி க3ளர்ச்சிஸுவ ரத3ரிந்த3 ப3ல்லவரு ||23**

சுதப = சூரியனில் இருந்துகொண்டு உலகத்தில் நன்றாக வெப்பத்தை உருவாக்குவதால் சுதப என்று பெயரைக் கொண்ட பரமாத்மன்
ஏகோத்தர சுபஞ்சாஷத = 51
வரண = அ-முதலான அனைத்து எழுத்துக்கள்
கரணதி = மனோ இந்திரியத்திற்கு, காரணமான இதய கமலத்தின் 12 இதழ்களிலும்
சதுரவிம்ஷதி சுதத்வதி = 24 தத்வங்களிலும்
தாதுகளொளு = எலும்பு, தோல் முதலான 7 தாதுகளில் இருந்து
அனிருத்த = அனிருத்த நாமக ஸ்ரீபரமாத்மன்
அவிரத = இடைவிடாமல் (தொடர்ந்து)
ஜகதி = உலகத்தில்
ஜீவ ப்ரததிகள = ஜீவர்களை
ஜதனமாள்பனு = காப்பாற்றுவான்
அதரிந்த = ஆகையால்
ஷண்ணவதி நாமக = ஷண்ணவதி என்று பெயரைக் கொண்ட 96 ரூபங்களைக் கொண்ட ஸ்ரீபரமாத்மன்
சதுரமூர்த்திகள = அனிருத்த அனிருத்த, அனிருத்த பிரத்யும்ன, அனிருத்த சங்கர்ஷண, அனிருத்த வாசுதேவ என்னும் அனிருத்தனின் நான்கு ரூபங்களை, அறிந்தவர்கள் / ஞானிகள் அர்ச்சிக்கின்றனர்.

மேலே பார்த்த 96 ரூபங்களை விளக்கி, அதில் அனிருத்தனின் வியாப்தித்வத்தை விளக்குகிறார். 'சம்யுக்தபதீதி சுதப:' என்னும் குறிப்பினால், சூரியனில் இருந்து, உலகின் இருட்டினை போக்குபவன் ஆகையால், பரமாத்மனு சுதப என்று பெயர். அ-முதல் க்ஷ-வரை 51 எழுத்துகள். வர்ணங்களால் புகழப்படுபவனான பரமாத்மனின் ரூபங்கள் 51. அஜ, ஆனந்த, இந்திர, ஈஷான, உக்ர, ஊர்ஜ, ருதம்பர, ரூக, இஷ, ஈஜ, ஏகாத்ம, ஐர, ஓஜோப்ருத், ஔரஸ, அந்த, அர்த்தகர்ப்ப, கபில, கபதி, கருட, கர்ம, ஞஸார, சார்வங்க, சந்தோகம்ய, ஜனார்த்தன, ஜாடிதாரி, ஞம, டங்கி, டகல, டரிண, ணாத்ம, தார, தப, தண்டி, தன்வி, நம்ய, பார, பலி, பலீ, பக, மனு, யக்ஞ, ராம, லட்சுமிபதி, வராஹ, ஷாந்த, ஸம்வித், ஷட்குண, சாராத்ம, ஹம்ஸ, ளாளுக, நரசிம்ஹ என்று 51 ரூபங்கள், அ முதல் க்ஷ வரைக்குமான எழுத்துகளால் வர்ணிக்கப்படுபவன் என்று அறியவேண்டும்.

இதய கமலத்தில் இருக்கும் 12 இதழ்களில் பகவந்தனின் 12 ரூபங்கள் இருக்கின்றன. அவை: சக்தி, ப்ரதிஷ்டா, சம்வித், ஸ்பூர்த்தி, ப்ரக்ருதி, பரா, வித்யா, மதி, நியதி, மாயா, கால மற்றும் புருஷ. இவற்றைப் பற்றி தந்த்ரசார சங்க்ரஹத்தில் மிகவும் விளக்கமாக படிக்கலாம். ப்ருத்வி முதலான ரூபங்கள் 5, தன்மாத்ரா குணங்கள் 5, ஞானேந்திரியங்கள் 5, கர்மேந்திரியங்கள் 5, சித்த, புத்தி, மனஸ், அஹங்கார இவற்றைச் சேர்த்து மொத்தம் 24 தத்வங்கள். இந்த தத்வங்களில் கேசவ நாமாதி 24 ரூபங்கள் உள்ளன. த்வக், சர்ம, மாம்ஸ, ருதிர, மேதஸ், மஜ்ஜா, அஸ்தி என்னும் ஏழு தாதுகளில் அனிருத்த, பிரத்யும்ன, சங்கர்ஷண, வாசுதேவ, நாராயண, ஹம்ஸ, வசிஷ்ட என்னும் 7 ரூபங்கள் உள்ளன. பகவத்ரூப 1, ஜீவ 1 என மொத்தம் 96 ரூபங்களில் அனிருத்தன் அனைத்து ஜீவராசிகளிலும் இருந்து ஜீவர்களை காப்பாற்றுகிறான். ஞானிகள் இந்த அனிருத்தனின் ஸ்வரூபத்தையே அனிருத்தபிரத்யும்ன என்று 4 பாகங்களாகப் பிரித்து அர்ச்சிக்கின்றனர்.

**அபு$^3$ஜஜாண்டோ$^3$த$^3$ரனு விபி$^1$னதி$^3$**
**ஷப$^3$ரியெஞ்சலனுண்ட$^3$ கோ$^3$கு$^1$ல**
**த$^3$ப$^3$லெயர னொலிஸித$^3$னு ரிஷிபத்னியரு கொட்டன்ன |**
**ஸுபு$^4$ஜ தா பு$^4$ஞ்சிஸித ஸ்வரமண**
**குபு$^3$ஜெக$^3$ந்த$^4$கெ$^3$ ஒலித$^3$ முனிக$^3$ண**
**விபு$^3$த$^4$ஸேவித பி$^3$டு$^3$வனெ நாவித்த கர்மப$^2$ல ||24**

அபுஜஜாண்டோதரனு = பிரம்மாண்டத்தை தன் வயிற்றில் தரித்திருக்கும் ஸ்ரீபரமாத்மன்
விபினதி = காட்டினில்
ஷபரியெஞ்சலனுண்ட = ஷபரி என்னும் வயதானவர் கொடுத்த எச்சில் பழங்களை உண்டான்
கோகுல தபலெயர நொலிசிதனு = கோகுலத்தில் இருக்கும் கோபிகா ஸ்த்ரியர்களை மெச்சி, அவர்கள் தன்னை அடையுமாறு செய்தான்
ரிஷிபத்னியரு = பூஜை செய்துகொண்டிருந்த பிராமண பெண்கள்
கொட்டன்ன = கொடுத்த அன்னத்தை
சுபுஜ = சுவையான உணவை உண்ணும் ஸ்ரீபரமாத்மன்
புஞ்சிஸித = உண்டான்
ஸ்வரமண = எந்தவொரு வேலைக்கும் யாருடைய உதவியும் தேவைப்படாதவன்
குபுஜெ = த்ரிவக்ரை என்பவள் கொடுத்த
கந்தகெ = சந்தனத்திற்கு
ஒலித = மகிழ்ந்து, அவள் தன்னை அடையுமாறு செய்தான்
முனிகண விபுதசேவித = முனிகணங்களாலும், தேவகணங்களாலும் வணங்கப்படுபவனான ஸ்ரீபரமாத்மன்
நாவித்த கர்மபல = நாம் சமர்ப்பித்த கர்மபலன்களை விட்டுவிடுவானோ?

ஸ்ரீபரமாத்மன் பக்தவத்ஸலன் என்று இங்கு சொல்கிறார். ஸ்ரீபரமாத்மன் ராமாவதாரத்தில், சீதா லட்சுமணனுடன் காட்டில் வசித்தபோது, ஷபரி என்னும் வயதானவள், ராமனின் வருகையை முதலிலேயே அறிந்து, மரத்திலிருந்து விழுந்த

நல்ல பழங்களை சேகரித்து, அவற்றைக் கடித்துப் பார்த்து, சுவை நன்றாக இருந்தால், இவை ராமனுக்கு என்று தனியே எடுத்து வைத்திருந்தாள். இப்படி சேகரித்து வைத்த பழங்களை ராமன் வந்தபோது சமர்ப்பித்தாள். ஸ்ரீராமனும் அவளுடைய பக்தியை மெச்சி, அந்த பழங்களை ஏற்றுக்கொண்டான்.

அவன் ஸ்வரமணனாக இருந்தாலும், கோகுலத்தின் கோபிகா ஸ்த்ரியர்களுக்கு அருளினான். ரிஷி கணங்களாலும், பிரம்மாதி தேவ கணங்களாலும் வணங்கப்படுபவன் ஆனாலும், ரிஷிபத்னியர் கொடுத்த அன்னத்தை ஏற்றுக்கொண்டான். த்ரிவக்ரை என்னும் குப்ஜை சந்தனத்தைக் கொடுக்க, அதனை அன்புடன் ஏற்றுக்கொண்டு அவள் தன்னை அடையுமாறு செய்தான்.

இப்படி ஜாதி ஆகியவற்றிற்கு முக்கியத்துவம் கொடுக்காமல், வெறும் பக்தியை மட்டுமே மெச்சி, மேற்சொன்னவர்களுக்கு அருளினான் என்றபிறகு, நாம் பக்தியுடன் கர்மங்களின் பலன்களை அவனுக்கு சமர்ப்பித்தால், பரமாத்மன் நம்மை கைவிடுவானோ? சந்தேகமில்லாமல் அவற்றை ஏற்றுக்கொள்வான் என்று பொருள்.

**க³ணனெயில்லத³ பரமஸுக² ஸ**
**த் கு³ணக³ணங்க³ள லேஷ லேஷகெ**
**எணெயெனிஸது ரமாப்ஜ ப⁴வ ஷக்ராதிக³ள ஸுக²வு |**
**உணுதுணுத மை மரெது க்ருஷ்ணா**
**ர்ப்பண வெனலு கைகொம்ப³னர்ப⁴க**
**ஜனனிபோ⁴ஜன ஸமயத³லி கை ஒட்டுவந்த³த³லி ||25**

கணனெ இல்லத = எண்ணமுடியாத அளவிற்கு
பரமசுக சத்குணகணங்கள = பரமானந்த முதலான சத்குணங்களில்
லேஷலேஷக்கெ = பற்பல அம்சங்களில் ஒரே ஒரு அம்சமாவது
அப்ஜபவ = பிரம்மதேவர்
ஷக்ராதிகள = இந்திராதிகள்
எணெயெனிஸது = சமம் என்று சொல்லமுடியாது.
உணுதுணுத = தான் போஜனம் செய்து கொண்டிருக்கும்போது
மை மரெது = பக்தியில் மெய்மறந்து
கிருஷ்ணார்ப்பணவெனலு = கிருஷ்ணார்ப்பணம் என்று சொல்லி அர்ப்பித்தால்
அர்பக = சிறுவன்
ஜனனி போஜன சமயதலி = தாய் தான் உண்ணும் சமயத்தில்
கை ஒட்டுவந்ததலி = கை நீட்டுவதைப் போல
கைகொம்பனு = ஏற்றுக் கொள்கிறான்

அபரிமிதமான சுக ஸ்வரூபனான ஸ்ரீபரமாத்மனிடம் இருக்கும் சத்குணங்களின் ஒரு அம்சம்கூட, ரமாபிரம்மாதிகளின் சுகத்திற்கு ஈடுசெய்வதற்கு சாத்தியமில்லை. இத்தகைய பரமாத்மனின் சேவை என்று நினைத்து, தான் போஜனம் செய்யும்போது, ஒவ்வொரு கை உண்ணும்போதும், பரமாத்மனின் ஸ்மரணையை செய்து, அந்த உணவினை பரமாத்மனுக்கு கிருஷ்ணார்ப்பணம் என்று

சமர்ப்பித்தால், தாய் தான் உண்ணும்போது, குழந்தை அவள் அருகில் அமர்ந்து எச்சில் உணவினை ஏற்றுக்கொள்வது போல, நாம் கொடுப்பதை அவன் ஏற்றுக்கொள்கிறான்.

**ஜீவக்ருத கர்மக3ள பி3டதெ3 ர**
**மாவரனு ஸ்வீகரிஸி ப2லகள**
**நீவனதி3காரானுஸாரதி3 அவரிக3னவரத ।**
**பாவகனு ஸர்வஸ்வ பு4ஞ்சிஸி**
**தா விகாரவனைத3னொம்மெகு3**
**பாவனகெ பாவனனெனிப ஹரியெம்பு3தே3னரிது3** ||26

ஜீவக்ருத கர்மகள = ஜீவர்கள் தங்கள் கர்மங்களை விடாமல்
ரமாதவனு = லட்சுமியைவிட உத்தமனான பரமாத்மன்
ஸ்வீகரிஸி = ஏற்றுக்கொண்டு
அவரிகெ = அந்த ஜீவர்களுக்கு
அதிகாரானுசாரதி = அந்த ஜீவர்களின் தகுதிக்கேற்ப
அனவரத = தினந்தோறும் (எப்போதும்)
பலகளனீவ = பலன்களைக் கொடுக்கிறான்
பாவகனு = அக்னி
சர்வஸ்வ புஞ்சிஸி = நல்லது கெட்டது என்று பார்க்காமல் அனைத்தையும் எரித்து உண்பதைப் போல
ஒம்மெகெ = ஒரு சமயத்திலும்
விகாரவனெய்து = தன் உருவத்தை இழப்பதில்லை. இப்படியிருக்கையில்,
பாவனகெ பாவனனெனிப = பவித்ரமான கங்காதி நதிகளை, பவித்ரம் ஆக்குபவன் என்ற பெயரைப் பெற்றவனான
ஹரி = ஸ்ரீபரமாத்மன்
உம்புதேனரிது = நாம் கொடுக்கும் கர்ம பலன்களை ஏற்றுக் கொள்வதில், என்ன ஆச்சரியம்?

ரமாதேவியின் பதியான (அல்லது ரமாதேவியரைவிட உத்தமனான) பரமாத்மன், தேவமனுஷ்யாதி ஜீவர்கள் செய்யும் புண்யபாபாதி கர்மங்கள், அவற்றை செய்விப்பது பகவந்தனே என்று நினைத்து அவனுக்கு சமர்ப்பிக்க, ஸ்ரீஹரி அவற்றை விட்டுவிடாமல் ஏற்றுக்கொண்டு, தன் பக்தர்கள் செய்த பாவ கர்மங்களை எரித்து (அழித்து), அவரவர் செய்த புண்யங்களுக்கேற்ப, அவரவர்களின் தகுதிக்கேற்ப, அவரவர்களுக்கு பலன்களைக் கொடுக்கிறான்.

ஆனால், அப்ராக்ருதனான ரமா வல்லபன், ப்ராக்ருதர்கள் செய்யும் பூஜைகளை, இவர்கள் கொடுக்கும் ப்ராக்ருத அன்னங்களை எப்படி ஏற்றுக்கொள்கிறான் என்றால்:

அக்னி அனைத்தையும் ஏற்றுக்கொள்கிறது. ஆனாலும் அதற்கு எந்தவொரு விகாரமும் வருவதில்லை. தேவதைகளின் தாரதம்யத்தில் 'விஷ்ணு: பரமோ

அக்னிரவம:' என்று அக்னியை கடைசியானவன் என்று சொல்லியிருக்கின்றனர். இப்படிப்பட்ட அக்னியே அனைத்தையும் ஏற்று, விகாரமாகாதவனாக இருக்கையில், கங்காதி பவித்ரமான நதிகளை, பவித்ரமாக ஆக்குபவன் என்னும் பெயரைப் பெற்ற ஸ்ரீபரமாத்மன் ப்ராக்ருத உணவினை உண்டு, அவற்றை பவித்ரமாக ஆக்குவான் என்று சொன்னால் அதில் என்ன ஆச்சரியம்?

**கலுஷ ஜிஹ்வெகெ3 ஸுஷ்டு போ4ஜன**
**ஜலமொத3லு விஷ தோ1ருவுது3 நி**
**ஷ் கலுஷ ஜிஹ்வெகெ3 ஸுரஸ தோருவுதெ3ல்ல காலத3லி |**
**ஸுலலிதாங்க3கெ3 ஸகலரஸ ம**
**ங்க3ல வெனிஸுதிஹுத3 ன்னமய கை**
**கொ1ளதெ3 பி3டு3வனெ பூதனிய விஷமொலெய னுண்ட3வனு ||27**

கலுஷ ஜிஹ்வெகெ = நோய் நொடி வந்தால் மரத்துவிடும் நாக்கிற்கு
சுஷ்டு போஜன = நல்ல சுவையான உணவும்
ஜலமொதலு = தண்ணீர்கூட
விஷதோருவுது = கசப்பாகத் தெரியும்
நிஷ்கலுஷ ஜிஹ்வெகெ = எந்த பிரச்னையும் இல்லாத நாக்கிற்கு
சருசதோருவுது = அனைத்தும் அருமையாகத் தெரியும் (சுவைக்கும்)
எல்ல காலதலி = எப்போதும்
சுலலிதாங்ககெ = மிகச்சிறந்த அழகான ஸ்வரூபமுள்ள பரமாத்மனுக்கு
சகலரஸ = அனைத்து ரசங்களும் (சுவைகளும்)
மங்கல வெனிசுதிஹுது = மங்கலமாகவே இருக்கிறது
பூதனிய = பூதனி என்னும் அரக்கியின்
விஷமொலெய = விஷம் நிரம்பிய பாலினைக் கொடுக்க வந்த
உண்டவனு = குடித்தவன்
அன்னமய = அன்னமய என்னும் பெயருள்ள பரமாத்மன்
கைகொள்ளதெ = நாம் கொடுப்பதை ஏற்றுக் கொள்ளாமல்
பிடுவனெ = நிராகரித்து விடுவானோ?

பகவந்தனுக்கு நாம் சமர்ப்பிக்கும் பதார்த்தங்கள், சுவையற்றதாகவே இருந்தாலும், அவனுக்கு அவை சுவையானதாகவே தோன்றும். அது பகவந்தனின் மகிமையே தவிர வேறில்லை என்று சொல்கிறார். ஜுரம் வந்தவனுக்கு, நல்ல சுவையான உணவு, நீர் எது கொடுத்தாலும், அது விஷத்தைப் போல கசக்கும். அதுவே, நோய் நொடிகள் இல்லாதவனுக்கு நன்றாக ருசி தெரியும். ஒரே பதார்த்தமானது, சிலருக்கு சுவையாகவும், சிலருக்கு கசப்பாகவும் தோன்றுவதற்கு நாக்கு மட்டுமே காரணம். அந்த பதார்த்தம் இல்லை.

'யோதோஷா இதரத்ராபிதே குணா: பரமேமதா:' அனைவருக்கும் எது தோஷங்களாக தெரிகிறதோ, அதுவே பரமாத்மனுக்கு குணங்களாக தெரிகிறது என்பது இந்த பிரம்ம சூத்திர வாக்கியத்தின் பொருள். நமக்கு சுவையானதாக இருக்கும் பதார்த்தங்கள், பரமாத்மனுக்கு ருசிகரமாகவே இருக்கின்றது.

பகவத்பக்தனான ஒரு பிராமணன், தன் வீட்டில் ஸ்ரார்த்தம் வரும்போது, பிராமணர்களுக்கு உணவளிக்க எந்தவித பதார்த்தங்களும் கிடைக்காமல், வெறும் கடுகு-உருண்டைகளை மட்டும் பரிமாறினான். அந்த பிராமணர்களுக்கு அதுவே அமிர்தத்தைப் போல இருந்தது என்று வராக புராண வாக்கியம் சொல்கிறது. பகவத் பக்தர்களுக்கே கடுகு-உருண்டை அமிர்தமாக தோன்றினால், அந்த பரமாத்மனுக்கு எப்படி அது கசப்பாகத் தோன்றும்?

விதேஹ நாட்டின் ஸ்ருததேவ என்னும் பிராமணன், ஸ்ரீகிருஷ்ணனை பக்தியுடன் பிரார்த்திக்க, ஸ்ரீகிருஷ்ணன் அவனது பக்திக்கு மெச்சி, அந்த பிராமணனின் வீட்டிற்கு வந்தான். அப்போது அந்த பிராமணன் கடுகு-உருண்டையாலேயே ஸ்ரீகிருஷ்ணனை திருப்திப்படுத்தினான். ஸ்ரீகிருஷ்ணன் அதை அமிர்தத்தைப் போல நினைத்து உண்டான் என்று பாகவத 10ம் ஸ்கந்தத்தில் சொல்லப்பட்டிருக்கிறது.

பூதனி என்னும் அரக்கி, ஸ்ரீகிருஷ்ணனைக் கொல்வதற்காக தன் முலைகளில் விஷம் தடவி அந்தப் பாலை ஸ்ரீகிருஷ்ணனுக்கு ஊட்டி விடுவதற்காக வந்தால், ஸ்ரீகிருஷ்ணன் அதைக்கூட நிராகரிக்காமல் ஏற்றுக்கொண்டான் என்றபிறகு, நாம் கொடுக்கும் பதார்த்தங்களை ஏற்றுக்கொள்ளாமல் நிராகரிப்பானா? ஒருக்காலும் நிராகரிக்க மாட்டான் என்பது பொருள்.

**பேளலேனு ஸமீரதே3வனு**
**காலகூடவனுண்டு3 லோகவ**
**பா1லிஸித3 தத்தா3ஸனோர்வனு அம்ருதனெனிஸித3 ।**
**ஸ்ரீலகுமிவல்லப4 ஷுபா4ஷுப4**
**ஜாலக1ர்மக3ளும் பனுபசய**
**தே3ளிகெ1க3ளவகி3ல்ல வெந்தி3கு3 ஸ்வரஸக3ள பி3ட்டு1 ||28**

சமீரதேவனு = வாயுதேவர்
காலகூடவனு = காலகூட என்னும் விஷத்தை
உண்டு = குடித்து
லோக = உலகங்களை
பாலிஸிதனு = காப்பாற்றினான்
தத்தாஸனோர்வனு = இப்படி பகவத் தாசர்களில் ஒருவரான வாயுதேவர் விஷத்தைக் குடித்து
அம்ருதனெனிஸித = அமிர்த என்னும் பெயரினைப் பெற்றான்
பேளலேனு = இப்படியிருக்கையில், பரமாத்மனின் விஷயத்தில் சொல்வதற்கு என்ன இருக்கிறது?
ஸ்ரீலகுமிவல்லப = ஸ்ரீலட்சுமிபதி
ஷுபாஷுப ஜாலகர்மகள = மக்கள் செய்யும் பாவ புண்ணிய கர்மங்களை
உம்பனு = அவர்களுக்கு பலன்களைக் கொடுப்பதற்காக ஏற்றுக் கொள்கிறான்
அவகெ = அந்த பரமாத்மனுக்கு
உபசய = தேகமானது வளர்வதோ
ஏளகெ = தேகமானது குறைவதோ, என்றும் இல்லை

ஸ்வரஸகள பிட்டு = ஸ்வரூப சம்பந்தமான ஆனந்தரூபமான சுவைகளை விட்டு வேறெந்த பதார்த்தங்களையும், தான் வளர்வதற்கோ, குறைவதற்கோ, அவன் ஏற்றுக்கொள்வதில்லை.
பரமாத்மனை பூஜித்து, அவனுக்காக சமர்ப்பிக்கப்படும் பதார்த்தங்களை அந்த பரமாத்மன் ஏற்றுக்கொள்வது, பக்தர்களின் நலனுக்காகவே தவிர அதனால் அவனுடைய தேகம் வளர்வதோ, குறைவதோ ஆவதில்லை என்கிறார்.

தேவதைத்யர்கள் சேர்ந்து, அமிர்தத்திற்காக பாற்கடலை கடைந்தபோது, காலகூட என்னும் விஷம் வெளிவந்து, உலகத்தையே தன் சக்தியால் எரித்துக் கொண்டிருக்க, தேவதைகள் பயந்து ருத்ரதேவரை வணங்கி, அந்த விஷத்தை அவரே ஏற்றுக் கொள்ளவேண்டும் என்று வேண்டினர். ருத்ரரும் அந்த விஷத்தைக் குடிக்க வந்து கொண்டிருந்தார். ஸ்ரீபரமாத்மன், பாற்கடலைக் கடையும் விஷயத்தில் உதவுவதற்காக அங்கேயே இருந்தாலும், அவர் ஏன் அதைக் குடிக்கவில்லை என்றால், பாகவத 8ம் ஸ்கந்த தாத்பர்யத்தில்:

ருத்ரஸ்யயஷஸோர்த்தாய ஸ்வயம் விஷ்ணுர்விஷம்விபு: |
நஸஞ்சஹ்ரே சமர்த்தோபிவாயும் சோசி ப்ரஷாந்தயே ||

ஸ்ரீபரமாத்மனுக்கு விஷத்தை முறியடிக்கும் சக்தி இருந்தாலும், ருத்ரருக்கு நீலகண்டன் என்னும் பெயரைக் கொடுப்பதற்காகவும், ருத்ரருக்கும், வாயுதேவருக்கும் இருக்கும் தாரதம்யத்தைக் காட்டுவதற்காகவும் தான் விஷத்தைக் குடிக்கவில்லை.

இதே விஷயத்தில், பாரத தாத்பர்ய நிர்ணய 10ம் அத்தியாயம் 14ம் ஸ்லோகம்:

கலே:ஸ்வரூபந்ததீவது: ஸஹம்வராத்விதாது: ஸகலைஸ்ச துஸ்ப்ருஷம் |
கரேவிதுத்யாஸ்தபலம் விதாயததௌஸ கிஞ்சித்கரிஷாயவாயு: ||
ஹரே:கரஸ்பர்ஷ பலாத்ஸ சஞ்ஞாமவாப நீலோஸ்யகலஸ்ததாஸீத் ||

அமிர்த மதன காலத்தில் வெளிவந்த விஷம் எப்படிப்பட்டது என்று தெரிவிக்கிறார்.

அது கலியின் ஸ்வரூபத்தைக் கொண்டிருக்கிறது. யாராலும் தடுக்க முடியாததாக இருந்தது. பிரம்மதேவரின் வரம் இருந்தாலும்கூட அதை தொடக்கூட முடியாததாக இருந்தது. இத்தகைய விஷத்தை வாயுதேவர், மிகச்சிறிதளவு தன் கையில் போட்டுக்கொண்டு, நன்றாக உறிஞ்சி, அதன் வேகத்தைக் (வீர்யத்தைக்) குறைத்து பின், ருத்ரதேவரின் கையில் கொடுத்தார். ருத்ரதேவர் அதைக் குடித்த உடனேயே, அது அவர் கழுத்திலேயே தங்கி, அவர் மூர்ச்சையாகி விட்டார். ஸ்ரீபரமாத்மன், ருத்ரரை தன் கையால் தடவிக்கொடுக்க, அவர் சுயநினைவை அடைந்தார். அந்த விஷத்தால் அவர் கழுத்து கருப்பாகிவிட, நீலகண்டன் என்ற பெயர் வரக் காரணமானது.

அத த்வதாக்ஞாம் புரதோ நிதாய நிதாயபாத்ரே தபனீயரூபே |
ஸ்வயம்தவனிர்மத்ய பலோபபன்னம் பபௌஸவாயுஸ்ததுதாஸ்ய ஜீர்ணம் ||

பிறகு, ஸ்ரீபரமாத்மனின் ஆணைப்படி, அந்த விஷம் முழுவதையும் ஒரு தங்கப் பாத்திரத்தில் போட்டுக் கொண்டு, அப்படியே குடித்து விட்டார். அது அவருக்கு ஜீர்ணம் ஆனது. மிகச்சிறிய அளவிலான விஷத்திற்காக ஸ்ரீபரமாத்மன் ருத்ரரை காப்பாற்ற வேண்டியிருந்தது. மிச்சமிருந்த அனைத்து விஷத்தையும் குடித்த வாயுதேவர், எந்த பிரச்னைக்கும் ஆளாகாமல், அமிர்த என்னும் பெயரைப் பெற்றார்.

இதே விஷயத்தையே, தாசராயர், இங்கு உதாரணம் கொடுத்திருக்கிறார். இப்படியாக, வாயுதேவர் காலகூட என்னும் விஷத்தை உண்டு, உலகத்தைக் காப்பாற்றினார். பரமாத்மனின் தாசர்களில் ஒருவரான வாயுதேவரே விஷத்தை குடித்ததால் ‘அமிர்த’ என்னும் பெயரைப் பெற்றபிறகு, லட்சுமிவல்லபனான ஸ்ரீபரமாத்மனின் விஷயத்தில் சொல்வதற்கு என்ன இருக்கிறது?

மக்களின் பாவ புண்ணியாதி கர்மங்களை தான் ஏற்றுக்கொண்டு, த்வேஷிகளுக்கு த்வேஷ பலன்களைக் கொடுத்து, பக்தர்களுக்கு புண்ய பலன்களைக் கொடுக்கிறார். ‘ஷுபம் பவத்யஸௌ நித்யம் னாஷுபம் ஸஹரி: பிபேத்’ என்னும் பிரம்மசூத்ர பாஷ்யத்தின் வாக்கியத்திற்கேற்ப பாபிகளின் பாப கர்மங்களுக்கேற்ப அவர்களுக்கு பலன்களைக் கொடுக்கிறார். பக்தர்கள் செய்யும் பாப கர்மங்களை பஸ்மம் ஆக்குகிறார். புண்ய பலன்களை தான் உண்டு, அவர்களுக்கும் கொடுக்கிறார். ஆனால், நிஜ பக்தர்கள் பூஜைகளை செய்து, அறுசுவைகளுடன் அன்ன, பக்ஷ்ய, பழங்களைக் கொடுத்தால், அதை ஏற்றுக்கொள்கிறார். ஆனால் அவை தனது இந்திரிய ப்ரீதிக்காக அல்ல.

‘யதா தரோர்மூல நிஷேசனேன த்ருப்யந்தி தத்ஸ்கந்த புஜோப ஷாகா:’ என்னும் பாகவத 14ம் ஸ்கந்த வாக்கியத்தின்படி, மரத்தின் வேரில் நீர் ஊற்றினால் எப்படி கிளைகள் வலிமை பெறுகிறதோ, அப்படியே நமக்கு ஆதாரனான பரமாத்மன், நம் தேகத்தில் இருந்து உணவினை உட்கொண்டால் மட்டுமே நமக்கு திருப்தி ஆகிறது. ஆகையால், நம் நலனுக்காகவே பரமாத்மன் உணவினை ஏற்றுக்கொள்கிறான். அவனே ஸ்வயம் அன்னமயன். அன்னத்தின் ரூபத்தில் தானே இருந்து, அதே அன்னத்தினால் தானே திருப்தியாகும் பரமாத்மனுக்கு நம் அன்னத்தினால் ஆவதுதான் என்ன?

பாகவத 1ம் ஸ்கந்த 10ம் அத்தியாயத்தில்:

ப்ரத்யுத்யயு: ப்ரஜாஸ்ஸர்வா: பத்ருதர்ஷன லாலஸா: ||40
நதோப நீதபலயோரவேர்தீப மிவாத்ருதா: ||
ஆத்மாராமம் பூர்ணகாமம் நிஜலாபேன நித்யதா ||41

ஸ்ரீகிருஷ்ணன், ஹஸ்தினாபுரத்திலிருந்து புறப்பட்டு, தன் தேசமான ஆனர்த்த தேசத்திற்கு வந்து சங்க நாதத்தை செய்தான் என்னும் கதையின் விவரம்.

ஸ்ரீகிருஷ்ணனின் வருகையை அறிந்த மக்கள் அனைவரும், தம் ஸ்வாமியைப் பார்க்கவேண்டும் என்னும் ஆசையினால், தேவையான பக்ஷ்ய போஜ்யாதிகளுடன்,

பூ பழங்களுடன் புறப்பட்டு, ஸ்ரீகிருஷ்ணன் இருக்கும் இடத்திற்கு வந்து அவனை வணங்கினர். அனைத்தையும் அவனுக்கு சமர்ப்பித்தனர். ஸ்ரீபரமாத்மன் ஸ்வரமணன். பூர்ணகாமன். தனக்கு எது வேண்டுமோ, அந்த வஸ்துவாக அவனே ஆகிறான். இப்படி, தன்னாலேயே தான் சுகம் அடையக்கூடிய பரமாத்மனுக்கு, இவர்கள் கொடுத்த பதார்த்தங்களால் ஆகும் பிரயோஜனம் என்னவென்று கேட்கவேண்டும்.

அதாவது, 'ரவேர்தீபமிவ' - சூர்ய நமஸ்காரம் செய்பவர்கள், ஜகத்பிரகாசனான சூரியனுக்கு ஒரு தீபத்தை ஏற்றுகின்றனர். அந்த தீபத்தால் சூரியனுக்கு எவ்வளவு பிரயோஜமோ, அவ்வளவே பலன், இவர்கள் கொடுத்த பதார்த்தங்களால் பரமாத்மனுக்கு ஆகிறது என்று சொல்கிறார். ஆகையால், ஸ்ரீபரமாத்மன், தன் பக்தர்கள் மகிழ்வதற்காகவே, எப்படி பெற்றோர் தன் குழந்தையின் கையில் வெற்றிலை பாக்கினைக் கொடுத்து, அதை தன் வாயில் போடுமாறு சொல்லி, அதன்மூலம் குழந்தையை மகிழ்விப்பரோ அது போல, நாம் கொடுத்ததை தான் ஸ்வீகரித்து, நம்மை மகிழ்விக்கிறான் என்று அறியவேண்டும்.

**ஈபரியொளச்யுதன தத்த**
**த்ரூப தன்னாமக$^{3}$ள ஸலெ நா**
**நா பதா$^{3}$ர்த்த$^{2}$தி$^{3}$ நெனெனெனெது$^{3}$ பு$^{4}$ஞ்சிஸுத$^{1}$லிரு விஷய |**
**ப்ராபக ஸ்தாபக நியாமக**
**வ்யாபகனு யெந்த$^{3}$ரிது நீ நி**
**ர்லேபனாகி$^{3}$ரு புண்யபாபக$^{3}$ளர்ப்பி ஸவனடிகெ$^{3}$ ||29**

ஈ பரியலி = மேலே சொன்ன விதமாக
அச்யுதன = அழிவில்லாத ஸ்ரீபரமாத்மனின்
தத்தத்ரூப = அனிருத்த, பிரத்யும்னாதி ரூபங்களை
தன்னாமகள = அன்னாதிகளில் இருக்கும் அன்னமயாதி ரூபங்களை
ஸலெ = ஒன்றாக சேர்த்து
நானா பதார்த்ததி = பக்ஷ்ய போஜ்யாதி பல வகையான பதார்த்தங்களில்
நெனெனெனெது = அந்தந்த பதார்த்தங்களில் அந்தந்த ரூபங்களை நினைத்து
புஞ்சிசுதலிரு = உணவினை உண்டு வாருங்கள்
விஷய = விஷய சுகங்களை
ப்ராபக = ஜீவர்களுக்கு சம்பந்தப்படுத்துபவன்
ஸ்தாபக = ஜீவர்களில் நிலைநிறுத்துபவன்
நியாமக = அனைத்தையும் நடத்துபவன்
வ்யாபகனு = அனைத்திலும் வல்லவன்
எந்தரிது = ஸ்ரீபரமாத்மனே என்று அறிந்து
அவனடிகெ = பரமாத்மனின் பாத கமலங்களுக்கு
புண்ய பாபகள = நீ செய்த புண்ய பாவங்களை
அர்ப்பிஸி = சமர்ப்பணம் செய்து
நீ = நீ

நிர்லேபனாகிரு = அந்த செயலுக்கும் உனக்கும் எந்த சம்பந்தமும் இல்லாதவாறு விலகி இரு.

மேலே பார்த்த விதங்களில், ஸ்ரீபரமாத்மன், நம் தேகத்தில் அன்னமயனாக கண்ட ரூபியாக இருந்து, அன்னனாக அகண்ட ரூபத்தில் இருந்து, இதைப்போல பிராணமயனாதி ரூபங்களால் அந்தந்த நாமங்களால், அந்தந்த பதார்த்தங்களில் பரமாத்மன் அனிருத்தன் இருக்கிறான் என்று அறிந்து உணவினை உண்ண வேண்டும். ஹே அதிகாரியே (செயல்களை செய்பவனே), விஷயாதி ஆசைகளைக் கொடுப்பவனும், அதை நிலை நிறுத்துபவனும், அனைத்தையும் நடத்துபவனும், அனைத்திலும் வல்லவனும் பரமாத்மனே என்று அறிந்து, நீ செய்த புண்ய பாபாதி அனைத்து கர்மங்களையும் பரமாத்மனுக்கு அர்ப்பித்துவிடு. பரமாத்மன் உன் பாவ கர்மங்களைப் பொசுக்கி, புண்யத்திற்கு தக்க பலன்களைக் கொடுப்பான். அனைத்தும் பரமாத்மனின் செயல்களே என்று சிந்தித்து, உனக்கும் அதற்கும் சம்பந்தம் இல்லை என்று அறி. அப்போது, உனது கர்மங்கள் வீணாகாது (தக்க பலன்களைக் கொடுக்கும்) என்கிறார் தாசராயர்.

**ஐது$^{3}$லக்ஷெம்ப$^{3}$த்த$^{1}$ ரொம்ப$^{3}$**
**த்தாத$^{3}$ ஸாவிரனேளுனூர்மே**
**லைது$^{3}$ ரூப$^{1}$வ த$^{4}$ரிஸி போ$^{3}$க்த்ருக$^{3}$ போ$^{4}$ஜ்ய னெந்தெ$^{3}$னிஸி |**
**ஸ்ரீத$^{4}$ரா து$^{3}$ர்கா$^{3}$ரமண பா$^{1}$**
**தா$^{3}$தி$^{3}$ ஷிரப$^{1}$ரியந்த வியாபி$^{1}$ஸி**
**கா$^{1}$து$^{3}$கொண்டி$^{3}$ஹ ஸந்தத ஜக$^{3}$ன்னாத$^{2}$விட்டலனு ||30**

ஐதுலக்ஷெம்பத்த ரொம்ப த்தாத சாவிரனேளுனூர்மே லைது ரூபவ = 589705
ரூபவ தரிஸி = ரூபங்களை தரித்து
போக்த்ருக போஜ்ய நெந்தெனிஸி = உணவை உண்பவன் என்றும், அந்த உணவின் அன்னமயன் என்றும்
எனிஸி = பெயர் பெற்று
ஸ்ரீதரா துர்காரமண = ஸ்ரீதேவி, பூதேவி, துர்காதேவியரின் பதியான
ஜகன்னாதவிட்டலனு = தாசராயரின் பிம்பரூபியான ஜகன்னாதவிட்டலன்
பாதாதி ஷிரபர்யந்த = கால் முதல் தலை வரை
வியாபிஸி = மனிதனின் சரீரத்தில் வியாபித்து
காதுகொண்டிஹ = நம்மை காப்பாற்றுகிறான்.

ஸ்ரீ பூ துர்கா ரமணனான, நம் தாசராயரின் பிம்பரூபியான ஸ்ரீஜகன்னாதவிட்டலன், அன்னமயாதி கண்டரூபங்கள் 585400, அன்னாதி கண்ட ரூபங்கள் 4305 (ஆக மொத்தம் 589705) என உணவை உண்பவரில் அதாவது அவரின் பஞ்சபிராணர்களிலும், அந்த தத்வாபிமானி தேவதைகளிலும், ஜீவரிலும், அனைத்து இந்திரியங்களிலும், வியாப்தனாக இருக்கிறான். இது மட்டுமல்லாமல், போஜ்ய பதார்த்தங்களில் மொத்தம் 589705 ரூபங்களை தரித்து, பிராணிகளின் கால் முதல் தலை வரையிலும் நிலைத்திருந்து, எப்போதும் அவர்களை காத்துக்

கொண்டிருக்கிறார். இப்படியாக பரமாத்மனை தியானித்தால், நாம் நிர்லிப்தராக பரமாத்மனை அடையமுடியும் என்று பொருள்.

போஜனரசவிபாக சந்தி என்னும் நான்காம் சந்தியின் தாத்பர்யம் இத்துடன் முடிவுற்றது.

ஸ்ரீகிருஷ்ணார்ப்பணமஸ்து

***

## பாவபிரகாசிகை : சந்தி 5 : விபூதி சந்தி

**ஹரிகதா2ம்ருதசார கு3ருக3ள**
**கருணதிந்தா3பநிது பே1ளுவே**
**பரம ப4கவத்3ப4க்தரித3னாத3ரதி3 கேளுவுது3**

**ஸ்ரீத1ருணி வல்லப4ன பரம வி**
**பூ4தி1ரூப1வ கண்ட3கண்ட3**
**ல்லிதெ1ரதி3 சிந்திஸூத1 மனத3லி நோடு3 ஸம்ப்4ரமதி3 |**
**நீத1 ஸாதா3ரண விஸேஷ ஸ**
**ஜாதி நைஜாஹிதவு ஸஹஜ வி**
**ஜாதி க2ண்டா3க2ண்ட3 ப3கெ3க3ளனரிது பு3த4ரிந்த3 ||1**

ஸ்ரீதருணி வல்லபன = ஸ்ரீலட்சுமிதேவியின் பதியான (தருணி = எப்போதும் இளமையாகவே இருப்பவள்)
பரம விபூதி ரூபவ = சிறந்த விபூதி ரூபங்களை
நீத, சாதாரண, விசேஷ, சஜாதி, நைஜ, அஹித, சஹஜ, விஜாதி, அகண்ட, கண்ட = என்னும் 10 விபூதி ரூபங்களை
புதரிந்த = ஞானிகளிடம்
அரிது = அறிந்து
ஈ தெரதி = இதன்படி
மனதலி = மனதில்
சிந்திசுத = தியானித்தவாறு
சம்ப்ரமதி = மகிழ்ச்சியுடன்
நோடு = பார்

முந்தைய சந்தியில், போக்த்ரு, போஜ்யாதிகளில் சிந்திக்க வேண்டிய பகவத்ரூபங்களை சொல்லி, இந்த சந்தியில் பரமாத்மனை தியானிக்க வேண்டுமெனில், பகவத்விபூதி ரூபங்களை அறியவேண்டியது அவசியம் என்று விபூதி ரூபங்களை சொல்லியவாறு, முதலாம் பத்யத்திலிருந்து இந்த சந்தியில் சொல்லப்போகும் விபூதி ரூபங்களின் சாரத்தை விளக்குகிறார். ஆகையால், இந்த பத்யத்திற்கு 'சந்தி ஸூசனெ' என்று பெயர் வந்தது.

சம்சார பந்தனத்திலிருந்து விடுதலை பெறவேண்டுமெனில், விபூதி ரூபங்களை கண்டிப்பாக அறியவேண்டும். ஸ்ரீராகவேந்திர ஸ்வாமிகள் இயற்றிய கீதாவிவ்ருத்தி என்னும் வியாக்யானத்தில் - பகவத்கீதை 10ம் அத்தியாயம் இறுதியில் - 'அஞ்ஞாத்பைனம் சர்வவிசேஷ யுக்தம் தேவம் பரம்கோவிமுச்யைவ பந்தனாத்', 'இதி ஸ்ருத்யா ப்ராகுக்த ஞானஸ்ய அவஷ்யகத்வாத்' என்று சொல்லியிருக்கிறார். இப்படி ஒவ்வொரு வஸ்துகளிலும் விசேஷமாக இருக்கும் பகவத்விபூதி ரூபத்தை அறியாமல் யாரால் பந்தமுக்தன் ஆகமுடியும்? என்னும் ஸ்ருதி வாக்கியத்திற்கேற்ப விபூதி ரூபஞானம் மிக அவசியம் என்பது மேற்சொன்ன வாக்கியத்தின் அர்த்தம். ஆகையால், தாசராயர் விபூதி ரூபங்களை இந்த சந்தியில் தெரிவிக்கிறார். முதல் பத்யத்தில் எவ்வளவு வகையான விபூதி ரூபங்கள் உள்ளது என்றும், விபூதி ஷப்தார்த்தத்தையும் தாசராயர் விளக்குகிறார்.

விபூதி என்றால் என்ன? கீதை 10ம் அத்தியாயம் 16ம் ஸ்லோகத்திற்கான கீதா விவ்ருத்தி வியாக்யானத்தில்:

விபூதயோ நாம விவிததயா நானாரூபதயா, ராம கிருஷ்ணாதிதயா, பூதாநிரூபாணி |
யத்வாயேஷாம்விஷ்ணு ஸ்வரூபாணாம் சன்னிதேரன்யவஸ்துஷு விஷிஷ்டத்வம்ஸ்வஜாதே: ஸ்யாத்விபூத்யாக்யானி தானிது ||

'விபூதி, விவிததயா, பூதய: விபூதய:' - ஒரே மாதிரியான பொருட்களில் ஒரே ஒன்றுக்கு மட்டும் சிறப்பு இருந்தால், அது விஷ்ணுவின் விபூதியென்று நினைக்கவேண்டும். 'மனுஷ்யாணாஞ்ச பூபதி:' என்னும் ஆதாரத்தால் விஷ்ணுவின் அம்சம் இருந்திக்கவில்லையெனில், அவன் அரசன் ஆகியிருக்கமாட்டான் என்று அறியவேண்டும். இப்படி ஒரே ஜாதியான பொருட்களில், சிறப்பு சாமர்த்தியம் இருப்பதை விபூதி என்று சொல்லவேண்டும்.

இந்த விபூதிகளில் 10 விபூதி வகைகள் உள்ளன.

நீத = பகவத்ரூபங்கள் ஸ்வயம்வியக்தானாக (சுயம்பு) இருக்கும் பொருட்கள். உதாரணம்: சாலிகிராமம்

சாதாரண = பிராமணர்களிலும், கிருஹஸ்தாஸ்ரமிகளில் இருக்கும் பகவத்ரூபங்கள்

விசேஷ = யதிகளில் இருக்கும் பகவத்ரூபங்கள்.

சஜாதிய = 'தேவானாம ஸ்மிவாஸவ:', 'ருத்ராணாம் ஷங்கரஷ்சாஸ்மி' என்னும் கீதா வாக்கியங்களால் 'தேவதைகளில் தேவேந்திரனையும், ஏகாதச ருத்ரர்களில் சங்கரனையும் என் விபூதி ரூபங்கள் என்று அறியவேண்டும்' என்று ஸ்ரீகிருஷ்ணன் கூறியது. அதாவது, தேவதைகள் அனைவரும் ஒரே ஜாதி என்றும், அவர்களில் இந்திரனும், ருத்ரரும் சஜாதியர்கள் என்றும், அவர்களில் சங்கரரையும் விபூதியாக சொல்லியிருப்பதால், இதற்கு சஜாதி விபூதி ரூபம் என்று பெயர்.

நைஜ = பரமாத்மனின் ஸ்வயம் அம்சங்களான நைஜ ரூபங்கள். உதாரணம்: ராம கிருஷ்ணாதி ரூபங்கள். 'மேரு: ஷிகரிணாமஹம், ஸ்தாவிராணாம் ஹிமாலய:'. சிகரம் உள்ள மலைகளில் மேரு பர்வதத்தை விபூதி என்று அறிய வேண்டும். நகராப் பொருட்களில் (ஸ்தாவரங்களில்) இமாலயத்தை விபூதி என்று அறிய வேண்டும் என்று சொல்லியிருக்கிறார். இத்தகைய ஸ்தாவிரங்களில், விபூதியை சிந்திப்பதற்கு அஹித விபூதி என்று பெயர். சராசர பிரதிமைகளில் விபூதி ரூபங்களை சிந்திப்பதற்கு விஜாதீய விபூதி.. அதாவது 'நக்ஷத்ராணாமஹம்ஷஷி', 'அஸ்வத்த: சர்வ வ்ருக்ஷாணாம்', 'ம்ருகாணாம் ம்ருகேந்த்ரோஹம்' இந்த உதாரணங்களில் நட்சத்திரத்திற்கும், நிலவிற்கும் பரஸ்பரம் விஜாதியே தவிர, சஜாதி அல்ல. அப்படியே, மரங்களில் அஸ்வத்தத்தையும், மிருகங்களில் சிங்கத்தையும் விபூதி என்று சொல்லியிருக்கிறார். இப்படியாக ஒவ்வொரு ஜாதிகளிலும் அதிக மகிமையுள்ள பொருளில், தனித்தனி பகவத்ரூபங்களை அறிவதே கண்ட விபூதி என்று சொல்வர். (கீதா 10-41ம் ஸ்லோகம்).

யத்யத்விபூதி மத்ஸத்வம் ஶ்ரீ மதூர்ஜித மேவவா |
தத்தேவாவகஜ்ஜத்வம் மமதேஜோம்ஷ சம்பவம் ||

'ஹே அர்ஜுனனே, எந்தெந்த பதார்த்தங்கள், சஜாதி விஜாதிகளில், செல்வத்தினாலோ, வலிமை அல்லது ஒளியாலோ அதிகமாக இருக்கிறதோ, அவற்றையெல்லாம் என் தேஜோம்சம் என்று அறி' என்கிறார் ஶ்ரீகிருஷ்ணன். இப்படியாக தனித்தனியாக அறிவதே கண்ட விபூதிகள்.

அகண்ட என்றால்:
அதவா பஹு நைதேனகிம் ஞானேன தவார்ஜுன |
விஷ்டப்யாஹமிதம் க்ருத்ஸ்னமேகாம்ஷேன ஸ்திதோ ஜகத் ||
(கீதை 10-42 ஸ்லோகம்).

'ஹே அர்ஜுனா! மேற்சொன்ன மாதிரி கண்ட ரூபங்களை அறிந்து உனக்கு ஆவது என்ன? முக்கியமான ஒரு அம்சத்தை சொல்கிறேன், கேள். எனக்கிருக்கும் அனந்தாம்சங்களில், ஒரு அம்சத்தினால், இந்த உலகத்தின் எல்லா இடங்களிலும் வியாப்தனாக இருக்கிறேன் என்று அறி. ஒரே அம்சத்தினால் அனைத்து இடங்களிலும் இருப்பதாக சிந்திப்பதை அகண்ட விபூதி என்று அறியவேண்டும்'. இப்படியாக 10 விதமான விபூதிகளை மனதில் அறிந்து சிந்திப்பாயாக என்று தாசராயர் ஒரே பத்யத்தினால் விபூதியின் விஷயங்கள் அனைத்தையும் சொல்கிறார்.

'கண்ட ரூபங்களையும் விபூதிகளையும் அறிந்து உனக்கு ஆகப்போவது என்ன?' என்று ஶ்ரீகிருஷ்ணன் கீதையில் கேட்பதால், இதன்மூலம் அகண்ட ரூப உபாசனையே போதும் என்று சொல்வதால், கீதையின் விபூதி அத்தியாயமும், தாசராயரின் விபூதி சந்தியும்கூட தேவையேயில்லையே என்று தோன்றலாம்.

ஆனால், கீதா விவ்ருத்தியில் இதற்கான தீர்வு உள்ளது.

நதைதஞ்ஞானாதேவ மோக்ஷ சித்தெளப்ராகுத்த பரிச்சின்ன விபூதி ரூபாணாம் ஞானம் வ்யர்த்தமிதி ததுக்தி வ்யர்த்தேதிஷக்யம் |
அஞ்ஞாத்வைனம் இதி ஸ்ருத்யாப்ராகுத்த ஞானஸ்யாவஷ்யகத்வாத் ||
மஹா பலாதிகாரித்வாத்தவோபயஞ்ஞான மவஷ்யகம் |
நவிசேஷஞ்ஞானமாத்ரெண ஆலமிதி தவைதேனஞாதேன கிமிதி பாவேன தவேத்யுக்தம் ||

இப்போது சொன்ன அகண்ட ரூபோபாசனையாலேயே மோட்சம் கிடைக்கிறது என்றால், மேற்சொன்ன கண்ட ரூபோபாசனை எதற்கு? இதுவரை சொன்ன விபூதி அத்தியாயமே வீண் என்று நினைக்கக்கூடாது. 'அஞ்ஞாத்வைனம்' என்னும் ஸ்ருதியில் கண்ட ரூபோபாசனை செய்தாலே ஒழிய முக்தி கிடைப்பதில்லை என்று சொல்லியிருப்பர். ஆகையால், கண்ட ரூபோபாசனையும்கூட அவசியமே. நீ மஹா பலாதிகாரியான (பலன்களை தன் விருப்பப்படி கொடுப்பவர்) காரணத்தால், உனக்கு கண்டாகண்ட ஞானம் அவசியம் என்று சொல்லியிருக்கிறாரே தவிர, அந்த ஞானமே அனாவசியம் என்று சொல்லவில்லை என்பது ஸ்ரீகிருஷ்ணனின் அபிப்பிராயம் என்பது மேற்சொன்ன வாக்கியத்தின் அர்த்தம். ஆகையால், உத்தமாதிகாரிகளுக்கு, கண்டாகண்ட ரூபங்கள் இரண்டின் ஞானமும் அவசியம் என்றும், சாமான்யாதிகாரிகளுக்கு, கண்டரூபோபாசனை ஒன்றாவது அவசியம் என்று அறிந்து 10 விதமான ஸ்தானங்களில் நிலைத்திருக்கும் பகவத் விபூதியை நினைக்க வேண்டும் என்று இந்த முதலாம் பத்யத்தினால் சொல்லி, அடுத்த பத்யங்களிலிருந்து கண்ட ரூபங்களை விளக்குகிறார்.

**ஜலத$^{4}$ராக$^{3}$ஸ தொ$^{3}$ளகெ$^{3}$ சரிஸுவ**
**ஹலவு ஜீவர நிர்மிஸிஹ னத$^{3}$**
**ரொளு ஸஜாதி$^{1}$ விஜாதி$^{1}$ ஸாதா$^{3}$ரண விஸேஷக$^{3}$ள |**
**தி$^{1}$ளிது$^{3}$ தத்தத் ஸ்தா$^{2}$னத$^{3}$லி வெ**
**க்க$^{3}$ளிஸி ஹப்பி$^{3}$த$^{3}$மனதி$^{3}$ பூ$^{1}$ஜிஸு**
**தலவ வ்யாப்த$^{1}$ன ரூபக$^{3}$ள நோடு$^{3}$தலெ ஹிக்கு$^{3}$தி$^{1}$ரு ||2**

ஜலதராகஸரொளகெ = ஜல=தண்ணீரில். தர=பூமியில், ஆகஸதொளகெ = ஆகாயத்தில்
சரிசுவ = சஞ்சாரம் செய்யும்
ஹலவு ஜீவர = நானாவித ஜீவராசிகளை
நிர்மிஸிஹனு = ஸ்ருஷ்டிப்பவன்
அதரொளகெ = அதில்
சஜாதி விஜாதி சாதாரண விசேஷகள திளிது தத்தத்ஸ்தானதலி = சஜாதியரான மனிதர்களில் அரசர்களிலும், விஜாதியரான மிருகங்களில் சிங்கத்திலும், அதிதி, விருந்தினர் முதலான சாதாரண மனிதர்களில் யதி முதலான விசேஷ ரூபங்களிலும், இப்படியாக அந்தந்த ஸ்தானங்களை
வெக்களிஸி = அதிகமாக
ஹப்பித = வியாபித்திருக்கும்
அலவ வ்யாப்தன = அனைத்திடங்களிலும் வியாப்தனான ஸ்ரீபரமாத்மன்

ரூபகள = ரூபங்களை
மனதி = மனதில்
பூஜிஸு = பூஜிப்பாயாக
நோடுதலி = சாதாரண விசேஷ சஜாதி விஜாதி வஸ்துகளில் விசேஷ ரூபங்களைப் பார்த்தவாறு
ஹிக்குதிரு = மகிழ்ச்சி அடையவேண்டும்.

தண்ணீரில், பூமியில், அதன் கீழுள்ள உலகத்தில், ஆகாயத்தில், அதன் மேலுள்ள ஸ்வர்க்காதி உலகங்களிலும் சஞ்சரிக்கும் அனைத்து பிராணிகளையும் ஸ்ரீபரமாத்மனே ஸ்ருஷ்டித்திருக்கிறான். இவற்றில் சஜாதி விஜாதி விபூதிகளை அறியவேண்டும். (சஜாதி, விஜாதி, சாதாரண, விசேஷ என்னும் சொற்களுக்கு முந்தைய பத்யத்தில் அர்த்தம் பார்க்கவும்). இப்படியாக, அந்தந்த பொருட்களில் உத்தமமானது எதுவோ, அதில் பகவந்தனின் விபூதி இருக்கிறது என்று அறிந்து மனதில் பூஜிக்கவேண்டும். விபூதியென்றால், கீதையில் சொன்ன இடங்களில் மட்டுமே என்று புரிந்து கொள்ளக்கூடாது என்னும் அபிப்பிராயத்திலேயே தாசராயர் 'வெக்களிஸி ஹப்பித' என்றார்.

நம் மனதில் நாமே சிந்தித்து அங்கங்கு இருக்கும் விபூதியை நினைக்கவேண்டும். கீதையில் சொன்னது மட்டுமே அல்லாமல், சாதாரண விபூதிகளை நாமே சிந்திக்க முடியும். பொதுவாக, ஒரு வயது, இரு வயதுக் குழந்தைகள் விளையாடிக் கொண்டிருந்தால், அதை பார்ப்பவர்களுக்கு மிகவும் அழகாகத் தோன்றும். ஸ்ரீபரமாத்மன், அங்கு அந்த மக்களின் ரூபத்தில் ஆடிக்கொண்டிருக்கிறான் என்று நினைத்து சஜாதி சாதாரண விபூதியை நினைக்கவேண்டும். அந்தக் குழந்தைகளில் எந்த குழந்தை மிகவும் அதிகமாக விளையாடுகிறதோ, மற்றும் மனிதர்களில் சாமான்ய மனிதர்களால் செய்யமுடியாத அசாத்திய காரியங்களை யாராவது ஒருவர் செய்தால், அங்கு சஜாதிய விசேஷ விபூதி ரூபம் இருக்கிறது என்று அறியவேண்டும். அலவவியாப்தி என்றால் ஓரிரு இடங்களில் மட்டுமன்றி அனேக இடங்களில் வியாபித்திருக்கிறான் என்று பொருள். இத்தகைய பகவத்ரூபங்களைப் பார்த்து மகிழ்ச்சியடைய வேண்டும்.

**ப்ரதி1மெ ஷாலக்3ராம கோ3ப்4யா**
**க3த அதி1தி1 ஸ்ரீதுளஸி பி1ப்ப1ல**
**யதி1 வனஸ்த2 க்4ருஹஸ்த2 வடு1 யஜமான ஸ்வபர ஜன ।**
**ப்ருதி2வி ஜல ஷிகி2 ப1வன தாரா**
**பத2 நவக்3ரஹ யோக3 கரண ப4**
**தி1தி2 ஸிதாஸிதபக்ஷ ஸங்க்ரம அவனதி3ஷ்டான ||3**

ப்ரதிமெ = சல, அசல பிரதிமைகள்
ஸாலகிராமம்,
கோ = பசு
அப்யாகத = வீட்டிற்கு வந்த விருந்தினர்கள்
அதிதி = வைஷ்வதேவ காலத்திற்கு வீட்டிற்கு வந்த அறிமுகம் இல்லாதவர்கள்.

ஸ்ரீதுளஸி,
பிப்பல = அஸ்வத்த மரம்
யதி
வனஸ்த = வானபிரஸ்த ஆசிரமத்தில் இருப்பவர்
கிருஹஸ்த = திருமணம் ஆனவர்
வடு = பிரம்மசாரி
யஜமான = அதிபதி / முதலாளி
ஸ்வபரஜன = உற்றார் உறவினர் & பிறர்
ப்ருதிவி = பூமி
ஜல = தண்ணீர்
ஷிகி = அக்னி
பவன = வாயு
தாராபத = ஆகாயம்
நவகிரக = நவக்கிரகங்கள்
யோக, கரண
ப = நட்சத்திரங்கள்
திதி,
ஸிதாஸிதபக்ஷ = சுக்ல, கிருஷ்ண பட்சங்கள்
ஸங்க்ரமண = மேஷாதி 12 சங்கிரமணங்கள்
அவன = ஸ்ரீபரமாத்மனின்
அதிஷ்டான = சன்னிதானம் இருக்கும் இடங்கள்

பரமாத்மனின் விபூதியை அறிவதற்காக, அவனின் சன்னிதானம் இருக்கும் இடங்களில், நீத, சாதாரண, சஜாதி முதலான ரூபங்களை சொல்கிறார்.

ஸ்வயம்வ்யக்த பிரதிமைகள், சாலகிராமங்கள் இவற்றில் நீத விபூதியை அறியவேண்டும். பசு, அழைத்த (ஏற்கனவே வந்திருக்கும்) விருந்தினர்கள், வைஷ்வதேவ காலத்தில் சரியாக வீட்டிற்கு சாப்பிட வந்த (அழையா) விருந்தினர்கள், ஸ்ரீதுளசி, அஷ்வத்த, யதி, வானபிரஸ்த, இவற்றில் விசேஷ விபூதியை அறியவேண்டும். கிருஹஸ்த, பிரம்மசாரி, பிரபு (முதலாளி), சொந்த மக்கள், பிற மக்கள் என இவர்கள் பகவத் பக்தர்களாக இருந்தால், அவர்களில் சாதாரண விபூதியை அறியவேண்டும். அல்லது மேற்கூறிய வனஸ்த, கிருஹஸ்த, பிரம்மசாரி, யஜமான இவர்கள் அனைவரும் ஸ்வ-பரராக இருக்கவேண்டும் என்று அர்த்தம்.

‘ஸ்வாதந்த்ர்யாத்ஸ்வ: பரமாத்மாதஸ்மின்வரா:, ஆஸக்தா:, ஸ்வபரா:,’ ஸ்வ என்றால் ஸ்வதந்த்ரமான பரமாத்மன். அவனில் நம்பிக்கை வைப்பவர்கள் ஸ்வபரர். மேற்கூறிய அனைவரும் பகவத்பக்தர்களாக இருந்தால், அவர்களை பூஜிக்க வேண்டும் என்று பொருள். ப்ருத்வி, ஜல, அக்னி, வாயு, ஆகாஷ இவற்றில் பரமாத்மனின் அகண்ட விபூதியை சிந்திக்க வேண்டும். ‘ப்ருத்வி வாயுராகாஷ அபோஜ்யோதிரஹம்மர்ஹா’ என்னும் (பாகவத 11ம் ஸ்கந்தம், 19ம் அத்தியாயம், 37ம்

ஸ்லோகம்) வாக்கியத்தினால் ப்ருதிவ்யாதி பஞ்சபூதங்களில் தன்னை அகண்ட ரூபமாக அறி என்று உத்தவனுக்கு ஸ்ரீகிருஷ்ணன் சொல்லியிருக்கிறார்.

இவற்றிலேயே கண்ட ரூபங்களையும் சிந்திக்க வேண்டும். (பாகவதம். 37-33). கந்தமாத்ரமஹம்புவ: | அபாம்ரஸஸ்சபரம: ஷப்தோஹம்னபஸ:பர:' ஆகிய வாக்கியங்களால் பூமியில் கந்த (வாசனை) குணம், தண்ணீரில் சுவை, தேஜஸ்ஸில் ரூபம், வாயுவில் ஸ்பர்ஷம், ஆகாயத்தில் ஷப்தம் என இவற்றில் கண்ட ரூபத்தை சிந்திக்கவேண்டும்.

நவக்கிரகங்களில் விஜாதீய கண்ட ரூபங்களை சிந்திப்பதோடு மட்டுமல்லாமல், நவக்கிரக விஜாதியில், சூரியனில் அகண்ட ரூபத்தை சிந்திக்க வேண்டும். யோகங்களில் சஜாதீய கண்ட ரூபங்களை, வியதீபாதங்களில் அகண்ட ரூபங்களை சிந்திக்க வேண்டும். இப்படியே கரணங்களில் கண்டரூப, விஷ்கம்பத்தில் அகண்ட ரூபத்தையும், நட்சத்திரங்களில் கண்ட ரூபம், அபிஜித் என்னும் நட்சத்திரத்தில் அகண்ட ரூபத்தையும் சிந்திக்க வேண்டும். 'நட்சத்திராணாம் ததாபிஜித்' என்னும் பாகவத வாக்கியமே இதற்கு ஆதாரம் ஆகும்.

திதியில் கண்ட ரூபத்தையும், த்வாதசியில் அகண்ட ரூபத்தையும் சிந்திக்க வேண்டும். சுக்ல கிருஷ்ண பட்சங்களில் கண்ட ரூபத்தையும், பௌர்ணமி, அமாவாசைகளில் அகண்ட ரூபத்தையும் சிந்திக்க வேண்டும். மேஷாதி 12 சங்கிரமணங்களில் கண்ட ரூபத்தையும், மகர, கடக சங்கிரமணங்களில் அகண்ட ரூபத்தையும் சிந்திக்க வேண்டும்.

**கா[1]த[3] கா[1]ஞ்சனதொ[3]ளகெ[3] ஷோபி[3]ப**
**ஆதி[3]தே[1]யாஸ்யன தெ[1]ரதி[3] லகு**
**மீத[4]வ ப்ரதிதி[3]னதி[3] ஷாலக்[3]ராம தொ[3]ளகி[3]ப்ப |**
**ஐது ஸாவிரவதி[4]க[1] மூவ**
**த்தைது[3] மேலைனூரு ரூபதி[3]**
**பூ[4] த[4]ரக[3]ளபி[4]மானி தி[3]விஜரொளிப்ப னனவரத ||4**

காத காஞ்சனதொளகெ = நன்றாக காய்ச்சிய தங்கத்தில்
ஷோபித = ஒளிரும்
ஆதிதேய = அதிதியின் மக்களான தேவதைகளுக்கு
ஆஸ்யனதெரதி = தலைவரான அக்னியைப் போல
லகுமிதவனு = லட்சுமிபதியான
ப்ரதிதினவு = அனைத்து நேரங்களிலும்
ஐது ஸாவிர மேலெ மூவத்தைததிக வைனூரு ரூபதி = 5535 ரூபங்களால்
ஷாலிகிராமதொளகெ இப்ப = சாலிகிராமத்தில் இருக்கிறான்
அனவரத = எப்போதும் எங்கும் நிலைத்திருப்பவன்
பூதரகளபிமானி = பர்வத அபிமானிகளான
திவிஜரொளு = கருட, சேஷ, ருத்ரரில்
இப்பனு = இருக்கிறான்.

முந்தைய பத்யத்தில் கூறிய பிரதிமை, சாலிகிராம ஆகியவற்றில் இருக்கும் பகவத் விபூதிகளை இங்கு விளக்கமாக சொல்கிறார். இந்த பத்யத்தில் சாலிகிராமத்தில் இருக்கும் பகவத்ரூபங்களை சொல்கிறார்.

பொதுவாகவே தங்கம் மிகவும் ஒளிர்ந்தவாறு இருக்கிறது. அதையே நெருப்பில் போட்டு காய்ச்சினால் எப்படி ஒளிருமோ, அதைப்போல, சாலிகிராமத்தில் பரமாத்மனின் விபூதியை அறியவேண்டும். அக்னிக்கு ஆதிதேயாஸ்ய என்று பெயர். அது எப்படியெனில், இந்திராதிகளுக்குக் கொடுக்க வேண்டிய ஆஹுதியை அக்னியில் கொடுப்பர். தேவதைகள் அக்னி மூலமாக ஆஹுதிகளைப் பெறுவர். ஆகையால், அக்னிக்கு தேவமுக என்ற பெயர் வந்தது. சாலிகிராம என்னும் சொல்லின் எண். ஷா=5 லி-3 க்+ரா=3+2=5, ம=5 இவற்றை வலது பக்கத்திலிருந்து படித்தால், 5535 வருகிறது. பகவந்தன் இவ்வளவு ரூபங்களால் சாலிகிராமத்தில் இருக்கிறான்.

இதைப்போல, பர்வதாபிமானிகளான கருட, சேஷ, ருத்ரர் அனைவரும்கூட இருக்கின்றனர். பர்வதாபிமானிகள், கருடாதிகள் என்னும் விஷயத்தில் (பாரத தாத்பர்ய நிர்ணய 20-68) ‘ஷிவம் சேஷம் கருடஞ்சாஹஸாபி பராவனாத்பர்வத நாமதேர்யா’ என்னும் வாக்கியமே ஆதாரம் ஆகும். இப்படி நீத விபூதிகளை சாலிகிராமத்திலும், விசேஷ விபூதிகளை கருடாதிகளிலும் சிந்திக்க வேண்டும்.

**ஸ்ரீரமண ப்ரதிமெக3ளொளகெ3 ஹதி3**
**மூரதி4க வாகி3ப்ப மேலை**
**நூரு ரூபவ த4ரிஸி இப்ப1னு ஆஹிதா1சலதி3 |**
**தா3ரு மத2னவகை3யே பாவக1**
**தோ1ருவந்தெ ப்ரதீ1க ஸுரரொளு**
**தோ1ருதிப்பனு தத்த1தா3கா1ரத3லி நோள்பரிகெ3 ||5**

ஸ்ரீரமண = லட்சுமிபதி
ப்ரதிமெகளொளகெ = தங்கம், வெள்ளி, பஞ்சலோகம் முதலான சிறிய பிரதிமைகளில்
ஹதிமூரதிகவாகி = 13 ரூபங்கள் அதிகமாக
ஐனூரு ரூபவ = 500 ரூபங்களை தரித்து (மொத்தம் 513)
இப்ப = இருப்பான்
ஆஹிதாசலதி = ஆலயங்களில், அஷ்டபந்தனங்களால் நிறுவப்பட்டிருக்கும் அசல பிரதிமைகளில்
இப்பனு = எப்போதும் இருக்கிறான். சலபிரதிமைகளில் இருக்கும் பகவத் விபூதிகளுக்கு அஹித விபூதி என்று பெயர்.
தாரு மதனவகையே = அரணியால் மதனம் செய்தால்
பாவகதோருவந்தெ = அக்னி தெரிவதைப் போல
ப்ரதீக சுரரொளு = பிரதிமா ரூபங்களான தேவர்களில்
ததாகாரதல்லி = பிரதிமா தேவதைகளின் உருவத்தில்
நோள்பரிகெ = பார்க்கும் மக்களுக்கு

தோருதிப்பனு = காண்பித்துக் கொள்வான்.

வீட்டில் இருக்கும் பூஜைக்கு ஏற்ற பஞ்சலோஹ பிரதிமைகளில், பிரதிமா என்னும் சொல்லின் எண்ணிற்கேற்ப, ப்+ர=1+2=3, தி=1, ம=5. இதை வலது பக்கமாக படித்தால், 513 ஆகிறது. இவ்வளவு ரூபத்தினால், சஹஜ விபூதி என்று எப்போதும் இருக்கிறான். அஹித விபூதியென்று அசலமாக தேவாலயங்களில் நிறுவப்பட்டிருக்கும் சிலா பிரதிமைகளிலும் அவ்வளவே விபூதி ரூபங்களால் வசிக்கிறான். யாகசாலைகளில் அக்னியை உருவாக்குவதற்காக, அரணிக்கட்டையை, இன்னொரு கட்டையால் மதனம் செய்தால், அக்னி வருவதைப் போல, ராமகிருஷ்ணாதி பிரதிமைகளில், அதே உருவத்தினால் ஞானிகளுக்கு தெரிகிறான். காஷ்டத்தில் அக்னி இருந்தாலும், அது நம் கண்ணிற்குத் தெரிவதில்லை. அதையே மதனம் செய்தால் எப்படி அக்னி தெரியவருகிறதோ, அதுபோலவே, சாதாரண மக்களுக்கு சாதாரண பஞ்சலோகாதி பிரதிமைகளைப் போல காணுவான். பக்தியினால் தியானம் செய்யும் ஞானிகளுக்கு தேஜோமயனாக பிரதிமை தேவதா ருபனாக, அதாவது, ராம பிரதிகளில் ராம ரூபியாகவும், கிருஷ்ணாதி ரூபங்களில் அந்தந்த ரூபியாகவும் காண்பித்துக் கொள்வான்.

**கரண நியாமகனு தானுப**
**கரணதொ$^{3}$ள கை$^{3}$வத்தெரடு$^{3}$ ஸா**
**விரத$^{3}$ ஹதி$^{3}$னைத$^{3}$தி$^{3}$க$^{1}$ ஷதரூபங்க$^{3}$ளனெ த$^{4}$ரிஸி ।**
**இருதிஹனு தத்ரூபனாமக$^{3}$**
**ளரிது$^{3}$ பூஜிஸுதிஹர பூஜெய**
**நிருத கைகொம்ப$^{3}$ த்ருஷார்த்தனு ஜலவ கொம்ப$^{3}$ந்தெ$^{1}$** ||6

கரண நியாமகனு = இந்திரியங்களின் பிரேரகனான ஸ்ரீபரமாத்மன்
தா = தான்
வுபகரணதொளகெ = பூஜைக்குப் பயன்படுத்தும் பொருட்களில்
ஐவத்தெரடு சாவிர ஹதினால்கதிக ஷதரூபகளனெ = 53114 ரூபங்களை
தரிஸி = தரித்து
இருதிஹனு = இருக்கிறான்
தத்ரூப நாமகளனரிது = கை, கால் ஆகியவற்றில் அந்தந்த ரூபங்களை தரித்து, அதில் அந்தர்யாமியாகவும் இருந்து, மேற்கூறிய அவ்வளவு ரூபங்களாலும் இருக்கிறான் என்று அறிந்து
பூஜிஸுதிஹர = பூஜையை செய்பவரின்
பூஜெய = பூஜையை
நிருத = தினந்தோறும் (எப்போதும்)
த்ருஷார்த்தனு = தாகம் கொண்டவன்
ஜலவ = தண்ணீரை
கொம்பந்தெ = குடிப்பதைப்போல
கைகொம்பனு = ஏற்றுக்கொள்வான்

ஞானேந்திர, கர்மேந்திரியங்களை நடத்துபவனான ஸ்ரீபரமாத்மன், பூஜைக்குப் பயன்படுத்தும் பொருட்களில், அதன் எண்ணிக்கையின்படி, வு=4, ப=1, க=1, ர=3, ண=5, இதை வலப்பக்கத்திலிருந்து படித்தால், 53114 ஆகிறது. அவ்வளவு பகவத் விபூதி ரூபங்களை பூஜைக்கான சாதனங்களில் (பதார்த்தங்களில் / பொருட்களில்) அறிந்து, பூஜிப்பவர்களின் பூஜையை, தாகம் எடுத்தவன் உடனடியாக எப்படி தண்ணீரைக் குடிக்கிறானோ, அதுபோல பரமாத்மன் ஏற்றுக்கொள்கிறான்.

**பிம்ப$^3$ரூபனு ஈ தெரதி$^3$ ஜட**
**பொ$^1$ம்ப$^3$ஸுர மொத$^3$லாத$^3$ ஸுரரொள**
**கி$^3$ம்பு$^3$ கொ$^3$ண்டி$^3$ஹ னெந்த$^3$ரிது த$^4$ர்மார்த்த$^2$ காமக$^3$ள |**
**ஹம்ப$^3$லிஸ த$^3$னுதி$^3$னதி$^3$ விஷ்வ கு**
**டு$^1$ம்பி$^3$ கொ$^1$ட்ட க$^1$ணான்ன கு$^1$த்ஸித**
**கம்ப$^3$ளியெ ஸௌபா$^4$க்ய வெந்த$^3$வனங்க்ரிக$^3$ள ப$^4$ஜிஸு ||7**

பிம்பரூபனு = பிம்பரூபியான ஸ்ரீபரமாத்மன்
ஈ தெரதி = முன்பு சொன்ன விதத்தில்
ஜட = ஜடரூபமான சல, அசல பிரதிமைகளில்
பொம்பஸுர = பொம்ம = தங்கத்தின். பஸுர = கர்ப்பம். அதாவது, ஹிரண்யகர்ப்பம் என்னும் பிரம்மதேவன் ஆகிய
சுரரொளகெ = தேவதைகளில்
இம்புகொண்டிஹனு = சஹஜ ரூபத்தால் நிலைத்திருப்பவன்
அரிது = என்பதை அறிந்து
தர்மார்த்தகாமகள = தர்மார்த்த காமங்களை
ஹம்பலிஸதெ = விரும்பாமல்
அனுதினதி = தினந்தோறும்
விஷ்வகுடும்பி = ஜகத்குடும்பியான ஸ்ரீபரமாத்மன்
கொட்டகணான்ன = கொடுத்த அரிசிகளை
குத்ஸிதகம்பளிய = மிகச்சிறிய கிழிந்த கம்பளி ஆடையை
சௌபாக்யவெந்து - இது நமக்கு சௌபாக்கியம் என்று நினைத்து
அவன = பரமாத்மனின் கமலங்களை வணங்கு.

முந்தைய பத்யங்களில் சொன்னதைப்போல, பிம்பரூபியான பரமாத்மன், சலாசல பிரதிமைகளில், அஹித சஹஜாதி விபூதியினாலும், பிரம்மாதிகளில் சஹஜவாத விபூதியினாலும் இருக்கிறான் என்று சிந்தித்து, தர்மார்த்த காமங்களை வேண்டாமல், நிஷ்காமத்தினால் தினந்தோறும் பஜித்தவாறு,, விஷ்வகுடும்பியான பரமாத்மன் கொடுத்த மிகச்சிறிய அளவிலான அரிசியானாலும்,, மிகவும் நைந்த / கிழிந்த கம்பளியானாலும், அதை பயன்படுத்தியவாறு, இதுவே நம் சௌபாக்கியம் என்று அறிந்து, இடைவிடாமல் எந்நேரமும் பரமாத்மனின் பாதகமலங்களை வணங்கு. இதுவே உனக்கு முக்திக்கான வழி.

**வாரியொள கி$^3$ப்ப$^1$த்து$^1$ நாலகு$^1$**
**மூரெரடு$^3$ ஸாவிரத$^3$மேல் மு**

**ந்னூரு ஹதி$^{3}$னேளெனிப ரூபவு ஸ்ரீதுளஸித$^{3}$ளதி$^{3}$ |**
**நூரு அரவத்தொந்து$^{3}$ பு$^{1}$ஷ்ப$^{1}$தி$^{3}$**
**மூரதி$^{4}$கத$^{3}$ஷ தீ$^{3}$பதொ$^{3}$ளு நா**
**நூருமூரு ஸுமூர்த்திக$^{3}$ளு க$^{3}$ந்த$^{3}$தொ$^{3}$ளகி$^{3}$ருதிஹவு ||8**

வாரியொளகெ = தண்ணீரில்
இப்பத்து நாலகு = 24 ரூபங்கள்
ஸ்ரீதுளசிதளதி = ஸ்ரீதுளசிதளத்தில்
மூரெரடு சாவிரத மேல் முன்னூரு ஹதினேளெனிப = 3+2=5. 5000+317 = 5317
நூறு அரவத்தொந்து = 161 ரூபங்கள்
புஷ்பதி = பூக்களில்
மூரதிகதஷ = 3+10 = 13 ரூபங்கள்
தீபதொளு = தீபத்தில்
நானூரு மூரு சுமூர்த்திகளு = 403 ரூபங்கள்
கந்ததொளகிருதிஹவு = சந்தனத்தில் இருக்கின்றன.

பூஜை சாமான்களில் இருக்கும் அகண்ட பகவத்ரூபங்களை 3ம் பத்யத்தில் சொல்கிறார் தாசராயர். இந்த பத்யத்தில் எந்தெந்த பொருட்களில் எவ்வளவு ரூபங்கள் உள்ளன என்பதை சொல்கிறார்.

தண்ணிரில், வாரி என்னும் சொல்லின் எண்ணிக்கையின்படி, வா = 4, ரி = 2. இதனை வலது பக்கத்திலிருந்து படித்தால், 24 ரூபங்கள் உள்ளன. ஸ்ரீதுளசி சொல்லின் எண்ணிக்கையின்படி ஸ்ரீ=7 து=1 ல=3 ஸி=5 அதாவது, 5317 ரூபங்கள். புஷ்பங்களில் பு=1 ஷ்=6 ப=1 அதாவது 161 ரூபங்கள் உள்ளன. தீபங்களில், தீ=3 ப=1 என்று 13 ரூபங்கள். கந்தத்தில் (சந்தனத்தில்) = க=3 ந்=0 த=4, அதாவது 403 ரூபங்கள் உள்ளன என்று அறியவேண்டும்.

**அஷ்ட$^{1}$த$^{3}$ள ஸத்ஹ்ருத$^{3}$ய க$^{1}$மலா**
**தி$^{3}$ஷ்டிதனு தானாகி$^{3}$ ஸர்வோ**
**த் க்$^{1}$ருஷ்டமஹிமனு த$^{1}$லக$^{3}$ளலி ஸஞ்சரிஸு தொ$^{1}$ளகி$^{3}$த்து$^{3}$ |**
**து$^{3}$ஷ்டரிகெ$^{3}$ து$^{3}$ர்பு$^{3}$த்தி$^{3}$ கர்ம வி**
**ஸிஷ்டரிகெ$^{3}$ ஸுக்ஞான த$^{4}$ர்ம ஸு**
**பு$^{1}$ஷ்டிகை$^{3}$ஸுத$^{1}$ ஸந்த$^{1}$யிப நிர்து$^{3}$ஷ்ட$^{1}$ ஸுக$^{2}$பூர்ண ||9**

நிர்துஷ்ட = நிர்தோஷியான
சுகபூர்ண = பூர்ணானந்த ஸ்வரூபனான
ஸர்வோத்க்ருஷ்ட மஹிமனு = சர்வஸ்ரேஷ்ட மகிமைகளைக் கொண்டவனான ஸ்ரீபரமாத்மன்
அஷ்டதள = 8 தளங்களைக் கொண்ட
ஸத்ஹ்ருதய கமல = இதயம் என்னும் கமலத்தில்
அதிஷ்டிதனு = இருக்கிறான்
தளகளலி = எட்டு தளங்களில்

சஞ்சரிஸுத ஔகித்து = இதய கமலத்தில் உள்ளேயிருந்து
துஷ்டரிகெ = அயோக்கியர்களுக்கு
துர்புத்தியன்னு = கெட்ட புத்தியை
கர்மவிசிஷ்டரிகெ = சத்கர்மங்களை செய்யும் சத்பக்தர்களுக்கு
சுஞ்ஞானதர்ம = உத்தமமான தர்மத்தை
தர்மபுத்தியன்னு = நற்புத்தியை
சம்புஷ்டிகைசுத = நன்றாக புரியுமாறு கொடுத்து
சந்தெயிப = சமாதானப் படுத்துகிறான்.

முந்தைய பத்யத்தில், பூஜை சாமான்களில் இருக்கும் விபூதி ரூபங்களை சொல்லியவாறு, இப்போது இதய கமலத்தில் இருக்கும் பகவத் விபூதி ரூபத்தை சொல்கிறார். இதய கமலத்தின் எட்டு தளத்தில் சஞ்சரித்தவாறு, தோஷங்கள் அற்ற, பூர்ணானந்தமயனான, சர்வோத்க்ருஷ்ட மகிமையுள்ள ஸ்ரீஹரி, அந்த கமலத்தில் உள்ளே இருந்துகொண்டு, தமோ யோக்யர்களுக்கு துர்புத்தியையும், சத்கர்மங்களை செய்பவர்களுக்கு சுக்ஞான தர்மங்களையும் அதிகப்படுத்தி, மக்களை சமாதானம் செய்கிறார்.

**வித்த தே[3]ஹாகா[3]ர தா[1]ரா**
**ப[1]த்ய மித்ராதி[3]க[3] ளொளகெ[3] கு[3]ண**
**சித்த பு[3]த்[4]யா தி[3]ந்த்[3]ரியக[3]ளொளு ஞான கர்மதொ[3]ளு |**
**த[1]த்த[1]தா[3]ஹ்வயனாகி[3] க[1]ரெஸுத[1]**
**ஸத்யஸங்கல்பானு ஸாரதி[3]**
**நித்யத[3]லி தா[1] மாடி[3] மாடி[3]பனெந்து[3] ஸ்மரிஸுதி[1]ரு ||10**

வித்த தேஹாகார தாராபத்ய = வித்த = த்ரவ்ய, தேக, அகார = வீடு. தாரா = கணவன் / மனைவி. அபத்ய = மக்கள்.
மித்ராதிகளொளகெ = நண்பர்கள், ஆகியோர்களில்
குண சித்த புத்யாதிந்த்ரியகளொளு = குண = சத்வாதி குணங்களிலும். சித்த, புத்தி, மனஸ், அஹங்காரம் ஆகிய இந்திரியங்களிலும்
ஞான கர்மதொளு = ஞானேந்திரிய கர்மேந்திரியங்களிலும்
தத்ததாஹ்வயனாகி கரெஸுத = அந்தந்த பெயர்களில் அழைத்துக் கொண்டு
ஸத்யசங்கல்பானு சாரதி = தான் சத்யசங்கல்பன் என்று அழைத்துக் கொள்வதற்கு ஏற்ப
நித்யதலி = தினமும்
தா = தான்
மாடி மாடிபனெந்து = செய்து, செய்விக்கிறான் என்று
ஸ்மரிசுதிரு = நினைத்துக் கொள்.

தன் தேகம், மனைவி / கணவன், மக்கள் ஆகியோர்களில் பகவத்விபூதியை அறியவேண்டுமென்று சொல்கிறார். தன் வீட்டில் இருக்கும் த்ரவ்யம் (பொருட்கள்), தன் தேகம், வீடு, மனைவி மக்கள், நண்பர்கள் ஆகியோர் என அனைவரிலும் அகண்ட ரூபத்தினால் பரமாத்மன் இருந்து, பூஜைக்கு உதவும் பொருட்களாக

இருக்கிறான் என்று அறியவேண்டும். மேலும், சாத்விக, ராஜஸ, தாமசர்களில் சத்ய, ரஜஸ், தமோ ரூபனாக இருந்து, தான், தன் மனைவி ஆகிய அனைவரின் சித்த, புத்தி, மனஸ், அஹங்காரகளிலும், ஞானேந்திரியங்களிலும், கர்மேந்திரியங்களிலும், அந்தந்த பெயரினால் அழைத்துக் கொண்டு, 'சத்ய சங்கல்பதோ விஷ்ணுர் நான்யதாதுகரிஷ்யதி' என்னும் பிரமாணத்தைப் போல, தினந்தோறும், மேற்சொன்ன மக்களில், இந்திரியங்களுக்குள்ளும் இருந்து, கர்மங்களை தான் செய்து, அந்த மக்களால் செய்விக்கிறான் என்று நினைக்கவேண்டும். தன்னிலும், மனைவி, மக்கள் ஆகியோரில் அகண்ட ரூபத்தையும், அவர்களின் கை, கால் ஆகிய இந்திரியங்களில் கண்ட ரூபத்தையும் நினைக்கவேண்டும்.

**பா[4]வ த்[3]ரவ்ய க்[1]ரியெக[3]ளெனிஸுவ**
**ஈ வித[3]த்வைதத்ரயங்க[3]ள**
**பா[4]விஸுத ஸத்ப[4]க்தியலி ஸர்வத்ர மரெயத[3]லெ |**
**தா[1]வக[1]னு தா[1]னெந்து[3] பிரதிதி[3]ன**
**ஸேவிஸுவ ப[4]குதரிகெ[3] தன்னனெ**
**ஈவ கா[1]வ க்ருபாளு கரிவரகொ[3]லித[3] தெரனந்தெ ||11**

பாவ த்ரவ்ய க்ரியெகளெனிஸுவ = பாவாத்வைத, த்ரவ்யாத்வைத, க்ரியாத்வைத என்று புகழ்பெற்றிருக்கும்
ஈ வித = இந்த விதமான
அத்வைதத்ரயங்கள = மூன்று அத்வைதங்களை
பாவிஸுத = சிந்தித்தவாறு
ஸத்பக்தியலி = சாத்விக பக்தியினால் (எதையும் எதிர்பார்க்காத பக்தியால்)
சர்வத்ர = அனைத்து தேச, காலங்களிலும்
மரெயதலெ = மறக்காமல்
தாவகனு நானெந்து = உன்னவன் நான் என்று
ப்ரதிதிவஸவு ஸேவிஸுவ பக்தரிகெ = தினமும் வணங்கும் பக்தனுக்கு
தன்னன்னு = தன் நிஜரூபத்தை
ஈவ = அபரோக்ஷத்தில் காட்டுவான்
கரிவரகெ = கஜேந்திரனுக்கு
ஒலித தெரதந்தெ = தக்க சமயத்தில் காப்பாற்ற வந்ததைப் போல
க்ருபாளு = கருணாசமுத்திரனான ஸ்ரீஹரி
காவ = காப்பாற்றுவான்

முந்தைய பத்யத்தில் சொல்லியிருப்பதையே இங்கு விவரிக்கிறார்.

பாவாத்வைத, த்ரவ்யாத்வைத, க்ரியாத்வைத என்னும் மூன்று அத்வைதங்களை சிந்திக்க வேண்டும். நூல்களை நெய்ந்து எப்படி ஆடையாக செய்கிறார்களோ, அது தனித்தனியாக இருந்தால் நூல் எனவும், ஆடையான பிறகு அந்த நூல்களே குறுக்கும் நெடுக்குமாக இருந்தாலும், அதை நூல் என்று சொல்லாமல், ஆடை என்று சொல்வதைப் போல, இங்கு ஆடைக்கும் நூலுக்கும் எப்படி வித்தியாசம் இருக்கிறதோ, அதுபோலவே விஸ்வரூபனான ஸ்ரீபரமாத்மன் உலகத்தை

நூல்களைப் போல, கண்டரூபியாக வியாபித்து, அகண்ட ரூபத்தினால் பிரபஞ்சமாக தோன்றுகிறான். ஆகையாலேயே, பரமாத்மனுக்கு விஸ்வ என்று பெயர். ஜீவருக்கும், பரமாத்மனுக்கும், நூலுக்கும் ஆடைக்கும் பேதம் இருப்பதைப் போல, பேதம் இருக்கிறது என்று நினைப்பதே பாவாத்வைத.

தான், தன் மனைவி மக்கள் ஆகியோர் செய்வது, பார்ப்பது என அனைத்து செயல்களும், ஒருவருக்கொருவர் செய்யும் உதவிகள் என்று நினைத்தவாறு, அவற்றை ஸ்ரீபரமாத்மனே செய்விக்கிறான் என்று, அனைத்து இடங்களிலும் இருக்கும் பகவத்ரூபங்களை ஒன்றாக சிந்திப்பதற்கு த்ரவ்யாத்வைத என்று பெயர்.

தான் செய்யும் அனைத்து கர்மங்களையும், தன்னில் இருந்து பரமாத்மனே செய்கிறான், செய்விக்கிறான் என்று சிந்தித்து, தன் ஸ்வாதந்த்ர்ய கர்மத்தை விட்டு, அனைத்தையும் பரமாத்மனுக்கே அர்ப்பிப்பதை க்ரியாத்வைத என்கிறோம்.

இது போல, மூன்றுவித அத்வைதங்களை சிந்தித்தவாறு, நிஷ்காமமான மற்றும் திடமான பக்தியினால், அனைத்து காலங்களிலும் (எப்போதும்) பரமாத்மனை மறக்காமல், 'ஸ்வாமி, நான் உன் தாசர்களில் ஒருவன்' என்று பரமாத்மனை வணங்கினால், பரமாத்மன் அவருக்கு அபரோக்ஷத்தில் தரிசனம் அளிக்கிறான். ரூபாந்தரத்தில் பிரத்யட்சமாக வந்து, ஜகன்னாததாசர் ஆகியோருக்கு தரிசனம் அளித்ததைப் போல தரிசனம் அளிப்பான். முதலையைக் கொன்று யானையைக் காப்பாற்றியதைப் போல, ஆபத்துக் காலத்தில் மேற்சொன்ன பக்தர்களை காப்பாற்றுவான். ஆகையாலேயே, பரமாத்மனை கருணாளு என்கிறார்.

**பா$^3$ந்த$^3$ளவெ மொத$^3$லாது$^3$த$^3$ரொளொ**
**ந்தொ$^3$ந்த$^3$ரலி பூஜா ஸுஸாத$^3$ன**
**வெந்தெ$^3$னிஸுவ பதா$^3$ர்த்த$^2$க$^3$ளு ப$^3$கெ$^3$ப$^3$கெ$^3$ய நூதனதி$^3$ |**
**ஸந்த$^3$ணிஸி கொண்டி$^3$ஹவு த்$^3$யானகெ**
**தந்தி$^3$னிது சிந்திஸி ஸதா கோ$^3$**
**விந்த$^3$னர்ச்சிஸி நோடு$^3$ நலிநலிதா$^3$டு கொண்டா$^3$டு$^3$ ||12**

பாந்தளவே = ஆகாயமே
மொதலாதுதரொளு = முதலான பஞ்சபூதங்களில்
ஒந்தொந்தரலி = ஆகாயம், வாயு, தேஜஸ், தண்ணீர், ப்ருத்வி இந்த ஐவரிலும்
பூஜா சுசாதன வெந்தெனிஸுவ = தேவரபூஜைக்கு சிறந்த சாதனங்கள் / பதார்த்தங்கள்
பகெபகெய = விதவிதமான
நூதனதி = புதிதாக
ஸந்தணிஸி கொண்டிஹவு = நிரம்பியிருக்கும்
த்யானகெ தந்து = அந்த பதார்த்தங்களை தியானித்து
இனிது சிந்திஸி = இந்த விதமாக சிந்தித்து
ஸதா = அனைத்து காலங்களிலும்
கோவிந்தன = வேதங்களால் புகழப்படும் ஸ்ரீபரமாத்மனை

அர்ச்சிஸி = பூஜித்து
நோடுதலி = கண்டு
நலிதாடு = நர்த்தனம் செய்
கொண்டாடு = ஸ்தோத்திரம் செய்

10ம் பத்யத்திலிருந்து, த்ரவ்யம், தேகம் ஆகியவற்றில் அகண்ட விபூதியை சிந்திக்க வேண்டுமென்றும், சித்த புத்தி ஆகியவற்றில், ஞானேந்திரிய கர்மேந்திரியங்களிலும்கூட பகவத் விபூதியை அறிந்து பூஜிக்க வேண்டும் என்று சொல்லி, 11ம் பத்யத்தில் பாவாத்வைத, க்ரியாத்வைத, த்ரவ்யாத்வைத என்று 10ம் பத்யத்தின் அர்த்தத்தை மேலும் விளக்கினார். இப்போது 10ம் பத்யத்தில் விடப்பட்ட பஞ்சமஹாபூதங்களில் அறியவேண்டிய விபூதியை விளக்குகிறார்.

பாந்தள என்றால் ஆகாயம் எனத் தொடங்கும் ஐந்து பஞ்சபூதங்கள். வாயு, அக்னி, நீர், பூமி இந்த ஐந்தினையும் சிந்திக்க வேண்டும். இவற்றில், ஒவ்வொன்றிலும் பற்பல விதமான புதுப்புது பூஜாசாதன பதார்த்தங்கள் இருக்கின்றன என்று நினைக்க வேண்டும். பூஜை என்றால், பிரதிமைகளை முன்னால் வைத்துக்கொண்டு, பூக்களால் அர்ச்சித்து பூஜிப்பது மட்டும் அல்ல. பூஜாசாதன த்ரவ்யம் என்றால், கந்த, புஷ்ப, நைவேத்தியம் என்று பொருள் அல்ல. மனதில் ஆகாயாதி பஞ்சபூதங்களின் உதவியுடன் கிடைக்கும் பூஜாசாதன பதார்த்தங்கள் பற்பல உண்டு. அவை புதிதுபுதிதாக கற்பனைக்கு வரும்.

அது எப்படியெனில்: ஆகாச தத்வம் நம் ஸ்ரோத்ர இந்திரியத்திற்கு சம்பந்தப்பட்டது. இதன் மாத்ரா குணம் கேட்பது (ஸ்ரவணம்). காதால் நாம் கேட்கும்போது சிறந்த உபன்யாசம், பெரியவர்கள் செய்திருக்கும் கன்னட கீர்த்தனைகள் ஆகியவற்றால் கர்ணானந்தம் கிடைக்கும்போது, இவை அனைத்தும் பகவத்பூஜை என்று நினைக்கவேண்டும். வாயு ஸ்தானம், நம் த்வக் இந்திரியம். அதன் குணம் ஸ்பரிசம். இதில் பெண்களின் ஸ்பரிசத்தையே சுகம் என்று நினைப்பவர்கள், இப்போது அல்ப சுகத்தை அனுபவித்து, பின்னர் கஷ்டப்படுவார்கள். ஆகவே, இதனை விரும்பாமல், த்வக் இந்திரியமானது, அவனின் பக்தர்களின் ஆலிங்கனத்திற்கே என்று சிந்திப்பது, அல்லது கிருஹஸ்தர்கள் தங்கள் துணைகளுடன் கூடுவது இந்திரிய சுகத்திற்கு என்று நினைக்காமல், பகவத் ப்ரீத்யர்த்தம் என்றும், சந்தான பிராப்தி என்பது பித்ரு ருணத்தை பரிகரித்துக் கொள்வதற்கும் என்று அறிந்து, இதுவும்கூட பூஜா சாதனை என்று சிந்திக்க வேண்டும்.

தேஜஸ் தத்வத்தின் ஸ்தானம் கண்கள். அதன் குணரூபம், பகவந்தனின் சலாசல பிரதிமைகளை பார்ப்பது, பகவத் பக்தர்களை பார்ப்பது. இவற்றிற்கு கண்களை பயன்படுத்துவதால், தேஜஸ்தத்வம் (அக்னி) பூஜாசாதனம் ஆகிறது. உதக தத்வத்தின் ஸ்தானம் நாக்கு. இதன் குணம் ரசம் (சுவை). பகவந்தனுக்கு நிவேதனம் செய்யப்பட்ட பதார்த்தங்களை உண்பதே பூஜாரூபம். ப்ருத்வி தத்வத்தின் ஸ்தானம் மூக்கு. இதன் குணரூபம், கந்த ((முகர்வது). பகவந்தனுக்கு சமர்ப்பிக்கப்பட்ட நிர்மால்யாதிகளை முகர்வது என்பது பகவத்பூஜை. இதற்கு

சாதனம் பூ (Bhu) தத்வம். இன்னும் சொல்வதற்கு என்ன இருக்கிறது? இங்கு சிறிதே விளக்கியிருக்கிறோம். இதைப் போலவே, ஆகாசாதி ஒவ்வொன்று தத்வங்களும், அனேக வித பூஜாசாதனங்களையும், தத்தம் தகுதிக்கேற்ப (யோக்யதானுசார) புதிதுபுதிதாக விஷயங்களை அறிந்துகொண்டு, தியானம் செய்ய வேண்டும் என்று பாகவத 9ம் ஸ்கந்தம், அம்பரீஷோபாக்யானத்தில் சொல்லப்பட்டிருக்கிறது.

ஸவைமன: க்ருஷ்ணபதாரவிந்தயோர் வஜாம்ஸி வைகுண்ட குணானுவர்ணனே |
கரைஹரேர்மந்திர மார்ஜனாதிஷுஸ்ருதே சகாராச்யுத ஸத்யதோதயே ||
முகுந்த லிங்கலயதர்ஷனே த்ருஷௌதத்ப்ருத்ய காத்ரஸ்பர்ஷேங்கஸங்கம் |
ப்ராணஞ்ச தத்பாதஸரோஜஸௌரப ஸ்ரீமத்துலஸ்யாம் ரஸனாந்த தர்பிதே ||
பாதௌஹரே: க்ஷேத்ரபதானுஸர்பணி ஷிரோஹ்ருஷீகேஷ பதாபிவந்தனே |
காமந்து தாஸ்யே நது காமகாம்யயா ததோத்தம ஸ்லோகஜனாஸ்ரயாம்ரதிம் ||

அம்பரீஷன் தன்
மனதினை பகவந்தனின் பாதாரவிந்தங்களிலும்,
வாக்குகளை வைகுண்டபிரதனான ஸ்ரீஹரியின் குணங்களை வர்ணிப்பதற்கும்,
கைகளை ஹரியின் வீட்டில் குப்பைகளை அகற்றி சுத்தம் செய்வதற்கும்,
காதுகளை பகவத் கதைகளைக் கேட்பதற்கும்,
கண்களை பகவந்தனின் பிரதிமாதிகளை பார்ப்பதற்கும்,
தேகத்தை பக்தர்களை ஆலிங்கனம் செய்வதற்கும்,
மூக்கினை ஸ்ரீபரமாத்மனின் பாத கமலங்களுக்கு அர்ப்பித்த ஸ்ரீதுளசி ஆகியவற்றை முகர்வதற்கும்,
நாக்கினை பரமாத்மனின் நைவேத்தியைத்தை உண்பதற்கும்,
பாதங்களை தீர்த்த க்ஷேத்திர சஞ்சாரத்திற்கும்,
தலையை பரமாத்மனை நமஸ்கரிப்பதற்கும்,
பயன்படுத்திக் கொண்டிருந்தான்.

காம என்றால் ஆசை. தான் பகவந்தனின் தாசன் ஆகவேண்டுமென்ற காமம் மட்டும் வைத்திருந்தான். ரதி என்றால், உத்தம பக்தர்களின் சங்கமே சுகம் என்று நினைப்பது. ஆகையாலேயே ஸ்ரீஹரி, அம்பரீஷனின் பாதுகாப்பிற்காக, யாருக்கும் கொடுக்காத சக்ராயுதத்தை அவனுக்குக் கொடுத்தான்.

இதைவிட பூஜை என்றால் வேறு என்ன? பூஜா சாதனங்களாக இதைவிட பயன்படுத்தக்கூடியவை வேறு என்ன உள்ளது? ஆகையாலேயே தாசராயர், ஆகாசாதிகளில் புதிதுபுதிதான பூஜாசாதனங்களை சிந்திக்க வேண்டும் என்றார். இப்படியாக, அனைத்து காலங்களிலும் சிந்தித்தவாறு, பரமாத்மனை பூஜித்தால், அதிலிருந்து கிடைக்கக்கூடிய மகிழ்ச்சி எப்படி இருக்கும் என்பதை அனுபவத்திற்குக் கொண்டு வந்தவர்களுக்கு மட்டுமே தெரியுமே தவிர, அனைவருக்கும் இது சாத்தியமில்லை. ஆகையால், தாசராயர் அர்ச்சித்துப் பாருங்கள் என்றார். மகிழ்ச்சியுடன் குதித்து ஆடு. ஸ்தோத்திரம் செய். இதைவிட பெரிய சாதனை வேறு எதுவும் இல்லை.

**ஜலஜனாப4ன மூர்த்தி மனத3லி**
**நெலெகொ3ளிஸி நிஸ்சல ப4கு3தி1யலி**
**சளி பி3ஸிலு மளெ கா3ளிக3ள நிந்தி3ஸதெ நித்யத3லி |**
**நெலதொ3ளிஹ க3ந்த4வெ ஸுக2ந்த4வு**
**ஜலவெ ரஸ ரூபவே ஸுதீ3பவு**
**எலரு சாமர ஷப்3த வாத்3ய க3ளர்ப்பிஸலு ஒலிவ ||13**

ஜலஜனாபன = பத்பனாபனின்
மூர்த்தி = ராமகிருஷ்ணாதி ரூபங்களை
மனதலி = மனதில்
நெலெகொளிஸி = ஸ்திரமாக நிலைநிறுத்தி
நிஸ்சல பகுதியலி = த்ருட பக்தியில்
சளெபிஸிலு மளெ காளிகள நிந்திஸதெ = வெயில், மழை, குளிர் ஆகியவற்றை சகித்துக்கொண்டு
நித்யதலி = தினமும்
நெலதலி = பூமியில்
இஹ = இருக்கும்
கந்தவெ = பொதுவாக இருக்கும் மணம்
சுகந்தவு = பரமாத்மனின் பூஜாசாதனமான சுகந்தம்
ஜலவெ = தண்ணீரில் இருக்கும் சுவை குணமே அறுசுவை பதார்த்தங்கள்
ரூபவெ = அக்னியில் இருக்கும் ரூபகுணம். அதற்கு ஈடான பூஜாசாதனமான தீபம்.
எலரு = வாயுவில் இருக்கும் ஸ்பர்ஷ குணம்
சாமரவு = பூஜைக்கு பயன்படும் சாமரம்
ஷப்த = ஆகாயத்தில் இருக்கும் ஷப்த குணமே வாத்தியங்கள்
அர்ப்பிஸலு = இப்படியாக சிந்தித்து சமர்ப்பித்தால்
வலிவ = மகிழ்வான்

பஞ்சதன்மாத்ரா குணங்களில் பகவத்பூஜா சாதனங்களை சொல்கிறார். கமலனாபனின், ராமகிருஷ்ணாதி ரூபங்களை, த்ருடமான பக்தியினால், மனதில் நிலைநிறுத்தி, மாத்ரா ஸ்பர்ஷங்களால் ஆகும் குளிர், காற்று, வெயில், மழை, ஆகியவற்றின் தோஷங்களை திட்டாமல், அந்தந்த காலங்களில் பகவந்தனால் கிடைத்தவற்றால் திருப்திப்பட்டு, மனதிலேயே பரமாத்மனை பூஜித்தவாறு, ப்ருத்வி, அபு, தேஜஸ், வாயு, ஆகாயம் என்னும் பஞ்சபூதங்களின் மாத்ரா குணங்களில் இருக்கும் மணமே சுகந்தம் என்றும், சுவையே அறுசுவையினாலான நைவேத்தியம் என்றும், ரூபமே தீபம் என்றும், ஸ்பர்ஷமே சாமரம் என்றும், ஷப்தமே வாத்தியங்கள் என்று நினைத்து பூஜித்தால், ஸ்ரீபரமாத்மன் நமக்கு அருள்வான்.

அதாவது, இந்த பூமியில் நாம் எங்கு இருந்தாலும், எவ்வகையான நறுமணத்தை நாம் முகர்ந்தாலும், 'ஆஹா, எத்தகைய நறுமணம்! என்ன ஆனந்தம்!' என்று நாம் மட்டும் திருப்தியடையாமல், அந்த நறுமணத்தை அதில் அந்தர்யாமியாக இருக்கும், கந்த குணத்திற்கான பூத தத்வ ரூபியான ஸ்ரீபரமாத்மனுக்கு இதையே நறுமணமாக அர்ப்பிக்கிறேன் என்று சமர்ப்பிக்க வேண்டும். அறுசுவையில்

இருக்கும் சுவையை, நாம் நாக்கின் மூலம் ஸ்வீகரிக்கும்போது, அந்த ருசியை, அதில் அந்த ரூபத்தால் இருக்கும் நம் நாக்கில் இருக்கும் பரமாத்மனுக்கு இந்த அறுசுவைகளின் சுவையை சமர்ப்பிக்கிறேன் என்று சமர்ப்பணம் செய்ய வேண்டும்.

இதைப்போல, எந்த ரூபத்தைப் பார்த்தாலும், அந்த ரூபகுணங்களில் அதன் நாமகனாக இருக்கும் பரமாத்மனுக்கு நம் கண்ணிற்குத் தெரியும் தேஜோமய ரூபங்கள் அனைத்தும் தீபமாக சமர்ப்பிக்கிறேன் என்று நினைக்க வேண்டும். வெயிலின் தாக்கத்தால் நாம் நொந்து போகும்போது, நல்ல தென்றல் வீசினால், அந்த ஸ்பர்ச சுகத்தை, ஸ்பர்ஷ குணத்தில் இருக்கும் பரமாத்மனுக்கு இது சாமரம் என்று சமர்ப்பிக்க வேண்டும்.

காதுகளில் விழும் அனைத்து நல்ல சப்தங்களும், பரமாத்மனுக்கு வாத்தியங்கள் என்று சமர்ப்பித்து பூஜித்தால் வெயில், குளிர் ஆகிய பிரச்னைகள் ஜீவனுக்கு எப்படி வரும்? அவன் பகவத் அருளுக்கு பாத்திரனாவான்.

**கோ$^{3}$ளக$^{1}$க$^{3}$ளு ரமாரமணன நி**
**ஜாலயக$^{3}$ள னுதினதி ஸம்ப்ர**
**க்ஷாலனெயெ ஸம்மார்ஜனவு க$^{1}$ரணக$^{3}$ளெ தீ$^{3}$பக$^{3}$ள**
**ஸாலு தத்தத் விஷயக$^{3}$ள ஸ**
**ம்மேளனவே பரியங்க$^{1}$ தத்ஸுக$^{2}$**
**தேளிகெ$^{3}$யெ ஸுப்பத்திகா$^{3}$த்ம நிவேத$^{3}$னவே வஸன ||14**

கோளகளு = கை கால்களால் ஆன இந்த ஸ்தூல தேகம், அதன் உள்ளே இருக்கும் அனிருத்த தேகம், லிங்கதேகம் ஆகியவை
ரமாரமணன = ரமாபதியின்
நிஜாலயகளு = தேவாயலங்கள்
அனுதினதி = தினந்தோறும்
ப்ரக்ஷாலனவெ = தேகத்தை கழுவுவது (ஸ்னானம் செய்வது)
சம்மார்ஜனவு = பரமாத்மனின் கோயில்களை கழுவி, துடைப்பது
கரணகளெ = கை, கால் ஆகிய கரணங்களே
தீபகள சாலு = தீபங்களின் வரிசை
தத்தத் விஷயகள = சம்மேளனவெ = கண் காது ஆகிய இந்திரியங்களுக்கு, ரூப, ரஸ முதலான மாத்ரா குணங்களை பொருத்துவது.. அதாவது, கண்களால் பார்ப்பது, காதுகளால் கேட்பது என்று பொருள். இவையே,
பரியங்க = படுக்கை
தத்சுக தேளிகெயெ = பார்த்து, கேட்டு அனுபவிக்கும் சுகமே
சுப்பத்திகெ = போர்வை
ஆத்ம நிவேதனெ = தன் சரீரத்தையே பரமாத்மனுக்கு சமர்ப்பணம் செய்வதே
வஸன = வஸ்திரம்.

தன் தேஹேந்திரியங்களால் தான் செய்யும் அனைத்து கர்மங்களும் பரமாத்மனின் பூஜை என்று எண்ண வேண்டும் என்னும் விஷயத்தை இங்கு விவரிக்கிறார்

தாசராயர். விபூதி சந்தியென்று சொல்லிவிட்டு, இதற்கு சம்பந்தமில்லாத விஷயங்களை தாசராயர் இங்கு ஏன் சொல்கிறார் என்று கேட்கக்கூடாது.

அது ஏனெனில், முந்தைய பத்யங்களில், தன் இந்திரியங்களிலும், பஞ்ச மஹாபூதங்களிலும், தன்மாத்ரா குணங்களிலும், விபூதியை சிந்தித்து பூஜிக்கும் விதத்தை சொல்லியிருந்தார். 'சங்கோச விஸ்தராப்யாஞ்ச கதயந்தி மனீஷிண:' என்னும் வாக்கியத்திற்கேற்ப, முதலில் சுருக்கமாகவும் மேலோட்டமாகவும் விஷயங்களை சொல்லிவிட்டு பிறகு, அதையே விளக்கமாக சொல்வது ஞானிகளின் சம்பிரதாயம் (வழக்கம்). அதைப் போலவே தாசராயரும், 'பாந்தளவெ மொதலாத' என்னும் பத்யத்தினால் ஆகாயாதி ஒவ்வொன்றிலும் புதிது புதிதான பற்பல விதமான பூஜாசாதன த்ரவ்யங்களை சிந்திக்க வேண்டும் என்று சொல்லியிருந்தார். அந்த பூஜா சாதனங்களையே இந்த பத்யங்களிலும் தொடர்ந்து சொல்லி வருகிறார்.

தேஹேந்திரியங்களால் செய்யப்படும் அனைத்து விஷயங்களும் பூஜை என்றே சிந்திக்க வேண்டும் என்று சொன்னது சம்பந்தமில்லாத விஷயங்கள் இல்லை என்று அறியவேண்டும். ரமாபதியான ஸ்ரீபரமாத்மனுக்கு, நம் ஸ்தூல தேகம், அனிருத்த தேகம், சூக்ஷ்ம லிங்க சரீரம் ஆகியவை தேவாலயங்கள் என்று நினைக்க வேண்டும். ஸ்னானங்களை செய்து நாம் தேகத்தை சுத்தம் செய்துகொள்வதே, பரமாத்மனின் கோயிலை நன்றாக கழுவித் துடைப்பது என்று நினைக்க வேண்டும். கை, கால்களே தீபங்களின் வரிசை. பார்ப்பது, கேட்பது ஆகிய விஷய அனுபவங்களே படுக்கை. அந்த அனுபவங்களால் கிடைக்கும் சுகங்களே போர்வை. தன் சரீரம், தன் மனைவி, மக்கள் ஆகிய அனைத்தையும் பரமாத்மனுக்கு ஒப்படைப்பதே வஸ்திரம்.

**பாபக[1]ர்மவு பா[1]துகெ[1]க[3]ளனு**
**லேப[1]னவு ஸத்புண்ய ஷாஸ்த்ரா**
**லாப[1]னவெ ஸ்ரீதுளஸி ஸுமனோ வ்ருத்திக[3]ளு ஸுமன |**
**கோ[1]ப தூ[4]ப[1]வு ப[4]க்தி பூ[4]ஷண**
**வ்யாபிஸித[3] ஸத்பு[4]த்தி ச[1]த்ரவு**
**தீ[3]ப[1]வெ ஸுக்ஞான ஆரார்த்திக[3]ளெ கு[3]ணகத[4]ன ||15**

பாபகர்மவு = அஞ்ஞானத்தால், தெய்வ சங்கல்பத்தால் நடந்துவிட்ட பாப கர்மங்கள்
பாதுககளு = செருப்புகள்
ஸத்புண்ய ஷாஸ்த்ரா லாபனவெ = புண்ணியத்தை தரக்கூடிய சாஸ்திர பிரவசனம் அல்லது, சாஸ்திரம் சம்பந்தப்பட்ட பேச்சுகள்
அனுலேபனவு = சுகந்தம்
சுமனஸ்ஸு = சிறந்த கர்மங்களில் அல்லது பகவந்தனிடம் பக்தி கொண்ட மனம்
வ்ருத்திகளு = இந்திரியங்களின் செயல்கள்
சுமனா = புஷ்பங்கள்
கோபவு = பகவத் த்வேஷிகளில் செய்யும் கோபம்
தூபவு = தூபம்

பக்தி = த்ருடமான பக்தியே
பூஷண = ஆபரணங்கள்
வ்யாபிஸித சுபுத்தி = சத்விஷயங்களில் வியாபித்திருக்கும் உத்தம புத்தி
சத்ரவு = குடை
சுஞ்ஞானவெ = உத்தமமான ஞானமே
தீபவு = ஒளி
குணகதன = பரமாத்மனின் குணங்களை சொல்வதே
ஆர்திகளு = மங்களாரத்தி.

நம் மனப்பூர்வமாக பாவம் செய்யாமல், தெய்வ சங்கல்பத்திற்கேற்ப அஞ்ஞானத்தால் பாவங்களை செய்துவிட்டால், அவற்றை பரமாத்மனுக்கு பாதுகைகள் என்று சமர்ப்பிக்க வேண்டும். உத்தம புண்ணியத்தை தரக்கூடியதான நற்சாஸ்திர பாட, பிரவசனங்களே சுகந்தம் என்று நினைக்க வேண்டும். பரமாத்மனின் பாதாரவிந்தங்களில் இருக்கும் மனஸ்ஸே ஸ்ரீதுளசி. இந்திரியங்களின் செயல்களே புஷ்பங்கள். பகவத் த்வேஷிகளில் நாம் செய்யும் கோபமே, பரமாத்மனுக்கு தூபம் என்று நினைக்க வேண்டும். சத்பக்தியே ஆபரணங்கள். அனைத்து இடங்களிலும் வியாப்தனான பரமாத்மனிடம் நிலைத்திருக்கும் புத்தியே குடை. சுஞ்ஞானமே தீபம். பரமாத்மனின் குணங்களை வர்ணிப்பதே மங்களாரத்தி என்று நினைக்க வேண்டும்.

**மன வசன காய ப்ரத$^{3}$க்ஷிணெ**
**அனுதி$^{3}$னதி$^{3}$ ஸர்வத்ர வியாபக$^{1}$**
**வன ருஹேக்ஷண க$^{3}$ர்ப்பிசுத$^{1}$ மோதி$^{3}$ஸுத$^{1}$லிரு ஸதத |**
**அனுப$^{4}$வக்கெ$^{1}$ தந்து$^{3}$கோ$^{1}$ ஸகல ஸா**
**த$^{3}$னக$^{3}$ளொளகி$^{3}$து$^{3}$ முக்$^{2}$ய பாமர**
**மனுஜரிகெ$^{3}$ பே$^{1}$ளித$^{3}$ரெ திளியது$^{3}$ பு$^{3}$த$^{4}$ரிக$^{3}$ல்லத$^{3}$லெ ||16**

சர்வத்ர வியாபக = அனைத்து இடங்களிலும் வியாபித்திருக்கும்
வனருஹேக்ஷணகெ = தாமரைக் கண்ணனாகிய ஸ்ரீபரமாத்மனுக்கு
அனுதினதி = தினந்தோறும்
மனவசன காயக = மனோ, வாக், காயங்களால் செய்யப்படும் செயல்களே
பிரதக்ஷிணே = பிரதட்சிணை என்று நினைத்து
அர்ப்பிஸுத = அந்த பரமாத்மனுக்கு அர்ப்பணம் செய்து
ஸதத = அனைத்து காலங்களிலும்
மோதிஸுதலிரு = மகிழ்ச்சி அடைவாயாக
அனுபவகெ தந்துகோ = ஹே அதிகாரியான மனிதனே. நாம் சொன்னதை அனுபவத்திற்குக் கொண்டுவா. (சொன்னவாறு செய்)
ஸாதனகளொளகெ = முக்திக்காக நாம் செய்யும் சாதனைக்கான செயல்கள், பற்பல இருந்தாலும், அந்த சாதனைகளுக்குள்,
இது முக்ய = இதையே முக்கிய சாதனை என்று அறி
புதரிகல்லதெ = ஞானிகளைத் தவிர
பாமர மனுஜரிகெ = அஞ்ஞானிகளுக்கு

பேளிதரெ = இதைச் சொன்னால்
திளியது = இந்த விஷயங்கள் புரியாது.

மனதால், வாக்கினால், தேகத்தால் செய்யும் அனைத்து காரியங்களையும், ஸ்ரீபரமாத்மனுக்கு செய்யப்படும் பிரதட்சிணை என்று நினைத்து, அவற்றை ஸ்ரீபரமாத்மனுக்கு அர்ப்பித்து, மகிழ்ச்சி அடைந்துகொண்டிரு. இந்த விஷயங்களை சொல்லிப் பலனில்லை. அனுபவத்திற்குக் கொண்டு வா. முக்திக்கு இதைவிட சாதனை என்று எதுவும் இல்லை. ஆனால், இது சாதாரண மக்களின் மனதிற்கு புரிவது கஷ்டம். ஞானிகளுக்கு மட்டுமே புரியும் விஷயம் இது. அஞ்ஞானிகளுக்கு உபதேசம் செய்து என்ன பலன்? என்று உதாசீனம் செய்யவேண்டாம். புரியாத விஷயங்களை, குருகளிடமிருந்து அறிந்து, அனுபவத்திற்குக் கொண்டு வரவேண்டும் என்பதே தாசராயரின் கருத்து.

**சதுரவித[4] புருஷார்த்த[2] படெ[3]வரெ**
**சதுரத[3]ஷ லோக[1]க[3]ள மத்[4]யதொ[3]**
**ளித[1]ரு பா[1]யக[3]ளில்ல நோடலு ஸகலஷாஸ்திரத[3]லி |**
**ஸதத விஷயேந்தி[3]ரயக[3]ளலி ப்ரவி**
**ததனெனிஸி ராஜிஸுவ லகுமி**
**பதிகெ[3] ஸர்வஸமர்ப்பணெய மஹபூஜெ ஸது[3]பாய ||17**

சதுரவித புருஷார்த்த படெவரெ = தர்ம, அர்த்த, காம, மோட்ச என்னும் நான்கு புருஷார்த்தங்களைப் பெறவேண்டுமெனில்
சதுர்தஷ லோகគள மத்யதொள் = 14 உலகங்களின் நடுவில்
சகல சாஸ்திரதலி = அனைத்து சாஸ்திரங்களில்
நோடலு = பார்த்தால்
இதருபாயகளில்ல = வேறு உபாயங்கள் இல்லை
ஸதத = எப்போதும்
விஷயேந்திரியகளலி = விஷய சுகானுபவத்திற்கு காரணங்களான ஞானேந்திரிய, கர்மேந்திரியங்களில்
ப்ரவிததனெனிஸி = வியாப்தன் என்று நினைத்து
ராஜிஸுவ = ஒளிர்ந்து கொண்டிருக்கும்
லகுமிபதிகெ = லட்சுமிபதிக்கு
ஸர்வஸமர்ப்பணெய = அனைத்தையும் சமர்ப்பணம் செய்யவேண்டும் என்பதே
மஹபூஜெ சதுபாய = மகாபூஜை சரியான வழியாகும்

சகல சமர்ப்பணையினால் பரமாத்மனை தியானம் செய்வதைவிட மிகப்பெரிய சாதனம் வேறு எதுவும் இல்லை என்று சொல்கிறார். தர்ம, அர்த்த, காம, மோட்ச என்னும் நான்கு புருஷார்த்தங்களைப் பெறவேண்டுமெனில், இந்த 14 உலகங்களில் எந்த நற்சாஸ்திரங்களைத் தேடினாலும், ஞானேந்திரிய கர்மேந்திரியங்களில், தத்ரூபியாகி, தன் நாமங்களால் அந்தந்த இந்திரியங்களில் வியாப்தனான பரமாத்மனுக்கு, அந்தந்த இந்திரியங்களால் செய்த புண்ணிய பாபாதிகள்

அனைத்தையும் சமர்ப்பணம் செய்வது என்பது மிகப்பெரிய மகாபூஜையே, இதைத்தவிர வேறு உபாயம் இல்லை.

**கோ3ளக1வெ கு1ண்ட3க்னி க1ரணவு**
**மேலொத3கி3ப3ஹ விஷய ஸமிதெ4யு**
**கா3ளி யத்னவு கா1ம தூ4மவு ஸன்னிதா3னார்ச்சி |**
**மேளனவெ ப்ரஜ்வாலெ கி1டிக3ளு**
**தூ1ளிதா3னந்த3க3ளு த1த்த1**
**த்கா1ல மாது1க3ளெல்ல மந்த்ராத்4யாத்1ம யக்ஞவிது3** ||18

கோளகவெ = சூக்ஷ்ம ஸ்தூல சரீரங்களே
குண்ட = அக்னிகுண்டம்
கரணவு = இந்திரியங்களே அக்னி
மேலொதகிபஹ விஷய = அவ்வப்போது கிடைக்கும் விஷயங்களே
சமிதெயு = காஷ்டங்கள் (குச்சிகள்)
யத்னவு = முயற்சியே, காற்று
காம = விஷயத்தைப் பற்றிய ஆசையே
தூமவு = புகை
ஸன்னிதான = விஷயேந்திரியங்களுக்கும், விஷய போக்ய வஸ்துகளுக்கும் அருகில்
அர்ச்சி = அக்னி ஜ்வாலை
மேளனவெ = விஷயேந்திரியங்களுக்கும் போக்ய வஸ்துகளுக்கும் இருக்கும் பரஸ்பர சம்பந்தம்
ப்ரஜ்வாலெ = விசேஷமான ஜ்வாலை
கிடிகளு = ஒளி
தூளிதானந்தகளு = போகத்தினால் வரும் மகிழ்ச்சியே
தத்தத்காலமாதுகளெல்ல = அந்தந்த காலங்களில் பேசும் பேச்சுக்கள் அனைத்தும்
மந்த்ர = மந்திரங்கள்
இது = இப்படி, சிந்திப்பதே ஆத்யாத்ம யக்ஞம் ஆகும்.

தேஹேந்திரியங்களின் செயல்களையே ஆத்யாத்ம யக்ஞங்களாக சிந்திப்பது என்பது பரமாத்மனின் பூஜை என்று சொல்கிறார் தாசராயர்.

ஸ்தூல மற்றும் ஸூக்ஷ்ம சரீரங்களே அக்னி குண்டங்கள். கண், காது ஆகிய இந்திரியங்களே அக்னி. கண், காது ஆகியவற்றால் செய்யப்படும் விஷயங்களான பார்ப்பது, கேட்பது ஆகியவையே காஷ்டங்கள். பார்ப்பதற்கும், கேட்பதற்கும் முயற்சிப்பதே காற்று. அந்த விஷய போகங்களைப் பற்றிய விருப்பமே புகை. கண், காது முதலான இந்திரியங்களுக்கு பார்ப்பதற்கும், கேட்பதற்கும் உரிய பொருட்கள் அதாவது அழகான ரூபமுள்ள பொருள், அல்லது இனிமையான பாடல் ஆகியவற்றின் சமீபமே (அருகாமையே) ஜ்வாலை. இந்திரியங்களுக்கு யோக்ய வஸ்துகள் கிடைப்பதே விசேஷ ஜ்வாலை.

அதிலிருந்து கிடைக்கும் மகிழ்ச்சியே ஒளி. அந்தந்த காலத்திற்கேற்ப பேசும் பேச்சுக்களே மந்திரங்கள்.

இப்படி நாம் செய்யும் அனைத்து செயல்களிலும் பகவந்தனுக்கு சம்பந்தப்பட்ட விஷயத்தையே சிந்திப்பதற்கு ஆத்யாத்ம யக்ஞம் என்று பெயர். பிரத்யட்ச யாகங்களை செய்வதற்கு, அக்னியின் முன் அமர்ந்து கஷ்டமான யக்ஞ யாகங்களை செய்தாலும், இந்த ஆத்யாத்ம யாகத்திற்கு சமமான பலன் கிடைக்காது. இந்த வகையான ஆத்யாத்ம யக்ஞமானது பரமாத்மனின் விசேஷமான பூஜை என்று அறியவேண்டும். த்ரவ்ய யக்ஞாதிகள் கஷ்டமானவை, பலன் குறைவு, ஆனால், இந்த யக்ஞமானது அதிக பலன்களைக் கொடுக்கக்கூடியது.

’ஷப்தாதீன்விஷயானன்யே இந்த்ரியாக்னிஷு ஜுஹ்வதி’ - சில ஞானிகள் தாம் அனுபவிக்கும் விஷய போகங்களை, தம் சொற்களால், இந்திரியாக்னிகளில் ஹோமம் செய்வர். என்னும் கீதா வாக்கியத்தின் சாரமே இங்கு விளக்கமாக சொல்லப்பட்டிருக்கிறது.

**மது[4]விரோதி[4]ய ப[1]ட்டணகெ பூ**
**ர்வத[3] க[1]வாடக[3]ளக்ஷி நாஸிக[1]**
**வத[3]ன ஷ்ரோத்ரக[3]ளெரடு த[3]க்ஷிண உத்த[1]ர த்[3]வார |**
**கு[3]த[3] உபஸ்த[2]க[3]ளெரடு பஸ்சிம**
**க[1]த[3]க[1]ளெனிபுவு ஷட்ஸரோஜவே**
**ஸத[3]ன ஹ்ருத[3]யவெ மண்டப த்ரிகு[3]ணக[3]ளெ கலஷக[3]ளு ||19**

மதுவிரோதிய = மது நாமக தைத்யனைக் கொன்ற ஸ்ரீபரமாத்மனின்
பட்டணகெ = நம் இந்த சரீரமே அவன் பட்டணம். அத்தகைய பட்டணத்திற்கு
அக்ஷி = இரு கண்கள்
நாசிக = மூக்கு துவாரங்கள்
வதன = வாய் ஆகியவை
பூர்வத கவாடகளு = கிழக்கு வாசல்கள்
ஸ்ரோத்ரகளெரடு = காதுகள் இரண்டும்
தக்ஷிண உத்தர த்வார = வடக்கு தெற்கு வாசல்கள்
குத உபஸ்தகளெரடு = மல, ஜல த்வாரங்கள் இரண்டும்
பஸ்சிம கதகளெனிபுவு = மேற்கு வாசல்கள் எனப்படுகின்றன
ஷட்ஸரோஜவே = இதயத்தில் இருக்கும் ஆறு தள தாமரையே
ஸதன = பரமாத்மனின் வீடு
ஹ்ருதயவெ மண்டப = இதயமே மண்டபம்
த்ருகுணகளெ = சத்வ ரஜஸ் தமோ குணங்களே
கலஷ = மண்டபத்தின் கலசங்கள் என்று அறியவேண்டும்.

19ம் பத்யத்திலிருந்து 23ம் பத்யம் வரைக்கும், இந்த சரீரத்தை பரமாத்மனின் பட்டணமாக அறிந்து, பூஜிக்கும் விதங்களைப் பற்றி கூறுகிறார் தாசராயர்.

நம் சரீரமே, மதுசூதனனின் பட்டணம் என்று சிந்திக்க வேண்டும். பட்டணம் என்று சொன்ன பிறகு அதன் லட்சணங்கள் எவை என்று சொல்கிறார். அது என்ன என்றால்:

கண்கள், மூக்கு த்வாரங்கள், வாய் இவைகளே இந்த பட்டணத்திற்கு கிழக்கு வாசல்கள். வலது காது தெற்கு கதவு. இடது காது வடக்கு காது. மல ஜல த்வாரங்கள் மேற்கு வாசல்கள். இந்த விஷயத்தைப் பற்றி பாகவதம் 4ம் ஸ்கந்தம் 29ம் அத்தியாயத்தில் சொல்லப்பட்டிருக்கும் ஆதார ஸ்லோகங்கள் இவையே.

நவத்வாரம் த்விஹஸ்தாங்க்ரிம் புரம்மனுத ஸாத்விதி |
அக்ஷிணீ நாஸிகே அஸ்யமிதி பஞ்சபுரஸ்க்ருதா: ||
தக்ஷிணாதக்ஷிண: கர்ண: உத்தராசோத்தர: ஸ்ம்ருத: |
பஷ்சிமே இத்யதௌத்வாரௌ குதஷிஷ்னாவிஹோதிதே |

நம் இதயத்தில் இருக்கும் ஆறு தள தாமரையே பரமாத்மனின் வீடு. இதயமே மண்டபம். ஸத்வரஜஸ்தமோ குணங்களே கலசம்.

**தா4து1க3ளு ஸப்தாவரண உப**
**வீதி4க3ளெ நாடிக3ளு மத3க3ளு**
**யூத1பக3ளு ஸுஷும்ன நாடி3யெ ராஜபந்தா2ன |**
**ஈ தனூருஹக3ளெ வனங்க3ளு**
**மாதரிஷ்வனு ப1ஞ்சரூபதி3**
**பாத1க1க3ளெம்பரிக3ளனு ஸம்ஹரிப த1ளவார ||20**

தாதுகளு = ரத்தம், மாமிசம், மஜ்ஜை என்னும் 7 பாகங்கள்
ஸப்தாவரணவு = 7 பிரகாரங்கள்
நாடிகளு உபவீதிகளு = நாடிகளே குறுக்குத் தெருக்கள்
மதகளு = செல்வங்களால் வரும் கர்வம்
யூதபகளு = மத கஜங்கள்
சுஷும்னா நாடியே = தேகத்தின் நடுவில் இருக்கும் பிரம்ம நாடியே
ராஜபந்தான = ராஜ மார்க்கம் (ராஜவீதி)
ஈதனுருஹகளெ = முடிகளே வனங்கள்
மாதரிஷ்வனு = முக்யபிராண தேவர்
பஞ்சரூபதி = பிராண, அபான, வியான, உதான, சமான என்னும் ஐந்து ரூபங்களில்
பாதககளெம்ப = பாவங்கள் என்னும்
அரிகளன = எதிரிகளை
ஸம்ஹரிப = கொல்லும்
தளவார = ஆயுதங்கள்

த்வக், சர்ம, மாம்ஸ, ரக்த, மேதஸ், மஜ்ஜை, அஸ்தி என்னும் 7 பாகங்களே இந்த பட்டணத்தின் ஏழு பிரகாரங்கள். இளா பிங்களா ஆகிய நாடிகளே சிறிய குறுக்குத் தெருக்கள். கல்வி, செல்வங்களால் வரும் எட்டு துர்குணங்களே மதகஜங்கள்.

முக்யபிராணதேவர், பிராண, அபானாதி ஐந்து ரூபங்களால் காம, கிரோதாதி ஆறு எதிரிகளைக் கொல்லும் ஆயுதங்கள்.

**இன ஷஷாங்காதி3க3ளு லகுமி**
**வனிதெயரஸன த்வாரபாலக**
**ரெனிஸுதிப்பரு மனத3வ்ருத்திக3ளெ பதா3தி1க3ளு |**
**அனுப4விப விஷயங்க3ளெ ப**
**ட்டணக்கெ ப3ப்ப பஸாத3க3ளு ஜீ**
**வனு ஸுவர்த1க1 க1ப்பக3ள கைகொம்ப3 ஹரி தானு ||21**

இன ஷஷாங்காதிகளு = சந்திர சூர்யாதி தத்வாபிமானி தேவதைகள்
லகுமி வனிதெ = லட்சுமியென்னும் உத்தம ராணியின்
அரஸன = பதியான ஸ்ரீபரமாத்மனின்
த்வாரபாலகரு = த்வார பாலகர்கள்
எனிசுதிப்பரு = என்று அழைக்கப்படுகிறார்கள்
மனதவ்ருத்திகளெ = மனதில் தோன்றும் கோரிக்கைகளே
பதாதிகளு = காலாட்கள்
அனுபவிப = நாம் அனுபவிக்கும்
விஷயங்களெ = விஷய போகங்களே
பட்டணகெ = சரீரம் என்னும் இந்த பட்டணத்திற்கு
பப்ப = வரும்
பஸாரகளு = மிகப்பெரிய கடைகள்
ஜீவனு = ஜீவர்கள்
ஸுவர்த்தக = நல்ல வியாபாரி
கப்பகள = கப்பங்களை
ஹரி = ஸ்ரீஹரி, தான்
கைகொம்ப = ஏற்றுக்கொள்கிறான்

லட்சுமிதேவியின் ரமணனான ஸ்ரீபரமாத்மனின் த்வார பாலகர்கள், கண்களுக்கு அபிமானி தேவதைகளான சந்திர, சூரியர்கள் என்று அறியவேண்டும். மனதில் அவ்வப்போது தோன்றும் கோரிக்கைகளே காலாட்கள். நாம் அனுபவிக்கும் விஷயபோகங்களே இந்த பட்டணத்திற்கு வரும் மிகப்பெரிய கடைகள். ஜீவனே அந்த பொருட்களை வாங்கும் நுகர்வோன். இதற்கான கப்பத்தை ஸ்ரீபரமாத்மன் ஏற்றுக்கொள்கிறான்.

**உருபராக்ரம அரமனெகெ3 த3ஷ**
**கரணக3ளு கன்னடி3ய ஸாலுக3**
**ளரவிதூ3ரன ஸத்3விஹாரக்கெ1 சித்த1 மண்டபவு |**
**மரளிபீ3சுவ ஷ்வாஸக3ளு சா**
**மர விலாஸினி பு3த்தி4 தா3மோ**
**த3ரகெ ஸாஷ்டாங்க3 பிரணாமக3ளே ஸுஷயனக3ளு ||22**

உருபராக்ரம = உரு = மிகச்சிறந்த பராக்ரமன = பராக்ரமசாலியான பரமாத்மனின்
அரமனகெ = நம் இதயம் என்னும் அரண்மனைக்கு
தஷகரணகளு = ஞானேந்திரியங்கள் 5, கர்மேந்திரியங்கள் 5 என மொத்தம் 10 இந்திரியங்கள்
கன்னடிய சாலுகளு = வரிசையாக இருக்கும் கண்ணாடிகள்
அரவிதூரன = தோஷங்கள் இல்லாதவனான ஸ்ரீஹரியின்
ஸத்விஹாரகெ = நன்றாக நடவடிக்கை செய்வதற்கு
சித்த = நம் சித்தம்
மண்டபவு = மண்டபம்
மரளிபீசுவ ஷ்வாஸகளு = திரும்பத்திரும்ப வீசும் ஸ்வாசங்கள்
சாமர = சாமரங்கள்
புத்தி = புத்தியே
விலாஸினி = வேசிப்பெண்
சுஷயனகளு = நாம் படுத்திருப்பதே
தாமோதரகெ = தாமோதரனுக்கு
சாஷ்டாங்க பிரணாமகளு = சாஷ்டாங்க நமஸ்காரம் செய்வதைப் போன்றதாகும்.

பஹு பராக்ரமசாலியான பரமாத்மனின் அரண்மனையப் போன்றதாகும், நம் இதயம். இதற்கு, ஞானேந்திரியம், கர்மேந்திரியம் என்னும் 10 இந்திரியங்கள் கண்ணாடியின் வரிசைகளைப் போன்று இருக்கின்றன. தோஷங்கள் அற்றவனான ஸ்ரீஹரி, நன்றாக நடவடிக்கைகளை செய்வதற்கு, நம் சித்தமே மண்டபமாக இருக்கிறது. திரும்பத்திரும்ப நாம் விடும் ஸ்வாசங்களே அவனுக்கான சாமரங்கள். புத்தியே வேசிப்பெண். நாம் படுப்பதே, தாமோதரனுக்கு நாம் செய்யும் சாஷ்டாங்க நமஸ்காரங்கள் என்று நினைக்க வேண்டும்.

**மாரமண நரமனெகெ3 ஸுமஹா**
**த்4வார வெனிஸுவ வத3னகொப்பு1வ**
**தோரண ஷ்மஸ்ருக3ளு கே1ஷக3ளெ ப1தாகெ1க3ளு |**
**ஊரி நடெ3வங்க்4ரிக3ளு ஜங்கெ4க3**
**ளூரு மத்4யோத3ர ஷிரக3ளா**
**கா3ரது3ப்ப1ரிகெ3க3ளு கோ1ஷக3ளைது3 கோணெக3ளு ||23**

மாரமணன = லட்சுமிபதியின்
அரமனெகெ = அரண்மனை என்னும் இந்த சரீரத்திற்கு
சுமஹாத்வாரவெனிஸுவ = பெரிய வாயில்கள் எனப்படும்
வதனகெ = முகத்திற்கு
ஒப்புவ = அழகான
ஸ்மஸ்ருகளு = மீசைகள்
தோரண = தோரணங்கள்
கேஷகளே = கூந்தல்களே
பதாகிகளு = அலங்காரக் கொடிகள்
ஊரிநடெவ = நிலத்தில் ஊன்றி நடக்கும்

அங்க்ரிகளு = பாதங்கள்
ஜங்கெகளு = முழங்காலுக்குக் கீழ் பாகங்கள்
ஊரு = துடைகள்
மத்ய = நடுவே
உதர = வயிறு
ஷிரகளு = தலை, ஆகியவையே
ஆகாரத = வீட்டில் உப்பரிகைகள்
கோஷகளைது = அன்னமய, பிராணமய, மனோமய, விக்ஞானமய, ஆனந்தமய என்னும் ஐந்து கோஷங்களும்
கோணெகளு = கொட்டடிகள்

ஸ்ரீபதியின் அரண்மனை என்னும் இந்த தேகத்திற்கு மகாத்வாரம் போல இருக்கும் இந்த முகத்தில் இருக்கும் மீசைகளே தோரணங்கள். அதாவது 'தோரணோऽஸ்த்ரீ பஹிர்த்வாரம்' என்னும் அமரகோச வாக்கியத்திற்கேற்ப, தோரணங்கள் என்றால், ஊருக்கு எல்லையில் இருக்கும் வாயில் என்று பொருள். கூந்தல் மயிர்களே த்வஜக் கொடிகள். பூமியில் ஊன்றி நடக்கும் பாதங்கள், அதற்கு மேல் முழங்காலுக்குக் கீழ் இருக்கும் பகுதிகள், துடைகள், வயிறு, தலை ஆகியவையே வீட்டின் உப்பரிகைகள். அன்ன, பிராண, மனஸ், விக்ஞான, ஆனந்த என்னும் ஐந்து கோஷங்களே ஐந்து கொட்டடிகள். இந்த விதமாக நம் தேகத்தையே பரமாத்மனின் அரண்மனை என்று சிந்தித்து பூஜை செய்வது ஒரு சாதனையாகும்.

**ஈ ஷரீரவெ ரத2 ப1தா1க ஸு**
**வாஸக3ளு புண்ட்ரக3ளு த்4வஜ ஸிம்**
**ஹாஸனவெ சித்தவு ஸுபுத்தி4யெ கலஷ ஸன்மனவெ |**
**பாஷ கு3ண த3ண்ட3த்ரயக3ளு ஷு**
**பா4 ஷுப4த்வய கர்மசக்ர ம**
**ஹா ஸமர்த்தா4ஷ்வக3ளு த3ஷ கரணங்க3ளெனிஸுவுவு ||24**

ஈ ஷரீரவெ ரத, சுவாஸகளு = நாம் தரித்திருக்கும் வஸ்திரங்களே
பதாக = த்வஜங்கள் (கொடிகள்)
புண்ட்ரகளு = 12 கோபிசந்தன நாமங்களே, த்வஜஸ்தம்பங்கள் (கருட முத்திரை என்றால் கருட த்வஜம் என்று அர்த்தம்)
சித்தஸுபுத்தியெ = பகவத் விஷயமான புத்தியே
கலஷ = ரதத்தின் கலச
ஸன்மனவெ = பகவத் பாதாரவிந்தங்களில் நிலைத்திருக்கும் மனமே
பாஷ = லகான் (குதிரைகளை பிடித்து இழுக்கும் கயிறு)
குண = சத்வ ரஜஸ் தமோ குணங்கள்
தண்டத்ரயகளு = குதிரைகளை அடிக்கும் குச்சிகள்
ஷுபாஷுபத்வயகர்ம = புண்ய பாப கர்மங்கள்
சக்ர = (இரண்டு) சக்கரங்கள்
தஷகரணங்களு = பத்து இந்திரியங்கள்
மஹாஸமர்த்தாஷ்வகளு = மிகவும் திறன் கொண்ட குதிரைகள்

எனிஸுவவு = என்று நினைத்து பூஜிக்க வேண்டும்

நம் தேகத்தை ரதம் என்றும், பரமாத்மன் அதில் அமர்ந்திருக்கிறான் என்றும் சிந்தித்து பூஜிப்பது ஒரு வகையான சாதனை என்று இரு பத்யங்களால் விளக்குகிறார் தாசராயர்.

தேஹோரதஸ்த்வம் த்ரியாஷ்வ: ஸம்வத்ஸர வயோகதி: |
மனோரஷ்மிர்புத்தி ஸூதோஹ்ருன்னீடோ த்வந்த்வ கூபர: ||
(பாகவத 4ம் ஸ்கந்தம் 29ம் அத்தியாயம் 18ம் ஸ்லோகம்)

இந்த வாக்கியத்தின் சாரத்தையே தாசராயர் இங்கு விளக்கியிருக்கிறார். இந்த சரீரமே ரதம். நாம் தரித்திருக்கும் ஆடைகளே ரதத்தின் கொடிகள். 12 கோபிசந்தன நாமங்களே கருட சின்னத்தால் கூடிய த்வஜம். நம் சித்தமே பரமாத்மன் அமரும் சிம்ஹாசனம். பகவத் விஷயத்தில் ஈடுபடும் புத்தியே ரதத்தின் மேல் இருக்கும் கலசம். பகவத் பாதாரவிந்தங்களில் இருக்கும் மனமே குதிரையின் லகான் கயிறுகள். 'ஸன்மனவுபாஷ' என்று சொல்கிறார். பாஷ என்றால் கயிறு. இதை லகான் கயிறு என்று ஏன் அர்த்தம் கொள்ளவேண்டும் என்றால், பாகவத வாக்கியத்தில் 'மனோரஷ்மிபி:' என்று சொல்லப்பட்டிருக்கிறது. அந்த ஆதாரத்தினாலும், ரதத்திற்கு வெறும் கயிறின் சம்பந்தம் இல்லாததாலும், மேற்சொன்ன அர்த்தத்தையே சொல்ல வேண்டியதாகிறது. ஸத்வரஜஸ்தமோ குணங்களே தண்டங்கள் (கொம்பு / குச்சிகள்). புண்ய பாவங்களே சக்கரங்கள். ஞானேந்திரிய கர்மேந்திரியங்கள் பத்து - இவையே மிகவும் புத்திசாலிகளான / திறன்களைக் கொண்ட குதிரைகள்.

**மாதரிஷ்வனு தே3ஹரத2தொ3ளு**
**ஸூதனாகி3ஹ ஸர்வகாலதி3**
**ஸ்ரீதருணி வல்லப4 ரதிகனெந்தரிது3 நித்யத3லி |**
**ப்ரீதியிந்த3லி போ1ஷிஸூத வா**
**தாதபாதி3க3ளிந்த3 அவிரத1**
**ஈ த1னுவினொளு மமதெ1 பி3ட்டிஹனவனெ மஹயோகி3 ||25**

மாதரிஷ்வனு = வாயுதேவர்
தேஹரததொளு = தேகம் என்னும் இந்த ரதத்தில்
சர்வகாலதி = அனைத்து காலங்களிலும்
ஸூதனு = சாரதி
ஆகிஹ = ஆகியிருக்கிறான்.
ஸ்ரீதருணி வல்லபனு = ஸ்ரீதேவி என்னும் தருணியின் பதியான ஸ்ரீபரமாத்மன்
ரதிகனெந்தரிது = ரதத்தில் அமர்ந்திருக்கிறான் என்று அறிந்து
நித்யதலி = தினந்தோறும் (எப்போதும்)
ப்ரீதியிந்தலி = பக்தி விஸ்வாசங்களால்
வாதாத பாதிகளிந்தலி = காற்று வீசுவது முதலான செயல்களால்
அவிரத = திடமாக (இடைவிடாமல்)

போஷிஸு = நன்றாக கவனி
ஈதனுவினொளு = இந்த தேகத்தில்
மமதெ = அபிமானத்தை (ப்ரியத்தை)
பிட்டிஹனு = விட்டவன் (யார் விடுகிறார்களோ)
அவனே
மஹாயோகி = மஹா யோகி ஆகிறான்.

தேகம் என்னும் ரதத்தில் சாரதியாக இருப்பவர் வாயுதேவர். பாகவதத்தில் 'மனோரஷ்மிபுத்திஸூதோ' 'புத்திந்து ஸாரதிம்வித்தி' புத்தியை சாரதியாக சொல்லியிருப்பர். மேலும் 'மூலவாயு ரக்ஷஸக்ஞஷ்சக்ரே த்வேஷபுண்யதுஷ்க்ருதி' என்னும் ஆத்யாத்ம யோக வாக்கியத்திற்கேற்ப சக்கரத்தில் இருக்கும் அச்சாணியே வாயுதேவர் என்றும் சொல்லியிருப்பர். ஆனால், தாசராயரோ வாயுதேவரையே சாரதி என்கிறார். இதில் பரஸ்பரம் கருத்து வேறுபாடு வருகிறதே என்றால், அது அப்படியில்லை.

புத்தியை சாரதியாகி சொல்லியிருப்பது, வெறும் புத்தியை மட்டும் குறிப்பதல்ல. அபிமானி தேவதைகளையும் சொல்கின்றனர் என்று கருத வேண்டும். அப்படியானாலும், புத்திக்கு அபிமானி, உமா, ப்ருஹஸ்பதி ஆகியோர்களே தவிர, வாயுதேவர் இல்லையே என்றால், அதற்கு விளக்கம் இதுவே. புத்தியில் சித்த, புத்தி, அஹங்கார, மனஸ் என்று 4 பகுதிகள் உண்டு. சஞ்சலம் பிறக்கும் இடம் மனஸ். நான், எனது என்று சொல்வது அஹங்காரம். இது இப்படிப்பட்டது என்று தீர்மானம் செய்வது புத்தி. பகவத் பாதாரவிந்தங்களில் திடமாக நிற்கும் புத்தியே சித்தம் எனப்படுகிறது. புத்தியில் சுபுத்தி, துர்புத்தி என்று இரு பாகங்கள் உண்டு. புண்ய கர்மங்களில் நம்மை ஈடுபடுத்துவது சுபுத்தி. பாவ கர்மங்களில் நம்மை ஈடுபடுத்துவது துர்புத்தி. இந்த இரண்டும் அல்லாமல், வெறும் பகவந்தனை பற்றி சிந்தித்துக் கொண்டிருக்கும் புத்தியே சித்த.

இப்படியாக சித்தத்திற்கும் புத்திக்கும் சிறிது வேறுபாடு இருந்தாலும், குருபாண்டவ நியாயத்தைப் போன்றது என்று சொல்லலாம். அது என்னவெனில், கௌரவர்கள், பாண்டவர்கள் இருவரும் குரு வம்சத்தில் பிறந்ததால் 'கௌரவர்கள்' என்னும் சொல், பாண்டவர்களுக்கும்கூட பொருந்தும். ஆனாலும் கௌரவர் என்னும் சொல் துரியோதனாதிகளை மட்டுமே குறிப்பதோடு நின்றுவிட்டது. ஆனால், பாண்டவ என்னும் சொல், கௌரவர்களைக் குறிப்பதில்லை. பாண்டுராஜனின் மக்கள் மட்டுமே பாண்டவர்கள் என்று குறிக்கிறது. இந்த பெயர் துரியோதனாதிகளுக்கு பொருந்தாது.

ஆகையால், புத்தியின் இன்னொரு பாகமே சித்தம் ஆனாலும், வெறும் பகவந்தனைப் பற்றி சிந்திக்கும் புத்திக்கு மட்டுமே சித்தத்வம் இருப்பதால், சித்த என்னும் சொல், புத்திக்கு சேர்வதில்லை. புத்தி என்னும் சொல் சித்தத்தையும் குறிக்கும். புத்தியை பகவந்தனிடம் ஈடுபடுத்தினால் அதுவே சித்தம் ஆவதால், அதனை சுபுத்தி எனலாம். இப்படியாக, பகவந்தனில் ஈடுபட்டிருக்கும் புத்தியிலிருந்து வேறுபட்டிருக்கும் சித்தத்திற்கு வாயுதேவரே அபிமானி.

ஆகையால், இங்கு புத்தி என்பது சித்தத்தையும் மற்றும் சித்த என்னும் சொல், அபிமானியையும் குறிக்கும். இப்படியாக சிந்தித்தால், சித்தாபிமானியான வாயுதேவரே, சாரதி என ஆகிறது. ஆகையால், தாசராயரின் வாக்கியத்திற்கும், பாகவதாதிகளில் இருக்கும் வாக்கியத்திற்கும் வேறுபாடு இல்லை என்று அறியவேண்டும்.

அச்சாணியை வாயுதேவர் என்று சொல்லும் ஆத்யாத்ம யோகத்தின் வாக்கியத்தின்படி, அச்சாணி ரூபமாகவும், சாரதியாகவும் வாயுதேவரே இருக்கிறார் என்று சொன்னால் அதில் தவறு எதுவும் இல்லை.

ஸ்ரீபரமாத்மனே இந்த தேக ரதத்தில் அமர்ந்திருக்கிறார் என்று அறிந்து தினந்தோறும் அன்ன, பானாதிகளால் தினந்தோறும் இந்த தேகத்தைப் பார்த்துக்கொள். இந்த தேகம் என்னுடையது என்று நினைத்து, இந்திரிய அபிமானத்திற்காக மட்டும் சரீரத்தைப் பார்த்துக் கொள்ள வேண்டாம் என்கிறார். இந்த தேகம் பரமாத்மன் அமரும் ரதம். ஆகையால் இதை கழுவுகிறேன், ஆடை அணிகலன்களால் அலங்கரிக்கிறேன் என்று ரதம் கெடாமல் இருப்பதற்காக அன்ன, பானாதிகளால் நன்றாக பாதுகாப்பேன் என்று சிந்தித்து பார்த்துக் கொள். எனக்கு வெயில் ஆகாது, மழை பிடிக்காது என்று இந்திரிய அபிமானத்திற்காக தேக அபிமானத்தை செய்யாமல், பகவத்ப்ரீதிக்காக மட்டும் சரீர போஷணம் செய்தவாறு, வெயில், குளிர் ஆகியவற்றை சகித்துக்கொண்டு, நான் எனது என்னும் அபிமானத்தை விட்டு இருப்பவன் யாரோ, அவனே மஹாயோகி.

**ப4வவெனிப1 வனதி3யொளு கர்ம**
**ப்1ரவஹதொ3ளு ஸஞ்சரிஸுதிஹ தே3**
**ஹவ ஸுனாவெய மாடி3 தன்னவரிந்த3 ஒடகூ3டி3 |**
**தி3வஸ தி3வஸக3ளல்லி லகுமி**
**த4வனு க்ரீடி3பனெந்து3 சிந்திஸி**
**ப1வனய்ய ப4வாப்தி4 தா3டி1ஸி பரமஸுக2வீவ ||26**

பவவெனிப = சம்சாரம் என்னும்
வனதியொளு = கடலில்
கர்ம = புண்ய பாப கர்மங்கள் என்னும்
ப்ரவஹதொளு = ஆற்றில்
சஞ்சரிசுதிஹ = பிறப்பு இறப்பு என்னும் சுழற்சியில் வந்து போய்க்கொண்டிருக்கும்
தேஹவெ = தேகத்தையே
ஸுனாவெய = உத்தமமான படகாக ஆக்கி
தம்மவரிந்தலி = தம் பக்தர்களான தத்வாபிமானி தேவதைகளுடன்
திவஸ திவஸகளல்லி = தினந்தோறும் (எப்போதும்)
லகுமீதவனு = லட்சுமிபதி
க்ரீடிபனெந்து = விளையாடுகிறான் என்று
சிந்திஸி = சிந்தித்து
பவனய்ய = வாயுதேவரின் தந்தையான ஸ்ரீபரமாத்மன்

பவாப்தி = பிறவிக்கடலை
தாடிஸி = தாண்டச் செய்து
சுகவீவ = சுகத்தைத் தருகிறான்.

சம்சாரம் என்னும் கடலில், புண்ய பாபாதி கர்மங்கள் என்னும் ஆற்றில், பிறப்பு இறப்பு என்னும் சுழற்சியில் வந்து போய்க்கொண்டிருக்கும் இந்த தேகத்தை, ஸ்ரீபரமாத்மன் தன் படகாக ஆக்கிக்கொண்டு, தன் பக்தர்களான தத்வாபிமானி தேவதைகளுடன் சேர்ந்து, தினந்தோறும் (எப்போதும்) அந்தப் படகில் அமர்ந்து விளையாடுகிறான் (தன் நடவடிக்கைகளை செய்கிறான்), என்று நாம் இந்த தேகத்தை பரமாத்மன் வசிக்கும் இடமாக நினைத்து, இது நமது என்னும் அபிமானத்தை விட்டால், பிராணபதியான ஸ்ரீபரமாத்மன் நம்மை சம்சார சாகரத்தை தாண்டச் செய்து, பரமானந்தத்தைக் கொடுக்கிறான்.

**ஆப1ணாலயக3த பதா3ர்த்த2வு**
**ஸ்த்ரீ புருஷருக3 ளிந்திரியக3ளலி**
**தீ3ப பா1வக1தொ3ளிருதிஹ தை1லாதி3 த்3ரவ்யக3ளு |**
**ஆ பரமக3வதா3னவெந்து3 ப**
**தே3பதே3 மரெயத3லெ ஸ்மரிஸுத**
**பூ4ப1னந்த3தி3 ஸஞ்சரிஸு நிர்ப4யதி3 ஸர்வத்ர ||27**

ஆபணாலயகத = ஆபண = கடைக்குள். ஆலய = வீட்டில். கத = இருக்கும்
பதார்த்த = அரிசி, பருப்பு ஆகிய பதார்த்தங்கள்
ஸ்த்ரீ புருஷர் = ஆண் பெண்கள்
இந்திரியகளலி = காது, மூக்கு, கை, கால்கள் ஆகிய இந்திரியங்களில் அணியும் ஆபரணங்களில்
தீப பாவகரொளு = தீபம், நெருப்பு ஆகியவற்றில்
இருதிஹ = இருக்கும்
தைலாதி த்ரவ்யகளு = எண்ணெய் போன்ற த்ரவ்யங்கள் இவை அனைத்தும்
ஆ பரமகெ = பரமாத்மனுக்கு
அவதானவெந்து = ஆஹுதி என்று
பதேபதே = திரும்பத்திரும்ப
மரெயதலெ ஸ்மரிஸுத = மறக்காமல்; நினைத்தவாறு
பூபனந்ததி = அரசனைப் போல
சஞ்சரிஸு = ஓடியாடு
நிர்பயதி = பயம் இல்லாமல்
சர்வத்ர = எல்லா இடங்களிலும்

ஆமயோऽயஞ்ச பூதானாம் ஜாயதேயேனஸுவ்ரத |
ததேவஹ்யாமயத்ரவ்யம் தத்புனாதிசிகித்ஸிதம் |
ஏவன்ன்ருணாங்க்ரியாயோக: ஸர்வே சம்ஸ்க்ருதி ஹேதவ: |
த யோவாத்மவினாஷாய கல்பந்தே கலிபிதா:பரே ||
(பாகவத முதல் ஸ்கந்தம்)

நோய்க்கு காரணமான பதார்த்தங்களை தின்றால், அது அந்த மனிதனையே கொன்றுவிடும். ஆனால், அந்த பதார்த்தங்களையே மருத்துவர்கள் சுத்தம் செய்து, நோயாளிக்குக் கொடுத்தால், அது மருந்தாகிவிடுகிறது. அதுபோல, நாம் செய்யும், ஸ்னான, அலங்கார, போஜனாதிகளை, நம் நலனுக்காக என்னும் சிந்தனையுடன் தின்றால் அதுவே நம் சம்சாரத்திற்குக் காரணமாகி விடுகிறது. ஆனால், பரமாத்மனின் வீடான இந்த சரீரத்தை, பரமாத்மனின் ப்ரீதிக்காக கழுவுகிறேன், அலங்கரிக்கிறேன், பாதுகாக்கிறேன் என்று அனைத்தையும் பரமாத்மனின் பூஜை என்று நினைத்தால், அதுவே முக்திக்கான சாதனை என்று (மேற்கண்ட ஸ்லோகத்தில்) சொல்லியிருப்பர். அதையே இங்கு தாசராயரும் கூறுகிறார்.

கடையில் இருக்கும் பதார்த்தங்கள், வீட்டில் இருக்கும் அரிசி, பருப்பு முதலான பதார்த்தங்கள், ஆண்கள் மற்றும் பெண்கள் அணியும் ஆபரணங்கள், தீபத்திற்கு விடும் எண்ணெய், நெருப்பில் போடும் கட்டைகள், ஆகிய அனைத்தும் பரமாத்மனின் பூஜாத்மக யாகத்தில் விடும் ஆஹுதி என்று நினைத்து, ஒவ்வொரு கணமும் இந்த சிந்தனையை விடாமல், எப்போதும் நினைத்தவாறு, மகாராஜாவானவன் எப்படி யாருக்கும் பயப்படாமல் சஞ்சரிக்கிறாரோ அதுபோல, நீயும் யாருக்கும் பயப்படாமல் சஞ்சரிப்பாயாக.

**வாரிஜ ப$^{4}$வாண்ட$^{3}$வெ ஸுமண்ட$^{1}$ப**
**மேருகி$^{3}$ரி ஸிம்ஹாஸனவு பா$^{4}$**
**கீ$^{3}$ரதி$^{4}$யெ மஜ்ஜனவு தி$^{3}$க்$^{3}$வஸ்த்ரக$^{3}$ளு நுடி$^{3}$ மந்த்ர ।**
**பூ$^{4}$ருஹஜ ப$^{2}$ல பு$^{1}$ஷ்ப க$^{3}$ந்த$^{4}$ ஸ**
**மீர ஸஷிரவி தீ$^{3}$ப$^{1}$ பூ$^{4}$ஷண**
**தாரகெக$^{3}$ ளெந்த$^{3}$ர்ப்பிஸலு கைகொண்டு$^{3}$ மன்னிஸுவ ||28**

வாரிஜ பவாண்டவெ = இந்த பிரம்மாண்டமே
சுமண்டப = சிறந்த மண்டபம்
மேருகிரி = மேரு பர்வதம்
சிம்ஹாசனவு = சிம்மாசனம்
பாகீரதியெ = கங்கையின் தண்ணீரே
மஜ்ஜன = அபிஷேகம்
திக்வஸ்த்ரகளு = திசைகளே வஸ்திரங்கள்
நுடி = பேச்சுக்களே மந்திரங்கள்
பூருஹஜ = தானாக வளர்ந்த மரங்களில் இருக்கும் பூ, பழங்களே
ஸமீர = காற்று
கந்த = சுகந்தம்
ஷரீரவெ = சந்திர சூர்யர்களே தீபங்கள்
தாரககளே = நட்சத்திரங்களே
பூஷண = ஆபரணங்கள்
எந்தர்ப்பிஸலு = என்று சமர்ப்பிக்க
கைகொண்டு = ஸ்வீகரித்து

மன்னிஸுவ = நம் அபராதங்களை மன்னிப்பான்

பிரம்மாண்டமே ஸ்ரீபரமாத்மனின் மண்டபம். மேரு மலையே சிம்ஹாசனம். கங்கை நதியே ஸ்னானத்திற்காக நீர். திசைகளே வஸ்திரங்கள். பேச்சுக்களே மந்திரங்கள். மரங்களில் வளரும் பூ, பழங்களே தேவருக்கு பூ, புஷ்பங்கள். வீசும் காற்றே சுகந்தம். சந்திர சூரியரே தீபங்கள். நட்சத்திரங்களே ஆபரணங்கள் என்று நினைத்து பரமாத்மனை மானஸ பூஜை செய்து சமர்ப்பித்தால், பரமாத்மன் அவற்றை ஏற்றுக்கொண்டு நம் அபராதங்களை மன்னித்து நமக்கு அருள்கிறான்.

**பூ4ஸுரரொளிப்ப1ப்ஜ ப4வனொளு**
**வாஸுதே3வனு வாயு க2க3ப ஸ**
**தா3 ஷிவஹிபே1ந்த்ரனு விவஸ்வான் நாமக சூர்ய |**
**பே4ஷ காமமராஸ்ய வருணா**
**தீ3 ஸுரரு க்ஷத்ரியரொளிப்பரு**
**வாஸவாகி3ஹ ஸங்கருஷ்ணன நோடி3 மோதி3பரு ||29**

பூசுரரொளிப்ப = பிராமணர்களின் உள்ளிருக்கும்
அப்ஜ பவனொளு = பிரம்ம தேவருக்குள்
வாசுதேவனு = வாசுதேவ நாமக பரமாத்மன்
வாயு = வாயுதேவர்
ககப = பறவைகளில் சிறந்தவனான கருடன்
ஸதாசிவ = ருத்ரதேவர்
அஹிப = சேஷதேவர்
இந்திரன்,
விவஸ்வன் நாமக சூர்ய = விவஸ்வன் நாமகனான சூரியன்
பேஷ = நட்சத்திரங்களின் தலைவனான சந்திரன்
காம = மன்மதன்
அமராஸ்ய = அக்னி
வருணாதி = வருணன் முதலான தேவதைகள்
க்ஷத்ரியரொளிப்பரு = க்ஷத்ரிய அபிமானியாக இருப்பவர்கள்
தம்மொளகெ வாஸவாகிஹ = வசிக்கும்
ஸங்கருஷணன = சங்கர்ஷண நாமக பரமாத்மனை
நோடி மோதிபரு = பார்த்து மகிழ்வர்.

பிராம்மணாதி வர்ணாபிமானி தேவதைகளையும், அந்த ஜாதியின் நியாமகனான வாசுதேவ ரூபங்களையும், 'பூசுரரொளிப்ப' என்னும் பத்யத்தில் தொடங்கி அடுத்த 31ம் பத்யம் வரைக்கும் விளக்குகிறார் தாசராயர்.

பிராமண ஜாதியினருக்கு அபிமானி பிரம்மதேவர். இவர் பிராமணர்களில் இருப்பவர். அவரில் வாசுதேவ மூர்த்தியை சிந்திக்க வேண்டும். வாயுதேவர், கருட, ருத்ர, சேஷ, இந்திர, விவஸ்வான் என்னும் சூரியன், சந்திரன், மன்மதன், அக்னி, வருணாதி தேவதைகள் ஆகியோர் க்ஷத்ரிய ஜாதியின் அபிமானிகள், இவர்கள்

க்ஷத்ரியர்களில் இருப்பார்கள். இவர்களில் சங்கர்ஷணரூபி ஸ்ரீபரமாத்மன் இருக்கிறான் என்று சிந்திக்க வேண்டும்.

**மீனகே1தன த1னய ப்ராணா**
**பான வ்யானோதா3ன முக்2யை**
**கோ1ன பஞ்சாஷன் மருத்க3ண ருத்3ர வஸுக3ணரு ।**
**மேனகா1த்மஜெ கு1வர விஷ்வ**
**க்ஸேன த4னபாத்3யனி மேஷரனு ஸ**
**தா3னுராக3தி3 தே4னிபு1து3 வைஷ்யரொளு ப்ரத்4யும்ன ।।30**

மீனகேதன = மன்மதனின்
தனய = மகனான அனிருத்தன்
ப்ராணாபான வ்யானோதானமுக்ய = பிராண, அபான, வ்யான, உதான முதலான
ஏகோனபஞ்சாஷத் மருத்கண = 49 மருத்கணர்கள்
ருத்ரவசுகணரு = ருத்ரகண, வசுகணர்கள்
மேனகாத்மஜெ குவர = பார்வதியின் மகனான கணபதி
விஷ்வக்சேன,
தனபாதி = குபேராதி
அனிமிஷரனு = தேவதைகளை
வைஷ்யரொளு = வைஷ்ய ஜாதியின் அபிமானிகளாக, வைஷ்யர்களின் இருப்பவர்கள் என்று
ப்ரத்யும்ன = ப்ரத்யும்ன நாமக ஸ்ரீபரமாத்மன் வசிக்கிறான் என்றும்
ஸதா = எந்நேரமும் / எப்போதும்
அனுராகதி = நினைக்க வேண்டும்.

மன்மதனின் அவதாரமான ப்ரத்யும்னனின் மகனான அனிருத்தன், பிராண, அபான, வியான, உதான முதலான 49 மருத்கணங்கள், 11 ருத்ரர்கள், பார்வதியின் மகனான கணபதி, விஷ்வக்சேன, குபேராதி தேவதைகள் ஆகியோர் வைஷ்யாபிமானிகள், வைஷ்யர்களில் இருப்பவர்கள். இந்த தேவதைகளில் இருப்பவர், பிரத்யும்ன நாமக பகவந்தன் என்று அன்புடன் எப்போதும் நினைக்க வேண்டும்.

**இருதிஹரு நாஸத்ய த3ஸ்ரரு**
**நிருருதியு யமத4ர்ம யமகி**
**ங்கரரு மேதி3னி காலம்ருத்யு ஷனைஸ்சராதிக3ளு ।**
**கரெஸிகொம்ப3ரு ஷூத்4ரரெந்தன**
**வரத ஷூத்4ரரொளிப்ப ரிவரொள**
**க3ரவிதூ3ர நிருத்த3னிக3னெந்த3ரிது3 மன்னிபு1து3 ।।31**

நாஸத்யதஸ்ரரு = அஸ்வினி தேவதைகள்
நிரருதியு = திக்பாலகனான நிரருதி
யமதர்மன்,
யமகிங்கரர்கள்,

மேதினி = பூமி
காலம்ருத்யு,
ஷனைஸ்சராதிகளு = சனீஸ்வரன் முதலான தேவதைகள்
ஷூத்ரரொளு = நான்காம் வர்ணத்தவர்களில்
இருதிஹரு = இருக்கிறார்கள்
இவரொளகெ = இந்த தேவதைகளில்
அரவிதூர = தோஷங்கள் அற்றவனான அனிருத்தன்
மன்னிபுது = மரியாதை செய்யவேண்டும்.

நாஸத்யதஸ்ரர் என்னும் இருவர் அஸ்வினி தேவதைகள், சனீஸ்வராதி தேவதைகள், யமதர்மன், யமதூதர்கள், பூமி, காலம்ருத்யு, நிரருதி, இவர்கள் அனைவரும் ஜாதியில் நான்காம் வர்ணத்தவர் என்று நினைத்து, அந்த ஜாதிக்கு அபிமானி தேவதைகளாக, அவர்களில் இருக்கின்றனர். இவர்களில் தோஷங்கள் அற்றவனான அனிருத்தரூபி ஸ்ரீபரமாத்மன் இருக்கிறான் என்று மரியாதையுடன் நினைக்கவேண்டும்.

**வீதப4ய நாராயண சது**
**ஷ்பாது தானெந்தெ3னிஸி தத்த**
**ஜ்ஜாதி த4ர்ம ஸுக2ர்மகள தா மாடி3 மாடி3ஸுத |**
**சேதனர ஒளஹொரகெ3 ஓத**
**ப்ரோத னாகி3த்தெ3ல்லரிகெ3 ஸ**
**ம் ப்ரீதியலி த4ர்மார்த்த காமாதி3க3ள கொடு3திஹனு ||32**

வீதபய = பயம் அற்றவனான
நாராயண = நாராயண மூர்த்தி
சதுஷ்பாத = நான்கு பாதங்களைப் போல இருக்கும் நான் இந்த ஜாதி என்று சொல்லிக்கொண்டு
தத்தத் ஜாதி தர்மசுகர்மங்கள = பிராமண க்ஷத்ரியாதி தர்மங்களை அந்தந்த ஜாதிகளுக்கான செயல்களை
தா மாடி மாடிஸுத = தான் செய்து, செய்விக்கிறான்
சேதனரொளகெ = அனைத்து சேதனர்களுக்குள்ளும்
ஓதப்ரோதனாகி = குறுக்கும் நெடுக்குமாக
எல்லரிகெ = அனைத்து ஜாதி மக்களுக்கும்
ஸம்ப்ரீதியலி = மிகவும் அன்புடன்
தர்மார்த்த காமகள = தர்மாதி புருஷார்த்தங்களைக்
கொடுதிஹனு = கொடுக்கிறான்.

பயம் முதலான தோஷங்கள் அற்றவனான ஸ்ரீநாராயண மூர்த்தி, நான்கு பாதங்களைப் போல இருக்கும், பிராமணாதி ஜாதியரில், வாசுதேவாதி 4 ரூபங்களில் இருந்து, அந்தந்த ஜாதியருக்கேற்ற கர்மங்களை அனுசரித்து அந்தந்த செயல்களை செய்து, செய்வித்து, அனைத்து பிராணிகளின் உள்ளேயும் வெளியேயும் இருந்துகொண்டு, துணியில் நூல்கள் குறுக்கும் நெடுக்குமாக இருப்பதைப் போல

அனைத்து இடங்களிலும் வியாபித்தவாறு, அன்புடன் தர்மார்த்தாதி புருஷார்த்தங்களை வழங்குகிறான்.

ஜாதிபேதஸ்து தேவேஷு ஈஷ்வரேச்சானிபந்தன: |
பிரம்மவர்ண பதிர்ப்ரம்மா நாரதோதேவ லோsஸித: |4
ப்ருஹஸ்பதி ப்ருகுர்வன்ஹிர் மரீச்யாத்யா: ஸனாதய: |
ருஷய: பிதர:ஸர்வே பிரம்மவர்ணா: ப்ரகீர்த்திதா: ||5
க்ஷத்ரவர்ண பதிர்வாயு: ப்ராண:ஸூத்ரம்ய ஈரித: |
ருத்ராத்யா: ப்ராயஷோதேவா: க்ஷத்ரவர்ண உதீரிதா: ||6
அஷ்வினௌ தனதோவிஷ்வ கர்ம வித்யா தராதய: |
வைஷ்வவர்ணபதிம் தேஷாம் தனதம்வ்யத ததாத்தரி: ||7
ஏவமேவயமோதேவோ தர்ம:கால இதித்விதா |
தர்மோவிப்ர: காலஷூத்ரவர்ணாத்யக்ஷோததூதகா: |
யக்ஷாஷ்ச குஹ்யகாஷ்சாபி ஷூத்ரவர்ணா: ப்ரகீர்த்திதா: ||

29ம் பத்யமான பூசுரரொளு என்னும் பத்யத்தில் துவங்கி, 32ம் பத்யம் வரைக்கும் சொல்லப்பட்ட பிரம்மாதி வர்ண தேவதைகளின் விஷயத்தில், விஷ்ணு ரஹஸ்ய 35ம் அத்தியாயம் 4ம் ஸ்லோகத்தின் துவங்கி அடுத்து வரும் (மேற்சொன்ன) ஸ்லோகங்களின் சாரத்தை விளக்குகிறார். கிரந்தம் மிகப்பெரியதாக ஆகிவிடும் என்பதால், இந்த ஸ்லோக அர்த்தங்கள் இங்கு விளக்கப்படவில்லை.

**நித4ன த4னத3 விதா4த1 விக3தா1**
**ப்யதி4க ஸமஸமவர்த்தி ஸாமக3**
**த்ரித3ஷக3ண ஸம்பூஜ்ய த்ரிககு3த்தா3ம ஷுப4நாம |**
**மது4மத2ன ப்4ருகு3ராம கோ4ட1க**
**வத3ன ஸர்வ பதா3ர்த்த2தொ3ளு து1தி3**
**மொத3லு தும்பி3ஹனெந்து3 சிந்தி1ஸு பி3ம்ப3ரூபத3லி ||33**

நிதன = பிரளயகாரகனாகையால், பரமாத்மனுக்கு நிதன என்று பெயர்
தனத = ஐஸ்வர்யத்தைக் கொடுப்பவன் ஆகையால், தனத என்று பெயர்
விதாத = ஸ்ருஷ்டி கர்த்தன்
விகதாப்யதிகஸம = தன்னைவிட உத்தமரோ, சமரோ இல்லாதவன்
சமவர்த்தி = அனைவரிலும் சமமாக நிலைத்திருப்பவன்
சாமக = சாமவேதத்தால் புகழப்படுபவன்
த்ரிதஷகண சம்பூஜ்ய = 5 .. கணங்களால் பூஜிக்கப்படுபவன்
த்ரிககுப்தாம = ஸ்வேதத்வீப, அனந்தாஸன, வைகுண்ட என்னும் மூன்று இடங்களில் இருப்பவன்
மதுமதன = மது என்னும் தைத்யனைக் கொன்றவன்
ப்ருகுராம = பரசுராமன்
கோடகவதன = ஹயக்ரீவன்
ஷுபநாம = இப்படிப்பட்ட மங்களகரமான நாமங்களைக் கொண்ட ஸ்ரீபரமாத்மன்
ஸர்வபதார்த்ததொளு = அனைத்து பதார்த்தங்களிலும்

துதிமொதலு = ஆதி முதல் அந்தம் வரைக்கும்
தும்பிஹனெந்து = வியாப்தனாக இருக்கிறான் என்று
பிம்பரூபதலி = உன் பிம்பரூபனாக இருக்கிறான் என்று
சிந்திஸு = நினைத்துப் பார்.

அனைத்து இடங்களிலும் இருப்பவனான ஸ்ரீபரமாத்மனை, தேகத்தில் பிம்பரூபனாக ஐக்ய சிந்தனை செய்யவேண்டும். எந்த பரமாத்மன், நிதன நாமகனாக பிரளயத்தை ஏற்படுத்துகிறானோ, அனைவரும் செல்வத்தைக் கொடுப்பவனாகையால் தனத என்று பெயரைக் கொண்டானோ, யார் ஸ்ருஷ்டியை செய்கிறானோ, எந்த பரமாத்மனுக்கு சமமோ, உத்தமரோ இல்லையோ, யார் அனைத்து இடங்களிலும் ஒரே மாதிரியாக இருக்கிறானோ, அதாவது, பரமாத்மனுக்கு ஒருவரிடம் நட்பு, இன்னொருவரில் த்வேஷம் இல்லை என்று பொருள், அவரவர்கள் செய்த புண்ணிய பாவங்களுக்கேற்ப அவரவர்களுக்கு பலன்களைக் கொடுப்பதால், சமவர்த்தி என்று பெயருள்ளவன் என்று பொருள். சாமகானப்ரியன், பிரம்மாதி தேவதாகணங்களால் பூஜ்யன், ஸ்வேதத்வீப, அனந்தாஸன, வைகுண்ட என்னும் மூன்று உலகங்களில் வசிப்பவன்.

இத்தகைய மங்கள நாமங்களைக் கொண்ட ஸ்ரீபரமாத்மன், மதுசூதனன், பரசுராமன், ஹயக்ரீவ என்னும் அவதார ரூபங்களால் அனைத்து பதார்த்தங்களின் ஆதி முதல் அந்தம் வரைக்கும் வியாப்தனாக இருக்கிறான். இத்தகைய ஸ்ரீஹரியே, அதே ரூபத்தினால் என் பிம்பரூபியாக இருக்கிறான் என்று நினைக்க வேண்டும்.

**க1ன்னடி3ய கைபி1டி3து3 நோட3லு**
**த1ன்னிரவு ஸவ்யா பஸவ்யதி3**
**கண்ணிகொ3ப்புவ தெரதி3 அனிருத்த3னிகெ3 ஈ ஜக3வு |**
**பி4ன்னபி4ன்னவெ தோ1ருதி1ப்புது3**
**ஜன்யவாது3த3ரிந்த3 ப்ரதி பி3**
**ம்ப3ன்ன மயகா3னெந்தரிது3 பூஜிஸலு கைகொம்ப3 ||34**

கன்னடிய கைபிடிது = கண்ணாடியை கையில் பிடித்துக்கொண்டு
நோடலு = பார்த்தால்
தன்னிரவு = தன் உருவம்
ஸவ்யாபஸவ்யதி = இடது வலமாக
கண்ணிகெ = கண்ணிற்கு
ஒப்புவ = தெரிவது போல
அனிருத்தனிகெ, ஈ ஜகவு = அனிருத்தனுக்கு, இந்த உலகம்
பின்னபின்னவெ = வெவ்வேறாக
தோருதிப்பது = தோன்றுகிறது
ஜன்யவாதுதரிந்த = பிம்பரூபத்திலிருந்து தோன்றியதால்
ப்ரதிபிம்ப = தான் பிரதிபிம்பன்
அன்னமய = அன்னமயன்
எந்தரிது = என்று அறிந்து

பூஜிஸலு = பூஜித்தால்
கைகொம்ப = ஏற்றுக்கொள்வான்.

அனிருத்த நாமக பரமாத்மனுக்கு, இந்த உலகம் பிரதிபிம்ப ரூபமானது என்று சொல்லி, முந்தைய பத்யங்களில் கூறிய வியாப்தோபாசனையால் தெரியும் ஜீவ பரமாத்மனின் அபேத சந்தேகத்தை இங்கு பரிகரிக்கிறார். அது எப்படியெனில், தேகமே ரதம், பரமாத்மனே அதில் அமர்ந்திருப்பவன். ஆகிய பத்யங்களால் பரமாத்மன் வேறு (தனியான) ஜீவன் வேறு இல்லையோ என்னவோ என்னும் சந்தேகம் வந்தால் அதனை இந்த 'கன்னடிய கைபிடிது' என்னும் பத்யத்தில் தீர்த்து வைக்கிறார்.

கண்ணாடியை தன் கையில் பிடித்து தன் முகத்தைப் பார்த்தால், முகம் இடது வலமாக மாறித் தெரிவதுபோல, ஸ்ரீ அனிருத்த நாமக ஸ்ரீபரமாத்மனுக்கு, இந்த உலகத்தில் இருக்கும் அனைத்து பிராணிகளும், கண்ணாடியில் தெரியும் பிரதிபிம்பத்தைப் போலவே வெவ்வேறு பிரதிபிம்பங்களாக தெரிகிறது. இதனால் பிம்பரூபியான மனிதர்களுக்கும், கண்ணாடியில் தெரியும் பிரதிபிம்பங்களுக்கும் எப்படி வேறுபாடு இருக்கிறதோ, அப்படியே, பரமாத்மனுக்கும், பிரதிபிம்பரூபிகளான ஜீவர்களுக்கும் வேறுபாடு உண்டு என்று சொல்வது போல் ஆயிற்று.

பிம்பரூபியான அனிருத்த தேவரால் இந்த உலகம் ஸ்ருஷ்டிக்கப்பட்டிருப்பதால், ஜீவர்களை பிரதிபிம்பர் என்று சொல்ல வேண்டியதாயிற்று. மேலும், அன்னமயனான பரமாத்மன், அனைவருக்கும் உள்ளே இருந்து, அன்னாதிகளை ஏற்றுக்கொண்டு, ஜீவர்களை திருப்திப்படுத்துவதால், அன்னமயன் என்று அறிந்து 'பிம்போஸி பிரதிபிம்போஸ்மி' - நீங்கள் பிம்பன். நான் பிரதிபிம்பன் - என்று அறிந்து பக்தியுடன் பரமாத்மனை பூஜித்தால், பரமாத்மன் அதனை ஏற்றுக்கொண்டு நமக்கு அருள்வான்.

**பி$^3$ம்ப$^3$ரெனிபரு ஸ்வோத்தமரு ப்ரதி**
**பி$^3$ம்ப$^3$ரெனிபரு ஸ்வாவரரு ப்ரதி**
**பி$^3$ம்ப பிம்பக$^3$ளொளகெ$^3$ கேவல பி$^3$ம்ப$^3$ ஹரியெந்து$^3$ |**
**ஸம்ப்$^4$ரமதி$^3$ பா$^1$டுத$^1$லி நோடு$^3$த**
**உம்பு$^3$டுவுதி$^3$டுவுது$^3$ கொ$^1$டு$^3$வுதெ$^3$**
**ல் லம்பு$^3$ஜாம்ப$^3$க$^1$ணங்க்$^4$ரி பூஜெக$^3$ளெந்து$^3$ நலிதா$^3$டு$^3$ ||35**

ஸ்வோத்தமரு = தன்னைவிட உத்தமர்
பிம்பரெனிபரு = பிம்பர் என்று சொல்லிக் கொள்வர்
ஸ்வாவரரு = தன்னைவிட குண, ஞானங்களை குறைவாகக் கொண்டவர்
பிரதிபிம்ப = பிரதிபிம்பர் என்று அறியவேண்டும்
பிரதிபிம்ப பிம்பரொளகெ = பிரதிபிம்ப ஜீவர், பிம்பரின் உள்ளே
கேவல பிம்ப = பிம்பரூபி
ஹரியெந்து = ஸ்ரீபரமாத்மனே என்று
ஸம்ப்ரமதி = மகிழ்ச்சியுடன்

பாடுதலி = பாடும்போது
நோடுத = பார்க்கும்போது
உம்புடுவது = உண்வது மற்றும் வஸ்திராதிகளை உடுத்துவது
இடுவுது = ஆபராணாதிகளை அணிவது
கொடுவுது = மற்றவர்களுக்கு தானம் கொடுப்பது
எல்ல = இந்த அனைத்து செயல்களையும்
அம்புஜாம்பகன = தாமரைக் கண்ணனான ஸ்ரீபரமாத்மனின்
அங்க்ரிபூஜெகளெந்து = பாதபூஜை என்று
நலிதாடு = குதித்துக் கொண்டாடு.

எங்கெங்கு, பிம்பபிரதிபிம்ப ரூபங்களை சிந்திக்க வேண்டும் என்பதை சொல்கிறார். மகாபாரத தாத்பர்ய நிர்ணயத்தில், 1ம் அத்தியாயத்தில்:

ஆபாஸ கோஸ்யபவன: பவனஸ்ய ருத்ர: ஷேஷாத்மகோ கருட ஏவச ஷக்ரகாமௌ |
வீந்த்ரேஷயோஸ் ததபரேத்வனயோஷ்ச தேஷாம்ருஷ்யாதய: க்ரமஷ ஊனகுணா: ஷதாம்ஷாத் ||

பரமாத்மனின் நேரடி பிரதிபிம்பர் - வாயுதேவர். வாயுதேவரின் பிரதிபிம்பர் ருத்ரதேவர். அந்த ருத்ரதேவரே அடுத்து சேஷ பதவிக்கு வருபவர். கருடனும் வாயுதேவரின் பிரதிபிம்பரே. கருடசேஷாதிகளின் பிரதிபிம்பர் இந்திர மன்மதர்கள். இவர்களின் அடுத்தவர்கள் இவர்களுக்கு பிரதிபிம்பர் என்று இப்படியே 100 குணங்கள் குறைவாக இருப்பவர்கள், ரிஷிமுனிகள். இவர்கள் அனைவரும் ஸோத்தமரின் பிரதிபிம்பர்கள் என்று சொல்கிறார். இதே விஷயத்தையே தாசராயர் இங்கு சொல்கிறார்.

நம்மைவிட உத்தமர்களை (சிறந்தவர்களை) நமக்கு பிம்பரூபி என்றும், நம்மைவிட குணத்தில் சிறந்தவர்களை நமக்கு பிரதிபிம்பர் என்றும், நாம் ஸோத்தமருக்கு பிரதிபிம்பர், ஸ்வாவரருக்கு பிம்பரூபி என்றும் சொல்கிறார். இந்த பிம்பஜீவிகளுக்கும், பிரதிபிம்ப ஜீவிகளுக்கும், முக்கியமான பிம்பரூபி பரமாத்மன் என்று அறிந்து, நாம் உண்பதை, உடுத்துவதை, வாங்குவதை, கொடுப்பதை - அதாவது செய்யும் அனைத்தையும் நம் அந்தர்யாமியான பிம்பரூபியான தாமரைக் கண்ணனின் பூஜை என்று நினைத்து மகிழ்ச்சியடைய வேண்டும் என்பதே பொருள்.

**நதி$^{3}$ய ஜல நதி$^{3}$கெ$^{3}$ரெவ தெ$^{1}$ரத$^{3}$**
**ந்த$^{3}$த$^{3}$லி ப$^{4}$கவத்$^{3}$தத்த த$^{4}$ர்மக$^{3}$**
**ஞுத$^{3}$தி$^{4}$ ஷயனனிக$^{3}$ர்ப்பிஸூத$^{1}$ வ்யாவ்ருத்த$^{1}$ நீனாகி$^{3}$ |**
**விதி$^{4}$ நிஷேதா$^{4}$தி$^{3}$க$^{3}$ளிகொளகா$^{3}$**
**க$^{3}$த$^{3}$லெ மாடு$^{3}$த$^{1}$ த$^{3}$ர்வியந்த$^{3}$தி$^{3}$**
**பது$^{3}$மனாப$^{4}$ன சகலகர்மக$^{3}$ளல்லி நெனெயுதிரு ||36**

நதிய ஜல = ஆற்று நீரை

நதிகெ எரெவந்ததலி = ஆற்றிலேயே (அர்க்யத்தை) கொடுப்பதைப் போல
பகவத்தத்த = பரமாத்மன் கொடுத்த
தர்மகளு = தர்மங்களை (பதார்த்தங்களை)
உததிஷயனனிகெ = பாற்கடலில் படுத்திருக்கும் ஸ்ரீஹரிக்கு
அர்ப்பிஸுத = அர்ப்பித்தவாறு
நீ = நீ
வ்யாவர்த்தனாகி = நானே செய்தேன் என்னும் சிந்தனையை விட்டு, அதாவது ஸ்வதந்த்ர கர்த்ருத்வ அபிமானத்தை விட்டு
விதி நிஷேதாதிகளிகொளகாகதலெ = செய்ய வேண்டியதை, செய்யக்கூடாதவற்றை, நானே செய்தேன், நானே விட்டேன் என்ற புத்திக்கு (அஹங்காரத்தை) ஆளாகாமல்
மாடுத = அ-ஸ்வதந்த்ரனான நான், பரமாத்மன் செய்வதைப்போல செய்வேன் என்னும் சிந்தனையுடன் கர்மங்களை செய்தவாறு
தர்வியந்ததி = கரண்டிகளைப் போல என்றால், சாம்பார், ரசம் என அனைத்து பாத்திரங்களிலும் கரண்டி எப்படி மூழ்குகிறதோ அது போல. அதாவது. அஸ்வதந்த்ரமான கரண்டி, தன்னை யார் பிடித்திருக்கிறார்களோ, அவர்கள் செய்வதற்கேற்ப வெவ்வேறு பாத்திரங்களில் மூழ்கி எழுகிறது என்ற உதாரணம் இங்கு சொல்லப்படுகிறது. சிலர் ஜீவருக்கு கர்த்ருத்வமே இல்லை என்னும் விஷயத்தில் கரண்டி உவமையை சொல்கின்றனர். அப்படி சொன்னால், சித்தாந்தத்திற்கும், லௌகிக உவமைக்கும் விரோதம் ஏற்படுகிறது. ரசம், சாம்பார் பாத்திரங்களில் மூழ்கும் கரண்டிக்கு எப்படி காரம், இனிப்பு ஆகிய துக்கங்கள் இல்லையோ, அப்படியே, ஜீவனுக்கும் நரக, ஸ்வர்க்காதிகளால் ஆகும் துக்க சுகங்கள் இல்லை என்று ஆகிறது. 'ஜீவோபிகர்த்தா' ஆகிய வாக்கியங்கள் பயனில்லை என்று ஆகிறது. ஆகையால், கரண்டி உவமையை அ-ஸ்வதந்த்ர கர்த்ருத்வ விஷயத்தில் மட்டும் உவமை என்று நினைக்கவேண்டும்.
சகலகர்மகளல்லி = நாம் செய்யும் அனைத்து கர்மங்களையும்
பதுமனாபன = ஸ்ரீபத்பனாபனே ஸ்வதந்த்ரனாக செய்கிறான் என்று
நெனவுதிரு = நினைத்திரு.

**அரியதி3த்த3ரு எம்மொளித்த3ன**
**வரத1 விஷயக3ளும்ப3 ஞானோ**
**த்தரதி3 தனக3ர்ப்பிஸலு சித்ஸுக2வித்து ஸந்தெய்ப |**
**ஸரிது1 கா1ல ப்ரவஹக3ளு க**
**ண்ட3ரெயு ஸரி காணதி3ரெ ப1ரிவுவு**
**மரளி மஜ்ஜன பான கர்மக3ளிந்தெ3 ஸுக2வஹவு ||37**

அரியதிர்தரு = நமக்கு தெரியவில்லை என்றாலும்
எம்மொளித்து = நமக்குள் இருந்து
அனவரத = எப்போதும் இருப்பவன்
விஷயகளும்ப = விஷயசுகங்களின் சாரத்தை ஏற்றுக்கொள்பவன்
ஞானோத்தரதி = ஞானோதயம் வந்தபிறகு (நமக்கு விவரம் தெரிந்தபிறகு)
தனகெ = பரமாத்மனுக்கு

அர்ப்பிஸலு = சமர்ப்பணம் செய்தால்
சித்சுகவித்து = நிரந்தரமான சுகத்தைக் கொடுத்து (முக்தியைக் கொடுத்து)
ஸந்தெயிப = சமாதானம் செய்வான் (அருள்வான்)
ஸரிது கால = மழைக்காலத்தில்
ப்ரவஹகளு = வரும் வெள்ளங்கள்
கண்டரெயு ஸரி = ஒருவர் பார்த்தாலும் சரியே
காணதிரெ = காணவில்லையென்றாலும் சரியே
பரிவவு = பாய்ந்து கொண்டே இருக்கும்
மரளி = வெள்ளம் வருகிறது என்பதை மக்கள் அறிந்தபிறகு
மஜ்ஜனபான கர்மகளிந்த = ஸ்னான பானாதி கர்மங்களை செய்தால்
சுகவஹவு = அவர்களுக்கு சுகங்களைக் கொடுப்பான்.

அஞ்ஞானத்தால், நாம் செய்த காரியங்களை, சில காலங்களுக்கு, பரமாத்மனுக்கு அர்ப்பணம் செய்யாது இருந்தாலும், விஷயம் தெரிந்தபிறகு சமர்ப்பணம் செய்தாலும், அதனை ஸ்வீகரித்து, முக்தியைக் கொடுக்கிறான் என்று சொல்கிறார் தாசராயர்.

ஆற்று வெள்ளமானது, எப்படி யாரும் பார்க்கிறார்களோ, இல்லையோ, அது தன் பாட்டிற்கு பாய்ந்துகொண்டு போகிறதோ, அப்படி வெள்ளம் வந்திருக்கிறது என்று மக்களுக்கு தெரிந்தபிறகு, அது தணிந்தபின் ஆற்றில் செய்யப்படும் ஸ்னான பானங்களை செய்தால், எப்படி சுகங்களைக் கொடுக்கிறதோ, அப்படியே பரமாத்மன் நமக்குள் இருந்து, கர்மங்களை செய்விக்கிறான், விஷயசுகங்களை அனுபவிக்கிறான் என்று நமக்கு தெரியாவிட்டாலும், அவன் அந்த விஷய சுகங்களை ஏற்காமல் விடமாட்டான். அப்படி அவன் ஏற்கிறான் என்ற விஷயம் நமக்குத் தெரிந்தபிறகு, நாம் செய்த செயல்களை பரமாத்மனுக்கு சமர்ப்பித்தால், நிரந்தர சுகமயமான முக்தியைக் கொடுத்து அருள்வான். ஆகையால், நாம் செய்த அனைத்து கர்மங்களையும் பரமாத்மனே செய்து, செய்விக்கிறான் என்று அறிந்து, அதனை அவனுக்கு அர்ப்பிக்க வேண்டும் என்பது கருத்து.

**ஏனு மாடு$^{3}$வ க$^{1}$ர்மக$^{3}$ள லகு$^{1}$**
**மி நிவாஸனி க$^{3}$ர்ப்பிஸ னுஸ**
**ந்தா$^{3}$ன பூர்வக$^{1}$தி$^{3}$ந்த$^{3}$ ஸந்தே$^{3}$ஹிஸதெ$^{3}$ தி$^{3}$னதி$^{3}$னதி$^{3}$ |**
**மானநிதி$^{4}$ கை$^{1}$கொ$^{1}$ண்டு$^{3}$ ஸுக2வி**
**த்தா$^{3}$னத$^{3}$ர ஸந்தெய்ப த்$^{1}$ருணஜல**
**தே$^{4}$னு தானுண்ட$^{3}$னவரத$^{1}$ பால்க$^{3}$ரெவ தெ$^{1}$ரனந்தெ$^{1}$ ||38**

ஏனுமாடுவ = எப்படியாவது செய்யும்
கர்மகளு = புண்யபாவ கர்மங்களை
லகுமி நிவாஸனிகெ = ஸ்ரீனிவாசனுக்கு
அனுசந்தான பூர்வகதிந்த = கர்மங்களை பரமாத்மனே செய்விக்கிறான் என்னும் சிந்தனையுடன்
ஸந்தேஹிஸதெ = எவ்வித சந்தேகமும் படாமல்

தினதினதி = தினந்தோறும்
அர்ப்பிஸெ = அர்ப்பித்தால்
மானநிதி = மானமே நிதியாக உள்ள ஸ்ரீஹரி
கைகொண்டு = ஏற்றுக்கொண்டு
சுகவித்து = சுகங்களைக் கொடுத்து
ஆனதர = பக்தனை
தேனு = பசு
த்ருணஜலதானுண்டு = புல்லைத் தின்று, நீரைக் குடித்து
அனவரத = எப்போதும் நிலைத்திருப்பவன்
பால்கரெவ = பாலைக் கொடுக்கும்
தெரதந்தெ = இதே போல
ஸந்தெயிப = மகிழ்ச்சியைக் கொடுக்கிறான்.

பாவ புண்ணிய காரியங்களை சந்தேகமில்லாமல் பரமாத்மனுக்கு அர்ப்பிக்க வேண்டும் என்கிறார் தாசராயர். நாம் தினந்தோறும் எந்த புண்ணிய, பாவ செயல்களை செய்தாலும், 'நாஹம் கர்த்தா ஹரி:கர்த்தா' என்ற சிந்தனையுடன், இந்த செயல்களை செய்தது நான் அல்ல, பரமாத்மன் செய்வித்திருக்கிறான் அதையே நான் செய்தேன் என்று நினைத்து, பாவங்களை நாம் பகவந்தனுக்கு சமர்ப்பித்தால் நமக்கு பாவம் வந்துவிடுமோ என்கிற சந்தேகம் இல்லாமல் அனைத்தையும் அவனுக்கு அர்ப்பித்தால், ஸ்ரீபரமாத்மன் அவற்றை ஏற்றுக்கொண்டு, பாவங்களை சுட்டு, பசு எப்படி புல்லைத் தின்று, நீரைக் குடித்து, பாலைக் கொடுக்கிறதோ, அப்படியே புண்யகர்மங்களின் பலன்களை அதிகப்படுத்தி, சுகங்களைக் கொடுத்து, நமக்கு அருள்வான்.

**பூ[1]ர்வ த[3]க்ஷிண பஸ்சிமோத்தர**
**பார்வதீ[1]பதி[1] அக்[3]னி வாயு சு**
**ஷார்வரீசர திக்[3]வலயதொ[3]ளு ஹம்ஸ நாமக[1]னு |**
**ஸார்வகா[1]லதி[3] ஸர்வரொளு ஸுர**
**ஸார்வபௌமனு ஸ்வேச்செயலி ம**
**த்தோ[1]ர்வரிகெ[3] கோ[3]சரிஸத[3] வ்யக்தாத்ம நெந்தெ[3]னிப ||39**

பூர்வதக்ஷிண பஸ்சிமோத்தர = கிழக்கு தெற்கு வடக்கு மேற்கு திசைகளில்
பார்வதிபதி = ருத்ரர் வசிக்கும் ஈசான்யம்
அக்னி, வாயு,
சுஷார்வரீசர = நள்ளிரவில் சஞ்சரிக்கும் அசுரனான நிரருதியின் திசை
திக்வலயதொளு = திக்கு, திசைகளில்
ஹம்ஸ நாமகனு = ஹம்ஸ நாமக பரமாத்மன் (இருக்கிறான்)
சுரசார்வபௌமனு = தேவதா சக்ரவர்த்தியான ஸ்ரீபரமாத்மன்
சர்வகாலதி = அனைத்து காலங்களிலும் (எப்போதும்)
சர்வரொளு = எல்லா பிராணிகளிலும்
ஸ்வேச்செயலி = தன் விருப்பத்தின்படியே
மத்தோர்வரிகெ = வேறொருவருக்கு

கோசரிஸதெ = யார் கண்ணுக்கும் புலப்படாமல்
அவ்யக்தாத்மனு = ஸ்வரூபத்தைக் காட்டாமல் இருப்பவன்
எந்தெனிஸி = என்று இருப்பான்.

கிழக்கு, தெற்கு, வடக்கு, மேற்கு, ஈசான்ய, அக்னி, வாயு, நிரருதி - என அனைத்து திக்கு விதிக்குகளில் ஹம்ஸ நாமக பரமாத்மன் நியாமகனாக இருக்கிறான். இப்படியாக, தேவதா சார்வபௌமனான ஸ்ரீஹரி, எல்லா காலங்களிலும், அனைத்து பிராணிகளிலும், தன் விருப்பப்படியே இருந்தவாறு, வேறு யாரின் கண்களுக்கும் புலப்படாமல் 'அவ்யக்தாத்ம' என்னும் பெயரைப் பெறுகிறான்.

'இந்த்ரோ நலோ தண்டதரஸ்ச ரக்ஷோ பாஷாயுதோ வாயு தனேஷ ருத்ர:' என்னும் ஸ்லோகத்தில் நிரருதிக்கு அசுரன் என்று சொல்லியிருக்கும் ஆதாரத்தின்படியே தாசராயரும் சொல்லியிருக்கிறார்.

**ப[1]ரி இடா[3] வத்ஸரனு ஸம்வ**
**த்ஸர தொ[3]ளனிருத்தா[3]தி[3] ரூப[1]வ**
**த[4]ரிஸி பா[4]ர்ஹஸ்ப[1]த்[1]ய ஸௌரப[4] சாந்த்[3]ரமனு எனிஸி |**
**இருதி[1]ஹ ஜகன்னாத[2]விட்டல**
**ஸ்மரிஸுப[3]வரனு ஸந்தயிஸுவனு**
**உருபராக்ரமனுசித ஸாத[4]னெ யோக்[3]யதெயனரிது[1] ||40**

பரி இடா வத்ஸரனு சம்வத்ஸரதொளு = பரிவத்ஸர, இடாவத்ஸர, வத்ஸர, அனுவத்ஸர, ஸம்வத்ஸர என்று இருக்கும் ஐந்து விதமான சம்வத்ஸரங்களில்,
அனிருத்தாதி ரூபவ = அனிருத்த, பிரத்யும்ன, சங்கர்ஷண, வாசுதேவ, நாராயண என்னும் ஐந்து ரூபங்களை தரித்து
பார்ஹஸ்பத்ய = பார்ஹஸ்பத்ய-மான என்று
ஸௌர = ஸௌர-மான என்று
ப = நட்சத்திர-மான என்று
சாந்த்ரமனு = சாந்திர-மான என்று (மொத்தம் 5 விதமாக)
எனிஸி = என்று பெயரைக் கொண்டு
இருதிஹ = இருக்கிறான்
உருபராக்ரம = பஹு பராக்ரமசாலியான
ஜகன்னாதவிட்டல = ஜகன்னாத விட்டலனு
ஸ்மரிசுவரன = நினைப்பவர்களை
உசித சாதனெ யோக்யதெயனரிது = அவரவர்களின் தகுதிக்கேற்ப சாதனையை அறிந்து
எந்தூ = எப்போதும்
ஸந்தயிப = காப்பாற்றுவான்

சந்தியை முடிக்கும் இந்த ஸ்லோகத்தில், காலரூபியான பரமாத்மனின் விபூதியை விவரிக்கிறார் தாசராயர். பாகவதம் 3ம் ஸ்கந்தம் 12ம் அத்தியாயம் ஸ்லோகம் 14ல் :

ஸம்வத்ஸரம் பரிவத்ஸர இடாவத்ஸர ஏவச ।
அனுவத்ஸரோ வத்ஸரஷ்ச விதுரைவம்ப்ரபாஷ்யதே ।

இங்கு 5 வித வத்ஸரங்களின் பெயர் சொல்லப்பட்டிருக்கிறது. இந்த ஸ்லோகத்தின் பாகவத தாத்பர்ய வாக்கியம் :

இடாவத்ஸர நாமாஸெள நக்ஷத்ர த்வாதசேஸ்தித: ।
தித்தீனாந்த்வாதசாவர்த்தேயோ ஹரி: ஸோனுவத்ஸர: ।।
வத்ஸரோய: ஸ்திதஸ்தன் ஹாம்ஷஷ்ட்யுத்தர ஷதத்ரயே ।
குர்வாவர்த்தத்வாதஷாம்ஷோய: ஸ்தித: பரிவத்ஸர: ।।
ஸெளரத்வாதஷமாசேஷு ய:ஸ்தித: ஸம்வத்ஸரோ ஹரி: ।
ஏவம் ஸ கால நாமாபிகாலஸ்த: பரமேஷ்வர இதி ।।

* அஸ்வினி முதலான நட்சத்திரங்களில், அஸ்வினியோ வேறு எந்த நட்சத்திரமோ, 12 முறை வந்தால், அது ஒரு ஆண்டு ஆகிறது. இதற்கு இடா வத்ஸரம் என்று பெயர்.
* 12 அமாவாசைகள் முடிந்தால் ஒரு ஆண்டு ஆகிறது. இந்த ஆண்டின் நியாமகனான பரமாத்மனுக்கு அனுவத்ஸர என்று பெயர்.
* 360 நாட்கள் முடிந்தால் ஆகும் ஆண்டின் நியாமகனான பரமாத்மனுக்கு வத்ஸர என்று பெயர்.
* (குரு) பிருஹஸ்பதி ஒரு ராசியை விட்டு இன்னொரு ராசிக்கு செல்லும் காலமான ஒரு ஆண்டின் நியாமகனான பரமாத்மனுக்கு பரிவத்ஸர என்று பெயர்.
* சூரியன் 12 ராசிகளில் சஞ்சரிக்கும் காலமான ஒரு ஆண்டின் நியாமகனான பரமாத்மனுக்கு சம்வத்ஸர என்று பெயர்.

இப்படி, கால நியாமகனான பரமாத்மனுக்கு காலன் என்று பெயர். இப்படியாக சொன்ன விதத்தில், பார்ஹஸ்பத்ய, ஸெளர, அனுஸெளர, நட்சத்திர, சாந்திரமான என்னும் ஐந்து விதமாக கணிக்கும் பரிவத்ஸராதி ஐந்து பெயர்களைக் கொண்டிருக்கிறான். இந்த 5 ரூபங்களில் அனிருத்த, பிரத்யும்ன, சங்கர்ஷண, வாசுதேவ, நாராயண என்னும் ஐந்து ரூபங்களால் வசிக்கிறான். இதில் அனுஸெளர என்றால் 360 பகல்களைக் கொண்ட ஆண்டிற்கு பெயர். இப்படிப்பட்ட சிறந்த பராக்ரமியான அஸ்மத் அந்தர்யாமியான பிம்பரூபி ஸ்ரீமத் ஜகன்னாதவிட்டலனை நினைப்பவர்களின் தகுதிக்கேற்ப அவர்களால் சாதனையை செய்வித்து, அவர்களுக்கு சுகங்களைக் கொடுத்து அருள்வான்.

விபூதி சந்தி என்னும் 5ம் சந்தியின் தாத்பர்யம் இத்துடன் முடிவுற்றது. ஸ்ரீகிருஷ்ணார்ப்பணமஸ்து. ***

## பாவபிரகாசிகை : சந்தி 6 : பஞ்சமஹாயக்ஞ சந்தி

**ஹரிகதா$^{2}$ம்ருதசார கு$^{3}$ருக$^{3}$ள**
**கருணதிந்தா$^{3}$பநிது பே$^{1}$ளுவே**
**பரம ப$^{4}$கவத்$^{3}$ப$^{4}$க்தரித$^{3}$னாத$^{3}$ரதி$^{3}$ கேளுவுது$^{3}$**

**ஜனனி பி$^{1}$த$^{1}$ பூ$^{4}$ வாரித$^{3}$ம்ப$^{3}$ர**
**வெனிப பஞ்சாக்$^{3}$னியலி நாரா**
**யணன த்ரிம்ஷதி$^{1}$ மூர்த்திக$^{3}$ள வ்யாபார வ்யாப்திக$^{3}$ள**
**நெனெது$^{3}$ திவஸக$^{3}$ளெம்ப$^{3}$ ஸமிதெ$^{4}$க$^{3}$**
**ளனு நிரந்தர ஹோமிஸுத பா$^{1}$**
**வனகெ பா$^{1}$வனனெனிப ப$^{1}$ரமன பே$^{3}$டு$^{3}$ பரமஸுக$^{2}$ ||1**

ஜனனி=தாய்
பித = தந்தை
பூ = பூமி
வாரித = மேகம்
அம்பர = ஆகாயம்
எனிப = என்னும்
பஞ்சாக்னியலி = இந்த ஐந்து வித அக்னியில்
நாராயணன = நாராயணனின்
த்ரிம்ஷதி மூர்த்திகள = 30 மூர்த்திகளின்
வ்யாபார = செயல்களை
வ்யாப்திகள = ஸ்ரீபரமாத்மனின் நிலைத்திருத்தலை
நெனெது = நினைத்து
திவஸகளெம்ப = தினங்கள் (நாட்கள்) என்னும்
ஸமிதெகளனு = சமித்துகளை
நிரந்தர = எப்போதும் / எந்நேரமும்
ஹோமிஸுத = ஹோமத்தை செய்தவாறு
பாவனகெ பாவனனெனிப = பவித்ரமான பொருட்களை பவித்ரமாக ஆக்குபவன் (அதற்கு பவித்ரத்தைக் கொடுப்பவன்) என்று அழைக்கப்படும்
பரமன = சர்வோத்தமனான பரமாத்மனிடம்
பரமசுக = மோட்சத்திற்காக
பேடு = பிரார்த்தனை செய்

முந்தைய பத்யத்தில், பரமாத்மன் அடைவதற்கு சுலபன் என்று சொல்வதற்காக, நான் ஸ்னானம் செய்வது, உண்பது, உடுத்துவது என அனைத்தும் பகவத்பூஜை என்று நினைத்தால் போதும். பரமாத்மன் மகிழ்வான். காட்டிற்குச் சென்று தவம் செய்தால் மட்டுமே முக்தி. இல்லையெனில் இல்லை என்று இல்லை - என்னும் பல கருத்துக்களை விபூதி சந்தியில் விளக்கினார் தாசராயர்.

இந்த சந்தியில், யாகங்களை செய்பவர்கள், நெருப்பின் முன் அமர்ந்து, கண்களை துன்புறுத்திக்கொண்டு ஹோமாதிகளை செய்வது மட்டுமே ஹோமம் அல்ல. அனுசந்தானத்துடன் பகவந்தனின் வியாப்தியை அறிந்து, தாய் தந்தை ஆகியோரின் சேவையே யாகம் என்று, பஞ்சமஹாசந்தி என்னும் இந்த சந்தியில் யாக லட்சணங்களை நிரூபிக்கத் துவங்கி, இந்த சந்தியின் சாரத்தை இந்த முதலாம் பத்யத்தில் சுருக்கமாகச் சொல்கிறார்.

அக்னி என்றால் நெருப்பு என்றும், காஷ்ட என்றால் சமித்து என்று மட்டுமே அர்த்தம் இல்லை. தாய், தந்தை, பூமி, மேகம், ஆகாயம் என 5 அக்னிகளில் நாராயணன், அனிருத்தாதி பஞ்சரூபங்களால் இருப்பது மட்டுமல்லாமல், தாய் முதலான ஒவ்வொரு அக்னியிலும் அனிருத்தாதி ஐந்து ரூபங்களால் வியாப்தனாக இருக்கிறான். அது எப்படியெனில்:

தாய் என்னும் அக்னியில் அனிருத்த ரூபன் இருக்கிறான். அந்த அனிருத்த ரூபத்திற்குள், அனிருத்த அனிருத்த, அனிருத்த பிரத்யும்ன, அனிருத்த சங்கர்ஷண, அனிருத்த வாசுதேவ, அனிருத்த நாராயண என 1 ரூபத்தில் 5 ரூபங்கள் இருக்கின்றன. இதைப்போலவே, தந்தையில், பிரத்யும்ன. அவரில், பிரத்யும்ன அனிருத்த, பிரத்யும்ன பிரத்யும்ன என 5 ரூபங்கள். ஆக, ஒவ்வொரு அக்னியிலும் 6 ரூபங்களும், மொத்தம் 5 அக்னிகளில் 30 ரூபங்களும் இருக்கின்றன. அல்லது, தாய், தந்தை முதலான ஒவ்வொருவரிலும் 5 ரூபங்கள். ஒவ்வொருவரிலும் அனிருத்தாதி 5 ரூபங்கள். ஆகமொத்தம் 30 ரூபங்கள் என அறியவேண்டும்.

இவனின் நடவடிக்கைகள் என்னவெனில், தாய்க்குள் இருந்து பிறக்க வைக்கிறான். தந்தைக்குள் இருந்து உயிரைக் கொடுக்கிறான். பூமியில் இருந்து தானியங்களை விளைவிக்கிறான். மேகங்களில் இருந்து தண்ணீரைக் கொடுக்கிறான். ஆகாயத்தில் இருந்து அவகாசத்தைக் கொடுக்கிறான். இப்படியாக, 5 அக்னிகளில் மொத்தம் 30 ரூபங்களால் செய்யும் வியாபாரங்களையும், இந்த அக்னிகளில் வியாப்தித்வத்தையும் நினைத்து, நாட்கள் என்பதே சமித்துக்கள். இந்த வகையில், பூஜாரூபமான ஹோமங்களை செய்தவாறு, பவித்ரமான பொருட்களுக்கு பவித்ரத்தைக் கொடுக்கும் பரமாத்மனை வேண்டினால், பரமசுகமான முக்தியைக் கொடுக்கிறான்.

**க$^{3}$க$^{3}$ன பா$^{1}$வக$^{1}$ ஸமிதெ$^{3}$ ரவி ர**
**ஷ்மிக$^{3}$ளெ தூ$^{4}$மவு அர்ச்சியெனிபுதெ$^{3}$**
**ஹக$^{3}$லு நக்ஷத்ரக$^{3}$ளெ கி$^{1}$டிக$^{3}$ளு சந்த்$^{3}$ரமங்கா$^{3}$ர |**
**ம்ருக$^{3}$வரோத$^{3}$ர னொளகெ$^{3}$ ஐரூ**
**பக$^{3}$ள சிந்திஸி ப$^{4}$க்திரஸ மா**
**துக$^{3}$ள மந்த்ரவ மாடி$^{3}$ ஹோமிஸுவரு விபஸ்சிதரு ||2**

ககன = ஆகாயம்
பாவக = அக்னி
ஸமிதெ = காஷ்டம் (சமித்து)

ரவி = சூரியன்
ரஷ்மிகளெ = சூரியனின் கிரணங்கள்
தூமவு = புகை
அர்சியெனிபுதெ = ஜ்வாலை என்று அழைக்கப்படுகிறது
ஹகலு = பகல் (சூரிய உதய காலத்து)
நட்சத்திரகளே கிடிகளு = நட்சத்திரங்களே தீப்பொறிகள்
சந்திரமா = சந்திரன்
அங்கார = நெருப்பு
ம்ருகவரோதரனொளகெ = சந்திரனுக்குள்
ஐரூபகள சிந்திஸி = அனிருத்தாதி 5 ரூபங்களை சிந்தித்து
பக்திரஸ மாதுகளெ = பக்தியுடன் கூடிய பேச்சுக்களே
மந்த்ரவு மாடி = மந்திரமாக ஆக்கிக்கொண்டு
ஹோமிஸுவரு = ஹோமம் செய்வார்கள்
விபஸ்சிதரு = ஞானிகள்

முந்தைய பத்யத்தில், தாய் தந்தை முதலான பஞ்சாக்னிகளில் அனிருத்தாதி ரூபங்களையும், அந்த ஒவ்வொன்றிலும் மேலும் ஐந்து ரூபங்களையும் என மொத்தம் 30 ரூபங்களை சிந்திக்க வேண்டுமென்று கூறினார். இப்போது அந்த பஞ்சாக்னிகளை ஒவ்வொன்றாக ஐந்து பத்யங்களில் சொல்லி, அவற்றில் சிந்திக்க வேண்டிய 30 ரூபங்களின் விவரத்தை சொல்கிறார் தாசராயர்.

"அஸெளவாவலோகோ கௌதமாக்னிஸ்தஸ்யாதித்ய ஏவ ஸமித்ரஷ்மயோ தூமோஹரர்ச்சிஷ்சந்த்ரமா அங்காரா நக்ஷத்ராணாம் விஷ்ணுலிங்கஸ்தஸ்மின்னே தஸ்மின்னக்னௌ தேவா: ஸ்ரத்தாம் ஜுஹ்வதி தஸ்யா: ஆயுதே: ஸோமோ ராஜா ஸம்பவதி" என்று சாந்தோக்ய உபநிஷத் ஐந்தாம் அத்தியாயம் சொல்கிறது. இதன் அர்த்தத்தையே தாசராயர் இந்த பத்யத்தில் சொல்லியிருப்பதால், உபநிஷத் வாக்கியத்திற்கு தனியாக அர்த்தம் எழுதவில்லை.

ககன என்றால் ஆகாயம்.
பாவக என்றால் அக்னி.
சூரியனே சமித்து.
சூரியனின் கிரணங்களே புகை.
பகல் ஜ்வாலை.
நட்சத்திரங்கள் தீப்பொறிகள்.
சந்திரனே கங்கு.

சந்திரனில் அதாவது சந்திரனுக்குள் அனிருத்தாதி 5 ரூபங்களை சிந்தித்து, பக்திரஸபூர்ணமான பேச்சுக்கள் என்னும் ஹோம த்ரவ்யங்களை ஞானிகள் ஹோமம் செய்வார்கள். அக்னி, காஷ்டம், புகை, ஜ்வாலை, தீப்பொறிகள், கங்கு என்னும் ஆறிலும் அந்தந்த பெயர்களால் அழைக்கப்பட்டு, ஆகாயத்தில் நாராயண, சூர்யனில் நாராயண நாராயண, கிரணங்களில் நாராயண் வாசுதேவ, பகல்களில் நாராயண சங்கர்ஷண, நட்சத்திரங்களில் நாராயண பிரத்யும்ன, சந்திரனில்

நாராயண அனிருத்த என அகண்டமான ஆகாஷ-அக்னியில் நாராயண ரூபத்தை, மற்ற காஷ்டாதிகளில் நாராயணாதி 5 ரூபங்களை அறிந்து மொத்தம் 6 ரூபங்களை சிந்திக்க வேண்டும்.

மேற்சொன்ன சாந்தோக்ய உபநிஷத்தின் பாஷ்யத்தில் :

நாராயணாதய: பஞ்ச க்ரமாத் பஞ்சக்னய: ய:ஸ்ம்ருதா: |
அதனாதங்க நேத்ருத்வான் னிதராமசலத்வத: ||
ஸமேதனாத் ஸமித் விஷ்ணுத்தூத்காராத்தூம உச்யதே |
அரஞ்சிதத் வாதர்ச்சிஷ்சஸோங்காரோங்கரதே ரபி ||
விவிதம் ஸ்புரணாச்சைவ விஷ்ணுலிங்க இதீரித |
புனர்னாராமணாத்யத்மா ப்ரத்யேகம் பஞ்சரூபர்வா ||
ஆதித்ய: ஸததாऽதானாத்ரஷ்மீரதி ஷம்ரூபத: |
தமஸாஹன னீருத்வாதஹஷ் சந்த்ர: பரம்ஸுகம் அனன்ய ராஜோ நக்ஷத்ரம் ||

இதன் அர்த்தம்:
ஆகாயம், மேகம், பூமி, தந்தை (ஆண்), தாய் (பெண்) - இந்த பஞ்சாக்னிகளில், நாராயணாதி 5 ரூபங்களையும், அதாவது, நாராயண, வாசுதேவ, சங்கர்ஷண, பிரத்யும்ன, அனிருத்த என்னும் பஞ்சரூபங்களை சிந்திக்க வேண்டும். மேலும் அக்னி முதலான பெயர்கள் பகவந்தனுடையது என்று அறியவேண்டும். எப்படியெனில், ஆ-கா-ஷ சொல்லினால், நன்றாக ஒளி தரக்கூடியவனாக இருப்பதால், ஆகாஷன் என்று நாராயணனுக்குப் பெயர். அதே நாராயணன், அக்னி என்றும் அழைக்கப்படுகிறான். 'அத்தேத்யக்னி:' பிரபஞ்சத்தையே உண்பவனாகையால், அதாவது, பிரளய காலத்தில் பிரபஞ்சத்தை தன் உதரத்தில் வைத்துக் கொண்டிருப்பவன் ஆகையால், மேலும், அனைத்து காலங்களிலும் பிரபஞ்சமானது பரமாத்மனின் உதரத்தில் இருந்தே இருக்கிறது என்பதாலும், அல்லது, அக்னி ரூபத்தினால் அனைத்தையும் எரிப்பவன் (உண்பவன்) ஆகையால், அக்னி என்று நாராயணனுக்குப் பெயர்.

'தஸ்யாதித்ய ஏவஸமித்' இந்த ஆகாசனுக்கு ஆதித்யனே சமித், அதாவது, காஷ்டன் என்று சொல்கிறார். 'ஆதித்ய: ஆதத்த இத்யாதித்யனாமா ஆதித்யஸ்தோ நாராயண நாராயணாத்மா' - அனைத்து மக்களும் செய்யும் பூஜாதிகளை ஏற்றுக்கொள்கிறான். அல்லது, பூமியில் இருக்கும் தண்ணீர் அனைத்தையும் எடுத்துக் கொள்வதால் ஆதித்யன் என்று பெயர். இத்தகைய ஆதித்ய நாமக பரமாத்மன், 'நாராயண நாராயண' ஸ்வரூபன் என்று அறியவேண்டும். சமித் என்றால் அதுவும் பரமாத்மனே. 'ஸமேதனாத் ஸமிதித்யுச்யுதே' அனைவரையும் வளர்ப்பதால் (அனைவருக்கும் அருள்வதால்) பரமாத்மனுக்கு சமித் என்று பெயர். 'ரஷ்மயோதூம:' ரஷ்மிகள் என்றால் கிரணங்கள். புகை என்று பொருள். 'ரதிஷம்ரூபத்வேன ரஷ்மினாமா: ரஷ்மிகதோ நாராயணோ வாசுதேவாத்மா தூத்கரோதி நிராகரோதீத் யஞ்ஞானா தீனிதி தூமனாமோச்யதே'. ரதி சுகரூபனாகையால் பரமாத்மனுக்கு ரஷ்மி என்று பெயர். இந்த ரஷ்மியில்

இருக்கும் ரூபம், நாராயண வாசுதேவ ஸ்வரூபம் என்று அறியவேண்டும். அஞ்ஞானாதிகளை போக்குவதால், பரமாத்மனுக்கு 'தூம' என்று பெயர்.

'அஹரர்ச்சி:' பகல், ஜ்வாலை. 'தமஸா அஹனனீயாத் வாதஹர்னாம கதோ னாராயண சம்ரக்ஷணாத்மா' - இருட்டினால் அவனுக்கு எவ்வித பிரச்னைகளும் ஆகாததால், பரமாத்மனுக்கு 'அஹ:' அதாவது பகல் என்று பெயர். அர்ஹ (பகலுக்குள்) இருப்பது நாராயண சங்கர்ஷண ரூபம் என்று அறியவேண்டும். எவ்வித குறைபாடுகள் இல்லாமல், எப்போதும் ஒரே மாதிரியாக இருப்பதால், பரமாத்மனுக்கு அர்ச்சி என்று பெயர்.

சந்த்ரமா அங்காரா: - சந்திரன் கங்கு என்பதன் பொருள் இதுவே.
சுகரூபத்வாச்சந்த்ரனாமா சந்த்ரகத: நாராயண ப்ரத்யும்னாத்மா |
அங்காரா: அங்கேஷு ரமண ஹேதுத்வதங்காரா இத்யுக்த: ||

சுகஸ்வரூபன் ஆகையால், பரமாத்மனுக்கு சந்திரன் என்று பெயர். இந்த சந்திரனில் இருக்கும் ரூபம் 'நாராயண ப்ரத்யும்ன' ரூபம்.

கங்கிற்கு அங்கார என்று சம்ஸ்கிருதத்தில் பெயர். அங்கார என்றால் அங்கங்களில் (சரீரத்தில்) நிலைத்திருப்பதால், பரமாத்மனுக்கு அங்கார என்று பெயர். 'நக்ஷத்ராணி விஷ்புலிங்கா:' நட்சத்திரங்களே தீப்பொறிகள் என்கின்றனர். இதன் பொருள்: 'அனன்ய ராஜத்வேன நக்ஷத்ரானாமா: நக்ஷத்ரகத: நாராயணா னிருத்தாத்மா, மத்ஸ்யாதி ரூபேண விவிதம் ஸ்புரணாத் விஸ்புலிங்கா இத்யுக்த:' - இவனைவிட உத்தமமான ராஜன் யாரும் இல்லை என்பதால், பரமாத்மனுக்கு 'நக்ஷத்ரன்' என்று பெயர். நட்சத்திரத்தில் இருக்கும் ரூபம் நாராயண அனிருத்த ரூபம்.

பொதுவாக மீனை தண்ணீரிலிருந்து எடுத்து தரையில் போட்டால், அது தாவிக் குதிப்பதுண்டு. இதற்கு 'ஸ்புரண' என்று பெயர். பரமாத்மன், மத்ஸ்யாதி ரூபங்களை எடுத்து செயல்களை செய்வதால், அவனுக்கு 'விஸ்புலிங்க' என்று பெயர். இத்தகைய ஆகாஷ நாமக நாராயணாக்னியில் நாராயண நாராயணாதி 5 ரூபங்களையும் சேர்த்த 6 ரூபங்கள் உள்ள அக்னியில், யார் மிகுந்த பக்தியுடன் பரமாத்மனை வணங்குகின்றனரோ, அத்தகையவர்களை, தேவதைகள் 6 ரூபங்களைக் கொண்ட நாராயணாக்னியில் ஆஹுதி கொடுக்கின்றனர். அந்த ஆஹுதி ரூபமான சஜ்ஜனர்கள், சோமராஜனை அதாவது சந்திரனை சேர்வார்கள்.

**பாவக1னு பர்ஜன்ய ஸமிதெ4யு**
**ப்ராவஹீபதி தூ4மக3ளெ மே**
**கா4வளிக3ளர்ச்சி க்ஷணப்ரபெ3 க3ர்ஜனவெ கிடி3யு |**
**பா4விஸுவுத3ங்கா3ர ஸிடி3லெ**
**ந்தீ3வித3க்4னியொளப்தி4 ஜாத1ன**
**கோ1வித3ரு ஹோமிஸுவரனுதி3ன பரமப4கு3தி1யலி ||3**

பாவகனு = அக்னி

பர்ஜன்ய = மேகத்திற்கு அபிமானி
சமிதெயு = சமித்து
ப்ராவஹீபதி = ப்ராவஹிபதியான வாயு
தூமகளெ = புகை
மேகாவளிகளெ = மேகக் கூட்டங்களே
அர்ச்சி = ஜ்வாலைகள்
க்ஷணப்ரபெ = மின்னல்
கர்ஜனவெ = இடி
கிடியு = தீப்பொறி
அங்கார = கங்கு
ஈ வித அக்னியொளு = இந்த விதமான அக்னியில்
அப்திஜாதன = சந்திரனை வணங்கும் ஜீவர்களை
கோவிதரு = ஞானிகள் (தேவதைகள்)
அனுதின = தினந்தோறும் (எப்போதும்)
பரமபகுதியலி = மிகுந்த பக்தியுடன்
ஹோமிஸுவரு = ஹோமம் செய்வார்கள்

மேகாக்னியில் ஹோமம் செய்யும் விதத்தையும், அங்கு இருக்கும் பகவத் ரூபங்களையும் தாசராயர் இங்கு விளக்குகிறார்.

பர்ஜன்யோவாவ கௌதமாக்னிஸ்தஸ்ய வாயுரேவ சமிதப்ரந்தூமோ வித்யுதர்சிர ஷனிரங்காரஹ்ராதுனயோ விஸ்ப்ருலிங்கா: ||
தஸ்மின்னே தஸ்மின்னக்னௌ தேவாஸ்ஸோமா ராஜானம் ஜுஹ்வதி தஸ்யா ஆஹுதேவர்ஷ: ஸம்பவதி ||

இது சாந்தோக்ய உபநிஷத் வாக்கியம். இதன் பொருள்:

ஹே கௌதமா! வாவேத்யவதாரணெ என்னும் நியாயத்தினால் 'பர்ஜன்ய ஏவ' அதாவது மேகங்களே அக்னி என்று பொருள். 'பர்ஜன்ய: பரமஸ்யஜன்ய மஸ்தேதி பர்ஜன்ய:' ஜனனம் ஆகும் பதார்த்தங்களுக்கு பர்ஜன்ய என்று பெயர். பரமனின் சேவைக்காக பிறக்கும் பதார்த்தங்களுக்கு பர்ஜன்ய (பரமாத்மன் என்று) என்று பெயர். இந்த பர்ஜன்யனில் இருக்கும் ரூபம் வாசுதேவ ரூபம். இத்தகைய வாசுதேவன் அக்னியில் இருப்பவன். அக்னி முதலான சொற்களுக்கான அர்த்தங்கள் முந்தைய ஸ்லோகங்களில் சொல்லப்பட்டிருக்கிறது.

இத்தகைய பர்ஜன்யனில் இருக்கும் வாசுதேவ அக்னிக்கு 'வாயுரேவ சமித்' வாயுவே சமித்தாக இருக்கிறார். ஞான ரூபியான காரணத்தாலும், இவருக்கு வாயு என்று பெயர். வாயுவில் இருக்கும் பகவத்ரூபம் வாசுதேவ நாராயண ஸ்வரூபம். 'அபந்தூம:' மேகக் கூட்டங்களே புகை. 'அபாம்பரணாத ப்ரனாமா஽ப்ரகதோ வாஸுதேவ வாஸுதேவாத்மா தூம:'. தண்ணீரை நிரப்பிக்கொண்டு அனைவரையும் காப்பதினால், அப்ர என்று மேகக்கூட்டங்களில் இருக்கும் பரமாத்மனுக்குப் பெயர். அந்த அப்ரனில் இருக்கும் பகவத்ரூபம் வாசுதேவ வாசுதேவ ரூபம். இந்த

புகைக்கே, முன்பு சொன்னதுபோல, தூம ஷப்த வாச்யனாக இருக்கும் பரமாத்மன் என்று பொருள்.

'வித்யுதர்ச்சி:' 'வித்யோதனாத் வித்யுன்னாமா வித்யுத்கத: வாசுதேவ சங்கர்ஷண நாமாsர்ச்சி:' சிறப்பாக ஒளிர்பவனாகையால், வித்யுத் (மின்னல்) என்று பரமாத்மனுக்குப் பெயர். அந்த வித்யுத்-தில் இருக்கும் பரமாத்ம ரூபம் வாசுதேவ சங்கர்ஷண ரூபம். இந்த ரூபத்தின் ஸ்வரூபமே அர்ச்சி அதாவது ஜ்வாலை.

அஷனாத ஷனிநாமாs ஷனகதோ வாசுதேவ ப்ரத்யும்னாத்மா அங்காரா: = அன்னத்தில் இருப்பவன் ஆகையால் பரமாத்மனுக்கு அஷனி என்று பெயர். அஷனியில் இருக்கும் பகவத்ரூபம் வாசுதேவ ப்ரத்யும்னனே கங்கு. 'ஹ்ராதுனயோ விஸ்புலிங்கா:' மேகங்களின் கர்ஜனையே தீப்பொறிகள். 'நிர்ஹாதனாத் ஹ்ராதுனினா மௌஹ்ராதுனி ஷப்தித மேகனாதகதோ வாசுதேவானி ருத்தாத்மா விஸ்புலிங்கா:' பயங்கரமான சத்தத்தை செய்வதனால், மேகங்களின் கர்ஜனைக்கு 'ஹ்ராதுனி' என்று பெயர். அதில் இருக்கும் வாசுதேவ அனிருத்த ரூபமே தீப்பொறிகள்.

இப்படி வாயு முதலானவர்களில் நாராயணாதி 5 ரூபங்களில், முந்தைய பத்யங்களில் கூறிய ஆகாயத்தில் இருக்கும் நாராயணனில் ஹோமம் செய்து, சோமராஜனைப் பெற்ற சோம (சந்திர) என்னும் பெயருள்ள ஜீவனை தேவதைகள் ஆஹுதி கொடுக்கிறார்கள்.

இந்த உபநிஷத் அர்த்தத்தையே தாசராயரும் இந்த பத்யத்தில் விளக்கியிருப்பதால், அதனை மறுபடி இங்கு விளக்கவில்லை. ஆனால், உபநிஷத்தில் சொல்லப்பட்டிருக்கும் பஞ்சமஹாயக்ஞ விஷயத்திற்கும், தாசராயர் கூறியிருக்கும் சந்தர்ப்பங்களுக்கும் கருத்து வேறுபாடு இருக்கலாம்.

உபநிஷத்தின்படி, ப்ரவஹ என்னும் ராஜன், கௌதமரிடம் 'ஜீவர்கள் பூமியில் யோக்யனாக, பகவத்பக்தனாக, பிறப்பது எப்படி?' என்று கேட்க அதற்கு கௌதமர் பதிலைக் கூறுகிறார். 'சிரத்தை பக்தியுடன் யாகாதிகளை செய்யும் ஜீவர்களுக்கு 'ஷ்ரத்தா' என்று பெயர். அத்தகைய ஷ்ரத்தா நாமக ஜீவனை தேவதைகள், ஆகாஷாக்னியில் ஹோமம் செய்வார்கள். அந்த ஜீவன் சந்திரனை அடைகிறான். சந்திரனில் இருக்கும் ஜீவனை, மேக அக்னியில் ஹோமம் செய்வார்கள். அந்த ஜீவன் மழையை அடைகிறான். மழையில் சேர்ந்த ஜீவனை, ப்ருத்வி அக்னியில் ஹோமம் செய்வார்கள். அவன் அன்ன ஆகிறான். அன்ன ரூப ஜீவனை புருஷாக்னியில் ஹோமம் செய்கிறார்கள். அவன் வீர்யம் ஆகிறான். அந்த ரேதஸ் ரூபி ஜீவனை ஸ்த்ரி நாம அக்னியில் ஹோமம் செய்வார்கள். அவன் பூமியில் பிறக்கிறான். இந்த பஞ்சாஹுதி வித்யையை யார் அறிகிறார்களோ, அவன் பிரம்மனை அடைகிறான்' என்று சொல்கிறார்.

இங்கு தாசராயர், பஞ்சமஹாயக்ஞ சந்தர்ப்பத்தில் சொல்வதால், இப்படி ஆகாஷாதி அக்னியில் 30 பகவத்ரூபங்களை, அந்தந்த ஸ்தானத்தில் இருக்கும் பகவத்ரூபங்களை சிந்திப்பதே, முக்தி சாதனம் என்று சொல்கிறார். இப்படி

சந்தர்ப்பத்திற்கேற்ப இருவரும் விளக்கியிருப்பதால், சிறிது கருத்து வேறுபாடு இருவருக்கும் வந்திருக்கிறது என்று அறியவேண்டும்.

‘அப்திஜாதன ஹோமிஸுவரு’ என்னும் வாக்கியத்தால் சந்திரனே, ஹோம த்ரவ்யம் என்று வாயு முதலான காஷ்டங்களால் கூடிய பர்ஜன்ய அக்னியில், சந்திரனையே ஆஹுதி கொடுக்கிறார்கள் என்கிறார். உபநிஷத் பாஷ்யத்தில் ஜீவனுக்கு சந்திரன் என்று பெயர் என்றிருக்கிறது. ஜீவனின் உற்பத்தி கட்டத்தில் இவ்வாறு சொல்லியிருப்பதால், பரஸ்பரம் இங்கு விரோதம் இல்லை என்று அறியவேண்டும்.

**த[4]ரணியெம்புதெ[3] அக்[3]னி ஸம்வ**
**த்ஸரவெ ஸமிதெ[3] விஹாயஸவெ ஹொகெ[3]**
**இருளுரி திஷங்கா[3]ரவாந்தர தி[3]க்[3]வலய கி[1]டி[3]யு |**
**வருஷவெம்பா[3]ஹுதி க[3]ளிந்த[3]லி**
**ஹரிய மெச்சிஸி ஸக[1]லரொளக[3]**
**த்[4]வரியனாகி[3]ரு ஸர்வரூபாத்மகன சிந்திஸுத ||4**

தரணியெம்புதெ = பூமி என்பதே, அக்னி,
சம்வத்ஸரவெ சமிதெ = சம்வத்ஸரமே சமித்து
விஹாயஸவெ ஹொகெ = ஆகாயமே புகை
இருளு = இரவு
உரி = ஜ்வாலை
திஷா = திசைகள்
அங்கார = கங்குகள்
ஆவாந்தர திக்வலய = விதிக்குகளே தீப்பொறிகள்
வருஷவெம்ப = மழை என்னும், ஆஹுதிகளால்
ஹரிய மெச்சிஸி = பக்தியுடன் ஸ்ரீஹரியை
ஸர்வரூபாத்மகன = ப்ருத்வி அக்னியில் சங்கர்ஷண, சம்வத்ஸர காஷ்டங்களில் சங்கர்ஷண நாராயண, சங்கர்ஷண வாசுதேவ முதலான 6 ரூபாத்மகனான பரமாத்மனை சிந்தித்தவாறு
சகலரொளகெ அத்வரியனாகிரு = யாகங்களில் அத்வர்யர் எப்படி தலைவரோ அதுபோல அனைவருக்கும் தலைவனாக இரு. இத்தகைய ஞானம் உள்ளவன், தலைவனாக இருப்பான் என்று பொருள்.

இந்த பத்யத்தில், மூன்றாம் ப்ருத்வி அக்னியில் ஹோமம் செய்யும் விதத்தை விளக்குகிறார் தாசராயர்.

இந்த அனைத்து பத்யங்களுக்கும், உபநிஷத் வாக்கியங்கள் இருக்கின்றன. அதன் பொருள் மட்டும் இங்கு சொல்லப்படுகிறது. கிரந்தம் பெரிதாகிவிடும் என்பதால், உபநிஷத் வாக்கியங்களைக் கொடுக்கவில்லை.

'ப்ருதி தத்வாத் ப்ருதிவீ நாம ப்ருதிவீஸ்த: சங்கர்ஷண: அக்னி:'. உலகத்தில் புகழ் பெற்றவனாக இருப்பதால், பரமாத்மனுக்கு ப்ருதிவி என்று பெயர். ப்ருத்வியில் இருக்கும் அக்னியின் பெயர் சங்கர்ஷணன். அனைவரையும் தனக்குள் வசிக்க

அனுமதிப்பவன் ஆகையால், சம்வத்ஸரன் என்று பெயருள்ள சங்கர்ஷண நாராயண ஸ்வரூபமே காஷ்டம் (சமித்து). நன்றாக ஒளி தருபவனாகையால், ஆகாஷன் என்று பெயர். இந்த ஆகாயத்தில் இருக்கும் சங்கர்ஷண வாசுதேவ ஸ்வரூபன் எப்படி 'ரதிர்வானாத்ராத்ரி:', ரதிப்ரதன் ஆகையால், ராத்ரி என்று பரமாத்மனுக்குப் பெயர். ராத்ரியில் இருக்கும் சங்கர்ஷண சங்கர்ஷண ஸ்வரூபனே ஜ்வாலை. ஞானத்தைக் காட்டுபவனாகையால் ('திஷதீதி திக்'), பரமாத்மனுக்கு திக் என்று பெயர். திக்குகளில் இருக்கும் சங்கர்ஷண பிரத்யும்ன ஸ்வரூபனே கங்குகள். 'அவாந்தரந்திஷதீதி அவாந்தரதிக்' அவாந்தர ஞானத்தைக் காட்டுபவனாகையால், பரமாத்மனுக்கு அவாந்தர திக் என்று பெயர். அவாந்தர திக்குகளில் இருக்கும் சங்கர்ஷண அனிருத்தனே தீப்பொறிகள். மழைத்துளிகளையே ஆஹுதிகளாச் செய்து, ஹரியை துதித்தவாறு, மேற்சொன்ன காஷ்டங்களில் இருக்கும் அனைத்து ரூபங்களை சிந்தித்தவாறு அனைவரைவிடவும் சிறந்தவனாக இரு. இப்படியாக சிந்தித்தால், ஸ்வாமி நம்மை சஜாதியர்களில் அனைவரைவிடவும் சிறந்தவராக மாற்றி, அருள்வான் - என்று சொல்கிறார்.

**புருஷ ஷிகி[2] வாக்ஸமிதெ[4] தூ[4]மவு**
**கரண அர்ச்சியு ஜிஹ்வெ ஸ்ரோத்ரக[3]**
**ளெரடு[3] கி[1]டிக[3]ளு லோசனக[3] ளங்கா[3]ர வெனிஸுவுவு |**
**நிருத[1] பு[4]ஞ்சிஸுவன்ன யது[3]கு[1]ல**
**வரனிக[3]வதா[3]னக[3]ளு எந்தீ[3]**
**பரி ஸமர்ப்பணெகை[3]யெ கைகொண்ட[3]னுதி[3]னதி[3] பொரெவ ||5**

புருஷ = ஆண்கள்
ஷிகி = அக்னி
வாக் = வாக் இந்திரியம்
ஸமிதெ = காஷ்டம் (சமித்து)
கரண = கர்மேந்திரியங்கள்
தூம = புகை
அர்ச்சியு = ஜ்வாலை
ஜிஹ்வெ = நாக்கு
ஸ்ரோத்ரகளெரடு = இரு காதுகள்
கிடிகளு = தீப்பொறிகள்
லோசனகளு = கண்கள்
அங்காரவெனிஸுவுது = கங்குகள் எனப்படுகின்றன
நிருத = தினந்தோறும் (எப்போதும்)
புஞ்சிஸுவ = நாம் உண்ணும்
அன்ன = அன்னத்தை
எதுகுலவரனிகெ = யதுகுல ஸ்ரேஷ்டனான ஸ்ரீபரமாத்மனுக்கு
அவதானகளெந்து = ஆஹுதி என்று
ஈ பரி அனுதினதி = இந்த மாதிரி, தினந்தோறும்
சமர்ப்பணெகையெ = சமர்ப்பித்தால்

கைகொண்டு = ஏற்றுக்கொண்டு
அனுதினவு = தினந்தோறும்
பொரெவ = நமக்கு அருள்வான்.

புருஷாக்னியின் லட்சணங்களை சொல்கிறார். 'புருத்வாத் பூர்ணத்வாத் புருஷ நாமா' அனந்தமானவன் ஆகையாலும், பூர்ணமானவன் ஆகையாலும், பரமாத்மனுக்கு புருஷன் என்று பெயர். இந்த புருஷனில் இருக்கும் ப்ரத்யும்னரூபியே அக்னி. 'தஸ்ய புங்கதஸ்ய ப்ரத்யும்னஸ் த்யுத்வாத்வாக நாமாவாசி ஸ்தித: ப்ரத்யும்ன நாராயணௌத்ம ஸமித்' - அனைவருக்குள்ளும் இருந்து பேசுபவனாகையால் பரமாத்மனுக்கு வாக் என்று பெயர். இந்த புருஷ நாமகனான ப்ரத்யும்னரூபி அக்னிக்கு வாக்கில் இருக்கும் பிரத்யும்ன நாராயணனே சமித்துகள். நடவடிக்கைகளை செய்வதால், பிராண நாமகன். இந்த பிராணனில் இருக்கும் பிரத்யும்ன வாசுதேவ ஸ்வரூபனே புகை.

'ஹோமதே, அத்யதே அனேனேதி ஜிஹ்வானாமா ஜிஹ்வாகத பிரத்யும்ன ஸங்கர்ஷனாத்மா அர்ச்சி:' ஹோமம் செய்துகொள்பவனும், அதன் பலன்களை உண்பவனும் ஆகையால், பரமாத்மனுக்கு ஜிஹ்வா என்று பெயர். நாக்கினில் இருக்கும் ப்ரத்யும்ன சங்கர்ஷண ரூபமே ஜ்வாலை. 'சஷ்டேபஷ்யதி சர்வமிதி சக்ஷுர் நாமா சக்ஷுஸ்த ப்ரத்யும்ன ப்ரத்யும்னாத்மா அங்காரா:' அனைத்தையும் கண்களில் வைத்து பார்ப்பவன் ஆகையால், பரமாத்மனுக்கு சக்ஷுஸ் என்று பெயர். கண்களின் உள் இருப்பவன் ப்ரத்யும்ன - கங்குகள். கேட்பதால் பரமாத்மனுக்கு ஸ்ரோத்ர என்று பெயர். காதுகளுக்குள் இருக்கும் ப்ரத்யும்னானிருத்த ரூபமே தீப்பொறிகள்.

இத்தகைய புருஷ நாமக பிரத்யும்ன அக்னியில், நாராயணாதி 5 ரூபங்களை சிந்தித்து, ஷட்ரூபியான யதுகுலோத்தமனான ஸ்ரீபரமாத்மனின் விருப்பப்படி தினந்தோறும் நான் உண்ணும் உணவே ஆஹுதிகள் என்று சமர்ப்பணம் செய்தால், அதனை ஏற்றுக்கொண்டு நமக்கு உத்தமகதியைக் கொடுத்து அருள்வான்.

'புருஷோவாவ கௌதமாக்னி ஸ்தஸைவாகேவ சமித்' இத்யாதி உபநிஷத் வாக்கியங்களே இவற்றிற்கு ஆதாரம். உபநிஷத் பாஷ்யத்தையும், உபநிஷத் கண்டார்த்தத்தையும் அனுசரித்து, இந்த பத்யங்களுக்கு அர்த்தங்கள் எழுதப்பட்டிருக்கின்றன.

**மத்தெ[1] யோஷாக்[3]னியொளு திளிவுது[3]**
**பஸ்த[2] த[1]த்வவெ ஸமிதெ[4] காமோ**
**த்பத்தி பரமாதுக[3]ளெ தூ[4]மவு யோனி மஹத[3]ர்ச்சி |**
**தத்ப்ரவேஷங்கா[3]ர கி[1]டிக[3]ளு**
**உத்ஸஹக[3]ளுத் ஸர்ஜனவு புரு**
**ஷோத்தமனி க[3]வதா[3]னவெனெ கைகொண்டு[3] மன்னிஸுவ ||6**

மத்தெ = அடுத்து
யோஷாக்னியொளு = ஸ்த்ரி என்னும் அக்னியில்

திளிவுது = காஷ்டாதிகளை இப்போது சொல்லப்போகும் விதங்களை அறியவேண்டும்
உபஸ்த தத்வவெ = மல ஜல உறுப்புகள்
சமிதெ = காஷ்டங்கள்
காமோத்பத்தி பரமாதுகளே = காமத்தினால் பெண்களிடம் ரதி சம்பந்தமான பேச்சுக்களை பேசுவதே
தூமவு = புகை
யோனி
மஹதர்ச்சி = மஹா ஜ்வாலை
தத்ப்ரவேஷ = அதில் நுழைவதே
அங்கார = கங்குகள்
உத்ஸஹகளு = ரதியில் உற்சாகமே தீப்பொறிகள்
உத்சர்ஜனவு = வீர்யத்தை விடுவது
புருஷோத்தமனிகெ = புருஷோத்தமனுக்கு
அவதானவெனெ = ஆஹுதிகள் என்று சமர்ப்பித்தால்
கைகொண்டு = அவற்றை ஏற்றுக்கொண்டு
மன்னிஸுவ = நம் அபராதங்களை மன்னிக்கிறான்.

ஸ்த்ரி என்பவரே அக்னி. அதற்கு காஷ்டாதிகளை சொல்கிறார். அனைவருக்கும் வேண்டியவனாக இருப்பதால், பரமாத்மனுக்கு யோஷா என்று பெயர். ஸ்த்ரியர்களில் அனிருத்த ரூபத்தை சிந்திக்க வேண்டும். 'ஸ்த்ரீகதோ னிருத்தோக்னி' ஸ்த்ரியர்களில் இருக்கும் அனிருத்தனே அக்னி. 'தஸ்யா:யோஷித்கதா னிருத்தாக்யாக்னே: உபஸ்த: உபஸ்திதே: உபஸ்தா நாமா உபஸ்தகத: அனிருத்த நாராயணாத்மா ஸமித்'. அருகிலேயே வசிப்பதால் பரமாத்மனுக்கு உபஸ்த என்று பெயர். ஸ்த்ரியரில் இருக்கும் அனிருத்தன் என்னும் அக்னிக்கு, உபஸ்த நாமகனான உபஸ்தவில் இருக்கும் அனிருத்த நாராயண ரூபமே காஷ்டம்.

'உபமந்த்ரயதே, ரத்யர்த்த சம்பாஷதே இதியத்ஸ: |
தத்ரத்ய: அனிருத்த வாசுதேவாத்மோபமந்த்ரண நாமாதூம:'

காமத்திற்கான ரகசிய சம்பாஷணைகளை புருஷர்களில் இருந்து செய்வதால், பரமாத்மனுக்கு உபமந்த்ரண என்று பெயர். அங்கிருக்கும் அனிருத்த வாசுதேவ ரூபன் புகை. 'யுனக்தி மிஸ்ரிகரோதீதி யோனினாமா யோனிஸ்தோsனிருத்த சங்கர்ஷணாத்மர்ச்சி:' கலப்பதனால் பரமாத்மனுக்கு யோனி என்று பெயர். யோனியில் இருக்கும் அனிருத்த சங்கர்ஷண பரமாத்மனே ஜ்வாலை. உள்ளே நுழைக்கும் செயல்களை செய்விப்பவனான அனிருத்த ப்ரத்யும்னரூபனே கங்குகள்.

அபினந்ததீத்யபி நந்தானாமா அபினந்தகதோs நிருத்தா நிருத்தாத்மா விஸ்புலிங்கா:'. ரதியில் உற்சாகத்தைக் கொடுப்பவன், அபினந்தன நாமகனில் இருக்கும் அனிருந்தா அனிருத்த ரூபமே தீப்பொறிகள். புருஷோத்தமனான ஸ்ரீபரமாத்மனுக்கு ரேதத்தைக் கொடுப்பதே ஆஹுதி என்று நினைத்து பகவத்

பூஜையென்று சமர்ப்பித்தால், அதையே அவன் பூஜையென்று ஏற்று, நம் தவறுகள் அனைத்தையும் மன்னிக்கிறான்.

யோஷாவாவ கௌதமாக்னிஸ்தஸ்யா உபஸ்த ஏவ சமித் - இத்யாதி உபநிஷத் வாக்கியங்களே இவற்றிற்கு ஆதாரம்.

**ஐது3 வித3த3க்னியலி மரெயதெ3**
**ஐது3 ரூபாத்மக1ன இப்ப**
**த்தைது3 ரூபக3ளனுதி3னதி3 நெனெவரிகெ3 ஜனுமக3ள ।**
**ஐதி3ஸனு நளினாக்ஷ ரணதொ3ளு**
**மைது3னன காய்த3ந்தெ1 ஸலஹுவ**
**வைத3வகெ3 க3தியித்த ப4யஹர ப4க்தவத்ஸலனு ।।7**

ஐது வித அக்னிகளல்லி = ஆகாஷ, மேகம் முதலான ஐந்து வகையான அக்னிகளில்
மரெயதெ = மறக்காமல்
இது ரூபாத்மகன = நாராயணாதி 5 ரூபங்களை
இப்பத்தைது ரூபகளனு = நாராயண நாராயணாதி 25 ரூபங்களை
அனுதினதி = எப்போதும் / தினந்தோறும்
நெனெவரிகெ = நினைப்பவர்களுக்கு
ஜனுமகள = பிறவிகளை
யைதிஸலு = கொடுக்க மாட்டான்.
நளினாக்ஷ = தாமரைக் கண்ணனான ஸ்ரீகிருஷ்ணன்
ரணதொளு = பாரதப் போரில்
மைதுனன = தன் தங்கையின் கணவனான அர்ஜுனனை
காயிதந்தெ = காப்பாற்றியதைப் போல
ஸலஹுவ = காப்பாற்றுபவன்
பயஹர = பக்தர்களின் பயங்களை பரிகரிப்பவன்
பக்தவத்ஸலன், வைதவகெ = தன்னை திட்டிக்கொண்டிருந்த சிசுபாலனுக்கு
கதியித்த = முக்தியைக் கொடுத்தான்.

இப்படி மேற்சொன்ன 5 பத்யங்களில் கூறியதைப் போல, ஆகாயம், மேகம், பூமி, புருஷ, ஸ்த்ரி என்னும் 5 அக்னிகளில் நாராயண, வாசுதேவ, சங்கர்ஷண, ப்ரத்யும்ன, அனிருத்த என்னும் 5 ரூபங்களை சிந்தித்து, மறக்காமல், அதே நாராயண என்னும் ஒவ்வொரு ரூபத்திலும் நாராயணாதி 5 ரூபங்களை, ஆக மொத்தம் 25 ரூபங்களை தினந்தோறும் நினைத்திருப்பவர்களுக்கு மறுபிறவியைக் கொடுக்காமல், ஸ்ரீகிருஷ்ணன், தன் தங்கை புருஷனான அர்ஜுனனை போர்க்களத்தில் சாரதியாக இருந்து எப்படி காப்பாற்றினானோ, அது போலவே காப்பாற்றுவான். பக்தர்களுக்கு வரும் பயங்களை பரமாத்மன் பரிகரிக்கிறான். எப்போதும் தன்னை திட்டிக்கொண்டிருந்த சிசுபாலன், அவன் ஜயன் என்னும் த்வாரபாலகனாகையால், முக்தியைக் கொடுத்து காப்பாற்றினான். ஆகையாலேயே, பக்தவத்ஸலன் என்னும் விருது அவனுக்கு இருக்கிறது.

**பஞ்ச நாரிதுரக3த3ந்த3தி3**
**பஞ்ச ரூபாத்மகனு தா ஷட்**
**பஞ்ச ரூபவ த4ரிஸி த1த்த1ன்னாமதி3ம் கரெஸி ।**
**பஞ்ச பாவக முக2தி கு3ணமய**
**பஞ்ச பூதா3த்மக ஷரீரவ**
**பஞ்ச வித3 ஜீவரிகெ3 கொட்டல்லல்லெ ரமிஸுவனு ।।8**

பஞ்ச நாரி துரகதந்ததி = 5 பெண்களை சேர்த்து அவர்களின் கை கால்களை குதிரையின் கை கால்களாக தோன்றுமாறு செய்து நிற்க வைப்பதற்கு பஞ்ச நாரி துரக என்று பெயர். இப்படியான பஞ்ச நாரி துரகனைப் போல
பஞ்சரூபாத்மகனு = நாராயணாதி 5 ரூபங்கள்
தா = தான்
ஷட்பஞ்ச ரூபவ தரிஸி = நாராயண ரூபம் 1. அதில் நாராயணாதி ரூபங்கள் 5. இப்படி ஒவ்வொன்றிலும் 5*6=30 ரூபங்களை தரித்து
தத்தன் நாமதி கரெஸி = மேலே இருக்கும் பத்யங்களில் சொன்னதைப் போல, ஆகாஷாதி நாமங்களாலும், காஷ்டாதிகளில் அந்தந்த பெயர்களில் இருந்தும், காஷ்டங்களாக சிந்திக்கும் சூர்யாதி நாமங்களாலும் அழைத்துக்கொண்டு
பஞ்சபாவக முகதி = ஆகாஷாதி பஞ்சாக்னியின் முகத்தில்
குணமய = சத்வ ரஜஸ் தமோ குணாத்மகனான
பஞ்சபூதாத்மக = ப்ருதிவ்யாதி பாஞ்சபௌதிக சம்பந்தமான
ஷரீரவ = சரீரத்தைக் கொண்டவன்
பஞ்சவித ஜீவரிகெ = தேவ, கந்தர்வ, பித்ரு, மனுஷ்ய, அசுர என்னும் 5 வித ஜீவர்களுக்குக் கொடுத்து
அல்லல்லெ = அந்தந்த ஜீவர்களின் சரீரங்களிலேயே
ரமிஸுவனு = செயல்களை செய்கிறான்.

மேற்சொன்ன 7 பத்யங்களில் இருக்கும் விஷயத்தை, சாந்தோக்ய உபநிஷத் வாக்கியங்களின் அபிப்பிராயங்களைத் தொகுத்து சாரமாக இங்கு சொல்கிறார்.

பஞ்ச நாரி துரக என்றால் 5 பெண்களை சேர்த்து ஒரு குதிரை வடிவத்தைப் போல நிற்க வைப்பது. அவர்களின் கை, கால்களே, குதிரையின் கை, கால்களாக வைப்பது. ஒரு ரூபத்தில் ஐந்து ரூபங்களை சிந்திக்கும் இந்த படத்தை பல புத்தகங்களில் பார்த்திருக்கலாம். இதன் சிறப்பு என்னவென்றால், அந்த ரூபம் ஒரு குதிரையைப் போலத் தோன்றும். அப்படியே, நாராயண ரூபத்தினால் ஆகாஷனாக காட்டிக்கொள்வான். அதன் காஷ்டாதி ஸ்தானங்களில், சூர்யாதி ஐந்து பேரில், நாராயணாதி 5 ரூபங்களில் இருக்கிறான். இப்படி நாராயணாதி பஞ்சரூபி மற்றும் ஒவ்வொன்று ரூபங்களிலும் நாராயணாதிகள் என்றால், மொத்தம் 30 ரூபங்களை தரித்து, ஆகாஷாதிகளில், ஆகாஷாதி நாமங்களால் அழைத்துக் கொண்டு, சமித், புகை ஆகியவற்றில் அந்தந்த பெயர்களைக் கொண்ட, ஆகாஷாதிகளை அக்னியாக சிந்திக்கும்போது, காஷ்டாதி ஸ்தானங்களில் சிந்திக்க வேண்டிய சூர்யாதி நாமங்களால் அழைக்கப்பட்டு, ஆகாசாதி பஞ்சாக்னி முகத்தில், சாத்விக ராஜஸ

தாமஸ குணங்களைக் கொண்ட பாஞ்சபௌதிக சரீரத்தை, பஞ்சவித ஜீவர்கள் என்றால், பாகவத 10ம் ஸ்கந்தத்தில் 'யதோ யதோதாவதி தைவசோதிதம் மனோவிகாராத்மக மாத்மபஞ்சஸு' என்னும் ஸ்லோகத்தின், விஜயத்வஜீய வியாக்யானத்தில் 'ஆத்மபஞ்சஸு' என்னும் பதத்திற்கு 'தேவ, கந்தர்வ, பித்ரு, மனுஷ்யாசுர சேதேன பஞ்சானாம் ஆத்மனாம் மத்யே' என்று சொல்லியிருக்கிறார். இதே ஆதாரத்தினால் 5 வித ஜீவரென்றால், தேவதைகள், கந்தர்வர், பித்ருகள், மனுஷ்யர், அசுரர் என்னும் 5 வித ஜீவருக்கு சரீரங்களைக் கொடுத்து, அவருக்குள் இருந்து நடவடிக்கைகளை செய்கிறான்.

**விதி$^{3}$ ப$^{4}$வாதி ஸமஸ்தஜீவர**
**ஹ்ருத$^{3}$யதொ$^{3}$ளகே$^{3}$ கா$^{1}$த்மனெனிஸுவ**
**பது$^{3}$மனாப$^{4}$னு அச்யுதானந்தாதி$^{3}$ ரூபத$^{3}$லி |**
**அதி$^{4}$ ஸுபூ$^{4}$தாத்யாத்ம அதிதெ$^{3}$ய்**
**வதொ$^{3}$ளு கரெஸுவ ப்ராண நாகா$^{3}$**
**பி$^{4}$த$^{3}$னு த$^{3}$ஷரூபத$^{3}$லி த$^{3}$ஷவித$^{4}$ ப்ராணரொளகி$^{3}$த்து ||9**

விதி பவாதி = பிரம்ம ருத்ரர் முதலான
சமஸ்த ஜீவர = அனைத்து ஜீவர்களின்
ஹ்ருத்யதொளகெ = இதயத்தில் இருந்து
ஏகாத்மனெனிஸுவ = ஒரு ரூபத்தினால் அழைக்கப்படுகிறான்
பதுமனாபனு = மூலரூபியான ஸ்ரீபத்மனாபன்
அச்யுதாதி அனந்தரூபதலி = அச்யுத, அனந்த, கோவிந்த என்னும் ரூபத்ரயங்களால்
ஆதிபூத, ஆத்யாத்ம, ஆதிதெய்வதொளு = அதிபூதத்திலும், ஆத்யாத்மத்திலும், ஆதிதெய்வத்திலும் இருந்து, ஆதிபூதாதி பெயர்களால் அழைக்கப்படுகிறான்.
பிராண = பிராணாபானாதி பஞ்ச பிராணனாகவும்,
நாகாபிதனு = நாக க்ருகள முதலான 5 பஞ்சப்ராணங்களின் பெயர்களைக் கொண்டவனாகவும்
இப்படியாக
தசவித பிராணரொளகித்து = பிராணாதி 5 பேர்களிலும், நாகாதி 5 பேர்களிலும், இருந்து,
தஷரூபதலி = 10 ரூபங்களால்
கரெசுத = அழைத்துக் கொள்ளப்படுகிறான்.

முந்தைய பத்யத்தில், த்ரிவித ஜீவர்களுக்கு பஞ்சவித சரீரங்களைக் கொடுத்து செயல்களை செய்கிறான் என்று சொல்லியிருந்தார். இங்கு, பஞ்சபூதங்களிலும், சரீரங்களிலும், தத்வாபிமானிகளிலும் கூட இருக்கும் பகவத்ரூபங்களை விவரிக்கிறார் தாசராயர்.

பாகவத 3ம் ஸ்கந்தம் 7ம் அத்தியாயத்தில்:

விபபாஜாத்மனாத்மான மேகதாதஷதாத்ரிதா |
ஸாத்யாத்மம் ஸாதிதெய்வஞ்ச ஸாதிபூத மிதித்ரிதா ||

விராட்ப்ராணோதஷவித ஏகதா ஹ்ருதயேனச ।

ஆத்யவதார பூதனான பரமாத்மன், தன்னை ஒரு ரூபமாகியும், 10 ரூபங்களாகவும், 3 ரூபங்களாகவும் பிரிக்கிறான். ஆத்யாத்ம, ஆதிதெய்வ, ஆதிபூத என்னும் மூன்றில், மூன்று ரூபங்களாகவும், பிராணாதி 5, நாகாதி 5 என்று பிராணங்களில் 10 ரூபங்களாகவும் இருக்கிறான். இதற்கு ஆதாரம், மேற்சொன்ன ஸ்லோகத்தின் வியாக்யானத்தில்:

தஹுக்தம் || பிராணாதி பஞ்சகஞ்சைவ ததா நாகாதி பஞ்சகம் ||
ஏவந்து தஷதாப்ராணா ஆத்யாத்மாதி த்ரிதாகிளா || இதி

பிராணாதி பஞ்சகம் என்றால், பிராண, அபான, வ்யான, உதான, சமான இவையே. நாகாதி பஞ்சகம் என்றால், நாக, க்ருகள, கூர்ம, தேவதத்த, தனஞ்சய என 5. இவையே 10 வகையான பிராணங்கள். ஆத்யாத்மாதி மூன்று பேதங்கள், இந்த 10 பிராணர்களில் இருக்கின்றன என்று பொருள். பிரம்மாதி சேதனர்களின் இதயத்தில், 1 ரூபம். ஆக இப்படியாக, ஒரு ரூபனாகவும், 10 ரூபங்கள் உள்ளவனாகவும் இருக்கிறான் என்கிறார். பிரம்ம ருத்ரர்களின் இதயங்களில் ஏகாத்மனாக, ஆத்யவதார பூதனான ஸ்ரீபத்பனாபன், அச்யுத, அனந்த, கோவிந்த என்னும் மூன்று ரூபங்களின் அனந்தானந்தத்தை ஏற்றுக்கொண்டு, அனைத்து சரீரங்களிலும், அத்யாத்ம, அதிதெய்வ, அதிபூத என்னும் மூன்று வித பிரதேசங்களில் வசிக்கிறான்.

அத்யாத்ம என்றால் சரீரத்தில் இருக்கும் கண், காது ஆகிய இந்திரியங்கள். அதிதெய்வ என்றால், தத்வாபிமானி தேவதைகள். அதிபூத என்றால் பஞ்சபூதங்கள். இவை ஒவ்வொன்றிலும், அச்யுத, அனந்த, கோவிந்த என்னும் மூன்று அகண்ட ரூபங்களிலும், பஞ்சபூத, இந்திரியங்கள், தத்வாபிமானிகளில் கண்டரூபியாகவும், இப்படி அச்யுதாதி அனந்த ரூபங்களால் வியாபித்துக் கொண்டிருக்கிறான். பிராண அபானாதி ஐந்து பிராணங்களிலும், நாகக்ருகள ஆதி 5 உப பிராணங்களிலும், இப்படியாக 10 ரூபங்களால் இருந்து, அந்தந்த பெயர்களால் அழைக்கப்பட்டுக் கொண்டிருக்கிறான்.

**ஈரயிது$^{3}$ ஸாவிரத$^{3}$யிப்ப**
**த்தாரதி$^{4}$க முன்னூரு ரூப$^{1}$க$^{3}$**
**ளீரெரடு$^{3}$ ஸ்தா$^{2}$னத$^{3}$லி சிந்திபரனுதி$^{3}$னதி$^{3}$ பு$^{3}$த$^{3}$ரு ।**
**நூரயிப்பத் தே$^{1}$ளதி$^{4}$க மூ**
**ராருஸாவிர ரூப$^{1}$தி$^{3}$ம் த$^{3}$ஷ**
**மாருதரொளித் த$^{3}$வரவர பெஸரிந்த$^{3}$ க$^{1}$ரெஸுவரு ||10**

ஈரயிது சாவிரத = 10,000
இப்பத்தாரதிக முன்னூரு ரூபகள = 26+300=326 (மொத்தம் 10,000+326 = 10,326)
ஈரெரடு ஸ்தானதலி = அனைத்து பிராணிகளின் இதயம் ஒரு இடம். ஆத்யாத்மாதி 3 ஸ்தானம் என மொத்தம் 4 ஸ்தானங்களில்
அனுதினதி = தினந்தோறும் / எப்போதும்
புதரு = ஞானிகள்

சிந்திபுது = சிந்திக்கின்றனர்
நூர இப்பத்தேளதிக மூராரு சாவிர ரூபதிம் = 127+18000 = 18127 ரூபங்களால்
தஷமாருதரொளித்து = பிராணாபானாதி ரூபங்களால், அந்தந்த பெயர்களால் அழைக்கப்படுவான்.

முந்தைய பத்யத்தில், பத்பனாபன் தன் ஸ்வரூபத்தால் ஒரு ரூபனாகவும், 10 ரூபங்களாகவும், 3 ரூபங்களாகவும் பிரித்து அவற்றில் இருக்கிறான். மேலும், பிரம்மாதி அனைத்து சேதனர்களின் இதயத்தில் ஏக ரூபனாக இருந்து, அத்யாத்மாதிகளில் மூன்று ரூபங்கள், தச பிராணரில் தச ரூபங்களாக இருக்கிறான் என்கிறார். இப்போது, 1, 10, 3 என்னும் இந்த ஸ்தானங்களில், ஒவ்வொன்றிலும் அனேக ரூபங்களை சிந்திக்க வேண்டும் என்று சொல்கிறார்.

பிரம்மாதி சேதர்களின் இதயங்களில் இருக்கும் ரூபம் 1.
அத்யாத்மாதி மூன்றில் அச்யுதாதி மூன்று ரூபங்கள்
இவற்றை எண்ணிக்கையின்படி பார்த்தால், கிடைக்கும் ரூபங்கள், 10,326 ரூபங்கள். அது எப்படியெனில்:

பெயர் - எண்ணிக்கை - மொத்தம் - வலதிலிருந்து பார்த்தால்

ஏகாத்ம - ஏ=11 கா=1 த்+ம=6 1116 6111
அச்யுத அ=1 ச்+யு=1+1=2, த=1 121 121
அனந்த அ=1 ந=5 ம்=0 த=1 1501 1051
கோவிந்த கோ=3 வி=4 ந்=0 த=3 3503 3053
மொத்த பகவத் ரூபங்கள் : 10,326

இப்படி 5 ஸ்தானங்களில் மொத்தம் 10,326 ரூபங்களை ஞானிகள் சிந்திக்க வேண்டும். மேலும், தச பிராணர்களில் எண்ணிக்கையை பார்த்தால், இவ்வளவு ரூபங்கள் இருக்கின்றன.

பிராண ப்+ரா=3 ண=5 35 53
அபான அ=1 பா=1 ந=5 115 511
வியான வ்+யா=5 ந=5 55 55
உதான உ=5 தா=3 ந=5 535 535
ஸமான ஸ=7 மா=5 ந=5 755 557
நாக நா=5 க=3 53 35
க்ருகள க்ரு=3 க=1 ள=9 319 913
கூர்ம கூ=1 ர்ம=7 17 71
தேவதத்த தே=3 வ=4 த=3 த்த=2 3432 2343
தனஞ்சய த=4 ந=5 ம்=0 ஜ=3 ய=1 45031 13054

இப்படி, பிராணாதி 10 ஸ்தானங்களின் ரூபங்கள் : 18127 ரூபங்களில் இருந்துகொண்டு, பிராண, அபான முதலான பெயர்களாலேயே அறியப்படுகிறான்.

**சித்தயிஸுவுது$^{3}$ எண்ட$^{1}$தி$^{4}$க இ**
**ப்பத்து ஸாவிர நால்கு$^{1}$ஷத$^{1}$ தை$^{3}$**
**வத்த$^{1}$மூரு ஸுமூர்த்திக$^{3}$ளு அஹவல்லி பரியந்த$^{1}$ |**
**ஹத்து நாலகு ரூபக$^{3}$ள நெனெ**
**யுத்த அவனீப$^{1}$ரி தி$^{1}$ளிது$^{3}$ புரு**
**ஷோத்தமன சர்வத்ர பூஜெயமாடு$^{3}$ கொண்டா$^{3}$டு$^{3}$ ||11**

சித்தயிசுவுது = இது கேட்கத் தகுந்தது
யெண்டதிக இப்பத்து சாவிர நால்குஷத தைவத்தமூரு சுமூர்த்திகளு = 8000+20,000+400+53 = 28,453 மூர்த்திகள்
இல்லி பர்யந்த = ஏகாத்ம, அத்யாத்மாதி த்ரய, பிராணாதி தஷ ரூபங்கள் என இது வரை
அஹவு = இருக்கிறது
நால்கு ரூபகளனெரெ = அத்யாத்மாதி 3, இதயத்தில் இருக்கும் ரூபம் 1, என மொத்தம் 4 ரூபங்களின் சம்பந்தமான
வித்தரமனு = விளக்கத்தை
ஈ பரி = இப்படியாக
திளிது = அறிந்து
புருஷோத்தமன = புருஷோத்தமனை பரமாத்மனை
சர்வத்ர = எல்லா இடங்களிலும்
பூஜெயமாடு கொண்டாடு = பூஜித்துக் கொண்டாடு.

மேற்சொன்ன பத்யத்தில் இருக்கும் 14 ஸ்தானங்களிலும் இருக்கும் பகவத்ரூபங்களை சிந்திக்க வேண்டும் என்று சொல்கிறார் தாசராயர். அனைவரின் இதயத்தில் இருக்கும் ரூபம் 1. அத்யாத்மாதி ரூபங்கள் 3. என இந்த நான்கு ரூபங்களில் உள்ள 10326 ரூபங்கள், தசபிராணர்களில் இருக்கும் ரூபங்கள் 18127 என மொத்தம் 28,453 என மேற்சொன்ன 14 ஸ்தானங்களில் மொத்தம் 28,453 ரூபங்களின் விளக்கத்தை அறிந்து, அனைத்து இடங்களிலும் பரமாத்மனை பூஜிக்க வேண்டும், மகிழ்ச்சி அடையவேண்டும் என்பது பொருள்.

**ஈரெரடு$^{3}$ஷத$^{1}$ த்யஷ்டதி$^{4}$க ஹதி$^{3}$**
**நாருஸாவிர ரூப ஸர்வ ஷ**
**ரீரதொ$^{3}$ளு ஷப்தா$^{3}$தி$^{3}$க$^{3}$ள தி$^{4}$ஷ்டானதொ$^{3}$ளகி$^{3}$ப்ப |**
**மாருத$^{1}$ர நாகா$^{3}$தி$^{3}$ ரூப$^{1}$தி$^{3}$**
**மூரனெ கு$^{3}$ணமானி ஸ்ரீது$^{3}$**
**ர்கா$^{3}$ ரமண வித்$^{4}$யா கு$^{1}$மோஹவ கொ$^{1}$டு$^{3}$வ க$^{1}$ரணக்கெ ||12**

மாருதனு = வாயுதேவர்
நாகாதிரூபதி = நாக முதலான உபவாயு ரூபமாக
ஸர்வ ஷரீரதொளு = அனைத்து பிராணிகளின் சரீரத்தில் இருந்து
ஷப்தாதிகள = ஷப்த, ஸ்பர்ஷாதி தன்மாத்ரா குணங்களின்
அதிஷ்டானதொளகெ = சன்னிதானத்தில் (அவர்களில்)

ஈரெரடு ஷத த்யஷ்டதிக ஹதினாரு சாவிர ரூப = (2*2*100 = 400) + 16 + 16,000 = 16416 ரூபங்கள்
இப்ப = இருக்கிறான்
மூரனெ குணமானி = மூன்றாம் குணமான தமோ குணத்தின் அபிமானியான
ஸ்ரீதுர்கா ரமண = ஸ்ரீதுர்காபதியான (மேற்சொன்ன வாயுரூபங்களின் அதிஷ்டானங்களில் இருந்துகொண்டு)
கரணக்கெ = இந்திரியங்களுக்கு
குமோஹவ = அஞ்ஞானாதி மோகங்களைக் கொடுக்கிறான்.

தேகத்தில், தசபிராணர்களை சிந்திக்க வேண்டுமென்று சொல்கிறார். இதில் ‘பிராணாபான விக்யாஞ்ச பிங்களாயாஞ்ச சர்வஷ:’ என்னும் வாக்கியத்திற்கேற்ப இளா, பிங்களா, முதலான நாடிகளில் பிராண அபானாதி வாயுகள் இருக்கிறார்கள் என்னும் விஷயம் முன்னால் சொல்லப்பட்டிருக்கிறது. நாகாதி உபபிராணர்கள் இந்த சரீரத்தில் எங்கு இருக்கிறார்கள் என்று சொல்லியிருக்கவில்லை. இந்த பத்யத்தினால் அவற்றை மேலும் விளக்குகிறார்.

நாக நா=5 க=3 53 35
க்ருகள க்ரு=3 க=1 ள=9 319 913
கூர்ம கூ=1 ர்ம=7 17 71
தேவதத்த தே=3 வ=4 த=3 த்த=2 3432 2343
தனஞ்சய த=4 ந=5 ஞ்=0 ஜ=3 ய=1 45031 13054

மொத்தம் : 16416 ரூபங்கள்

இப்படியாக 16416 நாகாதி பிராணங்களில், தமோ குணாபிமானி ஸ்ரீதுர்காதேவியின் பதியான பரமாத்மன் இருந்து தாமசர்களின் ஷப்தாதி மாத்ரா குணங்களுக்கு காரணமான தாமிஸ்ர, அந்ததாமிஸ்ர, மஹாமோஹ, மோஹ, தமஸ் என்னும் அஞ்ஞானங்களில் அவர்களை ஈடுபடுத்துகிறான்.

**ஐத$^{3}$வித்யெக$^{3}$ளொளகெ$^{3}$ இஹ நா**
**கா$^{3}$தி$^{3}$க$^{3}$ ளதி$^{4}$ஷ்டானத$^{3}$லி லகு$^{1}$**
**மீத$^{4}$வனு க்ருத்$^{3}$தோ$^{3}$ல்க$^{1}$ மொத$^{3}$லாதை$^{3}$து$^{3}$ ரூபக$^{3}$ள |**
**தா த$^{4}$ரிஸி சஜ்ஜனர வித்$^{3}$யெய**
**ச்சேதிஸுவ தாமஸரி க$^{3}$க்ஞா**
**நாதிக$^{3}$ள கொட்டவரவர ஸாத$^{4}$னவ மாடி$^{3}$ஸுவ ||13**

ஐதுவித்யெகளொளகெ = தர்க, வ்யாகரண, மீமாம்ஸ, சாந்தஸ, அலங்காரம் என்னும் 5 வித்யைகளுக்குள்
இஹ = இருக்கும்
நாகாதிகள = நாகாதி பஞ்சபிராணர்களின்
அதிஷ்டானதலி = அந்தர்யாமியாக
லகுமீதவனு = லட்சுமிபதி

க்ருத்தோல்க மொதலாத = க்ருத்தோல்க, மஹோல்க, வீரோல்க, த்யுல்க, ஸஹஸ்ரோல்க என்னும்
ஐது ரூபகள = ஐந்து ரூபங்களை
தா = தான்
தரிஸி = ஸ்வீகரித்து
சஜ்ஜனர அவித்யெய = சஜ்ஜனர்களின் தவறான ஞானங்களை
சேதிஸுவ = பரிகரிக்கும்
தாமஸரிகெ = தாமசர்களுக்கு
அஞ்ஞானாதிகள = அஞ்ஞானாதிகளை
கொட்டு = கொடுத்து
அவரவர = முக்தி யோக்ய, தமோ யோக்யர்களின் தகுதிக்கேற்ப
ஸாதனவ = சாதனையை
மாடிஸுவ = செய்விக்கிறான்.

முந்தைய பத்யத்தில் நாகாதி பஞ்சப்ராணர் அனைத்து மக்களின் ஷப்தாதிகளில் இருக்கிறார்கள் என்று சொல்லி, இவர்களின் அந்தர்யாமி பரமாத்மன், அயோக்யர்களில் தமோபிமானி துர்காபதி ரூபனாக இருந்து, அன்யதா ஞானத்தை (தவறான ஞானத்தை) கொடுக்கிறான் என்றார். அடுத்து, அதே நாகாதி பிராணரின் அந்தர்யாமியாகி சஜ்ஜனர்களில் பரமாத்மன் என்ன செய்கிறான் என்று சொல்கிறார்.

அயோக்கியர்கள் 5 விதமான கெட்ட விஷயங்களில் மனதை செலுத்துமாறு செய்து, சஜ்ஜனர்கள் தர்க்க, வ்யாகரண, மீமாம்ஸ, சந்தஸ், அலங்காரம் என்னும் பஞ்சவித்யைகளை கற்றவர்களாக செய்து, நாகாதி பஞ்சபிராணர்களுக்குள் ஸ்ரீலட்சுமிபதி, க்ருத்தோல்க, மஹோல்க, வீரோல்க, த்யுல்க, ஸஹஸ்ரோல்க என்னும் 5 ரூபங்களால் இருந்து, அவரவர்களின் தகுதிக்கேற்ப, அதாவது முக்தி யோக்யர்களுக்கு முக்தி சாதனையை செய்விக்கிறான். தமோ யோக்கியர்களுக்கு தமஸ் சாதனையையும், மத்யமர்களுக்கு மிஸ்ர லோகத்தின் ஸாதனையை செய்விக்கிறான்.

**கோ$^3$வுக$^3$ளொளுத்கீ$^3$த$^4$னிஹ ப்ர**
**ஸ்தா$^1$வ ஹீங்கா$^1$ரரெடு$^3$ ரூப$^1$தி$^3$**
**ஆவி அஜக$^3$ளொளிஹனு ப்ரதிஹாராஹ்வ ஹயக$^3$ளொளு |**
**ஜீவனப்ரத$^3$ நித$^4$ன மனுஜரொ**
**ளீவித$^3$தொ$^3$ளிக$^3$ பஞ்ச ஸாமவ**
**ஜாவ ஜாவகெ$^1$ நெனெவரிகெ$^3$ ஐதி$^3$ஸனு ஜனுமக$^3$ள ||14**

கோவுகளொளு = பசுக்களில்
உத்கீதனு = உத்கீத நாமக பரமாத்மன்
இஹ = இருக்கிறான்
ப்ரஸ்தாவ = ப்ரஸ்தாவ நாமகன்
ஹிங்கார = ஹிங்கார நாமகன்
எரடு ரூபதலி = இந்த இரு ரூபங்களால்

ஆவியஜகளொளு = செம்மறி ஆடுகளில் மற்றும் ஆடுகளில்
இஹனு = இருக்கிறான்
ஹயகளொளு = குதிரைகளில்
ப்ரதிஹாராஹ்வய = ப்ரதிஹார நாமகன் (இருக்கிறான்)
ஜீவனப்ரத = வாழ்க்கையைக் கொடுத்து அருளும் ஸ்ரீபரமாத்மன்
நிதன = நிதன நாமகனாகி
மனுஜரொளு = மனிதர்களில் இருக்கிறான்
ஈ விததலி = இப்படியாக
இஹ = இருக்கும்
பஞ்சஸாமவ = சாமவேதத்தால் புகழப்படுபவனான இந்த 5 ரூபங்களை
ஜாவ ஜாவகெ = ஒவ்வொரு நாழிகையிலும் (எப்போதும்)
நெனெவரிகெ = நினைப்பவர்களுக்கு
ஜனுமகள = பிறவிகளை
ஐதிஸனு = கொடுக்க மாட்டான் (மறுபிறவி இல்லாமல் செய்வான்).

சத்கதியைக் கொடுப்பவனாகையால், பசுக்களில் உத்கீத என்னும் பெயரைக் கொண்ட பரமாத்மன் இருக்கிறான். உத்கீத போன்ற பெயர்களின் குறியீடு என்னவென்று சாமவேதத்தை அத்யயனம் செய்பவர் அறிந்திருக்கிறார். உத்கீத, ப்ரஸ்தாவ, ஹிங்கார, ப்ரதிஹார, நிதன என்று சாமகானம் 5 விதங்களைக் கொண்டிருக்கிறது. இந்த ஐந்தில், நாராயண, வாசுதேவாதி 5 ரூபங்களால் பரமாத்மன் இருக்கிறான். இந்த ரூபங்களை யக்ஞ சாதனமான பஞ்ச பசுக்களில் சிந்திக்க வேண்டும்.

பசுக்களில் உத்கீத நாம நாராயண ரூபத்தை சிந்திக்க வேண்டும். செம்மறி ஆடுகளில் மற்றும் ஆடுகளில் அதே பெயரில், அதே ரூபமாக பரமாத்மன் இருக்கிறான். அவற்றில் முறையே பிரஸ்தாவ நாமக வாசுதேவ ரூபத்தையும், ஹிங்கார நாமக சங்கர்ஷண ரூபத்தையும் சிந்திக்க வேண்டும். குதிரைகளில் அதே ரூப அதே பெயரில் இருக்கிறான். அவற்றில் ப்ரதிஹார நாமகனாக ப்ரத்யும்ன ரூபியான ஸ்ரீபரமாத்மன் இருக்கிறான்.

உலகைக் காப்பவனான ஸ்ரீபரமாத்மன், மனிதர்களில் அதே ரூபத்தில், அந்த பெயரில் இருக்கிறான். அவர்களில் நிதன நாமக அனிருத்த ரூபத்தை நினைக்க வேண்டும். இப்படியான 5 ரூபங்களை ஒவ்வொரு கணமும் சிந்திப்பவர்களுக்கு, மறுபிறவி வராமல் அருள்கிறான்.

தாசராயர் சொல்லாமல் விட்ட நாராயண வாசுதேவாதி ரூபங்களின் சிந்தனை எதற்கு செய்யவேண்டும் என்று கேட்கலாம். நாராயணாதி ரூபியான பரமாத்மன் உத்கீதாதி சொற்களால் புகழப்படுகிறான் என்று சந்தோக்ய உபநிஷத் பாஷ்யத்தில் ஸ்ரீமதாசார்யர் சொல்லியிருக்கிறார். இதில் 2ம் அத்தியாயம், 6ம் கண்டத்தில்:

பஷுஷு பஞ்சவிதஞ் ஸாமோபாஸீதாஜாஹிங்காரோ஽வய: |

ப்ரஸ்தாவோகாவ உத்கீதோsஷ்வா: ப்ரதிஹார: புருஷோனிதனம் பவந்திஹாஸ்யபஷவ:
பஷுமான்பவதிய ஏததேவம் விர்த்வா பஷுஷுபஞ்சவிதஞ் ஸாமோபாஸ்தே ||

பசுக்களில் 5 வித சாமத்தை நினைக்க வேண்டும் என்று தாசராயர் இந்த பத்யத்தில் சொல்லிய அர்த்தத்தை சொல்லி, இறுதியில் 5 வித சாமவேதத்தால் புகழப்படும் 5 ரூபங்களை யார் நினைக்கிறானோ, அவன் பசுவந்தன் ஆகிறான் என்று சொல்லியிருக்கிறார். அதாவது, பசு நாமக பரமாத்மனை அடைகிறான் என்று பொருள். இந்த உபநிஷத் பாஷ்யத்தில்,

ஸாதுத்வாத்ஸாம நாமானம் ஸமஸ்த குணபூர்ணத: |
ஸமஸ்தம்ய உபாஸீத நாராயண மனாமயம் ||
ஸர்வஸாம்னாம் தேவதேதி ஸமுக்த: ஸாதுதர்ம பாகிதி ஸாமஸம்ஹிதாயாம் ||
நாராயணாக்ய உத்கீத: உத்கீய: ப்ரணவேனயத் ||
உத்கச்சந்தி யதோஸ்மாத்வ வாஸுதேவாதி மூர்த்தய: |
ப்ரதமாவதார ரூபத்வாத்வாசுதேவ: பர:புர்மா ||
ப்ரஸ்தவோ நிதனஞ்சாபி ஸங்கர்ஷண: உதாஹ்ருத: |
சங்கர்ஷணோஹி சங்கர்த்தா ப்ரத்யும்ன: பரமேஷ்வர: ||
ஹிங்கார இதி ஸம்ப்ரோக்தோ ஹீதிஸ்ருஷ்டிருதீர்யதே ||
ப்ரஸித்த தாஹிஸ்ருஷ்டி: ஸ்யாதனிருத்த: பரோவிபு: |
ப்ரதீஹார இதிப்ரோக்த: ஸஹிகார்யேஷ்டிதம் ஜகத் |
ப்ரதிப்ரதிஹரேன்மித்யம் மூர்த்திப்ரதிஹ்ருதேஸ்ததா |
பாலனாத்ஸுக காரித்வாத் பஷு நாமா ஜனார்த்தன |
முக்தஸ்தர்த்வா பவத்யேவ பஷு உபாஸகோ ஹரீரிதிச |
யக்ஞேனாஞ்சன ஹேதுத்வாத்தஜிஸ்தோ பகவானஜ: |
அவிஸ்தஸ்த்வ விரேபோக்த: ஊர்ணயா ஷீததோsவனாத் |
கௌஷ்சஸக்கதி ஹேதுத்வாத்கோஸ்த: ஸபுருஷோத்தம ||
அஸ்வஸ்ஸைவாஷு கந்த்ருத்வாத்புருஷ: பூர்த்திஹேதுத இதி ச |
அஜா இத்யாதி பஹுவசனம் பஹுரூபத்வாத்தகவத: ||6

இவற்றின் பொருள் என்னவெனில்:

சமஸ்த குண சம்பூர்ணனாகையாலும், ஸாது ஆகையாலும், பரமாத்மனுக்கு சாம என்று பெயர். இப்படி அனைத்து சாமங்களால் புகழப்படுபவனும், அல்லது அனைத்து நாமங்களும் பரமாத்மனுடையதே என்று யார் உபாசனை செய்கிறார்களோ, அவன் முக்தியை அடைகிறான் என்று சாமஸம்ஹிதையில் சொல்லியிருக்கிறார்கள். ஸ்ரீநாராயணன், ப்ரணவ மந்திரத்தால் அறியப்படுபவன் என்பதாலும், அல்லது, நாராயண ரூபத்தினாலேயே வாசுதேவாதி மூர்த்திகள் பிறந்திருப்பதால், உத்கீத என்றும் அழைக்கப்படுகிறான்.

* முதலாம் அவதார ரூபமாகையால், வாசுதேவனுக்கு பிரஸ்தாவ என்று பெயர்.
* சம்ஹாரத்தை செய்பவன் ஆகையால், நிதன என்று சங்கர்ஷணனுக்குப் பெயர்.

* பரமேஸ்வரன் ஆகையால், ப்ரத்யும்னன்.
* ஹி என்றால் ஸ்ருஷ்டி என்று பொருள். ஸ்ருஷ்டி செய்பவன் ஆகையால், ஹிங்கார என்று ப்ரத்யும்னனுக்கு பெயர். * உத்தமரான பிரம்மாதிகளுக்கு தலைவன் ஆகையால், அனிருத்தன் என்று பெயர்.
* ஒவ்வொரு செயல்களிலும் இந்த உலகத்தை தவிர்ப்பனாகையால், பரமாத்மனுக்கு ப்ரதிஹார என்றும், அனிருத்தன் என்றும் பெயர்.
* உலகத்தை காப்பவன் ஆகையால், சுக-கரன் ஆகையாலும், ஜனார்த்தனனுக்கு பஷு என்று பெயர்.
* பஷுவந்தன் ஆகிறான் என்றால், முக்தனாகி, பஷு நாமக பரமாத்மனை சேர்கிறான் என்று பொருள்.
* யக்ஞத்திற்கு பயன்படும் பொருட்களாக இருப்பவனாகையால், அஜ என்று, ஆடுகளில் இருக்கும் பரமாத்மனுக்கு பெயர்.

* ஆவி என்றால் செம்மறி ஆடு. அவற்றில் இருக்கும் பரமாத்மனுக்கும் ஆவி என்று பெயர்.
* செம்மறி ஆட்டின் மயிர்களால் ஆகும் தாவளி, சால்வை, ஆகியவற்றால் குளிரிலிருந்து காப்பாற்றுகிறான் ஆகையால், பரமாத்மனுக்கு ஆவி என்று பெயர்.
* சத்கதிக்கு காரணனாகையால், பசுக்களுக்கு உள்ளே இருக்கும் பரமாத்மனுக்கு கோ என்று பெயர்.

* ஆஷுகந்தா = வேகமாக போகிறவன் ஆகையால் அஸ்வ என்று அஸ்வத்திற்குள் இருக்கும் பரமாத்மனுக்கு பெயர் உண்டு.
* அனைத்தையும் முடித்து வைப்பதற்கு காரணனாகையால், பரமாத்மனுக்கு புருஷ என்று பெயர்.

இத்தகைய ஆதாரங்களை மனதில் வைத்தே, தாசராயர் பசுக்களில் பஞ்சசாமத்தை உபாசனை செய்யவேண்டும் என்று கூறுகிறார்.

**யுக[3]சதுஷ்டயக[3]ளலி தா[1]னி**
**த்யுக[3] ப்ரவர்த்தக த[4]ர்மக[1]ர்மக[3]**
**ளிகெ[3] ப்ரவர்த்த[1]க[1] வாஸுதே[3]வாதீ[3]ரெரடு[3] ரூப**
**தெ[1]கெ[3]து[3] கொண்டு[3] யுகா[3]திக்ருது தா**
**யுக[3]ப்ரவர்த்தக நெனிஸி த[4]ர்ம**
**ப்ரகடகனு தானாகி[3] ப[4]குதரிகீ[3]வ ஸம்பத[3]வ ||15**

யுகசதுஷ்டயகளலி = க்ருத, த்ரேதா, த்வாபர, கலியுக என்னும் 4 யுகங்களில்
தானித்து = தானே இருந்து
யுக ப்ரவர்த்தக = யுக யுகாதிகளில் நடைபெற வேண்டிய தர்ம கர்மங்களை செய்பவனாக
தர்ம கர்மகளிகெ = அந்த தர்ம கர்மங்களுக்கு
ப்ரவர்த்தக = காரணனாக
வாசுதேவாதி = வாசுதேவ, சங்கர்ஷண, ப்ரத்யும்ன, அனிருத்த என்னும்

ஈரெரடு ரூப = நான்கு ரூபங்களை
தெகெது கொண்டு = தரித்து
யுகாதிக்ருத் = யுகாதிக்ருத் என்னும் பெயரில்
யுகப்ரவர்த்தக = யுகத்திற்கு காரணமானவன் என்றும்
எனிஸி = பெயரைப் பெற்று
தர்ம ப்ரகடகனு = அந்தந்த காலத்தில் இருந்த மக்களால் அந்தந்த தர்மங்களை செய்விப்பவன்
தானாகி = செய்விப்பவனாக
சம்பதவ = செல்வத்தை. ஞானாதி ஈஸ்வர சம்பந்தமான செல்வங்களை.
பகுதரிகீவ = பக்தர்களுக்குக் கொடுக்கிறான்

க்ருத, த்ரேதா, த்வாபர, கலி என்னும் 4 யுகங்களில், வாசுதேவ, சங்கர்ஷண, ப்ரத்யும்ன, அனிருத்த என்னும் ரூபங்களால் இருந்து ‘யுகாதிக்ருத் யுகாவர்த்தோ’ என்று சொல்வதைப் போல, யுகாதிக்ருத் என்னும் பெயராலும், க்ருத யுகத்திற்குப் பிறகு, த்ரேதா, அதன் பிறகு த்வாபர என அடுத்தடுத்து யுகங்களை தொடங்கி வைப்பவன் ஆகையால் யுகாவர்த்தன் என்றும், யுகப்ரவர்த்தகன் என்றும் பெயரைப் பெற்று அந்தந்த யுக தர்மங்களை, கர்மங்களை, அந்தந்த மக்களில் உள் இருந்து செய்து, செய்வித்து, தன் பக்தர்களிடமிருந்து யுகத்திற்கேற்ப நற்காரியங்களை செய்வித்து, செல்வங்கள் மட்டுமல்லாது, ஐஸ்வர்யம் என்னும் ஈஸ்வர சம்பந்தமான ஞானாதிகளைக் கொடுத்து அருள்கிறான்.

**தலெயொளிஹ நாராயணனு க$^{3}$**
**ண்ட$^{1}$லடி$^{3}$ ஒட$^{3}$லொளு வாஸுதேவனு**
**ப$^{3}$லத$^{3}$லிஹ ப்ரத்$^{3}$யும்ன எட$^{3}$பா$^{4}$க தொளக$^{3}$னிருத்த$^{4}$ |**
**கெ$^{1}$ளகினங்கதி$^{3}$ ஸங்கருஷணன**
**திளிது$^{3}$ ஈபரி ஸகலதேஹக$^{3}$**
**ளொளகெ$^{3}$ பஞ்சாத்மக$^{1}$ன ரூபவ நோடு$^{3}$ கொண்டா$^{3}$டு$^{3}$ ||16**

தலெயொளு நாராயணனு = தலையில் நாராயணன் இருக்கிறான்
கண்டலெடெ = கழுத்தின் கீழ்
ஒடலொளு = வயிற்றில்
வாசுதேவன்,
பலதலி = உடம்பின் வலது பாகத்தில்
இஹ பிரத்யும்ன = பிரத்யும்னன் இருக்கிறான்
எடபாக = உடம்பின் இடது பாகத்தில்
அனிருத்த = அனிருத்தன் இருக்கிறான்
கெளகினந்ததி = கால் முதலான உடம்பின் கீழ் பாகங்களில்
சங்கர்ஷணன = சங்கர்ஷணன் இருக்கிறான்
திளிது ஈபரி = இப்படியாக அறிந்து
சகலதேஹகளொளகெ = உடம்பின் அனைத்து பாகங்களிலும்
பஞ்சாத்மகன ரூபவ = நாராயண வாசுதேவாதி 5 வ்யூஹ ரூபங்களை
நோடு = சிந்தித்து

கொண்டாடு = ஸ்தோத்திரம் செய்

16,17 இந்த இரு பத்யங்களிலும் நம் சரீரத்தில், நாராயணாதி பஞ்சரூபங்களை சிந்திக்கும் விதங்களையும், அதன் பலன்களையும் விளக்குகிறார்.

தலையில் நாராயணன், கழுத்திலிருந்து வயிறு வரைக்குமான உடம்பில் வாசுதேவன், வலது பாகத்தில் பிரத்யும்னன், இடது பாகத்தில் அனிருத்தன், வயிற்றின் கீழ் பாகத்தில் சங்கர்ஷணன், என நம் சரீரத்தில் பஞ்சாத்மகனான ஸ்ரீபரமாத்மன், நாராயணாதி 5 ரூபங்களில் வசிக்கிறான் என்று அறிந்து, சிந்தித்து, ஸ்தோத்திரம் செய்யவேண்டும்.

**தனுவிஸிஷ்டதி$^{3}$யிப்ப நாரா**
**யணனு க$^{1}$டி$^{1}$ பாதா$^{3}$ந்த$^{1}$ ஸங்கரு**
**ஷணனு ஷிர ஜக$^{4}$னாந்த$^{1}$வாகி$^{3}$ஹ வாஸுதே$^{3}$வாக்$^{2}$ய |**
**அனிமிஸேஷனிருத்த$^{4}$ ப்ரத்$^{3}$யு**
**ம்னன எட$^{3}$தி ப$^{3}$லபா$^{4}$க$^{3}$த$^{3}$லி சி**
**ந்தனெய மாள்ப$^{1}$ரிகு$^{3}$ண்டெ$^{1}$ மைலிகெ$^{3}$ விதி$^{4}$ நிஷேத$^{4}$க$^{3}$ளு ||17**

தனுவிசிஷ்டதி = அனைத்து சரீரங்களிலும், அதாவது, இந்த தேகத்தில் முழுமையாக
இப்ப நாராயணனு = நாராயணன் இருக்கிறான்
கடிபாதாந்த சங்கர்ஷணன் = வயிற்றிலிருந்து பாதங்கள் வரை சங்கர்ஷணன் இருக்கிறான்
ஷிரஜகனாந்தவாகி = தலை முதல் வயிற்றிலிருந்து நாபி வரைக்கும்
வாசுதேவ நாமகனு இஹ = வாசுதேவன் வியாபித்திருக்கிறான்
அனிமிசேஷ = தேவேஷனான
அனிருத்த = அனிருத்தன்
பிரத்யும்ன யடதி = இடது பக்கத்தில் அனிருத்தனையும்
பலபாகதலி = வலது பக்கத்தில் பிரத்யும்னனையும்
சிந்தனெய மாள்பரிகெ = சிந்திப்பவர்களுக்கு
மைலிகெ விதி நிஷேதகளு = விழுப்பு, விதிமீறல்கள் போன்ற தோஷங்கள் இருக்கிறதா? (இல்லை என்று அர்த்தம்).

நாராயணன், தன் அகண்ட ரூபத்தினால், நம் தேகம் முழுமையாக வியாபித்திருக்கிறான். மேலும், கண்ட ரூபத்தினால் வயிற்றிலிருந்து கீழ் பாகத்தில் பாதம் வரைக்கும் சங்கர்ஷண, வயிற்றிலிருந்து மேல் பாகத்தில் தலை வரைக்கும் வாசுதேவ மூர்த்தியாக, இடது, வலது பாகங்களில் தேவேஷனான அனிருத்த, பிரத்யும்னர்கள் இருக்கிறார்கள் என்று சிந்திப்பவர்களுக்கு, விழுப்போ, விதிமீறல்களுக்காக வரும் தோஷங்களோ வருவதில்லை.

தாசராயர் இப்படி சொல்லியதால், அனைவரும் ஸ்னான, நித்ய கர்மானுஷ்டானங்களை விட்டுவிட வேண்டும் என்பதில்லை. உண்ணக்கூடாததை உண்டால், செய்யக்கூடாதவற்றை செய்தால் பாவங்கள் வராது என்று ப்ரஷ்டன்

(நீசன்) ஆகவேண்டியதில்லை. அது ஏனெனில், இதே ஸ்ரீஜகன்னாததாசர் இயற்றிய இன்னொரு பதத்தில்

ஸோசித கர்மகளாசரிஸுத, பலு நீசரல்லிகெ போகி யாசிஸதெ
கேசரவாத சராசர பந்தக மோசக நஹுதெந்து யோசிஸு திப்புதே -
பலவிது பாள்துதக்கே

என்றிருக்கிறார். இந்த பத்யங்களைப் பார்த்தால், ஸ்வ தர்மத்திற்கேற்ப கர்மங்களை செய்யவேண்டும் என்று ஒரு பதத்தில் சொல்லி, இன்னொரு இடத்தில், விதிமீறல்களால் பாவங்கள் வருவதில்லை என்றால் கர்மங்களே செய்யவேண்டியதில்லை என்றும் சொல்கிறாரே என்றால் அது சரியல்ல. இதைத்தவிர, கீதையில் :

யஸ்த்விந்த்ரியாணி மனஸா நியம்யாரபதேர்ஜுன |
கர்மேந்த்ரியை: கர்மயோக மஸக்த: ஸவிஷிஷ்யதே ||
நிரந்தர குரு கர்மத்வம் கர்மஜ்யாயோஹ்ய கர்மண ||

இப்படியான பற்பல ஆதாரங்களால், நித்யகர்மானுஷ்டாங்களை செய்தே ஆகவேண்டும் என்றும், விதிமீறல்களை செய்யவே கூடாதென்றும் புரிகிறது. அதாவது, நமக்குத் தெரிந்து (சுய சிந்தனையுடன்), செய்யக்கூடாதவற்றை செய்யக்கூடாது என்று அர்த்தம்.

நாம் மெய்மறந்து நாமஸ்மரணையில் ஈடுபட்டிருக்கும்போதோ, ஆனந்தத்தில் ஆடிப்பாடி தேவர நாமாக்களை பாடிக்கொண்டிருக்கும்போது, நமக்கே தெரியாமல் பிராணிகளை இம்சித்துவிட்டாலோ, கிருமி, பூச்சிகளை மிதித்துவிட்டாலோ, பகவத்ரூபங்களை சிந்தித்திருக்கும் நம்மை அந்த பாவங்கள் அண்டாது.

விதிக்கு உட்பட்ட செயல்களே ஆனாலும் ‘பூர்வாம் ஸந்த்யாம் ஸ நக்ஷத்ராம்’ என அந்தந்த காலங்களில் செய்யவேண்டிய செயல்களை நாம் பரமாத்மனை வணங்கியவாறு இருந்ததால், அந்த காலங்களில் செய்யாமல் விட்டுவிட்டால், அதற்கான தோஷங்கள் நமக்குக் கிடையாது என்று பொருள். ஸ்னானாதிகளை செய்து, மெய்மறந்து பரமாத்மனை பஜித்துக் கொண்டிருக்கும்போது, நாய், பூனைகளோ, யாராவது சிறுவர்களோ நம்மைத் தொட்டுவிட்டாலும், அந்த விழுப்பில் நாம் பஜிப்பது சரியல்ல என்று சந்தேகப்படாமல் மேலும் சிறிது காலம் வரைக்கும் பஜிக்கலாம். பஜனைகளை செய்யும்போது அந்த விழுப்புகள் நம்மை அண்டாது என்று நினைக்க வேண்டுமே தவிர, ஸ்னான சந்தியாவினை விட்டாலும் தோஷம் இல்லை என்றும், செய்யக்கூடாத செயல்களை செய்தாலும் கூட நமக்கு தோஷங்கள் இல்லை என்றும் நினைக்கக்கூடாது.

**பது3மனாப4னு பா1ணியொளகி3ஹ**
**வத3னத3லி ஹ்ருஷிகே1ஷ நாஸிக1**
**ஸத3னத3லி ஸ்ரீத4ரனு ஜிஹ்வெயொளிப்ப வாமனனு |**
**ம்ருது3ல த்வக்3தே3ஷதி3 த்ரிவிக்ரமனு**

**மது[4] விரோதி[4]யு லோசனதி[3] க**
**ர்ணத[3]லி இப்பனு விஷ்ணு நாமக ஸ்ரவணனெந்தெ[3]னிஸி ||18**

பதுபனாபனு = பத்பனாப மூர்த்தி
பாணியொளகெ = கைகளில்
இஹ = இருக்கிறான்
வதனதலி ஹ்ருஷிகேஷ = முகத்தில் ஹ்ருஷிகேஷனும்
நாஸிக சதனதலி ஸ்ரீதரனு = மூக்கு என்னும் குகையில் ஸ்ரீதரன்
ஜிஹ்வெயொளிப்ப வாமனனு = நாக்கினில் வாமனன் இருக்கிறான்
ம்ருதுளத்வக்தேஷதி = மிருதுவான த்வக் இந்திரியத்தில்
த்ரிவிக்ரமனு = த்ரிவிக்ரம மூர்த்தி
நேத்ரதி மதுஹ = கண்களில் மதுசூதனன்
கரணதலி விஷ்ணு நாமக = காதுகளில், விஷ்ணு நாமக பகவந்தன்
ஸ்ரவணனெந்தெனிஸி = ஸ்ரவண நாமகனாக

இந்த பத்யத்திலிருந்து துவங்கி, 21ம் பத்யம் வரைக்கும், 24 தத்வங்களில் கேசவாதி 24 மூர்த்திகளை சிந்திக்கும் விதங்களை சொல்கிறார் தாசராயர்.

இரு கைகளில் பத்பனாப மூர்த்தி;
முகத்தில் ஹ்ருஷிகேஷ;
ப்ராணேந்திரியத்தில் ஸ்ரீதர;
நாக்கினில் வாமன;
த்வக் இந்திரியத்தில் த்ரிவிக்ரம;
கண்களில் மதுசூதனன்;
காதுகளில் விஷ்ணு ரூபத்தையும் சிந்திக்க வேண்டும்.

**மனதொ[3]ளிஹ கோவிந்த[3] மாத[4]வ**
**க[4]னபஸக[2] த[1]த்வத[3]லி நாரா**
**யண மஹத்த[1]த்வதொ[3]ளு அவ்யக்ததொ[3]ளு கே[1]ஷவனு |**
**இனிது[1] ரூப[1]வ தே[3]ஹதொ[3]ளு சி**
**ந்த[1]னெயகை[3]வ மஹாத்மரிளெயொளு**
**மனுஜரல்லவரமரரெ ஸரி ஹரிக்[1]ருபா[1]ப[3]லதி[3] ||19**

மனதொளிஹ கோவிந்த = மனதில் கோவிந்தன் இருக்கிறான்
மாதவ = மாதவ,
கனபசக = குபேரனின் சகனான ருத்ரதேவரின்
தத்வதலி = அஹங்கார தத்வத்தில்
நாரயண மஹத்தத்வதலி = மஹத் தத்வத்தில் நாராயணன்
அவ்யக்ததலி கேசவனு = அவ்யக்த தத்வத்தில் கேசவன்
இனிது ரூபவ = இந்த விதமாக பகவத்ரூபங்களை
தேஹதொளு = நம் தேகத்தில்
சிந்தனெயகைவ = சிந்திக்கும்

மஹாத்மரிளெயொளு = மஹாத்மர்கள், பூமியில்
மனுஜரல்ல = சாதாரண மனிதர்கள் என்று அவர்களை சொல்லக்கூடாது
ஹரிக்ருபாபலதி = பரமாத்மனின் க்ருபா பலத்தினால்
அவர்கள்,
அமரரே சரி = தேவதைகளே ஆவார்கள்.

மனஸ் தத்வத்தில் கோவிந்தனையும்;
அஹங்கார தத்வத்தில் மாதவனையும்;
மஹத் தத்வத்தில் நாராயனனையும்;
அவ்யக்த தத்வத்தில் கேசவனையும்; என சிந்திக்க வேண்டும்.
இந்த விதமாக தேகத்தில் ரூபங்களை சிந்திப்பவர்கள், சாதாரண மனிதர்கள் அல்ல. இவர்களை பகவத் கிருபைகளைக் கொண்ட தேவாம்சர்கள் என்றே அறியவேண்டும்.

**நெலதொ[3]ளிப்ப[1]னு க்ருஷ்ணரூப[1]தி[3]**
**ஜலதொ[3]ளிப்ப[1]னு ஹரியெனிஸி ஷிகி[2]**
**யொளகெ[3] இப்ப[1]னு பரஸுராமனுபேந்த்[3]ர னெந்தெ[3]னிஸி |**
**எலரொளிப்ப ஜனார்த்த[3]னனு பா[3]**
**ந்த[3]ள தொ[3]ளச்யுத[1] க[3]ந்த[4] நரஹரி**
**பொளெவதோ[4]க்ஷஜ ரஸக[3]ளொளு ரஸரூப தா[1]னாகி[3] ||20**

நெலதலி = ப்ருத்வியில்
க்ருஷ்ணரூபதி = கிருஷ்ண ரூபத்தினால்
இப்பனு = இருக்கிறான்
ஜலதொளு = அபு தத்வத்தில் (தண்ணீர்)
ஹரியெனிஸி = ஹரி நாமகனாக
நிப்பனு = இருக்கிறான்
ஷிகிவளகெ = அக்னியில் (தேஜஸ்ஸில்)
பரசுராமனு உபேந்திர நெந்தெனிஸி = உபேந்திர நாமகனாக
யலரொளு = வாயு தத்வத்தில்
ஜனார்த்தனனு = ஜனார்த்தனன் இருக்கிறான்
பாந்தளதொளு = ஆகாஷத்தில்
அச்யுத = அச்யுதன் இருக்கிறான்
கந்த = கந்த குணத்தில்
நரஹரி = நரஹரி ரூபி
ரஸகளொளு = ரச குணங்களில் ரச ரூபமாக
அதோக்ஷஜ = அதோக்ஷஜன்
பொளெவ = ஒளிரூபமாக இருக்கிறான்.

பஞ்சமஹா பூதங்களிலும், தன்மாத்ரா குணங்களிலும், மலமூத்ர இந்திரியங்களிலும், சிந்திக்க வேண்டிய பகவத் ரூபங்களை இந்த & அடுத்த பத்யங்களில் தெரிவிக்கிறார் தாசராயர்.

ப்ருத்வியில் கிருஷ்ண ரூபத்தையும்;
தண்ணீரில் ஹரியையும்;
அக்னியில் (தேஜஸ்ஸில்) பரசுராமன், உபேந்திர நாமகனையும்;
வாயு தத்வத்தில் ஜனார்த்தனரூபியையும்;
ஆகாஷத்தில் அச்யுதரூபியையும்;
என பஞ்சமஹா பூதங்களில் பகவந்தன் இருக்கிறான் மற்றும்

தன்மாத்ரா குணங்களில்,
கந்தத்தில் நரசிம்ஹ ரூபத்தையும்;
ரஸத்தில் அதோக்ஷஜனையும்; சிந்திக்க வேண்டும்.

**ரூப$^{1}$ புருஷோத்த$^{1}$மனு ஸ்பர்ஷ**
**ப்ராபக$^{1}$னு அனிருத்த$^{3}$ ஷப்த$^{3}$தி$^{3}$**
**வியாபிஸிஹ ப்ரத்$^{3}$யும்ன்யுபஸ்த$^{4}$தி$^{3}$ வாஸுதே$^{3}$வனிஹ |**
**தா$^{1}$ பொ$^{1}$ளெவ பா$^{1}$யுஸ்த$^{2}$னாகி$^{3}$ ஜ**
**யாப$^{1}$தி$^{1}$யு ஸங்கர்ஷணனு ஸு**
**ஸ்தா$^{2}$பக$^{1}$னெனிஸி பாத$^{3}$தொ$^{3}$ளு தா$^{3}$மோத$^{3}$ரனு பொ$^{1}$ளெவ ||21**

ரூப = ரூபகுணத்தில்
புருஷோத்தமன் = புருஷோத்தம ரூபி
ஸ்பர்ஷ ப்ராபகனு = ஸ்பர்ஷ குணத்தின் காரியத்தை செய்பவன்
அனிருத்த = அனிருத்தன்
ஷப்ததி = ஷப்த குணத்தில்
ப்ரத்யும்ன = ப்ரத்யும்ன ரூபி
வ்யாபிஸிஹ = வியாபித்திருக்கிறான்
உபஸ்ததி = உபஸ்த இந்திரியத்தில் வாசுதேவன்
பாயுஸ்தனாகி = குண இந்திரியங்களில்
ஜயாபதியு = ஜயா நாமகளான லட்சுமிதேவியின் பதியான சங்கர்ஷணன்
தா = தான்
பொளெவ = ஒளிர்கிறான்
பாததொளு = பாதங்களில்
தாமோதரனு = தாமோதரரூபி
ஆஹ = ஸ்திரமாக இருந்து
பொளெவ = ஒளிர்கிறான்

ரூபத்தில் புருஷோத்தமனும்;
ஸ்பர்ஷ குணத்தில் அனிருத்தனும்;
ஷப்த குணத்தில் ப்ரத்யும்னனும் ; இருக்கின்றனர்.
உபஸ்த இந்திரியத்தில் வாசுதேவனும்;
குணத்தில் சங்கர்ஷணனும்;
பாதங்களில் தாமோதரனும்; வியாபித்திருக்கின்றனர் என்று சிந்திக்க வேண்டும்.

**சதுரவிம்ஷதி த1த்வதொ3ளு ஶ்ரீ**
**ப1தி1யு அனிருத்தா3தி3 ரூபதி3**
**வித1த1னாகி3த்த3கி2ல ஜீவர ஸம்ஹனனதொ3ளகெ3 |**
**வ்ரத1தி1யந்த3தி3 ஸூத்து1ஸூத்து1த1**
**பித்ருக3ளிகெ3 த1ர்ப1க1னெனிஸி கொ**
**ண்ட3துல மஹிமனு ஷண்ணவதி நாமத3லி நெலெஸிஹனு ||22**

ஶ்ரீபதியு = லட்சுமிபதி
சதுரவிம்சதி தத்வதொளு = 24 தத்வங்களில்
அனிருத்தாதி ரூபதி = அனிருத்த, ப்ரத்யும்ன, சங்கர்ஷண, வாசுதேவ என்னும் ரூபங்களால்
விததனாகித்து = நிலைத்திருந்து
அகிளஜீவர = அனைத்து ஜீவர்களின்
சம்ஹனனதொளகெ = தேகத்தில்
ப்ரததியந்ததி = கொடிகளைப் போல
ஸூத்திசுத்துத = படர்ந்துகொண்டு
பித்ருகளிகெ = அவரவர்களின் பித்ரு பிதாமகர்களுக்கு
தர்பகனெனிஸி கொண்டு = அவரவர்கள் செய்யும் சிரார்த்தாதிகளால் திருப்தியடைபவன் என்று சொல்லிக்கொண்டு
அதுள மஹிமனு = சமமில்லாத மகிமையுள்ளவன்
ஷண்ணவதி நாமதலி = 96 சிரார்த்தங்களின் நாமங்களால்
நெலஸிஹனு = நிலைத்திருக்கிறான்.

முந்தைய பத்யங்களால் 24 தத்வங்களில் ஒவ்வொரு தத்வங்களிலும் இருக்கும் பகவத் ரூபங்களை தனித்தனியாக சொல்லி, இந்த பத்யங்களிலிருந்து 24 தத்வங்களில் ஒவ்வொரு தத்வத்திலும் அனிருத்தாதி 4 ரூபங்கள் என, மொத்தம் 96 ரூபங்களில் இருந்துகொண்டு, ஶ்ரீபரமாத்மன் பித்ருகளை திருப்திப்படுத்துகிறான் என்று சொல்கிறார்.

யாருமே தனக்கு சமம் இல்லாதவனான, மகா மகிமைகளைக் கொண்டவன் ஶ்ரீலட்சுமிபதி என்கிறார். அதுளமகிமன் என்னும் பதத்திற்கு ஶ்ரீபதி 96 என்னும் குறியீடு சரியாகப் பொருந்துகிறது. அதாவது, ஶ்ரீபதி, லட்சுமிபதியாக இருப்பதாலேயே, அதுளமஹிமன் என்று பொருள்.

அது எப்படியெனில்: த்வாதஸ ஸ்தோத்திரம் 7ம் அத்தியாயத்தில், ஶ்ரீலட்சுமியின் மகிமைகள் வர்ணிக்கப்படுகின்றன. அதில் ஒரு ஸ்லோகத்தை மட்டும் பார்க்கலாம்.

பிரம்மேஷ ஷக்ர ரவிதர்ம ஷஷாங்க பூர்வ கீர்வாண சந்ததிரியம் யதபாங்க லேஷம் |
ஆஶ்ரீத்ய விஷ்வவிஜயம் விததாத்ய சிந்த்யா ஶ்ரீயத்கடாக்ஷ பலவத்யஜிதம் நமாமி ||

பிரம்ம, ருத்ர, இந்திர, சூர்ய, யம, சந்திர ஆகிய தேவதாகணம் எந்த ஸ்ரீலட்சுமியின் அதி அல்பமான, கடைக்கண் பார்வையில் பிரசாதத்தினேலேயே, இந்த பிரபஞ்சத்தில் வெற்றியைப் பெறுகிறார்களோ, அந்த லட்சுமி, எந்த ஸ்ரீபரமாத்மனின் கடாட்சத்தினால் அவள் பலம் பெறுகிறாளோ, அத்தகைய அஜிதனான ஸ்ரீபரமாத்மனை வணங்குகிறேன் என்று ஸ்ரீமத்வாசார்யர் சொல்கிறார்.

மேலும் 'யம் காமயேதந்தம்' என்னும் ஸ்ருதி, லட்சுமிதேவியின் மகிமையை சொல்கிறது. இத்தகைய லட்சுமிதேவியின் பதி என்று சொன்னபிறகு, அவருக்கு சமமானவர்கள் வேறு யார் இருக்கமுடியும்? ஆகையாலேயே, தாசராயர், ஸ்ரீபதி என்னும் சொல்லை, அதுளமகிமன் என்னும் சொல்லைக் கொண்டு விளக்குகிறார். 24 தத்வங்களில், ஒவ்வொரு தத்வத்தில் அனிருத்தாதி 4 ரூபங்கள் இருந்து, மொத்தம் 96 ரூபங்களால் மரங்களை, கொடிகள் எப்படி சுற்றிப் படர்ந்திருக்கிறதோ அது போல, இந்த மனுஷ்யாதிகளின் சரீரத்தில், சுற்றிக்கொண்டு, 96 ஸ்ரார்த்தங்களை செய்வித்து (96 ஸ்ரார்த்தங்களின் பெயர்களை விவரத்தை முன்னர் 4ம் சந்தி, 23ம் பத்யத்தில் கொடுத்திருக்கிறோம்), தன்னுடைய நாமங்களாலும் அவற்றில் இருந்து, இந்த மனிதர்களின் பித்ரு, பிதாமஹ, ப்ரபிதாமஹாதிகளை, ததபிமானிகளான வசுகண, ருத்ரகண, ஆதித்யகணங்களையும் திருப்திப்படுத்துகிறான்.

**சதுரவிம்ஷதி த[1]த்வதொ[3]ளு த**
**த்பதிக[3] ளெனிஸுவ பி[3]ரம்மமுக[2] தே[3]**
**வதெ[1]க[3]ளொளு ஹன்னொந்து[3] னூரைவத்தெ[1]ரடு[3] ரூப[1] ।**
**வித[1]த[1]னாகி[3]த்தெ[3]ல்ல ஜீவர**
**ஜத[1]ன மாடு[3]வகோ[3]ஸுக[2] ஜக[3]**
**த்ப[1]தி[1]கெ[3] ஏனாத[3]ரு ப்ரயோஜனவில்ல வத[3]ரிந்த[3] ||23**

சதுரவிம்சதி தத்வதொளு = 24 தத்வங்களில்
தத்பதிகளெனிஸுவ = தத்வாபிமானிகள் என்று பெயர் பெற்றிருக்கும்
பிரம்மமுக தேவதெகளொளு = பிரம்மன் முதலான தேவதைகளில்
ஹன்னொந்து நூரைவத்தெரடு ரூப = 1152 ரூபங்கள்
விததனாகித்து = வியாப்தனாக இருந்து
யல்லஜீவர = அனைத்து ஜீவர்களை
ஜதனமாடுவ = ரக்ஷணை செய்யும்
ஜகத்பதிகெ = இந்த பரமாத்மனுக்கு (இப்படி அனைவரையும் காப்பதினால்)
ஏனாதரு = ஏதாவது
பிரயோஜனவில்ல = பிரயோஜனம் இல்லை.

இந்த பத்யத்தினால், 24 தத்வங்களிலும், தத்வாபிமானி தேவதைகளிலும் இருக்கும் மொத்த பகவத்ரூபங்களையும் சொல்லியவாறு, தனக்கு எவ்வித பலனும் இல்லாமலேயே, உலகத்தைக் காக்கிறான் என்று பகவந்தனின் மகிமையை சொல்கிறார்.

24 தத்வங்களிலும், அந்த தத்வாபிமானி தேவதைகளான பிரம்ம முதலான தேவதைகளின் உள் மொத்தம் 1152 ரூபங்களால் ஸ்ரீஹரி வியாப்தனாக இருக்கிறான். அது எப்படியெனில்: தத்வங்கள் 24, மனஸ், புத்தி முதலான ஒவ்வொரு தத்வத்திலும் ஸந்த்ருப்த தத்வங்கள் என்று 24 தத்வகுணங்கள் சேர்ந்திருக்கின்றன. இந்த இரண்டையும் பெருக்கினால், 24*24 = 576 ஆகிறது. இதைப்போல, தத்வாபிமானி தேவதைகள் 24 ஒவ்வொரு தேவதைகளிலும் தனித்தனியாக 24 தத்வாபிமானிகள். இங்கும் 24*24 = 576. இந்த இரண்டையும் சேர்த்தால் 576+576 = 1152 ஆகிறது.

இவ்வளவு ரூபங்களால் வியாபித்திருந்து, அனைத்து ஜீவர்களையும் பாதுகாக்கிறார். ஆனால், ஜகத்பதியான பரமாத்மனுக்கு இதனால் ஏதாவது பலன் இருக்கிறதா? ஒன்றும் இல்லை. ‘தேவஸ்யேஷ ஸ்வபாவோயம் ஆப்தகாமஸ்ய காஸ்ப்ருஹா’ ஸ்ரீபரமாத்மனுக்கு இந்த உலகத்தைக் காக்கும் விஷயமானது, ஒரு விளையாட்டைப் போல, ஸ்வபாவமே தவிர, பூர்ணகாமனான ஸ்வாமிக்கு இதனால் ஆவது என்ன? என்னும் ஸ்ருதி வாக்கியங்கள் இதற்கு ஆதாரங்களாக இருக்கின்றன. (இந்த விஷயம் மங்களாசரண சந்தியில் விளக்கப்பட்டிருக்கிறது).

**இந்தி$^3$ராத$^4$வ ஷக்திமொத$^3$லா**
**தொந்த$^3$தி$^4$க த$^3$ஷ ரூபதி$^3$ந்த$^3$லி**
**பொந்தி$^3$ஹனு ஸக$^1$லேந்தி$^3$ரியக$^3$ளலி புருஷனாமக$^1$னு |**
**ஸுந்த$^3$ரப்ரத$^3$ பூர்ணஞானா**
**நந்த$^3$மய சித்தே$^3$ஹதொ$^3$ளு தா$^1$**
**நொந்த$^3$ரேக்ஷண அக$^3$லத$^3$லெ பரமாப்தனாகி$^3$ப்ப$^1$ ||24**

இந்திராதவ = லட்சுமிபதி
சக்திமொதலாத = லட்சுமி முதலான
ஒந்ததிக தஷ ரூபதிந்தலி = 11 ரூபங்களால்
சகலேந்த்ரியகளலி = அனைத்து இந்திரியங்களிலும்
பொந்திஹனு = வியாபித்திருக்கிறான்
சுந்தரப்ரத = அழகான ரூபங்களாகட்டும்
பூர்ணஞானானந்தமய = பூர்ணமான ஆனந்தத்தைக் கொண்டிருக்கும்
புருஷ நாமகனு = புருஷ நாமக ஸ்ரீபரமாத்மன்
சித்தேஹதொளு = ஜீவனஸ்வரூப தேகத்தில்
தா = தான்
ஒந்தரக்ஷண = ஒரு அரைக் கணமும்
அகலதலெ = விட்டு அகலாமல்
பரமாப்தனாகி = ஜீவர்களுக்கு பரம ஆப்தனாக
இப்ப = இருக்கிறான்

ஸ்ரீலட்சுமிபதியான ஸ்ரீபரமாத்மன், ஜீவர்களின் கண், காது முதலான 10 இந்திரியங்கள் மற்றும் மனஸ் என்று 11 இந்திரியங்களில், ஷக்தி, ப்ரதிஷ்டா, சம்வித், ஸ்பூர்த்தி, ப்ரக்ருதி, கலா, வித்யா, மதி, நியதி, மாயா, கால என்னும் 11

ரூபங்களால் வியாபித்திருக்கிறான். மக்களுக்கு அழகான ரூபத்தையும், அல்லது அழகான வைகுண்டாதி லோகங்களை அவரவர்களின் தகுதிக்கேற்ப கொடுக்கும், பூர்ணஞானானந்தமயனான ஸ்ரீபுருஷ நாமகன், ஜீவர்களின் ஸ்வரூப தேகத்தில், ஒரு அரைக்கணமும்கூட அவர்களை விட்டு அகலாமல், அவர்களுக்கு பரம ஆப்தனாக இருப்பான்.

**ஆரதி$^{4}$க$^{1}$த$^{3}$ஷ ரூபதி$^{3}$ந்த$^{3}$லி**
**தோ$^{1}$ருதி$^{1}$ப்பனு விஷ்வ லிங்க$^{3}$ ஷ**
**ரீரதொ$^{3}$ளு தை$^{1}$ஜஸனு ப்ராக்$^{3}$ஞனு து$^{1}$ரிய நாமகனு ।**
**மூரயிது$^{3}$ ரூபக$^{3}$ள த$^{3}$ரிஸுத**
**ஈரயிது$^{3}$ கரணத$^{3}$லி மாத்ரதி$^{3}$**
**கே$^{2}$ர ஷிகி$^{2}$ ஜல பூ$^{4}$மியொளகி$^{3}$ஹனாத்ம நாமத$^{3}$லி ||25**

ஆரதிகதஷ ரூபதிந்ததலி = 16 ரூபங்களால்
விஷ்வலிங்க சரீரதொளு = 16 கலைகளால் கூடிய, மூன்று குணங்களால் கூடிய, லிங்க சரீரத்தில்
தோருதிப்பனு = ஞானிகளுக்குக் காண்பித்துக் கொள்கிறான்
(அதாவது, 16 ரூபங்களால் லிங்கதேகத்தில், 16 கலைகளால் கூடியவனாக இருக்கிறான் என்று பொருள். விஸ்வ நாமகனாக, லிங்கதேகத்தில், லிங்க சரீரத்தின் 16 கலைகளில், தைஜஸ, ப்ராக்ஞ, துரிய நாமகனாக இருக்கிறான்).
மூரயிது ரூபகள தரிசுத = மூன்று ரூபியான பரமாத்மன், ஒவ்வொரு ரூபத்தினாலும் அனிருத்தாதி ஐந்தைந்து ரூபங்களை தரித்து, அதாவது 3 * 5 = 15 ரூபங்களால்,
ஈரயிது கரணதலி = கண், காது முதலான 10 இந்திரியங்களில்
மாத்ரதி = ஷப்தாதி மாத்ர குணங்களாலான
கேர = க+ஈர = க-ஆகாஷ, ஈர-வாயு
ஷிகி = அக்னி
ஜல, பூமியொளு = ஆகாயம், வாயு, அக்னி, ஜல, பூமி என்னும் இந்த பஞ்ச பூதங்களில்
இஹ = இருக்கிறான் .
ஆத்ம நாமதலி = என்னும் சொல், அடுத்த பத்யத்துடன் சேர்த்து படிக்க வேண்டும்.

இந்த பத்யத்தில், லிங்க சரீரத்தில் இருக்கும் பகவத்ரூபங்களை சொல்கிறார். இந்த பரமாத்மன், 16 கலைகளால் கூடிய லிங்க சரீரத்தில், 16 ரூபங்களால் வியாப்தனாக இருக்கிறான் என்று சொல்கிறார். இதன் விவரமானது. லிங்க சரீரமானது, 16 கலைகளால் கூடியது. ஞானேந்திரியங்கள் 5, கர்மேந்திரியங்கள் 5, தன்மாத்ரா குணங்களால் ஆன பஞ்சபூதங்கள் 5, மனஸ் 1 என மொத்தம் 16. இவற்றில் பரமாத்மனின் 16 ரூபங்கள் எவை என்றால், முதலில் விஷ்வ என்னும் ரூபத்தால் லிங்க சரீரத்தில் இருக்கிறான். இது இல்லாமல், 16 கலைகளில், 16 ரூபங்கள் வெவ்வேறாக இருக்கின்றன. அவற்றின் விவரம்.

தைஜஸரூபியான பரமாத்மன், அனிருத்தாதி 5 ரூபங்களால் கர்மேந்திரியங்களிலும்,

துர்யரூபியான பரமாத்மன், அனிருத்தாதி 5 ரூபங்களால் பஞ்சபூதங்களிலும் இருக்கிறான்.

ஷப்த, ஸ்பர்ஷாதி குணங்கள், பஞ்சபூதங்களின் குணங்களே ஆனதால், வெவ்வேறாக எடுத்துக் கொள்ள வேண்டியதில்லை. இதில் விஷ்வ தைஜஸ ப்ராக்ஞ ரூபங்கள், ஜீவர்களுக்கு சத்வாதி குணங்களைக் கொடுப்பவர்களாக ஜாக்ர, ஸ்வப்ன, சுஷுப்திகளைக் கொடுக்கிறார்கள் மற்றும், துர்ய நாமகன் சரீரத்தைப் பாதுகாப்பவனாக இருக்கிறான் என்று பொருள். இந்த பத்யத்தில் மூரைது ரூபங்களை (15) மட்டுமே சொல்லியிருக்கிறார். ஆத்ம நாமதலி என்னும் சொல், அடுத்த பத்யத்தோடு சேர்த்து படிக்க வேண்டும்.

**மனதொ[3]ளு அஹங்கா[1]ரத[3]லி சி**
**ந்தனெய மாள்புது[3] அந்த[1]ராத்மன**
**க[4]னஸூத[1]த்வதி[3] பரமனவ்யக்த[1]த[3]லி ஞானாத்ம |**
**இனிது[1] பஞ்சாஷத்வரண வே**
**த்[3]யன அஜாத்[3]யைவத்து[1] மூர்த்திக[3]**
**ளனு ஸதா[3] ஸர்வத்ர தே[3]ஹக[3]ளல்லி பூ[1]ஜிபு[1]து[3] ||26**

ஆத்ம நாமதலி (முந்தைய பத்யத்திலிருந்து) : ஆத்ம நாமகனாக
மனதொளு = மனஸ் தத்வத்தில்
அஹங்காரதலி = அஹங்கார தத்வத்தில்
அந்தராத்மன = அந்தராத்ம ரூபத்தை
கனசுதத்வதி = மஹத் தத்வத்தில்
பரமன = பரமாத்மனை
அவ்யக்ததலி = அவ்யக்த தத்வத்தில்
ஞானாத்ம = ஞானாத்மனை
சிந்தனெய = சிந்தனையை
மாள்புது = செய்ய வேண்டும்
இனிது = இந்த விதமாக
பஞ்சாஷத்வர்ண வேத்யன = ஆகாஷாதி 10 எழுத்துக்களால் அறியப்படுபவனின்
அஜாத்யைவத்து மூர்த்திகளனு = அஜ, ஆனந்த ஆகிய 50 மூர்த்திகளை
ஸதா = சர்வ காலத்திலும்
சர்வத்ரதேஹத = எல்லா இடங்களிலும்
பூஜிபுது = பூஜிக்க வேண்டும்.

முந்தைய பத்யத்தில், லிங்க சரீரம் 16 கலைகளைக் கொண்டது என்றும், அதில் 15 கலைகளின் பகவத் ரூபங்களை சொல்லியிருந்தார். இப்போது மிச்ச ஒன்றான மனஸ் தத்வத்தையும், இதர தத்வங்களையும் சொல்லி, தேகங்களில் பகவத்ரூபங்களை பூஜிக்க வேண்டும் என்னும் விஷயத்தை சொல்கிறார்.

மனஸ் தத்வத்தில் ஆத்ம ரூபத்தையும்,
அஹங்கார தத்வத்தில் அந்தராத்ம ரூபத்தையும்,

மஹத் தத்வத்தில் பரமாத்ம ரூபத்தையும்,
அவ்யக்த தத்வத்தில் ஞானாத்ம ரூபத்தையும் சிந்திக்க வேண்டும்.

அ-காரம் முதல் க்ஷ-காரம் வரை மொத்தம் 51 எழுத்துகள். இந்த எழுத்துக்களுக்கான ரூபங்கள் தந்திரசாரத்தில் சொல்லப்பட்டுள்ளன. மாத்ருகான்யாசத்திலும் வருகிறது. அஜ, ஆனந்த, இந்திர, ஈஷான முதலான 51 ரூபங்களே இவை. ஆனால் இங்கு தாசராயர் 50 எழுத்துக்கள், 50 ரூபங்கள் என்று கூறுகிறார். 'ஏகபஞ்சாஷத் வர்ணானாம்' என்னும் ஆசார்யரின் வாக்கியத்தால் 51 என்று வருகிறது.

இதன் அர்த்தம் என்னவெனில், அ முதல் ள வரைக்குமான 50 எழுத்துக்கள், அ=அஜ, ஆ=ஆனந்த, இ=இந்திர என அந்தந்த எழுத்துக்களே ரூபங்களை சொல்கின்றன. க்ஷ என்னும் எழுத்துக்கு மட்டும் அதன் ரூபத்தை சொல்லாமல், நரசிம்ம ரூபியான பகவந்தன் அந்த எழுத்தைப் பிரதிபலிப்பவனாக இருக்கிறான். ஆகையால், தாசராயர், பஞ்சாஷத் வர்ண வேத்யன் என்றார். க்ஷம் நரசிம்ஹாய நம: என்று மாத்ருகா மந்திரத்தில் வருகிறது. இதிலிருந்து அறிய வேண்டிய விஷயம் என்னவெனில்:

'பஞ்சாஷத் வர்ணவேத்யனு' என்னும் தாசராயரின் வாக்கியத்தால் 50 எழுத்துக்களால் அறியப்படுபவன் என்று அர்த்தம் ஆகிறது. ஆகையால், அ முதல் ள வரைக்கும் ஆகும் 50 எழுத்துக்களின் நாமங்கள், க்ஷ எழுத்தின் பிரதிபாத்யனான நரசிம்மரூபியின் குணங்களையே சொல்கிறது என்று பொருள். அது எப்படியெனில், அஜ=படைத்தல் பற்றிய ஞானம். ஆ=ஆனந்த ஸ்வரூப. இந்திர = பரம ஐஸ்வர்ய ப்ரதன். ஆகிய பகவத்ரூபங்களை வெளிப்படுத்தும் ரூபங்கள் 50. வேத்யனு = அறியப்பட வேண்டியவன், ஸ்தோத்திரம் செய்பவன், செய்விப்பவன் அவனே ஒரு ரூபத்தால் தன் மகிமையை உபதேசம் செய்தவாறு, இன்னொரு ரூபத்தினால் புகழ்ந்தவாறும் இருப்பவன் பரமாத்மனே ஆகையால், வேத்யரூபமான க்ஷகார பிரதிபாத்ய நரசிம்மரூபத்தை வேறாக எடுத்துக் கொண்டிருப்பதால், ஆசார்யரின் வாக்கியத்திற்கும், தாசராயரின் பத்யத்திற்கும் வேறுபாடுகள் இல்லை.

க்ஷகார சொல்லின் நரசிம்ம சொல்லுக்கு புருஷோத்தமன் என்று பொருள். புருஷ ரூபமே அவதாரங்களுக்கு, பிரம்மாதிகளை ஸ்ருஷ்டிப்பதற்காக எடுத்த ரூபம். பாகவத முதலாம் ஸ்கந்தத்தில்:

ஜக்ருஹே பௌருஷம்ரூபம் பகவான்மஹதாதிபி: சம்பூதம் ஷோடஷகல மாதைலோக ஸிஸ்ருக்ஷயா |
யஸ்யம்பஸி ஷயானஸ்ய யோக நித்ராம் விதன்வத: |
நாபிஹ்ருதாம்பு ஜாதாஸீத்பிரம்மா விஷ்வ ஸ்ருஜாம்பதி: ||

ஸ்ரீபரமாத்மன், முதன்முதலில் உலகத்தைப் படைக்கும் முடிவுடன் மஹத் தத்வம், அஹங்கார தத்வம், பஞ்சபூதங்களால் கூடிய 16 கலைகளைக் கொண்ட புருஷ ரூபத்தை ஸ்ருஷ்டித்தார். அதாவது, பிரளய காலத்தில் சயனம் செய்யும் ரூபத்தையே புருஷ ரூபத்தினால் தோற்றுவித்தார். எந்த பரமாத்மன், பிரளய

தண்ணீரின் மேல் படுத்து, யோக நித்திரையை வெளிப்படுத்துகிறானோ, அந்த பரமாத்மனே பரம புருஷ ரூபத்தை வெளிப்படுத்துகிறான். அந்த பரமபுருஷ ரூபியான பரமாத்மனின் நாபி கமலத்திலிருந்தே பிரம்மதேவர் பிறந்தார் என்று கூறுகிறார்.

ஆகையால், பரமபுருஷ ரூபமே ஸ்ருஷ்டிக்கு காரணமான முதலாம் ரூபம். பரமபுருஷ என்னும் வாக்கியம் புருஷர்களில் சிறந்தவன் என்பதைக் குறிக்கிறது. அதுபோல, க்ஷ-க்ஷகாரம் குறிக்கும் நரசிம்ம சொல்லின் அர்த்தம், நர=புருஷ, சிம்ஹ=சிறந்தவன் என்பது. இந்த விதமாக 50 எழுத்துக்களால் புகழப்படுபவனான நரசிம்மன் என்று தாசராயரின் வாக்கியத்திற்கு, புகழும் ரூபங்கள் 50, புகழப்படும் ரூபம் 1 என மொத்தம் 51 ரூபங்களை அறியவேண்டும்.

இப்படி 51 எழுத்துக்களால் புகழப்படுபவனான பகவத்ரூபங்களை

அஜாய நம: முகே,
ஆனந்தாய நம: ஷிரஸி...

என்னும் மாத்ருகான்யாஸ கிரமத்தில் தேகத்தின் பாகங்களில் எப்போதும் நினைத்திருக்க வேண்டும் என்பது பொருள்.

**சதுரவிம்ஷதி த[1]த்வதொ[3]ளு தத்பதிக[3]**
**ளெனிஸுவ பி[3]ரம்மமுக[2] தே[3]**
**வதெக[3]ளொளு ஹதி[3]மூரு ஸாவிரதெ[3]ண்டு நூரதி[4]க[1] |**
**சதுரவிம்ஷதி ரூபதி[3]ந்த[3]லி**
**விததனாகி[3]த் தெ[3]ல்லரொளு ப்[1]ரா**
**க்ருத[1] புருஷனந்த[3]த[3]லி பஞ்சாத்மக[1]னு ரமிஸுவனு ||27**

சதுரவிம்ஷதி தத்வதொளு = 24 தத்வங்களில்
தத்பதிகளெனிஸுவ = தத்வாபிமானிகள் என்று அழைக்கப்படும்
பிரம்மமுக தேவதெகளு = பிரம்மரே முதலான தேவதைகளில்
ஹதிமூரு சாவிர தெண்டு நூரதிக சதுரவிம்சதி ரூபதிந்ததலி = 13,824 ரூபங்களால்
எல்லரொளு = அனைவரிலும்
விததனாகித்து = நிலைத்திருந்து
பஞ்சாத்மகனு = அனிருத்தாதி 5 ரூபாத்மகன்
ப்ராக்ருத புருஷனந்ததலி = சாமான்யமான புருஷர்களைப் போல
ரமிசுவனு = நடமாடுவான்

இந்த பத்யத்தில், ஸ்தூல சரீரத்தில் வியாபித்திருக்கும், இந்த சந்தியில் இதுவரை சொல்லியிருக்கும், அனைத்து பகவத்ரூபங்களையும், மறுபடி தொகுத்து சொல்லியிருக்கிறார். மொத்தம் 13,824 ரூபங்கள். எழுத்தின் எண்ணிக்கையின்படியே இவற்றை அறியவேண்டும்.

அவ்யக்த - 251

மஹத் - 185
தாமஸ - 751
மனஸ் - 755
பத்து இந்திரியங்களின் மொத்த எழுத்து எண்ணிக்கை : 2353
பஞ்சபூதங்களின் மொத்த எழுத்து எண்ணிக்கை - 1000
பஞ்சதன்மாத்ர மொத்த எழுத்து எண்ணிக்கை - 1080

மொத்தம் : 6365

ஆத்யாத்ம, ஆதிதெய்வ, ஆதிபூதங்களின் மொத்த எழுத்து எண்ணிக்கை - 4326

பத்து இந்திரியங்களில், ஒவ்வொன்றிலும் அனிருத்தாதி 5 ரூபங்கள் என, 30 ரூபங்களையும், ஆக : 10*30=300

இதைப் போல தஷ ப்ராணரில் ஒவ்வொருவரிலும் 30 ரூபங்கள், ஆக 10 பிராணர்களில், 10*30=300

24 தத்வங்களில் ஒவ்வொரு தத்வத்திலும் அ-காராதி 51 எழுத்துக்கள். 24 * 51 = 1224

க-முதல் க்ஷ-வ்ரை இருக்கும் எழுத்துக்கள் 35. இவை க, கா, கி, ... கம். க: என்று 13 எழுத்துக்களையும் கொண்டவை. இப்படி 35 எழுத்துக்களின் மொத்த எண்ணிக்கை : 35 * 13 = 420

க், ச், என மெய் எழுத்துக்களின் எண்ணிக்கை : 51

ஷக்தி பிரதிஷ்டா முதலான ரூபங்கள் : 12

அனைத்து தேகங்களிலும் இருக்கும் அனிருத்தாதி பஞ்சரூப : 5

ஆக மொத்தம் : 13,824 ரூபங்கள்.

பரமாத்மன், இவ்வளவு ரூபங்களால் அனைவரிலும் இருந்து அனிருத்தாதி ரூபங்களால், சாதாரண மனிதர்களைப் போல நடமாடுவான்.

**கேஷவாதி$^3$ ஸுமூர்த்தி த்$^3$வாத$^3$ஷ**
**மாஸ புண்ட்$^3$ரக$^3$ளல்லி வேத$^3$**
**வியாஸ அனிருத்தா5தி$^3$ ரூப$^1$க$^3$ளாரு ருது$^1$க$^3$ளலி |**
**வாஸவாகி$^3$ஹ வெந்து$^3$ த்ரிம்ஷதி$^1$**
**வாஸரதி$^3$ ஸத்க$^1$ர்ம த$^4$ர்ம நி**
**ராஷெயிந்த$^3$லி மாடு$^3$ க$^1$ருணவ பே$^3$டு$^3$ கொண்டா$^3$டு$^3$ ||28**

கேஷவாதி = கேஷவ முதலான
சுமூர்த்தி = தாமோதரன் வரைக்குமான 12 மூர்த்திகள்
த்வாதஸ மாஸ = மார்கசிர முதல் கார்த்திக வரைக்குமான 12 மாதங்கள்
புண்ட்ரகளலி = 12 ஊர்த்வ புண்ட்ர நாமங்களில்

ருதுகளில் = வசந்தாதி 6 ருதுக்களிலும்
வேதவியாசன், அனிருத்தாதி ரூபகளு = வேதவியாச + அனிருத்த முதலான 5 ரூபங்கள் = 6 ரூபங்கள்
வாஸவாகிஹவெந்து = வசிக்கிறான் என்பதை அறிந்து

த்ரிம்ஷதி வாஸதலி = 30 திதிகளில், நந்தா, பத்ரா, ஜயா, ரிக்தா, பூர்ணா என்னும் குறியீடுகள், பிரதமை முதல் பஞ்சமி வரை பொருந்துகிறது. இப்படியே ஷஷ்டி முதல் தசமி வரைக்கும், பின், ஏகாதசி முதல் பௌர்ணமி வரைக்கும், பின்னர் கிருஷ்ண பட்சத்தில் மூன்று முறையும் என, மொத்தம் 6 முறை வருகின்றன. 6*5=30 நாட்களில் நந்தாதி 5 திதிகளில், அனிருத்தாதி 5 மூர்த்திகள் என ஒரு மாசத்திற்கு 30 திதிகளில் அனிருத்தாதி 5 மூர்த்திகளையும், 6 முறை சிந்தித்தால், 30 மூர்த்திகள் ஆகின்றன. இந்த விதமாக 30 நாட்களில்,

நிராஷெயிந்தலி = காம்ய பலன்களை விரும்புவதை விட்டு
சத்கர்ம தர்ம = சத்கர்மங்களை, பாகவத தர்மங்களை
மாடு = செய்
கருணவ பேடு = காம்ய கர்மங்களை விரும்பாமல் / கேட்காமல், ஸ்வாமியின் கருணையை மட்டும் வேண்டு
கொண்டாடு = பரமாத்மனை ஸ்தோத்திரம் செய்.

நாம் தரிக்கும் 12 புண்ட்ரங்களில், 12 மாதங்களில், ருதுகளில், திதிகளில், சிந்திக்க வேண்டிய பகவத்ரூபங்களை இங்கு விவரிக்கிறார்.

மார்கசிரவில் துவங்கி கார்த்திக வரை, கேசவாதி தாமோதர வரைக்குமான 12 மூர்த்திகளை சிந்தித்து பூஜைகளை செய்யவேண்டும். தினந்தோறும் ஸ்னானாதி சங்கல்பம் சமயத்தில், வைஷாக மதுசூதன, கார்த்திக தாமோதர என சொல்ல வேண்டும். 12 புண்ட்ர நாமங்களில், 'லலாடே கேஷவம் த்யாயேன் நாராயணம் அதோதரே' என வாக்கியங்களைப் போல, கேசவாதி 12 மூர்த்திகளை சிந்திக்க வேண்டும். வசந்தாதி 6 ருதுக்களில் வேதவியாஸ, அனிருத்தாதி நாராயணா வரை 5. என மொத்தம் 6 ரூபங்களை தியானிக்க வேண்டும். பிரதமை முதல் பஞ்சமி வரை இருக்கும் நந்தாதி திதிகளில், அனிருத்தாதி 5 ரூபங்களை சிந்திக்க வேண்டும். நந்தாதி திதிகள் 6 முறை திரும்பத் திரும்ப வரும். அது போல, அனிருத்தாதி ரூபங்களை 6 முறை சிந்திக்க வேண்டும்.

இப்படி, 12 மாதங்களில், ருதுகளில், திதிகளில், பகவத் ரூபங்களை சிந்தித்து, பலன்களைப் பற்றிய ஆசையைத் துறந்து, சத்கர்மங்களான சத்யாதி கர்மங்களையும், முக்திக்கு வழியான தர்மங்களையும், விரத நியமங்களையும் செய்தவாறு, அவற்றை பரமாத்மனுக்கு சமர்ப்பித்தவாறு, பரமாத்மனின் கருணையை மட்டுமே வேண்டி, அவனை ஸ்தோத்திரம் செய்ய வேண்டும் என்பது பொருள்.

**லோஷ்டகா[1]ஞ்சன லோஹ ஷைலஜ**
**காஷ்ட மொத[3]லாத[3]கி[2]ல ஜட பர**

**மேஷ்டி மொத3லாதெ3ல்ல சேதனரொளகெ3 அனுதி3னவு |**
**சேஷ்டெக3ள மாடி3ஸுத1 திளிஸதெ3**
**ப்ரேஷ்டனாகி3த் தெ3ல்லரிகெ3 ஸ**
**ர்வேஷ்டதா3யக ஸந்தயிஸுவனு சர்வஜீவரனு ||29**

லோஷ்ட = களிமண்
காஞ்சன = தங்கம்
லோஹ = இரும்பு
ஷைலஜ = மலைகள், அதில் இருக்கும் கற்கள், பாறைகள் ஆகிய
காஷ்ட முந்தாத = மரக்கட்டைகள்
அகிளஜட = அனைத்து ஜடப் பொருட்களில்
பரமேஷ்டி முதலாத = பிரம்ம முதலான
எல்ல சேதனரொளகெ = அனைத்து சேதனர்களிலும்
அனுதினவு = தினந்தோறும்
சேஷ்டெகள = செயல்களை
மாடிசுத = செய்வித்தவாறு
திளிஸதெ = தான் செய்யும் செயல்கள் என்னவென்று யாருக்கும் தெரியாமல்
ப்ரேஷ்டனாகித்து = பிராணிகளுக்குப் ப்ரியனாக இருந்து
எல்லரிகெ = அனைவரின்
சர்வேஷ்ட தாயக = அனைத்து விருப்பங்களையும் நிறைவேற்றி
சர்வஜீவரன = அனைத்து பிராணிகளையும்
ஸந்தயிசுவனு = திருப்திப்படுத்துவான்.

ஜட, சேதனாதி அனைத்து பொருட்களின் செயல்கள், ஸ்ரீபரமாத்மனாலேயே நடக்கிறது என்று சிந்திக்க வேண்டும் என்று சொல்கிறார்.

இரும்பு, தங்கம், மலை, பாறைகள், கற்கள் ஆகிய அனைத்து ஜடப்பொருட்களிலும், பிரம்மாதி அனைத்து சேதனர்களிலும் இருந்து, தினந்தோறும் அவருக்கு தெரியாமலேயே, அனைத்து செயல்களையும் செய்து, செய்வித்தவாறு, அனைவருக்கும் ப்ரியனாக இருந்து, அவரவர்களின் விருப்பங்களை நிறைவேற்றியவாறு, அனைத்து ஜீவர்களையும் காப்பாற்றுவான்.

**வாஸுதே3வனிருத்த3 ரூபதி3 பும்ஷ**
**ரீர தொ3ளிஹனு ஸர்வத3**
**ஸ்த்ரீ ஷரீரதொ3ளிஹனு ஸங்கருஷணனு ப்ரத்3யும்ன |**
**த்3வாஸுபர்ணா ஸ்ருதி வினுத ஸ**
**ர்வாஸு நிலய நாராயணன ஸது3**
**பாஸனெய கை3வவரு ஜீவன்முக்தரெனிஸுவரு ||30**

வாசுதேவ அனிருத்த ரூபதி = வாசுதேவ, அனிருத்த என்னும் இரு ரூபங்களில்
பும்ஷரீரதொளு = புருஷர்களின் சரீரத்தில்
ஸர்வத = எப்போதும்

இஹனு = இருக்கிறான்
ஸ்த்ரீசரீரதொளு = பெண்களின் சரீரத்தில்
சங்கர்ஷணனு பிரத்யும்ன = சங்கர்ஷண, பிரத்யும்ன என்னும் இரு ரூபங்களில்
இஹனு = இருக்கிறான்
த்வாசுபர்ணா ஸ்ருதி வினுத = த்வாசுபர்ணா என்னும் ஸ்ருதியால் போற்றப்படும்
சர்வாசு நிலய = அனைவரின் பிராணனிலும் நிலைத்திருக்கும்
நாராயணன = ஸ்ரீமன் நாராயணனின்
சதுபாசனெய கைவவரு = பரமாத்மன் தன்னிலிருந்து வேறுபட்டவன், சர்வஸ்வதந்த்ரன், ஜீவன் அஸ்வதந்த்ரன் ஆகியவற்றை சிந்தித்து உபாசனையை செய்பவர்கள்
ஜீவன்முக்தர் = முக்தர்களாக இருந்தாலும், சத்யாதி லோகங்களில் முக்தர்களைப் போல சுகமாக இருப்பதால், ஜீவன் முக்தர் என்று
எனிஸுவரு = அழைக்கப்படுவர்.

ஸ்த்ரி புருஷர்களின் சரீரத்தில் வாசுதேவாதி பஞ்ச ரூபங்களை உபாசனை செய்யும் கிரமத்தை விளக்குகிறார்.

வாசுதேவ, அனிருத்த என்னும் இரு ரூபங்களால் ஸ்த்ரி, புருஷர்களின் சரீரத்தில் இருக்கிறான். ஸ்த்ரி சரீரத்தில், சங்கர்ஷண, ப்ரத்யும்ன என்னும் இரு ரூபங்களால் வசிக்கிறான். ஸ்ரீநாராயண ரூபத்தினால், அனைவரின் பிராணர்களில் வசிக்கிறான். இத்தகைய பரமாத்மனை, சதுபாசனை என்றால், ஜீவ பரமாத்ம பேத ஞானத்தைப் பெற்று, பரமாத்மனின் தாசன் தான் என்று உபாசனை செய்வது. ஜீவ பரமாத்மருக்கிடையே பரஸ்பர பேதத்தை சொல்லும்

த்வாசுபர்ணா சயுஜாசகாய: சமானம் வ்ருக்ஷம் பரிஷஸ்வஜாதே |
தயோரன்ய: பிப்பலம் ஸ்வாத்தத்தி அனஷ்னன்யோ அபிசாகஷீதி ||

இந்த ஸ்ருதியால் வணங்கப்படுகிறான் என்று கூறுகிறார் தாசராயர். இந்த ஸ்ருதி, ஜீவ பரமாத்மனின் பேதத்தை, தாரதம்யத்தைக் காட்டுகிறது என்னும் விஷயத்தில், பாகவத 10ம் ஸ்கந்தம், 11ம் அத்தியாயத்தில்

அதபத்தஸ்ய முக்தஸ்ய வைலக்ஷண்யம் வதாமிதே |
விருத்த தர்மிணோஸ்தாத ஸ்திதயோரேஷ தர்மிணி ||

இங்கிருக்கும் பத்தமுக்த என்னும் பதங்களுக்கு பத்தன் என்றால் ஜீவன் என்றும், முக்தன் என்றால் விஷ்ணு என்றும், விஜயத்வஜீயத்தில் வியாக்யானம் செய்து, அதற்கு ஆதாரமாக, பாகவத தாத்பர்யத்தில் ஸ்ரீமதாசார்யரின் வாக்கியத்தை உதாரணம் காட்டியிருப்பார். அது என்னவெனில்:

பத்தா ஜீவா இமேஸர்வே பூர்வபந்த ஸமன்வயாத் |
நித்யமுக்தஸ்தமோ விஷ்ணுர் முக்தா நாமாஸதோதித: ||
அபத்தத்வாத மோக்ஷோபி தீப்யதே ஸௌரவிர்யதா ||

ஜீவர்கள் முக்திக்கு செல்வதற்கு முன், பத்தராக இருந்து, பின்னர் பகவத் பிரசாதத்தினால் முக்தர் ஆகின்றனர். ஜீவர்கள் பத்தர்களாக இருப்பதால், அவர்களுக்கு பத்தர் என்றே பெயர். 'நமே மோக்ஷோன பந்தனம்' என்னும் பகவத் வாக்கியத்திற்கேற்ப, முக்தி என்பதற்கு, பந்தனத்திலிருந்து முக்தி என்று அர்த்தம் ஆகிறது. யார் பத்தரோ அவரே முக்தர் ஆகிறார். பரமாத்மனுக்கு பந்தனம் இல்லை; பின் முக்தி எங்கிருந்து வந்தது என்றால், சூரியனுக்கு சில காலம் பிரகாசம் உண்டு, சில காலம் இல்லை என்று எப்படி சொல்வதில்லையோ, அது போல, பரமாத்மன் நித்ய முக்தனாக இருப்பதால், பரமாத்மனுக்கு முக்தன் என்று பெயர் வந்திருக்கிறதே தவிர, அவருக்கு பந்தனத்திலிருந்து முக்தி என்று இல்லை.

சூரியன் எப்போதும் பிரகாசமானவனாகவே இருந்தாலும், கால தேசத்திற்கு ஏற்றவாறு, சில இடங்களில் அதிக வெப்பத்தையும், சில நாடுகளில் வெளிச்சம் குறைவாகவும் காணப்படுகிறான். அதாவது, மக்களுக்கு அதிக வெப்பம், குறைவான சூடு, மிதமான வெப்பம் எனத் தோன்றும். சில இடங்களில் சூர்ய அஸ்தமன காலத்திலேயே ஒளி இல்லாமல் ஆகிவிடும். உதயத்தில் வெளிச்சக் குறைவு, மதியத்தில் அதிக ஒளி என பலவிதமாக தோன்றுவது, தேச காலத்திற்கேற்ப இருப்பதே தவிர, சூரியனின் ஒளியில் எப்போதும் அதிகமோ குறைவோ இருப்பதில்லை.

அதுபோலவே, ஸ்ரீபரமாத்மன், ராம கிருஷ்ணாவதாரத்தில் 'வித்தவன் முக்தவச்சைவ கேஷவோ வேதனார்த்தவத்' என்னும் நிர்ணய வாக்கியத்திற்கேற்ப, அடி வாங்கியவனைப் போலவும், தனக்கு எதுவுமே தெரியாதவனைப் போல இருப்பதும், உலகத்தை ஏமாற்றுவதற்காகவே என்றும், பரமாத்மனுக்கு என்றைக்கும் பந்தனம் இல்லை என்றும் தெளிவாகக் கூறியிருக்கிறார். பந்தனமும் இல்லை; அதிலிருந்து முக்தியும் இல்லை. நித்ய முக்தன் ஆகையால், அவனுக்கு முக்தன் என்று பெயர் மட்டுமே.

**த$^{1}$ன்னனந்தானந்த ரூப ஹி**
**ரண்யக$^{3}$ர்பா$^{4}$திக$^{3}$ ளொளகெ$^{3}$ கா$^{1}$**
**ருண்யஸாக$^{3}$ர ஹரகி$^{3}$ அவரவரகி$^{2}$ல வியாபா$^{1}$ர |**
**பன்னபட$^{3}$தெலெ மாடி$^{3}$ மாடி$^{3}$ஸி**
**த$^{4}$ன்யரெனிஸி ஸமஸ்த தி$^{3}$விஜர**
**புண்யக$^{1}$ர்மவ ஸ்வீகரிஸி ப$^{2}$லவித்து பா$^{1}$லிஸுவ ||31**

தன்னனந்தானந்த ரூபவ = தன் அனந்தானந்த ரூபங்களை
ஹிரண்யகர்ப்பாதிகளொளகெ = பிரம்மாதி தேவதைகளுக்குள்
காருண்யசாகர = கருணைக் கடலான ஸ்ரீபரமாத்மன்
ஹரஹி = நிலைத்திருந்து
அவரவர = அவரவர்கள் செய்ய வேண்டிய
அகிலவ்யாபார = அனைத்து காரியங்களையும்
பன்னபடதெலெ = எந்தவித சோர்வும் இல்லாமல்
மாடி மாடிஸி = (தான் அவர்களுக்குள் இருந்துகொண்டு) செய்து, செய்வித்து

சமஸ்ததிவிஜர = அனைத்து தேவதைகளும் செய்யும்
புண்யகர்மவ = தைத்ய சம்ஹார, தன்னை ஆராதிப்பது ஆகிய புண்யகர்மங்களை
ஸ்வீகரிஸி = ஏற்றுக்கொண்டு
பலவித்து = இஹத்தில் போகங்களையும், பரத்தில் அவரவர்களின் தகுதிக்கேற்ப முக்திசுகங்களைக் கொடுத்து
பாலிஸுவ = காப்பாற்றுவான்.

ஸ்ரீபரமாத்மன் பக்தர்களில் பரமப்ரீதியை செய்கிறான் என்பதை, பக்தியோகிகள் எனப்படும், பக்தியில் சிறந்தவர்கள் எனப்படும் பிரம்மாதி தேவதைகளில் இருந்துகொண்டு எப்படி செயல்களை செய்கிறான் என்பதையும், ஸ்ரீபரமாத்மனின் கருணையையும் இந்த பதத்தில் விளக்குகிறார் தாசராயர்.

கருணைக்கடலான ஸ்ரீபரமாத்மன், தன் அனந்தானந்த ரூபங்களால் தத்வாபிமானிகளான பிரம்மாதி தேவதைகளில் இருந்துகொண்டு, 24 தத்வங்களில், தத்-பதிகளாக இருந்துகொண்டு, கண், காது ஆகியவற்றால் அனைத்து பிராணிகளும் செய்யவேண்டிய செயல்களை, பிரம்மாதி தத்வபதி தேவதைகளில் இருந்து, தான் செய்து, அவர்கள் மூலமாக செய்ய வைக்கிறான் என்று பொருள்.

சத்யலோக, ஸ்வர்க்க லோகாதிகளில் வசித்திருக்கும், பிரம்ம ருத்ர, இந்திராதி அனைத்து தேவதைகளில், அந்தந்த உருவத்தில், அந்தந்த பெயர்களில், அனந்தானந்த ரூபங்களால், அவர்களில் இருக்கிறான். எப்படியெனில், பிரம்ம தேவரில் 'பிரம்ம' என்னும் சொல்லின் எண்ணைப் பார்த்தால், ப்ர=5 ஹ்ம=13. இதனை வலது பக்கத்திலிருந்து பார்த்தால் 315 ரூபங்கள் ஆகிறது.

பிரம்மாந்தர்கத வாசுதேவ மூர்த்தி, இவரின் எண்ணிக்கை. வா=4 சு=7 தே=3 வ=4. இதை வலது பக்கத்திலிருந்து படித்தால், 4374 ரூபங்களாகிறது. இதன் மேல், பிரம்மாதிகளின் பாஞ்சபௌதிக சரீரங்களிலும், 24 தத்வங்கள், தத்பதி தேவதைகள், அவர்களில் மேற்சொன்ன விதத்தில், 13,824 ரூபங்கள். இதைப்போல, அவர்களில் இருக்கும் தத்வாபிமானி தேவதைகளில் ஒவ்வொரு தேவதையிலும் அவ்வளவு ரூபங்கள் உள்ளன. இப்படி தத்வாபிமானி தேவதைகளுக்கும் அனந்த ரூபங்களைக் கொடுத்து, தான் ருத்ராதி ஒவ்வொருவரிலும் அனந்தானந்த ரூபங்களில் இருந்து, அவரவர்கள் செய்ய வேண்டிய காரியங்களை அவர்களுக்குள் இருந்து தான் செய்கிறான். அதாவது, தத்வாபிமானிகளில் இருந்து தத்வ கார்யங்களை செய்விக்கிறான்.

பிரம்ம தேவருக்குள் இருந்து ஸ்ருஷ்டிக்கிறான். ருத்ரரில் இருந்து சம்ஹாரம் செய்கிறான். இந்திரரில் இருந்து ஸ்வர்க்கத்தை ஆண்டவாறு, துஷ்ட நிக்ரஹத்தை செய்து, 100 அஸ்வமேத யாகங்களை செய்கிறான். இந்த காரியங்களை அந்தர்யாமியாக இருந்து, தான் செய்து, அவர்கள் மூலமாகவும் செய்வித்து, ஸ்ருஷ்டி கர்த்தா பிரம்மா, சம்ஹார கர்த்தா ருத்ர, வ்ருத்ராசுரனைக் கொன்றவன் இந்திரன், 100 அஸ்வமேதங்களை செய்தான், ருத்ரர் த்ரிபுராசுரர்களை சம்ஹரித்தார் என்னும் பற்பல புகழினை அவர்களுக்குக் கொடுத்து, அவர்கள் செய்த புண்ய

கர்மங்களை தான் ஏற்று, இஹத்தில் அவர்களின் யோக்யதைக்கேற்ப பலன்களைக் கொடுத்து, முக்தியிலும், பிரம்மாதிகளுக்கு தாரதம்யத்திற்கேற்ப, மகிழ்ச்சியைக் கொடுக்கிறான்.

இப்படியாக, எந்தவித பிரதிபலன்களையும் எதிர்பார்க்காமல், இத்தகைய புகழையும், மகிழ்ச்சியையும் கொடுப்பவனாகையால், பரமாத்மன் கருணைக்கடல் ஆகிறான். இவ்வளவு செய்தாலும் பரமாத்மனுக்கு 'அகர்த்த' என்று பெயர் உண்டு. அது எப்படியெனில், 'அகர்த்தாsக்லிஷ்டகாரித்வாத்' எவ்வளவு செயல்களை செய்தாலும், கொஞ்சம்கூட அதில் சோர்வு இல்லாததால், இந்தப் பெயர். இதையே தாசராயர், பன்னபடதலெ என்னும் சொல்லால் குறிப்பிடுகிறார். சிரமம் இல்லாமல் செயல்களை செய்து செய்விக்கிறான் என்று பொருள்.

**ஸாக3ரதொா3ளிஹ நதி3ய ஜல பே4**
**தா3க3ஸதொா3ளிப்ப1ப்த3 ப3ல்லுது3**
**கா1கெ3 கு3ப்பி3க3ளரிய ப3ஹவெ நதி3ய ஜலஸ்தி2திய |**
**போ4கிவரப1ரியங்க1 ஷயனனொ**
**ளீகு3ணத்ரய ப3த்த4 ஜக3விஹு**
**தா3க3மக்3ஞரு திளிவரஞானிக3ளிக3ளவட3து3** ||32

சாகரதொளு = கடலில்
இஹ = இருக்கும்
நதியஜல = ஆற்று நீரின்
சேத = வேறுபாட்டினை
ஆகஸதொளு = ஆகாயத்தில்
இப்ப = பறக்கும்
அப்த = தண்ணீர் கொடுக்கும் மேகங்கள்
பல்லவு = அறியும்
காகி குப்பிகளு = காக்கை, குருவிகள்
நதியஜலச்சேத = கடலில் சேர்ந்த ஆற்றின் சுவையான நீரினை
அரியபல்லவெ = அறியுமோ?
போகிவர = சர்வஸ்ரேஷ்டனான சேஷதேவரே
பர்யங்க = படுக்கையாக்கிக் கொண்டிருக்கும்
ஷயனனொளு = படுத்திருக்கும் பரமாத்மனில்
ஈகுணத்ரயபத்த ஜகவு = சத்வ ரஜஸ் தமோ குணங்களுக்குக் கட்டுப்பட்ட இந்த பிரபஞ்சம்
இஹவு = இருப்பதை
ஆகமஜ்ஜரு = மத்வ சாஸ்திரத்தை நன்றாக அறிந்தவர்கள் அறிவார்கள்
அஞ்ஞாகளிகெ அளவடரு = அஞ்ஞானிகள் அறியமாட்டார்கள்.

த்வைத மத சித்தாந்தங்களை நன்றாக அறிந்தவர்களுக்கு மட்டுமே மேற்சொன்ன பேத ஞானம் சாத்தியமே தவிர, மற்றவர்களுக்கு புரிவதற்கு சாத்தியமில்லை என்னும் விஷயத்தை சொல்கிறார் தாசராயர். கடலில் கங்காதி நதிகள்

சேர்ந்திருப்பதை, ஆகாயத்தில் பறக்கும் மேகக்கூட்டங்கள் மட்டுமே வேறுபடுத்திப் பார்க்கும். அந்த நீரைக் குடிக்கும் காக்கை, குருவிகள் இந்த வேறுபாட்டினை அறியுமோ? முடியாது.

அதுபோல, சாத்விக, ராஜஸ, தாமஸர்களான, தேவ, தானவ, மானுஷர்களாலும், த்ரிகுணமயமான பொருட்களாலும், நிரம்பிய இந்த உலகம், சேஷசாயியாக படுத்துக்கொண்டிருக்கும் பரமாத்மனுக்குள் அடங்கியிருந்தாலும், அது பரமாத்மனிடமிருந்து பின்னமாக இருக்கிறது என்னும் விஷயத்தை அறியவேண்டுமெனில், மத்வ சித்தாந்த சாஸ்திரங்களை நன்றாக அறிந்தவர்களால் மட்டுமே முடியுமே தவிர, அஞ்ஞானிகளுக்கு எப்படி புரியும்? என்றைக்கும் புரியாது என்பது பொருள்.

**கரண கு$^3$ண பூ$^4$தக$^3$ளொளகெ$^3$ த**
**த்வரரெனிப பி$^3$ரம்மாதி$^3$ தி$^3$விஜரொ**
**ளரிது ரூபசதுஷ்டய க$^3$ளனுதினதி சர்வத்ர ।**
**ஸ்மரிஸுதனு மோதி$^3$ஸுத$^1$ ஹிக்கு$^3$த**
**பரவஷதி$^3$ பாடு$^3$வவரிகெ$^3$ த**
**ன்னிரவ தோ$^1$ரிஸி ப$^4$வவிமுக்தர மாடி$^3$ போஷிஸுவ ||33**

கரண = ஞானேந்திரிய, கர்மேந்திரியங்களில்
குண = குண த்ரயங்களில் அல்லது தன்மாத்ரா குணங்களில்
பூதகளொளகெ = பஞ்சபூதங்களில்
தத்வரரெனிப = அவற்றின் அதிபதிகள் எனப்படும்
பிரம்மாதி திவிஜரொளு = பிரம்மாதி தேவதைகளுக்குள்
ரூப சதுஷ்டயகளனு = அனிருத்தாதி ரூபங்களை
அரிது = அறிந்து
தினதினதி = தினந்தோறும்
சர்வத்ர = எல்லா பிராணிகளிலும்
ஸ்மரிசுத = நினைத்தவாறு
அனுமோதிசுத = நினைப்பவர்களைப் பார்த்து புகழ்ந்தவாறு
ஹிக்குத = மகிழ்ச்சிப்படுத்தி
பரவஷதி = மெய்மறந்து
பாடுவவரிகெ = பகவன் மகிமைகளை குறிக்கும் பதங்களை பாடுபவர்களுக்கு
தன்னிரவ = தன் ஸ்தானத்தை அல்லது ரூபத்தைக் காட்டி
பவவிமுக்தர = பிறப்பு இறப்பு துக்கங்களிலிருந்து முக்தராக
மாடி = செய்து
போஷிசுவ = காப்பாற்றுவான்.

தத்வங்களிலும், அபிமானி தேவதைகளிலும் அனந்தானந்த ரூபங்களை சிந்திக்க வேண்டுமென்று மேற்கூறிய பத்யங்களில் சொல்கிறார். இந்த ரூபங்களைத் தொகுத்து, சுலபமாக நினைவில் வைத்துக்கொண்டு உபாசனை செய்யும் வழியையும், அதன் பலன்களையும் இங்கு சொல்கிறார். ஞானேந்திரியங்கள் 5,

கர்மேந்திரியங்கள் 5, மனஸ் - இவற்றில் அனிருத்த ரூபத்தையும், தன்மாத்ரா குணங்களில் அல்லது சத்வாதி குணங்களில் பிரத்யும்ன ரூபத்தை, பஞ்சபூதங்களை சங்கர்ஷண ரூபத்தையும், தத்வாபிமானிகளான பிரம்மாதிகளில் வாசுதேவ ரூபத்தையும், இந்த விதமாக 4 ஸ்தானங்களில் நான்கு ரூபங்களையும் தினந்தோறும் அனைத்து பிராணிகளின் தேகத்திலும் நினைத்தவாறு, மகிழ்ந்தவாறு, மெய்மறந்து பகவன் மகிமைகளைச் சொல்லும் பதபத்யங்களைப் பாடுபவர்களுக்கு, தன் அபரோக்ஷத்தைக் கொடுத்து சம்சாரத்திலிருந்து முக்தராக மாற்றி காப்பாற்றுகிறான்.

விஷ்ணு சஹஸ்ர நாமாதிகளில், பகவன் நாமங்களை, அவற்றின் மகாமகிமைகளை விளக்கமாக சொல்லியிருப்பர். ஒருவேளை இந்த சஹஸ்ர நாமத்தைப் படிக்க முடியாவிடில், இறுதியான ஒரு ஸ்லோகத்தைப் படித்தால் மட்டுமே, சஹஸ்ர நாமம் படித்த பலன் வருகிறதென்று ‘நமோஸ்துsனந்தாய சஹஸ்ரமூர்த்தயே’ என்னும் ஸ்லோகத்தில் சொல்லப்பட்டிருக்கிறது.

இதைப்போலவே படிக்கவேண்டிய கிரந்தங்கள் மிகவும் அதிகமென்றும், அவற்றை தினமும் முழுவதுமாக படிக்கமுடியாது என்பதாலும், ஆதி-அந்த ஸ்லோகங்களை மட்டும் தனியாக தொகுத்து அதை மட்டும் படித்து வரும் சம்பிரதாயமாக இருக்கிறது. ’சங்கோச விஸ்தராப்யாஞ்ச கதயந்திமனீஷிண:’. ஞானிகள், விஷயங்களை, அதிகாரிகளை அனுசரித்து மிகவும் சுருக்கமாகவும், விளக்கமாகவும் சொல்வதைப்போல, ஒவ்வொருவரின் தேகங்களிலும் அனந்தானந்த ரூபங்களை சிந்திப்பதற்கு சாத்தியம் இல்லாத அதிகாரிகள், அனைத்து பிராணிகளின் தத்வங்களில் / ததபிமானிகளான தேவதைகளில் 4 ரூபங்களையாவது சிந்தித்து க்ருதார்த்தர் ஆகவேண்டும் என்று இந்த உபாசனா கிரமத்தை தொகுத்து சொல்லியிருக்கிறார் தாசராயர்.

**மூலரூபனு மனதொ3ளிஹ ஸ்ரவ**
**நாலியொளகி3ஹ மத்ஸ்ய கூர்மனு**
**கோலரூபனு த்வக்3ரசன தொளகி3ப்ப நரசிம்ஹ |**
**பா3லவடு1 வாமனனு நாஸிக1**
**நாளதொ3ளு வத3னத3லி பா4ர்க்க3வ**
**வாலிப4ஞ்ஜன ஹஸ்த1தொ3ளு பாத3த3லி ஸ்ரீகிருஷ்ண ||34**

மூலரூபனு = ஸ்ரீமன் நாராயணன்
மனதொளு = மனதில்
இஹ = இருக்கிறான்
ஸ்ரவண = காதுகளில்
ஆலியொளகெ = கண்களில்
மத்ஸ்யகூர்மனு = மத்ஸ்ய, கூர்மரூபி இருக்கிறான்.
கோலரூபனு = வராஹரூபி
த்வக் = த்வக் இந்திரியத்தில் இருக்கிறான்.
ரசனதொளகெ = நாக்கினில் இருக்கிறான்

நரசிம்ஹ = நரசிம்ம ரூபனாக
இப்ப = இருக்கிறான்
பாலவடு வாமனனு = பாலபிரம்மசாரியான வாமனன்
நாஸிக நாளதொளு = மூக்கின் துளைகளில்
வதனதலி = வாக் இந்திரியத்தில்
பார்க்கவ = பரசுராமன்
வாலிபஞ்சன = ஸ்ரீராமன்
ஹஸ்ததலி = கைகளில்
பாததலி = கால்களில்
ஸ்ரீகிருஷ்ண = ஸ்ரீகிருஷ்ண ரூபி
இருக்கிறான்.

சந்தியை முடிக்கும் தாசராயர், மனஸ் சேர்த்து 11 இந்திரியங்களில், மூலரூபத்தின் தசாவதாரங்களை சிந்தித்தால், பகவத் ப்ரசாதம் கிடைக்கிறது என்று, கடைசி இரு பத்யங்களில் சொல்கிறார்.

மனதில், மூலரூபியான ஸ்ரீமன் நாராயணன் இருக்கிறான்.
காதுகளில், மத்ஸ்ய ரூபி;
கண்களில் கூர்ம ரூபி;
சரீரத்தில் வராக ரூபி;
நாக்கினில் நரசிம்ம ரூபி;
மூக்கினில் பால பிரம்மசாரியான வாமன ரூபி;
வதனத்தில் பரசுராம ரூபி;
கைகளில் வாலியைக் கொன்றவனான ஸ்ரீராம ரூபி;
கால்களில் ஸ்ரீகிருஷ்ணரூபியும் இருக்கின்றனர்.

**ஜினவிமோஹக பு3த்த4பா1யுக3**
**த3னுஜமர்த்த3ன கல்கி மேட்4ரதி**
**இனிது த3ஷரூபகள த3ஷகரணங்க3ளலி திளிது3 ।**
**அனுப4விப விஷயக3ள க்ருஷ்ணா**
**ர்ப்பண வெனலு கைகொம்ப3 வ்ருஜினா**
**ர்த்தன வரஜகன்னாத2 விட்டல விஷ்வவியாபகனு ।।35**

ஜினவிமோஹகபுத்த = ஜைன மதத்தவரை மயக்கிய புத்த ரூபி;
பாயுக = மலஜல இந்திரியங்களில்;
தனுஜ மர்த்தன = தைத்யர்களைக் கொல்லும் கல்கி ரூபி
மேட்ரதி = ஆண்குறியில்
இனிது = இதே விதமாக
தஷரூபகள = தசாவதார ரூபங்களை
தஷ கரணங்களலி = பத்து இந்திரியங்களில்
திளிது = அறிந்து
அனுபவிப = தான் அனுபவிக்கும்

விஷயகள = விஷய சுகங்களையே
கிருஷ்ணார்ப்பணவெனலு = கிருஷ்ணார்ப்பணம் என்று சொல்ல
வ்ருஜினார்த்தன = பாவங்களைப் போக்குபவனான
ஸ்ரீஜகன்னாத விட்டல,
விஷ்வவியாபகனு = உலகத்தையே வியாபித்திருக்கும் ஸ்ரீபரமாத்மன்,
கைகொம்ப = அதை ஏற்றுக்கொள்வான்.

பஞ்சமஹாயக்ஞ சந்தி என்னும் ஆறாம் சந்தி இத்துடன் முடிவுற்றது.
ஸ்ரீகிருஷ்ணார்ப்பணமஸ்து

***

## பாவபிரகாசிகை : சந்தி 7 : பஞ்சதன்மாத்ர சந்தி

**ஹரிகதா$^{2}$ம்ருதசார கு$^{3}$ருக$^{3}$ள**
**கருணதிந்தா$^{3}$பநிது பே$^{1}$ளுவே**
**பரம ப$^{4}$கவத்$^{3}$ப$^{4}$க்தரித$^{3}$னாத$^{3}$ரதி கேளுவுது$^{3}$**

**பூ$^{4}$ ஸலில ஷிகி$^{2}$ பவன பூ$^{4}$தா**
**காஷ தொ$^{3}$ளகை$^{3}$தை$^{3}$து$^{3}$ தன்மா**
**த்ரா ஸஹித ஒந்ததி$^{4}$க பஞ்சாஷத் வரணவேத்$^{3}$ய ।**
**ஈ ஷரீரதி$^{3}$ வ்யாபிஸித்து$^{3}$ ஸு**
**ராஸுரரிகெ$^{3}$ நிரந்தரத$^{3}$லி ஸு**
**கா$^{2}$ ஸுக$^{2}$ப்ரத$^{3}$னாகி$^{3}$ ஆடுவ த்வேஷிபர பி$^{3}$டு$^{3}$வ ||1**

பூ = பூமி
சலில = தண்ணீர்
ஷிகி = அக்னி
பவன = வாயு
பூதாகாஷதொளு = ஆகாயம்
ஐது = 5
தன்மாத்ரா சஹித = ஷப்த, ஸ்பர்ஷாதி 5 குணங்களுடன் கூடிய
ஈ ஷரீரதி = இந்த பாஞ்சபௌதிக சரீரத்தில்
ஒந்ததிக பஞ்சாஷத் வரணவேத்ய = 51 எழுத்துக்களால் அறியப்படுபவனான
வியாபிஸி = வியாபித்தவாறு இருந்து
சுராசுரரிகெ = தேவ தைத்யர்களுக்கு
ஸுகாசுகப்ரதனாகி = சுக துக்கங்களை கொடுப்பவனாக
ஆடுவ = விளையாடும் (செயல்களை செய்யும்)
த்வேஷிபர = த்வேஷிகளை
பிடுவ = சம்ஹரிக்கிறான்.

இந்த சந்தியில், தன்மாத்ர குணங்களில் இருக்கும் பகவத்ரூபங்களை சொல்லியாறு, முதல் பத்யத்தில் அதன் சாரத்தை சொல்கிறார். ப்ருதிவி, அபு, தேஜஸ், வாயு, ஆகாச என்னும் 5 பஞ்சபூதங்கள். இவற்றின் மாத்ரா குணங்கள், கந்த, ரஸ, ரூப, ஸ்பர்ஷ மற்றும் ஷப்த. இவற்றைக் கொண்டிருக்கும் இந்த சரீரத்தில் ஆகாஷாதி 51 எழுத்துக்களால் புகழப்படும் அஜ, ஆனந்தாதி 51 ரூபங்களை சிந்திக்க வேண்டும். மஹாபூதங்களில் ஆகாஷாதி ஒவ்வொரு பூதங்களிலும், வாய்வாதி 5 பூதாதிகளின் சம்பந்தம் இருக்கிறது. அதுபோலவே, ஆகாஷாதிகளின் தன்மாத்ரா குணங்களான ஷப்தாதிகளில் ஸ்பர்ஷாதி குணங்கள், ஸ்பர்ஷாதிகளில் ஷப்தாதி குணங்களின் கலவை இருக்கிறது. ஒவ்வொரு பூதங்களிலும் மற்ற 4 பூதங்களின் சம்பந்தமும், மாத்ரா குணங்கள் ஒவ்வொன்றிலும் இதர 4 மாத்ரா குணங்களின் சம்பந்தமும் இருக்கிறது என்று அறிய வேண்டும்.

பாகவத 3ம் ஸ்கந்தம் 27ம் அத்தியாயம் 51ம் ஸ்லோகம் 'பரஸ்ய த்ருஷ்யதே தர்மோஹ்ய பரஸ்மின்னமுன்வயாத்'. இதை விஜயத்வஜீய வியாக்யானத்தில் 'பரஸ்ய பூர்வஸ்ய, காரணஸ்ய ஷாகாஷாதேதர்ம: ஷப்தாதி குணோsபரஸ்மின் பச்சாத்தனேகார்யே வாய்வாதௌ த்ருஷ்யதேஹி | குத: சமன்வயாத் சம்பந்தாத் ||'. பரஸ்ய = முன்னர் இருக்கக்கூடிய. ஆகாஷாதி தர்மம் என்றால் ஷப்தாதி குணங்கள். அபரர்ஸ்மி = இதற்குப் பிறகு காரியபூதமான வாயுகளில் இருக்கிறது. அது எப்படியெனில், ஸமன்வயாத் = ஒன்றுக்கொன்று சம்பந்தம் இருப்பதால், என்று சொல்லியிருக்கிறார்.

இந்த ஆதாரத்தினால், பஞ்சபூதம் 5. ஒவ்வொன்றிலும் இதர பூதங்கள் 4 என்றால், பூமி ஒன்று. அதில் தண்ணீர் முதலான 4 ரஸ சம்பந்தங்கள் 5. இப்படியாக ஒவ்வொன்றிலும் 5 என்றால், மொத்தம் 25 ஆகிறது. இதைப்போல, தன்மாத்ரா ஷப்தாதிகள் 25. மொத்தம் 50. இதனுடன் மனஸ் சேர்த்தால், 51. இந்த 51ல் அஜ, ஆனந்த முதலான 51 எழுத்துக்களால் வர்ணிக்கப்படுபவனை அறியவேண்டும். நம் தேகத்தில் தத்வாபிமானி தேவதைகள் எவ்வளவு பேர் இருக்கின்றனரோ, அவ்வளவு தத்வாபிமானி தைத்யர்களும் இருக்கின்றனர். தேவதைகள், புண்ய கர்மங்களை செய்விப்பவர்கள். தைத்யர்கள், பாவ கர்மங்களை செய்விப்பவர்கள்.

பாகவத 11ம் ஸ்கந்தம், 2ம் அத்தியாயம், 49ம் ஸ்லோகத்தில் 'தேஹேந்த்ரிய ப்ராணதியாம்' என்பதின் பாகவத தாத்பர்யத்தை, விஜயத்வஜீய வியாக்யானத்தில் சொல்லியிருக்கிறார். அது என்னவெனில்:

தேஹேந்த்ரிய ப்ராணதியாம் த்ரிதைவத்வபிமானின: |
தத்ரோத்தமா தேவதாஸ்தா: ஸர்வ தோஷ விவர்ஜிதா: ||
மத்யமா குணதோஷேதா அவமா அஸுரா மதா: |
தேப்யோன்யோ மானுஷோ ஜீவஸ்தப்யாம் தேவாஸுராவபி |
ஜீவாபிமானினஸ்சைவ த்ரிவிதா சம்ப்ரகீர்த்திதா: ||
ஜீவமான்யுத்தமோ பிரம்மா மத்யம: ஸ்வயமேவது |
அதம: கலிருத்திஷ்ட: தத்ர மத்யம நீசயோ: ||
ம்ருதிஜன்ம க்ஷுதாதுக்க ப்ரப்ருத்யகிலமேவது ||
நோத்தமஸ்யது ஜீவஸ்ய தேஹாதேஷ்ச கதஞ்சன ||
அசுராணாமதர்மஸ்ய வ்ருத்யா சுகமபீஷ்யதே ||
தேவானாம் நைவகேனாபி துக்கம் ப்ரீதிஸ்துதர்மத: |
அதர்மோபி ப்ரீதயேஸ்யாத சுராணாம் தமோகதே: ||
தேவானாம் புண்யபாபாப்யாம் சுகமேபோத்த ரோத்தரம் |
தேஷாம் துக்காதிகம் கிஞ்சிதசுராவேஷதோ பவேத் ||
ப்ராணஸ்ய நாசுராதேஷோ ஹரிணாச (அகணாஸ்ச) சமோஹிஸ: ||
சம்பூர்ணானுக்ரஹாத்விஷ்ணோ: ப்ராண: பூர்ணகுணோமத |
அஸுராணாம் சுகாத்யாஷ்ச தேவாவேஷாதுரீரிதா: ||

தேகம், இந்திரியங்கள், பிராண, புத்தி ஆகியவற்றிற்கு அபிமானிகள், மூன்று விதங்கள்.
* உத்தமர் தேவதைகள், தோஷங்கள் இல்லாதவர்கள்.
* மத்யமர் குணதோஷங்கள் கொண்டவர்கள்.
* அதமர் தைத்யர் அனைவரும் தோஷங்கள் கொண்டவர்கள்.

இந்த மூன்றிலிருந்து வேறுபட்டவர்கள், மனுஷ்யஜீவர்கள். இவனுக்கு, தேவாசுரர்கள் அபிமானிகள்.

ஜீவாபிமானிகள் கூட மூன்று விதமானவர்கள்.
* ஜீவமானிகளில் உத்தமர் பிரம்மதேவர்.
* மத்யமன் ஜீவன் மற்றும் புரஞ்சனன் என்னும் ராஜன்.
* அதமன், கலி.

இவற்றில், மத்யமனான ஜீவனுக்கும், ஜீவமானியான புரஞ்சனனுக்கும், நீசனான கலிக்கும், மரணம், ஜனனம், பசி முதலான துக்கங்கள் உண்டு.

இதேபோல, தேகத்தில் இருக்கும் தத்வாபிமானி தேவதைகளுக்கு, தேகத்தில் இருக்கும் சுகங்கள் மட்டுமே உண்டு. ஜீவனுக்கு சுக துக்கங்கள் என இரண்டின் சம்பந்தமும் இருக்கிறது. அசுரர்களுக்கு அதர்ம வழியாதலால், துக்கம் மட்டுமே உண்டாகிறது. துரியோதனாதிகளுக்கு ஆனதைப் போல, சில துக்கங்களே பல-ரூபமாக, சுகமும் ஆவதுண்டு. ஆனால் அதுவும் அவர்களின் பாவத்திற்கே வழிவகுக்கும். தேவதைகளுக்கு எவ்வித துக்கங்களும் இல்லை. தர்மத்தை பின்பற்றினால், பரமாத்மன் மேல் அன்பு அதிகரிக்கும். சில சமயங்களில் தேவதைகள் அதர்ம செயல்களை செய்தாலும், அது அசுரர்களின் தமஸ் சாதனைக்காக, தாம் செய்து, அந்த பலன்களை தைத்யர்களுக்கே கொடுப்பர். ஆகையால், தேவதைகள், புண்ணியம் செய்தாலோ, பாவம் செய்தாலோ, அல்லது தேகங்களைக் கொண்டிருக்கும் நம்மிடமிருந்து புண்ய பாவங்களை செய்வித்தாலோ, அவர்களுக்கு புண்ய பலன்களே கிடைக்கிறது. பாப பலன்கள், அதன் அபிமானி தைத்யர்களுக்கே ஆகிறது. இதைத்தவிர, தைத்ய ஜீவர்களுக்கு என்றைக்கும் சுகம் இல்லை. தேவதைகளுக்கு என்றைக்கும் துக்கம் இல்லை.

அஞ்ஞான வாசத்தில் பாண்டவர்கள் கஷ்டப்படவில்லையா? துர்யோதனாதிகள் அரசைப் பெற்று சுகப்படவில்லையா? என்றால், தேவதைகளுக்கு இருக்கும் அசுர ஆவேசத்தினால் மிகச்சிறிய அளவிற்கு துக்கம் உண்டாகலாம். தேவதைகளின் உள்ளே இருக்கும் தைத்யர்களே அதனை அனுபவிப்பர். தேவதை ஜீவிகள் அதனை அனுபவிக்க மாட்டார்கள். தைத்யர்களுக்கு சுகம் ஆனாலும், தேவ ஆவேசத்தாலேயே ஆகிறதே தவிர, தைத்ய ஜீவர்களுக்கு அல்ல.

பிராணதேவருக்கு மட்டும் என்றைக்கும் அசுர ஆவேசம் இல்லை. பரமாத்மனின் ஸ்வரூபத்தைக் காட்டும் விஷயத்தில் அவர் உரைகல் போல. பரமாத்மனின் பரமானுக்கிரகத்தினால் அவர் பூர்ண குணங்களைக் கொண்டவர் என்று அறியவேண்டும். தேகங்களில் இருக்கும் தத்வாபிமானி தேவ தைத்யர்களுக்கு சுக

துக்கங்களை, அதாவது தேவதைகளுக்கு சுகங்களை, தைத்யர்களுக்கு துக்கங்களைக் கொடுத்து, இதே சரீரத்தில் நிலைத்திருந்து, அவரவரின் கர்மங்களுக்கேற்ப, த்வேஷிகளை திருத்தி, பரத்தில், தமோரூபமான தண்டனையைக் கொடுக்கிறான் என்று பொருள்.

**ப்ரணவ ப்ரதிபாத்$^{3}$ய த்ரிநாமதி$^{3}$**
**த$^{1}$னுவினொளு த்ரிஸ்தா$^{2}$னக$^{3}$ னிரு**
**த்த$^{4}$னு த்ரிபஞ்சக ஏகவிம்ஷதி$^{1}$ சதுரவிம்ஷதி$^{1}$க**
**நெனிஸி எப்பத்தெரடு$^{3}$ ஸாவிர**
**இனிது$^{1}$ நாடிக$^{3}$ளொளு நியாமிஸுு**
**தின கப$^{4}$ஸ்திக$^{3}$ லோகதொ$^{3}$ளு சர்வத்ர பெ$^{3}$ளகு$^{3}$வனு ||2**

ப்ரணவ ப்ரதிபாத்யனு = ஓம்காரத்தால் புகழப்படுபவன்
த்ரிநாமதி = ஓம்காரத்தில் இருக்கும் எழுத்துக்கள், அ+உ+ம.
* ஆனந்த ஸ்வரூபன் ஆகையால் ஆ என்று பெயர்.
* ஆனந்த த்வாதனாமாஸெள, உத்க்ருஷ்டத்வாது நாமக: - என்னும் வாக்கியத்திற்கேற்ப மிகச்சிறந்தவன் ஆகையால், உ என்று பெயர்.
* அனைவராலும் பூஜிக்கப்படுபவன் ஆகையால் ம என்று பெயர்.
இத்தகைய மூன்று ரூபங்களால்,
தனுவினொளு = தேகத்தில்
த்ரிஸ்தானக = லிங்க, அனிருத்த, ஸ்தூல சரீரங்களில் இருந்து, அல்லது ; அ,உ,ம இவை மூன்று எழுத்துக்களும் தோன்றும் ஸ்தானங்கள் அ= அடி வயிற்றிலிருந்து. உ = கழுத்திலிருந்து; ம = உதடுகளிலிருந்து. இந்த விதமாக, மூன்று ஸ்தானங்களில்,
அனிருத்தனு = அனிருத்த ரூபியான பரமாத்மன்
த்ரிபஞ்சக = 15 ரூபங்களாலும்
ஏகவிம்ஷதி = 21 ரூபங்களாலும்
சதுர விம்ஷதிக = 24 ரூபங்களாலும் இருக்கிறான் என்று அழைக்கப்பட்டு
இனிது = இதைப் போலவே
எப்பத்தெரடு சாவிர நாடிகளொளு = தேகத்தில் இருக்கும் 72,000 நாடிகளில்
நியாமிஸுத = நிலைத்திருந்து, அந்தந்த செயல்களை செய்தவாறு
இனகபஸ்திக = இதைப்போல, சூர்யனின் கிரணங்களிலும் இருந்து
சர்வத்ர = அனைத்து இடங்களிலும்
பெளகுவனு = ஒளிர்கிறான்.

இந்த தேகத்திலும், நாடிகளிலும் உபாசனை செய்யவேண்டிய பகவத்ரூபங்களைப் பற்றி தாசராயர் சொல்கிறார்.

ப்ரணவ ப்ரதிபாத்ய - ஓம்கார ப்ரதிபாத்யனு த்ரினாமதி என்றால், அ+உ+ம என இந்த மூன்று எழுத்துக்களை சேர்த்து, ஓம் என்று ஆகிறது. இதன் பொருள்: சாந்தோக்ய உபநிஷத்தில்

அகாரேணாதிகம் ப்ரோக்த முகாரேணோச்ச முச்யதே |
ததாமிதம் சர்வவேதைர் மகாரேணாபி தீயதே |
அதிகோச்சமிதி ஞாதமோமித்யஸ்ய ஈரித: ||

அதிகமானவனாகையால் (மிகச்சிறந்தவன் ஆகையால்), அ-நாம என்றும் , உச்சம் ஆனதால் உ-நாம என்றும், அனைத்து வேதங்களைவிடவும் உயர்ந்தவன், அதாவது, அவற்றினால் அறிந்துகொள்ளப்படுபவன் ஆகையால் ம-காரத்தால் அறியப்படுபவன் பரமாத்மன்.

ஓம் நாமானமுபாஸீத ததர்த்தகுண பூர்வகம் ஓதத்வாதவ நாம்னானாதரிகோச்சத்வ காரணாத் |
அனந்தாதோஜஸஸ்சைவ பரணாதோ முதாஹ்ருத: ||

ஓம்காரத்தால் அறியப்படுபவனான பரமாத்மனை தெளிவான ஞானத்துடன் உபாசிக்க வேண்டும். பிரபஞ்சம் அனைத்தும் பரமாத்மனில், ஆடையின் நூல்களைப் போல சேர்ந்திருப்பதால், அந்த பிரபஞ்சம் அனைத்தையும் காப்பாற்றுவதால், அனைவராலும் வணங்கப்படுபவன் ஆகையால், அதிகமான உச்சத்தில் இருப்பவன் ஆகையாலும், ஆனந்த ஸ்வரூபன் ஆகையாலும், பலசாலியாகையாலும், உலகத்தையே தன்னுள் வைத்திருப்பதாலும், பரமாத்மனுக்கு ஓம் என்று பெயர் -- என்று கூறுகிறார்.

இதே போல, மூன்று பெயர்களில், லிங்க சரீரத்திலும், அனிருத்த சரீரத்திலும், ஸ்தூல சரீரத்திலும், இந்த தேகத்தின் மூன்று ஸ்தானங்களில் அனிருத்தன் வசிக்கிறான். அல்லது, அகார, உகார, மகாரங்களின் பிறப்பிடமான அடிவயிறு, கழுத்து, உதடுகள் என்னும் மூன்று இடங்களில் வசிக்கிறான். இது மட்டுமல்லாது,

* அனிருத்தன், ஞானேந்திரியங்கள் 5, கர்மேந்திரியங்கள் 5, பஞ்சபூதங்கள் 5 என 15 இடங்களில் அனிருத்தன், அனிருத்தாதி 5 ரூபங்களால் 3*5 இடங்களில், 3*5=15 ரூபங்களில் லிங்கதேகத்திலும்,

* இந்த 15ல் பஞ்சதன்மாத்ரா குணங்கள் 5, மனஸ் 1 என இந்த 6ஐயும் சேர்த்து, 21ல் அனிருத்த தேகத்தில், ஷக்தி பிரதிஷ்டா 11 + தசாவதார 10 = 21 ரூபங்களாலும்,

* ஸ்தூல சரீரத்தில் இந்த 21 தத்வங்களில் அவ்யக்த, மஹத், அஹங்கார இந்த மூன்றையும் சேர்த்து, 24ல், கேசவாதி 24 ரூபங்களிலும் இருக்கிறான்.

மேலும், 1 மாதத்திற்கு, 30 பகல் 30 இரவுகள் இருப்பதைப் போல, ஒரு ஆண்டிற்கு 360 இரவு 30 பகல்கள் மனித ஆயுளின்படி, 100 ஆண்டுகளுக்கு 36,000 பகல்கள், 36,000 இரவுகள் ஆகின்றன. இவையே சூரியனில் தட்சிணாயனத்தில் 36,000 உத்தராயனத்தில் 36,000 கிரணங்களாக ஆகின்றன. இந்த கிரணங்களே நம் சரீரத்தில் இடது பக்கத்தில் 36000 வலது பக்கத்தில் 36000 என 72000 நாடிகளாக இருக்கின்றன. அந்த நாடிகளில் அவ்வளவே ரூபங்களால் நியாமகனாக இருந்து,

சூர்யனின் கிரணங்களில் கூட இருந்து, அனைத்து இடங்களிலும் ஒளியைப் பாய்ச்சுகிறான்.

**ஜீவ லிங்க3னிருத்த ஸ்தூ2ல க**
**ளேவரக3ளலி விஷ்வ து1ரக3**
**க்3ரீவ மூலேஷாச்யுத த்ரய ஹம்ஸ மூர்த்திக3ள ।**
**ஈ வித3 சதுஸ்தா2னத3லி ஷா**
**ந்தீவரன ஈரெரடு3 ரூபவ**
**பா4விஸுவுதே3கோன விம்ஷதி மூர்த்தி சர்வத்ர ।।3**

ஜீவலிங்கனிருத்த ஸ்தூல கலேவரகளலி = ஜீவனின் ஸ்வரூப தேகத்தில், லிங்க தேகத்தில், அனிருத்த தேகத்தில், ஸ்தூல தேகத்திலும்
விஷ்வ = விஸ்வரூபத்தினால்
துரகக்ரீவ = ஹயக்ரீவ ரூபத்தினால், அனிருத்த ரூபத்தினாலும்
மூலேஷ = நாராயண அல்லது பத்பனாப ரூபத்தினாலும்
அச்யுதத்ரய = அச்யுத, அனந்த, கோவிந்த என்னும் மூன்று ரூபங்களால்
ஹம்ஸ மூர்த்திகள = ஹம்ஸ என்னும் 4 மூர்த்திகளை
ஈ வித சதுஸ்தானதலி = மேற்சொன்ன 4 தேகங்களில்
சாந்திவரன = சாந்திபதியான அனிருத்தன்
ஈரெரடு ரூபதி = 4 ரூபங்களை
பாவிசுவுது = நினைக்க வேண்டும்.
சர்வத்ர = மேற்சொன்ன அனைத்து இடங்களிலும்
ஏகோன விம்சதி மூர்த்தி = 19 மூர்த்திகளை. அதாவது, ஷப்தாதி தன்மாத்ரா குணங்களுடன் கூடிய பஞ்சபூதங்களில், அனிருத்தாதி 5 ரூபங்களை, ஞானேந்திரிய 5ல் 5 ரூபங்களை, கர்மேந்திரிய 5ல் அனிருத்தாதி 5 ரூபங்களை, என 15, அவ்யக்த, மஹத், மனஸ், அஹங்கார என்னும் 4ல் அச்யுத, அனந்த, கோவிந்த, ஹம்ஸ என்னும் 4 ரூபங்களையும் சேர்த்து, 19 ரூபங்களையும், ஒவ்வொரு சரீரங்களிலும் சிந்திக்க வேண்டும்.

இந்த பத்யத்தில், நான்குவித தேகங்களிலும், உபாசனை செய்யவேண்டிய பகவத்ரூபங்களை சொல்கிறார்.

ஜீவனின் :
* ஸ்வரூப தேகத்தில் விஸ்வரூபத்தையும்,
* லிங்க சரீரத்தில் ஹயக்ரீவ ரூபத்தையும்
* அனிருத்த தேகத்தில் அனிருத்த ரூபத்தையும்
* ஸ்தூல தேகத்தில் நாராயண ரூபத்தையும்
* அனிருத்தனே இருக்கிறான்; அல்லது,

அச்யுத, அனந்த, கோவிந்த, ஹம்ஸ என்னும் 4 ரூபங்களை தரித்து மேற்கண்ட 4 தேகங்களில் இருக்கிறான்.

இப்படி, சாந்திபதியான அனிருத்தன் 4 ரூபங்களால் 4 ஸ்தானங்களில் இருப்பதே பஞ்சபூத 5, கர்மேந்திரிய 5, ஞானேந்திரிய 5, என மொத்தம் 19 தத்வங்களில் அனிருத்தாதி 5*3=15 ரூபங்களாலும், அச்யுதானந்த கோவிந்த என்னும் 3 ரூபங்கள், ஹம்ஸ 1 என மொத்தம் 19 ரூபங்களால், நான்கு தேகங்களிலும் வசிக்கிறான் என்று சிந்திக்க வேண்டும்.

**கலுஷவில்லத த$^{3}$ர்ப்ப$^{1}$ணதி$^{3}$ ப்ரதி**
**ப$^{2}$லிஸி ஸர்வ பதா$^{3}$ர்த்த$^{2}$க$^{3}$ளு க**
**ங்கொ$^{3}$ளிஸுவந்த$^{3}$தி$^{3}$ பி$^{3}$ம்ப$^{3}$ ஜட$^{3}$ சேதனக$^{3}$ளொளகி$^{3}$த்து |**
**பொளெவ ப$^{3}$ஹுரூபத$^{3}$லி ஸஜ்ஜன**
**ரொளகெ மனத$^{3}$ர்ப்ப$^{1}$ணதி தா$^{1}$ நி**
**ஸ்சல நிராமய நிர்விகார நிராஸ்ரய அனந்த ||4**

கலுஷவில்லத = தூய்மையான
தர்பணதி = கண்ணாடியில்
ப்ரதிபலிஸி = பிரதிபலித்து
சர்வ பதார்த்தகளு = அனைத்து பதார்த்தங்களும்
கங்கொளிசுவந்ததி = கண்ணுக்குத் தெரிவதைப் போல
பிம்ப = பிம்பரூபியான பரமாத்மன்
ஜட சேதனகளொளகித்து = ஜட சேதனர்களில் இருந்து
பஹுரூபதலி = அனேக ரூபங்களால்
பொளெவ = ஒளிர்கிறான்
சஜ்ஜனரொளகெ = சஜ்ஜனர்களில்
மனதர்ப்பணதி = மனம் என்னும் கண்ணாடியில்
அனந்த = அனந்த ரூபங்களைக் கொண்ட
நிராஸ்ரய = யாரையும் நம்பியிருக்காத, ஸ்ரீபரமாத்மன்
தா = தான்
நிஸ்சல = நிஸ்சலனாக (நிலையானவன்)
நிராமய = நோய்கள் அற்றவனாகவும்
நிர்விகார = எவ்வித குறைகளும் அற்றவன்
பொளெவ = ஒளிர்கிறான்.

பிம்ப பிரதிபிம்பர்கள் என்னும் வகையில், பகவத் உபாசனையைப் பற்றி விளக்குகிறார். தூய்மையான கண்ணாடியில் பார்க்கும் பொருட்கள் அனைத்தும் அதன் பிரதிபிம்பமாக எப்படி தோன்றுகிறதோ, அப்படியே பிம்பரூபியான ஸ்ரீபரமாத்மனுக்கு நித்யமான, ஜீவனஸ்வரூப தேகம் கண்ணாடியைப் போல இருக்கிறது. அந்த ஸ்வரூப தேகம் என்னும் கண்ணாடியில் நித்யமான பிம்பரூபியான பரமாத்மனின் பிரதிபிம்பமே ஜீவனாக பிரதிபலித்து தெரிகிறது. பிம்பரூபி ஒருவனே ஆனாலும், சரீரங்கள் வேறாகையால், பற்பல ப்ரதிபிம்பங்களாக காட்சியளிக்கிறது. உபாதி பேதத்தினாலேயே சாத்விகாதி மூன்று வித ஜீவர்களாக இருக்கிறது.

தீபமானது எப்போதும் ஒரே மாதிரியான ஒளியைக் கொடுத்தாலும், மேலிருக்கும் சிம்னிக்கேற்ப, சிவப்பு, வெள்ளை, மஞ்சள், கருப்பு என எப்படி பல வண்ணங்களாக தெரிகிறதோ. அதுபோலவே பரமாத்மனின் ரூபமானது நிஸ்சல, நிராமய மற்றும் நிராஸ்ரயமாக இருந்தாலும், ஜீவ ஸ்வரூபம் அதன் தேகத்தை அனுசரித்து, சாத்விக, ராஜஸ, தாமஸ என்னும் பேதங்களாக தெரிகிறது.

ஜ்யோதிர்யதைவோதக பார்த்திவேஷ்வத: ஸமீர வேகானுகதம் விபாவ்யதே -- என்னும் பாகவத 10ம் ஸ்கந்த வாக்கியத்தின்படி, தண்ணீரில் தெரியும் சூரியனின் பிரதிபிம்பமானது, தண்ணீர் ஆடும்போது, உடைந்திருப்பதைப் போல தெரிகிறது. அதே பிரதிபிம்பம், ஒரு சிலையில் தெரியும்போது, தெளிவாக நிஸ்சலமாக தெரிகிறது. இப்படி சூரியனின் பிரதிபிம்பமானது, தெளிவாகவும் / உடைந்தது போலவும் தெரிவதற்கு, தண்ணீரும், சிலையும் காரணங்களே தவிர, சூரியனின் கிரணங்களில் எவ்வித பிரச்னைகளும் இல்லை. அதுபோலவே, ஜீவர்களின் ஸ்வரூப யோக்யதைக்கேற்ப, பிரதிபிம்பரான ஜீவரே தோஷிகள் ஆகுவரே தவிர, பரமாத்மன் தோஷியல்ல. அதில், சாத்விகரான யோக்ய ஜீவர் மட்டும் தூய்மையான, நிஸ்சலமான தம் மனம் என்னும் தர்மங்களில் கூடி ஒளிரும் பிம்பரூபியான பரமாத்மனை காண்பர்.

சூரியன் எப்போதும் ஒளிர்பவனே ஆனாலும், மேகங்கள் மறைத்துவிட்டால் சூரியனை எப்படி காணமுடியாதோ, அப்படியே பரமாத்மன், தமக்குள் பிம்பரூபியாக இருந்து ஒளிர்ந்து கொண்டிருந்தாலும், அஞ்ஞானிகளும், அயோக்யர்களும், அஞ்ஞானத்தில் மூழ்கி, அவனைக் காணமாட்டார்கள். ஜடங்களில் ஜடரூபனாகவும், சேதனர்களில் சேதனரூபியாகவும், அனைவரிலும் ஒளிர்பவனாகவும் இருப்பதை ஞானிகள் மட்டுமே அறிவார்கள்.

பரமாத்மன் நிஸ்சலமாக இருக்கிறான் என்றால் கல் போன்று இருக்கிறான் என்று அர்த்தமல்ல. ஜடத்தில் நிஸ்சலமாக இருக்கிறான். ஜடசேதனாதிகளில் ‘சலிஸதெ’ என்றால் ஸ்திரமாக இருக்கிறான் என்று பொருள். மனுஷ்யாதி சரீரங்களில் இருந்தாலும், ஜீவனுக்கு அவன் யோக்யதைக்கேற்ப நோய்கள் வந்திருந்தாலும், தான் மட்டும் நிரோகியாக இருக்கிறான். ஜீவன் சுக துக்கங்களால் விகாரம் (தோற்றத்தில் மாற்றம்) பெற்றாலும், தான் நிர்விகாரனாக இருக்கிறான்.

ரமா பிரம்மாதி அனைத்து சேதனர்களும், ஜடர்களும் தன்னை நம்பியவர்களாக இருந்தாலும், தான் யாரையும் நம்பியவனாக இருப்பதில்லை. தான், ஒருவனே ஆனாலும், அனந்தரூபனாக இருக்கிறான். ஆகையால், தாசராயர், நிஸ்சல, நிராமய, நிர்விகார நிராஸ்ரய என்னும் சிறப்பு குணங்களை சொல்கிறார். இதிலிருந்து ஜீவ பரமாத்மரின் வேறுபாடுகளை காட்டுவது போலவும் ஆயிற்று. ஜீவன், தேகத்தை விட்டுப் போகிறவன் ஆகையால், சலன். ஜீவன் நோய்களால் பீடிக்கப்படுபவன். இந்த இரண்டும் பரமாத்மனுக்கு இல்லை. ஜீவன் சுகதுக்காதிகளால் விகாரம் பெறுகிறான். பரமாத்மன் நிர்விகாரன். ஜீவன், பராஸ்ரயன், அஸ்வதந்த்ரன். பரமாத்மன் நிராஸ்ரயன், ஸ்வதந்த்ரன். இத்தகைய பற்பல ரூபங்களால் ஒளிரும் பரமாத்மனை ஞானிகள் மட்டுமே காண்பர்.

**ஈ ஷரீர சதுஷ்டயக3ளொளு**
**கோ1ஷதா4து1க3 பா4ரதிப ப்ரா**
**ணேஷ னிப்பத்தொந்து3 ஸாவிரதா3ரு நூரெனிப |**
**ஷ்வாஸரூபக ஹம்ஸ பா4ஸ்கர**
**பே4ஷரொளகி3த்த3வர கைபிடி3**
**தீ ஸரோஜ ப4வாண்ட3தொ3ளு ஸர்வத்ர தும்பி3ஹனு ||5**

ஈ ஷரீர சதுஷ்டயகளொளு = மேற்கூறிய நான்கு விதமான சரீரங்களில்
கோஷ = அன்னமய, பிராணமய, மனோமய, விக்ஞானமய, ஆனந்தமய என்னும் 5 கோஷங்களில்
தாதுக = மேதஸ், மஜ்ஜ முதலான 7 தாதுகளில் வியாபித்திருக்கும்
பாரதிப ப்ராணேஷ = பாரதிரமண முக்யபிராணாந்தர்கதனான
ஹம்ஸ = ஹம்ஸரூபி ஸ்ரீபரமாத்மன்
இப்பத்தொந்து சாவிரதாரு நூரெனிப = 21,600 என்னும்
ஸ்வாசரூபக = ஹம்ஸ மந்திர ஜப என்னும் ஸ்வாச ரூபனாக
பாஸ்கர பேஷரொளு = இட வல மூக்குகளிலிருந்து வெளியேறும் மூச்சுக்குக் காரணமான சூர்ய சந்திரர்களில் இருந்து
அவர = சந்திர சூர்யரின்
கைவிடிது = கைபிடித்து. அதாவது அவர்களின் வழிகாட்டியாக
ஈ சரோஜ பவாண்டதொளு = இந்த பிரம்மாண்டத்தில்
சர்வத்ர = எல்லா இடங்களிலும்
தும்பிஹனு = நிலைத்திருக்கிறான்.

ஸ்வரூப தேகம் முதலான 4 தேகங்களில் முக்ய பிராணதேவர் இருந்து செய்யும் வேலைகளை சொல்கிறார். இந்த 4 சரீரங்களில், கோஷங்கள் 5. தாதுக்கள் 7. இவற்றில் இருக்கும் பாரதிரமண முக்யபிராணாருக்கு பதியான - அதாவது, ஸ்வாமியான ஸ்ரீபரமாத்மன், ஹம்ஸரூபத்தினால் பிராணதேவரில் இருந்து 21,600 ஹம்ஸ மந்திர ஜபரூபமான ஸ்வாசங்களை, இடது வலது மூக்கினால் வரும் ஸ்வாசங்களுக்கு காரணமான சந்திர சூர்யரின் வழிகாட்டியாக, அவர்களை காப்பாற்றியவாறு, இந்த பிரம்மாண்டத்தில் அனைத்து இடங்களிலும் இருந்து நிலைத்திருக்கிறான்.

**ஷிரக3ளைதை3தெ3ரடு பா3ஹுக3**
**ளெரடு3 பாத3க3ளொந்து3 மத்4யோ**
**த்3ரதி3 ஷோபி4ப வாங்மனோமய னெனிஸி நித்யதலி |**
**கரண தா4து1க3ளல்லி எப்ப**
**த்தெரடு3 ஸாவிர நாடிக3ளலி**
**ப்பரவிதூ3ரனு பா4ரதப்ரதிபாத்3ய னெந்தெ3னிஸி ||6**

ஷிரகளைது = பஞ்சபூதங்கள் என்னும் 5 தலைகள்
ஐதெரடு பாஹுகளு = ஞானேந்திரிய கர்மேந்திரியங்கள் என்னும் 10 தோள்கள்

எரடு பாதகளு = புண்ணிய, பாவம் என்னும் 2 பாதங்கள்
ஒந்து மத்ய = அஹங்காரா என்னும் 1 இடுப்பு
உதரதி = புத்தி என்னும் 1 வயிறு
ஷோபிப = ஒளிர்ந்து கொண்டிருக்கும்
வாங்மனோமய நெனிஸி = வாங்மனோமய என்னும் பெயரால் அழைக்கப்பட்டு வரும் ஸ்ரீஹரி
நித்யதலி = எப்போதும் / தினந்தோறும்
கரண = பத்து இந்திரியங்களிலும்
தாதுகளல்லி = 7 தாதுகளில்
எப்பத்தெரடு சாவிர நாடிகளலி = 72,000 நாடிகளில்
இப்ப = இருக்கிறான்
அரவிதூரனு = தோஷங்கள் அற்றவன்
பாரத்ப்ரதிபாத்ய நெந்தெனிஸி = வேதத்தைவிட உத்தமமான பாரதத்தில் புகழப்படுபவன்

வாக்கு, மனது இவற்றின் ரூபியாக இருக்கும் பரமாத்மனின் உபாசனா கிரமத்தை சொல்கிறார். அனைத்து பிராணிகளின் முக்கிய இந்திரியங்களான வாக்கிலும், மனஸ்ஸிலும் இருந்து, அனைத்து காரியங்களையும் செய்கிறான் ஆகையால், வாங்மய என்றும், மனோமய என்றும் பரமாத்மனுக்குப் பெயர். இந்த் வாங், மனோமய ரூபங்களை உபாசனை செய்யும் கிரமம் என்னவெனில்,

* பஞ்சபூதங்களே இந்த ரூபங்களுக்கு 5 தலைகளாக,
* பத்து இந்திரியங்களே 10 கைகளாகவும்,
* புண்ய பாப என்னும் இரு கர்மங்களே இரு பாதங்களாகவும்,
* அஹங்கார 1, புத்தி 1 இவை இரண்டும் மத்திய பிரதேச வயிறு எனவும்,
சிந்திக்க வேண்டும்.

இத்தகைய ரூபத்தினால் அனைத்து இடங்களிலும் இருக்கிறான். இப்படியாக தினமும், இந்திரியங்களிலும், நாடிகளிலும் இருந்தாலும், புண்ய பாபாதி கர்மங்களை செய்விப்பவனாகவும் இருந்தாலும், தான், 'அரவிதூர' நிர்லிப்தனாக (எதற்கும் தனக்கும் சம்பந்தம் இல்லாமல்) இருப்பதால், நிர்தோஷியாக இருக்கிறான். வேதங்களில் புகழப்படுகிறான் என்று அனைத்து சாஸ்திரங்களும் கொண்டாடும்போது, பாரதத்தால் புகழப்படுபவன் என்று தாசராயர் சொன்னது எதற்கு என்றால், வேத அத்யயனம் செய்திருந்தாலும், உண்மையான அர்த்தம் உணர்வதற்கு கஷ்டமாகையால், மற்றும் ஸ்த்ரீ மற்றும் நான்காம் வர்ணத்தவர்க்கு அதைப் படிக்கும் தகுதி இல்லாததாலும், வேதங்களில் இருக்கும் பகவந்தனின் மகிமைகளை மக்கள் அனைவரும் அறிவது கஷ்டம் என்று வேதங்களில்கூட சொல்லப்படாத பகவன் மகிமைகளை பாரதத்தில் சேர்த்திருக்கின்றனர், என்னும் ஆசார்யரின் வாக்கியமே உள்ளது.

வேதார்த்தங்களால் கூடிய பாரதத்தால் புகழப்படுபவன் என்ற பிறகு வேதாதிகளும் அதிலேயே அடங்கியிருக்கின்றன என்ற சிந்தனையில் இப்படி

சொல்லியிருக்கிறார். அல்லது, வேதாதிகளை படித்தாலும் மத்வ சாஸ்திரத்தை அறிந்தாலே, வேதங்கள் சரியாக அர்த்தம் ஆகும் என்பதால், பாரதத்தால் புகழப்படுபவன் என்று சொன்னதால், மத்வ சாஸ்திரத்தால் புகழப்படுபவன் என்றும் அர்த்தம் கொள்ளலாம். அது எப்படியெனில்:

பாகவத ஸ்ருதிகீதையில் - 'பரதமதஸ்சகாஸி' - வாயுமதத்தைப் பின்பற்றுபவர்களால் சொல்லப்படும் பேதஞானத்திலேயே ஒளிர்வாய் என்று சொல்லப்பட்டிருக்கிறது. 'பரதமத' என்று சொன்னால் அதை வாயு மதம் என்று எப்படி சொல்லலாம் என்று கேட்டால்,

ரதத்வாத்பாத்மகே விஷ்ணுவதாவாபி ஸ்வயம்ப்ருதே |
பரதோ வாயுருத்திஷ்ணோ பாரதீதத்ஸரஸ்வதே ||

என்னும் பதத்தினால், ப என்றால் பரமாத்மன். அவனில் ரதராக இருப்பதால், பாரத என்று வாயுதேவருக்குப் பெயர் வந்தது. ஆகையாலேயே, 'பரதஸ்ய ஸதே பாரதீ' என்று வாயுதேவரின் மனைவிக்கு பாரதி என்று பெயர் வந்தது. ஆகையால், பாரத என்றால் பரத சம்பந்தி பாரத வாயு சம்பந்தப்பட்ட கிரந்தங்களுக்கு பாரத என்று பெயர். வாயுதேவரே மத்வாசார்யர் ஆகையால், பாரத ப்ரதிபாத்யன் என்றால், மத்வ சாஸ்திர பிரதிபாத்யன் என்று பொருள். அப்படியில்லை என்றால், தவறான ஞானத்தால் கெட்டுப் போவார்களே தவிர, உண்மையான ஞானம் பெறுவதில்லை. ஆகையால், இந்த அர்த்தமே சரியானது என்று அறியவேண்டும்.

**ஈரெரடு தே3ஹோர்மி பூ4தக3**
**நாரதி4கத3ஷ ருக்3வினுத ல**
**க்ஷ்மீரமண விஷ்ண்வாக்ய ரூபதி3 சது:ஷஷ்டிகலா**
**தா4ரக1னு தானாகி3 பி3ரம்ம பு**
**ராரி முக்யரொளித்து ஸதத வி**
**ஹார மாள்பனு சது:பாதா3ஹ்வயதி3 லோகதொ3ளு ||7**

ஈரெரடுதேஹ = மேற்சொன்ன, ஸ்வரூபதேஹாதி 4 தேகங்களால் கூடிய ஜீவனின் ஸ்தூல சரீரம்
ஊர்மிபூதகளாரு = அஸ்தி, ஜாயதெ, பரிணமதெ, விவர்ததே, அபக்ஷீயதெ, விவஷ்யதெ என்னும் 6 அலைகள் கூடிய, இத்தகைய அலைகளால் கூடிய தேகத்தில்
சது:ஷஷ்டிகலா = 64 கலைகளால் கூடிய
தாரகன் = காப்பாற்றுபவன் அல்லது அனைவருக்கும் ஆதாரமானவன்
தானாகி, ஆரதிக தஷருக்வினுத = 16 ரிக்குகளால் கூடிய புருஷ சூக்தத்தினால் கூடியவனான ஸ்ரீலட்சுமி நாராயணன்
லட்சுமிரமண விஷ்வாக்ய ரூபதி = லட்சுமிபதியானவன், விஷ்ணு நாமகனான ரூபத்தினால்
பிரம்ம புராரி முக்யரொளித்து = பிரம்ம, ருத்ர, ஆகியோர்களில் இருந்துகொண்டு
சது:பாதாஹ்வயதி = தர்ம, சத்ய, தயா, தான என்னும் 4 பாதங்களில் தர்மபூதனாக

லோகதொளு = இந்த உலகத்தில்
ஸதத = எப்போதும், எல்லா காலங்களிலும்
விஹாரமாள்பனு = நடமாடுகிறான் (செயல்களை செய்கிறான்).

பிரம்மாதி தேவதைகளில் 4 பாத தர்மங்களை பின்பற்றியவாறு, 64 கலைகளையும் தரித்தவனாக இருக்கும் பகவத் ரூபோபாசனையை சொல்கிறார்.

பிரம்மாதி அனைத்து தேவதைகளுக்கும், ஸ்வரூப, லிங்க, அனிருத்த, ஸ்தூல என்னும் 4 தேகங்கள் உண்டு. இதில் 6 விதங்கள் இருக்கின்றன. அவை :

1. அஸ்தி: லிங்க அனிருத்த தேகங்களுடன் ஸ்தூல தேகத்தை அடைவதற்கு கிழக்கில் இருப்பது
2. ஜாயதி: ஸ்தூலதேகத்தைப் பெறுவது
3. பரிணயதி: ஷைஷவ அவஸ்தையைக் கடப்பது
4. விவர்த்ததி : யௌவனத்தை அடைவது
5. அபேக்ஷியதி : உடல் மெலிவது
6. வினஷ்யதி : அழிவது

என்னும் 6 அலைகள் உண்டு. இவற்றில், பிரம்ம வாயு சரஸ்வதி பாரதியர்களுக்கு மட்டும் கர்ப்ப பிரவேசம் இல்லை. பிரம்மதேவருக்கு அவதாரமே இல்லை. வாயுதேவரின் அவதார த்ரயங்களிலும், சுக்லஷோணித சம்பந்தத்தால் அவர் பிறப்பது இல்லை என்று அவரது சரித்திரத்திலிருந்து நாம் தெரிந்து கொள்ளலாம். ஆஞ்சனேய அவதாரத்தில், வாயுதேவர் பழத்தைக் கொடுத்தார் என்றும், அவர் மூலமாகவே அஞ்சனா கர்ப்பம் தரித்தாள் என்று சொல்லியிருப்பர்.

சுக்லஷோணித சம்பந்தமானால் மட்டுமே கர்ப்பத்தில் ஸ்தூல தேகம் உற்பத்தி ஆகும். அது இல்லாமல், இந்த உலகத்தில் பிறக்க வேண்டுமெனில், தம் விருப்பத்தினால், தம் நிஜ ரூபத்தினாலேயே ஒரு கர்ப்பத்தில் பிறந்தார் என்று நிச்சயமாகிறது.

கலிலம் ஏகராத்ரேண பாஞ்சராத்ரேண புத்துதம் |
தஷராத்ரேன கர்கந்து:பேஷ்யண்டம் வாதத:பரம் ||
வாஸேனது ஷிரோத்வாப்யாம் பாஹ்வாங்க்ராத்யங்க விக்ரஹ: ||

பாகவத 3ம் ஸ்கந்தத்தில் வரும் இத்தகைய வாக்கியங்களால், ஓர் இரவில் சுக்லஷோணிதம் கலக்கிறது. 5 நாட்களில் நுரைகள் தோன்றும். 10 நாட்களில் வீங்கிய கண்களைப் போல திடமாகிறது. பிறகு, பேஷே என்னும் உறையினால் சுற்றப்பட்டு, உலகத்தைப் போல வளர்கிறது. 1 மாதத்தில் தலை வருகிறது. 2ம் மாதத்தில் கை, கால்கள் முதலான அங்கங்கள் தோன்றுகின்றன. -- இந்த வாக்கியங்களால், சுக்லஷோணித சம்பந்தத்தினாலேயே கர்ப்பம் உற்பத்தி ஆகிறது என்று தெளிவாகிறது. அது இல்லாமல் ஆவதென்றால், தன் மகிமையினாலேயே, ரிஷிகளின் தபஸ் சக்தியினாலேயே, ஆகவேண்டுமே தவிர, வேறு வழி இல்லை.

த்ருபதாதிகளின் உற்பத்தி சுக்லாதிகளின் சம்பந்தம் இல்லாமலேயே ஆனாலும், அது அவர்களது சாமர்த்தியம் இல்லை. தபோமகிமை என்று அறியவேண்டும்.

வாயுதேவர், தன்னுடைய சுய மகிமைகளாலேயே, எவ்வித கர்ப்ப சம்பந்தமும் இல்லாதவாறு ஹனும பீம அவதாரங்களை எடுத்தார் என்று அறியவேண்டும். மத்வவிஜயத்தில் ஸ்ரீமதாசார்யரின் ஜனனத்தைப் பற்றி 'ராஜீவ சத்புரவரம் புவனாதிராஜோ நிஷ்காஸர்ய பரமஸௌபகவான்வீஷ' - மத்யகேஹ பட்டரின் மனைவி கர்ப்பிணி ஆனபிறகு, சம்பூர்ண லட்சணத்துடன் கூடிய அந்த தேகத்தில் இருந்த ஜீவனை வெளியே எடுத்து, எப்படி தான் கைப்பற்றிய நாட்டின் அரசனை துரத்திவிட்டு வெற்றி பெற்ற அரசன், தான் கோட்டையில் எப்படி நுழைவானோ, அது போல வாயுதேவரும் அந்த சரீரத்தில் பிரவேசம் செய்தார் என்று தெளிவாக வர்ணித்திருக்கிறார்.

திரௌபதி, தன் முந்தைய பிறவிகளான இந்திரஸேனாதி அவதாரத்தில் நள ராஜனின் மகளாக பிறந்தார். அங்கு பாரதி தேவிக்கு கர்ப்பாவஸ்தையை சிந்திக்க வேண்டாமா என்றால், அங்கும் பாரதிதேவி ஷச்யாதிகளால் பிரார்த்திதராகி, தாம் கர்ப்பத்திற்கு வந்ததால், ஸ்வதந்திரமாக அந்த கர்ப்பத்திற்கு சம்பந்தப்படாமல், ஷச்யாதிகளுக்கு மட்டுமே, கர்ப்ப சம்பந்தத்தைக் கொடுத்தார் என்று அறியவேண்டும். ஒரே கர்ப்பத்தில், ஷசி, ஷாமலா, உஷா, பார்வதி என்னும் 4 தேவியர்களுடன் கூடி பாரதி தேவியர் வந்திருக்க, பாரதிதேவிக்கு மட்டும் கர்ப்ப சம்பந்தம் இல்லை, மற்ற ஷச்யாதி நால்வருக்கு இருக்கிறது என்று எப்படி சொல்கிறீர்கள் என்றால், தேங்காய் கொப்பரையாக இருக்கும்போது உடைத்தால், உள்ளிருக்கும் கொப்பரை எப்படி ஓட்டிற்கு சம்பந்தப்படாமல் இருக்கிறதோ, அது போல என்று சொல்லவேண்டும்.

இந்த தேகம் தன்னுடையது என்னும் அபிப்பிராயம் ஷச்யாதிகளுக்கு இருந்ததால், அந்த கர்ப்ப சம்பந்தம் அவர்களுக்கு மட்டுமே இருந்தது. அந்த தேகத்தின் மீதான அபிப்பிராயம், பாரதிதேவியருக்கு இல்லாததால், அவருக்கு கர்ப்ப சம்பந்தம் இல்லை என்று அறியவேண்டும்.

பிரம்ம வாயு, சரஸ்வதி பாரதியரைத் தவிர, தாரதம்யத்தில் அடுத்து வருபவர்கள் அனைவருக்கும் ஆறு அலைகளாலான அவஸ்தைகள் இருக்கிறது என்று அறியவேண்டும். பிரம்ம வாயுகளுக்கு ஸ்வரூப, லிங்க, அனிருத்த தேகங்களைக் கொண்டிருத்தல்; ஸ்தூல தேக ப்ராப்தி ஆகியவை உண்டு. ஆனால், கர்ப்பாவஸ்தைகள் இல்லை. வளர்வது, மெலிவது என நிலைகள் அவரது தேகங்களுக்கு இல்லை என்றாலும், 100 ஆண்டு ஆயுள் குறைந்துகொண்டு வருவதே அவருக்கான வளர்ச்சி / குறைவு நிலைகள் என்று அறியவேண்டும். இத்தகைய 4 தேகங்கள், 6 அலைகளாலான பிரம்மாதி அனைத்து சேதனர்களில் புருஷசூக்தத்தில் வர்ணிக்கப்படுபவனான ஸ்ரீலட்சுமி ரமணனான ஸ்ரீபரமாத்மன் விஷ்ணு ரூபத்தால் வியாப்தனாக இருந்து 64 கலைகளை தரித்திருக்கிறான்.

64 கலைகள் என்னவென்றால்:

1. அக்கரவிலக்கணம் - எழுத்திலக்கணம்
2. இலிகிதம் - எழுத்தாற்றல்
3. கணிதம் - கணிதவியல்
4. வேதம் - மறை நூல்
5. புராணம் - தொன்மம்
6. வியாகரணம் - இலக்கணவியல்
7. நீதி சாஸ்திரம் - நய நூல்
8. ஜோதிடம் - கணியக் கலை
9. தர்ம சாஸ்திரம் - அறத்துப் பால்
10. யோக சாஸ்திரம் - ஓகக் கலை
11. மந்திர சாஸ்திரம் - மந்திரக் கலை
12. சகுன சாஸ்திரம் - நிமித்தகக் கலை
13. சிற்ப சாஸ்திரம் - கம்மியக் கலை
14. வைத்தியசாஸ்திரம் - மருத்துவக் கலை
15. உருவ சாஸ்திரம் - உறுப்பமைவு
16. இதிகாசம் - மறவனப்பு
17. காவியம் - வனப்பு
18. அலங்காரம் - அணி இயல்
19. மதுர பாடனம் - இனிதுமொழிதல்
20. நாடகம் - நாடகக் கலை
21. நிருத்தம் - ஆடற் கலை
22. சத்தப்பிரும்மம் - ஒலிநுட்ப அறிவு
23. வீணை - யாழ் இயல்
24. வேணு (புல்லாங்குழல்)- குழலிசை
25. மிருதங்கம் (மத்தளம்)
26. தாளம் - தாள இயல்
27. அத்திரப் பரிட்சை - வில்லாற்றல்
28. கனகப் பரிட்சை - (பொன் நோட்டம்)
29. இரதப் பரிட்சை - (தேர் ஏற்றம் )
30. கஜப் பரிட்சை - (யானை எற்றம்)
31. அசுவப் பரிட்சை - (குதிரை ஏற்றம்)
32. இரத்தினப் பரிட்சை - மணி நோட்டம்
33. பூமிப் பரிட்சை - மண்ணியல்
34. சங்கிராம விலக்கணம் - போர்ப் பயிற்சி
35. மல்யுத்தம் - கைகலப்பு
36. ஆகருடனம் (ஆகர்ஷணம்)- கவர்ச்சியியல்
37. உச்சாடனம் - ஓட்டுகை
38. வித்து வேடனம் - (நட்பு பிரிக்கை)
39. மதன சாஸ்திரம் - மதன கலை
40. மோகனம் - மயக்குக் கலை
41. வசீகரணம் - வசியக் கலை

42. இரசவாதம் - இதளியக் கலை
43. காந்தருவ வாதம் - (இன்னிசைப் பயிற்சி)
44. பைபீலவாதம் - (பிறவுயிர்மொழி)
45. கவுத்துவ வாதம் - மகிழுறுத்தம்
46. தாதுவாதம் - (நாடி சாஸ்திரம்)
47. காருடம் - கலுழம்
48. நட்டம் (காணாமற்போன பொருளைக் கண்டுபிடித்தல் அல்லது இழப்பறிகை)
49. மூட்டி (கைக்குள் மூடியிருக்கும் பொருளைச் சொல்லுதல்;மறைத்ததையறிதல்)
50. ஆகாய கமனம் (வானத்தில் ஊர்ந்து செல்லுதல்--வான் செல்கை)
51. பரகாய பிரவேஷம் (கூடுவிட்டுக் கூடு பாய்தல்)
52. ஆகாயப் பிரவேஷம் ( ஆகாயத்தில் மறைந்து கொள்வது--வான்புகுதல்)
53. அதிரிசியம் - தன்னுறு கரத்தல்
54. இந்திர ஜாலம் (செப்பிடு வித்தை, மாய வித்தை)
55. மகேந்திர ஜாலம் - பெருமாயம்
56. அக்கினி ஸ்தம்பம் (நெருப்பைச் சுடாமல் கட்டல்--அழற் கட்டு)
57. ஜலஸ்தம்பம் (நீருக்குள் மூழ்கி வெகு நேரமிருத்தல், நீரில் நடத்தல், நீரில் படுத்திருத்தல்)
58. வாயுஸ்தம்பம் - வளிக் கட்டு
59. திட்டி ஸ்தம்பம் - கண் கட்டு
60. வாக்கு ஸ்தம்பம் - நாவுக் கட்டு
61. சுக்கில ஸ்தம்பம் - (விந்தையடக்கல்)
62. கன்னத்தம்பம் - புதையற் கட்டு
63. கட்கத்தம்பம் - வாட் கட்டு
64. அவத்தைப் பிரயோகம் - சூனியம்

இப்படியாக 64 கலைகளை தரித்திருப்பவனாக, பிரம்மாதி அனைத்து சேதனர்களில் இருந்துகொண்டு, தர்ம, சத்ய, தயா, தான என்னும் 4 பாதங்களைக் கொண்ட தர்மத்தை நிறுவியவாறு, செய்தவாறு, சதுஷ்பாத என்று அழைத்துக் கொண்டு, அனைத்து உலகங்களிலும் நடமாடுகிறான் (தன் செயல்களை செய்கிறான்).

**த்ருணமொத$^{3}$லு பிரஹ்மாந்த ஜீவர**
**தனுக$^{3}$ள த்ரயக$^{3}$ளலி நாரா**
**யணன ஸாவிரதை$^{3}$து$^{3}$ நூரிப்பத்து மேலாரு ।**
**க$^{3}$ணனெ மாள்பரு பு$^{3}$த$^{4}$ரு ரூபவ**
**க்$^{4}$ருணிய சூர்யாதி$^{3}$த்ய நாமக$^{3}$**
**ளனுதி$^{3}$னதி$^{3}$ ஜபிசுவரிகீவாரோக்$^{3}$ய ஸம்பத$^{3}$வ ||8**

த்ருணமொதலு பிரம்மாந்த ஜீவர = கிருமியிலிருந்து பிரம்மதேவர் வரை இருக்கும் அனைத்து ஜீவர்களின்
தனுசதுஷ்டயரல்லி = ஸ்வரூபாதி 4 தேகங்களில்
நாராயணன = நாராயணனின்
ஸாவிரதைது நூரிப்பத்து மேலாரு = 5126

கணனெ மாள்பரு = எண்ணிக்கையால் சேர்த்து பார்க்கவேண்டும் மற்றும் 'த்யேயஸ்ஸதா ஸவித்ரு மண்டல மத்யவர்த்தி' என்னும் தியான ஸ்லோகத்தின்படி சூர்யமண்டல மத்யவர்த்தியான நாராயணனை நினைத்தவாறு, ஸ்ரீமதாசார்யர் தந்த்ரசாரத்தில் சொல்லியிருக்கும் 72 மகாமந்திரங்களில் ஒன்றான 'ஓம் க்ருணி: சூர்ய ஆதித்ய:' என்னும் சூர்ய அஷ்டாக்ஷர மந்திரத்தை ஜெபிக்க வேண்டுமென்று சொல்கிறார்.
க்ருணி சூர்யாதித்ய நாமகளனு = க்ருணி சூர்ய என்றும் ஆதித்ய என்றும் பெயர்களைப் பெற்ற, இந்த மந்திரத்தை,
அனுதினதி = தினந்தோறும்
ஜபிசுவரிகெ = ஜெபிப்பவர்களுக்கு
ஆரோக்ய சம்பதவ = ஆரோக்கியம், செல்வங்களை
ஈவ = கொடுப்பான்.

கிருமி முதற்கொண்டு பிரம்மர் வரை இருக்கும் அனைத்து ஜீவர்களின் 4 சரீரங்களில், உபாசனா செய்யவேண்டிய பகவத்ரூபங்களை சொல்கிறார்.

கிருமி முதல் பிரம்மன் வரை இருக்கும் ஜீவரின் ஸ்வரூபம், லிங்க, அனிருத்த, ஸ்தூல என்னும் 4 தேகங்களில் நாராயணரூபியான ஸ்ரீபரமாத்மன் எண்ணிக்கையின்படி, ந+அ=5+1=6, ரா=2, ய=1, ண = 5. 6215. இவற்றை வலது பக்கத்திலிருந்து படித்தால், 5126 ஆகிறது. அல்லது, நா=5 ரா-2 ய=1 ண=5. 5215 அல்லது 5125 ஆகிறது. இவற்றுடன் நாராயண ரூபம் ஒன்றையும் சேர்த்தால், 5126 ஆகிறது. இவ்வளவு ரூபங்களால் வசிக்கிறான். 'ஓம் க்ருணி: சூர்ய ஆதித்ய:' என்னும் ஸௌர அஷ்டாக்ஷர மந்திரத்தை, தந்த்ரசாரத்தில் ஸ்ரீமதாசார்யர் 72 மகாமந்திரங்களில் ஒன்றாக எடுத்துக் கொண்டிருக்கிறார்.

வனவாசத்தில் இருந்தபோது தர்மராஜன், பிராமண போஜனம் செய்வதற்கு வழியில்லாதவராக இருந்தார். இந்த மந்திரத்தினால் சூரிய ஆராதனை செய்து, அக்ஷய பாத்திரத்தைப் பெற்றார். ஆகையாலேயே, தாசராயர் 'ஓம் க்ருணி: சூர்ய ஆதித்ய:' என்னும் மந்திரத்தை தினந்தோறும் ஜபம் செய்பவர்களுக்கு ஆரோக்கியத்தையும், செல்வத்தையும் ஸ்ரீபரமாத்மன் கொடுக்கிறார் என்று சொல்லியிருக்கிறார்.

**ஐது$^{3}$னூரெப்பத்த நாலகு**
**ஆதி$^{4}$பௌ$^{4}$திகத$^{3}$ல்லி திளிவரு**
**ஐதெ$^{3}$ரடு ஷத$^{1}$ ஏகவிம்ஷதி ரூபவாத்$^{4}$யாத்ம**
**பே$^{4}$த$^{3}$கள லின்னூர மூவ**
**த்தா$^{1}$த$^{3}$ மேலொந்ததி$^{4}$க மூர்த்திக$^{3}$**
**ளாத$^{3}$ரதி$^{3}$ ஆதி$^{4}$தை$^{3}$வதொளு சிந்திபரு பூ$^{4}$சுரரு ||9**

ஆத்யாத்மாதிகளில் இருக்கும், சூர்யமண்டல மத்யவர்த்தியான நாராயணனின் ரூபங்களின் சிந்தனையைப் பற்றி சொல்கிறார்.

க்ருணி, சூர்ய, ஆதித்ய என்னும் நாமங்களால் ஆதிபூதாதி மூன்றில் அந்தந்த எண்ணிக்கையின்படி ஸ்ரீமன் நாராயணன் நிலைத்திருக்கிறான். க்ருணி=க்=4, ர்=2, ணி=5. வலது பக்கத்திலிருந்து பார்த்தால், 524 ரூபங்களால் ப்ருதிவ்யாதி பஞ்சபூதங்களில் இருக்கிறான். ஆத்யாத்ம என்னும் மனஸ் தத்வத்தில் சூர்ய நாமகனாகி, சூ=7, ர்=2, ய=1, 721 ரூபங்களில் இருக்கிறான். இந்த எண்ணிக்கையை ஏன் வலப்பக்கத்திலிருந்து மாற்றி படிக்கவில்லை என்றால், இந்த மந்திரத்தின் 'ஓம் க்ருணி: சூர்ய ஆதித்ய:' என்பதில், சூர்ய என்னும் சொல் நடுவில் இருந்து, ஷடங்கன்யாசங்களில் கிரம, தலைகீழ்-கிரமங்களின் விதிகளின்படி மந்திரங்களை உச்சரித்தவாறு நியாசங்களை செய்யும்போது, கிரமத்திலும், தலைகீழ்-கிரமங்களிலும் சூர்ய என்னும் சொல் நடுவில் இருக்கிறது என்று குறிக்கிறது.

அது எப்படியெனில்:

ஓம் க்ருணி ஹ்ருதயாய நம:
சூர்யாய ஷிரஸே ஸ்வாஹா
ஆதித்யாய ஷிகாயை வஷட்
ஆதித்யாய கவசாய ஹும்
சூர்யாய நேத்ராப்யாம் வஷட்
க்ருணயே அஸ்த்ராய ஷட் - இதி திக்பந்த:

என்னும் தந்திரசாரத்தில் ஷடங்கன்யாசத்தை சொல்லியிருப்பர். இதிலிருந்து, இடமிருந்து வலமாக சொல்லும்போதும், க்ருணி, சூர்ய, ஆதித்ய என்று, சூர்ய நடுவில் இருக்கிறது. ஆதித்ய, சூர்ய, க்ருணி என்று வலமிருந்து இடம் படிக்கும்போதும், சூர்ய நடுவில் இருக்கிறான். இப்படியாக, சூர்யன் இப்படியும், அப்படியுமே சமமே என்னும் அர்த்தத்தைக் குறிப்பதாக, எண்ணிக்கையின்படி, 721 ஆகிறது. இதனை வலப்பக்கத்திலிருந்து படிக்கையில் 127 ஆகவேண்டியிருந்தது. அப்படி சொல்லாமல், 721 என்றே ஏன் சொல்லியிருக்கின்றனர் என்பதை என் அறிவிற்கு எட்டிய மட்டில் எழுதியிருக்கிறேன்.

இந்த விஷயத்தில், சங்கர்ஷண ஒடெயரு தமது வியாக்யானத்தில், 'ஐது எரடுஷத ஏகவிம்ஷதி' என்பதை, சூரியனின் கிரணங்கள் ஐந்து. பூர்வாதி நான்கு திசைகள் 4, ஊர்த்வ (மேல் திசை) 1 என, ஐந்து திசைகளில், திசைக்கு ஒன்றாக இரு நூறு., 5*200=1000 கிரணங்கள் என்றும், ஷத ஏக விம்ஷதி என்றால் 121 என்று சொல்லி, இந்த பத்யத்திற்கு க்ருணி: சூர்ய ஆதித்ய என்னும் மந்திரத்தில் சூர்ய சொல்லிற்கு அர்க என்னும் சொல்லை அனுசரித்து, அ=1 ர்=2 க=1 என்று சொல்லி, ஷத ஏகவிம்ஷதி = 121 ரூபங்களை ஆத்யாத்மத்தில் அறியவேண்டும் என்று விளக்கியிருக்கிறார்.

இவற்றில், படிப்பவர்கள் எந்த விளக்கத்தை வேண்டுமானாலும் எடுத்துக் கொள்ளலாம். இதைப்போல, ஆதிதெய்வமான தத்வதேவதைகளில், ஆதித்ய= ஆ=1, தி=3, த்ய=2, 132 இதனை வலது பக்கத்திலிருந்து 231 ரூபங்களை சிந்திக்க வேண்டுமென்று அறியவேண்டும்.

**ஸுருசி ஷார்வரிகரனெனிஸி ச**
**ங்கருஷண ப்ரத்3யும்ன ஷஷி பா4**
**ஸ்கர ரொளகெ அரவத்ததி3க முன்னூரு ரூபத3லி ।**
**கரெஸிகொம்ப3னு அஹ: சம்வ**
**த்ஸரனெனிப சுவிஷிஷ்ட நாமதி3**
**அரிதவரிகா3ரோக்ய பா4க்யவனீவனந்த3மய ||10**

சுருசி ஷார்வரிகரனெனிஸி = சுருசி, ஷார்வரிகர என்னும் நாமங்களால், சங்கர்ஷண, பிரத்யும்ன ரூபங்கள்
ஷஷி பாஸ்கர ரொளகெ = சூர்ய, சந்திரர்களுக்குள்
அரவத்ததிக முன்னூரு ரூபதலி = 360 ரூபங்களில்
அஹ: = பகல் என்று அழைத்துக்கொண்டும்
சம்வத்ஸர நெனிபனு = சம்வத்ஸர என்று அழைத்துக் கொள்பவனும்
விஷிஷ்ட நாமதலி = இப்படி பற்பல நாமங்களில் அழைத்துக்கொண்டு
அரிதவரிகெ = அறிந்தவர்களுக்கு
நந்தமய = ஆனந்த ஸ்வரூபன்
ஆரோக்ய பாக்யவனீவ = ஆரோக்யத்தை, செல்வத்தை
ஈவ = கொடுக்கிறான்.

சந்திர சூர்யர்களில் பகவத் உபாசனையை எப்படி செய்யவேண்டும் என்று சொல்கிறார். ஆனந்தமயனான சங்கர்ஷணன், சுருசி நாமகனாகி, சூர்யனிலும், ப்ரத்யும்னன் ஷார்வரிக நாமகனாகி சந்திரனிலும் இருந்து, 360 பகல்கள் என்று அழைக்கப்பட்டும், 360 இரவு என்று அழைக்கப்பட்டும், மேலும், சம்வத்ஸர என்றும் அழைத்துக்கொண்டும் இருக்கிறான். இப்படி பற்பல நாமங்களால் அழைத்துக் கொள்கிறான் என்று அறிந்து, உபாசனை செய்பவர்களுக்கு ஆரோக்கியத்தை, செல்வத்தைக் கொடுத்து அருள்கிறான்.

**ஏகபஞ்சாஷத் வரணக3த**
**மாகளத்ரனு சர்வரொளக3**
**வ்யாக்ருதா காஷாந்த வ்யாபிஸி நிக3மததி1க3ளனு ।**
**வ்யாகரண பா4ரதமுகா2தி அ**
**நேக சாஸ்திர புராண பா4ஷ்யா**
**நீக1க3ள கல்பிஸி மனோவாங்மய நெனிஸிகொம்ப3 ||11**

ஏகபஞ்சாஷத் வர்ணகத = அ முதலான 51 எழுத்துக்களின் தலைவனான
மாகளத்ரனு = லட்சுமிபதி
சர்வரொளகெ = அனைவருக்குள்ளும், வெளியேயும்
அவ்யாக்ருதா காஷாந்த = அவ்யாக்ருத ஆகாஷத்தின் வரை
வியாபிஸி = நிலைத்திருந்து
நிகமததிகளனு = வேத சமூகங்களை
வ்யாகரண = வியாகரண சாஸ்திரங்களை
பாரத முகாத்யனேக = பாரதத்திலிருந்து துவங்கி அனேக

புராண, பாஷ்யானீதகள = புராண, பாஷ்யங்களின் சமூகங்களை
கல்பிஸி = கற்றுக்கொடுத்து
மனோவாங்மய = மனோமயன் என்று
எனிஸிகொம்ப = சொல்லிக் கொள்கிறான்.

அ-காரத்திலிருந்து அனைத்து எழுத்துக்களிலும் வியாபித்திருந்து, அனைத்து சொற்களிலும் வியாபித்து, மனோமயனாக இருப்பதை விளக்குகிறார்.

அகாராதி 51 எழுத்துக்களின் தலைவனாக, ஸ்ரீலட்சுமிரமணன் அவ்யாக்ருத முதல் ஆகாயத்தின் வரை, அனைத்து இடங்களிலும், அனைவரிலும் நிலைத்திருந்து, வேத, பாரதாதி அனைத்து சாஸ்திரங்களையும், அவரவரின் தகுதிக்கேற்ப புரிந்துகொள்ளுமாறு செய்து, மனோமய, வாங்மயனென்று அழைத்துக் கொள்கிறான். [எந்தவொரு பாஷ்யமானாலும், புராணாதிகள் ஆனாலும், 51 அகாராதி எழுத்துக்களையும் கொண்டிருக்கிறது ஆகையால், அஜாதி பெயர்களில் அனைத்து இடங்களிலும் நிறைந்திருக்கிறான் என்று பொருள்].

**பா$^{4}$ரப்$^{4}$ருன் நாமக$^{1}$ன ஸாவிர**
**தா$^{3}$ருனூரிப்பத்து நாலகு$^{1}$**
**மூருதிக$^{3}$ளு சராசரதி$^{3}$ ஸர்வத்ர தும்பி$^{3}$ஹவு ।**
**ஆரு நாலகு ஜடக$^{3}$ளலி ஹதி$^{3}$**
**நாரு சேதனக$^{3}$ளலி சிந்திஸெ**
**தோரிகொம்ப$^{3}$னு தன்னரூபவ ஸகல டா$^{2}$வினலி ।।12**

பாரப்ருன் நாமகன = பாரப்ருத் என்னும் பெயருள்ள (பரமாத்மனின்)
சாவிரதார நூரிப்பத்து நால்கு = 1624
மூருதிகளு = ரூபங்கள்
சராசரதி = சராசரங்கள் நிறைந்த உலகத்தில்
சர்வத்ர = அனைத்து இடங்களிலும்
தும்பிஹவு = வியாபித்துக் கொண்டிருக்கிறார்
ஆரு நாலகு ஜடகளலி = ஸ்தூல தேகத்தில் இருக்கும், 6*4=24 ஜடபூதமான ப்ருதிவ்யாதி தத்வங்களில்
ஹதினாரு சேதனகளலி = 16 கலாபிமானிகளான 16 தத்வங்களில்
சிந்திஸெ = சிந்தித்தால்
சர்வடாவினலி = அனைத்து இடங்களிலும்
தன்னரூபவ = தன் ரூபங்களை
தோரிகொம்பனு = அபரோக்ஷத்தில் காட்டுகிறான்.

பாரப்ருத் என்னும் பெயருள்ள பரமாத்மனின் பெயர் எண்ணிக்கையின்படி = பா=4 ர=2 ப்ரு=6 த்=1, 4261 இதை வலப்பக்கமாக படித்தால், 1624 ஆகிறது. சராசராத்மக உலகத்தில் இவ்வளவு மூர்த்திகள் இருக்கின்றன. பிரபஞ்சத்தையே தாங்கியிருப்பதால், அதிலிருந்தும் பிராணிகளின் யோகக்ஷேம பாரத்தையும் தாங்குகிறான் என்று பொருள். ஆகையாலேயே, பரமாத்மனுக்கு 'பாரப்ருத்' என்று

பெயர். மற்றும் ஸ்தூல சரீரத்தில் இருக்கும் 24 தத்வங்கள், ப்ருதிவ்யாதி ஜடமாகையால் அவற்றில் தத்ரூபனாக இருக்கிறான். 16 கலைகளால் கூடிய லிங்க சரீரத்திலும், ஸ்தூல சரீரத்திலும்கூட ஞானேந்திரியங்கள் 5, கர்மேந்திரியங்கள் 5, மகாபூதங்கள் 5, மனஸ் 1, இவற்றின் அபிமானி தேவதைகள் சேதனராகையால், '16 சேதனர்களில்' என்று சொல்கிறார்.

24ல் 16 சேதனர்களை மட்டும் ஏன் எடுத்துக்கொண்டார் என்றால், பஞ்சபூதங்களை எடுத்துக்கொண்டால், சூரியனை விட்டு அதன் கிரணங்கள் எப்படி வேறாவதில்லையோ, அதுபோல தன்மாத்ரா குணங்கள், ப்ருதிவி ஆகியவற்றை விட்டு தனியாக இருக்காமல், ப்ருதிவியின் குணம் கந்த, தண்ணீரின் குணம் ரஸ, இப்படி இவை ஒன்றுக்கொன்று சேர்ந்தே இருக்கின்றன. அவற்றிற்கு ஞானம் தனியாக இருக்காமல், ஞானேந்திரியங்களே இருப்பிடமாக இருப்பதால், அதாவது, கந்த குணத்தைக் கொண்ட பூத தத்வத்திற்கு மூக்கு இருப்பிடமாகவும், தேஜஸ் குணத்தைக் கொண்ட பூத தத்வத்திற்கு கண் இருப்பிடமாகவும் இருப்பதால், அந்த தன்மாத்ரா குணங்களை விட்டுவிட்டார்.

ஷோடஷ கலைகளில் இருப்பது புருஷ ரூபமாக இருக்கும் என்பதாலேயே, பரமாத்மனுக்கு 'ஷோடஷாத்மக' என்னும் பெயர் வந்து என்று சொல்லும் பாகவத வசனங்களை அனுசரித்தே தாசராயரும் 'ஹதினாரு சேதனகளலி' என்று சொல்கிறார் எனலாம்.

இப்படியே அனைத்து இடங்களிலும் இருந்து, நம் அனைவரின் யோகக்ஷேம நலன்களின் பாரத்தை சுமந்து, நம்மை காப்பாற்றுவான் என்று நம்பி, ஸ்வ-கர்த்ருத்வ-அபிமானத்தை துறந்து, பரமாத்மனை தியானிக்க வேண்டும். வீடு, காடு என்னும் இட வேறுபாடு இல்லாமல், அல்லது பிரம்மசார்ய, கிருஹஸ்த, வானப்ரஸ்த, சன்யாஸ என்னும் வேறுபாடு இல்லாமல் எந்த நிலையில் இருந்தாலும், பக்தியுடன் பஜிப்பவர்களுக்கு அபரோக்ஷத்தில் தன் ரூபத்தைக் காட்டுவார்.

**மிசுனிமேலின மணியவோல் ரா**
**ஜிஸுவ பிரம்மாதி$^{3}$க$^{3}$ள மனத$^{3}$லி**
**பிஸஜஜாண்டா$^{3}$தா$^{4}$ரகனு ஆதே$^{3}$யனெந்தெ$^{3}$னிஸி |**
**த்$^{3}$விஷத$^{1}$ நால்வத்தெரடு$^{3}$ ரூபதி$^{3}$ ஷஷியொ**
**ளிப்பனு ஷஷதொளகெ$^{3}$ ஷோ**
**பி$^{4}$ஸுவ நால்வத்தெரட$^{3}$தி$^{4}$கஷத ரூபத$^{3}$லி பி$^{3}$ட$^{3}$தெ ||13**

மிஸுனிமேலின = தங்கத்தின் மேல் வேயப்பட்ட
வோல் = மாணிக்கத்தைப் போல
ப்ரம்மாதிகள = பிரம்மனே முதலான தேவதைகளின்
மனதலி = மனதில்
ராஜிஸுவ = நிலைத்திருப்பான்.
பிஸஜ ஜாண்டாதாரகனு = பிரம்மாண்டத்தை தரித்தவன் என்று

ஆதேயனெந்தெனிஸி = ஆதேயன் என்று அழைத்துக் கொண்டு
த்விஷத நால்வத்தெரடு ரூபதி = 242 ரூபங்களை
ஷஷியொளிப்பனு = சந்திரனில் இருக்கிறான்
ஷஷதொளகெ = சந்திரனில் இருக்கும் களங்கத்தில்
நால்வத்தெரடதிக ஷத = 142
ரூபதலி = ரூபங்களில்
பிடதெ = எப்போதும்
ஷோபிஸுவ = நிலைத்திருப்பான்.

ஒளிமயமான தங்க மலை சிகரத்தின் நடுவில் ஒளிரும் மாணிக்கத்தைப் போல, ஆதார, ஆதேய ரூபங்களால் பிரம்மாதிகளின் மனதில் நிலைத்திருக்கிறான். தங்கத்தின் நடுவே மாணிக்கம் போன்ற உதாரணத்தினால், தங்கமலை போன்றவனாக, பிரம்மாண்டத்திற்கு ஆதாரமாக இருக்கிறான். விஸ்வரூபத்தினால், மாணிக்கத்தைப் போல அதற்குள் வீற்றிருக்கிறான். இந்த ரூபத்தை, பிரம்மாதிகள் தத்தம் யோக்யதைக்கேற்ப அபரோக்ஷத்தில் காண்கின்றனர். ஆதாரமாக இருக்கிறான் என்னும் விஷயத்தில் இன்னொரு உவமானத்தையும் சொல்கிறார்.

சந்திரனுக்குள் கருப்பாக ஒரு விஷயம் காணப்படுகிறது. மக்கள் அதை மான் என்று சொல்வதுண்டு. அதற்கு சம்ஸ்கிருதத்தில் 'ஷஷ' என்று பெயர். ஷஷ என்றால் மூலம் (ஆதாரம்). இந்த சந்திரனின் களங்கத்திற்கு ஷஷ என்று பெயர் இருப்பதால், சந்திரனுக்கு - (ஷஷ உள்ளவன் ஆகையால்) ஷஷி என்ற பெயர் வந்தது.

இப்படி ஆதார நாமகனாக, எழுத்துக்களின் படியும், ஆ=2 தா=4 ர=2, 242 வலது பக்கத்தில் படித்தாலும் 242 வருகிறது. இத்தகைய ரூபங்களால், சந்திர, சந்திரனின் களங்கத்தில் ஆதார ரூபனாக, பிரம்மாண்டத்தில் ஆதேய நாமகனாகவும், ஆ=2 தே=4 ய=1. 241 இதை வலப்பக்கமான படித்தால் 142 ரூபங்கள் வருகிறது. இவ்வளவு ஆதேய ரூபங்களால், உலகங்களிலும் இதைப்போலவே, எந்த பொருளின் ஆதாரத்தின் மேல் எந்தப் பொருள் இருக்கிறதோ, அவற்றிலெல்லாம் ஆதார, ஆதேய ரூபங்களால் பரமாத்மன் எப்போதும் நிலைத்திருக்கிறான் என்று சிந்திக்க வேண்டும்.

**எரடு$^3$ஸாவிரதெ$^3$ண்டு$^1$ ரூபவ**
**நரிது சர்வபதார்த்த$^2$தலி ஸிரி**
**வரன பூஜெயமாடு$^3$ வரக$^3$ள பே$^3$டு$^3$ கொண்டா$^3$டு$^3$ |**
**ப$^3$ரிதெ$^3$ ஜலதொளு முளுகி$^3$ பி$^3$ஸிலொளு**
**பெரளனெணிஸிதரேனு சத்கு$^3$ரு**
**ஹிரியரனுசரிஸித$^3$ர மர்மவனரியதி$^3$ஹ நரனு ||14**

எரடுசாவிரதெண்டு ரூபவனு = 2008 ரூபங்களை
அரிது = அறிந்து
ஷிரிவரன = லட்சுமி ரமணனை

சர்வ பதார்த்ததலி = அனைத்து பொருட்களிலும்
பூஜெயமாடு = பூஜையை செய்
வரகள பேடு = வரங்களை கேள்
கொண்டாடு = ஸ்தோத்திரம் செய்
சத்குரு = சத்குருகளான பெரியவர்களை
அனுசரிஸி = அவர்கள் பேச்சினைக் கேட்டு
மர்மவன்னு = மகிமைகளை
அரியதெ = தெரியாமல்
இஹ = இருக்கும்
நரனு = மனிதன்
பரிதெ = எவ்வித பயனுமில்லாமல்
பெரளனு = விரல்களை
எணிஸதரேனு = எண்ணினால் என்ன பயன்? (பயன் இல்லை என்று பொருள்).

முந்தைய 2 பத்யங்களில் கூறிய பகவத்ரூபங்களை சொல்லியவாறு, சத்குருவின் உபதேசம் இல்லாதவர்க்கு இந்த உபாசனை புரியாது என்று சொல்கிறார்.

12ம் பத்யத்தில் கூறிய பகவத் ரூபங்களின் எண்ணிக்கை 1624. ஆதார ரூபங்கள் 242. ஆதேய ரூபங்கள் 142. மொத்த ரூபங்கள் 2008. இவ்வளவு பகவத்ரூபங்களை அனைத்து பொருட்களிலும் சிந்தித்து லட்சுமிபதியை யார் பூஜிக்கின்றாரோ, அவரே தன்யர். அவரை பிரார்த்தித்து விஷயங்களை அறியவேண்டும். அவரை போற்றவேண்டும். சத்குருகளின் சேவை செய்து அவரின் உபதேசத்தினால் இந்த மர்மங்களை அறியாத மனிதர்கள், பெரிய ஆசார்யர் என்று வேடம் தரித்து, குளிரில் சென்று குளத்தில் மூழ்கி, வெளியில் அமர்ந்து கண்மூடி அமர்ந்து, விரல்களை விட்டு ஜெபம் செய்து என்ன பலன்? எந்த பலனும் இல்லை.

**மத்தெ சித்தே$^{3}$ஹத$^{3}$ ஒளகெ$^{3}$ எ**
**ம்ப$^{3}$த்து$^{1}$ சாவிரதே$^{3}$ளுனூரி**
**ப்பத்த$^{1}$யிது$^{3}$ நரசிம்ஹ ரூபத$^{3}$லித்து$^{3}$ ஜீவரிகெ$^{3}$ |**
**நித்யத$^{3}$லி ஹக$^{3}$லிருளு ப$^{3}$ப்ப$^{1}$ப$^{1}$**
**ம்ருத்யுவிகெ$^{3}$ தா ம்ருத்யுவெனிஸுவ**
**ப்$^{4}$ருத்யவத்ஸல ப$^{4}$யவினாஷன பா$^{4}$க்யசம்ப$^{1}$ன்ன ||15**

மத்தெ = மேற்சொன்ன ரூபங்கள் இல்லாமல்
சித்தேஹத ஒளகெ = ஜீவனின் ஸ்வரூப தேகத்தில்
எம்பத்து சாவிரதேளு நூரிப்பத்தயிது = 80,725
நரசிம்ஹ ரூபதலித்து = நரசிம்ம ரூபத்தில் இருந்து
ஜீவரிகெ = ஜீவர்களுக்கு
நித்யதலி = எப்போதும்
ஹகலிருளு = இரவும் பகலும்
பப்ப = வருவான்
அபம்ருத்யுவிகெ = துர்மரணத்திற்கு

தா = தானே
அபம்ருத்யுவெனிஸுவ = தானே துர்மரணம் என்றவாறு
ப்ருத்யவத்ஸல = பக்தவத்ஸலன்
பயவினாஷன = பயங்களை போக்குபவன்
பாக்ய சம்பன்ன = செல்வங்களை அளிப்பவன்.

ஸ்வரூப தேகத்தில் இருக்கும் பகவத் ரூபங்களை சொல்கிறார்.

நரசிம்ம என்னும் ரூபத்தின் எண்ணிக்கை ந=5 ர=2 ஸி=7 ம்=0 ஹ=8, 52708. இதனை வலது பக்கத்திலிருந்து பார்த்தால், 80725 ரூபங்களால் நரசிம்மன், ஜீவனின் ஸ்வரூப தேகத்தில் இருந்து, ஜீவருக்கு தினந்தோறும், இரவும் பகலும் வரும் துர்மரணத்திற்கே துர்மரணம் எனப்படுகிறார். அதாவது, துர்மரணத்தை பரிகரிக்கிறவன் என்று பொருள். தன் பக்தர்களில் மிகவும் அன்பு கொண்டவன், பக்தர்களின் பயங்களைப் போக்குகிறவன், ஆறு நற்குணங்களைக் கொண்டவன். ஆகையாலேயே, துர்மரணத்தைப் போக்குகிறான் என்று பொருள்.

**ஜ்வரனொளிப்பத்தேளு ஹரனொள**
**கிருவனிப்பத்தெண்டு ரூபதி[3]**
**எரடு[3] ஸாவிரதெ[3]ண்டு நூரிப்பத்த[1] ஏளெனிப ।**
**ஜ்வரஹராஹ்வய நாரசிம்ஹன**
**ஸ்மரணெ மாத்ரதி[3] து[3]ரித[1]ராஷிக[3]**
**ளிரதெ போ[1]பு[1]வு த[4]ரணிபிம்ப[3]வ கண்ட[3] ஹிமத[3]ந்தெ ||16**

ஜ்வரனொளு = மஹேஸ்வரனிடமிருந்து தோன்றிய ஜ்வரனுக்குள்
இப்பத்தேளு = 27 ரூபங்களால்
ஹரனொளகிருவ = ஜ்வரனை ஸ்ருஷ்டித்த ஹரனில்
இப்பத்தெண்டு ரூபதி = 28 ரூபங்களில்
எரடு சாவிரதெண்டு நூரிப்பத்த ஏளெனிப = 2827 அனிருத்த ரூபங்களில்
ஜ்வரஹராஹ்வய = ஜ்வரஹர என்னும் பெயருள்ள
நாரசிம்ஹன = நரசிம்மனின்
ஸ்மரணெ மாத்ரதி = நினைத்த மாத்திரத்திலேயே
துரித ராஷிகளு = பாப ராசிகள் அல்லது கஷ்ட ராசிகள்
தரணி பிம்பவ = சூரிய மண்டலத்தை
கண்ட = பார்த்த
ஹிமதந்தெ = பனித்துளியைப் போல அல்லது குளிரைப் போல
இரதெ போபுவு = இல்லாமல் போய்விடும்.

இரு பத்யங்களால், நரசிம்ம தேவரின் மகிமைகளை விவரிக்கிறார். ருத்ர தேவரிடமிருந்து ஸ்ருஷ்டி ஆனது மஹேஸ்வர ஜ்வரம். இந்த கதையானது, ஹரிவம்சத்தில், உஷாஹரண கதையில் ஸ்ரீகிருஷ்ணனுக்கும் ருத்ரருக்கும் போர் நடந்த சந்தர்ப்பத்தில் வருகிறது. இதே கதையை மகாபாரத தாத்பர்ய நிர்ணய 22ம்

அத்தியாயம் 259ம் ஸ்லோகத்திலிருந்து 265 ஸ்லோகம் வரைக்கும் விவரமாக சொல்லியிருப்பார். அது என்னவெனில்:

அதக்ருஷ்ண: ஸமாருஹ்ய கருடம் ராமஸம்யுத: |
ப்ரத்யும்னோனச தத்ராகாத் ப்ரதமந்தத்ரவன்ஹிபி: ||
யுத்ட்வேவாங்கிரஸாசைவ க்ஷணாத்வித்ராவ்யர்தா ஹரி: | 259
வித்ராவ்ய ஷர்வப்ரமதானாஸஸாத ஜ்வரந்தத: |
தேன பஸ்ம ப்ரஹாரெணஜ்வரிதம் ரோஹிணீசுதம் | 260
ஆஷ்லிஷ்ய விஜ்வரம் சக்ரி வாசுதேவோ ஜகத்ப்ரபு: |
ஸ்வயம் விக்ரீட்யதேனாத கிஞ்சித்காலம் ஜனார்த்தன: | 261
நிஷ்பிஷ்ய முஷ்டிபிஷ்சான்யம் ஸஸர்ஜஜ்வர மச்யுத: |
ஸ்வயம் ஜித்வாபிகிரிஷ ப்ருத்யம் நாலமிதிப்ரபு: | 262
ஸ்வப்ருத்யேன சேதவ்ய யித்யன்யம் ஸஸ்ருசேததா |
ஜ்வரேண வைஷ்ணவேனாஸௌ சுப்ருஷம் பீடிதஸ்ததா ||263
க்ராஸார்த்த முபனீதஷ்ச ஜகாம ஷரணம் ஹரிம் |
தேனஸ்துதஸ்ஸ பகர்வா மோசயாமாஸதம் ப்ரபு: || 264

தன் மகளான உஷாவை காந்தர்வ முறையில் ரகசியமாக திருமணம் செய்து, அவளது அந்தப்புரத்தில் மறைந்திருந்த அனிருத்தனை, பாணாசுரன் போரில் வென்று, நாகாஸ்திரத்தினால் கட்டினான். இதனை நாரதரிடமிருந்து அறிந்து கொண்ட ஶ்ரீகிருஷ்ணன், பலராம, பிரத்யும்னருடன், கருடவாகனனாக, பாணாசுரனின் பட்டணத்திற்கு வந்தார். அங்கு முதலில் அங்கிரஸ முதலானவர்களுடன் போர் புரிந்து, ஒரே நொடியில் அவர்கள் அனைவரையும் வென்றார்.

அப்போது ருத்ரர், பாணாசுரனுக்கு உதவி செய்வதற்காக ஒரு ஜ்வரத்தை ஸ்ருஷ்டித்து கிருஷ்ணனுடன் போர் புரிவதற்கு அனுப்பினார். அந்த ஜ்வரமானது, முதலில் பலராமனின் மேல் விபூதியைக் கொட்ட, அதன் வீரியத்தால், பலராமனுக்கு உடம்பு முழுக்க ஜ்வரம் பரவி மிகவும் துன்பப்பட, ஶ்ரீகிருஷ்ணன் பலராமனை கட்டிக்கொண்டு அந்த ஜ்வரத்தை போக்கினான்.

அப்போது, மஹேஸ்வரனின் ஜ்வரம், பலராமனை விட்டு, கிருஷ்ணனிலேயே நுழைந்தது. ஶ்ரீகிருஷ்ணன் சிறிது நேரம் கஷ்டப்பட்டவனைப் போல நடித்து, பின் தன் முஷ்டியினால் அடித்து அந்த ஜ்வரனை வென்றான். ருத்ர பக்தரை தன் பக்தன் மூலமாகவே வெல்லவேண்டும் என்னும் நோக்கத்தில், தானும் ஒரு ஜ்வரனை ஸ்ருஷ்டித்தான். அப்போது, கிருஷ்ணனின் ஜ்வரம் புறப்பட்டு, மஹேஸ்வரனின் ஜ்வரத்தை வெளியில் இழுத்து, துன்புறுத்தி, இறுதியில், அந்த ஜ்வரத்தையே தின்றுவிட வேண்டுமென்று முயல, மஹேஸ்வரனின் ஜ்வரம், ஶ்ரீகிருஷ்ணனிடம் உயிர்ப்பிச்சை கேட்டது.

அந்த ஜ்வரத்தால் வணங்கப்பட்டு, தன் ஜ்வரத்தை நிறுத்தி, மஹேஸ்வரனின் ஜ்வரம் மட்டுமே பூமியில் இருக்குமாறு வரத்தைக் கொடுத்து ‘ நீ இவ்வளவு பாகங்களால் மனிதர்களிலும், இவ்வளவு பாகங்களால் மிருக, மரங்களில் இருக்க

வேண்டும் என்றும், ஜ்வரத்தால் பாதிக்கப்படும் மனிதன் உன்னை நான் வென்ற இந்த கதையைக் கேட்க, சொல்ல, உடனடியாக அவனிடமிருந்து அந்த ஜ்வரம் பரிகாரமாக வேண்டும் என்றும் வரத்தைக் கொடுத்து அனுப்பினார்.

ஜ்வரனை வென்ற பிறகு, ஸ்வயம் ருத்ரதேவரே ஶ்ரீகிருஷ்ணனிடம் போரைத் துவக்கினார். அப்போது, பாணாசுரன் போருக்கு வர, அவனை வென்றதுடன், அவனைக் கொல்வதற்கு ஆயுதம் ஏந்தியதைப் பார்த்த ருத்ரதேவர், கிருஷ்ணனிடம் வேண்டினார். கிருஷ்ணனும் ருத்ரதேவரின் வேண்டுகோளுக்கிணங்க, அவனைக் கொல்லாமல் விட்டு, அவனுடைய ஆயிரம் கைகளில் இரண்டை மட்டும் விட்டுவிட்டு, மற்றவற்றை கத்தரித்தார். ருத்ரதேவர், பாணாசுரனை சமாதானம் செய்தார். ஶ்ரீகிருஷ்ணன், அனிருத்தன், உஷாதேவியுடன் தன் இருப்பிடமான த்வாரகைக்குத் திரும்பினார்.

இத்தகைய ஜ்வரனில் எண்ணிக்கையின்படி ஜ்வ=7 ர=2. 72. இதனை வலப்பக்கத்திலிருந்து படித்தால் 27 ரூபங்களில் இருக்கிறார். இதனை ஸ்ருஷ்டித்த ஹரனில் ஹ=8 ர=2. 82. வலப்பக்கத்திலிருந்து படித்தால் 28 ருபங்களில் இருக்கிறார். ஶ்ரீ நரசிம்மன், ஜ்வரஹர என்னும் பெயரில் ஜ்வ=7 ர=2 ஹ=8 ர=2 என 7282. இதை வலப்பக்கத்திலிருந்து படித்தால் 2827 ஆகிறது. இவ்வளவு ரூபங்களால், தன்னை நினைத்த மாத்திரத்திலேயே, சூரியன் பனித்துளிகளை எப்படி நீக்குகிறானோ, அந்த வேகத்தில் தன் பக்தர்களின் துன்பங்களைப் போக்குகிறார்.

**மாஸ பரியந்தரவு பி$^{3}$ட$^{3}$தெ$^{3}$ ந்ரு**
**கேசரிய ஷுப$^{4}$நாமமந்த்ர ஜி**
**தாஸனதி ஏகாக்$^{4}$ரசித்த$^{1}$தி$^{3}$ நிஷ்க$^{1}$படதி$^{3}$ந்த$^{3}$ |**
**பே$^{3}$ஸரதெ$^{3}$ ஜபிஸலு வ்ருஜினக$^{3}$ள**
**நாஷகை$^{3}$ஸி மனோரத$^{2}$க$^{3}$ள ப**
**ரேஷ பூர்த்தியமாடி$^{3}$ கொடு$^{3}$வனு க$^{1}$டெ$^{3}$கெ$^{3}$ பரக$^{3}$திய ||17**

மாஸ பர்யந்தரவு = ஒரு மாதம் வரைக்கும்
பிடதெ = விடாமல்
ந்ருகேசரிய = நரசிம்மனை
ஷுப நாம மந்த்ர = சுப-கரமான நாம மந்திரத்தை
ஜிதாஸனதலி = ஸ்திரமான ஆசனத்தில்
ஏகாக்ரசித்ததி = ஒரு மனத்துடன் (தியானத்தில்)
நிஷ்கபடதிந்த = மனதில் எவ்வித களங்கமும் இன்றி
பேசரதெ = எவ்வித சோர்வும் இல்லாமல்
ஜபிஸலு = ஜெபித்தால்
வ்ருஜினகள = பாவங்களை
நாஷகெயிஸி = போக்கி
மனோரதகள = மனோபீஷ்டங்களை
பரேஷ = ஶ்ரீபரமாத்மன்
பூர்த்திய மாடி = நிறைவேற்றி

கடெகெ பரகதிய = இறுதியில் பரகதியை
கொடுவனு = கொடுக்கிறான்.

இந்த பத்யத்தால், நரசிம்ம மந்திரத்தை ஜெபிப்பதன் பலன்களை விளக்குகிறார்.

ஒரு மாதம் வரைக்கும், விடாமல், சுபகரமான நரசிம்ம நாம மந்திரத்தை ஜெபிக்க வேண்டும். அந்த மந்திரத்தை ஜெபிக்கும் கிரமத்தை தந்திரசாரத்தில் சொல்லியிருக்கிறார் ஸ்ரீமதாசார்யர்.

உக்ரம் வீரம் மஹாவிஷ்ணும் ஜ்வலந்தம் சர்வதோ முகம் |
ந்ருஸிம்ஹம் பீஷணம் பத்ரம் ம்ருத்யும் ம்ருத்யும் நமாம்யஹம் ||

என்னும் 32 எழுத்துக்களைக் கொண்ட மஹாமந்திரத்தை ஒரு ஸ்திரமான ஆசனத்தில் அமர்ந்து, நிலையான மனதுடன், ஜெபிக்க வேண்டும். மனதில் பக்தி இல்லாமல், பிறர் பாராட்ட வேண்டும் என்று ஜெபிப்பது கபடம் எனப்படுகிறது. அப்படியில்லாமல், பக்தியுடன், சோர்வில்லாமல் இதனை ஜெபித்தால், அனைத்து பாவங்களையும் பரிகரித்து, சர்வேஷனான ஸ்ரீஹரி அவர்களின் மனோபீஷ்டங்களை நிறைவேற்றி இறுதியில் உத்தமமான சத்கதியையும் கொடுக்கிறார்.

**சதுரமூர்த்யாத்மக ஹரியு த்ரிம்**
**ஷதி சுரூபதி$^{3}$ பி$^{3}$ரம்மனொளு மா**
**ருதனொளிப்பத்தேளு ரூபத$^{3}$லிப்ப ப்ரத்$^{3}$யும்ன**
**சுதரொளிப்பத்தைது$^{3}$ ஹதி$^{3}$னெ**
**ண்டதுல ரூபக$^{3}$ளரிது வத்ஸர**
**ஷதக$^{3}$ளல்லி பூஜிசுதலிரு சதுராத்மகன பத$^{3}$வ ||18**

சதுர மூர்த்யாத்மக = அனிருத்தாதி நான்கு ரூபாத்மகனான
ஹரியு = வாசுதேவனு
த்ரிம்ஷதி சுரூபதி = மிகச்சிறந்த 30 ரூபங்களால்
ப்ரம்மனொளு = பிரம்மதேவரில்
ப்ரத்யும்ன = பிரத்யும்னரூபியான ஸ்ரீபரமாத்மன்
மாருதனொளு = வாயுதேவரில்
இப்பத்தேளு ரூபதொளு = 27 ரூபங்களில்
இப்ப = இருக்கிறார்
ஸுதரொளு = பிரம்ம வாயுகளின் மக்களான கருட, சேஷ, ருத்ரர்களில்
இப்பத்தைது ரூபதொளு = 25 ரூபங்களில், சங்கர்ஷண இருக்கிறான்
ஹதினெண்டதுள ரூபகள = யாருமே தனக்கு சமம் இல்லாத 18 ரூபங்களில்
அனிருத்தன் = அனிருத்தன் இருக்கிறான்
வத்ஸரஷதகளலி = இப்படியாக 100 ஆண்டுகளில் மொத்தம் 100 ரூபங்களை நினைத்து
சதுராத்மகன = 4 ரூபத்மகனான ஸ்ரீபரமாத்மனை
பதவ = பாதாரவிந்தங்களை
பூஜிஸுதலிரு = பூஜித்துக் கொண்டிரு.

மனிதர்களுக்கு இருக்கும் 100 ஆண்டு கால ஆயுளில் நினைக்க வேண்டியதான பகவத்ரூபங்களைப் பற்றி சொல்கிறார்.

அனிருத்த, பிரத்யும்ன, சங்கர்ஷண, வாசுதேவ என்னும் 4 ரூபங்களைக் கொண்டிருக்கும் ஸ்ரீபரமாத்மன், மனிதனின் ஆயுளில் முதல் 30 ஆண்டுகள் பிரம்மனின் அந்தர்யாமியாகி அதிபதியாக இருப்பான். வாசுதேவன் 30 ரூபங்களால் 30 ஆண்டுகள் வரை பிரம்மதேவரின் அந்தர்யாமியாக இருந்து சரீரத்தை காப்பாற்றுகிறான்.

அதன்பிறகு, 27 ஆண்டுகள் வரை, அதாவது, 31ம் வயதிலிருந்து 57ம் வயது வரை, வாயுதேவர் அபிமானிகளாக இருக்கிறார். அப்போது, பிரத்யும்னன் 27 ரூபங்களால் அந்த 27 ஆண்டுகளும் வாயுவின் அந்தர்யாமியாக இருந்து நம் சரீரத்தை காப்பாற்றுகிறான்.

அதன்பிறகு, 25 ஆண்டுகள் வரை, அதாவது 57ம் வயதிலிருந்து 82ம் வயது வரை, கருட சேஷ ருத்ரர் அதிபதியாக இருக்கின்றனர். அப்போது சங்கர்ஷணன் 25 ரூபங்களால் அந்த 25 ஆண்டுகளும் கருட சேஷ ருத்ரர்களின் அந்தர்யாமியாக இருந்து நம் சரீரத்தை காப்பாற்றுகிறான்.

அடுத்த 18 ஆண்டுகள் வரை, அதாவது 82ம் வயதிலிருந்து 100 வயது வரை, ஸ்ரீஅனிருத்தரூபியான பரமாத்மன், தானே 18 ரூபங்களால் நம் சரீரத்தை காப்பாற்றுகிறான்.

இப்படியாக 4 ரூபங்களைக் கொண்ட ஸ்ரீபரமாத்மன், 100 ஆண்டுகள் வரை, 4 ரூபங்களால் நம்மை காக்கிறான் என்று அறிந்து ஸ்ரீநாராயண மூர்த்தியை பூஜிக்க வேண்டும் என்று பொருள்.

**நூருவருஷக்கெ தி$^{3}$வஸ மூவ**
**த்தாரு ஸாவிரவஹவு நாடி ஷ**
**ரீரதொளகி$^{3}$னிதிஹவு ஸ்த்ரீ பு$^{1}$ம் பே$^{4}$த$^{3}$த$^{3}$லி ஹரிய**
**ஈரதி$^{4}$க வெப்பத்துசாவிர**
**மூருதிக$^{3}$ளனு நெனெது$^{3}$ ஸர்வா**
**தா$^{4}$ரகன ஸர்வத்ர பூ$^{1}$ஜிஸு பூர்ணனெந்த$^{3}$ரிது ||19**

நூரு வருஷக்கெ = 100 ஆண்டுகளுக்கு
திவஸ = இரவு + பகலுடன் கூடிய ஒரு நாள்
மூவத்தாரு ஸாவிரவு = 36,000
அஹவு = ஆகிறது [இதில் பகல் 36,000 + இரவு 36,000 என 72,000 ஆகிறது]
இனிது = இந்த விதமாக
ஷரீரதொளகெ = நம் தேகத்தில்
ஸ்த்ரி பும் பேததலி = 36,000 பகல் நாடிகள் புருஷ நாடிகள் என்றும், 36,000 நாடிகள் ஸ்த்ரி நாடிகள் என்றும், வல இட பாகங்களில் இருக்கின்றன. இந்த நாடிகளில்

ஹரிய = ஸ்ரீபரமாத்மனின்
ஈரதிக வெப்பத்து சாவிர மூர்த்திகளனு = 72,000 மூர்த்திகளை
நெனெது = சிந்தித்து
பூர்ணனெந்தரிது = ஆனந்தாதி குணங்களால் பூர்ணன் என்று அறிந்து
சர்வாதாரகன = அனைத்து பிராணிகளுக்கும் ஆதாரமான ஸ்ரீபரமாத்மனை
சர்வத்ர = அனைத்து இடங்களிலும்
பூஜிஸு = பூஜையை செய்.

மனிதனின் ஆயுட்காலமான 100 ஆண்டுகளில், 1 ஆண்டுக்கு, 360 நாட்கள் என்றால், 100 ஆண்டுகளுக்கு 36,000 நாட்கள் ஆகின்றன. அதில் 36,000 பகல்கள், 36,000 இரவுகள். இவற்றைக் குறிக்கும் நாடிகள், புருஷ நாடிகள் என்றும், ஸ்த்ரி நாடிகள் என்றும் இந்த சரீரத்தின் வல இடது பாகங்களில் பகல் இரவைக் குறிக்கும் நாடிகள் என மொத்தம் 72,000 நாடிகள் இருக்கின்றன. இந்த நாடிகளில் ஸ்ரீபரமாத்மன் 72,000 ரூபங்களில் இருந்து, நம்மைக் காக்கிறான். அவன், பூர்ணானந்த ஸ்வருபனாகவே இருக்கிறான். அதாவது, சரீர சம்பந்தத்தினால் நாடிகளுக்கு என்ன பிரச்னை வந்தாலும், பரமாத்மன், அதற்கு சம்பந்தப்படாமல் (நிர்லிப்தனாகவே) இருக்கிறான் என்று பொருள். இப்படியாக, ஸ்ரீபரமாத்மன், சர்வாதாரகன், பூர்ணன் ஆகிறான் என்று அறிந்து, அவனை அனைத்து இடங்களிலும் இருப்பவன் என்று நினைத்து பூஜிக்க வேண்டும் என்கிறார்.

**கால கர்ம கு$^{3}$ண ஸ்வபா$^{4}$வ க$^{3}$**
**ளாலயனு தானாகி$^{3}$ லகுமி**
**லோல தத்தத்$^{3}$ரூப நாமதி$^{3}$ கரெசுதொளகி$^{3}$த்து$^{3}$ |**
**லீலெயிந்த$^{3}$லி சர்வஜீவர**
**பாலிஸுவ சம்ஹரிப ஸ்ருஷ்டிப**
**மூல காரண ப்ரக்ருதி கு$^{3}$ண கார்யக$^{3}$ள மனெமாடி ||20**

கால = இறந்த, நிகழ், எதிர் என்னும் மூன்று காலங்கள்
கர்ம = சுக துக்கத்தின் பலன்களான கர்மங்கள்
குண = சத்வ ரஜஸ் தமோ என்னும் மூன்று குணங்கள்
ஸ்வபாவ = ஜீவர்களின் ஸ்வபாவம் இவற்றிற்கு
ஆலயனு = அங்கு வசிப்பவன்
தானாகி = தானாகவே
லகுமி லோல = லட்சுமிபதியான
தத்தத்ரூப நாமதி = கால, கர்மாதி நாமங்களால் அழைக்கப்படும்
ஒளகித்து = அனைவரிலும் அந்தர்யாமியாக இருந்து
லீலெயிந்தலி = சோர்வில்லாமல் தனது விளையாட்டுகளினாலேயே
பாலிஸுவ = விஷ்ணு ரூபத்தினால் காக்கிறான்
சம்ஹரிஸி = ருத்ர ரூபத்தினால் ருத்ரதேவரில் இருந்துகொண்டு, அனைத்து ஜீவர்களின் ஸ்தூல தேகங்களை சம்ஹரித்து, ப்ரபஞ்சத்தையே எரித்து
மூலகாரண = மூலகாரணமான ப்ரக்ருதிக்கு காரணமான பரமாத்மன்

ப்ரக்ருதி குணகார்யகள = ப்ராக்ருதமான சத்வ ரஜஸ் தமோ குணங்களின் காரியங்களையே
மனெமாடி = தன் இருப்பிடமாகக் கொண்டு (அவற்றில் இருந்து)
ஸ்ருஷ்டிப = வாசுதேவாதி ரூபங்களால் சூக்ஷ்ம ஸ்ருஷ்டியை செய்து, பின் பிரம்மதேவரின் பிரம்ம ரூபத்தில் இருந்து, ஸாத்விக ராஜஸ தாமஸ ஜீவர்களின் ஸ்தூல ஸ்ருஷ்டியை செய்கிறான்.

ஸ்ரீபரமாத்மனின் ஸ்ருஷ்ட்யாதி மகிமையை 'கால கர்ம' என்னும் பத்யத்தில் சொல்கிறார்.

ஜீவர்கள் அனாதி காலத்திலிருந்து சாத்விக, ராஜஸ, தாமஸர் என்று மூன்று விதமான ஸ்வபாவம் உள்ளவர்களாக இருக்கின்றனர். சாத்விகர் - சுக ப்ராரப்த கர்மங்கள் உள்ளவர்கள். முக்தி யோக்யர் எனப்படுகிறார்கள். ராஜஸர் - சுக துக்க மிஸ்ரமான ப்ராரப்த கர்மங்கள் உள்ளவர்கள். தாமஸர் துக்க ப்ராரப்த கர்மங்கள் உள்ளவர்கள். இவை அனாதி காலத்திலிருந்து ஜீவர்களின் ஸ்வபாவமாக இருக்கின்றன. ஸ்ரீலட்சுமிரமணன், சிறிய அணு முதல் அனைத்திலும் இருந்து, காலாத்மகனாக, ஜீவர்களின் குணகர்மங்களை அனுசரித்து சம்சார சாதனையை செய்வித்து, தாமசர்களின் யோக்யதைக்கேற்ப, துக்கத்திற்கான சாதனையை செய்வித்தும், த்ரிவித ஜீவர்களை விஷ்ணு ரூபத்தினால் காப்பாற்றுகிறான்.

பிரளய காலத்தில் ருத்ராந்தர்கதனாகி ருத்ர ரூபத்தில் இருந்து, பிரபஞ்சத்தை எரித்து, அனைத்து ஜீவர்களுக்கும் அவரவர்களின் குண கர்மங்களுக்கேற்ப சுக, மிஸ்ர, துக்க ரூபங்களான முக்தி, சம்சாரம், தமஸ் என்னும் 3 வித கதிகளைக் கொடுக்கிறான். மேலும், இதுவரை ஸ்ருஷ்டிக்கு வராத ஜீவர்களின் குண கர்மங்களுக்கேற்ப மூலபிரக்ருதியை ஸ்ருஷ்டிக்கிறான். ஸ்ருஷ்டியாதி கர்மங்களுக்கு, பிரம்மாதிகள், ஒரு நிமித்த காரணர்களே (பெயருக்கு என இருப்பவர்கள்). முக்ய காரணன், பரமாத்மனே.

**திலஜ வர்த்திகளனுஸரிஸி ப்ர**
**ஜ்வலிஸி தீபக$^{3}$ளாலயத$^{3}$ க**
**த்தலெய ப$^{4}$ங்கிஸி தத்பதா$^{3}$ர்த்த$^{4}$வ தோருவந்த$^{3}$த$^{3}$லி |**
**ஜலருஹேக்ஷண தன்னவர மன**
**தொளகெ$^{3}$ ப$^{4}$க்தி ஞான கர்மகெ**
**ஒலிது பொளெவுத தோருவனு கு$^{3}$ண ரூப க்ரியெக$^{3}$ளனு ||21**

திலஜ வர்த்திகள = எண்ணெய், வத்திகளை அனுசரித்து
ப்ரஜ்வலிஸி தீபகளு = எரியும் தீபங்கள்
ஆலயத = வீட்டின்
கத்தலெய = இருட்டினை
பங்கிஸி = நீக்கி
தத்கத = அந்த வீட்டில் இருக்கும்
அர்த்தவ = பதார்த்தங்களை (பொருட்களை)

தோருவந்ததலி = எப்படி காட்டுகிறதோ
ஜலருஹேக்ஷண = தாமரைக் கண்ணனான ஸ்ரீஹரி
தன்னவர = தன் பக்தர்களின்
மனதொளகெ = மனதில்
பக்திஞான கர்மகெ = அவன், பக்தி, ஞானத்துடன் செய்யும் கர்மங்களுக்கு
ஒலிது = தரிசனம் அளித்து
பொளெவுத = அபரோக்ஷத்தில் தரிசனம் அளித்து
குணரூப க்ரியேகளனு = தன் குண, ரூபங்கள், க்ரியைகளை
தோருவனு = அவரவர்களின் யோக்யதைக்கேற்ப காட்டுகிறான்.

ஸ்ரீபரமாத்மன் பிராணிகளின் பக்தி, ஞான கர்மங்களுக்கு மெச்சி, தன் குண ரூப க்ரியைகளை காட்டுகிறான் என்கிறார் தாசராயர்.

ஒரு பாத்திரத்தில் எண்ணெய் ஊற்றி, வர்த்திகளை விட்டு, தீபத்தை ஏற்றினால், அந்த தீபம் அந்த எண்ணெய், வர்த்திகளுக்கேற்ப, அதாவது அதிக எண்ணெய், திடமான வர்த்தி இருந்தால் அதிக ஒளியுடனும், குறைவான எண்ணெய், சிறிய வர்த்தி இருந்தால், குறைந்த ஒளியுடனும் எரியும். அதுபோலவே, தாமரைக் கண்ணனான ஸ்ரீஹரி, நம் மனஸ் என்னும் வீட்டில் கர்ம என்னும் பாத்திரத்தை வைத்து, பக்தி என்னும் எண்ணெய், ஞானம் என்னும் வர்த்திகளை வைத்து, ஸ்ரீபரமாத்மன் என்னும் தீபத்தை ஏற்றினால், நம் அஞ்ஞானம் என்னும் இருட்டில் தெரியாத பகவந்தனின் குணங்களை ரூபங்களை க்ரியைகளை காட்டுகிறான். பக்தியுடன், பகவத் ப்ரீத்யர்த்தமாக நிஷ்காம்ய (எதையும் எதிர்பார்க்காமல்) கர்மங்களை செய்தால், அவரவரின் யோக்யதைக்கேற்ப பரமாத்மனின் ஸ்வரூபஞானம் ஆகிறது. அதற்கு பரமாத்மன் ப்ரீதனாகி, அபரோக்ஷத்தில் தான் தன்னுடைய ரூபங்களைக் காட்டுகிறான். பிறகு, பரமாத்மனின் குணங்கள், அவன் செய்யும் ஸ்ருஷ்ட்யாதி கர்மங்கள், அவரவர்களின் யோக்யதைக்கேற்ப பரமாத்மன் அவரவர்களுக்கு காட்டிக் கொள்கிறான் என்று பொருள்.

**ஆவ தே$^3$ஹவ கொடலி ஹரி ம**
**த்தாவ லோகதொ$^3$ளிடலி தா ம**
**த்தாவ தே$^3$ஷதொளிடலி ஆவாவஸ்தெ$^2$க$^3$ளு ப$^3$ரலி |**
**ஈ வித$^3$தி$^3$ ஜட சேதனதொ$^3$ளு ப**
**ராவரேஷன ரூப கு$^3$ணக$^3$ள**
**பா$^4$விசுவ ஸுக்ஞான ப$^4$கு$^3$தி$^1$ய பே$^3$டு$^3$ கொண்டா$^3$டு$^3$ ||22**

ஹரி = ஸ்ரீபரமாத்மன்
ஆவதேஹவகொடலி = எந்த பிறவியை நமக்குக் கொடுத்தாலும்
மத்தாவ லோகதொளிடலி = நரக, ஸ்வர்க்க, பாதாளாதி எந்த உலகத்தில் வைத்தாலும்
தா = தான்
மத்தாவ தேஷதொளிடலி = எந்த தேசத்தில் இருந்தாலும்

ஆவாவஸ்தெகளு பரலி = பால்ய, யௌவனாதி நிலைகள் அல்லது துக்க சுகாதி நிலைகள் அல்லது ஜாக்ரத, ஸ்வப்ன, சுஷும்ன என எந்தவொரு நிலைகளிலும்
ஈ விததி = முந்தைய பத்யத்தில் சொன்னபடி
ஜடசேதனதொளு = பிரம்மதேவரே முதலான ஸ்தாவர வரைக்குமான அனைத்து பொருட்களிலும்
பராவரேஷன = உத்தமரான ரமா பிரம்மாதிகளுக்கும், நீசரான கலி முதலானவர்களுக்கும் ஈசனான (தலைவனான) ஸ்ரீபரமாத்மனின்
ரூப குணகள = அந்தந்த பொருட்களில் அந்த உருவத்தில் இருக்கும் அனந்த ரூபங்களை, அதில் இருப்பவனாக இருந்தாலும், நிர்லிப்தனாக (அதற்கு சம்பந்தப்படாமல்) இருக்கிறான் என்பதை
பாவிஸுத = நினைத்தவாறு
சுக்ஞான = சிறந்த ஞானத்தை
பகுதிய = பக்தியை
பேடு = வேண்டு
கொண்டாடு = ஸ்தோத்திரம் செய்

பகவத் அபரோக்ஷம் ஆகவேண்டுமெனில், முதலில் தேவையானவை ஞானம் மற்றும் பக்தி மட்டுமே. ஆகையால், காம்ய பலன்களை விரும்பாமல், அனைத்து பிறவிகளிலும் பரமாத்மனிடம் பக்திஞானம் வருமாறு வேண்டிக் கொள்ள வேண்டுமென்று 'ஆவ தேஹவ' என்னும் இந்த பத்யத்தில் சொல்கிறார்.

நம் கர்மங்களுக்கேற்ப ஸ்ரீபரமாத்மன் நமக்கு எந்த பிறவியையும் கொடுக்கட்டும், நரகமோ, அந்த உலகத்தின் எந்த பகுதியிலோ நமக்கு கொடுத்தாலும், அல்லது ஸ்வர்க்க, பூலோகம், பாதாளாதி எந்த உலகத்தில் எந்த தேசத்தில் நம்மை பிறக்கச் செய்தாலும், அங்கங்கு சுகமோ துக்கமோ எந்த நிலையில் நம்மை வைத்திருந்தாலும், மேற்சொன்ன விதத்தில் சர்வோத்தமனான ஸ்ரீபரமாத்மன், ஸ்தாவர ஜங்கம முதலான அனைத்து பிராணிகளிலும் அந்தந்த ரூபனாகி, அந்தந்த பெயரில் அழைக்கப்பட்டு அவற்றில் நிலைத்திருக்கிறான் என்னும் ஞானத்தையும், அந்த பரமாத்மனிடம் த்ருடமான பக்தியையும் நிரந்தரமாக இருக்கச் செய் என்று ஸ்ரீபரமாத்மனை தினந்தோறும் ஸ்தோத்திரம் செய்தவாறு பிரார்த்தனை செய்.

நாய், கழுதை, முதலான பிறவிகளில் பிறந்தாலும், நரகாதிகளை அனுபவித்திருந்தாலும், அஞ்ஞானத்தைக் கொண்டிருந்தாலும், பரமாத்மனின் ஸ்வரூப ஞானம் கிடைப்பது கஷ்டம் என்று நினைக்கக்கூடாது. 'சுக்ஞான பகுதிய பேடு கொண்டாடு' என்று தாசராயர் கூறியது மனிதப்பிறவி வந்தபிறகு செய்யவேண்டும் என்று அர்த்தமல்ல. இப்போது மனிதர்களாக இருந்து, ஹரி சர்வோத்தமத்வாதி ஞானத்தினால் பக்தியுடன் பரமாத்மனை ஆராதித்துக் கொண்டிருந்தால் 'ப்ராரப்த கர்மங்களுக்கேற்ப நமக்கு நாய், கழுதை ஆகிய பிறவியை பரமாத்மன் கொடுத்தாலும், எந்த நரகத்தில் என்னை வைத்தாலும், அல்லது பூலோகத்திலேயே எந்த சம்சாரத்தில் நம்மை வைத்தாலும், நம் மனது மட்டும், தேனி மலர்களை தேடிப் போவதுபோல, உன் பாத கமலங்களில் இருக்கட்டும். நீயே சர்வோத்தமன், நீயே அனைத்து இடங்களிலும் வியாப்தன்

என்னும் ஞானமும், த்ருடமான பக்தியும் நமக்கு அனைத்து பிறவிகளிலும் இருக்கட்டும். இத்தகைய வரத்தை மட்டும் நமக்குக் கொடுத்து, நமக்கு எந்த பிறவி, எந்த உலகம், எந்த தேகம், எந்த நிலைகளைக் கொடுத்தாலும் கொடு' என்று தினந்தோறும் பரமாத்மனை இந்த பிறவியில் பிரார்த்திக்க வேண்டும் என்பது அர்த்தம்.

இத்தகைய ஞானிகளான பக்தர்களுக்கு ப்ராரப்த கர்ம பலத்தினால், ஜடபரதருக்கு மானின் பிறவியும், இந்திரத்யும்ன ராஜனுக்கு யானையின் பிறவியும், நஹுஷனுக்கு பாம்பின் பிறவியும் கிடைத்தாலும், அவர்களுக்கு அந்தந்த பிறவிகளில்கூட பகவத் அருளால் ஞான, பக்தி இருந்தது என்பதில் சந்தேகமில்லை.

பாகவத எட்டாம் ஸ்கந்தத்தில் கஜேந்திர மோட்ச சந்தர்ப்பத்தில்: 'ஜஜாப பரமம் ஞாப்யம் ப்ராக்ஜன்மன்யனு சிக்ஷிதம்' - 'தன் முந்தைய பிறவியில் கிடைத்த ஞானபலத்தினால், பகவந்தனின் ஸ்தோத்திரத்தை செய்தான் கஜேந்திரன்' என்கிறார். ஐந்தாம் ஸ்கந்தத்தில் - பரத ராஜனுக்கு மிருக பிறவி வந்தபோது மற்றும் மூன்றாம் பிறவியில் பிராமணனாக இருந்தபோதும்கூட, பகவத் ஆராதனைகளை செய்ததால் வந்த புண்ணியத்தால், பூர்வஜென்மங்களைப் பற்றிய விவரங்கள் தெரிந்ததால், பகவந்தனை ஒவ்வொரு நொடியும் விடாமல், தியானம் செய்துகொண்டிருந்தான் என்று சொல்கிறார்.

பலன்களை எதிர்பார்த்து எதையும் செய்யக்கூடாது என்று பல இடங்களில் சொல்லியிருக்கிறார். ஆனால், அனைத்து பிறவிகளிலும் ஞான பக்திகளைக் கொடு என்று எப்படி கேட்கிறார் என்றால், பகவத் பிரசாதத்தை, ஞான பக்திகளை வேண்டுவது காம்ய அல்ல. ஞான பக்திகளை வேண்டுவது பகவந்தனின் பிரசாதத்திற்காக. பிரசாதமே நமக்கு முக்கியம். 'நீ மகிழ்ந்தால் எனக்கு முக்தியைக் கொடு'. செல்வத்தை வேண்டுவது மட்டுமே காம்யம். அருளை மட்டுமே வேண்டுவது காம்ய அல்ல. நிஷ்காம பக்தர்களான சனகாதிகள், பிரகலாதன் ஆகியோர்கூட இத்தகைய வரங்களையே கேட்டனர்.

பாகவத 3ம் ஸ்கந்தம் 16ம் அத்தியாயம் 49ம் ஸ்லோகத்தில் - சனகாதிகள், பரமாத்மனிடம் மன்னிப்பு கேட்கும் தருணத்தில் :

காமம் ப்ரஜேம வ்ருஜினைர் நிரயேஷு நஷ்டாஷ்சேதோலிவத்யதி நுதேபதயோ ரமேத |
வாசஷ்சனஸ்துலஸிவத்யதி தேங்க்ரிஷோபா: பூர்யேததே குணகணைர்யதி கர்ணரந்த்ர: ||

'உன்னுடைய அனுமதி இல்லாமல், உன் வீட்டு பாதுகாவலர்களை நாங்கள் திட்டியதின் பலனாக, நீ எங்களை எந்தவித நரகாதி லோகங்களுக்கு அனுப்பினாலும், அங்கு செல்ல நாங்கள் தயாராக இருக்கிறோம். ஆனால், ஒன்று மட்டும் வேண்டிக்கொள்கிறோம். எந்த நரகத்தில் நாங்கள் இருந்தாலும், எங்கள் சித்தம் மட்டும் உன் பாத கமலங்களில், தேனீ மலரைத் தேடிப் போவதைப் போல,

சுகப்படுவதைப் போல செய்யவேண்டும். நம் வாக் இந்திரியம் உன் பாதத்தில் உள்ள துளசியைப் போல ஒளிரட்டும். [அதாவது, என் நாக்கு உன் பாதகமலங்களையே எப்போதும் ஸ்தோத்திரம் செய்திருக்கட்டும் - என்று பொருள்]. மற்றும், நம் காதுகள் உன் குணங்களால் நிறைந்திருக்கட்டும். இந்த அளவிற்கு உன் அருள் இல்லையெனில், எந்த நரகம் வேண்டுமானாலும் வரட்டும். அங்கு போவதற்கு நாங்கள் தயாராக இருக்கிறோம்' என்று வேண்டினர்.

இதைப்போலவே பாகவத 7ம் ஸ்கந்தம், 9ம் அத்தியாயம், 43ம் ஸ்லோகம்:

நைவோத்விஜே பவதுரத்யய வைதரண்யாஸ்வதீர்த்த காயன மஹாம்ருத மத்தசித்த: |

கோரமான சம்சாரத்தில் மட்டும் எங்களை தள்ளிவிட வேண்டாம் என்று மேலே வேண்டினர். இந்த ஸ்லோகத்தில் : நீங்கள் சம்சாரத்தில் இருந்தே தீரவேண்டும் என்று கட்டாயமாக எங்களை அதில் தள்ளினாலும், வைதரணி என்னும் இந்த சம்சாரத்தைத் தாண்டுவதற்கு நாங்கள் பயப்படுவதில்லை. அதற்குத் தக்க வலிமை மட்டும் வேண்டும் என விரும்புகிறோம். சில மத்யபானங்களைக் குடித்து, தங்களின் சோர்வினை போக்கிக் கொள்வார்கள். அது போலவே, நாங்கள் உன் பவித்ரமான, மகிமாபூர்வமான, மஹாம்ருதத்தைக் குடித்து அவர்களைப் போல மயக்கமடைந்தால், சம்சாரத்தின் பயம் வராது. அதாவது, அத்தகைய வரத்தைக் கொடு என்று அர்த்தம். ஆகையால், தாசராயர் சுக்ஞான பக்தியை அனைத்து பிறவிகளிலும் கொடு என்று கேள் என்கிறார்.

**ஒந்த$^{3}$ரொள கொ$^{3}$ந்தொ$^{3}$ந்து$^{3}$ பெ$^{1}$ரெதி$^{3}$ஹ**
**இந்தி$^{3}$ரேஷன ரூபக$^{3}$ள மன**
**ப$^{3}$ந்ததெரதலி சிந்திஸித$^{3}$க$^{1}$னுமான வினிதில்ல |**
**ஸிந்து$^{4}$ராஜனொ எம்ப$^{3}$ராலய**
**பந்தி$^{4}$ஸலு ப்ரதிதந்துக$^{3}$ளொளுத$^{3}$**
**பி$^{3}$ந்து$^{3}$ வ்யாபிஸித$^{3}$ந்தெ இருதிப்பனு சராசரதி$^{3}$ ||23**

ஒந்தரொளகெ = சராசராத்மகவான இந்த உலகத்தில் இருக்கும் அனைத்து பொருட்களிலும்
ஒந்தொந்து = ஒவ்வொரு ரூபத்தைப் போல
பெரெதிஹ = சேர்ந்திருக்கும்
இந்திரேஷன = லட்சுமிபதியின்
ரூபகள = ரூபங்களை
மனபந்த தெரதலி = எந்தப் பொருளின் அந்தர்யாமி ரூபத்தை நினைக்க வேண்டுமென்று மனதிற்கு தோன்றியபோது
சிந்திஸு = தியானம் செய்
இதகெ = இந்த விஷயத்தில்
இனிது = எந்தவொரு
அனுமானவில்ல = சந்தேகமும் இல்லை

ஸிந்துராஜனொளு = சமுத்திரத்தில்
அம்பராலய = துணியால் ஆன வீட்டை
பந்திஸலு = கட்டினால்
ப்ரதிதந்துகளொளு = ஒவ்வொரு நூலிலும்
உதபிந்து = தண்ணீர்த் துளிகள்
வியாபிஸிதந்தெ = நிறைந்திருப்பதைப் போல
சராசரதி = சராசர பொருட்கள் நிறைந்திருக்கும் இந்த பிரபஞ்சத்தில்
இருதிப்பனு = வியாபித்திருக்கிறான்.

சராசர பொருட்களால் நிறைந்திருக்கும் இந்த உலகத்தில், ஒவ்வொரு ஜடப் பொருட்களிலும் ஒவ்வொரு பகவத் ரூபங்கள் கண்டிப்பாக இருந்தே இருக்கும். பிரம்மாதிகளில், வாசுதேவாதி ரூபங்களாக அந்தர்யாமியாக இருக்கிறான்.

ஸ்வ-அம்ச ரூபங்களால் ராம, கிருஷ்ணாதி ரூபங்களை எடுக்கிறான். லட்சுமண, பலராம, ப்ருது ஆகியோரில் குறைந்த அம்சத்துடன் அந்த ரூபத்தில் இருக்கிறான். பானையில் பானையின் ரூபத்திலும், ஒரு படத்தில் அந்த படத்தின் ரூபத்திலும், வேறு பொருட்களில் அந்தந்த ரூபங்களிலும் வியாபித்திருக்கிறான். ‘அணோரணீர்யா மஹதோ மஹீர்யா’ என்னும் ஸ்ருதி வாக்கியத்திற்கேற்ப மிகச்சிறியதான அணு ரூபத்தின் பொருட்களில் அதைவிட சிறியதாக இருக்கிறான். மிகப்பெரியதான பொருட்களில், அதைவிட பெரியதான ரூபத்தில் இருக்கிறான்.

ஆனால், இப்படி வியாபித்திருக்கும் பகவத் ரூபோபாசனையின் அதிகாரமானது, அனைவருக்கும் கிடைப்பதில்லை. ‘ப்ரதிமா ஸ்வப்ரபுத்தானாம் சர்வத்ர விதிதாத்மனாம்’ என்னும் ஆதாரத்தில், அஞ்ஞானிகள் பிரதிமைகளில் இருக்கும் பரமாத்மனை பூஜிக்க வேண்டும் என்றும், ஞானிகள் எங்கெங்கும் வியாபித்திருக்கும் பரமாத்மனை பூஜிக்க வேண்டும் என்றும் நிச்சயமாகிறது. அஞ்ஞானிகள் என்றால் மூடர்கள் அல்ல. ‘யாவத்ஸர்வேஷு பூதேஷு மத்பாவோ நோபஜாயதே | தாவதேவமுபாஸீத... ’ என்னும் பாகவத வாக்கியத்தின்படி, தமக்குள் இருக்கும் பரமாத்மனுக்கும், நாய், பாம்பு ஆகியவற்றில் இருக்கும் பரமாத்மனுக்கும் வேறுபாடு இல்லை என்று எப்போது அறிகிறானோ, அப்போது ‘ப்ரணமேத் தண்டவத் பூமௌ அஷ்வசண்டால கோகரம்’ - நாய், சண்டால, பசு, பாம்பு ஆகியவற்றிற்கும்கூட சாஷ்டாங்கமாக நமஸ்காரம் செய்யவேண்டும் என்று சொல்லியிருக்கிறார்கள்.

அனைவரிலும், பகவந்தன் இருக்கிறான் என்று சொல்வது மற்றும் அறிவது சுலபம். அதனை அனுஷ்டானத்திற்கு கொண்டு வருவது மிகவும் கஷ்டம். அனுஷ்டானம் என்றால் என்ன? பாம்புகளில் பரமாத்மன் இருக்கிறான் என்று ஆத்திகர்கள் சொல்கின்றனர். ஆனால், புலி, பாம்புகளை பார்த்தவுடன் அவற்றைக் கொல்ல முயல்கின்றனர் அல்லது தாமே ஓடிப் போகின்றனர். நம்மில் இருக்கும் பகவந்தனே அங்கும் இருக்கிறான் என்னும் எண்ணம் திடமானால், நெருப்பு நெருப்பினை என்ன செய்யும்? அதுபோலவே, தான், தனது என்னும் கர்த்ருத்வ பாவத்தை விட்டு, இங்கிருப்பவனும், அங்கிருப்பவனும் ஒருவனே ஆகையால்,

தானே தன்னை என்ன செய்துவிட முடியும்? என்று சொல்லி, பிரதிமைகளை எப்படி பூஜிக்கிறோமோ, பயமில்லாமல் இருக்கிறோமோ அப்படியே பாம்புகளைக் கண்டாலும் பயப்படாமல் இருக்கும் நிலை வந்தால், அவன் அனைத்து இடங்களிலும் வியாப்தனான பகவந்தனின் பூஜையை செய்யமுடியும்.

இந்த ஞானம் வரும்வரை தன்னைவிட உத்தமர் என்று யாரிடம் பக்தி பிறக்கிறதோ, அவரில் அந்தர்யாமியான பரமாத்மனை மாத்திரம் பூஜிக்க வேண்டும். யாரிடம் தபஸ், ஞான, பக்தி ஆகியவை அதிகமாக இருக்கிறதோ, அந்த சன்னிதானத்தில் தாரதம்யத்திற்கேற்ப பக்தி செய்யவேண்டும். நம்மைவிட நீசரில்கூட ஞானாதிகளில் இருக்கும் பகவத்ரூபங்களுக்கு அபேத சிந்தனை செய்துகொண்டு தன் யோக்யதைக்கேற்ப எந்தெந்த சன்னிதானங்களில் தனக்கு பக்தி பிறக்கிறதோ, அந்தந்த சன்னிதானங்களில் பகவத் பூஜையை செய்யவேண்டும். ஆகையாலேயே, தாசராயர், 'மன பந்த தெரதலி சிந்திஸு' என்று சொல்லியிருக்கிறார்.

அனைத்து இடங்களிலும் பகவத் ரூபம் வியாபித்திருப்பதற்கான ஆதாரத்தை கொடுக்கிறார். கடற்கரையில் துணியினால்ஆன ஒரு கூடாரத்தை அமைத்தால், ஒவ்வொரு முறை அலை அடிக்கும்போதும், அந்த துணியில் இருக்கும் நூல்களின் இடைவெளிகளில் எப்படி நீர்த் திவலைகள் வந்து நிரம்பியிருக்குமோ, அப்படி, பரமாத்மன் சராசராத்மக பிரபஞ்சத்தின் அனைத்து இடங்களிலும் வியாபித்திருக்கிறான். இந்த உதாரணம் நடைமுறைக்கு பொருந்தாது. நீருக்குள் சென்று யாரும் இப்படிப்பட்ட துணியாலான வீட்டினை கட்டமாட்டார்கள். அப்படியிருக்கையில், இந்த உதாரணத்தை எப்படி கொடுத்தார் என்றால், பழமொழிகளில் இருக்கும் உதாரணங்களை மட்டுமே கொடுக்கத் தேவையில்லை என்று பொருள்.

பாகவத முதலாம் ஸ்கந்தத்தில் ஸ்ரீகிருஷ்ணன் ஹஸ்தினாபுரத்திலிருந்து த்வாரவதிக்கு வரும்போது, ரத்னத்தால் ஆன வெள்ளையான குடையை பிடித்திருந்தான். உத்தவ, சாத்யகி இவர்கள் இருவரும் விசிறியை பிடித்து நின்றிருந்தனர். ஸ்ரீகிருஷ்ணன், கௌஸ்துப மாணிக்கம், வனமாலை ஆகியவறை தரித்திருந்தான். அவை எப்படி ஒளிர்ந்து கொண்டிருந்தது என்பதை சொல்கிறார். 'கனோ யதார்கீனசாபவைத்யுதை:' -- உச்சத்தில் சூரியன், பக்கத்தில் பூர்ணசந்திரன், மேகமண்டலத்தில் இந்திர தனுஸ் மற்றும் மின்னல். இவை அனைத்தும்கூடிய நீலமேகம் எப்படி ஒளிருமோ அப்படியே பரமாத்மன் தலையின் மேல் இருந்த குடை சூரியனைப் போலவும், விசிறி பூர்ண சந்திரனைப் போலவும், வனமாலை பற்பல வண்ணங்களால் ஆன வில்லைப் போலவும், கௌஸ்துப மாணிக்கம் மின்னலைப் போலவும், ஸ்ரீகிருஷ்ணன், இவை அனைத்தையும்கூடிய நீலமேகன் எனவும் ஒளிர்ந்தான் என்று சொல்லியிருக்கிறார்.

நம் தாசராயர் கொடுத்திருக்கும் உவமானத்தின்படி, மேற்கத்தியர் தற்போது கடற்கரையில் அத்தகைய வீட்டினை கட்டினாலும் கட்டுவர். ஆனால், பாகவதத்தில் சொல்லியிருக்கும் உவமை என்றாவது நடக்குமா? மதிய சூரியன், அத்தகைய

சூரியனின் பக்கத்தில் பூர்ணசந்திரனை வானத்தில் எப்போதாவது காணமுடியுமா? அமாவாசை அன்றே சூரிய, சந்திரர் இருவரும் ஒன்றாக சேர்வர். ஆனால் அன்றைய தினம் சந்திரனுக்கு ஒளி இல்லை. இப்படியிருக்கையில், சூரியனை உச்சத்திலும், பக்கத்தில் சந்திரனைக் காண்பது என்றும் சாத்தியம் இல்லை.

அடுத்து, வானவில். காலையில் கிழக்கில் சூரியன் இருந்து, மேற்கில் மேகம் இருந்து, மழைத்துளிகள் விழுந்து கொண்டிருந்தால், அப்போதோ அல்லது மாலையில் மேற்கில் சூரியன் இருந்து, கிழக்கில் மேகத்திலிருந்து மழைத்துளிகள் விழுந்து கொண்டிருந்தால், அப்போது, பற்பல வண்ணங்களுடன் கூடிய வானவின் தோன்றும். இதைப் பார்க்கவேண்டுமெனில், காலையில் உதயமாகி 1-2 நாழிகைக்குள் அல்லது அஸ்தமனத்திற்கு முன் 1-2 நாழிகையில், முறையே மேற்கு கிழக்கில், இந்த வானவில் தோன்றும். மதிய நேரத்தில் இந்த வானவில் என்றும் தோன்றுவதில்லை. உச்சத்தில் சூரியன் இருந்து, அதன்கீழ் மேகங்கள் இருந்தால், சுற்றிலும் ஒளிமயமான வெயில் இருக்கையில், மின்னல் தோன்றுவது எப்படி? இவற்றில் எதுவுமே சாத்தியமில்லை.

குடை, விசிறி, வனமாலை, கிருஷ்ண இவை அனைத்தும் கண்ணிற்குத் தெரிபவை. இதைப்போல அந்த ஆதாரத்திலும், சூரியன், சந்திரன், வில், மின்னல்களால் கூடிய மேகம் என்று சொன்ன அனைத்தையும் காண வேண்டியதாக இருந்தது. இப்படியாக இந்த உதாரணம் நடைமுறைக்கு சாத்தியமில்லாததாக இருந்தாலும், மிகச்சிறந்ததான பகவத் ரூபத்தை விளக்குவதற்கு வேறு உதாரணம் இல்லையென்பதால், இவை அனைத்தும் சேர்ந்தால் எப்படி இருக்குமோ அப்படி என்று உதாரணத்தைக் கொடுத்திருக்கிறார். ஆகையால், தாசராயர் இங்கு கொடுத்துள்ள உவமையும் இதைப் போலவே என்று நினைக்க வேண்டும்.

**ஒந்து[3] ரூபதொ[3]ளொந்த[3] வயவதொ[3]**
**ளொந்து[3] ரோமதொ[3]ளொந்து[3] தே[3]ஷதி[3]**
**பொந்தி[3] இப்பவஜாண்டனந்தானந்த[1] கோடி[1]க[3]ளு ।**
**ஹிந்தெ[3] மார்க்காண்டே[3]ய காணனெ**
**ஒந்தெ[3] ரூபதி[3] ஸ்ருஷ்டி ப்ரளயவ**
**இந்தி[3]ரேஷனொளனிதச்சரி அப்ரமேய சதா[3] ||24**

ஒந்து ரூபதொளு = பரமாத்மனின் அனந்தானந்த ரூபங்களில் ஒன்றில்
ஒந்தவயவதொளொந்து = கை, கால் ஆகிய உறுப்புகளில் ஏதாவது ஒன்றில்
ஒந்து ரோமதொளித்து = அனேக மயிர்களில் ஒரு மயிரில்
ஒந்து தேஷதி = ஒரு பாகத்தில்
அஜாண்ட = பிரம்மாண்டங்கள்
அனந்தானந்த கோடிகளு = அனந்தானந்த எண்ணிக்கை உள்ளவைகளாக
பொந்தி இப்பவு = சேர்ந்திருக்கிறது
ஹிந்தெ = பிரளயத்தில்
ஒந்து ரூபதி = பிரளய சமயத்தில், வடபத்ர சாயியாக படுத்திருந்த ஒரு ரூபத்தில்

ஸ்ருஷ்டி பிரளயவ = வெளியில் பிரளயத்தையும், பரமாத்மனின் வயிற்றில் இருந்துகொண்டு ஸ்ருஷ்டி காரியங்களை
மார்க்கண்டேய = மார்க்கண்டேய ரிஷிகள்
காணனெ = பார்க்கவில்லையா?
இந்திரேஷனொளு = லட்சுமிபதியிடம்
ஏனிதச்சரி = இது என்ன ஆச்சரியம்?
ஸதா = அனைத்து காலங்களிலும்
அப்ரமேய = இப்படி இருக்கிறான் - என்பதை நம்மால் நினைத்துக்கூட பார்க்கமுடியாது.

ஸ்ரீபரமாத்மனின் அனந்தானந்த ரூபத்தில் ஒரு ரூபத்தின், அனேக இந்திரியங்களில் ஒரு இந்திரியத்தின், பற்பல மயிர்களில் ஒரே ஒரு மயிரின், பற்பல பாகங்களில் ஒரேயொரு பாகத்தில், அனேக கோடி பிரம்மாண்டங்கள் அடங்கியிருக்கின்றன. இதனைக் கண்டவர் யார் என்றால், அவர் மார்க்கண்டேய ரிஷிகள். பரமாத்மனைக் குறித்து தவம் செய்து, 'ஸ்ருஷ்டி, ஸ்திதி, சம்ஹார ரூபமான உன் மாயையை நாம் பார்க்க வேண்டும்' என்று வேண்ட, பரமாத்மன் மார்க்கண்டேய ரிஷிகளுக்கு பிரளயத்தைக் காட்டினான். பிரளய நீரில் வடபத்ரத்தில் படுத்திருக்கும் பகவத்ரூபத்தைக் கண்டு, அந்த ரூபத்தை தூக்கிக்கொள்ள அருகில் வர, குழந்தை வடிவில் இருந்த பகவந்தன், மூச்சுக்காற்றை பலமாக இழுக்க, மார்க்கண்டேய ரிஷிகள் அந்த ஸ்வாசத்தால் இழுக்கப்பட்டு பரமாத்மனின் வயிற்றில் நுழைந்து, அதில் பிரம்மாண்டம் முதலான அனைத்து பிரபஞ்சங்களையும் கண்டார். ஆகையால், அந்த பகவந்தனின் மகிமை நம்மால் நினைத்துப் பார்க்கமுடியாதது. இத்தகைய மகிமைகளைக் கொண்ட லட்சுமிபதி, மார்க்கண்டேயருக்கு ஸ்ருஷ்டி பிரளயாதிகளை தன் ஒரே ரூபத்தினால் காட்டியிருப்பதில் நமக்கு எவ்வித ஆச்சரியமும் இல்லை.

**ஒந்த[3]னந்தா[1]னந்த[1] ரூபக[3]**
**ளொந்தெ[3] ரூபதொ[3]ளிஹவு லோக[1]தொ**
**ளொந்தெ[3] ரூபதி[3] ஸ்ருஷ்டி ஸ்திதி மொத[3]லாத[3] வ்யாபார |**
**ஒந்தெகாலதி[3] மாடி திளிஸதெ**
**ஸந்த[3]ணிசிகொண்டி[3]ப்ப ஜக[3]தொ[3]ளு**
**நந்தனந்தன ரணதொளிந்த்ராத்மஜகெ[3] தோ[1]ரிஸனெ ||25**

ஒந்தொந்து ரூபதி = பரமாத்மனின் ஒவ்வொரு ரூபத்திலும், அனந்தானந்த ரூபங்கள்
லோககளு = அனேக உலகங்கள்
இஹவு = இருக்கிறது
ஸ்ருஷ்டி ஸ்திதி முதலாத வியாபார = ஸ்ருஷ்டி, ஸ்திதி, சம்ஹார, நியம ஆகிய கர்த்ருத்வ வியாபாரங்களை ஒரே காலத்தில் செய்து
திளிஸதெ = தன் கர்த்ருத்வத்தை ஜீவருக்கு தெரிவிக்காமல்
ஜகதொளு = உலகத்தில்
ஸந்தணிஸிகொண்டிப்ப = வியாபித்திருக்கிறான்.

நந்தனந்தன = நந்தகோபனின் மகனான ஸ்ரீகிருஷ்ணன்
இந்த்ராத்மஜகெ = இந்திரனின் மகனான அர்ஜுனனுக்கு
ரணதொளு = பாரதப் போரான குருக்ஷேத்திரத்தில்
தோரிசனெ = ஸ்ரீகிருஷ்ணனின் தேகத்தில் பற்பல தலை, தோள்களால் கூடிய பிரபஞ்சங்களையே முழுங்கியிருப்பதை, காட்டவில்லையா?

பரமாத்மனின் ஒரு ருபத்தில் அனந்தானந்த ரூபங்கள் இருக்கின்றன. ஒவ்வொரு ரூபத்திலும் அனந்தானந்த உலகங்கள் இருக்கின்றன. பாகவத 10ம் ஸ்கந்தம், 9ம் அத்தியாயத்தில், ஸ்ரீகிருஷ்ணன் மண் தின்றான் என்னும் சந்தேகத்தில், அவனைத் திட்டிய தாயான யசோதைக்கு, தான் மண் தின்னவில்லை என்று சொல்வதற்காக வாய் திறந்து காட்டிய விஷயத்தில்:

ஸாதத்ர தத்ருஷே விஷ்வம் ஜகத் ஸ்தாஸ்னுச கந்திஷ: |
ஸாத்ரி த்வீபாப்தி பூகோளம் ஸவாய்வக்னீந்து தாரகம் ||37
ஏகத்விசித்ரம் ஸஹஜீவகால ஸ்வபாவ கர்மாஷய லிங்கபேதம் |
ஸூனோஸ்தனௌ வீக்ஷ்ய விதாரிதாஸ்யே வ்ரஜம் ஸஹாத்மானமவா பஷங்காம் ||38

யசோதை, ஸ்ரீகிருஷ்ணனின் வாயில் ஸ்தாவர ஜங்கமாத்மகமான ப்ரபஞ்சத்தைக் கண்டாள் என்று சாதாரணமாக பிரபஞ்சம் என்று சொன்னதை விவரிக்கிறார். பிரபஞ்சத்தின் அனைத்து பிரதேசங்களையும், பூலோகத்தையும், வாயு, அக்னி, சந்திர, நட்சத்திரங்களால் ஆன அந்தரிக்ஷ முதலானவற்றையும் கண்டாள். அது மட்டுமல்ல. அனாதி காலங்களிலிருந்து இருக்கும் சாத்விக, ராஜஸ, தாமஸ என்னும் ஜீவராசிகளை கண்டாள். அவர்களில் ஸ்ருஷ்டிக்கு வராதவர்களையும் அவர்கள் கர்மங்களுக்கேற்ப ஸ்ருஷ்டிக்கு வந்து கர்மங்களை செய்து கொண்டிருப்பதையும், சாத்விகாதி ஜீவர்கள் முக்தி, சம்சார, தமஸ் என்னும் மூன்றுவித கர்மபலன்களை அனுபவித்துக் கொண்டிருப்பதையும், அவர்களின் சம்சாரத்தில் இருக்கும் லட்சணங்கள் இவை அனைத்தையும் ப்ரத்யட்சமாக பார்ப்பது மட்டுமல்லாமல், தன் கோகுலம், கோகுலத்தில் தான் ஸ்ரீகிருஷ்ணனின் வாயில் உலகத்தை பார்த்திருப்பதையும், இப்படியாக அனந்தானந்த பிரபஞ்ச, கோகுலாதிகளைக் கண்டு சந்தேகம் கொண்டாள் என்கிறார்.

இங்கு இந்த ஸ்லோகத்தில், 'வ்ரஜம் ஸஹாத்மானம்' என்று மட்டுமே இருக்கிறது. அனந்தானந்த உலகங்களைக் கண்டாள் என்று எங்கு இருக்கிறது? என்று சந்தேகப்படக்கூடாது. 'வ்ரஜம் ஸஹாத்மானம்' என்னும் பிரபஞ்ச யோகத்தினாலேயே அனந்தானந்த ரூபங்கள் என்னும் அர்த்தம் ஆகிறது. அது எப்படியெனில், தான், கோகுலத்தில் ஸ்ரீகிருஷ்ணனின் வாயை திறந்து காட்டிக்கொண்டிருப்பதை ஸ்ரீகிருஷ்ணனின் வயிற்றில் கண்டாள். என்றபிறகு, அந்த வாயில், உலகத்தை, கோகுலத்தை, தன்னை, வாய் திறந்து காட்டிக்கொண்டிருக்கும் ஸ்ரீகிருஷ்ணனைக் கண்டாள் என்று மறுபடி சொல்லத் தேவையில்லை. இப்படி, வயிற்றில் காணும் ஒவ்வொரு கிருஷ்ண ரூபத்தின் வயிற்றில், இதைப்போலவே

பிரபஞ்சத்தைக் காணவேண்டும் அல்லவா? அந்த பலத்தினாலேயே, அனந்தானந்த ரூபங்களைக் கண்டாள் என்று அர்த்தம் வருகிறது என்பதே கருத்து.

ஒரே காலத்தில், ஸ்ருஷ்டி, ஸ்திதி, லயங்களை செய்கிறான். என்றால், பொதுவாக ஸ்ருஷ்டி காலத்தில் உலகத்தைப் ஸ்ருஷ்டிக்கிறான். மத்திய காலத்தில் அதை பாதுகாக்கிறான். பிரளய காலத்தில் அதனை அழிக்கிறான் என்று சொன்னாலும், 'ஜனம் ஜனேன ஜனர்ய ம்ருத்யுனாத்மன:' காலநாமகனான ஸ்ரீஹரி, தன் வசத்தில் இருக்கும் பிரம்மாதிகளாலும் இதர மக்களாலும் ஸ்ருஷ்டி செய்தவாறு, ஒரே காலத்தில் தன் வசத்தில் இருக்கும் ம்ருத்யுவிற்குக் காரணமான நோய்களால், அழித்தும் வருகிறான். பாகவத 3ம் ஸ்கந்தத்தின் வாக்கியத்தின்படி ஒருவரில் இருந்து ஸ்ருஷ்டிக்கிறான், அதே சமயத்திலேயே இன்னொருவரில் இருந்து பிறந்தவர்களை அழிக்கிறான். இன்னொரு ரூபத்தினால் கொல்கிறான். ஆனால், உலகத்தில் மக்கள் பிறப்பதை, வாழ்வதை, இறப்பதை அனைவரும் பார்த்துக் கொண்டிருந்தாலும், இவனின் மகன் இவன். இவனைப் பெற்றவன் அவன், இவன் இதனால் இறந்தான் என்று சொல்வரே தவிர, இவை அனைத்தும் பகவந்தனின் வியாபாரம் என்று யாரும் அறிவதில்லை. ஞானிகளுக்கு மட்டுமே இவை புரியும். பாரத யுத்தத்தில் அர்ஜுனனுக்கு விஸ்வரூபத்தைக் காட்டியபோது, பீஷ்ம முதலானவர்கள் ஸ்ரீகிருஷ்ணனின் வாயில் பிரவேசிப்பதை ஸ்ரீகிருஷ்ணன் அர்ஜுனனுக்கு காட்டியதையும், அதனை அர்ஜுனன் கண்டதையும், கீதையின் 11ம் அத்தியாயத்தில் சொல்லியிருக்கிறான். அதிலிருந்தே பகவந்தனின் மகிமைகள் புரியவில்லையா? என்று பொருள்.

**ஸ்ரீரமேஷன மூர்த்திக3ளு நவ**
**நாரி குஞ்சரத3ந்தெ1 ஏகா1**
**கா1ர தோ1ர்ப்புவு அவயவாஹ்வய அவயவக3ளல்லி |**
**பே3ரெ பே3ரெயெ க1ங்கொ3ளிஸுவ ஷ**
**ரீரதொளு நானாப்ரகார வி**
**கா1ரசூன்ய விராடனெனிசுவ பது3மஜாண்ட3தொ3ளு ||26**

ஸ்ரீரமேஷன = ஸ்ரீலட்சுமிபதியின்
மூர்த்திகளு = ரூபங்கள்
நவனாரி குஞ்சரதந்தெ = 9 பெண்களைக் கொண்ட ஒரு யானையின் ரூபமாக செய்வதற்கு நவனாரி குஞ்சர என்று பெயர். இதைப்போல
ஏககார தோர்ப்புவு = ஒரே உருவமாகத் தெரியும்
அவயவாஹ்வய = அவயவங்கள் என்று பெயருள்ள ஸ்ரீஹரி
அவயவகளல்லி = கை, கால் முதலான அவயவங்களில்
பேரெ பேரெய கங்கொளிசுவ = கை வேறு, கால் வேறு என்று காட்டிக் கொள்கிறான்
ஷரீரதொளு = சரீரங்களில்
நானாப்ரகார = அனேக விதங்களாக
ஏகாரஷூன்ய = நிர்விகாரனாக இருக்கிறான்.
பதுமஜாண்டதொளு = பிரம்மாண்டத்தில்

விராடனெனிசுவ = பிரம்மாண்டத்தையே தன் சரீரமாக செய்துகொண்டு விராட்புருஷன் என்று பெயர் உள்ளவனாக இருக்கிறான்.

நவனாரி குஞ்சர என்னும் படத்தில் எப்படி 9 பெண்களின் உடல்கள் ஒரே யானை போல தோன்றுகிறதோ, மற்றும் அவர்களை வேறுபடுத்தினால் ஒன்பது பெண்கள் எப்படி தனித்தனியாக இருப்பரோ, அப்படியே ஒவ்வொரு சரீரத்திலும் தானே கை, கால் முதலான அவயவங்களின் ரூபனாக, 24 தத்வங்களின் பெயர்களில், ஒரே சரீரமாக காண்பித்துக் கொள்கிறான்.

ஞானிகளுக்கு
* கைகளில், கையின் உருவமாக, கை என்று அழைத்துக்கொண்டு,
* பாதங்களில், பாதத்தின் உருவமாக, பாதம் என்று அழைத்துக்கொண்டு,

இப்படியே ஒவ்வொரு உறுப்பிலும், அந்தந்த உருவமாக, அந்தப் பெயரில் வெவ்வேறாகத் தெரிகிறான். இப்படி இருந்தாலும், மனுஷ்யாதிகளின் சரீரத்தின் உறுப்புகளுக்கு வேறுபாடுகள் இருந்தாலும், அவற்றில் அந்தர்யாமியாகி தான் நிர்விகாரனாக இருக்கிறான். இது மட்டுமல்லாமல், 14 உலகங்களாலான இந்த பிரம்மாண்டத்தையே தனது சரீரமாக ஆக்கிக்கொண்டு, தானே கை, கால்களின் உருவத்தில் காண்பித்துக் கொண்டு, ’விராட்ரூபி’ எனப்படுகிறான். ‘பாதாள மேதஸ்யஹி பாரமூலம்’ என்னும் பாகவத 2ம் ஸ்கந்த வாக்கியங்களால், விராடரூபத்தை புரிந்து கொள்ளலாம். இத்தகைய மகாமகிமைகளைக் கொண்டவன் பரமாத்மன் என்பது பொருள்.

**வாரிஜப$^{4}$வாண்ட$^{3}$தொ$^{3}$ளு லகுமி**
**நாரசிம்ஹன ரூப கு$^{3}$ணக$^{3}$ளு**
**வாரிதி$^{3}$யொளிஹ தெரெக$^{3}$ளந்த$^{3}$தி$^{3}$ ஸந்த$^{3}$ணிஸி இஹவு ।**
**காரணாம்ஷாவேஷ வ்யாப்த$^{1}$வ**
**தார வ்யக்தாவ்யக்த கார்யக$^{3}$**
**ளீரயிது ஸுவிபூ$^{4}$தி அந்தர்யாமி ரூபக$^{3}$ளு ।।27**

வாரிஜபவாண்டதொளு = பிரம்மாண்டத்தில்
லகுமி நாரசிம்ஹன = லட்சுமி நரசிம்மதேவரின்
ரூபகுணகளு = ரூப குணங்கள்
வாரிதியொளிஹ = கடலில் இருக்கும்
தெரெகளந்ததி = அலைகளைப் போல
சந்தணிஸி = வியாபித்துக்கொண்டு
இஹவு = இருக்கிறது
காரண = அனிருத்தாதி ஸ்ருஷ்டிக்கு காரணனான ரூபத்தினாலும், அம்ஷ ப்ரதிபிம்ப ருபத்தினால் ஜீவர்களிலும்
ஆவேஷ = விசேஷ ஆவேசத்தினால் பலராம, லட்சுமணாதிகளிலும்
வ்யாப்த = பிரம்மாண்டத்தில் அனைத்து இடங்களிலும் நிலைத்திருந்தும்
அவதார = ராம, கிருஷ்ணாதி அவதார ரூபங்களாலும்

கார்ய = கார்ய ரூபங்களால் பிரபஞ்சத்திலும்
ஞானிகள ஹ்ருதயாகாஷதல்லி = ஞானிகளில் இதயங்களில்
வ்யக்த = வியாப்தனாகி
அஞ்ஞானிகளல்லி = அஞ்ஞானிகளில்
அவ்யக்த = மறைந்திருந்தும், அல்லது, பிரம்மாதி ரூபங்களால் அஞ்ஞானிகளுக்கு மறைந்திருந்து, வாசுதேவாதி ரூபங்களால் சஜ்ஜனர்களுக்கு தரிசனம் அளித்தும்
ஈரயிது சுவிபூதி = 2*5-10 வித விபூதி ரூபங்களாலும்
அந்தர்யாமி ரூபகளு = அனைத்து இடங்களிலும் அந்தர்யாமி ரூபங்களாலும்
(இப்படியாக பரமாத்மன் கடல் அலைகளைப் போல, தனித்தனியாகக் கண்டாலும், அனைத்து அலைகளும் சேர்ந்து எப்படி ஒரே ஒரு கடலாக இருக்கிறதோ, அதுபோலவே அனேக ரூபாத்மகனாகி ஒருவனே இருக்கிறான்).

லட்சுமி நரசிம்ம நாமகனான ஸ்ரீலட்சுமி நாராயணன், கடலில் அனந்தானந்தமாக அலைகள் எப்படி ஒன்றின் மேல் ஒன்றாகி ஒரே சமயத்தில் தெரிகிறதோ அப்படி, காரண ரூபம், அம்ச, ஆவேஷ, வியாப்த, அவதார, கார்ய, அவ்யக்த, வ்யக்த, 10 வித விபூதி, அந்தர்யாமி என்னும் அனந்தானந்த ரூபங்களால் ஒரே சமயத்தில் காட்டிக்கொள்கிறான்.

காரண, அம்ச முதலான ரூபங்கள் என்று எந்த ரூபங்களை சொல்கிறார் என்றால்: ஸ்ருஷ்ட்யாதிகளுக்கு காரணரூபங்கள் - வாசுதேவ, சங்கர்ஷண, ப்ரத்யும்ன, அனிருத்த என்னும் நான்கு ரூபங்களை, ஸ்ருஷ்டி, ஸ்திதிகளுக்காக எடுத்தான் என்று நிர்ணயத்தின் முதலாம் அத்தியாயத்தில் - 'இத்தம் விசிந்த்ய பரமஸ்ஸது வாசுதேவ நானா பபூவ நிஜமுக்தி பதப்ரதாதா' என்னும் ஆறாம் ஸ்லோகத்தில் துவங்கி, 9ம் ஸ்லோகம் வரைக்கும் வாசுதேவாதி நான்கு ரூபங்களின் செயல்களை சொல்லியிருக்கிறார் ஸ்ரீமதாசார்யர். அந்த ஸ்லோக அர்த்தங்களைப் பார்த்தால், அனிருத்தாதி ரூபங்கள், ஸ்ருஷ்டி, ஸ்திதிகளுக்கு காரணம் என்று புரியும்.

'மமைவாம்ஷோ ஜீவலோகே ஜீவபூதஸ்ஸனாதன:' என்னும் கீதா வாக்கியத்தின்படி, அம்ச என்றால், பிரதிபிம்ப என்றும், ஜீவரே பிரதிபிம்பரூபம் என்றும் சொல்லியிருக்கிறார். அத்தகைய ஜீவரில், ஜீவனாக இருப்பவை அம்ஷ ரூபங்கள், ஆவேஷ ரூபங்கள் என்றால் லட்சுமி, பிரம்ம, சேஷாதிகள், பலராம, லட்சுமண ஆகியவர்களில் இருப்பவை.

நர: பல்குன இத்யாத்யா விசேஷாவேஷினோ ஹரே: |
வாலி சாம்பாதயஷ்சைவ கிஞ்சிதாவேஷினோ ஹரே: ||

என்னும் நிர்ணய 2ம் அத்தியாயம் 33ம் ஸ்லோகத்தின் வாக்கியத்தால், அர்ஜுனாதிகள் விசேஷ ஆவேச உள்ளவர்கள் என்றும், வாலி, சாம்பாதிகள் பரமாத்மனின் கிஞ்சித் (கொஞ்சம்) ஆவேசம் உள்ளவர்கள் என்றும் அறியவேண்டும். இவையே ஆவேஷ ரூபங்கள்.

வியாப்த ரூபங்கள் என்றால், பிரம்மாண்டத்தில் அனைத்து இடங்களிலும் நிலைத்திருக்கும் ரூபங்கள் என்று பொருள். அவதார ரூபங்கள் - ராம,

கிருஷ்ணாதிகள். கார்யரூப உலகத்தின் அனைத்து பிராணிகளிலும், பிரம்ம, ருத்ராதி ரூபங்களால் ஸ்ருஷ்ட்யாதிகளை செய்திருந்தாலும், அவர்களின் தேகத்தில் தான் அஞ்ஞானிகளுக்கு அவ்யக்தானாகவே காட்டிக்கொள்வார். அல்லது, அனைத்து இடங்களிலும், அனைத்து சரீரங்களில் இருந்தாலும், அஞ்ஞானிகளுக்கு தெரிய மாட்டார். ஞானிகளுக்கு அனைத்து இடங்களிலும் தெரிவார். அல்லது சாதாரண மனிதர்களுக்கு வாசுதேவாதி ரூபங்களால் தெரியாமலும், ராம, கிருஷ்ணாதி ரூபங்களால் தெரிந்தும் இருக்கிறான்.

விபூதி ரூபங்கள் பத்து. அவை : நீத, சாதாரண, விசேஷ, சஜாதி, விஜாதி, நைஜ, அஹித, விஜாதி, கண்ட மற்றும் அகண்ட என்று ஐந்தாம் சந்தியில் விளக்கமாக பார்த்திருக்கிறோம். அந்தர்யாமி அனைத்து இடங்களிலும் இப்படியாக அனந்தானந்த ரூபியாகி இருக்கிறான் என்று பொருள்.

**மணிக[3]ளொளகி[3]ஹ ஸூத்ரத[3]ந்த[3]தி[3]**
**ப்ரணவபாத்[3]யனு சேதனா சே**
**தன ஜக[3]த்தினொளனு தி[3]னதொளாடுவனு சுக[2]பூர்ண |**
**த[3]ணிவிகெயு இவகி[3]ல்ல பஹுகா**
**ருணிகனந்தானந்த ஜீவர**
**க[3]ணதொளேகாஷம்ஷ ரூபதி[3] நிந்து[1] நியமிஸுவ ||28**

மணிகளொளு = மாணிக்கத்துக்குள்
இஹ = இருக்கின்ற
சூத்ரதந்ததி = கயிறினைப் போல
ப்ரணவபாத்யனு = ஓம்கார பிரதிபாத்யனான ஸ்ரீஹரி
சேதனாசேதன ஜகத்தினொளு = ஜட சேதனாத்மகவான இந்த சரீரத்தில்
அனுதினதொளு = தினந்தோறும்
ஆடுவனு = லீலைகளை செய்வான்
சுகபூர்ண = சுகபூர்ணன் ஆனதால்
தணுவிகெயு = சோர்வு
இவகில்ல = இவனுக்கு இல்லை
பஹுகாருணிக = பஹு கருணைக்கடலான
அனந்தானந்த ஜீவர கணதொளு = பற்பல ஜீவர்களின் கணங்களில்
ஏகாம்ஷரூபதி = பிம்பரூபியாகவும், பிரதிபிம்பனான ஜீவனுக்குள்ளும்
நிந்து = இருந்து
நியமிசுவ = நடத்துகிறான்.

ஒரு நூலில் மாணிக்கங்களை கோர்த்தால் எப்படி அந்த நூலானது அந்த மாணிக்கங்களுக்கு ஆதாரமாக இருக்கிறதோ, அப்படி ஸ்ரீபரமாத்மன் பிரம்மாதி சேதனர்களில் இருந்து, அசேதனகளான நதி, மலை ஆகியவற்றிலும், என அனைத்து பிரபஞ்சங்களுக்கும் ஆதாரமாக இருந்து அவரவர்கள் செய்யவேண்டிய செயல்களை எப்போதும் செய்து, செய்வித்து, அவன் சுகபூர்ண ஸ்வரூபன் ஆகையால், சோர்வில்லாமல் தன் லீலைகளை செய்கிறான். கருணாசமுத்திரனான

ஸ்ரீஹரி வாசுதேவ ஸ்வாம்ஷரூபத்தினால் பிரம்ம தேவரில் இருந்துகொண்டு, பிரம்மாம்சத்தினால் ருத்ரதேவரில் இருந்து, இப்படி ஸ்வாம்ஷங்கள், ராம, கிருஷ்ணாதி ரூபங்களின் அம்ஷாம்ஷ ரூபங்கள், இவற்றைத் தவிர ஜீவர்களிலும் இருந்து, அவரவர்களின் யோக்யதைக்கேற்ப செயல்களை தீர்மானித்து, செய்து, செய்விக்கிறான் என்று பொருள்.

**ஜீவஜீவர பே$^{4}$த$^{3}$ ஜட$^{3}$ஜட$^{3}$**
**ஜீவஜட$^{3}$ ஜட$^{3}$ஜீவரிந்த$^{3}$லி**
**ஸ்ரீவரனு அத்யந்தபி$^{4}$ன்ன விலக்ஷணனு லகுமி**
**மூவரிந்த$^{3}$லி பதுமஜாண்ட$^{3}$தி$^{3}$**
**தா விலக்ஷணளெ னிசுதிப்பளு**
**ஸாவதி$^{4}$கஸம ஷூன்யளெந்த$^{3}$ரிதீர்வரனு ப$^{4}$ஜிஸு ||29**

ஜீவஜீவர = ஜீவ ஜீவருக்கும்
பேத = ஒருவருக்கொருவர் நடுவே வேறுபாடு
ஜடஜட = ஜட ஜடங்களுக்கும் வேறுபாடு
ஜீவஜட = ஜீவ ஜடர்களுக்கு நடுவே வேறுபாடு
ஜடஜீவரிந்தலி = ஜட, ஜீவர்களைவிட
ஸ்ரீவரனு = லட்சுமிக்கு கணவனான ஸ்ரீஹரி
அத்யந்த பின்ன = மிகுந்த வேறுபாடு கொண்டவன்
லட்சுமி = லட்சுமிதேவி
மூவரிந்தலி = ஜீவ, ஜட, பரமாத்மா என்னும் மூவரைவிட
பதுமஜாண்டதி = பிரம்மாண்டத்தில்
தா = தான்
விலக்ஷண எனிசுதிப்பளு = வேறுபட்டிருப்பவள்
சாவதிக = நற்குணங்களைப் பெற்றவள்
சம சூன்யளெந்து = சமம் இல்லாத; வேறுபாடு கொண்டவள்
அரிது = அறிந்து
ஈர்வரனு = லட்சுமி, நாராயணன் என்னும் இருவரையும்
பஜிஸு = ஸ்தோத்திரம் செய்.

ஜட சேதனர்கள் நிறைந்த பிரபஞ்சத்தில் வியாப்தனாக இருக்கிறான் என்று உபாசனை செய்யவேண்டும் என்று முந்தைய பத்யத்தில் சொல்லியிருந்தார். இப்போது, இந்த பிரபஞ்சத்தில் இருந்தாலும். அந்த ஜட சேதனர்களிலிருந்து வேறுபட்டவன் லட்சுமி நாராயணன் என்று உபாசனை செய்தவாறு, அதற்கு முக்கிய சாதனமான பஞ்சபேதத்தை இங்கு விளக்குகிறார்.

ஜீவருக்கும் ஜீவருக்கும் இருக்கும் வேறுபாடு,
ஜடத்திற்கும் ஜடத்திற்கும் இருக்கும் வேறுபாடு,
ஜீவருக்கும், ஜடத்திற்கும் இருக்கும் வேறுபாடு,
ஜடத்திற்கும், பரமாத்மனுக்கும் இருக்கும் வேறுபாடு,
ஜீவனுக்கும் பரமாத்மனுக்கும் இருக்கும் வேறுபாடு

என்னும் பஞ்ச பேதங்களை அறியவேண்டும்.

ஜீவனுக்கும் ஜீவனுக்கும் வேறுபாடு இருக்கிறது என்பது நம் அனுபவத்திலேயே தெரிகிறது. உலகத்தில் இருக்கும் அனேக பிராணிகளில் சில சுகப்படுகின்றன; சில துக்கப்படுகின்றன. சிலர் ரோகிகள். சிலர் வலிமையானவர்கள். கழுதை, குதிரை ஆகியவை அனைத்தும் ஒன்றே என்று எப்படி சொல்வது? ஆகையால், ஜீவர்களில் வேறுபாடு உண்டு என்று சொல்லியே ஆகவேண்டும்.

ஜீவர் நித்யர். தேகம் அநித்யம். 'கடேபின்னேயதாகாஷ ஆகாஷஸ்யாத்யதாவுரா' என்னும் பாகவத 12ம் ஸ்கந்த வாக்கியத்தின்படி, பானை உடைந்தால், அதற்குள் இருக்கும் ஆகாயம், ஆகாயமாக நின்றுவிடுகிறது. அந்த ஆகாயம் அழிவதில்லை. தேகம் அழிந்தாலும், ஜீவன் அந்த தேகத்திலிருந்து விடுபட்டுவிடுகிறது. ஆகையாலேயே, ஜீவனுக்கும் ஜடத்திற்கும் வேறுபாடு உண்டு என்று அறியவேண்டும். ஜடத்திற்கும் ஜடத்திற்கும்கூட வேறுபாடு உண்டு. கழுதை, குதிரை, எறும்பு ஆகிய பிராணிகளின் தேகங்களுக்கும், மலை, ஆறு ஆகியவற்றிற்கும் ஒன்றுக்கொன்று வேறுபாடு இருப்பதால், ஜடத்திற்கும் ஜடத்திற்கும் வேறுபாட்டினை ஒப்புக்கொண்டே ஆகவேண்டும். ஜீவனுக்கும் பரமாத்மனுக்கும் வேறுபாடு எப்படியெனில்:

ஜீவன் அஸ்வதந்த்ரன். பிறப்பு இறப்பு இருக்கிறது (அதாவது, ஜீவ நித்யம் ஆனாலும், சரீர சம்பந்தம் ஆவதே = பிறப்பு. அந்த சம்பந்தம் விடுபடுவதே = இறப்பு). இந்த துக்கங்களை அனுபவிக்க வேண்டியவர்கள். பரமாத்மன் ஸ்வதந்த்ரன். ஆனந்த பூர்ணன். எல்லையற்ற மகிமைகளைக் கொண்டவன். இந்த காரணங்களால், ஜீவ பரமாத்மனுக்கிடையே வேறுபாட்டினை ஒப்புக் கொள்ள வேண்டும்.

ஜடங்களில் தானாக செயல்களை செய்யும் சக்தி இல்லாததால், ஜடத்திற்கும் பரமாத்மனுக்கும் வேறுபாடு உள்ளது என்று அறியவேண்டும். ஜீவ ஜடாதிகளில் இல்லாத விலக்ஷண (தனித்துவ) தர்மம், பரமாத்மனிடம் இருப்பதால், அவனுக்கு விலக்ஷணன் என்று பெயர். லட்சுமிதேவி, பரமாத்மனைவிட, ஜடங்களைவிட, ஜீவர்களைவிட, விலக்ஷணனாகிருக்கிறார். பிரம்மாதிகளுக்கு சரீர வியாப்தி, சரீர நாசங்கள் உண்டு. ரமாதேவியர்களுக்கு அது இல்லை. பிரளய காலத்தில் கூட இருக்கிறார். ஆகையால், அவர் ஜீவ விலக்ஷணர் என்று சொல்ல வேண்டியதாயிற்று. ஜகத் ஸ்ருஷ்டிக்கு ஜடப்ரக்ருதி ரூபமாக இருந்தும், ஜடஸ்ருஷ்டிக்கு ஜடரூபத்தை ஸ்வீகரிப்பரே தவிர, தாம் ஜடர் அல்ல. ஏனெனில், பிரம்மாதிகளை ஸ்ருஷ்டிக்கும்போது சேதன ஸ்வரூபத்திலேயே இருக்கிறார். சேதனர்களுக்கு, க்ரியா சக்தி இருப்பதால், சாமர்த்தியம் உள்ளவர், ஜடசேதனாதி ரூபங்களை தரிக்க முடியும். வெறும் ஜடம் மட்டும் என்றைக்கும் சேதனர் ஆகமுடியாது. ஆகையால், லட்சுமிதேவியர், ஜடத்திலிருந்து வேறுபட்டவர் என்று சொல்ல வேண்டியதாயிற்று. பரமாத்மனைப் போல பிரளய காலத்திலும்கூட நாசம் இல்லாத சரீரம் கொண்டவரான காரணத்தினால், பரமாத்மனே லட்சுமிரூபம் என்று சொல்ல வேண்டுமெனில், பிரளய காலத்திலாவது பரமாத்மனின் அதீனராகி

அஸ்வதந்த்ரராகவே இருக்கிறார். ஆகையால், பரமாத்மனிடமிருந்து வேறுபட்டவர். இந்த விலக்ஷணத்தையே தாசராயர் சொல்கிறார். 'ஸாவதிக ஸமஷூன்யளெந்து' என்றால் பரமாத்மனைவிட குறைவான குணங்களைக் கொண்டவள். பிரம்மாதிகளைவிட உத்தமள். இவளுக்கு சமம் என்று யாரும் இல்லை. இப்படியாக லட்சுமி நாராயணர் லோக விலக்ஷணர் என்று உபாசனை செய்யவேண்டுமென்று அர்த்தம்.

**ஆதி3தே1யரு திளியதி3ஹ கு3ண**
**வேத3மானிக3ளெ ந்தெ3னிப வா**
**ண்யாதி3க3ளு ப3ல்லரவரரியத3 கு3ணக3ணங்களனு ।**
**வேத3 ப3ல்லனு பொ3ம்மனரியத3**
**கா3த4கு3ணக3ள லகுமி ப3ல்லளு**
**ஶ்ரீத4ரொப்ப3னுபா1ஸ்ய ஸத்கு3ணபூர்ண ஹரியெந்து3 ।।30**

ஆதிதேயரு = தேவதைகள்
திளியதிஹ = அறியாத
குண = பரமாத்மனின் குணங்களை
வேதமானிகளெந்தெனிப = வேதாபிமானிகள் என்று எண்ணும்
வாண்யாதிகளு = சரஸ்வதி பாரதியர்
பல்லரு = அறிவர்
அவரரியத = சரஸ்வதி, பாரதிதேவியர் அறியாத
குணகணங்களனு = குணங்களை
வேத = பிரம்மதேவர்
பல்லனு = அறிவார்
பொம்மனரியத = பிரம்மதேவர் அறியாத
அகாதகுணகள = அபாரமான குணங்களை
லகுமி பல்லளு = லட்சுமிதேவி அறிவார்
ஶ்ரீதரனு = லட்சுமிதேவியை வக்ஷஸ்தளத்தில் தரித்த
ஒப்பனு = ஶ்ரீதரனான ஶ்ரீஹரியே
உபாஸ்ய = வணங்கத்தக்கவன் (சிறந்தவன்)
ஸத்குணபூர்ண = மிகச்சிறந்த குணபூர்ணனான
ஹரியெந்து = ஹரி என்னும் பரமாத்மனே என்று (லட்சுமிதேவி அறிவார்).

முந்தைய மூன்று பத்யங்களால், லட்சுமிதேவியரின் மகாமகிமைகளை சொல்லி, அத்தகைய ரமாதேவியர் பரமாத்மனின் அபார குணங்களை இன்னும் தேடிக்கொண்டிருக்கிறார் என்னும் வசனங்களால் விசேஷமான பகவத்மகிமைகளை கூறுகிறார்.

ருத்ராதி தேவதைகள் அறியாத பகவத் மகிமைகளை வேதாபிமானிகள் என்றே அழைக்கப்படும் சரஸ்வதி, பாரதி தேவியர் அறிவர். அவர் அறியாத குணங்களை பிரம்மதேவர் அறிவார். பிரம்மதேவருக்கும் தெரியாத மகா மகிமைகளை லட்சுமிதேவி அறிவார். தன் மார்பில் லட்சுமிதேவியரை தரித்திருக்கும்,

சர்வசத்குண பூர்ணன், ஹரி என்று அழைக்கப்படுபவனுமான, பரமாத்மன் ஒருவனே அனைவரையும்விட உத்தமன்; உபாஸ்யன் என்கிறார்.

**இந்தனந்தானந்த கு$^3$ணக$^3$ள**
**ப்$^1$ராந்த$^1$கா$^1$ணதெ$^3$ மஹலகுமி ப$^4$க$^3$**
**வந்த கா$^3$ப$^4$ரணாயுதா$^4$ம்ப$^3$ர ஆலயக$^3$ளாகி$^3$ |**
**ஸ்வாந்தத$^3$லி நெலெகொ$^3$ளிஸி பரம து$^3$**
**ரந்த மஹிமன தௌ$^3$த்யகர்ம நி**
**ரந்தரதி$^3$ மாடு$^3$த$^1$லி தத$^3$தீ$^3$னத்வ வைதி$^3$ஹளு ||31**

இந்து = இத்தகைய
அனந்தானந்த குணகள = அனந்தானந்த குணங்களின்
ப்ராந்தகாணதெ = முடிவைக் காணமுடியாமல்
மஹாலகுமி = மகாலட்சுமி
பகவந்தகெ = பரமாத்மனுக்கு
ஆபரண = கௌஸ்துபாபரண ரூபியாக இருக்கிறார்
ஆயுத = தனுஸ் முதலான ஆயுத ரூபியாக இருக்கிறார்
அம்பர = வஸ்த்ர ரூபியாக இருக்கிறார்
ஆலமகளாகி = வீடாகவும் இருக்கிறார்
ஸ்வாந்ததலி = தன் அந்தரங்கத்தில் (மனதில்)
நெலெகொளிஸி = (திடமாக பகவத்ரூபத்தை) நிலைத்திருந்து
பரம துரந்த மஹிமன = மிகச்சிறந்த மற்றும் எல்லையற்ற மகிமைகளைக் கொண்ட பரமாத்மனின்
தௌத்யகர்ம = தாச கர்மங்களை
நிரந்தரதி = தொடர்ந்து (இடைவிடாமல்)
மாடுதலி = செய்துகொண்டு
ததீனத்வ = பரமாத்மனின் அதினமாக
யைதிஹளு = இருக்கிறாள்.

முந்தைய பத்யத்தில், பிரம்மாதிகளும் அறியாத பகவத் மகிமைகளை ரமாதேவியர் அறிவார் என்று சொல்வதால், அத்தகைய மகிமைகளை அவர் முழுமையாக அறிவாரோ என்று எழும் சந்தேகத்தை இங்கு போக்குகிறார்.

பிரம்மாதிகளைவிட அதிகமாக பகவத் மகிமைகளை ரமாதேவியர் அறிந்திருந்தாலும், பரமாத்மனின் அனந்தானந்த குணங்களின் எல்லைகளைக் காணாமல், பகவத் ரூபங்களை தன் மனதில் நிலைநிறுத்தி, அந்த குணங்களை பார்த்துக் கொண்டிருக்கிறார். ஆனாலும் அவற்றை முழுமையாக அறியார். அத்தகைய பகவந்தனின் சேவையை செய்வதற்கு, தம் ஒரே ரூபத்தினாலும், ஸ்ரீ, பூ, துர்கா என்னும் மூன்று ரூபங்களாலும், சேவை செய்துவந்தாலும், அதில் திருப்தி அடையாமல், வஸ்திரம், ஆபரணம், சத்ர, சாமரம் ஆகிய ரூபங்களை தரித்து, அவற்றின் மூலமாக சேவை செய்து, பரமாத்மனை புகழ்ந்திருக்கிறார். மேலும்

தமக்கு அனேக தாசியர்கள் இருந்தாலும், பகவந்தனின் சேவாதிகளை தாமே செய்கிறார். பாகவத 3ம் ஸ்கந்தம், 19ம் அத்தியாயம், 21ம் ஸ்லோகம் :

ஸ்ரீரூபிணீ க்வணயதீ சரணாரவிந்தம் நீலாம்புஜேன ஹரிஸத்மனி முக்த தோஷா | ஸம்லக்ஷ்யதே ஸ்படிக குட்ய உபேதஹேம்னி ஸம்மார்ஜதீய தனுக்ரஹணேன்ய யாத்னா: ||

விஜயத்வஜீய வியாக்யானம்:

அனேஷா முபாஸகானாம் அஸ்மாதாதீனாம் உபாசனாதி ப்ரயத்னா யஸ்யானுக்ரஹணேऽனுக்ரஹார்த்தம் ஸ்யு: |

இதரரான நம்மைப் போன்றவர்கள், லட்சுமிதேவியரின் மகிமைகளைப் பெறுவதற்காக, அவரை பூஜிக்கிறோமோ, அத்தகைய பிறப்பு இறப்பு போன்ற சுழற்சிகள் இல்லாதவரான லட்சுமிதேவி, தம் திவ்ய ரூபத்தினால் பரமாத்மனின் அந்தப்புரத்தில், அவன் சரணாரவிந்தங்களில் அலங்கரித்துக் கொண்டிருக்கும், சலங்கையின் சப்தத்தை உருவாக்கியவாறு. நீலவர்ணனான, தாமரை மலர்களால் அலங்கரிக்கப்பட்ட, பெருக்கும் துடைப்பத்தைக் கையில் ஏந்தி குப்பையைக் கூட்டிக்கொண்டு, தங்க மயமான, ஸ்படிக மணிகளால் அலங்கரிக்கப்பட்ட சுவரில் தன்னை பிரதிபிம்பராக காட்டிக்கொள்கிறார் என்று சொல்கிறார்.

இதுமட்டுமல்லாமல், புரந்தரதாசர் இயற்றிய 'ஏனு தன்யளோ லகுமி எந்தா மான்யளோ' என்னும் பத்யத்தில், 'சத்ர சாமர வ்யஜன பர்யங்க பாத்ரரூபதல்லி நிந்து, சித்ர சரிதனாத ஹரிய நித்ய சேவே மாடுதிஹளு' என்கிறார். இதே விஷயத்தையே தாசராயர் சொல்கிறார் -- 'தினந்தோறும் தூத கர்மத்தை செய்து வருகிறார்' - என்கிறார். ஒரு வேலைக்காக ஒருவர் மூலமாக இன்னொருவரிடம் செல்வதற்கே தூது என்ற பெயர் இருக்கிறது. சீதைக்கு மோதிரத்தைக் கொடுத்து அவரிடமிருந்து சூடாமணியைக் கொண்டுவர ராமதேவர் ஹனுமந்ததேவரை அனுப்பியதாலேயே, அல்லது ராவணனிடம் அனுப்பியதாலேயே, ஹனுமந்ததேவருக்கு 'ஸ்ரீராமதூத' என்று பெயர் வந்தது. ஸ்ரீகிருஷ்ணன் பாண்டவர்களுக்கு ராஜ்யத்தைக் கொடுப்பதற்காக, குருபாண்டவர்களின் சமாதானத்திற்காக தூதனாக சென்றான். அப்படியே, லட்சுமிதேவியரும் தூதராக இருந்தாரா? தூதராக செயல்பட்டார் என்று தாசராயர் எப்படி சொல்கிறார் என்றால்:

தாச தாசியர்களுக்கு தௌத்ய (தூத) கர்மம் சகஜமானதே ஆகும். தூதுக்கு மட்டும் தாச தாசியர்களே இருக்க வேண்டும் என்னும் விதி ஒன்றும் இல்லை. தாசர்களாக இல்லையென்றாலும்கூட தாஸ்யத்தை செய்யலாம். ராஜசூய யாகத்தில் தர்மராஜனுக்கு நாரதர் தூதராகச் சென்றார். பாண்டவர்களுக்கு ஸ்ரீகிருஷ்ணன் தூதனாகச் சென்றான். த்ருபதராஜனின் புரோகிதர் தூதராக த்ருதராஷ்டிர ராஜனிடம் வந்தார். இவர்கள் அனைவரும் தூத கர்மத்தை செய்திருந்தாலும், தாசர் ஆகவில்லை. தாசதாசியருக்கு மட்டும், மேற்சொன்ன தூதகாரியம் சகஜமாக இருந்தே இருக்கிறது.

பாண்டவர்களும் குரு வம்சத்திலேயே பிறந்ததால், அவர்களுக்கும் 'கௌரவ' என்னும் சொல் பொருந்தியது. ஆனால், அவர்களின் மகிமையால், கௌவர்களை தனியே பிரித்து, பாண்டுராஜனின் மக்களான பாண்டவர்களை அவர்களிடமிருந்து பிரித்தனர். கௌரவ என்னும் சொல் மட்டும் பாண்டவர்களுக்கும் பொருந்துமே தவிர, பாண்டவர் என்னும் சொல், கௌவர்களுக்கு எப்படி சேராதோ, அதைப்போலவே தாசியர்களை தூதி என்று சொல்லலாமே தவிர, தூதியர் அனைவரும் தாசியர் அல்ல என்று சொல்லவேண்டும்.

ஆனால், ரமாதேவியரை, பரமாத்மனுக்கு தாசியர் என்றே சொல்ல வேண்டியதாயிற்று. தௌத்ய கர்மம் செய்து வந்ததாலேயே இப்படி சொன்னார்கள் என்றால், சாதாரணமாக சம்பளத்திற்கு வேலை பார்க்கும் தாசியர், அதைத்தவிர சில வெளி வேலைகளையும் செய்வார்களே தவிர, அந்தரங்க வேலைகளான தௌத்யாதி கர்மங்களை அவர்களிடம் செய்விக்க சாத்தியம் இல்லை. ஆகையாலேயே, அரசகுமாரிகள், தம்மிடம் சரியான தாசியர்கள் இல்லையெனில், தம் உறவினர்களையே தௌத்ய விஷயங்களில் அனுப்பும் வழக்கம் உண்டு. ஆகையால், அந்தரங்க விஷயத்திற்கு ஏற்றவர் மட்டுமே தௌத்ய கர்மத்திற்கு தகுதியானவர். ஆகையால், ரமாதேவியர் பரமாத்மனின் அந்தரங்க தாசியராக இருந்தார் என்பதை காட்டுவதற்காக 'தௌத்யகர்ம' என்று சொன்னார் என்று அறியவேண்டும். இப்படி, பகவந்தனின் அதீனராகி பகவத் அருளினாலேயே பகவன் மகிமைகளை பிரம்மாதிகளைவிட அதிகமாக தம் தகுதிக்கேற்ப அறிந்திருக்கிறார் என்று பொருள்.

**ப்ரளய ஜலதி$^{3}$யொளுள்ள நாவெயு**
**ஹொலபு$^{3}$கா$^{3}$ணதெ$^{3}$ ஸுத்துவந்த$^{3}$தி$^{3}$**
**ஜலருஹேக்ஷண அமல கு$^{3}$ண ரூபக$^{3}$ள சிந்திஸுத ।**
**நெலெயகா$^{3}$ணதெ$^{3}$ மஹலகுமி ஸ**
**ஞ்சலவனைதி$^{3}$ஹ ளல்ப ஜீவரி**
**க$^{3}$ளவடு$^{3}$வ தே$^{3}$னிவன மஹிமெக$^{3}$ளீ ஜக$^{3}$த்ரயதி$^{3}$ ।।32**

ப்ரளய ஜலதியொளுள்ள = பிரளய சமுத்திரத்தில் இருக்கும்
நாவெயு = படகு
ஹொலபுகாணதெ = அதன் கரையைக் காணாமல்
ஸுத்துவந்ததி = சுற்றிக் கொண்டிருப்பதைப் போல
ஜலருஹேக்ஷணன = தாமரைக் கண்ணனான ஸ்ரீஹரியின்
அமலகுண ரூபகள = மிகச்சிறந்த களங்கமற்ற குணரூபங்களை
சிந்திஸுத = எண்ணியவாறு
நெலெயகாணதெ = அதனை அறியமுடியாமல்
மஹாலகுமி = மஹா லட்சுமியானவர்
சஞ்சலவனு = மன சஞ்சலத்தை
யைதிதளு = அடைந்தாள். (இப்படி இருக்கையில்)

ஈ ஜகத்ரயதி = இந்த மூன்று உலகங்களையும் (பாதாள, பூமி ஸ்வர்க்காதி மூன்று உலகங்களையும்)
இவன மஹிமெகளு = இந்த பரமாத்மனின் மகிமைகளை
அல்ப ஜீவரிகெ = சாமான்ய ஜீவர்களுக்கு
அளவடுவதேனு? = இவ்வளவுதான் என்று சொல்வதற்கு சாத்தியமா? (என்றைக்கும் சாத்தியம் இல்லை என்று பொருள்)

பகவந்தனின் குணரூபாதி மகிமைகளை, முழுமையாக அறிவதற்கு, யாருக்கும் சாத்தியம் இல்லை என்னும் விஷயத்தை ஓர் ஆதாரத்துடன் விளக்குகிறார்.

உலகம் முழுக்க பிரளய நீரில் மூழ்கியிருக்கும்போது, அதில் ஒரு படகு மட்டும் இருந்தால், அந்த படகு கரையைக் காணாமல் எப்படி தண்ணீரில் சுற்றிக்கொண்டிருக்குமோ, அதுபோல, மகாலட்சுமிதேவி பரமாத்மனின் அபாரமான குணராசிகளின் ஆதி-அந்த்யத்தைக் காணமுடியாமல், அதிலேயே சுற்றிக்கொண்டு, மன சஞ்சலத்தை அடைந்தாள். இப்படி சொன்னபிறகு, இன்னும் சாதாரண இதர ஜீவர்கள், பரமாத்மனின் குணாதி மகிமைகளை அறிவது எப்படி?

**ஸ்ரீனிகேதன ஸாத்வதாம்பதி1**
**ஞானக$^{3}$ம்ய க$^{3}$யாசுரார்த்த$^{4}$ன**
**மௌனிகுலஸன்மான்ய மானத$^{3}$ மாதுலத்$^{4}$வம்ஸி |**
**தீ$^{3}$னஜனமந்தா$^{3}$ர மது$^{4}$ரிபு**
**ப்ராணத$^{3}$ ஜகன்னாத$^{2}$விட்டல**
**தானெ க$^{3}$தியெந்த$^{3}$னுதி$^{3}$னதி$^{3}$ நம்பி$^{3}$த$^{3}$வரனு பொரெவ ||33**

ஸ்ரீனிகேதன = லட்சுமிதேவியரின் வீடு. அதாவது, லட்சுமிதேவியரை எப்போதும் வக்ஷஸ்தலத்தில் வைத்திருக்கும்
ஸாத்வதாம்பதி = சாத்விக குலத்தின் ஸ்வாமியான. அல்லது, சஜ்ஜனர்களின் ஸ்வாமியான
ஞானகம்ய = ஞானத்தினாலேயே அறியக்கூடியவனான
கயா சுரார்த்தன = கயா என்னும் தைத்யனைக் கொன்ற
மௌனிகுல ஸன்மான்ய = ரிஷிகுலத்தினால் புகழப்பட்டிருக்கும்
மானத = தன் பக்தர்களுக்கு தக்க கௌரவத்தைக் கொடுக்கும்
மாதுலத்வம்ஸி = தாய்மாமனான கம்ஸனைக் கொன்ற
தீனஜனமந்தார = தீனனான பக்தர்களுக்கு கல்பவ்ருக்ஷத்தைப் போல இருக்கும்
மதுரிபு = மது என்னும் அசுரனைக் கொன்ற
ப்ராணத = அனைவருக்கும் பிராணனைக் கொடுத்து காப்பாற்றும்
ஜகன்னாதவிட்டல = (தாசராயரின் பிம்பரூபியான) ஜகன்னாதவிட்டலன் என்று அழைக்கப்படும் ஸ்ரீபரமாத்மன்
தானே கதியெந்து = பரமாத்மனே கதி என்று
அனுதினதி = தினந்தோறும்
நம்பிதவரனு = தன்னை நம்பியவர்களை
பொரெவ = காப்பாற்றுவான்.

சந்தியை முடித்தவாறு, பரமாத்மானை வணங்கி, இத்தகைய பரமாத்மனை வணங்கியவர்களை அவன் காப்பாற்றுவான் என்கிறார் தாசராயர்.

ஸ்ரீலட்சுமிதேவியை எப்போதும் தன் மார்பில் வைத்துக் கொண்டிருப்பதால், பரமாத்மனுக்கு ஸ்ரீனிகேதன என்று பெயர். யாதவ குலத்தைச் சேர்ந்த, சாத்வத குலத்தில் பிறந்ததால் பரமாத்மனுக்கு சாத்வதாம்பதி என்று பெயர். அல்லது, சாது சஜ்ஜனர்களுக்கு ஸ்வாமியானதாலும் ஸாத்வதாம்பதி என்று பெயர். பரமாத்மனை சேர்வேண்டுமெனில், ஞானத்தினாலேயே சாத்தியம் ஆகையால், ஞானகம்ய என்று பெயர் பெற்றார். கயா என்னும் அசுரனைக் கொன்று, புண்ணிய க்ஷேத்திரமான கயாவை காப்பாற்றியவர். முனிவர்களால் மரியாதை செய்யப்படுகிறவன். தான் இந்த பிரம்மாதிகளுக்கு மரியாதை நிமித்தமாக சன்மானம் செய்கிறவன். தன் தாய்மாமனான கம்சனைக் கொன்று, யாதவர்களைக் காத்தவன். தன் பக்தர்களுக்கு கல்பவ்ருக்ஷம் போல இருப்பவன். மது என்னும் மிகக்கொடிய தைத்யனைக் கொன்றவன். அனைவருக்கும் பிராணனைக் கொடுப்பவன்.

இத்தகைய பிம்பரூபியான ஸ்ரீஜகன்னாதவிட்டலனை நீயே கதி என்று யார் திடமாக நம்புகின்றனரோ, அவர்களை ஸ்வாமி காப்பாற்றுகிறான்.

பஞ்சதன்மாத்ரா சந்தி என்னும் 7ம் சந்தியின் தாத்பர்யம் முடிவுற்றது.

ஸ்ரீகிருஷ்ணார்ப்பணமஸ்து.

***

## பாவபிரகாசிகை : சந்தி 8 : மாத்ருகா சந்தி

**ஹரிகதா2ம்ருதசார கு3ருக3ள**
**கருணதிந்தா3பநிது பே1ளுவே**
**பரம ப4கவத்3ப4க்தரித3னாத3ரதி3 கேளுவுது3**

சந்தி 8: மாத்ருகா சந்தி

**பாத3மானி ஜயந்தனொளகெ3 ஸு**
**மேத4 நாமக1னிப்ப த3க்ஷிண**
**பாத3த3ங்கு3டத3ல்லி ப1வனனு பா4ரப்4ருத்3ரூப1 ।**
**காது3கொண்டி3ஹ ட1ங்கி1 த1ரமொத3**
**லாத3னாமதி3 ஸந்தி4க3ளலீ**
**ரைது3 ரூபத3லித்து ஸந்தத நடெது3 நடெஸுதலி ।।1**

பாதமானி = பாதங்களுக்கு அபிமானியான
ஜயந்தனொளகெ = ஜயந்தனில்
சுமேத நாமகனிப்ப = சுமேத என்னும் பரமாத்மன்

இப்ப = இருக்கிறான்
தக்ஷிண பாததங்குடதல்லி = வலது கால் கட்டை விரலில்
பவனனு = வாயுதேவர், அதன் அந்தர்யாமியாகி
பாரப்ருத்ரூப = பாரப்ருத் எனும் பெயருள்ள ரூபத்தினால்
காதுகொம்டிஹ = காத்துக் கொண்டிருக்கிறான்
டங்கிதர மொதலாத = டங்கி, தாரா முதலான பெயர்களில்
நாமதி = பெயர்களில்
சந்திகளு = துடையிலிருந்து பாதம் வரைக்கும் உள்ள முட்டிகளில்
ஈரைது ரூபதலித்து = 10 ரூபங்களில் இருந்து
நடெது = தானும் நடந்து
நடெசுதலி = மக்களாலும்கூட நடத்தி வைக்கிறான்.

முந்தைய சந்திகளில், பஞ்சமகாபூதங்கள், பஞ்ச தன்மாத்ரா குணங்களுடன் கூடிய பாஞ்சபௌதிக சரீரங்களில் பகவத் உபாசனா கிரமத்தை சொல்லி, சந்தி 11ல் ‘ஏகபஞ்சாஷத் வர்ணகத மாகளத்ரனு’ என்று 51 எழுத்துக்களில் பரமாத்மன் சரீரங்களில் இருக்கிறான் என்று குறிப்பால் உணர்த்துகிறார். இந்த சந்தியில் 51 எழுத்துக்களில் இருக்கும் பகவத் ரூபங்களை, தந்த்ரசாரத்தில் சொல்லியபடி, மாத்ருகான்யாச கிரமத்தின்படி எந்தெந்த இடங்களில் சிந்திக்க வேண்டும் என்னும் விஷயத்தை சொல்கிறார்.

பாதாபிமானி ஜெயந்தனில், சுமேத நாமகனான பரமாத்மன் இருக்கிறான். வலது காலின் கட்டைவிரலில் வாயுதேவர் இருக்கிறார். அவருக்குள் பாரப்ருத் எனும் பெயருள்ள பரமாத்மன் இருக்கிறான். இந்த ரூபங்கள் 51 எழுத்துக்களுக்கு சம்பந்தப்படாத வேறு ரூபங்கள். வலது துடையிலிருந்து, முழங்கால், பாதங்கள், விரல்கள், இவற்றில் இருக்கும் மூட்டுகள், விரல்களின் நுனி என இந்த 5 இடங்களில் டங்கி முதலான 5 ரூபங்கள், அதாவது, மாத்ருகான்யாச க்ரமத்தில் சொல்லியிருப்பதைப் போல டங்கி, டகல, டரக, டரீ, ணாத்ம என்னும் 5 ரூபங்களால், இதைப்போலவே இடது பக்கத்தில், துடையிலிருந்து 5 மூட்டுகளில் தார, தப, தண்டீ, தன்வி, நம்ய என்னும் 5 ரூபங்களாலும் இருந்து, தான் அந்த தேகத்தில் இருந்து நடந்தவாறு (செயல்களை செய்தவாறு), அந்த தேகத்தை நடக்க வைத்தும் (செயல்களை செய்வித்தும்) இருக்கிறான்.

**கபில சார்வங்கா$^{3}$தி$^{3}$ ரூபதி$^{3}$**
**வபுக$^{3}$ளொளு ஹஸ்தக$^{3}$ள ஸந்தி$^{4}$யொ**
**ளபரிமித கர்மக$^{3}$ள மாடு$^{3}$தலிப்ப தி$^{3}$னதி$^{3}$னதி$^{3}$ |**
**க்ருபணவத்ஸல பார்ஷ்வதொ$^{3}$ளு பர**
**ஸுப$^{2}$லி எனிஸுவ கு$^{3}$த$^{3}$ உபஸ்த$^{2}$தி$^{3}$**
**விபுள ப$^{3}$லிப$^{4}$க$^{1}$ மனுவெனிஸி துந்தி$^{3}$யொளகி$^{3}$ருதிஹனு ||2**

கபில சார்வங்காதி ரூபதி = கபில, சார்வங்க முதலான ரூபங்களால்
ஹஸ்தகள சந்தியொளு = வலது, இடது கைகளின் மூட்டுகளில் இருந்து
தினதினதி = தினந்தோறும் / எப்போதும்

அபரிமித = எல்லைகள் அற்ற (எண்ணிக்கை அற்ற)
கர்மகள = கர்மங்களை
மாடுதலிப்ப = செய்து வருகிறான்
க்ருபணவத்ஸல = (பக்தர்களாக இருந்து, ஜிதேந்திரியர் ஆகாதவர்கள் க்ருபணர்கள்). அத்தகைய பக்தர்களின் ப்ரியம் கொண்ட ஸ்ரீஹரி.
பார்ஷ்வதொளு = வல இட பக்கங்களில்
பரசுபலியெனிசுவ = பர மற்றும் பலி என்னும் சுரூபங்களால் இருக்கிறான்
குத உபஸ்ததி = மல மூத்ர இந்திரியங்களில்
விபுள = நிலைத்திருக்கும்
பலிபக = பலி, பக என்னும் ரூபங்களில் இருக்கிறான்
மனவெனிஸி = மன என்னும் பெயரில்
துந்தியொளகெ = நாபியின் கீழ்ப்பாகத்தில்
இருதிஹனு = இருக்கிறான்.

முந்தைய பத்யத்தில் ட1, ட2, ட3, ட4, ண, த1, த2, த3, த4, ந என்னும் 10 எழுத்துக்களின் பகவத்ரூபங்களை சிந்திப்பதைப் பற்றி சொல்லியிருந்தார். இந்த பத்யத்திலிருந்து துவங்கி, க முதல் ச வரிசையில் உள்ள பகவத் ரூபங்களை சிந்திப்பதைப் பற்றி விவரிக்கிறார்.

க1=கபில, க2=கபதி, க3=கருட, க4=கர்ம, ஞ=ஞஸார என்னும் 5 ரூபங்களை வலது கை, தோளின் மூட்டு, முழங்கை சந்தி, விரல் நுனி, விரல் நடுவே இருக்கும் மூட்டு என இந்த 5 சந்திகளில் சிந்திக்க வேண்டும். இதைப்போலவே, ச1=சார்வாங்க. ச2=சந்தோகம்ய, ஜ1=ஜனார்த்தன, ஜ2=ஜாடிதாரி ஙு=யம என்னும் 5 ரூபங்களை இடது 5 சந்திகளில் சிந்திக்க வேண்டும்.

ப-வர்க்கத்திற்கான இடங்களை சொல்கிறார். க்ருபணவத்ஸலனான ஸ்ரீஹரி, ப1=பர என்னும் ரூபத்தினாலும், ப2= பலி என்னும் ரூபத்தினாலும் இரு பக்கங்களில் இருக்கிறான். ப3=பலி, ப4=பக எனும் இரு ரூபங்களால் மலமூத்ர உறுப்புகளில் இருக்கிறான். ம=மனு என்னும் ரூபத்தினால் நாபிக்கு கீழ் பாகத்தில் இருக்கிறான். இப்படியாக சிந்திக்க வேண்டும் என்பது கருத்து.

**ஐது$^{3}$மேலொந்த$^{3}$தி$^{4}$க த$^{3}$ளவு**
**ள்ளைது$^{3}$ பத்$^{3}$மவு நாபி$^{4}$மூலதி$^{3}$**
**ஐது$^{3}$ மூர்த்திக$^{3}$ளிஹவு அனிருத்தா$^{3}$தி$^{3}$ நாமத$^{3}$லி |**
**ஐதி$^{3}$ஸூத$^{1}$ க$^{3}$ர்ப்ப$^{4}$வனு ஜீவர**
**நாதி$^{3}$ கர்ம ப்ரக்ருதி கு$^{3}$ணத$^{3}$**
**ஹாதி$^{3}$ தப்பலிகொட$^{3}$தெ$^{3}$ வ்யாபாரக$^{3}$ள மாடு$^{3}$திஹ ||3**

ஐது மேலொந்ததிக தளவுள்ள = 5+1=6 தளங்களைக் கொண்ட
ஐது பத்மவு = 5 தாமரைகள்
நாபி = நாபியில்
மூலதி = கீழே (5 தாமரைகள் இருக்கின்றன).

இவற்றில்,
அனிருத்தாதி நாமதலி = அனிருத்தாதி 5 நாமங்களைக் கொண்ட
ஐது மூர்த்திகளிஹவு = 5 ரூபங்கள் இருக்கின்றன
ஜீவர = ஜீவர்களுக்கு
கர்ப்பவனு = கர்ப்பஸ்தானத்தை
யைதிஸுத = கொடுத்தவாறு
அனாதி கர்ம = அனாதி கர்மங்களை
ப்ரக்ருதி குணகள = ப்ரக்ருதி சம்பந்தமான ஸத்வ, ரஜஸ், தமோ குணங்களை
ஹாதி தப்பலிகொடதெ = யோக்யதையை மீறாதவாறு
வ்யாபாரகள மாடுதிஹ = வியாபாரங்களை செய்கிறான், செய்விக்கிறான்.

'ஐது மேலொந்ததிக தளவுள்ளைது பத்மவு நாபிமூலதி' என்னும் வாக்கியத்திற்கு சாதாரணமாக நாபி மூலத்தில் 6 தளங்களைக் கொண்ட 5 தாமரைகள் இருக்கிறது என்றும், அவற்றில், அனிருத்தாதி 5 ரூபங்கள் உள்ளன என்றும் அர்த்தம் சொல்லலாம். மானஸ ஸ்ம்ருதி என்னும் கிரந்தத்தில்

ததஸ்ஸுஷும்னா ஸம்ஸக்தா நாபி ஸம்ஸ்தேஷு பஞ்சஸு ।
ஷட்தளாருண பத்ரேஷு அனிருத்தாதிர் காஸ்மரேத் ।।

என்பதே இதற்கு ஆதாரமாக இருக்கிறது. தந்த்ரசாரத்தில் 4ம் அத்தியாயம், 160ம் ஸ்லோகத்தில் :

மூலாதாரம் ஸமாரப்ய த்வாமூர்த்தான ம்ருஜுஸ்திதா ।
மத்யேஸுஷும்னா விக்ஞேயா வஜ்ரிகார்யா ப்ரகாஷினி ।
வைத்யுதா பிரம்ம நாடீதி ஸைவ பஞ்சப்ரபேதினி ।।161
ப்ருஷ்டவாமாக்ர தக்ஷாந்தர் பேதாஸ்தேச க்ரமேணது ।
ப்ரத்யும்னாதி ஸ்வரூபேண த்யேயம் ஸித்திமபீப்ஸிதா ।।

இதன் பொருள்:

மத்யே = சரீரத்தின் நடுவில்
மூலாதாரம் = மூலத்தில்
சமாரப்ய = துவக்கத்தில்
ஆமூர்த்தானம் = தலை வரைக்கும்
ருஜுஸ்திதா = நீளமாக இருப்பது சுஷும்னா நாடி

இதன் கருத்து என்னவென்றால், மல மூத்திர உறுப்புகளுக்கு நடுவே, 2 அங்குல நீளம், 4 அங்குல அகலம் உள்ள உருண்டையான ஒரு பொருள் இருக்கிறது. அதிலிருந்தே நாடிகள் துவங்கியிருக்கின்றன. சுஷும்னா நாடி அங்கிருந்தே புறப்படுகிறது. அந்த ஒரு நாடியே, வஜ்ரிகா, ஆர்யா, ப்ரகாஷினீ, வைத்யுதா, பிரம்ம நாடி என்னும் 5 வேறுபாடுகளைக் கொண்டிருக்கிறது. ஒன்றிற்கு 5 ரூபங்கள் எப்படியெனில்:

இதே சுஷும்னா நாடியின் :

* பின்புறத்திற்கு ‘வஜ்ரிகெ’ என்று பெயர்.
* இடது பக்கத்திற்கு ‘ஆர்யா’
* முன் பக்கத்திற்கு ப்ரகாஷினி
* வலது பக்கத்திற்கு வைத்யுதா என்று பெயர்.
* நடு பாகத்திற்கு பிரம்ம நாடி என்று பெயர்

இந்த 5 இடங்களில் முறையே பிரத்யும்ன, அனிருத்த, வாசுதேவ, சங்கர்ஷண, நாராயண ஸ்வரூபங்களைக் கொண்ட பரமாத்மனை சிந்திக்க வேண்டும்.

மூலேச நாபௌ ஹ்ருதயேந்த்ரியோனி ப்ரூமத்ய மூர்த்னி த்விஷடந்தகேஷு ||161
சதுர்த்விஷஷ்டம் த்விசதுர்த்விஷட் கந்தளேஷுபத்மேஷு ஸிதாருணேஷு |
பஞ்சாத்மகோஸௌ பகவான்ஸத்யைவ த்யேயோஹ்ருதந்தான்யருணா நிதானி ||164

இந்த பத்யங்களின்படி, சுஷும்னா நாடியில் மூலத்திலும், நாபி, ஹ்ருதய, இந்த்ரயோனி, ப்ரூமத்ய, தலை என்னும் 6 இடங்களில் 6 தாமரைகள் இருக்கின்றன. அங்கு

* 4 தள தாமரை 1.
* நாபியில் 6 தளங்களைக் கொண்ட தாமரை 1
* மார்பில் 8 தளங்களைக் கொண்ட தாமரை 1
* தைத்திரிய உபநிஷத்தில் ’அந்தரேண தாளுகேய ஏஷஸ்தன இனாவலம்பதே, ஸேந்த்ரயோனி:’ என்று இந்திரயோனியின் லட்சணத்தை சொல்லியிருப்பர். அதாவது, கழுத்தின் நடுவில் உருண்டையாக இருப்பதே இந்திரயோனி. அந்த இந்திரயோனியில் 2 தள தாமரை 1.
* புருவங்களுக்கு நடுவில் 4 தள தாமரை 1.
* தலையில் 12 தள தாமரை 1.

என்று 6 தாமரைகள் உள்ளன. இந்த தாமரைகளில் சில சிவப்பாகவும், சில வெள்ளையாகவும் இருக்கின்றன. எது சிவப்பு எது வெள்ளை என்றால், ‘ஹ்ருதந்தான்யருஹானி’ - மூல, நாபி, மார்பு இந்த மூன்று தாமரைகளும் சிவப்பு. அவற்றிற்கு மேல் இருக்கும் தாமரைகள் மூன்றும் வெள்ளை. இவற்றில், பஞ்சாத்மகனான பரமாத்மனை - அனிருத்த, ப்ரத்யும்ன, வாசுதேவ, சங்கர்ஷண, நாராயண என்னும் 5 ரூபங்களை முறையே தியானிக்க வேண்டும் என்று சலாரி ஆசார்யரின் வியாக்யானத்தில் சொல்லப்பட்டிருக்கிறது.

இது மட்டுமல்லாமல், சுஷும்னா நாடிக்கு 4 பக்கங்களிலும் 4 நாடிகள் இருக்கின்றன.

இடாச பிங்களாசைவ வஜ்ரிகா தாரிணேததா |
ஸபகர்வா ஹ்ருதயே ஸவ்யவஸ்தித: ||

அதே தந்த்ரசார 4ம் அத்தியாயத்தின் மேற்சொன்ன ஸ்லோகத்தின் அர்த்தம் பின்வருமாறு:

சுஷும்னா நாடிக்கு நான்கு திசைகளிலும் இடா, பிங்களா, வஜ்ரிகா, தாரணி என்னும் நான்கு நாடிகள் உள்ளன. இவற்றில், அனிருத்தாதி 4 ரூபங்களால் 4 நாடிகளிலும், நாராயண ரூபத்தினால் சுஷும்னா நாடியிலும் இருக்கிறான். ஆனால் இடா, பிங்களா என்னும் கிரமத்தில் அனிருத்தாதிகள் இருக்கிறார்கள் என்னும் விஷயத்தை விளக்குவதற்காக 'வஜிரகாத்யாஸு' என்று சொல்லியிருக்கிறார்கள். வஜ்ரிகாவில் தொடங்கி அனிருத்தாதி ரூபங்கள் இருக்கின்றன. இதன் விவரம் சாந்தோக்யோ உபநிஷத்தில் இருக்கிறது.

ஸயேஷ ஹ்ருதினாடீஷு பஞ்சரூப: ப்ரதிஷ்டித: |
நாராயணாக்யம் ஸௌஷும்னம் மத்யகம் ரக்தவர்ணகம் ||
ஷுக்லந்து வாஸுதேவாக்யம் நந்தின்யாமக்ரத ஸ்திதம் |
பிங்களாயாம் பிகளஞ்ச ரூபம் சங்கர்ஷணாபிதம் ||
பக்ஷிமேவஜ்ரிகாயாஞ்ச பீதம் ப்ரத்யும்ன நாமகம் |
இடாயாமனிருத்தாக்யம் நீலரூபம் வ்யவஸ்திதம் ||

சுஷும்னத்திற்கு
மேற்கில் இருக்கும் வஜ்ரிகா நாடியில் மஞ்சள் வர்ணனாக ப்ரத்யும்ன,
வடக்கில் இருக்கும் இடா நாடியில் நீல வர்ணனாக அனிருத்தன்,
கிழக்கில் இருக்கும் பிங்களா நாடியில், பழுப்பு நிறத்தில் சங்கர்ஷண
தெற்கில் இருக்கும் நந்தினி நாடியில், வெள்ளை நிறத்தில் வாசுதேவ
நடுவில் சுஷும்னா நாடியில் சிவப்பு வர்ணனாக நாராயண

என 5 ரூபங்களால் பகவந்தன் இருக்கிறான். இதைப் போன்ற ஆதாரங்களின் பேரிலேயே, 'ஐதுமேலொம்ததிக தளவுள்ளைது பத்மவு நாபிமூலதி' என்னும் பதங்களுக்கு, ஒவ்வொரு இடங்களிலும் 5-5 தாமரைகள் என்னும் அர்த்தம் சொல்வது அர்த்தமற்றது. 5 இடங்களில் 5 தாமரைகள் என்றும், இன்னொரு தாமரை, கண்ணிற்குத் தெரியாதவாறு தலையிலிருந்து 12 அங்குலம் வரை உள்ளே இருக்கிறது என்றும் அறியவேண்டும்.

இந்த வாக்கியத்திற்கும் மானஸஸ்ம்ருதி வாக்கியத்திற்கும் வேறுபாடு வரலாம். இதை எப்படி புரிந்து கொள்ளவேண்டுமெனில், நாபியில் 6 தள தாமரைகள், 5 இருந்தாலும், அவை ஒரே இழையில் சேர்ந்துகொண்டு, ஒன்றுக்கொன்று சம்பந்தப்படாமல் இருப்பதால், அவை ஒரே தாமரை என்பது ஸ்ரீமதாசார்யரின் அபிப்பிராயம். மானஸ ஸ்ம்ருதியின் வாக்கியத்தை அனுசரித்து, தாசராயர், அவை வெவ்வேறான 5 தாமரைகள் என்று சொல்லியிருக்கிறார் என்று அறியவேண்டும். இப்படி, 5 தாமரைகளில், அனிருத்தாதி 5 ரூபங்களால் பரமாத்மன் இருந்து, அவரவர்களின் கர்மங்களுக்கேற்ப ஜீவர்களை கர்ப்பத்திற்குக் கொண்டு வந்து, பிறக்க வைத்து, அனாதி கர்மங்களை செய்து, செய்விக்கிறான்.

**நாபி⁴யலி ஷட்கோண மண்ட³ல**

**தீப⁴விஷ்யத் பி³ரம்மனொளு மு**
**க்தாப ஸ்ரீப்ரத்யும்னனிப்பனு வி பு⁴த³க³ணஸேவ்ய |**
**ஷோபி⁴ஸுத கௌஸ்துப⁴வெ மொத³லா**
**தா³ப⁴ரண ஆயுத⁴க³ளிந்த ம**
**ஹாப⁴யங்கர பாபபுருஷன ஷோஷிஸுத நித்ய ||4**

நாபியலி = நாபிக் கமலத்தில்
ஷட்கோண மண்டலதி = ஆறு கோணங்களைக் கொண்ட மண்டலத்தின் நடுவில்
ஈ பவிஷ்யத் பிரம்மனொளு = அடுத்த கல்பத்தில் பிரம்மபதவியை அடையும் வாயுதேவரில்
முக்தாப = முத்தினைப் போல ஒளிரும்
ஸ்ரீபிரத்யும்னனிப்பனு = ஸ்ரீபிரத்யும்னரூபி பகவந்தன் இருக்கிறான்
விபுதகணசேவ்ய = அவன், பிரம்மாதி தேவதைகளால் வணங்கப்படுபவன்
கௌஸ்துபவெ மொதலாத = கௌஸ்துப முதலான
ஆபரண = ஆபரணங்களால்
ஆயுதகளிந்த = சக்ராதி ஆயுதங்களால்
ஷோபிஸுத = அலங்கரித்துக்கொண்டு
மஹாபயங்கர = மகா பயங்கரனாகி
பாபபுருஷன = பாப புருஷனை
நித்ய = தினந்தோறும்
ஷோஷிசுத = வென்றவாறு (அழித்தவாறு)

முந்தைய பத்யத்தில், மூலாதாரத்திலிருந்து துவங்கி தலை வரைக்கும், 6 இடங்களில் இருக்கும் 6 தாமரைகளில், தலையில் இருக்கும் ஒரு தாமரையைத் தவிர, பாக்கி 5 தாமரைகளில் இருக்கும் பகவந்தனின் அனிருத்தாதி ரூபங்களை சொல்லியிருந்தார். இந்த பத்யத்திலிருந்து, அந்த தாமரையில் இருக்கும் த்ரிகோண மண்டலங்களை, அதில் இருக்கும் பகவத்ரூபங்களின் சிந்தனையை சொல்லியவாறு, பாபபுருஷ விசர்ஜனா லட்சணத்தையும் கூறுகிறார்.

மூலாதாரத்தில் துவங்கி, மேற்சொன்ன ஆறு தாமரைகளிலும், மத்திய பிரதேசத்தில் 6 மண்டலங்கள் இருக்கின்றன.
* முக்கோண மண்டலம்,
* அறுகோண மண்டலம்
* 12 கோண மண்டலம்,
* வட்ட மண்டலம்
* முக்கோண மண்டலம்
* வட்ட மண்டலம் என மொத்தம் ஆறு மண்டலங்கள் உள்ளன. இதற்கு ஆதாரம்:

த்ரிகோணவன்ஹௌச ஷடஸ்ரவாயோ த்விஸ்தாவதஸ்ர த்விஸ்தாவதஸ்ர ரவிவ்ருத்த ஷஷித்ரிவன்ஹௌ |
வ்ருத்தே வதாவபி விசிந்த்யமிதம் தஷார்த்தரூபம் ஸிதம் ததகிளம் ஹ்ருதயாத்பரஸ்தம் || 165

என்னும் இந்த ஆதாரத்தினால், மேற்சொன்ன விதத்தில் 6 மண்டலங்கள் இருக்கின்றன.

த்ரிகோண மண்டலம் - அக்னி மண்டலம் என்றும்,
அறுகோண மண்டலம் - வாயு மண்டலம் என்றும்,
12 கோண மண்டலம் - சூர்ய மண்டலம் என்றும்,
வட்ட மண்டலம் - சந்திர மண்டலம் என்றும் இதனுடன் இன்னொரு த்ரிகோண & வட்ட மண்டலங்கள் சேர்ந்து, மொத்தம் 6 மண்டலங்கள் உள்ளன. இவற்றில், அனிருத்தாதி 5 ரூபங்களை சிந்திக்க வேண்டுமென்று சொல்லியிருக்கிறார்கள். இவற்றில், இந்த பத்யத்தில், நாபியில் இருக்கும் அறுகோண மண்டலத்தில் சிந்திக்க வேண்டிய பகவத்ரூபங்களைப் பற்றி சொல்கிறார்.

நாபியில் ஷட்கோண மண்டலம் இருக்கிறது. அதில் நீல வர்ணனாக, அடுத்த கல்பத்தில் பிரம்மபதவியை வகிக்கப்போகும் வாயுதேவர் இருக்கிறார். அவரில் அந்தர்யாமியாக, தேவதைகளால் வணங்கப்படுபவனான, ஸ்ரீபிரத்யும்னன், நீலமணிகளின் நடுவே இருக்கும் முத்தினைப் போல ஒளியுள்ளவனாக, கௌஸ்துப முதலான ஆபரணங்களை அணிந்தவனாக, சக்ர சங்கு முதலான ஆயுதங்களை தரித்தவனாக, அலங்கரிக்கப்பட்டவனாக, மகாபயங்கரனான பாபபுருஷனை தினந்தோறும் வென்று கொண்டிருக்கிறான். பாபபுருஷனின் லட்சணங்களை பாபபுருஷ விசர்ஜன மந்திரத்தில் 'பிரம்மஹத்யா ஷிரஸ்கஞ்ச' ஆகிய வாக்கியங்களால் சொல்லியிருப்பர்.

பாபபுருஷனுக்கு பிரம்மஹத்யவே சிரஸ். ஸ்வர்ணஸ்தேய என்னும் மகாபாபமே இரு தோள்கள். சுராதான என்பதே மார்பு. குருஸ்த்ரி கமன என்னும் மகாபாபமே இடுப்பு. இத்தகைய மஹாபாபங்களே இரு பாதங்கள். மற்ற பாவங்களே இதர உறுப்புகள். கையில் கத்தி, கேடயம் ஆகியவற்றை தரித்துக்கொண்டு, கருப்பு வண்ணமாக இருக்கிறான் என்று இடது இடுப்பில் சிந்தித்து, பின் அந்த பாபபுருஷனை நாபி பிரதேசத்திற்கு இழுத்து வருவதாக நினைத்து, நாபியில் :

'ஷட்கோண மண்டல மத்யஸ்தோ நீலவர்ணோ வாயுபீஜவாச்ய: பரமாத்மா வாய்வந்தர்யாமி ஸ்ரீப்ரத்யும்னோ பகர்வா மச்சரீரஸ்தம் பாபபுருஷம் வாயுனா ஷோஷயது' என்று உச்சரித்து வாயு பீஜமான 'யம்' என்னும் பீஜாக்ஷரத்தை 6 முறை, ஓம்காரத்துடன் சேர்த்து சொல்லி, அந்த பாபபுருஷன் உலர்ந்தான் (அழிந்தான்) என்று சிந்திக்க வேண்டும். என்று சொல்லியிருக்கிறார்கள்.

இதே விஷயத்தையே தாசராயர் இங்கு சொல்லியிருக்கிறார். 'முக்தாப' ப்ரத்யும்னன் - முத்தினைப் போல ஒளிர்கிறான் என்றார். மேற்சொன்ன மந்திரத்தில் 'நீலவர்ணோவாயு பீஜவாச்ய:' என்னும் சொல்லினால், பிரத்யும்னன் நீல வர்ணனாக இருக்கிறான் என்று சொல்கிறார். இதன் பொருள் என்னவெனில், அறுகோண மண்டலத்தில், நீல வர்ணனான வாயுதேவர் இருக்கிறார். அவரின் அந்தர்யாமி ஆனதால், ஞானிகளுக்கு சாதாரண ஒளியைக் கொண்டவனாக, இருட்டில் இருக்கும் முத்தினைப் போல அதிக வெளிச்சம் இல்லாமல், நீல

வண்ண முத்தினைப் போல இருக்கிறான். அவன் நீலவண்ண வாயு அந்தர்யாமியானதால், அந்த அந்தர்யாமி ரூபத்தைக் காணாமல், நீல வர்ணத்தை மட்டுமே கண்டனர். ஆகையால், நீலவர்ணன் என்று மட்டும் கூறினர் என்று அறியவேண்டும்.

**த்வாத$^{3}$ஷார்க$^{1}$ர மண்ட$^{3}$லவு ம**
**த்$^{4}$யோத$^{3}$ரதொ$^{3}$ளு ஸுஷும்னதொ$^{3}$ளகி$^{3}$ஹு**
**தை$^{3}$து$^{3}$ ரூபாத்மகனு அரவத்ததி$^{3}$க முன்னூரு ।**
**ஈ தி$^{3}$வாராத்ரிக$^{3}$ள மானிக$^{3}$**
**ளாத திவிஜர ஸந்தயிஸுத நி**
**ஷாத$^{3}$ரூபக தை$^{3}$த்யரனு ஸம்ஹரிப நித்யத$^{3}$லி ।।5**

த்வாதஷார்கர மண்டலவு = 12 கோணங்களைக் கொண்ட சூர்ய மண்டலம்
மத்யோதரதொளு = வயிற்றின் நடுவில்
சுஷும்னதொளகெ = சுஷும்னா நாடியில்
இஹுது = இருக்கிறது
ஐது ரூபாத்மகனு = அனிருத்தாதி 5 ரூபாத்மகனான ஸ்ரீபரமாத்மன், அந்த 12 கோண மண்டலத்தில் சங்கர்ஷண ரூபத்தில் இருந்து
அரவத்ததிக முன்னூரு = 360 எண்ணிக்கையில்
ஈ திவாராத்ரிகள மானிகளாத = பகல், இரவுகளுக்கு அபிமானியான
திவிஜர = தேவதைகளை
சந்தெயிஸுத = சமாதானம் செய்தவாறு, இந்த தேவதைகளுக்கு எதிரிகளான
நிஷாதரூபக தைத்யரனு = நிஷாத ஜாதியைப் போல காணும் தைத்யர்களை
நித்யதலி = தினந்தோறும்
சம்ஹரிப = சம்ஹரிக்கிறான்.

வயிற்றின் நடுவில் சுஷும்னா நாடியில் 12 கோணம் உள்ள சூர்ய மண்டலம் இருக்கிறது. அதில் பஞ்சரூபாத்மகன் என்றால் அனிருத்தாதி 5 ரூபாத்மகனான ஸ்ரீபரமாத்மன் சங்கர்ஷண ரூபத்தினால் இருந்து 360 பகல் மற்றும் 360 இரவுகளுக்கு அபிமானிகளான தேவதைகளை மகிழ்வித்தவாறு, சூரியனுக்கு எதிரியான மந்தேஹ என்னும் அசுரனை தினந்தோறும் அழித்தவாறு இருக்கிறார். ஒரு நாள் அந்த அசுரனை கொன்றுவிட்டால், மறுபடி அடுத்த நாளும் ஏன் அவனைக் கொல்ல வேண்டும் என்று கேட்டால், சந்தியா பாஷ்யத்தில் :

ஸத்யாகாலேச ஸம்ப்ராப்தே கோரே பரமதாருணீ ।
மந்தேஹா ராக்ஷஸா கோரா: ஸூர்ய மிச்சந்தி காதிதும் ।।
ப்ரஜாபதி க்ருத: ஸாபஸ்தேஷாமைரேய ராக்ஷஸாம் ।
அக்ஷயத்வம் ஷரீராணாம் மரணஞ்ச தினேதினே ।।
தத: ஸூர்யஸ்ய தைர்யுத்தம் பவத்யேவ ஸுதாரணம் ।।

தினந்தோறும் சந்தியா காலத்தில், மந்தேஹ என்னும் சில கோரரான அசுரர்கள், சூரியனை தின்பதற்கு விரும்புவர். அந்த அசுரர்களுக்கு பிரம்மன், தினந்தோறும்

மரணம் அடையுமாறும், தேகம் நாசமடையாமல் இருக்குமாறும் சாபம் கொடுத்திருக்கிறார். அது எப்படியெனில், தினந்தோறும் காலை மாலை இரு வேளைகளிலும், அந்த அசுரர்கள் சூரியனை தின்பதற்கு வருவார்கள். இந்த இருவர்களுக்கும் தினந்தோறும் போர் வரும். அந்த சமயத்தில், பிராமணர்கள், காயத்ரி மந்திரத்தால் மந்திரிக்கப்பட்ட நீரினால் அர்க்யம் கொடுத்தால், அந்த தண்ணீர் ஆயுதமாக மாறிச் சென்று அந்த அசுரர்களைக் கொல்லும். அவர்கள் மறுபடி தங்களின் அழியா உடலில் சென்று சேர்ந்து, பிழைத்து, மறுபடி சூரியனுடன் போருக்கு வருவர். மறுபடி மரணமடைவர். இப்படியான பிரம்ம தேவரின் சாபம் இருக்கிறதென்று சந்த்யா பாஷ்யத்தில், விஷ்ணு புராணத்தின் ஆதாரத்தின்படி எழுதியிருப்பர்.

பிராமணர்களின் அர்க்யத்தினால் மட்டுமே அசுரர்கள் இறக்கிறார்கள் என்றால், இங்கு 12 கோண மண்டலத்தில் இருக்கும் சங்கர்ஷணரூபி பரமாத்மன் அவர்களைக் கொல்கிறான் என்று சொல்லியிருக்கிறாரே? அதற்கும் இதற்கும் சம்பந்தம் இல்லையா என்று கேட்டால், வெறும் மந்திரத்திற்கோ, அர்க்ய தண்ணீருக்கோ அசுரர்களைக் கொல்லும் தகுதி இல்லாத காரணத்தால், நம் தேகத்தில் வயிற்றின் நடுவில் 12 கோண சூர்யமண்டலத்தில் இருப்பவனான சங்கர்ஷணன், நாம் கொடுக்கும் அர்க்யத்தில் இருந்து அந்த அசுரர்களைக் கொல்கிறான். சூரியனின் எதிரி இறந்துவிடுவதால், பகல் இரவுகளின் அபிமானி தேவதைகளுக்கு மகிழ்ச்சி உண்டாகிறது.

**ஹ்ருத$^3$ய தொ$^3$ளகி$^3$ஹுதஷ்டத$^3$ள கம**
**லத$^3$ரொளகெ$^3$ ப்ராதே$^3$ஷ நாமக**
**நுதி$^3$த பா$^4$ஸ்கரனந்தெ தோர்பனு பி$^3$ம்ப$^3$னெந்தெ$^3$னிஸி ।**
**பது$^3$ம சக்ர ஸுஷங்க$^2$ ஸுக$^2$தா$^3$**
**ங்தகடக முகுடாங்கு$^3$லீயக**
**பத$^3$க கௌஸ்துப$^3$ஹார க்$^3$ரைவெயாதி$^3$ பூ$^4$ஷிதனு ।।6**

ஹ்ருதயதொளகெ = இதயத்தில்
அஷ்டதள கமலவு = 8 தளமுள்ள தாமரை
இஹது = இருக்கிறது
அதரொளகெ = அதற்குள்
ப்ராதேஷ நாமக = ப்ராதேஷ நாமகனான ஸ்ரீபரமாத்மன்
உதிதபாஸ்கரனந்தெ = உதய சூரியனைப் போல
பதும சக்ர சுஷங்க சுகதா = பத்ம, சக்ர, சங்க, கதா ஆகியவற்றை
அங்கத = தோள்களில் தரித்து
கடக = வாள்/கேடயம்
முகுட = கிரீடம்
அங்குலீயக = மோதிரம்
பதக, கௌஸ்துபஹார = பதக்கம், கௌஸ்துப ஹாரம்
க்ரைவேயாதி = கழுத்தில் அணியும் வகைவகையான மாலைகள்
பூஷிதனு = இவற்றை அணிந்தவனாக

பிம்பனெந்தெனிஸி = பிம்பரூபி என்னும் பெயரில்
தோர்ப்பனு = தரிசனம் அளிக்கிறான்.

இதயத்தில் இருக்கும் 8 தள கமலத்தில், ப்ராதேஷ நாமகனாக வசிக்கும் பகவந்தனை பூஜிக்கும் கிரமத்தை பாகவத 2ம் ஸ்கந்தம் 2ம் அத்தியாயம் ‘கீசித்ஸ்வதேஹாந்த ஹ்ருதயாவகாஷே ப்ராதேஷ மாத்ரம் புருஷம் வஸந்தம்’ என்னும் 9ம் ஸ்லோகத்தில் துவங்கி, 13ம் ஸ்லோகம் வரைக்கும் விவரிக்கிறது. அதையே தாசராயர் இந்த பத்யத்தில் விவரிக்கிறார்.

இதயத்தில் 8 தள தாமரை இருக்கிறது. அதற்குள், ப்ராதேஷ நாமகனாக பிம்பரூபி பரமாத்மன், உதயசூரியனைப் போல ஒளிர்ந்துகொண்டு பத்ம, சக்ர, சங்கு, கதா, மற்றும் பற்பல ஆபரணங்களை அணிந்தவனாக ஒளிர்கிறான். இத்தகைய பரமாத்மனின் உபாசனையை அதற்கு தகுதியானவர்கள் செய்யவேண்டும் என்பது கருத்து.

**த்வித$^3$ளபத்$^3$மவு ஷோபி$^2$புது$^3$ க**
**ண்ட$^2$த$^3$லி முக்யபிராண தன்னய**
**ஸுத$^3$தியிந்தொ$^3$டகூடி$^3$ ஹம்ஸோபாஸனெய மாள்ப |**
**உத$^3$கவன்னாதி$^3$க$^3$ளிக$^3$வகா**
**ஷத$^3$னு தானாகி$^3$த்து$^3$ தா$^3$னா**
**பி$^4$த$^3$னு ஷப்த$^3$வ நுடி$^3$து$^3$ நுடி$^3$ஸுவ சர்வஜீவரொளு ||7**

த்விதலபத்மவு = 2 தளமுள்ள தாமரை
ஷோபிபுது = மலர்ந்திருக்கிறது
கண்டதலி = இதயத்தில்
முக்யபிராண = முக்யபிராணதேவர்
தன்னய = தன்னை
சுததியிந்தொடகூடி = தன் மனைவியுடன்
ஹம்ஸோபாஸனெய = ஹம்ஸ மந்திர ஜெபத்தை
மாள்ப = செய்கிறார்
உதகவன்னாதிகளிகெ = தண்ணீர், அன்னம் ஆகியவற்றிற்கு
அவகாஷவனு = இடம் கொடுக்கிறான்
தானாகித்து = தானே இருந்து
உதானாபிதனு = உதான நாமகனாகி
சர்வஜீவரொளு = அனைத்து பிராணிகளுக்குள்ளும் இருந்து
நுடிது = பேசி
நுடிஸுவ = பேசுமாறு செய்கிறான்.

இதயத்தில் இரு தளம் உள்ள தாமரை மலர்ந்திருக்கிறது. அதில், உதான நாமகனான வாயுதேவர் தம் மனைவியுடன் வசித்து, ஸ்வாஸ, உஸ்வாஸ ரூபமான ஹம்ஸமந்திர ஜப ரூப உபாசனையை செய்து கொண்டிருக்கிறார். பிராணிகள் உண்ணும் அன்னம், தண்ணீர் ஆகியவற்றை வயிற்றுக்குச் செல்ல

இடம் கொடுக்கிறார். தான் அங்கிருந்து பேசியவாறு, பிராணிகளை பேசவைத்துக் கொண்டிருக்கிறார்.

பிராணாபான விடாயாஞ்ச பிங்களாயாஞ்ச சர்வத: |
வ்யானஸ்ஸந்திஷு சர்வத்ர உதானோ பிரம்மனாடிக: ||

என்னும் பாகவத 2ம் ஸ்கந்தம் ஸ்லோகத்திலிருந்து, ப்ராண, அபான, வாயுகள், இடா, பிங்களா நாடிகளில் இருக்கிறார்கள் என்றும் வ்யான பிராணதேவன், அனைத்து மூட்டுகளிலும், உதான வாயுதேவர் பிரம்ம நாடி, அதாவது மூலாதாரத்திலிருந்து தலை வரைக்கும் போகும் மத்யபிரதேசத்தில் இருக்கும் சுஷும்னா நாடியில் இருக்கிறார் என்றும் சொல்லப்பட்டிருக்கிறது. அந்த நாடியில் உதான வாயுதேவர் வியாப்தராக இருந்து இதயத்தில், அதே சுஷும்னா நாடியின் மத்யபகுதியில் இருக்கிறார்.

**நாஸிகதி³ நாஸத்ய த³ஸ்ரரு**
**ஷ்வாஸமானி ப்ராண பா⁴ரதி**
**ஹம்ஸ த⁴ன்வந்த்ரிக³ளு அல்லல்லிப்ப ரவரொளகெ³ |**
**பே⁴ஷ பா⁴ஸ்கரரக்ஷியுக³ள க**
**தீ⁴ஷரெனிபரு அவரொளகெ³ ல**
**க்ஷ்மீஷ த³தி⁴வாமனரு நிய்யாமிஸுதலிருதிஹரு ||8**

நாஸிகதி = மூக்கில்
நாஸத்ய தஸ்ரரு = நாஸத்ய, தஸ்ர என்னும் அஸ்வினி தேவதைகள் இருவரும் (பிராணேந்திரியத்திற்கு அபிமானியாக இருக்கிறார்கள்)
ஷ்வாஸமானி ப்ராண பாரதி = ஷ்வாஸத்திற்கு அபிமானிகளான வாயுதேவர் மற்றும் பாரதிதேவி (இவர்களும் அங்கு இருக்கின்றனர்)
அவரொளகெ = அஸ்வினி தேவதைகளுக்கு உள்ளே, ப்ராண பாரதி தேவியருக்குள்ளும்
அல்லல்லி = அந்தந்த இடங்களில்
ஹம்ஸ தன்வந்த்ரிகளு = ஹம்ஸரூபி ஸ்ரீபரமாத்மனும், தன்வந்த்ரி தேவரும்கூட
இப்பரு = இருக்கின்றனர்.
பேஷபாஸ்கரரு = சந்திர சூர்யர்கள் (ப= நட்சத்திரங்களுக்கு; ஈஷ= தலைவன் ஆகையால், பேஷ = சந்திரன்).
லக்ஷ்மீஷ = லட்சுமிபதியான நாராயணன்
ததிவாமனரு = ததிவாமனதேவர்
நியாமிஸுத = இவற்றை தீர்மானித்தவாறு
இருதிஹரு = இருக்கிறார்

'நாஸத்யதஸ்ரௌ பரமஸ்யனாஸெ' என்னும் பாகவத வாக்கியத்தினால் நாஸத்ய-தஸ்ர என்னும் அஸ்வினி தேவதைகள் இருவர் இட, வல மூக்குகளுக்கு அபிமானிகளாக அங்கு இருக்கின்றனர். அங்கிருந்து கொண்டு, ஸ்வாஸ உஸ்வாஸ செயல்களை செய்து, செய்வித்து, ஸ்வாஸாபிமானிகளாக, பிராண பாரதி தேவியர்

இருக்கின்றனர். இந்த நான்கு பேரிலும் அந்தந்த இடங்களில் இருந்து, ஹம்ஸ, தன்வந்த்ரி என்னும் இரு பகவத்ரூபங்களை சிந்திக்க வேண்டும். இரு கண்களுக்கு அபிமானிகள் சந்திர சூர்யர்கள். அவர்களின் அந்தர்யாமியாக ஸ்ரீநாராயணன் மற்றும் ததிவாமனன் இருந்து, பார்க்கும் செயல்களை தீர்மானிக்கின்றனர்.

**ஸ்தம்ப[4] ரூபத[3]லிப்ப த[3]க்ஷிண**
**அம்ப[3]கதி[3] ப்ரத்யும்ன கு[3]ணரூ**
**பாம்ப்[4]ரிணியு தானாகி[3] இப்ப[1]ளு வத்ஸரூபத[3]லி**
**பொம்ப[3]ஸூரபத[3]யோக்ய ப[1]வன**
**த்ரயம்ப[3]காதி[3] ஸமஸ்த தி[3]விஜ க**
**த[3]ம்ப[3] ஸேவிதனாகி[3] ஸர்வபதா[3]ர்த்தக[3]ள தோ[1]ர்ப்ப[1] ||9**

தக்ஷிணத = வலது
அம்பகதி = கண்ணில்
ப்ரத்யும்ன = ப்ரத்யும்ன நாமக பரமாத்மன்
ஸ்தம்பரூபதலி = ஸ்தம்ப ரூபத்தில்
இப்ப = இருக்கிறான்
அம்ப்ரணியு = ரமாதேவி
தானு = தானும்
குணரூப = கயிற்றின் ரூபத்தில்
இப்பளு = இருக்கிறாள்
பொம்பஸர பதயோக்ய = ஹிரண்யகர்ப்ப என்னும் பிரம்மதேவரின் பதவிக்குத் தகுதியானவரான
பவன = வாயுதேவர்
த்ரியம்பகாதி = ருத்ரதேவரே முதலான
ஸமஸ்த = அனைத்து
திவிஜ = தேவதைகளின்
கதம்ப = கூட்டத்தால்
ஸேவிதராகி = வணங்கப்பட்டு
வத்ஸரூபதலி = கன்றின் ரூபத்தில், கட்டப்பட்டு
சர்வ பதார்த்தகள = பார்ப்பதற்கு தகுதியான அனைத்து பதார்த்தங்களையும்
தோர்ப்ப = விளக்குவான்

முந்தைய பத்யத்தில், சந்திர சூர்யர்கள் கண்ணுக்கு அபிமானி தேவதைகள் என்றும், அவர்களின் அந்தர்யாமியாகி நாராயண ததிவாமனர்கள் இருக்கிறார்கள் என்றும் சொல்லியிருப்பர். இப்போது, வலது கண்ணில் இருக்கும் விசேஷ ரூபத்தை சொல்கிறார்.

மானஸ ஸ்ம்ருதியில்
தக்ஷிணாக்ஷிஸ்திதோ விஷ்ணு: ஸ்தம்பரூபோ ரமாஸ்யயம் |
ரஜ்ஜு ரூபதயாபத்தம் வாயும் கோவத்ஸ ரூபிணம் ||

என்று சொல்லப்பட்டிருப்பதன் அர்த்தத்தையே இங்கு தாசராயர் சொல்லியிருக்கிறார். வலது கண்ணில் பிரத்யும்ன நாமக ஸ்ரீபரமாத்மன் ஸ்தம்ப ரூபியாகவும், ரமாதேவியர் கயிறு ரூபமாகவும் இருந்து, அடுத்த கல்பத்தில் பிரம்மபதவிக்கு வரவிருக்கும் வாயுதேவரை கன்றின் ரூபமாக கட்டுவர். அந்த வாயுதேவர், ருத்ராதி அனைத்து தேவதா சமூகத்தினராலும் வணங்கப்பட்டு கண்களால் பார்ப்பதற்கு தகுதியான அனைத்து பதார்த்தங்களையும் பார்க்குமாறு செய்வார்.

**நேத்ரக3ளல்லி வஸிஷ்ட விஷ்வா**
**மித்ர பா4ரத்வாஜ கௌ3தம**
**ரத்ரி யா ஜமத3க்னி நாமக3ளிந்த3 க1ரெஸுதலி |**
**ப1த்ரதா1பக1 ஷக்ர ஸூர்ய த4**
**ரித்ரி பர்ஜன்யாதி3ஸூரரு ஜ**
**க3த்ரயேஷன ப4ஜிபரனுதி3ன பரமப4கு3தி1யலி ||10**

நேத்ரகளலி = கண்களில்
வசிஷ்ட விஷ்வாமித்ர பாரத்வாஜ கௌதம அத்ரி ஜமதக்னி = இத்தகைய ரிஷிகள்
நாமகளிந்த கரெசுதலி = இந்த நாமங்களால் அழைக்கப்பட்டு
பத்ரதாபக = ருத்ரதேவர்
ஷக்ர = இந்திரன்
சூர்ய = சூரியன்
தரித்ரி = பூமி
பர்ஜன்ய = வருணன்
ஆதி = ஆகியோர்
சுரர் = தேவதைகள்
ஜகத்ரயேஷன = மூன்று உலகங்களுக்கும் தலைவனான
பஜிபரு = ஸ்தோத்திரம் செய்வர்
அனுதின = தினந்தோறும்
பரமபகுதியலி = மிகுந்த பக்தியுடன்

முந்தைய ஸ்லோகத்தில் கன்றின் ரூபத்தில் இருக்கும் வாயுதேவர், ருத்ராதி தேவதைகளால் வணங்கப்படுகிறார் என்பதை சொல்லியிருப்பார். இங்கு, அந்த தேவதைகளின் உபாஸனா கிரமத்தை சொல்கிறார்.

வசிஷ்டாதி நாமங்களால், ருத்ராதி தேவதைகள் கண்களில் இருந்துகொண்டு, உபாசனை செய்கின்றனர் என்று இந்த பத்யத்தில் சொல்கின்றனர். இதற்கு மூல கிரந்தமான மானஸ ஸ்ம்ருதியில், கண்களில் எந்தெந்த பாகங்களில், யார் யார் எந்தெந்த நாமங்களால் இருக்கிறார்கள் என்னும் விஷயத்தை சொல்லியிருக்கின்றனர். அது என்னவெனில்:

ஸ்வேததாராஸ்திதஸ்சந்த்ரோ வஸிஷ்டாக்ய சுரேஷ்வர: |
நயனே ரக்தராஜிஸ்தோ ருத்ரோகௌதம நாமக: |

க்ருஷ்ணதாராஸ்திதோ வன்ஹிர் ஜமதக்னிரிதி ஸ்ம்ருத: |
கமனீயாதித்ய ஸம்ஸ்தோவிஷ்வாமித்ராபித:ஸ்தித: |
வாரிகோ வருண: ஸாக்ஷாத் பரத்வாஜாபிதஸ்ததா |
அதராவர்த்தினீ சம்ஸ்தா ப்ருத்வி கஷ்யப நாமிகா |
உத்தராயாம் த்யுனாம்னாயாம் பாரதீ ஹ்ருத்ரினாமிகா |
ஏதேஹ்யக்ஷீணமனஸ: ஸப்ததேவா உபாஸதே ||

* கண்களின் வெள்ளைப் பகுதியில் சந்திரன் இருக்கிறான். அங்கேயே தேவேந்திரன், வசிஷ்ட நாமகனாக வசிக்கிறான்.
* கண்ணின் ஓரத்தில் சிவப்புப் பகுதியில் ருத்ரர், கௌதம என்னும் பெயரில் இருக்கிறார்.
* கண்ணின் கருப்புப் பகுதியில் அக்னி, ஜமதக்னி என்னும் பெயரில் இருக்கிறான்.
* பார்க்கும் பார்வையில் சூர்யன், விஸ்வாமித்ர நாமகனாக இருக்கிறான்.
* கண்ணீரில் வருணன், பாரத்வாஜ நாமகனாக இருக்கிறான்.
* கண்ணின் கீழ் பாகத்தில் பூமிதேவி, கஷ்யப நாமகளாக இருக்கிறாள்.
* கண்ணின் மேல் பாகத்திற்கு த்யு என்று பெயர். அங்கு பாரதி தேவியர், அத்ரி என்னும் பெயரில் இருக்கிறார்

இப்படியாக 7 தேவதைகள் முழுமையான மனதுடன் வாயுதேவரை உபாசனை செய்து கொண்டிருக்கிறார்கள் என்று, மானஸ ஸ்ம்ருதி வாக்கியம் சொல்கிறது. இதே விஷயத்தையே தாசராயரும் இந்த பத்யத்தில் சொல்லியிருக்கிறார்.

**ஜ்யோதியொளகி³ப்ப கபிலனு புரு**
**ஹூதமுக² தி³க்பதிக³ளிந்த³ ஸ**
**மேதனாகி³ஹ த³க்ஷிணாக்ஷிய முக²தொ³ளிஹ விஸ்வ**
**ஸ்வேத வர்ண சதுர்பு⁴ஜனு ஸ**
**ம்ப்ரீதியிந்த³லி ஸ்தூ²ல விஷயவ**
**சேதனரிகு³ண்டு³ணிப ஜாக்³ரதெயித்து ந்ருக³ஜாஸ்ய ||11**

ஜ்யோதிரொளகெ = கண்ணின் ஒளியில்
கபில = கபில நாமக பரமாத்மன்
இப்பனு = இருக்கிறான்
ஸ்வேதவர்ண = வெள்ளை வண்ணத்தில்
சதுர்புஜனு = நான்கு தோள்களைக் கொண்ட
ந்ருகஜாஸ்ய = 18 மனித முகங்கள், 1 யானை முகம் என மொத்தம் 19 முகங்களைக் கொண்டவனான
விஸ்வ = விஸ்வ நாமக பரமாத்மன்
புருஹூத முக = தேவேந்திரன் முதற்கொண்டு
திக்பதிகளிந்த = திக்பாலகர்களால்
ஸமேதனாகி = உடன்
தக்ஷிணாக்ஷிய = வலது கண்ணின்
முகதொளு = முன் பாகத்தில்

இஹ = இருக்கிறான். இந்த விஸ்வரூபியான பரமாத்மன், சேதனர்களுக்கு மிகவும் அன்புடன்
ஜாக்ரதி இத்து = ஜாக்ரத அவஸ்தையில் இருந்து (விழித்திருந்து)
ஸ்தூல விஷயவ = ஸ்தூலமான விஷய சுகத்தை
உண்டு = தான் ஸ்வீகரித்து
உணிப = உண்ண வைக்கிறான்.

கபில நாமக பரமாத்மன் கண்ணின் ஒளியில் இருக்கிறான். விஸ்வ நாமக பரமாத்மன் இந்திராதி அஷ்ட திக்பாலகர்களால் வணங்கப்பட்டு, அவர்களுடன், வலது கண்ணின் முன்பாகத்தில் இருக்கிறான். இந்த பரமாத்மன், வெள்ளை நிறத்தில், நான்கு தோள்களைக் கொண்டவனாக இருக்கிறான். மனிதனின் முகமும், யானைமும் முகமும் இவனுக்கு இருக்கிறது என்று தாசராயர் 'ந்ருகஜாஸ்ய' என்னும் பத்யத்தினால் சொல்கிறார்.

அதற்கு மொத்தம் எவ்வளவு தலைகள் என்று சொல்லாமல் இருந்தாலும், 'ந்ருகஜாஸ்ய' என்றால், மனித மற்றும் யானையின் முகம் என்று சொன்னபிறகு, ஒரே முகம் இல்லை என்பது புரிந்துவிட்டது. அப்படியெனில், எவ்வளவு முகங்கள் என்றால், மாண்டூக உபநிஷத்தில் :

அஷ்டாதஷ முகான்யஸ்ய புமாகாராணி சர்வஷ: |
மத்யமந்து கஜாகாரஸ்சதுர்பாஹு: பர: புமான் ||

மனித முகங்கள் - 18. நடுவில் ஒரு முகம் மட்டும் யானையின் முகம். 4 தோள்களைக் கொண்ட பரமபுருஷன் என்று சொல்லியிருக்கிறார்கள். அதே அர்த்தத்தையே இங்கு புரிந்து கொள்ளவேண்டும். இந்த விஸ்வ நாமகன், ஜீவர்களுக்கு ஜாக்ரத அவஸ்தையைக் கொடுக்கிறான். ஆகையால், ஜீவர்கள் ஜாக்ரத அவஸ்தையில் அனுபவிக்க வேண்டிய விஷய சுகங்களை அவர்களின் கண்களில் இருந்துகொண்டு, அன்புடன், தான் அனுபவித்து, ஜீவர்களுக்கும் சுகங்களைக் கொடுக்கிறான். அதில் சில விசேஷங்கள் உள்ளன. அது என்னவெனில்:

விஸ்வரூபியான பரமாத்மனுக்கு 19 முகங்கள் என்று சொல்கின்றனர். அதில் எந்தெந்த முகத்திலிருந்து யார்யாருக்கு ஜாக்ரத அவஸ்தையைக் கொடுக்கிறான் என்னும் விஷயத்தை, ப்ரகாஷ சம்ஹிதா என்னும் கிரந்தத்தில் விளக்கமாக சொல்லியிருக்கின்றனர். அது என்னவெனில்:

தக்ஷிணாகதோ விஷ்வ: ஸத்வஸ்த: ஸத்யபாகத: |
உத்தமானாம் மத்யமானாம் னீசானாம் தத்வமானினாம் |
த்ரிபிர்முகை: ஸவ்யகதைரவஸ்தா ஜாக்ருதாஹ்வயா |
கரோத்யவஸ்தாமம் த்யஸ்தைஸ்த்ரிபிராஸ்யை: ஸஏவஹி |
நிரம்ஷானாஞ்ச ஸாம்ஷானாம் ஜாக்ருதா ஸம்ப்ரவர்தக: |
பும்ஸாமேவம் வாமகாஸ்யை: ஸ்த்ரீணாமேவம் கரிஷ்யதி ||

சேதனர்களின் வலது கண்ணில் விஷ்வ நாமக பரமாத்மன் சத்வகுணம் நிறைந்தவனாக, தத்வாபிமானிகளான தேவதைகளில் உத்தமரான பிரம்மாதிகளுக்கும், மத்யமரான இந்திராதிகளுக்கும், அதமரான புஷ்கராதிகளுக்கும், இத்தகைய மூன்று முகங்களால் ஜாக்ரத அவஸ்தையைக் கொடுக்கிறார். அந்த மூன்று முகங்களுக்கு நடுவே இருக்கும் மூன்று முகங்களால் மனுஷ்யோத்தமர், மனுஷ்யரில் மத்யமர், அதமர் என்னும் மூன்றுவித மக்களுக்கும் ஜாக்ரத அவஸ்தையைக் கொடுக்கிறார்.

அடுத்த மூன்று முகங்களால், தைத்யோத்தமர், மத்யமர், அதமரான ஸாம்ஷர், நிரம்ஷரான தைத்யர் இவர்களுக்கு ஜாக்ரத அவஸ்தையைக் கொடுக்கிறார். இப்படியே வலதுபக்கத்து ஒன்பது முகங்களால் புருஷர்களுக்கு ஜாக்ரத அவஸ்தையைக் கொடுக்கிறார். இதைப்போலவே யானை முகத்திற்கு இடது பக்கத்தில் இருக்கும் ஒன்பது முகங்களால் தேவ, மானுஷ, தைத்ய என்னும் பெயர்களால் ஸ்த்ரியர்களுக்கும் ஜாக்ரத அவஸ்தையைக் கொடுக்கிறார். இந்த விசேஷ அர்த்தங்களையே தாசராயர் இந்த பத்யத்தில் சொல்லியிருக்கிறார்.

**நெலெஸிஹரு தி[3]க்தே[3]வதெக[3]ளி**
**க்கெ[1]லதி கர்ணங்க[3]ளலி தீர்த்த**
**ங்க[3]ளிகெ[3] மானிக[3]ளாத[3] ஸுரநதி[3]முக்[2]ய நிர்ஜரரு**
**ப[3]லத[3] கிவியலி இருதிஹரு பா[3]**
**ம்பொ[3]ளெய ஜனக[1] த்ரிவிக்ரமனு நி**
**ர்மலினரனு மாடு[3]வனு ஈபரி சிந்திஸுவ ஜனர ||12**

திக்தேவதெகளு = திக்தேவதைகள்
இங்கெலதி = இந்த தேகத்தில்
கர்ணங்களலி = காதுகளில்
நெலஸிஹரு = அபிமானிகளாக வசிக்கின்றனர்
தீர்த்தங்களளிகெ = கங்கை முதலான தீர்த்தங்களுக்கு
மானிகளாத = அபிமானிகளான
ஸுரநதி முக்ய = தேவ கங்கையே முதலான
நிர்ஜரரு = தேவதைகள்
பலத கிவியல்லிருதிஹரு = பிராமணர்களின் வலது காதுகளில் இருக்கிறார்கள்
பாம்பொளெய = கங்கை
ஜனக = தந்தையான த்ரிவிக்ரமன்
ஈ பரி = இந்த விதமாக சிந்திக்கும்
ஜனர = மக்களை
நிர்மலரனு = சுத்தமானவர்களாக ஆக்குகிறார்.

காதுகளில் சிந்திக்க வேண்டிய தேவதைகளைப் பற்றி இந்த பத்யத்தில் விளக்குகிறார். காதுகளில் திக்தேவதைகள் அபிமானி தேவதைகளாக வசிக்கின்றனர்.

புஷ்கராத்யானி தீர்த்தானி கங்காத்யா:ஸரிதஸ்ஸதா |
விப்ரஸ்ய தக்ஷிணே கர்ணே ஸந்தீதி மனுரப்ரவீத் ||

என்னும் மனு வாக்கியத்தினால், புஷ்கர முதலான அனைத்து தீர்த்த அபிமானிகளும், கங்கா முதலான புண்ய நதிகளின் அபிமானி தேவதைகள் அனைவரும் பிராமணர்களின் வலது காதுகளில் வசிக்கின்றனர் என்று நிர்ணயித்திருக்கின்றனர். ஆகையாலேயே, பிராமணர்கள், ஆசமனம் செய்ய வேண்டிய சந்தர்ப்பத்தில், தண்ணீர் கிடைக்கவில்லையெனில், 'ஸ்வகர்ண ஸ்பர்ஷனாச்யுதி:' என்னும் தர்ம சாஸ்திர வாக்கியத்தின்படி, தன் காதைத் தொட்டாலே ஆசமனம் செய்வதைப்போல பவித்ரன் ஆகிறான் என்றிருக்கிறார்கள். இந்த அபிப்பிராயத்தையே தாசராயர் இங்கு சொல்லியிருக்கிறார். இந்தவிதமாக வலது காதில் அனைத்து தீர்த்தாபிமானிகளும் இருக்கிறார்கள் என்று நினைத்து எந்த பிராமணர் காதைத் தொடுகிறாரோ அவரை, கங்கையைப் பெற்ற த்ரிவிக்ரமன், சுத்தமாக (பவித்ரமாக) ஆக்குகிறான்.

**சித்தஜேந்த்[3]ரரு மனதொ[3]ளிப்பரு**
**க்ருத்திவாஸனு அஹங்காரதி[3]**
**சித்த சேதனமானிக[3]ளு விஹகே[3]ந்த்[3]ர ப[2]ணிபரொளு**
**நித்யத[3]லி நெலெகொண்டு[3] ஹத்தொ**
**ம்ப[3]த்துமொக[3] தைஜஸனு ஸ்வப்னா**
**வஸ்தெ[2]வைதி[3]ஸி ஜீவரனு ப்ரவிவிக்த பு[4]கு[3]வெனிப ||13**

சித்தஜேந்த்ரரு = மன்மதன், தேவேந்திரன் முதலானவர்கள்
மனதொளு = மனதிற்கு அபிமானியாக
இப்பரு = இருக்கிறார்கள்
க்ருத்திவாசனு = தோல் ஆடையை தரித்திருக்கும் ருத்ரதேவர்
அஹங்காரதி = அஹங்கார தத்வத்தில் (இருக்கிறார்)
சித்தசேதன மானிகளு = சித்த, சேதன இவற்றிற்கு அபிமானிகளான
விஹகேந்த்ர = பறவைகளில் சிறந்தவனான கருட
பணிபரொளு = மிகச்சிறந்தவனான சேஷ
நித்யதலி நெலெகொண்டு = தினந்தோறும் (எப்போதும்) இருந்துகொண்டு
ஹத்தொம்பத்து மொக = 19 முகங்களைக் கொண்ட
தைஜஸனு = தைஜஸ நாமக பரமாத்மன்
ஜீவரன = ஜீவர்களை
ஸ்வப்னாவஸ்தெ = ஸ்வப்ன அவஸ்தையை
யைதிஸி = கிடைக்குமாறு செய்து
ப்ரவிவிக்த = விசேஷமான ஏகாந்த பதார்த்தங்களை (ஸ்வப்ன பதார்த்தங்களை)
புக் = உண்ண வைக்கிறான்
எனிப = என்று அழைக்கப்படுகிறான்.

மனதில் மன்மதன், இந்திரன் இவர்கள் இருவரும் இருக்கிறார்கள். அஹங்கார தத்வத்தில் ருத்ரர் இருக்கிறார். சித்தாபிமானி கருடன் சித்தத்தில் இருக்கிறான்.

சித்தாபிமானிகள் பிரம்ம, வாயுகள் என்று பாகவதத்தில் வாக்கியம் இருந்தாலும், முக்யாபிமானிகள் பிரம்ம வாயுகள், அமுக்யர்கள் கருடன் என்று அறியவேண்டும். சேதனத்திற்கு அபிமானிகள் சேஷதேவர். இவர் சேதனத்தில் இருப்பவர். இவர்களில் விஸ்வ நாமக பரமாத்மனில் இருப்பதைப்போலவே, நடுவில் கஜமுகன், இடது பக்கத்தில் 9 மனித முகங்கள், வலது பாகத்தில் 9 மனித முகங்கள், என 19 முகங்களைக் கொண்ட தைஜஸ நாமக பரமாத்மன் இருந்து ஜீவருக்கு ஸ்வப்னாவஸ்தையைக் கொடுத்து, அதாவது, ஸ்வப்னத்தில் யானை, குதிரை முதலான பதார்த்தங்களை ஸ்ருஷ்டித்து, அவற்றை ஜீவர்களுக்கு சம்பந்தப்படுத்தி, ஜீவர்களுக்குள் தான் இருந்து, அந்த சுகங்களை அனுபவித்து, ஜீவனுக்கு உண்ணக் கொடுப்பதால், ஜீவனுக்கு ஸ்வப்னத்தில் காணும் பதார்த்தங்கள், அவனது ஸ்வப்னத்தில் மட்டுமே தெரியுமே தவிர, வேறு யாருக்கும் தெரிவதில்லை. ஆகையால், 'ப்ரவிவிக்த புக்' என்றார். தனிமையில் பிறக்கும் பொருட்களின் சம்பந்தத்தினால் கிடைக்கும் ஸ்வப்ன சுகத்தை அனுபவிக்கிறான் என்று பொருள்.

**ஞானமய தைஜஸனு ஹ்ருத3ய**
**ஸ்தா2னவைது3த ப்ராக்ஞனெம்பபி4**
**தா4னதிங் கரெஸுத்த சித்ஸுக2 வ்யக்தியனெ கொடு3வ ।**
**ஆனதேஷ்டப்ரத3னு அனுஸ**
**ந்தா4னவீயதெ3 ஸுப்தியைதி3ஸி**
**தானெ புனரபி ஸ்வப்ன ஜாக்3ரதெ ஈவ சேதனகெ ।।14**

ஞானமய = ஞானஸ்வரூபனான
தைஜஸனு = தைஜஸ நாமக பரமாத்மன்
ஹ்ருதயஸ்தான ஐதிஸி = ஜீவரை ஹ்ருதய ஸ்தானத்திற்குக் கொண்டு வந்து
ப்ராக்ஞனெம்பபிதானதிம் = ப்ராக்ஞ என்னும் பெயரால்
கரெஸுத = அழைத்துக்கொண்டு
சித்ஸுக = ஸ்வரூப சுகத்தின்
வ்யக்தியெனெ கொடுவ = அறிமுகத்தைக் கொடுத்து
ஆனதேஷ்டப்ரதனு = நமஸ்காரம் செய்பவர்களுக்கு இஷ்டார்த்தங்களை நிறைவேற்றும் ஸ்ரீஹரி
அனுசந்தானவீயதெ = ஜீவர்களுக்கு இப்போது இப்படி இருக்கவேண்டும் என்னும் சிந்தனையை மனதிற்குக் கொண்டு வராமல செய்து
ஸுப்தியெய்திஸி = தூக்க நிலையைக் கொடுத்து
தானெ = தைஜஸனே
புனரபி = மறுபடி
ஸ்வப்ன ஜாக்ரதெ = ஸ்வப்ன நிலையை, ஜாக்ரத நிலையையும்
சேதனகெ = சேதனர்களுக்குஈவ = கொடுக்கிறான்

ஞானஸ்வரூபனான தைஜஸ நாமகனான பரமாத்மன், இதயத்தில் நின்று, ஸ்வப்ன நிலையைக் கொடுக்கிறான். அங்கிருந்து ஜீவர்களை தமக்குள் வைத்துக்கொண்டு ஹ்ருதய ஸ்தானத்திற்கு வருகிறான். இதே தைஜஸ பரமாத்மனே, ப்ராக்ஞ

நாமகனாகி, ஹ்ருதய ஸ்தானத்தில் இருக்கிறான். அங்கு ஜீவனுடன் சேர்ந்து தைஜஸன் வந்தவுடன், ப்ராக்ஞன் தன் ஆலிங்கனத்தால் சுஷுப்த அவஸ்தையை (தூக்கத்தை) கொடுத்து, முக்தி யோக்யர்களுக்கு ஸ்வரூபானந்தத்தை கொஞ்சம்போல அதிகப்படுத்துகிறான்.

ப்ராக்ஞ நாமகனான பரமாத்மனின் ஆலிங்கனமே சுஷுப்த அவஸ்தை. அப்போதைய சுகமே ஸ்வரூப சுகம். ஜீவனுக்கு சாட்சாத்தாக பரமாத்மனின் ஆலிங்கனம் கிடைப்பதில்லை. வாயுதேவர் ஜீவனை விழுங்கி, ரமாதேவியரில் பிரவேசம் செய்வார். ரமாவுடன் தைஜஸன், ப்ராக்ஞனில் வருவான். அங்கு பரம்பரா சம்பந்தத்தினால், ஜீவனுக்கு ப்ராக்ஞனின் ஆலிங்கனம் கிடைக்கிறது என்று கருத்து.

தமோ யோக்யருக்கு நிரந்தர சுகமே இல்லாத காரணத்தால், அனித்ய சுகத்தைக் கொடுக்கிறான். சுஷுப்தி காலத்தில், வேறு விஷய ஞானமே இருப்பதில்லை. தைஜஸன் மறுபடி இதயத்திற்கு வந்து ஸ்வப்னத்தைக் கொடுக்கிறான். விஸ்வன், தைஜஸனை விட்டு கண்ணுக்கு வந்து ஜாக்ரத அவஸ்தையைக் கொடுக்கிறான். இப்படி ஒரே பரமாத்மன், விஸ்வ, தைஜஸ, ப்ராக்ஞ என்னும் ரூபங்களால் ஜாக்ரத, ஸ்வப்ன, சுஷுப்த என்னும் மூன்று நிலைகளை ஜீவருக்குக் கொடுக்கிறான் என்று கருத்து.

இந்த விஷயத்தில் ப்ரமாண வாக்கியங்கள் இவையே. மானஸ ஸ்ம்ருதியின்படி:

புனஸ்தைஜஸ ஸம்யுக்தோ விஷ்ணுர்ஜீவகளாவ்ருத: |
கண்டே ஸமாகதோ ஸ்வப்ன: புனர்பவதி தத்ரஹி ||
விஹாய தைஜஸம் விஷ்வே புனஸ்சக்ஷோ: ஸமாகதே |
ததாஜாக்ரதவஸ்தாஸ்யா தேவம் விக்ஞேயமஞ்சஸா ||

தூக்கம் கலைந்த பிறகு, மறுபடி தைஜஸ நாமக பரமாத்மனுடன், விஸ்வன், இதயத்திற்கு வருகிறான். அப்போது ஸ்வப்ன அவஸ்தை, ஜீவருக்கு மறுபடி வருகிறது. தைஜஸனை விட்டு விஸ்வ நாமக பரமாத்மன் மறுபடி கண்ணிற்கு வர, ஜீவருக்கு ஜாக்ரவஸ்தெ (முழிப்பு) வருகிறது என்று பிரமாணத்தின் அர்த்தம். இதே அபிப்பிராயத்தையே தாசராயர் இங்கு சொல்லியிருக்கிறார்.

**நாலிகெ[3]யொளிஹ வருண மத்ஸ்யனு**
**நாலிகெ[3]யொளு உபேந்த்ரரிந்த[3]ரு**
**தாலு பர்ஜன்யாக்[2]ய ஸூர்யனு அர்த்த[4] க[3]ர்ப்ப[4]னிஹ |**
**ஆலியொளு வாமன ஸுபா[4]மன**
**பா[2]லதொ[3]ளு ஷிவ கே[1]ஷவரு ஸுக[2]**
**போலதொ[3]ளகெ[3] ரதீஷ காமனு அல்லெ ப்ரத்[3]யும்ன ||15**

நாலிகெயொளு = நாக்கினில்
வருண = வருணன்
மத்ஸ்ய = மத்ஸ்யரூபி பரமாத்மன்
இஹ = இருக்கிறான்

அணுனாலிகெயொளு = உள் நாக்கினில்
உபேந்திர, இந்திரனு = உபேந்திரன், இந்திரன் இருக்கின்றனர்.
தாளு = தொண்டைக்குள்
பர்ஜன்யாக்ய சூர்யனு = பர்ஜன்ய என்னும் சூரியன்
அர்த்தகர்ப்ப = அர்த்தகர்ப்ப என்னும் பரமாத்மன்
இஹ = இருக்கிறான்
ஆலியொளு = கண்ணுக்குள்
ஸுபாமன = இந்தப் பெயருள்ள தேவதை
வாமன = வாமனரூபி பரமாத்மன் இருக்கிறான்
பாலதொளு = நெற்றியில்
ஷிவ = ஈஸ்வரன்
கேஷவ = கேசவ மூர்த்தி, இருக்கிறான்
ஸுகபோலதொளகெ = தாடையில்
ரதீஷகாமனு = ரதிபதியான மன்மதன் இருக்கிறான்
அல்லெ பிரத்யும்ன = அதே இடத்தில் பிரத்யும்ன நாமக பரமாத்மன் இருக்கிறான்.

நாக்கினில் அதன் அபிமானி தேவதைகளுடன் ஸ்ரீஹரி, எந்தெந்த பெயர்களில் வசிக்கிறான் என்பதை இங்கு சொல்கிறார். நாக்கினில் வருணன் மத்ஸ்யரூபியான பரமாத்மன் இருக்கிறான். உள் நாக்கினில் இந்திரனுடன் உபேந்திர நாமக பரமாத்மன் இருக்கிறான். தொண்டைக்குள் பர்ஜன்ய என்னும் சூரியனுடன், அர்த்தகர்ப்ப என்னும் பரமாத்மன் இருக்கிறான். கண்ணின் உள்பாகத்தில் சுபாமன என்னும் தேவதையுடன் வாமனன் இருக்கிறான். நெற்றியில் ருத்ரதேவருடன், கேசவ நாமக பரமாத்மன் இருக்கிறான். தாடையில் ரதிபதியான மன்மதனுடன், ப்ரத்யும்ன நாமக பரமாத்மன் இருக்கிறான்.

**ரோமக$^{3}$ளொளு வஸந்த த்ரிககு**
**த்தா$^{3}$ம முக$^{2}$தொளக$^{3}$க்$^{3}$னி பா$^{4}$ர்க$^{3}$வ**
**தாமரஸ ப$^{4}$வ வாஸுதே$^{3}$வரு மஸ்தகதொ$^{3}$ளிஹரு |**
**ஈ மனதொ$^{3}$ளிஹ விஷ்ணு ஷிக$^{2}$தொ$^{3}$ளு**
**மாமஹேஸ்வர நாரஸிம்ஹ**
**ஸ்வாமி தன்னனுதி$^{3}$னதி$^{3}$ நெனெவரபம்ருத்யு பரிஹரிப ||16**

ரோமகளொளு = மயிர்களில்
வசந்த = வசந்தருதுவிற்கு அபிமானி தேவதையான வசந்தன்
த்ரிககுத்தாம = மூன்று திமில்களைப் போல, சிறப்பாக வளர்ந்திருக்கும், ஸ்வேதத்வீபாதி மூன்று இடங்களைக் கொண்டிருப்பதால், பரமாத்மனுக்கு த்ரிகக்குத்தாம என்று பெயர்
முகதொளகெ = வாய்க்குள்
அக்னி - அக்னி
பார்க்கவ = பரசுராமதேவர் இருக்கிறார்
மஸ்தகதொளு = தலையில்
தாமரஸபவ = தாமரையில் பிறந்த பிரம்மதேவர்

வாசுதேவரு = வாசுதேவ மூர்த்தி
மனதொளு = மனதில்
ஈ = லட்சுமிதேவி
விஷ்ணு = விஷ்ணுரூபி பரமாத்மன் இருக்கிறார்
ஷிகதொளு = சிகையில்
உமாமஹேஸ்வர நாரஸிம்ஹஸ்வாமி = பார்வதி பரமேஸ்வரன் மற்றும் நரசிம்மதேவர்
தன்னனு = தன்னை
அனுதின = தினந்தோறும்
நெனெவர = தியானிப்பவரின்
அபம்ருத்யு = துர்மரணத்தை
பரிஹரிப = பரிகரிக்கிறான்.

மயிர்களில் வசந்தன், த்ரிகக்குத்தாம நாமக பரமாத்மன் இருக்கிறான். முகத்தில் அக்னி, பரசுராமன் இருக்கின்றனர். தலையில் பிரம்மதேவர் வாசுதேவமூர்த்தி இருக்கின்றனர். மனதில் லட்சுமி-விஷ்ணு இருக்கின்றனர். சிகையில் பார்வதி பரமேஸ்வரன் மற்றும் நரசிம்மதேவர் இருக்கிறார். ‘உக்ரம் வீரம் மகாவிஷ்ணும்’ ஆகிய நரசிம்ம மந்திரங்களை தினந்தோறும் ஸ்தோத்திரம் செய்தவாறு, நரசிம்ம ஸ்மரணையை செய்பவர்களுக்கு அந்தந்த காலத்தில் வரவிருக்கும் துர்மரணத்தை பரிகரிக்கிறான்.

**மௌளியொளிஹ வாசுதே[3]வனு**
**ஏளதி[4]க நவஜாதி[3] ரூபவ**
**தா[1]ளி முக[2]தொ[3]ளு நயன ஸ்ரவணாத்யவயவக[3]ளல்லி |**
**ஆளரஸு தானாகி[3] ஸத[1]த[1] ஸு**
**லீலெகை[3]யுதலிப்ப ஸுக[2]மய**
**கே[1]ளி கே[1]ளிஸி நோடி[3] நோடி[3]ஸி நுடி[3]து[3] நுடி[3]ஸுவனு ||17**

மௌளியொள = நெற்றியில்
இஹ = இருக்கிறான்
வாசுதேவனு = வாசுதேவ மூர்த்தி
ஏளதிக நவ = 7+9=16
அஜாதி ரூபவ தாளி = அ,ஆ,இ முதலான 16 எழுத்துக்களின் தலைவனான அஜ, ஆனந்த, இந்திர முதலான ரூபங்களை தரித்து
முகதொளு = முகத்தில்
நயன ஸ்ரவணாத்யவயவகளல்லி = கண், காது ஆகிய அவயவங்களில்
ஆளரஸு தானாகி = நண்பனும், தலைவனும் தானேயாகி
ஸதத = எப்போதும்
ஸுலீலெ கைவுதலிப்ப = மிகச்சிறந்த லீலைகளை செய்திருப்பான்
சுகமய = சுகஸ்வரூபமான பரமாத்மன்
கேளி = காது கொடுத்து தான் கேட்டு
கேளிஸி = ஜீவனை கேட்கச் செய்து

நோடி = கண்களால் பார்த்து
நோடிஸி = ஜீவனை பார்க்கச் செய்து
நுடிது = தான் பேசி
நுடிஸுவனு = ஜீவர்களை பேசச் செய்வான்.

தலையின் நடுவில் இருக்கும் பிரம்மரந்த்ரம் என்று சொல்லக்கூடிய இடத்தில், வாசுதேவ ரூபியான பரமாத்மன், அ-கார முதல் அ: வரை இருக்கும் 16 எழுத்துக்களின் தலைவனான, அஜ, ஆனந்த, இந்திர முதலான 16 ரூபங்களை தரித்து, முகத்தில் கண், காது ஆகிய உறுப்புகளில், மாத்ருகான்யாசத்தில் சொல்லிய விதத்தில், அந்தந்த இடங்களில், தலைவனாகவும், நண்பனாகவும் இருந்து, செயல்களை செய்கிறான். தான் சுக ஸ்வரூபனாக இருந்தாலும், எதற்கும் சம்பந்தப்படாமல், அனைவரின் காதுகளில் தான் கேட்டு, ஜீவர்களை கேட்கச் செய்கிறான். தான் பார்த்து, ஜீவர்களை பார்க்கச் செய்கிறான். தான் பேசி, ஜீவர்களை பேசச் செய்கிறான்.

**எரட$^{3}$தி$^{4}$க எப்பத்தெனிப ஸா**
**விரத$^{3}$ நாடிகெ$^{3}$ முக்$^{2}$யவேகோ**
**த்தர ஷதக$^{3}$ளல்லிஹவு நூராஒந்து$^{3}$ மூர்த்திக$^{3}$ளு ।**
**அரிது தே$^{3}$ஹதி$^{3}$ கலஷனாமக**
**ஹரிகெ$^{3}$ களெக$^{3}$ளிவெந்து நைர**
**ந்தரதி$^{3}$ பூஜிஸுதிஹரு பரமாத$^{3}$ரதி$^{3}$ பூ$^{4}$ஸுரரு ।।18**

எரடதிக எப்பத்தெனிப = 72 எண்ணிக்கையில்
ஸாவிரத நாடிகெ = 72*1000 = 72000 நாடிகளில்
முக்ய = முக்கியமான
ஏகோத்தர ஷதகளு = 101 நாடிகள்
அல்லி = அந்த 101 நாடிகளில்
நூராஒந்து மூர்த்திகளு = 101 மூர்த்திகள்
இஹவு = இருக்கின்றன
அரிது = இப்படியாக அறிந்து
தேஹதி = தன் தேகத்தில்
கலஷனாமக ஹரிகெ = கலஷ என்னும் பெயருள்ள ஹரிக்கு
களெகளெந்து = 101 நாடிகளில் இருக்கும் பகவத்ரூபங்களின் கலைகள் என்று
நைரந்தரதி = நிரந்தரமாக
பூஸுரரு = பிராமணர்கள்
பரமாதரதி = மிகவும் பக்தியுடன்
பூஜிஸுதிஹரு = பூஜித்துக் கொண்டிருப்பர்.

பரமாத்மனுக்கு அபிஷேகங்களை செய்யும்போது நாம் செய்யும் கலஷ பூஜையின் சமயத்தில் ஆவாஹனம் செய்யவேண்டிய 101 மூர்த்திகளை, நம் தேகத்தில் இருக்கும் 101 முக்கிய நாடிகளில் பூஜிக்க வேண்டும் என்று இந்த பத்யத்தில் சொல்கிறார்.

நம் தேகத்தில் இருக்கும் மொத்த நாடிகள் 72,000. அவற்றில் முக்கியமானவை 101 நாடிகள். அந்த நாடிகளில் ‘கலஷஸ்ய முகே விஷ்ணு:’ ஆகிய ஸ்லோகங்களால், கலசத்தில் கலச நாமக பரமாத்மனை சிந்தித்து 101 மூர்த்திகளை ஆவாஹனம் செய்யும் சம்பிரதாயம், தந்த்ரசார ரீதியாக தேவதார்ச்சன மந்திரத்தில் இருக்கிறது.

ஏகபஞ்சாஷத் வர்ணானாம் சதுர்விம்ஷதி மூர்த்தய: |
ஆத்மாத்யா வாசுதேவாத்யா விஷ்வாத்யா மத்ஸ்ய கச்சபௌ |
க்ரோடோ ந்ருசிம்ஹ: ஸவடுர்ஜாமதக்னி ரகூத்வஹௌ |
வாஸிஷ்டயாதவௌ க்ருஷ்ணாவாத்ரேயோ புத்தகல்கினௌ |
சிம்ஷு மாரஸ்சேதி ஷதங்கலா: கலஷதேவதா: ||

அஜாதி 51, கேசவாதி 24, ஆத்ம, அந்தராத்ம, பரமாத்ம, ஞானாத்ம என்னும் 4 மூர்த்திகள், வாசுதேவ, சங்கர்ஷண, ப்ரத்யும்ன, அனிருத்த இவை 4, விஸ்வ, தைஜஸ, ப்ராக்ஞ, துரிய இவை 4, மத்ஸ்யாதி 10, வேதவ்யாஸ, தத்தாத்ரேய, சிம்சுமார, ஸ்ரீலட்சுமி நாராயண, என மொத்தம் 101 மூர்த்திகள். இவை கலச மூர்த்தியின் களாபூதங்கள் என்று தந்த்ரசாரத்தில் சொல்லப்பட்டிருக்கிறது. இந்த மூர்த்திகளே நம் தேகத்தில் இருக்கும் 101 முக்கிய நாடிகளில் இருக்கின்றன. இவைகளும் கலச நாமக பரமாத்மனின் கலைகள் என்று அறிந்து, மிகவும் பக்தியுடன், ஞானிகளான பிராமணர்கள் பூஜித்து வருவார்கள். பிராமணர் என்றால் பிரம்மஞானிகள் என்று பொருள். பிராமணராக பிறந்தவர் அனைவரும் இப்படி பூஜிக்கிறார்கள் என்று அர்த்தமல்ல. ’செய்கிறார்கள்’ என்று சொல்லினால், சம்பிரதாயத்தை சொல்கிறார். இதனால், அதிகாரிகள் அனைவரும் இப்படிதான் செய்யவேண்டும் என்பது கருத்து.

**இத3க்கெ காரணவெனிஸுவுது3 எர**
**டதி4க த3ஷ நாடிக3ளொளகெ3 ஸுர**
**நதி3யெ மொத3லாத3கி2ல தீர்த்த2க3ளிஹவு கரணத3லி**
**பது3மனாப4னு கேஷவாதி3**
**த்வித3ஷ ரூபத3லிப்பனல்லதி1**
**ம்ருதுளவாத3 ஸுஷும்னதொ3ளகே3 காத்மனெனிஸுவனு ||19**

இதகெ = மேற்சொன்ன நாடிகளுக்கு
காரணவெனிஸுவ = மூலகாரணம் என்று பெயர் பெற்ற
எரடதிக தஷ நாடிகளொளகெ = 2+10=12 நாடிகளில்
சுர நதியே மொதலாத அமல தீர்த்தகளு = களங்கமற்ற (தோஷங்களற்ற) புண்ணிய தீர்த்தங்கள்
இஹவு = இருக்கின்றன
பதுபனாபனு = பத்பனாப மூர்த்தி
கேஷவாதி த்விதஷ ரூபதலி = கேசவ, நாராயண முதலான 12 ரூபங்களில்
அல்லி = அந்த 12 நாடிகளில்
இப்ப = இருக்கிறான்
அதி ம்ருதுலவாத சுசும்னதொளகெ = மிகவும் மிருதுவான சுஷும்னா நாடியில்

ஏகாத்மனெனிஸுவனு = ஏகாத்ம என்னும் பெயரில் அழைத்துக்கொண்டு இருக்கிறான்.

மேற்சொன்ன 101 நாடிகளுக்கு, மூலகாரணம் (ஆதாரம்) என்று சொல்லக்கூடிய 12 நாடிகளில் சிந்திக்கவேண்டிய மூர்த்திகளை சொல்கிறார்.

மேற்சொன்ன 101 நாடிகளுக்கு மூலாதாரமான நாடிகள் 12. இவற்றில் கங்கை முதலான 12 நதிகள், அதாவது அந்த நதிகளின் அபிமான தேவதைகள் வசிக்கின்றனர். அந்த நாடிகள் மற்றும் நதிகளின் பெயர்களை ஸ்ரீவிஜயதாசர் தமது சுளாதியில் தெரிவிக்கிறார்.

ஒந்தொந்து நதிகளு குந்தாதெ ஹன்னெரடாரல்லிஹவு
மந்தாகினி இடா நாடியல்லி
பானு நந்தனெ பிங்களா நாடியல்லி
கங்காதி நாடியல்லி உண்டு காவேரி
ஹஸ்தினீகெ ஸிந்து நதியென்னி
தாம்ரபர்ணீ ஸந்தீதெ நோடி எம்புனாடியல்லி
சந்துள்ள கோமதி மத்யனாடியல்லி
புன்னாடி கண்டீகெ நோடி
சரஸ்வதி நாடியல்லி நந்தா
கிருஷ்ணவேணி குஹதி ஸோமனந்தினி
தாபதீ ஷங்கிணி நாடியல்லி வாஸவெந்து திளி
கோதெ வாருணி நாடியல்லி அந்தவாத பூஷா (பூர்ணா)
பயஸ்வினீயிந்த புட்டிபாது அல்லிகல்லி பொந்திகொண்டிப்பவு
ஞானிகளு துதிஸி மிந்து பரம பதவீய படகொம்போரு
ப்ருந்தாரக வந்த்ய விஜயவிட்டலரெயன
சந்தர்ஷன மாள்ப மஹாத்மரு பல்லரு.

இந்த சுளாதியில் சொல்லியிருக்கும்படி:

1 இடா நாடியில் மந்தாகினி
2 பிங்களா நாடியில் யமுனை
3 கங்காதி நாடியில் காவேரி
4 ஹஸ்தினி நாடியில் சிந்து
5 அலம்ப நாடியில் தாமிரபரணி
6 மத்ய நாடியில் கோமதி
7 புன்னாடி நாடியில் கண்டிகி
8 சரஸ்வதி நாடியில் நந்தா கிருஷ்ணவேணி
9 குஹு நாடியில் காவேரி
10 ஷங்கிணி நாடியில் தபதி
11 வாருணி நாடியில் கோதாவரி
12 பூஷா நாடியில் பயஸ்வினி

இப்படி 12 நாடிகளில் 12 நதிகளை அறிந்து ஞான தீர்த்தத்தில் ஸ்னானம் செய்யவேண்டும் என்று ஸ்ரீவிஜயதாசர் தமது சுளாதியில் விளக்கியிருக்கிறார். இதே போல பிராமணர்களில் வலது காதிலும் இருக்கின்றனர். கேசவ முதல் தாமோதர வரைக்குமான 12 ரூபங்களால் ஸ்ரீபரமாத்மன் அந்த நாடிகளில் இருக்கிறான். அனைத்து நாடிகளுக்கும் மூலாதாரமான, நடுவில் இருப்பதான சுஷும்னா நாடியில், ஸ்ரீபரமாத்மன் ஏகாத்மன் என்னும் பெயரில் வசிக்கிறான். இப்படியாக அறிந்து சிந்திப்பதால், அந்தந்த நதிகளில் ஸ்னானம் செய்த பலன் கிடைக்கிறது என்று பொருள்.

ஆம்னயப்ரதிபாத்[3]ய ஸ்ரீப்ர
த்[3]யும்ன தே[3]வனு தே[3]ஹதொ[3]ளகெ[3] ஸு
ஷும்னதீடா[3] பிங்க[3]ள[3]தி[3] விஷ்வாதி[3] ரூபத[3]லி ।
நிர்மலாத்மனு வாணி வாயு ச
துர்முக[2] ரொளித்த[3]கி[2]ல ஜீவர
கர்ம கு[3]ணவனுஸரிஸி நடெ[3]வனு விஷ்வவ்யாபக[1]னு ||20

ஆம்யன ப்ரதிபாத்யனாத = வேதங்களில் புகழப்பட்டவனான
நிர்மலாத்மனு = உலகம் முழுதும் வியாபித்திருக்கும்
ஸ்ரீப்ரத்யும்ன தேவனு = ஸ்ரீப்ரத்யும்ன ரூபி
தேஹதொளகெ = நம் தேகத்தில்
சுஷும்னதி = சுஷும்னா நாடியில்
இடபிங்களதி = இடா, பிங்களா நாடிகளில்
ஸ்ரீவிஷ்வாதி ருபதலி = விஷ்வ, தைஜஸ, ப்ராக்ஞ என்னும் மூன்று ரூபங்களில்
வாணி = சரஸ்வதி தேவியர்
வாயு, சதுர்முகரொளித்து = வாயு, பிரம்மதேவரில் இருந்து
அகிலஜீவர = அனைத்து ஜீவர்களையும்
கர்ம = கர்மங்களை
குணவனுசரிஸி = சத்வாதி குணங்களுக்கேற்ப
நடெவனு = செயல்களை செய்து செய்விக்கிறான்.

வேதங்களால் புகழப்படுபவனான, நிர்தோஷ ஸ்வரூபியான, அனைத்து உலகங்களிலும் அனைத்து இடங்களிலும் வியாபித்திருப்பவனான, ஸ்ரீபரமாத்மன் ப்ரத்யும்ன நாமகனாக, சுஷும்னா, இடா, பிங்களா என்னும் மூன்று நாடிகளில் வியாப்தனாக இருக்கிறான். அந்த நாடிகளில் அபிமானிகளாக, சரஸ்வதி, வாயுதேவர், பிரம்மதேவர் இருக்கிறார்கள். அவர்களில் கண்டரூபியாக ப்ரத்யும்னனே, விஸ்வ, தைஜஸ, ப்ராக்ஞ என்னும் 3 ரூபங்களில் இருந்து, அனைத்து ஜீவர்களின் தகுதிக்கேற்ப, அவரவர்களின் வினைப்பயன்களுக்கேற்ப கர்மங்களையும், சத்வாதி குணங்களுக்கேற்ப செயல்களை செய்து செய்விக்கிறான்.

**அப்[3]த[3]யன ருது மாஸ பக்ஷ ஸு**
**ஷப்ததிந்த[3]லி கரெஸுதலி நீ**
**லப்[3]த[3] வர்ணனிருத்த[3] மொதலாதை[3]து[3] ரூபத[3]லி ।**

**ஹப்பி[3]ஹனு சர்வத்ரத[3]லி கரு**
**ணாப்[4]தி[3] நால்வத்தைது[3] ரூபதி[3]**
**லப்[4]யனாகு[3]வனீபரிய தே[4]னிஸுவ ப[4]குதரிகெ[3] ||21**

அப்த = மழை
அயன, ருது, மாஸ, பக்ஷ, இவற்றின்
சுஷப்ததிந்தலி = உத்தமமான பெயர்களால்
கரெஸுத = அழைக்கப்பட்டு
நீலாப்ஜவர்ண = நீல குவளையைப் போல வண்ணம் கொண்ட
அனிருத்த மொதலாத ஐது ரூபதலி = அனிருத்த முதலான 5 ரூபங்களில்
சர்வத்ரதலி = அனைத்து இடங்களிலும்
கருணாப்தி = கருணா சமுத்திரனான ஸ்ரீபரமாத்மன்
ஹப்பிஹனு = வியாப்தனாக இருக்கிறான்
ஈ பரி = இப்படியாக
தேனிஸுவ = தியானம் செய்யும்
பகுதரிகெ = பக்தர்களுக்கு
நால்வத்தைது ரூபதி = 45 ரூபங்களால்
லப்யனாகுவனு = தியானத்தில் தெரிகிறான்.

ஆண்டு 1
அயனம் 2
ருது 6
மாதம் 12
பட்சம் 24
என மொத்தம் 45 ரூபங்கள்.

கருணா சமுத்திரனான ஸ்ரீஹரி 45 ரூபங்களால், மேற்சொன்ன சம்வத்ஸராதிகளில் அந்தந்த பெயர்களில் இருந்து, இந்த 45 பெயர்களை அறிந்து யார் பரமாத்மனை தியானிக்கிறார்களோ, அத்தகைய பக்தர்களுக்கு தியானத்தில் தன்னை காட்டிக் கொள்கிறான்.

**ஐது[3]ரூபாத்மகனு இப்ப**
**த்தைது[3] ரூபத[3]லிப்ப மத்ஹதி[3]**
**நைது[3] திதி[2] இப்பத்து நாலகரிந்த[3] பெச்சிஸலு |**
**ஐது[3]வுது[3] அரவத்ததி[4]க ஆ**
**ரைது[3] தி[3]வஸாஹ்வயனொளகெ[3] மன**
**தொய்த[3]வகெ[3] தாபத்ரயத[3] மஹதோ[3]ஷ வெல்லிஹுது[3] ||22**

ஐது ரூபாத்மகனு = அனிருத்தாதி 5 ரூபாத்மகனான ஸ்ரீஹரி
இப்பத்தைது ரூபதலிப்ப = அப்யாதி (ஆண்டுகளில் தொடங்கி) ஐந்திலும், ஒவ்வொன்றிலும் 5 ரூபங்களில் இருந்து
இப்ப = இருக்கிறான்

அதினைது திதி = பிரதமை முதல் பௌர்ணமி வரையிலான சுக்ல பட்சத்தில் 15 திதிகளில் மற்றும் பிரதமை முதல் அமாவாசை வரையிலான கிருஷ்ண பட்சத்தில் 15 திதிகளில்
இப்பத்து நால்கரிந்த பெச்சிஸலு = ஒரு ஆண்டில் இருக்கும் 24 பட்சங்களில் இதை பெருக்கினால் (24*15)
அரவத்ததிக முன்னூரு = 360 நாட்கள்
யைதுவது = ஆகிறது
ஆத திவஸாஹ்வய = அந்த நாட்களின் பெயர்களைக் கொண்ட பரமாத்மனுக்குள்
மனதோய்தவகெ = நன்றாக மனது வைத்தவனுக்கு
தாபத்ரய = கஷ்டங்கள்
மஹதோஷ = பெரிய தோஷங்கள்
எல்லிஹது = எங்கு இருக்கிறது? (இல்லை என்று பொருள்).

அனிருத்தாதி 5 ரூபனாத ஸ்ரீஹரி, சம்வத்ஸர, அயன, ருது, மாஸ, பட்ச என்னும் ஐந்தில் ஒவ்வொன்றிலும், அனிருத்த, ப்ரத்யும்ன, சங்கர்ஷண, வாசுதேவ, நாராயண என்னும் ஐந்து ரூபங்களில் இருக்கிறான். இப்படி அனிருத்தாதி 5 ரூபங்களை, சம்வத்ஸராதி 5ல் பெருக்கினால், 25 வருகிறது. இந்த 25 ரூபங்களால் பரமாத்மன் சம்வத்ஸராதிகளில் இருக்கிறான். மேலும் 1 பட்சத்திற்கு 15 திதிகள். ஒரு மாதத்திற்கு சுக்ல, கிருஷ்ண என்று 2 பட்சங்கள். 12 மாதங்களுக்கு 24 பட்சங்கள். பரமாத்மன் 360 ரூபங்களால் அந்த நாட்களில் ‘திவச’ என்று அழைக்கப்பட்டு இருக்கிறான். இத்தகைய பரமாத்மனில் மனதை வைத்து திடமாக சிந்திப்பவர்களுக்கு கஷ்டங்கள் என்னும் தோஷங்கள் என்றும் வருவதில்லை என்று பொருள்.

**தி3வஸ யாம முஹூர்த்த க4டிகா**
**த்3வயவக3ளொளகி3த்து க3ங்கா3**
**ப்ரவஹத3ந்த3தி3 கால நாமக ப்ரவஹிஸுத1லிப்ப |**
**இவன கு3ண ரூப க்ரியங்க3ள**
**நிவஹதொ3ளு முளுக்3யாடு3தலி பா4**
**ர்க3வி ஸதா3னந்தா3த்மளாகி3ஹ ளெல்லகாலத3லி ||23**

திவஸ = பிரதமை முதலான திதிகள்; அல்லது பகல்
யாம = நாழிகை
முகூர்த்த = 2 நாழிக்கைக் காலம்
கடிகாதி = களிகை முதலான
அவயவகளொளித்து = காலங்களில் இருந்து
கங்காப்ரவஹதந்ததி = கங்கையின் பிரவாகத்தைப் போல
கால நாமக = கால நாமகனான பரமாத்மன்
ப்ரவஹிஸுதலி = கங்கை பிரவாகமானது எப்படி இடைவிடாமல் தொடச்சியாக வருகின்றதோ, அதைப்போல ஒரு நொடி முடிந்தால் அதைத் தொடர்ந்து அடுத்து வருகிறது
இப்ப = இருக்கிறான்

இவன = இந்த பரமாத்மனின்
குணரூப க்ரியங்கள = ஆனந்தாதி குணங்கள், அப்ராக்ருத ரூபங்கள், ஸ்ருஷ்ட்யாதி செயல்கள் இவற்றின்
நிவஹதொளு = குளத்தில்
முளுக்யாடுதலி = மூழ்கி எழுந்தால்
பார்கவி = ரமாதேவி
ஸதானந்தாத்மகளாகி = எப்போதும் ஆனந்தஸ்வரூபளாகி
இஹளு = இருக்கிறாள்
எல்ல காலதலி = பிரளயாதி காலங்களிலும் கூட.

நாட்கள், யாம, முகூர்த்த, களிகை ஆகியவை நாட்களின் அங்கமாகும். இவற்றில் கங்கா பிரவாகத்தைப் போல, கால நாமக பரமாத்மன் எப்போதும் பிரவகித்துக்கொண்டே இருக்கிறான். கங்கையில் தண்ணீர் பிரவாகமானது எப்படி இடைவிடாமல் தொடர்ச்சியாக வருகிறதோ, முன்சென்ற நீர் எப்படி மறுபடி திரும்பி வராதோ, அதுபோல களிகைக்குப் பின் களிகை, முகூர்த்தத்திற்குப் பின் முகூர்த்தம் என சென்று, அதுவே இரவு, பகல் என வருகிறது. சாதாரண நதியின் பிரவாகத்திலும்கூட இந்த நிலையே காணப்படும். அதற்கு கங்கை என்று ஏன் சொல்லவேண்டும் என்றால், மற்ற நதிகளில் சில காலம் தண்ணீரே இல்லாமல் காணப்படலாம். ஆகையால், தொடர்ச்சியாக இருக்கக்கூடிய கங்கையை உதாரணமாக கொடுத்தார் என்று அறியலாம்.

இத்தகைய பகவந்தனின் ஆனந்தாதி குணங்கள், அப்ராக்ருதமான அனந்தானந்த ரூபங்கள், ஸ்ருஷ்ட்யாதி அனந்தானந்த செயல்கள், இவற்றைக் கொண்ட பகவன் மகிமைகள் என்னும் பெரிய குளத்தில், ரமா தேவியர் மூழ்கியெழுந்து, அதாவது, அவற்றின் கரைகளைக் காணாமல், அவற்றைத் தேடும் முயற்சியில் நிரந்தரமாக இருக்கின்றனர் என்று பொருள். யாராவது ஒரு செயலை செய்யப்போய், அது முடியவில்லையெனில், மனம் கஷ்டப்படும். அப்படி ரமாதேவியரும் கஷ்டப்படுவாரோ என்றால், இல்லை. எப்போதும் ஆனந்தஸ்வரூபளாகவே, குதூகலத்துடன் பகவந்தனின் புதுப்புது மகிமைகளை தேடிக்கொண்டிருக்கிறார்.

**வேத3ததிக3ளமானி லகுமி த4**
**ராத4ரன ரூப க்ரியெக3ள**
**ஆதி3 மத்4யாந்தவனு காணதெ3 மனதி3 யோசிஸுத**
**ஆத3பெனெ ஈதனிகெ3 பத்னி க்ரு**
**போ1த3தி4யு ஸ்வீகரிஸித3னு லோ**
**காதி4பனு பி4க்ஷுகன மனெயௌதணவ கொம்ப3ந்தெ ||24**

வேத ததிகள = வேதங்களுக்கு
மானி = அபிமானியான
லட்சுமி = லட்சுமிதேவியர்
தராதரன = தலைவனான, பரமாத்மனின்
க்ரியெ குணகள = செயல்களை, குணங்களின்

ஆதி மத்யாந்தவனு காணதெ = ஆதி, மத்திய, அந்தம் இவற்றைக் காணாமல்
ஈதனிகெ = இப்படிப்பட்டவருக்கு
பத்னி = மனைவி
ஆதபெனெ = அனைத்து அவதாரங்களிலும் நானே மனைவி ஆகிறேன் என்றூ
மனதி = மனதில்
யோசிஸூத = யோசித்தவாறு இருக்கிறார்
க்ருபோததியு = கருணைக்கடலான ஸ்ரீஹரி
லோகாதிபனு = மகாராஜன்
பிக்ஷுகன மனெயௌதனவ = ஏழையின் விருந்தை
கொம்பந்தெ = ஏற்றுக்கொள்வதைப் போல, ஏற்றுக்கொள்கிறான்.

வேத சமூகங்களுக்கு அபிமானியான ரமாதேவியர், ஸ்ரீபரமாத்மனின் குணரூபக்ரியைகளின் ஆதி, மத்ய, அந்தங்களைக் காணமுடியாமல், மனதில் வியப்படைந்தவாறு, இத்தகைய பரமாத்மனுக்கு, அனைத்து அவதாரங்களிலும் நானே மனைவியாக இருக்கிறேன் என்று சிந்திக்கிறாள். இப்படி தான் அவருக்கு எப்போதும் மனைவி ஆவோமோ இல்லையோ என்னும் சந்தேகம் ரமாதேவிக்கு இல்லை. எப்போதும் அவதாரம் ஆகும், எப்போதும் நான் அந்த அவதாரத்தின் மனைவியாவோம் என்னும் எதிர்பார்ப்பில் இருக்கிறார் என்று அர்த்தம். பரமாத்மன் ஸ்வ-ரமணன் ஆன காரணத்தால், ரமாதேவியரால் தனக்கு எதுவும் ஆகவேண்டியதில்லை என்றாலும், தான் கருணைக்கடலான காரணத்தால், அவளின் சேவைக்கு மகிழ்ந்து, ஏழையின் விருந்தை மகாராஜனானவன் ஏற்றுக்கொள்வதைப் போல, தான் அவளை ஏற்றுக்கொள்கிறான்.

**கோவித$^3$ரு சித்தைஸுவுது ஸ்ரீ**
**தே$^3$வியொளகி$^3$ஹ நிகி$^2$லகு$^3$ண த்ருண**
**ஜீவரலி கல்பிஸி யுகுதியலி மத்து க்ரமதி$^3$ந்த$^3$**
**தே$^3$வதே$^3$வகி இப்பளெந்த$^3$ரி**
**தா$^3$ விரிஞ்சன ஜனனி ஈதன**
**ஆவகாலத$^3$ அரியளந்த$^3$வ நரர பாடே$^3$னு ||25**

கோவிதரு = ஞானிகள்
சித்தைஸூவுது = இங்கு சொல்லப்படும் விஷயத்தை சித்தத்தில் வைத்துக் கொண்டு
ஸ்ரீதேவியொளகெ = ஸ்ரீதேவியில்
இஹ = இருக்கும்
நிகிலகுண = அனைத்து குணங்கள்
த்ருண ஜீவரலி = ஜீவர்களில் மிகச்சிறியதான கிருமி ஜீவிகளில்
கல்பிஸி = இருக்கிறான் என்று சிந்தித்து
யுகுதியலி = திட்டத்தில்
மத்து க்ரமதிந்த = த்ருண முதல் பிரம்மன் வரை இருக்கும் தாரதம்யத்தில் குணங்களை அதிகப்படுத்திக் கொண்டே போனால், எவ்வளவு குணங்கள் ஆகுமோ அவ்வளவு

தேவி தேவியு = தேவியர்களுக்கு தேவியான ரமாதேவி
இப்பளெந்து = இருக்கிறாள் என்று
அரிது = அறிந்து
ஆவிரிஞ்சிய = பிரம்மதேவர
ஜனனி = தாயான ரமாதேவியர்
ஈதன = இந்த பரமாத்மனின் மகிமைகளை
யாவகாலதலி = எல்லா காலங்களிலும்
அரியளு = அறியமாட்டார்கள்
எந்தேனே = என்றபிறகு
நரர பாடேனு = சாதாரண ஜீவர்களைப் பற்றி என்ன சொல்வது?

பண்டிதர்கள் இந்த விஷயத்தில் சிறிது கவனம் செலுத்த வேண்டும். லட்சுமிதேவியரிடம் இருக்கும் குணங்களானது, ஒரு அதம ஜீவியான கிருமியிடமும் இருக்கிறது என்று நினைப்போம். அந்த கிருமியைவிட உத்தம ஜீவர்களில் இருக்கும் குணங்களை எண்ணிக்கொண்டே வருவோம். இப்படி மனிதர், தேவதைகள் என தாரதம்யத்தின்படி குணங்களை எண்ணிக்கொண்டே வந்தால், பிரம்மதேவர் வரை வந்தால், எவ்வளவு குணங்கள் வருகிறது? அவ்வளவு குணங்கள் ரமாதேவியரிடம் இருக்கிறது என்று சிந்திப்போம். இத்தகைய குணங்களைக் கொண்ட ரமாதேவியர், தமது இவ்வளவு குணங்களால் பரமாத்மனின் குணங்களை எப்போதும் தேடிக்கொண்டிருந்தாலும், அவற்றின் கரையைக் காணமாட்டார். இவருக்கே இப்படி சொன்னபிறகு, அதி அல்பரான மனிதர்களின் கதி என்ன? பகவந்தனின் அருளினாலேயே பகவன் மகிமைகளை தத்தம் தகுதிக்கேற்ப சிறிதளவு அறியவேண்டும் என்பது பொருள்.

**க்ஷீர த$^{3}$தி$^{4}$ நவனீத க்$^{4}$ருததொ$^{3}$ளு**
**ஸௌரப$^{4}$ ரஸாஹ்வய னெனிஸி ஷா**
**ந்தீரமண ஞான க்ரியேச்சா ஷக்தியெந்தெ$^{3}$ம்ப$^{3}$**
**ஈரெரடு$^{3}$ நாமத$^{3}$லி கரெஸுவ**
**பாரதீ வாக்$^{3}$தே$^{3}$வி வாயு ஸ**
**ரோரு ஹாஸனரல்லி நெலெஸிஹரெல்ல காலத$^{3}$லி ||26**

க்ஷீர = பால்
ததி = தயிர்
நவனீத = வெண்ணெய்
க்ருத = நெய், இவற்றில்
ஸௌரப ரஸாஹ்வயனெனிஸி = வாசனை ரூபத்திலும், சுவை ரூபத்திலும் அழைத்துக்கொண்டு
ஷாந்தீரமண = சாந்திபதியான அனிருத்தன்
ஞான க்ரியேச்சா ஷக்தியெந்தெம்ப = ஞான, செயல்கள், விருப்பம், சக்தி என்று அழைக்கப்படும்
ஈரெரடு நாமதலி = 4 நாமங்களில்
கரெஸுவ = அழைக்கப்படும்

பாரதி வாக்தேவி = பாரதி சரஸ்வதிதேவியர்
வாயு சரோருஹாஸனரல்லி = வாயுதேவர், தாமரையில் அமர்ந்திருப்பவரான பிரம்மதேவரில்
எல்ல காலதலி = எல்லா காலங்களிலும்
நெலெஸிஹரு = நிலைத்திருக்கிறார்

பால், தயிர், வெண்ணெய், நெய் இந்த நான்கிலும் இருக்கும் மணம், சுவை இவற்றின் ஸ்வரூபனாக, சாந்திபதியான அனிருத்தன், நான்கு ரூபங்களால்,

* ஞானரூபத்தினால் பிரம்மதேவரிலும்,
* க்ரியா ரூபத்தினால் வாயுதேவரிலும்,
* இச்சா ரூபத்தினால் சரஸ்வதிதேவியிலும்,
* சக்தி ரூபத்தினால் பாரதி தேவியரிலும்
எப்போதும் இருக்கிறார் என்று சிந்திக்க வேண்டும்.

**வஸுக3ளெண்டு நவப்ரஜேஷரு**
**ஷ்வஸன க3ணஜவத்து ஏகா**
**த3ஷ தி3வாகரரனிது ருத்3ரரு அஷ்வினிக3ளெரடு3 |**
**த3ஷவிஹீன ஷதாக்2ய ஈ ஸுமா**
**நஸரொளகெ3 சதுராத்ம நிய்யா**
**மிஸுவ பி3ரம்ம ஸமீர க2க3ப ப2ணீந்த்ரரொளகி3த்து ||27**

வஸுகளெண்டு = அஷ்ட வசுக்கள்
பவப்ரஜேஷரு = ஒன்பது ப்ரஜேஷர்கள்
ஷ்வஸன கணவெளேளு = 50 மருத்களர்கள்
ஏகாதச திவாகரரு = 11 சூரியர்கள்
அனிது ருத்ரரு = அவ்வளவே (11) ருத்ரர்கள்
அஸ்வினிகளெரடு = அஸ்வினி தேவதைகள் இருவர்
தஷவிஹீன ஷதாக்ய = 10 குறைவான 100 எண்ணிக்கையிலான (90)
ஈ ஸுமனசரொளகெ = இந்த தேவதைக்குள்
சதுராத்ம = அனிருத்தாதி 4 ரூபாத்மகன்
பிரம்ம சமீர ககப பணீந்த்ர = பிரம்ம வாயு கருட சேஷ
ஒளகித்து = இவர்களின் உள்ளிருந்து
நியாமிஸுவ = ப்ரேரகனாக (அவர்களை வழிநடத்துபவனாக) இருக்கிறான்.

* த்ரோண, ப்ராண, த்ருவ, அர்க்க, அக்னி, தோஷ, வசு, விபாவசு என்று 8 பேர் அஷ்ட வசுக்கள்.
* மரீச்யாதி 9 பேர் ப்ரஜேஷர்கள்
* மருத்கணர் 49 பேர். அவர்களுடன் இந்திரனை சேர்த்தால் 50 வருகிறது
* சூரியர்கள் 11 பேர். உருக்ரம என்னும் சூரியன், பரமாத்மனின் அவதாரமே ஆனதால், அவனை விட்டுவிட்டு 11 சூரியர்கள் என்கிறார்கள்.
* அவ்வளவே ருத்ரர்கள் என்றால் 11 ருத்ரர்கள்

* அஸ்வினி தேவதைகள் இருவர்.

ஆக மொத்தம் 91 தேவதைகள். ஆனால், பத்யத்தில் 100க்கு 10 குறைவு, அதாவது 90 என்றிருக்கிறது. இந்த வேறுபாட்டை எப்படி சரிப்படுத்துவது என்றால், அஸ்வினி தேவதைகள் இருவரும் ஒரே காலத்தில் பிறந்து, ஒரே பெயரில் அழைக்கப்பட்டு இருவரும் ஒன்றாகவே இருப்பதால், அந்த தேவதைகளை ஒன்று என்றே எண்ணிக்கையில் எடுத்துக் கொண்டிருக்கிறார். ஆகையால் 90 தேவதைகளே வருகிறது. ஸ்ரீஹரி, அனிருத்த, பிரத்யும்ன, சங்கர்ஷண, வாசுதேவ ரூபங்களால், பிரம்ம, வாயு, கருட, சேஷ என்னும் நால்வரில் இருந்து, மேற்சொன்ன 90 தேவதைகளில் நுழைந்து அவர்களின் செயல்களை நடத்துபவனாக இருக்கிறான்.

**தோருதிப்பனு சக்ரத$^{3}$லி ஹீ**
**ங்கார நாமக ஷங்க$^{2}$த$^{3}$லி ப்ரதி**
**ஹார க$^{3}$தெ$^{3}$யலி நித$^{4}$ன பத்$^{3}$மத$^{3}$லிப்ப ப்ரஸ்தாவ |**
**காருணிகனுத் கீ$^{3}$த$^{2}$ நாமதி$^{3}$**
**மாரமணனைரூபக$^{3}$ள ஷ**
**ங்கா$^{2}$ரி மொத$^{3}$லாதா$^{3}$யுத$^{3}$ க$^{3}$ளொளு ஸ்மரிஸி த$^{4}$ரிஸுதிரு ||28**

சக்ரதலி = சக்ர முத்திரையில்
ஹிங்கார நாமக = ஹிங்கார நாமக பரமாத்மன்
தோருதிப்பனு = காட்டிக் கொள்கிறான்
ஷங்கதலி = சங்கு முத்திரையில்
ப்ரதிஹார = ப்ரதிஹார நாமக பரமாத்மன்
கதெயலி = கதை முத்திரையில்
நிதன = நிதன நாமக பரமாத்மன்
பத்மதலி = பத்ம முத்திரையில்
ப்ரஸ்தாவ = ப்ரஸ்தாவ நாமக பரமாத்மன்
இப்ப = இருக்கிறான்
உத்கீத = உத்கீத நாமக பரமாத்மன்
நாமதி = நாம முத்திரையில் இருக்கிறான்
காருணிகன = கருணைக்கடலான
மாரமணன = லட்சுமிபதியின்
ஐரூபகள = 5 ரூபங்களை
சங்காதி மொதலாத = சங்கு சக்ர முதலான
ஆயுதகளொளு = ஆயுத ரூபமான 5 முத்திரைகளில்
ஸ்மரிஸி = சிந்தித்து
தரிசுதிரு = அவற்றை தரித்துக் கொண்டிரு.

* சக்ர முத்திரையில் ஹிங்கார நாமத்திலும்
* சங்கு முத்திரையில் ப்ரதிஹார நாமத்திலும்
* கதை முத்திரையில் நிதன நாமத்திலும்
* பத்ம முத்திரையில் ப்ரஸ்தாவ நாமத்திலும்

* நாம முத்திரையில் உத்கீத நாமத்திலும் பரமாத்மன் இருக்கிறான். இப்படி மகா கருணைக்கடலான ஸ்ரீபரமத்மன், இந்த 5 ரூபங்களால் 5 முத்திரைகளில் இருக்கிறான் என்று சிந்தித்து, முத்திரைகளை தரிக்க வேண்டும் என்பது கருத்து.

**தனுவெ ரத[2] வாகா[3]பி[4]மானியெ**
**கு[3]ணவெனிஸுவளு ஸ்ரோத்ரத[3]லி ரோ**
**ஹிணி ஷஷாங்கரு பாஷபாணிக[3]ளஷ்வ வெந்தெ[3]னிஸி**
**இனனு சஞ்ஞாதே[3]வியரு இஹ**
**ரனலலோசன ஸூதனெனிஸுவ**
**ப்ரணவபாத்[3]ய ப்ராண நாமக ரதி[2]கனெனிஸுவனு ||29**

தனுவெ = சரீரமே
ரத = ரதம்
வாகாபிமானியெ = வாக்கிற்கு அபிமானியான உமாதேவி
குணவெனிஸுவளு = கயிறு என்று அழைத்துக் கொள்கிறாள்
ஸ்ரோத்ரதொளு = காதுகளில்
ரோஹிணி ஷஷாங்கரு = ரோஹிணிதேவி மற்றும் அவளின் கணவனான சந்திரன்
பாஷபாணி = லகான் பிடித்துக் கொள்கிறான்
இனன = சூரியனின்
சஞ்ஞாதேவியரு = அவனின் மனைவி சஞ்ஞாதேவி
அஷ்வனெந்தெனிஸி = குதிரை என்று சொல்லிக்கொண்டு
இஹரு = இருக்கிறார்கள்
அனலலோசன = அக்னி நேத்ரனான ருத்ரதேவர்
ஸூதனெனிஸுவ = சாரதி என்று சொல்லிக்கொண்டு
ப்ரணவபாத்ய = ஓம்கார ப்ரதிபாத்யனான (முக்யபிராணானந்தர்கத)
ப்ராண நாமக = பிராண நாமக ஸ்ரீபரமாத்மன்
ரதிகனெனிஸுவனு = ரதிகன் என்ற பெயரில் இருக்கிறான்

நம் தேகமே ரதம்.
வாக் அபிமானியான பார்வதி தேவியே கயிறு.
காதுகளின் அபிமானியான ரோஹிணி மற்றும் சந்திரன், கயிறைப் பிடித்திருப்பர்.
சூர்யன் மற்றும் அவர் மனைவி சஞ்ஞாதேவியர் கண்களில் இருந்து குதிரைகளாக இருப்பர்.
மனோபிமானிகளான ருத்ரர் சாரதியாக இருக்கிறார்
ஓம்காரத்தால் புகழப்படுபவனான, முக்யபிராணாந்தர்கதனான, ப்ராண நாமக ஸ்ரீபரமாத்மன், ரதிக (தேரில் வீற்றிருப்பவன்) என்று சிந்தித்து, தேகத்திற்கு அலங்காரங்களை செய்யவேண்டும் என்று பொருள்.

இதற்கு ஆதாரம், மானஸ ஸ்ம்ருதியில் இருக்கிறது.

விஷ்ணோராயதனம் திவ்யந்தேஹாக்யம் வைஷ்ணவம்ரதம் |

சூர்யஸ்ச சூர்ய பார்யாச சக்ஷுத்வய ஸமாஸ்ரிதௌ |
வாஜிரூபௌ ததாசோமஸ்தத்பத்னீச ஸ்ருதிஸ்திதௌ |
ஹயபாஸௌ வஹந்த்யேதி தத்தந்த ப்ரக்ரஹாத்மிகா |
உமாவாசிஸ்திதாஞேயா தத்பதிர்மனஸி ஸ்தித: |
சம்ப்ரோக்த: ஸாரதிஸ்தர்ஸ்மி ரதேப்ராண: ப்ரதிஷ்டித: |
ப்ரக்ருஷ்டஞ்ஞானரூபத்வா த்ப்ராணே ப்ராணோ ஹரி:ஸ்ம்ருத: |
அதிதிஷ்டதி விஷ்ணுஸ்து தஸ்மாத்தேஹமலம்கரேத ||

இதன் அர்த்தம்:

நம் தேகமானது, பரமாத்மன் வசிக்கத் தகுந்த, திவ்யமான, வைஷ்ணவ ரதம். சூரியனும் அவனின் மனைவியும் இரு கண்களில் இருந்து, குதிரைகளைப் போல இருக்கின்றனர். சந்திரனும் அவனது மனைவியும், காதுகளில் இருந்து, குதிரைகளின் லகானைப் பிடித்துக் கொண்டிருக்கின்றனர். உமாதேவி, வாக்கினில் கயிறாக இருக்கிறார். அவளின் கணவனான ருத்ரதேவர், மனஸ்ஸில் இருந்து, சாரதியாக இருக்கிறார். ரதத்தில் பிராணதேவர் நாயகனாக அமர்ந்திருக்கிறார். அவரில் அந்தர்யாமியாக ப்ராண என்னும் பெயருடைய ஸ்ரீபரமாத்மன் இருக்கிறார்.

ப்ர=மிகச்சிறந்த ஆ=ஆனந்த ஸ்வரூபனான ண=ஞானஸ்வரூபமாக இருப்பவன், இதுவே பிராண என்று பரமாத்மனுக்குப் பெயர். இத்தகைய விஷ்ணுவிற்கு ரதமாக இருப்பதால், இந்த தேகத்தை நன்கு அலங்கரிக்க வேண்டும், என்று பிரமாண வாக்கியம் சொல்கிறது. இதே அபிப்பிராயத்தையே தாசராயரும் சொல்கிறார்.

**அமித மஹிமனபார கு3ணக3ள**
**ஸமித வர்ணாத்மக ஸ்ருதி ஸ்ம்ருதி**
**க3மிஸலாப1வெ தத3பி4மானிக3ளெந் தெ3னிஸிகொம்ப3 |**
**க1மலஸம்ப4வ ப4வ ஸுரேந்த்3ரா**
**த்3யமரரனுதி3ன திளியலரியரு**
**ஸ்வமஹிமெக3ளா த்3யந்த மத்4யக3ளரிவ சர்வக்3ஞ ||30**

அமித மஹிமன = எல்லைகளற்ற மகிமைகளைக் கொண்ட
அபார குணகள = எல்லைகற்ற நற்குணங்களைக் கொண்ட
ஸமித வர்ணகள = எல்லைகள் உள்ள எழுத்துக்களைக் கொண்ட ஸ்ருதி ஸ்ம்ருதிகளின்
கமிஸலாபவெ = எல்லைகளைக் காணமுடியுமோ?
ததபிமானிகளெ ந்தெனிஸி கொம்ப = ஸ்ருதிஸ்ம்ருதிகளுக்கு அபிமானிகள் என்று புகழப்படும்
கமலசம்பவ = பிரம்மதேவர்
பவ = ருத்ரதேவர்
சுரேந்த்ராதி = தேவேந்திர முதலான
அமரரு = தேவதைகள்
அனுதின = தினந்தோறும்

திளியலு = பகவன்மகிமைகளை அறிய முயன்றாலும்
அரியரு = முழுமையாக அறியமாட்டார்கள்
ஸ்வமஹிமெகள = தன் மகிமைகளை
அத்யந்த மத்யகள = ஆதி, மத்ய, அந்தம் ஆகியவற்றை
சர்வக்ஞ = சர்வக்ஞனான பரமாத்மன் ஒருவனே
அரிவ = அறிவான்.

ஸ்ரீஹரி எல்லைகளற்ற மகிமைகளைக் கொண்டவன். இவனது அபாரமான நற்குணங்களை மக்கள் அறியவேண்டுமெனில், ஸ்ருதிகளாலும், ஸ்ம்ருதிகளாலும், அறியவேண்டும். அப்படியிருந்தாலும், அந்த ஸ்ருதி, ஸ்ம்ருதிகள், தங்களுக்கு தெரிந்த வரையிலான குணங்களை மட்டுமே சொல்கிறதே தவிர, பகவந்தனின் முழுமையான மகிமைகளை அதனால் சொல்ல முடியாது. ஏனெனில் ‘ஸமிதவர்ணாத்மக’ எழுத்துக்கள் எல்லைகளைக் கொண்டவை. அத்தகைய எழுத்துக்களைக் கொண்ட ஸ்ருதி, ஸ்ம்ருதிகளுக்கும் எல்லை உண்டு. அபரிமிதமான பகவந்தனின் குணங்களின் எல்லைகளை, எல்லையுள்ள ஸ்ருதி ஸ்ம்ருதிகள் விளக்கமுடியுமோ? என்றும் சாத்தியமில்லை. அதன் அபிமானிகளான பிரம்ம ருத்ராதிகளும்கூட முழுமையாக அறியமாட்டார்கள். தத்தம் தகுதிக்கேற்பவே அறிவர். அத்தகைய மகிமைகளின் எல்லைகளை அறிந்தவர் யார்? அதாவது, சர்வக்ஞனான பரமாத்மன் ஒருவனே தன் மகிமைகளின் ஆதி, மத்ய, அந்த ஆகியவற்றை அறிவான் என்பது கருத்து.

**வித்த தே3ஹாகா3ர தா3ரா**
**பத்ய மித்ராதி3க3ளொளகெ3 ஹரி**
**ப்ரத்யகா3த்மனு எந்தெ3னிஸி நெலெஸிப்பனெந்த3ரிது3 ।**
**நித்யத3லி ஸந்த்ருப்தி ப3டி3ஸுத**
**உத்தமாத4ம மத்4யமர க்ருத**
**க்ருத்ய னாகு3ன்மத்தனாக3தெ3 ப்4ருத்யனானெந்து3 ।।31**

வித்த = செல்வம்
தேஹ = சரீர
ஆகார = வீடு
தாரா = கணவன் / மனைவி
அபத்ய = மக்கள்
மித்ராதிகளொளகெ = நண்பர் ஆகியோரில்
ஹரி = ஸ்ரீஹரி
ப்ரத்யகாத்மனு = ஜீவர் அல்லாமல் வேறாக இருக்கிறான்
எந்தெனிஸி = என்று சொல்லிக்கொண்டு
நெலெஸிப்பனு = அனைத்து ஜீவர்களின் அந்தர்யாமியாக இருக்கிறான்
எந்தரிது = என்று அறிந்து
நித்யதலி = தினந்தோறும்
உத்தமாதம மத்யமர = கணவன் / மனைவி, மக்கள் நண்பர் ஆகியோர் உத்தமரோ, மத்யமரோ, அதமரோ ஆகட்டும்

ஸந்த்ருப்தி படிசுத = நன்றாக திருப்திப்படுத்தி
க்ருதக்ருத்யனாகு = செய்யவேண்டிய பகவத்பூஜா ரூபமான சாதனையை செய்தேன் என்று நினைத்து
உன்மத்தனாகதெ = என் தேகம், என் மனைவி என்று பைத்தியம் போல் சொல்லித் திரியாமல்
ப்ருத்யனானெந்து = பரமாத்மனின் சேவகன் நான் என்று சிந்தித்திரு.

தான், தன் கணவன்/மனைவி, மக்கள், செல்வம் ஆகியவற்றில் பரமாத்மனே அந்தந்த உருவத்தில் அவர்களில் இருக்கிறான் என்று நினைத்து, கணவன்/மனைவி மக்களை, மிகுந்த அன்புடன்; நான் காக்கவில்லையெனில் அவர்கள் கதி என்ன என்னும் கர்வத்துடன், ஸ்வதந்த்ர கர்த்ருத்வ அபிமானத்தில் பைத்தியமாகாமல்; மனைவி மக்களின் பாதுகாப்பும்கூட பகவத்பூஜை என்றும், நான் பரமாத்மனின் சேவகன். எனக்குள் இருந்து அவனே அனைத்தையும் செய்விக்கிறான் என்று சிந்திக்க வேண்டும்.

மனைவி மக்கள் ஆகியோர் அவர்கள் உத்தமரோ, மத்யமரோ, அதமரோ அதாவது, அவர்கள் உன்னிடம் அதிக அன்பு செலுத்துகிறாரோ, உதாசீனம் செய்கிறாரோ அல்லது வெறுக்கிறாரோ, அத்தகையவர்களில் அவர்களைப் போலவே நீயும் இருக்காமல், அனைவருக்குள்ளும் பரமாத்மனே இருந்து, அப்படி செய்விக்கிறான் என்று சிந்தித்து, நீ அவர்களை சமமாக பாவிக்க வேண்டும்.

அல்லது, உன்னைவிட உத்தமர், உனக்கு சமர், உன்னைவிட நீசர் இத்தகையவர்களில்;

அல்லது, உத்தம பிராமணாதிகள் என்றால் குருகள் முதலானவர்கள். மத்யமர் சாதாரண மக்கள். அதமர் நீசர் இவர்களிலும் பகவந்தன் சமமாக இருக்கிறான் என்று நினைத்து, உன் சக்திக்கேற்ப, அவரவர்களின் யோக்யதைக்கேற்பவும், அவர்கள் அனைவரையும் நன்றாக திருப்திப்படுத்த வேண்டும் என்பது கருத்து.

**தே$^{3}$வதே$^{3}$வேஷன ஸுமூர்த்தி க**
**ளேவரக$^{3}$ளொளக$^{3}$னவரத ஸ**
**ம்பா$^{4}$விஸுத பூஜிஸுத நோடு$^{3}$த ஸுகி$^{2}$ஸுதிரு பி$^{3}$ட$^{3}$தெ$^{3}$ |**
**ஶ்ரீவர ஜகன்னாத$^{2}$விட்டல**
**தா ஒலிது$^{3}$ காருண்யத$^{3}$லி ப$^{4}$வ**
**நோவ பரிஹரிஸுவனு ப்ரவித$^{1}$த1 பதிதபாவனனு ||32**

தேவ தேவேஷன = தேவதைகளுக்கெல்லாம் தேவனான பரமாத்மன்
சுமூர்த்தி = திவ்ய மூர்த்திகளும்
களெவரகளொளகெ = சரீரங்களில்
அனவரத = நித்யமான
ஸம்பாவிஸுத = போற்றியவாறு
பூஜிஸுத = பூஜித்து
நோடுத = பார்த்தவாறு

சுகிசுதிரு பிடதெ = விடாமல் சுகப்படு (ஆனந்தப்படு).
ப்ரவிதத = அனைத்து இடங்களிலும் இருப்பவனும், பதித பாவனனுமான
ஸ்ரீவர = லட்சுமிபதியான
ஜகன்னாதவிட்டலனு = தாசராயரின் பிம்பமூர்த்தியான ஜகன்னாதவிட்டலன்
தா ஒலிது = தான் மகிழ்ந்து
காருண்யதலி = கருணையால்
பவனோவ = பிறப்பு இறப்பு என்னும் சுழற்சியின் வேதனையை
பரிஹரிசுவனு = நீக்குகிறான்.

பிரம்மாதி அனைத்து தேவதைகளுக்கும் ஸ்வாமியான ஸ்ரீபரமாத்மனின் மூர்த்திகள், உத்தம, மத்யம, அதமர்களான அனைத்து பிராணிகளிலும் இருக்கிறது என்று சிந்தித்து, இப்படி அனைத்து இடங்களிலும் பகவத்ரூபங்களை சிந்தித்து, அந்த ரூபங்களை இடைவிடாமல் சிந்தித்தவாறு சுகப்பட வேண்டும். இப்படி செய்வதால் வரும் பலன் என்னவெனில், அனைத்து இடங்களிலும் வியாப்தனான, பதித பாவனனான, லட்சுமிபதியான, ஸ்ரீஜகன்னாத விட்டல நாமக பிம்பரூபியான ஸ்ரீபரமாத்மன் மகிழ்ந்து, சம்சாரம் என்னும் நமது வேதனையை பரிகரிக்கிறான்.

இத்துடன் மாத்ருகா சந்தி என்னும் எட்டாம் சந்தியின் தாத்பர்யம் முடிவுற்றது.
ஸ்ரீகிருஷ்ணார்ப்பணமஸ்து.

***

## பாவபிரகாசிகை : சந்தி 9 : ஜீவ ப்ரகரண சந்தி

**/ உதாத்த அனுதாத்த சந்தி /**
**வர்ண ப்ரக்ரிய சந்தி**

**ஹரிகதா2ம்ருதசார கு3ருக3ள**
**கருணதிந்தா3பநிது பே1ளுவே**
**பரம ப4கவத்3ப4க்தரித3னாத3ரதி3 கேளுவுது3**

**ஹரியெ பஞ்சாஷத்3வரண ஸு**
**ஸ்வர உதா3த்த1னுதா3த்த ப்ரசய**
**ஸ்வரித ஸந்தி4 விஸர்க3 பி3ந்து3க3ளொளகெ3 தத்3வாச்ய।**
**இருவ தத்தன்னாம ரூபக3**
**ளரிதுபாஸனெ கை3வரிளெயொளு**
**ஸூரரெ ஸரி நரரல்ல அவராடு3வுதெ3 வேதா3ர்த்த2 ||1**

ஹரியே = ஸ்ரீபரமாத்மனே
பஞ்சாஷத்வர்ண = அ-கார முதலான 50 எழுத்துக்கள்
ஸுஸ்வர = எழுத்துக்களை உச்சரிப்பது
உதாத்த = உயர் ஸ்வரத்தை உச்சரிப்பது
அனுதாத்த = ஒரு இடத்தில் குறைப்பது
ப்ரசய = ஸ்வர விசேஷம்

ஸ்வரித = யதாஸ்திதி (அப்படியே) உச்சரிப்பது
ஸந்தி = இரு பதங்களை ஒன்றாக சேர்க்கும்
விஸர்க பிந்துகளொளகெ = அம், கம், என எழுதும்போது பக்கத்தில் புள்ளி வைப்பது, இவற்றில்
தத்வாச்ய = அந்தந்த ஷப்தத்தின் பெயரால்
இருவ = இருக்கிறான்
தத்தன்னாம ரூபகளரிது = எந்த பெயர், எந்த ரூபம் என்பதை அறிந்து
உபாஸனெகைவரு = உபாசனை செய்பவர்கள்
இளெயொளு = பூமியில்
ஸுரரேஸரி = தேவதைகள் என்றே அறியவேண்டும்
நரரல்ல = அவர்கள் சாமான்யரான மனிதர் என்று அறியக்கூடாது
அவரு ஆடுவுதே = அவர்கள் என்ன பேசினாலும்
வேதார்த்த = அது வேத அர்த்தங்களுக்கு சமம் என்று எண்ணவேண்டும்.

முக்தி ஆகவேண்டுமென்றாலும், அபரோக்ஷம் கிடைக்கவேண்டும் என்றாலும், அதற்குமுன் முதலில் ஜீவரின் ஸ்வரூப யோக்யதையை அறிந்துகொண்டு, யார்யாரிடம் எப்படி எப்படி இருக்கவேண்டும் என்னும் விஷயத்தை அறிந்து, அந்த சன்னிதானத்திற்கேற்ப உபாசனை செய்வது முக்கிய சாதனை என்று சொல்கிறார். அதனால் இந்த சந்திக்கு ஜீவ ப்ரகரண சந்தி என்று பெயர்.

வேதங்களில், ஸ்வரித, அனுதாத்த, உதாத்த, ப்ரசய ஆகியவை இருக்கின்றன. ஸந்தி, விஸர்க, பிந்து ஆகியவை ஸ்மிருதி வாக்கியங்களில், வேதங்களிலும் கூட வருகிறது. ஸ்வரித, அனுதாத்த, உதாத்தங்களின் லட்சணங்களை அறியவேண்டுமெனில் சங்கீத சாஸ்திரங்களில் கொஞ்சம் அறிமுகம் இருக்கவேண்டும். 'ஸரிகமபதநி' என்னும் 7 ஸ்வரங்கள் ஆரோகண கிரமத்தில் ஒன்றைவிட ஒன்று அதிக ஸ்வரத்தில் இருக்கும். நிதபமகரிஸ என்று அவரோகண கிரமத்தில் சொல்லும்போது ஒன்றுக்கொன்று குறைந்த ஸ்வரத்தில் சொல்ல வேண்டும். இதில் ம ப த என்னும் 3 ஸ்வரங்களை எடுத்துக்கொண்டால்,

* ம என்பது அனுதாத்த ஸ்வரம்.
* ப என்பது ஸ்வரித
* த என்பது உதாத்த
* ப என்னும் ஸ்வரம் யதாஸ்திதியாக உச்சரிப்பது. இதற்கு ஸ்திர என்றும் பெயர்.
* பஞ்சமத்தைவிடவும் ஒரு நிலை கீழாக உச்சரிப்பது ம (மத்யம).
* பஞ்சமத்தைவிடவும் ஒரு நிலை மேலாக உச்சரிப்பது த (தைவத).
* வேதங்களில் சரிசமமாக உச்சரிப்பது ஸ்வரித,
* நீசஸ்வரமே அனுதாத்த,
* உச்ச ஸ்வ்ரமே உதாத்த,
* ப்ரசய என்றால் உதாத்தத்தை உச்சரிக்கும்போது ஸ்வரித, அனுதாத்த, உதாத்தங்களை ஒரே சொல்லின் இறுதியில் ஒரே சமயத்தில் உச்சரிக்கும் ஸ்வரவிசேஷம் ஆகும்.

* ஸந்தி என்றால் இரு சொற்களை சேர்ப்பது அதாவது ‘பிராணாபானாவிடாயாம்’ என்னும் சொல்லில் ப்ராண, அபான, என்னும் இரு சொற்களை சேர்க்கும்போது ப்ராணாபானௌ என்று ஆகிறது. இதற்கு சந்தி என்று பெயர்.
* விஸர்க்க, பிந்து ஆகியவை மேலே சொன்னதைப் போல.

இவற்றில் 50 எழுத்துக்களின் பெயராலும், உதாத்த நாமகனாகவும், அனுதாத்தாதி நாமங்களால் அழைக்கப்பட்டு அங்கங்கு வியாப்தனாக இருக்கிறான் என்று அறிந்து, உபாசனை செய்யவேண்டும். மேலும்,

ஸர்வே வேதா யத்பதமாமனந்தி, வேதைஸ்ச ஸர்வைரஹமேவ வேத்ய:

ஆகிய ஸ்ருதி ஸ்ம்ருதிகளில் சொல்லியிருப்பதைப் போல அனைத்து வேதங்களும், புராணங்களும், பரமாத்மனையே புகழ்கின்றன. அவனே அனைத்து ஸ்ருதி, ஸ்ம்ருதிகளால் புகழப்படுபவன் என்று அறிந்து, யார் உபாசனை செய்கிறார்களோ அவரை சாதாரண மனிதர் என்று எண்ணாமல், தேவதாம்சர் என்று அறியவேண்டும் என்று சந்தியின் அறிமுகமாக இந்த பத்யத்திலிருந்து உத்தம ஜீவனின் ஸ்வரூபத்தை விளக்குகிறார் தாசராயர்.

**ஈஷனலி விக்$^{3}$ஞான ப$^{4}$க$^{3}$வ**
**த்தா$^{3}$ஸரலி ஸத்ப$^{4}$க்தி விஷய நி**
**ராஸெ மித்$^{2}$யாவாத$^{3}$த$^{3}$லி ப்ரத்$^{3}$வேஷ நித்யத$^{3}$லி |**
**ஈ ஸமஸ்த ப்ராணிக$^{3}$ளலி ர**
**மேஷ நிஹனெந்த$^{3}$ரிது அவரபி$^{4}$**
**லாஷெக$^{3}$ள பூரைஸுவுதெ$^{3}$ மஹயக்$^{3}$ஞ ஹரிபூஜெ ||2**

ஈஷனலி = பரமாத்மனிடம்
விக்ஞான = விசேஷமான ஞானம்
பகவத்தாசரலி = பகவத் பக்தர்களிடம்
ஸத்பக்தி = சிறந்த பக்தி
விஷய = விஷய சுகங்களில்
நிராஸெ = ஆசையை துறப்பது
மித்யாவாததலி = ஜகத் பொய் என்று சொல்லும் மித்யா வாதத்தில்
நித்யதலி = தினந்தோறும்
ப்ரத்வேஷ = அதிகமாக த்வேஷத்தைக் காட்டுவது
ஈ சமஸ்த ப்ராணிகளலி = இந்த அனைத்து பிராணிகளிடமும்
ரமேஷ = லட்சுமிபதியானவன்
நிஹனெந்தரிது = இருக்கிறான் என்று அறிந்து
அவரபிலாஷெகள = அவர்களின் விருப்பங்களை
பூரெயிஸுவுதெ = நிறைவேற்றுவதே
மஹயக்ஞ ஹரிபூஜெ = மிகப்பெரிய யக்ஞம், ஹரிபூஜை

ஸ்ரீபரமாத்மனே சர்வோத்தமன். அனைத்து பிரபஞ்சங்களிலிருந்து வேறுபட்டவன். அனைத்து உலகங்களையும் படைத்து, நடத்துபவன் என்னும் விசேஷ ஞானத்தைப்

பெற்று, பகவந்தன் நம் ஸ்வாமி, நாம் அவனின் தாசன் என்று அறிந்து உபாசனை செய்யும் பக்தரிடம் உத்தமமான பக்தி செய்வது; சம்சார சுகங்களில் நிராசை; உலகமே பொய், நானே ஈஸ்வரன் என்று சொல்லும் மதங்களை பின்பற்றுவர்களில் விசேஷமான த்வேஷம்; சராசரங்களால் நிறைந்த இந்த உலகத்தில் ஸ்ரீஹரி அனைத்து இடங்களிலும் வியாபித்திருக்கிறான் என்று அறிந்து, பிராணிகளின் விருப்பங்களை நிறைவேற்றுவதே மிகப்பெரிய யாகம் என்றும், அதுவே பரமாத்மனின் மிகப்பெரிய பூஜை என்றும் அறியவேண்டும். இப்படி இருப்பவர்கள் யோக்யஜீவிகள் என்பது கருத்து.

**த்ரித$^3$ஷ ஏகாத்மகனெனிஸி பூ$^4$**
**உத$^3$க ஷிகி$^2$யொளு ஹத்து கரணதி$^3$**
**அதி$^4$பரெனிஸுவ ப்ராணமுக்$^2$யா தி$^3$த்யரொளு நெலெஸி ।**
**விதி$^3$தனாகி$^3$த்த$^3$னவரத நிர**
**வதி$^4$க மஹிமனு ஸகல விஷயவ**
**நித$^4$ன நாமக ஸங்கருணாஹ்வயதி$^3$ ஸ்வீகரிப ||3**

த்ரிதஷ = 3+10=13 ரூபங்களைக் கொண்டவனாகவும்
ஏகாத்மனெனிஸி = ஏகாத்மன் என்று பெயர் பெற்று
பூ = பூமி
உதக = தண்ணீர்
ஷிகியொளு = நெருப்பு, என இந்த மூன்று ரூபங்களாலும்
ஹத்து கரணதல்லி = கண் முதலான 10 இந்திரியங்களிலும்
அதிபரெனிஸுவ = அதன் அபிமானிகள் என்று அழைக்கப்படும்
ப்ராணமுக = வாயுதேவரே முதலான
ஆதித்யரொளு = தேவதைகளில்
நிதன நாமக = நிதன என்னும் பெயர் கொண்ட
ஸங்கருஷணாஹ்வயனு = சங்கர்ஷண நாமக பரமாத்மன்
நெலஸி = நிலைத்திருந்து
விதிதனாகித்து = ஞானிகளிக்கு தெரிபவனாக இருந்து
அனவரத = எப்போதும் இருப்பவன்
நிரவதிக மஹிமய = எல்லைகளற்ற மகிமைகளைக் கொண்டவனான
சகலவிஷயவ = இந்த தேகத்தில் அனுபவிக்கும் அனைத்து விஷய போகங்களை
ஸ்வீகரிப = ஏற்றுக் கொள்கிறான்.

முந்தைய பத்யத்தில் சொன்னவாறு, ஜீவனின் யோக்யதையை அறிந்து, அவரவர்களின் மனோபீஷ்டங்களை நிறைவேற்றினால், ஸ்ரீஹரி அதனை அன்புடன் ஏற்றுக்கொள்கிறான். ஆகையால், பகவத் பூஜையை செய்வது போலாயிற்று என்று சொல்கிறார்.

ப்ருத்வி, தண்ணீர், நெருப்பு என்று பெயருள்ள இந்த மூன்றும், அன்னம், தண்ணீர், நெருப்பு என்னும் மூன்றையும் குறிப்பால் உணர்த்தும் பெயர்கள் என்று அறியவேண்டும். இவை மூன்றிலிருந்து பிறப்பது, வாத, பித்த, ஸ்லேஷ்ம என்னும்

மூன்று தாதுக்கள். பிரளய காலத்தில், ருத்ராந்தர்கதனாக இருந்து, உலகத்தை எரித்து (அழித்து) சம்ஹாரம் செய்வதால், சங்கர்ஷண மூர்த்திக்கு, நிதன மூர்த்தி என்று பெயர்.

இத்தகைய சங்கர்ஷணன்,

* வாத பித்தாதி மூன்றில் மூன்று ரூபங்களிலும்;
* கண், காது ஆகிய 10 இந்திரியங்களில் அவற்றின் அபிமானிகளான வாயு முதலான தேவதைகளில் 10 ரூபங்களாலும்;
* மனதில் ஏகாத்மன் என்னும் ஒரு ரூபத்திலும் இருந்து,

ஞானிகளுக்கு மட்டும் தெரிந்தவாறு, அபார மகிமைகளைக் கொண்டவன் ஆகையால்,

* நாம் பிறருக்கு செய்யும் பூஜாதிகளையும்,
* நாம் அனுபவிக்கும் சுகங்களையும், * கேட்பது, பார்ப்பது முதலான அனைத்து விஷயபோகங்களையும் ஏற்றுக்கொள்கிறான்.

இப்படியாக அறிந்து, அனுபவிக்கும் விஷய போகங்களும்கூட பகவத் பூஜையே ஆகும் என்பது கருத்து.

**த$^{3}$ஹிக தை$^{3}$ஷிக காலிக த்ரய**
**க$^{3}$ஹன கர்மக$^{3}$ளுண்டு இத$^{3}$ரொளு**
**விஹித கர்மக$^{3}$ளரிது நிஷ்காமகனு நீனாகி$^{3}$ |**
**ப்$^{3}$ருஹதி நாமக பா$^{4}$ரதீஷன**
**மஹித ரூபவ நெனெது$^{3}$ மனத$^{3}$லி**
**அஹரஹர் ப$^{3}$க$^{3}$வந்தக$^{3}$ர்ப்பிஸு பரமப$^{4}$கு$^{3}$தி$^{1}$யலி ||4**

தஹிக = தேக சம்பந்தமாக
தைஷிக = தேச சம்பந்தமாக
காலிக = கால நேரம் சம்பந்தமாக
த்ரய = இந்த மூன்றை
கஹன கர்மகளுண்டு = செய்யவேண்டிய கர்மங்கள் உள்ளன
இதரொளு = இவற்றில்
விஹித கர்மகளரிது = கண்டிப்பாக செய்யவேண்டிய கர்மங்களை அறிந்து
நிஷ்காமகனு = பலனை எதிர்பார்க்காமல்
நீனாகி = நீ இரு
ப்ருஹதி நாமக = 72000 நாடிகளில் இருக்கும் ப்ருஹதி நாமகனான
பாரதீஷன = முக்யபிராணதேவரின்
மஹித ரூபவ = மிகச்சிறந்த ரூபங்களை
மனதலி = மனதில்
நெனெது = நினைத்து (சிந்தித்து)
அஹரஹ = தினந்தோறும்

பகவந்தகர்ப்பிஸு = பகவந்தனுக்கு அர்ப்பணம் செய்
பரமபகுதியலி = மிகுந்த பக்தியுடன்

மனிதர்கள் செய்யவேண்டிய கர்மங்கள் மூன்று விதங்கள். அவை:

* தைஹிக -> தேகத்தால் செய்யவேண்டிய செயல்கள். உதாரணம் நமஸ்காரங்கள்.
* தேஷிக -> தேச சம்பந்தமானவை. உதாரணம் காசி முதலான க்ஷேத்திரங்களுக்கு செல்லும்போது அங்கு செய்யவேண்டிய தீர்த்த ஸ்ரார்த்தம் ஆகியவற்றை செய்வது
* காலிக -> கால சம்பந்தமானவை. உதாரணம்: சந்தியாவந்தனம், சிரார்த்தம், சங்கிரமணங்களில் செய்யும் தர்ப்பணம் ஆகியவை.

இப்படி மூன்று விதமான கர்மங்களில் விதிப்படி அனைத்து கர்மங்களையும் செய்ய வேண்டுமெனில் அது மிகவும் கஷ்டமான காரியமாகும். ஆகையால், இந்த மூன்று வித கர்மங்களில் நமக்குத் தகுதியான கர்மங்கள் என்றால், எந்த செயல்களை நாம் கண்டிப்பாக செய்ய வேண்டுமோ அவற்றை அறிந்து, பலன்களை எதிர்பாக்காமல், பகவத் ப்ரீதிக்காக மட்டும் செய்யவேண்டும்.

மேலும் 72,000 நாடிகளில் இருக்கும் வாயுதேவருக்கு ப்ருஹதி என்று பெயர். இத்தகைய ப்ருஹதி சந்தஸ்ஸிற்கு புகழ்பெற்ற ப்ருஹதி நாமகனாத வாயுதேவரை சிந்தித்து, அவரின் அந்தர்யாமியான பகவந்தனுக்கு, தினந்தோறும் நாம் செய்யும் கர்மங்களை மிகுந்த பக்தியுடன் சமர்ப்பிக்க வேண்டும்.

**மூருவித[4] கர்மக[3]ளொளகெ[3] கம்**
**ஸாரி பா[4]ர்க[3]வ ஹயவத[3]ன ஸ**
**ம்ப்ரேரகனு தானாகி[3] நவ ரூபங்க[3]ளனெ த[4]ரிஸி |**
**ஸூரி மானவ தா[3]னவரொளு வி**
**காரஷூன்யனு மாடி[3] மாடி[3]ஸி**
**ஸாரபோ[4]க்தனு ஸ்வீகரிஸி கொடு[3]திப்ப ஜீவரிகெ[3] ||5**

மூருவித கர்மகளொளகெ = முந்தைய பத்யத்தில் கூறிய மூன்று வித கர்மங்களில் (தைஹிக, தேசிக, காலிக)
கம்ஸாரி = ஸ்ரீகிருஷ்ணன்
பார்கவ = பரசுராமன்
ஹயவதன = ஹயக்ரீவ என்னும் மூன்று ரூபங்கள்
சம்ப்ரேரகனு = இருந்து வழி நடத்துகிறான்
தானாகி நவ ரூபங்களனெ தரிஸி = கிருஷ்ண ரூப 3, பரசுராம ரூப 3, ஹயக்ரீவ ரூப 3 என மொத்தம் 9 ருபங்களை தரித்து
ஸூரி = தேவதைகளில்
மானவ = மனிதர்களில்
தானவரொளு = தைத்யர்களில் இருந்து
விகார ஷூன்யனு = விகாரம் இல்லாதவனாக

மாடி மாடிஸி = தேவ மானவ தானவர் செய்யும் சாத்விக ராஜஸ தாமஸ கர்மங்களை செய்து செய்வித்து
சாரபோக்தனு ஸ்வீகரிஸி = அந்த சாத்விக கர்மங்களின் பலன்களை ஏற்றுக்கொண்டு
ஜீவரிகெ = ஜீவர்களுக்கு
கொடுதிப்ப = கொடுக்கிறான்

தைஹிக, தைசிக, காலிக என்னும் கர்மங்கள், சாத்விக, ராஜஸ, தாமஸ என்னும் மூன்றுவித ஜீவராசிகளில் தனித்தனியாக இருக்கிறது. மூன்று வித ஜீவராசிகள் என்றால் தேவதைகள், மனிதர், தைத்யர்கள் என்று பொருள். தைஹிக கர்மங்களுக்கு தலைவன் கிருஷ்ணரூபியான பரமாத்மன். தேஷிக கர்மங்களின் தலைவன் பரசுராமன். காலிக கர்மங்களின் தலைவன் ஹயக்ரீவன். இந்த மூன்று வித ஜீவர்களில் மூன்று வித கர்மங்களை நடத்துபவனாக, 3*3=9 ரூபங்களால் அங்கங்கு நிலைத்திருக்கிறான்.

சாத்விகாதி சரீரங்களில் இருந்து, தான் விகாரம் இல்லாதவனாக இருக்கிறான். மூன்று வித ஜீவராசிகள் செய்யவேண்டிய கர்மங்களை, அவர்களுக்குள் இருந்து தான் செய்து, அவர்கள் மூலமாகவும் செய்வித்து, அனைத்தின் சாரங்களையும் ஏற்றுக்கொள்பவனான ஸ்வாமி, அவரவர்களின் பூஜா த்வேஷாதிகளுக்கேற்ப பலன்களைக் கொடுப்பதற்காக சாத்விகர்கள் செய்யும் சாத்விக பூஜாதிகளை, மனுஷ்யர்கள் செய்யும் ராஜஸ பூஜாதிகளை, தாமஸர் செய்யும் த்வேஷாதிகளை தான் ஏற்றுக்கொண்டு, அந்தந்த கர்மங்களுக்கேற்ப அவர்களுக்கு பலன்களைக் கொடுக்கிறான்.

**அனலபக்வவகை$^3$ஸி த$^3$ன்னவ**
**அனலனொளு ஹோமிஸுவ தெரன**
**ந் த$^3$னிமிஷேஷனு மாடி$^3$ மாடி$^3$ஸித$^3$கி$^2$ல கர்மக$^3$ள |**
**மன வசன காயத$^3$லி திளித$^3$னு**
**தி$^3$னதி$^3$ கொடு$^3$ ஷங்கிஸதெ$^3$ வ்ருஜினா**
**ர்த்த$^3$ன ஸதா$^3$ கைகொண்டு$^3$ ஸந்தைஸுவனு தன்னவர ||6**

அனல = நெருப்பினால்
பக்வவகைசி = சமைத்த
அன்னவனு = அன்னத்தை
அனலனொளு = அந்த நெருப்பிலேயே
ஹோமிஸுவ தெரதந்தெ = ஹோமம் செய்வதைப் போல
அனிமிசேஷனு = தேவேஷன்
மாடி மாடிஸித = செய்து, செய்வித்த
அகிள கர்மகள = அனைத்து கர்மங்களையும்
மனவசன காயதலி = மனம், வசனம், தேகத்தால்
திளிது = செய்த கர்மங்களை பரமாத்மனே செய்தான் என்பதை அறிந்து
அனுதினதி = தினந்தோறும்

ஷங்கிஸதெ = சந்தேகம் இல்லாமல்
கொடு = சமர்ப்பணம் செய்தால்
வ்ருஜனார்த்தன = கஷ்டங்களை பரிகரிக்கும் பரமாத்மன்
ஸதா = அனைத்து காலங்களிலும்
கைகொண்டு = ஏற்றுக்கொண்டு
தன்னவர = தன் பக்தர்களை
ஸந்தயிஸுவனு = பாதுகாக்கிறான்.

நமக்குள் இருந்துகொண்டு, பரமாத்மன் செய்து, செய்விக்கும் கர்மங்களை பரமாத்மனுக்கே சமர்ப்பணம் செய்யவேண்டும் என்பதை ஆதாரத்துடன் விளக்குகிறார்.

அக்னியில் நிலைத்திருக்கும் ஸ்ரீபரசுராம தேவரே, அன்னாதிகளை சரியான பதத்தில் இருக்கச் செய்கிறார். அதாவது, நாம் அடுப்பை ஏற்றி, நெருப்பினால் அன்னாதிகளை சமைக்கிறோம் அவ்வளவே. அந்த பக்குவத்தைக் கொடுக்கும் சக்தி அக்னிதேவருக்கு இல்லை ஆகையால், அக்னி அந்தர்யாமியாக இருந்து, பரசுராம தேவர் செய்கிறார் என்று பொருள். அதே அன்னத்தையே பரமாத்மனுக்கு நைவேத்தியம் செய்து மற்றும் வைஸ்வதேவம் செய்யும்போது அக்னி அந்தர்கத பரசுராமாத்மக பரமாத்மனுக்கு சமர்ப்பிக்கும் சம்பிரதாயம் இருக்கிறது அல்லவா? இதைப் போலவே, பரமாத்மன் நம் மனோ, வாக், காயங்களில் இருந்துகொண்டு செய்யும் செய்விக்கும் அனைத்து புண்ணிய பாபாதி கர்மங்களை பரமாத்மனுக்கு அர்ப்பிக்கலாமோ கூடாதோ என்னும் சந்தேகமே படாமல், அவனுக்கு சமர்ப்பித்தால், பாவங்களைப் போக்குபவனான ஸ்ரீபரமாத்மன் தான் அனைத்து காலங்களிலும் அவற்றை ஏற்றுக்கொண்டு, பாவங்களை சுட்டுப் பொசுக்கி, புண்யபலன்களை பக்தர்களுக்குக் கொடுத்து அவர்களை பாதுகாக்கிறான்.

**குது3ரெபா3லத3 கொனெய கூத3ல**
**துதி3 விபா4க3வ மாடி3 ஷத1வித4**
**அத3ரொளொந்த3னு நூரு பா4க3வ மாட3லெந்தி1ஹுதோ3 ।**
**விதி4 ப4வாதி3 ஸமஸ்த தி3விஜர**
**மொத3லுமாடி3 த்ருணாந்த ஜீவரொ**
**ளதி4க ன்யூனதெ இல்லவெந்தி3கு3 ஜீவ பரமாணு ।।7**

குதுரெபாலத கொனெய கூதல = குதிரையின் வாலின் முடியின் இறுதி பாகத்தை
ஷதவித = நூறு விதமாக
துதி விபாகவ மாடி = அந்த நுனியை பிரித்து
அதரொளொந்தனு = அவற்றில் ஒரே ஒரு பாகத்தை எடுத்து
நூறு பாகவ மாடலு = அதை நூறு பாகங்களாகப் பிரித்தால்
எந்திஹுதோ = எவ்வளவு இருக்குமோ (என்ன அளவில் இருக்குமோ)
விதிபவாதி = பிரம்ம ருத்ரர் முதலான
ஸமஸ்த திவிஜர மொதலு மாடி = அனைத்து ஜீவர்களில் தொடங்கி

த்ருணாந்த ஜீவரொளு = த்ருண (கிருமி) வரைக்குமான அனைத்து ஜீவர் வரை, அவர்களுக்குள்
எந்திகு = எப்போதும்
ஜீவபரிமாணு = ஜீவரின் அளவு
அதிகன்யூனதெ இல்ல = அதிகமோ குறைவோ இல்லை.

ஜீவர்களில் பரமாத்மன் பரமாணுவான பற்பல ரூபங்களில் வசிக்கிறான் என்னும் பகவன் மஹிமையை முந்தைய பத்யத்தில் சொல்லிவிட்டு, இந்த பத்யத்திலிருந்து ஜீவரின் அளவினை சொல்கிறார்.

குதிரையின் வால்முடியில் ஒரு முடியை எடுத்து, அதன் நுனியை, நூறு பாகங்களாகப் பிரித்து, அதன் ஒரு பாகத்தை மட்டும் எடுத்து, மறுபடி அதை நூறு பாகங்களாகப் பிரித்தால், அந்த ஒரு துண்டு எந்த அளவில் இருக்குமோ, அந்த அளவிலேயே; பிரம்மனில் துவங்கி கிருமி ஜீவரின் வரைக்கும், அனைத்து ஜீவர்களின் ஸ்வரூபத்தின் அளவு இருக்கும். பிரம்மாதி ஜீவரின் அளவு பெரியதாக இருக்கட்டும், கிருமி ஜீவரின் அளவு சிறியதாக இருக்கட்டும், இந்த ஸ்வரூபத்தின் அளவு அதிகமாகவோ குறைவாகவோ இருப்பதில்லை.

அஷ்வ வாலாக்ரமாதாய விபஜ்ய ஷததாஹிதத் |
புனஸ்ச ஷததாபின்னம் கியன்மானம் பவிஷ்யதி ||
தாவத்பிரம்மாதி ஜீவானாம் பரினாணம் ப்ரகீர்த்திஷம் ||

என்னும் தத்வசாரத்தின் வாக்கியமே இதற்கு ஆதாரமாகும். இந்த ஸ்லோகத்தின் அர்த்தம் அப்படியே இந்த பத்யத்தில் வந்திருக்கிறது.

**ஜீவனங்கு3ஷ்டா2ங்க்3ர மூருதி**
**ஜீவனங்கு3ட மாத்ர மூருதி**
**ஜீவன ப்ராதே3ஷ ஜீவாகார மூர்த்திக3ளு |**
**ஏவமாதி3 அனந்த ரூபதி3**
**யாவ த3வயவக3ளொளு வ்யாபி1ஸி**
**கா1வ கருணாளுக3ள தே3வனு ஈ ஜக3த்ரயவ ||8**

ஜீவன அங்குஷ்டாக்ர மூருதி = கட்டை விரலின் நுனி மாதிரியான அளவில் பகவன் மூர்த்தி
ஜீவனங்குஷ்ட மாத்ர மூருதி = கட்டை விரலின் அளவிலான பகவன் மூர்த்தி
ஜீவன ப்ராதேஷ = கட்டை விரலுக்கும் ஆள்காட்டி விரலுக்குமான உயர வித்தியாச அளவிற்கு
ஜீவாகார மூர்த்திகளு = ஜீவனின் அளவிற்கு உயரமான மூர்த்திகள்
ஏவமாதி = இவை முதலான
அனந்த ரூபதி = அனந்த ரூபங்களால்
யாவதவயவகளொளு = அனைத்து அங்கங்களிலும்
வியாபிஸி = நிலைத்திருந்து
கருணாளுகள தெய்வனு = கருணாபூர்ணனான ஸ்ரீஹரி

ஈ ஜகத்ரயவ = மூன்று உலகங்களையும்
காவ = காப்பாற்றுகிறான்.

ஜீவன், பரமாணு ரூபமானவன் என்று முந்தைய பத்யத்தில் சொல்லி, இந்த பத்யத்தில் ஜீவனைவிட மிகவும் சிறியதான அளவில் ஜீவனில் இருக்கிறான் என்று சொல்கிறார்.

குதிரையின் முடியில் நுனியை நூறாகப் பிரித்து, அதில் இருக்கும் ஒரு முடியை மறுபடி நூறாகப் பிரித்தால், வரும் அளவிற்கு ஜீவனின் அளவு இருக்கும் என்று கூறியிருந்தார். அத்தகைய ஜீவனின் கையின் கட்டைவிரலின் நுனி அளவிற்கு உருவம் உள்ள மூர்த்திகள் சில, சில மூர்த்திகள் கட்டை விரலின் அளவிற்கு இருக்கும். ஜீவனின் முழுமையான உயரத்திற்கு சில மூர்த்திகள். இப்படி பற்பல ரூபங்களால் ஜீவனின் அனைத்து அங்கங்களிலும் வியாபித்து கருணாபூர்ணனான ஸ்ரீஹரி மூன்று உலகங்களையும் காப்பாற்றுகிறான்.

தத்கர்ணிகாமூலதேஷே ஜீவாங்குஷ்டாக்ர மானத: |
மூலேஷ இதிக்யாத: ||

ஆகிய முக்தி தத்வ கிரந்த வாக்கியங்களால் ஜீவனின் இதயத்தில் அஷ்டதள தாமரையின் நடுவில், ஜீவனின் கட்டை விரல் நுனியின் அளவு கொண்ட ரூபத்தினால் மூலேஷ என்னும் பெயரில் வசிக்கிறான். அந்த மூர்த்தியின் பின்பக்கத்தில் ஜீவனின் கட்டைவிரல் அளவு கொண்ட ரூபத்தினால், அந்த மூர்த்தியின் பின்பக்கத்தில் ப்ராணேஷ நாமக பரமாத்மன் இருக்கிறான் என்னும் அர்த்தம் வருகிறது. ஜீவனின் அனைத்து அங்கங்களிலும் அனந்தானந்த ரூபங்களால் இருக்கிறான் என்று விஷயத்தில் தைத்திரிய பாஷ்யத்தில் சொல்லியிருக்கும்

விஷ்ணோரங்கானி ஜீவாங்கேஷ்யவச்சின்னானி ஸர்வஷ: |
வாஸுதேவோ ஹரே: சீர்ஷம் ஜீவ சீர்ஷே வ்யவஸ்தித: நாராயணோ ஹரேர்மத்யம் ஜீவ ஸந்தேஹ ஸம்ஸ்தித: |

ஆகிய ஆதாரங்களால், பரமாத்மனின் ரூபங்கள் ஜீவனின் அனைத்து அங்கங்களிலும், ஒவ்வொரு அங்கத்திலும் தனித்தனியாக பகவத்ரூபங்கள் இருக்கின்றன என்று அறியவேண்டும். ஜீவனின் ஸ்வரூப தேஹாகாரனாக, ஜீவனின் ஸ்வரூப தேகத்தை வியாபித்து ஸ்ரீபரமாத்மன் இருக்கிறான். அந்த பரமாத்மனின் சிரஸில் வாசுதேவ ரூபி வசிக்கிறான். அதே பரமாத்மனின் சிரஸே ஜீவனின் சிரஸிலும் இருக்கிறது. அங்கு வாசுதேவ மூர்த்தி இருக்கிறான். நாராயணன், ஜீவனின் தேஹாகாரனான பரமாத்மனின் நடு பாகத்தில் இருக்கிறான். நாராயணனே ஜீவனின் நடுப்பாகத்திலும் இருக்கிறான். இதே பிரகாரம், வலது பக்கத்தில் பிரத்யும்ன, இடது பக்கத்தில் அனிருத்த இருக்கிறான். இப்படியாக, அனந்தமான பரமாணு ரூபங்களால் ஜீவனின் ஸ்வரூப தேகத்தில் பரமாத்மன் இருக்கிறான் என்று அறியவேண்டும்.

**பி$^{3}$ம்ப$^{3}$ ஜீவாங்கு$^{3}$ஷ்ட மாத்ரதி$^{3}$**
**இம்பு$^{3}$ கொண்டி$^{3}$ஹ ஸர்வரொளு ஸூ**
**க்ஷ்மம்ப$^{3}$ரதி$^{3}$ ஹ்ருத்க$^{1}$மல மத்$^{4}$ய நிவாஸியெந்தெ$^{3}$னிஸி |**
**எம்ப$^{3}$ரீதகெ$^{3}$ கோவித$^{3}$ரு வி**
**ஷ்வம்ப$^{4}$ராத்மக ப்ராக்ஞு ப$^{4}$க்தகு**
**டும்பி$^{3}$ ஸந்தெயிஸுவனு ஈபரி ப$^{3}$ல்ல ப$^{4}$ஜகரனு ||9**

பிம்ப = பிம்பரூபியான ஶ்ரீபரமாத்மன்
ஜீவாங்குஷ்ட மாத்ரதி = ஜீவனின் கட்டை விரல் அளவில்
இம்புகொண்டிஹ = நிலைத்திருக்கிறான்
ஸர்வரொளு = அனைவருக்குள்ளும்
ஸூக்ஷாம்பரதி = சூக்ஷ்மமான இதயம் என்னும் ஆகாயத்தில்
ஹ்ருத்கமல மத்ய நிவாஸி எந்தெனிஸி = இதயத்தாமரையில் நடுவில் இருப்பவன் என்று சொல்லிக்கொண்டு
கோவிதரு = ஞானிகள்
ஈதகெ = இந்த பகவத்ரூபத்தை
விஷ்வம்பராத்மக ப்ராக்ஞு = விஷ்வம்பர, ஆத்மா, ப்ராக்ஞு என்னும் மூன்று பெயர்களைக் கொண்டிருக்கிறான் என்று
யெம்பரு = சொல்வர்
ஈ பரி = இப்படியாக
பல்ல = அறிந்த
பஜகரனு = தன் பக்தர்களை (தன்னை பஜிப்பவர்களை)
பக்த குடும்பி = பக்தர்களைக் காப்பவன்
சந்தெயிஸுவனு = காப்பாற்றுவான்

பிம்பரூபியான ஶ்ரீபரமாத்மனின் லட்சணங்களை இங்கு சொல்கிறார்.

ஸ்தூலாங்குஷ்டமிதோ தேஹே ஜீவாங்குஷ்டமிதோ ஹ்ருதி - என்று காடக உபநிஷத்தில் சொல்லப்பட்டிருக்கிறது. இந்த ஆதாரத்தின்படி, பரமாத்மன் ஸ்தூல தேகத்தில், இதயாகாஷத்தில், ஸ்தூல தேகத்தின் கட்டைவிரல் உயரத்திற்கேற்ப உள்ள ரூபத்தினால் இருக்கிறான். இதே போல, ஜீவனின் ஸ்வரூபதேகத்தின் அதி சூக்ஷ்மமான ஹ்ருதயாகாஷத்தில், ஜீவனின் கட்டைவிரல் உயரத்திற்கேற்ப ரூபத்திற்கேற்ப இருக்கிறான் என்று அறியவேண்டும்.

இவன், சூஷ்மமான இதயகமலத்தில் நடுவில் இருப்பதால் இவனை ‘ஹ்ருத்கமல மத்ய நிவாஸி’ என்பர். இவனையே ஞானிகள் விஷ்வம்பர மூர்த்தி என்றும், ஆத்ம மூர்த்தி என்றும், ப்ராக்ஞு மூர்த்தி என்றும் சொல்வார்கள். இந்த ஸ்வாமி, தன் பக்தர்களை அன்புடன் பாதுகாப்பதால், பக்தகுடும்பி என்று அழைக்கப்படுகிறான். உலகத்தையே பாதுகாப்பதால், பக்தர்களை அன்புடன் பாதுகாக்கிறான் என்பது கருத்து. இப்படியாக அறிந்து யார் பரமாத்மனை ஸ்தோத்திரம் செய்கிறார்களோ அவரை அனைத்து விதங்களிலும் பரமாத்மன் மகிழ்ச்சிப்படுத்துகிறான்.

**புருஷ நாமக சர்வஜீவரொ**
**ளிருவ தே[3]ஹாகா[1]ர ரூபதி[3]**
**கரண நிய்யாமக ஹ்ருஷீகப னிந்த்ரியங்க[3]ளலி |**
**துரிய நாமக விஷ்வ தா ஹ**
**ந்னெரடு[3] பெ[3]ரளுளிது[3]த்தமாங்க[3]தி[3]**
**எரட[3]தி[4]க[1] எப்பத்துஸாவிர நாடிக[3]ளொளிப்ப ||10**

புருஷ நாமக = புருஷ நாமகனான பரமாத்மன்
சர்வஜீவரொளிருவ = அனைத்து ஜீவர்களிலும் இருக்கிறான்
தேஹாகார ரூபதி = ஜீவனின் ஸ்வரூப தேகம் எந்த ரூபத்தில் இருக்கிறதோ அதே ரூபத்தினால்
இருவ = இருக்கிறான்
ஹ்ருஷீகப = இந்திரியங்களை பாதுகாப்பதால், ஹ்ருஷிகேஷ என்னும் பெயருள்ள பரமாத்மன்
கரண நியாமக = இந்திரியங்களை நடத்துபவனாக, அந்த இந்திரியங்களில் இருக்கிறான்
துரிய நாமக விஷ்வ = துரிய என்னும் பெயருள்ள விஸ்வ மூர்த்தி
ஹன்னெரடு பெரளுளிதுத்தமாங்கதி = தலைமேல் 12 அங்குல நீளமாக
எரடதிக எப்பத்து ஸாவிர நாடியொளகெ = 72,000 நாடிகளுக்குள்
இப்ப = அந்த அனைத்து நாடிகளுக்குள்ளும் இருக்கிறான்

புருஷ நாமகனான ஸ்ரீபரமாத்மன், ஜீவனின் ஸ்வரூப தேகம் எந்த உருவத்தில் இருக்கிறதோ, அதாவது, மனிதனாக இருக்கிறதோ, மிருகமாக இருக்கிறதோ, பறவையோ, அந்த ஜீவனின் ஸ்வரூபத்தை அனுசரித்து அனைத்து ஜீவர்களின் தேகங்களில் இருக்கிறான். இந்திரியங்களில் இந்திரியங்களை வழி நடத்துபவனாக ஹ்ருஷிகேஷ நாமக பரமாத்மன் இருக்கிறான். விஷ்வ நாமகன், துர்ய நாமத்தினால் தலைக்கு மேல் 12 அங்குலம் நீளத்தில் இருக்கிறான். இந்த விஷயத்தைப் பற்றி, 8ம் சந்தி 3ம் பத்யத்தின் அர்த்தத்தில் விளக்கியிருக்கிறோம். இதுமட்டுமல்லாமல், தேகத்தில் இருக்கும் 72,000 நாடிகளிலும் பரமாத்மன் இருக்கிறான். துர்ய, விஷ்வ, இந்த ரூபங்களை சொல்வதால் 'பரமாத்மா சதூரூப: ஸர்வப்ராணி: ஷரீரக:' என்னும் பிரமாணத்திற்கேற்ப விஷ்வ, தைஜஸ, ப்ராக்ஞ, துர்ய என்னும் 4 ரூபங்களால் ஜீவர்களின் தேகத்தில் இருக்கிறான் என்று பொருள்.

**வ்யாபகனு தானாகி[3] ஜீவ ஸ்வ**
**ரூபதே[3]ஹவ ஔஹொரகெ[3] நி**
**ர்லேபனாகி[3]ஹ ஜீவக்ருத கர்மக[3]ளனாசரிஸி |**
**ஸ்ரீபயோஜ ப[4]வேரரிந்த்ர ப்ர**
**தீ[3]ப வர்ண ஸ்வமூர்த்தி மத்[4]யக[3]**
**தா பொளெவ விஷ்வாதி ரூபதி[3] ஸேவே கைகொ[3]ளுத ||11**

ஜீவ ஸ்வரூபதேஹவ வளஹொரகெ = ஜீவனின் ஸ்வரூப தேகத்தின் உள்ளேயும் வெளியேயும்

வியாபகனு தானாகி = நிலைத்திருப்பவன் தானேயாகி
ஜீவக்ருத கர்மகளனு = ஜீவன் செய்யும் கர்மங்களை
ஆசரிஸி = செய்து
நிர்லிப்தனாகிஹ = அதன் பலன்களில் சம்பந்தப்படாமல் இருக்கிறான்
ஸ்ரீபயோஜ பவேரரிந்த = லட்சுமிதேவி, பத்ம சம்பவனான பிரம்ம தேவர், வாயுதேவர் ஆகியோரிடமிருந்து
சேவெகைகொளுத = சேவைகளை ஏற்றுக்கொண்டு
ப்ரதீபவர்ண = அப்ராக்ருத வண்ணங்களாலான
விஷ்வாதி ரூபதி = விஷ்வாதி ரூபங்களால்
ஸ்வமூர்த்தி மத்யக = ஸ்வரூபங்களின் நடுவில், மூலரூபி நாராயணன்
தா = தான்
பொளெவ = ஒளிர்கிறான்

ஜீவனின் ஸ்வரூப தேகத்தின் உள்ளேயும் வெளியேயும் பரமாத்மன் வியாப்தனாக இருந்து, ஜீவனின் யோக்யதைக்கேற்ப, அவரவர்கள் செய்யவேண்டிய கர்மங்களை தான் செய்து, செய்வித்து, ஸ்தூல தேகத்தில் நிலைத்திருந்து, தான் எதற்கும் சம்பந்தப்படாதவாறு இருக்கிறான்.

லட்ஷ்மீதராப்யா மாஷ்லிஷ்ட: ஸ்வமூர்த்திகண மத்யக: |
மூர்த்தியோஷ்டவபி த்யேயாஷ்வக்ர ஷங்கவராபயை: ||
முக்தா: ப்ரதீப வர்ணஸ்ச சர்வாபரண பூஷிதா: |

ஆகிய தந்த்ரசார பிரமாணத்தின்படி, இந்த சரீரத்திலும், ஸ்வரூப தேகத்திலும் விஷ்வ, தைஜஸ, ப்ராக்ஞ, துர்ய, ஆத்ம, அந்தராத்ம, பரமாத்ம, ஞானாத்ம என்னும் 8 ரூபங்களும், சக்ர சங்குகளை இரு கைகளில் தரித்தவாறு, அபய, வரத கைகளைக் கொண்டு, சர்வாபரண பூஷிதனாக ஒளிர்ந்தவாறு, பிம்பரூபியான ஸ்ரீமன் நாராயணன், ஸ்ரீதேவி, பூதேவி சமேதனாகி பிரம்ம வாயுகளால் வணங்கப்படுகிறான் என்று ஸ்ரீமதாசார்யரின் வாக்கியத்தினால் தெரிகிறது. ஜீவனின் ஸ்வரூபத்திலும், பரமாத்மனின் பிரவேசத்தை அறிந்தாலேயே ‘வ்யாபகனு தானாகி’ என்பதன் அர்த்தம் புரிகிறது.

**க3ருட ஸேஷ ப4வாதி நாமவ**
**த4ரிஸி பவன ஸ்வரூப தே3ஹதி3**
**கரண நிய்யாமகனு தானாகி3ப்ப ஹரியந்தெ1 |**
**ஸரஸிஜாஸன வாணி பா4ரதி**
**ப4ரதனிந்தொ3ட3கூ3டி3 லிங்க3த3**
**லிருதிஹரு மிக்காதி3 தே1யரிகி3ல்லவாஸ்தா2ன ||12**

கருட சேஷ பவாதி = கருட, சேஷ, ருத்ர முதலான
நாமவ = பெயர்களை
தரிஸி = தரித்து
பவன = வாயுதேவர்

ஸ்வரூபதேஹதி = ஜீவர்களின் ஸ்வரூப தேகத்தில்
கரண நியாமக = இந்திரியங்களை வழி நடத்துபவனாக
ஹரியந்தெ = பரமாத்மனைப் போல
இப்ப = இருக்கிறான்
ஸரஸிஜாஸன = பிரம்மதேவரின்
வாணி = சரஸ்வதி தேவி
பாரதி = பாரதி தேவியர், இந்த மூவரும்
பரதனிந்த ஒடகூடி = வாயுதேவருடன் சேர்ந்து
லிங்கதலி = ஜீவனின் லிங்கதேகத்தில், நியாமகராக இருக்கிறார்கள்
மிக்க = மற்ற
ஆதி தேயரிகெ = தத்வாபிமானி தேவதைகளுக்கு
ஆஸ்தான = லிங்கசரீரத்தில் இருக்கும் நிலை இல்லை.

ஜீவனின் ஸ்வரூப தேகத்தில் இந்திரியங்களின் வழி நடத்துபவனாக, வாயுதேவர் இருக்கிறார் என்று சொல்கிறார். வாயுதேவர், அஹங்கார தத்வாதிகளுக்கு அபிமானிகளான கருட, சேஷ, ருத்ர, ஆகியோருடன் 'ஆதி' என்றதால், அனைத்து தேவதைகளையும் எடுத்துக்கொள்ள வேண்டும். இத்தகைய தத்வாபிமானி தேவதைகளின் ரூபத்தை தாமே ஸ்வீகரித்து ஸ்ரீபரமாத்மன் எப்படி ஜீவனின் ஸ்வரூப-அந்த:கரணங்களின் தலைவனாக இருக்கிறானோ, அப்படியே, வாயுதேவர் இந்திரிய ப்ரேரகனாக இருக்கிறார். ஆனால், முக்கிய தலைவன் பரமாத்மன். அந்த பரமாத்மனின் வசத்தில், ஜீவன் செய்யவேண்டிய காரியங்களை, சேவகர்கள் ராஜகாரியங்களை செய்வதுபோல, இதர தேவதைகளையும் வசப்படுத்திக்கொண்டு இருக்கிறான்.

வாயுதேவருக்கு ஸ்வரூப தேகத்தில் பிரவேசம் இல்லை என்பது சிலரின் அபிப்பிராயம். தாசராயர் இந்த பத்யத்தில் 'ஹரியந்தெ பவன' என்னும் வாக்கியத்தால், வாயுதேவருக்கு பரமாத்மனைப் போலவே ஸ்வரூப தேகத்தில் பிரவேசம் உண்டு என்று நிரூபித்திருக்கிறார். இதற்கு ஆதாரமாக ஸ்ரீமதாசார்யரின் வாக்கியமும் இருக்கிறது. நியாயவிவரணத்தில்

இந்த்ரியஸ்த்யை: ஸ்வரூபைஸ்து | ஸூக்ஞானம் ஜனயத்யஸௌ ||
மனஸ்தேன விசேஷேண | காம்யை: கர்ம க்ருதேவஸ: ||
ப்ருதக் ஸ்திதேன ரூபேண | ஜீவம் தாரயதிப்ரபு: ||
ஜீவஸ்திதேன ரூபேண | வேதயத்யஹ மித்யபி ||
ப்ராண ஏகோ வதீனித்யம் | பாஹ்யந்த: கரணேஷ்வர: ||
தான்யேதானிவஷான்யேவ | ததாபி க்ருபமைவஸ: ||
ப்ருதக் ஷக்தோபி தத்கைஸ்து | ஸ்வரூபைஸ்தத்க கார்யக்ருத் ||
தஸ்யேஷோ பகர்வா விஷ்ணுரேவமேவ யதாக்ரமம் ||

ஜீவனின் ஸ்வரூப தேகத்தில் வாயுதேவர், இந்திரியாபிமானி தேவதைகளின் ஸ்வரூபங்களை தரித்து, ஜீவன் செய்யவேண்டிய காரியங்களை செய்து, செய்விக்கிறார். மனதின் அபிமானி ரூபத்தினால், ஜீவருக்கு ஞானத்தைக்

கொடுக்கிறார். பகவத் சன்னிதானத்தைக் கொண்ட முக்யபிராண ரூபத்தினால் ஜீவனை தரித்து இருக்கிறார். ஜீவனின் ஸ்வரூப தேகத்தின் இந்திரியங்களில் இருக்கும் ரூபத்தினால், நான் என்னும் அபிமானத்தை பிறக்கச் செய்கிறார். இப்படியாக பிராண தேவர் ஒருவரே அனைவரையும் வசப்படுத்தியிருப்பதால் வஷீ என்று பெயர் பெற்றிருக்கிறார். ஸ்வரூப தேகத்தின் இந்திரியங்களுக்கும், வெளிப்புற லிங்க சரீரத்தின் இந்திரியங்களுக்கும்கூட அதிபதியாக இருக்கிறார்.

இந்திரியங்கள் அனைத்தும் வாயுதேவரின் வசத்திலேயே இருக்கின்றன. தமக்கு தம் ரூபத்தினாலேயே அனைத்து இந்திரியங்களையும் நிர்வகிக்கும் சக்தி இருந்தாலும், தத்வாபிமானி தேவதைகளின் மேல் உள்ள கருணையால், வெவ்வேறு தத்வாபிமானி தேவதைகளின் ரூபத்தை தரித்து, கண், காது முதலான இந்திரியங்களால் செயல்களை செய்விக்கிறார். இத்தகைய வாயுதேவருக்கு தலைவன், பரமாத்மன் ஒருவனே என்று நியாயவிவரணத்தின் வாக்கியம் அர்த்தம் சொல்கிறது.

இதைத்தவிர, பாகவத தாத்பர்ய தீபிகாவில்:

ஸ்வரூபேந்த்ரிய தேஹேஷு மாதரிஷ்வாபிதானத: |
தத்தே லிங்கஷரீரஸ்த: ஸூத்ரனாமா மஹாப்ரபு: ||

ஜீவனின் ஸ்வரூப தேகத்தின் இந்திரியங்களில் மாதரிஷ்வா என்னும் பெயரிலும், லிங்க சரீரத்தில் ஸூத்ர என்னும் பெயரிலும் வசிக்கிறார் என்று சொல்லும் பவமான சம்ஹிதாவின் ஆதாரத்தை சொல்லியிருக்கிறார்.

தாசராயர் இங்கு சொல்லியிருக்கும் வாக்கியம் மேற்சொன்ன ஆதாரங்களால் நிரூபிக்கப்பட்டுள்ளது என்று அறியலாம். லிங்க சரீரத்தில் பிரம்ம, சரஸ்வதி, பாரதி, மற்றும் பரத என்றால் வாயுதேவர், ஆகியோர் இருக்கின்றனர். இந்த தேகத்தில் இதர தத்வாபிமானி தேவதைகளுக்கு பிரவேசம் இல்லை.

ரதத்வாத்பாத்மகே விஷ்ணௌவதவாபி ஸ்வயம் ப்ருதே: |
பரதோ வாயுருத்திஷ்டோ பாரதீ தத்ஸரவஸ்தி ||

என்னும் பாகவத 10ம் ஸ்கந்த தாத்பர்யத்தின்படி 'ப4' என்னும் பரமாத்மனில் நிலைத்திருப்பதால் 'பரத' என்ற பெயரைப் பெற்றிருக்கிறார் என்றும், அல்லது, மக்களை பரண செய்வதால் (உறை போல அவர்களை காப்பதால்), பரத என்று வாயுதேவருக்குப் பெயர். பரதனின் மனைவியானதால், பாரதி என்று அவரின் மனைவிக்குப் பெயர். இந்த ஆதாரங்களாலேயே, வாயுதேவரை தாசராயர் இங்கு பரத என்று அழைத்திருக்கிறார்.

**ஜீவனிகெ3 துஷத3ந்தெ1 லிங்க3வு**
**ஸாவகாஷ3தி3 பொந்தி3 ஸூத்தலு**
**ப்ராவரண ரூபத3லி இப்புது3 ப4க3வதிச்செயலி |**
**கேவல ஜட3ப்ரக்ருதியு இதக்கதி4**

**தே$^3$வதெயு மஹலகுமியெனிபளு**
**ஆ விரஜெய ஸ்னானபர்யந்தரதி$^3$ ஹத்திஹுது ||13**

ஜீவனிகெ = ஜீவர்களின் ஸ்வரூப தேகத்தை சுற்றி
துஷதந்தெ = அரிசியைச் சுற்றியிருக்கும் உமியைப் போல
லிங்கவு = லிங்க சரீரம்
ஸாவகாஷதி = ஸ்வரூப தேகத்தில் இருப்பதற்கு சிறிது இடம் கொடுத்து, அதைச் சுற்றியும்
ப்ராவரணரூபதலி = அரிசியை உமி சுற்றிக் கொண்டிருப்பதைப் போல
பகவதிச்செயலி = பரமாத்மனின் விருப்பப்படி
இப்பது = லிங்க சரீரம் இருக்கும்
இதகெ = இந்த லிங்க சரீரத்திற்கு
கேவல ஜடப்ரக்ருதியு = ஜடப்ரக்ருதி ரூபமான
மஹாலகுமி = மஹாலட்சுமியே
அதிதேவதையு = அபிமானி
ஆவிரஜெய ஸ்னான பரியந்தரதி = அந்த லிங்க சரீரம், விரஜா நதியின் ஸ்னானம் வரைக்கும்
ஹத்திஹது = ஜீவனின் ஸ்வரூப தேகத்தில் சேர்ந்து கொண்டிருக்கிறது.

லிங்க சரீரத்தின் லட்சணத்தை சொல்கிறார். அரிசியின் மேல் உமி எப்படி அதை மூடிக்கொண்டிருக்கிறதோ, அதைப்போல, பகவந்தனின் விருப்பப்படி, ஜீவனின் ஸ்வரூப தேகத்தின் மேல் ஒரு உறையாக, லிங்க சரீரம் இருக்கிறது. ஸ்வரூப தேகம் உள்ளே இருப்பதற்கு இடம் செய்து கொடுத்து, லிங்க சரீரம் மேலே சுற்றிக் கொண்டிருக்கிறது. இந்த லிங்க தேகத்திற்கு அபிமானியாக மகாலட்சுமிதேவி, ஜடப்ரக்ருதியின் ரூபத்தில் இருக்கிறார். இந்த லிங்க சரீரமானது, விரஜா நதி ஸ்னானம் வரையிலும் ஸ்வரூப தேகத்தை சுற்றியிருக்கிறது. விரஜா நதி ஸ்னானம் ஆனபிறகு, லிங்க சரீரம் பங்கம் ஆகிறது.

**ஆரதி$^4$க த$^3$ஷகளெக$^3$ளுள்ள ஷ**
**ரீர அனிருத்$^3$த$^4$க$^3$ள மத்$^4$யதி$^3$**
**ஸேரியிப்புவு ஜீவ பரமாச்சாதிக த்வயவு |**
**பா$^3$ரத$^3$ந்த$^3$தி$^3$ தா$^3$னவர அதி**
**தூ$^3$ரகை$^3$ஸூத ஸ்ரீஜனார்த்த$^4$ன**
**மூரு கு$^3$ணதொ$^3$ளகி$^3$ப்பனெந்தி$^3$கு$^3$ த்ரிவ்ருதெந்தெ$^3$னிஸி ||14**

ஆரதிக தஷகளெகளுள்ள = 16 கலைகளைக் கொண்ட
ஷரீர = லிங்க தேகம்
அனிருத்தகள = அனிருத்த சரீரங்களின்
மத்யதி = நடுவில்
ஜீவ பரமாச்சாதிக த்வயவு = ஜீவாச்சாதிக, பரமாச்சாதிக என்னும் இரு துஷ்ட ப்ரக்ருதிகள்
ஸேரி யிப்புவு = சேர்ந்து இருக்கிறது

தானவரனு = தானவர்களை
பாரதந்ததி = ஜீவனின் அருகில் வரவிடாமல்
அதிதூரகைசுத = தூரத்தில் வைத்து
ஸ்ரீஜனார்த்தன = துஷ்டர்களைக் கொல்பவனான ஸ்ரீஹரி
த்ரிவ்ருத் = த்ரிகுணங்களின் காரியங்களையும் நடத்துபவன் என்று பெயர் பெற்று
எந்திகு = எப்போதும்
மூருகுணதொளகெ = சத்வ, ரஜஸ், தமோ என்னும் மூன்று குணங்களைக் கொண்ட லிங்க சரீரத்தில்
இப்ப = இருக்கிறான்.

மேற்சொன்ன, 16 கலைகளுள்ள, லிங்க சரீரத்திற்கும், அனிருத்த சரீரத்திற்கும் நடுவில், ஜீவாச்சாதிக என்றும், பரமாச்சாதிக என்றும், 'அசேத்யௌ ப்ரக்ருதீ துஷ்டே' என்னும் பாகவத தாத்பர்ய வாக்கியத்திற்கேற்ப, துஷ்டவான இரு ப்ரக்ருதிகள் சேர்ந்திருக்கின்றன. லிங்கசரீரம், 16 கலைகளைக் கொண்டிருக்கிறது என்னும் விஷயம் 4ம் ஸந்தி, 2ம் பத்யத்தில் சொல்லப்பட்டிருக்கிறது.

அரிசியின் மேல் தவிடு ஒரு உறையாகவும், அதற்கு மேல் உமி ஒரு உறையாகவும் இருக்கிறது. இதைப்போல, ஜீவாச்சாதிக, பரமாச்சாதிக என்னும் இரண்டும் சேர்ந்து கொண்டிருக்கிறன. ஜீவாச்சாதிகா என்பது ஜீவனின் ஸ்வரூபமே தெரியாமல் சுற்றிக் கொண்டிருப்பது. ஸ்ருதிகீதையின் முதலாம் ஸ்லோகம்

'ஜயஜய ஜஹ்யஜாமஜிததோஷ க்ருஹீதகுணாம் - ஹே அஜித! தோஷக்ருஹிதகுணாம் அஜாம்ஜஹி' - எப்போதும் யாரிடமும் தோற்காத தேவனே, குணங்களை விழுங்கி தோஷத்தையே வெளிப்படுத்திக் கொண்டிருக்கும் அஜாம் - ஜீவாச்சாதிக ஸ்வரூபனான துஷ்டப்ரக்ருதியை, ஜஹி - நாசம் செய், என்று பிரார்த்தனை செய்திருக்கிறார்.

ஜீவாச்சாதிகாவின் உள் புறத்தில், பரமாச்சாதிகா, பரமாத்மனின் ஸ்வரூபம், ஜீவனுக்கு தெரியாமல் திரைபோல இருக்கிறது. அத்தகைய பரமாத்மாச்சாதிகா என்னும் துஷ்ட ப்ரக்ருதியை 'ஜஹி' - விலக்கு என்னும் ஸ்ருதிவாக்கியம், அது பரமாத்மனின் ஸ்வரூபமாகவே இருந்தாலும், தெரிவதில்லை. ஜீவாச்சாதிக அழிந்தால், ஜீவனின் ஸ்வரூபம் தெரிகிறது. ஜீவனுக்கும் பரமாத்மனுக்கும் நடுவே திரை போட்டாற்போல பரமாச்சாதிக இருக்கிறது. அந்த திரையும் போனால், பரமாத்மனின் ஸ்வரூபத்தைக் காணலாம். இதே விஷயத்தையே விஷ்ணு ரகசியத்திலும் சொல்லியிருக்கின்றனர். த்ரிகுணாத்மகம் நிறைந்த லிங்கசரீரத்தில் பரமாத்ம அனிருத்த, தைத்யர்களின் பிரவேசம் ஆகாதவாறு ஜீவர்களைக் காக்கிறான்.

**ருத்$^{3}$ரமொத$^{3}$லாதமரரிகெ$^{3}$ அனி**
**ருத்த தே$^{3}$ஹவெ மனெயெனிஸுவுது**
**இத்$^{3}$து$^{3}$ கெலஸவ மாட$^{3}$ரல்லிந்தி$^{3}$த்த ஸ்தூ$^{2}$லத$^{3}$லி ।**
**க்ருத்த$^{4}$கி$^{2}$ல தி$^{3}$விஜரு பரஸ்பர**

**ஸ்பர்த்தெ[4]யிந்த[3]லி த்[3]வந்த்[3]வகர்ம ஸ**
**ம்ருத்தி[4]க[3]ளனாசரிஸுவரு ப்ராணேஷனாக்ஞெயலி ||15**

ருத்ர மொதலாத = ருத்ரரில் தொடங்கி அனைத்து
அமரரிகெ = தேவதைகளுக்கு
அனிருத்த தேஹவெ = அனிருத்த தேகமே
மனெயெனிஸுவுது = வீடு என்று அழைக்கப்படுகிறது
இத்து = அந்த அனிருத்த தேகத்திலும்
கெசலவ மாடரு = கண், காதுகளால் செய்யவேண்டிய பார்ப்பது, கேட்பது ஆகிய வேலைகளை செய்ய மாட்டார்கள்
அல்லிந்தித்த = அனிருத்த தேகத்திற்கு அப்பால்
ஸ்தூலதலி = ஸ்தூல தேகத்தில்
க்ருத்த = கோபத்திற்கு ஆளான
களா = தைத்யர்கள்
திவிஜரு = தேவதைகள்
பரஸ்பர = ஒருவருக்கொருவர்
ஸ்பர்த்தெயிந்தலி = சவால் விட்டுக்கொண்டு
த்வந்த்வ கர்ம ஸம்ருத்திகளன்னு = அதிகமான புண்ய பாப கர்மங்களை
ப்ராணேஷன = முக்ய பிராணதேவரின்
ஆக்ஞேயலி = ஆணையின் பேரில்
ஆசரிசுவரு = செய்கின்றனர்.

ருத்ர முதலான தேவதைகளுக்கு லிங்க சரீரத்தில் பிரவேசம் இல்லை என்று முந்தைய பத்யத்தில் கூறியிருந்தார். அப்படியெனில், அவர்களின் பிரவேசம் எங்கு வரைக்கும் இருக்கும் என்றால், அதை இங்கு விளக்குகிறார்.

ருத்ர முதலான தேவதைகள், அனிருத்த தேகத்தில் வசித்து இந்திரியங்களின் செயல்களை செய்யாமல் இருப்பார்கள். ஏனெனில், அந்த சரீரத்தில் இந்திரிய வியாபாரங்கள் இருப்பதில்லை. அதற்கு அப்பால் இருக்கும் ஸ்தூல தேகத்தில், தத்வாபிமானிகளான தேவதைகளும், தைத்யர்களும் இருப்பார்கள். இந்த இருவரும், ஒருவருக்கொருவர் சவால் விட்டுக்கொண்டு, முக்யபிராண தேவரின் ஆணையின் பேரில், முறையே புண்ணிய, பாவ கர்மங்களை அந்த ஸ்தூல தேகத்தில் செய்து வருகின்றனர்.

**மஹியொளகெ[3] ஸுக்ஷேத்ர தீர்த்த[2]தி[3]**
**து[1]ஹின வருஷ வஸந்தகாலதி[3]**
**த[3]ஹிக தை[3]ஷிக காலிகத்ரய த[4]ர்மகர்மக[3]ள**
**த்[3]ருஹிண மொத[3]லா த[3]மரரெல்லரு**
**வஹிஸி கு[3]ணகளனனுஸரிஸி ஸ**
**ந்நிஹிதராகி[3]த் தெ[3]ல்லரொளு மாடு[3]வரு வ்யாபார ||16**

மஹியொளகெ = பூமியின் பரத கண்டத்தில்

ஸுக்ஷேத்ர தீர்த்ததி = அயோத்யா, மதுராதி க்ஷேத்திரங்கள், கங்கை முதலான தீர்த்தங்கள் இவற்றில்
துஹின = தனுர், மாக மாதம் முதலான குளிர்காலத்திலும்
வர்ஷ = வர்ஷருது, சரத்ருது கூடிய பருவ மழைக் காலங்களான சாதுர்மாத காலத்திலும்
தஹிக = தேக சம்பந்தமான
தேஷிக = தேச சம்பந்தமான
காலிக = கால சம்பந்தமான
த்ரய = மூன்று வகையான
தர்மகர்மகள = தான, சந்தியாவந்தனாதி நித்ய நைமித்திக கர்மங்கள் இவற்றை
த்ருஹிண மொதலாத = பிரம்ம தேவர் முதலான
அமரரெல்லரு = தத்வாபிமானி தேவதைகள் அனைவரும்
வஹிஸி = ஜீவன் செய்யவேண்டியற்றை தாமே செய்து
குணகளனு = ஸத்வாதி குணங்களை
அனுஸரிஸி = அனுசரித்து (அதற்கேற்ப)
எல்லரொளு = அனைவரிலும்
ஸன்னிஹிதராகித்து = நிலைத்திருந்து
வ்யாபார = செயல்களை
மாடுவரு = செய்வார்கள்

முந்தைய பத்யத்தில், தேவதைகள் புண்ய கர்மங்களயும், தைத்யர்கள் பாவ கர்மங்களையும் செய்விக்கிறார்கள் என்றார். அதில் தேவதைகள் செய்விக்கும் புண்ய கர்மங்களை இங்கு விவரிக்கிறார்.

* இந்த பரத கண்டத்தில் இருக்கும் ஸ்ரீரங்க, திருப்பதி, பண்டரிபுர, அயோத்யா, மதுரா முதலான புண்ணிய க்ஷேத்திரங்கள்,
* கங்கை, கோதாவரி முதலான தீர்த்தங்கள்,
* இவற்றில் செய்யவேண்டிய, தேக சம்பந்தமான தலைமுடி எடுப்பது,
* தேச சம்பந்தமான தீர்த்த ஸ்ரார்த்தாதிகள் ஆகியவற்றை செய்வது,
* சாதுர்மாஸ, மாகாதி மாதங்களில், சைத்ர வைசாகாதி வசந்த ருதுவில், இத்தகைய கால சம்பந்த ஸ்னானாதிகளை செய்வது
* மூன்றுவிதமான தர்ம, அதாவது, க்ஷேத்திரங்களில் சத்திரம் கட்டுவது, குளம் வெட்டுவது, அன்னதானம் செய்வது, புராணங்களைக் கேட்பது - ஆகிய தர்மங்களை செய்வது
* நித்ய நைமித்திக என்னும் இருவித சந்தியாவந்தன, ஸ்ரார்த்தாதிகள் ஆகியவை நித்யகர்மங்கள்;
* விஷ்ணு பஞ்சக ஆகியவை நைமித்திக கர்மங்கள் - இத்தகைய தர்ம கர்மங்களை

பிரம்மாதி தேவதைகள் அனைவரும் சேர்ந்து ஜீவனின் பாரத்தை தாமே சுமந்து, அவரவர்களின் யோக்யதையை அனுசரித்து, அவர்களில் இருந்து செய்விக்கிறார்கள்.

**கேஷ ஸாஸிரவித[4] விபா[4]க[3]வ**
**கை[3]ஸலெனிதனிதி[1]ஹ ஸுஷும்னவு**
**ஆ ஷிராந்த[1]தி[3] வ்யாபிஸிஹுதீ[3]தே[3]ஹ மத்[4]யத[3]லி |**
**ஆ ஸுஷும்னகெ[1] வஜ்ரிகா[1]ர்ய ப்ர**
**காஷினி வைத்[3]யுதக[3]ளிஹவு ப்ர**
**தே[3]ஷத[3]லி ப[1]ஸ்சிமகெ உத்தர பூர்வ த[3]க்ஷிணகெ ||17**

கேஷ = தலைமுடியை
ஸாஸிரவித = ஆயிரம் பாகங்களாக
கைசலு = செய்தால்
யெனிது = எவ்வளவு வருமோ
அனிதிஹ = அந்த அளவிற்கு
சுஷும்னா = சுஷும்னா நாடி
ஆஷிராந்ததி = மூலஸ்தானம் முதல் தலை வரைக்கும்
ஈ தேஹ மத்யதலி = இந்த தேகத்தின் நடுவில்
வியாபிஸிஹது = வியாபித்துக் கொண்டிருக்கிறது
ஆஸுஷும்னாகெ = அந்த சுஷும்னா நாடிகளுக்கு
வஜ்ரிகா, ஆர்ய, ப்ரகாஷிணி, வைதுதிகளு = இவ்வாறான 4 பெயர்கள்
ப்ரதேஷதலி = என்று 4 இடங்களில்
இஹவு = இருக்கிறது

தேகத்தின் நடுவில் இருக்கும் சுஷும்னா நாடியின் லட்சணங்களை சொல்கிறார். ஒரு தலைமுடியை ஆயிரம் பாகமாக பிரித்து, அதில் ஒரு பாகம் எவ்வளவு இருக்குமோ, அவ்வளவு சிறியதாக - மூலஸ்தானம் முதல் தலையின் பிரம்மரந்திரம் வரைக்கும் நடுவில் சுஷும்னா நாடி இருக்கிறது. இந்த நாடி, 5 வகைகளாக இருக்கிறது. மேலும் 5 பெயர்களில் அழைக்கப்படுகிறது.

நடுவில் சுஷும்னா நாடி இருக்க,
* மேற்கு - பின் பக்கத்திற்கு வஜ்ரகாய என்றும்,
* வடக்கு - இடது பாகத்திற்கு ஆர்ய என்றும்,
* கிழக்கு - முன் பாகத்திற்கு ப்ரகாஷினி என்றும்,
* தெற்கு - வலது பாகத்திற்கு வைத்யுத என்றும் பெயர்கள் உண்டு.

இந்த விஷயத்தை 8ம் சந்தி, 3ம் பத்யத்தில் விவரமாக பார்த்திருக்கிறோம். இந்த ஒரே சுஷும்னா நாடியே, 5 பாகங்களாக, 5 பெயர்களில் இருக்கிறது என்று தெரிவிக்கிறார்.

**ஆ நளினப[4]வ நாடி[3]யொளகெ[3] த்ரி**
**கோணசக்ரவு இப்புத[3]ல்லி க்ரு**
**ஷானுமண்ட[3]ல மத்[4]யதொ[3]ளு ஸங்கருஷணாஹ்வயனு |**
**ஹீன பாபாத்மக புருஷன த[3]**
**ஹானகை[3]ஸுத தி[3]னதி[3]னதி[3] வி**

**க்ஞானமய ஶ்ரீவாஸுதேவன ஐதி[3]ஸுவ கருணி ||18**

ஆ நலின பவனாடியொளகெ = சுஷும்னா என்று பெயர் பெற்ற பிரம்ம நாடியின் உள்ளே (இதய மத்யத்தில்)
த்ரிகோண சக்ரவு இப்பது = முக்கோண மண்டலம் இருக்கிறது
அல்லி = அங்கு
க்ருஷானு மண்டல மத்யதலி = அக்னி மண்டலத்தின் நடுவில்
சங்கருஷணாஹ்வயனு = சங்கர்ஷண நாமக பரமாத்மன்
ஹீன = நீசனான
பாபாத்மக புருஷன = குரு மந்திரத்தில் சொல்லிய விதமாக 'பிரம்மஹத்யா ஷிரஸ்கஞ்ச' என்னும் லட்சணத்தினால் கூடிய, பாப ஸ்வரூபனான பாபபுருஷனை
தினதினதி = தினந்தோறும்
ஹானிகைஸுத = பஸ்மம் செய்தவாறு
கருணீ = கருணாளுவான ஶ்ரீஹரி
வாஸுதேவனு = வாசுதேவ ரூபத்தினால்
ஞானமய = பவித்ரஸ்வரூப உள்ளவனாக
யைதிஸுவ = செய்விக்கிறான்

இதன் அர்த்தத்தை 8ம் ஸந்தியின் வியாக்யானத்தில் விரிவாக பார்த்திருக்கிறோம்.

த்ரிகோணமண்டல மத்யஸ்தோ ரக்தவர்ணோ அக்னிபீஜவாச்ய:
அக்ன்யந்தர்யாமி சங்கர்ஷணோ பகவான் மச்சரீரஸ்தம் பாபபுருஷம் அக்னினா நிர்தஹது ||

என்னும் மந்திரத்தின் அர்த்தத்தையே இங்கு சொல்லியிருக்கிறார். நடுவில் இருக்கும் சுஷும்னா நாடிக்கு பிரம்ம நாடி என்று பெயர். அந்த நாடியை ஒட்டி, இதயாகாஷத்தில், முக்கோண மண்டலத்தில், அக்னி என்னும் சொல்லில் அழைக்கப்படுபவனான, அக்னி அந்தர்கத சங்கர்ஷணன் எப்போதும் வசித்தவாறு, பாப புருஷனை தகிக்கிறார். அவன் பிரம்ம வரத்தினால், இரவில் மறுபடி உயிர் பெற்று வந்துவிடுகிறான். மந்திரங்களை ஜெபிப்பவர்களின் இதயங்களில் இருந்து, மறுபடி அதே பாபபுருஷனை எரிக்கிறார். அதன்பின், தலையில் இருக்கும் வாசுதேவ மூர்த்தி, தேகத்தை, பவித்ரமாக ஆக்கி ஞானப்ரதன் ஆக்குகிறான்.

**மத்[4]ய நாடி[3]ய மத்[4]யத[3]லி ஹ்ரு**
**த்பத்[3]மமூலதி[3] மூலப[1]தி[1] பத[3]**
**பத்[3]ம மூலத[3]லிப்ப பவனன பாத[3]மூலத[3]லி |**
**பொந்தி[3]கொண்டி[3]ஹ ஜீவ லிங்க[3]னி**
**ருத்த[4] தே[3]ஹ விஸிஷ்டனாகி[3] க**
**பர்த்தி[3] மொத[3]லாதமரரெல்லரு காது[3]கொண்டி[3]ஹரு ||19**

மத்ய நாடிய மத்யதலி = சுஷும்னா நாடியின் நடுவில் இருக்கும்
ஹ்ருத்பத்மமூலதலி = இதய தாமரையின் அடியில் இருக்கும்
மூலபதி = மூலேஷ நாமக பரமாத்மனின்

பதபத்ம மூலதலி = பாத கமலத்தின் மூலத்தில்
இப்ப = இருக்கிறான்
பவனன = வாசுதேவனின்
பாதமூலதலி = கால் விரல் நுனியில்
ஜீவ = ஜீவன்
லிங்கனிருத்த தேஹவிசிஷ்டனாகி = லிங்க தேகம், அனிருத்த தேகம் இவற்றுடன்
பொந்திகொண்டிஹ = சேர்ந்திருக்கிறான்
கபர்த்திமொதலாத = ருத்ரதேவரே முதலான
அமரரெல்லரு = தேவதைகள் அனைவரும்
காதுகொண்டிஹரு = தாமரையின் 8 தளங்களில் வசிக்கின்றனர்.

தேகத்தின் நடுவில் ஓடும் சுஷும்னா நாடியில் 8 தள தாமரை ஒன்று இருக்கிறது. அந்த தாமரையில், அக்ரேஷ, மூலேஷ, பிராதேஷ என்னும் மூன்று மூர்த்திகள், கமலத்தின் மேல் தளங்களிலும், அடிப்பாகத்திலும் இருக்கிறார்கள். அவற்றில், கீழ் பாகத்தில் மூலேஷ நாமக பரமாத்மனின் பாத மூலத்தில் பிராணதேவர் இருக்கிறார். மேற்சொன்ன மூன்று மூர்த்திகளையும் பார்த்தவாறு, கை கூப்பியவாறு, பிராண தேவர் நின்றிருக்கிறார். அவரின் பாதங்களை பிடித்தவாறு, லிங்க சரீர, அனிருத்த சரீரங்களால் கூடிய ஜீவன் இருக்கிறான். ருத்ரதேவரே முதலான அஷ்ட திக் பாலகர்கள் 8 தளங்களில் பகவத் சேவைகளை செய்வதற்கு காத்துக் கொண்டிருக்கின்றனர். இதற்கு ஆதாரமான வாக்கியம் இதுவே:

விஷ்ணுர்மூலேஷ இதிது விக்ஞானாத்மீதி தம்விது: |
தஸ்மாதக்ரேஷ மூலேஷ ப்ராதேஷ இதினாமகா: |
மூர்த்தய: ஸந்திஹ்ருத்பத்மேத்ரய ஆனந்த ரூபிண: |
வர்ததே மூலேஷபாத ஸன்னிதௌ ப்ராண நாமக: |
பத்தாஞ்சலி: ஸ்வரூபாணாம் த்ரயாணாம் பரத: ஸதா |
பூர்வாபிமுக தஸ்சைவ வர்ததி ஜீவ ஏவது |
முக்யப்ராண பதாம்போஜ சன்னிதௌ தத்வதேவஹி ||

என்னும் முக்தி தத்வ வாக்கியங்களில் சொல்லப்பட்டுள்ள விஷயத்தையே தாசராயர் இங்கு சொல்லியிருக்கிறார்.

**நாள மத்$^{4}$யத$^{3}$லிப்ப ஹ்ருத்கீ$^{1}$**
**லாலஜதொ$^{3}$ளிப்பஷ்டத$^{3}$ளதி$^{3}$ கு**
**லால சக்ரத$^{3}$ தெரதி$^{3}$ சரிஸுத ஹம்ஸ நாமகனு |**
**கால காலக$^{3}$ளல்லி எண்தெ$^{3}$ஸெ**
**பா$^{1}$லகர கைஸேவெ கொ$^{3}$ளுத க்ரு**
**பாளு அவரபி$^{4}$லாஷெக$^{3}$ள பூ$^{1}$ரயிஸி கொடு$^{3}$திப்ப ||20**

நாள மத்யதலிப்ப = சுஷும்னா நாடியின் நடுவில் சேர்ந்திருக்கும்
ஹ்ருத்கீலாலஜதொளு = இதய கமலத்தில்
இப்ப = இருக்கிறான்

அஷ்டதளதி = 8 தள கமலத்தில்
குலால சக்ரத தெரதி = பானை செய்யும் குயவனின் சக்கரத்தைப் போல
யெண் தெஸெ பாலகர = 8 திக் பாலகர்களின்
கைஸேவெ = சேவையை
கொளுத = ஏற்றுக்கொண்டு
க்ருபாளு = கருணாளுகளான ஸ்ரீபரமாத்மன்
அவரபிலாஷெகள = ஜீவர்களின் யோக்யதைக்கேற்ப அவரவர்களின் விருப்பங்களை
பூரைஸி = நிறைவேற்றி
கொடுதிப்ப = கொடுக்கிறான்.

முந்தைய ஸ்லோகத்தில் இதய கமலத்தின் 8 தளங்களில் திக்பாலகர்கள் இருக்கிறார்கள் என்று சொல்லியிருந்தார். அடுத்த 5 பத்யங்களால், ஹம்ஸ நாமக பரமாத்மன், அந்த இதய கமலத்தின் 8 தளங்களில் சுற்றியவாறு, ஜீவர்களின் புண்ய பாபாதி கர்மங்களை நடத்துகிறான் என்கிறார். சுஷும்னா நாடியின் நடுப் பகுதியில், இதய கமலத்தின் 8 தளங்களில் குயவனின் சக்கரம் சுற்றுவதைப் போல ஹம்ஸ நாமக பரமாத்மன் சுற்றியவாறு, அஷ்ட திக்பாலகர்களிடமிருந்து சேவைகளைப் பெற்றுக்கொண்டு, கருணாளுவான ஸ்ரீஹரி, அவரவர்களின் மனோபீஷ்டங்களை நிறைவேற்றுகிறான்.

**வாஸவானுஜ ரேணுகாத்மஜ**
**தா$^{3}$ஷரதி$^{2}$ வ்ருஜினார்த்த$^{3}$னமலஜ**
**லாஷயாலய ஹயவத$^{3}$ன ஸ்ரீகபில நரசிம்ஹ |**
**ஈ ஸுரூபதி$^{3}$ அவரவர ஸ**
**ந்தோஷ ப$^{3}$டிஸுத$^{1}$ நித்யஸுக$^{2}$மய**
**வாஸவாகி$^{3}$ஹ ஹ்ருத்க$^{1}$மலதொ$^{3}$ளு பி$^{3}$ம்ப$^{3}$னெந்தெ$^{3}$னிஸி ||21**

வாஸவானுஜ = இந்திரதேவனின் தம்பியான உபேந்திரதேவன்
ரேணுகாத்மஜ = பரசுராமன்
தாஷரதி = தஷரதராமன்
வ்ருஜனார்த்தன = பாப நாஷகனான ஜனார்த்தனன்
அமலஜலாஷயாலய = தூய்மையான நீரினைக் கொண்ட ஏரி முதலானவை; அவற்றை வீடாகக் கொண்டிக்கும் மத்ஸ்யமூர்த்தி
ஹயவதன ஸ்ரீகபில நரசிம்ஹ = ஹயக்ரீவ கபில நரசிம்ம
சுரூபதி = இந்த சிறந்த எட்டு ரூபங்களில்
அவரவர = அந்தந்த ஜீவர்களை (யோக்யதைக்கேற்ப)
சந்தோஷ படிஸுத = மகிழ்ச்சிப்படுத்தியவாறு
நித்யசுகமய = நிரந்தர சுகஸ்வரூபனான ஸ்ரீஹரி
பிம்பனெந்தெனிஸி = பிம்பன் என்று சொல்லிக்கொண்டு
ஹ்ருத்கமலதொளு = இதய தாமரைகளில்
வாஸவாகிஹ = வசிக்கிறான்.

அஷ்ட திக்பாலகர்களிடமிருந்து, 8 ரூபங்களால் வணங்கப்படுகிறான் என்கிறார். இதய கமலத்தின் அஷ்ட தளங்களில் உபேந்திர, பரசுராம, ராம, ஜனார்த்தன, மத்ஸ்ய, ஹயக்ரீவ, கபில, நரசிம்ம ஆகிய 8 ரூபங்களால் இந்திர, அக்னி முதலான திசைகளில், பிம்ப என்னும் பெயரில், ஆனந்த ஸ்வரூபனான ஸ்வாமி, அவரவர்களின் யோக்யதைக்கேற்ப அவரவர்களை மகிழ்ச்சிப்படுத்தியவாறு வசிக்கிறான்.

**ஸூரபனாலய கை[1]தி[3]தொ[3]டெ[3] மன**
**வெரகு[3]வுது[3] ஸத்புண்ய மார்க்க[3]தி[3]**
**ப[3]ரலு வன்ஹியமனெகெ[3] நித்[3]ராலஸ்ய ஹஸி த்ருஷெயு |**
**த[1]ரணிதனய நிகேதனதி[3] ஸ**
**ம்ப[4]ரித கோபாடோப தோ[1]ருவு**
**த[3]ரவிதூ[3]ரனு நிருதியலி ப[3]ரெ பாபக[3]ள மாள்ப ||22**

சுரபன = இந்திரனின்
ஆலயகெ = வீடு என்றால் இந்திரன் வசிக்கும், கிழக்கு தளத்திற்கு
ஐதிதரெ = வந்தால்
மனவு = மனஸ்
ஸத்புண்யமார்க்கதி = உத்தமமான புண்ய மார்க்கத்தில்
எரகுவுது = நுழைகிறது
வன்ஹியமனெகெ = அக்னி இருக்கும் தளத்திற்கு வந்தால்
நித்ரா ஆலஸ்ய ஹஸி த்ருஷெயு = தூக்கம், சோர்வு, பசி, தாகம் ஆகியவை உண்டாகிறது
தரணி = சூர்யனின்
தனய = மகனான யமனின்
நிகேதனதி = தளத்திற்கு வந்தால்
ஸம்பரித கோபாடோப = முழுமையான கோபம் வருகிறது
அரவிதூரனு = தோஷங்கள் அற்றவன்
நிருதியல்லிரெ நிரருதி இருக்கும் தளத்திற்கு வந்தால்
பாபகளமாள்ப = பாப கர்மங்களில் புத்தி செல்கிறது.

20ம் பத்யத்தில் ஹம்ஸரூபி பரமாத்மன், அந்த தளங்களில் இருக்கும் திக்பாலகர்களிடமிருந்து சேவைகளைப் பெற்று, குயவனின் சக்கரத்தைப் போல, 8 தளங்களில் சுற்றியவாறு இருக்கிறார் என்றார். இப்போது, மூன்று பத்யங்களால் எந்தெந்த தளங்களில் எந்தெந்த செயல்களை செய்கிறார் என்பதை சொல்கிறார்.

இந்திரன் இருக்கும் கிழக்கு தளத்திற்கு பரமாத்மன் வந்தால், உத்தமமான புண்ய மார்க்கத்தில் மனஸ் நுழைகிறது. அக்னி இருக்கும்படியான தளத்திற்கு பரமாத்மன் வந்தால், ஜீவனுக்கு தூக்கம், தாகம், பசி ஆகியவை வருகிறது. யமன் இருக்கும் தெற்கு தளத்திற்கு பரமாத்மன் வருகையில், பயங்கரமான கோபம் வருகிறது. தோஷங்கள் அற்றவனான ஸ்ரீஹரி நிரருதி திசையில் இருக்கும் தளத்திற்கு வந்தால், ஜீவனுக்கு பாவ கர்மங்களில் புத்தி செல்கிறது.

**வருணனல்லி வினோத$^3$ ஹாஸ்யவு**
**மருதனொளு க$^3$மனாக$^3$மன ஹிம**
**கர த$^4$னாதி$^3$பனல்லி த$^4$ர்மத$^3$ பு$^3$த்தி$^3$ ஜனிஸுவுது$^3$ ।**
**ஹரன மந்தி$^3$ரத$^3$ல்லி கோ$^3$ த$^4$ன**
**த$^4$ரணி கன்யாதா$^3$னக$^3$ள ஒ**
**ந்த$^3$ரக$^4$ளிகெ$^3$ தடெயத$^3$லெ கொடுதி$^1$ஹ சித்த புட்டுவுது$^3$ ||23**

வருணனலி = வருணன் வசிக்கும் மேற்கு தளத்திற்கு (பரமாத்மன் வந்தால்)
வினோத ஹாஸ்யவு = நகைச்சுவைகளால் காலம் கழிக்கும் புத்தி வருகிறது
மருதனொளு = வாயு வசிக்கும் தளத்திற்கு (பரமாத்மன் வந்தால்)
கமனாகமன = சஞ்சாரம் செய்வதற்கு புத்தி உண்டாகிறது
ஹிமகர தனாதிபரல்லி = சந்திர மற்றும் குபேரர் வசிக்கும் வடக்கு திசைக்கு பரமாத்மன் வருகையில்
தர்மத புத்தி ஜனிஸுவுது = தர்மம் செய்வதற்கு புத்தி வருகிறது
ஹரன = ருத்ரதேவர் இருக்கும் ஈசான்ய தளத்திற்கு பரமாத்மன் வருகையில்
கோதன தரணி கன்யாதானகள = கோ-தான, திரவ்ய தான, பூ-தான, கன்யா-தான
ஒந்தரகளிகெ தடெயதலெ = அரை நாழிகைகூட தாமதமில்லாமல் (அதாவது பரமாத்மன் ஈசான்ய தளத்திற்கு வந்த உடனேயே)
கொடுதிஹ = கொடுக்கிறான்
சித்த = புத்தி
புட்டுவுது = பிறக்கிறது

வருணன் இருக்கும் தெற்கு தளத்திற்கு பரமாத்மன் வருகையில், சிறந்த நகைச்சுவைகளில் புத்தி செல்கிறது. வாயு இருக்கும் வாயவ்ய தளத்திற்கு பரமாத்மன் வருகையில், தேசாந்தரம் பயணம் செய்ய புத்தி செல்கிறது. சந்திரன் மற்றும் குபேரன் வசிக்கும் வடக்கு தளத்திற்கு பரமாத்மன் வருகையில், தர்ம விஷயங்களில் புத்தி செல்கிறது. ருத்ரதேவர் இருக்கும் ஈசான்ய திசையில் இருக்கும் தளத்திற்கு பரமாத்மன் வந்த அதே நொடியில், கோதான, பூதான, திரவ்ய தான, கன்யாதான ஆகியவற்றை செய்வதற்கு மனம் விரும்புகிறது.

**ஹ்ருத$^3$யதொ$^3$ளகெ$^3$ விரக்தி கேஸர**
**கொத$^3$கெ$^3$ ஸ்வப்ன ஸுஷுப்தி லிங்க$^3$தி$^3$**
**மது$^4$ஹ கர்ணிகெ$^1$யல்லி ப$^3$ரெ ஜாக்$^3$ரதெயு புட்டுவுது ।**
**ஸுத$^3$ருஷன மொத$^3$லாத$^3$ அஷ்டா**
**யுத$^4$வ பிடி$^3$து$^3$ தி$^3$ஷாதி$^4$பதிக$^3$ள**
**ஸத$^3$னத$^3$லி ஸஞ்சரிஸுதீபரி புத்தி$^3$க$^3$ள கொடு$^3$வ ||24**

ஹ்ருதயதொளகெ = இதய கமலத்தின் நடுவே வந்தால்
விரக்தி = சம்சாரத்தில் விரக்தி வருகிறது
கேஸரக்கெ = நடுவில் இருக்கும் தளத்திற்கு
ஒதகெ = வந்தால்

ஸ்வப்ன = ஸ்வப்ன நிலை வருகிறது
லிங்கதி = லிங்க சரீரத்திற்கு வந்தால்
ஸுஷுப்தி = நித்ரா நிலை வருகிறது
மதுஹ = மதுசூதனன்
கர்ணிகெயல்லி = தளங்களில்
பரெ = நுழைந்தால்
கர்ணிகெயல்லி = தளங்களில்
பரெ = நுழைந்தால்
ஜாக்ரதெ = ஜாக்ரத நிலை
புட்டுவுது = பிறக்கிறது
ஸுதர்ஷன மொதலாத = சக்ர முதலான
அஷ்டாயுதவ பிடிது = 8 ஆயுதங்களைப் பிடித்து
ஆஷாதிபதிகள = திக்பாலகர்களின்
சதனதல்லி = தளங்களில்
சஞ்சரிசுத = பயணம் செய்தவாறு
ஈபரி = இந்த மாதிரியான
புத்திகள கொடுவ = அறிவைக் கொடுக்கிறது

அஷ்ட தளங்களையும் சுற்றிவிட்டு, பரமாத்மன் கமலத்தின் நடுப்பகுதிக்கு வந்தால், வைராக்ய புத்தி உண்டாகிறது. அந்த தளங்களின் நடுப்பகுதியில் சஞ்சாரம் செய்யும்போது ஸ்வப்ன அவஸ்தை வருகிறது. நடுத் தண்டிற்கு வரும்போது தூக்க நிலை வருகிறது. மதுசூதனன் மறுபடி தளங்களுக்கு பிரவேசம் செய்கையில், விழிப்பு நிலை வருகிறது. சக்ர, சங்கு, கதா, பத்ம, தனுஸ், அம்பு, கத்தி, கேடயம் என்னும் 8 ஆயுதங்களை 8 கைகளில் தரித்துக்கொண்டு ஸ்ரீபிம்ப என்னும் ஹம்ஸரூபி பரமாத்மன் அஷ்டதிக்பாலகர்களின் தளங்களில் பயணிக்கும்போது இவ்விதமான புத்திகளைக் கொடுக்கிறான்.

**ஸுத்ரநாமக ப்ராணபதி கா$^{3}$**
**யத்ரி ஸம்ப்ரதிபாத்$^{3}$யனாகி$^{3}$**
**கா$^{3}$த்ரதொ$^{3}$ளு நெலெஸிரலு திளியதெ$^{3}$ கண்ட$^{3}$கண்ட$^{3}$ல்லி |**
**தா$^{4}$த்ரியொளு ஸஞ்சரிஸி புத்ர க**
**ளத்ர ஸஹிதனுதி$^{3}$னதி$^{3}$ தீர்த்த$^{2}$**
**க்ஷேத்ர யாத்ரெய மாடி$^{3}$தே$^{3}$வு எந்தெ$^{3}$னுத ஹிக்கு$^{3}$வரு ||25**

சூத்ர நாமக = ஸூத்ர என்னும் பெயருள்ள
ப்ராணபதி = பிராணதேவரின் ஸ்வாமியான ஹம்ஸ நாமக பரமாத்மன்
காயத்ரி ஸம்ப்ரதிபாத்யனாகி = காயத்ரி பிரதிபாத்யன் என்று அழைத்துக் கொண்டு
ஈ காத்ரதொலு = இந்த சரீரத்தில்
நெலெஸித்து = இருப்பதை அறியாமல்
தாத்ரியொளு = பூமியில்
கண்டகண்டல்லி = அனைத்து இடங்களிலும்
சஞ்சரிஸி = பயணித்து

புத்ரகளத்ரஸஹித = மக்கள், மனைவியர் சஹிதமாக
அனுதினதி = தினந்தோறும்
தீர்த்த க்ஷேத்ரயாத்ரெயு = தீர்த்த க்ஷேத்திர யாத்திரைகளை
மாடிதேவு எந்தெனுத = செய்தோம் என்றவாறு
ஹிக்குவரு = பெருமை கொள்வர்.

அனுசந்தானம் இல்லாதவர்கள் தீர்த்த யாத்திரைகளை செய்தாலும் பலன் கிடைக்காது. அனுசந்தானத்துடன் தேகத்தில் பகவத் ரூபங்களை சிந்தித்தால், தீர்த்த யாத்திரை செய்ததைவிட உத்தம பலன் கிடைக்கிறது என்று சொல்கிறார்.

சூத்ர நாமகனான பிராணதேவரின் ஸ்வாமியான ஸ்ரீஹம்ஸ மூர்த்தி, நம் தேகத்தில் இதய கமலத்தின் தளங்களில் ராமாதி ரூபங்களால் வசிப்பதை அறியாமல், இந்த பூமியில் பயணம் செய்து, உடுப்பிக்குச் சென்று கிருஷ்ணனின் தரிசனம் செய்தோம், அயோத்திக்குச் சென்று ராம தரிசனம் செய்தோம், காசிக்குச் சென்று கங்கா ஸ்னானம் செய்தோம் என்று மனைவி, மக்களுடன் வெவ்வேறு இடங்களுக்குச் சென்று வந்து கர்வத்துடன் சொல்லிக் கொள்வர். இதயத்தில் இருக்கும் பகவந்தனை அறியாமல் தேச சஞ்சாரம் செய்து என்ன பலன்? ஞானிகள், இத்தகைய தேகத்தில் இருக்கும் பகவத் ரூபங்களை அறிந்து, வீட்டிலேயே அனைத்து தீர்த்தக்ஷேத்திர யாத்திரையை செய்த பலனைப் பெறுவர். ஆகையால், அனுசந்தானமே முக்கியம் என்று சொல்கிறார்.

**நாரசிம்ஹ ஸ்வரூபதொ$^{3}$ளகெ$^{3}$ ஷ**
**ரீரனாமதி$^{3}$ கரெஸுவனு ஹதி$^{3}$**
**நாரு களெக$^{3}$ளனுள்ள லிங்க$^{3}$தி$^{3}$ புருஷ நாமகனு ।**
**தோருவனு அனிருத்த$^{3}$தொ$^{3}$ளு ஷா**
**ந்தீரமண நனிருத்த$^{3}$ ரூபதி$^{3}$**
**ப்ரேரிஸுவ ப்ரத்$^{3}$யும்ன ஸ்தூ$^{2}$ல கலேவரதொ$^{3}$ளித்து$^{3}$ ||26**

நரசிம்ஹ = நரசிம்மரூபி பரமாத்மன்
ஸ்வரூபதொளகெ = ஜீவனின் ஸ்வரூப தேகத்தில்
ஷரீர நாமதி = ஸ்வரூப தேகம் என்னும் பெயரில் அழைக்கப்படுகிறான்
ஹதினாரு கலெகளனுள்ள = 16 கலைகளைக் கொண்ட
லிங்கதி = லிங்க சரீரத்தில்
புருஷ நாமகனு = புருஷ நாமக ஸ்ரீஹரி
தோருவனு = இருக்கிறான்
அனிருத்தனொளு = அனிருத்த சரீரத்தில்
ஷாந்தீரமண = சாந்திபதியான
அனிருத்த ரூபதி = அனிருத்தன்
ப்ரேரிசுவ = நிலைத்திருக்கிறான்
ஸ்தூல கலேவரதொளு = ஸ்தூல தேகத்தில் இருந்து
ப்ரத்யும்ன = ப்ரத்யும்ன ரூபி
இத்து = இருந்து

இந்த சந்தியின் துவக்கத்தில் 10,11 பத்யங்களால் ஜீவனின் ஸ்வரூப தேகம் ஆகியவற்றில் இருக்கும் பகவத்ரூபங்களை கூறியிருந்தார். ஆனால், அந்த பத்யங்களில் ஸ்வரூப தேகம் முதலான தேகங்களின் உள்ளே இருந்து, ஜீவனின் செயல்களை செய்து செய்விக்கும் ரூபங்களை மட்டும் சொல்லியிருப்பார். இந்த பத்யத்தில் சரீராகாரனாக ஸ்வரூபாதி தேகங்களில் தெரியும் பகவத்ரூபங்களை சொல்கிறார்.

நரசிம்ம ரூபியான ஸ்ரீபரமாத்மன் ஜீவனின் ஸ்வரூபதேக ரூபத்தில், ஸ்வரூப சரீர என்னும் பெயரில் அழைத்துக்கொண்டு இருக்கிறார். 16 கலைகளைக் கொண்ட லிங்க சரீராகாரனாகி புருஷ நாமக என்று அழைக்கப்படுகிறான். அனிருத்த தேகத்தில் சாந்தி-பதியான அனிருத்தன் இருக்கிறான். ஸ்தூல தேகத்தில் ப்ரத்யும்ன அனிருத்தன் இருக்கிறான்.

**மொத$^{3}$லு த்வக்சர்மக$^{3}$ளு மாம்ஸவு**
**ருதி$^{4}$ர மேதா$^{3}$ மஜ்ஜவஸ்தி$^{2}$க$^{3}$**
**ளத$^{3}$ரொளகெ$^{3}$ ஏகோனபஞ்சாஷன் மருத்க$^{3}$ணவு ।**
**நித$^{4}$ன ஹீங்காராதி$^{3}$ ஸாமக$^{3}$**
**அத$^{3}$ர நாமதி$^{3}$ கரெஸூதொம்ப$^{4}$**
**த்ததி$^{4}$கனால்வத்தெனிப ரூபதி$^{3}$ தா$^{4}$துக$^{3}$ளொளிப்ப ||27**

காற்று, வெயில், குளிர் ஆகியவை படும் இந்திரியத்திற்கு த்வக் இந்திரியம் என்று பெயர். இது தேகத்தின் தோலுக்கு மேல் இருக்கும் ஒரு தாது (mineral). இதற்குள், த்வக், மாம்ஸ, ருதிர (ரத்தம்), மேதஸ் (கொழுப்பு), மஜ்ஜா = மஜ்ஜைகள், அஸ்திகள்
இதரொளகெ = இந்த சப்த தாதுகளில்,
ஏகோனபஞ்சாஷன் மருத்கணவு = 49 மருத்கணர்கள், இருக்கிறார்கள்
நிதன ஹீங்காராதி = நிதனஹீங்கார முதலான
ஸாமகனு = சாமகானத்தால் பாடப்படுபவனான
அதர நாமதி = சப்த தாதுகளின் பெயர்களால்
கரெசுத = அழைக்கப்பட்டு
ஒம்பத்ததிக நால்வத்தெனிப ரூபதி = 49 ரூபங்களில்
தாதுகளொளு = 7 தாதுகளில்
இப்ப = இருக்கிறான்.

சப்த தாதுக்களில் இருக்கும் பகவத்ரூபங்களை சொல்கிறார். நம் தேகத்தில், த்வக், சர்ம, மாம்ஸ, ரத்த, மேதஸ், மஜ்ஜை, அஸ்தி என்னும் 7 தாதுக்கள் இருக்கின்றன. இந்த 7ல் ஒவ்வொன்றிலும் ஏழேழு மருத்கணங்கள் என, மொத்தம் 49 மருத்கணங்கள் இருக்கின்றனர். இவர்களில் சாமவேதத்தில் புகழப்படுபவனான, மற்றும் சாம சொல்லால் அழைக்கப்படுபவனான ஸ்ரீஹரி, நிதன, ஹிங்கார, ப்ரஸ்தாவ, ப்ரதீஹார, உத்கீத, வஷட்கார, ஆதிநாம என்னும் 7 ரூபங்களால், ஏழேழு மருத்கணங்களில் ஒன்றாக, 7 தாதுகளில் 7 ரூபங்கள் உள்ளன. இதன் விளக்கம் ஆத்யாத்ம மாலா கிரந்தத்தில் இருக்கிறது.

த்வசப்ரஸ்தாவ நாமாச வாசுதேவஸ்ததைவச ।
ராமரூபீ ஹரிஸ்தத்ர வர்ததே தன்னியாமக: ।
சர்மணி ப்ரதிஹாராக்யோ ஹ்யனிருத்தஸ்ததைவச ।
லக்ஷ்மீபதிஸ்து தத்ரைவ வர்ததே தன்னியாமக: ।
மாம்ஸேஷூட்கீத நாமாச நாராயண ஸுரூபர்வா ।
ரக்தேனிதன நாமாச ததா சங்கர்ஷணாபித: ।
ஷாந்த ஸ்ம்விஸ்ச ததைவ வர்ததே தன்னியாமக: ।
மேதஸ்யபி வஷட்கார நாமா ஷட்குண ஏவச ।
மஜ்ஜாயமாதிவாராஹ ரூபி ஸாராத்ம ரூபத்ருக் ।
அஸ்திஷூபத்ரவோனாம ந்ருஸிம்ஹோ ஹம்ஸ ஏவச ।।

இதன் பொருள்:
* த்வக்கில் ப்ரஸ்தாவ நாமக ஸாம வாச்யன், வாசுதேவரூபி இருக்கிறான். அங்கு ராமரூபியான பரமாத்மன், நியாமகனாக இருக்கிறான்.
* சர்மத்தில் ப்ரதீஹார நாமக மற்றும் அனிருத்தன் இருக்கிறான். லட்சுமிபதி அங்கு நியாமகனாக இருக்கிறார்.
* மாம்ஸத்தில் உத்கீத நாமகன் இருக்கிறான். அங்கு நாராயண ரூபி நியாமகனாக இருக்கிறார்
* ரத்தத்தில் நிதன நாமகனும், சங்கர்ஷணரூபியும் இருக்கின்றனர். அங்கே ஷாந்த சம்வித் ரூபி நியாமகனாக இருக்கிறார்.
* மேதஸ்ஸில் வஷட்கார நாமகன், ஷட்குண ரூபியும் இருக்கின்றனர்.
* மஜ்ஜையில் ஆதிவராஹ ரூபி சாராத்மன் இருக்கிறான்.
* அஸ்திகளில் உபத்ரவ நாமகனும், நரசிம்ஹ, ஹம்ஸ இந்த மூர்த்திகள் இருக்கின்றனர்.

இதே அர்த்தத்தையே இந்த பத்யமும் சொல்கிறது.

**ஸப்ததா[4]துக[3] ளொளஹொரகெ[3] ஸ**
**ந்தப்த லோஹக[3]தக்னியந்த[3]தி[3]**
**ஸப்த ஸாமக[3]னிப்பனன்னமயாதி[3] கோ[1]ஷதொ[3]ளு ।**
**லிப்தனாகதெ[3] தத்ததா[3]ஹ்வய**
**க்லுப்த போ[4]க[3]வ கொடுத[3] ஸ்வப்ன ஸு**
**ஷுப்தி ஜாக்[3]ரதெயீவ தைஜஸ ப்ராக்ஞ விஷ்வாக்[2]ய ।।28**

சப்ததாதுகள = மேற்சொன்ன 7 தாதுகளில்
ஹொளஹொரகெ = உள்ளேயும் வெளியேயும்
அன்னமயாதி கோஷகொளு = இருக்கும் அன்னமய, ப்ராணமய முதலான கோஷங்களில்
லிப்தனாகதெ = நிர்லிப்தனாக (அதற்கு சம்பந்தப்படாமல்)
சந்தப்த லோஹகதாக்னியந்ததி = நன்றாக காய்ச்சிய இரும்பில் இருக்கும் நெருப்பைப் போல

ஸப்தஸாமக = நிதன, ஹீங்காராதி மேற்சொன்ன 7 ஸாம ஷப்த வாச்யன்
தததாஹ்வய = அந்தந்த பெயர்களைக் கொண்டு
க்லுப்த போகவ கொடுத = சரியான போகங்களைக் கொடுத்தவாறு
இப்பனு = இருக்கிறான்
அல்லி தைஜஸ ப்ராக்ஞ விஷ்வாக்ய = அங்கு, தைஜஸ, ப்ராக்ஞ, விஷ்வ என்னும் மூன்று ரூபங்கள் இருந்து
ஸ்வப்ன சுஷுப்தி ஜாக்ரதியீவ = ஸ்வப்ன, சுஷுப்தி, ஜாக்ரத என்னும் மூன்று நிலைகளை
ஈவ = கொடுக்கிறார்.

மேற்சொன்ன 7 தாதுகளுக்குள் அன்னமய, ப்ராணமய, மனோமய, விக்ஞானமய, ஆனந்தமய என்னும் 5 கோஷங்கள் உள்ளன. இந்த கோஷங்களைக் கொண்ட அந்த 7 தாதுகளில் நிதனாதி 7 ரூபங்கள் உள்ளன.

ஸப்ததாது ஷுத்வாதந்த: க்ரமாத்கோஷா: ப்ரதிஷ்டிதா:
தன்னாமகானிருத்தாதி ரூபாண்யேஷு விசிந்தயேத்

என்னும் அனிருத்தாதி 5 ரூபங்கள் அந்தந்த கோஷங்களின் பெயர்களால், அந்த கோஷங்களில் இருக்கிறது. ஆனாலும், இந்த ரூபங்கள் அனைத்தும், நன்றாக சிவப்பாக காய்ச்சிய இரும்பில் இருக்கும் நெருப்பைப்போல நிர்லிப்தமாகவே இருக்கின்றன. அந்தந்த ஜீவர்களின் வினைப்பலன்களை அனுசரித்து அவரவர்களுக்கு இருக்கும் போகங்களை கொடுக்கிறான். இது மட்டுமல்லாமல், விஷ்வ, தைஜஸ, ப்ராக்ஞ, என்னும் மூன்று ரூபங்களில் இருந்துகொண்டு, ஜாக்ரத, ஸ்வப்ன, சுஷுப்தி ஆகிய மூன்று நிலைகளைக் கொடுக்கிறார்.

**தீ[1]விகொண்டி[3]ஹவல்லி மஜ்ஜ க[1]**
**லேவரதி[3] அங்கு[3]லிய பர்வத[3]**
**டா[2]வினலி முன்னூரு அரவத்தெனிப த்ரிஸ்த[2]ளதி[3] |**
**ஸாவிரத[3] எம்ப[3]த்து ரூபதி[3]**
**கோவித[3]ரு பேளுவரு தே[3]ஹதி[3]**
**தே[3]வதெக[3]ளொடகூ[3]டி[3] க்ரீடி[3]ஸுவனு ரமாரமண ||29**

களேவரதலி = இந்த சரீரத்தில்
அங்குலிய = கை, கால், விரல்களின்
பர்வத = மூட்டுகளில்
டாவினலு = அந்த இடங்களில்
யக்ஞ = யக்ஞ என்னும் தாது
தீவிகொண்டிஹவு = இடம் பெற்று, அங்கு இருக்கிறது
அல்லி = அந்த இடங்களில்
முன்னூர அரவத்தெனிப = 360 எண்ணிக்கையில், நாட்களுக்கு அபிமானிகள் எனப்படும்
த்ரிஸ்தளதி = மூன்று இடங்களில்

ஸாவிரத எம்பத்து ரூபவ = 1080 ரூபங்கள் இருப்பதாக
கோவிதரு = ஞானிகள்
பேளுவரு = சொல்வார்கள்
தேஹதி = இந்த சரீரத்தில்
தேவதெகளொளகூடி = 360 நாட்களின் அபிமானி தேவதைகளுடன் மற்றும் தத்வாபிமானி தேவதைகளுடன் சேர்ந்து
ரமாரமண = லட்சுமிபதியான ஸ்ரீஹரி
க்ரீடிசுவனு = நிலைத்திருக்கிறான் (செயல்களை செய்கிறான்).

பாதஹஸ்தாங்குலி ஸ்தானியானி பர்வாணி விக்ரஹ |
தத்பர்வஸு பரிஞானாத்பர்வ நாமானிவைஹரே |
அஷீத்யுத்தர ஸாஹஸ்ர ரூபாண்யே தானிஸர்வஷ: |
யோவிஜானாதி தஸ்யைவ நித்யமாயுர் விவர்த்ததே ||

இந்த சரீரத்தின் கை, கால் விரல்களின் மூட்டுகளில் பர்வ நாமக பரமாத்மனின் 1080 ரூபங்களை யார் அறிகிறாரோ, அவருக்கு ஆயுள் அதிகரிக்கிறது என்னும் மானஸ ஸ்ம்ருதியின் வாக்கியத்தையே தாசராயர் இங்கு விளக்கியிருக்கிறார்.

கால், கை விரல்களின் மூட்டுகளில் மஜ்ஜ என்னும் தாது இருக்கிறது. பர்வ என்னும் பெயர் கொண்ட பௌர்ணமி, அமாவாசைகள் ஒரு ஆண்டிற்கு 24 வருகின்றன. ஒவ்வொரு பர்வத்திற்கும் 15 நாட்களை பெருக்கினால், 15*24 = 360 வருகிறது. இவற்றில் பர்வ நாமகனாக பரமாத்மன், பர்வாபிமானி தேவதைகளால் கூடியவாறு வசிக்கிறான். விரல்களின் மூட்டுகள், ஒவ்வொரு விரல்களிலும் மூன்று இடங்கள் இருக்கின்றன. ஒரு இடத்திற்கு 360 என்றால், 360*3=1080 ஆகிறது. இவ்வளவு ரூபங்களால் பர்வ நாமகனாக ஸ்ரீலட்சுமிபதி அந்தந்த தத்வாபிமானி தேவதைகளுடன் சேர்ந்து அங்கு நிலைத்து, செயல்களை செய்கிறான்.

**கீ1ட1 பேஷஸ்கார னெனவிலி**
**கீ1ட1 பா4வவ தொரெது3 த1த்வத்**
**கே2டரூபவனைதி3 ஆடு3வ தெரதி3 ப4கு3தி1யலி |**
**கை1ட1பா4ரிய த்4யானதி3ந்த3 ப4**
**வாடவியனதி ஷீக்4ரதி3ந்த3லி**
**தா3டி ஸாரூப்யவனு ஐது3வரல்ப ஜீவிக3ளு ||30**

கீட = பச்சை வண்ணத்தில், 1 அங்குல நீளத்தில் இருக்கும் ஒரு புழு
பேஷஸ்காரி = இன்னொரு புழு
நெனவலி = ஞாபகத்துடன்
கீடபாவவ = புழுவின் ரூபத்தை
தொரெது = விட்டு
தத்வத் = இதன் நினைவில் இருக்கும்
கேடரூபவன்னு = அந்தரிக்ஷத்திற்கு தாவிக்கொண்டிருப்பதால் கேட என்னும் பெயருள்ள புழுவின் ரூபத்தை

யைதி = பெற்று
ஆடுவ தெரதி = பாய்ந்து ஓடுவதைப் போல
பகுதியலி = பக்தியில்
கைடபாரிய = கைடப நாமக தைத்யனைக் கொன்ற ஸ்ரீபரமாத்மன்
த்யானதிந்தெ = தியானத்திலேயே
பவாடவியனு = சம்சாரம் என்னும் காடினை
அதி ஷீக்ரதிந்தலி = மிகவும் விரைவாக
தாடி = தாண்டி
அல்பஜீவரு = ரமா பிரம்மாதிகளைவிட நீசரான பிற முக்தியோக்ய ஜீவர்கள் கூட
சாரூப்யவனு = சாரூப்ய பதவியை
ஐதுவரு = பெறுகின்றனர்.

மனதினை, அனைத்து விதங்களிலும் பகவந்தனின் பாதாரவிந்தங்களில் வைத்து, தியானம் செய்துகொண்டிருந்தால், பரமாத்மனின் ஸாரூப்ய பதவியை அடைவர் என்கிறார்.

குளவிகள் சுவற்றில் மண்ணிலான வீடு கட்டி, அதில் உள் நுழைவதற்காக ஒரு சிறிய வழியையும் வைத்து, அதில், பச்சை நிறத்து புழுவினைக் கொண்டு வந்து வைத்து, அந்த புழு வெளியில் செல்லமுடியாமல், அந்த வழியை சிறியதாக்கி தான் அதற்கு உணவினைக் கொடுத்து அந்த புழுவை காப்பாற்றுகிறது.

பாகவத 11ம் ஸ்கந்த 9ம் அத்தியாயம் 23ம் ஸ்லோகத்தில்:

கீட: பேஷஸ்காரம் த்யாயன் கட்யாந்தேன ப்ரவேஷித: |
யாதிதத்ஸாம்யதாம் ராஜன் பூர்வரூப மஸந்த்யஜன் ||

இதேபோல, 7ம் ஸ்கந்தம் 1ம் அத்தியாயத்தில்:

கீட: பேஷஸ்க்ருதாருத்ஹ்ட: குட்டேயாந்த மனஸ்மரன் |
ஸ்ம்ரம்ப பயயோகேன விந்ததெ தத்ஸ்வரூபதாம் ||

குளவியால், சுவற்றில் இருக்கும் கூட்டில் வைக்கப்பட்ட அந்த புழு, இரவும் பகலுமாக வெளியில் போய்வந்து கொண்டிருக்கும் அந்த குளவியின் வருகையை எதிர்பார்த்து அதையே சிந்தித்துக் கொண்டிருக்கிறது. தன்னை இழுத்துவந்து இப்படி சிறையில் வைத்த அந்த குளவியின் மேல் சிறிதளவு கோபமோ, த்வேஷமோ, பயமோ இருந்தால்கூட, தனக்கு உணவினைக் கொடுத்து காப்பாற்றுவதால், நட்பு உணர்வுடன், அந்த குளவியையே நினைத்தவாறு இருப்பதால், அடுத்து அந்த புழுவிற்கு குளவி பிறவியே வருகிறது. அதாவது, இந்த புழுவிற்கும், இறக்கைகள் வந்து இதுவும் குளவியாகிவிடுகிறது.

யத்ர யத்ர மனோதேஹி தாரயேத்ஸகலம் தியா |
ஸ்னேஹாத்வேஷாத்பயாத்வாபி யாதி தத்தத் ஸ்வரூபதாம் ||

என்னும் ஆதாரத்தின்படி நட்பினாலோ, த்வேஷத்தினாலோ, பயத்தினாலோ, எப்போதும் யாரை மனதில் நினைத்திருக்கிறோமோ, அந்தந்த ரூபத்தையே பெறுகிறோம் என்று பொருள். ஆகையால், பகவந்தனின் ஏதோ ஒரு ரூபத்தை மனதில் வைத்து அதைப்பற்றியே தியானம் செய்து சிந்தித்தால், பரமாத்மனின் ஸாரூப்யம் நமக்குக் கிடைக்கிறது. அப்படியெனில், த்வேஷிகளான தமோ யோக்யர்கள்கூட, த்வேஷத்தினால் எப்போதும் பரமாத்மனையே சிந்தித்துக் கொண்டிருந்தால், சாரூப்யம் கிடைக்குமோ என்று கேள்வி எழலாம்.

ஏனெனில், பகவந்தனிடம் த்வேஷம் செய்பவர்கள், கோரமான தமஸ்ஸை அடைகிறார்கள்

கர்மணா மனஸா வாசா யோத்விஷ்யாத்விஷ்ணு மத்யயம் |
மஜ்ஜந்தி பிதரச்தஸ்ய நரகே ஷாஷ்வதி: ஸமா ||

கர்மத்தினாலோ, மனதாலோ, வாக்கினாலோ யார் பரமாத்மனில் த்வேஷம் செய்கிறாரோ, அவர்களின் பித்ருகள் அனைவரும் நிரந்தரமான நரகத்தில் வீழ்கிறார்கள் என்று இருப்பதால், த்வேஷிகளுக்கு ஸாரூப்யாதி முக்தி என்றும் கிடைப்பதில்லை. அப்படியெனில், மேற்சொன்ன உவமை சரியில்லையா என்று கேட்டால்,

ஸந்த்யல்பாத்யல்பவித்வேஷெ போஜனம் தாஸ்யதீதிது |
ஸ்னேஹபாஹுல்யத: கீட: பேஷஸ்காரி ஸமோபவேத் |
த்வேஷே ஸர்வாத்மனானஷ்டே ஸ்னேஹே சைவவிவர்த்திதே |
ஸரூபதா ததைவஸ்யாத்கீடஸ்யைவம் ஹரேரபி ||
நஹிபேஷஸ்க்ருத: கிஞ்சித் பலதாத்ருத்வ மிஷ்யதே |
ஸ்வாதந்த்ர்யாத்வித்வஷாம்ஹி கீஷவோனஸுக ப்ரதயிதி ||

என்னும் பாகவத 11ம் ஸ்கந்தத்தில் உள்ள இந்த ஸ்லோகங்களின் அர்த்தம் இதுவே:

தன்னை பலவந்தமாக இழுத்து வந்து, மண்ணின் கூட்டில் வைத்து சிறையில் இட்டிருப்பதால், குளவியின் மீது புழுவிற்கு சிறிதளவு கோபம் இருந்தாலும், தனக்கு உணவு கொடுத்து காப்பாற்றி வருவதால், அதன் மேல் நட்பு அதிகமாகிறது. முதலில் சில நாட்கள் குளவியின் மேல் த்வேஷம் இருந்தாலும், நாளடைவில் அந்த த்வேஷம் மறைந்து, நட்புணர்வு உருவாகி, எப்போதும் குளவியைப் பற்றியே புழு சிந்தித்திருப்பதால், அதுவும் குளவியைப் போலவே ஆகிறது.

இதைப்போல, ஸ்ரீஹரியிடம் முழுமையான பக்தியுடன் எப்போதும் அவரைப்பற்றியே சிந்தித்திருப்பதால் பரமாத்மனின் ஸாரூப்யம் கிடைக்கிறது. புழுவிற்கு எவ்வித பலன்களைக் கொடுக்கும் சக்தியும் குளவிக்கு இல்லை. பரமாத்மன், ஸ்வதந்த்ரமானவன் ஆகையால், த்வேஷிகளுக்கு சுக பலன்களைக் கொடுப்பதில்லை. பக்தர்களுக்கு மட்டுமே சுக பலன்களைக் கொடுக்கிறான். அப்படியெனில் 'ஸ்னேஹாத்வேஷாத்பயாத்வாபி' என்று சொல்லும் ஆதாரத்தின்

நிலை என்ன என்று கேட்டால், ஜீவன் யோக்யனாக இருந்து, தைத்ய ஆவேசத்தினால் சில காலம் மட்டும் த்வேஷம் செய்துகொண்டிருந்து, மறுபடி திருந்திவிட்டால், சிசுபாலன் ஆகியோருக்கு கிடைத்ததைப் போல சத்கதியே கிடைக்கிறது.

ஸ்வபாவத்திலேயே த்வேஷிகளுக்கு பரமாத்மனில் த்வேஷம் இருந்தாலும், எந்நேரமும் அவர்களுக்கு பரமாத்மனின் சிந்தனை இருப்பதில்லை. ஆகையாலேயே, பாகவத 7ம் ஸ்கந்தத்தில்

கோப்ய:காமாத்பயாத் கம்ஸோ த்வேஷாச்சைத்யாத யோன்ருபா: |
ஸம்பந்தாத்வ்ருஷ்ணய: ஸ்னேஹாத் யூயம் பக்த்யாவயம் விபோ |
கதமோபி நவேனஸ்ய பஞ்சானாம் பூருஷம்ப்ரதி ||

கோபிகா ஸ்த்ரியர்கள், காமத்துடனான பக்தியை,
கம்ஸன் பயத்துடனான பக்தியை,
சைத்யாதிகள் த்வேஷத்துடனும்,
வ்ருஷ்ணிகன் சம்பந்தத்துடனும்,
நீங்கள் (பாண்டவர்கள்) நட்புடனும்
பக்தியால் நாமும் பக்தி செய்கிறோம்.

வேனாசுரன் வெறும் த்வேஷத்தை மட்டுமே செய்கிறான். ஆகையாலேயே, வேனாசுரனுக்கு சத்கதி கிடைக்கவில்லை. சிசுபாலன் யோகஜீவன். அவனில் இருந்த தைத்யனின் சகவாசத்தால் கிருஷ்ணனிடம் த்வேஷம் செய்தான். பின்னர் அது குறைந்து, பக்தியே அதிகமாயிற்று. ஆகையாலேயே, அவன் பரமாத்மனை அடைந்தான் என்று நாரதர், தர்மராஜனுக்கு சொல்வதாக மேற்கண்ட ஸ்லோகங்களின் அர்த்தம் சொல்கிறது.

ஆகையால், த்வேஷிகள் எப்போதும் தியானம் செய்வதில்லை. ஆகையால், அவர்களுக்கு சாரூப்யம் வருவதற்கு வாய்ப்பேயில்லை. யோக்யஜீவர்கள், சாபம் முதலான காரணங்களால் அசுராவேசத்துடன் பிறக்கிறார்களே தவிர, எப்போதும் த்வேஷத்தை வைத்துக்கொண்டு சிந்தித்திருப்பவர்கள் அல்ல. அவர்களுக்கு சத்கதியே கிடைக்கிறது என்று பொருள்.

**ஈபரிய தே$^{3}$ஹதொா$^{3}$ளு ப$^{4}$க$^{3}$வ**
**த்ரூபக$^{3}$ள மரெயதெ$^{3}$லெ மனதி$^{3}$ ப**
**தே$^{3}$ பதே$^{3}$ ப$^{4}$கு$^{3}$தி$^{1}$யலி ஸ்மரிஸுதலிப்ப ப$^{4}$குதரனு |**
**கோ$^{3}$பதி ஜகன்னாத$^{2}$விட்டல ஸ**
**மீபக$^{3}$னு தானாகி$^{3}$ ஸந்தத**
**தா பரோக்ஷவ நீடி$^{3}$ பொரெவனு எல்லகாலத$^{3}$லி ||31**

ஈபரிய தேஹதொளு = மேற்சொன்ன பற்பல பகவத்ரூபங்களுடன் கூடிய இந்த சரீரத்தில்
பகவத்ரூபகள = பகவத் ரூபங்களை

மரெயதெலெ = மறக்காமல்
பதேபதே = எப்போதும், திரும்பத்திரும்ப
மனதி = மனதில்
பகுதியலி = பக்தியுடன்
ஸ்மரிசுதலிப்ப = நினைத்துக் கொண்டிருக்கும்
பகுதரனு = பக்தர்களை
கோபதி = லோகேஷனான (கோ என்றால் பூமி. பூமியை காப்பாற்றுவன் ஆகையால், பரமாத்மனுக்கு கோபதி என்று பெயர். அல்லது கோ என்றால் வேதாத்மிகரான துர்கைக்குப் பெயர். அவரது பதியாகையால், கோபதி)
ஜகன்னாதவிட்டல = பிம்பரூபியான ஜகன்னாதவிட்டலன்
சமீபகனு தானாகி = தான் அவர்களின் அருகிலேயே இருந்து
சந்தத = எப்போதும்
தாபரோக்ஷவ நீடி = அபரோக்ஷ உள்ளவர்களாக செய்து (அபரோக்ஷத்தில் தான் காட்சியளித்து)
எல்ல காலதலி = எப்போதும்
பொரெவ = காப்பாற்றுகிறான்

சந்தியை முடித்தவாறு, தாசராயர், தியானம் செய்பவர்களுக்கு கிடைக்கும் பலன்களை சொல்கிறார்.

இதைப்போல, இந்த சந்தியில் சொல்லியவாறு, இருக்கும் பகவத்ரூபங்களை அறிந்து, ஒருகணமும் விடாமல், திடமான பக்தியுடன், நினைத்துக் கொண்டிருக்கும் பக்தர்களுக்கு, ஸ்ரீஜகன்னாதவிட்டல அங்கித லோகேஷன், இவர்களின் இதயத்தில் நின்று, அபரோக்ஷத்தில் தரிசனம் கொடுத்து எப்போதும் காப்பாற்றுவான்.

ஜீவப்ரகரண சந்தி என்னும் 9ம் சந்தியின் தாத்பர்யம் இத்துடன் நிறைவுற்றது.
ஸ்ரீகிருஷ்ணார்ப்பணமஸ்து

***

## பாவபிரகாசி : சந்தி 10 : சர்வ ப்ரதீக சந்தி

**/ சர்வ சமர்ப்பண சந்தி**

**ஹரிகதா2ம்ருதசார கு3ருக3ள**
**கருணதிந்தா3பநிது பே1ளுவே**
**பரம ப4கவத்3ப4க்தரித3னாத3ரதி3 கேளுவுது3**

**ஆவ பரபொ3ம்மனதி விமலா**
**ங்கவப3த்த3ரு எந்தெ3னிப ரா**
**ஜீவ ப4வமொத3லா த3மரரனுதி3னதி3 ஹரிபத3வ ।**
**சேவிபரிக3னுகூல ரல்லதெ3**
**தாவு இவரனு கெடி3ஸப3ல்லரே**

**ஸ்ரீவிலாஸாஸ்பத3ன தா3ஸரிகு3ண்டே1 அபஜயவு ||1**

ஆவ பரபொம்மன = எந்த ஸ்ரீபரமாத்மனின்
அதி விமல = மிக அழகான
அங்காவ பத்தரு = அங்கங்களை ஆதரவாக
எந்தெனிப = என்று நினைத்துக் கொண்டிருப்பவர்கள்
ராஜீவபவ மொதலாத = பிரம்மதேவரே முதலான
அமரரு = தேவதைகள்
அனுதினதி = எப்போதும்
ஹரிபதவ = பரமாத்மனின் பாத கமலங்களை
சேவிதராகி = சேவை செய்பவர்களாக
அனுகூலரல்லதெ = அனுகூலர்களாக இருப்பார்களே தவிர
தாவு = பிரம்மாதி தேவதைகள்
இவரன = இந்த பக்தர்களை
கெடிஸபல்லரெ = கெடுப்பார்களா?
ஸ்ரீவிலாஸாஸ்பதன = லட்சுமிதேவியரின் மூலமாக பல செயல்களைப் புரியும் பரமாத்மன்
தாசரிகெ = பக்தர்களுக்கு
உண்டே = இருக்கிறதா?
அபஜயவு = தோல்வி? (என்றும் இல்லை என்று பொருள்).

ஜீவனின் லட்சணங்களையும், ஸ்வரூபதேகத்தில், லிங்க தேகத்தில், அனிருத்த தேகத்தில் இருக்கும் பகவத் ரூபங்களையும் சென்ற சந்தியில் தாசராயர் விளக்கியிருந்தார். இந்த சந்தியில், எந்தெந்த இடங்களில் எந்தெந்த விதமாக பகவந்தனை சிந்திக்க வேண்டும் என்னும் விஷயத்தை சொல்வதற்காக, சர்வபிரதீக - அனைத்து இடங்களிலும் சிந்திக்க வேண்டிய பரமாத்மனின் ப்ரதிமா ஸ்தானம் என்று பொருள். அத்தகைய சந்தியை இங்கு துவக்குகிறார்.

ஸ்ரீபரபிரம்மனின், மிகவும் அழகான அற்புதமான அங்கங்களை ஆதரவாகக் கொண்டிருப்பதால், பிரம்மாதி தேவதைகளுக்கு அங்காவபத்தர் என்று பெயர். இத்தகைய பரமாத்மனின் நாபிக் கமலத்திலிருந்து பிறந்த பிரம்மதேவர் முதலான தேவதைகள், தினந்தோறும் ஸ்ரீபரமாத்மனின் சேவையையே செய்துகொண்டிருக்கும் பக்தர்களுக்கு என்றைக்கும் விரோதம் செய்வதில்லை. தத்வாபிமானிகள் அத்தகைய பக்தர்களின் பக்தியை மேலும் வளர்த்து சுக சாதனைகளையே செய்விக்கின்றனர். லட்சுமிதேவியின் மூலமாக பல செயல்களைப் புரியும் ஸ்ரீபரமாத்மனின் தாசர்களுக்கு தோல்வி என்பது உண்டா? என்றைக்கும் இல்லை.

அப்படியெனில், பாண்டவர்கள் கஷ்டப்பட்டதாக பாரத கிரந்தங்களில் சொல்லியிருப்பது பொய்யா? என்றால், 'தேஷாம் துக்காதிகம் கிஞ்சிதஸுரா வேஷதோ பவேத்' என்னும் பாகவத தாத்பர்யத்திற்கேற்ப, வினைப்பயன்களுக்கேற்ப சில பக்தர்களுக்கு அவ்வப்போது துக்கங்கள் வந்தாலும், அவற்றை அவர்களுக்குள் இருக்கும் தைத்யர்களே அனுபவிப்பர். அந்த துக்கங்கள் அவர்களின் முக்திக்கு

தடங்கலாக இருப்பதில்லை. அதாவது, முக்திக்கு தடையாகும் பாவங்களை பரமாத்மன் அவர்களை செய்ய விடுவதில்லை. இதுவே இந்த பத்யத்தின் கருத்து.

**ஸ்ரீத2னங்க்4ரி ஸரோஜயுக3ளெ**
**காத3ஷ ஸ்தா2னாத்மதொ3ளகி3**
**ட்டா1த3ரதி3 ஸந்துதிஸுவவரிகெ3 ஈ நவக்3ரஹவு ।**
**ஆதி3தே1யரு ஸந்த1தா1தி4**
**வ்யாதி4க3ள பரிஹரிஸுத1வரனு**
**காது3கொண்டி3ஹ ரெல்லரொந்தா3கீ3ஷ நாக்3ஞெயலி ।।2**

ஸ்ரீதன = ஞான ஐஸ்வர்யத்தைக் கொடுக்கும் பரமாத்மனின்
அங்க்ரி = பாதங்கள் என்னும்
சரோஜ = கமலங்கள்
யுகள = இரண்டையும்
ஏகாதஷ ஸ்தான்ன = 11ம் இந்திரியமான
ஆத்மதொளகெ = மனதில்
இட்டு = வைத்து
ஆதரதி = மரியாதை பக்தியுடன்
ஸந்துதிசுவ = நன்றாக ஸ்தோத்திரம் செய்யும்
பக்தரிகெ = பக்தர்களுக்கு
ஈ நவக்ரஹவு = நவக்கிரகம் என்று அழைக்கப்படும்
ஆதிதேயரு = தேவதைகள், அல்லது, சந்திரசூர்யாதி நவக்கிரகங்கள் / தத்வாபிமானி தேவதைகள்
யல்லரொந்தாகி = இவர்கள் அனைவரும் ஒன்றாக கூடி (ஒரே மனதுடன்)
ஈஷன = பரமாத்மனின்
ஆக்ஞெயலி = ஆணைப்படி
ஸந்தத = எப்போதும்
ஆதி = மனோவ்யாதி
வ்யாதிகள = ரோகாதிகள் இவற்றை
பரிஹரிஸுத = பரிகரித்து
அவரன = அந்த பக்தர்களை
காதுகொண்டிஹரு = பாதுகாத்து வருகின்றனர்.

பரமாத்மனின் பக்தர்களுக்கு, சூர்ய, அங்காரக, சனி முதலான நவக்கிரக தேவதைகள்கூட உதவிகரமாகவே இருக்கிறார்கள் என்று சொல்கிறார். பக்தர்களுக்கு ஞான, ஐஸ்வர்யங்களைக் கொடுக்கும் பரமாத்மனை மனதில் வைத்து, எப்போதும் பஜித்துக் கொண்டிருக்கும் பக்தர்களுக்கு நவக்கிரக தேவதைகளின் சஞ்சாரத்தினால் ஆபத்துகள் வருவதில்லை என்கிறார்.

த்வாதஷாஷ்டம ஜன்மஸ்தா: ஷன்யர்காங்கார கோகுரு: ।
குர்வந்தி ப்ராணஸந்தேஹம் ஸ்தானப்ரஷ்டம் தனக்ஷயம் ।।

சனி, சூர்ய, அங்காரக, குரு ஆகிய கிரகங்கள் ஒருவருடைய ஜென்ம ராசியிலிருந்து 12, 8ம் ஸ்தானங்களுக்கு வரும்போது, அவர்களுக்கு மரணபயத்தைக் காட்டுவார்கள். மற்றும் இடம் விட்டு இடம் பெயரச் செய்வார்கள். செல்வம் களையுமாறு செய்வார்கள் என்னும் ஜ்யோதிட சாஸ்திரத்திற்கேற்ப சொல்லும் பலன்கள், வியாதிகள் ஆகியவற்றை பரிகரித்து, பகவந்தனின் ஆணைப்படி அவர்களை காப்பாற்றுவார்கள்.

**மேதி[3]னிய மேலுள்ள கோ[3]ஷ்பா**
**தோ[3]த[3]கக[3]ளெல்ல மலதீர்த்த[2]வு**
**பாத[3]பா[1]த்[3]ரி த[4]ராதளவெ ஸுக்ஷேத்ர ஜீவக[3]ண**
**ஸ்ரீத[3]ன ப்ரதிமெக[3]ளு அவரு**
**ம்போ[3]த[3]னவெ நைவேத்[3]ய நித்யதி[3]**
**ஹாதி[3]னடெ[3]வுதெ[3] நர்தன க[3]ளெந்த[3]ரித[1]வனெ யோகி[3]** ||3

மேதினிய மேலுள்ள = பூமியின் மேல் இருக்கும்
கோஷ்பாதோதககளெல்ல = பசுவின் குளம்பில் தேங்கும் நீரிலிருந்து துவங்கி, ஏரி, குளம் வரைக்குமான நீர் நிலைகள் அனைத்தும்
அமல தீர்த்தவு = தோஷங்கள் அற்ற, தூய்மையான தீர்த்தம் என்று
பாதப = மரங்கள்
அத்ரி = மலைகள்
தராதலவெ = பூமி இவை அனைத்தும்
ஸுக்ஷேத்ர = உத்தமமான தீர்த்த க்ஷேத்திர
ஜீவகண = அனைத்து ஜீவகணங்கள்
ஸ்ரீதன = ஞான, ஐஸ்வர்யங்களைக் கொடுப்பவனான ஸ்ரீஹரியின் பிரதிமைகளைவிட
அவரும்ப = அவர்கள் உணவு உண்ணும்
ஓதனவெ = அன்னமே
நைவேத்ய = நைவேத்தியம்
நித்யதிஹாதினடெவுதே = தினமும் நடக்கும் பாதையே
நர்த்தனகளு = நடனம்
எந்தரிதவனே = என்று அறிந்தவனே
யோகி = ஞானி

அனைத்துமே பரமாத்மனின் சன்னிதானம் என்று அறிந்து உபாசனை செய்பவர்களுக்கு, அவை தீர்த்தங்களாகவும், க்ஷேத்திரங்களாகவும், ப்ரதிமைகளாகவும், தெரிகிறது. இப்படி உபாசனை செய்வதற்கு வியாப்தோபாசனை என்று பெயர். தகுதி உள்ளவர்களுக்கான வியாப்தோபாசனை செய்யும் கிரமத்தை இங்கு சொல்கிறார் தாசராயர்.

சாதாரணமான மாட்டுக் குளம்பில் தேங்கும் நீர் மிகவும் குறைவாகவே இருக்குமல்லவா? அவ்வளவு சிறிய நீரிலிருந்து, குளம் குட்டை ஏரி வரையிலான நீர்நிலைகள் அனைத்தும் தீர்த்தங்கள் என்றும், மரங்கள், மலைகள், பூமி முதலான

அனைத்தும் உத்தம க்ஷேத்திரங்கள் என்றும், ஜீவகணங்கள் அனைத்தும் பரமாத்மனின் பிரதிமைகள் என்றும், அவர்கள் உண்ணும் அன்னாதிகளே நைவேத்தியம் என்றும், தினமும் வழியில் நடப்பதே நடனம் என்றும் யார் அறிகிறாரோ, அவர் சாமான்யமானவர் அல்ல. அவரையே மஹா ஞானிகள் என்று சொல்ல வேண்டும்.

**சர்வதே$^{3}$ஷவு புண்யதே$^{3}$ஷவு**
**சர்வகாலவு புண்யகாலவு**
**சர்வஜீவரு தா$^{3}$னபாத்ரரு மூரு லோகதொ$^{3}$ளு ।**
**சர்வமாதுக$^{3}$ளெல்ல மந்த்ரவு**
**சர்வகெலஸக$^{3}$ளெல்ல பூஜெயு**
**ஷர்வவந்த்யன விமலமூர்த்தி த்$^{3}$யானவுள்ளவகெ$^{3}$ ||4**

சர்வவந்த்யன = ருத்ரதேவரால் வணங்கப்படும் ஸ்ரீபரமாத்மனின்
விமல = தூய்மையான
மூர்த்தி = மூர்த்திகளை
த்யான உள்ளவகெ = என்றைக்கும் சிந்திக்கும் வியாப்தோபாசகர்களுக்கு
சர்வதேசவு புண்யதேசவு சர்வகாலவு புண்யகாலவு = அனைத்து இடம், காலங்களும் புண்ணிய இடங்கள், காலங்களே
மூரு லோகதொளு = மூன்று உலகங்களிலும் இருக்கும்
சர்வஜீவரு தானபாத்ரரு = அனைத்து ஜீவர்களும் தான பாத்ரர்களே
சர்வமாதுகளெல்ல = பேசும் பேச்சுக்கள் அனைத்தும்
மந்த்ரவு = ஜெபிக்க வேண்டிய மந்திரங்கள் எவ்வளவு உண்டோ அவை அனைத்தும் என்று அறியவேண்டும்
சர்வகெலஸகளு = செய்யும் அனைத்து வேலைகளும்
எல்ல பூஜெயு = அனைத்து விதமான பகவத் பூஜைகள்

முந்தைய பத்யத்தில் சொன்னதையே இங்கு விவரிக்கிறார்.

மேலே சொன்னதைப் போல, அனைத்து இடங்களிலும் இருக்கும் பகவத்ரூபங்களை சிந்திக்கும் வியாப்தோபாசகர்களுக்கு

கங்காதிகளே புண்ணிய தீர்த்தங்கள் என்றும்,
அயோத்யாதிகளே புண்யக்ஷேத்திரங்கள் என்றும்,
பிராம்மணாதிகளே தானபாத்ரர் என்றும்,
அஷ்டாக்ஷர த்வாதசாக்ஷரங்களே ஜெபிக்கத் தகுந்த மந்திரங்கள் என்றும்,
பிரதிமாதிகளே பூஜைக்குத் தகுந்தவை என்று அல்ல.

தமக்குள் இருக்கும் பிம்ப மூர்த்தியை அனைத்து இடங்களிலும் உபாசிக்கும் உபாசகர்களுக்கு 'ப்ரணமேத் தண்டவத் தோமௌ அஷ்வசண்டால கோகரம்' என்னும் பாகவத 11 ஸ்கந்த வாக்கியத்திற்கேற்ப நாய், பசு, கழுதை முதலான அனைத்திலும் இருக்கும் பகவத்ரூபங்களுக்கு பரஸ்பரம் வேறுபாடு இல்லையென்று உபாசனை செய்யவேண்டும் என்று அறியவேண்டும்.

ப்ரதிமாஸ்வ ப்ரபுத்தானம் சர்வத்ர விதிதாத்மனாம் - என்னும் வாக்கியத்திற்கேற்ப, அப்ரபுத்தர் என்றால், அனைத்து இடங்களிலும் இருக்கும் பகவத் ரூபங்களை வேறுபாடின்றி ஒன்றாகவே அறியும் யோக்யதை இல்லாதவர்கள் என்று பொருள். இத்தகையவர்கள், பிரதிமைகளிலேயே பூஜை செய்யவேண்டும். அத்தகைய ஞானம் உள்ளவர்கள், அனைத்து இடங்களிலும் உபாசனை செய்யலாம். மேலும், பாகவத 11ம் ஸ்கந்தத்தின்படி 'யாவத்ஸர்வேஷு பூதேஷு மத்பாவோனோபஜாயதே | தாவதேவ முபாஸீத' என்னும் ஸ்ரீகிருஷ்ணனின் வாக்கியத்தின்படி, அனைத்து இடங்களிலும் இருக்கும் என் ரூபத்தில் யாருக்கு வேறுபாடு தோன்றுவதில்லையோ, அவர்களும் பிரதிமாதிகளிலேயே பூஜிக்க வேண்டும் என்றார். ஆனால் இந்த உபாசனை செய்வது ஒன்றும் கஷ்டமான விஷயமல்ல. அது எப்படி என்றால்:

பரமாத்மன் அனைத்து இடங்களிலும் கண்டிப்பாக இருக்கிறான். பகவத்ரூபங்களுக்கு பரஸ்பரம் வேறுபாடு இல்லை. ஜீவ ஜடர்களைவிட பரமாத்மன் வேறுபட்டவன் என்னும் சிறிதளவு ஞானம், கொஞ்சம் சாஸ்திரம் படித்தவர்களுக்கும்கூட இருக்கிறது. இப்படி இருக்கையில், அனைத்து இடங்களிலும் வியாப்தோபாசனை செய்கிறோம் என்று யாத்திரைகளை,

பூஜாதிகளை, ஜபங்களை விட்டுவிட வேண்டும் என்று அர்த்தமல்ல. அறிவது என்றால் என்ன? வெறும் அறிவது மட்டும் அல்ல. அறிந்தவற்றை அனுஷ்டானத்திற்கு கொண்டு வரவேண்டும். புலியைக் கண்டால், பாம்பைக் கண்டால், நமக்குள் இருக்கும் பகவத்ரூபத்திற்கும், ப்ரதிமாதிகளில் இருக்கும் பகவத் ரூபத்திற்கும், புலி ஆகியவற்றில் இருக்கும் பகவத் ரூபத்திற்கும் பரஸ்பரம் வேறுபாடு இல்லை என்பது புரிந்தால், பிரமாதிகளில் நமக்கு எவ்வளவு நம்பிக்கை இருக்கிறதோ, திருப்பதி முதலான க்ஷேத்திரங்களில் இருக்கும் ஸ்ரீனிவாசனின் பிரதிமைகளைக் கண்டால் எப்படி பயமில்லாமல் நிற்கிறோமோ, நம் தேகத்தினால் நமக்கு எப்படி பயம் இல்லையோ, மேலும் அதில் எப்படி அன்பு பெருகுகிறதோ, அப்படியே புலியிலும், நம்மிலும் இருப்பவன் ஒருவனே ஆனபிறகு, அந்தப் புலி நம்மை என்ன செய்யும்? நாம் ஏன் அவற்றைக் கண்டு பயப்பட வேண்டும்? இத்தகைய ஞானம் முழுமையாக வந்து, அதை அனுஷ்டானத்திற்குக் கொண்டு வந்து, எந்த பிராணிகளைக் கண்டாலும் பயப்படாமலும், வெறுப்படையாமலும், மனம் ஸ்திரமடைந்தால், அப்போது வியாப்தோபாசனை செய்வதற்கு அதிகாரம் வந்திருக்கிறது என்று அறியலாம்.

இத்தகைய ஞானம் யாருக்கு இருக்கிறதோ, அவருக்கு அனைத்து தேசமும் புண்ணியதேசங்களே. அனைத்து காலங்களும் பர்வ காலங்களே. அனைத்து பிராணிகளும் பாத்ரரே. அனைத்து பேச்சுகளும் மந்திரங்களே. செய்யும் செயல்கள் அனைத்தும் பகவத் பூஜைகளே ஆகிறது என்று இந்த பத்யத்தில் விளக்குகிறார்.

**தே3வகா2ர தடாக1 வாபி ஸ**
**ரோவரக3ளபி4மானி ஸுரரு க**

**ளேவரதொ3ளிஹ ரோமகூபக3ளொளகெ3 தும்பி3ஹரு |**
**ஆ வியத்க3ங்கா3தி3 நதி3க3ளு**
**பா4விஸுவு தெ3ப்பத்தெரடெ3னிப**
**ஸாவிர ஸுநாடிக3ளொளகெ3 ப்ரவஹிஸுதலிஹவெந்து3 ||5**

தேவகார = தேவர்களால் உருவாக்கப்பட்ட நீர்வீழ்ச்சி
தடாக = ஏரி
வாபி = இறங்கி குளிக்கத்தகுந்த கிணறு
ஸரோவர = குளம், இவற்றின்
அபிமானி ஸுரரு = அபிமானி தேவதைகள்
களெவரதொளகெ = இந்த சரீரத்தில்
இஹ = இருக்கிறார்கள்
ரோமகூபகளொளகெ = மயிர்க்கால்களில்
தும்பிஹரு = நிறைந்திருக்கிறார்கள்
ஆ வியத்கங்காதி நதிகளு = ஆகாய கங்கை வரைக்கும் இருக்கும் புண்ணிய நதிகள் அனைத்தும்
பாவிசுவுது = அனுசந்தானம் செய்து
எப்பத்தெரடெனிப சாவிர = 72,000
நாடிகளொளகெ = நாடிகளுக்குள்
ப்ரவஹிஸுதலிகவெந்து = பாய்ந்து ஓடுகின்றன என்று

இந்த சரீரத்திலேயே தீர்த்தக்ஷேத்திர அபிமானி தேவதைகள் இருக்கிறார்கள் என்று சொல்கிறார்.

நீர்வீழ்ச்சி, ஏரி, கிணறு, குளம் ஆகியவற்றின் அபிமானி தேவதைகள், நம் தேகத்தின் மயிர்க்கால்களில் வியாபித்திருக்கிறார்கள். சாதாரணமான நதியில் தொடங்கி, ஆகாயகங்கை வரை இருக்கும் நதிகள் அனைத்தும் நம் சரீரத்தின் 72,000 நாடிகளில் இருக்கிறார்கள் என்று நினைக்க வேண்டும். பரமாத்மனின் விராட ரூப தேகத்தின் நாடிகளில் கிணறு, ஏரி, ஆகியவற்றின் அபிமானி தேவதைகளும், நதிகளும் பாய்ந்து ஓடுகின்றன. அந்த பரமாத்மன், நம் சரீரத்தில் இருப்பதால், நம் தேகங்களிலும் இவை அனைத்தும் இருக்கின்றன என்பது கருத்து.

**மூரு கோடியமேலெ ஷோபி4ப**
**ஈரதி4க எப்பத்து ஸாவிர**
**மாருதாந்தர்யாமி மாத4வ ப்ரதிதி3வஸத3ல்லி |**
**தா ரமிஸுதிஹனெந்து3 திளிதி3ஹ**
**ஸூரிக3ளெ தேவதெக3ளவர ஷ**
**ரீரக3ளெ ஸுக்ஷேத்ர அவரர்ச்சனெயெ ஹரிபூஜெ ||6**

மூரு கோடியமேலே = மூன்று கோடிக்கு மேல்
ஈரதிக எப்பத்து சாவிர = 72,000
ஷோபிப = ஒளிர்ந்து கொண்டிருக்கும்

மாருதாந்தர்யாமி = வாயுதேவரின் அந்தர்யாமியாக இருக்கும்
மாதவ = லட்சுமிபதியான ஸ்ரீபரமாத்மன்
ப்ரதி திவசதல்லி = எப்போதும்
தா = தான்
ரமிஸுதிஹனெந்து = நம் தேகத்தில் மகிழ்ச்சியுடன் நடமாடிக் கொண்டிருக்கிறான் என்று
திளிதிஹ = அறிந்திருக்கும்
ஸூரிகளெ = ஞானிகளே
தேவதெகளு = தேவதைகள்
அவர சரீரகளே = அவரின் சரீரங்களே
சுக்ஷேத்ர = தீர்த்த க்ஷேத்திரங்கள்
அவரர்ச்சனெயெ = அவரின் பூஜையே
ஹரிபூஜெ = ஹரிபூஜையாகும்.

முந்தைய ஸ்லோகத்தில் கூறியபடி, தேகத்தில் இருக்கும் நாடிகளில் இருக்கும் நதி முதலானவற்றின் அபிமானி தேவதைகளில் முக்ய பிராணாந்தர்கத பரமாத்மனின் ரூபங்களை சிந்திப்பவர்களை பூலோகத்தில் தேவதைகளாக நினைக்க வேண்டும் என்று சொல்கிறார். நீர்வீழ்ச்சி முதலானவற்றின் அபிமானி தேவதைகள் 3 கோடிகளுக்கு மேல் இருக்கிறார்கள். 72,000 நாடிகளில் அனைத்து நதிகளின் அபிமானி தேவதைகளும் இருக்கிறார்கள். இவை அனைத்திலும், பாரதிரமண முக்யபிராணாந்தர்கதனாக மூன்று கோடி 72,000 ரூபங்களால் மயிர்க்கால்கள், நாடிகள் இவற்றில் பரமாத்மன், மகிழ்ச்சியுடன் நடமாடுகிறான் என்று அறிந்தவர்களை பூலோகத்தில் தேவதைகள் என்றே அறியவேண்டும். இத்தகைய மகாத்மர்களின் தேகங்களே உத்தம க்ஷேத்திரம். இவர்களின் பூஜையை செய்தால், தன்னையே பூஜித்ததாக ஸ்ரீஹரி மகிழ்ச்சியடைகிறான்.

**ஸ்ரீவர னிக3பி4ஷேக வெந்தரி**
**தீ வஸுந்த4ரெயொளகெ3 ப3ல்லவ**
**ராவ ஜலத3லி மிந்த3ரெயு க3ங்கா3தி தீர்த்த2க3ளு ।**
**தா ஒலிது3ப3ந்த3ல்லெ நெலெகொ3**
**ண்டீ3வு வகி2லார்த்த2க3ள னரியத3**
**ஜீவர மரதரங்கி3ணியனைதி3த3ரு ப2லவேனு ||7**

ஸ்ரீவரனிகெ = நம் தேகத்தில் தேஹாகாரனாக இருக்கும் ஸ்ரீலட்சுமிபதிக்கு
அபிஷேகவெந்து = நம் தேகத்தை கழுவுவதே (நாம் ஸ்னானம் செய்வதே) அபிஷேகம் என்று
அரிது = அறிந்து
பல்லவரு = ஞானிகள்
ஈ வஸுந்தரெயொளகெ = இந்த பூமியில்
ஆவ ஜலதலி = கிணறு, ஏரி என எந்த நீரில்
மிந்தரெயு = ஸ்னானம் செய்தாலும்
கங்காதி தீர்த்தகளு = கங்கை தீர்த்தங்கள்

தாவலிது = தான் தரிசனம் அளித்து
பந்து அல்லி நெலெகொண்டு = ஸ்னானம் செய்யும் நீரில் நிலைத்து
அகிளார்த்தகள = ஸ்னான பலன்களை
ஈவரு = கொடுக்கிறார்
அரியத = இதனை அறியாத
ஜீவரு = மனிதர்கள்
அமரதரங்கிணிய = தேவநதியான கங்கையில்
மைதிதரெ = ஸ்னானம் செய்வதற்காக சென்றால்
பலவேனு? = என்ன பலன் கிடைக்கப் போகிறது?

அனுசந்தானத்துடன் ஸ்னானம் செய்யும் ஞானிகள், எங்கு ஸ்னானம் செய்தாலும் அனைத்து தீர்த்தங்களின் ஸ்னான பலன்களும் கிடைக்கிறது. அனுசந்தானம் இல்லாத அஞ்ஞானிகள் காசிக்குச் சென்றாலும் அது பலன்களைக் கொடுக்காது என்று கூறுகிறார். நம் தேகமானது, பரமாத்மனுக்கு ப்ரதிமையைப் போன்றது என்று அறிந்து, நாம் ஸ்னானம் செய்யும்போது, எந்த தண்ணீரில் ஸ்னானம் செய்தாலும்,

கங்கேச யமுனேசைவ கோதாவரி சரஸ்வதி ।
நர்மதா ஸிந்து காவேரி ஜலேஸ்மின் ஸன்னிதிம்குரு ।।

என்னும் மந்திரத்தினாலும், ஸ்னான விதிகளின்படி ஸ்மரணாதிகளை செய்து புருஷ சூக்தத்தை சொல்லியவாறு, தம் தேகத்தில் பரமாத்மனை சிந்தித்து, அபிஷேகம் செய்கிறேன் என்று நினைத்து, ஸ்னானம் செய்தால், இவர் நினைத்த கங்கை முதலான அனைத்து தீர்த்தாபிமானிகளும் அங்கு வந்து அந்தந்த நதிகளில் ஸ்னானம் செய்த பலன்களைக் கொடுத்து தன்யர்களாக செய்கின்றனர். இத்தகைய ஞானம் இல்லாமல், யாத்திரையை செய்து காசிக்குச் சென்று கங்கையில் குளித்தாலும் கங்கா ஸ்னானம் செய்த பூர்ண பலன் கிடைக்காது.

**நத$^{3}$ நதி$^{3}$க$^{3}$ளிளெயொளகெ$^{3}$ பரிவுவு**
**உத$^{3}$தி$^{4}$பர்யந்தரதி$^{3}$ தருவா**
**யத$^{3}$லி ரமிஸுவுவல்லி தன்மயவாகி$^{3}$ தோரத$^{3}$லெ ।**
**விதி$^{4}$ நிஷேத$^{3}$க$^{3}$ளா சரிஸுவரு**
**பு$^{3}$த$^{4}$ரு ப$^{4}$கவத்$^{3}$ரூப ஸர்வ**
**த்ரத$^{3}$லி சிந்த$^{1}$னெ ப$^{3}$ரலு த்யஜிஸுவரகி$^{2}$ல கர்மக$^{3}$ள ।।8**

இளியொளகெ = பூமண்டலத்தில்
நத நதிகளு = நத என்றால் கிழக்கிலிருந்து மேற்கு நோக்கிப் பாய்வது; நதி என்றால் மேற்கிலிருந்து கிழக்கு நோக்கிப் பாய்வது. இத்தகைய நத நதிகள்
உததிபர்யந்தரதி = கடலைச் சேரும் வரை தனித்தனியாக
பரிவுவு = பாய்கின்றன
தருவாயதலி = அந்தக் கடலில் சேர்ந்தபிறகு
தோரதலெ = நதியாகத் தெரியாமல்
தன்மயவாகி = கடல் ரூபமாகவே

அல்லி = அந்தக் கடலில்
ரமிஸுவுவு = பாயாமல் நின்றுவிடுகின்றன; அது போல,
புதரு = ஞானிகள்
விதி நிஷேதகள = செய்யவேண்டிய செயல்களை செய்வது; செய்யக்கூடாதவற்றை செய்யாமல் இருப்பது
ஆசரிசுவரு = இத்தகைய செயல்களை செய்வார்கள்
(பகவத் ரூபங்களை எப்போதும் சிந்தித்திருப்பார்கள் என்று அர்த்தம்)
பகவத்ரூப = பரமாத்மனின் ரூபம்
சர்வத்ரதலி = எல்லா இடங்களிலும்
சிந்தனெ பரலு = சிந்திக்க
அகிளகர்மகள = அனைத்து காம்ய கர்மங்களையும்
த்யஜிஸுவரு = விட்டுவிடுவர்

வியாப்தோபாசகர்கள், எந்தவொரு பலன்களையும் எதிர்பார்த்து விதிபூர்வகமான கர்மங்களை செய்வதில்லை என்று சொல்கிறார்.

மிகப்பெரிய நதகள், நதிகள் அனைத்தும் கடலில் போய்ச் சேரும் வரைக்கும், பாய்ந்து ஓடிக்கொண்டிருக்கின்றன. அந்தக் கடலில் போய் சேர்ந்தபின், அதில் தனியான நதியாக தெரியாமல், கடலிலேயே அடங்கிவிடுவதைப் போல, அனைத்து இடங்களிலும் வியாபித்திருக்கும் பகவத் ரூபத்தின் சிந்தனை தமது அனுஷ்டானத்திற்கு வரும்வரைக்கும் ஞானிகள், தங்களின் கர்ம ஆசரணையை செய்வார்கள். அப்படியான அனுஷ்டானம் வந்தபிறகு, விதிபூர்வகமான கர்மங்களைப் பின்பற்றுவதையும் விட்டுவிடுவர். இங்கு அந்த கர்மங்களை ஒரேயடியாக விட்டுவிடுவர் என்று அர்த்தமல்ல.

விதிகளுக்கு உட்படாத தேவதைகளும்கூட விதிபூர்வமான கர்மங்களை செய்து கொண்டிருப்பதாக பாகவத 3ம் ஸ்கந்தத்தில் - தேவானாம் குணலிங்கானாம் அனுஸ்ராவிக கர்மிணாம் - என்று சொல்லியிருப்பதற்கு பாகவத தாத்பர்யத்தில் 'அனுஸ்ராவிக கர்மாஸௌஸ்ருத்யுக்தம் யோனலங்கயேத்' - வேதோக்த கர்மங்களை செய்பவரே அனுஸ்ராவிக கர்மி என்று சொல்கிறார்.

மேலும் 'நஸுராம்பிபேத்' - சுராபானம் குடிக்கக்கூடாது என்று சொல்வது தடை செய்யப்பட்ட செயல்களாகும்.
'அஹரஹ: ஸந்த்யாமுபாஸீத' - தினமும் சந்தியாவந்தனம் செய்யவேண்டும், என்று சொல்வது, விதி வாக்கியமாகும்.

இந்த இரண்டையும் சரியாக பின்பற்ற வேண்டும்.

கீதா தாத்பர்ய வாக்கியங்களிலிருந்து இதைப்பற்றி தெரியவேண்டிய விஷயங்கள் என்னவெனில்: சமாதி நிலையில் இருந்துகொண்டு, பகவத் தியானங்களை செய்து வரும்போது, அவசியமான கர்மங்களை விட்டால் அதில் தவறில்லை. பகவந்தனை ஸ்தோத்திரம் செய்தவாறு, பதங்களைப் பாடியவாறு, மெய்மறந்து நர்த்தனங்களை செய்து வரும்போது, சந்தியாதிகளை விட்டாலும் அதில் பிரச்னையில்லை.

ஏனெனில், இவையும் ஒரு விதிக்கு உட்பட்ட கர்மங்களே. அவை முடிந்தபின், அந்த விடுபட்ட நித்யகர்மானுஷ்டங்களை செய்யலாம்.

சாதுக்கள், சன்யாசிகள்கூட தங்களின் கர்மங்களை செய்து கொண்டிருப்பதாக ஸ்ரீமதாசார்யரின் வாக்கியம் இருக்கிறது. ஆகையால் 'தியஜிசுவரு - விட்டுவிடுவர்' என்று சொல்வதின் அர்த்தம் என்னவெனில், 'ஸ்வர்க்ககாமோயஜீத' - ஸ்வர்க்கத்தில் விருப்பம் உள்ளவர்கள் யாகங்களை செய்யவேண்டும் என்று சொல்லக்கூடிய பலன்களைக் காட்டும் விதிகளை விட்டுவிடுவர். அதாவது, பகவத் ப்ரீதிக்காக நித்யகர்மங்களை அனுஷ்டானம் செய்து, பரமாத்மனுக்கு அருகில் செல்வர். அதன் பலன்களை வேண்ட மாட்டார்கள். கர்மத்யாக என்றால் கர்மங்களை தியாகம் செய்வது அல்ல; கர்மங்களின் பலன்களை தியாகம் செய்வது என்று கீதையில் ஸ்பஷ்டமாக சொல்லியிருக்கார்கள்.

ஆகையால், அகிளகர்மங்களை தியஜிஸுவரு என்றால், அனைத்து காம்ய கர்மங்களை (பலன்களை விரும்பி செய்யப்படும் அனைத்து கர்மங்களும்) விட்டு, நிஷ்காமகராகி கர்மங்களை செய்வார்கள் என்பது கருத்து.

**கலியெ மொத$^3$லாத$^3$கி$^2$ல தா$^3$னவ**
**ரொளகெ$^3$ பி$^3$ரம்மப$^4$வாதி$^3$ தே$^3$வ**
**ர்க$^3$ளு நியாமகராகி$^3$ ஹரியாக்$^3$ஞெயலி அவரவர |**
**கலுஷகர்மவ மாடி$^3$ மாடி$^3$ஸி**
**ஜலருஹேக்ஷண க$^3$ர்ப்பிஸூத நி**
**ஸ்சல ஸுப$^4$க்தி ஞானபூர்ணரு ஸுகி$^2$பரவரொளகெ$^3$ ||9**

கலியெ மொதலாத = கலியில் துவங்கி
அகில தானவரொளகெ = அனைத்து தைத்யர்களிலும்
பிரம்ம பவாதி = பிரம்ம, ருத்ர முதலான
தேவர்களு = தத்வாபிமானி தேவதைகள்
நியாமகராகி = ப்ரேரகர்களாகி (வழி நடத்துபவர்களாக)
ஹரிய ஆக்ஞெயலி = ஸ்ரீஹரியின் ஆணைப்படி
அவரவர = அவரவர்களின் (தகுதிக்கேற்ப)
கலுஷ கர்மவ = பாவ கர்மங்களை
மாடி மாடிஸி = அவர்கள் உள்ளே இருந்து தாம் செய்து, அவர்களால் செய்வித்து
ஜலருஹேக்ஷண = தாமரைக் கண்ணனான ஸ்ரீபரமாத்மனுக்கு
அர்ப்பிஸூத = சமர்ப்பணம் செய்து
நிஸ்சல = திடமான
சுபக்தி = தூய்மையான பக்தி
ஞானபூர்ணரு = தெளிவான ஞான பக்தாதிகளைக் கொண்ட இந்த பிரம்மாதிகள்
அவரொளகெ = அந்த கலி முதலானவர்களில்
சுகிபரு = சுகமாக இருப்பார்கள்

கலி முதலான தமோ யோக்யர்களில் பிரம்மாதிகள் இருந்து, பாவ கர்மங்களை செய்வித்து, அவற்றை ஸ்ரீஹரிக்கு சமர்ப்பித்தவாறு, தாம் நிர்லிப்தர்களாக (அவற்றிற்கு சம்பந்தப்படாமல்) இருக்கிறார்கள் என்கிறார்.

கலி முதலான அனைத்து தைத்யர்களிலும், பிரம்ம, ருத்ர முதலான தேவதைகள் இருந்து, அவரவர்களின் யோக்யதைக்கேற்ப பகவத் த்வேஷாதி பாப கர்மங்களை, பகவந்தனின் ஆணைப்படி தாம் செய்து, அவர்களிடமிருந்து செய்வித்து, அவற்றை பரமாத்மனுக்கு சமர்ப்பிக்கின்றனர். தம்முடைய திடமான ஞான, பக்திகளால் அவர்களில் சுகமாக இருப்பார்கள்.

**ஆவ ஜீவரொளித்த$^3$ரேனி**
**ன்னாவ க$^1$ர்மவ மாட$^3$லேனி**
**ந்னாவ கு$^3$ண ரூபக$^3$ளுபாஸனெ மாட$^3$லேனவரு |**
**காவனய்யன பரமஸத்கரு**
**ணாவலோகன ப$^3$லதி சலிஸுவ**
**தே$^3$வதெக$^3$ளனு முட்டலாப$^1$வெ பாபகர்மக$^3$ளு ||10**

அவரு = மேற்சொன்ன பத்யத்தில் சொல்லப்பட்ட, மஹாபகவத் பக்தரான பிரம்மாதி தேவதைகள்,
ஆவ ஜீவரொளித்தரேனு = எந்த ஜீவர்களில் இருந்தால் என்ன?
யாவ கர்மவ மாடலேனு = இன்னும் எந்த கர்மங்களை செய்தால் என்ன?
ஆவ குண ரூபகள = எந்த குணங்களைக் கொண்ட எந்த தேவதையை
உபாசனெ மாடலேனவரு = உபாசனை செய்தால் என்ன?
காவனய்யன = மன்மதனின் தந்தையான ஸ்ரீபரமாத்மனின்
பரம சத்கருணாவலோகன பலதி = மிகச்சிறந்த கருணா கடாக்ஷத்தினால்
சஞ்சரிசுவ = பயணம் செய்யும்
தேவதெகளனு = தேவதைகளை
பாபகர்மகளு = பாவ கர்மங்கள்
முட்டலாபவெ = சம்பந்தம் செய்யுமா?

பிரம்மாதிகள் கலி முதலான தைத்யர்களில் இருந்து, பாவ கர்மங்களை செய்வதால், அவர்களுக்கு பாவ கர்மங்களின் சம்பந்தம் இல்லை என்கிறார். 'தேவானாம் புண்யபாபாப்யாம் ஸுகமேவோத்தரோத்தரம்' என்னும் பாகவத 11 ஸ்கந்த தாத்பர்யத்தின்படி தேவதைகள் புண்ணியமோ பாவமோ எது செய்தாலும், அவர்களுக்கு சுகமே கிடைக்கிறதே தவிர, துக்கம் இல்லை என்று சொல்லியிருப்பதால், பிரம்மாதி தேவதைகள் கலி முதலான எந்த தைத்யர்களில் இருந்தால் என்ன? அவர்களில் இருந்துகொண்டு, எந்த தாமஸ ராஜஸாதி க்ஷ்த்ர தேவதோபாஸனையை செய்தால் என்ன?,

ஸ்ரீபரமாத்மனின் கருணைப் பார்வையால் அந்த தேவதைகளுக்கு பாபத்தின் சம்பந்தம் ஆகுமோ? என்றைக்கும் ஆகாது என்கிறார்.

**பதியொட$^3$னெ மனப$^3$ந்த தெரத$^3$லி**

**ப்ரதி தி$^{3}$வஸத$^{3}$லி ரமிஸி மோதி$^{3}$ஸி**
**ஸுதர படெ$^{3}$தி$^{3}$ளெயொளு ஜிதேந்த்$^{3}$ரியளெந்து$^{3}$ கரெஸுவளு |**
**க்ருதிபதி கதா$^{2}$ம்ருத ஸுபோ$^{4}$ஜன**
**ரத மஹாத்மரிகி$^{3}$தர தோ$^{3}$ஷ**
**ப்ரததிக$^{3}$ளு ஸம்ப$^{4}$ந்திஸுவுவெஃச்யுதன தாஸரிகெ$^{3}$ ||11**

பதியொடனெ = தன் கணவனுடன்
மனபந்த தெரதலி = தன் இஷ்டத்திற்கேற்ப
ப்ரதிதிவசதலி = தினந்தோறும்
ரமிஸி = போகித்து
மோதிஸி = சுகத்தை அடைந்து
ஸுதரபடது = மக்களைப் பெற்று
இளியொளு = பூமியில்
ஜிதேந்த்ரியளெந்து கரெஸுவளு = ஜிதேந்த்ரியள் (இந்திரியங்களை வென்றவள்) என்று அழைக்கப்படுகிறாள்
க்ருதிபதி = க்ருதி நாமக லட்சுமியின் பதியான ப்ரத்யும்ன நாமக ஸ்ரீபரமாத்மன்
கதா = கதை என்னும்
அம்ருத = அமிர்தத்தை
ஸுபோஜன = உத்தமமான போஜனத்தை
ரத = ஆத்திகரான
மஹாத்மரிகெ = மகாத்மரான
அச்யுதன தாசரிகெ = அச்யுதனின் பக்தர்களுக்கு
இதர தோஷ ப்ரததிகளு = வேறு விதமான பாப ராசிகள்
சம்பந்திசுவுவெ = சம்பந்தமாகுமா? (இல்லை என்று அர்த்தம்)

முந்தைய பத்யத்தில் தேவதைகளுக்கு பாப சம்பந்தம் இருப்பதில்லை என்றார். இங்கு பரமாத்மனின் பக்தர்களான ஸ்த்ரி, புருஷர்களுக்கு வேறு பாப சம்பந்தம் இல்லை என்று சொன்னபிறகு, தேவதைகளுக்கு என ஏன் தனியான சொன்னார் என்னும் சந்தேகத்தை இங்கு தெளிவாக்குகிறார். பரமாத்மனின் கதா அம்ருத பானத்தில் மூழ்கியிருக்கும், என்றால், எப்போதும் கதா ஸ்ரவணாதிகளை செய்தவாறு, பாடியவாறு இருக்கும் ஸ்த்ரீயர், தினமும் கணவனுடன் தேவையான போகங்களை அனுபவித்து, சுகங்களைப் பெற்று, மக்களைப் பெற்றிருந்தாலும், அவளை, ஜிதேந்திரியள் (இந்திரியங்களை வென்றவள்) என்பர். ஆகையால், மகாத்மரான பகவத் தாசருக்கு பாவ சம்பந்தங்கள் இருப்பதில்லை.

**தூஸிப$^{3}$ஹ நதி$^{3}$யொளகெ$^{3}$ தன்ன ஸ**
**ஹாஸ தோருவெனெந்து$^{3}$ ஜலகெது$^{3}$**
**ரீசித$^{3}$ரெ கைஸோது$^{1}$ முளுகு$^{3}$வ ஹரிய பி$^{3}$ட்டவனு**
**க்லேஷ வைது$^{3}$வனாதி$^{3}$யலி ச**
**ர்வேஷ க்லுப்தி$^{1}$ய மாடி$^{3}$து$^{3}$த$^{3}$ பி$^{3}$**
**ட்டாஷெயிந்த$^{3}$லி அன்யராராதி$^{3}$ஸுவ மானவனு ||12**

ஸீஸிபக = வேகமாகப் பாயும் ஆற்றின் வேகம்
நதியொளகெ = ஆற்றில்
ஹரிய பிட்டவனு = பிம்ப ரூபி பரமாத்மனை விட்டவன் அல்லது பிம்பரூபியின் கருணையைப் பெறாதவன்
தன்ன ஸாஹஸ தோருவெனெந்து = தன் திறமையைக் காட்டுகிறேன் என்று
ஜலகிதிரிகெ = பாயும் நீரில் அதற்கு எதிராக
ஈஸிதரெ = நீச்சல் அடித்தால்
கைஸோது முணுகுவனு = சோர்ந்து, மூழ்குவான்
ஆதியலி = துவக்கத்தில்
சர்வேஷ = சர்வ லோகத்திற்கும் ஈஸ்வரனான ஸ்ரீபரமாத்மன்
க்லுப்திய மாடிதுது = இவன் இவ்வளவே சுக துக்கங்களை அனுபவிக்கட்டும் என்று தீர்மானம் செய்திருப்பதை
பிட்டு = விட்டு
ஆஷெயிந்தலி = ஆசையில்
அன்யர = பிற தேவதைகளை
ஆராதிஸுவ = ஆராதிக்கும்
மானவனு = மனிதன்
க்லேஷயைதுவனு = கஷ்டப்படுவான்

பரமாத்மனை விட்டு பிற தேவதைகளை வணங்குவோர் கஷ்டப்படுவர் என்பதை ஆதாரத்துடன் விளக்குகிறார்.

இரு கரைகளையும் தொட்டு வேகமாகப் பாயும் நதியில், தன் சாமர்த்தியத்தைக் காட்டுவேன் என்று சொல்லி, ஒருவன் அந்த நீர் பாயும் திசையை நோக்கி எதிர்நீச்சல் அடித்தால், சிறிது நேரத்திலேயே கை தளர்ந்து, சோர்ந்து, அதே நீரிலேயே மூழ்கிவிடுவான். அதுபோலவே, ஈஸ்வரன் நமக்கு முதலிலேயே கொடுத்திருக்கும் போகங்களில் சுகப்படாமல், பேராசையினால், பரமாத்மனை விட்டு அன்ய தேவதைகளை பஜிப்பவர்கள், இறுதியில் இஹபரங்களில் கஷ்டப்படுவர்.

**நானு நன்னது$^3$ எம்ப$^3$ ஜட$^3$மதி**
**மானவனு தி$^3$னதி$^3$னதி$^3$ மாடு$^3$வ**
**ஸ்னான ஜப தே$^3$வார்ச்சனெயெ மொத$^3$லாத$^3$ கர்மக$^3$ள |**
**தா$^3$னவரு ஸெளெதொ$^3$ய்வரல்லதெ$^3$**
**ஸ்ரீனிவாஸனு ஸ்வீகரிஸ ம**
**த்தானெ பக்வ கபித்த$^2$ப$^2$ல ப$^4$க்ஷிஸித$^3$வோலஹுது ||13**

நானு நன்னது எம்ப ஜடமதி மானவனு = நான், எனது, இவற்றை நானே செய்தேன் என்று சொல்லும் கர்வம் கொண்ட முட்டாள் மனிதன்
தினதினதி = தினந்தோறும்
மாடுவ = செய்யும்
ஸ்னான ஜப தேவாச்சனெயெ = ஸ்னான, ஜப, பூஜைகளே
மொதலாத கர்மகள = ஆகிய செயல்களின் பலன்களை

தானவரு = தைத்யர்கள்
செளெதொய்வரல்லதெ = பலாத்காரத்தினால் அபகரித்துச் செல்வதுடன்
ஸ்ரீனிவாசனு = ஸ்ரீனிவாசன்
ஸ்வீகரிஸ = ஏற்றுக்கொள்ள மாட்டான்
மத்தானெ = மதம் பிடித்த யானை
பக்வ = பழுத்த
கபித்த பல = விளாம்பழம்
பக்ஷிஸிதவோலஹுது = தின்பதைப் போல பலன் இல்லாதது.

அனைத்து கர்மங்களையும் பகவந்தனே செய்வித்தான் என்னும் அறிவு இல்லாமல், அனைத்தையும் நானே செய்தேன் என்னும் ஸ்வதந்த்ர கர்த்ருத்வ அபிமானத்தைக் கொண்டவன் செய்த பூஜை முதலான செயல்கள் அனைத்தும், நிஷ்பலன் - பலன்களைக் கொடுக்காதவை என்று சொல்கிறார்.

நாஹம் கர்த்தா ஹரி: கர்த்தா என்னும் வாக்கியத்தால், அனைத்து காரியங்களையும் பரமாத்மனே செய்விக்கிறான் நான் எதுவும் செய்யவில்லை என்னும் ஞானத்தை மறந்து, அனைத்து செயல்களையும் ஸ்வதந்த்ரத்துடன் நானே செய்தேன்,

இந்த பொருட்கள் அனைத்தும் என்னுடையதே என்னும் அபிமானத்தைக் கொண்ட முட்டாள் செய்யும் ஸ்னான, ஜப, பூஜை முதலான அனைத்து கர்மங்களின் பலன்களையும் தைத்யர்கள் அபகரித்துப் போகிறார்களே தவிர, அவற்றை பரமாத்மன் ஏற்றுக் கொள்வதில்லை. அது எப்படியெனில், விளாம்பழத்தை தின்றால், அதன் உள்ளிருக்கும் பழம் மட்டும் மாயமாகி, அதன் ஓடு மட்டும் வெளியே வந்து விழுவதைப் போல.

**தா4த்ரியொளகு3ள்ளகி2ல தீர்த்த2**
**க்ஷேத்ர சரிஸித3ரேனு பாத்ரா**
**பாத்ரவரிதன்னாதி3 தா3னவ மாடி3 ப2லவேனு ।**
**கா3த்ர நிர்மலனாகி3 மந்த்ர**
**ஸ்தோத்ர படி2ஸித3ரேனு ஹரி ஸ**
**ர்வத்ர க3தனெந்த3ரியத3லெ தா கர்த்ரு எம்பு3வனு ।।14**

தாத்ரியொளகுள்ள = பூமியில் உள்ள
அகிள தீர்த்த க்ஷேத்திர = அனைத்து தீர்த்த க்ஷேத்திர யாத்திரைகளை
சரிஸிதரேனு = செய்தால் என்ன?
பாத்ராபாத்ரவனரிது = பாத்ரா பாத்ரங்களை அறிந்து
தானவ மாடி பலவேனு? = அன்ன தானம் முதலான தானங்களை செய்து என்ன பலன்?
காத்ர நிர்மலனாகி = ஸ்னானாதிகளால் சரீரங்களை சுத்தப்படுத்திக் கொண்டு
மந்த்ர ஸ்தோத்ர படிஸிதரேனு = மந்திர ஸ்தோத்திரங்களை படித்தால் என்ன?
ஹரி சர்வத்ர கதனெந்து = ஸ்ரீஹரி அனைத்து இடங்களிலும் இருக்கிறான் என்று

அரியதலெ = தெரியாமல்
தா கர்த்ரு எம்புவனு = (மேற்கண்ட செயல்களை) செய்தவன் நானே என்று சொல்பவன்

பரமாத்மனே அனைத்து இடங்களிலும் இருந்து கொண்டு, அனைத்து காரியங்களையும் செய்விக்கிறான் என்று அறியாமல், தானே ஸ்வதந்த்ரனாக அனைத்தையும் செய்கிறேன் என்று யார் நினைக்கிறாரோ, அத்தகையவர் பூமியில் உள்ள அனைத்து தீர்த்த க்ஷேத்திரங்களையும் சென்று பார்த்து விட்டு வந்தால்தான் என்ன? தகுந்தவர்களுக்கு அன்னாதி தானங்களை செய்தும் என்ன பலன்? ஸ்னானாதிகளை, மந்திர ஸ்தோத்திரங்களை சொல்லியும் என்னதான் பலன்? ஒன்றும் இல்லை என்று பொருள்.

**கண்ட3 நீரொளு முளுகி3 தே3ஹவ**
**த3ண்டிஸலு ப2லவேனு த3ண்ட3க**
**மண்டலுக3ளனெ த4ரிஸி யதியெந்தெ3னிஸி ப2லவேனு |**
**அண்டஜாதி4பனம்ஸக3ன பத3**
**புண்டரீகதி3 மனவஹர்னிஷி**
**ப3ண்டு3ணியவோலிரிஸி ஸுக2ப3ட3தி3ப்ப மானவனு ||15**

அண்டஜாதிபன = பக்ஷி ராஜனான கருடனின்
அம்ஸகன = முதுகில் அமர்ந்திருக்கும் ஸ்ரீஹரியின்
பத புண்டரீகதி = பாத கமலங்களில்
அஹர்னிஷி = இரவும் பகலும்
மனவ = மனதை
பண்டுணியவோல் = ஒரு தேனியைப் போல
இரிஸி = வைத்து
சுக படதிப்ப = சுகங்களை அனுபவிக்கும்
மானவனு = மனிதன்
கண்ட நீரொளு முளுகி = அனைத்து தீர்த்தங்களில் ஸ்னானம் செய்து
தேஹவ தண்டிஸலு பலவேனு? = அந்த பயணங்களில் தேகத்தை தண்டித்து என்ன பயன்?
தண்ட கமண்டலுகளெ தரிஸி = தண்ட, கமண்டலங்களை தரித்து
யதியெந்தெனிஸி = சன்யாசி என்று சொல்லிக் கொண்டு
பலவேனு? = என்ன பலன்?

தேனி எப்படி மலர்களையே சுற்றி வந்து கொண்டிருப்பதைப் போல, யார் எப்போதும் கருடாரூடனான ஸ்ரீபரமாத்மனின் பாத கமலங்களில் தன் மனதை வைப்பதில்லையோ, அத்தகைய மனிதன் கண்ணுக்குத் தெரியும் தண்ணீர் அனைத்திலும் மூழ்கி, குளிர் முதலானவைகளால் தேகத்தை தண்டித்தவாறு இருப்பதில் என்ன பலன்? தண்ட, காஷ்ட, கமண்டலம் ஆகியவற்றை தரித்து தான் ஒரு சன்னியாசி என்று புகழ்பெற்றால் அதனால் ஆகும் பலன்தான் என்ன?

**வேத சாஸ்திர புராண கதெ$^{2}$க$^{3}$ள**
**நோதி$^{3}$ பேளித$^{3}$ரேனு ஸகல நி**
**ஷேத$^{3}$கர்மவ தொரெது$^{3}$ ஸத்கர்மக$^{3}$ள மாடே$^{3}$னு |**
**ஓத$^{3}$னங்க$^{3}$ள ஜரிது ஷ்வாஸ நி**
**ரோத$^{3}$கை$^{3}$ஸித$^{3}$ரேனு காம**
**க்ரோத$^{3}$வளியதெ$^{3}$ நானு நன்னது$^{3}$ எம்ப$^{3}$ மானவனு ||16**

காம க்ரோதவளியதெ = காம கிரோதங்களை விடாமல்
நானு நன்னது எம்ப மானவனு = நான், எனது எனது கர்வத்துடன் திரியும் மனிதன்
வேத சாஸ்திர புராண கதெகள = வேத சாஸ்திர புராணங்களின் கதைகளை
ஓதி பேளிதரேனு = படித்து, மற்றவர்களுக்கு சொன்னால்தான் என்ன?
சகல நிஷேத கர்மவ = செய்யக்கூடாது என்று சொல்லப்பட்ட கர்மங்களை
தொரெது = செய்யாமல் விட்டு
சத்கர்மங்கள மாடேனு = சத்கர்மங்களை மட்டும் செய்துவந்தால்தான் என்ன?
ஓதனங்கள ஜரிது = அன்ன ஆகாரங்களை விட்டு
ஷ்வாஸ நிரோத கைஸிதரேனு = மூச்சை அடக்கி, தான் ஒரு யோகி என்று சொன்னால்தான் என்ன?
(இவை அனைத்தும் எவ்வித பலன்களையும் கொடுக்காதவை என்று பொருள்).

காம, குரோதங்களை விடாமல், எப்போதும் நான், எனது என்னும் ஸ்வதந்த்ர பாவத்துடன் உள்ள மனிதன், என்ன புராண, வேத சாஸ்திரங்களை படித்தால், கேட்டால், அதனால் எந்தவொரு பலனும் இல்லை. செய்யக்கூடாத செயல்களை விட்டு, விதிப்படி செய்யவேண்டிய சத்கர்மங்களை சரியாக பின்பற்றினாலும், எந்தவொரு பலனும் இல்லை. தான் ஒரு மிகப்பெரிய யோகி என்று சொல்லிக்கொண்டு அன்ன ஆகாரங்களை விட்டு, மூச்சினை அடக்கினாலும், இவை அனைத்தையும் பரமாத்மனே செய்விக்கிறான் என்று அறிந்து, காம, குரோதங்களை வெல்லும்வரை, எந்தவொரு பிரயோஜனமும் இல்லை என்பது கருத்து.

**ஏனு கே$^{1}$ளித$^{3}$ரேனு நோடி$^{3}$த$^{3}$**
**ரேனு ஓதி$^{3}$த$^{3}$ரேனு பேளித$^{3}$**
**ரேனு பாடி$^{3}$த$^{3}$ரேனு மாடி$^{3}$த$^{3}$ரேனு தி$^{3}$னதி$^{3}$னதி$^{3}$ |**
**ஸ்ரீனிவாஸன ஞான கர்மதி$^{3}$**
**ஸானுராக$^{3}$தி$^{3}$ நெனெது$^{3}$ தத்த**
**த் ஸ்தா$^{2}$னத$^{3}$லி தத்$^{3}$ரூப தன்னாமகன ஸ்மரிஸத$^{3}$வ ||17**

ஸ்ரீனிவாசன ஜென்ம கர்ம = லட்சுமிதேவியை தன் வக்ஷஸ்தலத்தில் வைத்துக் கொண்டிருக்கும் ஸ்ரீபரமாத்மனின் அவதார சரித்திரங்களை
ஸதா = எப்போதும்
அனுராகதி = பக்தியினால்
நெனது = நினைத்தவாறு
தத்தத் ஸ்தானதலி = அந்தந்த இடங்களில்

தத்ரூப தன்னாமகன = அந்தந்த ரூபங்களில் அந்தந்த பெயர்களால் ஆன பரமாத்மனை
ஸ்மரிஸதவ = நினைக்காதவன்
ஏனு கேளிதரேனு = எந்த கிரந்தத்தைக் கேட்டால் என்ன?
நோடிதரேனு = எந்த கடவுளரின் பிரதிமைகளை / பூஜைகளை பார்த்தால் என்ன?
ஓதிதரேனு = எந்த கிரந்தத்தைப் படித்தால் என்ன?
பேளிதரேனு = பாராயணம் / ஸ்தோத்திரங்களை சொன்னால் என்ன?
பாடிதரேனு = தேவர நாமாக்களை பாடினால் என்ன?
மாடிதரேனு = எந்தவொரு நற்செயல்களை செய்தால் என்ன?
தினதினதி = தினந்தோறும் செய்தால் என்ன?

ஸ்ரீபரமாத்மனின் அவதார சரித்திரங்களை அனைத்து காலங்களிலும் (எப்போதும்) பக்தியுடன் நினைத்தவாறு, தீர்த்தங்களில் க்ஷேத்திரங்களில் வேத புராணாதிகளிலும், அனைத்து பிராணிகளிலும், அந்தந்த ரூபமாக அந்தந்த பெயர்களால் நிலைத்திருந்து, அனைத்து செயல்களையும் பரமாத்மனே செய்விக்கிறான் என்று உபாசனை செய்யாமல், அனைத்தையும் தானே செய்கிறேன் என்று நினைக்கும் புருஷன், எந்த பகவந்தனின் கதையைக் கேட்டால் என்ன? எந்த பிரதிமைகளை பார்த்தால் என்ன? எந்த கிரந்தங்களை படித்தால் என்ன? எந்த கிரந்தங்களை கேட்டால் என்ன? புராணம் சொன்னால் என்ன? எதை பாடினால்தான் என்ன? எந்த சத்கர்மங்களை அனுஷ்டானம் செய்தால் என்ன? எந்தவொரு செயல்களாலும் எந்த பிரயோஜனமும் இல்லை.

**பு$^3$த்தி$^3$ வித்$^3$யாபலதி$^3$ பேளித$^3$**
**ஷுத்த$^3$ காவ்யவித$^3$ல்ல த$^1$த்வ ஸு**
**பத்த$^3$திகளனு திளித$^3$ மானவனல்ல பு$^3$த$^3$ரிந்த$^3$ |**
**மத்$^4$வவல்லப$^4$ தானெ ஹ்ருதயதொ$^3$**
**ளித்து$^3$ நுடித$^3$ந்த$^3$த$^3$லி நுடிதெ$^3$ன**
**பத்த$^4$க$^3$ள நோட$^3$த$^3$லெ கிவிகொட்டாலிபுது$^3$ பு$^3$த$^4$ரு ||18**

புத்தி வித்யா பலதி = என் அறிவு, கல்விகளால்
பேளித = கூறிய
ஷுத்த காவ்யவிதல்ல = சுத்தமான காவியம் அல்ல இது
புதரிந்த = ஞானிகளிடமிருந்து
தத்வஸுபத்ததிகளனு = சிறந்த சாஸ்திர மார்க்கங்களை
திளித = அறிந்த
மானவனல்ல = மனிதன் அல்ல
மத்வ வல்லப = ஸ்ரீமன் மத்வாசார்யருக்கு ஸ்வாமியான பரமாத்மன்
தானே ஹ்ருதயதொளித்து = என் மனதில் இருந்து
நுடிதந்ததலி = சொன்னதைப் போல
நுடிதென = சொல்கிறேன்
புதனு = ஞானிகள்
அபத்தகள நோடதலெ = இதில் இருக்கும் தோஷங்களை கண்டுகொள்ளாமல்

கிவிகொட்டாலிபுது = காது கொடுத்து கேட்க வேண்டும்.தாசராயர் தமது ஹரிதாசத்வத்தை வெளிப்படுத்துகிறார்.

நான் இந்த கிரந்தத்தை ஏதோ எழுதிவிட்டேன். ஆனால் நான் அறிவாளி என்றோ, அறிஞன் என்றோ நினைத்து இதை எழுதவில்லை. சிறந்த காவிய லட்சணங்களுடன் கூடிய சுத்தமான காவியம் என்றும் நான் இதை கூறுவதில்லை. நல்ல சித்தாந்த பத்ததிகளை ஞானிகளிடமிருந்து நான் அறிந்தவனும் அல்ல. ஸ்ரீமத்வேஷன் தானே எனக்குள் இருந்து சொல்லியிருப்பதைப் போல எழுதியிருக்கிறேன். ஆகையாலேயே, சாதுக்கள் இதனை காது கொடுத்து கவனத்துடன் கேட்க வேண்டும், என்று தாசராயர் இந்த பத்யத்தில் கூறுகிறார்.

ஆனால், உண்மையாக தாசராயர் மிகச்சிறந்த பண்டிதர் என்பதும், சுதாதி கிரந்தங்களைப் படித்தவர், பிரவசனங்களை செய்தவர் என்பதும் இவரது சரித்தத்தைப் படிப்பதன் மூலம் அறியலாம். அப்படியிருந்தும், நான் அறிஞன் அல்ல, அறிவாளி அல்ல என்று ஏன் சொல்கிறார் என்றால் 'வித்யார்வா புத்திர்வா' அறிஞன் அறிவாளி ஆகியவை அந்தர்யாமி பரமாத்மனுடையதே தவிர என்னுடையது அல்ல என்று சொல்வதற்காகவும், இந்த சந்தியில் முன்பு சொல்லியிருப்பதைப் போல, நான் எனது என்பவன் என்ன நற்செயல்களை செய்தாலும் அது பலன்களைக் கொடுப்பதில்லை என்பதை தன்னுடைய அனுஷ்டானத்திற்குக் கொண்டு வந்திருப்பதால், இங்கு இவ்வாறு சொல்லியிருக்கிறார். ஆகையால், இந்த பதத்தை புரிந்து கொள்ளும் விதம் இப்படியாக இருக்கிறது.

அறிவு, கல்வி ஆகியவற்றின் சக்தியில் இயற்றப்பட்ட சுத்தமான காவியம் இது அல்ல என்றால், நானே அறிவாளி, நானே அறிஞன் என்னும் கர்வத்தில் இயற்றப்பட்ட அசுத்தமான காவியம் இது அல்ல. பரமாத்மனே எனக்குள் இருந்து, வித்யா, புத்தி ஆகியவற்றைக் கொடுத்து செய்து, செய்வித்த சுத்தமான காவியம் இது என்று அறியவேண்டும்.

ஸ்ரீராகவேந்திர ஸ்வாமிகளின் பரம்பரையில் வந்த வரதேந்திர தீர்த்த ஸ்வாமிகளிடம் வியாகரண சாஸ்திரங்களை, வேதாந்த கிரந்தங்களைப் படித்து, இந்த இரு சாஸ்திரங்களையும் தாசராயர், தம் சிஷ்யர்களுக்கு பாடம் சொல்லிக் கொடுத்திருந்தார் என்பது அனைவரும் அறிந்த ஒன்று. ஞானிகளிடமிருந்து தத்வ பத்ததிகளை தாம் அறிந்தவரல்ல என்று தாசராயர் சொல்கிறார். இந்த வாக்கியத்திற்கும், ஞானிகளில் இருந்து உபதேசம் செய்தவனும், எனக்குள் இருந்து படித்து, படிக்க வைத்து, தான் பண்டிதன் என்னும் பெயர் பெறுவதற்கு காரணம் அந்த பரமாத்மனே என்னும் சிந்தனையுடன் நான் அறிந்தவனல்ல என்று சொல்லிக் கொண்டிருக்கிறார்.

**கப்பி$^3$னொளகி$^3$ஹ ரஸ வித$^3$ந்தனி**
**க$^3$ப்ப$^3$ ப$^3$ல்லதெ$^3$ பா$^4$க்ய யௌவன**

**மப்பி[3]னலி மைமரெதவகெ[3] ஹரி ஸுசரிதாம்ருதவு |**
**லப்[4]யவாக[3]து[3] ஹரிபதா[3]ப்[3]ஜதி[3]**
**ஹப்பி[3]த[3]தி[1] ஸத்ப[4]க்திரஸ உ**
**ண்டு[3]ப்பி[3] கொப்பி[3] ஸுகா[2]ப்[4]தி[3]யொள கா[3]டுவவக[3]ல்லத[3]லெ ||19**

கப்பினொளகிஹ = கரும்பினில்
ரஸ = சாறு
விதந்தனிகெ = பல் இல்லாதவருக்கு
அப்தபல்லதெ = சுவைக்குமோ? கடித்து அதன் சுவையை உணர்வதற்கு சாத்தியம் இல்லை என்று அர்த்தம்
இதைப்போல,
ஹரிபதாப்ஜதி = பரமாத்மனின் பாதாரவிந்தங்களில்
ஹப்பித = சேர்ந்திருக்கும்
அதி ஸத்பக்திரஸவ = மிகச்சிறந்த பக்தி ரசத்தை
உண்டு = குடித்து
உப்பி = மகிழ்ந்து
கொப்பி = அதில் மயங்கி
சுகாப்தி யொளாடுவவ கல்லதலெ = சுக சமுத்திரத்தில் விளையாடுபவனுக்கு
பாக்யயௌவன மப்பனலி = செல்வம், வாலிபம் என்னும் இந்த இரு இருட்டில்
மைமரதவகெ = மெய் மறந்தவனுக்கு
ஹரிஸுசரிதாம்ருதவு = இந்த ஹரிகதாம்ருதமானது
லப்யவாகது = கிடைக்காது

இந்த கிரந்தமானது, ஞானிகளுக்கு சுவையாக இனிக்குமே தவிர, அஞ்ஞானிகளுக்கு இனிக்காது என்கிறார்.

கரும்பைக் கடித்து அதன் சாறினைக் குடிக்க வேண்டுமெனில், அது பல் இருப்பவர்களுக்கு மட்டுமே சாத்தியம். பல் இல்லாதவர்களுக்கு அது எப்படி சாத்தியம் இல்லையோ, அப்படியே பரமாத்மனின் பாதாரவிந்தத்தில் மனதை வைத்து, திடபக்தி என்னும் சாற்றைக் குடித்து, அதிலிருந்து மகிழ்ச்சியடைந்து, அதில் மயங்கி, சுக சமுத்திரத்தில் நீந்தி விளையாடுவர்களுக்கு மட்டுமே இந்த ஹரிகதாம்ருதசாரத்தின் சுவை தெரியும். கரும்பினைப் போல இருக்கும் ஹரிகதாம்ருதசாரத்தின் சாற்றினை, ஞானம் என்னும் பல் இல்லாத அஞ்ஞானிகள் குடிக்க முடியுமா? முடியாது.

**க[2]க[3]வரத்[4]வஜனங்க்[4]ரி ப[4]கு[3]தி[1]ய**
**ப[3]கெ[3]யனரியத[3] மானவரிகி[3]து[3]**
**ஒக[3]டி[1]னந்த[3]தி[3] தோருதிப்புது[3] எல்ல காலத[3]லி |**
**த்ரிகு[3]ண வர்ஜிதனமல கு[3]ணக[3]ள**
**பொக[3]ளி ஹிக்கு[3]வ பா[4]க[3]வதரிகெ[3]**
**மிகெ[3] ப[4]கு[3]தி[1] விக்ஞான ஸுக[2]வித்தவரரக்ஷிபுது[3] ||20**

ககவரத்வஜ = பக்ஷிகளில் சிறந்தவனான கருடத்வஜன்
அங்க்ரி பகுதிய = பாதாரவிந்தங்களின் பக்தியின்
பகெய = விதத்தை
அரியத = அறியாத
மானவரிகெ = மனிதர்களுக்கு
இது = இந்த கிரந்தம்
ஒகடினந்ததி = ஒரு புதிரைப் போல
தோருதிப்பது = சரியாக புரிவதில்லை
எல்லகாலதலி = அனைத்து காலங்களிலும்
த்ரிகுணவர்ஜிதன = ப்ராக்ருதமான சத்வ ரஜஸ் தமோ குணங்கள் இல்லாதவனான ஸ்ரீபரமாத்மனின்
அமல = நிர்மலமான (தோஷங்கள் அற்ற)
குணகள = ஆனந்தாதி குணங்களை
பொகளி = ஸ்துதித்து
ஹிக்குவ = மகிழ்ச்சியடையும்
பாகவதரிகெ = பகவத் பக்தர்களுக்கு
மிகெ பகுதி = அதிக பக்தியை
ஸுக்ஞான சுகவன்னு = பகவத் சம்பந்தமான சிறந்த ஞான சுகத்தை
இத்து = கொடுத்து
அவர = அந்த பக்தரை
ரக்ஷிபுது = காப்பாற்றுகிறான்

முந்தைய பத்யத்தில் சொன்னதையே மறுபடி சற்று விளக்குகிறார்.

ஸ்ரீபரமாத்மனின் பாதாரவிந்த பக்தி மார்க்கத்தையே அறியாத மனிதர்களுக்கு, இந்த கிரந்தம் ஒரு புதிர் போல இருக்கிறது. அப்ராக்ருதமான பரமாத்மனிடம் த்ருடபக்தி உள்ளவர்களாக, அவனின் மகிமையை எப்போதும் பாடியவாறு, புகழ்ந்தவாறு, மகிழ்ச்சியடைந்திருக்கும் பகவத் பக்தர்களுக்கு, சிறந்த பக்தியை, ஞானத்தை அதிகப்படுத்தி சுகத்தைக் கொடுக்கிறது.

**பரமத1த்வ ரஹஸ்யவிது3 பூ4**
**ஸுரரு கேள்வுது3 ஸாத3ரதி3 நி**
**ஷ்டுரிக3ளிகெ3 மூட3ரிகெ3 பண்டி3தமானி பி1ஷுனரிகெ3 ।**
**அரஸிகரிகி3து பேள்பு3த3ல்லன**
**வரத ப4கவத்3 பாத3யுக3ளா**
**ம்பு3ருஹ மது4கரரெனி ஸுவரரிகி3த3னருபு மோத3த3லி ।।21**

இது = இந்த கிரந்தம்
பரமதத்வ ரஹஸ்யவிது = மிகச்சிறந்த ரகசியமான தத்வ கிரந்தம் இது
பூசுரரு = பிராமணர்கள்
ஸாதரதி = மரியாதை பக்தியுடன்
நிஷ்டுரிகளிகெ = கடுமையாக பேசிக் கொண்டிருப்பவர்களுக்கு

மூடரிகெ = மூடர்களுக்கு
பண்டிதமானி = நானே பண்டிதன் என்னும் கர்வத்தில் இருப்பவர்களுக்கு
பிஷுனரிகெ = குருவிடமிருந்து கற்காமல், தான் சொல்வதே சரி என்று நிரூபிக்க முயல்பவர்களுக்கு
அரஸிகரிகெ = தத்வ ரகசியங்களை போற்றத் தெரியாதவர்களுக்கு
இது = இந்த கிரந்தமானது
பேள்வுதல்ல = சொல்லத்தக்கது அல்ல
அனவரத = எப்போதும் (இடைவிடாமல்)
பகவத் பாதயுக்ளாம்புருஹ மதுகரரெனிஸுவரரிகெ = பரமாத்மனின் பாத கமலங்களில் தேனைப் போல சுற்றி வருபவர்களுக்கு
மோததலி = மகிழ்ச்சியுடன்
இதனு = இந்த கிரந்தத்தை
அருபு = சொல்

பகவத் பக்தர்களே இந்த கிரந்தத்தை கேட்கத் தகுந்தவர்கள் என்கிறார். இந்த கிரந்தம், பரம ரகசியமான பகவத் தத்வத்தை அடக்கியிருக்கிறது. இதனை, பக்தர்களான பிராமணர்கள் கவனத்தில் வைக்க வேண்டும். எப்போதும் எதையும் எதிர்த்துப் பேசுபவர்கள், மூடர்கள், தாமே பண்டிதர் என்னும் கர்வத்தில் இருப்பவர்கள், பிடிவாதக்காரர்கள், தத்வ ரகசியங்களை போற்றத் தெரியாதவர்கள் இவர்களுக்கு இந்த கிரந்தத்தை சொல்லக்கூடாது. எப்போதும் பரமாத்மனின் பாதார விந்தங்களிலேயே யார் திட பக்தியை வைத்திருக்கிறார்களோ அவருக்கு மட்டுமே இதை சொல்ல வேண்டும்.

**லோகவார்த்தெ இத$^3$ல்ல பரலோ**
**கைகனாத$^2$ன வார்த்தெ கேள்வரெ**
**காகுமனுஜரிகி$^3$து$^3$ ஸமர்ப்பகவாகி$^3$ ஸொாக$^3$யிஸது$^3$ |**
**கோ$^1$க$^1$னத$^3$ பரிமளவ ஷட்பத$^3$**
**ஸ்வீகரிஸுவந்த$^3$த$^3$லி ஜல சர**
**பே$^4$க1 ப$^3$ல்லுதெ$^3$ இத$^3$ர ரஸ ஹரிப$^4$குதக$^3$ல்லத$^3$லெ ||22**

இது = இந்த கிரந்தம்
லோகவார்த்தெ = ஆண் பெண்களை வைத்து நடத்தும் நாடகம் அல்ல
பரலோகைக நாதன வார்த்தெ = வைகுண்டாதி லோகங்களுக்கு ஸ்வாமியான பரமாத்மனின் மகிமைகளை வர்ணிக்கும் காவியம்
கேள்வரெ = இதனை பாவிகள் கேட்பார்களா? என்றைக்கும் கேட்கமாட்டார்கள் ஏனெனில்,
காகுமனுஜரிகிது = விஷய சுகத்தையே சுகம் என்று நினைத்து, ஸ்ரீஹரியை மறந்து, நான் எனது என்று இருக்கும் ஸ்வதந்த்ர கர்த்ருத்வ அபிமானிகளுக்கு, இந்த கிரந்தமானது
ஸமர்ப்பகவாகி = மனதை திருப்திப்படுத்துமாறு
ஸொாகசுவுதெ = தெரிகிறதே
கோகனத = சிகப்பு தாமரையின்

பரிமளவு = சுகந்தமானது (மகரந்தம்)
ஷட்பத = தேனீ
ஸ்வீகரிசுவந்ததலி = குடித்து மகிழ்ந்திருப்பதைப் போல
ஜலசர = நீரில் வசிக்கும்
பேக = தவளை
பல்லுதெ = அறியுமோ, அதுபோலவே
இதர ரஸ = இந்த கிரந்தத்தின் சுவை
ஹரிபகுதகல்லதலெ = சிறந்த ஹரிபக்தர் மட்டுமே இதனை அறிந்து போற்ற முடியும்

உலகத்தில் பொதுவாக மக்கள் எந்தத் தொழிலில் இருக்கின்றரோ, அதே தொழிலில் இருப்பவர்களுடனே நட்பு கொண்டிருப்பர். அவர்களுக்கு ஏற்ற கதைகளைக் கேட்பதே சம்பிரதாயமாக இருக்கிறது. நடன, நாடகம் போடுபவர்கள், சிறந்த நாடகங்களையே விரும்புவர். நாட்டிய நாடகங்களைப் பார்த்து மகிழ்வர். அதைப்போலவே, பகவத் பக்தர்கள், பகவந்தனின் கதைகளைக் கேட்பது, படிப்பது, உற்சவங்களைப் பார்த்து மகிழ்வது என்றே இருப்பர். ஆகையால், பொதுவாக பகவந்தனிடம் பக்தி இல்லாதவர்களுக்கு இந்த கிரந்தம் சுவைக்காது. ஏனெனில், இது வெறும் பகவந்தனின் மகிமைகளையே சொல்கிறதே தவிர, ஸ்த்ரி புருஷர்களின் வர்ணனை பற்றிய காவியம் அல்ல. பகவத் பக்தர்களைத் தவிர பிறருக்கு இந்த கிரந்தம் சுவைக்காது.

அது எப்படியெனில், தேனியானது, பூ வெகு தூரத்தில் இருந்தாலும், அதில் இருக்கும் மகரந்தத்தை அங்கிருந்தே கண்டுபிடித்து வந்துவிடுவதைப் போல, நீரில் இருக்கும் தவளையால் அது முடியுமா? இதைப்போலவே, பக்தர்களைத் தவிர இதரருக்கு இக்கிரந்தம் ருசிக்காது.

**ஸ்வப்ரயோஜன ரஹித ஸகலே**
**ஷ்ட ப்ரதா$^{3}$யக ஸர்வகு$^{3}$ண பூ**
**ர்ண ப்ரமேய ஜராமரண வர்ஜித விக$^{3}$த க்லேஷ |**
**விப்ரதம விஷ்வாத்ம க்$^{4}$ருணி ஸூ**
**ர்ய ப்ரகாஷானந்த$^{3}$ மஹிம க்$^{4}$ரு**
**த ப்ரதீகாராதி$^{4}$தங்க்$^{4}$ரி ஸரோஜ ஸுரராஜ ||23**

ஸ்வப்ரயோஜன ரஹித = ஸ்ரீபரமாத்மன், யாரிடமிருந்தும் எவ்வித பலனையும் எதிர்பாராமல்
ஸகலேஷ்ட ப்ரதாயக = அனைவரின் மனோபீஷ்டங்களை நிறைவேற்றுபவன்
ஸர்வகுண பூர்ண = சகல குண சம்பூர்ணனானவன்
அப்ரமேய = அறியமுடியாத அபாரமான மகிமைகளைக் கொண்டவன்
ஜராமரண வர்ஜித = முதுமை, இறப்பு, இத்தகைய தோஷங்கள் அற்றவன்
விகதக்லேஷ = எந்தவித கஷ்டங்களையும் அடையாதவன்
விப்ரதம = விசேஷ ஞானம் பெற்று ஒளிர்பவர்களான பிரம்மாதிகளைவிட சிறந்தவன்

விஷ்வாத்ம = பிரபஞ்சத்தில் எல்லா இடங்களிலும் வியாபித்திருப்பவன்
க்ருணி = தயாவந்தன்
ஸூர்ய ப்ரகாஷ = கோடி சூர்யர்களைவிட அதிக ஒளி தரக்கூடியவன்
அனந்தமஹிம = எல்லைகளற்ற மகிமைகளைக் கொண்டவன்
க்ருத ப்ரதிக = லட்சுமிதேவியின் கரங்களால் (நெய்யின் ரூபத்தில் தினமும் பரமாத்மனின் போஜனத்திற்கு உதவி செய்வதால், லட்சுமிதேவிக்கு க்ருதப்ரதீகா என்று பெயர்)
அங்க்ரி சரோஜ = தாமரை போன்ற கால்கள்
சுரராஜ = பிரம்மாதி தேவதைகளின் நடுவில் வீற்றிருப்பதால் சுரராஜன் என்று பெயர்.
ஜயஜயா என்னும் அடுத்த பத்யத்தில் இருக்கும் சொல்லை இங்கு பயன்படுத்த வேண்டும். ஜயஜயா என்றால் உன் வெற்றியை உலகத்திற்கு எடுத்துக்காட்டு என்று வேண்டுதல்.

**வனசராத்3ரி த4ராத4ரனெ ஜய**
**மனுஜ ம்ருக3வரவேஷஜய வா**
**மன த்ரிவிக்ரம தே3வஜய ப்4ருகு3ராம பூ4மஜய |**
**ஜனகஜாவல்லப4னே ஜய ரு**
**க்மிணி மனோரத ஸித்3தி4தா3யக**
**ஜினவிமோஹக கலிவிதா3ரண ஜய ஜயாரமண ||24**

வனசர = நீரில் வாழும் - மத்ஸ்யரூபி
ஜய = வெற்றியைக் கொடு
அத்ரிதர = மந்தர மலையைத் தூக்கியவன் - கூர்மரூபியே, ஜய
தராதரனே = பூமியை காப்பாற்றிய வராகரூபியே, ஜய
மனுஜ ம்ருகவரவேஷ = நரசிம்ம ரூபத்தை தரித்த ஸ்வாமியே, ஜய
வாமன த்ரிவிக்ரம தேவஜய = வாமனனாக வந்து த்ரிவிக்ரமனாக வளர்ந்தவனே, ஜய
ப்ருகுராம பூம = பூஜ்யனான பரசுராமன், ஜய
ஜனகஜாவல்லபனெ = சீதாபதியான ராம, ஜய
ருக்மிணி மனோரத ஸித்திதாயக = ருக்மிணியின் மனதில் இருப்பவனே, ஸ்ரீகிருஷ்ணனே, ஜய
ஜினவிமோஹக = புத்த ரூபத்தினால் மக்களை மயக்கியவனே, ஜய
கலிவிதாரண = கல்கி ரூபத்தினால் கலியுகத்தின் பாவிகளை அழித்தவனே, ஜய
ஜயாரமண = ஜயா என்னும் பெயருள்ள ரமாதேவியின் பதியான சங்கர்ஷண நாமக ஸ்ரீஹரியே
ஜய = உலகத்தில் வெற்றியைக் கொடு

பரமாத்மனின் மத்ஸ்ய, கூர்மாதி தசாவதாரங்களை வணங்குகிறார்.

அத்ரிதர = கூர்மாவதாரம்
தராதர = பூமியைத் தூக்கிய வராகாவதாரம்

வாமனாவதாரம் செய்து தானம் பெற்று பூமியை அளந்தபோது த்ரிவிக்ரம ரூபத்தை தரித்திருப்பதால், வாமனாவதாரமே

த்ரிவிக்ரமாவதாரம்.

மற்ற சொற்களின் அர்த்தம் மேலே சொன்னதைப் போலவே இருக்கிறது.

**சச்சிதானந்தா3த்ம பி3ரம்ம க**
**ரார்ச்சிதங்க்4ரி ஸரோஜ ஸுமனஸ**
**ப்ரோச்ச ஸன்மங்களத மத்4வாந்த: கரணரூட4 |**
**அச்யுத ஜகன்னாத2விட்டல**
**நிச்சனெச்சித ஜனர பி3ட3 கா**
**ட்3கி3ச்சனுண்டு3 அரண்யதொளு கோ3 கோ3பரனு காய்த3 ||25**

சச்சிதானந்தாத்ம = சச்சிதானந்த ஸ்வரூபன்
பிரம்ம கரார்ச்சிதங்க்ரி சரோஜ = பிரம்மதேவரின் கைகளால் பூஜிக்கப்பட்ட பாத கமலங்களைக் கொண்டவன்
சுமனஸ = தேவதைகளால்
ப்ரோச்ச = புகழப்படுபவன்
சன்மங்களத = உத்தமமான சுப பலன்களை கொடுப்பவன்
மத்வாந்த:கரணரூட = மத்வாசார்யரின் அந்தரங்கத்தில் திடமாக அமர்ந்திருப்பவன்
அச்யுத = அழிவு இல்லாதவன்
அரண்யதொளு = யமுனா நதிக்கரையில் இருக்கும் ஒரு காட்டினில்
காடுகிச்சனுண்டு = காட்டினை எரித்து வரும் ஒரு காட்டுத்தீயை விழுங்கி
கோ கோபரன = பசுக்களையும், கோபாலகர்களையும்
காய்த = காப்பாற்றினான்
இத்தகைய
ஜகன்னாதவிட்டல = பிம்பரூபியான ஜகன்னாதவிட்டலன்
நிச்ச = இவன் தோஷங்கள் அற்றவன் என்று
மெச்சித = யாரின் பக்திக்கு மெச்சுவனோ, அத்தகைய
ஜனர = மக்களை, பக்தர்களை
பிட = விடாமல் காப்பாற்றுகிறான்.

யாருக்கு அருளவேண்டும் என்று பக்தவத்ஸலனான பகவந்தனின் மனதிற்கு படுகிறதோ, அவர்களை கண்டிப்பாக அருளியே தீர்வான். அதாவது, யார் தான் செய்யும் பக்தியை, பரமாத்மன் மெச்சுமாறு செய்கிறானோ, அவனுக்கு பரமாத்மன் தரிசனம் அளிக்கிறான் என்று சொல்லியவாறு, இந்த சந்தியை முடிக்கிறார். ஸ்ரீபரமாத்மன், சச்சிதானந்த ஸ்வரூபன். பிரம்மதேவரின் கைகளால் பூஜிக்கப்படும் பாத கமலங்களைக் கொண்டவர். தேவோத்தமன். அனைத்து பக்தர்களுக்கும் மங்களங்களைத் தருபவன். ஸ்ரீமன் மத்வாசார்யரின் இதய கமலத்தில் வசிப்பவன்.

ஸ்ரீகிருஷ்ணாவதாரத்தில், ஒரு சமயம், கோபாலகர்கள் தங்கள் பசுக்களை யமுனா நதிக்கரையில் மேய்த்தவாறு, அங்கிருந்த ஒரு காட்டிற்கு அருகில்

படுத்திருந்தபோது, இரவில் காட்டினில் காட்டுத்தீ பரவியதைக் கண்டு, அங்கிருந்தவர் பயந்து, கிருஷ்ணனிடம் முறையிட்டனர்.

நிமீலியத மாப்யைஷ்டலோசனானீத்ய பாஷத |
ததைவ மீலிதாக்ஷேஷு பகவானக்னி முல்பணம் |
பீத்வாமுகேன ர்த்தா க்ருசாத்யோகாதீ ஷோவ்யமோசயத் ||

ஶ்ரீகிருஷ்ணன், கோபாலகர்களைப் பார்த்து, பயப்படாதீர்கள். நீங்கள் அனைவரும் ஒரு நிமிடம் கண் மூடிக்கொள்ளுங்கள். என்று சொல்லி, அந்த கடுமையான காட்டுத்தீயினை விழுங்கி, கோபாலகர்கள் அனைவரையும் காட்டுத்தீயிலிருந்து காப்பாற்றினான் என்று பாகவத 10ம் ஸ்கந்தத்தில் வருகிறது.

நாசம் இல்லாதவனான ஜகன்னாதவிட்டலன் ‘யமே வைஷவ்ருணுதெ தீனலப்ய:’ (அத்தியாயம் 13, ஸ்லோகம் 11-13) என்னும் ஸ்ருதியில் சொல்லியிருப்பதைப் போல, யார் தன்னிடம் பக்தி செய்து தன்னை மெச்சுவரோ, தான் யாருடைய பக்திக்கு மெச்சுகிறானோ, அவரை என்றைக்கும் கை விடமாட்டான்.

இத்துடன் 10ம் ஸந்தியான சர்வப்ரதீக சந்தியின் தாத்பர்யம் இத்துடன் முடிவுற்றது.
ஶ்ரீகிருஷ்ணார்ப்பணமஸ்து

***

## பாவபிரகாசிகை : சந்தி 11 : தியான ப்ரக்ரிய சந்தி

**ஹரிகதா2ம்ருதசார கு3ருக3ள**
**கருணதிந்தா3பநிது பே1ளுவே**
**பரம ப4கவத்3ப4க்தரித3னாத3ரதி3 கேளுவுது3**

**முன்னுரை:**

10 சந்திகளை இயற்றி, இறுதியில் ‘புத்தி வித்யாபலதி’ என்னும் 18ம் பத்யத்திலிருந்து ‘லோகவார்த்தெ இதல்ல’ என்னும் 22ம் பத்யம் வரைக்கும் ஸ்வ-அஹங்கார கண்டன செய்தவாறு, இந்த கிரந்தத்தின் பலன், இதைக் கேட்பதால் ஆகும் பலன் ஆகியவற்றைச் சொல்லி, இறுதியான மூன்று பத்யங்களால் மங்கள ரூபமாக பரமாத்மனை வணங்கி, அந்த சந்தியை முடித்திருக்கிறார். பொதுவாக, கிரந்தம் இயற்றுபவர், இவற்றை கிரந்தம் துவக்கும்போதோ அல்லது அதை முடிக்கும்போதோ சொல்வார்கள். பல ஸ்ருதி சொல்லவேண்டுமெனில், ஒவ்வொரு நிலை முடியும்போதும், சொல்வார்கள். காவியங்களின் நடுவில் ஸ்வ-அஹங்கார கண்டனைகளோ, கிரந்தத்தின் பலன்களோ சொல்லும் சம்பிரதாயம் இல்லை. இப்படியிருக்கையில், 9 சந்திகள் வரை ஒன்றும் சொல்லாமல், தாசராயர், 10ம்

சந்தியில் இப்படி சொல்வதற்கு காரணம் இல்லாமல் போகாது என்று தோன்றுகிறது.

பகவத்கீதையில் முதல் 6 அத்தியாயங்களில் ஞானோபாயனத்தையும், இரண்டாம் 6 அத்தியாயங்களில் சாதனங்களையும், மூன்றாம் 6 அத்தியாயங்களில் இவற்றின் விளக்கங்களையும் சொல்லியிருக்கிறான் ஸ்ரீகிருஷ்ணன். கர்மயோக, பக்தியோக, ஞானயோக என்னும் மூன்றில் கர்மயோகிகள் மனிதர்கள் என்றும், பக்தியோகிகள் தேவதைகள் என்றும், ஸனகாதி ரிஷி ஆகியோர் ஞானயோகிகள் என்றும், பாகவத தாத்பர்யத்தில் விளக்கியிருக்கிறார். ஆனாலும், பக்திக்கு முக்கிய அதிகாரிகள், அவர்கள் தேவாதிகளாக இருக்கட்டும் அல்லது மனுஷ்யோத்தமர்களாக இருக்கட்டும், அவர்களுக்கு பொதுவாக பக்தி ஞான சாதனைகள் இருந்தே இருக்கிறது. அவர்களின் கர்ம லட்சணம் என்ன? பக்தி எப்படி பிறக்கிறது? ஞானம் எப்படி கிடைக்கிறது என்னும் விஷயங்களை சரியாக புரிந்துகொள்ளாமல், உபவாசங்களை செய்து சரீர தண்டனையே கர்மம் என்றும், மூச்சை அடக்குவதே தியானம் என்றும் நினைத்து புரிந்து கொண்டு, சாதனை மார்க்கம் என்றால் என்னவென்றே அறியாமல் கஷ்டப்படும் மக்களின் மேம்பாட்டிற்காக (அவர்களுக்கு உதவுவதற்காக) தாசராயர், முதலாம் 10 சந்திகளில், கீதையில் சொல்லியிருப்பதைப் போல ஞானோபாயங்களையும், 11 முதல் 17ம் சந்தி வரை சாதனோபாயங்களையும், அதற்குப் பிறகு இவற்றையே விளக்கமாக சொல்லியிருக்கிறார் என்று சொல்ல வேண்டியதாகிறது.

* முதலாம் மங்களாசரண சந்தி முடிந்தபிறகு

* 2ம் கருணா சந்தியில், பரமாத்மன் பரம கருணாமயி ஆனதால், பக்தனானவன் என்ன தவறு செய்தாலும் அதை மன்னிக்கிறான். ஆகையால், செய்ததை பரமாத்மனே செய்வித்தான் என்று நினைத்து பலன்களை விரும்பாமல் செயல்களை புரிந்து, அவற்றை பரமாத்மனுக்கு சமர்ப்பிக்க வேண்டும் என்றார்.

* வியாப்தி சந்தியில் கர்மங்களை தானே செய்கிறேன் என்று நினைத்து செய்தால் பலன்கள் கிடைக்காது; நம் தேகங்களிலும், இந்திரியங்களிலும் பரமாத்மனே வியாப்தனாக இருந்து அனைத்தையும் செய்விக்கிறான் என்று நினைத்து, கர்மங்களை செய்தாலேயே கர்மங்களின் பலன் கிடைக்கும் என்று பகவந்தனின் வியாப்தியை விளக்கினார்.

* போஜனரஸவிபாக சந்தியில் ஸ்ரீபரமாத்மன் போஜ்ய பதார்த்தங்களில் அனேக ரூபங்களில் இருந்து அந்த சுவையை ஏற்றுக்கொள்கிறான் என்பதை தெரிவித்து, போஜனங்களை செய்வதும்கூட ஒரு சத்கர்மமே என்று நினைக்க வேண்டும்.

* விபூதி சந்தியில் நதி ஆகியவற்றில் ஸ்னானம் செய்வதாகட்டும், அங்கங்கு பகவத் ரூபங்களை சிந்தித்து, பூஜித்தாலேயே கர்மங்களின் பலன் கிடைக்கிறது என்றார்.

* இதைப்போல, பஞ்சமஹாயக்ஞும் என்றால், அக்னியில் ஆஹுதி கொடுத்து ஹோமம் செய்வது மட்டுமல்ல என்றும், தந்தை, தாய், பூமி, மேக, ஆகாய என்னும் பஞ்சாக்னியில், தக்க அனுசந்தானத்துடன் தியானம் செய்வதே யாகம் என்று யக்ஞுகர்ம லட்சணங்களை விளக்கினார்.

* பஞ்சதன்மாத்ரா சந்தியில் ஷப்த, ஸ்பர்ஷாதி வியாபாரங்கள் அனைத்தும் பரமாத்மனே தன் அனந்தானந்த ரூபங்களால் ப்ருதிவ்யாதிகளில் இருந்துகொண்டு செய்விக்கிறான் என்று அறிந்து செய்யும் செயல்களே கர்மங்கள் என்று கூறியிருந்தார்.

* மாத்ருகா சந்தியில் அ-காரத்திலிருந்து துவங்கும் எழுத்துக்களின் தலைவன் பரமாத்மனே ஆகையால், நாம் பேசும் பேச்சுக்களில் கூட பகவத்வாசக என்று அறிந்து, என்ன பேசினாலும் அனைத்தும் பூஜையைப் போன்றே ஆகிறது என்று குறிப்பிடுகிறார்.

* ஜீவப்ரக்ரிய சந்தியில், ஜீவரின் யோக்யதையை அறிந்து தன்னைவிட உத்தம அதிஷ்டானத்தில் பூஜிப்பதே பூஜா ப்ரக்ரியா என்று கூறினார்.

* சர்வப்ரதீக சந்தியில் ஏரி, குளம் ஆகிய அனைத்து நீர் நிலைகளிலும், எல்லா பூமிகளிலும், எல்லா பொருட்களிலும் ஸ்ரீஹரி இருக்கிறான் என்று அறிந்து, ஸ்னானாதிகளை செய்தால், தீர்த்தங்களில் ஸ்னானம் செய்த பலனும், யாத்ரா பலனும் கிடைக்கிறது என்று கூறினார்.

இப்படியாக 10 சந்திகளில் பகவத்கீதையில் கூறியதைப்போலவே:

புத்திர்யோகேத் விமாம்ஸ்ருணு | யோகஸ்த: குரு கர்மாணி ஸங்கந்த்யக்த்வா தனஞ்சய |
ஸித்யஸித்யோ: ஸமோபூத்வா ஸமத்வம் யோக உச்யதி ||

என்னும் வாக்கியங்களால் யோக என்றால் உபாயம் என்றும்; கர்ம-பலன்களை-விரும்பாததே சன்யாஸம் என்றும் சொல்லி, இவற்றை ஞானோபாயம் என்று விளக்கியிருக்கிறார். அந்த சந்தியின் இறுதியில் ஸ்ஹ-அஹங்கார கண்டனத்துடன், பலஸ்ருதி மங்களாசரணங்களை சொல்லி முடித்திருக்கிறார் என்று தோன்றுகிறது. இந்த சந்தியிலிருந்து 17ம் சந்தி வரை, முக்திக்கு சாதனமான தியான ப்ரக்ரிய, நாடி ப்ரக்ரிய, நாமஸ்மரணை முதலான சந்திகளை கூறுகிறார். அவற்றில், தனக்கிருக்கும் அல்ப பக்தியினால் பகவத்ப்ரீதிக்காக, கர்மங்களை செய்து, திடமான பக்தி வந்தபிறகு செய்யவேண்டிய பகவத் தியான, நாமஸ்மரணை, தியானம் ஆகியவற்றை செய்ய வேண்டுமானால், தியானத்திற்கு தரிசனம் தரக்கூடிய பதார்த்தங்களின் ஸ்வரூப ஞானம் மிகவும் அவசியம். அதற்காக, தியான சாதனை ஆகுமாறு, தியானப்ரக்ரியை என்னும் சந்தியை இங்கு துவக்குகிறார்.

**பாது³கெய கண்டக ஸிகதமொத³**

**லாது[3]வனுதி[3]ன பா[3]தி[4]ஸவு ஏ**
**காத[3]ஷேந்த்ரியக[3]ளலி பி[3]ட[3]தெ[3] ஹ்ருஷீகபன மூர்த்தி ।**
**ஸாத[3]ரதி[3] நெனெவவரு ஏனப**
**ராத[4]க[3]ள மாடி[3]த[3]ரு ஸரியே நி**
**ரோதகை[3]ஸவு மோக்ஷமார்க[3]கெ து[3]ரிதராஷிக[3]ளு ||1**

பாதுகெய = பாதுகைகளை அணிந்த புருஷனை
கண்டக = முட்கள்
ஷிகத = மண், கற்கள்
மொதலாதுவு = ஆகியவை
அனுதின = தினந்தோறும்
பாதிஸுவு = பாதிக்குமா?
ஏகாதஷேந்திரியகளலி = 5 கர்மேந்திரியங்கள், 5 ஞானேந்திரியங்கள் மற்றும் மனதில்
பிடதெ = இடைவிடாமல்
ஹ்ருஷீகபன = இந்திரியாபிமானியான ஹ்ருஷிகேஷ ரூபி பரமாத்மனை
மூர்த்தி = ஸ்வரூபத்தை
ஸாதரதி = பக்தி மரியாதையுடன்
நெனெவவனு = நினைப்பவன்
ஏனபராதகள = என்ன தவறுகளை
மாடிதரு சரியே = செய்தாலும்
துரிதராஷிகளு = அந்த பாப ராசிகள்
மோக்ஷ மார்ககெ = மோட்ச மார்க்கத்திற்கு
நிரோதகைஸவு = தடையாக இருக்காது

காலில் பாதுகையை அணிந்துகொண்டு, கல், மண் ஆகியவற்றின் மேல் நடந்தாலும், அவை அந்த மனிதனுக்கு எப்படி பிரச்னைகளைக் கொடுக்காதோ, அதுபோலவே 11 இந்திரியங்களில் இந்திரியாதிபதியான ஹ்ருஷிகேசன் இருக்கிறான் என்று பக்தியுடன் மரியாதையுடன் யார் நினைக்கிறார்களோ, அவர்கள் என்ன தவறுகளை செய்தாலும், அந்த பாப ராசிகள் அவர்களின் மோட்ச மார்க்கத்திற்கு என்றும் தடையாக இருக்காது.

பகவத்பக்தர்கள் செய்யும் பாவங்கள் மற்றும் அவரின் யோக்யதைக்கு மீறி செய்யும் புண்ணிய கர்மங்கள் மட்டும் நாசமாகுமே தவிர, முக்திக்குத் தேவையான புண்ணியங்களை அழித்து, முக்தி மார்க்கத்திற்கு தடை வரும் சூழ்நிலை என்றும் வராது.

அகலிகையை அடைந்ததால் தேவேந்திரனுக்கும், குருஸ்த்ரி சங்கமத்தால் சந்திரனுக்கும் முக்தியில் எந்த சுகத்திற்கும் பிரச்னை உண்டாகவில்லை. இதைப்போல, தியானத்தில் ஆழ்ந்திருப்பவர்கள், ஏதாவது பாவம் செய்தாலும், அந்த பாபராசிகள் பஸ்மம் ஆகுமே தவிர, முக்திக்கு பிரச்னை உண்டாகாது என்பது

கருத்து. இந்த பத்யத்தினால், இந்த சந்தியில் சொல்லவரும் தியானத்தைப் பற்றிய அபிப்பிராயத்தை குறிப்பிடுகிறார்.

**ஹக3லனந்தா3 தீ3பத3ந்த3தி3**
**நிக3மவேத்3யன பூஜிஸுத கை**
**முகி3து3 நால்கரொளொந்து3 புருஷார்த்த4வனு பே3ட3த3லெ |**
**ஜக3து3த3ர கொட்டுத3னு பு4ஞ்சிஸி**
**மக3 மட3தி3 ப்ராணேந்த்3ரியாத்மா**
**தி3க3ளு ப4க3வத3தீ3ன வெந்த3டிக3டிகெ3 நெனெவுதிரு ||2**

ஹகலு நந்தாதீபதிந்ததி = பகல் வேளையில் பூஜையறையில் வைக்கப்பட்டிருக்கும் சிறு அகல்விளக்கைப் போல (பகலில், இருட்டை விரட்டுவதற்காக என்றில்லாமல், இறைவனுக்காக என்று ஏற்றி வைக்கப்பட்டிருக்கும் விளக்கைப் போல)
நிகமவேத்யன = வேதங்களால் புகழப்படுபவனான ஸ்ரீபரமாத்மனை
பூஜிஸுத = பூஜித்தவாறு
கைமுகிது = கைகளால் தொழுது
நால்கரொளொந்து புருஷார்த்தவனு = தர்ம, அர்த்த, காம, மோக்ஷ முதலான நான்கு புருஷார்த்தங்களில் ஒன்றையும்
பேடதலெ = வேண்டாமல்
ஜகதுதர = ஜகத்தினை வயிற்றில் தரித்திருக்கும் பரமாத்மன்
கொட்டதனு = கொடுத்திருப்பதை (அருளியிருப்பதை)
புஞ்சிஸி = ஏற்றுக்கொண்டு
மகமடதி ப்ராணேந்த்ரியாத்மாதிகளு = மக்கள், மனைவி, பிராண, இந்திரியங்கள், தன் ஜீவன், அல்லது சரீரம் இவை அனைத்தும்
பகவததீன = பகவந்தனின் அதீனம்
எந்து = என்று
அடிகடிகெ = ஒவ்வொரு நொடியும்
நெனெவுதிரு = சிந்தித்திரு

பகல் நேரத்தில், பூஜை அறையில் எரியும் நந்தாதீபமானது, இருட்டை விரட்டுவதற்காக இல்லாமல், பகவத்ப்ரீதிக்காகவே இருக்கிறது. அப்படியே, எந்நேரமும் பகவந்தனை பூஜித்திருக்க வேண்டும். ஸ்ரீஹரியின் அருளால் எப்போது, என்ன கிடைக்கிறதோ, அதை அனுபவித்தவாறு, இவை அனைத்தும் ஈஸ்வர சங்கல்பமே என்று நினைத்தவாறு, தன் மனைவி, மக்கள், பிராணன், இந்திரியங்கள், இந்த தேகம் ஆகிய அனைத்தும் பரமாத்மனின் அதினமே என்று நம்ப வேண்டும். இந்த விஷயத்தில் கனகதாசர் கூறிய 'தனு நின்னது ஜீவ நின்னது | அனுதினதலி பாஹோ சுக துக்க நின்னதய்ய' என்று பாடியிருக்கும் விதத்தைப் போலவே நினைத்து, எப்போதும் பரமாத்மனை நினைத்திருக்க வேண்டும்.

**அஸ்வதந்த்ரனு ஜீவ ஹரி ஸ**
**ர்வஸ்வதந்த்ரனு நித்ய சுக2மய**

**நிஸ்ஸ்வபத்த[3]ல்பக்[3]ஞ ஷக்த ஸது[3]க்க நிர்விண்ண |**
**ஹ்ரஸ்வதே[3]ஹி ஸனாத ஜீவனு**
**விஷ்வ வ்யாபக கர்த்ரு பி[3]ரம்ம ஸ**
**ரஸ்வதீஷாத்[3]யமரனுத ஹரியெந்து[3] கொண்டா[3]டு[3] ||3**

ஜீவ = ஜீவன்
அஸ்வதந்த்ரனு = ஸ்வந்தந்த்ரம் இல்லாதவன்
ஹரி = ஸ்ரீஹரி
ஸர்வ ஸ்வதந்த்ரன் = பரிபூர்ண ஸ்வதந்த்ரம் உள்ளவன்
நித்யசுகமய = எப்போதும் சுகமயமானவன்
நிஸ்வ = தரித்திரன்
பத்த = விதிகளுக்கு உட்பட்டவன்
அல்பக்ஞ = கொஞ்சமே ஞானம் உள்ளவன், சிறிது சக்தி உள்ளவன்
சுதுக்க = துக்க ஸ்வரூபன்
நிர்விண்ண = சோர்வு அற்ற
ஹ்ரஸ்வதேஹி = மிகவும் சூக்ஷ்மமான உருவம் கொண்டவன்
ஸனாத = பரமாத்மன் என்னும் நாதனுடன் இருப்பவன்
ஹரி = ஸ்ரீபரமாத்மன்
விஷ்வவ்யாபக = அனைத்து இடங்களிலும் வியாபித்திருப்பவன்
கர்த்து = ஸ்ருஷ்ட்யாதி அனைத்து கடமைகளை செய்பவன்
பிரம்ம சரஸ்வதீஷாதி = பிரம்ம, சரஸ்வதி, ருத்ரர் முதலானவர்கள்
அமரனுத = தேவதைகளால் வணங்கப்படுபவன்
ஹரியெந்து = ஸ்ரீஹரி என்று
கொண்டாடு = ஸ்தோத்திரம், பூஜை செய்.

ஜீவன் அஸ்வதந்த்ரன். பரமாத்மன் ஸ்வதந்த்ரன். நித்ய சுகபூர்ணன். அனைத்து இடங்களிலும் வியாபித்திருப்பவன். பிரம்ம ருத்ராதிகளால் வணங்கப்படுபவன். ஸ்ருஷ்ட்யாதி கர்மங்களை செய்பவன். ஜீவன் தரித்திரன். நித்ய பத்தன். அல்பக்ஞன். அல்ப சக்தி உள்ளவன். துக்கம் நிறைந்தவன். தீனன். அதிசூக்ஷ்ம ஸ்வரூபன். பரமாத்மனுடன் கூடியிருப்பவன். பகவந்தனின் அருளினாலேயே ஞான, சக்தி, சுகங்கள் ஜீவனுக்கு கிடைக்கிறது -- என்று அறிந்து பரமாத்மனை ஸ்தோத்திரம் செய்ய வேண்டும்.

**மத்தெ விஷ்வாத்[3]யெண்டு[1] ரூபொ**
**ம்ப[4]த்தரிந்த[3]லி பெச்சிஸலு எ**
**ப்பத்தெரடு ரூபக[3]ளஹவு ஒந்தொ[3]ந்தெ[3] ஸாஹஸ்ர |**
**ப்ருத[2]க்ப்ருத[2]கு நாடிக[3]ளொளகெ[3] ஸ**
**ர்வோத்தமன திளியெந்து[3] பீ[4]ஷ்மனு**
**பித்தரிஸித[3]னு த[4]ர்மதனயகெ[3] ஷாந்திபர்வத[3]லி ||4**

மத்தெ = அடுத்து

விஷ்வாத்யெண்டுரூப = விஷ்வ, தைஜஸ, ப்ராக்ஞ, ஆத்ம, அந்தராத்ம, பரமாத்ம, ஞானாத்ம என்னும் 8 ரூபங்களை
ஒம்பத்தரிந்த பெச்சிஸலு = அவ்யக்த, மஹத்தத்வ, அஹங்கார தத்வ, மனஸ், மற்றும் பஞ்சபூதங்கள் என்னும் 9ல் ஒவ்வொன்றிலும் எட்டு ரூபங்கள். 8*9=72 ரூபங்கள்
அஹவு = ஆகிறது
ஒந்தொந்து சஹஸ்ர = 72 ரூபங்களில் ஒவ்வொன்றிலும் 1,000 ரூபங்கள் என்றால் மொத்தம் 72*1000=72000
ப்ருதக் ப்ருதக் = தனித்தனியாக
நாடிகளொளகெ = அந்த 72,000 நாடிகளுக்குள்
சர்வோத்தமன = சர்வோத்தமனான ஸ்ரீஹரியை
திளியெந்து = அறிந்துகொள் என்று
பீஷ்மனு = பீஷ்மாசார்யர்
ஷாந்திபர்வதலி = சாந்தி பர்வத்தில் இருக்கும் மோட்ச தர்மத்தில்
தர்மதனயகெ = தர்மராஜனுக்கு
பித்தரிஸிதனு = விளக்கிக் கூறினார்.

ஸ்ரீபரமாத்மன், விஷ்வாதி 8 ரூபங்களால், மூலப்ரக்ருதி (அவ்யக்த தத்வ), மஹத் தத்வ, அஹங்கார தத்வ, மனஸ், பஞ்சபூதங்கள் என இவை 9ல் ஒவ்வொன்றிலும் 8 ரூபங்கள் என்றால், 8*9=72 ரூபங்கள் ஆகின்றன. இந்த 72 ரூபங்களில் ஒவ்வொன்றிலும் 1,000 ரூபங்கள் என்றால் மொத்தம் 72,000 ரூபங்களால், நம் தேகத்திலிருக்கும் 72,000 நாடிகளில் ஸ்ரீபரமாத்மன் இருக்கிறான் என்று அறிந்து கொள் என்று பீஷ்மாசார்யர் தர்மராஜனுக்கு உபதேசம் செய்தார் என்று மகாபாரத சாந்தி பர்வத்தில் மோட்ச தர்மத்தில் சொல்லப்பட்டிருக்கிறது.

’விஸ்தரிஸிதனு தர்மதனயகெ பீஷ்மபர்வதலி’ என்று சில இடங்களில் இருப்பதால், வியாக்யானகாரர்கள், பீஷ்மாசார்யர், பீஷ்ம பர்வத்தில் தர்மராஜனுக்கு கூறினார் என்று சொல்கிறார்கள். பீஷ்ம பர்வத்தில், பீஷ்மாசார்யருக்கும், தர்மராஜனுக்கும் உபதேசம் நடைபெறும் சந்தர்ப்பம் இல்லவேயில்லை. போர் துவங்கும்போது, தர்மராஜன், பீஷ்மாசார்யரை வணங்கி, போரைத் துவக்குவதற்கான அனுமதியைப் பெற்றான். இரண்டாவது முறை, போரின் 9வது நாளின் இரவில், பீஷ்மாசார்யரிடம் வந்த தர்மராஜன், அவரை சம்ஹரிப்பதற்கான வழியை கேட்டு அறிந்தான். மேற்கண்ட இரு சந்தர்ப்பங்கள் மட்டுமே இருப்பதால், சாந்தி பர்வதலி என்னும் பாடமே சரியானது என்று அறிவோம்.

**எண்டு[1] ப்ரக்ருதிக[3]ளொளகெ[3] விஷ்வா**
**த்யெண்டு ரூபத[3]லித்து[3] ப[4]குதர**
**கண்டகவ பரிஹரிஸுதலி பாலிஸுவ ப்ரதிதி[3]னதி[3] |**
**நெண்டனந்த[3]தி[3] எடெ[3]பி[3]ட[3]தெ[3] வை**
**குண்டரமணனு தன்னவர நி**
**ஷ்கண்டக ஸுமார்க்க[3]த[3]லி நடெ[3]ஸுவ து[3]ர்ஜனர பி[3]டு[3]வ ||5**

எண்டு ப்ரக்ருதிகளொளகெ = பஞ்சபூதங்கள், அஹங்கார, புத்தி, மனஸ் என்னும் 8 ப்ரக்ருதிகளில்
விஷ்வாதி = விஷ்வ முதலான
எண்டு ரூபதலித்து = ரூபங்களில் இருந்துகொண்டு
பகுதர = பக்தர்களின்
கண்டகவ = பிரச்னைகளை / ஆபத்துகளை
பரிஹரிசுதலி = பரிகரித்து
பாலிஸுவ = பாதுகாக்கிறான்
ப்ரதிதினதி = தினந்தோறும்
நெண்டனந்ததி = உறவினர்களைப் போல
எடபிடதெ = இடைவிடாமல்
தன்னவர = தன் பக்தர்களை
நிஷ்கண்டக = தடைகள் இல்லாத
சுமார்க்கதலி = கற்கள், முட்கள் இல்லாத நல்ல வழியில்
நடெசுவ = நடக்க வைப்பான்
துர்ஜனர = கெட்டவர்களை
பிடுவ = தண்டிப்பான்
வைகுண்டரமணனு = வைகுண்டபதியான பரமாத்மன்

பூமிராபோனலோவாயு: கம்மனோபுத்திரேவச |
அஹங்கார இதீயம்மே பின்னாப்ரக்ருதி ரஷ்டதா ||

என்னும் கீதை 7ம் அத்தியாயத்தின் வாக்கியத்தைப் போல, ப்ரக்ருதி, பூமி, தண்ணீர், அக்னி, வாயு, ஆகாயம், மனஸ், புத்தி, அஹங்கார என்னும் 8 விதங்கள் உள்ளன. இந்த எட்டு ப்ரக்ருதிகளுக்குள்ளும் ஸ்ரீஹரி 8 ரூபங்களில் இருந்து, பக்தர்களுக்கு வரும் ஆபத்துகளை பரிகரித்தவாறு, தினந்தோறும் அவர்களை காக்கிறான். மற்றும் அவர்களின் உறவினர்களைப் போல இருந்து, ஒரு நொடியும் விலகாமல், வைகுண்டபதியானவன், அவர்களை எவ்விதமான பிரச்னைகளும் இல்லாமல் நல்வழியில் நடத்தியவாறு மேம்படுத்துவான் / அருள்வான். இத்தகைய நல்வழியானது, துர்ஜனர்களுக்கு கிடைப்பதில்லை.

**ஸ்வரமணனு ஷக்த்யாதி[3]ரூபதி[3]**
**கரணமானிக[3]ளொளகெ[3] நெலெஸி**
**த்த[3]ரவிதூ[3]ரனு ஸ்தூ[2]ல விஷயக[3]ளுண்டு[3]ணிப நித்ய |**
**அரியதெ[3]லெ நானும்பே[3]னெம்பு[3]வ**
**நிரயக[3]ளனும்பு[3]வனு நிஸ்சய**
**மரளி மரளி ப[4]வாட[1]விய ஸஞ்சரிஸி ப[3]ளலுவனு ||6**

அரவிதூரனு = தோஷங்கள் அற்றவனான
ஸ்வரமணனு = தானே ஸ்த்ரி, புருஷ ரூபங்களில் இருந்து ஆனந்தத்தை அடையும் பரமாத்மன்
ஷக்த்யாதி ரூபதி = ஷக்தி, ப்ரதிஷ்டா முதலான 11 ரூபங்களில் இருந்து

கரணமானிகளொளகெ = 11 இந்திரிய அபிமானி தேவதைகளில்
நெலெஸித்து = நிலைத்திருந்து
ஸ்தூல விஷயகள = தற்காலிக விஷய போகங்களை
நித்ய = தினந்தோறும்
உண்டு = தான் உண்டு
உணிப = ஜீவரையும் உண்ண வைக்கிறான்
அரியதலெ = இருக்கிறான் என்று அறியாமல்
நானும்பேனெம்புவ = நானே இந்த விஷயங்களை, ஸ்வதந்திரனாக அனுபவிக்கிறேன் என்று சொல்பவன்
நிஸ்சய = நிச்சயமாக
நிரயகளனு = நரகங்களை
உம்புவனு = அனுபவிக்கிறான்
மரளி மரளி = திரும்பத்திரும்ப
பவாடவிய = சம்சாரம் என்னும் காட்டினில்
சஞ்சரிஸி பளலுவனு = அலைந்து திரிந்து கஷ்டப்படுவான்

தோஷங்கள் அற்றவனான ஸ்ரீபரமாத்மன் ஸ்வரமணன் ஆவான்.

மஹா ஸௌந்தர்ய யுக்தேஷு நிர்தோஷேஷுச ஸர்வதா |
ரமதே ஸ்த்ரி ஸ்வரூபாணி பும்ரூபாணி விதாயச ||

என்னும் ஸத்தத்வ ரத்னமாலா என்னும் கிரந்த வசனத்தின்படி, தானே அழகான பெண் ரூபத்தையும், புருஷ ரூபங்களையும் தரித்து, சுகப்படுகிறான் ஆகையால், பரமாத்மனுக்கு ஸ்வரமணன் என்று பெயர். கண், காது ஆகிய 10 இந்திரியங்களுடன், மனஸ் சேர்த்து 11 இந்திரியங்களில்; ஷக்தி, ப்ரதிஷ்டா, ஸம்வித், ஸ்பூர்த்தி, ப்ரக்ருதி, கலா, வித்யா, மதி, நியதி, மாயா, காலா என்னும் 11 ரூபங்களில் இருந்து, விஷய போகங்களை தான் அனுபவித்து, ஜீவருக்கும் உண்ண வைக்கிறான். இதனை அறியாமல், தானே ஸ்வதந்திரத்தால் இவற்றையெல்லாம் அனுபவிக்கிறேன் என்று சொல்பவன், நிச்சயமாக நரகத்திற்கே போகிறான். அல்லது, திரும்பத்திரும்ப சம்சாரத்திற்கு வந்து, கஷ்டப்படுகிறான்.

**ஸுருசி ருசிர ஸுக2ந்த ஷுசி எ**
**ந்தி3ருதிஹனு ஷட்3ரஸக3ளொளு ஹ**
**ந்னெரடு ரூபத3லிப்ப ஸ்ரீ பூ4 து3ர்கெ3யர ஸஹித |**
**ஸ்வரமணனு எப்பத்தெரடு3 ஸா**
**விர ஸமீரன ரூபதொ3ளகி3**
**த்து3ருபராக்ரம கர்த்ருயெனிஸுவ நாடி3க3ளொளித்து3 ||7**

ஷட்ரஸகளொளு = இனிப்பு, கசப்பு முதலான அறுசுவைகளில் ஒவ்வொன்றிலும்
ஸுருசி, ருசிர, சுகந்த, ஸுசி, என்னும் பெயர்களால்
இருதிஹனு = இந்த நான்கு ரூபங்களில் இருக்கிறான்
ஹன்னெரடு ரூபதலிப்ப = ஷக்தி, பிரதிஷ்டா முதலான 12 ரூபங்களில்

ஸ்ரீபூதுர்கெயர ஸஹித = ஸ்ரீதேவி, பூதேவி, துர்காதேவி ஆகியோருடன் சேர்ந்து
இப்ப = இருக்கிறான்
ஸ்வரமணன் = ஸ்வரமணனான ஸ்ரீஹரி
எப்பத்தெரடு சாவிர = 72,000
ஸமீரன = வாயுதேவரின்
ரூபதொளகெ = ரூபத்தில்
இத்து = இருந்து
உருபராக்ரம = மகா பராக்ரமசாலியான ஸ்ரீஹரி
கர்த்ரு = அனைத்து செயல்களையும் செய்கிறான்
யெனிஸுவ = என்று அழைத்துக் கொண்டு
நாடிகளொளகித்து = நாடிகளில் இருந்து

அறுசுவைகளில் ஒவ்வொன்றிலும் ஸுருசி, ருசிர, ஸுகந்த, ஸுசி என்னும் 4 ரூபங்களால் பரமாத்மன் இருக்கிறான்.
ஸுருசி = நல்ல சுவை.;
ருசிர = சுவையான பதார்த்தங்களை உண்ணும்போது, இன்னும் வேண்டும் என்னும் ஆசையை தூண்டும் உணர்வு
ஸுகந்த = நறுமணம்
ஸுசி = எவ்வித தோஷங்களும் அற்ற பவித்ரமானது

இப்படியான 4 குணங்களும் ஒவ்வொரு சுவைகளிலும் இருப்பது. இந்த 4 ரூபங்களால் பகவந்தனே அந்த சுவைகளில் இருப்பது. மற்றும் சக்தி, ப்ரதிஷ்டா முதலான 12 ரூபங்களால் ஒவ்வொன்று சுவைகளிலும் இரண்டிரண்டு ரூபங்கள் இருந்து, 6 சுவைகளில் மொத்தம் 12 ரூபங்கள் இருக்கின்றன. இதுமட்டுமல்லாமல், 72,000 நாடிகளில் வாயு தேவர், 72,000 ரூபங்களில் வசிக்கிறார். அவரின் அந்தர்யாமியாக 72,000 ரூபங்களால் நாடிகளில் இருந்து, மகா பராக்ரமசாலிகளான பரமாத்மன், இந்த ஸ்தூல தேகத்தினால் செய்யவேண்டிய கர்மங்களை செய்தவாறு கர்த்தா என்னும் பெயரைப் பெறுகிறான்.

**நின்ன ஸர்வத்ரத3லி நெனெவவ**
**ரன்யகர்மவ மாடி3த3ரு ஸரி**
**புண்யகர்மக3 ளெனிஸுவுவு ஸந்தே3ஹ வினிதில்ல |**
**நின்ன ஸ்மரிஸதெ3 ஸ்னான ஜப ஹோ**
**மான்ன வஸ்த்ர க3ஜாஷ்வ பூ4 த4ன**
**தா4ன்ய மொத3லாத3கி2ல தா3னவ மாடி3 ப2லவேனு ||8**

(ஹே ஸ்ரீஹரியே)
நின்ன = உன்னை
ஸர்வத்ரதலி = அனைத்து இடங்களிலும்
நெனெவவரு = நினைப்பவர்கள்
அன்யகர்மவ = புண்ணியம் கொடுக்காத செயல்களை
மாடிதரு ஸரி = செய்தாலும், அவையும்

புண்யகர்மக ளெனிஸுவுவு = புண்ணிய செயல்களே என்றே அறியப்படும்
ஸந்தேஹ வினிதில்ல = இந்த விஷயத்தில் எந்தவொரு சந்தேகமும் இல்லை
நின்ன ஸ்மரிஸதெ = உன்னை நினைக்காமல்
ஸ்னான, ஜப, ஹோம = ஸ்னான, ஜப, ஹோமங்களை செய்தாலும்
அன்ன, வஸ்திர, கஜ, அஷ்வ, பூ, தன, தான்ய = அன்ன, வஸ்திர, யானை, குதிரை, பூமி, தன, தான்ய
மொதலாதகில = ஆகிய அனைத்தையும்
தானவ மாடி = தானமாகக் கொடுத்தால்
பலவேனு = என்ன பலன்? (பலன் கிடைக்காது என்று பொருள்).

தர்மோऽபவத்ய தர்மோபி க்ருதோ பக்த்யைஸ்த வாச்யுத |
பாபம் பவதி தர்மோபி யேன பக்த்யை: க்ருதோஹரே ||

என்னும் ஸதாசார ஸ்ம்ருதி வாக்கியத்தை மனதில் வைத்து, அதே அர்த்தம் வருமாறு, ஸ்ரீஹரியைக் குறித்து இந்த பத்யத்தில் சொல்கிறார் தாசராயர். ஹே தேவாதிதேவா! உன்னை மனதில் நினைத்தவாறு பக்தர்கள் எந்த செயல்களை செய்தாலும், 'நாஹம் கர்த்தா ஹரி:கர்த்தா' என்னும் சிந்தனையுடன், நான் அஸ்வதந்திரன், பரமாத்மன் செய்வித்ததைப் போல நான் செய்தேன் என்னும் ஞானத்தினால் கர்மங்களை செய்தால், அவன் செய்த பாவ கர்மங்களும்கூட புண்ணிய பலன்களையே கொடுக்கின்றன.

இந்த விஷயத்தில் சந்தேகமே வேண்டாம். தேவேந்திரன், வ்ருத்ராசுரனைக் கொன்றதால், மஹாத்மன் என்று பெயர் பெற்றார். பீஷ்ம, த்ரோண ஆகியோர் பிராமணர்கள். போரில், பாண்டவர்கள், ஸ்ரீகிருஷ்ணன் இவர்களுக்கு எதிரான நிலைப்பாட்டை எடுத்து, துரியோதனர்களின் பட்சத்தில் சேர்ந்து, பாண்டவர்களுக்கு எதிராக போர் புரிந்தனர். ஆனாலும், பூ-பாரத்தைக் குறைப்பதற்காக அவதாரம் எடுத்த ஸ்ரீகிருஷ்ணனின் சேவை செய்ததால், புண்ணிய பலன்களையே பெற்றனர். துரியோதனனும் பாண்டவர்களுடன் போர் புரிந்தான். ஆனால், அவனுக்கு அது பாவ சாதனையே ஆனது. ஆகையாலேயே, தாசராயர், ஹே தேவா! உன்னை நினைக்காமல் எந்த தான தர்மங்களை செய்தாலும், அது நற்பலன்களைக் கொடுக்காது. என்று சொல்கிறார்.

**இஷ்டபோ⁴க்ய பதா³ர்த்த²தொ³ளு ஷிபி¹**
**விஷ்ட நாமதி³ ஸர்வஜீவர**
**துஷ்டி ப³டி³ஸுவ தி³னதி³னதி³ ஸந்துஷ்ட தானாகி³ |**
**கோ¹ஷ்டதொ³ளு நெலெஸித்து³ ரஸமய**
**புஷ்டியைதி³ஸு திந்த்³ரியக³ளொளு**
**ப்ரேஷ்டனாகி³த்தெ³ல்ல விஷயக³ளும்ப திளிஸத³லெ ||9**

இஷ்ட = விருப்பமான
போக்ய = அனுபவிக்கும்
பதார்த்ததொளு = பதார்த்தங்களில்

ஷிபிவிஷ்ட நாமதி = ஷிபிவிஷ்ட என்னும் பெயரில் இருந்து
சந்துஷ்ட தானாகி = தான் திருப்தனாகி
தினதினதி = தினந்தோறும்
ஸர்வஜீவர = அனைத்து ஜீவர்களையும்
துஷ்டிபடிஸுவ = திருப்திப்படுத்தும்
ரஸமய = ரஸமய நாமகன்
கோஷ்டதொளு = அன்னாதி கோஷங்களில்
நெலெஸித்து = நிலைத்திருந்து
புஷ்டிகைஸுத = பிராணிகளின் தேகங்களுக்கு புஷ்டியைக் கொடுத்து
இந்த்ரியகளொளு = அவர்களின் இந்திரியங்களில்
ப்ரேஷ்டனாகித்து = நெருங்கிய நண்பனாக இருந்து
திளிஸதலெ = பிராணிகளுக்கு தன் கர்த்ருத்வத்தை தெரிவிக்காமல்
விஷயகளும்ப = விஷய சுகங்களை அனுபவிக்கிறான்

பிராணிகள், விருப்பத்துடன் உண்ணும் பதார்த்தங்களில் ஷிபிவிஷ்ட என்னும் பெயரைக் கொண்ட பரமாத்மன் இருந்து, தான் திருப்தனாகி, அனைத்து ஜீவர்களையும் திருப்திப்படுத்துகிறான். 'யக்ஞோவைவிஷ்ணு: பஷவ: ஷிபிர்யக்ஞ ஏவை பஷுஷுப்ரவிஷ்ட:' என்னும் ஸ்ருதி வசனத்தை அனுசரித்து, விஷ்ணுவிற்கு யக்ஞ என்று பெயர். ஷிபி என்றால் யக்ஞபசு. யக்ஞ நாமகன், பசுக்களில் ப்ரவிஷ்டனாக இருக்கும் அன்னமயாதி கோஷங்களில் (கோஷ்டங்களில்), ரஸமய என்னும் பரமாத்மன் இருந்து, தேகங்களுக்கு புஷ்டியைக் கொடுக்கிறான். இந்திரியங்களில் அனைவருக்கும் வேண்டியவனாக இருந்து, ஜீவனுக்கு தெரியாமலேயே, விஷயபோகங்களை தான் உண்டு, அவர்களையும் உண்ண வைக்கிறான்.

**காரணாஹ்வய ஞான கர்ம**
**ப்ரேரகனு தானாகி$^3$ க்ரியெக$^3$ள**
**தோருவனு கர்மேந்தி$^3$ரியாதி$^4$பரொளகெ$^3$ நெலெஸித்து$^3$ |**
**மூரு கு$^3$ணமய த்$^3$ரவ்யக$^3$ ததா$^3$**
**கார தன்னாமத$^3$லி கரெஸுவ**
**தோரிகொள்ளதெ$^3$ ஜனர மோஹிப மோஹகல்பகனு ||10**

காரணாஹ்வய = காரணரூபி என்னும் பெயரால்
ஞான கர்ம ப்ரேரகனு = ஞானேந்த்ரிய, கர்மேந்த்ரியங்களை வழி நடத்துபவன்
தானாகி = தானாகவே
கர்மேந்த்ரியாதிபரொளகெ = கை, கால் ஆகிய இந்திரிய அபிமானி தேவதைகளில்
நெலெஸித்து = நிலைத்திருந்து
க்ரியெகள = ஞான கர்ம கிரியைகளை
தோருவனு = செய்யும் முறைகளை காட்டுவான்
மூரு குணமய த்ரவ்யக = ஸத்வ ரஜஸ் தமோ குணாத்மக பதார்த்தங்களில் இருந்துகொண்டு
ததாகார தன்னாமதலி = அந்த ஆகாரத்தில், அந்தப் பெயரில்

கரெஸுவ = அழைத்துக் கொள்கிறான்
தோரிகொள்ளதெ = தான் அங்கிருப்பதை, காட்டிக் கொள்ளாமல்
அமோக கல்பகனு = சத்ய சங்கல்பன்
ஜனர = தன் பக்தர்களை
மோஹிப = விரும்புகிறான்

ஸ்ரீபரமாத்மன், காரண என்னும் பெயரால் ஞானேந்திரிய, கர்மேந்திரியங்களின் அபிமானி தேவதைகளில் இருந்து அவற்றை வழிநடத்தி, ஞானகர்ம க்ரியைகளை செய்ய வைக்கிறான். ஸத்வ ரஜஸ் தமோ என்னும் மூன்று குண சம்பந்தமான பதார்த்தங்களில், அந்தந்த பதார்த்தங்களின் உருவத்தில், அந்தந்த பெயர்களில், சத்யசங்கல்பனான ஸ்ரீஹரி, தன் இருப்பைக் காட்டிக் கொள்ளாமல், மக்களை மகிழ்விக்கிறான்.

விஷ்ணுரஹஸ்ய 4ம் அத்தியாயம்:

கடாகாரம்பவத்யேவ கடஸ்தம் ஸலிலம்யதா |
தத்ததாகாரர்வா விஷ்ணு: தத்தத்வஸ்து ஸ்தித:ஸ்ததா ||5
தன்மோடானைவஜானந்தி மாயாமுஷித சக்ஷுஷ: |
தேஹேஹம் பாவினோன்யத்ர மமதா புத்தய: ஸதா ||8
அனிச்சந்தோபி புஞ்சந்தி துக்கானி விவிதான்யபி ||9

பானையில் இருக்கும் தண்ணீர், பானை போன்ற தோற்றத்திலேயே எப்படி இருக்கிறதோ, அப்படியே பரமாத்மன் அந்தந்த பொருட்களில் அந்தந்த உருவங்களில் இருக்கிறான். ஆனால், மூடஜனர்கள் இதனை அறியாமல், பரமாத்மனின் மாயையில் மயங்கி, தேகமே தான் என்று, அனைத்து பொருட்களும் தம்முடையது என்றும் நினைத்து, தாம் விரும்பாவிட்டாலும் பற்பல துக்கங்களையே அனுபவிக்கின்றனர். என்று தாசராயர் கூறுகிறார். இதே அபிப்பிராயத்தையே இந்த பத்யத்தில் சொல்கிறார்.

**த்$^{3}$ரவ்யனெனிஸுவ பூ$^{4}$த மாத்ரதொ$^{3}$**
**ளவ்யயனு கர்மேந்த்$^{3}$ரியக$^{3}$ளொளு**
**ப$^{4}$வ்ய ஸத்க்ரியனெனிப ஞானேந்த்ரியக$^{3}$ ளொளகி$^{3}$த்து$^{3}$ |**
**ஸ்தவ்ய காரகனெனிஸி ஸுக$^{2}$மய**
**ஸேவ்ய ஸேவகனெனிஸி ஜக$^{3}$தொ$^{3}$ளு**
**ஹவ்யவாஹன அரணியொளகி$^{3}$ப்பந்தெ$^{1}$ இருதிப்ப ||11**

பூதமாத்ரதொளு = பஞ்ச மஹாபூதங்களிலும் தன்மாத்ரா குணங்களிலும்
அவ்யயனு = அழிவு இல்லாதவனான ஸ்வாமி
த்ரவ்யனெனிஸுவ = த்ரவ்ய என்று அழைத்துக் கொள்கிறான்
கர்மேந்த்ரியகளொளு = கை, கால் முதலான கர்மேந்திரியங்களில்
பவ்யனெனிப = குஷல என்னும் பெயர் இருக்கிறான்.
ஞானேந்திரியக ளொளகித்து = ஞானேந்திரியங்களில் இருக்கிறான்
ஸ்த்க்ரியனெனிப = ஸத்க்ரிய என்று அழைத்துக் கொள்கிறான்

ஜகதொளு = இந்த உலகினில்
ஹவ்யவாஹனனு = அக்னி
அரணியொளகிப்பந்தெ = அரணிக்கட்டையில் இருப்பதைப் போல (அந்தக் கட்டைக்கு சம்பந்தப்படாமல் அதற்குள் இருப்பதைப் போல)
இருதிப்ப = இருக்கிறான்

ஸ்ரீஹரி,
* பஞ்சபூதங்களில் திரவ்ய நாமகனாகவும்
* ஷப்த ஸ்பர்ஷாதி மாத்ரா குணங்களில் அவ்யய நாமகனாகவும்
* கர்மேந்திரியங்களில் குஷல நாமகனாகவும்
* ஞானேந்திரியங்களில் ஸத்ரிய நாமகனாகவும் இருந்து,

* வணங்குபவன்
* வணங்கப்படுபவன்
* சுகப்படுபவன், என அனைத்தும் தானே ஆகி,

* சிலர்களில் இருந்து வணங்கப்பட்டு
* சிலர்களில் இருந்து வணங்கி
அந்தந்த செயல்களை செய்து, செய்விக்கிறான்.

கட்டையில் இருக்கும் நெருப்பினைப் போல நிர்லிப்தனாக இருக்கிறான். அரணிகட்டையில் நெருப்பு இருப்பதை அறியவேண்டுமெனில், அதை கடைய வேண்டும். அப்போதே அதிலிருந்து நெருப்பு வருகிறது. நெருப்பு வந்தவுடன் அந்த கட்டையை சுட்டுவிடுகிறது. அதே நெருப்பு, கடைவதற்கு முன்பு அதில் இருப்பது மற்றவர்களுக்கு தெரிவதில்லை. அப்படியே, பரமாத்மன் அனைத்து இடங்களிலும் இருந்தாலும், தான் காட்டிக் கொள்ளாமல், பகவத்ஸ்வரூபத்தை தியானம் செய்யும் சஜ்ஜனர்களுக்கு மட்டுமே தெரிகிறான்.

**மனவெ மொத3லாதி3ந்த்3ரியக3ளொள**
**க3னிலதே3வனு ஷுசியெனெஸிகொ**
**ண்ட3னவரத நெலெஸிப்ப ஷுசிஷத்தோ4த னெந்தெ3னிஸி ।**
**தனுவினொளகி3ப்பனு ஸதா3 வா**
**மன ஹ்ருஷிகேஷாக்2ய ரூபதி3**
**அனுப4வகெ தந்தீ3வ விஷயஜ ஸுக2வ ஜீவரிகெ3 ।।12**

மனவெ மொதலாத = மனஸ் முதலான
இந்திரியகளொளு = இந்திரியங்களில்
அனிலதேவனு = வாயுதேவர்
ஷுசி எனிஸிகொண்டு = ஷுசி என்னும் பெயரில்
அனவரத = எப்போதும்
நெலஸிப்ப = இருக்கிறார், இந்த வாயுதேவரின் அந்தர்யாமியாக
ஷுசிஷத், ஹோத நெந்தெனிஸி = ஷுசிஷத், ஹோத என்ற பெயர்களில்
இப்பனு = இருக்கிறான்

தனுவினொளகெ = சரீரத்தில்
ஸதாவாமன ஹ்ருஷிகேஷாக்ய ருபதி = வாமன, ஹ்ருஷிகேஷ ஆகிய இரு ரூபங்களில்
விஷயஜ = விஷயத்தால் ஆகும்
சுகவ = சுகத்தை
அனுபவகெ = அனுபவத்திற்கு
தந்தீவ = கொண்டு வந்து கொடுக்கிறார்

* மனஸ், ஞானேந்திரியங்கள், கர்மேந்திரியங்கள் ஆகிய 11 இந்திரியங்களில், ஷுசி என்னும் பெயரில் வாயுதேவர் இருக்கிறார். அவரின் அந்தர்யாமியாக ஷுசிஷத் என்னும் ரூபத்தில் ஸ்ரீபரமாத்மன் இருக்கிறான்.

* மற்ற அனைத்து இந்திரியங்களிலும் ஹோத நாமக வாயுதேவரில் ஹோத நாமகனாக பரமாத்மன் இருக்கிறான்.
* சரீரத்தில் வாமன, ஹ்ருஷிகேஷ என்னும் இரு ரூபங்களில் இருந்து, உணவு, ஸ்த்ரி போகங்கள் என்னும் விஷய சுகங்களை ஜீவர்களின் அனுபவத்திற்குக் கொண்டு வந்து தருகிறார்.

**ப்ரேரக ப்ரேர்யரொளு ப்ரேர்ய**
**ப்ரேரகனு தானாகி³ ஹரி நி**
**ர்வைரதி³ந்த³லி வர்தி¹ஸுவ தன்னாம ரூபத³லி ।**
**தோரிகொள்ளதெ³ ஸர்வரொளு பா⁴**
**கீரதீ ஜனகனு ஸகலவ்யா**
**பாரக³ள தா மாடி³ மாடி³ஸி நோடி³ நகு³திப்ப ।।13**

ப்ரேரக ப்ரேர்யரொளு = புண்ய பாவங்களை செய்யும் விஷயத்தில், அதை முடிவுசெய்யும் தத்வாபிமானி தேவதைத்யர்களில் இருந்து, அதை செய்யும் அனைத்து ஜீவர்களில் இருந்து,
ப்ரேர்ய ப்ரேரகனு = ஆணையிடுபவனும், செய்பவனுமாகி
ஹரி = ஸ்ரீஹரி
நிர்வைரதிந்த = தேவ, தைத்யர்களில் பரஸ்பரம் த்வேஷத்தை வளர்க்காமல்
தன்னாம ரூபதலி = அந்தந்த தேவ தைத்ய பிராணிகளின் நாம ரூபங்களில் இருந்து
ப்ரவர்த்திசுவ = நடமாடுகிறான்
பாகீரதி ஜனகனு = கங்கையைப் பெற்ற ஸ்ரீபரமாத்மன்
தோரிகொள்ளதே = தன்னுடைய இருப்பைக் காட்டிக் கொள்ளாமல்
சர்வரொளு = அனைவரிலும் இருந்து
சகல வ்யாபாரகள = அனைத்து செயல்களையும்
தா மாடி மாடிஸி = தான் செய்து, செய்வித்து
நோடி நகுதிப்ப = அதற்கு சம்பந்தப்படாமல், தான் அவர்களைப் பார்த்து சிரித்துக் கொண்டிருப்பான்.

நம் தேகங்களில் எப்படி 24 தத்வாபிமானி தேவதைகள் இருக்கின்றனரோ, அதைப் போலவே, தைத்யர்களும் இருக்கின்றனர். தேவதைகள் புண்ய கர்மங்களை செய்யத் தூண்டுவர். தைத்யர்கள் பாவ கர்மங்களை செய்யத் தூண்டுவர். மூன்று வித குணங்களைக் கொண்டவர்களும், இந்த தேவதை, தைத்யர்களின் தூண்டுதல்களின்படியே புண்ய பாவ கர்மங்களை செய்கின்றனர். பரமாத்மன், தேவதைகளிலும், தைத்யர்களிலும், அனைத்து பிராணிகளிலும், அதே உருவம், அதே பெயரில் இருந்து, அவர்கள் செய்யத் தூண்டும் புண்ணிய பாவங்களை, செய்யத் தூண்டுகிறான். செய்பவர்களான அனைத்து பிராணிகளிலும் இருந்து, தானே அவற்றை செய்கிறான். இப்படியாக, செய்பவன், செய்விப்பவனாக தானே இருந்து, அனைத்து கர்மங்களையும் செய்து, செய்வித்து, தான் நிர்லிப்தனாக இருந்து, பார்த்து சிரித்துக் கொண்டிருக்கிறான்.

**ஹரியெ முக்$^{2}$ய நியாமகனு எ**
**ந்த$^{3}$ரிது$^{3}$ புண்யாபுண்ய ஹருஷா**
**மருஷ லாபா$^{4}$லாப$^{4}$ ஸுக$^{2}$துக்கா$^{2}$தி$^{3}$ த்$^{3}$வந்த்$^{3}$வக$^{3}$ள |**
**நிருத அவனங்க்ரிகெ$^{3}$ ஸமர்ப்பிஸு**
**நரக பூ$^{4}$ ஸ்வர்க்கா$^{3}$பவர்க$^{3}$தி$^{3}$**
**கரண நியாமகன ஸர்வத்ரத$^{3}$லி நெனெவுதிரு ||14**

ஹரியே, முக்ய நியாமகனு = அனைத்து கர்மங்களையும் செய்விப்பவன், ஸ்ரீஹரியே
எந்தரிது = என்று அறிந்து
புண்யாபுண்ய = புண்ணிய, பாவ
ஹருஷாமருஷ = மகிழ்ச்சி, கோபம்
லாபாலாப = லாப நஷ்டம்
சுகதுக்காதி = சுகம், துக்கம் ஆகிய
த்வந்த்வகள = இருவித நிலைகளையும்
நிருத = எப்போதும்
அவனங்க்ரிகெ = அந்த பரமாத்மனின் பாதங்களுக்கு
சமர்ப்பிஸு = சமர்ப்பித்து
நரக பூ ஸ்வர்க்க = நரகம், பூமி, ஸ்வர்க்கம்
அபவர்க்கதி = முக்தியில்
ஸர்வத்ரதலி = அனைத்து இடங்களிலும்
கரண நியாமகன = இந்திரியங்களை செயல் செய்விப்பவனான ஹ்ருஷிகேஷனை
நெனெவுதிரு = நினைத்துக் கொண்டிரு.

ஸ்ரீஹரியே அனைத்து செயல்களையும் செய்விக்கிறான் என்று அறிந்து புண்ய பாவங்களை, ஸ்ரீபரமாத்மனுக்கு சமர்ப்பணம் செய்யவேண்டும். மகிழ்ச்சி, கோபம், லாபம், நஷ்டம், சுக, துக்கம், என அனைத்தையும், எது வந்தாலும், அவை அனைத்தும் பகவத் விருப்பமே என்று சிந்தித்து, பரமாத்மனுக்கு சமர்ப்பித்து, நரக, பூமி, ஸ்வர்க்க, முக்தி முதலான எந்த இடத்திற்கு நாம் சென்றாலும், நம் இந்திரிய நியாமகனான

ஸ்ரீஹரியே அங்கும் இருந்து, அந்தந்த சுக துக்கங்களை கொடுக்கிறான் என்று அனைத்து இடங்களிலும் பரமாத்மனை சிந்திக்க வேண்டும்.

**மாணவக தத்ப2லக3ளனுஸ**
**ந்தா3னவில்லதெ3 கர்மக3ள ஸ்வே**
**ச்சானுஸாரதி3 மாடி3 மோதி3ஸுவந்தெ ப்ரதிதி3னதி3 |**
**ஞானபூர்வக விதி4 நிஷேத4க3**
**ளேனு நோட3தெ3 மாடு3 கர்ம ப்ர**
**தா4ன புருஷேஷனலி ப4கு3தி1ய பே3டு3 கொண்டா3டு3 ||15**

மாணவக = சிறுவர்கள்
தத்பலகளனு = தான் செய்யும் செயல்களின் பலன்களை
அனுஸந்தானவில்லதெ = பெறவேண்டும் என்னும் விருப்பம் இல்லாமல்
கர்மகள = அந்த செயல்களை
ஸ்வேச்சானுசாரதி = தன் இஷ்டத்திற்கு
மாடி = செய்து
மோதிஸுவந்தெ = மகிழ்ச்சியடைவதைப் போல
ப்ரதிதினதி = தினந்தோறும்
ஞானபூர்வக = தெளிவான ஞானத்துடன்
விதி நிஷேதகளேனு நோடதெ = இது செய்யலாம், இது செய்யக்கூடாது என்றெல்லாம் பார்க்காமல்
கர்ம ப்ரதான புருஷேஷன = அனைத்தையும் செய்விப்பனான புருஷோத்தமனே பிரதான கர்த்தன் என்று அறிந்து
பகுதிய பேடு கொண்டாடு = பக்தி செய்து, ஸ்தோத்திரம் செய்.

புதோ பாலகவத்க்ரீடேத் |
ஆத்மக்ரீட ஆத்மரத: விசாராமீஹ பாலவத் ||

என்னும் பாகவத 11ம் ஸ்கந்த வாக்கியத்தின்படி, ஞானியானாலும், ஒரு சிறுவனைப்போல இருக்கவேண்டும். அவதூத பிராமணனுக்கும், யதுராஜனுக்கும் ஒரு சமயம் பேச்சுவார்த்தை நடந்த சமயத்தில், சிறுவன் எப்படி தனக்குத்தானே பேசிக்கொண்டு, விளையாடிக் கொண்டிருப்பானோ அது போல, 'நான் செய்வது அனைத்தும் பரமாத்மனே செய்விக்கிறான் என்னும் சிந்தனையில் செய்து, என்னை நானே மகிழ்ச்சிப்படுத்தியவாறு நடமாடிக் கொண்டிருக்கிறேன்' என்று அந்த அவதூதன் கூறுகிறார். அதையே இங்கும் அறிய வேண்டும். சிறுவர்கள் எப்படி தமக்குத் தெரிந்ததை விளையாடிக் கொண்டிருக்கிறார்களோ, அப்படி அனைத்தையும் பரமாத்மனே செய்விக்கிறான் என்னும் நிச்சய ஞானத்தினால், இது விதி; இதை செய்தால் இஷ்டார்த்தங்கள் பூர்த்தி ஆகின்றன; இது விதிவிலக்கு; இதை செய்தால் நான் கெட்டுப் போகிறேன். ஆகையால் இந்த விதியை செய்வேன். இந்த விதிவிலக்கினை செய்ய மாட்டேன் என்னும் கர்த்ருத்வ-அபிமானத்தை விட்டு, விதியை செய்பவன் நான் அல்ல. விதிவிலக்கினை விடுபவன் நான் அல்ல. அனைத்து செயல்களும் ஸ்ரீபரமாத்மனுடையதே என்று

சிந்தித்து, பகவந்தன் எந்த காலத்தில் எதை செய்வித்தாலும், அதை செய்து அவனுக்கே அர்ப்பிக்க வேண்டும்.

இந்த விஷயத்தைப் பற்றி, பாகவத 5ம் ஸ்கந்த ஜடபரத கதையில் ஆதாரம் இருக்கிறது. ரிஷபதேவரின் மகனான ஜடபரதன், அனைத்தையும் தியாகம் செய்து வனத்தில் இருந்தபோது, அவனின் வினைப்பயனின் காரணமாக ஒரு மான்குட்டியின் பரிச்சயம் கிடைத்தது. இறுதியில் மரணகாலத்தில் அந்த மானையே நினைத்தவாறு உயிரை விட்டதால், அடுத்த பிறவியில் மானாகவே பிறந்தார். முந்தைய பிறவியின் நற்பலன்களின் காரணமாக, பரமாத்மனிடம் பக்தி பிறந்து, பிறகு அடுத்த பிறவியில் பிராமணோத்தமனாகப் பிறந்தார்.

அந்த பிராமண பிறவியிலும், முந்தைய வினைப்பயன்களால், முந்தைய இரு பிறவிகளின் நினைவு இருந்ததால், மகா ஞானியாகி, தேக அபிமானத்தை விட்டு, பால்யத்திலிருந்தே விரக்தனாக இருந்து, செயல்களை செய்து வந்து கொண்டிருந்தார். பகவத்பக்தரான ரஹோகண என்னும் ராஜன் ஒருவன், தான் தத்வோபதேசத்தை பெறுவதற்காக கபிலரின் ஆசிரமத்திற்கு செல்லும் வழியில், அவரது பல்லக்கை தூக்குவதற்கு மனிதர்களை நியமிக்க வேண்டி அந்த கிராம அதிகாரியை கேட்டுக் கொண்டான். அவரும் இந்த பிராமணோத்தமரை பல்லக்கு தூக்குமாறு கூற, இவர், அதுவும் ஒரு பகவத் சேவைதானே என்று சிந்தித்து பல்லக்கை தூக்கிக் கொண்டு சென்றார். போகும்போது கீழே இருக்கும் கிருமி, புழு, பூச்சிகளின் மேல் கால் பட்டுவிடுமோ என்று நினைத்து தன் காலடிகளை கவனத்துடன் வைத்து சென்றதால், பல்லக்கு மேல்கீழாக அல்லாடியது. அதைக் கண்ட ராஜன், ஓரிருமுறை அதை சாதாரணமாக எடுத்துக் கூறினாலும், அவர் அப்படியே நடந்து கொண்டார். அந்த ராஜனுக்கு கோபம் வந்தது. 'கிமரேத்வம் ஜீவன்ம்ருதோபி மாங்கதர்த்தீக்ருத்ய பர்த்ருஷாஸன மதிசரஸி, ப்ரமத்தஸ்யதே கரோமி சிகித்ஸாந்தண்டபாணிம்வ' என்றான்.

'ஹே நீசனே. ஏன் நடைப்பிணமாக இருக்கிறாய்? நான் யார் என்று உனக்கு தெரிகிறதா? அரசனான எனது ஆணையை மீறி நடக்கிறாயா? இப்போதே நான் உன்னை யமனிடம் அனுப்புகிறேன்' என்றான். இதைக் கேட்ட பிராமணோத்தமன் சிரித்து, கூறியது. (பாகவதம் 5ம் ஸ்கந்தம் 10ம் அத்தியாயம். 10ம் ஸ்லோகம்).

பிராமண உவாச||
த்வயோதிதம் வ்யக்தமவிப்ரலப்தம் பர்த்து: ஸமேஸ்யாத்யதி வீர பார: |
கந்துர்யதிஸ்யாத திகம்யமத்வாபீவேதி சாஸெளனவிதாம் ப்ரவாத: ||

'ஹே ராஜனே. பாரத்தை சுமந்து செல்வது நானாக இருந்தால், நீ சொல்வது அனைத்தும் நிஜமே. ஆனால், அது பொய். பாரத்தை சுமப்பது நானல்ல. வழியில் செல்வதும் நானல்ல. வழியும் இதுவல்ல' என்று பதில் அளித்தான். முதலில் அரசன் நகைச்சுவையாக பேசியபோது இவன் 'ஸுசிரம் நாதிபீவான்' ஸ்தூல தேகம் கொண்டவன் (ஊனமுற்றவன் என்னும் பொருளில்) என்றிருந்தான். அதற்கு பதிலாக 'பீவேதி சானெளனவிதாம்ப்ரவாத' - என்னை ஊனமுற்றவன் என்றாய். இது

அறிந்தவர்கள் பேசும் பேச்சல்ல. என்றால், முட்டாள்கள் பேச்சும் பேச்சு இது என்று அர்த்தம். ஜீவன், மிகவும் சூக்ஷ்மனான ரூபம் கொண்டவன். தேகம் மட்டுமே ஸ்தூலமானது. தேகம் ஜடமாகையால், கர்த்ருத்வங்கள் தேகத்திற்கு இல்லை. நீ என்று அழைப்பது ஜீவனையே அன்றி தேகத்தை அல்ல. ஆகையால், இப்படி பேசுவது முட்டாள்களின் பேச்சே ஆகும்.

பிரத்யட்சமாக நடந்து போகும் பாதை தெரிகிறது. தூக்கிக் கொண்டு போகும் மனிதரும் தெரிகிறார். இப்படி இருக்கையில் இந்த பிராமணன் 'தூக்கிக் கொண்டு போவது நானல்ல. நடப்பதும் நானல்ல. வழியும் இதல்ல' என்று ஏன் கூறுகிறார் என்றால், தேகம் ஜடம். ஜீவன் அஸ்வதந்த்ரன், அஷக்தன். 'பர்தாஸன் ப்ரியமாணோபிபர்த்திய வுத்ரிதாது ப்ருதிவீமுதத்யாம்' என்னும் ஸ்ருதிகளில் சொல்லியிருப்பதைப் போல, தூக்கியிருப்பவன், நடப்பவன், வழிகாட்டுபவனும் பரமாத்மனே. அவனே அனைத்து செயல்களையும் செய்து செய்விக்கிறான் என்ற சிந்தனையில், மேற்சொன்ன பதிலை பரதராஜன், ராஜனுக்குக் கூறினான். இதே அபிப்பிராயத்தையே தாசராயர் இந்த பத்யத்தில் சொல்லியிருக்கிறார் என்று நினைக்க வேண்டும்.

பரமாத்மனின் பூஜையை, சேவையை செய்துவிட்டு பலன்களை எதிர்பார்க்கக்கூடாது. பக்தியை வேண்டு, கொண்டாடு என்று தாசராயர் கூறுகிறார். பக்தியையாவது கேட்கலாமா? அது காம்ய பலன் இல்லைதானே? என்றால், பக்தி, ஞானம் ஆகியவை பலன்கள் அல்ல. பக்தி செய்வது பகவந்தனின் அருளுக்காக. அதிலிருந்து கிடைக்கும் பலன் முக்தி. அதை மட்டும் கேட்கக்கூடாது. பாகவத 11ம் ஸ்கந்தத்தில் :

ஸாலோக்ய ஸார்ஷ்டி ஸாமீப்ய ஸாரூப்யைக த்யமித்யுத ।
தீயமானம் நக்ருண்ஹந்தி வினாமத்ஸேவனஞ்சனா: ।।

ஸாலோக்ய = பரமாத்மனின் உலகத்தில் வசிப்பது
ஸார்ஷ்டி = பரமாத்மனுக்கு சமமான செல்வங்களைப் பெறுவது
ஸாமீப்ய = பரமாத்மனின் அருகில் வசிப்பது
ஸாரூப்ய = பரமாத்னைப் போல ரூபம் பெறுவது
ஏகத்வ = சாயுஜ்யம் பெறுவது;
என்னும் 5 வித முக்திகளைக்கூட என் ஏகாந்த பக்தர்கள் கேட்பதில்லை என்று பரமாத்மன் உத்தவனுக்குக் கூறுகிறான். இப்படி முக்தி பலரூபமாகையால், அதனை வேண்டுவது காம்ய பலனே ஆகிறது. பக்தி, கர்மரூபமாகையால், அதை வேண்டுவது காம்யம் ஆவதில்லை.

**ஹானி வ்ருத்தி$^{3}$ ஜயாபஜயக$^{3}$ள**
**ஏனு கொட்டுத$^{3}$ பு$^{4}$ஞ்சிஸுத ல**
**ட்சுமி நிவாஸன கருணவனெ ஸம்பாதி$^{3}$ஸனுதி$^{3}$னதி$^{3}$ ।**
**ஞானஸுக$^{2}$மய தன்னவர பர**
**மானுராக$^{3}$தி$^{3}$ ஸந்தயிப தே$^{3}$**

**ஹானு ப³ந்தி⁴க³ளந்தெ ஒளஹொரகி³த்து³ கருணாளு ||16**

ஹானி வ்ருத்தி ஜயாபஜயகளு = குன்றுவது, வளர்வது, வெற்றி, தோல்வி என இவை அனைத்தும்
ஏன் கொட்டுத = எப்போது எவை பகவத் ப்ரேரணையின்படி வருகிறதோ
புஞ்சிஸுத = அதனை அனுபவித்தவாறு
லட்சுமி நிவாஸன = ஸ்ரீனிவாசனின்
கருணவனெ = கருணையையே
அனுதினதி = தினந்தோறும்
சம்பாதிசு = சம்பாதித்துக் கொள்
ஞானசுகமய = ஞானானந்த ஸ்வரூபமான ஸ்ரீஹரி
தன்னவர = தன் பக்தர்களை
தேஹானு பந்திகளந்தெ = தேக சம்பந்தம் உள்ள உறவினர்களைப் போல
பரமானுராகதி = பரம ப்ரீதியுடன்
ஒள ஹொரகித்து = உள்ளேயும் வெளியேயும் இருந்து
கருணாளு = கருணாமயியானவன்
சந்தயிப = காப்பாற்றுவான்

வளர்வது, குன்றுவது, வெற்றி, தோல்வி ஆகிய எதுவாயினும், ஈஸ்வர சங்கல்பத்தால் எந்த காலத்தில் எது வந்தாலும்,

ஈஷாவாஸ்யம் இதம் சர்வம் யஜ்ஜகத்யாம் ஜகன்மன: |
தேனத்யக்தேன புஞ்ஜீதா மாக்ருத: கஸ்யசித்தனம்

என்னும் ஈஷாவாஸ்ய உபநிஷத்தின் வாக்கியத்தின்படி வந்ததை அனுபவித்தவாறு, ஸ்ரீபரமாத்மனின் அருளை மட்டும் எப்போதும் சம்பாதிக்க வேண்டும். அப்படி செய்பவர்களை, ஞானானந்த ஸ்வரூபனான ஸ்ரீஹரி மிகப்பெரிய கருணாளு ஆகையால், மிகவும் நெருங்கிய உறவினர்களைப்போல, அவர்களின் உள்ளேயும் வெளியேயும் இருந்து, பரம ப்ரீதியுடன் அவர்களை காப்பாற்றுவான்.

**ஆ பரம ஸகலேந்த்ரியக³ளொளு**
**வ்யாபகனு தானாகி³ விஷயவ**
**தா பரிக்³ரஹிஸுவனு திளிஸதெ³ ஸர்வஜீவரொளு |**
**பாபரஹித புராணபுருஷ ஸ**
**மீபத³லி நெலெஸித்து³ நானா**
**ரூபதா⁴ரக தோரிகொள்ளதெ³ கர்மக³ள மாள்ப ||17**

ஆ = மேற்சொன்ன
பரம = பரமாத்மன்
சகலேந்திரியகளொளு = அனைத்து இந்திரியங்களிலும்
வியாபகனு தானாகி = தானே நிலைத்திருந்து
சர்வஜீவரொளு = அனைத்து ஜீவர்களிலும் இருந்து
திளிஸதெ = ஜீவர்களுக்குத் தெரியாமல்

தா = தான்
விஷயவனு = விஷய போகங்களை
பரிக்ரஹிஸுவனு = பரிகரிக்கிறான்
பாபரஹித = பாவங்கள் இல்லாதவனான
புராணபுருஷ = புராதன புருஷனான ஶ்ரீபரமாத்மன்
ஸமீபதலி நெலெஸித்து = ஜீவர்களின் சமீபத்தில் இருந்து
தோரிகொள்ளதே = தான் இருப்பதை அறிவித்துக் கொள்ளாமல்
நானா ரூபதாரக = உற்றார் உறவினர்களின் ரூபங்களை தரித்து
கர்மகள மாள்ப = கர்மங்களை செய்கிறான்.

ஶ்ரீபரமாத்மன், அனைத்து பிராணிகளின், அனைத்து இந்திரியங்களிலும் நிலைத்திருந்து, அவர்களுக்கே தெரியாமல் விஷய சுகங்களை தான் பரிகரிக்கிறான். தோஷங்கள் அற்றவனான, பாவங்களே இல்லாதவனான, புராண புருஷனான ஶ்ரீஹரி, உற்றார், உறவினர், யானை, குதிரை போன்ற பற்பல ரூபங்களால், அவற்றில் தானே இருந்து, அப்படி தான் இருப்பதை யாருக்கும் தெரிவிக்காமல், அவரவர்களால் எந்தெந்தெ செயல்கள் செய்யவேண்டுமோ அவற்றை தானே செய்கிறான்.

**கே2சரரு பூ4சரரு வாரி னி**
**ஷாசரரொளித்த3வர கர்மக3**
**ளாசரிஸுவனு க4ன மஹிம பரமல்பனோபா1தி3 |**
**கோ3சரிஸனு ப3ஹு ப்ரகாரா**
**லோசனெய மாடி3த3ரு மனஸிகெ3**
**கீசகாரியப்ரீய கவிஜனகே3ய மஹராய ||18**

கன மஹிம = மகாமகிமையுள்ள ஶ்ரீஹரி
கேசரரு = ஆகாயத்தில் பறக்கும் பறவைகள்
பூசரரு = பூமியில் வசிக்கும் பசு, மனிதர்கள்
வாரிசரரு = தண்ணீரில் வசிக்கும் மீன் முதலைகள்
நிஷாசரரொளு = அசுரர்கள் என இவர்களில் இருந்து
பரமால்பனோபாதி = மிகவும் சிறியதான மீன் முதலான பிராணிகளைப் போல
கர்மகள = செயல்களை
ஆசரிஸுவனு = செய்கிறான்
கீசகாரிப்ரிய = கீசகாதிகளைக் கொன்ற பீமசேன அவதாரத்தை எடுத்த வாயுதேவரின் ப்ரியனான
கவிஜனகேய = ஞானிகளால் வணங்கப்படுபவனான
மஹராய = பிரம்மாதிகளுக்கு அதிபதி ஆனதால் சக்ரவர்த்தி என்று அழைக்கப்படும்
ஶ்ரீஹரி
பஹு ப்ரகார = பல்வேறு விதங்களில்
ஆலோசனெய மாடிதரு = யோசித்தாலும்

மனஸ்ஸிகெ கோசரிஸனு = தன் முழுமையான மகிமையை தெரியப் படுத்தமாட்டான்.

* வானத்தில் பறக்கும் பறவைகள், தேவதைகள், கந்தர்வர்கள் ஆகியோர்,
* பூமியில் வசிக்கும் பசு, மனிதர்கள்,
* தண்ணீரில் வசிக்கும் மீன், முதலைகள்,
* இரவில் நடமாடும் அசுரர்கள் ஆகியோருக்குள் இருந்து,

அவன் மகாமகிமை உள்ளவனாக இருந்தாலும், மிகவும் சிறிய பிராணிகளைப் போல, அந்தந்த ஜீவர்களின் செயல்களை செய்து செய்விக்கிறான். வாயுதேவரின் ப்ரியனான, ஞானிகளால் வணங்கப்படுபவனான, பிரம்மாதிகளால் பூஜிக்கப்படுபவனான ஸ்ரீஹரி, மஹாராய என்று அழைக்கப்படுகிறான். அதாவது, சக்ரவர்த்தியான ஸ்ரீபரமாத்மன் தன் பக்தர்களுக்கு அவரவர்களின் தகுதிக்கேற்ப தானாக தரிசனம் அளிக்கிறானே தவிர, தேகத்தைக் கொண்டவர்கள் எவ்வளவு விதமாக யோசித்தாலும் பரமாத்மன் தரிசனம் அளிப்பதில்லை. மஹாராஜா என்னும் பெயர் ஸ்ரீஹரிக்கு காரணப்பெயர். மற்றவர்களுக்கு உபசாரப் பெயரே ஆகும்.

பாகவத 10ம் ஸ்கந்தம், 64 அத்தியாயம், 30ம் ஸ்லோகம் - ஸ்ருதி கீதையில்,

வர்ஷ புஜோகிள க்ஷிதிபரிவ விஷ்வஸ்ய ஜோவிதரதியத்ரயேத்வதி க்ருதாபவதஸ்சகிதா: |
த்வமேக: ஸ்வராடகிள காரகஷக்திதவ ஸ்தவ பலிமுத்வஹந்தி ஸமதந்தி சயீனிமிஷா: ||

ஹே ஸ்வாமி. நீ ஒருவனே சக்ரவர்த்தி. அனைத்து செயல்களையும் அனைவரின் மூலமாகவும் செய்விக்கும் சக்தி உள்ளவன். பிரம்மாதி தேவதைகள் அனைவரும் மற்றவர்களிடமிருந்து தான் பூஜாதிகளை ஏற்றுக்கொண்டு, உனக்கு பூஜாரூபமான கப்பத்தை செலுத்துகிறார்கள்.

கண்டாதீஷா: ஸார்வபௌமஸ்ய யத்வத்ச்ரஹ்மேஷாத்யா: குர்வதி தேனுஷாஸ்தி: -- என்னும் சாண்டில்ய ஸ்ருதியிலும் இதே அர்த்தம் வெளிப்படுகிறது.

**ஒந்தெ3 கோ3த்ர ப்ரவர ஸந்த்4யா**
**வந்த3னெக3ளனு மாடி3 ப்ராந்தகெ**
**தந்தெ3 தனயரு பே3ரே தம்மய பெஸருகொ3ம்ப3ந்தெ |**
**ஒந்தெ3 தே3ஹதொ3ளித்து3 நிந்த3யா**
**நிந்த3ய கர்மவ மாடி3 மாடி3ஸி**
**இந்தி3ரேஷனு ஸர்வஜீவரொ ளீஷனெனிஸுவனு ||19**

ஒந்தே கோத்ர ப்ரவ்ர = ஒரே கோத்திர பிரவரங்களைக் கொண்ட தந்தை, மகன்கள்
ஸந்த்யாவந்தனெகளனு மாடி = சந்தியாவந்தனத்தை செய்து
ப்ராந்தகெ = இறுதியில்

தந்தெ தனயரு = தந்தை மகன்கள்
பேரெ தம்மய பெஸருகொம்பந்தெ = தத்தம் பெயர்களை மட்டும் வெவ்வேறாக சொல்வதைப் போல
இந்திரேஷனு = லட்சுமிபதி
ஒந்தே தேஹதொளித்து = ஒரே தேகத்தில் இருந்து
நிந்தியானிந்த்ய கர்மவ = புண்ய பாவ கர்மங்களை செய்து, செய்வித்து
ஸர்வ ஜீவரொளகெ = அனைத்து ஜீவர்களிலும்
ஈஷனெனிஸுவனு = ஸ்வாமி என்று அழைத்துக் கொள்கிறான்.

ஒரே கோத்திரம், ஒரே ப்ரவரத்தில் பிறந்த தந்தை மகன்கள், சந்தியாவந்தனத்தை செய்து, இறுதியில் ஒரே கோத்திரம், பிரவரத்தை சொல்லி, தத்தம் பெயர்களை மட்டும் வெவ்வேறாக சொல்வார்கள். அப்படியே, பரமாத்மன் ஒவ்வொரு தேகங்களிலும் இருந்து, புண்ணிய பாவ கர்மங்களை தான் செய்து, செய்வித்து, இறுதியில் தன்னை ஈசன் என்று அழைத்துக் கொள்கிறான். அதாவது, தந்தை மக்கள் கோத்ராதிகளை உச்சரிக்கும்போது அது ஒன்றாகவே இருந்தாலும், பெயரை சொல்லும்போது வெவ்வேறாக எப்படி இருக்கிறதோ அது போல, ஜீவர்களின் உள்ளே இருந்து, கர்மங்களை தான் செய்து, செய்விப்பவன் ஒருவனே இருந்தாலும், பலன்களை அனுபவிக்கும் காலத்தில் ஜீவன் வேறு பரமாத்மனான ஸ்வாமி வேறு என்று ஆகிறார்கள். அதாவது, ஜீவன் சுக துக்கங்களை அனுபவிக்கிறான். பரமாத்மன் அவற்றிற்கு சம்பந்தப்படாமல் நிர்லிப்தனாக இருக்கிறான்.

**கிட்டிக$^{3}$ட்டித$^{3}$ லோஹ பாவக**
**ஸுட்டு விங்க$^{3}$ட$^{3}$ மாடு$^{3}$வந்தெ க$^{4}$**
**ரட்ட வ்ரீஹியொளிப்ப தண்டு$^{3}$ல கடெ$^{3}$கெ$^{3}$ தெ$^{3}$கெ$^{3}$வந்தெ |**
**விட்டலாயெந்தொ$^{3}$ம்மெ மை மரெ**
**த$^{3}$ட்டஹாஸதி$^{3}$ கரெயெ துரிதக$^{3}$**
**ளட்டுளி பி$^{3}$டி$^{3}$ஸி அவன தன்னொளகி$^{3}$ட்டு ஸலஹுவனு ||20**

கிட்டகட்டித லோஹ = துருப்பிடித்த இரும்பு
பாவக = நெருப்பு
சுட்டு = எரித்து
விங்கட மாடுவந்தெ = அந்த துரு, இரும்பு இரண்டையும் பிரிப்பதைப் போல
மத்து கரட = உமியைக் குட்டி அரிசியை தனியாகப் பிரிக்கும் இயந்திரம்
வ்ரீஹிகளொளிப்ப = உமியில் இருக்கும் அரிசி
கடெகெ தெகெவந்தெ = வேறாக எடுப்பதைப் போல
துரிதகள = பாவங்களை
அட்டி = தூர விலக்கி
உளிய = பீஜமாக இருக்கும் லிங்க சரீரத்தை
பிடிஸி = விடுவித்து
இவன = இந்த பக்தனை
தன்னொளகித்து = தன் லோகத்திலிருந்து, அல்லது, தன் அருகில் வைத்து முக்தனாக மாற்றி காப்பாற்றுவான்.

இரும்பில் துரு மற்றும் அதைப்போன்ற சில தோஷங்கள் இருக்கலாம். அந்த இரும்பை நன்றாக காய்ச்சி, அடித்தால், அந்த தோஷம் தனியாக பிரிந்துவிடும். அது போலவே, மர இயந்திரத்தில் உமியை வைத்து குட்டி, உமியிலிருந்து அரிசியை பிரித்தெடுக்கிறோம். அது போலவே, பக்தியினால் மெய்மறந்து விட்டலா என்று ஒரு முறை உச்சரித்தால், இவனின் பாவங்களை பரிகரித்து, உத்பத்திக்கு மூலகாரணமான லிங்க சரீரத்தை பங்கம் செய்து முக்தியைக் கொடுத்து அருள்கிறான்.

**ஜலதி4யொளு ஸ்வேச்சானுஸாரதி3**
**ஜலசர ப்ராணிக3ளு தத்த**
**த் ஸ்த2லக3ளலி ஸந்தோஷபடு3தலி ஸஞ்சரிஸுவந்தெ |**
**நலினனாப4னொளப்3ஜப4வ மு**
**ப்பொளலுரிக3 மைக3ண்ண மொத3லா**
**த3லவ ஜீவர க3ணவு வர்த்திஸுதிஹுது நித்யத3லி ||21**

ஜலதியொளு = கடலில்
ஸ்வேச்சானுசாரதி = தத்தம் இஷ்டத்திற்கேற்ப
ஜலசர ப்ராணிகளு = நீரில் வசிக்கும் மீன் முதலை ஆகியவை
தத்தத் ஸ்தலகளலி = அந்தந்த இடங்களில்
சந்தோஷபடுதலி = மகிழ்ந்திருப்பதைப் போல
நளினனாபனொளு = பத்பனாபனுக்குள்
அப்ஜபவ = தாமரையில் பிறந்த பிரம்மதேவர்
முப்பொளலுரிக = மூன்று பட்டணங்களை சுட்ட ருத்ரதேவர்
மைகண்ண மொதலாத = உடம்பெல்லாம் கண்களை உடைய தேவேந்திரன் முதலான
ஹலவு ஜீவரகணவு = பலவகை ஜீவ கணங்கள்
நித்யதலி = நிரந்தரமாக
வர்த்திஸுதிஹது = சஞ்சரிக்கின்றனர்.

கடலில் மீன், முதலை ஆகிய பிராணிகள் எப்படி தத்தம் இஷ்டத்திற்கேற்ப மகிழ்ந்து வசித்திருப்பதைப் போல, பரமாத்மனின் உதரத்தில் பிரம்ம ருத்ராதி தேவதைகள், தத்தம் ஸ்தானங்களில் இருந்துகொண்டு சஞ்சரித்து, மகிழ்ச்சியுடன் பகவந்தனை தியானித்துக் கொண்டிருக்கின்றனர்.

**வாஸுதே3வனு ஒளஹொரகெ3 ஆ**
**பா4ஸகனு தானாகி3 பி3ம்ப3 ப்ர**
**காஷிஸுவ தத்3ரூப தன்னாமத3லி ஸர்வத்ர |**
**ஈ ஸமன்வய வெந்தெ3னிப ஸது3**
**பாஸனெய கை3வப1னு மோக்ஷா**
**ந்வேஷிக3ளொளுத்தமனு ஜீவன்முக்த நவனியொளு ||22**

வாசுதேவன் ஔஹொரகெ ஆபாஸகனு = ஜீவரின் ஸ்வரூப தேகத்தின் உள்ளே வெளியே பிரதிபிம்பனாக வாசுதேவன்
தானாகி = தானேயாகி
பிம்ப = பிம்பரூபத்தினால்
சர்வத்ர = அனைத்து இடங்களிலும்
தத்ரூப = அந்தந்த ரூபங்களில்
தன்னாமதலி = அந்தந்த பெயர்களில்
ப்ரகாஷிஸுவ = ஒளிர்கிறான் (நிலைத்திருக்கிறான்)
ஈ ஸமன்வய யெந்தெனிப = பிம்ப, பிரதிபிம்ப ரூபங்களில் தானே இருந்து அனைத்து காரியங்களை செய்விக்கிறான் என்னும்
ஸதுபாஸனெய = இந்த உத்தமமான உபாசனையை
கெய்வவனு = செய்பவன்
மோக்ஷான்வேஷிகளொளு = மோட்சத்தை விரும்புபவர்களில்
உத்தமன் = சிறந்தவன்
அவனியொளு = பூமியில்
ஜீவன்முக்த = ஜீவன் முக்தன் எனப்படுகிறான்.

ஜகத்தின் உள்ளேயும் வெளியேயும் ஸ்ரீபரமாத்மன் நிலைத்திருக்கிறான். பிம்பரூபனாக, ஜீவனின் ஸ்வரூப தேகத்தில் ப்ரதிபிம்பனாக, அனைத்து பிராணிகளில் அந்தந்த ரூபங்களில் அந்தந்த பெயர்களில் பிரகாசித்துக் கொண்டிருக்கிறான். பிம்பரூபியாகி எந்த பரமாத்மன் இருக்கிறானோ அதே பரமாத்மன் பிரதிபிம்பனான ஜீவர்களில் இருக்கிறான். இந்த இரு பகவத்ரூபங்களுக்கு பரஸ்பரம் வேறுபாடு இல்லை என்னும் உத்தம சிந்தனையை / உபாசனையை செய்பவரே, முக்தியோக்யர்களில் உத்தமன் மற்றும் பூமியில் ஜீவன் முக்தர்கள்.

**போ4க்3ய வஸ்துக3ளொளகெ3 யோக்3யா**
**யோக்3ய ரஸக3ளனரிது யோக்3யா**
**யோக்3யரலி நெலெஸிப்ப ஹரிகெ3 ஸமர்ப்பிஸனுதி3னதி3 ।**
**பா4க்3ய ப3ட3தன ப3ரலு ஹிக்க3தெ3**
**குக்3கி3 ஸொரக3தெ3 ஸத்ப4கு3தி1 வை**
**ராக்3யக3ளனே மாடு3 நீ நிர்பா4க்3ய னெனிஸத3லெ ||23**

போக்யவஸ்துகளொளகெ = நாம் போகிக்க யோக்யமான பதார்த்தங்களில்
யோக்யாயோக்ய ரஸகளனரிது = இந்த பதார்த்தம் போகிக்க தகுதியானது, இது தகுதியற்றது என்று குரு முகத்தினாலோ, சம்பிரதாயத்தினாலோ, சாஸ்திரங்களிலிருந்தோ அறிந்து
யோக்யாயோக்யரலி நெலஸிப்ப = தேவ பிராமண சண்டால பசுக்களில் இருக்கும்
ஹரிகெ = பகவத் ரூபங்களுக்கு
அனுதினதி = தினந்தோறும்
சமர்ப்பிஸு = சமர்ப்பித்து வா

பாக்ய படதன பரலு ஹிக்கதெ, குக்கி ஸொரகதெ = செல்வம் வந்ததென்று கர்வப்படாமல், ஏழ்மை வந்ததென்று கவலைப்படாமல், நீ,
நிர்பாக்யனெனிஸதலெ = இந்த பிறவியே வீண் என்று நினைக்காமல்
ஸதுபகுதி = பரமாத்மனிடம் நல்ல பக்தியை
வைராக்யகளனெ = சம்சாரத்தில் வைராக்கியங்களை வேண்டு.

நாம் பயன்படுத்தும் தகுந்த பதார்த்தங்களில் தேவர நைவேத்தியத்திற்குத் தகுதியான பதார்த்தங்கள் எவை? தகுதியில்லாத பதார்த்தங்கள் எவை? என்பதை ஒரு குருவிடமிருந்தோ, சாஸ்திரங்களிலிருந்தோ அறிந்து, சாத்விகர்கள், ராஜஸர்கள், தாமசர்கள் என்னும் மூன்றுவித ஜீவர்களில் நிலைத்திருக்கும் ஸ்ரீபரத்மானுக்கு சாத்விக, ராஜஸ, தாமஸாத்மகமான போக்ய பதார்த்தங்களை சமர்ப்பிக்க வேண்டும். அதாவது, சாத்விகர்கள், சாத்விக ஆகாரத்தை வணங்கியவாறு, ஏகபத்னி விரதனாக இருக்கிறான். ராஜஸர், தாமஸர் இருவரும் தத்தம் தகுதிகளுக்கேற்ப ராஜஸ தாமஸ பதார்த்தங்களான உருளைக்கிழங்கு, சுரைக்காய் ஆகிய பதார்த்தங்களையும், வேசி முதலான பர-ஸ்த்ரியர்களையும் விரும்பி மகிழ்ந்திருப்பர்.

ஸ்ரீபரமாத்மன் அவர்களில் இருந்து அவரவர்களின் தகுதிக்கேற்ப பலன்களைக் கொடுப்பதற்காக, சாத்விக தாமஸ முதலான பதார்த்தங்களின் ரசங்களை தான் ஸ்வீகரித்து, அவரவர்களுக்கு தகுதியான பலன்களைக் கொடுக்கிறான். இவற்றை அறிந்து சாத்விகரான பகவத்பக்தர்களில் இருக்கும் பரமாத்மனுக்கு சாத்விக பதார்த்தங்களையே அர்ப்பிக்க வேண்டும். தாமஸாதி பதார்த்தங்களை ஸ்வீகரித்தால், பரமாத்மனுக்கு தோஷங்கள் வந்துவிடும் என்று சந்தேகப் படக்கூடாது. ஏனெனில், தகுதியான / தகுதியில்லாத பதார்த்தங்களில் எந்த பரமாத்மன் இருக்கிறானோ, அந்த உண்பவரில்கூட அதே பரமாத்மனே இருப்பதால், அந்த பதார்த்தங்களுக்கும், அதை உண்பவருக்கும் பரஸ்பரம் வேறுபாடு உண்டே தவிர, அவற்றில் இருக்கும் பகவத்ரூபங்களுக்கு கொஞ்சம்கூட வேறுபாடு இல்லை.

ஆகையால், எந்தெந்த பிராணிகள் எந்தெந்த பதார்த்தங்களை விரும்புகிறதோ, அவரவர்களில் இருக்கும் பரமாத்மனுக்கு, அந்தந்த பதார்த்தங்களையே சமர்ப்பிக்க வேண்டும். இப்படியாக சமர்ப்பித்து பூஜிப்பதற்கு ‘அன்வய பூஜை’ என்று பெயர். இப்படி அனைத்து இடங்களிலும் வியாப்தனாகி இருக்கும் பகவத் ரூபங்களில் வேறுபாடுகளை சிந்திக்காமல் பூஜிப்பதனால், நெருப்பில் நெருப்பையே போட்டது போல ஒன்றாக இருக்கிறான். இப்படியாக அறிந்து பூஜித்தால், பரமாத்மன் மகிழ்ச்சியடைகிறான்.

இப்படி இல்லாமல், செல்வம் வரும்போது மகிழ்வது / கர்வம் கொள்வது; ஏழ்மை வரும்போது வருந்துவது கூடாது. எந்த காலத்திற்கு எது வந்தாலும் அது பகவந்தனின் விருப்பத்தினாலேயே வந்தது என்று நினைத்து, இந்தப் பிறவியை அர்த்தமுள்ளதாக ஆக்கிக்கொண்டு, ஞான வைராக்ய பக்தியினால் பகவந்தனை ஆராதிக்க வேண்டும்.

**ஸ்தள ஜலாத்3ரிக3ளல்லி ஜனிஸுவ**
**ப2ல ஸுபுஷ்ப ஸுக3ந்த3ரஸ ஶ்ரீ**
**துளஸி மொத3லாத3கி2ல பூஜாஸாத3ன பதா3ர்த்த4 |**
**ஹலவு ப3கெ3யிந்த3ர்ப்பிஸுத பா3**
**ம்பொ3ளெய ஜனககெ3 நித்ய நித்யதி3**
**திளிவரிது வ்யதிரேக பூஜெக3ளெந்து3 கோவித3ரு ||24**

ஸ்தல = பூமி
ஜல = நீர்
அத்ரிகளலி = மலைகளில்
ஜனிஸுவ = பிறக்கும்
பலஸுபுஷ்பஜ = பழங்கள், பூக்களால் பிறக்கும்
கந்த = வாசனையானது
ரஸ = சாறு ஆகியவை
ஶ்ரீதுளசி மொதலாத அகில பூஜா சாதன பதார்த்த = பகவந்தனின் பூஜைக்கு தகுதியான பதார்த்தங்களை
ஹலவு பகெயிந்த = பல விதமாக
பாம்பொளெய ஜனககெ = கங்கையைப் பெற்ற பரமாத்மனுக்கு
நித்ய நித்யதி = தினந்தோறும்
அர்பிஸுத = அர்ப்பிப்பவர்கள்
ஈ பூஜெயு = இந்த பூஜையானது
கோவிதரு = பண்டிதர்கள்
வியதிரேக பூஜெகளெந்து = வியதிரேக பூஜை என்று நினைப்பார்கள்.

பூமி, தண்ணீர், மலை இவற்றில் கிடைக்கும் பழம், பூ இவற்றின் சாறு, நறுமணம் ஆகியவற்றை, ஶ்ரீதுளசி முதலான அனைத்து பூஜைக்குத் தகுதியான பதார்த்தங்களை, பல்வேறு விதமாக ஶ்ரீபரமாத்மனுக்கு அர்ப்பிக்க வேண்டும். இந்த பூஜையை ஞானிகள் வியதிரேக பூஜை என்கிறார்கள்.

**ஶ்ரீகரன ரூப க்ரியெ கு3ணவ**
**லோகிஸுத ஸர்வத்ரதி3 வ்யதி**
**ரேக திளியதெ3 அன்வயிஸு பி3ம்ப3னலி மரெயத3லெ |**
**ஸ்வீகரிஸுவனு கருணதி3ந்த3 நி**
**ராகரிஸதெ3 க்ருபாளு ப4க்தர**
**ஷோகக3ள பரிஹரிஸி ஸுக2வித்தனவரத1 பொரெவ ||25**

ஶ்ரீகரன = ஐஸ்வர்யத்தைக் கொடுக்கும் ஶ்ரீபரமாத்மனை
சர்வத்ரதி = அனைத்து இடங்களிலும்
அவலோகிஸுத = சிந்தித்து / நினைத்து
குண = ஆனந்தாதி குணங்களில்
ரூப = அனைத்து இடங்களிலும் இருக்கும் ரூபங்கள், மத்ஸ்யாவதார ரூபங்கள் இவற்றில்

க்ரிய = ஸ்வாமி, நண்பர்களில் இருந்து செய்து, செய்விக்கும் செயல்களில் ஆகட்டும்
வைதிரேக திளியதலெ = பேதங்களை சிந்திக்காமல்
பிம்பனலி = நம் தேகத்தில் இருக்கும் பிம்பமூர்த்தியில்
அன்வயிஸு = ஒன்றேயாகும் என்னும் சிந்தனையை
சிந்திஸு = நினை
ஸ்வீகரிஸுவனு = ஏற்றுக்கொள்கிறான்
கருணதிந்த = கருணையுடன்
நிராகரிஸதெ = அதை நிராகரிக்காமல்
க்ருபாளு பக்தர ஷோககள பரிஹரிஸி = பக்தர்களின் சோகங்களை பரிகரிக்கும் கருணாளு
சுகவித்து = சுகங்களைக் கொடுத்து
அனவரத = எங்கும் எப்போதும் இருப்பவன்
பொரெவ = அருள்கிறான்.

முந்தைய பத்யத்தில் கூறியதைப் போல, நிலம், நீர், மலைகளில் கிடைக்கும் பழ, பூ ஆகியவற்றிலும்கூட பகவந்தனே அந்தந்த ரூபங்களில், அந்தந்த உருவங்களில் இருக்கிறான் என்று சிந்தித்து, நம் பிம்ப மூர்த்தியான ஸ்ரீபரமாத்மனுக்கும், துளசி ஆகியவற்றிலும், சண்டாலர்களிலும் இருக்கும் பகவந்தனின் அனந்தாதி ரூபங்களில், செயல்களை செய்யும் சக்திகளில், சிறிதளவுகூட வேறுபாட்டினை எண்ணாமல், பிம்பரூபியே நம்மிலும், அனைத்து இடங்களிலும் இருக்கிறான் என்று சிந்திக்க வேண்டும்.

துளசி ஆகியவற்றில் இருக்கும் பகவந்தனை, பிம்பரூபியான ஸ்ரீபரமாத்மனுக்கு சமர்ப்பிக்கிறேன் என்று நினைக்க வேண்டும். பூஜா த்ரவ்ய ரூபமான பகவந்தனை பிம்பனில் நினைப்பதே அன்வய பூஜை என்று சொல்வர். இதற்கு நேர்மாறாக, துளசிகளில், போக்ய பதார்த்தங்களில், பகவந்தனை அறிந்திருந்தாலும், அந்த பொருட்களை வேறாக சிந்தித்து, சாலிகிராம பிரதிமைகளில், பகவத் ப்ரீதிக்காக சமர்ப்பிப்பது, வியதிரேக பூஜை என்று அறியவேண்டும்.

அன்வய பூஜையில், அனைத்து இடங்களிலும் நிலைத்திருக்கும் பகவத்ரூபங்களின் குண ரூப க்ரியைகளில் வேறுபாட்டினை சிந்திக்கக்கூடாது என்றால் என்ன? பதார்த்தங்கள் அனைத்தும் ஒன்றே என்று பொருள் இல்லை. இவற்றில் இருக்கும் பகவந்தனின் குணம் க்ரியைகளுக்கு பேதம் இல்லை. அது எப்படியெனில், பாகவத ஸ்ருதி கீதையில் ‘ நஹி விக்ருதந்த்யஜந்திகனகஸ்ய ததாத்மதயா’ - சிறந்த தங்கத்தினால் ஆபரணங்களை செய்தால், அந்த ஆபரணங்களின் உருவ பேதத்தினால் பெயர்களில் மட்டும் வேறுபாடு இருக்குமே தவிர, அந்த தங்கத்தில் வேறுபாடு இல்லை. நிறம், குணம், செயல் ஆகியவற்றில் எப்படி வேறுபாடு இருக்காதோ, அப்படியே, ராம கிருஷ்ணாதி ரூபங்களிலும், பசு, பறவை, மரம் ஆகியவற்றில் வேறுபாடு காண்பவர்கள், அந்தந்த பெயர் அந்தந்த ரூபங்களில் பகவந்தன் இருந்தாலும், பகவத்ரூப, குண, க்ரியாதிகளில் வேறுபாடு சிந்திக்கக்கூடாது. இப்படியாக பகவந்தனை ஒரு மனதுடன் பூஜித்தால், அந்த

பூஜையை நிராகரிக்காமல் கருணாமயியான ஸ்வாமி கருணையுடன் அதனை ஏற்றுக்கொண்டு, பக்தர்களின் சோகங்களை பரிகரித்து, முக்தி சுகங்களைக் கொடுத்து அருள்கிறான்.

**இனிது வ்யதிரேகான்வயக$^{3}$ளெ**
**ந்தெ$^{3}$னிப பூஜாவிதி$^{4}$க$^{3}$ளனு திளி**
**த$^{3}$னிமேஷேஷன த்ருப்தி ப$^{3}$டி$^{3}$ஸுதலிரு நிரந்தரதி$^{3}$ |**
**க$^{4}$னமஹிம கைகொண்டு$^{3}$ ஸ்திதி ம்ருதி**
**ஜனுமக$^{3}$ள பரிஹரிஸி ஸேவக**
**ஜனரொளிட்டானந்த$^{3}$ ப$^{3}$டிஸுவ ப$^{4}$க்தவத்ஸலனு ||26**

இனிது = இந்த விதமாக
வ்யதிரேகான்வயகளெந்தெனிப = வியதிரேக பூஜை, அன்வய பூஜை ஆகியவற்றின் விதிகளை அறிந்து
அனிமிசேஷன = தேவதைகளின் தலைவனான ஸ்ரீபரமாத்மனை
நிரந்தரதி = விடாமல் தினந்தோறும்
த்ருப்தி படிசுதலிரு = பரமாத்மன் மகிழ்ச்சியடையுமாறு பூஜையை செய்
கனமஹிம = மகா மகிமையுள்ள ஸ்ரீஹரி
கைகொண்டு = ஏற்றுக்கொண்டு
ஸ்திதி = இருப்பது
ம்ருதி = மரண
ஜனுமகள = பிறப்பு இவற்றினை
பரிஹரிஸி = பரிகரித்து
ஸேவக ஜனரொளு = பிரம்மாதி தேவதைகளின் சமீபத்தில்
இட்டு = முக்த ஸ்தானங்களில் வைத்து
பக்த வத்ஸலனு = பக்தவத்ஸலனான
ஆனந்தபடிஸுவ = சுகங்களைக் கொடுப்பான்.

மேலே நான்கு பத்யங்களில் விவரித்ததைப் போல, அன்வய வியதிரேக பூஜைகளை அறிந்து, தேவோத்தமனான ஸ்ரீபரமாத்மனை நினைத்து, அவன் மகிழுமாறு அந்த பூஜைகளை செய்தால், பரமாத்மன் பக்தவத்ஸலன் ஆகையால், பிறப்பு இறப்பு ரூபமான சம்சார பந்தனங்களிலிருந்து நம்மை விடுவித்து, முக்தியைக் கொடுத்து, அந்த முக்த ஸ்தானத்தில் முக்தர்களான பிரம்மாதிகளின் நடுவில் நம்மை வைத்து சுகப்படுத்துவான்.

**ஜலஜனாப$^{4}$னிகெ$^{3}$ரடு$^{3}$ ப்ரதிமெக$^{3}$**
**ளிளெயொளகெ$^{3}$ ஜட சேதனாத்மக**
**சலதொ$^{3}$ளிர்ப$^{3}$கெ$^{3}$ ஸ்த்ரி புருஷபே$^{4}$த$^{3}$த$^{3}$லி ஜடதொ$^{3}$ளகெ$^{3}$**
**திளிவுதா$^{3}$ஹித ஸஹஜ மிகெ$^{3}$ ஜட$^{3}$**
**சலக$^{3}$ளெந்தி$^{3}$ர்ப$^{3}$கெ$^{3}$ ப்ரதீகதி$^{3}$**
**லலித பஞ்ச த்ரய ஸுகோ$^{3}$ளகவரிது ப$^{4}$ஜிஸுதிரு ||27**

ஜலஜனாபனிகெ = தாமரைக் கண்ணனுக்கு
இளெயொளகெ = பூமியில்
ஜடசேதனாத்மக = ஜட பிரதிமைகளிலும், சேதன ப்ரதிமைகளிலும்
எரடு ப்ரதிமெகளு = இரு விதமான பிரதிமைகள் இருக்கிறது
சலதொளு = அந்த இரண்டில்,
ஈர்பகெ = இரு வகைகள் உண்டு
ஸ்த்ரி புருஷ பேததலி = ஸ்த்ரி, புருஷ என்னும் பேதங்கள்
ஜடதொளகெ = ஜட பிரதிமைகளில், ஆஹித பிரதிமை, ஸஹஜாசல பிரதிமை என்றும்
ஈர்பகெ = இரு வகைகள் உண்டு
ப்ரதீகதி = பிரதிகளில்
லலித = அழகான
பஞ்சத்ரய சுகோளகவரிது = 5, 3 என்று இரு வகையான கோளகங்களை அறிந்து துதிக்க வேண்டும்.

ஸ்ரீபத்மனாபனுக்கு ஜடபிரதிமை என்றும், சேதன ப்ரதிமை என்றும் இரு வகைகள் உண்டு. சல ப்ரதிமைகள் ஸ்த்ரி, புருஷ வேறுபாட்டினால் இரு விதங்கள். ஜட ப்ரதிமைகளில் அஹித பிரதிமை, ஸஹஜாசல ப்ரதிமை என்று இரு வகைகள் உண்டு. அஹித ப்ரதிமை என்றால், பஞ்சலோகங்களால் செய்யப்பட்டது. ஸஹஜாசல ப்ரதிமை என்றால் சாலகிராமாதிகள். இந்த ப்ரதிமைகளில், ப்ரதிமைகளே பகவந்தன் என்று சிந்திக்காமல், கோளகபஞ்சக, கோளகத்ரய என்று இரு விதமாக சிந்திக்க வேண்டும். சாலிகிராமத்தில் மட்டும் கோளக சிந்தனை இல்லை.

ஸ்வயம்வ்யக்த என்று சொல்லப்படும் ப்ரதிமைகளில் கோளகத்ரய சிந்தனை செய்ய வேண்டும். எப்படியெனில்:
* நம் கண்ணிற்கு தெரியும் பிரதிமை ஒன்று
* அதற்குள் பாரதிரமண முக்யபிராணாந்தர்கத வாயுதேவரால் பூஜிக்கப்படும் ப்ரதிமை ஒன்று
* அதற்குள் லட்சுமிதேவி இருக்கும் ப்ரதிமை ஒன்று - என மொத்தம் மூன்று கோளகங்கள்
அதில் லட்சுமிசமேத பரமாத்மனை நினைக்க வேண்டும். இதற்கு கோளகத்ரய என்று பெயர்.

தச்சன், சிற்பி ஆகியோரால் செய்யப்பட்டும் பிரதிமைகளில் 5 கோளகங்களை சிந்திக்க வேண்டும்.
* நம் கண்ணிற்கு தெரியும் பிரதிமை ஒன்று
* அதற்குள் விஸ்வகர்ம நிர்மாணித்த பிரதிமை ஒன்று
* அதற்குள் பாரதிரமண முக்யபிராணாந்தர்கத வாயுதேவரால் பூஜிக்கப்படும் பிரதிமை ஒன்று
* அதற்குள் வாயுதேவர் இருக்கும் பிரதிமை ஒன்று

* அதற்குள் லட்சுமிதேவி இருக்கும் பிரதிமை ஒன்று - என மொத்தம் ஐந்து கோளகங்கள்.
* அதற்குள் லட்சுமிசமேத பரமாத்மனை நினைக்க வேண்டும். இதற்கு கோளபஞ்சக என்று பெயர்.

சிவ விக்ரகம், லிங்கம் ஆகியற்றில்
* லிங்கம் 1.
* விஸ்வகர்ம நிர்மாணித்த 1
* எந்த தேவதா ரூபம் என்று பார்க்கிறோமோ, அது 1
* அதில் வாயுதேவர் 1
* அந்தர்யாமி விஷ்ணு 1 - என மொத்தம் ஐந்து கோளகங்கள்

இவற்றை அறிந்து ப்ரதிமாதிகளை பூஜிக்க வேண்டும்.

**வாரிஜாஸன வாயு வீந்த்[3]ர உ**
**மாரமண நாகே[1]ஷ ஸ்மரஹ**
**ங்காரிக[1] ப்ராணாதி[3]க[3]ளு புருஷர கலேவரதி[3] ।**
**தோரிகொளத[3]னிருத்[3]த[4] தோ[3]ஷவி**
**தூ[3]ர நாராயணனரூப ஷ**
**ரீர மானிக[3]ளாகி[3] ப[4]ஜிஸுத ஸுக[2]வ கொடு[3]திஹரு ।।28**

வாரிஜாஸன = பிரம்மதேவர்
வாயு வீந்த்ர உமாரமண நாகேஷ = வாயு, கருட, பார்வதிரமணனான ருத்ர, ஸ்வர்க்காதிபதியான தேவேந்திரன்
ஸ்மர = மன்மதன்
அஹங்காரிக பிராணாதிகளு = அஹங்காரிக பிராண முதலானோர்
புருஷ களேவரதி = புருஷரின் சரீரங்களில்
தோரிகொளதெ = காட்டிக் கொள்ளாமல்
ஷரீர மானிகளாகி = சரீர அபிமானிகளாக
அனிருத்த தோஷவிதூர் நாராயணரூப = அனிருத்த ரூப, தோஷங்கள் அற்றவனான நாராயணரூபம்
பஜிஸுத = துதித்தால்
சுகவ கொடுதிஹரு = சுகங்களைக் கொடுக்கிறார்கள்

புருஷ தேகத்தில் பிரம்மா, வாயு, கருட, ருத்ர, இந்திர, மன்மத, அஹங்காரிக பிராண முதலான தேவதைகள் சரீர அபிமானிகளாக, அந்த சரீரத்தில் இருக்கும் அனிருத்த நாராயண ரூபங்களை துதித்தவாறு, பிராணிகளுக்கு சுகத்தைக் கொடுக்கிறார்கள் என்று அனைத்து புருஷ தேகத்தில் சிந்தித்து, புருஷர்கள் அனைவரும் புருஷ ரூபியான பரமாத்மனின் சலப்ரதிமைகள் என்று பூஜிக்க வேண்டும்.

**ஸிரி ஸரஸ்வதி பா[4]ரதி ஸௌ**
**பரணி வாருணி பார்வதிமுக[2]**
**ரிருதிஹரு ஸ்த்ரீயரொள க[3]பி[4]மானிக[3]ளு தாவெனிஸி ।**

**அருணவர்ண நிபா[4]ங்க[3] ஸ்ரீஸ**
**ங்கருஷண ப்ரத்[3]யும்ன ரூபக[3]**
**ளிருளு ஹக[3]லு உபாஸனவ கை[3]வுதலி மோதி[3]பரு ||29**

சிரி = லட்சுமி
சரஸ்வதி பாரதி சௌபரணி வாருணி பார்வதிமுக = இவர்கள் அனைவரும்
இருதிஹரு = இருக்கிறார்கள்
ஸ்த்ரீயரொளகெ = பெண்களில்
அபிமானிகளு தாவெனிஸி = தாமே அபிமானிகள் என்று சொல்லிக் கொண்டு
அருண = சிவப்பு வண்ணம் உள்ளவனாகவும்
ஸ்வர்ணனிபாங்க = தங்கத்தைப் போல ஒளிரும் சரீரங்களில்
ஸ்ரீசங்கர்ஷண ப்ரத்யும்ன ரூபகளு = ஸ்ரீசங்கர்ஷண ப்ரத்யும்ன ரூபங்கள்
இருளு ஹகலு = எப்போதும்
உபாஸனவகைவுதலி = உபாசனை செய்தவாறு
மோதிபரு = மகிழ்ந்திருப்பார்கள்

ஸ்த்ரிகள் அனைவரையும் பரமாத்மனின் சலப்ரதிமைகளாக நினைத்து, அந்த தேகங்களில் லட்சுமி, சரஸ்வதி, பாரதி, ஸௌபர்ணி, வாருணி, பார்வதி ஆகிய தேவதா ஸ்த்ரியர்கள் இருந்து, அவர்களில் சிவப்பு வண்ணனான சரீரம் உள்ளவனாக, தங்கத்தைப் போல ஒளிர்பவனாக சங்கர்ஷண ப்ரத்யும்ன ரூபங்களைக் கொண்ட பகவந்தன் இருக்கிறான் என்று நினைத்து, இந்த தேவதைகள் அவனை எந்நேரமும் சேவித்து, சுகத்தோடு இருக்கிறார்கள் என்று ஸ்த்ரி தேகங்களில் பகவந்தனை பூஜிக்க வேண்டும்.

**க்ருதப்ரதீகதி[3] டங்கி பா[4]ர்க[3]வ**
**ஹூத வஹானிலமுக்[2]ய தி[3]விஜரு**
**துதிஸிகொளுத பி[4]மானிக[3]ளு தாவாகி[3] நெலெஸித்து[3] |**
**ப்ரதிதி[3]வஸ ஸ்ரீதுளஸி க[3]ந்தா[4]**
**க்ஷதெ குஸும ப[2]ல தீ[3]ப பஞ்சா**
**ம்ருத[1]தி[3] பூஜிப ப[4]குதரிகெ[3] கொடு[3]திஹரு புருஷார்த்த[2] ||30**

க்ருதப்ரதீகதி = செய்யப்பட்ட பஞ்சலோக பிரதிமைகளில்
டங்கி = டங்கி நாமக பரமாத்மன்
பார்கவ = பரசுராம தேவர்
ஹூதவஹ = அக்னி
அனிலமுக்ய = வாயுதேவரே முதலான
திவிஜரு = தேவதைகள்
துதிஸிகொளுத = வணங்கப்படும்
அபிமானிகளு தாவாகி = பிரதிமைகளின் அபிமானிகளாக
நெலெஸித்து = நிலைத்திருந்து
ப்ரதிதிவஸ = தினந்தோறும்

ஶ்ரீதுளசி கந்தாக்ஷதெ குசும பல தீப பஞ்சாம்ருததி = ஶ்ரீதுளசி, கந்த, அக்ஷதை, பூ, பழம், தீபம், பஞ்சாமிருதம்
பூஜிப பகுதரிகெ = பூஜிக்கும் பக்தர்களுக்கு
புருஷார்த்த = தர்ம அர்த்த காம மோட்ச என்னும் நான்கு புருஷார்த்தங்களை
கொடுதிஹரு = கொடுக்கின்றனர்.

வெள்ளி, தங்கம், இரும்பு, தாமிரம், ஈயம் என்னும் ஐந்து லோகங்களின் கலவையால் தயாரான, பஞ்சலோக பிரதிமைகளில், டங்கி நாமக பரமாத்மன், பரசுராமதேவருடன் அபிமானிகளாக இருக்கிறான். இந்த மூர்த்திகளை வணங்கியவாறு, அக்னி, வாயு, முதலான தேவதைகள் அமுக்யாபிமானி தேவதைகளாக இருக்கின்றனர். என்று அறிந்து தினந்தோறும் ப்ரதிமைகளை, ஶ்ரீதுளசி, சந்தனம், அக்ஷதை, பூ, பழம், பஞ்சாம்ருதம் ஆகியவற்றால் பூஜித்தால், அத்தகைய பக்தர்களுக்கு, அதில் இருக்கும் அபிமானி தேவதைகள் மூலமாக பரமாத்மன் மகிழ்ச்சியடைந்து சதுர்வித புருஷார்த்தங்களை கொடுக்கிறார்.

**நக[3]க[3]ளபி[4]மானி க[3]ளெனிப ஸுர**
**ருக[3]ளு ஸஹஜாசலக[3]ளிகெ[3] மா**
**நிக[3]ளெனிஸி ஶ்ரீவாஸுதே[3]வன பூஜிஸுதலிஹரு ।**
**ஸ்வக[3]தபே[4]த[3] விவர்ஜிதன நா**
**ல்ப[3]கெ ப்ரதீகதி[3] திளிது[3] பூஜிஸெ**
**விக[3]ட[3]ஸம்ஸாராப்[4]தி தா[3]டிஸி முக்தரனு மாள்ப ।।31**

நககளபிமானிகளெனிப = பர்வதங்களின் அபிமானிகள் என்று அழைக்கப்படும்
சுரருகளு = தேவதைகள்
சஹஜாசலகளிகெ = சாலிகிராம முதலான ஜட பிரதிமைகளுக்கு
மானிகளெனிஸி = அபிமானிகள் என்று நினைத்து
ஶ்ரீவாசுதேவன பூஜிஸுதலிஹரு = ஶ்ரீவாசுதேவனை பூஜிக்கின்றனர்
ஸ்வகதபேத விவர்ஜிதன = சர்வத்ர வியாப்தனான ரூபங்களில் பரஸ்பரம் பேதங்கள் இல்லாத ஶ்ரீபரமாத்மனை
நால்பகெ ப்ரதீகதி = ஸ்த்ரி, புருஷ, ஆஹித, ஸஹஜாசல என்னும் நான்கு விதம ப்ரதிமைகளில்
திளிது பூஜிஸி = அறிந்து பூஜித்து வர
விகத = வி என்னும் கருடனில் அமர்ந்து சஞ்சரிக்கும் பக்ஷிவாஹனனான ஶ்ரீஹரி
சம்சாராப்தி தாடிஸி = பிறப்பு இறப்பு என்னும் சுழற்சியை தாண்டவைத்து
முக்தரனெ = முக்தர்களாக
மாள்ப = செய்வான்

மேரு, மந்தார முதலான பர்வதங்களுக்கு அபிமானியாக இருக்கும் தேவதைகளே, சாலிக்ராம முதலானவைகளுக்கும் அபிமானிகளாக இருந்து, அங்கு அந்தர்யாமியாக இருக்கும் வாசுதேவ மூர்த்தியை வணங்கிக் கொண்டிருக்கிறார்கள். அனைத்து இடங்களிலும் வியாப்தனான பகவத் ரூபங்களில்

பரஸ்பரம் பேதம் இல்லாததால், பரமாத்மனுக்கு ஸ்வகதபேத விவர்ஜிதன் என்று பெயர். இத்தகைய ஸ்ரீ பரமாத்மனின் சல, அசல என்னும் இரு ப்ரதிமைகளில், ஒவ்வொன்றிலும் இரு விதங்களாக, மொத்தம் நான்கு விதங்கள் உண்டு என்று சொல்கிறார்கள். அத்தகைய, ஸ்த்ரி, புருஷ, ஆஹித, ஸஹஜாசல என்னும் நான்கு வித ப்ரதிமைகளில் மேற்கூறியவாறு பகவத் ரூபங்களை அறிந்து பூஜித்தால், பக்ஷிவாகனனான ஸ்வாமி, தன் பக்தர்களை சம்சார சமுத்திரத்தை தாண்ட வைத்து, அவருக்கு முக்தியைக் கொடுக்கிறான்.

**ஆவ க்ஷேத்ரகெ போத³ரேனி**
**ந்னாவ தீர்த்த²தி³ முளுக³லேனி**
**ந்னாவ ஜப தப ஹோம தா³னவ மாடி³ ப²லவேனு ।**
**ஶ்ரீவர ஜகன்னாத²விட்டல ஈ**
**வித4தி³ ஸ்தா²வரதி³ ஜங்க³ம**
**ஜீவரொளு பரிபூர்ண நெந்த³ரியதி³ஹ மானவனு ।।32**

ஸ்ரீவர = ஸ்ரீலட்சுமிதேவிக்கு ஸ்ரேஷ்டனன
ஜகன்னாதவிட்டல = ஜகன்னாதவிட்டல அங்கிதனான ஸ்ரீஹரியை
ஈ விததி = மேற்சொன்ன பத்யங்களில் விளக்கியதைப் போல
ஸ்தாவரதி ஜங்கம ஜீவரொளு = சல அசல ரூபமான மனுஷ்ய, பசு, மலை, மரங்கள் ஆகிய அனைத்திலும்
பரிபூர்ண நெந்தரியதிஹ = நிறைந்திருக்கிறான் என்று அறியாத
மானவனு = மனிதன்
யாவ க்ஷேத்ரகெ போதரேனு = எந்த க்ஷேத்திரத்திற்கு சென்றால் என்ன?
ஆவ தீர்த்ததி முளுகலேனு = எந்த தீர்த்தத்தில் மூழ்கினால் என்ன?
ஆவ ஜப தப ஹோம தானவ = எந்த ஜப தப ஹோம தானத்தை
மாடி பலவேனு = செய்தால் என்னதான் பலன்? (பலன் இல்லை என்று பொருள்)

இந்த சந்தியில் விவரித்ததைப் போல ஜடப் பொருட்களான தண்ணீர், மரங்கள், மலை, ஆகியவற்றிலும், பஞ்சலோகங்களிலும், சிலை பிரதிமைகளிலும், சாலிகிராம ஆகியவற்றிலும், மனிதர்கள், பசு முதலானவற்றில், ஸ்த்ரி புருஷர்களில் கூட பகவத்ரூபங்களை வேறுபாடுகள் இன்றி சிந்திப்பவர்கள், எங்கு சென்றாலும், எங்கு ஸ்னானம் செய்தாலும், தீர்த்தக்ஷேத்திர யாத்திராதி பலன்கள் வரும்.

ஆனால் இதனை அறியாமல் பரமாத்மன் திருப்பதியிலேயே இருக்கிறான். தீர்த்தம் என்றால் கங்கையே என்று நினைத்து, சில இடங்களில் பகவந்தன் இருக்கிறான் என்றும், சில இடங்களில் பகவந்தன் இல்லை என்றும் நினைக்கும் மனிதர்கள், எந்த க்ஷேத்திரங்களுக்கு போனால் என்ன? எந்த தீர்த்தங்களில் ஸ்னானம் செய்தால் என்ன, என்ன ஜப, தப, ஹோம, தான ஆகியவற்றை செய்தால்தான் என்ன? அவை அனைத்தும் பலன்களைக் கொடுக்காது என்று நினைக்க வேண்டும்.

தியானப்ரக்ரியா சந்தி என்னும் 11ம் சந்தியின் தாத்பர்யம் இத்துடன் முடிவுற்றது.
ஸ்ரீகிருஷ்ணார்ப்பணமஸ்து.

***

## பாபிரகாசிகை : சந்தி 12 : நாடி ப்ரக்ரிய சந்தி

**/ நாடி ப்ரகரண சந்தி**

**ஹரிகதா[2]ம்ருதசார கு[3]ருக[3]ள**
**கருணதிந்தா[3]பநிது பே[1]ளுவே**
**பரம ப[4]கவத்[3]ப[4]க்தரித[3]னாத[3]ரதி[3] கேளுவுது[3]**

இந்த சந்தியில் நம் தேகத்தில் இருக்கும் நாடிகள் எவ்வளவு, எந்தெந்த அங்கங்களில் எவ்வளவு நாடிகள் இருக்கின்றன, அங்கிருக்கும் பகவத் ரூபங்கள் எவ்வளவு என்னும் விஷயங்களை சொல்கிறார். பின்வரும் முதலாம் பத்யத்தில், சந்தியின் நோக்கத்தை விளக்குகிறார்.

**வாஸுதே[3]வனு ப்ராணமுக[2] த**
**த்வேஷரிந்த[3]லி ஸேவெ கை[1]கொ[1]ளு**
**தீ ஷரீரதொ[3]ளிப்ப மூவத்தாரு ஸாஹஸ்ர |**
**ஈ ஸுனாடிக[3]ளொளகெ[3] ஸ்ரீ பூ[4]**
**மி ஸமேத விஹாரகை[3]வ ப**
**ரேஷனமல ஸுமூர்த்திக[3]ள சிந்திஸுத ஹிக்கு[3]திரு ||1**

வாசுதேவனு = அனைத்திடங்களிலும் வியாப்தனாக இருக்கும் ஸ்ரீபரமாத்மன்
ப்ராணமுக தத்வேஷரிந்தலி = சித்தாதி அபிமானிகளான வாயுதேவரே முதலான தத்வாபிமானி தேவதைகளால்
ஸேவெ மைகொளுத = சேவைகளை பெற்றுக்கொண்டு
ஈ ஷரீரதொளிப்ப = இந்த தேகத்தில் இருக்கும்
மூவத்தாரு சாஹஸ்ர = 36,000
ஈ சுனாடிகளொளகெ = இந்த நாடிகளுக்குள்
ஸ்ரீ பூமி சமேத = ஸ்ரீதேவி பூதேவி சமேத
விஹாரகைவ = நடவடிக்கைகளை செய்யும்
பரேஷன = இத்தகைய பரமாத்மனின்
அமல சுமூர்த்திகள = தோஷங்கள அற்ற அழகான மூர்த்திகளை
சிந்திஸுத ஹிக்குதிரு = நினைத்தவாறு ஸ்தோத்திரம் செய்

ஸ்ரீபரமாத்மன், இந்த தேகத்தில் இருக்கும் தத்வாபிமானி தேவதைகளிடமிருந்து சேவைகளைப் பெற்றுக்கொண்டு, இந்த தேகத்தில் இருக்கும் புருஷ நாடிகளான 36,000 நாடிகளில் அவ்வளவே ரூபங்களால் ஸ்ரீபூதேவியரின் சமேதனாக நிலைபெற்றிருக்கிறான். இத்தகைய 36,000 ரூபங்களை சிந்தித்தவாறு மகிழ்ச்சியடைய வேண்டும்.

**சரணக[3]ளொளிஹ நாடிக[3]ளு ஹ**
**ந்னெரடுஸாவிர மத்[3]யதே[3]ஹதொ[3]**

**ளிருதிஹவு ஹதி$^{3}$னால்கு பாஹுக$^{3}$ளொளகெ$^{3}$ ஈரெரடு ।**
**ஷிரதொ$^{3}$ளாரு ஸஹஸ்ர சிந்திஸி**
**இருளு ஹக$^{3}$லபி$^{4}$மானி தி$^{3}$விஜர**
**நரிதுபாஸனெ கை$^{3}$வரிளெயொளு ஸ்வர்க்க$^{3}$வாஸிக$^{3}$ளு ।।2**

சரணகளொளு = பாதங்களில்
இஹ = இருக்கும்
நாடிகளு = நாடிகள்
ஹன்னெரடு சாவிர = 12,000
மத்யதேஹதொளு = சரீரத்தின் நடுப்பாகத்தில்
இருதிஹவு = இருக்கின்றன
ஹதினால்கு = 14,000
பாஹுகளொளகெ = இரு தோள்களில்
ஈரெரடு = 4,000
ஷிரதொளாரு சஹஸ்ர = தலையில் 6,000 (ஆக மொத்தம் 36,000 நாடிகளை சிந்தித்து)
இரளு ஹகலபிமானி திவிஜர = ஆண்டு ஒன்றுக்கு 360 பகல், 360 இரவுகள் என்று 100 ஆண்டுகளுக்கு 36,000 பகல்கள், 36,000 இரவுகள் என அந்த நாடிகளில் அறிந்து
உபாசனெ கைவரு = உபாசனை செய்பவர்கள்
ஸ்வர்க்க வாசிகளு = தேவதைகள் என்று அழைக்கப்படுகிறார்கள்.

முந்தைய பத்யத்தில் கூறிய 36,000 நாடிகளில்:

* பாதங்களில் 12,000
* சரீரத்தின் நடுப்பகுதியில் 14,000
* தோள்களில் 4,000
* தலையில் 6,000, என மொத்தம் 36,000 நாடிகள் சரீரத்தின் வலது பாகத்தில் இருக்கின்றன.

இதைப்போலவே 36,000 நாடிகள் இடது பக்கத்திலும் இருக்கின்றன. இவற்றில், 100 ஆண்டுகளுக்கு ஆகும் 36,000 பகல்கள், 36,000 இரவுகள் இவற்றின் அபிமானி தேவதைகளே இந்த தேகத்திற்குள் இடது-வலது நாடிகளான 72,000 நாடிகளில் இருக்கிறதென்று சிந்தித்து உபாசனை செய்பவர்கள் பூமியில் இருந்தாலும், அவர்களை தேவதைகள் என்றே சிந்திக்க வேண்டும். அதாவது, தேவதைகள் எப்படி வணங்கத்தக்கவரோ, அப்படியே இவர்களும் வணங்கத்தக்கவர்கள் ஆவர்.

**ப்$^{3}$ருஹதி நாமக வாஸுதே$^{3}$வனு**
**வஹிஸி ஸ்த்ரி பும் தோ$^{3}$ஷவி**
**ரஹித எப்பத்தெரடு$^{3}$ ஸாவிர நாடி$^{3}$க$^{3}$ளொளித்து$^{3}$ ।**
**த்$^{3}$ருஹிண மொத$^{3}$லாத$^{3}$மரக$^{3}$ண ஸ**
**ன் மஹித ஸர்வப்ராணிக$^{3}$ள மஹ**
**மஹிம ஸந்தைஸுவனு ஸந்தத பரமகருணாளு ।।3**

ப்ருஹதி நாமக = ப்ருஹதி சந்தஸ்ஸால் போற்றப்படும் ப்ருஹதி நாமகனான வாசுதேவன்
ஸ்த்ரி புருஷ = 72,000 ஸ்த்ரி புருஷ நாடிகளை (36000 புருஷரூப + 36,000 ஸ்த்ரிரூபங்களை)
வஹிஸி = தரித்து
தோஷவிரஹித = தோஷங்கள் அற்றவனான ஸ்ரீஹரி
எப்பத்தெரடு சாவிர நாடிகளொளித்து = 72,000 நாடிகளில் இருந்துகொண்டு
த்ருஹிண் மொதலாதமரகண = பிரம்மனே முதலான தேவதைகள்
ஸன்மஹித = நன்றாக பூஜிக்கப்படுபவனான
மஹாமஹிம = மகிமைகளைக் கொண்ட ஸ்ரீபரமாத்மன்
சர்வப்ராணிகள = அனைத்து பிராணிகளையும்
சந்தத = எப்போதும்
பரம கருணாளு = கருணாமயி
சந்தைசுவனு = காப்பாற்றுவான் / அருள்வான்.

மேற்சொன்ன விதத்தில் இந்த தேகத்தில் 72,000 நாடிகள் இருக்கின்றன. அந்த நாடிகளில் 36,000 ஸ்த்ரி நாடிகள் இடது பக்கத்திலும், 36,000 புருஷ நாடிகள் வலது பக்கத்திலும் இருக்கின்றன. ப்ருஹதி சந்தஸ்ஸின் தலைவனாகையாலும், ப்ருஹபூர்ண என்று பூர்ணனாக இருப்பதால், ப்ருஹதி என்னும் பெயருள்ள ஸ்ரீபரமாத்மன், 36,000 ஸ்த்ரி ரூபங்களையும், 36,000 புருஷ ரூபங்களையும் தரித்து, மேற்சொன்ன ஸ்த்ரிபுருஷ நாடிகளில் இருந்து, பிரம்மாதி தேவதைகளால் வணங்கப்பட்டு, மிகக் கருணையுடன் மகாமகிமை உள்ளவனாகி தினமும் அனைவரையும் அருள்கிறான்.

**நூருவருஷகெ தி$^{3}$வஸ மூவ**
**த்தாரு ஸாவிரவஹவு நாடி$^{3}$ ஷ**
**ரீரதொ$^{3}$ளகி$^{3}$னி திஹவு யெந்த$^{3}$ரிதொந்து$^{3}$ தி$^{3}$வஸத$^{3}$லி ।**
**ஸூரிக$^{3}$ள ஸத்கரிஸித$^{3}$வ ப்ரதி**
**வாரத$^{3}$லி த$^{3}$ம்பதிக$^{3}$ளர்ச்சனெ**
**தா ரசிஸித$^{3}$வ ஸத்ய ஸம்ஷயவில்ல வெந்தெ$^{3}$ந்து$^{3}$ ।।4**

நூருவருஷகெ = 100 ஆண்டுகளுக்கு
திவச மூவத்தாரு சாவிரவஹவு = 36,000 நாட்கள் வருகிறது
இனிது = இவ்வளவு எண்ணிக்கையில்
நாடி = நாடிகளில்
ஷரீரதொளு = சரீரத்தில்
இஹவு = இருக்கின்றன
யெந்தரிது = என்று அறிந்து
ஒந்து திவஸதலி = ஒரு நாளில்
ஸூரிகள = ஞானிகளை
ஸத்கரிஸிதவ = பூஜிப்பவன்
ப்ரதிவாரதலி = 100 ஆண்டுகள் வரை தினந்தோறும்

தம்பதிகளரச்சனெ = தம்பதி பூஜையை
தா = தான்
ரசிஸிதவ = செய்த பலன்களைப் பெறுகிறான்
ஸத்ய = இது உண்மை
சம்ஷயவெல்ல எந்தெந்து = இதில் என்றைக்கும் சந்தேகமே இல்லை

மனிதர்களுக்கு 100 ஆண்டு கால ஆயுள் என்று சொல்லப்படுகிறது. இந்த 100 ஆண்டுகளுக்கு 36,000 நாட்கள். அதில் 36,000 பகல்கள் + 36,000 இரவுகள் இருக்கின்றன. திவஸ (நாள்) என்றால் பகல்+இரவு இரண்டும் சேர்ந்ததையே சொல்கிறோம். 36,000 திவஸ என்று சொன்னதால், பகல்+இரவு இரண்டையும் சேர்த்தே இந்த எண்ணிக்கையை சொல்லியிருக்கிறார். முந்தைய பத்யத்தில் இரவு, பகல் இரண்டையும் தனித்தனியாக சொல்லியிருப்பதால், 72,000 என்று கூறினார். ப்ருஹதி சந்தஸ்ஸிற்கு எழுத்துக்கள் 36. சஹஸ்ர சேர்த்தால் 36,000. அந்த ப்ருஹதி சஹஸ்ரத்திற்கு தலைவனே, 36,000 திவஸ'ங்களுக்கும் தலைவனாக இருக்கிறான்.

அத்தகைய ஸ்வாமியே பகல் 36,000 இரவு 36,000 எண்ணிக்கையுள்ள ஸ்த்ரி, புருஷ நாடிகளில் இருக்கிறான் என்று சிந்தித்து, ஒரு நாளில் ஞானிகளை அழைத்து பூஜித்தால், 100 ஆண்டுகள் பகல் இரவு பூஜித்தால் எவ்வளவு பலனோ, அவ்வளவு பலன் கிட்டுகிறது. இந்த விஷயத்தில் சந்தேகமே இல்லை.

**சதுரவிம்ஷதி த$^{1}$த்வக$^{3}$ளு த**
**த் பதிக$^{3}$ளெனிஸுவ பி$^{3}$ரம்மமுக$^{2}$ தே$^{3}$**
**வதெகளனுதி$^{3}$ன ப்ரதிப்ரதி நாடியொளகி$^{3}$ருதித்து$^{3}$ |**
**சதுரத$^{3}$ஷ லோகதொ$^{3}$ளு ஜீவ**
**பிரததிக$^{3}$ள ஸம்ரக்ஷிஸுவ ஷா**
**ஷ்வத தத்தத்ஸ்தானத$^{3}$லி நோடு$^{3}$தலெ மோதி$^{3}$பரு ||5**

சதுர்விம்ஷதி தத்வகளு = 24 தத்வங்கள்
தத்பதிகளெனிஸுவ = அந்த தத்வங்களுக்கு அபிமானிகள் என்று சொல்லப்படும்
பிரம்மமுக தேவதெகளு = பிரம்மரே முதலான தேவதைகள்
அனுதின = தினந்தோறும்
ப்ரதிப்ரதி நாடிகளொளிருதித்து = ஒவ்வொரு நாடியிலும் இருந்துகொண்டு
சதுர தஷலோகதொளு = 14 உலகங்களின்
ஜீவப்ரததிகள = ஜீவ சங்கங்களை
சம்ரக்ஷிஸுவ = காப்பாற்றுகிறான்
ஷாஷ்வதன = எப்போதும் ஒரு மாதிரியாக இருக்கக்கூடிய பரமாத்மனை
தத்தத்ஸ்தானதலி = அந்தந்த நாடிகளில்
நோடுதலெ = பார்த்தவாறு
மோதிபரு = மகிழ்ந்திருப்பர்

24 தத்வங்கள், அதன் தத்வாபிமானிகளான பிரம்மாதி தேவதைகள், இந்த தேகத்தில் இருக்கக்கூடிய 72,000 நாடிகளின் ஒவ்வொரு நாடிகளிலும் இருந்துகொண்டு, அந்த

நாடிகளில் இருக்கக்கூடிய ஸ்ரீபகவத் ரூபங்களை பார்த்தவாறு, மகிழ்ந்து கொண்டிருப்பர்.

**ஸத்யஸங்கல்பனு ஸதா$^3$ எ**
**ப்பத்தெரடு$^3$ ஸாஹஸ்ரதொ$^3$ளு மூ**
**வத்து நாலகு லட்சதை$^3$ய்வத்தாரு ஸாஹஸ்ர |**
**சித்ப்ரக்ருதியொடகூ$^3$டி$^3$ பரமனு**
**நித்ய மங்களமூர்த்தி ப$^4$குதர**
**தெத்திக$^3$னு தானாகி$^3$ ஸர்வத்ரதலி ஸந்தெயிப ||6**

ஸத்யசங்கல்பனு = தன் விருப்பத்தின் பேரில் அனைத்தையும் செய்யும் ஸ்ரீஹரி
சதா = எப்போதும்
எப்பத்தெரடு சாஹஸ்ரதொளு = 72,000 நாடிகளில்
மூவத்து நாலகு லட்சதைய்வத்தாரு சாஹஸ்ர = 34,56,000 ரூபங்களில்
சித்ப்ரக்ருதியொடகூடி = சேதன ப்ரக்ருதியான லட்சுமிதேவியுடன் கூடி
பரமனு = சர்வோத்தமனான
சுனித்ய மங்கலமூர்த்தி = நித்ய மங்கள மூர்த்தியான ஸ்ரீஹரி
பகுதர = பக்தர்களின்
தெத்திகனு = நலன்களை ஏற்றிருப்பவன்
தானாகி = தானாகவே
சர்வத்ரதலி = எப்போதும்
சந்தயிப = மகிழ்ச்சிப்படுத்துகிறான்

சர்வோத்தமனும், நித்ய மங்கள ஸ்வரூபனும், சத்யசங்கல்பனும் ஆன ஸ்ரீஹரி, 72,000 நாடிகள் ஒவ்வொன்றிலும், 24 தத்வங்கள், 24 தத்வாபிமானிகள் என மொத்தம் 48 ரூபங்களில்; மொத்தம் 72,000 * 48 = 34,56,000 ரூபங்களில் இந்த தேக நாடிகளில், லட்சுமி சமேதனாக இருந்து, பக்தர்களின் நலன்களை தானே கவனித்துக் கொண்டு, தினந்தோறும் அனைத்து இடங்களிலும் அவரை காப்பாற்றுகிறான் / அவருக்கு அருள்கிறான்.

**மணிக$^3$ளொளகி$^3$ஹ ஸூத்ரதந்த$^3$தி$^3$**
**ப்ரணவபாத்$^3$யனு ஸர்வ சேதன**
**க$^3$ணதொளித்த$^3$னவரத ஸந்தெயிஸுவனு தன்னவர |**
**ப்ரணதகாமத$^3$ ப$^4$க்த சிந்தா**
**மணி சிதானந்தை$^3$க தே$^3$ஹனு**
**அணு மஹத்க$^3$த நல்பனோபாதி$^3$யலி நெலெஸிப்ப ||7**

மணிகளொளு = மாலையாக கட்டப்பட்டிருக்கும் மணிகளின் நடுவில்
இஹ = இருக்கும்
சூத்ரதந்ததி = கயிறைப் போல
ப்ரணவபாத்யனு = ஓம்கார ப்ரதிபாத்யனான
சர்வசேதன கணதொளித்து = அனைத்து சேதனர்களிலும் இருந்து

அனவரத = அனைத்து காலங்களிலும்
தன்னவர = தன் பக்தர்களை
சந்தெயிஸுவனு = அருள்கிறான்
ப்ரணதகாமத = தன்னை வணங்குபவர்களின் மனோபீஷ்டங்களை நிறைவேற்றும்
பக்தசிந்தாமணி = பக்தருக்கு சிந்தாமணியைப் போலிருக்கும்
சிதானந்தைகதேஹனு = எப்போதும் ஆனந்தமே தேகமாகக் கொண்டிருப்பவனான ஸ்ரீஹரி
அணுமஹத்கதனு = சூக்ஷ்ம ஸ்தூல சரீரங்களில் இருந்தவாறு
அல்பனோபாதியலி = அல்ப சக்தி உள்ளவர்களைப் போல
நெலெசிப்ப = காட்டிக் கொள்கிறான்.

தன்னை பூஜிப்பவர்களின் மனோபீஷ்டங்களை நிறைவேற்றுவதால், ஸ்ரீபரமாத்மனுக்கு ப்ரணதகாமத என்று பெயர். சிந்தாமணி என்றால் நினைப்பதைக் கொடுக்கும் மணி என்று பொருள். பக்தர்களின் விஷயத்தில் பரமாத்மன் இப்படியே இருக்கிறான் என்று பொருள். எப்போதும் ஆனந்த ஸ்வரூபனும், மிகச்சிறிய பதார்த்தங்களிலும், ஜீவர்களிலும், மிகப்பெரிய பிரம்மாண்டத்தின் உறையாகவும் இருக்கும் சூக்ஷ்ம ஸ்தூல ரூபங்களை ஸ்வீகரிக்கும் மஹா சாமர்த்தியசாலி ஆனாலும், சாதாரண மனிதர்களைப் போல காட்டிக்கொண்டு, அனைத்து ஜீவராசிகளிலும் மணிகளைக் கோர்க்கும் கயிறினைப் போல, ஆதாரபூதனாக அனைத்து காலங்களிலும் இருந்து, பக்தர்களை காக்கிறான்.

**ஈ ஸுஷும்னாத்$^{3}$யகி$^{2}$ல நாடி$^{3}$**
**கோ$^{1}$ஷ நாபி$^{4}$ மூலத$^{3}$லி வ்ருஷ**
**நாஸனத$^{3}$ மத்$^{4}$யத$^{3}$லி இப்புது$^{3}$ துந்தி$^{3}$னாமத$^{3}$லி ।**
**ஆ ஸரோஜாஸன முக$^{2}$ரு மூ**
**லேஷனானந்தா$^{3}$தி$^{3}$ ஸுகு$^{3}$ணோ**
**பாஸனெய கை$^{3}$வுதலி தே$^{3}$ஹக$^{3}$ளொளகெ$^{3}$ இருதிஹரு ।।8**

ஈ சுஷும்னாத்யகில நாடிகோஷ = சுஷும்னா முதலான அனைத்து நாடிகளும்
நாபிமூலதலி = நாபிக்கு கீழ்பாகத்தில்
வ்ருஷணாஸனத மத்யதலி = விதைப்பைக்கும் மல இந்திரியத்திற்கும் நடுவில்
துந்தினாமதலி = துந்தி என்னும் பெயருள்ள இடத்தில்
இப்பது = இருக்கிறது
தேஹதொளகெ = அந்த துந்தி என்னும் இடத்தில்
மூலேஷன = மூலேஷ நாமக பரமாத்மன்
ஆனந்தாதி சுகுணோபாஸனெய = ஆனந்தாதி மிகச்சிறந்த குணங்களை
உபாஸனெய கைவுதலி = உபாசனையை செய்தவாறு
ஆ ஸரோஜாஸன முகரு = தத்வாபிமானிகளான பிரம்மாதி தேவதைகள்
இருதிஹரு = இருக்கின்றனர்

சுஷும்னா நாடியை ஆதாரமாகக் கொண்டு இருக்கும் 72,000 நாடிகளும் (நாபிக்கு கீழ் ஆசனம் வரை இருக்கும் இடத்திற்கு துந்தி என்று பெயர்), துந்தியின்

மூலஸ்தானத்தில், மேற்சொன்ன சுஷும்னா முதலான பிரதான நாடிகள் சேர்ந்து 72,101 நாடிகளுக்கு ஒரு முடிச்சு இருக்கிறது. அங்கு, மூலேஷ நாமக பரமாத்மன் வசிக்கிறான். அங்கு, பிரம்மாதி தேவதைகள் அந்த மூலேஷனின் ஆனந்தாதி குணங்களை உபாசனை செய்தவாறு வசிக்கின்றனர்.

முந்தைய 9ம் சந்தி 17ம் பத்யத்தில் தொடங்கி சில பத்யங்களில் இந்த நாடியைப் பற்றி தாசராயர் விவரித்திருக்கிறார். அதே இடத்தில், தகுந்த ஆதாரங்களுடன் சுஷும்னா நாடியைப் பற்றி விவரமாக சொல்லப்பட்டிருக்கிறது. அதைத்தவிர மேலதிக விஷயங்கள் இங்கு உள்ளன.

நாபிக்குக் கீழ் இருக்கும் துந்தி என்று அழைக்கப்படும் ஒரு இடத்தில் உள்ள ஒரு முடிச்சு இந்த நாடிகளுக்கு ஆதாரமாகும். அதில் பிரதான நாடிகள் 101. அதிலும் பிரதான நாடிகள் 5. அதன் விவரம்: நடுவில் இருக்கும் சுஷும்னா நாடி, அதன் 4 திசைகளில் இடா, பிங்களா, வஜ்ரிகா, தாரிணீ என்னும் 4 நாடிகள் இருக்கின்றன. இந்த நான்கு நாடிகள் ஒவ்வொன்றும் 25ஆக பிரிந்து, 4*25 = 100 ஆகிறது. மத்ய நாடி 1. ஆக 101 நாடிகள் ஆகின்றன. இந்த நாடிகள் ஒவ்வொன்றிலும் பல கிளைகள் இருக்கின்றன. மொத்தம் 101 * 100 = 10100 ஆகிறது. இவற்றில்,

100 நாடிகள் ஒவ்வொன்றிலும் 10 கிளைகள் எனவும்,
மற்றொரு 100 நாடிகள் ஒவ்வொன்றிலும் 9 கிளைகள் எனவும்,
அடுத்த 300 நாடிகளில் 8 கிளைகள் எனவும்,
மிச்ச 9600 நாடிகள் 6 கிளைகளைக் கொண்டதாகவும் இருக்கின்றன.
இவைகளைக் கூட்டினால்:

மூல நாடிகள் = 10100
இவற்றில்:
10 கிளைகள் கொண்ட நாடிகள் = 100*10 = 1000
9 கிளைகள் கொண்ட நாடிகள் = 100*9 = 900
8 கிளைகள் கொண்ட நாடிகள் = 300*8 = 2400
6 கிளைகள் கொண்ட நாடிகள் = 9600*6 = 57600
மொத்தம் : 10,100 நாடிகள் = 61,900.

இந்த 61,900க்கு மூலமாக 10,100ஐ சேர்த்தால், மொத்தம் 72,000 நாடிகள் ஆகின்றன. இவற்றிற்கு ஆதாரமான நாடிகள் 101. இந்த எண்ணிக்கைகளுக்கு ஆதாரமாக, விஜயதாசராயரின் சுளாதி ஒன்று உள்ளது.

ஹத்தைது விம்ஷதி மேலெரடுஸாவிர
மத்தெ நூரொந்து நாடி தேஹதொளகெ
தத்தளிஸுதிப்பது பலஸவ்யாதிடிது
இனிது கேளுவுது நாடிகள ஷாகா ஹத்து |
ஹத்தொந்து முக்ய நாடிய நூரரிந்த
பித்தரிஸி குணிஸி ஆயுதா நூரு
ஸத்யவாயிது நோடெ இதகெ விவர உண்டு.

உத்தமகணதாவரு திளியபேகு
ஹத்து ஹத்து குணிஸி அதன்னு அஷ்டரிந்த
மத்தெ ஹெச்சிஸலு ஸாவிரவஹுது
இத்த முந்தக்கெ நூரு இட்டுகொண்டு ஒம்பத்து நூரு.
சுத்தாதீரின்னு த்ரயனூரு எண்டாரிந்த
சித்தாதலி குணிஸி ஆதுதிதகெ
இப்பத்து நால்குனூரு. ஆ தருவாய
ஒம்பத்து ஸாவிரதாருனூரு
அர்த்தியிந்தலெ இதெ. ஆராரிந்தாலி குணிஸி
ஹத்தைது ஏளுஸாவிர நூராரு
இத்தண்டதிந்த பூர்வோத்தர நோடெ அர
வத்தொந்து சாவிரதெண்டொந்து நூரு.
மத்தெ இதர கௌகெ மேலின ஆயுதானூரு
இத்தரெ ஸப்பெரடுயுத நாடியு
நித்யவே ஸரி இதகெ நூரொந்து முக்ய நாடி
தத்தளகொளவெ கூடிஸலு, மொத்த உள்
ளத்தக்கெ ஹெச்சுவாதிஷ்டெ நாடிகளு
மர்த்ய லோகாதஜனரு குணிஸிதரு
அத்யந்த மஹிமனம்ம விஜயவிட்டலரேயா
ஸ்தோத்ர மாடிதவர மனகெ இந்து திளிபுவ ||

என்று இந்த சுளாதியில் சொல்லியிருக்கும் அர்த்தத்தையே மேலே விளக்கியிருப்பதால், இந்த சுளாதியை மறுபடி விளக்கவில்லை. இதற்கான ஆதாரங்கள் ஷட்ப்ரஷ்னோ உபநிஷத் பாஷ்யத்திலும், நாடிகல்பலதா என்னும் கிரந்தத்திலும் இருக்கின்றன. கிரந்தம் பெரிதாகிவிடும் என்பதால் அவற்றை இங்கு விளக்கவில்லை.

**ஸூரிக³ளு சித்தைஸுவுது³ பா⁴**
**கீ³ரதியெ மொத³லாத³ தீர்த்த²க³**
**ளீரதி³க வெப்பத்து ஸாவிர நாடி³யொளகி³ஹவு ।**
**ஈ ரஹஸ்யவனல்ப ஜனரிகெ³**
**தோரி பேளதெ³ நாடி³நதி³யொளு**
**தீ⁴ரரனுதி³ன மஜ்ஜனவ மாடு³தலெ ஸுகி²ஸுவரு ||9**

ஸூரிகளு = ஞானிகள்
சித்தைஸுவது = கவனத்தில் வைக்க வேண்டும்
பாகீரதியெ மொதலாத = கங்கையில் தொடங்கி அனைத்து
தீர்த்தகளு = ஆறுகள்
ஈரதிக வெப்பத்து சாவிர = 72,000
நாடியொளகிஹவு = நாடிகளில் இருக்கின்றன
ஈ ரஹஸ்யவனு = இந்த ரகசியத்தை
அல்ப ஜனரிகெ = பாமர மக்களுக்கு

தோரி பேளதெ = சொல்லி புரியவைக்காமல்
தீரரு = திடமான நம்பிக்கை உள்ளவர்கள்
நாடி நதியொளு = நாடிகளில் உள்ளே இருக்கும் நதிகளில்
அனுதின = தினந்தோறும்
மஜ்ஜனவ மாடுதலெ = ஸ்னானம் செய்தவாறு (நாடிகளில் கங்கை முதலான நதிகள் இருக்கிறதென்று அறிந்து சிந்திப்பதே ஸ்னானம் என்று அர்த்தம்)
சுகிசுவரு = மகிழ்ந்திருப்பர்.

இந்த விஷயத்தை ஞானிகள் கவனத்தில் வைக்க வேண்டும். மேற்சொன்ன 72,000 நாடிகளில் கங்கா, துங்கா முதலான அனைத்து தீர்த்தாபிமானி தேவதைகளும் வசிக்கின்றனர். இந்த விஷயம் மிகவும் ரகசியமானது. பாமரருக்குக் கூறினால் அவர்கள் நகைச்சுவை என்று சிரிப்பார்கள். அத்தகையவர்களுக்கு இதை சொல்லக்கூடாது. இந்த நம்பிக்கை உள்ளவர்கள், எப்போதும் தம் நாடிகளில் அனைத்து நதிகளும் இருக்கின்றன என்று சிந்தித்து, அவற்றில் ஸ்னானம் செய்கிறோம் என்று மனதில் நினைத்தால், அனைத்து தீர்த்தங்களில் ஸ்னானம் செய்த பலன் கிடைக்கும்.

**திளிவுதீ$^3$ தே$^3$ஹதொ$^3$ளகி$^3$ஹ எட$^3$**
**ப$^3$லத$^3$ நாடி$^3$க$^3$ளொளு தி$^3$விஜரனு**
**ஜலஜஸம்ப$^4$வ வாயு வாண்யாதி$^3$க$^3$ளு ப$^3$லத$^3$ல்லி |**
**எலருணிக$^3$ விஹகே$^3$ந்த்$^3$ர சளிவெ**
**ட்டளிய ஷண்மஹிஷியரு வாருணி**
**குலிஷத$^4$ர காமாதி$^3$களு எட$^3$பா$^4$க$^3$தொளகி$^3$ஹரு ||10**

ஈ தேஹதொளகெ = இந்த தேகத்தில்
இஹ = இருக்கும்
எடபலத நாடிகளொளகெ = இடது வலது பக்கங்களில் இருக்கும் நாடிகளில்
திவிஜரு = தேவதைகளை
திளிவது = இந்த விதமாக அறியவேண்டும்
ஜலஜசம்பவ = பிரம்மதேவர்
வாயு = வாயுதேவர்
வாண்யாதிகளு = சரஸ்வதி முதலான
திவிஜரு = தேவதைகள்
பலதல்லி = வலது பக்கத்து நாடிகளில், இருக்கிறார்கள் என்று அறியவேண்டும்
எடபாகதொளு = இடது பக்கத்து நாடிகளில்
எலருணிப = காற்றை விழுங்குபவன் என்றால், சர்ப்ப என்று அர்த்தம்; சேஷதேவர்
விஹகேந்த்ர = பக்ஷிகளில் சிறந்தவனான கருடன்
சளி பெட்டளிய = இமாலய மலையில் மாப்பிள்ளையான ருத்ரர்
ஷண்மஹிஷியரு = கிருஷ்ணனின் மனைவியரில் ஜாம்பவதி முதலான 6 பேர்
வாருணி = சேஷதேவரின் மனைவி
குளிஷதர = வைரம் அணிந்த தேவேந்திரன்
காமாதிகளு = மன்மதன் முதலானவர்கள்

இஹரு = இருக்கிறார்கள்.

இந்த தேகத்தில், பகல் நாடிகள் 36,000 வலது பக்கத்திலும்; இரவு நாடிகள் 36,000 இடது பக்கத்திலும் இருக்கின்றன. வலது நாடிகள் புருஷ நாடிகள் என்றும், இடது நாடிகள் ஸ்த்ரி நாடிகள் என்றும் அழைக்கப்படுகின்றன. வல, இட நாடிகளில், 500-500 நாடிகளுக்கு தக்ஷிணாயன நாடிகள், உத்தராயண நாடிகள் என்றும் பெயருண்டு. ஷாண்டில்ய தத்வத்தில்:

தேஹேத்ரிஸ்ரஸ்து நாட்ய:ஸ்யு: பிங்களெடாஸுஷும்னாகா: |
தக்ஷிணாபிங்களானாம இடா வாமாப்ரகீர்த்திதா: ||
பிங்களாயா: ஷதம் பஞ்சனாட்யோவை தக்ஷிணாயனா: ||
தாவந்த ஏவாசீடாயா: நாட்யஸ்தேசோத்தராயணா: ||

இந்த தேகத்தில் முக்கிய நாடிகள் மூன்று இருக்கின்றன. நடுவில் சுஷும்னா; வலது பக்கத்தில் பிங்களா, இடதில் இடா. பிங்களா நாடியிலிருந்து பிறந்த 500 நாடிகளுக்கு தக்ஷிணாயன நாடிகள் என்றும், இடா நாடியிலிருந்து பிறந்த 500 நாடிகளுக்கு உத்தராயன நாடிகள் என்றும் பெயர் உண்டு -- என்று சொல்லியிருக்கின்றனர்.

இத்தகைய வல இடது நாடிகளில் தேவதைகள் வசிக்கின்றனர் என்று அறியவேண்டும். வலது பக்க நாடிகளில் பிரம்மதேவர், சரஸ்வதி ஆகியோர் வசிக்கின்றனர். இடது பக்க நாடிகளில் சேஷதேவர், கருடதேவர், ருத்ரர், ஜாம்பவதி, மித்ரவிந்தா, காளிந்தி, நீலா, பத்ரா, லக்ஷ்ணா என்னும் ஷண்மஹிஷியர், சேஷதேவரின் மனைவி ஆகியோர் வசிக்கின்றனர்.

**இக்கெலதொ$^{3}$ளிஹ நாடி$^{3}$யொளு தே$^{3}$**
**வர்க்க$^{3}$ளிந்தொ$^{3}$ட நாடு$^{3}$தலி பொ**
**ம்ப$^{3}$க்கிதே$^{3}$ரனு ஜீவரதி$^{4}$காரானு ஸாரத$^{3}$லி |**
**தக்கஸாத$^{4}$ன மாடி$^{3}$ மாடி$^{3}$ஸு**
**தக்கரதி$^{3}$ ஸந்தெய்ப ப$^{4}$குதர**
**தக்ககொ$^{3}$ட$^{3}$னு அஸுரர ஸத்புண்யக$^{3}$ள னபஹரிப ||11**

இக்கெலதொளு = இரு பாகங்களில்
இஹ = இருக்கும்
நாடியொளு = நாடிகளில்
தேவக்களிந்த = தேவதைகளுடன்
ஒடனாடுதலி = அவர்களுடன் சேர்ந்து சஞ்சரிக்கும்
பொம்பக்கிதேவனு = கருடனே வாகனனாக உள்ள ஸ்ரீபரமாத்மன்
ஜீவர = சாத்விக, ராஜஸ, தாமஸ என்னும் மூன்றுவித ஜீவர்கள்
அதிகாரானு சாரதலி = தகுதிக்கேற்ப
தக்க சாதன மாடி = சாதனைகளை செய்து
மாடிசுத = செய்வித்து
பக்தர = பக்தர்களை

அக்கரதி = அன்புடன்
சந்தெய்ப = காப்பாற்றுவான்
அசுரர்கெ = தைத்யர்களுக்கு
சத்புண்யகள = சிறந்த புண்ணியங்களை
தக்ககொடனு = கொடுக்கிறான்
அபஹரிப = தான் அவர்களில் இருந்து செய்து செய்வித்த புண்ணியங்கள் சிறிதே இருந்தாலும், அதனை தானே அபகரிக்கிறான்.

நம் சரீரத்தில் இருக்கும் நாடிகளில் கருடவாகனான ஸ்ரீஹரி, தேவதைகளுடன் சேர்ந்துகொண்டு, அங்கு வசித்தவாறு மூன்றுவித ஜீவர்களின் யோக்யதைக்கேற்ப தக்க சாதனைகளை செய்து செய்வித்து, பக்தர்களுக்கு புண்ய பலன்களைக் கொடுத்து, அவர்களுக்கு அருள்கிறான். த்வேஷிகளான தைத்யர்களில் இருந்து, செய்து செய்விக்கும் புண்ய பலன்களை தான் அபகரித்து அவர்களுக்கு அந்த பலன் கிடைக்காதவாறு செய்கிறான்.

**துந்தி$^{3}$விடி$^{3}$தா$^{3}$ஷிரத$^{3}$ பர்ய**
**ந்தொந்தெ$^{3}$ வ்யாபிஸி இஹுது$^{3}$ தாவரெ**
**கந்த$^{3}$னிஹனத$^{3}$ரொளகெ$^{3}$ அத$^{3}$கீரைது$^{3}$ ஷாகெ$^{2}$க$^{3}$ளு ।**
**ஒந்த$^{3}$தி$^{4}$க தஷகரணக$^{3}$ளு ஸ**
**ம்ப$^{3}$ந்த$^{4}$ கை$^{3}$தி$^{3}$ஹவல்லி ரவி சஷி**
**ஸிந்து நாஸத்யாதி$^{3}$க$^{3}$ளு நெலெகொண்டி$^{3}$ஹரு ஸதத ।।12**

துந்திவிடிது = நாபிக்கு கீழுள்ள பகுதியிலிருந்து
ஷிரதபரியந்த = தலை வரைக்கும்
ஒந்தேவ்யாபிஸிஹது = பிரம்ம நாடி வியாபித்துக் கொண்டிருக்கிறது, அதற்குள்
தாவரெகந்த = தாமரையிலிருந்து பிறந்தவர் என்றால், பரமாத்மனின் நாபி கமலத்திலிருந்து பிறந்த பிரம்மதேவர், அந்த பெயர் கொண்ட வாயுதேவர் என்று பொருள்; அத்தகைய வாயுதேவர் அல்லது பிரம்ம வாயுகள்
இஹனு = இருக்கிறார்கள்
இதகெ = இந்த பிரம்ம நாடிக்கு
ஈரைது ஷாகெகளு = 10 கிளைகள் இருக்கின்றன. பிரம்ம நாடி 1. கிளைகள் 10. மொத்தம் 11 நாடிகளில்
ஒந்ததிக தஷ கரணகளு = ஞானேந்திரிய 5, கர்மேந்திரிய 5, மனஸ் 1. மொத்தம் 11 இந்திரியங்கள், சம்பந்தப்பட்டிருக்கின்றன
அல்லி = அந்த இந்திரிய சம்பந்தத்தினால் கூடிய நாடிகளில்
ரவி = சூரியன்
ஸிந்து = வருணன்
நாஸத்யாதிகளு = அஸ்வினி தேவதை முதலானவர்கள்
ஸதத = அனைத்து காலங்களிலும்
நெலெகொண்டிஹரு = வசிக்கின்றனர்.

நாபிக்குக் கீழுள்ள பகுதிக்கு துந்தி என்று பெயர். அந்த துந்தி, மல இந்திரியம் வரை இருக்கிறது. துந்தியின் மூல ஸ்தானத்திலிருந்து தலை வரைக்கும் பிரம்ம நாடி வியாபித்திருக்கிறது. அதில் ஸ்ரீ பிரம்மதேவர் மற்றும் வாயுதேவர் இருக்கின்றனர். இங்கு வாயுதேவரை தனியாக சொல்லாவிட்டாலும், அடுத்த பத்யத்தில் தனியாக சொல்லியிருப்பதாலும், வாயுதேவரே பிரம்மதேவராக ஆகப்போவதாலும், பிரம்மதேவரைக் கூறியதால், வாயுதேவரையும் சேர்த்து சொன்னதாகவே அர்த்தம். இந்த பிரம்ம நாடிக்கு 10 நாடிகள் கிளைகளாக இருக்கின்றன. பிரம்ம நாடியை சேர்த்து மொத்தம் 11 நாடிகள். இந்த 11 நாடிகளில் மனஸ் 1, ஞானேந்திரியங்கள் 5, கர்மேந்திரியங்கள் 5, என 11 இந்திரியங்கள் சம்பந்தப்பட்டு இருக்கின்றன. அவற்றில் சூரியன், சந்திரன், வருணன், அஸ்வினி தேவதைகள் ஆகியோர் வசிக்கின்றனர்.

மேலே 101 நாடிகளின் எண்ணிக்கையைக் கூறியபோது சுஷும்னா நாடியை அதில் ஒன்றாக எடுத்துக்கொண்டு, மற்ற நான்கு நாடிகளில் 24 என கிளைகளைச் சொல்லி, மொத்தம் 101 என்று கூறியிருந்தார். இப்போது சுஷும்னா நாடியின் கிளைகளைப் பற்றி சொல்கிறார்.

**பொக்களடி3விடி3தொந்தெ3 நாடி3யு**
**ஸுக்கத3லெ தா4ராளரூபதி3**
**ஸிக்கிஹுது3 நடு3தே3ஹதொ3ளகெ3 ஸுஷும்ன நாமத3லி |**
**ரக்கசரனொள பொக3கொ3ட3தெ3 த3ஷ**
**தி3க்கினொளகெ3 ஸமீரதே3வனு**
**லெக்கிஸதெ3 மத்தொ3ப்பரனு ஸஞ்சரிப தே3ஹதொ3ளு ||13**

பொக்களவிடிது = வயிற்றின் கீழ் பாகத்திலிருந்து
ஒந்தே நாடியு = ஒரே நாடியானது
ஸுக்கதலெ = வக்ரங்கள் இல்லாமல்
தாராளரூபதி = நேராக
நடுதேஹதொளகெ சுஷும்ன நாமதலி = தேகத்தின் நடுவில், சுஷும்னா என்னும் பெயரில்
சிக்கிஹது = இருக்கிறது
ஸமீரதேவனு = வாயுதேவர்
ரக்கசரனு = அசுரர்களை
ஒள்போககுடதெ = உள்ளே நுழையவிடாமல்
மத்தொப்பரனு = மற்றவர்களை
லெக்கிஸதெ = கவனத்தில் கொள்ளாமல்
தேஹதொளு = தேகத்தில்
தஷதிக்கினொளகெ = பத்து திசைகளிலும்
சஞ்சரிப = சஞ்சரிக்கிறான்

முந்தைய பத்யங்களில் சொன்னவாறு, வயிற்றின் கீழ் பாகத்திலிருந்து புறப்படும் சுஷும்னா நாடி, எந்தவித சுருளும் இல்லாமல் நேராக தலைவரைக்கும் செல்கிறது.

அதில் வாயுதேவர் இருந்துகொண்டு, தேகத்தில் 10 திசைகளிலும் சுற்றியவாறு, அசுரர்களை அந்த நாடிகளின் அருகில் வரவிடாமல், வேறு எவரையும் லட்சியம் செய்யாமல் காப்பாற்றி வருகிறார்.

**இனிது நாடி3ஷாகெ2க3ளு ஈ**
**தனுவினொளெ கி3ஹவெந்து3 ஏகா**
**த்மனு த்விஸப்த1தி1 ஸாவிராத்மகனாகி3 நாடி3யொளு ।**
**வனிதெயிந்தொ3ட3கூ3டி3 நாரா**
**யண தி3வாராத்ரியொளகீ3பரி**
**வனஜஜாண்டதொ3ளகி2ல ஜீவரொளித்3து3 மோதி3ஸுவ ||14**

இனிது = இந்த விதமாக
நாடிஷாகெகளு = நாடியின் கிளைகள்
ஈ தனுவினொளகெ = தேகத்தில்
இஹவெந்து = இருக்கிறதென்று
ஏகாத்மனு = தன் அனந்தானந்த ரூபங்களில் வேறுபாடு இல்லை ஆகையால் ஏகாத்மன் என்று அழைக்கப்படும்
நாராயண = ஸ்ரீ நாராயணன்
த்விஸப்ததி ஸாவிராத்மகனாகி = 72,000 ரூபங்களை தரித்து
வனிதெயிந்தொடகூடி = அவ்வளவு ரூபங்களைக் கொண்ட லட்சுமிதேவியருடன்
திவாராத்ரியொளகெ = பகல் இரவுகளில்
ஈபரி = இப்படியாக
வனஜ ஜாண்டதொளு = பிரம்மாண்டத்தில்
அகிளஜீவரொளு = எல்லா பிராணிகளில்
இத்து = இருந்து
மோஹிஸுவ = தான் இருப்பதை அறிவித்துக் கொள்ளாமல் மக்களிடம் அன்பு செய்கிறான் என்றும் அறிந்து உபாசனை செய்ய வேண்டும் என்று அர்த்தம்.

இந்த விதமாக தேகத்தில் நாடியின் கிளைகள் மொத்தம் 72,101 இருக்கிறதென்றும், இந்த நாடிகளில், பரமாத்மன் ஒருவனே ஆனாலும் 72,101 ரூபங்களை தரித்து இருப்பதைப் போல 72,101 ரூபங்களை லட்சுமிதேவியும் தரித்து, அவனுடன், பகலும் இரவும், இந்த பிரம்மாண்டத்தில் இருக்கும் அனைத்து பிராணிகளில் இருந்து, மக்களை அன்பு செய்கிறார்கள் என்று அறிந்து உபாசனை செய்யவேண்டும் என்பது கருத்து.

**தி3னதி3னதி3 வர்த்தி2ஸுவ குமுதா3**
**ப்1தன மயூக2த3 ஸொப3க3 க3தலோ**
**சனவலோகி2ஸி மோத3 ப3ட3ப3ல்லனெ நிரந்தரதி3 ।**
**குனரிகீ3 ஸுக2தாsம்ருதத3 போ4**
**ஜனத3 ஸுக2 தொ3ரகுவுதெ3 லகுமி**
**மனோஹரன ஸத்கு3ணவ கீர்த்திப ப4குதக3ல்லத3லெ ||15**

தினதினதி = தினந்தோறும்
வர்த்திசுவ = சஞ்சரிக்கும்
குமுதாப்தன = சந்திரனின்
மயூகத = கிரணங்களின்
சொபக = அழகினை
கதலோசன = குருடன்
அவலோகிஸி = பார்த்து
நிரந்தரதி = எப்போதும்
மோத படபல்லனெ = மகிழ முடியுமா?
அதைப்போல,
லகுமி மனோஹரன = லட்சுமிபதியான ஸ்ரீபரமாத்மனின்
ஸத்குணவ = நற்குணங்களை (சரித்திரங்களை)
கீர்த்திப = கொண்டாடும் பக்தர்கள்
குனரகெ = ஹீன புத்தியுடனான, பகவத் த்வேஷம், பகவத் பக்தரின் த்வேஷாதிகளை வளர்க்கும் மனிதர்களுக்கு
ஈ சுகதாம்ருதத = இந்த சிறந்த ஹரிகதை என்னும் அமிர்தம், உணவின் சுகம் கிடைக்குமா? என்றும் கிடைக்காது என்று அர்த்தம்.

தினந்தோறும் வளரும் சந்திரனின் கிரணங்களின் அழகினைப் பார்த்து மகிழவேண்டுமெனில் கண் இருப்பவர்களுக்கு சாத்தியமே தவிர, குருடனுக்கு அது சாத்தியமில்லை. அதுபோலவே இந்த ஹரிகதை என்னும் மிகச்சிறந்த கிரந்தத்தைக் குடிக்க பகவத் பக்தர்கள் அல்லாது, ஞானசூன்யர்களாகி, பகவத் த்வேஷ, பகவத் பக்தர்களின் த்வேஷம் ஆகியவற்றை செய்யும் கீழ்புத்தி மனிதர்களுக்கு இந்த சுகம் கிடைக்குமா? என்றும் கிடைக்காது.

**ஈ தனுவினொளகி[3]ஹவு ஓத**
**ப்ரோதரூபதி[3] நாடிக[3]ளு புரு**
**ஹூத முக[2]ரல்லிஹரு தம்மிந்த[3]தி[4]கரொடகூ[3]டி[3] |**
**பீ[4]திகொ[3]ளிஸுத தா[3]னவர ஸ**
**ங்கா[4]த நாமக ஹரிய கு[3]ண ஸ**
**ம்ப்ரீதியலி ஸது[3]பாஸனெய கை[3]யுதலெ மோதி[3]பரு ||16**

ஈ தனுவினொளகெ = இந்த தேகத்தில்
ஓதப்ரோதரூபதி = குறுக்கும் நெடுக்குமாக
நாடிகளு = நாடிகள்
புருஹூத முகரு = இந்திரன் முதலானவர்கள்
தம்மிந்ததிகரொடகூடி = தம்மைவிட உத்தமர்களான கருட, சேஷாதிகளுடன் சேர்ந்து
தானவர = அசுரர்களை
பீதிகொளிஸுத = பயப்படுத்தியவாறு

ஸங்காதனாமக = யாருக்கும் தெரியாமல் மறைந்திருப்பதால் சங்காத என்னும் பெயருள்ள; அல்லது சந்தாத என்னும் பாட-பேதமும் இருக்கிறது. சந்தாத என்றால் அனைவரையும் நன்றாக பார்த்துக் கொள்பவன் என்று அர்த்தம்.
ஹரிய = இத்தகைய பெயருள்ள ஹரியின்
குண = குணங்களை
சம்ப்ரீதியலி = மிகவும் அன்புடன்
சதுபாஸனெகைவுதலெ = உத்தமமான உபாசனையை செய்தவாறு
மோதிபரு = மகிழ்ச்சிப்படுத்துவர்.

இந்த தேகத்தில் நாடிகள் குறுக்கும் நெடுக்குமாக ஓடுக்கொண்டிருக்கின்றன. அந்த நாடிகளில் இந்திராதி தேவதைகள் தம்மைவிட உத்தமமான கருட, சேஷ, ருத்ர, சௌபர்ணி, வாருணி, பார்வதி, பாரதி, சரஸ்வதி, வாயுதேவர், பிரம்மதேவர் ஆகியோருடன் தேகத்தில் இருக்கும் தைத்யர்களை பயப்படுத்தியவாறு சங்காத அல்லது சந்தாத என்னும் பெயரில், இந்த தேகத்தில் இருக்கும் பரமாத்மனை உபாசனை செய்தவாறு மகிழ்ச்சியடைகின்றனர்.

**ஜலட குக்குட கே[2]ட[1] ஜீவர**
**கலெவரக[3]ளொளகி[3]த்து[3] காணிஸி**
**கொளதெ[3] தத்தத்[3]ரூப தன்னாமத[3]லி கரெஸுதலி |**
**ஜலருஹேக்ஷண விவித[4] கர்ம**
**ங்க[3]ள நிரந்தர மாடி[3] மாடி[3]ஸி**
**ப[2]லக[3]ளுண்ணதெ[3] ஸஞ்சரிஸுவனு நித்யஸுக[2]பூர்ண ||17**

ஜலஜ = நீரில் வசிக்கும் பிராணிகள்
குக்குட = பூமியில் சஞ்சரிக்கும்
கேட = வானில் சஞ்சரிக்கும் பிராணிகள் என மூன்று வித பிராணிகளின்
களேவரதொளகித்து = சரீரத்தில் இருந்துகொண்டு
காணிஸிகொளதெ = யாருக்கும் காட்டிக் கொள்ளாமல்
தத்தத்ரூப = அந்தந்த ரூபங்களில்
தன்னாமதலி = அந்தந்த பெயர்களில்
கரெஸுதலி = அழைத்துக்கொண்டு
ஜலருஹேக்ஷண = தாமரைக் கண்ணன்
விவித கர்மகள = பலவித கர்மங்களை
நிரந்தரதி = தினந்தோறும்
மாடி மாடிஸி = செய்து செய்வித்து
தத்பலகளுணதெ = அவற்றின் பலன்களை அனுபவிக்காமல்
நித்யசுகபூர்ண = நிரந்தரமான சுகபூர்ணனான ஸ்ரீஹரி
சஞ்சரிசுவனு = சஞ்சரிக்கிறான்

ஜலஜ என்றால் நீரில் வசிக்கும் பிராணிகள் என்று அர்த்தம். குக்குட என்றால் பொதுவாக கோழிகளுக்குப் பெயரானாலும், பூமியில் வசிக்கும் அனைத்து பிராணிகளும் என்று அர்த்தம் கொள்ளலாம். கேட என்றால் வானில் பறப்பவை.

இத்தகைய மூன்று வகையான பிராணிகளிலும் இருந்து, தாமரைக் கண்ணனான, நித்யசுக பூர்ணனான ஸ்ரீஹரி, அந்த பிராணிகளின் அனைத்து கர்மங்களையும் தான் செய்து, அவற்றின் பலன்களை மட்டும் தான் உண்ணாமல் சுகத்துடன் சஞ்சரிக்கிறான்.

**திளிது$^{3}$பாஸனெ கை$^{3}$யுதீ$^{1}$பரி**
**மலினனந்திரு து$^{3}$ர்ஜனர க**
**ங்க$^{3}$ளிகெ$^{3}$ கோ$^{3}$சரிஸதெ$^{3}$ விபஸ்சிதரொட$^{3}$னெ க$^{3}$ர்விஸதெ$^{3}$ |**
**மளெ பி$^{3}$ஸிலு ஹஸி த்ருஷெ ஜயாஜய**
**க$^{2}$ளர நிந்தா$^{3}$னிந்தெ$^{3}$ ப$^{4}$யக$^{3}$ளி**
**க$^{3}$ளுகத$^{3}$லெ மத்தா$^{3}$னெயந்த$^{3}$தி$^{3}$ சரிஸு த$^{4}$ரெயொளகெ$^{3}$ ||18**

ஈ பரி = மேற்சொன்ன விதத்தில்
திளிது = அறிந்து
உபாஸனெ கையுத = உபாசனையை செய்து
துர்ஜனர கங்களிகெ கோசரிஸதெ = இவன் இவ்வாறு உபாசனை செய்யும் யோகி என்று காட்டாமல்
விபஸ்சிதரொடனெ = ஞானிகளின் சன்னிதானத்தில்
கர்விஸதெ = நான் ஞானி என்று கர்வம் கொள்ளாமல்
மலினனந்திரு = ஞானசூன்யனைப் போல காட்டிக்கொள்
மளெ பிஸிலு ஹஸி த்ருஷெ = மழை, வெயில், பசி, தாகம்
ஜயாஜய = வெற்றி தோல்வி
களர = அயோக்கியர்களின்
நிந்தா = திட்டுதல்
அனிந்தா = பாராட்டு
பய = பயம்
இவுகளிகெ = இவற்றிற்கு
அளுகதலெ = பயப்படாமல் என்றால் திட்டுவதற்கு வருத்தப்படாமல், பாராட்டுகளுக்கு மயங்காமல்
தரெயொளகெ = பூமியில்
மத்தானெயந்ததி = கர்வம் கொண்ட யானையைப் போல
சரிஸு = சஞ்சரித்துக் கொண்டிரு.

முந்தைய பத்யத்தில் கூறியவாறு, உபாசனை செய்தவாறு, உன் ஞானத்தை துஷ்ட ஜனர்களுக்கு (தமோ யோக்கியர்களுக்கு) காட்டிக் கொள்ளாமல் 'புதோபாலவத்க்ரீடேத் குஷலோஜடவச்சரேத்' என்று பாகவதத்தில் சொல்லியிருப்பதைப் போல, ஞானியானாலும், மான அவமானங்களுக்கு பெருமைப்படாமல், ஒரு சிறுவனைப்போல காட்டிக் கொள்ளவேண்டும். எவ்வளவு அறிவாளியானாலும், ஒரு முட்டாள் அல்லது ஒரு பைத்தியக்காரரைப் போல காட்டிக் கொள்ளவேண்டும்.

யோக்யரான பகவத்பக்தருடன் நீ சேரும்போது நான் ஞானி என்று அகங்காரம் கொள்ளாமல் அவரில் மரியாதையாக இரு. மழை, வெயில், பசி, தாகம் வெற்றி, தோல்வி, அயோக்கியர்கள் செய்யும் திட்டு, பாராட்டு, அவரால் உண்டாகும் பயம், இவற்றிற்கு மயங்காமல் :

ஏதர பய ஶ்ரீநாதன பரமப்ரீதிய படெதவகெ |
பந்து ஜனரு தனகொந்திஸிதாக்ஷண பந்த பாக்யவேனோ |
ஹிந்தெமுந்தெ தன நிந்திஸி நுடியலு குந்தாதத்தேனோ ||
மந்தரதர கோவிந்தன மானஸ மந்திரதொளு தந்திட்டவகின்யாதர பய |

என்னும் தாசரின் வாக்கியத்திலிருந்தும்,

சுகதுக்கேஸமேக்ருத்வா லாபாலாபௌ ஜயாஜயௌ

என்னும் கீதா வாக்கியத்தாலும்,

மேற்சொன்ன சுகதுக்கங்களை சமமாக அறிந்து, மதம் பிடித்த யானை எப்படி யாருக்கும் அஞ்சாமல் தன் இஷ்டப்படி சஞ்சரிக்கிறதோ அப்படியே சஞ்சரித்துக் கொண்டிரு.

**கானன க்3ராமஸ்த2 ஸர்வ**
**ப்ராணிக3ளு ப்ரதிதி3வஸத3லி ஏ**
**நேனு மாடு3வ கர்மக3ளு ஹரிபூஜெயெந்த3ரிது3 |**
**தே4னிஸுத ஸத்ப4க்தியலி பவ**
**மானமுக2 தே3வாந்தராத்மக**
**ஶ்ரீனிவாஸனிக3ர்ப்பிஸுத மோதி3ஸுத நலியுதிரு ||19**

கானன = காட்டில்
கிராமஸ்த = கிராமங்களில் வசிக்கும்
சர்வப்ராணிகளு = அனைத்து பிராணிகளும்
ப்ரதிதிவஸதலி = தினந்தோறும்
ஏனேனு மாடுவ கர்மகளு = செய்யும் அனைத்து கர்மங்களும்
ஹரிபூஜெயெந்தரிது = ஹரிபூஜை என்று அறிந்து
சத்பக்தியலி = பக்தியுடன்
தேனிஸுத = சிந்தித்து
பவமான முக தேவாந்தராத்மக = வாயுதேவரே முதலான தேவதைகளின் அந்தர்யாமியான
ஶ்ரீனிவாசனிகர்ப்பிஸுத = ஶ்ரீனிவாசனுக்கு அர்ப்பித்தவாறு
மோதிஸுத = மகிழ்ந்தவாறு
நலியுதிரு = நர்த்தனம் செய்தவாறு இரு (சஞ்சரித்திரு).

காட்டில் இருக்கும் புலி, சிங்கம் முதலான பிராணிகள், கிராமங்களில் இருக்கும் பசு, நாய், பன்றி போன்ற பிராணிகள், அவற்றின் தகுதிக்கேற்ப எந்த செயல்களை

செய்கின்றனவோ, அவற்றை பார்க்கையில், அந்தந்த பிராணிகளில் பரமாத்மனே அந்தந்த ரூபத்தில் இருந்து, அந்தந்த செயல்களை செய்கிறான் என்று சிந்தித்து, அங்கங்கு பகவத் ரூபங்களை சிந்திப்பதே ஹரிபூஜை என்று அறியவேண்டும்.

அனைத்து இடங்களிலும் பரமாத்மனை உத்தம பக்தியினால் தியானித்தவாறு, வாயுதேவரே முதலான தேவதைகளின் அந்தர்யாமியான ஸ்ரீலட்சுமிபதிக்கு, மேற்சொன்ன விதத்தில் சிந்தனா பூர்வகமான பூஜையை சமர்ப்பித்தவாறு, மகிழ்ச்சியுடன் சஞ்சரித்துக் கொண்டிரு. குருபரம்பரா மூலமாக வந்த, பரம ரகசியமான உபாசனா மார்க்கத்தை, தாசராயர் உபதேசம் செய்திருக்கிறார் என்று அறியவேண்டும்.

**நோகனீயனு லோகதொ³ளு ஷுனி**
**ஸூகராதி³க³ளொளகெ³ நெலெஸி**
**த்தே³க மேவாத்³விதிய ப³ஹு ரூபாஹ்வயக³ளிந்த³ |**
**தா கரெஸுதொளகி³த்து³ திளிஸதெ³**
**ஸ்ரீக¹மல ப⁴வமுக்²ய ஸகல தி³**
**வௌகஸகணாராத்⁴ய கைகொண்ட³னுதி³னதி³ பொரெவ ||20**

நோகனீயனு = சிறியவனாக இல்லாதவன் (உலகத்தில் முதன்முதலில் பிறந்த பிரம்மாதிகளுக்கும் தந்தை ஆனதால், அனைவரைவிடவும் பெரியவன் என்று அர்த்தம்)
லோகதொளு = உலகத்தில்
ஷுனி = நாய்
ஸூகராதிகளொளகெ = பன்றி ஆகியவற்றில்
நெலெஸித்து = நிலைத்திருந்து
ஏகமேவாத்விதிய = எப்போதும் சர்வோத்தமனாகவும், சர்வ ஸ்வதந்த்ரனாகவும் இருப்பவன் ஒருவனே ஆகையால் 'ஏகமேவ' பிரம்ம என்னும் பொருள் ஒன்றே என்று பெயர் பெற்றவன். அத்விதிய என்றால் சமம் இல்லாதவன் என்று பொருள். அல்லது 'அத்விதீயம் வஸ்து ஏகமேவ' உலகத்தில் அனேக ஜீவராசிகள் இருந்தாலும், சமம் இல்லாத சர்வோத்தம வஸ்து 'பிரம்ம' என்னும் பெயருள்ள ஒரே பொருள் என்று பொருள்.
பஹு ரூபாஹ்வயகளிந்த = இத்தகைய ஸ்வாமி, பல ரூபங்களைக் கொண்டவன், மத்ஸ்ய, கூர்ம, ராமகிருஷ்ணாதி பல ரூபங்களை தரித்து,
கரெஸுதொளகித்து = பல பெயர்களால் அழைக்கப்பட்டு, அனைத்து பிராணிகளின் பெயரால், அவற்றிற்குள் இருந்து,
திளிஸதெ = யாருக்கும் காட்டிக் கொள்ளாமல்
ஸ்ரீ=லட்சுமிதேவி
கமலபவ = பிரம்மதேவர் முதலான
சகல திவௌகச கணாராத்ய = அனைத்து தேவதைகளாலும் வணங்கப்படும் ஸ்ரீஹரி
கைகொண்டு = அவர்களின் செயல்களை ஏற்றுக்கொண்டு
அனுதினதி = தினந்தோறும்

பொரெவ = அருள்கிறான்.

கனீயர் என்றால் சிறியவன் என்று பொருள். நோகனீய என்றால் அப்படி அல்ல என்று பொருள். உலகத்தில் அனைவரையும்விட பெரியவன் என்று அர்த்தம். அத்விதிய என்றால் சமம் இல்லாதவன் என்று பொருள். இத்தகைய குணங்களைக் கொண்ட பொருள் ஒன்றே ஒன்றுதான் இருக்கிறது. அந்த பொருளே பரபிரம்மன். அந்த பரபிரம்மனே நாராயணன் என்று அறியவேண்டும். அதற்கு ஆதாரம் என்னவெனில் 'பிரம்மவிதாப்னோதிபரம்' என்னும் ஸ்ருதியினால், பிரம்மனை அறிந்தவன், பரத்தை அடைகிறான். பிரம்மனின் ஸ்வரூபத்தை அறிந்தவன், பிரம்மனை அடைகிறான் என்று சொல்ல வேண்டியதாயிற்று. பரத்தை அடைகிறான் என்று சொல்லியிருப்பதால், பிரம்மனே பரன் என்று சொல்லியதைப் போல் ஆயிற்று. பிரம்மன் என்றாலும், பரன் என்றாலும் அது ஸ்ரீநாராயணனையே குறிக்கிறது என்று பாகவத முதல் ஸ்கந்தம், முதல் ஸ்லோகத்தின் விஜயத்வஜீய உரையில் சொல்லப்பட்டிக்கிறது.

யதேதத்வர பிரம்ம வேதவாதேஷு பட்யதே |
ஸதேவ: புண்டரீகாக்ஷ: ஸ்வயம் நாராயண: பர: ||

வேதாதிகளில், பல இடங்களில், தாமரைக் கண்ணனான, பர என்று அழைக்கப்படுபவனான ஸ்ரீ நாராயணனே பர என்று அழைக்கப்படுகிறான் என்று தெளிவாக சொல்லப்பட்டிருக்கிறது. அதே முதலாம் ஸ்கந்தத்தில், 'பிரம்மேதி பரமாத்மேதி பகவானிதி ஷப்த்யதே' என்று சொல்லிய வாக்கியங்களால், பரபிரம்மனே நாராயணன் என்று தெளிவாகிறது. மேலும், பாகவத 11ம் ஸ்கந்த, 2ம் அத்தியாய, 42ம் ஸ்லோகத்தில் தாத்பர்யத்தில்:

பூர்ணத்வாதாத்ம ஷப்தோக்த கஸ்சித்ஸர்வ நரோத்தம: |
ஸோபி நாராயணோனான்ய: ஸதாஸர்வேஷு ஸம்ஸ்தித: ||
தத்வஷா இதரே ஸர்வேஶ்ரீ பிரம்மேஷ புரஸ்ஸரா: |

பூர்ணன் ஆகையால் ஆத்மன் என்று பெயர். அவனே நாராயணன். அவனைத் தவிர வேறு யாரும் அல்ல. அவனே அனைத்து இடங்களிலும் வியாப்தனாக இருப்பவன். ஸ்ரீலட்சுமி பிரம்ம வாயு ஈஸ்வர முதலானவர்கள், அவனின் வசத்தில் இருக்கிறார்கள் என்று சொல்கிறார்.

இப்படியான பல ஆதாரங்களினால், பரமாத்மன் ஒருவனே சர்வோத்தமன். ஜீவருக்கும் பரமாத்மனுக்கும் வேறுபாடு இருப்பதால், ஏகமேவா த்விதீயம் என்னும் வாக்கியம், ஜீவர்கள் வேறு அல்ல; பரமாத்மன் ஒருவனே என்று அத்வைதத்தை விளக்குகிறது என்று சொல்லக்கூடாது. ஜீவர்கள் வேறாக இருந்தே இருக்கின்றனர். பரமாத்மனின் ரூபங்களில் வேறுபாடு இல்லை. சர்வதந்த்ர ஸ்வதந்த்ரனாக, சமம் இல்லாதவனாக இருப்பவன் பரமாத்மன் ஒருவனே என்பது கருத்து. இத்தகைய ஸ்வாமி ஒருவனே ஆனாலும், அனந்தானந்த ரூபங்களால், அனைத்து இடங்களிலும் வசித்து, பல ரூபங்களால் பல பெயர்களை பெற்றிருக்கிறான். பிராணிகளில் அந்தந்த உருவங்களைப் பெற்றிருந்தாலும், யாருக்கும் காட்டிக்

கொள்ளாமல் இருக்கிறான். நாம் செய்யும் பூஜை, தியானாதிகளை ரமா பிரம்மாதி தேவர்களால் வணங்கப்படுபவனான ஸ்ரீஹரி, ஏற்றுக்கொண்டு தினந்தோறும் அனைவருக்கும் அருள்கிறான்.

**இனிதுபாஸனெகை3யுதிஹ ஸ**
**ஜ்ஜனரு ஸம்ஸாரத3லி ப்ரதிப்ரதி**
**தி3னக3ளலி ஏனேனு மாடு3வுதெ3ல்ல ஹரிபூஜெ**
**எனிஸிகொம்பு3வு ஸத்ய ஈ மா**
**தினலி ஸம்ஷயப3டு3வ நரன**
**ல்பனு ஸுனிஸ்சய பா3ஹ்யகர்மவ மாடி3 ப2லவேனு ||21**

இனிது = இந்த விதமாக
உபாஸனெகையுதிஹ = உபாசனை செய்து கொண்டிருக்கும்
சஜ்ஜனரு = பக்தர்கள்
சம்சாரதலி = சம்சாரத்தில்
ப்ரதிப்ரதி தினகளலி = தினந்தோறும்
ஏனேனு மாடுவுதெல்ல = எந்தெந்த கர்மங்களை செய்கின்றனரோ, அதையெல்லாம்
ஹரிபூஜெ = ஸ்ரீஹரியின் பூஜை
எனிஸிகொம்புவு = என்று சிந்தித்து
சத்ய = இது உண்மை
ஈ மாதினலி = இந்த விஷயத்தில்
சம்ஷயபடுவ = சந்தேகப்படுபவன்
நரனல்பனு = மனிதன்
சுனிஸ்சய = நிச்சயமாக
பாஹ்யகர்மவ = மற்ற அனைத்து கர்மங்களையும்
மாடி பலவேனு = செய்து என்ன பலன்?

மேற்சொன்ன விதங்களில் தினந்தோறும் உபாசனை செய்து வரும் சஜ்ஜனர்கள், தினந்தோறும் என்ன செயல்களை செய்தாலும், அவை அனைத்தும் ஹரிபூஜை என்றே நினைத்து செய்வர். இதுவே உண்மை என்று அறியுங்கள். இந்த விஷயத்தில் கொஞ்சம்கூட சந்தேகம் படவேண்டாம். அப்படி சந்தேகப்படுபவர்கள், அல்பமான மனிதன் ஆவான். இது உண்மை.

இப்படி உபாசனை செய்யும் கிரமத்தை அறியாதவன், பாஹ்யபூஜை அதாவது, பிரதிமைகளை வைத்து ஆடம்பர பூஜையை செய்வதால் என்ன பலன் கிடைக்கும்? அந்த பூஜை, மக்கள் மெச்சுவதற்கு பயன்படுகிறதே தவிர, பகவந்தனை மகிழ்விப்பதற்கு பயன்படுவதில்லை, என்று தாசராயர் சபதம் செய்வதுபோல சொல்லியிருக்கிறார் என்று அறியவேண்டும்.

**போ4க்3ய போ4க்த்ருக3ளொளகெ3 ஹரி தா**
**போ4க்3ய போ4க்தனு எனிஸி யோக்3யா**
**யோக்3ய ரஸக3ள தே3வ தா3னவ க3ணகெ உணிஸுவனு |**

**பா4க்யநிதி4 ப4க்தரிகெ3 ஸத்3வை**
**ராக்3ய ப4க்தி ஞானவீவ அ**
**யோக்யரிகெ3 த்3வேஷாதிக3ள தன்னல்லி கொடு3திப்ப ||22**

போக்ய போக்ருத்களொளகெ = போகிக்க தகுந்த பதார்த்தங்களில் மற்றும் அதை அனுபவிப்பவரின் உள்ளேயும்
ஹரியு = ஸ்ரீஹரி
தா = தான்
போக்யபோக்தனு = தானே அந்த பதார்த்தம்; தானே அந்த அனுபவிப்பவன்
எனிஸி = என்று நினைத்துக்கொண்டு
யோக்யாயோக்ய ரஸகள = போகிக்கத் தகுந்த பதார்த்தங்களின் சாறுகளை, தகுதியில்லாத பதார்த்தங்களின் சாறுகளை
தேவதானவகணகெ = தேவதா கணங்களுக்கும், தைத்ய கணங்களுக்கும், தனித்தனியாக பிரித்துக் கொடுக்கிறான்
பாக்யநிதி = பக்தி, வைராக்ய என்னும் பாக்யம் உள்ள சஜ்ஜனர்களுக்கு நிதியாக இருக்கும் ஸ்ரீஹரி
பக்தரிகெ = அந்த பக்தர்களுக்கு
ஸத்வைராக்ய பக்தி ஞானவ = வைராக்ய, பக்தி, ஞானங்களை
ஈவ = கொடுக்கிறான்
அயோக்யரிகெ = அயோக்கியர்களுக்கு
தன்னல்லி = தன்னிடம்
த்வேஷாதிகள = த்வேஷம் ஆகியவற்றை
கொடுதிப்ப = கொடுக்கிறான்.

உலகத்தில் போகங்களை அனுபவிப்பதற்கு கெட்ட பதார்த்தங்கள், சிறந்த பதார்த்தங்கள் பல இருக்கின்றன. உணவுப் பொருட்களில் கோதுமை, அரிசி, வாழை, கிழங்குகள், ஆகியவை சாத்விக ஆகாரங்கள் என்றும், சுரைக்காய், புடலங்காய் ஆகியவை ராஜஸ என்றும், கத்திரி, வெங்காயம் ஆகியவை தாமஸ என்றும் தர்ம சாஸ்திரங்களில் சொல்லப்பட்டிருக்கின்றன. இதன் விளக்கத்தை வராக புராண சாதுர்மாஸ மகாத்ம்யம், ஸ்ம்ருத்யர்த்த சாகர என்னும் சலாரி ஆசார்யர் இயற்றிய தர்மசாஸ்திர முதலானவைகளில் பார்க்கலாம்.

இந்த மூன்றுவித பதார்த்தங்கள் அனைவருக்கும் சுவையாக இருப்பதில்லை. ஆகையாலேயே 'லோகோ பின்னருசி:' என்று சொல்லியிருக்கின்றனர். முக்கியமாக சாத்விகர்களுக்கு சாத்விக பதார்த்தங்களும், ராஜஸர்களுக்கு ராஜஸ பதார்த்தங்களும், தாமஸருக்கு தாமஸ பதார்த்தங்களும் பிடிக்கிறது. ஸ்ரீஹரி, த்ரிகுணங்களும் இல்லாதவனே ஆனாலும், இந்த மூன்றுவித பதார்த்தங்களில் அந்தந்த ரூப, அந்தந்த பெயர்களில், அவற்றிற்கு சம்பந்தப்படாமல் இருக்கிறான். சாத்விக, ராஜஸ, தாமஸ மக்களிலும் இருந்து, அந்த பதார்த்தங்களின் சுவையை அந்தந்த ஜீவர்களுக்குக் கொடுக்கிறான்.

போக்யவஸ்து என்றால் உண்ணும் பதார்த்தங்கள் என்று மட்டும் அர்த்தம் அல்ல. உடுத்துவது, தொடுவது, அலங்கார வகைகள், ஸ்த்ரி போகம் என அனைத்தையும் சொல்லலாம். வேஷ பூஷணாதிகள் என அனைத்திலும், ஒரே குலம் ஒரே மதமாக இருந்தாலும் இன்றைய காலத்தில் எவ்வளவு வேறுபாடுகள் இருக்கின்றன என்பதை கண்கூடாகப் பார்க்கிறோம். உதாரணங்கள் என்று ஒன்றிரண்டை மட்டும் பார்க்கலாம்.

வேஷங்களில் முந்தைய கால பிராமணர்கள் என்றால், த்வைத, அத்வைத, விசிஷ்டாத்வைத மதங்களில் பிறந்தவர்கள் அந்தந்த மத சின்னங்களை தரித்துக்கொண்டு, அவர்களைப் பார்த்தாலே அந்தந்த மதங்களை சேர்ந்தவர்கள் என்று அறிந்துகொள்ளலாம். வைஷ்ணவ மாத்வர்கள் ஊர்த்வ புண்ட்ரங்களை தரித்து, சந்தனம், அங்கார, அக்ஷதெகளை தரித்து, 12 முழ வேட்டியை அணிந்து, அத்தகைய ஒன்றையே போர்த்திக்கொண்டு, பார்த்தாலே இவர் மாத்வ ஆசார்யர் என்று தெரிந்துவிடும். ஸ்மார்த்தர், விபூதிகளை ருத்ராட்சங்களை தரித்திருப்பர். ஸ்ரீவைஷ்ணவர், மூன்று நாமங்களை தரித்திருப்பர். ஆனால், இந்த காலத்தில் இந்த மூன்று மதத்தவரைப் பார்த்தால், முதலில் நீங்கள் பிராமணரா என்றே கேட்க வேண்டியுள்ளது. அதன்பிறகு, எந்த மதத்தவர் என்று கேட்டு அறியவேண்டியிருக்கிறது.

அது இருக்கட்டும். அந்தந்த பூஷணங்கள் அவரவர்களுக்கு பிடிக்காதிருந்தால் அவர் அந்த வேஷத்தை தரிப்பார்களா? கண்டிப்பாக இல்லை. ஆகவே இவையும் போக்ய வஸ்துகளே. அனைத்து பொருட்களிலும், பரமாத்மன், அந்தந்த ரூப, உருவமாக இருந்து, அவற்றை தரிக்க யோக்யர் யாரோ, அவரில் பரமாத்மன் அவரின் உருவமாக இருந்து, அந்தந்த பொருட்களில் அவர்களுக்கு ருசி உண்டாகுமாறு செய்து, அந்த பலன்களை அவர்களுக்குக் கொடுக்கிறார்.

மேலும், பாகவத 11ம் ஸ்கந்த தாத்பர்யத்தில்

ஸஏவது ஸ்வபக்தீஷு ஸ்தித்வானுக்ரஹகாரக: |
அஞ்ஞேஷ்யஞான யந்தாச த்விஷத்ஸு த்வேஷகாரக: ||

அதே பரமாத்மனே பக்தர்களில் இருந்து, அருள்கிறான். அஞ்ஞானிகளில் இருந்து அஞ்ஞானத்தை வளர்க்கிறான். த்வேஷிகளில் இருந்து தன்னில் த்வேஷத்தை வளர்க்கிறான், என்கிறார். இதே அபிப்பிராயத்தையே இங்கும் தாசராயர் கூறுகிறார். பக்தி, ஞானாதிகளே ஐஸ்வர்யம் என்று நினைக்கும் பக்தர்களுக்கு நிதியைப் போல இருக்கும் ஸ்ரீபரமாத்மன், அவர்களில் இருந்து உத்தமமான வைராக்கியம், பக்தி, ஞானங்களைக் கொடுக்கிறான். தமோயோக்யர்களுக்கு தன்னில் த்வேஷங்களையே வளர்க்கிறான். இப்படி செய்வதற்கு, அவரவர்களின் யோக்யதையே முக்கிய காரணம் என்று அறியவேண்டும்.

**ஈ சதுர்தஷ பு4வனதொ3ளகெ3 ச**
**ராசராத்மக ஜீவரல்லி வி**
**ரோசனாத்மஜ வஞ்சகனு நெலெஸித்து3 தி3னதி3னதி3**

**யாசகனு எந்தெ[3]னிஸிகொம்ப ம**
**ரீசித[3]மன ஸுஹம்ஸரூபி நி**
**ஷேச காஹ்வயனாகி[3] ஜனரபி[4]லாஷெ பூரைப ||23**

ஈ சதுரதஷ புவனதொளகெ = இந்த 14 உலகங்களில்
சராசராத்மக ஜீவரல்லி = ஸ்தாவர, ஜங்கமங்களாக இருக்கும் அனைத்து ஜீவர்களிலும்
வஞ்சகனு = விரோசனனின் மகனான பலிசக்ரவர்த்தியை வஞ்சித்த வாமனன்
நெலெஸித்து = நிலைத்திருந்து
தினதினதி = தினந்தோறும்
யாசகனு எந்தெனிஸிகொம்ப = தான் யாசகன் என்று அழைத்துக் கொள்கிறான்.

மரீசிதமன = மரீசி என்றால் 'ம்ருகத்ருஷ்ணா மரீசிகா' என்னும் வாக்கியத்தால், இக்கரைக்கு அக்கரை பச்சை என்று மேயும் பசுக்கள் அங்கு சென்றால் அதிகம் மேயலாம் என்ற ஆசையில் போவது. இதற்கு ம்ருக-த்ருஷ்ணி என்று பெயர். அதைப்போலவே பாலைவனச்சோலை. தூரத்தில் தண்ணீர் இருப்பதைப் போல தெரிந்தால், மக்கள் பக்கத்தில் இருக்கும் தண்ணீரைவிட்டு, அதனை நோக்கிப் போவார்கள். அதற்கும் ம்ருக-த்ருஷ்ணி என்றே பெயர். பாகவதத்தில் இதற்கு சம்சாரத்தை (வாழ்க்கையை) உதாரணமாகக் காட்டியிருப்பர். எப்படி பக்கத்தில் இருக்கும் தண்ணீரை விட்டு, தூரத்தில் மண்ணில் நீர் இருக்கிறது என்று நினைத்து அங்கு போவது, துக்ககரமானதோ, உத்தமமான மனிதப்பிறவியில் பிறந்து, தனக்குள் இருந்த பரமாத்மனை கண்டுகொள்ளாமல், விஷய போகங்களில் இருக்கும் அல்ப சுகங்களுக்காக மிகவும் முயற்சி செய்வதால், சம்சார வாழ்க்கையை ம்ருக-த்ருஷ்ணிக்கு சமமாக சொல்லியிருப்பர். பொதுவாக மரீசி என்றால் சூரிய கிரணம் என்று அர்த்தம். மண்ணில் விழும் கிரணங்கள் தண்ணீர் போல தெரிவதற்கு மரீசிகா என்பர். மரீசி என்றாலும் மரீசிகா என்றாலும் ஒன்றே. ஆகையால், மரீசி என்றால் ம்ருக-த்ருஷ்ணாவைப் போல இருக்கும் வாழ்க்கை என்று பொருள்.

தமன = அழிக்கும்
சுஹம்ஸரூபி = துக்கங்களை அழிப்பவனான ஹம்ஸ நாமகனான ஸ்ரீபரமாத்மன்
நிஷேசகாய்வயனாகி = அனைவரின் மனோபீஷ்டங்களை நிறைவேற்றுபவனாகையால் நிஷேசக என்னும் பெயர் பெற்றவனாகி
ஜனரபிலாஷெ பூரெய்ப = மக்களின் விருப்பங்களை நிறைவேற்றுகிறான். இதற்கு மரீசி, ஹம்ஸ, தமன என்னும் மூன்று ரூபங்களால் நிஷேசக நாமகனாக இருக்கிறான் என்று அர்த்தமும் உண்டு.

இந்த 14 உலகங்களில் உள்ள அனைத்து ஜீவர்களிலும், ஸ்ரீவாமனதேவர் நிலைத்திருந்து, அவரவர் வேண்டும் விஷயங்களை செய்கிறார். விஷ்ணு சஹஸ்ரநாமத்தில் ஆயிரம் நாமங்களால் புகழப்படுபவன் ஆகையால், அதில் வரும் 'மரீசிர்த மனோஹம்ஸ' மரீசி, தமன, ஹம்ஸ என்னும் மூன்று பெயர்களை எடுத்துக் கொண்டிருக்கிறார். மரீசி என்றால் பொதுவாக சூரிய கிரணங்கள் என்று அர்த்தம். ஸ்வயம் பகவந்தனே சூரிய கிரணங்களைப் போல இருப்பதால்,

பரமாத்மனுக்கு மரீசி என்று பெயர். அல்லது விஷ்ணு சஹஸ்ரநாம வியாக்யானத்தில், ‘சலனான்மரீசி:’ அனைத்து பிராணிகளிலும் இருந்து, அவர்களுக்கு நடக்கும் சக்தியை கொடுப்பவன் ஆகையால் பரமாத்மனுக்கு மரீசி என்று பெயர்.

இதை எழுதும்போது மரீசிதமன என்று ஒரே சொல்லாக எழுதி, சம்சார- நாசகன் என்று பொருள் வருமாறு சொல்லியிருக்கிறார்கள். அப்படியெனில், இந்த மரீசி, தமன, ஹம்ஸ என்னும் மூன்று ரூபங்கள் இல்லவேயில்லை என்றும் சிலர் சொல்லலாம். அதை எப்படி எதிர்கொள்ளலாம் என்றால்: சொல்லும்போது, மரீசி என்னும் சொல்லை, இருமுறை சொன்னால் சரியாகிவிடும். மரீசி மரீசி தமன ஹம்ஸ என்று மூன்று ரூபங்கள் என்று சொல்லவேண்டும். இப்படியாக அர்த்தம் கொள்வதால், தாசராயரின் வாக்கியத்திற்கு விரோதம் வருவதில்லை என்று சொல்கிறார்.

தமன என்றால் ‘சம்சாரம் தமயதீதி தமன:’ சம்சாரத்தை நாசப்படுத்துபவன் ஆகையால் பரமாத்மனுக்கு தமன என்று பெயர். மரீசி, தமன இரு சொற்களையும் தனித்தனியாக படித்து அர்த்தம் சொல்லவேண்டுமெனில், தமன -> சம்சாரத்தை அழிப்பவன். மரீசி -> ஒளிபொருந்தியவன் அல்லது நடக்கும் சக்தி கொடுப்பவன் என்று சொல்லலாம். ஹம்ஸ என்றால், ‘துக்கம்ஸர்வம் ஹந்தீதி ஹம்ஸ:’ அனைத்து துக்கங்களையும் நாசம் செய்கிறான் ஆகையால், ஹம்ஸ என்று பெயர். இப்படி, மரீசி, தமன, ஹம்ஸ என்னும் விஸ்வாதி 1,000 பெயர்களில் வரும் மூன்று ரூபங்களால் அனைத்து மக்களிலும் இருந்து, ‘ நிஷேசக’ என்னும் பெயரால் அனைவரின் மனோபீஷ்டங்களை நிறைவேற்றுகிறான். நிஷேசக = பொழிவது என்று அர்த்தம் கொள்ளலாம். அவர்கள் விருப்பங்களை ( நிறைவேற்றி) பொழிகிறான் என்று கருத்து.

**அன்னத$^{3}$ன்னாத$^{3}$ன்னமய ஸ்வய**
**மன்ன பி$^{3}$ரம்மாத்யகி$^{2}$ல சேதன**
**கன்ன கல்பகனாஹன நிருத்தா$^{4}$தி$^{3}$ ரூபத$^{3}$லி |**
**அன்யரன பேக்ஷிஸதெ$^{3}$ கு$^{3}$ணகா**
**ருண்யஸாக$^{3}$ர ஸ்ருஷ்டிஸுவனு ஹி**
**ரண்ய க$^{3}$ர்ப்பனொளித்து$^{3}$ பாலிஸுவனு ஜக$^{3}$த்ரயவ ||24**

அன்னத = அன்னத்தை பிறருக்குக் கொடுப்பவன்
அன்னாத = மக்களில் இருந்து அன்னத்தை உண்பவன்
அன்னமய = அன்னத்தில் நிலைத்திருப்பவன்
ஸ்வயமன்ன = ஸ்வயம் அன்ன என்று அழைக்கப்படுபவன்
பிரம்மாத்யகிலசேதனகெ = பிரம்மாவிலிருந்து தொடங்கி அனைத்து சேதனர்களுக்கும்
அன்ன கல்பகனு = தகுதிக்கேற்ப அன்னத்தைக் கொடுப்பவன், இப்படி 5 வித செயல்களை
அனிருத்தாதி ரூபதலி = அனிருத்த, பிரத்யும்ன, சங்கர்ஷண, வாசுதேவ, நாராயண என்னும் 5 ரூபங்களில் இருந்து

அஹனு = செய்கிறான்.
அன்யரனு = பிறரை
அபேக்ஷிஸதெ = எதிர்பார்க்காமல் (அவர்களின் உதவியின்றி)
குணகாருண்ய சாகர = ஆனந்தாதி குணங்களின் சாகரமாக இருப்பவன்; அல்லது கருணைக் கடலாக இருப்பவன்
ஹிரண்யகர்ப்பனொளித்து = பிரம்மதேவருக்குள் இருந்து
ஸ்ருஷ்டிசுவனு = படைக்கிறான்
ஜகத்ரயவ = மூன்று உலகங்களையும்
பாலிஸுவ = ஸ்வயம் விஷ்ணு ரூபத்தினால் சத்வ குணத்துடன் காக்கிறான்; தமோ குணத்தால் ருத்ர ரூபத்தினால் அழிக்கிறான்.

ஸ்ரீபரமாத்மன், அனிருத்தாதி 5 ரூபங்களால் அன்னத, அன்னாத, அன்னமய, அன்ன, அன்னகல்பக என்று 5 செயல்களை செய்கிறான்.

அன்ன என்றால் 'அன்னந்ததாதீதி அன்னத:' அனைவருக்கும் அன்னத்தைக் கொடுப்பவர் என்று பொருள்.
* அனிருத்த ரூபத்தினால், அனைத்து அன்னதாதாவிலும் இருந்து, அன்னப்ரதன் ஆகிறான்.
* பிரத்யும்ன ரூபத்தினால், அனைத்து பிராணிகளிலும் இருந்து, போஜனங்களை உண்கிறான். 'அன்னமத்தீதி அன்னாத:' அன்னத்தை உண்பவன் ஆகையால் அன்னாத என்று பெயர். ஆகையால் பிரத்யும்னன், அன்னாத என்று அழைக்கப்படுகிறான்.
* ஸ்வயமன்னம் என்றால் 'அத்தீத்யன்னம்' அனைத்து பிரபஞ்சத்தையும் உண்பவன் ஆகையால், அன்ன என்று பெயர். இந்த செயலை, சங்கர்ஷண ரூபத்தினால் செய்கிறான்.
* நாராயண ரூபத்தினால் பிரம்மாதி அனைத்து ஜீவகணங்களுக்கும் அன்னத்தை ஸ்ருஷ்டிக்கிறான். இதை செய்வதற்கு யாரிடமிருந்தும், எதையும் எதிர்பார்ப்பதில்லை. ஏன் இந்த செயல்களை அவன் செய்கிறான் என்று கேட்டால், அவன் 'காருண்ய சாகரன்'. கருணைக்கடலாக இருப்பவனாகையால் இவற்றை செய்கிறான்.

* ரஜோகுணத்தை ஏற்றுக்கொண்டு பிரம்ம தேவரில் இருந்து உலகத்தை படைக்கிறான்.
* ஸ்வயம் விஷ்ணு ரூபத்தினால் சத்குணத்தினால் காக்கிறான்.
* தமோ குணத்தினால் ருத்ரரில் இருந்து அழிக்கும் செயலை செய்கிறான்.

இந்த செயல்களால் பரமாத்மனுக்கு ஆகவேண்டியது என்று ஒன்றும் இல்லை. எவ்வித எதிர்பார்ப்புகளோ லாபமோ இல்லாமல், மக்களின் நலனுக்காக, கருணைக் கடல் ஆகையால், இந்த செயல்களை செய்கிறான் என்பது கருத்து.

**த்ரிபத$^3$ த்ரித$^3$ஷாத்$^3$யக்ஷ த்ரிஸ்த$^2$**
**த்ரிபத$^2$ கா$^3$மினிபித த்ரிவிக்ரம**

**க்ருபணவத்ஸல குவலயத$^{3}$ளஷ்யாம நிஸ்ஸீம ।**
**அபரிமித சித்ஸுக$^{2}$கு$^{3}$ணாத்மக**
**வபுஷ வைகுண்டா$^{2}$தி$^{3}$ லோகா**
**தி$^{3}$ப த்ரயீமய தன்னவர நிஷ்கபடதி$^{3}$ம் பொரெவ ||25**

த்ரிபத = மூன்று பாதங்களைக் கொண்ட காயத்ரி மந்திரத்தின் தலைவன்
த்ரிதஷாதக்ஷ = தேவதைகளுக்கு தலைவனானவன்
த்ரிஸ்த = ஸ்வேதத்வீப, அனந்தாஸன, வைகுண்ட என்னும் மூன்று இடங்களில் வசிப்பவன்
த்ரிபதகாமினி = மூன்று வழிகளில் பிரவகிக்கும் கங்கை
பித = தந்தை
த்ரிவிக்ரம = மூன்று பாதங்களால் உலகை அளந்த த்ரிவிக்ரமரூபி
க்ருபணவத்ஸல = தன் பக்தர்களாக இருந்து, இந்திரியங்களை அடக்கமுடியாமல் இருப்பவர்களில் ப்ரியம் உள்ளவன்
குவலயதளஷ்யாம = குவளை மலரைப் போல நீல வண்ணமாக இருப்பவன்
நிஸ்ஸீம = எல்லைகள் இல்லாத குணங்களைக் கொண்டவன்
அபரிமித = எல்லைகள் இல்லாதவன்
சித்ஸுக = நிரந்தர சுகம் கொண்டவன்
குணாத்மக = ஆனந்தாதி குணங்களை
வபுஷ = சரீரமாக உள்ளவன்
வைகுண்டாதி லோகாதிப = வைகுண்ட முதலான மூன்று உலகங்களுக்கு அரசன்
த்ரயீமய = வேத ப்ரதிபாத்யன் அல்லது வேத ஸ்வரூபனுமான இத்தகைய ஸ்வாமி
தன்னவர = தன் பக்தர்களை
நிஷ்கபடதிந்த = எந்தவித எதிர்பார்ப்புகளும் இன்றி
பொரெவ = காப்பாற்றுகிறான் / அருள்கிறான்.

த்ரிபதகாயத்ரி என்று புகழ் பெற்றிருக்கும் காயத்ரி மந்திர பிரதிபாத்யன். 'த்ரிதஷா விபுதா: ஸுரா:' என்னும் அமர வாக்கியத்தின்படி த்ரிதஷ என்றால் தேவதைகள். அவர்களுக்கு தலைவன். 'கங்காத்ரிபத காமினி' என்னும் ஆதாரத்திற்கேற்ப கங்கையைப் பெற்றவன் என்று அர்த்தம். வாமன அவதாரத்தில், பலியிடம் மூன்றடி நிலம் தானம் கேட்டு, அவற்றினால் 14 உலகங்களையும் அளந்தான். க்ரம என்றால் காலடி. ஆகையால், த்ரிவிக்ரம என்று பெயர். க்ருபண என்றால் கஞ்சர்களுக்கு பெயர் உண்டு.

பாகவத 11ம் ஸ்கந்தத்தில் 'யார் க்ருபண?' என்று உத்தவன் கேள்வி கேட்டபோது, ஸ்ரீபரமாத்மன் சொன்னது. 'க்ருபணோயோsஜிதேந்த்ரிய:'. 16ம் அத்தியாயம் 45ம் ஸ்லோகத்தில் இந்த விவரம் இருக்கிறது. இதற்கு விஜயத்வஜீயத்தில் இவ்வாறு குறிப்பிடுகிறார்.

விஷயேதோஷ புத்திஸ்ஸன் இந்த்ரியாணாம் வஷேஸ்தித: ।
க்ருபண: ஸதுஸம்ப்ரோக்தோ குணபுத்தி விபர்யய: ।।

பரமாத்மனிடம் பக்தி வைத்து, சம்சார சுகத்தை சுகம் என்று எண்ணாமல், அதன் மேல் ஆசை கொள்ளாமல் இருந்தாலும், தன் இந்திரியங்களை வசப்படுத்திக் கொள்ள முடியாமல் இருப்பவனே க்ருபணன். அதாவது இவனிடம் இருக்கும் குணத்திற்கும், புத்திக்கும் வேறுபாடு உண்டு. குணம், விஷய சுகத்தை வேண்டாமல் பரமாத்மனை துதிக்கிறது. புத்தியோ, இந்திரியங்களை வசப்படுத்தாது. இத்தகையவர்கள், ‘ஸ்வாமி, இந்திரியங்களை வசப்படுத்த முடியாமல் இருக்கும் எங்களை காப்பாற்றுங்கள்’ என்று தன்னிரக்கத்துடன் வேண்டுகிறார்கள். இவர்களிடம் வாத்ஸல்யம் உள்ளவன் என்று பொருள்.

த்ரயீமயி என்றால்

ஸ்ரீர்பூமிரிதி ரூபாப்யாம் ப்ரக்ருதிர்விஷ்ணு நாஸஹ |<br>ஷேதே ஸ்ருதி ஸ்வரூபேண ஸ்தௌதிபிரம்ம கல்பலயே ஹரிம் ||

என்னும் ஸ்ருதிகீதையின் தாத்பர்யத்திற்கேற்ப, வேதம், லட்சுமிஸ்வரூபமே ஆனாலும், அதில் பரமாத்மன் வியாபித்திருப்பதால், அவனை வேதஸ்வரூபன் என்று சொல்வதில் பிரச்னை எதுவும் இல்லை. இத்தகைய பரமாத்மன், பக்தர்களை வஞ்சிக்காமல் காப்பாற்றுவான் என்பதே கருத்து.

ஆனால் இந்த விஷயத்தில் சிறிது ஆட்சேபம் வரலாம். அது எப்படியெனில், பலி சக்ரவர்த்தியை வாமன ரூபத்தில் வந்து ஏமாற்றியது. பாண்டவர்களுக்கு பகவத் அனுக்கிரகம் இருந்திருந்தால், வனவாசாதிகள் அவர்களுக்கு வந்திருக்காது. பாண்டவர்கள் வனவாசத்திற்கு சென்றபிறகு, அவர்களிடம், ‘நான் ஊரில் இருந்திருந்தால் உங்களுக்கு இந்த நிலை வந்திருக்காது. நான் சால்வ ராஜனுடன் போருக்கு சென்றிருந்தேன். அப்போதே இந்த பிரச்னை உண்டாகியிருக்கிறது’ என்று சாக்கு சொல்கிறான் ஸ்ரீகிருஷ்ணன். பகவத் விருப்பம் இருந்திருந்தால், சாட்சாத் ஸ்ரீகிருஷ்ணனின் மாப்பிள்ளையும், அர்ஜுனனின் மகனுமான அபிமன்பு செத்திருப்பானா? இவை அனைத்தும் வஞ்சனை இல்லாமல் வேறு என்னவென்று சொல்வது? என்றால்,

அவை பக்தர்களை வஞ்சிப்பதற்காக செய்த செயல்கள் கிடையாது. பலியை வேண்டியதால் அவனது புகழை நிரந்தரமாக பரவச் செய்தான். வனவாசத்தினால் பாண்டவர்களின் யோக்யதையும், துரியோதனாதிகளின் அயோக்யதையும் உலகிற்கு தெரியபடுத்தியதைப் போல் ஆயிற்று. அபிமன்யு பிறந்த காலத்திலேயே ‘16ம் வயதிலேயே உன் மகன் உன்னிடம் வருவான் என்று சந்திரனுக்கு பரமாத்மன் வரம் கொடுத்திருந்ததால், அதனை உண்மையாக்குவதற்கு அவனை கொல்ல வேண்டியதாயிற்று.

இப்படியாக சத்யசங்கல்பனான ஸ்வாமி, தான் செய்யும் செயல்களால் பக்தர்களுக்கு சில சமயம் தோன்றினாலும், அதிலிருந்து அவர்களுக்கு அனந்த சுகமே ஆகிறது. பக்தர்களுக்கு கஷ்டம் கொடுப்பதற்கான காரணத்தை அவன் மட்டுமே அறிவான். பல தாசர்கள் தமக்கு பகவந்தன் கஷ்டத்தையே கொடுக்க

வேண்டும் என்று வேண்டிக்கொள்வதே இதற்கு சாட்சி. ஆகமொத்தம், அனைத்து விதங்களிலும் பக்தர்களுக்கு அருளவேண்டும் என்பதே அவனது விருப்பமே தவிர, அவர்களை கெடுக்க வேண்டும் என்னும் நோக்கம் அவனுக்கு அறவே இல்லை. ஆகையாலேயே, தாசராயர் இதை கூறினார் என்று அறியவேண்டும்.

**லவணமிஸ்ரித ஜலவு தோர்புது$^3$**
**லவணதோ$^3$பாதி$^3$யலி ஜிஹ்வெகெ$^3$**
**விவரகை$^3$ஸலு ஷக்யவாகு$^3$வுதே$^3$னு நோள்பரிகெ$^3$ ।**
**ஸ்வவஷவ்யாபி எனிஸி லகுமி**
**த$^4$வ சராசரதொளகெ$^3$ தும்பி$^3$ஹ**
**நவிதி$^3$தன ஸாகல்ய ப$^3$ல்லவராரு ஸுரரொளகெ$^3$ ।।26**

லவணமிஸ்ரித = உப்பு சேர்ந்த தண்ணீர்
லவணதோபாதியலி = உப்பைப் போலவே
ஜிஹ்வெகெ = நாக்கிற்கு
தோர்ப்புது = தெரிகிறது
நோள்பரிகெ = பார்க்கும் மக்களுக்கு
விவரகைஸலு = உப்பை வேறாக எடுத்துக் காட்டினால்
ஷக்யவாகுவுதேனு = சந்தேகம் வருவது ஏன்
லகுமிதவ = லட்சுமிபதி
ஸ்வவஷவியாபி எனிஸி = தானே ஸ்வதந்த்ரன் என்று நினைத்து
சராசரதொளகெ = ஸ்தாவர ஜங்கம நிறைந்த உலகத்தில்
தும்பிஹனு = நிறைந்திருக்கிறான்
அவிதிதன = தன் ஸ்வரூபம் இத்தகையது என்று அடுத்தவருக்குக் காட்டிக் கொள்பவனின்
ஸுரரொளகெ = தேவதைகளுக்குள்
ஸாகல்ய = நன்றாக / முழுமையாக
பல்லவராரு = சொல்பவர்கள் யார்?

உப்பு கலந்த நீரை, குடித்தால் மட்டுமே அதில் உப்பு இருப்பது தெரியும். அந்த தண்ணீரை பார்த்தால் அதில் உப்பு கலந்திருப்பது தெரியுமா? அந்த உப்பை வேறுபடுத்திக் காட்டுவது சாத்தியமா? அப்படியே, ஸ்ரீபரமாத்மன், தண்ணீரில் உப்பு கலந்திருப்பதைப் போல அனைத்து இடங்களிலும் வியாபித்திருக்கிறான். இத்தகைய பகவந்தனின் ஸ்வரூபத்தை அறிவதற்கு, ரமாதேவியருக்கே சாத்தியமில்லை. அப்படியிருக்கையில், வேறு தேவதைகள் அவனது ஸ்வரூபத்தை பிரபஞ்சத்திலிருந்து வேறுபடுத்தி அவனை முழுமையாக அறிவது என்று? தேவதைகளுக்கே அவ்விஷயம் தெரியாதபோது, மனிதர்களின் பாடு என்ன? பகவந்தனின் அருளால் மிகச்சிறிய அளவில் அறிவரே தவிர, முழுமையாக யாரும் அவனை அறியமாட்டார்கள். பகவந்தனின் அருள் இல்லாதவர்கள் எதையும் அறிவதற்கு சாத்தியமில்லாதவர்கள் என்று அறியவேண்டும்.

**வ்யாப்யனந்த$^3$தி$^3$ சர்வஜீவரொ**

**ளிப்ப சின்மய கோ4ர ப4வ ஸ**
**ந்தப்ய மானரு ப4ஜிஸெ ப4கு3தி1க3ளிந்த3லிஹபரதி3 ।**
**ப்ராப்ய நாகு3வனவரவ கு3ணக3**
**ளொப்புகொ3ம்ப3னு ப4க்தவத்ஸல**
**தப்பிஸுவ பஹுஜன்மதோ3ஷக3 ளவரிக3னவரத ।।27**

சின்மய = சிதானந்த ஸ்வரூபன்
வ்யாப்யனந்ததி = தன்னுடைய வியாபக ரூபங்களில்
சர்வஜீவரொளிப்ப = அனைத்து ஜீவர்களிலும் இருக்கிறான்
கோரபவ = பயங்கரமான சம்சார பந்தத்தினால்
சந்தப்தமானரு = நன்றாக மூழ்கியவர்கள்
பகுதிகளிந்தலி = திட பக்தியினால்
பஜிஸெ = துதிக்க
இஹபரதி = இந்த உலகத்திலும், பர உலகத்திலும்
ப்ராப்தவாகுவ = அவர்களுக்கு கிடைக்கிறான்
அவர = அவர்களின்
அவகுணவ = துர்குணங்களை
பக்தவத்ஸல = பக்தவத்ஸலனானவன்
ஒப்பிகொம்பனு = ஏற்றுக்கொள்கிறான்
அவரிகெ = அப்படி வணங்கும் பக்தர்களுக்கு
அனவரத = நிரந்தரமானவன்
ஜன்மாதி தோஷகள = பிறப்பு இறப்பு சுழற்சியை
தப்பிஸுவ = அவர்களை தப்ப வைக்கிறான்

வியாப்தன் என்றால், ஒரு சம்புடத்தைப் போல, அனைத்து ஜீவர்களிலும் அவர்களின் உள்ளேயும் வெளியேயும் பகவந்தன் இருக்கிறான் என்று பொருள். வியாப்யன் என்றால், அவனால் நிலைத்திருக்கப்பட்டவன் என்று பொருள். சிதானந்த ஸ்வரூபனான ஸ்ரீஹரி, வியாப்தரான சாமான்ய ஜீவரைப் போல அனைத்து ஜீவர்களிலும் இருக்கிறான். அவர்களில், கோரமான சம்சாரம் என்னும் பெருங்கடலில் விழுந்து கஷ்டப்பட்டு, தன்னை பக்தியுடன் வழிபடும் பக்தர்களை 'பக்தவத்ஸலனெம்பொ பிரிது பொத்தமேலே பக்தரதீனனாகிரபேடவே' என்னும் தாசராயரின் வாக்கிற்கேற்ப, ஸ்வயம் தானே அவர்களின் வசமாகிறான். அவர்களில் இருக்கும் அவகுணங்களை லட்சியம் செய்வதில்லை. பக்தவத்ஸலனான ஸ்வாமி, அந்த பக்தர்களுக்கு வரும் பிறப்பு இறப்பு ஆகிய கஷ்டங்களைப் போக்கி, நிரந்தர சுகங்களைக் கொடுக்கிறான்.

**ஹலவு ப3கெ3யலி ஹரிய மனத3லி**
**ஒலிஸி நில்லிஸி ஏனு மாடு3வ**
**கெலஸக3ளு அவனங்க்4ரி பூஜெக3ளெந்து3 நெனெவுதிரு ।**
**ஹலத4ரானுஜ தானெ ஸர்வ**
**ஸ்த2லக3ளலி நெலெஸித்து3 நிஸ்ச**
**ஞ்சல ப4கு3தி1 ஸுக்3ஞான பா4க்3யவ கொட்டு ஸந்தெயிப ।।28**

ஹலவு பகெயலி = பல்வேறு விதங்களாக
ஹரிய = ஸ்ரீஹரியை
மனதலி = மனதில்
ஒலிஸி = தரிசனம் தருபவனாக செய்து
நில்லிஸி = ஸ்திரமாக நிறுத்தி
ஏனு மாடுவ கெலஸகளு = எந்த வேலைகளை செய்தாலும், அந்த வேலைகள்
அவன = அந்த ஸ்ரீஹரியின்
அங்க்ரிபூஜெகளெந்து = அவனின் பாத பூஜை என்று
நெனெவுதிரு = சிந்தித்திரு
ஹலதரானுஜ = பலராமனின் தம்பியான ஸ்ரீகிருஷ்ணன்
தானே,
ஸர்வஸ்தலகளலி = அனைத்து காலங்களிலும்
நெலெசித்து = நிலைத்திருந்து
நிஸ்சல பகுதி = திடமாக பக்தி
சுக்ஞான = உண்மையான ஞானம்
பாக்யவ = ஆகிய செல்வங்களை
கொட்டு = கொடுத்து
சந்தெய்ப = அருள்கிறான்

அனைத்து விதங்களிலும் பரமாத்மனிடம் திடமான பக்தியை வைத்து, அந்த பக்தியினால் பரமாத்மன் தரிசனம் கொடுப்பது போல செய்து, சஞ்சலமற்ற மனதுடன் பரமாத்மனை நிறுத்தி, நீ செய்யும் ஒவ்வொரு வேலையும் பரமாத்மனின் பூஜை என்றே நினைத்திரு. இப்படி செய்வதால், ஸ்ரீகிருஷ்ணன் தானே அனைத்து இடங்களிலும் இருந்து, நீ செய்யும் அனைத்து செயல்களையும் தன் பூஜையென்றே ஏற்றுக்கொண்டு, சிறந்த பக்தியை, திவ்யஞான செல்வத்தைக் கொடுத்து உனக்கு அருள்வான் என்று தாசராயர் அன்புடன் சஜ்ஜனர்களுக்கு உபதேச ரூபமாக சொல்லியிருக்கிறார்.

**தோ$^{3}$ஷக$^{3}$ந்த$^{4}$விதூ$^{3}$ர நானா**
**வேஷதா$^{4}$ரக ஈ ஜக$^{3}$த்ரய**
**போஷக புராதனபுருஷ புருஹூதமுக$^{2}$ விநுத ।**
**ஸேஷவர பரியங்க ஷயன வி**
**பீ$^{4}$ஷணப்ரிய விஜயஸக$^{2}$ ஸ**
**ந்தோஷ ப$^{3}$டி$^{3}$ஸுவ ஸுஜனரிஷ்டார்த்த$^{2}$க$^{3}$ள பூரயிஸி ||29**

தோஷ கந்தவிதூர = தோஷத்தின் வாசனையே இல்லாதவன்
நானா வேஷதாரக = அனைத்திடங்களிலும் வியாப்தனாகவும், மத்ஸ்யகூர்மாதி அவதார ரூபங்களாலும் பற்பல வித ரூபங்களை தரித்திருக்கிறான்
ஈ ஜகத்ரய போஷக = மூன்று உலகங்களில் வசிக்கும் பிராணிகளை காக்கிறான்
புராதனபுருஷ = ஆதியிலிருந்து இருப்பவன்
புருஹூதமுகவினுத = இந்திராதி தேவதைகளால் வணங்கப்படுபவன்

சேஷவர பர்யங்க ஷயன = சேஷன் என்னும் பாம்பில் படுத்திருப்பவன்
விபீஷணப்ரிய = விபீஷணனால் வணங்கப்படுபவன்
விஜயஸக = அர்ஜுனனின் நண்பன் (இத்தகைய பரமாத்மன்)
சுஜனர = சஜ்ஜனர்களின்
இஷ்டார்த்தகள = இஷ்டார்த்தங்களை
பூரயிஸி = நிறைவேற்றி
சந்தோஷ படிசுவ = மகிழ்ச்சியளிப்பான்.

தோஷகந்தவிதூர என்றால், சிறிதளவும் தோஷங்களின் வாசம் அற்றவன் என்று பொருள். விஷ்ணுரஹஸ்ய 15ம் அத்தியாயம் 31ம் ஸ்லோகத்தில்

யதானாலோகதே ஸூர்யஸ்தமோலேஷமபிக்வசித் |
ததாதுக்கஸ்யலேஷோபி கர்ஹிசின்னமயேக்ஷதே ||

சூரியன் மேகங்களில் மறைந்திருந்தாலும் எப்படி இருட்டைக் காணமுடியாதோ, அப்படியே நான் எக்காலத்திலும் துக்கத்தின் சாயலைக் காணமாட்டேன் என்று ஹயக்ரீவரூபி ஸ்ரீபரமாத்மன் பிரம்மதேவருக்கு சொல்கிறார். அதே அபிப்பிராயத்தையே 'தோஷகந்தவிதூர' என்று தாசராயர் இங்கு சொல்லியிருக்கிறார்.

**ஸ்ரீமஹீஸேவித பதா$^{3}$ம்பு$^{3}$ஜ**
**பூ$^{4}$ம ஸத்ப$^{4}$க்த்யைகலப$^{4}$ய பி**
**தாமஹாத்$^{3}$யமரா ஸுரார்ச்சித பாத$^{3}$பங்கேஜ |**
**வாம வாமன ராம ஸம்ஸா**
**ராமயௌஷத$^{3}$ ஹே மமகுல**
**ஸ்வாமி ஸந்தயிஸெனலு ப$^{3}$ந்தொ$^{3}$த$^{3}$கு$^{3}$வனு கருணாளு ||30**

ஸ்ரீ = லட்சுமிதேவி
மஹீ = பூதேவி இவர்களால்
சேவிதபதாம்புஜ = வணங்கப்படும் பாதங்களை உடையவன்
பூம = ஹே பூர்ணனே
சத்பக்த்யைகலப்ய = உத்தமமான பக்திக்கு மட்டுமே தரிசனம் அளிப்பவனே
பிதாமஹாதி = பிரம்மதேவரே முதலான
அமர = தேவதைகளால்
அசுர = அசு என்றால் முக்யபிராண தேவர். அவரில் ரதர், என்றால் அவரிடம் பக்தி கொண்டவர்கள் - கருட சேஷாதி அனைத்து தேவதைகள்; மற்றும் வாயுதேவரை குருவாக நினைத்து வணங்கும் அனைத்து மனிதர்களாலும்
அர்ச்சித = பூஜிக்கப்படும்
பாதபங்கேஜ = பாத கமலங்களைக் கொண்டவனே
வாம = அழகானவனே
வாமன, ராம,
சம்சாரமயௌஷத = சம்சாரம் என்னும் நோய்க்கு மருந்தினைப் போன்றவனே

ஹே மமகுலஸ்வாமி = என் குலதெய்வமே
ஸந்தயிஸெனலு = என்னைக் காப்பாற்று என்று வேண்டினால்
கருணாளு = கருணைக் கடலானவன்
பந்தொதகுவனு = வந்து காப்பாற்றுவான்.

பிதாமஹாத்யமரா சுரார்ச்சித - என்று தாசராயர் சொல்லியிருக்கிறார். இதில் பிதாமஹாதி = பிரம்மதேவரே முதலான. அமர = தேவதைகள் அனைவரும். அசுரார்ச்சித = தைத்யர்களாலும் பூஜிக்கப்படும் பாத கமலங்களைக் கொண்டவன் என்று பொதுவாக அர்த்தம் சொல்லலாம். அசுரர் என்னும் பதத்திற்கு தைத்யர் என்று அர்த்தம் கூறினால், தைத்யர்களால் பூஜிக்கப்படும் பாத கமலங்களைக் கொண்டவன் பரமாத்மன் என்று அர்த்தம் வருகிறது. தைத்யர்கள் பரமாத்மனை பூஜிப்பது என்பது நடக்காத செயல் என்று நினைத்து சில வியாக்யானகாரர்கள் 'அஸுஷுரத: அசுர:' பிராணர்களில் இருப்பதால் பிராணதேவருக்கு அசுர என்று பெயர் இருக்கிறது என்று சொல்கின்றனர். இப்படி விளக்குவதில் ஒரு பிரச்னை வருகிறது. அது என்னவெனில்:

பிரம்மாதி தேவதைகளாலும், வாயுதேவராலும், பூஜிக்கப்படும் பாத கமலங்களைக் கொண்டவன் என்று அர்த்தம் வருகிறது. பிரம்ம முதலான தேவதைகள் என்றபிறகு, வாயுதேவரும் அதிலேயே வந்துவிடுகிறார். அசுர என்று வாயுதேவரை தனியாக மறுபடி சொல்வது, புனருக்தி தோஷம் வருவதைப் போலாகிறது. ஆகையால், அசுர என்பதற்கு பிராணதேவரை சொல்வது யோசிக்க வேண்டியதாகிறது. அப்படியெனில், இதை எப்படி அர்த்தம் சொல்வது என்றால்:

இந்த தேகத்தில் இருக்கும் 24 தத்வாபிமானி தேவதைகளுக்கு, வாயுதேவரே முதல்வனாக, பாக்கி 23 தேவதைகளுக்கு தலைவனாக இருக்கிறார். அனைத்து தேவதைகளும் இருந்தாலும், 1 வாயுதேவர் இருந்தால் மட்டுமே, பிராணன் இருக்கிறது என்கிறோம். அனைத்து தேவதைகளும் இருந்தாலும், 1 வாயுதேவர் இல்லாவிட்டால், அந்த சரீரத்தினால் எந்த செயலும் ஆவதில்லை. இந்த விஷயத்தை பாகவதம் 3ம் ஸ்கந்தத்தில் 'அக்னிர்வாசா முகம்பேஜே' என்னும் ஸ்லோகத்தில், முதலில், முகத்தில் அக்னிதேவர் நுழைந்தார். விரார் சரீரம் எழவில்லை. பின்னர் அடுத்தடுத்து 23 தத்வாபிமானி தேவதைகள் நுழைந்தாலும், அந்த சரீரம் எழவில்லை.

சித்தேனஹ்ருதயம் சைத்யக்ஷேத்ரக்ஞ: ப்ராவிஷத்யதா |
விராட்ததைவ புருஷ: ஸலிலாதுததிஷ்டத் ||

சித்தாபிமானி பிரம்மதேவர். வாயுதேவரே பிரம்மதேவர். அவர் அந்தர்யாமியான க்ஷேத்ரக்ஞன் பிரம்மவாயுகளுடன் சேர்ந்து, அந்த விராட் சரீரத்தில் நுழைந்தவுடன் அந்த சரீரம் எழுந்தது என்று பிராணதேவருக்கு சர்வ சேதனோத்தமத்வத்தை நிரூபித்தார். அஸு என்றால் பிராண. பிராண ஷப்தம் குறிப்பது வாயுதேவரை. 'அஸௌரதா: அசுரா:' அதாவது பிராணதேவரை யார் நம்பிக்கையுடன் வணங்கி, வாயுமதத்தை பின்பற்றுகின்றனரோ அவர்களுக்கு

அசுரா: என்னும் பெயர் வருகிறது. ‘பிதாமஹாத்யமரா ஸுரார்ச்சித’ என்பதற்கு பதில் பிரம்மாதி தேவதைகள் மற்றும், தேவதைகள் அல்லாத வாயு மதத்தைப் பின்பற்றுபவர்களாலும் பூஜிக்கப்படும் பாத கமலங்களைக் கொண்டவன் என்னும் அர்த்தம் வருகிறது. யார்யார் மத்வ மதத்தைப் பின்பற்றுகிறார்களோ, அவரே ஹரிசர்வோத்தமா வாயுஜீவோத்தமா என்னும் ஞானத்தைப் பெற்று, ஸ்ரீஹரியே சர்வோத்தமன் என்று சிந்தித்து துதிக்கின்றனர். மற்றவர்கள் அப்படி நினைத்து வணங்குவதில்லை.

அத்வைதிகள் ஈஷ்வர பிரம்மவாதிகள். விசிஷ்டாத்வைதிகள் விஷ்ணு தீக்ஷையைப் பெற்று வைஷ்ணவராக இருந்தாலும் ‘யர்ஸ்தாத்வேஷ்டி ஸமாந்த்வேஷ்டி’ என் பக்தர்களிடம் த்வேஷம் செய்பவர்கள், என்னிடம் த்வேஷம் செய்பவர்கள் என்றே நான் நினைக்கிறேன் என்னும் பரமாத்மனின் வாக்கியத்திற்கு விரோதமாக, ருத்ராதிகளில் த்வேஷத்தை செய்கிறார்கள். ஆகையால், மத்வமதத்தைப் பின்பற்றுகிறவர்கள் மட்டுமே தாரதம்யத்தின்படி பகவந்தனை துதிக்கின்றனர்.

**த$^3$னுஜ தி$^3$விஜரொளித்து$^3$ அவரவ**
**ரனுஸரிஸி கர்மக$^3$ள மாள்பனு**
**ஜனன மரணாத்யகி$^2$ல தோ$^3$ஷவிதூ$^3$ர எம்மொட$^3$னெ**
**ஜனிஸுவனு ஜீவிஸுவ ஸம்ர**
**க்ஷணெய மாடு$^3$வனெல்ல காலதி$^3$**
**த$^4$னவ காய்தி$^3$ஹ ஸர்பனந்த நிமித்த பா$^4$ந்த$^3$வனு ||31**

தனுஜ திவிஜரொளித்து = தைத்யர்களிலும், தேவதைகளிலும் இருந்து
அவரவரனு = அவர்களை
அனுசரிஸி = அனுசரித்து
கர்மகள மாள்பனு = செயல்களை செய்கிறான்
ஜனன மரணாத்யகில தோஷவிதூர = பிறப்பு, இறப்பு ஆகிய தோஷங்கள் அற்றவன்
எம்மொடனெ = நாம் பிறக்கும்போது பிறக்கிறான்
ஜீவிசுவ = நாம் வாழும்போது நம்மில் இருந்து வளர்ந்து வருகிறான்
சம்ரக்ஷணெய மாடுவனு = நம்மைக் காக்கிறான்
எல்ல காலதி = அனைத்து காலங்களிலும்
தனவ காய்திஹ சர்ப்பனந்த = புதையலைக் காக்கும் பாம்பினைப் போல
அநிமித்த பாந்தவனு = எவ்வித எதிர்பார்ப்புகளும் (பிரதிபலனும்) எதிர்பார்க்காத நண்பனைப் போன்றவன்.

ஸ்ரீபரமாத்மன், தேவதைகளில் இருந்து அவர் செய்யும் பகவத்பக்தி, ஸ்தோத்திர, பூஜை ஆகியவற்றை, அவர்களுக்கேற்ப செய்து செய்விக்கிறான். தைத்யர்களில் இருந்து, தன்னில் த்வேஷத்தை, தேவதா த்வேஷத்தை, தமஸ்ஸிற்கு காரணமாகும் காரியங்களை, அவர்களுக்கேற்ப செய்து செய்விக்கிறான். பரமாத்மனுக்கு பிறப்பு, இறப்பு தோஷங்கள் இல்லை என்றாலும், ஜீவர்கள் கர்ப்பத்தில் நுழைந்து, பூமியில் பிறக்கும்போது தானும் பிறக்கிறான். அவர்கள் வளரும்போது தானும் வளர்கிறான்.

புதையலைக் காக்கும் சர்ப்பமானது எப்படி அதனை தனக்காக பயன்படுத்திக் கொள்வதில்லையோ, மற்றவர்களுக்கும் அதைக் கொடுப்பதில்லையோ, அப்படியே பரமாத்மன், எந்தவொரு சுயநலமும் இன்றி, ஜீவனுக்கு உறவினராக, அனைத்து காலங்களிலும் அவரை உறவினர்களைப் போலவே நினைத்து காக்கிறான்.

**பி$^{3}$ஸருஹாப்தா$^{3}$க$^{3}$ஸதி$^{3}$ தானுத$^{3}$**
**யிஸலு வ்ருக்ஷங்க$^{3}$ள நெளலு பஸ**
**ரிஸுவவிளெயொளு அஸ்தமிஸலல்லல்லெ லீனிபவு |**
**ஷ்வசன முக்$^{2}$யமராந்தராத்மன**
**வஷதொ$^{3}$ளகெ$^{3}$ இப்புது$^{3}$ ஜக$^{3}$த்ரய**
**ப$^{3}$ஸுரொளிம்பி$^{3}$ட்டெல்ல கர்மவ தோர்ப்ப நோள்பரிகெ$^{3}$** ||32

பிஸருஹாப்த = தாமரைக்கு தந்தையான சூரியன்
ஆகஸதி = ஆகாயத்தில்,
தானுதயிஸலு = தான் உதிக்கும்போது
வ்ருக்ஷங்கள நெளனு = மரங்களின் நிழல்
பசரிசுவவு = அதன் கீழேயே இருக்கிறது
இளெயொளகெ = பூமியில்
அஸ்தமிஸலு = சூரியன் அஸ்தமிக்கும்போது
அல்லல்லெ = அங்கங்கு
லீனிபவு = மறைகிறது
ஷ்வஸன முக்ய = வாயுதேவரே முதலான
அமராந்தராத்மகன = தேவதைகளின் அந்தராத்மகனான ஸ்ரீஹரி
வஷதொளகெ = அவர்களின் வசத்தில்
ஜகத்ரய = மூன்று உலகங்களை
பசரொளு = தன் வயிற்றில்
இம்பிட்டு = பத்திரமாக வைத்துக்கொண்டு
நோள்பரிகெ = தன்னை வணங்குபவர்களுக்கு
எல்லா கர்மவ = அனைத்து கர்மங்களை
தோர்ப்ப = காட்டுவான்

சூரியன் உதயமானால், மரங்களின் நிழல் நன்றாக தெரிகிறது. சூரியன் அஸ்தமனமானால், நிழலும் அங்கங்கே மறைந்துவிடுகிறது. இதே ரீதியில், ஸ்ரீபிரம்ம வாயு முதலான தேவதைகளின் அந்தராத்மகனான ஸ்ரீபரமாத்மனின் வசத்தில், இந்த மூன்று உலகங்களும் இருக்கின்றன. அவற்றை தன் வயிற்றில் வைத்துக்கொண்டு, பிரளய காலத்தில் படுத்திருக்கும்போது, தங்களின் செயல்கள் என்ன என்று எந்த ஜீவர்களுக்கும் தெரிவதில்லை. ஜீவர்களை ஸ்ருஷ்டிக்குக் கொண்டுவந்த உடனேயே, அவரவர்கள் செய்யவேண்டிய கர்மங்களை, அவரவர்களால் செய்வித்து, அந்தந்த கர்மங்களை, தன்னை பக்தியுடன் வணங்குபவர்களுக்கு காட்டிக் கொடுக்கிறான்.

சூரியன் அஸ்தமனமானபிறகு, நிழல் காணாமல் போய், மறுபடி உதயமானபிறகு எப்படி நிழல் தோன்றுகிறதோ, அப்படியே, பிரளயகாலத்தில் மக்களின் கர்மங்கள் தெரிவதில்லை. ஸ்ருஷ்ட்யாதி செயல்களை விட்டு, பரமாத்மன் யோக நித்திரையில் இருப்பதால், அஸ்தமன உவமையை சொல்கிறார். ஸ்ருஷ்டி ஆனபிறகு உதய காலத்தை ஒப்பிட்டு, மக்களின் செயல்களை அவர்களுக்கு காட்டிக் கொடுக்கிறான்.

**த்ரிபு$^4$வனைகாராத்$^4$ய லக்ஷ்மி**
**ஸுபு$^4$ஜ யுக$^3$ளாலிங்கிதாங்க$^3$**
**ஸ்வபு$^4$ ஸுகா$^2$த்ம ஸுவர்ணவர்ண ஸுபர்ண வரவஹன |**
**அப$^4$யதா$^3$னந்தார்க்க ஷஷிஸ**
**ந்னிப$^4$ நிரஞ்சன நித்யத$^3$லி தன**
**க$^3$பி$^4$னமிஸுவரி கீ$^3$வ ஸர்வார்த்த$^4$க$^3$ள தடெ$^3$யத$^3$லெ ||33**

த்ரிபுவனைகாராத்ய = மூன்று உலகத்து மக்களாலும் வணங்கப்படுபவனான
லக்ஷ்மிசுபுஜ யுகளாலிங்கிதாங்க = லட்சுமிதேவியின் இரு கைகளால் ஆலிங்கனம் செய்யப்பட்ட சரீரத்தைக் கொண்ட
ஸ்வபு = தன் விருப்பதால் தானே பூமியில் அவதரிக்கும்
சுகாத்ம = சுக ஸ்வரூபனான, அல்லது,
ஸ்வபு சுகாத்ம = தன்னிலிருந்து தானாகவே பிறந்த சுக ஸ்வரூபனான (ஸ்வரமணன் என்று பொருள்)
சுவர்ணவர்ண = தங்கத்தின் நிறத்தைக் கொண்டவன்
சுவர்ண வரவஹன = கருடன் என்னும் உத்தமமான வாகனத்தைக் கொண்ட
அபயத = அனைவருக்கும் அபயத்தைக் கொடுக்கும்
அனந்தார்க்க ஷஷிஸன்னிப = அனந்த சூரியர்களைப் போல ஒளி உள்ளவன் ஆனாலும், அனந்த சந்திரர்களைப் போல குளிர்ச்சியைக் கொண்டவன் (கருணை என்னும் குளிர்ச்சியை அதிகம் கொண்டவன் என்று பொருள்).
நிரஞ்சன = தோஷங்கள் அற்றவனான ஸ்ரீபரமாத்மன்
நித்யதலி தனகெ அபினமிஸுவரிகெ = எப்போதும் தன்னை வணங்குபவர்களுக்கு
ஸர்வார்த்தகள = அனைத்து புருஷார்த்தங்களையும், அவர்களின் யோக்யதைக்கேற்ப
தடெயதலெ = சீக்கிரமாகவே (எவ்வித தாமதங்களும் இல்லாமல்)
ஈவ = கொடுக்கிறான்.

விளக்கம்: மேலே தெளிவாக உள்ளதால் இங்கு மறுபடி விளக்கவில்லை.

**கவிக$^3$ளிந்த$^3$லி திளிது$^3$ ப்ராத:**
**ஸவன மாத்$^4$யந்தி$^3$னவு ஸாயம**
**ஸவனக$^3$ள வஸு ருத்$^3$ர ஆதி$^3$த்யரொளு ராஜிஸுவ |**
**பவனனொளு க்ருதி ஜய ஸுமாயா**
**த$^4$வன மூர்த்தி த்ரயவ சிந்திஸி**
**தி$^3$வஸ வெம்பா$^3$ஹுதிக$^3$ளிந் த$^3$ர்ச்சிஸுத ஸுகி$^2$ஸுதிரு ||34**

கவிகளிந்தலி = ஞானிகளால்
ப்ராத: ஸவன = காலை நேரத்து
மாத்யந்தினவு = மதிய நேரத்து ஆஹுதியின் கிரமத்தை
ஸாயம ஸவனகளு = சாயங்கால சந்தியா ஆஹுதி கிரமத்தை
திளிது = அறிந்து, இந்த மூன்று சமயங்களின் அபிமானிகளான
வசு ருத்ர ஆதித்யரொளு = வசுகண, ருத்ரகண மற்றும் ஆதித்யகணரில்
ராஜிஸுவ = அந்தர்யாமியாக ஒளிரும்
பவனனொளு = பாரதிரமண முக்யபிராணதேவருக்குள்
க்ருதி ஜய சுமாயாதவன = க்ருதி, ஜயா, மாயா என்னும் மூன்று லட்சுமிரூபங்களின் கணவர்களான ப்ரத்யும்ன, சங்கர்ஷண, வாசுதேவரின்
மூர்த்தித்ரயவ = மூன்று ரூபங்களை
சிந்திஸி = நினைத்து
திவஸவெம்ப = நாள் என்னும்
ஆஹுதிகளிந்த = ஆஹுதிகளால்
அர்ச்சிசுத = அர்ச்சித்தவாறு
சுகிசுதிரு = சுகமாக இரு.

யாகங்களில் மூன்று காலங்களில் ஆஹுதி கொடுப்பதற்கு த்ரி-ஸவன என்று பெயர். இந்த ப்ராத: ஸவன, மத்யான்ஹ ஸவன, ஸாயம் ஸவன என்னும் மூன்று ஸவனங்களுக்கும் அபிமானிகள் வசுகண, ருத்ரகண, ஆதித்யகணங்கள் ஆவர். இந்த மூன்று கணங்களிலும் பாரதிரமண முக்யபிராணதேவர் இருக்கிறார். அவரில், க்ருதிரமண ப்ரத்யும்ன, ஜயாரமண சங்கர்ஷண, மாயாரமண வாசுதேவ என்னும் மூன்று ரூபங்களில் பரமாத்மன் வசிக்கிறான் என்று அறிந்து, அந்த பரமாத்மனுக்கு நம் ஆயுளில் நாட்களையே ஹவிஸ் என்று நினைத்து, பூஜித்தால், யாகம் செய்த புண்ணிய பலனே கிடைக்கிறது என்பது தாத்பர்யம்.

**சதுரவிம்ஷத்யப்3த வஸுதே3**
**வதெக3ளொளு ப்ரத்3யும்ன நிப்பனு**
**சது: சத்வாரிம்ஷதிக3ளலி ஸங்கருஷணாக்2ய**
**ஹுதவஹாக்ஷரொளிஹனு மாயா**
**பதியு ஹதி3னாரதி4க த்3வாத்ரிம்**
**ஷதி வருஷக3ளலிப்ப னாதி3த்யரொளு ஸிதகாய ||35**

சதுர விம்ஷத்யப்த = 24 ஆண்டுகள் வரை
வசுதேவதெகளொளு = அஷ்ட வசுக்களில்
ப்ரத்யும்னனிப்பனு = ப்ரத்யும்னன் இருக்கிறான்
சதுஷ்சத்வாரிம்ஷதிகளலி = 44 ஆண்டுகள் வரை
ஹுதவஹாக்ஷரொளு = அக்னி நேத்ரனான ருத்ரதேவரில்
சங்கர்ஷணாக்ய = சங்கர்ஷண நாமக பரமாத்மன்
இஹனு = இருக்கிறான்
ஸிதகாய = வெள்ளை வண்ண சரீரம் கொண்ட
மாயாபதியு = வாசுதேவன்

ஹதினாதரிக த்வாத்ரிம்ஷதி வருஷகளலி = 16+32=48 ஆண்டுகள் வரை
ஆதித்யனொளு = சூரியனில்
இப்ப = இருக்கிறான்

* மனிதர்களின் ஆயுளில் முதல் 24 ஆண்டுகள் வரை, அஷ்ட வசுக்களின் அபிமானிகள் என்று அழைக்கப்படும் ப்ராத:ஸவன காலம் என்று அழைக்கப்படுகிறது. இந்த வசுதேவதைகளுக்குள் ப்ரத்யும்னரூபி ஸ்ரீபரமாத்மன் இருக்கிறான்.

* அதன் பிறகு 44 ஆண்டுகள் வரை மாத்யான்ன ஸவன காலம். இதன் அபிமானிகள் ருத்ரகண. அவரில் சங்கர்ஷணரூபி பரமாத்மன் வசிக்கிறான்.

* அதன் பிறகு 48 ஆண்டுகள் வரை ஸாயம் ஸவன காலம். அதன் அபிமானிகள் ஆதித்யகண. அவரில் வாசுதேவ மூர்த்தி வசிக்கிறான்.

**ஷோட$^{3}$ஷஷோத்தரஷத வருஷத$^{3}$லி**
**ஷோடஷோத்தரஷத ஸுரூபதி$^{3}$**
**க்ரீடி$^{3}$ஸுவ வஸு ருத்ர ஆதி$^{3}$த்யரொளு ஸதிஸஹித |**
**வ்ரீட$^{3}$வில்லதெ$^{3}$ ப$^{4}$ஜிப ப$^{4}$குதர**
**பீடி$^{3}$ஸுவ து$^{3}$ரிதௌக$^{4}$க$^{3}$ள தூ$^{3}$**
**ரோடி$^{3}$ஸுத ப$^{3}$ளியலி பி$^{3}$டதெ$^{3}$ நெலெஸிப்ப ப$^{4}$யஹாரி ||36**

ஷோடஷோத்தர ஷதவர்ஷதலி = முந்தைய பத்யத்தில் கூறிய ஆண்டுகளின் கூட்டுத்தொகை மொத்தம் 116. இவற்றில்.
ஷோடஷோத்தர ஷத சுரூபதி = 116 ரூபங்களில்
வசு ருத்ர ஆதித்யரொளு = வசுகண, ருத்ரகண, ஆதித்யகணங்களுடன்
சதிசஹித = தன் மனைவியுடன்
க்ரீடிசுவ = நிலைத்திருக்கிறான்
வ்ரீடவில்லதெ = வெட்கம் இல்லாமல்
பஜிப பகுதர = தன்னை துதிக்கும் பக்தர்களின்
பீடிஸுவ துரிதௌககள = கஷ்டங்களை, துக்கங்களை அல்லது பாப சமூகங்களை
தூரோடிசுத = தூர ஓட்டுவான்
பயஹாரி = பயங்களை பரிகரிப்பவன்
பளியலி பிடதெ = பக்தர்களை விட்டுவிடாமல்
நெலஸிப்ப = வசிக்கிறான்

மேற்சொன்ன பத்யங்களில் மூன்று ஸவனங்களை, மனித ஆயுளின்படி சொன்னபோது, முதல் ஸவன - 24 ஆண்டுகள், இரண்டாம் ஸவன - 44 ஆண்டுகள்; மூன்றாம் ஸவன 48 ஆண்டுகள் என்று கூறினர். மொத்தம் 116 ஆண்டுகள். மனிதர்களுக்கு ஆயுள் 100 ஆண்டுகளே என்று சொன்னபின், 116 என இங்கு ஏன் சொல்ல வேண்டும்?. சாந்தோக்ய பாஷ்யத்தில் 3ம் அத்தியாயத்தில்:

விஷ்ணுபூஜார்த்த யக்ஞேஹ மித்யுபாஸன மாதராத் |

குர்மீத புருஷோனித்யம் தஸ்யயத்க்ஷோட ஷோத்தரம் ||
ஷத மாயுஸ்தத்ஸவனத்ரய மீரித முத்தமம் |
சதுர்விம்ஷத்து யத்பூர்வம் ப்ராத: ஸவன மேவதத் ||
ப்ரார்த்தயித்வா வஸூம்ஸ்தத்கம் புர்மா ம்ருத்யுமபானுதேத் |
மத்யே சதுஷ்சத்வாரிம்ஷ மத்யமம் ஸவனம் ஸ்வயம் |
ருத்ராணாம் ப்ரார்த்தனேனாத்ர புர்மா ம்ருத்யுமபானுதேத் |
ததோஷ்ட சத்வாரிம்ஷத்து த்ருதீயம் ஸவனம் ஸ்ம்ருதம் |
ஆதித்யானாம் ப்ரார்த்தனேனதத்கம் ம்ருத்யுமனுதேதிதி ஸர்வயக்ஞி: ||

இதன் பொருள்:

விஷ்ணு பூஜைக்காக நானே யக்ஞமாகிறேன். அதாவது என் ஸ்வரூபமே யக்ஞம் ஆகும் என்று புருஷன் தினமும் உபாசனை செய்யவேண்டும். இப்படி செய்வதால், அவனுக்கு ஆயுள் 116 ஆகும். இந்த ஆயுள் ஆண்டினையே யாகத்தில் ஆஹுதியாக கொடுக்க வேண்டும். அதில் முதல் 24 ஆண்டுகள் வரை, ப்ராத: ஸவன என்று அழைக்கப்படுகிறது. இந்த ஸவனத்திற்கு அபிமானிகள் வசுகணர்கள். அந்த வசுகணர்களை பிரார்த்தித்து, அந்த ஆண்டுகள் வரை வரக்கூடிய துர்மரணத்தை பரிகரித்துக் கொள்ளவேண்டும். அதாவது, அவரின் அந்தர்யாமி பிரத்யும்னதேவன் பரிகரிக்கிறார் என்பது கருத்து.

அதற்குப்பின், ஆயுளின் 44 ஆண்டுகள் (25ம் வயது முதல் 68 வயது வரை) மத்யம ஸவன எனப்படுகிறது. அந்த காலத்தின் அபிமானிகளான ருத்ரகணர்களை பிரார்த்தித்து, அந்த காலத்து மரணத்தை பரிகரித்துக் கொள்ளவேண்டும்.

அதற்குப்பின், 48 ஆண்டுகள் (69ம் வயது முதல் 116 ஆண்டுகள் வரை) மூன்றாம் ஸவன காலம் ஆகும். அந்த காலத்தின் அபிமானிகளான ஆதித்யகணத்தை ஆராதித்து, அந்த காலத்து மரணத்தை பரிகரித்துக் கொள்ளவேண்டும்.

என்று சர்வயக்ஞ என்னும் கிரந்தத்தில் சொல்லப்பட்டிருக்கிறது. இப்படியாக நினைப்பவர்கள் யாராவது இருப்பார்களோ என்னும் கேள்விக்கு, சம்பிரதாயத்தைக் காட்டுவதற்காக ஐதரேய இதரா தேவியின் குமாரரான மஹிதாஸ நாமக (இது பரமாத்மன் அல்லாத மற்றொரு இதரா தேவியின் குமாரனான மஹிதாஸ) ரிஷி, இத்தகைய உபாஸனையை செய்து, 116 ஆண்டுகள் வாழ்ந்திருந்தார். ஆகையால், இப்படியான உபாசனையை செய்பவர்கள், 116 ஆண்டுகள் வரை வாழ்ந்திருப்பர் என்று சாந்தோக்ய உபநிஷத் பாஷ்யத்தில் இருக்கிறது.

அதே அபிப்பிராயத்தையே தாசராயர் முந்தைய பத்யத்தில் கூறி, இந்த பத்யத்தில், அந்த ஆண்டுகளின் அந்தர்யாமி பகவத்ரூப சிந்தனையின் பலனை கூறுகிறார். 116 ஆண்டுகளில் 116 ரூபங்களால், தன் மனைவியுடன், ஸ்ரீஹரி, வசு, ருத்ர, ஆதித்யருக்குள் நிலைத்திருக்கிறான். வெட்கத்தை விட்டு, யாரொருவன் இப்படியாக துதிக்கின்றரோ, அத்தகைய பக்தர்களை தாக்கும் துர்மரண முதலான துக்க சமூகத்தை தூர விலக்கி, தான் அவர்கள் அருகே எப்போதும் இருந்து, பயங்களைப் போக்குபவனானவன், காப்பாற்றுகிறான்.

**மூரதி4கவெம்ப4த்து ஸஹஸ்ரை**
**நூரயிப்பத்தெனிப ரூபதி3**
**தோருதிப்ப தி3வா னிஷாதி4பரொளகெ3 நித்யத3லி |**
**பா4ரதி ப்ராணரொளகி3த்து3 நி**
**வாரிஸுத ப4குதர து3ரித ஹீ**
**ங்கார நித4ன ப்ரத2மரூபதி3 பித்ருக3ள பொரெவ ||37**

மூரதிக எம்பத்து ஸஹஸ்ரைனூர இப்பத்தெனிப ரூபதி = 83520 ரூபங்களில்
திவானிஷாதிபரொளகெ = மேற்கூறிய 116 ஆண்டுகளின் பகல் இரவுகளின் அதிபதி தேவதைகளுக்குள்
நித்யதலி = தினந்தோறும்
தோருதிப்ப = இருக்கிறான்
பாரதி ப்ராணரொளகெ = பாரதிதேவி பிராணதேவரின் அந்தர்யாமியாகி
ஹிங்கார நிதன ப்ரதம ரூபதி = ப்ரஸ்தாவ ரூபங்களால் அந்தந்த சொற்களால் அழைக்கப்படுபவனான ப்ரத்யும்ன, சங்கர்ஷண, வாசுதேவ ரூபங்களால் இருந்து
பகுதர துரித = பக்தர்களின் கஷ்டங்களை
நிவாரிஸுத = பரிகரித்தவாறு
பித்ருகளனெ = பித்ரு தேவதைகளை
பொரெவ = அருள்கிறான்.

முந்தைய பத்யங்களில் கூறிய 116 ஆண்டுகளில், ஆண்டு ஒன்றிற்கு 360 பகல்கள் என மொத்தம் 116*360 = 41760. இதைப்போலவே இரவுகளும் 41760. மொத்தம் 41760+41760=83520 ஆகிறது. இவ்வளவு ரூபங்களால், ஹிங்கார, நிதன, ப்ரஸ்தாவ ரூபங்களால் இருக்கிறான். இதன் விவரம்:

முதல் ஸவன காலமான 24 ஆண்டுகளில் 24 * 360 = 8640 பகல்கள், அவ்வளவு இரவுகள். இவற்றிற்கு ஹிங்கார நாமக பிரத்யும்னன்.

இரண்டாம் ஸவன காலமான 44 ஆண்டுகளில் 44 * 360 = 15840 பகல்கள். அவ்வளவு இரவுகள். இவற்றிற்கு நிதன நாமக சங்கர்ஷணன்

மூன்றாம் ஸவன காலமான 48 ஆண்டுகளில் 48 * 360 = 17280 பகல்கள். அவ்வளவு இரவுகள். இவற்றிற்கு ப்ரதம ரூபதி என்றால், ப்ரதமாவதாரம் ஆகையால், ப்ரஸ்தாவ நாமக வாசுதேவ ரூபத்தினால் என்று பொருள்.

நிதன ஹிங்கார ப்ரதம ரூபதி என்று தாசராயர் கூறியிருக்கிறார். இதில் இருக்கும் ப்ரதம என்பதற்கு ப்ரஸ்தாவ என்று எப்படி சொல்லமுடியும் என்றால், சாந்தோக்ய பாஷ்யம் 2ம் அத்தியாயம் 2ம் உப நிஷத் வாக்கியத்தில்

ப்ரதமாவதார ரூபத்வாத்வாஸுதேவ: பர: புர்மா |
ப்ரஸ்தாவோ நிதனன்சாபி ஸங்கர்ஷண உதாஹ்ருத: |
ஸங்கர்ஷணோஹி ஸம்ஹர்த்தா ப்ரத்யும்ன: பரமேஷ்வர: ||

ஹிங்கார இதி ஸம்ப்ரோக்தோ ஹீதி ஸ்ருஷ்டிருதீர்யதே ||

ப்ரதமாவதார ரூபமாகையால், பரமபுருஷனான வாசுதேவன் ப்ரஸ்தாவ எனப்படுகிறான். சங்கர்ஷணன், சம்ஹார கர்த்தன் ஆகையால், நிதன எனப்படுகிறான். ப்ரத்யும்னன் ஸ்ருஷ்டி கர்த்தன் ஆகையால், 'ஹிங்கரோதீதி ஹிங்கார:' ஹி என்றால், ஸ்ருஷ்டி; அதனை செய்பவன் ஆகையால், ஹிங்கார எனப்படுகிறான் -- என்று சொல்லப்பட்டிருக்கிறது. ஆகையால், இதன்படி இங்கு ப்ரதம என்னும் சொல்லிற்கு ப்ரஸ்தாவ என்றும் ஹிங்கார, நிதன, ப்ரஸ்தாவ சொற்களுக்கு ப்ரத்யும்ன, சங்கர்ஷண, வாசுதேவ என்றும் அர்த்தம் சொல்ல வேண்டும். இத்தகைய மூன்று ரூபங்களால் பாரதி ப்ராணர்களின் அந்தர்யாமியாகி மொத்தம் 83,520 இரவு பகல்களுக்கு அபிமானிகளான வசு, ருத்ர, ஆதித்யர்களில் இருந்து, பக்தர்களுக்கு வரும் கஷ்டங்களை பரிகரித்தவாறு, அவர்களின் பித்ருகளை அருளியவாறு இருக்கிறான் என்பது கருத்து.

**பு[3]த்தி[3]பூர்வக உத்தமோத்தம**
**ஷுத்[3]த[4] ஊர்ணாம்ப[3]ரவ ப[1]ங்க[1]தொ[3]**
**ளத்தி[3] தெகெ[3]யலு லேபவாகு[3]வுதெ[3] பரீக்ஷிஸலு |**
**பத்ப[3]னாப[4]னு சர்வஜீவரொ**
**ளித்த[3]ரேனு கு[3]ணத்ரயக[3]ளி**
**ம்ப[3]த்த[4] நாகு[3]வனேனு நித்யஸுகா[2]த்ம சின்மயனு ||38**

புத்திபூர்வக = புத்திபூர்வகமாக
உத்தமோத்தம = மிகச்சிறந்த
ஷுத்த = சுத்தமான
ஊர்ணாம்பரவ = பட்டுத் துணியை
பரீக்ஷிஸலு = பரிசோதித்தால்
பங்கதொளு = அழுக்கில்
அத்தி தெகெயலு = தோய்த்து எடுத்தால்
லேபவாகுவுதெ = சேறு அந்த துணியில் நுழையுமா? (இல்லை)
பத்பனாபனு,
சர்வ ஜீவரொளித்தரேனு = அனைத்து ஜீவர்களில் இருந்தால் என்ன
நித்யசுகாத்ம = நித்ய சுகஸ்வரூபனும்
சின்மயனு = சின்மய ஸ்வரூபனும் ஆன ஸ்ரீஹரி
குணத்ரயகளிந்த = ஸத்வாதி மூன்று குணங்களால்
பத்தனாகுவனேனோ? = கட்டுப்படுவானோ? (இல்லை).

மிகச்சிறந்த அற்புதமான பட்டுத்துணியை, பரிசோதிப்பதற்காக, சேற்றில் அமிழ்த்தி எடுத்தால், அந்த துணியில் சேறு எப்படி சேராதோ, அப்படியே பரமாத்மன் மூன்று குணங்களுக்கு கட்டுப்பட்டவர்களான அனைத்து பிராணிகளிலும் இருந்து, தான் மட்டும் அந்த குணங்களுக்கு கட்டுப்படாமல், அதற்கு சம்பந்தப்படாமல் இருக்கிறான். சிதானந்த ஸ்வரூபனான பரமாத்மனை இந்த ப்ராக்ருத குணங்கள் கட்டுப்படுத்துமா? என்றும் இல்லை.

**ஸகலதோ3ஷவிதூ3ர ஷஷி பா**
**வக ஸஹஸ்ரானந்த3 ஸூர்ய**
**ப்ரகரஸன்னிப4 கா3த்ர லகுமிகளத்ர ஸுரமித்ர ।**
**விக2னஸாண்ட3 தொ3ளிப்ப பி3ரம்மா**
**த்3யகி2ள சேதனக3ணக்கெ தானெ**
**ஸக2னெனிஸி கொண்ட3 அகுடிலாத்மக நிப்பனவரந்தெ ||39**

சகலதோஷவிதூர = எவ்வித தோஷங்களும் இல்லாதவன்
சஹஸ்ரானந்த = எல்லையற்ற எண்ணிக்கையிலான
ஷஷி = சந்திரன்
பாவக = அக்னி
சூர்ய = சூரியன் இவற்றின்
ப்ரகர = குழுவிற்கு
சன்னிப = சமமான ஒளியுடன் ஒளிரும்
காத்ர = உருவம் கொண்ட
லகுமிகளத்ர = லட்சுமிபதியான
ஸுரமித்ர = தேவதைகளுக்கு மித்ரனான ஸ்ரீஹரி
விகனஸாண்டதொள = பிரம்மாண்டத்தில்
இப்ப = இருக்கிறான்
பிரம்மாதி = பிரம்ம முதலான
அகிள சேதனகணகெ = அனைத்து சேதன கணங்களுக்கு
தானே
அகுடிலாத்மக = தோஷங்கள் இல்லாதவன்
சகனெனிஸிகொண்டு = நண்பன் என்று சொல்லிக் கொண்டு
அவரந்தெ = அவர்களைப் போல
பிரம்மாதி சேதனரந்தெ = பிரம்மாதி சேதனர்களைப் போல
இப்ப = இருக்கிறான்.

பிறப்பு, இறப்பு போன்ற எவ்வித தோஷங்களும் அற்றவன் ஸ்ரீஹரி. பற்பல ஆயிரம் சந்திரன், அக்னி, சூர்யர்களைப் போல ஒளிரும் தேக ஒளி உள்ளவன். சந்திரன், அக்னி, சூரியன் என மூன்று உவமானங்களைக் கொடுத்திருக்கிறார். இந்த மூன்றையும் சேர்த்து பார்க்காமல், தனித்தனியாக பார்க்கவேண்டும். சந்திரனைப் போல குளிர்ச்சி குணம். சூரியனைப் போல ஒளி. பாவங்களை எரிக்கும் விஷயத்தில் அக்னியைப் போன்றவன். என இந்த மூன்று உவமைகளை புரிந்து கொள்ளவேண்டும். இத்தகைய ஸ்வாமி பிரம்மாண்டத்தில் இருக்கிறான். பிரம்மாதி அனைத்து சேதன ராசிகளுக்கும் நண்பனாக, செயற்கையாக இல்லாமல், அவரைப்போலவே அவரில் இருக்கிறான்.

**தே3ஷபே4த3க3ளல்லி இப்பா**
**காஷதோ3பாதி3யலி சேதன**
**ராஷியொளு நெலெஸிப்பனவ்ய வதா4னத3லி நிருத ।**

**ஶ்ரீஸஹித ஸர்வத்ரதி[3] நிரவ**
**காஷ கொடு[3]வந்த[3]த[3]லி கொடு[3]த நி**
**ராஷெயலி ஸர்வாந்தராத்மக ஷோபி[3]ஸுவ ஸுக[2]த[3] ||40**

தேஷபேதகளல்லி = பானை, பாத்திரம் முதலான இட பேதங்களில்
இப்ப = இருக்கிறான்
ஆகாஷதோபாதியலி = ஆகாயத்தைப் போல
சேதன ராஷியொளு = சேதனர்களில்
நிருத = எப்போதும்
அவ்யவதானதலி = பானைகள் எப்படி இருக்கின்றவோ அதே ரூபத்தில், அவற்றின் அனைத்து பாகங்களிலும் எப்படி இடைவெளி விடாமல் ஆகாயம் நிறைந்திருக்கிறதோ அப்படியே நிறைந்து
நெலஸிப்பனு = ஸ்ரீபரமாத்மன் நிலைத்திருக்கிறான்
ஸ்ரீ ஸஹித = லட்சுமிதேவியருடன்
ஸர்வத்ர = அனைத்து இடங்களிலும்
ஆகாஷ = ஆகாயம்
இரவ = தன் இருப்பிடமான
கொடுவந்ததலி = கொடுப்பதைப் போல
கொடுத = பரமாத்மன் கொடுத்தவாறு
நிராஷெயலி = பிறரிடம் தான் எவ்வித பிரதிபலன்களையும் எதிர்பார்க்காமல்
சர்வாந்தராத்மக = அனைவரின் அந்தர்யாமியாகி
சுகத = சுகங்களைக் கொடுத்தவாறு
ஷோபிஸுவ = ஒளிர்கிறான்.

சொம்பு, கிண்டி, தவலை ஆகியவை எப்படி வெவ்வேறு உருவங்களாக இருக்கிறதோ, அதே உருவத்தில் அவற்றில் எவ்வித இடைவெளியும் இன்றி, ஆகாயம் எப்படி வியாபித்திருக்கிறதோ, அப்படியே பரமாத்மன் ஜீவராசிகளின் ஸ்வரூப தேகங்கள், மற்றும் ஸ்தூல தேகங்களில் முழுமையாக வியாபித்திருக்கிறான். மற்றும் ஆகாயம் எப்படி அனைத்து பிராணிகளும் வசிப்பதற்கு இடத்தைக் கொடுக்கிறதோ, அதாவது சொம்பு முதலானவற்றில் ஆகாயம் நிறைந்திருந்தாலும், தண்ணீர் முதலானவற்றிற்கு இடம் கொடுக்கிறது. அதுபோலவே, பரமாத்மன் தான் லட்சுமிதேவியுடன் அனைத்து இடங்களிலும் நிறைந்திருந்தாலும், தமக்குள் அனைத்து பிராணிகளுக்கும் இருப்பிடம் கொடுத்து, அனைவருக்கும் சுகங்களைக் கொடுக்கிறான். அவர்களில் அந்தர்யாமியாகி இருந்து ஒளிர்கிறான்.

**ஶ்ரீவிரிஞ்சாத்[3]யமரக[3]ண ஸம்**
**ஸேவிதாங்க்[4]ரி ஸரோஜனீ ஜட[3]**
**ஜீவராஷிக[3]ளொள ஹொரகெ[3] நெலெஸித்து[3] நித்யத[3]லி ।**
**ஸாவகாஷனு எனிஸி தன்ன க**
**ளேவரத[3]ல்லிம்பி[3]ட்டு ஸலஹுவ**
**தே[3]வதே[3]வகிரமண தா[3]னவஹரண ஜிதமரண ||41**

ஸ்ரீவிரிஞ்சாதி = லட்சுமிதேவி, மற்றும் பிரம்மன் முதலானவர்கள்
அமரகண = தேவதா கணங்கள்
சம்ஸேவிதாங்க்ரி ஸரோஜ = நன்றாக வணங்கப்படும் பாத கமலங்களைக் கொண்ட ஸ்ரீஹரி
ஈ ஜட ஜீவராஷிகளு = மரங்கள், செடி கொடிகள் ஆகிய ஜட ராசிகளின்
ஒள ஹொரகெ = உள்ளே & வெளியே
நித்யதலி = தினந்தோறும்
நெலெஸித்து = நிலைத்திருந்து
ஸாவகாஷனு எனிஸி = தனக்குள் அவற்றிற்கு இடம் கொடுப்பவன் என்று பெயர் பெற்று
தேவ = ஸ்ருஷ்ட்யாதி கர்மங்களை செய்பவனான
தேவகிரமண = லட்சுமிபதி
தானவ ஹரண = தைத்யர்களை அழிப்பவன்
ஜிதமரண = மரணத்தை வென்றவன் (என்றால் மரணம் இல்லாதவன் என்று பொருள்)
தன்ன களேவரதல்லி = தன் தேகத்தில்
இம்பிட்டு = நன்றாக வைத்துக்கொண்டு (ஜட ஜீவராசிகளை)
ஸலஹுவ = காப்பாற்றுவான்.

ஜடஜீவிகள் என்றால் ஸ்தாவரங்கள் என்று பொருள். சேதன, ஜட என்று இரு விதங்கள் உண்டு. முந்தைய பத்யத்தில் சேதன ஜீவர்களில் பரமாத்மனின் இருப்பை விளக்கினார். லட்சுமிதேவியர், பிரம்ம முதலான தேவதா கணங்கள், ஆகியோரால் நன்றாக வணங்கப்படும் பாத கமலங்களைக் கொண்ட ஸ்ரீபரமாத்மன், ஜடஜீவரான என்றால், 'வனஸ்பத்யோஷ திலதாத்வக் ஸாராவீரு தாத்ருமா:' என்னும் பாகவத மூன்றாம் ஸ்கந்தம் வாக்கியத்தால், ஜடஜீவரில் 6 விதங்கள் உண்டு என்று சொல்கிறார். வெறும் ஜட என்றால், பானை, மலை, நம் தேகம் ஆகியவை ஆகும். ஜடஜீவர் என்றால் மேற்கூறிய 6 விதங்களான ஸ்தாவரங்கள் ஆகும்.

* வனஸ்பதி என்றால் 'பலந்தியே வினாபுஷ்ட்யேர்ஸ்தா வதந்தி வனஸ்பர்தீ' என்று மூன்றாம் ஸ்கந்தம் விஜயத்வஜீயத்தில் சொல்லியிருக்கிறார். அதாவது, பூ இல்லாமல் பழம் மட்டும் கொடுக்கும் பலாப்பழ மரம் ஆகியவற்றிற்கு வனஸ்பதி என்று பெயர்.
* 'பலபாகாந்தா ஓஷதய: வ்ரிஹ்யாதய:' பழம் ஆனதுமே உலர்ந்து போகும், அரிசி முதலான தானியங்களுக்கு ஔஷதி என்று பெயர்.
* லதா என்றால் கொடிகள்.
* த்வக்ஸார என்றால் மேலே கெட்டியாக இருந்து, உள்ளே ஒன்றும் இல்லாமல் இருப்பது. உதாரணம்: மூங்கில்.
* வீருத என்றால் தர்ப்பை, புல் முதலானவை.
* த்ருவ என்றால் புளி போன்ற மரங்கள்.

இப்படியாக 6 விதமான ஜடஜீவர்களின் உள்ளே வெளியேயும் ஸ்ரீபரமாத்மன் வசிக்கிறான். அல்லது தான் நிறைந்திருக்கும் இந்த பிரம்மாண்டத்தில் அவற்றிற்கு இடங்களைக் கொடுத்து, அவை தினந்தோறும் வளருமாறு செய்து, அவற்றை காக்கிறான். முக்தியிலும் இந்த ஜடஜீவர்களுக்கு தன் உலகத்தில், ப்ரளயத்தில் தன் தேகத்தில் இடத்தைக் கொடுத்து காப்பாற்றுகிறான் என்பது கருத்து.

தேவ தேவகிரமண என்று பரமாத்மனை அழைக்கிறார். 'திவாக்ரீடாயம்' என்னும் மூலத்திலிருந்து தேவ என்றால் ஸ்ருஷ்டிகர்த்தன் என்று பொருள் வருகிறது. தேவகிரமண என்று தாசராயர் சொல்கிறார். இதற்கு வியாக்யானகாரர் ஒருவர், தேவகியின் புத்திரன் என்று சொல்கிறார். தாசராயரின் விருப்பம், தேவகியின் புத்திரன் என்றே சொல்வதாக இருந்தால், தேவகி தனய என்றுதான் சொல்லியிருக்க வேண்டும். அப்படி சொல்லியிருந்தாலும், அதனால் எதுகை, மோனை எதிலும் குறை வந்திருக்காது. அப்படியும், தேவகிரமண என்று சொன்னதில் ஏதோ விசேஷம் இருக்க வேண்டுமென்றே தோன்றுகிறது.

பொதுவாக உலகத்தில் நந்தனா என்று குழந்தைகளையும், ரமணா என்று கணவனையும்தான் சொல்கிறார்களே தவிர, ரமணா என்று குழந்தைகளை குறிப்பதில்லை. 'நந்தயதீதி நந்தன' விளையாட்டுகளாலும், தன் குணங்களாலும், தன் பெற்றோரை மகிழ்ச்சிப்படுத்துவதால், குழந்தைகளுக்கு நந்தன என்ற பெயர் பொருந்தி வருகிறது. 'ரமுக்ரீடாயாம்' விளையாட வைப்பதால் ரமணா என்று பெயர். 'ரமயதீதி ராம:' என்று ராமாதி சொற்களுக்கு சொன்னதைப் போல, ரமண என்னும் சொல்லுக்கு சுகம் கொடுப்பவன் என்றும் ஏன் அர்த்தம் செய்யக்கூடாதென்றால், இதுவரை அப்படி யாரும் சொன்னதில்லை. லோக ரமணன் என்று சொன்னால், அது உலகத்தின் பதி என்றே அர்த்தம்.

மகிழ்ச்சி கொடுக்கிறான் என்னும் அர்த்தத்தினாலேயே, ரமண என்றால் மகன் என்று அர்த்தம் சொல்ல முடியவில்லை. பதி என்றாலும், பர்த்தா என்றாலும் அது மகனையும் குறிக்க முடியும். அது எப்படியெனில், 'பரணாத்பர்த்தா: பாலனாத்பதி:' இவை இரண்டும் காப்பாற்றுபவர்களுக்கான பெயர். மகன் பெரியவனானபிறகு தாயை காப்பாற்றுகிறான். அப்படியெனில், அவனை தாயின் பதிபர்த்தா என்று சொல்லவேண்டியிருக்கும். அர்த்தத்தில் சரியாக இருந்தாலும், உலக வழக்கத்தின்படி இது பயன்பாட்டிற்கு வருவதில்லை. தவறாகவும் தெரியும். ஆகையால், ரமண என்றால் பதி என்றே அர்த்தம் சொல்ல வேண்டும். ஆகையால் இங்கு தேவகிரமண என்றால் அது லட்சுமிபதி என்றே தாசராயரின் அபிப்பிராயமாக இருக்க வேண்டும் என்று ஊகிக்க வேண்டும். தேவகி என்றால் லட்சுமி என்று எங்கு இருக்கிறதென்றால்:

பாகவத 1ம் ஸ்கந்தம் 8ம் அத்தியாயம் 24ம் ஸ்லோகம்:

க்ருஷ்ணாய வாசுதேவாய தேவகி நந்தனாயச |
நந்தகோப குமாராய கோவிந்தாய நமோ நம: ||

இதில் தேவகினந்தனாய என்னும் சொல்லிற்கு, விஜயத்வஜீய வியாக்யானத்தில்:

தேவகி லட்சுமி:தானந்தயிதும் ஷீலமஸ்யேதி தேவகி நந்தன:

தேவகி என்றால் லட்சுமி. அவளுக்கு மகிழ்ச்சியைக் கொடுக்கும் யோக்யதை இவனில் இருப்பதால், இவனுக்கு தேவகி நந்தன என்றும், லட்சுமிபதி என்றும் பெயர்.

மேலும்:

தேவானாம் கம் சுகம் தாதும் ஷீலமஸ்யா அஸ்தீதி தேவகீ லக்ஷ்மீ: ||

கம் என்றால் சுகம். தேவதைகளுக்கு சுகத்தைக் கொடுக்கும் யோக்யதை இவளுக்கு இருப்பதால், லட்சுமிதேவிக்கு தேவகி என்று பெயர். அல்லது,

தேவவத் கம் யஸ்யா: ஸா தேவகி ||

அதாவது, பரமாத்மனுக்கு அர்த்தாங்கினியான காரணத்தால், பரமாத்மனைப் போல சுகங்களைப் பெற்றிருப்பதால், லட்சுமிதேவிக்கு தேவகி என்று பெயர் உண்டு. இப்படியாக, தேவகி நந்தன என்றால் லட்சுமிபதி என்று அர்த்தம் சொல்லலாம். இதே ஆதாரத்தின் பேரிலேயே தாசராயர், தேவகிரமண என்று பிரயோகம் செய்திருக்கிறார் என்று நிச்சயமாக தெரிகிறது.

**மாஸ ஒந்த$^3$கெ ப்ரதி தி$^3$வஸத$^3$லி**
**ஷ்வாஸக$^3$ளஹவு அஷ்ட சத்வா**
**ரிம்ஷதி ஸஹஸ்ராதி$^4$கா$^1$ரு ஸூலக்ஷ ஸங்க்$^2$யெயலி |**
**ஹம்ஸ நாமக ஹரிய ஷோட$^3$ஷ**
**ஈ ஷதாப்$^3$த$^3$தி$^3$ ப$^4$ஜிஸெ ஒலிவ த$^3$**
**யா ஸமுத்$^3$ர குசேலகொ$^3$லித$^3$ந்த$^3$த$^3$லி தி$^3$னதி$^3$னதி$^3$ ||42**

மாஸ ஒந்தகெ = ஒரு மாத காலத்தில்
பிரதி திவஸகெ = ஒரு நாள் கணக்கில்
அஷ்டசத்வாரிம்ஷதி சஹஸ்ராதிகாரு சுலக்ஷ = 6,48,000
சங்க்யெயலி = எண்ணிக்கையில்
ஷ்வாஸகளஹவு = மூச்சுகள் விடுகிறோம் (ஆகிறது)
ஷோடஷ ஈ ஷதாப்ததி = இந்த 116 ஆண்டுகளில்
ஹம்ஸ நாமக ஹரிய = ஹம்ஸ நாமக ஹரியை
பஜிஸெ = இந்த மொத்த ஆண்டுகளில் துதித்தால்
தினதினதி = எப்போதும்
குசேலகொலிதந்ததலி = குசேலனுக்கு தரிசனம் அளித்ததைப் போல
தயாசமுத்ர = கருணாசமுத்திரனான ஸ்ரீஹரி
ஒலிவ = தரிசனம் அளித்து அருள்வான்.

ஒரு நாளுக்கு நாம் விடும் ஸ்வாசங்கள் 21,600. இதை, பிராணதேவர் நமக்குள் இருந்து செய்விக்கும் ஹம்ஸ மந்திர ஜெபம் என்று முதலாம் மங்களாசரண

சந்தியில் ‘ஆரு மூரெரெடொந்து சாவிர’ என்னும் பத்யத்தில் பார்த்தோம். இப்படியாக ஒரு நாளுக்கு 21,600; மாதத்திற்கு 21,600 * 30 = 6,48,000 ஸ்வாசங்கள் ஆகிறது. மேற்சொன்ன 116 ஆண்டுகளில், ஒவ்வொரு நாளும் நாம் இந்த மூச்சினை, ஸ்ரீஹம்ஸ நாமக பரமாத்மனின் மந்திர உபாசனை என்று அறிந்து துதித்தால், குசேலன் என்னும் பிராமணனுக்கு ஸ்ரீகிருஷ்ணன் அருளி, இஹபரங்களைக் கொடுத்ததைப் போல, நமக்கும் அருள்வான்.

**ஸ்தூ2ல தே3ஹதொ3ளித்து3 வருஷக்கெ**
**ஏளதி4க வெப்பத்து லக்ஷத3**
**மேலெ எப்பத்தாரு ஸாவிர ஷ்வாஸ ஜபக3ளனு ।**
**கா3ளிதே3வனு கருணத3லி ஈ**
**ரேளு லோகதொ3ளுள்ள சேதன**
**ஜாலதொ3ளு மாடு3வனு த்ரிஜகத் வ்யாப்த பரமாப்த ।।43**

ஸ்தூல தேஹதொளித்து = ஸ்தூல தேகத்தில் இருந்து
வர்ஷக்கெ = 1 ஆண்டிற்கு
ஏளதிக வெப்பத்து லக்ஷத மேலே எப்பத்தாரு ஸாவிர = 77,76,000
ஷ்வாஸ ஜபகளனு = ஸ்வாச ஜெபங்களை
காளிதேவனு = பிராணதேவர்
கருணதலி = எவ்வித பலன்களையும் எதிர்பாராமல் வெறும் கருணையுடனே
ஈரேளு லோகதொளுள்ள = 14 உலகங்களிலும் உள்ள
சேதன ஜாலதொளு = ஜீவர்களின் ஸ்தூல தேகத்தில் இருந்து
த்ரிஜத் வ்யாப்த = மூன்று உலகங்களிலும் வியாப்தனாகி
பரமாப்த = அனைவருக்கும் பரம நண்பனாக இருப்பவன்
மாடுவனு = செய்கிறான்.

வாயுதேவர், 14 உலகங்களிலும் நிலைத்திருந்து, அனைத்து பிராணிகளுக்கும் பரம நண்பராகி, 14 உலகங்களிலும் இருக்கும் அனைத்து பிராணிகளின் ஸ்தூல தேகங்களில் இருந்து, அந்த பிராணிகளிடமிருந்து தான் எவ்வித பிரதிபலன்களையும் எதிர்பாராமல், பகவத் ஆஞ்யையின்படி, பகவந்தனின் அன்பிற்காக, தன் கருணையால் மாதம் ஒன்றிற்கு 6,48,000 ஸ்வாசங்கள் என ஒரு ஆண்டிற்கு 77,76,000 ஸ்வாசங்களை தான் செய்து, ஜீவர்களால் செய்விக்கிறார். இந்த ஸ்வாச ஜப மந்திரங்கள் ஆகியவற்றை, மங்களாசரண சந்தியில் ‘ஆரு மூரெரெடொந்து சாவிர’ என்னும் பத்யத்தின் விளக்கத்தில் பார்த்திருக்கிறோம்.

**ஈரெரடு3 தே3ஹக3ளொளித்து3 ஸ**
**மீரதே3வனு ஷ்வாஸஜப நா**
**நூரதி4க வாகி3ப்ப எம்ப3த்தாரு ஸாஹஸ்ர ।**
**தா ரசிஸுவனு தி3வஸ ஒந்த3கெ**
**மூருவித4 ஜீவரொளகி3த்து3 க2**
**ராரி கருணாப3லவ தெ3ந்து1டோ பவனராயரொளு ।।44**

மூருவித ஜீவரொளு = சாத்விக, ராஜஸ, தாமஸ என்னும் மூன்று வித ஜீவர்களில்
இத்து = இருந்து
ஆ ஜீவர ஈரெரடு தேஹதொளு = ஸ்வரூப, லிங்க, அனிருத்த, ஸ்தூல என்னும் நான்கு தேகங்களிலும் இருந்து
ஸமீரதேவனு = வாயுதேவர்
நானூரதிகவாகிப்ப எம்பத்தாரு ஸஹஸ்ர = 86,400
ஸ்வாசஜப = ஸ்வாச ஜபங்களை
திவஸ ஒந்தகெ தா ரசிஸுவனு = தினந்தோறும் தான் செய்கிறான்
பவனராயரொளு = வாயுதேவரில்
கராரி = கர என்னும் அசுரனைக் கொன்ற ஸ்ரீராமதேவர் என்றால் ஸ்ரீபரமாத்மன்
கருணாபலவதெந்துடோ = கருணாபலமானது எவ்வளவு என்று சொல்லவும் முடியுமோ? என்றால், பகவந்தனின் சம்பூர்ண அருளுக்குப் பாத்திரர் என்று அர்த்தம்.

வாயுதேவர் அனைத்து பிராணிகளிலும் இருந்து, ஷ்வாஸ ஜபங்களை செய்விப்பது, இந்த ஸ்தூல தேகங்களில் மட்டுமல்ல. ஸாத்விகாதி மூன்றுவித ஜீவர்களுக்கும், ஸ்வரூப தேகம், லிங்க தேகம், அனிருத்த தேகம், ஸ்தூல தேகம் என்று 4 வித தேகங்கள் உண்டு. இந்த 4 தேகங்களிலும் இருந்து, ஒரு சரீரத்திற்கு ஒரு நாளில் 21,600 ஸ்வாசங்கள் என்று 4 தேகங்களில் ஒரு நாளுக்கு 96,400 ஜபங்களை செய்கிறார்.

எந்த ஸ்ரீராமன், ராமாவதாரத்தில் ஹனுமந்தனுக்கு பரமானுக்கிரகம் செய்தானோ, அதே பரமாத்மனே மூலரூபத்தினால், மூலரூபியான வாயுதேவருக்கு முழுமையான கருணையைக் காட்டியிருக்கிறார். அந்த கருணாபலம் எவ்வளவு என்பதை வர்ணிப்பது யாருக்குதான் சாத்தியம்? அதாவது, வாயுதேவர் பகவந்தனின் முழுமையான கருணாபலத்திற்குப் பாத்திரரானவர் என்று அர்த்தம்.

**ஸ்ரீத4வ ஜகன்னாத2 விட்டல**
**தா த3யதி3 வத3னதொ3ளு நுடிதோ3**
**பாதி3யலி நா நுடி3தெ3னல்லதெ3 கே1ளி பு3த4ஜனரு ।**
**ஸாது4லிங்க3 ப்ரத3ருஷகரு நி**
**ஷேதி4ஸிதரேனஹுது3 என்னப**
**ராத4வேனித3ரொளகெ3 பேள்வுது3 திளித3 கோவித3ரு ।।45**

ஸ்ரீதர = லட்சுமிதேவியை தன் மார்பில் தரித்திருக்கும்
ஜகன்னாதவிட்டலனு = பிம்பமூர்த்தியான ஜகன்னாத விட்டலன் என்னும் பரமாத்மன்
தா = தான்
தயதி = கருணையால்
வதனதொளு = நான் வாயில் இருந்து
நுடிதோபாயதலி = சொல்லியதைப் போல
நா = நான் சொல்கிறேன்
அல்லதெ = தவிர, நான் ஸ்வதந்த்ரமாக எதையும் சொல்ல முடியாதவன்

புதஜனரு = ஞானிகள்
கேளி = கேட்டு
ஸாதுலிங்க ப்ரதர்ஷகரு = சாதுகளைப் போல வேடம் தரித்தவர்கள்
நிஷேதிஸிதரெ = இது சரியில்லை என்று சொன்னீர்களேயானால்
ஏனஹுது = என்ன ஆகும்
இதரொளகெ = இதில்
என்னபராதவேனு = என் தவறு என்ன இருக்கமுடியும்?
கோவிதரு = ஞானிகள்
பேள்வுது = சொல்ல வேண்டும்.

ஜகன்னாதவிட்டலனான ஸ்ரீதரன், என் வாயில் இருந்துகொண்டு கூறுவதைப் போல நான் சொல்கிறேனே தவிர, என் ஸ்வதந்த்ர புத்தியினால் இந்த கிரந்தத்தில் நான் எதையும் சொல்லவில்லை. இதை ஞானிகள் தெரிந்து கொள்ளட்டும். சஜ்ஜனர்களைப் போலவோ, தபஸ்விகளைப் போலவோ வேடம் தரித்த சிலர் என்றால், அந்த:சுத்தி (அந்தரங்க) இல்லாதவர்கள் இந்த கிரந்தத்தை திட்டுவார்கள். ஆகையால் ஆவது என்ன? இதில் என்னுடைய தவறு என்ன? ஞானிகள் இதனை யோசிக்க வேண்டும். என்று தாசராயர், இந்த கிரந்த கர்த்ருத்வ சக்தியானது, தமக்குள் அந்தர்யாமியாக இருக்கும் பகவந்தனே தவிர, தமது சொந்த கருத்து எதுவும் இதில் கொஞ்சம்கூட இல்லை என்று அனைத்தையும் பரமாத்மனுக்கே சமர்ப்பிக்கிறார்.

நாடிப்ரகரண சந்தி என்னும் 12ம் சந்தியின் தாத்பர்யம் இத்துடன் முடிவுற்றது.

ஸ்ரீகிருஷ்ணார்ப்பணமஸ்து.
***

## பாவபிரகாசிகை : சந்தி 13 : நாமஸ்மரண சந்தி

**ஹரிகதா²ம்ருதசார கு³ருக³ள**
**கருணதிந்தா³பநிது பே¹ளுவே**
**பரம ப⁴கவத்³ப⁴க்தரித³னாத³ரதி கேளுவுது³**

இந்த கலியுகத்தில், மற்ற அனைத்து சாதனங்களைவிட நாமோச்சாரணத்தை மட்டும் பக்தியினால் செய்தால், அதற்கு சமமான வேறெதுவும் இல்லை என்பதை

நாம்னாஸ்தி யாவதீ ஷக்தி: பாப நிர்ஹரணேஹரே: ।
தாவத்கர்த்தும் நஷக்னோதி பாதகம் பாதகீஜன: ।।

பரமாத்மனின் நாமத்தை பக்தியினால் உச்சரித்தால், அது எவ்வளவு பாவங்களை பரிகரிக்கிறதோ, அவ்வளவு பாவங்களை மனிதன் தன் ஆயுளில் செய்வதற்கு சாத்தியம் இல்லை என்று ஸ்ரீமதாசார்யர் கூறுகிறார். ஆகையால், தாசராயர்

நாமஸ்மரணையின் மகிமையையும் அதனை செய்யும் விதத்தையும் இங்கு சொல்கிறார்.

சத்சாதனைக்கு முக்கிய காரணமான பகவத்பக்தர்களின் மகிமை எத்தகையது என்னும் விஷயத்தையும், புண்ணிய பாவங்களின் விவரத்தையும், பஞ்ச-பௌதிகரான ஜீவர்களின் போஜ்ய பதார்த்தங்களில் செய்ய வேண்டிய அனுசந்தான கிரமத்தையும், ஸ்ரீபரமாத்மனை அடையும் விதத்தையும் இந்த சந்தியில் தாசராயர் விளக்குகிறார். முதல் பத்யத்தில், சந்தியின் நோக்கத்தை விளக்கியவாறு, எந்த ரீதியில் நாமஸ்மரணை செய்தாலும் மகாபலன்கள் கிடைக்கிறது என்று சொல்கிறார்.

**மக்களாடி$^3$ஸுவாக$^3$ மட$^3$தி$^3$யொ**
**ளக்கரதி$^3$ நலிவாக$^3$ ஹய ப**
**ல்லக்கி க$^3$ஜமொத$^3$லாத$^3$ வாஹனவேரி மெரெவாக$^3$ |**
**பி$^3$க்குவாக$^3$ ஆகளிஸுதலி தே$^3$**
**வக்கிதனயன நெனெவுதிஹ நர**
**ஸிக்கனெம தூ$^3$தரிகெ$^3$ ஆவாவல்லி நோடி$^3$த$^3$ரு ||1**

மக்களாடிசுவாக = குழந்தையை தொட்டிலில் போட்டு தாலாட்டும்போது, அவர்களுடன் விளையாடும்போது, அவர்களுடன் மகிழ்ந்திருக்கும்போது,
மடதியொள் = மனைவியுடன்
அக்கரதி = அன்புடன்
நலிவாக = போகிக்கும் காலத்திலும்
ஹய = குதிரை
பல்லக்கி = பல்லக்கு
கஜ மொதலாத = யானை முதலான
வாஹனவேரி மெரெவாக = இத்தகைய பல்லக்கில் ஏறிச் செல்லும்போது
பிக்குவாக = விக்கல் வரும்போது
ஆகளிஸுதலி = கொட்டாவி விடும்போது
தேவக்கி தனயன = தேவகி மகனான ஸ்ரீகிருஷ்ணனை
நெனெவுதிஹ = நினைக்கும்
நர = ஜீவன்
ஆவாவல்லி நோடிதரு = எங்கு பார்த்தாலும்
யமதூதரிகெ = யமதூதர்களிடம்
சிக்கனு = சிக்க மாட்டான்.

ஸ்ரீபரமாத்மனின் நாமஸ்மரணையை செய்வதற்கு, ஸ்னானாதிகளை செய்து ஜபத்தை செய்ய வேண்டும், இத்தகைய காலத்திலேயே செய்ய வேண்டும். மற்ற நேரத்தில் செய்யக்கூடாது என்றெல்லாம் கிடையாது. ஸ்மரணை செய்வதற்கு அனைத்தும் தகுந்த காலமே. கருட புராணத்தில்:

புத்ராதீனாம் சும்பனேச்யைவ காலெ ஸவேணு ஹஸ்தம் ஸஸ்மரேத்க்ருஷ்ணமேவ |
ஸுசங்ககாலெ ஸ்வஸ்தியஸ்சைவ நித்யம் கோப ஸ்த்ரீணாம் பீனபயோதரம் த்ருதம் ||

குழந்தைகளைக் கொஞ்சும்போது வேணுகோபால கிருஷ்ணனை நினைக்க வேண்டும். தன் மனைவியுடன் போகிக்கும் காலங்களில், கோபிகாஸ்த்ரியர்களின் மார்பில் சாய்ந்திருக்கும் ஸ்ரீகிருஷ்ணனை நினைக்க வேண்டும் என்று சொல்லப்பட்டிருக்கிறது.

இதே அர்த்தத்தையே தாசராயர் இந்த பத்யத்தில் கூறியிருக்கிறார். குழந்தைகளுடன் விளையாடும்போது, பகவந்தனே சிசு ரூபத்தில் இருந்து அப்படி விளையாட வைக்கிறான் என்று நினைக்க வேண்டும். மனைவியுடன் போகிக்கும் காலங்களில், தம்பதிகளில் தம்பதி ரூபியாக பரமாத்மன் இருந்து செயல்களை செய்விக்கிறான் என்று பரமாத்மனை நினைக்க வேண்டும்.

ஆஸீன: ஸம்விஷம்ஸ்த்ரிர்ஷ்ட புஞ்சான: பர்யர்ட பிபன் |
சிந்தயானோ ஹ்ருஷீகேஷ மபஷ்யத்தன்மயம் ஜகத் ||

என்னும் பாகவத 10ம் ஸ்கந்த வாக்கியத்தின்படி அமர்ந்திருக்கும்போதும், தூங்கும்போதும், நிற்கும்போதும், உண்ணும்போதும், நடக்கும்போதும், குடிக்கும்போதும், பரமாத்மனை நினைத்தவாறு, உலகம் முழுவதையும் பரமாத்மனாகவே பார்த்தான் என்று சொல்லியிருக்கிறார்கள். மேலும் ஆறாம் ஸ்கந்தத்தில்:

பதித:ஸ்கலிதோ பக்ன: ஸந்தஷ்டஸ்தப்த ஆஹத: |
ஹரிரித்யவஷேனாஹ புமான்னார்ஹதி யாதனாம் ||

வேண்டும்போதும், ஏதாவது காயம் பட்டாலும், உதட்டை கடித்துக் கொண்டாவது, திட்டு வாங்கும்போதும், ஐயோ அப்பா என்று சொல்லாமல் ஹரே ஹரே என்றால் போதும். அவன் யம பட்டண யாத்திரையை செய்ய மாட்டான் என்கிறார். அதாவது 'அபக்தோ தாஹ்ருதம் நைவபலதாத்ரு பவிஷ்யதி' என்னும் 6ம் ஸ்கந்த வியாக்யானத்திற்கேற்ப, பக்தியில்லாமல் நாமோச்சாரணை செய்தால், பலன் வருவதில்லை என்று ஸ்பஷ்டமாக சொல்லியிருப்பதால், பக்தியுடன் மட்டுமே மேற்சொன்ன மாதிரி நாமோச்சாரணை செய்தால், யமதூதர்களை ஒருவன் பார்ப்பதில்லை போலவே தாசராயர், குதிரையின் மேலும், பல்லக்கியிலும், யானை முதலான வாகனங்களின் மேல் அமர்ந்து போகும்போதும், பரமாத்மனை பக்தியுடன் நினைக்கும் மனிதன் யமதூதர்களுக்கு சிக்க மாட்டான் என்கிறார். பாகவத 6ம் ஸ்கந்தத்தில்:

ஸக்ருன்மன: கிருஷ்ண பதாரவிந்த யோர்னிவேஷிதம் தத்குணராகியைரிஹ |
நதே யமம் பாஷப்ருதஸ்ச தத்பர்டா ஸ்வப்னேபி பஷ்யந்தி ஹிசீர்ண நிஷ்க்ருதா: ||

பரமாத்மனின் பாதாரவிந்தங்களில் மனதை வைத்து, ஒரு முறையாவது பரமாத்மனின் குணங்களை, அர்த்தங்களை அறிந்து உச்சரித்தால், அவன் யமனை மட்டுமல்ல, பாசக்கயிறைக் கொண்ட யமதூதர்களையும்கூட பார்ப்பதில்லை. ஏனெனில், இதனால் அவன் பிராயச்சித்தம் செய்தது போலாகிறது என்று சொல்கிறார். அதே அபிப்பிராயத்தையே ‘சிக்குவனே யமதூதரிகெ ஆவல்லி நோடிதரு’ என்று தாசராயர் கூறியிருக்கிறார்.

**ஸரிது3 ப்ரவஹக3ளல்லி தி3வ்யா**
**ம்ப3ரதி3 ப1த்1ராதி3யலி ஹருஷா**
**மருஷ விஸ்ம்ருதி1யிந்த3லாக3லி ஒம்மெ பா3ய் தெரது3 ।**
**ஹரி ஹரி ஹரியெம்ப3 எரட3**
**க்ஷர நுடித3 மாத்ரத3லி து3ரிதக3**
**ளிரதெ3 போபுவு தூ1லராஷியொளனல பொக்கந்தெ ।।2**

ஸரித்ப்ரவஹகளல்லி = ஆறுகளில் குளிக்கும்போது
திவ்யாம்பரதி = புதிய ஆடைகளை அணிவதற்காக கிழிக்கும்போது
பத்ராதியலி = இலை பறிக்கும்போது
ஹர்ஷாமருஷ விஸ்ம்ருதியிந்தலாகலி = கர்வத்துடனோ, கோபத்துடனோ, ஏதோ ஒரு காரணத்தாலும்
ஒம்மெ = ஒரு முறை
பாய் தெரது = வாய் திறந்து
ஹரி ஹரி எம்ப எரடக்ஷர = ஹரி என்னும் இரு எழுத்துக்கள்
நுடித மாத்ரதி = சொன்ன உடனேயே
துலராஷியொளு = பஞ்சுக் குவியலில்
அனல பொக்கந்தெ = நெருப்பு வைத்ததைப் போல
துரிதகளு = பாவங்கள்
இரதெ போபவு = சுட்டுப் போகின்றது.

ஆற்றில் நீர் பாயும்போது அதைப் பார்த்து தண்ணீர் பாய்கிறது (கன்னடத்தில் : ஹரிகிறது) என்று சொல்லும்போது அதில் இருக்கும் ஹரி என்னும் சொல், புதிய ஆடையை உடுத்தும்போது கிழி என்று சொல்லும்போது (கன்னடத்தில் : ஹரி) என்று சொல்லும்போது அதில் இருக்கும் ஹரி என்னும் சொல், இலையைப் பறி (கன்னடத்தில்: ஹரி) என்று சொல்லும்போது அதில் இருக்கும் ஹரி என்னும் சொல், ஆகியவற்றில் நம் முயற்சி இல்லாமலேயே நம் வாயிலிருந்து வரும் ஹரி என்னும் சொல் அதிக பலன்களைக் கொடுக்கக்கூடியது.

கர்வத்தினாலோ, கோபத்தினாலோ, ஏதோ ஒரு காரணத்தால் சுயநினைவு இல்லாதபோதோ, ஒரு முறை வாய் திறந்து, அதாவது சத்தமாக, ஹரி ஹரி ஹரி என்று உச்சரித்தால், பஞ்சுக் குவியலில் நெருப்பு வைத்ததைப் போல, பாவங்கள் அனைத்தும் சுட்டுப் போகின்றன என்கிறார். இதில் ஒரு சிறப்பினை கவனிக்க வேண்டும். நாம் செய்வது ஹரிஸ்மரணை என்றே நமக்குத் தோன்றாமல்,

இலையைப் பறி (ஹரி) என்று சொன்ன உடனேயே, பாவராசிகள் அனைத்தும் சுட்டுப் போகின்றன என்று அர்த்தமல்ல. இலையைப் பறி என்று சொல்லும்போது, அதில் இருக்கும் ஹரி சொல், அதன் அர்த்தஞானத்துடன், பாவத்தை அழிப்பதால் ஹரி என்று பரமாத்மனுக்கு பெயர் வந்தது என்னும் ஞானத்தை உடனடியாக மனதில் கொண்டு வந்து, அதே ஹரி சொல், இங்கும் பயன்பட்டிருக்கிறது என்று நினைக்க வேண்டும். அதாவது, நதி ஓடுகிறது (ஹரி) என்று சொல்லும்போது, தானாகவே வரும் ஹரி சொல், ஸ்ரீஹரியை நினைத்துக் கொள்வதற்கு உதவி செய்கிறது என்பதே இதன் பொருள்.

இப்படியாக கூறினால், தாசராயரின் கருத்துக்கு விரோதம் வருகிறது என்று நினைக்கக்கூடாது. ஏனெனில், இதே அபிப்பிராயத்தை வைத்தே தாசராயரும் இந்த பத்யத்தை இயற்றியிருக்கிறார் என்பது நிச்சயம். ஏனெனில், பாகவத 6ம் ஸ்கந்த, அஜாமிளனின் சரித்திர சமயத்தில்:

ஸாங்கேத்யம் பாரிஹாஸ்யம் வாஸ்தோபம் ஹேளனமேவவா |
வைகுண்டனாம க்ரஹணமஷேஷாகஹரம்விது: ||

என்று பாகவதத்தில் சொல்லியிருக்கிறார்கள். இதன் அர்த்தத்தை பொதுவாக பார்த்தால், இவன் யார் என்று மற்றவர்கள் அறிவதற்கு, இவனுக்கு ராம, கிருஷ்ண என்று பெயர் வைத்திருக்கிறார்கள். அந்தப் பெயரை வைத்து யாரையாவது அழைத்தால், ஹே ராம, ஹே கிருஷ்ண என்று அழைத்தால், ராம கிருஷ்ண பெயர் வைத்திருக்கும் ஒருவனை கேலி செய்தால், அவனை திட்டும்போது, அவன் மேல் கோபப்படும்போதும், இப்படி ஏதோ ஒரு காரணமாக பரமாத்மனின் பெயர், நம் வாயிலிருந்து வந்தால் போதும். அனைத்து பாவங்களும் சுட்டுப் போகின்றது என்று பாகவத கர்த்தரான வேதவியாஸ தேவர் சொல்லியிருக்கிறார். அதற்கு ஸ்ரீமதாசார்யர் இயற்றிய தாத்பர்யத்தை அனுசரித்து எழுதிய, விஜயத்வஜீய வியாக்யானத்தில் இதன் அர்த்தத்தை இவ்வாறு சொல்லியிருக்கிறார்.

தம் மக்களை அவர்களின் பெயர்களை சொல்லி, ஹே ராம, ஹே கிருஷ்ணா என்று அழைத்தால் போதும். அதற்கே அனைத்து பாவங்களும் சுட்டுப் போகின்றன என்று அர்த்தமல்ல. சாங்கேத்யம் என்றால் மக்கள், ராம என்று அழைக்கும்போது இப்படி சிந்திக்க வேண்டும்.

அவர்களுக்கு பெயர் வைக்கும்போது, ஸ்ரீஹரியின் பெயர்களை வைக்கும் காரணம் என்ன? நாம் சம்சாரத்தில் மெய்மறந்து மூழ்கியிருக்கும்போதும், மக்களின் பெயர்கள் மூலமாக அந்த பெயர் நமக்கு நினைவுக்கு வரட்டும் என்னும் நோக்கத்திற்கே. ஆகவே, ராம என்று மகனை அழைக்கும்போது, 'ரமயதீதி ராம:' உலகத்தில் இருக்கும் அனைவருக்கும் மகிழ்ச்சியைக் கொடுக்கும் குணம் இவனிடம் இருப்பதால், பரமாத்மனுக்கு ராமன் என்று பெயர், என்று நினைத்தவாறு, மகனை அழைக்கும்போதெல்லாம் இப்படி பரமாத்மனை நினைக்க வேண்டும் என்பது கருத்து. அப்படியெனில், அஜாமிளன் தன் இறுதிக்காலத்தில் தன் மகனை நாராயணா என்று அழைத்த மாத்திரத்தில், விஷ்ணு தூதர்கள் அவனை அழைத்துப்

போயினரே? அவனுக்கு எப்படி சத்கதி உண்டாயிற்று? என்றால், அவன் தன் மகனை அழைக்கவில்லை.

தூரே க்ரீடனகாஸக்தம் புத்ரம் நாராயணாஹ்வயம் |
ப்லாவிதேன ஸ்வரேனோச்சை ராஜுஹாவாகுலேந்த்ரிய: ||

யமதூதர்களை பார்த்த மாத்திரத்தில், மகனிடம் வாத்ஸல்யம் பிறந்து, தூரத்தில் விளையாடிக் கொண்டிருந்த தன் மகனான நாராயணனை, தழுதழுத்த குரலில் நாராயணா என்று அழைத்தான் என்று ஸ்லோக அர்த்தம் சொல்கிறது.

இதைப் போலவே இதன் முந்தைய ஸ்லோகத்தில் 'மதிஞ்சகாரதனயே பாலேனாராயணாஹ்வயே' பாசக்கயிறுடன், பயங்கரமான மூன்று யம தூதர்களை, கண்ணில் பார்த்த உடனேயே சிறுவனான நாராயணன் என்னும் தன் மகனை நினைத்தான் என்று அர்த்தம் சொல்லலாம். அதாவது, யமதூதர்களை கண்ணில் கண்டவுடன், பயத்தினால், மகன் மேல் உள்ள பாசத்தினால் மகனை அழைக்க நினைத்தான்.

அதற்குள், இவனது வினைப்பயனின் காரணமாக, இவன் யோக்ய ஜீவன் ஆன காரணத்தால், நாராயண என்னும் மகனை எப்போது அழைக்க முற்பட்டானோ, அப்போதே அவனுக்கு பரமாத்மனின் நினைவு வந்தது. ஆகையால், 'மதிஞ்ச காரதனயே பாலே நாராயணாஹ்வயே'. தனய என்றால், 'தனுவிஸ்தாரே, யீதிஞானம் ஸமுத்திஷ்டம்'. அதாவது ஞானம், விஸ்தாரமான ஞானம் உள்ளவன் என்று அர்த்தம். பால என்றால், ப்ராதேஷ நாமகனாகி, 5 வயது சிறுவனைப் போல நம் இதய கமலத்தில் ஒளிர்ந்து கொண்டிருக்கும் சிறுவன் என்று பரமாத்மனுக்குப் பெயர். இத்தகைய பால நாமகனான, விஸ்தாரமான ஞானமுள்ள நாராயணனில் மனதை வைத்தான் அஜாமிளன். தூரேக்ரீடனகாஸக்தம் - தூரத்தில் அதாவது, பிரம்மாண்டத்தின் வெளியில் விளையாடிக் கொண்டிருக்கிறான். என்ன விளையாட்டு? ஸ்ருஷ்டிப்பது; அழிப்பது; இத்தகைய விளையாட்டுக்கள்.

புன்னாம்னோ நரகாத்ராதா புத்ர இத்யாபி ஷப்த்யைதே - புத் என்னும் நரகத்திலிருந்து விடுவிக்கிறான் ஆகையால் பரமாத்மனுக்கு புத்ர என்று பெயர். இத்தகைய புத்திரனான நாராயணனை, தன் உச்ச குரலில் அழைத்தான் அஜாமிளன். அப்போது விஷ்ணு தூதர்கள் வந்தனர் என்று உரை எழுதியிருக்கின்றனர். ஆகையால் 'ஸாங்கேத்யாம்' என்றாலும் பரமாத்மனின் பெயர் நினைவுக்கு வருவதற்காக இந்த பெயரை நினைத்து குழந்தைகளை அழைத்தால், பரமாத்மனின் நாமம் நினைவுக்கு வரவேண்டும் என்பது அர்த்தம்.

பாரிஹாஸ்யம்வா என்றால், பரமாத்மனின் பெயர் உள்ள ஒருவரை கேலியாகவும் அவர் பெயரை சொன்னால் போதும் என்னும் அர்த்தமல்ல. நாராயண என்னும் பெயருள்ள ஒருவரை கேலி பேசும்போது, 'ஓஹோ. இவன்தானா நாராயணன்? பாற்கடலில் படுத்திருப்பவனா இவன்? முட்டாளே. வீட்டில் மோருக்கு வழியில்லை. இவனுக்கு நாராயணன் என்று பெயர். அந்த ஸ்வாமி பாற்கடலில் படுத்திருக்கிறான். முக்தர்களின் கதியானவன். தோஷங்கள் இல்லாதவன்.

இவனோ? என்று கேலி பேசும்போதும், நாராயணன் முக்தர்களின் கதி, ஆகிய நாராயணனின் குணங்களை நினைவுக்குக் கொண்டு வரவேண்டும். இதனால், பாவங்கள் பரிகாரம் ஆகின்றன என்று பொருள்.

ஸ்தோபம் என்றால் கோபம் வரவழைப்பது அல்லது திட்டுவது என்று அர்த்தம். மதுசூதனன் என்னும் பெயருள்ள ஒருவரை திட்டி, அவருக்கு கோபம் வரவழைப்பது. அப்போதாவது நம் ஸ்வாமி மது என்னும் தைத்யனைக் கொன்றான். அவனுக்கு மதுசூதனன் என்று பெயர் வந்தது. ஹே பாபி. நீ எத்தகைய மதுசூதனன். மது என்றால் தேன். அதனைக் கொல்லும் யோக்யதையும் உனக்கில்லை. இப்படி இருக்கையில், உன் பெயர் மதுசூதனனா? என்று ஒருவரை திட்டும்போதும், பரமாத்மனின் மகிமை, குணங்களை நினைத்தால் செய்த பாவங்கள் தீர்கின்றன என்ற அர்த்தம்.

இவையல்லாமல், நாராயணாதி பெயருள்ள ஒருவரை திட்டும்போது, அந்தப் பெயர் வந்தால் போதும், பாவங்கள் அனைத்தும் போகின்றன என்றால், இந்த உலகத்தில் பாவிகளே இருக்கமாட்டார்கள். துரியோதனாதிகள் எவ்வளவோ முறை ஸ்ரீகிருஷ்ணனின் பெயரை சொல்லியிருக்கின்றனர். இறக்கும்போது, ஸ்ரீகிருஷ்ணனின் அருகிலேயே இறந்திருக்கின்றனர். ஆனாலும், அவர்களுக்கு முக்தி கிடைக்கவில்லை. ஆகையால், அ-பக்தியினால் உச்சரிக்கும் பெயர்களுக்கு பலன் இல்லை என்கிறார்.

அப்படியிருக்கையில், இலையைக் கிழி (ஹரி), நதி பாய்கிறது (ஹரி), என்று சொன்ன மாத்திரத்திலேயே, இவனுக்கு சத்கதி என்று தாசராயர் சொல்லியிருக்க வாய்ப்பே இல்லை. வியாச வாக்கியத்தைப் பார்த்து, ஸ்ரீமதாசார்யருக்கு தோன்றிய அர்த்தத்தை விட்டு, வேறு அர்த்தத்தை அதாவது வியாச வாக்கியத்திற்கு எதிரான அர்த்தத்தை அவர் எழுதினார் என்று சொல்வது எப்படி சாத்தியமில்லையோ, அதுபோலவே ஆசார்யரின் வாக்கியத்திற்கு எதிரான அர்த்தத்தை தாசராயர் எழுதினார் என்று சொல்வதும் சாத்தியமில்லை.

ஆக, நமக்குத் தெரியாமல் ஹரி என்ற சொல் நம் வாயிலிருந்து வந்தாலும், அதன் மூலம் ஸ்ரீஹரியை நினைத்து, அவன் மகிமை குணங்களை சிந்தித்தால், அப்போதே கதி, மற்றும் பாவங்கள் பரிகரிக்கின்றன என்று தாசராயர் சொல்வதாக அறியவேண்டும்.

**மலகு$^{3}$வாக$^{3}$லி ஏளுவாக$^{3}$லி**
**குளிது மாதாடு$^{3}$தலி மனெயொளு**
**கெலஸக$^{3}$ள மாடு$^{3}$தலி மைதொளெவாக$^{3}$ மெலுவாக$^{3}$ |**
**கலுஷதூ$^{3}$ரன ஸகலடா$^{2}$விலி**
**திளியெ தத்தன்னாம ரூபதி$^{3}$**
**ப$^{3}$ளியலிப்பனு ஒந்த$^{3}$ரெக்ஷண பி$^{3}$ட்டலக$^{3}$லனவர ||3**

மலகுவாகலி = படுக்கும்போதும்
ஏளுவாகலி = எழும்போதும்

குளிது மாதாடுதலி = அமர்ந்து பேசும்போதும்
மனெயொளு கெலஸகள மாடுதலி = வீட்டு வேலைகளை செய்யும்போதும்
மைதொளெவாக = குளிக்கும்போதும்
மெலுவாக = உண்ணும்போதும்
கலுஷதூரன = தோஷங்கள் அற்றவனான ஸ்ரீஹரி
தத்தன்னாமரூபவ = அங்கங்கு அந்தந்த பெயர், ரூபங்களை வசிப்பவனான
சகலடாவிலி = அனைத்து இடங்களிலும்
திளிது = அறிந்து நினைத்தால்
பளியொளிப்பனு = அவரின் சமீபத்திலேயே வசிக்கிறான்
ஒந்தரெக்ஷண = ஒரு கணமும்
அவர = அவர்களை
பிட்டகல = விட்டு விலகாமல் இருக்கிறான்

படுப்பது முதலான காலங்களில், அனைத்து இடங்களில், அந்தந்த நாம ரூபத்தை அறியவேண்டும் என்று இந்த பத்யத்தில் சொல்கிறார். அந்தந்த நாமரூபத்தை அறிவது என்றால் என்ன? அதாவது, நாம் படுக்கும்போது, ஸ்ரீபரமாத்மனுக்கு சேஷன் படுக்கையாக இருப்பதைபோல, இந்த படுக்கையிலும் ஸ்ரீபரமாத்மன் இருக்கிறான் என்று நினைக்க வேண்டும். அடுத்து, நம்மில் பரமாத்மன் நம் ரூபத்தில் இருக்கிறான் என்றும், லட்சுமிதேவி என் மனைவியின் ரூபத்தில் இருக்கிறார் என்றும் நினைத்து, போகாதிகளை அனுபவித்து தூங்க வேண்டும். நம் யோக்யதைக்கேற்ப, அந்த சுகத்தை சிறிதளவு நமக்குக் கொடுக்கிறான் என்று நமக்குள்ளும், படுக்கையிலும், மனைவியிலும் லட்சுமி நாராயணனையே நினைக்க வேண்டும் என்பது கருத்து.

அல்லது தன் படுக்கையில் சேஷ ரூபத்திலும், நம்மில் புருஷ ரூபத்திலும், தன் மனைவியில் ஸ்த்ரீ ரூபத்திலும், அதே உருவம், அதே பெயரில் ஒவ்வொரு இடத்திலும் ஸ்ரீபரமாத்மன், லட்சுமிசமேதனாக இருக்கிறான் என்று நினைக்க வேண்டும். இதைப்போல, எழும்போதும், லட்சுமி நாராயணர்கள் நம்மில் இருந்து, நம்முடன் எழுந்திருக்கிறார் என்று அறியவேண்டும். எழுந்தபிறகு அருகில் எந்த பொருட்களைப் பார்க்கிறோமோ, அந்தப் பொருட்களில் அந்த ரூபம், அந்த பெயரில் பகவந்தன் இருக்கிறான் என்று அறியவேண்டும்.

அமர்ந்து பேசும்போது, நம் வாயிலிருந்து வெளிவரும் அனைத்து எழுத்துக்களும் பரமாத்மனே. பேசும் பேச்சுக்கள் அனைத்தும் பகவந்தனின் ஸ்தோத்திரங்கள் என்று நினைக்க வேண்டும். வீட்டில் எந்த வேலையை செய்து வந்தாலும், இவை அனைத்தும் பகவத் சேவை என்று நினைத்து, அங்கு காணும் அனைத்து பதார்த்தங்களிலும் அந்த உருவத்தில், அந்த பெயரில் பரமாத்மன் இருக்கிறான் என்று அறியவேண்டும்.

குளிக்கும்போது, இந்த என் தேகம், பகவந்தனின் பிரதிமை என்றும், அந்த பிரதிமைக்கு இந்த குளியலானது, அபிஷேகம் என்று நினைக்க வேண்டும். அல்லது பரமாத்மனுக்கு என் தேகம் ரதம். இதில் பரமாத்மனை சிந்திப்பதற்கு, அதனை

(ரதத்தை) சுத்தப்படுத்துவதே இந்தக் குளியல் என்று சிந்திக்க வேண்டும். தேகத்தில் வஸ்திர, ஆபரணங்களை தரிக்கும்போதும், பகவந்தனின் பிரதிமையான இந்த தேகத்திற்கு அவை அலங்காரங்கள் என்றும், அல்லது தேக- ரதத்தை அலங்கரிக்கிறேன் என்றும் நினைக்க வேண்டும்.

உண்ணும்போது, அன்னரூபியான பரமாத்மனை எனக்குள் இருக்கும் பரமாத்மனிடம் சேர்க்கிறேன் என்ற சிந்தனை வேண்டும் என்னும் அர்த்தத்தையே 'சர்வடாவிலி துரிததூரன தத்தன்னாமரூபவ திளியே' என்று சொல்லியிருக்கிறார் என்று அறியவேண்டும். இதைத்தவிர, படுக்கும்போது, அமரும்போது, எழும்போது, வேலை செய்யும்போது, உண்ணும்போது என அனைத்து காலங்களிலும் ஹரிநாமஸ்மரணையையே செய்து கொண்டிருக்கவேண்டும் என்பதே இங்கு சொல்ல வந்துள்ள கருத்து. அங்கங்கு அந்தந்த நாம, ரூபத்தை நினைப்பது உபாசனைக் கிரமம். அனைத்து காலங்களிலும், நாராயணா, கிருஷ்ணா என்று சொல்வது, பக்தியை வெளிக்காட்டும் உபாசனை. அதையே மனதில் சொல்லிக் கொண்டிருப்பதும் உபாசனை கிரமமே. இந்த இரு வகை கிரமங்களையும் நாம் செய்யவேண்டும் என்கிறார்.

**ஆவ குலத3வனாத3டே3 நி**
**ந்னாவ தே3ஷதொ3ளித்த3டே3 நி**
**ந்னாவ கர்மவ மாட3லேனின்னாவ காலத3லி |**
**ஸ்ரீவரன ஸர்வத்ரத3லி ஸ**
**ம்பா4விஸுத பூஜிஸுத மோதி3ப**
**கோவித3ரிகு3ண்டேனு ப4ய து3க்கா2தி தோ3ஷக3ளு ||4**

ஆவ குலதவனாதடே = எந்த குலத்தவனாக இருந்தால் என்ன?
ஆவ தேஷதொளித்தடேனு = எந்த தேசத்தில் இருந்தால் என்ன?
ஆவ காலதலி = அந்த காலமாக இருந்தால் என்ன?
ஆவ கர்மவ மாடலேனு = எந்த செயல்களை செய்தால் என்ன?
ஸ்ரீவரன = லட்சுமிபதியான ஸ்ரீபரமாத்மனை
சர்வத்ரதலி = அனைத்து இடங்களிலும்
சம்பாவிஸுத = நினைத்து
பூஜிஸுத = பூஜித்து
மோதிப = மகிழும்
கோவிதரிகெ = ஞானிகளுக்கு
பவ துக்காதி தோஷகளு = பய, துக்க ஆகிய தோஷங்கள்
உண்டேனு = இருக்கிறதா? (இல்லை என்பது கருத்து).

பகவந்தனை துதிக்க வேண்டுமெனில் இந்த குலத்தவனே ஆகவேண்டும் என்பதில்லை. இந்த தேசத்தில் துதிக்க வேண்டும், இந்த காலத்திலேயே துதிக்க வேண்டும், இத்தகைய செயல்களையே செய்ய வேண்டும் என்றும் இல்லை. எந்த தேசத்திலாகட்டும், எந்த காலத்திலாவது ஆகட்டும், எந்த குலத்தவனாக

இருக்கட்டும், பரமாத்மனிடம் பக்தி மட்டும் இருந்தால் போதும். பரமாத்மன் இவனது பய, துக்கங்களை பரிகரிக்கிறான்.

பாகவத 7ம் ஸ்கந்தம் 7ம் அத்தியாயத்தில்:

தேவோsஸுரே மனுஷ்யோவா எக்ஷோ கந்தர்வ ஏவச |
பஜன்முகுந்த சரனம் ஸ்வஸ்திமான் ஸ்யாத்யதாவயம் ||52
நாலம் த்விஜத்வம் தேவத்வம் ரிஷித்வம் வாsஸுராத்மஜா: |
ப்ரீணனாய முகுந்தஸ்ய நவ்ருத்தம் நபஹுஞ்ஞுதா ||53
நதானம் நதபோனேஜ்யா நஷௌசம் நவ்ரதானிச |
ப்ரீயதேsமலயாபக்த்யா ஹரிரன்ய த்விடம்பனம் ||54

பிரகலாதன் தைத்ய பாலகர்களுக்கு உபதேசம் செய்யும் சந்தர்ப்பம். ஹே தைத்ய பாலகர்களே. தேவதையோ, தைத்யரோ, மனுஷ்யரோ, யக்ஷனோ, கந்தர்வனோ, அவர் யாராக இருக்கட்டும், மோட்சத்தைக் கொடுப்பவனான ஸ்ரீபரமாத்மனை துதித்தால், அவர் நம்மைப்போல சுகத்தைப் பெறுவார்கள். ||52

பிராமணராக பிறந்ததால் மட்டுமே, தேவதையாக பிறந்ததால் மட்டுமே, ரிஷியாக இருந்தால் மட்டுமே, பரமாத்மனை மகிழ்விக்க முடியும் என்பதில்லை. ஹே தைத்ய பாலகர்களே. சதாசாரங்களை பின்பற்றுவதால் மட்டுமல்ல. அதிகமாக தெரிந்து வைத்திருப்பதும் காரணமல்ல. ||53

தானமும் காரணமல்ல. விரதங்களும் காரணமல்ல. நிர்மலமான - அதாவது, த்வேஷாதி சம்பந்தங்கள் அல்லாத பக்தி ஒன்றிற்கே ஸ்ரீஹரி மெச்சுகிறான். மற்றது அனைத்தும் வெறும் டாம்பீகமே. ||54

பிரகலாதன் இவ்வாறு கூறுவதையே, தாசராயரும் இந்த பத்யத்தில் விளக்கியிருக்கிறார்.

**வாஸுதேவன கு$^3$ணஸமுத்$^3$ரதோ$^3$**
**ளீஸ ப$^3$ல்லவ ப$^4$வஸமுத்$^3$ரா**
**யாஸவில்லதெ$^3$ தா$^3$டுவனு ஷீக்$^3$ரத$^3$லி ஜக$^3$தொளகெ$^3$ |**
**பே$^3$ஸரதெ$^3$ து$^3$ர்விஷயக$^3$ள அபி$^3$**
**லாஷெயலி ப$^3$ளலுவவ நானா**
**க்லேஷக$^3$ள நனுப$^4$விப ப$^4$க்தி ஸுமார்க்க$^3$ காணத$^3$லெ ||5**

வாசுதேவன = ஸ்ரீஹரியின்
குணசமுத்ரதொளு = குணங்கள் என்னும் கடலில்
ஈஸ பல்லவ = யாரால் நீந்த (சிந்திக்க / தியானிக்க) முடிகிறதோ
பவசமுத்ர = சம்சாரம் என்னும் கடலை
ஜகதொளகெ = இந்த உலகில்
ஷீக்ரதலி = விரைவாக
ஆயாஸவில்லதெ = சோர்வு இல்லாமல்

தாடுவனு = தாண்டுகிறான்
துர்விஷயகளன = துஷ்டமான விஷய சுகங்களின் ஆசையில்
பேஸரதெ = சலிப்பு இல்லாமல்
பளலுவவ = அல்லாடிக் கொண்டிருக்கிறான்
பக்தி சுமார்க்க காணதலெ = பக்தி என்னும் உத்தமமான வழியைக் காணாமல்
க்லேஷகள = துன்பங்களை
அனுபவிப = அனுபவிக்கிறான்.

இந்த உலகில், யாரொருவன், வாசுதேவனின் குணக்கடலில் நீந்துவதற்கு அறிந்தவனோ, அதாவது, எப்போதும் பரமாத்மனின் குணங்களையே கொண்டாடியவாறு, நினைத்தவாறு, நாமங்களை ஸ்மரணை செய்தவாறு காலத்தை கழிக்கிறானோ, அத்தகையவர், சம்சாரம் என்னும் கடலை எவ்வித சோர்வுமின்றி தாண்டுவதற்கான தகுதியுள்ளவன். அப்படி இல்லாமல் எப்போதும், மனைவி, மக்கள், வீடு, நிலம் என்று இவற்றில் மூழ்கியிருக்கிறானோ, அவன் பக்தி மார்க்கத்தையே பார்க்காமல் சம்சாரத்தில் அனேக விதமான கஷ்டங்களை அனுபவிக்கிறான்.

**ஸ்னான ஜப தே[3]வார்ச்சனெயு வ்யா**
**க்[2]யான பா[4]ரதமுக[2] மஹ உப பு**
**ராண கதெ[2]க[3]ள பேளி கே[1]ளித[3]ரேனு தி[3]னதி[3]னதி[3] |**
**ஞான கர்மேந்தி[3]ரியக[3]ளிந்**
**தே[3]னு மாடு[3]வ கர்மக[3]ளு ல**
**க்ஷ்மி நிவாஸன பூஜெயிந் த[3]ர்ப்பிஸத[3] மானவனு ||6**

ஞான கர்மேந்திரியங்களிந்த = கண், காது முதலான ஞானேந்திரியங்களாலும், கை, கால் ஆகிய கர்மேந்திரியங்களாலும்
ஏனு மாடுவ கர்மகளு = என்ன செயல்களை செய்தாலும், அவை அனைத்தையும்
லகுமி நிவாஸன = ஸ்ரீனிவாசனின்
பூஜெயெந்து அர்ப்பிஸத = பரமாத்மனுக்கு அர்ப்பணம் செய்யாத
மானவனு = மனிதன்
ஸ்னான, ஜப, தேவார்ச்சனெ = ஸ்னான, ஜப, பூஜை ஆகியவற்றை செய்தால் என்ன?
வியாக்யான = மற்றவர்களுக்கு இந்த அர்த்தத்தை விவரித்தால் என்ன?
பாரதமுக = பாரதம் முதலான
மஹ உப புராண கதெகள = பாகவதம் முதலான மஹா புராணங்கள், பிரம்ம வைவர்த்த, விஷ்ணு ரஹஸ்ய முதலான உப புராணங்கள் என இத்தகைய கதைகளை
பேளி கேளிதரேனு = தானே சொன்னால் என்ன? பிறரிடமிருந்து கேட்டால் என்ன? (அதிலிருந்து பலன் எதுவும் கிடைப்பதில்லை என்று பொருள்).

பாகவத 1ம் ஸ்கந்தம் 5ம் அத்தியாயம் 12ம் ஸ்லோகம்:
நைஷ்கர்ம்ய மப்யச்யுத பாவவர்ஜிதம் நஷோபதே ஞானமலம் நிரஞ்சனம் |
குத: புன: ஷஸ்வத பத்ரமீஷ்வரே கர்மயதப்யகாரணம் ||

நைஷ்கர்ம்ய என்றால், பலன்களை எதிர்பார்க்காமல் செய்யும் கர்மங்கள். இவை முக்திக்கு காரணமானவை என்று அறியப்படுகின்றன. இத்தகைய நைஷ்கர்ம்ய எனப்படும் செயல்கள், நிரஞ்சனம் -> சுத்தமான வைராக்கியத்துடன் கூடிய, அலம் = முக்தி சாதனத்திற்கு சாதனையாகும் ஞானம் ஆகியவை இருந்தாலும், பக்தி ஒன்று மட்டும் இல்லையெனில், அந்த அதிகாரிக்கு எந்த நற்பலன்களும் வருவதில்லை. அல்லது, பரமாத்மனின் பாதாரவிந்தங்களில் திடமாக தன் மனதை நிறுத்தாவிடில், முழுமையான பலன்கள் வருவதில்லை. இப்படியிருக்கையில், விஷயங்களில் மயங்கி, எப்போதும் அமங்களங்களையே பேசி, பகவந்தனுக்கு அர்ப்பிக்காத கர்மங்களை எவ்வித பலன்களையும் எதிர்பார்க்காமல் செய்தாலும், அதன் பலன்கள் கிடைப்பதில்லை என்று சொல்லவும் வேண்டுமா? என்கிறார். இதே அபிப்பிராயத்தையே தாசராயர் இங்கு சொல்கிறார்.

தன் ஞானேந்திரியங்களாலும், கர்மேந்திரியங்களாலும் செய்யும் கர்மங்களை பகவந்தனின் பூஜையென்று நினைத்து, அந்த அனைத்து கர்மங்களையும் பரமாத்மனுக்கு அர்ப்பித்தால், செய்த அனைத்தும் அர்த்தமுள்ளதாக ஆகின்றன. அப்படி இல்லையெனில், இவன் எவ்வளவு ஆறுகளில் ஸ்னானம் செய்து, ஜபங்களை செய்யட்டும், மக்கள் விரும்பியவாறு தேவரபூஜையை ஆடம்பரமாக செய்யட்டும், பாரதாதி கிரந்தங்களை உபன்யாசம் செய்யட்டும், பாரத, பாகவத முதலான புராணங்கள், பிரம்மவைவர்த்த முதலான உப புராணங்கள் சொல்லட்டும், கேட்கட்டும், பரமாத்மனை எப்போதும் தன் மனதில் நிறுத்தி வைக்காதிருந்தால், இவை எவையும் பலன்களை தருவதில்லை.

**தே$^{3}$வ க$^{3}$ங்கெ$^{3}$ யொளுள்ளவகெ$^{3}$ து$^{3}$ரி**
**தாவளிக$^{3}$ளுண்டெ விசாரிஸெ**
**பா$^{1}$வுக$^{3}$ள ப$^{4}$யவுண்டெ விஹகா$^{3}$தி$^{2}$பன மந்தி$^{3}$ரதி$^{3}$ ।**
**ஜீவ கர்த்ருத்வவனு மரெது$^{3}$ ப**
**ராவரேஷனெ கர்த்ருவெந்த$^{3}$ரி**
**தா$^{3}$வ கர்மவ மாடி$^{3}$த$^{3}$ரு லேபிஸவு கர்மக$^{3}$ளு ।।7**

தேவகங்கெயொளுள்ளவகெ = ஆகாச கங்கை அல்லது தேவ நதி என்று புகழ்பெற்றிருக்கும் கங்கையில் இருப்பவனுக்கு -

அதாவது, அதன் மஹாத்ம்ய ஞானத்தை அறிந்து அதில் ஸ்னானாதிகளை செய்துகொண்டு அங்கேயே இருப்பவனுக்கு
விசாரிஸெ = விசாரித்துப் பார்த்தால்
துரிதாவளிகளுண்டே = பாவ ராசிகள் இருக்கிறதா? (இல்லை)
விஹகாதிபன = பக்ஷிகளில் சிறந்தவனான கருடனின்
மந்திரதி = வீட்டில்,
பாவுகள பயவுண்டே = பாம்புகளின் பயம் இருக்கிறதா? (இல்லை)
ஜீவ கர்த்ருத்வவனு = ஜீவன் ஸ்வதந்த்ரத்துடன் கர்மங்களை செய்கிறான் என்பதை

மரெது = மறந்து (அறியாமல்)
பராவரேஷன = பிரம்மனிலிருந்து துவங்கி ஸ்தாவர வரை அனைத்து பிராணிகளுக்கும், ஈஸ்வரான ஸ்ரீஹரியே
கர்த்ரு = ஸ்வதந்த்ரமாக செய்து, செய்விக்கிறான்
எந்தரிது = என்று அறிந்து
ஆவகர்மவ மாடிதரு = எந்த செயல்களை செய்தாலும் - அதாவது அதிலிருந்து வரும் பலன்கள்
லேபிஸவு = வராது என்று பொருள்.

கங்கையைப் பற்றிய மஹாத்ம்ய ஞானம் இல்லாமல் அதில் மூழ்கினால் எதுவும் பலன் இல்லை. பகவத் பக்தியோடு அதன் மகிமைகளை அறிந்து, 'ஸ ஏவத்ரவரூபேண கங்காம்போ நாத்ரஸம்ஷய:' ஸ்ரீஹரியே திரவ்ய ரூபத்தில் கங்கையின் தண்ணீரில் இருக்கிறான். இந்த விஷயத்தில் சந்தேகமே வேண்டாம் என்று அறிந்து, ஸ்னானாதிகளை செய்து அங்கேயே வசித்து வந்தால், அவனுக்கு பாவங்களின் சங்கமே ஆவதில்லை.

அதுபோலவே, கருட மந்திரத்தை ஜெபித்து அதனை தன் வசப்படுத்தியிருந்தால், கருடன் வசிக்கும் இடங்களில் எப்படி சர்ப்பங்களின் பயமே இருப்பதில்லையோ அப்படியே 'நாஹம்கர்த்தா ஹரி:கர்த்தா' என்று அறிந்து, ஜீவனின் ஸ்வதந்திரத்தினால் எவ்வித செயல்களை செய்வதற்கும் முடியாது, 'தேனவினா த்ருணமபி நசலதி' பரமாத்மன் இல்லாமல், கிருமிகூட நகர்வதில்லை. அதாவது, மிகச்சிறிய காரியமானாலும், பரமாத்மன் இன்றி ஆவதில்லை என்று அறிந்து, பரமாத்மன் செய்வதைப் போல செய்பவன் நான். பரமாத்மன் ஸ்வதந்த்ர கர்த்தன் என்று அறிந்து உபாசனை செய்பவன், பாவங்களை செய்வதே இல்லை. ஒருவேளை தெரியாமல் பாவங்களை செய்துவிட்டாலும், அதன் பலன் அவனை சேர்வதில்லை என்பது கருத்து.

'ஏனு மாடிதரு' என்றால், செய்யக்கூடாதவற்றை செய்வதல்ல. பிரம்மஹத்யா தோஷத்தை செய்துவிட்டு, அதை ஸ்ரீஹரிதான் செய்வித்தான் என்று சொல்வது அல்ல. ஏனெனில், யாரொருவன், பிரம்மஹத்யா தோஷம் முதலான பெரிய பாவங்களை செய்வதற்கு பயப்படுவதில்லையோ, அவனுக்கு பகவத்பக்தி இருப்பதே இல்லை. யாரொருவன் எல்லா இடங்களிலும் பகவந்தனை சிந்தித்திருக்கிறானோ, அவன் எறும்பு, பூச்சி போன்றவற்றிலும், தத்ரூபமாக பகவந்தனே இருக்கிறான் என்று அறிகிறானோ, அவன் அவற்றை துன்புறுத்துவது எப்படி? ஆகையால், பக்தர்கள் பாவங்கள் செய்ய விரும்புவதில்லை.

வினைப்பயன்களாலோ அல்லது பகவத் இச்சையாலோ ஏதோ ஒரு வேளையில் பாவ கர்மங்கள் நடந்தாலும், அதற்கு அவன் உடனடியாக வருத்தப்படுகிறான். அப்போதே பரமாத்மனை சிந்தித்து, அதை பரமாத்மனே செய்வித்தான் என்று அறிந்து, அவனுக்கு அதை சமர்ப்பித்தால், அந்த பாவங்கள் அனைத்தும் பொசுங்கிவிடுகிறது. பாகவத 6ம் ஸ்கந்தம் அஜாமிளனின் கதையில்:

ப்ராயஸ்சித்தானி சீர்ணானி நாராயண பராங்மக்யை: |
நவை புனந்தி ராஜேந்திர ஸுராகும்ப மிவாபகா: ||

கெட்ட பதார்த்தங்கள் நிறைந்த மண் குடத்தை எந்த ஆற்றில் கழுவினாலும் எப்படி அது சுத்தமாவதில்லையோ, அப்படியே நாராயணனிடமிருந்து விலகியவர்கள் எவ்வகையான பிராயச்சித்தத்தை செய்தாலும், அவர்களின் பாவங்கள் அழிவதில்லை என்று சொல்லி, மேலும்:

ஸ்தேனஸ்ஸுராபோ மித்ரத்ருக் பிரம்மணா குருதல்பக: |
ஸ்த்ரி ராஜ பித்ருகோஹந்தா யேசபாதகி நோsபரே ||
ஸர்வேsஷாமப்யகவதாமிதமேவ ஸுனிஷ்க்ருதம் ||

தங்கத்தை திருடுதல், சுராபானம், மித்ர துரோகம், பிரம்மஹத்யா, குருஸ்த்ரீ கமனம், ஸ்த்ரிஹத்யா, ராஜஹத்யா, பித்ருஹத்யா, கோஹத்யா என இன்னும் வேறு பாவங்களை செய்தவர்களுக்கும் பக்தி பூர்வகமான பரமாத்மனின் ஸ்மரணையே ப்ராயச்சித்தம் என்று சொல்கிறார். இதில் முக்கியமானவை, பக்தி மற்றும் பிராயச்சித்தம். மனப்பூர்வமாக பாவம் செய்யும் பாவிகளுக்கு இந்த இரண்டும் பிறப்பதே இல்லை. வழிப்பறி செய்பவர்களுக்கும், ஆடு ஆகியவற்றை வெட்டுபவர்களுக்கும் பச்சாதாபம் வருவது எப்படி? எப்போதும் வருவதே இல்லை. ஆகையால், எதேச்சையாக நடந்த பாவங்கள் மட்டுமே அழிகின்றன என்பது இந்த பத்யத்தின் கருத்து.

**ஏனு மாடு$^3$வ புண்ய பாபக$^3$**
**ளானெ மாடு$^3$வெனெம்பு$^3$வ னத$^4$ம**
**ஹீனகர்மகெ பாத்ர நா புண்யக்கெ ஹரியெம்ப$^3$**
**மானவனு மத்$^4$யமனு த்$^3$வந்த்$^3$வகெ**
**ஶ்ரீனிவாஸனெ கர்த்ருவெந்து$^3$ ஸ**
**தா$^3$னுராக$^3$தி$^3$ நெனெது$^3$ ஸுகி$^2$ஸுவவனெ நரோத்தமனு ||8**

ஏனு மாடுவ புண்யபாபகள = மனிதர்கள் செய்யும் அனைத்து பாவ புண்ணியங்களும்
ஆனே மாடுவெனெம்புவ = நானே செய்தேன் என்பவன்
அதமனு = கீழானவன்
ஹீன கர்மகெ = தவறான / பாவ செயல்களுக்கு
நா = நான்
பாத்ர = செய்பவன்
புண்யகே = புண்ணிய செயல்களுக்கு
ஹரியெம்ப = செய்தவன் ஹரி என்பான்
மத்யமனு = நடுநிலையானவன்
த்வந்த்வகெ = இந்த இரு செயல்களுக்கும்
ஶ்ரீனிவாசனெ
கர்த்ருவெந்து = செய்பவன் என்று

சதானுராகதி = சதா+அனுராகதி = எப்போதும் பக்தியுடன்
நெனெது = சிந்தித்து
சுகிசுவவனே = சுகப்படுபவனே
நரோத்தமனு = மிகச்சிறந்தவன்

தான் செய்த பாவ புண்ணியங்களை, ஸ்வதந்திரமாக தானே செய்தேன் என்று நினைப்பவன் மனிதர்களில் அதமன் (கீழானவன்). பாவம் செய்பவன் நான், புண்ணியத்தை செய்விப்பவன் பரமாத்மன் என்று நினைப்பவன் மத்யமன். ஏனெனில், ஜீவர்களுக்கு ஸ்வதந்த்ர கர்த்ருத்வம் இல்லை என்றானபிறகு, பாவம் மட்டும் எப்படி அவனால் செய்ய முடியும்? ஆகையால், பாவமோ புண்ணியமோ, அனைத்திற்கும் காரணம் பரமாத்மனே என்று அந்த பலன்களை பரமாத்மனிடம் ஒப்பித்து, அவனையே நினைத்தவாறு சுகப்பட்டுக் கொண்டிருப்பவனே மனுஷ்யோத்தமன் ஆவான்.

**ஈ உபாஸனெகை³வ ரிளெயொளு**
**தே³வதெக³ளல்லத³லெ நரர**
**ல்லாவ ப³கெ³யிந்தா³த³ரிவரர்சனவெ ஹரிபூஜெ ।**
**கேவல ப்ரதிமெக³ளெனிபரு ர**
**மாவினோதி³கெ³ இவரனுக்³ரஹ**
**வெ வரானுக்³ரஹவெனிஸுவுது முகுதியோக்³யரிகெ³ ।।9**

ஈ உபாசனெகைவரு = முந்தைய பத்யத்தில் கூறிய உபாசனையை செய்பவர்கள்
இளெயொளு = பூமியில்
தேவதெகளல்லதலெ = தேவதைகளுக்கு சமம் ஆவார்கள்
நரரல்ல = சாதாரண மனிதர்கள் அல்லர்
ஆவபகெயிந்தாதரு = எந்த வகையிலாவது
இவரர்ச்சனவெ = இந்த பக்தர்களை பூஜிப்பது
ஹரிபூஜெ = ஸ்ரீஹரியின் பூஜையே
ரமாவினோதிகெ = லட்சுமி ரமணனுக்கு
இவரு கேவல ப்ரதிமெகளெனிபரு = இவர்கள் சல-பிரதிமைகளே ஆவர்
முக்தியோக்யரிகெ = முக்தி யோக்யர்களுக்கு
இவரனுக்ரஹவெ = இவர்களின் அருளே
தேவர அனுக்ரஹவெனிஸுவுது = ஸ்ரீஹரியின் அருள் என்று ஆகிறது.

அனைத்தையும் செய்வது பரமாத்மனே என்று உபாசனை செய்பவர்களை, இந்த பூமியில் தேவதைகள் என்று அறிந்து, அனைத்து விதங்களிலும் அவரின் பூஜையை செய்தால், அது சாட்சாத் பரமாத்மனின் பூஜையென்றே ஆகிறது. இவர்களை பகவந்தனின் சல-பிரதிமை என்றே நினைக்க வேண்டும். முக்தி யோக்யர்கள் இவரின் அருளைப் பெற்று, அதையே பரமாத்மனின் அருள் என்று நினைக்க வேண்டும்.

**தனுவே நானெம்பு³வனு ஸதி ஸுத**

**மனெ த$^{4}$னாதி$^{3}$க$^{3}$ளென்னதெ$^{3}$ம்பு$^{3}$வ**
**த்$^{3}$யுனதி$^{3}$ மொத$^{3}$லாது$^{3}$த$^{3}$கக$^{3}$ளெ ஸத்தீர்த்த$^{2}$வெம்பு$^{3}$வனு ।**
**அனல லோஹாதி$^{3}$ ப்ரதீகா**
**ர்ச்சனவெ தே$^{3}$வரபூஜெ ஸுஜனர**
**மனுஜரஹுதெ$^{3}$ம்பு$^{3}$வனு கோ$^{3}$க$^{2}$ரனெனிப பு$^{3}$த$^{3}$ரிந்த$^{3}$ ||10**

தனுவெ நானெம்புவ = தேகமே நான் (ஜீவன்) என்பவன்
ஸதி ஸுத மனெ தனாதிகளு = மனைவி மக்கள் வீடு செல்வம்
என்னதெம்புவ = அனைத்தும் என்னுடையது என்பவன்
த்யுனதி மொதலாத = கங்கை முதலான
உதககளெ = தண்ணீரே
ஸத்தீர்த்தவெம்புவனு = புனித நீர் என்கிறான்
அனல = அக்னி
லோஹாதி = தங்கம், வெள்ளி ஆகியவற்றால் செய்யப்பட்ட
ப்ரதீகார்ச்சனவே = ப்ரதிமைகளின் பூஜையே
தேவரபூஜெ = தேவரபூஜை என்கிறான்
சுஜனரே = பகவத்பக்தர்களான சஜ்ஜனர்களே
மனுஜரஹுதெம்புவனு = சாமான்யரான மனிதர்கள் என்று நினைப்பவன்
புதரிந்த = ஞானிகளால்
கோகரனெனிப = பூமியில் கழுதை என்று அழைக்கப்படுவான்.

தேகம் அநித்யமானது. ஜடம். ஜீவன் நித்யன். சேதனன். பிறப்பது, வளர்வது, மாறுவது, இறப்பது, என இந்த மாறுதல்கள் அனைத்தும் 'தேஹஸ்யைவ நசாத்மன:' - தேகத்தை சேர்ந்ததே தவிர, ஜீவனுக்கு அல்ல. தேகமே தான் என்று சொல்லிக்கொண்டு இருப்பதாலும், அத்தகைய தேக சம்பந்தம் ஜீவனுக்கு இருந்தாலும், தேகத்திற்கு உண்டாகும் பிறப்பு, இறப்பு, சுக துக்கங்கள் ஆகியவை தேகத்திற்கு மட்டுமே சம்பந்தப்பட்டவை ஆகும்.

ஜீவன் பிறப்பவனும் அல்ல. வளர்பவனும் அல்ல. இறப்பவனும் அல்ல. ஜடமான தேகத்திற்கு சம்பந்தம் ஆகும்போது, சுகதுக்கங்களுக்கு மட்டுமே சம்பந்தப்படுகிறான். குடம் நன்றாக இருக்கும்வரையிலும், அதில் அந்த ரூபத்தில் ஆகாயம் அதற்குள் இருக்கிறது. 'கடபின்னே யதாகாஷ ஆகாஷ ஸ்யாத்யதாபுரா' என்னும் பாகவத 12ம் ஸ்கந்தத்தின் வாக்கியத்தின்படி, குடம் உடைந்தால் ஆகாயம் முன்னர் இருந்ததைப் போல ஆகாயமாகவே நின்றுவிடுகிறது. அதாவது குடம் நாசமடைகிறதே தவிர, ஆகாயம் நாசம் அடைவதில்லை.

அப்படியே, தேகம் நஷ்டமடைந்தாலும், ஜீவன் இருந்தே இருக்கிறான். ஜீவனுக்கும் தேகத்திற்கும் இருக்கும் வேறுபாட்டினை அறியாமல், தானே தேகம் என்றால் (தேகமே ஆத்மன் என்றால்), அது பிரமையே தவிர உண்மையல்ல.

பாகவத 11ம் ஸ்கந்தம் 22ம் அத்தியாயம் 45ம் ஸ்லோகத்தில்:
ஆத்ய: ஸ்வகர்ம பீஜேன ஜாயதே ஸோவ்யய: புமான் ।

ம்ரியதீ சாமரோப்ராந்த்யா யதாக்னிர்தாரு ஸம்யுத: ||

விஜயத்வஜீய வியாக்யானம்:
நனுதேஹஸ்யைவ விகாரஸ்சேதஹம் ஜாதோஹம் ம்ருத இதி ப்ரதீதி: கதமத்ராஹ ||

மாறுதல்கள் தேகத்திற்கே தவிர, ஜீவனுக்கு அல்ல என்றபிறகு, நான் பிறந்தேன். நான் இறக்கிறேன் என்று எப்படி சொல்வது என்றால்: ஜீவன் ஆத்யன். முதலிலிருந்தே இருப்பவன். உத்பத்தி இல்லாதவன்.

அமர வாக்கியம்:
மரணரஹித: ஆத்யந்த ஷூன்ய இத்யர்த்த:

ஜீவன் - மரணம் இல்லாதவன் ஆதி அந்தம் இல்லாதவன். வளர்ச்சி குறைபாடுகள் இல்லாதவன். பிறந்தான், இறந்தான் என்று நடைமுறையில் சொல்வதெல்லாம் மயக்கத்தினால். அதாவது, விவேக ஞானம் இல்லாமல் சொல்லப்படுபவை. எப்படி அக்னிக்கு உற்பத்தி, அழிவு இல்லாமல் இருந்தாலும், கட்டைகளை தேய்த்தால் அக்னி பிறந்துவிட்டது என்று சொல்லமுடியாதோ, கட்டையே இல்லாமல் இருந்தால் அக்னி நாசமடைந்துவிட்டது என்று சொல்வரோ, அப்படியே, ஜனன மரணங்கள் இல்லாத ஜீவனுக்கு அ-விவேகத்தினால் பிறப்பு, இறப்புகளை சொல்கிறார்கள்.

ஸஜாய மிதிதுக்ஞானம் நம்ருஷாயம் ஸ ஏவது |
இதி ஞானம் ம்ருஷைவஸ்யாத் பேதா பேதௌ யதஸ்தயோ: ||
அபேத ஏவ ஜீவஸ்ய நித்யம்ப்ரத்யேகஷ: ப்ருதக் |
தேஹதீப நதீவாரி பலாதீனாம் ப்ருதக்வத: ||
பேதாபேதௌ பரிக்ஞேயௌ கார்ய காரணயோபி ||
குணஸ்ய குணனஸ்சைவ ஜாதிவ்யாக்த்யோஸ்ததைவச |

கால சம்பந்தத்தினால் பால்யம், கௌமாரம், யௌவன ஆகியவை சரீரத்திற்கு மாறுதல்கள் கொண்டு வந்தாலும், குழந்தையாக பிறந்தபோது எந்த சரீரம் இருக்கிறதோ, அதே சரீரமே தொடர்ந்து இருக்கிறது என்று சொல்வதில் தவறு இல்லை. உண்மையே ஆகும். குழந்தையாக இருந்த சரீரமே வளர்ந்து மாறுதல் அடைந்ததால், இந்த சரீரத்தில் வேறுபாடு இல்லை என்று சொல்வது நியாயமே. ‘அயமேவஸ:’ அந்த தேகமே இவன் என்றால், அது உண்மையல்ல.

ஜீவனுக்கும் தேகத்திற்கும் வேறுபாடு இருப்பதால், இரண்டும் ஒன்றே என்று சொல்வது சாத்தியமில்லை. முதலில், மனித தேகத்தில் பிறந்த ஜீவனே, அந்த பிறவியை விட்டு, பின், நாயாக பிறந்திருக்க முடியும். தேகம் மட்டும், பால்ய, யௌவனாதி மாறுதல்களை அடைந்தாலும், அது (தேகம்) மாறுவதில்லை. அந்த சரீரத்தை விட்டு, ஜீவனுக்கு வேறு சரீரம் வந்தால், தேகத்தில் ஒன்றுக்கொன்று வேறுபாடு வருகிறது. ஆனால், ஜீவன் ஒருவனே. அந்த விஷயத்தில் சில ஆதாரங்களை இங்கு பார்க்கலாம்.

இப்படி வேறுபாடுகள் வருவது தேகத்திற்கு மட்டும் அல்ல. நதியில் பாயும் தண்ணீர், பழங்கள் இவை அனைத்தும் வேறுபாட்டிற்கு உள்ளாகின்றன. ஒரு மனிதனோ, மிருகமோ எந்த தேகத்தை பார்த்தாலும், இவன் மனிதன், இது மிருகம் என்று சொல்வர். ஆனால், அவனே இவன் அல்ல. இவன் வேறு, அவன் வேறு என்று ரூபங்களாலும், குணங்களாலும், பேதங்களை சொல்கிறோம். இவனும் மனிதன், அவனும் மனிதன் என்னும் விஷயத்தில் வேறுபாடு இல்லை. ஆனாலும், ரூப, குணங்களால் தேகங்களுக்கிடையே வேறுபாடுகள் இருக்கின்றன.

போலவே தீபங்களில், இதுவும் தீபமே அதுவும் தீபமே. ஆனால், இவ்வளவு நேரம் எரிந்து கொண்டிருந்த தீபம் இதுவல்ல. இது வேறு என்று சொல்வார்கள். கங்கை நீரும் அப்படியே. இவ்வளவு நாள் ஓடிக்கொண்டிருந்த தண்ணீர் இதுவல்ல. இது புதிதாக வருகிறது என்று சொல்கிறோம். பழங்களில், இதுவும் மாம்பழம்தான். ஆனால், நான் தின்ற பழம் இதுவல்ல. என்று, இவற்றிற்கு வேறுபாடுகளை நடைமுறையில் சொல்கிறோம். இதைப்போலவே, கார்யகாரண வஸ்துகளுக்கும், குண-குணிகளுக்கும் வேறுபாட்டினை ஒப்புக்கொண்டே ஆகவேண்டும்.

இந்த பானை மண்ணால் செய்யப்பட்டிருந்த போதிலும், இது மண்ணல்ல. இது பானை. போலவே, தந்தையிடமிருந்தே மகன் பிறந்திருந்தாலும், அவனே இவனல்ல என்று சொல்கிறோம். குண என்றால் என்ன? குணி என்றால் என்ன? பிறப்பு இறப்புகளே குணங்கள். அவற்றிலிருந்து தோன்றுவது குணி. அதாவது, தேகம். பிறப்பு இறப்புகளே தேகம் அல்ல. பிறப்பு இறப்புகளால் கூடியது இந்த தேகம் என்று அர்த்தம். இவற்றிற்கு வேறுபாடுகள் உண்டு. ஆகையால், ஜீவனே தேகம் என்று சொல்வது சாத்தியமில்லை.

பாகவத மூல ஸ்லோகம் 46:
விசேஷ கர்ப்ப ஜன்மானி பால்ய கௌமார யௌவனம் |
வயோமத்யம் ஜராம்ருத்யு ரித்யவஸ்தாத னோர்னவ ||

பெண் வயிற்றில் நுழைவு, கர்ப்பத்தில் வளர்வது, பிறப்பு, குழந்தையாவது, பால்ய, யௌவனம், நடுத்தர வயது, முதுமை, இறப்பு என்னும் ஒன்பது நிலைகள் இருப்பது சரீரத்திற்கே தவிர, ஜீவனுக்கு அல்ல. இத்தகைய ஆதாரங்களின் பலத்தினால், ஜீவனுக்கும், தேகத்திற்கும் வேறுபாடு இருக்கிறது என்றும், ஜீவனே தேகம் என்று அறிபவன், கழுதையே ஆகிறான். மற்றும், மனைவி, மக்கள் ஆகியோர் என்னுடையவர்கள் என்று சொல்பவர்களையும் கழுதை என்றே சொல்ல வேண்டும். இது எப்படியெனில், ஜீவனுக்கு, மனைவி, மக்கள், தந்தை, தாய் என்னும் எந்தவொரு சம்பந்தங்களும் இல்லை. தேக சம்பந்தத்தினால் தாய், தந்தை, கணவன், மனைவி, மக்கள் ஆகியவை வருகின்றன. ஒரு தேகத்தை விட்டவுடன், அந்த சம்பந்தங்கள் அனைத்தும் அங்கேயே முடிந்து போகின்றன.

மற்றொரு பிறவியை (தேகத்தை) எடுத்தால் அங்கு வெவ்வேறு தாய் தந்தைகள் மக்கள் சம்பந்தம் வருகின்றன. தேகம் எப்படி ஸ்திரம் இல்லையோ, அப்படியே மனைவி, மக்களும் ஸ்திரம் அல்ல. ஜீவனுக்கும் ஜீவனுக்கும் சம்பந்தம் இல்லை.

தேகமோ இவருடையதும் ஸ்திரமல்ல. அவருடையதும் ஸ்திரமல்ல. இத்தகைய மனைவி, மக்கள், வீடு, செல்வங்களில், என் மனைவி, என் மக்கள் என்று அபிமானம் செய்கின்றனர். தேகத்தை விட்டு, ஜீவன் ஆகாயத்தைப் போல நிற்கும்போது 'க்வததீயரதிர் பார்யா க்வேதந்துச்சம் அபிமான களேவரம்' இவனின் சுகம் எங்கே? அவனின் மனைவி எங்கே? தற்காலிகமான அந்த தேகம்தான் எங்கே? எதுவும் தனக்கு அந்த சமயத்தில் உதவிக்கு வருவதில்லை.

ஆகையால், தேக சம்பந்தமான வஸ்துகளை, அவை தன்னுடையது என்று சொல்வது மயக்கமே தவிர வேறில்லை. கங்காதி நதிகளே தீர்த்தங்கள் என்று அவற்றின் மஹாத்ம்ய ஞானம் இல்லாமல், பகவத் சன்னிதானத்தினாலேயே கங்கா நதிகளுக்கு மகிமை என்னும் ஞானம் இல்லாமல், அவற்றில் மூழ்கி எழுந்தாலும் எவ்வித பலன்களும் கிடைப்பதில்லை.

யதிச்சஸி மஹாராஜ ஸர்வதீர்த்தாவகாஹனம் |
விப்ரபாத வினிர்முக்தம் தோயம் ஷிரஸிதாரய ||

மோட்ச தர்மத்தின் வாக்கியத்திற்கேற்ப:
ஹே தர்மராஜனே. அனைத்து தீர்த்தங்களிலும் ஸ்னானம் செய்யவேண்டும் என்று உனக்கு விருப்பம் இருந்தால், பிராமணரின் பாத பிரட்சாலனம் செய்து, அந்த தண்ணீரை உன் தலையில் தெளித்துக் கொள், என்று பீஷ்மாசார்யர் கூறுகிறார். அதைப்போல, அனைத்து இடங்களிலும் பரமாத்மனை சிந்தித்து, சர்வகர்த்தா பரமாத்மனே என்று அறிந்து, ஸ்வகர்த்ருத்வ அபிமானத்தை கொஞ்சம்கூட வைத்துக்கொள்ளாமல் இருக்கும் மஹனீயர்களின் பாதோதகங்களைவிட கங்காதி நீர் உன்னை புனிதமாக்கிவிடுமா? இல்லை. இத்தகைய உத்தமர்களை, சாமான்ய மனிதர் என்று நினைத்து, புறக்கணித்து, வெள்ளி, தங்க பிரதிமைகளை வைத்துக்கொண்டு, ஆடம்பர பூஜைகளை செய்தால், பரமாத்மன் மெச்சுவனோ? இல்லை.

பாகவத 3ம் ஸ்கந்தம் 30ம் அத்தியாயத்தில் 22-23ம் ஸ்லோகங்கள்:
யோவாம் ஸர்வேஷு பூதேஷு ஸந்தமாத்மானமீஷ்வரம் |
ஹித்வார்சாம் பஜதே மௌட்யாத்பஸ்மன்யேவ ஜுஹோதிஸ: ||
த்விஷத: பரகாயேமாம் மானினோ பின்னதர்ஷன: |
பூதேஷு பத்ததைரஸ்யன மன:ஷாந்தி ம்ருச்சதி ||

அனைத்து பிராணிகளிலும் வசிக்கும் ஈஸ்வரனான என்னை விட்டுவிட்டு, எந்தவொரு மனிதன், மூடன் போல, பிரதிமைகளில் மட்டும் நான் இருக்கிறேன் என்று நினைத்து அந்த பிரதிமைகளை பூஜிக்கிறானோ, அவன், சாம்பலில் ஹோமம் செய்தவன் என்று அறியவேண்டும். மந்திர உச்சாரணை செய்து ஹோமம் செய்தால், ஏதோ கொஞ்சமாவது பலன் வரும். சாம்பலில் ஹோமம் செய்தால், எந்த பலனும் இல்லை. பகவத்பக்தர்களில் விசேஷ சன்னிதானத்தில் இருக்கும் என்னை அறியாமல், பிரதிமைகளிலும் பக்தர்களிலும் இருக்கும் என் ரூபங்களில் வேறுபாட்டினை சிந்தித்து, விஷ்ணு பக்தர்களிடம் த்வேஷத்தை வளர்த்தவாறு,

என்னை பிரதிமைகளில் மட்டும் பூஜித்தால், அத்தகையவனின் மனம், என்றும் என்னிடம் ஸ்திரமாக நிற்பதில்லை. அதாவது, அவன் எனக்கு ப்ரியன் ஆவதில்லை என்று பொருள். மேற்சொன்ன ஸ்லோகத்தில் இருக்கும் 'பூதேஷு' என்னும் சொல்லிற்கு, 'வைஷ்ணவேஷு' என்றும் 'ஷாந்தி' என்னும் சொல்லிற்கு, 'மன்னிஷ்டதா' என்றும் அர்த்தம் சொல்லியிருப்பர்.

அந்த வியாக்யானத்தை அனுசரித்தே, இங்கு அர்த்தம் சொல்லப்பட்டிருக்கிறது. ஆகையால், தாசராயர், அக்னி, பஞ்சலோகத்தின் பிரதிமைகள் ஆகியவற்றையே தேவர் என்பவர்கள், பகவத் பக்தர்களை சாமான்ய மனிதன் என்று சிந்திப்பவன் பூமியில் கழுதை என்று அழைக்கப்படுவான் என்று சொல்லியிருக்கிறார்.

**அனல ஸோமார்கேந்து$^{3}$ தாரா**
**வனி ஸுராபக$^{3}$முக்$^{2}$ய தீர்த்த$^{2}$க$^{3}$**
**ஏனில க$^{3}$க$^{3}$ன மனாதி$^{3}$ இந்த்ரியக$^{3}$ளிகெ$^{3}$ அபி$^{4}$மானி**
**எனிப ஸுரரு விபஸ்சிதர ஸ**
**ந்மனதி$^{3}$ ப$^{4}$ஜிஸத$^{3}$லிப்பவர பா**
**வனவ மாட$^{3}$ரு தம்மபூஜெய மாடி$^{3}$த$^{3}$ரு ஸரியே ||11**

அனல = அக்னி
ஸோம = உமா சமேதரான ருத்ரதேவர்
அர்க = சூரிய
இந்து = சந்திர
தாரா = நட்சத்திரங்கள்
அவனி = பூமி
ஸுராபான = கங்கை
முக = முதலான தீர்த்தங்கள்
அனில = வாயு
ககன = ஆகாஷ
மனாதி = மனஸ் முதலான இந்திரியங்களுக்கு
அபிமானி எனிப சுரரு = தேவதைகள்
விபஸ்சிதரு = ஞானிகள்
தம்ம பூஜெய மாடிதரு சரியே = தங்களின் பூஜையை செய்தாலும்
ஸன்மனதி = பரமாத்மனிடம் திடமான மனதை வைத்து
பஜிஸதலிப்பர = துதிக்காமல் இருப்பவர்களை புனிதம் ஆக்க மாட்டார்கள்

அக்னி, பார்வதி பரமேஷ்வரன், சூர்ய, சந்திர, நட்சத்திர கூட்டம், நவக்கிரகங்கள், பூமி, கங்கை முதலான தீர்த்தங்கள், வாயு, ஆகாஷ முதலான பஞ்சபூதங்கள், தன்மாத்ரா குணங்கள், ஞானேந்திரிய, கர்மேந்திரிய மனஸ் முதலான இந்திரியங்கள், இவற்றின் அபிமானி தேவதைகள், பகவத்பக்தர்களான ஞானிகள் - என இவர் அனைவரும் பரமாத்மனின் சன்னிதானம் கொண்டவர்கள் என்று அறிந்து, அந்தந்த இடங்களில் பூஜித்தால், அவரின் அந்தர்யாமி பரமாத்மன் மகிழ்ந்து, இவனை பவித்ரனாக மாற்றுவர். அவர்களில் பகவந்தனின் சன்னிதானத்தை அறியாமல் பூஜித்தால்,

அதை அவர்களின் அந்தர்யாமியான பகவந்தனின் பூஜையென்று நினைக்காமல், வெறும் தேவதா பூஜை என்று நினைத்தால், மேற்சொன்ன எந்த தேவதைகளும் இவனை பவித்ரனாக மாற்றுவதில்லை.

**கெண்ட$^3$ காணதெ$^3$ முட்டித$^3$ரு ஸரி**
**கண்டு$^3$ முட்டலு த$^3$ஹிஸதிப்புதெ$^3$**
**புண்ட$^3$ரிகத$^3$லாயதா$^3$க்ஷன விமலபத$^3$பத்$^3$ம**
**ப$^3$ண்டு$^3$ணிக$^3$ளெந்தெ$^3$னிப ப$^4$குதர**
**ஹிண்டு$^3$ நோடி$^3$த$^3$ மாத்ரத$^3$லி தனு**
**தி$^3$ண்டு$^3$ கெ$^3$ட$^3$திஹ நரன பாவனமாள்புதா$^3$க்ஷணதி$^3$ ||12**

கெண்ட = கங்கு
காணதெ முட்டிதரு சரி = தொட்டால் சுடும் என்கிற ஞானம் இல்லாமல் தொட்டாலும் அது சுட்டுவிடும்
கண்டு முட்டலு = தொட்டால் சுடும் என்று தெரிந்து தொட்டாலும்
தஹிஸதிப்புதெ = சுடாமல் இருக்குமா?
புண்டரீக தளாயதாக்ஷன = தாமரை போன்ற கண்களை உடைய ஸ்ரீபரமாத்மனின்
விமல = தோஷங்கள் இல்லாத
பதபத்ம = பாத கமலங்களை
பண்டுணிகளெந்தெனிப = தேனி (வண்டு) என்று நினைக்கும் பக்தர்களின்
ஹிண்டு = குழுவை
நோடித மாத்ரதலி = பார்த்த உடனேயே
தனுதிண்டு = சரீரம் என்னும் தண்டத்தை
கெடதிஹ = கீழே போட்ட (அதாவது, தண்டத்தைப் போல கீழே விழுந்து சாஷ்டாங்கமாக வணங்கிய)
நரன = மனிதனை
ஆ க்ஷணதி = அந்த நொடியிலேயே
பாவன மாள்பரு = புனிதம் ஆக்குகின்றனர்.

நெருப்பு கங்கினை தொட்டால் அது சுடும் என்று தெரிந்தோ, தெரியாமலோ அதைத் தொட்டாலும், அது கண்டிப்பாக நம்மை சுடும். ஒரு தேனி தாமரையின் மகரந்தத்தை எப்படி தொடர்ந்து குடிக்கிறதோ, அதைப்போல, யார் எப்போதும் பரமாத்மனின் பாத-தியானத்தில் எப்போதும் ஈடுபட்டிருக்கிறாரோ, அத்தகைய பக்தர்களின் குழுவின் தரிசனத்தாலேயே, ஒருவரது பாவங்கள் அனைத்தும் பரிகாரம் ஆகிறது. அத்தகையவர்களை பார்ப்பவர்களுக்கு, அந்த பிராமணர்களின் மஹாத்ம்ய ஞானம் இருக்கிறதோ இல்லையோ, அவர்களுக்கு சாஷ்டாங்கமாக நமஸ்காரம் செய்தால், இவனை அவர்கள் உடனடியாக பவித்ரனாக மாற்றுகிறார்கள். தன்யராக மாற்றுகிறார்கள்.

ஸ்லோக தர்மத்தில் இதே விஷயத்தை:
விப்ரௌக தர்ஷனாத்க்ஷிப்ரம் க்ஷீயந்தே பாபராஷய: |
வந்தனான் மங்களாவாப்தி ரர்ச்சனாதச்யுதம் பரம் ||

பிராமணர்களின் குழுவை பார்த்தவுடன், இவனின் பாவ ராசிகள் அனைத்தும் அழிகின்றன. அவர்களை நமஸ்காரம் செய்தால், மங்களம் உண்டாகிறது. அவர்களை பூஜித்தால், பரமாத்மன் மகிழ்ந்து தன் பதவியைக் கொடுக்கிறான் - என்று சொல்லியிருக்கின்றனர்.

நெருப்பைத் தொடுபவர்கள், அது சுடும் என்னும் ஞானம் இல்லாமல் தொட்டாலும், அந்த நெருப்பு அவனை கண்டிப்பாக சுடுகிறது. அது போலவே, இவர்கள் பிராமணோத்தமர்கள் என்ற ஞானம் இல்லாமல் பார்த்தாலும், அவர்கள் இவனுக்கு நல்ல உபதேசங்களைக் கொடுக்கின்றனர். பாகவதம் 10ம் ஸ்கந்தம் 47ம் அத்தியாயத்தில்:

நஹ்யம்மயானி தீர்த்தானி நதேவா ம்ருச்சிலாமயா: |
தீபுனந்த்யுரு காலேன தர்ஷனாதேவ ஸாதவ: ||

கங்கை முதலான தீர்த்தங்கள், அதில் குளிப்பவர்களை பவித்ரராக மாற்றுவதில்லை என்று இல்லை. மண்ணால், சிலையால் செய்யப்பட்ட பிரதிமைகள், தம்மை தரிசனம் / பூஜை செய்வோரை, பவித்ரர்களாக மாற்றுவதில்லை என்று இல்லை. ஆனால், பெரியவர்களின் சகவாசத்தால், அவற்றின் மஹாத்ம்ய ஞானத்தை அறிந்து, அவற்றில் அந்தர்யாமியாக இருப்பவர்களை அறிந்து சிந்தித்தால், அப்போது அவை ஒருவரை பவித்ரராக மாற்றுகிறது.

ஆனால், சாதுக்கள் அப்படியல்ல. அவர்களைப் பார்த்தாலே, ஞானோபதேசத்தை செய்து, ஒருவரை பவித்ரராக மாற்றுகின்றனர் என்கிறார். பிராமணர்களுக்கு இவ்வளவு மகிமையைக் கொடுப்பதால், தேவதைகளைவிட பிராமணர்கள் உத்தமரா என்ற சந்தேகம் வரக்கூடும். இந்த விஷயத்தில், பாகவதம் 11ம் ஸ்கந்தம், 2ம் அத்தியாயத்தில், நாரதரிடம் வசுதேவன் கூறுவதாக இருப்பது:

பூதானாம் தேவசரிதம் துக்காயச சுகாயச |
சுகாயைவஹி சாதூனாம் த்வாத்ருஷா மச்யுதாத்மனாம் ||
பஜந்தியே யதா தேர்வா தேவா அபி ததைவர்த்தா |
சாயேவ கர்ம ஸசிவாஸாதவோ தீனவத்ஸலா: ||

தேவதைகள், பிராணிகளின் சுகம் துக்கம் இரண்டிற்கும் காரணமாகின்றனர். எப்போதும் பரமாத்மனிடமே மனதை நிறுத்தியிருக்கும், உம்மைப் போன்ற சாதுகள், சுகத்திற்கு மட்டுமே காரணமாகின்றீர்கள். அது எப்படியெனில், தேவதைகளை, யார்யார் எப்படிஎப்படி வணங்குகின்றனரோ, அதற்கேற்ப அவர்கள் அவர்களுக்கு சுகத்தையோ, துக்கத்தையோ கொடுக்கின்றனர். அவர்கள், முக்கியமாக கர்மத்தை எதிர்பார்த்து, அதற்கேற்ப பலன்களைக் கொடுக்கின்றனர்.

இதன் பொருள் என்னவெனில், தேவதைகள்,

* சாத்விகாதி மூன்றுவித ஜீவர்களின் யோக்யதையை அறிந்து, சாத்விகர்களுக்கு தம்மில் பக்தியை அதிகரித்து, தாரதம்ய பிரகாரம் தம் பூஜையை செய்யவைத்து, மனது பரமாத்மனிடம் நிற்குமாறு செய்து, முக்தி சாதனையை செய்விக்கின்றனர்.
* ராஜஸர்களிடம் மிஸ்ர (கலவை) புத்தியைக் கொடுத்து, அதற்கேற்ப பலன்களைக் கொடுக்கின்றனர்.
* தாமஸர்களுக்கு தம்மில் த்வேஷத்தை பிறக்க வைத்து, பரமாத்மனிடமும் த்வேஷத்தை பிறக்க வைத்து, தமஸ் சாதனையை செய்விக்கின்றனர்.

** இது விஜயத்வஜீய வியாக்யானத்தைப் பொறுத்து எழுதப்பட்டிருக்கிறது.

ஆனால், சாதுக்கள் அப்படியல்ல. அவர்கள் கருணாசாலிகள். தம்மை யார் பார்க்கின்றனரோ, அவன் எத்தகையவனோ ஆகட்டும், அவனுக்கு சத் உபதேசத்தை செய்கிறார்கள், என்று சொல்கிறார்.

இதிலிருந்து, தேவதைகளைவிட ரிஷிகள் (பிராமணர்கள்) உத்தமர்கள் என்று நினைக்கக்கூடாது. தேவதைகள், பகவத் ஆக்ஞா பிரகாரம் யோக்யதானுசாரவாகி பலன்களைக் கொடுப்பவர்கள் ஆகையால், அவர்கள் ஸ்ரேஷ்டர்களே. ரிஷிகள், மக்கள் அயோக்யராகட்டும், யோக்யராகட்டும், பெற்றோர் குழந்தையிடம் எப்படி அன்பு காட்டுகின்றனரோ, அப்படி மக்கள் கஷ்டப்படுவதை காண சகிக்காமல், அவர்களுக்கு நல்வழியைக் காட்டுகின்றனர். அப்படியிருந்தும், தேவதைகளைவிட, ரிஷிகள் தாரதம்யத்தில் குறைந்தவர்களே.

இப்படி செய்தாலும், இவர்களின் உபதேசம், தமோயோக்யர்களுக்கு ருசிக்கிறதா? என்றால், இல்லை. ஒருவருக்கு என்ன/ எவ்வளவு வருமோ, அதை/ அவ்வளவு செய்கிறார்கள். இவர்கள் யோக்யரானால் அவர்களுக்கு அருள்கின்றனர். அவர்கள் அயோக்யர்களாக இருந்தால், சாபங்களைக் கொடுக்கிறார்கள்.

ஆக, சாதுக்களின் சந்திப்பினாலேயே, யோக்யர்களுக்கு ஞானோதயம் உண்டாகி, பரமாத்மனை துதிக்கும் புத்தி பிறக்கிறது. ஆகையாலேயே, பக்தர்களுக்கு நமஸ்காரம் செய்தாலும், அல்லது, அவர்களைக் கண்டாலும்கூட பாப பரிகாரம் ஆகிறது என்று சொல்கிறார்கள்.

**ஈ நிமத்த புன:புன: ஸு**
**க்ஞானிக³ள ஸஹவாஸ மாடு³ கு**
**மானவர கூடா³ட³தி³ரு லௌகிககெ மருளாகி³ |**
**வைனதே¹யாம்ஸக³ன ஸர்வ**
**ஸ்தா²னத³லி தன்னாம ரூபவ**
**தே⁴னிஸுத ஸஞ்சரிஸு இதராலோசனெய பி³ட்டு ||13**

ஈ நிமித்த = மேலே கூறிய காரணங்களால்
புன: புன: = திரும்பத்திரும்ப
சுக்ஞானிகள சஹவாஸமாடு = சஜ்ஜனர்களுடன் நட்பில் இரு

குமானவர = பகவத் த்வேஷம் செய்பவர்களை, பகவத் பக்தரின் த்வேஷம் செய்பவர்களுடன்
கூடாடதிரு = பழகாதே
லௌகிககெ மருளாகெ = இவரே செல்வந்தர் என்று நினைப்பது, எப்போதும் மனைவி, மக்கள் என்று சம்சாரத்தில் மூழ்கியிருப்பது, செல்வத்தில் மயங்கியிருப்பது
வைனதேயாம்ஸகன = கருடனின் முதுகில் அமர்ந்திருக்கும் ஸ்ரீஹரியை
சர்வ ஸ்தானதலி = எல்லா இடங்களிலும்
தன்னாம ரூபவ = பார்க்கும் பொருட்களிலெல்லாம் அந்தந்த ரூபங்களில், அந்தந்த பெயர்களில் பரமாத்மன் இருக்கிறான் என்று நினைத்து
தேனிஸுத = சிந்தித்தவாறு
இதராலோசனெய பிட்டு = மற்ற யோசனைகளை அப்படியே விட்டு
சஞ்சரிஸு = செயல்களை செய்து கொண்டிரு.

மேற்சொன்ன காரணங்களால், ஞானிகளுடன் நட்பில் இருந்தால், ஞானோதயம் கிடைக்கிறது. அயோக்யரின் நட்பில் இருந்தால் கெட்டதே நடக்கிறது. ஆகையால், பகவத்பக்தர்களின் நட்பையே செய். செல்வங்களுக்கு மயங்கி, அயோக்யர்களின் செல்வத்திற்காகவோ, வேறு எந்த காரணத்திற்காகவோ, அவரின் நட்பை நாடாதே. பரமாத்மன் அனைத்து இடங்களிலும் இருக்கிறான் என்று அறிந்து, அந்தந்த இடங்களில் அந்தந்த நாம, ரூபங்களால் அவனை சிந்தித்து, பிற எந்தவொரு யோசனைகளையும் விட்டு, நடமாடு. வீட்டு லௌகிக விஷயங்களை மறந்துவிட்டு சுற்று என்றால் மனைவி, மக்கள் என்ன ஆவார்கள் என்று கேட்கலாம்.

அனன்யாஸ் சிந்தயந்தோமாம் யேஜனா: பர்யுபாஸதே |
தேஷாம் நித்யாபியுக்தானாம் யோகக்ஷேமம் வஹாம்யஹம் ||

என்னைத் தவிர அவர்களை காப்பாற்றுபவர்கள் வேறு யாரும் இல்லை என்று நினைத்து யார் என்னை உபாசனை செய்கிறார்களோ, அவர்களின் நலன்களை நான் பார்த்துக் கொள்கிறேன். என்று கீதையில் ஸ்ரீகிருஷ்ணன் சொல்லியிருக்கிறார். ஆகையால், இவற்றைப் பற்றி எப்போதும் நினைத்துக் கொண்டிருந்தாலும், எதுவும் ஆகப்போவதில்லை. பரமாத்மனே கதி என்று நம்பிவிட்டால், நம் பிரச்னைகளை பரமாத்மனே பார்த்துக் கொள்கிறான் என்று பொருள்.

**ஈ நளினஜாண்ட$^{3}$தொ$^{3}$ளு ஸர்வ**
**ப்ராணிக$^{3}$ளொ ளித்த$^{3}$னவரத வி**
**க்ஞானமய வ்யாபாரக$^{3}$ள மாடு$^{3}$வனு திளிஸத$^{3}$லெ |**
**ஏனு காணதெ$^{3}$ சகல கர்மக$^{3}$**
**ளானெ மாடு$^{3}$வெனெம்ப$^{3}$ நரனு கு**
**யோனி ஐது$^{3}$வ கர்த்ருஹரி எந்த$^{3}$வனெ முக்தனஹ ||14**

ஈ நலினஜாண்டதொளு = இந்த பிரம்மாண்டத்தில்
சர்வ ப்ராணிகளொளு = அனைத்து பிராணிகளிலும்

இத்து = நிலைத்திருந்து
அனவரத = எப்போதும்
விக்ஞானமய = விக்ஞான ஸ்வரூபனான ஸ்ரீஹரி
திளிஸதலெ = ஜீவர்களுக்கு தான் செய்ததை காட்டிக் கொள்ளாமல்
வ்யாபாரகள = கர்மங்களை
மாடுவனு = செய்கிறான்
ஏனு காணதெ = ஸ்ரீபரமாத்மனே தன்னில் இருந்து அனைத்து செயல்களையும் செய்விக்கிறான் என்பதை அறியாமல்
சகல கர்மகள = அனைத்து கர்மங்களையும்
ஆனே மாடுவெனெம்ப = தானே செய்கிறேன் என்று நினைக்கும்
நரனு = மனிதன்
குயோனியைதுவ = நாய், நரி முதலான பிறவிகளை எடுக்கிறான்
ஹரி = பரமாத்மன்
கர்த்து = ஸ்ரீஹரியே ஸ்வதந்த்ர கர்த்தா என்று அறிந்தவனே
முக்தனஹ = ஜீவன் முக்தர் என்று கருதப்படுகிறான்.

இந்த பிரம்மாண்டத்தில் அனைத்து பிராணிகளிலும் இருந்து, ஸ்ரீபரமாத்மனே அனைத்து காரியங்களையும் செய்கிறான். அஸ்வதந்த்ரனான ஜீவன், தானே செய்ததைப் போல செய்விக்கிறான். ஆனால், தன்னில் இருந்து செயல்களை பரமாத்மனே செய்வித்தான் என்று யாருக்கும் தெரிவதில்லை. ஆகவே, அனைத்தையும் தானே செய்தேன் என்ற மயக்கத்தில், பாவங்களை சம்பாதித்து, நாய், நரி முதலான கீழ் பிறவிகளை எடுக்கிறான். அனைத்திற்கும் பரமாத்மனே காரணம் என்று அறிந்து, செய்த புண்ணிய பாப கர்மங்களை பரமாத்மனுக்கே சமர்ப்பணம் செய்தவன், ஜீவன் முக்தர் என்று கருதப்படுகிறான்.

**கலிமலா பஹளெனிஸுதிஹ பா$^3$**
**ம்பொ$^3$ளெயொளகெ$^3$ ஸஞ்சரிஸி ப$^3$து$^3$குவ**
**ஜலசர பிராணிக$^3$ளு ப$^3$ல்லவெ தீர்த்த$^2$ மஹிமெயனு ।**
**ஹலவு ப$^3$கெ$^3$யலி ஹரிய கருணா**
**ப$^3$லதி ப$^3$ல்லித$^3$ராத$^3$ பி$^3$ரம்மா**
**நில விபேஷாத்$^3$யமர ரரியர நந்தனமல கு$^3$ண ||15**

கலிமலாபஹளெனிஸுதிஹ = கலியுகத்தின் பாவங்களை பரிகரிப்பவன் என்று புகழ்பெற்றிருக்கும்
பாம்பொளெயொளகெ = கங்கையில்
சஞ்சரிஸி பதுகுவ ஜலசர பிராணிகளு = அங்கேயே பிறந்து, வாழ்ந்து கொண்டிருக்கும் மீன், முதலை போன்ற நீர்வாழ் உயிரினங்கள்
தீர்த்தமஹிமெயனு = அந்த கங்கையின் புனிதத்தன்மையையும், மகிமையையும்
பல்லவே = அறியுமா?
ஹலவு பகெயலி = பல்வேறு விதங்களில்
ஹரிய கருணாபலதி = ஸ்ரீஹரியின் கருணையால்
பல்லிதராத = பரமாத்மனின் தயா பலத்தினால் அறிந்தவரான

பிரம்மா நில விப ஈஷாதி = பிரம்மா, வாயு, கருட, ருத்ரதேவர்களே முதலானவர்கள்
அமரரு = தேவதைகள்
அனந்தன = எல்லையற்ற மகிமைகளைக் கொண்ட ஸ்ரீஹரியின்
அமலகுண = தோஷங்கள் அற்ற குணங்களை
அரியரு = முழுமையாக அறிய மாட்டார்கள்.

கலியுகத்தில் இருக்கும் பாபிகளின் பாபங்களை பரிகரிக்கும் சக்திகொண்ட கங்கையில், பற்பல மீன், முதலைகள் ஆகிய நீர்வாழ் உயிரினங்கள் இருக்கின்றன. அவற்றிற்கு, அந்த கங்கையின் மகிமையைப் பற்றி தெரியுமா? அதுபோலவே, அபாரமான மகிமையுள்ள, குண சமுத்திரனான பரமாத்மனிடம், கடலில் நீர்த்துளிகள் இருப்பது போல குணங்கள் இருக்கின்றன. அதில் ஒரேயொரு குணத்தையாவது, நீர்வாழ் உயிரினங்களைப் போல இருக்கும் சாமான்ய மனிதர்கள் அறிவார்களா? இல்லை. பகவத் அனுக்கிரக பலத்தினால், சர்வக்ஞர் என்று அழைக்கப்படும் பிரம்ம, வாயுகளே, அந்த பகவன் மகிமைகளை முழுமையாக அறிவதற்கு சாத்தியம் இல்லை. தத்தம் யோக்யதைக்கேற்ப அவற்றை அறிவர் என்பது கருத்து. பிரம்ம வாயுகள் அறிந்த அளவிற்கு, கருட ருத்ராதிகள் அறிந்தவரில்லை. இப்படி இருக்கையில், இன்னும் பகவன் மகிமைகளை முழுமையாக சொல்லத் தக்கவர்தான் யார்?

பாகவத 2ம் ஸ்கந்தம் 7ம் அத்தியாயம் 40-42 ஸ்லோகங்கள்:
விஷ்ணோர்னவீர்ய கணனாம் கதமோர்ஹதீஹய: பார்த்திவ்யான்யபி கவிர்விமமேரஜாம்ஸி |
சஸ்கம்பய: ஸ்வரபஸா ஸ்கலிதந்த்ரி ப்ருஷ்டம் யன்மாம் நிஷாம்ய ஸதனாதுது கம்பமானம் ||40
(பிரம்மதேவர் நாரதருக்கு உபதேசம் செய்கிறார்).

ஸ்ரீபரமாத்மன், வாமனாவதாரம் செய்து, பலிசக்ரவர்த்தியிடம் மூன்றடி நிலம் தானம் கேட்டு, த்ரிவிக்ரம ரூபத்தினால் பூமியை அளந்தபோது பரமாத்மனின் இடது பாதம், ஸத்யலோகத்தை அடைந்தபோது, சத்யலோகம் இடம்பெயர்ந்து கீழே விழும்படி ஆயிற்று. பிரம்மதேவருக்கு அஞ்ஞானம் இல்லாதபோதும், பகவன்மகிமையைக் காட்டுவதற்காக, தமக்கு நாசம் வந்துவிடுமோ என்னும் பயத்துடன், நடுநடுங்கினார். இதனைக் கண்ட பரமாத்மன் ‘உருகம்பமானம், மாம், த்ரிப்ருஷ்டஞ்ச சஸ்கம்ப’ பயத்தில் நடுங்கிக் கொண்டிருந்த என்னை, கீழே விழுந்து கொண்டிருந்த சத்யலோகத்தை நிறுத்தினார். அத்தகைய விஷ்ணுவின் மகிமையை அறிவதற்கு யாருக்குதான் சாத்தியம்? யாருக்கும் சாத்தியமில்லை.

ஒரு காலத்தில் ஆதிகவியான பிரம்மதேவர் ‘பார்த்திவானி ரஜாம்ஸ்யபி’ பூமியில் இருக்கும் மிகச்சிறிய அணுத்துகள்கள் எவ்வளவு என்று கணக்கெடுத்தார். அத்தகைய பிரம்மானாலேயே, பகவன் குணங்களை வர்ணிப்பது சாத்தியமாகவில்லை என்றபிறகு, மற்ற எந்த ஞானியால்தான் அது சாத்தியமாகும்? யாராலும் சாத்தியமில்லை. ||40

நாந்தம்விதாம்ருஹமிமுனய: ப்ரஜேஷா மாயாபலஸ்ய குதோபரேயே |
காயன்குணான்வஷ ஷதானன ஆதிதேவ: சேஷோsதுனாபி ஸமவஸ்யபி நாஸ்யபாரம் ||41

(பிரம்மன் மேலும் கூறுவது):
ஹே நாரதனே. இச்சா சக்தியுள்ள மகாபுருஷ்னான ஸ்ரீபரமாத்மனின் மகிமைகளை, நானே முழுமையாக அறியமாட்டேன். இங்கிருக்கும் மரீச்யாதி ரிஷிகள் ஆகட்டும், பரமாத்மனின் மகிமையை அறியமாட்டார்கள். இப்படி இருக்கையில், மற்றவர்கள் அதனை அறிவாரோ? சேஷதேவருக்கு ஆயிரம் முகங்கள் உள்ளது. ஆகையால், அவர் பிரம்மதேவரை விட அதிகமாக விஷயம் தெரிந்தவரா என்னும் அல்ப கேள்விக்கு பதில் சொல்கிறார்.

1000 முகங்களைக் கொண்ட சேஷதேவர் தனது 1000 முகங்களால் பரமாத்மனை துதித்துக் கொண்டிருந்தாலும், அவரால் இன்னும் பகவந்தனின் மகிமைகளின் எல்லையைக் காணமுடியவில்லை. இனி அவர் அதை காணப்போவதும் இல்லை. ||41

பரமாத்மனின் மகிமைகளை யாரும் அறியாததால், அவரது மகிமைகளை அறிந்தபிறகே அவர்களுக்கு புருஷார்த்தம் என்றும், அப்படி யாரும் காணாததால் இனி யாருக்கும் புருஷார்த்த சித்திகள் கிடையாதா என்னும் கேள்விக்கு பதில் அளித்தவாறு, பகவந்தனின் அருளைப் பெற்றவர்களுக்கு அனைத்தும் சுலபமே என்று சொல்கிறார்.

ஏஷாம்ஸ ஏவ பகர்வா தயயோதனந்த: ஸர்வாத்மனா ஸ்ரிதபதோ யதி நிர்வ்யலீகம் |
தேவைவிதந்த்யதி தரந்திச தேவமாயாம் நைஷாம் மமாஹவிதிதீ: ஷ்வஸ்ருகாளபக்ஷ்யே ||42

ஸ்ரீஹரி, தானாக யாரிடம் கருணை காட்டுகிறானோ, அவர், பரமாத்மனின் மாயையை தாண்டி, தம் யோக்யதைக்கேற்ப பரமாத்மனை அறிவர். அப்படியெனில், பரமாத்மன், சிலருக்கு கருணை காட்டுகிறான், சிலருக்கு காட்டுவதில்லை என்றாகிறது. இதனால், பரமாத்மனுக்கு வைஷம்ய இருக்கிறது என்று சொல்லலாமா? என்றால்:ஸர்வாத்மனா ஸ்ரீதபதூயதி நிர்வ்யலீகம் - கபடம் இல்லாமல், அனைத்து விதங்களிலும் தன் பாதாரவிந்தங்களையே யார் நம்புகிறாரோ, அவரில் கருணையைக் காட்டுவான். என்று சொல்லியிருப்பதால், அவரவர்களின் யோக்யதைக்கேற்ப த்வேஷிகளுக்கு த்வேஷபலன், பக்தர்களுக்கு பக்தி பலன் கொடுக்கிறான் என்பதால், பரமாத்மனுக்கு வைஷம்ய இல்லை என்று தெரிகிறது.

தன்னை அனைத்து விதங்களிலும் நம்புபவர்களுக்கு தான் கருணை காட்டுகிறேன் என்றான். அதாவது, நாய், நரி, ஆகியவற்றிற்கு உணவாகக்கூடிய இந்த தேகத்தின் மேல், நான், எனது என்று யாருக்கு எண்ணம் இருக்கிறதோ, அவர்களுக்கு மட்டும் பகவந்தன் கருணை காட்டமாட்டான் என்று சொல்கிறார். ||42

இந்த மூன்று ஸ்லோகங்களில் அபிப்பிராயத்தையே, தாசராயர் இந்த பத்யத்தில் விளக்கியிருக்கிறார் என்று அறியவேண்டும்.

**ஶ்ரீலகுமிவல்லப[4]னு ஹ்ருத்கீ[1]**
**லாலஜதொ[3]ளித்த[3]கி[2]ல சேதன**
**ஜாலவனு மோஹிஸுவ த்ரிகு[3]ணதி[3] ப[3]த்தரனு மாடி[3] |**
**ஸ்தூ[2]ல கர்மதி[3] ரதர மாடி[3] ஸ்வ**
**லீலெக[3]ள திளிஸத[3]லெ ப[4]வதி[3] கு**
**லால சக்ரத[3] தெரதி[3] திருகி[3]ஸுதிஹனு மானவர ||16**

ஶ்ரீலகுமி வல்லபனு = லட்சுமிபதி
ஹ்ருத்கீலாலஜதொளு = இதய கமலத்தில் (கீலால = நீர். ஜ = அதில் பிறந்தது, அதாவது கமலம்)
இத்து = இருந்து
அகிள சேதன ஜாலவனு = அனைத்து ஜீவ சமூகத்தை
த்ரிகுணதி = சத்வ ரஜஸ் தமோ குணங்களால்
பத்தரனமாடி = கட்டப்பட்டவர்களாக செய்து
மோஹிஸுவனு = விரும்புவான்
ஸ்தூலகர்மதி ரதர மாடி = ஸ்தூலமான கர்மங்களை செய்ய வைத்து
சுலேலெகள திளிஸதலெ = தன் உத்தமமான மகிமைகளை, லீலைகளை மக்களுக்கு தெரியப்படுத்தாமல்
மானவர = மனிதர்களை
பவதி = சம்சாரத்தில்
குலாலசக்ரவதெரதி = குயவனின் சக்கரத்தைப் போல
திருகிசுதிஹனு = சுற்றுவான்.

ஶ்ரீலட்சுமிபதி, அனைத்து மக்களின் இதய கமலத்தில் நிலைத்திருந்து, அனைத்து ஜீவர்களையும் த்ரிகுணங்களில் கட்டி, அவர்களை விரும்புவான் என்கிறார் தாசராயர். இதைப் பார்த்தால், பரமாத்மனே ஜீவர்களை மூன்று குணங்களில் கட்டி வைத்திருக்கிறான் என்று அர்த்தம் வருகிறது. அப்படி சொல்வதற்கில்லை. ஏனெனில், மகாபாரத தாத்பர்ய நிர்ணய 1ம் அத்தியாயத்தில்:

த்ருஷ்ட்வாஸ சேதனகர்ணா ஜடரே ஷயனானானந்த மாத்ர வபுஷ: ஸ்ருதி விப்ரமுர்க்தா |
த்யானம் கதா ஸ்ருதிகதாம்ஸ்ச சுஷுப்தி சம்ஸ்தா பிரம்மாதிர்கா கலிபர்கா மனுஜாம் ஸ்தத்யைக்ஷத் ||

* வெறும் ஆனந்த ஸ்வரூபத்தைக் கொண்டிருக்கும் முக்தர்களை, ஸ்ருஷ்டிக்கு யோக்யர் ஆனவர்களில், த்யானம் செய்பவர்கள், நித்ய சம்சாரிகள், சுஷுப்தி நிலையில் இருப்பவர்கள் என்றால் பிரம்மதேவரே முதலான சாத்விகர்,
* கலி முதலான தாமஸர்,
* மனுஷ்யரான ராஜஸர்,

என அனாதி காலத்திலிருந்து மூன்று குணங்களால் கட்டுப்பட்ட ஜீவர்களை தன் வயிற்றில் வைத்திருக்கிறான் என்று தெரிகிறது. இதே விஷயத்தை விஷ்ணு ரஹஸ்யத்தில் 2ம் அத்தியாயத்தில் விளக்கியுள்ளனர்.

கல்பயித்வாகிளான் பஸ்சாஜ்ஜீவரஷீர் வலோகயம் ||24
கதிசித்புருஷாகார: கதிசித்தயரூபிண: ||
ஸிம்ஹ வ்யாக்ர ம்ருகாதீனாம் கஜகோஜா விபக்ஷிணாம் ||35
வ்ருக்ஷகுல்மலதாதீனாம் மாகாரம் பிப்ரதோபரே ||
அபரே ஸத்ருஷாகாரா ஜுஷமீனாதி யாதஸாம் ||36
ஸ்வரூபேணைவ யோஜீவா ஸ்தாத்ருஷானந்த ஸஞ்ஞகா: |
குணைரனேக ஸங்க்யைகை: ப்ரத்யேகமபிசான்விதா: ||37
ஸாத்விகா ஷ்வேதரூபாஸ்து ஷ்யாமாஸ்தத்ரேவ தாமஸா: |
தத்ராபி தாரதம்யேன ஷ்வேதஸ்வேத தராதிகம் ||38
யதாயோக்ய தயாஸர்வே ராஜஸா ஷபலாஸ்ததா |
தத்ததாகார ஸத்ருஷைர் லிங்கதேஹைரனாதிபி: ||39
கஞ்சுகைரிவ ஸஞ்சலான்னாஸ் தத்தத்வர்ணை: ப்ருதக் ப்ருதக் |

பரமாத்மன் பிரம்மதேவருக்கு சொல்வது:
மஹத்தத்வங்களை ஸ்ருஷ்டித்த பிறகு, ஜீவராசிகளை பார்த்தேன். அதில் ஸ்வரூபத்திலேயே சிலர் புருஷ ரூபத்திலும், சிலர் குதிரையின் ரூபம், வேறு சிலர் சிங்கம், புலி, மான் முதலான மிருகங்களின் ரூபங்களாகவும், வேறு சிலர் யானை, பசு, ஆடு, பறவைகளின் ரூபங்களாகவும், வேறு சிலர், மரங்கள், செடி கொடிகளைக் கொண்டும், வேறு சிலர் மீன், ஆமை, முதலான நீர்வாழ் உயிரினங்களின் உருவங்களைக் கொண்டும் இருந்தனர். இவர்கள் அனைவரும் ஸ்வரூபத்திலேயே இப்படி இருந்தனர். இத்தகைய ஜீவர்கள் ஏராளமாக இருந்தனர். ஒவ்வொரு ஜீவரின் குணமும் தனித்தனியாக அனேக எண்ணிக்கையிலான குணங்களால் பிறந்திருந்தன. இந்த ஜீவர்கள், மூன்று குணங்களால் கட்டுப்பட்டிருந்தனர். சாத்விக, ராஜஸ, தாமஸ குணங்கள் அனைத்து ஜீவராசிகளிலும் இந்த மூன்று பேதங்கள் இருந்தன. இந்த மூன்று குணங்களை அவர்களின் வர்ணங்களே காட்டியது. சாத்விகர்கள் வெண்மையாக இருந்தனர். தாமஸர்கள் கருப்பு வண்ணத்தில் இருந்தனர். ராஜசர் சிகப்பு வண்ணத்தில் இருந்தனர்.

இந்த சாத்விகரில்
சிலர் சாத்விக-சாத்விகர்,
சிலர் சாத்விக-ராஜ்ஸர்,
வேறு சிலர் சாத்விக-தாமஸர்.

ராஜஸர்களில்,
சிலர் ராஜச-சாத்விகர்,
சிலர் ராஜச-ராஜசர்
வேறு சிலர் ராஜச-தாமஸர்.

இதைப்போலவே தாமசர்களில்
சிலர் தாமச-சாத்விகர்,
சிலர் தாமச-ராஜசர்
வேறு சிலர் தாமச-தாமசர்களாக இருந்தனர்.

இவற்றில் ஒவ்வொன்றிற்கும் நடுவே வேறுபாடுகள் உண்டு. அவை கலவையான வண்ணங்களால் இருக்கின்றன. சுத்தமான வெண்மை, வெண்மை கலந்த கருப்பு, வெண்மை கலந்த சிவப்பு என அனேக வண்ணங்கள் இருந்தன.

இப்படியாக அந்த ஜீவர்களின் ஸ்வரூபங்கள், அவர்கள் சாத்விக, ராஜஸ, தாமசர்கள் என அடையாளம் காட்டின. ஜீவர்களின் ஸ்வரூப தேகத்தின் மேலே, கவசம் போட்டதைப் போல, அதே வண்ணங்களால், அதே உருவத்தினால் ஆன, லிங்க சரீரம், ஒரு உறையைப் போல மூடிக்கொண்டிருந்தது, என்று பரமாத்மன், பிரம்மதேவருக்குக் கூறுகிறான். இத்யாதி பிரமாணங்களால், அனாதி காலங்களிலிருந்து ஜீவர்கள் த்ரிகுணங்களால் கட்டப்பட்டவர்கள் என்று தெரிகிறது.

இப்படி இருக்கையில், தாசராயர், 'த்ரிகுணதி பத்தரன மாடி' என்னும் வாக்கியத்தால், பரமாத்மன் ஜீவர்களை தன் விருப்பப்படியே, சிலரை சாத்விகர்களாக, சிலரை ராஜஸர்களாக, சிலரை தாமசர்களாக செய்தான் என்று சொல்வதாக தோன்றுகிறது. இது சித்தாந்தத்திற்கு எதிராக இருப்பதால், இதை அப்படி அர்த்தம் கொள்ளக்கூடாது.

அனாதி காலத்திலிருந்து, ஜீவர்கள் த்ரிகுணங்களால் கட்டுப்பட்டவர்களாக இருந்தாலும், ஜீவாச்சாதிகா, பரமாச்சாதிகா என்னும் இரு துஷ்ட ப்ரக்ருதியின் ஆவரணத்தினால் (உறை) மூடப்பட்டு, சாத்விகர் என்றும், ராஜசர் என்றும், தாமசர் என்றும் அழைத்துக் கொண்டனர். ஜீவனின் ஸ்வரூபம், ஜீவனுக்கு தெரிவதில்லை. அத்தகைய ஜீவருக்கு அவரவர்களின் யோக்யதைக்கேற்ப உள்ள கர்மங்களை செய்வித்து அதன் பலன்களைக் கொடுப்பதற்காக, சாத்விகர்களுக்கு பரமாத்மனில் பக்தி ஆகியவற்றை வளர்ப்பதற்காக, சாத்விக தேகமான தேவதா சரீரத்தையும், ராஜஸர்களுக்கு மனுஷ்ய சரீரத்தையும், தாமஸர்களுக்கு தைத்ய சரீரத்தையும் கொடுத்து அவரவர்களின் யோக்யதைக்கேற்ப கர்மங்களை செய்விக்கிறான். -- என்கிற அர்த்தமே வருகிறதே தவிர, ஜீவர்களையே சாத்விகாதி குணங்களைக் கொண்டவர்களாக ஆக்கினான் என்னும் அர்த்தம் வருவதில்லை. பரமாத்மன் செய்யும் செயல்களை, ஜீவன், பகவன் மாயையால் அவற்றை தானே செய்தேன் என்று அறிகிறான். பரமாத்மன் அனைவரிலும் இருந்து கர்மங்களை செய்கிறான் என்றால், இதை யாராவது அறியாமல் இருப்பார்களா? ஞானிகள் தங்களின் ஞான-சமாதிகளால் பகவன் மகிமைகளை அறிகின்றனர். அஞ்ஞானிகள் அதை அறிவதில்லை.

இது உண்மையானால், அது சிலருக்கு மட்டும் ஏன் தெரிகிறது? ஏன் சிலர் அதனை அறிவதில்லை என்றால், பாகவதம் 7ம் ஸ்கந்தம் 1ம் அத்தியாயம், 6ம் ஸ்லோகத்தில்: 'நிர்குணோபி ஹ்யசோவ்யக்த:' என்று இருக்கிறது. இதில் இருக்கும்

‘அவ்யக்த’ சப்தத்திற்கு, வியாக்யானத்தில், ‘தர்ஹிகுதோ விவிச்யனஞாயதே இத்யதோ வ்யக்த இதி’ என்கிறார்.

(ஜீவ-பின்ன-பரமாத்மனே அனைவரிலும் இருந்து கர்மங்களை செய்வித்தவாறு கட்டுப்படுபவனும், கட்டுப்படுத்துபவனும் தானே ஆனால்? என்னும் முந்தைய ஸ்லோகத்திற்கான விளக்கம் இது).

ஜீவ-பின்ன-பரமாத்மன் ஏன் தெரிவதில்லை? என்றால், அதற்கு விடையாக ‘அவ்யய’ என்கின்றனர்.

ததிஸ்த க்ருதவத்காஷ்டே வன்ஹிவச்ச ஜனார்த்தன: |
தேஹேந்த்ரியாஸு ஜீவேப்யோ விவிச்ச ஞாயதே நது ||

தயிருக்குள் நெய் இருக்கிறது. இது நமக்குத் தெரியும். ஆனால், தயிரைப் பார்த்தால் உடனடியாக நெய் தெரிகிறதா? அதை கடைந்து, வெண்ணெய் எடுத்து, அதை காய்ச்சினால் நெய் வருகிறது. அதைப்போலவே, கட்டையில் நெருப்பு இருக்கிறது. கட்டையைப் பார்த்தால் நெருப்பு தெரிவதே இல்லை. இரு கட்டைகளை தேய்த்தால், அங்கு நெருப்பு வருகிறது. அப்படியே பரமாத்மன், ஜீவர்களில் இருந்து அனைவருக்கும் தெரிவதில்லை. தயிர் கடைந்து, வெண்ணெய் காய்ச்சுவதைப் போல, ஞானம் என்னும் தயிரை கடைந்து, அங்கு வரும் பரமாத்மனின் மகிமை என்னும் வெண்ணையை எடுக்க வேண்டும். ஹரிசர்வோத்தமத்வ இத்யாதி குரு உபதேச ஞானம், தயிரைப் போல இருக்கிறது. அதற்குள், பகவன் மகிமை கலந்திருக்கிறது. அதனை கடைந்து அறியவேண்டும். அதாவது, சமாதியில், பகவத் தியானம் செய்து, பகவத் அனுக்கிரகத்தால், ஜீவபின்னனான பரமாத்மனை காணவேண்டும். இதனை ஞானிகள் காண்கின்றனர். அஞ்ஞானிகள் காண்பதில்லை என்பது கருத்து.

குயவனின் சக்கரத்தைப் போல சம்சாரத்தில் சுற்றிவிடுவான் என்று சொல்லியிருக்கிறார். சக்கரத்தின் மேல் ஒரு கருப்புப் புள்ளி, ஒரு வெள்ளைப் புள்ளி வைத்து, சக்கரத்தை சுற்றினால், அதன்படியே வெள்ளையும், கருப்புமாக மாறி மாறி புள்ளிகள் அந்த பானையில் வரும். அதுபோலவே, பிறப்பு, வாழ்தல், இறப்பு என்னும் சுழற்சி மற்றும் இதன் நடுவில், சுகம், துக்கம். ‘சுகஸ்த்யானந்தரம் துக்கம் துக்கஸ்யானந்தரம் சுகம்’ என்னும் ஆதார வாக்கியத்தின்படி, ஜீவனும் சக்கரத்தைப் போலவே சுற்றிவருகிறான் என்பது கருத்து. இதற்காகவே குயவனின் சக்கர உதாரணத்தை சொல்லியிருக்கிறார்.

**வேத$^{3}$ ஸாஸ்திர விசாரகை$^{3}$து$^{3}$ நி**
**ஷேத$^{4}$ கர்மவ தொரெது$^{3}$ நித்யதி$^{3}$**
**ஸாது$^{4}$ கர்மவ மாள்பரிகெ$^{3}$ ஸ்வர்க்கா$^{3}$தி$^{3}$ ஸுக$^{2}$வீவ |**
**ஐதிஸுவ பாபிக$^{3}$ள நிரயவ**
**கே$^{2}$த மோத$^{3}$ மனுஷ்யரிகெ$^{3}$ து$^{3}$**
**ர்வாதி$^{3}$ க$^{3}$ளிக$^{3}$ந்த$^{4}$ந்த$^{1}$மதி$^{3}$ மஹது$^{3}$க்கக$^{3}$ணனுணிப ||17**

வேத சாஸ்திரவிசாரகைது = வேத சாஸ்திரங்களை நன்றாக படித்து அதன் சாரத்தை அறிந்து
நிஷேத கர்மவ தொரெது = வேதங்களில், தர்ம சாஸ்திரங்களில் எந்த செயல்களை செய்யக்கூடாது என்று சொல்கிறார்களோ அதை செய்யாமல் துறந்து
நித்யதி = தினந்தோறும்
சாதுகர்மவ மாள்பரிகெ = சாஸ்திரங்களில் சொல்லியவாறு விதிபூர்வகமான கர்மங்களை செய்பவர்களுக்கு
ஸ்வர்க்காதி சுகவீவ = ஸ்வர்க்கம் முதலான சுகங்களைக் கொடுக்கிறான்
பாபிகள = பாபிகளை
நிரயவ = நரகத்தை
ஐதிஸுவ = தள்ளுகிறான்
மனுஷ்யரிகெ கேதமோத = சுக துக்க மிஸ்ரத்தை கொடுக்கிறான்
துர்வாதிகளிகெ = மித்யாவாதிகளுக்கு, அன்யதா ஞானிகளுக்கு
அந்தம்தமதி = அந்தந்தமஸ்ஸில்
மஹதுக்ககள = மிகப் பெரிய துக்கங்களை
உணிப = உண்ண வைக்கிறான்.

இங்கு ராஜஸர், தாமஸர் இவர்களுக்குக் கிடைக்கும் கதியை சொல்கிறார்.

ராஜஸ சாத்விகர், வேத சாஸ்திரங்களைப் படித்து, தத்வார்த்தங்களை அறிந்து கர்மங்களை செய்ய வேண்டும். செய்யக்கூடாதவற்றை விடவேண்டும் என்று அறிந்து, துஷ்டகர்மங்களை விட்டு, சத்கர்மானுஷ்டானங்களை செய்தாலும், அனைத்தையும் செய்வது பரமாத்மன் என்று, சர்வ சமர்ப்பணையை பரமாத்மனுக்கு செய்யவேண்டும் என்ற ஞானம் இல்லாமல் சத்கர்மங்களை மட்டும் செய்து வருவர். இவர்களுக்கு ஸ்வர்க்க பலன் கிடைக்கிறது.

ராஜஸ தாமஸர் பாப கர்மங்களை செய்பவர்கள். இத்தகைய சாமான்ய பாபிகளுக்கு நரக துக்கம் கிடைக்கிறது. ராஜஸ ராஜஸர் மனுஷ்யர்கள். இவர்கள் சுக துக்கங்கள் கலந்த பலனையே பெறுவார்கள்.

மொத்தத்தில், மூன்றுவித ராஜஸர்களுக்கும் சுக துக்கம் மிஸ்ரமான பலனே கிடைக்கிறதே தவிர, நிரந்தரமான சுகமோ, நிரந்தரமான துக்கமோ இல்லை என்பது கருத்து. மித்யாவாதிகள், அன்யதா ஞானிகள் ஆகியோர் தாமஸ ஜீவர்கள் என்று அறியவேண்டும். இவர்களுக்கு நிரந்தர துக்கமான அந்தந்தமஸ்ஸே கிடைக்கிறது.

**நிர்கு3ணோபாஸககெ3 கு3ணஸம்**
**சர்க்க3 தோ3ஷக3ளீயத3லெ அப**
**வர்க்க3த3லி ஸுக2வித்து பாலிஸுவனு க்ருபாஸாந்த்3ர |**
**து3ர்க3மனு எந்தெ3னிப த்1ரைவி**
**த்யர்கெ3 த்ரிகு3ணாதீத ஸந்தத**
**ஸ்வர்க்க3 பூ4 நரகத3லி ஸஞ்சாரவனெ மாடி3ஸுவ ||18**

நிர்குணோபாஸககெ = ஸ்ரீஹரி, ப்ராக்ருத குணசம்பந்தங்கள் இல்லாதவன் என்பதை அறிந்து, அவரை பூஜிப்பவர்களுக்கு
குணஸம்ஸர்க்க தோஷகள = அந்த ஜீவன் செய்த குண சம்பந்தமான அஞ்ஞான தோஷங்களை
ஈயதலெ = கொடுக்காமல் (அதை பரிகரித்து)
க்ருபாஸாந்த்ர = தயாளுவான ஸ்ரீஹரி
அபவர்க்கதலி = முக்தியில்
சுகவித்து பாலிஸுவனு = சுகங்களைக் கொடுத்து அருள்கிறான்
த்ரைவித்யர்கெ = த்ரிவித்யை, ரிக், யஜுஸ்ஸாம என்னும் மூன்று வேதங்களை கற்பித்து, ஸ்தூலமாக தெரியும்

அர்த்தத்தை பரமார்த்தம் என்று அறிந்து, ஸ்வர்க்காதி பலன்களையே வேதோக்தங்கள் என்று அறிந்து, அவற்றைக் கொடுக்கும் நான் தேவதைகளை பூஜிப்பதே தர்மம் என்றும், வேதங்களுக்கு வேறு தாத்பர்யம் இல்லை என்றும் சிந்தித்து, வேதங்களில் சொல்லப்பட்ட ஸ்தூல கர்மங்களை அனுஷ்டிப்பவர்கள் த்ரைவித்யர்கள். அத்தகையவர்களுக்கு, ஸ்ரீமன் நாராயணன்,
துர்கமன் = சுலபனல்ல
எந்தெனிப = என்று சொல்லிக் கொள்கிறான்
ஸந்தத = எப்போதும்
த்ரிகுணாதீத = ஸ்வயம் தான் இந்த மூன்று குணங்களின் சம்பந்தம் இல்லாதவன்
அத்ரைவித்யர்கெ = ஸ்வர்க்கம், பூமி, நரகத்தில் இருக்கும் சுகதுக்க போகங்களை கொடுக்கிறான்
ஸ்வர்க்க பூ நரகதலி = ஸ்வர்க்கம், பூமி, நரகத்தில்
சஞ்சாரவனெ மாடிசுவ = சஞ்சாரத்தை செய்விக்கிறான்.

இந்த த்ரைவித்யர்களில், சிலர் ஸத்வபாகம் அதிகம் உள்ளவர்கள். சிலர் ரஜோ பாகம் அதிகம் உள்ளவர்கள். சிலர் தமோ பாகம் அதிகம் உள்ளவர்கள். இப்படி அதிகமாக இருக்கும் சத்வாதி குணங்களுக்கேற்ப, வெவ்வேறு தேவதைகளை பூஜிப்பதால், ஸ்வர்க்க பூமி நரகத்தில் அவர்களுக்கு பலன்கள் கிடைக்கின்றன.

ஸாத்விக முதலான மூவரைத் தவிர, த்ரிகுணாதீதர் (நிர்குணர்கள்) என்று வேறு சிலர் இருக்கின்றனர். சாத்விகர் முக்தியோக்யர்கள். ஆனால், அவர்களுக்கு இவ்வளவு கல்ப சாதனை செய்யவேண்டும், இவ்வளவு பிறவிகள் சாதனை செய்ய வேண்டும் என்று விதி இருக்கிறது. சாத்விகர்கள் தங்கள் சாதனை முடியும்வரை, சத்வகுண சம்பந்தத்தில் இருப்பார்கள். சாதனை முடிந்தபிறகு அவரே நிர்குணர்கள் (குணாதீதர்கள்) ஆகின்றனர். சத்வகுண சம்பந்தம் இருக்கும்வரைக்கும் ஸ்வர்க்க சுகத்தையோ, ராஜ்ய போகங்களையோ, வேறு போகங்களையோ விரும்புவர்.

நிர்குணர்களான பிறகு,

ஸாலோக்ய ஸார்ஷ்டி ஸாமீப்யைகத்வமித்யுததீயமான ந க்ருஹ்ணந்தி வினாமத்யே வனஞ்சனா: ||

சாலோக்யாதி 5 வித முக்திகளைக்கூட விரும்பமாட்டார்கள் என்று பரமாத்மனே சொல்லியிருக்கிறார். இந்த ஞானம், குணாதீதருக்கு மட்டுமே பிறக்கிறது. இதே அர்த்தத்தையே தாசராயர் இந்த பத்யத்தில் சொல்கிறார். குணசம்பந்த தோஷங்கள் என்றால், ஸ்வர்க்கத்திற்குப் போய் சில காலம் சுகங்களை அனுபவித்து, மறுபடி பூமியில் பிறப்பர். அங்கும் அனித்ய சுகத்தையே அனுபவிப்பர்.

மேலே கூறியதைப் போல த்ரிகுணாதீதரான, சாதனை முடிந்த சாத்விகர்களுக்கு, இத்தகைய குணசம்பந்த தோஷங்களைக் கொடுக்காமல், முக்தியைக் கொடுத்து காப்பாற்றுகிறான். இதைத்தவிர, இன்னும் சாதனை முடியாதிருக்கும் சாத்விகர்கள், சில காலம் சாதனையை செய்துமுடிக்க அவர்களின் சுகங்கள் அனைத்தையும் ஸ்வர்க்கத்திலேயே அனுபவிப்பார்கள்.

‘விஷ்ணோஸ்து மத்யமோபக்தோ னிரயன்யைவ கச்சதி’ என்னும் 11ம் ஸ்கந்தத்தின் தாத்பர்யத்திற்கேற்ப, பக்தர்களான மனுஷ்யோத்தமர்கள் என்றும் நரகத்திற்குப் போவதில்லை. பூமியிலேயே சுகங்களை அனுபவிப்பர். நாளடைவில் இவர்களுக்கும் முக்தி கிடைக்கிறது.

ராஜஸர்கள், பூமியில் துக்கம் கலந்த சுகங்களையே அனுபவிக்கின்றனர். தாமஸர்கள், நரக வாசிகள். சில காலங்கள் வரை, பூமியில் துக்கம், சில காலம் சுகம் என அனுபவித்தவாறு இருப்பார்கள். சாத்விகர்களில் நிர்குணர்கள் எப்படி உத்தமர்களோ, அப்படியே தாமஸர்களில் நிர்குணோபாசனை (நிர்குணோபாசனை என்றால், பரமாத்மன் நிர்குணன். நிராகாரன் என்று உபாசனை செய்வது) செய்துகொண்டிருப்பர் என்று அர்த்தம். இந்த உபாசனையை செய்யக்கூடாது என்று ஸ்ரீமதாசார்யர் கண்டிக்கிறார். இதிலும் அன்யதோபாசனை (நானே பிரம்மன் என்று சொல்லி உபாசனை செய்வது) செய்பவர்களுக்கு, அந்தம்தமஸ்ஸே கிடைக்கிறது என்று சொல்கிறார்.

**மூவரொளகி$^3$த்த$^3$ரு ஸரியெ ஸுக$^2$**
**நோவுக$^3$ளு ஸம்ப$^3$ந்த$^4$வாக$^3$வு**
**பாவனகெ பாவன பராத்பர பூர்ணஸுக$^2$வனதி$^3$ |**
**ஈ வனருஹ ப$^4$வாண்ட$^3$தொ$^3$ளு ஸ்வ க**
**ளேவர ததா$^3$கார மாடி$^3$ ப**
**ராவரேஷ சராசராத்மக லோகக$^3$ள பொரெவ ||19**

மூவரொளகெ = ஸாத்விக, ராஜஸ, தாமஸ ஜீவர்களில்
இத்தரு சரியே = ஸ்ரீஹரி இருந்தாலும்
சுக நோவுகளு = சுகதுக்கங்கள்
சம்பந்தவாகவு = பரமாத்மனுக்கு ஏற்படுவதில்லை
பாவனகெ பாவன = ஏனெனில் அவன், பரம பவித்ரம் எனப்படும் பொருட்களைவிட பரம பவித்ரனானவன்
பராத்பர = உலகில் உத்தமர்கள் எனப்படும் ரமா பிரம்மாதிகளைவிட உத்தமர்கள்
பூர்ண சுகவனதி = பூர்ணசுகங்கள் நிறைந்தவன்

ஈ வனருஹ பவாண்டதொளு = இந்த கமலத்தில் பிறந்தவரான பிரம்மனின் பெயர் கொண்ட அண்டத்தில் (பிரம்மாண்டத்தில்)
ஸ்வ களேவர = அதே தேகத்துடன்
ததாகார மாடி = தன் சரீரம் என்று சொல்லப்படும் ஜகத்தினை, அந்தந்த உருவத்தில் (பற்பல ரூபங்களால்)
பராவரேஷ = உத்தமரான ரமா முதல் அல்பரான த்ருணஜீவர் வரைக்கும், அனைவருக்கும் நியாமகனான
சராசராத்மக = ஸ்தாவர, ஜங்கமங்களில் அந்தர்யாமியாக இருந்து
லோககள = அனைத்து உலகங்களையும்
பொரெவ = காப்பாற்றுகிறான்.

பிரம்மாதி உள்ள அனைத்து பிராணிகளுக்கும் ஸ்வாமியானவன். பூர்ண சுக-சமுத்திரன். கடலுக்கு ஜலதி, வனதி என்று பெயர்கள் உண்டு. எப்படியெனில்: 'வனம்பாஸ்யப்ஸுகானனே' என்னும் இலக்கணத்தால் வன என்றால் நெருப்பிலிருந்து வரும் ஒளி, தண்ணீர் என்றும் அர்த்தங்கள் இருக்கின்றன. ஆகையால், பூர்ண சுக வனதி என்றால், பூர்ண சுக ஜலதி என்று அர்த்தம் சொல்ல வேண்டும். 'வஜருஹ பவாண்டதொளு' என்றாலும் இதே அர்த்தம்தான். 'கமலபவ' என்றால், கமலத்திலிருந்து பிறந்தவர் பிரம்மன். அந்தப் பெயருள்ள அண்ட என்றால் பிரம்மாண்டம். இத்தகைய பிரம்மாண்டத்தில், ஸ்தாவர ஜங்கம பிராணிகளின் உருவங்களை தான் பெற்று, அனைவரிலும் இருந்து, அனைவரையும் காப்பாற்றுகிறான்.

**ஈ நிமித்த நிரந்தரதி³ ஸ்வா**
**தீ⁴ன கர்த்ருத்வவனு மரெதெ³**
**நேனு மாடு³வதெ³ல்ல ஹரி ஒளஹொரகெ³ நெலெஸித்து³ ।**
**தானெ மாடு³வனெந்த³ரிது³ ம**
**த்தானெயந்த³தி³ ஸஞ்சரிஸு பவ**
**மான வந்தி³தனொந்த³ரேக்ஷண பிட்டக³ல நின்ன ।।20**

ஈ நிமித்த = எந்த பிரதிபலன்களையும் விரும்பாமல்
நிரந்தர = தினந்தோறும்
ஸ்வாதீன கர்த்ருத்வவனு மரெது = ஸ்வதந்த்ர கர்த்ருத்வன் என்பதை மறந்து
ஏனேனு மாடுவதெல்ல = செய்யும் செயல்கள் அனைத்தும்
ஹரி ஒளஹொரகெ நெலஸித்து = ஹரியே உள்ளும் வெளியேயும் நிலைத்திருந்து
தானே மாடுவனெந்தரிது = ஸ்ரீஹரி தானே செய்கிறான் என்பதை அறிந்து
மத்தானெயந்ததி = பயம் இல்லாமல் கர்வத்துடன்
சஞ்சரிஸு = நடமாடு
பவமானவந்தித = முக்யபிராணரால் பூஜிக்கப்படுபவனான
ஒந்தரேக்ஷண = ஒரு அரைக்கணமும்
பிட்டகல = விட்டு அகல மாட்டான்
நின்ன = உன்னை

பவமான வந்திதனான ஸ்ரீபரமாத்மன், அனைவரிலும் முக்யபிராண அந்தர்யாமியாக இருந்து, அவர்கள் மூலமாக அனைத்து செயல்களையும் செய்விக்கிறான் என்று அறிந்து துதிப்பது அவசியம் என்று குறிப்பிடுகிறார் தாசராயர்.

**ஹலவு கர்மவ மாடி$^{3}$ தே$^{3}$ஹவ**
**ப$^{3}$ளலிஸதெ$^{3}$ தி$^{3}$னதி$^{3}$னதி$^{3}$ ஹ்ருத$^{3}$ய**
**க$^{1}$மல ஸதனதி$^{3}$ விராஜிஸுவ ஹரிமூர்த்தியனெ ப$^{4}$ஜிஸு |**
**திளியதீ$^{3}$ பூஜா ப்ரகரணவ**
**ப$^{2}$ல ஸுபுஷ்பாக்$^{3}$ர்யோத$^{3}$க ஸ்ரீ**
**துளஸித$^{3}$ல வர்ப்பிஸலு ஒப்பனு வாஸுதேவ$^{3}$ ஸதா$^{3}$ ||21**

ஹலவு கர்மவ மாடி = பற்பல விதமான நியம கர்மங்களை செய்து
தேஹவ பளலிஸதெ = தேகத்திற்கு சோர்வினைக் கொடுத்து துன்புறுத்தாமல்
தினதினதி = தினந்தோறும்
ஹ்ருதயகமல சதனதி = இதய கமலம் என்னும் தூய்மையான வீட்டில்
விராஜிஸுவ = வீற்றிருக்கும்
ஹரிமூர்த்தியனெ = பகவத்ரூபங்களை, அவற்றின் குணங்களை
பஜிஸு = துதித்துக் கொண்டிரு
ஈ பூஜா ப்ரகரணவ திளியதெ = இப்படியான பூஜா விதானங்களை அறியாமல்
பல சுபுஷ்ப அக்ர்யோதக ஸ்ரீதுளசிதல = பழம், பூ, அர்க்யம், துளசிதளம்
அர்ப்பிஸலு = ஆகியவற்றை அர்ப்பித்தால்
வாசுதேவ = வாசுதேவன்
ஒப்பனு = ஒப்புக் கொள்ளமாட்டான்
சத = எப்போதும்

முக்திக்கு சாதனையான இந்த சரீரத்தை, பற்பல விரதங்கள், உபவாசங்களை செய்து தேகத்தை சுத்தம் செய்து கெடுத்துக் கொள்வதில் எவ்வித பலன்களும் இல்லை. உன் இதய கமலம் என்னும் கோயிலில் ஒளிரும் பிம்பமூர்த்தியான ஸ்ரீஹரியே சர்வகர்த்தன் என்று அறிந்து, சர்வசமர்ப்பணம் செய்து அவனை வணங்கு. இதுவே பகவத்பூஜை. இந்த பூஜையைப் பற்றி அறியாமல் வெறும், பூ, துளசி, சந்தனம், முதலான வெளிப்புற / படாடோப பூஜையை செய்தால், அதனால் பரமாத்மன் மகிழ்வதில்லை.

இந்த வாக்கியத்தால், வெளிப்புற பூஜை செய்யக்கூடாது என்று அர்த்தமல்ல. எந்த செயல்களை செய்தாலும், பரமாத்மனே கர்த்தா என்னும் ஞானம் இல்லாமல், நான் பூஜை செய்தேன்; பூ, துளசி கொண்டு வந்து அர்ச்சித்தேன்; பீஷ்மபஞ்சக விரதம் செய்தேன் என்று ஸ்வதந்த்ர கர்த்ருத்வத்தால் அனைத்தையும் செய்தேன் என்று நினைத்தால், அப்படி செய்த அனைத்தும் நிஷ்பலனே (பலன்களே கொடுக்காது) ஆகுமே தவிர, பகவந்தன் அதிலிருந்து மகிழ்வதில்லை.

**த$^{4}$ரணி நாராயணனு உத$^{3}$கதி$^{3}$**
**துரிய நாமக அக்$^{3}$னியொளு ஸ**

**ங்கருஷணாஹ்வய வாயுக[3] பிரத்[3]யும்ன அனிருத்த[3]**
**நிருதிஹனு ஆகாஷதொ[3]ளு மூ**
**ரெரடு[3] ரூபவ த[4]ரிஸி பூ[4]தக[3]**
**கரெஸுவனு தன்னாமரூபதி[3] ப்ரஜர ஸந்தெய்ப ||22**

தரணி = ப்ருத்வி தத்வத்தில்
நாராயணனு = நாராயணன்
உதகதி = அபு (தண்ணீர்) தத்வத்தில்
துரிய நாமகனு = வாசுதேவ மூர்த்தி
அக்னியொளு = தேஜஸ் (நெருப்பு) தத்வத்தில்
சங்கருஷணாஹ்வயனு = சங்கர்ஷண நாமகன்
வாயுக = வாயு தத்வத்தில்
பிரத்யும்ன = பிரத்யும்ன நாமகன்
ஆகாஷதொளு = ஆகாஷ தத்வத்தில்
அனிருத்த இருதிஹனு = அனிருத்தன் இருக்கிறான்
மூரெரடு ரூபவ = இப்படி 3+2=5 ரூபங்களை
தரிஸி = ஸ்வீகரித்து
பூதக = பஞ்சபூதங்களில்
தன்னாமரூபதி = அந்தந்த ரூபங்களால் இருந்து, அந்தந்த பெயர்களால் அழைக்கப்படுகிறான்
ப்ரஜர ஸந்தெய்ப = மக்களை காக்கிறான்.

பரமாத்மனின் இத்தகைய விபூதி ரூபங்களை அறிந்த பக்தர்களை அவன் கருணையால் காக்கிறான்.

**க[4]னக[3]தனு தானாகி[3] நாரா**
**யணனு தன்னாமத[3]லி கரெஸுவ**
**வனத[3] க[3]ர்ப்போ[4]த[3]கதி[3] நெலெஸிஹ வாஸுதே[3]வாக்[2]ய |**
**த்[4]வனி ஸிடி[3]லு ஸங்கர்ஷணனு மி**
**ஞ்சினொளு ஶ்ரீப்ரத்[3]யும்ன வ்ருஷ்டிய**
**ஹனிக[3]ளொள க[3]னிருத்த[3]னிப்பனு வர்ஷனெந்தெ[3]னிஸி ||23**

நாராயணன்,
கனகதனு தானாகி = மேகங்களில் தான் இருந்து
தன்னாமதலி = மேகம் என்னும் பெயரில்
கரெசுவ = அழைத்துக் கொள்கிறான்
வனத கர்ப்போதகதி = மேகத்தில் இருக்கும் தண்ணீரில்
நெலெஸிஹ வாசுதேவாக்ய = வாசுதேவன் நிலைத்திருக்கிறான்
த்வனி ஸிடிலு = கர்ஜிக்கும் இடியில்
சங்கர்ஷணனு = சங்கர்ஷண மூர்த்தி
மிஞ்சினொளு = மின்னலில்
ஶ்ரீபிரத்யும்ன = ஶ்ரீபிரத்யும்ன ரூபி

வ்ருஷ்டிய ஹனிகளொளகெ = மழைத்துளிகளில்
அனிருத்தனிப்பனு = அனிருத்தரூபி இருக்கிறான்
வர்ஷனெந்தெனிஸி = மழை என்று தன்னை அழைத்துக் கொள்கிறான்.

மேகத்தில் நாராயணன்,
மேகத்தில் இருக்கும் தண்ணீரில் வாசுதேவன்,
கர்ஜிக்கும் இடியில் சங்கர்ஷணன்,
மின்னலில் பிரத்யும்னன்,
மழைத்துளிகளில் அனிருத்தன்,
என இந்த 5 ரூபங்களால், அந்தந்த பெயர், ரூபங்களை தரித்து, ஸ்ரீஹரி அங்கங்கு நிலைத்திருக்கிறான்.

**க்$^3$ருஹ குடும்ப$^3$ த$^4$னாதி$^3$க$^3$ள ஸ**
**ந்னஹக$^3$ளுள்ளவராகி$^3$ விஹிதா$^1$**
**விஹித த$^4$ர்ம ஸுக$^2$ர்மக$^3$ள திளியத$^3$லெ நித்யத$^3$லி |**
**அஹர மைது$^2$ன நித்$^3$ரெயொளகா$^3$**
**கி$^3$ஹரு ஸர்வபிராணிக$^3$ளு ஹ்ரு**
**த்கு$^3$ஹ நிவாஸியனரியத$^3$லெ ப$^4$வதொ$^3$ளகெ$^3$ ப$^3$ளலுவரு ||24**

க்ருஹ குடும்ப தனாதிகள = வீடு, குடும்பம், செல்வம் ஆகியவற்றை
சன்னஹகளுள்ளவராகி = இவற்றை சம்பாதிப்பதில் நேரம் செலவழித்து
விஹித = செய்யவேண்டிய
அவிஹித = செய்யக்கூடாத
தர்ம சுகர்மகள = தர்ம காரியங்களை
திளியதலெ = தெரியாமல்
நித்யதலி = தினந்தோறும்
அஹர மைதுன நித்ரெ யொளகாகி = உணவு, பெண்களுடன் சேர்க்கை, தூக்கம் இவற்றில் மயங்கி
சர்வப்ராணிகளு = அனைத்து பிராணிகளும்
இஹரு = இருக்கிறார்கள்
ஹ்ருத்குஹ நிவாஸியனு = தன் இதய கமலத்தில் நிலைத்திருக்கும் ஸ்ரீபிம்பமூர்த்தி பரமாத்மனை
அரியதலெ = அறியாமல்
பவதொளகெ = சம்சாரத்தில்
தொளலுவரு = மூழ்கியிருப்பர்.

மனைவி, மக்கள், வீடு, நிலம், சொத்து ஆகியவற்றை சம்பாதிப்பதற்குத் தேவையான வழிகளை செய்தவாறு, அவற்றிலேயே மெய்மறந்து, தர்ம விஷயங்களோ, கர்மங்களோ விதிப்படி செய்ய வேண்டியது, செய்யக்கூடாதது ஆகியவற்றையே அறியாமல், அனைத்து பிராணிகளும் தேவையான ஆகாரங்களை தின்று, ஸ்த்ரீயாதி போகங்களை அனுபவித்து, சுகமான தூக்கத்தை விரும்பியிருக்கிறார்கள். இவை உலகத்தில் நாம் காணும் சாமான்ய

விஷயங்களாகும்.

இதய கமலத்தில் வசிப்பவனான பிம்பரூபி பரமாத்மனின் மகிமைகளை அறிந்து, அவனையே ஒரு மனதுடன் உபாசனை செய்பவர்கள் மிகச்சிலரே. ஆகையால், மக்கள் சம்சாரத்தில் பற்பல விதங்களாக கஷ்டத்தை அனுபவிக்கின்றனர்.

**ஜடஜ ஸம்ப$^{4}$வ க$^{2}$க$^{3}$ ப$^{2}$ணிப கெ**
**ஞ்ஜடெ$^{3}$யரிந் தொ$^{3}$ட$^{3}$கூ$^{3}$டி$^{3}$ ராஜிஸு**
**தட$^{3}$வியொளகி$^{3}$ப்பனு ஸதா$^{3}$ கோ$^{3}$ஜாத்$^{3}$ரிஜனு எனிஸி ।**
**உடு$^{3}$பனிந்த$^{3}$பி$^{4}$ வ்ருத்தி$^{4}$க$^{3}$ள தா**
**கொடு$^{3}$த ப$^{1}$க்ஷி ம்ருகா$^{3}$ஹிக$^{3}$ள கா**
**ரொட$^{3}$ல காவனு தத்ததா$^{3}$ஹ்வயனாகி$^{3}$ ஜீவரனு ।।25**

ஜடஜசம்பவ = பிரம்மதேவர்
கக = கருடன்
பணிப = சேஷன்
கெஞ்செடெயரிந்த = ருத்ரர் ஆகியோரால்
ஒடகூடி = சேர்ந்து
ராஜிஸுத = ஒளிர்ந்தவாறு
சதா = எப்போதும்
கோஜாத்ரிஜனு = மலைகளில் பிறந்த ஸ்தாவர ஜங்கம ஜீவர்களில்
எனிஸி = கோஜா + அத்ரிஜ என்ற பெயரில்
இப்பனு = இருக்கிறான்
தா = தான்
உடுபனிந்த = சந்திரனிடமிருந்து
அபிவ்ருத்திகள கொடுத = காடு, மிருகங்களுக்கு வளர்ச்சியைக் கொடுத்து
பக்ஷி ம்ருக அஹிகள = பறவை, மிருகம், பாம்புகளின்
காரொடல = கிருஷ்ண வர்ணனான ஸ்ரீபரமாத்மன்
தத்ததாஹ்வயனாகி = கோஜா + அத்ரிஜ என்ற பெயர்களில்
ஜீவரனு = அந்த ஜீவர்களை
காவனு = காக்கிறான்

காடுகளில், மலைகளில் நிலைத்திருக்கும் பரமாத்மனை வேதங்களில் சொல்லப்பட்ட கோஜா, அத்ரிஜா என்னும் நாமங்களால் தியானிக்கவேண்டும்.

**அபரிமித ஸன்மஹிம நரஹரி**
**விபினதொ$^{3}$ளு ஸந்தெயிஸுவனு கா**
**ஷ்யபியனளெவவ ஸ்த$^{2}$லக$^{3}$ளலி ஸர்வத்ர கேஷவனு ।**
**க$^{2}$பதி க$^{3}$க$^{3}$னதி$^{3}$ ஜலக$^{3}$ளலி மஹ**
**ஷப$^{4}$ர நாமக ப$^{4}$க்தரனு நி**
**ஷ்கபடதி$^{3}$ந்த$^{3}$லி ஸலஹுவனு கருணாளு தி$^{3}$னதி$^{3}$னதி$^{3}$ ।।26**

அபரிமித ஸன்மஹிம = எல்லைகளற்ற மகிமைகளைக் கொண்ட

நரஹரி = நரசிம்மரூபி ஸ்ரீஹரி
விபினதொளு = காக்கிறான் (காட்டில் ஸ்ரீஹரி, நரசிம்மரூபத்தை தியானித்தால் காக்கிறான்)
காஷ்யபியனு = பூமியை
அளெதவனு = மூன்றடிகளால் பூமியை அளந்த வாமனமூர்த்தி
ஸ்தலகளலி = கிராமங்களில், நகரங்களில்
சர்வத்ர = எல்லா இடங்களிலும்
கேசவனு = கேசவரூபி பரமாத்மன் காக்கிறான்
கபதி ககனதி = வானில் சஞ்சரிப்பவர்களை, ஹ்ருஷிகேஷ ரூபி காக்கிறான்
ஜலகளலி மஹ ஷபர நாமக = தண்ணீரில் சஞ்சரிப்பவர்களை, மத்ஸ்யரூபி காக்கிறான்
நிஷ்கபடதிந்தலி = எவ்வித உள் நோக்கமும் இல்லாமல்
பக்தரனு = பக்தர்களை
ஸலஹுவனு = காக்கிறான்
கருணாளு = கருணைக்கடலானவன்
தினதினதி = தினந்தோறும்

பாகவத 6ம் ஸ்கந்தத்தில் இருக்கும் நாராயண வர்மத்தில்:
துர்கேஷ்ட்யடவ்யாஜி மகாதிஷுப்ரபு: பாயான் ந்ருஸிம்ஹோஸுரமூதபாரி:

மலைகளில், காடுகளில், போர்க்களத்தில், பிரபுவான நரசிம்மன் நம்மை காப்பாற்றட்டும் என்று சொல்கிறார்.

ஸ்தளேசமாயா வடு வாமனோவ்யாத்.
என்னும் பாகவத வியாக்யானத்திற்கேற்ப, பூமியை அளந்த வாமனரூபி பரமாத்மன், ஸ்தளங்களில் (கிராமங்களில், நகரங்களில்) நம்மை காப்பாற்றுகிறான். அனைத்து இடங்களிலும் கேசவன் நம்மை காக்கிறான். மூன்றடி நிலத்தை தானமாக வேண்டி, த்ரிவிக்ரம ரூபத்தினால் அளந்து, இந்திரனுக்கு ஸ்வர்க்கத்தைக் கொடுத்ததால், த்ரிவிக்ரம ரூபத்திற்கு கபதி என்று பெயர்.

* மூன்று அடிகளால் நிலத்தை அளந்ததால் த்ரிவிக்ரம என்றும்,
* உலகம் முழுக்க வியாபித்ததால் விஸ்வரூபி என்றும்,
* நிலம் உள்ள அனைத்து இடங்களை 2 அடிகளால் அளந்து, ' நவைத்ருதீயஸ்ய ததீயமண்யபி' மூன்றாம் அடிக்கு கொஞ்சம் கூட இடம் இல்லாமல் வியாபித்திருப்பதால், கபதி என்றும் பெயர். கபதி என்றால் ஆகாயத்திற்கு பதி என்றும் அர்த்தம்.

த்ரிவிக்ரமரூபிக்கு இந்த மூன்று பெயர்களும் உண்டு என்று அறியவேண்டும். 'த்ரிவிக்ரம: கேமது விஷ்வரூப:'

ஆகையால், நாராயண வர்மத்தில் விஷ்வரூபியான த்ரிவிக்ரமன், ஆகாயத்தில் காப்பாற்றட்டும் என்று சொல்லப்பட்டிருக்கிறது. 'ஜலேஷுமாம்ரக்ஷது மத்ஸ்ய மூர்த்தி:' என்னும் வியாக்யானத்திற்கேற்ப, தண்ணீரில் மத்ஸ்யரூபி

காப்பாற்றுகிறான். இத்தகைய ரூபங்களை தரித்து பரம தயாளுவான ஸ்வாமி, பக்தர்களை அனைத்து விதங்களிலும் காப்பாற்றுகிறான்.

**காரணந்தர்யாமி ஸ்தூ2லவ**
**தார வ்யாப்தாம்ஷாதி3 ரூபகெ**
**ஸார ஷுப4 ப்ரவிவிக்தனந்த3 ஸ்தூ2ல நிஸ்ஸார |**
**ஆரு ரஸக3ளனர்ப்பிஸல்ப1ரி**
**கீ3ரஹஸ்யவ பேளதெ3 ஸதா3**
**பாரமஹிமன ரூப கு3ணக3ள நெனெது3 ஸுகி2ஸுதிரு ||27**

காரண = காரணரூப
அந்தர்யாமி = அந்தர்யாமிரூப
ஸ்தூல = ஸ்தூலரூப
அவதார = அவதாரரூப
வியாப்த = வியாப்தரூப
அம்ஷாதிரூபகெ = அம்ஷ முதலான ஆறு ரூபங்களுக்கு
ஸார = சாத்விக பதார்த்தங்களின் சுவை
ஷுப = மங்களகரமான பதார்த்தங்கள்
ப்ரவிவிக்த = ஏகாந்தமான பொருட்கள்
அனந்த = போகங்களால் வரும் ஆனந்தங்கள்
ஸ்தூல = மரங்களுக்கு தண்ணீர் போன்ற பதார்த்தங்கள்
நிஸ்ஸார = பசுக்களுக்கு புல் போன்ற பதார்த்தங்கள்
ஆரு ரசகளனு = மேற்கூறிய 6 சுவைகளை
அர்ப்பிஸலு = அர்ப்பணம் செய்
ஈ ரஹஸ்யவ = இந்த ரகசியத்தை
அல்பரிகெ = துஷ்டர்களுக்கு
பேளதே = சொல்லாமல்
அபாரமஹிமன = எல்லையற்ற மகிமைகளைக் கொண்டவனின்
ரூப குணகள = ரூப குணங்களை
சதா = எப்போதும்
நெனெது = நினைத்தவாறு
சுகிஸுதிரு = மகிழ்ந்திரு.

பகவத்ரூபங்களில்,

* காரணரூபம்
* அந்தர்யாமிரூபம்
* ஸ்தூலரூபம்
* அவதாரரூபம்
* வியாப்த ரூபம்
* அம்ஷரூபம்

என்று ஆறு விதங்கள் உண்டு

இதைப்போலவே, சுவைகளிலும்
* ஸார ரஸ
* ஷுப ரஸ
* ப்ரவிவிக்த ரஸ
* அனந்த ரஸ
* ஸ்தூல ரஸ
* நிஸ்ஸார ரஸ
என்று ஆறு விதங்கள் உண்டு.

காரணரூபம்:
காரியம் எனப்படும் ஒவ்வொரு பதார்த்தங்களுக்கும், கர்த்தா, காரண இந்த இரண்டும் உண்டு.

* பானை என்பது காரியம். இதற்கு காரணம் ப்ரக்ருதி (மண்). குயவன் கர்த்தா.
* மக்கள் என்பது காரியம். தந்தை கர்த்தா. விந்து காரணம்.
இதைப்போல,
* ஜகத் என்பது காரியம். த்ரிகுணங்களைக் கொண்ட ப்ரக்ருதி காரணம். பரமாத்மன் கர்த்தா.

இப்படி ஆதிஸ்ருஷ்டியிலிருந்து, ஸ்ருஷ்டி, ஸ்திதி, சம்ஹார என்று அனைத்து செயல்களுக்கும், காரியம், காரண, கர்த்தா என்னும் மூன்றும் உண்டு. இவற்றில் ஸ்ருஷ்டிக்கு காரணம் ப்ரக்ருதி. இப்படி ஒவ்வொரு காரண வஸ்துகளிலும் இருக்கும் பகவத்ரூபங்களுக்கு காரண ரூபம் என்று பெயர். அனைத்து காரணரூபங்களையும் எடுத்துக்கொண்டு, ஒவ்வொன்றிற்கும் சுவைகளை பிரித்துக் கொடுத்தால், கிரந்தம் பெரிதாகிவிடும் . ஆகையால், முக்கியமான ஜகத் ஸ்ருஷ்டிக்கு, ஸ்திதிக்கு, சம்ஹாரத்திற்கு காரண ஸ்வரூபளான ப்ரக்ருதியில், பரமாத்மனே இருந்து ப்ராக்ருத குணங்களை வகித்து, ஸ்ருஷ்டி, ஸ்திதி, லயங்களை செய்கிறான். ஆகையால், ப்ரக்ருத்யாதிகளில் இருக்கும் பகவத் ரூபங்களுக்கு காரண ரூபங்கள் என்று பெயர். இவற்றிற்கு ஸார ரஸங்களை அர்ப்பிக்க வேண்டும்.

ஸார ரஸ என்றால், பரமாத்மன் ஸாத்விக, ராஜஸ, தாமஸ என்னும் மூன்றுவித ஜீவர்களை ஸ்ருஷ்டித்து, அவர்கள் போகிப்பதற்காக சாத்விக, ராஜஸ, தாமஸ பதார்த்தங்களை படைக்கிறான். அதாவது, நெய், பால் ஆகியவை சாத்விக பதார்த்தங்கள். கடலை, மிளகு ஆகியவை ராஜஸ பதார்த்தங்கள். உருளை, கத்திரி ஆகியவை தாமஸ பதார்த்தங்கள் என்று இவற்றை படைத்திருக்கிறான். இவற்றில் ஸார என்றால், சாத்விக பதார்த்தங்களின் சுவையையே த்ரிகுணரூப காரணனாக இருக்கும் பகவத்ரூபத்திற்கு சமர்ப்பிக்க வேண்டும் என்று பொருள்.

அந்தர்யாமிரூபம்:
அந்தர்யாமி என்றால் பிரம்மாதி அனைத்து பிராணிகளிலும் அந்தர்யாமியாக இருக்கும் ரூபம். இந்த ரூபத்திற்கு ஷுப ரஸவை அர்ப்பிக்கவேண்டும். ஷுப

என்றால் மங்களகரமான பதார்த்தங்கள் என்று பொருள். அந்தர்யாமியான பகவந்தனுக்கு நாம் பார்ப்பது, கேட்பது, உண்பது, போகிப்பது ஆகியவற்றில், இது நல்லது, இது மங்களப் பொருள் என்று நமக்கு எது தோன்றுகிறதோ, உடனடியாக அதனை சமர்ப்பிக்க வேண்டும்.

ஸ்தூலரூபம்:
ஸ்தூலரூபம் என்றால் பிரம்மாண்டமே சரீரமாகக் கொண்ட விராட்ரூபம். இந்த ரூபத்திற்கு ப்ரவிவிக்த ரஸத்தை சமர்ப்பிக்க வேண்டும். ப்ரவிவிக்த என்றால் ஏகாந்தம் என்று பொருள். மக்கள் நடமாட்டம் இல்லாத இடம் என்று பொருள். உலகத்தில் இத்தகைய ஏகாந்தமான இடங்களில் அனேக புண்ய தீர்த்தங்கள், க்ஷேத்திரங்கள் இருக்கின்றன. யாத்திரைகளை செய்துகொண்டிருக்கும்போது, அங்கு நாம் செய்யும் புண்ணிய செயல்கள், நமக்கு ஆகும் மகிழ்ச்சி ஆகியவற்றை விராட்ரூபியான பரமாத்மனுக்கு அர்ப்பிக்க வேண்டும் என்று பொருள்.

அவதாரரூபம்:
ராமகிருஷ்ணாதி ரூபங்களே அவதார ரூபங்கள். இந்த ரூபங்களுக்கு நாம் உண்பது, குடிப்பது, தூங்குவது, போகங்களால் வரும் ஆனந்தங்களை சமர்ப்பிக்க வேண்டும் என்பது பொருள்.

வியாப்தரூபம்:
வியாப்தரூபம் என்றால், பிரம்மாண்டத்திலும், அதற்கு வெளியேயும், சேதன, அசேதன நிறைந்த அனைத்து உலகங்களிலும், வியாபித்துக் கொண்டிருக்கும் ரூபம். இந்த ரூபத்திற்கு ஸ்தூல ரஸத்தை சமர்ப்பிக்க வேண்டும். மரங்களுக்கு தண்ணீரே ஸார. இந்த தண்ணீரை ஊற்றினால், மரங்களில் வியாபித்திருக்கும் பரமாத்மனுக்கு, இது ப்ரீதி ஆகட்டும் என்று சமர்ப்பிக்க வேண்டும். இப்படி ஒவ்வொரு வஸ்துவில் இருக்கும் பகவத்ரூபங்களுக்கும் அதற்கு ஸார என்று தெரியும் ரஸங்களை சமர்ப்பிக்க வேண்டும் என்பது பொருள்.

அம்ஷரூபம்:
அம்ஷ ரூபம் என்றால், 'மமைவாம்ஷோ ஜீவலோகே ஜீவபூத: ஸனாதன:' என்னும் கீதா வாக்கியத்தால், அனைத்து ஜீவராசிகளும் பகவந்தனின் அம்ஷ ரூபமே என்று அறியவேண்டும். இங்கு 'அம்ஷ' என்றால் பிரதிபிம்ப என்று அர்த்தம். இத்தகைய பிரதிபிம்பரான ஜீவருக்குள்ளும் அவர் உருவம், அந்த ரூபத்தில் பரமாத்மன் இருக்கிறான்.

அந்தர்யாமி ரூபத்தை சொல்லும்போது, தேவ மனுஷ்யாதிகளை சொல்லியாயிற்று. இங்கு பசு முதலான மிருகங்களை எடுத்துக் கொள்ளவேண்டும். நமக்கு எது நிஸ்ஸார என்று தோன்றுகிறதோ, அத்தகைய புல் ஆகியவை இவற்றிற்கு ஆகாரமாக இருக்கிறது. பசு முதலிய ரூபியான பரமாத்மனுக்கு இத்தகைய நிஸ்ஸாரத்தை சமர்ப்பிக்க வேண்டும்.

ஷுபம் பிபத்யஸோனித்யம் நாஷுபம்பிபதே ஹரி: என்னும் ஆதாரத்தினால் பரமாத்மன் எப்போதும் சாரத்தையே ஏற்றுக் கொள்கிறான் என்று அறியவேண்டும்.

அப்படியிருக்கையில், நிஸ்ஸாரத்தை எப்படி அர்ப்பிப்பது என்றால், பசு முதலானவற்றிற்கு அது சார என்றிருக்கிறது. நமக்கு அது நிஸ்ஸார.

இது பரம ரகசியமான விஷயம். இதனை அயோக்கியர்களுக்கு சொல்லக்கூடாது. நீ மட்டும் இதனை அறிந்து மேற்கூறிய ஷட்ரூபியான பரமாத்மனுக்கு ஷட்ரஸங்களை அர்ப்பிக்க வேண்டும். அபார மகிமையுள்ள பரமாத்மனை துதித்து மகிழ்ச்சியாக இரு என்று தாசராயர் தன் ஆப்த சிஷ்யர்களிடம் கூறுகிறார் என்று எண்ணவேண்டும்.

**ஜலக$^3$தோடு$^3$பனமல பி$^3$ம்ப$^3$வ**
**மெலுவெவெம்ப$^1$தி ஹருஷதி$^3$ந்த$^3$லி**
**ஜலசர பிராணிக$^3$ளு நித்யதி$^3$ யத்னகை$^3$வந்தெ |**
**ஹலத$^4$ரானுஜ போ$^4$க்$^3$ய ரஸக$^3$ள**
**நெலெயனரியதெ$^3$ பூஜிஸுத ஹ**
**ம்ப$^3$லிஸுவரு புருஷார்த்த$^2$க$^3$ள ஸத்குலஜராவெந்து$^3$ ||28**

ஜலகத = தண்ணீரில் இருக்கும்
உடுபன = சந்திரனின்
விமல பிம்பவ = தூய்மையான பிம்பத்தை
மெலுவெனெந்ததி ஹருஷதிந்தலி = தின்னவேண்டும் என்று நினைத்து
ஜலசர பிராணிகளு = நீரில் வசிக்கும் உயிரினங்கள்
நித்யதி = தினமும்
யத்னகைவந்தெ = முயல்வதைப்போல
ஹலதரானுஜ = பலராமனின் தம்பியான ஸ்ரீகிருஷ்ணனுக்கு
போக்யரஸகள = சம்மதமான ரஸங்களை
நெலெயனு = ஸ்வரூபத்தை
அரியதெ = அறியாமல்
ஆவு = நாம்
ஸத்குலஜரெந்து = பெரிய வம்சத்தவர்கள் என்று எண்ணி
பூஜிஸுத = பரமாத்மனின் பிரதிமாதிகளை பூஜித்தவாறு
புருஷார்த்தகள = தர்ம அர்த்த காம மோட்ச என்னும் நான்கு புருஷார்த்தங்களை
ஹம்பலிசுவரு = விதவிதமாக வேண்டுகிறோம்.

சந்திரனின் பிரதிபிம்பத்தை நீரில் காணும் நீர்வாழ் உயிரினங்கள், அதை தங்களின் ஆகாரம் என்று எண்ணி, மிகவும் மகிழ்ச்சியுடன் அதை தின்பதற்கு முயல்கின்றன. ஆனால் அதை உண்பது என்றைக்கும் சாத்தியம் ஆவதில்லை. அதுபோலவே, அங்கங்கு இருக்கும் பகவத்ரூபங்களுக்கு எந்தெந்த ரஸங்களை எப்படிஎப்படி சமர்ப்பிக்க வேண்டும் என்று அறியாத ஒருவர், தாம் நற்குலத்தில் பிறந்தவர் என்று எண்ணி, பிரதிமாதிகளை மிகவும் ஆடம்பரத்துடன் பூஜித்து புருஷார்த்தங்களை வேண்டுவார். அந்த நீர்வாழ் உயிரினங்கள், நிலவின் பிரதிபிம்பத்தை உண்பதற்கு முயன்று தோல்வியுறுவதைப் போலவே இவரது நிலையும் ஆகிறது. (எவ்வித பலன்களும் இவருக்குக் கிடைப்பதில்லை என்பது கருத்து).

**தே$^{3}$வ ரிஷி பித்ருக$^{3}$ளு கா$^{3}$யக**
**தே$^{3}$வ நர நர த$^{3}$னுஜ கோ$^{3}$ஜ க$^{2}$**
**ராவி மொத$^{3}$லாத$^{3}$கி$^{2}$ல சேதனபோ$^{4}$க்$^{3}$ய ரஸக$^{3}$ளனு |**
**யாவத$^{3}$வயவ க$^{3}$ளொளகி$^{3}$த்து$^{3}$ ர**
**மாவரனு ஸ்வீகரிப யாவ**
**ஜ்ஜீவ க$^{3}$ணக்கெ ஸ்வயோக்$^{3}$ய ரஸக$^{3}$ளனீய நெந்தெ$^{3}$ந்து$^{3}$ ||29**

தேவ ரிஷி பித்ருகளு = தேவதைகள், ரிஷிகள், பித்ருகள்
நரதேவ = ப்ரியம்வ்ரத முதலான சக்ரவர்த்திகள்
மானவ = மனிதர்கள்
தனுஜரு = தைத்யர்கள்
கோ = பசுக்கள்
அஜ = ஆடுகள்
கர = கழுதைகள்
ஆவி = செம்மறி ஆடுகள்
மொதலாத = ஆகிய
அகில சேதன போக்ய ரஸகளனு = அனைத்து பிராணிகளும் உண்ணும் அனைத்து பதார்த்தங்களின் ஸாரங்களையும்
யாவதவயவகளொளகெ = கண், காது முதலான அனைத்து அங்கங்களிலும்
இத்து = இருந்து
ரமாவரனு = லட்சுமிபதி
ஸ்வீகரிப = ஏற்றுக்கொள்கிறான்
யாவஜ்ஜீவகணக்கெ = எல்லா ஜீவராசிகளுக்கும்
ஸ்வயோக்ய = அவரவர்களின் யோக்யதைக்கேற்ப
ரஸகளனு = ரஸங்களை
எந்தெந்து = எப்போதும்
ஈவனு = கொடுக்கிறான்

தேவதைகள், ரிஷிகள், பித்ருகள், சக்ரவர்த்திகள், மனிதர்கள், தைத்யர்கள், பசுக்கள், ஆடுகள், கழுதைகள், செம்மறி ஆடுகள் போன்ற அனைத்து பிராணிகளின் போக்ய வஸ்துகள்

* அதாவது ஞானேந்திரிய, கர்மேந்திரிய மனஸ் முதலான உறுப்புகளால் அனுபவிக்கும் அனைத்து பொருட்கள்
* கண்ணில் பார்த்து மகிழும் பொருட்கள்.
* காதில் கேட்டு மகிழும் பொருட்கள்.
* உண்பது

போன்ற அனைத்து போக்ய வஸ்துகளின் ஸாரத்தை, ஸ்ரீபரமாத்மன், அந்தந்த பிராணிகளில் இருந்து, ஏற்றுக்கொண்டு, அனைத்து ஜீவகணங்களுக்கும் அவரவர்களின் யோக்யதைக்கேற்ப ரஸங்களைக் கொடுக்கிறான் என்பது கருத்து.

**ஒரடு[1] பு[3]த்தி[4]ய பி[3]ட்டு லௌகிக**
**ஹரடெக[3]ளனீடா[3]டி[3] காஞ்சன**
**பரட லோஷ்டாதி[3]க[3]ளு ஸமவெந்த[3]ரிது[3] நித்யத[3]லி |**
**புருட க[3]ர்ப்பா[4]ண்டோ[3]த[3]ரனு ஸ**
**த்புருட நெந்தெ[3]னிஸெயெல்லரொளகி[3]**
**த்துருடு கர்மவ மாள்பனெந்த[3]டிக[3]டிகெ[3] நெனெயுதிரு ||30**

ஒரடுபுத்திய பிட்டு = பிரதிமைகளே தேவர், திருப்பதியிலேயே ஸ்ரீனிவாசன் இருக்கிறான், கங்கையே தீர்த்தம் என்று சொல்லும் தவறான புத்தியை விட்டு
லௌகிக ஹரடெகளனு = வெறும் வீண் அரட்டைகளை
ஈடாடி = விட்டு,
காஞ்சன = தங்கம்
பரட = தேங்காய் ஓடு
லோஷ்டாதிகளு = உலோகங்கள் முதலியன
ஸமவெந்தரிது = சமம் என்று அறிந்து
நித்யதலி = தினந்தோறும்
புரட கர்ப்பாண்டோதரனு = புரட கர்ப்ப = ஹிரண்யகர்ப்ப அதாவது பிரம்ம. அண்டோதரனு = பிரம்ம+அண்டம் =

பிரம்மாண்டம். அதை வயிற்றில் வைத்திருக்கும், ஸ்ரீஹரி என்று பொருள்.
ஸ்த்புருடனெந்தெனிஸி = புருஷோத்தமன் என்று நினைத்து
உருடகர்மவ = தன்னுடைய செயல்களை
மாள்பனெந்து = செய்கிறான் என்று
அடிகடிகெ = ஒவ்வொரு கணமும்
நெனெவுதிரு = நினைத்துக் கொண்டிரு.

* ஸ்ரீஹரி இங்கேயே இருக்கிறான். அங்கே என்ன இருக்கிறது?
* பிரதிமையே ஸ்ரீஹரி
* இந்த கடவுளே கடவுள்

என்னும்படியான சிறுமையான (தவறான) புத்தியை விட்டு, லௌகிக அரட்டைகளில் காலத்தைக் கழிக்காமல், தங்கம் வேண்டும், வெள்ளி வேண்டும் என்று பேராசைப்படாமல் இவை அனைத்தும் தற்காலிகமானவை என்று அறிந்து, உலோகம், தேங்காய் ஓடு, தங்கம் இவை அனைத்தும் சமமே என்று அறிந்து, பரமாத்மனை வேண்டு. பிரம்மாண்டத்தையே தன் வயிற்றில் வைத்துக்கொண்டிருக்கும் பரமாத்மன் சர்வோத்தமன். சர்வபிராணிகளிலும் இருந்து நீசோச்ச பாவத்தினால், அனைத்து கர்மங்களையும் செய்விக்கிறான் என்று நினைத்து எப்போதும் பரமாத்மனை நினைத்துக் கொண்டிரு என்பது கருத்து.

**பூ[4]தளதி[3] ஜனருக[3]ளு மர்மக**
**மாதுக[3]ளனாடித[3]ரெ ஸஹிஸதெ[3]**
**கா[4]தி ஸுவரதி[1] கோபதி[3]ந்த[3]லி எச்சரிப தெரதி[3] |**

**மாதுளாந்தக ஜார ஹே நவ**
**நீத சோரனே எனலு தன்ன நி**
**கேதனதொ³ளிட்டவர ஸந்தெயிஸுவனு கருணாளு ||31**

பூததலி = பூமியில்
ஜனருகளு = மக்கள்
மர்மத மாதுகளனாடிதரெ = மனதை வருத்தும்படியான பேச்சுக்களை பேசினால்
ஸஹிஸதெ = அதை பொறுக்காமல்
அதிகோபதிந்தலி = மிகவும் கோபத்துடன்
காதிஸுவரு = தண்டனை கொடுப்பர்
எச்சரிபதெரதி = அவர்களுக்கு எச்சரிக்கை விடுப்பர்
மாதுளாந்தக = ஹே தாய் மாமனைக் கொன்றவனே
ஜார = (கோபிகையரின்) பெண்களின் மனம் கவர்ந்தவனே
ஹே,
நவனீத சோரனே = வெண்ணையை திருடித் தின்றவனே
எனலு = என்று பக்தியுடன் கூறினால்
அவர = அவர்களை
தன்ன நிகேதனதொளிட்டு = தன் வீட்டில் வைத்து (முக்தியில் தன் உலகத்தில் வைத்து)
கருணாளு = கருணைக்கடலான
ஸந்தெயிஸுவனு = காப்பாற்றுவான்

உலகத்தில் யாராவது யாரையாவது, அவர் மனம் புண்படும்படி பேசிவிட்டால், உடனே அவர் அதை பொறுக்காமல், அவருக்கு தக்க தண்டனை கொடுப்பார். உயர்ந்த குரலில் மறுபடி இதைப்போல செய்யாதே என்று எச்சரிப்பார். ஆனால், ஸ்ரீபரமத்மன் அப்படியல்ல. ஹே மாதுளாந்தகா. ஹே ஜார. ஹே நவனீத சோரா. என்று உரத்த குரலில் அழைத்தால், மிகுந்த கருணையுடன் அவர்களுக்கு முக்தியைக் கொடுத்து காப்பாற்றுவான். ஆகையாலேயே, கருணாளு என்கிறார்.

**ஹரிகதாऽம்ருத ஸாரவிது³ ஸ**
**ந்தரு ஸதா³ சித்தயிஸுவுது³ நி**
**ஷ்டுரிக³ளிகெ³ பிஷுனரி க³யோக்³யரிகி³த³னு பேளத³லெ |**
**நிருத ஸத்³ப⁴க்தியலி ப⁴க³வ**
**ச்சரிதெக³ள கொண்டா³டி³ ஹிக்கு³வ**
**பரம ப⁴கவத்³தாஸரிகெ³ திளிஸுவுது³ ஈ ரஹஸ்ய ||32**

ஹரிகதாம்ருத சாரவிது = இது ஹரிகதை என்னும் உத்தமமான அமிர்தம்
ஸந்தரு = சஜ்ஜனர்கள்
ஸதா = எப்போதும்
சித்தயிஸுவுது = சித்தத்தில் நினைக்கத் தக்கது
நிஷ்டுரிகளிகெ = இந்த கிரந்தத்தை புறக்கணித்து, திட்டுபவர்களுக்கு
பிஷுனரிகெ = புறம் பேசுபவர்களுக்கு

அயோக்யரிகெ = ஹரி குரு த்வேஷிகளுக்கு
இதனு பேளதலெ = இந்த கிரந்தத்தை விளக்காமல்
நிருத = எப்போதும்
ஸத்பக்தியலி = சிறந்த திடமான பக்தியில்
பகவத்சரிதெகள = பகவந்தனின் சரிதைகளை
கொண்டாடி = பூஜித்து
ஹிக்குவ = மகிழும்
பரம பகவத்தாஸரிகெ = பகவந்தனின் பக்தர்களுக்கு
ஈ ரஹஸ்ய = இந்த ரகசிய விஷயங்களை
திளிஸுவுது = சொல்ல வேண்டும்

இப்போது நாம் சொன்னது அனைத்தும் ரகசியமான ஹரிகதை என்னும் அமிர்தத்தின் சாரம். இதைக் கேட்பதற்கு சஜ்ஜனர்கள் மட்டுமே அதிகாரம் கொண்டவர்கள். மற்றவர்கள் அல்ல. ஆகையால், இதனை பகவன்மஹிமை கேட்பதில் ஆர்வம் இல்லாமல் அதற்கு எதிராக பேசுபவர்களுக்கு சொல்லக்கூடாது. பரமாத்மனிடம் த்வேஷம் செய்பவர்களுக்கும், பிற தேவதைகளை பூஜிப்பவர்களுக்கும் தமோ யோக்யர்களுக்கும் இதை சொல்லக்கூடாது. யார் மிகச்சிறந்த பக்தியால் பகவத் சரித்திரங்களை கேட்டு பூஜித்து மகிழ்கின்றனரோ, அத்தகைய பகவத் தாசர்களுக்கு மட்டுமே இந்த ரகசியத்தை உபதேசம் செய்யவேண்டும்.

**ஸத்யஸங்கல்பனு ஸதா$^3$ ஏ**
**நித்துதெ$^3$ புருஷார்த்தவெந்த$^3$ரி**
**த$^3$த்யதி$^4$க ஸந்தோஷதி$^3$ம் நெனெவுத்த பு$^4$ஞ்சிபுது$^3$ ।**
**நித்ய ஸுக$^2$ஸம்பூர்ண பரமஸு**
**ஹ்ருத்தம ஜகன்னாத$^2$விட்டல**
**ப$^3$த்திஸி ப$^4$வாம்பு$^3$தி$^4$ய சித்ஸுக$^2$வ்யக்தி கொடு$^3$திப்ப ||33**

சத்யசங்கல்பனு = பரமாத்மனின் அனைத்து வேலைகளும் சுஜீவர்களுக்கு நல்லதாகவே தோன்றுகிறது.
எனித்துதெ = அத்தகைய சங்கல்ப ஸ்வரூபனாக இருக்கும் பரமாத்மன் ஜீவர்களுக்கு எந்த தேச, கால, அவஸ்தைகளை கொடுக்கிறானோ,
சதா = எப்போதும்
புருஷார்த்தவெந்து = அதுவே அவன் கொடுத்த பரமபுருஷார்த்தம் என்று அறிந்து,
அத்யதிக சந்தோஷதிம் = மிகவும் அதிகமான மகிழ்ச்சியில்
நெனெவுத்த = அவனின் மகிமைகளை நினைத்தவாறு
புஞ்சிபுது = அந்த பலன்களை ஏற்றுக்கொள்ள வேண்டும்.
நித்யசுக சம்பூர்ண = நித்ய ஆனந்தமயமான
பரம சுஹ்ருத்தம = ஆபத்துகளை பரிகரித்து காப்பாற்றும் உத்தமனான
ஜகன்னாதவிட்டல = பிம்பமூர்த்தியான ஜகன்னாத விட்டலரூபி பகவந்தன்
பவாம்புதிய = சம்சாரம் என்னும் சாகரத்தை
பத்திஸி = தாண்டச் செய்து

சித்சுகவ்யக்தி = ஸ்வரூப ஆனந்தத்தை
கொடுதிப்ப = கொடுக்கிறான்.

சத்யசங்கல்பன் என்றால், தன் மனதில் முதலில் எது தோன்றுகிறதோ, அதையே நடத்தி முடிக்கிறான். அவன் நினைத்ததை மாற்றுவதற்கு பிரம்மாதிகளாலும் முடிவதில்லை. ஆகையாலே, பரமாத்மனுக்கு சத்யசங்கல்பன் என்று பெயர்.

ஈஷாவாஸமிதம் சர்வம் யக்ஞகத்யாம் ஜகன்மன: |
தேனத்யக்தேன புஞ்சீதா: ||

என்னும் ஈஷாவாஸ்ய உப நிஷத்தின் வாக்கியத்தைப் போல, இத்தகைய பகவந்தன், தன் இஷ்டத்திற்கு தான் நினைத்ததை எப்போதும் நமக்குக் கொடுக்கிறான். ஆகையால், நம் தகுதிக்கேற்ப, அவன் கொடுப்பதே புருஷார்த்தம் என்று (அதாவது தர்ம, அர்த்த, காம, மோட்ச என்னும் புருஷார்த்தங்களை) நினைத்து, கிடைக்காத பொருட்களில் ஆசையை வைக்கக்கூடாது என்று சொல்கிறார்.

யத்ருச்சா லாபதுஷ்டஸ்ய தேஜோவிப்ரஸ்ய வர்த்ததே |
ஈஸ்வர ப்ரேரணையால் கிடைத்ததை வைத்து யாரொருவன் மகிழ்கிறானோ, அவனுக்கு தேஜஸ் வளர்கிறது.

அஸந்துஷ்ட: சுகம்விப்ரனாப்னோத்யபி ஸுரேஷ்வர: ||
ஹே பிராமணனே, திருப்தி அடையாமல் இருந்தால், அவன் தேவேந்திரனாக இருந்தாலும், அவனுக்கு சுகம் கிடைக்காது.

இது பாகவத 10ம் ஸ்கந்தத்தில், ருக்மிணி தேவி அனுப்பிய கடிதத்தைக் கொண்டு வந்திருந்த பிராமணனிடம் ஸ்ரீகிருஷ்ணன் கூறியதாகும்.

இப்படியாக, ஸ்ரீஹரி கொடுத்ததை மகிழ்ச்சியுடன் போகித்தவாறு, பரமாத்மனை துதித்துக் கொண்டிருந்தால், பரம நண்பனான ஸ்ரீஹரி, சம்சாரம் என்னும் சாகரத்தைத் தாண்ட வைத்து (முக்தனாக மாற்றி) முக்தியில் ஸ்வரூப ஆனந்தத்தைக் கொடுத்து காப்பாற்றுகிறான்.

நாமஸ்மரண சந்தி என்னும் 13ம் சந்தியின் தாத்பர்யம் இத்துடன் முடிவுற்றது.

ஸ்ரீகிருஷ்ணார்ப்பணமஸ்து.
***

## பாவபிரகாசிகை : சந்தி 14 : பித்ருகண சந்தி

**/ பித்ருகண விசார சந்தி**

**ஹரிகதா[2]ம்ருதசார கு[3]ருக[3]ள**
**கருணதிந்தா[3]பநிது பே[1]ளுவே**

**பரம ப4கவத்3ப4க்தரித3னாத3ரதி கேளுவுது3**

முந்தைய சந்தியில், பரமாத்மன் அனைத்து பொருட்களிலும், கர்த்ரு, காரண முதலான ரூபங்களில் இருந்து, அவற்றை வழி நடத்துகிறான் என்று அறிந்து, எப்போதும் அவனை நினைத்தவாறு செய்யும் கர்மங்கள் அனைத்தும் சுப பலன்களைக் கொடுக்கின்றன. பக்தி இல்லாமல் செய்யும் இத்தகைய செயல்கள் நற்பலன்களைக் கொடுக்காது என்று சொல்லி, அனுசந்தானம் மற்றும் பக்தி இல்லாதவன் செய்யும் செயல்கள், அல்ப பலன்களையே கொடுப்பதாக இருந்தாலும், தனக்கான செயல்களை செய்வதே சரியானதாகும். அவற்றை விடக்கூடாது என்னும் அர்த்தத்தை இந்த 14ம் சந்தியில் பித்ருகளைக் குறித்து செய்யும், நித்ய நைமித்திக கர்மங்கள் மிகவும் அவசியமானவை என்று கூறுகிறார்.

**க்ருதிரமண ப்ரத்3யும்ன வஸுதே3**
**வதெக3ள அஹங்கார த்ரயதொ3ளு**
**சதுரவிம்ஷதி ரூபதி3ந்த3லி போ4ஜ்யனெனிஸுவனு ।**
**ஹுதவஹாக்ஷாந்தர்க3த ஜயா**
**பதியு தானெ மூரதி4க த்ரிம்**
**ஷதி ஸுரூபதி3 போ3க்த்ரு எனிஸுவ போ3க்த்ருக3ளொளித்து3** ||1

க்ருதிரமண ப்ரத்யும்ன = க்ருதி தேவியின் பதியான பிரத்யும்ன நாமக பரமாத்மன்
வசுதேவதெகள = அஷ்ட வசுக்களில் இருக்கும்
அஹங்காரத்ரயதொளு = வைகாரிக, தைஜஸ, தாமஸ என்னும் மூன்றுவித அஹங்காரங்களில்
சதுரவிம்ஷதி ரூபதிந்தலி = 8 வசு * 3 ரூபம் = 24 ரூபங்களால்
போஜ்யனெனிஸுவனு = போஜ்ய என்று அழைத்துக் கொள்கிறான்
ஹுதவஹாக்ஷ = அக்னி நேத்ரரான ருத்ரரே முதலான 11 ருத்ரரில்
அந்தர்கத = அந்தர்யாமியான
ஜயாபதியு = ஜயாதேவியின் பதியான ஸ்ரீசங்கர்ஷணன்
தானே,
மூரதிக த்ரிம்ஷதி சுரூபதி = 33 சிறந்த ரூபங்களில்
போக்த்ருகளொளித்து = போக்த்ருகளில் இருந்து
போக்த்ரு எனிஸுவ = போக்த்ரு என்று அழைத்துக் கொள்கிறான்.

பித்ரு, பிதாமஹ, ப்ரபிதாமஹ என்னும் 3வித பித்ருகளுக்கு வசுகண, ருத்ரகண, ஆதித்யகண என்னும் மூன்று கணங்கள் உள்ளன. அதில் வசுகணத்தை சேர்ந்தவர் 8 பேர். ஒவ்வொருவரிலும், வைகாரிக, தைஜஸ, தாமஸ என்னும் மூன்றுவித அஹங்கார தத்வங்கள் இருக்கின்றன. ஒவ்வொன்று அஹங்காரத்தில் ஒவ்வொரு ரூபம் என்று, 8*3=24 ரூபங்களால்; ஸ்ரார்த்தத்தில் போஜன யோக்யமான பதார்த்தங்களில் இருந்து, க்ருதிபதியான பிரத்யும்னன், தன்னை, போஜ்ய என்று அழைத்துக் கொள்கிறான். 11 ருத்ரதேவரில் ஒவ்வொருவரிலும் மூன்று அஹங்காரங்களாக 11*3=33 அஹங்காரங்களில் 33 ரூபங்களால் ஜயாபதியான

சங்கர்ஷணன் பித்ருகளை ஆவாஹனம் செய்திருக்கும் பிராமணரில் இருந்து பதார்த்தங்களை உண்டு, போக்த்ரு என்று அழைத்துக் கொள்கிறான்.

**ஆரதி$^{4}$க மூவத்து ரூபதி$^{3}$**
**வாரிஜாப்தனொளிருதிஹனு மா**
**யாரமண ஶ்ரீவாஸுதே$^{3}$வனு கால நாமத$^{3}$லி ।**
**மூருவித$^{3}$ பித்ருக$^{3}$ளொளு வஸு த்ரிபு**
**ராரி ஆதி$^{3}$த்யகனிருத்த$^{4}$னு**
**தோரிகொள்ளதெ$^{3}$ கர்த்ருகர்ம க்ரியவெனிஸிகொம்ப$^{3}$ ।।2**

ஆரதிக மூவத்து ரூபதி = 36 ரூபங்களால்
மாயாரமண = மாயாரூபியான ஸ்ரீலட்சுமிதேவியின் பதியான வாசுதேவரூபி பரமாத்மன்
கால நாமதலி = கால என்று அழைத்துக் கொண்டு
வாரிஜாப்தனொளு = சூர்யர்களில்
இருதிஹனு = இருக்கிறான்
மூருவித பித்ருகளொளு = மூன்று வித பித்ருகளில்
வசு = வசுகண
த்ரிபுராரி = ருத்ரகண
ஆதித்யக = ஆதித்ய கண
அனிருத்தன் = இவர்களில் அனிருத்தன் இருக்கிறான்
தோரிகொள்ளதே = தன்னை காட்டிக் கொள்ளாமல்
கர்த்ரு = செய்பவர்
கர்ம = செய்யும் செயல்
க்ரிய = செய்யும் விதம்
எனிஸிகொம்ப = கர்த்ருக்குள் இருந்து கர்த்ரு என்றும்; கர்மத்தில் இருந்து கர்ம என்றும்; க்ரியாவில் இருந்து க்ரிய என்றும் அழைத்துக் கொள்கிறான். மேலும் இந்த ரூபங்களில் இருந்து அந்த பெயர்களாலேயே அழைத்துக் கொள்கிறான்.

ஆதித்யகணங்கள் 12 பேர். இவர்கள் ப்ரபிதாமஹர்களில் இருப்பவர்கள். இவர்களில் ஒவ்வொருவரிலும் வைகாரிகாதி மூன்று அஹங்காரங்கள் என்று மொத்தம் 12 * 3 = 36 ரூபங்களால், மாயாதேவியின் பதியான ஸ்ரீவாசுதேவன், கால நாமகனாக ஸ்ரார்த்த காலத்தில் வியாப்தனாக இருக்கிறான். இப்படியே, பிரத்யும்ன, சங்கர்ஷண, வாசுதேவ இந்த மூவரையும் சொல்கிறார்.

அடுத்து, அனிருத்தன் எங்கு இருக்கிறான் என்கிறார். ப்த்ரு, பிதாமஹ, ப்ரபிதாமஹ என்னும் மூன்று வித பித்ருகளுக்கு அதிபதிகளான வசுகண, ருத்ரகண, ஆதித்ய கணங்களில் அனிருத்தன் இருக்கிறான். அவன், தன் கர்த்ருத்வத்தை தெரியப்படுத்தாமல்,

* ஸ்ரார்த்தம் செய்பவரில் இருந்து, கர்த்த என்றும்,
* ஸ்ரார்த்த கர்மத்தில் இருந்து கர்ம என்றும்,

* பிராமண பாதபிரட்சாலன, போஜன முதலான செயல்களில் இருந்து க்ரிய என்றும் அழைத்துக் கொள்கிறான்.

ஸ்ரார்த்த கல்பத்தில், விஸ்வேதேவதைகளில் அனிருத்த, நாராயண ரூபங்களாலும், பித்ராதிகளில் ப்ரத்யும்னாதி ரூபங்களாலும், இருக்கிறார் என்று சொல்கிறார். ஆனால் இங்கு பித்ருகளிலேயே அனிருத்தனை ஏன் சொல்கிறார் என்றால், கல்பத்தில், விஸ்வேதேவதைகளில் இருந்து ஆவாகனம் செய்யப்பட்டு, அனிருத்த, நாராயணர்கள், போஜ்ய, போக்ஷ்ய என்று அழைக்கப்படுகிறார் என்று சொல்கிறார். அது மட்டுமல்ல. பித்ருகளிலும்கூட இருந்து கர்த்ரு, கர்ம, க்ரிய என்றும் ஆகிறான் என்னும் விசேஷ அர்த்தத்தை சொல்கிறார்.

**ஸ்வவஷ நாராயணனு தா ஷ**
**ண்ணவதி நாமதி[3] கரெஸுதலி வஸு**
**ஷிவ தி[3]வாகர கர்த்ரு கர்ம க்ரியெக[3]ளொளகி[3]த்து[3] ।**
**நெனவவில்லதெ[3] நித்யத[3]லி த**
**ந்னவரு மாடு[3]வ ஸேவெகை[3]கொ**
**ண்ட[3]வர பித்ருக[3]ளிகீ[3]வ நந்தா[3]னந்த[3] ஸுக[2]க[3]ளனு ।।3**

ஸ்வவஷ = ஸ்வதந்த்ரனான
நாராயணனு
தா = தான்
வசு = 8 வசுக்களில் 24 ரூபங்களாலும்
ஷிவ = 11 ஆதித்யரில் 33 ரூபங்களாலும்
திவாகர = 12 சூரியர்களில் 36 ரூபங்களாலும்
கர்த்ரு கர்ம க்ரியெகளொளகித்து = கர்த்ரு, கர்ம, க்ரியை ஆகியவற்றில் இருந்து
ஷண்ணவதி நாமதலி = ஷண்ணவதி (96) என்னும் பெயரில்
கரெஸுதலி = அழைத்துக் கொண்டு
இத்து = இருந்து
நெவனவில்லதெ = எந்தவொரு பிரதிபலனும் இல்லாமல்
நித்யதலி = தினந்தோறும்
தன்னவரு = தன் பக்தர்கள்
மாடுவ = மேற்கூறியவாறு அனுசந்தானத்துடன் செய்யும்
சேவெ கைகொண்டு = ஸ்ரார்த்தாதி சேவைகளை ஏற்றுக்கொண்டு
அவர பித்ருகளிகெ = அவர்களின் பித்ருக்களுக்கு
அனந்தானந்த சுககளன்னு = அனந்தானந்த சுகங்களை
ஈவ = கொடுக்கிறான்.

மேற்கூறியதைப்போல, ப்ரத்யும்னன் 8 வசுக்களிலும், ஒவ்வொருவரிலும் இருக்கும் வைகாரிக, தைஜஸ, தாமஸ என்னும் மூன்று வித அஹங்காரங்களில் மூன்று ரூபங்களால் 8*3=24 ருபங்களில் இருக்கிறான். இதைப்போல,
* 11 ருத்ரரில் சங்கர்ஷண ரூபி 33 ரூபங்களிலும்,
* 12 ஆதித்யரில் வாசுதேவ ரூபி 36 ரூபங்களிலும் இருக்கிறார்கள்.

* கர்த்ரு, கர்ம, க்ரியைகளில் அனிருத்தனின் ரூபங்கள் 3.

ஆக மொத்தம் 96 ரூபங்கள் ஆகின்றன. அனிருத்த, பிரத்யும்ன, சங்கர்ஷண, வாசுதேவ என்னும் 96 ‘கண்ட’ ரூபங்கள் இவற்றில் அகண்டவாகி ஸ்ரீ நாராயணன், அனிருத்தாதி 4 ரூபங்களால் வியாபித்து ஷண்ணவதி என்னும் பெயரில் அழைத்துக் கொள்கிறான்.

அதாவது,
* அனிருத்தனின் ரூபங்கள் கர்த்ரு, கர்ம, க்ரியா என்னும் 3,
* வசுகளில் பிரத்யும்ன ரூபங்கள் 24
* ருத்ரரில் சங்கர்ஷண ரூபங்கள் 33
* ஆதித்யரில் வாசுதேவ ரூபங்கள் 36

ஆக மொத்தம் 96 ரூபங்கள், அனிருத்தாதி 4 ரூபங்களுக்கு பொருத்தப்பட்டிருக்கிறது. ஸ்ரீ நாராயணன், வசுகண, ருத்ரகண, ஆதித்யகண, கர்த்ரு, கர்ம, க்ரியை இவற்றில் வியாப்தனாகி மொத்தம் 96 ரூபங்களால் ஷண்ணவதி என்னும் பெயரால் இருந்து, தன் பக்தர்கள் செய்யும் ஸ்ரார்த்த கர்மத்தை ஏற்று, அவர்களின் பித்ருகளுக்கு அனந்தானந்த சுகங்களைக் கொடுத்து அவர்களை காப்பாற்றுகிறான்.

**தந்துபடத$^{3}$ந்தத$^{3}$லி லகுமி**
**காந்த பஞ்சாத்மகனெனிஸி வஸு**
**கந்துஹர ரவி கர்த்ருக$^{3}$ளொளித்த$^{3}$னவரத தன்ன**
**சிந்திஸுவ ஸந்தரனு கு$^{3}$ரு ம**
**த்$^{4}$வந்தராத்மக ஸந்தயிஸுவனு**
**ஸந்ததகி$^{2}$லார்த்த$^{2}$க$^{3}$ள பாலிஸி இஹ பரங்க$^{3}$ளலி ||4**

தந்துபடதந்ததலி = துணியில் நூல்கள் குறுக்கும் நெடுக்குமாக இருந்து, ஆடையாக மாறியிருப்பதைப் போல
லகுமிகாந்த = லட்சுமிபதி
பஞ்சாத்மகனெனிஸி = அனிருத்த, பிரத்யும்ன, சங்கர்ஷண, வாசுதேவ, நாராயண ஸ்வரூபன் என்று அழைத்துக் கொண்டு
வசு = வசுகண
கந்துஹர = மன்மதனை எரித்த ருத்ரர்; அதாவது ருத்ரகண
ரவி = ஆதித்யகண
கர்த்ருகளொளு = கர்ம செய்பவர்களில் இருந்து
அனவரத = எப்போதும்
தன்ன = தன்
சிந்திஸுவ = தியானம் செய்யும்
சந்தரனு = பக்தர்களை
குரு மத்வந்தராத்மக = நம் முக்கிய குருவான ஸ்ரீமன் மத்வாசார்யரின் அந்தர்யாமியாக இருக்கும் ஸ்ரீபரமாத்மன்
இஹபரங்களலி = இஹ பரங்களில்

ஸந்தத = எப்போதும்
அகிலார்த்தகள = அவரின் விருப்பங்களை
பாலிஸி = கொடுத்து (நிறைவேற்றி)
சந்தயிஸுவனு = அருள்கிறான்.

நூல் எப்படி குறுக்கும் நெடுக்குமாக சென்று ஒரு ஆடையாக உருவாகிறதோ, அதுபோலவே அனிருத்தாதி ரூபங்களால், வசு ருத்ராதி ஆதித்யரில் 96 ரூபங்களில் இருந்து, லட்சுமிபதியான நாராயணன், தன்னை தினந்தோறும் தியானம் செய்தவாறு, ஸ்ரார்த்தாதிகளை அனுசந்தானத்துடன் செய்பவர்களை 'ஆயு: ப்ரஜாம் தனம் வித்யாம் ஸ்வர்க்கம் மோக்ஷம் சுகானிச ப்ரயச்சந்தி' என்று ஸ்ரார்த்த காலத்தில் சொல்வதைப் போல, ஆயுள், வாரிசு, செல்வம், கல்வி, ஸ்வர்க்கம், மோட்சம் என்னும் இஹபர சுகங்களைக் கொடுத்து, அருள்கிறான் என்பது கருத்து.

**தந்தெ$^3$ தாய்க$^3$ள ப்ரீதிகோஸுக$^2$**
**நிந்த்யகர்மவ தொரெது$^3$ விஹிதக$^3$**
**ளொந்து$^3$ மீரதெ$^3$ ஸாங்க$^3$ கர்மக$^3$ளாசரிஸுவவரு ।**
**வந்த$^3$னியராகி$^3$ இளெயொளு தை$^3$**
**நந்தி$^3$னதி$^3$ தை$^3$ஷிக தஹிக ஸுக$^2$**
**தி$^3$ந்த$^3$ பா$^3$ள்வரு ப$^3$ஹுதி$^3$வஸத$^3$லி கீர்த்தியுதராகி$^3$ ||5**

தந்தெ தாய்கள = பெற்றோரின்
ப்ரீதிகோசுக = அவர்களை மகிழ்விப்பதற்காக
நிந்த்யகர்மவ = செய்யக்கூடாது என்று சாஸ்திரங்களில் சொல்லப்பட்ட செயல்களை
தொரெது = விட்டு
விஹிதகளொந்து மீரதெ = செய்யவேண்டும் என்று சாஸ்திரங்களில் சொல்லப்பட்டவற்றை
சாங்க கர்மங்கள = அத்தகைய கர்மங்களை
ஆசரிசுவவரு = செய்பவர்கள்
இளெயொளகெ = பூமியில்
வந்தனியராகி = அனைவராலும் வணங்கப்பட்டு
தைனந்தினதி = தினந்தோறும்
கீர்த்தியுதராகி = புகழ்பெற்று
பஹுதிவஸதலி = வெகு காலம் வரைக்கும்
தைஷிக = தேச சம்பந்தமான
தஹிக = தேக சம்பந்தமான
சுகதிந்த = சுகங்களால்
பாளுவரு = வாழ்வர்.

ஸ்ரார்த்த கர்மங்களை செய்பவர்கள், தம் தாய் தந்தைகளில் அன்புடன், செய்யக்கூடாது என்று சாஸ்திரங்களில் சொல்லப்பட்ட விஷயங்களை செய்யாமல், செய்யவேண்டும் என்று சாஸ்திரங்களில் சொல்லப்பட்ட கர்மங்களை

- ஸ்ரார்த்தாதிகளை - செய்து, பித்ருகளின் அந்தர்யாமியான ஜனார்த்தன வாசுதேவருக்கு ப்ரீதி ஆகட்டும் என்று அவற்றை சமர்ப்பிக்க வேண்டும். அப்படி செய்தால், பூமியில் மக்களால் பூஜ்யராகி, தினந்தோறும் தேச சம்பந்தமாகவும், தேஹ சம்பந்தமாகவும், சுகங்களையே அனுபவித்து, புகழ்பெற்றவர்களாக, வெகு காலம் வரைக்கும் இருப்பர்.

தேச சம்பந்தம் என்றால், சில இடங்களில் கோடையிலும் குளிர் தெரியலாம். சில இடங்களில் குளிர் காலத்திலும், வெப்பம் அதிகம் இருக்கலாம். அத்தகைய இடங்களில் இருந்தாலும், தேச சம்பந்தமான சீதோஷ்ண பிரச்னைகள் இல்லாமல் சுகமாக இருப்பார்கள் என்பது கருத்து.

தேக சம்பந்தம் என்றால், நோய் நொடி இல்லாமல், திடமாக இருப்பார்கள் என்று அர்த்தம்.

**அம்ஷி அம்ஷந்தர்க$^3$த த்ரய**
**ஹம்ஸவாஹன முக்$^2$ய தி$^3$விஜர**
**ஸம்ஷரெந்திளி த$^3$ந்தராத்மக ஸ்ரீஜனார்த்த$^3$னன ।**
**ஸம்ஸ்மரணெ பூர்வகதி$^3$ ஷடதி$^3$க**
**த்ரிம்ஷதி$^3$த்ரய ரூபவரிது வி**
**பம்ஸகன பூஜிஸுவரவரெ க்ருதார்த்தரெனிஸுவரு ।।6**

அம்ஷி = அம்சம் உள்ளவர்கள் என்றால் பித்ரு பிதாமஹ ப்ரபிதாமஹர்களில் நிலைத்திருக்கும் வசுகண, ருத்ரகண, ஆதித்யகண என்று அர்த்தம்
அம்ஷ = அம்ச ருபம் என்றால் பிரத்யும்ன, சங்கர்ஷண, வாசுதேவ ரூபங்கள்
அந்தர்கதத்ரய = இவற்றில் அந்தர்கதமாக இருக்கும் ரூபங்கள் 3, இவ்வளவு ரூபங்களைக் கொண்ட ஜனார்த்தனன்
ஹம்ஸவாஹன முக்ய திவிஜர = பிரம்மதேவரே முதலான தேவதைகள்
அஸம்ஷயதி = சந்தேகமில்லாமல் அறிந்து
அந்தராத்மக = அந்தர்யாமியாகி வசிக்கும்
ஸ்ரீஜனார்த்தனன = ஸ்ரீஜனார்த்தனனை
திளிது = அறிந்து
சம்ஸ்மரணெ பூர்வகதி = நன்றாக நினைத்து
ஷடதிக த்ரிம்ஷதித்ரய = 63
ரூபவரிது = ரூபங்களை அறிந்து
விபாம்ஸகன = பக்ஷிராஜனான கருடனின்
அம்ஸகன = முதுகின் மேல் இருக்கும் பரமாத்மன்
பூஜிஸுவரு = பித்ரு காரியங்களால் பூஜை செய்பவர்கள்
க்ருதார்த்தரெனிஸுவரு = அவரே தன்யர்கள் ஆவார்கள்

அம்ஷிக என்றால் சாம்ஷர் என்று அர்த்தம். அதாவது, ஒரு ரூபத்தினால் ஒரு இடத்திலும், வேறொரு ரூபத்தினால் வேறொரு இடத்திலும் இருக்கும் தகுதி கொண்ட தத்வாபிமானி தேவதைகள். மனிதர்கள் நிரக்ஷர்கள். சூரியன்

ஆகாயத்தில் ஒளிர்பவன். அதே சமயம், கர்ணனாகவும், சுக்ரீவனாகவும் பிறந்தவன். மற்றும், அனைவரின் கண்களிலும் அம்சத்தினால் இருக்கிறான். ஆனாலும், மேலேயும் இருக்கிறான். அம்சத்தினால் இப்படி பல இடங்களில் இருக்கிறான். இந்த சக்தி, அனைத்து தேவதை, தைத்யர்களிலும் உண்டு. இது மனிதர்களுக்கு இல்லை ஆகையால் இவர்கள் நிரம்ஷர்கள்.

சிரார்த்தத்தில், நிரம்ஷரான பித்ரு பிதாமஹ ப்ரபிதாமஹர்களில் நிலைத்திருக்கும் 8 வசுக்கள், 11 ருத்ரர்கள், 12 ஆதித்யர்கள் அம்ஷிகள். முன்பு பார்த்ததைப் போல, ஒவ்வொருவரிலும், பிரத்யும்ன, சங்கர்ஷண, வாசுதேவ என்னும் மூன்று ரூபங்கள் இருக்கின்றன. இவை அம்ச ரூபங்கள்.

அந்தர்யாமி ரூபங்கள் 3. பித்ரு அந்தர்யாமி, பிதாமஹ அந்தர்யாமி, ப்ரபிதாமஹ அந்தர்யாமி என்று இந்த மூவரிலும் ஜனார்த்தனன் அந்தர்யாமியாக இருக்கிறான். பித்ருகளை ஆவாஹனம் செய்திருக்கும் பிராமணரின் தேகத்தில் இருக்கும் தத்வாபிமானிகளான பிரம்மாதிகளின் அந்தர்யாமியாக இருந்து, ஸ்ரீஜனார்த்தனன் சிரார்த்தத்தை ஏற்றுக் கொள்கிறான் என்று அறிந்து, சிந்தித்து, மேற்சொன்ன விதத்தில் பித்ரு அந்தர்கத வசு கணர்களில் 24 ரூபங்கள், பிதாமஹ அந்தர்கத ருத்ர கணர்களில் 33 ரூபங்கள், ப்ரபிதாமஹ அந்தர்கத ஆதித்ய கணர்களில் 36 ரூபங்கள், பித்ராதி மூவரிலும் ஜனார்த்தனரூபி 3. என மொத்தம் 96 ரூபங்களை, பிராமணர்களில் சிந்திக்க வேண்டும். மேலும், பித்ருகளின் அந்தர்யாமியான கருட வாகனனான ஸ்ரீபரமாத்மனை சிந்தித்து பூஜிப்பவரே தன்யர் என்று அறியவேண்டும்.

இந்த பத்யத்தில் 'ஹம்ஸவாஹன முக்யதிவிஜர சம்ஷயதி' என்னும் இடத்தில் 'அஸம்ஷயதி' என்று போட்டாலும் அது சரியே. அசம்ஷயதி என்றால், பிரம்ம முதலான தேவதைகளின் அந்தராத்மகன் என்று சந்தேகமில்லாமல் அறிந்து - என்று பொருள். சம்ஷயதி என்றால், 'சம்யக் ஷேதே அஸ்மின்னிதி சம்ஷய:' பிரம்மாதி தேவதைகளின், சம்ஷயதி = நல்ல படுக்கையில், அதாவது, வசிக்கத் தகுந்த அவரின் இதயாகாஷத்தில் அந்தராத்மகன் என்று அறிந்து -- என்று அர்த்தம் வருகிறது.

**மூருவரெ ஸாவிரத3 மேலரெ**
**நூரைது3 ரூபதி3 ஜனார்த்த4ன**
**ஸூரிக3ளு மாடு3வ ஸமாராத3னெகெ3 விக்4னக3ளு ।**
**பா3ரத3ந்தெ ப3ஹுப்ரகார க2**
**ராரி காபாடு3வனு ஸர்வஷ**
**ரீரக3ளொளித்த3வரவர பெஸரிந்த3 கரெஸுதலி ।।7**

மூருவரெ ஸாவிரத மேலெ அரெனூரைது ரூபதி = 3500 + (100/2) + 5 = 3555 ரூபங்களால்
ஜனார்த்தன = ஜனார்த்தனரூபி
சூரிகளு மாடுவ = ஞானிகள் செய்யும்
ஸமாராதனெகெ = பித்ரு அந்தர்கத ஜனார்த்தனனின் பூஜைக்கு

விக்னகளு பாரதந்தெ = எவ்வித தடைகளும் வராமல்
கராரி = கர ராட்சசனைக் கொன்ற ஸ்ரீஹரி
சர்வஷரீரகளொளித்து = அனைவரின் சரீரங்களில் இருந்து
அவரவர பெசரிந்த = அவரவரின் பெயர்களால்
கரெசுதலி = அழைக்கப்பட்டு
பஹுப்ரகார = பல்வேறு விதங்களில்
காபாடுவனு = காப்பாற்றுவான்.

ஜனார்த்தன என்னும் சொல்லை, எண்ணிக்கையின்படி பார்த்தால், ஜ=3 நா=5 ர்த்த=5 ன=5 என 3555 ஆகிறது. இந்த இடத்தில் எண்ணிக்கையை வலமிருந்து படிக்காமல் அப்படியே சொல்ல வேண்டும். இவ்வளவு ரூபங்களால் ஸ்ரீஜனார்த்தனன், ஞானிகள்** செய்யும் சமாராதனைகளுக்கு*** எந்தவிதமான விக்னங்களும் வராமல், கர்த்ரு, போக்த்ரு ஆகியோரில் அந்தந்த பெயர்களில் இருந்து, அவர்களை அனைத்து விதங்களிலும் அருள்வான் என்பது கருத்து.

**ஞானிகள் = மேற்சொன்ன விதத்தில் அனுசந்தானத்துடன் பரமாத்மனை அனைத்து இடங்களிலும் நினைத்து சிரார்த்தத்தை செய்பவர் என்று பொருள்

***சமாராதனை = அதாவது, பிராமண பாதபிரட்சாலனத்தில் துவங்கி, கந்த அக்ஷதை போஜனம் தாம்பூலம் கொடுப்பது வரை அனைத்தும். சிரார்த்தங்களில் கலச பூஜைகள் ஆனபிறகு, ‘பித்ரந்தர்யாமி ஜனார்த்தன வாசுதேவஸ்ய சமாராதனம் கரிஷ்யே’ என்று சங்கல்பம் செய்வதால், சமாராதனை என்பதற்கு, சம்யுக் ஆராதனெ = நன்றாக பூஜிப்பது என்று அர்த்தம் வருகிறது.

**ஜயஜய ஜயாகாந்த த3த்தா**
**த்ரேய கபில மஹிதாஸ ப4க்த**
**ப்ரிய புராதனபுருஷ பூர்ணானந்த3 ஞானக4ன |**
**ஹயவத3ன ஹரி ஹம்ஸ லோக**
**த்ரய விலக்ஷண நிகி2ல ஜக3தா3**
**ஸ்ரய நிராமய த3யதி3 ஸந்தெயிஸெந்து3 ப்ரார்த்திபுது3 ||8**

ஜயஜய = உன் ரூபத்தின் தரிசனத்தைக் கொடுத்து
ஜயாகாந்த = ஜயா நாமகளான லட்சுமிதேவியின் அரசன் சங்கர்ஷணன்
தத்தாத்ரேய, கபில, மஹிதாஸ
பக்தப்ரிய = பக்தர்களுக்கு ப்ரியமானவன்
புராதனபுருஷ = அனைத்து காலங்களிலும் அனைவரிலும் வசிப்பவன்
பூர்ணானந்த = பூர்ணமான ஆனந்தஸ்வரூபனே
ஞானகன = வெறும் ஞானாத்மக ஸ்வரூபனே
ஹயவதன, ஹரி,
ஹம்ஸ = துக்கங்களைப் போக்கும் ஹம்ஸரூபியே
லோகத்ரய விலக்ஷண = மூன்று உலகங்களில் இருக்கும் பிராணகளைவிட வேறுபட்டவனே

நிகில ஜகதாஸ்ரய = அனைத்து உலகத்திற்கும் ஆதரவு அளிப்பவனே
நிராமய = எவ்வித தோஷங்களும் இல்லாதவனே
தயதி = தயவு செய்து
சந்தெயிஸெந்து பிரார்த்திபுது = என்னை காப்பாற்று என்று பிரார்த்திக்க வேண்டும். (பிரார்த்தனை செய்தவாறு, கர்மங்களை செய்யவேண்டும் என்பது கருத்து).

பரமாத்மன் சங்கர்ஷண ரூபத்தை ஸ்வீகரித்தபோது, லட்சுமிதேவி ஜயா என்னும் பெயரில் ரூபத்தை எடுத்து, சங்கர்ஷணனின் மனைவி ஆனாள். ஆகையால், ஜயாகாந்த என்றால், சங்கர்ஷணன் என்று பொருள்.

அத்ரி ரிஷிகளின் தவத்திற்கு மெச்சி தன் தேகத்தை 'புத்ரத்வேன தத்த:' புத்ர வாத்ஸல்யத்தால் தூங்க வைப்பதற்காக கொடுத்தாள். இப்படியாக அத்ரியிடம் அவதாரம் செய்ததால், தத்தாத்ரேயன் என்று பெயர் வந்தது. புத்ரனாக கொடுத்ததால், தத்த என்றும், 'அத்ரீரபத்யம் புமானாத்ரேய:' அத்ரி ரிஷிகளின் மகனாக ஆனதாலும் ; அல்லது, 'ததாதி அபீஷ்டமிதிதத்த:' அபீஷ்டங்களை பக்தர்களுக்கு கொடுப்பதால் தத்த என்று பெயர் வந்தது.

கம் ஸுகம்பிபதீதி கபி:லாதி கபி:லாதி = பக்தா:ஸ்வீகரோதீதி ல: = கபிஷ்சாஸௌ லஷ்சேதி கபில: ||
கம் என்றால் சுகம். பி என்றால் பானம் செய்வது. ஆக, கபி என்றால் சுக ஸ்வரூபம் என்று பெயர். லாதி என்றால் ஏற்றுக்கொள்பவன். பக்தர்களை ஏற்றுக்கொள்பவன் என்று பொருள். இப்படி சுகஸ்வரூபன், பக்தர்களை காப்பாற்றுபவன் ஆகையால், கபில என்று பெயர்.

மஹிதாஸ என்பது தேவரிஷி அவதாரம். மஹி என்றால் பூஜ்யர். உலகங்களே பூஜிக்கும் பிரம்மாதிகள் அனைவரும் பரமாத்மனுக்கு தாசராக இருப்பதால், மஹிதாசர் என்று பெயர்.

ஹரி = கஷ்டங்களை போக்குபவன்.

ஹம்ஸ = துக்கங்களை போக்குபவன்

மற்ற அனைத்தும் மேலே விளக்கியதைப் போலவே ஆகும்.

**ஷண்ணவதி எம்பக்ஷரேட்³யனு**
**ஷண்ணவதி நாமத³லி கரெஸுத**
**தன்னவரு ஸத்ப⁴க்தி பூர்வகதி³ந்த³ மாடு³திஹ ।**
**புண்யகர்மவ ஸ்வீகரிஸி கா**
**ருண்யஸாக³ர ஸலஹுவனு பிர**
**ஹ்மண்யதே³வ ப⁴வாப்தி³போத ப³ஹுப்ரகாரத³லி ||9**

ஷண்ணவதி எம்ப = 96 என்னும்
அக்ஷர = லட்சுமிதேவியரிடமிருந்து

ஈட்யனு = வணங்கப்படுபவனான
காருண்யசாகர = கருணைக் கடலான
பிரம்மண்யதேவ = பிராமணர்களுக்கு அருளும் ஸ்வாமி
பவாப்திபோத = சம்சாரம் என்னும் சாகரத்தைக் கடக்க படகு போல இருக்கும், ஸ்ரீஹரி,
ஷண்ணவதி நாமதலி கரெசுத = ஷண்ணவதி என்னும் பெயரால் அழைக்கப்பட்டு
தன்னவரு = தன் பக்தர்கள்
ஸத்பக்தி பூர்வகதிந்த மாடுதிஹ = சிறந்த பக்தியால் செய்யும்
புண்யகர்மவ = சிரார்த்தாதி புண்ய கர்மங்களை
ஸ்வீகரிஸி = ஏற்றுக்கொண்டு
பஹு ப்ரகாரதலி = பல விதங்களில்
ஸலஹுவனு = காப்பாற்றுகிறான்.

மேலே 1,2,3,6ம் பத்யங்களில் பார்த்தவாறு, பரமாத்மன் 96ரூபங்களால் பித்ருகளில் இருப்பதால், ஷண்ணவதி (96) என்று அழைக்கப்படுகிறான். இவ்வாறு அழைத்துக்கொண்டு, கருணைக்கடலான, பிராமணர்களில் மிகவும் அன்பு வைத்திருப்பவனுமான, சம்சார சாகரத்தைக் கடக்க உதவுபவனான, லட்சுமியால் வணங்கப்படுபவனான ஸ்ரீஹரி, தன் பக்தர்கள் செய்யும் ஸ்ரார்த்தாதி செயல்களை ஏற்றுக்கொண்டு, அவர்களுக்கு இஹ பரங்களில் சுகங்களைக் கொடுத்து அருள்கிறான்.

'க்ஷர:ஸர்வாணி பூதானி கூடஸ்தோக்ஷர உச்யதெ' என்னும் கீதை வாக்கியத்திற்கேற்ப, க்ஷர என்றால், அனைத்து பிராணிகள். அக்ஷர என்றால், லட்சுமிதேவி. ஆகையால், அக்ஷரேட்யனு என்றால், லட்சுமிதேவியால் வணங்கப்படுபவன் என்று பொருள்.

**தே$^3$ஹக$^3$ள கொடு$^3$வவனு அவரவர**
**அஹரவனு கொட$^3$தி$^3$ஹனெ ஸுமனஸ**
**மஹித மங்களசரித ஸத்கு$^3$ணப$^4$ரித அனவரத ।**
**அஹிக பாரத்ரிக ஸுக$^2$ப்ரத$^3$**
**வஹிஸி பெ$^3$ன்னலி பெ$^3$ட்டவம்ருதவ**
**த்$^3$ருஹிண மொத$^3$லாத$^3$வரி கு$^3$ணிஸித$^3$ முரித$^3$னஹிதரனு ।।10**

தேஹகள கொடுவவ = ஜீவர்களுக்கு தேகத்தைக் கொடுத்து ஸ்ருஷ்டி செய்யும் ஸ்வாமி
அவரவர = அந்தந்த பிராணிகளின்
அஹரவனு = யோக்யத்திற்கேற்ப ஆகாரங்களை
கொடதிஹனெ = கொடுக்காமல் இருப்பானோ?
சுமனஸமஹித = தேவதைகளால் வணங்கப்படுபவன்
மங்கலசரித = மங்களகரமான சரித்திரத்தைக் கொண்டவன்
சத்குணபரித = உத்தம குணங்களைக் கொண்டவன்
அனவரத = அனைத்து காலங்களிலும் இருப்பவன்

அஹிக = இந்த உலகத்திலும்
பாரத்ரிக = பர லோகத்திலும்கூட
சுகப்ரத = சுகங்களைக் கொடுப்பவன்
பென்னலி = தன் முதுகில்
பெட்டவ = மலையை
வஹிஸி = தாங்கி
அம்ருதவ = அமிர்தத்தை
த்ருஹிண மொதலாதவரிகெ = இந்திராதி தேவதைகளுக்கு
அஹிதரன = (இந்திராதி தேவதைகளுக்கு எதிரான கால நேமி முதலான) தைத்யர்களை
முரிதனு = சம்ஹரித்தான்.

அனைத்து பிராணிகளுக்கும் சரீரத்தைக் கொடுத்து ஸ்ருஷ்டித்த ஸ்ரீஹரி, அவரவர்களின் யோக்யதைக்கேற்ப ஆகாரத்தைக் கொடுக்காமல் இருப்பானோ? பாகவத 1ம் ஸ்கந்தத்தில்:

அஹஸ்வானி ஸஹஸ்தானாமபதோத் விசதுஷ்டதாம் |
அணூனிதூத மஹதாம் ஜீவோஜீவஸ்ய ஜீவனம் ||

* கை உள்ள மனுஷ்யாதிகளுக்கு, விதைகளிலிருந்து தோன்றிய தானியங்களும்,
* கை இல்லாத பிராணிகளான, பசு, குதிரை, யானை, ஆகியவற்றிற்கு கிருமிகள், புற்கள் ஆகியவற்றைக் கொடுத்திருக்கிறான்.
* புலி முதலானவற்றிற்கு ஆடு, போன்றவற்றையும்,
* நாய் முதலானவற்றிற்கு அவற்றை விட சிறியதான பூனை ஆகியவற்றையும்,
* பூனை முதலானவற்றிற்கு எலி போன்றவற்றையும்,
* கோழி, காக்கை, குருவி ஆகியவற்றிற்கு அவற்றைவிட சிறியதான கிருமி, பூச்சிகளையும்,
* நீரில் வசிக்கும் மீன் முதலானவற்றிற்கு அங்கேயே இருக்கும் மற்ற பிராணிகளை ஆகாரமாகக் கொடுத்திருக்கிறான்.
நம் மனைவி மக்களை நாம் பார்த்துக் கொள்கிறோம் என்று மயக்கத்தில் சொல்கிறோமே தவிர, அப்படி செய்ய நாம் ஸ்வதந்த்ரமானவர்கள் அல்ல. ஏனெனில்:

காலகர்ம குணாதீனோ தேஹோயம் பாஞ்சபௌதிக: |
கதமன்யாம்ஸ்து கோபாயேத் ஸர்ப்பக்ரஸ்தோ யதாபரம் ||

காலம், வினைப்பயன், கர்ம, ப்ரக்ருதி குணங்கள், இவற்றிற்கு அதீனமான பஞ்சபூத சரீரம் இது. அதாவது, நம் சரீரமே நமக்கு நிரந்தரமல்ல. பால்யத்தில் அனைத்திற்கும் பிறரை எதிர்ப்பார்ப்பது அனைவருக்கும் தெரிந்ததே. முதுமை வந்தபிறகு, அது போலதான். நடு வயதில், நான் ஸ்வதந்திரமாக சம்பாதிக்கிறேன் என்று அறிந்திருக்கிறான். அது மயக்கமே. அப்போதும், இவனின்

வினைப்பயன்களுக்கேற்ப செயல்கள் நடக்கிறதே தவிர, நாம் என்ன முயற்சி செய்தாலும், எதுவும் நம் இஷ்டத்திற்கேற்ப நடப்பதில்லை.

இவ்வளவு ஏன்? நம் தேகம், நம் கட்டுப்பாட்டில் இருந்தால், நாம் முதுமை அடைந்தபிறகு, பல் விழுந்துவிட்டது; காது கேட்கவில்லை; கண் தெரியவில்லை என்று புலம்புவது ஏன்? முகம் விகாரம் அடைவது ஏன்? நம் ஸ்வதந்த்ரத்துடன், நம் இஷ்டத்திற்கேற்ப, இளமையில் எப்படியோ அப்படியே நம் சரீரத்தை வைத்துக்கொண்டிருக்கலாம். ஏன் அப்படி முடியவில்லை? இதைப் புரிந்தாவது நம் தேகம் நம் கட்டுப்பாட்டில் இல்லை என்று அறியலாம்தானே? இப்படி இருக்கையில், நாம் மற்றவரை காப்பாற்றுவது எப்படி? நாம் மற்றவரை காப்பாற்றுகிறோம் என்று சொல்வது எப்படி இருக்கிறதென்றால் - 'ஸர்ப்பக்ரஸ்தோ யதாபரம்' - ஒரு பாம்பின் வாயில் சிக்கி, உயிர் விடத் தயாராக இருக்கும் தவளை ஒன்று, மற்றொரு பாம்பின் வாயில் சிக்கித் தவிக்கும் தவளையைப் பார்த்து - கவலைப்படாதே, நான் உன்னைக் காப்பாற்றுகிறேன் என்று சொல்வது போல இருக்கிறது.

ஆகையால், தேவதைகளால் வணங்கப்படுபவனும், மங்கள சரித்ரனும், சத்குணபூர்ணனுமான ஸ்ரீஹரியை, நீயே கதி என்று நம்பினால், அவன் நம்மை காப்பாற்றாமல் விடுவானோ? இஹ பரங்களில் நமக்கு சுகத்தைக் கொடுத்து, நம் துக்கங்களை பரிகரித்து, அனைத்து காலங்களிலும் நம்மை காப்பாற்றியே தீர்வான்.

இந்திராதி தேவதைகள், தங்கள் ராஜ்யத்தை இழந்து, பரமாத்மனை வேண்டியபோது, அமிர்தம் கடையும் காலத்தில், மந்தர மலையை மத்தாக மாற்றி, பாற்கடலைக் கடையும்போது, பரமாத்மன் கூர்மாவதாரத்தை எடுத்து, அந்த மலையைத் தாங்கி, தேவதைகளுக்காக தானே அக்கடலைக் கடைந்து, இந்திராதி தேவதைகளுக்கு அமிர்தத்தைக் கொடுத்து, அவர்களின் எதிரிகளை சம்ஹரிக்கவில்லையா? அவர்கள் நம்பியதைப் போல, நாமும் நம்பினால், நம்மை ஏன் காப்பாற்றமாட்டான்? கண்டிப்பாக காப்பாற்றுவான்.

த்ருஹிண முதலாதவரிகெ -- த்ருஹிண என்றால், பிரம்ம முதலானவர்களுக்கு என்று அர்த்தம் வந்தாலும், அமிர்தத்தைக் குடித்தே பிரம்மதேவர் அமரர் ஆகவேண்டியிருக்கவில்லை. அவருக்கு பிரம்மகல்ப 1 கல்ப ஆயுள் முதலிலேயே கிடைத்திருக்கிறது. ருத்ர கருட சேஷர்களுக்கும் இல்லை. இந்திராதிகளுக்கு, போர்களில் மரணம் இல்லாதிருக்கட்டும் என்று அமிர்தத்தைக் கொடுத்து அவர்களை அமரர் ஆக்கவேண்டும் என்று முதலிலேயே தீர்மானம் ஆகியிருந்தது. ஆகையால், பிரம்ம முதலாதவரிகெ என்றால், பிரம்மதேவர் யாருக்கு முதலாதவதாக இருக்கிறாரோ, அவர்களுக்கு அதாவது இந்திராதி தேவதைகளுக்கு என்று அர்த்தமாகிறது.

பாகவத 4ம் ஸ்கந்தத்தில், ஒரு இடத்தில், பிரம்மன் ருத்ரரை வணங்குவதைப் போல 'ப்ரம்மதயஸ்தமவகீர் யஜடா:ஸ்மஷானே' தோன்றுகிறது. அங்கு பிரம்மாதய: என்னும் பதத்திற்கு, 'பிரம்மா: ஆதி பிதா யோஷாந்தே பிரம்மாதய: ஸனகாதய:'

என்று வியாக்யானம் செய்திருப்பார்கள். அதாவது, பிரம்மதேவர் யாருக்கு ஆதியோ, (தந்தையோ) அவர்கள் பிரம்மாதிகள் என்று பொருள். ஆகையால், பிரம்மதேவரின் மக்களான சனகாதிகளுக்கு பிரம்மாதிகள் என்று பெயர்.

அமிர்த ப்ராசன காலத்தில் அங்கு பிரம்மதேவர் இருக்கவில்லை என்று பாகவதாதிகளில் சொல்லியிருப்பதால், இந்திராதி தேவதைகள் என்று அர்த்தம் சொல்வதே நியாயம்.

**த்3ருஹிண மொத3லாத3மரரிகெ3 ஸ**
**ந்மஹித மாயாரமண தானெ**
**ஸ்வஹனெனிஸி ஸந்த்ருப்திப3டி3ஸுவ ஸர்வகாலத3லி |**
**ப்ரஹித ஸங்கருஷண பிதருக3ளி**
**க3ஹரனெனிப ஸ்வதா4க்2ய ரூபதி3**
**மஹிஜ ப2ல த்ருணபெஸரினலி ப்ரத்3யும்னனிருத்3த4 ||11**

த்ருஹிண மொதலாதமரரிகெ = பிரம்ம முதலான தேவதைகளுக்கு
ஸன்மஹித = சஜ்ஜனர்களால் பூஜிக்கப்படும்
மாயாரமண = மாயாதேவியின் பதியான ஸ்ரீவாசுதேவன்
தானே ஸ்வஹனெனிஸி = தானே, ஸ்வாஹா என்று அழைக்கப்பட்டு
சர்வகாலதலி = அனைத்து காலங்களிலும்
சந்த்ருப்திபடிசுவ = நன்றாக திருப்திப்படுத்துவான்
ப்ரஹித = விசேஷமாக அனைவருக்கும் ஹிதத்தைக் கொடுக்கும்
சங்கர்ஷணன்,
ஸ்வதாக்ய ரூபதி = ஸ்வதா என்னும் ரூபத்தில்
அஹரனெனிஸுவ = ஆகாரம் என்று இருக்கிறான்
(மஹிஜ.. என்று இங்கு தொடங்கும் ஆறாம் வரி, அடுத்த பத்யத்துடன் சேர்ந்து வருதால், இதன் விளக்கத்தை அங்கு பார்க்கலாம்).

யாகங்களில் ஆஹுதிகளைக் கொடுக்கும் காலங்களில் தேவதைகளுக்கு பிரம்மணே ஸ்வாஹா, ருத்ராய ஸ்வாஹா, என்று ஸ்வாஹாகாரத்தினாலும், பித்ருகளுக்கு ஸ்வதாகாரங்களிலும், தானே அன்னரூபனாக இருந்து அவர்களை திருப்திப்படுத்துவான். சங்கர்ஷணன், ஸ்வதா ஷப்த வாச்யனாக இருந்து, அன்னமாக இருந்து, பித்ருகளை திருப்திப்படுத்துகிறான் என்று அர்த்தம்.

**அன்னனெனிஸுவ ந்ரு பஷுக3ளிகெ3 ஹி**
**ரண்ய க3ர்ப்பா4ண்ட3தொ3ளு ஸந்தத**
**தன்னனீபரியிந்து3 பாஸனெகை3வ ப4குதரன |**
**ப3ன்னப3டிஸதெ3 ப4வஸமுத்3ர ம**
**ஹோன்னதி3ய தா3டிஸி சதுரவித4**
**அன்னமய நாத்ம ப்ரத3ர்ஷன ஸுக2வனீவ ஹரி ||12**

(மஹிஜ = பூமியில் உத்தமமான
பல = பலன்

த்ருணபெசரினலி = தானியங்கள், பழங்கள் ஆகிய பெயர்களில் ப்ரத்யும்ன அனிருத்தன்)
ஹிரண்ய கர்ப்பாண்டதொளு = பிரம்மாண்டத்தில்
ந்ரு பஷுகளிகெ = மனிதர்களுக்கும், பசுக்களுக்கும்
அன்னனிஸுவ = தான்யாதி ரூபங்களில் போஜ்யன் எனப்படுகிறான்
தன்னனு = ஸ்ரீபரமாத்மன், தன்னை
ஈ பரியிந்த = அன்னமயனாகி
ஸந்தத = எல்லா காலங்களிலும்
உபாஸனெகெய்வ = உபாசனை செய்யும்
பகுதரன = பக்தர்களை
பன்னபடிஸதெ = எவ்வித கஷ்டங்களையும் கொடுக்காமல்
சதுர்வித அன்னமயனு = காத்ய, பேய, லேஹ்ய, போஜ்ய என்னும் நான்கு வித அன்னரூபமான ஸ்ரீஹரி
பவசமுத்ர மஹோன்னதிய = தாண்டமுடியாத சம்சார சமுத்திரத்தைத் தாண்டச் செய்து
ஆத்மப்ரதர்ஷன சுகவனு = இஹத்தில் தன் அபரோக்ஷ தர்ஷன சுகத்தையும், முக்தியில் எப்போதும் பகவத்ரூப தரிசன சுகத்தையும்
ஈவ = கொடுக்கிறான்.

பிரம்மாண்டத்தில், அனைத்து பிராணிகளுக்கும், அவரவர்களின் யோக்யதைக்கேற்ப, யார்யாருக்கு எந்தெந்த ஆகாரமோ, அதாவது, மனிதர்களுக்கு காத்ய, லேஹ்ய, போஜ்ய, பேய போன்றன. உண்பது, அன்னத்திற்கு தக்க சட்னி, மாவு, மிளகு, ஊறுகாய் போன்றன, குடிப்பது என்று 4 விதங்கள் உண்டு. பசு முதலானவற்றிற்கு புற்கள். இந்த பெயர்களால் பிரத்யும்னன், அனிருத்தன் த்ருப்திப்படுத்துகிறான்.

இப்படி அனைத்து பிராணிகளும் உண்ணும் அன்னரூபனாக பரமாத்மனே அனைவரையும் திருப்திப்படுத்துகிறான். ’அன்னம்பிரம்மேதிவ்யஜானாத்’ என்னும் உபநிஷத் வாக்கியத்திற்கேற்ப, பரமாத்மனை அன்ன என்று உபாசனை செய்யவேண்டும் என்று அர்த்தம். அன்ன என்னும் சொல்லுக்கு ‘அத்தீத்யன்னம்’ பிரபஞ்சத்தை உண்பதால் பரமாத்மனுக்கு அன்ன என்று பெயர் என்று அர்த்தம் சொல்லலாம். ஆகையால், பிரபஞ்சத்தில் அன்னரூபமாக இருப்பதாலும், பிரளய காலத்தில் ப்ரபஞ்சத்தை தன் வயிற்றில் வைத்துக் கொள்வதாலும், பரமாத்மனுக்கு அன்ன என்று பெயர்.

இப்படியாக பரமாத்மன் அன்ன ரூபியாக இருக்கிறான் என்று நினைத்து யார் உபாசனை செய்கிறார்களோ, அத்தகைய பக்தர்களை சம்சாரத்தில் கஷ்டப்படுத்தாமல், அவர்களை சம்சார சாகரத்தை தாண்டவைத்து, சதுர்வித அன்னமயனான ஸ்ரீஹரி, இஹத்தில் தன் அபரோக்ஷ தரிசன சுகத்தையும், முக்தியில் ஸாமீப்யாதி ஸ்தானங்களையும் கொடுத்து, அங்கும் தன் தரிசனத்தை எப்போதும் கொடுத்தவாறு அவர்களை காப்பாற்றுகிறான்.

**மன வசன காயக³ள தெ³ஷெயி**

**ந்த[3]னுதினதி[3] பி[3]ட[3]தா[3]சரிஸுதி**
**ப்பனு சிதோசித கர்மக[3]ள ஸத்ப[4]க்திபூர்வகதி[3] |**
**அனிலதே[3]வனொளிப்ப நாரா**
**யணகி[3]தன்னவு எந்து[3] க்ருஷ்ணா**
**ர்ப்பணவெனுத கொடெ[3] ஸ்வீகரிஸி ஸந்தயிப கருணாளு ||13**

மனவசன காயகள தெஷெயிந்த = மனஸ், வாக்கு, தேகங்களால்
அனுதினதி = தினந்தோறும்
பிடதெ ஆசரிசுத்திப்ப = செய்து கொண்டிருக்கும்
அனுசித = செய்யக்கூடாத
உசித = செய்ய வேண்டிய
கர்மகள = கர்மங்களை
சத்பக்தி பூர்வகதி = பக்தியுடன்
அனிலதேவனொளிப்ப = பாரதிரமண முக்யபிராணாந்தர்கதனன
நாராயணகெ = நாராயணனுக்கு
இது அன்னவெந்து = இதுவே அன்னம் என்று
கிருஷ்ணார்ப்பணவெனுத = கிருஷ்ணார்ப்பணம் என்று
கொடெ = சமர்ப்பித்தால்
கருணாளு = கருணைக்கடலான ஸ்ரீஹரி
ஸ்வீகரிஸி = அதனை ஏற்றுக்கொண்டு
சந்தெய்ப = காக்கிறான்.

மனோ வாக் காயங்களால் நாம் தினமும் செய்யும் புண்ய பாப கர்மங்களை பரமாத்மனே செய்விக்கிறான் என்று அறிந்து, திடமான பக்தியினால், இவை அனைத்தும் பரமாத்மனுக்கே அன்னம் என்று நினைத்து, பாரதிரமண முக்யபிராணாந்தர்கத ஸ்ரீலட்சுமி நாராயண: ப்ரீயதாம், ஸ்ரீகிருஷ்ணார்ப்பணமஸ்து என்று சமர்ப்பித்தால், பரமாத்மன் அவற்றை ஸ்வீகரித்து, பாபங்களை சுட்டு, புண்யங்களை வளர்த்து, கருணாசமுத்திரனான ஸ்ரீஹரி நம்மைக் காக்கிறான்.

**ஏளு வித[3]த[3]ன்ன ப்ரகரணவ**
**கே[1]ளி கோவித[3]ராஸ்யதி[3]ந்த[3]லி**
**ஆலஸவ மாட[3]த[3]லெ அனிருத்தா[3]தி[3] ரூபக[3]ள |**
**காலகாலதி[3] நெனெது[3] பூஜிஸு**
**ஸ்தூலமதிக[3]ளிகி[3]த[3]னு பேளதெ[3]**
**ஸ்ரீலகுமிவல்லப[4]னெ அன்னாத[3]ன்ன அன்னத[3]னு ||14**

ஏளுவித = 7 விதமான
அன்ன ப்ரகரணவ = அன்ன ப்ரகரணங்களை
கோவிதர = ஞானிகளின்
ஆஸ்யதிந்தலி = முகத்திலிருந்து கேட்டு
ஆலஸவ = சோர்வினை
மாடதலெ = செய்யாமல்

அனிருத்தாதி ரூபகள = அனிருத்த முதலான ரூபங்களை
காலகாலதி = அந்தந்த காலங்களில்
நெனது = நினைத்தவாறு
ஸ்தூலமதிகளிகெ = மனைவி மக்கள் வீடு என்று தற்காலிக சுகங்களில் ஈடுபட்டு, பகவத் விஷயங்களில் கொஞ்சம்கூட ஞானம் இல்லாதவர்களுக்கு
இதனு பேளதெ = இதனை சொல்லாமல்
ஸ்ரீலகுமி வல்லபனெ = ஸ்ரீலட்சுமிபதியே
அன்னாத = போக்த்ருகளில் இருந்து அன்னத்தை உண்கிறான் என்று
அன்ன = அன்னமயனும்
அன்னதனு = அன்னத்தைக் கொடுப்பவன் என்றும்
பூஜிஸு = பூஜை செய்.

11, 12, 13 ஆகிய மூன்று பத்யங்களால், 7விதமான அன்னபிரகரணங்களைக் கூறினார். அந்த சப்தான்னங்களையே இங்கு தொகுத்துக் கொடுத்திருக்கிறார். 7வித அன்னங்களை, ப்ருஹதாரண்ய உபநிஷத்தில், 1ம் அத்தியாயம், 5ம் ஸ்லோகத்தில், சப்தான்ன பிராமணரில் முதலாம் கண்டத்தில்:

யத்ஸப்தான்னானிமேதயா தபஸா அஜனயபிதா ஏகமஸ்ய ஸாதாரணம் த்வேதேவான பாஜயத், த்ரீண்யாத்மனோs குருதபஷுப்ய ஏகம் ப்ராயச்சத் தஸ்மின் ஸர்வம் ப்ரதிஷ்டிதம் இத்யாதி ||

இதன் கண்டார்த்தம்:

விஷ்ணு பிரம்மாணா வபிக்ருஹணா வதிஷ்டமதோ க்ருஹே உத்தம இத்யுக்தமாத்மை வேத்யாதினா ||
தஸ்யக்ருஹிணோ பகவத்ஸ்ருஷ்டம் யத்ஸாதாரணமன்னம் தன்னஸ்வகீய மேவேதி மந்தவ்யமிதி பாவேன ப்ரக்ருதஹரே: ||
ஸப்தான்ன ஸ்ரஷ்ட்ரத்வமஹிமானமாஹ ||
யத்ஸப்ரான்னமிதி ||

விஷ்ணு பிரம்மதேவர் இருவரும் கிருஹஸ்தாஸ்ரமிகள் ஆயினர். ஆகையால், கிருஹஸ்தாஸ்ரமத்தில் யார் உத்தமர்கள் என்று ஆத்மைவ இத்யாதி கண்டங்களால் கேட்டனர். அந்த கிருஹஸ்தன், பகவந்தனால் ஸ்ருஷ்டிக்கப்பட்ட அன்னமானது, அனைத்து பிராணிகளுக்கும் கிடைக்க வேண்டும் என்பதை மறந்து, தன்னுடையது என்று அறியக்கூடாது என்று கூறுகிறார். 'யத்ஸப்தான்னானி' என்னும் கண்டத்தால்

பிதா = அனைத்து உலகங்களுக்கும் தந்தையான ஸ்ரீஹரி.
மேதயா = தன் விருப்பத்தால்
தபஸா = பிராணிகளின் சம்பந்தமான கர்மங்களால்
ஸப்தான்னானி = 7 வித அன்னங்களை
அஜனயத் = ஸ்ருஷ்டித்தான்

பிராணிகளுக்கு திருப்தி ஆவதால், அதற்கு அன்ன என்று பெயர். அந்த 7 வித அன்னங்கள் எவை என்றால்:

* பிராணிபிரத்யமானமேகம் = பிராணிகள் உண்ணும் சாதாரண அன்னம் 1.
* வைஸ்வதேவ, பலிஹரண இவை இரண்டு
* பிராணிகளின் மனஸ், வாக், பஞ்சப்ராண ரூபமானது மூன்று
* பால் அல்லது தண்ணீர் ஒன்று,

என மொத்தம் 7. இந்த ஏழில்,

* ஒன்று மட்டும் உலகத்திற்கு சாதாரணமானதாகும்.
* வைஸ்வதேவ, பலிஹரண ரூபமான இரு அன்னங்கள் தேவதைகளுக்கு, அவர்கள் மூலமாக பித்ருகளுக்கும் பகிர்கின்றனர் என்று அர்த்தம்.
* மனஸ், வாக், பஞ்சப்ராண இந்த மூன்று அன்னங்களையும், பரமாத்மன் தனக்காக வைத்துக் கொண்டான்.
* பசுக்களுக்கு தண்ணீர் ரூபமான ஒரு அன்னத்தைக் கொடுத்தான். ஆனால், இந்த தண்ணீர் பசுக்களுக்கு மட்டுமே அல்ல. அனைத்து ஜீவர்களும் தண்ணீரால் வாழ வகை செய்தான்.

இதுபோன்ற விஷயங்களை அங்கு விளக்கமாக சொல்லியிருக்கின்றனர். இந்த சப்தான்ன பிராமணங்கள் மொத்தம் 23 கண்டங்களில் இருக்கின்றன. அதில் நமக்குத் தேவையான 7 கண்டங்களில் வெகு சில பாகங்கள் மட்டும் இங்கு கொடுக்கப்பட்டுள்ளது. மேலும் விஷயங்களை அறியவேண்டுமெனில், ப்ருஹதாரண்ய உபநிஷத்திலும், பாஷ்யத்திலும், சப்தான்ன பிராம்மணன் என்னும் 8ம் பிராமணனைப் பார்த்து அறியலாம். இதே உபநிஷத்தின் இந்த கண்டத்திற்கு, பாஷ்யத்தில் :

ஸப்தான்னானியதா விஷ்ணு: பரம: புருஷோவிபு: ||
ஸஸர்ஜதேஷாம் ஸ்வார்த்தானி சகார த்ரீணிகேஷவ: |
மனோவாசந்ததா ப்ராணம் தஸ்மாத்யைஸ்துஷ்டி மேதிஸ: |
தஸ்மாத் தத்பக்தி காமஸ்யாத் ஸங்கல்பம் தத்க்ருதிம்ப்ரதி ||
குர்யாத் தத்வேதனேச்சாஞ்ச ஸ்ரத்தாந்தஸ்ய குணோன்னதௌ ||
இத்யாதி ||
சதுர்த்தம் போஜ்யமேவான்னம் ஸர்வஸாதாரணம் ஸ்ம்ருதம் ||
ஆத்மனோதி ஸமீபத்வம் தஸ்யயோன்னஸ்ய மன்யதே ||
அக்ஷயம் பாபமஸ்யஸ்யாத் தேவபிரம்மஸ்வ ஹாரிண: |
ததேவ மந்த்ரயுக்தப்த்வாத் பலிஹோமாத்மனாத்வயம் |
தேவானம் ப்ரததௌ விஷ்ணுஸ்தஸ்மான்யைவேச்ச யாயஜேத் |
யதீச்சயாயஜேத்தேஷா மபஹர்தாபவிஷ்யதி |
தேவஸ்வந்தே நயேன்யைவ காம்யார்த்தம் வினியோஜிதம் |
பரகீயேனவித்தேன தஸ்மின் வினிமயேயதா |
சதுஷ்டாத் ப்யோத்விபாத்யஸ் சபஷுப்ய: பய ஆத்மகம் ||

ப்ராயச்சத்ஸப்தமான்னம் ஸகோக்ஷீர முக்யமத்ரச |
ஆத்மனேசைவ தேவானாம் தத்தோமார்த்தம் ப்ரகல்பிதம் |
ஸம்வத்ஸரம் கோபயஸாயேன ஹொமோஹரே: க்ருத: |
பகவத்தத்வ விதுஷா தஸ்ய முக்திர் நஸம்ஷய: |
அத்ருஷ்ட பகவத்ரூபஸ்யை தத்தர்ஷன காரணம் |
ஸப்தான்னோபாஸனம் யஸ்யாத் தேவானாம் யோக்யமுத்தமம் |
தஸ்மாத்தேவத்வ மாப்னோதி யோக்யோ தேவ பதஸ்யய: ||

இதன் பொருள்:

ஸ்ரீபரமாத்மன் எப்போது சப்தான்னங்களை ஸ்ருஷ்டித்தானோ அப்போது பரமபுருஷனான பிரபுவான ஸ்ரீஹரி, மனதிலிருந்தும், வாக்கிலிருந்தும், பஞ்சபிராணங்களிலிருந்தும் செய்யும் க்ரியாரூபமான மூன்று வித அன்னங்களை தன் பாகம் என்று வைத்துக்கொண்டான். இந்த மூன்று விதமான கர்மங்களால், பரமாத்மன் மகிழ்கிறான். ஆகையால், மனஸ் சம்பந்தமான அன்னம் என்றால், மனதை பரமாத்மனின் பாதாரவிந்தங்களில் வைத்து, பகவத் சேவாரூபமான கர்மங்களை செய்வேன் என்று, மனதில் சங்கல்பம் செய்து, அந்த கர்மத்தை செய்து முடித்தபிறகு, நான் அஸ்வதந்திரன், பரமாத்மனே எனக்குள் இருந்து இதனை செய்வித்தான் என்று அறிந்து, பரமாத்மனுக்கு அர்ப்பிக்க வேண்டும். இதுவே மனஸ் சம்பந்தமான அன்னம்.

வாக் அன்னத்தை, பகவன்-நிந்தா மற்றும் பகவத் பக்தரின் நிந்தாதிகளில் பயன்படுத்தாமல், வெறும் அவரின் ஸ்தோத்திரங்களை செய்வதற்கு பயன்படுத்த வேண்டும். ப்ராண உபானாதி 5ல் :

* பிராணனை பகவத் சம்பந்த கர்மங்களை செய்வதற்கும்,
* அபானத்தை பிற கர்மங்களை செய்யாதிருக்கவும்,
* பகவத் விரோதிகளை நீக்குவதற்கு வியானத்தையும்,
* யோகதாரணத்திற்காக உதானத்தையும்,
* மனோ வாக் முதலான இந்திரியங்களை தண்டிப்பதற்கு சமானத்தையும் என,

பஞ்சபிராணங்களால் ஆகும் செயல்களையும் அன்ன என்று பரமாத்மனுக்கு சமர்ப்பிக்க வேண்டும். (இந்த விஷயங்களை இன்னும் விளக்க முடியும். கிரந்தம் பெரிதாகிவிடும் என்பதால், இத்துடன் நிறுத்துகிறோம்).

4ம் அன்னம்: இந்த அன்னம் அனைவருக்கும் சாமான்யமாக இருப்பதால், யார் இதை தனதென்று நினைக்கிறானோ, அத்தகையவனுக்கு தேவபிராமணரின் சொத்தை அபகரித்த பாவிகளுக்கு வரும் மஹா பாவம் வரும். இந்த அன்னத்தில் பலிஹோம ரூபமாக இரண்டை தேவதைகளுக்காக ஸ்ரீபரமாத்மன் கொடுத்திருக்கிறான். அதுவே வைஷ்வதேவ, பலிஹரண. வைஷ்வதேவம் - தேவதைகளுக்கு மட்டும். பலிஹரணம் - தேவதைகளுக்கும், பித்ருகளுக்கும். ஆகையால், நாம் அன்னத்தை செய்தபிறகு, அந்த அன்னம் தேவதைகளை சேர்ந்ததாகும்.

ஏனெனில், மழைக்கு அபிமானியான தேவதை, அந்த மழையை தக்க காலத்தில் பெய்வித்து, தானியங்களை விளைவிக்க வேண்டும். நெருப்புக்கு அபிமானி தேவதை, அன்னத்தை வேகவைக்க வேண்டும். இப்படி, பல தேவதைகளின் உதவி இல்லாமல் நம் அன்னம் தயார் நிலைக்கு வருவதில்லை. ஆகையால், அதனை அவர்களுக்குக் கொடுக்காமல், அவர் அனுமதி இல்லாமல் நம் இஷ்டத்திற்கு வினியோகம் செய்தால், தேவதைகளின் சொத்தினை அபகரித்த தோஷம் நமக்கு வருகிறது.

'சதுஷ்பாதி த்விபாதிகள' என்றால், பசு, மனிதர்களின் வாழ்க்கைக்காக 'பய:' தண்ணீர் மயமான 7ம் அன்னத்தை ஸ்ருஷ்டித்தார். அந்த அன்னத்தில், பசுவின் பால் மிகவும் முக்கியமானது. அந்த பாலினை, தனக்கும், தேவதைகளுக்கும், ஹோமாதிகளை செய்வதற்காக அனுப்பியுள்ளார். ஆகையால், எந்த புருஷன் ஒரு ஆண்டு வரைக்கும் பசும் பாலினால், ஹோமங்களை செய்கிறானோ, அவன் முக்தியை அடைகிறான். அபரோக்ஷத்தில் பகவத் ரூபத்தை காணாதவனுக்கு இந்த சப்தான்ன உபாசனம் தரிசனத்திற்கு காரணமாகிறது. சப்தான்ன உபாசனை, தேவதா-யோக்யமானதால், பரம உத்தமமானதாகும். ஆகையால், இந்த சப்தான்ன உபாசனையை செய்பவன் தேவ பதவிக்கே தகுதியானவன் ஆகிறான். அவன் தேவத்வத்தை அடைகிறான்.

இதுபோன்ற அனேக விஷயங்களை பிரஹதாரண்ய உபநிஷத்தில் சொல்லியிருக்கிறார்கள். இதே அர்த்தங்களையே 11ம் பத்யத்திலிருந்து 14ம் பத்யம் வரைக்கும் தாசராயரும் சொல்லியிருக்கிறார். இத்தகைய 7 விதமான அன்ன ப்ரகரணத்தை, அறிந்தவரின் முகத்திலிருந்து கேட்டு, அறிந்து, அனிருத்தாதி ரூபங்களை நினைத்து பூஜிக்க வேண்டும். ப்ருஹதாரண்ய உபநிஷத்தில் சொல்லியபடி வைஷ்வதேவ, பலிஹரண என்னும் இரு அன்னங்களின் பிரகரணத்தை 'த்ருஹிண மொதலாத' என்னும் பத்யத்திலிருந்து சொல்கிறார். அதில் சொல்லியிருக்கும்படி, ஹோமம் செய்யும் ஸ்வாஹா என்னும் உபாசனையே வைஷ்வதேவ என்று அர்த்தம். அங்கு வாசுதேவ மூர்த்தியை சிந்திக்க வேண்டும். ஸ்வதா ரூபத்தினால், பித்ருகளுக்கு ஆகாரம் என்று சொல்வதே பலிஹரணம். தேவதைகளுக்கு ஸ்வாஹா ஷப்தத்தினாலும், பித்ருகளுக்கு ஸ்வதா ஷப்தத்தினாலும் பலியைக் கொடுக்க வேண்டும். அங்கு, சங்கர்ஷணனை சிந்திக்க வேண்டும். இப்படி இரு அன்னங்கள் இருக்கின்றன. 12ம் பத்யத்தில் 3-4 இந்த இரு அன்னங்களை சொல்லியிருக்கிறார்.

த்ருண முதலான ஜீவனைவிட மஹிஜ என்றால், பூமியை தோண்டினால் கிடைக்கும் தண்ணீர் என்று அர்த்தம். பசு முதலான அனைத்து பிராணிகளுக்கும் நீர் மிகவும் முக்கியமானது. இது மூன்றாம் அன்னம்.

நான்காவது சர்வ சாதாரணமான மனுஷ்யதேவதை முதலான அனைவருக்கும் பயன்படும் அன்னம். இந்த அன்னத்தில் ப்ரத்யும்ன அனிருத்தனை சிந்திக்க வேண்டும்.

மற்ற மூன்று அன்னங்களை 14ம் மனவசன என்னும் பத்யத்திலிருந்து சொல்லியிருக்கிறார். இந்த மூன்றிலும் நாராயணனை சிந்திக்க வேண்டும். ப்ருஹதாரண்ய பாஷ்யத்தில் சொல்லிய பிராண ஷப்தத்தையே தாசராயர், 'காய' என்று சொல்கிறார். இந்த வித்தியாசம் ஏன் என்றால், பிராணோபானாதிகளால், செய்யவேண்டிய கர்மங்களை பாஷ்யத்தில் சொல்லும்போது,

* பகவத் சம்பந்தமான கர்மங்களை செய்வதற்கு ப்ராண காரணம் என்றும்,
* அபான, பிற கர்மங்களை விடுவதற்கும்,
* பகவத் விரோதிகளை நீக்குவதற்கு வியானனும்..

என்று இவையே பஞ்சப்ராணரின் வேலை என்பது ப்ருஹதாரண்யத்தின் வாக்கியம். தாசராயரின் அபிப்பிராயம் என்னவென்றால், இந்த ப்ராணோபானாதி ஐந்து ப்ராணர்களால் ஆகும் கர்மங்கள், சரீரத்தால் ஆகிறதே தவிர, தேகத்தை விட்டு ஆவதில்லை என்று நினைத்து, மனவசனகாய என்பவை ஒரு அன்னம் என்று சொல்கிறார். ஆகையால், இது ஆசார்யரின் வாக்கியத்திற்கு விரோதமல்ல. இப்படியாக, அனிருத்தாதி 5 ரூபங்களை, மேற்சொன்ன விதத்தில், 7 அன்னங்களில்,

* வைஷ்வதேவத்தில் ஸ்வாஹா ரூபான்ன,
* பலிஹரணத்தில் ஸ்வதா ரூபான்ன,
* ஸாதாரணன்ன,
* தண்ணீர்

இந்த நான்கில், வாசுதேவ, சங்கர்ஷண, பிரத்யும்ன, அனிருத்த இந்த நான்கு ரூபங்களையும்,

* மன
* வசன
* காய ரூபங்களான

மூன்று அன்னங்களில் நாராயண ரூபத்தை, என மொத்தம் 5 ரூபங்களை 7 வித அன்னங்களில் சிந்திக்க வேண்டும் என்பது கருத்து. இதனை அறிந்து எந்தெந்த காலங்களில் எந்தெந்த அன்னத்தை சமர்ப்பிக்கின்றீரோ, அந்தந்த காலத்திற்கு அந்தந்த மூர்த்தியை நினைக்க வேண்டும்.

எப்போதும் இந்திரியங்களை தற்காலிக விஷய சுகங்களில் ஈடுபடுத்துவோருக்கு இந்த விஷயங்களை உபதேசம் செய்யக்கூடாது. ஸ்ரீபரமாத்மனே இந்த விதமாக, அன்னஸ்வரூபனும், அன்னப்ரதனும், அன்ன உண்பவனுமாக இருக்கிறான் என்று அறிந்து உபாசனை செய்யவேண்டும்.

**எந்த$^3$ரிது ஸப்தான்னக$^3$ள தெ$^3$ய்**
**நந்தி$^3$னதி$^3$ மரெயதெ$^3$ ஸதா$^3$ கோ$^3$**
**விந்த$^3$க$^3$ர்ப்பிஸு நிர்ப$^4$யதி$^3$ மஹயக்ஞுவிது$^3$ யெந்து$^3$ ।**
**இந்தி$^3$ரேஷனு ஸ்வீகரிஸி த$^3$ய**

**தி$^{3}$ந்த$^{3}$ பே$^{3}$டி$^{3}$ஸிகொளதெ$^{3}$ தவகதி$^{3}$**
**தந்து$^{3}$ கொடு$^{3}$வனு பரமமங்கல தன்ன தாஸரிகெ$^{3}$ ||15**

எந்தரிது = இப்படியாக (மேற்சொன்ன விதத்தில்) அறிந்து
சப்தான்னகள = சப்தான்ன பிரகரணங்களை அறிந்து
தெய்னந்தினதி = தினந்தோறும்
மரெயதே = மறக்காமல்
சதா = எப்போதும்
நிர்பயதி = சந்தேகமில்லாமல்
மஹயக்ஞவிது எந்து = இதுவே மிகப்பெரிய யக்ஞம் என்று
கோவிந்தகர்ப்பிஸு = கோவிந்தனுக்கு அர்ப்பித்து இரு
இந்திரேஷனு = லட்சுமிபதியான ஸ்ரீமன் நாராயணன்
தயதிந்த = கருணையுடன்
ஸ்வீகரிஸி = அதனை ஏற்றுக்கொண்டு
பேடிஸிகொள்ளதெ = நமக்கு முக்தியைக் கொடு என்று வேண்டிக்கொள்ளாமல்
தவகதி தன்ன தாசரிகெ = தன் பக்தர்களுக்கு உடனடியாக
பரமமங்கள = பரமானந்தகரமான ஸ்வரூபானந்தத்தை
தந்து கொடுவனு = கொடுக்கிறான் (முக்தியைக் கொடுக்கிறான்).

மேற்சொன்ன விதத்தில், சப்தான்னங்களை அறிந்து, மறக்காமல் தினந்தோறும் இதுவே மஹாயக்ஞம் என்று அறிந்து, ஸ்ரீபரமாத்மனுக்கு அர்ப்பிக்க வேண்டும். அப்படி அர்ப்பிக்கும் தாசருக்கு ஸ்ரீபரமாத்மன், அவர் கொடுத்ததை கருணையுடன் ஏற்றுக்கொண்டு, இவரின் பிரார்த்தனை எதுவும் இல்லாதபோதும், தானாகவே மகிழ்ந்து, முக்தியில் ஸ்வரூபானந்தத்தைக் கொடுக்கிறான்.

**ஸூஜி கரத$^{3}$லி பிடி$^{3}$து$^{3}$ ஸமரவ**
**நா ஜயிஸுவெனு எம்ப$^{3}$ நரன**
**ந்தீ$^{3}$ ஜக$^{3}$த்தினொளுள்ள அஞ்ஞானிக$^{3}$ளு நித்யத$^{3}$லி ।**
**ஸ்ரீஜகத்பதி சரணயுக$^{3}$ள ஸ**
**ரோஜ ப$^{4}$க்தி ஞானபூர்வக**
**பூஜிஸதெ$^{3}$ த$^{3}$ர்மார்த்த$^{4}$ காமவ ப$^{3}$யஸி ப$^{3}$ளலுவரு ||16**

சூஜி = ஒரு குண்டூசியை
கரதலி பிடிது = கையில் ஏந்தி
ஸமரவ = போர்க்களத்தில் எதிரிகளை
நா ஜயிஸுவேனு = நான் வெல்வேன்
எம்ப = என்று சொல்லும்
நரனந்தெ = மனிதனைப் போல
ஜகத்தினொளுள்ள = இந்த உலகத்தில் உள்ள
அஞ்ஞானிகளு = அஞ்ஞானிகள்
நித்யதலி = தினந்தோறும்
ஸ்ரீஜகத்பதி = ஜகத்பதியான பரமாத்மனின்

சரணயுகள ஸரோஜ = பாதபத்ம என்னும் கமலங்களை
பக்தி ஞான பூர்வக பூஜிஸதெ = பக்தி ஞானத்துடன் பூஜிக்காமல்
தர்மார்த்த காமவ = தர்ம, அர்த்த, காம என்னும் புருஷார்த்தங்களை
பயஸி = வேண்டி
பளலுவரு = கஷ்டப்படுவார்கள்.

போர்க்களத்தில் வேல், வாள் ஆகியவற்றை ஏந்தி போருக்கு நின்றிருக்கும் எதிரிகளை, நான் ஒரு குண்டூசி வைத்துக்கொண்டே வென்றுவிடுவேன் என்று சொன்னால், அது எப்படி சாத்தியமாகாதோ அது போலவே, பகவந்தனிடம் பக்தி, ஞானம் இல்லாமல், பரமாத்மனை பூஜிக்காமல், எனக்கு தர்ம அர்த்த காம ஆகிய புருஷார்த்தங்கள் வேண்டும் என்று வேண்டும் அஞ்ஞானிகளின் காரியமும் வேண்டிய பலன்களைக் கொடுக்காது. அதாவது, குண்டூசியால் எதிரிகளை வெல்ல முடியாது; பரமாத்மனிடம் பக்தி இல்லாதவனுக்கு புருஷார்த்தங்கள் கிடைக்காது என்பது கருத்து.

**ஷகடப[4]ஞ்சன ஸகலஜீவர**
**நிகடகனு தானாகி[3] லோககெ[3]**
**ப்ரகடனாக[3]தெ[3] ஸகலகர்மவ மாடி[3] மாடி[3]ஸுத |**
**அகுடிலாத்மக ப[4]குதஜனரிகெ[3]**
**ஸுக[2]த[3]னெனிஸுவ ஸர்வகாலதி[3]**
**அகடகட ஈதன மஹா மஹிமெக[3]ளிகே[3] னெம்பே[3] ||17**

ஷகடபஞ்சன = வண்டியில் ரூபத்தில் வந்த ஷகடாசுரனைக் கொன்ற ஸ்ரீகிருஷ்ணரூபி ஸ்ரீஹரி
சகலஜீவர நிகடகனு = அனைத்து ஜீவர்களின் பிம்பரூபியாக அவர்களின் அருகிலேயே இருக்கிறான்
தானாகி = தானாகவே
லோககெ = உலகத்திற்கு
ப்ரகடனாகதே = தன்னை காட்டிக்கொள்ளாமல்
சகலகர்மவ மாடி மாடிசுத = அனைத்து செயல்களையும் செய்து, செய்வித்து
அகுடிலாத்மக = தோஷங்கள் அற்ற பரமாத்மன்
பகுதஜனரிகெ = பக்தர்களுக்கு
சர்வகாலதி = எப்போதும்
சுகதனெனிஸுவ = சுகம் கொடுப்பவன் என்று அழைத்துக் கொள்கிறான்
அகடகட = என்ன ஆச்சரியம்?
ஈதன மஹா மஹிமெகளு = இவனின் மகா மகிமைகளை
ஏனெம்பே? = நான் என்னவென்று சொல்வேன்? (சொல்லி முடிக்கவே முடியாது என்று அர்த்தம்).

ஸ்ரீகிருஷ்ணாவதாரத்தில், மூன்று மாதங்கள் குழந்தையாக இருந்தபோது, யசோதை, ஸ்ரீகிருஷ்ணனை முதல்முறையாக கோயிலுக்கு அழைத்துப் போகும் சந்தர்ப்பத்தில், ஒரு வண்டியின் கீழ் அவனை படுக்கவைத்து, தான் வந்தவர்களுக்கு

உபசாரம் செய்து கொண்டிருக்கும்போது, ஷகடாக்ஷ என்னும் ஒரு அசுரன், அதே வண்டியின் ரூபமாக வந்து, கிருஷ்ணனை கொல்ல முயன்றான். இதை அறிந்த ஸ்ரீகிருஷ்ணன், தாய் தன்னை தூக்கிக் கொள்ளவில்லை என்று அழுவதைப்போல, அந்த வண்டியின் சக்கரத்தை தன் காலால் எட்டி உதைக்க, அந்த வண்டி பொடிப்பொடியாக நொறுங்கி, அந்த தைத்யன் இறந்தான் என்று பாகவத 10ம் ஸ்கந்தத்தில் பார்க்கிறோம்.

ஆகையால், தாசராயர் இங்கு ஷகடபஞ்சன என்றார். அதாவது, வண்டியை உதைத்தவன் என்று பொருள். இத்தகைய ஸ்ரீபரமாத்மன், அனைத்து பிராணிகளின் அருகிலும் இருந்து, அவர்களுக்குத் தெரியாதவாறு, அனைத்து செயல்களையும் தான் செய்து, செய்வித்து, தோஷங்கள் அற்றவனான ஸ்ரீஹரி, அனைத்து காலங்களிலும் பக்தர்களுக்கு சுகங்களைக் கொடுக்கிறான். ஆஹா. இவனின் கருணையை, மகா மகிமையை நான் என்னவென்று கொண்டாடுவேன்? அதை சொல்வதற்கு சாத்தியமே இல்லை என்பதை ‘அகடகட’ என்ற சொல்லின் மூலம் சொல்கிறார்.

**ஸ்ரீலகுமிவல்லப4னு வைகு**
**ண்டாலயதி3 ப்ரணவ ப்ரக்ருதி கீ3**
**லாலஜாஸன முக்ய சேதனரொளகெ3 நெலெஸித்து3 |**
**மூல காரண அம்ஷினாமதி3**
**லீலெகை3ஸுத தோரிகொள்ளதெ3**
**பாலினொளு க்4ருதவித்த தெரத3ந்திப்ப த்ரிஸ்த2ளதி3 ||18**

ஸ்ரீலகுமிவல்லபனு = லட்சுமிபதியான ஸ்ரீஹரி
வைகுண்டாலயதி = வைகுண்ட என்னும் தன் வீட்டில்
ப்ரணவ = அனைத்து வேதங்களுக்கும் மூலமான ப்ரணவ என்றால் ஓம்காரத்திலும்
ப்ரக்ருதி = வேதமானியான சேதன ப்ரக்ருதி மற்றும் ஜட ப்ரக்ருதிகளிலும்
கீலாலஜ = தண்ணீரில் மலர்ந்த தாமரை
ஆஸன = ஆசனமாகக் கொண்ட பிரம்மன்
முக்ய = முதலான
சேதனரொளகெ = சேதனர்களில்
நெலஸித்து = நிலைத்திருந்து
மூல = மூலரூபியாகவும் அந்தந்த பெயர்களிலும்
தோரிகொள்ளதெ = தன்னை காட்டிக் கொள்ளாமல்
லேலெகைஸுத = செயல்களை செய்தவாறு
பாலினொளு க்ருதவித்த தெரதந்திப்ப = பாலைக் காய்ச்சி, உரை ஊற்றினால் வரும் தயிரைக் கடைந்தால் வரும் வெண்ணையைக் காய்ச்சினால் வரும் நெய்யைப் போல இருக்கிறான்
த்ரிஸ்தலதி = மூன்று இடங்களிலும்
இப்ப = இருக்கிறான்

ஸ்ரீலட்சுமிபதியான ஸ்ரீமன் நாராயணன், மூலரூபத்தினால் சர்வவேதாத்மகமான ப்ரணவ, அதாவது, ஓம்காரத்தில் வசிக்கிறான். லட்சுமிதேவிக்கு ப்ரக்ருதி என்று பெயர். பாகவத ஸ்ருதி கீதா வியாக்யானத்தில்:

ஸ்ரீர்பூமிரிதி ரூபாக்யாம் ப்ரக்ருதிர் விஷ்ணுனாஸஹ |
சேதேஸ்ருதிஸ்ச ரூபேண ஸ்தௌதிப்ரம்ம லயேஹரிம் ||

என்னும் வாக்கியத்தில் ப்ரக்ருதி; ஸ்ரீ, பூ என்னும் இரு ரூபங்களால் பரமாத்மனுடன் சயனம் செய்கிறாள். துர்கா நாமக ப்ரக்ருதி வேத ஸ்வரூபளாகி பரமாத்மனை ஸ்துதிக்கிறாள் என்று சொல்லப்பட்டிருக்கிறது. இந்த ப்ரக்ருதியில் சேதன ப்ரக்ருதி, ஜட ப்ரக்ருதி என்று இரு விதங்கள் உண்டு. ஜட ஸ்ருஷ்டிக்கு ஜட ப்ரக்ருதி. சேதனர்களான பிரம்மாதிகளுக்கு சேதன ப்ரக்ருதி காரணமாகிறது. இந்த ஜட, சேதன ப்ரக்ருதிகளில் காரண ரூபத்தினால் பரமாத்மன் இருக்கிறான்.

* பிரபஞ்சத்தின் ஸ்ருஷ்டிக்கு காரணம், ப்ரக்ருதி ஆகையால், அங்கு காரண ரூபத்தினாலும்;
* ப்ரக்ருதி நாமகனாக பிரம்மாதி அனைத்து பிராணிகளிலும் பின்னாம்ஷ ரூபனாக வசிக்கிறான்.

அம்ஷ ரூபங்கள் இரு விதங்களாக இருக்கின்றன. அவை ஸ்வாம்ஷ & பின்னாம்ஷ.
ஸ்வாம்ஷ: பரமாத்மனே அவதாரம் செய்திருக்கும் ராம கிருஷ்ணாதி ரூபங்கள்.
பின்னாம்ஷ: இதர ஜீவர்களில், அவர்களிடமிருந்து வேறுபட்டு அந்த தேகத்தில் இருந்து காரியங்களை செய்விக்கும் ரூபம். இதற்கு வியாப்தி ரூபம் என்றும் பெயர் உண்டு.

இப்படி பரமாத்மன், மூன்று இடங்களில்; அதாவது,

* வைகுண்டத்தில் ஓம்கார பிரதிபாத்ய ரூபம் 1,
* ப்ரக்ருதி காரணரூப 1,
* பிரம்மாதி அனைத்து ஜீவர்களில் அம்ச ரூபம் 1.

இப்படி மூன்றுவித ரூபங்களால் மூன்று இடங்களில் வசிக்கிறான். இந்த இடங்களில் பரமாத்மன் இருந்து, யாருக்கும் தெரியாமல், பாலுக்குள் நெய் இருப்பதைப் போல இருக்கிறான். பாலைப் பார்த்தால் நெய் தெரிகிறதா? இல்லை. பாலைக் காய்ச்சி, பிறகு அதில் சிறிதளவு உரை மோர் ஊற்றி அதை தயிர் ஆக்க வேண்டும். பிறகு அந்த தயிரை கடைய வேண்டும். அங்கு வெண்ணெய் வருகிறது. அந்த வெண்ணெயைக் காய்ச்சினால் நெய் வருகிறது. இங்கு எப்படி பால், பாலிலிருந்து தயிர், தயிரிலிருந்து வெண்ணெய், வெண்ணெயிலிருந்து நெய் வந்து, அதை பார்க்கிறோமோ, அப்படியே மேற்சொன்ன மூன்று இடங்களில் பகவந்தனை பார்க்க வேண்டும்.

வேதம், பாலைப் போல இருக்கிறது. அதில் நெய்யைப் போல இருக்கும் பகவத் ரூபங்களை பார்ப்பது எப்படி? பாலைக் காய்ச்சி அதில் உரை மோர் ஊற்றினால், தயிர் ஆகும் என்னும் ஞானம் நமக்கு வேண்டுமல்லவா?

சதுர்வேத்யபியோவிப்ரோ வாஸுதேவம் நவிந்ததி ।
வேதபாவ பராக்ராந்த: ஸவைப்ராம்ஹண கார்தப: ।।

என்னும் பிரமாண வாக்கியத்திற்கேற்ப, நான்கு வேதங்களையும் அத்யயனம் செய்தாலும், வேத-பிரதிபாத்யன் பரமாத்மனே என்னும் ஞானம் இல்லாதவன், வேதம் என்னும் பாரத்தை சுமக்கும் கழுதை என்று சொல்கிறார். வேதம் என்னும் பாலை, தயிர் ஆக்கும் வழியை, குருகளிடமிருந்து அறிந்து, ஞான-அக்னியில் இந்த பாலைக் காய்ச்சி, ஓம்காரம் என்னும் உரைமோரை ஊற்றினால், அனைத்து வேத அர்த்தங்களும் அந்த ஓம்காரத்தில் அடங்கி, பால் எப்படி தயிராக மாறுகிறதோ, அப்படியே, வேதம் அனைத்தும் ஓம்கார ஸ்வரூபமாக தயிராகிறது.

அடுத்து, இதனை காய்ச்ச வேண்டும். அ-கார, உ-கார, ம-காரங்களின் கூட்டான ஓம் என்னும் எழுத்தினை சிந்தித்து, மூச்சை அடக்கி, யோகா பயிற்சி செய்து, அபரோக்ஷத்தில் பரமாத்மனை காணவேண்டும் என்று பாகவத 2ம் ஸ்கந்தத்தில்:

அப்யஸேன்மனஸாஷுத்தம் த்ரிவ்ருத் ப்ராம்ஹணாக்ஷரம் பரம் ।
மனோயச்சேஜ்ஜித ஸ்வாஸோ பிரம்மபீஜ மனுஸ்மர ।।
நியச்சேத்விஷயேப்யோ அக்ஷான்மனஸா புத்திஸாரதி: ।।

யோகி முதலில் ஒரு ஆசனத்தில் அமர்கிறான். அடுத்து, மூச்சை அடக்கி, மனதை ஸ்திரமாக நிறுத்தி, த்ரிவ்ருக்; அதாவது, அ, உ, ம என்னும், பிரம்மாக்ஷரம் என்னும் ஓம்காரத்தை பயிற்சி செய்ய வேண்டும். அதாவது, ஜெபிக்க வேண்டும் என்று பொருள். பிறகு தியானம் செய்ய வேண்டும். தியானம் செய்யவேண்டுமெனில், மனம் என்னும் லகானைப் பயன்படுத்தி, புத்தி என்னும் சாரதியால், இந்திரியங்கள் என்னும் குதிரைகளை, தன் வசப்படுத்திக் கொள்ளவேண்டும். அதன்பிறகு, பகவத்ரூபங்களை தியானிக்க வேண்டும்.

ஆகையால், பிரம்மபீஜமான ஓம்காரம் எனும் தயிரை, யோகாப்பியாசத்தால் கடைந்து, வெண்ணெய் எடுக்க வேண்டும். வெண்ணெய் என்பது வாஸனாத்மகமான அபரோக்ஷம் ஆகும். சாதாரணமாக பிரதிமைகளை பூஜித்து, புஷ்பம், துளசி, நைவேத்யாதிகளை வைத்து எப்படி பூஜிக்கிறோமோ, அவையே அதே உருவமாக, நாம் கண் மூடினாலும் நம் அபரோக்ஷத்தில் காண்கிறோம். இதற்கு 'வாஸனா-அபரோக்ஷம்' என்று பெயர். இது வெண்ணெயைப் போல இருக்கிறது.

இப்படியாக, தினந்தோறும் பகவத் ஸ்வரூபங்களை தியானித்தவாறு ஞானாக்னியால், வெண்ணெய் எப்படி நெய் ஆகிறதோ, அதன்படியே பகவத் அபரோக்ஷம் ஆகிறது. அந்த அபரோக்ஷத்தில், நம் யோக்யதைக்கேற்ப மின்னலைப் போலவோ, சந்திரனைப் போலவோ, சூரியனைப் போலவோ ஒளிபொருந்திய பகவத் ரூபத்தை பார்க்க முடியும். இப்படி,

மூலரூபத்தைப் பார்க்க வேண்டுமென்றாலும்,
காரண ரூபத்தைப் பார்க்க வேண்டுமென்றாலும்,
அம்ஷ ரூபத்தைப் பார்க்க வேண்டுமென்றாலும்

இப்படியான அபரோக்ஷத்தினாலேயே பார்க்க வேண்டும். இந்த அபரோக்ஷம் இல்லாதவன், பாலில் நெய் இருந்தாலும், அதை நாம் எப்படி பார்ப்பதில்லையோ, அப்படியே வியாப்தனான பரமாத்மனை பார்க்க மாட்டார்கள்.

**மூருயுக$^3$தலி மூலரூபனு**
**ஸூரிக$^3$ள ஸந்தெயிஸி தி$^3$திஜ கு**
**மாரரனு ஸம்ஹரிஸி த$^4$ர்மவனுளுஹ பே$^3$கெந்து$^3$ |**
**காருணிக பூ$^4$மியொளு நிஜபரி**
**வார ஸஹிதவதரிஸி ப$^3$ஹுவித$^3$**
**தோரித$^3$னு நரவத் ப்ரவ்ருத்திய ஸகல சேதனகெ ||19**

காருணிக = கருணாளுவான
மூலரூபனு = மூலரூபியான ஸ்ரீபத்பனாபன்
ஸூரிகள = ஞானிகளான தேவதைகளை
ஸந்தெயிஸி = சமாதானம் செய்து
திதிஜ குமாரகர = திதி மக்களான தைத்யர்கள் - திதிஜர்கள். அவர்களின் அம்சத்தினால் பூமியில் பிறந்தவர்கள். ராவண, ஜராசந்த, கம்ஸ முதலானவர்கள் என்று பொருள். இத்தகைய தைத்ய ராஜர்களைக்
சம்ஹரித்து = கொன்று,
தர்மவனு = தர்மத்தை
உருளபேகெந்து = காப்பாற்ற வேண்டும்.
மூரு யுகதலி = க்ருத, த்ரேதா, த்வாபர யுகங்களில்
நிஜ பரவாரஸஹித = தன் பக்தரான வாயுதேவரே முதலான தேவதாகணத்துடன் அவதரித்து
பஹுவித = பல விதமாக
நரவத்ப்ரவ்ருத்திய = மனுஷ்யனைப் போல பிறத்தல், வளர்தல், சுகதுக்கங்களை அனுபவித்தல், இறத்தல் ஆகியவற்றை
சகல சேதனகெ = அனைத்து ஜீவர்களுக்கும்
தோருவனு = கொடுக்கிறான்.

ஏதன்னானாவதாராணாம் நிதானம் பீஜமத்யயம் |
யஸ்யாம்ஷாம்ஷேன ஸ்ருஜ்யந்தீ தேவதிர்யம் நராதய: || (1-2-3)

முதல் ஸ்கந்தத்தின் வாக்கியத்தின்படி, பத்பனாப ரூபமே மூலரூபம் என்றும், இந்த மூல ரூபத்திலிருந்தே ஸ்வாம்ஷ பின்னம்ஷங்கள் அனைத்தும் பிறக்கிறது என்றும் சொல்லப்பட்டிருக்கிறது. இத்தகைய பரமாத்மன் :

யதாயதாஹி தர்மஸ்ய க்லானிர் பவதி பாரத |
அப்யுத்தானம் அதர்மஸ்ய ததாத்மானம் ஸ்ருஜாம்யஹம் ||

என்னும் கீதா வாக்கியத்தின்படி, எந்தெந்த காலங்களில் புண்ணியங்கள் குறைகின்றதோ, அந்தந்த காலங்களில் பரமாத்மன் அவதரிக்கிறான். கலியுகமானது வெறும் பாப-யுகமானதால், இந்த யுகத்தில் பரமாத்மனின் அவதாரம் இல்லை. ஆகையால், மூன்று யுகத்தில் என்று சொல்கிறார்.

கிருத யுகத்தில் 4 அவதாரங்கள்.
த்ரேதா யுகத்தில் 3 அவதாரங்கள்
த்வாபர யுகத்தில் 2 அவதாரங்கள்
கலியுகத்தின் இறுதியில், கலியுக க்ருதயுக சந்தியில் 1 அவதாரம். ஆக, மொத்தம் 10 அவதாரங்கள்.

இந்த ஒவ்வொரு அவதாரமும், தர்மத்தை வளர்ப்பதற்காக, தேவதைகளின் பிரார்த்தனைக்கேற்ப, தைத்யர்களைக் கொல்வதற்காக செய்த அவதாரங்களாகும்.

தைனந்தின பிரளயத்தில், பிரம்மதேவர் இரவில் படுத்திருக்கும்போது, அவரின் முகத்திலிருந்து வெளிவந்த வேதங்களை; அதாவது வேதபுருஷனை ஹயக்ரீவ என்னும் தைத்யன் அபகரித்தான். பிரம்மதேவரால் வணங்கப்பட்டு, மத்ஸ்யாவதாரம் எடுத்து ஹயக்ரீவாசுரனைக் கொன்று பிரம்மதேவருக்கு வேதங்களை திருப்பிக் கொடுத்தான்.

தைத்யர்கள் தேவதா-ராஜ்ஜியத்தை அபகரித்தபோது, பரமாத்மன், தேவதைகளால் வணங்கப்பட்டு, அவர்களுக்கு உதவியாக இருந்து, பாற்கடலைக் கடைந்தபோது, மந்தர மலை, நீரில் மூழ்க, கூர்மாவதாரத்தை எடுத்து அந்த மலையைத் தாங்கினான்.

ஹிரண்யாக்ஷ என்னும் தைத்யன் பூமியை பாதாளத்திற்கு எடுத்துப் போகையில், தேவதைகளால் வணங்கப்பட்டு, வராக அவதாரம் எடுத்து, ஹிரண்யாக்ஷனைக் கொன்று, பூமியை மேலே திரும்ப எடுத்து வந்தான்.

பிரம்மதேவரின் வரத்தினால், ஹிரண்யகசிபு, யாராலும் வெல்லப்பட முடியாதவனானபோது, தேவதைகளை துன்புறுத்தியும், தன் சிறந்த பக்தனான பிரகலாதனைக் கொல்ல முயன்றபோதும், அனைத்து தேவதைகளால் வணங்கப்பட்டு, ஸ்ரீஹரி, நரசிம்ம ரூபத்தினால் கம்பத்திலிருந்து வெளிவந்து, அந்த ஹிரண்யகசிபுவைக் கொன்று, பிரகலாதனையும், அனைத்து தேவதைகளையும், அருளினான்.

இப்படி க்ருத யுகத்தில் நான்கு அவதாரங்கள் ஆயின.

பலி சக்ரவர்த்தி, தேவேந்திரனின் ராஜ்ஜியத்தை அபகரித்தபோது, ஸ்ரீஹரி, அதிதியால் பிரார்த்திக்கப்பட்டு, வாமனாவதாரம் எடுத்து, பலியிடம் மூன்றடி நிலம் தானம் கேட்டு, இரண்டு அடியில் பிரம்மாண்டத்தையே அளந்து, இந்திரனுக்கு அவருடைய ராஜ்ஜியத்தை திருப்பிக் கொடுத்தான்.

கார்த்தவீர்யார்ஜுனன் தன் 1000 தோள்களால், ஜமதக்னி ரிஷிகளின் காமதேனுவை அபகரிக்க, பரமாத்மன் பரசுராம அவதாரத்தினால் அவனைக் கொன்றார். அதற்கு எதிர்வினையாக, கார்த்தவீர்யனின் மக்கள் ஜமதக்னி ரிஷிகளை கொன்றனர். அதே கோபத்துடன், ஸ்ரீபரசுராமன், 21 முறை துஷ்ட ப்ரக்ருதியை சம்ஹரித்து குருக்ஷேத்திரத்தில் ஸ்மந்த பஞ்சக என்னும் க்ஷேத்திரத்தை நிறுவினார்.

ராவணாதி அசுரர்களின் தொந்தரவுகளை தாங்கமுடியாமல் தேவதைகள் பரமாத்மனை பிரார்த்திக்க, பரமாத்மன், தசரதனின் மகனாக ராமனாக அவதரித்து, தன் பக்தரான தேவதைகள் அனைவரும் கபிகளாக / கரடிகளாக அவதரிக்க, அவர்களுடன் ராவணாதி அசுரர்களைக் கொன்றான்.

இந்த மூன்று அவதாரங்களும் த்ரேதா யுகத்தில் நடைபெற்றன.

தைத்ய ராஜர்களின் பாரத்தை தாங்க முடியாத பூமிதேவி, பரமாத்மனை வேண்ட, பரமாத்மன் கிருஷ்ணாவதாரத்தை எடுத்தான். அப்போது வாயுதேவர், சேஷதேவர் ஆகியோர் பீமசேன, பலராம ரூபங்களால் அவதரித்தனர். ஜராசந்த, துர்யோதன, கம்ஸ முதலான அனைத்து தைத்யர்களையும் கொன்று ஸ்ரீகிருஷ்ணன் பூ-பாரத்தைக் குறைத்தான்.

தைத்யர்கள் பலஹீனர்களாக வேறு வழியில்லாமல், பரமாத்மனையே கதியென்று வேண்டும் காலம் வர, அயோக்கியர்களான தைத்யர், இது தமக்கு யோக்யமல்ல என்று சிந்திக்க, த்வாபர கலியுக சந்தியில் ஸ்ரீபரமாத்மன் புத்தாவதாரத்தை எடுத்து, தைத்யர்களை ஏமாற்றி, அவரின் யோக்யதைக்கேற்ப, அவர்களுக்கு தமஸ்-சாதனமான மதத்தை போதித்தான்.

கலியுக-க்ருதயுக சந்தியில், பரமாத்மன் கல்கி அவதாரம் செய்து துஷ்ட ராஜர்களைக் கொன்று, க்ருதயுகத்தின் தர்மத்தை நிலைநாட்டினான்.

இவை மட்டுமல்லாமல், தத்த, கபில, வியாஸ அவதாரங்களால் மக்களுக்கு ஞானோதயத்தைக் கொடுத்து, தர்மத்தை நிலைநாட்டினார். ஒவ்வொரு அவதாரங்களிலும் தேச-காலத்திற்கேற்ப, பூமியில் மனிதர்கள் எப்படி இருக்கிறார்களோ அப்படியே தானும் மனிதனைப் போல அவதரித்து 'வித்தவன் மத்தவச்சைவ கேஷபோவே தனார்த்தவத்' ஆகிய நிர்ணய வாக்கியத்தின்படி, அஞ்ஞானியைப் போலவும், திட்டு வாங்குவதைப் போலவும், வேதனையால் கவலைப் படுபவனைப் போலவும் மக்களை மயக்கியிருப்பார்.

இந்த அபிப்பிராயத்தையே தாசராயர் சுருக்கமாக ஒரே பதத்தில் சொல்லியிருக்கிறார்.

**காரணாஹ்வய ப்ரக்ருதியொளகி$^{3}$**
**த்தா$^{3}$ரதி$^{3}$க ஹதி$^{3}$னெண்டு த$^{1}$த்வவ**
**தா ரசிஸி தத்$^{3}$ரூப தன்னாமங்க$^{3}$ளனெ த$^{4}$ரிஸி ।**
**நீரஜ ப$^{4}$வாண்ட$^{3}$வனு நிர்மிஸி**

**காருணிக கார்யாக்$^{2}$ய ரூபதி$^{3}$**
**தோருவனு ஸஹஜாஹிதாசலக$^{3}$ளலி ப்ரதிதி$^{3}$னதி$^{3}$ ||20**

காரணாஹ்வய = காரண நாமகனான ஸ்ரீபரமாத்மன்
ப்ரக்ருதியொளகித்து = காரண ரூபளான ப்ரக்ருதியில் இருந்து
ஆரதிக ஹதினெண்டு = 24 தத்வங்கள்
தா ரசிஸி = தான் இயற்றி
தத்ரூப தன்னாமங்களனெ தரிஸி = அந்த உருவம், பெயர்களையே தான் ஏற்று
நீரஜபவாண்டவனு = பிரம்மாண்டத்தை
நிர்மிஸி = படைத்து
காருணிக = கருணாளுவான ஸ்ரீஹரி
கார்யாக்ய ரூபதி = கார்ய என்று புகழ்பெற்ற ரூபத்தினால்
ஸஹஜ = சாலிகிராமத்தை
அஹித = ப்ரதிமைகள்
அசலகளலி = மலைகளில்
ப்ரதினதி = தினந்தோறும்
தோருவனு = இருக்கிறான்.

காரணரூபளான ப்ரக்ருதியில், பரமாத்மன் காரணரூபமாக இருந்து, அவ்யக்த, அஹங்கார, புத்தி, மனஸ், ஞானேந்திரியங்கள் 5, கர்மேந்திரியங்கள் 5, பஞ்சபூதங்கள் 5, தன்மாத்ரா 5, என 24 தத்வங்களை படைத்தான். அந்தந்த ரூபமாக, அந்தந்த பெயர்களில் அவற்றில் இருந்து, கார்ய ரூபமான பிரம்மாண்டத்திலும், ஸாலிக்ராம ரூபங்களிலும், பிரதிமா ரூபங்களிலும், மலைகளில் மலையின் ரூபமாகவும் மக்களுக்கு தரிசனம் அளித்தான். ஒவ்வொரு பதார்த்தத்திற்கும் காரண, கார்ய, கர்த்தா என்று மூன்று உண்டு.

பானை கார்யம். மண் காரணம். குயவன் கர்த்தா.
இதைப்போலவே,
ஜகத் கர்த்தா, ஸ்ரீபரமாத்மன். ப்ரக்ருதி, காரணள். ஜகத் கார்யம்.

இப்படி, கர்த்தா, காரண, கார்ய என அனைத்தும் தானே ஆகி, கார்ய காரணங்களில், தானே கார்ய ரூபத்தாலும், காரண ரூபத்தாலும் நிலைத்திருக்கிறான் என்று அர்த்தம்.

இங்கு, காரணரூபியான பரமாத்மன் காரண ப்ரக்ருதியில் இருந்து, 24 தத்வங்களை படைத்து, அவற்றில் நிலைத்திருந்து, பிரம்மாண்டத்தைப் படைத்தான் என்று சொல்கிறார். பாகவத 2ம் ஸ்கந்தம் 5ம் அத்தியாயத்தில் 18ம் ஸ்லோகமான 'ஸத்வம் ரஜஸ்தம இதி நிர்குணாஸ்ய குணத்ரய:' இங்கிருந்து, இந்த ப்ரகரணத்தை மிகவும் விளக்கமாக சொல்லியிருப்பர். மேலும் 3ம் ஸ்கந்தம், 6ம் அத்தியாயத்திலும் இதே விஷயத்தை விளக்கியிருப்பர். அதன் சுருக்கத்தை இங்கு சொல்கிறோம்.

* காரணாத்மகளான பிரக்ருதியிடமிருந்து முதலில் மஹத் தத்வம் பிறந்தது.

* அதிலிருந்து அஹங்கார தத்வம் பிறந்தது.
* அந்த அஹங்காரமே வைகாரிக, தைஜஸ, தாமஸ என்று மூன்றாக இருக்கிறது.

* தாமஸ அஹங்காரத்திலிருந்து ஷப்த-குணத்தை பிரதிபலிக்கும் ஆகாஷ தத்வம் பிறந்தது.
* ஆகாஷ தத்வத்திலிருந்து ஸ்பர்ஷ குணத்தைக் கொண்ட வாயுதத்வம் பிறந்தது.
* அந்த வாயுதத்வத்திலிருந்து ரூப குணத்தைக் கொண்ட தேஜஸ் தத்வம் பிறந்தது.
* அதிலிருந்து, ரஸ குணத்தைக் கொண்ட உதக தத்வம் பிறந்தது.
* அதிலிருந்து, கந்த குணத்தைக் கொண்ட ப்ருத்வி தத்வம் பிறந்தது.

இப்படி தாமஸ அஹங்காரத்திலிருந்து 5 மஹபூத தத்வங்கள், பஞ்சதன்மாத்ரா குணங்கள் பிறந்தன.

தேஜஸ் அஹங்காரத்திலிருந்து ஞானேந்திரியங்கள் 5, கர்மேந்திரியங்கள் 5 என கண், காது முதலான 10 இந்திரியங்களைப் படைத்தான்.

வைகாரிக அஹங்காரத்திலிருந்து மனஸ்ஸை, தத்வாபிமானி தேவதைகளை படைத்தான். பாகவத 3ம் ஸ்கந்தம் 7ம் அத்தியாயத்தில்:

இதிதாஸாம் ஸ்வஷக்தீ நாமஸமேத்யஸ: |
ப்ரஸுப்தலோகதந்த்ராணாம் நிஷம்யகிரமீஷ்வர: ||1
காலஸம்ஞானம் ததாதேவீம்பிப்ரச்சக்தி முருக்ரம: |
த்ரயோவிம்ஷதி தத்வானாம் கணம் யுகபதாவிஷத் ||2
ஸோனுப்ரவிஷ்டோ பகவான்சேஷ்டா ரூபேணதங்கணம் |
பின்னம்ஸம் யோஜயாமாஸ ஸுப்தம்கர்ம ப்ரபோதர்ய ||3
ப்ரபுத்தகர்மாதைவேன த்ரயோவிம்ஷதி கோகண: |
ப்ரேரிதோऽஜனயத்ஸ்வாபிர் மாத்ராபிரபி போருஷம் ||4

மஹத்தத்வ 1
அஹங்காரதத்வ 1
பஞ்சபூதங்கள் 5
தன்மாத்ரா குணங்கள் 5
மனஸ 1
ஞானேந்திரியங்கள் 5
கர்மேந்திரியங்கள் 5;
ஆக மொத்தம் 23ம் சேர்ந்து ஒரு 'தத்வ கணம்' என்று அழைக்கப்பட்டது.

அவ்யக்த தத்வம் லட்சுமிஸ்வரூபமே ஆகையால், இதில் அது சேரவில்லை. 6ம் அத்தியாயத்தில், இந்த தத்வகுணம், தன்னால் பிரம்மாண்டத்தை படைக்க முடியாமல், பரமாத்மனையே துதித்த விஷயத்தை சொல்லியிருக்கிறார்கள். இந்த ஸ்லோகத்தின் அர்த்தம் என்னவென்றால்:

தன் ஸ்வாதீனத்தில் இருப்பதால், ஷக்தி என்று அழைக்கப்படும் இந்த 23 தத்வங்களின் குணம் ஒன்றுக்கொன்று சம்பந்தப்படாமல், உலகத்தை படைக்க

முடியாமல், தன்னை பிரார்த்திப்பதை அறிந்து, ஸ்வதந்த்ரனான ஸ்ரீபரமாத்மன், தன் சக்தியை தரித்திருக்கும் கால நாமகளான லட்சுமிதேவியுடன் சேர்ந்து, ஒரே சமயத்தில் 23 தத்வகணத்தில் நுழைந்தான் ||2

ஸ்ரீபரமாத்மன் அந்த கணத்தில் நுழைந்து சேஷ்டா ரூபத்தினால் ஒருவருக்கொருவர் சம்பந்தப்படாமல் இருக்கும் கர்மங்களைக் கொண்ட அனைவரையும் சேர்த்து, ஒரே கர்மத்தைக் கொண்டவர்களாக மாற்றினார். அதாவது, 10 பேர் சேர்ந்து ஒரு வேலை செய்யவேண்டுமெனில், அனைவரும் ஒரே மனதுடன் அந்த வேலையை செய்தால் மட்டுமே முடியும். அப்படியில்லாமல், 10 பேர் 10 விதமாக செய்தால், அந்த வேலை முடிவது எப்போது? இப்படி 23 தத்வங்களின் காரியம், 23 வகையாக இருந்தது. ஒரே மார்க்கமாக இருந்திருக்கவில்லை. பின் பரமாத்மன் அவர்களில் நுழைந்து, இவர்கள் அனைவரின் காரியங்களை ஒரே முகமாக இருக்குமாறு செய்தான். அப்போது அவர்கள் அனைவரும் சேர்ந்து ஒரு வேலையை செய்வதற்கு தயாராயினர். ||3

அடுத்து, 23 தத்வங்களின் குணங்கள், தம்மில் நுழைந்த பரமாத்மனின் ஆணைப்படி, தம் அம்சத்தினால் புருஷ ஷப்த வாச்யனான பிரம்மதேவருக்கு சரீரமாக, புருஷ என்னும் பெயருள்ள பிரம்மாண்டத்தைப் படைத்தனர் ||4

என்று சொல்லியிருக்கிறார்கள். இதே அபிப்பிராயத்தையே, தாசராயர் '
.. ப்ரக்ருதியொளகி
த்தாரதிக ஹதினெண்டு தத்வவ
தா ரசிஸி தத்ரூப தன்னாமங்களனெ தரிஸி |
நீரஜபவாண்டவனு நிர்மிஸி'

என்றார்.

**ஜீவரந்தர்யாமி அம்ஷி க**
**லேவரக$^3$ளொள கி$^3$ந்த்$^3$ரியக$^3$ளலி**
**தா விஹாரவகை$^3$வுத$^3$னுதி$^3$ன அம்ஷ நாமத$^3$லி |**
**ஈ விஷயக$^3$ளனுண்டு ஸுக$^2$மய**
**ஈவ ஸுக$^2$ ஸம்ஸார து$^3$க்க$^2$வ**
**தே$^3$வ மானவ தா$^3$னவரிக$^3$விரத ஸுதா$^3$ம ஸக$^2$ ||21**

ஜீவரந்தர்யாமி அம்ஷ = ஜீவர்களின் அந்தர்யாமியாக இருக்கும் அம்ஷரூபியான ஸ்ரீஹரி
களேவரகளொளகெ = அந்தந்த பிராணிகளின் சரீரங்களில்
இந்திரியங்களலி = இந்திரியங்களில்
தா = தான்
விஹாரகைவுத = இந்திரிய வியாபாரங்களை செய்விப்பதே விஹார. அத்தகைய விஹாரங்களை செய்தவாறு
அனுதினவு = தினந்தோறும்
அம்ஷ நாமதலி = அம்ஷ என்னும் பெயரில்

ஈ விஷயகளன்னு = ஷப்த, ஸ்பர்ஷ ஆகிய விஷய சுகத்தின் சாரத்தினை
உண்டு = ஸ்வீகரித்து
சுகமயனு = சுக சமுத்திரனாக இருப்பவனான
ஸுதாம சக = குசேலனின் நண்பனான ஸ்ரீஹரி
தேவ மானவ தானவரிகெ = இவர்களுக்கு
சுக சம்சார துக்கவ = தேவதைகளுக்கு நித்ய சுகத்தை; மானவர்களுக்கு நித்ய சம்சாரத்தை; தானவர்களுக்கு நித்ய துக்கத்தையும்
அவிரத = அனைத்து காலங்களிலும்
ஈவ = கொடுக்கிறான்.

அனைத்து சேதனர்களின் அந்தர்யாமியாக இருந்து, அம்ஷரூபி என்று அழைத்துக்கொண்டு, ஸ்ரீபரமாத்மன், அனைத்து பிராணிகளின் தேகங்களிலும், அந்த தேகத்தில் இந்திரியங்களிலும், அம்ஷ நாமகனாக இருந்து, இந்திரிய கார்யங்களை செய்து செய்வித்து, தன் விருப்பத்தால் ஜீவேந்திரியங்களில் நடவடிக்கைகளை செய்து, இந்த தேக சம்பந்தமான விஷய சுகங்களின் சாரத்தை, தான் ஸ்வீகரிக்கிறான். ஆனால், அந்த சுகத்தினால் பரமாத்மனுக்கு ஆகவேண்டியது என்று ஒன்றும் இல்லை. தான் சுக-மயன், எப்போதும் சுக-ஸ்வரூபன். ஸ்வ-ரமணன். இப்படி இருக்கையில், பிராணிகளின் தேக சம்பந்தமான விஷய சுகங்களால் பரமாத்மனுக்கு ஆவது என்ன? எதுவும் இல்லை எனில், அவற்றை பரமாத்மன் ஏன் ஸ்வீகரிக்கிறான் என்றால், ஜீவர்களுக்கு சுகங்களைக் கொடுப்பதற்காக, அவற்றை தான் ஏற்றுக்கொண்டு, ஜீவர்களுக்கு மிகச்சிறிய பாகத்தை அளிக்கிறான்.

குசேல-சக என்றதால், இந்த விஷய சுகம் பரமாத்மனுக்கு இருந்ததென்றால், பரம தரித்திரனான குசேலனுக்கு நண்பன் ஆவானா? மஹாராஜர்களின் தேகங்களில் இருந்து, அவருக்கு நண்பன் ஆனால், பக்ஷ்ய போஜ்யங்களின் சுகங்கள் அவனுக்கு தேவையான சுகங்களைக் கொடுப்பதாக இருந்தது. அத்தகைய சுக விருப்பம் அவனுக்கு என்றும் இருந்ததில்லை. பக்திக்கு மட்டுமே மகிழ்கிறான். சாத்விக, ராஜஸ, தாமஸர்களான மூன்றுவித ஜீவர்களால் அவரவர்களின் தகுதிக்கேற்ப கர்மங்களை செய்து செய்வித்து, அவரவர்களின் தகுதிக்கேற்ப, சாத்விகர்களான தேவதைகளுக்கு நித்ய சுகமயமான முக்தியையும், ராஜஸர்களான மனிதர்களுக்கு சுகதுக்க மிஸ்ரவான நித்ய சம்சாரத்தையும், தாமசர்களான தைத்யர்களுக்கு நித்ய துக்கமயமான தமஸ்ஸையும் கொடுக்கிறான். மனிதர்களில் மனுஷ்யோத்தமர்கள் நித்ய சுகத்தையே பெறுகின்றனர் என்று அறியவேண்டும்.

**தே3ஷ தே3ஷவஸுத்தி தே3ஹா**
**யாஸகொ3ளிஸதெ3 காம்யகர்ம து3**
**ராஸெகொ3ளகா3க3த3லெ பி3ரம்மாத்3யகி2ல சேதனரு |**
**பூ4 ஸலில பாவக ஸமீரா**
**காஷ மொத3லாத3கி2ல த1த்வ ப**
**ரேஷகி3வதி3ஷ்டான வெந்த3ரித3ர்ச்சி ஸனவரத ||22**

தேஷ தேஷவ சுத்தி = தீர்த்தயாத்திரை என்று எவ்வித அனுசந்தானமும் இன்றி பல இடங்களுக்கும் சென்று
தேஹாயாசகொளிசதெ = தேகத்திற்கு சோர்வு உண்டாக்கி
காம்யகர்மதுராஷெகெ = காம்ய கர்மங்களை செய்து, தன தான்ய முதலான ஐஹிக பலன்களைப் பெறும் ஆசையில்
ஔகாகதலெ = விழாமல்
பிரம்மாத்யகில சேதனரு = பிரம்மாதிகளின் துவங்கி அனைத்து சேதனர்களும்
பூ = பூமி
ஸலில = தண்ணீர்
பாவக = அக்னி
ஸமீர = வாயு
ஆகாஷ = ஆகாயம்
மொதலாத = ஆகிய
அகில தத்வ = என்றால் 24 தத்வங்கள்
பரேஷகெ = பிரம்மாதி அனைத்து சேதனர்களுக்கு தலைவனான ஸ்ரீபரமாத்மனுக்கு
அதிஷ்டானவெந்து = சன்னிதானம் என்று அறிந்து
அரிது = அறிந்து
அனவரத = தினமும்
அர்ச்சிஸு = பூஜை செய்.

அனைத்து சேதன ராசிகளும், இந்திரியங்களும், தத்வாபிமானிகளும் - இவை அனைத்தும் பகவந்தனின் சன்னிதானம் என்று அறிந்து பூஜிக்காமல் இருப்பவன், தீர்த்தயாத்திரை செய்கிறேன் என்று தேகத்திற்கு சோர்வினை உண்டாக்கி தேசதேசமாக சுற்றினாலும், அதனால் ஆகும் பயன் ஒன்றும் இல்லை. காம்ய பலனை எதிர்பார்த்து அனைத்து செயல்களை செய்தாலும் பலன் இல்லை. ஆகையால், பிரம்மாதி தேவர்களே முதலான அனைத்து சேதனர்கள், ப்ருத்வி, அபு, தேஜஸ், வாயு, ஆகாஷ ஆகிய 24 தத்வாபிமானி தேவதைகள் பகவந்தனின் பிரதிமா சன்னிதானர்கள் என்று அறிந்து, அனைத்து நேரங்களிலும் பூஜிக்க வேண்டும் என்பது கருத்து.

**எரடு$^{3}$ வித$^{3}$த$^{3}$லி லோகதொ$^{3}$ளு ஜீ**
**வருக$^{3}$ளிப்பரு ஸந்தத க்ஷரா**
**க்ஷர விலிங்க$^{3}$ ஸலிங்க$^{3}$ ஸ்ருஜ்யாஸ்ருஜ்ய பே$^{4}$த$^{3}$த$^{3}$லி |**
**கரெஸுவுது$^{3}$ ஜட$^{3}$ ப்ரக்ருதி ப்ரணவா**
**க்ஷர மஹத்தணு காலனாமதி$^{3}$**
**ஹரிஸஹித பே$^{4}$த$^{3}$கள பஞ்சக ஸ்மரிஸு ஸர்வத்ர ||23**

லோகதொளு = உலகத்தில்
சந்தத = எப்போதும்
க்ஷராக்ஷர = க்ஷர என்றும், அக்ஷர என்றும்
எரடு விததலி = இரு விதமாக
ஜீவருகளிப்பரு = ஜீவர்கள் இருக்கிறார்கள்

க்ஷர - புருஷரில்
விலிங்க = லிங்க சரீரம் அழிந்த முக்த ஜனர்கள்
ஸலிங்க = அமுக்தரான லிங்க சரீரம் கொண்டவர்கள்
ஸ்ருஜ்ய = ஸ்ருஷ்டிக்கு வந்தவர்கள்
அஸ்ருஜ்ய = ஸ்ருஷ்டிக்கு வராதவர்கள்
பேததலி = இத்தகைய பேதங்களால் இருக்கிறார்கள்
ஜட = ஜடங்களில்
ப்ரக்ருதி = ஜட ப்ரக்ருதி
ப்ணவாக்ஷர = ஓம் என்னும் அக்ஷரம்
மஹதணுகால நாமதி = மஹத்கால, அணுகால என்னும் பெயரால்
கரெஸுவது = அழைக்கப்படுகிறது
ஹரிஸஹித = இந்த ஜட பதார்த்தங்களுடன், பரமாத்மனை சேர்த்தால் மூன்று வகைகள் ஆகின்றன
பேதகள பஞ்சக = அடுத்த பத்யத்தில் கூறிவதைப் போல, ஐந்து பேதங்களை அனைத்து இடங்களிலும் சிந்திக்கவும்.

அனைத்து உலகங்களிலும், க்ஷர புருஷ, அக்ஷர புருஷர் என்று இரு வகை ஜீவர்கள் உண்டு. 'க்ஷரஸ்ஸர்வாணி பூதானி கோடஸ்தூ அக்ஷர உச்யதே' என்னும் கீதா தாத்பர்யத்தால் க்ஷர என்றால் பிரம்மதேவர் முதலான அனைத்து பிராணிகளும் என்று அர்த்தம். க்ஷர என்றால் நாசம் உள்ளவன் என்று அர்த்தம். பிரம்மதேவர் முதல் அனைத்து ஜீவர்களுக்கும் சரீர நாசம் இருப்பதால், அவர்களுக்கு க்ஷர என்று பெயர். தேக நாசம் இல்லாத ரமாதேவியருக்கு அக்ஷர என்று பெயர். அக்ஷர புருஷன் என்று ஸ்த்ரீயான ரமாதேவிக்கு புருஷ சொல் எப்படி பொருந்தும் என்றால், புருஷரைப் போல பிரம்மாதிகளை ஸ்ருஷ்டிக்கும் சக்தி உள்ளவராகையால், புருஷ சொல் அவருக்கு பொருந்துகிறது.

இப்படி அனைத்து உலகங்களிலும் க்ஷர அக்ஷர என்னும் இரு வித புருஷர்கள் உண்டு. இவரில் க்ஷர புருஷரான பிரம்மாதிகளில், விலிங்க, சலிங்க என்று இரு விதம் உண்டு.

விலிங்க:
* சாதனை முடிந்தபிறகு, விரஜா நதி ஸ்னானம் ஆனபிறகு, லிங்க சரீரம் பங்கம் ஆனபிறகு, முக்தியை அடையும் முக்தரான பிரம்மாதி அனைத்து சேதனர்களும்; மற்றும்
* தமோ யோக்யர்களான கலி முதலானவர்கள், வாயுதேவரின் கதா பிரயோகம் பெற்று லிங்க சரீரம் பங்கமாகி, நித்ய துக்கமயமான, அந்தம்தமஸ்ஸை அடைபவர்கள்,
விலிங்க என்று அழைக்கப்படுகின்றனர்.

ஸலிங்க:
லிங்க தேகத்துடன் இருப்பவர்கள், ஸலிங்க ஆவார்கள். இந்த ஸலிங்கர்களில் இரு விதம் உண்டு. ஸ்ருஜ்யரு, அஸ்ருஜ்யரு.

ஸ்ருஜ்யர்: பிரம்மகல்பத்தில் ஸ்ருஷ்டிக்கு வந்தவர்கள் என்று அர்த்தம்.
அஸ்ருஜ்யர் : இன்னும் ஸ்ருஷ்டிக்கு வராதவர்கள்.

இப்படி சேதனர்களில் பேதங்கள் இருக்கிறது.

ஜடங்களில் ஓம் எனும் ப்ரணவாக்ஷர, வேதங்கள், த்விபரார்த்த மஹாகால, பரமாணு முதலான அணுகால, இவை அனைத்தும் ஜட என்று அழைக்கப்படுகின்றன. இவை அனைத்திலும் பஞ்ச பேதங்களை அறிந்து, சிந்திக்க வேண்டும் என்பது கருத்து.

**ஜீவ ஜீவர பே$^4$த$^3$ ஜட$^3$ ஜட$^3$**
**பே$^4$த$^3$ ஜீவ ஜட$^3$க$^3$ளபே$^4$த$^3$ பரமனு**
**ஜீவ ஜட$^3$ ஸூவிலக்ஷணனு எந்த$^3$ரிது நித்யத$^3$லி |**
**ஈ விரிஞ்ச்யாண்ட$^3$த$^3$லி எல்லா**
**டாவினலி திளிதை$^3$து$^3$ பே$^4$த$^3$ க**
**லேவரதொ$^3$ளரிதச்யுதன பத$^3$வைது$^3$ ஷீக்ரத$^3$லி ||24**

ஜீவ ஜீவர பேத = ஜீவருக்கும் ஜீவருக்கும் பரஸ்பர பேத
ஜட ஜட பேத = ஜடர்களுக்கும் ஜடர்களுக்கும் பரஸ்பர பேத
ஜீவ ஜடகள பேத = ஜீவர்களுக்கும் ஜடர்களுக்கும் பேத
பரமனு = பரமாத்மன்
ஜீவஜட ஸூவிலக்ஷணனு = ஜீவரைவிடவும், ஜடர்களைவிடவும், வேறுபட்டவன் என்றால், பரமாத்மன் - ஜீவன், பரமாத்மன் - ஜடர் வேறுபாடு
எந்தரிது = என்று அறிந்து
நித்யதலி = தினந்தோறும்
ஈ விரிஞ்சாண்டதலி = இந்த பிரம்மாண்டத்தில்
எல்லா டாவினலி = அனைத்து இடங்களிலும்
ஐது பேத = இந்த ஐந்து பேதங்களை
களேவரதொளு = தேகத்தில்
திளிது = பரமாத்மன், ஜீவர்களிலிருந்து வேறுபட்டவன், தேகத்திலிருந்து வேறுபட்டவன் என்று அறிந்து, பிம்பரூபியான ஸ்ரீஹரியை ஹ்ருதயாகாஷத்தில் சிந்தித்து தியானம் செய்து
அச்யுதன = நாசம் இல்லாத ஸ்ரீபரமாத்மனின்
பத = பாதாரவிந்தங்களை
யெய்து = அடை
சீக்ரதலி = விரைவாக.

இந்த பஞ்சபேத லட்சணத்தை, 7ம் சந்தி, 12ம் பத்யத்தில் பார்த்திருக்கிறோம். அங்கு இந்த பஞ்சபேதங்களை, அதன் ஆதாரங்களுடன் சொல்லப்பட்டுள்ளது. ஆனால், அதே விஷயத்தை தாசராயர் இன்னொரு முறை இங்கு ஏன் சொல்கிறார்? இதனால் புனருக்தி தோஷம் ஆகவில்லையா என்றால், அதற்கு பதில் இதுவே.

சாதாரணமான ஸ்லோகங்களில் அல்லது வாக்கியங்களில் ஒரு முறை சொன்னதையே மறுபடி சொன்னால், அதை புனருக்தி தோஷம் என்பர். உபதேசரூபமாக போதிக்கும் கிரந்தங்களில், மக்களுக்கு நன்றாக புரிய வேண்டும் என்று ஒரே விஷயத்தையே திரும்பத்திரும்ப கூறினால், அதனை தோஷம் என்று சொல்ல முடியாது. பாகவத 4ம் ஸ்கந்தம் 1ம் அத்தியாயம் 1ம் ஸ்லோகத்தில்: 'கதாம்ப்ரூய: அப்யாஸாதுத்தமம் பலம்' - தெரிந்த கதைகளை ஞானிகள் திரும்பத்திரும்ப சொல்வார்கள். இதற்கு என்ன காரணம் என்றால், 3ம் ஸ்கந்தத்தில் : ஸ்வாயம்புவ மனுவிற்கு ஷதரூபி என்னும் மனைவியில், அகூதி, தேவஹூதி, ப்ரஸூதி என்னும் மூன்று பெண்கள் பிறந்தனர் என்று சொல்லியிருப்பர். அடுத்து 4ம் ஸ்கந்தத்தில்

மனோஸ்து ஷதரூபாயாம் திஸ்ர:கன்யாஸ்ஸஜக்ஞிரே |
அகூதிர்தேவஹூதிஸ்ச ப்ரஸூதிரிதி விஸ்ருதா: ||1

என்று அதே அர்த்தத்தையே சொல்லியிருப்பர். புனருக்தி தோஷத்தை பரிகரிப்பதற்காக இங்கு அந்த ஸ்லோகம் வந்திருக்கிறது. அதைப்போலவே, தாசராயர் இதுவரை பல இடங்களில் மற்றும் இன்னும் பல இடங்களில் சொன்னதையே சொல்லியிருப்பார். இதன் நோக்கம் என்னவெனில், எப்படி ஓம் ராம் ராமாய நம: என்று மந்திரங்களை, ஒரே முறை சொல்லாமல், பல முறை சொல்கிறோமோ அப்படியே சில முக்கியமான விஷயங்களை ஒரே முறை சொல்லிவிட்டால், இதை எங்கேயோ ஒரு முறை கேட்டோம் என்று அசிரத்தை வந்துவிடும். ஆகையால், சாதாரண விஷயத்தை ஒரு முறை சொன்னால் போதும். விசேஷமான விஷயங்களை திரும்பத்திரும்ப சொன்னால், 1க்கு நான்கு முறை சொல்லியிருக்கிறாரே, அதில் ஏதோ விசேஷம் இருக்கிறதோ என்று மக்களுக்கு எண்ணம் வரும்.

இப்படி சொல்லியிருப்பவர் தாசராயர் ஒருவர் மட்டும் அல்ல.

ஸத்யம் ஸத்யம் புனஸ்ஸத்யம் புஜமுத்ருத்ய போஜ்யதே |
வேதஷாஸ்த்ராத்பரம் நாஸ்தினதைவம் கேஷவாத்பரம் ||

என் இரு கைகளை மேலே தூக்கி, உண்மையாக உண்மையாக திரும்பத்திரும்ப உண்மையை சொல்வேன். அது என்னவெனில், வேதத்திற்கு சமமான சாஸ்திரம் இல்லை. கேசவனைவிட உத்தம தெய்வம் இல்லை என்று உரக்க சொல்வேன் என்று வேதவியாஸதேவரே சொல்லியிருக்கிறார். பாகவத 11ம் ஸ்கந்தத்தில், ஸ்ரீகிருஷ்ணன் உத்தவருக்கு உபதேசம் செய்தவாறு, பக்தியோகத்தை சொல்கிறான். இதை ஸ்ரீகிருஷ்ணன் முன்னரே ஒரு முறை சொல்லியிருந்தாலும், நினைவிற்காக இன்னொரு முறை சொல்கிறேன் கேள் என்று சொல்கிறான். ஆகையால், இதுவே சரியான சமாதானம் என்று அறியவேண்டும்.

நிற்க.
பகவத் உபாசனைக்கு முக்கியமானவை பஞ்சபேத, தாரதம்யஞான இவ்விரண்டும். மகாபாரத தாத்பர்ய நிர்ணய 1ம் அத்தியாயத்தில்:

தாரதம்யந்ததோஞ்ஞேயம் ஸர்வோச்சத்வம் ஹரேஸ்ததா |
ஏதத்வினானகஸ்யாபி விமுக்திஸ்யாத் கதஞ்சன ||81
பஞ்சபேதாம்ஸ்ச விக்ஞாய விஷ்ணோ:ஸ்வாபேதமேவச |
நிர்தோஷத்வம் குணோத்ரேகம் ஞாத்வார்முக்திர் நசான்யதா ||82
அவதாரான் ஹரேர்ஞாத்வான் நாவதாராஹரேஸ்சயே |
ததாவேஷாம் ஸ்ததாஸம்யக்ஞாத்வா முக்திர் நசான்யதா ||83

ஸ்ரீஹரியே சர்வோத்தமன் என்று அறிந்து லட்சுமி பிரம்மாதி அனைத்து பிராணிகளிலும் தாரதம்யத்தை அறிந்து உபாசனை செய்யவேண்டும். இதைத்தவிர வேறு எந்த வழியிலும், எந்த காரணத்தாலும், எந்த காலத்திலும், முக்தி கிடைக்காது ||83

பஞ்சபேதங்களை அறியவேண்டும். இந்த பஞ்சபேதங்கள் எவை என்றால்:

ஜீவேஷயோர் பிதாச்சைவ ஜீவபேத: பரஸ்பரம் |
ஜடேஷயோர் ஜடானாஞ்ச ஜடஜீவாபிதாஸ்ததா ||70
பஞ்சபேதேமேனித்யா: ஸர்வாவஸ்தாஸு ஸர்வஷ: |
முக்தானாஞ்ச நஹீயந்தே தாரதம்யஞ்ச சர்வதா ||71

ஜீவனுக்கும், பரமாத்மனுக்கும் பேதம்,
ஜீவனுக்கும், ஜீவனுக்கும் பரஸ்பரம் பேதம்,
ஜடர்களுக்கும், பரமாத்மனுக்கும் பேதம்,
ஜடர்களுக்கும், ஜடர்களுக்கும் பேதம்,
ஜடர்களுக்கும், ஜீவர்களுக்கும் பேதம்.

இப்படியாக இந்த 5 பேதங்கள் அனைத்து காலங்களிலும், அனைத்து நிலைகளிலும் உண்மையாகும். முக்தர்களில் கூட பஞ்சபேதம் உண்டு. இதைப்போல, தாரதம்யமும் அனைத்து நிலைகளிலும், அனைத்து காலங்களிலும், முக்தியிலும்கூட இருக்கிறது என்று சொல்லியிருக்கிறார்கள். இத்தகைய பஞ்சபேதங்களை அறியவேண்டும்.

பரமாத்மனின் மூலரூப, ஆவேஷரூப, ஆகியவற்றிலும், அனைத்து இடங்களிலும் வியாப்தனான பகவத்ரூபங்களிலும் பேதங்களை சொல்லக்கூடாது. பரமாத்மன் தோஷங்கள் அற்றவன். ஆனந்தாதி குணபூர்ணன் என்று சிந்தித்து உபாசனை செய்யாவிட்டால், முக்தி வராது ||82

ராமகிருஷ்ணாதி அவதாரங்கள் பரமாத்மனின் ஸ்வரூபம் என்று அறியவேண்டும். எவை சாட்சாத் அவதாரங்கள் இல்லை என்று சாஸ்திரங்களில் சொல்லப்படவில்லையோ, அந்த ரூபங்களில் பரமாத்மனின் விசேஷ-ஆவேசம் அறியவேண்டும். இப்படி நன்றாக அறிந்து உபாசனை செய்தாலேயே முக்தி கிடைக்கிறதே தவிர, இல்லையேல் முக்தி இல்லை என்கிறார்.

இவை அனைத்தும் முக்கியமான விஷயங்கள் என்று ஸ்ரீமதாசார்யரே சொல்லியிருப்பதால், தாசராயர் இவற்றில் பக்தர்களுக்கு திட நம்பிக்கை பிறப்பதற்காக திரும்பத்திரும்ப சொல்கிறாரே தவிர, அவருக்கு பொழுது போகாமல் கிரந்தத்தை, எவ்வித காரணமுமின்றி வளர்க்கும் உத்தேசத்தில் சொல்லவில்லை என்று அறியவேண்டும். இந்த பஞ்சபேதங்கள் எப்படி இருக்கின்றன என்பதை 7ம் சந்தி 12ம் பத்யத்தின் விளக்கத்தில் சொல்லியிருக்கிறோம். இத்தகைய பஞ்சபேதங்களை இந்த பிரம்மாண்டத்தில் அனைத்து இடங்களிலும் அறிந்து ஜீவ ஜடர்களிலிருந்து வேறுபட்டிருக்கும் பரமாத்மனை, தன் சரீரத்தின் இதயாகாஷத்தில் சமாதி லட்சணத்தால், அதாவது மேலே 18ம் பத்யத்தில் பாலில் நெய் இருப்பதைப்போல என்று சொல்லியிருக்கிறோம். அதைபோல, இதயாகாஷத்தில் இருக்கும் பரமாத்மனை தியானம் செய்து அபரோக்ஷத்தில் அச்யுதனைக் கண்டு அவனின் அருளால் சீக்கிரத்தில் பரமாத்மனின் பாதாரவிந்தங்களை அடை என்றால், முக்தியை சேர் என்று அர்த்தம்.

**ஆதி3யல்லி க்ஷரக்ஷராக்2ய**
**த்3வேத3 அக்ஷரதொ3ளு ரமா மது3**
**ஸூத3னரு க்ஷரக3ளொளு ப்ரக்ருதி ப்ரணவ காலக3ளு ।**
**வேதமுக்2ய த்ருணாந்த ஜீவர**
**பே4த3க3ளனரிதீ ரஹஸ்யவ**
**போ3தி3ஸதெ3 மந்த3ரிகெ3 ஸர்வத்ரத3லி சிந்திபுது3 ।।25**

ஆதியல்லி = துவக்கத்தில்
க்ஷராக்ஷராக்ய = க்ஷர அக்ஷர என்று பெயர் பெற்ற
த்வேத = இரு வகையான புருஷர்களில்
அக்ஷரதொளு = அக்ஷர புருஷனில்
ரமா மதுஸூதனனு = லட்சுமி நாராயணன்
க்ஷரகளொளு = க்ஷர புருஷர்களில்
ப்ரக்ருதி = குண த்ரயாத்மகளான ஜடப்ரக்ருதி
ப்ரணவ = ஓம்கார
காலகளு = காலம் (நொடிகள், நிமிடங்கள்..)
வேதமுக்ய = பிரம்மதேவரே முதலாக
த்ருணாந்தஜீவர = த்ருணஜீவர்கள் வரை
பேதகளனு = வேறுபாடுகளை
அரிது = அறிந்து
ஈ ரஹஸ்யவ = இந்த ரகசியங்களை
மந்தரிகெ = தமோ யோக்யர்களுக்கு
போதிஸதெ = சொல்லிக் கொடுக்காமல்
ஸர்வத்ரதலி சிந்திபுது = அனைத்து இடங்களிலும் சிந்திக்க வேண்டும்.

த்வாவிமௌ புருஷௌலோகே க்ஷரஸ்சாக்ஷர ஏவச ।
க்ஷரஸ்ஸர்வாணி பூதானி கூடஸ்தோऽக்ஷர உச்யதே ।।

என்னும் கீதா வாக்கியத்திற்கேற்ப க்ஷரபுருஷ, அக்ஷரபுருஷர் என்று இரு வகையினர் உள்ளனர். நாசம் அடையும் அனைத்து பிராணிகளும் க்ஷர என்றும், தேக நாசம் இல்லாத ரமாதேவியவர் அக்ஷரர் என்றும் சொல்லியிருக்கிறார்கள். அதே அர்த்தத்தையே தாசராயர் இங்கு விளக்கமாக சொல்லியிருக்கிறார். க்ஷர அக்ஷர இந்த இரண்டில் ரமாதேவி, பரமாத்மன் இந்த இருவரையும் அக்ஷரபுருஷர் என்று சொல்லவேண்டும்.

'உத்தம:புருஷஸ்யன்ய: பரமாத்மேத்யுதாஹ்ருத: - க்ஷர, அக்ஷரர் இந்த இருவரைத்தவிர இன்னொரு புருஷர் இருக்கிறான் என்று கீதையில் சொல்லியிருந்தாலும், 'யஸ்மாத்க்ஷரமதீதோ ஹமக்ஷராதபி சோத்தம: ஆதோஸ்மிவேதேலோகேச ப்ரதித: புருஷோத்தம:' எந்த காரணத்தால் நான் க்ஷரர்களை மீறியிருக்கிறேனோ, அக்ஷரளான ரமாதேவியைவிட நான் உத்தமனாக இருக்கிறேனோ, அதே காரணத்தால் உலகத்திலும், வேதங்களிலும் நான் புருஷோத்தமன் என்று அழைக்கப்படுகிறேன் என்று ஸ்ரீகிருஷ்ணன் சொல்லியிருக்கிறான்.

இப்படி இருக்கையில் தாசராயர் அக்ஷர புருஷர்களில் நாராயணனையும் ஏன் சேர்த்துவிட்டார் என்றால், கீதையின் வாக்கியத்தினால் லட்சுமிதேவியரைவிட பரமாத்மனுக்கு உத்தம ஸ்தானத்தை கொடுத்ததைப் போலாயிற்று. தாசராயர் சொன்னது என்னவெனில்: தேஷத: காலத: தேக நாசம் இல்லாதவர்கள் அக்ஷரர்கள். ரமாதேவியும் பரமாத்மனும் அப்படிப்பட்ட கணத்தை சேர்ந்தவர்கள் என்றார். இப்படி சொல்லிவிட்டதால், இது கீதை வாக்கியத்திற்கு எதிரானது என்று சொல்லக்கூடாது. ஸ்வாதந்த்ர்ய பரதந்த்ரம் போன்ற பேதங்களால், லட்சுமிதேவியைவிட பரமாத்மன் உத்தமன் என்பது அனைவரும் அறிந்ததே என்ற பிறகு, இங்கு தனியாக கூறத்தேவையில்லை என்னும் அபிப்பிராயத்தால் தாசராயர் புருஷோத்தமன் என்று பரமாத்மனை தனியாகக் கூறவில்லை என்று அறியவேண்டும்.

க்ஷர ஜீவர்களான ஜட சேதன ஜீவர்களை சொல்கிறார். க்ஷரரில் ஜடப்ரக்ருதி, ப்ரணவ மஹாகால, அணுகால, பிரம்மதேவர் முதலாக த்ருணம் வரைக்கும் அனைத்து சேதனர்களும் தேக நாசம் உள்ளவர்கள ஆகையால், க்ஷர என்று அழைக்கப்படுகின்றனர். இதில் ப்ரக்ருதி, வேத, கால இவை அனாதி என்று புகழடைந்திருப்பதால், தாசராயர் இவற்றை ஏன் க்ஷரரில் சேர்த்திருக்கிறார் என்றால், ப்ரக்ருதியில் சேதன ரூபளான லட்சுமிதேவி மட்டுமே அக்ஷர. ஜடப்ரக்ருதியின் ரூபத்தை ஸ்ருஷ்டி காலத்தில் ஸ்வீகரிப்பதால் க்ஷரத்தில் சேர்க்கப்பட்டது. ப்ரளய காலத்தில் வேத ஸ்வரூபளாக துர்காதேவி இருந்தாலும், ஓம் என்னும் எழுத்து ஸ்ருஷ்டி ஆனபிறகு பிரம்ம தேவருக்கு உபதேசமாக வெளியே வந்தது.

அதைப்போலவே, கால அனாதியானாலும், இப்போது நொடி ஆயிற்று, நாழிகை ஆயிற்று, நாள் ஆயிற்று என்று காலம் நொடி நொடிக்கு போய்க்கொண்டிருப்பதால், அனித்ய ஆகிறது. இவை அனைத்தும் ப்ரவாஹ ரூபத்தினால் நித்ய என்று

அழைக்கப்பட்டாலும், நதியில் முன்னர் ஓடிய நீர் மறுபடி வராததால் அந்த நீர் அனித்ய என்றும் சொல்லலாம். அதைப்போலவே, கால, பிரணவாதிகள் ப்ரவாகிப்பதால் நித்யம். ஸ்ருஷ்டி காலத்தில் வருகின்றன. ப்ரளய காலத்தில் ப்ரணவம் வேதங்களில், காலம் மஹாகாலத்தில் சேர்ந்து விடுகிறது. ஆகையால், இவற்றை க்ஷரத்தில் சேர்த்தார். இப்படி க்ஷராக்ஷர புருஷர்களின் பேதங்களை அறிந்து தமோயோக்யருக்கு இந்த ரகசியத்தை சொல்லாமல், அனைத்து இடங்களிலும் அதிகாரிகள் மட்டும் இதனை சிந்திக்க வேண்டும் என்கிறார் தாசராயர்.

**தீ$^3$பதி$^3$ந்தீ$^3$பக$^3$ளு பொரம**
**ட்டாபணாலயக$^3$த திமிரக$^3$ள**
**தா பரிஹரிஸி தத்க$^3$த பதா$^3$ர்த்த$^2$க$^3$ள தோர்ப்பந்தெ |**
**ஸௌபரணி வரவஹன தா ப$^3$ஹு**
**ரூப நாமதி$^3$ எல்ல கடெ$^3$யலி**
**வ்யாபிஸித்து$^3$ யதே$^2$ஷ்ட மஹிமெய தோர்ப்ப திளிஸத$^3$லெ ||26**

தீபதிம் = ஒரு தீபத்தினால்
தீபகளு = பல தீபங்கள்
பொரெமட்டு = முதலிலிருந்து
ஆபண = கடைகள்
ஆலயகத = வீடு, இவற்றில் இருக்கும்
திமிரகள = இருட்டினை
தா = தான்
பரிஹரகைஸி = பரிகரித்து
தத்கத = அங்கிருக்கும்
பதார்த்த = பொருட்களை
தோர்ப்பந்தெ = காட்டுவதைப் போல
ஸௌபரணி வரவாஹனனு = ஸௌபர்ணிதேவியின் பதியான, கருடனை வாகனமாகக் கொண்டிருக்கும் ஸ்ரீஹரி
பஹு ரூப நாமதி = பல ரூபங்களாலும், பல பெயர்களாலும்
எல்ல கடெயலி வியாபிஸித்து = எல்லா இடங்களிலும் வியாபித்து
திளிஸதலெ = தான் இருப்பதை தெரிவிக்காமல்
யதேஷ்ட மஹிமெய = விசேஷ மகிமைகளை
தோர்ப்ப = மக்கள் செய்ததுபோல காட்டுகிறான்.

ஒரு தீபம் இருந்தால், அதிலிருந்து இன்னொன்று தீபம், அதிலிருந்து மற்றொன்று என தொடர்ச்சியாக ஏற்றி, கடைகளில், வீடுகளில் வைத்தால், அங்கங்கு இருக்கும் இருட்டினைப் போக்கி அங்கிருக்கும் பதார்த்தங்களை அந்த தீபம் மக்களுக்கு காட்டுகின்றன. அதைப்போல, ஸ்ரீபரமாத்மன் தன் மூலரூபமான பத்மனாபரூபத்தினால், அவதாரரூப, அம்ஷரூப முதலான அனேக ரூபங்களால், ஸ்ரீபரமாத்மனே அனைத்து கர்மங்களையும் செய்தான் என்று சாதாரண மக்களுக்கு தெரிவிக்காமல், ராஜகுருகளில் இருந்து ராஜகாரியங்களை, சேவகர்களில் இருந்து

சேவக காரியங்களை செய்வித்து, ஞானிகளுக்கு மட்டும் தன் மகிமைகளை காட்டிக் கொள்கிறானே தவிர, தீபம், குருடர்களுக்கு எப்படி பொருட்களை காட்டாதோ, அதுபோலவே, பரமாத்மன் தன் மகிமைகளை ஞானிகளுக்கு மட்டுமே காட்டுகிறான். அஞ்ஞானிகளுக்கு காட்டுவதில்லை.

**நலினமித்ரகெ$^3$ இந்த்$^3$ரத$^4$னு ப்ரதி**
**ப$^2$லிஸுவந்தெ ஜக$^3$த்ரயவு க**
**ங்கொ$^3$ளிபுத$^3$னு பாதி$^4$யலி ப்ரதிபி$^3$ம்பா$^3$ஹ்வயதி$^3$ ஹரிகெ$^3$ ।**
**திளியெ த்ரிககுத்$^3$தா$^4$மனதி$^3$ ம**
**ங்க$^3$ல ஸுரூபவ ஸர்வடா$^2$விலி**
**பொளெவ ஹ்ருத$^3$யகெ ப்ரதிதி$^3$வஸ ப்ரஹ்லாத$^3$ போஷகனு ।।27**

நலினமித்ரகெ = சூரியனுக்கு
இந்திரதனு = இந்திரனின் தனுஸ் (காமனின் வில்) என்று புகழ் பெற்றிருக்கும் வானவில்
ப்ரதிபலிஸுவந்தெ = வானில் தெரிவதைப்போல
ஹரிகெ = ஸ்ரீஹரிக்கு
ஜகத்ரயவு = இந்த மூன்று உலகங்களும்
அனுபாதியலி = மேற்சொன்ன விதத்தில்
ப்ரதிபிம்பாஹ்வயதி = பிரதிபிம்பமாக
கங்கொளிபுதனு = தெரிகிறது
த்ரிககுத்தாமன = ஸ்வேதத்வீப, அனந்தாஸன, வைகுண்ட என்னும் மூன்று இடங்களை வீடாக வைத்திருக்கும் ஸ்ரீபரமாத்மனின்
அதிமங்கல ஸுரூபவ = மங்கலகரமான மிகச்சிறந்த ரூபத்தை
ஸர்வ டாவிலி = அனைத்து இடங்களிலும்
திளியெ =அந்த பிரதிபிம்பத்தில் அந்தர்யாமியாக பிம்பமூர்த்தியான பரமாத்மனே தத்ரூப அந்த உருவமாக இருக்கிறான் என்று அறிந்தால்,
ப்ரஹ்லாத போஷகனு = பிரகலாதனுக்கு அருளியவன்
ப்ரதிதிவஸ = எப்போதும்
ஹ்ருதயகெ = இதய கமலத்தில்
பொளெவ = அபரோக்ஷத்தில் ஒளிமயமாக காட்டிக் கொள்கிறான்.

ஸோபாதிரனுபாதிஸ்ச ப்ரதிபிம்போத்விதீயதே ।
ஜீவ ஈஷஸ்யானுபாதி இந்த்ரசாபோயதாரவே: ।।

என்று பிரம்மசூத்ர பாஷ்யத்தின்படி, ஸோபாதி பிரதிபிம்பம் மற்றும் அனுபாதி பிரதிபிம்பம் என்று இரு வகைகள் உண்டு. அதில் வானவில் எப்படி சூரியனுக்கு பிரதிபிம்பமோ, அப்படியே பரமாத்மனுக்கு ஜீவன் அனுபாதி பிம்பர்கள் என்று சொல்லியிருக்கிறார். ஸோபாதி என்றால் என்ன?

உபாதிஸத்வே ப்ரதிபிம்பஸ்ய ஸத்வம் ।
உபாதினாஷே ப்ரதிபிம்பஸ்யனாஷ: ।।

உருவம் இருந்தால் பிரதிபிம்பம் தெரியும். உருவம் இல்லையெனில், பிரதிபிம்பமும் தெரிவதில்லை. கண்ணாடி இருந்தால் நம் முகத்தின் பிரதிபிம்பம் தெரியும். கண்ணாடி இல்லையெனில், பிரதிபிம்பமும் இல்லை. இதைப்போல, சூரியன் கிழக்கில் அல்லது மேற்கில் இருக்கும் நேரத்தில் நீருள்ள மேகங்கள் சூரியனுக்கு எதிராக இருந்தால், சூரியனின் பிம்பம் அந்த மேகங்களில் பிரதிபிம்பமாக ஒரு வில்லினைப் போல பல வண்ணங்களில் தெரிகிறது. இதற்கு ஸோபாதி ப்ரதிபிம்பம் என்று பெயர். அத்தகைய மேகம் இல்லாத காலத்தில், வானவில் தெரிவதில்லை.

அனுபாதி என்றால், ஜீவனின் ஸ்வரூபதேகமே உருவமாக இருக்க, என்றும் நாசம் இல்லாத பரமாத்மனின் பிரதிபிம்பம், இந்த ஸ்வரூப தேகத்தையே பிரதிபிம்பம் என்கிறது. ஆனால், அங்கும் ஸ்வரூபதேகம் என்னும் உருவம் இருந்தாலும், அந்த உருவம், கண்ணாடி, மேகம், தண்ணீர் போல அழியும் பொருள் அல்ல. பாஹ்யோபாதி என்றும், அந்தரூபாதி என்றும் கீதையில் இரு விதங்களைக் கூறி, பாஹ்யோபாதிக்கு நாசம் உண்டு, அந்தருபாதிக்கு நாசம் இல்லை என்று சொல்லியிருக்கிறார்கள். நாசமில்லாத உபாதியே அனுபாதி பிரதிபிம்பம் ஆகும். நாசமுள்ள உபாதியினால் வந்த பிரதிபிம்பம் ஸோபாதி என்று அறியவேண்டும்.

தாசராயர், அனுபாதி பிரதிபிம்பத்திற்கு, ஸோபாதி பிரதிபிம்பத்தை உவமையாக கொடுத்திருக்கிறார். பாகவத 9ம் ஸ்கந்தத்தில்: 'ய:ஸேதேனிஷி ஸந்த்ரஸ்தோ யதானாரீ திவாபுர்யா' - புரூரவஸ் ராஜனிடம் ஊர்வசி கூறியது இது. பகலில் ஸ்த்ரி எப்படி பயப்படுகிறாளோ, இரவில் புருஷர் பயந்து படுத்திருக்கிறான். இந்த உவமையைப் போல இங்கும் சூரியனின் பிரதிபிம்பம் வானவில்லாக எப்படி தோன்றுகிறதோ, அதைப்போலவே, பரமாத்மனின் பிரதிபிம்பம் ஜீவன் என்று அறியவேண்டும். இப்படி அனைத்து இடங்களிலும் இருக்கும் ஜீவரை, பரமாத்மனின் பிரதிபிம்பம் என்று அறிந்து, பிம்பரூபியான பரமாத்மனை அனைத்து இடங்களிலும் சிந்திக்க, பரமாத்மன் அபரோக்ஷத்தில் ஒளிமயமாக தரிசனம் அளிக்கிறான்.

**ரஸவிஸேஷ தொ$^{3}$ளதி விமலஸித**
**வஸன தோயிஸி அக்$^{3}$னியொளகி$^{3}$டெ$^{3}$**
**பஸரிஸுவுது$^{3}$ ப்ரகாஷ நஸுகுந்த$^{3}$த$^{3}$லெ ஸர்வத்ர |**
**த்ரிஷிர தூ$^{3}$ஷணவைரி ப$^{4}$க்தி ஸு**
**ரஸதி தோய்த$^{3}$ மஹாத்மரனு பா$^{3}$**
**தி$^{4}$ஸவு ப$^{4}$வதொ$^{3}$ளகி$^{3}$த்த$^{3}$ரு ஸரியெ து$^{3}$ரித ராஷிக$^{3}$ளு ||28**

அதிவிமல = மிகத் தூய்மையான
ஸிதவஸனவனு = தூய்மையான வஸ்திரத்தை
ரஸவிசேஷதொளு = நெருப்பின் சம்பந்தம் ஆனாலும் எரியாத எண்ணெய்
அக்னியொளகிடெ = நெருப்பில் போட்டால்
நஸுகுந்ததலெ = வஸ்திரத்தை கொஞ்சமும் சுடாமல்
ஸர்வத்ர = வஸ்திரத்தில் அனைத்து இடங்களிலும்
ப்ரகாஷ = அக்னி ஜ்வாலை

பஸரிஸுவது = பரவும்
த்ரிஷிர = த்ரிஷிர என்னும் அசுரன்
தூஷண = அவனின் தம்பியான தூஷண என்னும் அசுரன் ஆகிய அசுரர்கள்
வைரி = இவர்களின் எதிரியான ஸ்ரீராமதேவர்
பக்தி = பக்தி என்னும்
ஸுரஸதி = உத்தமமான ரஸத்தில்
தோய்த மஹாத்மரன = மூழ்கிய மகாபக்தர்கள்
பவதொளகித்தரு சரி = ஸம்சாரத்தில் இருந்தாலும் சரி
துரிதராஷிகளு = பாபராசிகள்
பாதிஸவு = அவர்களை பாதிக்காது.

ஒரு மூலிகை ரசத்தில் ஒரு நல்ல தூய்மையான ஆடையை நனைத்து, பின் அதனை எரித்தாலும், பார்ப்பவர்களுக்கு அந்த ஆடை எரிவதைப்போல தெரியும் ஆனால், நெருப்பு குறைந்தபிறகு பார்த்தால், அந்த ஆடைக்கு சேதம் ஆகியிருக்காது. மந்திரவாதிகள் இதை பயன்படுத்தி மக்களை மயக்குவர்.

இதைப்போலவே, ஜகதீஸ்வரனான பரமாத்மனிடம் த்ருடமான பக்தி என்னும் ரசத்தில் மூழ்கிய மனதை பகவத்பக்தர்கள், சுகதுக்க மிஸ்ரமான சம்சாரம் என்னும் நெருப்பின் நடுவில் இருந்தாலும், சம்சார சம்பந்தமான பாபராசிகள் என்னும் அக்னி ஜ்வாலைகள் அவர்களை எதுவும் பாதிப்பதில்லை. பகவந்தனின் பாதாரவிந்தங்களில் திடமான பக்தி உள்ளவர்களை, சம்சாரம் எதுவும் பாதிப்பதில்லை என்பது கருத்து.

**வாரிநிதி4யொளக3கி2ல நதி3க3ளு**
**பே3ரெபே3ரெ நிரந்தரத3லி வி**
**ஹாரகை3வுத பரம மோத3த3லிப்ப தெரனந்தெ |**
**மூருகு3ணக3ள மானி எனிஸுவ**
**ஸ்ரீரமாரூபக3ளு ஹரியலி**
**தோருதிப்புவு ஸர்வகாலதி3 ஸமரஹிதவெனிஸி ||29**

வாரிநிதியொளகெ = கடலில்
அகிள நதிகளு = அனைத்து நதிகளும்
நிரந்தரதலி = நிரந்தரமாக
பேரெபேரெ விஹாரகையுத = தத்தம் அம்சங்களால் பிரவகித்தவாறு
பரம மோததலி = மிகுந்த மகிழ்ச்சியுடன்
இப்பதெரதந்தெ = இருப்பதைப் போல
மூருகுணகளமானி எனிஸுவ = ஸத்வ ரஜஸ் தமோ குணங்களுக்கு அபிமானி என்று அழைக்கப்படும்
ஸ்ரீரமாரூபகளு = ஸ்ரீரமாதேவியரு
ஹரியலி = பரமாத்மனிடம்
ஸர்வகாலதி = அனைத்து காலங்களிலும்
ஸமரஹிதவெனிஸி = சமம் இல்லாதவள் என்று நினைத்து

தோருதிப்பவு = தெரிகிறது

அனைத்து இடங்களிலும் வியாபித்திருக்கும் கடலில் கங்கை, கோதாவரி முதலான நதிகள் வெவ்வேறு இடங்களில் போய் சேர்கின்றன. பின் அவை மகிழ்ச்சியுடன் கடலில் பாய்வதைப் போல என்று இங்கு உவமை கொடுத்திருக்கிறார். இங்கு கங்கையின் சங்கம ஸ்தானம் வேறு, யமுனையின் சங்கம ஸ்தானம், கிருஷ்ணா துங்கா முதலான நதிகள் சேரும்போது அவை தனித்தனியாக (வெவ்வேறாக) தெரிகின்றன. இவ்வளவு நதிகளும் கடலில் இருக்கின்றன என்று சொல்லலாமே தவிர, ஜடமான நதிகளுக்கு மகிழ்ச்சி என்னும் குணத்தை எப்படி சொல்லலாம் என்று சந்தேகப்படக்கூடாது. நதிகளின் அபிமானி தேவதைகள், தங்களின் பதியான சமுத்திரஜ ராஜனிடம் சேர்ந்து மகிழ்கின்றனர் என்பது கருத்து.

அதைப்போல, த்ரிகுணாத்மகரான ரமாதேவியரும், சமுத்திரத்தில் தண்ணீர்த்துளிகள் இருப்பதைப்போல, அனேக இடங்களில் அனேக ரூபங்களால் வியாப்தராக இருக்கிறார். ஒரு சரீரத்தில் ஸ்வரூபதேகம், லிங்கதேகம், அனிருத்ததேகம், ஸ்தூலதேகம் என்று நான்கு சரீரங்கள் இருக்கின்றன. இந்த நான்கு தேகங்களிலும் அங்கங்கு இருக்கும் தத்வாபிமானி தேவதைகள் அனைவரும், அந்த தேவதைகளின் 24 தத்வங்களிலும் பகவத்ரூபங்கள், கடலில் தண்ணீர் துளிகள் வியாபித்திருப்பதைப்போல அனந்தானந்த ரூபங்களால் வியாபித்திருக்கின்றன.

இத்தகைய பகவந்தனின் ஒவ்வொரு ரூபங்களிலும் ரமாரூபம் பரமாத்மனின் வக்ஷஸ்தலத்தில் ஒளிர்கின்றன. பரந்து விரிந்த கடலில் ஒவ்வொரு நதியும் தனித்தனியாக ஒரே நேரத்தில் மட்டும் மகிழ்கின்றன. இத்தகைய குணம் வேறு யாரிடமும் இல்லை. லட்சுமிதேவியரைவிடவும் பரமாத்மன் உத்தமன். பிரம்மாதிகள் அதமர்கள். இவர்களுக்கு சமம் யார்? ஆகையால், சமம் இல்லாத இத்தகைய அனேக ரூபங்கள் பரமாத்மனின் ஏகதேச அங்கங்களில் அடங்கியிருக்கின்றன என்பது கருத்து.

**கோ$^{3}$கனத$^{3}$ ஸக$^{2}$னுதய கூ$^{3}$கவ**
**லோகனகெ ஸொாக$^{3}$ஸதி$^{3}$ரெ பா$^{4}$ஸ்கர**
**தா களங்கனெ க்ருதிப ஜகன்னாத$^{2}$னித$^{3}$ரொளிரெ ।**
**ஸ்வீகரிஸி ஸுக$^{2}$பட$^{3}$லரியத$^{3}$ வி**
**வேகிக$^{3}$ளு நிந்தி$^{3}$ஸித$^{3}$ரேனஹு**
**தீ$^{3}$கவித்$^{1}$வவ கே$^{1}$ளி ஸுக$^{2}$படதிஹரெ கோவித$^{3}$ரு ।।30**

கோகனத சகனு = தாமரையின் நண்பனான சூரியன்
உதய = உதயம்
கூக = ஆந்தை
ஆலோகனகெ = பார்வைக்கு
ஸொாகஸதிரெ = நன்றாக இல்லாவிட்டாலும்
பாஸ்கர = சூரியன்
தா = தான்

களங்கனெ = அது சூரியன் செய்த தவறா?
ஈ க்ருதியலி = இந்த காவியத்தில்
ஜகன்னாதனிரெ = தாசராயரின் உபாசனை மூர்த்தியான ஜகன்னாத ஸ்ரீபரமாத்மனின் ஸன்னிதானம் விசேஷம் இருப்பதால்
ஸ்வீகரிஸி = இதனைப் படித்து இதன் சாரத்தை புரிந்துகொண்டு
சுகபடலரியத = மகிழத் தெரியாத
அவிவேகிகளு = முட்டாள்கள்
நிந்திஸிதரெ = திட்டினால்
ஏனஹுது = என்ன ஆகும்? (இந்த கிரந்தத்திற்கு எந்த களங்கமும் வராது)
கோவிதரு = அறிஞர்கள்
ஈ கவித்வவ = இந்த காவியத்தை
கேளி = கேட்டு
சுகபடதெ = சுகப்படாமல்
இஹரெ = இருப்பார்களோ? (சுகப்படுவார்கள் என்று அர்த்தம்).

பகலில் கண் தெரியாத ஆந்தையானது, சூரியனின் உதயத்தைக் கண்டு கோபப்பட்டால் அதனால் சூரியனுக்கு ஏதும் தோஷம் வருமோ? அப்படியே சில அ-விவேகிகள் இந்த கிரந்தத்தில் இருக்கும் பகவன்மகிமைகளின் சாரத்தை ஏற்றுக்கொள்ளும் யோக்யதை இல்லாமல், இது ஒரு ப்ராக்ருத கிரந்தம், இதை படிக்கக்கூடாது என்று திட்டினால், அதனால் இந்த கிரந்தத்திற்கு ஏதும் களங்கம் வருகிறதா?

வெறும் பகவத் சரித்திரத்தையே சொல்லிக் கொண்டிருக்கும் இந்த கிரந்தத்தின் சாரத்தை ஏற்றுக்கொண்டு, சுகப்படும் யோக்யதையுள்ள, இந்த கிரந்தத்தைப் பார்த்து படித்து மகிழ்ச்சியடையாமல் இருப்பார்களோ?

அவிவேகிகளுக்கு இந்த கிரந்தத்தின் பயன் புரியாமல் இருந்தாலும், விவேகிகள் இதை படிப்பதால், இந்த கிரந்தத்தை இயற்றியதற்கான நற்பலன் கிடைத்துவிட்டது என்பது கருத்து.

**சேதனா சேதனக3ளலி கு3ரு**
**மாதரிஷ்வாந்தர்க3த ஜக3**
**ந்னாத2விட்டல நிரந்தரதி3 வ்யாபிஸி திளிஸிகொளதெ3 |**
**காதரவ புட்டிஸி விஷயத3லி**
**யாதுதா3னர மோஹிஸுவ நி**
**ர்பீ3த நித்யானந்த3மய நிர்தோ3ஷ நிரவத்3ய ||31**

சேதனா சேதனகளலி = சேதன மற்றும் ஜடாத்மகமான அனைத்து உலகங்களில்
குரு மாதரிஷ்வாந்தர்கத = லோக குருகளான பாரதிரமண முக்ய பிராணாந்தர்கத ஸ்ரீஜகன்னாதவிட்டல,
நிரந்தரதி = எப்போதும்
வியாபிஸி = நிலைத்திருந்து

திளிஸதலெ = காட்டிக் கொள்ளாமல்
விஷயதலி = விஷய சுகங்களில்
காதுரவ புட்டிஸி = விருப்பத்தை உருவாக்கி
யாதுதானர = தமோயோக்யர்களான தைத்யர்களை
மோஹிஸுவ = மோகம் கொள்ளச் செய்வான்
நிர்பீத = பயம் இல்லாதவன்
நித்யானந்தமய = எப்போதும் ஆனந்தமயமானவன்
நிர்தோஷ = பிறப்பு / இறப்பு போன்ற தோஷங்கள் அற்றவன்
நிரவத்ய = ப்ராக்ருத குண சம்பந்தமான தோஷங்கள் அற்றவன்

பிரம்மாதி சேதனர்களிலும், மரம் முதலான ஜட சேதனர்களிலும், ஸ்தாவரமான மலைகளிலும், பரமாத்மன் வியாப்தனாகி , சாமான்யர்கள் கண்களுக்குத் தெரியாமல் ஞானிகளின் கண்களுக்கு மட்டும் தெரிபவனாக இருக்கிறான். எப்போதும் பயம் அற்றவன். நித்யானந்த ஸ்வரூபன். பிறப்பு, இறப்பு முதலான தோஷங்கள் அற்றவன். சத்வ ரஜஸ் தமோ குணாத்மக ப்ராக்ருத தேக சம்பந்தமான சுக துக்கங்கள் இல்லாதவன்.

இத்தகைய ஸ்வாமி, அன்யதோ உபாசகர்களான தைத்யர்களுக்கு, சம்சார சம்பந்தமான விஷய சுகத்தில் அதிக விருப்பத்தை உருவாக்கி, தன்னில் த்வேஷாதிகளை செய்வித்து, அபார துக்கத்தையே கொடுக்கிறான். சத்-உபாசனை செய்பவர்களுக்கு மட்டும் நித்யானந்தமயமான முக்தியைக் கொடுக்கிறான் என்பது கருத்து.

பித்ருகணவிசார சந்தி என்னும் 14ம் சந்தியின் தாத்பர்யம் இத்துடன் முடிவுற்றது.
ஸ்ரீகிருஷ்ணார்ப்பணமஸ்து.
***

## பாவபிரகாசிகை : சந்தி 15 : ஸ்வாச சந்தி

**ஹரிகதா$^2$ம்ருதசார கு$^3$ருக$^3$ள**
**கருணதிந்தா$^3$பநிது பே$^1$ளுவே**
**பரம ப$^4$கவத்$^3$ப$^4$க்தரித$^3$னாத$^3$ரதி$^3$ கேளுவுது$^3$**

கிரந்தத்தில் இதுவரை அங்கங்கு, வாயுதேவர் ஒரு நாளுக்கு 21,600 ஸ்வாச ரூபமான ஜபங்களை செய்விக்கிறார் என்று சொல்லியிருக்கிறார் தாசராயர். ‘ஸங்கோச விஸ்தராப்யாஞ்ச கதயந்தி புனீஷிண:’ என்று சொல்வதைப் போல முதலில் சுருக்கமாக சொல்லிவிட்டு, பின்னர் அதையே விளக்கமாக சொல்வது ஞானிகளின் வழக்கம். அதுபோலவே, தாசராயரும் ஒரு நாழிகை முதல் ஒரு ஆண்டு வரை ஒவ்வொரு கால அளவிற்கும் எவ்வளவு ஸ்வாச ஜபங்கள் ஆகிறது என்னும் விவரத்தை இந்த சந்தியில் தெரிவிக்கிறார்.

**பா$^4$ரதீஸனு க$^4$ளிகெ$^3$யொளு மு**

**ந்னூரு அரவத்துஸிரு ஜபக$^{3}$ள**
**தா ரசிஸுவனு ஸர்வஜீவரொளித்து$^{3}$ பே$^{3}$ஸரதெ$^{3}$ ।**
**காருணிகனவரவர ஸாத$^{4}$ன**
**பூரயிஸி பூ$^{4}$ ஸ்வர்க$^{3}$ நரகவ**
**ஸேரிஸுவ ஸர்வக்$^{3}$ஞ ஸகலேஷ்ட ப்ரதா$^{3}$யகனு ।।1**

பாரதீசனு = பாரதிபதியான முக்யபிராணதேவர்
களிகெயொளு = ஒரு நாழிகையில்
முன்னூரு அரவத்துஸிரு ஜபகள = 360 ஸ்வாச ஜபங்களை
சர்வ ஜீவரொளித்து = அனைத்து ஜீவர்களிலும் இருந்து
பேஸரதெ = சோர்வு இல்லாமல்
தா = தான்
ரசிஸுவனு = செய்கிறான்
சர்வக்ஞ = அனைத்தும் அறிந்தவனான
சகலேஷ்ட ப்ரதாயகனு = அனைவரின் விருப்பங்களையும் நிறைவேற்றுபவனான
காருணிகனு = கருளாளுவான ஸ்ரீமுக்யபிராணதேவர்
அவரவர சாதன பூரயிஸி = சாத்விக ராஜஸ தாமஸர் ஆன, அனைவரின் சாதனைகளை நிறைவேற்றி
பூ ஸ்வர்க நரகவ = ராஜசர்களுக்கு பூமி, ஸாத்விகர்களுக்கு ஸ்வர்க்கம், தாமசர்களுக்கு நரகம் என அவரவர்களின் யோக்யதைக்கேற்ப
ஸேரிசுவ = இடங்களைக் கொடுக்கிறான்.

ஸ்ரீபாரதிபதியான முக்யபிராண தேவர், அனைத்து பிராணிகளுக்குள்ளும் இருந்து, ஒரு நாழிகையில் 360 ஸ்வாஸ ஜபங்களை தாம் செய்து, செய்வித்து, மஹா கருணாளுகளான சர்வக்ஞரான, அனைத்து மனோபீஷ்டங்களையும் நிறைவேற்றுபவரான முக்யபிராணதேவர், மூன்றுவித ஜீவராசிகளின் யோக்யதைகளுக்கேற்ப சாதனைகளை செய்வித்து, ராஜஸர்களை பூலோகத்திற்கும், சாத்விகர்களை ஸ்வர்க்க லோகத்திற்கும், தாமசர்களை நரகலோகத்திற்கும் அனுப்புகிறார்.

இங்கு பூலோக என்றால் சுகதுக்க மிஸ்ரமான நித்ய சம்சாரிகள் வசிக்கும் உலகத்தை குறிப்பிடுகிறார். ஸ்வர்க்க என்றால் முக்தி ஸ்தானத்தையும், நரக என்றால் தமஸ்ஸையும் அறியவேண்டும்.

**தாஸிகொ$^{3}$ம்பை$^{3}$னூரு ஷ்வாஸோ**
**ஸ்வாஸக$^{3}$ள நடெ$^{3}$ஸுதலி சேதன**
**ராஷியொளு ஹக$^{3}$லிருளு ஜாக்$^{3}$ருதனாகி$^{3}$ நித்யத$^{3}$லி ।**
**ஈ ஸுமனஸோத்தம்ஸ லேஷா**
**யாஸவில்லதெ$^{3}$ போஷிஸுத மு**
**லேஷனங்க்$^{3}$ரி ஸரோஜ மூலத$^{3}$லிப்ப காணிஸதெ$^{3}$ ।।2**

தாஸிகெ = ஒரு மணி நேரத்தில் (2.5 நாழிகையில்)

ஒம்பைனூரு ஸ்வாசோ ஸ்வாஸகள = 900 ஸ்வாச உஸ்வாஸங்களை (மூச்சு விடுவது + மூச்சு உள்ளிழுப்பது இந்த இரண்டும் சேர்ந்தால், அது ஒரு ஸ்வாஸ).
நித்யதலி = எப்போதும்
ஹகலிருளு = இரவும் பகலும்
நடெஸுத்தலி = செய்வித்து
ஈ ஸுமனஸோத்தம்ஸ = தேவர்களில் சிறந்தவரான இந்த வாயுதேவர்
லேஷாயாஸவில்லதெ = கொஞ்சம்கூட சோர்வு இல்லாமல்
ஜாக்ருதனாகி = விழிப்புடன் இருந்து
போஷிஸுத = ஜீவராசிகளை அருளியவாறு
சேதனராஷியொளு = அந்த சேதனர்களில் இருந்து
மூலேஷனங்க்ரி சரோஜ மூலதலி = மூலேஷ நாமக பரமாத்மனின் பாத கமலத்தின் மூலப் பகுதியில்
காணிஸதெ = யாருக்கும் காட்டிக் கொள்ளாமல்
இப்ப = இருக்கிறான்.

ஸ்ரீவாயுதேவர், அனைத்து ஜீவராசிகளின் இதய கமலத்தில் இருக்கும் மூலேஷ நாமக ஸ்ரீபரமாத்மனின் பாத கமலத்தில் இருந்துகொண்டு, தினமும் ஒரு நாழிகைக்கு 360 ஸ்வாசங்களையும், ஒரு மணி நேரத்திற்கு 900 ஸ்வாசங்களையும் (1 மணி = 2.5 நாழிகை; 360*2 + 180 = 900) ஸ்வாச உஸ்வாஸ ரூபமான ஹம்ஸ மந்திர ஜபத்தை செய்து செய்வித்து, தான் கொஞ்சம்கூட சோர்வு இல்லாமல், இரவும் பகலும், விழிப்புடன் இருந்து, வேறு யாருக்கும் காட்டிக்கொள்ளாமல், ஜீவராசிகளுக்கு அருள்கிறார்.

**அரிவுதொந்த் யாமதொ³ளு ஷ்வாஸக³**
**ளெரடு³ ஸாவிரதே³ளு நூரனு**
**ஷர சஹஸ்ரத³ மேலே நானூரஹவு த்³விதியக்கெ ।**
**மரளி யாமத்ரயகெ வஸு ஸா**
**விரத³ மேல்னூரெணிகெயலி ஹ**
**ந்னெரடு³ தாஸிகெ³ ஹத்துஸாவிர தெ³ண்டு³னூரஹவு ।।3**

ஒரு யாமதொளு = 1 யாமத்திற்கு (3 மணி நேரத்திற்கு)
எரடு சாவிரதேளு நாரனு = 2700
ஸ்வாஸ = ஸ்வாசங்களை
அரிவுது = தெரிந்து கொள்ளவேண்டும்
த்விதியக்கெ = இரு யாமங்களுக்கு (6 மணி நேரத்திற்கு)
ஷர சஹஸ்ரதமேலே நானூரஹவு = 5000 + 400 = 5400
மரளி = மற்றும்
யாமத்ரயக்கெ = 3 யாமத்திற்கு
வசுசாவிரத மேல்னூரைணிகெயலி = 8000+100= 8100 எண்ணிக்கையில்
ஹன்னிரடு தாசிகெ = 12 மணி நேரத்திற்கு
ஹத்துசாவிரதெண்டு நூரஹவு = 10000+800=12800

மூன்று மணி நேரத்திற்கு 1 யாமம் என்று பெயர். ஆக,
* 1 மணி நேரத்திற்கு 900 ஸ்வாச ஜெபங்கள் என்றால்,
* 1 யாமத்திற்கு 900 * 3 = 2700 ஆகிறது.
* 6 மணி நேரத்திற்கு அதுவே 5400 எனவும்,
* 3 யாமத்திற்கு (அதாவது 9மணி நேரங்களுக்கு) 8100 ஸ்வாச ஜபங்கள் என்றும்,
* 12 மணி நேரத்திற்கு 12800 ஸ்வாச ஜபங்கள் என்றும் அறியவேண்டும்.

**ஒந்து$^3$ தி$^3$னதொ$^3$ளக$^3$னிலனிப்ப**
**த்தொந்து$^3$ ஸாவிரதா$^3$ருனூரு மு**
**குந்த$^3$னாக்யதி$^3$ மாடி$^3$ மாடி$^3$ஸி லோகக$^3$ள பொரெவ**
**நெந்து$^3$ பவனன பொக$^3$ளுதிரு எ**
**ந்தெ$^3$ந்து$^3$ மரெயதெ ஈ மஹிமெ ஸ**
**ங்க்$^3$ரந்தனாத்$^3$யரிகு$^3$ண்டெ நோட$^3$லு ஸர்வகாலத$^3$லி ||4**

அனில = முக்யபிராணதேவர்
ஒந்து தினதொளகெ இப்பத்தொந்து சாவிரதாருனூரு = 1 நாளுக்கு 21,600 ஸ்வாச ஜபங்களை
முகுந்தனாக்யதி = மோட்சத்தைக் கொடுக்கும் ஸ்ரீபரமாத்மனின் ஆணையின்படி
மாடி மாடிஸி = இந்த ஸ்வாசங்களை செய்து, செய்வித்து
லோககள பொரெவ = உலகத்தை அருள்கிறான்.
எந்து = என்று
பவனன = முக்யபிராணதேவரை
பொகளுதிரு = வணங்கிக் கொண்டிரு
எந்தெந்து மரெயதெ = என்றைக்கும் மறக்காமல்
ஈ மஹிமெ = இத்தகைய அவரின் மகிமை
ஸங்க்ரந்தனாத்யரிகுண்டெ = இந்திரதேவரே முதலான தேவதைகளுக்கு உண்டா?
சர்வகாதலி = எப்போதும்
நோடலு = சரியாக சிந்தித்துப் பார்.

'ஏகவிம்ஷத் ஸஹஸ்ராத்மா ஸஷட் ஷதமஹர்னிஷம்' என்னும் தந்த்ரசார வாக்கியத்திற்கேற்ப ஒரு நாளைக்கு 21,600 ஸ்வாச ஜபங்களை ஸ்ரீவாயுதேவர் செய்து, பகவந்தனின் ஆணைக்கேற்ப, ஜீவர்களில் இருந்து அதை செய்வித்து, உலகங்களை - அதாவது, அனைத்து பிராணிகளையும் காப்பாற்றுகிறார் என்பதால், ஸ்ரீவாயுதேவரை என்றைக்கும் மறக்காமல், வணங்கிக் கொண்டிரு. இத்தகைய இவரது மகிமை எந்த காலத்திலும், இந்திராதி தேவதைகளுக்கு இல்லை என்றும் அறியவேண்டும்.

**மூருலக்ஷத$^3$ மேலே விம்ஷதி**
**ஈரெரடு$^3$ ஸாவிரவு பக்ஷக்கெ**
**ஆருலக்ஷத$^3$ மேலே நால்வத்தெண்டு ஸாவிரவு |**
**மாருதனு மாஸக்கெ ஜபிஸி ஸம்**
**ஸார ஸாக$^3$ரதி$^3$ந்த$^3$ ஸுஜனர**

**பாருகா$^3$ணிஸி ஸலஹுவனு ப$^3$ஹுபோ$^4$க$^3$க$^3$ளனித்து ||5**

மூருலக்ஷத மேலே விம்ஷதி ஈரெரடு சாவிரவு = 3,00,000+ (20+(2*2))*1000 = 3,24,000
பக்ஷக்கெ = 1 பட்சத்திற்கு (15 நாட்களுக்கு)
ஆரு லக்ஷத மேலே நால்வத்தெண்டு சாவிரவு = 6,00,000 + 48,000 = 6,48,000
மாசக்கெ = 1 மாதத்திற்கு
மாருதனு ஜெபிஸி = வாயுதேவர் ஜெபித்து
சம்சார சாகரதிந்த = பிறப்பு இறப்பு என்னும் சம்சாரத்திலிருந்து
சுஜனர பாருகாணிஸி = சஜ்ஜனர்களை காப்பாற்றி
பஹு போககளனித்து = ஞான, பக்தி, வைராக்கியம் முதலான பல போகங்களைக் கொடுத்து
சலஹுவனு = காப்பாற்றுகிறார்

15 நாட்களுக்கு 3,24,000 ஸ்வாச ஜெபங்களும், 1 மாதத்திற்கு 6,48,000 ஸ்வாச ஜெபங்களும் என வாயுதேவர் அனைத்து ஜீவர்களிலும் ஜெபித்து, சஜ்ஜனர்களை பிறப்பு இறப்பு என்னும் சம்சார சாகரத்திலிருந்து காப்பாற்றி, அவர்களுக்கு ஞான பக்தி வைராக்கியம் போன்ற பல போகங்களைக் கொடுத்து காப்பாற்றுகிறார்.

**எரடு$^3$ திங்க$^3$ளிக$^3$ஹவு ருது பூ$^4$**
**ஸுரரு திளிவரு ஷ்வாஸஜப ஹ**
**ந்னெரடு$^3$லக்ஷத$^3$ மேலே தொம்ப$^3$த்தாரு ஸாஹஸ்ர |**
**கரெஸுவது$^3$ அயனாஹ்வய தொ$^3$ளரெ**
**வருஷ மூவத்தெண்டு லக்ஷோ**
**பரி திளிவரெம்ப$^3$த்த எண்டுசஹஸ்ர கோவித$^3$ரு ||6**

எரடு திங்களிகெ ஒந்து ருது = இரு மாதங்களுக்கு 1 ருது என்று
அஹவு = ஆகிறது என்று
பூசுரரு திளிவரு = ஜீவர்கள் அறிவர்
ஸ்வாசஜப = இந்த ருது ஒன்றிற்கு
ஹன்னெரடு லக்ஷத மேலே தொம்பத்தாரு சாஹஸ்ர = 12,96,000
அயனாஹ்வயதொளு = 1 அயனத்திற்கு
அரெ வருஷ = 6 மாதங்கள்
மூவத்தெண்டு லக்ஷோபரி எம்பத்தெண்டு சஹஸ்ர = 38,88,000
கோவிதரு = அறிஞர்கள்
திளிவரு = அறிவார்கள்

இரு மாதங்கள் சேர்ந்தால் ஒரு ருது என்கிறோம். ஒரு ருது காலத்திற்கு 12,96,000 ஸ்வாச ஜபங்களை வாயுதேவர் செய்கிறார் என்று ஜீவர்கள் அறிவார்கள். 6 மாதங்கள் சேர்ந்தால் ஒரு அயனம் ஆகிறது. ஒரு அயன காலத்திற்கு 38,88,000 ஸ்வாச ஜெபங்களை வாயுதேவர் செய்கிறார் என்று அறிஞர்கள் அறிவார்கள்.

**வருஷகித$^3$ரிம்மடி$^3$ ஜபங்க$^3$ள**
**கு$^3$ருவரிய தா மாடி$^3$ மாடி$^3$ஸி**

**து[3]ரிதக[3]ள பரிஹரிஸுவனு சிந்திஸுவ சஜ்ஜனர ।**
**ஸுரவிரோதி[4]க[3]ளொளகெ[3] நெலெஸி**
**த்த[3]ரவிதூ[3]ர தமோதி[4]காரிக[3]**
**ளிரவரிது ஸோஹம்முபாஸனெ மாள்பனவரந்தெ ||7**

வருஷகெ = 1 ஆண்டிற்கு
இதரிம்மடி ஜபங்கள = இதன் இரண்டு மடங்கு ஜபங்களை
குருவர்ய = குருவர்யரான ஸ்ரீமுக்யபிராணதேவர்
தா மாடி மாடிஸி = தான் செய்து, செய்வித்து
சிந்திஸுவ சஜ்ஜனரா = ஹம்ஸ: ஸோஹம் ஸ்வாஹா என்னும் மந்திரத்தின் அர்த்தத்தை அறிந்து ஜெபிக்கும் சஜ்ஜனர்களின்
துரிதகள பரிஹரிஸுவனு = கஷ்டங்களை பரிகரிக்கிறான்
அரவிதூரனு = தோஷங்கள் அற்றவரான ஸ்ரீவாயுதேவர்
ஸுரவிரோதிகளொளகெ = சுரர்களுக்கு விரோதிகளான தைத்யர்களில்
நெலெஸி = நிலைத்திருந்து
தமோதிகாரிகள = தமோ யோக்யர்களின்
இரவரிது = யோக்யதையை அறிந்து
அவரந்தெ = அவர்களைப் போலவே
ஸோஹமுபாஸனெ = அவனே நான் என்னும் (பரமாத்மனே நான் என்னும்) உபாசனையை
மாள்ப = செய்விக்கிறான்.

6 மாதங்களுக்கு 38,88,000 ஸ்வாச ஜபங்கள் என்றால், அதுவே ஒரு ஆண்டிற்கு இரு மடங்கு ஆகிறது. அதாவது, 77,76,000 ஆகிறது. இவ்வளவு ஸ்வாச ஜபங்களை முக்யபிராணதேவர் பிராணிகளில் இருந்து செய்கிறார். யோக்யஜீவர்கள், ஹம்ஸ: ஸோஹம் ஸ்வாஹா என்னும் ஹம்ஸ மந்திர ஜபத்தின் அர்த்தத்தை அறிந்து - அதாவது,

* துக்கங்களை நாசம் செய்வதால் பரமாத்மனுக்கு ஹம்ஸ என்று பெயர்.
* ஸோஹம் என்றால் அவனே நான் - அதாவது, அவனே என் அந்தர்யாமியாக இருக்கிறான் என்று அர்த்தம்.

பிரம்மசூத்ர பாஷ்யத்தில்:

அந்தர்யாமிண மீஷேஷம பேக்ஷ்யா ஹந்த்வமித்யபி ।
ஸர்வேஷப்தா: ப்ரயுஜ்யந்தே ஸதிபேதேபி வஸ்துஷு ॥

என்று பரமாத்மனைக் குறித்து, நீயே பரபிரம்மன்; நீனே நான் என்னும் வாக்கியங்களை பயன்படுத்துபவர்கள் உண்டு.

சாட்சாத் பரபிரம்மனே உன் அந்தர்யாமி ஆனவர்; அவனே எனக்குள்ளும் இருக்கிறான் என்ற சிந்தனையுடன், அவனே நான் என்னும் வாக்கியங்கள்

வந்திருக்கின்றன என்று அறியவேண்டும். இப்படியாக அறிந்து, உபாசனை செய்யும் சஜ்ஜனர்களின் கஷ்டங்களை பரிகரித்து, அவர்களுக்கு அருள்வான்.

தேவர்களின் எதிரிகளான, தமோ யோக்யர்களான, தைத்யர்களின் யோக்யதைக்கேற்ப, அவனே நான் என்னும் உபாசனையை செய்து செய்வித்து, ஜகதீஸ்வரனான பரமாத்மனுக்கும் தனக்கும் பேதம் இல்லை என்று உபாசனை செய்ததால், அதன் பலனாக அவர்களுக்கு தமஸ்ஸையே அளிக்கிறான்.

**இனிதுபாஸனெ ஸர்வஜீவரொ**
**ளனிலதே$^3$வனு மாடு$^3$திரெ சி**
**ந்தனெய மாட$^3$தெ$^3$ கண்ட$^3$னீரொளு முளுகி$^3$ நித்யத$^3$லி |**
**மனெயொளகெ$^3$ க்ருஷ்ணாஜினாத்$^3$யா**
**ஸனதி$^3$ குளிது விஸிஷ்ட ப$^3$ஹுஸ**
**ஜ்ஜனனெனிஸி ஜபமணிக$^3$ளெணிஸித$^3$ரேனு பே$^3$ஸரதெ$^3$ ||8**

இனிது = முந்தைய பத்யங்களில் சொன்னதைப்போல
உபாஸனெ = ஹம்ஸ மந்திர ஜப உபாசனையை
சர்வஜீவரொளு = அனைத்து ஜீவர்களிலும்
அனிலதேவனு = வாயுதேவர்
மாடுதிரெ = செய்து வருகிறார்
சிந்தனெய மாடதெ = (ஸ்வாஸமே ஹம்ஸ மந்திர ஜபம் என்று நினைத்து) உபாசனையை செய்யாமல்
கண்டனீரொளு முளுகி = தீர்த்த ஸ்னானங்களை செய்து
நித்யதலி = தினந்தோறும்
மனெயொளகெ = வீட்டில்
கிருஷ்ணாஜினாத்யாஸனதி = கிருஷ்ணாஞ்சினம் போன்ற ஆசனங்களை போட்டு
குளிது = அதில் அமர்ந்து
விசிஷ்ட = அதிகமான செல்வத்தை
பஹு சஜ்ஜனரு = சஜ்ஜனர்கள்
எனிஸி = என்று தன்னை சொல்லிக்கொண்டு
பேஸரதெ = சோர்வு இல்லாமல் (தொடர்ச்சியாக)
ஜபமணிகளெனிஸிதரேனு = ஜப மணிகளை எண்ணினால் என்ன? (எந்தவொரு பலனும் இல்லை என்று அர்த்தம்).

முந்தைய பத்யங்களில் கூறியதைப்போல, வாயுதேவர் ஸ்வாசரூப ஹம்ஸமந்திர ஜபங்களை அனைத்து ஜீவர்களிலும் இருந்து, செய்விக்கிறார் என்று ஜப உபாசனையை செய்யாமல், கண்ட தண்ணீரில் தினந்தோறும் மூழ்கி, வீட்டில் கிருஷ்ணாஞ்சின முதலான ஆசனங்களின் மேல் அமர்ந்து, தன்னையே அனைத்தும் அறிந்த சஜ்ஜனர் என்று சொல்லிக்கொண்டு, ஜபமணிகளை எண்ணிக் கொண்டிருந்தால், அதனால் கிடைக்கும் பலன் ஒன்றும் இல்லை.

வாயுதேவரே அனைத்தையும் செய்விக்கிறார் என்று அறியாமல் தானே ஜப அனுஷ்டாங்களை செய்கிறேன் என்று அறிந்து செய்வது எதுவும் பலன்களைக் கொடுக்காது என்கிறார்.

**ஓத3னோத3க3வெரடு3 தேஜதொ3**
**ளைது3வுவு லய தத3பி4மானிக3**
**ளாத3 ஷிவ பவனரு ரமாதீ4னத்வ வைது3வரு ।**
**ஈ தி3விஜரொட3கூ3டி3 ஶ்ரீ மது3**
**ஸூத3னனனைது3வளு எந்த3ரி**
**தா3த3ரதி3 அன்னோத3கவ கொடு3துணுத ஸுகி2ஸுதிரு ||9**

ஓதனோதகவெரடு = நாம் உண்ணும் அன்னம், குடிக்கும் நீர் இந்த இரண்டும்
தேஜதொளு = அக்னியில்
லயவைதுவவு = சேர்கிறது (ஜீர்ணம் ஆகிறது)
ததபிமானிகளாத = அன்ன, பான ஆகியவற்றின் அபிமானிகளான
ஷிவபவனரு = ருத்ரதேவர், வாயுதேவர்
ரமாதீனத்வயைதுவரு = ரமாதேவியரிடம் சென்று சேர்கின்றனர்.
ஈ திவிஜரொடகூடி = இந்த சிவ, வாயுகள் என்னும் தேவதைகளுடன் சேர்ந்து
ஶ்ரீமதுசூதனன = மது நாமக தைத்யனைக் கொன்ற ஶ்ரீபரமாத்மன்
ஐதுவளு = ரமாதேவியர் சேர்கின்றனர்
எந்தரிது = என்று அறிந்து
ஆதரதி = பக்தியுடன்
அன்னோதகவ = அன்ன, பானங்களை
கொடுத = பிராமணாதிகளுக்குக் கொடுத்து
உணுத = நீ உண்டு
சுகிசுதிரு = மகிழ்ச்சியாக இரு.

நாம் உண்ணும் அன்னம், தண்ணீர் இந்த இரண்டும், வயிற்றில் இருக்கும் ஜடராக்னியில் சென்று சேர்கிறது. அன்ன, தண்ணீருக்கு அபிமானிகள் ருத்ரதேவர் மற்றும் வாயுதேவர். இவர்கள் இருவரும் அன்ன, உதக ரூபமாக ரமாதேவியரில் சென்று சேர்கின்றனர். ரமாதேவியர், அன்னோதக ரூபமான சிவ வாயுகளுடன் சேர்ந்து, ஶ்ரீபரமாத்மனிடம் சேர்கிறார்.

இப்படி நாம் உண்ட, குடித்த அன்ன, தண்ணீர் ஆகியவை பரமாத்மனிடம் சேர்ந்து அர்த்தமுள்ளதாக ஆகிறது என்று அறிந்து, பிராமணாதிகளுக்கு அன்னங்களைக் கொடுத்து, நீயும் இதே அனுசந்தானத்துடன் உண்டு, மகிழ்ச்சியுடன் இரு என்பது கருத்து.

**ஜாலிதொப்பல ஜாவிக3ளு மெ**
**த்3தா3லயதி3 ஸ்வேச்சானுஸாரதி3**
**பாலு க3ரெவந்த3த3லி லகுமீரமண தன்னவர ।**
**கீளுகர்மவ ஸ்வீகரிஸி த**

**ந்னாலயதொ3ளிட்டவர பொரெவ க்ரு**
**பாளு காமத3 கைரவத3ளஷ்யாம ஶ்ரீராம ||10**

அஜா = செம்மறி ஆடுகள்
அவிகளு = ஆடுகள்
ஜாலிகொப்பல = வழியில் இருக்கும் இலைகளை
மெத்து = தின்று
ஆலயதி = வீட்டில்
ஸ்வேச்சானுசாரதி = தன் இஷ்டத்திற்கு
பாலகரெவந்ததலி = பால் கொடுக்கின்றன
லக்ஷ்மிரமண = லட்சுமிபதியான ஶ்ரீபரமாத்மன்
தன்னவர = தன் பக்தர்கள் செய்யும்
கீளுகர்மவ = பாப கர்மங்களை
ஸ்வீகரிஸி = ஏற்றுக்கொண்டு
தன்னாலயதொளிட்டவர = தன் உலகத்தில் அவரை வைத்து
க்ருபாளு = கருணாமயியான
காமத = அனைவரின் மனோபீஷ்டங்களை நிறைவேற்றும்
கைரவதஸ்யாம = நீல தாமரையின் வர்ணனான
ஶ்ரீராம = ஶ்ரீபரமாத்மன்
அவர = அந்த பக்தர்களை
பொரெவ = அருள்வான்

ஆடுகள், செம்மறி ஆடுகள் ஆகியவை வழியில், ஓரத்தில் கிடைக்கும் செடி கொடிகளை தின்று, பின் வீட்டுக்கு வந்து, பால் கொடுக்கின்றன. பசு, எருமைகளைப் போல தவிடு ஆகிய எதையும் தின்னாமல், தெருவோரங்களில் கிடைக்கும் செடிகளை உண்டே பால் கறக்கின்றன. அதைப்போலவே, பரமாத்மன், பக்தர்கள் செய்யும் அல்பமான சிறு பூஜைகளை, ப்ராக்ருதமான அன்ன உதகங்களை ஏற்றுக்கொண்டு, அதன் பலன் ரூபமாக எதேஷ்டையான ஸ்வரூபானந்தத்தைக் கொடுத்து அவர்களை மகிழ்விக்கிறான்.

**ஷஷி தி3வாகர பாவகரொளிஹ**
**அஸித ஸித லோஹிதக3ளலி ஷிவ**
**ஷ்வஸன பா4ர்க3வி மூவரொளு ஶ்ரீகிருஷ்ண ஹயவத3ன |**
**வஸுதி4பார்த3ன த்ரிவ்ருது எனிஸி**
**வஸுமதியொளன்னோத3க அனல**
**பெஸரினிந்த3லி ஸர்வஜீவர ஸலஹுவனு கருணி ||11**

ஷஷி = சந்திரன்
திவாகர = சூரியன்
பாவகரொளகெ = அக்னி, இந்த மூவரில்
இஹ = இருக்கிறான்
அஸித = கருப்பு

ஸித = வெள்ளை
லோஹிதகளலி = சிவப்பு இந்த மூன்று வண்ணங்களில்
ஷிவ ஷ்வஸன பார்கவி = அபிமானிகளான சிவ, வாயுதேவர், லட்சுமிதேவி
மூவரொளு = இந்த மூவரில்
ஸ்ரீகிருஷ்ண ஹயவதன, நிலைத்திருந்து
வஸுதி பார்த்தன = பூ-பாலனான, துஷ்டகளை அழிப்பவனான ஜனார்த்தனன், இந்த மூவரும்
த்ரிவ்ருது எனிஸி = மூவரிலும் இருக்கிறார் என்று நினைத்து
வசுமதியொளு = பூமியில்
அன்னோதக அனல பெசரினிந்தலி = அன்ன, தண்ணீர், அக்னி என்னும் பெயரால்
கருணி = கருணாளுவான ஸ்ரீஹரி
சர்வஜீவர சலஹுவனு = அனைத்து ஜீவர்களையும் காக்கிறான்.

பிராணிகள் உயிர் வாழவேண்டுமெனில், தேவையான முக்கிய ஆதாரம் அன்ன, தண்ணீர், அக்னி இந்த மூன்றும். இவற்றில் அன்னத்திற்குத் தேவையான பொருட்கள் என்றால் அது அரிசி, கோதுமை. இவை வளரவேண்டுமெனில் சந்திரன் தேவை. ஔஷத (மருந்து, மூலிகை) ஆகியவற்றிற்கு சந்திரனை அரசனாக ஆக்கினார்கள் என்று ஹரிவம்சத்தில் தெளிவாக கூறியிருக்கின்றனர். அதிலும் முக்கியமானது, சந்திரனின் நடுப்பகுதியில் இருக்கும் இருட்டின் அடையாளமான கருப்பு. அவற்றின் அபிமானிகள் ருத்ரதேவர். அவருக்கு தலைவர், ஸ்ரீகிருஷ்ணரூபியான பரமாத்மன்.

சூரியனின் வெண்மையான ஒளியால் தண்ணீர் பிறக்கிறது. கடலில் இருக்கும் தண்ணீர், சூரிய கிரணங்களால் ஆவியாகி, மேகங்களாகி, மழை பெய்வித்து, பூமியில் பெய்வதால், சூரியனில் இருக்கும் வெள்ளை வண்ணமே தண்ணீருக்குத் தேவையானது. இதற்கு அபிமானிகள், வாயுதேவர். அவரின் அந்தர்யாமி ஹயக்ரீவரூபி.தேகத்தில் இருக்கும் அக்னிக்கு சம்பந்தப்பட்ட சிவப்பு வண்ணத்தின் அபிமானி ரமாதேவி. அவரின் அந்தர்யாமி ஜனார்த்தனரூபி. கருணா சமுத்திரனான ஸ்ரீஹரி இப்படி அன்ன, தண்ணீருக்கு அபிமானிகளான சிவ, வாயு, லட்சுமிதேவியரின் அந்தர்யாமியாக இருந்து, அன்ன, தண்ணீர், அக்னி என்னும் பெயரால் த்ரிவ்ருத் - அதாவது, மூன்று ரூபத்தினால் வசிக்கிறான் என்று நினைத்து ரூபத்ரயங்களால் அனைத்து பிராணிகளையும் காக்கிறான்.

**தீ$^{3}$ப கரத$^{3}$லி பிடிது$^{3}$ காணதெ$^{3}$**
**கூபதொ$^{3}$ளு பி$^{3}$த்த$^{3}$ந்தெ வேத$^{3}$ ம**
**ஹோபனிஷத$^{3}$ர்த்த$^{2}$க$^{3}$ள நித்யதி$^{3}$ பேளுவவரெல்ல |**
**ஸ்ரீ பவனமுக$^{2}$ வினுதனமல ஸு**
**ரூபக$^{3}$ள வ்யாபார திளியதெ$^{3}$**
**பாப புண்யகெ ஜீவகர்த்ரு அகர்த்ரு ஹரியெந்து$^{3}$ ||12**

தீப = தீபங்களை
கரதலி = கைகளில்

பிடிது = பிடித்து
காணதெ = தெரியாமல்
கூபதொளு பித்தந்தெ = கிணற்றில் விழுந்ததைப்போல
மஹோபனிஷதர்த்தகள = ஐதரேயாதி மஹா உபநிஷத்களின் அர்த்தங்களை
நித்யதி = தினந்தோறும்
பேளுவவரெல்ல = பலர் சொல்வர்
ஸ்ரீ = லட்சுமிதேவி
பவன = வாயுதேவர்
முக = முதலான தேவதைகளால்
வினுதன = வணங்கப்படும் ஸ்ரீஹரி
அமல = நிர்மலமான
ஸுரூபகள = ரூபங்களை
வ்யாபார = க்ரியா விசேஷங்களை
திளியதெ = அறியாமல்
பாபபுண்யக்கெ = பாவ புண்ணியங்களுக்கு
ஜீவகர்த்ரு = ஜீவனே ஸ்வந்த கர்த்ரு
அகர்த்ருயம்ப = ஸ்ரீஹரிக்கு கர்த்ரு இல்லை என்று நினைத்துக் கெடுவர்.

கையில் தீபத்தைப் பிடித்தவாறு, மற்றவர்களுக்கு வழி காட்டியவாறு, தான் தன் வழியைக் காணாமல், கிணற்றில் விழுபவர்கள் உண்டு. அதைப்போல, வேதவேதாந்தங்களை நன்கு படித்து, சாஸ்திர அர்த்தங்களை பிறருக்கு உபதேசம் செய்தவாறு, தான் அதனை சரியாக அனுசந்தானம் செய்யாமல், தனதே ஸ்வதந்த்ர கர்த்ரு என்று புரிந்து, புண்ய பாவங்கள் செய்யும் விஷயங்களில் பரமாத்மனின் ப்ரேரணை எதுவும் இல்லை என்று அறிந்து கெடுகிறார்கள் என்பது கருத்து.

**அனிலதே$^{3}$வனு வாங்மனோமய**
**நெனெஸி பாவக வருண ஸங்க**
**ந்த$^{3}$ன முகா$^{2}$த்$^{3}$யரொளித்து$^{3}$ ப$^{4}$க$^{3}$வத்$^{3}$ரூப கு$^{3}$ணக$^{3}$ளனு ।**
**நெனெனெனெது$^{3}$ உச்சரிஸுதலி ந**
**ம்மனு ஸதா$^{3}$ ஸந்தயிஸுவனு ஸ**
**ந்முனி க$^{3}$ணாராதி$^{4}$த பதா$^{3}$ம்பு$^{4}$ஜ கோ$^{3}$ஜ ஸுரராஜ ||13**

சன்முனி கணாராதித பதாம்புஜ = உத்தமர்களான ரிஷிகளால் வணங்கப்படும் பாதங்களைக் கொண்டவன்
கோஜ = வேதாந்த கிரந்தங்களை இயற்றிய
ஸுரராஜ = கருட சேஷ ருத்ரர்களுக்கு தலைவனான
அனிலதேவனு = வாயுதேவர்
வாங்மனோமய நெனிஸி = வாங்மய, மனோமய என்று சொல்லிக்கொண்டு
பாவக வருண = அக்னி, வருணர்களிலும்
ஸங்க்ரந்தனமுகாத்யரொளு = கை, கால் முதலிய இந்திரியங்களுக்கு அபிமானிகளான இந்திராதி தத்வாபிமானி தேவதைகளில் இருந்து
பகவத்ரூப குணகளனு = பகவத்ரூப குணங்களை

நெனெனெனெது = திரும்பத்திரும்ப நினைத்து
உச்சரிஸுதலி = கூறினால்
நம்மனு = நம்மை
ஸதா = எப்போதும்
ஸந்தயிஸுவனு = காப்பாற்றுவான்.

முனி என்னும் சொல்லுக்கு ஞானி என்று பொருள். உத்தமமான ஞானிகளால் அல்லது வசிஷ்டாதி முனிவர்களால் வணங்கப்படும் பாதங்களைக் கொண்டவர் வாயுதேவர். கோஜ என்றால்: கௌ:=வேதாந்த வாக்கியங்கள் என்று அர்த்தம்.

வேதாந்த கிரந்தங்கள் யாரிடமிருந்து பிறந்ததோ அவருக்கு கோஜ என்று பெயர். வாயுதேவரே மத்வ அவதாரத்தால் வேதாந்த கிரந்தங்களை இயற்றினார் என்று பொருள். இவர் ருத்ரர் முதலான தேவதைகளுக்கு தலைவர். வாக்யாபிமானி அக்னி, நாக்கிற்கு அபிமானி வருண, மனோ என்றால் சித்த என்று அர்த்தம் சொல்ல வேண்டும்.

இத்தகைய வாயுதேவர், சித்தத்திற்கு அபிமானி தாமே ஆகியிருக்கிறார். அல்லது; மனோபிமானி சந்திர இவர்களில் வாங்மய, மனோமய என்னும் பெயரில் இருப்பது மட்டுமல்லாமல், கை, கால் ஆகியவற்றிற்கு அபிமானிகளான இந்திராதி தத்வாபிமானி தேவதைகளிலும் இருந்து, அனைத்து காலங்களிலும், பரமாத்மனின் குணரூபங்களை நினைத்தவாறு, வாயிலும் உச்சரித்தவாறு இருக்கிறார்.

அதாவது, நமது வாக்கில், மனஸ்ஸில் இருப்பதைப்போல, இந்திராதி தத்வாபிமானிகளின் வாக்கிலும், மனஸ்ஸிலும் வாங்மய, மனோமய என்று அழைத்துக்கொண்டு வசித்து, பகவன் மஹாத்ம்யங்களை மனதால் நினைத்து, வாயால் உச்சரித்து, அனைத்து பிராணிகளும் மனோவாக்குகளால் நினைக்குமாறும், உச்சரிக்குமாறும் செய்து, அவர்களுக்கு அருள்கிறார் என்று பொருள்.

**பாத$^{3}$வெனிபவு வாங்மனஸுக$^{3}$ளு**
**பாத$^{3}$ரூப த்வயக$^{3}$ளொளு ப்ர**
**ஹ்லாத$^{3}$ போஷக ஸங்கருஷணாஹ்வயதி$^{3}$ நெலெஸித்து$^{3}$ ।**
**வேத$^{3}$ சாஸ்திர புராணக$^{3}$ள ஸம்**
**வாத$^{3}$ரூபதி$^{3}$ மனனகெ$^{3}$யிஸுத**
**மோத$^{3}$மய ஸுக$^{2}$வித்து ஸலஹுவ ஸர்வஸஜ்ஜனர ||14**

வாங்மனோமய = வாங்மய, மனோமய என்னும் இந்த இரண்டும்
பாதவெனிபுது = பாதங்கள் எனப்படுகின்றன
பாதரூப த்வயகளொளு = வாங்மய மனோமய என்னும் பாதரூபமான இந்த இரண்டில்
ப்ரஹ்லாத போஷக = பிரகலாதனுக்கு அருளிய நரசிம்ம தேவர்
சங்கர்ஷணாஹ்வயதி = சங்கர்ஷண என்னும் இந்த இரு பெயர்களால்
நெலெஸித்து = நிலைத்திருந்து
வேத சாஸ்திர புராணகள = வேத சாஸ்திர புராணங்களை

ஸம்வாதரூபதி = கேட்க தகுதி உள்ளவர்களுக்கு சொல்லிக் கொடுத்து, கேட்டு மனனம் செய்வித்தவாறு, ஆனந்த ஸ்வரூபமான ஸ்ரீஹரி
ஸர்வசஜ்ஜனர = அனைத்து சஜ்ஜனர்களையும்
ஸலஹுவ = காப்பாற்றுவான்

நடப்பவர்களுக்கு பாதங்கள் எப்படி முக்கியமோ, அப்படியே ஞான மார்க்கத்தில் நடந்து, முக்த ஸ்தானத்தை அடைவதற்கு, வாக், மனஸ் இந்த இரண்டும் முக்கியமானவை. முந்தைய பத்யத்தில் வாக் மனோபிமானிகளில் வாயுதேவரே இருக்கிறார் என்று சொல்லியிருந்தார். முக்திக்கு செல்வதற்கு, வாங்மய ஒரு பாதம், மனோமய ஒரு பாதம். வாயுதேவரே பாத-த்வய ரூபமாக இருக்கிறார். இந்த பாத-த்வயத்தில், வாங்மன ரூபத்தில் நரசிம்ம தேவர், மனோமய ரூபத்தில் சங்கர்ஷண தேவர் இருக்கின்றனர். பாரதாதி சாஸ்திரங்கள், ரிகாதி வேதங்கள், பாகவதாதி புராணங்கள் ஆகியவற்றைக் கேட்பது, படிப்பது, மனனம் செய்வது ஆகியவையே ஞானத்திற்கு சாதனைகள் ஆகும். இவற்றைப் படிப்பது, வாங்மயத்தின் செயல்களாகும். இந்த வாங்மய ரூபியான வாயுதேவரில் நரசிம்மரூபியான பரமாத்மன் இருந்து, வேத சாஸ்திரங்களை படிக்க வைக்கிறான். கேட்க வைத்து, அவற்றை மனனம் செய்வது மனத்தின் செயல்கள். இங்கு மனோரூபியான வாயுதேவரில், சங்கர்ஷண நாமக பரமாத்மன் இருந்து, மனனம் செய்விக்கிறான்.

பரமாத்மன் ஸ்வயம் நித்யானந்தமயமானவன். கிரந்தங்களை படித்தல், மனன செயல்களை செய்வித்து, சஜ்ஜனர்களுக்கு ஞானத்தைக் கொடுத்து, சாதனையை முழுவதுமாக செய்வித்து, அபரோக்ஷ ஞானத்தை பிறக்கச்செய்து, இறுதியில் முக்தியைக் கொடுத்து, அருள்கிறான்.

**க3ந்த4வஹ த3ஷ தி3ஷக3ளொளக3ர**
**விந்த3 ஸௌரப4 பஸரிஸுத க்4ரா**
**ணேந்த்3ரியக3ளிகெ3 ஸுக2வனீவுத ஸஞ்சரிஸுவந்தெ |**
**இந்தி3ரேஷன ஸுகு3ணக3ள தை3**
**நந்தி3னதி3 துதிஸுதனு மோதி3ஸு**
**தந்த4 ப3தி4ர ஸுமூகனந்திரு மந்த3ஜனரொட3னெ ||15**

கந்தவஹ = காற்று
தஷ திஷகளொளகெ = பத்து திசைகளிலும்
அரவிந்த = தாமரையின்
ஸௌரப = நறுமணத்தை
பஸரிஸுத = பரப்பியவாறு
க்ராணேந்தியகளிகெ = வாசனை முகரும் மூக்கிற்கு
சுகவனீவுத = சுகங்களைக் கொடுத்து
சஞ்சரிசுவந்தெ = சஞ்சரிப்பதைப் போல
இந்திரேஷனு = லட்சுமிபதியான பரமாத்மன்
சுகுணகள = நற்குணங்களை

தைனந்தினதி = தினந்தோறும்
துதிஸுத = துதித்தவாறு
அனுமோதிஸுத = ஸ்தோத்திரம் செய்பவர்களைப் பார்த்து மகிழ்ந்தவாறு
மந்தஜனரொடனெ = அஞ்ஞானிகளில்
அந்த = குருடனைப்போல
பதிர = செவிடனைப்போல
ஸு = நல்ல
மூகனந்திரு = ஊமையைப் போல இரு.

தாமரை மலரில் இருக்கும் நறுமணத்தை, காற்றானது ஏந்தி, அங்கங்கு அமர்ந்திருக்கும் மக்களின் மூக்கிற்கு நறுமணத்தைக் கொடுத்து, அவர்களுக்கு மகிழ்ச்சியைக் கொடுத்து, தான் நிர்லிப்தனாக (அதற்கு சம்பந்தப்படாமல்) இருக்கிறது. அதைப்போல, இந்திரேஷனின் மிகச்சிறந்த நற்குணங்களை, நீ ஏற்றுக்கொண்டாலும், காற்று எப்படி அந்த நறுமணத்தை பிறருக்குக் கொடுத்து தான் நிர்லிப்தனாக இருக்கிறதோ, அப்படி, பகவந்தனை நான் துதித்தேன், நான் ஞானி, நான் பக்தன், என்னும் கர்த்ருத்வ அபிமானத்தை வைத்துக்கொள்ளாமல், பரமாத்மனுக்கு அந்த ஸ்தோத்திர, பூஜைகளை சமர்ப்பித்து நிர்லிப்தனாக இரு.

அல்லது, காற்று, பிராணேந்திரியங்களுக்கு மட்டுமே நறுமணத்தைக் கொடுத்து மகிழ்விப்பதைப் போல, நீ செய்யும் ஸ்தோத்திராதிகளை, பூஜைகளை சஜ்ஜனர்கள் மட்டும் கேட்டு மகிழுமாறு செய். பாபிகளான தமோயோக்கியர்களைப் பார்க்கும்போது குருடனைப் போல இரு. அவன் உன்னை திட்டினால், செவிடனைப் போல் இரு. அவருடன் பேச வேண்டியிருந்தால், ஊமையாக இரு. இதுவே ஞானிகளின் லட்சணம் ஆகும். ஞானிகளின் லட்சணங்களை ஜகன்னாததாசர் ‘மூகாபதிரரந் திப்பரொ னோள்பா ஜனகெ’ என்று கூறுகிறார். அதைப்போல இருக்கவேண்டும் என்பது கருத்து.

**ஶ்ரீரமணனரமனெய பூர்வ**
**த்$^3$வாரத$^3$ல்லிஹ ஸங்க்ய ஸூர்யக$^3$**
**பா$^4$ரதிபதி ப்ராணனொளகி$^3$ஹ லகுமி நரயணன**
**ஸேரி மனுஜோத்தமரு ஸர்வஷ**
**ரீரக$^3$த நாராயணன அவ**
**தார கு$^3$ணக$^3$ள துதிஸுதலி மோதி$^3$பரு முக்தியலி ||16**

ஶ்ரீரமணன = லட்சுமிபதியான ஶ்ரீபரமாத்மனின்
அரமனெய = வைகுண்ட லோகத்தின்
பூர்வ த்வாரதல்லி = கிழக்கு வாசலில்
இஹ = இருக்கிறான்
சங்க்ய சூர்யக = சங்க்யா என்னும் மனைவியுடனான சூரியனின் உள் இருக்கும்
பாரதிபதி ப்ராணனொளகிஹ = பாரதிதேவியின் கணவனான வாயுதேவரில் இருக்கும்
லகுமி நரயணன = லட்சுமி நாராயணனை

மனுஜோத்தமரு = மனுஷ்யோத்தமர்கள்
ஸேரி = சேர்ந்து
சர்வஷரீரிகத = அனைத்து தேகங்களிலும் இருக்கும்
நாராயணன அவதார குணகள = நாராயணனின் அவதார குணங்களை
துதிஸுதலி = துதித்தவாறு
முக்தியலி = முக்தியில்
மோதிபரு = மகிழ்கின்றனர்.

ப்ராணிகளின் தேகங்களில் பிராண, அபான, வியான, உதான, சமான என்னும் 5 வாயுகள் வியாபித்திருக்கின்றன. இவற்றில் ப்ராணாபானாதி பெயர்களில் முக்யபிராணதேவரே, ஜடவாயுகளுக்கு ப்ரேரகராகி, அவற்றின் காரியங்களை செய்விக்கிறார். இது மட்டுமல்லாமல், ப்ராணாபானாதி ஜட வாயுகளுக்கு சூர்ய சந்திராதிகள், அபிமானிகளாக இருக்கின்றனர். அவர்களின் அந்தர்யாமியாக, ப்ராணாபானாதி பெயர்களால் வாயுதேவர் இருக்கிறார். எந்தெந்த வாயுகளுக்கு யார் அமுக்யாபிமானிகள் என்றால், பஞ்சராத்ராதிகளில்

ப்ராணாபிமானீ சக்ஷுஸ்ச சூர்ய ஏவ உதாஹ்ருத: |
தேஜோன்னாக்ய பிமானீச ப்ராக்த்வாராதிபதிர் ஹரே: ||

பிராணவாயுவிற்கும், கண்களுக்கும், தேஜஸ் தத்வத்திற்கும், அன்னாதிகளுக்கும், அபிமானி, சூரியன். இதே சூரியன், பரமாத்மனின் அரண்மனையின் கிழக்கு வாசலில், வாயிற்காப்பாளனாக இருக்கிறான் என்கிறார்.

சாந்தோக்ய பாஷ்யத்தில் 'ஸூர்யப்ரஸாதாத்துனரா: பூர்வத்வாரேண கேஷவம் ப்ராப்னுவந்தி' - கிழக்கு வாசலின் அதிபதியான சூரியனின் பிரசாதத்தினால், மனுஷ்யோத்தமர்கள் கிழக்கு வாசலிலிருந்து பரமாத்மனை அடைகிறார்கள் என்கிறார்.

அதே அர்த்தத்தையே தாசராயர் இங்கு சொல்லியிருக்கிறார். கிழக்கு வாசலில் சங்க்யா நாமகளான மனைவியுடன், பிராணாபிமானி சூரியன் இருக்கிறான். அவனுக்குள், ஸ்ரீபாரதிபதியான பிராணதேவர் ப்ராண நாமகனாக இருக்கிறார்.

மனுஷ்யோத்தமர்கள் முக்தியை அடையும்போது, சூரியன் மூலமாக பிராணதேவரை அடைந்து, அவரின் அருளால், அவரின் அந்தர்யாமியான ஸ்ரீலட்சுமி நாராயணனை அடைகிறார்கள். அப்போது அவர்கள் முக்தர்கள் ஆகின்றனர். பிறகு, விருப்பமான இடங்களுக்கு தம் விருப்பப்படி பயணம் செய்து, அனைத்து சரீரங்களில் இருக்கும் பகவத் ரூபங்களையும், அவதார ரூபங்களையும் கொண்டாடியவாறு, ஸ்வரூபானந்தத்தைப் பெற்று, சுகத்துடன் வசிக்கின்றனர்.

**ப்ரணவ ப்ரதிபாத்$^{3}$யன புரத$^{3}$ த$^{3}$**
**க்ஷிண கவாடத$^{3}$லிப்ப ஷஷிரோ**
**ஹிணிக$^{3}$த வ்யானஸ்த க்ருதிப்ரத்$^{3}$யும்ன ரூபவனு |**
**கு$^{3}$ணக$^{3}$ளனு ஸந்துதிஸுதலி பித்ரு**

**க$^3$ண க$^3$தா$^3$த$^4$ரனதிவிமல ப**
**ட்டணதொ$^3$ளகெ$^3$ ஸ்வேச்சானுஸாரதி$^3$ ஸஞ்சரிஸுதிஹரு ||17**

ப்ரணவ ப்ரதிபாத்யன = ஓம்கார ப்ரதிபாத்யனான ஸ்ரீபரமாத்மனின்
புரத = வைகுண்டத்தின்
தக்ஷிண கவாடதலி = தெற்கு வாயிலில்
ஷஷிரோஹிணி = சந்திரன், அவர் மனைவியான ரோஹிணியுடன்
இப்ப = இருக்கிறான்
கத = இவர்கள் இருவரில்
வ்யானஸ்த = வ்யான நாமக ப்ராணதேவரின் அந்தர்யாமியான
க்ருதி = க்ருதி நாமக லட்சுமிதேவியருடன்
ப்ரத்யும்ன ரூபவனு = ப்ரத்யும்ன நாமக ஸ்ரீபரமாத்மனின்
குணகளனு = நற்குணங்களை
ஸந்துதிஸுதலி = நன்றாக துதித்து
பித்ருகண = பித்ருகணர்கள்
கதாதரன = கதையை தரித்த ஸ்ரீஹரியின்
அதிவிமல = மிகவும் தூய்மையான
பட்டணதொளகெ = வைகுண்டத்தில்
ஸ்வேச்சானுசாரதி = தன் இஷ்டத்திற்கேற்ப
சஞ்சரிசுதிஹரு = சஞ்சரிக்கின்றனர்.

தேகத்தில் இருக்கும் வியான நாமக ஜடவாயுவின் அதிபதி சந்திரன். காதுகளுக்கும் அவனே அதிபதியாக இருக்கிறான். அவனின் அந்தர்யாமியாக, வியான நாமகரான முக்யபிராணதேவர் இருக்கிறார். இவருடன் சேர்ந்து, பரமாத்மனின் வீட்டின் தெற்கு வாசலில் சந்திரன் அதிபதியாக இருக்கிறான்.

தக்ஷிணாதிபதி ஸ்ஸோம: வ்யான: ஸ்ரோத்ரா பிமானவான் || என்னும் பாஞ்சராத்ர ஆகமத்தின்படி இந்த அர்த்தம் வருகிறது. சாந்தோக்ய பாஷ்யத்திலும் 'ப்ராப்னு வந்த்யத ஸோமஸ்ய ப்ரஸாதாத் பதரஸ்ததா' என்று சொல்லியிருக்கின்றனர்.

இந்த ஆதாரங்களின் அர்த்தத்தையே தாசராயர் இங்கு சொல்கிறார். ஓம்காரத்தின் அதிபதியான ஸ்ரீபரமாத்மனின் தெற்கு வாசலின் அதிபதி, ரோஹிணி சஹிதனான சந்திரன். இவனுக்குள் வியான நாமக வாயுதேவர். பித்ருகணர்கள் முக்தர்களாகி, பரமாத்மனின் அரண்மனையின் தெற்கு வாசலில் இருக்கும் சந்திரனின் பிரசாதத்தினால், அந்த வாயிலில் நுழைந்து, அங்கு சந்திராந்தர்கத வியான நாமக பிராணதேவரின் அந்தர்யாமியான ஸ்ரீக்ருதிதேவி சமேதனான ஸ்ரீ ப்ரத்யும்ன தேவரை உபாசனை செய்தவாறு அவனின் குணங்களை துதித்தவாறு, தம் விருப்பப்படி, செயல்களை செய்துகொண்டு ஸ்வரூப சுகங்களை அனுபவிக்கின்றனர்.

**அமிதவிக்ரமனாலயத$^3$ ப**

**ஸ்சிம கவாடதி3 ஸதிஸஹித ஸ**
**ம்ப்4ரமதி3 ப4கவத்3கு3ண க3ளனெ பொக3ளுதலி மோதி3ஸுவ**
**ஸுமனஸாஸ்ய நொளிப்பபானக3**
**த3மன ஸங்கருஷணன நிஜ ஹ்ரு**
**த்க1மலதொ3ளு தே4னிஸுவ ருஷிக3ணவைதி3 ஸுகி2ஸுவரு ||18**

அமித விக்ரமன = அபரிமித பராக்ரமசாலியான ஸ்ரீபரமாத்மனின்
ஆலயத = வைகுண்டத்தின்
பஸ்சிம கவாடதி = மேற்கு வாயிலில்
ஸதிஸஹித = தன் மனைவியான ஸ்வாஹாதேவியுடன்
ஸம்ப்ரமதி = மகிழ்ச்சியுடன்
பகவத்குணகளனெ = பரமாத்மனின் குணங்களை
பொகளுதலி = புகழ்ந்தவாறு
மோதிஸுத = மகிழ்ச்சியுடன்
ஸுமனஸாஸ்யனொளு = தேவதைகளுக்கு முகம் போலிருக்கும்
அக்னியொளகெ = அக்னியில்
இப்ப = இருக்கிறான்
அபானக = அபான வாயுதேவரின் அந்தர்யாமியான
தமன = சம்ஹார ரூபகனான
சங்கர்ஷணன = சங்கர்ஷணரூபி பரமாத்மனை
நிஜஹ்ருத்கமலதொளு = தன் இதய கமலத்தில்
தேனிஸுத = தியானம் செய்தவாறு
ருஜுகண = ரிஷிகள்
யெய்தி = (அந்த மேற்கு வாசல் வழியாக முக்தர்களாக) வந்து
சுகிசுவரு = ஸ்வரூபானந்தத்தை அடைந்து, மகிழ்வர்.

அபான நாமக ஜடவாயுவிற்கு மற்றும் வாக்கிற்கு அபிமானியான அக்னி, தன் மனைவியான ஸ்வாஹா உடன், பரமாத்மனின் அரண்மனையின் மேற்கு வாயிலில், பரமாத்மனை துதித்தவாறு இருக்கிறார். அவரின் அந்தர்யாமி அபான நாமக வாயுதேவர். ரிஷிகணர்கள் முக்தர்களாகி, அக்னிதேவரின் பிரசாதத்தினால், மேற்கு வாயில் மூலமாக நுழைந்து, அக்னி அந்தர்கத அபானாந்தர்கத ஸங்கர்ஷணரூபியான ஸ்ரீபரமாத்மனை, தன் இதய கமலங்களில் தியானித்தவாறு, தன் இஷ்டத்திற்கேற்ப சஞ்சரித்து, ஸ்வரூபானந்தத்தை அனுபவிக்கின்றனர்.

**ஸ்வரமணன கு3ண ரூப ஸப்த**
**ஸ்வரக3ளிந்த3லி பாடு3திஹ து**
**ம்பு3ரனெ மொத3லாத3கி2ல க3ந்த4ர்வரு ரமாபதிய |**
**புரத3 உத்தர பா3கிலாதி4ப**
**ஸுரப ஷசிக ஸமானவாயுக3**
**ஹரின்மணினிப4 ஷாந்திபதி அனிருத்த4 னைது3வரு ||19**

ஸ்வரமணன = ஸ்ரீபரமாத்மனின்

குணரூப = குண ரூபங்களை
ஸப்த ஸ்வரகளிந்தலி = நிஷாத, ருஷப, காந்தார முதலான சப்த ஸ்வரங்களில்
பாடுதிஹ = பாடிக்கொண்டிருக்கும்
தும்பரனெ மொதலாதகில கந்தர்வரு = தும்புரு முதலான அனைத்து கந்தர்வர்களும்
ரமாபதிய புரத = லட்சுமிபதியான பரமாத்மனின் அரண்மனையின்
உத்தர பாகிலாதிப = வடக்கு வாசலில் அதிபதி
சுரப ஷசிக = ஷசிபதியான தேவேந்திரனின் அந்தர்கதனான
ஸமான வாயுக = சமான நாமக வாயுதேவரின் அந்தர்யாமியான
ஹரின்மணினிப = நீலமணியின் நீல நிறத்தில் உள்ள
ஷாந்திபதி அனிருத்தன = சாந்திபதியான அனிருத்தனை
ஐதுவரு = அடைவர்.

உத்தரத்வாரபஸ்த்விந்த்ர: ஸமானோ மன ஆத்மக: -- என்னும் பாஞ்சராத்ர ஆகமத்தின் ஆதாரத்தின்படி வடக்கு வாசலின் அதிபதி தேவேந்திரன். இவருக்குள், சமான நாமக வாயுதேவர், மனதில் அந்தர்யாமியாக இருக்கிறார். ஸ்ரீபரமாத்மனின் குணரூபங்களை, சப்த ஸ்வரங்களால் பாடியவாறு, தும்புரு முதலான கந்தர்வர்கள் இந்திரனின் பிரசாதத்தினால் முக்தர்களாகி, வடக்கு வாசலில் நுழைந்து, அங்கு சசி இந்திர அந்தர்யாமியான ஸமான வாயுதேவரின் அந்தர்யாமியான சாந்திதேவியின் பதியான அனிருத்த ரூபத்தை உபாசனை செய்தவாறு, தம் இஷ்டத்தின்படி அங்கு சஞ்சரித்தவாறு, ஸ்வரூபானந்தத்தை அடைந்து, மகிழ்ந்திருக்கிறார்கள்.

**க$^{3}$ருட$^{3}$ ஸேஷ மரேந்த்$^{3}$ர முக$^{2}$ பு**
**ஷ்கரனெ கடெ$^{3}$யாகி$^{3}$ப்பகி$^{2}$ல நி**
**ர்ஜரரு ஊர்த்$^{4}$வத்$^{3}$வாரக$^{3}$த பா$^{4}$ரதி உதா$^{3}$னனொளு**
**மெரெவ மாயாவாஸுதே$^{3}$வன**
**பரம மங்க$^{3}$லவயவக$^{3}$ள ம**
**ந்தி$^{3}$ரவனைதி$^{3}$ ஸதா$^{3}$ முகுந்த$^{3}$ன நோடி$^{3}$ ஸுகி$^{2}$ஸுவரு ||20**

கருட சேஷ சுரேந்திரமுக = கருட, சேஷ, தேவேந்திரன் இவர்களில் துவங்கி
புஷ்கரனெ கடெயாகி = புஷ்கரன் வரைக்கும்
இப்ப = இருக்கும்
அகில நிர்ஜரரு = அனைத்து தேவதைகளும்
ஊர்த்வ த்வாரகத = மேல் வாயிலில் இருக்கும்
பாரதி உதானனொளு = பாரதி சமேதரான உதான நாமக வாயுதேவரில்
மெரெவ = ஒளிர்ந்து கொண்டிருக்கும்
மாயா வாசுதேவன = மாயாதேவியின் பதியான ஸ்ரீவாசுதேவன்
பரம மங்கல அவயவகள = மங்களங்களைக் கொண்ட அவயவங்களை
மந்திரவனு = வீட்டை
யெய்தி = அடைந்து
சதா = எப்போதும்
முகுந்தன நோடி = முகுந்தனைப் பார்த்தவாறு

சுகிசுவரு = மகிழ்ந்திருப்பர்.

மேல் வாயிலின் அதிபதி, பிரதான வாயுதேவர். இவர் உதான நாமகனாக, பத்னி சமேதமான இவரின் அந்தர்யாமி மாயாபதியான ஸ்ரீவாசுதேவன் இருக்கிறான். கிழக்கிலிருந்து துவங்கி அனைத்து திசைகளின் வாயிலில், ஜயவிஜயாதி திக்பாலகர்கள் இருக்கிறார்கள் என்று பாகவதாதி கிரந்தங்களில் சொல்லப்பட்டிருக்கிறது. ஆனால், இங்கு சூரியன், சந்திரன், அக்னி முதலானவர்கள் என்று சொல்லியிருக்கிறார். ஒன்றுக்கொன்று வேறுபாடு வருகிறதே என்றால்,

பாஞ்சராத்ர ஆகமத்தில் :

பரஸ்ய பிரம்மணஸ்தேதே புருஷா: பஞ்ச கீர்த்திதா:
த்வாபரா ஹ்ருதயெஞ்சைவ விஷ்ணுலோகே ச சர்வதா ||
அந்தஸ்ச த்வார பாஹ்யேதே ஜயாத்யா பாகத: ஸ்ம்ருதா: ||

பரபிரம்மனான ஸ்ரீமன் நாராயணனுக்கு முந்தைய பத்யங்களில் கூறியவாறு கிழக்கிலிருந்து இருக்கும் 4 திசைகளில், சூரியன், சந்திரன், அக்னி, இந்திரன் இவர்கள் நால்வரும், மேல் வாயிலில் உதான பிராணதேவர் என இந்த 5 தேவதைகளும் பரமாத்மனின் வீட்டிலும் மற்றும் இதயாகாஷத்திலும் வாயிற்காப்பாளர்களாக இருக்கின்றனர். இவர்கள் கோட்டையின் உள் வாயிலிலும், ஜயவிஜயாதிகள் கோட்டையின் வெளி வாயிலிலும் இருக்கின்றனர் என்று சொல்லியுள்ளனர். இதனால், இங்கு எவ்வித கருத்து வேறுபாடுகளும் வருவதில்லை என்பதை அறியலாம்.

கருட, சேஷ, இந்திரனில் துவங்கி, கர்மாபிமானியான புஷ்கரன் வரை உள்ள அனைத்து தேவதைகளும், முக்தர்களாக முக்தி ஸ்தானத்தை அடையவேண்டுமெனில், இத்தகைய மேலுள்ள வாயிலினால் உள்ளே நுழைந்து, அங்கிருக்கும் பிராண தேவரின் பிரசாதத்தினால், அவரில் அந்தர்யாமியாக இருக்கும் வாசுதேவ மூர்த்தியை எப்போதும் கண்ணால் பார்த்தவாறு, தம் ஸ்வரூபானந்தத்தை அனுபவித்தவாறு மகிழ்ச்சி அடைகிறார்கள்.

**த்$^3$வாரபஞ்சக பாலகரொளிஹ**
**பா$^4$ரதி ப்ராணாந்தராத்மக**
**மாரமணனைரூப தத்தத்$^3$வாரத$^3$லி ப$^3$ப்ப |**
**மூரெரடு$^3$வித$^4$ முக்தியோக்$^3$யர**
**தாரதம்யவனரிதவர கம்**
**ஸாரி ஸம்ஸாராப்$^3$தி$^4$ தா$^3$டிஸி முக்தரனு மாள்ப ||21**

த்வாரபஞ்சக = கிழக்கு தெற்கு மேற்கு வடக்கு மேலே என்னும் இந்த 5 வாயில்களின்
பாலகரொளு = த்வார பாலகர்களில்
இஹ = இருக்கிறார்
பாரதி ப்ராணாந்தரத்மக = பாரதி ரமண முக்யபிராணாந்தர்கத

மாரமணன = லட்சுமிபதியான ஸ்ரீபரமாத்மனின்
ஐரூப = ஷாந்தி, க்ருதி, ஜயா, மாயா, லட்சுமி என்னும் 5 ரூபங்களைக் கொண்ட ரமாதேவியருடன் சேர்ந்துள்ள அனிருத்த, பிரத்யும்ன, சங்கர்ஷண, வாசுதேவ, நாராயண என்னும் 5 ரூபங்கள்
தத்தத்வாரதலி = கிழக்கு முதலான அந்தந்த வாயில்களில்
பப்ப = வரும்
மூரெரடுவித = மனுஷ்யோத்தமர்கள், பித்ருகள், ரிஷிகள், கந்தர்வர்கள், கருடாதி புஷ்கரன் வரைக்குமான தேவதைகள் -

இந்த 5 விதமான
முக்தியோக்யர = முக்தி யோக்யர்களின்
தாரதம்யவனு = தாரதம்யத்தை
அரிது = அறிந்து
அவர = இந்த 5 வித முக்தியோக்யர்களை
கம்ஸாரி = கம்சனைக் கொன்றவனான ஸ்ரீகிருஷ்ணன்
சம்சாராப்தி தாடிஸி = பிறப்பு இறப்பு என்னும் சம்சார சாகரத்தை தாண்டவைத்து
முக்தரன = முக்தர்களாக
மாள்ப = செய்கிறான்

கிழக்கு தெற்கு மேற்கு வடக்கு மேலே என இருக்கும் ஐந்து உட்புற வாயில்களில், திக்பாலகர்களாக இருக்கும் சூரியன், சந்திரன், அக்னி, இந்திரன், பிரதான வாயு என இந்த 5 த்வாரபாலகர்களின் அந்தர்யாமியாக இருக்கும் வாயுதேவர், பிராண, அபான, வ்யான, உதான, சமான என்னும் 5 ரூபங்களால் இருக்கிறார். இவரின் மனைவியான பாரதிதேவியும் 5 ரூபங்களில் இருக்கிறார்.

ப்ருதிவி நாமிகா ஸ்ரேஸ்து த்யௌர் திஷோவித்யு தேவச |
வாயுபத்னீ ஸமுத்திஷ்டா தத்தத்வாராதி பாஸ்சதா: ||

ப்ருத்விதேவி, ஸ்ரீதேவி, த்யுதேவி, திக்தேவி, வித்யுத்தேவி என்று பாரதி தேவிக்கு 5 ரூபங்கள் இருக்கின்றன. இவர் பிராண, அபானாதி வாயுதேவரின் 5 ரூபங்களுக்கும் மனைவியராகி, தம் பதியுடன் சேர்ந்து அந்தந்த வாயில்களில் இருக்கின்றனர் என்று சாந்தோக்ய பாஷ்யத்தில் சொல்லியிருக்கின்றனர்.

இந்த பஞ்சரூபியான பிராணதேவரின் அந்தர்யாமியான பரமாத்மன், நாராயண, வாசுதேவ, சங்கர்ஷண, பிரத்யும்ன, அனிருத்த என்னும் 5 ரூபங்களால் லட்சுமி, மாயா, ஜயா, க்ருதி, ஷாந்தி என்னும் 5 ரூபங்கள் உள்ள லட்சுமிதேவியுடன் சேர்ந்து, கிழக்கு வாயிலிலிருந்து தொடங்கி வரும் மனுஷ்யோத்தமர்கள், பித்ருகணர்கள், ரிஷிகணர்கள், கந்தர்வர், தேவதைகள் என்னும் 5 வித முக்தியோக்யர்களை அவரவர்களின் தாரதம்யத்தை அறிந்து, கம்சாரியான ஸ்ரீஹரி, சம்சார சமுத்திரத்திலிருந்து அவர்களை தாண்ட வைத்து, அவரவரின் யோக்யதைக்கேற்ப முக்தியில் அவர்களுக்கு ஸ்வரூப சுகத்தைக் கொடுக்கிறார்.

கம்சாரி என்றால், கம்சனைக் கொன்ற கிருஷ்ண ரூபத்தினாலேயே முக்தியைக் கொடுக்கிறான் என்று அர்த்தம் அல்ல. ‘கஸிஹிம்ஸாயா மிதிதாதோ: கம்ஸ:’ - முக்தி மார்க்கத்திற்கு தடையாக இருந்து, தர்மத்தைக் கெடுப்பது சம்சார வாழ்க்கை. இதற்கு கம்ச என்றும் பெயர் உண்டு. இத்தகைய சம்சாரத்தை அழிப்பவனான ஸ்ரீஹரி என்பது கருத்து.

**பெ$^{3}$ளகி$^{3}$த்$^{3}$ஹூஜியு நோள்பரிகெ$^{3}$ த$^{2}$ள**
**த$^{2}$ளிஸூதலி கங்கொ$^{3}$ளிஸூவந்த$^{3}$தி$^{3}$**
**தொளெது$^{3}$ தே$^{3}$ஹவ நாம முத்$^{3}$ரெக$^{3}$ளிந்த$^{3}$லங்கரிஸி |**
**ஒலிஸி நித்ய குதர்க்க யுக்திக$^{3}$**
**ளலவ போ$^{4}$த$^{4}$ர ஷாஸ்த்ர மர்மவ**
**திளியதி$^{3}$ஹ நர ப$^{3}$ரிதெ$^{3}$ இத$^{3}$ரொளு ஷங்கிஸித$^{3}$ரேனு ||22**

பெளகித = நன்றாக கழுவிய
ஹூஜியு = சிறிய கழுத்துள்ள பாத்திரம் (சொம்பு)
நோள்பரிகெ = அதை பார்ப்பவர்களுக்கு
தளிதளிஸூதலி கங்கொளிஸூவந்ததி = பளபள என்று ஒளிர்வதைப் போல
தேஹவ = சரீரத்தை
தொளெது = சுத்தம் செய்து
நாம முத்ரெகளிந்த = 12 நாமங்கள், முத்ரைகளால்
அலங்கரிஸி = அதனை அலங்கரித்து
நித்ய குதர்க்க யுக்திகள = ஸ்ருதி ஸ்ம்ருதிகளை பின்பற்றாமல் வெறும் தந்திரங்களால் ஊகிக்கும் கு-தர்க்கத்தை
ஒலிஸி = படித்து
அலவபோதர = ஸ்ரீ பூர்ணப்ரக்ஞரின் (ஸ்ரீமன் மத்வாசார்யரின்)
சாஸ்த்ர மர்மவ = சர்வமூல கிரந்தங்களின் உள் அர்த்தத்தை
திளியதிஹ = அறியாத
நர = மனிதன்
பரிதெ = பிரயோஜனம் இல்லாமல்
இதரொளு = இந்த கிரந்தத்தில்
ஷங்கிஸிதரேனு = சந்தேகப்பட்டால்
ஏனு = என்ன பிரயோஜனம்?

சிறிய வாயுள்ள சொம்பினை, நன்றாக சுத்தமாகக் கழுவி, அதற்குள் குப்பைகளை நிரப்பி வைத்தால், வெளியே பார்ப்பவர்களுக்கு அது பளபளவென்று ஒளிரும் சொம்பாக தெரியுமே தவிர, உள்ளே என்ன உள்ளது என்பது தெரியாது.

அது போலவே, நன்றாக குளித்து, 12 நாமங்களை உடம்பெங்கும் தரித்து, பெரிய பண்டிதர் என்று புகழடைந்து, தந்திரமான குதர்க்க சாஸ்திரங்களின் உதவியுடன், (அதாவது; ஸ்ருதி முதலான சாஸ்திரங்களை அனுசரிக்காமல், சொல்லும் தர்க்கத்திற்கு, குதர்க்கம் என்று பெயர்), பெயர் பெற்று, ஸ்ரீமன் மத்வ சாஸ்திரத்தின்

மர்மங்களையே அறியாதிருப்பவன், இந்த கிரந்தத்தின் மேல் ஆட்சேபணை செய்தால் என்ன பயன்?

இந்த கிரந்தத்தின் யோக்யதை, பகவத்பக்தர்களுக்கு தெரியுமே தவிர, உள்ளே பக்தி இல்லாமல், வெளியே மட்டும் வேடம் தரித்து பண்டிதர் என்னும் பெயருள்ள தர்க்கம் செய்பவர்களுக்கு என்றும் இது புரியாது. சொம்பின் உவமை எதற்குக் கொடுத்திருக்கிறார் என்றால், சொம்பின் மேல் பாகத்தினை சுலபமாக சுத்தம் செய்துவிடலாம். உள்ளே கை போகாததால், சுத்தம் செய்வது கடினம் ஆகும். அப்படியே உள்ளே அசிங்கத்தை வைத்துக்கொண்டு, தேகத்தை மட்டும் நன்றாக சுத்தம் செய்து, அலங்கரித்துக் கொண்டால், உள்ளே இருக்கும் அசிங்கம் போய்விடுமா? உள்ளே சுத்தமானவனாக ஆகவேண்டுமெனில், பக்தியுடன் பகவத் அனுக்கிரகத்தை சம்பாதித்தால் மட்டுமே முடியும். அத்தகைய பக்தர்கள், என்றும் இந்த கிரந்தத்தை புறக்கணிக்க மாட்டார்கள் என்பது கருத்து.

**உத$^{3}$தி$^{4}$யொளகூ$^{3}$ர்மிக$^{3}$ளு தோர்ப**
**ந்த$^{3}$த$^{3}$லி ஹம்ஸோத்$^{3}$கீ$^{3}$த$^{2}$ ஹரி ஹய**
**வத$^{3}$ன க்ருஷ்ணாத்$^{3}$யமித அவதாரக$^{3}$ளு நித்யத$^{3}$லி ।**
**பது$^{3}$மனாப$^{4}$னொ ளிருதிஹவு ஸ**
**ர்வத$^{3}$ ஸமஸ்த ப்ராணிக$^{3}$ள சி**
**த் ஹ்ருத$^{3}$யக$^{3}$த ரூபக$^{3}$ளு அவ்யவதா$^{3}$னத$^{3}$லி பி$^{3}$ட$^{3}$தெ$^{3}$ ||23**

உததியொளகெ = கடலில்
ஊர்மிகளு = அலைகள்
தோர்ப்பந்ததலி = வெவ்வேறாக தெரிவதைப் போல
ஹம்ஸ, உத்கீத, ஹரி, ஹயவதன, கிருஷ்ணாதி = இவை முதலான ரூபங்கள்
அமிதன அவதாரகளு = எண்ணிக்கை இல்லாத குணரூபங்கள் உள்ள ஸ்ரீபரமாத்மனின் அவதாரங்கள்
நித்யதலி = தினந்தோறும்
சமஸ்த பிராணிகள = அனைத்து பிராணிகளின்
சித்ஹ்ருதயகத = ஸ்வரூப தேகத்தின் ஹ்ருதயாகாஷத்தில் இருக்கும்
ரூபகளு = ரூபங்கள்
பிடதெ = விடாமல் (அனைத்து ரூபங்களும் சேர்ந்து)
அவ்யவதானதலி = ஒன்றுக்கொன்று சம்பந்தப்பட்டு
சர்வதா = எப்போதும்
பத்பனாபனொளு = மூலரூபியான பத்பனாப மூர்த்தியில்
இருதிஹவு = இருக்கின்றன.

கடல் அலைகளைப் பார்க்கும்போது அவை தனித்தனியாக வந்து விழுவதைப் போல இருந்தாலும், அவற்றை கடலிலிருந்து வேறுபடுத்தி பார்க்கமுடியாது. அகண்டமான கடல் நீரே கண்டரூபத்தில் அலைகளாக வருகிறது. இந்த கடலுக்கும், அலைகளுக்கும் வேறுபாடு இல்லை. அப்படியே, மூலரூபமான பத்பனாப ரூபத்திலிருந்து ஹம்ஸ, ஹரி, ஹயக்ரீவ, ராம, கிருஷ்ணாதி ரூபங்கள்,

கடலிலிருந்து அலைகள் வருவதைப்போல புறப்பட்டு வருகின்றன. அந்த அலைகள் மறுபடி கடலிலேயே போய் சேர்கின்றன. அதைப்போல, ராமகிருஷ்ணாதி ரூபங்களும்கூட பத்பனாப மூர்த்தியிலேயே போய் சேர்கின்றன.

மற்றும் அனைத்து பிராணிகளின் ஸ்வரூப தேகத்தின் ஹ்ருதயாகாஷத்தில் ஒளிரும் அனந்தானந்த ரூபங்களும், பத்பனாப ரூபத்திலேயே இருக்கின்றன.

பாகவத 1ம் ஸ்கந்தம் 3ம் அத்தியாயத்தில்:
ஏதன்னானவதாராணாம் நிதானம் பீஜமவ்யயம் |
யஸ்யாம்ஷேன ஸ்ருஜ்யந்தே தேவதிர்யங்யனராதம: ||

இந்த பத்பனாப ரூபமே, பற்பல மத்ஸ்ய, கூர்மாதி அனைத்து அவதாரங்களுக்கும் மூலமாகும்.

நிதானம் = அந்ததோத்ர ஸர்வாவதாரானி தீயந்தே ஏகேக்ரியந்த இதி நிதானம் ||

இறுதியில் அனைத்து ரூபங்களும் இந்த ரூபத்திலேயே ஐக்கியம் ஆவதால், அதற்கு அவ்யய என்று பெயர். இந்த பத்பனாப தேவரின் சாமர்த்தியத்தாலேயே தேவதைகள், தானவர், மானவர் என அனைத்து பிராணிகளும் பிறந்தனர் என்று சொல்லப்பட்டிருக்கிறது.

அவதாராஹ்ய ஸங்க்யேயா: ஹரே:ஸர்வ நிதீர்த்வஜா: |
யதாவிதாஸின: குல்யா: ஸரஸஸ்யு: ஸஹஸ்ரஸ: ||
ருஷயே மானவோதேவா மனுச்புத்ராமஹௌஜஸ: |
கலா: ஸர்வேஹரெரேவ ஸப்ரஜா பதய:ஸ்ம்ருதா: ||

சத்வ நிதியான பரமாத்மனின் அவதாரங்களை எண்ணுவது யாருக்கும் சாத்தியமில்லை. உயரமான இடத்திலிருந்து விழும் நீர் எப்படி ஆறாக பாய்கின்றதோ, அந்த ஆறுகளிலிருந்து எப்படி கால்வாய்கள் தோன்றுகின்றனவோ, அப்படியே, பகவத்ரூபங்களும் எண்ணில் அடங்காதவையாகும்.

இதுமட்டுமல்லாமல், ரிஷிகள், மனுகள், தேவதைகள், மனுபுத்ரர்கள், இவர் அனைவரும் பரமாத்மனின் பின்ன-அம்சர்கள் என்று சொல்லியிருக்கிறார்கள். இப்படியே,

* ஸ்வாம்ஷ ரூபங்கள்,
* பின்னாம்ஷ ரூபங்கள்
* பிம்ப ரூபங்கள்
* அந்தர்யாமி ரூபங்கள்

கடல் அலைகள் எப்படி கடலை விட்டு இருப்பதில்லையோ, அதுபோல, இவையும் பகவத்ரூபங்களே ஆகின்றன. இவை அனைத்தும் பத்பனாப ரூபத்திலேயே போய் சேர்கின்றன.

**ஷரதி4யொளு மகராதி3 ஜீவரு**
**இருளு ஹக3லேக ப்ரகாரதி3**
**சரிஸுதனு மோதி3ஸுதலிப்பந்த3தி3 ஜக3த்ரயவு**
**இருதிஹுது ஜக3தீஷனுத3ரதி3**
**கரெஸுவுது3 ப்ரதிபி3ம்ப3னாமதி3**
**த4ரிஸிஹுது3 ஹரிநாம ரூபங்க3ளனு அனவரத ||24**

ஷரதியொளு = கடலில்
மகராதி = முதலை முதலான
ஜீவரு = ஜீவர்கள்
இருளு ஹகலு = இரவும் பகலும்
ஏக ப்ரகாரதி = ஒரே மாதிரியாக
சரிஸுத = சஞ்சரித்தவாறு
அனுமோதிஸுத = மகிழ்ந்தவாறு
இப்பந்ததி = இருப்பதைப் போல
ஜகத்ரயவு = மூன்று உலகங்களும்
ஜகதீஷன உதரதி = பரமாத்மனின் வயிற்றில்
இருதிஹுது = இருக்கின்றன
மத்து ப்ரதிபிம்பனாமதி = பிரதிபிம்ப என்னும் பெயரில்
கரெஸுவுது = அழைத்துக் கொள்கிறான்
அனவரத = எப்போதும்
ஹரிநாம ரூபங்கள = ஸ்ரீஹரியின் நாம ரூபங்களை
தரிஸிஹவு = பெற்றிருக்கிறது.

கடலில், மீன், முதலை ஆகிய அனந்தானந்த ஜீவராசிகள், இரவும் பகலும் ஒரே மாதிரியாக சஞ்சரித்தவாறு, தத்தம் குழுவினருடன் மகிழ்ந்திருப்பதைப் போல, இந்த மூன்று உலகமும் பரமாத்மனின் பிரதிபிம்பம் என்று அழைத்துக் கொண்டு, நானாவிதமான ரூப நாம பேதங்களால் பரமாத்மனின் அம்ஷராசிரூபங்கள் ஸ்ரீபரமாத்மனின் வயிற்றில் ஒளிர்ந்து கொண்டிருக்கின்றன.

**ஜனனி ஸௌஷ்ட பதா3ர்த்த2க3ள போ4**
**ஜனவ மாட3லு க3ர்ப்ப4க3த ஷிஷு**
**தி3னதி3னதி3 அபி4வ்ருத்தி3 ஐது3வ தெரதி3 ஜீவரிகெ3 |**
**வனஜனாப4னு ஸர்வரஸ உ**
**ண்டு3ணிஸி ஸம்ரக்ஷிஸுவ ஜான்ஹவி**
**ஜனக ஜன்மாத்யகி2ல தோ3ஷவிதூ3ர க3ம்பீ4ர ||25**

ஜனனி = கர்ப்பிணியான தாய்
சௌஷ்ட பதார்த்தகள = சுவையான பதார்த்தங்களை
போஜனவ மாடலு = உண்டால்
கர்ப்பகத சிசு = கர்ப்பத்தில் இருக்கும் குழந்தை
அபிவ்ருத்தி ஐதுவ தெரதி = வளர்ந்து வருவதைப் போல

ஜான்ஹவி ஜனக = கங்கையைப் பெற்ற
ஜன்மாத்யகிள தோஷ விதூர = பிறப்பு முதலான எவ்வித தோஷங்களும் அற்றவனான
கம்பீர = கம்பீர குணங்களைக் கொண்ட
வனஜனாபனு = கமலனாபன்
சர்வ ரஸ = அனைத்து பதார்த்தங்களின் ரசத்தையும்
உண்டு = ஏற்றுக்கொண்டு
உணிஸி = ஜீவர்களுக்குக் கொடுத்து
சம்ரக்ஷிசுவ = காப்பாற்றுகிறான்.

கர்ப்பிணியானவள், நல்ல சத்துள்ள உணவுகளை உண்டால், அந்த சாரமானது, அவளின் நாபியிலிருந்து வரும் நாடியின் மூலமாக அவளின் கர்ப்பத்தில் இருக்கும் குழந்தையின் வயிற்றில் சென்று சேர்ந்து, அந்த குழந்தை நன்றாக வளர்ந்து வருகிறது. அதைப்போலவே, பூமியில் இருக்கும் அனைத்து விதமான போஜ்ய பதார்த்தங்களின் சாறினையும் தான் ஸ்வீகரித்து, ஜீவர்களுக்கு அதை உண்ணவைத்து அவர்களை காப்பாற்றுகிறான். பரமாத்மன், அந்த சாரத்தை, தன் வயிற்றை நிரப்பிக் கொள்வதற்காக தான் ஏற்றுக்கொள்வதில்லை. ஏனெனில், அவனின் அருளுக்கு பாத்திரர்களான தேவதைகளுக்கே பசி, தாகம் ஆகியவை இல்லை. அப்படியிருக்கையில், பரமாத்மனுக்கு தாகம் ஏற்படுவது எப்படி? பசி எப்படி வரும்?

ஜான்ஹவி ஜனக, ஜன்மாத்யகிள தோஷவிதூர என்னும் இரு சொற்களின் மூலம் பரமாத்மனுக்கு பசி, தாகம் ஆகியவை இல்லை என்று தாசராயர் குறிப்பிடுகிறார். கங்காஜனக = கங்கையை தன் பாதங்களிலிருந்து ஸ்ருஷ்டித்தவனுக்கு தாகம் ஏற்படாது என்பதை சொல்கிறார். ஜன்மாத்யகிள தோஷவிதூர = இந்த பூமியில் பிறந்தவர்களுக்கு வயிற்றை நிரப்பிக்கொண்டு, தேகத்தை வளர்க்க வேண்டும் என்னும் ஆசை இருக்கிறது. மற்றும் மரண பயமும் இருக்கிறது.

ஆனால், பகவந்தனுக்கு பிறப்பு, இறப்பு ஆகிய தோஷங்களே இல்லை என்றபிறகு, ஆசையும் இல்லை என்றே சொல்லவேண்டும். ஆகையால், கருணையுடன் ஜீவர்களை காப்பதற்காக, தான் ரசங்களை உண்டு, ஜீவர்களுக்கு அதை உண்ணவைத்து பார்க்கிறானே தவிர, அதனால் அவனுக்கு எவ்வித பிரயோஜனமும் இல்லை.

கர்ப்பிணி உண்ணும் உணவினால் மட்டுமே வயிற்றில் இருக்கும் குழந்தை உண்ணமுடியும். இதனாலேயே அக்குழந்தை திருப்தி அடைகிறது. இதைத்தவிர அக்குழந்தையை உண்ணவைக்க வேறு வழி எதுவும் இல்லை. அதுபோலவே, பிரதிபிம்பனுக்கு திருப்தி ஆகவேண்டுமெனில், பிம்பன் உண்டால்தான் முடியும். ஆகவே பரமாத்மன், பிம்பக்ரியைகளால் அனைத்தையும் தான் உண்டு, பின் அவற்றை ஜீவர்களால் உண்ண வைக்கிறான்.

**ஆஸெகொ[3]ளகா[3]த[3]வனு ஜனரிகெ[3]**

**தா$^{3}$ஸனெனிஸுவனாஸெயனு நிஜ**
**தா$^{3}$ஸிகை$^{3}$தி$^{3}$ஹ பும்ஸரெல்லரு தா$^{3}$ஸரெனிஸுவரு ।**
**ஸ்ரீஷனங்க்$^{4}$ரி ஸரோஜயுக$^{3}$ள நி**
**ராஸெயிந்த$^{3}$லி ப$^{4}$ஜிஸெ ஓலிது$^{3}$ ர**
**மாஸஹித தன்னனெ கொடு$^{3}$வ கருணாஸமுத்$^{3}$ர ஹரி ।।26**

ஆசெகெ = தனக்கு இது வேண்டும் அது வேண்டும் என்னும் ஆசைக்கு
ஔகாதவனு = மயங்கியவன்
ஜனரிகெ தாசனெனிசுவனு = மற்றவர்களுக்கு அடிமையாக இருப்பான்
ஆஷெயனு = இத்தகைய ஆசையை
நிஜ தாசகைதிஹ = தன் தாசனாக மாற்றிக்கொண்ட
பும்ஸகெ = புருஷனுக்கு
எல்லரு = உலக மக்கள் அனைவரும்
தாசரெனிஸுவரு = அதீனராகி இருப்பர்
ஸ்ரீஷனங்க்ரி ஸரோஜயுகள = லட்சுமிபதியான ஸ்ரீஹரியின் பாத கமலங்களை
நிராசெயிந்தலி = எவ்வித பிரதிபலனும் எதிர்பார்க்காமல்
பஜிஸெ = துதித்து
கருணாசமுத்ர = கருணைக்கடலான
ஹரி = ஸ்ரீஹரி
ரமாஸஹித = லட்சுமிதேவியுடன்
தன்னனெ = தன் ரூபத்தையே
கொடுவ = கொடுப்பான் (அபரோக்ஷத்தில் தரிசனம் கொடுப்பான், முக்தியில் தன் தேகத்தில் இடம் கொடுப்பான்).

நிஸ்ப்ருஹஸ்ய த்ருணம் ஜகத் - உலகத்தில் எவ்வித பதார்த்தங்களிலும் ஒருவனுக்கு ஆசை இல்லையெனில், அவனுக்கு மகாராஜாவிடமிருந்தும் ஆவது என்ன?

ஆஷானாமஹி லோகேஸ்மின் காசிதாஷ்சர்ய ஸ்ருங்கலா ।
யயாபத்தா: ப்ரதாவந்தி முக்தாஸ்திஷ்டந்தி பங்குவத் ।।

ஆசை என்பது ஒருவனுக்கு காலில் கட்டிய சங்கிலியைப் போன்றதாகும். ஏனெனில், கட்டியவுடன் அவனுக்கு கால் இருந்தாலும், அவன் எங்கும் போகாமல் அமர்ந்து விடுவான். அந்த சங்கிலியை அவிழ்த்தவுடன், மிகவும் மகிழ்ச்சியுடன் ஓடிவிடுவான்.

ஆசையும் அப்படியே. ஆசைக்கு மயங்கியவன், கண்டவர்களுக்கு தாசனாகி, அவர்களிடம் வேண்டி, தன் ஆசை பூர்த்தி ஆகாமல் கஷ்டப்படுவான். யார் ஒருவனுக்கு ஆசையே இல்லையோ, அந்த ஆசையை அவன் தன் தாசனாக ஆக்கிக் கொள்வான். இவன் சொல்வதைப்போல அந்த ஆசை கேட்குமே தவிர, தான் ஆசைக்கு அடிமை ஆகமாட்டான். ஆசையை விட்டவன் எவனோ, அவனுக்கு இந்த உலகத்தில் எதனாலும், யாராலும் ஆவதென்ன? உலகத்தில் இருக்கும்

அனைத்தும் கிருமி போன்றதே. ஆகையால், இத்தகைய ஆசையை விட்டு, எவ்வித பலன்களையும் எதிர்பாராமல், பரமாத்மனை வேண்டினால், கருணைக்கடலான ஸ்ரீஹரி ரமா சமேதனாகி, தானே தரிசனம் அளித்து, தன்னையே கொடுக்கிறான்.

பாண்டவர்களுக்கு ஸ்ரீகிருஷ்ணன் தானே தாசனாக ஆகவில்லையா? பலிசக்ரவர்த்தியின் வீட்டில் வாமன ரூபத்தினால் தானே வீட்டை பாதுகாத்திருந்தான். அப்படியே, நிஷ்காம பக்தர்களுக்கு தரிசனம் அளித்து, இஹபரங்களில் அனைத்து விதங்களிலும் அவர்களுக்கு அருள்கிறான்.

**த்3யுனதி3யாத்3யந்தவனு காணதெ3**
**மனுஜனேகத்ரத3லி தா ம**
**ஜ்ஜனவகை3து3 ஸமஸ்த தோ3ஷதி3 முக்தனஹுதெரதி3 ।**
**அனக4ன மலானந்தனந்த ஸு**
**கு3ணக3ளொளகொ3ந்தெ3 கு3ணத3 உபா**
**ஸனவகை3வ மஹாத்ம த4ன்ய க்ருதார்த்தனெனிஸுவனு ||27**

மனுஜனு = மனிதன்
த்யுனதிய = கங்கையின்
ஆத்யந்தவனு = ஆதி, அந்தத்தை
காணதே = பார்க்கமுடியாமல்
ஏகத்ரதலி = ஒரே இடத்தில்
தா = தான்
மஜ்ஜனவ = ஸ்னானத்தை
கைஸி = செய்ய
சமஸ்ததோஷதி = எல்லா தோஷங்களில் இருந்தும்
முக்தனஹுதெரதி = முக்தன் ஆவதைப்போல
அனகன = தோஷங்கள் இல்லாதவனான பரமாத்மனின்
அமல = நிர்மலமான
அனந்தானந்த = எண்ணிக்கையில் அடங்காத
சுகுணகளொளகெ = நற்குணங்களில்
ஒன்றே குணத உபாசனவகைவ = ஒரேயொரு குணத்தை உபாசனை செய்தால்
மஹாத்ம = மகாத்மன்
தன்ய = தன்யன் எனப்படுகிறான்.

கங்கையின் ஆதி, அந்தத்தை காண முற்படாமல், பக்தியுடன் ஏதோ ஒரு இடத்தில் ஸ்னானம் செய்பவர், அனைத்து பாவங்களிலிருந்து முக்தர் ஆகின்றனர். கங்கையின் மஹாத்ம்ய ஞானம் ஒன்றிருந்தால் போதும். அதன் ஆதி, அந்தம் அறியவேண்டியது அவசியம் இல்லை.

அதுபோலவே, தோஷங்கள் அற்றவனான பரமாத்மனின் அனந்தானந்த குணங்களில் ஒரு குணத்தின் மிகச்சிறிய பாகத்தையாவது அறிந்து, அதனை

பக்தியுடன் உபாசனை செய்தால், அவனே தன்யன் ஆகிறான். க்ருதார்த்தன் என்று உலகில் புகழ்பெறுகிறான்.

**வாஸுதே$^{3}$வனு கரெஸுவனு கா**
**ர்ப்பாஸனாமதி$^{3}$ ஸங்கருஷணனு**
**வாஸவாகி$^{3}$ஹ தூலதொ$^{3}$ளு தந்துக$^{3}$னு ப்ரத்$^{3}$யும்ன ।**
**வாஸரூபனிருத்$^{3}$த$^{4}$ தே$^{3}$வனு**
**பூ$^{4}$ஷணனு தானாகி$^{3}$ தோர்ப்ப ப**
**ரேஷ நாராயணனு ஸர்வத$^{3}$ மான்ய மானத$^{3}$னு ।।28**

வாசுதேவனு = வாசுதேவ நாமக ஸ்ரீபரமாத்மன்
கார்ப்பாஸனாமதி = பஞ்சு (விதைகளைக் கொண்ட) என்னும் பெயரில்
கரெசுவனு = அழைத்துக் கொண்டு
சங்கர்ஷணன்
தூலதொளு = பஞ்சு (விதைகள் இல்லாதவை)
வாஸவாகிஹ = வசிக்கிறான்.
ப்ரத்யும்ன,
தந்துகனு = நூல்களில்
அனிருத்த தேவன்,
வாஸரூபனு = வஸ்திர ரூபமாக
தோர்ப்ப = தோன்றுகிறான்.
பரேஷ நாராயணனு = நாராயணரூபி பரமாத்மன்
ஸர்வதாமான்ய = பூஜ்யனாகவும்
மான்ய மானதனு = மரியாதை கொடுத்தும், மரியாதை பெற்றுக்கொண்டும்
பூஷணனு தானாகி = அலங்கரிக்கப்பட்டவனாக இருக்கிறான்.

* வாசுதேவன், பஞ்சு என்னும் பெயரில், (விதைகளைக் கொண்ட) பஞ்சில் இருக்கிறான்.
* சங்கர்ஷணன் விதைகளைப் பிரித்த பஞ்சில் அந்தப் பெயரில் இருக்கிறான்.
* பிரத்யும்னன், நூல்களில், தார என்னும் பெயரில் இருக்கிறான்.
* அனிருத்தன், வஸ்திர ரூபத்தினால், வஸ்திர என்னும் பெயரில் வஸ்திரத்தில் இருக்கிறான்.
* அலங்காரங்களில் முக்கியமானது வஸ்திரம் என்று அறிவோம். அத்தகைய பூஷண ஸ்தானத்தில் பரேஷனான ஸ்ரீமன் நாராயணன் இருக்கிறான்.

இப்படியாக அனுசந்தானத்துடன் வஸ்திரத்தை அணிந்தால், அவன் தன்யன் ஆகிறான். வஸ்திரத்தை தரிப்பவனில் இருந்து, அனைவராலும் புகழப்படுவான். அதே நாராயணனே, பார்ப்பவர்களில் இருந்து, மரியாதையைக் கொடுக்கிறான்.

**லலனெயிந்$^{3}$தொ$^{3}$ட$^{3}$கூடி$^{3}$ சைலக$^{3}$**
**ளொளகெ$^{3}$ ஓதப்ரோத ரூபதி$^{3}$**
**நெலெஸிஹனு சதுராத்மக ஜக$^{3}$ன்னாத$^{2}$ விட்டலனு ।**

**சளி பி3ஸிலு மளெ கா3ளியெந்த3ரெ**
**க4ளிகெ3 பி3ட3த3லெ காவனெந்த3ரி**
**தி3ளெயொளர்ச்சிஸுதிரு ஸதா3 ஸர்வாந்தராத்மகன ||29**

சதுராத்மக = அனிருத்த, பிரத்யும்ன, சங்கர்ஷண, வாசுதேவ என்னும் 4 ரூபங்களைக் கொண்ட
ஜகன்னாதவிட்டலனு = தாசராயரின் பிம்பமூர்த்தியான ஜகன்னாத விட்டல என்னும் ஸ்ரீ நாராயணன்
லலனெயிந்தொடகூடி = தன் மனைவியுடன் சேர்ந்து
சீலகளொளகெ = வஸ்திரங்களில்
ஓதப்ரோத ரூபதி = குறுக்கும் நெடுக்குமாக நூல்களாக
நெலெஸிஹனு = நிலைத்திருக்கிறான்.
சளி பிசிலு மளெ காளி எந்து = குளிர், வெயில், மழை, காற்று என்று ஏதோ ஒரு காரணத்தாலும்
அரெ களிகெ பிடதலெ = அரை நாழிகைகூட விடாமல்
காவனெந்து = காக்கிறான் என்று
அரிது = அறிந்து
இளெயொளு = பூமியில்
ஸதா = எப்போதும்
ஸர்வாந்தராத்மகன = அனைவரிலும் அந்தர்யாமியாக ஸ்ரீபரமத்மனை
அர்ச்சிஸுதிரு = பூஜித்திரு.

அனிருத்த, பிரத்யும்ன, சங்கர்ஷண, வாசுதேவ எனும் 4 மூர்த்திகளின் ஸ்வரூபபூதனான ஜகன்னாத விட்டலாத்மக ஸ்ரீமன் நாராயணன், வஸ்திரங்களில் குறுக்கும் நெடுக்குமாக ஓடும் நூல்களின் ரூபத்தில் இருந்து, குளிர், வெயில், மழை, காற்று என என்ன வந்தாலும், அரை நாழிகையும் விடாமல், எப்போதும் நம்மை காக்கிறான் என்று அறிந்து அவனை வணங்கிக் கொண்டிரு. அந்த நூல்களைப் போலவே பரமாத்மனின் ரூபங்களும், நம் சரீரத்தில் உள்ளேயும் வெளியேயும் சேர்ந்து கொண்டிருக்கிறது என்பது கருத்து.

ஸ்வாச சந்தி என்னும் 15ம் சந்தியின் தாத்பர்யம் இத்துடன் முடிவுற்றது.
ஸ்ரீகிருஷ்ணார்ப்பணமஸ்து.

***

## பாவபிரகாசிகை : சந்தி 16 : தத்த ஸ்வாதந்த்ர்ய சந்தி

**ஹரிகதா2ம்ருதசார கு3ருக3ள**
**கருணதிந்தா3பநிது பே1ளுவே**
**பரம ப4கவத்3ப4க்தரித3னாத3ரதி3 கேளுவுது3**

சந்தி அறிமுகம்:

ஜீவனுக்கு கர்த்ருத்வமே இல்லையென்றால், புண்ய பாபங்களின் பலனும் அவனுக்கு கிடைக்காது என்றாகிறது. கர்த்ருத்வ இருக்கிறது என்று சொன்னால், சர்வ கர்த்ரு விஷ்ணு என்னும் வாக்கியத்திற்கு விரோதம் வருகிறது. இப்படிப்பட்ட சந்தேகங்களைப் போக்குவதற்காக பரமாத்மன் ஜீவருக்குக் கொடுத்திருக்கும் மிகச்சிறிய தத்த ஸ்வாதந்த்ரயத்தால் 'ஜீவோபி கர்த்தா' என்று பிரம்மசூத்ர பாஷ்யத்தில் சொன்னதைப்போல, ஜீவனுக்கு பராதீன கர்த்ருத்வம் உண்டு என்று சொல்லியவாறு, அதற்கு சம்பந்தமான சில விஷயங்களை இந்த சந்தியில் குறிப்பிடுகிறார்.

**காருணிக ஹறி தன்னொளிப்ப அ**
**பார ஸ்வாதந்த்ரிய கு$^3$ணதி$^3$ நா**
**நூரு தெகெ$^3$து$^3$ ஸபாத$^3$ ஆரொந்த$^3$தி$^4$க அரவத்து ।**
**நாரிகி$^3$த்து த்$^3$வி ஷோடஷாதி$^4$க**
**ணூரு பாத$^3$த்ரயவ தன்ன ஷ**
**ரீரதொ$^3$ளகீ$^3$பரி விபா$^3$க$^3$வ மாட்$^3$த$^3$ த்ரிபதா$^3$ஹ்வ ||1**

காருணிக = கருணாளுவான
ஹறி = ஸ்ரீபரமாத்மன்
தன்னொளிப்ப = தன்னில் இருக்கும்
அபார ஸ்வாதந்த்ரயகுணதி = அபரிமித ஸ்வாதந்த்ர்ய குணங்களில்
நானூரு தெகெது = 400 எடுத்து
ஆரொந்ததிக அரவத்து = 6+1=7; 60.
ஸபாத = கால் (1/4).
நாரிகித்த = தன் மனைவியான ஸ்ரீலட்சுமிதேவிக்குக் கொடுத்தான் (60+7+1/4 = 67 1/4)
த்விஷோடஷாதிக நூரு பாதத்ரயவ = 2*16=32 ; 100 ; 3/4. (மொத்தம் 132 3/4)
தன்ன ஷரீரதொளகெ = உலகத்தில் கர்மங்களை செய்வதற்கு தேவையான அளவு, தன் தேகத்தில் வைத்துக் கொண்டான்
த்ரிபதாஹ்வா = ஸ்ருஷ்டி, ஸ்திதி, சம்ஹார என்னும் மூன்று அம்சங்களால் உலகத்தை வியாபித்துக் கொண்டிருப்பதால், த்ரிபாத நாமகனான ஸ்ரீஹரி
ஈ பரி = மேற்சொன்ன ரீதியாகி
விபாகவ மாட்த = பிரித்துக் கொடுத்தான்.

மஹா கருணாளுவான ஸ்ரீபரமாத்மன், தனக்குள் இருக்கும் அபரிமிதமான ஸ்வாதந்த்ர்ய குணங்களில், ஸ்ருஷ்ட்யாதி உலக வியாபாரங்களை செய்வதற்காக 400 பாக ஸ்வதந்த்ரத்தை மட்டும் வேறாக எடுத்து, அதில் 67ஏ கால் (67 1/4) பாகங்களை லட்சுமிதேவியருக்குக் கொடுத்தான். 132ஏ முக்கால் (132 3/4) பாகங்களை தான் வைத்துக் கொண்டான். இப்படியாக அந்த 400 பாகங்களில் 200 பாகங்களை லட்சுமி நாராயணர்கள் வைத்துக்கொண்டு, மிச்ச 200 பாகங்களை பிரம்மதேவரே முதலான அனைத்து பிராணிகளுக்கும் பிரித்துக் கொடுத்தனர்.

ஒரு மனிதன் மிகச்சிறியதான ஒரு வேலையை செய்யவேண்டுமெனில், தன்னில் இருக்கும் எந்தவொரு சக்தியையும் பயன்படுத்தத் தேவையில்லை. தன் தகுதிக்கு மீறிய வேலையை செய்ய வேண்டும் என்றால் மட்டுமே, தன்னில் இருக்கும் அனைத்து சக்தியையும் பயன்படுத்துகிறான். அப்படியே ஸ்ரீபரமாத்மனுக்கு, இந்த உலகத்து ஸ்ருஷ்டி, ஸ்திதி, சம்ஹார, நியமன, ஞான, அஞ்ஞான, பந்த, மோட்ச என்னும் அஷ்ட கர்த்ருத்வ காரியத்தை தான் செய்யவேண்டுமெனில் அது ஒன்றும் பெரிய விஷயமல்ல. அவனைப் பொறுத்தவரை அது மிகவும் சிறியதான அல்பமான வேலையே. இவற்றை செய்வதற்கு, தன் சக்தி அனைத்தும் பயன்படுத்தத் தேவையில்லை. பரமாத்மனுக்கு இருக்கும் ஸ்வாதந்த்ர்யாதி குணங்கள் அபரிமிதமானவை. ஆனால் இவற்றை செய்வதற்கு மிகச்சிறிய அளவிலான ஸ்வாதந்த்ர்ய மட்டுமே போதுமானவை.

ஆகையால், அமரிமித ஸ்வாதந்த்ர்ய குணங்களில், 400 பாகங்கள் இருந்தால் அனைத்து ஜகத் வியாபாரங்களும் செய்ய முடியும் என்று நிச்சயித்து, அவ்வளவே பாகங்களை எடுத்து, அவற்றில் லட்சுமிஸமேத தான் செய்ய வேண்டிய வேலைகளுக்கு 200 பாகங்களை தமக்காக வைத்துக் கொண்டான். ஸாத்விகாதி ஜீவர்கள், தத்தம் யோக்யதைக்கேற்ப கதி அடையவேண்டுமெனில், அவரவர்கள் கொஞ்சமாவது கர்மங்களை செய்யவேண்டும். மற்றும் அவர்கள் அந்த பலன்களை அனுபவிக்க வேண்டும் என்று நிச்சயித்து, தன் பிரதிபிம்பர்களான பிரம்மாதி அனைத்து ஜீவர்களுக்கும் 200 பாகங்களை பிரித்துக் கொடுத்தான் என்பது கருத்து.

த்ரிபதாஹ்வ = பாத என்றால் அம்ச என்று அர்த்தம் என்று பாகவத 2ம் ஸ்கந்தத்தின் வியாக்யானத்தில் சொல்லியிருக்கின்றனர். 'பாதோஸ்ய விஷ்வா பூதானி த்ரிபதஸ்யாऽம்ருதம் திவி' என்னும் புருஷ சூக்த வாக்கியத்தால், இந்த பிரபஞ்ச ஆதி அந்தம், த்ரிபாத நாமக பரமாத்மனுக்கு ஒரு பாதம் என்றால், பரமாத்மனின் ஒரு அம்சம் என்று அர்த்தம். 'மமைவாம்ஷோ ஜீவலோகே ஜீவபூத: ஸனாதன:' என்னும் கீதை வாக்கியத்திற்கேற்ப அம்ச என்றால் ப்ரதிபிம்பம் என்று அர்த்தம்.

ஸ்வேதத்வீப, அனந்தாஸன, வைகுண்டத்தில் இருக்கும் நாராயணாதி ரூபங்கள், ராமகிருஷ்ணாதி அவதார ரூபங்கள், இவற்றிற்கு ஸ்வாம்ஷ என்று பெயர். நர, ப்ரத்யும்ன, ஸாம்ப, லக்ஷ்மண ஆகியோரில் இருக்கும் அம்ச ரூபத்திற்கு பின்னாம்ஷ என்று பெயர். இப்படியாக மூன்று அம்ஷ ரூபங்களால் ஜகத் காரியங்களை செய்வதற்கு 400 ஸ்வாதந்த்ர்ய பாகங்களைவிட அதிகம் தேவையில்லை. ஆகையால், அவ்வளவு மட்டும் எடுத்துக் கொண்டான் என்பது கருத்து.

**ஸத்யலோகாதி[3]ப னொளகெ[3] ஜ**
**வத்தெரடு[3] பவமானனொளு நா**
**ல்வத்து மேலெண்டதி[4]க ஷிவனொளகி[3]ட்டனிப்பத்து ।**
**சித்தஜேந்த்[3]ரரொளை த[3]தி[4]க த[3]ஷ**
**த[1]த்வமானிக[3]ளெனிப ஸுரரொளு**

**ஹத்து ஈரைத3கி2ல ஜீவரொளிட்ட நிரவத்3ய ||2**

ஸத்யலோகாதிபனொளகெ = பிரம்மதேவரில்
ஐவத்தெரடு = 52
பவமானனொளு = வாயுதேவரில்
நால்வத்து மேலெண்டதிக = 40+8=48 பாகங்கள்
ஷிவனொளு = ருத்ரதேவரில்
இப்பத்து = 20 பாகங்கள்
சித்தஜேந்த்ரரொள = மன்மத மற்றும் இந்திரனில்
ஐததிக தஷ = 15 பாகங்கள்
தத்வமானிகளெனிப சுரரொளு = தத்வாபிமானி தேவதைகளில்
ஹத்து = 10 பாகங்கள்
நிரவத்ய = தோஷங்கள் அற்றவனான ஸ்ரீஹரி
அகிள ஜீவரொளித்து = அனைத்து பிராணிகளிலும்
ஈரைது = 2*5=10 பாகங்களை
இப்ப = இப்படியாக பாகங்களைப் பிரித்து, வைக்கிறான்.

* பிரம்மதேவரில் 52 பாகங்கள்
* வாயுதேவரில் 48 பாகங்கள்
* ருத்ரதேவரில் 20 பாகங்கள்
* இந்திர மற்றும் மன்மதனில் 15 பாகங்கள்
* தத்வாபிமானி தேவதைகளில் 10 பாகங்கள்
* மற்ற அனைத்து ஜீவர்களுக்கு 10 பாகங்கள் வைத்தான்.

**கலி மொத3லுகொ3ண்டகி2ல தா3னவ**
**ரொளகெ3 நால்வத்தை3து3 ஈ பரி**
**திளிது3பாஸனெ மாடு3 மரெயதெ3 பரமப4கு3தி1யலி |**
**இளெயொளகெ3 ஸஞ்சரிஸு லகுமி**
**நிலயனாளானெந்து3 ஸர்வ**
**ஸ்த2லக3ளலி ஸந்தெயிஸுதிப்பனு கெ3ளெயனந்த3த3லி ||3**

கலி மொதலுகொண்டு = கலியிலிருந்து துவங்கி
அகிள தானவரொளகெ = அனைத்து தைத்யர்களிலும்
நால்வத்தைது = 45 பாகங்களை வைத்தான்
ஈ பரி திளிது = இப்படியாக அறிந்து
மரெயதெ = இதை மறக்காமல்
பரமபகுதியலி = மிகுந்த பக்தியுடன்
உபாசனெ மாடு = ஸ்ரீபரமாத்மனை துதி.
இளெயொளகெ = பூமியில்
லகுமி நிலயன = ஸ்ரீனிவாசனின்
ஆளுனானெந்து = பக்தன் நான் என்று
சஞ்சரிஸு = சஞ்சரித்து வா

ஸ்ரீஹரி
கெளெயனந்ததலி = நண்பனைப் போல
ஸந்தெயிஸுதிப்பனு = சமாதானம் செய்கிறான்.

கலி முதலான தைத்யர்களில் 45 பாகங்களை வைத்தான். முந்தைய பத்யத்தில் கூறியபடி, பிரம்ம தேவரே முதலான அனைத்து ஜீவர்களிலும் வைத்த மொத்த பாகங்கள் 155. இங்கு சொன்னது கலி முதலான தைத்யர்களில் 45. ஆக மொத்தம் 200 பாகங்கள் ஆயிற்று. இப்படி பரமாத்மனிடம் 200, மற்றவர்களில் 200 ஆக மொத்தம் 400 பாகங்கள் என்று அறிந்து, மறக்காமல், பரம பக்தியுடன் உபாசனை செய். பரமாத்மன் எனக்கு ஸ்வாமி; நான் அவனது சேவகன் என்று சிந்தித்து, பூமியில் சஞ்சரித்திரு. ஸ்ரீஹரி, ஒரு நண்பனைப் போல உன்னை காப்பாற்றுவான்.

இந்த விஷயத்தில், விஷ்ணு ரஹஸ்ய, 21ம் அத்தியாயத்தில்:
ஸ்வஸ்மின்னர்த்த ஸ்வதந்த்ருத்வம் ஸமாதாய ததர்தகம் |
விபஜ்யஷததா பூயோஷ்டா சத்வாரிம்ஷ தம்ஷர்கா |32
ப்ராணே ஸ்வாதந்த்ர்யமாதாய த்விபஞ்சா ஷத்துவேதஸி |
பாதம் சதுர்த்தம் ஷததா விபஜ்ய தஷபாகர்கா ||33
ஜீவே ஸ்வாதந்த்ர்யமாதாய ததோவிம்ஷதி பாகர்கா |
அஹம்காராத்மகே ருத்ரேததா புத்தெள நிதாயச ||34
மனோதேவேதத: ஷக்ரேபாகான்பஞ்ச தஷைவது |
தத்வதேவே தஷாம் ஷாந்த்வ ஸ்வாதந்த்ர்யம் நிததேஹரி: ||35
பஞ்சசத்வாரிம்ஷதம் தான்கலி முக்யேஷ்வதாத் ஸ்வயம் |
விஷ்ணோ: பரோனசானோஸ்தி ஸ்வதந்த்ர: கோபிசேதன: ||36

இவையே முந்தைய பத்யங்களின் ஆதாரம் ஆகும். இந்த ஸ்லோகங்களின் அர்த்தத்தையே பத்ய விளக்கமாக பார்த்திருப்பதால், இவற்றை மறுபடி விளக்கவில்லை.

200 பாகங்களில் லட்சுமிதேவியருக்கு 67 1/4 பாகங்கள் என்றும் ஸ்ரீபரமாத்மன் வைத்துக் கொண்டது 132 3/4 என்று தாசராயர் கூறியிருந்தார். இவற்றில் இருக்கும் கால், முக்கால் என்ன என்பதை விஷ்ணு ரஹஸ்ய வாக்கியத்தில் பார்க்கலாம். பரமாத்மன் 400 பாக ஸ்வதந்த்ர்யத்தை எடுத்து, அதில் பாதியை தான் வைத்துக்கொண்டு, மிச்ச பாதியில் ஒரு நூறினை, பிரம்மதேவருக்கு 52, வாயுதேவருக்கு 48 என்று பிரித்துக் கொடுத்தான். அடுத்த நூறினை மேற்சொன்ன பத்ய அர்த்தங்களில் கூறியவாறு ருத்ரருக்கு 20, இந்திர காமனுக்கு 15, அனைத்து ஜீவர்களுக்கு 10. கல்யாதி தைத்யகளுக்கு 45 என 100 பாகங்களைக் கொடுத்தான்.

தான் வைத்துக்கொண்ட 200 பாகங்களை மூன்று பாகங்கள் ஆக்கினான்.

தெளவிதாய த்ரிதத்ரம்ஷம் மாயாயை ப்ரததெளஸ்வயம் |
சேஷபாக த்வயம் ஸ்வஸ்மிஸ் ஸ்தாபர்யத்ஸ நிஜேச்சயா ||

என்ற ஸ்லோகத்தின் அடிப்படையில், அந்த 200 பாகங்களை, மூன்றாகப் பிரித்தால், 66*3 = 198 வருகிறது. இதில் ஒன்றினை (அதாவது 66) லட்சுமிதேவியருக்குக் கொடுத்தான். மற்ற இரண்டினை அதாவது 132 பாகங்களை தான் வைத்துக்கொண்டான். மிச்சம் இருந்த 2 பாகங்களில், தன்னுடன் சுகானுபவத்தின் ஸ்வாதந்த்ர்யத்திற்காக 1-1/4 பாகத்தை லட்சுமிதேவியருக்குக் கொடுத்து, மற்ற 3/4 பாகத்தை தானே வைத்துக் கொண்டான். ஆகையால், லட்சுமிதேவியருக்கு 1/4 வந்து, மொத்தம் 66 + 1 + 1/4 = 67 1/4 ஆயிற்று.

**அவனிப ஸ்வாமித்வ த$^{4}$ர்மவ**
**ஸ்வவஷமாத்$^{3}$யரிதித்து தா ம**
**த்தவர முக$^{2}$த$^{3}$லி ராஜகார்யவ மாடி$^{3}$ஸுவ தெரதி$^{3}$ ।**
**கவிபி$^{3}$ரீடித தன்ன கலெக$^{3}$ள**
**தி$^{3}$விஜ தா$^{3}$னவ மானவரொளி**
**ட்டவிரத கு$^{3}$ணத்ரயஜக$^{3}$ர்மவ மாடி$^{3}$ மாடி$^{3}$ஸுவ ||4**

அவனிப = அரசன்
ஸ்வாமித்வ தர்மவ = தனக்குள் இருக்கும் அரசனின் அதிகாரங்களை
ஸ்வவஷ = தன் வசத்தில் இருக்கும்
அமாத்யரிகித்து = மந்திரிகளுக்குக் கொடுத்து
தா = தான்
மத்தே = அடுத்து
அவர முதலி = அவர்களிடமிருந்து
ராஜகார்யவ மாடிசுவ தெரதி = ராஜ கார்யங்களை செய்விப்பது போல
கவிபிரீடித = ஞானிகளால் வணங்கப்படும் ஸ்ரீஹரி
தன்ன களெகள = தன் ஸ்வாதந்த்ர்யாதி சக்தி அம்சங்களை
திவிஜ = தேவதைகள்
தானவ = தைத்யர்கள்
மானவரொளு = மனிதர்களில்
இட்டு = வைத்து
அவிரத = ஒரு நொடியும் விடாமல்
குணத்ரயஜ = மூன்று குணங்களின் சம்பந்தமான
கர்மவ = கர்மங்களை
மாடி மாடிஸுவ = செய்து செய்விக்கிறான்.

மகாராஜனானவன், கிராம அதிகாரி, நகர அதிகாரி போன்ற பதவிகளை ஏற்படுத்தி, நீங்கள் இத்தகைய வேலைகளை செய்யவேண்டும் என்று ஆணையிட்டு, அவர்களிடமிருந்து ராஜ காரியங்களை செய்வித்து, அவர் செய்த காரியங்களை ஏற்றுக்கொள்கிறான். விஷ்ணு ரஹஸ்ய 21ம் அத்தியாயத்தில் :

பிரம்மாணஞ்ச ததாப்ராணம் ததா ந்யாஸ்தத்வ தேவதா: ।
தேஹேனியோஜயாம் சக்ரே ததாகல்யாதி காஸுரா ||27
ஸ்வாதந்த்ர்யம் வ்யஜபஜஸ்தேஷு ததாஜீவேஷு பாகஷ: ||28

யதா ராஜானிஜாமாத்யான் தத்வாஸ்வாதந்த்ர்ய மாத்மன: |
கார்யேனியோஜ்ய தத்ரத்யா குணதோஷாம்ஸ்ச ப்ருச்சதி ||
தத்தத்கார்ய க்ருதௌ ஷக்தி: ஸ்வாதந்த்ர்யம் ஹிபரம்ஸ்ம்ருதம் ||29
தத்காஸ்வ தத்தயாமாத்யை: க்ருதேகார்யேஸதுஷ்யதி |
ஸத்யாம் ஷக்தௌ கார்யனாஷே ஸ்வாஜ்ஜா முல்லங்க்ய வரஸ்தே ||30
குபித்வா தண்டயே தேவம் யதாக்ரீடத்யயம் ஹரி: ||31

ஜீவர்களிடமிருந்து அவரவர் யோக்யதைக்கேற்ப கர்மங்களை செய்விப்பதற்காக, ஜீவர்களுக்கு ஸ்தூல தேகத்தைக் கொடுத்து, பிரம்மதேவர், வாயுதேவர் மற்றும் தத்வாபிமானி தேவதைகள், கலி முதலான தைத்யர்கள் இவர்கள் அனைவரையும் அந்த ஜீவரின் ஸ்தூல தேகத்தில் இருக்கச் செய்து, அந்த பிரம்மாதிகளுக்கும், ஜீவருக்கும், கலி முதலானவருக்கும் அவரவரின் யோக்யதைக்கேற்ப, தன் ஸ்வாதந்த்ர்யத்தை பிரித்துக்கொடுத்து, காரியங்களை செய்து, செய்விக்கிறார்.

அது எப்படியெனில், மகாராஜன், தன் மந்திரி முதலானவர்களுக்கு அவரவரின் தகுதிக்கேற்ப ஸ்வாதந்த்ர்யத்தை பிரித்துக் கொடுத்து, அவர்களிடமிருந்து வேலை வாங்குவார். அதாவது, சர்வ தேசத்திற்கும் ஒருவனை அதிபதியாக ஆக்கி, அவன் வசத்தில் தேசாதிபதிகளை வைத்திருப்பார். இந்த தேசாதிபதிகளின் வசத்தில், நகராதிபதி. இவரின் கீழ் கிராமாதிபதி என அவரவர்களுக்கு அதிகாரங்களைக் கொடுத்து, கிராமாதிகாரி தன் வேலையை சரியாக செய்கிறாரா இல்லையா என்னும் விஷயத்தை, நகராதிபதி சரிபார்த்து, அவன் தனக்கு இருக்கும் ஸ்வதந்த்ர்ய சக்தியை மீறாமல், சரியாக வேலையை செய்தால், அவனுக்கு சம்பளங்களைக் கொடுத்தும், வேலைகளை சரியாக செய்யவில்லையெனில், அவனை தண்டிப்பதற்கும், நகராதிபதிகளுக்கு அதிகாரம் கொடுத்திருப்பர்.

இந்த நகராதிபதிகளை வேலை வாங்குவதற்கும், தண்டிப்பதற்கும், தேசாதிபதிகள் அதிகாரம் வைத்திருப்பர். இதைப்போலவே, இவருக்கு மேல், தேசாதிபதி, மந்திரி என அரசன் வரையிலும் அதிகாரம் வைத்திருப்பர். இப்படியாக, ராஜ காரியங்கள் நடைபெறுகின்றன.

இதைப்போலவே, பரமாத்மனும், பிரம்மாதி தேவதைகளுக்கும், தத்வாபிமானி தேவதைகளுக்கும், கலி தைத்யர்களுக்கும் ஸ்வாதந்த்ர்யத்தைக் கொடுத்து அவரவரின் தகுதிக்கேற்ப, பிரம்ம தேவருக்கு 52 ஸ்வாதந்த்ர பாகங்களையும், ருத்ரதேவருக்கு 20, இந்திரனுக்கு 15 என ஸ்வாதந்த்ர்யத்தை பிரித்துக் கொடுத்திருக்கிறார்.

இப்போது உலகத்தில் சில நீதிபதிகளுக்கு ஆயுள்தண்டனை கொடுக்கும் அதிகாரம் இருக்கிறது. சிலருக்கு 3ஆண்டுவரை தண்டனையும் சிலருக்கு 6மாதம் வரை தண்டனை கொடுக்கக்கூடிய அதிகாரமும் இருக்கிறது. அதுபோலவே, பிரம்மாதி தேவதைகளுக்கும், தாரதம்யத்திற்கேற்ப ஸ்வாதந்த்ர்யத்தை கொடுத்திருக்கிறான். பிரம்ம வாயுகளின் அதீனத்தில் ருத்ராதிகள், அவரின் அதீனத்தில் தத்வாபிமானிகள், கலிக்கு தைத்யர்களின் மேல் அதிகாரமும் இருக்கின்றன. இந்த

தேவதைகள், கலி முதலான தைத்யர்கள் - இவரின் அதீனத்தில் சாமான்ய ஜீவர்கள் இருக்கின்றனர். புண்ணியம் செய்விக்க தேவதைகள்; பாவம் செய்விக்க தேவதைகள்; என ஜீவர்கள் தத்தம் யோக்யதைக்கேற்ப, தேவ தைத்யர்கள் செய்விக்கும் புண்ணிய பாவங்களை செய்யவேண்டும். புண்ணிய பாவங்களை செய்விக்கும் ஸ்வதந்த்ர்யத்தை பரமாத்மன், தத்வாபிமானி தேவதைகளுக்கும், தைத்யர்களுக்கும் கொடுத்திருக்கிறான்.

'யேனவினா த்ருணமபி ந சலதி' என்னும் நியாயத்தால், பிரம்மாதி தேவதைகளே ஆனாலும், புல்லைக்கூட அசைக்கும் சக்தி பரமாத்மனைத் தவிர வேறு யாருக்கும் இல்லை. இவர்கள் அனைவருக்கும், அவரவர்களின் யோக்யதைக்கேற்ப, இச்சா சக்தி மட்டும் இருக்கிறது. ஒவ்வொருகணமும் பரமாத்மனே இருந்து அதனை நினைவுபடுத்துகிறார். ஸ்வாதந்த்ர்யம் இருந்தாலும், அது இச்சா மாத்ர சக்தியே தவிர, காரியம் செய்யும் சக்தி யாருக்கும் இல்லை. தத்வாபிமானி தேவதைகளில் இருந்து, இந்திரியங்களால் செய்யமுடிந்த பார்ப்பது, கேட்பது முதலான காரியங்களை செய்விக்கிறார்கள். ஜீவர்களில் இருந்து செய்விக்கிறார்.

இப்படியாக, சர்வ ஸ்வதந்த்ரன் ஒருவனே தவிர, வேறு யாரும் ஸ்வதந்த்ர கர்த்தர் இல்லை என்கிறார். இதைப்போலவே, பரமாத்மன், தேவதைகள், தானவர், மானவர் என இவர்களில் தன் ஸ்வாதந்த்ர்யத்தை அவரவர்களின் யோக்யதைக்கேற்ப பிரித்துக் கொடுத்து, சாத்விக, ராஜஸ, தாமஸ சம்பந்தமான கர்மங்களை செய்து செய்விக்கிறான்.

**புண்யபாபவனீதெரதி$^{3}$ கா**
**ருண்யஸாக$^{3}$ர தே$^{3}$வ தா$^{3}$னவ**
**மானவரொளிட்டவர ப$^{2}$ல வ்யத்யாஸவனெ மாடி$^{3}$ |**
**ப$^{3}$ன்னப$^{3}$டிஸுவ ப$^{4}$க்திஹீனர**
**ஸன்னுத ஸுக$^{2}$ர்மப$^{2}$ல தெகெ$^{3}$து$^{3}$ ப்ர**
**பன்னரிகெ$^{3}$ கொட்டவர ஸுக$^{2}$படிஸுவனு ஸுபுஜாஹ்வ ||5**

காருண்யசாகர = கருணைக்கடலான ஸ்ரீபரமாத்மன்
ஈ தெரதி = இந்த விதமாக
புண்யபாபகள = புண்ணிய பாவங்களை
தேவதானவ மானவரொளு = தேவ தானவர்கள் மானவர்களில்
இட்டு = வைத்து
அவர பலவ்யத்யாசவனெ மாடி = தேவதைகளுக்கு புண்ணிய பலன்களையும், தானவர்களுக்கு பாப பலன்களையும், மானவர்களுக்கு கலவையான பலன்களையும் என பலன்களில் வித்தியாசங்களை செய்து
பக்திஹீனர = பக்தி இல்லாதவர்களை
பன்னபடிசுவ = கஷ்டப்படுத்துகிறான்
ஸன்னுத = சஜ்ஜனர்களால் வணங்கப்படுபவன்
சுகர்மபல தெகெது = (தானவர்கள் செய்யும்) புண்ணிய கர்மங்களின் பலன்களை எடுத்து

ப்ரபன்னரிகெ = தன்னை சரணடைந்தவர்களுக்குக் கொடுத்து
சுபுஜாஹ்வ = உத்தமமான ரசத்தை மட்டும் ஸ்வீகரிப்பவனான ஸ்ரீஹரி; அல்லது மஹாபாஹு எனப்படும் ஸ்ரீஹரி
அவர = தன் பக்தர்களை
சுகபடுசுவனு = மகிழ்ச்சிப்படுத்துகிறான்.

கருணைக்கடலான ஸ்ரீஹரி, தேவதைகளிடமிருந்து புண்ணியத்தை; தானவர்களிடமிருந்து பாபங்களை; மானவர்களிடமிருந்து புண்யபாபங்களை செய்வித்து, தேவதைகளுக்கு / மனுஷ்யோத்தமர்களுக்கு முக்தியையும், தானவருக்கு தமஸ்ஸையும், மனுஷ்யருக்கு மிஸ்ர-உலகத்தையும் கொடுக்கிறான். அபக்தரான தானவர் செய்யும் யக்ஞ தானாதி பலன்களை எடுத்து, அதை தேவதைகளுக்குக் கொடுக்கிறான். தேவதைகள் செய்யும் பாபங்களை தைத்யர்களுக்கே கொடுக்கிறான். இதனால், பரமாத்மனுக்கு வைஷம்ய தோஷம் வருவதில்லையா என்று கேட்டால், தேவதைகளிடம் அசுராவேஷம் இருக்கும்போது, தேவதைகள் தைத்யர்களின் ப்ரேரணையினாலேயே பாபங்களை செய்கின்றனர். ஆகையால், அந்த பலன்கள் தைத்யர்களுக்கே போகின்றன.

தைத்யர்கள் புண்யத்தை செய்தாலும், உள்ளே இருக்கும் தேவதைகளின் ப்ரேரணையினாலேயே அவற்றை செய்கின்றனர். ஆகையால், அந்த புண்ய பலன்களை தேவதைகளுக்கே கொடுக்கிறான். தேவதைகளுக்கு சில காலம், கஷ்டம் வந்தாலும், அது தேவதைகளின் சரீரத்தில் இருக்கும் தைத்யர்களுக்கே ஆகிறது. அசுரர்களுக்கு, சுகம் வந்தால், அது தேவாவேஷத்தினால் வருவது என்று பாகவத 11ம் ஸ்கந்தத்தில் சொல்லியிருக்கிறார்கள்.

தேஷாம் துக்காதிகம் கிஞ்சித் அசுராவேஷ தோபவேத் |
அசுராணாம் ஸுகாத்யாஸ்ச தேவாவேஷாதுதீரிதா: ||

இத்தகைய ஆதாரங்கள் இருக்கின்றன. ஆகையால், பரமாத்மனுக்கு வைஷம்யாதி குணங்கள் என்றைக்கும் இல்லை என்பது நிச்சயம். இதைத்தவிர, தைத்யர்களின், புண்ய பாகங்களை தேவதைகளுக்கு மட்டுமே கொடுக்கிறான் என்று இல்லை. பக்தர்கள் அனைவருக்குமே அதைக் கொடுக்கிறான்.

விஷ்ணு ரஹஸ்யத்தில் (21ம் அத்தியாயம்):
புண்யகர்ம ஸஹாயாயே புண்யாத்மான ஸ்துயேனரா: |
தைத்யபாக கதாத்புண்யாத் தேப்யோஷந்தத தேஹரி: ||
பாபகர்ம ஸஹாயாயே பாபாத்மானஸ்து யே நரா: |
தேவபாககதாத் பாபாத் தேப்யோம்ஷந் தததே ஹரி: |

புண்ய கர்மங்களுக்கு உதவி செய்பவர்களுக்கும், புண்யாத்மராக இருக்கும் மனுஷ்யருக்கும் தைத்யரில் இருக்கும் புண்ய பாகங்களின் பலாம்ஷத்தை கொடுக்கிறான். பாப கர்மத்திற்கு உதவி செய்பவர்களுக்கு, தேவதைகளில் இருக்கும் பாப பாக பலன்களை கொடுக்கிறான் என்று சொல்லியிருக்கிறார்கள். அதே அபிப்பிராயத்தையே தாசராயர் இங்கு சொல்லியிருக்கிறார்.

**மாணிகவ கொண்ட$^3$ங்க$^3$டி$^3$யொளஜி**
**வான கொட்டாபுருஷன ஸமா**
**தா$^3$ன மாடு$^3$வதெரதி$^3$ தை$^3$த்யரு நித்யத$^3$லி மாள்ப |**
**தா$^3$ன யக்ஞாதிக$^3$ள ப$^2$ல பவ**
**மானபிதன பஹரிஸி அஸமீ**
**சீன ஸுக$^2$க$^3$ள கொட்டு அஸுரர மத்தரனு மாள்ப ||6**

மாணிகவகொண்டு = மாணிக்கத்தைக் கொண்டு வந்து
அங்கடியொளு யஜமானனு = கடையில் கடைக்காரர்
ஔஜிவான கொட்டு = ஓமத்தைக் கொடுத்து
ஆ புருஷன = அதைக் கொண்டு வந்து கொடுத்தவனை
சமாதான மாடுவ தெரதி = ஏமாற்றுவதைப் போல
தைத்யரு நித்யதலி மாள்ப = தைத்யர்கள் தினமும் செய்யும்
தான யக்ஞாதிகள பல = தான யக்ஞாதிகளின் பலன்களை
பவமானபிதனு = ஸ்ரீபரமாத்மன்
அபஹரிஸி = அபகரித்து
அசமீசீன சுககள கொட்டு = தற்காலிக சுகங்களைக் கொடுத்து
அசுரர = அந்த அசுரர்களை
மத்தரன மாள்ப = கர்வம் கொண்டவர்களாக மாற்றுகிறான்.

மாணிக்கத்தின் சரியான மதிப்பு தெரியாத முட்டாள் ஒருவன், அதை கடையில் கொடுக்க, அந்த கடைக்காரர் இவனை ஏமாற்றி, சிறிது ஓமத்தைக் கொடுத்து அனுப்பிவிட்டால் எப்படியோ அப்படியே அபக்தர்கள், இந்த ப்ரபஞ்சத்தின் சுகரூபமான அல்ப பலன்களைப் பெறுவதற்காக யாக தானங்களை செய்தால், அந்த கர்மங்களில் வரும் உத்தம பலன்களை தேவதைகளுக்குக் கொடுத்து, தைத்யர்களுக்கு அவர்கள் வேண்டும் விஷயாதி போகங்களையோ, ஸ்வர்க்காதிகளையோ சிறிது காலத்திற்கு கொடுக்கிறான். இதன்படி, கடைக்காரரைப் போல பரமாத்மனும் அவர்களை ஏமாற்றுகிறார் என்று நினைக்கக்கூடாது. இந்த சந்தேகத்தை மேற்கூறிய பத்யத்திலேயே போக்கியிருக்கிறோம்.

தேவதைகளின் ப்ரேரணையின்படி இவர்கள் இந்த கர்மங்களை செய்தால், அதன் பலன்கள் தேவதைகளுக்குப் போய் சேர்வது நியாயமே என்று அர்த்தம். இவர்களே யாகாதிகளை எவ்வித பலன்களையும் எதிர்பார்க்காமல் செய்தால், மாணிக்கத்தைப் போன்ற மிகச்சிறந்த முக்திக்கு அதுவே சாதனையாகிறது. காம்ய பலன்களைப் பெறுவதற்காக செய்தால், ஓமப்பொடியைப் போல அல்ப பலன்களே கிடைக்கிறது. அந்த பலன்களை அசுரர்கள் உள்ளிருக்கும் தேவதைகள் அனுபவிக்கின்றனர் என்று முந்தைய பத்யத்தில் உள்ள உதாரணத்தினால் தெளிவாகிறது.

தைத்யானாம் தத்ரனைவாஸ்தி புண்யகர்மவிபாகத: |
புண்யபகம் ஹரத்யேஷாம் ஸ்வயமேவ ஜனார்த்தன: ||48

விஷ்ணு ரஹஸ்யத்தில் கூறுவதைப்போல: தைத்யர்களுக்கு புண்ணியத்தில் பாகம் இல்லை. அவர்களின் புண்ணிய பாகங்களை பரமாத்மனே அவருக்குக் கிடைக்காதவாறு செய்கிறான் -- என்கிறார். இந்த அபிப்பிராயத்தையே தாசராயர் இங்கு சொல்லியிருக்கிறார்.

**ஏண லாஞ்சன நமலகிரண க்ர**
**மேண வ்ருத்தி$^{3}$யனெய்தி$^{3}$ லோகர**
**காணகொட$^{3}$தி$^{3}$ஹ கத்தலெய ப$^{4}$ங்கி$^{3}$ஸுவ தெரனந்தெ |**
**வைனதேயாம்ஸக$^{2}$ன மூர்த்தி**
**த்$^{3}$யான உள்ள மஹாத்மரிகெ$^{3}$ ஸு**
**க்ஞான ப$^{4}$க்த்யாதிக$^{3}$ளு வர்த்தி$^{4}$ஸி ஸுக$^{2}$வ கொடு$^{3}$திஹவு ||7**

ஏண லாஞ்சனன = சந்திரனின்
அமல கிரமேண = தூய்மையான கிரணங்கள்
க்ரமேண = சுக்ல பட்சத்தில் படிப்படியாக
வ்ருத்தியனெய்தி = வளர்ந்தவாறு
லோகர = உலகத்தில் இருக்கும் மக்களை
காணகொடதிஹ = கண்ணுக்குத் தெரியாமல் செய்யும்
கத்தலெய = இருட்டினை
பங்கிசுவ தெரனந்தெ = நாசப்படுத்துவதைப் போல
வைனதேயாம்ஸகன = கருடனின் மேல் அமர்ந்து பயணிக்கும் ஸ்ரீபரமத்மனின்
மூர்த்தி தியான உள்ள = மூர்த்தியை தியானிக்கும்
மஹாத்மரிகெ = மகாத்மருக்கு
சுக்ஞான பக்த்யாதிகளு = தெளிவான ஞானம், பக்தி ஆகியவற்றை
வர்த்திஸி = வளர்த்து
சுகவ கொடுதிஹவு = சுகங்களைக் கொடுக்கிறான்.

சுக்லபட்சத்தில் சந்திரனின் கிரணங்கள் படிப்படியாக வளர்ந்து வந்து, ஒளி அதிகமாகி, உலகத்தில் மக்கள் இருட்டில், பார்க்கமுடியாதிருந்த பதார்த்தங்களை தன் ஒளியினால், தெரியுமாறு செய்வான். அதைப்போலவே, பரமாத்மனின் பக்தர்கள் செய்யும் தியானாதிகள் வளர்ந்து கொண்டே வந்தால், பரமாத்மன், இதயாகாஷத்தில் அதிக ஒளியைக் கொடுக்கிறான். அதனால், இவர்களின் அஞ்ஞான இருட்டு பரிகாரம் ஆகி, ஞான பக்த்யாதிகள் வளர்கின்றன.

இந்த உவமையில், பரமாத்மனை சந்திரனைப்போல அறியவேண்டும். பக்தர்கள் செய்யும் தியானாதிகளே கிரணங்கள். இதனால், அவர்களின் இதயத்தில் பகவத்-களா-விசேஷம் வளர்கிறது ஆகையால் அஞ்ஞானம் என்னும் இருட்டு பரிகாரமாகி ஞானபக்தி வளர்கிறது என்பது கருத்து.

**ஜனபனரிகெய சோர பொளலொளு**
**த$^{4}$னவ கத்தொயிதீ$^{3}$யலவனவ**
**கு$^{3}$ணக$^{3}$ளெனிஸதெ$^{3}$ பொரெவ கொட$^{3}$தி$^{3}$ரெ ஸிக்ஷிஸுவதெரதி$^{3}$ |**

**அனுசிதோசித கர்ம க்ருஷ்ணா**
**ர்ப்பணவெனலு கைகொண்டு[3] தன்னர**
**மனெயொளிட்டானந்த[3] ப[3]டி[3]ஸுவ மாத[4]வானதர ||8**

ஜனபன = மக்களைக் காக்கும் அரசனின்
அரிகெய = பார்வைக்கு வந்த
சோர = திருடன்
பொளலொளு = தன் பட்டணத்தில்
கத்தொய்து = திருடி வந்த
தனவ = செல்வத்தை
ஈயலு = ராஜனிடம் கொடுத்து தன்னை மன்னிக்க வேண்டினால்
அவன = அந்த திருடனின்
அவகுணகள = கெட்ட குணங்களை
எணிஸதெ = நினைக்காமல்
பொரெவ = அவனை காப்பாற்றுவான்
கொடதிரெ = பணத்தை அரசனிடம் கொடுக்காமல் இருந்தால்
சிக்ஷிசுவதெரதி = அவனுக்கு தண்டனை கொடுப்பான். இதைப்போல
அனுசித = செய்யத்தகாத (செய்யக்கூடாது என்று சாஸ்திரங்களில் சொல்லப்பட்ட) செயல்களை
உசிதகர்ம = செய்ய வேண்டும் என்று சொல்லப்பட்ட கர்மங்கள்; அதாவது, பாப புண்ணிய கர்மங்கள் அனைத்தும்
கிருஷ்ணார்ப்பண வெனலு = பக்தியுடனும், பச்சாதாபத்துடனும் புண்ணிய பாவங்களை பகவந்தனுக்கு அர்ப்பித்து மன்னிப்பு கேட்டால்,
கைகொண்டு = அதை ஏற்றுக்கொண்டு
மாதவ = லட்சுமிபதியான ஸ்ரீ நாராயணன்
ஆனதர = மிகவும் பக்தியுடன் தன்னை வேண்டுபவர்களை
தன்ன அரமனெயொளிட்டு = தன் வீட்டில் வைத்து
ஆனந்த படிசுவ = மகிழ்ச்சிப்படுத்துவான்.

ஊரில் கள்ளத்தனம் செய்யும் திருடன் இவனே என்று அரசனுக்கு தகவல் வந்தவுடனேயே, தான் இதுவரை திருடிய பொருட்கள் அனைத்தையும் ராஜனின் முன் வைத்து ‘பிரபோ! நான் குடும்பி. தரித்திர நிலையால் இத்தகைய காரியத்தை செய்துவிட்டேன். என் தவறுகளை மன்னித்து, என்னை காப்பாற்ற வேண்டும் என்று வேண்டினால், ராஜன், கருணையுடன் அவனின் தவறுகளை மன்னித்து அவனை காப்பாற்றுகிறான். ஆனால், அதே திருடன் உண்மையை சொல்லாமல், தான் திருடிய பதார்த்தங்களை மறைத்து வைத்தால், அந்த அரசன் அவனை தண்டிப்பான்.

இதைப்போல, நாம் செய்யும் புண்ணிய பாவங்கள் பரமாத்மனின் பார்வைக்கு வராமல் இருக்குமா? நம் யோக்யதைக்கேற்ப, நம்முள் இருந்து அனைத்தையும் செய்விப்பவனே அவன். இத்தகைய கர்மங்களை தானே செய்ததாக அறிந்து பரமாத்மனுக்கு அவற்றை சமர்ப்பிக்காமல் இருந்தால், அவன் நம்மை

தண்டிக்கிறான். அப்படியில்லாமல், பரம பக்தியுடன் அஸ்வதந்த்ரனான நாம் செய்தது, உன் ப்ரேரணையுடனே செய்தேன், நீ அருள்வதோ, தண்டிப்பதோ எதுவும் செய்யத்தக்க ஸ்வதந்த்ரன், என்று வேண்டி பக்தியுடன் நாம் செய்த புண்ணிய பாவங்களை பரமாத்மனுக்கு சமர்ப்பித்தால், கருணாமயியான ஹரி நம் பாவங்களை சுட்டுப் பொசுக்கி, புண்ணியங்களை இரு மடங்காக்கி அதற்கு பலன் ரூபமாக, நம்மை தன் அந்தப்புரத்தில் வைத்து, தன் ரூபத்தை தரிசனம் செய்விக்கிறான்.

**அன்னத$^3$ன்னாத$^3$ன்ன நாமக**
**முன்னெ பேள்த$^3$ ப்ரகார ஜீவரொ**
**ளன்னரூப ப்ரவேஷகை$^3$தவரவர வ்யாபார |**
**ப$^3$ன்னப$^3$ட$^3$த$^3$லெ மாடி$^3$ மாடி$^3$ஸி**
**த$^3$ன்யரிவரஹுதெ$^3$ந்தெ$^3$னிஸி த்ரை**
**கு$^3$ண்யவர்ஜித தத்த$^3$தா$^3$ஹ்வயனாகி$^3$ கரெஸுவனு ||9**

அன்னத = அன்னத்தைக் கொடுப்பவன்
அன்னாத = அன்னத்தை உண்பவன்
அன்ன = ஸ்வயம் அன்ன ரூபன்
நாமக = இந்த காரணங்களால் அன்னத, அன்னாத, அன்ன என்னும் பெயர்களைப் பெற்று
முன்னெ பேள்த ப்ரகார = முன்னர் 14ம் சந்தியில் கூறிய விதமாக
ஜீவரொளு = ஜீவர்களில்
தன்ன ரூபப்ரவேஷகைது = தன் ரூபங்களால் நுழைந்து
அவரவர வியாபார = அந்தந்த ஜீவர்கள் செய்யும் கர்மங்களை
பன்ன படதலெ = கொஞ்சமும் சோர்வில்லாமல்
மாடி மாடிஸி = செய்து செய்வித்து
இவரு = இந்த ஜீவர்கள் தன்யர் என்று
எந்தெனிஸி = என்று சொல்லி
த்ரைகுண்யவர்ஜித = சத்வாதி ப்ராக்ருத குணங்கள் இல்லாதவனான பரமாத்மன்
தத்ததாஹ்வயனாகி = அந்தந்த பெயர்களில்
கரெசுவனு = அழைத்துக் கொள்கிறான்.

‘அன்னம்ததாதீதி அன்னத:’ - என்னும் இலக்கணத்தால் அன்னத்தைக் கொடுப்பவனாகையால் பரமாத்மனுக்கு அன்னத என்று பெயர். ‘அன்னமதீதி அன்னாத:’ - அன்னத்தை உண்பதால் அவனுக்கு அன்னாத என்று பெயர். தைத்திரிய உப நிஷத்தில் ‘ஆத்யதேத்திச பூதானி தஸ்மாதன்னம் ததுச்யதெ இதி’ என்று சொல்லியிருக்கின்றனர். அதன்படி ‘அத்யத இத்யன்னம்; ஸர்வமத்தேத்யன்னம்’. உலகத்தில் தான் அன்ன ரூபத்தினால் சேதனர்களுக்கு, உபஜீவ்யனாக இருக்கும் காரணத்தாலும், பரமாத்மனுக்கு அன்ன என்று பெயர். ப்ரளய காலத்தில் அனைத்து பிரபஞ்சத்தையும் முழுங்குவதால் அன்ன என்று பெயர். ஆகையால், இப்படி, அன்னாத, அன்னத, அன்ன என்னும் பெயர்களால் அழைக்கப்படுகிறான். முன்னர், பித்ருகண சந்தியில் சப்தான்ன பிரகரணத்தில் இந்த விஷயத்தைப் பற்றி

விளக்கமாகக் கூறியிருக்கிறோம். ஆகவே இங்கு சுருக்கமாகவே சொல்லியிருக்கிறோம்.

சப்தான்ன பிரகரணத்தில் சொல்லியிருப்பதைப்போல ஜீவர்களில் நுழைந்து, அவரவர்கள் செய்யவேண்டிய செயல்களை, கொஞ்சம்கூட சோர்வில்லாமல் தான் செய்து, அவர்களிடமிருந்து செய்விக்கிறான். பரமாத்மன் ராஜனிடம், சேவகனிடம், செல்வந்தரிடம், ஏழையிடம் இருந்து, தான் ப்ராக்ருத குணங்களைக் கொண்டிருக்காவிடிலும், ப்ராக்ருதத்தில் வசிப்பதால், ராஜன் என்றும், சேவகன் என்றும், செல்வந்தன் என்றும், ஏழை என்றும் அழைத்துக்கொண்டு அந்த பெயர்களை அவரவர்களுக்குக் கொடுக்கிறான்.

**ஸலிலபி$^{3}$ந்து$^{3}$ பயோப்$^{3}$தி$^{4}$யொளு பீ$^{3}$**
**ளலு விகாரவனைத$^{3}$ ப$^{3}$ல்லுதெ$^{3}$**
**ஜலவு தத்$^{3}$ரூபவனெ ஐது$^{3}$வுதெ$^{3}$ல்ல காலத$^{3}$லி |**
**கலிமலாபக$^{3}$னர்ச்சிஸுவ ஸ**
**த்குலஜர குகர்மக$^{3}$ளு தா நி**
**ஷ்கலுஷ கர்மக$^{3}$ளாகி$^{3}$ புருஷார்த்த$^{2}$க$^{3}$ள கொடு$^{3}$திஹவு ||10**

ஸலிலபிந்து = நீர்த்துளிகள்
பயோப்தியொளு = பாற்கடலில்
பீளலு = விழ
விகாரவனைத பல்லதெ = பாற்கடலில் இருக்கும் பால், தண்ணீராக மாறிவிடுமா?
ஜலவு = தண்ணீர் மட்டும்
தத்ரூபவனெ ஐதுவுது = பாலாக மாறிவிடுகிறது
எல்ல காலதலி = அனைத்து காலங்களிலும்
கலிமலாபஹன = கலியுக சம்பந்தமான பாவங்களை பரிகரிக்கும் ஸ்ரீஹரியை
அர்ச்சிஸுவ = பூஜிக்கும்
சத்குலஜர குகர்மகளு = சஜ்ஜனர்களின் பாவங்கள்
தா = தான்
நிஷ்கலுஷ கர்மகளாகி = சுத்தமான கர்மங்களாக மாறி
புருஷார்த்தகள = புருஷார்த்தங்களை
கொடுதிஹவு = கொடுக்கத்தக்கது.

பாலில் மோர் உரை ஊற்றினால், தயிர் ஆவதைப்போல, பாற்கடலில் நீர்த்துளிகள் விழுந்தால் அங்கு ஏதாவது மாற்றம் வருமோ? வராது. இந்த நீர்த்துளி மட்டும் பாலில் சேர்ந்து தானே பால் ஆகிவிடுகிறது. விஷ்ணு ரஹஸ்ய 21ம் அத்தியாயத்தில்:

க்ஷீராப்தௌபதிதம் தொயம்யதா க்ஷீரத்வமஷ்னுதே |
ஜீவகர்மசுகம் தத்வத்தராவானந்த தாம் பஜேத் ||

பாற்கடலில் விழுந்த நீர்த்துளியானது எப்படி பாலாகவே மாறிவிடுகிறதோ, அப்படி, பரமாத்மனிடம் சமர்ப்பித்த ஜீவனின் கர்மமானது, ஆனந்த ஸ்வரூபமே ஆகிறது

என்று சொல்கிறார். அதே அபிப்பிராயத்தையே தாசராயர் இங்கு சொல்கிறார். ஜீவன் செய்யும் கர்மங்களை பரமாத்மனுக்கு அர்ப்பித்து, எப்போதும் பரமாத்மனே கதியென்று நம்பி, அவனை ஆராதித்தால், இவன் சமர்ப்பித்த குகர்மங்களால், பாற்கடலில் விழுந்த நீர்த்துளிகளைப் போல, பரமானந்த ஸ்வரூபத்தை அடைகிறான். ஆகையால், ஸ்ரீஹரி மகிழ்ந்து, அந்த பக்தனுக்கு புருஷார்த்தங்களைக் கொடுத்து அருள்கிறான்.

**மொக$^{3}$தொ$^{3}$ளகெ$^{3}$ மொக$^{3}$விட்டு முத்$^{3}$தி$^{3}$ஸி**
**மகு$^{3}$வினம்பி$^{3}$கி$^{3}$த$^{3}$ப்பி நேஹதி$^{3}$**
**தெகெ$^{3}$து தன்ன ஸ்த$^{2}$னக$^{3}$ளுணிஸுவ ஜனனியந்த$^{3}$த$^{3}$லி |**
**அக$^{3}$ணிதாத்மனு தன்ன பாதா$^{3}$**
**ப்ஜக$^{3}$ள தே$^{4}$னிப ப$^{4}$க்தஜனரிகெ$^{3}$**
**ப்ரகடகனு தானாகி$^{3}$ ஸௌக்$^{2}$யகளீவ ஸர்வத்ர ||11**

மொகதொளகெ = குழந்தையின் முகத்தில்
மொகவிட்டு = தாய் தன் முகத்தை வைத்து
முத்திஸி = கொஞ்சி
மகுவினம் = குழந்தையை
பிகிதப்பி = கட்டிக் கொண்டு
ஸ்நேஹதி = அன்புடன்
தெகெது = எடுத்து
தன்ன ஸ்தனகளுளிஸுவ = முலைப்பால் ஊட்டும்
ஜனனியந்ததலி = தாயைப் போல
அகணிதாத்மனு = எண்ணிக்கையற்ற குணரூப ஸ்வரூபனான பரமாத்மன்
தன்ன பாதாப்ஜகள = தன் பாத கமலங்களை
தேனிப பக்தஜனரிகெ = பஜிக்கும் பக்த ஜனர்களுக்கு
ப்ரகடகனு தானாகி = ராமகிருஷ்ணாதி ரூபங்களால் பாண்டவாதிகளுக்கு பிரத்யட்சம் ஆகி, தரிசனம் அளித்து
சர்வத்ர = அனைத்து இடங்களிலும்
சௌக்யகளீவ = சுகங்களைக் கொடுக்கிறான்.

தாயானவள் தன் குழந்தையை தூக்கி, கொஞ்சி, மிகவும் அன்புடன், தன் முலைப்பாலை உண்ண வைத்து, பாதுகாப்பதைப் போல, பரமாத்மன் தன் பக்தர்களில் அத்தகைய அன்புடன், தியானம் செய்பவர்களின் ஹ்ருதயாகாஷத்தில், அபரோக்ஷத்தில் தரிசனம் அளித்து, முக்தியில் எப்போதும் தன் அருகிலேயே வைத்துக்கொண்டு சுகங்களைக் கொடுத்து அவர்களை காப்பாற்றுகிறான். தாய் குழந்தையைக் கொஞ்சி முலைப்பால் கொடுக்கும் விஷயத்தில் அவளுக்கு எவ்வளவு அன்பு இருக்கிறதோ, அவ்வளவு அன்பினை பக்தவத்ஸலன் என்னும் பெயர் பெற்றவனான ஸ்ரீஹரி பக்தர்களிடம் காட்டுவான் என்று அறியவேண்டும்.

கவிஞர்கள் பெண்களை சந்திரமுகி என்று தங்கள் கவிதைகளில் வர்ணிப்பதுண்டு. சந்திரனுக்கு கண் இல்லை. மூக்கு இல்லை. அப்படி சந்திரமண்டலத்தை முக

மண்டலத்திற்கு உவமையாகக் கொடுத்தால், அந்த முகம் நன்றாக இருக்கிறது என்று யாரும் சொல்வதில்லை. பூர்ண சந்திரனைப் பார்த்தால் நமக்கு ஒரு விதமான புத்துணர்ச்சி வரும். அத்தகைய சந்திரனில் இருக்கும் புத்துணர்ச்சி தரும் குணம், எந்த ஸ்த்ரீயரில் இருக்கிறதோ; அதாவது, எந்த ஸ்த்ரியரின் முகத்தைப் பார்த்தால், தொடர்ந்து பார்த்துக் கொண்டிருக்க வேண்டும் என்று தோன்றுகிறதோ, அத்தகைய ஸ்த்ரியரை சந்திரமுகி என்று வர்ணிப்பர்.

அதைப்போல, இங்கும் அன்பு விஷயத்தில் தாயின் உவமையைக் கொடுக்கிறார். அப்படியெனில், தாயைப் போல என்று மட்டும் சொல்லியிருந்தால் போதுமானதே. ஏன், முகத்தில் முகம் வைத்து, தூக்கி, கொஞ்சி, முலைப்பால் கொடுத்து - என்றெல்லாம் சொல்ல வேண்டும்? என்றால், பொதுவாக குழந்தை விளையாடிக் கொண்டிருக்கும்போது, தாய் தன் வீட்டு வேலைகளை செய்து கொண்டிருந்தால், அவ்வளவு அன்பு தெரிவதில்லை. அந்த குழந்தை பசியால் முலைப்பாலுக்காக தன்னிடம் வர, அந்த சமயத்தில் விசேஷமான அன்பு பிறந்து, முலைகளில் பால் சுரக்கிறது. அந்த சமயத்தில் தாய்க்கு குழந்தையிடம் எவ்வளவு அன்பு இருக்கிறதோ, அத்தகைய அன்பினை பரமாத்மன் தன் பக்தர்களிடம் எப்போதும் செய்கிறான் என்று சொல்வதற்காகவே இவ்வளவு விவரமாக தாயின் உவமையைக் கொடுத்திருக்கிறார் தாசராயர்.

**தோடிக3னு பூ4மியொளு பீ3ஜவ**
**நாடபே3கெந்தெ3னுத ஹிதத3லி**
**மோடெயிம் நீரெத்தி ஸஸிக3ள ஸந்தயிஸுவந்தெ ।**
**பாடுப3ட3த3லெ ஜக3தி3 ஜீவர**
**கோ4டகாஸ்யனு ஸ்ருஜிஸி யோக்3யதெ**
**தா3டகொ3ட3த3லெ ஸலஹுதிப்பனு ஸர்வகாலத3லி ।।12**

தோடிகனு = விவசாயி (தோட்டக்காரன்)
பூமியொளு = பூமியில்
பீஜவ = விதையை
நாடபேகெந்தெனுத = விதைக்க வேண்டும் என்னும் ஆசையில்
ஹிததலி = சிரத்தையுடன்
மோடெயின் நீரெத்தி = கிணற்றிலிருந்து பல உபகரணங்களின் உதவியுடன் நீர் எடுத்து
ஸஸிகள = வளர்ந்த பயிர்களை / செடிகளை
ஸந்தெயிஸுவந்தெ = திருப்திப்படுத்துவதைப் போல
பாடுபடதலெ = சோர்வில்லாமல்
ஜகதி = உலகில்
ஜீவர = பிராணிகளை
கோடகாஸ்யனு = ஹயக்ரீவ ரூபத்தை தரித்த ஸ்ரீபரமாத்மன்
ஸ்ருஜிஸி = ஸ்ருஷ்டித்து
ஸர்வகாலதலி = எப்போதும்
யோக்யதெ தாடகொடதலெ = ஜீவர்களின் யோக்யதையை மீறாமல்

ஸலஹுதிப்பனு = காப்பாற்றுகிறான்.

தோட்டவேலை செய்பவர், பூமியை தோண்டி, விதையை நட்டு, பல உபகரணங்களின் உதவியுடன் நீர் இறைத்து, அதனால் விளைந்த செடிகளை நன்றாக பார்த்துக் கொள்வதைப்போல, பரமாத்மன் ஜீவர்களை ஸ்ருஷ்டித்து, காப்பாற்றுகிறான். பூமியின் தன்மைக்கேற்ப தோட்டக்காரர் விதையை விதைப்பதைப் போல, செடிகளின் நிலைக்கேற்ப, எவ்வளவு நீர் வேண்டுமோ அவ்வளவே நீர் இறைத்து, அதனை பாதுகாக்கிறார். சில செடிகளுக்கு 4 நாட்களுக்கு ஒருமுறை, சிலவற்றிற்கு 8 நாட்களுக்கு ஒருமுறை, சில தானியங்களுக்கு மழை நீரை மட்டுமே நம்பி, என அவற்றை பல்வேறு விதங்களாக பாதுகாக்கிறார். அதன்படியே, பரமாத்மனும், ஜீவர்களை, தேவ மானவாதி யோனிகளில் பிறக்கச் செய்து, எந்தெந்த ஜீவர்களை எப்படி எப்படி பாதுகாக்க வேண்டுமோ அப்படியே பாதுகாக்கிறான்.

செடிகளுக்கு தண்ணீர் ஊற்றினால், தோட்டக்காரருக்கு மிகவும் சோர்வு உண்டாகிறது. அப்படியே, பரமாத்மனுக்கும் ஸ்ருஷ்ட்யாதி கர்மங்களில் சோர்வு ஆகிறதோ என்று கேட்டால் 'பாடுபடதலெ' என்னும் சொல்லினால் அந்த சந்தேகத்தை தாசராயர் போக்குகிறார். ஆனால் தோட்டக்காரன் எப்போதும் பலனை எதிர்பார்த்தே வேலை செய்கிறான்; பரமாத்மனோ எவ்வித பலனையும் எதிர்பார்க்காமல் அனைத்தையும் செய்கிறான். ஆகையாலேயே, பரமாத்மன், சர்வோத்தமன். கருணா சமுத்திரன் என்பது கருத்து.

**பூ4மியொளு ஜலவிரெ த்ருஷார்த்தனு**
**தா மரெது மொக3வெத்தி எண்தெ3ஸெ**
**வ்யோம மண்ட3லதொ3ளகெ3 காணதெ3 ஹுடுகுவந்த3த3லி ।**
**ஸ்ரீமனோரம ஸர்வரந்த**
**ர்யாமியாகி3ரெ திளியத3னுதி3ன**
**ப்4ராமகரு ப4ஜிஸுவரு ப4கு3தி1யொளன்ய தே3வதெய ।।13**

பூமியொளு ஜலவிரெ = பூமியில் நீர் இருந்தாலும்
த்ருஷார்த்தனு = தாகம் உள்ளவன்
தா மரெது = அதனை மறந்து
மொகவெத்தி = மேலே பார்த்தவாறு
வ்யோம மண்டலதொளகெ = ஆகாயத்தில்
எந்தெஸெ = எட்டு திசைகளிலும்
காணதெ = அதனை காணாமல்
ஹுடுகுவந்ததலி = நீரினை தேடுவதைப்போல
ஸ்ரீமனோரம = ரமாதேவியரின் மனதைக் கவரும் ரூபத்தைக் கொண்ட ஸ்ரீபரமாத்மன்
ஸர்வரந்தர்யாமியாகிரெ = அனைவரின் இதயத்திலும் இருந்தாலும்
திளியதனுதின = அறியாமல், தினந்தோறும்
ப்ராமகரு = கர்வம், பொறாமை உள்ள அஞ்ஞானிகள்

அன்யதேவதெய = கணபதி முதலான பிற தேவதைகளை
பகுதியில் = பக்தியில்
பஜிஸுவரு = துதிப்பார்கள்.

பூமியில், கிணறு, வாய்க்கால்களில் நீர் நிரம்பியிருந்தாலும், அதை கேட்டு அறிந்துகொள்ளாத தகுதியற்ற மூர்க்கன், அத்தகைய பூமியில் நீரைத் தேடுவதை விட்டு, ஆகாயத்தில், எட்டு திசைகளில் எங்காவது நீர் இருக்கிறதா என்று, தலை தூக்கிப் பார்த்தால் அதனால் என்ன பயன்? ஆகாயத்தில் நீர் நிறைந்திருக்கிறதா?

அப்படியே, ஜகத்பிரபுவான ஸ்வாமி, சர்வவியாப்தனாகி, பக்தர்களை அருள்வதற்காக, அனைவரின் இதயாகாஷத்திலும் காத்திருந்தாலும், அல்பமான விஷயாதி சுகங்களை விரும்பியவாறு, ஸ்வதந்த்ரனான பரமாத்மனை விட்டு, உச்சிஷ்ட கணபதி முதலான அன்ய தேவதைகளை துதிக்கிறார்கள். அதனால் கிடைக்கும் பலன் என்ன? பிற தேவதைகளின் அந்தர்யாமியாக இருந்து, பரமாத்மனே வரங்களைக் கொடுக்கிறான். பரமாத்மனையே துதித்தால், நிரந்தர பலன் கிடைக்கிறது என்பது கருத்து.

**முக்$^{2}$யப$^{2}$ல வைகுண்ட முக்$^{2}$யா**
**முக்$^{2}$யப$^{2}$ல மஹராதி$^{3}$ லோக அ**
**முக்$^{2}$யப$^{2}$ல வைஷயிகவெந்த$^{3}$ரிததி$^{3}$ ப$^{4}$கு$^{3}$தி$^{1}$யிந்த$^{3}$ ।**
**ரக்கஸாரிய ப$^{4}$ஜிஸுதலி நி**
**ர்து$^{3}$க்க$^{2}$னாகு$^{3}$ நிரந்தரதி$^{3}$ மொரெ**
**பொக்கவர பி$^{3}$ட$^{3}$ ப$^{4}$க்தவத்ஸல பா$^{4}$ரதீஷபித ||14**

முக்யபல = பகவத் ஆராதனைகளிலிருந்து நாம் பெறவேண்டிய பலன்களில் முக்கியமானது
வைகுண்ட = வைகுண்ட லோகத்தை சேர்வது
முக்யாமுக்யபல = முக்கியமும் அல்ல; அமுக்கியமும் அல்ல; மத்யம பலன்கள்
மஹராதிலோக = மஹர்லோக, ஜனோலோக முதலான லோகங்களை சேர்வது
அமுக்யபல = அமுக்கியமான பலன்
வைஷிகவு = விஷய சுகங்களைப் பெறுவது
எந்தரிது = என்று அறிந்து
அதி பகுதியிந்த = அதிகமான பக்தியினால்
ரக்கஸாரிய = அசுரர்களின் எதிரியான பரமாத்மனை
பஜிஸுதலெ = பஜனை செய்தவாறு
நிர்துக்கனாகு = எப்போதும் துக்கங்கள் அற்றவனாகி வைகுண்டத்தை சேர்
பக்தவத்ஸல = பக்தவத்ஸலனானவன்
பாரதீஷபித = பாரதிரமணனான முக்யபிராணதேவரின் தந்தையான ஸ்ரீஹரி
நிரந்தரதி = நிரந்தரமாக (தொடர்ச்சியாக)
மொரெபொக்கவர பிட = தன்னை வணங்குபவர்களை விடமாட்டான்

பலன்களில், முக்கிய பலன்கள், அமுக்கிய பலன்கள், முக்கியாமுக்கிய பலன்கள் என்று மூன்று விதங்கள் உண்டு.

அவற்றில் நிரந்தர சுகத்தைக் கொடுப்பது வைகுண்ட லோகம் - இதுவே முக்கிய பலன். இந்த பலனைப் பெறவேண்டுமெனில், எவ்வித வேண்டுதல்களும் இல்லாமல் (நிஷ்காமத்தினால்) பரமாத்மனை தொடர்ச்ச்சியாக துதிக்க வேண்டும்.

பரமாத்மனின் மத்யம பக்தர்களுக்கு முக்யாமுக்யமான மஹர்லோக, ஜனோலோக, தமோலோக, ஸத்யலோக முதலான உலகங்கள் கிடைக்கின்றன.

இந்த உலகங்களுக்கு செல்பவர்கள், சாபங்களால் மறுபடி பூலோகத்திற்கு வரும் வாய்ப்பு உண்டு. ஆனாலும், ஸ்வர்க்கவாசிகளைப் போல, புண்ணியங்களை இழந்து, பாவிகளாக இவர்கள் கீழே வருவதில்லை. அங்கிருந்தவாறே மேலே முக்த லோகத்திற்குச் சென்று, முக்தி காலத்தில் பிரம்மனுடன் சேர்ந்து முக்தர்கள் ஆகின்றனர். முக்தர்கள் ஆகும் அனைவருக்கும் பிரம்மனுடன்தான் முக்தி கிடைக்கிறது. ஆனால், முதலிலேயே சாதனைகளை பூர்த்தி செய்து வைகுண்டத்திற்கு புறப்பட்டவர்கள், பிரம்மலோகத்தில் இருந்தாலும், முக்தியில் இருந்தாற்போலவே சுகங்களை அனுபவித்தவாறு காலம் கழித்துக் கொண்டிருப்பார்கள்.

மஹராதி லோகங்களுக்கு செல்பவர்கள் அப்படியில்லை. சரியான காலத்தில் பிரம்மலோகத்தை அடைந்து முக்தர் ஆகின்றனர். இதற்கு நடுவில் இவர்கள் பூமிக்கு வரும் சந்தர்ப்பமும் உண்டு. வெறும் அமுக்ய பலன் என்றால், ஸ்வர்க்கலோக, அல்லது பூமியில் விஷயாதி போகங்களை அனுபவிப்பது. இந்த இரண்டும் தற்காலிகமானவை. புண்ணியம் இருக்கும் வரை ஸ்வர்க்கத்தை அனுபவிப்பர். புண்ணியம் குறைந்தால் மறுபடி பூமிக்கு வருவர். இந்த விஷயத்தில் ஷாண்டில்யதத்வத்தின் வாக்கியம்:

அதமாத் ஸ்வர்க்கலோகாதிர் மத்யமாத் ப்ரம்மண: பதம் |
உத்தமான் மோக்ஷமாப்னோதி ப்ரஸாதாச் சக்ரபாணின: ||

ஸ்ரீபரமாத்மனின் அதம பிரசாதத்தினால், ஸ்வர்க்கங்களோ, பூலோகத்தில் விஷய சுகானுபவங்களோ கிடைக்கின்றது. மத்யம பிரசாதத்தினால், மஹர்லோக முதல் ஸத்யலோகம் வரைக்கும் இருக்கும் ஏதோவொரு லோகத்தில் வசிக்கின்றனர். பரமாத்மனின் உத்தம ப்ரசாதத்தை அடைந்தவர்கள், மோட்சத்தை சேர்வார்கள் என்கின்றனர்.

இதே அபிப்பிராயத்தையே தாசராயர் இங்கு சொல்கிறார். பரமாத்மன் பக்தவத்ஸலன். நீயே கதி என்று தன்னை சரணடைந்தவர்களை என்றைக்கும் அவன் கைவிடுவதில்லை. ஆகையால், நீ பரமாத்மனை துதித்து, உத்தம பிரசாதத்தைப் பெற்று, முக்யபலனான முக்தியை அடைந்து, ஸ்வரூப சுகத்தை அனுபவித்திரு என்று சொல்கிறார்.

**வ்யாதி$^{4}$யிம் பீடி$^{3}$த ஸிஷுவிகெ$^{3}$ கு$^{3}$**
**டோத$^{3}$க$^{3}$வனெரெதகெ$^{3}$ ஔஷத$^{3}$**
**தேது$^{3}$ குடி$^{3}$ஸுவ தாயியோபாதி$^{3}$யலி ஸர்வக்ஞ |**
**பா$^{3}$த$^{3}$ராயண ப$^{4}$குதஜனகெ ப்ர**
**ஸாத$^{3}$ ரூபகனாகி$^{3}$ பா$^{4}$க$^{3}$வ**
**தாதி$^{3}$யலி பேளித$^{3}$ரு த$^{4}$ர்மாதிக$^{3}$ளெ ப$^{2}$லவெந்து$^{3}$** ||15

வியாதியிம் = நோயில்
பீடித சிசுவிகெ = பாதிக்கப்பட்ட குழந்தைக்கு
குடோதகவனெரெது = இனிப்பு சுவை கூட்டுவதற்காக, வெல்லம் கலந்த நீரினை
அதகெ = அந்த பானத்திற்கு
ஔஷதி = மருந்தை
தேது = சந்தனத்தைப் போல கல்லில் அரைத்து அந்த பானத்தில் சேர்த்து
குடிசுவ தாயியோபாதியலி = அதை அக்குழந்தைக்கு குடிக்க வைக்கும் தாயினைப் போல
ஸர்வக்ஞ = அனைத்தும் அறிந்தவனான ஸ்ரீஹரி
பாதராயண = பதரி மரத்தடியில் அமர்ந்திருப்பதால் பாதராயண என்று பெயர் பெற்ற வேதவியாஸ தேவர்
பக்தஜனகெ = தன் பக்தர்களுக்கு
ப்ரஸாத ரூபகனாகி = அருள்வதற்காக
பாகவதாதியலி = பாகவதம் முதலான கிரந்தங்களில்
பேளிதரு = கூறியதைப் போல
தர்மார்த்தகளே பலவெந்து = காம பலன்களை எதிர்பார்த்து செயல்களை செய்தால், அதிலிருந்து தர்ம அர்த்தாதி புருஷார்த்தங்கள் கிடைக்கிறது என்று சொல்கிறார்.

தாயானவள், குழந்தைக்கு வந்திருக்கும் நோயினை குணப்படுத்துவதற்காக, மருந்து கொடுக்கவேண்டுமெனில், அந்த குழந்தை அந்த மருந்தினை குடிக்காமல் அழுதால், அதன் கையில் சிறிது வெல்லத்தைக் கொடுத்து 'இந்தா இந்த மருத்தைக் குடித்து இந்த வெல்லத்தைக் கடி' என்று சமாதானப்படுத்தி மருத்தைக் குடிக்க வைப்பாள். ஆனால், இந்த வெல்லத்தினால் நோய் குணமாகுமா? அல்லது, மருந்தைக் குடித்தால் அதன் பலனாக வெல்லம் கிடைக்கும் என்று சொல்வதுதான் அந்த தாயின் அபிப்பிராயமா? இரண்டும் இல்லை. அடம் பிடிக்கும் குழந்தையை சமாதானப்படுத்துவதே தாயின் நோக்கம். மருந்தினால் கிடைக்கும் பலன் நோய் நிவாரணம்.

அதைப்போல, எவ்வித பலன்களையும் எதிர்பார்க்காமல், பரமாத்மனை பக்தியுடன் துதிப்பதே சம்சாரம் என்னும் நோய்க்கு மருந்து. அப்போது இக்குழந்தைக்கு கொடுத்ததைப்போல, சுவை ஊட்டுவதற்காக, அந்த கர்மங்களை செய்த யோக்யர்களுக்கு முதலில் சிறிது பலன்களை சொல்லியிருக்கிறார்களே தவிர, பலன்களை எதிர்பார்த்தே கர்மங்களை செய்யவேண்டும் என்னும் சொல்வது, ஸ்ரீவேதவியாச தேவரின் நோக்கம் அல்ல.

பாகவத 12ம் ஸ்கந்தம் இறுதியில், பாகவதம் கேட்டால் 'க்ருதகுல்யா: பய:குல்யா: மதுகுல்யாஸ்ச தத்பலம்' - இவன் வீட்டில் நெய் ஆறு, பாலாறு, தேனாறு பாய்கிறது என்று சொல்கின்றனர். குல்ய என்றால் மலைகளின் அடிவாரங்களில் தானாக தோன்றும் குளம் / குட்டை என்று சொல்லலாம். பாகவத ஸ்ரவணம் செய்பவர்களின் வீட்டில் இத்தகைய ஆறுகள் ஓடும் - அதாவது, அவ்வளவு செல்வங்கள் வந்து சேரும் என்பது கருத்து.

மற்றும் நாராயண பர்வத்தில் வரும் மந்திரங்களை ஜெபித்தால் 'ராஜதஸ் யுக்ரஹாதிப்யோ வ்யாத்யாதி ப்ருஷ்ச கஸ்சன' - அவனுக்கு ராஜனிடமிருந்தோ, திருடர்களிடமிருந்தோ, நவக்கிரகங்களிடமிருந்தோ, நோய்களிடமிருந்தோ எவ்வித பிரச்னைகளும் வருவதில்லை என்கிறார். இப்படி சொல்லியிருக்கும் வேதவியாஸதேவரின் அபிப்பிராயம் என்னவெனில் - பலன்களை எதிர்பார்த்து கர்மங்களை செய்பவர்களுக்கு, அந்த கர்மங்களுக்கு அவ்வளவே பலன்கள் கிடைக்கும் என்று இல்லை. இதே கர்மங்களை பகவத் ப்ரீதிக்காக செய்தால், அதன் பலன் முக்தி என்று அறியவேண்டும்.

கீதையில் 'கர்மண்யேவாதிகாரஸ்தே மா பலேஷு கதாசன' கர்மத்தை செய்வதற்கு மட்டுமே உனக்கு அதிகாரம் உள்ளதே தவிர, பலன்களை எதிர்பார்ப்பதில் அதிகாரம் இல்லை என்று அர்ஜுனனுக்கு ஸ்ரீகிருஷ்ணன் உபதேசிக்கிறார். இந்த காரணங்களால், பலன்களை சொல்லியிருப்பது, சுவை ஊட்டுவதற்காகவே என்று அறிந்து, பலன்களை எதிர்ப்பார்ப்பதை விட்டு, பகவத்ப்ரீதிக்காக கர்மங்களை செய்து முக்தியை அடையவேண்டும்.

**தூ$^{3}$ரத$^{3}$ல்லிஹ பர்வத க$^{4}$னா**
**கார தோர்புது$^{3}$ நோள்ப ஜனரிகெ$^{3}$**
**ஸாரெகை$^{3}$யலு ஸர்ப்ப வ்யாக்$^{4}$ரக$^{3}$ளிந்த ப$^{4}$யவிஹுது$^{3}$ |**
**கோ$^{4}$ரதர ஸம்ஸார ஸுக$^{2}$வு அ**
**ஸாரதரவெந்த$^{3}$ரிது நித்ய ர**
**மாரமண நாராதி$^{3}$ஸுவரத$^{3}$ரிந்த$^{3}$ ப$^{3}$ல்லவரு ||16**

தூரதில்லிஹ = தூரத்தில் தெரியும்
பர்வத = மலை
கனாகார = மேகத்தைப் போல மென்மையாக
நோள்ப ஜனரிகெ = பார்ப்பவர்களுக்கு
தோர்புது = தெரிகிறது
ஸாரெகையலு = அருகில் சென்று பார்த்தால்
ஸர்வ = பாம்புகள்
வ்யாக்ரகளிந்த = புலிகள் இருந்து
பயவிஹுது = பயங்கரமாக இருக்கிறது
கோரதர சம்சார சுகவு = பயங்கரமான சம்சார சுகத்தை
அஸாரதரவெந்தரிது = பிரயோஜனம் இல்லாதது என்று அறிந்து
அதரிந்த = அந்த காரணத்தாலேயே

பல்லவரு = ஞானிகள்
ரமாரமணன = லட்சுமிபதியான ஸ்ரீபரமாத்மனை
ஆராதிஸுவரு = பூஜிக்கின்றனர்.

‘தூரத: பர்வதோரம்ய:’ - மலைகள் தூரத்திலிருந்து பார்த்தால், மேகங்களைப் போல மென்மையாக, அழகாக தெரிகிறது. ஆனால் அதையே பக்கத்தில் சென்று பார்த்தால், பாம்பு, புலி முதலான துஷ்ட பிராணிகளுடன் பயங்கரமாக இருக்கிறது.

அதைப் போலவே, சம்சாரத்திலும், மிகப்பெரிய மாளிகையை வைத்துக்கொண்டு, மனைவி, மக்கள் ஆகியவர்களுடன் இருப்பவர்களைப் பார்த்து, இவர்கள் சம்சாரத்தில் இவ்வளவு சுகப்படுகிறார்கள் என்று நினைத்து, நாமும் அவர்களைப்போல சுகப்படவேண்டும் என்று மயங்கி, சம்சாரத்தில் மூழ்கி பற்பல துக்கங்களை அனுபவித்த பிறகு, இனி எப்பிறவியிலும் இந்த சம்சாரம் எனக்கு வேண்டவே வேண்டாம் என்று தோன்றும். ஆகையால், ஞானிகள், பிரயோஜனம் இல்லாத இந்த சம்சாரத்தில் பரமாத்மனின் ஆராதனை ஒன்றே பலன் உள்ளது என்று அறிந்து ஸ்ரீரமாரமணனை ஆராதிக்கின்றனர்.

**கெஸரக$^{4}$டக$^{3}$ல மாடி$^{3}$ பே$^{3}$ஸிகெ$^{3}$**
**பி$^{3}$ஸிலொளிட்டொ ணகி$^{3}$ஸித$^{3}$ரது$^{3}$ க$^{4}$ன**
**ரஸவ தும்ப$^{3}$லு ப$^{3}$ஹுதெ$^{3}$ ஸர்வ ஸ்வதந்த்ர தானெம்ப$^{3}$**
**பஷுப நரனேனெனு மாள்ப அ**
**நஷன தா$^{3}$ன ஸ்னான கர்மக$^{3}$**
**ளொஸரிபோபுவு ப$^{3}$ரிதெ$^{3}$ தே$^{3}$ஹாயாஸவனெ கொட்டு ||17**

கெசரகடகல மாடி = மண் பானை செய்து
பேஷிகெ பிஸிலொளு இட்டு = க்ரீஷ்ம ருதுவின் வெய்யிலில் அவற்றை வைத்து
ஒணகிஸிதரெ அவு = உலர வைத்தால், அவை
கனரஸவ = நீர் முதலான திரவ்யங்களை
தும்பலு பஹுதெ = அதில் நிரப்ப முடியுமா?
சர்வ ஸ்வதந்த்ர தானெம்ப = தானே ஸ்வதந்த்ரனாகி அனைத்து செயல்களையும் செய்கிறேன் என்னும்
பஷுப நர = மிருகங்களைப் போல தின்பவன்
ஏனேனு மாள்ப = எந்தெந்த செயல்களை செய்கிறானோ
அனஷன தான ஸ்னான கர்மகளு = உபவாச, தான, ஸ்னான முதலான கர்மங்கள்
பரிதெ = எவ்வித பலன்களையும் கொடுக்காமல்
ஒசரி போபுவு = வெளியேறி விடுகிறது
தேஹாயாஸவனெ = உடலுக்கு சோர்வினை மட்டும்
கொட்டு = கொடுக்கின்றன

மண்ணால் பானையை செய்து, அதை சுடும் வெய்யிலில் வைத்து உலர்த்தி, பின் அதில் நீர் நிரப்பினால், அந்த நீர் அதில் தங்காது. வெளியேறிவிடும். அதே பானையை நன்றாக சுட்டு, பின் நீர் நிரப்பினால், அந்த நீர் அதிலேயே தங்குகிறது.

அதுபோலவே, தேகம் என்னும் பானையில் இருக்கும் புருஷன், தானே ஸ்வதந்த்ரத்தினால் கர்மங்களை செய்கிறேன் என்றால், இந்த தேகம் பிறந்தபோது இருந்த மாதிரியே இருந்து, செய்த புண்ணியங்கள் அனைத்தும் எவ்வித பலன்களைக் கொடுக்காமலேயே போய்விடுகின்றன.

பானையை நெருப்பில் சுட்டதைப்போல, சரீரத்திற்கு பகவந்தனே ஸ்வதந்த்ரகர்த்தன், ஸர்வோத்தமன் என்னும் ஞானமே நெருப்பு ஆகிறது. அந்த ஞானம் என்னும் நெருப்பால் சுட்டு, சுட்ட-பானை எப்படி நீரை தக்க வைத்துக் கொள்கிறதோ, அது போல, தேகம் செய்த புண்ணியங்களை வெளியே விடாமல் காப்பாற்றுகிறது. ஆகையால், ஸ்வதந்த்ர கர்த்தன் பரமாத்மன் என்று, நாம் செய்த புண்யபாபங்களை பரமாத்மனுக்கு சமர்ப்பித்தால், தானே ஸ்வதந்த்ர கர்த்தன் என்று நினைக்கும், மிருகங்களைப் போல தின்பவன் செய்யும் ஸ்னான, தானாதி அனைத்தும் அவனுக்கு வெறும் உடற் சோர்வினைக் கொடுக்கின்றன என்பது கருத்து.

**எரடு$^{3}$ தீ$^{3}$க்ஷெக$^{3}$ளிஹவு பா$^{3}$ஹ்யா**
**ந்தரவெனிப நாமத$^{3}$லி பு$^{3}$த$^{4}$ரி**
**ந்த$^{3}$ரிது தீ$^{3}$க்ஷிதனாகு$^{3}$ தீர்க்க$^{4}$ த்$^{3}$வேஷ$^{2}$க$^{3}$ள பி$^{3}$ட்டு ।**
**ஹரியே ஸர்வோத்தம க்ஷராக்ஷர**
**புருஷபூஜிதபாத$^{3}$ ஜன்மா**
**த்$^{3}$யரவிதூ$^{3}$ர ஸுகா$^{2}$த்ம சர்வக$^{3}$னெந்து$^{3}$ ஸ்மரிஸுதிரு ||18**

பாஹ்யா = வெளிப்புற
அந்தர = உட்புற
நாமதலி = என்ற பெயர்களில்
எரடு தீக்ஷெகளிகவு = இரு தீட்சைகள் இருக்கின்றன
புதரிந்த = ஞானிகளிடமிருந்து
அரிது = (இந்த தீக்ஷைகளின் கிரமத்தை) அறிந்து கொண்டு
தீக்ஷிதனாகு = தீட்சைகளை அனுசரித்து வா
தீர்க்கத்வேஷகள பிட்டு = யாரிடமும் த்வேஷங்களை செய்யாமல்
ஹரியே சர்வோத்தம = ஸ்ரீஹரியே சர்வோத்தமன் என்றும்
க்ஷராக்ஷர = அக்ஷர நாமக ரமாதேவியாலும், க்ஷர எனப்படும் பிரம்மாதி தேவதைகளாலும்
புருஷ பூஜித பாத = இப்படியான ரமா பிரம்மாதிகளால் வணங்கப்படும் பாதங்களைக் கொண்டவன்
ஜன்மாத்யரவிதூர = பிறப்பு முதலான தோஷங்கள் அற்றவன்
சுகாத்ம = சுக ஸ்வரூபன்
சர்வகனு = அனைத்து இடங்களிலும் வசிப்பவன்
ஸ்மரிஸுதிரு = என்று நினைத்து அவனை வணங்கிக் கொண்டிரு.

வைஷ்ணவர்களுக்கு முக்கியமானது தீக்ஷா- ஸ்வீகாரம். விஷ்ணு தீக்ஷியை ஸ்வீகரிக்காதவன், வைஷ்ணவனே இல்லை. விஷ்ணு ரஹஸ்ய 7ம் அத்தியாயத்தில்:

ஸர்வாஸாமபி தீக்ஷாணாம் விஷ்ணு தீக்ஷாதிகாமதா |
யத: ஸர்வேஷ்வரோ விஷ்ணுர் தேவானாமபி தேவதா ||53
யஸ்யஸ்யாத்வைஷ்ணவீ தீக்ஷா ஸர்வைர்மான்ய: ஸதீக்ஷித: |
அவஜானாதி யஸ்தந்து ஸோவஜானாதி கேஷவம் ||55
அங்கிதம் ஷங்கசக்ராத்யைர் விஷ்ணு தீக்ஷான்விதம் நரம் |
யோனிந்ததி விமுடாத்மா ஸர்வேஷ்டா விஷ்ணு மேவஹி ||56
நீச வர்ணோபியோ விஷ்ணு தீக்ஷாவான் ஸஹிபந்துவத் |
வினாப்ரணாமம் மான்யே ஸ ராமக்ருஷ்ணாதி நாமபி: ||58
உச்சவர்ணோபி யே விப்ரோ: வேத வேதங்க பாரக: |
ஸதாசார ரதோபிஸ்யாத்விஷ்ணு தீக்ஷா விவர்ஜித: ||59
ஸஜோரவத்பஹிஷ்கார்யஸ்த ஸ்ம்ருததஞ்ச நிஷ்பலம் |
பாத்ரம் ஹி பரமம் ப்ரோக்தம் ஹவ்யகவ்யாதித: ஸதா ||60
யஸ்யஸ்யாத் வைஷ்ணவே தீக்ஷாதத்தம் பவதி சாக்ஷயம் ||

உலகத்தில் பிற தேவதைகளை உபாசனை செய்தவாறு, அந்த தீக்ஷையை ஸ்வீகரிப்பவர்கள் பலர் உண்டு. சைவ தீக்ஷை முதலான அனைத்து தீக்ஷைகளைவிட விஷ்ணு தீக்ஷை மிகச் சிறந்தது. ஏனெனில், பிரம்மாதி அனைத்து தேவதைகளுக்கும் விஷ்ணுவே ஸ்வாமியானவன். தேவதைகளுக்கெல்லாம் தேவதை எனப்படுபவன். ஆகையால், விஷ்ணு தீக்ஷையே உத்தமமானது ஆகும். யார் விஷ்ணு தீக்ஷையை ஏற்றிருக்கிறாரோ, அவன் அனைவராலும் புகழப்படுகிறான். அவனை வேறு யாராவது திட்டினால், அது விஷ்ணுவையே அவமானம் செய்ததைப் போலாகிறது. நீச வர்ணத்தவனாக இருந்தாலும்கூட ஒருவன் விஷ்ணு தீக்ஷையை ஏற்றுக்கொண்டால், அவனை நம் உற்றார் போல நினைக்க வேண்டும். ராமகிருஷ்ணாதி பெயர்களால் அவனை கௌரவிக்க வேண்டும்.

பிராமணனாக பிறந்து, வேத வேதாங்கங்களில் தேர்ச்சி பெற்று, சதாசாரங்களை பின்பற்றுபவனாக இருந்தாலும், விஷ்ணு தீக்ஷையைப் பெறவில்லையெனில், அவனை, திருடனை வெளியில் தள்ளுவதைப் போல வெளியில் தள்ள வேண்டும். அவனுக்கு எவ்வித தானங்களைக் கொடுத்தாலும், அது எவ்வித பலன்களையும் கொடுப்பதில்லை.

யார் வைஷ்ண தீக்ஷை பெற்றிருக்கிறானோ, அவனே சத்பாத்ரன் ஆகிறான். பகவத் பிரசாதங்களை இவனுக்கு கொஞ்சம் கொடுத்தாலும் கூட, அது அக்ஷயமாகிறது -- என்னும் பல வாக்கியங்களால், விஷ்ணு தீக்ஷைக்கு மகாமகிமைகளை சொல்லியிருக்கிறார்கள். இந்த விஷ்ணு தீக்ஷையில், பாஹ்ய தீக்ஷை, அந்தர தீக்ஷை என்று இரு விதங்கள். விஷ்ணு ரஹஸ்யத்தின் 7ம் அத்தியாயத்தில்:

தீக்ஷாஹி த்விவிதாப்ரோக்தா பாஹ்யாப்யந்தர பேதஷ:
ஞானினா முபயம் தத்ர பாஹ்யயோவா஽ங்ஞானினாம் பவேத் ||39
அயம் ஸர்வேஷ்டதாதா மே ஸர்வானிஷ்ட நிவாரக: |
ஸர்வோத் க்ருஷ்டோ஽ய மேவைகஸ்ததீயோ ஹம்ஸமேபதி: ||40
இதி ஞானம் நிஸ்சிதம் யத்ஸா தீக்ஷாப்யந்தராமதா ||

தீக்ஷையில் புற, அக என்று இரு விதங்கள் உண்டு. ஞானிகளுக்கு இந்த இருவித தீக்ஷையும் பொருந்தும். அஞ்ஞானிகளுக்கு என்றால், சிறிய குழந்தைகள் முதலானவர்களுக்கு புற தீட்சை கண்டிப்பாக இருக்கவேண்டும். இவற்றில் அக தீட்சை என்னவென்றால், ஸ்ரீபரமாத்மன், எனக்கு அனைத்து செல்வங்களையும் கொடுப்பவன். அனைத்து துன்பங்களையும் போக்குபவன். பரமாத்மன் ஒருவனே சர்வோத்தமன். நான் எப்போதும் அவன் அதீனமே. எனக்கு அவன் ஸ்வாமி என்னும் ஞானம் திடமாக (சந்தேகமில்லாமல்) இருப்பதே அக தீட்சை என்கிறார்.

இதே அபிப்பிராயத்தையே தாசராயரும் இங்கு சொல்கிறார். ஹரியே சர்வோத்தமன். க்ஷராக்ஷர புருஷர்களான பிரம்மாதிகளால் பூஜிக்கப்படுபவனான பாத கமலங்களைக் கொண்டவன். பிறப்பு இறப்பு முதலான தோஷங்கள் இல்லாதவன், ஆனந்த ஸ்வரூபன். அனைத்து இடங்களிலும் வியாபித்திருப்பவன் என்று அறிந்து எப்போதும் அவனை வணங்கிக் கொண்டிருப்பதே அக தீட்சை.

**ஹேயவஸ்துக³ளில்ல ஊபா**
**தே³யவஸ்துக³ளில்ல ந்யாயா**
**ன்யாய த⁴ர்மக³ளில்ல த்³வேஷாஸூயே மொத³லில்ல |**
**தாயிதந்தெ³க³ளில்ல க¹மலத³**
**லாயதாக்ஷகெ³ எனலு ஈஸுவ**
**காயியந்த³தி³ முளுக³கொட³தெ³ ப⁴வாப்³தி⁴ தா³டிஸுவ ||19**

கமலதலாயதாக்ஷகெ = தாமரையைப் போல கண்களை உடைய ஸ்ரீபரமாத்மனுக்கு
ஹேய வஸ்துகளல்ல = எந்த பொருள் நம்மிடம் இருப்பதால் நமக்கு மிகவும் துக்கம் வருகிறதோ, அத்தகைய பொருள் நம்மை விட்டு விலகினால் போதும் என்று நினைக்கிறோமோ, அத்தகைய பொருட்கள் பரமாத்மனுக்கு இருப்பதில்லை.
உபாதேய வஸ்துகளில்ல = எந்த பொருட்கள் இல்லை என்றாலும் சுகமாக இருக்கிறதோ, அத்தகைய பொருட்களும் இல்லை.
ந்யாயான்யாய தர்மகளல்ல = இது நியாயம், இது அ நியாயம் என்னும் தர்மபேதங்கள் இல்லை
த்வேஷாஸூயே மொதலில்ல = ஒருவரிடம் த்வேஷம், மற்றொருவரிடம் வயிற்றெரிச்சல் என்பவை இல்லை
தாயிதந்தெகளில்ல = அவனுக்கு தாய் தந்தைகள் இல்லை
யெனலு = என்று உபாசனை செய்தால்
ஈஸோகாயியந்ததி = சுரைக்காய் எப்படி மூழ்காமல் இருக்குமோ அப்படி
பவாப்தி = சம்சார சாகரத்தை

தாடிசுவ = தாண்ட வைப்பான்.

வாழ்க்கையில் மக்களுக்கு இரு வகை துக்கங்கள் உண்டு. பாகவத 7ம் ஸ்கந்தத்தில்:
யஸ்மாத்ப்ரியாப்ரிய வியோக ஸயோக ஜன்மஷோகாக்னினா ஸகல யோனிஷு தஹ்யமான: |

எந்தப் பொருள் நமக்கு மிகவும் பிடிக்குமோ, எந்தப் பொருளை விட்டு நாம் ஒரு கணமும் இருக்க முடியாது என்று நினைக்கிறோமோ, அத்தகைய வஸ்துவே நம்மை விட்டு போய்விடும். மற்றும், எந்த பொருட்களை நாம் தேவையில்லை என்று அறிந்து, இந்தப் பொருள் என்றும் நம்மிடம் வரக்கூடாது என்று நினைக்கிறோமோ, அந்தப் பொருள் நம்மை அடைந்து நம்மிடமே இருக்கும். இந்த இரண்டைவிட அதிக துக்கம் வேறெது? பரமாத்மன், ஜகத்குடும்பி ஆனாலும், இது வேண்டிய பொருள், இது தேவையில்லாத பொருள் என்னும் நினைப்பே அவனுக்கு இல்லை. மேலும், இது நியாயம், இது அநியாயம் என்னும் சிந்தனையும் அவனுக்கு இல்லை.

யேதோஷா இதரத்ராபிதேகுணா: பரமேமதா: -- என்னும் நியாயத்தால் மற்றவர்களிடம் எது தோஷம் என்று தோன்றுகிறதோ, அது பரமாத்மனிடம் குணமாகவே இருக்கும் என்கிறார். பரமாத்மனுக்கு ஒருவனிடமும் த்வேஷம் இல்லை. யாரிடமும் வயிற்றெரிச்சல் இல்லை. அவனுக்கு தாய் தந்தையர் இல்லை. என்று அறிந்து உபாசனை செய்வது, ஒரு அக தீட்சையாகும். இவ்விதமாக, உபாசனையை செய்தால், காய்ந்த சுரைக்காயை வயிற்றில் கட்டிக்கொண்டு தண்ணீரில் குதித்தாலும், அந்த சுரைக்காய் நீரில் மூழ்காமல் எப்படி மிதக்குமோ, அப்படியே ஸ்ரீபரமாத்மன், அக தீட்சையினால் தன்னை உபாசனை செய்பவரை, சம்சார சாகரத்தில், மூழ்கவிடாமல் மிதக்க வைத்து காப்பாற்றுவான்.

**மந்த$^{3}$னாத$^{3}$ரு ஸரியே கோ$^{3}$பி**
**சந்த$^{3}$ன ஸ்ரீமுத்$^{3}$ரெக$^{3}$ள நல**
**விந்த$^{3}$ த$^{4}$ரிஸூத ஸ்ரீதுளஸி பத்$^{3}$மாக்ஷ ஸரக$^{3}$ளனு |**
**கந்த$^{4}$ரத$^{3}$ மத்$^{4}$யத$^{3}$லி த$^{4}$ரிஸி மு**
**குந்த ஸ்ரீ பூ$^{4}$ரமண த்ரிஜக$^{3}$**
**த்வந்த்$^{3}$ய ஸர்வஸ்வாமி மமகுலதெ$^{3}$ய்வ எனெ பொரெவ ||20**

மந்தனாதரு சரியே = அஞ்ஞானியானாலும் சரியே
கோபிசந்தன ஸ்ரீமுத்ரெகள = கோபிசந்தன, ஸ்ரீமுத்திரைகளை
நலுவிந்த = மகிழ்ச்சியுடன்
தரிசுத = தரித்து
ஸ்ரீதுளசி பத்மாக்ஷ சரகளனு = ஸ்ரீதுளசி, பத்மாக்ஷ மாலைகளை
கந்தரத = கழுத்தைச் சுற்றி
மத்யதலி தரிஸி = தரித்து

முகுந்த = மோட்சத்தைக் கொடுப்பவனான
ஸ்ரீபூரமண = ஸ்ரீதேவி மற்றும் பூதேவியருக்கு தலைவனான
த்ரிஜகத்வந்த்ய = மூன்று உலகத்து மக்களாலும் வணங்கப்படுபவனான
ஸர்வஸ்வாமி = அனைத்து உலகங்களுக்கும் ஸ்வாமியான
மமகுலதெய்வ = என் குலதெய்வமான
எனெ = இப்படியாக தியானித்தால்
பொரெவ = காப்பாற்றுவான்.

ஒருவன் அஞ்ஞானியானாலும், விஷ்ணு தீக்ஷையைப் பெற வேண்டும்.

நாமசின்ஹாதினா தேஹே வன்ஹினாமாம்ருதாங்கனம் |
ஸாபாஹ்யப்ரோச்யதீ தீக்ஷா ஹ்யஞ்ஞானாம் ஞானினாமபி |
ஷிஷவ: பஷவோன்னானி பாத்ராண்யாபரணானிச ||42
ரதத்வஜ பதாகாதி ஸர்வமஞ்ஞான முச்யதே |
ஏதேஷாம் ஹிமதீயத்வ ஞாபனாய லிகேத்ஸ்வயம் ||

கோபிசந்தனத்தால் 12 ஊர்த்வ புண்ட்ரங்களை தரித்து சங்கு, சக்கரம், கதா, பத்ம, நாராயண முத்திரைகளை தரிப்பது மற்றும் தப்த முத்ராதாரணங்களை தரிப்பது, ஆகியவை புற தீக்ஷைகள். இந்த தீக்ஷை ஞானிகளுக்கும், அஞ்ஞானிகளுக்கும் பொதுவானவை. ஆகையால், அனைவரும் இவற்றை தரிக்க வேண்டும். அஞ்ஞானிகள் என்றால் சிறிய குழந்தைகள், பசுக்கள், சமையல் பாத்திரங்கள் ஆகியவை. ரத, த்வஜ, பதாகைகள் ஆகிய அனைத்தும் அஞ்ஞானிகளில் சேர்ந்தவை. இந்த பொருட்களின் மேல் இவை அனைத்தும் பகவத் சம்பந்தமானவை என்று தெரிவிப்பதற்காக 12 நாம புண்ட்ரங்களை, முத்திரைகளை இட வேண்டும். ஆகையால், அதன் மேல் அவை எப்போதும் விஷ்ணு தீக்ஷையைப் பெற்றிருப்பவை என்று காட்டுவதற்காக, சுண்ணாம்பினாலோ, வர்ணத்தினாலோ, அடையாளமாக காட்டுவதைப் போல நாமங்களை இட வேண்டும் என்பது கருத்து.

மேற்சொன்ன விஷ்ணு ரஹஸ்ய வாக்கியத்தை மனதில் வைத்து, தாசராயர் இங்கு இவ்வாறாக சொல்லியிருக்கிறார். இப்படியாக கோபிசந்தன முத்திரைகளை தரித்து, கழுத்தில் துளசிமணி மாலைகளை, கமலாக்ஷ சரங்களை தரித்தால், புற தீக்ஷையை ஏற்றுக் கொண்டதாக ஆயிற்று. பின், முகுந்த, மூன்று உலகங்களால் வணங்கப்படுபவன், சர்வஸ்வாமி, நம் குலதெய்வம் என்று உபாசனை செய்வது அக தீட்சை. இந்த இரண்டினால், தீக்ஷிதன் என்று சொல்லிக் கொள்பவனை, ஸ்ரீபரமாத்மன் காப்பாற்றுகிறான் என்பது கருத்து.

**ப்ராய த$^4$னமத$^3$தி$^3$ந்த$^3$ ஜனரிகெ$^3$**
**நாயக ப்ரபு$^4$வெம்பி$^3$ பூர்வதி$^3$**
**தாயி பொட்டெயொளிரலு ப்ரபு$^4$வெந்தே$^3$கெ கரெயரெலெ**
**காய நின்னனு பி$^3$ட்டுபோக$^3$லு**
**ராய நீனெம்புவ ப்ரபு$^4$த்வ ப**
**லாயனவனைதி$^3$து ஸமீபத$^3$லித்த$^3$ரத$^3$ தோரு ||21**

ப்ராய தன மததிந்த = வாலிப, செல்வ கர்வத்தினால்
ஜனரிகெ = மக்களுக்கு
நாயக = நான் நாயகன்
ப்ரபு = நான் முதல்வன்
மெம்பி = என்னும்
பூர்வதி = இதற்கு முன்
தாயிபொட்டெயொளிரலு = தாயின் கர்ப்பத்தில் இருந்தபோது
ப்ரபுவெந்து ஏகே கரெயரெலெ = (நீயே முதல்வனாக இருந்தால், தாயின் கர்ப்பத்தில் இருந்தபோது) உன் ஆளுமை எங்கே போயிற்று?
காய நின்னனு பிட்டுபோகலு = இந்த தேகம் உன்னை விட்டுப் போனபிறகு
ராய நீனெம்புவ ப்ரபுத்வ = நீயே தலைவன் என்று சொல்லும் உன் ஆளுமை
பலாயனவனைதிது = தோற்று ஓடிப்போயிற்று
சமீபதலித்தரத தோரு = அந்த ஆளுமை, உன் அருகில் இருந்தால், அதனை நீ காட்டு.

உலகத்தில் மக்கள், வாலிபம், செல்வம் இந்த இரண்டின் கர்வத்தினால், நானே அனைவரையும் காப்பாற்றுகிறேன். நானே தலைவன் என்று சொல்லும் வழக்கம் உண்டு. நான் தலைவன் என்று சொல்வது அவர்களின் ஸ்தூல தேகத்தைப் பார்த்தா அல்லது ஜீவனைப் பார்த்தா? தேகத்திற்கு பிரபுத்வம் கொடுத்தால், தாயின் கர்ப்பத்தில் இந்த தேகம் பூர்ணமாக இருந்தபோதும், குழந்தையாக இருந்தபோதும் இதே சரீரம்தானே இருந்தது? அப்போது பிரபு என்று ஏன் யாரும் சொல்லவில்லை? பாகவத 1ம் ஸ்கந்தத்தில் :

காலகர்மகுணாதீனோ தேஹோயம் பாஞ்சபௌதிக: |
கதமன்யாம்ஸ்து கோபாயேத் ஸர்ப்பக்ரஸ்தோ யதாபரம் ||

இந்த தேகத்தை பிரபு என்று சொன்னால், நாளடைவில் கண், காது முதலான இந்திரியங்கள் ஏன் நம்மை விட்டுப் போகின்றன? அவற்றின் மேல் நம் பிரபுத்வம் ஏன் இல்லை? சரீரம் நம்மை விட்டு ஏன் போகின்றது? ஆகையால், இந்த சரீரம், கால, கர்ம, குணங்கள் இவற்றின் அதீனத்தில் இருக்கும் பஞ்சபூத சம்பந்தப்பட்டவை. இத்தகைய சரீரத்தால், நாம் இன்னொருவரை காப்பாற்றுகிறோம் என்று சொல்வது, ஒரு பாம்பின் வாயில் சிக்கியிருக்கும் தவளையானது, இன்னொரு பாம்பின் வாயில் சிக்கியிருக்கும் தவளையைப் பார்த்து, நான் உன்னை காப்பாற்றுகிறேன் என்று சொல்வது போலாகும். இதுவே மேலின பாகவத ஸ்லோகத்தின் அர்த்தம்.

ஆகையால், பிரபுத்வம் தேகத்திற்கு இல்லை என்று சொல்லியாயிற்று. பின், ஜீவனை பிரபு என்று சொல்லலாம் என்றால், இந்த தேகம் ஜீவனை விட்டுப் போனபிறகு, ஜீவனின் பிரபுத்வம் எங்கு போகிறது? ஆகையால், ஜீவன் பிரபு அல்ல. பின் எதை பிரபு என்று சொல்வது? தேகம் உள்ள ஜீவன் என்றால், தேஹியே பிரபு என்று சொல்ல வேண்டும். இந்த தேஹிக்காவது, மழலை, முதுமைகளில் பிரபுத்வம் வருகிறதா என்றால் இல்லை. முன்னும் இல்லை. பின்னும் இல்லை.

இவற்றிற்கு நடுவில் நமக்குள் இருந்து, பிம்பரூபியான பரமாத்மன் செய்யும் பிரபுத்வத்தை, யௌவனத்தின் கர்வத்தில் மறந்து, நானே பிரபு என்று சொல்வர். பாகவத 10ம் ஸ்கந்தத்தின் பிற்பாதியில் இருக்கும் முசுகுந்த ஸ்துதியில் முசுகுந்த ராஜன் சொல்வது இது:

புராரதைர்ஹேம பரிஷ்க்ருதைஸ்சர்ய மதங்க ஜைர்வானரதேவ ஸங்ஞித: |
ஸ ஏவ காலேன துரத்யயோனவை களேவரோவிட் க்ரிமிபஸ்ம ஸங்ஞித: |

முன்னர், தங்கமயமான திவ்ய ரதத்தில் அல்லது யானைகளின் மேல் அமர்ந்து, யார் தன்னை ராஜாதிராஜன் என்று புகழ்ந்து கொள்கிறானோ, காலத்திற்கேற்ப அவன் அந்த ராஜ தேகத்தை விட்டபிறகு, அதில் இருக்கும் ராஜத்வம் போய், விட் என்றால் கிருமி அல்லது சாம்பலாகிறது. இந்த சரீரத்தை, சாம்பலாக்காமல் அப்படியே விட்டுவிட்டால், நாய் நரிகள் தின்று பின் மலரூபமாக காட்சியளிக்கிறது. அல்லது அதில் புழுக்கள் ஊர்ந்து போகின்றன. எரித்தால் சாம்பலாகிறது. இப்படிப்பட்ட காலங்களில் அந்த ராஜத்வம் எங்கு போனது என்பது முசுகுந்த ராஜனின் வாக்கியம். ஆகையால், ப்ரபுத்வம் போன்ற சொற்கள், அந்தர்யாமியாக இருக்கும் பரமாத்மனுக்கு பொருந்துமே தவிர, தேஹிகளுக்கு என்றும் பொருந்தாது என்பது கருத்து.

**வாஸுதே$^{3}$வைக ப்ரகாரதி$^{3}$**
**ஈஷனெனிஸுவ பி$^{3}$ரம்ம ருத்$^{3}$ர ஷ**
**சீஷ மொத$^{3}$லாத$^{3}$ மரரெல்லரு தா$^{3}$ஸரெனிஸுவரு |**
**ஈஸுமார்க்க$^{3}$வ பி$^{3}$ட்டு ஸோஹமு**
**பாஸனெய கை$^{3}$வனர தே$^{3}$ஹஜ**
**தை$^{3}$ஷிக க்லேஷக$^{3}$ளு ப$^{3}$ரலவனேகெ பி$^{3}$டி$^{3}$ஸிகொள ||22**

வாஸுதேவனு = வாசுதேவ நாமக ஸ்ரீபரமாத்மன்
ஏகப்ரகாரதி = ஒரே மாதிரியாக
ஈஷனெனிஸுவ = ஈஸ்வரன் என்று அழைத்துக் கொள்கிறான்
பிரம்ம ருத்ர ஷசீஷ = பிரம்ம, ருத்ர, இந்திரன்
மொதலாத அமரரெல்லரு = முதலான தேவதைகள்
தாசரெனிஸுவரு = அவனுக்கு தாசர்கள் எனப்படுவர்
ஈ சுமார்க்கவ பிட்டு = இப்படியான உபாசனை செய்வதற்கான நல்ல மார்க்கத்தை விட்டு
ஸோஹமுபாஸனெய = அந்த பரமாத்மனே நான் என்னும் உபாசனையை
கைவ = செய்யும்
நர = மனிதன்
தேஹஜ = தேக சம்பந்தமான
தைஷிக = தேச சம்பந்தப்பட்ட
க்லேஷகளு = துக்கங்கள்
பரலு = வந்தால்
ஏகே = எப்படி

பிடிஸிகொள = விடுவித்துக் கொள்ள மாட்டான்.

பாகவத 11ம் ஸ்கந்தம் 2ம் அத்தியாயத்தின் உரையில் :

பூர்ணத்வாதாத்ம ஷப்தோக்த: கஸ்சித்ஸர்வ நரோத்தம: |
ஸோபி நாராயணோனான்ய: ஸச ஸர்வேஷு சம்ஸ்தித: ||
தத்வகா இதரேஸர்வே ஸ்ரீப்ரம்மேஷ புரஸ்ஸரா: ||
இதி பஷ்யதி யோ புத்யா ஸதுபாகவதோத்தம: ||

பூர்ண குணாத்மகனாகையால் ஆத்ம என்று பெயர். அவன் சர்வ பிராணிகளைவிட உத்தமன். அவன் யார் என்றால், நாராயணனே தவிர, வேறு யாரும் அல்ல. அவனே அனைவரின் அந்தர்யாமியாக இருக்கிறான். லட்சுமிதேவி, பிரம்ம ருத்ராதி அனைத்து தேவதைகளும் அவன் அதீனராகவே இருக்கின்றனர் என்று யார் உபாசனை செய்கிறானோ, அவனே பாகவதோத்தமன் என்று சொல்கிறார்.

அதே அபிப்பிராயத்தையே தாசராயர் இங்கு சொல்கிறார். பரமாத்மன் ஒருவனே சர்வேஸ்வரன். பிரம்ம ருத்ரேந்த்ராதி தேவதைகள் அனைவரும் அந்த பரமாத்மனுக்கு சேவகர்கள் என்று உபாசனை செய்வதே சத்-உபாசனை. இத்தகைய உபாசனையை விட்டு 'ஸோஹம்' அவனே நான் என்னும் உபாசனையை செய்பவர்கள் தமோ யோக்யர்கள். பரமாத்மனே ஜீவன் என்று சொல்வது பொய்யானால், மித்யோபாசனையால் தமஸ் கிடைக்கும். ஒரு வேளை அது உண்மையானால், என்ன பிரச்னை என்றால், என்றைக்கும் அது உண்மை ஆவதில்லை என்று 'தேஹஜ' என்னும் வாக்கியத்தால் சொல்கிறார். உண்மையாக நாமே பரமாத்மனானால், ஆனந்த ஸ்வரூபனான பரமாத்மனுக்கு துக்கம் உண்டாகிறது. மனிதர்களுக்கு தேக சம்பந்தமான வயிற்றுவலி, கண் பார்வை பறிபோதல் ஆகிய துக்கங்களே ஆகட்டும், கால சம்பந்தமான ஜலதோஷம், ஜுரம் ஆகிய தோஷங்களே ஆகட்டும் வரும்போது அதனை ஏன் அனுபவிக்க வேண்டும்? தானே ஈஸ்வரன் என்றானபிறகு, அந்த துக்கங்கள் தன்னை பாதிக்காமல் இருக்கச் செய்யமுடியாதா? அத்தகைய சக்தி இவனுக்கு இல்லை என்றபிறகு, இவன் எப்படி ஈஸ்வரன் ஆகமுடியும்? ஆகையால், ஜீவன், ஈஸ்வரன் என்று என்றைக்கும் சொல்லமுடியாது என்பது கருத்து.

**ஆ பரபி3ரம்மனலி த்ரிஜக3**
**த்3வ்யாபகத்வ நியாமகத்வ**
**ஸ்தா2பகத்வ வஷத்வ ஈஷத்வாதி3 கு3ணக3ளிகெ3 |**
**லோபவில்லைக ப்ரகார ஸ்வ**
**ரூபவெனிபுவு ஸர்வகாலதி3**
**போபவல்லவு ஜீவரிகெ3 தா3ஸத்வதோ3பாதி3 ||23**

ஆ பரபிரம்மனலி = பரமாத்மனான ஸ்ரீ நாராயணனிடம்
த்ரிஜகத் வியாபகத்வ = மூன்று உலகங்களிலும் வியாபித்திருக்கும் தன்மை
நியாமகத்வ = வழிநடத்தும் தன்மை
ஸ்தாபகத்வ = ஒரே நிலையில் வைக்கும் தன்மை

வஷத்வ = மக்களை தன் அதீனத்தில் வைத்துக்கொள்ளும் தன்மை
ஈஷத்வாதி = தலைவனாக இருக்கும் தன்மை
குணகளிகெ = போன்ற குணங்களுக்கு
லோபவில்ல = குறைவில்லை
ஏக ப்ரகார = ஒரே மாதிரியாக
ஸ்வரூபவெனிபுவு = பரமாத்மனுக்கு ஸ்வரூபபூதமாக இருக்கின்றன
ஸர்வகாலதி = அனைத்து காலங்களிலும்
ஜீவரிகெ தாசத்வதோபாதி = ஜீவர்களுக்கு தாசத்வம் எப்படி போவதில்லையோ, அப்படி
போபவல்லவு = போகும் தன்மை கொண்டது இல்லை.

பரமாத்மன் மூன்று உலகங்களின் உள்ளும், வெளியேயும் நிலைத்திருக்கிறார். பிரம்மாதி தேவதைகளுக்கு மூன்று உலகங்களில் வியாபித்திருக்கும் சக்தி இருந்தாலும், அவர்கள் ஸ்வதந்த்ரர் அல்ல. அஸ்வதந்த்ரர்கள். பிரம்மாதிகளுக்கு நியாமத்வ இருந்தாலும், அவர்கள் பகவத் அதீனராக, பகவந்தனின் ஆணையின்படியே, அவன் கொடுத்த சக்தியினாலேயே நியாமகராக இருக்கிறார்கள். பரமாத்மன் ஸ்வதந்த்ர நியாமகன்.

பிரம்மாதி அனைத்து ஜீவர்களையும், நீங்கள் இப்படியே இருக்க வேண்டும் என்று அவர்களை தன் வசத்தில் வைத்துக்கொண்டு, அனைவரின் யோக்யதைக்கேற்ப அவர்கள் இருக்குமாறு செய்கிறான். இந்த அதிகாரம் எந்த ஜீவருக்கும் இல்லை. பரமாத்மன் சர்வேஸ்வரன். ஜீவனே பரமாத்மனாக இருந்தால், இத்தகைய குணங்கள் அவனிடம் எப்போதும் இருக்க வேண்டியதாயிற்று. ஆனால் அப்படி இல்லை. ஜீவன் எப்போதும் அபூர்ணன். ஜீவனுக்கு தாசத்வம் எப்படி நித்யமோ, அப்படியே பரமாத்மனுக்கு பிரபுத்வாதி குணங்கள் நித்யம். இத்தகைய ஸ்வாமி நானே என்று உபாசனை செய்தால், அவனுக்கு துக்ககரமான தமஸ்ஸே கிடைக்கிறது.

**நித்ய நூதன நிர்விகார ஸு**
**ஹ்ருத்தம ப்ரணவஸ்த$^{2}$ வர்ணோ**
**த்பத்தி காரண வாங்மனோமய ஸாமகா$^{3}$னரத |**
**த$^{3}$த்த கபில ஹயாஸ்ய ரூபதி$^{3}$**
**ப்ருத$^{2}$க் ப்ருத$^{2}$க் ஜீவரொளகி$^{3}$த்து$^{3}$ ப்ர**
**வர்த்திஸுவனவரவர யோக்$^{3}$யதெ கர்மவனுஸரிஸி ||24**

நித்ய நூதன = தினமும் பார்த்துக் கொண்டிருக்கும் லட்சுமி தேவியருக்கும் புதிதாகவே தெரிபவன்
நிர்விகார = தேக மாறுதல்கள் இல்லாதவன்
ஸுஹ்ருத்தம = உயிர் நண்பன்
ப்ரணவஸ்த = ஓம்காரத்தில் இருக்கும்
வர்ணோத்பத்தி காரண = அ,உ,ம என்னும் வர்ணங்களின் காரணன்
வாங்மனோமய = வாங்மய, மனோமய என்று அழைக்கப்படுபவன்

ஸாமகானரத = சாமகான ப்ரியன்
தத்த கபில ஹயாஸ்ய ரூபதி = தத்தாத்ரேய, கபில, ஹயக்ரீவ ரூபத்தில்
ப்ருதக் ப்ருதக் = தனித்தனியாக
ஜீவரொளகித்து = ஜீவர்களில் இருந்து
அவரவர = அவரவர்களின்
யோக்யதெ கர்மவனுசரிஸி = யோக்யதை, கர்மங்களை அனுசரித்து
ப்ரவர்த்திஸுவனு = செய்ய வேண்டியவற்றை செய்து, செய்விக்கிறான்.

ஸ்ரீபரமாத்மன் தினமும் புதிதாக இருப்பவன்.

நித்யம் நிரீக்ஷ்யமாணானாம் யத்யபி: த்வாராகௌகஸாம் | நவித்ருப்யந்திஹித்ருஷ: ||

த்வாரகையில் இருப்பவர்கள் தினந்தோறும் ஸ்ரீகிருஷ்ணனை பார்த்துக் கொண்டிருந்தாலும், அவன் எப்போதும் புதியவனாகவே தெரிந்ததால், எவ்வளவு பார்த்தாலும் கண்கள் திருப்தி அடையவேயில்லை என்று பாகவத 10ம் ஸ்கந்தத்தில் சொல்லியிருப்பர். ஆகையால், பரமாத்மன் நித்யநூதனன். இத்தகைய குணம் வேறு எந்த ஜீவர்களுக்கு இருக்கிறது?

வயது ஆகஆக, ஸ்தூல தேகத்தில் மாறுதல்கள் வந்துகொண்டே இருக்கின்றன. அத்தகைய மாறுதல்கள் பரமாத்மனின் எந்த ரூபங்களுக்கும் இல்லை. ஆகையால், பரமாத்மன் நிர்விகாரன்.

ஸுஹ்ருத்தம என்றால் ‘நித்யம்ப்ராண ஸம:ஸுஹ்ருத்’ என்னும் வாக்கியத்திற்கேற்ப, தன் உயிரைவிட மேலானவன் என்று யாரை நினைக்கிறானோ அவனே ஸுஹ்ருத்தமன். பரமாத்மன், ப்ராணனைவிட அதிக ப்ரியமானவன் ஆகையால், அவனே ஸுஹ்ருத்தமன்.

ப்ரணவத்தின் ஓம் என்னும் எழுத்தில், அ,உ,ம என்னும் மூன்று எழுத்துக்கள் சேர்ந்திருக்கின்றன. இவை மூன்றும் முதன்முதலில் பரமாத்மனிடமிருந்து தோன்றின.

வாங்மய மனோமய என்றால், அனைத்து ஜீவர்களிலும் இருந்து, வாங், மன வியாபாரங்களை செய்விப்பவன் என்று பொருள்.

வேதானாம் ஸாமவேதோஸ்மி என்னும் கீதா வாக்கியத்திற்கேற்ப, வேதங்கள் அனைத்தும் பகவந்தனைக் குறிப்பதே ஆனாலும், விசேஷமாக ஸாமவேதத்தில் பகவன் மகிமை அதிகமாக இருக்கிறது. ஆகையால், ஸாமகானரத என்றார்.

தத்தாத்ரேய, கபில, ஹயக்ரீவ ரூபங்களால் அனைத்து ஜீவரிலும் இருந்து, அவரவர்களின் ஸ்வரூப யோக்யதைக்கேற்ப, வினைப்பயன்களுக்கேற்ப, அவர் மூலம் செய்யவேண்டிய காரியங்களை செய்து, செய்விக்கிறான்.

இந்த குணங்களில் எந்தவொரு குணமாவது ஜீவனிடம் இருக்கிறதா? ஜீவன் பரமாத்மன் ஆவது எப்போது? எப்படி? இது எப்போதும் நடக்காத செயல் என்பது கருத்து.

**ஸ்ருதிக$^3$ளாதன மாது விமல**
**ஸ்ம்ருதிக$^3$ளாதன ஷிக்ஷெ ஜீவ**
**ப்ரததி ப்ரக்ருதிக$^3$ளெரடு$^3$ ப்ரதிமெக$^3$ளெனிஸி கொளுதிஹவு |**
**இதர கர்மக$^3$ளெல்ல லகுமி**
**பதிகெ$^3$ பூஜெக$^3$ளெந்து$^3$ ஸ்மரிஸுத**
**சதுரவித$^4$ புருஷார்த்த$^2$க$^3$ள பே$^3$ட$^3$தி$^3$ரு ஸ்வப்னத$^3$லு ||25**

ஸ்ருதிகளு ஆதன மாது = பரமாத்மனின் வாக்கியங்களே ஸ்ருதிகள்
விமல = நிர்மலமான
ஸ்ம்ருதிகளு = புராண வாக்கியங்கள்
ஆதன சிக்ஷெ = அவனது ஆணை
ஜீவப்ரததி = மூன்றுவித ஜீவர்கள்
ப்ரக்ருதிகளெரடு = ப்ரக்ருதி, இவை இரண்டும்
ப்ரதிமெகளெனிஸிகொளிதிஹவு = அவனின் பிரதிமைகள் என்று அழைக்கப்படுகின்றன
இதர கர்மகளெல்ல = மற்ற கர்மங்கள் அனைத்தும்
லகுமிபதிகெ = லட்சுமிபதியான ஸ்ரீ நாராயணனுக்கு
பூஜெகளெந்து = பூஜைகள் என்று
ஸ்மரிஸுத = சிந்தித்தவாறு
ஸ்வப்னதலு = கனவினிலும்கூட
சதுர்வித புருஷார்த்தகள = தர்ம அர்த்த காம மோட்ச என்னும் 4வித புருஷார்த்தங்களை
பேடதிரு = வேண்டாமல் இரு.

ஸ்ருதிகள் அனைத்தும் பகவந்தனின் வாக்கியங்கள் என்று அறி. புராண வாக்கியங்கள் அனைத்தும் பரமாத்மனின் ஆணைகள் என்று அறி. ஜீவ சரீரங்கள் மற்றும் ப்ரக்ருதி இந்த இரண்டும் பரமாத்மனின் ப்ரதிமைகள் என்று நினை. நீ செய்யும் அனைத்து கர்மங்களையும் பரமாத்மனின் பூஜைகள் என்று அறிந்து பரமாத்மனுக்கு அர்ப்பித்து வா. தர்மாதி நான்குவித புருஷார்த்தங்களை கனவிலும்கூட வேண்ட வேண்டாம். நிஷ்காமகனாக கர்மங்களை செய்ய வேண்டும் என்பது கருத்து.

**பூ$^4$தலாதி$^4$பனாக்ஞ தா$^4$ரக**
**தூ$^3$தரிகெ$^3$ ஸேவானுஸாரதி$^3$**
**வேதனவ கொட்டவர ஸந்தோஷ படிஸுவ தெரதி$^3$ |**
**மாதரிஷ்வப்ரியனு பரம**
**ப்ரீதிபூர்வக ஸத்கு$^3$ணங்க$^3$ள**
**கா$^3$த$^2$கர ஸந்தோஷ ப$^3$டி$^3$ஸுவனிஹ பரங்க$^3$ளலி ||26**

பூதளாதிப = பூமண்டலத்திற்கு அதிபதியான மகாராஜா
ஆக்ஞா தாரக தூதரிகெ = ஆணையை மீறாமல் செயல்களை செய்யும் தூதர்களுக்கு
ஸேவானுசாரதி = அவர்களின் சேவைகளுக்கேற்ப
வேதனவ = சம்பளத்தை
கொட்டு = கொடுத்து
அவர சந்தோத படிசுவ தெரதி = எப்படி மகிழ்விக்கிறானோ, அப்படி
மாதரிஷ்ப ப்ரியனு = வாயுதேவருக்கு முக்கிய ப்ரியனான; அல்லது, வாயுதேவரில் ப்ரீதியுள்ள ஸ்ரீஹரி
பரமபூர்வக = பக்தியுடன்
சத்குணங்கள = நற்குணங்களை
காதகர = கொண்டாடும் பக்தர்களை
இஹபரங்களலி = இந்த உலகத்திலும், பர லோகத்திலும்
சந்தோஷ படிசுவனிஹ = மகிழ்விக்கிறான்.

மகாராஜனின் தூதர்கள் ராஜனின் ஆணையை மீறாமல், தமக்குக் கொடுத்திருக்கும் வேலையை, ராஜன் மெச்சுமாறு செய்துவந்தால், அவர்களின் வேலைக்குத் தகுந்த சம்பளத்தைக் கொடுத்து, ராஜன் அவர்களை மகிழ்விக்கிறான். அதுபோலவே, ப்ரீதி விஷயனான ஸ்ரீஹரி, தன் சரித்திரங்களை பாடியவாறு, ஸ்ருதி ஸ்ம்ருதிகள் என்னும் பகவத் ஆணைக்கு கட்டுப்பட்டு கர்மங்களை செய்தவாறு, செய்த கர்மங்களை பரமாத்மனுக்கு அர்ப்பித்திருந்தால், ஸ்ரீஹரி மகிழ்ந்து அவரின் சேவைக்கு மெச்சி இஹபரங்களில் சுகங்களைக் கொடுத்து அவர்களை காப்பாற்றுவான்.

**தீ$^3$ப தி$^3$வத$^3$லி கண்ட$^3$ராத$^3$டெ$^3$**
**லோபகை$^3$ஸுவராக்ஷண ஹரி ஸ**
**மீபத$^3$ல்லிரெ நந்த$^3$னாம ஸுனந்த$^3$வெனிஸுவுது ।**
**ஔபசாரிகவல்ல ஸுஜனர**
**பாபகர்மவு புண்யவெனிபுது$^3$**
**பாபிக$^3$ள ஸத்புண்யகர்மவு பாபவெனிஸுவுது$^3$ ||27**

திவதலி = பகலில்
தீப = வீட்டில் தீபங்கள் எரிவதை
கண்டராதடெ = வீட்டினர் பார்த்தால்
ஆக்ஷண = உடனடியாக
லோபகைஸுவரு = அதனை அணைத்து விடுவர்.
அதே தீபங்கள்,
ஹரி ஸமீபதல்லிரெ = பூஜையறையில் இருந்தால்
நந்தனாம = நந்தாதீபம் என்ற பெயரில்
ஸுனந்தவெனிஸுவவு = ஆனந்தமயம் என்று அழைக்கப்படும்
ஔபசாரிகவல்ல = உபசார வார்த்தை அல்ல

ஸுஜனர = பகவத் தாசர் செய்த
பாபகர்மவு = பாவ கர்மங்கள்
புண்யவெனிபுது = புண்ய கர்மங்களின் பலன்களையே கொடுக்கின்றன
பாபிகள = பாவிகள் செய்யும்
சத்புண்யகர்மவு = சத்புண்ணிய கர்மங்கள்
பாபவெனிஸுவுது = பாவ கர்மங்களின் பலன்களையே கொடுக்கின்றன

பகல் வேளையில் வீட்டில் விளக்கு எரிந்துகொண்டிருப்பதை வீட்டினர் பார்த்தால், உடனடியாக அதனை அணைத்துவிடுவர். அத்தகைய தீபத்தை பூஜையறையில் வைத்தால், அதற்கு நந்தாதீபம் என்று பெயர் வைத்து, அதனை பார்த்து மகிழ்வர். இதைப்போல, பரமாத்மனே தானென்று ஸ்வதந்த்ர கர்த்ருத்வத்தை சிந்தித்தால், செய்த புண்ணியங்கள் அனைத்தும், பகலில் வீட்டில் எரிந்த தீபம் போல நஷ்டமடைகின்றன. புண்ணியங்கள் கழிந்துபோய், அதற்கு பதிலாக, பாவங்கள் வருகின்றன.

இதைப்போல, பகவத்பக்தர்கள் செய்யும் பாபங்கள்கூட, பரமாத்மன் ஸ்வதந்த்ரன், எனக்கு தலைவன் அவனே. நான் அவனின் தாசன். நான் பராதீனன். என்னும் ஞானத்தினால், அந்த கர்மங்களை பரமாத்மனிடம் அர்ப்பித்தால், நந்தாதீபம் பரமாத்மனின் சன்னிதானத்தில் இருந்தால் எப்படி அதற்கு நந்தாதீபம் என்று அழைத்தவாறு, ஆனந்தகரமாக இருக்கிறதோ, அப்படி, பாபங்கள் அனைத்தும் பஸ்மமாகி புண்யபலன்களையே கொடுக்கிறது.

இந்த உதாரணத்தில், தீபமானது புண்ணியத்திற்கு உவமையாக இருக்கிறது. பகல் நேரம், தீபத்திற்கு எதிரானது. ஹரித்வேஷிகள் பகல் நேரத்திற்கு ஒப்பானவர்கள். அவர்கள் செய்த புண்ணியம், பகல் நேர தீபம் அணைவதைப் போல அணைகிறது. அதே பகல் நேரத்து தீபம், பகவத் சன்னிதானத்தில் இருந்தால் மங்களகரமானது. அதுபோலவே, பகவத்பக்தர்கள் செய்த பாவங்கள் பகலின் நந்தாதீபத்தைப் போல, பகவத் அனுக்கிரக விசேஷத்தினால் புண்ணியம் ஆகிறது என்பது கருத்து.

மகாபாரத தாத்பர்ய நிர்ணய 1ம் அத்தியாயம், ஸ்லோகம் 108:
தர்மோபவத்ய தர்மோபிக்ருதோ பக்த்யைஸ்துவாச்யுத பாவம்பவதி தர்மோபி யோன பக்த்யை: க்ருதோஹரே ||
என்று சொல்லியிருப்பதையே தாசராயர் இந்த பத்யத்தில் சொல்லியிருக்கிறார்.

**த4னவ ஸம்பாதி3ஸுவ ப்ரத்3ரா**
**வணிகரந்த3தி3 கோவித3ர மனெ**
**மனெக3ளலி ஸஞ்சரிஸு ஷாஸ்த்ர ஸரவண கோ3ஸுக3தி3 |**
**மனனகை3து3பதே3ஷிஸுத து3**
**ர்ஜனர கூடா3ட3தி3ரு ஸ்வப்னதி3**
**ப்ரணதகாமத3 கொடு3வ ஸௌக்2யவனிஹ பரங்க3ளலி ||28**

தனவசம்பாதிசுவ = வியாபாரம் செய்து பணம் சம்பாதிக்க வேண்டும் என்று ஆசையுள்ள

ப்ரத்ராவணிகரந்ததி = வியாபாரிகளைப்போல
கோவிதர = ஞானிகளின்
மனெமனெகளல்லி = வீடுகளில்
சாஸ்த்ர ஸ்ரவண கோஸுகதி = நற்சாஸ்திர ஸ்ரவணம் செய்வதற்காக
சஞ்சரிஸு = சஞ்சரித்திரு
மனவகைது = காதால் கேட்டவற்றை மனதில் நினைத்தவாறு
உபதேஷிசுத = சஜ்ஜனர்களுகு அதனை உபதேசம் செய்தவாறு
துர்ஜனர கூட = துர்ஜனர்களுடன்
ஸ்பப்னதி = கனவிலும்கூட
ஆடதிரு = இந்த விஷயத்தை சொல்லாதிரு / அவர்களின் நட்பில் இருக்காதே
ப்ரணதகாமத = தன்னை வணங்குபவர்களுக்கு இஷ்டார்த்தங்களைக் கொடுக்கும் பரமாத்மன்
இஹபரங்களலி = இஹ பரங்களிலும்
சௌக்யவனிஹ = உனக்கு அருள்வான்.

வியாபாரி அதிக வியாபாரங்களை செய்து மேலும் அதிக லாபங்களை சம்பாதிக்க வேண்டுமென்று, அந்த ரகசியங்களை அறிந்திருக்கும் பிற வியாபாரங்களின் வீடுகளுக்குச் சென்று, தன் வியாபார விஷயங்களை அறிந்து, அந்த இடங்களுக்குச் சென்று வியாபாரம் செய்து, லாபங்களை சம்பாதிப்பான். அதுபோலவே, பகவத்பக்தர்கள் நற்சாஸ்திர ஸ்ரவணம் என்னும் லாபத்தை பெறுவதற்காக, சஜ்ஜனர்களின் வீடுகளுக்குச் சென்று அங்கு சாதுகளான ஞானிகள் இருந்தால், அவர்களுக்கு சேவாரூபமாக தான்யங்களை கொடுத்து, கதா ஸ்ரவணம் என்னும் லாபத்தை பெற்றுக் கொள்ள வேண்டும் என்பது கருத்து.

வியாபாரிகள் லாபத்தை சம்பாதித்து, எவ்வளவு லாபம் / நஷ்டம் என்பதை தனிமையில் அமர்ந்து பார்த்து, லாபம் வந்தால் தன் வீடு மனைவி மக்களுக்காக செலவழிப்பான். அதைப்போலவே, கதா ஸ்ரவணம் என்னும் லாபத்தை சம்பாதித்து அதனை தனிமையில் அமர்ந்து மனனம் செய்து, தன் பந்துக்களாக இருக்கும் இதர பக்தர்களுக்கு உபதேசம் செய்ய வேண்டும். வியாபாரிகள் தங்கள் லாபத்தை தங்கள் உறவினரைத் தவிர வேறு யாருக்கும் கொடுப்பதில்லையோ, அதுபோலவே தம் நண்பர்களான பக்தர்களுக்கு உபதேசம் செய்யவேண்டுமே தவிர, வேற்றார் போல இருக்கும் துஷ்ட மக்களுக்கு உபதேசம் செய்யக்கூடாது என்பது கருத்து.

சஜ்ஜனர்களின் சங்கத்தினாலேயே, கதா ஸ்ரவணம் ஆகவேண்டும். பாகவத 3ம் ஸ்கந்தத்தில் தேவஹூதிக்கு கபில உபதேசம் சமயத்தில் : ஸதாம் ப்ரஸங்கான்மம வீர்ய ஸம்பதோ பவந்தி ஹ்ருத்கர்ண ரஸாயனா: கதா: - சஜ்ஜனர்களின் சகவாசத்தினால், மனதிற்கும் காதிற்கும் இனிமையான கதைகள் கிடைக்கிறது என்கிறார். 12ம் ஸ்கந்தத்தில் :

அவிஸ்ம்ருதி ஸ்ரீதர பாதபத்மயோர் குணானுவாத ஸ்ரவணாதி பிர்ஹரே: -- பரமாத்மனின் குணங்களை பிறருக்கு சொல்வதாலும், அதை கேட்பதாலும், பரமாத்மனை எப்போதும் மறக்காமல் இருக்கிறோம். அவிஸ்ம்ருதி:

க்ருஷ்ணபதாரவிந்தயோ: க்ஷீணோத்யபத்ராணி ஷமம்தனோதிச -- அந்த பரமாத்மனை மறக்காமல் இருப்பது, அமங்களங்கள் அனைத்தையும் பரிகாரம் செய்து, உத்தமகதியைக் கொடுக்கிறது என்று சொல்லியிருக்கிறார்கள். ஆகையால், சஜ்ஜனர்களின் சங்கத்திற்காக வீடுவீடாகச் சென்று, பின் அதனை மனனம் செய்து, பிறருக்கு உபதேசம் செய்தால், இஹபரங்களிலும் சுகம் கிடைக்கிறது என்று தாசராயர் கூறுகிறார்.

**காரக க்ரிய த்$^{3}$ரவ்ய விப்$^{4}$ரம**
**மூருவித$^{4}$ ஜீவரிகெ$^{3}$ ப$^{3}$ஹு ஸம்**
**ஸாரகி$^{3}$வு காரணவெனிஸுவவு எல்லகாலத$^{3}$லி |**
**தூ$^{3}$ர ஓடி$^{3}$ஸி ப்$^{4}$ராமகத்ரய**
**மாரிகொ$^{3}$ளகா$^{3}$க$^{3}$த$^{3}$லெ ஸர்வா**
**தா$^{4}$ரகன சிந்திஸுதலிரு ஸர்வத்ர மரெயத$^{3}$லெ ||29**

காரக = ஞானேந்திரியங்களால் செய்யப்படும் செயல்களின் மேல் உள்ள அபிமானம்
க்ரிய = கர்மேந்திரியங்களால் செய்யப்படும் செயல்களின் மேல் உள்ள அபிமானம்
த்ரவ்ய = தேக அபிமானம்
மூருவித = என்று மூன்று விதமான
விப்ரம = விசேஷமான அபிமானங்கள் உள்ளன
ஜீவரிகெ = ஜீவர்களுக்கு
எல்லகாலதலி = அனைத்து காலங்களிலும்
சம்சாரக்கெ = சம்சார வாழ்க்கைக்கு
பஹு = அதிகமாக
ப்ராமகத்ரய = இந்த மூன்று விதமான அபிமானங்கள் என்னும்
மாரிகெ = எதிரிகளுக்கு
ஒளகாகதலெ = வசப்படாமல் (கட்டுப்படாமல்)
தூர ஓடிஸி = அவர்களை தூர ஓட்டி
ஸர்வத்ர மரெயதலெ = மறக்காமல் அனைத்து இடங்களிலும்
ஸர்வாதாரகன = அனைவருக்கும் ஆதாரமாக இருப்பவனான ஸ்ரீஹரியை
சிந்திஸுதலிரு = நினைத்துக் கொண்டிரு.

சம்சாரத்தில் பற்பல விதமான துக்கங்களைக் கொடுப்பதற்கும், திரும்பத்திரும்ப சம்சாரத்தில் கஷ்டப்படுமாறு செய்வதற்கும், காரக-ப்ரமை, க்ரிய-ப்ரமை, த்ரவ்ய-ப்ரமை என்னும் மூன்று வித அபிமானங்கள் காரணம் ஆகின்றன. இதன் அர்த்தங்கள் ஸ்ரீபுரந்தரதாசர் தாம் இயற்றிய சுளாதி ஒன்றில் விவரித்திருக்கிறார்.

நானேவெ கர்தனெம்போ காரகப்ரமவய்ய |
தைனந்தினதி கரண கார்ய மாடுவதெம்போ க்ரியத ப்ரமவய்ய |
ஆனபூர்வக தன தாராபத்யரெனகெ
ஆனிஸிகொடுவாரு ஸத்பதவெம்பந்த த்ரவ்ய விப்ரமவய்ய |
ஸானுராகதி பஹுபாதெபடிஸுதிதெ |

நீனாகி பிடிஸுதா தவ த்யான நீடய்ய
தீனஜனமந்தார புரந்தரவிட்டலானெ ஆனமிஸி நின்ன பாதயுகளக்கெ ||

இதன் அர்த்தம்:

நானே என் மனைவி, மக்களை காக்கிறேன் என்னும் ஸ்வதந்த்ர கர்த்ருத்வ அபிமானமே காரக- ப்ரமை. என் கண்களே பார்க்கின்றன. என் காதுகளே கேட்கின்றன என்று இந்திரியங்களுக்கு ஸ்வதந்த்ர கர்த்ருத்வத்தை நினைப்பதே க்ரிய- ப்ரமை. என் தேகம், குடும்பம், செல்வம் ஆகியவையே எனக்கு சுக சாதனையாகிறது என்று அறிவதே த்ரவ்ய- ப்ரமை. இத்தகைய மூன்றுவித பிரமைகளே சம்சாரத்தில் பற்பல விதமான துக்கங்களைக் கொடுப்பதற்கும், திரும்பத்திரும்ப நம்மை சம்சாரத்தில் தள்ளி கஷ்டப்படச் செய்வதற்கும் காரணமாகின்றன.

ஆகையால், இத்தகைய ப்ரமக த்ரயங்களை தூர ஓட்ட வேண்டும், இந்த மூன்று வித ப்ரமைகள் நமக்கு வாய்த்த மிகப்பெரிய நோய்களை / எதிரிகளைப் போல நம்மை இம்சிக்கின்றன. அவற்றிற்கு வசப்படாமல், அனைவரின் ஆதாரகனான ஸ்ரீபரமாத்மனை திடமாக அனைத்து காலங்களிலும் அனைத்து இடங்களிலும் சிந்தித்து இருக்க வேண்டும் என்பது கருத்து.

**கரண கர்மவ மாடித$^{3}$ரெ வி**
**ஸ்மரணெகாலதி$^{3}$ மாதுக$^{3}$ளிகு$^{3}$**
**த்தரவ கொட$^{3}$த$^{3}$லெ ஸும்மனிப்பனு ஜாக$^{3}$ராவஸ்தெ$^{2}$**
**கருணிஸலு வ்யாபார மாடு$^{3}$வ**
**ப$^{3}$ரலு நால்காவஸ்தெ$^{2}$க$^{3}$ளு பரி**
**ஹரிஸிகொளனேதகெ ஸ்வதந்த்ரனு தானெ எம்பு$^{3}$வனு ||30**

கரண = இந்திரியங்களே
கர்மவ மாடிதரெ = செயல்களை செய்தால்
விஸ்மரணெ காலதி = நினைவு இல்லாத காலங்களில் (தூக்கத்தில்)
மாதுகளிகெ = அவரிடம் சொன்னதற்கு
உத்தரவ கொடதலெ = பதில் சொல்லாமல்
சும்மனிப்பனு = அமைதியாக இருப்பான்
ஜாகராவஸ்தெ = முழிப்பு வந்த நிலையில்
கருணிஸலு = பகவந்தனின் கருணையால் (பகவந்தனின் கருணையால் விழிப்பு வந்தபிறகு)
வ்யாபாரமாடுவ = இந்திரியங்களால் செய்யப்படும் செயல்கள்; அதாவது, கேட்பது, சொல்வது, அமர்வது ஆகிய செயல்களை செய்வான்.
நால்காவஸ்தெகளு = முழிப்பு, கனவு, தூக்கம், மயக்கம் என்னும் 4 நிலைகள்
பரலு = வந்தால்
ஸ்வதந்த்ரனு தானே எம்புவனு = தானே ஸ்வதந்த்ரன் என்பான்
ஹரிஸிகொளனேதகெ = அந்தந்த நிலையில் ஏன் இருக்கக்கூடாது?

இந்திரியங்களே ஸ்வதந்த்ரமாக செயல்களை செய்கின்றன என்றால், தூங்கிக் கொண்டிருக்கும்போதும் கண், காது முதலான இந்திரியங்கள் இருந்தே இருக்கின்றன. அந்த சமயத்தில் யாராவது எதையாவது கேட்டால், தூங்கிக் கொண்டிருப்பவனின் காதில் அது கேட்குமா? வாய் ஏன் பதில் சொல்வதில்லை? முழிப்புடன் இருக்கும்போது மட்டுமே கேள்வி பதில்களை கேட்க / சொல்ல முடிகிறது. ஆகையால், இந்திரியங்களுக்கு ஸ்வதந்த்ர சக்தி இல்லை என்று சொல்ல வேண்டியதாகிறது.

இவனே ஸ்வதந்த்ரனாக இருந்தால், தன்னை மீறி வரும் தூக்கமோ, தூக்கத்திலிருந்து விழிப்போ, மூர்ச்சை அடைவது, கனவு காண்பது - என இந்த செயல்களை தன் இஷ்டத்திற்கு தன்னால் ஏன் செய்யமுடியவில்லை? அதாவது, நமக்குத் தேவையானபோது தூக்கம் வரட்டும். ஆனால் நம்மை அறியாமல் தூக்கம் ஏன் வருகிறது? நாமே ஸ்வதந்த்ரர் ஆனபிறகு, நம் இஷ்டத்திற்கே நாம் விழிக்க வேண்டும். நம்மை அறியாமலேயே நாம் ஏன் விழிக்கிறோம்? நமக்கு வேண்டுமானால் மட்டுமே கனவு வரட்டும். தானாகவே அது ஏன் வரவேண்டும்? நமக்கு இஷ்டமில்லாத மூர்ச்சை நிலையை, வேறு நோய்களை நமக்கு வராமல் நாம் ஏன் அவற்றை தடுக்கமுடியவில்லை? மரணம் நமக்கு ஏன் வருகிறது?

இவை அனைத்தும் நம் கையாலாகாத தன்மையை (பராதீனத்தை) தெளிவாக்குகிறது. இப்படி இருந்தாலும், நாமே ஸ்வதந்த்ர கர்தன். நம் இந்திரியங்களே கர்மங்களை செய்கின்றன என்று கூறினால், இது மயக்கம்தானே? மயக்கம் என்று தானாகவே நிரூபணம் ஆகிவிட்டது என்று கருத்து.

**யுக்திமாதுக3ளல்ல ஸ்ருதி ஸ்ம்ரு**
**த்யுக்த மாதுக3ளிவு விசாரிஸெ**
**முக்திகி3வு ஸோபானவெனிபவு ப்ரதி1பதீ1பத3வு ।**
**ப4க்திபூர்வக1 படி2ஸுவவரிகெ3**
**வ்யக்திகொடு3வ ஸ்வரூபஸுக2 ப்ரவி**
**வித்தரனு மாடு3வனு ப4வப4யதி3ந்த3 ப4ஹுரூப1 ।।31**

இவு = மேற்சொன்ன இந்த விஷயங்கள்
யுக்தி மாதுகளல்ல = தந்திர / சாமர்த்திய வார்த்தைகள் அல்ல
ஸ்ருதி ஸ்ம்ருத்யுக்த மாதுகளு = வேதங்களிலும், புராணங்களிலும் கூறப்பட்ட வார்த்தைகளே இவை
விசாரிஸெ = இவற்றை யோசித்துப் பார்த்தால்
ப்ரதிபதீ பதவு = இந்த கிரந்தத்தில் இருக்கும் ஒவ்வொரு சொல்லும்
முக்திகெ சோபானவெனிபுவு = முக்திக்கு செல்லும் படிக்கட்டுகள்
பஹுரூப = பஹுரூபியான ஸ்ரீஹரி
பக்தி பூர்வக படிசுவவரிகெ = இந்த கிரந்தத்தை பக்தியுடன் படிப்பவர்களுக்கு
ஸ்வரூப சுக = முக்தியில் ஸ்வரூப சுகத்தை
வ்யக்தி கொடுவ = கொடுக்கிறான்
பவபயதிந்த = சம்சாரம் என்னும் பயத்தினால்

ப்ரவிவிக்தரனு மாடுவனு = அனைத்தும் பரமாத்மனுடையது. தன் தேகம், வீடு அனைத்தும் பரமாத்மனுடையது என்னும் ஞானத்தைக் கொடுக்கிறான்.

இந்த சந்தியில் சொல்லப்பட்டிருக்கும் தத்த ஸ்வாதந்த்ர்ய விஷயங்கள், விஷ்ணு தீக்ஷையை ஏற்றுக் கொள்ளும் விஷயங்கள், இவற்றிற்கு சம்பந்தப்பட்ட சில விஷயங்கள் என இவை அனைத்தும் நம் சிந்தனையால் / தந்திரங்களால் நினைத்து கூறிய விஷயங்கள் அல்ல. வேதங்களிலும், விஷ்ணு ரகஸ்ய முதலான ஸ்ம்ருதிகளிலும் இருப்பதையே எடுத்து சொல்லியிருக்கும் வாக்கியங்கள் இவை. இந்த கிரந்தத்தை முழுமையாக படித்துப் பார்த்தால், இதில் இருக்கும் ஒவ்வொரு சொல்லும், முக்தி ஸ்தானம் என்னும் வைகுண்டத்திற்கு செல்வதற்கான படிக்கட்டுகளாக இருக்கின்றன. இந்த கிரந்தத்தை கேட்பவர்கள், படிப்பவர்கள் ஆகியோரை, தேஹேந்திரியாதிகளில் வியாப்தனாகி, பற்பல ரூபங்களால் வசித்துக் கொண்டிருக்கும் ஸ்ரீஹரி, இஹத்தில் சம்சாரத்திலிருந்து வேறுபடுத்தி, முக்தியில் அவருக்கு ஸ்வரூப ஆனந்தத்தைக் கொடுக்கிறான்.

**ஸ்ரீனிவாஸன ஸுகு$^{3}$ணமணிக$^{3}$ள**
**ப்ராணமத வயுனாக்$^{2}$ய ஸூத்ரதி$^{3}$**
**போணிஸித$^{3}$ மாலிகெய வாங்மயனம்ஸ க$^{3}$ர்ப்பிஸிதெ$^{3}$ |**
**ஞானிக$^{3}$ள த்ருக்$^{3}$விஷய பஹுத$^{3}$**
**ஞானிக$^{3}$ளிகெ$^{3}$ அஸஹ்ய தோர்ப்புது$^{3}$**
**மாணிகவ மர்கடன கையொளு கொட்ட தெரனந்தெ ||32**

வாங்மனயம்ஸ = வாக்கிற்கும், மனஸ்ஸிற்கும் அபிமானிகளான உமா ருத்ரதேவருக்கு தலைவனான ஸ்ரீபரமாத்மனுக்கு
அர்ப்பிஸித = சமர்ப்பித்த
ஸ்ரீனிவாசன = லட்சுமிதேவியை தன் வக்ஷதளத்தில் வைத்துக் கொண்டிருக்கும் ஸ்ரீபரமாத்மனின்
சுகுண = உத்தமமான குணங்கள் என்னும்
மணிகள = மாணிக்கங்களை
ப்ராணமத = வாயுதேவரின் மதம் (மத்வ மதம்)
மயுனாக்ய = ஞானம் என்னும்
ஸூத்ரதி = கயிற்றில் கட்டிய
மாலிகெயு = மாலைகளை
ஞானிகள = ஞானிகளின்
த்ருக்விஷய = கண்ணுக்குத் தெரிதல்
அஹுது = ஆகிறது (இது உத்தம கிரந்தம் என்று தெரிகிறது)
மாணிகவ மர்கடன கையொளு = குரங்கின் கையில் மாணிக்கத்தை
கொட்ட தெரனந்தெ = கடித்துப் பார்த்து, சுவையற்றது என்று சொல்லி எப்படி தூக்கிப் போடுகிறதோ, அப்படி
அஞ்ஞானிகளிகெ = அஞ்ஞானிகளுக்கு
அஸஹ்ய தோர்ப்புது = அருவருப்பாக தோன்றுகிறது.

ஸ்ரீமன் மத்வ மதத்தின் ஞானம் என்னும் சூத்திரத்தில், பரமாத்மனின் மிகச்சிறந்த குணங்கள் என்னும் மணிகளைக் கட்டி மாலையாகக் கோர்த்து, அந்த மாலையை, வாக்கிற்கும் மனதிற்கும் அபிமானியான உமா ருத்ரருக்கு தலைவனான ஸ்ரீபரமாத்மனுக்கு அர்ப்பிக்கிறேன். அதாவது, ஸ்ருதி, ஸ்ம்ருதிகளில் இருக்கும் ரகசிய அர்த்தங்கள் மக்களுக்குத் தெரியாமல், கிரந்தங்களில் அங்கங்கு வேறுபட்ட கருத்துகள் இருப்பதால், சஜ்ஜனர்கள் பல சந்தேகங்களைக் கொண்டிருக்கின்றனர்.

பகவந்தனின் ஆணைக்கேற்ப, வாயுதேவர், ஸ்ரீமத்வராக அவதரித்து, உண்மையான ஞானத்தை பரப்பினார். ஆகையால், சாஸ்திரங்களில் சந்தேகமற்ற நிச்சய ஞானம் வரவேண்டுமெனில், அது மத்வமதத்தினாலேயே ஆகவேண்டும். அதனை மனதில் வைத்துக்கொண்டு, தாசராயர் இவ்வாறு இங்கு கூறுகிறார்.

பரமாத்மனின் குணங்கள் ஸ்ருதி ஸ்ம்ருதிகளில் மணிகளைப் போல தனித்தனியாக இருக்கிறது. அவற்றை, மத்வமத சித்தாந்தம் என்னும் கயிற்றில் கோர்த்திருக்கிறேன். அதாவது, மத்வாசார்யரின் சாஸ்திரங்களை அனுசரித்து, பகவந்தனின் குணங்களை வர்ணித்திருக்கிறேன் என்கிறார். இத்தகைய மாலையின் மகிமைகளை அறியவேண்டுமெனில், அது ஞானிகளுக்கு மட்டுமே சாத்தியமே தவிர, அஞ்ஞானிகளுக்கு சாத்தியமில்லை.

ஏனெனில், குரங்கின் கையில் மாணிக்க மாலையைக் கொடுத்தாலும், அதை அக்குரங்கு கடித்துப் பார்த்து, சுவையாக இல்லை என்று சொல்லி, தூக்கிப் போட்டுவிடும். அதுபோலவே, அஞ்ஞானிகளுக்கு இதில் இருக்கும் பகவன் மகிமை எப்படி புரியும்? இதில் ஏதாவது பெண்ணை வர்ணித்திருக்கிறேனா? ஸ்ருங்கார ரசம் இருக்கிறதா? அல்லது இது காதுகளுக்கு இனிமையைத் தரும் புனைவுக் கதையா? அஞ்ஞானிகளுக்குத் தேவையான விஷயங்கள் இதில் இல்லை ஆகையால் அவர்கள் நிராகரித்து விடுவர் என்பது கருத்து.

**ஸ்ரீ விதீ4ர விபாஹிபேஷ ஷ**
**சீவராத்ம ப4வார்க்க ஷஷி தி3**
**க்3தே3வ ருஷி க3ந்த4ர்வ கின்னர ஸித்த3 ஸாத்4யக3ண**
**ஸேவித பதா3ம்போ4ஜ தத்பா**
**தா3வலம்பி3க3ளாத3 ப4குதர**
**காவ கருணாஸாந்த்3ர லக்ஷ்மீஹ்ருத் குமுத3சந்த்3ர ||33**

ஸ்ரீ = லட்சுமிதேவி
விதி = பிரம்மதேவர்
ஈர = வாயுதேவர்
விப = பக்ஷிகளில் சிறந்தவனான கருடன்
அஹிப = சர்வஸ்ரேஷ்டனான சேஷதேவர்
ஈஷ = ருத்ரதேவர்
சசீவர = சசிபதியான இந்திரன்
ஆத்மபவ = பரமாத்மனின் மனதிலிருந்து பிறந்த மன்மதன்

அர்க்க = சூரியன்
சசி = சந்திரன்
திக்தேவ = திக் தேவதைகள்
ரிஷி = ரிஷிகள்
கந்தர்வ, கின்னர, ஸித்த, சாத்யகண ஆகியோரிடமிருந்து
ஸேவித பதாம்போஜ = வணங்கப்படும் பாதங்களைக் கொண்ட
கருணாசாந்திர = கருணாபூர்ணனான
லட்சுமி ஹ்ருத் குமுதசந்திர = லட்சுமிதேவியின் மனஸ் என்னும் குமுத மலருக்கு சந்திரனைப் போன்ற ஸ்ரீநாராயணன்
தத்பாதாவலம்பிகளாத = மேற்சொன்ன லட்சுமி, பிரம்ம, வாயு முதலான தேவதைகளின் பாதங்களை
பகுதர = தாரதம்யத்திற்கேற்ப வணங்கும் பக்தர் யாரோ அத்தகைய தன் பக்தர்களை
காவ = காக்கிறான்

லட்சுமி, பிரம்ம, வாயு, கருட, சேஷ, ருத்ர, இந்திர, காம, சூர்ய, சந்திர, திக்தேவதைகள், ரிஷிகள், கந்தர்வர், கின்னரர், சித்தர், சாத்யர், ஆகியோரால் வணங்கப்படும் பாதங்களைக் கொண்ட ஸ்ரீபரமாத்மன், தாரதம்யத்திற்கேற்ப மேலே கூறிய தேவதைகளை நினைத்து தன்னில் பக்தி செய்கிறவர் யாரோ, அவர்களை காப்பாற்றுகிறான். தேவதைகளை புறக்கணிப்பவர்களை பரமாத்மன், தன் பக்தர்களாக ஏற்றுக்கொள்வதில்லை. இந்த விஷயத்தில், பாகவத 11ம் ஸ்கந்தம் 2ம் அத்தியாயத்தில்:

அர்சாயாமேவ சம்ஸ்திதம் ||
விஷ்ணும்ஞாத்வா ததன்யத்ர நைவ ஜானாதி ய: புர்மா |
தாரதம்யஞ்ச தத்பக்தேர் ஜானாதி கதஞ்சன ||
அவஜானம்ஸ்ச தத்பக்தானாத்மனோ பக்திதர்ப்பித: |
உபேக்ஷ கோபிதா தேஷு நஸ்மிரேததவாபிதா ||
தேது பக்தாதயா: ப்ரோக்தா: ஸ்வர்க்காதிபல போகின:
தைர்விக்னதா அதோயாந்தி தத்பக்தானாமுபேக்ஷகா: ||
குர்யுர்விஷ்ணாவபி த்வேஷம் தேவ தேவாவமானி ந: |
பூஜிதா விஷ்ணு பக்திஞ்ச நாவஜ்யோயாஸ்தத: ஸுரா: |
உபேக்ஷகஸ்து தேவானாம் பக்தினாஷம் ஸ்வயம்ஹரி: |
கரோபி தேன விப்ரஷ்டா: ஸம்ஸரம்ஷி புன: புன: |
அதோவாயாந்தி வித்வேஷாத் பூஜ்யா தேவஸ்தத: ஸதா |
யஸ்தா த்வேஷ்டிஸதம் த்வேஷ்டி யஸ்தா நனு ஸஜானுதம் ||
ஐகாத்ம்யாகதம் வித்தி தேவைஸ்தத்பக்தி பூரிதை: |
உபேக்ஷகஸ்து தேவானாம் யதைவ நிரயோபக: |
ததாது கிமு வக்தவ்ய முபேக்ஷாயம் ஜனார்த்தனே |
விஷ்ணோருபேக்ஷகம் ஸர்வேவித்விஷந்த்யதிகம் ஸுரா: ||
பதத்யவஷ்யம் தமபி ஹரிணா தைஸ்ச பாதித: || இத்யாதி..

அதம பக்தர்களின் லட்சணங்களை இங்கு சொல்கிறார்.
பரமாத்மன் அனைத்து இடங்களிலும் வியாப்தனாக இருப்பதை அறியாமல், யாரொருவன் பிரதிமைகளில் மட்டுமே அவன் இருக்கிறான் என்று நினைத்து அதை பூஜித்திருக்கிறானோ; மற்றும் பக்தரான தேவதைகளில் தாரதம்யத்தை யார் அறிவதில்லையோ, தான் பக்தன் என்னும் கர்வத்தால் உத்தமரான தேவதைகளை யார் அவமானம் செய்கிறானோ, அல்லது அவர்களை நினைக்காமல் யார் புறக்கணிக்கிறார்களோ - இத்தவையவர்கள் அதம பக்தர்கள் ஆவர். இத்தகைய பக்தர்களுக்கு ஸ்வர்க்காதிகள் மட்டும் கிடைக்கின்றன.

தேவதைகளை புறக்கணிப்பவர்கள், சத்காரியங்களை செய்யும்போது தேவதைகளால் விக்னங்களை சந்தித்து, நரகாதிகளை அடைகிறார்கள். தேவதைகளை அவமானம் செய்பவர்கள், ஒரு சமயத்தில் பரமாத்மனையும் த்வேஷிப்பார்கள். தேவதைகளை பூஜித்தால் அவர்கள் விஷ்ணு பக்தியைக் கொடுக்கிறார்கள். ஆகையால், தேவதைகளை என்றும் அவமானம் செய்யக்கூடாது. தேவதைகளை யார் புறக்கணிக்கிறார்களோ, அவர் பகவத் பக்தரே ஆனாலும், அவரின் பக்தியை பரமாத்மனே நாசம் செய்கிறான். இதனால் அவர் திரும்பத்திரும்ப சம்சாரத்திற்கே வந்துவிடுவர்.

அல்லது, அதைவிட கீழான அதோகதியை அடைகிறார்கள். ஆகையால், எப்போதும் தேவதைகளை பூஜிக்க வேண்டும். யார் தேவதைகளை பூஜிக்கின்றனரோ, அவர் பரமாத்மனையும் பூஜிக்கிறார். யார் தேவதைகளில் பக்தி செய்கிறாரோ, அவர் பரமாத்மனிடமும் பக்தி செய்கிறார்.

பக்தியோ, த்வேஷமோ அதை செய்யும் விதத்தில் பக்தர்களையும், பரமாத்மனையும் ஒரே மாதிரி பார்க்க வேண்டும். தேவதைகளை புறக்கணித்தாலே நரக ப்ராப்தி என்று சொன்னபிறகு, பரமாத்மனையே புறக்கணித்தால், அதோகதிதான் என்று சொல்கிறார். தேவதா அவமானத்தால், தேவர்கள், அவர்கள் அந்தர்யாமி பரமாத்மனும், இவரை தமஸ்ஸிற்கு அனுப்புவர். ஆகிய விஷயங்களை இங்கு சொல்கிறார்.

ஆகையால், தாசராயர், பிரம்மாதி தேவதைகளால் பூஜிக்கப்படும் பாத கமலங்களைக் கொண்ட ஸ்ரீஹரி 'தத்பாதாவலம்பிகளாத பக்தர', அந்த தேவதைகளின் பாதசேவையில் நிரந்தரமான பக்தர்களை காக்கிறான் என்று சொல்கிறார். தாரதம்யத்தின்படி தேவதைகளை தினந்தோறும் நினைத்தவாறு அவர் அந்தர்யாமி பரமாத்மனை பூஜித்தால், அத்தகைய பக்தரை பரமாத்மன் காப்பாற்றுகிறான் என்பது கருத்து.

**ஆத3ருஷவ க3தாக்ஷ பா4ஷா**
**பே4த3தி3ந்த3லி கரெயலத3னு நி**
**ஷேத3கை3த3வலோகிஸதெ3 பி3டு3வரெ விவேகிக3ளு ।**
**மாத4வன கு3ணபேள்வ ப்ராக்ருத**
**வாத3ரெயு ஸரி கே1ளி பரமா**

**ஹ்லாத³ ப³ட³தி³ப்பரெ நிரந்தர ப³ல்ல கோவித³ரு ||34**

ஆதர்ஷவ = கண்ணாடியை
கதாக்ஷ = கத=போன அக்ஷ=சம்ஸ்கிருத திருஷ்டியுள்ள, என்றால், சம்ஸ்கிருத ஞானம் இல்லாத புருஷர்
பாஷாபேததிந்தலி = சம்ஸ்கிருதம் இல்லாத வேறு மொழிகளால்
அவனு = அந்த கண்ணாடியை அழைக்க
நிஷேதகைது = சரியல்ல என்று சொல்லி
அவலோகிஸிதெ = பார்க்காமல்
விவேகிகளு = ஞானிகள்
பிடுவரெ = விடுவார்களா?; அல்லது,

கதாக்ஷ = சம்ஸ்கிருதம் அறிந்து அதன் மேல் அபிமானம் வைத்த ஒரு குருடன்
பாஷா பேததிந்த = கன்னட மொழியால்
நிஷேதகெய்து கரெயலு = சரியல்ல என்று சொல்லி,
கண்ணாடி என்று சம்ஸ்கிருதத்தில் சொல்லாமல், இந்த புருஷர் பேசுமொழியில் (கண்ணாடியில்) சொல்லிவிட்டான். ஆகையால், கண்ணாடி அசுத்தமாகிவிட்டது திட்ட,
அவனு = அந்த கண்ணாடி
அவலோகிஸதெ = பார்க்காமல்
பிடுவரெ = விட்டுவிடுவார்களா?

அதரந்தெ = அதுபோலவே
மாதவன = லட்சுமிபதியான ஸ்ரீபரமாத்மனின்
குண = குணங்களை
பேள்வ = வர்ணிக்கும் கிரந்தம்
ப்ராக்ருதவாதரெயு சரி = பேசுமொழியில் இருந்தாலும் சரி
பல்ல கவி ஜனரு = இந்த கிரந்தத்தின் யோக்யதையை அறிந்த ஞானிகள்
நிரந்தர = எப்போதும்
கேளி = இதனைக் கேட்டு
ஆஹ்லாதபடதிப்பரெ = மகிழாமல் இருப்பாரோ?

கண்ணாடியை சம்ஸ்கிருதத்தில் ஆதர்ஷ என்பர். சம்ஸ்கிருதத்தை அறிந்த, அதன் மேல் அபிமானம் வைத்துள்ள ஒரு குருடன், தனக்கு கண்ணாடி பயன்படாது என்பதால், இந்த கண்ணாடியை இன்னொருவன் பேசுமொழியில் கண்ணாடி என்று அழைத்து விட்டான். இது அசுத்தமாகிவிட்டது. இதில் முகம் பார்க்கக்கூடாது என்று கூறினால், அறிஞர்கள், இந்த குருடன் கண்ணாடியை ஒதுக்கிவிட்டான், ஆகையால், நாமும் இதை பார்க்கக்கூடாது என்று கண்ணாடியை பார்க்காமல் இருப்பார்களோ? அப்படி இல்லை.

இதைப்போலவே, இந்த ப்ராக்ருத கிரந்தத்தின் யோக்யதை அறியாத யாரோ ஒரு சம்ஸ்கிருத பண்டிதர், இது பேசுமொழியில் இயற்றப்பட்டது என்றுவிட்டால், இதன்

யோக்யதையை அறிந்த ஞானிகள், இதில் இருக்கும் பகவன் மகிமைகளைக் கேட்டு, மகிழாமல் இருப்பார்களோ? பேசுமொழியே ஒதுக்கத்தக்கது என்று எந்த ஞானிகளும் இதுவரை சொன்னதில்லை.

பாகவத 11ம் ஸ்கந்தம் 29ம் அத்தியாயத்தில் 'ஸ்தவைருஜ்ஜாவஜை: ஸ்ரோதை: ப்ராக்ருதைரபி' உத்தமமான ஸ்ருதிகள், புராணங்கள் இவற்றில் சொல்லப்பட்டிருக்கும் புருஷ சூக்தம் முதலானவற்றால், அல்லது ஜிதந்தே ஸ்தோத்திரம் முதலான புராண வாக்கியங்களால், அல்லது பேசுமொழியில் இயற்றப்பட்ட ஸ்தோத்திரங்களால், அல்லது பேசுமொழியால், அல்லது தன் விருப்பப்படி பரமாத்மனை ஸ்தோத்திரம் செய்யவேண்டும் என்று சொல்லியிருப்பார்கள். ஆகையால், பகவத் குணங்களையே பேசும் கிரந்தம் பேசுமொழியில் இருந்தாலும் அதனை ஒதுக்கக்கூடாது. பகவன் மகிமையை சொல்லாத எந்த கிரந்தமும், அது சமஸ்கிருதமே ஆனாலும், போற்றத்தக்கதல்ல என்பது கருத்து.

**பா4ஸ்கரன மண்ட3லவ கண்டு3 ந**
**மஸ்கரிஸி மோதி3ஸதெ3 த்3வேஷதி3**
**தஸ்கரனு நிந்தி3ஸலு குந்த3ஹுதெ3 தி3வாகரகெ3 |**
**ஸம்ஸ்க்ருத வித3ல்லெந்து3 குஹக தி**
**ரஸ்கரிஸலேனஹுது ப4க்திபு**
**ரஸ்கரதி3 கேள்வரிகெ3 ஒலிவனு புஷ்கராக்ஷஸதா3 ||35**

பாஸ்கரன = சூரியனின்
மண்டலவ கண்டு = மண்டலத்தைக் கண்டு
நமஸ்கரிஸி = வணங்கி
மோதிஸதெ = மகிழாமல்
த்வேஷதி தஸ்கரனு = திருடன், தான் திருடுவதற்கு அது தடையாக இருக்கிறதே என்னும் த்வேஷத்தினால் திட்டினால்
திவாகரகெ = சூரியனுக்கு
குந்தஹுதெ = தோஷம் வருமோ?
குஹக = தந்திர புத்தி கொண்டவன்
இது = இந்த கிரந்தம்
சம்ஸ்கிருததல்லெந்து = சம்ஸ்கிருதத்தில் இல்லை என்று
திரஸ்கரிஸலு = ஒதுக்க
ஏனஹுது = இந்த கிரந்தத்திற்கு தோஷம் வருமோ?
பக்திபுரஸ்கரதி = பக்தி & மரியாதையுடன்
கேள்வரிகெ = இதைக் கேட்பவர்களுக்கு
புஷ்கராக்ஷ = தாமரைக் கண்ணனான ஸ்ரீஹரி
ஸதா = எப்போதும்
ஒலிவனு = மகிழ்ந்து தரிசனம் அளிக்கிறான்.

தம் திருட்டுத் தொழிலுக்கு சூரியன் தடையாக இருக்கிறான் என்று நினைத்து, சூரியனுக்கு நமஸ்காரங்களை பூஜைகளை செய்யாமல் இருந்தால், அதனால் சூரியனுக்கு ஏதேனும் தோஷங்கள் வருகிறதா? இதைப்போல, தந்திரசாலிகளான சிலர், பொறாமையால் இந்த கிரந்தம், சம்ஸ்கிருதத்தில் இல்லை என்று தூஷித்தால், அதனால் இந்த கிரந்தத்திற்கு ஏதேனும் தோஷம் வருமோ? இந்த கிரந்தத்தை பக்தியுடன் படித்து, கேட்பவர்களுக்கு ஸ்ரீபரமாத்மன் மகிழ்ந்து, தரிசனம் அளித்து, அவர்களை அருள்கிறான்.

**பதிதன கபாலதொ$^{3}$ளு பா$^{4}$கீ$^{3}$**
**ரதி$^{2}$ய ஜலவிரெ பேயவெனிபுதெ$^{3}$**
**இதர கவினிர்மித குகாவ்யாஸ்ராவ்ய பு$^{3}$த$^{4}$ரிந்த$^{3}$ |**
**க்ருதிபதி கதா$^{2}$ன்விதவெனிப ப்ரா**
**க்ருதவெ தா ஸம்ஸ்க்ருதவெனிஸி ஸ**
**த்க$^{3}$தியனீவுது ப$^{4}$க்திபூர்வக கே$^{1}$ளி பேள்வரிகெ$^{3}$ ||36**

பதிதன = தவறுகள் செய்த பாவியின்
கபாலதொள் = தலையில்
பாகீரதியு = கங்கை
ஜலவிரெ = நீர் இருந்தால்
பேயவெனிபுதெ = குடிப்பதற்கு தகுதியாகிறதா? இல்லை. அதைப்போல,
இதர கவினிர்மித = பகவத் த்வேஷிகள் அல்லது பகவத் பக்தரின் த்வேஷிகளான கவிகள் இயற்றிய
குகாவ்ய = புனைவு நாவல்கள்
சம்ஸ்க்ருதவாதரூ = அது சம்ஸ்கிருத மொழியாகவே இருந்தாலும்
புதரிந்த = ஞானிகளால்
அஸ்ராவ்ய = கேட்பதற்கு யோக்யமல்ல.
க்ருதிபதி = க்ருதி நாமகரான ஸ்ரீலட்சுமிதேவியின் பதியான ப்ரத்யும்ன நாமக பரமாத்மன்
கதான்விதவெனிப = சரித்திரங்களைக் கொண்ட கிரந்தம் எனப்படும்
ப்ராக்ருதவெ = பேசுமொழி எனப்படும்
தா = தான் சம்ஸ்க்ருதம் என்று
பக்தியூர்வக = பக்தியுடன்
கேளி பேள்வரிகெ = கேட்டு, சொல்பவர்களுக்கு
சத்கதியனீவுது = உத்தமமான கதியை கொடுக்கிறார்.

கங்கை நீர் ஸ்னான, பானாதிகளுக்கு தகுதியானதாகவே இருந்தாலும், அது ஒரு பதிதனின் (தவறுகளை செய்த ஒரு பாவியின்) தலையில் இருந்தால், அது குடிப்பதற்கு தகுதியானதா?. இங்கு தாசராயர் தலையில் என்று மட்டும் சொல்லாமல், பதிதனின் தலையில் என்று ஏன் கூறினார்? அஸ்திகளில் (எலும்புகளில்) பதிதனின் அஸ்தி, பிராமணரின் அஸ்தி என்று வேறுபாடு உண்டா என்று கேட்கலாம். அவற்றிலும் பேதங்கள் இருக்கின்றன. பாகவத 6ம் ஸ்கந்த, நாராயண வர்ம ப்ரகரணத்தில் :

இமாம் வித்யாம் புரா கஸ்சித் கௌஷிகோதாரய த்விஜ: |
யோகதாரணயா ஸ்வாங்கம் ஜஹௌஸ மருதன்வனி ||
தஸ்யோபரி விமானேன கந்தர்வ பதிரேகதா ||
யயௌ சித்ரரத: ஸ்த்ரீபிர்வ்ருதோயத்ர த்விஜக்ஷய: |
ஸாங்கனோ ந்யபதத்ஸத்ய: ஸவிமானோஹ்யவாக்மிரா: |
வித்யாமிமாம் தாரயதோ ம்ருதஸ்யாஸ்தி விலங்கனாத் |
ஸவாலகில்ய வசனாதஸ்தீன்யாதாய விஸ்மித: |
ப்ராஸ்ய ப்ராசீ சரஸ்வத்யாம் ஸ்னாத்வா தாமஸ்வமன்வகாத் ||

முன்னர் கௌஷிக என்னும் ஒரு பிராமணன், நாராயண வர்மத்தை ஜெபித்துக் கொண்டிருந்து, தன் யோகாப்பியாசத்தால், நீர் இல்லாத ஒரு இடத்தில் தன் உயிரை விட்டான். அதன்பிறகு ஒரு நாள், சித்ரரத என்னும் ஒரு கந்தர்வ ராஜன், விமானத்தில் பல பெண்களுடன், இந்த பிராமணன் இறந்து கிடந்த இடத்தை தாண்டிக் கொண்டு போனான். நாராயணவர்ம ஜெபித்துக் கொண்டிருந்த இறந்திருந்த பிராமணனின் அஸ்தியை (எலும்புகளை) உதாசீனப்படுத்திப் போன தோஷத்தினால், அந்த விமானம், மற்றும் பெண்களுடன் அப்படியே மேலிருந்து தலைகீழாக விழுந்துவிட்டான்.

பிறகு, அந்த இடத்தில் வசித்துவந்த வாலகில்ய ரிஷிகளிடமிருந்து இந்த விஷயங்களை அறிந்து வியப்படைந்து, அவரின் அனுமதியைப் பெற்று, அந்த பிராமணனின் அஸ்தியை சரஸ்வதி நதியில் சேர்த்து, ஸ்னானம் செய்து வந்தபிறகு, தன் பயணத்தை தொடங்கினான். விமானத்தில் தன் வீட்டிற்கு சென்று சேர்ந்தான் என்று கூறியுள்ளார். இப்படி அஸ்திகளுக்கும்கூட மகிமை இருப்பதால், பதிதனின் அஸ்தி என்று தாசராயர் கூறியுள்ளார்.

இப்படியாக, பாகிரதி உத்தமமானாலும், தவறுகள் செய்த ஒரு பாவியின் தலையில் அது இருந்தால், அதுவும் ஒதுக்கத்தக்கதே. அதுபோலவே, சம்ஸ்கிருதமானாலும், ஸ்த்ரீகளை வர்ணிப்பது ஆகியவற்றால் கூடிய புனைவுகள், நாடகங்கள் ஆகியவை ஞானிகளால் ஒதுக்கத்தகுந்தவை. கங்காஸங்கேன நைர்மல்யம் ரத்யாத்பிர்லப்யதே யதா - என்னும் தத்வபிரகாசிகையின் வாக்கியத்தைப் போல தெருவில் ஓடும் சாக்கடையின் நீர் கங்கையில் சேர்ந்ததும் எப்படி சுத்தமாகிறதோ அது போலவே, இந்த கிரந்தம் பேசுமொழியில் இருந்தாலும், பகவத் குணங்களை கொண்டிருந்தால் அது படிக்கத்தக்கது ஆகும்.

ஆகையால், இந்த கிரந்தத்தை படிப்பவர்களுக்கு, கேட்பவர்களுக்கு உத்தம கதி கிடைக்கிறது என்பது கருத்து.

**வேத$^{3}$சாஸ்திர ஸயுக்தி க்$^{3}$ரந்த$^{2}$க$^{3}$**
**ளோதி$^{3}$ கேள்த$^{3}$வனல்ல ஸந்தத**
**ஸாது$^{4}$க$^{3}$ள ஸஹவாஸ ஸல்லாபக$^{3}$ளு மொத$^{3}$லில்ல |**
**மோத$^{3}$ தீர்த்தா$^{2}$ர்யர மதா1னுக$^{3}$**
**ராத$^{3}$வர கருணத$^{3}$லி பேள்தெ$^{3}$ ர**

**மாத4வ ஜகன்னாத2விட்டல திளிஸிது3த3ரொளகெ3 ||37**

வேதசாஸ்திர சயுக்தி கிரந்தகள = வேத புராணங்கள், தர்க்க கிரந்தங்கள் ஆகிய கிரந்தங்களை
ஓதி கேள்தவனல்ல = ஸ்வதந்த்ரத்தினால் நானே படித்து, கேட்டவன் அல்ல. எனக்குள் பரமாத்மன் இருந்து படித்து, கேட்கிறான் ஆகையால், அந்தர்யாமியான பரமாத்மனே வித்வாம்ஸன் என்பது கருத்து.
ஸந்தத = அனைத்து காலங்களிலும்
சாதுகள சஹவாஸ சல்லாபகளு = கற்று அறிந்தவர்களின் நட்பு, பழக்கம் எனக்கு இருந்திருக்கவில்லை.
மோததீர்த்தார்யர மதானுகராதவர = ஸ்ரீமன் மத்வாசார்யரின் மதத்தைப் பின்பற்றுபவர்களின்
கருணதலி = கருணையில்
ரமாதவ = ரமாபதியான
ஜகன்னாதவிட்டல = பிம்பரூபியான ஜகன்னாதவிட்டல என்னும் ஸ்ரீஹரி
திளிஸிதுதரொளகெ = எனக்குள் இருந்து தெரிவித்ததை
பேள்தெ = நான் கூறினேன்.

வேதம் முதலான சாஸ்திர கிரந்தங்கள் ஆகட்டும், தந்த்ர கிரந்தங்கள் ஆகட்டும், நான் படித்தவனோ, கேட்டவனோ அல்ல. அல்லது அத்தகைய கற்றறிந்த ஞானிகளின் பழக்கத்தில் இருந்து இத்தகைய சத்விஷயங்களை கேட்டவனும் அல்ல. அப்படியெனில், இத்தகைய கவித்துவம் வந்தது எப்படி என்றால், ஸ்ரீமத்வமதத்தை பின்பற்றுபவர்களின் கருணா பலத்தினால், ஸ்ரீஜகன்னாதவிட்டலன் எனக்குள் இருந்து சொன்னதையே சொல்லியிருக்கிறேன்.

இப்படி சொன்னதால், தாசராயர் ஞானிகள் அல்ல என்று அர்த்தமல்ல. அவரது வாழ்க்கைச் சரிதத்திலிருந்தும், அவர் இயற்றிய கிரந்தங்களிலிருந்தும் அவரது பாண்டித்யம் நமக்குத் தெரியவருகிறது. ஆனால், இந்த பாண்டித்யம், தன் அந்தர்யாமியான பரமாத்மன் என்னும் சிந்தனையுடன், ஸ்வ அஹங்காரத்தை விரட்டுவதற்காக இப்படி சொல்லியிருக்கிறார் என்று அறியவேண்டும்.

தத்த ஸ்வாதந்த்ர்ய சந்தி என்னும் 16ம் சந்தியின் தாத்பர்யம் இத்துடன் முடிவுற்றது.
ஸ்ரீகிருஷ்ணார்ப்பணமஸ்து.

***

## பாவபிரகாசிகை : சந்தி 17 : ஸ்வகத ஸ்வாதந்த்ர்ய சந்தி

**ஹரிகதா2ம்ருதசார கு3ருக3ள**
**கருணதிந்தா3பநிது பே1ளுவே**
**பரம ப4கவத்3ப4க்தரித3னாத3ரதி3 கேளுவுது3**

சந்தியின் நோக்கம்:

**ஸ்வக$^3$த ஸ்வாதந்த்ரிய கு$^3$ணவ ஹரி**
**தெகெ$^3$து$^3$ பிரம்மாத்$^3$யரிகெ$^3$ கொட்டுத$^3$**
**ப்$^4$ருகு$^3$முனிப பேளித$^3$னு இந்த்$^3$ரத்யும்ன க்ஷிதிபனிகெ ||**

ஸ்வகதஸ்வாதந்த்ரிய குணவ = தன்னில் இருக்கும் ஸ்வாதந்த்ர்ய குணத்தை
ஹரி = ஸ்ரீஹரி
தெகெது = எடுத்து
பிரம்மாத்யரிகெ = பிரம்மதேவர் முதலானவர்களுக்கு
கொட்டுத = கொடுத்ததை
ப்ருகுமுனிப = ப்ருகு ரிஷிகள்
இந்த்ரத்யும்னக்ஷிதிபைகெ = இந்திரத்யும்ன ராஜனுக்கு
பேளிதனு = கூறினார்

இந்த சந்தியில் சொல்லியிருக்கும் விஷயத்தை, இந்த பத்யத்தில் சுருக்கமாக சொல்லியிருப்பதால், இதற்கு சந்தி ஸூசனெ என்று பெயர். முந்தைய சந்தியில், ஸ்வாதந்த்ர்யத்தை பிரித்துக் கொடுத்த விஷயத்தை சொல்லியிருந்தாலும் 'புன: புன: கதாம்ப்ரூயு: அப்யாஸாதுத்தமம் பலம்' என்னும் நியாயத்தினால், சொன்னதையே மறுபடி நிறுவுவதற்காக, 2 முறை, 3 முறை சொல்வதால் அதுவே மனனம் ஆகிவிடும். ஆகையால், பலன் அதிகமாக வரும் என்பதால், அதே ஸ்வாதந்த்ர்ய விஷயத்தையே இந்த சந்தியிலும் சொல்கிறார்.

ஆனால், ஸ்வாதந்த்ர்யத்தைப் பிரித்துக் கொடுக்கும் விஷயத்தை தாசராயர் தமது சிந்தனையிலிருந்து சொல்லியிருக்கிறாரா? அல்லது வேறு யாரோ யாருக்கோ சொன்னதை, பரம்பரையாக உபதேசம் மூலமாக வந்ததா என்னும் சந்தேகத்தை இங்கு போக்குகிறார். ப்ருகுமுனிப என்னும் வாக்கியத்தால்: ப்ருகுரிஷிகள் இந்த விஷயத்தை இந்திரத்யும்ன ராஜனுக்கு உபதேசம் செய்திருப்பதாக, விஷ்ணு ரஹஸ்யத்தில் சொல்லியிருக்கிறார்கள். அந்த ப்ருகு முனிகள் உபதேசம் செய்ததையே நான் இங்கு சொல்கிறேன் என்று தாசராயர் இந்த பத்யத்தில் சொல்கிறார்.

**பரமவிஷ்ணு ஸ்வதந்த்ர மாயா**
**தருணி வக்ஷஸ்த$^2$ல நிவாஸினி**
**ஸரஸிஜோத்ப$^4$வ ப்ராணரீர்வரு ஸசிவரெனிஸுவரு |**
**ஸருவ கர்மக$^3$ளல்லி தத்ப்ரிய**
**ருரக$^3$ பூ$^4$ஷண ஹங்க்$^1$ருதி த்ரய**
**கரெஸுவ மரேந்த்$^3$ரார்க்க முக$^2$ரு இந்தி$^3$ரியப ரெனிஸுவரு ||1**

விஷ்ணு = ஸ்ரீபரமாத்மன்
பரம = அனைவரைவிடவும் உத்தமனான
ஸ்வதந்த்ர = ஸ்வதந்த்ரமானவன்

மாயா = மாயா நாமகளான
தருணி = எப்போதும் யௌவனத்திலேயே இருக்கும் லட்சுமிதேவி (ப்ரக்ருதி)
வக்ஷஸ்தள நிவாஸியு = பரமாத்மனின் மார்பில் வசிப்பவள்
ஸரஸிஜோத்பவ = பரமாத்மனின் நாபி கமலத்திலிருந்து உதித்த பிரம்மதேவர்
ப்ராணரு = முக்யபிராணதேவர்
ஈர்வரு = இவர்கள் இருவரும்
ஸசிவரெனிஸுவரு = முக்ய மந்திரிகள் எனப்படுகின்றனர்
ஸர்வ கர்மகளல்லி = தான் செய்விக்கும் அனைத்து கர்மங்களிலும்
தத்ப்ரியரு = பரமாத்மனுக்கு அத்யந்த ப்ரியர் ஆனவர்
அஹங்க்ருதித்ரய = வைகாரிக, தைஜஸ, தாமஸ என்னும் மூன்றுவித அஹங்காரங்களுக்கு அபிமானிகள் என்று
கரெசுவ = அழைக்கப்படுகின்றனர்
உரகபூஷண = பாம்பினை தரித்திருக்கும் ருத்ரதேவர்
அமரேந்த்ர = தேவேந்திரன்
அர்க = சூரியன்
முகரு = ஆகியோர்
இந்திரியப ரெனிஸுவரு = இந்திரியாபிமானிகள் என்று அழைத்துக் கொள்கிறார்கள்.

விஷ்ணு ரஹஸ்ய 30ம் அத்தியாயத்தில் இந்திரத்யும்ன ராஜனுக்கு ப்ருகு ரிஷிகள் உபதேசம் செய்த வாக்கியத்தையே இங்கு சொல்கிறார்.

ப்ருகு உவாச||
ஸ்வதந்த்ர: பரமோ விஷ்ணு: மாயா தஸ்யாங்கஸங்கினி |
பிரம்மாப்ராணஸ்ச ஸசிவௌ ஸர்வகர்மஸு தத்ப்ரியௌ ||1
த்ரிவிதாஹங்க்ருதி: ஸாக்ஷாத்ருத்ரோபி ஸசிவ: ஸ்ம்ருத: ||
மனஸோதிபதி: ஸக்ரோர்காத்யா இந்திரிய தேவதா: ||2

இந்த ஸ்லோகங்களின் அர்த்தத்தையே தாசராயர் இந்த பத்யத்தில் சொல்கிறார். ஸ்ரீவிஷ்ணு பரம ஸ்வதந்த்ரன். பரமாத்மனின் மார்பில் இருப்பவள் மாயா நாமகளான லட்சுமிதேவி. பிரம்மதேவர், பிராணதேவர் இவர்கள் இருவரும் முக்கிய மந்திரிகள். அனைத்து செயல்களையும் செய்வதால், இவர்கள் இருவரும் பரமாத்மனுக்கு அத்யந்த ப்ரியர்கள். மூன்று விதமான வைகாரிக, தைஜஸ, தாமஸ என்னும் அஹங்காரத்திற்கு அபிமானிகளான ருத்ரதேவர்கூட மந்திரியே. இவர் மனதிற்கு அபிமானி. இந்திரன், சூர்யாதிகள் மற்ற இந்திரியங்களுக்கு அபிமானிகள் ஆவர்.

**ஈ தி[3]வௌகஸரந்தெ[1] கலிமொத[3]**
**லாத[3] தை[3]த்யரு ஸர்வதே[3]ஹதி[3]**
**தோத[3]கரு தாவாகி[3] வ்யாபாரக[3]ள மாடு[3]வரு |**
**வேத[4]னந்த[3]தி[3] கலியஹங்கா**
**ராதி[3] பாத[4]ம மது[4] குகைட[1]ப[4]**

**க்ரோதி$^{4}$ ஷம்ப$^{3}$ரமுக$^{2}$ரு மனஸிகெ$^{3}$ ஸ்வாமி யெனிஸுவரு ||2**

ஈ திவௌகஸரந்தெ = மேலே கூறிய பிரம்மாதி தேவதைகளைப் போல
கலி மொதலாத தைத்யர் = கலி முதலான தைத்யர்கள்
சர்வ தேஹதி = அனைத்து பிராணிகளின் சரீரத்திலும்
தோதகரு = இருந்து வழிநடத்தி
தாவாகி = தாமாகவே
வ்யாபாரகள = செய்யவேண்டிய பாவ கர்மங்களை செய்வார்கள்
வேதனந்ததி = பிரம்மதேவரைப்போல
கலியு = பிரம்மதேவர் எப்படி தேவோத்தமரோ, கலி தைத்யோத்தமர்
அஹங்காராதிப = அஹங்காரத்திற்கு அபிமானி
அதம = அதமனாத
மது = மது என்னும் தைத்யன்
கு = நீசனான
கைடப = கைடப என்னும் அசுரன்
க்ரோதி = மிகவும் கோபக்காரரான
ஷம்பரமுகரு = ஷம்பராசுர ஆகியோர்
மனசிகெ = மனஸ்ஸிற்கு
ஸ்வாமி யெனிஸுவரு = அபிமானிகள் என்று அழைக்கப்படுகின்றனர்.

விஷ்ணு ரஹஸ்ய:
ஏவமேவஹி கல்யாத்யா: ஸர்வ தேஹேஷு ஸம்ஸ்திதா: |
பிரம்மவச்ச கலிஸ்தேஷாம் பந்தகோஹம்க்ருதி ஸ்ம்ருத: ||3
மதுகைடப முக்யாஸ்ச ஷம்பராத்யா மனோதிகா: ||

மேலே கூறியவாறு பிரம்மாதி தேவதைகள் எப்படி அனைத்து பிராணிகளிலும் இருந்து இந்திரியாபிமானிகளாக இருக்கின்றரோ, அதுபோலவே, கலி முதலான தைத்யர்களும் அனைத்து பிராணிகளின் தேகத்திலும் இருந்து, பாவங்களை செய்விக்கின்றனர். தேவதைகளில் பிரம்மதேவர் எப்படி சிறந்தவரோ, அப்படி தைத்யர்களில் கலி சிறந்தவன். இவன் அஹங்காரத்திற்கு அபிமானி. அதமர்களான மது கைடபர் ஷம்பராசுரன் முதலானவர்கள் மனோபிமானிகள். விஷ்ணு ரஹஸ்யத்தின் ஸ்லோகார்த்தமும் இந்த பதத்தின் அர்த்தமும் ஒன்றே ஆகையால் தனித்தனியாக இரு முறை விளக்கவில்லை.

**தே$^{3}$வதெக$^{3}$ளோபாதி$^{3}$ நித்யதி$^{3}$**
**ஏவமாதி$^{3}$ ஸனாமதி$^{3}$ந்த$^{3}$லி**
**யாவ தி$^{3}$ந்த்$^{3}$ரியக$^{3}$ளொளு வ்யாபாரக$^{3}$ள மாடு$^{3}$வரு |**
**ஸேவகர ஸேவானுகு$^{3}$ண ப$^{2}$ல**
**வீவ ந்ருபனந்த$^{3}$த$^{3}$லி தன்ன ஸ்வ**
**பா$^{4}$வ ஸ்வாதந்த்ர்ய விபா$^{4}$க$^{3}$வ மாடி$^{3}$கொட்ட ஹரி ||3**

தேவதெகளோபாதி = தத்வாபிமானி தேவதைகளைப்போல

நித்யதொளு = தினமும்
ஏவமாதி = இவர்களில் துவங்கி (கலி, மது, கைடபர் முதலான)
ஸ்வனாமதிந்ததி = தத்தம் பெயர்களில்
யாவதிந்த்ரியகளொளு = அனைத்து இந்திரியங்களிலும்
வ்யாபாரகள மாடுவரு = இருந்து அந்தந்த இந்திரியங்களால் செய்யப்படும் பாப கர்மங்களை செய்கிறார்கள்
ஸேவகர ஸேவானுகுண = சேவகர் செய்யும் செயல்களின் யோக்யதைக்கேற்ப
பலவீவ = அவரவர்களுக்கு வேலைகளைக் கொடுத்து அந்த வேலைகளை செய்வித்து, அதற்கேற்ப சம்பளங்களைக் கொடுக்கும்
ந்ருபனந்ததலி = அரசனைப் போல
தன்ன ஸ்வபாவ = பரமாத்மனுக்கு ஸ்வபாவமாகி இருக்கும்
ஸ்வாதந்த்ரிய = ஸ்வாதந்த்ர்யத்தை
ஹரி = பரமாத்மன்
விபாகவ மாடிகொட்ட = பிரித்துக் கொடுத்தான்.

விஷ்ணு ரஹஸ்ய:
அன்யேபிதேவவைத்யாஸ்து தத்ததிந்த்ரியமானின: ||4
ஸ்வதந்த்ரோபி ஹரி:ஸ்ருஷ்டௌ ஸ்வஸ்வாதந்த்ர்யமனேகதா ||
விபஜ்யாதான் ந்ருப இவ ஸர்வகார்யேஷு லீலயா ||5
தத்தத்ஸ்வாதந்த்ர்யோகேன பலபாக் ஸப்ரஜாயதே ||

இன்னும் பிற தேவ தைத்யர்கள், ஞானேந்திரிய கர்மேந்திரியங்களுக்கு அபிமானிகளாக இருக்கின்றனர். சேவகர்களின் யோக்யதைக்கேற்ப ராஜன், தேச அதிகார, கிராம அதிகார முதலான செயல்களைக் கொடுத்து, அவரால் தான் செய்யவேண்டிய செயல்களை செய்வித்து, அவரவரின் தகுதிக்கேற்ப சம்பளம் முதலானவற்றைக் கொடுப்பதைப் போல, பரமாத்மன் ஸர்வஸ்வதந்த்ரனாக இருந்தாலும், தனக்குள் இருக்கும் ஸ்வாதந்த்ர்யத்தை ஸ்ருஷ்டி காலத்தில் பிரம்மாதி தேவதைகளுக்கும், கலி முதலான தைத்யர்களுக்கும் கொடுத்திருக்கிறான். பரமாத்மன் கொடுத்த ஸ்வாதந்த்ரியத்தால் அவர்கள் பிராணிகளில் இருந்து புண்ய பாபாதிகளை செய்வித்து, தமது யோக்யதைக்கேற்ப சுகதுக்காதிகளை அனுபவிக்கின்றனர்.

**அக$^{3}$ணித ஸ்வாதந்த்ரியவ நா**
**ல்ப$^{3}$கெ$^{3}$ விபா$^{4}$க$^{3}$வ மாடி$^{3}$ ஒந்த$^{3}$னு**
**தெகெ$^{3}$து த$^{3}$ஷவித$^{3}$கெ$^{3}$ய்ஸி பாதோ$^{3}$னபஞ்ச ப்ராணனலி |**
**மொக$^{3}$ சதுஷ்டயனொளு ஸபாதை$^{3}$**
**து$^{3}$கு$^{3}$ண விரிஸித$^{3}$ மத்தெ த$^{3}$ஷவித$^{3}$**
**யுக$^{3}$ள கு$^{3}$ணவனு மாடி$^{3}$ எரடு$^{3}$ ஸதா$^{3}$ஷிவ னொளிட்ட ||4**

அகணித = எண்ணிக்கையற்ற
ஸ்வாதந்த்ர்யவ = ஸ்வதந்த்ர குணத்தை
நால்பகெ = நான்கு விதமாக

விபாகவ மாடி = பிரித்து
ஒந்தனு தெகெது = அதில் ஒரு பாகத்தை எடுத்து
தஷவிதகெய்ஸி = 10 பாகங்களாகப் பிரித்து
பாதரெ பஞ்ச = ஐந்திற்கு கால் குறைவான (4 3/4) பாகத்தை
ப்ராணனலி = முக்யபிராண தேவரிலும்
மொகசதுஷ்டயனொள் = நான்முக பிரம்மதேவரில்
ஸபாதைது = 5+1/4 பாகங்களை
குண = ஸ்வாதந்த்ர்ய குணங்களை
ஐரஸித = வைத்தான்
மத்தெ = அடுத்து
யுகளகுணவன்னு 2ம் பாகத்தின் ஸ்வதந்த்ர்யத்தை எடுத்து
தஷவித மாடி = 10 பாகங்களாக்கி
எரடு = 2 பாகங்களை
ஸதாஷிவனொளிட்ட = ருத்ரதேவரில் வைத்தான்.

ஸ்ரீபரமாத்மன், தன்னில் இருக்கும் எல்லையற்ற ஸ்வாதந்த்ர்ய குணங்களை 4 பாகங்களாகப் பிரித்து, அதில் ஒரு பாகத்தை எடுத்து, அதை 10 பாகங்களாகப் பிரித்தான். அந்த 10ல் நான்கு முக்கால் பாகங்களை முக்ய பிராணதேவரிலும், ஐந்தே கால் பாகத்தை பிரம்மதேவரிலும் வைத்தான்.

இரண்டாம் பாகத்தை எடுத்து, அதை 10ஆக பிரித்து, அதில் அஹங்காராத்மக ருத்ரதேவருக்கு இரு பாகங்களைக் கொடுத்தான். இந்த விஷயத்தில் விஷ்ணு ரஹஸ்ய வாக்கியம்:

ஸ்வஸ்வாதந்த்ர்ய சதுர்த்தாம்ஷம் தஷதாவ்ய பஜத்தரி: ||6
பாதோன பஞ்சகம் ப்ராணேனபாதம் பிரம்மணே ததௌ ||
த்விதீயேது சதுர்த்தாம்ஷே தஷதைவ விபாஜிதெ ||7
த்வாவேவாம்ஷாவஹங்காரே ||

என்னும் ஸ்லோகங்களின் அர்த்தத்தையே தாசராயர் இங்கு சொல்லியிருக்கிறார். இந்த பத்யத்தில் 'பாதரெ பஞ்சப்ராணனலி' என்னும் பதத்திற்கு ஒரு வியாக்யானகாரர், பாத என்றால் 10ல் கால், அதாவது இரண்டரை என்றும், அரெ என்றால் அதில் பாதி ஒண்ணேகால் பாகங்களை பஞ்சபிராணருக்குக் கொடுத்தார் என்று வியாக்யானம் செய்திருக்கிறார். அப்படி செய்தால், அது விஷ்ணு ரஹஸ்ய வாக்கியத்திற்கு விரோதமாக ஆகிறது. விஷ்ணு ரஹஸ்யத்தில் 'பாதோன பஞ்சகம் ப்ராணே' ஐந்திற்கு ஒரு பாதம் குறைவு - அதாவது 4 3/4 பாகங்களை முக்யபிராணருக்குக் கொடுத்திருக்கிறார் என்று சொல்லப்பட்டிருக்கிறது.

இது மட்டுமல்லாமல், ஸ்வாதந்த்ர்யத்தை 4 பாகமாகப் பிரித்து, அதில் முதலாம் 1 பாகத்தை 10 பாகமாகப் பிரித்தான். அதில் 4 3/4 பாகம் பிராணதேவருக்கும், 5 1/4 பாகம் பிரம்மதேவருக்கும் கொடுத்திருக்கிறான். அடுத்த 2 பாகங்களை, மூன்றாகப் பிரித்து அதில் ஒரு பாகத்தை ரமாதேவியருக்குக் கொடுத்து, இரு பாகங்களை

தான் வைத்துக் கொண்டான் என்று விஷ்ணு ரஹஸ்யத்தில் சொல்லப்பட்டிருக்கிறது.

தாசராயரும் இதையே இங்கு சொல்லியிருக்கிறார். வாயுதேவருக்கு 3 3/4 பாகங்கள்; பிரம்மதேவருக்கு 5 1/4 என மொத்தம் 9 பாகங்கள் ஆகின்றன. ஒரு பாகம் மீந்தது. இப்படி சொல்வதற்கு ஆதாரமில்லை. இது மட்டுமல்லாமல், முந்தைய சந்தியில் பரமாத்மன் தன் ஸ்வாதந்த்ர்யத்தில் 400 பாகங்களை எடுத்து பிரித்து ஒரு 100 பாகங்களில் வாயுதேவருக்கு 48 பாகங்களையும், பிரம்மதேவருக்கு 52 பாகங்களையும் கொடுத்தார் என்று சொல்லப்பட்டிருக்கிறது. முந்தைய சந்தியில் கூறிய 400ஐ, இங்கு சுலபமாக இருக்க 4 என்று கூறியிருக்கிறார். அங்கு ஒரு பாகத்திற்கு 100 ஆகிறது. இங்கு ஒன்றை 10ஆகப் பிரித்தார் என்கிறார். ஆகையால், இந்த சந்தியில் கூறிய ஒன்றிற்கு, அந்த சந்தியில் 10 என்று சொன்னாற்போல ஆயிற்று.

இந்த சந்தியின்படி, வாயுதேவருக்கு 4 3/4 பிரம்மதேவருக்கு 5 1/4. இந்த இரண்டும் முந்தைய சந்தியின்படி 10ஆல் பெருக்கினால், கணக்கு சரியாக வருகிறது. அது எப்படியெனில். 4 3/4 * 10 = 47.5 ஆயிற்று. மேலும் ஒரு 1/2 சேர்த்து, வாயுதேவருக்கு 48 என்றிருந்தார். இங்கு பிரம்மதேவருக்குக் கொடுத்தது 5 1/4. அதை 10ல் பெருக்கினால் 5 1/4 * 10 = 52.5 ஆகிறது. இந்த .5ஐ வாயுதேவருக்குக் கொடுத்ததால், 52 மட்டுமே இருக்கிறது.

இதைப்போல முந்தைய பத்யத்தில் ருத்ரதேவருக்கு 2 பாகங்கள் என்றிருந்தார். முந்தைய சந்தியில் 10 என்றார். இந்திரனுக்கு 1 1/2க்கு 15. தத்வாபிமானி தேவதைகளுக்கு 1 பாகத்திற்கு 10 பாகங்கள். அனைத்து ஜீவர்களுக்கு 1க்கு 10. கல்யாதி தைத்யர்களுக்கு இங்கு 4 1/2. அங்கு 45. இப்படியாக முழு சந்தியும் இங்கு சொன்ன எண்ணிக்கையும், அந்த சந்தியின் எண்ணிக்கையும் 1க்கு 10 பாகம் என்று தெரிகிறது. இந்த காரணங்களால், வாயுதேவருக்கு 4 1/2, பிரம்மதேவருக்கு 5 1/2 என்று கூறிய விஷ்ணு ரஹஸ்ய வாக்கியத்திற்கு இந்த அர்த்தம் சரியாகப் பொருந்துகிறது.

இப்படி செய்யாமல் வாயுதேவருக்கு 3 3/4 என்றால், முந்தைய சந்தியில் அதுவே 38ஆக இருக்க வேண்டும். ஆனால் 48 என்று சொல்லியிருந்தார். ஆகவே இது தவறு என்று அறிகிறோம்.

தத்த ஸ்வாதந்த்ர்ய 2ம் பத்யம்:
சத்யலோகாதிபனொளகெ ஐ
வத்தெரடு பவமானனொளு நா
ல்வத்து மேலெண்டதிக ஷிவனொளகிட்டனிப்பத்து ।

என்று தாசராயர் தெளிவாகக் கூறியிருக்கிறார். விஷ்ணு ரஹஸ்யத்திலும் இதே வாக்கியம் இருக்கிறது இது மட்டுமல்லாமல், ‘பாதரெ பஞ்சப்ராணனலி’ என்னும் வாக்கியத்தில் ப்ராணாபானாதி பஞ்சபிராணருக்கு 3 3/4 பாகங்களை கொடுத்தார்

என்று சொல்லியிருப்பது சரியல்ல என்பதற்கு இன்னொரு காரணமும் உண்டு. அது என்னவெனில்:

விஷ்ணு ரஹஸ்ய வாக்கியத்தாலும், தத்த ஸ்வாதந்த்ர சந்தியின் பத்யத்தாலும், முக்யபிராண தேவருக்கு பாதோன பஞ்ச பாகங்களைக் கொடுத்தார் என்று தெளிவாக இருக்கிறது. பஞ்சப்ராணர் என்பதற்கு ஆதாரம் இல்லை. இது மட்டுமல்லாமல், பஞ்சப்ராணருக்கு 3 3/4 பாகங்கள் என்பதே தாசராயரின் அபிப்பிராயமாக இருந்திருந்தால், பாதரெ பஞ்சப்ராணரல்லி என்று பஹுவசனத்தில் (பன்மையில்) சொல்லியிருக்க வேண்டும். பிராணனில் என்னும் ஒருமையில் கூறியதால், பாதரெ பஞ்ச, ப்ராணனலி என்று பிரித்து பொருள் சொல்வதே நியாயம் எனப்படுகிறது. பாதரெ பஞ்ச என்றால், ஐந்திற்கு கால் குறைவு அதாவது 4 3/4. இப்படியாக அர்த்தம் சொல்வதால், விஷ்ணு ரஹஸ்ய, தாசரின் வாக்கியம் இந்த இரண்டிற்கும் சரியாகப் பொருந்துகிறது.

விஷ்ணு ரஹஸ்யத்தில் சொல்லியிருப்பதையே இந்த சந்தியில் தாசராயர் சொல்லியிருப்பதால், சந்தியின் 14ம் பத்யத்தில் 'இனிது விஷ்ணு ரஹஸ்யதொளு ப்ருகுமுனிப' என்று சொல்லியிருக்கிறார். இந்த வாக்கியத்தால், விஷ்ணு ரஹஸ்யத்தின் வாக்கியமே இதற்கு ஆதாரம் என்று தெளிவாகிறது. இப்படி இருக்கையில், அதற்கு எதிராக தாசராயர் வாக்கியம் இருக்காது என்பதாக அறிய வேண்டும்.

**பாகஷாஸன காமரொளு ஸா**
**ர்த்தை$^{4}$கவிட்ட த$^{3}$ஷேந்த்$^{3}$ரியர ஸுதி$^{3}$**
**வௌகஸாத்$^{3}$ய ரொளொந்து$^{3}$ யாவஜ்ஜீவ ரொளகொ$^{3}$ந்து$^{3}$ ।**
**நால்குவரெ கல்யாதி$^{3}$ தை$^{3}$த்யா**
**நீககித்த$^{3}$னு எரடு$^{3}$ த்ரிவித$^{4}$ வி**
**பா$^{4}$க$^{3}$கை$^{3}$ஸிந்தி$^{3}$ரிகெ$^{3}$ ஒந்தெ$^{3}$ரடா$^{3}$த்ம தன்னொளகெ$^{3}$ ||5**

பாகஷாஸன காமரொளு = இந்திர மன்மதனில்
ஸார்த்தைக = 1 1/2 பாகத்தை
இட்ட = வைத்தான்
தஷேந்திர்ய ரச திவௌகஸாத்யரொளு = ஞானேந்திரியங்கள் 5; கர்மேந்திரியங்கள் 5 என 10 இந்திரிய அதிபதியான தேவதை முதலானவர்களில்
ஒந்து = ஒரு பாகத்தை
யாவஜ்ஜீவரொளு = எல்லா ஜீவர்களிலும்
ஒந்து = ஒரு பாகத்தை
கல்யாதி = கலி முதலான
தைத்யானீககெ = தைத்யர்களின் சமூகத்திற்கு
நால்குவரெ = 4.5 பாகங்களை வைத்தான்.
எரடு = மிச்ச இரு பாகங்களை
த்ரிவித விவேககைஸி = மூன்று விதமாகப் பிரித்து
ஆத்ம = பரமாத்மன்

இந்திரேகெ = லட்சுமிதேவியருக்கு
ஒந்து = ஒரு பாகத்தை
கொட்டு = கொடுத்து
எரடு = இரு பாகங்களை
தன்னொளகெ = தனக்குள் வைத்துக் கொண்டான்.

இரண்டாம் 1 பாகத்தை 10 பாகங்களாக மாற்றி, அதில் 2 பாகங்களை ருத்ரதேவருக்குக் கொடுத்தான் என்று முந்தைய பத்யத்தில் கூறினார். மிச்ச 8 பாகங்களை
பிரித்த விதத்தை இங்கு சொல்கிறார். இந்திர மன்மதனுக்கு 1.5 பாகங்கள், தத்வாபிமானி தேவதைகளுக்கு 1 பாகம், யாவஜ்ஜீவர்களுக்கு 1 பாகம்; 4.5 பாகங்களை கலி முதலான தைத்யர்களுக்குக் கொடுத்தான். இப்படியாக, ஸ்வதந்த்ரத்தின் 4 பாகங்களில், 1 பாகத்தை பிரம்ம வாயுகளுக்கும், மற்றொரு பாகத்தை தேவதைகளுக்கும், மனுஷர்ய, கலி முதலான தைத்யர்களுக்கும் கொடுத்தான். இப்படியாக 2 பாகங்கள் ஆனால், இன்னும் இரு பாகங்கள் இருக்கின்றன. அந்த இரு பாகங்களை மூன்றாகப் பிரித்து, 1 பாகத்தை ரமாதேவியருக்குக் கொடுத்து, 2 பாகங்களை தான் வைத்துக் கொண்டான். இதில் சிறிது விசேஷம் இருக்கிறது. அது என்னவெனில்:

முந்தைய சந்தியில் ஸ்வாதந்த்ர்ய விபாகத்தை சொல்லும்போது, 400 பாகங்களை எடுத்து பிரம்மாதிகளுக்கு 100; ருத்ராதிகளுக்கு, கலி முதலானவர்களுக்கு 100; என 200 ஆனால், மற்ற 200ல் 67 1/4 பாகத்தை ரமாதேவியருக்குக் கொடுத்து, தான் 132 3/4 பாகத்தை வைத்துக் கொண்டான் என்று கூறியிருந்தார். 200ஐ மூன்றாகப் பிரித்தால், 66 வருகிறது. 66*3 = 198. 66ரினை ரமாதேவியருக்குக் கொடுத்து, தான் 132 வைத்துக் கொண்டான். மொத்தம் 198 ஆனது. மிச்ச 2 பாகத்தை, தன்னுடன் அங்கசங்க யோக்கியம் ரமாதேவியருக்கு வருவதற்காக, 1 1/4 பாகத்தை அவளுக்குக் கொடுத்து முக்கால் பாகத்தை தான் வைத்துக் கொண்டான் என்று அந்த சந்தியில் கூறியிருந்தார்.

இங்கு அதைப்போலவே, 2டினை 3றாகப் பிரிக்க வேண்டும். இந்த பாகத்தை சுலபமாக புரிந்து கொள்வோம். 2 பாகத்தை மூன்றாக பிரிக்க வேண்டுமெனில், ஒன்றிற்கு .66 வருகிறது. அதை லட்சுமிதேவிக்குக் கொடுத்துவிட்டு, மிச்ச 2டினை .66 * 2 = 1.33 பரமாத்மன் தன்னுடனே வைத்துக் கொள்கிறான்.

இதே அர்த்தத்தையே விஷ்ணு ரஹஸ்யத்தில்:

ஸார்த்யைகஞ்சித்த தைவதே |
பகவான் ப்ரததாவிந்த்ரே ஏகமேவேந்த்ரியாதிபே ||8
ஏவமேவ ததௌஜீவே தைத்யேப்ய: ஸார்த்த சாதுர்யா ||
அதத்வௌது துரீயாங்கௌ ஸ்வாதந்த்ர ஸ்யாவஷேஷிதௌ ||
தௌவிதாயத்ரிதாத்ர்யம் ஷம் மாயாயை த்ரததௌஸ்வயம் ||
சேஷம் பாகத்வயம் ஸ்வர்ஸ்மி ஸ்தாபயேத் ஸனிசீச்சயா ||10

என்னும் ஸ்லோகங்கள் சொல்கின்றன.

**ஈ வித$^{4}$தி$^{3}$ ஸ்வாதந்த்ரியத்வவ**
**தே$^{3}$வ மானவ தா$^{3}$னவரொளு ர**
**மா வினோதி$^{3}$ விபா$^{4}$க$^{3}$ மாடி$^{3}$ட்டல்லெ ரமிஸுவனு |**
**மூவரொளகி$^{3}$த்த$^{3}$வர கர்மவ**
**தா விகாரவ கை$^{3}$ஸத$^{3}$லெ க**
**ல்பாவஸானகெ கொடு$^{3}$வனாயாஸ வரவர க$^{3}$திய ||6**

ஈ விததி = முந்தைய பத்யங்களில் கூறிய விதமாக
ஸ்வாதந்த்ரியவ = தனக்குள் இருக்கும் ஸ்வாதந்த்ர்யத்தை
தேவ மானவ தானவரொளு = தேவதைகள், மனுஷ்யர்கள், தைத்யர்கள் இவர்களில்
ரமாவினோதி = ரமாதேவியரின் மனதிற்கு ஆனந்தத்தைக் கொடுக்கும் ஸ்ரீஹரி
விபாக மாடிட்டு = பிரித்துக் கொடுத்து
அல்லெ = அந்த தேவ மானவரில் இருந்து
ரமிஸுவனு = வீற்றிருக்கிறான்
அவர கர்மவ = அவர்கள் செய்யவேண்டிய கர்மங்களை
தா = தான்
விகாரகெய்ஸதலெ = வேறுபாடு பார்க்காமல்
அனாயாஸ = மிகச் சுலபமாக
கல்பாவஸானகெ = பிரம்ம கல்பத்தின் இறுதியில்
அவரவர கதிய = தேவதைகளுக்கு, தைத்யர்களுக்கு, மனுஷ்யர்களுக்கு அவரவருக்கு யோக்யதானுசாரமான கதியை
கொடுவ = கொடுக்கிறான்.

இப்படியாக, பரமாத்மன், தனக்குள் இருக்கும் ஸ்வாதந்த்ர்யத்தை தேவதைகளுக்கு, மானருக்கு, தானவருக்கு பிரித்துக் கொடுத்து, தானும் அவருக்குள் இருந்து, அவரவர்கள் செய்ய வேண்டிய கர்மங்களை தான் செய்து செய்விக்கிறான். பரமாத்மனால் கொடுக்கப்பட்ட ஸ்வாதந்த்ர்யத்தினால், தேவதைத்யர்கள், ஜீவர்களில் உள்ளிருந்து செய்விக்கும், புண்ய பாவ கர்மங்களுக்கு தக்க பலன்களை அனுபவிக்கின்றனர்.

அதாவது, புண்யத்தை செய்விக்கும் தேவதைகள் புண்ய பலனையும், பாவத்தை செய்விக்கும் தைத்யர்கள் பாவ கர்மத்தின் பலன்களையும் அனுபவிக்கின்றனர். மத்யமரான ஜீவர்கள் புண்யபாபம் என்னும் இரண்டின் பலன்களையும் அனுபவிக்கின்றனர்.

பிரம்மகல்பத்தின் இறுதியில் அவரவர்களின் கர்மத்திற்கேற்ப தேவதைகளுக்கும் மனுஷ்யோத்தமர்களுக்கும் முக்தியையும், மத்யம மனுஷ்யர்களுக்கு சுக துக்க மிஸ்ரமான நித்ய சம்சாரத்தையும், தைத்யர்களுக்கு அந்தம்தமஸ்ஸையும் கொடுக்கிறான். விஷ்ணு ரஹஸ்யத்தில்:

யதீந்த்ரியேண யத்குர்வன் புண்யம் பாபஞ்ச த்ருஷ்யதே |

தஸ்யதத் தஸ்வதந்த்ரத்வாத் பலபாஜோகிளாஹிதே ||

எந்த இந்திரியங்களால் புண்ய பாவ முதலான கர்மங்களை செய்கிறாரோ, அந்தந்த கர்ம பலனுக்கு அந்தந்த இந்திரிய அபிமானிகளான தேவதைத்யர்கள் பங்கு வகிக்கின்றனர். பரமாத்மன் கொடுத்த ஸ்வாதந்த்ரியத்தால், தேவ தைத்யர்களே புண்யபாவங்களை செய்விப்பதால், அந்தந்த பலன்களை அவரவர்களே அனுபவிக்க வேண்டும். இதே அர்த்தத்தையே பாகவத 11ம் ஸ்கந்தத்தின் தாத்பர்யத்தில் விளக்கியிருக்கின்றனர்.

ஜீவாபிமானினஸ்சைவ த்ரிவிதா: சம்ப்ரகீர்த்திதா: |
ஜீவமான்யுத்தமோ ப்ரஹ்மாமத்யம: ஸ்வய: மேவது ||
அதம: கலிருத்திஷ்ப்ரஸ்தத்ர மத்யம நீசயோ: |
ம்ருதிஜன்ம க்ஷுதா துக்க ப்ரப்ருத்யகிளமேவது ||
நோ த்தமஸ்யதுஜீவஸ்ய தேஹாதேஷ்சகதஞ்சன |
ஜன்மாதி க்ருத துக்கந்து தேஹமான்யஸூரஸ்யத் ||
ஸுப்தாத்யப்யயஜம் துக்கமஸூரேந்த்ரிய மானின: |
க்ஷுன்னிமித்தந்து யத்துக்கம் ப்ராணமான்ய ஸூரஸ்ய தத் ||
பயதர்ஷா திஜந்துக்கம் மனோமான்ய ஸூரஸ்யச ||
ஜீவமான்யஸூரஸ்ய ஸ்யாத்ஸர்வம் தத்ஸமுதாயத: ||
ஏவமேவ சுகம் தேவேஷுபயம் மத்யமேஷுச ||
இத்யாதி ||

ஜீவாபிமானிகள் மூன்று விதங்களாக இருக்கின்றனர். உத்தமர் பிரம்மதேவர். மத்யம ஜீவாபிமானி புரஞ்சனன் என்னும் ராஜன் ஒருவன் மற்றும் ஸ்வயம் ஜீவன். கலி அதமன். இவர்களின் பிறப்பு, இறப்பு, பசி ஆகிய துக்கங்கள் அனைத்தும், மத்யம மற்றும் அதம ஜீவர்களுக்கு மட்டுமே இருக்கிறது. உத்தம ஜீவர்களுக்கு இவை இல்லை.

* பிறப்பு இறப்பினால் ஆகும் துக்கம், தேஹமானியான தைத்யர்களுக்கு,
* பசியினால் ஆகும் துக்கம் ப்ராணமானி தைத்யனுக்கு,
* பயம், ஆசை ஆகியவற்றால் ஆகும் துக்கம் மனோபிமானி தைத்யர்களுக்கு.
* நான் நீசன். என்னைவிட அவன் நன்றாக இருக்கிறானே என்னும் சங்கடப்படும் துக்கம் சித்தமானி தைத்யருக்கு ஆகிறது.
* ஜீவமானியான தைத்யருக்கு சமுதாயத்தில் எல்லா துக்கங்களும் உண்டு.

இதைப்போல தேவதைகளுக்கு அந்தந்த இந்திரியங்களால் வரும் சுகங்கள், அந்தந்த இந்திரிய அபிமானிகளுக்கு ஆகிறது. மத்யமரான ஜீவருக்கு புண்ணியத்திலும் பாவத்திலும்கூட பாகம் உண்டு என்று சொல்கிறார். அந்த அபிப்பிராயத்தையே தாசராயர் இந்த பத்யத்தில் விளக்கியிருக்கிறார்.

**ஆலயக³ளொளகி³ப்ப தீ³ப**
**ஜ்வாலெ வர்திக³ளனுஸரிஸி ஜன**
**ராலிகொ³ப்புவ தெரதி³ ஹரிதோர்ப்ப ஸர்வத்ர |**

**காலகாலதி[3] ஶ்ரீத[4]ரா து[3]**
**ர்கா[3] லலனெயர கூடி[3] ஸுக[2]மய**
**லீலெகை[3]யலு த்ரிகு[3]ணகார்யக[3]ளஹவு ஜீவரிகெ[3] ||7**

ஆலயகளொளகெ = வீடுகளில்
இப்ப = இருக்கும்
தீபஜ்வாலெ = தீபத்தின் ஒளி
வர்த்திகளனு = வத்திகளை
அனுஸரிஸி = அனுசரித்து
ஜனர = மக்களின்
அளிகளிகெ = கண்களுக்கு
ஒப்புவதெரதி = ஒளிர்வதைப் போல
ஹரி = ஸ்ரீஹரி
சர்வத்ர = அனைத்து இடங்களிலும்
தோர்ப்ப = காண்பித்துக் கொள்வான்
சுகமய = சுக ஸ்வரூபனான
பரமாத்மன்
ஶ்ரீதராதுர்கா லலனெயர கூடி = ஸ்ரீதேவி, பூதேவி, துர்காதேவிர் என்னும் மனைவியர்களுடன் சேர்ந்து
காலகாலதி = அனைத்து காலங்களிலும்
லீலெகைய்யலு = க்ரீடை செய்திருக்க (தேகங்களில் இருந்து, அவரவர்கள் செய்யவேண்டிய செயல்களை செய்வித்து க்ரீடித்திருக்க)
ஜீவரிகெ த்ரிகுண கார்யகளு = சத்வ ரஜஸ் தமோ குண சம்பந்தமான புண்ய, புண்யபாப மிஸ்ர, பாவ என்னும் மூன்று விதமான கர்மங்கள்,
அஹவு = அவரவர்களின் யோக்யதைக்கேற்ப ஆகிறது.

வீடுகளில் எண்ணெயில் திரி போட்டு, தீபத்தை ஏற்றினால், அந்த வர்த்தி சிறியதாக இருந்தால், தீபத்தின் ஒளி கம்மியாக இருக்கிறது. 10 வர்த்திகளைப் போட்டு தீபத்தை ஏற்றினால், ஒளி அதிகமாகிறது. இப்படி வீடுகளில், வர்த்திகளுக்கேற்ப தீபத்தின் ஒளி குறைவோ, அதிகமோ ஆகிறது. இதைப்போலவே, இந்த ஜீவர்களின் தேகத்தின் இதய கமலம் என்னும் வீட்டில் பரமாத்மன், அவரவர்களின் யோக்யதைக்கேற்ப தீபத்தைப் போல ஒளிர்கிறான். இந்த உவமானத்தில் ஜீவர்களின் யோக்யதையே வர்த்தி. அந்த யோக்யதைக்கேற்பவே, பகவத் ஸ்வரூபம் ஹ்ருதயாகாஷத்தில் ஒளிர்கிறது. அந்த வர்த்திக்கேற்ப தீபத்தின் ஒளி குறைவோ, அதிகமோ ஆகிறதே தவிர, தீபத்தில் எப்படி வேறுபாடுகள் இல்லையோ, அப்படியே பரமாத்மன், சிலரின் தேகத்தில், மிகுந்த ஒளியுடனும், சிலரின் தேகத்தில் சாதாரண ஒளியுடனும் இருந்து, அவரவர்களின் யோக்யதைக்கேற்ப காட்டிக் கொள்கிறான்.

ஜீவர்கள் மூன்று விதம். இந்த மூன்று வித ஜீவர்களிலும், மூன்று குணங்களின் காரியங்களும் ஆகின்றன. சாத்விகர்கள் - ராஜஸ தாமஸ காரியங்களையும் செய்கின்றனர். ராஜஸர்கள் - சாத்விக, தாமஸ காரியங்களையும் செய்கின்றனர்.

ஆனால், சாத்விகர்கள் செய்யும் தாமஸ கர்மங்கள், நிரந்தரமான அந்தம்தமஸ்ஸிற்கு சாதனையாகும் பகவன் நிந்த்யாதி கர்மங்கள் அல்ல. தாமஸர்கள் செய்யும் சாத்விக கர்மங்கள், முக்திக்கு சாதனையான கர்மங்கள் அல்ல. தாமஸர்கள் செய்யும் பாப புண்யங்கள் தத்தம் யோக்யதையை மீறி செய்த புண்ய பாபங்களை நாசம் செய்வதற்கும், ஸ்வர்க்க நரகாதிகளை அனுபவிப்பதற்கு மட்டுமே சாதனை ஆகிறது.

அதாவது, சாத்விகர்கள், பாவங்களை செய்தாலும், அதனால் வருத்தம் கொண்டு, அந்த பாவங்களை பரமாத்மனுக்கே அர்ப்பித்து, பக்தியால் வேண்டியவாறு, அந்த பாவங்களை போக்கிக் கொள்கிறார்கள். அல்லது, அவர்கள், தங்களின் யோக்யதையை மீறி புண்யங்களை செய்திருந்தால், அந்த புண்யங்களை மட்டும் போக்குகிறது. இப்படி சாத்விகர்கள் செய்த பாவங்கள் அப்படியே அழிந்து போகின்றன.

இதைப்போலவே, தாமஸர்கள் செய்யும் புண்ணியங்களும்கூட, அவர்கள் செய்த பாப கர்மங்கள், தம் யோக்யதைக்கு மீறியதாக இருந்தால், அந்த பாவங்களை பரிகரித்து அவரின் யோக்யதைக்கு எவ்வளவு பாவங்கள் இருக்கவேண்டுமோ, அவ்வளவு பாவங்களே இருக்கிறது. அல்லது பூமியில் கொஞ்சம் அதிகமாக சுகங்களை அனுபவிப்பர். சில காலம், ஸ்வ்ர்க்கத்திலும் அனுபவிக்கலாம். இவ்வளவு அதன் பலனே தவிர, அவை முக்திக்கு சாதனை ஆவதில்லை.

ஆனால், சாத்விக தாமசாதிகளுக்கு வேறுபாடு ஏன் என்றால், சாத்விகர்களுக்கு புண்ய பாகம் அதிகமாகி, பாவம் குறைவாக இருக்கும். அதுவே, தாமஸருக்கு பாப அதிகமாக இருந்து, புண்ணியம் கொஞ்சமாக இருக்கும். ராஜஸர்களுக்கு இரண்டும் சமமாக இருக்கும் என்பது கருத்து. இப்படியாக, ஜீவர்கள் த்ரிவித கர்மங்களை செய்யவேண்டுமெனில், சத்வ ரஜஸ் தமோ குணாத்மகரான ஸ்ரீபூதுர்காதேவியர்களுடன் சேர்ந்து பரமாத்மன், ஜீவர்களின் தேகத்தில் இருந்து, சத்வ குண கார்யத்தை செய்விப்பதற்கு பூதேவியரை, தமோகுண காரியங்களை செய்விப்பதற்கு துர்காதேவியையும் நியமித்து, இந்த மூவரால் அந்தந்த ஜீவர்களிடமிருந்து அந்தந்த கர்மங்களை செய்வித்து, சஞ்சரித்திருக்கிறான்.

**இந்த்$^{3}$ரியக$^{3}$ளிம் மாள்ப கர்ம**
**த்$^{3}$வந்த்$^{3}$வக$^{3}$ள தனக$^{3}$ர்ப்பிஸலு கோ$^{3}$**
**விந்த$^{3}$ புண்யவ கொண்டு$^{3}$ பாபவ ப$^{4}$ஸ்மவனெ மாள்ப ।**
**இந்தி$^{3}$ரேஷனு ப$^{4}$க்தஜனரனு**
**நிந்தி$^{3}$ஸுவ ரொளகி$^{3}$ப்ப புண்யவ**
**தந்து$^{3}$ தன்னவகீ$^{3}$வ பாபக$^{3}$ளவரி கு$^{3}$ணிஸுவனு ।।8**

இந்திரியங்களிம் = கண் காது முதலான இந்திரியங்களால்
மாள்ப = செய்யும்
கர்மத்வந்த்வகள = புண்ணிய பாவ ரூபங்களான இரு வித கர்மங்களை
தனகர்ப்பிஸலு = பரமாத்மனுக்கு அர்ப்பிக்க

கோவிந்த
புண்யவகொண்டு = புண்யத்தை ஏற்றுக்கொண்டு
பாபவ = அந்த பாவங்களை
பஸ்மவனெ மாள்ப = பொடிப்பொடியாக ஆக்குகிறான்
இந்திரேஷனு = லட்சுமிபதியான ஸ்ரீஹரி
பக்தஜனரன = பக்தர்களை
நிந்திஸுவரொளகெ = திட்டுபவர்களில்
இப்ப = இருக்கிறான்
புண்யவ = புண்யத்தை
தன்னவகெ = தன் பக்தர்களுக்கு
ஈவ = கொடுக்கிறான்
பாபகள = பாவங்களை
அவரிகெ உணிஸுவனு = அவர்களுக்கே கொடுக்கிறான்.

கண், காது முதலான இந்திரியங்களால் செய்யும் புண்ய, பாவ கர்மங்களை பரமாத்மனுக்கு அர்ப்பித்தால், பரமாத்மன், புண்ணியங்களை ஸ்வீகரித்து, பாபங்களை சுட்டுப் பொசுக்குகிறான். மற்றும், தன் த்வேஷத்தையும், தன் பக்தரின் த்வேஷத்தையும் செய்யும் பாபிகள் ஏதாவது புண்ணியம் செய்தாலும், அந்த புண்ணியத்தை எடுத்து, தன் பக்தர்களுக்குக் கொடுக்கிறான். பாவங்களை அந்த பாவிகளே அனுபவிக்குமாறு செய்கிறான்.

அதுபோல, தன் பக்தர்கள் செய்யும் பாவங்களை, தன்னிடமும், தன் பக்தரான பிரம்மாதிகளிலும், த்வேஷம் செய்யும் பாவிபளுக்குக் கொடுக்கிறான். விஷ்ணு ரஹஸ்யத்தில்:

க்ருஹ்யாதிசஹரி:புண்யம் பாபம் பஸ்மீகரோதிச |
ஸ்வஸ்யச த்ரோஹிண: கிஞ்சித் பாபாம்ஷம் ப்ரததாதி ஸ: ||12
ததைவ நிஜ பக்தானாம் பிரம்மாதினாஞ்சயேத்ருஹ: |
தேப்ய ஏவஹி தத்பாப விபாகம் ப்ரததாத்யஜ: ||13
பாபகர்மணியேபிஸ்யு: ஸஹாயா: பாபரூபிண: |
யதாபராதம் தேப்யோபி பாபானாம் விபஜத்யஸௌ ||14
தைத்யபாககதம் புண்யம் ததாபாகம் ததாதிச |
புண்யகர்ம ஸஹாயாயே தேஷாமதசயே நரா: ||15

என்று வரும் ஸ்லோகங்களே இந்த பத்யத்திற்கு ஆதாரமாகும்.

**ஹொத்து ஹொத்திகெ3 பாபகர்ம ப்ர**
**வர்த்தகர நிந்திஸதெ3 தனகி3**
**ந்து3த்தமர கு3ண கர்மக3ள கொண்டா3ட3த3லெ இப்ப |**
**மர்த்யரிகெ3 கோ3 பி3ராஹ்மண ஸ்த்ரி**
**ஹத்ய மொத3லாத3கி2ல தோ3ஷக3**
**ளித்தபனு ஸந்தே3ஹப3ட3 ஸல்லகி2ல ஷாஸ்திரமத ||9**

ஹொத்து ஹொத்திகெ = அனைத்து வேளைகளிலும்
பாபகர்ம = பாப கர்மங்களை
ப்ரவர்த்தகர = செய்து கொண்டிருக்கும் துஷ்டர்களை
நிந்திஸதெ = திட்டாமல்
தனகிந்துத்தமர = தன்னைவிட ஞானத்திலும், மரியாதையிலும், பகவத் பக்தியிலும், உத்தமர் ஆனவரை
குண கர்மகள = குணங்களையும் அவரின் சரித்திரங்களையும்
கொண்டாடதலெ இப்ப = அவர்களை புகழாமல் இருக்கிறான்
மர்த்யரிகெ = மனிதர்களுக்கு
கோ பிராமண ஸ்த்ரி ஹத்ய = கோ ஹத்யா, பிராமண ஹத்யா, ஸ்த்ரி ஹத்ய முதலான தோஷங்களை
இத்தபனு = கொடுக்கிறான்
ஸந்தேஹபடிசல்ல = இந்த விஷயத்தில் சந்தேகமே படவேண்டியதில்லை
இது அகிளசாஸ்திரமத = இதுவே அனைத்து சாஸ்திரங்களும் ஒப்புக்கொள்ளும் விஷயம் ஆகும்.

விடியலில் சந்தியாவந்தனம் எப்படி நித்யகர்மமோ அப்படி, தமோயோக்யரான பகவத் த்வேஷிகளை திட்டுவது, பக்தர்களை கொண்டாடுவதுகூட கடமையே ஆகும். இதை எவனொருவன் செய்வதில்லையோ, அவனுக்கு, ஸ்த்ரி ஹத்யா, கோ ஹத்யா, பிரம்ம ஹத்யா முதலான தோஷங்களை பரமாத்மன் கொடுக்கிறான். இந்த விஷயத்தில் சந்தேகப்படவே வேண்டியதில்லை. இது சாஸ்திரங்களால் ஒப்புக்கொண்ட விஷயமாகும்.

அதசயே நரா: ||15
தைத்ய நிந்தாம் நகுர்வந்தி தேபிதத்பாபபாகின: ||
என்னும் விஷ்ணு ரஹஸ்ய வாக்கியம் இதற்கு ஆதாரமாகும்.

**தன்ன ஸ்வாதந்த்ர்ய கு$^{3}$ணக$^{3}$ள ஹி**
**ரண்ய க$^{3}$ர்பா$^{4}$த்$^{3}$யரிகெ$^{3}$ கலிமுக$^{2}$**
**தா$^{3}$னவர ஸந்ததிகெ$^{3}$ அவரதி$^{4}$காரவ நுஸரிஸி**
**புண்யபாபக$^{3}$ளீவ ப$^{3}$ஹுகா**
**ருண்யஸாக$^{3}$ர அல்ப ஷக்திக$^{3}$**
**ளுண்ணலரியதெ$^{3}$ இரலு உணக$^{3}$லிஸுவனு ஸர்வரிகெ$^{3}$ ||10**

தன்ன ஸ்வாதந்த்ர்ய குணகள = தன் ஸ்வாதந்த்ரியத்தின் குணங்களை
ஹிரண்ய கர்பாத்யரிகெ = பிரம்மதேவரே முதலான தேவதைகளுக்கு
கலிமுக தானவர சந்ததிகெ = கலி முதலான தைத்யர்களின் வம்சத்தினருக்கு கொடுத்து
அவரதிகாரவனுஸரிஸி = அவரவர்களின் யோக்யதையை அனுசரித்து
புண்யபாபகளீவ = புண்ய பாவங்களின் பலன்களைக் கொடுக்கிறான்
பஹு காருண்யஸாகரனு = கருணைக்கடலான ஸ்ரீஹரி

அல்பஷக்திகளு = மிகச்சிறியதான எந்த பலன்களாகட்டும் அதை அனுபவிக்கும் சக்தி இல்லாதிருக்கும் ஜீவன்
உண்ணலரியதெ இரலு = பலன்களை அனுபவிக்க அறியாதிருக்க
ஸர்வரிகெ = அனைத்து பிராணிகளுக்கும்
உணகலிஸிதனு = பலன்களை அனுபவிக்குமாறு செய்கிறான்.

மேற்கூறியவாறு பிரம்மாதி தேவதைகளுக்கும், கலி முதலான தைத்யர்களுக்கும், தன் ஸ்வாதந்த்ர்ய குணங்களை, அவரவர்களின் யோக்யதைக்கேற்ப பிரித்துக் கொடுத்து, அந்த சக்தியால் அவரவர்கள் செய்யும் புண்ய பாபாதிகளை அனுசரித்து, அவரவர்களுக்கு யோக்யதைக்கேற்ப பலன்களைக் கொடுக்கிறான். கருணாசமுத்திரனான ஸ்ரீஹரி, மிகச் சிறியதான, குறைந்த சக்தியுள்ள ஜீவர்களுக்கு எந்த விதமான போக சக்தியும் இல்லை என்பதால், அத்தகையவர்களுக்கு சக்தியைக் கொடுத்து பலன்களை உண்ணுமாறு செய்கிறான்.

**ஸத்யவிக்ரம புண்யபாப ஸ**
**மஸ்தரிகெ$^{3}$ கொட$^{3}$லோஸுக$^{2}$தி$^{3}$ நா**
**ல்வத்து பா$^{4}$க$^{3}$வ மாடி$^{3}$ லேஷாம்ஷவனு ஜனகீவ ।**
**அத்யலுப பரம அணுவிகெ$^{3}$ ஸா**
**மர்த்யவனு தா கொட்டு ஸ்தூ$^{2}$ல ப**
**தா$^{3}$ர்த்த$^{2}$க$^{3}$ள உண்டு$^{3}$ணிப ஸர்வத$^{3}$ ஸர்வஜீவரிகெ$^{3}$ ।।11**

சத்யவிக்ரம = அதிகமான பராக்ரமங்களைக் கொண்ட ஸ்ரீஹரி
சமஸ்தரிகெ = அனைத்து பிராணிகளுக்கும்
புண்யபாப = புண்ய பாவங்களை
கொடலோஸுக = கொடுப்பதற்காக
நால்பத்து பாகவ மாடி = தன் ஸ்வதந்த்ர்யத்தை 40 பாகங்களாகப் பிரித்து
லேஷாம்ஷவனு = அதில் ஒரு பாகத்தை
ஜனகெ = ஜீவர்களுக்கு
ஈவ = கொடுக்கிறான்
அத்யல்ப பர்மாணுவிகெ = மிக சிறியதான, பரமாணு ஸ்வரூபனான ஜீவருக்கு
ஸாமர்த்யவன்னு தா கொட்டு = சாமர்த்தியத்தை கொடுத்து
ஸ்தூல பதார்த்தகளு = புண்ய பாவங்களுக்கு பல-ரூபமான போகங்களை; அதாவது, போஜன பானாதிகள், ஸ்த்ரீயாதி போகங்கள் ஆகிய ஸ்தூல பதார்த்தங்களின் போகங்களை
உண்டு = தான் உண்டு
ஸர்வதா = எப்போதும்
ஸர்வஜீவரிகெ = அனைத்து ஜீவர்களையும்
உணிப = உண்ண வைக்கிறான்.

சத்ய பராக்ரமனான ஸ்ரீஹரி, அனைத்து பிராணிகளுக்கும் புண்ய பாவங்களின் பலன்களைக் கொடுத்து, அவரவர்கள் தத்தம் யோக்யதைக்கேற்ப பலன்களை

அனுபவிப்பதற்காக, தன் ஸ்வாதந்த்ர்யத்தை, 40 பாகங்களாகப் பிரித்து, அதில் 1 பாகத்தை ஜீவருக்குக் கொடுக்கிறான்.

தத்த ஸ்வாதந்த்ர்ய சந்தியில் 400 பாகங்களில் 10 பாகங்கள் என்று சொல்லியிருப்பார். இந்த சந்தியில் 10:1 என்றது போல, 40க்கு 1 அம்ஷம் என்று சொல்லியிருக்கிறார். 400ல் 10 பாகங்கள் என்றாலும், 40ல் 1 என்றாலும், இரண்டும் ஒன்றே. விஷ்ணு ரஹஸ்யத்தில்:

ஏவம் புண்யஸ்ய பாபஸ்ய சத்வாரிம்ஷத்தமம் லவம்
ப்ராப்னோதி ஜீவஸ்தேனைவ பூர்ணோயம் பவதித்ருவம் ||
அல்பஷக்தித்வ தோல்பஞ்ச புண்யம் பாபம் ப்ரஜாயதே ||17

40ல் 1ஆக ஜீவருக்கு இருக்கும் ஸ்வதந்த்ர்ய சக்தியால், இந்த தேகத்தில் தத்வாபிமானிகளான தேவதைத்யர்கள் இருந்து செய்விக்கும் புண்யபாபாதிகளுக்கு, அந்த தேவ தைத்யர்கள் பங்குதாரர்களாகி (பாகிகளாகி) 40ல் 1 அம்ஷத்தை மட்டும் ஜீவர்கள் அனுபவிக்கின்றனர். ஜீவர்கள் அவ்வளவுக்கே பூர்ணர் ஆகின்றனர். அல்ப சக்தி உள்ளவர்கள் ஆகையால், அல்பமான புண்ய பாபங்களே இவருக்கு பூர்ணமாக இருக்கிறது. என்று சொல்கிறார்.

இப்படியாக, ஜீவர்கள் ஸ்தூல தேகத்தினால் செய்யும் புண்ய பாப கர்மங்களுக்கு, கர்ம ப்ரேரகனான தத்வாபிமானி தேவதைகளில் தேவதைகள் புண்ய பலன்களை, தைத்யர்கள் பாப பலன்களை அனுபவிப்பர். ஜீவருக்கு 40ல் 1 அம்ஷ மட்டுமே கிடைக்கிறது என்றால், இந்த சரீரத்தினால் நாம் செய்யும் புண்ய பாபத்திற்கு பலரூபமான சுக துக்கங்களில் 40ல் 1 அம்ச சுக துக்கங்களை மட்டுமே நாம் அனுபவிக்கிறோம் என்பது கருத்து. இப்படியாக, மிகக் குறைவான, பரமாணு ஸ்வரூபனான ஜீவருக்க்கு கருணா சமுத்திரனான ஸ்ரீஹரி, ஸ்தூல தேகத்தைக் கொடுத்து, புண்யத்திற்கும், பாவத்திற்கும் பலரூபமான சுக துக்கங்களை, ஸ்தூல பதார்த்தங்களின் சம்பந்தத்தினால் அனுபவிக்குமாறு செய்கிறான்.

குதிரையின் ஒரு முடியை 100ஆக பிரித்து, மேலும் அதனை 100ஆகப் பிரித்தால், இறுதியில் கிடைக்கும் அளவிற்கே ஜீவனின் ஸ்வரூபம் இருக்கிறது என்கிறார். இத்தகைய ஜீவருக்கு புண்ய பலன்களை அனுபவிக்கும்போது, ம்ருஷ்டான்ன போஜனங்களை செய்வது, ஸ்த்ரீயாதி போகங்களை அனுபவிப்பது ஆகிய ஸ்தூல பதார்த்தங்களின் போகங்கள் ஆக வேண்டுமெனில், அது அந்த ஜீவருக்கு சாத்தியமா? பரமாத்மன் இத்தகைய சக்தியையும், ஸ்தூல தேகத்தையும் கொடுத்து, தத்வாபிமானி தேவதைகளை அங்கு வைத்து, அவருக்குள் தான் இருந்து, அந்த கர்மங்களை செய்து, செய்வித்து, பலன்களை தான் உண்டு, ஜீவருக்கு உண்ண வைக்கிறான். ஆகையாலேயே, பரமாத்மன் கருணா சமுத்திரனாக இருக்கிறான்.

**திமிர தரணிக$^3$ளேக தே$^3$ஷதி$^3$**
**ஸமனிஸிப்பவெ எந்தி$^3$கா$^3$த$^3$ரு**
**ப்$^4$ரமண சளி பி$^3$ஸிலஞ்சிகெக$^3$ ளுண்டேனு பர்வதக்கெ |**
**அமித ஜீவரொளித்து$^3$ லகுமி**

**ரமண வ்யாபாரக[3]ள மாடு[3]வ**
**க[1]மலபத்ர ஸரோவரக[3]ளொளகி[3]ப்ப தெரனந்தெ ||12**

திமிர தரணிகளு = இருட்டு மற்றும் சூரியன், இந்த இரண்டும்
ஏக தேஷதி = ஒரே இடத்தில்
ஸமனிஸி = சமமாக
இப்பவே எந்திகாதரு = என்றாவது இருக்குமா?
ப்ரமண = சோர்வு
சளி பிஸிலு = குளிர் வெயில்
அஞ்சிகெகளு = பயங்கள்
பர்வதக்கெ = மலைகளுக்கு
உண்டேனு = இருக்கிறதா?
அமித ஜீவரொளு = எண்ணிக்கையற்ற ஜீவரில்
கமலபத்ர = தாமரை இலையின்
ஸரோவரகளொளு = குளங்களில்
இப்பதெரனந்தெ = எப்படி நிர்லிப்தமாக இருக்கிறதோ அப்படி
இத்து = இருந்து
லகுமிரமண = லட்சுமிபதியான ஸ்ரீஹரி
வ்யாபாரகள = கர்மங்களை
மாள்ப = செய்கிறான்.

சூரியனும், இருட்டும் எப்படி ஒரே சமயத்தில், ஓரிடத்தில் இருப்பது சாத்தியமில்லையோ, அப்படியே, சச்சிதானந்த ஸ்வரூபனான ஸ்ரீஹரிக்கு இதர பிராணிகளின் தேக சம்பந்தத்தினால் துக்கம் வருவதும் சாத்தியமில்லை. மலைகளுக்கு வெயில், குளிர் ஆகிய பயங்கள் எப்படி இல்லையோ, அப்படியே ஜகதீஷ்வரனான பரமாத்மனுக்கு சுகதுக்காதி சம்பந்தங்கள் எப்போதும் இல்லை. அனைவரின் தேகங்களிலும் இருந்து, செயல்களை செய்து கொண்டிருந்தாலும், தாமரை இலைகளைப் போல, நிர்லிப்தனாக இருக்கிறான்.

இந்த பத்யத்தில் மூன்று உவமைகளைக் கொடுக்கிறார். சூரியன் எப்படி என்றைக்கும் இருட்டினை பார்க்க மாட்டானோ, அப்படியே பரமாத்மன் ஆனந்த ஸ்வரூபனாகையால், துக்கத்தின் சாயலையும்கூட காண மாட்டான் என்பது முதலாம் உவமை. குளிர், வெயில் ஆகியவை மலைகளை துக்கப்படுத்துவது எப்படி சாத்தியமில்லையோ, அப்படியே ஜீவர்கள் செய்யும் பாவ புண்ணியங்கள் பரமாத்மனை எதுவும் செய்வதில்லை என்பது இரண்டாம் உவமை. தாமரை இலையானது, தண்ணீரிலேயே இருந்தாலும், தண்ணீர் எப்படி அதன் மேல் இருப்பதில்லையோ, அப்படியே பரமாத்மன், ஜீவர்களின் தேகத்தில் இருந்தாலும், அவன் நிர்லிப்தனாகவே இருக்கிறான் என்பது மூன்றாம் உவமையாகும்.

**அம்பு[4]ஜோத்ப[4]வ முக்[2]யஸூர கலி**
**ஷம்ப[3]ராதி[3] ஸமஸ்த தை[3]த்ய க**
**த[3]ம்ப[3]கனுதி[3]ன புண்யபாப விபா[4]க[3]வனெ மாடி[3] |**

**அம்பு3தி4ய ஜலவனு மஹத்த4ட**
**தி3ம்ப3னிது தும்பு3வ தெரதி3 ப்ரதி**
**பி3ம்ப3ரொளு தானித்து3 யோக்3யதெயந்தெ ப2லவீவ ||13**

அம்புஜோத்பவ முக்யசுர = பிரம்மதேவரே முதலான தேவதைகள்
கலிஷம்பராதி சமஸ்த தைத்ய கதம்பகெ = கலி மற்றும் ஷம்பராஸுர முதலான தைத்ய சமூகத்திற்கு
அனுதின = தினந்தோறும்
புண்யபாப விபாகவனெ = புண்ய பாவங்களைப் பிரித்துக் கொடுத்து
அம்புதிய ஜலவனு = கடல் நீரை
மஹாகட = பெரிய குடத்தால்
பிம்பரிது = தன் உருவத்திற்கேற்ப
தும்புவ தெரதி = நிரப்புவதைப் போல
ப்ரதிபிம்பரொளு = பிரதிபிம்பர்களான ஜீவர்களில்
தானித்து = தான் இருந்து
யோக்யதெயந்தெ = அவரவர்களின் யோக்யதைக்கேற்ப
பலவீவ = பலன்களைக் கொடுக்கிறான்.

பிரம்மதேவரே முதலான தேவதைகளுக்கும், கலி முதலான தைத்ய சமூகத்திற்கும், கடலில் மிக அதிகமான நீர் இருந்தாலும், குடம், சொம்பு முதலான பாத்திரங்களில் நீர் நிரப்பினால், அந்த பாத்திரங்களின் யோக்யதைக்கேற்ப எப்படி நீர் அதில் நிரம்புகிறதோ, அப்படி தினந்தோறும் மக்கள் செய்யும் புண்ய பாவங்களை, பாகம் செய்து, அவரவர்களின் யோக்யதைக்கேற்ப அவரவர்களுக்கு பலன்களைக் கொடுக்கிறான்.

தண்ணீர் இருக்கும் இடத்திற்கு பாத்திரங்கள் தாமாகவே போய் நீர் நிரப்பிக் கொள்வதில்லை. ஒருவர் குடம் ஆகியவற்றை எடுத்து, கடலுக்குச் சென்று அந்த பாத்திரம் நிரம்பும் அளவிற்கு நீர் நிரப்புவார். அதைப்போலவே, புண்ய பாவங்கள், கடல் நீரைப்போல அபாரமாக இருக்கிறது. பரமாத்மன் பானையைப் போலிருக்கும் ஜீவர்களின் யோக்யதையை அறிந்து, புண்யபாப பலன்களைக் கொடுக்கிறான்.

ஸ்வயோக்யம் ஜலமாதத்தெ ஸமுத்ராதுத்த்ருதோகட: |
தாவதைவ பவேத்பூர்ண ஏவமத்ர நிதர்ஷனம் ||

என்னும் விஷ்ணு ரஹஸ்ய வாக்கியம் இதற்கு ஆதாரமாக இருக்கிறது.

**இனிது விஷ்ணு ரஹஸ்யதொ3ளு ப்4ருகு3**
**முனிப இந்த்3ரத்3யும்ன க3ருபிது**
**த3னு பு3த4ரு கேளுவுது3 நித்யதி3 மத்ஸரவபி3ட்டு ।**
**அனுசிதோக்திக3ளித்3த3ரேயு ஸரி**
**க3ணனெ மாட3தி3ரெந்து3 வித்3வ**
**ஜ்ஜனகெ விக்ஞாபனெய மாடு3வெ வினயபூர்வகதி3 ||14**

இனிது = இப்படியாக
விஷ்ணு ரஹஸ்யதொளு = விஷ்ணு ரஹஸ்யத்தில்
ப்ருகு முனிப = ப்ருகு என்னும் முனீஸ்வரர்
இந்த்ரத்யும்னகெ = இந்திரத்யும்ன என்னும் அரசனுக்கு
அருபிதனு = கூறியதை
புதரு = ஞானிகள்
நித்யதி = தினந்தோறும்
மத்ஸரவ பிட்டு கேளுவுது = கர்வத்தை விட்டு கேட்க வேண்டும்
அனுசிதோக்திகளு = இதில் ஏதாவது தவறான வாக்கியங்கள்
இத்தரேயு சரி = இருந்தாலும் சரி
கணனெ மாடதிரி = அதனை கவனத்தில் கொள்ள வேண்டாம்
எந்து = என்று
வித்வஜ்ஜனகெ = அறிஞர்களுக்கு
விக்ஞாபனெய = வேண்டுகோள்
மாடுவெ = வைக்கிறேன்
வினயபூர்வகதி = மிகுந்த பணிவுடன்

இந்த சந்தியில் நாம் கூறிய விஷயங்கள் அனைத்தும், விஷ்ணு ரஹஸ்ய 30ம் அத்தியாயத்தில் ப்ருகு ரிஷிகள், இந்திரத்யும்னன் ராஜனுக்கு உபதேசம் செய்த விஷயங்களே தவிர, இதில் என் சொந்த கருத்துகள் எதுவும் இல்லை. ஆகையால், ஞானிகள் தினந்தோறும் இதனை கேட்க வேண்டும். நான் கூறியவற்றில் ஏதாவது தவறான கருத்துகள் இருந்தாலும், பகவத் மகிமை என்னும் குணத்தை நினைத்து, அந்த தோஷங்களை அலட்சியம் செய்யவேண்டும் என்று மிகுந்த பணிவுடன் கேட்டுக் கொள்கிறேன் என்று தாசராயர், பெரியவர்களிடம் மரியாதை கொடுக்க வேண்டும் என்று சொல்கிறாரே தவிர, இந்த கிரந்தத்தில் தவறான விஷயங்கள் எதுவும் இல்லை என்று அறியவேண்டும்.

இனிது விஷ்ணு ரஹஸ்யதொளு ப்ருகுமுனிப இந்திரத்யும்னகெ அருபிதனு -- என்னும் வாக்கியத்தால், விஷ்ணு ரஹஸ்யத்தில் இந்திரத்யும்ன ராஜனுக்கு ப்ருகு முனிகள் கூறிய விஷயத்தையே இங்கு சொல்லியிருக்கிறேன் என்று தாசராயர் தெளிவாகக் கூறியிருப்பதால், இதற்கு மூலம் விஷ்ணு ரஹஸ்யமே என்று தெளிவாகிறது. விஷ்ணு ரஹஸ்ய 30ம் அத்தியாயத்தில், ப்ருகு ரிஷிகளுக்கும் இந்திரத்யும்னனுக்கும், பேச்சுவார்த்தை ரூபமாக இதே விஷயங்களே பேசப்படுகின்றன. அந்த ஸ்லோகங்களையே இந்த சந்தியின் தாத்பர்யத்தில் கொடுத்திருக்கிறோம்.

ஆனால் ஒரு வியாக்யானகாரர், 'ப்ருகுமுனிப இந்திரத்யும்னனிகெ' என்னும் இடத்தில், ப்ருகுமுனிப என்றால், ப்ருகு வம்சத்திற்கு அதிபதியான பரசுராம தேவர் இந்திரத்யும்னனுக்கு உபதேசம் செய்தார் என்று கூறியிருக்கிறார். முனிப என்னும் சொல்லுக்கு ரிஷீஸ்வரர் என்று அர்த்தம். ப்ருகு ரிஷீஸ்வரர் என்று சொன்னால், விஷ்ணு ரஹஸ்ய வாக்கியத்திற்கு சரியாக பொருந்துகிறது. பரசுராமதேவர் என்று அர்த்தம் கொள்ள வேண்டுமெனில், இதற்கு ஆதாரம் தேடவேண்டியிருக்கிறது.

விஷ்ணு ரஹஸ்ய 28 முதல் 34ம் அத்தியாயம் வரை, இந்திரத்யும்ன ராஜனுக்கும் ப்ருகு ரிஷிகளுக்கும் பேச்சுவார்த்தை நடப்பதாக கதை இருக்கிறது. அதில், 30ம் அத்தியாயத்தின் கதையைப் பார்த்து, இதை உபதேசம் செய்தவர் ப்ருகு ரிஷியோ அல்லது பரமசுராம தேவரோ என்பதை தெளிவாக்கிக் கொள்ளலாம்.

**வீதப[4]ய விஷ்வேஷ விதி[4]பித**
**மாதுலாந்தக மத்[4]வவல்லப[4]**
**பூ[4]த பா[4]வனனந்த[1] பா[4]ஸ்கர தேஜ மஹாராஜ ।**
**கௌ[3]தமர மட[3]தி[3]யனு காய்த[3] அ**
**நாத[2]ரக்ஷக கு[3]ருதம ஜக[3]**
**ன்னாத[2]விட்டல தன்ன நம்பி[3]த3 ப[4]குதரனு பொரெவ ||15**

வீதபய = பயம் இல்லாதவனான
விஷ்வேஷ = பிரபஞ்சத்திற்கு அதிபதியான
விதிபித = பிரம்மதேவரின் தந்தை
மாதுலாந்தக = தாய் மாமனான கம்சனைக் கொன்றவன்
மத்வவல்லப = மத்வாசார்யருக்கு மிகவும் ப்ரியமானவன்
பூத பாவன = ப்ராணிகளை காப்பாற்றுபவன்
அனந்த பாஸ்கர தேஜ = அனந்த சூரியர்களின் ஒளியைக் கொண்டவன்
மஹாராஜ = பிரம்மாதி தேவதைகளே உள்ள பிரபஞ்சத்திற்கு அரசன்
கௌதமர மடதியனு காய்த = கௌதமரின் மனைவியான அகலிகைக்கு அருளிய (இந்திரதேவரின் சங்கத்தினால், கணவனான கௌதமரின் சாபத்திற்கு ஆளான அகலிகையை, ராமாவதாரத்தில் தன் பாத ஸ்பரிசத்தால் மறுபடி பெண்ணாக மாற்றிய)
அனாதரக்ஷகனு = அனைவரையும் காப்பாற்றுபவன்
குருதம = முக்கிய குருகளான வாயுதேவருக்கும் குருவான
ஜகன்னாதவிட்டல = இத்தகைய நம் அங்கித மூர்த்தியான ஜகன்னாதவிட்டல நாமகனான ஸ்ரீஹரி
தன்ன நம்பித பகுதரனு = தன்னை நம்பி வணங்கும் பக்தர்களை
பொரெவ = அருள்வான்

மேலே கூறியதே தெளிவாக இருப்பதால், விளக்கம் எழுதவில்லை.

ஸ்வகத ஸ்வாதந்த்ர சந்தி என்னும் 17ம் சந்தியின் தாத்பர்யம் இத்துடன் முடிவுற்றது.

ஸ்ரீகிருஷ்ணார்ப்பணமஸ்து.

***

## பாவபிரகாசிகை : சந்தி 18 : ஸர்வ ஸ்வாதந்த்ர்ய சந்தி

**ஹரிகதா[2]ம்ருதசார கு[3]ருக[3]ள**
**கருணதிந்தா[3]பநிது பே[1]ளுவே**
**பரம ப[4]கவத்[3]ப[4]க்தரித[3]னாத[3]ரதி கேளுவுது[3]**

முந்தைய தத்த ஸ்வாதந்த்ர மற்றும் ஸ்வகத ஸ்வாதந்த்ர்ய என்னும் இரு சந்திகளில், சர்வஸ்வதந்த்ரனான பரமாத்மன் தன் ஸ்வாதந்த்ர்யத்தை பிரித்து, பிரம்மாதிகளுக்குக் கொடுத்து தான் அவர்களில் இருந்து, செயல்களை செய்வித்து, அவரவர்களின் யோக்யதைக்கேற்ப பலன்களைக் கொடுக்கிறான் என்று சொல்லியிருந்தார். பரமாத்மன் ஸ்வதந்த்ரன். ஜீவன் பரதந்த்ரன் என்னும் ஞானம் முக்திக்கு மிகவும் அவசியம் ஆகையால், விஷ்ணு ரஹஸ்யத்தின் 21 மற்றும் 30ம் அத்தியாயங்களில் விசேஷமாகவும், மற்றும் சில அத்தியாயங்களில் சிறிது சிறிதாகவும் சொல்லியிருப்பார்கள். 'புன:புன: கதாம் ப்ரூய: அப்யாஸாதுத்தமம் பலம்' என்னும் வாக்கியத்திற்கேற்ப கதையை திரும்பத்திரும்ப கேட்பதால், அதுவே மனப்பாடமாகி, பலன்கள் அதிகமாகும் என்பதே இதன் நோக்கம்.

ஆகவே, தாசராயர், விஷ்ணு ரஹஸ்யாதிகளின் ஆதாரத்தின் பேரில், முந்தைய இரு சந்திகளில் கூறிய விஷயங்களையே இங்கு விவரிக்கிறார். 'ஆவ்ருத்தி ரஸக்ருதுபதேஷாத்' என்னும் சூத்திர வாக்கியத்திற்கேற்ப, 2,3 முறையாக உபதேசம் செய்யும் குருசிஷ்ய பரம்பரை முறை இருப்பதாலும், இது உபதேசத்திற்கு யோக்யமான விஷயம் என்பதாலும், இந்த விஷயத்தை மூன்று சந்திகளில் விளக்கியிருக்கிறார் என்று அறியவேண்டும்.

சந்திகள் சொல்லப்பட்டிருக்கும் முறையில், ஸ்ரீகமலாபதி தாசர் செய்திருக்கும் வியாக்கியானம், பாலபோதாக்ஷரம் அச்சிட்டிருக்கும் புத்தகத்தில், தத்த ஸ்வாதந்த்ர சந்தி 17வதும், ஸ்வகத ஸ்வாதந்த்ர்ய சந்தி 29வதும், க்ரீடாவிலாஸ சந்தி (சர்வ ஸ்வாதந்த்ர்ய சந்தி) 26வதாகவும் எடுத்துக் கொண்டிருக்கின்றனர். அப்படி எடுத்துக் கொள்வதில் என்ன பிரச்னை என்றால்: ஒரு முறை கேட்ட தத்த ஸ்வாதந்த்ர்ய விஷயத்தை இன்னொரு முறை கேட்கவேண்டுமெனில், 10 சந்தியை விட்டு கேட்க வேண்டியிருக்கிறது. அதனால், முன்னர் படித்தது நினைவில் வராமல் போகலாம்.

இதே விஷயத்தை விஷ்ணு ரஹஸ்யத்தில் மூன்று இடங்களில் சொல்லியிருப்பார்கள். ஆனால், அதையும் தொடர்ச்சியாக சொல்லவில்லை. 12ம் அத்தியாயத்தில் ஒரு முறை, 21ம் அத்தியாயத்தில் ஒரு முறை; 30ம் அத்தியாயத்தில் தத்த ஸ்வாதந்த்ர்ய விஷயத்தை சொல்லியிருப்பார்கள். பாகவத பாரதாதிகளிலும்கூட ஒரே கதையை 3-4 முறை சொல்லியிருப்பார்கள். பாகவதத்தில் ஸ்ருஷ்டி ப்ரகரணத்தை 2ம் ஸ்கந்தத்தில் ஒரு முறை, 3ம் ஸ்கந்தத்தில் ஒரு முறை சொல்லியிருக்கிறார்கள்.

வர்ணாசிரம தர்மத்தை 7ம் ஸ்கந்தத்தில் ஒரு முறை, 11ம் ஸ்கந்தத்தில் ஒரு முறை சொல்லியிருக்கிறார்கள். இதைப்போல, பாரத, ராமாயண முதலான அனைத்து கிரந்தங்களிலும் இத்தகைய சந்தர்ப்பங்கள் வருகிறது. ஒரு கதையை, ஒரே இடத்தில், 2-3 முறை சொல்வது என்பது எந்த கிரந்தத்திலும்

காணப்படவில்லை. அதன்படியே, தாசராயருங்கூட 17-26-29 சந்திகளில் தத்த ஸ்வாதந்த்ர்ய விஷயத்தை சொல்லியிருக்கிறார் என்றால் அது சம்பிரதாயத்திற்கு சரியாகவே பொருந்துகிறது.

ஶ்ரீனிவாஸன சரிதெக3ள பர
மானுராக3தி3 பெ3ஸகொ3ளலுமுனி
ஷௌனகாத்3யரிக3ருபித3னு ஸூதார்ய த3யதி3ந்த3 ||

ஶ்ரீனிவாஸன = லட்சுமிதேவியை தன் மார்பில் வைத்திருக்கும் பரமாத்மனின்
சரிதெகள = கதைகளை
பரமானுராகதி = பரம பக்தியினால்
பெஸகொளலு = சொல்ல வேண்டுமென்று கேட்க
ஸூதார்ய = சூத புராணிகர்
தயதிந்த = கருணையுடன்
ஷௌனகாத்யரிகெ = ஷௌனகாதி முனிவர்களுக்கு
அருபிதனு = கூறினார்.

ஸூத புராணிகர் ஷௌனகாதி ரிஷிகளுக்கு சொல்லியிருக்கும் விஷ்ணு ரஹஸ்யத்தில் இருக்கும் விஷயத்தையே இந்த சந்தியில் சொல்லியிருக்கிறோம் என்று இந்த அர்த்த- பத்யத்தில் சொல்லியிருக்கிறார். ஆகையால், இந்த பத்யத்திற்கு சந்தி ஸூசனை என்று பெயர்.

**பசன ப4க்ஷண க3மன போ4ஜன**
**வசன மைது2ன ஷயன வீக்ஷண**
**அசலன சலனக3ள ப்ரயத்னவு ஸாத்3யவெ ஜனகெ |**
**ஷுசிஸத3ன த3யதி3ந்த3 ஜீவர**
**நிசயதொ3ளு தானிந்து1 மாடு3வ**
**உசிதவனுசித கர்மக3ளனெந்த3ரிது3 கொண்டா3டு3 ||1**

பசன = சமைப்பது
பக்ஷண = தின்பது
கமன = பயணம் செய்வது
போஜன = உண்ணுவது
வசன = பேசுவது
மைதுன = பெண்களுடன் சங்கமிப்பது
ஷயன = தூங்குவது
வீக்ஷண = பார்ப்பது
அசலன = அசையாமல் இருப்பது
சலன = அசைவது, இவற்றை செய்வது
ஜனகெ = மக்களுக்கு
சாத்யவெ = சாத்தியமா? இல்லை
ஷுசிஸதன = முக்யபிராணாந்தர்யாமியான ஶ்ரீபரமாத்மனின்

தயதிந்த = கருணையால்
ஜீவர நிசயதொளு = ஜீவர்களின் சங்கத்தில்
தானிந்து = தான் இருந்து
உசித = செய்யவேண்டிய கர்மங்கள்
அனுசித = செய்யக்கூடாத கர்மங்கள்
மாடுவ = செய்கிறான்
எந்தரிது = என்று அறிந்து
கொண்டாடு = துதித்திரு.

பரமாத்மனின் அருள் இல்லாமல், ஜீவர்களுக்கு ஒரு புல்லைக்கூட அசைக்கும் சக்தி இருப்பதில்லை. விஷ்ணு ரஹஸ்ய 21ம் அத்தியாயத்தில்:

பசனங்கமனம் பக்ஷ்யம் புக்திரித்யாதி கர்மஸு ||17
த்ருஷ்யதேயதன்ன ஸாத்யத்வம் தைவம் தத்ராபி சிந்தயேத் ||

பதார்த்தங்களை சமைப்பது, பயணம் செய்வது, தின்பது, அனுபவிப்பது ஆகிய கர்மங்களில் பிராணிகளின் முயற்சி தெரிகிறது. ஆனால் அது உண்மையல்ல. அவை அனைத்தும் தெய்வ சங்கல்பத்தினாலேயே ஆகிறது என்று அறியவேண்டும் - என்று சொல்லியிருக்கின்றனர். மேலும் 12ம் அத்தியாயத்தில்:

ஸர்வவஸ்துஷு யாஷக்தி: ஸாமதீயைனான்யதா ||
மயைவதத்தம் ஸ்வாதந்த்ரம் கேவலேஷ்வபி ஸர்வஸு ||
தாவன்மாத்ரேண ஸம்யுக்த: ஸ்வாதந்த்ர்யம் மன்யதேனிஜம் ||22
ஸ்வாதந்த்ர்யேப ஹ்ருதேபஷ்சா ஜானந்தி பரதந்த்ர்யதாம் ||
ஞானினோபிஹிமன்யந்தெ மன்மாயா முஷ்டசேதனா: ||23
ஸ்வாதந்த்ர்யம் ஸ்வஷரீராதௌகி முஞ்ஞானவிவர்ஜிதா: ||
த்வாமாரப்ய த்ருணம் யாவஜ்ஜகத்ஸ்தாவர ஜங்கமம் ||24
மமஷக்திம்வினா ப்ரம்மஸ்வந்திதும் நைவஷக்யதே ||

ஹயக்ரீவ தேவர், பிரம்மதேவருக்கு உபதேசம் செய்தது:
ஹே பிரம்மனே. அனைத்து பிராணிகளிலும் எந்த சக்தி இருக்கிறதோ, அவை அனைத்தும் என் சக்தி என்று அறி. எந்த வேலை செய்வதற்கும் தகுதியற்ற பிராணிகளுக்கும், நான் ஸ்வாதந்த்ர்யத்தைக் கொடுத்து கர்மங்களை செய்விக்கிறேன். மக்கள் அவற்றை அறியாமல், தாமே ஸ்வதந்த்ரமாக காரியங்களை செய்வதாக அறிந்திருக்கின்றனர். தாம் ஸ்வதந்த்ரனாக காரியத்தைத் துவக்கி, அதனை முடிக்க முடியாமல் போனால், அப்போதே அவர்கள் பரதந்த்ரர் என்று அறிகின்றனர்.

எத்தகைய ஞானிகளும்கூட காரியங்களை செய்யும்போது, என் மாயையால் மயங்கி, தாம் ஸ்வதந்த்ரர் என்று அறிகின்றனர். இப்படி இருக்கையில், இன்னும் அஞ்ஞானிகள் நிலைதான் என்ன? பிரம்மனே! உன்னில் துவங்கி, கிருமி ஜீவர்கள் வரை, ஸ்தாவர ஜங்கமங்கள் நிறைந்த இந்த உலகத்தில், என் சக்தியைத் தவிர வேறு யாருக்கும் எந்த சக்தியும் இல்லை என்று அறி -- என்கிறார்.

அந்த அபிப்பிராயத்தையே இந்த பத்யத்தில் சொல்கிறார். பதார்த்தங்களை சமைக்கும்போது, கடித்துத் தின்னும்போது, பயணம் செய்யும்போது, உண்ணும்போது, பேசும்போது, ஸ்த்ரீயாதி போகங்களை அனுபவிக்கும்போது, பார்க்கும்போது, என அனைத்து விஷயங்களிலும், நான் தின்றேன், நான் நடந்தேன். நான் படுத்தேன் என்று மக்கள் ஸ்வதந்த்ர பாவத்தைக் கொண்டிருக்கிறார்கள். அல்பரான ஜீவருக்கு இந்த முயற்சி சாத்தியமா? பரமாத்மனான நான் அவர்களில் இருந்து, செய்வதை அறியாமல், தாமே செய்கிறோம் என்ற மயக்கத்தில் இருக்கின்றனர்.

ஷுசிஸதன = வாயுதேவருக்கு ஷுசி என்று பெயர். அவரின் மனெ என்றால், வாயுதேவரின் அந்தர்யாமியாகி இருக்கும் என்று பொருள். இத்தகைய பரமாத்மன் அனைவரிலும் கருணையுடன் இருந்து, அனைத்து புண்ய பாபாதி கர்மங்களை செய்து செய்விக்கிறான் என்று அறிந்து பரமாத்மனை துதிக்க வேண்டும் என்பது கருத்து.

**விஷ்டரஸ்ரவ தே$^{3}$ஹதொ$^{3}$ளகெ$^{3}$ ப்ர**
**விஷ்டனாகி$^{3}$ நிரந்தரதி$^{3}$ ப$^{3}$ஹு**
**சேஷ்டக$^{3}$ள மாடு$^{3}$திரெ கண்டு$^{3}$ ஸஜீவி எனுதிஹரு ।**
**ஹ்ருஷ்டராகு$^{3}$வர வனனோடி$^{3}$ க**
**நிஷ்டரெல்லரு ஸேவெமாள்பரு**
**பி$^{3}$ட்ட க்ஷணத$^{3}$லி கு$^{3}$ணபவெந்த$^{3}$ரித$^{3}$த$^{3}$னு பேக்ஷிபரு ||2**

விஷ்டரஸ்ரவ = விஷ்டர = வியாபித்திருக்கும்; ஸ்ரவ = கீர்த்தியுள்ள
தேஹதொளகெ = தேகத்தில்
ப்ரவிஷ்டனாகி நிரந்தரதி = ஸ்தூலதேகத்தில் நிரந்தரமாக நுழைந்து
பஹுசேஷ்டெகள = பல விதமான கர்மங்களை
மாடுதிரெ = செய்கிறான்
கண்டு = மக்கள் அதனைக் கண்டு
சுஜீவி = உயிர் உள்ளவன்
எனுதிஹரு = என்பார்கள்
அவர நோடி = உயிர் பிழைத்திருக்கும் மக்களைப் பார்த்து
கனிஷ்டரெல்லரு = அவர்களின் கீழ் இருக்கும் மனைவி, மக்கள், சேவகர்கள் அனைவரும்
ஹ்ருஷ்டராகுவர = மகிழ்ச்சியடைவர்
ஸேவெமாள்பரு = சேவை செய்வார்கள்
பிட்ட க்ஷணதலி = பரமாத்மன் தேகத்தை விட்ட அந்த நொடியில்
குணபனெந்தரிது = பிணம் என்று அறிந்து
உபேக்ஷிபரு = புறக்கணிக்கப்படுவார்கள்.

ஸ்ரீபரமாத்மன் அனைவரின் தேகங்களிலும் இருந்து, பற்பல கர்மங்களை செய்தால், இவன் பாக்யவந்தன், அறிஞன் என்று மனைவி, மக்கள், சேவகர்கள் ஆகியோர், மரியாதையுடன் உபசரிப்பார்கள். எப்போது பரமாத்மன் இவன் தேகத்தை

விட்டுவிடுகிறானோ, அப்போதே இவன் பிணம் என்று அறிந்து மனைவி மக்கள்கூட இவனை பார்ப்பதற்கே பயப்படுவர். ஆகையால், பரமாத்மன் ஒருவனே ஸ்வதந்த்ரன். ஜீவர்கள் அல்ல என்பது கருத்து.

**க்ரீடெ3கோ3ஸுக2 அவரவர க3தி**
**நீட3லோஸுக2 தே3ஹக3ள கொ**
**ட்டாடு3வனு ஸ்வேச்செயலி பி3ரம்மேஷாத்3யரொளு பொக்கு |**
**மாடு3வனு வ்யாபார ப3ஹுவித3**
**மூட4தை3த்யரொளித்து3 ப்ரதிதி3ன**
**கேடு3 லாப4வில்லவனி க3த3ரிந்தா3வ காலத3லி ||3**

க்ரீடெகோசுக = பரமாத்மன் தன் லீலைகளுக்காக
அவரவர கதி நீடலோசுக = ஜீவர்களுக்கு அவரவரின் யோக்யதைக்கேற்ப கர்மங்களை செய்வித்து அவரவர்களுக்கு தக்க கதியைக் கொடுப்பதற்கு
தேஹகள கொட்டு = தேகத்தைக் கொடுத்து
ஸ்வேச்செயலி = தன் விருப்பத்தால்
பிரம்மேஷாத்யரொளு = பிரம்ம ருத்ராதி தேவதைகளில்
பொக்கு = நிலைத்திருந்து
மூடதைத்யரொளித்து = பாவிகளான கலி முதலான தைத்யர்களில் இருந்து
பஹுவித = பல விதமான
வ்யாபார = இந்திரியங்களால் செய்யும் கர்மங்களை
மாடுவனு = செய்கிறான்
கேடு லாபகளு = பரமாத்மனுக்கு சுக துக்கங்கள்
யாவகாலதலி = எந்த காலங்களிலும்
இல்ல அவனிகெ = அவனுக்கு இல்லை
அரி = அறிந்து கொள்.

ஜீவர்களுக்கு ஸ்தூல தேகத்தைக் கொடுப்பதற்கு ஸ்ருஷ்டி என்று பெயர். பூர்ணகாமனான ஸ்வாமிக்கு இந்த ஸ்ருஷ்டியால் எவ்வித பிரயோஜனமும் இல்லை. இது அவனுக்கு ஒரு லீலை. கருணாளுவான ஸ்ரீஹரி, ஜீவர்களின் யோக்யதைக்கேற்ப கதியைக் கொடுப்பதற்காகவே அவருக்கு ஸ்தூல தேகத்தைக் கொடுத்து, தத்வாபிமானி தேவதைகளான பிரம்மாதி தேவதைகள், கலி முதலான தைத்யர்கள் இவர்களில் இருந்து, ஜீவர்கள் செய்ய வேண்டிய புண்யபாபாதி கர்மங்களை செய்வித்து அவரவர்களுக்குத் தக்க கதியைக் கொடுக்கிறான். இதனால் பரமாத்மனுக்கு லாபமும் இல்லை. நஷ்டமும் இல்லை.

**அக்ஷரேட்3யனு பி3ரம்ம வாயு**
**த்ரயக்ஷ ஸுரப ஸுராஸுரரொள**
**த்3யக்ஷ நாகி3த்தெ3ல்லரொளு வ்யாபார மாடு3திஹ |**
**அக்ஷய ஸுஸத்யாத்மக பரா**
**பேக்ஷெயில்லதெ3 ஸர்வரொளகெ3 வி**
**லக்ஷணனு தானாகி3 லோகவ ரக்ஷிஸுதலிப்ப ||4**

அக்ஷரேட்யனு = அக்ஷர நாமகளான ரமாதேவியரால் வணங்கப்படும் ஶ்ரீஹரி பிரம்ம வாயு,
த்ர்யக்ஷ = மூன்று கண்களைக் கொண்ட ருத்ரர்
ஸுரப = தேவேந்திரன்
ஸுராதிகள = மற்றும் இதர தேவதைகளுக்கு
அத்யக்ஷனாகி = தலைவனாக
எல்லரொளு = அனைவரிலும் இருந்து
பராபேக்ஷெயில்லதெ = அவர்களிடமிருந்து எந்தவொரு பிரதிபலனையும் எதிர்பார்க்காமல்
வியாபார மாடுதிஹ = கர்மங்களை செய்கிறான்
அக்ஷய = அழிவு இல்லாதவன்
ஸத்யாத்மக = சத்யஸ்வரூபனான
சர்வரொளகெ = அனைவரிலும்
விலக்ஷணனு தானாகி = அவர்களிடமிருந்து வேறாக
லோகவ = உலகத்தை
ரக்ஷிஸுதலிப்ப = காப்பாற்றுகிறான்.

அக்ஷர நாமகளான லட்சுமிதேவியரால் வணங்கப்படுவனான, அழிவில்லாதவனான, உத்தமானந்த, ஞானாத்மகனான ஶ்ரீஹரி, எந்தவித எதிர்பார்ப்புகளும் இல்லாமல், பிரம்ம ருத்ராதி அனைத்து தேவதைகளிலும் இருந்து, அனைத்து கர்மங்களையும் செய்கிறான். அதாவது, பிரம்ம தேவரில் இருந்து ஸ்ருஷ்டிக்கிறான். ருத்ரதேவரில் இருந்து சம்ஹாரம் செய்கிறான். இந்திரனில் இருந்து ஸ்வர்க்கத்தை ஆள்கிறான். இப்படி, ஸ்வதந்த்ரனாக அனைவரிலும் இருந்தாலும், அவர்களிலிருந்து வேறுபட்டு அனைத்து உலகங்களையும் காப்பாற்றுகிறான்.

**ஶ்ரீ ஸரஸ்வதி பா$^{4}$ரதி கி$^{3}$ரி**
**ஜா ஷசி ரதி ரோஹிணி ஸ**
**ஞ்ஞா ஸுஷதரூபாத்$^{3}$யகி$^{2}$ல ஸ்த்ரீயரொளு ஸ்த்ரீரூப**
**வாஸவாகி$^{3}$த்தெ$^{3}$ல்லரிகெ$^{3}$ வி**
**ஷ்வாஸ தன்னலி கொட்டு அவரபி$^{4}$**
**லாஷெக$^{3}$ள பூரைஸுதிப்பனு யோக்$^{3}$யதெக$^{3}$ளரிது** ||5

ஶ்ரீ சரஸ்வதி பாரதி கிரிஜா = லட்சுமிதேவி, சரஸ்வதி, பாரதி, பார்வதி
ஷசி ரதி ரோஹிணி சஞ்ஞா = சசி (சந்திரனின் மனைவி), சஞ்ஞா (சூரியனின் மனைவி)
ஷதரூபா = ஸ்வாயம்புவ மனுவின் மனைவி
ஆதி = ஆகியோரில் துவங்கி,
அகில ஸ்த்ரீயரொளு = அனைத்து ஸ்தீரியர்களிலும்
ஸ்த்ரீரூப = ஸ்த்ரீ ரூபத்தினால்
வாசவாகித்து = நிலைத்திருந்து

எல்லரிகெ = அனைவருக்கும்
விஷ்வாஸ தன்னலி கொட்டு = அவர்களில் பக்தியை உண்டாக்கி
யோக்யதெகளரிது = அவரவர்களின் யோக்யதைகளை அறிந்து
அபிலாஷெகள = அவர்களின் விருப்பங்களை
பூரைசுதிப்பனு = நிறைவேற்றுகிறான்.

லட்சுமி, சரஸ்வதி முதலான அனைத்து ஸ்த்ரியர்களிலும், பரமாத்மனே ஸ்த்ரீ ரூபத்தில் நிலைத்திருந்து, வணங்கப்பட்டு, தாரதம்யத்திற்கேற்ப லட்சுமிதேவியரில் சரஸ்வதி முதலானவர்களுக்கு பக்தியும், சரஸ்வதி தேவியரில் பாரதி முதலானவர்களுக்கு பக்தியும், இப்படி பகவத் பக்தர்களில் பரஸ்பர பக்தியை உண்டாக்கி, அவரவர்களின் விருப்பங்களை, அவரவர்களின் யோக்யதைக்கேற்ப இஹபரங்களில் நிறைவேற்றுகிறான்.

**கோலுகுது$^3$ரெய மாடி$^3$ ஆடு$^3$வ**
**பா$^3$லகர தெரனந்தெ லகுமி**
**லோல ஸ்வாதந்த்ரிய கு$^3$ணவ பி$^3$ரம்மாத்$^3$யரொளகி$^3$ட்டு ।**
**லீலெகை$^3$வனு தன்னவரிக$^3$னு**
**கூலனாகி$^3$த் தெ$^3$ல்ல காலதி$^3$**
**கூ$^2$ளரிகெ$^3$ ப்ரதிகூலனாகி$^3$ஹ ப்ரகடனாக$^3$த$^3$லெ ।।6**

கோலுகுதுரெய மாடி ஆடுவ பாலகர தெரனந்தெ = ஒரு கொம்பினை குதிரையாக நினைத்து, அதனை தம் கால்களுக்கு நடுவில் வைத்து விளையாடும் சிறுவர்களைப் போல
லகுமிலோல = லட்சுமிதேவியின் கணவன்
ஸ்வாதந்த்ர்ய குணவ = தன் ஸ்வரூப ஸ்வாதந்த்ர்யத்தை
பிரம்மாத்யரொளகிட்டு = பிரம்மாதி தேவதைகளில் வைக்கிறான்
லீலெகைவனு = லீலைகளை செய்து
தன்னவரிகனு கூலனாகித்து = அவனின் அந்தரங்க பக்தர்களுக்கு உதவிகளை செய்து
எல்ல காலதி = எப்போதும்
கூளரிகெ ப்ரதிகூலனாகி = பகவத் த்வேஷிகளுக்கு துக்க பலன்களைக் கொடுப்பவனாக
இஹ ப்ரகடனாகதலெ = தான் இருப்பதை அவர்களுக்குத் தெரிவிக்காமலேயே அவர்களில் இருக்கிறான்.

ஒரு கொம்பினை குதிரையாக நினைத்து, அதனை தம் கால்களுக்கு நடுவில் வைத்து, அக்குதிரைகளை அடிப்பதுபோல அடித்து, தாமே அதனை எடுத்து ஓடிக் கொண்டிருப்பர். அந்தக் கொம்பு குதிரைக்கு எவ்வளவு ஸ்வாதந்த்ர்யம் இருக்கிறதோ, அவ்வளவே ஸ்வாதந்த்ர்யம் ஜீவர்களுக்கு இருக்கிறது. கொம்பினை குதிரையாக செய்தவர்கள் இவரே, அமர்ந்தவரும் இவரே, அதை அடிப்பவர்களும் இவரே, இழுத்துக் கொண்டு ஓடுபவரும் இவரே, என சிறுவர்கள் எப்படி விளையாடுகிறார்களோ, அதுபோல பிரம்மாதி அனைத்து ஜீவர்களுக்கும், தன்

ஸ்வாதந்த்ர்ய குணங்களைக் கொடுத்து, வணங்கப்படுபவனும் தானே ஆகி, விளையாடுகிறான். யாருக்கும் தான் இருப்பதை தெரிவிக்காமல், பக்தர்களுக்கு அனுகூலமாக இருந்து, த்வேஷிகளுக்கு ப்ரதிகூலனாக இருக்கிறான்.

**ஸௌபரணி வரவஹன நானா**
**ரூப நாமதி$^3$ கரெஸுதவர ஸ**
**மீபத$^3$ல்லித்த$^3$கி$^2$ல வ்யாபாரக$^3$ள மாடு$^3$வனு ।**
**பாபபுண்யக$^3$ளெரடு$^3$ அவர ஸ்வ**
**ரூபக$^3$ளனனுஸரிஸி உணிப ப**
**ரோபகாரி பரேஷ பூர்ணானந்த$^3$ ஞானக$^4$ன ।।7**

ஸௌபரணி வரவஹன = ஸௌபர்ணி தேவியின் பதியான கருடன்; அத்தகையவனை வாகனமாக வைத்திருப்பவன்
பரோபகாரி = அனைவரும் உதவுபவனான
பரேஷ = ஸர்வோத்தமனான
பூர்ணானந்த ஞானகன = பூர்ணானந்த ஞானஸ்வரூபனான ஸ்ரீபரமாத்மன்
நானாரூப நாமதி = பிரம்ம ருத்ர சரஸ்வதி பாரதி கலி ஷம்பர முதலான பெயர்களில் அழைத்துக்கொண்டு
அவர ஸமீபதல்லித்து = அவர்களில் இருந்து
அகிள வியாபாரகள மாடுவனு = அவர்களின் செயல்களை செய்கிறான்
பாபபுண்யகளெரடு = பாவ புண்ணியங்கள் இரண்டையும்
அவர = தேவ தைத்ய மனுஷ்யாதிகளின்
ஸ்வரூபகளன்னனுஸரிஸி = அவர்களின் ஸ்வரூப, குணங்களை அனுசரித்து
உணிப = உண்ண வைக்கிறான்.

கருட வாகனனும், சர்வோத்தமனும், பூர்ணானந்த ஞானாத்மகனுமான ஸ்ரீஹரி, புருஷர்களிலும், ஸ்த்ரீயர்களிலும் தேவ தைத்ய மனுஷ்யாதிகளிலும் இருந்து, பற்பல வகையான கர்மங்களை செய்து, செய்விக்கிறான். புண்யபாவங்களின் பலன்களை மட்டும் அந்த ஜீவரின் யோக்யதைக்கேற்ப கொடுக்கிறான். ஆகையால், பரமாத்மனுக்கு வைஷம்யாதிகள் இல்லை என்பது கருத்து. இந்த விஷயங்களை முன்னர் பல பத்யங்களில் பார்த்திருக்கிறோம்.

**அஹர நித்$^3$ரா மைது$^2$னக$^3$ளஹ**
**ரஹர ப$^3$யஸி ப$^3$ளலுவவ லகுமி**
**மஹிதன மஹாமஹிமெக$^3$ளனெந்த$^3$ரிவ நித்யத$^3$லி ।**
**அஹிக ஸௌக்$^2$யவ மரெது மனத$^3$லி**
**க்$^3$ரஹிஸி ஷாஸ்த்ரார்த்த$^2$க$^3$ள பரமோ**
**த்ஸஹதி$^3$ கொண்டா$^3$டு$^3$தலி மைமரெத$^3$வரிக$^3$ல்லத$^3$லெ ।।8**

நித்யதலி = எப்போதும்
அஹிக சௌக்யவ = உணவு, நீர், ஸ்த்ரீ போகம் முதலான இந்த பிரபஞ்சத்தின் சுகங்களை

மரெது = விரும்பாமல்
மனதலி = மனதில்
ஷாஸ்த்ரார்த்தகள கிரஹிஸி = நற்சாஸ்திரங்களின் அர்த்தங்களை தன் மனதில் வாங்கி
பரமோத்ஸாஹதி = மிகவும் உற்சாகத்துடன்
கொண்டாடுதலி = பரமாத்மனின் மகிமைகளை கொண்டாடினால்
மைமரிதவரிகல்லதலெ = தங்கள் மெய்மறந்து இருப்பவர்களுக்கு மட்டுமல்லாமல்
அஹர = ஆகாரம்
நித்ரா = தூக்கம்
மைதுனகள = போகங்கள் ஆகியவற்றை
அஹரஹ = எப்போதும்
பயஸி = விரும்பி
பளலுவ = அதிலேயே மூழ்கியிருப்பவன்
லட்சுமிமஹிதன = லட்சுமிதேவியரால் வணங்கப்படுபவனான பரமாத்மனின்
மஹாமஹிமகள = மகா மகிமைகளை
எந்தரிவ = (அவை பகவன் மகிமைகள்) என்று அறிவது எப்போது?

எந்த புருஷன், தற்காலிக சுகங்களை சுகம் என்று நினைக்காமல், பரமாத்மனிடம் த்ருடமான பக்தியினால் சாஸ்திரார்த்தங்களைக் கேட்டு, மனனம் செய்தவாறு, மெய்மறந்து பரமாத்மனை கொண்டாடுகின்றானோ, அவனுக்கு பரமாத்மனின் மகிமை தெரிகிறதே தவிர; உணவு, நீர், ஸ்த்ரீபோகம் ஆகிய தற்காலிக சுகங்களையே எப்போதும் விரும்பியவாறு, சம்சாரத்தில் மூழ்கியிருப்பவர்களுக்கு பகவத் மகிமை தெரிவது எப்போது? என்றைக்கும் அவர்களுக்கு அது புரிவதேயில்லை என்பது கருத்து.

**ப3ந்த4 மோக்ஷப்ரத3ன ஞானவு**
**மந்த3மதி க3ளிகெ3ந்து தொ3ரெவுது3**
**பி3ந்து3 மாத்ர ஸுகா2னுப4வ பர்வதகெ ஸமது3க்2க**
**எந்து3 திளியதெ3 அன்யதெ3ய்வக3**
**ளிந்த3 ஸுக2வன பேக்ஷிஸுவரு மு**
**குந்த3னாராத3னெய பி3ட்டவகு3ண்டெ முக்திஸுக2** ||9

பந்தமோக்ஷப்ரதன = ஜீவருக்கு பந்தனத்தையும், மோட்சத்தையும் கொடுப்பவனான ஸ்ரீபரமாத்மனின்
ஞானவு = ஞானம்
மந்தமதி களிகெந்து தொரெவுது = மந்தமதிகளுக்கு என்றைக்கும் புரியாது
பிந்து மாத்ர சுகானுபவ = தற்காலிக விஷயங்களால் அவர்கள் அடையும் மிகச்சிறிய சுக அனுபவங்கள்
பர்வதக்கெ சம = மலையின் அளவுக்கு பெரியதான
துக்க எந்து திளியதே = துக்கம் தரக்கூடியவை என்று அறியாமல்
அன்யதெய்வகளிந்த சுகவன பேக்ஷிசுவரு = பிற தேவதைகளை வேண்டி, அவர்களிடமிருந்து சுகங்களை வேண்டுவர்

முகுந்தனாராதனெய = முகுந்தனை வழிபடாதவர்களுக்கு
முக்திசுக = முக்தியானது
உண்டே = உண்டா? (இல்லை).

அனைத்து பிராணிகளையும், சம்சாரத்தில் தள்ளுவதற்கும், சம்சாரத்திலிருந்து விடுதலை செய்து முக்தியைக் கொடுப்பதற்கும், பரமாத்மன் மட்டுமே சமர்த்தன். வேறு யாருக்கும் அந்த அதிகாரம் இல்லை. இத்தகைய பரமாத்மனைப் பற்றிய ஞானம், அல்பமதிகளுக்கு கிடைப்பது எப்போது? இவர்கள் அன்ய தேவதைகளை பூஜித்து, செல்வம், ஆயுள் ஆகியவற்றை வேண்டி, நானே தன்யர் என்பார்கள். இந்த சம்சாரத்தில் இருக்கும் விஷய போகங்களை பார்த்தால், அது ஒரு நீர்த்துளி அளவிற்கே. அதிலிருந்து வரும் துக்கமோ மலையைப் போல பெரியதாகும். ‘குர்வன் துக்க பிரதிகாரம் சுகவன்மன்யதேக்ருஹே’ என்னும் பாகவத வாக்கியதைப்போல, துக்கத்தை பரிகாரம் செய்வதற்கு முயன்று, நானே சுகி என்று நினைப்பவன், இத்தகைய அதி அல்ப சுகத்திற்காக அன்ய தேவதைகளை துதிக்கிறான். மோட்ச பிரதனான பரமாத்மனை துதிக்காமல் இருப்பவர்களுக்கு மோட்ச சுகம் எங்கு இருக்கிறது? என்றைக்கும் இல்லை என்பது கருத்து.

**ராஜ தன்ன அமாத்ய கருணதி[3]**
**நைஜ ஜனரிகெ[3] கொட்டு கார்ய நி**
**யோஜிஸூத மானாபமானவ மாள்ப தெரனந்தெ ।**
**ஶ்ரீஜனார்த்த[4]ன ஸகலரொளக[3]ப**
**ராஜிதனு தானாகி[3] ஸர்வப்ர**
**யோஜனவ மாடி[3]ஸுவ மாடு[3]வ ப[2]லகெ கு[3]ரிமாடி[3]** ||10

ராஜ = அரசன்
தன்ன = தனது
அமாத்ய = ஸ்வாதந்த்ரத்தை
கருணதி = கருணையுடன்
நைஜ ஜனரிகெ = தன் மக்களுக்கு
கொட்டு = கொடுத்து
கார்ய = காரியங்களை செய்ய
நியோஜிஸூத = ஆணை பிறப்பித்து
மானாபமானவ = அவர்கள் செய்யும் காரியங்களுக்கேற்ப அவர்களுக்கு ஊக்கமோ தண்டனையோ
மாள்ப தெரனந்தெ = தருவதைப்போல
ஶ்ரீஜனார்த்தன,
சகலரொளகெ = அனைவரின் உள்ளும் இருந்து
அபராஜிதனு தானாகி = யாராலும் வெல்லப்பட முடியாதவனாக தான் இருந்து
பலகெ குரிமாடி = ஜீவர்களை பலன்களுக்கு பயனாளர்களாக ஆக்கி
சர்வ ப்ரயோஜனவ = அனைத்து புண்ய பாப கர்மங்களை
மாடிசுவ மாடுவ = செய்து செய்விக்கிறான்.

அரசன், மந்திரத்வம் முதலான ஸ்வதந்த்ர்ய அதிகாரங்களை, தன் சேவகர்களுக்குக் கொடுத்து, செயல்களை செய்விப்பதைப் போல, அவர்களுக்கு ஆணையிட்டு, அவர்கள் செய்யும் செயல், மனதிற்கு திருப்தி அளித்தால், அவருக்கு பரிசுகளையும், செயல்கள் திருப்தி அளிக்கவில்லையெனில், தண்டனையும் கொடுக்கிறான். ஸ்ரீபரமாத்மன், பிரம்மாதிகளுக்கு ஸ்வாதந்த்ர்யத்தைக் கொடுத்து அவர்களின் உள் இருந்து (யாராலும் வெல்லப்பட முடியாதவனாக), அவரவர்களின் யோக்யதைக்கேற்ப கர்மங்களை செய்வித்து, அந்த கர்மங்களுக்கு தக்க சுக துக்க, மான அவமான முதலான பலன்களைக் கொடுக்கிறான்.

இந்த பத்யத்தில் துவங்கி 14ம் பத்யம் வரைக்கும் இருக்கும் விஷயங்கள், 16ம் தத்த ஸ்வாதந்த்ர்ய சந்தியில் வியாக்யானத்தில் விஷ்ணு ரஹஸ்ய பிரமாணங்களுடன் விவரிக்கப்பட்டுள்ளது.

**வாஸுதே3வ ஸ்வதந்த்ர்யவ ஸரோ**
**ஜாஸனாத்3ய மராஸுரரிகி3ய**
**லோஸுக2ர்த4வ தெகெ3த3த3ரொளர்த்த4வ சதுர்பா4க3**
**கை3ஸி ஒந்த3னு ஷதவித3 த்3விப**
**ஞ்சாஷத3ப்ஜ ஜகஷ்ட சத்வா**
**ரிம்ஷதி அனிலகி3த்த வாணி பா4ரதீக3ர்த்த4 ||11**

வாசுதேவ = ஸ்ரீமன் நாராயணன்
ஸ்வதந்த்ரவ = தன் ஸ்வாதந்த்ர்யத்தை
ஸரோஜாஸனாதி = தாமரையில் அமர்ந்திருப்பவரான பிரம்மதேவரே முதலான
அமர = தேவதைகளுக்கும்
அசுரரிகெ = கலி முதலான அசுரர்களுக்கும்
ஈயலோசுக = கொடுப்பதற்காக
அதரொளகெ = ஸ்வாதந்த்ர்யத்தில்
அர்த்தவ = பாதி பாகத்தை
தெகெது = எடுத்து
சதுர்ப்பாக கைஸி = அதை நான்கு பாகங்களாக மாற்றி
ஒந்தனு = அதில் ஒன்றினை
ஷதவிதகெய்ஸி = 100 பாகங்களாக ஆக்கி
த்விபஞ்சாஷத = 52 பாகங்களை
அப்ஜஜகெ = பிரம்ம தேவருக்கும்
அஷ்ட சத்வாரிம்ஷத = 48 பாகங்களை
அனிலகெ = வாயுதேவருக்கும்
இத்து = கொடுத்து
வாணி = சரஸ்வதி தேவியருக்கு
பாரதி = பாரதி தேவியருக்கு
அர்த்த = அவரவர்களின் கணவர்களின் பாகங்களில் அர்த்த பாகத்தைக் கொடுத்தான்.

சர்வ ஸ்வதந்த்ரனான ஶ்ரீபரமாத்மன், அபாரமான தன் ஸ்வாதந்த்ர்ய குணங்களில் பாதியை எடுத்து, அதனை 4 பாகங்களாக ஆக்கி, அதில் 1 பாகத்தை 100 பாகங்களாக்கி, அவற்றில் 52 பாகங்களை பிரம்மதேவருக்கும், 48 பாகங்களை வாயுதேவருக்கும் கொடுத்தான். அந்த பிரம்ம வாயுதேவர்களுக்குக் கொடுத்த பாகங்களில் பிரம்மதேவரின் பாகத்தில் பாதி 26 பாகங்களை சரஸ்வதி தேவியருக்கும், வாயுதேவரின் பாகங்களில் பாதி 24 பாகங்களை பாரதிதேவியருக்கும் கொடுத்தான்.

**த்$^3$விதிய பாத$^3$வ தெகெ$^3$துகொண்ட$^3$த$^3$**
**ஷத விபா$^4$க$^3$வ மாடி$^3$ தா விம்**
**ஷதி உமேஷனொளிட்ட இந்த்$^3$ரனொளைத$^3$தி$^3$க ஹத்து ।**
**ரதிபனொளகி$^3$னி தி$^3$ட்டகி$^2$ல தே$^3$**
**வதெக$^3$ளொளகீ$^3$ரைது$^3$ ஜீவ**
**ப்ரததியொளு த$^3$ஷ ஐத$^3$தி$^3$கனால்வத்து தை$^3$த்யரொளு ||12**

த்விதிய பாதவ = இரண்டாம் கால் பாகத்தை எடுத்து
அதனு = அதனை
ஷதவிபாகவ மாடி = 100 பாகங்களாக மாற்றி
தா = தான்
விம்ஷதி = 20 பாகங்களை
உமேஷனொளு = ருத்ரதேவரில்
இட்டு = வைத்து
இந்திரனொளு = இந்திரனில்
ஐரதிக ஹத்து = 15 பாகங்களை
ரதிபனொளகெ = ரதிபதியான மன்மதனில்
இனிதிட்ட = இந்திரனுக்குக் கொடுத்த பாகத்தையே இந்திரனுடனே அனுபவிக்குமாறு செய்து
அகிள தேவதெகளொளு = அனைத்து தேவதைகளில்
ஈரைது = 10 பாகங்களை
ஜீவப்ரததியொளு = ஜீவரின் சங்கத்தில்
தஷ = 10 பாகங்களை
ஐததிக நால்வத்து = 45 பாகங்களை
தைத்யரொளு = கலி முதலான தைத்யர்களில் வைத்தான்.

முதல் கால் பாகத்தை 100 பாகங்களாக மாற்றி, பிரம்ம வாயுவிற்குக் கொடுத்திருந்தான். இரண்டாம் கால் பாகத்தை எடுத்து, அதை 100 பாகங்களாக மாற்றி,

* 20 பாகங்களை ருத்ரதேவருக்கும்
* 15 பாகங்களை இந்திர மன்மதனுக்கும்
* 10 பாகங்களை மற்ற தேவதைகளுக்கும்
* 10 பாகங்களை அனைத்து ஜீவர்களுக்கும்

* 45 பாகங்களை கலி முதலான தைத்ய சமூகத்திற்கும் கொடுத்தான்.

**காருணிக ஸ்வாதந்த்ரியத்வவ**
**மூரு வித$^3$கை$^3$ஸெரடு$^3$ தன்னொளு**
**நாரிகொந்த$^3$னு கொட்ட ஸ்வாதந்த்ர்யவனு ஸர்வரிகெ$^3$ |**
**தா$^4$ருணிப தன்னனுக$^3$ரிகெ$^3$ வ்யா**
**பாரகொட்டு கு$^3$ணவகு$^3$ணகள வி**
**சார மாடு$^3$வ தெரதி$^3$ த்ரிகு$^3$ணவ வ்யக்தவனு மாள்ப ||13**

காருணிக = கருணாளுவான ஸ்ரீஹரி
ஸ்வாதந்த்ரியத்வவ = மிச்சமிருந்த பாதி ஸ்வாதந்த்ர்யத்தை
மூரு விதகைஸி = மூன்று பாகங்களாக ஆக்கி
எரடு தன்னொளு = இரண்டினை தன்னில் வைத்துக் கொண்டு
ஒந்தனு = ஒன்றினை
நாரிகெ கொட்ட = மனைவியான லட்சுமிதேவிக்குக் கொடுத்தான்
தாருணிப = மகாராஜன்
தன்னனுகரிகெ = தன் சேவகர்களுக்கு
வ்யாபார கொட்டு = செயல்களைக் கொடுத்து, சுதந்திரமாக அவற்றை செய்யுமாறு, அதிகாரத்தைக் கொடுத்து
குணாவகுணகள = அவர் செய்த செயல்களின் திறனைப் பார்த்து
விசார மாடுவ தெரதி = முடிவெடுப்பதைப் போல
த்ரிகுணவ = சத்வ ரஜஸ் தமோ குணங்களை
வ்யக்தவனு மாள்ப = பிரித்துப் பார்க்கிறான்.

மற்ற இரு பாகங்களை மூன்று பாகங்களாகப் பிரித்து, அதில் இரண்டினை தான் வைத்துக்கொண்டு, லட்சுமிதேவியருக்கு ஒரு பாகத்தைக் கொடுத்தான். இப்படி, ஸ்வாதந்த்ர்யத்தை அவரவர்களுக்குக் கொடுத்து, ஒரு அரசன் தன் சேவகர்களுக்கு, செயல்களை செய்யும் ஸ்வாதந்த்ர்யத்தைக் கொடுத்து, அவர்கள் செய்த செயல்களின் முடிவினைப் பார்த்து, அவரவர்களின் வேலைக்கேற்ப அவரவர்களின் யோக்யதையை முடிவெடுப்பதைப் போல, பரமாத்மன் ஜீவர்களின் யோக்யதையை, அவர்கள் மூலமாக செய்விக்கும் செயல்களால், இவர்கள் சாத்விகர், இவர்கள் ராஜஸர், இவர்கள் தாமஸர் என்று அவர்களின் யோக்யதையை வெளிப்படுத்துகிறான்.

**புண்யகர்மகெ ஸஹயவாகு$^3$வ**
**த$^4$ன்யரிகெ$^3$ கல்யாதி$^3$ தை$^3$த்யர**
**புண்யப$^2$லக$^3$ளனீவ தி$^3$விஜர பாபகர்மப$^2$ல**
**அன்ய கர்மவ மாள்பரிகெ$^3$ அனு**
**கு$^3$ண்ய ஜனரிகெ$^3$ கொடு$^3$வ ப$^3$ஹுகா**
**ருண்ய ஸாக$^3$ரனீதெரதி$^3$ ப$^4$க்தரனு ஸந்தெயிப ||14**

புண்யகர்மகெ சஹாயவாகுவ = புண்ய கர்மங்களுக்கு உதவி செய்யும்

தன்யரிகெ = புண்யபுருஷர்களுக்கு
கல்யாதி தைத்யர = கலி முதலான தைத்யர்களின்
புண்பபலகளனீவ = அவர்கள் செய்த புண்ய பலன்களைக் கொடுக்கிறான்
அதிதிஜர = தேவதைகளின்
பாபகர்மபல = பாப கர்மங்களின் பலனை
அன்ய கர்மவ மாள்பரிகெ = பாவ கர்மங்களை செய்பவர்களுக்கு
அனுகுண்ய ஜனரிகெ = உதவி செய்பவர்களுக்கு
கொடுவ = கொடுக்கிறான்
காருண்யசாகர = கருணைக்கடலான
ஈ தெரதி = இப்படியாக
பக்தரனு சந்தெயிப = பக்தர்களை காக்கிறான்.

புண்ய கர்மங்களுக்கு உதவி செய்பவர்களுக்கு, கலி முதலானவர்கள் செய்யும் புண்ய பலன்களை கொடுக்கிறான். தேவதைகள் செய்யும் பாப கர்ம பலன்களை பாபம் செய்பவர்களுக்கு உதவி செய்பவர்கள் யாரோ, அவர்களுக்குக் கொடுக்கிறான். இப்படியாக, கருணைக்கடலான ஸ்ரீஹரி, பக்தர்களை அனைத்து விதங்களிலும் காப்பாற்றுகிறான்.

தான் கொடுத்த ஸ்வாதந்த்ர்யத்தால், ஜீவர்கள் தாம் செய்யும் கர்மங்களுக்கேற்ப த்ரிவித ஜீவர்களின் யோக்யதையை வெளிப்படுத்துகிறான் என்று முந்தைய பத்யத்தில் சொல்லியிருந்தார். இவர் சாத்விகர், இவர் ராஜஸர், இவர் தாமஸர் என்று சொல்வதற்காக 5 பத்யங்களாக த்ரிவித ஜீவர்களின் லட்சணங்களை சொல்கிறார்.

(15 முதல் 17 பத்யங்கள் வரை, 17ம் பத்யத்தில் இறுதியில் இருக்கும் 'தமவெ வர்த்திபுது' என்னும் காரணி பொருந்துகிறது என்று அறியவேண்டும்).

**நிருபமகெ$^3$ ஸரியுண்டு எந்து$^3$**
**ச்சரிஸுவவ தத்ப$^4$க்தரொளு ம**
**த்ஸரிஸுவவ கு$^3$ணிகு$^3$ணக$^3$ளிகெ$^3$ பே$^4$த$^3$க$^3$ள பேளுவவ |**
**த$^3$ர ஸுத$^3$ர்ஷன ஊர்த்$^4$வபுண்ட்$^3$ரவ**
**த$^4$ரிஸித$^3$வரனு த்$^3$வேஷிபன ஹரி**
**சரிதெக$^3$ள கேளத$^3$லெ லோக$^3$ரவார்த்தெ கேளுவவ ||15**

நிருபமகெ = உவமைகளுக்குப் பொருந்தாத பரமாத்மனுக்கு
சரியுண்டு எந்து = பிரம்மா வாயு முதலான தேவதைகள் பரமாத்மனுக்கு சமமாகலாம் என்று
உச்சரிசுவவ = சொல்பவன்
தத்பக்தரொளு = பரமாத்மனின் பக்தர்களில்
மத்ஸரிஸுவவ = பொறாமை கொண்டவன்
குணகளிகெ = பரமாத்மனின் ஆனந்தாதி குண சமூகங்களுக்கு
பேதகள பேளுவவ = வேறுபாடு இருக்கிறது என்று சொல்பவன்

தர = சங்கு
சுதர்சன = சக்கர
ஊர்த்வபுண்ட்ரவ,
தரிசிதவரனு த்வேஷிபன = பகவத் பக்தர்களை த்வேஷிப்பவன்
ஹரி சரிதெகள கேளதலெ = ஸ்ரீஹரியின் சரித்திரங்களை கேட்காமலேயே
லோகவார்த்தெ கேளுவவ = லௌகிக சம்பந்தமான அரட்டைகளை மட்டுமே கேட்பவன்

தமோ யோக்யர்களின் குணங்களை சொல்கிறார்.

* சர்வோத்தமனான ஸ்ரீஹரியை, பிரம்மா வாயுவிற்கு சமமாக சொல்வர்
* பரமாத்மனின் பக்தர்களில் பொறாமை கொண்டவர்
* பரமாத்மனின் குணங்களில் வேறுபாடு காண்பர்
* ஊர்த்வ புண்ட்ர, சங்கு சக்கர முத்திரகளை தரித்து வரும் பகவத் பக்தர்களை த்வேஷிப்பவர்
* ஸ்ரீஹரியின் சரித்திரங்களை கேட்கமாட்டார்
* லௌகிக சம்பந்தமான அரட்டைகளில் நேரம் செலவழிப்பார்.

**ஏவமாதி$^3$ த்$^3$வேஷவுள்ள கு**
**ஜீவரெல்லரு தை$^3$த்யரெனிபரு**
**கோவித$^3$ர விக்ஞான கர்மவ நோடி$^3$ நிந்தி$^3$பரு |**
**தே$^3$வதே$^3$வன பி$^3$ட்டு$^3$ யாவ**
**ஜ்ஜீவபரியந்தரதி$^3$ துச்சர**
**ஸேவெயிந்து$^3$ப ஜீவிஸுவரக் ஞானகொளகா$^3$கி$^3$ ||16**

ஏவமாதி = இதுவே முதலான
த்வேஷவுள்ள = த்வேஷங்களைக் கொண்ட
குஜீவரெல்லரு = பாபி ஜீவர்கள் அனைவரும்
தைத்யரெனிபரு = தைத்யர்கள் எனப்படுகிறார்கள்
கோவிதர = ஞானிகளின்
விக்ஞான கர்மவ நோடி = விசேஷமான ஞானம், அவர்களின் செயல்களைப் பார்த்து
நிந்திபரு = திட்டுபவர்கள்
தேவதேவன = தேவதைகளுக்கு தேவனான ஸ்ரீஹரியை
பிட்டு = விட்டு
யாவஜ்ஜீவ பரியந்தரதி = தாம் உயிரோடு இருக்கும்வரை
துச்சர சேவெயிந்த = நீசரான தமோயோக்யரின் சேவையால்
அக்ஞானக்கொளகாகி = அஞ்ஞானத்தில் ஆழ்ந்து
உபஜீவசுரு = வாழ்ந்து வருவார்கள்.

தமோ யோக்யர்களின் குணங்களை மேலும் விவரிக்கிறார். இத்தகைய குணங்களைக் கொண்டவர்கள் தைத்யர்கள் எனப்படுகின்றனர். கற்றறிந்த

ஞானிகளின் விசேஷமான ஞானத்தை, அவர்களின் செயல்களைப் பார்த்து அவர்களை நிந்திப்பவர்கள், தேவதைகளுக்கு தேவனான ஸ்ரீஹரியை விட்டு, பிற தேவதைகளை பூஜிப்பவர்கள். நீசரான தமோயோக்யர்களின் தயவுக்காக, கருணைக்காக அவர்களை அண்டி, புகழ்ந்து வாழ்ந்து அஞ்ஞானத்தில் வாழ்ந்து வருவார்கள் இத்தகைய தமோ யோக்யர்கள்.

விஷ்ணு ரஹஸ்யத்தில்:
தம்போமானோ மதோஹிம்ஸா பாருஷ்டம் கபட்யான்ய தே ।
ஜாயந்தி தமஸோவ்ருத்தை கலிஸ்த த்ராதிதேவ்தா ।।
தாமஸான்னஸ்யபோகேன தாமஸானாஞ்ச ஸங்கதி ।
தாமஸேன ஸ்வபாவேன தமோவ்ருத்தி: ப்ரஜாயதி ।।

இந்த ஸ்லோகத்தில் சொல்லியிருப்பதையே, முந்தைய இரண்டு பத்யங்களில் + அடுத்த பத்யத்தில் சொல்லியிருக்கிறார் தாசராயர்.

**காம லோப$^4$ க்ரோத$^4$ மத$^3$ ஹிம்**
**ஸாமயான்ருத த$^3$ம்ப$^4$ கபட த்ரி**
**தா$^4$மனவதாரக$^3$ள பே$^4$த$^3$ அபூர்ண ஸுக$^2$ப$^3$த்த$^4$ ।**
**ஆமிஷனிவேதி$^3$த அபோ$^4$ஜ்யதி$^3$**
**தா$^4$மஸான்னவனும்ப$^3$ தாமஸ**
**ஸ்ரீ மதா$^3$ந்த$^4$ர ஸங்க$^3$தி$^3$ந்த$^3$லி தமவெ வர்த்தி$^4$புது$^3$ ।।17**

காம = ஆசை
லோப = கஞ்சத்தனம்
க்ரோத = கோபம்
மத = கர்வம்
ஹிம்ஸாமய = பிராணிகளை இம்சித்தல்
அன்ருத = பொய் பேசுதல்
தம்ப = கர்வம்
கபவ = ஏமாற்றுவது / தந்திரமாக செயல்படுவது
த்ரிதாமன = ஸ்வேதத்வீப, அனந்தாசன, வைகுண்ட என்னும் மூன்று இடங்களில் வீடுள்ள
அவதாரகள பேத = ராம கிருஷ்ணாதி ரூபங்களில் பேதங்களை சொல்வது
அபூர்ணசுக = பரமாத்மன் பூர்ண சுகன் அல்ல என்பது
பத்த = அவன் சுக துக்கங்களுக்குக் கட்டுப்பட்டவன் என்பது
ஆமிஷ = மாமிசங்களை மற்றும் தர்ம சாஸ்திரங்களில் தடை செய்யப்பட்டிருக்கும் உணவுகளை தின்பது.
அனிவேதித அபோஜ்யதி = நிவேதனம் செய்யப்படாத உணவுகளை உண்பது
தாமஸான்னவனும்ப = தாமஸ அன்னம் என்றால் வெங்காயம், பூண்டு முதலான பதார்த்தங்களை தின்பது
ஸ்ரீ மதாந்தர = செல்வத்தினால் வந்த கர்வம்
தாமஸ சங்கதிந்தலி = தாமஸ மக்களின் நட்பில் இருந்து

தமவெ வர்த்திபுது = இத்தகைய செயல்களை செய்தால், தமோகுணமே வளர்கிறது.

காம, க்ரோத முதலான குணங்களைக் கொண்டிருத்தல், ராமகிருஷ்ணாதி ரூபங்களில் பேதம் சொல்லுதல், மாமிசங்களை, நைவேத்தியம் செய்யப்படாதவற்றை தின்பது, தாமசர்களின் வீட்டில் உண்பது, தாமசர்களின் நட்பில் இருப்பது இவை அனைத்தும் தமோகுணம் வளர்வதற்கு காரணங்கள் ஆகும். இந்த குணங்கள் உள்ளவர்கள் அனைவரும் தாமசர் என்று அறியவேண்டும்.

**ஞான ப4க்தி விரக்தி வினய புராண**
**ஷாஸ்திர ஸ்ரவண சிந்தன**
**தா3ன ஷம த3ம யக்ஞ ஸத்ய அஹிம்ஸ பூ4தத3ய |**
**த்3யான ப4க3வன்னாம கீர்த்தன**
**மௌன ஜப தப வ்ரத ஸுதீர்த்த2**
**ஸ்னான மந்த்ர ஸ்தோத்திர வந்த3ன ஸஜ்ஜனர கு3ணவு ||18**

சொற்களின் விளக்கம்: படித்தாலே புரிகிறது என்பதால், தனித்தனியாக அர்த்தங்களை கொடுக்கவில்லை.

பகவந்தனைப் பற்றிய ஞானம், பரமாத்மனிடம் பக்தி, சம்சாரத்தில் விரக்தி, பெரியவர்களிடம் மரியாதை, பாகவதாதி புராணங்கள், பிரம்ம சூத்ர பாஷ்ய முதலான நற்சாஸ்திரங்களைக் கேட்பது, படிப்பது. ஷம என்றால் 'ஷமோமன்னிஷ்டதா புத்தே:தம இந்த்ரிய நிக்ரஹ:' என்னும் பாகவத 11ம் ஸ்கந்த வாக்கியத்தின்படி, பகவன் இஷ்டமான புத்தியே ஷம. இந்திரிய நிக்ரஹமே தம. யாகம் செய்வது, சத்யம், அஹிம்ஸை, பூத-தயை, பரமாத்மனின் தியானம், பகவன் நாமகீர்த்தனை, வீண் அரட்டைகளில் மௌனம், அஷ்டாக்ஷராதி மஹாமந்திரங்களின் ஜெபம், தபஸ் என்றால் பகவந்தனின் ஆனந்தாதி குணங்களை ஆலோசிப்பது, விஷ்ணு சம்பந்தமான விரதங்களை விஷ்ணு ப்ரீதிக்காக செய்வது, உத்தமமான தீர்த்தங்களில் ஸ்னானம் செய்வது, புருஷ சூக்தாதி மந்திரங்களை படிப்பது. சாஷ்டாங்கமாக நமஸ்காரம் செய்வது என இவை அனைத்தும் சஜ்ஜனர்களின் ஸ்வபாவமாகும்.

**லேஷ ஸ்வாதந்த்ர்ய கு3ணவனு ப்ர**
**வேஷகை3ஸித3 காரணதி3 கு3ண**
**தோ3ஷக3ளு தோருவுது3 ஸத்வாஸத்வ ஜீவரொளு |**
**ஷ்வாஸ போ4ஜன பான ஷயன வி**
**லாஸ மைது2ன க3மன ஹருஷ**
**க்லேஷ ஸ்வப்ன ஸுஷுப்தி ஜாக்3ரதியஹவு சேதனகெ ||19**

லேஷ ஸ்வாதந்த்ர்ய குணவனு = பரமாத்மனின் ஸ்வாதந்த்ர்யத்தில் அல்பாம்ஷமான ஸ்வாதந்த்ர குணத்தை
ப்ரவேஷகைஸித காரண = ஜீவர்களில் வைத்த காரணத்தால்
குணதோஷகளு = புண்ய பாப கர்மங்களின் சம்பந்தமான குணதோஷங்கள்

தோருவுது = தெரிகிறது.
சேதனகெ = ஜீவர்களுக்கு
ஷ்வாஸ = மூச்சு விடுவது
போஜன பான ஷயன = சாப்பிடுதல், குடித்தல், தூங்குதல்
விலாச மைதுன = மனைவியுடன் தனிமையில் பேசுவது; போகிப்பது
கமன = நடப்பது
ஹர்ஷ = மகிழ்வது
க்லேஷ = துக்கத்தை அனுபவிப்பது
ஸ்வப்ன = கனவு காண்பது
சுஷுப்தி = தூங்குவது
ஜாக்ரதி = முழிப்பது ஆகியவை
அஹவு = ஆகிறது

ஸ்வாதந்த்ர்ய லேஷதானேன ஜீவ ஷ்வஸதி ஜ்ரும்பதி ||44
இத்யாதி விஷ்ணு ரஹஸ்யத்தின் 21ம் அத்தியாயத்தின் வியாக்கியானத்தின்படி, ஸ்ரீபரமாத்மன் ஜீவருக்குக் கொடுத்த அல்ப ஸ்வாதந்த்ர்யத்தினாலேயே சாத்விக, ராஜஸ, தாமஸ ஜீவர்களின் யோக்யதைக்கேற்ப குணதோஷங்கள் தெரிகின்றன. ஜீவர்கள் மூச்சு விடுவது, உண்பது, குடிப்பது, படுப்பது, மனைவியுடன் தனிமையில் பேசுவது, போகிப்பது, நடப்பது, மகிழ்வது, துக்கத்தை அனுபவிப்பது, கனவு காண்பது, தூங்குவது, முழிப்பது ஆகியவை நடக்கின்றன. பரமாத்மன் கொடுத்திருக்கும் ஸ்வாதந்த்ர்யத்தினாலேயே இவை ஆவதால், ஜீவன் ஸ்வதந்த்ர கர்த்தனல்ல என்று அறியவேண்டும்.

**அர்த்த$^{4}$ தன்னொளகி$^{3}$ரிஸி உளிதொ$^{3}$**
**ந்த$^{3}$ர்த்த$^{4}$வ விபா$^{4}$க$^{3}$க$^{3}$யிஸி வ்ருஜி**
**நார்த்$^{3}$த$^{4}$னனு பூர்வத$^{3}$லி ஸ்வாதந்த்ர்யவனு கொட்டந்தெ |**
**ஸ்வர்து$^{3}$னீபித கொடு$^{3}$வவர ஸுக$^{2}$**
**வ்ருத்தி$^{3}$கோ$^{3}$ஸுக$^{3}$ பி$^{3}$ரம்ம வாயு க**
**பர்த்தி$^{3}$ மொத$^{3}$லாத$^{3}$வரொளித்த$^{3}$வர யோக்$^{3}$யதெயனரிது ||20**

அர்த்த தன்னொளகிரிஸி = தன் ஸ்வாதந்த்ர்யத்தின் 4 பாகங்களில் இரு பாகங்களை தான் வைத்துக்கொண்டு,
உளிதொந்தர்த்தவ = மிச்ச இரு பாகங்களை
விபாககெயிஸி = பிரித்துக் கொடுத்து
வ்ருஜினார்த்தனனு = கஷ்டங்களை பரிகரிக்கும் ஸ்ரீஹரி
பூர்வதலி = இதன் முன் 11-12ம் பத்யங்களில் விளக்கியதைப்போல
ஸ்வாதந்த்ர்யவனு கொட்டந்தெ = அவரவர்களின் யோக்யதைக்கேற்ப ஸ்வதந்த்ரயத்தை, எப்படி பிரித்துக் கொடுத்திருக்கிறானோ, அதன்படியே,
ஸ்வர்த்துனீபித = கங்கையைப் பெற்ற ஸ்ரீஹரி
பிரம்ம வாயு கபர்த்தி மொதலாதவரொளு = பிரம்ம வாயு ருத்ர முதலான தேவதைகளில்

அவர யோக்யதெயனரிது = பிரம்மாதி தேவதைகளின் யோக்யதையை அறிந்து, அதற்கேற்ப
சுக வ்ருத்திகோசுக = தாரதம்யத்தின்படி சுகத்தைக்
கொடுவ = கொடுக்கிறான்.
இந்த
சந்தியின் 11-12ம் பத்யங்களில் விளக்கியதைப்போல, தன் ஸ்வாதந்த்ரியத்தின் பாதி பாகத்தை; 52, 48, 20, 15, 10 இந்த விதமாக பிரம்ம வாயு ருத்ர இந்திர முதலானவர்களுக்கு கொடுத்து, அந்த ஸ்வாதந்த்ர்யத்தின் தாரதம்யத்திற்கேற்ப அவர்களில் இருந்து, அவரவர்களின் யோக்யதைக்கேற்ப ஞான பக்திகளைக் கொடுத்து, அதன்படியே அவர்களுக்கு முக்தியில் ஆனந்தத்தையும் கொடுக்கிறார்.

அதாவது, பிரம்மதேவருக்கு 52 பாக ஸ்வாதந்த்ர்யம் இருப்பதால், அவர் அதிக சாதனையை செய்கிறார். ருத்ரதேவருக்கு 20 பாகங்கள், இந்திர காமனுக்கு 15 பாகங்கள் இருப்பதால், அந்த தாரதம்யத்திற்கேற்ப அவர்களின் சாதனையும் ஆகிறது. இதைப்போலவே ஸ்வாதந்த்ர்ய பாகங்களுக்கேற்ப, ஆனந்தமும் இருக்கிறது. பரமாத்மனின் ஸ்வரூபத்தில் பேதங்கள் இல்லாததால், ஸ்வதந்த்ர ரூபத்தால் பிரம்மாதிகளில் இருக்கும்போது தேஜோ விசேஷத்திலும், ஞானாதிகளை காட்டுவதில், தீபத்தில் ஒரேயொரு வர்த்தி போட்டால் அதற்குத் தகுந்தவாறு ஒளி வருகிறதோ, 10 வர்த்திகள் போட்டால் அதற்குத் தக்க ஒளி வருமோ, அப்படியே, பல ஞானாதிகளில் தாரதம்யத்தை காட்டியவாறு பிரம்மாதிகளில் இருக்கிறார். அதைப்போல ஸாதனங்களை செய்விக்கிறார். அந்த சாதனைக்கேற்ப ஆனந்தத்தில் தாரதம்யத்தைக் கொடுத்து அவரவரின் யோக்யதைக்கேற்ப சுகத்தைக் கொடுக்கிறான் என்பது கருத்து.

**ஹலத[4]ரானுஜ மாள்ப க்ருத்யவ**
**திளியதெ[3] அஹங்காரதி[3]ந்தெ[3]**
**ந்னுளிது[3] ஸுவிதி[4]னிஷேத[4] பாத்ரரு இல்லவெம்பு[3]வகெ[3] |**
**ப[2]லக[3]ள த்[3]வய கொடு[3]வ தை[3]த்யர**
**கலுஷகர்மவ பி[3]ட்டு புண்யவ**
**ஸெளெது[3] தன்னொளகி[3]ட்டு க்ரமதி[3]ம் கொடு[3]வ ப[4]குதரிகெ[3] ||21**

ஹலதரானுஜ = கலப்பையை தரித்த பலராமன்; அவன் தம்பியான ஸ்ரீகிருஷ்ணன்
மாள்ப க்ருத்யவ = நம்முள் இருந்து செய்யும் செயல்களை
திளியதே = அறியாமல்
அஹங்காரதிந்த = கர்வத்தால்
என்னுளிது = என்னை விட்டு
விதியு = செய்யவேண்டிய செயல்களை செய்வதற்கும்
நிஷேத = செய்யக்கூடாத செயல்களை விடுவதற்கும்
பாத்ரரு = அருகதை உள்ளவர்கள்
இல்லவெம்புவகெ = இல்லை என்று சொல்லும் தமோ யோக்யர்களுக்கு

பலகள த்வய = இரு வித பாப பலன்களை; அதாவது, பக்தர்கள் செய்யும் பாப கர்மங்களின் பலன் ஒன்று. தான் செய்த பாவ கர்மத்தின் பலன் ஒன்று என இரு வித பாப பலன்களை
கொடுவ = அத்தகையவர்களுக்குக் கொடுக்கிறான்
தைத்யர கலுஷகர்மவ பிட்டு = தைத்யர்கள் செய்யும் பாப கர்மத்தின் பலன்களை, தைத்யர்களின் பாகத்திற்கே விட்டு
புண்யவ செளெது = அவர்கள் செய்த புண்ய கர்மங்களை எடுத்து
தன்னொளகிட்டு = தனக்குள் வைத்து; தான் வைத்துக்கொண்டு
க்ரமதிம் = கிரமத்தினால்
கொடுவ பகுதரிகெ = தன் பக்தர்களுக்குக் கொடுக்கிறான்.

நமக்குள் இருந்து, ஸ்ரீபரமாத்மன், புண்யபாபாதி கர்மங்களை செய்விப்பதை அறியாமல், கர்வத்தினால் விதி- நிஷேத கார்யங்களை, நானே செய்தேன்; புண்யம் செய்பவனும், பாவம் செய்பவனும் நானே என்று சொல்பவனுக்கு பரமாத்மன், அவர்கள் செய்த பாப கர்மங்களின் பலன்களை அவர்களிடமே வைத்து; அதனுடன், பக்தர்கள் செயும் பாப கர்மத்தின் பலன்களையும் அவர்களுக்கே கொடுக்கிறான். தைத்யர் செய்த பாப கர்மங்களை தைத்யர்களிடமே வைத்து, அவர்கள் செய்த புண்ய கர்மங்களை தான் எடுத்து தனக்குள் வைத்துக்கொண்டு பக்தர்களுக்கு படிப்படியாக பிரித்துக் கொடுக்கிறான்.

**தோயஜாப்தன கிரண வ்ருக்ஷ**
**ச்சாய வ்யக்திஸுவந்தெ க$^1$மலத$^3$**
**லாயதாக்ஷனு ஸர்வரொளு வ்யாபிஸித$^3$ காரணதி$^3$ |**
**ஹேய ஸத்கு$^3$ண கர்ம தோர்ப்புவு**
**நியாயகோவித$^3$ரிகெ$^3$ நிரந்தர**
**ஸ்ரீயரஸ ஸர்வோத்தமோத்தமனெந்து$^3$ பேளுவரு ||22**

தோயஜாப்தன = தண்ணீரில் பிறக்கும் தாமரையின் நண்பனான
கிரண = சூரியனின்
வ்ருக்ஷச்சாய = மரத்தின் நிழல்
வர்த்திசுவந்தெ = தெரிவதைப்போல
கமலதளாயதாக்ஷனு = தாமரைக் கண்ணனான ஸ்ரீஹரி
சர்வரொளு = அனைவரிலும்
வியாபிஸித காரணதி = வியாபித்திருக்கும் காரணத்தால்
ந்யாய கோவிதரிகெ = நியாயத்தை நன்றாக அறிந்தவர்களுக்கு
ஹேய = நீசமான பாப கர்மங்கள்
சத்குண = உத்தமமான புண்யகர்மங்கள்
தோர்ப்புது = கிடைக்கிறது
நிரந்தர = எப்போதும்
ஸ்ரீயரஸெ = லட்சுமிபதியே
சர்வோத்தமோத்தமனெந்து = சர்வோத்தமரான பிரம்மாதிகளுக்கு உத்தமர் என்று
பேளுவரு = சொல்வார்கள்

சூரியனின் ஒளியில், மரத்தின் நிழல் தெரிவதைப்போல, பரமாத்மன் அனைத்து இடங்களிலும் வியாப்தனாக இருப்பதாலேயே, ஜீவனின் புண்ய பாபாதி கர்மங்கள் தெரிகின்றன. ஆகையாலேயே, ஞானிகள் இத்தகைய ஸ்ரீலட்சுமிபதியே பிரம்மதேவர் முதலான அனைத்து தேவதைகளைவிட உத்தமன் என்று கூறினர்.

**மூல காரண ப்ரக்ருதி எனிப ம**
**ஹாலகுமி எல்லரொளகி$^{3}$த்து$^{3}$ ஸு**
**லீலெகை$^{3}$யுத புண்ய பாபக$^{3}$ளர்ப்பிபளு பதிகெ$^{3}$ ।**
**பா$^{3}$லக$^{3}$ட$^{3}$லொளு பி$^{3}$த்த ஜல கீ**
**லாலவெனிபுதெ$^{3}$ ஜீவக்ருத க**
**ர்மாளி த$^{1}$த்$^{3}$வது ஷுப$^{4}$வெனிஸுவுது$^{3}$ எல்லகாலத$^{3}$லி ।।23**

மூலகாரண ப்ரக்ருதி = ஜகத்திற்கு மூலகாரணளான மூலப்ரக்ருதி
எனிப = என்று அழைக்கப்படும்
மஹாலகுமி = மஹாலட்சுமி
எல்லரொளகித்து = அனைவருக்குள்ளும் இருந்து
சுலீலெகயுத = கணவனான பரமாத்மனுடன் தான் ப்ரக்ருதி சம்பந்தமான சத்வாதி குண காரியங்களை செய்த பின்
பதிகெ = பதியான பரமாத்மனுக்கு
புண்யபாபகளர்ப்பிஸலு = ஜீவர்கள் செய்யும் புண்ய பாபங்களை சமர்ப்பிக்கிறாள்.
பாலகடலொளு = பாற்கடலில்
பித்த ஜல = விழுந்த நீர்
கீலாலவெனிபுதெ = நீர் எனப்படுகிறதா? இல்லை. அது பாலாகவே மாறுகிறது
தத்வது = அதைப் போல
எல்ல காலதலி = அனைத்து காலங்களிலும்
ஜீவக்ருத = ஜீவர்களால் செய்யப்பட்ட
கர்மாளி = கர்மங்களை
ஷுபவெ எனிபுது = புண்ய கர்மங்களே ஆகிறது.

உலகத்திற்கு காரணபூதளான, மூலப்ரக்ருதி எனப்படும், லட்சுமிதேவி, தன் பதியுடன் அனைவரிலும் இருந்து, ப்ரக்ருதி சம்பந்தமான சத்வ ரஜஸ் தமோ குண காரியங்களை செய்தவாறு அவரவர்களால் செய்யப்பட்ட புண்யபாவங்களை, பதியான பரமாத்மனுக்கு அர்ப்பிக்கிறாள். ஆனால், ஜீவக்ருத பாவ கர்மங்களை பரமாத்மனுக்கு அர்ப்பிப்பதால், பரமாத்மனுக்கு பாப சம்பந்தத்தினால் துக்கம் வருகிறதா என்னும் சந்தேகம் இந்த ஆதாரத்தினால் பரிகாரம் ஆகிறது.

பாற்கடலில் நீர் விழுந்தால், அங்கிருக்கும் பால் கெட்டுப்போகுமோ? இல்லை. நீரே பால் ஆகிறது. கங்காதி மகா நதிகள் அனைத்தும், உப்புக்கடலில் சேரவும், கடல் நீர் அனைத்தும் இனிப்பாகிறதா? இல்லை. நீர் மட்டும் உப்பாகிறது. அதுபோலவே, பாற்கடலில் விழுந்த நீர் அனைத்தும் பாலே ஆகிறது. அப்படியே, பரமாத்மனில் சேர்ந்த பாப கர்மங்கள் அனைத்தும் சுபமே (புண்ய கர்மங்களே) ஆகின்றன.

**ஞான ஸுக2 ப3லபூர்ண விஷ்ணுவி**
**கே3னு மாள்பவு த்ரிகு3ணகார்ய க்ரு**
**ஷானுவின க்ருமி கவிது3 ப3க்ஷிபுது3ண்டெ லோகதொ3ளு |**
**ஈ நலினஜாண்ட3வனு பி3ரம்மே**
**ஷானமுக்2ய ஸுராஸுரர கா**
**லானலன வோள்னுங்கு3வகெ3 ஈ பாபக3ள ப3யவெ ||24**

ஞான சுக பலபூர்ண விஷ்ணுவிகெ = ஞானானந்த பலங்களால் பூர்ணனான விஷ்ணுவிற்கு
த்ரிகுணகார்ய = ப்ராக்ருதமான சத்வ ரஜஸ் தமோ குண காரியங்கள்
ஏனு மாளவு = என்ன செய்யும்?
லோகதொளு = உலகத்தில்
க்ருஷானுவின = நெருப்பினை
க்ரிமி கவிது = புழுக்கள் மென்று
பக்ஷிபுதுண்டெ = தின்னுவதுண்டா?
ஈ நலினஜாண்டவனு = இந்த பிரம்மாண்டத்தை
பிரம்மேஷான முக்ய சுராசுரர = பிரம்ம ருத்ர முதலான தேவதைகளை மற்றும் தைத்யர்களை
காலானலனவோல் = காலாக்னியைப் போல
நுங்குவகெ = விழுங்குபவனுக்கு
ஈ பாபகள பயவெ = இந்த பாவங்களைப் பற்றி பயமா?

சம்பூர்ணமான ஞானானந்த ஸ்வரூபமான ஸ்ரீவிஷ்ணுவை, ப்ரக்ருதி சம்பந்தமான, சத்வ ரஜஸ் தமோ குணகாரியங்கள் என்ன செய்துவிடும்? உலகத்தில் நெருப்பினை, புழுக்கள் மென்று தின்னுகிறதா? நெருப்பில் விழுந்து தாம் உயிரை விடுகின்றன. அதைப்போல, த்ரிகுண சம்பந்தமான கர்மங்கள் பரமாத்மனை என்ன செய்துவிடும்? கர்மங்கள் மட்டும் சுட்டுப் போகின்றன. பிரம்ம ருத்ர முதலான ஸ்தாவர ஜங்கமாத்மகமான இந்த பிரம்மாண்டத்தையே, பிரளய காலத்தில் காலாக்னியைப் போல விழுங்கும் ஸ்ரீஹரிக்கு, இந்த அல்பமான பாவங்களின் பயம் உண்டா? என்றைக்கும் இல்லை என்பது கருத்து.

**மோத3ஷிர த3க்ஷிணஸுபக்ஷ ப்ர**
**மோத3 உத்தரபக்ஷவெந்து3 ரு**
**கா3தி3 ஸ்ருதிக3ளு பேளுவுவு ஆனந்த3மய ஹரிகெ3 |**
**மோத3 வைஷிக ஸுக2விஸிஷ்ட ப்ர**
**மோத3 பாரத்ரிக ஸுக2ப்ரத3**
**நாத3காரணதி3ந்த3 மோத3 ப்ரமோத3னெனிஸுவனு ||25**

ஆனந்தமய ஹரிகெ = ஆனந்தஸ்வரூபனான ஸ்ரீஹரிக்கு
மோத = மகிழ்ச்சி
ஷிர = தலை
தக்ஷிணபக்ஷ = வலது பாகம்

ப்ரமோத = விசேஷமான மகிழ்ச்சி
உத்தரபக்ஷ = இடது பாகம்
எந்து = என்று
ருகாதி ஸ்ருதிகளு பேளுவுவு = ருகாதி வேதங்கள் சொல்கின்றன
மோத = மோத என்றால்
வைஷிக சுக விசேஷ = விஷய சம்பந்தமான சுக விசேஷம்
ப்ரமோத = ப்ரமோத என்றால்
பாரத்ரிக சுக = பரலோகத்தின் சுகம்
ப்ரதனு = இந்த இரு விதமான சுகங்களையும் கொடுப்பவன்
ஆதகாரணதிந்த = ஆகையால்
மோத ப்ரமோதனெனிஸுவனு = மோத பிரமோத என்று அழைக்கப்படுகிறான்.

பரமாத்மன் ஆனந்த ஸ்வரூபன் என்று ஸ்ருதி ஸ்ம்ருதிகளிலிருந்து தெரியவருகிறது. 'அஸ்யப்ரிய்மேவஷிர: | மோதோ தக்ஷிண பக்ஷ: | ப்ரமோத உத்தர பக்ஷ: | ஆனந்த ஆத்மா || ' என்று தைத்திரிய உபநிஷத்தில் சொல்லப்பட்டிருக்கிறது. மற்றும் விஷ்ணு ரஹஸ்ய 21ம் அத்தியாயத்தில்:

ப்ரியமஸ்யஷிரோ மோதோ தக்ஷிண: பக்ஷ உச்யதே |
ப்ரமோத உத்தர: பக்ஷ ஆத்மானந்த இதீரித: ||57
வஸ்துவிஞ்ஞாஜனம் சௌக்யமானந்த இதிகீர்த்தித: |
மோதோவிஷயஜம் சௌக்யம் தத்ர வஸ்து விசேஷத: ||58

இதே அர்த்தத்தையே தாசராயர் இந்த பத்யத்தில் சொல்கிறார்.

ஆனந்தஸ்வரூபனான ஸ்ரீஹரிக்கு ப்ரியமே தலை. மகிழ்ச்சியே வலது பாகம். விசேஷமான மகிழ்ச்சி இடது பாகம். ஆனந்தமே ஆத்மன். ஆனந்தம் என்றால், வஸ்துகளின் ஞானத்தினால் ஆகும் சுகம். பரமாத்மனுக்கு பிரபஞ்சத்தின் அனைத்து வஸ்துவின் ஞானம் இருப்பதால், ஆனந்தஸ்வரூபன் என்று பெயர் இருக்கிறது.

மோத என்றால் விஷய போகங்களால் ஆகும் சுகம். ப்ரமோத என்றால், புதிய வஸ்துகளால் ஆகும் விசேஷ சுகம். இந்த சுகம் பரலோகத்தில் மட்டுமே கிடைக்கிறது. ஆகையால், தாசராயர், ப்ரமோத என்றால், பாரத்ரிக சுகம் என்று கூறுகிறார். பிறருக்கு உதவி செய்வதால் வரும் சுகத்திற்கு ப்ரிய என்று பெயர். ஆனந்த ஸ்வரூபனான ஸ்ரீஹரிக்கு, ப்ரிய, மோத, ப்ரமோத, ஆகியவை அங்காங்களாக (உறுப்புகளாக) இருக்கிறது. இப்படி பரமாத்மனை அறிந்து உபாசனை செய்பவர்களுக்கு ப்ரிய, மோத, ப்ரமோத ஆகிய சுகங்களை கொடுப்பதால், மோத ப்ரமோத முதலான பெயர்கள் பரமாத்மனுக்கு வந்திருக்கிறது என்பது கருத்து.

**எந்தி$^3$கா$^3$த$^3$ரு வ்ருஷ்டியிந்த$^3$ வ**
**ஸுந்த$^3$ரெயொளிப்பகி$^2$ல ஜலதி$^3$ம்**
**ஸிந்து$^3$ வ்ருத்தி$^3$யனைது$^3$வதெ$^3$ பா$^4$ரதி$^3$ரெ பரித$^3$ஹுதெ$^3$ |**

**குந்து3 கொரதெக3ளில்லதிஹ ஸ்வா**
**நந்த3 ஸம்பூர்ண ஸ்வபா4வகெ3**
**ப3ந்து3மாடு3வுதே3னு கர்மாகர்மஜன்ய ப2ல ||26**

எந்திகாதரு = என்றாவது ஒரு சமயம்
வ்ருஷ்டியிந்த = மழையால்
வசுந்தரெயொளு = பூமியில்
இப்ப = இருக்கிறான்
அகிளஜலதிம் = அனைத்து தேசத்தின் நீரினால்
ஸிந்து = சமுத்திரம்
வ்ருத்தியனைதுவுதெ = வளர்கிறதோ?
பாரதிரெ = மழை நீர் சமுத்திரத்தில் சேராதிருந்தால்
பரிதஹுதெ = நீரின்று கடல் வற்றிப் போகுமா?
குந்து கொரதெகளில்லதிக = எந்தவிதமான தோஷங்களாகட்டும், குறைகளாகட்டும் இல்லாதிருக்கும்
ஸ்வானந்த சம்பூர்ண ஸ்வபாவகெ = தன் ஆனந்தத்தினாலேயே பூர்ணனாக இருக்கும் ஸ்வபாவம் கொண்ட ஸ்ரீஹரிக்கு
கர்மாகர்ம ஜன்யபல = ஜீவர்கள் செய்யும் புண்யபாபாதி கர்மபலன்கள்
பந்து மாடுவுதேனு = எதுவும் செய்யாது (லாபமும் இல்லை; நஷ்டமும் இல்லை).

உலகத்தில் மழை பெய்து, ஆறுகளில் வெள்ளம் வந்து, அந்த நீர் கடலில் சென்று சேர்ந்தால், கடலில் நீர் அதிகமாவதோ, அந்த ஆற்று நீர் கடலில் சேராவிட்டால், கடல் நீர் குறைவதோ இல்லை. அதுபோலவே, ஆனந்தஸ்வரூபனான ஸ்ரீஹரிக்கு, ஜீவர்கள் செய்யும் புண்ய பாப பலன்களால் ஆகும் லாப நஷ்டாதிகள் என்றும் இல்லை. ஜீவர்கள் தத்தம் சாதனைகளுக்காக புண்ய பாபங்களை, சமர்ப்பணம் செய்யவேண்டுமே தவிர, அதனால் பரமாத்மனுக்கு ஆகவேண்டியது ஒன்றும் இல்லை.

**தே3ஹவ்ருக்ஷதொ3ளெரடு3 பக்ஷிக3**
**ளிஹவு எந்தி3கு3 பி3ட3தெ3 பரம**
**ஸ்னேஹதி3ந்த3லி கர்மஜ ப2லக3ளும்ப3 ஜீவக2க3 ।**
**ஸ்ரீஹரியு தா ஸாரபோ4க்தனு**
**த்3ரோஹிஸுவ கல்யாதி3 தை3த்ய ஸ**
**மூஹகீவ விஷிஷ்டபாபவ லேஷவெல்லரிகெ3 ||27**

தேஹவ்ருக்ஷதொளு = தேகம் என்னும் மரத்தில் (ஜீவனின் ஸ்வரூப தேகத்தில்)
எரடு பக்ஷிகளு = ஜீவ பரமாத்மன் என்னும் இரு பறவைகள்
எந்திகு பிடதெ = என்றும் (அனாதி காலத்திலிருந்து) அவை ஒன்றையொன்று பிரியாமல்
பரம ஸ்னேஹதிந்தலி = மிகுந்த நட்புடன்
இஹவு = இருக்கின்றன
ஜீவகக = ஜீவன் என்னும் பறவை

கர்மஜ = கர்மங்களால் வந்த
பலகள = பலன்களை
உம்ப = உண்கிறான் (புண்யபாபங்களில் பலன்களான சுகதுக்கங்களை அனுபவிக்கிறான்)
ஸ்ரீஹரியு
தா = தான்
ஸாரபோக்தனு = ஸ்ரீஹரி அதில் சாரமான புண்யபலன்களை மட்டும் ஏற்றுக் கொள்கிறான்
த்ரோஹிஸுவ = தன்னிடம் த்வேஷம் செய்யும்
கல்யாதி தைத்ய சமூஹகீவ = கலி முதலான தைத்ய சமூகத்தை சேர்ந்த
எல்லரிகெ = அனைவருக்கும்
விஷிஷ்ட பாபக்லேஷவ = அனைத்து பாப கர்மங்களின் பலன்களான கஷ்டங்களை
ஈவ = கொடுக்கிறான்.

ஜீவர்களின் ஸ்வரூப மற்றும் ஸ்தூல தேகம் என்னும் இந்த இரண்டும், மரங்களாக இருக்கின்றன. அனாதி காலத்திலிருந்து ஸ்வரூப தேகம் இருக்கிறது. ஸ்தூல தேகம் அழிகிறது. த்வாஸுபர்ணா என்னும் ஸ்ருதியில் அனாதி காலத்தை சொல்லியிருப்பதால், இங்கு ஸ்வரூப தேகத்தையே எடுத்துக் கொள்ளவேண்டும். தாசராயரும் ‘எந்திகு பிடதே’ என்று குறிப்பிட்டு சொல்லியிருப்பதால், அதை ‘அனாதி காலத்திலிருந்து’ என்றே எடுத்துக் கொள்ளவேண்டும். இதன் அர்த்தம் இதுவே:

ஸ்வரூப தேகம் என்னும் மரத்தில் இதய கமலம் என்னும் கூட்டினை வைத்துக் கொண்டு, ஜீவ பரமாத்மன் என்னும் இரு பறவைகள், அனாதி காலத்திலிருந்தே இருக்கின்றன. இந்த பறவைகளில் ஜீவனின் ஸ்தூல தேக சம்பந்தத்தினால் செய்யும் புண்ய பாப கர்மங்கள் இரண்டின் பலன்களையும், ஜீவன் என்னும் பறவை மட்டும் ஏற்றுக் கொள்கிறது. ஒரு மரத்தில் உணவு கிடைக்கவில்லையெனில், பறவைகள் எப்படி பறந்து இன்னொரு மரத்தைச் சேர்ந்து அங்கு உணவு உண்கிறதோ, அப்படியே, இந்த ஸ்தூல தேகம் போனால், ஜீவன் இன்னொரு தேகத்தைச் சேர்ந்து கர்மபலனை அனுபவிக்கிறான்.

பரமாத்மன் என்னும் பறவை மட்டும் இந்த கர்மபலன்களை உண்பதில்லை. ஜீவனின் நலனுக்காக புண்ய பலன்களின் சாரத்தை மட்டும் ஏற்றுக்கொள்கிறான். ‘த்வாஸுபர்ணா ஸயுஜா’ என்னும் ஸ்ருதி இவ்வாறு சொல்கிறது. ஸ்ரீமன் மத்வாசார்யர், இந்த ஸ்ருதியையே, த்வைத மதத்திற்கு ஆதாரமாக தமது பாஷ்யாதிகளில் உதாரணம் கூறியிருப்பார். ஏனெனில், இந்த ஸ்ருதியில் :

* அனாதி காலத்திலிருந்து ஜீவனும் பரமாத்மனும் வெவ்வேறாக இருக்கிறார்கள் என்றும்
* ஜீவ பரமாத்ம பேதத்தை தெளிவாகவும்

சொல்லப்பட்டிருக்கிறது. இதன் அர்த்தத்தையே விஷ்ணு ரஹஸ்ய 21ம் அத்தியாயத்தில்:

தேஹவ்ருக்ஷே ஸமாஸீனௌ ஸகாயௌ பக்திணௌ சிரம் ||62
தயோர்மத்யேது யோஜ்யாயாம் ஸ்தஸ்ய ஸ்வாத்வேவ பிப்பலம் ||
இதி ப்ரஹஸ்ருதிஸ்ஸாக்ஷாத்கார போக்தா ஹரிஸ்தத: ||63

தேகம் என்னும் மரத்தில் அனாதி காலத்திலிருந்து இரு பறவைகள் நட்புடன் வசித்துக் கொண்டிருக்கின்றன. இவற்றில் எது உத்தம பறவையோ என்றால், பரமாத்மன் என்று அர்த்தம். அந்த பறவைக்கு பிப்பல என்னும் கர்மபலன் மிகவும் ருசிகரமாக இருக்கிறது. ஆகையால், பரமாத்மன் ஸாரபோக்தன் என்று ஸ்ருதி சொல்கிறது என்று சொல்கிறார்கள். இருக்கும் இரு பறவைகளில் ஒரு பறவைக்கு அந்த பலன் ருசிகரமாக இருந்தது என்றபிறகு, இன்னொரு பறவைக்கு அந்த பலன் ருசிக்கவில்லை என்று தனியாக சொல்லவேண்டியதும் இல்லை.

இதிலிருந்து ஜீவன், பிப்பல என்னும் கர்மபலன்களை அனுபவிக்கிறான் என்று தெளிவாக புரிகிறது. இதே அர்த்தத்தையே தாசார்யர் இந்த பத்யத்தில் சொல்லியிருக்கிறார். பரமாத்மன் ஜீவனுடன் தேகத்தில் இருந்து புண்ய பாப கர்மங்களை செய்வித்து, சுபங்களை தான் ஸ்வீகரித்து, புண்ய பலன்களை யோக்யரான தேவதைகளுக்கும், மிஸ்ர பலன்களை மனிதர்களுக்கும், பாப பலன்களை தைத்யர்களுக்கும் கொடுக்கிறான் என்பது கருத்து.

**த்$^{3}$யுமணிகிரணவ கண்ட$^{3}$ மாத்ரதி$^{3}$**
**திமிர ஓடு$^{3}$வ தெரதி$^{3}$ லக்ஷ்மி**
**ரமண நோடி$^{3}$த$^{3}$ மாத்ரதி$^{3}$ந்த$^{3}$ க$^{4}$னாஷவைது$^{3}$வது$^{3}$ |**
**க$^{1}$மலஸம்ப$^{3}$வ முக்$^{2}$யரெல்லா**
**ஸுமனஸரொளிஹ பாபராஷிய**
**நமரமுக$^{2}$ நந்த$^{3}$த$^{3}$லி ப$^{4}$ஸ்மவ மாள்ப ஹரி தானு ||28**

த்யுமணிகிரணவ = சூரியனின் கிரணங்களை
கண்ட மாத்ரதி = கண்ட உடனேயே
திமிர ஓடுவ தெரதி = இருட்டு ஓடுவதைப்போல
லட்சுமிரமண நோடித மாத்ரதிந்த = லட்சுமிபதியான ஸ்ரீஹரி பார்த்த உடனேயே
அகனாஷவைதுவுது = பாபங்கள் நாசம் ஆகின்றன
கமல சம்பவ முக்ய = பிரம்மதேவர் முதலான
எல்லா சுமனசரொளு = அனைத்து தேவதைகளில்
இஹ = இருக்கும்
பாபராஷியனு = பாபராசிகளை
அமரமுக நந்ததலி = தேவதைகளுக்கு முகமாக இருக்கும் அக்னியைப் போல
ஹரி தானு = ஸ்ரீஹரி தானே
பஸ்மவ மாள்ப = சுட்டுப் பொசுக்குகிறான்.

தமஸ்ஸூர்யம் யதானைவ பஷ்யேத்தத்வத்தரின் நஹி |

பாபம் கர்ம நிரீக்ஷித துராதேவ வினஷ்யதி ||
பிரம்மாதி தேவபாகாம்ஸ்து தூலவத்தஹதேஹரி: ||65

இருட்டானது, எப்படி எப்போதும் சூரியனைப் பார்ப்பதில்லையோ, அப்படியே பாபகர்மங்களும் பரமாத்மனை பார்ப்பதேயில்லை. தூரத்திலிருந்தே நாசமடைகின்றன. பிரம்மாதி தத்வாபிமானி தேவதைகள், கலி முதலான தைத்யர்களில் இருந்து செய்யும் பாவங்களை, பரமாத்மன் அக்னியைப் போல சுடுகிறான்.

இதே அர்த்தத்தையே தாசார்யர் இங்கு சொல்கிறார். சூரிய ஒளியைக் கண்டதும் இருட்டு எப்படி நாசம் அடைகிறதோ, அப்படி, ஹரியைக் கண்டதும் பாபங்கள் நாசம் அடைகின்றன. பிரம்மாதிகளில் இருக்கும் பாபங்களை அக்னியைப் போல பரமாத்மன் சுட்டு பொசுக்கி விடுகிறான்.

**சதுரஷத பா$^{4}$க$^{3}$தி த$^{3}$ஷாம்ஷதொ$^{3}$**
**ளிதர ஜீவரிகீ$^{3}$வ லேஷவ**
**தி$^{3}$திஜ தே$^{3}$வர்க$^{3}$ளிகெ$^{3}$ கொடு$^{3}$வ விஸிஷ்ட து$^{3}$க்க$^{2}$ ஸுக$^{2}$ |**
**மதிவிஹீன ப்ராணிக$^{3}$ளிகா$^{3}$**
**ஹுதிய ஸுக$^{2}$ ம்ருதி து$^{3}$க்கவரயோ**
**க்$^{3}$யதெயனரிது பிபீல மஷகாதி$^{3}$க$^{3}$ளிகீ$^{3}$வ ஹரி ||29**

சதுரஷத பாகதி = 400 பாகங்களில்
தஷாம்ஷதொளு = 10 பாகங்களில்
லேஷ = மிகச்சிறிய அளவினை
இதர ஜீவரிகெ = எறும்பு, கொசு முதலான ஜீவர்களுக்கு
ஈவ = கொடுக்கிறான்
திதிஜ = தைத்யர்களுக்கும்
தேவதெகளிகெ = தேவதைகளுக்கும்
விசிஷ்ட துக்க சுக = அவரின் யோக்யதைக்கேற்ப அதிகமான துக்கங்களை தைத்யர்களுக்கும், சுகங்களை தேவதைகளுக்கும்
கொடுவ ஹரி = ஸ்ரீஹரி கொடுக்கிறான்
மதிவிஹீன ப்ராணிகளிகெ = புத்தி இல்லாத பசு முதலான பிராணிகளுக்கும்
பிபீல = எறும்புகள்
மஷகாதிகளிகெ = கொசுக்களுக்கும் மற்றும் இதே போன்ற பிராணிகளுக்கும்
ஆஹுதிய = ஆகாரத்தை
சுக = சுகங்களை
ம்ருதி = மரணத்தை
துக்க = அவர்களின் யோக்யதைக்கேற்ப துக்கத்தை
ஈவ = கொடுக்கிறான்.

ஸ்ரீபரமாத்மன், தனது ஸ்வாதந்த்ர்யத்தின் 400ல் 10 அம்சத்தை அனைத்து ஜீவர்களுக்கும் கொடுத்திருக்கிறான். அந்த 10 அம்சத்தில் அல்ப பாகங்களை

மட்டும் பசு, எறும்பு, கொசு முதலான அஞ்ஞானி பிராணிகளுக்குக் கொடுத்திருக்கிறான். தேவதைத்யர்களுக்கு அதிகமான ஸ்வாதந்த்ர்யம் இருப்பதால், அதிகமான சுகதுக்கங்களை அவர்கள் அனுபவிக்கின்றனர். அல்ப பிராணிகளான பசு, பறவை, எறும்பு ஆகியவற்றிற்கு அவற்றின் யோக்யதைக்கேற்ப ஆகாரத்தைக் கொடுத்து, அவற்றிற்கும் சுக துக்க ஜனன மரணாதிகளைக் கொடுக்கிறான்.

இந்த விஷயங்கள், தத்த ஸ்வாதந்த்ர்ய சந்தியில், விஷ்ணு ரஹஸ்ய ஆதாரங்களின்படி, விவரமாக விளக்கப்பட்டுள்ளது.

**நித்ய நிரயந்தாக்2ய கூபதி3**
**ப்3ருத்யரிந்தொ3ட3கூ3டி3 புனரா**
**வர்த்திவர்ஜித லோகவைது3வ கலியு த்3வேஷத3லி |**
**ஸத்யலோகாதி3ப சதுர்முக2**
**த1த்வதே3வர்க3ள ஸஹித நிஜ**
**முக்தியைது3வ ஹரிபதா3ப்ஜவ ப4ஜிஸி ப4கு3தி1யலி ||30**

கலியு = கலி
த்வேஷதலி = பரமாத்மனிடம் த்வேஷத்தைக் காட்டி
ப்ருத்யரிந்தொடகூடி = தன் குழுவினரான விப்ரசித்தி முதலான தைத்யர்களுடன் சேர்ந்து
புனராவர்த்திவர்ஜித = சென்றால் மறுபடி திரும்பி வராத
நித்யனிரலு = நித்யமான அந்தம்தமஸ் என்னும்
அந்தாக்யகூபதி = இருட்டான கிணறுகளைக் கொண்ட
லோகவ = உலகத்தை
ஐதுவ = அடைகிறான்
ஸத்யலோகாதிப = சத்யலோகத்திற்கு அதிபதிகளான
சதுர்முக = நான்முக பிரம்மதேவர்
தத்வதேவர்கள ஸஹித = தத்வாபிமானி தேவதைகளுடன்
பகுதியலி = மிகுந்த பக்தியுடன்
ஹரிபதாப்ஜவ பஜிஸி = பரமாத்மனின் பாதாரவிந்தங்களை துதித்து
முக்தியைதுவ = முக்தியை அடைகிறார்கள்.

கலி, தன் குழுவினர்களான விப்ரசித்தி முதலான தைத்யர்களுடன் சேர்ந்து, பரமாத்மனிடம் த்வேஷத்தை செய்து, பிரளயகாலத்து இருட்டில், சென்றால் திரும்பி வராத, நிரந்தரமான லோகத்தில் இருக்கும் அந்தம்தமஸ்ஸை அடைகின்றனர். பிரம்மதேவர், ருத்ராதி தேவதைகளுடன் பரமாத்மனில் திடமான பக்தியை செய்து, அவனின் பாதாரவிந்தங்களை பஜித்து, முக்தியை சேர்கின்றனர். முக்தியோக்யர் அனைவருக்கும் பிரளய ஆரம்பத்தில், பிரம்மதேவருடன் விரஜா நதி ஸ்னானம் செய்து, லிங்க சரீரம் பங்கமாகி, முக்தி ஆகின்றது.

இதைப்போல, தமோயோக்யர் அனைவருக்கும், அதே சமயத்தில், கலியுடன் வாயுதேவரின் கதா அடியுடன் லிங்க சரீரம் பங்கமாகி, திரும்பி வரமுடியாத லோகத்தில் இருக்கும் நித்யதுக்கமயமான அந்தம்தமஸ்ஸிற்கு செல்கின்றனர் என்பது கருத்து.

**விதி$^{4}$ நிஷேத$^{3}$க$^{3}$ளெரடு$^{3}$ மரெயதெ$^{3}$**
**மது$^{4}$விரோதி$^{3}$ய பாத$^{3}$கர்ப்பிஸ**
**லதி$^{3}$தி மக்களிகீ$^{3}$வ புண்யவ பாப தை$^{3}$த்யரிகெ$^{3}$ |**
**ஸுத$^{3}$ருஷன த$^{4}$ரகீ$^{3}$யதி$^{3}$ரெ ப$^{3}$**
**ந்தொ$^{3}$த$^{3}$கி$^{3}$ ஒய்வரு புண்ய தை$^{3}$த்யரு**
**அதி$^{4}$பரில்லத$^{3}$ வ்ருக்ஷக$^{3}$ள ப$^{2}$லத$^{3}$ந்தெ நித்யத$^{3}$லி ||31**

விதி நிஷேதகளெரடு = விதி மற்றும் தடை ஆகியவற்றை சரியாக பின்பற்றுவதாலும், விடுவதாலும் கிடைக்கும் புண்ய பாபங்களை
மரெயதெ = மறக்காமல்
மதுவிரோதிய = மதுசூதனனுக்கு
பாதகர்ப்பிஸலு = அர்ப்பித்தால்
அதிதி மக்களிகெ = அதிதியின் மக்களான தேவதைகளுக்கு
புண்யவ = புண்யத்தை
ஈவ = கொடுக்கிறான்
பாப = பாப கர்மங்களை
தைத்யரிகெ = தைத்யர்களுக்கு கொடுக்கிறான்
சுதருஷன தரகெ = சக்ரதாரியான பரமாத்மனுக்கு
நித்யதலி = தினந்தோறும்
ஈயதிரெ = அர்ப்பிக்காமல் இருந்தால்
தைத்யரு = தைத்யர்கள்
பந்தொதகி = புண்யம் செய்யும் காலத்திற்கு சரியாக அங்கு வந்து
புண்ய = புண்யத்தை
அதிபரில்லத வ்ருக்ஷகள பலதந்தெ = யஜமானர் இல்லாத மரங்களின் பழங்களைப்போல; அதாவது, காவல்காரன் இல்லாத மரங்களில் இருக்கும் பழங்களை மற்றவர்கள் திருடுவதைப்போல
ஒய்வரு = அபகரிப்பர்.

விதி என்றால் கட்டாயம் செய்ய வேண்டும் என்று சாஸ்திரங்களில் சொல்லப்பட்ட கர்மங்கள். நிஷேத என்றால் செய்யக்கூடாது என்று சொல்லப்பட்ட கர்மங்கள். இந்த இரண்டில், விதியை சரியாக பின்பற்றி, தடை செய்யப்பட்டதை செய்யாமல் விடுவதே புண்ய கர்மங்கள். தடை செய்யப்பட்டதை செய்வது; விதியை விடுவது - பாவ கர்மங்கள். இத்தகைய புண்ய பாபங்கள் என எதை செய்தாலும், எப்போதும் மறக்காமல் அவற்றை பரமாத்மனின் பாதாரவிந்தங்களில் சமர்ப்பிக்க வேண்டும்.

பரமாத்மன் புண்ணியங்களை தேவதைகளுக்கும், பாவங்களை தைத்யர்களுக்கும் பிரித்துக் கொடுக்கிறான். புண்யத்தை தேவதைகளுக்குக் கொடுத்துவிட்டால், நமக்கு

புண்ய பலன்கள் எங்கிருந்து வரும் என்று யோசிக்கக்கூடாது. சத்பாத்ரர்களில் சிறிது தானம் செய்தாலும், அது அக்ஷயமாகிறது. நாம் சம்பாதித்திருக்கும் பணத்தை வீட்டில் வைத்துக் கொண்டிருந்தால் திருடர்களின் பயம் வரும். அதற்காக அந்த பணத்தை வங்கிகளில் வைத்தால், எப்படி அது வட்டியுடன் வளர்ந்து நமக்கு திரும்பக் கிடைக்கிறதோ, அப்படியே பரமாத்மன், நாம் செய்த புண்யத்தை, அவனுக்கு அர்ப்பிப்பதால், அதனை தான் தத்வாபிமானி தேவதைகளில் வைத்து, அதன் பலன்களை நமக்கு இருமடங்காக்கி கொடுக்கிறான்.

புண்யத்தை நாம் பரமாத்மனுக்கு அர்ப்பிக்கவில்லையெனில், வீட்டில் இருக்கும் பணத்தை திருடர்கள் திருடுவதைப்போல வந்து, தைத்யர்கள் அந்த புண்யத்தை அபகரித்து விடுகின்றனர். ஆகவே, அனைத்தையும் பரமாத்மனுக்கு அர்ப்பிக்க வேண்டும். பரமாத்மன், நம் பாவங்களை தைத்யர்களுக்குக் கொடுத்து, அயோக்யர்களுக்குக் கொடுத்த பணம் எப்படி மூழ்கிவிடுகிறதோ அப்படியே அந்த பாவங்கள் அனைத்தும் தைத்யர்களில் மூழ்கிப் போகிறது. ஆகையால், புண்ய பாவம் இந்த இரண்டினையும் பரமாத்மனுக்கு அர்ப்பிக்க வேண்டும் என்பது கருத்து.

**திலஜ கஷ்மல த்யஜிஸி தீ$^3$பவு**
**திளியதைலவ க்$^3$ரஹிஸி மந்தி$^3$ர**
**தொ$^3$ளகெ$^3$ வ்யாபிஸியிப்ப கத்தல ப$^3$ங்கிஸுவ தெரதி$^3$ |**
**கலிமொத$^3$லு கொ$^3$ண்ட$^3$கி$^2$ல தா$^3$னவ**
**குலஜரனுதி$^3$ன மாள்ப புண்யஜ**
**ப$^2$லவ பி$^3$ரம்மாத்$^3$யரிகெ$^3$ கொட்டல்லல்லெ ரமிஸுவனு ||32**

திலஜ = எள்ளிலிருந்து வந்த
கஷ்மல = கசடுகளை
தீபவு = தீபமானது
த்யஜிஸி = புறக்கணித்து
திளிய தைலவ = தெளிந்த எண்ணெயை மட்டும்
க்ரஹிஸி = இழுத்துக்கொண்டு
மந்திரதொளகெ = வீட்டில்
வியாபிஸி = பரவி
இப்ப = இருக்கும்
கத்தல பங்கிசுவ தெரதி = இருட்டினை விரட்டுவதைப்போல
கலி மொதலு கொண்டு = கலியில் துவங்கி
அகிள தானவ குலஜரு = தைத்யர்களின் குலத்தில் பிறந்தவர்கள் அனைவரும்
அனுதின மாள்ப = தினந்தோறும் செய்யும்
புண்யஜ பலவ = புண்ணியத்தின் பலன்களை
பிரம்மாத்யரிகெ = பிரம்மதேவரே முதலான தேவதைகளுக்கு
கொட்டு = கொடுத்து
அல்லல்லெ = அந்தந்த தேவதைகளில் இருந்து,
ரமிஸுவனு = ஆனந்தப்படுகிறான்.

விளக்கில் எண்ணையை ஊற்றி, தீபம் ஏற்றினால், அந்த எண்ணையில் இருக்கும் கசடுகளை பொருட்படுத்தாமல், அவற்றை அந்த விளக்கிலேயே விட்டுவிட்டு, தெளிவான எண்ணையை மட்டுமே இழுத்து, ஒளியானது வீட்டை ஒளிர்வித்து, இருட்டினை விரட்டுவதைப் போல, ஸ்ரீஹரி, கலி முதலான தைத்ய குலத்தவர் செய்யும் பாபரூப கசடுகளை அங்கேயே விட்டு தெளிவான எண்ணையைப் போல இருக்கும் புண்யத்தை மட்டும் இழுத்து, வீடுகளைப் போல இருக்கும் பிரம்மாதிகளில் தான் வியாபித்து, அவர்களில் இருக்கும் இருட்டிற்கு சமமான பாவங்களை அழித்து, தான் அங்கங்கே ஒளிர்ந்து கொண்டிருக்கிறான் என்பது கருத்து.

**ஈர்த$^{3}$லெயு நித்யத$^{3}$லி மேத்$^{4}$யா**
**மேத்$^{4}$ய வஸ்துக$^{3}$ளுண்டு$^{3}$ லோகதி$^{3}$**
**ஷுத்த$^{4}$ ஷுசி எந்தெ$^{3}$னிஸிகொம்ப$^{3}$னு வேத$^{3}$ஸ்ம்ருதிக$^{3}$ளொளு |**
**பு$^{3}$த்தி$^{4}$பூர்வகவாகி$^{3}$ விபு$^{4}$த$^{3}$ரு**
**ஸ்ரத்தெ$^{3}$யிந்த$^{3}$ர்ப்பிஸித$^{3}$ கர்ம நி**
**ஷித்த$^{4}$வாத$^{3}$ரு ஸரியெ கைகொண்டு$^{3}$த்த$^{4}$ரிஸுதிப்ப ||33**

ஈர்தலெயு = இரு தலைகளைக் கொண்ட அக்னி
நித்யதலி = எப்போதும்
மேத்யாமேத்ய வஸ்துகள = யோக்ய, அயோக்ய வஸ்துகளை
உண்டு = எரித்து
லோகதி = உலகத்தில்
வேத ஸ்ம்ருதிகளொளு = ஸ்ருதி ஸ்ம்ருதிகளில்
ஷுத்த ஷுசியெந்து = தோஷங்கள் அற்றவன், தூய்மையானவன் என்று
எனிஸிகொம்பனு = அழைத்துக் கொள்கிறான்
புத்திபூர்வகவாகி = தெளிவாக அறிந்துகொண்டு
விபுதரு = தேவதைகள்
ஸ்ரத்தெயிந்த = பக்தியுடன்
அர்ப்பிஸித = தனக்கு அர்ப்பித்த
கர்ம நிஷித்தவாதரு = கர்மங்கள், தடை செய்யப்பட்டவையாக இருந்தாலும்
சரியெ = அதை சரியென்று
கைகொண்டு = ஏற்றுக்கொண்டு
உத்தரிசுதிப்ப = அவர்களை அருள்கிறான்.

சத்வாரி ஸ்ருங்கா த்ரயோஸ்யபாதா த்வேஷீர்ஷே - என்னும் ஸ்ருதியின்படி, அக்னி இரு தலைகளைக் கொண்டுள்ளது என்பது தெரிகிறது. ஆகையாலேயே தாசராயர் இங்கு ஈர்தலெயெ என்று சொல்லியிருக்கிறார். இத்தகைய அக்னி, யாகாதிகளில் ஆஹுதியை ஏற்றுக் கொள்கிறான். கூடவே பிணத்தையும் ஏற்றுக் கொள்கிறான். ஆனாலும், அக்னி, நித்ய சுத்தன் (தூய்மையானவன்) என்று ஸ்ருதிகளில் சொல்லப்பட்டிருக்கிறது. அதைப்போல, புத்திபூர்வகமாக, பக்தி, ஸ்ரத்தையுடன் தம்மில் இருக்கும் கர்மங்களை தேவதைகள் பரமாத்மனுக்கு

அர்ப்பித்தால், பரமாத்மன் அவை தடை செய்யப்பட்ட கர்மங்களாக இருந்தாலும் ஏற்றுக்கொண்டு அவர்களை அருள்வான். அந்த பாவங்களை தான் சுட்டுப் பொசுக்குகிறான். ஆகையால், பாப சம்பந்தத்தினால் பரமாத்மன் தோஷங்களைக் கொண்டவன் என்று எண்ணாமல், அவன் நித்யானந்த ஸ்வரூபமானவன் என்று பெயர் பெற்றிருக்கிறான்.

**ஒடெ3யரித்த3 வனஸ்த2 ப2லக3ள**
**ப3டி3து திம்பு3வருண்டெ கண்ட3ரெ**
**ஹொடெ3து பி3ஸுடு3வரெம்ப ப4யதி3ம் நோட3லஞ்சுவரு |**
**பி3ட3தெ3 மாடு3வ கர்மக3ளு மனெ**
**மட3தி3 மக்களு ப3ந்து4க3ளு கா**
**ரொட3லனாளுக3ளெந்த3 மாத்ரதி3 ஓடுவுவு து3ரித ||34**

ஒடெயரித்த = யஜமானனால் பாதுகாக்கப்பட்ட
வனஸ்த = காட்டில் இருக்கும்
பலகள படிது திம்புவருண்டெ = மரங்களில் இருக்கும் பழங்களைத் திருடி தின்பவர்கள் உண்டா?
கண்டரெ = அந்த யஜமானன் பார்த்தால்
ஹொடெது பிசுடுவரெம்ப = அடித்து துரத்துவர் என்னும்
பயதிம் = பயத்தால்
நோடலஞ்சுவரு = அதை பார்ப்பதற்கே பயப்படுபவர்
பிடதெ மாடுவ கர்மகளு = நாம் செய்யும் கர்மங்கள்
மனெ மடதி மக்களு பந்துகளு = வீடு மனைவி மக்கள் உறவினர், இவர்கள் அனைவரும்
காரொடலன = ஜகதுதரன (ஜகத்தை தன் வயிற்றில் வைத்துக் கொண்டிருப்பவனின்)
ஆளுகளு = சேவகர்கள்
எந்த மாத்ரதி = என்று சொன்ன உடனேயே
துரித = பாபங்கள் அனைத்தும்
ஓடுவுவு = ஓடுகின்றன.

தோட்டக்காரர் ஒருவர் தன் தோட்டத்தில் இருக்கும் மரங்களை காத்து வந்தால், அந்த மரங்களில் இருக்கும் பழங்களை திருடித் தின்பதற்கு அனைவரும் பயப்படுவார்கள். தாம் அவற்றை திருடுவதைப் தோட்டக்காரர் பார்த்துவிட்டால், அடித்து துரத்துவார் என்கிற பயத்தால் அதை பார்ப்பதற்கே பயப்படுவார்கள். அதைப்போலவே, நாம் செய்யும் கர்மங்கள், நம் வீடு, மனைவி, மக்கள், உறவினர்கள் என அனைத்துமே பரமாத்மனின் சேவகர்களே என்று நினைத்து சர்வ சமர்ப்பணம் செய்தால், நமக்கு எதிரிகளான பாவங்கள் அனைத்தும் ஓடிப் போகின்றன.

**ஞான கர்மேந்தி3ரியளிந்தே3**
**நேனு மாடு3வ கர்மக3ள ல**
**குமி நிவாஸனிக3ர்ப்பிஸுதலிரு காலகாலத3லி |**

**ப்ராணபதி கைகொண்டு³ நானா**
**யோனியைதி³ஸனொம்மெ கொட³தி³ரெ³**
**தா³னவரு ஸெளெதொ³ய்வரெல்லா புண்யராஷிக³ள ||35**

ஞான கர்மேந்திரியங்களிந்த = ஞானேந்திரியங்களால், கர்மேந்திரியங்களால்
ஏனு மாடுவ கர்மகள = செய்யும் அனைத்து கர்மங்களும்
காலகாலதலி = அந்தந்த காலங்களில்
லகுமி நிவாசனிகெ = லட்சுமிபதியான ஸ்ரீஹரிக்கு
அர்ப்பிசுதலிரு = அர்ப்பித்து வா
ப்ராணபதி = ப்ராணேஷனான ஸ்ரீஹரி
கைகொண்டு = அவற்றை ஏற்றுக்கொண்டு
நானா யோனி= அனேக வித பிறவிகளை
ஐதிஸலு = கிடைக்காதவாறு பார்த்துக் கொள்வான்
ஒம்மெ கொடதிரெ = ஒரு வேளை அந்த கர்மங்களை நாம் அவனுக்கு அர்ப்பிக்காவிடில்
எல்லா புண்யராசிகள = நாம் செய்யும் அனைத்து புண்ய ராசிகளையும்
தானவரு = அசுரர்கள்
செளெதொய்வரு = அபகரித்துவிடுவர்.

கண் முதலான ஞானேந்திரியங்களால், கை கால் முதலான கர்மேந்திரியங்களால் நாம் செய்யும் அனைத்து கர்மங்களையும் அந்தந்த காலத்திலேயே பரமாத்மனுக்கு அர்ப்பிக்க வேண்டும். அப்படி செய்தால், பரமாத்மன் அவற்றை ஏற்றுக்கொண்டு நமக்கு மறுபிறவி இல்லாதவாறு பார்த்துக் கொள்வான். ஒரு வேளை நாம் அப்படி அவனுக்கு அவற்றை சமர்ப்பிக்காவிடில், நாம் செய்த புண்யராசிகளை தைத்யர்கள் அபகரித்துவிடுவர்.

**ஸ்ருதிய ஸ்ம்ருத்யர்த்த²வ திளித³ஹ**
**ம்மதி³ விஷிஷ்டனு கர்ம மாட³லு**
**ப்ரதிக்ரஹிச பாபக³ள கொடு³திப்ப நித்ய ஹரி ।**
**சதுரத³ஷ பு⁴வனாதி³ப க்ரது**
**க்ருத க்ருதக்⁴ன நியாமகனெனெ**
**மதிய ப்⁴ரம்ஷ ப்ரமாத³ ஸங்கடதோ³ஷவவகி³ல்ல ||36**

ஸ்ருதி = வேதார்த்தங்கள்
ஸ்ம்ருத்யர்த்தவ = புராண வாக்கியங்களின் அர்த்தங்களை
திளிது = அறிந்துகொண்டு
அஹம் மதி விசிஷ்டனு = நான் எனது என்னும் அறிவு கொண்டவன்
கர்ம மாடலு = சத்கர்மங்களை செய்தாலும்
ப்ரதிக்ரஹிஸலு = பரமாத்மன் அவற்றை ஏற்றுக் கொள்ளமாட்டான்
நித்யதலி = எப்போதும்
பாபகள = சஜ்ஜனர்கள் செய்யும் பாவங்களை
கொடுதிப்ப = இவர்களுக்கு கொடுப்பான்

சதுரதஷ புவனாதிபதி = 14 உலகங்களுக்கும் அதிபதியான
க்ரது = யக்ஞ நாமகனான ஸ்ரீஹரி
க்ருத = சத்கர்மங்களை செய்த புருஷனுக்கும்
க்ருதக்ஞ = இந்த புருஷனால் உதவி பெற்றேன் என்று அறிந்தவனுக்கும்
நியாமகனு = தலைவன்
எனெ = என்று நினைத்தால்
மதிப்ரம்ஷ = புத்தி கெட்டு
ப்ரமாத = அன்யதா ஞானம் பிறப்பது
ஸங்கட = அதனால் வரும் துக்கங்கள்
தோஷவு = இதே முதலான தோஷங்கள்
இவகில்ல = இவனுக்கு இல்லை.

ஸ்ருதி, ஸ்ம்ருதி இவற்றின் அர்த்தங்களை தான் அறிந்து, அதனை மற்றவர்களுக்கு போதனை செய்யக்கூடிய சக்தியைக் கொண்டிருந்தாலும், தான், தனது என்னும் அபிமானத்தை விடாதவன், எந்த சத்கர்மங்களை செய்தாலும், அவற்றை சத்கர்மங்கள் என்று பரமாத்மன் ஒப்புக்கொள்வதில்லை. ஆகையால், அந்த புண்ய கர்மங்களுக்கு பலன்கள் இல்லை மற்றும் சஜ்ஜனர்களிடம் இருக்கும் பாபங்களை மட்டும் இவனுக்கே கொடுக்கிறான்.

14 உலகங்களுக்கும் தலைவனான, யக்ஞ நாமகனான ஸ்ரீஹரி, சத்கர்மங்களை செய்பவனும், செய்விப்பவனும் - இவர்கள் அனைவரிலும் நின்று, அவற்றை செய்து, செய்விக்கிறான் என்று உபாசனை செய்பவர்களுக்கு எப்போதும் அறிவு கெடுவதில்லை. தவறான ஞானம் பிறப்பதில்லை. எந்தவிதமான சங்கடங்களும் வருவதில்லை.

க்ருத, க்ருதக்ஞ என்னும் இரு சொற்களுக்கு அர்த்தம்: க்ருத என்றால் செய்யப்பட்ட என்று பொருள். சத்கர்மங்களை, செய்பவன் என்று அர்த்தம். இத்தகைய சத்கர்மங்களை செய்பவன் பரமாத்மனின் ஆணையின்படியே செய்கிறான் என்று அறிபவனே, க்ருதக்ஞன் எனப்படுகிறான். அந்த ஞானம் வரவேண்டுமானாலும், பகவத் அருளாலேயே வருகிறது என்று அறிந்து உபாசனை செய்ய வேண்டும்.

**வாரிஜாஸன முக்$^{2}$யராக்ஞா**
**தா$^{4}$ரகரு ஸர்வ ஸ்வதந்த்ர ர**
**மாரமண நெந்த$^{3}$ரிது இஷ்டானிஷ்ட கர்மப$^{2}$ல**
**ஸாரபோ$^{3}$க்தனி க$^{3}$ர்ப்பிஸலு ஸ்வீ**
**கார மாடு$^{3}$வ பாபப$^{2}$லவ கு**
**பே$^{3}$ர நாமக தை$^{3}$த்யரிகெ$^{3}$ கொட்டவர நோயிஸுவ ||37**

வாரிஜாஸன முக்யரு = பிரம்மதேவரே முதலானவர்கள்
ஆக்ஞாதாரகரு = பரமாத்மனின் ஆணையின்படி நடப்பவர்கள்
ரமாரமணனு = லட்சுமிதேவியருக்கு மகிழ்ச்சியைக் கொடுக்கும் ஸ்ரீபரமாத்மன்
சர்வஸ்வதந்த்ரன் = ஸ்வதந்த்ரமானவன்

எந்தரிது = என்று அறிந்து
இஷ்டானிஷ்ட கர்மபல = புண்ய பாப கர்மங்களின் பலன்களை
ஸாரபோக்தனிகெ = பலன்களின் சாரத்தை உண்ணும் ஸ்ரீஹரிக்கு
அர்ப்பிஸலு = அர்ப்பித்தால்
ஸ்வீகார மாடுவ = அதனை ஏற்றுக் கொள்கிறான்
குபேரனாமக = குபேரன் என்னும் பெயருள்ள ஸ்ரீஹரி
பாபபல = பாப பலன்களை
தைத்யரிகெ கொட்டு = தைத்யர்களுக்குக் கொடுத்து
அவர நோயிசுவ = அவர்களுக்கு துக்கத்தைக் கொடுக்கிறான்.

பிரம்மதேவரே முதலானவர்கள் அனைவரும் பரமாத்மனின் வசத்தில் இருந்து, அவனின் ஆணைப்படி நடந்து கொள்வர். பரமாத்மன் ஒருவனே சர்வஸ்வதந்த்ரன் என்று அறிந்து, நாம் செய்த புண்ய பாப கர்மங்களை பரமாத்மனுக்கு அர்ப்பித்தால், பரமாத்மன் அவற்றை ஏற்றுக்கொண்டு புண்ய பலன்களின் சாரத்தை தான் உண்டு, அதை தனக்கு அர்ப்பித்தவர்களுக்கு பலன்களை இரு மடங்காக்கிக் கொடுத்து சுகப்படுத்துவான். குபேரன் என்னும் பெயருள்ள பரமாத்மன், தனக்கு அர்ப்பித்த பாப பலன்களை தைத்யர்களுக்குக் கொடுத்து அவர்களை துக்கப்படுத்துவான்.

**க்ரூர தை$^3$த்யரொளித்து$^3$ தானே**
**ப்ரேரிஸுவ காரணதி$^3$ ஹரிகெ$^3$ கு**
**பே$^3$ரனெம்ப$^3$ரு எல்லரொளு நிர்க$^3$ரதிகெ$^3$ நிருத ।**
**ஸூரிக$^3$ம்யகெ$^3$ ஸூர்யனெம்ப$^3$ரு**
**தூ$^3$ரஷோககெ$^3$ ஷுக்லலிங்க$^3$ ஷ**
**ரீரவில்லத$^3$ காரணத$^3$லி அகாயனெனிஸுவனு ।।38**

க்ரூர தைத்யரொளித்து = தைத்யர்களில் இருந்துகொண்டு
தானே = தான்
ப்ரேரிசுவ காரணதி = தானே வழிநடத்தும் காரணத்தால்
ஹரிகெ = ஸ்ரீஹரியை
குபேரனெம்பரு = குபேரன் என்று அழைக்கிறார்கள்
எல்லரொளு = அனைவரிலும்
நிர்கதரதிகெ = எப்போதும் பிரவேசம் செய்யும் யோக்யதை உள்ளவன் ஆகையால்
நிருத = அவனுக்கு நிருத என்று பெயர்.
சூரிகம்யகெ = ஞானிகளால் அறியப்படும் ஸ்வரூப உள்ளவன் ஆகையால்; அல்லது, ஞானிகளால் அடையப்படும் ஸ்தானம் உள்ளவனாகையால்
சூர்யனெம்பரு = சூரியன் என்று பெயர் இருக்கிறது
தூரஷோககெ = சோகங்கள் இல்லாதவனுக்கு; அல்லது, சோகங்களையே காணாதவனுக்கு
சுக்லலிங்க சரிரவில்லத காரணதலி = (ப்ரக்ருதியிலிருந்து வரும் ஸ்தூல சரீரம் இல்லாதவன்) - சுக்ல, லிங்க சரீரங்கள் இல்லாத காரணத்தால்,
அகாயனெனிஸுவனு = அகாய (சரீரம் இல்லாதவன்) என்ற பெயர் பெறுகிறான்.

க்ரூரர்களான தைத்யர்களில் இருந்து, பாபங்களை செய்ய முடிவெடுத்ததால் ‘குமதேரீரணாத் குபேர:’ என்னும் இலக்கணத்தால், ஸ்ரீஹரிக்கு குபேரன் என்று பெயர். ‘ஸூரிகம்யத்வாத் ஸூர்ய:’ ஞானிகளால் அடையப்படும் ஸ்தானத்தைக் கொண்டவன் ஆகையால் சூர்யன் என்று பெயர். ‘சுக்லந்தச்சோகராஹித்யாத்’ என்னும் ஆதாரத்தால், சோகங்கள் இல்லாதவன் ஆகையால், சுக்ல என்று பெயர். ‘ஆகாஷோ லிங்கவர்ஜனாத்’ என்னும் பிரமாணத்தால் லிங்கசரீர இல்லாத காரணத்தால், அகாய என்று பெயர்.

ஈசாவாஸ்ய உபநிஷத் பாஷ்யத்தின் ஆதாரத்தின் பெயரில் தாசார்யர் இந்த பெயர்களை சொல்லியிருக்கிறார் என்று அறியவேண்டும்.

**பேளலொஷவல்லத$^3$ மஹா பா**
**பாளிக$^3$ளனொந்தெ$^3$ க்ஷணதி$^3$ நி**
**ர்மூலகை$^3$ஸலிபே$^3$கு எம்பு$^3$வகொ$^3$ந்தெ$^3$ ஹரி நாம ।**
**நாலிகெ$^3$யொளுள்ளவகெ$^3$ பரமக்ரு**
**பாலு க்ருஷ்ணனு கைபிடி$^3$து$^3$ த**
**ன்னாலய தொ$^3$ளிட்டனுதி$^3$னதி$^3$ ஆனந்த$^3$ ப$^3$டி$^3$ஸுவனு ||39**

பேளலொஷவல்லத = சொல்வதற்கு சாத்தியமில்லாத
மஹா பாபாளிகள = பக்தர்களால் செய்யப்படும் மிகப்பெரிய பாவங்களை
ஒந்தேக்ஷணதி = ஒரே நொடியில்
நிர்மூலகைஸலு பேகு = அழிக்கப்பட வேண்டும்
எம்புவகெ = என்று விரும்புபவனுக்கு
ஹரி நாம ஒந்தே = ஹரி நாமம் ஒன்றே (முக்கிய சாதனம் ஆகும்)
நாலிகெயொளுள்ளவகெ = இந்த ஹரி நாமம் தன் நாக்கில் இருப்பவனுக்கு; அதாவது, ஹரி நாமஸ்மரணையை எப்போதும் செய்துகொண்டிருப்பவனுக்கு
பரமக்ருபாளு = பரம கருணாளுவான ஸ்ரீகிருஷ்ணன்
கைபிடிது = கையைப் பிடித்து
தன்னாலயதொளு = தன் இருப்பிடமான வைகுண்டத்தில்
இட்டு = வைத்து
அனுதினதி = தினந்தோறும் (எப்போதும்)
ஆனந்த படிசுவனு = மகிழ்ச்சிப்படுத்துவான்.

இவன் எவ்வளவு பாவங்களை செய்திருக்கிறான் என்று சொல்வதற்குக்கூட சாத்தியம் இல்லாத அளவிற்கு பாவங்களை செய்திருந்தாலும், அந்த அனைத்து பாவங்களையும் அழித்துவிட வேண்டும் என்னும் விருப்பத்தால், பச்சாதாபம் கொண்டு பகவன் நாமங்களை வாயில் உச்சரித்தால், அதே நொடியில், அனைத்து பாவங்களும் சுட்டுப் போகின்றன. பாகவத 6ம் ஸ்கந்தம் 2ம் அத்தியாயம் 9ம் ஸ்லோகத்தில்:

ஸ்தேன: ஸுராபோ மித்ரத்ருக் ப்ரம்ம ஹாகுரு தல்பக: ।

ஸ்த்ரீராஜ பித்ருகோஹந்தா யே ச பாதகினோ பரே ||

ஸர்வேஷாமப்ய கவதாமித மேவ ஸுனிஷ்க்ருதம் ||

என்று சொல்லியிருக்கின்றனர். பிரம்மஹத்யா முதலான பஞ்ச மஹாபாதகங்கள், மற்றும் பித்ரு ஹத்யா முதலான அனைத்து பாவங்களுக்கும் நாராயண ஸ்மரணையே பிராயச்சித்தம் என்று சொல்லியிருக்கின்றனர். ஆகையால், எவனொருவன் எப்போதும் பகவன் நாமோச்சாரணையை செய்து வருகிறானோ, அவனை கருணைக்கடலான ஸ்ரீபரமாத்மன், கை பிடித்து தன் உலகத்தில், முக்த ஸ்தானத்தில் வைத்து, எப்போதும் நிரந்தரமான சுகத்தைக் கொடுக்கிறான்.

**ரோகி$^{3}$ ஔஷத$^{4}$ பத்$^{2}$யதி$^{3}$ந்த$^{3}$ நி**
**ரோகி$^{3}$ யெனிஸுவதெரதி$^{3}$ ஸ்ரீம**
**த்$^{3}$பா$^{4}$க$^{3}$வத ஸுஸ்ரவணகை$^{3}$து$^{3}$ ப$^{4}$வாக்$^{2}$ய ரோக$^{3}$வனு |**
**நீகி$^{3}$ ஷப்தாத்$^{3}$யகி$^{2}$ல விஷய நி**
**யோகி$^{3}$ஸு த$^{3}$ஷேந்த்$^{3}$ரியவனிலனொளு**
**ஸ்ரீகு$^{3}$ரு ஜகன்னாத$^{2}$விட்ட$^{2}$ல ப்ரீதனாகு$^{3}$வனு ||40**

ரோகி = நோய் உள்ளவன்
ஔஷத பத்யதிந்த = மருந்து எடுத்துக் கொள்வதால்
நிரோகி எனிசுவ தெரதி = நோய் இல்லாதவன் என்று அழைக்கப்படுகிறான் (அவன் நோய் தீர்கிறது). அதைப்போல,
ஸ்ரீமத்பாகவத,
சுஸ்ரவணகைது = நன்றாக கேட்டு
பவாக்ய ரோகவனு = சம்சாரம் என்னும் நோயினை
நீகி = போக்கிக்கொண்டு
ஷப்தாத்யகில = ஷப்த, ஸ்பர்ஷ முதலான
தஷேந்த்ரிய = ஞானேந்திரிய, கர்மேந்திரியங்களால் செய்யும்
விஷய = விஷயங்களை
அனிலனொளு = ஸ்ரீபாரதிரமண முக்யபிராணரில்
நியோகிஸு = முக்யபிராணதேவரே நமக்குள் இருந்து செய்விக்கிறார் என்று அறிந்து, முக்யபிராணாந்தர்கத பரமாத்மனுக்கு அர்ப்பித்து வா.
ஸ்ரீகுரு = சர்வ ஜகத்குருவான
ஜகன்னாதவிட்டலனு,
ப்ரீதனாகுவனு = மகிழ்வான்.

நோயால் கஷ்டப்படும் நோயாளி ஒருவன், மருந்தினை எடுத்துக்கொண்டு அந்த நோயை போக்கிக் கொள்கிறான். அதுபோலவே, சம்சாரம் என்னும் நோயை போக்குவதற்கு மருந்து - பாகவத ஸ்ரவணம். ஆகவே, அதை நன்றாகக் கேட்டு, சம்சார நோயினை போக்கிக் கொள்ளவேண்டும். ஞானேந்திரியங்கள், கர்மேந்திரியங்களால் செய்யும் கர்மங்களை, ஸ்ரீபாரதிரமண முக்யபிராணாந்தர்கத பரமாத்மனுக்கு அர்ப்பித்தால், ஸ்ரீஜகன்னாதவிட்டலன் மகிழ்கிறான்.

க்ரீடாவிலாஸ சந்தி என்னும் 18ம் சந்தியின் தாத்பர்யம் இத்துடன் முடிந்தது.

ஸ்ரீகிருஷ்ணார்ப்பணமஸ்து

***

## பாவபிரகாசிகை : சந்தி 19 : கர்ம விமோசன சந்தி

**/ ஸ்தோத்திர பிரகரண சந்தி**

**ஹறிகதா2ம்ருதசார கு3ருக3ள**
**கருணதிந்தா3பநிது பே1ளுவே**
**பரம ப4கவத்3ப4க்தரித3னாத3ரதி கேளுவுது3**

இந்த சந்தியில், மனிதர்கள் செய்யும் துஷ்கர்மங்களை பரிகாரம் செய்வதற்குத் தேவையான முக்கிய சாதனையை சொல்லியவாறு, முதலில் கர்மத்தை செய்விப்பவன் யார்? எந்தெந்த ரூபங்களால் பரமாத்மன் கர்மங்களை செய்விக்கிறான் என்னும் விஷய ஞானம் நமக்கு அவசியமாகையால், அனைத்து சேதனர்களில் வியாப்தனாக இருக்கும் பகவத்ரூபங்களை இந்த பத்யத்தில் சொல்கிறார்:

**மூல நாராயணனு மாயா**
**லோலனந்தா வதார நாமக**
**வ்யாலரூப ஜயாரமணனாவேஷ னெனிஸுவனு ।**
**லீலெகை3வானந்த சேதன**
**ஜாலதொ3ளு ப்ரத்4யும்ன பி3ரம்மா**
**ண்டா3லயத3 ஒளஹொரகு3 நெலெஸிஹ ஷாந்தி அனிருத்3த4 ।।1**

மூல நாராயணனு = அனைத்து உலகங்களுக்கும் மூலரூபனான நாராயணன்
மாயாலோல = மாயா நாமக லட்சுமிதேவியின் கணவனான வாசுதேவன்
அனந்தாவதார நாமக = அனந்தாவதாரங்களுக்கு பீஜமாக இருப்பவன்
வ்யாளரூப = சர்ப்பத்தின் உருவத்தைக் கொண்டவன்
ஜயாரமணனு = ஜயா நாமகளான லட்சுமிதேவியின் பதியான சங்கர்ஷணன்
ஆவேஷனெனிஸுவனு = அனைத்து சேதனர்களில் ஆவிஷ்ட நாமகத்தால் ஆவேஷ எனப்படுபவன்
அனந்த சேதன ஜாலதொளு = அனந்தானந்த ஜீவர்களில்
ப்ரத்யும்ன = பிரத்யும்ன ரூபி
லீலெகெய்வ = கர்மங்களை செய்து செய்வித்து லீலைகளை செய்கிறான்
ஷாந்தியனிருத்த = ஷாந்தி ரமணனான அனிருத்தன்
பிரம்மாண்டாலயத = பிரம்மாண்டம் என்னும் வீட்டின்
ஒள ஹொரகெ = உள்ளும் வெளியேயும்
நெலஸிஹ = நிலைத்திருக்கிறான்.

பிரளய காலத்தில் ஸ்ரீமன் நாராயணன், லட்சுமி சமேதனாக ஒரே ரூபத்தில் இருக்கிறான். அவனே உலகத்திற்கு மூல காரணனாக இருக்கிறான். ஸ்ருஷ்டி

காலத்தில் வாசுதேவ, சங்கர்ஷண, ப்ரத்யும்ன, அனிருத்த என்னும் 4 ரூபங்களை தரிக்கிறான். இந்த 4 ரூபங்களுக்கும் மனைவியாக இருப்பதற்காக, லட்சுமிதேவியும் மாயா, ஜயா, க்ருதி, ஷாந்தி என்னும் 4 ரூபங்களை தரித்து, மேலே கூறிய வாசுதேவாதி 4 ரூபங்களுக்கு மனைவியாகிறார்.

இந்த 4 ரூபங்களில்
* மாயாபதியான வாசுதேவன், அனந்தானந்தமான பகவத் அவதாரங்களுக்கு மூலகாரணனாக இருக்கிறான்.
* ஜயா பதியான சங்கர்ஷணன், சேஷ ரூபத்தினால் சேஷாந்தர்கதனாக, அனைத்து சேதனர்களிலும் நிலைத்திருந்து அம்ஷரூபி என்று அழைத்துக் கொள்கிறான்.
* க்ருதிபதி பிரத்யும்னன் அனைத்து சேதனர்களில் இருந்து, நானாவித கர்மங்களை செய்து செய்வித்து லீலைகளை செய்கிறான்.
* பிரம்மாண்டத்தின் உள்ளும் வெளியேயும் சாந்திபதியான அனிருத்தன் வசிக்கிறான்.

**ஐது$^{3}$ காரணரூப இப்ப**
**த்தைது$^{3}$ கார்யக$^{3}$ளெனிஸுவுவு ஆ**
**ரைது$^{3}$ ரூபதி$^{3}$ ரமிஸுதிப்பனு ஈ சராசரதி$^{3}$ |**
**பே$^{4}$த$^{3}$வர்ஜித$^{3}$ மூர்ஜக$^{3}$ஜ்ஜ**
**ன்மாதி$^{3}$ காரண முக்திதா$^{3}$யக$^{3}$**
**ஸ்வோத$^{3}$ரதொ$^{3}$ ளிட்டெல்லரனு ஸந்தெயிப ஸர்வக்$^{3}$ஞ ||2**

ஐது காரணரூப = மேலே பார்த்த நாராயணாதி 5 ரூபங்கள், உலகிற்கு காரணரூபங்களாக இருக்கின்றன.
இப்பத்தைது கார்யகளெனிஸுவுவு = இந்த நாராயணாதி 5 ரூபங்களில் ஒவ்வொரு ரூபத்தில் 5-5 ரூபங்களால்;

அதாவது, நாராயணனில்,
* நாராயண நாராயண
* நாராயண வாசுதேவ
* நாராயண சங்கர்ஷண
* நாராயண ப்ரத்யும்ன
* நாராயண அனிருத்த என்று 5 ரூபங்கள்.

இதைப்போல வாசுதேவாதி 4 ரூபங்களிலும்,
* வாசுதேவ நாராயண
* வாசுதேவ வாசுதேவ
* வாசுதேவ சங்கர்ஷண
* வாசுதேவ ப்ரத்யும்ன
* வாசுதேவ அனிருத்த ;

இதேபோல 5 ரூபங்களிலும், 5-5 ரூபங்கள் என்று மொத்தம் 25 ரூபங்கள், கார்ய ரூபமான ஜகத்தில் கார்ய ரூபங்களாக இருக்கின்றன.

ஈ சராசரதி = சராசரங்கள் நிறைந்த இந்த பிரபஞ்சத்தில்
ஆரைது ரூபதி = காரண ரூபங்கள் 5; காரிய ரூபங்கள் 25, என மொத்தம் 30 ரூபங்கள்
ரமிஸுதிப்பனு = அனைத்து இடங்களிலும் வியாப்தனாகி லீலைகளை செய்கிறான்
பேதவர்ஜித = இந்த ரூபங்களில் ஒன்றுக்கொன்று பேதங்கள் இல்லாதவன்
மூஜக ஜன்மாதிகாரண = இந்த மூன்று உலகத்து ஸ்ருஷ்டியாதிகளுக்கு காரணன்
முக்திதாயக = முக்தியைக் கொடுப்பவன்
ஸர்வக்ஞ = அனைத்தும் அறிந்தவன். இத்தகைய ஸ்வாமி
ஸ்வோததொளிட்டு எல்லரனு = அனைவரையும் தன் வயிற்றில் வைத்துக்கொண்டு
ஸந்தெயிப = காப்பாற்றுகிறான்.

முந்தைய பத்யத்தில் கூறிய நாராயண, வாசுதேவ, சங்கர்ஷண, பிரத்யும்ன, அனிருத்த என்னும் 5 ரூபங்கள் காரண ரூபங்கள் எனப்படுபவை. பானை செய்வதற்கு எப்படி மண் தேவையோ அப்படியே, ஜகத் ஸ்ருஷ்டிக்கு இந்த ரூபங்கள் காரணம் ஆனவை. நாராயணாதி ஒவ்வொரு ரூபத்திலும் நாராயணாதி 5 ரூபங்கள் இருந்து கார்ய ரூபமான ஜகத்தில், கார்ய ரூபங்களாக இருக்கின்றன. அதாவது, நாராயணாதி 5 காரண ரூபத்தின் ஒவ்வொன்றிலும், 5-5 என, காரிய ரூபங்கள் 25; இப்படி மொத்தம் 30 ரூபங்களால், பிரபஞ்சத்தில் வியாப்தனாகி ஆனந்தப்படுகிறான்.

இந்த அனைத்து ரூபங்களுக்கும் பேதம் இல்லாதவன். அதாவது, குண பேதங்கள் இல்லாதவன். ரூப, நாம பேதங்கள் மட்டும் உண்டு. தங்கத்தால் பல்வேறு வித ஆபரணங்களை செய்தால், அந்த ஆபரணங்களின் ரூப, நாம பேதங்கள் மட்டுமே இருக்குமே தவிர, தங்கத்தில் எப்படி பேதம் இருப்பதில்லையோ, அப்படியே, மூலரூப அம்ச ரூப முதலான காரண கார்ய ரூபங்களுக்கோ, ராம, கிருஷ்ண, மத்ஸ்ய, கூர்ம முதலான அவதார ரூபங்களுக்கோ ரூப பேதத்தினால், நாம பேதம் மட்டும் இருக்கிறதே தவிர, ஆனந்தாதி குணங்களில் பரஸ்பரம் பேதம் இல்லை என்று அறியவேண்டும்.

ஸ்ருஷ்ட்யாதி கர்தனு. ஆதி ஷப்தத்தினால் சங்கர்ஷணன்; சம்ஹார முதலானவற்றை செய்கிறான் என்று அறியவேண்டும். முக்தியைக் கொடுக்கிறான். அனைவரையும் தன் வயிற்றில் வைத்துக்கொண்டு பிரளய காலத்திலும் அனைத்து ஜீவர்களையும் காப்பாற்றுகிறான்.

**கார்ய காரண கர்த்ருக3ளொளு ஸ்வ**
**பா4ர்யரிந்தொ3ட3கூ3டி3 கபிலா**
**சார்ய க்ரீடி3ஸுதிப்ப தன்னொளு தானெ ஸ்வேச்செயலி |**
**ப்ரேர்ய நல்ல ரமாப்3ஜப4வ ப4வ**
**ரார்ய ரக்ஷிஸி ஸிக்ஷிஸுவனு ஸ்வ**
**வீர்யதி3ந்த3லி தி3விஜ தா3னவததிய நனுதி3னதி3 ||3**

கார்ய காரண கர்த்ருகளொளு = கார்ய வஸ்துகளிலும், கர்த்ருகளிலும்
ஸ்வபார்யரிந்தொடகூடி = தன் மனைவியர்களுடன் சேர்ந்து
கபிலாசார்ய = 'கம் சுகம் பிபதீதி கபி: காதீதி ல: லோக குருத்வாதாசார்ய: = ஸசாஸௌ கபிலாசார்ய' என்ற வாக்கியத்தால், சுகத்தை பானம் செய்வதாலும், அனைவரையும் பாதுகாப்பதாலும், பரமாத்மனுக்கு கபில என்று பெயர். பிரம்மாதிகளுக்கும் உபதேசம் செய்பவன் ஆகையால், ஆசார்ய என்று பெயர். ஆகையால், விஷ்ணு சஹஸ்ர நாமத்தில் 'மஹர்ஷி: கபிலாசார்ய:' என்று வந்திருக்கிறது.
தன்னொளு தானே = தனக்குள் தானே
ஸ்வேச்செயலி = தன் விருப்பப்படி
க்ரீடிசுதிப்ப = லீலைகளை செய்கிறான்
ப்ரேர்யனல்ல = தான் அனைவருக்கும் ப்ரேரகனே தவிர, ப்ரேர்யன் அல்ல; அதாவது அவனுக்கு யாரும் தேவையில்லை
ரமாப்ஜபவ பவர = ரமாதேவி, பிரம்மதேவர், ருத்ரர் இவர்களுக்கு
ஆர்ய = பெரியவன் என்று அழைத்துக்கொண்டு
ஸ்வவீர்யதிந்தலி = தனது சாமர்த்தியத்தாலேயே
திவிஜ = தேவதைகள்
தானவ = தைத்யர்கள்
ததிய = சமூகத்தை
தினதினதி = எப்போதும் காப்பாற்றி திருத்துகிறான். தேவர்கள் குழுவை காப்பாற்றுகிறான். தைத்ய குழுவை திருத்துகிறான் என்று அர்த்தம்.

கார்யமான ஒவ்வொரு பதார்த்தங்களுக்கும், காரண கர்த்ருகள் இருந்தே இருக்கிறார்கள்.
* பானை காரியம் இதற்கு மண் காரணம். குயவன் கர்தா. அவன் பயன்படுத்தும் குச்சி - உபகாரணம்.
* மக்களுக்கு ரேதஸ் காரணம். ஸ்த்ரி உப-காரணம். புருஷன் கர்தா.
என சிந்திக்க வேண்டும்.

இப்படியாக கார்ய வஸ்து, காரண வஸ்து, கர்த்ருகள் இவர்களில் இருந்து, ஸ்ரீஹரி தன் விருப்பப்படி லீலைகளை செய்கிறான். பிரம்மாதி அனைவருக்கும் தானே தலைவன். தனக்கு தலைவன் என்று யாரும் இல்லை. லட்சுமி, பிரம்மா, வாயு, ருத்ர ஆகியோருக்கு ஸ்வாமி என்று அழைத்துக்கொள்ளும் ஸ்ரீஹரி, தேவர்கள் குழுவை காப்பாற்றியவாறும், தைத்யர்கள் குழுவை தண்டித்தவாறும் தன் லீலைகளை செய்கிறான்.

**ஈ ஸமஸ்த ஜக3த்தினொளகா3**
**காஷதோ3லிருதிப்ப வ்யாப்தா**
**வேஷ அவதாரந்த ராத்மகனாகி3 பரமாத்ம |**
**நாஷரஹித ஜக3த்தினொளகா3வ**
**காஷதனு தானாகி3 யோகி3**
**ஷாஷயஸ்தி2த தன்னொ ளெல்லரனிட்டு ஸலஹுவனு ||4**

ஈ சமஸ்த ஜகத்தினொளகெ = இந்த அனைத்து பிரபஞ்சங்களில் இருக்கும் ; பிரம்மதேவர் முதற்கொண்டு கிருமி வரை அனைத்து சேதனர்களிலும் இருந்து; பானை முதலான ஜட பொருட்களிலும் இருந்து
ஆகாஷதொளு = இடம் இருக்கும் அனைத்து பொருட்களிலும் (ஜடமான தண்ணீர் முதலானவற்றையும் எடுத்துக் கொள்ளவேண்டும்), இப்படி அனைத்து இடங்களிலும்
வியாப்த = வியாப்தனாகவும்
ஆவேஷனு = ஆவேச ரூபத்தினாலும்
அவதார = அவதார ரூபனாகவும்
அந்தராத்மனாகி = அந்தர்யாமி ரூபனாகவும்
நாஷரஹித = ஜீவர்களைப் போல ஸ்தூல தேக நாசமாகட்டும், லிங்கதேக பங்கமாகட்டும், இல்லாதவன்
யோகீஷாஷயஸ்தித = யோகிகளின் ஹ்ருதயாகாஷங்களில் வசிப்பவனான ஸ்ரீபரமாத்மன்
ஜகத்தினொளகெ = உலகத்தில்
அவகாஷதனு தானாகி = அனைத்து பிராணிகளுக்கும் வசிப்பதற்கு அவகாசம் கொடுப்பவனாக
எல்லர = அனைத்து பிராணிகளையும்
தன்னொளகிட்டு = தனக்குள் வைத்துக்கொண்டு
சலஹுவனு = காப்பாற்றுகிறான்.

* தண்ணீர், ஆகாயம், மலை முதலான ஜடங்களிலும், பிரம்மதேவரில் துவங்கி, கிருமி வரையிலான ஜீவர்களிலும், எல்லா சேதனர்களிலும், தத்ரூப, ததாகாரமாக வியாபித்திருக்கும் ரூபத்திற்கு, வியாப்தரூபம் என்று பெயர்.
* பலராம, ப்ரத்யும்ன, ஸாம்ப ஆகியோரில் நிலைத்திருக்கும் ஸ்ரீஹரியின் பின்னாம்சர்களுக்கு ஆவேச ரூபங்கள் என்று பெயர்.
* ராம, கிருஷ்ணர்கள் அவதார ரூபங்கள்
* அனைத்து பிராணிகளிலும் அந்தர்யாமியாக இருக்கும் ரூபம் அந்தராத்மக ரூபம்.

இப்படி 4 விதங்களில், இந்த உலகத்தில் அனைத்து இடங்களிலும் வியாபித்திருக்கிறான். ஆனாலும், யாரின் கண்களுக்கும் தெரியமாட்டான். கண்ணுக்குத் தெரியாததால், ஏன் இல்லை என்று சொல்லக்கூடாது என்றால், 'யோகிஷாஷய ஸ்திதன்' என்றார்கள். யோகிகள் தம் ஹ்ருதயாகாஷங்களில் பரமாத்மனை பார்க்கிறார்கள். நாம் காணாததால் பரமாத்மனே இல்லை என்று சொல்லலாமா? இந்திய நாட்டின் சக்ரவர்த்தியை நாம் பார்க்காததால், சக்ரவர்த்தியே இல்லை என்று சொல்லாமா? அவரை பார்த்திருப்பவர்கள் பலர் இருப்பதால், அப்படி சொல்லமுடியாது. சக்ரவர்த்தியை பார்க்கவேண்டுமெனில், அதற்குத் தக்க முயற்சியை எடுக்க வேண்டும். அதுபோலவே, பரமாத்மனை பார்ப்பதற்குத் தேவையான தபஸ் முதலானவற்றை செய்து, சாதனைகளை செய்யவேண்டும் என்பது கருத்து.

நாசம் இல்லாதவன் என்றால் ஜீவனுக்கும் நாசம் இல்லை. பரமாத்மனுக்கும் நாசம் இல்லை. பரமாத்மனிடம் இதில் விசேஷம் என்னவென்றால், ஜீவனுக்கு நாசம் இல்லையென்றாலும், அவனுக்கு வரக்கூடிய ஸ்தூல சரீரங்களுக்கு நாசம் உண்டு. இறுதியில் லிங்க சரீரம் பங்கம் ஆகிறது. பரமாத்மனுக்கு இத்தகைய நாசங்களும் இல்லை. பரமாத்மனின் சரீரத்திற்கும், பரமாத்மனுக்கும் பேதம் இல்லை. ஜீவருக்கும் ஜட தேகங்களுக்கும் பேதம் உண்டு. ஆகையால், ஜீவருக்கு தேக நாசம் உண்டு. பரமாத்மனுக்கு அது இல்லை. இத்தகைய ஶ்ரீபரமாத்மன் அனைவருக்கும் தனக்குள் வசிப்பதற்கு அவகாசம் செய்து கொடுத்து, அவர்களை காப்பாற்றுகிறான்.

**தா3ரு பாஷாணக3த பாவக**
**பே3ரே பே3ரிப்பந்தெ காரண**
**கார்யக3ள வொளகி3த்து காரண கார்யனெந்தெ3னிஸி ।**
**தோரிகொள்ளதெ3 எல்லரொளு வ்யா**
**பார மாடு3வ யோக்3யதெக3ளனு**
**ஸார ப2லக3ளனுணிஸி ஸந்தெயிஸுவ க்ருபாஸாந்த்3ர ॥5**

தாரு = கட்டைக்குள்ளும்
பாஷாணகத = கற்களுக்குள்ளும் இருக்கும்
பாவக = அக்னி
பேரெபேரிப்பந்தெ = வெவ்வேறாக இருப்பதைப்போல
காரண = காரண வஸ்துகள்
கார்யகள = கார்ய வஸ்துகள்
இவுகள = இவற்றின்
ஒளகித்து = உள்ளே இருந்து
காரண கார்யனெந்தெனிஸி = தானே காரணன், தானே கார்ய என்று சொல்லிக்கொண்டு
தோரிகொள்ளதே = யார் கண்ணிற்கும் தெரியாமல்
க்ருபாசாந்த்ர = தயாபூர்ணனான ஶ்ரீஹரி
எல்லரொளு = அனைவரிலும்
வியாபார மாடுவ = எல்லா காரியங்களையும் செய்து செய்விக்கிறான்
யோக்யதெகளனுசார = அவரவர்களின் யோக்யதைகளுக்கேற்ப
பலகளனுணிஸி = பலன்களை அவர்களுக்குக் கொடுத்து
சந்தெயிஸுவ = காப்பாற்றுகிறான்.

கட்டைகளிலும், கற்களிலும் நெருப்பு இருக்கிறது. ஆனால் அது அனைவருக்கும் தெரிவதில்லை. காஷ்டத்தை மதனம் செய்தால் நெருப்பு தெரிகிறது. இரு கற்களை தேய்த்தால் நெருப்பு வருகிறது. இவற்றில் கட்டை காரண. அக்னி கார்ய. இதைப் போலவே, கல் காரண. அக்னி கார்ய. இந்த இரு நெருப்புகளுக்கு பரஸ்பர பேதம் இல்லை. காரண வஸ்து வேறு, கார்ய வஸ்து வேறு என தெரிகிறது. கட்டையில் இருக்கும் நெருப்பு, அந்த கட்டைக்கு சம்பந்தப்படாமல் எப்படி வேறுபட்டு

இருக்கிறதோ, அப்படியே பரமாத்மனும், காரண கார்ய வஸ்துகளில் நிர்லிப்தனாக இருக்கிறான்.

கட்டையில் இருக்கும் நெருப்பை யாரும் பார்க்கமுடிவதில்லை. மதனம் செய்தாலே அது தெரியவருகிறது. அதைப்போலவே, பரமாத்மனை யாரும் பார்க்கமுடிவதில்லை. யோகிகள் யோகத்தில் அமர்ந்து தங்களின் ஹ்ருதயாகாஷத்தில் அவனை காண்கின்றனர்.

இப்படியாக ஒவ்வொரு காரண வஸ்துவிலும், கார்ய வஸ்துவிலும், அந்தந்த உருவத்தைப் பெற்று, அந்த பெயரால் அழைக்கப்பட்டு, அவரவர்களின் கர்மங்களை தான் செய்து, அவரிடமும் செய்விக்கிறான். அந்த கர்ம சம்பந்தமான பலன்களை, அவரவர்களின் யோக்யதைக்கேற்ப அவர்களுக்கே கொடுக்கிறான். ஆகையாலேயே, கருணாளு எனப்படுகிறான். ஜீவர்களின் நலனுக்காக, கர்மங்களை தான் செய்து, அதன் பலன்களை ஜீவருக்குக் கொடுப்பதால், கருணாபூர்ணன் என்று அவனை அழைக்கிறோம்.

**ஊர்மிக$^{3}$ளவோலிப்ப கர்ம வி**
**கர்மஜன்ய ப$^{2}$லாப$^{2}$லங்க$^{3}$ள**
**நிர்மலாத்மனு மாடி$^{3}$ மாடி$^{3}$ஸி உண்டு$^{3}$ணிஸுதிப்ப ।**
**நிர்மம நிராமய நிராஸ்ரய**
**த$^{4}$ர்மவித் த$^{4}$ர்மாத்ம த$^{4}$ர்மக$^{3}$**
**து$^{3}$ர்மதி ஜனரொல்லன ப்ரதிமல்ல ஸ்ரீனல்ல ।।6**

ஊர்மிகளவோலிப்ப = கடல் அலைகளைப்போல ஒன்றன்பின் ஒன்றாக வருகிறான்
கர்ம = செய்ய வேண்டிய கர்மங்களை செய்வது
விகர்ம = செய்ய வேண்டிய கர்மங்களை செய்யாமல் விடுவது; அல்லது செய்யக்கூடாத செயல்களை செய்வது
ஜன்ய = இத்தகைய புண்ய, பாவ கர்மங்களிலிருந்து பிறக்கும்
பலாபலங்கள = சுக, துக்க பலன்கள்
நிர்மலாத்மனு = சுத்த ஸ்வரூபன்
மாடி மாடிஸி = தான் செய்து, பிராணிகளால் செய்வித்து
உணிஸுதிப்ப = ஜீவர்களுக்கு அவற்றை உண்ண வைக்கிறான்
நிர்மம = தன் மனைவி, தன் மக்கள் எனும் அபிமானம் இல்லாதவன்
நிராமய = எந்தவிதமான ரோகாதிகள், எந்த காலத்திலும் இல்லாதவன்
நிராஸ்ரய = யாரையும் எக்காலத்திலும் ஆதரவு கேட்காதவன்
தர்மவித் = தர்ம சூக்ஷ்மங்களை அறிந்தவன்
தர்மாத்ம = தர்ம ஸ்வரூபன்
தர்மக = தர்மாத்மர்களால் வணங்கப்படுபவன்
அப்ரதிமல்ல = யாராலும் வெல்லப்பட முடியாதவன்
ஸ்ரீனல்ல = லட்சுமிபதியான இத்தகைய ஸ்வாமி
துர்மதிஜனர = மித்யாஞான முதலான துர்மதிகளை
ஒல்லரு = அவர்கள் செய்யும் பூஜாதிகளை ஏற்றுக்கொள்வதில்லை.

கடல் அலைகள் எப்படி ஒன்றன்பின் ஒன்றாக தொடர்ந்து வருகின்றனவோ, அதைப்போல, ஜீவர்கள் ஒவ்வொரு நொடியும், அபாரமான கர்மாகர்மங்களை, செய்து வருகின்றனர். கர்ம என்றால் சத்கர்மங்களை செய்கிறார்கள் என்று பொருள். அகர்ம என்றால், செய்யக்கூடாதவற்றை செய்வது மற்றும் செய்யவேண்டியதை விடுவது என்று பொருள். கர்மாகர்ம என்றால், புண்ய பாபங்கள் என்று அர்த்தம். அப்படியே, பலாபலன்கள் என்றால், சுகதுக்கங்கள் என்று பொருள். பலம் என்றால் புண்யபலம். அபல என்றால் சுகம் இல்லாமல் என்று பொருள். அதாவது துக்கம் என்று பொருள்.

நிர்தோஷியான ஸ்ரீஹரி, அனைத்து பிராணிகளிலும் இருந்து, புண்யபாப கர்மங்களை செய்து, செய்வித்து, அதிலிருந்து வரும் பலாபலன்களை தான் உண்டு, ஜீவருக்கும் உண்ண வைக்கிறான். பரமாத்மன், ஜீவனின் யோக்யதைக்கேற்ப பலன்களைக் கொடுக்கிறானே தவிர, இவர்கள் நம்மவர்கள், இவர் மற்றவர்கள் என்னும் சிந்தனையில், சுகதுக்கங்களைக் கொடுப்பதில்லை. அவன் எப்போதும், எவ்விதமான ரோகங்களையும் அனுபவிப்பவன் அல்ல. தானே அனைவருக்கும் ஆதாரமே தவிர, மற்றவர்களின் ஆதரவு பரமாத்மனுக்கு எப்போதும் தேவையில்லை. தர்ம சூக்ஷ்மத்தை அறிந்தவன்.

ஆசையை துறப்பது என்பது சாமான்யரான பகவத் பக்தர்களில் இருந்தே இருக்கிறது. பரமாத்மனிடம் இந்த குணத்தை சொல்வதன் சிறப்பு என்னவெனில்: பகவத் பக்தர்களில் இந்த குணங்கள் அவனது அருளால் வருகின்றன. பரமாத்மனிடம் இந்த குணம் சாதாரணமாகவே இருக்கிறது என்பது கருத்து. தர்ம சூக்ஷ்மத்தை பரமாத்மனே அறிந்தவன். அவனின் உபதேசத்தினால் மற்றவர்கள் அறியவேண்டும். இந்த விஷயத்தில், பாரத, கர்ண பர்வத்தில் ஒரு கதையை உதாரணமாக சொல்லலாம். அது என்னவெனில்:

தர்மராஜன், கர்ணனுடன் போர் புரிந்து, தோற்று, ஒவ்வொரு அங்கங்களிலும் கர்ணனின் அம்புகளால் அடிபட்டு, அவனால் அவமானப்படுத்தப்பட்டு, தன் கூடாரத்தை அடைந்து அங்கு படுத்தான். தன் சைன்யத்துடன் போர் புரிந்திருந்த அர்ஜுனன், தன் அண்ணனைக் காணாமல், உடனடியாக ஸ்ரீகிருஷ்ணனுடன் கூடாரத்தை அடைந்து தன் அண்ணனை அங்கு கண்டான். தர்மராஜன், கர்ணனிடமிருந்து பல திட்டுகளை வாங்கியிருந்ததால், அதைப் பொறுக்காத அர்ஜுனன், கர்ணனைக் கொன்றுவிட்டு, அந்த சுப செய்தியை தன்னிடம் பகிர்ந்து கொள்ள வந்திருக்கிறான் என்று எண்ணி, தர்மராஜன், அர்ஜுனனை பலவாறு புகழ்ந்து அவனை வரவேற்றான்.

அர்ஜுனன் ‘உன்னை போர்க்களத்தில் காணாததால், உடனடியாக இங்கு வந்திருக்கிறேன். இனிமேல்தான் போய் கர்ணனை கொல்லவேண்டும்’ என்றான். தர்மராஜன் உடனே கோபத்துடன் ‘எதற்கும் வேலைக்காகாத உனக்கு எதற்கு இந்த காண்டீப தனுஸ்? அதை கிருஷ்ணனிடம் கொடு. ராதேயனை அவன் கொல்வான். அல்லது, நீ போர் செய்யவில்லையெனில், பீமசேனனாவது கர்ணனைக் கொல்வான்.

நீ குந்தியிடம் வீணாகப் பிறந்தாய், பொய் சபதம் போட்டாய்' என்று பலவாறு சொற்களால், அர்ஜுனனை திட்டினான்.

உடனே அர்ஜுனன் கையில் கத்தியை எடுத்தான். இதைக்கண்ட ஸ்ரீகிருஷ்ணன், இது என்ன? கத்தியினால் என்ன செய்வாய்? என்று கேட்டான். அதற்கு அர்ஜுனன் இவ்வாறு கூறினான்.

மகாபாரத தாத்பர்ய நிர்ணயம் 27ம் அத்தியாயம்:
தமாஹகாம்டிவம் தாதும்யோ வதேத்தத்வதோமயா ||
ப்ரதிஞ்ஞாதஸ்ததோ ஹஸ்மின்ருபமித்யாஹ தம் ஹரி: || 120
ஸத்யஸ்ய வசனம் ஸ்ரேய: ஸத்யஞ்ஞானந்து துஷ்கரம் ||
மத்ஸதாம் ஹிதமத்யந்தம் தத்ஸத்ய மிதி நிஷ்சய: ||121
தர்மஸ்யாசரணம் ஸ்ரேயோதர்ம ஞ்ஞானந்து துஷ்கரம் |
ய: ஸதாம் தாரகோ நித்யம் ஸதர்ம இதி நிஷ்சய: ||122
கௌஷிகாக்யே ப்ராம்ஹணோஹி லீனம் க்ராமஜனம் க்வசித் |
தஸ்கரேஷ்வபிதார்யைவ நிரயம் ப்ரத்ய பத்யத ||123
கஸ்சித்வ்யாதோ ம்ருகம் ஹத்வா மாதா பித்ரு நிமித்தத: ||
பக்ஷார்த்தமப்யகாத் ஸ்வர்க்கமசுரோஸௌ ம்ருகோயத: ||124
உபத்ருவாய லோகஸ்ய தபஸ்சரதிதுர்மதி: |
தஸ்மாத்ஸத்தாரகோ தர்ம: இதி க்ருத்வா விநிஷ்சயம் ||125
மா ந்ருபஞ்சஹி ஸத்யாந்த்வம் குரு வாசம் திரஸ்குரு |
இத்யுக்தோ பஹுதாऽனிந்தத் க்ரோதாதேவார்ஜுனோ ந்ருபம் ||126

இத்யுக்த்வா சாத்மனாஷாய விகோஷம் க்ருதவானஸிம் |
புன: க்ருஷ்ணேன ப்ருஷ்டஸ்ஸன் ஸ்வாபிப்ராயமுவாசஸ: ||129
தச்ஸ்ருத்வாகர்ஹயித்வேனம் புனராஹ ஜனார்த்தன: |
மதிபூர்வம் தேஹ நாஷாத்பபம் மஹதவாப்யதே ||130
அதோமாத்யஜ தேஹந்து குருஜாத்ம ப்ரஷம்ஸனம் ||131
ததோகுரூணாம் த்வம்கார: ஸ்வப்ரஷம்ஸ்யைவ சாத்மன: ||
இத்யுக்த ஸத்வஹம் காராச்சஷம்ஸ ஸ்வகுணானலம் ||132
குருநிந்தாத்மபூஜாச தர்மாயன பவேத் க்வசித் |
ததாப்யர்ஜுனஹார்தம் தத்ஸம் ப்ரகாஷ்யஜனார்த்தன: ||133
தஸ்யலஜ்ஜாம்ஸமுத்பாத்ய நாஷயித்வாசதம் மதம் ||
நாஹம் வேத பரந்தர்மம் க்ருஷ்ண ஏவகதிர்மம ||134
இதிபாவம் ஸமுத்பாத்ய தோஷான்னாஷயிதும் ஹரி: ||
காரயாமாஸ தத்ஸர்வம் அர்ஜுனேன ஜகத்பதி: ||135

அர்ஜுனன், ஸ்ரீகிருஷ்ணனிடம் : 'கிருஷ்ணா, காண்டீவத்தை இன்னொருவரிடம் கொடு என்று யார் என்னிடம் சொல்கிறானோ, அவனை நான் கொல்வேன் என்று முன்னர் ஒரு முறை சபதம் செய்திருந்தேன். அதனை உண்மையாக்குவதற்கு, தர்மராஜனைக் கொல்வேன்' என்றான்.

கிருஷ்ணன்: 'ஹே பார்த்தா, சத்யத்தைக் காப்பது என்னமோ தேவையானதே. ஆனால், சத்யம் என்றால் என்ன? அதை அறிவாயா? சத்யத்தின் அர்த்த, ஞானத்தை மட்டும் அறிவது மிகவும் கஷ்டம். கண்டதை அப்படியே சொல்வது சத்யம் அல்ல. எதை செய்தால் அதனால் சஜ்ஜனர்களுக்கு ஹிதம் ஆகிறதோ, அதனை செய்வதும், அல்லது சொல்வதும் சத்யம் ஆகிறது. இதைப் போல, தர்மத்தை பின்பற்றுவதும் புண்யசாதனமே ஆகிறது. தர்மத்தின் அர்த்த, ஞானம் மட்டும் கிடைப்பது கஷ்டம். கேள்! முன்னர் ஒரு காலத்தில் கௌஷிக என்னும் ஒரு பிராமணன் ஒருவன் இருந்தான். அவன் சத்யவாதி என்று புகழ்பெற்றிருந்தான்.

இப்படியிருக்கையில், ஒரு நாள், அவன் வழியில் சென்று கொண்டிருக்கும்போது, தம்மைத் துரத்தி வந்த கள்வர்களிடமிருந்து தப்பி வந்த சில பிராமணர்கள், இந்த பிராமணனின் ஆசிரமத்தில் வந்து பதுங்கினர். பின்னாலேயே வந்த கள்வர்கள், இந்த சத்யவாதி பிராமணனிடம் - இங்கு ஓடிவந்த பிராமணர்கள் எங்கே என்று கேட்க, இவனும் அந்த பிராமணர்கள் மறைந்திருந்த இடத்தை அந்த கள்வர்களுக்குக் காட்டிக் கொடுத்துவிட்டான். கள்வர்கள் அந்த பிராமணர்களை அடித்து, அவர்களின் பொருட்களை கவர்ந்து சென்றனர். இந்த பாவம் அந்த சத்யவாதிக்கு வந்தது. அவனும் கோரமான நரகத்திற்குச் சென்றான்.

ஒரு வேடன், தன் பெற்றோர் உண்ணவேண்டுமென்று ஒரு மிருகத்தைக் கொன்றான். அந்த மிருகம் உண்மையில் ஒரு அசுரன். லோக-ஹிம்ஸைக்காக தவம் செய்துகொண்டிருந்தான். அவனைக் கொன்றதால், இந்த வேடனுக்கு ஸ்வர்க்கம் கிட்டியது.

ஆகையால், சஜ்ஜனர்களை மேம்படுத்துவதே தர்மம். ஆகவே, அண்ணனை கொல்லாமல், அவனை நன்றாக திட்டி விடு. பெரியவர்களை திட்டினால், அது அவர்களை கொல்வதற்கு சமம். இதனால் உன்னுடைய சபதத்திற்கும் கேடு வராது' என்றான்.

அர்ஜுனன் : கிருஷ்ணனின் இந்த பேச்சினைக் கேட்டு தர்மராஜனிடம் 'நீ திட்டத்தக்க சூது போன்ற விஷயங்களை செய்திருக்கிறாய். நீயே கையாலாகாதவன். மற்றவர்களை திட்டிக் கொண்டிருக்கிறாய். போரில் பயந்து புறமுதுகு காட்டி ஓடிவந்திருக்கிறாய். என்னைத் திட்டுவதற்கு உனக்கு அருகதையில்லை' என்று பலவாறு திட்டிவிட்டு, மறுபடி தன் கத்தியை எடுத்தான்.

கிருஷ்ணன்: மறுபடி என்ன செய்யப்போகிறாய்?

அர்ஜுனன்: கிருஷ்ணா. அண்ணனை நான் திட்டியதால் அதனால் வந்த பாவத்திற்கு ஆளானேன். அதற்காக தற்கொலை செய்து கொள்ளப்போகிறேன்.

கிருஷ்ணன்: பைத்தியக்காரனைப் போல செய்கிறாய். மனப்பூர்வமாக தற்கொலை செய்துகொண்டால், மிகப்பெரிய பாவத்திற்கு ஆளாவாய். ஆகையால் இந்த முடிவை கைவிடு. உன்னை நீயே புகழ்ந்துகொள். அதனால் நீ தற்கொலை செய்து கொண்டாற்போல ஆயிற்று.

கிருஷ்ணனின் இந்த பேச்சைக் கேட்ட அர்ஜுனன், கர்வத்தினால் தன்னைத்தானே புகழ்ந்துகொண்டான். இப்படியாக கிருஷ்ணன் அர்ஜுனனின் கர்வத்தையும் அடக்கினான்.

‘எனக்கு எந்த தர்மமும் தெரியாது. கிருஷ்ணா. நீயே எனக்கு கதி’ என்றான் அர்ஜுனன். அவன் சொல்வதைப்போல கேட்பதே நமக்கு தர்மம் என்னும் ஞானம் பிறந்தது. இத்தகைய ஞானத்தை அர்ஜுனனுக்குக் கொடுத்து, அவனின் தோஷத்தை பரிகரிப்பதற்காக, கிருஷ்ணன் அர்ஜுனன் மூலமாக இத்தகைய செயல்களை செய்யவைத்தான் என்று இந்த கதை சொல்கிறது.

இத்தகைய சூக்ஷ்மமான தர்மங்களை அறிந்தவன் பரமாத்மன் ஒருவனே. வேறு யாரும் இல்லை. ஆகையால் ‘தர்மவித்’ என்றார். மற்றும், ஸ்வயம் தர்ம ஸ்வரூபன், தர்மாத்மர்களால் வணங்கப்படுபவன், யாராலும் வெல்லப்பட முடியாதவன், லட்சுமிபதி, மித்யாஞானம், தவறான ஞானம் யாரிடம் இருக்கிறதோ அவர்கள் துர்மதிகள் ஆவர். (இந்த விஷயத்தில் பாகவத தாத்பர்ய வாக்கியங்கள், முந்தைய சந்தியில் அங்கங்கு உதாரணம் கொடுக்கப்பட்டுள்ளது. ஆகவே, இங்கு அந்த பிரமாணங்கள் கொடுக்கப்படவில்லை). இத்தகைய துர்மதிகள் செய்த பூஜாதிகளை பரமாத்மன் ஏற்றுக் கொள்வதில்லை.

**ஜலத$^{3}$ வடபா$^{3}$னலக$^{3}$ளம்பு$^{3}$தி$^{4}$**
**ஜலவனும்பு$^{3}$வுத$^{3}$ப்த$^{3}$ மளெக$^{3}$ரெ**
**திளெகெ$^{3}$ ஷாந்திய நீவுத$^{3}$னலன தானெ பு$^{4}$ஞ்சிபுது$^{3}$ |**
**திளிவுதீ$^{3}$பரியல்லி லகுமி**
**நிலய கு$^{3}$ணக்ருத கர்மஜ ப$^{2}$லா**
**ப$^{2}$லக$^{3}$ளு ண்டுணிஸுவனு ஸர்வக$^{3}$ ஸர்வஜீவரிகெ$^{3}$ ||7**

ஜலத = மேகங்கள்
படவானலகளு = கடலில் இருக்கும் படவாக்னி இவை இரண்டும்
அம்புதி ஜலவனு = கடல் நீரை
உம்புவுவு = குடிக்கின்றன
அப்த = மேகங்கள்
மளெகரெது = மழை பெய்து
இளெகெ = பூமிக்கு
ஷாந்திய நீவுது = குளிர்ச்சியைத் தருகிறது
அனலனு = அக்னி
தானெ புஞ்சிபுது = தனது கடல் நீரை தானே குடித்துவிடுகிறான் (சுட்டு விடுகிறான்)
ஈ பரியல்லி = இப்படியாக
திளிவுது = அறிந்து
லட்சுமி நிலய = லட்சுமிதேவியருக்கு வீடாக இருக்கும்
ஸர்வக = அனைத்து இடங்களிலும் வியாப்தனான ஸ்ரீபரமாத்மன்

குணக்ருத = சத்ய ரஜஸ் தமோ குணங்களின் சம்பந்தத்தினால் செய்யப்பட்ட
கர்மஜ = கர்மங்களால் பிறந்த
பலாபலங்கள = சுக துக்கங்களை
ஸர்வஜீவரிகெ = அனைத்து ஜீவர்களுக்கும்
உண்டுணிஸுவனு = தானும் உண்டு மற்றவர்களுக்கும் உண்ணக் கொடுக்கிறான்

கடலில் இருக்கும் நீரினை, மேகங்கள் மற்றும் படவாக்னி இந்த இரண்டும் குடிக்கின்றன. மேகமானது, தான் குடித்த நீரினை, மழையாக பொழிந்து பூமிக்கு குளிர்ச்சியை தந்து மக்களை மகிழ்விக்கிறது. படவாக்னி, தான் குடித்த நீரினை தானே ஜீர்ணம் செய்துகொள்கிறது. அதாவது, அந்த நீரினை சுட்டுவிடுகிறது. இப்படி மேகத்திலும், படவாக்னியிலும் இருக்கும் இரு தனித்தனியான குணங்கள், பரமாத்மன் ஒருவனிடமே இருக்கிறது. இதற்கு இரு உவமைகளை சொல்கிறார்.

கடல் நீரைக் குடித்த மேகம், பூமியில் அதனை மழையாகப் பொழிந்து, மக்களுக்கு குளிர்ச்சியைத் தருவதைப்போல, ஜீவர்கள் செய்யும் கர்மங்களிலிருந்து வரும் சுப பலன்களை பரமாத்மன் ஏற்றுக்கொண்டு, அவர்களுக்கு இரு மடங்கான சுகங்களைத் தருகிறான்.

படவாக்னி தான் குடித்த தண்ணீரை சுட்டுவிடுவதைப்போல, பரமாத்மன் தான் ஸ்வீகரித்த பாவ பலன்களை சுட்டுவிடுகிறான். பாபிகளில் இருக்கும் பாப கர்மங்களை, அங்கேயே விட்டு, புண்யங்களை மட்டும் ஏற்றுக்கொண்டு, அந்த புண்யங்களை சஜ்ஜனர்களுக்குக் கொடுக்கிறான்.

இந்த விஷயத்திலும் மேகத்தின் உபமானத்தை எடுத்துக் கொள்ளவேண்டும். மேகமானது, கடலில் இருக்கும் அனைத்து நீரினையும் எடுத்துக் கொள்வதில்லை. கடலின் யோக்யதையை மீறி வரும் தண்ணீரை குடிக்கிறது. பரமாத்மனும் அப்படியே, பாவங்களை தைத்யர்களில் விட்டு, அவருக்கு மீறிய புண்யத்தை கிரகித்து, மேகம் மழை பொழிந்து மக்களை சுகப்படுத்துவதைப்போல, சஜ்ஜனர்களுக்கு அந்த புண்யத்தை கொடுக்கிறான் என்பது கருத்து.

**புஸ்தகக$^{3}$ள வலோகிஸுத ம**
**ந்த்ர ஸ்துதிக$^{3}$ளனலேனு ரவியுத$^{3}$**
**யஸ்தமன பரியந்த ஜபதப மாடி$^{3}$ ப$^{2}$லவேனு ।**
**ஹ்ருத்ஸ்த பரமாத்மனெ ஸமஸ்தா**
**வஸ்தெ$^{2}$க$^{3}$ளொளித் தெ$^{3}$ல்லரொளகெ$^{3}$ நி**
**ரஸ்தகா$^{3}$மனு மாடி$^{3}$ மாடி$^{3}$பனெந்து$^{3}$ திளியத$^{3}$வ ||8**

நிரஸ்தகாமனு = பலன்களை விரும்பாத
ஹ்ருஸ்த = அனைவரின் இதயங்களில் வசிப்பவனான பரமாத்மனே
எல்லரொளகெ = அனைத்து பிராணிகளுக்குள்ளும்
ஸமஸ்தாவஸ்தெகளொளு = ஜாக்ர, ஸ்வப்ன, சுஷுப்தி ஆகிய அனைத்து நிலைகளிலும் இருந்து

மாடி மாடிபனெந்து = அனைத்து கர்மங்களையும் தான் செய்து, ப்ராணிகளால் செய்விக்கிறான் என்பதை
திளியதவ = அறியாதவன்
புஸ்தககள = புத்தகங்களை
அவலோகிஸுத = பார்த்தவாறு
மந்திர ஸ்துதிகளனு = மந்திர துதிகளை
எனலு = வாயால் உச்சரித்தால்
ஏனு = என்ன பலன்?
ரவிஉதய = சூர்யோதயத்திலிருந்து
அஸ்தமய பர்யந்த = மாலையில் சூர்ய அஸ்தமனம் வரைக்கும்
ஜபதப மாடி = ஜபங்களை செய்து
பலவேனு = என்ன பலன்? எதுவும் இல்லை என்று பொருள்.

எவ்வித பலன்களையும் எதிர்பாராமல், அனைவரின் இதயாகாஷத்தில் இருக்கும் பரமாத்மனே அனைத்து பிராணிகளிலும் இருந்து, முழிப்பு, கனவு, தூக்கம் ஆகிய அனைத்து நிலைகளிலும், அனைத்து கர்மங்களையும், தான் செய்து செய்விக்கிறான் என்று சிந்திக்காதவன், புத்தகங்களைப் படித்து, பாராயணங்களை செய்து, மந்திர ஸ்தோத்திரங்களை மனனம் செய்து, சூர்யோதயத்திலிருந்து சூர்ய அஸ்தமனம் வரை, ஜபதபங்களை செய்து - என இவை அனைத்துமே நிஷ்பலன்களே ஆகின்றன. (எவ்வித பலன்களையும் கொடுப்பதில்லை).

**மத்3யபா4ண்டவ தே3வனதி3யொள**
**க3த்தி3 தொளெயலு நித்யத3லி பரி**
**ஷுத்3த4வாஹுதெ3 எந்தி3கா3த3ரு ஹரிபதாப்3ஜக3ள**
**பு3த்3தி4பூர்வக ப4ஜிஸத3வகெ3 வி**
**ருத்3த4 வெனிஸுவுவெல்ல கர்ம ஸ**
**ம்ருத்3தி4க3ளு து3க்க2வனெ கொடுதிஹவத4ம ஜீவரிகெ3** ||9

மத்யபாண்டவ = கள் ஊற்றிய மண் பானையை
தேவ நதியொளகெ = கங்கையில்
நித்யதலி = தினந்தோறும்
அத்தி தொளெயலு = அமிழ்த்தி கழுவினால்
எந்திகாதரு = என்றைக்காவது ஒரு நாள்
பரிஷுத்தவாஹுதெ = பரிசுத்தம் ஆகிறதோ? (இல்லை)
ஹரிபதாப்ஜகள = பரமாத்மனின் பாதாரவிந்தங்களை
புத்திபூர்வக = அனுசந்தான பூர்வகமாக
அவன், பஜிஸதவகெ = துதிக்காதவனுக்கு
எல்ல கர்ம = அனைத்து கர்மங்களும்
விருத்த வெனிஸுவுவு = எதிர்பதமாக நடக்கும் (புண்ணிய கர்மங்கள் பாப பலன்களைக் கொடுக்கும். பாப பலன்கள் அதிகரிக்கும்)
அதம ஜீவரிகெ = அதம ஜீவர்களுக்கு
ஸம்ருத்திகள துக்கவனெ = சம்பூர்ணமான துக்கத்தையே

கொடுதிஹவு = கொடுக்கின்றன.

மேலே சொன்னதைப்போல, பரமாத்மனின் பாத கமலங்களை அனுசந்தானத்துடன் துதிக்காமல், ஜப, தப, முதலான எந்த கர்மங்களை செய்தாலும், அது இவனை மேம்படுத்தாது. பாகவத 6ம் ஸ்கந்தம் 1ம் அத்தியாயத்தில் :

ப்ராயஸ்சித்தானி சீர்ணானி நாராயண பராங்மகை |
நவை புனந்தி ராஜேந்திர ஸுரா கும்பமிவாபகா: ||

நாராயணனிடம் பக்தி இல்லாதோர், தங்கள் பாப பரிகாரத்திற்காக பிராயச்சித்த ரூபங்களாக எந்த கர்மங்களை செய்தாலும், கள் நிரம்பியிருந்த பானையை, கங்கை எப்படி சுத்தம் செய்யாதோ, அப்படியே இவையும் இவனை சுத்தப்படுத்தாது என்கிறார்கள்.

இதே அர்த்தத்தையே தாசார்யரும் இங்கு சொல்கிறார். கங்கை அனைத்து பொருட்களையும் சுத்தப்படுத்தும் தகுதி கொண்டதானாலும், கள் பானையை எப்படி சுத்தம் செய்யாதோ, அப்படி, சத்கர்மங்கள் அவை உத்தமமானாலும், அவற்றை பரமாத்மனே செய்வித்தான் என்னும் அனுசந்தானம் இல்லாமல், நானே அவற்றை செய்தேன் என்று அறிந்து, அதம ஜீவர்கள் செய்த கர்மங்கள், எதிர்ப்பதமான பலன்களையே கொடுக்கின்றன. அதாவது, அதிகமான பாவங்களையே கொடுக்கின்றன.

**ப⁴க்திபூர்வகவாகி³ முக்தா**
**முக்த நிய்யாமகன ஸர்வோ**
**த்ரிக்த மஹிமெக³ளனவரத கொண்டா³டு³ மரெயத³லெ |**
**ஸக்தனாக³தெ³ லோகவார்த்தெ ப்ர**
**ஸக்திக³ளனீடா³டி³ ஸ்ருதிஸ்ம்ரு**
**த்யுக்த கர்மவ மாடு³திரு ஹரியாக்³ஞெ எந்த³ரிது³ ||10**

முக்தாமுக்த நீயாமகன = முக்தர்களுக்கும், அமுக்தர்களான அனைத்து பிராணிகளுக்கும் தலைவனான ஸ்ரீபரமாத்மன்
சர்வோத்ரிக்த மஹிமெகள = அனைவரையும்விட அதிக மகிமைகளைக் கொண்டவனை
மரெயதலெ = மறக்காமல்
அனவரத = தினந்தோறும்
கொண்டாடு = துதி
ஸக்தனாகதெ = சம்சாரத்தில் மூழ்கிவிடாமல்
லோகவார்த்தெ ப்ரசக்திகள = லௌகிக சம்பந்தமான அரட்டைகளை
ஈடாடி = விட்டு
ஸ்ருதிஸ்ம்ருத்யுக்த கர்மவ = ஸ்ருதி, ஸ்ம்ருதிகளில் செய்யவேண்டும் என்று சொல்லப்பட்ட கர்மங்களை
ஹரியாக்ஞெ = ஹரியின் ஆணை
எந்தரிது = என்று அறிந்து

மாடுதிரு = செய்து கொண்டிரு.

முக்தர்களுக்கும், அமுக்தர்களுக்கும் தலைவனான ஸ்ரீபரமாத்மனின் மிகச்சிறந்த மகிமைகளை மறக்காமல் தினந்தோறும் பக்தியுடன் ஸ்தோத்திரம் செய்ய வேண்டும். சம்சாரத்தில் மயங்கிவிட வேண்டாம். லௌகிகமான வீண் அரட்டைகளை விட்டு, ஸ்ருதி ஸ்ம்ருதியில் செய்யவேண்டும் என்று சொன்னவற்றை ஹரியின் ஆணை என்று அறிந்து அவற்றை செய்துகொண்டிரு.

**லோபவாத[3]ரு ஸரியெ கர்மஜ**
**பாப புண்யக[3]ளெரடு[3] நின்னனு**
**லேபிஸவு நிஷ்காமகனு நீனாகி[3] மாடு[3]திரெ ।**
**ஸௌபரணி வரவஹன நின்ன ம**
**ஹாப[1]ராத[4]க ளெணிஸத[3]லெ ஸ்வ**
**ர்க்கா[3] பவர்க[3]தொ[3]ளிட்டு ஸலஹுவ ஸத[1]த[1] ஸுக[2]ஸாந்த்[3]ர ।।11**

நீனு = நீ
நிஷ்காமகனாகி = பலன்களை எதிர்பார்க்காமல், பகவத் ப்ரீதிக்காக மட்டும்
மாடுதிரெ = கர்மங்களை செய்தால்
லோபவாதரு சரியெ = செய்யும் கர்மங்களில் சிறிது குறையிலிருந்தாலும் சரி
கர்மஜ = காம்ய கர்ம சம்பந்தமான
பாப புண்யகளெரடு = பாப புண்ணியங்கள் இவை இரண்டும்
நின்னனு லேபிஸவு = உன்னை சேராது
நித்ய சுகஸாந்த்ர = நித்யானந்த பூர்ணனான
ஸௌபர்ணி வரவஹன = ஸௌபர்ணி தேவிக்கு பதியான கருடனை வாகனமாக வைத்துக்கொண்டிருக்கும் ஸ்ரீஹரி
நின்ன மஹாபராதகளெனிஸதலெ = உன் மிகப்பெரிய தவறுகளை எண்ணாமல்
ஸ்வர்க்க = இஹத்தில் ஸ்வர்க்கத்திற்கு இணையான சுகத்தைக் கொடுத்து;
அல்லது,
ஸ்வதந்த்ரனாகையால், பரமாத்மனுக்கு ஸ்வ என்று பெயர். அவரின் அருளாலேயே கிடைப்பதால், வைகுண்டத்திற்கு, ஸ்வ்ர்க்க என்று பெயர்.
அல்லது,
'ஸ்வரதோ விஷ்ணு: தேன கதோலோக: வைகுண்டாக்ய:' - ஸ்வரதன் ஆகையால் விஷ்ணுவிற்கு ஸ்வ என்று பெயர். அவன் வசிக்கும் உலகத்திற்கு ஸ்வர்க்கம் என்று பெயர்.
அல்லது
ஸதானந்த ஞான மூர்த்தித்வாத்ஸ்வர்கோ: விஷ்ணு: - எப்போதும் ஞானானந்த ஸ்வரூபன் ஆகையால், விஷ்ணுக்கு ஸ்வர்க்க என்று பெயர். இத்தகைய ஸ்வர்க்க நாமகனான பரமாத்மனின் லோகமான
அபவர்கதொளித்து = முக்த ஸ்தானத்தில் அல்லது ஸ்வர்க நாமகமான வைகுண்டத்தில் வைத்து
ஸலஹுவ = ஸ்வரூபானந்தத்தைக் கொடுத்து காப்பாற்றுவான்.

கர்மண்யே வாதிகாரஸ்தே மாபலேஷு கதாசன - என்னும் கீதை வாக்கியத்திற்கேற்ப, கர்மங்களை செய்யும்போது, பரமாத்மனே செய்விக்கிறான் என்று அனுசந்தானத்துடன், பலன்களை எதிர்பார்க்காமல், பகவத் ப்ரீதிக்காகவே கர்மங்களை செய்யவேண்டும். அப்படி சத்கர்மங்களை செய்யும்போது தெய்வ சங்கல்பத்தினால், செய்ய வேண்டிய சத்கர்மங்களுக்கு தடை / குறை வந்தாலும், அந்த அபராதங்களை பரமாத்மன் மன்னிக்கிறான்.

**ஸ்வரத ஸுக2மய ஸுலப4 விஷ்வ**
**ம்ப4ர விஷோக ஸுராஸுரார்ச்சித**
**சரணயுக3 சார்வங்க3 ஷார்ங்க3 ஷரண்ய ஜிதமன்யு ।**
**பரம ஸுந்த3ரதர பராத்பர**
**ஷரணஜன ஸுரதே4னு ஷாஷ்வத**
**கருணி கஞ்சத3லாக்ஷ காயெனெ கங்கொ3ளிப ஷீக்4ர ||12**

ஸ்வரத = ஸ்வரமணனான
சுகமய = ஆனந்த ஸ்வரூபனான
சுலப = பக்தர்களுக்கு சுலபனான
விஷ்வம்பர = பிரபஞ்சத்தையே தரித்திருப்பவன்
விஷோக = சோகங்கள் இல்லாதவன்
ஸுராசுரார்ச்சித = ருத்ராதி தேவதைகளைவிட, முக்யபிராண தேவரைவிட, ‘அசுஷுரதத்வாத ஸுரோமுக்ய ப்ராண:’ பிராணகளில் ரதனாக இருப்பதால், முக்யபிராணனுக்கு அசுர என்று பெயர். அல்லது, பிராணமதத்தை பின்பற்றுவோர் என்று அர்த்தம். 12ம் சந்தி, 30ம் பத்யத்தின் வியாக்யானத்தில், அசுர சொல்லுக்கு விளக்கம் சொல்லப்பட்டிருக்கிறது. இத்தகைய மத்வ மதத்தை பின்பற்றுவோராலும்,

அர்ச்சித = பூஜிக்கப்படும்
சரணயுக = பாதங்களைக் கொண்ட
சார்வங்க = அழகான அங்கங்களைக் கொண்டவன்
ஷார்ங்க ஷரண்ய = ஷார்ங்க என்னும் தனுஸ்ஸின் ரூபத்தைக் கொண்ட, வித்யா நாமக ரமாதேவியருக்கு ஆதரவு அளிக்கக்கூடியவனான
ஜிதமன்யு = வெல்லப்பட்ட கோபத்தை உடைய
பரம சுந்தரதர = பரம சுந்தரர்களான பிரம்மாதிகளைவிட சுந்தரனான
பராத்பர = பிரம்மாதிகளைவிட உத்தமனான
ஷரணஜன ஸுரதேனு = தன்னை வணங்கும் பக்தர்களுக்கு காமதேனு என்றிருக்கும்
ஷாஷ்வதகருணி = நிரந்தரமான தயா பூர்ணனான
கஞ்சதளாக்ஷ = தாமரைக் கண்ணன்
ஸ்ரீஹரியே
காயெனெ = என்னை காப்பாற்று என்று ஸ்தோத்திரம் செய்ய
ஸித்த = தயாராகி
கங்கொளிப = அபரோக்ஷத்தில் தரிசனம் கொடுக்கிறான்

பரதல்லி = முக்தியில் எப்போதும் தரிசனம் அளிப்பவன்

இந்த பத்யத்தின் அர்த்தம் அப்படியே புரிகிறது. சுராசுரார்ச்சித என்னும் இடத்தில், அசுரர் என்றால் தைத்யர் என்று அர்த்தம், தைத்ய குலத்தில் பிறந்த பிரகலாதன், பலி சக்ரவர்த்தி முதலான தைத்யர்களால் பூஜிதனான பாத கமலங்களைக் கொண்டவன் என்று அர்த்தம். பத்ய அர்த்தத்தில் கூறியிருப்பதைப்போல, முக்ய பிராணதேவர் என்று ஒரு அர்த்தம். மத்வ மதத்தைப் பின்பற்றுவோர் என்றும் ஒரு அர்த்தம் உள்ளது. ஷார்ங்க ஷரண்ய என்னும் இடத்தில், ஷார்ங்க என்னும் தனுஸ் உள்ளவனுக்கு ஷார்ங்க என்று பெயர். இங்கு ஷார்ங்க்யஷரண்ய என்பது ஒரே பதமாக பார்க்க வேண்டும்.

மகாபாரத தாத்பர்ய நிர்ணய 3ம் அத்தியாயத்தில், 76ம் ஸ்லோகம்:
கதாதுவாயுர் பலஸம்விதாத்மா ஷார்ங்கஸ்ச வித்யேதிரமைவ கட்க: |
துர்காத்மிகாஸைவச சர்மனாம்னி: ||

என்று சொல்லியிருக்கிறார்.

பல ஞானாத்மகமான வாயுதேவரே, பரமாத்மனின் கையில் தரித்திருக்கும் கதையாக இருக்கிறார். ஷார்ங்க நாமக தனுஸ்ஸின் ரூபமாக வித்யா நாமகளான ரமாதேவி இருக்கிறார். துர்காதேவி கட்க மற்றும் சர்ம ரூபமாக இருக்கிறார். இதனால் ரமாதேவியையே, ஷார்ங்க என்று சொன்னதாக ஆயிற்று. இத்தகைய ரமாதேவியருக்கு ஷரண்ய என்றால் வீடாக இருப்பவன் என்று அர்த்தம்.

**நிர்மலனு நீனாகி$^3$ கர்ம வி**
**கர்மக$^3$ளனு நிரந்தரத$^3$லி ஸு**
**த$^4$ர்ம நாமகக$^3$ர்ப்பிஸுத நிஷ்கலுஷ நீனாகு$^3$ |**
**ப$^4$ர்மக$^3$ர்ப்ப$^4$ன ஜனக த$^3$யத$^3$லி**
**து$^3$ர்மதிக$^3$ளனு கொட$^3$தெ$^3$ தன்னய**
**ஹர்ம்யதொ$^3$ளகி$^3$ட்டெல்ல காலதி$^3$ காவ க்ருபெயிந்த$^3$ ||13**

நீனு = நீ
நிர்மலனாகி = அகத்தில் தூய்மையானவனாக
கர்ம விகர்மகளனு = புண்யபாப கர்மங்களை
நிரந்தரதலி = நிரந்தரமாக
சுதர்ம நாமககெ = சுதர்ம நாமகனான பரமாத்மனுக்கு
அர்ப்பிசுத = அர்ப்பித்தவாறு
நீனு நிஷ்கலுஷனாகு = பாபங்கள் இல்லாதவனாகு
பர்மகர்ப்பன = ஹிரண்யகர்ப்ப என்று அழைக்கப்படுபவரான பிரம்மதேவரின்
ஜனக = தந்தையான ஸ்ரீஹரி
தயதலி = தயையால்
துர்மதிகளனு = மித்யாஞான முதலான துர்புத்திகளை கொடுக்காமல்
எல்லகாலதலி = அனைத்து காலங்களிலும்
தன்னஹர்ம்யதொளகெ = தன் வீட்டில்

இட்டு = வைத்து
க்ருபெயிந்த = கருணையுடன்
காவ = காக்கிறான்.

நீ எப்போதும் தூய்மையான மனதுடன் புண்ய பாவங்களை தினந்தோறும் சுதர்ம நாமக பரமாத்மனுக்கு அர்ப்பித்து வா. அதாவது, தர்ம என்றால் 'தாரகத்வாத்தர்ம:' ப்ரபஞ்சத்தை தரித்திருக்கிறான் ஆகையால் பரமாத்மனுக்கு தர்ம என்று பெயர். அனைத்தையும், இத்தகைய பரமாத்மனுக்கு, அர்ப்பிப்பதால், நீ பாபங்கள் இல்லாதவனாகிறாய். பிரம்மதேவரின் தந்தையான ஸ்ரீபரமாத்மன் தன் கருணையால், உனக்கு கெட்ட புத்திகள் உருவாகாதவாறு செய்வான். மற்றும், தன் வீட்டில் வைத்து எப்போதும் ஸ்வரூப ஆனந்தத்தைக் கொடுக்கிறான்.

**கல்பகல்பதி3 ஷரணஜனவர**
**கல்பவ்ருக்ஷனு தன்ன நிஜ ஸ**
**ங்கல்ப த3னுஸாரத3லி கொடு3திப்பனு ப2லாப2லவ |**
**அல்பஸுக2தா3 பேக்ஷெயிந்த3ஹி**
**த3ல்ப நாராதி4ஸதி3ரெந்தி3கு3**
**ஷில்பிக3ன கை ஸிலுகி3தா ஷிலெயந்தெ ஸந்தயிப ||14**

ஷரணஜனவர கல்பவ்ருக்ஷனு = சரணாகதி அடைந்த பக்தர்களுக்கு உத்தமமான கல்பவ்ருக்ஷத்தைப் போலிருக்கும் ஸ்ரீஹரி
தன்ன நிஜ சங்கல்பதனுசாரதலி = அனாதியான சத்யசங்கல்பத்திற்கு ஏற்ப
கல்பகல்பதி = ஒவ்வொரு பிரம்ம கல்பத்திலும்
பலாபலவ = அவரவர்களின் யோக்யதைக்கேற்ப, மூன்றுவித ஜீவர்களில் முக்தியோக்யர்களுக்கு முக்தியையும், தமோ யோக்யர்களுக்கு அந்தம் தமஸ்ஸையும், மத்யமருக்கு சுகதுக்க மிஸ்ரமான பலன்களையும் கொடுக்கிறான்.
அஹிதல்பன = சேஷதேவரை படுக்கையாகக் கொண்ட ஸ்ரீபரமாத்மனை
அல்பசுகத = தற்காலிக சுகத்தை விரும்பி
எந்திகு = என்றைக்கும்
ஆராதிஸதிரு = ஆராதனை செய்யாதே.
ஷில்பிகன = ஒரு சிற்பியின்
கைஷிக்க = கைக்கு சிக்கிய
ஷிலெயந்ததலி = கல்லைப் போல
சந்தைப = சுகத்தைக் கொடுப்பான்.

சரணாகதி அடைந்தவர்களை அருளும் விஷயத்தில் கல்பவ்ருக்ஷத்தைப் போலிருக்கும் ஸ்ரீஹரி, தன் சத்யசங்கல்பத்திற்கேற்ப, ஒவ்வொரு பிரம்ம கல்பத்திலும், ஸ்ருஷ்டிக்கு வந்திருக்கும் மூன்றுவித ஜீவராசிகளில், முக்தி யோக்யர்களுக்கு முக்தியையும், தமோ யோக்யர்களுக்கு அந்தம்தமஸ்ஸையும், மத்யமருக்கு சுகதுக்க மிஸ்ரமான நித்ய சம்சாரத்தையும் கொடுக்கிறான். இத்தகைய சேஷசாயியான பரமாத்மனை, தற்காலிக சுகங்களுக்காக என்றும்

வேண்டாதே. பரமாத்மன் மகிழட்டும் என்று துதித்தால், உன் துதிக்கு மெச்சி உனக்கு சுகத்தைக் கொடுக்கிறான்.

ஒரு சிற்பியின் கைக்கு சிக்கிய கல், என்னை ஒரு சிற்பமாக மாற்றி, பூஜாதிகளை செய் என்று அவனை வேண்டிக் கொள்கிறதா? எப்படி சிற்பியே தானாகவே கல்லினை பிரதிமையாக மாற்றி பூஜாதிகளை செய்யுமாறு ஆக்குகிறானோ, அப்படி பரமாத்மன், நீ எதை விரும்பினாலும் தானாகவே உன் யோக்யதைக்கேற்ப சுகத்தைக் கொடுக்கிறான்.

**தே3ஷபே4தா3 காஷத3ந்த3தி3**
**வாஸுதே3வனு ஸர்வபூ4த நி**
**வாஸி எனிஸி சராசராத்மகனெந்து3 கரெஸுவனு ।**
**த்3வேஷ ஸ்னேஹோதா3ஸினக3ள**
**ல்லீ ஷரீரிக3ளொளகெ3 அவர உ**
**பாஸனக3ளந்த3த3லி ப2லக3ளனீவ பரபி3ரம்ம ||15**

தேஷபேதா காஷதந்ததி = இட பேதத்தினால் ஒரே ஆகாயம், எப்படி வெவ்வேறாக தெரிகிறதோ
வாசுதேவனு
ஸர்வபூத நிவாஸி எனிஸி = அனைத்து பிராணிகளிலும் வசிப்பவன் என்று நினைத்து
சராசராத்மகனெந்து = சராசராத்மகமான ப்ரபஞ்சத்தில் அந்தந்த உருவங்களாக இருந்து சராசர ப்ராணிகளின் பெயர்களில் அழைத்துக் கொள்கிறான்
பரமாத்மன்
ஈ ஷரீரதொளகெ = இந்த சரீரத்தில்
த்வேஷ ஸ்னேஹோதாஸீனகளல்லி = த்வேஷ, ஸ்னேஹ, உதாசீன என்னும் மூன்று வித உபாசனைகளின் நடுவில்
அவர = த்ரிவித ஜீவர்களின்
உபாசனெகளந்ததலி = த்வேஷம் செய்பவர், ஸ்னேகம் செய்பவர், உதாசீனம் செய்பவர் என மூன்று வித உபாசனைகளுக்கேற்ப
பலவீவனு = பலன்களைக் கொடுக்கிறான்.

அனைத்து இடங்களிலும் ஒரே ஆகாயம் வியாபித்திருப்பதைப் போல, சராசராத்மக இந்த பிரபஞ்சத்தின் அனைத்து இடங்களிலும் பரமாத்மன் வியாப்தனாக இருப்பதால், பரமாத்மனுக்கு சர்வபூத நிவாச என்று பெயர். இப்படி சராசர பிராணிகளில் அந்த உருவமாக இருந்து, அந்த பிராணிகளின் பெயர்களை தானே தரித்திருக்கிறான். சரீரம் பெற்றிருக்கும் ஜீவர்களில், த்வேஷம் செய்பவர்கள் என்றும், நட்பு செய்பவர்கள் என்றும், உதாசீன செய்பவர்கள் என்றும், மூன்று வித உபாசகர்கள் உண்டு. இவர்களில், அவரவர் செய்யும் உபாசனைகளுக்கேற்ப, நட்பு செலுத்துபவர்களுக்கு முக்தியையும், த்வேஷிகளுக்கு அந்தம்தமஸ்ஸையும், உதாசீனம் செய்பவர்களுக்கு நித்ய சம்சாரத்தையும் கொடுக்கிறான்.

இதனால், பரமாத்மனுக்கு ஜீவரின் தேகங்களில் வைஷம்ய தோஷம் வருகிறது என்று அர்த்தமல்ல. அவரவர்களின் உபாசனைகளுக்கேற்பவே பலன்களைக் கொடுக்கிறான் என்று அறிய வேண்டும்.

**ஸஞ்சிதாகா³மிக³ள கர்ம வி**
**ரிஞ்சி ஜனகன ப⁴ஜிஸெ கெடு³வுவு**
**மிஞ்சினந்த³தி³ பொளெவ புருஷோத்தம ஹ்ருத³ம்ப³ரதி³ |**
**வஞ்சிஸுவ ஜனரொல்ல ஸ்ரீவ**
**த்ஸாஞ்சித ஸுஸத்³வக்ஷ தா னி**
**ஷ்கஞ்சன ஜனப்ரீய ஸுரமுனிகே³ய ஷுப⁴காய ||16**

விரிஞ்சி ஜனகன = பிரம்மதேவரின் தந்தையான ஸ்ரீபரமாத்மனை
பஜிஸெ = துதித்தால்
சஞ்சிதாகாமிகள கர்ம =
* சஞ்சித = முந்தைய பிறவிகளில் சம்பாதித்த கர்மங்களுக்காக இந்த பிறவியில் அனுபவிப்பவை
* ஆகாமி = இந்த பிறவியில் செய்த, செய்யப்போகும் கர்மங்களுக்காக, அடுத்த பிறவிகளில் அனுபவிக்க வேண்டிய
* இந்த இரு கர்மங்களும்,
கெடுவுவு = நாசம் அடைகின்றன
புருஷோத்தமனு = க்ஷாக்ஷர புருஷர்களில் சிறந்தவனான ஸ்ரீபரமாத்மன்
ஹ்ருதயாம்பரதி = உங்கள் ஹ்ருதயாகாஷத்தில்
மிஞ்சினந்ததி பொளெவ = அபரோக்ஷத்தில் மின்னலைப் போல காட்சியளிக்கிறான்
ஸ்ரீவத்ஸாங்கித சுசத்வ்யக்ஷ = ஸ்ரீதேவியையும், கௌஸ்துப மணியையும் தன் மார்பில் தரித்திருப்பவனான
வஞ்சிஸுவ ஜனர = டாம்பீக பக்தி காட்டுபவர்களுக்கு
ஒல்ல = அத்தகையவர்களுக்கு தரிசனம் அளிப்பதில்லை
நிஷ்கிஞ்சன ஜனப்ரிய = பரமாத்மனைத் தவிர மற்ற வஸ்துக்கள் நமது அல்ல என்று அறிந்தவன் நிஷ்கிஞ்சனன். இத்தகையவனுக்கு ப்ரியனான அல்லது; நிஷ்கிஞ்சன மக்களை விரும்புகிற பரமாத்மன்
ஸுரமுனிகேய = தேவதைகளாலும் ரிஷிகளாலும் வணங்கப்படுபவன்
ஷுபகாய = மங்கள ஸ்வரூபன், ஸ்ரீபரமாத்மன்.

ப்ராரப்த கர்மணொன்யஸ்ய ஞானாதேவ பரிக்ஷய - என்னும் அணுபாஷ்ய வாக்கியத்தில் ப்ராரப்த கர்மத்தை தவிர, ஆகாமி, சஞ்சித என்னும் இரு கர்மங்களும், அபரோக்ஷ ஞானம் ஆன உடனேயே நாசம் அடைகிறது. ப்ராரப்த கர்மம் மட்டும் அனுபவித்தே ஆகவேண்டும் என்றிருப்பார். மற்றும்:

பித்யதே ஹ்ருதயக்ரந்தி பித்யந்தே ஸர்வஸம்ஷயா: |
க்ஷேயந்தே ஞாஸ்ய கர்மாணித்ருஷ்ட ஏகாத்மனீஷ்வரே ||

என்னும் பாகவத 1ம் ஸ்கந்த வாக்கியத்திற்கேற்ப அபரோக்ஷத்தில் பரமாத்மனை கண்ட உடனேயே மன அழுக்குகள் பரிகாரம் ஆகின்றன. அதனால், மனதின் அனைத்து சந்தேகங்களும் பரிகாரம் ஆகின்றன. மற்றும் இவனின் ஆகாமி, சஞ்சித கர்மங்கள் அனைத்தும் நாசம் அடைகின்றன என்று நிச்சயம் ஆகின்றது. இந்த அர்த்தத்தையே தாசார்யரும் இங்கு சொல்லியிருக்கிறார்.

பரமாத்மனை விடாமல் துதித்தால், மனதை நிஸ்சலமாக பரமாத்மனிடம் நிலைத்து வைத்தால், தன்னை நம்பிய மக்களில் அன்பு காட்டும் பரமாத்மன், அவர்களின் ஹ்ருதயாகாஷத்தில் மின்னலைப் போல ஒளியுடன் தரிசனம் அளிக்கிறான். பரமாத்மனை கண்ட உடனேயே இவனின் ஆகாமி, சஞ்சித என்னும் இரு விதமான கர்மங்கள் நாசமாகி, முக்தியில் பரம சுகத்தை அடைகிறான் என்பது கருத்து.

**கால த்[3]ரவ்ய ஸுகர்ம ஷுத்தி[3]ய**
**பேளுவரு அல்பரிகெ[3] இவு நி**
**ர்முலகை[3]ஸுவு எல்ல பாபக[3]ளெல்ல காலத[3]லி |**
**தைலதா[4]ரெயந்த[3]வன பத[3]**
**ஓலயிஸி துதிஸத[3]லெ நித்யதி[3]**
**பாலிஷரு கர்மக[3]ளெ தாரகவெந்து[3] பேளுவரு ||17**

கால த்ரவ்ய சுகர்ம ஷுத்திய = கர்மங்களை செய்வதற்கு யோக்யமான காலத்திற்கு ஷுத்தியான காலம் என்பர். த்ரவ்ய ஷுத்தி என்றால், பாத்திரம் முதலானவற்றிற்கு புளி முதலானவற்றால் செய்யும் ஷுத்தி. ஷுத்தமான காலத்தில், ஷுத்தமான த்ரவ்யங்களால், சத்கர்மங்களை செய்வதே அந்த கர்மத்திற்கு ஷுத்தி என்று பாகவதாதிகளில் சொல்லியிருக்கின்றனர்.
அல்பரிகெ = அல்ப ஞானிகளுக்கு
அவு = அகால கர்மாதி ஷுத்திகள்
எல்லகாலதலி = எந்த காலத்திலும்
பாபகள = எல்லா பாபங்களையும்
நிர்மல கைஸுவவல்ல = முழுமையாக நாசம் செய்வதில்லை.
தைலதாரியந்தெ = எண்ணையை ஊற்றுவதைப் போல தொடர்ச்சியாக
அவனபதவ = அந்த பரமாத்மனின் பாதாரவிந்தத்தை
நித்யதி ஆலயிஸி = சித்தத்தில் வைத்து
ஸ்துதிஸதலெ = ஸ்தோத்திரம் செய்யாமல்
பாலிஷரு = சிறு புத்தி உடையவர்கள் (மூர்க்கர்கள்)
கர்மாதிகளே தாரகவெந்து = நம்மை மேம்படுத்துவன என்பார்கள்.

'கால த்ரவ்ய சுகர்ம ஷுத்திய பேளுவரு' என்னும் சொற்களின் அர்த்தத்திற்கேற்ப, கால ஷுத்தி, த்ரவ்ய ஷுத்தி, கர்ம ஷுத்தி விஷயங்களை பாகவதம் 11ம் ஸ்கந்தம் 21ம் அத்தியத்தில் சொல்லியிருக்கிறார்கள். அதுபோலவே,

தேஷகாலாதி பாவானாம் வசனான்மம ஸத்தம |
குணதோஷௌ விதீயேதே நியமார்த்தம் ஹிகர்மணாம் ||7

(ஶ்ரீகிருஷ்ணன் உத்தவனுக்கு உபதேசம் செய்தது)

ஹே உத்தவனே. இந்த தேசத்தில், இந்த காலத்தில், இந்த த்ரவ்யத்தினால் செய்யும் கர்மங்கள் யோக்யமானவை. அப்படி இல்லையெனில், அது அயோக்யம் எனப்படுகிறது. என்றும் கர்மங்களின் நியமத்திற்காக என் வசனத்தின் மேல் குணதோஷங்கள் விதிக்கப்படுகின்றன. தேசத்தில் எந்த தேசம் சுத்தமானது என்றால்:

கிருஷ்ண சாரோத தேஷானாம் பிராம்மணானாம் ஷுசிர்பவேத் |
கிருஷ்ண ஸாரோபி ஸௌவீர கீகடா ஸம்ஸ்க்ருதேரிண: ||8

இதன் அர்த்தம் விஜயத்வஜீய வியாக்யானத்திற்கேற்ப எழுதப்படுகிறது.

எந்த தேசத்தில் மான்கள் தாமாகவே வந்து வசிக்கின்றனவோ, அந்த தேசமே பிராமணர்கள் கர்மம் செய்வதற்கு ஏற்ற தேசம் என்று அறியவேண்டும். இந்த ஸ்லோகத்தில் இருக்கும் 'அத' என்னும் சொல், மான்கள் வசிக்கும் இடங்களைத் தவிர வேறு சில வகையான தேசங்களும் சுத்தமானவை என்று குறிப்பிடுகிறது. (வியாக்யான, ஸ்லோக, தாத்பர்யத்திலிருந்து உதாரணங்கள் கொடுக்கப்பட்டுள்ளன).

நதி சமுத்ர கிரய ஆஸ்ரயாஸ்சவனானிச |
நகராணிச திவ்யானி ஸாலக்ராமாதயஸ்ததா |
தேஷாம் ஸமீப காஸ்சைவ தேஷாயோ ஜனமாத்ரத: |
கர்மண்யாஸ்து ஸயாக்யாதாஸ் ததன்யே கீகடா: ஸ்ம்ருதா: ||
ததன்யேபிது ஏதேஷாம் கிருஷ்ணஸாரோஷிதா: ஸ்வத: |
கர்மண்யா ஏவதேஞ்ஞேயா: இதிவசனாத் ||

என்னும் வாக்கியத்தால் நதி, கடல், மலை, ஆசிரமம், தோட்டம், புண்யகரமான அயோத்யா முதலான நகரங்கள், சாலிகிராமம் இவை இருக்கும் தேசங்கள், இவற்றை சுற்றிலும் இருக்கும் தேசங்கள், கர்மங்களை செய்வதற்கு ஏற்றவை. இவை இல்லாதிருந்தாலும், மான்கள் வசிக்கும் இடமாக இருந்தால் அவை தகுந்த இடம் என்பது கருத்து.

இந்த ஸ்லோகத்தின் பின்பகுதியில் இதற்கு எதிர்ப்பதமான வாக்கியங்களை சொல்கிறார். மான்களே வசித்து வந்தாலும், ஸௌவீர, கீகட, அஸம்ஸ்ம்ருத, ஈரண முதலான தேசங்கள் மட்டும் எப்போதும் அசுத்தமானவை என்று அறியவேண்டும்.

ஸௌவீர என்னும் தேசம் 56 தேசங்களில் ஒன்று.
கீகட என்றால் நதி, சாலிகிராமம், மலை இவை எதுவுமே இல்லாத தேசமாகும்.
அஸம்ஸ்ம்ருத என்பது எப்போதும் மதவெறியர்கள் வசிக்கும் ஊராகும்
ஈரண என்பது கடலில் நடுவே இருக்கும் சிறு தீவுகள்.
இவை அனைத்தும் கர்மங்களை செய்வதற்கு தகுதியற்ற தேசங்கள் ஆகும்.

என்றால், நதி, கடல், ஆகியவை இருந்தாலும் 'யதினாத்யுஷிதா:கல்யை' அங்கத்திய மனிதர்கள் அனைவரும் தமோ யோக்யர்களே ஆகியிருக்கிறார்கள். அங்கு வசிப்பதற்கும் யோக்யமில்லை என்றபின், கர்ம செய்வதற்கு கண்டிப்பாக தகுதியில்லை என்பது கருத்து. இதில் ஒரு சிறப்பு உண்டு.

கலைரத்யுஷிதாஷ்சாபியதி ஸத்பிரதிஷ்டிதா: |
கர்மண்யா ஏவதேஞ்ஞேயா விஷ்ணு லிங்கானி யத்ரச ||

அயோக்யர்கள் வசித்தாலும், சஜ்ஜனர்கள் அந்த இடத்தில் வசித்திருந்தால் அது சிறந்த இடமேயாகும். மற்றும் விஷ்ணு மூர்த்திகள் இருக்கும் இடங்களும் கர்மங்களை செய்வதற்கு ஏற்ற இடமாகும். தேசங்களை சொன்னபிறகு, கர்ம யோக்யமான காலத்தை சொல்கிறார்.

கர்மண்யோ குணர்வாகாயோ த்ரவ்யத: ஸ்வத ஏவவா |
யதோ நிவர்ததெ கர்மஸதோஷோ கர்மக: ஸ்ம்ருத: ||9

யாகாதி கர்மங்களை செய்வதற்கு யோக்யமான காலமே சுத்தமான காலமாகும். காலத்தினால் சுத்தி என்றும் த்ரவ்யத்தினால் சுத்தி என்றும் இவை இரு விதங்கள். அவற்றில், சந்த்யாகாலம் ஆகியவை கர்மங்களை செய்வதற்கான சுத்தமான காலம். த்ரவ்யத்தினால் காலத்திற்கு கர்மண்ய (தகுதி / உறுதி) என்றால், வசந்த காலம் ஆகியவற்றை யாக காலம் என்றனர். வசந்த ருதுவின் சம்பந்தத்தினால் இந்த காலத்திற்கு கர்மண்ய என்னும் நிலை கிடைத்தது. எந்த காலத்தில் கர்மங்களை செய்யக்கூடாதென்று தடை இருக்கிறதோ அக்காலத்திற்கு சதோஷ (அசுத்தி) காலம் என்று அறியவேண்டும். அது என்னவெனில்: 'நிஷேதோமத்ய்மாராத்ரி: ராக்ஷஸானந்துகோசர:'. தடை செய்யப்பட்ட அர்த்த ராத்திரியில் கர்மங்களை செய்தல், அசுரர்களின் பலன் ஆகிறது. அது அசுர யோக்யமான காலம் என்று சொல்வதனால் அந்த காலத்தை அசுத்தி என்று கூறினர். அதாவது கர்மம் செய்வதற்கு தகுதியான காலம் இல்லை என்று பொருள்.

த்ரவ்ய சுத்தி பல வகைப்படும் என்று சொல்கின்றனர்.

த்ரவ்யஸ்ய ஷுத்யைஷுதீச த்ரவ்யேண வசனேனவா |
ஸம்ஸ்காரேணாதகாலேன மஹத்வால்பதயாதவா || 10
ஷக்த்யாஷக்த்யாச வாக்புத்யா ஸம்ருத்யா வாததாத்மன: |
அன்யேஷுத்யந்தி ஹி ததாதேஷா வஸ்தானுஸாரத: |11
தான்யதார்வஸ்தி தந்தூனாம் ரஸதைஜஸ சர்மணாம் |
காலவாய்வக்னி ம்ருத்தோயை: பார்திவானாயுதாயுதை: |12

த்ரவ்யங்களை சுத்தி செய்வதற்கு: வேறு சில த்ரவ்யங்களாலும், வாக்கியத்தாலும், ஸம்ஸ்காரத்தாலும், காலத்தினாலும் பெரிய பொருள் சிறிய பொருள் ஆகிய பேதத்தினாலும் என பல விதங்களாக சுத்தியை அறியலாம். இதன் விவரம்:

தாமிரம் முதலான பாத்திரங்களுக்கு எச்சில், கழிவு ஆகியவற்றால் அசுத்தி உண்டாகிறது. அது புளி போன்ற பதார்த்தங்களால் சுத்தி ஆகிறது. மிகப்பெரிய பாத்திரங்கள் அசுத்தி ஆனால், அவை பெரியவர்களின் வாக்கினால் சுத்தி ஆகிறது. அந்த பாத்திரங்களை தூக்குவதற்கும், கழுவுவதற்கும் சாத்தியம் இல்லையென்றால் மட்டுமே, அவை பெரியவர்களின் வாக்கினால் சுத்தம் ஆகிறது. சில பதார்த்தங்கள் கழுவுவதால் மட்டுமே சுத்தி ஆகிறது. பூ, பித்தளை, தாமிரம் ஆகியவை கழுவினால் மட்டுமே சுத்தம் ஆகின்றன. இல்லையெனில் அவை அசுத்தமே.

சில எப்போதும் அசுத்தமே. அதாவது: பகவத் சம்பந்தமல்லாத எவையும் அசுத்தமே என்று பொருள். மிலேச்சர்களின் வீடுகள் அசுத்தமே. ஆனால் அவை காலப்போக்கில் சுத்தமாகின்றன. அது எப்படியெனில், சில காலம் அந்த வீட்டினை காலியாக விட்டிருந்தால், அவற்றை சுத்தம் எனக் கருதலாம். அன்னாதிகள் செய்தபிறகு, ஒரு யாமம் வரை அவை சுத்தியாகும். ஒரு யாமத்திற்குப் பிறகு அன்னத்திற்கு அசுத்தி வருகிறது. அன்னம் என்று சொன்னதால், பக்ஷ்யாதிகள் இதில் சேர்ந்ததில்லை.

வினோதகேன யத்பக்வம் யத்பக்வம் சக்ருதாதினா ।
ஸர்வம் தத்பலவத்க்ராஹ்யம் ।।

என்னும் தர்ம சாஸ்திர வாக்கியத்தால், நீர் சேர்க்காத பால், நெய்யினால் செய்யப்பட்ட பதார்த்தங்கள், பழங்கள் ஆகியவற்றை ஏற்றுக் கொள்ளலாம்.

அன்னாதீனாம் மஹத்வேஷ்வாதி ஸ்பர்ஷேஸ் புஷ்பாம்ஷத் யாகேன ஸிஷ்டஸ்ய ஷுத்தி: ।
அதவான்னஸ்ய அல்பதயா ஷுனாஸ்ப்ருஷ்டஸ்யத ஸ்காஷுத்தி: ।।

அன்னாதிகளை (பல பாத்திரங்களில்) சமைத்து வைத்திருந்தால், அதன் ஏதாவது ஒரு பாகத்தை (பாத்திரத்தை), நாய் தொட்டு விட்டால், அந்த பாகத்தை (பாத்திரத்தை) மட்டும் விட்டுவிட்டு, மிச்ச பாகங்களை (பாத்திரங்களை) நாம் ஏற்றுக்கொள்ளலாம். ஒரு பாத்திரத்தில் அன்னம் இருந்து, அந்த பாத்திரத்தை நாய் தொட்டுவிட்டால், அது முழுக்க அசுத்தி ஆகிறது. மிகச் சிறியதான எறும்பு போன்றவை சமையல் பதார்த்தங்களை தொட்டுவிட்டால், அப்பதார்த்தங்கள் அசுத்தி ஆவதில்லை. பெரியதான பிராணிகள் சமையல் பதார்த்தங்களை தொட்டுவிட்டால், அவை அசுத்தி ஆகின்றன.

இத்தகைய அசுத்தி ஆனால், கால, த்ரவ்ய சக்தி உள்ளவர்கள், தீர்த்த யாத்திரை, சந்திராயன விரதம் முதலானவற்றை பிராயச்சித்த ரூபமாக செய்தால், அவன் சுத்தமாகிறான். நோய்களால் நோயாளி ஆனவன், தேவதா ஆராதனை, நித்ய கர்மானுஷ்டானங்களை செய்வதால், சுத்தமாகிறான். மகாத்மரின் வசனத்தாலும் அவன் சுத்தமாகிறான். இப்படி அவன் சுத்தமானாலும், மகாத்மர், இவன் அசுத்தமானவர் என்றால், அவன் அசுத்தமானவனே.

புத்திக்கு சுத்தி / அசுத்தியை இவ்வாறு அறியவேண்டும். சுராபானங்களில் புத்தி நுழைந்தால், புத்திற்கு அசுத்தி வந்திருக்கிறது என்று பொருள். ஹரிகதா ஸ்ரவணாதி புண்ய கர்மங்களால் புத்திக்கு சுத்தி ஆகிறது. ஒருவனுக்கு இருக்கும் செல்வத்தினால் அவனுக்கு சுத்தி / அசுத்தி ஆகிறது. எப்படியெனில், தன்னிடம் இருக்கும் த்ரவ்யத்தை, சத்பாத்ரர்களில் தானம் செய்தால், அவன் சுத்தனாகிறான். அசத்பாத்ரர்களுக்கு தானம், வைஷ்யா முதலானவர்களுக்கு பணம் செலவழித்தால் அசுத்தி ஆகிறான்.

ஸ்னானதான தபோவஸ்தாவீர்ய சம்ஸ்கார கர்மபி: |
மதப்யாஸான்மன: ஷௌசம்க்ருத்வா கர்மாசரேத்விஜ: ||14
மந்த்ரஸ்ய ச பரிஞானம் கர்ம ஷுத்திர்மதர்பணம் |
தர்ம: ஸம்பாத்ய தேஸத்பி: அதர்மஸ்து விபர்யயை: ||15

ஸ்னானம், தானம், தவம் இவற்றை யோக்யதைக்கேற்ப செய்ய வேண்டும். ஊர்த்வ புண்ட்ர தாரணம், சந்தியாவந்தனம் ஆகியவற்றுடன், என் பூஜை வரைக்குமான கர்மங்களை செய்து, இதனால் மனதை தூய்மையாக்கிக் கொண்டபிறகு, தன் இஷ்டமான விசேஷ கர்மங்களை செய்யவேண்டும். மந்திரங்களை ஜெபித்து, சாதனைகளை செய்யவேண்டுமெனில், மந்திரார்த்த ஞானத்தை சம்பாதிக்க வேண்டும். செய்த கர்மங்கள் மறுபடி சுத்தி ஆகவேண்டுமெனில், அவற்றை எனக்கு அர்ப்பிக்க வேண்டும். அதாவது, ஸ்ரீகிருஷ்ணார்ப்பணமஸ்து என்று அர்ப்பித்தால், கர்ம சுத்தி ஆகிறது என்று ஸ்ரீகிருஷ்ணன் கூறுகிறான்.

மேலும் அதிக விவரங்களை அறியவேண்டுமெனில், பாகவத 11ம் ஸ்கந்தத்தை பார்க்கலாம். இங்கு பிராயச்சித்த ரூபமான, கர்மங்களின் சுத்தியை, கால த்ரவ்ய சுத்தியை சொல்லியிருக்கின்றனர். ஆனாலும், வெறும் பிராயச்சித்த ரூபமான கர்மங்களை செய்து கொண்டாலும், அஞ்ஞானிகளுக்கு அவர்களின் அனைத்து பாவங்களும் பரிகாரம் ஆவதில்லை. பரமாத்மனின் பாதாரவிந்தங்களில் திடமாக மனதை வைத்து பஜனைகளை செய்யாமல், வெறும் கர்மங்களை மட்டும் செய்தால், அதிலிருந்து எந்த பலன்களும் கிடைப்பதில்லை. இதனால் நித்ய கர்மங்கள், சந்த்யா வந்தனங்கள் ஆகியவற்றை செய்தே ஆகவேண்டும். அந்த கர்மங்கள் பகவந்தனின் அர்ப்பணையால் சுத்தி ஆகிறது. நைமித்திக கர்மங்கள், தானாதிகளை செய்தால், ஸ்வர்க்காதி போகங்களுக்கு அவை பயன்படுகிறதே தவிர, முக்திக்கு அவை சாதனமல்ல. ஆகையாலேயே, தாசார்யர், 'கர்மமே தாரகம் என்பவர்கள் மூர்க்கர்' என்று சொல்கிறார்.

ஆகையால், கர்ம மார்க்கத்தைவிட ஞான மார்க்கமே உத்தமம் என்று அறியவேண்டும். மற்றும் 'கெசரினிந்த கெசரு தொளெவந்தெ கர்மத பல' என்னும் வாக்கியத்தை தாசார்யர் சொல்கிறார்.

**க1மலஸம்ப4வ ஷர்வ ஷக்ராதி3**
**அமரரெல்லரு இவன து3ரதி3**
**க்ரம மஹிமெக3ள மன வசனதி3ம் ப்ராந்தகா3ணத3லெ |**

**ஸ்ரமிதராகி3 பதா3ப்3ஜகல்ப**
**த்3ருமத நெளலா ஸ்ரயிஸி லக்ஷ்மீ**
**ரமண ஸந்தெயிஸெந்து3 ப்ரார்த்தி2பரதி1 ப4கு3தி1யிந்த3 ||18**

கமலசம்பவ = பிரம்மதேவர்
ஷர்வ = ருத்ரதேவர்
ஷக்ராதி = இந்திரன் முதலான
அமரரெல்லரு = தேவதைகள் அனைவரும்
இவன = இந்த பரமாத்மனின்
துரதிக்ரம = அபாரமான மகிமைகளை
மனவசனதிம் = மனதாலும், வசனத்தாலும்
ப்ராந்தகாணதலெ = எல்லைகளை காணமுடியாமல்
ஸ்ரமிதராகி = கஷ்டங்களை அடைந்து
பதாப்ஜ கல்பத்ரும = பாதாரவிந்தம் என்னும் கல்பவ்ருக்ஷத்தின்
நெளல = நிழலை
ஆஸ்ரயிஸி = அடைந்து
லட்சுமிரமண = ஹே லட்சுமிபதியே
ஸந்தெயிஸெந்து = என்னை காப்பாற்று என்று
அதி பகுதியிந்த = மிகுந்த பக்தியுடன்
ப்ரார்த்திபரு = பிரார்த்திக்கின்றனர்.

லோகேஷரான பிரம்மதேவர், ருத்ரதேவர், இந்திரதேவரே முதலான மகானுபாவர்கள் அனைவரும், இந்த பரமாத்மனின் அபாரமான மகாமகிமைகளை, மனோ, வாக், காயங்களால் ஸ்தோத்திரம் செய்து, அவற்றின் எல்லைகளைக் காணமுடியாமல், அவனின் பாதாரவிந்தங்கள் என்னும் கல்பவ்ருக்ஷத்தின் நிழலை அடைந்து, ஹே லட்சுமிகாந்தனே, நம்மை காப்பாற்று என்று பரம பக்தியுடன் பிரார்த்திக்கின்றனர். இப்படியிருக்கையில், மற்ற மக்கள் பகவந்தனை ஆராதிக்காமல் இருந்தால், அவர்களின் கதி என்ன என்று சொல்லவும் வேண்டுமோ? என்றைக்கும் நற்கதி கிடைக்காது என்பது கருத்து.

**வாரிசரக3ளெனிஸுவ த3ர்து3ர**
**தாரகக3ளெந்த3ரிது3 பே4க3வ**
**நேரி ஜலதி4ய தா3டுவேனு எம்பு3வன தெரனந்தெ |**
**தாரதம்யஞான ஷூன்யரு**
**ஸூரிக3ம்யன திளியலரியதெ3**
**ஸெளர ஷைவ மதானுக3ர நனுஸரிஸி கெடு3திஹரு ||19**

தர்மர = தவளைகள்
வாரிசரகளெனிஸுவ = தண்ணீரில் வசிக்கும் பிராணிகள் என்று அழைக்கப்படுகின்றன
தாரககளெந்தரிது = அந்த தவளைகளே நம்மை இக்கரையிலிருந்து அக்கரைக்கு அழைத்துச் செல்கின்றன என்று நினைத்து

பேகவனேரி = அந்த தவளையின் மேல் ஏறி அமர்ந்து
ஜலதிய = கடலை
தாடுவேனு எம்புவன தெரனந்தெ = தாண்டுவேன் என்பவனைப் போல
தாரதம்ய ஞானஷூன்யனு = தாரதம்ய ஞானம் இல்லாதவன்
ஸூரிகம்யன = ஞானிகளிடமிருந்து அறியப்படும் மகிமைகளைக்கொண்ட ஸ்ரீபரமாத்மனை
திளியலரியதெ = ஹரியே சர்வோத்தமன், பிரம்மாதி அனைத்து சேதனர்களும் அவனின் அதீனர்கள் என்று அறியும் தகுதி இல்லாமல்
ஸௌர ஷைவ மதானுகர = ஸௌர = சூரியனே சர்வோத்தமன் என்று வணங்குபவர்களின் மதம்

உலகத்தில் கடல் முதலான நீர்நிலைகளை தாண்ட வேண்டுமெனில், படகுகள், தோணிகள் ஆகியவற்றை பயன்படுத்த வேண்டும். இதனை அறியாமல், படகுகளும் தண்ணீரில் மிதக்கின்றன, தவளைகளும் தண்ணீரில் மிதக்கின்றன ஆகையால் நான் தவளையின் மீதேறி ஏன் கடலை தாண்டக்கூடாது என்று கேட்டு, அவற்றின் மேல் அமர முயல்பவன் எப்படி தோல்வியடைகிறானோ, அப்படியே, பலரும், ஹரி சர்வோத்தமன், அவனைவிட லட்சுமிதேவியர் பற்பல குணங்கள் குறைவானவர், பிரம்ம வாயுகள் அவர்களைவிட குறைவானவர்கள் என்னும் தாரதம்யத்தை போதிக்கும் மத்வ மதத்தை விட்டு, சூரியனே சர்வோத்தமன், சிவனே சர்வோத்தமன் என்று உபாசனை செய்பவர்களின் மதங்களை பின்பற்றி, கெட்டுப் போகிறார்கள்.

**க்ஷுதெ4யகோ3ஸுக2 போகி3 கானன**
**ப3த3ரிப2லக3ள பேக்ஷெயிந்த3லி**
**பொதெ3யொளகெ3 ஸிக3பி3த்து3 பா3ய்தெரெவவன தெரனந்தெ |**
**விதி3பிதன பூஜிஸதெ3 நின்னய**
**உத3ரகோ3ஸுக2 ஸாது3 லிங்க3**
**ப்ரத3ருஷகராராதிஸுத ப3ளலதி3ரு ப4வதொ3ளகெ3 ||20**

க்ஷுதெயகோஸுக = பசியை போக்கிக் கொள்ளும் பொருட்டு
கானன பதரி பலகள = காட்டில் இருக்கும் இலந்தைப் பழங்களை
அபேக்ஷெயிந்தலி = சாப்பிட வேண்டும் என்ற ஆசையில்
போகி = காட்டிற்குச் சென்று
பொதெயொளகெ சிகபித்து = முள் மரங்களில் சிக்கிக்கொண்டு
பாய்தெரெவவன தெரனந்தெ = தவிப்பவனைப் போல
விதிபிதன = பிரம்மதேவரின் தந்தையான ஸ்ரீபரமாத்மனை
பூஜிஸதெ = பூஜிக்காமல்
நின்னய உதரகோஸுக = வயிற்றுப் பாட்டிற்காக
ஸாதுலிங்க ப்ரதருஷகர = ஸாதுக்களைப் போல வேடம் பூண்ட, பகவத் பக்தி கொஞ்சமும் இல்லாத ஞான சூன்யர்களை
ஆராதிஸுத = வணங்கியவாறு
பவதொளகெ = சம்சாரத்தில்
பளலதிரு = துன்பப் படாமல் இரு.

மனிதர்கள் தமக்கு பசித்தால், ஊரிலேயே கிடைக்கும் அன்னத்தைத் தேடாமல், காட்டிற்குச் சென்று அங்கிருக்கும் இலந்தைப் பழத்தை தின்பேன் என்று சொல்லி, முட்கள் நிறைந்த மரங்களில் சிக்கிக் கொண்டு தவிப்பார்கள். அதுபோல, பிரம்மதேவருக்குத் தந்தையான, அனைத்து உலகங்களுக்கும் தந்தையான ஸ்ரீபரமாத்மனை ஆராதிக்காமல், பார்த்தால் மிகப்பெரிய சாதுக்களைப் போல இருக்கும், வெறும் வேஷதாரிகளின் கபடத்தில் மயங்கி, அவர்களையே ஆராதித்து, உன் வயிற்றை நிரப்பிக்கொண்டு, இந்த சம்சாரத்தில் கஷ்டங்களை அனுபவிக்காதே.

**க்ஷோணிபதி ஸுதனெனிஸி கை து$^{3}$**
**க்$^{3}$கா$^{3}$ணிகொ$^{3}$ட்டுவ தெரதி$^{3}$ ஸுமனஸ**
**தே$^{4}$னு மனெயொளகி$^{3}$ரலு கோ$^{3}$மய ப$^{3}$யஸுவந்த$^{3}$த$^{3}$லி |**
**வேணுகா$^{3}$னப்ரியன அஹிக ஸு**
**கா$^{2}$னுப$^{4}$வ பே$^{3}$ட$^{3}$த$^{3}$லெ லகுமி**
**ப்ராண நாத$^{2}$ன பாத$^{3}$ப$^{4}$கு$^{3}$தி$^{1}$ய பே$^{3}$டு$^{3}$ கொண்டா$^{3}$டு$^{3}$ ||21**

க்ஷோணிபதி = பூமியை ஆளும் மகாராஜனின்
ஸுதனெனிஸி = மனம் என்று நினைத்துக் கொண்டு
துக்காணிகெ = பணத்திற்காக
கையொட்டுவ தெரதி = அவனை ஆதரித்து, கை தட்டுவதைப் போல
ஸுமனஸதேனு = தேவப்பசுவான காமதேனு
மனெயொளகிரலு = வீட்டில் இருக்கையில்
கோமய = மாட்டுச் சாணியை
பயசுவந்ததலி = விரும்புவதைப் போல
வேணுகானப்ரியன = வேணுகான ப்ரியனான ஸ்ரீகிருஷ்ணனை (வேண்டாமல்)
அஹிக சுகானுபவ பேடதலெ = விஷய போகாதிகளைக் கொடு என்று வேண்டாமல்
லகுமிபிராண நாதன = லட்சுமிதேவிக்கும், முக்யப்ராண தேவருக்கும் கூட ஸ்வாமியான ஸ்ரீபரமாத்மனின்
பாதபகுதிய = பாதாரவிந்தங்களில் பக்தியை
பேடு = கொடு என்று வேண்டு
கொண்டாடு = அந்த பரமாத்மனையே ஸ்தோத்திரம் செய்.

மகாராஜனின் மகனாக இருந்து, இரு காசுக்காக இன்னொருவரை ஆதரித்து கை தட்டுவது எப்படியோ; அல்லது, வீட்டில் காமதேனுவே இருந்தாலும், சாணி வேண்டும் என்று பல வீடுகளுக்குச் செல்பவனின் யோக்யதை எப்படி இருக்குமோ; அப்படியே, லட்சுமிபதியான பகவந்தனின் அருளைப் பெற்று அஹிக சுகங்களை வேண்டுபவர்களும் இருக்கிறார்கள்.

மகாராஜனின் மகனுக்கு வீட்டில் குறைதான் என்ன? அப்படிப்பட்டவன் இரு காசுக்காக இன்னொருவரிடம் கை தட்டினால், அவனின் யோக்யதை எவ்வளவுக்கு

மற்றவர்கள் சிரிப்பதாக இருக்குமோ சிந்தியுங்கள். அடுத்து, வேண்டிய அனைத்தையும் கொடுக்கும் காமதேனுவையே வீட்டில் வைத்திருப்பவன், சாணிக்காக வீடுவீடாக சென்றால் அவன் எப்படிப்பட்டவன்?

இதைப்போலவே, முக்தியைக் கொடுத்து, ஸ்வரூபானந்தத்தை தரிசனம் செய்விக்கும் பரமாத்மனிடம், அல்பமான, தற்காலிகமான ஐஹிக சுகங்களை வேண்டுபவனின் யோக்யதையும் இருக்கிறது. ஆகையால், இத்தகைய அல்பமான விஷயங்களைக் கேட்காமல் ஸ்ரீபரமாத்மனை ஆராதனை செய்து அவனிடம் த்ருடமான பக்தியையே வேண்ட வேண்டும் என்பது கருத்து.

**நந்தி3வாஹன ராத்ரி ஸாத3னெ**
**ப3ந்த3 த்3வாத3ஷி த3ஷமி பைத்ருக**
**ஸந்தி3ஸிஹ ஸமயத3லி ஸ்ரவணவ த்யஜிஸுவந்தெ ஸதா3 |**
**நிந்த்3யரிந்த3லி ப3ந்த3 த்3ரவ்யவ**
**கண்தெரெது3 நோட3த3லெ ஸ்ரீமதா3**
**நந்த3 தீர்த்தந்தர்க3தன ஸர்வத்ர ப4ஜிஸுதிரு ||22**

நந்திவாஹன ராத்ரி = சிவராத்திரியின் நாளிலும்
ஸாதனெ பந்த த்வாதஷி = அல்ப த்வாதஷியான நாளிலும்
தஷமி = தசமி நாளிலும்
பைத்ருக = பித்ரு ஸ்ரார்த்தத்தின் நாளிலும்
ஸந்திஸித ஸமயதலி = சிரவண நட்சத்திரம் வந்த பட்சத்திலும்
சிரவணவ = அந்த நாளில் சிரவண உபவாசத்தையும்
த்யஜிசுவந்தெ = விடுவதைப்போல
சதா = எப்போதும்
நிந்த்யதிந்தலி = தவறானவர்களிடமிருந்து
பந்த த்ரவ்யவ = வந்த பொருட்களை
கந்தெரெது நோடதலெ = கண் திறந்து பார்க்காமல்
ஸ்ரீமதானந்த தீர்த்தந்தர்கதன = ஸ்ரீமன் மத்வாசார்யரின் அந்தர்கதனான ஸ்ரீபரமாத்மனை
சர்வத்ர பஜிஸுதிரு = எப்போதும் வணங்கிக் கொண்டிரு.

விஷ்ணு பஞ்சகம் செய்பவர்கள், சில குறிப்பிட்ட நாட்களில் சிரவண நட்சத்திரம் வந்தால் உபவாசம் செய்யக்கூடாது என்று சொல்லப்பட்டிருக்கிறது. பிரம்மாண்ட புராணத்தில்:

பித்ரப்தே ரௌத்ரிகாப்தேச ஸாதன த்வாதஷீதினே |
தஷம்யாஞ்சைவ விபுதைர்னோபோஷ்யம் விஷ்ணு தத்பரை: ||

தாய், தந்தையரின் சிரார்த்த நாட்களிலும், மகா சிவராத்திரி நாளிலும், த்வாதசி 12 நாழிகைக்கு குறைவாக இருக்கும் நாளிலும், தசமியன்றும், சிரவண நட்சத்திரம் வந்தால் அன்று உபவாசம் கிடையாது என்று சொல்லியிருக்கிறார்கள். விஷ்ணு பஞ்சக நிர்ணயத்தில்:

விஷ்ணுவ்ரதாபிமானாத்வா ஸ்ரவணேசாபிமானத: |
ய: குர்யாத் விஷ்ணு பக்தஸ்து விஷ்ணு த்ரோஹின ஸம்ஷய: ||
ஸதத்பலம் ஷிவேதத்வா யாதிகோரம் மஹத்தம: ||

விஷ்ணு விரதம் என்னும் அபிமானத்திலோ, சிரவண நட்சத்திரம் என்னும் அபிமானத்திலோ, சிவராத்திரியன்று சிரவணத்திற்கான உபவாசத்தை எந்தவொரு விஷ்ணு பக்தன் செய்கிறானோ, அவன் விஷ்ணு த்ரோகி எனப்படுகிறான். அந்த உபவாசத்தின் பலனை, ஈஸ்வரனுக்குக் கொடுத்து, இவன் கோரமான நரகத்தை அடைவான் - என்று சொல்லியிருக்கிறார்கள். மேலும்:

விஷ்ணுவ்ரதஸ்தோ ராஜேந்த்ரமாதா பித்ரோர் ம்ருதிஹனி |
குர்யாத் திவிதிவச் ஸ்ரார்த்தம் சேஷம் புஞ்சீத பந்துபி: ||
அன்யதாகர்ம லோப:ஸ்யாத் வ்ரத பங்கோபி ஜாயதே ||

விஷ்ணு பஞ்சக விரதத்தை செய்பவன், தன் தாய் தந்தைகளின் சிரார்த்த நாட்களில், சிரவண, பௌர்ணமி, அமாவாசை வந்தால், அன்று விதிப்படி சிரார்த்தம் செய்து, அந்த சேஷத்தை தன் சுற்றத்துடன் சேர்ந்து, தானும் உண்ண வேண்டும். அப்படியில்லை எனில், கர்ம நஷ்டம் வருகிறது. விரதபங்கம் ஆகிறது என்று சொல்கிறார்.

இதே அபிப்பிராயத்தையே தாசார்யரும் இங்கே சொல்கிறார். இப்படி விஷ்ணு பஞ்சகத்தில், சிரவண உபவாசம் மிக முக்கியமேயானாலும், எப்படி சில நாட்களில் விட்டுவிடுகின்றனரோ, அப்படி, விதி நிஷேதங்களை ஸ்ரீஹரிக்கு சமர்ப்பணம் செய்வதானாலும், நீசர்களிடமிருந்து த்ரவ்யம் பெறுவதை விட்டு, அந்த த்ரவ்யத்தை கண்ணால்கூட பார்க்கக் கூடாது. இத்தகைய நியமங்களுடன் ஸ்ரீமதானந்த தீர்த்தரின் அந்தர்யாமியான ஸ்ரீபரமாத்மனை துதிக்க வேண்டும் என்பது கருத்து.

**உத$^3$ய வ்யாபினி த$^3$ருஷ பௌர்ணிம**
**அதி$^4$கயாம ஸ்ரவண அபி$^4$ஜித்**
**ஸத$^3$னவைதி$^3$ரெ மாள்ப தெரத$^3$ந்த$^3$த$^3$லி ஹரிஸேவெ |**
**விதி$^4$ நிஷேத$^4$க$^3$ளேனு நோட$^3$தெ$^3$**
**விதி$^4$ஸுதிரு நித்யத$^3$லி தன்னய**
**ஸத$^3$னதொ$^3$ளகி$^3$ம்பி$^3$ட்டு ஸலஹுவ ப$^4$க்தவத்ஸலனு ||23**

உதய வியாபினி = உதய காலத்தில் வியாபித்திருக்கும்
தர்ஷ = அமாவாசை
அதிகயாமவு = ஒரு யாமத்திற்கு கொஞ்சமே அதிகம் இருக்கும் நாழிகைகள் இருக்கும்
பௌர்ணிம = பௌர்ணமி
அபிஜித் = அபிஜித் முகூர்த்தத்தை

சதனவைதிரெ = வியாபித்திருந்தால்; அதாவது 12 நாழிகைகளுக்கு மேல் வியாபித்திருக்கும் ஸ்ரவண, முதலான நாட்களில், விஷ்ணு பஞ்சக உபவாசங்களை செய்பவர்கள்
ஹரிஸேவெ = உபவாச ரூபமான ஹரிபூஜையை
மாள்ப தெரதந்தலி = செய்வதைப் போல
விதி நிஷேதகளேனு நோடதெ = செய்ய வேண்டியது, செய்யக்கூடாதது என்று எதையும் பார்க்காமல்; இது நல்லது, இது கெட்டது என்று எதையும் யோசிக்காமல், நீ செய்த கர்மங்களை
நித்யதலி விதிஸுதிரு = பரமாத்மனுக்கு அர்ப்பித்தவாறு இரு
பக்தவத்ஸலனு = பக்தர்களிடம் பரம வாத்ஸல்யத்தைக் கொண்டுக்கும் ஸ்ரீஹரி
தன்னய = தனது
ஸதனதொளகெ = வீட்டில்
இம்பிட்டு = நன்றாக வைத்துக்கொண்டு
ஸலஹுவ = காப்பாற்றுவான்.

விஷ்ணு பஞ்சக உபவாசம் செய்யும்போது ஒரு மாதத்திற்கு 5 உபவாசங்களை செய்யவேண்டும். அவை இரு ஏகாதசி, பௌர்ணமி, அமாவாசை மற்றும் சிரவண நட்சத்திரம் என 5 உபவாசங்கள் ஆகின்றன. ஏகாதசி விஷயத்தில், விடியற்காலையில் தசமி இருந்தாலும், அடுத்த நாளே ஏகாதசி செய்யவேண்டும் என்று அனைத்து வைஷ்ணவர்களும் பின்பற்றுகின்றனர்.

உதய வ்யாபினி தர்ஷா பௌர்ணமா ஸேதுயாமிகா, மத்யான்ஹ வ்யாபினி ஸ்ரோணாவோ போஷ்யாவிஷ்ணதத்பரை

என்னும் தர்ம சாஸ்திரத்தின் வாக்கியத்திற்கேற்ப, சூர்யோதயத்தில் இருக்கும் அமாவாசையன்றும் (7 1/4 நாழிகை), ஒரு யாமமாவது வியாபித்திருக்கும் பௌர்ணமியன்றும், மத்யானம் என்றால் காலை 6 நாழிகை, சந்தி காலம் 7 நாழிகை என மொத்தம் 13 நாழிகைகள் கழிந்தால், மத்யானம் வருகிறது. மதியத்தில் வியாபித்திருக்கும் ஸ்ரவணத்திலும் உபவாசம் செய்யவேண்டும் என்று சொல்லப்பட்டிருக்கிறது.

இப்படியாக இந்த நாட்களில், விஷ்ணு பஞ்சகம் செய்பவர்கள், எப்படி உபவாசத்தை விடாமல் செய்கிறார்களோ, அப்படியே நீ செய்யும் விதி, நிஷேத கர்மங்களை, கொஞ்சம் கூட சந்தேகப்படாமல், பரமாத்மனுக்கு அர்ப்பணம் செய். அப்படி செய்தால், பரமாத்மன் தன் உலகத்தை உனக்குக் கொடுத்து வாத்ஸல்யத்துடன் உன்னை காப்பாற்றுவான்.

**ஞான ஞேய ஞாத்ருவெம்ப³பி⁴**
**தா⁴ன தி³ம்பு³த்⁴யாதி³க³ளதி⁴**
**ஷ்டானத³லி நெலெஸித்³து³ கரெஸுவ தத்ததா³ஹ்வயதி³ ।**
**பா⁴னுமண்ட³லக³ ப்ரத³ர்ஷக**
**தானெனலு வஷனாகு³வனு ஷுக**

**ஷௌனகாதி3 முனீந்த்3ர ஹ்ருத3யாகாஷ க3தசந்த்ர ||24**

ஞான = அறிவு
ஞேய = அறிந்து கொள்ளவேண்டிய விஷயம்
ஞாத்ரு = விஷயத்தை அறிபவன்
எம்பபிமானதிம் = இந்த பெயர்களால்
புத்யாதிகள அதிஷ்டானதலி = புத்தி, ஞானேந்திரிய முதலான அதிஷ்டானங்களில்
நெலெசித்து = இவற்றில் நிலைத்திருந்து
தத்ததாஹ்வயதி = அந்தந்த பெயர்களில்
கரெஸுத = அழைத்துக் கொண்டு
ஷுக ஷௌனகாதி முனீந்த்ர = சுகாசார்யர், சௌனக முதலான முனிவர்கள்
ஹ்ருதயாகாஷ கதசந்திர = இவர்களின் இதயாகாஷத்தில் வசிக்கும் சந்திரனைப் போல குளிர்ச்சி தரும் குணத்தைக் கொண்ட
பானுமண்டலக = சூர்யமண்டலவாசியாக
ப்ரதர்ஷக தானெனிஸி = ஞானோபதேசகன் என்று நினைத்து
வஷனாகுவனு = பக்தியுடன் தியானிப்பவர்களுக்கு வசமாகிறான்.

ஸ்ரீபரமாத்மன், ஞானத்துடன் அறிந்து கொள்ளத் தகுதியான வஸ்துக்களில் அந்தந்த ரூபமாக இருந்து, அதைப்பற்றிய ஞானம் உள்ளவர்களில் வியாபித்திருந்து அந்தந்த பெயர்களில் புத்தி, ஞானேந்திரியங்களில் இருந்து, அந்தந்த வேலைகளால் அழைக்கப்பட்டு, மகா ஞானிகளான சுகாசார்யர், சௌனகாதி மஹரிஷிகள் ஆகியோரின் ஹ்ருதயாகாஷவாசியாகி, அவருக்கு சந்திரனின் தரிசனத்தால் எப்படி குளிர்ச்சி உண்டாகிறதோ அதைப்போல சுகத்தைக் கொடுத்தவாறு, சூர்யமண்டல மத்யவர்த்தியாகி சவித்ரு நாமதேயத்தால் ஞான போதகன் என்று அழைத்துக்கொண்டு, தன்னை ஆராதனை செய்பவர்களின் வசமாகிறான்.

**ஸ்ரீமனோரம மேரு த்ரிககு3**
**த்3தா4ம ஸத்கல்யாண கு3ணனி**
**ஸ்ஸீம பாவன நாம தி3விஜோத்தாம ரகு4ராம |**
**ப்ரேமபூர்வக நித்ய தன்ன ம**
**ஹாமஹிமெக3ள துதிஸுவரிகெ3 ஸு**
**தா4ம கொ3லித3ந்த3த3லி அகி2லார்த்த2க3ள கொடு3திப்ப ||25**

ஸ்ரீமனோரம = லட்சுமிதேவியரின் மனதிற்கு ஆனந்தத்தை தருபவன்
மருதேஷ = முக்யபிராணதேவருக்கு ஸ்வாமியானவன்
த்ரிககுத்தாம = ஸ்வேதத்வீப, அனந்தாஸன, வைகுண்ட என்னும் மூன்று இடங்களில் வீடு உள்ளவன்
நிஸ்ஸீம = எல்லைகள் அற்றவன்
குண = உத்தமமான மங்களகரமான குணங்களைக் கொண்டவன்
பாவனநாம = பவித்ரமான பெயருள்ளவன்
திவிஜோத்தாம = அனைத்து தேவதைகளைவிடவும் உத்தமன்

ரகுராம = ரகு வம்சத்தில் ராம நாமகனாக அவதரித்தவன். இத்தகைய ஸ்ரீபரமாத்மன்
ப்ரேமபூர்வக = பக்தியுடன் தன் மகாமகிமைகளை
துதிஸுவவரிகெ = ஸ்தோத்திரம் செய்பவர்களுக்கு
ஸுதாமகொலிதந்ததலி = குசேலனுக்கு அன்புடன் அனைத்து ஐஸ்வர்யங்களையும் கொடுத்ததைப் போல
அகிலார்த்தகள கொடுதிப்ப = அனைத்து இஷ்டார்த்தங்களையும் கொடுத்து அருள்வான்.

ஸ்ரீபரமாத்மனின் குணங்கள் மேற்கூறியவாறு உள்ளன. அத்தகைய பரமாத்மனின் மகாமகிமைகளை பக்தியுடன் ஸ்தோத்திரம் செய்பவர்களுக்கு ஸ்ரீபரமாத்மன், தான் குசேலனுக்கு அருளியதைப் போல அருளி அகிலார்த்தங்களைக் கொடுக்கிறான்.

**தந்தெ$^{3}$ தாய்க$^{3}$ள கு$^{3}$ருஹனரியத$^{3}$**
**கந்த$^{3}$ தே$^{3}$ஷாந்தரதொ$^{3}$ளகெ$^{3}$ த**
**ன்னந்த$^{3}$த$^{3}$லி இப்பவர ஜனனி ஜனகரனு கண்டு$^{3}$ |**
**ஹிந்தெ$^{3}$ என்னனு படெ$^{3}$த$^{3}$வரு இவ**
**ரந்த$^{3}$த$^{3}$லி இப்பரல நானவ**
**ரெந்து$^{3}$ காணுவெனெனுத ஹுடு$^{3}$குவ தெரதி$^{3}$ கோவித$^{3}$ரு ||26**

தந்தெ தாய்கள = பெற்றோரின்
குருஹ நரியத = அடையாளத்தை அறியாத
கந்த = குழந்தை
தேஷாந்தரதொளகெ = அவர்களை விட்டு வேறு இடங்களுக்குச் சென்று
தன்னந்ததலி இப்பவர = தன்னைப்போல இருக்கும் குழந்தைகளின்
ஜனனி ஜனகரனு கண்டு = அவர்களின் பெற்றோரைக் கண்டு
ஹிந்தெ என்னனு படெதவரு = முன்பு, என்னைப் பெற்றவர்களும்
இவரந்ததலி இப்பரெலை = இவர்களைப் போலவே என்னையும் பார்த்துக் கொண்டிருப்பார்களே
நானு அவர = நான் அவர்களை
எந்து காணுவனெந்து = என்று காண்பேன் என்றவாறு
ஹுடுகுவ தெரதி = அவர்களை தேடுவதைப் போல
கோவிதரு = ஞானிகள்

இதன் விளக்கம் அடுத்த பத்யத்துடன் சேர்த்து கொடுக்கப்பட்டுள்ளது.

**ஸ்ருதி புராண சமூஹதொ$^{3}$ளு பா$^{4}$**
**ரத ப்ரதிப்ரதி பத$^{3}$க$^{3}$ளொளு நி**
**ர்ஜிதன கு$^{3}$ண ரூபக$^{3}$ள ஹுடு$^{3}$குத பரமஹருஷத$^{3}$லி |**
**மதிமதரு ப்ரதிதி$^{3}$வஸ ஸார**
**ஸ்வத ஸமுத்$^{3}$ரதி$^{3}$ ஷபரியந்த$^{3}$தி$^{3}$**
**ஸதத ஸஞ்சரிஸுவரு காணுவ லவலவிகெயிந்த$^{3}$ ||27**

ஸ்ருதி புராண ஸமூஹதொளு = வேதங்களிலும், புராணங்களிலும்,
பாரத ப்ரதிபரதி பதகளொளு = பாரதத்தின் ஒவ்வொரு பதங்களிலும்
நிர்ஜிதன = எப்போதும் வெற்றியாளனான ஸ்ரீபரமாத்மனின் குணரூபங்களை
பரமஹருஷதலி = மிகவும் மகிழ்ச்சியுடன்
ஹூடுகுத மதிவந்தரு = புத்திவந்தர்கள்
ப்ரதி திவஸ சாரஸ்வத ஸமுத்ரதி = சரஸ்வதிக்கு சம்பந்தப்பட்டவை சாரஸ்வத; அதாவது, பாரத பாகவதாதி சாஸ்திரங்கள் என்னும் கடலில்
ஷபரியந்ததி = மீனைப் போல இருக்கும்
லவலவிகெயிந்த = பரமாத்மனின் மகிமைகளை அறியவேண்டும் என்னும் குதூகலத்துடன்
ஸதத = அனைத்து காலங்களிலும்
சஞ்சரிசுவரு = சஞ்சரித்துக் கொண்டிருப்பர்.

குழந்தையாக இருக்கும்போதே, தன் தாய் தந்தையரை தொலைத்துவிட்டு, வேறு இடத்திற்குப் போய், அங்கு வசிக்கும்போது, தன் வயதேயான குழந்தைகள், தங்களின் தாய் தந்தையர்களுடன் கொஞ்சப்படுவதைப் பார்த்து, தன் பெற்றோரின் அடையாளத்தை மறந்த அக்குழந்தை, எனக்கும் தாய் தந்தையர் இருப்பார்கள் அல்லவா? அவர்களை நான் எப்போது பார்ப்பேன் என்று அவர்களை தேடுவதைப் போல, ஞானிகள், பரமாத்மனைக் காணாமல், ஒவ்வொரு பதத்திற்கும் 10 அர்த்தங்களைக் கொண்ட மகாபாரதத்திலும், பாகவதாதி புராணங்களிலும், வேதங்களிலும், ஒவ்வொரு பதங்களிலும் காணும் பகவன் மகிமைகளை தேடியவாறு, கடலில் மீன்கள் ஆகாரத்தை தேடியவாறு, சஞ்சரிப்பதைப் போல, சாஸ்திரார்த்தம் என்னும் கடலில் பகவன் மகிமைகளை தேடியவாறு, இந்த பரம புருஷனான பரமாத்மனை என்று காண்போம் என்னும் எதிர்பார்ப்பில் சஞ்சரிக்கின்றனர். அதாவது, பகவத் தரிசனத்திற்காக சாஸ்திரார்த்த விஷயங்களில் ஈடுபட்டிருக்கின்றனர் என்று கருத்து.

**மத்ஸ்ய கேதன ஜனக ஹரி ஸ்ரீ**
**வத்ஸலாஞ்சன நிஜ ஷரணஜன**
**வத்ஸல வராரோஹ வைகுண்டா$^{2}$லய நிவாஸி |**
**சித்ஸுக$^{2}$ப்ரத$^{3}$ ஸலஹெனலு கோ$^{3}$**
**வத்ஸ த$^{3}$னி கொ$^{3}$த$^{3}$கு$^{3}$வ தெரதி$^{3}$ பர**
**மோத்ஸஹதி$^{3}$ ப$^{3}$ந்தொ$^{3}$த$^{3}$கு$^{3}$வனு நிர்மத்ஸரர ப$^{3}$ளிகெ$^{3}$ ||28**

மத்ஸ்ய கேதன ஜனக = மன்மதனின் தந்தையான
ஹரி = பரமாத்மனே
ஸ்ரீவத்ஸலாஞ்சன = ஸ்ரீவத்ஸ என்னும் சின்னம் உள்ளவனே
நிஜ ஷரண்ய ஜனவத்ஸல = தன்னை ஷரணன் என்று நம்பிய மக்களிடம் வாத்ஸல்யம் உள்ளவனே
வராரோஹ = உத்தமமான வாகனத்தில் ஏறுபவனே; அல்லது லட்சுமிதேவியை துடையில் அமர்த்திக் கொண்டிருப்பவனே.
வைகுண்டாலய நிவாஸி = வைகுண்ட என்னும் வீட்டில் வசிப்பவனே

சித்சுகப்ரத = சிதானந்தத்தை சஜ்ஜீவர்களுக்குக் கொடுப்பவனே
ஸலஹெனலு = என்னை காப்பாற்று என்று
நிர்மத்ஸரர பளிகெ = உத்தமர்களில் வயிற்றெரிச்சல் இல்லாதவர்களிடம்
கோ = பசு
வத்ஸ த்வனிகொதகுவ தெரதி = கன்று அழைக்கும் சத்தத்தைக் கேட்டு பசு உடனடியாக ஓடி வருவதைப்போல
பரமோத்ஸஹதி = மிகுந்த உற்சாகத்துடன்
பந்தொதகுவனு = வந்து காப்பாற்றுவான்.

ஸ்ரீஹரே! என்னை காப்பாற்று என்று பக்தியுடன் வேண்டும் பக்தர்களின் குரலைக் கேட்ட உடனேயே, கன்றின் குரலைக் கேட்டு ஓடி வரும் பசுவைப் போல, ஸ்ரீஹரி அந்த பக்தரிடம் ஓடி வந்து அவனை காப்பாற்றுகிறான்.

**ஸூரிக$^3$ளிகெ$^3$ ஸமீபக$^3$ து$^3$ரா**
**சாரிக$^3$ளிகெ$^3$ந்தெ$^3$ந்து$^3$ தூ$^3$ரா**
**த்$^3$தூ$^3$ரதர து$^3$ர்லபனெனிஸுவனு தை$^3$த்யஸந்ததிகெ$^3$ |**
**ஸாரிஸாரிகெ$^3$ நெனெவவர ஸம்**
**ஸாரவெம்ப$^3$ மஹோரக$^3$கெ ஸ**
**ர்ப்பாரியெனிஸி ஸதா$^3$ ஸுஸௌக்$^2$யவனீவ ஸுஜனரிகெ$^3$ ||29**

ஸூரிகளிகெ = ஞானிகளுக்கு
ஸமீபக = எப்போதும் அருகில் இருப்பவன்
துராசாரிகளிகெ எந்தெந்து தூராத்தூரதர = துராசாரிகளுக்கு எப்போதும் தூரம் இருப்பவன்
தைத்ய ஸந்ததிகெ = தைத்யர்களுக்கு
துர்லபனெனிஸுவனு = என்றைக்கும் கிடைக்காதவன் என்று அழைக்கப்படுகிறான்
ஸாரிஸாரிகெ = ஒவ்வொரு கணமும்
நெனெவவர = நினைப்பவர்களின்
ஸம்ஸாரவெம்ப மஹோரககெ = சம்சாரம் என்னும் மிகப்பெரிய பாம்பிற்கு
ஸர்ப்பாரியெனிஸி = கருடன் என்று நினைத்து
சுஜனரிகெ = சஜ்ஜனர்களுக்கு
சதா = எப்போதும்
ஸுஸௌக்யவனு = நல்லதையே
ஈவ = கொடுக்கிறான்.

ஞானிகளுக்கு பரமாத்மன் மிகவும் அருகில் இருக்கிறான். அதாவது, எங்கு அழைத்தாலும் அங்கே ப்ரத்யட்சமாகிறான். பிரகலாதனுக்கு கம்பத்திலேயே காட்சி அளித்தான். துரியோதனனை மகிழ்விப்பதற்காக, பாண்டவர்கள் வனவாசத்தில் இருந்தபோது, துர்வாசர் அங்கு சென்று திரௌபதியிடம் பிட்சை வேண்ட, அவளும் துர்வாசரின் சாபத்திற்கு பயந்து, ஸ்ரீகிருஷ்ணனை நினைத்த மாத்திரத்திலேயே, த்வாராவதியில் இருந்தாலும், உடனடியாக அங்கு வந்து சேர்ந்தான் ஸ்ரீகிருஷ்ணன். இப்படியான உதாரணங்கள் பல உண்டு.

அயோக்யர்களின் ஹ்ருதயாகாஷத்தில் இருந்தாலும் அவர்களுக்கு மிகவும் தூரத்திலேயே இருக்கிறான். தைத்ய வம்சத்தவர்களுக்கு என்றைக்கும் கிடைக்க மாட்டான். ஒவ்வொரு கணமும் தன்னை நினைத்துக் கொண்டிருக்கும் பக்தர்களுக்கு, பாம்பிற்கு கருடன் எப்படியோ அப்படி, சம்சாரப் பாம்பினை கருடன் போல அழித்து, ஸ்வரூபானந்தத்தைக் கொடுக்கிறான்.

**சக்ர ஷங்க2 க3தா3ப்4ஜத4ர து3ர**
**திக்ரம து3ராவாஸ விதி4 ஷிவ**
**ஷக்ர ஸூர்யாத்3யமர பூஜ்யபதா3ப்ஜ நிர்லஜ்ஜ ।**
**ஷுக்ரஸிஷ்யன அஷ்வமேத4**
**ப்ரக்ரியவ கெடி3ஸ்யப்3ஜ ஜாண்ட3வ**
**திக்ரமிஸி ஜான்ஹவிய படெ3த3 த்ரிவிக்ரமாஹ்வனு ।।30**

ஷங்க சக்ர கதாப்ஜதர = சங்கு, சக்கரம், கதா, பத்ம என்னும் நான்கினையும் நான்கு கைகளில் ஏந்தியவன்
துரதிக்ரம = இவனை மீறி நடப்பதற்கு யாராலும் சாத்தியம் இல்லாத, அபாரமான சாமர்த்தியம் உள்ளவன்
துராவாஸ = அனைவரைவிடவும் வேறுபட்டவன்
விதி = பிரம்மதேவர்
ஷிவ = ருத்ரதேவர்
ஷக்ர = இந்திரதேவர்
ஸூர்யாத்யமர பூஜ்யபதாப்ஜ = சூர்ய முதலான தேவதைகளால் வணங்கப்படும் பாத கமலங்களைக் கொண்டவன்
விர்லஜ்ஜ = வெட்கம் இல்லாதவன். தான் செய்யும் செயல்கள் தோஷங்களைக் கொண்டிருந்தால், அந்த செயல்களை செய்பவர்கள் வெட்கம் அடைகிறார்கள். பரமாத்மன் நிர்தோஷி. அவன் செய்யும் செயல்கள் நிர்தோஷமானவை. 'யே தோஷா: இதர த்ராபி தே குணா: பரமே மதா:' என்னும் வாக்கியத்தால், மற்றவர்களுக்கு எது தோஷம் என்று தெரிகிறதோ, அது பரமாத்மனிடம் குணமே ஆகிறது. ஆகையால், நியாயமான செயல்களை செய்பவன் ஏன் வெட்கப் படவேண்டும்? ஆகையால், வெட்கம் இல்லாதவன் என்றார்.
ஷுக்ர சிஷ்யன = சுக்ராசார்யரின் சிஷ்யனான பலி சக்ரவர்த்தி
அஷ்வமேத ப்ரக்ரியவ = அஷ்வமேத யாக காரியத்தை
கெடிஸி = வாமன ரூபியாக வந்து கெடுத்து
த்ரிவிக்ரமாஹ்வயனு = த்ரிவிக்ரமனாக வளர்ந்து
அப்ஜஜாண்டவ = பிரம்மாண்டத்தை
அதிக்ரமிஸி = தன் இரண்டாம் அடியால் அளந்து
ஜான்ஹவிய = கங்கையை
படெத = பாதங்களிலிருந்து ஸ்ருஷ்டித்தான்.

ஷங்க சக்ர கதா பத்ம தராஸ்சித்தா ஹரேர்புஜா - என்னும் த்வாதஸ ஸ்தோத்திரத்தின் வாக்கியத்திற்கேற்ப, சக்ர ஷங்க கதா பத்மங்களை எப்போதும்

தரித்திருக்கிறான். இத்தகைய பரமாத்மனை எந்த காலத்திலும் எந்த தேசத்திலும், ரமா பிரம்மாதி தேவதைகளால், எந்த விஷயத்திலும் மீறி நடப்பது சாத்தியமில்லை. அயோக்யர்களான பகவத் த்வேஷிகள், பகவத் பக்தர்களின் த்வேஷிகள் ஆகியோர் என்ன செய்தாலும் அவர்களுக்கு இவனின் இருப்பு, சுகமாக இருப்பதில்லை. கிருஷ்ணனின் தரிசனங்களால், துரியோதனனுக்கு துக்கமே உண்டாயிற்று. பிரம்ம ருத்ராதி தேவதைகளால் பூஜிக்கப்பட்ட பாத கமலங்களைக் கொண்டவன்.

எந்த வேலையை செய்தால், நான்கு பேருக்கு முன்னால், வெட்கப்பட வேண்டுமோ, அத்தகைய வேலையை எப்போதும் செய்யாதவன். ஆகையால், வெட்கம் இல்லாதவன். பலி சக்ரவர்த்தி இந்திர பதவியைப் பெறுவதற்காக 100 அஸ்வமேத யாகத்தை செய்து கொண்டிருக்கையில், அவன், ஸ்ரீபரமாத்மனின் பக்தனே ஆகியிருந்தாலும், ஒரு மன்வந்தரத்திற்கு ஒருவரே தலைவனாக இருக்க முடியும் என்பதாலும், பலி அடுத்த மன்வந்தரத்தில் இந்திர பதவியைப் பெறப் போகிறான் என்பதாலும், இந்த மன்வந்தரத்தில் புரந்தர என்பவரின் இந்திர பதவியை பலி பலாத்காரத்துடன் பறித்துக் கொண்டான் ஆகையாலும், அவனின் சக்தியை, சத்தியத்தை உலகத்தில் பரவச் செய்யவேண்டும் என்பதாலும், பரமாத்மன் வாமன ரூபியாக வந்து பலியிடம் மூன்றடி மண்ணை தானம் கேட்டான்.

பின் த்ரிவிக்ரம ரூபத்தினால், ஒரு அடியால் பூமியை அளந்து, இரண்டாம் அடியை அந்தரிக்ஷத்தில் வைத்தபோது, அந்த பாதம், பிரம்மாண்டத்தின் ஓட்டினை உடைத்து, வெளியில் பாய்ந்து கொண்டிருந்த தண்ணீர் பிரம்மாண்டத்தின் உள்ளே வந்தது. அதுவே கங்கை என்னும் பெயரில் உலகத்தையே பவித்ரமாக்கிக் கொண்டிருக்கிறது. இத்தகைய மகா மகிமையுள்ளவன் என்று அர்த்தம்.

**ஷக்தரெனி ஸுவரில்ல ஹரிவ்யதி**
**ரிக்த ஸுரகணதொ3ளகெ3 ஸர்வோ**
**த்ரிக்தனெனிஸுவ ஸர்வரிந்த3லி ஸர்வகாலத3லி ।**
**ப4க்திபூர்வகவாகி3 அன்ய ப்ர**
**ஸக்திக3ள நீடா3டி3 பரமா**
**ஸக்தனாகி3ரு ஹரிகதா2ம்ருதபான விஷயத3லி ||31**

சுரகணதொளகெ = தேவதா கணங்களில்
ஷக்தரெனிஸுவரு = சிறந்தவன் என்று அழைக்கப்படுபவன்
அல்ல = வேறொருவர் இல்லை
சர்வ காலதலி = முந்தைய, தற்போதைய, அடுத்த என அனைத்து காலங்களிலும்
சர்வரிந்தலி = சராசர பிராணிகள் நிறைந்த பிரபஞ்சத்தில் அனைவரிலும்
சர்வோத்ரிக்த நெனிஸுவ = ரமா பிரம்மாதி அனைத்து ஜீவோத்தமர்களை விடவும் உத்தமன் என்று அழைக்கப்படுகிறான்
ஆகையால்,
ஹரிகதாம்ருத பான விஷயதலி = இத்தகைய மகானுபவனான ஸ்ரீபரமாத்மனின் கதை என்னும் அம்ருதத்தை பானம் செய்யும் விஷயத்தில்

அன்ய ப்ரஸக்திகள நீடாடி = இதர விஷய சுகங்களின் மேலுள்ள ஆசைகளை விட்டு
பக்த்பூர்வகவாகி = பக்தியுடன்
பரமாசக்தனாகிரு = மிகுந்த மரியாதையுடன் அவனையே சரணடைந்திரு.

தேவதா கணத்திலாகட்டும், இதர தைத்ய, அசுர, கந்தர்வாதிகளிலும், சமர்த்தன் என்று பரமாத்மனை விட்டால் வேறு யாரும் இல்லை. பரமாத்மன் ஒருவனே அனைவரை விடவும், அனைத்து காலங்களிலும், சர்வோத்தமன் என்று அழைக்கப்படுகிறான். ஆகையால், இதர விஷய சுகங்களில் இருக்கும் ஆசையை விட்டு, ஹரிகதாம்ருதத்தை பானம் செய்யும் விஷயத்தில் பக்தியுடன், அத்யந்த மரியாதையுடன் இருந்து, அவனையே சரணடைந்திரு.

**ப்ரணதகாமத$^{3}$ ப$^{4}$க்தசிந்தா**
**மணி மணிமயாப$^{4}$ரண பூ$^{4}$ஷித**
**க்$^{4}$ருணி கு$^{3}$ணத்ரய தோ$^{3}$ஷவர்ஜித க$^{3}$ஹன ஸன்மஹிம |**
**எணிஸ ப$^{4}$க்தர தோ$^{3}$ஷக$^{3}$ள கு**
**ம்பி$^{3}$னிஜெயாண்ம ஷரண்ய ராமா**
**ர்ப்பணவெனலு கைகொண்ட$^{3}$ ஷப$^{3}$ரிய ப$^{2}$லவ பரமாப்த ||32**

ப்ரணதகாமத = தன்னை வணங்குபவர்களின் மனோபீஷ்டங்களை நிறைவேற்றுபவன்
பக்த சிந்தாமணி = பக்தர்களுக்கு சிந்தாமணியைப் போல வேண்டியதைக் கொடுப்பவன்
மணி மணியாபரண பூஷித = மாணிக்கமயமான ஆபரணங்களால், அணிகலன்களால் அலங்கரிக்கப்பட்டவனான
க்ருணி = தயாபூர்ணனான
குணத்ரய தூரவர்ஜித = ப்ரக்ருதி சம்பந்தமான சத்வ, ரஜஸ், தமோ குணங்களை தூர விலக்கிய
கஹன ஸன்மஹிம = யாராலும் அறியப்பட முடியாத உத்தம மகிமையுள்ள பரமாத்ம
பக்தர தோஷகள எணிஸ = பக்தர்களின் தோஷங்களை / குறைகளை மன்னிப்பவன்
கும்பிணிஜெயாண்ம = சீதா தேவியின் பதியான ராமன்
ஷரண்ய = பக்தர்களால் வணங்கப்படுபவன்
பரமாப்த = பக்தர்களுக்கு உற்ற தோழனைப் போல இருப்பவன் (பரமாத்ம என்றும் பாடபேதம் உண்டு. பரமாத்ம = சர்வோத்தமனான பரமாத்மன்)
ராமார்ப்பணவெனலு = ஸ்ரீராமா, உனக்கு அர்ப்பணம் என்று சொன்ன
ஷபரிய பலவ = ஷபரி கொடுத்த பழங்களை
கைகொண்ட = ஏற்றுக் கொண்டான்

தன்னை வணங்கும் பக்தர்களின் இஷ்டார்த்தங்களை நிறைவேற்றுபவன். பக்தர்களுக்கு சிந்தாமணியைப் போல அவர்களின் விருப்பங்களை

நிறைவேற்றுபவன். மாணிக்கமயமான ஆபரண, அணிகலன்களை அணிந்திருப்பவன். பரம தயாளு. ப்ராக்ருதமான சத்வ, ரஜஸ், தமோ குணங்களிலிருந்து தூரவிருப்பவன். பிரம்மாதி தேவதைகளாலும் அறியப்பட முடியாத மகாமகிமைகளைக் கொண்டவன். பக்தர்களிடம் என்ன தோஷங்கள் இருந்தாலும் அவற்றை மன்னிப்பவன்.

பூமிக்கு கும்பிணி என்று பெயர். பூமியிலிருந்து பிறந்தவளுக்கு கும்பிணிஜெ என்று பெயர். அவளின் ஆண்ம என்றால், அவளை பாதுகாப்பவன் அதாவது கணவன் என்று அர்த்தம். பூமியிலிருந்து பிறந்தவள் சீதாதேவி. அவளின் கணவன் ஸ்ரீராமன். ஸ்ரீராமன் ஆரண்யத்தில் இருந்தபோது, ஷபரி என்பவள், ராமனின் வருகையை அறிந்து, அவனுக்காக பழங்களை சுவை பார்த்து, சுவையுள்ள பழங்களை மட்டும் தேர்ந்தெடுத்து வைத்திருந்தாள். ஸ்ரீராமனும் அவளது இடத்திற்கு வருகையில், 'ஹே, சீதாபதியான ஸ்ரீராமனே. இந்த பழங்களை நான் உனக்காக வைத்துள்ளேன். இவற்றை ஏற்றுக்கொள்' என்று அர்ப்பிக்க, ஸ்ரீராமனும் அவற்றை, அவளது தோஷங்களை பார்க்காமல் ஏற்றுக்கொண்டான்.

**ப[3]ல்லெனெம்பு[3]வரில்ல ஈதன**
**ஒல்லெனெம்பு[3]வரில்ல லோகதொ[3]**
**ளில்லத[3] ஸ்த[2]லவில்லவல்லை ஞாத ஜனரில்ல ।**
**பெ[3]ல்லத[3]ச்சின பொம்பெ[3]யந்த[3]தி[3]**
**எல்லரொளகி[3]ருதிப்ப ஸ்ரீ பூ[4]**
**நல்ல இவகெ[3]ணெயில்ல அப்ரதிமல்ல ஜக[3]க்கெல்ல ।।33**

ஈதன = இந்த பரமாத்மனை
பல்லெனெம்புவரில்ல = நான் முழுவதுமாக அறிந்தேன் என்று சொல்ல இந்த உலகத்தில் யாரும் இல்லை
ஒல்லெனெம்புவரில்ல = பரமாத்மன் நமக்கு வேண்டாம் என்று சொல்பவர்களும் யாரும் இல்லை
லோகதொள் இல்லத ஸ்தளவில்ல = பரமாத்மன் இல்லாத இடமே இந்த உலகத்தில் இல்லை
ஒள்ளெ ஞாத ஜனரில்ல = பரமாத்மனை நன்றாக அறிந்த மக்கள் யாரும் இல்லை
பெல்லதஜ்ஜின பொம்பெயந்ததி = வெல்லத்தினால் அச்சு செய்தால், அந்த பொம்மைகளின் கை, கால் எதை உடைத்து ருசி பார்த்தாலும், அனைத்து இடங்களிலும் ஒரே மாதிரியான இனிப்பு சுவை இருப்பது போல
எல்லரொளகிருதிப்ப = பரமாத்மனும் அனைவரிடமும் ஒரே மாதிரியாக நிலைத்திருக்கிறான்
ஸ்ரீபூனல்ல = ஸ்ரீதேவியருக்கும், பூதேவியருக்கும், கணவன் ஆனவன்
இவகெணெயில்ல = இவனுக்கு இணை என்று யாரும் இல்லை
ஜகக்கெல்ல = இந்த அனைத்து உலகத்திலும்
அப்ரதிமல்ல = யாராலும் வெல்லப்பட முடியாதவன்

பாகவத 2ம் ஸ்கந்தம் 6ம் அத்தியாயத்தில், பிரம்மதேவர் நாரதருக்கு உபதேசம் செய்யும் சந்தர்ப்பத்தில்:
யஸ்யாவதார கர்மாணி காயந்திஹ்யஸ்மதாதய: |
ந யம் விந்தந்திதத்வேன தஸ்ம்யை பகவதே நம: ||

எந்த பரமாத்மனின் அவதார சரித்திரங்களை, நம்மைப் போன்றவர்கள் பாடல்களாகப் பாடுகின்றோமோ, யாரின் ஸ்வரூபத்தை நம்மால் முழுமையாக அறியமுடியாதோ, அத்தகைய பரமாத்மனுக்காக நமஸ்காரம் என்று கூறினார்.
மேலும். 7ம் அத்தியாயத்தில் 40ம் ஸ்லோகம்:
விஷ்ணோர்னுவீர்ய கணனாம் கதமோர்ஹதீஹ |
நாந்தம்விதாம்யஹ மமீ முனய: ப்ரஜேஷா: ||

ஆகிய வாக்கியங்களால், பரமாத்மனின் மகிமைகளை நாம் முழுமையாக அறியமுடியாது என்று தெரிய வருகிறது. ஆகையாலேயே, தாசார்யர் இவற்றை முழுமையாக அறிந்தவர்கள் யாரும் இல்லை என்றார். யோக்யரான மக்களில் யாரும் பரமாத்மனை வேண்டாம் என்று சொல்பவர்களும் இல்லை என்பது கருத்து.

தமோயோக்யர்களான பகவத் த்வேஷிகள் மட்டும் பகவந்தனை அறிவார்கள். உலகத்தில் பரமாத்மன் இல்லாத இடமே இல்லை. பரமாத்மனின் மகிமைகளை நன்றாக அறிந்தவர்களும் இல்லை. வெல்லப்பாகினால் பொம்மைகளை செய்தால், அந்த பொம்மைகளின் அனைத்து பாகங்களிலும் எப்படி இனிப்பு ஒரே மாதிரியாக பரவியிருக்கிறதோ, அப்படியே, பரமாத்மன், அனைவரிலும் அனைத்து பாகங்களிலும் வியாபித்திருக்கிறான். ஸ்ரீதேவியருக்கும், பூதேவியருக்கும் அவனே அரசன். இவனுக்கு சமமானவர்கள் யாரும் இல்லை. உலகத்தில் இவனுக்கு இணை வேறு யாரும் இல்லை என்பது கருத்து.

**ஷப்³த³கோ³சர ஷார்வரீகர**
**அப்³த³ வாஹனனனுஜ யது³வம்**
**ஷப்தி³ சந்த்ரம நிருபம ஸு³னிஸ்ஸீம ஸமிதஸம |**
**லப்³த³னாகு³வ தன்னவகெ³ ப்ரா**
**ரப்த³ கர்மக³ளுணிஸி தீவ்ரதி³**
**க்ஷுப்த³ பாவகனந்தெ பி³டதி³ப்பனு தயாஸாந்த்³ர ||34**

ஷப்தகோசர = வேதங்கள் மூலம் அறியப்படுபவன்
ஷார்வரீகர = சஜ்ஜனர்களின் கஷ்டங்களை போக்குபவன்
அப்த வாஹனனனுஜ = மேக வாகனன் என்னும் தேவேந்திரனுக்கு தம்பியாக, வாமனாவதாரம் செய்து, பலி சக்ரவர்த்தியிடமிருந்து பூமி தானம் கேட்டு, இந்திரனுக்கு அவனது அரசை மறுபடி கொடுத்து, அங்கு யுவராஜனாக உபேந்திரன் இருக்கிறான்
யதுவம்ஷாப்தி சந்திரனு = யது வம்சம் என்னும் கடலுக்கு, சந்திரனைப் போல இருப்பவன்

நிருபமனு = உபமானம் இல்லாதவன்
நிஸ்ஸீம = எல்லைகள் இல்லாத குணங்களைக் கொண்டவன்
ஸமதிஸமா = சமம் என்று யாரும் இல்லாதவன். அதாவது, பரமாத்மனுக்கு சமம் என்றால் அது பரமாத்மன் மட்டுமே என்று பிரம்மாதிகளால் வணங்கப்பட்டவன்
தன்னவகெ = தன் பக்தர்களுக்கு
தீவ்ரதி = மிகவும் விரைவாக
ப்ராரப்த கர்மகளுணிஸி = வினைப்பயன்களை அனுபவிக்குமாறு செய்து
லப்தனாகுவ = தரிசனம் அளிக்கிறான்
க்ஷுப்த பாவகனந்தெ = கட்டையில் பிடித்த நெருப்பு, எப்படி கட்டை இருக்கும்வரை அதை விடுவதில்லையோ, அப்படியே
தயாஸாந்த்ர = தயையால் நிறைந்த பரமாத்மன்
பிடதிப்பனு = ஜீவனை விடாமல் பிடித்திருப்பான்.

ஸ்ரீபரமாத்மன், வேதங்களால் அறியப்படுபவன். சந்திரன் எப்படி வெப்பத்தைக் குறைத்து குளிர்ச்சியை தருகிறானோ, பரமாத்மனிடமும் அதே குணங்கள் இருக்கின்றன. பக்தர்களுக்கு சம்சாரத்தால் ஆகும் கஷ்டங்களை பரிகரித்து, அபரோக்ஷத்தில் பிரத்யட்சமாகி, தன் தரிசனத்தால் குளிர்ச்சியை தருகிறான். ஆகையால், பரமாத்மனை சந்திரன் என்றார்.

நீரைக் கொடுப்பதால், மேகத்திற்கு அப்த என்று பெயர். மேக வாகனன் என்று தேவேந்திரனுக்குப் பெயர். 'துராஷாண்மேக வாஹன:' என்று அமரகோச வாக்கியம் இருக்கிறது. அதிதியிடம் வாமனனாக அவதரித்ததால், இந்திரனுக்கு தம்பி ஆனான். ஆகையால் பரமாத்மனுக்கு உபேந்திரன் என்று பெயர். 'உபேந்திர இந்திரா வரஜ:' என்று அமரகோஷத்தில் தெளிவாக இருக்கிறது. யதுவம்ச என்னும் சமுத்திரத்திற்கு சந்திரன். கடலில் சந்திரோதயம் ஆன உடனேயே வளரும் குணம் அதற்கு இருக்கிறது. ஆகையால், யதுவம்சம் என்னும் கடலுக்கு சந்திரன், என்றால், அந்த வம்சமத்தில் கிருஷ்ணாவதாரம் செய்து, அந்த வம்சத்தை வளர்த்தவன் என்று பொருள்.

உபமானரஹிதனு = இந்திராதிகளுக்கு ஒப்புமை கொடுக்க வேண்டுமெனில், அவரைவிட உத்தமரான இன்னொருவரை சொல்வதுண்டு. பரமாத்மனுக்கு சமமாக யாரை சொல்வது? ஆகையால், ராமாயணத்தில் 'ராம ராவணயோர் யுத்தம் ராம ராவணயோரிவ', ராம ராவண போரினை எதற்கு ஒப்பிடலாம் என்றால் 'ராம ராவணர்களைப் போலவே' இருந்தது என்றார். ஆகையால், நிருபம (ஒப்புமை இல்லாதவன்) என்று பரமாத்மனுக்குப் பெயர். எல்லைகள் இல்லாதவன். ஸமதிஸம = இவனுக்கு சமம் என்று யாரையாவது சொல்ல வேண்டுமெனில், எந்த விஷயத்திலும் யாரும் இல்லை.

பிரம்ம ருத்ராதிகளை ஸ்ருஷ்டிக்கும் யோக்யதை உள்ள ரமாதேவியரே பரமாத்மனுக்கு அதீனம் என்ற பிறகு, இவனுக்கு சமம் என்று யாரை சொல்வது? ஆகையால், தனக்கு தானே சமம் என்று சொல்லிக் கொள்பவன். தன் பக்தர்களின் ஆகாமி, சஞ்சித பாவங்களை சுட்டுப் பொசுக்குவான். ப்ராரப்தங்களை மட்டும்

அனுபவிக்க வேண்டும். ஆகையால், அந்த ப்ராரப்த கர்மங்களையும் சீக்கிரத்தில் அனுபவிக்குமாறு செய்து, அவருக்கு அபரோக்ஷத்தில் தரிசனம் அளிக்கிறான்.

கட்டைகளை எரித்து, ஒளிர்ந்து கொண்டிருக்கும் நெருப்பு எப்படி ஒளிமயமாக இருக்கிறதோ அப்படி, அவரவர்களின் யோக்யதைக்கேற்ப அவருக்கு தரிசனம் அளித்து, கருணாபூர்ணனான ஸ்ரீஹரி அந்த பக்தர்களை விடாமல் இருப்பான்.

**ஸ்ரீவிரிஞ்சாத்$^{3}$யமர வந்தி$^{3}$த**
**ஈ வஸுந்த$^{3}$ரெயொளகெ$^{3}$ தே$^{3}$வகி**
**தே$^{3}$வி ஜடரதொ$^{3}$ளவதரிஸித$^{3}$னு அஜனு நரனந்தெ ।**
**ரேவதி ரமணனனுஜனு ஸ்வப**
**தா$^{3}$வலம்பி$^{3}$க$^{3}$ளனு ஸலஹி தை$^{3}$**
**த்யாவளிய ஸம்ஹரிஸித$^{3}$ ஜகன்னாத$^{2}$விட்ட$^{2}$லனு ।।35**

ஸ்ரீவிரிஞ்சாத்யமர வந்தித = ரமா பிரம்மாதி தேவதைகளால் வணங்கப்படுபவன்
ஜகன்னாதவிட்டலன் = ஜகன்னாத விட்டல நாமக ஸ்ரீபரமாத்மன்
ஈ வசுந்தரெயொளகெ = இந்த பூமியில்
அஜனு = பிறப்பு இல்லாதவன்
ஜனதந்தெ = பிறக்கும் சாமான்ய மக்களைப் போல
தேவகி தேவி ஜடரதொளு = தேவகிதேவியின் வயிற்றில்
அவதரிசிதனு = அவதரித்தான்
ரேவதி ரமணானுஜனு = ரேவதிதேவியின் பதியான பலராமனுக்கு தம்பியான
ஸ்வபதாவலம்பிகளனு = தன் பாதங்களை சரணடைந்த பாண்டவர்கள், யாதவர் முதலானவர்களை
ஸலஹி = காப்பாற்றி
தைத்யாவளிய = தைத்ய வம்சத்தை
சம்ஹரிஸித = சம்ஹாரம் செய்தான்.

ரமா பிரம்மாதி அனைத்து தேவதைகளாலும் வணங்கப்படுபவனான ஸ்ரீஜகன்னாதவிட்டலன், தான் பிறப்பு இல்லாதவனானாலும், சாமான்ய ஜீவர்களைப் போல தேவகி தேவியின் வயிற்றில் அவதரித்து, பலராமனின் தம்பியாக, கம்சன் முதலான துஷ்ட ராஜர்களைக் கொன்று, பாண்டவர்கள் முதலான தேவதாம்ஷர்களான ராஜர்களை காப்பாற்றினான். ஆகையால், இத்தகைய பரமாத்மனிடம் திடமான பக்தியை செய்தால், அவன் நம் கஷ்டங்களை பரிகரித்து, நம்மை காப்பாற்றுவான் என்று பொருள்.

கர்மவிமோசன சந்தி என்னும் 19ம் சந்தியின் தாத்பர்யம் இத்துடன் முடிவுற்றது.

ஸ்ரீகிருஷ்ணார்ப்பணமஸ்து.

***

## பாவபிரகாசிகை : சந்தி 20 : குண தாரதம்ய சந்தி

**ஹரிகதா2ம்ருதசார கு3ருக3ள**
**கருணதிந்தா3பநிது பே1ளுவே**
**பரம ப4கவத்3ப4க்தரித3னாத3ரதி கேளுவுது3**

**<u>சந்தி ஸூசனை: (சந்தியின் நோக்கம்):</u>**

**சர்வேஷாஞ்ச ஹரிர் நித்யம் நியந்தா தத்வஷா: பரே ।**
**தாரதம்யம் ததோஞ்ஞேயம் சர்வோச்சத்வம் ஹரேஸ்ததா ।।**
**ஏதத்வினா ந கஸ்யாபி விமுக்தி: ஸ்யாத்கதஞ்சன ।।**

மகாபாரத தாத்பர்ய நிர்ணயத்தில் ஸ்ரீமதாசார்யர் சொல்வது:
அனைத்து பிராணிகளுக்கும் ஸ்ரீபரமாத்மனே ப்ரேரகன். ரமா பிரம்மாதி அனைவரும் அவனுக்கு கீழே. ஆகையால், பரமாத்மனை சர்வோத்தமன் என்று அறிந்து, ரமா பிரம்மாதிகளில் தாரதம்யத்தை அறியவேண்டும். இதனை அறியாமல் யாருக்கும் முக்தி கிடைப்பதில்லை என்று கூறியிருக்கிறார். ஆகையால், பரமாத்மனிலிருந்து துவங்கி மனுஷ்யோத்தமர் வரைக்கும் யார் யார் எவ்வளவு குணங்கள் கம்மியானவர்கள் என்னும் தாரதம்ய ஞானம் மிகவும் அவசியம். அதையே குண தாரதம்ய சந்தி என்னும் இந்த சந்தியில் சொல்லியிருக்கிறார்.

முதல் இரு பத்யங்களில், இந்த குண தாரதம்ய சந்தியை, தம் அந்தர்யாமி பகவந்தனின் அருளால் மட்டுமே முடிப்பதற்கு சாத்தியமே தவிர, தன் முயற்சியால் மட்டும் சாத்தியம் இல்லை என்று அறிந்து, பரமாத்மனை வணங்கியவாறு, ஸ்ரீபரமாத்மன் சர்வோத்தமன் என்பதை நிரூபிக்கிறார்.

**ஸ்ரீத4ரா து3ர்கா3 மனோரம**
**வேத3முக2 ஸுமனஸ க3ணஸமா**
**ராதி3த பதா3ம்போ4ஜ ஜக3த3ந்தர் ப3ஹிர்வ்யாப்த ।**
**கோ3த4ர ப2ணிவராதபத்ர நி**
**ஷே2த4தூ3ர விசித்ரகர்ம ஸு**
**போ4த4 ஸுக2மயகா3த்ர பரமபவித்ர ஸுசரித்ர ।।1**

ஸ்ரீதரா துர்கா மனோரம = ஸ்ரீதேவி, பூதேவி, துர்காதேவி என்னும் மூவரின் மனதிற்கும் ஆனந்தத்தைக் கொடுப்பவன். அதாவது, அந்த மூவருக்கும் கணவன் என்று அர்த்தம்.
வேதமுக = பிரம்மதேவரே முதலான
சுமனஸகண = தேவதா கணத்தினால்
ஸமாராதித பதாம்போஜ = நன்றாக வணங்கப்படக்கூடிய கால்களைக் கொண்டவன்
ஜகதந்தர்பஹிர்வ்யாப்த = ஜகத்தில் உள்ளேயும் வெளியேயும் வியாப்தனாக இருப்பவன்
கோதர = பூ மண்டலத்தை தன் தலையில் தாங்கியவன்

பணிவர = சர்வஸ்ரேஷ்டனான சேஷதேவரின் தலைகள் என்னும்
ஆதபத்ர = குடை உள்ளவன்
நிஷேத தோஷ விசித்ர கர்ம = செய்யக்கூடாத செயல்கள், பாவம் தரக்கூடிய செயல்கள் என்று எவ்வித பிரச்னைகளும் இல்லாத விசித்திரமான செயல்களைக் கொண்டவன்.
சுபோத சுகமய காத்ர = உத்தமமான ஞானானந்த ஸ்வரூபம் கொண்டவன்
பரம பவித்ர சுசரித்ர = பரம மங்களகரமான உத்தமமான சரித்திரங்களைக் கொண்டவன்

ஸ்ரீபூதுர்கா என்னும் மூன்று ரூபங்களாலான ரமாதேவியருக்கு பதியானவன். பிரம்மாதி தேவதா கணத்தால் நன்றாக பூஜிக்கப்படுவதான பாத கமலங்களைக் கொண்டவன். ஜகத்தின் உள்ளேயும் வெளியேயும் வியாப்தனாக இருப்பவன். ஆயிரம் தலைகளுள்ள சேஷதேவர், அந்த ஒரு தலையின் மேல் ஒரு கடுகினைப் போல உள்ள இந்த பூமண்டலம், யாரின் தலையின் மேல் ஷோபித்திருக்கிறதோ, அத்தகைய சேஷதேவரின் தலைகளே, பரமாத்மனுக்கு வெள்ளைக் குடையாக அலங்கரித்துக் கொண்டிருக்கிறது.

இது செய்யக்கூடாதது, இது செய்தால் தோஷம் வருவது என்ற கர்மங்களெல்லாம் பரமாத்மனுக்கு இல்லை. 'யே தோஷா இதரத்ராபி தேகுணா: பரமே மதா:' என்று மற்றவர்களில் எதெது தோஷங்களாக தெரிகிறதோ, அவை அனைத்தும் பரமாத்மனிடம் குணமாகவே ஒளிர்ந்து கொண்டிருக்கிறது என்று ஸ்ரீமதாசார்யர் சொல்லியிருப்பதால், கிருஷ்ணாவதாரத்தில், பிறர் மனைவிகளான கோபிகா ஸ்த்ரீயர்களுக்கு தன் அங்க-சங்கத்தைக் கொடுத்திருக்கிறான்.

பர-ஸ்த்ரி-கமனம் என்பது மிகப்பெரிய தோஷம் என்று சாஸ்திரங்களில் தடை செய்யப்பட்டிருந்தாலும், பரமாத்மனின் கோபிகா ஸ்த்ரீயர்களின் கதையை யார் கேட்டு, படித்து, சொல்கிறார்களோ அவர்களுக்கு பரம மங்களத்தையே கொடுக்கிறான். யாரைக் கொல்வது மகா பாதகம் என்று அறிகிறோமோ, அத்தகைய கம்சனைக் கொன்ற கிருஷ்ணனின் கதை, புண்ய சரித்திரம் எனப்படுகிறது. ஆகையால், அவன் விசித்ர கர்மன் எனப்படுகிறான். உத்தம ஞானானந்த ஸ்வரூபன். அவனின் கதைகளை கேட்டல், படித்தல் ஆகியவற்றை செய்வோர், அனைத்து பாவங்களிலிருந்து முக்தர்களாகி, பரம பவித்ரராகி திவ்ய கதியை அடைகின்றனர்.

**நித்ய நிர்மல நிக³மவேத்³யோ**
**த்பத்தி ஸ்தி²தி லய தோ³ஷவர்ஜித**
**ஸ்துத்ய பூஜ்ய ப்ரஸித்³த⁴ முக்தாமுக்த க³ணஸேவ்ய |**
**ஸத்யகாம ஷரண்ய ஷாஸ்வத**
**ப்⁴ருத்யவத்ஸல ப⁴ய நிவாரண**
**அத்யதி⁴க ஸம்ப்ரியதம ஜக³ன்னாத² மாம் பாஹி ||2**

நித்ய நிர்மல = எப்போதும் தோஷங்கள் அற்றவனான

நிகமவேத்ய = வேதங்களால் அறியப்படுபவன்; அல்லது,
நித்ய நிர்மல நிகம வேத்ய = நித்ய நிர்தோஷமான, அபௌருஷேயமான வேதங்களால் அறியப்படுபவன் (என்று ஒரே பதமாகவும் அர்த்தம் கொள்ளலாம்).
உத்பத்தி ஸ்திதி லய தோஷவர்ஜித = பிறப்பு, வளர்தல், இறப்பு ஆகிய தோஷங்கள் இல்லாதவன்
ஸ்துத்ய பூஜ்ய = அனைவராலும் வணங்கப்படுபவன்
ப்ரசித்த = சர்வ அந்தர்யாமியானதால் பரமாத்மன் என்று புகழ் பெற்றவன்.
முக்தாமுக்த கணஸேவ்ய = முக்தர்களாலும், அமுக்தர்களான பிரம்மாதி அனைத்து தேவதா கணங்களாலும், மனுஷ்யோத்தமர் முதலான யோக்ய கணத்தவர்களாலும் வணங்கப்படுபவன்
ஸத்யகாம = சத்ய சங்கல்பன்
ஷாஷ்வத = நிரந்தரமானவன்
ஷரண்ய = வணங்கப்பட தகுதியானவன்
பக்தவத்ஸல பய நிவாரண = பக்தவத்ஸலன், பக்தர்களின் பயங்களை போக்குபவன்
அத்யதிக சம்ப்ரியதமனு = மிகுந்த அதிகமான அன்பு கொண்டவன்
இத்தகைய ஜகன்னாத
மாம் = என்னை
பாஹி = காப்பாற்று

பதங்களின் பொருளே விளக்கமாக இருப்பதால், மறுபடி அதை விளக்கவில்லை.

**பரமபுருஷன ரூப கு3ணவனு**
**ஸரிஸி காம்ப3ளு ப்ரவஹத3ந்த3தி3**
**நிருபமளு நிர்து3ஷ்ட ஸுக2ஸம்பூர்ண ளெனிஸுவளு |**
**ஹரிகெ3 தா4மத்ரயவெனிஸி ஆ**
**ப4ரண வஸனாயுத4க3ளாகி3**
**த்3த3ரிக3ளனு ஸம்ஹரிஸுவளு அக்ஷரளெனிஸிகொண்டு3 ||3**

பரமபுருஷன = க்ஷர அக்ஷர புருஷர்களில் சிறந்தவனான ஸ்ரீபரமாத்மனின்
ரூப குணவனு = அனந்தானந்த குணங்களை
அரஸி = பட்டத்து ராணியான ரமாதேவி
ப்ரவஹதந்ததி = கங்காதி மகா நதிகளின் பிரவாகத்தைப்போல (அதாவது முன்னர் சென்ற நீர் எப்படி திரும்ப வராதோ; அதைப்போல ஒரு முறை கண்ட குணங்களை மறுபடி காணாமல் புதுப்புது குணங்களாகப் பார்ப்பது)
காம்பளு = காண்கிறாள்
நிருபமளு = ஒப்புமை இல்லாதவள்
நிர்துஷ்ட சுக சம்பூர்ணளெனிஸுவளு = தோஷங்கள் அற்றவள்; சுக சம்பூர்ணள்; எனப்படுகிறாள்
ஹரிகெ = பதியான ஸ்ரீபரமாத்மனுக்கு
தாமத்ரயவெனிஸி = ஸ்வேதத்வீப அனந்தாஸன வைகுண்ட என்னும் மூன்று விதமான வீடுகள் என்று நினைத்து

ஆபரண வசனாயுதகளாகி = ஸ்ரீபரமாத்மன் தரித்திருக்கும் ஆபரணங்கள், சக்ர, கதா முதலான ஆயுதங்களாகவும் இருந்து
அக்ஷரனெனிஸிகொண்டு = அழிவு இல்லாதவளாகையால் அக்ஷர என்று அழைத்துக் கொண்டு
அரிகளனெ = எதிரிகளை
ஸம்ஹரிஸுவளு = சம்ஹாரம் செய்கிறாள்.

பரமாத்மனின் பட்டத்து அரசியான ரமாதேவி பரமாத்மனின் ரூபகுணங்களை, கங்கா பிரவாகத்தில் எப்படி ஒரு முறை பாய்ந்த நீர் மறுபடி காணப்படுவதில்லையோ, எப்படி புதிய நீரே ஒவ்வொரு முறையும் காணப்படுகிறதோ, அப்படியே, எவ்வளவு ரூப குணங்களைக் கண்டாலும் மேலும் அபரிமிதமான குணரூபங்களை தேடியவாறு பார்த்திருக்கிறாள். பரமாத்மனுக்கு ஒப்புமை கொடுப்பதற்கு எப்படி சாத்தியம் இல்லையோ, அப்படியே ரமாதேவியருக்கும் ஒப்புமை கொடுக்க சாத்தியம் இல்லை.

எப்படியெனில், ரமாதேவியரைவிட பரமாத்மன் உத்தமன். பிரம்மாதிகள் அனைவரும் அதமர். அப்படி இருக்கையில், இவளுக்கு சமம் யார்? யாரும் இல்லை. பரமாத்மனின் அருளால், பிரம்மாதிகளைவிட, மிகவும் அதிகமான ஆனந்தத்தை அடைந்து கொண்டிருக்கிறாள். பரமாத்மன் வசிக்கும் ஸ்வேதத்வீபாதி மூன்று லோகங்களிலும், வீடுகளாக தாமே நிலைத்திருக்கிறார். பரமாத்மன் தரித்திருக்கும் வஸ்திரங்கள், ஆடைகள், ஆபரணங்கள் இவை அனைத்தும் ரமா ஸ்வரூபமே ஆகிறது. அதாவது, அந்தந்த ரூபங்களால் ரமாதேவியரே இருந்து, பகவந்தனின் சேவை செய்தவாறு, கதை, சக்ராதி ரூபங்களில் இருந்து, எதிரிகளை சம்ஹரிக்கிறாள். எப்போதும் அழிவு இல்லாத காரணத்தால் 'அக்ஷர புருஷ' என்று ரமாதேவி அழைக்கப்படுகிறார்.

**ஈதகி$^3$ந்தானந்த கு$^3$ணத$^3$லி**
**ஸ்ரீதருணி தா கடி$^3$மெ எனிபளு**
**நித்யமுக்தளு நிர்விகாரளு த்ரிகு$^3$ணவர்ஜிதளு ।**
**தௌ$^3$தபாப விரிஞ்சி பவனர**
**மாதெ எனிப மஹாலகுமி வி**
**க்$^2$யாதளாகி$^3$ஹளெல்ல காலதி$^3$ ஸ்ருதி புராணதொ$^3$ளு ||4**

நித்யமுக்தளு = சில காலம் அமுக்தராக இருந்து, பிரம்மாதிகளைப் போல முக்தர் ஆனவள் என்றில்லாமல், எப்போதும் முக்தள் என்று பெயர் பெற்றவள்
நிர்விகாரளு = விகாரம் (தோற்ற வளர்ச்சி, குறைவு) இல்லாதவள்
த்ரிகுண வர்ஜிதளு = சத்வ ரஜஸ் தமோ குணங்களுக்கு கட்டுப்படாதவள்
தௌதபாப விரஞ்சி பவனர = பாவங்கள் அற்றவர்களான பிரம்மா வாயுகளுக்கு
மாதெயெனிப = தாய் எனப்படுபவள்
ஸ்ரீதருணி = யௌவனத்தால் கூடிய ஒளி பொருந்தியவள்
மஹாலகுமி = மகா லட்சுமிதேவி
எல்லகாலதி = அனைத்து காலங்களிலும்

ஈதனிந்த = இந்த பரமாத்மனைவிட
அனந்தகுணதலி = அனந்த குணங்களில்
கடிமெ எனிபளு = தாரதம்யத்தில் குறைவு எனப்படுகிறாள்
ஸ்ருதி புராணதொளு = வேதங்களிலும், புராணங்களிலும்
விக்யாதளாகிஹ = இவ்வாறு சொல்லப்பட்டிருக்கிறது.

பரமாத்மனைவிட அனந்த குணங்களில் குறைவு எனப்படுகிறார் ரமாதேவி. இவர் நித்ய முக்தர் என்றும், நிர்விகாரர் என்றும் பெயர் பெற்றவர். குணாத்மகரே ஆனாலும், அந்த குணங்களால் கட்டுப்பட்டவர் அல்ல. பாவங்கள் இல்லாதவர்களான பிரம்ம வாயுகளுக்கு தாய் எனப்படுகிறார். இப்படியாகவே, அனைத்து வேதங்களிலும், புராணங்களிலும் புகழப்பட்டிருக்கிறார்.

**க[1]மலஸம்ப[4]வ பவனரீர்வரு**
**ஸமரு ஸமவர்த்திக[3]ளு ருத்[3]ரா**
**த்[3]யமர க[3]ணஸேவிதரு அபரபி[3]ரம்ம நாமகரு ।**
**யமளரிகெ[3] மஹலகுமி தானு**
**த்தமளு கோடி சஜாதிகு[3]ணதி[3]**
**ந்த[3]மித ஸுவிஜாத்ய த[4]மரெனிபரு பி[3]ரம்ம வாயுக[3]ளு ।।5**

கமலசம்பவ = பிரம்மதேவர்
பவன = வாயுதேவர்
ஈர்வரு = இருவரும்
சமரு = சமமானவர்கள்
சமவர்த்திகளு = பகவந்தனின் குணங்களை சமமாக அறிந்து, சமமாக உபாசனை செய்கிறார்கள்
ருத்ராத்யமரகண சம்ஸேவிதரு = ருத்ராதி தேவதைகளால் நன்றாக சேவை பெற்றுக் கொள்வதற்காக
அபரபிரம்ம நாமகரு = பிரம்மனான பரமாத்மனுக்கு இரண்டாவதாக ஸ்ருஷ்டியாதிகளை செய்வதால், பரபிரம்ம என்னும் பெயர் பெற்றிருக்கார்கள்.
யமளரிகெ = பிரம்ம வாயு என்னும் இந்த இருவருக்கு
மஹலகுமி தானு = மகாலட்சுமிதேவியரான தான்
கோடி சஜாதி குணதி = லட்சுமிதேவியரின் குணங்களின் ஜாதியைச் சேர்ந்த கோடி குணங்களால்
உத்தமளு = உத்தமர் எனப்படுகின்றனர்
பிரம்ம வாயுகளு
மித சுவிஜாத்யதமரெனிபரு = லட்சுமிதேவியர் எவ்வளவு குணங்களால் உத்தமர் என்று சொல்லியிருக்கிறாரோ, அவ்வளவு ; அதாவது கோடி குணங்களால். விஜாதி என்றால் லட்சுமிதேவியரின் குணங்களின் அனைத்து ஜாதிகள். இதுவே விஜாதி என்று பெயர். இப்படி, கோடி விஜாதி ரூபங்களால் குறைவானவர்கள்.

வாயுதேவரே அடுத்த கல்பத்தில் பிரம்மபதவிக்கு வரப்போகிறார். பிரம்மதேவரிடம் இருக்கும் குணங்கள் அனைத்தும் வாயுதேவரிடமும் இருக்கிறது. ஆனால்,

ருஜுகணத்தில் சேர்ந்தவர்களில், 99ம் கல்பத்தில் வாயுதேவராகி அவதார த்ரயத்தினால், பகவத் சேவாதிகளை செய்து, 100வது கல்பத்தில் பிரம்ம பதவியை அடைவார். முந்தைய கல்பத்து வாயுதேவரே தற்போது பிரம்மதேவராக இருக்கிறார். ஆகையால், வாயுதேவர் பிரம்மதேவரைவிட ஒரு கல்ப சாதனை மட்டுமே குறைவானவர்; மற்ற அனைத்து குணங்களிலும் பிரம்மதேவருக்கு சமமானவரே ஆவார்.

ருத்ராதி அனைத்து தேவதைகளைவிட உத்தமர். பரபிரம்ம பரமாத்மன் என்றும், அதே பரபிரம்ம பிரம்ம வாயுகள் என்றும் பெயர் பெற்றிருக்கிறார்கள். இவர்கள் இருவரை விடவும், கோடி சஜாதி குணங்களால், ரமாதேவியர் உத்தமர். சஜாதி என்றால் சமமான ஜாதி என்று அர்த்தம். விஜாதி என்றால் அந்த ஜாதி இல்லாமல் வேறு ஜாதி என்று பொருள். ரமாதேவியரிடம் இருக்கும் குணங்கள், ரமாதேவியரின் யோக்யதைக்குத் தக்க அதே ஜாதியை சேர்ந்த குணங்களே கோடி குணங்கள் பிரம்ம வாயுகளைவிட அதிகமாக இருக்கிறது என்பது கருத்து.

மிதசுவிஜாத்யதமரு = ரமாதேவியரில் எவ்வளவு குணங்கள் அதிகமாக இருக்கிறதோ அவ்வளவு குறைவு என்று அர்த்தம். அதாவது கோடி குணங்களால் பிரம்மவாயுகள், லட்சுமிதேவியரை விட குறைவு என்று அர்த்தம். குணங்கள் விஜாதியமானவை. லட்சுமிதேவியரின் குணங்களின் ஜாதிக்கு சேர்ந்த குணங்கள் அல்ல என்பது கருத்து.

**பதிக$^3$ளிந்த$^3$ ஸரஸ்வதி பா$^4$**
**ரதிக$^3$ளத$^3$மரு நூருகு$^3$ணபரி**
**மித விஜாத்$^3$யவரரு ப$^3$ல ஞானாதி$^3$ கு$^3$ணதி$^3$ந்த$^3$ ।**
**அதிஷயளு வாக்தே$^3$வி ஶ்ரீபா$^4$**
**ரதிகெ$^3$ பத$^3$த்$^3$ ப்ரயுக்த விதி$^4$மா**
**ருதரவோல் சிந்திபரு ஸத்ப$^4$க்தியலி கோவித$^3$ரு ।।6**

பதிகளிந்த = பிரம்ம வாயுகளைவிட
ஸரஸ்வதி பாரதிகளு = சரஸ்வதி பாரதிதேவியர்
அதமரு = குறைந்தவர்கள்
எவ்வளவு குணங்களில்? எத்தகைய குணங்களில்?
பல ஞானாதி குணகளிந்த = பல, ஞான முதலான ஒவ்வொரு குணங்களிலும்
பிரம்ம வாயுகளின் குணங்களின் ஜாதியைச் சேர்ந்த,
நூருகுணபரிமித = நூறு குணங்கள் குறைவு
விஜாத்யமரரு = விஜாதி குணங்களில் குறைவானவர்
வாக்தேவி = சரஸ்வதி தேவியர்
ஶ்ரீபாரதிகெ = ஶ்ரீபாரதி தேவியரைவிட
விதிமாருதரவோல் = பிரம்ம வாயுகளைப் போல
பதத ப்ரயுக்த = அதிகாரத்தில்
அதிஷயளு = கொஞ்சம் அதிகமானவர்
இப்படியாக

ஸத்பக்தியலி = உத்தமமான பக்தியால்
கோவிதரு = ஞானிகள்
சிந்திபுது = சிந்திக்க வேண்டும்.

பிரம்ம வாயுகளைவிட அவர்களின் மனைவியரான சரஸ்வதி பாரதியர் பலத்திலும், ஞானத்திலும் 100 விஜாதி குணங்களால் குறைவானவர்கள். பிரம்மதேவர் எப்படி வாயுதேவரைவிட ஒரு கல்ப சாதனை அதிகம் மற்றும் பதவியில் சிறிது உத்தமரோ, அதுபோலவே வாயுதேவரின் பத்னியான பாரதி தேவியரைவிட, பிரம்மதேவரின் மனைவியான சரஸ்வதி தேவியர், பதவியில் சிறிது உத்தமர் என்று ஞானிகள் சிந்திக்க வேண்டும் என்று சொல்கிறார்.

**க2க3ப ப2ணிபதி ம்ருட3ரு ஸம வா**
**ணிகெ3 ஷதகு3ணாவரரு மூவரு**
**மிகி3லெனிஸுவனு ஸேஷ பத3தி3ந்த3லி த்ரியம்ப3ககெ3 |**
**நக3த4ரன ஷண்மஹிஷியரு ப**
**ன்னக3 விபூ4ஷணகை3து3 மேனகெ**
**மக3ளு வாருணி ஸௌபரணிக3ளி க3தி4கவெரடு3 கு3ண ||7**

கக பணிபதி ம்ருடரு = கருட, சேஷ, ருத்ரர் ஆகியோர்
சம = சமமானவர்கள்
மூவரு = இந்த மூன்று பேரும்
வாணிகெ = சரஸ்வதி தேவிக்கு
ஷதகுணாதமரு = 100 குணங்களால் குறைவானவர்கள்
த்ரியம்பககெ = ருத்ரதேவருக்கு
சேஷ = சேஷதேவர்
பததிந்தலி = (ருத்ரதேவரே அடுத்த கல்பத்தில் சேஷதேவராக ஆகிறார்) பதவியால்
மிகிலெனிஸுவரு = உத்தமர் எனப்படுகிறார்
நகதரன = கோவர்த்தன மலையை தூக்கிய ஸ்ரீகிருஷ்ணனின்
ஷண்மஹிஷியரு = ஜாம்பவதி முதலான 6 பேர் மனைவியர்
பன்னக விபூஷணன = சர்ப்பத்தை தரித்தவனான ருத்ரதேவருக்கு
ஐது = ஐந்து குணங்கள் குறைவானவர்கள்
மேனகெ மகளு = மேனகையின் மகளான பார்வதி தேவி
வாருணி = வருணனின் மகளாகையால் வாருணி என்று பெயர் பெற்ற சேஷதேவரின் மனைவி
ஸௌபரணிகளிகெ = கருடனின் மனைவியான சௌபர்ணிதேவி
இவர்களைவிட
அதிக எரடு குண = இரு குணங்கள் அதிகம்.

கருட, சேஷ ருத்ரர்கள் சமமானவர்கள். சரஸ்வதி பாரதி தேவியரைவிட 100 குணங்கள் குறைவானவர்கள். இந்த மூவரும் சமமானாலும், ருத்ரதேவரை விட சேஷதேவர் பதவியின்படி கொஞ்சம் அதிகமானவர். ருத்ரரோ, 39 கல்ப சாதனைகளை செய்துகொண்டு, ருத்ரபதவியை அடைந்து, அடுத்த கல்பத்தில் சேஷ

பதவிக்கு வரப்போகிறவர் ஆகையால், ருத்ரதேவர், சேஷதேவரைவிட சிறிது குறைவானவர். கிருஷ்ணனின் மனைவியரான ஜாம்பவதி, மித்ரவிந்தா, நீலா, பத்ரா, லட்சணா, காளிந்தி என்னும் 6 மஹிஷியர்கள் ருத்ராதிகளைவிட 5 குணங்கள் குறைவானவர்கள். பார்வதி, வாருணி, ஸௌபர்ணி என்னும் ருத்ர, சேஷ, கருடரின் மனைவியரைவிட இரு குணங்களால் உத்தமர் என்று அறியவேண்டும்.

**க³ருட³ ஸேஷ மஹேஷரிகெ³ ஸௌ**
**பரணி வாருணி பார்வதியு மூ**
**வரு தஷாத³ம வாருணிகெ³ கடி³மெயெனிபளு கௌ³ரி ।**
**ஹரனமட³தி³கெ³ ஹத்துகு³ணத³லி**
**ஸுரப காமரு கடி³மெ இந்த்³ரகெ³**
**கொரதெயெனிஸுவ மன்மத²னு பத³தி³ந்த³ ஆவாக³ ||8**

கருட சேஷ மஹேஷரிகெ = கருட சேஷ ருத்ரருக்கு
ஸௌபர்ணி வாருணி பார்வதியு மூவரு = இவர்கள் மூவரும்
தஷாதம = 10 குணங்கள் குறைவானவர்கள்
வாருணிகெ = சேஷதேவரின் மனைவியான வாருணிதேவியைவிட
கௌரி = பார்வதிதேவி
கடிமெயெனிபளு = சேஷதேவரைவிட ருத்ரதேவர் பதவியால் எப்படி குறைவானவரோ, அப்படியே, சேஷதேவரின் மனைவியைவிட ருத்ரதேவரின் மனைவியான பார்வதியும் சிறிது குறைவானவர்.
ஹரன மடதிகெ = ருத்ரதேவரின் மனைவியான பார்வதிதேவியரைவிட
சுரப காமரு = இந்திர மன்மதன்
கடிமெ = குறைவு
இந்திரகெ = இந்திரனைவிட
ஆவாக = எப்போதும்
பததிந்த = பதவியால்
மன்மதன்,
கொரதெயெனிஸுவ = குறைவு என்று சொல்லப்படுகிறான்.

ஸௌபர்ணி, வாருணி, பார்வதி இந்த மூவரும் தம் பதிகளான கருட, சேஷ, ருத்ர தேவர்களைவிட 10 குணங்கள் குறைவானவர்கள். பதவியின் பொருட்டு, சேஷதேவரைவிட ருத்ரதேவர் எப்படி குறைவோ, அப்படியே, சேஷபதியான வாருணியைவிட ருத்ரபத்னியான பார்வதி சிறிது குறைவானவர். பார்வதிதேவியைவிட இந்திர மன்மதர்கள் 10 குணங்களால் குறைவானவர்கள். பதவியின் பொருட்டு இந்திரனைவிட மன்மதன் சிறிது குறைவானவன்.

**ஈரய்து³ கு³ண கடி³மெயாஹ**
**ங்காரிக ப்ராணனு மனோஜ ந**
**காரிக³ளிக³னிருத்³த⁴ ரதி மனு த³க்ஷ கு³ரு சசியு ।**
**ஆரு ஜன ஸம ப்ராணனிந்த³லி**
**ஹௌரபெனிபரு ஹத்து கு³ணத³லி**

**மாரஜாத்3யரிகை3து3 கு3ணதி3ந்த3த3ம ப்ரவஹாக்ய ||9**

மனோஜ நகாரிகளிகெ = மன்மத, இந்திரன் இவர்கள் இருவரைவிட
அஹங்காரிக பிராணனு,
ஈரைதுகுண கடிமெ = 10 குணங்கள் குறைவானவன்
அனிருத்த ரதி மனு (ஸ்வாயம்புவ மனு), தக்ஷகுரு (பிருஹஸ்பத்யாசார்யர்) சசி (இந்திரனின் மனைவி)
ஆரு ஜன சம = இவர்கள் ஆறு பேரும் சமமானவர்கள்
ப்ராணனிந்தலி = அஹங்காரிக பிராணனைவிட
ஹத்து குணதலி = 10 குணங்களில்
ஹௌரகெனிபரு = குறைவானவர்கள்
மாரஜாத்யரிகெ = மன்மதனின் மகனான அனிருத்த முதலான 6 பேர்களைவிட
ப்ரவஹாக்ய = கோணாதிபனான ப்ரவஹ வாயு
ஐதுகுணதிந்ததம = ஐந்து குணங்களால் குறைவு

இந்திரன், மன்மதன் இவர்கள் இருவரைவிட அஹங்காரிக பிராணன் 10 குணங்களால் குறைவானவர். 49 மருத்கணர் என்னும் வாயுகளில் சேர்ந்தவர் இந்த அஹங்காரிக பிராணன். இந்த பிராணனைவிட 10 குணங்களால் குறைவானவர், பிரத்யும்னனின் மகனான அனிருத்தன். மன்மதனின் மனைவி ரதி. ஸ்வாயம்புவ மனு, தக்ஷப்ரஜாபதி, பிருஹஸ்பத்யாசார்யர், இந்திரனின் மனைவி சசி, இவர்கள் ஆறு பேரும் குணங்களில் சமமானவர்கள். இவர்களைவிட, 5 குணங்களில் குறைவானவன் ப்ரவஹவாயு.

மரீசி நாமாந்தரவான் ப்ரவஹோ முக்யவாயுஜ: |
கோணாதிபஸ் ஸஏவோக்த நாசிக்யோ பௌதிகஸ் ததா ||

என்னும் தாரதம்ய கௌஸ்துபத்தின் வியாக்யானத்திற்கேற்ப, இந்த பிரவஹ வாயுவிற்கு மரீசி என்னும் பெயரும் உண்டு. ப்ரதான வாயுவின் மகன், வாயவ்ய திசைக்கு அபிமானி, பஞ்சபூதங்களில் சம்பந்தப்பட்ட அனைவரிடம் ஸ்வாச ரூபனாக இருக்கிறான் என்று அறியவேண்டும்.

**கு3ணத்3வயதி3ம் கடி3மெ ப்ரவஹகெ3**
**இன ஷஷாங்க யம ஸ்வயம்பு4வ**
**மனுமட3தி ஷதரூப நால்வரு பாத3 பாதா3ர்த்3த4 |**
**வனதி4 நீச பதா3ர்த்3த4 நாரத3**
**முனிகெ3 ப்ருக்3வக்3னி ப்ரஸூதிக3**
**ளெனிஸுவரு பாதா3ர்த்3த4 கு3ணதி3ந்த3 த4மரஹுதெ3ந்து3 ||10**

ப்ரவஹகெ = ப்ரவஹ வாயுவைவிட
இன = விவஸ்வான் என்னும் சூரியன்
ஷஷாங்க = சந்திரன்
யம = யமதேவர்

ஸ்வயம்புவ மனுவின மடதி = ஸ்வயம்புவ மனுவின் மனைவியான ஷதரூபாதேவி
நால்வரு = இந்த நால்வரும்
குணத்வயதிம் கடிமெ = இரு குணங்களால் குறைவு
வனதி = சமுத்ர ராஜனான வருணன்
பாத பாதார்த்த = கால் பாகம்; மற்றும் அதில் அரை பாகம்
நீச = சூரியாதிகளைவிட குறைவானவர்கள்
நாரத = நாரத முனிவர்
பாதார்த்த நீச = வருணனைவிட அர்த்த பாகம் குறைவு
நாரதனிகெ = நாரதனைவிட
ப்ருக்வக்னி ப்ரசூதிகளு = ப்ருகு ரிஷிகள், அக்னி தக்ஷ ப்ரஜாபதியின் மனைவியான ப்ரஸூதி என்னும் இந்த மூவரும்
பாதார்த்த குணதிந்த = அரைக்கால் பாக குணத்தினால்
அதமரஹுதெந்து = குறைவானவர்கள் என்று
எனிஸுவரு = சொல்லப்படுகிறார்கள்.

49 மருத்கணத்தில் சேர்ந்த ப்ரவஹ வாயுவைவிட சூரியன், சந்திரன், ஸ்வாயம்புவ மனுவின் மனைவி ஷதரூபாதேவி, யம இந்த நால்வரும் 2 குணங்களால் குறைவானவர்கள். சூரியாதிகளைவிட பாத பாதார்த்த (கால் பாகம் மற்றும் அதில் அரை பாகம்) குறைவானவர்கள். வருணன் = வருணனைவிட அரை பாகம் குணத்தால் நாரதர் குறைவானவர். நாரத முனிவரைவிட ப்ருகு ரிஷிகள், அக்னி, தக்ஷ ப்ரஜாபதியின் மனைவியான ப்ரஸூதி இவர்கள் மூவரும் அரைக்கால் பாகம் குறைவானவர்கள்.

**ஹுதவஹகெ$^{3}$ த்$^{3}$வி கு$^{3}$ணாத$^{4}$மரு விதி$^{4}$**
**ஸுதமரீச்யாதி$^{3}$க$^{3}$ளு வைவ**
**ஸ்வதனு விஷ்வாமித்ரனிகெ$^{3}$ கிஞ்சித் கு$^{3}$ணாத$^{4}$மனு |**
**வ்ரதிவர ஜக$^{3}$ன்மித்ர வரனி**
**ர்ருதியு ப்ராவஹி தாரரிகெ$^{3}$ கி**
**ஞ்சிது கு$^{3}$ணாத$^{4}$ம த$^{4}$னப விஷ்வக் ஸேனரெனிஸுவரு ||11**

விதிஸுத = பிரம்மதேவரின் மக்களான
மரீச்யாதிகளு = மரீசி ரிஷி முதலான 7 பேர்,
வைவஸ்வதமனு விஷ்வாமித்ரனிகெ = 7 + இந்த இருவர் மொத்தம் 9 பேர்
ஹுதஹவகெ = அக்னியைவிட
த்விகுணாதமரு = இரு குணங்களால் குறைவானவர்கள்
வ்ரதிவர = விஷ்ணு விரதத்தில் சிறந்தவனான
ஜகன்மித்ர = ஜகத்திற்கு மித்ரன் எனப்படும் சூரியன்
கிஞ்சித் குணாதமனு = சிறிது குணம் குறைவானவன்
நிரருதி = அசுர ஸ்ரேஷ்டனான கோணாதிபனான நிரருதி
ப்ரவாஹ வாயு, தார = இவர்கள் இருவரும் சமமானவர்கள்

மித்ரவர நிரருதி, ப்ராவஹி, தாரெ (பிருஹஸ்பத்யாசார்யரின் மனைவி தாரை) = இவர்களைவிட
தனப விஷ்வக்சேனரு = குபேரன், விஷ்வக்சேன இவர்கள் இருவரும்
கிஞ்சித் குணாதம ரெனிஸுவரு = சிறிது குணங்கள் குறைவு எனப்படுகிறார்கள்
கணேசனும், குபேர விஷ்வக்சேனர்களுக்கு சமமானவரே என்று அறியவேண்டும்.

பிரம்மதேவரின் மக்களான மரீசி, அத்ரி, அங்கிரஸ, புலஹ, க்ரது, வசிஷ்ட இவர்கள் ஏழு பேர். இவர்களுடன் வைவஸ்த மனு, விஷ்வாமித்ரர் இவர்கள் 9 பேர்களும், அக்னியைவிட 2 குணங்கள் குறைவானவர்கள். மித்ர என்னும் சூரியன், திக்பாலகனான நிரருதி, ப்ராவஹி என்னும் வாயு, ப்ருஹஸ்பத்யாசார்யரின் மனைவி தாரை -- இவர்கள் நால்வரும் விஷ்வாமித்ராதிகளைவிட சிறிது குறைவானவர்கள். குபேரன் மற்றும் விஷ்வக்சேனன் இவர்கள் இருவரும், தாரை முதலானவர்களைவிட சிறிது குறைவானவர்கள்.

**த$^{4}$னப விஷ்வக்ஸேன கௌ$^{3}$ரி**
**தனயரிகெ$^{3}$ உக்தேதரரு ஸம**
**ரெனிஸுவரு எம்ப$^{3}$த்தயிது$^{3}$ ஜன ஸேஷஷதரெந்து$^{3}$ ।**
**தி$^{4}$னபராரேளதி$^{4}$க நால்வ**
**த்தனிலரேள்வ ஸுருத்$^{3}$ரரீரை**
**த$^{3}$னிது விஷ்வேதே$^{3}$வ த்$^{4}$யாவாஷ்வினி ருபு$^{4}$ ப்ருத்$^{2}$வி ।।12**

தனப விஷ்வக்சேன கௌரீதனயரிகெ = குபேர, விஷ்வக்சேன, கணேச இவர்களுக்கு
உக்தேதரரு = மேலே தாரதம்யத்தில் கூறியவர்களைத் தவிர மற்றவர்கள்
சேஷஷதரெந்து = 100ல் மிச்சம் இருப்பவர்கள் என்று சொல்லப்படும்
எம்பத்தயிது ஜன = 85 பேர்
அவர்கள் யார் என்றால்:
தினபராரு = 12 சூரியர்களில் மேலே சொன்ன 6 பேரைத் தவிர அடுத்த 6 பேர்
ஏளதிக நால்வத்தனெலரு = 49 மருத்கணர்களில் மேலே சொன்ன 2 பேரைத் தவிர, 47 பேர் மருத்கள் (வாயுகள்)
ஏள்வஸு = 8 வசுக்களில் முன்னர் சொன்ன ஒருவரைத் தவிர மிச்ச 7 பேர்
ருத்ரரீரைது = 10 ருத்ரர்கள்
அனிது விஷ்வேதேவ = அதே எண்ணிக்கையுள்ள - 10 விஷ்வேதேவ,
ருஜுகண 1
அஷ்வினிகளெரடு = அஸ்வினி தேவதைகள் இருவர்
பித்ருகண மூவரில் முன்னர் சொன்ன 2 பேரைத் தவிர ஒருவர்,
பூமி 1
என்று மொத்தம் 85 பேர் என்று அறியவேண்டும்.
(மேலே சொன்னபடி, 6+47+7+10+10+1+2+1+1 = 85)

குபேரன், விஷ்வக்சேன, கணேசன் ஆகியோர் இவர்களுக்கு சமம்.

100 தேவதைகளில், மேலே பார்த்த 15 பேரை விட்டு, பாக்கி 85 பேர் என்று அறியவேண்டும். தாரதம்ய கௌஸ்துப என்னும் கிரந்தத்தில் :

நவகோட்யோஹி தேவானாம் தேஷாம் மத்யேஷதஸ்யது |
ஸோமாதிகாரோ வேதோக்த: ||

ஒருவரில் தேவதைகள் 9 கோடி எண்ணிக்கையில் இருக்கிறார்கள். அவர்களில் சோமபானத்திற்கு தகுதியானவர்கள் என்று 100 தேவதைகளை மட்டும் வேதங்களில் சொல்லப்பட்டிருக்கிறது என்கிறார்கள். அவர்கள் யார் என்றால், :

ப்ரதான வாயுர்வஸ்வோ ருத்ராதித்யமருத்கணா: |
ப்ருஹஸ்பதி ருபுர்த்யாவா ப்ருதிவ்யாவஷ்வஸௌததா |
விஷ்வேதேவாஷ்ச பிதர: ஷதஸ்தா தேவதாமதா: ||

இந்த 100 பேர் தேவதைகளின் விவரம்.

1. பிரதான வாயுதேவர்

8 - அஷ்ட வசுக்கள்

| | |
|---|---|
| 1. த்ரோண | 5. அக்னி |
| 2. ப்ராண | 6. தோஷாவஸு |
| 3. த்ருவ | 7. விபாவஸு |
| 4. அர்க்க | 8. த்யு |

11 ருத்ரர்கள்

| | |
|---|---|
| 1. ரைவத | 7. வ்ருஷாகபி |
| 2. அஜ | 8. அஜைகபாத் |
| 3. பவ | 9. அஹிர்புத்ன |
| 4. பீம | 10. பஹுரூப |
| 5. வாம | 11. மர்ஹா |
| 6. உக்ர | |

12 ஆதித்யர்கள்

| | |
|---|---|
| 1. விவஸ்வான் | 7. தாதா |
| 2. ஆர்யமா | 8. பர்ஜன்ய |
| 3. பூஷா | 9. வருண |
| 4. த்ருஷ்டா | 10. மித்ர |
| 5. ஸவிதா | 11. ஷக்ர (இந்திர) |
| 6. பக | 12. உருக்ரம |

3 பித்ருகள் -- கவ்யவாஹ, யம, ஸோம
2 அஸ்வினி தேவதைகள் - நாஸத்ய, தஸ்ர

49 மருத்கணர்கள்

| | | | | |
|---|---|---|---|---|
| 1. ப்ராண | 11. ப்ரவஹ | 21. நல | 31. ஸம்வர்தக | 41. க்ருஷ்ண |
| 2. அபான | 12. விவஹ | 22. அனில | 32. கால | 42. கபி |
| 3. வியான | 13. ஷம்பு | 23. ப்ரதிப | 33. ஜித | 43. ஷுக |
| 4. உதான | 14. ஸம்வஹ | 24. குமுத | 34. ஸௌம்ய | 44. யதி |
| 5. ஸமான | 15. பராவஹ | 25. காந்த | 35. கபி | 45. பீம |
| 6. நாக | 16. உத்வஹ | 26. ஷுசி | 36. ஜட | 46. ஹனு |
| 7. க்ருதல | 17. வஹ | 27. ஷ்வேத | 37. மண்டுக | 47. பிங்க |
| 8. கூர்ம | 18. ஷங்கு | 28. அஜித | 38. ஸம்ஹத | 48. அஹங்காரிக ப்ராண |
| 9. தேவதத்த | 19. கல | 29. குரு | 39. ஸித்த | |
| 10. தனஞ்சய | 20. ஷ்வாஸ | 30. ஸஞ்ஞா | 40. ரத்த | 49. கம்பன |

விஸ்வேதேவதைகள் 10

| | |
|---|---|
| 1. புரூரவ | 6. லோசன |
| 2. ஆர்த்ர | 7. தக்ஷ |
| 3. காம | 8. க்ரது |
| 4. கால | 9. வசு |
| 5. துரி | 10. ஸத்ய |

ப்ருஹஸ்பதி - 1
ருபு - 1
த்யாவா - 1
ப்ருதிவி - 1

இந்த 100 தேவதைகள், ஸோமபானத்தைக் குடிக்கும் தகுதி பெற்றவர்கள். இவர்களில் 15 பேரை, மேலே கூறிய தாரதம்யத்தில் சேர்த்திருக்கின்றனர். அவர்களின் விவரம்:

* சூரியர்களில் 6 பேர்
(உருக்ரம என்னும் சூரியன் ஸ்ரீவிஷ்ணுவே ஆனதால், தாரதம்யத்தில் சேர்க்கவில்லை)
* ப்ரதானாக்னி (வசு)
* பார்வதி பதியான பவ (ருத்ர)

* ப்ருஹஸ்பதி
* பித்ருகளில் யம, சந்திர
* 2 மருத்கணர்கள் (அஹங்காரிக பிராண, ப்ரவஹ)
* த்யாவா
* பிரதான வாயுதேவர்

என இவர்கள் 15 பேரைத் தவிர, மற்ற 85 பேர் என்று தாசார்யர் கூறுகிறார்.

85 பேர்களின் விவரம்:

சூரியர் 6
மருத்கணர் 47
வசுகள் 7
ருத்ரர் 10
விஷ்வேதேவதைகள் 10
ருபு 1
அஷ்வினி 2
பித்ரு 1
பூமி 1

என மொத்தம் 85 பேர் தேவதைகள்.

விஷ்வக்சேன, குபேர, கணேசர்கள் சமம் என்பது கருத்து.

**இவரிகி$^{3}$ந்தலி கொரதெ எனிபரு**
**ச்யவன ஸனகாதி$^{3}$க$^{3}$ளு பாவக**
**கவி உசத்$^{2}$ய ஜயந்த கஷ்யப மனுக$^{3}$ளேகத$^{3}$ஷ |**
**த்$^{4}$ருவ நஹுஷ ஷஷபி$^{3}$ந்து$^{3}$ ஹைஹய**
**த$^{3}$வுஷ்யந்தி விரோசனன நிஜ**
**குவர ப$^{3}$லி மொத$^{3}$லாத$^{3}$ ஸப்தேந்த்$^{3}$ரரு ககுத்ஸ்த$^{2}$ க$^{3}$ய ||13**

இவரிகிந்தலி = 100 பேர்களில் 85 பேர்களைத் தவிர
ச்யவன ஸனகாதிகளு = ச்யவன மற்றும் சனக, சனந்தன, சனத்குமார, சனத்சுஜாத என்னும் நால்வர்
பாவக = பாவக நாமக அக்னி
கவி = சுக்ராசார்யர்
உசித்ய,
ஜயந்த = இந்திரனின் மகன் ஜயந்தன்
கஷ்யப,
மனுகளேகாதஷ = வைவஸ்வத மனு, ஸ்வாயம்புவ மனு இவர்கள் இருவரையும் தாரதம்யத்தில் சேர்த்திருக்கிறார்கள். தாபஸ என்னும் மனு, ஸ்ரீபரமாத்மனின் அவதாரமே. ஆக இந்த மூவரையும் விட்டு, மற்றவர்கள் 11 பேர்.
த்ருவ, நஹுஷ, ஷஷிபிந்து, ஹைஹய = கார்த்தவீர்யார்ஜுன,

துவுஷ்ஷந்த = துஷ்யந்த ராஜன்
விரோசனன நிஜகுவர பலி = பிரகலாதனின் மகன் விரோசனன். அவனது நிஜ குவர என்றால் பலிசக்ரவர்த்தி
மொதலாத = முதலானவர்கள்
ஸப்தேந்த்ரரு = முந்தைய தாரதம்யத்தில் சேர்த்த 7 பேர் இந்திரர்கள். இவர்களைத் தவிர, பாக்கி 7 பேர்.
ககுஸ்த, கய = இவர்கள் இருவரும்
கொரதெ எனிபரு = குறைவானவர்கள் என்று சொல்லப்படுகிறார்கள்.

(ஸனாதனர் மற்றும் ஸனத்ஸுஜாதர் இருவரும் வெவ்வேறானவர்கள் இல்லை என்று பல்வேறு கிரந்தங்களிலிருந்து தெரியவருகிறது - கன்னட உரையை அச்சிட்டவரின் கருத்து).

**ப்ருது$^{2}$ ப$^{4}$ரத மாந்தா$^{4}$த ப்ரீயா**
**வ்ரத மருத ப்ரஹ்லாத$^{3}$ ஸுபரி**
**க்ஷித ஹரிஸ்சந்தி$^{3}$ராம் ப$^{3}$ரீஷோத்தானபாத$^{3}$ முக$^{2}$**
**ஷத ஸுபுண்ய ஸ்லோகரு க$^{3}$தா$^{3}$**
**ப$^{4}$ருதக$^{3}$தி$^{4}$ஷ்டா$^{2}$னரு ஸுப்ரீயா**
**வ்ரதகெ$^{3}$ த்$^{3}$விகு$^{3}$ணாத$^{4}$மரு கர்மஜரெந்து$^{3}$ கரெஸுவரு ||14**

ப்ருது, பரத, மாந்தாத, ப்ரியவ்ரத, மருத, ப்ரகலாத, பரீக்ஷித், ஹரிச்சந்திரன், அம்பரீஷ, உத்தானபாத, முக = இந்த அரசர்களே முதலான
ஷத சுபுண்யஸ்லோகரு = 100 பேர் புண்ய கீர்த்தி பெற்ற ராஜர்கள் இவர்கள் அனைவரும்
கர்மரெந்து கரெஸுவரு = கர்மஜர்கள் என்று அழைக்கப்படுகிறார்கள்

13, 14 இந்த இரு பத்யங்களில் சொல்லப்பட்டிருக்கும் அரசர்கள், ரிஷி முதலான அனைவரும் கர்ம தேவதைகள் எனப்படுகின்றனர். இவர்கள் சேஷ ஷதஸ்தர்களான 85 தேவதைகளைவிட குணத்தால் சிறிது குறைவானவர்கள். இந்த இரு பத்யங்களில் சொன்னவர்கள் அனைவரும், சமமே ஆனாலும், பகவத் ஆவேச பலத்தினால் சிறிது அதிக, குறைவாக இருக்கிறார்கள்.

விப்ரத்வாச்சாவனோசிதை தன்மத்யே கிஞ்சிதுத்தமௌ || என்னும் தாரதம்ய கௌஸ்துப வாக்கியத்திற்கேற்ப, பிராமணர் ஆனதால் ச்யவனர், உசித்யர் இவர்கள் இருவரும் சிறிது உத்தமர்கள் எனப்படுகிறார்கள். 100 புண்யஸ்லோக ராஜர்களில், ப்ரியவ்ரதனை சேர்த்து, அவர்கள் சுப்ரியவ்ரதனைவிட இரு குணங்கள் குறைவு என்கிறார்கள் என்றார் தாசார்யர்.

ஷதஸு புண்யஸ்லோகரு = 100 பேர் புண்ய கீர்த்தி ராஜர்கள்.
கதாப்ருதகதிஷ்டானரு = கதாதாரியான பரமாத்மனின் அம்சத்தைக் கொண்ட
கர்மஜரு = கர்ம தேவதைகளிலும்
ஸுப்ரியவ்ரதகெ = புண்யகீர்த்தியான ப்ரியவ்ரத ராஜனுக்கு

த்விகுணாதமரெந்து = இரு குணங்களால் குறைவு என்று அழைக்கப்படுகிறார்கள் என்று சொல்கிறார்.

பாகவத 5ம் ஸ்கந்த தாத்பர்யத்தில்: 'ப்ரியவ்ரதோ கயஸ்சைவ கர்ம தேவ ஸமௌகுணை:'. ப்ரியவ்ரத ராஜன், கயா ராஜன், இவர்கள் இருவரும் குணத்தில் கர்ம தேவதைகளுக்கு சமம் என்று சொல்கிறார். இப்படியிருக்கையில், ப்ரியவ்ரதனை முதலில் கர்மஜரில் சேர்த்து, பின் மற்றவர்கள் இவனைவிட இரு குணங்கள் குறைவு என்று எப்படி சொல்கிறார்கள் என்றால்:

ப்ரியவ்ரதன் குணத்தில் கர்ம தேவதைகளுக்கு சமம் என்று சேர்த்திருந்தாலும், அவனில் இருந்த சிறப்பான பகவத் அம்சம், மற்ற அனைவரைவிட அதிகமாக இருந்ததால், 2 குணத்தால் உத்தமன் என்று சொல்லப்பட்டிருக்கிறது என்று அறியவேண்டும். விசேஷமான பகவதம்சம் இவனில் இருந்தது என்பதற்கு பாகவத 5ம் ஸ்கந்தம் 1ம் அத்தியாயம் 39ம் ஸ்லோகத்தில் ஒரு வசனம் வருகிறது.

ப்ரியவ்ரத க்ருதம் கர்மகோனு குர்யாத்வினேஷ்வரம் |
யோனேமினிமைரகரோச்சாயம் க்னஸப்தவாரிதீன் ||

ப்ரியவ்ரத ராஜன் செய்த காரியத்தை செய்வதற்கு, பரமாத்மனை விட்டு வேறு யாரால் சாத்தியம்? எந்த ப்ரியவ்ரத ராஜன், இரவு நேரங்களில், மலையில் நிழலால் இருட்டு ஆவதை பரிகரித்து, பகலைப் போல செய்வதற்காக, ஒரு சக்கரம் கொண்ட ரதத்தில் ஏறி, மேரு பர்வதத்தை பிரதட்சிணை செய்தபோது, தன் ரதத்தின் சக்கரத்தால் ஏழு கடல்களை உருவாக்கினானோ - என்னும் வாக்கியங்களால், சப்த த்வீப, சப்த சமுத்திரம் ஆகியவற்றை உருவாக்கும் செயல்கள், பரமாத்மனை விட்டு வேறொருவரால் சாத்தியம் இல்லாத காரணத்தால், ப்ரியவ்ரதனில் பரமாத்மனின் விசேஷ ஆவேசம் இருந்தது என்பது தெளிவாகிறது.

ஆகையால், புண்ய ஸ்லோகர்களான 100 பேர் அரசர்களில் இவனும் ஒருவன் என்றாலும், மற்றவர்கள் இவனைவிட 2 குணங்கள் குறைவானவர்கள் என்று தாசார்யர் தெளிவுபடுத்துகிறார். இந்த பத்யத்தில் இருக்கும் 'ப்ரியவ்ரதகெ' என்னும் சொல்லை, முந்தைய பத்யத்தில் சேர்த்தால், விஷயம் சரியாகிவிடும். அது எப்படியெனில்: உத்தானபாத முக ஷதகதிஷ்டானரு, கர்மஜரெந்து கரெஸுவரு. இவர்கள் அனைவரும் த்விகுண அதமர்கள். இவர்கள் 85 தேவதைகளைவிட 2குணங்கள் குறைவு என்னும் அர்த்தம் வருகிறது. ப்ரியவ்ரதனுக்கு என்னும் பதத்தை நளனிஸஞ்ஞாரோஹிணி என்னும் பத்யத்தில் சேர்த்துக் கொண்டால், நளனி என்றால் கங்கை. கங்கை முதலானவர்கள் சுப்ரியவ்ரதனுக்கு அதமர்கள் என்னும் அர்த்தம் செய்தாலும், அது சித்தாந்தத்திற்கும், தாசார்யரின் வாக்கியத்திற்கும் அவிரோதம் ஆகிறது (சரியாகப் பொருந்துகிறது)..

**நளினி ஸங்ஞா ரோஹிணி ஷ்யா**
**மல விராட் பர்ஜன்யரத$^4$மரு**
**எலரு மித்ரன மட$^3$தி$^3$ த்$^3$வி கு$^3$ணாத$^4$மளு பா$^3$ம்பொ$^3$ளெகெ$^3$ |**
**ஜலமய பு$^3$தா$^4$த$^4$மனு த்$^3$வி கு$^3$ணதி$^3$**

**கௌகெ$^3$னிஸுவளுஷா ஷனைஸ்சர**
**ரிளெயு ஈரு கு$^3$ணாத$^4$ம ருஷாதே$^3$வி தெ$^3$ஷெயிந்த$^3$ ||15**

நளனி = கங்கை
சஞ்ஞா = விவஸ்வான் என்னும் சூரியனின் மனைவியான சஞ்ஞாதேவி
ரோஹிணி = சந்திரனின் மனைவி
ஷாமலா = யமதேவனின் மனைவி
விராட் = அனிருத்தனின் மனைவியான உஷாதேவி
பர்ஜன்ய = பர்ஜன்ய என்னும் சூரியன்
இவர்கள் ஐந்து பேரும் சமமானவர்கள்
ஸுப்ரியவ்ரதகெ = உத்தமனான ப்ரியவ்ரத ராஜனைவிட (இந்த சொல் முந்தைய பத்யத்திலிருந்து வந்துள்ளது)
அதமரு = இரு குணங்களால் குறைவானவர்கள்
ப்ரியவ்ரதகெ என்று சொன்னதால், அவனுக்கு சமமான கர்மதேவதைகள் அனைவரைவிடவும் என்று அர்த்தம்.
பாம்பொளெகெ = கங்கையைவிட
எலமித்ரன = வாயுவிற்கு மித்ரனான அக்னி
மடதி = மனைவியான ஸ்வாஹா தேவி
த்விகுணாதமளு = இரு குணங்களால் குறைவு எனப்படுகிறாள்
ஜலமய = தண்ணீரின் அபிமானினியான
புத = சந்திரனின் மகனான புதன்
த்விகுணதி = ஸ்வாஹாவைவிட இரு குணங்கள் அதமன்
உஷா = அஸ்வினி தேவதைகளின் மனைவியான உஷாதேவி
இளியு = பூமிக்கு அபிமானினியான
ஷனைஸ்சரர் = இவர்கள் இருவரும்
ஈருகுணாதமரு = இரு குணத்தால் குறைவானவர்கள்
உஷாதேவி தெஷெயிந்த = இந்த பதம் அடுத்த பத்யத்துடன் சேர்த்து படிக்க வேண்டும்.

கங்கை, விவஸ்வான் என்னும் சூரியனின் மனைவியான சஞ்ஞாதேவி, சந்திரனின் மனைவியான ரோஹிணி தேவி, யமதேவரின் மனைவி ஷாமலாதேவி, அனிருத்தனின் மனைவியான பாணாசுரனின் மகள் உஷாதேவிக்கு விராட் என்று பெயர். இவர்கள் ஆறு பேரும் சமமானவர்கள். இவர்கள் ப்ரியவ்ரதாதிகளைவிட இரு குணங்கள் குறைவானவர்கள். அக்னி தேவரின் மனைவி ஸ்வாஹாதேவி. கங்காதிகளைவிட இரு குணம் குறைவானவள்.

தண்ணீருக்கு அபிமானியான புதன் ஸ்வாஹாதேவியரைவிட இரு குணங்கள் குறைவு. அஸ்வினி தேவதைகளின் மனைவியான உஷாதேவி, ப்ருத்வி அபிமானியான சனைஸ்வரர், புதனைவிட இரு குணங்கள் குறைவானவர்.

**எரடு கு$^3$ண கர்மாதி$^4$பதி பு**
**ஷ்கர கடி$^3$மெ ஆஜானதி$^3$விஜரு**

**சிரபித்ருக3ளிந்து3த்தமரு கிங்கரரு புஷ்கரகெ3 |**
**ஸூரபனாலய கா3யகோத்தம**
**ரெரடயிது3 கு3ணதி3ந்த3த4ம து**
**ம்பு3ரகெ3 ஸம ஷதகோடி ருஷிக3ளு நூருஜனருளிது3 ||16**

கர்மாதிபதி புஷ்கர = கர்மாபிமானியான புஷ்கரன்
உஷாதேவி தெஷெயிந்த = உஷாதேவியை விட
எரடு குண கடிமெ = இரு குணங்கள் குறைவு
அஜானதிவிஜரு = அஜான தேவதைகள்
சிரபித்ருகளிந்துத்தமரு = சிரபித்ருகளைவிட உத்தமர்கள்
எரடைது குணதிந்ததம = 2*5=10 குணங்களால் குறைந்தவர்கள்
புஷ்கரகெ = புஷ்கரனைவிட குறைந்தவர்கள்.
அஜானஜர் யார் என்றால் =
சுரபனாலய கயகோத்தம = தேவேந்திரனின் வீட்டில் பாடல் பாடுபவர்களில் சிறந்தவனான தும்புரு முதலான 100 கந்தர்வர்கள்
தும்பரகெ சம = தும்புரு முதலானவர்களுக்கு சமமானவர்கள்
நூருஜனருளிது = 100 ஜன உத்தம குணங்களில் சேர்ந்தவர்களை விட்டு
நவகோடி ரிஷிகளு = 9 கோடி ரிஷிகள்; இவர்கள் இருவரும் அஜாஜனர்கள் என்பது கருத்து

உஷாதேவியரைவிட கர்மாபிமானியான புஷ்கரன் இரு குணங்கள் குறைவு எனப்படுகிறான். சிரபித்ருகளைவிட உத்தமர் என்று சொல்லப்படும் அஜானஜர், புஷ்கரனைவிட 10 குணங்கள் குறைவு. அஜானஜர் என்றால், தாரதம்ய கௌஸ்துபத்தின்படி:

அனாக்யாதா தேவதாஸ்து ஜாதா தேவகுலெச யா: |
கந்தர்வாஸ்தும்புருமுகா: ஷதமப்ஸரஸாம் ஷதம் ||
நாரதாதீனுசித்யம் தாம் வினாது ருஷயோகிலா: ||
ஆஜானஜா தேவதாஸ்தே ||

தேவதா குலத்தில் பிறந்து, தேவதைகள் என்று கணக்கிற்கு வராதவர்கள். தும்புரு முதலான 100 கந்தர்வர், அப்ஸர ஸ்த்ரீயர் 100, நாரதரில் துவங்கி உசித்யர் வரை இருக்கும் ரிஷிகளை விட்டு, மற்ற அனைத்து ரிஷிகள் -- இவர்களுக்கு அஜானஜ தேவதைகள் என்று பெயர்.

இவர்கள் அனைவரும் புஷ்கரனைவிட 10 குணங்கள் குறைவு.

**அவரவர பத்னியரு அப்ஸர**
**யுவதியரு ஸம உத்தமரனுளி**
**த3வரரெனிபரு மனுஜ க3ந்த3ர்வரு த்3வி ஷட்கு3ணதி3 |**
**குவலயாதி4பரீரயிது3 கு3ண**
**அவனிபஸ்த்ரீயரு த3ஷோத்தர**
**நவதி கு3ணதி3ந்த3த4ம ரெனிபரு மானுஷோத்தமரு ||17**

அவரவர = தும்புரு முதலான கந்தர்வர் 9 கோடிக்கு 100 பேர் குறைவான ரிஷிகள். இவர்களின்
பத்னியரு = மனைவிகள்
அப்ஸர யுவதியரு = அபஸர ஸ்த்ரீயர்கள்
உத்தமரனுளிது = மேலே உத்தமர் என்று சொல்லப்பட்ட ரிஷிபத்னி ஆகியோரை விட்டு, சமம் எனப்படுகின்றனர்.
மனுஜ கந்தர்வர் த்விஷட்குணதி = மேலே கூறப்பட்ட தேவ கந்தர்வர்களைவிட 12 குணங்களால்
அவரரெனிபரு = குறைவு எனப்படுகிறார்கள்
குவலயாதிபரு = பூமியில் சக்ரவர்த்திகள் என்று புகழ்பெற்றவர்கள்
அவனிபர ஸ்த்ரியரு = சக்ரவர்த்திகள் மனைவிகள்
அவரு ஈரைதுகுண = 10 குணங்களால்
அதமரெனிஸுவரு = குறைவு எனப்படுகிறார்கள்
மானுஷோத்தமரு = மனிதர்களில் உத்தமர்கள்
சக்ரவர்த்திகளைவிட
தஷோத்தர நவதி குணதிந்ததம = 100 குணங்களால் குறைவானவர்கள்.

* 100 கந்தர்வர்கள். 100 அப்சரஸ்த்ரியர்கள். 9 கோடிக்கு 100 பேர் குறைவான ரிஷிகள். இவர்கள் அனைவரும் புஷ்கரனைவிட 10 குணங்கள் குறைவானவர்கள்.
* தேவ கந்தர்வாதிகளைவிட மனுஷ்ய கந்தர்வர்கள் 12 குணங்களால் குறைவானவர்கள்.
* சக்ரவர்த்திகள் மற்றும் அவர்களின் மனைவிகள், மனுஷ்ய கந்தர்வர்களைவிட 10 குணங்கள் குறைவானவர்கள்.

இவர்களைவிட மனுஷ்யோத்தமர்கள் 100 குணங்கள் குறைவு என்று அர்த்தம் வருகிறது. இதைப்போலவே, மேலே பத்யார்த்தத்திலும் கொடுக்கப்பட்டுள்ளது. ஆனால், தாரதம்ய கௌஸ்துப வசனத்திற்கும், தாசார்யரின் வசனத்திற்கும் பரஸ்பர விரோதம் வருகிறது.

ஆஜானே ப்யோஷதம் ந்யூனா: பித்ருப்யஸ்ச ஷதாதமா: ||
உத்தான்யே தேவகந்தர்வா ஸ்தச்சதோனான்ருகாயாகா: ||
கந்தர்வேப்யோ மானுஷோய: ஷதோனாஸ்சக்ரவர்த்தின: ||
க்ஷிதிபேப்யோ ஷதாம்ஷோனா ஈரிதாமானுஷோத்தமா: ||

* அஜான தேவதைகளைவிட மற்றும் சிரபித்ருகளைவிட மேலே கூறிய கந்தர்வர்களைத் தவிர மற்ற தேவகந்தர்வர்கள் 100 குணங்களால் குறைவானவர்கள்.
* அவர்களைவிட மனுஷ்ய கந்தர்வர்கள் 100 குணங்கள் குறைவானவர்கள்.
* அவர்களைவிட சக்ரவர்த்திகள் 100 குணங்கள் குறைவானவர்கள்.
* அவர்களைவிட மனுஷ்யோத்தமர்கள் 100 குணங்கள் குறைவானவர்கள்.

இந்த ஆதாரத்தின்படி, மேற்கண்ட பத்யத்திற்கு அர்த்தம் கீழே கொடுக்கப்பட்டுள்ளது.

இந்த பத்யத்தின் சாராம்சம்:
மேலே தாரதம்யத்தில் கூறிய உத்தமர்களைவிட்டு, மற்ற உத்தமர்கள் மற்றும் அவரவர்களின் மனைவியர்,
அப்ஸர ஸ்த்ரீயர்,
ஸம = சமமானவர்கள்
த்விஷட்குணதி = 12 குணங்களால்
குறைவானவர்கள் = தங்களின் கணவர்களைவிட குறைவானவர்கள்
மனுஜ கந்தர்வர், தஷோத்தரனவதி குணதிந்த = 10 அதிக 90 என்றால் 100 குணங்கள்
தேவ கந்தர்வர்களைவிட அதமர்கள் எனப்படுகிறார்கள்
குவலயாதிபரு = சக்ரவர்த்திகள், மனுஜ கந்தர்வர்களைவிட,
தஷோத்தரனவதி குணதிந்த = 100 குணங்களால் (இந்த சொல்லை 2-3 முறை சொல்லிக் கொள்ளவேண்டும்)
அவனிபரஸ்த்ரியரு = சக்ரவர்த்திகளின் மனைவியர்
ஈரைது குண = 10 குணங்களால் தங்கள் கணவர்களைவிட அதமர்கள் ஆவர்
சக்ரவர்த்திகளைவிட, மானுஷோத்தமரு, தஷோத்தர நவதி குணதிந்த = 100 குணங்களால் குறைவானவர்கள்

என்று அர்த்தம் சொன்னால், ஆதார ஸ்லோகத்திற்கும், மூல வாக்கியத்திற்கும் பொருந்திப் போவது போல தெரிகிறது.

**ஸத்வஸத்வரு ஸத்வராஜஸ**
**ஸத்வதாமஸ மூவரு ரஜ**
**ஸ்ஸத்வ அதி4காரிக3ளு ப4க3வத்3 ப4க்தரெனிஸுவரு ।**
**நித்யப3த்3த4ரு ரஜோரஜரு**
**த்பத்தி பூ4 ஸ்வர்க3தொ3ளு நரகதி3**
**ப்ருத்2வியொளு ஸஞ்சரிஸுதிப்பரு ரஜஸு தாமஸரு ।।18**

ஸத்வஸத்வரு = சாத்விக சாத்விகர்கள்
ஸத்வராஜஸ = ஸாத்விக ராஜஸர்கள்
ஸத்வ தாமஸ = சாத்விக தாமஸர்கள்
மூவரு = இந்த மூன்று பேரும், மற்றும்
ரஜஸ்ஸத்வரு = ராஜஸ சாத்விகர்
இவரெல்லரு = இவர்கள் அனைவரும்
அதிகாரிகளு = மோக்ஷாதிபதிகள் (முக்திக்கு யோக்யர்கள் என்று அர்த்தம்)
பகவத் பக்தரெனிஸுவரு = பகவத் பக்தர்கள் எனப்படுகிறார்கள்.
ரஜோரஜரு = ராஜஸ ராஜஸர்கள்
நித்யபத்தரு = எப்போதும் பத்தர்கள்; அதாவது நித்ய சம்சாரிகள் எனப்படுகிறார்கள்

உத்பத்தி பூ ஸ்வர்க்கதொளு = பூமியில் பிறப்பது, ஸ்வர்க்கத்திற்கு போவது என இருந்து, இறுதியில் நித்ய சம்சார என்னும் சுகதுக்க மிஸ்ரமான நிலையில் இருக்கிறார்கள் என்று அர்த்தம்
ரஜஸதாமஸரு = ராஜஸ தாமஸர்கள்
நரகதி = நரகத்திலும்
ப்ருதிவியொளு = பூமியிலும்
சஞ்சரிசுதிப்பரு = சஞ்சரித்துக் கொண்டிருக்கின்றனர்.

அனாதி காலத்திலிருந்து சாத்விக, ராஜஸ, தாமஸ என்று மூன்று விதங்களாக ஜீவர்கள் இருந்து வருகின்றனர். இந்த சாத்விகாதி ஒவ்வொன்றிலும் மூன்று விதங்கள் உண்டு.

சாத்விகரில்:
சாத்விக சாத்விக
சாத்விக ராஜஸ
சாத்விக தாமஸ

இதைப்போல, ராஜஸரில்:
ராஜஸ சாத்விக
ராஜஸ ராஜஸ
ராஜஸ தாமஸ

தாமசரில்:
தாமஸ சாத்விக
தாமஸ ராஜஸ
தாமஸ தாமஸ

இவர்களில்:
* சாத்விக சாத்விகர்,
* சாத்விக ராஜஸர்,
* சாத்விக தாமஸர் என்று மூன்று வித சாத்விகர்கள்,
ராஜஸர்களில்
* ராஜஸ சாத்விகர்
ஆகியோர் பகவத் பக்தர்களாக இருக்கின்றனர். இவர்கள் அனைவரும் முக்தியோக்யர்கள் ஆவர்.

* ராஜஸ ராஜஸர்கள் நித்ய சம்சாரிகள். இவர்கள் ஸ்வர்க்கத்திற்கு போவது மறுபடி பூமியில் பிறப்பது என தொடர்ச்சியாக செய்து கொண்டிருப்பர். இவர்களுக்கு நரகம் கிடையாது. முக்தியிலும்கூட இவர்களுக்கு ஸந்தானிக என்னும் உலகம் கிடைக்கிறது. அங்கும் மிஸ்ர சுகத்தையே இவர்கள் அனுபவிக்கின்றனர்.

* ராஜஸ தாமஸர்கள் பூமியில் பிறக்கின்றனர், நரகத்திற்கு செல்கின்றனர். இவர்கள் சுக மிஸ்ரமான துக்கத்தையே அபாரமாக அனுபவிக்கின்றனர்.

**தமஸு ஸாத்விகரெனிஸி கொம்ப$^{3}$ரு**
**அமிதனாக்$^{2}$யாத ஸுரக$^{3}$ணவிது$^{3}$**
**தமஸு ராஜஸரெனிஸி கொம்ப$^{3}$ரு தை$^{3}$த்யஸமுதா$^{3}$ய ।**
**தமஸு தாமஸ கலி புரந்த்$^{3}$ரியு**
**அமித து$^{3}$ர்கு$^{3}$ணபூர்ண ஸர்வா**
**த$^{4}$மரொளத$^{4}$மாத$^{4}$ம து$^{3}$ராத்மனு கலி எனிஸிகொம்ப$^{3}$ ।।19**

தமஸ் சாத்விகரெனிஸி கொம்பரு = தாமஸ சாத்விகர் என்று அழைத்துக் கொள்ளும்
அசுரகணவு = தைத்ய கணம்
அனாக்யாத = புகழ் அடையாதவர்கள் என்று அழைத்துக் கொள்பவர்கள்
இந்தஹவரு அமிதவிதெ = இத்தகைய அசுரர்கள் பலர் இருக்கின்றனர்.
தைத்ய சமுதாய = புகழ் அடைந்திருக்கும் தைத்யர்கள்
தமோராஜஸ நெனிஸி கொம்பரு = தம்மை தமோ ராஜஸ என்று அழைத்துக் கொள்கிறார்கள்
கலி புரந்திரி = கலி மற்றும் கலியின் மனைவி புரந்த்ரி
அமித துர்குணபூர்ண = எண்ணிக்கையற்ற துர்குணங்களால் பூர்ணனாக இருப்பவர்கள்
ஸர்வாதமரொளு அதமாதம = உலகத்தில் அதமர் என்று பெயர் பெற்றவர்களைவிட அதமர் எனப்படுபவர்கள்
துராத்மனு = பாப ஸ்வரூபன் என்றும் அழைக்கப்படுகிறான்.

தாமஸர்கள் தைத்யர்களே ஆகியிருக்கின்றனர். அவர்களில் புகழ் பெறாதவர்கள் என்று ஏகப்பட்ட பேர் இருக்கிறார்கள். அனாக்யாதர்கள் என்றால் புகழ் பெறாதவர்கள் என்று பெயர். அவர்கள் அனைவரும் தாமஸ சாத்விகர்களே ஆவர். பிரதானமான கலி முதலான தைத்யர்களின் சேவகர்கள் என்று அழைக்கப்படும் தைத்யர்கள், தாமஸ தாமஸ எனப்படுகிறார்கள். பாகவத 2ம் ஸ்கந்தம், 10ம் அத்தியாயம், 41ம் ஸ்லோகத்தின், விஜயத்வஜீய வியாக்யானத்தின்படி:

கல்யாதி ப்ரதானா அஸுராஸ்தாமஸ தாமஸா: ।
ப்ரதானா ஸுரப்ருத்யாஸ்தாமஸ ராஜஸா: ।
அப்ரஸித்தா அஸுராஸ்தாமஸ ஸாத்விகா: ।
கேவல பாபசாரிணோ மனுஷ்யா ராஜஸ தாமஸா: ।
மிஸ்ரகர்மக்ருதோ மனுஷ்யா ராஜஸ ராஜஸா: ।
மனுஷ்யேஷு புண்யைக கர்மக்ருத:
உத்தம மனுஷ்யா: ராஜஸ ஸாத்விகா: ।
ப்ருதக் ப்ரஸித்தா தேவா: ஸாத்விக தாமஸா: ।
அதத்வாபிமானி நோலோகேக்யாதா: ஸாத்விக ராஜஸா: ।
தத்வாபிமானினோ தேவா: ஸாத்விக ஸாத்விகா: ।

ஸாத்விகேப்யோபி ஸாத்விகா: கருடாதி
த்ரிகதத்பார்யாஸ் தேப்யோபி ஸாத்விகீ
பிரம்மபார்யா ஸரஸ்வதி, ததோபி ஸாத்விகோ பிரம்மேதி ||

ஸத்வம் ரஜஸ்தம இதி த்ரிஸ்ர: ஸூரன்ரு நாரகா: ||
என்னும் மூல வசனத்தினால், சாத்விக, ராஜஸ, தாமஸ என்னும் மூவரும், தேவலோக, மனுஷ்ய லோக, நரக வாசிகள் என்று பெயர் பெற்றிருக்கிறார்கள் என்று சொல்லும் வாக்கியத்தால், தைத்யர்கள் அனைவரும் நரகவாசிகள், தாமஸர்கள் என்று நிச்சயமாகிறது. இதில் பற்பல பேதங்கள் இருக்கின்றன.

* கலி முதலான பிரதான தைத்யர்கள், தாமஸ தாமஸர்கள்.
* ப்ரதான தைத்யர்களின் சேவகர்கள் தாமஸ ராஜஸர்கள்
* புகழ் பெறாத தைத்யர்கள் தாமஸ சாத்விகர்கள்.

ராஜஸர்கள் அனைவரும் மனிதர்கள். அவர்களில் இருக்கும் பேதங்கள் இவ்வாறு:
* வெறும் பாவங்களைக் கொண்ட மனிதர்கள், ராஜஸ தாமஸர்கள்
* புண்ய பாப மிஸ்ரமான கர்மங்களை செய்யும் மனிதர்கள் ராஜஸ ராஜஸர்கள்
* வெறும் புண்யத்தை மட்டுமே செய்து கொண்டிருக்கும் உத்தம மனிதர்கள், ராஜஸ ஸாத்விகர்கள்.

ஸாத்விகர்கள் அனைவரும் தேவதைகள். அவர்களில் இருக்கும் பேதங்கள் இவ்வாறு:
* பெயர் பெறாத தேவதைகள் ஸாத்விக தாமஸர்கள்
* தத்வாபிமானிகளாக இல்லாமல், உலகத்தில் பெயர் பெற்றிருக்கும் தேவதைகள், ஸாத்விக ராஜஸர்கள்
* தத்வாபிமானிகளான தேவதைகள், சாத்விக சாத்விகர்கள்.

* சாத்விகர்களில் சாத்விகர்களானவர்கள், கருட, சேஷ, ருத்ரர், இவர்களின் மனைவிகள்.
* அவர்களைவிட சாத்விகர்கள் பிரம்ம வாயுகளின் மனைவிகள்.
* அவர்களைவிட சாத்விகர்கள் பிரம்ம வாயுகள் ; என்று சொல்லப்பட்டிருக்கிறது.

இந்த வாக்கியங்களுக்கேற்ப, இந்த பத்யத்திற்கு அர்த்தம் எழுதப்பட்டிருக்கிறது என்று அறியவேண்டும். இதைப்போல, தாமஸ தாமஸர் ப்ரதான தைத்யர்கள் ஆனாலும், அனைவரைவிடவும் தாமஸ தாமஸர்கள், கலியின் மனைவியான ஜ்யேஷ்டா என்பவள் ஆவாள். அவளைவிட மஹா தாமஸன் - கலி ஆவான்.

**இவன போளுவ பாபிஜீவரு**
**பு4வன மூரரொளில்ல நோட3லு**
**நவவித4 த்3வேஷக3ளிகா3க3ரனெனிஸி கொளுதிப்ப |**
**ப3வரதொளு ப4ங்கா3ரதொ3ளு நட**
**யுவதி த்3யூதா பேய ம்ருஷதொ3ளு**
**கவிஸி மோஹிஸி கெடி3ஸுவனு எந்த3ரிது த்யஜிஸுவுது3 ||20**

இவன = இந்த கலியை
போலுவ = ஒப்பிடத்தகுந்த பாபி ஜீவர்கள்
புவன மூரரொளில்ல = பூலோக, புவ (அந்தரிக்ஷ) லோக, ஸ்வர்க்க லோகம் என்று பெயர் இருந்தாலும், பூலோகத்தில், அதல சுதலாதி கீழாக இருக்கும் 7 லோகங்களும் சேர்ந்திருக்கிறது. நடுவில் அந்தரிக்ஷ லோகம். ஸ்வர்க்க என்றால், ஸத்யலோகம் வரைக்கும் இருக்கும் ஸ்வர்க்கத்தின் மேல் இருக்கும் அனைத்து லோகங்களும் சேர்ந்திருக்கின்றன. மொத்தத்தில் 14 உலகங்களும் என்று பொருள்.
நோடலு = எங்கு பார்த்தாலும் அங்கு
நவவித த்வேஷகளிகெ = 9 விதமான த்வேஷங்களுக்கு
ஆகரனெனிஸி கொளுதிப்ப = ஆதரவு தருபவனாக இருக்கிறான்
பவரதலி = பசுவதை ஆகும் இடங்களிலும்
பங்காரதலி = தங்கம்
நடயுவதி = வைஷ்யா ஸ்த்ரியர்கள் இருக்கும் இடங்கள்
த்யூதா = சூதாட்டம் நடக்கும் இடங்கள்
அபேயதலி = மது குடிக்கும் இடங்கள்
ம்ருஷதலி கவிஸி = பொய் முதலான தோஷங்கள் இருக்கும் இடங்களில்
மோஹதி = மயக்கி கெடுப்பவன்
எந்தரிது = என்று அறிந்து
த்யஜிஸுவரு = இந்த இடங்களை ஒதுக்க வேண்டும்.

இந்த கலிக்கு சமானரான பாபி ஜீவர்கள் இந்த உலகத்தில் எங்கும் யாரும் இல்லை. புண்யவந்தர்களில் எப்படி பிரம்மதேவர் உத்தமராக இருக்கிறாரோ, அப்படி பாபிகளில் கலியே உத்தமன். பகவந்தனிடம் 9 விதமான த்வேஷங்களுக்கும் இவன் ஆதரவு அளிக்கிறான். நவவித த்வேஷங்களின் விவரம், கருட புராண பிரம்ம காண்டத்தில் சொல்லப்பட்டிருக்கிறது.

ஜீவாபேதோ ஹரிணா ப்ராக்ருதேன ஸ்வதந்த்ரேண ஹ்யஸ்வதந்த்ரேண நித்யம் |
ஞானானந்தைர் விதுரத்வாச்சவிஷ்ணு: ஸதாஹரிர் நிர்குணஸ்சேதி சிந்தா ||
ஸதாகாம்யை: பரிபூர்ணே ஹரௌச குணைர பூர்ணோ ஹரிரித்யேவ சிந்தா ||
ஸ்ரீ பிரம்மாதி திவௌகஸாம் ஸதா ததாத்விஜானாம் ஸாம்யதாயாஷ்ச சிந்தா ||
விஷ்ணோ: ஸகாஷாத் பிரம்ம ருத்ராதிகானாம் ஸதாதிக்யாதேஸ் சிந்தனம் ச
ததோத்சத்தேர்மரண ஸ்யாபி சிந்தா ||
தத்பக்தானாம் தூஷணம் சாஹுராார்யாஸ் தத்வாக்யானாம் தூஷணம் த்வேஷ ஏவ ||
நவத்வேஷை: ஸம்யுதா ஏவலோகே த்ருஷ்யந்தே தைனது பக்தா: கலௌ ச ||

இதன் அர்த்தம்:
ஸ்வதந்த்ரனும், அப்ராக்ருதனுமான பரமாத்மனுக்கும், அஸ்வதந்த்ரனும், ப்ராக்ருதனும் ஆன ஜீவனுக்கும் அபேதத்தை சொல்கிறார்.

1. ஞானானந்தாதிகள் பரமாத்மனுக்கு இல்லை என்பதால், பரமாத்மன் நிர்குணன் என்று சிந்திப்பவர்

2. பூர்ண காமனான ஸ்ரீஹரியை அபூர்ணன் என்று சிந்திப்பவர்
3. லட்சுமிதேவியர், பிரம்மதேவர், தேவதைகள், பிராமணர் இவர்கள் அனைவரையும் சமமாக சிந்திப்பவர்
4. விஷ்ணுவைவிட பிரம்ம, ருத்ராதிகள் உத்தமர்கள் என்று சிந்திப்பவர்
5. பரமாத்மனின் கை, கால் முதலான அவயவங்களுக்கு பேதத்தை சிந்திப்பவர்
6. பரமாத்மனின் அவதாரங்களில் பரஸ்பர பேதங்களை சொல்வது மற்றும் பாணங்களால் தேகம் அடிபட்டது / காயம் பட்டது / துண்டு துண்டானது என்று சிந்திப்பவர்
7. பரமாத்மனுக்கு பிறப்பு, இறப்புகள் உண்டு என்று சிந்திப்பவர்
8. பரமாத்மனின் பக்தர்களில் த்வேஷம்
9. பரமாத்மனின் வாக்கியத்தில் த்வேஷம்

என ஒன்பது வகையான த்வேஷங்களைக் கொண்ட மக்களே கலியுகத்தில் இருப்பார்கள். பக்தர்களை காணவே முடியாது என்று ஸ்ரீபரமாத்மன் கருடனுக்கு உபதேசித்தார்.

இந்த ஒன்பது விதமான த்வேஷங்களையும் கொண்டவன் கலி. பரிக்ஷித் ராஜன், தன் திக்விஜயத்தில் கலியை வென்றபோது, கலியின் பிரார்த்தனையின் பேரில், கலி வசிப்பதற்காக 5 இடங்களைக் கொடுத்தார் என்று பாகவத 1ம் ஸ்கந்தத்தில் :

த்யூதம் பானம் ஸ்த்ரிய: ஸூனா யத்ராதர்மாஸ் சதுர்விதா: |
புனஸ்ச யாசமானாய சாதரூபமதாத் ப்ரபு: ||

* எங்கு சூதாட்டம் நடக்கிறதோ,
* எங்கு மது குடிக்கிறார்களோ,
* எங்கு வைஷ்யா ஸ்த்ரியர்கள் இருக்கிறார்களோ,
* எங்கு பசு வதை நடக்கிறதோ
அதர்மங்கள் நடக்கும் இந்த 4 இடங்களில் நீ வசித்திரு என்று கூறினார்.

இந்த இடங்கள் போதாது என்று கலி மறுபடி பரிக்ஷித்தினை வேண்ட, தங்கம் இருக்கும் இடத்தில் நீ இரு என ஐந்தாவதாக ஒரு இடத்தையும் கொடுத்தான்.

ததோன்ருதம்மத: காமோரஜோவைரஞ்ச பஞ்சமம் |
ஔத்தரீயேண தத்தானின்யவஸத்தன்னி தேஷ க்ருத் ||

பரிக்ஷித் ராஜன் கொடுத்த இந்த 5 இடங்களில், அவனின் ஆணைப்படி, கலி தன் அம்சத்தினால் வசித்து வருகிறான். எங்கெங்கு எந்தெந்த ரூபங்களில் இருக்கிறான், என்றால்:

* எங்கு சூதாட்டம் நடக்கிறதோ, அங்கு பொய் ரூபமாகவும்
* எங்கு மது இருக்கிறதோ, அங்கு மயக்கம் / வெறி ரூபமாகவும்
* எங்கு வைஷ்யா ஸ்த்ரீயரோ, அங்கு காம ரூபமாகவும்
* எங்கு பசு வதை நடக்கிறதோ, அங்கு பாப ரூபமாகவும்

* எங்கு தங்கம் இருக்கிறதோ, அங்கு கலக ரூபமாகவும் வசிக்கிறான் என்கிறார்.

அதே அபிப்பிராயத்தையே தாசார்யர் இங்கு சொல்கிறார்.

'பவரதலி' என்றால், போரில் என்று சிலர் வியாக்யானம் செய்கிறார்கள். 'தர்மோயுத்தேவ தோத்விஷாம்' என்னும் பாகவத வாக்கியத்திற்கேற்ப போர்க்களத்தில் எதிரிகளைக் கொல்வது, க்ஷத்ரிய தர்மம் என்று சொல்லப்பட்டிருப்பதால், பவர என்பதற்கு இங்கு போர் என்று அர்த்தம் சொல்லாமல், பாகவத வாக்கியத்திற்கேற்ப போருக்கு சரிசமமான அர்த்தத்தைக் கொடுக்கும் 'ஸூனா' என்னும் பதத்தை எடுத்துக் கொண்டிருக்கிறோம். ஸூனா என்றால், இம்சிப்பது என்று பொருள். அதற்கு வியாக்யானத்தில் பசு இம்சை (பசு வதை) என்று எடுத்திருக்கிறார்கள். ஆகையால், அதே அர்த்தத்தையே இங்கு சொல்லியிருக்கிறோம்.

இப்படி விளக்குவதால், பாகவதத்தில் சொல்லியிருக்கும்படியே, சூதாட்டம், பானம், பெண்கள், பசு வதை, தங்கம் என்னும் அர்த்தம் சரியாகப் பொருந்துகிறது.

'ம்ருஷகவிஸி' என்றால், பாகவத வாக்கியத்தின்படி, சூதாட்டம் முதலான 5 இடங்களில், பொய் முதலான 5 ரூபங்களால் இருந்து செயல்களை செய்வான் (கெடுப்பான்) என்று பொருள். இந்த பத்யத்தில் 'த்யூதானா பேயதொளு ம்ருஷ கவிஸி' என்றும் ஒரு பாடம் இருக்கிறது. ம்ருஷதொளு என்னும் பாடத்தைவிட ம்ருஷகவிஸி என்னும் பாடமே சரியாக தெரிகிறது. எப்படியெனில், பாகவதத்தில், கலிக்கு 5 இடங்களே கொடுக்கப்பட்டுள்ளன என்று சொல்லி, சூதாட்டத்தில் பொய் முதலான 5 ரூபங்களாக கலி இருக்கிறான் என்று சொல்லியிருக்கிறார்கள்.

இதனால், கலியின் ஸ்வரூபம் பொய் என்று சொல்வதாக ஆயிற்று. பொய்யே, பாப ரூபமானபிறகு, அதில் கலி பிரவேசம் எப்படி ஆகும்? இது மட்டுமல்லாமல், பாகவத வாக்கியத்தின்படி, 5 இடங்கள் உள்ளன. இங்கு அவை 5ம் சரியாகி, பொய் ஒன்று மட்டும் அதிகமாக இருக்கிறது. ஆகையால், பொய் முதலான 5 ரூபங்களால், சூதாட்டம் முதலான 5ல் கலி இருக்கிறான் என்னும் அர்த்தம் சரியாகவே பொருந்துகிறது.

**த்ரிவித4 ஜீவ்ப்ரததிக3ள ஸ**
**க்3க3வொளெயாண்மாலயனு நிர்மிஸி**
**யுவதியரொடகூடி3 க்ரீடி3ஸுவனு க்ருபாஸாந்த்3ர |**
**தி3விஜ தா3னவ தாரதம்யத3**
**விவர திளிவ மஹாத்மரிகெ3 பா3**
**ந்னவிர ஸக2 தானொலிது3 உத்3த4ரிஸுவனு ப4வதி3ந்த3 ||21**

க்ருபா ஸாந்த்ர = கருணாளுவான
ஸக்கவொளெயாண் மாலயனு = ஸக்க = ஸ்வர்க்க, வொளெய = அங்கிருந்து வந்த கங்கை ஆண்ம = ஆதரவு கொடுக்கும், அதாவது, கங்கையின் பதியான சமுத்திரம், ஆலயனு = வீடாகக் கொண்டவன். அதாவது, பாற்கடல்வாசியான ஸ்ரீஹரி

த்ரிவித ஜீவ ப்ரததிகள = மூன்று வித ஜீவ சங்கங்களை
நிர்மிஸி = படைத்து
யுவதியர ஒடகூடி = ஸ்ரீ, பூ, துர்கா என்னும் மூன்று ரூபத்தினால் இருக்கும் ரமாதேவியுடன் சேர்ந்து
க்ரீடிசுவனு = படைத்தவர்களை காத்தல், அழித்தல் முதலான லீலைகளை செய்கிறான்.
திவிஜ தானவ தாரதம்யத = தேவ தைத்யர்களின் தாரதம்யத்தை
விவிர திளிவ மஹாத்மரிகெ = விவரங்களை அறிந்த மகாத்மருக்கு
பான்னவிர சக = பான் என்றால் ஆகாயம். நவிர என்றால் முடியாகக் கொண்ட ருத்ரதேவர். சக = ருத்ரதேவரின் நண்பனான ஸ்ரீஹரி,
தானொலிது = தான் தரிசனம் அளித்து
பவதிந்த = இந்த சம்சார வாழ்க்கையிலிருந்து
உத்தரிசுவனு = காப்பாற்றுகிறான்.

தேவ நதியான கங்கையின் பதியான வருணன், சமுத்ராபிமானி ஆகையால், சமுத்திரன் என்று அழைக்கப்படுகிறான். அனைத்து சமுத்திராத்மனும் வருணனே. பாற்கடலில் இருக்கும் ஸ்வேதத்வீபத்தில் வசித்துக் கொண்டிருக்கும் ஸ்ரீஹரி, இந்த விதமாக மூன்று வித ஜீவ சங்கங்களையும் படைத்து, ஸ்ரீ பூ துர்கா ஆகிய மூவருடன் சேர்ந்து, தன் லீலைகளை செய்து கொண்டிருக்கிறான். ஆகாயத்தை தன் கேசமாகக் கொண்டவர் ருத்ரதேவர். வ்யோமகேஷ என்று சம்ஸ்கிருதத்தில் இருக்கும் சொல்லையே தாசார்யர், 'பான்னவிர' என்று சொல்லியிருக்கிறார். ருத்ர சக = ஸ்ரீஹரி. தேவ தைத்யர்களின் தாரதம்யத்தை அறிந்து உபாசனை செய்யும் மகாத்மர்களுக்கு ஸ்ரீஹரி தரிசனம் அளித்து, அவர்களை சம்சாரத்திலிருந்து காப்பாற்றி அருள்கிறான்.

**தே$^3$வதை$^3$த்யர தாரதம்யவு**
**பாவமான மதானுக$^3$ரிகி$^3$து**
**கேவலாவஷ்யகவு திளிவது$^3$ ஸர்வகாலத$^3$லி ।**
**தா$^3$வஷிகி$^2$ பாபாடவிகெ$^3$ நவ**
**நாவெயெனிபுது$^3$ ப$^4$வஸமுத்$^3$ரகெ**
**பாவடிகெ$^3$ வைகுண்ட$^2$லோககிதெ$^3$ந்து$^3$ கரெஸுவது$^3$ ||22**

இது = இந்த சந்தியில் கூறப்பட்டுள்ள
தேவ தைத்யர தாரதம்யவு = தேவ தைத்யர்களின் தாரதம்யம்
பாபமானி மதானுகரிகெ = வாயு மதானுகர்களுக்கு (மத்வ மதத்தை பின்பற்றுபவர்களுக்கு)
சர்வகாலதலி = அனைத்து காலங்களிலும்
கேவலாவஷ்யகவு = மிகவும் முக்கியமானது / கண்டிப்பாக தேவையானது
திளிவது = என்று அறியவேண்டும்
இது = இந்த தாரதம்ய ஞானம்
பாபாடவிகெ = பாப என்னும் கடுமையான காட்டிற்கு
தாவஷிகி = காட்டுத்தீயைப்போல இருக்கிறது

பவஸமுத்ரகெ = சம்சாரம் எனும் கடலுக்கு
நவனாவெயெனிபுது = புதியதான படகினைப் போல இருக்கிறது
வைகுண்ட லோலக்கெ = வைகுண்டத்திற்குப் போவதற்கு
பாவடிகெயெந்து = படிக்கட்டுகள் என்று
கரெசுவுது = சொல்லப்படுகிறது.

இந்த சந்தியில் சொல்லப்பட்டுள்ள தேவ தைத்யர்களின் தாரதம்ய ஞானமானது, மத்வ மதத்தைப் பின்பற்றுபவர்களுக்கு மிகவும் தேவையான விஷயம் என்று ஸ்ரீமன் மத்வாசார்யரின் வாக்கியமே உள்ளது. பஞ்சபேத ஞானம், தாரதம்ய ஞானம் இல்லாமல் முக்தி இல்லை என்னும் விஷயத்தில் ஸ்ரீமதாசார்யர் உதாரணம் கொடுத்திருக்கும் ஆதாரத்தை, இந்த சந்தியில் துவக்கத்தில் கொடுத்திருக்கிறோம். ஆகையாலேயே, தாசார்யரும் தாரதம்ய ஞானம் மிகவும் அவசியம் என்று சொல்லியிருக்கிறார். இந்த தாரதம்ய ஞானம் பாப என்னும் காட்டினை சுடும் விஷயத்தில் காட்டுத்தீயைப் போல இருக்கிறது. சம்சாரம் என்னும் சமுத்திரத்தை கடக்கும் படகாக இருக்கிறது. வைகுண்ட லோகத்திற்கு ஏறிப் போவதற்கு படிக்கட்டுகளாக இருக்கிறது. ஆகையாலேயே மத்வ மதத்தை பின்பற்றுபவர்களுக்கு தாரதம்ய ஞானம் மிகவும் அவசியம் என்று சொல்லியிருக்கிறார்.

**தாரதம்யஞான முக்தி**
**த்$^{3}$வாரவெனிபுது$^{3}$ ப$^{4}$க்தஜனரிகெ$^{3}$**
**தோரி பேளி ஸுகா$^{2}$ப்தி$^{4}$யொளு லோலாடு$^{3}$வுது$^{3}$ பு$^{3}$த$^{3}$ரு ।**
**க்ரூரமானவரிகி$^{3}$து$^{3}$ கர்ண க**
**டோரவெனிபுது$^{3}$ நித்யத$^{3}$லி அதி$^{4}$**
**காரிக$^{3}$ளிகி$^{3}$த$^{3}$னருபுவுது$^{3}$ துஸ்தர்க்கிக$^{3}$ள பி$^{3}$ட்டு ।।23**

தாரதம்ய ஞான = மேலே பார்த்த தாரதம்ய ஞானம்
முக்தி த்வாரவெனிபுது = முக்திக்கு செல்லும் வாயில் எனப்படுகிறது
புதரு = ஞானிகள்
பக்தஜனரிகெ = பக்த ஜனர்களுக்கு
தோரி = தாரதம்ய ஞானத்தை உபதேச ரூபமாக சொல்லிக் கொடுத்து
கேளி = பெரியவர்களின் முகத்திலிருந்து தாமும் கேட்டு
சுகாப்தியொளு = சுகம் என்னும் கடலில்
லோலாடுவுது = மூழ்கி, நீச்சலடித்துக் கொண்டிருக்கலாம்
க்ரூரமானவரிகிது = மித்யா ஞானம், தவறான ஞானம் ஆகியவற்றைக் கொண்டிருப்பவர்களுக்கு
இது = இந்த தாரதம்ய ஞானம்
கர்ண கடோரவெனிபுது = காதுகளில் கேட்பதற்கும் சாத்தியமில்லாத பேச்சுக்களாக இருக்கிறது
துஸ்தர்க்கிகள பிட்டு = குதர்க்கம் பேசும் அயோக்யர்களுக்கு இதை சொல்லாமல்
நித்யதலி = தினந்தோறும்
அதிகாரிகளிகெ = இதைக் கேட்கும் தகுதி உள்ளவர்களுக்கு மட்டும்

இதனு = இந்த தாரதம்யத்தை
அருபுவுது = சொல்லத் தக்கது.

இந்த தாரதம்ய ஞானம், யோக்யர்களுக்கு மட்டுமே முக்திக்கான மார்க்கம் என்று தெரியுமே தவிர, மித்யா ஞானிகள், தவறான ஞானம் கொண்டவர்களுக்கு இது காதால் கேட்பதற்குக்கூட சாத்தியமற்ற பேச்சுக்களாக இருக்கிறது. ஆகையால், அத்தகையவர்களுக்கு இதனை உபதேசம் செய்யாமல், இதற்கு அதிகாரிகள் யாரோ, அத்தகைய முக்தி யோக்யர்களுக்கு மட்டும் உபதேசம் செய்தவாறு, தானும் பெரியவர்களின் முகங்களிலிருந்து கேட்டவாறு, சுக சமுத்திரத்தில் மூழ்கியவாறு, நீச்சல் அடித்தவாறு, இருக்க வேண்டும் என்பது கருத்து.

**ஹரி ஸிரி விரிஞ்சீர பா4ரதி**
**க3ருட ப2ணிபதி ஷண்மஹிஷியரு**
**கி3ரிஜெ நாகேஷ ஸ்மர ப்ராண அனிருத்3த4 ஷசி |**
**கு3ரு ரதி மனு த3க்ஷ ப்ரவஹா**
**மருத மானவி யம ஷஷி தி3வா**
**கர வருண நாரத3 ஸுராஸ்ய ப்ரஸூதி ப்ருகு3முனிப ||24**

ஹரி = ஸ்ரீபரமாத்மன்
சிரி = ஸ்ரீலட்சுமிதேவி
விரிஞ்சி = பிரம்மதேவர்
ஈர = வாயுதேவர்
பாரதி = சரஸ்வதி பாரதியர்
கருட
பணிபதி = சேஷ (ருத்ரர்)
ஷண்மஹிஷியரு = கிருஷ்ணனின் மனைவியர்களான ஜாம்பவதி முதலான 6 பேர்
கிரிஜ = பார்வதி (இவருக்கு சமரான சௌபர்ணி வாருணி என இந்த மூவரும்)
நாகேஷ ஸ்மர = இந்திர மன்மதன்
பிராண, அனிருத்த, சசி, குரு, ரதி,
மனு = ஸ்வாயம்புவ மனு
தக்ஷ, ப்ரவஹா வாயு,
மானவி = ஷதரூபா
யம,
சசி = சந்திரன்
திவாகர = சூரியன்
வருண, நாரத,
சுராஸ்ய = அக்னி
ப்ரஸூதி
ப்ருகு முனிப = ப்ருகு முனிவர்

பத அர்த்தத்திலேயே விளக்கம் தெளிவாக உள்ளது.

**வ்ரததிஜாஸன புத்ரரெனிஸுவ**
**வ்ரதிவரத்ரி மரீசி வைவ**
**ஸ்வதனு தாரா மித்ர நிர்ருதி ப்ரவஹமாருதன**
**ஸதி த$^4$னெஷாஷ்வினிக$^3$ளிகெ$^3$ க$^3$ண**
**பதியு விஷ்வக்ஸேன ஸேஷ ஸு**
**ஷதரு மனுக$^3$ளுசத்$^4$ய ச்யாவன முனிக$^3$ளிகெ$^3$ நமிபெ ||25**

வ்ரததிஜாஸன = சேற்றிலிருந்து பிறந்த தாமரையையே ஆசனமாகக் கொண்ட, பிரம்மதேவரின்
புத்ரரெனிஸுவ = மக்கள் என்று அழைக்கப்படும்
வ்ரதிவர = விரதம் உள்ளவர்களில் சிறந்தவர்களான
அத்ரி, மரீசி, வைவஸ்வதனு
தாரா = பிருஹஸ்பத்யாசார்யரின் மனைவி தாரா
மித்ர = மித்ர நாமக சூரியன்
நிர்ருதி
ப்ரவஹ மாருதன சதி = ப்ரவஹ மாருதனின் மனைவி ப்ராவஹி
தனேஷ = குபேரன்
அஷ்வினிகளிர் = அஸ்வினி தேவதைகள் இருவர்
கணபதி, விஷ்வக்சேன,
சேஷ சுஷதரு = 100 பேர் தேவதைகளில் முன்னர் பார்த்தவர்களைத் தவிர மற்றவர்கள்
உசித்ய ச்யாவன முனிகளிகெ = உசித்ய, ச்யாவன முனிவர்களுக்கு
நமிபெ = முன்னர் இரு பத்யங்களில் கூறிய அனைவரையும் வணங்குகிறேன்.

பத அர்த்தத்திலேயே விளக்கம் தெளிவாக உள்ளது.

**ஷத ஸுபுண்ய ஸ்லோகரெனிஸுவ**
**க்ஷிதிபரிகெ$^3$ நமிஸுவெனு பா$^4$கீ$^3$**
**ரதி விராட்பர்ஜன்ய ரோஹிணி ஷ்யாமலா ஸஞ்ஞா |**
**ஹுதவஹன மஹிளா பு$^3$தோ$^4$ஷா**
**க்ஷிதி ஷனைஸ்சர புஷ்கரரிகா$^3$**
**நதிஸி பி$^3$ன்னைஸுவெனு ப$^4$க்தி ஞான கொட$^3$லெந்து$^3$ ||26**

ஷத சுபுண்ய ஸ்லோக ரெனிஸுவ க்ஷிதிபரிகெ = புண்ய கீர்த்திகள் என்று புகழ் பெற்றிருக்கும் 100 சக்ரவர்த்திகளுக்கு
பாகிரதி விராட் = அனிருத்தனின் மனைவியான உஷாதேவி
பர்ஜன்ய = பர்ஜன்ய நாமக சூரியன்
ரோஹிணி = சந்திரனின் மனைவி
ஷ்யாமலா = யமதேவரின் மனைவி
சஞ்ஞா = விவஸ்வத என்னும் சூரியனின் மனைவி
ஹுதவஹன மஹிளா = அக்னியின் மனைவி ஸ்வாஹாதேவி

புத,
உஷா = அஷ்வினி தேவதைகளின் மனைவி
க்ஷிதி ஷனைஸ்சர = பூமிக்கு அபிமானியான சனீஸ்வரன்
புஷ்கரரிகெ = புஷ்கரன் வரைக்குமான, மேலே கூறிய அனைவருக்கும்
நமிஸுவெனு = நமஸ்காரம் செய்கிறேன்
அனுதிஸி = நன்றாக இவர்கள் அனைவரையும் வணங்கி
பக்தி ஞான கொடலெந்து = பக்தி, ஞானத்தை எனக்குக் கொடுக்கவும் என்று
பின்னைசுவேனு = பிரார்த்திக்கிறேன்.

பத அர்த்தத்திலேயே விளக்கம் தெளிவாக உள்ளது.

**நூரதி4கவாகி3ப்ப மத்ஹறதி3**
**நாருஸாவிர நந்த3கோ3பகு**
**மாரனர்த்3தா4ங்கி3யர க3ஸ்த்யாதீ3 முனீஷ்வரரு |**
**ஊருவஷி மொத3லாத3 அப்ஸர**
**நாரியரு ஷத தும்பு3ரரு கம்**
**ஸாரி கு3ணக3ள கீர்த்தனெய மாடி3ஸலி என்னிந்த3 ||27**

நூரதிகவாகிப்ப = 100க்கு அதிகமான
ஹதினாரு சாவிர = 16,000 எண்ணிக்கையில் உள்ள
நந்தகோப குமாரன = ஸ்ரீகிருஷ்ணனின்
அர்த்தாங்கியரு = மனைவிகள்
அகஸ்த்யாதிக = அகஸ்திய முதலான
முனீஷ்வரரு = முனிவர்கள்
ஊர்வஷி மொதலாத அப்ஸர நாரியரு = ஊர்வசி முதலான அப்ஸர ஸ்த்ரியர்கள்
ஷத = 100 பேர் அப்ஸர ஸ்த்ரியர்கள்
தும்பரரு = 100 பேர் தும்புரு கந்தர்வர்கள், இவர்கள் அனைவரும்
என்னிந்த = என்னிடமிருந்து
கம்ஸாரி குணகள = ஸ்ரீகிருஷ்ணனின் குணங்களை
கீர்த்தனெய மாடிஸலி = கீர்த்தனையை செய்விக்கட்டும்.

பத அர்த்தத்திலேயே விளக்கம் தெளிவாக உள்ளது.

**பாவனரு ஷுசி ஷுத்3த4 நாமக**
**தே3வதெக3ளாஜான சிரபித்ரு**
**தே3வனர க3ந்த4ர்வர வனிப மானுஷோத்தமரு |**
**ஈ வஸுமதியொளுள்ள வைஷ்ணவ**
**ராவளியொளி ஹரெந்து3 நித்யதி3**
**ஸேவிபுது3 ஸந்தோஷதி3ம் ஸர்வப்ரகாரத3லி ||28**

பாவனரு ஷுசி சுத்த நாமக = இந்த பெயர்களைக் கொண்ட,
தேவதெகளாஜான = சோம பானத்திற்கு தகுதியற்ற தேவதைகள்
சிரபித்ரு = சிரபித்ருகள்

தேவனர கந்தர்வர = தேவ கந்தர்வர்கள், மனுஷ்ய கந்தர்வர்கள்
அவனிப = ராஜர்கள்
மானுஷோத்தமரு
ஈ வசுமதியொளுள்ள = இந்த பூமியில் இருக்கும்
வைஷ்ணவரு = விஷ்ணு பக்தர்கள்
அவளியொளு = மேற்கூறிய மானுஷோத்தமர்களை
இஹரெந்து = சேர்ந்தவர்கள் என்று
நித்யதி சந்தோஷதிம் = தினந்தோறும் சிந்தித்து, மகிழ்ச்சியுடன்
சேவிபுது = வணங்க வேண்டும்.

இந்த காலத்திலும், இந்த பூமியில், மனுஷ்யோத்தமர்கள் கணத்தை சேர்ந்தவர்கள், பாகவதோத்தமர்கள், எவ்வளவோ பேர்கள் இருக்கிறார்கள் என்று அறிந்து, தாரதம்யத்தின்படி, அனைவரையும், அனைத்து விதங்களிலும், தினமும் சேவை செய்தால், அதுவே முக்திக்கு சாதனையாகிறது என்பது கருத்து.

**மானுஷோத்தமரனு பிடி3து3 சது**
**ரானனாந்த3 ஷதோத்தமத்வ க்ர**
**மேண சிந்திப ப4குதரிகெ3 சதுரவித4 புருஷார்த்த2 ।**
**ஶ்ரீநிதி4 ஜகன்னாத2விட்ட2ல**
**தானெ ஒலிதீ3வனு நிரந்தர**
**ஸானுராக3தி3 படிஸுவுது3 ப்ராக்ஞரித3 மரெயத3லெ ||29**

மானுஷோத்தமரனு = மனுஷ்யோத்தமர்களை
பிடிது = அவர்களில் இருந்து துவங்கி
சதுரானனாந்த = பிரம்மதேவர் வரையிலும்
ஷதோத்தமத்வ க்ரமேண = 100-100 குணங்கள் சிறந்தவர்கள் என்ற விதத்தில்
சிந்திப = அறியும்
பக்தரிகெ = பக்தர்களுக்கு
ஶ்ரீனிதி ஜகன்னாதவிட்டல = ஶ்ரீதேவி என்னும் நிதி உள்ள ஜகன்னாத விட்டலன் என்னும் பெயரைக் கொண்ட ஶ்ரீபரமாத்மன்
தானே ஒலிது = தானாகவே மகிழ்ந்து
சதுரவித புருஷார்த்த = தர்ம, அர்த்த, காம, மோக்ஷ என்னும் 4 வித புருஷார்த்தங்களை
ஈவனு = கொடுக்கிறான்.
இது = இந்த தாரதம்ய சந்தியை
மரியதலெ = மறக்காமல் (சிந்தனையில் வைத்துக் கொண்டு)
ப்ராஞ்ஞரு = பகவத் பக்தர்களான ஞானிகள்
நிரந்தர = தினந்தோறும்
ஸானுராகதி = பக்தியுடன்
படிசுவுது = படிக்க வேண்டும்.

மனுஷ்யோத்தமரில் துவங்கி, பிரம்மதேவர் வரைக்கும், ஒருவரைவிட மற்றொருவர் 100 குணங்கள் உத்தமர் என்ற கிரமத்தில் அதாவது, சிலரின் மனைவிகளுக்கு 10 குணங்கள் உச்ச / நீச கிரமத்தையும் சொல்லியிருக்கிறார். இங்கு 100 குணங்கள் என்று சொன்னது, பொதுவாக என்று அர்த்தம் கொள்ளவேண்டும்.

ஆகமொத்தம், இந்த சந்தியில் கூறிய கிரமத்தில் யார் தினமும் சிந்திக்கின்றனரோ, அவருக்கு ஸ்ரீஹரி, தானாகவே மகிழ்ந்து, சதுர்வித புருஷார்த்தங்களை கொடுக்கிறான். ஆகையால், இதனை மறக்காமல் தினமும் இந்த சந்தியை, பக்தி மரியாதைகளுடன் படிக்க வேண்டும்.

**குணதாரதம்ய சந்தி என்னும் 20ம் சந்தியின் தாத்பர்யம் இத்துடன் முடிவுற்றது. ஸ்ரீகிருஷ்ணார்ப்பணமஸ்து.**

**

## பாவபிரகாசிகை : சந்தி 21 : ப்ருஹத் தாரதம்ய சந்தி

**/ ஆவேச அவதார சந்தி**

**ஹரிகதா$^{2}$ம்ருதசார கு$^{3}$ருக$^{3}$ள**
**கருணதிந்தா$^{3}$பநிது பே$^{1}$ளுவே**
**பரம ப$^{4}$கவத்$^{3}$ப$^{4}$க்தரித$^{3}$னாத$^{3}$ரதி கேளுவுது$^{3}$**

முந்தைய சந்தியில் குணங்களை அனுசரித்து தாரதம்யத்தைக் கூறியிருந்தார். இந்த சந்தியில் ஸ்ரீபரமாத்மன், மற்றும் தேவதைகள் இவர்களின் அவதாரங்களை, அம்சங்களை, தாரதம்ய கிரமத்தில் சொல்கிறார்.

**சந்தி ஸூசனை:**

**ஹரி ஷிரி விரஞ்சீரமுக$^{2}$ நிர்ஜர**
**ராவேஷாவதாரக$^{3}$ள ஸ்மரிஸு கு$^{3}$ணக$^{3}$ண**
**ஸர்வகாலதி$^{3}$ ப$^{4}$க்தி பூர்வகதி$^{3}$ ||**

ஹரி
ஷிரி = லட்சுமிதேவி
விரிஞ்சி = பிரம்மதேவர்
ஈர = வாயுதேவர்
முக = இவர்களில் துவங்கி
நிர்ஜரர = தேவதைகளின்
ஆவேஷாவதாரகள = ஆவேச, அம்ச அவதாரங்களை
குணகண =
அவர்களின் குண சமூகத்தை
சர்வகாலதி = அனைத்து காலங்களிலும்
பக்திபூர்வகதி = பக்தியுடன்
ஸ்மரிஸு = நினை.

ஸ்ரீபரமாத்மனின் அவதாரங்கள் அனந்தமாகையால், அனைத்து அம்சங்களையும், அவதாரங்களையும் சொல்வதற்கு சாத்தியமில்லை. ஆகையால், முக்கியமான அம்ஷாவதாரங்களை இங்கு சொல்லியிருக்கிறோம். இத்தகைய அம்சங்களை, அவதாரங்களை, பகவத் பக்தர்களான அதிகாரிகள் தினந்தோறும் நினைக்கவேண்டும் என்பது கருத்து.

இப்படியாக இந்த சந்தியின் அபிப்ராயத்தை இந்த பாதி பத்யத்தினால் குறிப்பிடுகிறார்.

**மீன கூர்ம க்ரோட$^{3}$ நரஹரி**
**மாணவக ப$^{4}$ருகு$^{3}$ராம த$^{3}$ஷரத$^{2}$**
**ஸூனு யாத$^{3}$வ பு$^{3}$த்$^{3}$த$^{4}$ கல்கி கபில வைகுண்ட$^{2}$ |**

**ஶ்ரீனிவாஸ வ்யாஸ ருஷப⁴ ஹ**
**யானனா நாராயணீ ஹம்**
**ஸானிருத்³த⁴ த்ரிவிக்ரம ஶ்ரீத⁴ர ஹ்ருஷிகேஷ ||1**

மீன = மத்ஸ்யாவதாரம்
கூர்ம = கூர்மாவதாரம்
க்ரோட = வராஹாவதாரம்
நரஹரி = நரசிம்ம அவதாரம்
மாணவக = வாமன அவதாரம்
ப்ருகுராம = பரசுராம அவதாரம்
தஷரத சூனு = தசரதனின் மகன் ராம அவதாரம்
யாதவ = கிருஷ்ண அவதாரம்
புத்த, கல்கி = ஆகிய 10 அவதாரங்கள்
கபில = தேவஹூதியிடம் கர்தமர் மூலமாக அவதரித்த கபில தேவர்
வைகுண்ட = விகுண்ட என்னும் ஸ்த்ரியரிடம் ஷுப்ரன் மூலமாக அவதரித்தவன் பத்னி விகுண்டா ஷுப்ரஸ்ய என்று பாகவத 8ம் ஸ்கந்த வாக்கியத்தில் சொல்லியிருக்கிறார்.
ஶ்ரீனிவாஸ, வியாஸ,
ரிஷப = நாபிராயன் மூலமாக மேருதேவியில் அவதாரம்
ஹயானன = ஹயக்ரீவ ரூபத்தினால் அவதரித்து, ஹயக்ரீவ நாமக தைத்யனைக் கொன்றான்
நாராயணி = மோகினி ரூபத்தை தரித்து தேவதைகளுக்கு, அமிர்தத்தைக் குடிக்கும் காலத்தில், தைத்யர்களை ஏமாற்றிய ரூபம்
ஹம்ஸ = பிரம்ம தேவருக்கு தத்வோபதேசம் செய்த ரூபம்
அனிருத்த = வாசுதேவாதி 5 ரூபங்களின் வியூகத்தில் சேர்ந்த ரூபம்
த்ரிவிக்ரம,
ஶ்ரீதர = லட்சுமிதேவியரை தன் மார்பில் தரித்த அஜித அவதாரம்
ஹ்ருஷிகேஷ = இந்திரிய அபிமானிகளுக்கு அதிபதியான பகவத்ரூபம்

இத்தகைய அனேக அவதாரங்களைக் கொண்டவன் பரமாத்மன் என்பது கருத்து.

**ஹரியு நாராயணனு க்ருஷ்ணா**
**ஸுரகுலாந்தக ஸூர்யஸப்ரப³**
**கரெஸுவனு நிர்து³ஷ்ட ஸுக²பரிபூர்ண தானெந்து³ |**
**ஸருவ தே³வோத்தமனு ஸர்வக³**
**பரமபுருஷ புராதன ஜரா**
**மரணவர்ஜித வாஸுதே³வாத்³யமித ரூபாத்ம ||2**

ஹரியு =
தத்ராபிஜஞ்ஞே பகவான் ஹரிண்யாம் ஹரிமேதஸ: |
ஹரிரித்யாஹுதோ யேன கஜேந்த்ரோ மோஜிதோ க்ரஹாத் ||

என்னும் பாகவத 8ம் ஸ்கந்த வாக்கியத்தைப் போல, மேதஸ் மற்றும் ஹரிணி என்பவர்களில் ஹரி அவதரித்து கஜேந்திரனை, முதலையிடமிருந்து விடுவித்த ரூபம்.

நாராயணன் = தர்மப்ரஜேஷ்வரன் மூலமாக ஸூன்ருதெயில் அவதரித்த நர நாராயண ரூபங்களில் ஒன்றான நாராயண ரூபம்.

கிருஷ்ண அசுரகுலாந்தக = தைத்யர்களைக் கொல்வதற்காக அவதரித்த கிருஷ்ணன்

இத்தகைய பரமாத்மன்
சூர்ய சப்ரப = சூரியனுக்கு சமமான காந்தி உள்ளவன்
நிர்துஷ்ட = தோஷங்கள் அற்றவன்
சுக சம்பூர்ண = சுகங்களையே முழுமையாகக் கொண்டவன்
சர்வ தேவோத்தமன் = அனைத்து தேவர்களைவிட உத்தமன்
சர்வக = அனைத்து இடங்களிலும் வியாப்தன்
பரமபுருஷ = புருஷர்களில் சிறந்தவன்
புராதன = அனாதி காலங்களிலிருந்து
ஜராமரணவர்ஜித = பிறப்பு இறப்பு இல்லாதவன்
வாசுதேவாத்யமித ரூபாத்ம = வாசுதேவ முதலான அனேக அவதார ரூபங்களைக் கொண்டவன்
கரெசுவனு = என்று அனைத்து சாஸ்திரங்களிலும் அழைக்கப்படுகிறான்.

**ஈ நலினப[4]வஜனனி லகுமி**
**ஞான ப[4]ல ப[4]க்த்யாதி[3] கு[3]ண ஸ**
**ம்பூர்ணளெனிபளு ஸர்வகாலதி[3] ஹரிக்ருபாப[3]லதி[3] ।**
**ஹீனளெனிபள நந்த[3]கு[3]ணதி[3] பு**
**ராணபுருஷகெ[3] ப்ரக்ருதிகி[3]ன்னு ஸ**
**மானரெனிஸுவரில்ல முக்தாமுக்த ஸுரரொளகெ[3] ।।3**

ஈ நலினபவ = கமலத்திலிருந்து பிறந்த பிரம்மதேவர்
ஜனனி = தாயான
லகுமி = ஸ்ரீலட்சுமிதேவி
சர்வகாலதி = பிரளய முதலான அனைத்து காலங்களிலும்
ஹரிக்ருபாபலதி = பரமாத்மனின் க்ருபா பலத்தினால்
ஞான பல பக்த்யாதி குண சம்பூர்ணளு = மற்ற பிரம்மாதி தேவதைகளைவிட, அத்யதிகமான, ஞான பல, பக்தியாதி குணங்களால் சம்பூர்ணள் எனப்படுகிறாள்.
புராண புருஷகெ = புராதன புருஷன் என்று அழைக்கப்படும் நாராயணனுக்கு
அனந்தகுணதி = அனந்தானந்த குணங்களால்
ஹீனளெனிபளு = குறைவு எனப்படுகிறாள்
ப்ரக்ருதிகெ = ஈ லட்சுமி தேவியருக்கு

முக்தாமுக்த சுரரொளகெ = முக்தர்களோ, அமுக்தர்களோ, எந்த தேவதைகளோ, இவளுக்கு
சமானரெனிஸுவரில்ல = சமானம் என்று சொல்வதற்கு யாரும் இல்லை

**கு$^{3}$ணக$^{3}$ள த்ரயமானி ஶ்ரீ கு**
**ம்பி$^{4}$னி மஹாது$^{3}$ர்கா ம்ப்$^{4}$ரிணி ரு**
**க்மிணியு ஸுஸத்யா ஷாந்தி க்ருதி ஜய மாய மஹலகுமி |**
**ஜனகஜா கமலாலயா த$^{3}$**
**க்ஷிணெ ஸுபத்$^{3}$மா த்ரிலோகேஷ்வரி**
**அணு மஹத்தினொளித்$^{3}$து$^{3}$ உபமாரஹித ளெனிஸுவளு ||4**

குணகள த்ரயமானி = ஸத்வ ரஜஸ் தமோ குணங்களுக்கு அபிமானி
ஶ்ரீ = ஶ்ரீதேவி
கும்பிணி = பூதேவி
மஹாதுர்கா, அம்ப்ரிணி, ருக்மிணி,
சுசத்யா = சத்யபாமா
ஷாந்தி = அனிருத்த நாமக பரமாத்மனின் மனைவி
க்ருதி = ப்ரத்யும்ன நாமக பரமாத்மனின் மனைவி
ஜய = சங்கர்ஷண நாமக பரமாத்மனின் மனைவி
மாயா = வாசுதேவனின் மனைவி
மஹலகுமி = நாராயணனின் மனைவி
ஜனகஜா = சீதாதேவி
கமலாலயா = அஜித நாமக பரமாத்மனின் மனைவி
தக்ஷிணெ = யக்ஞ நாமக பரமாத்மனின் மனைவி
சுபத்மா = பார்கவி ரூபம்
த்ரிலோகேஷ்வரி = மூன்று உலகங்களுக்கும் ஈஸ்வரி எனப்படுகிறாள்
அணு மஹத்தினொளித்து = இத்தகைய ரூபங்களைக் கொண்ட மஹாலட்சுமி, சூக்ஷ்மமான பொருட்களில் சூக்ஷ்மமாக இருந்து, மிகப் பெரியதான பொருட்களில் பெரியதாக இருந்து
உபமாரஹித ளெனிஸுவளு = தனக்கு யாரும் ஒப்புமை இல்லை என்று அழைக்கப்படுகிறாள்.

**கோ$^{4}$டகாஸ்யன மட$^{3}$தி$^{3}$கி$^{3}$ந்த$^{3}$லி**
**ஹாடகோத$^{3}$ர பவனரீர்வரு**
**கோடி கு$^{3}$ணதி$^{3}$ந்த$^{3}$த$^{4}$மரெனிபரு ஆவகாலத$^{3}$லி |**
**கே$^{2}$டபதி ஸேஷாமரேந்த்$^{3}$ரர**
**ஸாடிமாட$^{3}$தெ$^{3}$ ஶ்ரீஷன க்ருபா**
**நோடதி$^{3}$ந்த$^{3}$லி ஸர்வரொளு வ்யாபார மாடு$^{3}$வரு ||5**

கோடகாஸ்யன = குதிரை முகம் கொண்ட ஹயக்ரீவ தேவர்
மடதி கிந்தலி = அவன் மனைவியான லட்சுமிதேவியைவிட
ஹாடகோதர = தங்கமே உதரமாக உள்ள பிரம்மதேவர்

பவனரீர்வரு = வாயுதேவர், இவர்கள் இருவரும்
யாவகாலதலி = அனைத்து காலங்களிலும்
கோடி குணதிந்ததமரெனிபரு = ஒரு கோடி குணங்களால் குறைவு எனப்படுகிறார்கள்
ஸ்ரீஷன = லட்சுமிபதியான ஸ்ரீபரமாத்மனின்
க்ருபானோடதிந்தலி = கடைக்கண் பார்வையில்
கேடபதி = வானில் பறக்கும் பறவைகளின் தலைவனான கருட
சேஷாமரேந்த்ரர = சேஷ, தேவேந்திரனின்
ஸாடிமாடதெ = அவர்களை கவனத்தில் கொள்ளாமல்
சர்வரொளு = அனைத்து பிராணிகளிலும் இருந்து
வ்யாபார மாடுவரு = அனைத்து இந்திரியங்களின் செயல்களையும் செய்விக்கிறார்.

லட்சுமிதேவியரைவிட, பிரம்ம வாயுதேவர்கள், எந்த காலத்திலும், அதாவது, முக்தர்கள் ஆனபிறகும்கூட, ஒரு கோடி குணங்களால் குறைவானவர்கள். கருட, சேஷ, இந்திராதிகளை, லட்சியம் செய்யாமல், ஸ்ரீபரமாத்மனின் கடைக்கண் பார்வையின் பலத்தினால், அனைத்து பிராணிகளிலும் இருந்து, அனைத்து இந்திரியங்களின் செயல்களையும் செய்விக்கிறார்.

இந்த பத்யத்தில் 'கருடசேஷாமரேந்த்ரர' என்று கருட, சேஷர்களை மட்டும் சொன்னதால், ருத்ர தேவரை லட்சியம் செய்வாரோ என்று சந்தேகம் வர வாய்ப்புண்டு. ருத்ரதேவரே, சேஷ பதவிக்கு வருபவராகையால், சேஷ தேவரை சொன்னபிறகு, ருத்ர தேவரும் இதிலேயே சேர்ந்துவிட்டார் என்று அறியவேண்டும்.

**புருஷ பி[3]ரம்ம விரிஞ்சி மாஹ**
**ன்மருத முக்[2]யப்ராண த்[4]ருதி ஸ்ம்ருதி**
**கு[3]ருவர மஹாத்[4]யாத ப[3]ல விக்ஞாத விக்[2]யாத |**
**க[3]ரளபு[4]க் ப[4]வரோக[3] பே[4]ஷஜ**
**ஸ்வர வரண வேத[3]ஸ்த[2] ஜீவே**
**ஷ்வர விபீ[4]ஷண விஸ்வசேஷ்டக வீதப[4]ய பீ[4]ம ||6**

விரிஞ்சியு = வாசுதேவனின் மூலமாக மாயாதேவியிடம் சூக்ஷ்ம தேகத்தில் பிறந்த ரூபம், புருஷ என்று பெயர் பெற்றது.
மாஹன் = அனிருத்த நாமக பரமாத்மனிடமிருந்து சாந்திதேவியிடம் பிறந்த மஹத்தத்வ அபிமானியான பிரம்மரூபம்
பிரம்மா = பரமாத்மனின் நாபி கமலத்திலிருந்து பிறந்த சதுர்முக பிரம்மரூபம்.
இப்படி பிரம்மதேவரின் ரூப நாமங்களைச் சொல்லி, அடுத்து வாயுதேவரின் ரூப நாமங்களை சொல்கிறார்.

மருத = 49 மருத்கணங்களில் உத்தம ரூபம்
முக்யபிராண = அனைத்து பிராணிகளுக்கும் ப்ராணனைக் கொடுப்பவன்
த்ருதி = மிகவும் அதிகமான தைரியம் உள்ளவன்
ஸ்ம்ருதி = ஒப்புமை இல்லாத நினைவு சக்தி கொண்டவன்

குருவர = குருகளில் உத்தமர் எனப்படுகிறவர்
மஹாத்யூத = ஸ்ரீபரமாத்மனை மிகவும் அதிகமாக தியானம் செய்வதால், மஹாத்யூத என்று பெயர்.
பல = அவதார த்ரய ரூபங்களிலும், மூலரூபத்திலும் ஒரே மாதிரியான பலம் கொண்டவர் ஆகையால், பல என்று பெயர்.
விக்ஞாத = விசேஷமான ஞானம் உள்ளவன். பகவத் ஸ்வரூபத்தை, கருடாதிகளைவிட அதிகமாக அறிந்தவர் என்பது கருத்து.
விக்யாத = உலகத்திலும், வேதத்திலும் புகழப்படுபவர்
கரளபுக் = விஷம் உண்டவன்
பவரோக பேஷஜ = சம்சாரம் என்னும் ரோகத்திற்கு மருந்தானவன்
வேதஸ்த = வேதத்தில் இருக்கும்
ஸ்வர வரண = எழுத்துக்களுக்கு அபிமானி. அல்லது, பரமாத்மனுக்கு அடுத்து வேதங்களில் புகழப்படுபவர்
ஜீவேஷ்வர = ஜீவோத்தமர்
விபீஷண = எதிரிகளுக்கு பயம் உண்டு பண்ணுபவர்
அல்லது;
ஜீவேஷ்வர விபீஷண = ஜீவனே ஈஸ்வரன் என்பவர்களுக்கு பயங்கரமானவர்
விஷ்வசேஷ்டக = அனைத்து பிராணிகளுக்கும் சலன சக்தியைக் கொடுப்பவர்
வீதபய = பயமே இல்லாதவர்
பீம = பகவத் த்வேஷிகளுக்கு பயங்கரர்.

மகாபாரத தாத்பர்ய நிர்ணய 3ம் அத்தியாயத்தில்:
வ்யோடஸ்சதுர்தா பகவான் ஸ ஏகோ மாயாம் ஸ்ரீயம் ஸ்ருஷ்டி விதித்ஸயாSSர |
ரூபேண் பூர்வேண ஸவாஸுதேவ நாம்னாவிரிஞ்சம் ஸஷுவேசஸாSத: ||9
ஸங்கர்ஷணாஸ்சாபி ஜயா தனோஜோபபூவ சாக்ஷாத்பல ஸம்விதாத்மா |
வாயுர்ய ஏவாத விரிஞ்சனாமா பவிஷ்ய அத்யோ நபரஸ்ததோஹி ||10
ஸூத்ரம் ஸவாயு: புரஷோ விரிஞ்ச: ||

இதன் அர்த்தம்:

ஸ்ரீமன் நாராயணன், வாசுதேவ, சங்கர்ஷண, ப்ரத்யும்ன, அனிருத்த என்னும் 5 ரூபங்களை முதன்முதலில் தரித்து, ஸ்ருஷ்டி செய்யும் நோக்கத்தில், முதலாவதான வாசுதேவ ரூபத்தினால், லட்சுமிதேவியரின் முதலாம் ரூபமான மாயா தேவியை ஸ்வீகரித்தான். அந்த மாயாதேவி, வாசுதேவ நாமக பரமாத்மன் மூலமாக, விரிஞ்சனைப் பெற்றாள். ||9

பல, ஞானாத்மகரான வாயுதேவர், சங்கர்ஷண மற்றும் ஜயா தேவியின் குமாரனாக பிறந்தார். இந்த வாயுதேவரே, அடுத்த கல்பத்தில் விரிஞ்ச என்னும் பெயரில் வாசுதேவன் - மாயாதேவிக்கு முதலாம் குமாரராக பிறப்பார். ஆகையாலேயே, தேவதைகளில் இவரைவிட உத்தமமானவர் வேறு யாரும் இல்லை.

* சங்கர்ஷண மற்றும் ஜயா தேவியரில் பிறந்த ரூபத்திற்கு ஸூத்ர என்று பெயர்.

* மாயா தேவியிடம் பிறந்த விரிஞ்சனே புருஷ என்று சொல்வார்கள். இந்த புருஷ ரூபமே, பிரம்மாண்ட சரீரத்திற்கு அபிமான ரூபம்.
* அனிருத்த மற்றும் ஷாந்தி தேவியரில் இதே விரிஞ்ச நாமக பிரம்மதேவரே, மஹத் தத்வாபிமானியாகி, ஸ்தூல தேகத்தால் பிறப்பார். ஆகையால், மஹான் என்று இவருக்குப் பெயர்.
* பரமாத்மனின் நாபிக் கமலத்திலிருந்து நான்முக பிரம்மதேவர் பிறப்பார்.

இப்படி பிரம்மதேவருக்கு நான்கு பெயர்கள், 4 ரூபங்கள் என்று அறிய வேண்டும். இவருக்கு பூமியில் அவதாரம் இல்லை.

வாயுதேவர் பலஞானாத்மகர் என்று நிர்ணய வாக்கியத்தில் தெளிவாக இருக்கிறது. மேலும், நிர்ணயத்தில் 2ம் அத்தியாயத்தில்:

பக்திர்ஞானம் ஸவைராக்யம் ப்ரஞ்ஞாமேதா த்ருதி ஸ்ருதி: |
யோக: ப்ராணோபலஞ்சைவ வ்ருகோதர இதி ஸ்ம்ருத: ||141
ஏதத்தஷாத்மகோ வாயு: தஸ்மாத் பீமஸ்ததாத்மக: ||

பக்தி, ஞானம், வைராக்யம், புத்தி, நினைவுத்திறன், தைர்ய, ஸ்தைர்ய, யோக, ப்ராண, பல என இந்த பத்தும் பீமசேனனின் ஸ்வரூபம் ஆகும். ஏனெனில், வாயுதேவர், இந்த பத்து குணங்களின் ஸ்வரூபமானவர். அவரே பீமசேன ரூபம். ஆகையால், பீமசேன தேவரும் இவற்றை கொண்டிருக்கிறார் என்று சொல்வார்கள். மருத முக்யபிராணாதி பதங்களுக்கு மேலே அர்த்தம் கொடுக்கப்பட்டுள்ளது.

கரள புக் = விஷம் உண்டவன் என்பதற்கு என்ன ஆதாரம்? எப்போது நடந்தது இது? என்றால், பகவந்தனின் ஆணையின் பேரில், தேவ தைத்யர்கள் சேர்ந்து, பாற்கடலைக் கடைந்தபோது கடுமையான காலாஹல என்னும் விஷம் வந்தது. அப்போது பகவந்தனின் ஆணைப்படி வாயுதேவர் அந்த விஷத்தைக் குடித்தார். இதற்கு ஆதாரம், நிர்ணய 10ம் அத்தியாயத்தில்:

ததா ஜகத்க்ராஸி விஷம் ஸமுத்திதம் வாயுரதாத்கரேனிஜீ ||13
கலே: ஸ்வரூபம் தததீவ துஸ்ஸஹம் வராத்விதாது: ஸகல்யைஸ்ச துஸ்ப்ருஷம் ||
கரே விமத்யாஸ்த பலம் விதாய ததௌஸ கிஞ்சித் கிரிஷாய வாயு: ||14
ஸதத்பிபன் கஞ்டகதேன தேன நிபாதிதோ மூர்ச்சித ஆசுருத்ர: |
ஹரே: கரஸ்பர்ஷ பலாத்ஸதம் ஞாமவாப நீலோஸ்ய கலஸ்ததாஸீத் ||15
அதத்வதாஞாம் புரதோ நிதாய நிதாய பாத்ரே தபனீயரூபே |
ஸ்வயம்த்வனிர்மத்ய பலோ பபன்னம் பபௌஸ வாயுஸ்தது தாஸ்ய ஜீர்ணம் ||16
அத்யல்ப பானாஸ்ச பபூவ ஷூலாஷிவஸ்ய ஷீர்ணஸ்ய கராவஷிஷ்டம் ||
அபூத்கலிஸ்ஸர்வ ஜகத்ஸுபூர்ணம் பீத்வா விகாரோனபபூவ வாயோ: ||17

வியாசாவதாரத்திற்காக தேவதைகள் பரமாத்மனிடம் பிரார்த்தனை செய்த சந்தர்ப்பம்.

'ஹே தேவாதி தேவா! தேவதைகளும், தைத்யர்களும் பாற்கடலை கடையும் வேலையை நிறுத்திவிட, நீ ஒருவனே மந்தர பர்வதத்தை கடைந்து கொண்டிருக்க, அங்கு உலகத்தையே விழுங்கும்படியான விஷம் வந்தது. அப்போது, உன் ஆணையின் பேரில், வாயுதேவர் அந்த விஷத்தைக் குடிக்க, கையில் எடுத்துக் கொண்டார். அந்த விஷம் கலி ஸ்வரூபமானது. பிரம்மதேவரின் வரத்தினால், யாராலும் அதை தொடக்கூட சாத்தியம் இல்லை என்பது மட்டுமல்லாமல், அதன் அருகில் போகக்கூட முடியவில்லை. அத்தகைய விஷத்தை வாயுதேவர் குடிக்கப் போகையில், தேவதைகளால் வணங்கப்பட்டு ருத்ரதேவர் அந்த விஷத்தை தான் குடிப்பேன் என்று சொல்லி அங்கு வர, வாயுதேவர் அந்த விஷத்தில் சிறிய அளவினை தன் கையில் ஊற்றி, நன்றாக கலக்கி, விஷத்தின் பலத்தை குறைத்து, அதனை ருத்ரதேவருக்குக் கொடுத்தார்'.

'அவ்வளவே விஷத்தை குடித்தவுடன், ருத்ரதேவர், அந்த விஷத்தின் பாதிப்பால் உடனே மூர்ச்சையாகி விழுந்தார். பிறகு, ஸ்ரீபரமாத்மன் அவரை தன் கரத்தால் ஸ்பர்சிக்க, ருத்ரதேவருக்கு மயக்கம் தெளிந்தது. ஆனாலும் அவர் கழுத்தில் கருப்பு நிறம் தங்கிவிட்டதால் அவருக்கு நீலகண்ட என்னும் பெயர் வந்தது. அதன்பிறகு, வாயுதேவர் உனது ஆணையை ஏற்று, தங்க பாத்திரத்தில் அந்த விஷத்தை ஏந்திக்கொண்டு, தான் அந்த விஷத்தை அப்படியே குடித்துவிட்டார். அது வாயுதேவருக்கு ஜீர்ணம் ஆனது. மிகச்சிறிய அளவிலான விஷத்தைக் குடித்ததாலேயே ருத்ரதேவருக்கு நிரந்தரமாக தலைவலி வந்துவிட்டது. ருத்ரதேவரின் கையில் மீந்திருந்த விஷம், கலி ஸ்வரூபமாக உலகம் முழுக்க பரவியது. அத்தகைய விஷத்தை முழுமையாக குடித்தாலும் வாயுதேவருக்கு எந்த பிரச்னையும் உண்டாகவில்லை' என்றார்.

அதே அபிப்பிராயத்தையே தாசார்யரும் 'கரள புக்' என்னும் பதத்தில் சொல்லியிருக்கிறார்.

**அனில ஸ்தி[2]தி வைராக்[3]யநிதி[4] ரோ**
**சன விமுக்திக[3]னந்த த[3]ஷமதி**
**அனிமேஷேஷானித்[3]ர ஷுசி ஸத்வாத்மக ஷரீர ।**
**அணு மஹத்[3]ரூபாத்மகாம்ருத**
**ஹனுமதா[3]த்[3]யவதார பத்[3]மா**
**ஸன பத[3]வி ஸம்ப்ராப்த பரிஸர ஆக[2]ணாஷ்மஸம ||7**

அனில = வாயுதேவர்
ஸ்திதி = ஒரே மாதிரியான பல, ஞானாதிகளைக் கொண்டவர்
வைராக்யநிதி = வைராக்கியம் கொண்டவர்
ரோசன = வாயுதேவரின் ரூபம். இவர் இரண்டாம் ஸ்வாரோசிஷ மன்வந்தரத்தில் இந்திர பதவியை வகித்தவர்
விமுக்திக = பகவந்தனின் ஆணைப்படி முக்தி கொடுப்பவர்.
அனந்த தஷமதி = மத்வாசார்யராக அவதரித்து ஆனந்ததீர்த்தர் என்றும் தஷமதி தீர்த்தர் என்றும் பூர்ணப்ரக்ஞர் என்றும் பெயர் பெற்றவர்.

அனிமிஷேஷ = தேவோத்தமர்
அனித்ர = தூக்கத்தை வென்றவர்
ஷுசி சத்வாத்மக ஷரீர = தூய்மையான சத்வ ஸ்வரூபம் கொண்டவர்.
அணுமஹத்ரூபாத்மக = அதி ஸூக்ஷ்ம ரூபத்தை தரிப்பதற்கும் யோக்யமான ஸ்வபாவம் கொண்டவர்
அம்ருத = போஜன காலத்தில் பஞ்ச ப்ராணாஹுதி எடுத்துக்கொள்ளும் முன்னரும், போஜனத்திற்குப் பிறகும் அம்ருத என்றால் தண்ணீர் ரூபத்தினால் அன்னத்திற்கு பாதுகாப்புடன் இருக்கும் ரூபம்.
ஹனுமதாத்யவதார = ஹனுமத் பீம மத்வாசார்யர் என்னும் மூன்று அவதாரங்களை, த்ரேதா த்வாபர கலியுகங்களில் எடுத்தவர்.
ஸம்ப்ராப்ய = பெற்றவர்
பத்மாஸனபதவி = பிரம்ம பட்டத்திற்கு வருபவர்
ஆகணாஷ்மஸம = பரமாத்மனின் ஸ்வரூபத்தை காட்டும் விஷயத்தில் உத்தமமான உரைகல்லைப் போல இருப்பவர்.

காற்றுக்கு அனில என்று பெயர். வாயுதேவர் அந்த ரூபத்தைக் கொண்டிருப்பவர் ஆகையால் அனில என்று அழைக்கப்படுகிறார். ரோசன என்ற பெயரால், வாயுதேவர் இந்திர பதவியை ஆண்டிருந்தார். இதற்கு ஆதாரம், விஷ்ணு ரஹஸ்ய 27ம் அத்தியாயத்தில்:

ஸ்வாரோசிஷோமனுர்னாம த்விதீயோக்னே: ஸுதோ மஹான் |
ருஷிர்வேதஷிரா நாம துஷிதா தஸ்ய பத்ன்ய பூத் ||1
தஸ்யாம் ரோசன நாமாஸீத் ஜ்யேஷ்ட இந்திரஷ்ச ஷோபவத் |
ய:புரா ஸூத்ர நாமாஸீத் ஸ ஏவாயமிஹாபவத் ||2

இரண்டாமவர் : ஸ்வாரோசிஷ என்று அக்னியின் மகன். அந்த மன்வந்தரத்தில் வேதஷிரஸ் என்று ஒரு ரிஷி இருந்தார். அவரின் மனைவி துஷிதெ. அவர்களின் மூத்த மகன் ரோசனன். அவனே அந்த மன்வந்தரத்தில் இந்திரனாக இருந்தான். இதற்கு முன்னர் சங்கர்ஷண - ஜயாதேவியரிடம் பிறந்திருந்த சூத்ர நாமக வாயுதேவரே தற்போது ரோசன என்னும் பெயரில் பிறந்திருக்கிறார் என்று சொல்லப்பட்டிருக்கிறது.

இத்துடன், பாரதத்தில் பாண்டவர் 5 பேரும் 5 மன்வந்தரங்களில் இந்திரர்களாக இருந்தனர் என்றும் சொல்கிறார்கள். மகாபாரத தாத்பர்ய நிர்ணய 18ம் அத்தியாயத்தில், ஸ்லோகம் #142:

உத்பபர்ஹ கிரிந்தந்துததர்ஷாத்ரச தாம் ஸுராம்
பூர்வேந்த்ராம் மாருதவ்ருஷனாஸத்யாம்ஸ்ச துரஸ்திதாம் ||
மானுஷேஷ்வவதாராய மந்த்ரம் ரஹஸிகுர்வத: ||

ருத்ரதேவரின் சாபத்தினால் தேவேந்திரன், அவர் கூறிய மலையின் வாயிலை மூடியிருந்த கல்லை எடுத்தான். அந்த குகையில் முந்தைய மன்வந்தரத்தில் இந்திரனாக இருந்த வாயுதேவர், யமதர்ம, நாஸத்யதஸ்ர என்னும் அஸ்வினி

தேவதைகள் இருவர் - இந்த நான்கு தேவதைகளும் பூமியில் அவதாரம் செய்யும் விஷயத்தைப் பற்றி பேசிக் கொண்டிருந்ததைக் கண்டார் என்று சொல்லப்பட்டிருக்கிறது. இந்த வாக்கியத்தால் வாயுதேவர், இந்திரனாக இருந்தார் என்பது உறுதியாயிற்று.

ஆனால் பாகவத 8ம் ஸ்கந்தம் 1ம் அத்தியாயத்தில்:
ஸ்வாரோசிஷோத்விதீயஸ்து மனுரக்னேஸ்ஸுதோபவத் |
தத்ரேந்த்ரோ ரோசனஸ்த்வாஸீத் தேவாஸ்ச துஷிதாதய: ||20
ருஷேஸ்து ஸஸ்துஷிதானாம பத்ன்யபூத் ||
தஸ்யாஞ்சக்ஞே ததோ தேவோவிபுரித்யபிவிஸ்ருத: ||21

ஸ்வோரோசிஷ என்னும் அக்னி குமாரனே இரண்டாம் மனு. அப்போது ரோசனன் இந்திரனாக இருந்தார். தேவதைகள் என்றால் துஷித முதலானவர்கள். வேதஷிரஸ் என்னும் ரிஷிக்கு துஷித என்னும் மனைவி இருந்தாள். அவர்களிடம் ஸ்ரீபரமாத்மன் விபு என்னும் பெயரில் அவதரித்தான் என்று கூறப்பட்டுள்ளது.

விஷ்ணு ரஹஸ்யத்தில் ரோசனன், வேதஷிரஸ் என்னும் ரிஷிகளிடம், துஷிதை மூலமாக பிறந்தார் என்று சொல்லப்பட்டிருக்கிறது. பாகவதத்தில், ரோசனனின் பெற்றோர் பெயரை சொல்லாமல், விபு நாமக பரமாத்மனுக்கு, வேதஷிரஸ்ஸே தந்தை என்றும் துஷிதையே தாய் என்று சொல்லியிருக்கின்றனர். இதனால், விஷ்ணு ரஹஸ்யத்திற்கும், பாகவதத்திற்கும் விரோதம் வருகிறது என்றால், விஷ்ணு ரஹஸ்யத்தின் வாக்கியம் மூலமாக இந்த விரோதம் தீர்கிறது. அது எப்படியெனில்: 27ம் அத்தியாயம் 3ம் ஸ்லோகத்தில்:

தஸ்மாதனந்தரஞ்சாஹமவதீர்ணோ விபு: ஸ்வயம் ||
உபேந்திர இதி தேனாஹம் விஸ்ருதோ விதுஷாம் முகே ||3

வேதஷிரஸ் என்னும் ரிஷி மற்றும் துஷித இவர்களின் மூத்த மகன் ரோசனன். அவன் பிறந்தபிறகு, நான் விபு என்னும் பெயரில் அவளிடம் அவதரிக்கிறேன். ஆகையால், என்னை உபேந்திரன் என்று அழைப்பார்கள், என்று ஸ்ரீபரமாத்மன் பிரம்மதேவரிடம் கூறினார்.

இந்த வாக்கியத்தால், வேதஷிரஸ் ரிஷியின் மூத்த மகன் விரோசனன், இரண்டாம் மகன் விபு நாமக பரமாத்மன் என்று தெரிகிறதால், பாகவத, விஷ்ணு ரஹஸ்யத்தின் விரோதம் சரியாயிற்று என்று அறியவேண்டும்.

விமுக்திக என்றால், முக்தியைக் கொடுப்பவன் என்று பொருள். 'விஷ்ணுர்ஹி தாதா மோக்ஷஸ்ய வாயுஸ்து ததனுக்ஞயா' -- என்னும் நிர்ணய வாக்கியத்தின்படி, மோட்சத்தைக் கொடுப்பவன் பரமாத்மனே ஆனாலும், பகவந்தனின் ஆணைப்படி, வாயுதேவர் முக்தியைக் கொடுக்கிறார். ஆகையால், தாசராயர், விமுக்திக என்று கூறினார். ஷுசி ஸத்வாத்மக ஷரீர என்பதற்கு 'விஷுத்த ஸத்வம் ப்ரம்ஹாக்யம்' - சுத்தமான ஸத்வ ஸ்வரூபம் பிரம்மதேவருடையது என்று பாகவத 10ம் ஸ்கந்த தாத்பர்யத்தில் சொல்லியிருப்பதே ஆதாரம்.

அம்ருத = போஜனத்திற்கு அமரும் நேரத்தில் 'அம்ருத உபஸ்தரணமஸி ஸ்வாஹா' என்றும், எழும்போது 'அம்ருதாபிதானமஸி' என்று சொல்லும் மந்திரமே இதற்கு ஆதாரம். 'ஹே அம்ருதனே. அம்ருத ரூபியான வாயுதேவனே. நான் உண்ணும் அன்னத்திற்கு உறையாக இரு என்று சொல்வதே அந்த மந்திரத்தின் அர்த்தம். அடுத்த மந்திரம் - ஹே அம்ருதனே. நான் உண்ட அன்னத்திற்கு பாதுகாப்பாக இரு என்பதே அர்த்தம். இதிலிருந்து வாயுதேவரின் பெயரே அம்ருத என்பது தெளிவாயிற்று.

ஆகணாஷ்மஸம = இதற்கு ஆதாரம், பாகவத 11ம் ஸ்கந்த ஸ்லோகமே ஆதாரம். ப்ராணஸ்ய நாஸுராவேஷோ ஆகணாஷ்மஸமோஹிஸ: -- பிராணதேவருக்கு மட்டுமே அசுராவேஷம் இல்லை. பகவத் ஸ்வரூபத்தை வெளிப்படுத்தும் விஷயத்தில், உரைகல் எப்படி இருக்கிறதோ அப்படி வாயுதேவர் இருக்கிறார் என்கிறார். அதே அர்த்தத்தையே தாசார்யர் இங்கு சொல்லியிருப்பதாக அறியவேண்டும்.

**மாதரிஷ்வ ப்3ரம்ஹரு ஜக3**
**ந்மாதெக3த4மாதீ4ன ரெனிபரு**
**ஶ்ரீதருணி வல்லப4னு ஈர்வரொளாவ காலத3லி |**
**நீதப4க்தி ஞான ப3ல ரூ**
**பாதி ஷயதி3ந்தி3த்3து3 சேதன**
**சேதனக3ளொளு வ்யாப்தனெனிஸுவ தத்ததா3ஹ்வயதி3 ||8**

மாதரிஷ்வபிரம்மரு = வாயுதேவர், பிரம்மதேவர்
ஜகன்மாதெகெ = உலகத்திற்கே தாயான லட்சுமிதேவியருக்கு
அதம = கோடி குணங்களால் குறைவானவர்
அதீனரு = அவளின் அதீனத்தில் இருப்பதாக
எனிபரு = பெயர் பெற்றிருக்கிறார்
ஶ்ரீதருணிவல்லபனு = லட்சுமிதேவியர் என்னும் தருணியருக்கு பதியான ஶ்ரீபரமாத்மன்
ஆவகாலதலி = அனைத்து காலங்களிலும்
ஈர்வரொளகெ = இந்த இருவரான பிரம்ம வாயுகளில்
நீத = நிரந்தரமான
பக்தி, ஞான, பல ரூபாதிஷயதிந்த = பக்தி ஞான பல ரூபாதிகளால்
இத்து = இருந்து
சேதன = நர, பசு, பறவைகள் ஆகியவற்றில்
அசேதனகளொளு = ஜடமான மலை, நீர் ஆகியவற்றில்
தத்ததாஹ்வயதி = அந்தந்த பெயர்களில்
வ்யாப்தரு = இந்த பிரம்ம வாயுகள் இருவரும் நிலைத்திருக்கின்றனர்.
எனிஸுவ = என்று உலகத்தில் இவர்கள் பெயர் பெற்றிருக்கின்றனர்.

முந்தைய பத்யத்தில் கூறிய பிரம்ம வாயுகள் இருவரும், லட்சுமிதேவியரைவிட கோடி குணங்கள் குறைவானவர்கள். அவரின் அதீனத்திலேயே இருப்பவர்கள். லட்சுமிபதியான ஸ்ரீபரமாத்மன் அனைத்து காலங்களிலும் ஒரே மாதிரியான ஞான பக்தி பலங்களில், ருத்ராதி அனைத்து தேவதைகளைவிட அதிகமான பக்தி ஞான பலரூபத்தினால் இவர்கள் இருவரும் இருந்து, சேதன அசேதனாத்மகமான இந்த பிரபஞ்சத்தில், அனைத்து இடங்களிலும் அந்தந்த பெயர்களில் நிலைத்திருந்து, இவர்கள் இருவரும் பரமாத்மனைப் போல அனைத்து இடங்களிலும் இருப்பவர்கள் என்ற பெயரைப் பெற்றுத் தருகிறான்.

ஸம்பூர்ணா னுக்ரஹாத் விஷ்ணோ: வாயு: பூர்ணகுணாத்மக: | - என்னும் 11ம் ஸ்கந்த தாத்பர்யத்திற்கேற்ப பரமாத்மனின் சம்பூர்ண அனுக்கிரகத்தின்படியே, இவர்கள் இருவரும் வியாப்த முதலான சம்பூர்ண குணங்களைப் பெற்றிருக்கின்றனர் என்பது கருத்து.

**சரஸவதி வேதா$^{3}$த்மிகா பு$^{4}$ஜி**
**நரஹரி கு$^{3}$ருப$^{4}$க்தி பி$^{3}$ராம்ஹி**
**பரம ஸுக$^{2}$ப$^{3}$லபூர்ணெ ஸ்ரத்$^{3}$தா$^{4}$ ப்ரீதி கா$^{3}$யத்ரி |**
**க$^{3}$ருட$^{3}$ ஸேஷர ஜனனி ஸ்ரீஸ**
**ங்கருஷண ஜயாதனுஜெ வாணி**
**கரண நிய்யாமிகெ சதுர்த$^{3}$ஷ பு$^{4}$வன ஸன்மான்யே ||9**

சரஸ்வதி வேதாத்மிகா = அனைத்து வேதங்களுக்கும் அபிமானியான
புஜெ = அனைத்து போகங்களையும் பகவத் ப்ரீதியாகட்டும் என்று உண்பவர்கள்
நரஹரி = நரசிம்ம என்னும் பெயரால் அவதரித்த ஸ்ரீபரமாத்மன்
குரு = பதியான பிரம்மதேவரிடமும்
பக்தி = பக்தி உள்ளவர்
பிராம்ஹி = பிரம்ம பத்னி ஆனவர்
பரம சுக பலபூர்ண = பரமானந்த, பல ஆகியவற்றால் பூர்ணமானவர்
ஸ்ரத்தா = பிரத்யும்ன - க்ருதியிடம் பிறந்த ரூபம்
காயத்ரி = சரஸ்வதி தேவியின் மற்றொரு ரூபம். பிரம்மதேவருக்கு மிகவும் பிடித்த ஸாவித்ரி என்னும் ரூபம்
கருட சேஷர ஜனனி = சரஸ்வதி பாரதி என்னும் இருவரின் பெயர்களைக் கொண்ட ப்ரக்ருதி, ஸ்ரத்தா என்பவர்களிடம், கருட சேஷர்கள் பிறந்தனர். ஆகையால், இவர் கருட சேஷரின் தாய் எனப்படுகிறார்.
ஸ்ரீசங்கருஷண ஜயாதனுஜெ வாணி = சங்கர்ஷண நாமக பரமாத்மனிடம் ஜயாதேவியிடம் பிறந்த ஸூத்ர நாமக வாயுதேவருக்கு வாக்யரூபமாக இருக்கிறார்.
கரண நியாமக = ஞானேந்திரிய கர்மேந்திரிய மனஸ் முதலான இந்திரிய பதிகளான தேவதைகளுக்கு ப்ரேரகர் (வழிநடத்துபவர்).
சதுரதஷ புவனசன்மான்யே = 14 உலகங்களிலும் இருக்கும் அனைத்து மக்களைவிடவும் அதிக மரியாதையைப் பெற்றிருப்பவர் (அனைவராலும் வணங்கப்படுபவர்).

அனைத்து வேதங்களுக்கும் அபிமானியானதால், சரஸ்வதிதேவிக்கு வேதாத்மிகா என்று பெயர். கருட புராண, பிரம்ம காண்டத்தின் 'ஸர்வவேதாபிமானி த்வாத்ஸர்வ வேதாத்மிகா ஸ்ம்ருதா' என்னும் வாக்கியமே இதற்கு ஆதாரம். அதே கருட புராணத்தில்:

புஜ்யந்தே ஸர்வ போகாம்ஸ்து விஷ்ணு ப்ரீத்யர்த்த மேவச |
அதஸ்து பாரதீக்ஞேயா புஜிஸம்ஞாககோத்தம ||

ஹே பக்ஷிகளில் சிறந்தவனான கருடனே. அனைத்து போகங்களையும் ஶ்ரீவிஷ்ணுவுக்கே ப்ரீதியாகட்டும் என்று உண்பதால், ஶ்ரீபாரதிதேவிக்கு புஜி என்று பெயர் - என்று சொல்லப்பட்டிருக்கிறது. பதி அந்தர்கத பரமாத்மனைத் தவிர மற்றவர்களை சிந்திக்காமல், பதி அந்தர்கத பரமாத்மனையே திடமான பக்தியால் உபாசனை செய்வதால் நரஹரி குருபக்தி என்று பெயர். பிரம்மனின் மனைவியானதால், பிராம்ஹி என்று பெயர். பூர்ணானந்த ஸ்வருபர், பூர்ண பலம் உள்ளவர், ஆகையால் ஸ்ரத்தா என்று பெயர்.

மகாபாரத தாத்பர்ய நிர்ணய 3ம் அத்தியாயத்தில்:
ப்ரத்யும்ன தஸ்சாதக்ருதௌ ஸ்த்ரீயைத்வே |
ப்ரஜஞ்ஞுதுர்யமளே தத்ரபூர்வா ப்ரதான ஸஞ்ஞா ப்ரக்ருதிர்ஜனித்ரே ||11
ஸ்ரத்தாத்விதீயாத தயோஸ்ச யோகோ பபூவ பும்ஸைவச சூத்ர நாம்னா ||
ஹரேர் நியோகாததஸம்ப்ரஸூதௌ சேஷ:சுபர்ணஸ்ச தயோ ஸஹைவ ||12

க்ருதி - பிரத்யும்னரிடம் இரு பெண் குழந்தையர்கள் (இரட்டையர்கள்) பிறந்தனர். அவற்றில் முதலாமவள், ப்ரதானா என்னும் பெயர் கொண்ட, ஸ்ருஷ்டிக்குக் காரணமான ப்ரக்ருதி. இரண்டாமவள், ஸ்ரத்தாதேவி. இவர்கள் இருவருக்கும் புருஷ நாமக பிரம்மதேவர், ஸூத்ர நாமக வாயுதேவரின் சம்பந்தம் ஆனது. அதாவது, ப்ரதான நாமகரான ப்ரக்ருதிக்கு பிரம்ம தேவர், ஸ்ரத்தாதேவிக்கு வாயுதேவர் பதிகளாயினர். இந்த இரு தம்பதிகளுக்கு, சேஷ, கருடர்கள் பிறந்தனர் என்று சொல்கிறார்.

இப்படி ஸ்ரத்தா என்பது வாயுதேவரின் பத்னியான பாரதிதேவியின் பெயரானாலும், சரஸ்வதிதேவிக்கும் அதே பெயரில் ஸ்ரத்தையைக் கொடுத்தார். இதே ஆதாரத்தின்படி, கருட சேஷர்களின் தாய் என்னும் அர்த்தமும் தெளிவாகிறது. பதிக்கும், உலகத்தில் இருக்கும் அனைவருக்கும் வாக் ரூபமாக ப்ரீதி கொண்டிருப்பதால், இவருக்கு ப்ரீதி என்று பெயர். சரஸ்வதி தேவியருக்கு மூன்று ரூபங்கள் என்று விஷ்ணு புராணத்தில் சொல்லப்பட்டிருக்கிறது. விஷ்ணு ரஹஸ்ய 16ம் அத்தியாயத்தில்:

அதோபசயமாபன்னா ப்ரக்ருதி ஸ்த்ரீவிதாபவத் ||15
ஸத்வாதி குணயோகேன காயத்ரீ ச சரஸ்வதி |
ஸாவித்ரீதி சதாஸ்வேகோ ப்ரம்மாவீர்யமவாஸ்ருஜத் ||16

பிரம்மதேவரின் பத்னியான ப்ரக்ருதி, சத்வ ரஜஸ் தமோ என்னும் மூன்று குணங்களின் பேதத்தினால் மூன்று ரூபங்களை தரித்தார். அந்த ரூபங்களின் பெயர்கள் காயத்ரி, சரஸ்வதி, சாவித்ரி. அந்த மூவரிலும் பிரம்மதேவர் வீர்யா தானம் செய்தார் என்று சொல்லியிருக்கிறார்கள். இந்த ஆதாரத்தின் பேரில், சரஸ்வதி தேவிக்கு காயத்ரி என்று பெயர் என்பது தெளிவாகிறது.

ஸ்ரீசங்கர்ஷணஜயாதனுஜெவாணி என்று ஒரு சொல்லாக படிக்கவேண்டும். ஏனெனில், சரஸ்வதி பாரதி இருவரும் க்ருதி- பிரத்யும்னரிடம் பிறந்தனர் என்பது, நிர்ணய 3ம் அத்தியாயம் 11-12ம் ஸ்லோகங்களிலிருந்து தெளிவாகிறது. இதே ஹரிகதாம்ருதசார 1ம் சந்தியில் 'க்ருதிரமண ப்ரத்யும்ன நந்தனே' என்னும் பாரதிதேவியை ஸ்தோத்திரம் செய்திருக்கிறார். சரஸ்வதி பாரதிதேவி இருவரும் 'ப்ரத்யும்னதஸ்சாத க்ருதௌ ஸ்த்ரியௌத்வே' என்னும் ஸ்லோகத்தினால், இரட்டையர்களாக பிறந்தவர்கள் என்று சொல்லியிருக்கின்றனர்.

இப்படியே ஸ்ரீமதாசார்யரும், தாசார்யரும் சொல்லியிருப்பதாலும், சங்கர்ஷண-ஜயாதேவியிடம் பிறந்தார் என்பதற்கு ஆதாரம் இல்லை என்பதாலும், சரஸ்வதிதேவி, சங்கர்ஷணஜயாதனுஜெ என்று சொல்வதற்கு சாத்தியமில்லை. வாசுதேவ - மாயாதேவியிடம், புருஷ நாமக பிரம்ம தேவர், சங்கர்ஷண - ஜயாதேவியிடம், சூத்ர நாமக வாயுதேவர் பிறந்தனர் என்பது நிர்ணயத்தால் தெளிவாகிறது. ஆகையால் 'ஸ்ரீசங்கர்ஷண ஜயாதனுஜவாணி' என்று ஒரே சொல்லாக சொல்லி சங்கர்ஷண- ஜயாதேவியிடம் பிறந்த வாயுதேவருக்கு, வாணி என்றால் வாக் ரூபமானவள் என்று அர்த்தம் சொல்ல வேண்டியதாயிற்று.

வேதங்கள் வாயுதேவரின் முகத்திலிருந்து தொடர்ச்சியாக பரமாத்மனைப் புகழும் விதமாக வந்து கொண்டிருக்கின்றன. சரஸ்வதி, வேதாத்மிகளாகையால், வேத ஸ்வரூபளாக வாயுதேவரின் முகத்திலிருந்து வெளிவந்து கொண்டிருக்கிறாள் என்பது கருத்து. 'கீர்வாக்வாணி சரஸ்வதி' என்னும் அமரகோசத்தின்படி, வாக்கியத்திற்கும் வாணி என்னும் பெயர் உள்ளது. வாயுதேவரின் முகத்தினால் வேதங்கள் வெளிவருகின்றன என்னும் விஷயத்தில், பாகவத 10ம் ஸ்கந்த வேணுகீதையில் 'வனசரோ கிரிதடேஷு சரந்தீர்வேணுனாஹ்வ யதிகா: ஸயதாஹி' என்னும் ஸ்லோகத்திற்கு விஜயத்வஜீய வியாக்யானத்தில், கோபாலகிருஷ்ணனை வைத்து ஒரு அர்த்தமும், மூலரூபியான நாராயணனை வைத்து ஒரு அர்த்தமும் சொல்லியிருக்கிறார். நாராயணனைக் குறித்து சொல்லப்பட்ட வியாக்யானம் இவ்வாறு உள்ளது.

வனசர வனே ஜலே சரணம் ஷயனம் ஜலஷயனைத்யர்த்த: |
கிரிதடேஷு சரந்தீ: வாயோ: கிரிதடத்விஸ்ம்ருயமான:
ஜலஷயன: ஆதிபுருஷ: வாயுமுகேவர்த்தமானஸ்ருதீ:
ததர்த்தகதன பூர்வக முபதிஷ்தி || 8

வனம்பாஸ்யபுஸ்கானனே என்னும் கோஷத்தின் ஆதாரத்தில், நெருப்புக்கும், தண்ணீருக்கும், காட்டிற்கும், 'வனம்' என்றே பெயர் உண்டு. இங்கு வனசர என்றால்,

பாற்கடலில் படுத்திருப்பவன் என்று பொருள். இத்தகைய ஆதிபுருஷன், தன் பக்தர்களான சனகாதிகளால் வணங்கப்பட்டு, வாயுதேவரின் முகத்திலிருந்து வெளிப்படும் ஸ்ருதி வாக்கியங்களை, தன்னருகில் அழைத்து, அதன் அர்த்தங்களை சனகாதிகளுக்கு உபதேசம் செய்கிறான் என்று அர்த்தம் செய்திருக்கிறார். இந்த ஆதாரத்தின்படியே, வாயுதேவரின் முகத்திலிருந்து, சரஸ்வதிதேவி, ஸ்ருதி ரூபத்தினால் வெளிப்படுகிறாள் என்னும் அர்த்தத்தையும் சொல்லலாம். அதாவது, ஆசார்யரின் வாக்கியத்திற்கும் தாசராயரின் வாக்கியத்திற்கும் பரஸ்பரம் விரோதம் இல்லை என்று அறியலாம்.

**காளி காஷிஜெ விப்ரஜா பா**
**ஞ்சாலி ஷிவகன்யேந்த்[3]ர ஸேனா**
**காலமானி சந்த்[3]ர த்[3]யுஸபா[3] நாம பா[4]ரதிகெ[3] ।**
**காளி பி[3]ரம்மர யுவதியரு ஏ**
**ளேளு ஐவத்தொந்து[3] கு[3]ணதி[3]ம்**
**கீளரெனிபரு தம்ம பதிக[3]ளிகி[3]ந்த ஆவாக[3] ||10**

காஷிஜா = காசிராஜனின் மகளான
காளி = பீமசேனரின் மனைவியான காளி, சாட்சாத் பாரதி தேவியரின் அவதாரம்
பாஞ்சாலி = த்ருபத ராஜனின் மகளான த்ரௌபதி
சசி, ஷாமளா, உஷா, பார்வதி ஆகியோருடன் கூடி அவதரித்த பாரதிதேவி
ஷிவகன்யா = சிவ என்னும் பிராமணரிடம் அவதரித்த சசி ஆகியோருடன் இருக்கும் பாரதிரூபம்
இந்த்ரஸேனா = நள ராஜனின் மகளாக பிறந்த சசி ஆகியோருடன் கூடிய ரூபம்
காலமானி = காலாபிமானி
சந்திரா = சங்கர என்னும் பிராமணனின் வீட்டில் பிறந்த சசி ஆகியோருடன் கூடிய ரூபம்
வித்யுன்னாம = அந்தரிக்ஷத்திற்கும் திக்குகளுக்கும் அபிமானியரான பாரதிதேவியரின் பெயர்
இந்த ரூப நாமங்களால் கூடியவர் பாரதிதேவி என்று பொருள்.
காளி பிரம்மர யுவதியரு = வாயுதேவர் மற்றும் பிரம்மதேவர் இவர்களின் பத்னியரான பாரதி சரஸ்வதியர்கள்
ஏளேளு ஐவத்தொந்து குணதிம் = 49 மற்றும் 51, மொத்தம் 100 குணங்களால்
ஆவாக = எப்போதும்
தம்மபதிகளிந்த = வாயு, பிரம்மர்களைவிட
கீளரெனிபரு = குறைவானவர்கள்.

பாரதிதேவி, பீமசேனதேவரின் மனைவியாக ஆவதற்காக, காசிராஜனின் மகளாக காளி என்னும் பெயரில் பிறந்தார். மகாபாரத தாத்பர்ய நிர்ணய 20 அத்தியாயத்தில்:

க்ருஷ்ணாஸ்யைவாப்யன்ய ரூபேணஜாதா காஷீஷபுத்ரீம் யாம்ப்ரவதந்திகாளீம் ||
ஸாகேவலா பாரதீ நான்யதேவ்யஸ்தத்ரா விஷ்டாஸ்தத்யைதே காஷிராஜ: ||13

ஸ்வயம்வரார்த்தம் ந்ருபதீனாஜுஹாவ ஸர்வாம் ஸ்தேபிஹ்யத்ர ஹர்ஷாத்ஸமேதா: ||
தேஷாம் மத்யே பீமஸேனாம் ஸஏஷா மாலா மாதாத்தத்ர ஜராஸுதாத்யா: ||14
இத்யாதி.

இதே த்ரௌபதிதேவியே, காசிராஜனின் மகளாக பிறந்தார். அவள் பெயர் காளி. ஆனால் இவள் சசி முதலான தேவிகளால் கூடிய ரூபம் இல்லை. வெறும் பாரதி அவதாரமே ஆகும். காசிராஜன் இவளின் ஸ்வயம்வரத்திற்காக ராஜர்களை அழைத்திருந்தான். அனைவரும் மகிழ்ச்சியுடன் காசிராஜனின் பட்டணத்திற்கு வந்திருந்தனர். அந்த ராஜர்களின் நடுவில் இருந்த பீமசேனதேவரின் கழுத்தில், காளி மாலையை அணிவித்தாள். அதைக்கண்டு பொறுக்காத ஜராசந்தாதி அரசர்கள், பீமசேனதேவருடன் போருக்கு வரத் தயாராயினர். அவர்களை பீமசேனதேவர் வென்று, காசிராஜனால் பூஜிக்கப்பட்டு, காளியை திருமணம் புரிந்து கொண்டு, இந்திரபிரஸ்தத்தை அடைந்தார்.

இதுவே இந்த பத்யத்தில் சொல்லப்பட்டிருக்கும் காளி அவதாரம். திரௌபதி, ஷிவகன்யா, இந்திரஸேன, சந்திரா இந்த அவதாரங்கள், இந்திரனின் மனைவியான சசி, யமதேவரின் மனைவியான ஷாமளா, அஸ்வினி தேவதைகளின் மனைவி உஷா, ருத்ரதேவரின் மனைவியான பார்வதி இந்த நால்வருடன் சேர்ந்த, பாரதிதேவியின் அவதாரம் ஆகும். இப்படி நான்கு பேருடன் சேர்ந்து அவதரிக்க என்ன காரணம் என்றால், மகாபாரத தாத்பர்ய நிர்ணய 18ம் அத்தியாயத்தில்:

அன்வேனம் பாரதீஸாக்ஷாத் வேதிமத்யாத் ஸமுத்திதா |
ப்ராணோஹி பரதோ நாமஸர்வஸ்ய பரணாச்ஸ்ருத: ||103
தத்பார்யா பாரதீனாம வேதரூபா சரஸ்வதி |
ஆவேஷயுக்தா ஷச்யாஸ்ச ஷாமளாயாஸ்ததோஷ ஸ: |
தாஸ்வேந்த்ர தர்மனாஸத்ய ஸம்ஸ்ரயாஸ்ரய ஈரிதா: ||105
ஸாக்ருஷ்ணா நாமதஸ்சாஸீ துத்க்ருஷ்டத்வாத்தியோஷிதாம் ||
...
உமாம்ஷயுக்தாதி தராம் ஸர்வலக்ஷண சம்யுதா |
பூர்வம்ஹ்யுமாசதேவ்யஸ்தா: கதாசித் பர்த்ருபிர்யுதா: ||108
விலாஸந்தர்ஷயாமாஸுர் பிரம்மண: பஷ்யதோதிகம் |
ஷஷாப தாஸ்ததா ப்ரம்மாமானுஷீம் யோனிமாப்ஸ்யத ||109
தத்ரான்யகாஸ்ச பவதேத்யேவம் ஷப்தா: ஸுராங்கனா: ||
விசார்ய பாரதீ மேத்ய ஸர்வமஸ்யை நிவேத்யச ||110
சஹஸ்ர வத்ஸரம் சைனாம் ஷுஷ்ருஷித்வாபபாஷிரெ |
தேவினோ மானுஷம் ப்ராப்யமன்யகாத்வஞ்ச சர்வதா ||111
தத்ராபி மாருதாதன்யம் ந ஸ்ப்ருஷேமகதாசன |
ப்ரம்மண்யைவச ஷப்தாஸ்ம: பூர்வம்ஜான்யத்ர லீலயா ||112
ஏக தேஹத்ர மாப்யேனம் யதாவஞ்சயிதும் கதா: |
ஏகதேஹா மானுஷத்வமாப்ஸ்யைதத்ரிஷ உத்ததா: ||113
த்ரிஷோ மத்யஞ்சனாயேதா இதிதேனோதிதாவயம் |

அதஸ்த்வயைக தேஹத்வ மிச்சாமோதேவிஜன்மஸு ||114
சதுர்ஷ்டபியதோன்மாகம் ஷாபத்வயனிமித்தத: |
சதுர்ஜன்ம பவேத்பூமௌ த்வாம் நான்யே மாருதாத்ப்ரஜேத் ||115
இத்யாதி...

த்ருபத ராஜன் யாகம் செய்யும்போது, அக்னி குண்டத்திலிருந்து த்ருஷ்டத்யும்னன் தோன்றியபிறகு, அதே குண்டத்திலிருந்து சாட்சாத் பாரதிதேவி வெளிவந்தார். அனைவரையும் காப்பதால், வாயுதேவருக்கு பரத என்று பெயர். அவரின் மனைவியானதால், இவருக்கு பாரதி என்று பெயர் வந்தது. இவர் வேத ரூபத்தைக் கொண்டிருப்பதால், சரஸ்வதி என்றும் இவருக்கு பெயர் உண்டு. த்ருபத ராஜனின் மகளாக வந்ததால், திரௌபதி என்று அழைக்கப்பட்டார். இவரில், சசி, ஷாமளா, உஷா ஆகியோரின் ஆவேசமும் இருக்கிறது. இவர்கள் மூவரும் இந்திரன், யமன், அஸ்வினி தேவதைகள் - ஆகியோரின் பத்னியர் ஆகையால், ஸ்ரீ என்னும் பெயரும் இவருக்கு வந்தது. பெண்களில் அதிக ரூபம் கொண்டவராகையாலும், கிருஷ்ண வர்ணத்தை பெற்றிருந்ததாலும், கிருஷ்ணை என்ற பெயரும் இவருக்கு உண்டு.

இவர் பிறந்தபோதே, சர்வக்ஞராகவும், சர்வாபரண பூஷிதராகவும், எப்போதும் முதுமையைப் பெறாமல், இளமையுடனேயே இருந்தார். சச்யாதிகளைவிட பார்வதி அம்சம் அதிகமாக இருந்தது. சர்வ லட்சணங்களும் பொருந்தியவளாக இருந்தாள். பார்வதி ஆகியோருடன் கூடி, பாரதி தேவி அவதரித்ததற்கு என்ன காரணம் என்றால்: முன்னர் ஒரு நாள், பிரம்மதேவர் அருகில் இருந்தபோது, பார்வதி, சசி, ஷாமளா, உஷா ஆகிய நால்வரும் தத்தம் பதிகளுடன் அதிக மோகம் கொண்டனர். கோபம் கொண்ட பிரம்மதேவர், இவர்கள் நால்வருக்கும் 'நீங்கள் நால்வரும் மனிதர்களாகப் பிறந்து, பிற புருஷனின் சம்பந்தத்தைப் பெறுவீர்கள்' என்று சாபம் கொடுத்தார்.

பிறகு இந்த நால்வரும் சிந்தித்து, பாரதிதேவியரைக் குறித்து ஆயிரம் ஆண்டுகள் தவம் புரிந்து, அவர் மகிழ்ந்த பிறகு, தங்களின் சாபத்தைப் பற்றி அவருக்குத் தெரிவித்து, இப்படியாக வேண்டிக்கொண்டனர். 'தேவி, நாங்கள் நால்வரும் மனிதர்களாகப் பிறந்து, அந்தப் பிறவியில் பிற புருஷனின் சம்பந்தத்தைப் பெறவேண்டும் என்பது பிரம்மதேவரின் சாபம். இது மட்டுமே சாபமல்ல. இதற்கு முன்னரும் ஒரு நாள், நாங்கள் நால்வரும் ஒரே தேகத்தில் சேர்ந்து, பிரம்மனை வஞ்சிக்கச் சென்றிருந்தோம். அப்போதும் கோபம் கொண்ட பிரம்மதேவரின் 'நீங்கள் நால்வரும் மூன்று முறை, ஒரே தேகத்தில் பிறந்து, பிற புருஷனின் சம்பந்தத்தைப் பெறுங்கள்' என்று சாபம் கொடுத்திருந்தார். நாங்கள் பிற புருஷர்களின் சம்பந்தம் கொள்ளவேண்டுமெனில், எங்கள் பதிகளைவிட உத்தமமானவர்கள் இருந்தால் பாதகம் இல்லை. ஆகையால், வாயுதேவரைத் தவிர இன்னொருவரை நாங்கள் தொடமாட்டோம். நீங்கள் எங்களுடன் சேராவிடில், வாயுதேவரின் சம்பந்தம் கிடைக்காது. நாங்கள் இரு சாபங்களால், நான்கு பிறவிகளில் பிறக்கவேண்டியிருக்கிறது. ஆகையால், எங்களுடன் நீயும் பிறவி எடுத்தால், எங்களுக்கும் & உனக்கும் வாயுதேவரைத் தவிர வேறு சம்பந்தம்

கிடைக்காது. ஆகையால், நீயும் எங்களுடன் சேர்ந்து, நான்கு பிறவிகளில் மனிதர்களாக பிறக்க வேண்டும்' என்று கேட்டுக்கொண்டனர்.

பாரதிதேவியும் அப்படியே ஆகட்டும் என்று வாக்களித்தார். முதலில் சிவ என்னும் பிராமணனின் மகளாக, சிவகன்யா என்ற பெயரில் பிறந்து, பார்வதாதி நான்கு பேரும் ருத்ரதேவரைக் குறித்து தவம் செய்ய, ஒரே தேகத்தில் இவர்கள் இருப்பதால், இவர்களின் செயல்களும் ஒரே மாதிரியாகவே இருக்கவேண்டுமாகையால், பாரதிதேவி காம்யத்தை விரும்பாதவராக இருப்பதாலும், ருத்ரதேவரின் அந்தர்யாமியான பகவந்தனைக் குறித்து தவம் செய்தனர். தத்தம் பதிகளை இவர்கள் சேரவேண்டும் என்பதே இவர்களின் குறிக்கோளாக இருந்தது. அப்போது பார்வத்யாதி நால்வருக்கு ருத்ர தேவரும், பாரதி தேவியருக்கு ருத்ராந்தர்கத ஹரியும், அடுத்தடுத்த பிறவிகளில் பதி சம்பந்தமாகும் வரத்தைக் கொடுத்தார்.

முதல் பிறவியான சிவகன்யா, கன்யா பருவத்திலேயே மரணம் அடைந்தாள்.

இரண்டாம் பிறவியில், பார்வத்யாதி நால்வரும், பாரதிதேவியருடன் சேர்ந்து, நளராஜனின் மகளாக இந்திரசேனை என்னும் பெயரில் அவதரித்தனர். அப்போது முத்கல என்னும் ரிஷி தவம் செய்துகொண்டிருந்தார். ஒரு நாள் இந்த ரிஷி புராணம் கேட்டுக்கொண்டிருந்தபோது, பிரம்மதேவர் தன் மகளை மணம் செய்ய விரும்பினார் என்ற கதையைக் கேட்டு, பிரம்மதேவரை கேலி பேசினார். 'நீ அதோகதியைப் பெறுவதற்காக பாரத்யாதேவியரின் சங்கத்தை அடைவாய்' என்று பிரம்மன் சாபம் கொடுத்தார். அதைக்கேட்டு பயந்த முத்கலன், பிரம்மனைக் குறித்து தவம் புரிந்தான்.

அப்போது தரிசனம் அளித்த பிரம்மதேவர் 'ஹே முத்கலனே. நீ சாட்சாத்தாக அந்த தேவியரின் சம்பந்தத்தைப் பெறுவதில்லை. உன் சரீரத்தில் வாயுதேவர் நிலைத்திருந்து, அந்த தேவியரை அடைவார். அந்த சமயத்தில் நீ மயக்கமாக இருப்பாய். ஆகையால், உனக்கு அந்த தோஷம் வருவதில்லை' என்று சொல்லி அருளினார். ஆகையால், வாயுதேவர் முத்கலனில் இருந்து, இந்திரசேனையை திருமணம் புரிந்துகொண்டார். சில காலம் கழித்து, முத்கலனுக்கு மயக்கம் தெளிவித்து, வாயுதேவர் அங்கிருந்து புறப்பட்டார். இந்திரசேனையும் அந்த தேகத்தை விட்டுப் புறப்பட்டாள்.

அடுத்த பிறவியில், த்ருபத ராஜனின் மகளாகப் பிறந்தாள்.

பிறகு, வாயுதேவர் மத்வாசார்யராக பிறந்த காலத்தில், திரௌபதி, சங்கர என்னும் பிராமணனின் வீட்டில், சந்த்ரா என்னும் பெயரில் பிறந்து, கன்யாவஸ்தையிலேயே மரணமடைந்தாள்.

ஆக, சசி முதலானவர்களுடன் சேர்ந்து பாரதிதேவி அவதரித்தது நான்கு முறை என்று அறியவேண்டும். ஹனுமத் அவதார காலத்தில் சிவகன்யையாக பிறந்திருந்தார். த்ரேதாயுகத்தின் முடிவில் இந்திரசேனையின் ஜனனம். பீமசேன

அவதாரத்தில் திரௌபதி, மத்வாவதாரத்தில் சந்திரா என 4 அவதாரங்களின் காலத்தை கருட புராணத்தில் சொல்லியிருக்கின்றனர். அந்த பாரதிதேவியரே காலாபிமானி ஆனவர். வித்யுத் என்பது பாரதி தேவியரின் மற்றொரு பெயர். இந்த சரஸ்வதி பாரதியர், தத்தம் பதிகளைவிட 100 குணங்களால் குறைந்தவர்கள் என்று அறியவேண்டும்.

**ஹரிஸமீராவேஷனர ஸ**
**ங்கருஷணா வேஷயுத லக்ஷ்மண**
**பரமபுருஷன ஷுக்ல கேஷாவேஷ ப$^3$லராம |**
**ஹர ஸதா$^3$ஷிவ தப அஹங்க்ருது**
**மருதயுக்த ஷுகோர்த்$^4$வ பட த**
**த்புருஷ ஜயகீ$^3$ஷௌர்வ த்$^3$ரௌணி வ்யாத$^4$ தூ$^3$ர்வாஸ ||11**

ஹரிஸமீராவேஷனர = பரமாத்ம மற்றும் வாயுதேவர் இவர்கள் இருவரின் ஆவேசத்தைக் கொண்ட சேஷதேவரின் அவதாரமே, நர நாராயணர்களில் நர ரூபம்.
சங்கர்ஷணா வேஷயுத லக்ஷ்மண = சங்கர்ஷண நாமக பரமாத்மனின் அம்சத்தைக் கொண்ட சேஷதேவரின் அவதாரம் லட்சுமண ரூபம்.
பரமபுருஷன சுக்லக்லேஷாவேஷ பலராம = பரமாத்மனின் சுக்ல கேஷாவேஷத்தினால் ஆன சேஷதேவரின் அவதாரமே பலராம ரூபம்.
ஹர = நினைத்த மாத்திரத்திலேயே அனைத்து பாவங்களையும் பரிகரிப்பதால், ருத்ரதேவருக்கு ஹர என்று பெயர்.
தப: = 10 கல்பங்கள், உப்புக் கடலில் தவம் செய்ததால், ருத்ரதேவருக்கு தப: என்று பெயர்.
அஹங்க்ருது = அஹங்கார தத்வத்திற்கு அபிமானியானதால், அஹங்க்ருது என்று பெயர்.
மருதயுக்த ஷுக = வாயுதேவரின் ஆவேசத்துடன் கூடிய ருத்ராவதாரம் - சுகாசார்யர்.
ஊர்த்வபட = அந்தரிக்ஷத்தையே ஆடையாக அணிந்தவன் என்று பொருள்; அல்லது, 'படகதாவிதிதாதோ: பட' அதாவது, வேகத்திற்குப் பெயர். வானில் பறக்கும் சக்தி உள்ளவன் என்று பொருள்.
தத்புருஷ = பரமாத்மனின் சேவகர்கள் ஆகையால், தத்புருஷ என்றால் அவனின் புருஷன் என்று பொருள்.
ஜைகீஷ = ஜைகீஷ என்று ரிஷிகுலத்தில் அவதரித்து, பலருக்கு தத்வோபதேசம் செய்த ரூபம்.
ஔர்வ = ப்ருகு குலத்தில், துடையிலிருந்து பிறந்த ரிஷிரூபம்.
த்ரௌணி = த்ரோண புத்ரரான அஸ்வத்தாமாசார்யர்
வ்யாத = அர்ஜுனனுடன் போரிட்ட வேட்டைக்கார ரூபம்
தூர்வாஸ = துர்வாச ரிஷிரூபம்

மேற்சொன்ன அனைத்தும் ருத்ரதேவரின் அவதாரங்கள் என்பது கருத்து.

**க$^3$ருட ஸேஷ ஷஷாங்கத$^3$ல ஷே**

**க2ரரு தம்மொளு ஸமரு பா4ரதி**
**ஸரசிஜாஸன பத்னிக3த4மரு நூரு கு3ணதி3ந்த3 ।**
**ஹரிமட3தி3 ஜாம்ப3வதியொளு ஸ்ரீ**
**தருணியாவேஷ விஹுதெ3ந்தி3கு3**
**கொரதெ எனிபரு க3ருட3 ஸேஷரிகை3வரைது3 கு3ண ।।12**

கருடசேஷ ஷஷாங்கதள சேகரரு = கருட, சேஷ, ருத்ர இந்த மூவரும்
தம்மொளு சமரு = பரஸ்பரம் சம குணங்களைக் கொண்டவர்கள்
பாரதி சரசிஜாஸன பத்னிகெ = பாரதி சரஸ்வதி தேவியருக்கு
100 குணதிந்த = 100 குணங்களால்
அதமரு = குறைந்தவர்கள்
ஹரிமடதி = ஸ்ரீகிருஷ்ணனின் மனைவியான
ஜாம்பவதியொளு = ஷண்மஹிஷியரில் (ஜாம்பவதி, மித்ரவிந்தா, நீளா, பத்ர, காளிந்தி, லக்ஷணா) ஒருவரான ஜாம்பவதியில்
எந்திகு = என்றைக்கும்
ஸ்ரீதருணியாவேஷவிஹுது = ஸ்ரீலட்சுமிதேவியரின் ஆவேசம் இருக்கிறது
கருட சேஷரிகெ = கருட சேஷர்களைவிட
கொரதெ எனிபரு = சிறிது குறைவு எனப்படுகிறார்
ஷண்மஹிஷியரில் மற்ற ஐவர்,
ஐது குண = கருட சேஷர்களைவிட ஐந்து குணங்கள் குறைவானவர்கள்.
ஜாம்பவதியிடம் லட்சுமிதேவியின் ஆவேசம் இல்லாத காலங்களில், இந்த ஆறு பேரும் சமம் எனக் கருதவேண்டும்.

கருடதேவருக்கு அவதாரம் இல்லாத காரணத்தால், அவரின் விஷயத்தைப் பற்றி விளக்கவில்லை. கருட சேஷ ருத்ரர் சமமானவர்கள். பதவியின்படி, ருத்ரதேவரைவிட சேஷதேவர் கொஞ்சம் மேலானவர் என்பதை முன்னரே பார்த்தோம். இவர்கள் மூவரும் சரஸ்வதி பாரதியரைவிட 100 குணங்கள் குறைவானவர்கள். ஸ்ரீகிருஷ்ணனின் மனைவியரான ஜாம்பவதி முதலான ஆறு பேர்களும் சமமானவர்கள் ஆனாலும், லட்சுமி தேவியரின் ஆவேச பலத்தினால், ஜாம்பவதி, மற்ற ஐந்து பேர்களைவிட கொஞ்சம் மேலானவர். கருட சேஷர்களைவிட சிறிது குறைவானவர் ஆவார். நீலாதி மற்ற ஐவரும், கருட சேஷாதிகளைவிட ஐந்து குணங்கள் குறைவானவர்கள் ஆவர்.

**நீலப3த்3ர மித்ரவிந்தா3**
**மேலெனிப காளிந்தி3 லக்ஷணெ**
**பா3லெயரிகி3ந்த3த4ம வாருணி ஸௌபரணி கி3ரிஜ ।**
**ஸ்ரீலகுமியுத ரேவதி ஸிரி**
**மூலரூபதி3 பேயளெனிபளு**
**ஷைலஜாத்3யரு தஷகு3ணாத4ம தம்ம பதிக3ளிகெ3 ।।13**

நீலா, பத்ரா, மித்ரவிந்தா,
மேலெனிப = சிறந்தவர்கள் எனப்படும்

காளிந்தி, லக்ஷணா
பாலெயரிகிந்த = ஜாம்பவதி முதலான கிருஷ்ணனின் 6 மனைவியர்களைவிட
வாருணி = சேஷதேவரின் மனைவி
சௌபரணி = கருடனின் மனைவி
கிரிஜ = பார்வதி
இவர்கள் மூவரும்
அதம = குறைவானவர்கள்
அவர்களில், சேஷதேவரின் மனைவியான வாருணிதேவி
ஸ்ரீலகுமியுத = ஸ்ரீலட்சுமிதேவியரின் அம்சத்துடனான
ரேவதி = ரேவதராஜனின் மகளாகையால், ரேவதி என்ற பெயரில் பிறந்து பலராமனுக்கு மனைவியானவள்
இவளுக்கு ஸ்ரீதேவியின் அம்சம் இருப்பதால், ஸ்ரீ என்று பெயர்.
மூலரூபதி = மூலரூபமான வாருணி ரூபத்தினால்
பேயளெனிபளு = குடிக்கத் தகுந்ததான பான ரூபத்தினால், பலராமனை மகிழ்விக்கிறாள்
ஷைலஜாத்யரு = பார்வதி முதலானவர்கள்
தம்ம பதிகளிகெ = தத்தம் கணவர்களுக்கு
தஷகுணாதம = 10 குணங்கள் குறைவானவர்கள்

ஜாம்பவதி முதலானவர்களைவிட வாருணி, சௌபரணி, பார்வதி ஆகிய மூவரும் 5 குணங்கள் குறைவானவர்கள். ரேவதி ராஜனின் மகளான ரேவதியே பலராமனின் மனைவி ஆவார். பலராமனிடம் எப்படி பரமாத்மனின் சுக்லகேஷ ஆவேசம் இருக்கிறதோ, அப்படியே, லட்சுமிதேவியரின் அம்சத்துடன் கூடியது வாருணி ரூபம். இவளுக்கு ஸ்ரீ என்று பெயர் உண்டு. இதே வாருணி, தன் மூல ரூபத்தினால், மத்யபான ரூபமாக, பலராமனை மகிழ்விக்கிறாள். பாகவத 10ம் ஸ்கந்தம், 88ம் அத்தியாயத்தில்:

ராம: க்ஷபாஸு பகவான் கோபீனாம் ரதிமாவஹம் ||
பூர்ணசந்த்ரகராம்ருஷ்டே கௌமுதீ கந்தவாயுனா ||
யமுனோபவனேரேமே ஸேவிதே ஸ்த்ரிகணைர்வ்ருத: |18
வருணப்ரேஷிதா தேவி வாருணி வ்ருக்ஷகோடராத் ||
பதந்தீதத்வனம் சர்வம் ஸௌரபேணாத்யவாஸயத் ||19
தம்கந்தம் மதுதாராயா: கோபிகா வாயுனோபஹ்ருதம்பல: ||
ஆக்ராயோபகதஸ்தத்ர லலனாபி: பபௌஸமம் ||20

இரவு நேரங்களில் பலராமன், கோபிகா ஸ்த்ரியர்களுக்கு மகிழ்ச்சியைக் கொடுத்தவாறு, பூரண சந்திரனின் கிரணங்களுடன் கூடிய, பூக்களின் நறுமணத்துடன் வீசும் காற்றைக் கொண்ட யமுனா நதிக்கரையில், ஸ்த்ரி கணங்களுடன் க்ரீடித்துக் கொண்டிருந்தான். அந்த சமயத்தில், வருணனால் அனுப்பப்பட்ட வாருணி என்னும் சேஷதேவரின் மனைவி, பலராமனுக்கு சேவை செய்வதற்காக, மரக்கிளைகளுக்கு நடுவிலிருந்து, தன் நறுமணத்தை காட்டில் முழுவதுமாக பரப்பினாள். காற்றில் மிதந்து வந்த அந்த காற்றினை சுவாசித்த

பலராமன், பெண்களுடன் அங்கு வந்து, அந்த மதுவை குடித்தான் என்று சொல்லப்பட்டிருக்கிறது.

அதே அபிப்பிராயத்தையே தாசார்யரும், மூல ரூபதி பேயளெனிபளு என்று சொல்லியிருக்கிறார். பார்வதி முதலான இந்த மூவரும், தத்தம் கணவர்களைவிட 10 குணங்கள் குறைவானவர்கள்.

**நரஹரீ ராவேஷ ஸம்யுத**
**நர புரந்த$^{3}$ர கா$^{3}$தி$^{4}$ குஷ ம**
**ந்த$^{3}$ரத்$^{3}$யுமனனு விகுக்ஷி வாலி இந்த்$^{3}$ரனவதார |**
**ப$^{4}$ரத பி$^{3}$ரம்மாவிஷ்ட ஸாம்ப$^{3}$ ஸு**
**த$^{3}$ருஷன பிரத்$^{3}$யும்ன ஸனகா**
**த்$^{3}$யரொளகி$^{3}$ப்ப ஸனத்குமாரனு ஷண்முக$^{2}$னு காம ||14**

நரஹரிய = சேஷ அம்சமும், பரமாத்மனின் அம்சத்தினாலும் கூடியது நர நாராயணர்களில், நர ரூபம் என்று சேஷதேவரின் அவதாரத்தை சொல்லும்போது பார்த்தோம். அந்த நரனின் அம்சத்தினாலும், ஸ்ரீஹரியின் அம்ச விசேஷத்தினாலும் கூடிய இந்திரன், நர = அர்ஜுனன்
புரந்தர = வைவஸ்த மன்வந்தரத்தின் இந்திரனின் பெயர்
காதி = குஷ ராஜனின் மகனான காதிராஜன்
குஷ = ராமதேவரின் மகன் குஷன்
மந்தரத்யும்னனு = சாக்ஷுஷ மன்வந்தரத்தின் இந்திரன்
விகுக்ஷி = இக்ஷ்வாகு ராஜனின் மகன்; வாலி (சுக்ரீவனின் அண்ணன்); இவர்கள் இருவரும் இந்திரனின் அவதாரம்.
பரத = ராமதேவரின் தம்பி
பிரம்மாவிஷ்டஸாம்ப = ஜாம்பவதியின் மகனான சாம்பன், பிரம்மனின் ஆவேசத்தைப் பெற்ற மன்மதன்
சுதர்ஷன = பரமாத்மனின் கையில் இருக்கும் சக்கரம்
ப்ரத்யும்ன = ஸ்ரீகிருஷ்ண ருக்மிணியின் மகன்
ஸனகத்யதொளகிப்ப = சனக, சனந்த, சனத்குமார, சனத்சுஜாத என்னும் பிரம்ம மானஸ புத்ரர்களான நால்வரில் சேர்ந்த
ஸனத்குமாரனு, ஷண்முகனு, காம = இவர்கள் அனைவரும் மன்மதனின் அவதாரங்கள்.

நர அம்சத்தினாலும், பரமாத்மனின் விசேஷமான அம்சத்தினாலும் கூடிய இந்திரனின் அவதாரமே அர்ஜுனன். மகாபாரத தாத்பர்ய நிர்ணய 12ம் அத்தியாயத்தில்:

இதீரிதாஸாஹ்வயதாஷு வாஸவம் தத: ப்ரஜக்ஞே ஸ்வயமேவ ஷக்ர: |
ஸஜார்ஜுனோ நாமனராம்ஷயக்தோ விஷ்ண்வாவேஷீ பலவானஸ்தவேத்தா ||99

பாண்டுராஜனின் பேச்சைக் கேட்டு குந்திதேவி, மந்திரபலத்தினால் இந்திரனை அழைத்தாள். அப்போது, தேவேந்திரன் தானே குந்திதேவியில் அர்ஜுனன் என்ற

பெயரில் பிறந்தான். அவன், நர அம்சத்தினாலும், அதாவது, ஹரி அம்சத்தினால் கூடிய சேஷாம்ச என்று பொருள் (ஹரி அம்சத்தினால் கூடிய சேஷாம்சரே நர அவதாரம் என்று 11ம் பத்யத்தில் தெளிவாக பார்த்துள்ளோம்). மற்றும் பரமாத்மனின் விசேஷமான ஆவேசத்தினாலும் சேர்ந்து, வலிமையானவனாகவும், அனைத்து அஸ்திரங்களையும் பயன்படுத்தத் தெரிந்தவனாகவும் இருந்தான் என்று கூறியிருக்கிறார். இந்த வாக்கியமே 'நரஹரியாவேஷசம்யுத நர' என்பதற்கு ஆதாரம் என்று அறியவேண்டும்.

நர அம்சம் கொண்டவன் ஆகையால், நர என்று அர்ஜுனனுக்கும், நாராயணன் என்னும் கிருஷ்ணனுக்கும் பெயர் இருக்கிறது. 'நர நாராயணாவேதௌ' என்னும் பாரத வாக்கியத்தால் கிருஷ்ணார்ஜுனரே நாராயண நரர் என்று தெரிகிறது. அந்த அபிப்பிராயத்திலேயே தாசராயர் அர்ஜுனனின் பெயர் நரன் என்று கூறுகிறார்.

நரஹரியாவேஷயுத = நர என்றால் நரஹரி என்பதற்கு பரமாத்மன் என்று அர்த்தம் சொல்லி, பரமாத்மனின் ஆவேசத்தினால் கூடிய நரனே புரந்தரன் என்று அர்த்தம் சொல்வதானால், அர்ஜுனனின் பெயரை தனியாக (வேறாக) சொல்ல வேண்டியதாக இருந்தது. ஆனால், அப்படி சொல்லவில்லை. ஆகையால், நரஹரி என்பதற்கு நராம்சமும், ஹரியின் அம்சமும் சேர்ந்த நர, அர்ஜுனன் என்று அர்த்தம் சொல்ல வேண்டும். புரந்தர என்றால் புரந்தரன் என்னும் தேவேந்திரன். விஷ்ணு ரஹஸ்ய 44ம் அத்தியாயத்தில்:

ஏஷஏவமனுர்ஜாத: ஸப்தமோஹிரவே ஸுத: ||37
இக்ஷ்வாகு முக்யாஸ் தஸ்யாஸு: புத்ராதஷ மஹாபலா: |
இந்திர: புரந்தரஸ்தத்ர தேவாருத்ராதயஸ்ததா ||38

ஆறாம் மன்வந்தரத்தின் இறுதியில், சத்யவ்ரத என்னும் ராஜனிடம் பரமாத்மன் மத்ஸ்யாவதாரத்தை எடுத்து அவனுக்கு தத்வோபதேசத்தை செய்தான். அந்த சத்யவ்ரதன் பகவந்தனின் அருளால், விவஸ்வான் என்னும் சூரியனின் மகனாக ஸ்ராத்தேவ என்றும், வைவஸ்வத என்றும் பிறந்து, இந்த மன்வந்தரத்திற்கு அதிபதியானான். அவனின் மக்களே இக்ஷ்வாகு முதலான 10 பேர். அந்த மன்வந்தரத்தில் புரந்தர என்னும் கஷ்யபரின் மகன் இந்திரனாக இருந்தான் என்று தெரிய வருகிறது. ஆகையால், வைவஸ்வத மன்வந்தரத்தின் இந்திரனுக்கு புரந்தர என்று பெயர்.

காதிராஜன் சந்திர வம்சத்தில் பிறந்தான். மகாபாரத தாத்பர்ய நிர்ணயத்தில் 4ம் அத்தியாயத்தில்:

தத: ஸுவம்ஷேஷஷின: ப்ரஸூதோகாதீதி ஷக்ரஸ்தனுஜோஸ்யஜாஸீத் ||4

உத்தமமான சந்திர வம்சத்தில் தேவேந்திரன் காதி என்னும் பெயரில் பிறந்தான். அவனின் மகன் விஸ்வாமித்ர என்று சொல்கிறார். ராமதேவரின் மக்களான குஷலவர்களில் குஷனே இந்திரன். நிர்ணய அத்தியாயம் 9ல் :

தேவ்யாம்ஸ ஜாஜனயதிந்த்ர ஹுதாஷனௌ த்வௌ புத்ரௌயயௌ குஷலயௌ பலினௌ குணாட்யௌ ||

ஶ்ரீராமதேவர், சீதாதேவியரிடம் இந்திர, அக்னி இருவர் குஷ, லவ என்னும் பெயருள்ள மக்களாக பிறந்தனர். அவரில் குஷன் இந்திரன் என்பதற்கு இந்த வாக்கியமே ஆதாரம். விஷ்ணு ரஹஸ்ய 44ம் அத்தியாயம்:

ஷஷ்டஸ்துசக்ஷுஷ: புத்ர: சாக்ஷுஷோ மனுரீரித: |
மந்தரத்யும்ன: ஸ்வயம்ஷக்ர: இந்த்ரம்பதமஷாஸத ||8

ஆறாம் மனு சக்ஷுஷனின் மகன், சாக்ஷுஷன். ஸ்வயம் தேவேந்திரனே மந்தரத்யும்ன என்னும் பெயரில் இந்திர பட்டத்தை ஆண்டவன் என்று சொல்கிறார். இக்ஷ்வாகு ராஜனின் மகன் விகுக்ஷிராஜன். இந்திராவதாரன். வாலி இந்திராவதாரன்.

மன்மதனின் அவதாரங்களை சொல்கிறார். கைகேயியின் மகன், ராமதேவரின் தம்பி, பரதனே முன்பு மன்மதன். நிர்ணய 3ம் அத்தியாயத்தில்:

பூர்வம்ஹரேஸ்சக்ரம புத்திதுர்கா தம:ஸ்திதா ஶ்ரீரிதியாம்வதந்தி |
ஸத்வாத்மிகாஷங்க மதோரஜஸ்தா பூர்னாமிகாபத்மம பூத்தரேஹிம் || 75
கதாதுவாயுர்பல சம்விதாத்மா ஷார்ங்கம் ச வித்யேதிரமைவ கட்க: |
துர்காத்மிகா ஸைவசசர்மனாம்னே பஞ்சாத்மகோ மாருத ஏவபாணா: ||76
ஏவம்ஸ்திதேஷ்வேவ புராதனேஷு வராத்ரதாங்கத்வம வாபகாம: ||
தத்ஸூனு தாமாபசஸோ஽னிருத்தோ பிரம்மோத்பவ: ஷங்கதனு: புமாத்மா || 77
தாவேவ ஜாதௌ பரதஸ்சனாம்னா ஷத்ருக்ன இத்யேவச ராமதோ஽னு ||

முதன்முதலில், சத்வ ரஜஸ் தமோகுணாத்மகரான ஶ்ரீபூதுர்கா என்னும் லட்சுமிதேவியரின் மூன்று ரூபங்களில்

* தமோ குணாத்மகரான துர்காதேவி, பரமாத்மனின் சக்ர ரூபமாக இருந்தார்.
* ஸத்வ குணாத்மகரான ஶ்ரீதேவி, ஷங்க ரூபத்தில் இருந்தார்.
* ரஜோ குணாத்மகரான பூதேவி, பத்மரூபத்தில் இருந்தார்.
* பல, ஞானத்தால் கூடிய வாயுதேவர், கதா ஆயுதமாக இருந்தார்.
* வித்யா நாமக ரமாதேவி ஷார்ங்க என்னும் தனுஸ்ஸாக இருந்தார்.
* ரமாதேவியே வாளாக இருந்தார்.
* துர்காதேவி, சர்ம ரூபத்திலும்,
* பிராண அபானாதி வாயுதேவர் பாண ரூபத்தில் இருந்தார்.

* மன்மதன் தவம் செய்து வரத்தினால் சக்ரத்வத்தை அடைந்தான்.
* மன்மதனின் (பிரத்யும்னனின்) மகனான அனிருத்தன் தவம் செய்து வரம் பெற்று பிரம்மதேவரிடமிருந்து சங்கு ரூபத்தில் பிறந்து, பரமாத்மனின் கையில் சேர்ந்தான்.

அவர்கள் இருவரே, பரத, ஷத்ருக்ன என்னும் பெயரால் ராமதேவரை தொடர்ந்து, கைகேயி சுமித்ரையரின் மக்களாக பிறந்தார் என்று சொல்லியிருக்கிறார். இந்த ஆதாரத்தின் பெயரில், மன்மதனே சுதர்ஷனன் என்னும் சக்கரமாக இருந்தான். அவனே பரத, சுதர்ஷன என்னும் இரு ரூபங்கள் என்று ஆதாரம் கொடுக்கிறார்.

ஜாம்பவதி குமாரனான சாம்பனே பிரம்மதேவரின் அம்சத்தினால் ஆன மன்மதன். இதற்கு ஆதாரம், நிர்ணய 17ம் அத்தியாயத்தில்:

அதாபஸாம்பனாமகம் சுதஞ்சரோஹிணீஹரே: ||220
சதுர்முகாம்ஷ சம்யுதம் குமாரமேவஷண்முகம் ||

ஸ்ரீகிருஷ்ணன், ஜாம்பவதி, சத்யபாமாவை திருமணம் செய்து கொண்டபிறகு, ரோஹிணி கிருஷ்ணன் மூலமாக ஸாம்பன் என்னும் குமாரனை பெற்றெடுத்தாள். (ஜாம்பவதிக்கு ரோஹிணி என்று பெயர். ஜாம்பவந்தனின் மகளானதால், ஜாம்பவதி என்று பெயர் பெற்றாள். அவளின் முதல் பெயரே ரோஹிணி). இந்த சாம்பன் முன்பு ஷண்முகன். பிரம்மதேவரின் அம்சத்தினால் பிறந்தவன் என்று சொல்வர். இந்த ஆதாரத்தினால், மன்மதன், பிரம்மதேவரால் ஆன சாம்பன் என்றும், மன்மதனே ஷண்முகன் என்றும், இரு அவதாரங்களுக்கும் நிர்ணய வாக்கியம் உள்ளது.

பிரத்யும்னனே மன்மதன் என்னும் விஷயத்தில் நிர்ணய 17ம் அத்தியாயத்தில்:

தயார மஜ்ஜநார்தனோ வியோக ஷூன்யயாஸதா ||181
அதத்தபுத்ர முத்தமம்மனோ பவம்புராதனம் ||
சதுஸ்தர்னோஹரே ப்ரபோஸ்த்ருதீய ரூபஸம்யுத: ||182

ஸ்ரீகிருஷ்ணன், சாட்சாத் ரமாதேவியின் அவதாரமான ருக்மிணியை திருமணம் செய்து கொண்டான். அவளிடம் பிரத்யும்ன என்னும் மகன் பிறந்தான். அவனே முன்பு மன்மதன். பரமாத்மனின் வாசுதேவ, சங்கர்ஷண, ப்ரத்யும்ன, அனிருத்த என்னும் 4 ரூபங்களில் மூன்றாவதான பிரத்யும்ன நாம பரமாத்மனின் அம்சத்தினால், அதே பெயரில் பிறந்தான் என்பதே இதற்கு ஆதாரம். பிரம்மதேவரின் மானஸ புத்ரரான சனகாதி நால்வரில் சனத்குமாரன், சனத்குமார நாமக பரமாத்மனின் அம்சத்தால் கூடிய மன்மதனின் அவதாரம். இவை அனைத்தும் மன்மதனின் அவதாரங்கள் என்று அறியவேண்டும்.

**ஈரயிது[3] கு[3]ண கடி[3]மெ பார்வதி**
**வாருணீயரிகி[3]ந்த்[3]ர காம ஷ**
**ரீர மானிபிராண த[3]ஷகு[3]ண அவர ஷக்ரனிகெ[3] ।**
**மாரஜா ரதி[1] த[3]க்ஷ கு[3]ரு வ்ரு**
**த்ராரி ஜாயாஷசி ஸ்வயம்பு[4]வ**
**ஆரு ஜன ஸம ப்ராணக[3]வரரு ஹத்து கு[3]ணதி[3]ந்த[3] ||15**

பார்வதி, வாருணியரிகெ = பார்வதி வாருணி இவர்களுக்கு

ஈரைதுகுண = 10 குணங்களால்
கடிமெ = குறைந்தவர்
ஷக்ரனிகெ = இந்திரனைவிட
ஷரீரமானி பிராண = அஹங்காரிக பிராணன்
தஷகுணவு = 10 குணங்களால்
அவர = குறைவு
மாரஜ = பிரத்யும்ன ரூபியான மன்மதனின் மகனான அனிருத்தன்
ரதி = மன்மதனின் மனைவியான ரதி
தக்ஷ = பிரம்மதேவரின் மகனான தக்ஷ ப்ரஜேஷ்வரர்
குரு = பிருஹஸ்பத்யாசார்யர்
வ்ருத்ராரிஜாயா = வ்ருத்ராசுரனின் எதிரியான தேவேந்திரனின் மனைவியான
சசி = சசிதேவி
ஸ்வயம்புவரு = ஸ்வாயம்புவ மனு, இவர்கள்
ஆரு ஜன சம = ஆறு பேரும் சமமானவர்கள்
ப்ராணகெ = அஹங்காரிக பிராணனுக்கு
ஹத்து குணதிந்த அதமரு = 10 குணங்களால் குறைவானவர்கள்.

பார்வதி முதலான மூன்று பேர்களைவிட, இந்திரன் மன்மதன் 10 குணங்கள் குறைவானவர்கள். இவர்களைவிட அஹங்காரிக பிராணன் 10 குணங்கள் குறைவானவன். இவனைவிட ரதி, ஸ்வாயம்புவ மனு, பிருஹஸ்பதி, சசி, தக்ஷ பிரஜாபதி, பிரத்யும்னனின் மகனான அனிருத்த - இவர்கள் ஆறு பேரும் 10 குணங்களால் குறைவானவர்கள். இந்த ஆறு பேரும் தமக்குள் சமமானவர்கள் ஆவர்.

**காமபுத்ரனிருத்$^{3}$த$^{4}$ ஸீதா**
**ராமனானுஜ ஷத்ருஹன ப$^{3}$ல**
**ராமனானுஜ பௌத்ரனனிருத்$^{3}$த$^{4}$ நொளக$^{3}$னிருத்$^{3}$த$^{4}$ |**
**காமபா$^{4}$ர்யா ருக்$^{3}$மவதி ஸ**
**ந்னாம லக்ஷணெ எனிஸுவளு பௌ**
**லோமி சித்ராங்க$^{3}$தெ$^{3}$யு தாரா எரடு$^{3}$ பெஸருக$^{3}$ளு ||16**

காமபுத்ரனிருத்த = மன்மதனின் மகனான அனிருத்தன்
சீதா ராமனானுஜ = சீதாபதியான ஸ்ரீராமதேவரின் தம்பியான
ஷத்ருஹன = ஷத்ருக்னன். அதாவது, அனிருத்த அவதாரமே ஷத்ருக்னன் என்று அர்த்தம்.
பலராமனானுஜ = பலராமனின் தம்பியான ஸ்ரீகிருஷ்ணன்
பௌத்ரனு = மகனான பிரத்யும்னனின் மகனான
அனிருத்த நொளகெ அனிருத்த = அனிருத்த நாமக பரமாத்மனின் ஆவேசம் உள்ளது
காமபார்யா = மன்மதனின் மனைவியான ரதிதேவியின் அவதாரங்கள்
ருக்மவதி = ருக்மியின் மகளான ருக்மவதி
சன்னாம = உத்தமமான பெயருள்ள

லக்ஷணெ = துரியோதனனின் மகளான லக்ஷணெ; இந்த இரண்டும் என்று அறிய வேண்டும்.
பௌலோமி = இந்திரனின் மனைவியான ஷசிதேவிக்கு
சித்ராங்கதெயு = பாண்ட்ய தேசாதிபதியான வீரசேனனின் மகளான சித்ராங்கதை
தாரா = வாலியின் மனைவியான தாரை
எரடு பெசருகளு = இந்த இரு அவதாரங்களிலும் இரு பெயர்கள் இருக்கின்றன என்று அறியவேண்டும்.

ப்ரத்யும்னனின் மகனான அனிருத்தனே ஷத்ருக்னன் என்னும் விஷயத்தில், மன்மதனின் அவதாரங்களை சொல்லும் சந்தர்ப்பத்தில் எழுதப்பட்டிருக்கும் நிர்ணய ஸ்லோகத்திலிருந்து அறிந்து கொள்ளலாம். மன்மதன் தவம் செய்து சக்ரத்வத்தை அடைந்தான். அவனின் மகனான அனிருத்தன் சங்கு ஆனான். அவர்கள் இருவரே, பரத ஷத்ருக்னர்களாக பிறந்தனர் என்று சொல்வதால், ஷங்காத்மகனான அனிருத்தனே ஷத்ருக்னன் என்று தெளிவாகிறது. அனிருத்தனில் அனிருத்த நாமக பரமாத்மனின் அம்சம் இருக்கிறது என்ற பிறகு, அதே அனிருத்தனே ஷத்ருக்ன நாமத்தினால், ஷத்ருக்னனிலும், அனிருத்த நாமக பரமாத்மனின் அம்சம் இருக்கிறது என்று தனியாக சொல்ல வேண்டியதில்லை.

மன்மதனின் மனைவியான ரதிதேவி, ருக்மிணியின் அண்ணனான ருக்மியின் மகளாக பிறந்து, பிரத்யும்னனின் மனைவியானாள். இன்னொரு ரூபமே துரியோதனின் மகளான லக்ஷணாதேவி. நிர்ணய 19ம் அத்தியாயத்தில் 'தஸ்யாம் ஸுதந்த்வஜனயத்புரு அஸயோக்ஷ: கன்யாம்புராப்ரியதயாம் சஷடானனஸ்ய'. முன்பு கலியின் மனைவியான அலக்ஷ்மி, காசிராஜனின் மகளாக பிறந்தாள். அவளை துரியோதனன் திருமணம் செய்துகொண்டு அவளிடம், முன்பு ராவணனின் மகனான அக்ஷயகுமாரனையே, லட்சண என்னும் பெயருள்ள மகனாகப் பெற்றான். அவர்களுக்கு இன்னொரு பெண்ணும் பிறந்தாள். அவளின் பெயர் லக்ஷணை. அவள் முன்பு ஷண்முகனின் மனைவியாக இருந்தவள். ஷண்முகன், மன்மத அவதாரம் என்று முன்பு பார்த்தோம். ஷண்முகனே மன்மதன் என்னும் விஷயத்தில் இன்னொரு ஆதாரம் மகாபாரத தாத்பர்ய நிர்ணயத்தின் 22ம் அத்தியாயத்தில்:

துர்யோதனஸ்யாஸ புத்ரீரதிர்யா பூர்வம் நாம்னா லக்ஷணாகாந்தரூபா ||
ஸ்வயம்வரஸ்தாம் தாம்பலா தேவஸாம்போ ஜக்ராஹ ஸாசைனமாஸானுரக்தா ||231

துரியோதனனுக்கு மகளான லக்ஷணா என்பவள், முன்பு ரதிதேவி. அவளுக்காக ஸ்வயம்வரத்தை நடத்தியபோது, ஜாம்பவதியின் குமாரனான சாம்பன் பலாத்காரத்துடன் அபகரித்தான். அந்த லக்ஷணையும் இவனிடம் அன்பு கொண்டிருந்தாள் என்று சொல்கின்றனர்.

இந்த வாக்கியத்தினால், மேற்சொன்ன ஆதாரத்தில் ஷண்முகனின் மனைவியே லக்ஷணை என்றார். இந்த ஸ்லோகத்தில் அவளே ரதிதேவி என்று கூறுகிறார். ஷண்முகனின் அவதாரம் சாம்பன் என்று முன்பு கூறினார். அவனே இந்த

லக்ஷணை என்னும் ரதிதேவியை திருமணம் செய்துகொண்டான் என்றபிறகு, ஷண்முகனே மன்மதன் என்றும், அவனே சாம்ப, மற்றும் பிரத்யும்ன என்னும் இந்த இரு ரூபங்களால் பிறந்து, ரதிக்கு முதலாம் அவதாரமான ருக்மியின் மகளான ருக்மவதியை பிரத்யும்னனும், ரதிக்கு இரண்டாம் அவதாரமான லக்ஷணையை, சாம்பனும் திருமணம் செய்து கொண்டனர் என்பது கருத்து.

சசிதேவியின் அவதாரங்களை சொல்கிறார். பாண்ட்ய தேசாதிபதியான வீரசேனனின் மகள் சித்ராங்கதை. இவளே சசிதேவியின் அவதாரம். மகாபாரத தாத்பர்ய நிர்ணயத்தின் 20ம் அத்தியாயத்தில்:

ஸம்வத்ஸராந்தே பல்குனஸ்யானுரூபா சித்ராங்கதா வீரஸேனேன தோஷாத் |
ஸவீரஸேனஸ் த்வஷ்ப்ருரம்ஷோய மஸ்யாவேஷயுக் ஸாசகன்யாஷசீஹி ||161

அர்ஜுனன் தீர்த்த யாத்திரை செய்துகொண்டு பாண்டிய தேசத்திற்கு வந்தான். அந்த தேசத்தின் அதிபதியான வீரசேன ராஜன் தன் மகளான சித்ராங்கதையை மகிழ்ச்சியுடன் திருமணம் செய்து கொடுத்தான். அந்த வீரசேனன், த்வஷ்டா என்னும் சூர்யனின் அம்சத்தைக் கொண்டிருந்தான். மற்றும் யமனின் ஆவேசமும் அவனில் இருந்தது. அவனின் மகளான சித்ராங்கதை, இந்திரனின் மனைவியான சசிதேவியே ஆகும். ஆனால், அவளுக்கு திருமணம் ஆகி, அவளுக்கு பப்ருவாஹனன் பிறக்கும் வரை, அவளிடம் இருந்துவிட்டு, பின்னர் அங்கிருந்து புறப்பட்டுவிட்டான் அர்ஜுனன்.

நிர்ணய வாக்கியம்:
தாராதேஹே ஸூர்யஜஸ்யாங்க சங்காத் ஸ்வர்காம்னாயா தந்தரிக்ஷாதிஹாஸீத் |
தேனைவ ஹேதுர்னாஷி ஸாமீப்யமாஸீத் || 161

முன்னர் வாலியின் மனைவியாக தாரையாக இருந்தபோது, சூர்ய புத்ரனான சுக்ரீவனின் அங்க சங்கம் இவளுக்கு ஆன தோஷத்தினால், அப்போது அவள் ஸ்வர்க்கத்திற்குச் செல்லாமல், அந்தரிக்ஷ லோகத்தில் இருந்துவிட்டு, பின் சித்ராங்கதையாக பிறந்தாள். அந்த காரணத்தினாலேயே அர்ஜுனனுக்கும் சித்ராங்கதைக்கும் அதி சாமீப்யம் இருக்கவில்லை என்று சொல்கிறார். வாலி என்னும் கபி இந்திராவதாரி. அவன் மனைவி தாரை. அவளே சசிதேவி என்று மேலே பிரமாணத்தின் மூலம் பார்த்தோம். இப்படியாக சசிதேவிக்கு இரு ரூபங்கள் என்று சொல்லியிருக்கிறார்.

**தார நாமக த்ரேதெயொளு ஸீ**
**தா ரமண நாராதி4ஸித3னு ஸ**
**மீரயுக்தோத்3த4வனு க்ருஷ்ணகெ3 ப்ரீயனெனிஸித3னு |**
**வாரிஜாஸனயுக்த த்3ரோணனு**
**மூரிளெயொளு ப்3ருஹஸ்பதிகெ3 அவ**
**தாரவெம்ப3ரு பா4ரத மஹாதாத்பரியதொ3ளகெ3 ||17**

தார நாமக = தார என்னும் கபி
த்ரேதெயொளு = த்ரேதா யுகத்தில்
ஸீதாரமண = சீதாபதியான ஸ்ரீராமசந்திரன்
ஆராதிசிதனு = பூஜித்தான்
ஸமீரயுக்த = வாயுதேவரின் ஆவேசத்தினால் கூடிய
உத்தவன்,
க்ருஷ்ணகெ ப்ரீயனெனிஸிதனு = கிருஷ்ணனுக்கு மிகவும் அன்பானவன்
வாரிஜாசனயுக்த = பிரம்ம ஆவேசத்தைக் கொண்ட
த்ரோணனு = த்ரோணாசார்யர்
இளியொளு = இந்த பூமியில்
ப்ருஹஸ்பதிகெ = ப்ருஹஸ்பத்யாசார்யருக்கு
மூரு அவதார = மூன்று அவதாரங்கள்
பாரத மஹாதாத்பர்யதொளகெ = மகாபாரத தாத்பர்ய நிர்ணயத்தில்
எம்பரு = என்றிருக்கிறார்

ப்ருஹஸ்பத்யாசார்யருக்கு மூன்று அவதாரங்கள். த்ரேதாயுகத்தில் ராமதேவரின் சேவைக்காக தார என்னும் கபியாக அவதரித்தார். மகாபாரத தாத்பர்ய நிர்ணய 3ம் அத்தியாயத்தில்:

ப்ருஹஸ்பதிஸ்தார உதோசசி ச ஷக்ரஸ்ய பார்யைவ பபூவதாரா ||70
ப்ருஹஸ்பதி பிரம்மசுதோபி பூர்வம் ஸஹைவஷ ச்யுமனஸோபிஜாத: |
பிரம்மோத்தவஸ்யாங்கிரஸ: ஸுதோபூன்மாரீச ஜஸ்வைவஷ சேபுலோம்ன: ||71
ஸ ஏவஷச்யா ஸஹவானரோபூத் ஸ்வஸம்பவோதேவ குருப்ருஹஸ்பதி: ||

ப்ருஹஸ்பத்யாசார்யர் தார என்றும், இந்திரனின் மனைவியான சசிதேவி தாரை என்றும் அண்ணன் தங்கையாக பிறந்தனர். இந்த தாரையே இந்திராவதாரனான வாலியின் மனைவி. ப்ருஹஸ்பத்யாசார்யர் முன்னர், பிரம்மதேவரின் மகனாக இருந்தாலும், பிரம்மதேவரின் மனதால் சசிதேவியுடனேயே பிறந்தார். ஆகையால், அப்போதும் அண்ணன் தங்கையாகவே பிறந்திருந்தார். நடுவில் ஒரு பிறவி வேறு சரீரமாக இருந்தார். பிரம்மதேவரின் மக்களான அங்கிரஸ என்னும் ரிஷியிடம் ப்ருஹஸ்பத்யாசார்யர் பிறந்தார். மரீசி ரிஷியின் மக்களான கஷ்யபரிடம், தனூதேவி மூலமாக பிறந்த புலோம என்னும் தானவனின் மகளாக சசிதேவி பிறந்தாள். ஆகையாலேயே, சசிதேவிக்கு பௌலோமி என்று காரணப் பெயர் வந்தது. அப்போது அதே ப்ருஹஸ்பத்யாசார்யர், சசிதேவியுடன், வானர ரூபமாக பிறந்தார்.

ஆகையால், தேவகுருவான ப்ருஹஸ்பத்யாசார்யரே தார என்னும் கபியாக பிறந்தாரே தவிர, ப்ருஹஸ்பத்யாசார்யரின் மகன் தார என்னும் அர்த்தம் வருவதில்லை என்பது கருத்து. வாயுதேவரின் ஆவேசத்தால், ப்ருஹஸ்பத்யாசார்யரே த்வாபர இறுதியில் ஸ்ரீகிருஷ்ணனின் சேவைக்காக பிறந்தார். மகாபாரத தாத்பர்ய நிர்ணயத்தின் 12ம் அத்தியாயத்தில்:

ப்ருஹஸ்பதி: பூர்வமபூத்தரே: பதம்ஸம்ஷேவிதும் பவனாவேஷயுக்த: ||100
ஸ உத்தவோனாம யதுப்ரவீராக்ஞுதோ வித்வானுபகவ நாமதேயாத் ||
த்ரோணாத்மகம்னாதிதராம் ஸ்வஸேவகம் குர்யாத்தரிர்யாமிதி பூய ஏவ |101
ஸ உத்தவாத்மாவததார யாதவேஷ்டா ஸேவனார்த்தம் புருஷோத்தமஸ்ய ||

ப்ருஹஸ்பத்யாசார்யர் பரமாத்மனின் சேவையை செய்வதற்காக த்ரோணாசார்யராக பிறந்திருந்தாலும், அதில் திருப்தி அடையாமல், வாயுதேவரின் ஆவேசத்தைக் கொண்டு, யாதவ தலைவனான உபவகவன என்பவனிடம், உத்தவ என்னும் பெயரில் பிறந்தார். அது எதற்கு என்றால்: த்ரோண ரூபியான தன்னை ஸ்ரீஹரி தனக்கு ப்ரியமான சேவகனாக ஆக்கிக்கொள்வான் என்று நினைத்து ஸ்ரீகிருஷ்ணனுக்கு நன்றாக சேவை செய்யவேண்டும் என்னும் ஆசையில், உத்தவ என்னும் பெயரில் யாதவரிடம் பிறந்தார் -- என்று கூறியிருக்கிறார்.

முதலாம் அவதாரம் தார என்னும் கபி. இரண்டாவது உத்தவன். மூன்றாவது த்ரோண என்பது, உத்தவனின் அவதாரத்தை விளக்கும் சந்தர்ப்பத்தில் கொடுத்த ஆதாரத்தின்படி தெரிய வருகிறது. த்ரோண ரூபியான என்னை ஸ்ரீகிருஷ்ணன் மிகவும் அன்பான சேவகனாக ஆக்கிக்கொள்வான் என்று சிந்தித்து, யாதவர்களில் உத்தவனாக பிறந்தான் என்னும் பிரமாணத்தாலும், உத்தவனும் த்ரோணாசார்யரின் சமகாலத்தவர்கள் ஆவர். அதில் த்ரோணாசார்யர் முதலில் பிறந்தார் என்றும் உத்தவன் பின்னர் பிறந்தவர் என்றும் நிர்ணயாதி ஆதாரங்களிலிருந்து தெரிய வருகிறது.

ஆனால், தாசார்யர் ஏன் இதற்கு விரோதமாக முதலில் தார, இரண்டாவது உத்தவ, பிறகு த்ரோண என்று கூறினார் என்றால், அவரின் அபிப்பிராயம், ப்ருஹஸ்பத்யாசார்யருக்கு மூன்று அவதாரங்கள் என்று சொல்வது மட்டுமே தவிர, அந்த அவதாரத்தின் கிரமங்களை அவர் சொல்லவில்லை. ஆகையால், இதில் எவ்வித பிரச்னையும் இல்லை என்பது கருத்து. த்ரோணாசார்யரே ப்ருஹஸ்பத்யாசார்யர் என்பதற்கு ஆதாரம்: நிர்ணய 11ம் அத்தியாயத்தில்:

யதைவ ஜாத: ஸக்ருத ஸ்ததைவ ப்ருஹஸ்பதே: ஸூனுரகாச்சகங்காம் |
ஸ்னாதும் ப்ருதாசீம் ஸததர்ஷதத்ர ஷ்லததத்துகூலாம் ஸுரவர்ய காமினீம் ||64
தத்தர்ஷனாத் ஸ்கன்னமதேந்த்ரியம் ஸத்ரோணே ததாராஷு ததோபவத்ஸ்வயம் |
அம்போஜஜாவேஷயுதோ ப்ருஹஸ்பதி: கர்தும் ஹரே:கர்மபுவோ பரோத்ருதெள ||65
த்ரோணேதினாமாஸ்யச காரணாதோ ||

எப்போது க்ருபாசார்யர் பூமியில் பிறந்தாரோ, அதே காலத்தில் ப்ருஹஸ்பத்யாசார்யரின் மக்களான பாரத்வாஜர், ஸ்னானம் செய்வதற்காக கங்கைக்கு வந்தார். அந்த சமயத்தில், அங்கு முன்னரே வந்திருந்த, க்ருதாசி என்னும் அப்ஸர ஸ்த்ரியை பார்த்தார். ஸ்னானம் செய்வதால் அவளின் ஆடை விலகியிருந்தது. அவளை பார்த்த உடனேயே, இவருக்கு இந்திரிய ஸ்கலிதம் ஆனது. அந்த வீர்யத்தை தன் பாத்திரத்தில் பிடித்தார். அங்கிருந்தே ப்ருஹஸ்பத்யாசார்யர், பிரம்மதேவரின் ஆவேசத்தினால், ஸ்ரீபரமாத்மனின் பூபார

ஹரணத்தின் காரியத்தில் உதவுவதற்காக பிறந்தார். அவரின் தந்தையான பரத்வாஜர் இவருக்கு த்ரோண என்று பெயர் வைத்தார் -- என்று கூறுகிறார்.

இந்த வாக்கியங்களை உத்தேசித்து தாசார்யர் இந்த அவதார ஆவேசங்களை மகாபாரத தாத்பர்யதொளகெ என்றார். அதாவது, நிர்ணயத்தில் சொல்லியிருப்பதாக கூறினார். ஆகையால், நிர்ணயத்தின் மூல ஸ்லோகங்கள் இங்கு அர்த்த சஹிதமாக எழுதியிருக்கிறோம்.

**மனுமுகா²த்³யரிகி³ந்த ப்ரவஹ**
**கு³ணதி³ பஞ்சக நீசனெனிஸுவ**
**இன ஷஷாங்கதரு த⁴ர்ம மானவி எரடு³ கு³ணதி³ந்த³**
**கனியரெனிபரு ப்ரவஹகி³ந்தலி**
**தி³னப ஷஷி யமத⁴ர்ம ரூபக³**
**ளனுதி³னதி³ சிந்திபரு ஸந்தரு ஸர்வகாலத³லி ||18**

மனுமுகாத்யரிகிந்த = ஸ்வாயம்புவ மனு முதலான 6 பேர்களைவிட

ப்ரவஹ = ப்ரவஹ வாயு
பஞ்சககுணவு = 5 குணங்கள்
நீசனெனிஸுவ = குறைவானவன்
இன = சூர்ய
ஷஷாங்ககரு = சந்திர இவர்கள் இருவரும்
தர்ம = யமதர்மன்
மானவி = மனுவின் மனைவியான ஷதரூபா; இவர்கள் அனைவரும்
ப்ரவஹகிந்தலி = ப்ரவஹ வாயுவைவிட
எரடு குணதிந்த = இரு குணங்களால்
கனீயரெனிபரு = குறைந்தவர் எனப்படுகிறார்
தினப = சூரியன்
சசி = சந்திரன்
யமதர்மரூபகளனு = இவர்களின் ரூபங்களை
சந்தரு = சஜ்ஜனர்கள்
அனுதினதி = தினந்தோறும்
ஸர்வகாலதலி = எப்போதும்
சிந்திபுது = நினைக்க வேண்டியது.

சங்கர்ஷண ஒடெயரின் வியாக்யானத்திலும், உடுப்பியில் வெளியிடப்பட்ட புத்தகத்திலும்கூட, இந்த பத்யத்தில் 'மனுமுக்யாத்யரகிந்த ப்ரவஹா குணகளத்வய நீசனெனிஸுவ' என்று இருக்கிறது. கமலாபதி தாசரின் வியாக்யான புத்தகத்தின் மூலத்தில் 'மனுமுகாத்யரகிந்த ப்ரவஹா குணவு பஞ்சக நீசனெனிஸுவ' என்று இருக்கிறது. இந்த வேறுபாட்டில், கமலாபதி தாசரின் புத்தகத்தில் இருக்கும் பாடமே சரியானது என்று தோன்றுகிறது.

எப்படியெனில், குண தாரதம்ய சந்தி என்னும் 20ம் சந்தி, 6ம் பத்யத்தில்: ‘மாரஜாத்யரிகைது குணதிந்தம ப்ரவஹாக்ய’ என்று சொல்லியிருப்பது, அனைத்து புத்தகங்களிலும் ஒரே மாதிரியாகவே இருக்கிறது. தற்போது தாசார்யர், அந்த சந்தியில், மாரசாத்யரு என்றால், அனிருத்த, ரதி, மனு, குரு, தக்ஷ, சசி என்று காம புத்ரனான அனிருத்தவில் தொடங்கி 6 பேரைவிட 5 குணங்கள் குறைவு ப்ரவாஹ வாயு என்று சொல்லியிருந்தார்.

இந்த சந்தியில் ‘மனுமுக்யாத்யரிகிந்த ப்ரவஹா குணகளத்வய நீசனெனிஸுவ’ - மனு, சசி, முதலான 6 பேரைவிட இரு குணங்கள் குறைவு என்று கூறினால், தாசார்யரின் வாக்கியங்களிலேயே வேறுபாடு வந்துவிடுகிறது. ஆகையால், ‘குணகளத்வய’ என்பது பஞ்சக என்று இருக்கும் பாடமே சரியானது என்று நினைக்கிறோம்.

ஸ்வாயம்புவனு, ப்ருஹஸ்பத்யாசார்யர், காம புத்ரனான அனிருத்த, ரதி, சசி, தக்ஷ, என இவர்கள் ஆறு பேர்களைவிட ஏகோனபஞ்சாஷன் (49) மருத்கணத்தில் சேர்ந்த ப்ரவஹவாயு 5 குணங்களால் குறைவு எனப்படுகிறார். இவனைவிட சந்திரன், சூர்ய, யம, ஷதரூபாதேவி (மனு பத்னி) இவர்கள் 2 குணங்கள் குறைவு எனப்படுகிறார்கள். சூர்ய, சந்திர, யம இவர்களை தினந்தோறும் நினைத்தால், யமதேவரின் சிந்தனையால் பாப பரிகாரம் ஆவதுடன், யம-பாதெ (மரண பயம்) குறைகிறது. சூரியனின் ஜபங்களை, மந்திரங்களை சொல்வதால் அனைத்து அபீஷ்டங்களும் கிடைத்து, அனைத்து நோய்களும் கிடைப்பது மட்டுமல்லாமல், காலத்திற்கு மழையும் பொழிகிறது. சந்திரனின் ஸ்மரணையால் போகங்களை அனுபவிப்பர் என்று பற்பல பாகவத வாக்கியங்களால் தெரிய வருகிறது.

**மருதனாவேஷயுத த$^{4}$ர்மஜ**
**கரடி$^{3}$ விது$^{3}$ரனு ஸத்யஜிது ஈ**
**ரெரடு$^{3}$ த$^{4}$ர்மனரூப பி$^{3}$ரம்மாவிஷ்ட ஸுக்$^{3}$ரீவ |**
**ஹரிய ரூபாவிஷ்ட கர்ணனு**
**தரணிகெ$^{3}$ரட$^{3}$வதார சந்த்$^{3}$ரம**
**ஸுரபனாவேஷயுத அங்க$^{3}$த நெனிஸி கொளுதிப்ப ||19**

தர்மன = யமதர்மனுக்கு
மருதனாவேஷயுத = வாயுதேவரின் ஆவேசத்தைக் கொண்ட
தர்மஜ = தர்மராஜனின் அவதாரம் ஒன்று
கரடி = ஜாம்பவந்த என்னும் ரூபம் - இரண்டாவது.
விதுர - மூன்றாவது
ஸத்யஜித் = மூன்றாம் மன்வந்தரத்தில் இந்திரனாக இருந்தவன் - நான்காவது
இப்படி,
ஈரெரடுரூப = நான்கு அவதாரங்கள்
தரணிகெ = சூரியனுக்கு
பிரம்மாவிஷ்ட = பிரம்மதேவரின் ஆவேசத்தைக் கொண்ட
சுக்ரீவ = சூக்ரீவ என்னும் கபி ரூப ஒன்று

ஹரியரூபாவிஷ்ட கர்ணனு = பரமாத்மனின் ஆவேசத்தைக் கொண்ட கர்ண ரூப ஒன்று
எரடவதார = என்று 2 அவதாரங்கள்
சந்த்ரம = சந்திரன்
சுரபனாவேஷயுதனு = இந்திரனின் ஆவேசத்தைக் கொண்ட
அங்கதனெனிஸி கொளுதிப்ப = அங்கதன் என்று அழைக்கப்படுகிறான்.

யமதர்மனுக்கு 4 அவதாரங்கள். குந்தி புத்ரனான தர்மராஜனின் ரூபம் 1. இவனில் வாயுதேவரின் ஆவேசம் இருந்தது. மகாபாரத தாத்பர்ய நிர்ணய 12ம் அத்தியாயத்தில்:

இதீரிதேதயாயம: ஸமாகுதோகமத்ருதம் || 32
ததஸ்ச ஸத்ய ஏவஸாஸூஷாவ புத்ரமுத்தமம் |
யுதிஷ்டிரம் யமோஹிஸ: ப்ரபேத ஆத்மபுத்ரதாம் ||33

கணவனின் ஆணைப்படி குந்திதேவி, மந்திர பலத்தினால் யமதேவரை அழைத்தாள். உடனடியாக யமனும் அங்கு வந்தான். குந்தியும் அதே கணத்தில் யமன் மூலமாக ஒரு புத்திரனைப் பெற்றாள். அவனே யுதிஷ்டிரன். அவனே யமதர்மன். யமன், குந்தியில் தானே மகனாகப் பிறந்தான். என்னும் வாக்கியம், யமனே தர்மராஜன் என்னும் விஷயத்திற்கு ஆதாரமாக இருக்கிறது. இவனில் வாயுதேவரின் ஆவேசம் இருக்கிறது என்னும் விஷயத்தில், மகாபாரத தாத்பர்ய நிர்ணய 12ம் அத்தியாயத்தில் 129ம் ஸ்லோகத்தில்:

யுதிஷ்டிராத்யேஷு சதுர்ஷுவாயு: ஸமாவிஷ்ட: பல்குனேதோவிசேஷாத் ||129
யுதிஷ்டிரே ஸௌம்யரூபேணவிஷ்ட: வீரேணரூபேண தனஞ்சயேஸௌ ||

தர்மராஜன் முதலான நால்வரில்; அதாவது, பீமசேனதேவர் ஸ்வயம் வாயுதேவரே ஆனதால், அவரைத் தவிர மற்ற பாண்டவர்களில், தர்மராஜ, அர்ஜுன, நகுல, சகாதேவ இந்த நால்வரில் வாயுதேவர் நிலைத்திருந்தார். அதிலும் அர்ஜுனனில் விசேஷமாக நிலைத்திருந்தார். தர்மராஜனிடம் வாயுதேவர் சௌம்ய ரூபத்தில் நிலைத்திருந்தார். அர்ஜுனனில் வீர ரூபத்தில் இருந்தார். இத்யாதி வாக்கியங்களால், தர்மராஜனில் வாயு ஆவேசம் இருந்தது என்று தெரிகிறது.

யமதர்மனுக்கு கரடி அவதாரம் என்றால், ஜாம்பவந்தனின் அவதாரம் ஒன்று. மகாபாரத தாத்பர்ய நிர்ணய மூன்றாம் அத்தியாயத்தில்:

யஏவபூர்வம் பரமேஷ்டிஸ்சவக்ஷ ஸஸ்வகுத்பவோதர்ம இஹாஸ்யதோ பவத் ||66
யஏவ சூர்யத்புனரேவ சஞ்ஞயாம் நாம்னாயமோதக்ஷிணதிக்ஷ ஆசீத் ||
ஸராம்பவான் தெய்வத கார்யதர்ஷினா புரைவஸ்ருஷ்டோமுகத: ஸ்வயம்புவா ||67

எந்த தர்மன் முன்னர், பிரம்மதேவரின் வக்ஷஸ்தலத்தின் ரோமத்திலிருந்து பிறந்தானோ, அதே தர்மனே மறுபடி பிரம்மதேவரின் வாயிலிருந்து தற்போது

பிறந்தான். மற்றும் யார் முன்னர் விவஸ்வான் என்னும் சூரியன் - சஞ்ஞாதேவியில் யம என்று பிறந்து, தக்ஷிண திக்பாலகன் என்று சொல்லிக் கொள்கிறானோ, அதே யமதர்மரே தேவதா காரியங்களை முன்னரே அறிந்திருக்கும் பிரம்மதேவரின் முகத்திலிருந்து முன்னரே ஸ்ருஷ்டிக்கப்பட்டிருந்தார். அவனே ஜாம்பவந்தன். இந்த பிரமாணத்திலிருந்து ஜாம்பவந்தன், யம அவதாரி என்பது தெளிவாகிறது.

விதுரன் தர்மராஜன் என்னும் விஷயத்தில், மகாபாரத தாத்பர்ய நிர்ணயத்தின் 11ம் அத்தியாயத்தில்:

தஸ்யாம்ஸதேவோ ஜனிதர்மராஜோ மாண்டவ்யஷாபாத்ய உவாஹசூத்ரதாம் ||
வசிஷ்ட ஸாம்யம்ஸமபீப்ஸமானம் ப்ரச்யாவயன்னிச்சயா ஷாபமாப ||136

வேதவியாஸ என்றால், தாயான சத்யவதியின் வாக்கியத்திற்கேற்ப விசித்ரவீர்யனின் மனைவியரான இருவரில், அம்பிகை த்ருதராஷ்டிரன் என்னும் கண் பார்வையற்றவனையும், இரண்டாமவளான அம்பாலிகை பாண்டு மகாராஜா என்பவனையும், வேதவியாஸ தேவரின் தொடுதல் மூலமாகவே பெற்றனர். இருவரில் மூத்தவன் குருடன், அடுத்தவன் சுத்தமான வெண்மை நிறத்தவனாகவும் இருந்தார்கள். இதனைக் கண்ட சத்யவதி, நிர்தோஷியான இன்னொரு குமாரனைப் பெறவேண்டும் என்று வேதவியாசதேவரை வேண்ட, அவரின் ஒப்புதலின் பேரில் மூத்த மருமகளான அம்பிகையிடம் -- 'நீ வேதவியாசரைக் கண்டு பயந்து கண் மூடிவிட்டதால், உன் மகன் குருடனானான். இப்போது அப்படி செய்யாதே. வேதவியாசரை பக்தியுடன் வணங்கு' என்று கூறினாள்.

ஆனால் அவளோ மேலும் பயந்து, தன் தாசியான சூத்ர ஸ்த்ரியை தன்னைப் போல அலங்கரித்து வேதவியாசரிடம் அனுப்பினாள். அவளும் மிகவும் பக்தியுடன் வேதவியாசதேவரை சேவித்தாள். சூத்ர ஸ்த்ரியரில் யமன் பிறப்பதற்கு என்ன காரணம் என்றால்: மாண்டவ்ய என்னும் ஒரு ரிஷி, தான் வசிஷ்டருக்கு சமமாக வேண்டும் என்று விரும்பி, தவம் செய்து கொண்டிருந்தார். அந்த சமயத்தில், அந்த நாட்டு ராஜனின் வீட்டில் திருடர்கள் வந்து பொருட்களை திருடிச் சென்றனர். ராஜ சேவகர்களும், அந்த திருடர்களை துரத்தி வருகையில், அந்த திருடர்கள், இந்த மாண்டவ்ய ரிஷிகளின் ஆசிரமத்தில் நுழைந்தனர்.

அப்போது மாண்டவ்யர், சமாதி நிலையில் தியானத்தில் இருந்ததால், சுய நினைவுடன் இருந்திருக்கவில்லை. ஆசிரமத்தில் நுழைந்த ராஜ சேவகர்கள், தியான நிலையில் மெய் மறந்திருந்த மாண்டவ்யரைப் பார்த்து, அவரும் திருடனோ என்று நினைத்து, அந்த திருடர்களுடன் இவரையும் கட்டி இழுத்துப் போனார்கள். அரசன் திருடர்களுக்கு விதித்த சிறை தண்டனை இவருக்கும் கிடைத்தது. அப்போதும் இவர் சமாதி நிலையிலேயே இருந்தார். மற்ற திருடர்கள் அனைவரும் இறந்தனர். இவர் சமாதி நிலையிலிருந்து வெளி வந்தார். தான் சிறையில் இருப்பதைக் கண்டு, அங்கிருந்த சேவகர்களை அழைத்து, உங்கள் அரசனை அழையுங்கள் என்றார்.

அரசனும் நடந்த தவறினை உணர்ந்து, ஓடோடி வந்து அவரிடம் மன்னிப்பு கேட்டு காலில் விழுந்தான். அவர் உடலில் பாய்ந்திருந்த த்ரிசூலத்தை எடுக்க முடியாமல் போக, வெளியில் தெரிந்த சூலத்தை மட்டும் கத்தரிக்க, மிச்ச பாகங்கள் மாண்டவ்யரின் உடலிலேயே தங்கியது. இதனால் அவருக்கு அணிமாண்டவ்ய என்ற பெயர் வந்தது. மாண்டவ்யனும், இது அரசன் கொடுத்த தண்டனை அல்ல. யமதேவரின் ப்ரேரணையால் தனக்கு இந்த தண்டனை கிடைத்தது என்று எண்ணி, அரசனை மன்னித்து, அங்கிருந்து யமதேவரிடம் வந்து, தனக்கு சிறை தண்டனை கிடைத்ததற்கு என்ன காரணம் என்று கேட்டார்.

தனக்கு தகுதியில்லாத வசிஷ்ட பதவியை அவர் விரும்பியதே சரியான காரணமாக இருந்தாலும், இவர் செய்த அதிக தவத்தினை குறைப்பதற்காக, யமதேவர் இவருக்கு கோபத்தை ஏற்படுத்தி, தான் சாபம் பெறுவதற்காக 'நீங்கள் பால்யத்தில் கிருமி, பூச்சிகளுக்கு துன்பம் ஏற்படுத்தினீர்கள். ஆகையால் உங்களுக்கு சிறை தண்டனை கிடைத்தது' என்று பொய் கூறினான். இது அவரின் தவ வலிமையை குறைப்பதற்காக கூறிய பொய் ஆகையால், யமதேவருக்கு பொய் கூறியதால் எந்த தோஷமும் வரவில்லை.

மாண்டவ்யர் கோபம் கொண்டு, 'நான் சிறுவயதில் தவறு செய்திருந்தாலும், அதற்கான தண்டனை இதுவல்ல. நீ என்னிடம் பொய் சொல்லியிருக்கிறாய். ஆகையால், நீ பூமியில் சூத்திரனாக பிறப்பாய்' என்று சாபம் கொடுத்தார். ஆகையால், மாண்டவ்யரின் தவ பலன் குறைந்தது. இப்படி இவரின் தவ வலிமையை குறைப்பதற்காக, பொய் சொல்லி, அவரிடம் சாபம் பெற்றான். அதனாலேயே, வேதவியாஸ தேவரின் மூலமாக ஒரு சூத்ர ஸ்த்ரியரிடம் யமதர்மன் விதுரனாக பிறந்தார். அவர் தர்ம நிரதனாக, மகாஞானியாகவே இருந்தார். 'வித்யாரதேர் விதுரோனாமசாயம்' - வித்யைகளை கற்றறிந்தவனாக இருந்தால், அவனுக்கு விதுரன் என்று பெயர் வந்தது -- என்று கூறினார்.

யமதர்மனுக்கு சத்யஜித் என்று ஒரு அவதாரம் உண்டு. அது எப்போது? எந்த காலத்தில்? என்றால், விஷ்ணு ரஹஸ்ய 27ம் அத்தியாயத்தில்:

த்ருதீயேத்வந்தரே ப்ரம்மனுத்தமோதாம வைமனு: ||4
ய:ஸ்தனாதபவத்விஷ்ணோ: ஸதமஸ்த்ரிந்த்ரதாம்கத: ||
சத்யஜின் நாமவிக்யாதோ தர்மாதஜனிய: ஸ்வயம் ||5

ப்ரியவ்ரத ராஜனின் மகன் உத்தவன். முன்னர் யார் 'தர்மஸ்தனாத்தக்ஷிணத:' என்னும் பாகவத வாக்கியத்திற்கேற்ப பரமாத்மனின் வலது ஸ்தனத்திலிருந்து பிறந்தானோ, அதே தர்மனே, சத்யஜித் என்னும் பெயரில் பிறந்து இந்த மூன்றாம் மன்வந்தரத்தில் இந்திரனாக இருந்தான்.

சத்யஜித் என்பவன் யமனின் அவதாரம் என்பதற்கு இதுவே ஆதாரம்.

இப்படியாக யமதர்மனுக்கு 4 அவதாரங்கள்.

சூரியனுக்கு இரு அவதாரங்கள். பிரம்மதேவரின் ஆவேசத்தைக் கொண்ட சுக்ரீவ என்னும் கபியின் ரூபம் 1. இந்த விஷயத்தில் ஆதாரம், மகாபாரத தாத்பர்ய நிர்ணய மூன்றாம் அத்தியாயத்தில் : 'சுக்ரீவ ஆஸீத்பரமேஷ்டி தேஜஸாயுதோரவி: ||66. பிரம்மதேவரின் ஆவேசத்தைக் கொண்டு சூரியன், சுக்ரீவ என்னும் பெயரில் பிறந்தார் என்று சொல்லியிருக்கிறார். இரண்டாம் அவதாரம் கர்ணன். நிர்ணய 11ம் அத்தியாயத்தில்:

அதாஸஸாத பாஸ்கர: ||
ஸதத்ரஜக்ஞிவான் ஸ்வயம்த்விதீய ரூபகோவிபு: ||
ஸவர்மதிவ்ய குண்டலோ ஜ்வலன்னிவஸ்வதேஜஸா ||156
புராஸவாலிமாரண ப்ரபூததோஷகாரணாத் ||
ஸஹஸ்ரவர்மனாமினா சுரேணவேஷ்டிதோ஽ஜனி ||157
யதாக்ரஹைர் விதூஷ்யதே மதிர்ன்ருணாம் ததைவஹி ||
அபூச்சதைத்ய தூஷிதாமதிர் திவாகராத்மன: ||158
ததாபி ராமஸேவனாத் தரேஷ்ச சன்னிதானயுக் ||
சுதர்ஷனீய கர்ணத: சகர்ணனாம கோபவத் ||159

குந்திதேவி தன் மந்திரத்தால் அழைக்க, சூரியன் அங்கு வந்து, தானே இன்னொரு ரூபத்தினால், கர்ண குண்டலங்களுடன், திவ்யமான கவசங்களுடன், தன் தேஜஸ்ஸினால் ஒளிர்ந்தவாறு, பிறந்தான். ஆனால், முந்தைய பிறவியில் சுக்ரீவனாக இருந்து, வாலியைக் கொன்ற பாவத்தினால், சஹஸ்ரவர்ம என்னும் தைத்யனின் ஆவேசத்தைக் கொண்டிருப்பதால், எப்படி மனிதர்களுக்கு பேய் பிடித்தால், புத்தி கெட்டு விடுகிறதோ, அதைப் போலவே இவனுக்கும் புத்தி கெட்டுப் போயிருந்தது. அப்படியிருந்தாலும், முந்தைய பிறவியில் ராமசேவையை செய்து புண்ணியம் பெற்றிருப்பதால், பரமாத்மனின் சன்னிதானத்தைக் கொண்டிருந்தான். இவனின் காதுகள், குண்டலங்களால் அலங்கரிக்கப்பட்டு, பார்க்க அழகாக இருந்ததால், இவனுக்கு கர்ணன் என்று பெயர் வந்தது. இப்படியாக சூரியனுக்கு இரு அவதாரங்கள்.

சந்திரன், இந்திரனின் ஆவேசத்தைக் கொண்டு, அங்கத என்னும் கபியாக பிறந்தான். மகாபாரத தாத்பர்ய நிர்ணய 3ம் அத்தியாயத்தில்:

பிரம்மோத்பவ: ஸோம உதாஸ்யசூரோரத்ரேரபூத் ஸோங்கத ஏவஜாத: ||68
இந்த்ரோங்கதேச்சைவத தொங்கதோஹி பலினிதாந்தம் ஸபபூவ ஷஷ்வத் ||78

முன்னர் பிரம்மதேவரின் மகனாக இருந்த சந்திரனே, பிரம்மதேவரின் மக்களான அத்ரி ரிஷிகளின் மகனாகப் பிறந்தான். அவனே மறுபடி அங்கதன் என்று வாலியின் மகனாகி பிறந்தான், என்று 78ம் ஸ்லோகத்தில் சொல்லியிருக்கிறார். அதே அத்தியாயம் 68ம் ஸ்லோகத்தில், அங்கதனில் இந்திரனின் ஆவேசமும் இருந்தது. ஆகையால், அங்கதன் மிகவும் பலசாலியாக இருந்தான் என்று சொல்லியிருக்கிறார். இந்த அபிப்பிராயத்தையே தாசார்யரும் 'ஸுரபனா வேஷயுதனங்கத' என்று சொல்லியிருக்கிறார்.

**தரணிகி[3]ந்த[3]லி பாத[3] பாத[3]ரெ**
**வருணனீசனு மஹபி[4]ஷக் த[3]**
**ர்து[3]ர ஸுஷேணனு ஷந்துனுவு நால்வரு வருணரூப |**
**ஸுரமுனி நாரத[3]னு கிஞ்சி**
**த்கொரதெ வருணகெ[3] அக்[3]னி ப்[4]ருகு[3] அஜ**
**கொ[3]ரள பத்னி ப்ரஸுதி மூவரு நாரத[3]னிக[3]த[4]ம ||20**

தரணிகிந்தலி = சூரியனைவிட
பாதபாதரெ = 1/4ல் 1/8 பாகம் (அல்லது ரூபாய் கணக்கில் 6 அணா எனலாம்)
வருண நீசனு = வருணன் குறைவானவன்
மஹபிஷக் = மஹாபிஷக் என்னும் ராஜனின் அவதாரம் ஒன்று
தர்துர = தவளையின் ரூபம் ஒன்று
சுஷேண = சுஷேண என்னும் கபி ரூபம் ஒன்று
ஷந்தனுவு = ஷந்தனு சக்ரவர்த்தி ரூபம் ஒன்று
நால்வரு = இந்த நான்கு அவதாரங்கள்
வருணரூப = வருணனின் அவதாரங்கள்
ஸுரமுனி = தேவரிஷியான நாரதர்
வருணகெ = வருணனைவிட
கிஞ்சித் = சிறிது பாகம்
கொரதெ = குறைவானவர்
அக்னி, ப்ருகு,
அஜ கொரள பத்னி = ஆட்டுத் தலை கொண்ட தக்ஷ பிரஜேஸ்வரனின் மனைவியான ப்ரஸூதி
மூவரு = இந்த மூவரும்
நாரதனிகெ = நாரத முனிவரைவிட
அதம = குறைவானவர்கள்.

சூரியனைவிட 6 அணா பாகம் குணங்களால் வருணன் குறைவானவன். வருணனுக்கு 4 அவதாரங்கள். மஹாபிஷக் என்னும் அரசனாக பிறந்தது ஒரு அவதாரம். வருணன் அரசனாக பிறப்பதற்கு என்ன காரணம் என்றால்: மகாபாரத தாத்பர்ய நிர்ணய 11ம் அத்தியாயத்தில்:

பூர்வோததேஸ்தீர கதேꞏப்ஜ ஸ்ம்பவே கங்காயுத: பர்வணிகூர்ணிதோப்தி: |
அவாக்ஷிபத்தஸ்ய தனௌ நிஜோதபிந்தும் ஷஷாபைனமதாப்ஜ யோனி: ||16
மஹாபிஷக்ஞ மனரேஷ்வரஸ்வம் பூத்வாபுன: ஷந்தனு நாமதேய: ||
ஜனிஷ்யஸே விஷ்ணுபதீததைஷா தத்ராபிபார்யாபவதோ பவிஷ்யதி ||17
ஷாந்தோபவேத்யே வமயோத்தஸ்வம் தனுத்வமாப்தோஸி ததஸ்சஷந்தனு: ||
இதீரித: ஸோதன்ருபோ பபூவ மஹாபிஷக்ஞமஹரே: பதாஸ்ரய: ||18
ஸதத்ர புக்த்வாசிரகால முர்னிந்தனும் விஹாயாப ஸதோவிதாது: ||
தத்ராபிதிர்ஷ்ட சுரவ்ருந்த சன்னிதௌ ததர்ஷகங்காம் ஷ்சதிதாம்பராம்ஸ்வகாம் ||19
அவாங்மகேஷுத்யுஸதஸ்ஸு கங்காம் நிரீக்ஷ்யமாணம் புனராத்மஸம்பவ: ||

உவாசபூமௌ ந்ருபதிர்பவாஷு ஷப்தோயதா த்வம் ஹி புராமதைவ ||20
இதீரிதஸ்தக்ஷணத: ப்ரதீபாத்பபூவ நாம்னான்ருபதிஸ்ச ஷந்தனு: ||

ஒரு நாள், ஒரு பர்வ காலத்தில், பிரம்மதேவர், கிழக்கு கடற்கரைக்கு வந்தார். அப்போது சமுத்திரன் (வருணன்), கங்கா சங்கமத்தினாலும், பர்வ காலமாகையாலும், அதிகமான அலைகளுடன் இருந்தான். பிரம்மதேவரின் மேல் நீர்த்துளிகளை தெளித்தான். அப்போது பிரம்மதேவர் கோபத்துடன் 'ஹே வருணனே. நீ பூமியில் மஹாபிஷக் என்னும் அரசனாகப் பிறந்து, சிறிது காலத்தில் அந்த தேகத்தை விட்டு, அடுத்து ஷந்தனு என்னும் பெயரால் ராஜகுமாரனாகி பிறப்பாய். அப்போதும் கங்கை உனக்கு மனைவியாவாள். ஷாந்தனாகு என்று என்னால் சொல்லப்பட்டதால், அப்போது உனக்கு ஷந்தனு என்ற பெயர் கிடைக்கும் என்று பிரம்மதேவர் சாபம் கொடுத்தார்.

அதன்படியே, சமுத்திரராஜனான வருணன், பரமாத்மனின் பக்தனாகி மஹாபிஷக் என்னும் பெயரில் ராஜனாகி பிறந்து, பூமியில் வெகுகாலம் அரசாண்டு வந்தான். பிறகு அந்த தேகத்தை விட்டு பிரம்மலோகத்திற்கு சென்று சேர்ந்தான். அங்கு ஒரு நாள் சபையில் அனைவரும் அமர்ந்திருக்க, மஹாபிஷக் ராஜனுக்கு மனைவியான கங்கையின் ஆடை, திடீரென்று விலக, அங்கிருந்த தேவதைகள் அனைவரும் 'னனக்னாம் ஸ்த்ரீயமீக்ஷேத' வஸ்திரம் இல்லாத ஸ்த்ரியை பார்க்கக்கூடாது என்னும் பிரமாணத்திற்கேற்ப தலை குனிந்தனர். ஆனால் இந்த ராஜன் மட்டும் அவளை பார்த்துக் கொண்டிருந்தான்.

அப்போது பிரம்மதேவர், 'நான் உனக்கு முன்னர் கொடுத்த சாபத்தின்படி, இப்போது நீ பூமியில் அரசனாகப் பிற' என்று சாபம் கொடுத்தார். அதன்படி, அவன், ப்ரதீப ராஜனின் மகனாக, ஷாந்தனு என்னும் பெயரில் பிறந்து, தன் முந்தைய மனைவியான கங்கையையே மணம் புரிந்து வெகு காலம் வாழ்ந்து வந்தான் என்று சொல்லியிருக்கிறார்.

இந்த வாக்கியங்களால், மஹாபிஷக் 1, ஷந்தனு சக்ரவர்த்தி 2; என வருணனின் இரு அவதாரங்களின் காரணம் தெரிய வருகிறது. தர்மர என்று ஒரு அவதாரம் என்று சொல்கிறார். தர்மர என்றால் தவளை. வருணன், தவளை ரூபத்தில் பரமாத்மனைக் குறித்து ஸ்தோத்திரம் செய்தான் என்று மாண்டுக்ய உபநிஷத்தில் சொல்லப்பட்டிருக்கிறது. 'மண்டுகரூபீ வருணஸ்துஷ்டவ ஹரிமவயம்'. வருணன் மண்டுக என்றால் தவளை ரூபத்தில் ஹரியை ஸ்தோத்திரம் செய்தான் என்று அர்த்தம். ஆகையால், மூன்றாம் அவதாரம் தவளை.

சுஷேண என்னும் கபிரூபம் ஒன்று. நிர்ணய 3ம் அத்தியாயம் 70ம் ஸ்லோகத்தில் 'அபூத்ஸுஷேணோவருண:' வருணன், சுஷேணன் என்னும் பெயரால் பிறந்தான் என்று சொல்லியிருக்கிறார். இப்படியாக வருணனுக்கு 4 ரூபங்கள்.

தேவரிஷியான நாரதர், வருணனைவிட சிறிது குறைவானவர். நாரதரைவிட அக்னி, ப்ருகு ரிஷிகள், தக்ஷ ப்ரஜேஷ்வரனின் மனைவியான ப்ரஸூதி இவர்கள் மூவரும் குறைவானவர்கள். தக்ஷனுக்கு அஜகொரள என்று பெயர். ருத்ரதேவரை

அவமானம் செய்வதற்காக இவன் யாகத்தை துவக்க, ருத்ரரின் மனைவியான சதிதேவி, அங்கு வந்து, தக்ஷன், ருத்ரதேவர் மேல் இருந்த த்வேஷத்தால் அவளை புறக்கணிக்க, அத்துடன் யாகத்தில் ருத்ரருக்கு ஆஹுதி கொடுக்காமல் அவர்களை அவமானம் செய்தான். தந்தையான தக்ஷனை சதிதேவி பலவிதமாக நிந்தித்து, அவள் தேகத்தை அங்கேயே விட்டுவிட்டாள்.

ருத்ரதேவர் இந்த சம்பவத்தை அறிந்து தக்ஷனின் யாகத்தை த்வம்சம் செய்து, தக்ஷனின் தலையை கத்தரித்து அக்னியில் ஆஹுதியைக் கொடுத்தார். அப்போது பிரம்மதேவர் வந்து, ருத்ரதேவரின் கோபத்தை அமைதிப்படுத்தி, தக்ஷனை மறுபடி பிழைக்க வைக்குமாறு சொல்ல, ருத்ரதேவரும் பிரம்மதேவரின் ஆணைப்படி, தக்ஷனை பிழைக்க வைத்தார். தலையை ஆஹுதி கொடுத்து விட்டதால், தக்ஷன் தலையில்லாமல் இருந்தார். ஒரு ஆட்டின் தலையை அவனுக்குக் கொடுத்து உயிரையும் கொடுத்தார். ஆகையால், அவனுக்கு 'அஜகொரள' என்று பெயர் வந்தது.

**நீல த்$^{3}$ருஷ்டத்$^{3}$யும்ன லவ இவு**
**லேலிஹானன ரூபக$^{3}$ளு ப்$^{4}$ருகு$^{3}$**
**காலலொத்து$^{3}$த்$^{3}$த$^{3}$ரிந்த$^{3}$ ஹரியனு வ்யாத$^{4}$னெனிஸித$^{3}$ரு |**
**ஏளு ரிஷிக$^{3}$ளிகு$^{3}$த்தமரு முனி**
**மௌளி நாரத$^{3}$க$^{3}$த$^{4}$ம மூவரு**
**கா$^{3}$ளியுத ப்ரஹ்லாத$^{3}$ பாஹ்லிக ராயனெனிஸித$^{3}$னு ||21**

நீல = நீல என்னும் கபி
த்ருஷ்டத்யும்ன = த்ருபத ராஜனின் மகன்
லவ = ராமதேவரின் மகன்
ஈ = இந்த மூவரும்
லேலிஹாலன ரூபகளு = அக்னியின் அவதாரங்கள்
ப்ருகு = ப்ருகு ரிஷிகள்
ஹரியனு = ஸ்ரீமன் நாராயணனை
காலலொத்துத்தரிந்த = காலால் எட்டி உதைத்ததால்
வ்யாதனெனிஸிதரு = ஜரா என்னும் வேடனாக பிறந்தார்
மூவரு = அக்னி, ப்ருகு, ப்ரஸூதி என்னும் மூவர்
ஏளு ரிஷிகளிகெ = பிரம்மதேவரின் மக்களான மரீசி முதலான ஏழு ரிஷிகளைவிட
உத்தமரு = உத்தமர்கள்
முனிமௌளி = ரிஷிகளில் சிறந்தவரான
நாரதகெ = நாரதனுக்கு அதமர்கள்
காளியுத = வாயுதேவரின் ஆவேசத்தைக் கொண்டு
ப்ரஹ்லாத = ப்ரகலாத ராஜர்
பாஹ்லிக ராயனெனிஸிதரு = பாஹ்லிக ராஜன் என்று அழைக்கப்பட்டார்.

அக்னிக்கு மூன்று அவதாரங்கள். ராமாவதாரத்தில் நீல என்னும் கபி ரூபம் 1. 'நீலோக்னி ராஸீத்' என்பது நிர்ணய வாக்கியம். இரண்டாவது த்ருஷ்டத்யும்ன ரூபம். நிர்ணய 18ம் அத்தியாயத்தில்:

புத்ரஞ்ச த்ரோணஹந்தார மிச்சன் விப்ரவரௌ யயௌ |
யாசோப யாஜாவா நீயாதார்புதேன கவான்ருப: ||93
சகாரேஷ்டிம் து தத்பார்ய த்விஜாப்யாமத்ர ஜாஹூதா ||
த்ருபதாத்ஸூத லப்த்யர்த்தம் பத்ன்யாப்ராஷ்யம் ஹவிஸ்ததா ||94
ஹூதேஹவிஷயம் த்ராப்யாம் வைஷ்ணவாப்யாம் ததைவஹி |
தீப்தாம் காரனிபோ வன்ஹி: குண்ட மத்யாத்ஸ முத்தித: ||95
கிரீடி குண்டலீ தீப்தோ ஹேமமாலி மஹாஸியான் ||
ரதேனாதித்ய வர்ணேன நதன் த்ருபத மத்ரவத் ||96
த்ருஷ்யத்வாத்யோதனத்வா ச்ச த்ருஷ்டத்யும்ன: இதீரித: ||

பீமார்ஜுனர் மூலமாக த்ரோணாசார்யர், த்ருபத ராஜனை போரில் தோற்கடித்து, அவனின் பாதி ராஜ்ஜியத்தை தான் எடுத்துக் கொண்டு அனுப்பினார். த்ருபத ராஜன், தனக்கு ஏற்பட்ட அவமானத்தால் இரவும் பகலுமாக துடித்து, பீமார்ஜுனர்களின் பலத்தை, அர்ஜுனனில் இருக்கும் பண்பினையும் பார்த்து, அர்ஜுனனுக்குக் கட்டி வைப்பதற்காக ஒரு பெண்ணையும், த்ரோணாசார்யரை கொல்வதற்கு ஒரு மகனையும் வேண்டி, யாஜோப யாஜ என்னும் பிராமணோத்தமரிடம் வந்து, அவருக்கு 10 கோடி பசுக்களை கொடுத்து, தன் நோக்கம் நிறைவேறுவதற்காக ஒரு யாகத்தை செய்தான்.

அந்த அண்ணன், தம்பிகளான யாஜ, உபயாஜ இருவரும், புத்ர சந்தானத்தைக் கொடுக்கக்கூடிய ஹவிஸ்ஸினை அபிமந்திரித்து, த்ருபத ராஜனின் மனைவியிடம் அதை கொடுக்கவேண்டி அவளை அழைத்தனர். அவளோ வருகிறேன் இருங்கள் என்று சொல்லி, தன் அலங்காரத்தில் ஈடுபட்டிருந்தாள். அவளின் மனதில், அரசகுமாரர்களை தானே பெறவேண்டும் என்றும், தானோ ராணி, இவர்களோ சாதாரண புரோகிதர்கள், எனக்காக இவர்கள் காத்திருக்கட்டும் என்று எண்ணினாள். அந்த பிராமணோத்தமர்களோ, இவளின் கர்வத்தை அறிந்து, இவளால் நமக்கு ஆவது என்ன என்று நினைத்து, அவளுக்காக அபிமந்திரித்து வைத்திருந்த இரு ஹவிஸ்ஸினையும், விஷ்ணு மந்திரத்தை சொல்லி, அக்னியிலேயே போட்டு விட்டனர்.

உடனடியாக, அக்னியே அந்த குண்டத்திலிருந்து வெளியே வந்துவிட்டான். திவ்யமான கிரீட, குண்டலங்கள், தங்க ஆபரணங்களால் அலங்கரிக்கப்பட்ட, கையில் வாளேந்தி, ரதத்தில் அமர்ந்தவாறு, எதிரிகளை கொன்றுவிடுவதைப் போல ஒருவன் வர, அவனுக்கு த்ருஷ்டத்யும்னன் என்று பெயர் வைத்தனர். அக்னி குண்டத்தில் இருந்த கட்டையிலிருந்து திரௌபதி பிறந்தாள். அக்னிக்கு த்ருஷ்டத்யும்ன ரூபம் இரண்டாவதாகும் என்று இதிலிருந்து தெரிகிறது.

அடுத்த அவதாரம் ஸ்ரீராமதேவரின் மகனான லவ. இதைப் பற்றி, முன்னர், இந்திரனின் அவதாரங்களை சொல்லும்போது, இந்திரன் குஷனாகவும், அக்னி லவனாகவும் இருவரும் இரட்டையர்களாக சீதையிடம் பிறந்தனர் என்று சொல்லி, ஆதாரங்களும் கொடுக்கப்பட்டுள்ளன. அதே ஆதாரங்களே லவ என்னும் அக்னியின் அவதாரத்திற்கும் பொருந்தும்.

பிரம்மா சிவ விஷ்ணுவில் யார் உத்தமர் என்று பார்ப்பதற்காக வந்த ப்ருகு ரிஷிகள், பிரம்மதேவருக்கு நமஸ்காரம் செய்யாமல் இருக்க, பிரம்மதேவருக்கு கோபம் வந்ததையும் அதை அவர் பொறுத்துக் கொண்டார் என்பதையும் அறிந்து, அடுத்து சிவனிடம் சென்றார். அவரோ பார்வதியுடன் சம்போகத்தில் இருந்ததால், அதே சிந்தனையில் ப்ருகு ரிஷிகளையும் ஆலிங்கனம் செய்ய வந்தார். ப்ருகு ரிஷிகள் கோபம் கொள்ள, ருத்ரரும் ப்ருகுவை கொல்ல வந்தார். அடுத்து அங்கிருந்து ரிஷிகள், விஷ்ணுவின் இடத்திற்கு வந்து, அங்கு அவர் படுத்திருப்பதைக் கண்டு, அவரை காலால் உதைக்க, பரமாத்மன் உடனடியாக எழுந்து, ப்ருகு ரிஷிகளை உபசரித்தார்.

இதனைக் கண்ட ப்ருகு ரிஷிகள், ஹரியே சர்வோத்தமன், பிரம்மதேவர் மத்யமர் என்றும், ருத்ரதேவர் இவர்களைவிட குறைவானவர் என்றும் உலகத்தில் பெயர் பெறட்டும் என்று கூறியதாக கதைகள் சொல்கின்றன. இந்தக் கதை பாகவதத்திலும், பவிஷ்யோத்தர புராணத்திலும்கூட இருக்கிறது.

பாதப்ரஹாரதோஷேண ப்ருகுந்துவ்யாததாங்கதம் |
ஸ்வாஞ்ஞாப்ராப்த விமானேன திவம் நின்யே ஜனார்த்தன: ||

பரமாத்மனை காலால் எட்டி உதைத்த தோஷத்தால் ப்ருகு ரிஷி ஜரா என்னும் வேடனாக பிறந்ததை அறிந்த ஸ்ரீகிருஷ்ணன், அவனை தன்னுடைய விமானத்தில் அமர்த்தி ஸ்வர்க்கத்திற்கு அழைத்துச் சென்றான் என்று பாகவத 11ம் ஸ்கந்தத்தின் இறுதி அத்தியாயத்தின் தாத்பர்யத்தில் சொல்லியிருக்கிறார். அதே அபிப்பிராயத்தையே இங்கு சொல்லியிருக்கிறார்.

இப்படியாக, அக்னி, ப்ருகு ரிஷி, ப்ரஸூதி இவர்கள் மூவரும் பிரம்மதேவரின் மக்களான, இதே 23ம் பத்யத்தில் சொல்லப்பட்டிருக்கும் மரீசி முதலான சப்த ரிஷிகளைவிட உத்தமர் எனப்படுகின்றனர். இவர்கள் நாரதரைவிட குறைவானவர்கள். இந்த மூவருக்கு சமனான பிரகலாதன், வாயுதேவரின் அம்சத்தைக் கொண்டு, பால்ஹிக ராஜராக பிறந்தார். நிர்ணய 11ம் அத்தியாயத்தில்:

புத்ரிகாபுத்ரதாம்யாதோ பால்ஹிகோ ராஜஸத்தம: |7
ஹிரண்யகஷிபோ: புத்ர: ப்ரஹ்லாதோ பகவத்ப்ரிய: ||
பாயுனாசஸமா விஷ்ணோ மஹாபலஸன்வித: ||8
யேனைவஜாயமானேன தரஸாபூர் விதாரிதா ||
பூபாரக்ஷபணே விஷ்ணோ ரங்கதாமாப்துமேவஸ: ||9
ப்ரதீப புத்ரதாமாப்ய பால்ஹிகேஷ்ட பவத்பதி: ||

குருவம்சத்து ராஜனான ப்ரதீபனுக்கு, தேவாபி, பால்ஹிக, ஷந்தனு என்று மூன்று மக்கள் இருந்தனர். மகளைக் கொடுத்து, மருமகனை தனக்கே கொடுக்க வேண்டும் என்று முதலிலேயே நிச்சயித்து, பெண் கொடுப்பதற்கு புத்ரிகாபுத்ரதர்ம என்று பெயர். அதன்படியே, ஹஸ்தினாபுரத்து அரசனான ப்ரதீப ராஜனின் மகனான பால்ஹிக ராஜன், தன் தாயின் தந்தையான, பால்ஹிக தேஷாதிபதிக்கு புத்ரிகாபுத்ர தர்மத்தால் கொடுக்கப்பட்டு, அந்த நாட்டிற்கு அரசனானான்.

ஹிரண்யகஷ்யபுவின் மகனான மஹா பகவத்பக்தனான பிரகலாதன், வாயுதேவரின் ஆவேசத்தினால், மஹா வீரனாக, பால்ஹிக என்னும் பெயரில் பிறந்தார். இவன் பிறந்து, பூமியின் ஸ்பர்சம் ஆனபோது, பூமியின் அந்த பாகத்தில் பிளவு ஏற்பட்டது. பரமாத்மன் பூமியில் கிருஷ்ணாவதாரம் செய்து, பூமியின் பாரத்தைக் குறைக்கும் செயலில் ஈடுபடுவதற்கு, தன்னாலான சேவை இதுவே என்று சொல்வதைப் போல இச்செயல் இருந்தது. ப்ரதீப ராஜனின் மகனாகப் பிறந்து, பால்ஹிக தேசத்திற்கு அதிபதியானார் என்று சொல்லப்பட்டிருக்கிறது.

**ஜனப கர்மஜரொளகெ$^{3}$ நாரத$^{3}$**
**முனியனுக்$^{3}$ரஹ ப$^{3}$லதி$^{3}$ ப்ரஹ்லா**
**த$^{3}$னல ப்$^{4}$ருகு$^{3}$முனி த$^{3}$க்ஷபத்னிகெ$^{3}$ ஸமனெனிஸிகொம்ப$^{3}$ |**
**மனு விவஸ்வான் கா$^{3}$தி$^{4}$ஜேர்வரு**
**அனலகி$^{3}$ந்தலி கிஞ்சிதா$^{1}$த$^{4}$ம**
**ரெணெ எனிஸுவரு ஸப்தருஷிக$^{3}$ளிகெ$^{3}$ல்ல காலத$^{3}$லி ||22**

ஜனப கர்மஜரொளகெ = முன்னர் அரசனாக இருந்து கர்மத்தினால் தேவத்வத்தைப் பெற்றவர்கள், கர்மஜர் என்று அழைக்கப்படுகின்றனர். கர்மதேவதைகளில் ஒருவனான பிரஹ்லாதன்
நாரத முனியனுக்ரஹ பலதி = நாரத முனிவரின் உபதேசத்தின் பலனாக
அனல = அக்னி
ப்ருகுமுனி,
தக்ஷபத்னி = ப்ரஸூதிதேவி; இவர்களுக்கு
சமனெனிஸிகொம்ப = சமம் எனப்படுகிறார்.
மனுவிவஸ்வான் = விவஸ்வான் என்னும் சூரியனின் மகனான வைவஸ்வத என்னும் மனு
காதிஜ = காதி ராஜனின் மக்களான விஸ்வாமித்ர ரிஷிகள்
ஈர்வரு = இந்த இருவரும்
அனலதிந்தலி = அக்னியைவிட
கிஞ்சித்தமகெ = சிறிது குறைவான
ஸப்த ரிஷிகளிகெ = மரீசி முதலான ஏழு ரிஷிகளுக்கு
எல்லகாலதலி = அனாதி முதல் அனந்த காலங்களில்
எணெ எனிஸுவரு = சமம் எனப்படுகின்றனர்.
'அனலகிந்தலி கிஞ்சிதாதமரெணெ எனிஸுவரு ஸப்தரிஷிகளிகெ' என்றும் ஒரு பாடம் இருக்கிறது. அந்த அர்த்தத்தில், வைவஸ்வத மனு, விஸ்வாமித்ர இவர்கள்

இருவரும் அக்னியைவிட சிறிது குறைவானவர்கள்; சப்த ரிஷிகளுக்கு சமர் என்று அர்த்தம்.

அரசனாக இருந்து தேவத்வத்தை அடைந்த; கர்மதேவதைகளில் ஒருவனான பிரகலாதன், அக்னி முதலானவர்களுக்கு எப்படி சமம் ஆனான் என்றால், இவன் தாயின் கர்ப்பத்தில் இருந்தபோதே நாரதரின் அருளால் பகவன் மகிமைகளை உபதேசம் செய்திருந்தார். ஆகையால், அதிகமான பகவத் பக்தியால் இந்த அக்னி முதலான மூவருக்கு சமமானார் என்று அறிய வேண்டும். வைவஸ்வத மனு, விஸ்வாமித்ரர் இவர்கள் இருவரும் அக்னி முதலான மூவரைவிட சிறிது குறைவானவர்கள். மரீசி முதலான 7 ரிஷிகளுக்கு அனைத்து காலங்களிலும் சமம் எனப்படுகின்றனர்.

**கமலஸம்ப$^{4}$வ ப$^{4}$வரெனிப ஸம்**
**யமி மரீசியு அத்ரி அங்கி$^{3}$ர**
**ஸுமதிபுலஹா க்ரது வஸிஷ்ட புலஸ்த்யமுனி ஸ்வாஹா**
**ரமணக$^{3}$த$^{4}$மரு மித்ர நாமக**
**த்$^{3}$யுமணி ராஹூயுக்த பீ$^{4}$ஷ்மக**
**யமளரூபனு தார நாமகனெனிப த்ரேதெயொளு ||23**

கமலசம்பவ = பரமாத்மனின் நாபி கமலத்திலிருந்து பிறந்த பிரம்மதேவர்
பவரெனிப = பிறந்தவர் எனப்படும்
ஸம்யம = இந்திரியங்களை வென்றவரான
மரீசியு, அத்ரி, அங்கிரஸ,
சுமதி = ஞானிகளான
புலஹ, க்ரது, வசிஷ்ட, புலஸ்த்ய, ஆகிய 7 பேர் முனிவர்களும்
ஸ்வாஹா ரமணகெ = அக்னிக்கு
அதமரு = குறைவானவர்கள்
மித்ர நாமகத்யுமணி = மித்ர என்னும் சூரியன்
ராஹூயுக்த பீஷ்மக = ராகு அம்சத்தினால் பீஷ்மக என்ற பெயரில் பிறந்தார்
த்ரைதெயொளு = த்ரேதாயுகத்தில்
தார நாமகனெனிஸி = தார நாமகளாக இருந்து
யமளரூபனு = இரு ரூபங்களைக் கொண்டிருந்தான்.

பிரம்மதேவரின் மக்களான மரீசி, அத்ரி, அங்கிரஸ, புலஹ, க்ரது, வசிஷ்ட, புலஸ்த்ய இந்த ஏழு பேர்களும், அக்னி முதலான மூவரைவிட குறைவானவர்கள். மித்ர என்னும் சூரியனுக்கு இரு ரூபங்கள். த்ரேதா யுகத்தில் தார நாமகனாக இருந்தான். ஆனால், ப்ருஹஸ்பத்யாசார்யர், தார என்னும் கபி ஆனார் என்று தாசார்யர் வாக்கியத்திலிருந்தும், நிர்ணய வாக்கியத்திலிருந்தும் தெரிகிறது. ஆகையால், மித்ரன், தார என்னும் இன்னொரு கபியாக இருந்தான் என்று அறிய வேண்டும். இதற்கு சரியான ஆதாரம் நமக்கு கிடைக்கவில்லை.

தாசார்யர், அபரோக்ஷ ஞானிகளாகையால், அனேக கிரந்தங்களை படித்தவராகையால், எந்த கிரந்தத்தின் ஆதாரத்தின் பேரில் இந்த அவதாரத்தை எழுதினார் என்று கண்டுபிடிப்பது, நம் போன்ற மந்த புத்திக்கு புலப்படவில்லை. ஸ்ரீசங்கர்ஷண ஒடெயரின் வியாக்யானத்திலும் தார என்னும் இவர் இன்னொருவர்; ப்ருஹஸ்பத்யாசார் ஆன தார என்னும் கபி வேறு என்று மட்டும் எழுதப்பட்டிருக்கிறது. அவரும் ஆதாரத்தை எழுதவில்லை.

கமலாபதி தாசரின் வியாக்யானத்தில் 'தாரனாமகனெனிஸி' என்னும் பதத்திற்கு ப்ருஹஸ்பத்யாசார்யரின் மனைவி தாரைக்கு க்ருபி என்னும் அவதாரம் இருக்கிறது என்று எழுதியிருக்கிறார். ஆனால் இங்கோ தார என்னும் ஆண்பால் பெயர் இருக்கிறது. வியாக்யானத்தில் தாரை என்று பெண்பால் பெயரை சொல்லியிருக்கிறார். இது மூலத்திற்கும், வியாக்யானத்திற்கும் சரியாக பொருந்துவதில்லை. வெவ்வேறு புத்தகங்களில் பாடங்கள் வேறாக இருக்கலாமோ என்னும் சந்தேகமும் வருகிறது. எப்படியோ, இதற்கான முடிவை கண்டுபிடிக்க முடியவில்லை.

மித்ர என்னும் சூரியனுக்கு மற்றொரு அவதாரம் பீஷ்மகராஜனின் அவதாரம். இவனில் ராகுவின் ஆவேசம் இருக்கிறது. நிர்ணய 14ம் அத்தியாயத்தில்:

ய:பூர்வமாஸதிதி சோனரஹேல்வலாப்யோ ருக்மீதி நாமச பபூவ ஸ குண்டினேஷ: ||90
பாகேத ஏவதனயஸ்ய ஸஏவ வன்ஹேர் நாம்னா ஷுசீஸ்ஸசபிதாஸ்யஹி மித்ரபாக: ||
ராஹ்வம்ஷயுக் ததனுஜெள க்ரததைகஷிகாக்யெள ||

முன்னர் மனிதர்களைக் கொன்று வந்த இல்வல என்னும் அசுரனே, ருக்மி என்னும் பெயரில் பிறந்து, குண்டினபுர அதிபதியாக இருந்தான். இவனில் ஷுசி என்னும் அக்னியின் அம்சம் இருந்தது. இவனின் தந்தையான பீஷ்மக ராஜன், ராகு அம்சத்தைக் கொண்ட மித்ர என்னும் சூரியன் என்று அறியவேண்டும் -- என்கிறார்.

**நிருதிகெ3ரட3வதார து3ர்முக2**
**ஹரயுத க4டோத்கசனு ப்ராவஹி**
**கு3ரு மட3தி3தாரா ஸமரு பர்ஜன்யகு3த்தமரு |**
**கரிகொ3ரள ஸம்யுக்த ப4க3த3**
**த்தரஸூ கத்1த2ன த4னபரூபக3**
**ளெரடு3 விக்4னப சாருதே3ஷ்ணனு அஷ்வினிக3ளு ஸம ||24**

நிருதிகெ = நிரருதிக்கு
துர்முக = துர்முக என்னும் கபி ரூபம் ஒன்று;
ஹரயுத = ருத்ரதேவரின் ஆவேசத்தைக் கொண்ட கடோத்கஜ
எரடு அவதார = என்று இரு அவதாரங்கள்
ப்ராவஹி = ப்ரவஹ வாயுவின் மனைவியான ப்ராவஹி
குருமடதி = ப்ருஹஸ்பத்யாசார்யரின் மனைவி

தாரா = தாரா தேவி
ஸமரு = முந்தைய பத்யத்தில் பார்த்த மித்ர என்னும் சூரியன், நிரருதி, ப்ராவஹி, தாரை இந்த நால்வரும் சமர்.
பர்ஜன்யகுத்தமரு = பர்ஜன்யனை விட உத்தமர்கள்
கனப = குபேரனுக்கு
கரிகொரள = நீலகண்டன் எனப்படும்
ஹரயுக்த = ருத்ரதேவரின் அம்சத்தைக் கொண்ட
பகதத்தரஸு = நரகாசுரனின் மகனான பகதத்தன்
கத்தன = கத்தனன் என்னும் கபி ரூபம் ஒன்று; என்று இரு ரூபங்கள்
விக்னப = கணபதியின் அவதாரம்
சாருதேஷ்ண = சாருதேஷ்ண என்னும் கிருஷ்ணனின் மகனின் ரூபம்
இந்த கணபதி, குபேரன்,
அஸ்வினிகள சம = அஸ்வினி தேவதைகளுக்கு சமமானவர்கள்.

நிர்ருதிக்கு துர்முக என்னும் கபி ரூபம் ஒன்று. கடோத்கஜ என்னும் ரூபம் இன்னொன்று. என மொத்தம் இரு ரூபங்கள் இருக்கின்றன. பீமசேனதேவரின் மகனான கடோத்கஜனில், ருத்ரதேவரின் ஆவேசம் இருந்தது. இந்த நிரருதிக்கு சமர், ப்ரவஹ வாயுவின் மனைவி. ப்ராவஹி, ப்ருஹஸ்பத்யாசார்யரின் மனைவி தாரை. இவர்கள் இருவரும் பர்ஜன்யனைவிட 2 குணங்கள் உத்தமர்கள். தாரதம்ய கௌஸ்துபத்தில் சொல்லப்பட்டிருக்கும் :

மஹாபலீ ருக்முகஸ்ச ருத்ரயுக்தோ கடோத்கச: |
த்வாவேதௌனிர்ருதி: பூர்வம் ||

என்னும் வாக்கியம் நிர்ருதியின் அவதாரங்களுக்கு ஆதாரம் என்று அறியவேண்டும்.

குபேரனுக்கு கத்த என்னும் கபி ரூபம் மற்றும் நரகாசுரனின் மகன் பகதத்தனின் ரூபம் ஒன்று, என மொத்தம் இரு ரூபங்கள். 'ஸகத்தனோவித்தபதி:' என்று நிர்ணய 8ம் அத்யாயத்தில் சொல்லியிருக்கிறார். பகதத்தனில் ருத்ரதேவரின் அம்சம் இருந்தது. நிர்ணய 11ம் அத்தியாயத்தில்

வித்தேஷ்வர: பூர்வமபூத்தி பௌமாந்தரே: ஸுதத்வேபி ததிச்சயாஸுராத் ||
பாபேன தேனாபஹ்ருதோ ஹி ஹஸ்தே ஷிவப்ரதத்த: ஸுப்ரதீகாபிதான: ||32
ததர்த்தமேவாஸ்ய ஸுதொபிஜாதோ தனேஷ்வரோ பகதத்தாபிதேய: ||
மஹா ஸூரஸ்யாம்ஷயுத: ஸ ஏவ ருத்ராவேஷாத் பலவானஸ்த்ரவாம்ஸ்ச ||

கிருஷ்ணாவதாரத்திற்கு முன்னர், தேவதைகள் அனைவரும் அவனின் சேவைகளை செய்வதற்காக அவர்களும் பிறக்க வேண்டும் என்று பிரம்மதேவரின் ஆணை வந்தது. இதற்கு என்ன காரணம் என்றால், குபேரனுக்கு ருத்ரதேவர் கொடுத்திருந்த சுப்ரதீக என்னும் யானையை, பாபியான நரகாசுரன் அபகரித்திருந்தான். அந்த யானையைப் பெறவேண்டும் என்பதற்காக, குபேரன், பகதத்தன் என்னும் பெயரில் நரகாசுரனின் மகனாகப் பிறந்தான். நரகாசுரன் உயிருடன் இருந்த வரை,

பகதத்தனிடம் நரகாசுரனின் ஆவேசம் இருந்தது. நரகாசுரன் இறந்தபிறகு, அசுராவேசம் மறைந்தது. இவனில், ருத்ர ஆவேசமும் இருந்ததால், மிகப்பெரிய வீரனாக இருந்தான் என்று கூறுகிறார்.

இப்படி குபேரனுக்கு இரு அவதாரங்கள். விக்னேஸ்வரனுக்கு ஒரேயொரு அவதாரம். நிர்ணய 20ம் அத்தியாயத்தில்:

பைஷ்ம்யா அபிசாருதேஷ்ண: ||
ஸசாருதேஷ்ணோபிஹி விக்னராஜ: ||

ஸ்ரீகிருஷ்ணன் - ருக்மிணியரிடம் சாருதேஷ்ணை என்னும் மகன் பிறந்தான். அந்த சாருதேஷ்ணையே முன்னர் விக்னேஷ்வரன் என்று சொல்கிறார். இதே வாக்கியத்தையே தாசார்யர் இங்கு சொல்லியிருக்கிறார். இந்த குபேரன், கணபதி, அஸ்வினி தேவதைகளுக்கு சமம் எனப்படுகிறான்.

**த்$^{3}$ரோண த்$^{4}$ருவ தோ$^{3}$ஷா$^{2}$ர்க அக்$^{3}$னி**
**ப்ராண த்$^{3}$யு விபா$^{4}$ வஸுக$^{3}$ளெண்டு க்ரு**
**ஷானு ஸ்ரேஷ்ட த்$^{3}$யுநாம வஸுபீ$^{4}$ஷ்மார்ய பி$^{3}$ரம்மயுத |**
**த்$^{3}$ரோண நாமக நந்த$^{3}$கோ$^{3}$ப ப்ர**
**தா$^{4}$ன அக்$^{3}$னியனுளிது$^{3}$ ஏளு ஸ**
**மானரெனிபரு தம்மொளகெ$^{3}$ ஞானாதி$^{3}$ கு$^{3}$ணதி$^{3}$ந்த$^{3}$ ||25**

த்ரோண, த்ருவ, தோஷ, அர்கனு, அக்னி, ப்ராண, த்யு, விபாவசு - ஆகியோர்
வசுகளெண்டு = எட்டு பேர் வசுக்கள்
க்ருஷானு ஸ்ரேஷ்ட = இவரில் முக்கியமானவன் அக்னி
த்யு நாமவஸு = த்யு என்னும் பெயருள்ள வசு
பிரம்மயுத = பிரம்மதேவரின் அம்சத்தைக் கொண்டவன்
பீஷ்மார்ய = பீஷ்மாசார்யர் என்று பிறந்தான்.
த்ரோண நாமக = த்ரோண என்னும் வசு
நந்தகோப = நந்தகோபனாக பிறந்தான்
ப்ரதான அக்னியனுளிது = எட்டு வசுக்களில் ப்ரதானனான அக்னியைத் தவிர
ஏளு = மற்ற ஏழு பேர்
தம்மொளகெ ஞானாதி குணதிந்த = ஞானாதி குணங்களால்
சமானரெனிபரு = சமம் எனப்படுகிறார்கள்

நவகோட்யோஹி தேவானாம் சேஷாம் மத்யேஷதத்ஸது ||
ஸோமாதிகாரோ வேதோக்தோ ||

என்னும் தாரதம்ய சங்க்ரஹத்தின் வாக்கியத்திற்கேற்ப, இருக்கும் 9 கோடி தேவதைகளில், வெறும் 100 பேருக்கு மட்டுமே சோமபானம் குடிப்பதற்கு தகுதி என்று வேதத்தில் சொல்லப்பட்டிருக்கிறது. அந்த 100 பேரில், சிலரின் தாரதம்யம் முன்னர் சொல்லப்பட்டிருக்கிறது. மற்றவர்களின் அவதாரங்களை, தாரதம்யத்தை இங்கு சொல்கிறார். அந்த 100 பேரில் 8 பேர் வசுக்கள். த்ரோண, த்ருவ, தோஷ,

அர்கனு, அக்னி, ப்ராண, த்யு, விபாவசு ஆகியோர். இவரில் அக்னி சிறந்தவன். அவனின் தாரதம்ய அவதாரங்களை இந்த சந்தியின் 21ம் பத்யத்தில் 'நீலத்ருஷ்டத்யும்ன லவனீலேலி ஹாலன ரூபகளு' என்னும் பத்யத்தில் பார்த்தோம். மற்ற 7 பேர் வசுக்கள் தமக்குள் பல, ஞானாதி குணங்களால் சமானர் என்பது கருத்து.

இதில் த்யு நாமக வசு, பிரம்ம ஆவேசத்தைக் கொண்டு, பீஷ்மாசார்யராக பிறந்தான். நிர்ணய 11ம் அத்தியாயத்தில்: 'அதாஷ்டவோ வசுராஸீத்யுனாமா' என்னும் 22ம் ஸ்லோகத்தில் துவங்கி, 37ம் ஸ்லோகம் வரைக்கும் பீஷ்மாசார்யரின் பிறப்பின் காரணங்கள் சொல்லப்பட்டிருக்கிறது. கிரந்தம் பெரிதாகிவிடும் என்பதால் அந்த ஸ்லோகங்களை இங்கு எழுதவில்லை. அதன் விளக்கங்களை மட்டும் கூறுகிறோம்.

அஷ்ட வசுக்களில் 8ம் வசுவான த்யு நாமக வசுவிற்கு வராங்கி என்னும் மனைவி இருந்தாள். சுவிந்தன் என்னும் ராஜனின் மனைவியான வராங்கி என்பவள் இவளுக்கு தோழியாக இருந்தாள். ராஜகுமாரியானாலும் மனித குலத்தவர் ஆகையால், அவளுக்கு முதுமை வந்தது. வசு மனைவியான வராங்கிக்கு தன் தோழியையும் தன்னைப் போலவே 'ஜராமரண' இல்லாமல் செய்யவேண்டும் என்னும் விருப்பம் வந்தது. அதற்காக, வசிஷ்டரிடம் இருந்த நந்தினி என்னும் காமதேனுவை இழுத்து வரவேண்டும் என்று தன் கணவனிடம் கூறினாள். ஏனெனில், காமதேனுவின் பால் அமிர்தத்திற்கு சமானமாகும். ஆகவே அதைக் குடித்தால் மரணம் வராது என்று அறிந்து, அந்த பாலை தன் தோழிக்குக் கொடுக்க வேண்டும் என்பதே அவளின் விருப்பம்.

மனைவியின் விருப்பத்தை நிறைவேற்ற, த்யு, மற்ற ஏழு வசுக்களின் உதவியையும் கோர, அவர்களும் இவனுடன் சேர்ந்து கொள்ள, மொத்தம் 8 வசுக்களும் வசிஷ்டரின் ஆசிரமத்திற்குச் சென்று காமதேனுவை இழுத்து வர முயன்றனர். அப்போது வசிஷ்டரில் பிரம்மதேவர் நிலைத்திருந்து, அவர்களை சபித்தார்.

'நீங்கள் அனைவரும் அதர்மத்தில் ஈடுபட்டதால், உடனடியாக மனிதர்களாக பிறக்கக் கடவீர்கள். யாருக்காக நீங்கள் ஏழு பேரும் தர்மத்தை விட்டீர்களோ, அந்த ஒரு த்யு வசுவைத் தவிர மற்றவர்கள், அங்கு பிறந்தவுடன் தேகத்தை விட்டு உங்கள் இடத்தை திரும்பப் பெறுவீர்கள். த்யு வசு மட்டும் உங்கள் எட்டு பேரின் ஆயுளைப் பெறட்டும். அவனை துர்மார்க்கத்தில் தள்ளிய அவனது மனைவி வராங்கி, அம்பா என்னும் பெயரில் மனிதப்பிறவியில் பிறந்து, கணவன் இல்லாமல், புருஷ ஷரீர பிரவேசத்தால் பதியைக் கொல்வதற்கு காரணமாகட்டும். இவன் பிரம்மசர்யத்தை பின்பற்றட்டும். அந்த தம்பதிகளுக்கு விரோதம் உண்டாகட்டும். இவன் தன் இறுதிக் காலத்தில், முட்படுக்கையில் படுத்து, உங்கள் 8 பேரின் கர்ப்ப வேதனையை அனுபவிக்கட்டும். போரில் பலமான அஸ்திர சஸ்திரங்களால் அடிபட்டு, உடம்பு முழுக்க காயம் பட்டு, 8 பேரின் மரண வேதனையை அனுபவிக்கட்டும்' என்று சாபம் கொடுத்தார்.

அப்போது அந்த எட்டு வசுக்களும், தங்களுக்கு சாபம் கொடுத்தவர் பிரம்மதேவரே என்று அறிந்து, பசுவை விடுவித்து, அவரை வணங்கி, 'எங்களுக்கு மனுஷ்ய, ஸ்த்ரி கர்ப்ப சம்பந்தம் இல்லாதவாறு அருளுங்கள். த்யு நாமகன் புகழைப் பெற்றும், அஸ்த்ரக்ஞனாகவும், இருப்பது மட்டுமல்லாமல் உங்களின் ஆவேசமும் அவனில் இருந்து நம் அனைவரின் பலமும் அவனுக்கு இருக்குமாறு அருளவேண்டும்' என்று வேண்டிக் கொண்டனர். 'அப்படியே ஆகட்டும்' என்று பிரம்மதேவர் வரமளித்தார்.

அடுத்து வசுக்கள் அனைவரும் கங்கையின் அருகில் வந்து, சாபத்தை அவளுக்கு தெரிவித்து, 'நீங்களே நம் அனைவரையும் கர்ப்பத்தில் தரித்து, த்யு நாமகனை மட்டும் விட்டு, மற்ற 7 பேரை, நாங்கள் பிறந்த உடனேயே கொன்றுவிட வேண்டும். இப்படி செய்வதால், உங்களுக்கு சிசு ஹத்யா தோஷம் வராதவாறு நாங்கள் வரத்தைக் கொடுக்கிறோம்' என்று வேண்ட, கங்கையும் அதற்கு ஒப்புக் கொண்டாள்.

குருவம்சத்து அரசனான ப்ரதீப ராஜன், மிருக வேட்டைக்கு வந்து, கங்கா தீரத்திற்கு வந்தபோது, திவ்ய ஸ்த்ரீ ரூபத்தைப் பெற்று, இவனின் வலது துடையின் மேல் அமர்ந்து 'நீ எனக்கு பதி ஆகு' என்று கேட்டாள். அதற்கு அவன், 'மனைவி அமர வேண்டியது இடது. நீயோ வலது துடையின் அமர்ந்தாய். ஆகவே நீ என் மகள் அல்லது மருமகள் ஆக வேண்டும். நீயே என் மருமகள் ஆகிறாயா' என்று கேட்டான். இவளின் நோக்கமும் அப்படியே இருந்தது.

ஏனெனில், கங்கையின் பதியான வருணனே இவனது மகனாக ஷந்தனு என்ற பெயரில் பிறந்திருப்பதை அறிந்திருந்தாள். ஷந்தனுவின் மனைவியாகவே தான் வரவேண்டும் என்பதற்காகவே ப்ரதீபனின் வலது துடையில் அமர்ந்தாள். எவ்வித பிரச்னையும் இன்றி 7 குழந்தைகளையும் கொல்லும் நோக்கத்தில், ப்ரதீப ராஜன், எனது மருமகள் ஆகு என்று சொன்ன உடனேயே, 'நான் உன் மகனை திருமணம் செய்த பிறகு, நீ யார் என்று என்னை கேட்கக்கூடாது. நான் எந்த கெட்ட செயல்களை செய்தாலும் அதை தடுக்கக்கூடாது. அதன் காரணத்தை கேட்கக்கூடாது. இந்த மூன்றில் ஏதாவது ஒன்றை செய்தாலும், நான் உன் மகனை விட்டு போய்விடுவேன். இதற்கு சம்மதமானால், நான் உனக்கு மருமகள் ஆகிறேன்' என்று கூறினாள்.

ப்ரதீபனும் இவை அனைத்திற்கும் ஒப்புக்கொண்டு, 'மூன்று மக்களில் உனக்கு யாரை திருமணம் செய்ய வேண்டும்' என்று கேட்க, 'நான் ஷந்தனுவை விரும்புகிறேன்' என்றாள். ராஜனும், இந்த கதையை ஷந்தனுவிற்கு சொல்லி, கங்கையை அவனுக்கே திருமணம் செய்து வைத்தான். ரிஷியின் சாபத்தின்படியே இந்த 8 வசுக்களும் அவளின் கர்ப்பத்தில் பிறந்தனர். அதில் ஏழு பேரை அவள் உடனே கொன்றுவிட்டாள். எட்டாவதாக பிறந்த குழந்தையை கொல்வதற்காக, கணவனின் முன் அந்தக் குழந்தையை கொல்லப் போவதாக சொல்ல, அப்போது ஷந்தனு சக்ரவர்த்தி இவளின் கையைப் பிடித்து ' நிறுத்து, யார் நீ? ஏன் இப்படி எல்லா குழந்தைகளையும் கொல்கிறாய்? இதன் காரணம் என்ன? இந்தக் குழந்தையைக் கொல்ல வேண்டாம்' என்றான்.

உடனே அக்குழந்தையைக் கொல்வதை விட்டு, அனைத்து காரணங்களையும் விளக்கமாக அவனிடம் சொல்லி, தான் முன்னர் சபதம் செய்ததைப் போல, அவனை விட்டுப் புறப்பட்டாள். அந்த எட்டாவது மகனே பீஷ்மாசார்யர். பிரம்ம அம்சத்தைக் கொண்டு பிறந்தவர் என்று பாரதத்திலும், நிர்ணயத்திலும் சொல்லப்பட்ட கதையின் சாராம்சம் இங்கு சொல்லப்பட்டுள்ளது.

த்ரோண நாமக வசு நந்தகோபனாகப் பிறந்தான். நிர்ணய 11ம் அத்தியாயத்தில்:

ததைவாயோத்ரோண நாமவஸு: ||224
ஸ்வபார்யயா தரயா த்வத்ப்த்ருத்வம் ப்ராப்த்யும் தபஸ்தேப உதாரமானஸ: ||
தஸ்ம்யை வர: ஸமயாஸன்னிஸ்ருஷ்ட: ஸஜாஸ நந்தாக்ய
உதாஸ்யபார்யா நாம்னா யஷோதா ஸச ஷூரதாதஸுதஸ்ய வைஷ்யப்ரபவோஹிகோப: ||225
(பரமாத்மனை தேவதைகள் பிரார்த்திக்கும் கட்டம்)

இதன்படி, த்ரோண என்னும் வசு தன் மனைவியுடன் உன் (பகவந்தனின்) தந்தையாக வேண்டும் என்று தவம் செய்தான். அதைப்போல, 'நான் (பிரம்மதேவர்) அவனுக்கு அந்த வரத்தினைக் கொடுத்திருக்கிறேன். அவன் கோகுலத்தில் நந்தகோபன் என்றும், அவனின் மனைவி யசோதை என்றும் பிறந்திருக்கிறார்கள். நந்தகோபன் ஷூரராஜன் மூலமாக ஒரு வைஷ்ய ஸ்த்ரியிடம் பிறந்து, கோபாலகராக இருக்கிறான். நீ வசுதேவனிடம் அவதரித்து நந்தகோபனின் வீட்டுக்கு சென்று வசிக்க வேண்டும்' என்று கூறினார். இப்படி த்ரோண என்னும் வசுவிற்கு ஒரு அவதாரம் என்று அறியவேண்டும்.

**பீ$^4$ம ரைவத ஓஜஜைகப**
**தா$^3$மஹான் ப$^3$ஹுரூபகனு ப$^4$வ**
**வாம உக்$^3$ர வ்ருஷாகபி அஹிர்பு$^3$த்$^4$னி எனுதிப்ப |**
**ஈ மஹாத்மர மத்$^3$யதொ$^3$ளகெ$^3$ உ**
**மாமனோஹர நுத்தமனு த$^3$ஷ**
**நாமகரு ஸமரெனிஸிகொம்ப$^3$ரு தம்மொளெந்தெ$^3$ந்து$^3$ ||26**

பீம, ரைவத, அஜ, அஜைகபாத், மஹான், பஹுரூபகனு, பவ, காம, உக்ர, வ்ருஷாகபி, அஹிர்புத்னி எனுதிப்ப = இப்படி 11 பேர் ருத்ரர்களாவர்.
ஈ மஹாத்மர மத்யதொளகெ = இவர்களில்
உமா மனோஹரனு = பவ நாமகரான, பார்வதி பதியானவர் சிறந்தவர்
உத்தமனு = சிறந்தவன்
தஷ நாமகரு சமரெனிஸிகொம்பரு = அவனைத் தவிர மற்றவர்கள் தங்களுக்குள் சமம் எனப்படுவர்
தம்மொளெந்தெந்து = எந்த காலத்திலும்

மேலே கூறிய 11 ருத்ரர்களில், பவ என்னும் பெயர் கொண்ட பார்வதி பதி உத்தமர் ஆகிறார். மற்ற 11 பேரும் தமக்குள் அனைவரும் சமமானவர்கள் என்று அறியவேண்டும்.

**பூ4ர்யஜைக பதா3ஹ்வஹிர்பு3**
**த்4னியரிது3 ருத்3ரக3ணஸம்யுத**
**பூ4ரிஸ்ரவனெந்தெ3னிப ஷல விருபாக்ஷ நாமகனு ।**
**ஸூரிக்ருப விஷ்கம்ப4 ஸஹதே3**
**வாரணாக்3ரணி ஸோமத3த்தனு**
**தா ரசிஸித3 த்3விரூப த4ரெயொளு பத்ர தாபகனு ।।27**

அஜைகபதாஹ்வய = அஜைகபாத் என்னும் ருத்ரர்
பூரி = பூரி ராஜனாக பிறந்தார்
அஹிர்புத்னி = அஹிர்புத்னி என்னும் ருத்ரர்
ஈரைது ருத்ரகண சம்யுத = 10 ருத்ரர்களின் அம்சத்தைக் கொண்டு
பூரிஸ்ரவனெந்தெனிப = பூரிஸ்ரவ ராஜன் என்று அழைத்துக் கொண்டான்
விரூபாக்ஷ நாமகனு = விரூபாக்ஷ என்னும் ருத்ரன்
ஷல = ஷல ராஜன் ஆனான்
விஷ்கம்ப = அந்த பெயர் கொண்ட ருத்ரர்
ஸூரி = ஞானியான
க்ருப = க்ருபாசார்யராக பிறந்தார்
சஹதேவ = ஜராசந்தனின் மகனான சஹதேவ
ரணாக்ரணி = போர்க்களத்தில் சூரனான சோமதத்தன்
த்விரூப = என்னும் இந்த இரு ரூபங்களை
பத்ரதாபகனு = பத்ரதாபகன் என்னும் ருத்ரர்
தரெயொளு = பூமியில்
தாரசிஸித = தான் ஸ்ருஷ்டித்தான். அதாவது, இரு ரூபங்களில் அவதரித்தான்.

அஜைகபாத், அஹிர்புத்னி, விரூபாக்ஷ என்னும் மூன்று ருத்ரர்கள் சோமதத்தனின் மக்களாக பூரி, பூரிஸ்ரவ, ஷல என்னும் பெயர்களில் பிறந்தனர். இந்த மூவரின் தந்தையான (பிரகலாத ராஜனின் அம்சம், பால்ஹிக ராஜனின் மகனான) சோமதத்தன், பத்ரதாப என்னும் ருத்ரரின் அவதாரமே. நிர்ணய 11ம் அத்தியாயத்தில்:

ப்ரதீபபுத்ர தாமாப்ய பால்ஹிகேஷ்ட பவத்பதி: ।
ருத்ரேஷு பத்ரதாபாக்ய: ஸோமதத்தோஸ்ய சாத்மஜ: ।।11
அஜைகபாதஹிர்புத்னிர் விரூபாக்ஷ இதித்ரய: ।
ருத்ராணாம் ஸோமதத்தஸ்ய பபூவு: ப்ரதிதா: ஸுதா: ।
விஷ்ணோரேவாங்கதா: ப்ராப்தும் பூரிர் பூரிஸ்ரவா ஷல: ।।
ஷிவாதி ஸர்வருத்ராணாம் ஆவேஷாத்வரதஸ் ததா ।।12
பூரிஸ்ரவா அதிபலஸ்யத்ராஸீத் பரமாஸ்த்ரவித் ।
ததர்த்தம்ஹி தபஸ்சீர்ணம் ஸோமதத்தேன ஷம்பவே ।।13
தத்தோ வரஸ்சதேனாஸ்ய த்வத்ப்ரதீபாபி பூதிக்ருத் ।।
பலவீர்ய குணோபேதோ நாம்னா பூரிஸ்ரவா: ஸுத: ।।14
பவிஷ்யதி மயாவிஷ்ணோ யக்ஞஷீல இதிஸ்மஹ ।।

தேனபூரிஸ்ரவா ஜாத: ஸோமதத்த ஸுதோபலி: ||15

ப்ரதீப ராஜனின் மக்கள் தேவாபி, பால்ஹிக, ஷந்தனு என்னும் மூவர். அவர்களில் பிரகலாதன் பால்ஹிக ராஜனாக அவதரித்திருக்கிறான் என்று 21ம் பத்யத்தில் பார்த்தோம்.

ருத்ரர்களில் பத்ரதாப என்னும் ருத்ரன் ஸோமதத்தன் என்னும் பெயரில் பால்ஹிக ராஜனின் மகனாக பிறந்தான். அஜைகபாத், அஹிர்புத்னி, விரூபாக்ஷ என்னும் மூன்று பேர் ருத்ரர், பூரி, பூரிஸ்ரவ, ஷல என்னும் பெயர்களில் இவனின் மக்களாகப் பிறந்தனர். அவர்களில் பூரிஸ்ரவ ராஜன், உமாபதியான ஷிவ முதலான அனைத்து ருத்ரரின் ஆவேசத்தாலும், வர பலத்தாலும், மகா பலசாலியாக இருந்தான். வரபலம் என்னவெனில், முன்பு, சோமதத்தன், ருத்ரரைக் குறித்து இத்தகைய மகன் பிறக்கவேண்டும் என்று தவம் செய்தான்.

அப்போது ருத்ரதேவர் ‘உன் எதிரியைக் கொல்லும் சக்தியைக் கொண்டவனான, பல, வீர்ய, குண இவற்றில் சிறந்தவனான பூரிஸ்ரவ என்னும் மகன் உனக்கு பிறப்பான். அவனில் என் ஆவேசமும் இருக்கும். நிர்ணய 11ம் அத்தியாயத்தில்:

ஷரத்வாம்ஸ்து தப: குர்வன் ததர்ஷ ஸஹஸோர்வஷேம் |
சஸ்கந்த ரேதஸ்தஸ்யாத ஷரஸ்தம்பே ததோ பவத் ||57
விஷ்கம்போ நாமருத்ராணாம் பூபார ஹரணேऽம்கதாம் ||
ஹரே: ப்ராப்தும் ததாதார பார்யாயாஹி ப்ருஹஸ்பதே: ||58
தாவுபௌ ஷந்தனுர்த்ருஷ்ட்வா க்ருபாவிஷ்ட: ஸ்வகம்க்ருஹம் ||
நினாய நாமசக்ரேத க்ருபாயாவிஷயௌ யத: ||59
க்ருப: க்ருபீதி ||

ஷரத்வான் என்னும் ரிஷி தவம் செய்து கொண்டிருக்கும்போது, ஊர்வசியைப் பார்க்க, இவரது வீர்யம் வெளிப்பட்டு, அது கீழே இரு பாகங்களாக விழ, அங்கிருந்து ஒரு ஆண் குழந்தை ஒரு பெண் குழந்தை பிறந்தன. அந்த ஆண் குழந்தையே விஷ்கம்ப என்னும் ருத்ரர். பரமாத்மன் பூ-பார ஹரணத்திற்காக பூமியில் பிறக்கப் போகிறான். அந்த உத்தம செயலில் நான் பங்கேற்கப் போகிறேன் என்று சொல்லி, அங்கு பிறந்தார். மகள், ப்ருஹஸ்பத்யாசார்யர், த்ரோணாசார்யராக பிறந்திருக்கிறார் என்று அறிந்து தான் அவரது மனைவியாக வேண்டும் என்பதற்காக தாரை அங்கு பெண் குழந்தையாக பிறந்தாள்.

மிருக வேட்டைக்கு வந்த ஷந்தனு, இந்த இரு குழந்தைகளையும் பார்த்து, அவர்களை வீட்டுக்குக் கொண்டு வந்து வளர்க்கத் துவங்கினான். ஆண் குழந்தைக்கு க்ருப என்றும், பெண் குழந்தைக்கு க்ருபெ என்றும் பெயர் சூட்டினான் என்று சொல்லப்பட்டிருக்கிறது. இந்த க்ருபாசார்யரே, விஷ்கம்ப என்னும் ருத்ரர் என்று அறியவேண்டும்.

110 ருத்ரரில் பத்ரதாப, விரூபாக்ஷ, நிஷ்கம்ப இவர்கள் சேரவில்லை. இந்த ருத்ரர் யாரென்றால், 11 ருத்ரர்களைத் தவிர, மேலும் கோடி ருத்ரர்கள் இருக்கின்றனர்.

அவர்களில் இவரே பிரதானமானவர் என்று அறியவேண்டும். பாகவத 6ம் ஸ்கந்தம் 9ம் அத்தியாயத்தில்:

பூதஸ்ய பார்யா பூதாயா ருத்ரா வேகாதஷஸ்க்ருதா: |
சுரூப்யாऽஸூத பூதஸ்ய பார்யா ருத்ராம்ஷ கோடஷ: ||17

தக்ஷப்ரஜேஷ்வரன், ப்ராசேதசனாக பிறந்து 60 பெண் குழந்தைகளைப் பெற்றான். அவர்களில் பூத என்பவருக்கு 2 பெண் குழந்தைகள் பிறந்தன. பூதெ மற்றும் சுரூபே என்பது அவர்களின் பெயர். இந்த பூதெயில் 11 ருத்ரர்கள் பிறந்தனர். சுரூபெயிடம் கோடி ருத்ரர்கள் பிறந்தனர் என்று சொல்கிறார்.

இந்த ஆதாரத்தினால் விஷ்கம்பாதிகள், அந்த ருத்ர கணத்தை சேர்ந்தவர்கள் என்று அறியவேண்டும். ருத்ரனுக்கு சோமதத்த ரூபம் மட்டுமல்லாமல், இன்னொரு அவதாரமும் உண்டு. அது என்னவெனில், ஜராசந்தனின் மகன் சஹதேவன். நிர்ணய 21ம் அத்தியாயத்தில்:

இதிஸ்ம பீமம்ப்ரதியோதனாய ஸங்க்ருஹ்யராஜா ஸஜராஸுதோ பலீ |
ராஜ்யே நிஜம்ஜாத்மஜ மப்ருஷிம்ஜத் புராக்யாதம் பத்ரதாபாக்யருத்ரம் ||150

ஜராசந்தனைக் கொல்வதற்காக, ஸ்ரீகிருஷ்ணன், பீமசேனர், அர்ஜுனன் இம்மூவரும் வந்து, 'உன்னுடன் போர் புரிவதற்கு எங்கள் மூவரில் யாராவது ஒருவரைத் தேர்ந்தெடு' என்று சொல்ல, ஜராசந்தன், பீமசேனனை தேர்ந்தெடுத்தான். போருக்கு முன், ஜராசந்தன் தன் அரசில் தன் மகனுக்கு பட்டாபிஷேகம் செய்வித்தான். அந்த மகனே முன்னர், பத்ரதாப என்னும் ருத்ரர் என்று சொல்லியிருக்கிறார். இப்போதைய இவன் பெயரை சொல்லவில்லை. வெறும் மகன் என்றே சொல்லியிருப்பார். ஆனால், இவனே சஹதேவன் என்று எப்படி சொல்லமுடியும் என்றால், இதே அத்தியாயம் 166ம் ஸ்லோகத்தில், ஜராசந்தனின் சம்ஹாரம் ஆனபிறகு:

சுதோயயௌ ஷரணம் தான் ரமேஷ பீமார்ஜுனாம் ஸஹதேவோஸ்யதீயாம் ||

தன் தந்தையை பீமசேனர் கொன்றுவிட, ஜராசந்தனின் மகனான சஹதேவன், கிருஷ்ண பீமார்ஜுனரிடம் முறையிட்டான். சிறந்த ஒரு ரதத்தில், தன் தங்கையை பீமசேனனுக்கு திருமணம் செய்து கொடுக்க வேண்டி நினைத்தான். பீமசேனன், அந்த பெண்ணை, தன் தம்பியான சகதேவனுக்கு மணம் செய்து கொடுக்கிறேன் என்றார். இந்த ஆதாரத்தினால், சஹதேவன் என்னும் ஜராசந்தனின் மகனே, பத்ரதாப என்னும் அவதாரத்தைக் கொண்டிருக்கிறான் என்று நிச்சயமாயிற்று. அதாவது, பத்ரதாப என்னும் ருத்ரனுக்கு, சஹதேவ, சோமதத்த என்னும் இரு அவதாரங்கள் இருக்கிறது என்பதை பார்த்தாயிற்று.

**தே³வஷக்ர உருக்ரமனு மி**
**த்ரா வருண பர்ஜன்ய ப⁴க³ பூ¹**
**ஷா விவஸ்வான் ஸவித்ரு தா⁴தா ஆர்யம த்வஷ்ட |**

**தே³வகி ஸுதனலி ஸவித்ரு வி**
**பா⁴வஸூஸுத பா⁴னு எனிஸுவ**
**ஜ்யாவனபயுத வீரஸேனனு த்வஷ்ட நாமகனு ||28**

தேவ = தேவதைகளைவிட உத்தமனான
ஷக்ர = ஷக்ர என்னும் இந்திரதேவன்
உருக்ரம, மித்ர, வருண, பர்ஜன்ய, பக, பூஷா, விவஸ்வான், ஸவிதா, தாதா, ஆர்யமா, த்வஷ்டா = என்னும் 12 ஆதித்யர்

(அதிதியின் மக்கள் என்று அர்த்தம்). இந்த 12 ஆதித்யரில்
ஸவித்ரு விபாவஸு = ஸவிதா என்னும் சூரியன்
தேவகிஸுதனல்லி = ஸ்ரீகிருஷ்ணனிடம்
ஸுத = சத்யபாமையின் மகனாகப் பிறந்து
பானுயெயிஸுவ = பானு என்னும் பெயரைக் கொண்டான்
ச்யாவனபயுத = யமதேவரின் அம்சத்தைக் கொண்டு
த்வஷ்ட்ரு நாமகனு = த்வஷ்ட்ரு என்னும் சூரியன்
வீரஸேனன் = பாண்ட்ய தேசாதிபதியான வீரசேன, அரசன் என்று சொல்லிக் கொண்டான்.

அதிதியின் மக்களான ஆதித்யர்கள் 11 பேர். ஷக்ர, உருக்ரம, மித்ர, வருண, பர்ஜன்ய, பக, பூஷா, விவஸ்வான், ஸவிதா, தாதா, ஆர்யமா மற்றும் த்வஷ்டா. இவர்களில் ஸவிதா என்னும் சூரியன், கிருஷ்ண - சத்யபாமா இவர்களுக்குப் பிறந்தான். நிர்ணய 20ம் அத்தியாயத்தில்:

விவஸ்வதோயோsவரஜோsதிதே: ஸுதோ க்யாதஸ்ச நாம்னாஸ்விதேதி க்ருஷ்ணாத் ||141
ஜாத: ஸஸத்யாஜடரேத்ர நாம்னாபானுஷ்ச ||

விவஸ்வான் என்னும் சூரியனின் தம்பியான ஸவிதா என்னும் சூரியன், சத்யபாமையின் வயிற்றில் பானு என்னும் பெயரில் பிறந்தான் என்று சொல்கிறார். த்வஷ்டா என்னும் சூரியன், யமனின் ஆவேசத்தைக் கொண்டு, பாண்டிய தேசாதிபதியான வீரசேனனாக பிறந்தான். நிர்ணய 20ம் அத்தியாயத்தில்:

ஸுதாபாண்ட்ய ராஜேனதத்தா ||160
ஸம்வத்ஸராந்தே பல்குனஸ்யானுரூபா சித்ராங்கதா வீரசேனேன தோஷாத் ||
ஸவீரஸேனோ த்வஷ்ட்ராரம்ஷோ யமஸ்யாப்யாவேஷயுக் ||

என்னும் ஸ்லோகங்களால் அர்ஜுனனின் மனைவி சித்ராங்கதைக்கு தந்தையான, பாண்டிய தேசாதிபாதியான வீரசேனன் என்றும், அவர் யமதேவரின் ஆவேசத்தைக் கொண்ட த்வஷ்டா என்னும் சூரியன் என்றும் இதிலிருந்து தெரிகிறது.

**எரட³தி⁴கத³ஷ ஸூர்யரொளு மூ**
**ரெரடு³ ஜனருத்தம விவஸ்வா**

**ந்வருண ஷக்ர உருக்ரமனு பர்ஜன்ய மித்ராக்$^{2}$ய |**
**மருதனாவேஷயுத பாண்டு$^{3}$ அ**
**வர பராவஹனெந்$^{3}$தெ$^{3}$னிப கே**
**ஸரிம்ருக$^{3}$ப ஸம்பாதி$^{3}$ ஷ்வேதத்ரயு மருத$^{3}$ம்ஷ ||29**

எரடதிக தஷ சூர்யரொளு = 12 சூரியர்களில்
மூரெரடு ஜனருத்தம = 3*2=6 பேர் உத்தமர்கள் (இவர்களில் இன்னொரு பாடத்தின்படி, 5 பேர் உத்தமர்கள். ஒருவன் பர்ஜன்யன், கங்கைக்கு சமமானவன். ஆக இந்த 6 பேர், மற்ற ஆறு பேருக்கு சமம் அல்ல என்பது கருத்து)
விவஸ்வான், வருண, ஷக்ர, உரு, க்ரம, மித்ர - இந்த அறுவரின் கதையை முன்னர் பார்த்திருக்கிறோம்.
பர்ஜன்யனின் விஷயத்தை முன்னரே பார்த்திருக்கிறோம்.
மற்ற 6 பேர் சூரியர்கள் சமம் என்பது கருத்து.
வரபராவஹனு = மருத்களில் சிறந்தவனான பராவஹ என்பவன்,
மருதனாவேஷயுத = வாயுதேவரின் ஆவேசத்தைக் கொண்டு
பாண்டூ எந்தெனிப = பாண்டு ராஜனாக அவதரித்தான்.
கேஸரிம்ருகப = கேசரி என்னும் கபி
ஸம்பாதி = சம்பாதி என்னும் கபி
ஸ்வேத = ஸ்வேத என்னும் கபி
த்ரயரு = கேசரி, சம்பாதி, ஸ்வேத என்னும் இந்த மூவரும்
மருதம்ஷ = மருத்களின் அம்சத்தினால் பிறந்தனர்.

12 ஆதித்யரில் முன்னர் தாரதம்யத்தில் கூறப்பட்ட, விவஸ்வான், வருண, ஷக்ர, உருக்ரம, மித்ர என்னும் இந்த 5 பேர் உத்தமர்கள். பர்ஜன்யன் கங்கைக்கு சமமானவன். மற்ற 6 பேரும் அவர்களுக்குள் சமர்கள். ஏகோனபஞ்சாஷத் (49) மருத் கணர்களில் பராவஹன் என்பவன் வாயுதேவரின் ஆவேசத்தைக் கொண்டு, பாண்டு ராஜனாக அவதரித்தான்.

நிர்ணய 8ம் அத்தியாயத்தில்:

பவனகணவராம்ஷௌ ஷ்வேதஸம்பாதினௌ ச ||
கேஸரீதி ப்ரமரமத மருத்ஸப்ராஸ்ய தேதான் முகேஸ: ||106

இந்த வாக்கியங்களால் ஸ்வேத, சம்பாதி, கேசரி இந்த மூவரும் பவனகண அம்சர்கள். அதாவது, மருத்கணர்களில் உத்தமர்களின் அம்சத்தைக் கொண்டவர்கள் என்று தெரிகிறது. இவர்களின் பெயர்கள் சொல்லப்படவில்லை. தாசார்யரும் பெயர்களை சொல்லவில்லை என்று அறியவேண்டும். மருத்களின் அம்சத்தினால் பிறந்தவர்கள் என்பது கருத்து.

**ப்ரதிப$^{4}$னாதனு சேகிதனு வி**
**ப்ருது$^{2}$ எனிஸுவனு ஸௌம்யமாருத**
**விதத ஷர்வோத்துங்க$^{3}$ க$^{3}$ஜ நாமகனு ப்ராணாம்ஷ |**
**த்$^{3}$விதியபான க$^{3}$வாக்ஷ க$^{3}$வயனு**

**த்ருதியவ்யான உதா[3]ன வ்ருஷப[1]**
**ர்வதுல ஷர்வத்ராத க[3]ந்த[4]ஸுமாதன ஸமான ||30**

ப்ரதிபவாதனு = ப்ரதிப என்னும் மாருதன்
சேகிதானனு = சேகிதானன என்னும் யாதவன்
ஸௌம்யமாருத = ஸௌம்ய நாமக மாருதன்
விப்ருதவெனிஸுவனு = விப்ருத என்னும் யாதவன்
விதத, ஷர்வோத்துங்க - என்னும் இருவர் யது வம்சத்தவர்கள்
கஜ நாமகனு = கஜ என்னும் கபி
இவர்கள் மூவரும் பிராணாம்ஷ = பிராண நாமக மாருதனின் அம்ஷத்தினால் பிறந்தவர்கள்
த்வீதீய = இரண்டாவதான
ஆபான = ஆபான மாருதனு
கவாக்ஷ = கவாக்ஷ என்னும் கபி ஆனான்
த்ருதீய = மூன்றாமவனான
வ்யான = வியான நாமக மாருதன்
உதான = உதான நாமகனான மாருதன்
வ்ருஷபர்வ = வ்ருஷப என்னும் கபி
அதுள = பராக்ரமசாலியான
ஷர்வத்ராத = ஷர்வத்ராத என்னும் பீமசேனதேவரின் மகன்
கந்தஸுமாதனரு = கந்தஸுமாத என்னும் கபி
இவர்கள் இருவரும்
ஸமான = சமான மாருதனின் அவதாரங்கள்.

49 மருத்களின் அவதாரங்களில் சிலருக்கு மட்டுமே அவதாரம் இருக்கிறது. இப்படி சொல்லியதால், ஸ்வேதாதிகள் மருத்கணரில் சேர்ந்தவரோ இல்லையோ என்று சந்தேகம் வரும். ஆகையால், முதலில் 49 மருத்களின் பெயர்களை அறியவேண்டும். ஆகையால், முந்தைய தாராதம்ய விஷயத்தில் சொல்லியிருந்தாலும், இங்கு இன்னொரு முறை சொல்கிறோம்.

மருத்கணர்களின் பெயர்கள்:
1. ப்ராண 2. அபான 3. வியான 4. உதான 5. ஸமான 6. நாக 7. க்ருதல 8. கூர்ம 9. தேவதத்த 10. தனஞ்சய 11. ப்ரவஹ 12. விவஹ 13. ஷம்பு 14. ஸம்வஹ 15. பராவஹ 16. உத்வஹ 17. வஹ 18. ஷங்கு 19. கல 20. ஷ்வாஸ 21. நல 22. அனில 23. ப்ரதிப 24. குமுத 25. காந்த 26. ஷுசி 27. ஷ்வேத 28. அஜித 29. குரு 30. ஸஞ்ஞா 31. ஸம்வர்தக 32. கால 33. ஜித 34. ஸௌம்ய 35. கபி 36. ஜட 37. மண்டுக 38. ஸம்ஹத 39. ஸித்த 40. ரத்த 41. க்ருஷ்ண 42. கபி 43. ஷுக 44. யதி 45. பீம 46. ஹனு 47. பிங்க 48. அஹங்காரிக ப்ராண 49. கம்பன

இந்த 49 மருத்கணர்களில்,
* 15வதாக இருப்பவன் பராவஹ என்னும் பாண்டு ராஜன்.

* 27ம் ஸ்வேத என்பவன் சம்பாதி, கேசரி என்று இரு அவதாரங்களை எடுத்திருக்கிறான்.
* 23 ப்ரதிப என்னும் மாருதன் சேகிதானனாக அவதரித்திருக்கிறான்.

நிர்ணய 12ம் அத்தியாயத்தில்:
மருத்ஸுனாம ப்ரதிபோ யதுஷ்டபூத் ஸசேகிதானோ ஹரிஸேவனார்த்தம் ||103

மருத்களில் பிரதிப என்பவன், பரமாத்மனின் சேவை செய்வதற்காக சேகிதானன என்று யாதவரில் பிறந்தான் என்னும் வாக்கியம், முந்தைய வாக்கியத்திற்கு ஆதாரம்.

* ஸௌம்ய நாமகனான 34ம் மாருதன், விப்ருது என்னும் யாதவனாக பிறந்தான். நிர்ணய 20ம் அத்தியாயத்தில்:

நிர்கத்யபுர்யா விப்ருதும் ததர்ஷ ராமேண புர்யா ரக்ஷணே சன்னியுக்தம் |
ஏகோஹ்யஸௌ மருதாம் ஸௌம்யனாமா ஷுஷ்ரூஷார்த்தம் வாஸுதேவஸ்ய ஜாத: ||193

சன்யாசி வேடத்தில் த்வாராவதிக்கு வந்த அர்ஜுனன், சுபத்ரையால் சேவை செய்யப்பட்டு, பலராம, கிருஷ்ண ஆகிய அனைவரும், ரைவத பர்வதத்திற்கு சென்றபோது, கிருஷ்ணனின் அனுமதியுடன், சுபத்ரையை அபகரித்து, த்வாராவதியை விட்டுப் போகும்போது, விப்ருது என்னும் யாதவன் த்வாரபாலகனாக இருப்பதைக் கண்டான். அவன் பலராமனின் ஆணைப்படி அங்கு காப்பாளனாக இருந்தான். இவனே முன்னர் 34ம் மருத்கண சௌம்ய. விப்ருது என்னும் பெயரில் கிருஷ்ணனுக்கு சேவை செய்வதற்காகப் பிறந்திருந்தான். ஆகையால், அர்ஜுனனுடன் சண்டை போடுவதாக நடித்து, அர்ஜுனனை விட்டுவிட்டான் என்று கூறியிருக்கிறார். இதிலிருந்து விப்ருது என்பவன் யாதவன் என்றும், ஸௌம்ய நாமக மாருதன் என்றும் தெளிவாகிறது.

* விதத, ஷர்வோத்துங்க, இவர்கள் இருவரும் மற்றும் கஜ என்னும் கபி ; இந்த மூவரும் முதலாமவனான பிராண நாமக மருத்தின் அம்சத்தைக் கொண்டவர்கள் என்று அறியவேண்டும்.
* இரண்டாமவனான அபானன், கவாக்ஷ என்னும் கபி ஆனான்.
* மூன்றாமவனான வ்யானன் கவய என்னும் கபி
* நான்காமவனான உதானன் வ்ருஷப என்னும் கபி
* ஐந்தாமவனான சமானன், பீமசேனதேவரின் மகனான ஷர்வத்ராத என்னும் அவதாரம் ஒன்று; கந்தமாதன எனும் கபி ரூபம் ஒன்று; என இரு ரூபங்களை தரித்திருந்தான்.

இவற்றிற்கு ஆதாரம், நிர்ணய 8ம் அத்தியாயத்தில்:
கஜோகவாக்ஷோ கவயோவ்ருஷஸ்ச ஸகந்தமாதா தனதேன ஜாதா: |
ப்ராணாதய: பஞ்சமருத்ப்ரவீரா: ||

கஜ, கவாக்ஷ, கவய, வ்ருஷப, கந்தமான இந்த ஐந்து பேரும், ப்ராண, அபான, வியான, உதான, சமான என்னும் ஐந்து மருத்களின் அம்சத்தைக் கொண்டவர்கள் என்று சொல்கிறார். இத்துடன், சமான மாருதன், பீமசேனதேவரின் மகனான ஷர்வத்ராத என்னும் அவதாரத்தைக் கொண்டவன் ஆகிறான். நிர்ணய 20ம் அத்தியாயத்தில்:

பீமஸேனோரதம்ஸ்வம் ||
ஆருஹ்ய காஷீஷ்வர பூஜிதஸ்ச யயௌகால்யா ஷக்ர சனாமகம் புரம் ||27
தஸ்ய த்ரிலோகாதிக ரூபஸத்குணைரா ஸம்மிதாயாம் ரமமாண: ஸுதஞ்ச ||
ஷர்வத்ராதம் நாம்னாs ஜனயத்புராய: ஸமானவாயுர் பலவீர்யயுக்த: ||28

பீமசேனதேவர், காளியின் ஸ்வயம்வரத்திற்காக, காஷீஷ்வரனின் பட்டணத்திற்கு வந்து, அந்த ஸ்வயம்வரத்தில் காளியை அடைந்து, அங்கு வந்திருந்த மாகதாதி அனைத்து அரசர்களையும் வென்று, சாட்சாத் பாரதிதேவியின் அவதாரளான காளியுடன், காஷீஷ்வரனால் பூஜிக்கப்பட்டு, இந்திரபிரஸ்தத்திற்கு வந்து, அவள் மூலமாக ஷர்வத்ராத என்னும் புத்ரனைப் பெற்றார். அவனே முன்பு ஸமான வாயு. சமான வாயுவே பல, வீர்யனாக இங்கு பிறந்தான் -- என்று சொல்லியிருக்கிறார். ஷர்வத்ராதன் பீமசேனதேவரின் மகன் என்பதற்கு இந்த வாக்கியமே ஆதாரமாக இருக்கிறது.

**ஐவரொளகீ³ குந்திபோ⁴ஜனு**
**ஆவினாமக நாக³ க்ரகளனு**
**தே³வத³த்த த³னஞ்சயரு அவதார வர்ஜிதரு ।**
**ஆவஹோத்³வஹ விவஹ ஸம்வஹ**
**ப்ராவஹீபதி மருத ப்ரவஹனி**
**கா³வகாலகு கிஞ்சித³த⁴மரு மருதக³ணவெல்ல ||31**

ஐவரொளகெ = நாகாதி ஐந்து பேர்களில்
ஆவினாமக = கூர்ம நாமகனான 8வது மாருதன்
குந்திபோஜன = குந்திபோஜராஜனாக பிறந்தவன்
நாக, க்ரகள, தேவதத்த, தனஞ்சய = இந்த நால்வரும்
அவதார வர்ஜிதரு = அவதாரம் இல்லாதவர்கள்
ஆவஹ, உத்வஹ, விவஹ, சம்வஹ = முதலான மருத்கணர்கள் அனைவரும்
ப்ராவஹீபதி மருதப்ரவஹனிகெ = ப்ராவஹிபதியான ப்ரவஹ மருதனுக்கு (அஹங்காரிக பிராணனைவிடவும்)
கிஞ்சித்ததமரு = கொஞ்சம் குறைவானவர்கள்.

மருத்கணர்களில் ஆறாவது முதலான ஐந்து நாகாதிகளில் மூன்றாமவரான கூர்மன், ஷூரராஜனின் நண்பனான குந்திபோஜனாக பிறந்தான். இவன் ஷூரராஜனின் மகளான குந்திதேவிக்கு குந்தி என்று பெயரிட்டான். அதற்கு முன்னர், குந்திக்கு ப்ருதா என்று பெயர் இருந்தது. நாக, க்ருதள, தேவதத்த, தனஞ்சய - இவர்களுக்கு அவதாரம் இல்லை. அஹங்காரிக பிராண, ப்ரவஹ வாயு (48, 11

எண்ணிக்கையுள்ளவர்கள்) இவர்கள் இருவரைவிட, மற்ற, அவஹாதி அனைத்து மருத்களும் சிறிது குறைவானவர்கள்.

**ப்ராணபான வ்யானுதா³ன ஸ**
**மானரைவரு உளித³ மருதரு**
**ஊனரெனிபரு ஹத்து விஷ்வேதே³வரவரிந்த³**
**ஸூனுக³ளு எனிஸுவரு ஐவரு**
**மானினி த்³ரௌபதிகெ³ கெலவரு**
**க்ஷோணியொளு கைகேயரெனிஸுவ ரெல்ல காலத³லி ||32**

பிராண, அபான, வியான, உதான, சமான ஐவரு = இந்த ஐந்து பேரும்
உளித = இவர்களைத் தவிர, மற்ற
மருதரு = மருதர்கள் சமம் எனப்படுகின்றனர்.
இவரிந்த = ப்ராணாபானாதி இவர்களிடம்
ஹத்து விஷ்வேதேவர் = 10 விஷ்வேதேவர்கள்
ஊனரெனிபரு = சிறிது குறைவானவர்கள்
மானினி த்ரௌபதிகெ = புகழ் பெற்ற திரௌபதிக்கு
இவரு = 10 விஷ்வேதேவர்களில், 5 பேர்
சூனுகளு எனிசுவரு = மக்கள் எனப்படுகிறார்கள்
கெலவரு = மற்ற 5 பேர்
எல்லா காலதலி = அனைத்து கல்பங்களிலும்
கைகேயரெனிபரு = கைகேய என்னும் பெயரில் பிறக்கின்றனர்.

49 மருத்களில் மேலே சொன்ன அஹங்காரிக பிராண, ப்ரவஹ, இவர்கள் இருவரும் உத்தமர்கள். மற்ற 47 பேர்களில் ப்ராண, அபான, வியான, உதான, சமான என்னும் ஐவர் சிறிது உத்தமர்கள். ஆகையால், பாகவத தாத்பர்யத்தில் ‘மருதஸ்ச ஸமா: ஸர்வேஸ்பததேஷு ப்ரதானகா:’ 49 மருத்களில் சமர்கள். அவர்களில் 7 பேர் முக்கியமானவர்கள் என்று சொல்லப்பட்டிருக்கிறது.

இது மட்டுமல்லாமல் ‘பவன கணவராம்ஷௌஸ்வேத் ஸம்பாதினௌச ||
கேஸரிதி ப்ரவரமதமருத்ஸு ||

என்னும் வாக்கியங்களால் ஷ்வேத, ஸம்பாதி, கேசரி எனும் மூன்று கபிகள் மருத்களில், சிறந்த அம்சத்தினைக் கொண்டவர்கள் என்று சொல்லியிருப்பதால், மருத்கள் அனைவரும் சமானர் அல்லர் என்றும், சிறிது தாரதம்யம் உள்ளவர்கள் என்றும் தெரிகிறது. பாகவத தாத்பர்யத்தால், ஏழு பேர் ப்ராதனர் என்றும் அறிகிறோம். அவர்கள் யார் என்றால்,

* ப்ராண
* ப்ரவஹ ப்ராண
* ப்ராண, அபானாதி 5

என மொத்தம் 7 பேர் என்று அறிகிறோம். மற்றவர்கள் அனைவரும் சமானர்கள்.

மருத்களுக்கு விஷ்வேதேவதைகள் சமானர்கள் ஆனாலும், பிராண, அபானாதி 5 பேர்களுக்கு சிறிது குறைவானவர்கள் என்பது கருத்து. விஷ்வேதேவதைகள் புரூரவ, ஆர்த்ர, கால, காம, துரி, லோசன, தக்ஷ, க்ரது, ஸத்ய, வசு என்று 10 பேர். இவர்களில் முதலாம் ஐவர், திரௌபதி தேவியிடம், தர்மராஜ முதலான 5 பாண்டவர்கள் மூலமாக 5 மக்களாக பிறந்தனர். மற்ற ஐவர், கைகேய என்னும் பெயரால் பிறந்தனர் என்பது கருத்து.

திரௌபதியின் மக்களின் விஷயத்தை அடுத்த பத்தியில் பார்க்கப் போகிறோம். விஷ்வேதேவதைகளின் அவதாரம் கைகேய என்னும் விஷயத்தில், நிர்ணய 20ம் அத்தியாயத்தில்:

விஷ்வேஷாம் தேவானாமவதாராஹி பஞ்ச தே கைகயா: ப்ராதரோ ஸ்யா:ஹரேஸ்ச ||
பக்தானித்யம் பாண்டவானாஞ்ச ||50

கிருஷ்ணனின் அத்தை மக்கள், மற்றும் கிருஷ்ணனின் அஷ்ட மஹிஷியரில் ஒருவளான பத்ரையின் சகோதரர் ஆன கைகேயர் என்னும் அண்ணன் தம்பிகள் ஐந்து பேர், விஷ்வேதேவதைகளின் அவதாரர்கள். இவர்கள் அனைவரும் பாண்டவர்களுக்கு மாத்ருஷ்வஸா; அதாவது, தாயுடன் கூடப்பிறந்தவர்கள் என்று அர்த்தம். கைகேயரின் தாயும், பாண்டவர்களின் தாயுமான குந்திதேவியும் அக்கா தங்கையர். ஆகையால், பாண்டவர்களுக்கு வேண்டியவர்கள் ஆயினர்.

இவர்களின் தந்தையான ஷைப்யனும், பாண்டவர்களின் வசத்தில் இருந்தான் என்று அறிகிறோம். ஆகையால், கைகேயர் இத்தகையவர்கள் என்று தெளிவாகிறது.

**ப்ரதிவிந்த்$^{3}$ய ஸ்ருதஸோம ஸ்ருத கீ**
**ருதி ஷதானிக ஸ்ருதகர்ம த்$^{3}$ரௌ**
**பதி குவரரிவரொளகெ$^{3}$ அபி$^{4}$தாம்ர ப்ரமுக$^{2}$ சித்ர**
**ரத$^{2}$னு கோ$^{3}$ப கிஷோர ப$^{3}$லரெ**
**ம்ப$^{3}$துலரை க$^{3}$ந்த$^{4}$ர்வரிந்த$^{3}$லி**
**யுதரு த$^{4}$ர்ம வ்ருகோத$^{3}$ராதி$^{3}$ஜரெந்து$^{3}$ கரெஸுவரு ||33**

ப்ரதிவிந்த்ய, ஸ்ருதசோம, ஸ்ருதகீர்த்தி, ஷதானீக, ஸ்ருதகர்ம என்னும் இந்த 5 பேரும்
த்ரௌபதி குவரரு = திரௌபதியின் மக்கள்
இவரொளகெ = இந்த ஐவரில்
அபிதாம்ர, ப்ரமுக = கந்தர்வ ஸ்ரேஷ்டனான சித்ரரத, அபிதாம்ர, கோப, கிஷோர, பலர் என்பவர்கள்
அதுல = கந்தர்வர்களில் இந்த ஐவர் மட்டும் சமம். மற்றவர்கள் இவர்களுக்கு சமமல்ல என்று அர்த்தம்.
ஐகந்தர்வரிந்தலி = ஐந்து கந்தர்வர்களைவிட
யுதரு = ஆவேசத்தைக் கொண்டவர்கள்

தர்ம வ்ருகோதராதிஜரெந்து = இந்த ஐவரும், தர்மராஜ, பீமசேன, அர்ஜுன, நகுல, சகதேவ இந்த ஐந்து பேர்கள் மூலமாக, திரௌபதி மூலமாக பிறந்தவர்கள்
கரெசுவரு = உலகத்தில் புகழ் பெற்றவர்கள்.

தர்மராஜ முதலான 5 பேர் பாண்டவர்கள் மூலமாக திரௌபதியிடம் 5 பேர் விஷ்வேதேவதைகள் ப்ரதிவிந்தியா முதலான 5 பெயர்களால் பிறந்தனர். இந்த ஐவரில் ஐந்து கந்தர்வர்களின் ஆவேசம் இருந்தது. நிர்ணய 20ம் அத்தியாயத்தில்:

அசங்க்ருஷ்ணாயா: பஞ்சசுதா குணாட்யா: விஷ்வேதேவா: பஞ்சகந்தர்வ முக்யை: ||11
அபிஷ்டாஸ்தே சித்ரரதாபிதாம்ர கிஷோர கோபால பலை: க்ரமேண
ப்ரதிவிந்த்ய: ஸ்ருதஸோம: ஸ்ருதாக்யோகீர்த்தி ஸ்ருதானீக உதஸ்ருத க்ரிய: ||12
யுதிஷ்டிராத்யை: க்ரமஷ: ப்ரஜாதா: ||

திரௌபதியிடம் விஷ்வேதேவதைகள் ஐவர், 5 கந்தர்வ ஸ்ரேஷ்டர்களின் ஆவேசத்தினால் பிறந்தனர். சித்ரரத, அபிதாம்ர, கிஷோர, கோபால, பல என்னும் 5 கந்தர்வர்கள், பிரதிவிந்த்ய முதலான ஐந்து பேரில் முறையே நிலைத்திருந்தனர்.

இந்த ஐந்து பேரும் தர்மராஜ முதலான 5 பாண்டவர்களால், திரௌபதியிடம் வரிசையாக பிறந்தனர்.

அதாவது,
* தர்மராஜன் மூலமாக பிறந்தவன் ப்ரதிவிந்த்ய,
* பீமசேனனின் மூலமாக பிறந்தவன் ஸ்ருதசோம,
* அர்ஜுனன் மூலமாக பிறந்தவன் ஸ்ருதகீர்த்தி,
* நகுலனின் மகன் ஷதானீக மற்றும்
* சகதேவன் மூலமாக பிறந்தவன் ஸ்ருதகர்ம.

இவர்களில் கந்தர்வர்களின் ஆவேசம் என்றால்:

* பிரதிவிந்த்யனில் சித்ரரத கந்தர்வனின் ஆவேசம்
* ஸ்ருதஸோமனில் அபிதாம்ர கந்தர்வனின் ஆவேசம்
* ஸ்ருதகீர்த்தியில் கிஷோர கந்தர்வனின் ஆவேசம்
* ஷதானீகவில் கோபால கந்தர்வனின் ஆவேசம்
* ஸ்ருடகர்மனில் பல கந்தர்வனின் ஆவேசம்

இருந்தது.

ஐந்து பேர் விஷ்வேதேவதைகள், திரௌபதியின் மக்கள் என்று சொல்லியிருக்கிறார். அந்த விஷ்வேதேவதைகளின் பெயர்கள் 32ம் பத்யத்தில் பத்ய அர்த்த பகுதியில் கொடுக்கப்பட்டுள்ளது.

**விவித³ மைந்த³ரு நகுல ஸஹதே³**
**வ விபு⁴ த்ரிஷிகா²ஷ்வினிக³ ளிவரொளு**

**தி$^{3}$விபனாவேஷ விஹுதெ$^{3}$ந்தி$^{3}$கு$^{3}$ த்$^{3}$யாவ ப்ருத்$^{2}$வி ருபு$^{4}$ |**
**பவனஸுத விஷ்வக்ஸேன உமா**
**குவர விக்$^{4}$னப த$^{4}$னபமொத$^{3}$லா**
**த$^{3}$வரு மித்ரகெ$^{3}$ கிஞ்சிதா$^{3}$த$^{4}$மரெனிஸி கொளுதிஹரு ||34**

விவித மைந்தரு = இந்த பெயர் கொண்ட கபிகள்
நகுல சஹதேவ,
விபு த்ரிஷிகரு = இந்த அவதாரங்கள்
அஷ்வினிகளு = நாஸத்ய தஸ்ர என்னும் அஸ்வினி தேவதைகளின் அவதாரங்கள்
இவரொளு = இவர்களில்
எந்திகு = எப்போதும்
திவிபனாவேஷ = தேவேந்திரனின் ஆவேசம்
இஹது = இருக்கிறது
த்யாவா, ப்ருதிவி, ருபு,
பவனசுத விஷ்வக்சேன = வாயுகுமாரனான விஷ்வக்சேன
உமாகுவர விக்னப = பார்வதியின் மகனான விக்னேஷ்வரன்
தனப = குபேரன்
மொதலாதவரு மித்ரகெ = மித்ரன் என்னும் சூரியனுக்கு
கிஞ்சிதாதமரு = சிறிது குறைவானவர்கள்
எனிஸி கொளுதிஹரு = என்று அழைக்கப்படுகிறார்கள்.

ராமாவதாரத்தில், ராமனின் சேவைக்காக, அஸ்வினி தேவதைகள், விவித, மைந்த என்னும் கபிகளாக பிறந்திருந்தனர். அஸ்வினி தேவதைகள் என்பவர்கள் குதிரையின் 2 மூக்குகளிலிருந்து சமமாக பிறந்தவர்களாகையால், அவர்கள் இருவரும் எப்போதும் ஒரே இடத்தில் ஒரே ரூபமாக இருக்கிறார்கள். எங்கு அவதாரம் செய்தாலும், இருவரும் சேர்ந்தே செய்கிறார்கள். ஆகையால், நாஸத்ய, தஸ்ர என்னும் இரு அஸ்வினி தேவதைகளும், விவித மைந்தர் என பிறந்தனர்.

அஸ்வினௌச நாஸத்ய தஸ்ரௌ விவிதஸ்ச மைந்த: -- என்னும் நிர்ணய வாக்கியம் இதற்கு ஆதாரம். கிருஷ்ணாவதார காலத்தில், பாண்டுராஜனின் மனைவியான மாத்ரியில் அஸ்வினி தேவதைகள், நகுல சகதேவர்களாக பிறந்தனர். நிர்ணய 12ம் அத்தியாயத்தில்:

மந்த்ரம் ஸமாதாயச மத்ரபுரீ வ்யசிந்தயத்ஸ்யான்னு கதந்த்விபுத்ரே ||
ஸதாsவியோகௌ திவிஜேஷுதஸ்ரௌ ந சைதயோர் நாம பேத: க்வசித்தி ||124
ஏகாபார்யா த்வேதயோர ப்யுஷாஹி ததாயாத: ||
ஸக்ருதாவர்தனாத்யௌ இதீஷந்த்யாss காரிதாவஸ்வினௌதௌ |125
தாவேன தேவௌ நகுல: பூர்வ ஜாத: ஸஹதேவோபூத் பஷ்சிமஸ்தௌயமௌஹி ||

பாண்டு ராஜனுக்கு குந்தி தேவியிடம், தர்மராஜ, பீமசேன, அர்ஜுனன் என்னும் மூவரும், யம, வாயு, இந்திர இந்த மூவரின் மூலமாக பிறந்த பிறகு,

குந்திதேவியிடம் இருக்கும் சந்தானத்தைக் கொடுக்கக்கூடிய மந்திரத்தை மாத்ரிக்கு உபதேசம் செய்யவும் என்று பாண்டு ராஜன் கேட்க, அது குந்திக்கு இஷ்டமில்லாத போதும், கணவனின் பேச்சைத் தட்டமுடியாமல், அந்த மந்திரம் ஒரே ஒரு முறை மட்டுமே பலிக்குமாறு, மாத்ரிக்கு உபதேசித்தாள்.

அஸ்வினி தேவதைகள் இருவரும் எப்போதும் ஒன்றாகவே இருப்பர். இவர்கள் இருவரில் எவ்வித பேதமும் காணப்படுவதில்லை. இருவருக்கும் உஷா என்னும் ஒருவளே மனைவி. ஆகையால், அவர்கள் இருவரை ஒரே மந்திரத்தில் அழைத்தால், அவர்கள் ஓரிரு மக்களைக் கொடுப்பார்கள் என்று நினைத்து, அந்த மந்திரத்தால் அஸ்வினி தேவதைகளை அழைத்தாள் மாத்ரி. அதே நொடியில், நாஸத்ய தஸ்ர என்னும் அந்த அஸ்வினி தேவதைகள் அங்கு வந்து, மாத்ரையிடம் தாமே பிறந்தனர். முதலில் நகுலன், பிறகு சகதேவன் பிறந்தனர். இருவரும் இரட்டையர்கள் என்று அறியவேண்டும். இந்த ஆதாரத்தினால், நகுல சகதேவர்களே அஸ்வினி தேவதைகள் என்று நிச்சயமாயிற்று.

விபு த்ரிஷிக (விஷிக) இவர்கள் இருவரும் இந்திரனாக இருந்தனர். இந்த விஷயத்தில் நிர்ணய 18ம் அத்தியாயத்தில்: 'பூர்வேந்த்ரா மாருத வ்ருஷ நாஸத்யாம் ஸ்ச துரஸ்திதாம் ||42 '. முந்தைய மன்வந்தரத்தில் இந்திரனாக இருந்த வாயுதேவர், யமதர்ம, அஸ்வினி தேவதைகள் இருவர் - ஆக மொத்தம் நான்கு பேரும் பூமியில் பிறப்பதாக யோசித்தனர். -- என்னும் வாக்கியத்திலிருந்து அஸ்வினி தேவதைகளும் இந்திரனாக இருந்தனர் என்று தெரிகிறது. அந்த இந்திரன் யார்? அவன் பெயர் என்ன? எந்த காலம் என்பதற்கு விஷ்ணு ரஹஸ்ய வாக்கியம்: (28ம் அத்தியாயம்).

சதுர்த்தஸ்தாபஸோ நாம்னா ஹ்யுத்தமாஸ்யானு ஜோமனு: |
நாஸத்யோ விஷிக்யோ நாம்னா ப்ராப்த இந்த்ரபதம் ஸூரா: ||2

நான்காம் மனு உத்தமனின் தம்பியான தாபஸ என்பவன், அந்த மன்வந்தரத்தில் நாஸத்ய தஸ்ர என்னும் அஸ்வினி தேவதைகளில், நாஸத்ய என்பவன் விஷிக என்னும் பெயரில் பிறந்து, இந்திர பதவியைப் பெற்றான் என்று இருக்கிறது. ஆனால் தாசார்யரோ ஷிகிர என்று சொல்லியிருக்கிறார்.

இப்படி பெயர் வித்தியாசம் வருவதற்கு காரணம் என்ன என்று கேட்கலாம். பாகவத 8ம் ஸ்கந்தத்தில்:

சதுர்த்த உத்தம ப்ராதாமனுனாம்னாச தாபஸ: ||
ஸத்யாகா ஹரயோ வீராதேவாஸ்த்ரிஷிக ஈஷ்வர: ||

நான்காம் மனு உத்தமனின் தம்பி தாபஸ என்பவன், ஸத்யகா ஹரி, வீர ஆகியோர் தேவதாகணங்கள், த்ரிஷிக என்னும் தேவேந்திரன் என்று சொல்லியிருக்கிறார். இப்படி பாகவதத்தில் த்ரிஷிக என்றே இருக்கிறது. தாசார்யரும் த்ரிஷிக என்றே சொல்லியிருக்கிறார். விஷ்ணு ரஹஸ்யத்தில் இதே விஷயத்தில் விஷிக என்று சொல்லியிருப்பதால், புத்தகத்தில் தவறு இருந்தாலும் இருந்திருக்கலாம் அல்லது

பாட பேதம் இருந்தாலும் இருக்கலாம். அல்லது, ஒருவருக்கு 2 பெயர்கள் இருக்கலாம். 5ம் மன்வந்தரத்தில் அஸ்வினிகளில் தஸ்ர என்பவன், விபு என்னும் பெயரில் இந்திரனாக இருந்தான்.

பாகவத 8ம் ஸ்கந்தம் 5ம் அத்தியாயத்தில்:

பஞ்ச மோரைவதோ நாம மனுஸ்தாபஸ ஸோதர: || விபுரிந்த்ர: ||

5ம் மனு தாபஸனின் தம்பி ரைவத என்பவன். தேவேந்திரன் விபு என்பவன் என்று சொல்லியிருக்கிறார்கள். அந்த ஆதாரங்களின் பேரிலேயே விபு த்ரிஷிகர் இருவரும் பூர்வேந்திரர் என்றும் அஸ்வினி அவதாரிகள் என்றும் தெரிய வருகிறது. இவர்களில் விவித என்னும் கபியில், இந்திரனின் ஆவேசம் இருந்தது என்று நிர்ணய 3ம் அத்தியாயத்தில்:

அஸ்வினௌச பபூவதுஸ்தௌ விவிதஸ்ச மைந்த: ||
ப்ரம்மோத்பவௌதௌ புனரேவ ஸூர்யாத் பபூவது ஸ்தத்ரகனீயஸஸ்து ||
ஆவேஷ இந்தொரோவரதானதோ பூத்ததோ பலீயான் விவிதோஹி மைந்தாத் ||73

அஸ்வினி தேவதைகள் முன்னர் பிரம்மதேவரின் மக்கள். மற்றும் சூரியனின் பெண் குதிரையின் மூக்கின் த்வாரத்திலிருந்து பிறந்தவர்கள். அவர்களே ராமாயணத்தில் மைந்த விவித என்னும் கபிகளாக பிறந்தனர். அவர்களில் சிறியவனான விவித என்பவனில் இந்திரனின் ஆவேசமும், வர பலமும் இருந்ததால், மைந்தனைவிட பலசாலியாக இருந்தான், என்பது இந்த வாக்கியத்தால் தெரியவருகிறது.

த்யாவா ப்ருத்வி, ருபுகணங்கள், விஸ்வக்சேன, விக்னேச, குபேர ஆகியோர், மித்ரனைவிட சிறிது குறைவானவர்கள்.

**பாவகக்[4]னி குமாரனெனிஸுவ**
**ச்யாவனரு சத்[2]யமுனி சாக்ஷுஷ**
**ரைவத ஸ்வாரோசிஷோத்தம பி[3]ரம்ம ருத்[3]ரேந்த்[3]ர ।**
**தே[3]வத[4]ர்மனு த[3]க்ஷ நாமக**
**ஸாவரணி ஷஷபிந்து[3] ப்ருது[2] ப்ரீ**
**யாவ்ரதனு மாந்தா[4]த க[3]யனு ககுத்ஸ்த[2] தௌ[3]ஷ்யந்தி ||35**

அக்னி குமாரனெனிஸுவ = அக்னியின் மூத்த மகன் என்று சொல்லப்படும்
பாவக = பாவகன்
ச்யாவன, உசித்ய என்னும்
முனி = இரு ரிஷிகள்
சாக்ஷுஷ மனு, ரைவத, ஸ்வாரோசிஷ, உத்தம - இந்த 4 மனுக்களும்
பிரம்ம = பிரம்ம சாவர்ணி
ருத்ர = ருத்ர சாவர்ணி
இந்த்ர = இந்திர சாவர்ணி

தேவ = தேவ சாவர்ணி
தர்மனு = தர்ம சாவர்ணி
தக்ஷ நாமகனு = தக்ஷ சாவர்ணி
சாவர்ணி, என இந்த 7 பேரும்,
ஷஷபிந்து = இந்த பெயருள்ள சக்ரவர்த்தி
ப்ருது = ப்ருது சக்ரவர்த்தி
ப்ரியவ்ரதனு, மாந்தாத, கயனு, ககுஸ்த, த்யௌஷ்யந்தி = துஷ்யந்தனின் மகனான பரதன்.

விளக்கம் 38ம் பத்யத்தில் கொடுக்கப்பட்டுள்ளது

**ப$^4$ரத ரிஷப$^4$ஜ ஹரிணிஜ த்விஜ**
**ப$^4$ரத மொத$^3$லாத$^3$கி$^2$ல ராயரொ**
**ளிருதிஹுது ஶ்ரீவிஷ்ணுப்ராணாவேஷ ப்ரதிதி$^3$னதி$^3$ ।**
**வரதி$^3$வஸ்பதி ஷம்பு$^4$ அத்$^3$பு$^4$த**
**கரெஸுவனு ப$^3$லி ஸ்ருத வித்$^4$ருத**
**நெரெஷுசி ருததா$^4$ம சப்தேந்த்$^3$ரஷ்ட க$^3$ந்த$^4$ர்வ ।।36**

ருஷபஜ = ருஷபதேவரின் மகனான
பரத = பரத ராஜன்
ஹரிணிஜ = மான் பிறவியைப் பெற்ற பரதனின் இரண்டாம் ரூபம்
த்விஜ = பிராமண பிறவியை எடுத்த பரதனின் மூன்றாம் ரூபம்
என மூன்று ரூபங்களைக் கொண்ட பரத
மொதலாத = முதலான
அகில ராயரொளு = அனைத்து 100 ராஜர்களிலும்
ப்ரதிதினதி = அனைத்து காலங்களிலும்
ஶ்ரீவிஷ்ணு ப்ராணாவேஷ = ஶ்ரீபரமாத்மனின் மற்றும் வாயுதேவரின் ஆவேசம் இருந்தது.
வர = உத்தமனான
திவஸ்பதி = திவஸ்பதி என்னும் தேவேந்திரன்
ஷம்பு, அத்புத, பலி, வித்ருத, ஷுசிஸரெயெனிப = இவர்களுக்கு சமமான
ருததாம = ருததாம முதலான ஏழு பேர்கள்
கரெசுவரு = இந்திரன் எனப்படுகிறார்கள்
இந்த ஏழு இந்திரர்கள்,
அஷ்ட கந்தர்வ = 8 பேர் கந்தர்வர்கள் ஆவர்.

விளக்கம் 38ம் பத்யத்தில் கொடுக்கப்பட்டுள்ளது

**அரஸெனிப கர்மஜரு வைஷ்வா**
**நரக$^3$த$^4$ம ஷதகு$^3$ணதி$^3$ விக்$^4$னே**
**ஷ்வரகெ$^3$ கிஞ்சித்கு$^3$ண கடி$^3$மெ ப$^3$லிமுக$^2$ய பாவகரு ।**
**ஷரப$^4$ பர்ஜன்யாக$^2$யமே க$^4$ப**

**தரணி பா$^{4}$ர்யா ஸஞ்ஞெ ஷார்வரி**
**கரன பத்னியு ரோஹிணி ஷ்யாமலெயெ தே$^{3}$வகியு ||37**

அரஸெனிப = ஷஷிபிந்து, மாந்தாதா முதலான அரசர்கள் என்று புகழ்பெற்ற
கர்மஜரு = கர்ம தேவதைகள்
வைஷ்வானர = அக்னிக்கு
ஷதகுணதி = 100 குணங்களால்
அதம = குறைவானவர்கள்
பலிமுக்ய = பலி சக்ரவர்த்தி முதலான
இந்திர, பாவக, உசித்ய ஆகியோர்
விக்னேஷ்வரகெ = விக்னேஷ்வரனுக்கு
கிஞ்சித் குணகடிமெ = சிறிது குணம் குறைவு
ஷரப பர்ஜன்யாக்ய = ஷரப என்னும் கபிரூபத்தை தரித்த பர்ஜன்யன் என்னும்
மேகப = மேகாதிபதி
தரணி = விவஸ்வான் என்னும் சூரியனின்
பார்யா = மனைவியான
சஞ்ஞே = சஞ்ஞாதேவியும்,
ஷார்வரீகரன பத்னியு = சந்திரனின் மனைவியான ரோஹிணியும்
ஷாமலெயு = யமதேவரின் மனைவியான ஷாமலா தேவியும்.

விளக்கம் 38ம் பத்யத்தில் கொடுக்கப்பட்டுள்ளது

**அரஸியெனிபளு த$^{4}$ர்மராஜகெ$^{3}$**
**வருண பா$^{4}$ர்யோஷா$^{2}$தி$^{3}$ ஷட்கரு**
**கொரதெ எனிபரு பாவகாத்$^{3}$யரிகெ$^{3}$ரடு$^{3}$ கு$^{3}$ணதி$^{3}$ந்த$^{3}$ |**
**எரடு$^{3}$ மூர்ஜனகத$^{4}$ம ஸ்வாஹா**
**கரெஸுவளு ஷாதே$^{3}$வி வைஷ்வா**
**நரமட$^{3}$தி$^{3}$கெ$^{3}$ த$^{3}$ஷகு$^{3}$ண அவரளு அஷ்வினீபா$^{4}$ர்ய ||38**

தேவகியு = முந்தைய பத்ய இறுதியில் சொல்லப்பட்டுள்ள தேவகியும்
ஷாமலாதேவியின் அவதாரம் எனப்படுகிறாள். இவள்
தர்மராஜகெ = தர்மராஜனுக்கு
அரஸியெனிபளு = மனைவி எனப்படுகிறாள். இந்த தேவகி,
வருண பார்யா = கங்கை
உஷாதிஷட்கரு = அனிருத்தனின் மனைவியான உஷா முதலான 6 பேர்
பாவகாத்யரிகெ = அக்னியின் மகனான பாவக முதலானவர்களைவிட
எரடு குணதிந்த = இரு குணங்களால்
கொரதெயெனிபரு = குறைவு எனப்படுகிறார்கள்
எரடு மூர்ஜனர = பர்ஜன்ய முதலான ஆறு பேர்களைவிட
ஸ்வாஹா = அக்னியின் மனைவியான ஸ்வாஹாதேவி
அதம = குறைவு
அஸ்வினீபார்யா = அஸ்வினி தேவதைகளின் மனைவியான

உஷாதேவி
கரெஸுவளு = பெயருள்ள அவள்
வைஷ்வானர மடதிகெ = அக்னி தேவனின் மனைவியான ஸ்வாஹாதேவிக்கு
தஷகுண = 10 குணங்களால்
அவரளு = குறைவு எனப்படுகிறாள்.

35ம் பத்யத்திலிருந்து 38ம் பத்யம் வரைக்கும் இருக்கும் 4 பத்யங்களில், பத்ய இறுதியில் க்ரியா பதங்கள் (வினைச் சொற்கள்) இல்லாத காரணத்தால் 4 பத்யங்களையும் சேர்த்து ஒன்றாகவே பார்க்க வேண்டும். ஆகையால், அந்த 4 பத்யங்களின் தாத்பர்யமும் இங்கு எழுதப்பட்டுள்ளது.

ப்ரதான அக்னியின் மூத்த மகனான பாவகன் என்பவன். சாவன, உசித்ய என்னும் ரிஷிகள் இருவர்.

சாக்ஷுஷ = 6ம் மன்வந்திரத்தின் அதிபதியான மனு.
ரைவத = 5ம் மனு
ஸ்வாரோசிஷ = இரண்டாமவன்.
உத்தம = மூன்றாம் மனு.
ஆகிய 4 மனுகள்

பிரம்ம சாவர்ணி,
ருத்ர சாவர்ணி,
இந்திர சாவர்ணி,
தேவ சாவர்ணி,
தர்ம சாவர்ணி,
தக்ஷ சாவர்ணி,
சாவர்ணி
என்னும் இந்த ஏழு மனுகள், அடுத்த 8ம் மன்வந்தரத்திலிருந்து துவங்கி, 14ம் மன்வந்தரத்தின் வரை இருக்கும் ஏழு மன்வந்தரங்களுக்கு அதிபதிகள் ஆவர்.

மொத்த மனுகள் 14 பேர். அவர்களில் 4ம் மன்வந்தராதிபதியான தாபஸ என்பவன், ஸ்ரீபரமாத்மனின் அவதாரமே ஆகும். ஸ்வாயம்புவ மனு ரதி, சசி, ப்ருஹஸ்பதி ஆகியோருக்கு சமம் என்று அங்கு சேர்க்கிறார். வைவஸ்வத மனுவை விஸ்வாமித்ர, மரீசி முதலாதவர்களின் கக்ஷையில் சேர்க்கிறார். இப்படி 3 பேரைத் தவிர, மற்ற 11 மனுகளை இங்கு சொல்லியிருக்கிறார்.

ஷஷிபிந்து ராஜன் ப்ருது சக்ரவர்த்தி, ப்ரியவ்ரத ராஜன், மாந்தாத ராஜன், கய, ககுஸ்த, துஷ்யந்த ராஜனின் மகனான பரதராஜன், ரிஷபதேவரின் மகனான பரதனுக்கு, மானின் பிறவியும், பிராமண பிறவியும் கிடைத்தது. இந்த மூன்று பிறவிகளைக் கொண்ட பரதன், இவரே முதலான அனைத்து ராஜர்களிலும் ஸ்ரீபரமாத்மன் ஆவேசமும், வாயுதேவரின் ஆவேசமும் இருக்கிறது.

மற்றும் இந்திரர் 14 பேர். அவர்களில் 7 இந்திரரை உத்தம கக்ஷையில் சேர்த்திருக்கிறார்.

* ஸ்வாயம்புவ மன்வந்தரத்தில் யக்ஞ நாமகனான பரமாத்மனே இந்திரன்.
* ஸ்வாரோசிஷ மன்வந்தரத்தில் ரோசன என்னும் வாயுதேவரே இந்திரன்.
* உத்தம மன்வந்தர என்றால் மூன்றாம் மன்வந்தரத்தில் ஸத்யஜித் என்னும் யமதர்மன் இந்திரனாக இருந்தான்.
* தாபஸ, ரைவத என்னும் இந்த நான்காம், ஐந்தாம் மன்வந்தரங்களில் த்ரிஷிக, விபு என்று அஸ்வினி தேவதைகள்

இந்திரராக இருந்தனர்.
* 6ம் சாக்ஷுஷ மன்வந்தரத்தில் மந்த்ரத்யும்ன என்றும்,
* தற்போது நடைபெற்று வரும் ஏழாம் வைவஸ்வத மன்வந்தரத்தில் புரந்தர என்றும்,
இந்த இரு இந்திரரும் சசிபதியான புரந்தர என்றும் அறியவேண்டும்.

இந்த ஏழு இந்திரர்களைத் தவிர, அடுத்த ஏழு இந்திரர்கள் இருக்கின்றனர்.

* 8ம் மன்வந்தரத்தில் பலி சக்ரவர்த்தி இந்திரன் ஆகிறான்.
* 9ம் மன்வந்தரத்தில் அத்புத என்பவனும்,
* 10ம் மன்வந்தரத்தில் ஷம்பு என்னும் இந்திரனும்
* 11ம் மன்வந்தரத்தில் வித்ருத எனும் இந்திரனும்
* 12, 13, 14ம் இந்த மூன்று மன்வந்தரங்களில், ருததாம, திவஸ்பதி, ஷுசி என்னும் மூன்வரும் இந்திரர்கள்.

கந்தர்வர்களில் ப்ரதானர் 8 பேர். இவர்கள் அனைவரும் சுரர்கள். பாவகனிலிருந்து துவங்கி சாவர்ணி வரைக்குமான தேவதைகள், கர்மதேவதைகள் எனப்படும் ஷஷிபிந்து முதலான ராஜர்கள், (கர்மதேவதைகள் என்றால், முதலில் அரசர்களாக இருந்து, கர்மத்தினால் தேவத்வத்தைப் பெற்றவர்கள் என்று அர்த்தம்). மற்றும் திவஸ்பதி முதலான இந்திரர்கள் கந்தர்வர்கள். இவர்கள் அனைவரும் பிரதான அக்னிக்கு 100 குணங்களால் குறைவானவர்கள்.

விக்னேஸ்வரனைவிட பலி சக்ரவர்த்தி, பாவக முதலானவர்கள் சிறிது குறைவானவர்கள்.மேகாதிபதியான பர்ஜன்ய என்பவன், 12 ஆதித்யர்களில் ஒருவன். இவனுக்கு ஷரப என்னும் கபி அவதாரம் இருந்தது. ராமாயண பாலகாண்ட 17ம் சர்க்கத்தில் 'ஷரபஞ்சனயாமாஸ பர்ஜன்யஸ்து மஹாபல:' . மஹா பலசாலியான பர்ஜன்யன் ஷரப என்னும் கபியை ஸ்ருஷ்டித்தான் என்னும் வாக்கியம் இதற்கு ஆதாரம்.

இந்த
* பர்ஜன்யன்,
* விவஸ்வான் என்னும் சூரியனின் மனைவி சஞ்ஞாதேவி,
* சந்திரனின் மனைவி ரோஹிணி

* யமதேவரின் மனைவி ஷாமலாதேவி
* வருணனின் மனைவி கங்கை
* அனிருத்தனின் மனைவி உஷெ
-- இவர்கள் ஆறு பேரும், பாவக முதலானவர்களைவிட, 2 குணங்கள் குறைவு என்று அறியவேண்டும்.

இவர்களில், யமனின் மனைவி ஷாமலாதேவிக்கு தேவகி என்று ஒரு அவதாரம் உண்டு. அது வசுதேவனின் மனைவி தேவகி அல்ல. இது தர்மராஜனின் மனைவி. நிர்ணய 20ம் அத்தியாயத்தில்:

அதோபயோமே ஷிஷுபாலபுத்ரீம் யுதிஷ்டிரோ தேவகீ நாம பூர்வம் |
ஸ்த்ரீயாம்பார்யாம் ||

தர்மராஜன், சிசுபாலனின் மகளான தேவகியை திருமணம் செய்து கொண்டான். அவளே முன்னர் யமனின் மனைவி. யமனே தர்மராஜனாக இருந்ததால், இவனின் மனைவி என்று கூறினார். இந்த வாக்கியம், ஷாமலா, சிசுபாலனின் மகளான தேவகியின் அவதாரம் என்று சொல்வதற்கு ஆதாரமாக இருக்கிறது.

மேலே பார்த்த பர்ஜன்யாதி 6 பேர்களைவிட, அக்னியின் மனைவியான ஸ்வாஹாதேவி இரு குணங்களால் குறைவானவர். அஸ்வினி தேவதைகளின் மனைவியான உஷாதேவி, ஸ்வாஹாதேவியைவிட 10 குணங்கள் குறைவானவர்.

**ஸுத$^3$ருஷன ஷக்ராதி$^3$ ஸுரயுத**
**பு$^3$த$^4$னு தானபி$^4$மன்யு வெனிஸுவ**
**பு$^3$த$^3$னிகி$^3$ந்த$^3$ ஷ்வினிய பா$^4$ர்யா ஷல்யமாக$^3$த$^4$ர**
**உத$^3$ரஜெ உஷாதே$^3$விகி$^3$ந்த$^3$லி**
**அத$^4$மனெனிப ஷனைஸ்சரனு ஷனி**
**க$^3$த$^4$ம புஷ்கர கர்மபனு எனிஸுவனு பு$^3$த$^4$ரிந்த$^3$ ||39**

சுதருஷன = சக்கரம்
ஷக்ராதிசுரயுத = இந்திர முதலான என்றால், யம, வாயு, இந்திர, அஸ்வினி, சந்திர இந்த தேவதைகளின் அம்சத்தைக் கொண்ட
புதனு
தானு அபிமன்யு வெனிஸுவ = அர்ஜுனனின் மகனான அபிமன்யுவாக பிறந்தான்
ஷல்யமாகதர = ஷல்ய, ஜராசந்த இவர்களின்
உதரஜா = வீர்யத்தினால் பிறந்த இரு அவதாரங்களைக் கொண்ட
அஸ்வினி பார்யா = அஸ்வினி தேவதைகளின் மனைவியான உஷாதேவி
புதனகிந்த = புதனைவிட, குறைவு எனப்படுகிறார்
உஷாதேவிகிந்தலி = உஷாதேவியைவிட
ஷனைஸ்சரனு அதமனெனிப = சனீஸ்வரன் அதமன் எனப்படுகிறான்
புஷ்கர கர்மபனு = புஷ்கர என்னும் கர்மத்திற்கு அதிபதியான
ஷனிகெ = சனியைவிட
புதரிந்த = ஞானிகளால்

அதமனெனிஸுவனு = குறைவு எனப்படுகிறான்.

சந்திரனின் மகனான புதன் விசேஷமான சந்திராம்ஷத்தினாலும், சுதர்ஷன என்னும் பகவந்தனின் சக்கரத்தின் ஆவேசத்தினாலும், யம, வாயு, இந்திர, அஸ்வினி இவர்களின் ஆவேசத்தினாலும் சேர்ந்து, சுபத்திரையிடம் அர்ஜுனன் மூலமாக அபிமன்யு என்று பிறந்தான். நிர்ணய 20ம் அத்தியாயத்தில்:

தேஷாம்த்வயோஷ்சவர ஜோபிமன்யு: ||
சந்த்ராம்ஷ யுக்தோ திதராம்புதோஸௌ ஜாதஸ் ஸுபத்ரா ஜடரெsர்ஜுனேன |
தர்மே ரஷக்ராம்ஷ யுதோஸ்வினோஸ்ச ததைவ க்ருஷ்ணஸ்யச சன்னிதானயுக் ||213

என்னும் வாக்கியமே இதற்கு ஆதாரம். அபிமன்யுவிடம் ஸ்ரீகிருஷ்ணனின் சன்னிதானம் இருக்கிறது என்று இந்த வாக்கியத்திலிருந்து தெரிகிறது.

அஸ்வினி தேவதைகளின் மனைவியான உஷெ, புதனைவிட சிறிது குறைவானவள். இவளுக்கு இரு அவதாரங்கள். ஷல்யனின் மகளும், நகுலனின் மனைவியுமான கரேணுமதி அவதாரம் ஒன்று. ஜராசந்தனின் மகளும், சகதேவனின் மனைவியுமான விஜயா என்னும் ரூபம் ஒன்று. இந்த இரண்டும் உஷாதேவியின் அவதாரங்கள். அஸ்வினி தேவதைகள் இருவருக்கும் உஷே என்னும் ஒருவளே மனைவியாக இருந்ததால், அஸ்வினி தேவதைகளே நகுல சகதேவர்களாக வந்திருப்பதாலும், இவர்கள் இருவருக்கும் மனைவியாக, ஒருவளே இரு ரூபங்களில் வந்தாள்.

நிர்ணய 20ம் அத்தியாயத்தில்:
பீம: கன்யாம் ஸஹதேவஸ்ய ஹேதோஸ் ஸமக்ர ஹேதனுஜஸ்யாத்மன ஸ்ஸ: ||
நகுலஸ்யாதான்மத்ரராஜோஹி பூர்வம்ஸ்வீயாம் கன்யாம் ஸாததைஷாப்யுஷாஹி ||

பீமசேனதேவர், ஜராசந்தனைக் கொன்ற உடன், அவனின் மகனான சகதேவன், ஒரு ரதத்தில் தன் தங்கையை, பீமசேன தேவரிடம் ஒப்படைத்து, அவரிடம் வேண்டினான் என்று முந்தைய நிர்ணய ஸ்லோகத்தில் சொன்னதை பார்த்தோம்.

அந்த ஸ்லோகம், 11 ருத்ரர்களின் தாரதம்யத்தை சொல்லும் சந்தர்ப்பத்தில், பத்ரதாப என்னும் ருத்ரன், ஜராசந்தனின் மகனாக சஹதேவனாக பிறந்தார் என்று சொல்கிறது.

இதே சந்தி 27ம் பத்ய அர்த்தத்தில் அதனை உதாரணம் கொடுத்து, விளக்கியிருக்கிறோம். இந்த ஸ்லோகத்தின் அர்த்தம் என்னவெனில்: ஜராசந்தனின் மகனான சஹதேவன் கொடுத்த கன்யையை, பீமசேனதேவர், தனது தம்பியான சகதேவனுக்குக்காக ஏற்றுக் கொண்டார். அவளை சகதேவனுக்கே திருமணம் செய்தார். இதற்கு முன்னர், ஷல்யன், நகுலனுக்கு தன் மகளைக் கொடுத்திருந்தான். அந்த ஷல்யனின் மகள் மற்றும் இந்த சஹதேவனின் தங்கையும் ஜராசந்தனின்

மகளுமான இருவரும், முன்னர் அஸ்வினி தேவதைகளின் மனைவியான உஷாதேவி என்று அறியவேண்டும். -- என்று இந்த வாக்கியத்தினால் அறிகிறோம்.

இந்த உஷாதேவியைவிட சனீஸ்வரன், அதமன். அவனைவிட கர்மத்திற்கு அபிமானியான புஷ்கரன் அதமன் எனப்படுகிறான்.

**உத்[3]வஹா மருதான்விதவிரா**
**த[4] த்[3]விதிய ஸஞ்ஜயனு தும்பு[3]ரு**
**வித்[3]வது[3]த்தம ஜனமேஜய த்வஷ்ட்ருயுத சித்ரரத[2] |**
**ஸத்[3]வினுத த[3]மகோ[4]ஷக கப[3]**
**ந்த[1]த்[3]வயரு க[3]ந்த[4]ர்வத[3]னு மனு**
**பத்[3]ம ஸம்ப[4]வயுத கிஷோரக்ரூர நெனிஸுவனு ||40**

தும்பரு = தும்பரு என்னும் கந்தர்வனுக்கு
விராத = விராத என்னும் அசுர ரூபம் ஒன்று
த்விதிய = இரண்டாவதாக
உத்வஹாமருதான்வித = உத்வஹ என்னும் மருத்தின் அம்சத்தைக் கொண்ட
சஞ்சயனு = சஞ்சயனின் ரூபம் ஒன்று; என இரு ரூபங்கள்
வித்வதுத்தவ = அறிந்தவர்களில் உத்தமனான
ஜனமேஜய = ஜனமேஜய ராஜன்
த்வஷ்ட்ருயுத = த்வஷ்ட்ரு என்னும் சூரியனின் அம்சத்தைக் கொண்ட
சித்ரரத = சித்ரரத என்னும் கந்தர்வனின் அவதாரம்
ஸத்வினுத = சஜ்ஜனர்களால் வணங்கப்படும்
தமகோஷக = தமகோஷ ராயனின் அவதாரம் ஒன்று
கபந்த = கபந்த என்னும் அசுர ரூபம் ஒன்று
த்வயரு = இந்த இரு ரூபங்களும்
தனு கந்தர்வ = தனு என்னும் கந்தர்வனின் அவதாரங்கள்
மனு = ஸ்வாயம்புவ மனு
பத்மஸம்பவயுத = பிரம்மதேவரின் அம்சத்தைக் கொண்ட
கிஷோரனு = கிஷோர என்னும் கந்தர்வன்
அக்ரூரனெனிஸுவனு = அக்ரூரனாக பிறந்தான்.

தும்பரு என்னும் கந்தர்வனுக்கு விராத என்னும் அசுர ரூபம் ஒன்று. இரண்டாவது, சஞ்சய என்பவனின் ரூபம். இப்படியாக இரு ரூபங்கள். தும்பரு என்னும் கந்தர்வன் விராத என்னும் விஷயத்தில் நிர்ணய 5ம் அத்தியாயத்தில்:

ராமோபி தத்ர தத்ருஷே தனதஸ்ய ஷாபாத்கந்தர்வ முர்வஷிரதேரத யாதுதானீம் | ப்ராப்தந்தஷாம் ஸபதிதும்பரு நாமதேயம் நாம்னா விராதமபி ஷர்வவராதவத்யம் ||20

ராமதேவர், சீதா லட்சுமணர்களுடன், தண்டகாரண்ய பிரவேசம் செய்தபோது, விராத என்னும் அசுரனைக் கண்டார். அவன் முன்பு தும்பரு என்னும் கந்தர்வனாக இருந்தான். ஒரு முறை ஊர்வசியானவள், குபேரனின் ஆணைப்படி அவனின்

வீட்டிற்கு அவசரமாக சென்று கொண்டிருந்தபோது, அவள் வழியை மறித்த தும்பரு, அவளை சரியான நேரத்திற்கு செல்ல விடாமல் தடுத்தான். இதை அறிந்த குபேரன், தும்பருவை அசுரனாகப் பிறக்க வேண்டும் என்று சாபம் கொடுத்தார். அவனே விராத என்னும் அசுரனாகப் பிறந்து, ருத்ரதேவரின் வரத்தினால், யாராலும் கொல்லப்பட முடியாதவனாக இருந்தான் என்று இந்த ஆதார வாக்கியம் சொல்கிறது.

இதே தும்பரு, சஞ்சயன் என்னும் விஷயத்தில், நிர்ணய 11ம் அத்தியாயத்தில்:

கவத்கணாதாஸ ததைவ ஸூதாத் ஸமஸ்தகந்தர்வ பதி: தும்பரு: ||
யௌத்வஹோ நாம மருத் ததம்ஷயுக்தோ வஷே சஞ்சயனமதேய: ||143

த்ருதராஷ்டிர ராஜனின் சாரதியான கவத்கண என்னும் பூதஜாதியைச் சேர்ந்தவனிடம், தும்பரு என்னும் கந்தர்வன், உத்வஹ என்னும் மருத்தின் அம்சத்தைக் கொண்டு, சஞ்சய என்னும் பெயரில் பிறந்தான் என்று இந்த ஆதார வாக்கியம் சொல்கிறது.

சித்ரரத என்னும் கந்தர்வன், த்வஷ்ட்ரன் என்னும் சூரியனின் ஆவேசத்தைக் கொண்டு த்ருபதராஜனின் மகனாகி, ஜனமேஜய என்னும் பெயரில் பிறந்தான். நிர்ணய 18ம் அத்தியாயத்தில்:

அக்ரதஸ்துஷி கண்ட்யாகாத்ரதோதார: ஷரான்க்ஷிபன் |
ஜனமேஜயஸ்த மன்வேவபூர்வம் சித்ரரதோஹிஸ: ||71
த்வஷ்ட்ர ராவேஷ சம்யுக்த: ஸஷ்ரானப்யவர்ஷத ||

த்ரோணாசார்யரின் வாக்கியத்தின்படி, த்ருபத ராஜனை வென்று அவனை த்ரோணாசார்யரிடம் ஒப்படைப்பதற்கு, பீமார்ஜுனர்கள் அவனுடன் போருக்குச் சென்றனர். த்ருபதனும் தன் படைகளுடன் போருக்கு வந்தான். ஷிகண்டியும் புறப்பட்டான். அவன் பின்னாலேயே, அவனின் தம்பியான ஜனமேஜயனும் பாணங்களை பொழிந்தவாறே வந்தான். அவன் முன்பு, சித்ரரத என்னும் கந்தர்வனாக இருந்தான். த்வஷ்ட்ர என்னும் சூரியனின் அம்சத்தைக் கொண்டவன் என்று சொல்லியிருக்கிறார். அந்த வாக்கியமே இதற்கு ஆதாரம்.

தமகோஷ கபந்தௌதனுகந்தர்வ உச்யதே -- என்னும் பிருஹத் தாரதம்ய வாக்கியத்தின்படி ராமாவதாரத்தில் ராமதேவரால் கொல்லப்பட்ட கபந்த என்னும் அசுரனும், ஸ்ரீகிருஷ்ணனின் அத்தையின் கணவனான தாகோஷ ராஜனும், தனு என்னும் கந்தர்வனின் ரூபங்கள்.

பிரம்மா ஸ்வாயம்புவாவிஷ்டோ ஹ்யக்ரூர: ப்ராக்கிஷோர: -- என்னும் ஆதாரத்தின்படி பிரம்மதேவர் மற்றும் ஸ்வாயம்புவ மனு இவர்களின் அம்சத்தைக் கொண்ட கிஷோர் என்னும் கந்தர்வன், அக்ரூரராக பிறந்திருக்கிறான் என்று தெரிகிறது.

**வாயுயுத த்[4]ருதராஷ்ட்ர தி[3]விஜர**
**கா[3]யகனு த்[3]ருதராஷ்ட்ர நக்ரனு**
**ராயத்[3]ருபதா[3]வஹ விஸிஷ்டனு ஹூஹூக[3]ந்த[4]ர்வ |**
**நாயக விராட்விவஹயுத ஹஹ**
**ஞேய வித்[3]யாத[4]ரனெ அஜக[3]ர**
**தாயெனிஸுவனு உக்[3]ரஸேனனெ உக்[3]ரஸேனாக்[2]ய ||41**

த்ருதராஷ்ட்ர = திருதராஷ்ட்ர என்னும்
திவிஜர காயகனு = தேவ கந்தர்வன்
வாயுயுத = வாயுதேவரின் ஆவேசத்தைக் கொண்டு
த்ருதராஷ்ட்ர = த்ருதராஷ்ட்ர ராஜன்
நக்ரனு = கஜேந்திரனை பிடித்துக் கொண்டிருந்த முதலையை
ராயத்ருபதனு = த்ருபத ராயன்
அவஹவிஷிஷ்ட = ஆவஹ என்னும் மருத்தின் அம்சத்தைக் கொண்ட
ஹூஹூ கந்தர்வ = ஹுஹூ என்னும் கந்தர்வனின் அவதாரங்கள்
நாயகவிராட = விராட ராஜன்
விவஹயுத = விவஹ என்னும் மருத்தின் அம்சத்தைக் கொண்ட
ஹாஹா = ஹாஹா என்னும் கந்தர்வனின் அவதாரம் ஆகும்.
கேயவித்யாதரனே = பாடகனான சுதர்ஷன என்னும் வித்யாதரன்
அஜகர = நந்தகோபனை விழுங்கிய அஜகரன்
உக்ரஸேனாக்ய = உக்ரசேன என்னும் கந்தர்வன்
உக்ரசேனனெ எனிசுவனு = உக்ரசேன ராஜன் என்று அழைக்கப்படுகிறான்.

அபூச்சதஸ்யாம் த்ருதராஷ்டனாமகோ கந்தர்வராட் பவனாவேஷயுக்த: ||129

என்னும் நிர்ணய 11ம் அத்தியாயத்தின் வாக்கியத்தின் ஆதாரத்தின்படி, த்ருதராஷ்டிரன் என்னும் கந்தர்வன், வாயுதேவரின் ஆவேசத்தைக் கொண்டு, த்ருதராஷ்டிர என்னும் ராஜனாக, அம்பிகெ என்னும் ஸ்த்ரியில் பிறந்தான் என்று தெரிகிறது.

ஹூஹூ என்னும் கந்தர்வனே முதலையாக பிறந்தான் என்னும் விஷயத்தில், பாகவத 8ம் ஸ்கந்தத்தின்:

யோஸௌக்ராஹ: ஸவைஸத்ய: பரமாஸ்சர்ய ரூபத்ருக் |
முக்தோதேவல ஷாபேன ஹூஹூ கந்தர்வஸத்தம: ||

கஜேந்திரனை பிடித்துக் கொண்டிருந்த முதலையை, பரமாத்மன் கொன்ற உடன், அந்த முதலையாக இருந்தவன், அந்த உடலை விட்டு, ஒரு அழகான உருவம் கொண்டு நின்றான். அவன் முன்பு ஹூஹூ என்னும் கந்தர்வனாக இருந்தான். பாட்டு பாடுவதில் தனக்கு நிகர் யாரும் இல்லை என்னும் கர்வத்தில், பிரம்மதேவரின் சபையில் தேவல என்னும் ரிஷிகளை உதாசீனம் செய்த காரணத்தால், அவரின் சாபத்தைப் பெற்றான். அந்த சாபத்தினால் முதலையாக

இருந்தான். தற்போது அந்த சாபத்திலிருந்து மீண்டு, அழகான தன் உருவத்தை மீண்டும் பெற்றான் என்று சொல்லும் இந்த வாக்கியமே இதற்கு ஆதாரம்.

இதே ஹுஹு கந்தர்வனே, ஆவஹ என்னும் மருத்தின் அம்சத்தைக் கொண்டு, த்ருபத ராஜனாக பிறந்தான் என்னும் விஷயத்தில், நிர்ணய 11ம் அத்தியாயத்தில்:

காலேசதஸ்மின் ப்ருஷதோனபத்யோ வனேதுபாஞ்சால பதிஸ்சகார ।
தபோ மஹத்தஸ்ய ததாவராப்ஸராவ லோகனாத்ஸ்கந்திக மாஷுரேத: ।।67
ஸதத்விலஜ்ஜாவஷத: பதேன ஸமாக்ரமத்தஸ்ய பபூவஸூனு: ।
ஹூஹூஸ்துனாமாஸ விரிஞ்ச காயகோ நாம்னாssவஹோயோ மருதாந்ததம்ஷயுக் ।।68
பதேத்ருதத்வாத்ருபதாபிதேய: ।।

பாஞ்சால தேசாதிபதியான த்ருபத ராஜன், தனக்கு சந்தானம் வேண்டுமென்ற விருப்பத்துடன் வனத்தில் கடும்தவம் செய்தான். அப்போது அழகான ஒரு அப்சர ஸ்த்ரியரை அங்கு கண்டவுடன், அவனுக்கு வீர்ய ஸ்கலிதம் ஆனது. அவன் வெட்கத்துடன் அந்த வீர்யத்தை தன் காலால் மிதித்து மூடினான். அதிலிருந்து மகன் பிறந்தான். காலால் (பாதத்தால்) மூடியதால், பிறந்ததால், அவனுக்கு த்ருபத என்று பெயர் வந்தது -- என்கிறார்.

அதே அபிப்பிராயத்தையே தாசார்யர் இங்கு சொல்லியிருக்கிறார். விராட ராஜன், விவஹ என்னும் மருத்தின் அம்சத்தைக் கொண்ட ஹாஹா என்னும் கந்தர்வன். நிர்ணய 11ம் அத்தியாயத்தின்படி:

தேஷாம் ஸமானோவயஸா விராடஸ்த்வ பூத்தாஹா நாமவிதாத்ரு காயக: ।।
மருத்ஸயோ விவஹோ நாமதஸ்யாப்யம்ஷேன யுக்தோ நிஜதர்மவர்த்தி: ।।72

த்ருபத ராஜன் முதலானவர்களுக்கு வயதில் சமானரானவர் விராட ராஜன். இவனே முன்னர் பிரம்மதேவரின் சபையில் பாடகரான இருந்த ஹாஹா என்னும் கந்தர்வன். விவஹ என்னும் மருத்தின் அம்சத்தைக் கொண்டு பிறந்தான் என்று சொல்லிருக்கும் வாக்கியமே இதற்கு ஆதாரமாகும். பாடகரான சுதர்சன என்னும் வித்யாதரன், அஜகரனாக பிறந்தான்.

பாகவத 10ம் ஸ்கந்தம் 32ம் அத்தியாயத்தில் நந்தகோப முதலான கோபாலகர் அனைவரும், பலராம கிருஷ்ணர்களுடன் சேர்ந்து தேவ யாத்திரை என்று, சரஸ்வதி நதி தீரத்திற்கு வந்து, இரவு நேரத்தில் படுத்திருந்தபோது, இந்த அஜகரன், நந்தகோபனை விழுங்கினான். அவனை காப்பாற்ற யாராலும் முடியவில்லை. ஸ்ரீகிருஷ்ணன் தன் பாதங்களால் அந்த சர்ப்பத்தை உதைக்க, அவன் உடனே அந்த சர்ப்ப தேகத்தை விட்டு, திவ்ய ரூபத்தைத் தாங்கி நின்றான். அப்போது ஸ்ரீகிருஷ்ணன், நீ யார் என்று கேட்க:

அஹம் வித்யாதர: கஸ்சித்ஸுதர்ஷன இதிஸ்ருத: ।
ஸ்ரியாஸ்வரூப ஸம்பத்யா வியானே நாசரந்திஷ: ।।12

ரிஷீன் விரூபானன்கிரஸ: ப்ராஹஸம் ரூபதர்ஷித: ||
தைரியாம் ப்ராபிதோ யோனிம் ||

நான் ஒரு வித்யாதரன். என் பெயர் சுதர்சனன். செல்வத்தினால் வந்த கர்வத்தினால், விமானத்தில் ஏறி சஞ்சரித்து வந்தேன். ஒரு நாள், குரூபியான அங்கிரஸ என்னும் ரிஷிகளைக் கண்டு, அவரை கேலி செய்தேன். அவரின் சாபத்தினால் இந்த கதியை அடைந்தேன் என்று அந்த பாம்பு சொன்னது -- என்கிறார். இதிலிருந்து, சுதர்சன என்னும் வித்யாதரன் அஜகரன் என்று தெரிகிறது. உக்ரசேன என்னும் கந்தர்வன், உக்ரசேன ராஜனாக பிறந்தான்.

ய உக்ரசேன: சுரகாயக: ஸ ஜாதோ யதுஷ்டேவ ததாபிதேய: || -- என்னும் நிர்ணய வாக்கியம் இதற்கு ஆதாரமாகும்.

**பி$^3$ஸஜ ஸம்ப$^4$வ யுக்த விஷ்வா**
**வஸு யுதா$^4$மன்யுத்தமௌஜஸ**
**பி$^3$ஸஜ மித்ரார்யமயுத பராவஸு எனிஸுதிப்ப |**
**அஸம மித்ரான்விதனு ஸத்யஜிது**
**வஸுதெ$^3$யொளு சித்ரஸேனம்ருதா**
**ந்த$^4$ஸர கா$^3$யகரெந்து$^3$ கரெஸுவராவகாலத$^3$லி ||42**

பிசஜ சம்பவயுக்த = பிரம்மதேவரின் ஆவேசத்தைக் கொண்ட
விஷ்வாவசு = விஷ்வாவசு என்னும் கந்தர்வன்
யுதாமன்யு = த்ருபத ராஜனின் மகனான யுதாமன்யு என்னும் ராஜன் ஆனான்
ஆர்யம = ஆர்யமன் என்னும்
பிஸஜமித்ரயுத = கமல நண்பனான சூரியனின் அம்சத்தைக் கொண்ட
பராவசு = இந்த பெயருள்ள கந்தர்வன்
உத்தமௌஜஸ யெனிஸுதிப்ப = இந்த பெயரைக் கொண்ட த்ருபத ராஜனின் மகன் என்று சொல்லிக் கொண்டு
அஸம = சமம் இல்லாதவனான (பலசாலியாக) சித்ரசேனனெம்ப கந்தர்வன்
மித்ரான்விதனு = மித்ர என்னும் சூரியனின் அம்சத்தைக் கொண்டு
வசுதியொளு = பூமியில்
ஸத்யஜித் = இந்த பெயரால் த்ருபத ராஜனின் மகனாக பிறந்தான்.
ஆவகாலதலி = அனாதி முதல் அனந்த காலம் வரை
மேலே கூறிய கந்தர்வர்கள் அனைவரும்
அம்ருதாந்தஸர = அமிர்தமே ஆகாரமாக உள்ள தேவதைகளின் பாடகர் என்று அழைக்கப்படுகின்றனர்.

இந்த பத்யத்தில் சொல்லப்பட்டுள்ள யுதாமன்யு, உத்தமௌஜஸ, ஸத்யஜித் என்னும் மூவரும் த்ருபத ராஜனின் மக்கள் ஆவர். இந்த மூவரும் பிரம்மாண்ட, ஆர்யம, மித்ரர் என்னும் சூரியன் ஆகியோரின் அம்சத்தைக் கொண்டு விஷ்வாவஸு, பராவஸு, சித்ரசேன என்னும் கந்தர்வர்கள் என்று, நிர்ணய 18ம் அத்தியாயத்தில்:

சக்ரரக்ஷௌது தஸ்யாஸ்தாம் யுதாமன்யோத்த மௌஜஸௌ |

தாத்ரர்ய மாவேஷயுதௌ விஷ்வாவசு பராவசூ ||73
ஸுதௌதஸ்ய மஹாவீரயௌ ஸத்யஜித்ருஷ்டதோ பவத் ||69
ஸமித்ராம்ஷயுதோ வீரஸ்சித்ர சேனோ மஹாரத: ||70

என்னும் வாக்கியங்களால் தெரிகிறது. பிரம்ம அம்சத்தைக் கொண்ட விஷ்வாவசு என்பவன் யுதாமன்யு என்றும், ஆர்யமாவேஷத்தைக் கொண்ட பராவசு என்பவன், உத்தமௌஜஸ் என்றும், மித்ராம்ஷத்தைக் கொண்ட சித்ரசேனன் சத்யஜித் என்றும் பிறந்தனர் என்பது கருத்து. இவர்கள் அனைவரும் தேவகந்தர்வர்கள் என்று அறியவேண்டும்.

**உளித³ க³ந்த⁴ர்வருக³ளெல்லரு**
**ப³லிமொத³லு கோ³பாலரெனிபரு**
**இளெயொளகெ³ ஸைரெந்த்⁴ரி பிங்க³லெ அப்ஸரஸ்த்ரீயு |**
**திலோதமெயு பூர்வத³லி நகுலன**
**லலனெபார்வதி எனிஸுவளு கோ³**
**குலத³ கோ³பியரெல்ல ஷபரீமுக்²ய அப்ஸரரு ||43**

உளித கந்தர்வருகளெல்லரு = மேலே சொன்ன கந்தர்வர்களைத் தவிர மற்ற கந்தர்வர்கள் அனைவரும்
பலிமொதலு கோபாலரெனிபரு = கோகுலத்தில் ஸ்ரீகிருஷ்ணனின் நண்பர்களான பலி முதலான பெயர்களில் பிறந்திருக்கின்றனர்.
இளியொளகெ = பூமியில்
ஸைளேந்த்ரீ = ஸ்ரீகிருஷ்ணனுக்கு சந்தனத்தைக் கொடுத்த த்ரிவக்ர என்னும் சைரந்த்ரி, பிங்களா எனும் வைஷ்ய ஸ்த்ரி, முன்னர் அப்ஸர ஸ்த்ரீயராக இருந்தாள்.
நகுலன = நகுலனின்
லலனெ பார்வதி = மனைவியான பார்வதி
பூர்வதலி = முன்னர்
திலோதமெயு = திலோத்தமையாக இருந்தார்
கோகுலத கோபியரெல்ல = கோகுலத்து கோபியர்கள் அனைவரும்
ஷபரீ = ராமாயணத்தில் வந்த ஷபரி என்பவள்
முக்யரு = இவரே முதலாக அனைவரும்
அப்சரரு = அப்ஸரஸ ஸ்த்ரீயர்கள் ஆவர்

மேலே கூறிய முக்கிய கந்தர்வர்களை விட்டு, மற்ற கந்தர்வர்கள், கோகுலத்தில் பலி முதலான கோபாலகர்களாக கிருஷ்ணனின் சேவைகளை செய்வதற்காக பிறந்தனர். முன்னர், பிங்களா என்னும் வைஷ்ய ஸ்த்ரி, விதேஹ தேசத்தில் இருந்து, பிறகு வைராக்கியத்தில் வைஷ்ய வ்ருத்தியை விட்டு, தன் அந்தர்கதனான பரமாத்மனே தன் பதி என்று வரித்து, தியானம் செய்து வந்தாள். பின் அந்த தேகத்தை விட்டு, கிருஷ்ணாவதாரத்தில் த்ரிவக்ரையாகப் பிறந்து, ஸ்ரீகிருஷ்ணனுக்கு சந்தனம் கொடுத்து, அவனின் அங்க சங்கத்தைப் பெற்றாள். இவள் முன்னர் அப்ஸரஸ் ஸ்த்ரி. பிங்களையின் கதையை பாகவத 11ம்

ஸ்கந்தத்தில் விளக்கமாக சொல்லியிருக்கின்றனர். இதே அர்த்தத்தையே நிர்ணய 15ம் அத்தியாயத்தில் ‘யாபிங்களான்யsபவ ஆத்மனி ஸம்ஸ்திதம் தம்ஸம்ஸ்ம்ருத காந்தமுருகாயமபூத் த்ரிவக்ரா’ என்னும் 2ம் ஸ்லோகத்திலிருந்து விவரிக்கிறார்.

நகுலனுக்கு ஷல்யனின் மகளைத் தவிர பார்வதி என்று இன்னொரு மனைவியும் இருந்தார். அவள் முன்னர் திலோத்தமை என்னும் அப்ஸரஸ். இதன் விளக்கம் நிர்ணய 22ம் அத்தியாயம், 56ம் ஸ்லோகத்தில் வருகிறது. ‘பார்வதீ நகுலஸ்யா ஸீத்பார்யா பூர்வந்திலோத்தமா’. கோகுலத்தின் கோபியர்கள் அனைவரும் அப்ஸர ஸ்த்ரியர்கள் என்று நிர்ணய வாக்கியத்திலிருந்தும், பாகவத 10ம் ஸ்கந்தத்திலிருந்தும், தெரிகிறது. நிர்ணய 13ம் அத்தியாயத்தில்,

கோபாங்கனா அபிபுரா வரமாபிரே யத் ||
ஸம்ஸ்கரத: ப்ரதமமேவ ஸுசங்க மோனோபூயாத் தவேதி வரமப்ஸரஸ: புராயா: ||51

கோபிகா ஸ்த்ரியர்கள் முன்னர் உத்தமமான அப்ஸரஸ் ஸ்த்ரீயர்களாக இருந்தவர்கள். இவர்கள் பரமாத்மனைக் குறித்து தவம் செய்து ‘உனக்கு உபநயனம் ஆவதற்கு முன்னர் எங்களுக்கு உன் சங்கத்தைக் கொடு’ என்று கேட்டு, அதன்படியே வரத்தைப் பெற்றனர்.

இந்த வாக்கியத்தால், கோபிகா ஸ்த்ரியர்கள் அனைவரும் அப்ஸர ஸ்த்ரியர்கள் என்பது தெளிவாகிறது.

ஷபரி என்பவள் அப்ஸரஸ் ஸ்த்ரி என்பது நிர்ணய 5ம் அத்தியாயத்தில்:
த்ருஷ்ட்வாதமேவஷபரி பரமம் ஹரிஞ்ச ஞ்ஞாத்வாவிவேஷதஹனம் புரதோஸ்ய தஸ்யை ||
ப்ராதாத் ஸ்வலோகமிவவேவஹி ஸாப்ரதீக்ஷ்ய பூர்வம் மதங்க வசனேன வனெத்ர ஸாபூத் ||44
ஷாபாத்வராப்ஸரஸமே வஹிதாம் விமோச்ய ஷச்யாக்ருதாத்பதிபுரஸ்த்வ திவர்பஹேதோ: ||45

ஸ்ரீராமன் தண்டகாரண்யத்தில், சீதையை தேடும் சந்தர்ப்பத்தில், ஷபரி பழங்களை தான் ருசி பார்த்து, அவை ருசியானவையே என்று அறிந்து அவற்றை ஸ்ரீராமனுக்காக என்று எடுத்து வைத்ததை, அவனுக்கு சமர்ப்பித்து, பின் அக்னி பிரவேசம் செய்தாள். ஸ்ரீபரமாத்மன் அவளுக்கு தன் லோகத்தைக் கொடுத்தான். அவள் முன்னர் உத்தமளான அப்ஸரஸ் ஸ்த்ரி. ஒரு நாள் தேவேந்திரன் மற்றும் சசிதேவியின் முன்னர், இவள் தன் அதிகாரத்தைக் காட்ட, சசிதேவி கோபத்துடன் இவளுக்கு சாபம் கொடுத்தாள். அதனால் இவள் பூமியில் பிறந்து, ஸ்ரீராமனின் தரிசனத்தால் விமோசனம் பெற்றாள் என்று இங்கு சொல்லப்பட்டிருக்கிறது.

**க்ருஷ்ணவர்த்மன ஸுதரொளகெ[3] ஷத**
**த்[3]வயஷ்ட ஸாவிர ஸ்த்ரீயரல்லி ப்ர**
**விஷ்டளாகி[3] ரமாம்ப[4] தத்தன்னாம ரூபத[3]லி ।**

**க்ருஷ்ண மஹிஷியரொளகெ[3] இப்பளு**
**த்வஷ்ட்ரு புத்ரிக[1]ஷேரு இவரொளு**
**ஸ்ரேஷ்டளெனிபளு உளித[3] ருஷிக[3]ண கோ[3]பிகாஸமரு ||44**

க்ருஷ்ணவர்த்மன = அக்னி
சுதரொளகெ = மக்களில்
ஷதத்வயஷ்ட சாவிர ஸ்த்ரீயரல்லி = 16,100 கிருஷ்ணனின் மனைவியர்களில்
ரமாம்ப = ரமாதேவி
தத்தன்னாம ரூபதலி = அந்தந்த பெயர், ரூபங்களில்
இப்பளு = இருக்கிறாள்
த்வஷ்ட்ருபுத்ரி = த்வஷ்ட்ராவின் மகளான
கஷேரு = கஷேரு
இவரொளு ஸ்ரேஷ்டளெனிபளு = இவர்களில் சிறந்தவள் எனப்படுகிறாள்
உளித ருஷிகண = கஷேருவைத் தவிர மற்ற, கிருஷ்ணனின் மனைவியராக அவதரித்த அக்னி புத்ரரான ரிஷி கணர்கள்
கோபிகாசமரு = கோபிகா ஸ்த்ரீயர்களுக்கு சமமானவர்கள்.

கிருஷ்ண பத்னியரான 16,100 பேர், முன்னர் அக்னி புத்ரரான ரிஷிகள் ஆவர். கிருஷ்ணனின் அங்கசங்கத்தின் விருப்பத்தால், இவர்கள் தவம் செய்து, வரம் பெற்று, பெண்களாகப் பிறந்து, ஸ்ரீகிருஷ்ணனுக்கு மனைவியர் ஆயினர். இவர்களில் த்வஷ்ட்ரனின் மகளான கஷேரு என்பவள் சிறந்தவள். இவளைத் தவிர மற்றவர்கள், கோபிகா ஸ்த்ரியர்களுக்கு சமர் என்பது கருத்து.

இந்த அர்த்தம் நிர்ணயம் 20ம் அத்தியாயத்தில் நரகாசுரனை சம்ஹாரம் செய்து, அவனின் வீட்டில் சிறையில் இருந்த 16,100 ராஜகுமாரிகளை ஸ்ரீகிருஷ்ணன் ஏற்றுக்கொண்டான் என்னும் கதையில்:

த்வ்யஷ்டௌ ஸஹஸ்ராணி ஷதஞ்ச ரூபஷீலோதாரா: அக்ஷதா: ஸத்வ்ருதஸ்தா: ||
காஷ்சித்தத்ராஸன் தேவகந்தர்வ கன்யா: தாஸாம் ப்ரதானாத்வஷ்ட்ரு புதீகஷேரு: ||112
புத்ரா அக்னீ: பூர்வமஸம்ஸ்சதேऽத ஸ்த்ரீத்வ ப்ராப்த்யைசக்ருருக்ரம் தபஸ்ச ||
பார்யாத்வார்த்தே வாஸுதேவஸ்யயோஷித்தனாந்தா ஸாமிச்சதீனாம் ஸமீர: ||113
அதாத்வரம் தபஸாராதித: ஸஸ்த்ரீபூதாஸ்தே பதரீம் ஸம்ப்ரஜக்மு: ||
நாராயணம் தத்ர ஷுஷ்ரூஷமாணா: ப்ராப்யாப்ஸரஸ்தம் ராஜகுலேஷுஜாதா: ||114

நரகாசுரனின் வீட்டில் சிறைப்பட்டிருந்த, ரூப குணங்களில் சிறந்தவர்களான 16,100 ராஜகுமாரிகளை ஸ்ரீகிருஷ்ணன் கண்டான். இவர்களில் இருந்த, த்வஷ்ட்ரா என்னும் சூரியனின் மகளான கஷேரு என்பவள் சிறந்தவளாக இருந்தாள். இவர்கள் அனைவரும் முன்னர், அக்னிதேவரின் மக்கள். ஸ்ரீகிருஷ்ணனுக்கு பத்னி ஆகவேண்டும் என்று, வாயுதேவரைக் குறித்து தவம் செய்தனர். வாயுதேவரும் அவர்களின் தவத்திற்கு மெச்சி, அவர்கள் விரும்பிய வரத்தைக் கொடுத்தனர்.

பின் அவர்கள் அனைவரும் ஸ்த்ரித்வத்தைப் பெற்று, பதரிகாஸ்ரமத்திற்கு வந்து, அங்கு ஸ்ரீ நாராயணதேவரை சேவை செய்து கொண்டிருந்தனர். அப்ஸரஸ் ஸ்த்ரியராகப் பிறந்து, பின், ராஜகுலத்தில் பிறந்தனர்.

காஸ்சித்ஸ்வர்க்கே: தானிஷாமைவ க்ருஷ்ணம் வவ்ரு: பதிம் ஸர்வகுணாபிராமம் |
அஜானதேவை: ஸர்வகுணை: ஸமாஸ்தா: ஸ்வபாவதோதேந்திராவேஷதோsத: ||115
குணாதிகாஸ்தா: ஷிகிகாஸு கிருஷ்ண: அரோபயித்வா ப்ராஹிணொத்வரவத்யை ||

சிலர் ஸ்வர்க்கத்தில் இருந்தனர். இவர்கள் அனைவரும் ஸ்ரீகிருஷ்ணனின் மகிமைகளைக் கேட்டு, ஸ்ரீகிருஷ்ணனை அவனே தம் பதியாக வேண்டும் என்று கேட்டுக் கொண்டனர். இவர்கள் அனைவரும் ரமாதேவியின் விசேஷ ஆவேசத்தைக் கொண்டிருந்தனர். அஜான தேவதைகளுக்கு சமமானவர்கள். ரமா ஆவேசத்தினாலேயே இவர்கள் அனைவருக்கும் அதிகமான குணங்கள் இருந்தன. ஸ்ரீகிருஷ்ணன் இவர்கள் அனைவரையும் பல்லக்கில் அமர்த்தி, த்வாரகைக்கு அனுப்பினான் என்று இந்த ஸ்லோகத்திலிருந்து தெரிய வருகிறது.

**ஸூனுக³ளு எனிஸுவரு தே³வக்ரு**
**ஷானுவிகெ³ க்ரது ஸிந்து³ ஷுசி பவ**
**மான கௌஷிகரைது³ தும்பு³ரு ஊர்வஷீஷதரு |**
**மேனகா ருஷிராயருக³ளா**
**ஜான ஸுரரிகெ³ ஸமரெனிபரு ஸு**
**ராணகரனாக்யா²த தி³விஜர ஜனகரெனிஸுவரு ||45**

தேவக்ருஷானுவிகெ = அக்னி தேவருக்கு
க்ரது, ஸிந்து, ஷுசி, பவமான, கௌஷிக - என்று
ஐது = 5 பேர்
சூனுகளு எனிசுவரு = மக்கள் இருந்தனர்
இவரைது ஜனரு = இந்த ஐந்து பேர் மற்றும்
தும்புரு ஷதரு = தும்பரு முதலான 100 கந்தர்வர்கள் மற்றும்
ஊர்வஷி ஷதரு = ஊர்வசி முதலான 100 அப்ஸரஸ்கள் மற்றும்
மேனகெ = மேனகை முதலானவர்கள்
ரிஷி = முன்னர் சொன்ன வசிஷ்டாதிகளைத் தவிர, மற்ற ரிஷிகள்
ராயருகளு = முன்னர் சொன்ன ப்ரியவ்ரதாதிகளைத் தவிர, மற்ற ராஜர்கள்
அஜானசுரரிகெ = அஜான தேவதைகளுக்கு
ஸமரெனிபரு = சமம் எனப்படுகிறார்கள்
சுராணகரு = அஜானஜரில் சிறந்தவர்கள் என்னும் தேவதா சமூகம்
அனாக்யாதிவிஜர = புகழ் பெறாத தேவதைகளின்
ஜனகரெனிஸுவரு = தந்தை எனப்படுகிறார்கள்.

அக்னிதேவர்களுக்கு க்ரது, ஸிந்து, ஷுசி, பவமான, கௌஷிக என்னும் 5 மக்கள் இருந்தனர்.
* இவர்கள் ஐந்து பேர்,
* தும்பரு முதலான கந்தர்வர்கள் 100 பேர்,
* ஊர்வசி முதலான அப்ஸரஸ் 100 பேர்,
* வஷிஷ்டாதிகளைத் தவிர மற்ற ரிஷிகள்,
* ப்ரியவ்ரதாதிகளைத் தவிர மற்ற ராஜர்கள்

அனைவரும் அஜானஜர் என்று அழைக்கபப்டுகின்றனர்.

ப்ருஹத் தாரதம்யத்தில்:

பவமான க்ரதௌத்வௌப்ராக் பவமானோக்னிஜ: ஸ்ம்ருத: ||
கௌஷிகோதாக்னிஜ: ஸிந்து: ஷுசி: ப்ராக்ஷுசிரக்னிஜ: ||
தும்பர்யாதி ஷதஞ்சைவ ஊர்வஷ்யாத் யப்ஸராஸ் ததா ||
ருஷயஷ்ச வசிஷ்டாதீன் வ்ருதே அஜானஜா: ஸ்ம்ருதா: ||

பவமான என்னும் அக்னிக்கு, பவமான, க்ரதர் என்னும் இரு மக்கள்.
அக்னிக்கு கௌஷிக, சிந்து என்று இரு மக்கள்.
ஷுசி என்னும் அக்னிக்கு ஷுசி என்னும் மகன் ஒருவன்
என மொத்தம் 5 பேர் அக்னி மக்கள்.
தும்பரு முதலான 100 கந்தர்வர்கள்,
ஊர்வசி, மேனகை முதலான அப்ஸர ஸ்த்ரியர்கள் 100 பேர்
வசிஷ்டாதி உத்தம குணத்தைச் சேர்ந்தவர்களைத் தவிர மற்ற ரிஷிகள்

இவர்கள் அனைவரும் அஜான தேவதைகள் எனப்படுகின்றனர் என்கிறார். இந்த வாக்கியத்தால் மேற்சொன்ன அர்த்தம் தெளிவாகிறது.

ஸுராணகாம்ஸ்தமோனேதுந்தத்யா ஜீவஸஜானகீம்

சுராணர என்னும் தைத்ய சமூகத்தை தமஸ்ஸிற்கு அனுப்புவதற்காக, சீதையை தியாகம் செய்ததுபோல காட்டினான் என்னும் வசனத்தில் சொன்ன சுராணாகர்களை இங்கு சொல்லவில்லை. சுராணகா என்றால் தேவதா சமூகம் என்று அர்த்தம். இந்த தேவதா சமூகத்தவர்கள் அஜானஜரில் சம்பந்தப்பட்ட அ-ப்ரஸித்த (புகழ் பெறாத) தேவதைகளுக்கு தந்தை எனப்படுகிறார்கள்.

**பாவகரிகி[3]ந்தத[4]ம ரெனிஸுவ**
**தே[3]வகுல ஜானாக்[2]ய ஸுரக[3]ண**
**கோவித[3]ரு நானா ஸுவித்[3]யதி[3] ஸ்வோத்தமர நித்ய**
**ஸேவிபரு ஸத்ப[4]க்திபூர்வக**
**ஸ்வாவரரிகு[3] பதே[3]ஷிஸுவரு நி**
**ராவலம்ப[3]ன விமலகு[3]ணக[3]ள ப்ரதிதி[3]வஸத[3]ல்லி ||46**

தேவகுலஜ = தேவதா குலத்தில் பிறந்து தேவதைகள் என்று புகழ் பெறாதவர்கள்

பாவகரிகிந்த = மேற்கூறிய அக்னிகளைவிட
அதமரெனிஸுவ = அதமர்கள் எனப்படுகிறார்கள். இவர்கள் அனைவரும்
நானஸுவித்யதி = பற்பல விதமான உத்தம வித்யையில்
கோவிதரு = ஞானிகள் எனப்படுகின்றனர்
நித்ய = தினந்தோறும்
ஸோத்தமர = தம்மைவிட உத்தமர்களை சத்பக்தியுடன் சேவிக்கிறார்கள்
நிராவலம்பன = எந்த காலத்திலும் யாரையும் எதிர்பார்க்காத ஜகதீஸ்வரனின்
விமலகுணகள = தூய்மையான குணங்களை
ப்ரதி திவசதல்லி = தினந்தோறும்
ஸ்வாவரிகெ = தம்மைவிட குறைந்தவர்களுக்கு
உபதேஷிசுவரு = உபதேசிப்பார்கள்.

மேலே கூறிய அக்னிகளைவிட, புகழ் பெறாத தேவதைகள், குறைவானவர்கள். இவர்கள் அனைவரும் அனைத்து வித்யைகளையும் கற்றவர்களாகவும், தம்மைவிட உத்தமர்களை, பக்தியுடன் சேவை செய்தவாறு, ஜகதீஸ்வரனான ஸ்ரீபரமாத்மனின் நிர்மலமான குணங்களை, தம்மைவிட குறைந்தவர்களுக்கு (பக்தர்களுக்கு) தொடர்ச்சியாக உபதேசம் செய்தவாறு, காலத்தைக் கழிக்கின்றனர்.

**ஸுரரொளகெ$^{3}$ வர்ணாஸ்ரமக$^{3}$ளெ**
**ம்பெ$^{3}$ரடு$^{3}$ த$^{4}$ர்மக$^{3}$ளில்ல தம்மொளு**
**நிருபமரு எந்தெ$^{3}$னிஸிகொம்ப$^{3}$ரு தாரதம்யத$^{3}$லி ।**
**கு$^{3}$ரு ஸுஷிஷ்யத்$^{3}$வவு ருஷிக$^{3}$ளொள**
**கி$^{3}$ருதிஹுது$^{3}$ ஆஜானஸுரரிகெ$^{3}$**
**சிரபித்ரு ஷதாத$^{4}$ம ரெனிஸுவரு ஏளு ஜனருளிது$^{3}$ ||47**

சுரரொளகெ = தேவதைகளில்
வர்ணாஸ்ரமகளெம்ப =
வர்ண = பிராமண க்ஷத்ரிய முதலான வர்ணங்கள்
ஆஸ்ரம = பிரம்மசார்ய முதலான ஆசிரமங்கள்
எரடு தர்மகளில்ல = இரு தர்மங்கள் இல்லை
தம்மொளு = தமக்குள் தாரதம்யத்தில்
நிருபமரு = ஒப்புமை இல்லாதவர்கள் என்று நினைத்துக் கொள்பவர்கள்
ரிஷிகளொளு = ரிஷிகளில்
குரு சிஷ்யத்வவு இருதிஹது = குரு சிஷ்யர் என்னும் பாவம் இருக்கிறது
அஜானசுரரிகெ = அஜான தேவதைகளுக்கு
ஏளு ஜனருளிது = 7 பேர் பித்ருகளை விட்டு
சிரபித்ரு = மற்ற சிரபித்ருகள்
ஷதாதமரெனிசுவரு = 100 குணங்களால் அதமர் எனப்படுகிறார்கள்.

தேவதைகளில், பிராமண, க்ஷத்ரிய என்னும் ஜாதி பேதங்கள் இல்லை. பிரம்மசாரி, க்ருஹஸ்த என்னும் ஆசிரம பேதங்கள் இல்லை. ஆகையால், வர்ணாசிரம

விஷயத்தில் இவர் உத்தமர், இவர் குறைவானவர் என்னும் பேதம் இல்லாமல், நிருபமர் எனப்படுகிறார்கள். அதாவது, அனைவரும் சமர்களே ஆகின்றனர்.

ஆனால், ஞான பக்தியின் அதிக / குறைவினால் தாரதம்யம் உண்டாகிறது. அதிலும், எந்த தேவதைகளுக்கு எந்த தேவதை அதிகம் / குறைவு என்று சொல்லப்பட்டிருக்கிறதோ, அவர்களை விட்டால், வேறு யாருக்கும் ஒப்பிட்டு சொல்லமுடியாது.

அதாவது, கருட, சேஷ, ருத்ரர் சமர். இவர்களுக்கு ஒப்புமை கொடுக்க வேண்டுமெனில், வேறு யாரும் இல்லை. இந்திர மன்மதர்கள் சமர். இவர்களை மற்றவர்களுக்கு ஒப்பிட்டு சொல்ல முடியாது என்பது கருத்து. ரிஷிகளில் இவர் குரு, இவர் சிஷ்யர் என்னும் தாரதம்யம் உண்டு. பித்ருகளில் முன்னர் சொன்ன, ப்ரியவ்ரதாதி கர்ம தேவதைகளின் தாரதம்யத்தில் ஏழு பேர் என்று சொல்லி, சேர்க்கப்பட்டுள்ளது. அவர்களைத் தவிர, மற்ற சிரபித்ருகள், மேலே கூறிய அஜான தேவதைகளுக்கு 100 குணங்களால் அதமர் என்பது கருத்து.

**சிரபிதருக$^3$ளி க$^3$த$^4$ம க$^3$ந்த$^4$**
**ர்வருக$^3$ளெனிபரு தே$^3$வ நாமக**
**கொரதெ எனிஸுவ சக்ரவர்த்திக$^3$ளிந்த$^3$ க$^3$ந்த$^4$ர்வ**
**நரரு உத்தமரெனிஸுவரு ஹ**
**ந்னெரடு எம்பத்தெண்டு கு$^3$ணத$^3$லி**
**ஹிரியரெனிபரு க்ரமதி$^3$ தே$^3$வாவேஷ ப$^3$லதி$^3$ந்த$^3$ ||48**

சிரபித்ருகளிகெ = சிரபித்ருகளுக்கு
தேவ நாமக கந்தர்வரு = தேவ கந்தர்வன்
அதமரெனிபரு = அதமர் எனப்படுகிறான்
கொரதெயெனிஸுவ = தாரதம்யத்தில் குறைவு எனப்படும்
சக்ரவர்த்திகளிந்த = சக்ரவர்த்திகளைவிட
கந்தர்வ = மனுஷ்ய கந்தர்வர்கள்
ஹன்னெரடு எம்பத்தெண்டு குணதலி = 12, 88, 100 குணங்களால்
ஹிரியரெனிஸுவரு = உத்தமர் எனப்படுகிறார்கள்
நரரொளுத்தமரெனிஸுவரு = மனுஷ்யோத்தமர்கள்
இந்த மனுஷ்யோத்தமர்களைவிட
சக்ரவர்த்திகள்,
ஹிரியரெனிபரு = உத்தமர்கள் எனப்படுகிறார்கள்
க்ரமதி = மேலே கூறிய கிரமத்தில்
தேவாவேஷ பலதிந்த = தேவதைகளின் ஆவேசத்தை அனுசரித்து, ஒருவரைவிட இன்னொருவர் 100 குணங்களால் குறைவு எனப்படுகிறார்கள்.

* முந்தைய பத்யத்தில் சொன்ன சிரபித்ருகளைவிட தேவகந்தர்வர்கள் 100 குணங்களால் அதமர்.
* அவர்களைவிட மனுஷ்ய கந்தர்வர்கள் 100 குணங்களால் குறைவு.

* அவர்களைவிட சக்ரவர்த்திகள் 100 குணங்களால் குறைவு.
* அவர்களைவிட மனுஷ்யோத்தமர்கள் 100 குணங்களால் குறைவு.

இதற்கு ஆதாரம், ப்ருஹத் தாரதம்யத்தின்:

பித்ருப்யோ தேவகந்தர்வா அஷ்டோத்தரஷதம் வினா |
தேப்யோ மனுஷ்ய கந்தர்வாஸ் தேப்யோனாஸ் சக்ரவர்த்தின: ||
தேப்யஸ்துமானுஷ ஸ்ரேஷ்டா: க்ரமாச்சத குணாவரா: ||

என்னும் வாக்கியத்தால் தெளிவாகிறது. இதில் சொல்லப்பட்டிருக்கும் தேவ கந்தர்வரில், முன்னர் கர்ம தேவதைகளின் கக்ஷையில் சேர்க்கப்பட்ட 108 பேர் கந்தர்வர்களை விட்டு, மற்ற கந்தர்வர்கள் என்று அர்த்தம். சக்ரவர்த்திகளில் தேவதா ஆவேசம் இருப்பதால், மனுஷ்யோத்தமர்களைவிட அவர்கள் 100 குணங்கள் உத்தமர்கள் என்பது கருத்து.

**தே$^{3}$வதெக$^{3}$ளிம் ப்ரேஷ்யரெனிபரு**
**தே$^{3}$வக$^{3}$ந்த$^{4}$ர்வரு க$^{3}$ளவரி**
**ந்தா$^{4}$வ காலகு ஷிக்ஷிதரு நரனாமக$^{3}$ந்த$^{4}$ர்வ |**
**கேவலதி$^{3}$ ஸத்ப$^{4}$க்தி பூர்வக**
**யாவதி$^{3}$ந்த்$^{3}$ரியக$^{3}$ள நியாமக**
**ஶ்ரீவரனெ எந்த$^{3}$ரிது$^{3}$ ப$^{4}$ஜிபரு மானுஷோத்தமரு ||49**

தேவதெகளிம் = தேவதைகளைவிட
தேவகந்தர்வரு = தேவ கந்தர்வர்கள்
ப்ரேஷ்யரெனிபரு = ஆணையைப் பெறுபவர்கள். அதாவது, தேவதைகளின் ஆணைப்படி நடப்பவர்கள் தேவ கந்தர்வர்கள் என்று அர்த்தம்.
அவரிந்த = தேவ கந்தர்வர்களைவிட
நரனாம கந்தர்வ = மனுஷ்ய கந்தர்வர்கள்
ஆவகாலகு = அனைத்து காலங்களிலும்
சிக்ஷிதரு = உபதேசம் பெறுபவர்கள்
அல்லது, அவர்களது ஆணையின்படி நடப்பவர்கள் என்று அர்த்தம்
கேவலதி சத்பக்தி பூர்வக = மற்ற அனைத்து விஷயங்களின் ஆசையை விட்டு, யோக்யதைக்கேற்ப, உத்தம பக்தியினால் யாவதிந்திரியகள நியாமக = அனைத்து இந்திரியங்களையும் வழி நடத்துபவன்
ஶ்ரீவரனெ எந்தரிது = லட்சுமிபதியே என்று அறிந்து
பஜிபரு = வணங்குவர். அவரே,
மானுஷோத்தமரு = மனிதர்களில் உத்தமர்கள்.

தேவதைகளுக்கு சிஷ்யர்களைப் போல, அவரின் ஆணைகளுக்கேற்ப நடப்பவர்கள் தேவ கந்தர்வர்கள். இவர்களின் சிஷ்யர்களாக, இவர்களது ஆணைப்படி நடப்பவர்கள் மனுஷ்ய கந்தர்வர்கள். இதர தற்காலிக விஷய சுகங்களை விட்டு, சத்பக்தியுடன் பரமாத்மனை வணங்கியவாறு, அனைத்து இந்திரியங்களுக்கும் நாயகன் ஶ்ரீலட்சுமிபதியே என்று அறிந்து, சிந்திப்பவர்கள் மனுஷ்யோத்தமர்கள்.

ப்ருஹத் தாரதம்யத்தில் வரும்:

ஸாக்ஷாத்தேவ முகாத்ப்ரேஷ்யா: தேவகந்தர்வ நாமகா: ||83
ஏகந்தர்வமுக ப்ரேஷ்யா: கந்தர்வா மானுஷாஸ்ம்ருதா: ||

இந்த வாக்கியம் இதற்கு ஆதாரமாக இருக்கிறது.

**பா3த3ராயண பா4க3வத மொத3**
**லாத3 சாஸ்த்ரக3ளல்லி ப3ஹுவித4**
**த்3வாத3ஷ த3ஷ ஸுபஞ்சவிம்ஷதி ஷத ஸஹஸ்ரயுத |**
**பே4த3க3ள பேளித3ரு ஸ்வோத்தம**
**ராதி3தே3யாவேஷ ப3லதி3 வி**
**ரோத4 சிந்திஸபா3ரதி3து3 ஸாது3ஜன ஸம்மதவு ||50**

பாதராயண = வேதவியாச தேவர்
பாகவத மொதலாத சாஸ்திரகளல்லி = பாகவத முதலான அனைத்து சாஸ்திரங்களில்
ஸோத்தம = அவர்களைவிட உத்தமரான
ஆடிதேயாவேஷ பலதி = தேவதைகளின் ஆவேச பலத்தினால்
பஹுவித பேதகள பேளிதரு = குண தாரதம்ய எண்ணிக்கை விஷயத்தில், ஒவ்வொரு கிரந்தத்தில் ஒவ்வொரு விதமாக - அதாவது ஒரு இடத்தில் 12 குணங்கள் குறைவு என்றும், இன்னொரு இடத்தில் 100 குணங்கள் குறைவு என்றும் சொல்லியிருக்கிறார்கள் என்று அர்த்தம்.
த்வாதஷ = 12
தஷ = 10
பஞ்சவிம்ஷதி = 25
ஷத = 100
ஸஹஸ்ர = 1000
ஆயுத = 10,000
விரோத சிந்திசவாரதிது = இதில் விரோதம் பார்க்கக்கூடாது. இரு அர்த்தங்களும் ஒன்றே (சரியானதே) என்று அறியவேண்டும்.
சாதுஜன சம்மதவு = இதுவே அனைத்து அறிஞர்களும் அறிந்து ஒப்புக்கொண்ட விஷயமாகும்.

இந்த கிரந்தத்தில் சொல்லப்பட்டிருக்கும் குண தாரதம்ய எண்ணிக்கைக்கும், விஷ்ணு ரஹஸ்யாதி கிரந்தங்களில் சொல்லப்பட்டிருக்கும் குணங்களின் எண்ணிக்கைக்கும் ஒரு வேளை அதிக / குறைவு வித்தியாசம் வரலாம். புராண வாக்கியங்களிலும் பரஸ்பர பேதங்கள் வரலாம். ஆனாலும், அந்த எண்ணிக்கைகளுக்கு பேதங்களை சிந்திக்கக் கூடாது.

ஏனெனில்: ப்ருஹத் தாரதம்ய வாக்கியம்:

உக்தசங்க்யாதிகத்வோக்திர் யாஸவேஷ விசேஷத: |
ஷதம்தஷ சஹஸ்ரஞ்ச நைவ தன்மாத்ர வாசகம் ||
அவிரோதஸ்த தோக்ஞேயோ நானாவாக்யேஷு ஷர்வஷ: ||

10, 100, 1000 முதலான எண்ணிக்கைகள், 10, 100 என்றே அர்த்தம் அல்ல. 10 என்றாலும், 100 என்றாலும் அனந்த எண்ணிக்கை என்றே ப்ரமாணம் இருப்பதால், தகுந்த எண்ணிக்கையை அந்த இடத்திற்கு ஏற்றவாறு பொருத்தி, அர்த்தம் புரிந்து கொள்வதால், பரஸ்பர விரோத சரியாகிறது. இப்படியாக அர்த்தம் செய்துகொள்வதே சாதுகள் ஒப்புக் கொண்டதாகும்.

**இவரு முக்தீயோக்$^{3}$ய ரெனிபரு**
**ஸ்ரவண மனனாதி$^{3}$க$^{3}$ள பரமோ**
**த்ஸவதி$^{3}$ மாடு$^{3}$த கே$^{1}$ளி நலியுத த$^{4}$ர்ம காமார்த்த$^{2}$ |**
**த்ரிவித$^{3}$ ப$^{2}$லக$^{3}$ள பேக்ஷிஸதெ$^{3}$ ஸ்ரீ**
**பவனமுக$^{2}$ தே$^{3}$வாந்தராத்மக**
**ப்ரவரத$^{4}$ம ஷிஷ்டேஷ்ட தா$^{3}$யகனெந்து$^{3}$ ஸ்மரிஸுவரு ||51**

ஸ்ரவண மனனாதிகள = பரமாத்மனின் சரித்திரங்களை கேட்பது, கேட்டதை எப்போதும் மனதில் சிந்திப்பது என்னும் இந்த இரண்டினை
பரமோத்ஸவதி = பரமானந்தத்தினால் (வீட்டில் மக்களுக்கு வைபவத்துடன் திருமணம் நடந்தால், எப்படி மகிழ்ச்சி அடைவோமோ, அப்படி என்று அர்த்தம்)
மாடுத = அப்படி செய்தவாறு
கேளி = அவற்றைக் கேட்ட உடனேயே மகிழ்ச்சியுடன்
நலியுத = நடனம் ஆடியவாறு
தர்ம, காம, அர்த்த, த்ரிவிதபலகள = இந்த மூன்று விதமான பலன்களை
அபேக்ஷிஸதே = விரும்பாமல்
ஸ்ரீ = லட்சுமிதேவியர்
பவனமுக = வாயுதேவரே முதலான
தேவாந்தராத்மக = தேவதைகளின் அந்தர்யாமியான
ப்ரவரதம = அனைத்து தேவதைகளைவிடவும் சிறந்தவனான
அல்லது
ஸ்ரீபவனமுக தேவாந்தராத்மக ப்ரவரதம = ஸ்ரீவாயுதேவரே முதலான தத்வாபிமானி தேவதைகளுக்கு
சிஷ்டேஷ்ட தாயக = சிஷ்யரான பகவத்பக்தரின் இஷ்டங்களை நிறைவேற்றுபவன் என்று
ஸ்மரிசுவரு = புராணங்களில் சொல்லப்பட்டவாறு சிந்திப்பர்.

பரமாத்மனின் கதைகளை மிகவும் மகிழ்ச்சியுடன் கேட்டவாறு, பின் அதனை மனப்பாடம் செய்து, மகிழ்ச்சியுடன் மெய்மறந்து நடனமாடியவாறு; மனனாதி என்னும் ஆதி சொல்லினால், கீர்த்தனை, ஸ்மரணை முதலான 9 வித பக்தியையும் எடுத்துக் கொள்ள வேண்டும். ஸ்ரவணம், கீர்த்தனம் விஷ்ணோ: ஸ்மரணம் பாதசேவனம், அர்ச்சனம் வந்தனம் தாஸ்யம் சக்யம் ஆத்ம நிவேதனம் என்னும் 9

வித பக்தியால் பரமாத்மனை வணங்கியவாறு, தர்ம, அர்த்த, காம என்னும் மூன்று வித புருஷார்த்தங்களை வேண்டாமல், லட்சுமி பிரம்ம முதலான அனைத்து தேவதைகளின் அந்தர்யாமியான, அனைத்து தேவதைகளைவிட சிறந்தவனான ஸ்ரீபரமாத்மன், பக்தர்களின் இஷ்டங்களை நிறைவேற்றுவான் என்று எப்போதும் ஸ்ரீஹரியை மறக்காமல் யார் வேண்டுகிறார்களோ, அவர்களே முக்தி யோக்யர்கள் என்று விஷ்ணு ரஹஸ்ய முதலான புராணங்களில், முக்தி யோக்யரின் லட்சணங்களை சொல்லியிருக்கிறார்கள். அதே அபிப்பிராயத்தையே தாசார்யரும் இங்கு சொல்லியிருக்கிறார் என்று அறிய வேண்டும்.

**நித்யஸம்ஸாரிக$^3$ளு கு$^3$ணதோ$^3$**
**ஷாத்மகரு பி$^3$ரம்மாதி$^3$ ஜீவர**
**ப்$^4$ருத்யரெம்ப$^3$ரு ராஜனோபாதி$^3$யலி ஹரி எந்து$^3$ ।**
**க்ருத்திவாஸனு பி$^3$ரம்ம ஸ்ரீவி**
**ஷ்ணுத்ரயரு ஸம து$^3$க்க ஸுக$^2$ உ**
**த்பத்தி ம்ருதி ப$^4$ய பேளுவரு அவதாரக$^3$ளிகெ$^3$ ஸதா$^3$ ||52**

நித்யசம்சாரிகள = ராஜஸர்களான நித்ய சம்சாரி ஜீவர்கள்
குணதோஷாத்மகரு = குணதோஷ மிஸ்ரமான ஸ்வபாவம் உள்ளவர்கள். இவர்களின் உபாசனை கிரமம் என்னவெனில்:
பிரம்மாதி ஜீவரு = பிரம்ம முதலான தேவதைகள்
ப்ருத்யரெம்பரு = பரமாத்மனின் பரிவார தேவதைகள் என்று சொல்வர்.
ராஜனோபாதியலி = ராஜன் எப்படி மக்களுக்கு அதிபதியோ, அப்படியே, பிரம்மாதி பிரஜைகளுக்கு பரமாத்மன் அதிபதி
எம்ப = என்பார்கள்
க்ருதிவாஸனு = சர்மமே வஸ்திரமாகக் கொண்ட ருத்ரதேவர்
பிரம்ம, ஸ்ரீவிஷ்ணு த்ரயர் = இந்த மூவரும்
சம = சமர்
அவதாரகளிகெ = பரமாத்மனின் ராம கிருஷ்ணாதி அவதாரங்களுக்கு
சதா = எப்போதும்
துக்க சுக உத்பத்தி = பிறப்பு, இறப்பு, வளர்ச்சி
ம்ருதி = அழிவு
பய = பயம்
பேளுவரு = இவை உண்டு என்று சொல்வார்கள்

நித்ய சம்சாரிகள் எப்போதும், குணதோஷ மிஸ்ரமான ஸ்வபாவம் உள்ளவர்கள். இவர்களின் உபாசனை கிரமம் என்னவெனில்:

தத்ர ஸம்ஸ்ருதிபத்தாஸ்து குணதோஷோ பயாத்மகா: |
தத்ரோச்சா ராஜவத்விஷ்ணோ ஸர்வாதிக்யேஷு சம்ஷயா: ||
ஜாநந்த்யதாபி பிரம்மாதி தேவானாம் பரிவாரதாம் ||

நித்ய சம்சாரிகள் என்பவர்கள் குணதோஷங்கள் என்னும் இரண்டும் கலந்த ஸ்வபாவம் உள்ளவர்கள். பரமாத்மன், ஒரு சாதாரண ராஜனைப் போல பிரஜாதிபதி என்று மட்டும் அறிவார்கள். அதாவது, ராஜர்களுக்கு மேலே சக்ரவர்த்தி எப்படி இருக்கிறானோ, அப்படியே பரமாத்மனுக்கும் வேறொருவர் தலைமை இருக்கலாம் என்று சர்வாதிக (சர்வோத்தம) விஷயத்தில் சந்தேகப்படுகிறார்கள் என்று அர்த்தம்.

ஆனாலும், பிரம்மாதி தேவதைகள் பரமாத்மனின் பரிவாரங்கள் என்று அறிந்திருப்பர் என்னும் சத்தத்வ ரத்ன மாலையின் வாக்கிய அர்த்தத்தையே இங்கு கொடுத்திருக்கிறார்.

பிரம்மதேவர், ருத்ரதேவர், ஸ்ரீவிஷ்ணு இவர்கள் மூவரும் சமம். ராமகிருஷ்ணாதி அவதாரங்களில் சுக, துக்க, வளர்ச்சி, நாசம், பயம் ஆகிய தோஷங்கள் இருக்கிறது என்று நினைப்பர். ஆகையால், இவர்களுக்கு நித்ய சம்சார ரூபமான சந்தானிக லோகம் கிடைக்கிறது. அங்கு, சுக, துக்க மிஸ்ர பலன்களை இவர்கள் அனுபவிப்பர்.

**தாரதம்ய ஞானவில்லதெ3**
**ஸூரிக3ள நிந்தி3ஸுத நித்யதி3**
**தோருதிப்பரு ஸுஜனரோபாதி3யலி நரரொளகெ3 |**
**க்ரூர கர்மாஸக்தராகி3 ஷ**
**ரீர போஷணெ கோ3ஸுக3தி3 ஸ**
**ஞ்சார மாள்பரு அன்யதே3வதெ நீசராலயதி3 ||53**

தாரதம்ய ஞானவில்லதெ = இவர் உத்தமர், இவர் அதமர் என்னும் தாரதம்ய ஞானம் இல்லாமல்
சூரிகள = ஞானிகளை
நித்யதி = தினந்தோறும்
நிந்திஸுத = திட்டியவாறு
நரரொளகெ = மனுஷ்யரில்
சுஜனரோபாதியலி = வெகு யோக்யரான சாதுக்களைப் போல தெரிவான்
க்ரூர கர்மாஸக்தராகி = க்ரூர தேவதையின் பஜனை முதலான கர்மங்களில் ஈடுபட்டு
ஷரீரபோஷணெகோசுகதி = வயிற்றை நிரப்பி, தேகத்தை பார்த்துக் கொள்வதற்காக
அன்யதேவதெ நீசராலயதி = தேவதைகளில் நீசரான க்ஷுத்ர தேவதைகளின் ஆலயங்களிலும்; அல்லது, பிற தேவதைகளின் ஆலயங்கள்; அல்லது பணத்திற்காக நீச மக்களின் வீடுகள் இவற்றில் சஞ்சரிப்பர்.

மனுஷ்யாதமர்கள், தாரதம்ய ஞானமில்லாமல் பகவத் பக்தர்களை திட்டியவாறு, தன்னை ஞானி என்றும், தபஸ்வி என்றும், காட்டிக் கொள்வார்கள். க்ஷுத்ர தேவதைகளின் உபாசனையை செய்தவாறு, வயிற்றுப் பாட்டுக்காக, நீச மக்களின் வீட்டையே சுற்றி வருவார்கள்.

யஸ்தான் த்வேஷிஸமாந்த்வேஷ்டி யஸ்தானனு ஸமானனு -- என்னும் கீதா தாத்பர்யத்தின்படி, தாரதம்ய ஞானமில்லாமல் ஹரிபக்தரின் த்வேஷம் செய்பவன்,

பரமாத்மனிடமும் த்வேஷம் செய்தே செய்கிறான். ஆகையால், அவனுக்கு அதோகதியே கிடைக்கிறது என்பது கருத்து.

**த3ஷப்ரமதிய மதாப்3தி4யொளு ஸும**
**நஸரெனிப ரத்னக3ள அவலோ**
**கிஸி தெகெ3து3 ப்ராக்ருத ஸுபா4ஷாதந்துக3ள ரசிஸி ।**
**அஸுபதி ஸ்ரீரமணகெ3 ஸம**
**ர்ப்பிஸிதெ3 ஸஜ்ஜனரித3னு ஸந்தோ**
**ஷிஸலி தோ3ஷக3ளெணிஸத3லெ காருண்யத3லி நித்ய ||54**

தஷப்ரமதிய மத = பூர்ணப்ரக்ஞர் என்னும் பெயரைப் பெற்ற ஸ்ரீமன் மத்வாசார்யரின் மதம் என்னும்
அப்தியொளு = கடலில்
சுமனஸரெனிப = தேவதைகள் என்னும் ரத்தினங்களை
அவலோகிஸி = தேடி, எடுத்து
ப்ராக்ருத சுபாஷாதந்துகள = பேசுமொழி எனப்படும் உத்தமமான கன்னட மொழி என்னும் கயிற்றில் கட்டி
ரசிஸி = மாலையாக செய்து
அஸுபதி = ப்ராணபதியான
ஸ்ரீரமணகெ = லட்சுமிபதியான ஸ்ரீமன் நாராயணனுக்கு
ஸமர்ப்பிஸிதெ = சமர்ப்பித்தேன்
சஜ்ஜனரு = அறிஞர்கள்
தோஷகளெணிஸதலெ = இதிலுள்ள தோஷங்களை கவனிக்காமல்
காருண்யதலி = கருணையுடன்
நித்ய = தினந்தோறும் இதைப் பார்த்து மகிழட்டும்

**நிருபம ஸ்ரீவிஷ்ணு லகுமி**
**ஸரஸிஜோத்ப4வ வாயு வாணி**
**க3ருட3 ஷண்மஹிஷியரு பார்வதி ஷக்ர ஸ்மர ப்ராண ।**
**கு3ருப்3ருஹஸ்பதி ப்ரவஹ ஸூர்யனு**
**வருண நாரத3 வன்ஹி ஸப்தா**
**ங்கி3ரரு மித்ர க3ணேஷ ப்ருது க3ங்கா3 ஸ்வஹா பு3த4னு ||55**

நிருபம = ஒப்புமை இல்லாதவனான
ஸ்ரீவிஷ்ணு, லட்சுமி,
சரசிஜோத்பவ = பிரம்மதேவர்
வாயு வாணி கருட ஷண்மஹிஷியரு பார்வதி
ஷக்ர = தேவேந்திரன்
ஸ்மர = மன்மதன்
பிராண = அஹங்காரிக பிராணன்
குரு ப்ருஹஸ்பதி ப்ரவஹ சூரியன் வருண நாரத
வன்ஹி = அக்னி

சப்தாங்கிரரு = அங்கிர, வசிஷ்ட முதலான பிரம்மதேவரின் ஏழு மக்கள்
மித்ர = மித்ர என்னும் சூரியன்
கணேஷ
ப்ருது = ப்ருது முதலான சக்ரவர்த்தி ராஜர்கள்
கங்கா ஸ்வாஹா புதன்.

**தரணி தனய ஷனைஸ்சரனு பு**
**ஷ்கரனஜானஜ சிரபிதரு க$^{3}$**
**ந்த$^{3}$ருவரீர்வரு தே$^{3}$வமானுஷ சக்ரவர்த்திக$^{3}$ளு ।**
**நரரொளுத்தம மத்$^{4}$யமாத$^{4}$ம**
**கரெஸுவரு மத்$^{4}$யோத்தமரு ஈ**
**ரெரடு ஜன கை$^{1}$வல்ய மார்க்க$^{3}$ஸ்த$^{2}$ரெந்தா$^{3}$ நமிபெ ||56**

தரணிதனய = சூரியனின் மகனான
ஷனைஸ்சரனு = சனீஸ்வரன்
புஷ்கர
அஜானஜ = அஜானஜ தேவதைகள்
சிரபிதரு,
கந்தர்வரீர்வரு தேவமானுஷ = தேவ கந்தர்வர், மனுஷ கந்தர்வர்
சக்ரவர்த்திகளு
நரரொளுத்தம = மனுஷ்யோத்தமர்
மத்யமரு, அதமர்,
கரெசுவரு = மனிதர்களில் இப்படி மூன்று வித ஜீவர்கள். இவர்களின் நடுவில் மனுஷ்ய கந்தர்வர்கள், மனுஷ்ய சக்ரவர்த்திகள், மனுஷ்யோத்தமர்கள், மனுஷ்ய மத்யமர்கள் என ஈரெரடு ஜன = 2+3=5 வித ஜீவர்கள்
கைவல்ய மார்க்கஸ்தரெந்து = முக்தி யோக்யர் என்று
ஆ நமிபெ = இவர்கள் அனைவருக்கும் வணங்க வேண்டும்.

என்று தாசார்யர் சந்தியின் முடிவில் வணங்குகிறார். இதைப்போலவே, பிருஹத் தாரதம்ய கிரந்தகாரரும் வணங்குகிறார்.

விஷ்ணு: ஸ்ரீபிரம்மாவாணீஷோனீ லோமேந்த்ர ஸ்மரோகுரோ: ।
ப்ரவஹ ஸூர்யவருணௌ நாரதோக்னிர் வஷிஷ்டக: ||
மித்ரவிக்னேஸ்வரௌளசைவ ப்ருதுர்கங்கா ச கேசன ||
ஸ்வாஹா புதோஷானய: புஷ்கராஜான தேவதா: ||
பிதரோ தேவமனுஜ கந்தர்வாஸ்சக்ரவர்த்தின: ||
மனுஷ்யோத்தம பர்யந்தா: ப்ரீயந்தாம் குரவோமம ||

என்று சொல்லியிருக்கிறார். அதே அபிப்பிராயத்தையே தாசார்யரும் இங்கு சொல்லியிருக்கிறார்.

**ஸாரப$^{4}$க்திஞானதி$^{3}$ ப்$^{3}$ருஹ**
**த் தாரதம்யவனரிது படி$^{2}$ஸுவ**

**ஸூரிக3ளிக3னுதி3னதி3 புருஷார்த்த2க3ள பூரயிஸி ।**
**காருணிக மருதந்தராத்மக**
**ப்ரேரக ஜக3ன்னாத2விட்ட2ல**
**தோரிகொம்ப3னு ஹ்ருத்க1மலதொ3ளு யோக்3யதெக3ளரிது ||57**

ஸாரபக்திஞானதிம் = பரமாத்மனிடம் த்ருடமான பக்தியினாலும், ஹரி சர்வோத்தம என்னும் ஞானத்தினாலும்
ப்ருஹத்தாரதம்யவனரிது = ப்ருஹத் தாரதம்ய என்னும் இந்த சந்தியின் சாரத்தை அறிந்து
படிசுவ சூரிகளிகெ = படிக்கும் ஞானிகளுக்கு
அனுதினதி = தினந்தோறும்
புருஷார்த்தகள பூரயிஸி = அவர்களின் விருப்பங்களை நிறைவேற்றி
காருணிக = மஹா கருணாளுவான
மருதந்தராத்மக = பாரதி ரமண முக்யபிராணாந்தர்கத
ப்ரேரக ஜகன்னாதவிட்டல = லட்சுமிபதியான ஸ்ரீ ஜகன்னாதவிட்டலன்
யோக்யதெகளரிது = அவரவர்களின் யோக்யதையை அறிந்து
ஹ்ருத்கமலதொளு = அவர்களின் இதய கமலத்தில்
தோரிகொம்பனு = அபரோக்ஷத்தில் தன் ரூபத்தைக் காட்டுகிறான்.

ஸ்ரீவிஷ்ணு சர்வோத்தமன் என்பதில் துவங்கி, மனுஷ்யோத்தமர்கள் வரை சொல்லியிருக்கும் ப்ருஹத் தாரதம்ய என்னும் இந்த சந்தியின் சாரத்தை அறிந்து, பக்தி ஞானத்தினால், அதனை படிப்பவர்களுக்கு, ஸ்ரீபாரதிரமண முக்யபிராணாந்தர்கத ஸ்ரீலட்சுமிபதியான ஜகன்னாதவிட்டலன் மகிழ்ந்து, அவர்களின் தர்ம காமாதி நான்கு வித புருஷார்த்தங்களை நிறைவேற்றி, அவரவர்களின் யோக்யதைக்கேற்ப அவர்களின் இதய கமலங்களில் தரிசனம் அளிக்கிறான். அதாவது, அபரோக்ஷத்தில் பரமாத்மனை காண்பர் என்று அர்த்தம்.

ப்ருஹத் தாரதம்ய சந்தி என்னும் 21ம் சந்தியின் தாத்பர்யம் இத்துடன் முடிவுற்றது.
ஸ்ரீகிருஷ்ணார்ப்பணமஸ்து.

***

## பாவபிரகாசிகை : சந்தி 22 : சகல துரித நிவாரண சந்தி

**/ ஆவேச அவதார சந்தி**

**ஹரிகதா2ம்ருதசார கு3ருக3ள**
**கருணதிந்தா3பநிது பே1ளுவே**
**பரம ப4கவத்3ப4க்தரித3னாத3ரதி கேளுவுது3**

இந்த சந்தியில், ஸ்ரீபரமாத்மன் தன் பக்தர்கள், தெரியாமல் கெட்ட செயல்களை செய்துவிட்டாலும், அவற்றை மன்னித்து அவருக்கு புண்ணிய பலன்களை

கொடுக்கிறான் என்று திடமாகச் சொல்கிறார். முதலாம் பத்யத்திலிருந்து பரமாத்மன் தயாசமுத்திரன் என்பதை சொல்கிறார்.

ஸ்ரீலகுமி வல்லபகெ சம கரு
ணாளுகள நா காணெனெல்லு கு
சேலனவலிகெ மெச்சி கொட்டனு சகலசம்பதவ |
கேளிதாக்ஷண வஸ்த்ரகள பா
ஞ்சாலிகித்தனு தைத்யனுதரவ
சீளி சந்தையிசிதனு ப்ரஹ்லாதன க்ருபாசாந்த்ர ||1

ஸ்ரீலகுமி வல்லபகெ = ஸ்ரீலட்சுமிபதியான நாராயணனுக்கு
சம = சமமான
கருணாளுகள = கருணாசாலியை
எல்லி = எந்த உலகத்திலும்
நா = நான்
காணே = கண்டதில்லை
குசேலன = சுதாமன் என்னும் பிராமணனின்
அவலிகெ = அவலுக்கு
மெச்சி = புகழ்ந்து / மகிழ்ந்து
சகல சம்பதவ = அனைத்து செல்வங்களையும் கொடுத்தான்.
கேளிதாக்ஷண = கேட்ட அதே கணத்திலேயே
வஸ்த்ரகள = எல்லையில்லா ஆடையினை
பாஞ்சாலிகித்தனு = பாஞ்சாலிக்குக் கொடுத்தான்
தைத்யன = ஹிரண்யகசிபுவைக் கொன்று
க்ருபாசாந்த்ர = கருணாளுவான ஸ்ரீஹரி
ப்ரஹ்லாதன = பிரகலாதனை
சந்தையிஸிதனு = காப்பாற்றினான்.

கருணா சமுத்திரன் என்றால் ஸ்ரீலட்சுமிபதியான ஸ்ரீமன் நாராயணன் ஒருவனே. அவனுக்கு சமமானவர்கள் வேறு யாரும் எந்த உலகத்திலும் இல்லை. அத்தகைய கருணையை அவன் யாரிடம் காட்டினான் என்றால்: குசேலன் என்னும் பிராமணன் தந்த 4 பிடி அவலில், ஒரு பிடி அவலை மட்டும் எடுத்துக் கொண்டு, அவனுக்கு இஹத்தில் மிகப்பெரிய செல்வத்தையும், பரலோகத்தில் முக்தியையும் கொடுத்தான். சபையில் துச்சாதனன் தன் ஆடையை இழுத்தபோது திரௌபதி, 'ஹே கிருஷ்ணா த்வாரகாவாசி' என்று ஸ்ரீகிருஷ்ணனை பிரார்த்திக்க, உடனடியாக, ஸ்ரீகிருஷ்ணன் அவளுக்கு முடிவில்லா ஆடையைத் தந்து அவள் மானத்தைக் காப்பாற்றினான். ஹிரண்யகசிபு தன் மகனான பிரகலாதனைக் கொல்வதற்காக தயாரானான். பரமாத்மன் நரசிம்ம அவதாரத்தை எடுத்து, ஹிரண்யனைக் கொன்று, பிரகலாதனைக் காத்தான். ஆகையால், பரமாத்மன் க்ருபாசாந்திரன் என்று அழைக்கப்படுகிறான்.

தேவஷர்மாஹ்வய குடும்பகெ

ஜீவனோபாயவனு காணதெ
தேவதேவ ஷரண்ய ரக்ஷிஸு ரக்ஷிசெனெ கேளி |
தா ஒலிது பாலிஸித ஸௌக்ய க்ரு
பாவலோகனதிந்த ஈதன
சேவிசதெ ஸௌக்யகள பயசுவரல்ப மானவரு ||2

தேவஷர்மாஹ்வய = தேவஷர்ம என்னும் பிராமணனின்
குடும்பகெ = குடும்பத்திற்கு
ஜீவனோபாயவனு காணதெ = வாழ்க்கைக்கு தேவையான பணத்தைக் காணாமல்
தேவதேவ! ஷரண்ய!
ரக்ஷிஸு = என்னை காப்பாற்று
ரக்ஷிஸெனெ = என்னைக் காப்பாற்று என்று
கேளி = வேண்டியதைக் கேட்டு
க்ருபாவலோகனதிந்த = மிகக் கருணையுடன்
தா ஒலிது = தான் தரிசனம் அளித்து
ஸௌக்ய பாலிஸித = செல்வங்களைக் கொடுத்து காப்பாற்றினான்
ஈதன = இவனை, ஸ்ரீபரமாத்மனை
சேவிசதெ = வணங்காமல்
அல்ப மானவரு = கீழான மனிதர்கள்
ஸௌக்யகள பயசுவரு = தங்களின் நலன்களை விரும்புவர்

தேவஷர்மா என்னும் பிராமணன், தன் மனைவி மக்கள் ஆகியோரை காப்பாற்ற / பாதுகாக்க வழி தெரியாமல், ஏழ்மையில் இருந்து கஷ்டப்பட்டவாறு, ஸ்ரீனிவாசதேவரைக் குறித்து பிரார்த்தனை செய்தான். அதற்கு ஸ்ரீபரமாத்மன் தரிசனம் அளித்து வரத்தைக் கொடுத்தான். ஆதித்ய புராண வெங்கடேச மஹாத்ம்யத்தில் இந்த கதை வருகிறது.

ஸ்ரீனிவாச உவாச ||
ப்ரீதோஹம் தே த்விஜஸ்ரேஷ்ட மதுபாஸன கர்மணா |
மஹதைஸ்வர்ய ஸம்ஸித்தி காரணம் ஸ்தோத்திர முத்தமம் |
க்ருதவானஸி தஸ்மாத்த்வம் மாப்யைஷ்டாத்ர பரத்ரஹி ||
விபன்னாஷ: ஸம்பதாப்திர்பூயாத்தே மதனுக்ரஹாத் ||
மமபக்தஸ்ய தேகேஹே ஸ்வர்ணவ்ருஷ்டிர் தினேதினே ||

தேவஷர்மாவிடம் ஸ்ரீனிவாசதேவர் சொன்னது:
'ஹே பிராமண ஸ்ரேஷ்டனே. நீ செய்த என் உபாசனை ரூபமான ஸ்தோத்திரத்தினால், நான் மகிழ்ந்தேன். அபாரமான செல்வத்தை பெறக்கூடிய தகுதியுள்ள ஸ்தோத்திரத்தை நீ செய்திருக்கிறாய். ஆகையால், நீ இஹத்திலும் பரத்திலும் பயப்படத் தேவையில்லை. என் அருளால் உன் கஷ்டம் பரிகாரம் ஆகிறது. அபாரமான செல்வம் உனக்கு கிடைக்கப் போகிறது. என் பக்தனான உன் வீட்டில் தினமும் தங்க மழை பொழியும்' என்று பரமாத்மன் வரம் கொடுத்தான் -- என்று சொல்லப்பட்டிருக்கிறது.

சுகமிச்சந்தி மே மூடா: நீச்சந்தி சுககாரணம் -- என்னும் வாக்கியத்திற்கேற்ப அனைவருக்கும் சுகம் வேண்டும். ஆனால், என்ன செய்தால், சுகம் கிடைக்குமோ, அந்த காரணம் மட்டும் யாருக்கும் வேண்டாம். அல்ப மனிதனானவன், பரமாத்மனை வணங்காமல், சுகத்தை மட்டும் வேண்டுகிறான். அது அவனுக்கு என்றைக்கும் கிடைக்காது என்பது கருத்து.

ஸ்ரீனிவாசன போல்வ கருணிக
ஈனலின ஜாண்டதொளு காணெ ப்ர
வீணராதவரரஸி நோள்புது ஸ்ருதி புராணதொளு ।
த்ரோண பீஷ்ம க்ருபாதிகளு குரு
சேனெயொளகிரெ அவரவகுணக
ளேனு நோடதெ பாலிஸித பரமாத்ம பரகதிய ||3

ஸ்ரீனிவாசன போல்வ = ஸ்ரீனிவாசதேவருக்கு சமானர் என்று சொல்வதற்கு தகுதியான
கருணிகள = கருணாளுகளை
ஈ நளின ஜாண்டதொளு = இந்த பிரம்மாண்டத்தில்
காணே = நான் கண்டதில்லை
ப்ரவீணராதவரரு = ஞானிகள்
ஸ்ருதி புராணதொளு = ஸ்ருதி, ஸ்ம்ருதி, புராணங்களில்
அரஸினோள்பரு = தேடிப் பார்க்கலாம்
த்ரோண பீஷ்ம க்ருபாதிகளு = இத்தகைய ரிஷிகள்
குருஸேனெயொளகிரெ = கௌரவர்களின் சேனையில் இருந்தாலும்
அவரவகுணகளேனு நோடதெ = அவர்களின் கெட்ட குணங்களை கவனத்தில் கொள்ளாமல்
பரமாத்ம = ஸ்ரீகிருஷ்ணன்
பரகதிய = பரலோகத்தில் உத்தம கதியை
பாலிஸித = அவர்களுக்குக் கொடுத்தான்

ஸ்ரீஸ்ரீனிவாசனைப் போல கருணா சமுத்திரனை இந்த பிரம்மாண்டத்தில் எங்கு தேடினாலும் அத்தகையவர் எனக்குக் கிடைக்கவில்லை. ஞானிகள் ஆனவர்கள், இந்த விஷயத்தில் எவ்வித சந்தேகமும் இல்லாமல், ஸ்ருதிகளையும், புராணங்களையும் நன்றாக படித்து, அதில் தேடிப் பார்த்துக் கொள்ளலாம். த்ரோணாசார்யர், பீஷ்மாசார்யர், க்ருபாசார்யர் ஆகியோர் ஸ்ரீகிருஷ்ணனுக்கு எதிரான கௌரவரின் சேனையில் இருந்துகொண்டு, பாண்டவர்களுக்கு எதிராக போர் புரிந்தனர். அப்படி இருந்தாலும், அவர்களின் அவகுணங்களை கவனத்தில் கொள்ளாமல், அவர்கள் அனைவருக்கும் உத்தம கதியைக் கொடுத்தான்.

சண்டவிக்ரம சக்ர ஷங்கவ
தோண்டமான ந்ருபாலகித்தனு
பாண்டகாரக பீமன ம்ருதாபரணகளி கொலித ।

மண்டெ ஒடெதாகாஷராஜன
ஹெண்டதிய நுடி கேளி மகளிகெ
கண்டனெனிஸித கஹனமஹிம கதாப்ஜதரபாணி ||4

சண்டவிக்ரம = புகழ்பெற்ற வீரனான ஸ்ரீஸ்ரீனிவாசன்
சக்ர ஷங்கவ = சக்ர சங்கினை
தோண்டமான ந்ருபாலகெ = தொண்டைமான் ராஜனுக்கு
இத்தனு = கொடுத்தான்
பாண்டகாரக பீமன = பீமன் என்னும் குயவன்
ம்ருதாபரணகளிகெ = மண் ஆபரணங்களுக்கு
ஒலித = மெச்சி தரிசனம் அளித்தான்
கஹன மஹிம = அறிவதற்கு சாத்தியமில்லாத மகிமை உள்ள
கதாப்ஜ தரபாணி = கதா பத்மங்களை கைகளில் தரித்துள்ள
மண்டெ ஒடெத = ஸ்ரீனிவாசனின் தலையை உடைத்த கோபாலகன்
ஹெண்டதிய = ராமாவதாரத்தில் தன் மனைவியான சீதாதேவியின்
நுடி கேளி = பேச்சைக் கேட்டு
ஆகாஷராஜன மகளிகெ = ஆகாசராஜனின் மகளுக்கு
கண்டனெனிஸித = கணவன் என்று அழைத்துக் கொண்டான்.

தொண்டைமான் ராஜனின் பக்திக்கு மெச்சி, தன் சக்ர சங்கினை அவனுக்குக் கொடுத்தான். கதா, பத்மங்களை மட்டும் தான் வைத்துக் கொண்டான். பீமன் என்னும் குயவனின் பக்திக்கு மெச்சி, அவன் சமர்ப்பித்த மண்ணினால் ஆன துளசி தளங்களை ஏற்றுக் கொண்டான். சோளராஜனின் செல்வங்களை காத்து வந்த கோபாலகன், கோ-ரூபியான பிரம்மதேவர், ஸ்ரீனிவாசனுக்கு பால் அபிஷேகம் செய்வதைக் கண்டு பொறுக்காமல், அந்த பசுவை அடிக்க வர, தன் பக்தனுக்கு விழும் அடியை ஸ்ரீனிவாசன் தன் தலையில் தாங்கி மண்டை உடைபட்டான்.

ராமாயணத்தில், மாயா சீதையான வேதவதி, சீதையின் ரூபத்தில் ஒரு ஆண்டு காலம் ராவணனின் வீட்டில் கஷ்டப்பட்டதால், இந்த வேதவதியை திருமணம் செய்து கொள்ள வேண்டுமென்று சீதை வேண்ட, இந்த அவதாரத்தில் நான் ஏகபத்னி விரதன் என்று சொல்லி, அடுத்த ஸ்ரீகிருஷ்ணாவதாரத்தில் இவளை நான் திருமணம் செய்து கொள்வேன் என்று சொல்லி வாக்களித்தான். மனைவியான சீதாதேவிக்குக் கொடுத்த வாக்கினை, உண்மை ஆக்குவதற்காக ஆகாசராஜனின் மகளை திருமணம் செய்து கொண்டான். ஆகாசராஜனின் மகளான பத்மாவதியே வேதவதி என்பது கருத்து. இந்த கதை அனைத்தும் பவிஷ்யோத்தர புராண வெங்கடேச மஹாத்ம்யத்தில் விளக்கமாக சொல்லப்பட்டிருக்கிறது. அந்த கதையை தாசார்யர் சுருக்கமாக இங்கு சொல்லியிருக்கிறார்.

கௌதமர நிஜபத்னியனு புரு
ஹூதனைதிரெ காய்த வ்ருத்ரன
காதிசித பாபவனு நால்கு விபாக மாடிதனு |
ஷாதகும்பாத்மக கிரீடவ

கைதவதி கத்தோய்த இந்த்ரா
ராதிபாகில காய்வ பக்தத்வேன ஸ்வீகரிஸி ||5

கௌதமன நிஜபத்னியனு = கௌதமரின் மனைவியான அகலிகையை
புருஹூதனு = தேவேந்திரன்
யைதிரெ = அபகரிக்க
காய்து = அந்த பாவத்திலிருந்து இந்திரனைக் காத்து
வ்ருத்ரன = வ்ருத்ராசுரனை
காதிஸித = கொன்ற
பாபவனு = பாவத்தை
நால்கு விபாக மாடிதனு = பூமி, மரம், தண்ணீர், பெண் என இந்த 4 இடங்களில் பிரித்து வைத்து, இந்திரனை பாவம் இல்லாதவனாக மாற்றினான்.
ஷாதகும்பாத்மக = தங்க மயமான
கிரீடவ = ஸ்வேதத்வீபத்தில் ஸ்ரீமன் நாராயணதேவர் தரித்திருந்த கிரீடத்தை
கைதவதி = கள்ளதனத்தால்
கத்தொய்த = அபகரித்துப் போன
இந்திராராதி = இந்திரனின் எதிரியான பலிசக்ரவர்த்தியை
பக்தத்வேன = அவனை தன் பக்தன் என்று அங்கீகரித்து
பாகில காய்வ = அவனின் வீட்டின் வாயிலை காத்தான்.

தேவேந்திரன், கௌதமரின் மனைவியான அகலிகையை வஞ்சித்து, அவளை அபகரிக்க, அவனுக்கு வந்த மிகப்பெரிய பாவத்தை பரிகரித்து, இந்திரனைக் காத்தான். அடுத்து தேவேந்திரன் வ்ருத்ராசுரனைக் கொன்று பிரம்மஹத்யையை அனுபவிக்கும்போது, 'பூம்யம்புத்ருமயோஷித்ப்ய: சதுர்தாவ்ய பஜத்தரி:' என்னும் பாகவத வாக்கியத்தின்படி, அந்த பிரம்மஹத்யையை நான்கு பாகங்களாக மாற்றி,
* பூமியில் ஒரு பாகத்தையும்,
* தண்ணீரில் ஒரு பாகத்தையும்,
* மரங்களில் ஒரு பாகத்தையும்,
* பெண்களில் ஒரு பாகத்தையும்

வைத்து இந்திரனை பாவங்கள் இல்லாதவனாக செய்தான். இந்த நான்கு இடங்களில் இன்றும் பிரம்மஹத்யை 4 விதமாக இருக்கிறது. அது எப்படியெனில்:

ஈரணம் பிரம்மஹத்யாய ரூபம் பூமௌப்ரத்ருஷ்யதே ||7
நிலத்தில் தரிசு நிலமாக ஒரு பாகம் இருக்கிறது.

தாஸு புத்புதபேனாப்யாம் த்ருஷ்டந்தத்தரிகில்பிஷம் ||10
தண்ணீரில் நுரைகள் இருக்கின்றன. இந்த ரூபத்தில் பிரம்மஹத்யை இருக்கிறது.

தேஷாம் நிர்யாஸரூபேண பிரம்மஹத்யா ப்ரத்ருஷ்யதே ||8
மரங்களில் நெருப்பு ரூபமாக, பிரம்மஹத்யா இருக்கிறது.

ரஜோரூபேண தாஸ்வம்ஹோ மாஸிமாஸி ப்ரத்ருஷ்யதே ||9

மாதத்திற்கு ஒரு முறை ரஜஸ்வலா (விழுப்பு) ரூபமாக பிரம்மஹத்யை பெண்களிடம் இருக்கிறது. என்று பாகவத 6ம் ஸ்கந்தம், 9ம் அத்தியாயத்தில் விவரமாக சொல்லப்பட்டிருக்கிறது.

இந்திரனின் எதிரியான பலிசக்ரவர்த்தி, பரமாத்மனின் கிரீடத்தை திருட்டுத்தனமாக அபகரித்து ஓடினான். பாகவத 10ம் ஸ்கந்தத்தில் இந்த கதை வந்திருக்கிறது. மகாபாரத தாத்பர்ய நிர்ணய 16ம் அத்தியாயத்தில் :

ததாதுக்தாப்தெள ஸம்ஸுதிஸ்தை: ஸுராத்யை: பூஜா ஆப்தும் ஸ்தானமேஷாஞ்ச யோக்யம் ||
முக்தஸ்தானாதாப நாராயணோஜோ பலிஸ்சாகாத்தத்ர ஸந்த்ரஷ்டுமீஷம் ||4
தத்ராஸுராமேஷ மமுஷ்யவிஷ்ணு: ஸந்தர்ஷயன் சுப்திஹீனோபி நித்யம் ||
ஸம்ஸுப்தவச்சேஷ்ய உதாரகர்மா சஞ்ஞாயை தேவானாம் முகமீக்ஷ்ய ப்ரமேய: ||5
தேவாஸ்ச தத்பாவவிதோகிளாஸ்ச நிமீலிதாக்ஷா: ஷயனேஷுஷிஷ்யரே ||
ததா பலிஸ்தஸ்ய விஷ்ணோ: கிரீடமாதாயாகாஜ்ஜ ஹஸுஸ்ஸர்வதேவா: ||6
நாராயணே ஸர்வதேவை: ஸமேதே பிரம்மாதிபிர் ஹாஸமானே ஸுபர்ண: ||
கத்வாபாதாலம்யுதி ஜித்வாபலிம் ச கிரீடமாதாயாப்ய யாத்யத்ர க்ருஷ்ண: ||7

ஸ்ரீகிருஷ்ணன் ஜராசந்தனுடன் 17 முறை போர் புரிந்து அவனை வென்று, 18ம் முறையில் அவனுக்கு வெற்றியைக் கொடுக்க நிச்சயித்து, 18ம் முறையில் போருக்கு முன்பாகவே, கோமந்த பர்வதத்திற்கு சென்றான். அந்த சமயத்தில், முக்த ஸ்தானத்தில் இருக்கும் ஸ்ரீ நாராயணன், அமுக்தர்களான பிரம்மாதி தேவதைகளுக்கு, தன்னை வணங்க வேண்டுமெனில் அவர்களுக்கு அங்கு பிரவேசம் இல்லாததால், அவர்களிடமிருந்து சேவை பெற்றுக் கொள்வதற்காக, பாற்கடலுக்கு நடுவில் இருக்கும் ஸ்வேதத்வீபத்திற்கு வந்தான்.

அதே சமயத்தில், பலி சக்ரவர்த்தியும் நாராயணனை வணங்குவதற்கு அங்கு வந்தான். அவனில் அசுர ஆவேசம் இருப்பதை மக்களுக்குக் காட்டும் விதமாக, ஸ்ரீமன் நாராயணன், தேவதைகளை படுத்துத் தூங்குமாறு சைகை செய்து, என்றைக்கும் தூக்கம் இல்லாதவனான தானும் தூங்குவதாக நாடகம் ஆடினான். அங்கு வந்த பலி சக்ரவர்த்தி, அனைவரும் தூங்கிக் கொண்டிருப்பதைக் கண்டு, அசுர ஆவேசத்தைக் கொண்டிருந்ததால், பரமாத்மனின் தலையில் இருக்கும் அற்புதமான கிரீடத்தை எடுத்து, வஸ்திரத்தில் சுற்றிக் கொண்டு ஓடிச் சென்றான். அப்போது தேவதைகளும், பரமாத்மனும் அவனது செய்கையைக் கண்டு சிரித்தனர்.

அப்போது கருடன், பலி சக்ரவர்த்தியை துரத்தி சுதல லோகத்திற்கு சென்று, அவனை வென்று, அந்த கிரீடத்தை திரும்பக் கொண்டு வந்து, கோமந்த பர்வதத்தில் நின்றிருந்த ஸ்ரீகிருஷ்ணனின் தலையில் அந்த கிரீடத்தை வைத்து, அவனை வணங்கினான்.

அந்த அபிப்பிராயத்தையே தாசார்யர் இங்கு சொல்லியிருக்கிறார். இத்தகைய அபராதத்தை பலிசக்ரவர்த்தி செய்திருந்தாலும், வாமன ரூபத்தினால் அவனது வீடு,

வாயில் ஆகியவற்றை காத்தவாறு அவனை காப்பாற்றினான். ஆகையால், இத்தகைய கருணாளுவை இந்த உலகத்தில் வேறெங்கும் நான் காணவில்லை என்று தாசார்யர் கூறுகிறார்.

நார நந்தவ்ரஜத ஸ்த்ரீயர
ஜாரகர்மகெ ஒலித அஜ சுகு
மாரனெனிசித நந்தகோபகெ நலினபவஜனக ।
வைரவர்ஜித தைத்யரனு சம்
ஹாரமாடித விபகமன பெக
லேரிதனு கோபாலகர வ்ருந்தாவனதொளித்து ।।6

நார = அர என்றால் தோஷம். நார என்றால் தோஷம் அற்றவன். இத்தகைய பரமாத்மன்
நந்தவ்ரஜத ஸ்த்ரியர = நந்தகோகுலத்தில் வசித்து வந்த கோபிகா ஸ்த்ரியர்கள்
ஜாரகர்மகெ ஒலித = தன்னை ஜாரன் (பெண்களை மயக்குபவன்) என்று நினைத்து, பக்தியுடன் சேவிப்பதற்காக அவர்களுக்கு தரிசனம் அளித்தான்.
அஜ = ஸ்வயம் உத்பத்தி இல்லாதவன்
நளினபவஜனக = பத்ம சம்பவரான பிரம்மதேவரின் தந்தையான
நந்தகோபகெ = நந்தகோபனுக்கு
சுகுமாரனெனிஸித = அவனின் மகன் என்று பெயர் பெற்றவன்
வைரவர்ஜித = தைத்யர்களிடம் தனக்கு த்வேஷம் இல்லாதிருந்தாலும்
தைத்யரனு சம்ஹார மாடி = தேவதைகளை பாதுகாப்பதற்காக தைத்யர்களைக் கொன்றான்
விபகமன = ஸ்வயம் கருட வாகனன் ஆனாலும்
வ்ருந்தாவனதொளு = விருந்தாவனத்தில்
அந்து = அன்று ஒரு நாள்
கோபாலகர பெகலேரிதனு = கோபாலகர்களின் முதுகில் ஏறினான்.

தான் தோஷங்கள் அற்றவன். ஆனாலும், தன்னை 'பெண்களை மயக்குபவன்' என்று நினைத்து உபாசனை செய்து வரும் நந்தகோகுல நிவாசிகளான கோபிகா ஸ்த்ரியர்களுக்கு தரிசனம் அளித்து, அவர்களுக்கு அங்க சங்கத்தைக் கொடுத்து, அவர்களுக்கு பரலோகத்தில் திவ்ய கதியைக் கொடுத்தான். பிரம்மதேவரின் தந்தையே ஆனாலும், தனக்கு பிறப்பு ஆகியவை இல்லை என்றாலும், நந்தகோபனுக்கு மகன் என்று சொல்லிக் கொண்டான். தனக்கு தைத்யர்களில் எவ்வித த்வேஷங்களும் இல்லை என்றாலும், தேவபிராமணர்களை பாதுகாப்பதற்காக தைத்யர்களைக் கொன்றான். தான் கருட வாகனன். ஆனாலும், தான் பாலலீலைகளைக் காட்டியவாறு, குதிரை விளையாட்டினைப் போல, ஸ்ரீதாம என்னும் கோபாலகனின் முதுகில் ஏறி பாண்டீரக என்னும் மரத்தின் அடியில் விளையாடினான்.

உவாஹக்ருஷ்ணோ பகவான் ஸ்ரீதாமானம்பராஜித: -- என்னும் பாகவத 10ம் ஸ்கந்த வாக்கியத்தின் வியாக்யானத்தில் 'ஸ்ரீதாமா பராஜித: ஸம்

க்ருஷ்ணமுவாஹ' என்று அர்த்தம் சொல்லியிருக்கின்றனர். அதாவது, மூலத்தில், ஸ்ரீகிருஷ்ணன் தான் தோற்று, ஸ்ரீதாமனை தான் முதுகில் ஏற்றிக் கொண்டான் என்று அர்த்தம் வருகிறது. இந்த வாக்கியம் ஹரிவம்சம் ஆகியவற்றிற்கு விரோதம் ஆகிறது. அதற்காக 'பஹுமான விரோதேன வ்யத்யாஸ: ஷப்ததோர்த்தத:' என்னும் பாகவத தாத்பர்யத்திற்கு ஏற்றவாறு, மகா கிரந்தங்களுக்கு விரோதம் வந்தால், ஷப்தத்தினாலோ, அர்த்தத்தினாலோ வேறுபட்டு அர்த்தத்தை சொல்ல வேண்டும் என்னும் ஆதாரத்தின் பேரில், ஸ்ரீதாமன், கிருஷ்ணனை தூக்கிக் கொண்டான் என்று அர்த்தம் செய்தார்.

அதே அபிப்பிராயத்தையே தாசார்யரும் இங்கு சொல்லியிருக்கிறார்.

ஸ்ரீகரார்ச்சித பாதபல்லவ
கோகுலத கொல்லதியரொலிஸித
பாகஷாசன பூஜ்ய கோ கோவத்ஸகள காய்த ।
ஓகரிஸி குருபதிய போஜன
ஸ்வீகரிஸிதனு விதுரனௌதண
பாகுலிக நந்ததலி தோரித பக்தவத்ஸலனு ||7

ஸ்ரீ = லட்சுமிதேவி
கர = கரங்களால்
அர்ச்சித = பூஜித்த
பாதபல்லவ = கோமளமான பாதங்களைக் கொண்ட ஸ்ரீபரமாத்மன்
கோகுலத கொல்லதியரன்னு = கோகுலத்தின் கோபிகையர்களின்
ஒலிஸித = பக்திக்கு மெச்சினான்
பாகஷாஸன பூஜ்ய = இந்திரனால் வணங்கப்படும் ஹரி
கோகோவத்ஸகள காய்த = பசுக்களை, கன்றுகளை (மேய்த்தான்) காத்தான்.
குருபதிய = மகாராஜனான துரியோதனின்
போஜன = ம்ருஷ்டான்னத்தை
ஓகரிஸி (நீகரிஸி) = புறக்கணித்து
விதுரன = விதுரனின்
ஔதன = விருந்தினை
ஸ்வீகரிஸிதனு = அவனின் வீட்டில் உண்டான்
பக்தவத்ஸல = பக்தர்களில் வாத்ஸல்யம் கொண்ட ஸ்ரீஹரி
பாகுலிக நந்ததலி = பாண்டவர்களின் தூதனைப் போல
தோரித = காட்டிக் கொண்டான்.

ஸ்ரீபரமாத்மன் பக்தவத்ஸலன் என்பதை விளக்குகிறார். ஸ்வயம் லட்சுமிதேவியரால் பூஜிக்கப்படும் பாதங்களைக் கொண்டவன். அல்பரான கொல்லர்களான கோபிகா ஸ்த்ரியர்களின் பக்திக்கு மெச்சி, அவருக்கு அங்கசங்கத்தை அளித்தான். தேவேந்திரன் ஆகியோரால் பூஜிக்கப்படுபவன் ஆனாலும், கோபாலகர்களின் அன்பில் மயங்கி, பசுக்களை, கன்றுகளை காத்தான் (மேய்த்தான்). பாண்டவர்களுக்கும் கௌரவர்களுக்கும் சமாதானம் பேசும்

பொருட்டு, பாண்டவ தூதன் என்று சொல்லிக் கொண்டு, துரியோதனின் வீட்டிற்கு வந்தபோது, அவன் ஸ்ரீகிருஷ்ணனுக்காக ம்ருஷ்டான்னத்தைக் கொடுத்தான்.

த்வஷதன்னம் நபோக்தவ்யம் த்விஷந்தம் நைவபோஜயேத் ||

அப்போது ஸ்ரீகிருஷ்ணன் சொன்னது:
'த்வேஷிகளின் வீட்டில் உணவு உண்ணக் கூடாது. த்வேஷிகளை உணவிற்கு அழைத்து, அவர்களுக்கு உணவும் வழங்கக் கூடாது. நீ பாண்டவர்களை த்வேஷிக்கிறாய். பாண்டவர்கள் என் நண்பர்கள் (பக்தர்கள்). அவரின் த்வேஷம் என் த்வேஷமே. நீ டாம்பீகத்திற்காக என்னை அழைக்கிறாய். உலகத்தில் ஒருவரின் வீட்டிற்கு இன்னொருவர் வரவேண்டுமெனில் இரு வித காரணங்களால் வருவார்கள். அன்புடன் மரியாதை செய்து அழைத்தால், அவரின் வீட்டிற்கு உணவிற்கு வரலாம். அல்லது, வழி தவறி வந்து, உணவிற்கு வழியில்லாமல் ஒருவர் வீட்டிற்கு உணவிற்கு வரலாம். அத்தகைய இரு விதங்களும் எனக்கு இப்போது இல்லை.

நச ஸம்ப்ரீயஸே ராஜன், நசைவாபத்கதாவயம் -- எனக்கு உன்னிடம் அன்பும் இல்லை. உணவிற்கு வழியில்லாமல் வேறு வழியின்றி வந்தேன் என்பதும் இல்லை. ஆகையால், உன் வீட்டில் நான் உணவு உண்பதில்லை' என்று சொல்லி, தன்னுடன் வந்த பிராமணர்களுடன் விதுரனின் வீட்டிற்கு சென்று உணவு உண்டான் என்று பாரத உத்யோக பர்வத்திலும், பாரத தாத்பர்ய நிர்ணயத்திலும் சொல்லப்பட்டிருக்கிறது.

அதே அபிப்பிராயத்தையே தாசார்யர் இங்கு சொல்லியிருக்கிறார். பரமாத்மன் பிரம்மாதிகளால் வணங்கப்பட்டு, பாண்டவர்களின் தூதன் எனப்படுகிறான். ஆகையால், பக்தவத்ஸலன் என்னும் பெயர் பரமாத்மனுக்கு பொருத்தமே என்பது கருத்து.

புத்ரனெனிஸித கோபிதேவிகெ
பர்த்ருவெனிஸித வ்ரஜதனாரிய
உத்ரலாலிஸி பர்வதவ நெகஹித க்ருபாசாந்த்ர |
ஷத்ருதாபனு யக்ஞபுருஷன
புத்ரியர தந்தாள்த த்ரிஜக
த்தாத்ர மங்கலகாத்ர பரமபவித்ர சுரமித்ர ||8

கோபிதேவிகெ = யசோதாதேவிக்கு (வேறு பாடத்தில்: நந்த கோபனுக்கு)
புத்ரனெனிஸித = மகன் என்று அழைத்துக் கொண்டான்
வ்ரஜதனாரிய = கோபிகா ஸ்த்ரியரின்
உக்திலாலிஸி = பிரார்த்தனையை ஏற்று
பர்த்ருவெனிஸித = பதி என்று அழைத்துக் கொண்டான்
க்ருபாஸாந்த்ர = கருணாளுவான ஸ்ரீஹரி
பர்வதவ = கோவர்த்தன மலையை
நெகஹித = தூக்கினான்

ஷத்ருதாபனு = எதிரிகளுக்கு கஷ்டத்தைக் கொடுப்பவனான ஸ்ரீகிருஷ்ணன்
யஞ்ஞபுருஷன = அக்னிதேவரின்
புத்ரியர = புத்ரிகளான 16,100 பேர் ஸ்த்ரியர்களை
தந்து = நரகாசுரனின் வீட்டில் இருந்தவர்களை கொண்டு வந்து
ஆள்த = அவர்களுக்கு பதியாகி, காத்தான்
த்ரிஜகத்தாத்ர = வெறும் அக்னி புத்ரிகளை மட்டும் காக்கிறவன் அல்ல. மூன்று உலகங்களையும் காப்பாற்றுபவன்.
மங்கலகாத்ர = பரம மங்களகரமான சரீரம் கொண்டவன்
பரமபவித்ர = பவித்ரன்
ஸுரமித்ர = தேவதைகளின் நண்பன்.

ஸ்ரீகிருஷ்ணன், நந்தகோப யசோதையரின் மகன் என்று உலகப் புகழ் பெற்றான். கோபிகா ஸ்த்ரியருக்கு பதி ஆனான். அல்லது, நீலா என்னும் கோப கன்னிகையின் பதி எனப்படுகிறான். இந்த பத்யத்தில் 'வ்ரஜதனாரிய உக்திலாலிஸி பர்த்ருவெனிஸித' என்று இருப்பதால், கோபிகா ஸ்த்ரியரின் பிரார்த்தனையின்படி, அவருக்கு பதி ஆனான் என்று அர்த்தம் வருகிறது.

ஆனால், கோபிகா ஸ்த்ரியருக்கு வேறு கணவர்கள் இருந்ததால், இவனை, 'ஜார' என்று சொன்னாலும், 'பர்த்ரு' என்றாலும், கணவன் என்று மட்டும் சொல்ல முடியாது. ஏனெனில் 'பரணாத் பர்த்தா பாலனாத் பதி:' என்னும் வாக்கியத்தின்படி, வீட்டிலேயே வைத்துக்கொண்டு அன்னாதிகளைக் கொடுத்து காப்பவன் மட்டுமே பர்த்தா என்றும் பதி என்றும் அழைக்கப்படுகிறான்.

யாரை திருமணம் செய்து கொள்கிறானோ அவளுக்கு பதி என்று சொல்ல வேண்டும். கோபிகா ஸ்த்ரியர்களை இவன் திருமணம் செய்துகொள்ளவில்லை. ஆகையால், இந்த பத்யத்தில் இருக்கும் 'பர்த்ருவெனிஸித வ்ரஜதனாரிய உக்திலாலிஸி' என்பதில் ர-ல-ள இந்த எழுத்துக்களுக்கு வேறுபாடுகள் இல்லை என்று பாகவதாதிகளில் 'தபோரராடம்' என்னும் வாக்கியத்தால் லலாட என்னும் சொல்லுக்கு ரராட என்றும் சொல்லலாம் என்கிறார்.

அதைப்போலவே இங்கும் நாரியருக்தி என்னும் இடத்தில், ரு க்கு பதில் ளு என்ற எழுத்தைப் போட்டு படிக்கலாம். நாரியளுக்தி என்றால், அந்த பெண்களில் ஒருவளுக்கு பதியாக இருந்தான் என்று அர்த்தம் வருகிறது. அந்த ஒரு பெண், நீலா என்னும் பெயருள்ள கோபிகா ஸ்த்ரி என்று நிர்ணயத்தில் சொல்லப்பட்டிருக்கிறது. மகாபாரத தாத்பர்ய நிர்ணய 13ம் அத்தியாயத்தில்:

ஸப்தோக்ஷணோதி பலவீர்ய யுதானதர்யா ஸர்வேகிரீஷவரதோ திதிஜப்ரதானாம்
ஹத்வாஸுதாமலபதாஷு விபுர்யஷோதா ப்ராது: ஸகும்பகஸமாஹ்வயினோபி நீலாம் ||49
யா பூர்வஜன்மனி தப: ப்ரதமைவபார்யா பூயாஸமித்யசரதஸ்ய ஹி ஸங்கவோமே ||
ஸ்யாத்க்ருஷ்ண ஜன்மனி ஸமஸ்த வராம்கனாப்ய: பூர்வம்த்விதி ஸ்ம ததிமாம் ப்ரதமம் ஸ ஆப ||50

அக்ரெத்விஜத்வத உபாவஹதேவ நீலாம் கோபாங்கனா அபி புராவரமாபிரெ யத் ||
ஸம்ஸ்காரத: ப்ரதமமேவ ஸுசங்கமோனோ பூயாத்தவேதி பரமாத்ஸரஸ: புராயா: ||51

இந்த ஸ்லோகங்களின் சாராம்சம் என்னவெனில்:
யசோதாதேவிக்கு அண்ணனான கும்பக என்னும் கோபாலகனுக்கு நீலா என்னும் ஒரு பெண் இருந்தாள். அந்த கும்பகன், அந்தப் பெண்ணின், ரூப, குண, சௌந்தர்யத்திற்கு ஏற்ற வரனைத் தேடுவதற்காக காட்டில் மேய்ந்து கொண்டிருக்கும் ஏழு எருதுகளைப் பிடித்து, அவற்றை அடக்கிக் கொடுப்பவனுக்கே தன் மகளைக் கொடுப்பேன் என்று அறிவித்தான். அந்த ஏழு எருதுகளும் சாதாரணமானவை அல்ல. ருத்ரதேவரின் வரத்தினால் வெல்லப்பட முடியாததாக, மகா தைத்யரே அந்த ரூபத்தில் இருந்தனர். அவற்றின் எதிரில் கூட யாராலும் நிற்க முடியவில்லை. அத்தகைய எருதுகளை பிடிப்பது யாராலும் சாத்தியமில்லை. ஸ்ரீகிருஷ்ணன் 6 வயது குழந்தையாக இருந்தபோதே, அந்த எருதுகளைப் பிடித்து, கொன்று நீலா என்னும் கன்யையை திருமணம் செய்து கொண்டான்.

இவள் முந்தைய பிறவியில் தவம் செய்து, நீ கிருஷ்ணாவதாரத்தில், உப நயனம் செய்து கொள்வதற்கு முன்னரே, என்னை திருமணம் செய்து கொள்ளவேண்டும் என்று வரம் பெற்றிருந்தாள். அதற்கேற்ப பரமாத்மன் வரம் கொடுத்திருந்தான். அதனை உண்மையாக்குவதற்காக முதலில் நீலாவை திருமணம் செய்து கொண்டான். இதே நீலா, நக்னஜித் ராஜனின் மகளாகப் பிறந்து, அங்கும் இதே மாதிரி ஸ்வயம்வரத்தில் கிருஷ்ணனின் மனைவி ஆனாள்.

அவளின் திருமணம் ஆனபிறகு, அந்த நீலையில் இந்த நீலா சேர்ந்தாள். கிருஷ்ணனின் அஷ்ட மஹிஷியர்களில் நீலா என்பவள் கோப கன்னிகை என்று அறியவேண்டும்.

தேவேந்திரனுக்கு வந்த கர்வத்தை அடக்குவதற்காக, இந்திர யாகத்திற்காக தயாராகிக் கொண்டிருந்த கோபாலகர்களை ஸ்ரீகிருஷ்ணன் அழைத்து, கிரி-யக்ஞ என்னும், மலைக்கு பலி ரூபமான யாகத்தை செய்விக்க, அதனால் கோபம் கொண்ட இந்திரன், கோகுலத்தையே மூழ்கடிக்குமாறு மழை பெய்விக்க, கோவர்த்தன மலையையே குடை போல தூக்கி, பசுக்களை, கோபாலகர்களை ஸ்ரீகிருஷ்ணன் காப்பாற்றினான்.

அக்னிதேவரின் மக்களான 16,100 ரிஷிகள் தவம் செய்து, கிருஷ்ணனின் அங்க சங்கத்திற்காக அப்ஸர ஸ்த்ரியர்களாகப் பிறந்து சில காலம் இருந்து, பின் ராஜகுமாரிகளாகப் பிறந்து, நரகாசுரனிடம் சேர்ந்து அவன் வீட்டில் சிறைபட்டிருந்தனர். கிருஷ்ணன், நரகாசுரனைக் கொன்று அவர்களை திருமணம் செய்துகொண்டான். அதே அபிப்பிராயத்தையே தாசார்யர் இங்கு சொல்கிறார்.

16,100 பேர் மனைவியரை காப்பாற்றினான் என்பது ஒன்றும் வியப்பான விஷய்ம் அல்ல என்று காட்டுவதற்காக 'த்ரிஜகத்தாத்ர' என்றார். மூன்று உலகத்தையே

காப்பாற்றுபவனுக்கு, 16,100 எண்ணிக்கையில் இருப்பவர்களை காப்பாற்ற முடியாதா? அதில் என்ன ஆச்சரியம்? உபநயனத்திற்கு முன்னரே நீலாவை திருமணம் செய்தான் என்றும், கோபிகா ஸ்த்ரியர்களுக்கு 'ஜார' ஆனான் என்பதாலும் பரமாத்மனுக்கு தோஷம் வந்திருக்குமோ என்னும் சந்தேகம் வந்தால், அதை 'மங்களகாத்ர பரமபவித்ர' என்று சொல்கிறார்.

சுரமித்ர என்ற பதத்திலிருந்து, தேவதைகள், தேவ ஸ்த்ரியர்கள் ஆகியோர் பரமாத்மனுக்கு ப்ரியமானவர்கள், ஆகையால் கோப கன்னிகையர்கள் அனைவரும் அப்ஸர ஸ்த்ரியர் ஆகையால், அவர்களின் தவத்திற்கு மெச்சி, முன்னர் அவர்களுக்குக் கொடுத்திருந்த வரத்தை உண்மை ஆக்குவதற்காக, சிறு வயதிலேயே அவர்களுடன் திருமணம் செய்தானே தவிர, இந்திரிய சுகத்திற்காக அல்ல என்பதை குறிப்பிடுகிறார்.

ரூப நாமவிஹீன கர்கா
ரோபித சுனாமதலி கரெசித
வ்யாபக பரிச்சின்னரூபதி தோர்த லோகரிகெ ।
த்வாபராந்த்யதி தைத்யரனு ச
ந்தாபகொளிசுவெனெந்து ஷ்வேத
த்வீப மந்திரனவதரிஸி சலஹிதனு தன்னவர ||9

ரூப நாமவிஹீன = ஸ்ரீபரமாத்மன், ப்ராக்ருதமான பாஞ்சபௌதிக சரீரம் இல்லாதவன். அத்தகைய ரூபமே இல்லாதபோது, அதற்கு பெயர் எங்கிருந்து வந்தது? ஆகையால், ப்ராக்ருதமான ரூப நாமங்கள் இல்லாதவன் என்று அர்த்தம். அப்படி இருந்தாலும், கிருஷ்ணாதி அவதாரங்களில் தன் ரூபங்களை மனிதர்களைப் போல காட்டினான். ப்ராக்ருத பெயர் இல்லாதவன் ஆனாலும்,
கர்காரோபித = கர்காசார்யரால் வைக்கப்பட்ட
சுனாமதலி = சிறந்த (அப்ராக்ருதமான) கிருஷ்ண என்னும் பெயரில்
கரெஸித = மக்களால் அழைக்கப்பட்டான்
வியாபக = அனைத்து இடங்களிலும் வியாப்தன் ஆனாலும்
பரிச்சின்ன ரூபதி = இவனே கிருஷ்ணன். வேறு யாரும் இல்லை. இவன் இங்கு இருக்கிறான். வேறு எங்கும் இல்லை.

என்பது போன்ற எல்லைகள் உள்ள ரூபங்களில்
லோகரிகெ = மக்களுக்கு
தோர்த = காட்டிக் கொண்டான்.
த்வாபராந்ததி = த்வாபர யுகத்தின் இறுதியில்
தைத்யரனு சந்தாபகொளிசுவெனெந்து = பூமிக்கு பாரமாக இருப்பவர்களில், தைத்யர்களை கொல்வேன் என்று
ஸ்வேதத்வீப மந்திரனு = ஸ்வேதத்வீபத்தில் வசிப்பவனான ஸ்ரீநாராயணன்,
அவதரிஸி = பூமியில் கிருஷ்ணன் என்று அவதரித்து
தன்னவர = தன் பக்தர்களான தேவதைகள் மற்றும் தேவாம்சம் பொருந்தியவர்களை

ஸலஹிதனு = காப்பாற்றினான்.

ஸ்ரீபரமாத்மனுக்கு, சாதாரண மனிதர்களைப் போல, கண் காது முதலான இந்திரியங்கள் கொண்ட ப்ராக்ருதமான, பாஞ்ச பௌதிக சரீரம் இல்லை. அப்ராக்ருதமான, ஆனந்தமயமான, கர, சரணாதிகளைக் கொண்ட சரீரத்தைக் கொண்டவன். ஆனந்தஞானாதி பெயர்களைக் கொண்டவன். ஆனாலும், தேவ காரியங்களுக்காக மனிதர்களைப் போல அவதரித்து, அந்தந்த குலாசாரத்தின்படி கிடைத்த பெயர்களை வைத்துக் கொண்டான். கிருஷ்ணாவதாரத்தில், கர்காசார்யர் செய்த நாமகரணத்தில் கிருஷ்ண என்ற பெயர் பெற்றான். அந்த கிருஷ்ண என்னும் பெயரும் அப்ராக்ருதமானதே. கிருஷ்ண என்னும் பெயர் இருந்தாலும், அதுவும் அப்ராக்ருதமான நாராயணனின் பெயரே ஆகியிருக்கிறது.

பாரத ஆதி மங்களாசரணத்தில் 'கிருஷ்ணோ முக்த்யைரிஜ்யதெவீத மோஹை:' கிருஷ்ணன் முக்தர்களாலும் பூஜிக்கப்படுகிறான் என்னும் வாக்கியத்தால், நாராயணனுக்கும் கிருஷ்ணன் என்று 'க்ருஷதி தாரயதி பாபானீதி கிருஷ்ண:' - பாவங்களைப் போக்கி விடுபவன் ஆகையால் நாராயணனுக்கு கிருஷ்ணன் என்று பெயர். அதையே கர்காசார்யர், நாமகரணம் செய்தார். ஆகையால், ப்ராக்ருத ரூப நாமங்களால் அழைக்கப்பட்டான் என்பது கருத்து.

அனைத்து இடங்களிலும் வியாப்தன் ஆனாலும், மனுஷ்யாதி அவதாரத்தில் அவர்களைப் போலவே காட்டிக் கொண்டான். த்வாபராந்த்யத்தில் ராஜனாக பிறந்து பூமிக்கு பாரமாக இருக்கையில், ஸ்ரீஹரி, பிரம்மாதிகளால் வேண்டப்பட்டு, தைத்யர்களைக் கொல்வதற்காக, பூமியில் கிருஷ்ணாவதாரம் செய்து, கம்சாதிகளைக் கொன்று, தேவதைகளைக் காப்பாற்றினான்.

ஸ்ரீவிரிஞ்சாத்யமரனுத நா
நாவதாரவ மாடி சலஹித
தேவதெகளனு ருஷிகளனு க்ஷிதிபரனு மானவர
சேவெகள கைகொண்டு பலகள
நீவ நித்யானந்தமய சு
க்ரீவ த்ருவமொதலாத பகுதரிகித்த புருஷார்த்த ||10

ஸ்ரீவிரிஞ்சாத்யமரனுத = லட்சுமிதேவியர், பிரம்மாதி தேவதைகள் இவர்களால் வணங்கப்படுபவனான ஸ்ரீமன் நாராயணன்
நானாவதார = மத்ஸ்ய, கூர்ம, வேதவ்யாஸ முதலான நானா வித அவதாரங்களை எடுத்து,
தேவதெகளனு = தேவதைகளை
ரிஷிகளனு = ரிஷிகளை
க்ஷிதிபரனு = அரசர்களை
மானவர = மனிதர்களை
சலஹித = காத்தான்
நிந்த்யானந்தமய = நித்யமான ஆனந்தமயன் ஆனாலும்

சேவெகள கைகொண்டு = பக்தர்கள் செய்யும் சேவைகளை ஏற்றுக்கொண்டு
பலகளனீவ = பலன்களைக் கொடுக்கிறான்
சுக்ரீவ, த்ருவ மொதலாத பக்தரிகெ = சுக்ரீவ, த்ருவ முதலான பக்தர்களுக்கு
புருஷார்த்த = புருஷார்த்தங்களை
இத்த = கொடுத்தான்.

லட்சுமி, பிரம்மாதி தேவர்களால் வணங்கப்படுபவனான ஸ்ரீமன் நாராயணன், மத்ஸ்யாதி அனந்த அவதாரங்களை எடுத்து, அஜித, வாமன முதலான அவதாரங்களால் தேவதைகளையும், வியாஸ, கபிலாதி ரூபங்களால் ரிஷிகளையும், ரிஷபாதி அவதாரங்களால் அரசர்களையும், ராம கிருஷ்ணாதி ரூபங்களால் மனிதர்களையும் காத்தான் என்பது கருத்து.

அந்தந்த காலத்தில் இருந்த மனிதர்களால் நேரடியாகவும், மற்ற காலங்களில் பிரதிமாதி ரூபங்களால் மற்ற மக்களிடமிருந்து சேவைகளை ஏற்றுக்கொண்டு, அவரவர்களுக்கு சுக்ரீவ, த்ருவ ஆகியோருக்குக் கொடுத்ததைப் போன்ற புருஷார்த்தங்களை கொடுப்பான் என்பது கருத்து.

துஷ்டதானவ ஹரண சர்வோ
த்க்ருஷ்ட சத்குணபரித பக்தா
பீஷ்டதாயக பவவினாஷக விகதபயஷோக |
நஷ்டதுஷ்டிகளில்ல ஸ்ருஷ்ட்யா
த்யஷ்ட கர்தனிகாவ காலதி
ஹ்ருஷ்டனாகுவ ஸ்மரணெ மாத்ரதி ஹ்ருத்குஹாவாஸி ||11

(ஸ்ரீபரமாத்மன்)
துஷ்டதானவ ஹரண = துஷ்டர்களான கம்ஸ, ஸ்ருகாள, பௌண்ட்ரக வாசுதேவன், நரகாசுரன் முதலான தானவர்களைக் கொல்கிறான்
சர்வோத்க்ருஷ்ட = அனைவரைவிட சிறந்தவன்
சத்குணபரித = சர்வோத்தமாதி நற்குணங்கள் நிரம்பியவன்
பக்தாபீஷ்டதாயக = பக்தர்களின் அபீஷ்டங்களை நிறைவேற்றுபவன்
பவவினாஷக = சம்சாரம் என்னும் நோயினை நாசம் செய்பவன்
விகதபயஷோக = எந்த காலத்திலும் பயமோ, துக்கங்களோ இல்லாதவன்
ஸ்ருஷ்ட்யாத்யஷ்ட கர்தனிகெ = ஸ்ருஷ்டி, ஸ்திதி, சம்ஹார, நியமன, ஞான, அஞ்ஞான, பந்த, மோக்ஷ என்னும் 8 கர்த்ருத்வ உள்ள ஸ்ரீபரமாத்மனுக்கு
ஆவகாலதலி = எந்த காலங்களிலும்
நஷ்டதுஷ்டிகளில்ல = ஆனந்தாதிகளில் குறைவு / அதிகம் ஏற்படுவதில்லை (ஆவதில்லை)
ஹ்ருத்குஹாவாசி = அனைவரின் இதய கமலத்திலும் வசிப்பவனான ஸ்ரீஹரி
ஸ்மரணெ மாத்ரதி = அவனை நினைத்த அந்த கணத்திலேயே
ஹ்ருஷ்டனாகுவ = மகிழ்வான் (தரிசனம் அளிப்பான் என்பது கருத்து).

ஸ்ரீபரமாத்மன், பற்பல அவதாரங்களை எடுத்தான் என்பதை முந்தைய பத்யத்தில் பார்த்தோம். அதனால், பகவந்தனுக்கும் நம்மைப் போலவே பலவந்தமான பிறவிகள் வருகிறதோ என்னமோ என்னும் சந்தேகத்தைப் போக்குவதற்காக, துஷ்டதானவஹரண என்றார். ஒவ்வொரு அவதாரத்திலும், வெறும் தன்னுடைய லாபத்திற்காக, செயல்களை செய்வதற்காக, பிறந்தவன் அல்ல. பிரம்மாதிகளால் வேண்டப்பட்டு, மனிதர்களான ராவணன், கம்ஸ, ஆகியோரின் சம்ஹாரத்திற்காக, தன் விருப்பப்படி அவதாரம் செய்தான் என்பது கருத்து.

தைத்யர்களின் சம்ஹாரம், தேவதைகளின் பாதுகாப்பு செய்தவன் ஆகையால், பரமாத்மனுக்கு மனிதர்களைப் போல வைஷம்யாதி தோஷங்கள் இருக்கிறதோ என்றால், இல்லை என்று அவன் 'சர்வோத்க்ருஷ்ட சத்குணபரித' என்றார்.

சர்வோத்தமனான நற்குணங்களைக் கொண்டவன் என்றபிறகு வைஷம்யாதி தோஷங்கள் இல்லை என்று தனியாக சொல்ல வேண்டியதில்லை என்பது கருத்து. அப்படியெனில், தைத்யர்களை ஏன் கொன்றான் என்றால், 'பக்தாபீஷ்டதாயகன்' என்றார். பக்தர்களின் கஷ்டங்களைப் போக்கி, அவர்களின் இஷ்டார்த்தங்களை நிறைவேற்றுவதற்காக அவர்களை கொன்றான் என்பது கருத்து.

அது மட்டுமல்லாமல், சம்சாரத்திலிருந்தும் அவர்களைக் காக்கிறான். தைத்யர்களின் மேல் உள்ள பயத்தாலோ, அவர்கள் தன் மேல் காட்டிய த்வேஷத்தாலோ, பரமாத்மனுக்கு அவர்களில் வெறுப்பு உண்டாகி; அல்லது, தன் லாப நஷ்டங்களைப் பார்த்து அந்த தைத்யர்களை கொல்லவில்லை. அவரவர்களின் கர்மங்களுக்கேற்ப அவரவர்களுக்கு பலன்களைக் கொடுக்கிறான் ஆகையால், தேவதைகளின் பாதுகாப்பிற்காக தைத்யர்களைக் கொன்றானே தவிர, தன் பயனுக்காக அல்ல என்பதை 'விகதபயஷோக நஷ்டதுஷ்டிகளில்ல' என்னும் பதங்களால் சொல்கிறார்.

இத்தகைய, அனைத்து ஜீவர்களின் இதய கமலத்திலும் இருப்பவனான ஸ்ரீபரமாத்மன், தன்னை நினைத்த அந்த நொடியிலேயே தரிசனம் அளிக்கிறான். பக்தியால் அவனை நினைக்க வேண்டும். அபக்தர்கள் செய்யும் ஸ்மரணைக்கு பலன் இல்லை என்பது 'அபக்தோதாஹ்ருஷம் நைவ பலதாத்ரு பவிஷ்யதி' என்னும் ஸ்ரீமதாசார்யரின் வாக்கியத்தால் தெளிவாகிறது.

ஹிந்தெ ப்ரலயோதகதி தாவரெ
கந்தனஞ்சிஸி காய்த தலெயொளு
பாந்தொரெய பொத்தவகொலிது பரியங்கபதவித்த ।
பந்திசித வ்ருந்தாரகர ச
த்வ்ருந்தகுணிசித சுதெய கருணா
சிந்து கமலாகாந்த பஹுநிஸ்சிந்த ஜயவந்த ||12

ஹிந்தெ பிரளயோதகதி = பிந்தைய பிரளய கல்பத்தின் நீரில்
தாவரெகந்தன = கமலத்தில் உதித்தவனான பிரம்மதேவரை
அஞ்சிஸி = பயப்படுத்தி

காய்த = காத்தான்
தலெயொளு = தலையில்
பாந்தொரெய பொத்தவகெ = ஆகாய கங்கையைப் பெற்ற ருத்ரதேவருக்கு
ஒலிது = அவரின் தவத்திற்கு மெச்சி
பர்யங்க பதவித்த = சேஷ பதவியைக் கொடுத்தான்
வந்திஸித = தங்கள் இடத்தை இழந்து, துக்கமடைந்த தேவதைகள், பரமாத்மனை வேண்ட
வ்ருந்தாரகர ஸத்வ்ருந்தகெ = அந்த தேவதைகளின் உத்தமமான சமூகத்திற்கு
கருணாஸிந்து = கருணா சமுத்திரனான
பஹுனிஷ்சிந்த = என்றைக்கும் கவலை இல்லாதவனான
ஜயவந்த = எப்போதும் வெற்றியாளனான
கமலாகாந்த = லட்சுமிபதியான ஸ்ரீமன் நாராயணன்
ஸுதேய = அமிர்தத்தை
உணிஸித = குடிக்கக் கொடுத்தான்.

பிந்தைய பிரம்ம கல்பத்தின் முடிவில், பரமாத்மனின் நாபி கமலத்திலிருந்து பிறந்த பிரம்ம தேவரை காத்தான். விஷ்ணு ரஹஸ்ய 24ம் அத்தியாயத்தில்:

ஸவிஷ்ணு: பத்மனாபாக்ய: தன்னாபி கமலாதபூத் ||
ஹிரண்யகர்ப்பனாமாஸௌ ஸஜாதோ தத்ருஷீதிஷ: ||36
சதுர்திக்ஷுச சத்வாரி முகான்யாஸன் மஹாத்மன: ||
பத்மஸ்ய கர்ணிகாமத்யே நிஷண்ண: ஸ்வஸ்திகாஸனெ ||
ததா விஷ்ண்வஞ்ஞயா துர்கா ஜலபிந்துபிரன்விதம் ||
விஸ்ஸர்ஜ மஹாவாதம் தேனாபூத் பீடிதோவிதி: ||40
ததா காடாந்தகாரே ஸ்வமஸஹாயம் விலோக்யஸ: ||
வீட்யமானோ வர்ஷவாதை: க்ஷணம் பீதோஸ்மரத்தரிம் ||41
ததஸ்தபஸ்தபேத்யாஸீத் ஷரீரைவ பாரதீ ||
ஸமாதி யோகமாஸ்தாய விருச்ஸ்வாஸோ பயத்தத ||42
தத்யாவாந்தரமாத்மானம் பிரம்மா ரூபம் ஸதாஸிவம் ||
திவ்யவர்ஷாயுதம் பஸ்சாதுத்தித: ஸஸமாதித: ||43
ப்ரீதோத தபஸாதேன பத்மனாபோ ஹரி: ஸ்வயம் ||
கௌமாரம் ரூபமாஸ்தாய நிஜரூபமதர்ஷயத் ||44

நாபியில் கமலம் இருந்ததால், விஷ்ணுக்கு பத்பனாப என்னும் பெயர் வந்தது. அந்த நாபிக் கமலத்திலிருந்து ஹிரண்யகர்ப்ப என்னும் பெயருள்ள பிரம்மதேவர் பிறந்தார். அவர் நான்கு திசைகளில் பார்க்கும்போது 4 முகங்களைப் பெற்றார். பத்மத்தின் நடுவில், பத்மாசனத்தில் (ஸ்வஸ்திகாசன) அமர்ந்திருந்த தன்னை தானே பார்த்தார். அந்த சமயத்தில் துர்கா தேவியர் ஸ்ரீவிஷ்ணுவின் ஆணையின்படி மிகப்பெரிய சூறாவளியை உண்டுபண்ண, அதனால் பிரம்மதேவர் துன்பப்பட்டார். கும்மிருட்டு பரவியது. வேறு யாரின் உதவியும் கிடைக்காமல், தண்ணீர் துளிகள் தெறிக்கும் அந்த இரவில் பிரம்மதேவர் சிறிது பயந்தார். பின் ஸ்ரீபரமாத்மனை சிந்தித்தார்.

அந்த சமயத்தில் ‘தப தப’ என்று 2 முறை சத்தம் கேட்டது. அப்போது பிரம்மதேவர் சமாதி நிலையில் மூச்சினை அடக்கி, இதயகமலத்தில், சதா மங்கள மூர்த்தியான ஸ்ரீபரமாத்மனை தியானம் செய்தவாறு, தேவதா நாளின்படி 10,000 ஆண்டுகள் வரை தியானத்தில் இருந்து, பின் வெளி வந்தார். அப்போது பரமாத்மன் அவரது தவத்திற்கு மகிழ்ந்து, திவ்யமான கௌமார ரூபத்தை தரித்து, அந்த ரூபத்தை பிரம்மதேவருக்குக் காட்டினான் என்று சொல்லியிருக்கிறார்.

அந்த அபிப்பிராயத்தையே தாசார்யர் இங்கு ‘தாவரெ கந்தனஞ்சிஸி காய்த’ என்று சொல்கிறார். ருத்ரதேவரின் தவத்திற்கு மெச்சி, அவருக்கு சேஷ பதவியைக் கொடுத்தார். துர்வாசரின் சாபத்தினால், தேவதைகள் அவர்களின் ராஜ்யத்தை இழந்து, பரமாத்மனை வேண்ட, பரமாத்மன், தேவ-தைத்யர்களுடன் பாற்கடலைக் கடைய, அதிலிருந்து அமிர்தம் கிடைத்தது. தைத்யர்கள் அந்த அமிர்த கலசத்தை அபகரித்தனர். பரமாத்மன் மோகினி ரூபத்தை தரித்து, தைத்யர்களை ஏமாற்றி, தேவதைகளுக்கு அமிர்தத்தைக் கொடுத்தான். இந்த கதை பாகவத 10ம் ஸ்கந்தத்திலும்,

மகாபாரத தாத்பர்ய நிர்ணய 10ம் அத்தியாயத்திலும் வருகிறது. இதனால் பரமாத்மனுக்கு எவ்விதமான பலனும் இருக்கவில்லை. கவலை இல்லாதவன். சாட்சாத் லட்சுமிபதி. இப்படி இருக்கையில், தேவதைகளால் இவனுக்கு ஆவதுதான் என்ன? தைத்யர்களால் இவனுக்கு வரப்போகும் கஷ்டம்தான் என்ன? எதுவும் இல்லை. ஆனாலும், அவன் கருணா சமுத்திரன் ஆகையால், பக்தர்களாக தன்னை வேண்டியதால், அவர்களின் பாதுகாப்பிற்காக அமிர்தத்தைக் கொடுத்தான் என்பது கருத்து.

சத்யசங்கல்பானுசார ப்ர
வர்த்திசுவ ப்ரபு தனகெ தானெ
ப்ருத்யனெனிசுவ போக்த்ரு போக்ய பதார்த்ததொளகித்து ।
தத்ததாஹ்வயனாகி தர்பக
த்ருப்திபடிசுவ தத்வபதிகள
மத்தராதசுரர்கெ அசமீசீன பலவீவ ||13

சத்ய சங்கல்பானுசார ப்ரவர்த்திசுவனு = தன் இஷ்டப்படி, தான் நினைத்ததைப் போல நடப்பவன்.
தனகெ தானெ பிரபு = சர்வோத்தமன். தனக்கு தானே தலைவன். ஒப்புமைக்கும் யாரும் இல்லாதவன்
ப்ருத்யனெனிஸுவ = சேவகன் என அழைக்கப்படுகிறான்
போக்த்ரு போக்ய பதார்த்ததொளகித்து = அனுபவிப்பவர்களிலும், அனுபவிக்கத் தகுந்த பதார்த்தங்களிலும் தானே இருந்து
தத்ததாஹ்வயனாகி = அந்தந்த பெயர்களில் அழைக்கப்பட்டு
தர்பக = தர்பக என்று அழைத்துக் கொண்டு

தத்வபதிகள = அனுபவிப்பவர்களின் தேகத்தில் இருக்கும் தத்வாபிமானி தேவதைகளை
த்ருப்திபடுசுவ = திருப்திப்படுத்துவான்
மத்தராத = த்வேஷிகளான
அசுரர்கெ = தைத்யர்களுக்கு
அஸமீசீன பலவீவ = பாவ பலன்களைக் கொடுக்கிறான்.

முந்தைய பத்யத்தில், தைத்யர்களை வஞ்சித்து, தேவதைகளுக்கு அமிர்தத்தைக் கொடுத்தார் என்று வந்தது. அதனால், பகவந்தனுக்கு வைஷயம்யாதி தோஷம் வருகிறதோ என்று சந்தேகம் வந்தால், அதை இங்கு பரிகரிக்கிறார்.

ஸத்ய ஸங்கல்பதோ விஷ்ணுர் நான்யதாது கரிஷ்யதி -- என்னும் வாக்கியத்தின்படி பரமாத்மன் சத்ய சங்கல்பன். அதற்கு எதிராக அவன் எப்போதும் நடப்பதில்லை. தன் பக்தர்களுக்கு வரும் கஷ்டங்களை பரிகரித்து, அவர்களின் இஷ்டார்த்தங்களை நிறைவேற்றுவதே இவனின் சங்கல்பம். ஆகையால், தேவதைகளுக்கு அனுகூலமாகவும், தைத்யர்களுக்கு ப்ரதிகூலனாகவும் இருக்கிறானே தவிர, தனக்கு யாராலும் ஆவதென்ன? ப்ரபுகளில் இருந்து பிரபு என்று அழைத்துக் கொள்கிறான். ப்ருத்யர்களில் இருந்து, ப்ருத்ய காரியங்களை செய்து, ப்ருத்ய என்று அழைத்துக் கொள்கிறான். சுகாதிகளை அனுபவிக்கும் மக்களில் அவர்கள் போகிக்க தகுதியான பதார்த்தங்களில் தானே இருந்து, அந்தந்த பெயர்களால் தர்பக என்று அழைத்துக் கொண்டு தத்வாபிமானி தேவதைகளை திருப்திப்படுத்துகிறான். தைத்யர்களுக்கு பாவ பலன்களைக் கொடுக்கிறான்.

பிட்டிகள நெவதிந்தலாகலி
ஹொட்டெகோசுக வாதராகலி
கெட்டரோக ப்ரயுக்தவாகலி அணகதிந்தொம்மெ |
நிட்டுசிரினிம் பாய்தெரது ஹரி
விட்டலா சலஹெந்தெனலு கை
கொட்டு காவ க்ருபாலு சந்தத தன்ன பகுதரனு ||14

பிட்டிகள நெவதிந்தலாகலி = முதலாளியானவன் எந்த பணமும் கொடுக்காமல் வேலை செய்யச் சொல்லும் சந்தர்ப்பத்தில், கஷ்டப்பட்டு அந்த வேலைகளை செய்யும்போதோ
ஹொட்டெகோசுக வாதராகலி = இவன் பக்தன் என்று அறிந்து, மக்கள் தனக்கு பணம் கொடுக்கிறார்கள் என்று வயிறு வளர்க்கும் ஆசையினாலோ
கெட்ட ரோக ப்ரயுக்தவாகலி = கெட்ட நோய்களை அனுபவிக்கும்போது, அதனை சகிக்கமுடியாமலோ
அணகதிந்தொம்மெ = பக்தி மரியாதையுடன், ஒரு மனதுடன்
நிட்டுசுரினிம் = பெருமூச்சுடன்
பாய்தெரெது = வாய் திறந்து
ஹரி விட்டலா சலஹெந்தெனலு = ஹரி விட்டலா, என்னைக் காப்பாற்று என்றால்
க்ருபாளு = கருணாளுவான ஸ்ரீஹரி

சந்தத = சர்வ காலத்திலும்
தன்ன பகுதரன = தன் பக்தர்களை
கைகொட்டுகாவ = கை கொடுத்து அவர்களைக் காக்கிறான்

சம்பளமே இல்லாமல் வேலைகளை இலவசமாக செய்யும்போது வரும் கஷ்ட காலங்களிலோ, வயிற்றுக்கு இல்லாமல் கஷ்டப்படும்போதோ, நோயின் தாக்கத்தைப் பொறுத்துக் கொள்ள முடியாதபோதோ, பக்தி வைராக்கியத்தினால், ஒரு மனத்துடன், பெருமூச்சு விட்டு, வாய் திறந்து, அய்யோ அப்பா என்று சொல்லாமல், ஹரே, விட்டலா, என்னைக் காப்பாற்று என்று நினைத்தால் போதும். கருணாளுவான ஸ்ரீஹரி, தன் பக்தர்களின் சிந்தனையை மெச்சி, அவர்களை கை கொடுத்து காக்கிறான்.

ஈ வசுந்தரெயொளகெ ஸ்ரீ பூ
தேவியரசன சுகுண கர்மக
ளாவ பகெயிந்தாதராகலி கீர்த்திசுவ நரர
காவ கமலதலாயதாக்ஷ க்ரு
பாவலோகனதிந்த கபிசு
க்ரீவகொலிதந்ததலி ஒலிதபிலாஷெ பூரயிப || 15

கமலதளாயதாக்ஷ = தாமரைக் கண்ணனான ஸ்ரீஹரி
ஈவசுந்தரெயொளகெ = இந்த பூமியில்
ஸ்ரீபூதேவியரஸன = ஸ்ரீதேவி பூதேவியருக்கு தலைவனான ஸ்ரீபரமாத்மனின்
சுகுணகர்மகள = உத்தமமான குண கர்மங்களை
ஆவ பகெயிந்தாதராகலி = ஏதோ ஒரு வழியில்
கீர்த்திஸுவ நரர = வாயில் சொல்லி, காதில் கேட்டுக் கொண்டிருக்கும் மக்களை
காவ = காக்கிறான்
க்ருபாவலோகனதிந்த = தன் கருணைப் பார்வையால் பார்த்து
கபி சுக்ரீவ கொலிதந்ததலி = கபி சுக்ரீவனுக்கு உதவி, இஹத்தில் வாலியைக் கொன்று ராஜ்யத்தை அவனுக்குக் கொடுத்து, பரத்தில் திவ்ய கதியைக் கொடுத்ததைப் போல
ஒலிது = பக்தர்களுக்கு தரிசனம் அளித்து
அபிலாஷெபூரயிப = அவர்களின் மனோபீஷ்டங்களை நிறைவேற்றுகிறான்.

இந்த பூமியில், ஸ்ரீதேவி பூதேவியின் அரசனான ஸ்ரீமன் நாராயணனின் குண கர்மங்களை ஏதோ ஒரு வகையில் சொல்லிக் கொண்டிருந்தால், தாமரைக் கண்ணனான ஸ்ரீஹரி, அவர்களுக்கு தரிசனம் அளித்து, தன் கருணைப் பார்வையால் அவர்களைக் காத்தவாறு, கபியான சுக்ரீவனுக்கு உதவியதைப் போல, உதவி செய்து, அவர்களின் மனோபீஷ்டங்களை நிறைவேற்றுகிறான்.

சேதனாந்தர்யாமி லகுமி
நாத கர்மகளனுசரிஸி ஜனி
தோதவிஷ்ணோ எம்ப ஸ்ருதிபிரதிபாத்ய எம்மொடனெ |

ஜாதனாகுவ ஜன்மரஹித அ
கூதினந்தன பக்தரிந்தா
ஹூதனாகி மனோரதவ பேடிசிகொளதலீவ ||16

சேதனாந்தர்யாமி = அனைத்து பிராணிகளின் அந்தர்யாமியான
லகுமி நாத = லட்சுமிபதியான ஸ்ரீமன் நாராயணன்
ஜனிதோத விஷ்ணோ எம்ப ஸ்ருதிபிரதிபாத்ய = ஜனிதோதவிஷ்ணோ என்னும் ஸ்ருதியில் சொல்லப்பட்டதைப் போல
எம்மொடனெ = நம்முடன்
கர்மகளனுஸரிஸி = நம் கர்மங்களுக்கேற்ப
ஜன்மரஹித = பிறப்பு இல்லாதவனாக இருந்தாலும்
ஜாதனாகுவ = பிறக்கிறான்
அகூதினந்தன = யக்ஞ நாமகனான ஸ்ரீஹரி
பக்தரிந்த = தன் பக்தர்கள் மூலமாக
ஆஹூதனாகி = அழைத்துக் கொண்டு
பேடிசிகொளதலீவ = அவர்களால் எந்த மனோரதங்களையும் வேண்டிக்கொள்ளாமல்
மனோரதவ = அவர்களின் இஷ்டார்த்தங்களை
ஈவ = கொடுக்கிறான்.

ஜீவனின் கர்மத்திற்கேற்ப பூமியில் பிறக்கும்போது, அனைத்து பிராணிகளின் அந்தர்யாமியான ஸ்ரீபரமாத்மன், தானும் அந்த ஜீவனுடன் பிறக்கிறான். 'ஜனிதோதவிஷ்ணோ' 'அஜாயமானோ பஹூவதாவ்யஜாயதே' - இத்தகைய ஸ்ருதிகளில் சொன்னதைப் போல, தான் பிறப்பு இல்லாதவனானாலும், ஜீவருக்கு, கர்மங்களை தானாக செய்யும் சக்தி இல்லாததாலும், அவர்களிடமிருந்து கர்மங்களை செய்விப்பதற்காக, அந்த ரூபமாக பிறக்கிறான். பக்தர்கள் தன் நாமங்களை உச்சரித்து அழைத்தால், மிகவும் மகிழ்ந்து, அவன் எதை கேட்டும் / கேட்காவிட்டாலும், தானே அவர்களின் மனோபீஷ்டங்களை அறிந்து, அவற்றை நிறைவேற்றுகிறான்.

ந்ருபது எனிசுவ மனுஜரொளு சுர
ருஷபனிந்த்ரியதொளு தத்த
த்விஷயகள புஞ்சிசுவ ஹோதாஹ்வயனு தானாகி |
ம்ருஷரஹித வேததொளு ருதுசது
பெசரினிந்தலி கரெசுத ஜக
த்ப்ரசவித நிரந்தரதி சந்தெயிசுவனு பகுதரனு ||17

சுரருஷப = தேவ ஸ்ரேஷ்டனான ஸ்ரீஹரி
மனுஜரொளு = மனிதனில் இருந்து
ந்ருபது எனிஸுவ = ந்ருபது என்று அழைத்துக் கொள்கிறான்
இந்திரிய்களொளு = பிராணிகளின் கண் முதலான இந்திரியங்களில் இருந்து
ஹோதாஹ்வயனு தானாகி = ஹோதா என்னும் பெயர் உள்ளவனாகி

தத்தத்விஷயகள = அந்தந்த இந்திரியங்களால் ஆகும் பார்த்தல், கேட்டல் முதலான காரியங்களை செய்வித்து
புஞ்சிசுவ = அவற்றினால் கிடைக்கும் சுகத்தை ஏற்றுக் கொள்கிறான்
ம்ருஷரஹித = பொய் இல்லாத
வேததொளு = வேதத்தில்
ருதுசது பெசரினிந்தலி = ருதுசது என்னும் பெயரில்
கரெசுத = அழைக்கப்பட்டு
ஜகத்ப்ரஸவித = உலகத்தை படைக்கும் ஸ்ரீஹரி
நிரந்தரதி = எப்போதும்
பக்தரனு = தன் பக்தர்களை
சந்தெயிஸுவனு = சமாதானம் செய்கிறான் (அருள்கிறான்).

தேவோத்தமனான ஸ்ரீபரமாத்மன், மனிதர்களில் இருந்து, ந்ருபது என்று அழைத்துக் கொள்கிறான். இந்திரியங்களில் இருந்து ஹோத என்னும் பெயரால் அந்தந்த விஷயங்களை ஏற்றுக் கொள்கிறான். சத்யபூதமான வேதங்களில் இருந்து ருதுசது என்று அழைத்துக் கொள்கிறான். ஸ்ருஷ்டிகர்த்தனான ஸ்ரீஹரி, தன் பக்தர்களை எப்போதும் சமாதானம் செய்தவாறு, அவர்களின் இஷ்டார்த்தங்களை நிறைவேற்றுகிறான்.

அப்ஜபவபித ஜலதரத்ரியொ
ளப்ஜ கோஜாத்ரிஜனெனிசி ஜல
துப்பளெ பீயூஷதாவரெ ஸ்ரீ ஷஷாங்கரொளு ।
கப்பு கதளி லதா த்ருண த்ரும
ஹெப்புகேய மாடுதிஹ கோஜனு
இப்பகேப்ரதீக மணி ம்ருககள ஸ்ருஜிபனத்ரிஜனு ||18

அப்ஜபவபித = பிரம்மதேவரின் தந்தையான ஸ்ரீபரமாத்மன்
ஜல = தண்ணீரிலும்
தரெ = பூமியிலும்
அத்ரியொளு = பர்வதத்திலும், முறையே
அப்ஜ, கோஜ, அத்ரிஜ நெனிஸி = இந்த பெயர்களில் அழைத்துக் கொண்டு
ஜலதுப்பளெ = நீர்க்குமிழி அல்லது அலைகள் - இவற்றிலும்
பீயூஷ = தண்ணீரில் அல்லது பாறகடலில் பிறந்த அமிர்தத்திலும்
தாவரெ = தாமரைப் பூவில்
ஸ்ரீ = ஒளியிலும்
ஷஷாங்கரொளு = சந்திர மண்டலத்திலும்
அப்ஜ நாமக பரமாத்மன் இருக்கிறான்
கப்பு கதளி = கரும்பு, வாழை,
லதா = கொடிகளில்
த்ருண = புல்
த்ரும = மரம், முதலானவைகளில்
கோஜனு = கோஜ நாமகனாக

ஹெப்புகெய = வளர்ச்சியைக்
மாடுதிஹ = கொடுக்கிறான்
அத்ரிஜனு = மலையில் வசிப்பவனான அத்ரிஜ நாமகன்
யெப்பகெ ப்ரதீகதொளு = ஜடசேதன ரூபமான இரு வித ப்ரதிமைகளில் இருந்து
மணி = ஜடமான மாணிக்கம் முதலானவற்றில் இருந்து
ம்ருக = மலை, காடுகளில் சஞ்சரிக்கும் விலங்குகளை
ஸ்ருஜிப = ஸ்ருஷ்டிக்கிறான்

ஸ்ரீபிரம்மதேவரின் தந்தையான ஸ்ரீபத்பனாபன், தண்ணீரில் அப்ஜ என்ற பெயரில் இருந்து நீர்க்குமிழி, அமிர்தம், தாமரை மலர், சந்திர மண்டலம் ஆகியவற்றின் ஒளியை அதிகப்படுத்துகிறான்.

பூமியில் கோஜ என்னும் பெயரில் இருந்து, கரும்பு, வாழை ஆகியவற்றிலும், கொடி, புல், மரம், செடி ஆகியவற்றை வளர்க்கிறான்.

அத்ரிஜ நாமகன், மலைகளில் கிடைக்கும் மாணிக்கம் ஆகியவற்றை ஜடபிரதிமை என்றும், மிருகங்கள் ஆகியவற்றை சேதன பிரதிமை என்றும், இரு வித பிரதிமைகளை ஸ்ருஷ்டித்து, அவற்றில் வசிக்கிறான்.

பரமாத்மன் வசிக்கத் தகுந்ததான பதார்த்தங்களுக்கு ப்ரதிமை என்று பெயர். அவன் அனைத்து இடங்களிலும் வசிப்பதால், ஜடசேதனாத்மகமான அனைத்தும், பரமாத்மனுக்கு ப்ரதிமைகளே என்று சிந்திக்க வேண்டும்.

ஸ்ருதிவினுத சர்வத்ரதலி பா
ரதிரமணனொளகித்து தா ஷுசி
ஷதுவெனிஸி ஜட சேதனரனு பவித்ரமாடுதிஹ |
அதுல மஹிமானந்த ரூபா
ச்யுதனெனிஸி சித்தேஹதொளு ப்ரா
க்ருத புருஷனந்ததலி நானாசேஷ்டெகள மாள்ப ||19

ஸ்ருதிவினுத = வேதங்களால் புகழப்படும் ஸ்ரீபரமாத்மன்
சர்வத்ரதலி = அனைத்து பிராணிகளிலும்
பாரதிரமணனொளகித்து = அந்தர் நியாமகராக இருக்கும் வாயுதேவரில் இருந்து
தா = தான்
ஷுசிஷுதுவெனிஸி = ஜடசேதனர்களின்
பவித்ரமாடுதிஹ = ஜடசேதன ரூபமான அனைத்தையும் பவித்ரமாக ஆக்குபவன்
அதுளமஹிம = ஒப்புமை இல்லாத மகிமை உள்ளவன்
அனந்தரூப = எல்லைகளற்ற ரூபங்களைக் கொண்ட ஸ்ரீஹரி
அச்யுதனெனிஸி = அச்யுதன் என்ற பெயரில்
சித்தேஹதொளு = ஜீவனின் ஸ்வரூப தேகத்தில் இருந்து
ப்ராக்ருதபுருஷனந்ததலி = சாதாரண ப்ராக்ருத மனிதனைப் போல
சேஷ்டெகள மாள்ப = கர்மங்களை செய்விக்கிறான்.

வேதங்களால் வணங்கப்படும் ஸ்ரீஹரி, அனைத்து பிராணிகளின் அந்தர்யாமியாக இருக்கும், சித்தாபிமானியாக இருக்கும், பாரதி ரமண முக்ய பிராண தேவரில் ஷுசிஷது என்னும் பெயரில் இருந்து, ஜடசேதனாத்மகமான இந்த பிரபஞ்சத்தையே

பவித்ரமாக ஆக்குகிறான். யாரையும் ஒப்புமை கொடுக்க முடியாத மகிமைகளைக் கொண்ட, அனந்த ரூபங்களைக் கொண்ட ஸ்ரீஹரி, நாசம் இல்லாதவன் ஆகையால், அச்யுத என்ற பெயரில் அழைத்துக்கொண்டு, அனைவரின் ஸ்வரூப தேகத்தில் இருந்து, சாதாரண மனிதர்களைப் போல, பற்பல விதமான செயல்களை செய்து கொண்டிருக்கிறான் என்பது கருத்து.

அதிதி எனிசுவனன்னமய பா
ரதிரமணனொளு ப்ராணமய ப்ரா
க்ருத விஷய சிந்தனெய மாடிசுவனு மனோமயனு |
யதன விக்ஞானமய பரலத
ஜதனமாடிஸி ஆத்மஜாயா
சுதர சங்கதி சுகவனீவானந்த மயனெனிஸி ||20

அதிதி = அதிதிகளின் உள்ளிருந்து
அன்னமய = அன்னமய என்று அழைத்துக் கொள்கிறான்
பாரதிரமணனொளு = பாரதிபதியான முக்ய பிராணதேவரில் இருந்து
ப்ராணமய = ப்ராணமய என்று அழைத்துக் கொள்கிறான்.
மனோமயனு = மனோமயனாக அனைவரின் மனதிலும் இருந்து
ப்ராக்ருதவிஷய சிந்தனெய = கண், காது, முதலான அனைத்து இந்திரியங்களால் அனுபவிக்கும் விஷய சம்பந்தமான சிந்தனையை செய்விப்பவன்
விக்ஞானமய = விக்ஞானமய என்று அழைத்துக் கொள்கிறான்
யதனபரலு = முயற்சி செய்யவேண்டிய சந்தர்ப்பங்கள் வந்த காலத்தில்
அத = அதனை
ஜதனமாடிஸி = அந்த முயற்சிகளை சரியாக செய்விப்பவன்
ஆனந்தமயனெனிஸி = ஆனந்தமய என்று அழைத்துக் கொள்கிறான்
ஆத்ம = தான்
ஜாயா = மனைவி
ஸுதர = மக்கள்; இவர்களின்
ஸங்கதி = சகவாசத்தினால் அவர்களில் அபிமானத்தைக் கொடுத்து
சுகவனீவ = சுகத்தைக் கொடுக்கிறான்.

* மதிய நேரத்தில் வீட்டிற்கு வரும் அதிதிகளில் இருந்து, அன்னமய என்று அழைத்துக் கொள்கிறான்.
* பாரதி ரமணனான முக்யபிராணரில் இருந்து ப்ராணமய என்று அழைத்துக் கொள்கிறான்.
* மனதில் மனோமய என்ற பெயர் உள்ளவராக இருந்து ப்ரக்ருதி சம்பந்தமான விஷய சிந்தனையை கொடுக்கிறான்.

* விக்ஞானமய என்று சொல்லி, முயற்சி செய்யவேண்டிய காலத்தில் மக்களால் முயற்சியை செய்ய வைக்கிறான்.
* ஆனந்தமயனானவன், தான், தன் மனைவி, மக்கள் என்னும் அபிமானத்தை பிறக்கவைத்து, அவர்கள் மூலமாக சுகத்தைக் கொடுக்கிறான்.

இனிது ரூபாத்மனிகெ தோஷக
ளெனிது பப்பவு பேளிரை ப்ரா
ஹ்மண குலோத்தமராதவரு நிஷ்கபட புத்தியலி |
குண நியாமக தத்ததாஹ்வய
நெனிஸி கார்யவ மாள்ப தேவன
நெனெதமாத்ரதி தோஷராஷிகளெல்ல கெடுதிஹவு ||21

இனிது = இந்த விதமாக
ரூபாத்மனிகெ = அனந்தானந்த ரூபங்களால் அவரவரின் யோக்யதைக்கேற்ப கர்மங்களை செய்து வரும் பரமாத்மனுக்கு
தோஷகளு = வைஷம்யாதி தோஷங்கள்
எனிதுபப்பவு = எப்படி வரும்?
பிராமண குலோத்தமராதவரு = உத்தமமான பிராமண குலத்தில் பிறந்த நீங்கள்
நிஷ்கபட புத்தியலி = எவ்வித பாரபட்சமும் இன்றி, நியாயமாக
பேளிரை = சொல்லுங்கள்
குண நியாமக = சத்வ ரஜஸ் தமோ குணங்களின் ப்ரேரகனான
தத்ததாஹ்வயனெனிஸி = அந்தந்த பெயர் உள்ளவன் என்று புகழ் பெற்று
கார்யவமாள்ப = கர்மங்களை செய்விக்கிறான்
தேவன = ஸ்ருஷ்ட்யாதி கர்த்தனான ஸ்ரீஹரி
நெனதமாத்ரதி = நினைத்த மாத்திரத்தில்
தோஷ ராஷிகளெல்ல = செய்த பாவங்கள் அனைத்தும்
கெடுதிஹவு = நாசம் அடைகின்றன.

இப்படியாக, அனந்தானந்த ரூபங்களால், சாத்விக, ராஜஸ, தாமஸ ஜீவர்களில் இருந்து, அவரவர்களின் யோக்யதைக்கேற்ப கர்மங்களை செய்வித்து, பலன்களைக் கொடுக்கும் ஸ்ரீஹரிக்கு, வைஷம்யாதி தோஷங்கள் எப்படி இருக்கும்? உத்தமமான பிராமண குலத்தில் பிறந்துள்ள நீங்கள் அனைவரும், இதனை சிந்தித்துப் பாருங்கள் என்று சொல்கிறார். ஆனால், ருத்ராதி தேவதைகளில் அல்லது பிற மதங்களில் பாரபட்சம் வைத்துக் கொண்டு பார்த்தால், சரியான நியாயம் தெரியாது. அத்தகைய பாரபட்சத்தை விட்டு, சமபுத்தியினால் பார்த்தால் இவ்விஷயம் புரியும் என்பது கருத்து. சத்வாதி குணங்களுக்கு நியாமகனாக, சாத்விகாதி பெயர்களால் செயல்களை செய்து செய்விக்கும் ஸ்ரீபரமாத்மனின் ஸ்மரணையால் மட்டுமே தோஷ ராசிகள் அனைத்தும் நாசம் அடைகின்றன.

குஸ்தனெனிஸுவ பூமியொளு ஆ
ஷஸ்தனெனிசுவ திக்வலயதொளு
ஸ்வஸ்தனெனிபா காஷாதொளு ஒப்பொப்பரொளகித்து

வ்யஸ்தனெனிஸுவ சர்வரொளகெ ச
மஸ்தனெனிசுவ பளியலித்து உ
பஸ்தனெனிப விஷோதன விஷுத்தாத்ம லோகதொளு ||22

பூமியொளு = பூமியிலிருந்து
குஸ்தனெனிஸுவனு = குஸ்த என்று அழைத்துக் கொள்கிறான்
திக்வலயதொளு = திக் மண்டலங்களில் இருந்து
ஆஷஸ்தனெனிஸுவ = ஆஷஸ்த என்று அழைத்துக் கொள்கிறான்
ஆகாஷதொளு கஸ்தனெனிப = ஆகாயத்தில் இருந்து கஸ்த என்று அழைத்துக் கொள்கிறான்
ஒப்பொப்பரொளகித்து = அனைத்து பிராணிகளிலும் தனித்தனியாக ரூபங்களில் இருந்து
வ்யஸ்தனெனிஸுவனு = வ்யஸ்த என்று அழைத்துக் கொள்கிறான்
சமஸ்தரொளகெ = அனைவரிலும் வியாப்தனான ரூபத்தினால் சமஸ்த என்று அழைத்துக் கொள்கிறான்
பளியலித்து = பக்கத்தில் இருந்து
உபஸ்தனெனிப = உபஸ்த என்று அழைத்துக் கொள்கிறான்
லோகதொளு = இப்படியாக உலகத்தில்
விஷோதன = அனைத்தையும் தூய்மையாக்குபவன் என்றும்
விஷுத்தாத்ம = தூய்மையானவன் என்றும்
சிந்திக்க வேண்டும் என்று அர்த்தம்.

பூமியில் இருக்கும் பரமாத்மனுக்கு குஸ்த என்று பெயர். 'கோத்ராகும் ப்ருதிவி ப்ருத்வீ' என்னும் அமரகோச வாக்கியத்தைப் போல, கு என்றால் பூமி. 'கௌஸ்தீயதெ இதி குஸ்த:' என்னும் நிர்ணயத்தின்படி பூமியில் இருப்பதால், குஸ்த என்று பெயர். திசைகளுக்கு ஆஷா என்று பெயர். அங்கு இருப்பதால், ஆஷஸ்த என்று பெயர். ஆகாயத்திற்கு கம் என்று பெயர். ஆகாயத்தில் இருப்பதால், கஸ்த என்று பெயர். ஒவ்வொருவரிலும் தனித்தனியான ரூபங்களில் இருப்பதால், வ்யஸ்த என்று பெயர். அனைத்து இடங்களிலும் நிலைத்திருக்கும் ரூபத்திற்கு சமஸ்த என்று பெயர்.

அருகிலேயே இருப்பதால் உபஸ்த என்று பெயர். இப்படியாக, விசேஷமான தூய்மையாக்குபவன் ஆகையால், தூய்மையான ஸ்வரூபம் கொண்டவனாக இருக்கும் ஸ்ரீஹரி, உலகத்தில் இத்தகைய அனேக ரூபங்களால், அனேக பெயர்களால் வசிக்கிறான் என்று சிந்திக்க வேண்டும் என்பது கருத்து.

ஞானதனு எந்தெனிப ஷாஸ்த்ரதி
மானதனு எந்தெனிப வசனதி
தானஷீல சுபுத்தியொளகெ வதான்யனெனிசுவனு |
வைனதேயவரூத தத்த
த் ஸ்தானதலி தத்தத்ஸ்வபாவக
ளானுசார சரித்ரெ மாடுத நித்ய நெலெசிப்ப ||23

ஷாஸ்திரதி = சாஸ்திரத்தில்
ஞானதனு எந்தெனிப = ஞானதன் என்று அழைத்துக் கொள்கிறான்
வஸனதி = வஸ்திரங்களில்
மானதனு = மானதன
எந்தெனிப = என்று அழைத்துக் கொள்கிறான்
தானஷீல சுபுத்தியொளகெ = தானத்தை எப்போதும் செய்து கொண்டிருக்க வேண்டும் என்னும் புத்தியில்
வதான்யனெனிஸுவனு = வதான்ய என்று அழைத்துக் கொள்கிறான்
வைனதேயவரூத = கருடனே த்வஜமாக உள்ள ஸ்ரீஹரி
தத்தத் ஸ்தானதலி = அந்தந்த இடங்களில்
தத்தத் ஸ்வபாவகளானுசார = அந்தந்த பொருட்களின் ஸ்வபாவத்திற்கேற்ப
சரித்ரெகள = கர்மங்களை
மாடுத = செய்தவாறு
நெலெசிப்ப = வசிக்கிறான்.

* சாஸ்திரங்களில் இருந்து ஞானத்தைக் கொடுப்பவன் ஆகையால், ஞானத என்று அழைத்துக் கொள்கிறான்.
* வஸ்திரங்களில் இருந்து மானத்தைக் காப்பவன் ஆகையால், மானத என்று அழைத்துக் கொள்கிறான்.
* வதான்ய என்றால் வீரர்களுக்குப் பெயர். தானசீலர்களில் இருந்து வதான்ய என்று அழைத்துக் கொள்கிறான்.

இப்படி கருட வாகனனான ஸ்ரீபரமாத்மன், அந்தந்த இடங்களில் இருந்து, அந்தந்த ஸ்வபாவங்களை அனுசரித்து, செயல்களை செய்தவாறு எப்போதும் அங்கு வசிக்கிறான்.

க்ராமபனொளக்ரணி எனிசுவனு
க்ராமிணி எனிசுவனு ஜனரொளு
க்ராமுமக்ராமகளொளகெ ஸ்ரீமான்யனெனிசுவனு ।
ஸ்ரீமனோரம தானெ யோக
க்ஷேம நாமகனாகி சலஹுவ
ஈ மஹிமெ மிக்காத தேவரிகுண்டெ லோகதொளு ||24

க்ராமபனொளு = கிராம அதிபதியில்
அக்ரணியெனிஸுவனு = அக்ரணி என்று அழைத்துக் கொள்கிறான்
ஜனரொளு = ஊர் மக்களில் இருந்து
க்ராமணி எனிஸுவனு = கிராமணி என்று அழைத்துக் கொள்கிறான்
க்ராம, உபக்ராமகளொளகெ = கிராமங்கள், சிற்றூர்களில் இருந்து
ஸ்ரீமான்யனெனிஸுவனு = ஸ்ரீமான் என்று அழைத்துக் கொள்கிறான்
ஸ்ரீமனோரம = லட்சுமி மனோரமனான (மனதிற்கு அபிமானியான) ஸ்ரீபரமாத்மன்
யோகக்ஷேம நாமகனாகி = யோகக்ஷேம என்னும் பெயரில்

சலஹுவ = காக்கிறான்
ஈ மஹிமெ = இத்தகைய மகிமை
லோகதொளு = இந்த உலகத்தில்
மிக்காத தேவரிகுண்டெ = மற்ற எந்த தேவதைகளுக்காவது உண்டா?
இல்லை என்பது கருத்து.

கிராமாதிபதி என்றால், தேசாதிபதி, மகாராஜா, சக்ரவர்த்திகள் என அனைவரையும் சொல்லலாம். இவர்களில் இருந்து, அக்ரணி என்று அழைத்துக் கொள்கிறான். ப்ரபு என்று அழைத்துக் கொள்கிறான் என்று அர்த்தம். மக்களில் இருந்து கொண்டு, க்ராமணி என்று அழைத்துக் கொள்கிறான். க்ராமங்களிலும், உப-கிராமங்களிலும் இருந்து ஸ்ரீமந்த என்று அழைத்துக் கொள்கிறான்.

இதன் அபிப்பிராயம் என்னவெனில்: விபூதியை சிந்திப்பது போல, கிராமங்களில் கிராமாதிபதியில் இருந்து, பிரபு என்று அழைத்துக் கொள்கிறான். சாமான்ய பிரஜைகளில், ராஜர்களில் இருந்து ப்ரபு என்று அழைத்துக் கொள்கிறான். ராஜர்களில் சக்ரவர்த்தியில் இருந்து பிரபு என்று அழைத்துக் கொள்கிறான். அதாவது அந்தந்த குழுக்களில் அதிபதி ஸ்தானத்தில் இருந்து, அந்த பிரபு காரியத்தை தான் செய்கிறான் என்று பொருள். லட்சுமி மனோகரனான ஸ்ரீமன் நாராயணன், அனைத்து பிரஜைகளிலும், யோகக்ஷேம என்னும் பெயரில் தான் இருந்து, யோகக்ஷேமத்தை தான் வகித்து அவர்களை காக்கிறான். இத்தகைய மகிமை, மற்ற எந்த தேவதைகளுக்கு இருக்கிறது? என்றைக்கும் இல்லை என்பது கருத்து.

விஜயசாரதி எந்து கருட
த்வஜன மூர்த்திய பக்திபூர்வக
பஜிசுதிப்ப மஹாத்மரிகெ சர்வத்ரதலி ஒலிது ।
விஜயதனு தானாகி சலஹுவ
புஜகபூஷண பூஜ்யசரணா
ம்புஜ விபூதித புவனமோஹனரூப நிர்லேப ||25

விஜயசாரதி எந்து = அர்ஜுனனின் சாரதி என்று (பார்த்தசாரதி என்று)
கருடத்வஜன மூர்த்திய = கருடத்வஜனின் மூர்த்தியை
பக்திபூர்வக = பக்தியுடன்
பஜிசுதிப்ப = துதித்துக் கொண்டிருக்கும்
மஹாத்மரிகெ = பக்தர்களுக்கு
புஜகபூஷண பூஜ்ய சரணாம்புஜ = பாம்பினை தரித்திருக்கும் ருத்ரதேவர் வணங்கும் கால்களை உடைய
விபூதித = பக்தர்களுக்கு அபாரமான செல்வத்தைத் தரக்கூடியவனான
புவனமோஹனரூப = உலகத்தை மயக்கும் ரூபத்தைக் கொண்ட
நிர்லேப = நிர்லிப்தனான ஸ்ரீஹரி
ஸர்வத்ரதலி = எல்லா இடங்களிலும், அனைத்து காலங்களிலும்
ஒலிது = மகிழ்ந்து தரிசனம் அளித்து

விஜயதனு தானாகி = விசேஷமான வெற்றியை தருபவனாக இருந்து
சலஹுவ = காக்கிறான்.

கருடத்வஜனான ஸ்ரீகிருஷ்ணமூர்த்தியை, பார்த்தசாரதி என்று பக்தியுடன் பூஜிக்கும் பக்தர்களுக்கு பரமாத்மன் தரிசனம் அளித்து, அவர்களுக்கு அனைத்து செயல்களிலும் வெற்றியைக் கொடுத்து காக்கிறான். ருத்ராதி தேவதைகளை பஜித்தால், இத்தகைய வரங்கள் கிடைக்குமென்றால், ருத்ரதேவர் பரமாத்மனுக்கு பக்தராக இருப்பதால், மகாராஜனின் சாட்சாத் பிரசாதத்திற்கும், அவனின் சேவகனின் பிரசாதத்திற்கும் எவ்வளவு வித்தியாசம் இருக்கிறதோ, இங்கும் அவ்வளவு வித்தியாசம் இருக்கிறது என்பதை காட்டுவதற்காக - புஜகபூஷண பூஜ்யசரணாம்புஜ - என்றார். ருத்ரதேவர் சேவகர் என்று தனியாக சொல்லவும் வேண்டுமா? ஆகையால், விபூதித என்றார். பரமாத்மன் கொடுக்கும் செல்வத்திற்கு, இஹ பரங்களிலும் நஷ்டம் இல்லை.

மற்றவர்கள் கொடுத்தாலும் அல்ப பலன்களையே கொடுப்பார்கள். பரமாத்மன் மகா பலன்களையே கொடுக்கிறான் என்பது கருத்து. பிரம்மா, விஷ்ணு, மகேஸ்வரர் மூவரும் வரங்களை கொடுப்பவர்களே.

பாகவத 10ம் ஸ்கந்தம் 61ம் அத்தியாயத்தில்)
ஸத்ய: ஷாபப்ரஸாதோங்க ஷீவோ ப்ரம்மா நசாச்யுத: ||

ருத்ரதேவரோ, பிரம்மதேவரோ, இவர்கள் மகிழவேண்டுமெனில், கோபம் கொள்ளவேண்டுமெனில், உடனுக்குடன் ஆகிறார்கள். எனில், சிறிதளவிலான தவத்திற்கு மெச்சி, உடனடியாக வரத்தைக் கொடுக்கின்றனர். சிறிய தவறுக்கும் கோபம் கொண்டு சாபம் கொடுக்கின்றனர். இந்த இரண்டுமே ஸ்திரமானதல்ல. ருத்ரதேவர் கொடுத்த வரத்தை, வாயுதேவரும், ஸ்ரீபரமாத்மனும் அழிக்கின்றனர். பிரம்மதேவர் கொடுத்த வரத்தை, சில சமயங்களில் வாயுதேவரும், சில இடங்களில் பரமாத்மனும் த்வம்சம் செய்கின்றனர். பரமாத்மன் கொடுத்த வரத்திற்கு எவ்வித பிரச்னை / நஷ்டம் இல்லை என்று பாகவதாதி வசனங்களில் இருப்பதால், அந்த ஆதாரங்களின் மேல், இந்த அர்த்தம் இங்கு எழுதப்பட்டிருக்கிறது.

அனபிமத கர்மப்ரவஹதொளகெ
அனிமேஷாதி சமஸ்தசேதன
கணவிஹுது தத்பலகளுண்ணதெ ஸ்ருஷ்டிசுவ முன்ன |
வனிதெயிந்தொடகூடி கருணா
வனதி நிர்மிஸெ தம்ம தம்மய
அனுசிதோசித கர்மபலகள உணுத சரிசுவரு ||26

ஸ்ருஷ்டிசுவ முன்ன = ஜீவர்களை ஸ்ருஷ்டிக்குக் கொண்டு வரும் முன்னர்
ஆனபிமத கர்ம ப்ரவஹதொளகெ = அவரவர்கள் தத்தம் கர்மங்கள் இத்தகையது என்று தெரியாமல், அந்த கர்மங்களை செய்ய விரும்பாமல்,
தத்பலகளுணதெ = அந்த கர்ம பலன்களை அனுபவிக்காமல்
அனிமிஷாதி = தேவதைகளே முதலான

சமஸ்த சேதனகணவிஹுது = அனைத்து ஜீவராசிகளும் இருக்கின்றன.
வனிதெயிந்தொடகூடி = ஸ்ரீலட்சுமி தேவியருடன் சேர்ந்து
கருணாவனதி = கருணா சமுத்திரன்
நிர்மிஸெ = ஸ்ருஷ்டிக்க
தம்ம தம்மய = தத்தம்
அனுசிதோசித கர்மகள = நல்ல மற்றும் கெட்ட (அல்லது புண்ய பாவங்களை) கர்மங்கள், இவற்றை
உணுத = அதன் பலன்களை உண்டு
சரிசுவரு = பிறப்பு இறப்பு சுழற்சியில் சிக்கி நகர்வார்கள்.

ஜீவர்கள் ஸ்ருஷ்டிக்கு வருவதற்கு முன்னர், அனாதி காலத்திலிருந்து வரும் கர்மத்திற்கு கட்டுப்பட்டு இருந்தாலும், அந்த கர்மங்களை செய்வதற்கு அவர்களுக்கு விருப்பம் இருப்பதில்லை. கர்மபலன்களை அனுபவிப்பதில்லை. தம் யோக்யதை இத்தகையது என்று அவர்களுக்கு தெரிவதில்லை. இத்தகைய ஜீவர்கள் ஸாத்விக, ராஜஸ, தாமஸ பேதத்தினால், தேவதைகள், தைத்யர்கள், மனிதர்கள் முதலான ஜாதியில் பிறந்து, கர்மங்களை செய்வதற்கு தகுதியானவர்கள் பலர் இருக்கின்றனர். கருணா சமுத்திரனான ஸ்ரீஹரி, தன் மனைவியான ரமாதேவியுடன் சேர்ந்து, தேவ தைத்ய மனுஷ்யாதிகளை ஸ்ருஷ்டிக்க, அவரவரின் யோக்யதைக்கேற்ப, புண்ய பாபாதி கர்மங்களை செய்து, பலன்களை ஏற்றுக் கொண்டு, பூமி, ஸ்வர்க்க, நரகாதிகளில் சஞ்சரிக்கின்றனர்.

ஜல்லடிய நெளலந்தெ தோர்புது
எல்லகாலதி பவதசௌக்யவு
எல்லி பொக்கரு பிடதெ பெம்பத்திஹுது ஜீவரிகெ ।
ஒல்லெனெந்தரெ பிடது ஹரி நி
ர்மால்ய நைவேத்யவனு புஞ்சிஸு
பல்லவரகூடாடு பவதுக்ககள நீடாடு ||27

ஜல்லடிய நெளலந்தெ = சல்லடையின் நிழலைப் போல
தோர்புது = தெரிகிறது
எல்ல காலதி = ஸ்ருஷ்டி ஸ்திதி முதலான அனைத்து காலங்களிலும்
பவதசௌக்யவு = சம்சார சுகமானது
எல்லி பொக்கரு பிடதெ = எங்கு சென்றாலும் விடாது
பெம்பத்திஹுது ஜீவரிகெ = ஜீவர்களை துரத்தும்
ஒல்லெனெந்தரெ பிடதெ = வேண்டாம் என்றாலும் விடாமல்
ஹரி நிர்மால்ய நைவேத்யவனு புஞ்சிஸு = ஸ்ரீஹரிக்கு சமர்ப்பித்த நிர்மால்யங்களை (பூ, துளசி, தீர்த்தம்), நைவேத்தியங்களை எடுத்துக் கொள்
பல்லவரகூடாடு = ஞானிகளுடன் பழகு
பவதுக்ககள நீடாடு = இந்த சம்சார துக்கத்தினை தாண்டு.

இந்த சம்சார சுகமானது சல்லடையின் நிழலைப் போல மிகவும் அத்யல்ப சுக, மிகவும் அதிகமான துக்கங்களைக் கொண்டதாகும். ஆகையால், பாகவத 7ம் ஸ்கந்தம் 9ம் அத்தியாயத்தில், பிரகலாதன் ஸ்தோத்திரம் செய்யும்போது:

கண்டோயனேன கரயோரிவ துக்க துக்கம் ||45
த்ரஸ்தோஸ்ம்யஹம் க்ருபண வத்ஸல துஸ்ஸஹோக்ர
ஸம்சார சக்ரகதனாத்ம்யஷ தாம் ப்ரணேத: || 16
யஸ்மாத்ப்ரியாப்ரியவியோக ஸயோகஜன்ம ஷோகாக்னினா சகல யோனிஷு தஹ்யமான: ||
துக்கௌஷதம் ததபி துக்கமதத்தியாஹம் பூமன் ப்ரமாமி வத மே தவ தாஸ்ய யோகம் ||17

கையில் அரிப்பு வரும்போது, அதை கொஞ்சம் சொறிந்து கொண்டால், சிறிது சுகமாக இருக்கும். ஆனால் அதையே தொடர்ந்து செய்ய, வாய் விட்டு அழுமாறு துக்கம் அதிகமாகும். அத்தகைய சுக துக்கங்களே சம்சாரத்தில் காணப்படுகிறது. 'ஹே நரசிம்மனே! உன் இந்த பயங்கரமான ரூபத்தைக் கண்டு நான் பயப்படுவதில்லை. மஹா உக்ரமான, சகிக்கமுடியாத சம்சார சக்கரத்தில் சிக்கி, எங்கு கஷ்டப்பட வேண்டி வருமோ என்று அந்த ஒன்றிற்கே நான் மிகவும் பயப்படுகிறேன். அதில் அதிக துக்கம் என்னவெனில், எந்தப் பொருள் நமக்கு மிகவும் இஷ்டம் என்று, நாம் அதை விடக்கூடாது என்றிருக்கிறோமோ, அதுவே நம்மை விட்டுப் போகிறது. எது நமக்கு வேண்டாம் என்று நாம் நிராகரிக்கிறோமோ, அது நம்மை விட்டுப் போவதில்லை.

இதைத்தவிர, பிறப்பு இறப்பு போன்ற துக்கங்கள். இப்படி எந்த யோனியில் பிறந்தாலும், சோக அக்னியில் தகித்து, கஷ்டத்தையே படவேண்டும். அந்த துக்க பரிகாரத்திற்கு ஏதாவது ஒரு வழி செய்தாலும், அதிலிருந்தும் துக்கமே வருகிறது. ஆகையால், இந்த சம்சாரத்திற்கு பயந்து நான் உன்னிடம் முறையிடுகிறேன். ஹே பிரபோ! உன் தாஸ்யத்தைக் கொடுத்து என்னை காத்தருள்வாய்.' என்று வேண்டிக்கொண்டான்.

ஆகையால், தாசார்யர் சம்சாரம் மிகவும் துக்கமயமானது என்றார். இதனை உடனடியாக தீர்த்துக் கொள்வது என்பது சாத்தியமல்ல. சுகதுக்க ரூபமான பழைய கர்மங்கள், இவன் எங்கு சென்றாலும் விடாமல் துரத்திக் கொண்டே வரும்.

ஆகையால் தாசார்யர் 'ப்ராசீனகர்மவிது சின்னபிடது' என்று கூறுகிறார். ஆகையால், தற்காலிக சுகத்திற்கு ஆசைப்படாமல், நிரந்தர சுக ரூபமான முக்திக்காக, பரமாத்மனின் பாதங்களுக்கு அர்ப்பித்த துளசி, புஷ்பங்களை பயன்படுத்தி, ஹரி நைவேத்தியங்களை உண்டவாறு, சஜ்ஜனர்களின் சங்கத்தினால் காலம் கழித்தவாறு, ஹரிகதா ஸ்ரவணங்களை செய்து, சம்சாரத்திலிருந்து முக்தர் ஆகவேண்டும் என்பது கருத்து.

நிர்மால்யங்களை பயன்படுத்துவது. நைவேத்தியங்களை உண்பது. இந்த இரண்டு மட்டுமே அல்ல. கர, சரணாதி அனைத்து இந்திரியங்களையும் பகவத்

சேவைக்காகவே பயன்படுத்த வேண்டும் என்பது கருத்து. பாகவத 9ம் ஸ்கந்தத்தில் இந்திரியங்களை பயன்படுத்தும் விதத்தை சொல்கிறார்.

ஸவைமன: க்ருஷ்ணபதாரவிந்தயோர் வசாம்ஸி வைகுண்ட குணானு வர்ணனே ||
கரௌஹரேர் மந்திர மார்ஜனாதிஷு ஸ்ருதீ சகாராசைதுஸத் கதோதயே ||
முகுந்த லிங்காலய தர்ஷனே த்ருஷௌதத் ப்ருத்ய காத்ர ஸ்பர்ஷேங்க சங்கம் ||
ப்ராணாஞ்ச தத்பாத ஸரோஜ சௌரப ஸ்ரீமத்துலஸ்யாம் ரஸனாம் ததர்ப்பிதே ||
பாதௌஹரே: க்ஷேத்ர பதானுஸர்பணி ஷிரோஹ்யஷீகேஷ பதாபிமந்தனெ ||
காமந்துதாஸ்யேனது காமகாம்யயா ததோத்தம ஸ்லோக ஜனாஸ்ரயாம்ரதிம் ||

அம்பரீஷ ராஜன் இருந்த நிலையைக் கூறுகிறார்.
* மனதை கிருஷ்ணனின் பாதாரவிந்தங்களில் வைத்திருந்தான்.
* வாக்கியத்தை வைகுண்ட நாமக பரமாத்மனின் குணங்களை சொல்வதற்கு பயன்படுத்தினான்.
* கரங்களை பரமாத்மனின் வீட்டின் குப்பையை சுத்தம் செய்வதற்கு பயன்படுத்தினான்.
* காதுகளை பரமாத்மனின் கதா ஸ்ரவணத்திலும்,
* கண்களை பிரதிமாதிகளின் தரிசனத்திற்கும்,
* பரமாத்மனின் சேவகர்களை தொடுவதற்காக,
* மூக்கினை பரமாத்மனுக்கு சமர்ப்பித்த துளசி முதலானவற்றை முகர்வதற்கும்
* நாக்கினை பரமாத்மனின் நைவேத்தியங்களை உண்பதற்கும்
* பாதங்களை ஸ்ரீஹரியின் தீர்த்தக்ஷேத்திர சஞ்சாரத்திற்கும்
* தலையை ஹ்ருஷிகேசனின் பாதங்களில் நமஸ்காரம் செய்வதற்கும் பயன்படுத்தினான்.
* காமதன்னு என்றால் விருப்பத்தை பரமாத்மனின் தாஸ்யத்தில் வைத்திருந்தான்.

ரதிசுக என்றால், உத்தம ஸ்லோகனான ஸ்ரீபரமாத்மனின் பக்த ஜனர்களின் சகவாசத்தினாலேயே சுகத்தை அடைந்திருந்தான் என்று சொல்கிறார். இப்படி அனைத்து இந்திரியங்களையும் பகவத் சேவைக்கே பயன்படுத்தினான் என்று அறிய வேண்டும்.

குட்டி கொயிதுதனட்டு இட்டுத
சுட்டு கொட்டுத முட்டலக ஹி
த்திட்டு மாள்புது விட்டலுண்டுச்சிஷ்ட சஜ்ஜனர
பிட்டு தன்னய ஹொட்டெகோசுக
தட்டனுணுதிஹ கெட்ட மனுஜர
கட்டி ஒய்தெம பட்டண தொளொத்தட்ட லிடுதிஹரு ||28

கொய்துதன = நெல் பறித்த பிறகு
குட்டி = அதனை புடைத்து, அரிசி எடுத்த பிறகு
அட்டு = சமையல் செய்து
இட்டத = நைவேத்தியத்திற்கு வைத்ததை

சுட்டு = வைஸ்வதேவம் செய்து
கொட்டத = பிராமண அந்தர்யாமியான ஸ்ரீபரமாத்மனுக்கு சமர்ப்பணம் செய்ததை, பிராமணர்களுக்கு உணவு உண்ணக் கொடுத்த பின் அதன் மிச்சத்தை
புஞ்சிஸலு = நாம் உண்ண
விட்டல = ஸ்ரீஹரி உண்ட
உச்சிஷ்ட = சேஷ (மிச்சம்)
சஜ்ஜனர = பகவத் பக்தர்களின்
அக = பாவங்களை
ஹிட்டிட்டுமாள்புது = பொடிப்பொடி ஆக்குவது
பிட்டு = நைவேத்ய வைஷ்வதேவ இல்லாமல், அதிதிகளுக்கு வைக்காமல், அப்படியே
உணுதிய = உண்ணும்
கெட்டமனுஜர = கெட்டவர்களை
கட்டி ஒய்து = கட்டி இழுத்து
யம பட்டணதொளு = யம பட்டணத்தில்
ஒத்தட்டலி = ஒரு நரகத்தில்
இடுதிஹரு = போட்டு விடுவார்கள்.

நாம் சமையல் செய்யும் அன்னத்தில் 5 விதமான ஹத்யா தோஷங்கள் இருக்கின்றன.

1. நெல்லினை பறிப்பது
2. கழுவுவது
3. புடைப்பது
4. பிரிப்பது
5. வேக வைப்பது

என்னும் இந்த பஞ்ச ஸூனா தோஷங்கள் வருகின்றன. அந்த தோஷங்களின் பரிகாரத்திற்காக, சமையல் செய்தபிறகு, தேவரின் நைவேத்தியம் செய்து, வைஷ்வதேவம் செய்ய வேண்டும். பின், அதிதிகளுக்கு உணவளித்து விட்டு, பிராமணாந்தர்கத ஸ்ரீபரமாத்மனுக்கு அதை சமர்ப்பித்து, அந்த சேஷ அன்னத்தை, நாம் உண்டால், அந்த பாவ கர்மங்கள் அனைத்தும் பரிகாரம் ஆகின்றன.

நைவேத்ய வைஷ்வதேவ இல்லாமல் செய்த சமையலை தானே உண்டால், 'ஆத்மார்த்தம் பாசிதமன்னம் ஆமிஷமித்குச்யதே' தனக்காக செய்த சமையல், மாமிசத்திற்கு சமம் என்று தர்ம சாஸ்திரத்தில் சொல்லப்பட்டிருக்கிறது.

ஆகையால், எந்த நீச மனிதனும், தான் உண்ட சமையலை உடனே தின்று விடுகிறானோ, அவனை யமதூதர்கள், திட்டி, நரகத்தில் தள்ளி விடுகிறார்கள். ஆகையால், வைஷ்வதேவ முதலானவைகளை செய்தே உண்ண வேண்டும் என்பது கருத்து.

ஜல்லடிய நௌலந்தெ பவசுக

தல்லணவகொளிசுவுது நிஸ்சய
வல்ல சாலவமாடி சக்கரெ மெத்த தெரனந்தெ |
க்ஷுல்லகர கூடாடதலெ ஶ்ரீ
வல்லபன சத்குணகணங்களு
பல்லவர கூடாடி சம்பாதிஸு பரம்பதவ ||29

ஜல்லடிய நெளலந்தெ = சல்லடையின் நிழலைப் போல
பவசுக = சம்சார சுகம்
தல்லணவ கொளிஸுவுது = துக்கமே அதிகமாக இருக்கிறது
நிஸ்சயவல்ல = அந்த சிறியதான சுகமும் நிரந்தரமல்ல
ஸாலவமாடி ச்க்கரெ மெத்த தெரனந்தெ = கடன் வாங்கி சர்க்கரை தின்றால், அது சாப்பிடும்போது சிறிது சுகம் ஏற்படும்.

ஆனால், பின்னர் கடன்காரர் வந்து கடனைக் கேட்கும்போது துக்கமே ஏற்படும். அதைப்போல, சம்சாரத்தில் ஸ்த்ரீயாதி போகங்களால் சிறிது சுகம் வந்தாலும், பிறகு அனந்த துக்கங்கள் அனுபவிக்க வேண்டியிருக்கும் என்று அர்த்தம்.

இத்தகைய சம்சாரத்தில்,
க்ஷுல்லகர கூடாடதலெ = அல்பமான மனிதர்களுடன் சேராமல், அல்லது, தமோ யோக்ய மக்களுடன் சேராமல்
பல்லவரகூடாடி = ஞானிகளின் சகவாசத்தை செய்தவாறு, அவர்களின் முகத்திலிருந்து ஹரிகதா ஸ்ரவணங்களைக் கேட்டவாறு
பரம்பதவ = உத்தமமான பரமாத்மனின் பரம பதவியை
சம்பாதிஸு = சம்பாதி.

சல்லடையில் ஓட்டைகள் நிறைய இருப்பதால், வெயில் அதிகமாகவும், நிழல் குறைவாகவுமே விழும். அதைப்போலவே, சம்சாரத்தில் துக்கம் அதிகமாகவும், சுகம் சிறிதாகவும் இருக்கும் என்பது கருத்து. அந்த சிறிதளவு சுகமும் நிச்சயமல்ல. இதனால் உண்டாகும் சுகம் எத்தகையது என்றால், கடன் வாங்கி சர்க்கரை தின்றால், அது சாப்பிடும்போது சிறிது சுகம் ஏற்படும். ஆனால், பின்னர் கடன்காரர் வந்து கடனைக் கேட்கும்போது துக்கமே ஏற்படும். அதைப்போல, சம்சாரத்தில் ஸ்த்ரீயாதி போகங்களால் சிறிது சுகம் வந்தாலும், பிறகு அனந்த துக்கங்கள் அனுபவிக்க வேண்டியிருக்கும் என்று அர்த்தம். ஆகையால், அயோக்யர்களின் சகவாசத்தை, பேச்சுவார்த்தையை விட்டு, ஞானிகளின் சகவாசத்தை செய்து, ஶ்ரீலட்சுமிபதியான ஶ்ரீபரமாத்மனின் குணங்களைக் கேட்டு, பரம பதவியை சம்பாதி.

**ஜாகு³மாட³தெ³ போ⁴க³தா³ஷெய**
**நீகி³ பரமனுராக³தலி வர**
**போ⁴கி³ஷயனன ஆக³ரத³ ஹெப்³பா³கி³லலி நிந்து³ |**
**கூகு³தலி ஷிரபாகி³ கருணா**
**ஸாக³ரனே ப⁴வரோக³பே³ஷஜ**
**கைகொடெ³ந்தெ³னெ பே³க³னொத³கு³வ பா⁴க³வதரரஸ ||30**

ஜாகுமாடதெ = சோம்பல் இல்லாமல்
போகதாஷெய = அல்பமான விஷய சுக போகத்தின் ஆசையை
நீகி = விட்டு
பரமனுராகதலி = பரம பக்தியால்
வரபோகிஷயனன = உத்தமமான சர்வஷயனனான (சேஷசாயியான) ஸ்ரீபரமாத்மனின்
ஆகரத = வீட்டின்
ஹெப்பாகிலலி நிந்து = வாயிலில் நின்று
ஷிரபாகி = நமஸ்கரித்து
கருணா சாகரனே = கருணைக்கடலே
பவரோக பேஷஜ = சம்சார சாகரத்தை கடக்க உதவுபவனே என்று
கூகுதலி = உச்ச ஸ்வரத்தில் கூப்பிட்டால்
பாகவதரரஸ = பகவத் பக்தர்களின் பிரபுவான ஸ்ரீஹரி
பேகனொதகுவ = அதி வேகமாக வந்து அவர்களுக்கு அருள்வான்.

சம்சாரத்தில் ஆசையை விட்டு, விஷய சுகங்களைத் துறந்து, சோம்பல் இல்லாமல், பரம பக்தியுடன் சேஷசாயியான ஸ்ரீபரமாத்மனின் வீட்டின் வாயிலில் நின்று, வணங்கி, உச்ச ஸ்வரத்தில் அவனை 'ஹே கருணா சமுத்திரனே, பவரோக பேஷஜனே, என்னைக் காத்தருள்' என்று வேண்டினால், பக்தர்களுக்கு அரசனான ஸ்ரீஹரி, அந்த நொடியே வந்து அவர்களைக் காப்பான்.

**ஏனு கருணவோ தன்னவரலி த[3]**
**யாநிதி[4]கெ[3] ஸத்ப[4]க்தஜனரதி[3]**
**ஹீனகர்மவ மாடி[3]த[3]ரு ஸரி ஸ்வீகரிஸி பொரெவ ।**
**ப்ராணஹிம்ஸக லுப்தககெ[3] ஸு**
**க்[3]ஞான ப[4]க்திக[3]ளித்து த[3]ஷரத[2]**
**ஸூனு வால்மீகிரிஷிய மாடி[3]த[3] பரமகருணாளு ||31**

தயாநிதிகெ = தயாநிதியான ஸ்ரீஹரிக்கு
தன்னவரலி = தன் பக்தர்களில்
ஏனுகருணவோ = என்ன கருணையோ
சத்பக்த ஜனரு = அவன் பக்தர்கள்
அதி ஹீன கர்மவ மாடிதரு = எந்த நீசமான கர்மங்களை செய்தாலும்
ஸ்வீகரிஸி = அவற்றை ஏற்றுக்கொண்டு
பொரெவ = காப்பான்.
ப்ராணஹிம்ஸக = அனேக பிராணிகளைக் கொல்லும்; வழிகாட்டிகளான பிராமணாதி மக்களை அடித்து, அவர்களிடம் இருக்கும் பொருட்களை அபகரிக்கும்
லுப்தககெ = வேடர்களுக்கு
சுக்ஞான பக்திகளித்து = உத்தமமான ஞான, பக்திகளைக் கொடுத்து
தஷரதஸூனு = ரகுவம்சத்தில், தசரதனின் மகனாக அவதரித்த ஸ்ரீராமசந்திரதேவர்
வால்மிகிரிஷிய = அந்த வேடனை, வால்மிகி ரிஷியாக
மாடித = மாற்றிய

பரமகருணாளு = கருணைக்கடல் ஆனவன்.

தயாநிதியான ஸ்ரீஹரிக்கு தன் பக்தர்களிடம் இருக்கும் காருண்யத்தை என்னவென்று வர்ணிப்பேன்? அவர்கள் என்ன நீச கர்மங்களை செய்திருந்தாலும், அவற்றை மன்னித்து, அந்த பாவங்களை பஸ்மம் செய்து, அவர்களைக் காப்பான். அப்படி யாரை காத்தான் என்றால், வால்மிகி ரிஷிகள் முன்பு வேடனாக இருந்தபோது, அவ்வழியில் வந்த மக்களை அடித்து, துன்புறுத்தி அவர்களிடமிருந்து பொருட்களை அபகரித்து வந்தார். வயிற்றுப் பசிக்காக பல மிருகங்களை கொன்று வந்தார்.

இத்தகையவருக்கு திவ்ய ஞானத்தைக் கொடுத்தான். அது எப்படியெனில், வழிப்போக்கர்களை துன்புறுத்தும்போது, அங்கு ஒரு ரிஷி வரவும், அவரின் தரிசனத்தால் மட்டுமே அவனுக்கு சத்புத்தி பிறக்குமாறு செய்து, தனக்கு உபதேசம் செய்ய வேண்டும் என்று வேண்டிய வேடனுக்கு, அந்த ரிஷியும் அவனுக்கு உபதேசம் செய்ய இஷ்டமில்லாமல் ராம ராம என்னும் மந்திரத்தை மரா மரா என்று உபதேசம் செய்ய, அவனும் மரா மரா மரா என்றே ஜெபிக்கத் துவங்கினான்.

அதன் மூலமாகவே பரமாத்மன் அவனுக்கு பரமானுக்கிரகத்தை செய்து, திவ்ய ஞானத்தைக் கொடுத்து, இறுதியில் நாரதரின் முகத்திலிருந்து ராம சரித்திரத்தைக் கேட்டு, பிரம்மதேவரின் ஆணைப்படி 7 காண்ட ராமாயணத்தை இயற்றினான். அதுவே, வால்மிகி ராமாயணம் என்று பெயர் பெற்றது. இத்தகைய நீச ஜாதியில் பிறந்தவனுக்கு, இத்தகைய ஞானம் வரவேண்டுமெனில், முழுமையான பகவத் அருளைத் தவிர வேறு என்ன இருக்க முடியும்? ஆகையாலேயே, அவனை பரமகருணாளு என்று பாடினார்.

**மூட$^{3}$மானவ எல்லகாலதி$^{3}$**
**பே$^{3}$டி$^{3}$கொம்பி$^{3}$னிதெந்து$^{3}$ தைன்யதி$^{3}$**
**பேடத$^{3}$ந்த$^{3}$தி$^{3}$ மாடு$^{3}$ புருஷார்த்த$^{2}$க$^{3}$ள ஸ்வப்னத$^{3}$ளு |**
**நீடு$^{3}$வரெ நின்னமலகு$^{3}$ண கொ**
**ண்டா$^{3}$டி$^{3}$ ஹிக்கு$^{3}$வ பா$^{4}$க$^{3}$வதரொட$^{3}$**
**நாடி$^{3}$ஸென்னனு ஜனும ஜனுமக$^{3}$ளல்லி த$^{3}$யதி$^{3}$ந்த$^{3}$ ||32**

மூடமானவனு = அஞ்ஞானியானவன்
இனிதெந்து = இது வேண்டும், அது வேண்டும் என்று
தைன்யதி = பக்தி / மரியாதையுடன்
பேடிகொம்பனு = வேண்டுவான், ஆனால் நான் அப்படி வேண்டுவதில்லை
நீடுவரெ = நீயே கொடுப்பதானால்
புருஷார்த்தகள = தர்ம, அர்த்த, காம, மோட்ச என்னும் 4 வித புருஷார்த்தங்களை
ஸ்வப்னதலி = கனவிலும்
பேடதந்ததி = வேண்டாதவாறு செய்
ஜன்ம ஜன்மகளல்லி = ஒவ்வொரு பிறவியிலும்
மரெயதலெ = மறக்காமல்

நின்னமலகுணகொண்டாடி ஹிக்குவ = உன் தோஷமற்ற குணங்களைக் கொண்டாடி, மகிழும்
பாகவதரொடனெ = பகவத் பக்தர்களுடன்
என்னனு = என்னை
ஆடிஸு = பழக்கத்தில் இருக்குமாறு செய்.

அஞ்ஞானிகள் மட்டுமே தனக்கு இது வேண்டும், அது வேண்டும் என்று விஷய சுகங்களை வேண்டுவார்கள். ஞானிகள் 4 புருஷார்த்தங்களில் ஒன்றான முக்தியையாவது வேண்டுவார்களா? பாகவத 3ம் ஸ்கந்தத்தில்:

ஸாலோக்ய ஸார்ஷ்டி ஸாமீப்ய ஸாரூப்யைகத்வ மித்யுத ||
தீயமானம் ந க்ருண்ஹந்தி வினாமத்ஸேவனம் ஜனா: ||

ஸாலோக்ய = பரமாத்மனின் உலகத்தில் எங்காவது ஒரு இடத்தில் இருப்பர்
ஸார்ஷ்டி = பரமாத்மனுக்கு சமானமான செல்வத்தைப் பெறுவது
ஸாமீப்ய = பரமாத்மனின் சமீபத்தில் வசிப்பது
ஸாரூப்ய = பரமாத்மனைப் போலவே ரூபத்தைப் பெறுவது
ஏகத்வ = பரமாத்மனின் சரீரத்தில் பிரவேசம் செய்து ஏதாவது ஒரு அங்கத்தின் சுகத்தை அனுபவிப்பது

என்னும் 5 வித முக்தியைக் கூட தன் ஏகாந்த பக்தர்கள் வேண்டுவதில்லை. என் சேவையை மட்டுமே வேண்டுவர் என்று, தேவஹூதிக்கு கபில நாமக பரமாத்மன் சொல்கிறான்.

அதே அபிப்பிராயத்தையே தாசார்யர் இங்கு குறிப்பிடுகிறார். விஷய சுகமாகட்டும், புருஷார்த்தமாகட்டும் உன்னை வேண்டாதவாறு செய் என்று ஒரு வரத்தையும், உன் தோஷங்களற்ற மகிமையை கொண்டாடி வரும் பாகவதர்களின் சகவாசத்தை எப்போதும் கொடு என்று இரு வரங்களை மட்டும் கேட்கிறார். இதிலிருந்து இந்த இரு வரங்களும் அனைவரும் கேட்க வேண்டியதே என்று அறியவேண்டும்.

**சதுரவித[3] புருஷார்த்த[2]ரூபனு**
**சதுர மூர்த்யாத்மகனிரலு ம**
**த்திதர புருஷார்த்த[2]க[3]ள ப[4]யஸுவரேனு ப[3]ல்லவரு |**
**மதிவிஹீனரு அஹிகஸுக[2] ஷா**
**ஷ்வதவிதெந்த[3]ரி த[3]னுதி[3]னதி[3] க[3]ண**
**பதியெ மொத[3]லாத[3]ன்ய தே[3]வதெக[3]ளனெ ப[4]ஜிஸுவரு ||33**

சதுரவித புருஷார்த்தரூபனு = தர்ம முதலான 4 வித புருஷார்த்த ஸ்வரூபனாக,
சதுர மூர்த்யாத்மனிரலு = அனிருத்த, பிரத்யும்ன, சங்கர்ஷண, வாசுதேவ என்னும் 4 ரூபியான பரமாத்மன் இருக்கையில்
பல்லவரு = ஞானிகள்
மத்திரத புருஷார்த்தகள பயசுவரேனு = மற்ற புருஷார்த்தங்களை வேண்டுவார்களா என்ன? (இல்லை என்று அர்த்தம்)

மதிவிஹீனரு = புத்தி இல்லாதவர்கள்
அஹிகஸுக = அல்பமான, தற்காலிகமான விஷய சுகங்களையே
ஷாஷ்வதவிதெந்து = இது நிரந்தரமானது என்று
அரிது = நினைத்து
அனுதினதி = தினந்தோறும்
கணபதியெ மொதலாத = கணபதி முதலான
அன்ய தேவதெகளனெ = தாரதம்யத்தில் கீழ் இருக்கும் பிற தேவதைகளை
பஜிஸுவரு = வணங்குவார்கள்.

தர்ம, அர்த்த, காம, மோட்ச என்னும் சதுர்வித புருஷார்த்த ஸ்வரூபனான, அனிருத்த, பிரத்யும்ன, சங்கர்ஷண, வாசுதேவ என்னும் 4 ரூபாத்மகனான பரமாத்மன் இருக்கையில், ஞானிகள் இதர புருஷார்த்தங்களை வேண்டுவார்களா என்ன? புத்தி இல்லாதவர்கள், ஐஹிக சுகங்களையே நிரந்தரமானவை என்று நினைத்து, தினந்தோறும் கணபதி முதலான பிற தேவதைகளை வணங்கி, அல்பமான, தற்காலிகமான சுகத்தை வேண்டுவார்கள். ஞானிகள் என்றும் அப்படி செய்ய மாட்டார்கள் என்பது கருத்து.

**த்ருஹிண மொத$^3$லாத$^3$மர க$^3$ணஸ**
**ன்மஹித ஸர்வப்ராணிக$^3$ள ஹ்ரு**
**த்கு$^3$ஹ நிவாஸி க$^3$பீ$^4$ர ஸர்வார்த்த$^2$ ப்ரதா$^3$யகனு ।**
**அஹிக பாரத்ரத$^3$லி விஹிதா**
**விஹித கர்மக$^3$ளரிது ப$^2$ல ஸ**
**ன்னிஹிதனாகி$^3$த் தெ$^3$ல்லரிகெ$^3$ கொடு$^3$திப்ப ஸர்வக்$^3$ஞ ।।34**

த்ருஹிண மொதலாத = பிரம்மதேவரே முதலான
அமரகண = தேவதா கணங்களால்
ஸன்மஹித = பூஜிக்கப்படும்
ஸர்வபிராணிகள ஹ்ருத்குஹ நிவாஸி = அனைத்து பிராணிகளின் இதயத்தில் வசிப்பவனான
கபீர = மஹா கௌரவத்தைக் கொண்டவனான (மரியாதைக்குரியவன்)
ஸர்வார்த்த பிரதாயகனு = ஸர்வார்த்தங்களைக் கொடுக்கும் ஸ்வபாவம் உள்ள
சர்வக்ஞ = சர்வக்ஞனான
ஹரி = ஶ்ரீஹரி
ஸன்னிஹிதனாகி = அனைவரிலும் அந்தர்யாமியாக இருந்து
அஹிகபாரத்ரதலி = இஹ லோகத்திலும், பர லோகத்திலும்
விஹிதா விஹித கர்மகளரிது = புண்ய பாவ கர்மங்களை அறிந்து
எல்லரிகெ = அனைவருக்கும்
சன்னிஹிதனாகித்து = அருகில் இருந்துகொண்டு
பல = பலன்களைக் கொடுக்கிறான்.

பிரம்மாதி தேவதைகளால் வணங்கப்படுபவனான, அனைத்து பிராணிகளின் இதய கமலத்தில் இருப்பவனான, அனைவரின் அனைத்து மனோபீஷ்டங்களை

நிறைவேற்றுபவனான, சர்வக்ஞனான, ஸ்ரீஹரி, அனைத்து பிராணிகளின் புண்ய பாப கர்மங்களை அறிந்து, அவரவர்களின் தகுதிக்கேற்ப, அவரவர்களில் நிலைத்திருந்து பலன்களைக் கொடுக்கிறான்.

**ஒம்மெகா[3]தரு ஜீவரொளு வை**
**ஷம்ய த்[3]வேஷாஸுயெ இல்ல ஸு**
**த[4]ர்ம நாமக ஸந்தயிஸுவனு ஸர்வரனு நித்ய |**
**பி[3]ரம்ம கல்பாந்தத[3]லி வேதா[3]**
**க[3]ம்ய ஸ்ரீஜக[3]ன்னாத[2] விட்ட2ல**
**ஸும்மனீவனு த்ரிவித[3]ரிகெ[3] அவரவர நிஜக[3]திய ||35**

ஒம்மெகாதரு = எந்த காலத்திலாகட்டும்
வைஷம்ய த்வேஷாஸுயெ இல்ல =
வைஷம்ய = ஒருவரிடம் அன்பு; இன்னொருவரிடம் வெறுப்பு காட்டுவது
த்வேஷ = ஒருவரை எதிரியாக நினைப்பது
அஸுயெ = வயிற்றெரிச்சல்
இல்ல = ஆகியவை இல்லை
ஸுதர்ம நாமக = சுதர்ம என்னும் பெயருள்ள ஸ்ரீஹரி
சர்வரனு = அனைவரையும்
நித்ய = எப்போதும்
ஸந்தயிஸுவனு = காப்பாற்றுவான்
பிரம்மகல்பாந்ததலி = பிரம்ம கல்பத்தின் இறுதிப் பகுதியில்
வேதாகம்ய = வேதங்களாலும் முழுமையாக அறியப்பட முடியாதவன்
ஸ்ரீஜகன்னாதவிட்டல = ஜகன்னாத விட்டலன்
த்ரிவிதரிகெ = மூன்று வித ஜீவராசிகளுக்கும்
அவரவர நிஜகதிய = அவரவர்களின் தகுதிக்கேற்ப கதியை
ஸும்மனீவனு = அவரவர்களுக்கு தெரிவிக்காமல் மௌனத்துடன் கொடுக்கிறான்.

பரமாத்மனுக்கு எந்த காலத்திலும், ஜீவர்களிடம் த்வேஷமோ, அஸுயையோ, வஞ்சனையோ இல்லை. அனைவரையும் சமமாகவே அறிந்து, அவர்களைக் காக்கிறான். அப்படியெனில், தமோயோக்யர்கள், முக்தி யோக்யர்கள் இவர்களின் கதி என்ன? இவர்களில் வேறுபாடு என்ன? என்றால், தன் வஞ்சனையால் பலன்களின் வேறுபாடு செய்வதில்லை. அவரவர்கள் செய்யும் புண்ய, பாவ கர்மங்களை அனுசரித்து, முக்தி யோக்யர்களுக்கு முக்தியையும், மத்யமர்களுக்கு நித்ய சம்சாரத்தையும், தமோ யோக்யர்களுக்கு தமஸ்ஸையும், மூவரின் யோக்யதைக்கேற்ப, பிரம்ம கல்பத்தின் இறுதியில், அவரவர்களுக்குக் கொடுக்கிறான். இத்தகைய ஸ்ரீஜகன்னாத விட்டலன், வேதங்களாலும் கூட முழுமையாக அறியப்பட முடியாத மகிமைகளைக் கொண்டவன்.

பக்தாபராதசஹிஷ்ணு சந்தி என்னும் 22ம் சந்தியின் தாத்பர்யம் இத்துடன் முடிவுற்றது.
ஸ்ரீகிருஷ்ணார்ப்பணமஸ்து.

***

## பாவபிரகாசிகை : சந்தி 23 : கல்ப சாதன சந்தி

### / அபரோக்ஷ தாரதம்ய சந்தி

**ஹரிகதா$^{2}$ம்ருதசார கு$^{3}$ருக$^{3}$ள**
**கருணதிந்தா$^{3}$பநிது பே$^{1}$ளுவே**
**பரம ப$^{4}$கவத்$^{3}$ப$^{4}$க்தரித$^{3}$னாத$^{3}$ரதி கேளுவுது$^{3}$**

இந்த சந்தியில் பிரம்ம தேவரே முதலான அனைத்து தேவதைகளின் கல்ப சாதனையை, எந்த தேவதைக்கு எவ்வளவு கல்ப சாதனைக்குப் பிறகு, அபரோக்ஷம் ஆகிறது என்பதையும், அந்த காலமானத்தையும் இங்கு விளக்குகிறார்.

**ஏகவிம்ஷதி மதப்ரவர்த்தக கா**
**குமாய்க$^{3}$ள குஹகயுக்தி நி**
**ராகரிஸி ஸர்வோத்தமனு ஹரியெந்து$^{3}$ ஸ்தா$^{2}$பிஸித$^{3}$ ।**
**ஶ்ரீகளத்ரனஸத$^{3}$ன த்$^{3}$விஜப பி**
**நாகிஸன்னுத மஹிம பரம க்ரு**
**பாகடாக்ஷதி$^{3}$ நோடு$^{3}$ மத்$^{4}$வாசார்ய கு$^{3}$ருவர்ய ।।1**

ஏகவிம்ஷதி மதப்ரவர்த்தக = 21 மதங்களை உலகத்தில் படைத்து புகழ் பெறச்செய்த
காகு மாய்கள = மாயாவாதிகளின்
குஹகயுக்தி = கபட யுக்திகளை
நிராகரிஸி = கண்டனம் செய்து
சர்வோத்தமனு ஹரியெந்து ஸ்தாபிஸித = ஶ்ரீமன் நாராயணனே சர்வோத்தமன் என்று நிறுவிய
ஶ்ரீகளத்ரன = லட்சுமிதேவியை பத்னியாகக் கொண்டிருக்கும் ஶ்ரீபரமாத்மனின்
ஸதன = வசிக்கும் இடமான சேஷதேவர்
த்விஜப = பறவையில் சிறந்தவரான கருடதேவர்
பினாகி = ருத்ரதேவர் இவர்களால்
ஸன்னுத = வணங்கப்படுபவனான
மஹிம = மகிமைகளைக் கொண்ட
மத்வாசார்ய = ஶ்ரீமன் மத்வாசார்யர் என்னும்
குருவர்ய = ஹே குரு ஸ்ரேஷ்டனே.
பரமக்ருபா கடாக்ஷதி = என்னை உன் பரம கருணைப் பார்வையால்
நோடு = பார்; அதாவது, இப்போது தொடங்கியுள்ள சந்தி எவ்வித தடங்கல்களும் இன்றி முடியவேண்டும். அதுமட்டுமல்லாமல், இந்த சந்தியில் சொல்லும் வாக்கியங்கள், நீங்கள் சொன்ன வாக்கியத்திற்கு அனுகுணமாக, அனைத்து

மக்களுக்கும் சம்மதமாக இருக்குமாறும் செய்யுங்கள் என்று வேண்டிக் கொள்கிறார் என்பது கருத்து.

ஸௌர, சாக்த, காணபத்ய முதலான 21 மதங்களின் தவறான வாதங்களை நிராகரித்து ‘ஏகவிம்ஷதி குபாஷ்ய தூஷகம்’ என்னும் மத்வ விஜயத்தின் வாக்கியத்தைப் போல, பிரம்ம சூத்திரத்திற்கு 22ம் பாஷ்யத்தை இயற்றி, ஹரி சர்வோத்தமன் என்று நிர்ணயம் செய்த, கருட, சேஷ ருத்ராதிகளால் வணங்கப்படும் மகிமை உள்ள, குரு ஸ்ரேஷ்டரான ஹே மத்வாசார்யரே! உங்கள் கருணைப் பார்வையால், என்னைப் பாருங்கள். இந்த சந்தியில் நான் சொல்வது அனைத்தும், உங்களின் வாக்கியங்களுக்கு சரியாகப் பொருந்தி, அனைத்து மக்களுக்கும் சம்மதம் ஆகுமாறு செய்யுங்கள்.

**வேத$^{3}$மொத$^{3}$லாகி$^{2}$ப்பமல மோ**
**க்ஷாதி$^{3}$காரிக$^{3}$ளாத$^{3}$ ஜீவர**
**ஸாத$^{4}$னக$^{3}$ள பரோக்ஷனந்தர லிங்க$^{3}$ப$^{4}$ங்க$^{3}$வனு |**
**ஸாது$^{4}$க$^{3}$ளு சித்தைபுதெ$^{3}$ன்னப**
**ராத$^{4}$க$^{3}$ள நோட$^{3}$த$^{3}$லெ சக்ர க**
**தா$^{4}$த$^{3}$ரனு பேளிஸித$^{3}$ தெரத$^{3}$ந்த$^{3}$த$^{3}$லி பேளுவேனு ||2**

வேதமொதலாகிப்ப = பிரம்மதேவரில் துவங்கி
அமல= தோஷங்கள் அற்ற
மோக்ஷாதிகாரிகளாத ஜீவர சாதனகள = மோட்சத்திற்கு தகுதியான ஜீவர்களின் சாதனைகளை
அபரோக்ஷனந்தர = அபரோக்ஷம் ஆனபிறகு
லிங்கபங்கவனு = லிங்க சரீரம் பங்கம் ஆகும் காலத்தை
சக்ர கதாதரனு பேளிஸித தெரதந்ததலி = ஸ்ரீஹரி என்னில் இருந்து சொன்னதைப் போல
பேளுவேனு = சொல்கிறேன்
ஸாதுகளு = அறிஞர்கள்
என்னபராதகள = என் தவறுகளை
நோடதலெ = பார்க்காமல் (கவனிக்காமல்)
சித்தைபுது = அதனை ஏற்றுக் கொள்ள வேண்டும்.

பிரம்மதேவரில் துவங்கி, மோட்சத்திற்குத் தகுதியான அனைத்து ஜீவர்களும், எவ்வளவு கல்பங்கள் சாதனைக்குப் பிறகு, அபரோட்சத்தை அடைகிறார்கள்; மற்றும், அதன் பிறகு முக்திக்கு எவ்வளவு கல்ப சாதனை தேவைப்படுகிறது என்பதை, ஸ்ரீஹரி எனக்குள் இருந்து சொல்லுமாறு சொன்னதை, நான் சொல்கிறேன். இதில் என் தவறுகள் ஏதேனும் இருந்தால், மன்னித்து, அறிஞர்கள் இதனை ஏற்றுக் கொள்ளவேண்டும் என்று கேட்டுக் கொள்கிறேன். இதிலிருந்து, தமது ஸ்வாதந்த்ர்ய கர்த்ருத்வத்தை, தாசார்யர் பரிகரித்துக் கொள்கிறார் என்பது கருத்து.

**த்ருண க்ருமி த்[3]விஜ பஷு நரோத்தம**
**ஜனப நரக[3]ந்த[4]ர்வக[3]ணரிவ**
**ரெனிபரம்ஷவிஹீன கர்மஸுயோகி[3]க[3]ளு எந்து[3] |**
**தனுப்ரதீகதி[3] பி[3]ம்ப[3]ன உபா**
**ஸனவகெ[3]ய்யுத இந்தி[3]ரியஜ க**
**ர்மனவரத ஹரிக[3]ர்ப்பிஸுத நிர்மமரு எனிஸுவரு ||3**

த்ருண = த்ருண ஜீவர்கள்
க்ருமி = கிருமி (பூச்சிகள்)
த்விஜ = பறவைகள்
பஷு = பசு, நாய் முதலான விலங்குகள்
நரோத்தம = மனுஷ்யோத்தமர்கள்
ஜனப = சக்ரவர்த்திகள்
நரகந்தர்வகண = மனுஷ்ய கந்தர்வ கண
இவர்கள் ஏழு கணங்களும்
அம்ஷவிஹீனரு = இவர்கள் நிரம்ஷ ஜீவர்கள்
கர்மசுயோகிகளு = கர்ம யோகிகள். அதாவது, கர்மத்தினால் சாதனைகள் செய்பவர்கள்
எந்து = எனப்படுகிறார்கள்
தனுப்ரதீகதி = தன் சரீரம் என்னும் ப்ரதிமைகளில்
பிம்பன = பிம்ப மூர்த்தியான ஸ்ரீஹரியின்
உபாஸனகெய்யுத = உபாசனையை செய்தவாறு
இந்திரியஜ கர்ம = ஞானேந்திரிய, கர்மேந்திரிய மற்றும் மனஸ் இவற்றின் சம்பந்தத்தினால் செய்யும் அனைத்து கர்மங்களையும்
அனவரத = எப்போதும், எல்லா காலங்களிலும்
ஹரிகெ = ஸ்ரீபரமாத்மனுக்கு
அர்ப்பிஸுத = சமர்ப்பணம் செய்தவாறு
நிர்மமரு = நான், எனது என்னும் அபிமானத்தை விட்டவர்கள்
எனிஸுவரு = எனப்படுகிறார்கள்

த்ருண, கிருமி, பறவை, பசு, மனுஷ்யோத்தமர்கள், சக்ரவர்த்திகள், மனுஷ்ய கந்தர்வர்கள் என்னும் இந்த 7 வித ஜீவர்களும் நிரம்ஷர் எனப்படுகின்றனர். சாம்ஷர்கள் என்றால், தத்வாபிமானி தேவதைகளான சூர்யாதிகள் என்று அறியவேண்டும். சூர்ய மண்டலத்திலும், அனைவரின் கண்களிலும் இருப்பவன் ஒருவனே ஆனாலும், சூரியன், அம்சத்தினால் பல ரூபங்களைக் கொண்டிருக்கிறான். இப்படியே அனைத்து தத்வாபிமானி தேவதைகளும் இருக்கின்றனர்.

இப்படி இல்லாதவர்கள் நிரம்ஷர்கள். இவர்கள் ஒரு இடத்தில் இருந்தால், தமது ரூபாந்தரங்களால் இன்னொரு இடத்தில் இருக்காதவர்கள். இவர்கள் கார்ய யோகிகள் எனப்படுகின்றனர். இவர்களுக்கு பிரதீகாலம்பனர் என்றும் இன்னொரு பெயர் உண்டு. ப்ரதீக என்றால் அவர்களின் சரீரம். அந்த சரீரத்திலேயே,

ஸ்ரீஹரியை அபரோக்ஷத்தில் காண்கின்றனர் ஆகையால், ப்ரதீகாலம்பனர் எனப்படுகின்றனர்.

த்ருணாதிமர்த்ய கந்தர்வ பர்யந்தாஸ் தேஹ்யனம்ஷத: ||
நிரம்ஷாஸ்தே ப்ரதீகாக்யாலம்பாஸ்தே கர்மயோகின: ||
ப்ரதீகாக்ய ஷரீரஸ்தம் பஷ்யந்தீதி ததாஹ்வயா: ||

என்னும் பிரகாச சம்ஹிதையின் வாக்கியத்திற்கேற்ப இந்த அர்த்தம் தெரிய வருகிறது. இந்த த்ருண முதல் மனுஷ்ய கந்தர்வர்கள் வரைக்குமான 7 கணங்கள், தம் தேகத்தில் பிம்ப ரூபியான ஸ்ரீஹரியின் உபாசனை செய்தவாறு, தம் இந்திரியங்களால் செய்யும் அனைத்து கர்மங்களையும், தங்களின் கர்வத்தையும் விட்டு, அவற்றை ஸ்ரீஹரிக்கு அர்ப்பித்தவாறு, தாம் நிர்லிப்தனாக இருக்கின்றனர்.

**ஏளு வித3 ஜீவக3ண ப3ஹள ஸு**
**ராளி ஸங்க்2யானேம வுள்ளுது3**
**தாளி நரதே3ஹவனு பி3ராம்மண குலதொ3ளுத்3ப4விஸி |**
**ஸ்தூ2லகர்மவ தொரெது3 கு3ருக3ளு**
**பேளித3ர்த்த2வ திளிது3 தத்த**
**த்கால த4ர்ம ஸமர்ப்பிஸுவவரு கர்மயோகி3க3ளு ||4**

ஏளு வித ஜீவகண = முந்தைய பத்யத்தில் கூறிய த்ருண மொதலு மனுஷ்ய கந்தர்வர்கள் வரைக்குமான 7 ஜீவ கணங்கள்
பஹள = எண்ண முடியாதவர்களாக (அதிகமாக) இருக்கிறார்கள்
சுராளி சங்க்யா = தேவதைகளின் சமூகத்தின் எண்ணிக்கை
நேம உள்ளத்து = இவ்வளவு என்று எண்ணிக்கை கொண்டது
கர்மயோகிகள் = மேற்கூறிய 7 வித கர்ம யோகிகளான ஜீவகணர்கள்
நரதேஹவனு தாளி = மனுஷ்ய தேகத்தை அடைந்து
பிராம்மண குலதொளுத்பவிஸி = பிராமண குலத்தில் பிறந்து
ஸ்தூல கர்மவ தொரெது = விஷய சுக ஆசையினாலும், ஸ்வர்க்கத்தின் ஆசையினாலும் செய்யும் காம்ய கர்மங்களை விட்டு
குருகளு பேளிதர்த்தவ = குருகள் சொன்ன உபதேசத்தை அறிந்து
தத்தத்கால தர்ம = அந்தந்த காலங்களில் செய்யும் புண்ய பல ரூபமான கர்மங்களை
ஸமர்ப்பிஸுவரு = ஸ்ரீஹரிக்கு சமர்ப்பிப்பார்கள்.

த்ருண முதலான 7 வித ஜீவர்கள், எண்ணவே முடியாத அளவிற்கு இருக்கிறார்கள். தேவதா கணங்கள் மட்டும் 'ஷதகோட்யோஹி தேவானாம்' தேவதைகள் 100 கோடிகள் என்னும் வாக்கியத்தினால் எண்ண முடியுமாறு இருப்பவர்கள். த்ருணவில் தொடங்கி, மனுஷ்ய கந்தர்வர்கள் வரைக்கும் இருக்கும் 7 வித ஜீவர்கள், கர்மயோகிகள் எனப்படுகிறார்கள். இவர்கள், மனிதர்களாக, பிராமண குலத்தில் பிறந்து, காம்ய கர்மங்களை விட்டு, குரு முகத்தினால் பகவன் மஹாத்ம்யத்தைக் கேட்பது, ஆகியவற்றை செய்து, அவற்றை மனப்பாடம் செய்து,

செய்த கர்மங்கள் அனைத்தையும் ஹரிக்கு அர்ப்பித்தவாறு, காலத்தை கழிப்பார்கள்.

**ஹீனகர்மக$^3$ளிந்த$^3$ ப$^3$ஹுவித$^3$**
**யோனியலி ஸஞ்சரிஸி ப்ராந்தகெ**
**மானுஷத்$^3$வவனைதி$^3$ ஸர்வோத்தமனு ஹரி எம்ப$^3$ |**
**ஞான ப$^4$க்திக$^3$ளிந்த$^3$ வேதோ$^3$**
**க்தானுஸார ஸஹஸ்ர ஜனுமதி$^3$**
**ந்யூனகர்மவ மாடி$^3$ ஹரிக$^3$ர்ப்பிஸித நந்தரதி$^3$ ||5**

ஹீனகர்மகளிந்த = (மேற்கூறிய கர்மயோகிகள், பிராமண பிறவியில் பிறப்பதற்கு முன்னர்), அனேக வித நீச கர்மங்களை செய்து
பஹுவித யோனியலி சஞ்சரிஸி = நானா விதமான பிறவிகளை எடுத்து
ப்ராந்தகெ = இறுதியில்
மானுஷத்வவனைதி = மனிதப் பிறவியில் பிறந்து
சர்வோத்தமனு ஹரி எம்ப = ஸ்ரீஹரியே சர்வோத்தமன் என்னும் ஞான பக்திகளால்
வேதோக்தானுசார = வேதங்களில் சொல்லப்பட்டிருப்பதைப் போல, விதிகளை செய்து, விதிவிலக்குகளை விட்டு
ஹீகெ சஹஸ்ரஜன்மான்யூன = ஆயிரம் பிறவிகளுக்கு குறைவு இல்லாமல்
கர்மவமாடி = செய்ய வேண்டிய கர்மங்களை செய்து, ஸ்ரீஹரிக்கு அர்ப்பித்த
அனந்தரதி = பிறகு

த்ருணவில் துவங்கி, மனுஷ்ய கந்தர்வர்கள் வரைக்கும் மேற்கூறிய 7 வித கர்ம யோகிகள், மனிதர்களாக பிறப்பதற்கு முன்னர், அனேக விதமான நீச கர்மங்களை செய்து, அனேக வித பிறவிகளில் பிறந்து இறந்து, இறுதியில் மனுஷ்ய பிறவியில் பிறந்து, பரமாத்மனிடம் பக்தியுடன் ஹரி சர்வோத்தமன் என்று அறிந்து ஞான பூர்வகமாக, வேதோக்த கர்மங்களை, ஆயிரம் பிறவிகளுக்கு குறைவு இல்லாமல் செய்து, அவற்றை ஸ்ரீஹரிக்கு அர்ப்பித்த பிறகு.

**ஹத்துஜனுமக$^3$ளல்லி ஹரிஸ**
**ர்வோத்தம ஸுராஸுரக$^3$ணார்ச்சித**
**சித்ரகர்ம விஷோக$^4$னந்தானந்த ரூபாத்ம |**
**ஸத்ய ஸத்ஸங்கல்ப ஜக$^3$து$^3$**
**த்பத்தி ஸ்தி$^2$தி லய காரண ஜரா**
**ம்ருத்யு வர்ஜிதனெந்து$^3$பாஸனெகெ$^3$ய்த$^3$ தருவாய ||6**

ஹத்து ஜனுமகளல்லி = 10 பிறவிகளில்
ஹரி சர்வோத்தம,
சுராசுரகணார்ச்சித =
சுர = அமுக்தர்களான தேவதா கணத்தினாலும்
அசுர = முக்தர்களான தேவதா கணத்தினாலும்

அஸூபி: ஸ்வரூபேந்த்ரியை: சின்மாத்ரை:
ரமந்தே ஸ்வரூபானந்த மனுபவந்தித்யஸூரா: --
என்னும் நிர்ணயத்தின், வரதராஜீய வியாக்யான வாக்கியம் இருக்கிறது. மகாபாரத தாத்பர்ய நிர்ணய 2ம் அத்தியாயத்தில், 48 ஸ்லோகம்:

வந்தேபவக்ன மமராஸூர ஸித்தவந்த்யம் -- இதில் அமரர் என்றால் தேவதைகள் இவர்களாலும், அசுரர் என்றால் தைத்யர் இவர்களாலும், வணங்கப்படுபவர் என்று அர்த்தம் ஆகிறது. பரமாத்மனுக்கு தைத்ய-வந்த்யத்வம் இல்லை என்னும் சந்தேகத்தை பரிகரிப்பதற்காக, ஸ்வயம் ஸ்ரீமதாசார்யரே 60ம் ஸ்லோகத்திலிருந்து வியாக்யானம் செய்திருக்கிறார். அது என்னவெனில்: மோக்ஷைக ஹேதுரசுரூப சுரைஸ்சமுக்த்யைர் வந்த்ய: என்கிறார்.

இதற்கு வரதராஜீய வியாக்யானத்தில், மேலே கூறியதைப் போலவே இருக்கிறது. அதாவது, அசுர = அசு என்றால், சித் ஸ்வரூபமான ஸ்வரூபேந்திரியங்கள். ஸ்வரூபானந்தத்தை அனுபவிக்கும் முக்தர்கள் என்று அர்த்தம். இப்படியாக, அசுர வந்த்ய என்றால் நிர்ணயத்தில் அர்த்தம் சொல்லியிருப்பதால், இங்கும், சுராசுர கணார்ச்சித என்பதில் அசுர என்றால், முக்தர்களான தேவதா கணம் என்று அர்த்தம் சொல்ல வேண்டும். ஆக,

சுராசுர கணார்ச்சித = முக்தாமுக்த தேவதா கணத்தினால் வணங்கப்படுபவன் என்று அர்த்தம்.
சித்ரகர்ம = விசித்திரமான வியாபாரங்களைக் கொண்ட
விஷோக = சோகங்கள் அற்றவனான
அனந்தானந்த ரூபாத்ம,
ஸத்யசங்கல்ப = சொன்னதை / தன் இஷ்டப்படியே செய்து முடிப்பவன்
ஜகத் = உலகிற்கு
உத்பத்தி = ஸ்ருஷ்டி, ஸ்திதி, லய, காத்தல், அழித்தல் இவற்றிற்கு காரணன்
ஜராம்ருத்யுவர்ஜித = பிறப்பு இறப்பு ஆகியவை இல்லாதவன்
எந்து உபாசனெகெய்த = உபாசித்த
தருவாய = பிறகு

மனுஷ்ய பிறவிகளில் 1000 பிறவிகளின் சாதனை செய்த பிறகு, மற்றும் பத்து பிறவிகளில், ஹரி சர்வோத்தம, முக்தாமுக்தர்களால் வணங்கப்படுபவன், விசித்ர கர்மங்களைக் கொண்டவன், சோகங்கள் அற்றவன், அனந்தானந்த ரூபங்களைக் கொண்டவன், சத்யசங்கல்பன், உலகத்தின் ஸ்ருஷ்டி, ஸ்திதி, லயத்திற்கு காரணன், பிறப்பு இறப்பு இல்லாதவன் என்று உபாசனைகளை செய்தபிறகு.

**மூரு ஜனுமக3ளல்லி தே3ஹா**
**கா3ர பஷுத4ன பத்னிமித்ர கு**
**மார மாதாபித்ருக3ளல்லிஹ ஸ்னேஹகிந்ததி4க ।**
**மாரமணனலி பி3ட3தெ3 மாடு3வ**
**ஸூரிக3ளு ஈ உக்த ஜனுமவ**

**மீரி பரமாத்மன ஸ்வதே3ஹதி3 நோடி3 ஸுகி2ஸுவரு ||7**

மூரு ஜனுமகளல்லி = மூன்று பிறவிகளில்
தேஹாகார பஷுதன = பஞ்சபௌதிக சரீரம், வீடு, பசு, செல்வம்
பத்னிமித்ர குமார = மனைவி, நண்பர்கள், மக்கள்
மாதாபித்ருகளல்லிஹ = தாய் தந்தையர் இவர்களிடம்
ஸ்னேஹகிந்ததிக = இவர்களிடம் இருக்கும் நட்பினை (அன்பினை) விட அதிகமான நட்பினை
மாரமணனலி = லட்சுமிபதியான ஸ்ரீஹரியில்
பிடதெ மாடுவ சூரிகளு = விடாமல் செய்யும் ஞானிகள்
ஈ உக்த ஜனுமவ = மேற்கூறிய பிறவிகள் முடிந்த பிறகு
ஸ்வதேஹதி = தம் தேகத்தில்
பரமாத்மன = பரமாத்மனைக் கண்டு
சுகிசுவரு = மகிழ்ந்திருப்பர்.

முந்தைய பத்யத்தில் கூறப்பட்டுள்ள 10 பிறவிகள் ஆனபிறகு, மூன்று பிறவிகளில், மனைவி, மக்கள் ஆகியவர்களில் செய்யும் அன்பைவிட அதிகமான அன்பினை பரமாத்மனிடம் செய்தபிறகு அபரோக்ஷம் ஆகிறது. அதாவது, தம் தேகத்திலேயே பரமாத்மனை காண்பர்.

இப்படியாக, 3ம் பத்யம் முதல் 7ம் பத்யத்தின் வரை, த்ருணவில் தொடங்கி 7 வித ஜீவர்கள் வரையிலான கர்மயோகி ஜீவர்களின் சாதனையை சொல்கிறார். மொத்தம் இந்த 5 பத்யங்களில் சாராம்சம் என்னவென்றால்:

நிரம்ஷா: ஸத்ஸாதனாயோசித ஜன்மஸஹஸ்ரத: ||
ஞானந்துதஷபி: ப்ராப்ய ஸத்பக்திம் த்ரிபிராப்ய ச ||
த்ருஷ்ட்வா ஹ்ருதிஸ்தம்யுச்யந்தே ஹ்யதஸ்தே கர்மயோகின: ||

நிரம்ஷரான ஜீவர்கள், 1000 பிறவிகளில் சத்சாதனைகளை செய்து, அதன் பின் 10 பிறவிகளில் ஞானத்தை சம்பாதித்து, அதன் பின், 3 பிறவிகளில் பகவந்தனிடம் த்ருட ஸ்னேகத்தை செய்து, அபரோக்ஷத்தில் பரமாத்மனைக் கண்டு முக்தர் ஆகுவர் என்று ப்ரகாஷ சம்ஹிதையில் சொல்லியிருப்பதையே தாசார்யர் இங்கு சொல்லியிருக்கிறார்.

**தே3வகா3யகஜான சிரபித்ரு**
**தே3வரெல்லரு ஞானயோகி3க3**
**ளாவகாலகு புஷ்கர ஷனைஸ்சர உஷா ஸ்வாஹ**
**தே3வி பு3த4 ஸனகாதி3க3ளு மே**
**கா4வளிப பர்ஜன்ய ஸாம்ஷரு**
**ஈ உப4ய க3ணதொ3ளகி3வரு விக்3ஞானயோகி3க3ளு ||8**

தேவகாயக = தேவ பாடகர்கள்
அஜான = அஜானஜ தேவர்கள்

சிரபித்ரு = சிரபித்ரு கணங்கள்
தேவரெல்லரு = இந்த தேவதைகள் அனைவரும்
ஆவகாலகு = அனாதி காலத்திலும்
ஞானயோகிகளு = ஞான யோகிகள் எனப்படுகின்றனர்.
புஷ்கர, ஷனைஸ்சர, உஷா, ஸ்வாஹாதேவி, புத, சனகாதிகள், ஆகியோர்
மேகாவளிப = மேகங்களுக்கு அதிபதியான
பர்ஜன்ய,
சாம்ஷரு = இவர்கள் அனைவரும் சாம்ஷர்கள்
ஈ உபய கணதொளகெ = மேற்கூறிய சாம்ஷர் என்னும் இரு குணங்களில்
இவரு = இவர்கள்
விக்ஞானயோகிகள் = விக்ஞான யோகிகள் எனப்படுகின்றனர்.

தேவ கந்தர்வர்கள், அஜானஜர்கள், சிரபித்ருகள், இவர்கள் சாம்ஷர்கள். பிரதிகூலம்பனர் எனப்படுகிறார்கள். இவர்கள் ஞானயோனிகள்.

தேவகந்தர்வ பூர்வாத் வஷாஸ்சசானஜாம்ஷா: ஸமஸ்தஷ: ||
ப்ரதீகாலம்பனா: ஸாம்ஷா: க்ரமாஸ்ச ஞானயோகின: ||

என்னும் பிரகாச சம்ஹிதா வாக்கியத்திலிருந்து, இந்த அர்த்தம் கிடைக்கிறது.

புஷ்கர, ஷனைஸ்சர, உஷா, ஸ்வாஹா, புத, சனகாதிகள், பர்ஜன்ய இவர்கள், சாம்ஷரில் அப்ரதீகாலம்பனர்கள் மற்றும் விக்ஞான யோகிகள் எனப்படுகின்றனர்.

அப்ரதீகாலம்பனாஸ்ச ப்ராயோ விக்ஞானயோகின: ||

அப்ரதீகாலம்பனர்கள் அனைவரும் விக்ஞான யோகிகள் என்னும் பிரகாச சம்ஹிதையின் வாக்கியமே இதற்கு ஆதாரமாக இருக்கின்றது.

**ப$^4$ரதக$^2$ண்ட$^3$தி$^3$ நூரு ஜனுமவ**
**த$^4$ரிஸி நிஷ்காமக ஸுகர்மா**
**சரிஸிதா$^3$னந்த$^3$ரதி$^3$ தஷஸாஹஸ்ர ஜனுமத$^3$லி |**
**உருதர ஞானவனு படெ$^3$தொ$^3$**
**ந்தெ$^3$ரடு ஷத தே$^3$ஹத$^3$லி ப$^4$கு$^3$தி$^1$ய**
**நிரவதி$^4$கனலி மாடி$^3$ காம்ப$^3$ரு பி$^3$ம்ப$^3$ரூபவனு ||9**

பரதகண்டதி = பரத கண்டத்தில்
நூரு ஜனுமவ தரிஸி = நூறு பிறவிகளை எடுத்து
நிஷ்காமக = பலன்களில் இருக்கும் விருப்பங்களை விட்டு
சுகர்மாசரிஸி = சத்கர்ம அனுஷ்டானங்களை பின்பற்றிய பிறகு
தஷ சாஹஸ்ர ஜன்மதலி = 10,000 பிறவிகளில்
உருதர ஞானவனு படெது = சுக்ஞானத்தைப் பெற்று
ஒந்தெரடு ஷத தேஹதலி = (2+1)*100 = 300 பிறவிகளில்
நிரவதிகனலி = ஒப்புமை இல்லாத ஸ்ரீஹரியிடம்

பகுதிய மாடி நிரவதிகதலி -- என்று ஒரு பாடம் இருக்கிறது. இந்த பாடத்தின்படி, ஒப்புமை இல்லாத பக்தியை செய்து, என்று அர்த்தம் வருகிறது.
காம்பரு பிம்பரூபவனு = பிம்பரூபத்தைக் காண்பார்கள்.

ஸத்கர்மக்ருத்வா நிஷ்காமம் லபந்தே குருஸந்ததம் |
அகாத்விகா தேவதாஸா: ஸத்கர்ம ஷதஜன்மபி: ||
க்ருத்வாதஷ ஸஹஸ்ரோரு ஜன்மாபிர் ஞானமாப்ய ச|
பக்திம் த்ரிஷத கைராப்ய முச்யந்தே ஞானயோகின: ||

என்னும் பிரகாச சம்ஹிதையின் வாக்கியத்திற்கேற்ப, இந்த பத்ய அர்த்தம் சொல்லப்பட்டிருக்கிறது. இதன் சாதனை கிரமம் என்னவெனில்: பரத கண்டத்தில் 100 பிறவிகளில் நிஷ்காம்ய கர்மங்களை செய்து, பிறகு 10,000 பிறவிகளில் சிறந்த ஞானத்தைப் பெற்று, பின் 300 பிறவிகளில் உத்தமமான பக்தியை செய்து, அபரோக்ஷத்தில் பரமாத்மனை காண்பார்கள்.

**ஸாத$^{4}$னாத் பூர்வத$^{3}$லி இவரிக$^{3}$**
**நாதி$^{3}$கால பரோக்ஷவில்ல நி**
**ஷேத$^{4}$கர்மக$^{3}$ளில்ல நரகப்ராப்தி மொத$^{3}$லில்ல |**
**வேத$^{3}$சாஸ்திரக$^{3}$ளல்லி இப்ப வி**
**ரோத$^{4}$வாக்$^{3}$யவ பரிஹரிஸி மது$^{3}$**
**ஸூத$^{3}$னனெ ஸர்வோத்தமோத்தமனெந்து$^{3}$ துதிஸுவரு ||10**

இவரிகெ = மேற்கூறிய ஞான விக்ஞான யோகிகளுக்கு
ஸாதனாத் பூர்வதலி = சாதனை ஆகுவதற்கு முன்னர்
அனாதிகால = அனாதி காலத்திலிருந்து
அபரோக்ஷவில்ல = அபரோக்ஷம் இல்லை
நிஷேத கர்மகளில்ல = இவர்களுக்கென்று விதிக்கப்பட்ட கர்மங்கள் இல்லை
நரகப்ராப்தி மொதலில்ல = நரகத்தில் துன்பப்படுவது என்பது இல்லை
வேத சாஸ்திரகளல்லி = வேத சாஸ்திரங்க்ளில்
இப்ப = இருக்கும்
விரோதவாக்யவ பரிஹரிஸி = வேறுபாடுள்ள வாக்கியங்களை பரிகரித்து
மதுசூதனனெ சர்வோத்தமோத்தமனெந்து = ஸ்ரீஹரியே சர்வோத்தமன் என்று
துதிசுவரு = வணங்குவார்கள்.

தேவ கந்தர்வர்களில் தொடங்கி, பர்ஜன்ய வரைக்கும் கூறிய சாம்ஷர்களான, ஞான விக்ஞான யோகிகளுக்கு, முந்தைய பத்யத்தில் கூறிய சாதனையை செய்வதற்கு முன்னர், அனாதி காலத்தில் அபரோக்ஷம் இல்லை. விசேஷ கர்மாசரணைகள் இல்லை. நரக பிராப்தியும் இல்லை. வேத சாஸ்திரங்களில் பரஸ்பரம் வரும் விரோத வாக்கியங்களை பரிகரித்து, சந்தேகமற்ற ஞானத்தினால், ஸ்ரீஹரியே சர்வோத்தமன் என்று அறிந்து, மகிழ்ச்சியடைவார்கள்.

**ஸத்யலோகாதி$^{3}$பன பிடி$^{3}$து$^{3}$ ஷ**
**தஸ்த$^{2}$ தே$^{3}$வக$^{3}$ணாந்தரெல்லரு**

**ப$^4$க்தியோகி$^3$க$^3$ளெந்து$^3$ கரெஸுவராவ காலத$^3$லி |**
**ப$^4$க்தியோக்$^3$யர மத்$^3$யத$^3$லி ஸ**
**த்ப$^4$க்தி விக்ஞானாதி$^3$ கு$^3$ணதி$^3$**
**ந்து$^3$த்தமோத்தம பி$^3$ரம்ம வாயு வாணி வாக்தே$^3$வி ||11**

சத்யலோகாதிபன பிடிது = சத்யலோகாதிபதியான பிரம்மதேவரிலிருந்து துவங்கி
ஷதஸ்த தேவகணாந்தரெல்லரு = சேஷ ஷதஸ்த தேவதைகளின் வரைக்கும் இருக்கும் அனைவரும்
அவகாலதலி = அனாதி காலத்திலும்
பக்தியொகிகளெந்து கரெசுவரு = பக்தி யோகிகள் என்று அழைக்கப்படுகின்றனர்
பக்தியோக்யர மத்யதலி = இத்தகைய பக்தி யோகிகளில்
சத்பக்தி விக்ஞானாதி குணதிந்த = பக்தி, விக்ஞான, குணங்களில்
பிரம்ம வாயு வாணி வாக்தேவி = பிரம்ம வாயு சரஸ்வதி பாரதி ஆகியோர்
உத்தமமோத்தம = உத்தமர்கள்.

பிரம்மதேவரில் தொடங்கி, ப்ருஹத் தாரதம்யத்தில் சொல்லிய 49 மருத்கணர்கள், 12 ஆதித்யர்கள் முதலான தேவதைகளில், மேற்சொன்ன கக்ஷையைச் சேர்ந்த தேவதைகளை விட்டு, மற்றவர்கள், சேஷ ஷதர்கள் என்று 100 தேவதைகளின் வரைக்கும், இருக்கும் அனைத்து தேவதைகளும் பக்தி யோகிகள் எனப்படுகிறார்கள். அந்த பக்தி யோகிகளின் நடுவில் பிரம்மதேவர், வாயுதேவர், சரஸ்வதி தேவி, பாரதி தேவி ஆகியோர், சத்பக்தி, ஞானாதிகளால் உத்தமோத்தமர் எனப்படுகிறார்கள்.

**ருஜுக$^3$ணகெ ப$^4$க்த்யாதி$^3$ கு$^3$ண ஸா**
**ஹஜவெனிஸுவுது$^3$ க்ரமதி$^3$ வ்ருத்$^3$தி$^4$ அ**
**ப்$^3$ஜஜபத$^3$வி பரியந்த பி$^3$ம்போ$^3$பாஸனவு அதி$^4$க |**
**வ்ருஜின வர்ஜிதரிவரொளகெ$^3$ த்ரிகு$^3$**
**ணஜ விகாரக$^3$ளில்லவெந்தி$^3$கு$^3$**
**த்$^4$விஜ ப$^2$ணிப ம்ருட$^3$ ஷக்ரமொத$^3$லா த$^3$வரொளிருதிஹுது$^3$ ||12**

ருஜுகணகெ = பிரம்ம பட்டத்திற்கு யோக்யரான ருஜு கணத்தவர்க்கு
பக்த்யாதி கண சஹஜவெனிஸுவது = பக்த்யாதி குணங்கள், அனாதி காலத்திலிருந்தும் இருந்தே இருக்கிறது
க்ரமதி = கல்ப சாதனை முடிய முடிய
வ்ருத்தி = வளர்ந்தவாறு
அப்ஜஜ பதவி பர்யந்த = 100 கல்ப சாதன ரூபமான பிரம்ம பதவி வரும் வரைக்கும்
பிம்போபாசனவு = பிம்ப உபாசனையானது
அதிக = கல்ப கல்பத்திற்கும் அதிகமாகிக் கொண்டே வருகிறது
வ்ருஜின வர்ஜிதரு = இவர்களுக்கு பாவங்களும் சேர்வதில்லை
இவரொளகெ = இந்த ருஜுகணத்தவர்களில்

த்ரிகுண விகாரகளு = ஸத்வ ரஜஸ் தமோ குணங்களின் சம்பந்தமான குறைபாடுகள் என்றும் இல்லை
த்விஜ = கருட
பணிப = சேஷ
ம்ருட = ருத்ர
ஷக்ர = இந்திர
மொதலாதவரொளு = ஆகியோரில்
இருதிஹுது = த்ரிகுண சம்பந்தமான குறைபாடுகள் இருக்கின்றன.

100 கல்ப சாதனையால் பிரம்ம பதவியை அடையும் தகுதி உள்ளவர்கள் ருஜுகணஸ்தர்கள். இவர்களுக்கு பக்த்யாதி குணங்களும், அபரோக்ஷமும், அனாதி காலத்திலிருந்து இருக்கிறது. படிப்படியாக கல்ப சாதனை முடிந்தவாறு, பக்த்யாதிகள் பிம்போபாசனை ஆகியவை அதிகமாகியே வந்து, பிரம்ம பதவியை அடையும்போது முழுமை அடைகிறது.

இந்த ருஜுகணத்தவர்களுக்கு பாப சம்பந்தம் கொஞ்சமும் இருப்பதில்லை. சத்வாதி ப்ராக்ருத குணத்திலிருந்து வரும் எவ்வித குறைபாடுகளும் இருப்பதில்லை. இந்த குறைபாடுகள், கருட, சேஷ, ருத்ர, இந்திர முதலான தேவதைகளில் இருக்கின்றன.

ருஜவோ நாமயேதேவா: யோக்யா பிரம்மபதஸ்யது || -- என்னும் பாகவத தாத்பர்ய வசனங்களால், பிரம்ம பதவி என்பது, இந்த ருஜுகணத்தவரைத் தவிர, வேறு யாருக்கும் கிடைப்பதில்லை.

**ஸாத[4]னாத் பூர்வத[3]லி ஈ ரு**
**ஜ்வாதி[3] தாத்விகரெனிப ஸுரக[3]ண**
**நாதி[3] ஸாமான்யா பரோக்ஷிக[3]ளெந்து[3] கரெஸுவரு |**
**ஸாத[4]னோத்தர ஸ்வஸ்வபி[3]ம்ப[3] உ**
**பாதி[4] ரஹிதாதி[3]த்ய நந்த[3]தி[3]**
**ஸாதரதி[3] நோடு[3]வரு அதி[4]காரானுஸாரத[3]லி ||13**

சாதனாத் பூர்வதலி = சாதனை துவங்குவதற்கு முன்னர்
ஈ ருஜ்வாதி = ருஜுகண முதலான
தாத்விகரெனிப = தத்வாபிமானிகள் எனப்படும்
சுரகண = தேவதா கணம்
அனாதி = அனாதி காலத்திலிருந்து
சாமான்யபரோக்ஷிகளெந்து கரெசுவது = அபரோக்ஷிகள் என்றே அழைக்கப்படுகிறார்கள்
சாதனோத்தர = தத்தம் சாதனைகள் முடிந்தபிறகு
ஸ்வஸ்வபிம்ப = தத்தம் பிம்ப ரூபியான ஸ்ரீஹரியை
அதிகாரானுசாரதலி = தத்தம் யோக்யதைக்கேற்ப
உபாதி ரஹித = மேகம் முதலானவற்றால் மூடப்படாதிருக்கும்
ஆதித்யனந்ததி = சூரியனைப் போல

சாதரதி = மரியாதையுடன்
நோடுவரு = பார்க்கிறார்கள்

இந்த ருஜுகண முதலான தத்வாபிமானிகள், அனாதி காலத்திலிருந்தும், சாமான்யமான அபரோக்ஷ உள்ளவர்களாக இருக்கிறார்கள். சாதனை காலம் முடிந்தபிறகு, தத்தம் தகுதிக்கேற்ப, மேகங்களால் மறைக்கப்படாத தூய்மையான ஆகாயத்தின் நடுவில் இருக்கும் சூரியனைப் போல, தத்தம் பிம்பரூபியான ஸ்ரீபரமாத்மனை காண்பார்கள்.

'நோடுவ அதிகாரானுசாரதலி' என்று சொன்னதால், அனைவரும் ஒரு சூரியனைப் போலவே பார்க்கிறார்களா என்னும் சந்தேகத்தை பரிகரித்தாயிற்று. சிலர் ஒரு சூரியனைப் போல, சிலர் 10 சூரியனின் பிரகாசம், சிலர் 100, என அவரவர்களின் யோக்யதைக்கேற்ப ஒளி பொருந்திய பரமாத்மனை காண்பார்கள் என்பது கருத்து.

**சி2ன்னப4க்தரு எனிஸுதிஹரு ஸு**
**பர்ண ஸேஷாத்4யமரரெல்ல**
**ச்சி2ன்னப4க்தரு நால்வரெனிபரு பா4ரதி ப்ராண**
**ஸொன்னொட3ல வாக்தே3வியரு பணெ**
**க3ண்ண மொத3லாத3வரொளகெ3 த**
**த்தன்னியாமகராகி3 வ்யாபாரக3ள மாடு3வரு ||14**

சுபர்ண = கருட தேவர்
சேஷாத்யமரரெல்ல = சேஷ தேவரே முதலான அனைத்து தேவதைகளும்
சின்ன பக்தரு = நடுநடுவே சிறிது காலம் தடைபட்டு, மறுபடி பக்தி செய்வார்கள் என்று அர்த்தம்.
பாரதி = பாரதி தேவியர்
பிராண = பிராணதேவர்
ஸொன்னொடல = தங்க உடலைக் கொண்டவன் என்றால் ஹிரண்யகர்ப்ப என்று அர்த்தம். அதாவது பிரம்மதேவர்
வாக்தேவி = சரஸ்வதி தேவியர்
நால்வரு = இந்த நால்வரும்
அச்சின்ன பக்தரு = எவ்வித தடைகளும் இன்றி, பக்தி செய்பவர்கள்
பணெகண்ண மொதலாதவரொளகெ = நெற்றியில் கண் உள்ளவர் ருத்ரதேவர். இவரில் துவங்கி அனைத்து தேவதைகளிலும்
தத்தன் நியாமகராகி = அந்தந்த வேலைகளுக்கு ப்ரேரகராகி
வியாபாரகள மாடுவரு = செயல்களை செய்வார்கள்.

கருட, சேஷ முதலான தேவதைகள் - சின்ன பக்தர்கள் எனப்படுகின்றனர். பாரதி, சரஸ்வதி, பிரம்மதேவர், வாயுதேவர் இந்த நால்வரும் அச்சின்ன பக்தர்கள் எனப்படுகின்றனர். இவர்கள் நால்வரும் ருத்ரதேவர் முதலான தேவதைகளில் இருந்து, அந்தந்த காரியங்களுக்கு ப்ரேரகராகி, கர்மங்களை செய்விக்கின்றனர்.

**ஹீன ஸத்கர்மக3ளெரடு3 பவ**

**மானதே$^3$வனு மாள்பனித$^3$கனு**
**மானவினிதில்லெனுத த்$^3$ருடப$^4$க்தியலி ப$^4$ஜிபரிகெ$^3$ ।**
**ப்ராணபதி ஸம்ப்ரீதனாகி$^3$ கு**
**யோனிக$^3$ள கொட$^3$னெல்லகர்மக$^3$**
**ளானெ மாடு$^3$வெனெம்ப மனுஜன நரககைதி$^3$ஸுவ ||15**

ஹீன சத்கர்மகளெரடு = சுகர்ம, துஷ்கர்ம என்னும் இரண்டையும்
பவமான தேவரு = வாயுதேவர்
மாள்பரு = செய்விக்கிறார்
அதகனுமான வினிதில்லெனுத = இந்த விஷயத்தில் சந்தேகமே இல்லை என்று
த்ருடபக்தியலி பஜிபரிகெ = திடபக்தியினால் வணங்குபவர்களுக்கு
ப்ராணபதி = முக்யபிராணதேவர்
ஸம்ப்ரீதனாகி = மிகவும் மகிழ்ந்து
குயோனிகள = நாய் நரி முதலான நீச பிறவிகளை
கொடனு = கொடுப்பதில்லை
எல்ல கர்மகள = அனைத்து கர்மங்களையும்
ஆனெ மாடுவனென்ப = நானே செய்கிறேன் என்று சொல்லும்
மனுஜன = மனிதனை
நரகவைதிஸுவ = நரகத்தில் தள்ளுகிறார்.

புண்ய பாவங்களுக்கு சாதனமான சுகர்ம, துஷ்கர்ம என்னும் இரண்டையும், வாயுதேவரே நமக்குள் இருந்து செய்விக்கிறார். இந்த விஷயத்தில் சந்தேகமே இல்லை என்று நம்பிக்கையுடன் வணங்கும் மனிதர்களுக்கு வாயுதேவர் மிகவும் மகிழ்ச்சியுடன், நாய் நரி முதலான நீச பிறவிகளைக் கொடுக்காமல் செய்வார். கர்மங்களை நானே செய்கிறேன் என்று நினைக்கும் மனிதர்களை நரகத்தில் தள்ளுவார்.

**தே$^3$வ ரிஷி பித்ரு ந்ருபரு நரரெனிஸுவ**
**ரைவரொளு நெலெஸித்து$^3$ அவர ஸ்வ**
**பா$^4$வகர்மவ மாடி$^3$ மாடி$^3$பனொந்து$^3$ ரூபத$^3$லி ।**
**பா$^4$விப்$^3$ரம்மனு கூர்மரூபத$^3$**
**லீ விரிஞ்ச்யாண்ட$^3$வனு பெ$^3$ன்னலி**
**தா வஹிஸி லோகக$^3$ள பொரெவனு த்$^3$விதி$^3$ய ரூபத$^3$லி ||16**

தேவ = தேவதைகள்
ரிஷி = ரிஷிகள்
பித்ரு = பித்ரு கண
ந்ருப = சக்ரவர்த்திகள்
நரனெனிஸுவ = மனுஷ்யன், எனப்படும் இந்த
ஐவரொளு = முக்தியோக்யரான ஐந்து வித ஜீவர்களில்
ஒந்து ரூபதலி = ஒரு ரூபத்தினால்
நெலஸித்து = நிலைத்திருந்து

அவர = அந்த முக்தியோக்யரின்
ஸ்வபாவ கர்மவ மாடி மாடிப = கர்மங்களை செய்து, செய்விக்கிறான்
பாவிப்ரம்மனு = அடுத்த கல்பத்தில் பிரம்ம பதவிக்கு வரப்போகும்
த்விதிய ரூபதலி = இரண்டாம் ரூபமான
கூர்மரூபதலி = கூர்ம ரூபத்தினால்
ஈ விரிஞ்ச்யாண்டவனு = இந்த பிரம்மாண்டத்தை
பென்னலி = தன் முதுகில்
தா வஹிஸி = தான் தாங்கிப் பிடித்து
லோககள = அனைத்து பிராணிகளையும்
பொரெவனு = காக்கிறான்.

தேவதைகள், ரிஷிகள், பித்ருகள், சக்ரவர்த்திகள், மனுஷ்யர்கள் என்னும் ஐந்து வித முக்தி யோக்ய ஜீவர்களில் வாயுதேவர் வசித்தவாறு, அவரவரின் யோக்யதைக்கேற்ப கர்மங்களை செய்து, செய்வித்து, அவர்களை ஒரு ரூபத்தினால் காக்கிறார். இரண்டாவதான, கூர்ம ரூபத்தை தரித்து, பிரம்மாண்டத்தை தன் முதுகில் தாங்கி, அனைத்து பிராணிகளையும் காக்கிறார்.

**கு³ப்தனாகி³த்த³னிலதே³வ த்வி**
**ஸப்தலோகத³ ஜீவரொளகெ³ த்ரி**
**ஷப்³த ஸாவிரதா³ருனூரு ஷ்வாஸஜபக³ளனு ।**
**ஸுப்தி ஸ்வப்ன ஸுஜாக்ரதி³க³ளலி**
**ஆப்தனந்த³தி³ மாடி³ மாடி³ஸி**
**க்லுப்தபோ³க³க³ளீவ ப்ராந்தகெ த்ருதிய ரூபத³லி ||17**

அனிலதேவ = வாயுதேவர்
த்ருதீய ரூபதலி = தன் மூன்றாம் ரூபத்தில்
த்விஸப்த லோகத ஜீவரொளகெ = 14 உலகங்களிலும் இருக்கும் அனைத்து பிராணிகளிலும்
குப்தனாகித்து = மறைந்திருந்து
ஸுப்தி = அவர்கள் தூங்கிக் கொண்டிருக்கும்போதும்
ஸ்வப்ன = ஸ்வப்ன அவஸ்தையில் இருந்தாலும்
ஜாக்ரதீகளலி = முழித்திருக்கும் போதும்; அதாவது அனைத்து நிலைகளிலும்
ஆப்தனந்ததி = ஆப்த நண்பனைப் போல
த்ரிஸப்த ஸாவிரதாருனூரு ஷ்வாஸ ஜபகளனு = 3*7= 21,000+600 = 21,600 ஷ்வாஸ ஜபங்களை
மாடி = தாம் செய்து
மாடிஸி = ஜீவர்களால் செய்வித்து
ப்ராந்தகெ = இறுதியில்
க்லுப்தபோககளீவ = அவரவர்களின் யோக்யதைக்கேற்ப போகங்களைக் கொடுக்கிறார்.

வாயுதேவர், 14 உலகத்தில் இருக்கும் பிராணிகளில், அவர்களுக்குத் தெரியாமல் இருந்து, ஸ்வப்ன நிலை, முழித்திருக்கும் நிலை, தூக்க நிலை என்னும் மூன்று நிலைகளிலும் இருந்து; அதாவது எப்போதும் என்று அர்த்தம். அவர்களின் நெருங்கிய நண்பனைப் போல இருந்து, ஒரு நாளுக்கு 21,600 ஷ்வாஸ ஜபங்களை செய்து, செய்வித்து, தன் மூன்றாம் ரூபத்தினால், இறுதியில் அவரவர்களின் யோக்யதைக்கேற்ப போகங்களைக் கொடுக்கிறார்.

**ஷுத்த$^4$ ஸத்வாத்மக ஷரீரதொ$^3$**
**ளித்த$^3$காலகு லிங்க$^3$தே$^3$ஹவு**
**பத்த$^4$வாக$^3$து$^3$ த$^3$க்தபடதோபாதி$^3$ இருதிஹுது$^3$ ।**
**ஸித்த ஸாத$^4$ன ஸர்வரொளக$^3$ன**
**வத்$^4$யனெனிஸுவ க$^3$ருட$^3$ ஸேஷ க**
**பர்த்தி$^3$ மொத$^3$லாத$^3$மரரெல்லரு தா$^3$ஸரெனிஸுவரு ||18**

ஷுத்த ஸத்வாத்மக ஷரீரதொளித்த காலகு = வாயுதேவர் சுத்தமான ஸத்வாத்மக தேகத்தில் இருந்த காலத்தில்
பத்தவாகது = இவரை கட்டுப்படுத்துவது இல்லை
தக்தபடதோபாதி = எளிதில் தீப்பிடிக்கக்கூடிய ஆடை போன்று
லிங்கதேஹவு = லிங்கதேகம்
இருதிஹுது = உருவம் மட்டும் இருக்கிறது. எந்தவொரு வேலைக்கும் பிரயோஜனம் இல்லை என்று அர்த்தம்.
ஸித்த ஸாதன = இவர் எப்போதும் ஸித்த ஸாதனர். அனைத்து சாதனைகளும் சம்பூர்ணமானவையே என்று அர்த்தம். இன்னும் சாத்தியமாகும் சாதனை என்று ஒன்றும் இல்லை. இத்தகைய வாயுதேவர், அனைத்து தேவதைகளில்
அனவத்யனெனிஸுவ = வெல்லப்பட முடியாதவர் எனப்படுகிறார்
கருட சேஷ கபர்த்தி = கருட சேஷ ருத்ரர்கள்
மொதலாதமரரெல்லரு = முதலான தேவதைகள் அனைவரும்
தாசரெனிஸுவரு = தாசர்கள் எனப்படுகின்றனர்.

பிரம்ம வாயுகளின் சரீரங்கள் 'விஷுத்த ஸத்வம் பிரம்மாக்யம்' என்னும் பாகவத 10ம் ஸ்கந்த தாத்பர்ய வாக்கியத்தைப் போல விஷுத்தமான; அதாவது, ரஜோகுண தமோகுண கலவை இல்லாமல், ஷுத்த ஸத்வ ஸ்வரூபத்தால் ஆனது. லிங்க சரீரம் இருந்தாலும், அதற்கு கட்டுப்படாதவர். ஒரு ஆடையை எரித்தால், அது எளிதாக எரிந்து சாம்பலாகிறது. அதைப் போலவே, அவருக்கு லிங்க தேகம் இருக்கிறது. இவருக்கு சாதனைகள் பூர்த்தி ஆகிவிட்டதால், ஸித்த ஸாதன என்று அழைக்கப்படுகிறார். அனைத்து பிராணிகளிலும் இருந்து, யாராலும் வெல்லப்பட முடியாதவராக இருக்கிறார். கருட, சேஷ, ருத்ராதி தேவதா கணங்கள் இவருக்கு தாசர்கள் எனப்படுகின்றனர்.

**க$^3$ணதொ$^3$ளகெ$^3$ தானித்து$^3$ ருஜு எந்தெ$^3$**
**நிஸிகொம்ப$^3$னு கல்பஷத ஸா**
**த$^4$னவ கை$^3$தா$^3$னந்தரதி$^3$ தா கல்கி எனிஸுவனு ।**

**த்வினவஷீதிய ப்ராந்தபா[4]கதி[3]**
**அனில ஹனுமத்[4]பீம ரூபதி[3]**
**த[3]னுஜரெல்லர ஸதெ[3]து[3] மத்[4]வாசார்ய நெனிஸுவனு ||19**

கணதொளகெதானித்து = ருஜு கணர்களுக்குள் தான் இருந்து
ருஜுவெந்தெனிஸிகொம்பனு = ருஜுகணத்தை சேர்ந்தவன் என்று பெயர் பெறுகிறான்
கல்பஷத ஸாதனவ கைதானந்தரதி = 100 கல்ப சாதனை முழுமையடைந்த பின்
தா கல்கி எனிஸுவனு = தன் 101வது கல்பத்தில், கல்கி எனப்படுகிறான்
த்வினவஷீதிய ப்ராந்த பாகதி = 98ம் கல்பத்தின் இறுதி பாகத்தில் ; அதாவது 99ம் பாகத்தில்.
ஹனுமத்பீம ரூபதி = ராமாவதாரத்தில் ஹனுமந்த ரூபத்திலும், கிருஷ்ணாவதாரத்தில் பீமசேன ரூபத்திலும்,
தனுஜரெல்லர = தானவர் அனைவரையும்
ஸதெது = சம்ஹரித்து
மத்வாசார்ய = ஸ்ரீமன் மத்வாசார்யர்
எனிஸுவனு = என்று அழைக்கப்படுகிறார்.

முன்னர், வாயுதேவர் ருஜுகணத்தில் சேர்ந்து ருஜு என்னும் பெயரைப் பெற்று, நித்ரா அவஸ்தையில் இருக்கிறார். முதலில் ஸ்ருஷ்டிக்கு வந்தபிறகு 100 கல்ப சாதனைகள் ஆனபிறகு, இவருக்கு ருஜு என்னும் பெயர் போய், கல்கி என்னும் பெயர் வருகிறது. கல்கி ஆனபிறகு, 100 கல்ப சாதனைகளை செய்து, பிரம்மபதவியைப் பெறுகிறார்.

இந்த விஷயத்தைப் பற்றிய புரந்தரதாசரின் சுளாதி ஒன்று இருக்கிறது.

ஹரமுக்யாத்யமரரிகெ வரனெனிப ருஜுவொப்ப
ஹருஷதி ஷதகல்ப சாதனவகெய்து தானு
கரெஸுவ கல்கியெந்து, எரடைது தஷகல்ப சாதன மாடுதலெ
விரிஞ்சியெதானெனிஸி ஸத்ய லோகவனாளி
ஸர்வாங்க ஸாயுஜ்யாவ படெவானு
இதரந்தெ சரிபாரு ப்ரதிதின ருஜுகண சேதனரு
தரணீஷ புரந்தர விட்டலான பூர்ணாகருணா
பூர்ணாபாத்ரரு கேளோ அபின்ன பக்தரிவரு ||

என்னும் சுளாதியிலிருந்து ருஜுகணதவர்கள் 100 கல்ப சாதனை ஆனபிறகு, கல்கி என்று அழைக்கப்பட்டு, மறுபடி 100 கல்ப சாதனையால், பிரம்ம பதவிக்கு வருகிறார் என்கிற அர்த்தம் புரிகிறது. அதே அர்த்தத்தையே தாசார்யர் இங்கு சொல்லியிருக்கிறார்.

இப்படி 100 கல்ப சாதனை ஆனபிறகு கல்கி என்று அழைக்கப்பட்டு, பின் 98 கல்ப சாதனைகள் முடிந்து, 99ம் கல்பத்தில் வாயு என்று அழைத்துக் கொண்டு, ராமாவதாரத்தில் ஹனுமந்த ரூபத்தினாலும், க்ருஷ்ணாவதாரத்தில் பீமசேன

ரூபத்தினாலும், தைத்யர்களை சம்ஹரித்து, இறுதியில் அந்த தானவர்கள் பிராமண ஜாதியில் பிறந்து, குபாஷ்யாதிகளை இயற்றி பகவத் குணங்களை தவறாக பரப்ப முயல, பரமாத்மனின் ஆணைப்படி, அவரே மத்வாசார்யராக அவதரித்தார்.

**விஷ்வவ்யாபக ஹரிகெ3 தா சா**
**த்ருஷ்யரூபவ த4ரிஸி பி3ரம்ம ஸ**
**ரஸ்வதி பா4ரதிக3ளிந்தொ3ட3கூடி3 பவமான |**
**ஷாஸ்வத ஸுப4க்தியலி ஸுக்3ஞா**
**நஸ்வரூபன ரூப கு3ணக3ள**
**நஷ்வரனு எந்தெ3னுத பொக3ளுவ ஸ்ருதிக3ளொளகி3த்து ||20**

விஷ்வவியாபக = பிரபஞ்சத்தில் அனைத்து இடங்களிலும் நிலைத்திருந்து,
ஹரிகெ தா = ஸ்ரீஹரிக்கு தான்
சாத்ருஷ்யரூபவ தரிஸி = சமானமான ரூபத்தைப் பெற்று
பிரம்ம சரஸ்வதி பாரதிகளிந்தொடகூடி = பிரம்ம, சரஸ்வதி, பாரதி இவர்களுடன்
பவமான = வாயுதேவர்
ஸ்ருதிகளொளகித்து = வேதங்களில் இருந்து
ஷாஷ்வத சுபக்தியலி = நிரந்தரமான (தடையற்ற) உத்தம பக்தியால்
சுக்ஞான ஸ்வரூபன = உத்தம ஞான ஸ்வரூபனான ஸ்ரீஹரி
ரூப குணகள = ரூப குணங்களை
நஷ்வர எந்து = நிரந்தரமானவை என்று
பொகளுவ = போற்றுவார்.

வாயுதேவர், பிரபஞ்சத்தில் அனைத்து இடங்களிலும் வியாப்தராக இருந்து, பரமாத்மனின் ஸ்வரூபத்தால், பிரம்மதேவர், சரஸ்வதிதேவி, பாரதிதேவி இவர்களுடன் வேதங்களில் நிலைத்திருந்து, நிரந்தரமான பக்தியால், பரமாத்மனின் ரூப குணங்கள், நிரந்தரமானவை என்று போற்றிக் கொண்டிருக்கிறார். வேதாத்மகர் துர்காதேவியே ஆனாலும், வேதத்தில் நிலைத்திருந்து பரமாத்மனை துதித்துக் கொண்டிருப்பார் என்று அர்த்தம். அல்லது, மத்வாசார்யரின் ரூபத்தால் வேதார்த்தங்களை வெளிப்படுத்தினார் என்று அர்த்தம்.

**கே2ட குக்குட ஜலடபெ3ம்ப3 த்ரி**
**கோடி ரூபவ த4ரிஸி ஸதத நி**
**ஷாடரனு ஸம்ஹரிஸி ஸலஹுவ ஸர்வஸஜ்ஜனர |**
**கைடபா4ரியபுரத3 ப்ரத2ம க**
**வாடனெனிஸுவ க3ருட3 ஸேஷ ல**
**லாடலோசனமுக்2ய ஸுரரிகெ3 ஆவகாலத3லி ||21**

கேட = ஆகாயத்தில் பறக்கும் பிராணிகள்
குக்குட = பூமியில் வசிக்கும் பிராணிகள்
ஜலட = தண்ணீரில் வசிக்கும் பிராணிகள்
எம்ப த்ரிகோடி ரூபவ = என்னும் இத்தகைய 3கோடி ரூபங்களை தரித்து

ஸதத = அனைத்து காலங்களிலும்
நிஷாடரனு = இரவில் சஞ்சரிக்கும் அசுரர் முதலானவர்களை
சம்ஹரிஸி = கொன்று
ஸர்வ சஜ்ஜனர ஸலஹுவ = அனைத்து சஜ்ஜனர்களையும் காப்பான்.
கருட, சேஷ, லாடலோசன = கருட, சேஷ, ருத்ரர்
முக்ய சுரரிகெ = முதலான தேவதைகளுக்கு
ஆவகாலதலி = அனாதி காலத்திலிருந்தும்
கைடபாரியபுரத = மது கைடபர்களைக் கொன்றவரான ஸ்ரீஹரியின் பட்டணத்தின்
ப்ரதம கவாட வெனிஸுவ = ரத்னமயமான வாயில் எனப்படுகிறார்.

வாயுதேவர் மூன்று கோடி ரூபங்களை தரித்து, அசுரர்களைக் கொன்று, சஜ்ஜனர்களைக் காக்கிறார். 'மஹாபலோஹம் கபிலாக்ய ரூபஸ்த்ரி கோடிரூப: பவனஸ்ச மேஸுத:' என்னும் நிர்ணய 8ம் அத்தியாயத்தில் 237ம் ஸ்லோகத்தில், ஸ்ரீராமதேவர் கூறும் வாக்கியத்தால், வாயுதேவர் 3 கோடி ரூபங்கள் கொண்டவர் என்பது தெரிகிறது. அந்த ரூபங்களில் சில, ஆகாயத்தில் பறக்கும் ரூபங்கள். சில பூமியில் சஞ்சரிக்கும் ரூபங்கள். சில, தண்ணீரில் வசிக்கும் ரூபங்கள். இந்த ரூபங்களால், துஷ்டர்களைக் கொன்று, சஜ்ஜனர்களைக் காக்கிறார். கருட, சேஷ, ருத்ராதி தேவதைகளுக்கு, வாயு தேவர் பரமாத்மனின் பட்டணத்தின் வாயிலில் முதலாம் த்வாரபாலகனாக இருக்கிறார். அதாவது, இவரது மூலமாக உபாஸனையை செய்து, பரமாத்மனை அடைய வேண்டும் என்பது கருத்து. பாரதிரமண முக்யபிராணாந்தர்கத பரமாத்மனையே வணங்க வேண்டுமே தவிர, நேரடியாக பரமாத்மனை துதிப்பதற்கு அதிகாரம் இல்லை என்று அர்த்தம்.

**ஈ ருஜுக$^3$ளொளகொ$^3$ப்$^3$ப$^3$ ஸாத$^3$ன**
**னூருகல்பதி$^3$ மாடி$^3$ கரெஸுவ**
**சாருதர மங்க$^3$ள ஸுனாமதி$^3$ கல்ப கல்பத$^3$லி |**
**ஸூரிக$^3$ளு ஸந்துதிஸி வந்தி$^3$ஸெ**
**கோ$^4$ர து$^3$ரிதக$^3$ளளிது போபுவு**
**மாரமண ஸம்ப்ரீதனாகு$^3$வ ஸர்வகாலத$^3$லி ||22**

ஈ ருஜுகளதொளகெ = இந்த ருஜுகணத்தவர்களில்
ஒப்ப = ஒரு வாயுதேவர் மட்டும்
நூரு கல்பதி சாதன மாடி = நூறு கல்பங்களை சாதனை செய்து
கல்ப கல்பதலி = அனைத்து கல்பங்களிலும்
சாருதர மங்கள சுனாமதி = மனோகரமான ரூபத்தினாலும் மங்களகரமான பெயர்களாலும்
கரெசுவ = அழைத்துக் கொள்கிறார்
சூரிகளு = ஞானிகள்
சந்துதிஸி = ஸ்தோத்திரம் செய்து
வந்திஸெ = வணங்கினால்
கோர துரிதகளு = கோரமான பாவங்கள்
அளிது போபுவு = நாசம் அடைகின்றன

ஸர்வகாலதலி = அனைத்து காலங்களிலும்
மாரமண = லட்சுமிபதியானவன்
சம்ப்ரீதனாகுவ = மிகவும் மகிழ்கிறான்.

ருஜுகணர்களில் 100 கல்பங்கள் சாதனை செய்து, சுரூபங்களை சுநாமங்களை பெற்றவர் வாயுதேவர் ஒருவரே. இப்படி அனைத்து கல்பத்திலும், ஒரு பிரம்மதேவர் முக்தர் ஆன உடனேயே, தற்போதைய வாயுதேவர் அந்த பதவிக்கு வருகிறார். ருஜுகணத்தில் 98 கல்ப சாதனைகள் ஆன ஒருவர், வாயுதேவரின் பதவிக்கு வருகிறார். இவரை வணங்கி போற்றும் மக்களுக்கு பாவங்கள் அனைத்தும் பரிகாரம் ஆகின்றன. பரமாத்மன் மிகவும் மகிழ்கிறான்.

**பாஹி கல்கி ஸுதேஜ தா³ஸனெ**
**பாஹி த⁴ர்மாத⁴ர்ம க²ண்ட³னெ**
**பாஹி வர்சஸ்வி க²ஷண நமோ ஸாது⁴ மஹிபதியெ |**
**பாஹி ஸத்த⁴ர்மக்³ஞ த⁴ர்மஜ**
**பாஹி ஸம்பூர்ண ஷுசி வைக்ருத**
**பாஹி அஞ்சன ஸர்ஷபனெ க²ர்பட²னெ ஸ்ரத்³தா⁴ஹ்வ ||23**

ருஜு கணத்தவர்கள் முதலில் 100 கல்ப சாதனை ஆகும்வரை ருஜு எனப்படுகின்றனர். 100 கல்ப சாதனை ஆனபிறகு, ருஜு என்னும் பெயர் போய், 101ம் கல்பத்தில் கல்கி என்ற பெயர் பெறுகின்றனர். இப்படி கல்கி என்னும் பெயர் வந்தபிறகு, ஒவ்வொரு கல்பத்திற்கும் ஒவ்வொரு பெயராக 100 கல்பத்திற்கும் 100 பெயர்கள் வருகின்றன. அந்தப் பெயர்களை இங்கு வரிசையாக சொல்கிறார்.

| கல்ப # | பெயர் | காரணம் |
|---|---|---|
| 1 | கல்கி | கலியை அழிப்பதால் |
| 2 | சுதேஜா | தேஜஸ்வியாக இருப்பதால் |
| 3 | தாசன் | ஸ்ரீஹரிக்கு முக்கிய தாசனாக இருப்பதால் |
| 4 | தர்ம | தர்ம ஸ்வரூபனாக இருப்பதால் |
| 5 | அதர்ம கண்டன | அதர்மத்தை கண்டிப்பதால் |
| 6 | வர்சஸ்வி | புகழ் பெற்றவனாக இருப்பதால் |
| 7 | கஷண | எதிரிகளை பயமுறுத்துவதால் |
| 8 | ஸாது | சஜ்ஜனர்களுக்கு உதவிகரனாக இருப்பதால் |
| 9 | மஹிபதி | கருட சேஷ ருத்ராதிகளுக்கு பிரபுவாக இருப்பதால் |
| 10 | ஸத்தர்மக்ஞ | உத்தமமான தர்ம ரகசியத்தை அறிந்தவன் ஆகையால் |
| 11 | தர்மஜ | தர்மத்தை காப்பதால் |
| 12 | ஸம்பூர்ண | சம்பூர்ண குணங்களைக் கொண்டிருப்பதால் |
| 13 | ஷுசி | சுத்தமான ஞானத்தைக் கொண்டிருப்பதால் |
| 14 | வைக்ருத | பிரம்மாண்டத்தில் ஸ்தாவர ஜங்கம பிராணிகளில் வியாப்தனாக இருப்பதால் |

| | | |
|---|---|---|
| 15 | அஞ்சன | அகார நாமக பகவந்தனை, மக்களிடம் புகழ் பெறச் செய்ததால் |
| 16 | ஸர்ஷப | ருஷ என்றால் ஞானம். ஞானம் உள்ளவன் என்று பொருள். ஞானம் உள்ளவர்களை காப்பதால் |
| 17 | கர்பட | நீசரான கலி முதலானவர்களில் இருந்து அவரவர்களின் சாதனைகளை செய்வதால் |
| 18 | ஸ்ரத்தா | பரமாத்மனிடம் திடமான புத்தி வைத்திருப்பதால் |

**பாஹி ஸந்த்$^3$யான மஹஞானனெ**
**பாஹி மஹவிக்$^3$ஞான கீர்த்தன**
**பாஹி ஸங்கீர்ணாக்$^2$ய கத்த$^2$ன மஹாபு$^3$த்தி$^3$ ஜய ।**
**பாஹி மாஹத்தர ஸுவீர்யனெ**
**பாஹி மேதா$^4$வி விஜயாஜெய**
**பாஹி மாம் ரந்தி$^3$ன்ம மனு மாம் பாஹி மாம் பாஹி ||24**

| கல்ப # | பெயர் | காரணம் |
|---|---|---|
| 19 | ஸத்யான | எப்போதும் தியானம் செய்து கொண்டிருப்பதால் |
| 20 | விக்ஞான | விசேஷ ஞானம் உள்ளவன் ஆகையால் |
| 21 | மஹாஞான | சிறப்பான ஞானம் உள்ளவன் ஆகையால் |
| 22 | கீர்த்தன | எப்போதும் பகவந்தனின் நாம கீர்த்தனை செய்வதால் |
| 23 | சங்கீர்ண | மத்யம ஜீவர்களுக்கு மிஸ்ர புத்தியை பிறக்க வைப்பதால் |
| 24 | கத்தன | வேத சாஸ்திரார்த்தங்களை சித்தாந்தம் ஆக்கி, வாதிகளை வெல்வதால் |
| 25 | புத்திஜய | எவ்வித சந்தேகங்களும் இல்லாதவன் ஆகையால் |
| 26 | மஹத்தர | ஜீவோத்தமன் ஆகையால் |
| 27 | சுவீர்ய | பலசாலி ஆகையால் |
| 28 | மேதாவி | மகா ஞானியாகையால் |
| 29 | விஜய | வெற்றி வாகை சூடுபவன் ஆகையால் |
| 30 | ஜய | வெற்றியைக் கொடுப்பவன் ஆகையால் |
| 31 | ரந்திம | ரம் என்பது அக்னி பீஜாக்ஷரம். அது பரமாத்மனிடம் இருப்பதால் சங்கர்ஷண மூர்த்தியான ஸ்ரீஹரிக்கு ரந்தி என்று பெயர். அத்தகைய ஸ்ரீஹரியை எப்போதும் மனதில் தரித்திருப்பதால் |
| 32 | மனு | மந்திர பிரதிபாத்யனானதால் |

**பாஹி மோத$^3$ ப்ரமோத$^3$ ஸந்தனெ**
**பாஹி ஆனந்த$^3$ நமோ து$^3$ஷ்ட$^3$னெ**
**பாஹி மாம் சார்வங்க$^3$ சாருஸுபா$^4$ஹு சாருபத$^3$ ।**
**பாஹி பாஹி ஸுலோசனனெ மாம்**

**பாஹி ஸாரஸ்வத ஸுவீரனெ**
**பாஹி ப்ராக்[3]ஞனெ கபி அலம்பட பாஹி ஸர்வக்[3]ஞ ||25**

| கல்ப # | பெயர் | காரணம் |
|---|---|---|
| 33 | மோத | எப்போதும் ஆனந்தப்படுபவன் ஆகையால் |
| 34 | பிரமோத | பரலோக சுகத்தைக் கொடுப்பவன் ஆகையால் |
| 35 | ஸந்தன் | சத்வ குணத்தைக் கொடுப்பவன் ஆகையால் |
| 36 | ஆனந்த | பிற ஜீவர்களை விட அதிக ஆனந்தம் உள்ளவன் ஆகையால் |
| 37 | ஸந்துஷ்ட | எவ்வித விருப்பங்களும் இல்லாதவன் ஆகையால் |
| 38 | சார்வங்க | அழகான தேகம் கொண்டவன் ஆகையால் |
| 39 | சாருபாஹு | அழகான தோள்களைக் கொண்டவன் ஆகையால் |
| 40 | சாருபத | அழகான கால்களைக் கொண்டவன் ஆகையால் |
| 41 | ஸுலோசன | திவ்ய ஞானத்ருஷ்டி உள்ளவன் ஆகையால் |
| 42 | சாரஸ்வத | அனைத்து ஸ்ருதிகளிலும் யதார்த்த ஞானம் உள்ளவர் ஆகையால் |
| 43 | ஸுவீர | வீரன் ஆகையால் |
| 44 | ப்ராக்ஞ | தத்வ ஞானத்தை அறிந்தவன் ஆகையால் |
| 45 | கபி | சுகத்தையே அனுபவிப்பவன் ஆகையால் கபி. கம் என்றால் சுகம். அதனை பானம் செய்வதால்; அதாவது, அனுபவிப்பவன் என்று பொருள் |
| 46 | அலம்பட | விஷய சுகங்களை விட்டவன் ஆகையால் |
| 47 | ஸர்வக்ஞ | அனைத்தையும் அறிந்தவன் ஆகையால் |

**பாஹி மாம் ஸர்வஜித் மித்ரனெ**
**பாஹி பாபவினாகஷனெ மாம்**
**பாஹி த[4]ர்மவினேத ஷாரத[3] ஓஜ ஸுதபஸ்வி |**
**பாஹி மாம் தேஜஸ்வி நமோ மாம்**
**பாஹி தா[3]னஸுஷீல நமோ மாம்**
**பாஹி யக்ஞ ஸுக[2]ர்த்த யஜ்வி யாக[3]வர்த்தகனெ ||26**

| கல்ப # | பெயர் | காரணம் |
|---|---|---|
| 48 | ஸர்வஜித் | உலகத்தை வென்றவன் ஆகையால் |
| 49 | மித்ர | ஜகன்மித்ரன் ஆகையால் |
| 50 | பாபவினாஷக | பாவங்களைப் போக்குபவன் ஆகையால் |
| 51 | தர்ம | எப்போதும் தர்மத்தைப் பின்பற்றுவதால் |
| 52 | வினீத | தர்மத்தை போதிப்பதால் |
| 53 | ஷாரத | எதிரிகளுக்கு துன்பத்தைக் கொடுப்பவன் ஆகையால் |

| | | |
|---|---|---|
| 54 | ஓஜஸ்வி | யாராலும் வெல்லப்பட முடியாதவன் ஆகையால் |
| 55 | தபஸ்வி | சிறந்த தபஸ்வி ஆகையால் |
| 56 | தேஜஸ்வி | பிரம்ம தேஜஸ்ஸைக் கொண்டிருப்பதால் |
| 57 | தான | தானசீலன் ஆகையால் |
| 58 | சுஷீல | நல்ல நடவடிக்கைகளைக் கொண்டவன் ஆகையால் |
| 59 | யக்ஞ | யக்ஞங்களை செய்வதால் |
| 60 | கர்த்த | அனைத்தையும் செய்விப்பதால் |
| 61 | யஜ்வீ | அனைத்து கர்மங்களையும் பரமாத்மனுக்கு அர்ப்பிப்பதால் |
| 62 | யாகவர்த்தக | அனைவரையும் தேவதா ஆராதனையை செய்ய வைப்பதால் |

**பாஹி பிராண த்ராண அமருஷி**
**பாஹி மாம் உபதே³ஷ்ட தாரக**
**பாஹி கால க்ரீட³னெ ஸுகர்மா ஸுகாலக்ஞ ।**
**பாஹி காலஸூஸூசகனெ மாம்**
**பாஹி கலிஸம்ஹர்த்ரு கலி மாம்**
**பாஹி கால ஸ்வாமரேத ஸதா³ரத ஸுப⁴லனெ ||27**

| கல்ப # | பெயர் | காரணம் |
|---|---|---|
| 63 | ப்ராண | அனைத்து ஜீவர்களுக்கும் பிராணனைக் கொடுப்பதால் |
| 64 | த்ராண | மகா சக்தி உள்ளவன் ஆகையால் |
| 65 | அமர்ஷி | எதிரிகளிடம் கோபம் கொள்பவன் ஆகையால் |
| 66 | உபதேஷ்ட | லோக குருவாக இருப்பதால் |
| 67 | தாரக | அனைவரையும் உத்தாரம் செய்பவன் ஆகையால் |
| 68 | காலக்ரீடன | காலத்திற்கு ஏற்ப நடவடிக்கைகளை செய்பவன் ஆகையால் |
| 69 | ஸுகர்த்தா | சத்காரியங்களை செய்விப்பவன் ஆகையால் |
| 70 | ஸுகாலக்ஞ | கால லட்சணங்களை நன்றாக அறிந்தவன் ஆகையால் |
| 71 | காலஸூஸூசக | கால நாமக பரமாத்மனை மக்களுக்கு தெரிவிப்பவன் ஆகையால் |
| 72 | கலிஸம்ஹர்த்தக | கலியைக் கொல்பவன் ஆகையால் |
| 73 | கலி | கால ஞானம் உள்ளவன். 'கலா அஸ்மின்னஸ்தீதி கலி' |
| 74 | கால | துர்ஜனர்களைக் கொல்பவன் ஆகையால் |
| 75 | ஸ்வாமரேத | அவன் ஸ்வரமணன் ஆகையால் |
| 76 | ஸதாரத | எப்போதும் சுகமயன் ஆகையால் |
| 77 | ஸுபல | பலசாலி ஆகையால் |

**பாஹி பாஹி ஸஹோ ஸதா³கபி**

**பாஹி கம்ய ஞான த$^3$ஷகல**
**பாஹி மாம் ஸ்ரோதவ்ய நமோ ஸங்கீர்த்திதவ்ய நமோ |**
**பாஹி மாம் மந்தவ்ய கவ்யனெ**
**பாஹி த்$^3$ரஷ்டவ்ய நமோ ஸக்$^2$யனெ**
**பாஹி க$^3$ந்தவ்ய நமோ க்ரவ்யனெ பாஹி ஸ்மர்தவ்ய ||28**

| கல்ப # | பெயர் | காரணம் |
|---|---|---|
| 78 | ஸஹ | சஹன சக்தி உள்ளவன் ஆகையால் |
| 79 | ஸதாகபி | அனைத்து காலங்களிலும் 'ஆகபேர் துக்க பேஷணாத்வாத்' துக்கங்களைப் போக்குபவன் ஆகையால் |
| 80 | கம்யஞான | பெறுவதற்கு தகுதியான ஞானத்தைக் கொண்டவன் ஆகையால் |
| 81 | தஷகல | அனந்தமான (பூர்ணமான) ஞானத்தைக் கொண்டவன் ஆகையால் |
| 82 | ஸ்ரோதவ்ய | கேட்பதற்கு தகுதியான மகிமைகளைக் கொண்டவன் ஆகையால் |
| 83 | ஸங்கீர்த்தவ்ய | பாடுவதற்கு தகுதியான மகிமைகளைக் கொண்டவன் ஆகையால் |
| 84 | மந்தவ்ய | மனனம் செய்வதற்கு தகுதியான மகிமைகளைக் கொண்டவன் ஆகையால் |
| 85 | கவ்ய | கவிகளால் வர்ணிக்கத் தகுதி உள்ளவன் ஆகையால் |
| 86 | த்ரஷ்டவ்ய | பார்ப்பதற்கு தகுதியானவன் ஆகையால் |
| 87 | ஸக்ய | நண்பனாக இருக்கத் தகுதியானவன் ஆகையால் |
| 88 | கந்தவ்ய | அடைவதற்குத் தகுதியானவன் ஆகையால் |
| 89 | க்ருகரணி | ஸேவை பெற்றுக் கொள்வதற்குத் தகுதியானவன் ஆகையால் |
| 90 | ஸ்மர்தவ்ய | நினைப்பதற்குத் தகுதியானவன் ஆகையால் |

**பாஹி ஸேவ்ய ஸுப$^4$வ்ய நமோ மாம்**
**பாஹி ஸ்வர்க$^3$வ்ய நமோ பா$^4$வ்யனெ**
**பாஹி மாம் ஞாதவ்ய நமோ வக்தவ்ய க$^3$வ்ய நமோ |**
**பாஹி மாம் லாதவ்ய வாயுவெ**
**பாஹி பி$^3$ரம்மனெ பி$^3$ராஹ்மணப்ரிய**
**பாஹி பாஹி ஸரஸ்வதீபதே ஜக$^3$த$^3$கு$^3$ருவர்ய ||29**

| கல்ப # | பெயர் | காரணம் |
|---|---|---|
| 91 | ஸேவ்ய | ஸேவை செய்வதற்குத் தகுதியானவன் ஆகையால் |

| | | |
|---|---|---|
| 92 | ஸுபவ்ய | பரம ஞானி, காரியங்களை செய்து முடிப்பவன் ஆகையால் |
| 93 | ஸ்வர்க்கவ்ய | ஸ்வ நாமக பரமாத்மன் வசிப்பதால் ஸ்வர்க்கம். அதாவது வைகுண்டம். பக்தர்களுக்கு வைகுண்டத்தைக் கொடுக்கும் தகுதி உள்ளவன் ஆகையால் |
| 94 | பாவ்ய | நினைப்பதற்கு தகுதியானவன் ஆகையால் |
| 95 | ஞாதவ்ய | அறிந்து கொள்வதற்கு தகுதியானவன் ஆகையால் |
| 96 | வக்தவ்ய | ஸ்தோத்திராதிகளால் சொல்வதற்கு தகுதியானவன் ஆகையால் |
| 97 | கவ்ய | வேதகோசரன் ஆகையால் |
| 98 | லாதவ்ய | வாயு பதவிக்கு முந்தைய பதவியின் பெயர். |
| 99 | வாயு | அனைத்து சேதனர்களிலும் ஷ்வாஸ ஜபத்தை செய்வதால் |
| 100 | பிரம்மா | ருஜு கணர்களில் முதல்வர். உத்தமமான ஞான, பக்தியைக் கொண்டவர். சாதனையை முடித்தவர். |

**வாமன புராணத3லி பேளித3**
**ஈ மஹாத்மர பரமமங்க3ல**
**நாமக3ள ஸம்ப்ரீதிபூர்வக நித்ய ஸ்மரிஸுவர |**
**ஸ்ரீமனோரமனவரு பே3டி3த3**
**காமிதார்த்த2க3ளித்து தன்ன த்ரி**
**தா4மதொளக3னு தி3னத3லிட்டானந்த3 படி3ஸுவனு ||30**

வாமன புராணத்தில் சொல்லப்பட்ட, இத்தகைய மகாத்மரின் பரம மங்கலகரமான, மேற்கூறிய 100 நாமங்களை, மிகுந்த பக்தியுடன் தினமும் நினைப்பவர்களுக்கு, லட்சுமி மனோகரனான ஸ்ரீஹரி, அவர்கள் வேண்டிய இஷ்டார்த்தங்களை நிறைவேற்றி, தன் ஸ்வேதத்வீப, அனந்தாசன, வைகுண்ட என்னும் லோகங்களில் வைத்து அவர்களை மகிழ்விக்கிறான்.

**ஈ ஸமீரகெ3 நூருஜன்ம ம**
**ஹா ஸுக2ப்ராரப்த3 போ3க3 ப்ர**
**யாஸவில்லதெ3 ஐதுவனு லோகாதி4பத்யவனு |**
**பூ4ஸுரன ஒப்பிடி3யவ்லிகெ3 வி**
**ஸேஷ ஸௌக்2யவனித்ததா3தன**
**தா3ஸவர்யனு லோகபதி எனிஸுவுது3 அச்சரவெ ||31**

ஈ ஸமீரகெ = இந்த வாயுதேவருக்கு
நூரு ஜன்ம மஹா சுகப்ராரப்த போக = மகா சுகமயமான பிராரப்த போகங்கள் இருக்கும்.
ப்ரயாஸவில்லதெ = எவ்வித கஷ்டமும் இல்லாமல்
லோகாதிபத்யவனு = லோகாதிபத்யத்தை

ஐதுவனு = கொடுக்கிறான்
பூசுரன = குசேலன் என்னும் பிராமணனின்
ஒப்பிடியவலிகெ = ஒரு பிடி அவலுக்கு பதிலாக
விசேஷ சௌக்யவனித்த = இஹத்தில் செல்வத்தையும், பரத்தில் முக்தியையும் கொடுத்த
ஆதன = அத்தகைய ஸ்ரீஹரியின்
தாசவர்யன் = தாசனான வாயுதேவர்
லோபதி எனிஸுவுது = லோகாதிபதி ஆவதில்
அச்சரவெ = என்ன ஆச்சரியம்? - என்றும் ஆச்சரியமான விஷயம் இல்லை என்று அர்த்தம்.

இந்த வாயுதேவர், மொத்தம் 100 கல்ப சுக பிராரப்தங்களை அனுபவித்து, பிரம்ம பதவியை அடைகிறார். ஸ்ரீகிருஷ்ண ரூபியான பரமாத்மன், குசேலனின் ஒரு பிடி அவலுக்கு மெச்சி, இஹத்தில் மஹத் ஐஸ்வர்யங்களையும், பரலோகத்தில் முக்தியையும் கொடுத்தான். இத்தகைய ஸ்ரீஹரியின் தாசவர்யரான வாயுதேவருக்கு லோகாதிபத்யம் வருவதில் என்னதான் வியப்பு? ஆச்சரியம்?

**த்3விஷத கல்பக3க3ளல்லி பி3ட3தீ3**
**பெஸரினிந்த3லி கரெஸுவனு த**
**ந்வஷத3 அமரரொளித்து3 மாடு3வனவர ஸாத4னவ |**
**அஸது3பாஸனெகை3வ கல்யா**
**த்3யஸுரரனு ஸம்ஹரிஸி தா பொ**
**ம்ப3ஸுரபத3 வைது3வனு கு3ருபவமான ஸதியொட3னெ ||32**

த்விஷத கல்பகளல்லி = 200 கல்பங்களில்
பிடதே = விடாமல்
ஈ பெசரினிந்த = மேற்கூறியவாறு 100 பிறவிகளில் ருஜு என்றும், 101வது கல்பத்திலிருந்து, கல்கியிலிருந்து துவங்கி பிரம்ம என்னும் பெயர்களில் 100 பெயர்களில்
கரெசுவனு = அழைக்கப்படுகிறார்
அமரர = தேவதைகளை
தன்னொஷகெ = தன் வசத்தில் இருக்குமாறு
ஒளகிட்டு = வைத்துக் கொண்டு
அவர ஸாதனவ = தேவதைகள் முதலானவர்கள் செய்யவேண்டிய சாதனைகளை
மாடுவ = செய்விக்கிறான்.
அஸதுபாஸனெகைவ = ஸோஹம் இத்யாதி உபாசகரான
கல்யாத்யசுரரனு = கலி முதலான தைத்யாதிபதிகளை சம்ஹரித்து
குருபவமான = ஜகத்குரு எனப்படும் வாயுதேவர்
ஸதியொடனெ = தன் ஸதியான பாரதிதேவியுடன்
தா = தான்
பொம்பசுரபதவி = பிரம்ம பதவியை
ஐதுவனு = அடைகிறார்.

ருஜுகணத்தவர்களுக்கு மொத்தம் 200 கல்ப சாதனை என்று மேலே பார்த்தோம். முதல் 100 கல்பத்து வரைக்கும் ருஜு என்றும், 101ல் துவங்கி, கல்கி முதலான 97ம் பெயர் வரைக்கும் சொல்லப்பட்ட பெயர்களில் 97 கல்பங்களை முடித்து, 98ம் கல்பத்தில், லாதவ்ய என்னும் பெயரைப் பெறுகிறார். 99ம் கல்பத்தில் வாயு பதவிக்கு வருகிறார். 100ம் கல்பத்தில் பிரம்மதேவர். ஆக 200 கல்ப சாதனைகள் ஆகவேண்டும்.

வாயுபதவியில் இருக்கும்போது, தத்வாபிமானி தேவதைகளை, தன் வசத்தில் வைத்துக் கொண்டு, த்ரிவித ஜீவர்கள் செய்யவேண்டிய சாதனைகளை அவரவர்களால் செய்வித்து , அவரவர்களின் யோக்யதைக்கேற்ப கதியைக் கொடுக்கிறார். அன்யதா உபாசனை செய்து கொண்டிருக்கும் கலி முதலான தைத்யர்களைக் கொன்று, பாரதி தேவியருடன் சேர்ந்து, பிரம்ம பதவியை ஏற்பார்.

**அனிமிஷர நாமத$^{3}$லி கரெஸுவ**
**அனிலதே$^{3}$வனு ஒந்து$^{3}$ கல்பதி$^{3}$**
**வனஜ ஸம்ப$^{4}$வனெனிப னெம்ப$^{3}$த்தேளுவரெ வருஷ |**
**கு$^{3}$ணத்ரய விவர்ஜிதன மங்க$^{3}$ல**
**கு$^{3}$ண ஸுரூப க்ரியெய ஸது$^{3}$பா**
**ஸனெயு அவ்யக்தாதி$^{3}$ ப்ருத்$^{2}$வ்யந்தரதி$^{3}$ இருதிஹுது$^{3}$** ||33

அனிலதேவனு = வாயுதேவர்
ஒந்து கல்பதி = 99ம் கல்பத்தில்
அனிமிஷர நாமதலி = தேவதைகளின் நடுவே ஜீவோத்தமர் என்று
கரெசுவ = அழைக்கப்படுகிறார்
வனஜ ஸம்பவனெனிப = பிரம்மதேவர் என்று பெயர் வந்தபிறகு,
எம்பத்தேளுவரெ வருஷ = 100 கல்பத்தின் 100 ஆண்டுகளில், பிரளய சந்தி காலம் 12.5 ஆண்டுகள் போக, மிச்சம் இருக்கும் 87.5 ஆண்டுகள்.
அவ்யக்தாதி ப்ருதிவ்யந்தரதி = அவ்யக்த தத்வத்தில் துவங்கி ப்ருதிவி தத்வத்தின் வரை இருக்கும் தத்வங்களில் வியாபித்திருக்கிறார்
குணத்ரய விவர்ஜிதன = ப்ராக்ருதமான சத்வாதி குணங்களுக்குக் கட்டுப்படாமல் இருக்கும் ஸ்ரீஹரியின்
குணக்ரியெய சுரூபகள = ஆனந்தாதி குணங்கள், ஸ்ருஷ்ட்யாதி கார்யங்கள், ராம கிருஷ்ணாதி அனந்தானந்த ரூபங்கள் இவற்றின்
சதுபாசனெயு = உபாசனை
இருதிஹுது = செய்கிறார்

வாயுதேவர், வாயுபதவியில் ஒரு கல்பத்தில் ஜீவோத்தமர் என்று சொல்லிக் கொண்டு, தேவதைகளுடன் இருக்கிறார். பிரம்ம பதவிக்கு வந்தபிறகு, பிரம்மமானத்தினால் 100 ஆண்டுகளின் கல்பத்தின் நடுவில், 12.5 ஆண்டுகள் சந்திகாலம் என்று சொல்லப்படுகிறது. மிச்சம் இருக்கும் 87.5 ஆண்டுகளில், அவ்யக்த தத்வத்தின் வரை இருக்கும் தத்வங்களில் நிலைத்திருந்து, ப்ராக்ருத

குணங்களுக்குக் கட்டுப்படாதவனான ஸ்ரீபரமாத்மனின் மங்களகரமான, ஆனந்தாதி குணங்களை, ஸ்ருஷ்ட்யாதி க்ரியைகளை, ராமகிருஷ்ணாதி அனந்தானந்த ரூபங்களை, உபாசனை செய்கிறார்.

**மஹிதருஜுக$^{3}$ணகொந்தெ$^{3}$ பரமோ**
**த்ஸஹ விவர்ஜிதவெம்ப$^{3}$ தோ$^{3}$ஷவு**
**விஹிதவெ ஸரி இத$^{3}$னு பேள்தி$^{3}$ரெ முக்தபி$^{3}$ரம்மரிகெ$^{3}$ |**
**ப$^{3}$ஹுது$^{3}$ ஸாம்யவு ஞானப$^{4}$கு$^{3}$தி$^{1}$யு**
**த்$^{3}$ருஹிண பத$^{3}$பர்யந்த வ்ருத்$^{3}$தி$^{3}$யு**
**ப$^{3}$ஹிருபாஸனெயுண்டு நந்தர பி$^{3}$ம்ப$^{3}$த$^{3}$ர்ஷனவு ||34**

மஹித = பூஜ்யர்களான ருஜுகணத்திற்கு
பரமோத்ஸஹ விவர்ஜித எம்ப = பகவந்தனின் உபாசனையில் அத்யந்த உற்சாகம் இருப்பதில்லை என்னும்
ஒந்தே தோஷவு = ஒரே தோஷம்
விஹிதவே சரி இதனுபேளதிரெ = இந்த தோஷத்தை சொல்லாமல் இருந்தால்
முக்த பிரம்மரிகெ = முக்த பிரம்மர்களுக்கு
ஸாம்ய பஹுது = சமர் என்று ஆகிறது
ஞான பக்தியு = ஞான பக்தியானது
த்ருஹிண பதபர்யந்த = பிரம்ம பதவியின் வரை
வ்ருத்தியு = கல்ப கல்பத்திற்கு சிறிது சிறிதாக அதிகமாகிக் கொண்டே வருகிறது
பஹிருபாஸனெயுண்டு = புறத்தில் வியாப்தமான பகவத் ரூபங்களின் உபாசனை உண்டு
நந்தர = அதன் பிறகு
பிம்ப தர்ஷனவு = பிம்ப தரிசனம் ஆகிறது.

பூஜ்யர்களான ருஜு கணத்தவர்களுக்கு ஒரு தோஷம் மட்டும் இருக்கிறது. ஒவ்வொருவருக்கும் 200 கல்ப சாதனை கண்டிப்பாக ஆகியே தீரவேண்டும் என்பதால், தற்போது நாம் பகவந்தனை எங்கே காணப் போகிறோம் என்று நினைத்து, அவர்களுக்கு பகவந்தனின் உபாசனையில் அத்யந்த உற்சாகம் இருப்பதில்லை.

நாளை காலை விடிந்தால், எனக்கு பெரிய பதவி ஒன்று கிடைக்கப் போகிறது என்று தெரிந்தால், எவ்வளவு உற்சாகம் இருக்குமோ, அதுவே 50-60 ஆண்டுகளுக்குப் பிறகு கிடைக்கப் போகிறது என்றால் அத்தகைய உற்சாகம் இருக்குமா?

அதைப்போலவே, ருஜுகணத்தவர்களுக்கும் அந்த தோஷம் இருந்தே இருக்கிறது. ஆனால், அவர்களுக்கு அந்த தோஷம் இருக்கிறது என்று சொல்வதும் சரியாகவே இருக்கிறது. இல்லையெனில், முக்தரான பிரம்மதேவர், ருஜுகணத்தவர், பதவிக்கு வந்தவர், வராதவர் என இந்த அனைவரும் சமம் என்று சொல்ல வேண்டியதாயிற்று.

ஆகையால், அந்த தோஷம் இருக்கிறது என்று சொல்வதும் சரி என்றார். கல்ப சாதனை அதிகமாக ஆக, பக்தி, ஞானமும் அதிகமாகிக் கொண்டே வருகின்றன. இவர்களுக்கு வியாப்தோபாசனை உண்டு. சாதனைக்குப் பிறகு, இவர்களுக்கு பிம்பாபரோக்ஷம் ஆகிறது. அதற்கு முன்பு, சாமான்யமான அபரோக்ஷம், சாதனைக்குப் பிறகு விசேஷ அபரோக்ஷம் உண்டு என்பது கருத்து.

**ஞானரஹித ப4யத்வ பேள்வ பு**
**ராண தை3த்யர மோஹகவு ஸது3**
**ரானனகெ3 கூடுவுதெ3 மோஹாஞான ப4ய ஷோக |**
**பா4னுமண்ட3ல சலிஸித3ந்ததி3**
**காணுவுது3 த்ருக்3தோ3ஷதி3ந்த3லி**
**ஶ்ரீனிவாஸன ப்ரீதிகோ3ஸுக2 தோர்த்த3னல்லத3லெ ||35**

பிரம்மவாயுகளுக்கு,
ஞானரஹித = ஞானம் இல்லாமல் இருப்பது; அதாவது அஞ்ஞானம் உண்டு என்று அர்த்தம்
பயத்வ = பயப்படுதல் ஆகியவை (இருக்கின்றன)
பேள்வ புராண = என்று சொல்லும் புராண வசனங்கள்
தைத்யர மோஹகவு = தைத்யர்களை மயக்குவதற்காக சொல்லப்பட்ட வசனங்கள் ஆகும்
சதுரானனகெ = பிரம்மதேவருக்கு
மோஹ, அஞ்ஞான, பய, ஷோக - ஆகியவை
கூடுவுதெ = இருக்கிறது என்று சொல்லவும் சாத்தியமோ?
ஶ்ரீனிவாசன ப்ரீதிகோசுக = ஶ்ரீனிவாசனை மகிழ்ச்சிப்படுத்துவதற்காக
தோர்த்தனல்லதலெ = அஞ்ஞானம், பயம் ஆகியவை இருப்பதைப் போல காட்டுகிறார். ஆனால் உண்மையாக அவை எதுவும் இல்லை.
த்ருக்தோஷதிந்தலி = பித்தத்தினால் அல்லது கண்ணில் தோன்றும் வேறு ஏதாவது நோயினால்
பானுமண்டல சலிசிதந்ததி = ஒருவனுக்கு சூரியன் சுற்றுவதைப் போல தோன்றும்.
காணுவுது = அப்படியே மக்களின் அஞ்ஞானத்தினாலேயே பிரம்மதேவருக்கு அஞ்ஞானாதிகள் இருக்கிறதைப் போல தெரிகிறது.

ராமாயணத்தில், அதாவது, ராமாயண சுந்தரகாண்டத்தில், ஹனுமந்ததேவர் சீதையை ராவணனின் அந்தப்புரத்தில் தேடி அங்கு அவர் கிடைக்காமல் மிகவும் கவலைப்பட்டு இறுதியில் அசோக வனத்தில் சீதையைக் கண்டார் என்னும் விஷயத்தில் ஹனுமந்ததேவருக்கு அஞ்ஞானம் இருக்கிறது என்று தெரிகிறது. ஆனால், இதன் சரியான அர்த்தமானது, மகாபாரத தாத்பர்ய நிர்ணய 7ம் அத்தியாயத்தில்:

யத்யப்யேதே நபஷ்யந்தி நிஷாசர கணாஸ்துயே |
த்யுலோகசாரின: சர்வே பஷ்யந்த்ருஷ ஏவச ||14
தேஷாம் விடம்பனாயைவ தைத்யானாம் வஞ்சனாயச |

பஷ்யதாம் கலிமுக்யானாம் விடம்போயம் க்ருதோ பவேத் ||15

ஹனுமந்ததேவர் சீதையை தேடினார். இரவில், அசுரர்கள் அனைவரும் தூங்கும்போது, இவர் சீதையை தேடியதை, ராவணனின் வீட்டில் இருக்கும் அசுரர்கள் மட்டும் இவரை பார்க்கவில்லையே தவிர, அந்தரிக்ஷவாசிகளான அனைவரும் பார்த்துக் கொண்டிருந்தனர். ஞானிகளான ரிஷிகளும் பார்த்துக் கொண்டிருந்தனர். அந்த தேவதைகளுக்கும், ரிஷிகளுக்கும் தன் முரணை (irony) காட்டுவதற்கும், தைத்யர்களை வஞ்சிப்பதற்கும், பார்த்துக் கொண்டிருக்கும் கலி முதலானவர்களை மயக்குவதற்கும், ஹனுமந்ததேவர் இப்படியாக நடித்தார் என்று சொல்லியிருக்கிறார்.

இதைப் போலவே, பீமாவதாரத்திலும் சில இடங்களில் இப்படி நடந்ததாக தெரிய வருகிறது. இவை உண்மை அல்ல. அஞ்ஞானிகளை மயக்குவதற்காக என்று அறிய வேண்டும். சர்வக்ஞர்களான பிரம்ம வாயுகளுக்கு அஞ்ஞான, பய, சோகங்கள் ஆகியவை இருப்பதில்லை. பகவத் விஷயத்தில் மட்டும் பிரம்மதேவருக்கு சிறிது அஞ்ஞானம் இருக்கிறது. மற்ற ஜகத் விஷயங்களில் இல்லை என்று அறியவேண்டும். பகவத் விஷயத்தில் அஞ்ஞானம்கூட பகவத் ப்ரீதிக்காகவே இருக்கிறது.

கண்ணில் இருக்கும் புரை ஆகிய தோஷங்களால், சூர்ய மண்டலம் முதலானவை சுற்றுவதைப் போல தோன்றுகின்றன. அதுபோலவே, அஞ்ஞானிகள் மட்டும் பிரம்ம வாயுகளின் பய சோகாதிகளை அனுபவித்தனர் என்று அறியவேண்டும்.

**க1மலஸம்ப4வ ஸர்வரொள கு3**
**த்தம நெனிஸுவனு எல்லகாலதி3**
**விமல ப4க்தி ஞான வைராக்3யாதி3 கு3ணதி3ந்த3 |**
**ஸமபி4 அதி4கவிவர்ஜிதன கு3ண**
**ரமெய முக2தி3ந்த3ரிது நித்யதி3**
**த்3யுமணி கோடிக3ளந்தெ காம்ப3னு பி3ம்ப3ரூபவனு ||36**

கமலசம்பவ = பிரம்மதேவர்
விமல பக்தி ஞான வைராக்யாதி குணதிந்த = தூய்மையான பக்தி, ஞான, வைராக்யாதி குணங்களால்
எல்லகாலதி = அனாதி காலங்களில்
சர்வரொளகெ உத்தம நெனிஸுவரு = அனைத்து ஜீவர்களைவிட உத்தமர் எனப்படுகிறார்.
சமபி அதிக்விவர்ஜிதன = சமம் மற்றும் உத்தமர் இல்லாதவனின்
குண = குணங்களை
ரமெய = ரமாதேவியரின்
முகதிந்த அரிது = மூலமாக அறிந்து
நித்யதி = தினந்தோறும்
த்யுமணி கோடிகளந்தெ = கோடி சூரியர்களைப் போல

பிம்பரூபவனு = பிம்பமூர்த்தியை
காம்பனு = காண்பார்.

பிரம்மதேவர், அனைத்து காலங்களிலும், தூய்மையான பக்தி, ஞான, வைராக்யாதி குணங்களில், மற்ற கருட, சேஷ, ருத்ராதி அனைத்து தேவதைகளைவிட உத்தமர் எனப்படுகிறார். சமம் அல்லது அதிகம் இல்லாத ஸ்ரீஹரியின் குணாதிஷயங்களை, ரமாதேவியரின் மூலமாக கேட்டு, பிம்பரூபியான ஸ்ரீபரமாத்மனை கோடி சூர்ய பிரகாச உள்ளவனாக காண்பார்.

**ஞான ப[4]க்த்யாத்[3]யகி[2]லகு[3]ண சது[3]**
**ரானன நொளிப்பந்தெ முக்[2]ய**
**பிராணனலி சிந்திபுது[3] யத்கிஞ்சித் கொரதெயாகி[3] |**
**ந்யூன ருஜுக[3]ண ஜீவரல்லி க்ர**
**மேணவ்ருத்[3]தி[4] ஞான ப[4]கு[3]தி[1] ஸ**
**மான பா[4]ரதி வாணிக[3]ளலி பத[3]ப்ரயுக்ததி[4]க ||37**

ஞானபக்தியாத்யகிளகுண = ஞான, பக்தி முதலான அனைத்து குணங்கள்
சதுரானன நொளிப்பந்தெ = பிரம்மதேவரிடம் இருப்பதைப் போல
யத்கிஞ்சித் கொரதெயாகி = மிகச் சிறிய அளவில் மட்டுமே குறைவாக
முக்யபிராணனலி = வாயுதேவரில்
சிந்திபுது = சிந்திக்க வேண்டும்
ருஜுகண ஜீவரலி = ருஜு கணஸ்தர்களில்
ந்யூன = குறைவாக இருந்து
க்ரமேண வ்ருத்தி = கிரமமாக கல்ப சாதன ஆகும்போதெல்லாம் அதிகமாகிறது
பாரதிவாணிகளலி = பாரதி, சரஸ்வதி தேவியரில்
ஞானபக்திசமான = ஞான, பக்தி ஆகியவை சமமாக இருக்கிறது
ஆனால்,
பதப்ரயுக்ததிக = சரஸ்வதி தேவியர் பதவியில் சிறிது அதிகமானவர் என்று அறியவேண்டும்.

பிரம்மதேவரிடம் ஞான, பக்தி ஆகியவை எவ்வளவு இருக்கிறதோ, அவ்வளவு வாயுதேவரிடமும் இருக்கிறது. ஆனால், பிரம்மதேவருக்கு வாயுதேவரைவிட ஒரு கல்ப சாதனை அதிகமாக ஆகியிருப்பதால், பதவியில் அவர் சிறிதளவு வாயுதேவரைவிட அதிகம்.

ருஜுகணர்களில் முதலில் குறைவாக இருந்து, பின் கல்ப சாதனை ஆக ஆக, ஞான, பக்திகளும் அதிகமாகிக் கொண்டே வருகின்றன.

சரஸ்வதி, பாரதிதேவியரிடமும், பிரம்ம வாயுகளைப் போலவே, ஞான பக்த்யாதிகள் சமமாக இருந்தாலும், சரஸ்வதி தேவியின் பதவி சிறிது அதிகமாக இருக்கிறார்.

யாவஞ்ஞானம் சாஸ்திமே வாஸுதேவ தாவத் ஞானம் வாயுதேவஸ்ய சாஸ்தி ||

இத்யாதி கருட புராண, பிரம்மகாண்ட வசனங்கள் இதற்கு ஆதாரமாக இருக்கின்றன.

**ஸௌரி ஸூர்யனதெரதி$^{3}$ பி$^{3}$ரம்ம ஸ**
**மீர கா$^{3}$யத்ரி கி$^{3}$ரிக$^{3}$ளொளு**
**தோருவுது$^{3}$ அஸ்பஷ்டரூபதி$^{3}$ முக்திபரியந்த ।**
**வாரிஜாஸன வாயு வாணி**
**பா$^{4}$ரதீர்கெ$^{3}$ மஹாப்ரலயத$^{3}$லி**
**பா$^{4}$ரத$^{3}$ஞானாதி$^{3}$ தோ$^{3}$ஷவு ஹரிக்ருபா ப$^{3}$லதி$^{3}$ ||38**

ஸௌரிசூர்யனதெரதி = சௌரி என்றால் சனீஸ்வரன். அந்த கிரகத்தைப் பார்த்தால், ஒரு சாதாரண தீபத்தைப் போலவே தெரியும். ஆகையால், இதன் குறியீடாக தீபத்தை எடுத்துக் கொள்ளலாம். இப்படி விளக்கினைப் போல ஹ்ருதயாகாஷத்தில் பார்க்கும்போது, சூர்யனின் பிரகாசத்தைப் பார்த்தால் எப்படி அது தெளிவாக தெரியாதோ, அப்படியே பகவந்தனின் ரூபங்களை தெளிவாக பார்க்க மாட்டார்கள் என்பது கருத்து.

பிரம்ம,
சமீர = வாயுதேவர்
காயத்ரி = சரஸ்வதி தேவியர்
கிரி = பாரதி தேவியர்
களொளு = இவர்களில்
முக்திபரியந்த = முக்தி அடையும் வரை
அஸ்பஷ்டரூபதி = தெளிவற்ற ருபத்தில் காண்தல்
வாரிஜாஸன = பிரம்மதேவர்,
வாயு வாணி பாரதீர்கெ = வாயுதேவர், சரஸ்வதி, பாரதிதேவி இவர்களுக்கு
மஹாப்ரளயதி = மஹா ப்ரளய காலத்தில்
ஹரி க்ருபா பலதி = ஸ்ரீஹரியின் க்ருபா கடாக்ஷத்தால்
அஞ்ஞானாதி தோஷவு = அஞ்ஞானம் முதலான தோஷங்கள் வராது.

தீபங்களை அனைவரும் சாதாரணமாக பார்க்கலாம். ஆனால், அதுவே சூரியனைப் பார்ப்பதற்கு சாத்தியமில்லை. அதைப்போலவே, பிரம்மதேவ்ர், வாயுதேவர், சரஸ்வதி, பாரதி இவர்கள் அபரோக்ஷத்தில் தீபத்தின் ஒளியைப் போல மிகத் தெளிவாக பகவந்தனை காண்கின்றனர். அனைத்து இடங்களிலும் இருக்கும் பகவத் ரூபங்களை, சூரிய மண்டலத்தைப் பார்ப்பதைப் போல, தெளிவற்ற நிலையில் காண்பர்.

வாயுதேவருக்கு பிரம்ம பதவியிலிருந்து முக்தி ஆவதால், வாயுதேவர் தெளிவற்ற நிலையிலேயே பகவத் ரூபங்களை காண்பார். பிரம்மதேவர் முக்தரான பிறகு, தெளிவாகக் காண்கிறார். முக்தரான பிறகு, அதிக தெளிவாக காண முடியும். இந்த தாரதம்யம், பிரம்ம வாயுகளிடம் இருக்கிறது என்று அறிய வேண்டும்.

பிரம்மதேவர், வாயுதேவர், சரஸ்வதி, பாரதி தேவியர் - இவர்களுக்கு மஹாபிரளயத்திலும்கூட பரமாத்மனின் க்ருபா கடாக்ஷத்தினால் அஞ்ஞானாதி தோஷங்கள் வருவதில்லை. இந்த விஷயத்தில் கருட புராண, பிரம்ம காண்டத்தில்:

அஸ்பஷ்டரூபே ஞானபலேன சேஷ: ஸௌரிப்ரகாஷஸ்ய யதைவதர்ஷனம் ||
ததாமம ஞானகதோ விசேஷ: தீபப்ரகாஷஸ்ய யதைவ தர்ஷனம் ||
ததாஞானம் வாயுதேவஸ்ய சாஸ்தி அஸ்பஷ்டதா ந்யூனதா ஹ்யஸ்திவாயோ: ||
ததாऽஞ்ஞானம் நைவ ஸஞ்சிந்தனீயம் சைதாத்ருஷஞ்ஞான வ்யக்திர்முராரே ||
வாய்வாதீனாம் மோக்ஷபர்யந்த மஸ்திவாயோமமப்ரளயே ஸ்ருஷ்டி காலே ||
ததாகாயத்ர்யா நாஸ்தினாஸ்த்யேவ மோஹ: காயத்ரீவத்பாரதி தேவதேவ ||

ஆகிய வாக்கியங்கள் ஆதாரங்களாக இருக்கின்றன. இந்த பத்ய அர்த்தங்களையே இந்த ஸ்லோகங்களும் சொல்வதால், அவற்றை மறுபடி தனியாக விளக்கவில்லை.

**நூருவருஷானந்தரத$^{3}$லி ஸ**
**ரோருஹாஸன தன்ன கல்பதி$^{3}$**
**ஆரு முக்தியனைது$^{3}$வரோ அவரவர கரெதொ$^{3}$ய்து$^{3}$ |**
**ஷௌரிபுரதொ$^{3}$ளகி$^{3}$ப்ப நதி$^{3}$யலி**
**காருணிக ஸுஸ்னான நிஜபரி**
**வார ஸஹிததி$^{3}$ மாடி$^{3}$ ஹரியுத$^{3}$ர ப்ரவேஷிஸுவ ||39**

நூருவருஷானந்தரதலி = பிரம்மஞானத்தினால் நூறு ஆண்டுகள் வரை ஒரு கல்பம் முடிந்த பிறகு
ஸரோருஹாஸன = பத்மாசனரான பிரம்மதேவர்
தன்ன கல்பதி = தம் கல்பத்தில்
ஆரு முக்தியனைதுவரோ = அந்த கல்பத்தில் யார் யார் முக்தியை அடைந்திருக்கிறார்களோ
அவரவர கரெதொய்து = அவர்களுடன் கூடி
ஷௌரிபுரதொளகிப்ப = பரமாத்மனின் உலகத்தில் நடுவில் இருக்கும்
நதியலி = விரஜா நதியில்
நிஜபரிவார ஸஹிததி = வாணி சேஷ கருடாதி தன் பரிவாரங்களுடன்
ஸுஸ்னான மாடி = நன்றாக ஸ்னானம் செய்த பிறகு, லிங்க சரீரங்கள் பங்கம் ஆகின்றன. அதன்பிறகு,
காருணிக = கருணாளுவான பிரம்மதேவர்
ஹரி உதர = பரமாத்மனின் உதரத்தில்
பிரவேஷிஸுவ = பிரவேசம் செய்வார்.

பிரம்மதேவரின் 100 ஆண்டுகளுக்கு, ஒரு பிரம்ம கல்பம் என்று பெயர். தத்வாபிமானிகளான சூர்யாதி தேவதைகளே முதலான முக்தி யோக்யர்களில் 10-20 கல்ப சாதனைகள் என சொல்லியிருப்பவர்களை விட்டு, மற்ற சாமான்ய ஜீவர்கள் அனைவருக்கும் ஒரேயொரு கல்ப சாதனை என்று சொல்லப்பட்டிருக்கிறது.

இந்த பிரம்ம கல்பத்தில் ஸ்ருஷ்டிக்கு வந்தவர்கள் இதே கல்பத்திலேயே முக்தியை அடையவேண்டும் என்று நிச்சயிக்கப்பட்டிருக்கிறது. இவர்கள் அனைவருக்கும் பிரம்மதேவருடன் விரஜா நதி ஸ்னானத்தினால் லிங்க சரீரம் பங்கமாகி, முக்தி ஆகிறது.

இப்படியாக நியமம் இருப்பதால், இந்த பிரம்மதேவருக்கு 100 ஆண்டுகள் ஆனபிறகு, இந்த பிரம்ம கல்பம் முடிகிறது. அந்த சமயத்தில் இந்த கல்பத்தில் முக்தர்கள் ஆக வேண்டிய ஜீவர்களுடன் சேர்ந்து, மற்றும் கருட, சேஷ, இந்திர முதலான இந்த கல்பத்தில் முக்தர்கள் ஆக வேண்டிய தன் பரிவாரங்களுடன் சேர்ந்து, வைகுண்ட லோகத்து நடுவில் இருக்கும் விரஜா நதியில் ஸ்னானம் செய்து, லிங்க சரீரம் பங்கமான பிறகு, அனைவருடன் பரமாத்மனின் உதரத்தை பிரவேசம் செய்கிறார்.

**வாஸுதே3வன உத3ரதொ3ளகெ3 ப்ர**
**வேஷகை3தா3னந்தரதி3 நி**
**ர்தோ4ஷ முக்தரு உத3ரதி3ம் பொரமொட்டு ஹருஷத3லி ।**
**ஈஷனிந்தா3க்ஞுவ படெ3த3ன**
**ந்தாஸன ஸிதத்3வீப மோக்ஷதி3**
**வாஸவாகி3 விமுக்த து3க்க2ரு ஸஞ்சரிஸுதிஹரு ।।40**

நிர்தோஷ முக்தரு = தோஷங்கள் அற்றவர்களான முக்தர் ஆனவர்கள்
வாசுதேவன உதரதொளகெ ப்ரவேஷகைதா னந்தரதி = வாசுதேவனின் உதரத்தில் பிரவேசம் செய்தபிறகு
உதரதிம் = அந்த வயிற்றிலிருந்து
பொரமொட்ட = வெளியே வந்து
ஹருஷதலி = மகிழ்ச்சியுடன்
ஈஷனிந்த = பரமாத்மனின்
ஆக்ஞுவ படெது = ஆணையைப் பெற்று
மோக்ஷதி = முக்த ஸ்தானங்களில் ஸ்வேதத்வீபத்திலும், அனந்தாசனத்திலும்,
வாசவாகி = வசித்தவாறு
விமுக்ததுக்கரு = துக்கங்கள் இல்லாதவர்களாக
சஞ்சரிசுதிஹரு = சஞ்சரித்துக் கொண்டிருப்பர்.

முக்தர் ஆகிறவர்கள், லிங்க சரீரம் ஆனபிறகு, பகவந்தனின் உதர பிரவேசம் செய்வார்கள் என்று முந்தைய பத்யத்தில் பார்த்தோம். அதன் பிறகு, அவர்கள் என்ன செய்கிறார்கள் என்றால்: பரமாத்மனின் உதரத்திலிருந்து வெளியே வந்து, மகிழ்ச்சியுடன் அனந்தாசன, ஸ்வேதத்வீப முதலான இடங்களில் தம் இஷ்டத்திற்கேற்ப சஞ்சரித்தவாறு, ஸ்வரூபானந்தத்தை அனுபவித்தவாறு முக்தியில் வசித்துக் கொண்டிருப்பர்.

**ஸத்வ ஸத்வ மஹா ஸூஸூக்ஷ்மவு**
**ஸத்வ ஸத்வாத்மக கலேவர**
**ஸத்யலோகாதி4ப னெனிப க3த்யல்பவெரடு3 கு3ண ।**

**முக்திபோ4க்3ய வித3ல்லஜாண்டோ3**
**த்பத்தி காரணவல்ல ஹரிப்ரீ**
**த்யர்த்த2வாகீ3ஜக3த்3 வ்யாபாரக3ள மாடு3வனு ||41**

ஸத்வ ஸத்வ மஹாஸூக்ஷ்மவு ஸத்வ சத்வாத்மக கலேவர = 'ஸத்வ ஸத்வ மஹாஸத்வ சூக்ஷ்ம ஸத்வஸ்சதுர்முக:' என்னும் கருட புராணத்து வாக்கியத்திற்கேற்ப, பிரம்மதேவருக்கு 'விஷுத்த ஸத்வ' என்று பெயர். அதன் விவரம்: அவரது ஸ்வரூபதேகம் - ஸாத்விக ஸாத்விக ஸாத்விக சூக்ஷ்ம ஸாத்விக ஸ்வரூபாத்மகமானது என்று அர்த்தம்.
ஸத்யலோகாதிப நெனிப = பிரம்மதேவர், சத்யலோகாதிபதி எனப்படுகிறார்
எரடுகுண = ரஜோகுண, தமோகுணங்கள் இவ்விரண்டும்
அத்யல்ப = மிகவும் குறைவாக இருக்கிறது
இது = (பிரம்ம பதவியில் இருக்கும்போது செய்த) இந்த கல்ப சாதனை
முக்தி யோக்யவல்ல = முக்தியில் அனுபவிக்கும் சுக சாதனைக்காக அல்ல
அஜாண்டோத்பத்திகெ = பிரம்மாண்ட ஸ்ருஷ்டிக்கு
காரணவல்ல = அதற்காகவும் அல்ல
ஹரி ப்ரீத்யர்த்தவாகி = ஸ்ரீஹரியின் மகிழ்ச்சிக்காகவே
ஜகத்வியாரகள மாடுவனு = ஸ்ருஷ்ட்யாதிகளை பகவத் சேவை என்றும், இதனால் பகவந்தன் மகிழ்ச்சியடைவான் என்றும், அவற்றை செய்கின்றார் என்று அர்த்தம்.

ஸத்வகுண, ரஜோகுண, தமோகுணர்கள் என்னும் மூன்று வித குணங்களில், குணங்களின் அதிக விகிதத்தினால், சத்வ குணத்தை அதிகமாகக் கொண்டவர்கள் சாத்விகர்கள் என்றும், ரஜோ குணத்தை பிரதானமாகக் கொண்டவர்கள், ராஜஸர்கள் என்றும், தமோ குணத்தை பிரதானமாகக் கொண்டவர்கள் தாமசர்கள் என்றும் அழைக்கப்படுகின்றனர். அனைவரிலும் மூன்று குணங்களும் இருந்தே இருக்கின்றன.

சத்வ குணம் அதிகமாகவும், ரஜோ குண தமோ குணங்கள் குறைவாக இருப்பவர்கள், சாத்விக சாத்விக ராஜஸர்கள் என்று அழைக்கப்படுகிறார்கள். இதைப்போலவே, சாத்விக சாத்விக தாமசர்கள் போன்றவர்களும் உண்டு.

இந்த பேதங்களில் பிரம்மதேவர், சாத்விக சாத்விக சூக்ஷ்ம சாத்விகர் என்னும் விதத்தை சேர்ந்தவர் என்பது கருத்து. அவரிடம், ராஜஸ, தாமஸ குணங்கள் மிகக் குறைவாக இருக்கின்றன. வாயு பதவியில் இருக்கும்போதே இவரின் சாதனைகள் அனைத்தும் பூர்த்தி ஆகிவிட்டன. பிரம்ம பதவிக்கு வந்த பிறகு செய்யும் சாதனைகள், வெறும் ஹரி ப்ரீதிக்காகவே ஆகும்.

இவரால் முக்தி சாதனையும் ஆவதில்லை, பிரம்மாண்டத்தின் உற்பத்தி காரணமும் இல்லை. முக்தி சாதனை அனைத்தும் வாயு பதவியிலேயே முடிந்துவிட்டன என்பது கருத்து.

**பாத3ன்யூன ஷதாப்த3 பரிய**
**ந்தோதி3 உக்3ரத3பாஹ்வயதி3 லவ**

**ணோத3தி3யொளகெ3 கல்பத3ஷ தபவித்த3னந்தரதி3 |**
**ஸாதி4ஸித3 மஹதே3வ பதவா**
**ரைது3 நவ கல்பாவஸானகெ**
**ஐது3வனு ஸேஷன பத3வ பார்வதி ஸஹிதனாகி3 ||42**

பாதன்யூன ஷதாப்த பர்யந்த = நூற்றுக்கு ஒரு பாதம் குறைவு என்றால் 75 ஆண்டுகள் வரை
ஓதி = 98ம் கல்ப சாதனையில். அதாவது வாயு பதவிக்கு முந்தைய கல்பத்தில் இதே வாயுதேவர் லாதவ்யர் என்னும் பெயரைப் பெற்றிருந்தார். பகவந்தனின் குணாதிசயங்களைக் கேட்டு, அதன்பின்,
உக்ரதபாஹ்வயதி = உக்ரதபா என்னும் பெயரில்
லவணோததியொளகெ = உப்புக் கடலில்
கல்பதஷ = 10 கல்பங்களின் வரை
தபவித்து = உக்ரமான தவத்தினை செய்து
அனந்தரதி = பின்பு, 38 கல்ப சாதனைக்குப் பிறகு, 39ம் கல்பத்தில்
மஹதேவபத = ருத்ர பதவியை
ஸாதிஸித = அடைந்தார்
ஆரைது நவ கல்பாவசானகெ = 6*5=30. 30+9= 39ம் கல்பத்தின் இறுதியில். 39ம் கல்பத்தை முடித்தபிறகு, 40ம் கல்பத்தில் பார்வதி சகிதமாக சேஷனின் பதவியை அடைகிறார்.

ஸுஸ்ராவோக்ர தபானாம யோக்யோ ருத்ரபதஸ்யய: |
ஸார்த்தம் பரார்த்தம் விஷ்ணோஸ்து குர்ணா பக்த்யா ஸதோதித: ||

என்னும் அனுவியாக்யானத்தின் வாக்கியத்திற்கேற்ப, ருத்ர பதவிக்கு தகுதி பெற்றவர்களில் ஒருவர் 75 ஆண்டுகள் வரை, பரமாத்மனின் குணாதிஷயங்களை லாதவ்யரிடம் கேட்டு, அதன் பிறகு, உப்புக் கடலில் உக்ரதபா என்னும் பெயரில் 10 கல்ப தவத்தினை செய்து, அதன் பிறகு, 38 பிரம்மகல்பம் முடிந்தபிறகு, 39ம் கல்பத்தில் ருத்ர பதவியைப் பெற்று, அந்த கல்பத்தின் இறுதியில், அதாவது 40ம் கல்பத்தில் பார்வதி சமேதராக சேஷ பதவியை அடைகிறார்.

**இந்த்3ர மனுத3ஷ கல்பக3ளலி ஸு**
**நந்த3னாமதி3 ஸ்ரவணகை3து3 மு**
**குந்த3ன பரோக்ஷார்த்த2 நால்கு ஸுக2ல்ப தபவித்து3 |**
**நொந்து3 பொகெ3யொளு கோடி வருஷ பு**
**ரந்த3ரனு அத3னுண்டனந்தர**
**பொந்து3வனு நிஜலோக ஸுரபதி காமனித3ரந்தெ ||43**

இந்த்ர = இந்திரன்
மனுதஷ கல்பகளலி = 10 மன்வந்தரங்களில்
சுனந்த நாமதி = சுனந்த என்னும் பெயரில்

ஸ்ரவணகைது = கருட பதவிக்குத் தகுதியான ஸுமனஸு என்பவரிடமிருந்து பகவன் மகிமைகளைக் கேட்டு
முகுந்தன = மோக்ஷத்தைக் கொடுப்பவனான ஸ்ரீபரமாத்மனின்
அபரோக்ஷார்த்த = அபரோக்ஷத்தைப் பெறுவதற்காக
நால்கு சுகல்ப = 4 மன்வந்தரங்களில்
தபவித்து = தவம் செய்து
பொகெயொளு = புகையில்
நொந்து = கஷ்டப்பட்டு
கோடி வர்ஷ அதனுண்ட = கோடி வருடங்கள், அந்தப் புகையையே பானம் செய்து
அனந்தர புரந்தரனு = புரந்தர என்னும் பெயருள்ள 7ம் மன்வந்தரத்தில், இந்திர பதவிக்கு வந்த
ஸுரபதி = தேவாதிபதி
நிஜலோக = தன் தகுதிக்கேற்ப இருக்கும் ஸ்வரூப சுகத்தை முக்தியில் அடைகிறான்.
அல்லது,
நிஜலோக என்றால், இந்திராதிபத்யத்தை அடைந்து, பின் ஸ்வர்க்க லோகத்தை அடைகிறான் என்று அர்த்தம்.
அந்த கல்பத்தின் இறுதியில் தேவேந்திரனுக்கு முக்தி என்பது கருத்து.
காமனு = மன்மதன்
இதரந்தெ = இதே ரீதியில் சாதனை உள்ளவன் என்று அர்த்தம்.

தஷமன்வந்தரம்ஷ க்ரபதயோக்யோ கருத்மக: |
பதயோக்யாத் ஸுமனஸோ ஸுனந்தோ நாமஜா ஷ்ருணோத் ||
உபாஸாம் சக்ர உத்யுக்தோ மன்வந்தர சதுஷ்டய: ||

என்னும் அனுவியாக்யானத்தின் வாக்கியத்தின்படி, இந்த பத்ய அர்த்தத்தை இவ்வாறு அறிய வேண்டும்.

தேவேந்திரன், இந்திர பதவிக்கு வருவதற்கு முன்பு, ஸுனந்த என்னும் பெயரால், கருட பதவியை அடைவதற்குத் தகுதியான, ஸுமனஸ என்பவரிடமிருந்து 10 மன்வந்தரங்கள் வரை, பகவன் மகிமைகளைக் கேட்டு, அதன் பிறகு, பரமாத்மனின் அபரோக்ஷத்திற்காக 4 மன்வந்தரங்கள் தவம் செய்து மறுபடி 1 கோடி ஆண்டுகள் வரை புகையில் தவம் செய்து, அதனையே பானம் செய்து, இந்திர பதவியைப் பெற்று, ஸ்வர்க்கத்தில் வசிக்கிறார். மன்மதனும் இதைப் போலவே சாதனை செய்து கொண்டு, பரமாத்மனின் புத்ரனாக இருக்கிறான்.

**கரெஸுவரு பூர்வத3லி சந்த்ரா**
**ர்கரதி3ஷாந்த ஸுரூபனாமதி3**
**எரடெ3ரடு3 மனுகல்ப ஸ்ரவணவகை3து3 மனுகல்ப**
**வரதபோ ப3லதி3ந்த3 அர்வா**
**க்ஷிரக3ளாகீ3ரைது3 ஸாவிர**
**வருஷ து3க்கவ நீகி3 காம்ப3ரு பி3ம்ப3ரூபவனு ||44**

சந்திரார்க்கரு = சந்திர சூரியர்கள்
பூர்வதலி = பதவியை அடைவதற்கு முன்னர்
அதிஷாந்த சுரூப நாமதி = அதிஷாந்தர் என்றும் சுரூப என்றும் பெயர்களால்
எரடெரடு மனுகல்ப = இரண்டிரண்டு மனு கல்பங்கள்
ஸ்ரவணகெய்து = முந்தைய கல்பத்தில் சுமனஸ என்பவரிடமிருந்து பகவன் மகிமைகளைக் கேட்டு
மனுகல்பா = ஒரு மன்வந்தரத்தில் சுமனஸரின் உபாசனையை செய்து
வர தபோ பலதிந்த = மிகச்சிறந்த வர தவ பலத்தினால்
அல்லது,
வர பலத்தினாலும், தபோ பலத்தினாலும்
அர்வாக்ஷிரகளாகி = தலைகீழாக
ஈரைது சாவிர வருஷ = 10,000 ஆண்டுகள் தவம் செய்து
துக்கவ நீகி = துக்கத்தைக் களைந்து கொண்டு
பிம்பரூபவனு = பிம்ப மூர்த்தியை
காம்பரு = அபரோக்ஷத்தில் காண்பார்கள்.

ஸுரூப ஷ்யாந்தரூபஸ்ச மன்வந்தர சதுஷ்டயம் ||
அஸ்ருண்வதாம் ஸுமனஸோ மன்வந்தரமுபாஸதாம் ||
வர்ஷாயுத ஸஹஸ்ரேண தபோர்வாக் ஷிரஸாக்ருதம் ||

ஆகிய அனுவியாக்யான வாக்கியங்களுக்கேற்ப, சந்திர சூரியர்கள் அவர்களின் பதவியைப் பெறுவதற்கு முன்னர், அதிஷாந்தரூப, ஸுரூப என்னும் பெயர்களால், கருட பதவிக்குத் தகுதியானவரான ஸுமனஸரை 1 மன்வந்தர காலம் உபாசனை செய்து, 4 மன்வந்தர காலம் அவரிடம் பகவத் மகிமைகளைக் கேட்டு, அதன் பிறகு, 10,000 ஆண்டுகள் வரை தலைகீழாக நின்று மிகவும் கஷ்டத்துடன் கடுந்தவம் புரிந்து, இன்னொரு 1,000 ஆண்டுகள் ஆகாயத்தில் சயனம் செய்து, சூரிய கிரணங்களையே பானம் செய்து, அபரோக்ஷத்தில் பரமாத்மனைக் காண்பார்கள்.

**ஸாத$^{4}$னக$^{3}$ள அபரோக்ஷனந்தர**
**ஐது$^{3}$வரு மோக்ஷவனு ஷிவ ஷ**
**க்ராதி$^{3}$ தி$^{3}$விஜரு உக்தக்ரமதி$^{3}$ம் கல்பஸங்க்யெயலி |**
**ஐத$^{3}$லெய கை$^{3}$வத் துபேந்த்$^{3}$ர ஸ**
**ஹோத$^{3}$ர நிகி$^{3}$ப்பத்து த்$^{3}$வினவ த்வ**
**கா$^{3}$தி$^{4}$பதி ப்ராணனிகெ$^{3}$ கு$^{3}$ரு மனுக$^{3}$ளிகெ$^{3}$ ஷோட$^{3}$ஷவு ||45**

ஷிவ ஷக்ராதி = ருத்ர இந்திர முதலான
திவிஜரு = தேவதைகள்
உக்த க்ரமதிம் கல்ப சங்க்யெயலி = முன்னர் கூறியதைப் போல, கல்ப எண்ணிக்கையில்
ஸாதனகளு = சாதனைகள் ஆனபிறகு

அபரோக்ஷ = அபரோக்ஷத்தில் பகவத் ரூபத்தைக் கண்டு, மோட்சத்தை அடைவார்கள்
ஐதலெயகெ = 5 தலைகள் உள்ள ருத்ர தேவருக்கு
ஐவத்து = 50 கல்ப சாதனை
உபேந்திர ஸஹோதரனிகெ = தேவேந்திரனுக்கு
இப்பத்து = 20 கல்ப சாதனை
த்வகாதிபதி ப்ராணனிகெ = த்வக் இந்திரிய அபிமானியான அஹங்காரிக பிராணனுக்கு
த்வினவ = 2*9=18 கல்ப சாதனைகள்
குருவனுகளிகெ = ப்ருஹஸ்பதி, ஸ்வாயம்புவ மனு முதலானவர்களுக்கு
ஷோடஷவு = 16 கல்ப சாதனை என்று அறியவேண்டும்.

ருத்ர இந்திராதிகளுக்கு, முன்னர் கூறியபடி, கல்ப சாதனைகள் ஆனபிறகு, அபரோக்ஷத்திற்குப் பிறகு, முக்தி ஆகிறது. யார்யாருக்கு எவ்வளவு சாதனைகள் என்றால், ருத்ர தேவருக்கு 50 கல்பங்கள்; இந்திர தேவருக்கு 20 கல்பங்கள் ஆக வேண்டும். ருத்ரதேவருக்கு சொல்லியிருப்பதால், கருடதேவரும் இவருக்கு சமானரே ஆனதால், கருடதேவருக்கும் இதே அளவு சாதனை என்று அறிய வேண்டும். சேஷ பதவியை அடையப் போகிறவர், ருத்ர தேவரே ஆனதால், அவரின் சாதனை தனியாக இருப்பதில்லை.

இந்திரனுக்கு சொல்லியதைப் போலவே, மன்மதனுக்கும் என்று அறிய வேண்டும். அஹங்காரிக பிராணனுக்கு 18 கல்பங்கள்; குரு, மனு, ரதி, தக்ஷ, சசிகளுக்கு 16 கல்பங்கள்.

இந்த கல்ப சாதனை விஷயத்தில் ருத்ரதேவருக்கு 50 கல்ப சாதனை என்று, முதலாம் சந்தியில் 'க்ருத்திவாஸனே ஹிந்தெ நீ நால்பத்து கல்ப' என்னும் பத்யத்தின் விசேஷ அர்த்தத்தில், ஆதாரங்களுடன் விவரித்துள்ளோம். அதனால் அதை மறுபடி இங்கு விளக்கவில்லை.

விம்ஷத்கல்ப மிதாஸ்த்விந்த்ர ஜீவாத்வினவ கல்பகா: ||
அஹம்ப்ராண பதார்த்தஸ்ச குர்வாத்யாத்வ்யஷ்ட கல்பகா: ||

என்னும் பிரகாச சம்ஹிதையின் வாக்கியம் மேலே சொன்னதற்கான ஆதாரம் என்று அறிய வேண்டும்.

**ப்ரவஹமருதகெ$^{3}$ ஹன்னெரடு$^{3}$ ஸை**
**ந்த$^{4}$வ தி$^{3}$வாகர த$^{4}$ர்மரிகெ$^{3}$ த$^{3}$ஷ**
**நவஸுக$^{2}$ல்பவு மித்ரரிகெ$^{3}$ ஸேஷஷத ஜனகெ$^{3}$ண்டு |**
**கவி ஸனக ஸுஸனந்த$^{3}$ன ஸன**
**த்குவர முனிக$^{3}$ளிகே$^{3}$ளு வருணன**
**யுவதி பர்ஜன்யாதி$^{3}$ புஷ்கரகா$^{3}$ரு கல்பத$^{3}$லி ||46**

ப்ரவஹ மருதகெ = ப்ரவஹ வாயுவிற்கு

ஹன்னெரடு = 12 கல்பங்கள்
ஸைந்தவ = கடலில் பிறந்த சந்திரன்
திவாகர = சூரியன்
தர்ம = யமதர்மன் ; இவர்களுக்கு
தஷ = 10 கல்பங்கள்
மித்ரரிகெ = மித்ர தாரெ முதலானவர்களுக்கு ; அதாவது, அந்த கக்ஷையை சேர்ந்தவர்களுக்கு
நவஸூகல்பவு = 9 கல்பங்கள்
ஷேஷஷதஸ்த ஜனகெ = சேஷ ஷதஸ்தர்களுக்கு
எண்டு = 8 கல்பங்கள்
கவி = சுக்ராசார்யர்
ஸனக, சனந்தன, சனத்குமார, முனிகளிகெ = இந்த ரிஷிகளுக்கு
ஏளு = 7 கல்ப சாதனைகள்
வருணன யுவதி = கங்கா
பர்ஜன்யாதி = பர்ஜன்யனில் துவங்கி
புஷ்கரகெ = புஷ்கர வரைக்குமான அந்த கக்ஷையில் இருப்பவர்களுக்கு
ஆருகல்பதலி = 6 கல்பங்கள், முக்திக்கு சாதனையாகும்.

ப்ரவஹஸ்துத்விஷட்கல்ப்யை: ஸூர்யாத்யா தஷகல்பகா: ||
மித்ராதீனாஞ்ச நவபிஸ்தூக்த சேஷகணஸ்யது ||
அஷ்டபி: ஸப்தபி: கல்பை: ஸனகாதி கணஸ்யது ||
ஷட்பி: பர்ஜன்ய மாரம்ப புஷ்கராந்தகணஸ்யவை ||

என்னும் பிரகாச சம்ஹிதையின் வாக்கியத்திற்கேற்ப இந்த பத்ய அர்த்தம் இப்படியாக புரிந்து கொள்ள வேண்டும்.

ப்ரவஹ வாயுவிற்கு 12 கல்ப சாதனை;
சூர்ய சந்திர, யம முதலானவர்களுக்கு 10 கல்ப சாதனை;
மித்ர தாரை முதலானவர்களுக்கு 9 கல்ப சாதனை;

முன்பு கூறிய மனு, சூர்ய, இந்திர முதலான, சோனபானத்தைக் குடிக்கத் தகுதியான தேவதைகள் 100 பேரில்; ப்ரதான வாயு முதலான 15 பேரை மட்டும் விட்டு, மற்ற 85 தேவதைகள். இவர்களுக்கு உக்த சேஷஷதஸ்தர் என்று பெயர். இவர்களுக்கு 8 கல்ப சாதனை ;

பார்க்கவ, சனக, சனந்தன, சனத்குமார, இவர்களுக்கு 7 கல்ப சாதனை;
கங்கா, பர்ஜன்ய முதல் புஷ்கர வரை இருக்கும் தேவதைகளுக்கு 6 கல்ப சாதனை;
இதன் பிறகு இவர்களுக்கு அபரோக்ஷம் ஆகி, முக்தி ஆகும் என்பது கருத்து.

**ஐது³ கர்மஜஸூரரிகா³ஜா**
**நாதி³ க³ளிகீ³ரெரடு³ கல்பா**
**ர்தாதி³கத்ரய கோ³பிகாஸ்த்ரீயரிகெ³ பித்ரு த்ரயவு ।**
**ஈ தி³வௌகஸ மனுஜகா³யக**

**ரைது[3]வரு எரடொ[3]ந்து[3] கல்ப ந**
**ராதி[4]பரிக[3]ரெ கல்பதொளக[3] பரோக்ஷ விருதிஹுது[3] ||47**

கர்மஜ சுரரிகெ = கர்மஜ தேவதைகளுக்கு
ஐது - 5 கல்பங்கள்
அஜானாதிகளுக்கு = அஜானஜ தேவதை முதலானவர்களுக்கு
ஈரெரடு = 4 கல்பங்கள்
அர்த்தாதிகத்ரய = 3.5 கல்பங்கள்
பித்ரு = பித்ரு கணத்தவர்களுக்கு
த்ரயவு = 3 கல்பங்கள்
ஈ திவௌகஸ மனுஜ காயகரு = தேவ கந்தர்வர் மனுஷ்ய கந்தர்வர்
எரடு = 2 கல்பங்கள்
ஐதுவரு = அபரோக்ஷத்தை அடைவார்கள்
நராதிபரிகரெ = மனுஷ்யோத்தமர்களுக்கு
ஒந்து கல்ப = 1 கல்ப சாதனை
த்ருணகளிகெ = த்ருண ஜீவிகளுக்கு
அரெ = 0.5 கல்ப சாதனை
அபரோக்ஷ விருதிஹுது = அபரோக்ஷம் ஆகிறது என்பது கருத்து.

கர்மதேவதைகளுக்கு 5 கல்பங்கள்
அஜானஜ தேவதைகளுக்கு 4 கல்பங்கள்
கிருஷ்ணனின் அங்கசங்கத்தைப் பெற்ற கோபிகா ஸ்த்ரியர்களுக்கு 3.5 கல்பங்கள்
பித்ருகளுக்கு 3 கல்பங்கள்
தேவ கந்தர்வ, மனுஷ்ய கந்தர்வர்களுக்கு 2 கல்பங்கள்
மனுஷ்யர்களுக்கு 1 கல்பம்
த்ருண ஜீவர்களுக்கு 0.5 கல்பம்;
இந்த சாதனைகளுக்குப் பிறகு அபரோக்ஷம் ஆகிறது என்பதும் கருத்து.

இவற்றிற்கு ஆதாரம், பிரகாச சம்ஹிதையில் கூறப்பட்டுள்ளது:

கர்மதேவா: பஞ்ச கல்பாபரோக்ஷிண: |
சதுர்ப்பி ராஜானஜானாம் ஸார்த்த கல்பத்ரேயீணஹி ||
கிருஷ்ணாங்க ஸங்ககோபீனாம் த்ரிபி: பித்ருகணஸ்யது ||
கந்தர்வாணாந்து கல்பாப்யாம் மர்த்யானாந்து ததைகத: ||
அர்த்தகல்பம் த்ருணாந்தானாம் யோக்யானாம் ஹரிதர்ஷனெ ||
நியமோயம் ஸர்வகர்மேஷ்வேவ மேவனஜான்யதா ||
ப்ரோக்ஷ்யை: கல்யைர்விமுச்யந்தே தாவத்கல்பைஸ்து ஸாதனம் ||
ததூர்வமபரோக்ஷஸ்ய கர்தவ்ய மிதினிஸ்சய: ||

இந்த பத்யத்தின் அர்த்தமே இந்த ஸ்லோகங்களின் அர்த்தமாக இருக்கின்றன. இறுதி இரு ஸ்லோகங்களில் விசேஷ அர்த்தம் இருக்கிறது. அது என்னவெனில்:

மேலே சொல்லப்பட்ட கல்ப எண்ணிக்கை, பிரம்ம கல்பம் என்று அறியவேண்டும். ஒவ்வொருவருக்கு எவ்வளவு கல்ப சாதனை சொல்லப்பட்டிருக்கிறதோ, அவ்வளவு கல்ப எண்ணிக்கையில், அபரோக்ஷத்திற்குப் பிறகு, அவர்கள் முக்திக்காக செய்ய வேண்டும். அந்த எண்ணிக்கை கல்ப சாதனை செய்தால்தான் அவர்களுக்கு அபரோக்ஷம் கிடைக்கிறது.

உதாரணம்: இந்திரனுக்கு 20 கல்பம் என்று சொல்லப்பட்டிருக்கிறது. அபரோக்ஷத்திற்கு முன்னர் 20 கல்ப சாதனை செய்தால், அவருக்கு அபரோக்ஷம் ஆகிறது. அபரோக்ஷத்திற்குப் பின் முக்தி ஆவதற்கு 20 கல்ப சாதனை செய்யவேண்டும் என்பது கருத்து. இதைப் போலவே அனைவருக்கும் சாதனை ஆகவேண்டும் என்று அறியவேண்டும்.

**தீபக³ளனனு ஸரிஸி தீ³ப்தியு**
**வ்யாபிஸி மஹாதிமிரவ களெது³ ப**
**ரோபகாரவ மாள்ப தெரத³ந்த³த³லி பரமாத்ம |**
**ஆ பயோஜாஸனனொளித்து³ ஸ்வ**
**ரூபஷக்திய வ்யக்தகை³ஸுத**
**தா பொளெவனவனந்தெ சேஷ்டெய மாடி³ மாடி³ஸுத ||48**

தீபகளனனுசரிஸி = வீட்டில் வைத்திருக்கும் தீபத்தின் யோக்யதைக்கேற்ப
தீப்தியு வியாபிஸி = ஒளி பரவி
மஹாதிமிரவ = பயங்கர இருட்டினை
களெது = போக்கி / துரத்தி
பரோபகாரவ மாள்ப தெரதந்ததலி = நமக்கு உதவி செய்வதைப் போல
பரமாத்ம = ஸ்ரீபரமாத்மன்
ஆபயோஜாஸனனொளித்து = பிரம்மதேவரே முதலான அனைவரிலும் இருந்து
ஸ்வரூப ஷக்திய வியக்திகைஸுத = அவரவர்களின் யோக்யதைக்கேற்ப அவர்களுக்கு சக்தியைக் கொடுத்து
அவரந்தெ = அந்தந்த பிராணிகளைப் போல
சேஷ்டெய = செயல்களை
மாடி மாடிசுத்த = செய்து, செய்வித்து
தா = தான் (பரமாத்மன்)
பொளெவனு = ஒளிமயமாக ஒளிர்கிறான்

5-5 வர்த்திகளாக சேர்த்து, ஒரு பெரிய தீபத்தில் வைத்து, அந்த தீபத்தை பற்றவைத்தால், ஒளி மிகவும் அதிகமாகவும், ஒரே ஒரு திரி போட்டு தீபத்தை ஏற்றினால், ஒளி குறைந்ததாகவும் எப்படி தெரிகிறதோ அதுபோலவே, ஸ்ரீபரமாத்மன், பிரம்மாதி தேவதைகளில் துவங்கி த்ருணாந்த ஜீவர்கள் வரை அனைவரிலும் இருந்து, அவரவர்கள் செய்யவேண்டிய கர்மங்களை தான் செய்து, அவர்கள் மூலமாகவும் செய்வித்து, அவரவர்களின் தகுதிக்கேற்ப, ஸ்வரூப சக்தியைக் கொடுத்தவாறு, பிரம்மாதிகளில் அத்யந்த ஒளி உள்ளவனாக, பூர்ண ஞான பக்த்யாதிகளால், அவர்களின் ஸ்வரூப சக்தியையும், த்ருணாந்த ஜீவர்களில்

மிகக் குறைந்த சக்தியால், அல்ப ஞானாதிகளால், அவர்களின் ஸ்வரூப சக்தியையும் வெளிப்படுத்தி, தன் ஒளியையும் சிலரில் அதிகமாகவும் சிலரில் குறைவாகவும் வைத்து ஒளி கொடுக்கிறான்.

**ஸ்வோத$^{3}$ரஸ்தி$^{2}$த ப்ராண ருத்$^{3}$ரே**
**ந்த்$^{3}$ராதி$^{3}$ ஸுரரிகெ$^{3}$ தே$^{3}$ஹக$^{3}$ள கொ**
**ட்டாத$^{3}$ரதி$^{3}$ அவரவர ஸேவெயகொம்ப$^{3}$ நனவரத ।**
**மோத$^{3}$ போ$^{3}$த$^{3}$ த$^{3}$யாப்தி$^{4}$ தன்னவ**
**ராதி$^{3}$ரோக$^{3}$வ களெது$^{3}$ மஹத$^{3}$ப**
**ராத$^{4}$க$^{3}$ள நோட$^{3}$த$^{3}$லெ ஸலஹுவ ஸதத ஸ்மரிஸுவர ||49**

ஸ்வோதரஸ்மித = ஸ்ருஷ்டிக்கு முன்னர் தன் உதரத்தில் வசிக்கும்
ப்ராண = வாயுதேவர்
ருத்ர = ருத்ரதேவர்
இந்திராதி = இந்திரன் முதலான
சுரரிகெ = தேவதைகளுக்கு
தேஹகள கொட்டு = தேகங்களைக் கொடுத்து
ஆதரதலி அவரவர ஸேவெய = அவரவர்களின் சேவையை
அனவரத = அனைத்து காலங்களிலும்
கொம்பனு = ஸ்வீகரிக்கிறான்
மோதபோத = மோத = ஆனந்தம். போத = ஞானம். இவைகளே ஸ்வரூபமாக உள்ள
தயாப்தி = தயா சமுத்திரனான ஸ்ரீஹரி
தன்னவர = தன் பக்தர்களின்
ஆதி = மனோவியாதியை
ரோகவ = சரீர சம்பந்தமான நோய்களை
களெது = பரிகரித்து
சதத = எப்போதும்
ஸ்மரிசுவர = தன்னை நினைப்பவர்களின்
மஹதபராதகள நோடதலெ = தவறுகளை பார்க்காமல்
சலஹுவ = அவர்களுக்கு அருள்வான்.

பிரளய காலத்தில் தன் வயிற்றில் வசித்திருக்கும் வாயுதேவர், ருத்ரதேவர், இந்திரன் ஆகிய தேவதைகளுக்கு சரீரத்தைக் கொடுத்து, மரியாதையுடன் அவர்கள் தனக்கு செய்யும் சேவைகளை ஏற்றுக்கொண்டு, ஞானானந்த ஸ்வரூபனான, தயா சமுத்திரனான ஸ்ரீஹரி, தன் பக்தர்களின் ஆதிவியாதிகளை பரிகரித்து, தன்னை எப்போதும் நினைத்திருப்பவர்கள், என்ன தவறுகளை செய்திருந்தாலும், அவற்றைக் கண்டுகொள்ளாமல் (கவனிக்காமல்), அவர்களை காக்கிறான்.

**ப்ரதிப்ரதி கல்பத$^{3}$லி ஸ்ருஷ்டி**
**ஸ்தி$^{2}$தி லயவ மாடு$^{3}$தலி மோதி$^{3}$ப**
**சதுரமுக$^{2}$ பவமானரன்னவ மாடி$^{3}$ பு$^{4}$ஞ்சிஸுவ ।**

**க்4ருதவெ ம்ருத்யுஞ்சயனெனிப தே3**
**வதெக3ளே உபசேதனரு ஸ்ரீ**
**பதிகெ3 மூர்ஜக3வெல்ல ஓத3னதிதி2 எனிஸிகொம்ப3 ||50**

ப்ரதிபதி கல்பதலி = ஒவ்வொரு கல்பத்திலும்
ஸ்ருஷ்டி ஸ்திதி லயவ மாடுதலி = படைத்தல், காத்தல், அழித்தல் ஆகியவற்றை செய்தவாறு
மோதிப = மகிழ்ச்சி அடைகிறான்
சதுரமுக பவமானர = பிரம்ம வாயுகளை
அன்னவ மாடி புஞ்சிஸுவ = அன்னம் செய்து உண்பான்
ம்ருத்யுஞ்செயனு = ருத்ரதேவர்
க்ருதவெனிஸி = நெய் என்று சொல்லி
தேவதெகளெ உபசேதனரு = தேவதைகளே ஷாக, பாகாதி பதார்த்தங்கள் என்று நினைத்து
ஸ்ரீபதிகெ = லட்சுமிபதியான ஸ்ரீஹரிக்கு
மூர்ஜகவெல்ல = மூன்று உலகத்திலும் இருக்கும் அனைத்து பிராணிகளும்
ஓதன = அன்னம் என்று நினைப்பான்
ஸ்ரீஹரி, தன்னை அதிதி என்று நினைப்பான்

ஸ்ரீபரமாத்மன், ஒவ்வொரு கல்பத்திலும் பிரம்மதேவரிடம் பிரம்ம நாமகனாக இருந்து ஸ்ருஷ்டியையும், விஷ்ணு நாமகனாக காத்தலையும், ருத்ரதேவரிடம் ருத்ரரூபியாக இருந்து அழித்தலையும் செய்தவாறு, மகிழ்ச்சியாக இருக்கிறான். ஒவ்வொரு பிரளய காலத்திலும், பரமாத்மனுக்கு பிரம்ம வாயுகள், அன்னம் ஆகிறார்கள். ருத்ரதேவர் நெய் ஆகிறார். மற்ற தேவதைகள் இதர பதார்த்தங்கள் ஆகிறார்கள். இப்படி மூன்று உலகத்தில் இருப்பவர்களும், பக்ஷ்ய, போஜ்யாதி ரூபமான அன்னம் என்றும், பரமாத்மன் அதிதி என்றும் அறியவேண்டும்.

**க3ர்ப்பிணிஸ்த்ரி உண்ட3போ4ஜன**
**க3ர்ப்பக3த ஷிஷு உம்ப3 தெரத3லி**
**நிர்ப4யனு தானுண்டு3ணிஸுவனு ஸர்வஜீவரிகெ3 ।**
**நிர்ப4லதிபரம அணுஜீவகெ3**
**அப்புவுதெ3 ஸ்தூ2லான்ன போ4ஜன**
**அர்ப்3ப4கரு பேளுவரு கோவித3ரித3னொட3ம்ப3ட3ரு ||51**

கர்ப்பிணி ஸ்த்ரி உண்ட போஜன = கர்ப்பிணிப் பெண் உண்ணும் அன்னமானது
கர்ப்பகத ஷிசு உம்ப தெரதலி = (அவளின் உடலில் இருக்கும் நாடி மூலமாக) அவளுக்குள் இருக்கும் குழந்தையானது உண்பது போல
நிர்பயனு = பயம் இல்லாதவனான ஸ்ரீஹரி
தானுண்டு = தான் உண்டு
சர்வ ஜீவரிகெ உணிசுவனு = தான் உண்டு, அதனால் அனைத்து ஜீவர்களுக்கும் உண்ண வைப்பான்.
நிர்பல = பலம் இல்லாத சிறிய பரமாணு ஜீவர்களுக்கு

ஸ்தூலான்ன = பக்ஷ்ய போஜ்யாதிகளால் ஆன இந்த உணவு
அப்புவுதெ = சாப்பிடுவது சாத்தியமா?
பேளுவரு = சாத்தியம் என்று சொல்வார்கள்
அர்ப்பகரு = அல்ப புத்தி உள்ள சிறுவர்கள் எனப்படுபவர்கள்
இதனு = ஜீவர்கள் உண்பார்கள் என்று
கோவிதரு = அறிந்தவர்கள்
ஒடம்படரு = ஒப்புக் கொள்வதில்லை.

கலிலந்த்வேகராத்ரேண பஞ்சராத்ரேண புத்பதம் ।
தஷாஹேனதுகர்கந்து: பேஷ்யண்டம் வா தத:பரம் ।।2
வாஸேனது ஷிரோத்வாப்யாம் பாஹ்வாங்க்ர்யாத்யங்க விக்ரஹ: ।।
நகரோவாஸ்தி சர்மாணி லிங்கச்சேத்ரோத் பவஸ்த்ரிபி: ।।3
சதுர்பிர்தாதவஸ்ஸப்த பஞ்சபி: க்ஷுத்ருடுத்பவ: ।।4
(பாகவதம் 3ம் ஸ்கந்தம் 32ம் அத்தியாயம்)

இந்த ஸ்லோகங்களுக்கேற்ப,
* ஒரு இரவில் சுக்ல ஷோணிதங்கள் கலக்கின்றன.
* 5 நாட்களில் பார்க்குமாறு ஆகிறது
* 10 நாட்களில் புரை விழுந்த கண்களைப் போல தெரிகிறது.
* 1 மாதத்தில் தலை,
* 2ம் மாதத்தில் கை, கால் முதலான அங்கங்கள்
* 3ம் மாதத்தில் நகம், முடி, சர்ம, லிங்க ஆகியவை தெரிகின்றன
* 4ம் மாதத்தில் ரத்தம், மாமிசம், மேதஸ் ஆகிய 7 தாதுக்கள் பிறக்கின்றன
* 5ம் மாதத்தில் பசி எடுக்கிறது என்று சொல்லியிருக்கிறார்கள்.

பசி எடுத்தபிறகு, மேலும் 4 மாதங்கள் கர்ப்பத்திலேயே இருந்து, அன்னம் இல்லாமல் உயிர் வாழ்வது எப்படியெனில்:

மாதுர் ஜக்தான்ன பானாத்யை ரேதேதாதுர ஸம்மத: ।।6
தாய் உண்ட போஜனம், குடித்த நீர் ஆகியவற்றால் திருப்தி அடைந்து, குழந்தை கர்ப்பத்தில் வளர்கிறான் என்கிறார்.

இதே உவமையை தாசார்யர் இங்கு சொல்கிறார். கர்ப்பிணி உண்ட அன்னத்தால், உள்ளே இருக்கும் குழந்தை எப்படி அதையே உண்டு திருப்தியாக இருக்கிறதோ, அதைப் போலவே பரமாத்மன், அனைத்து பிராணிகளிலும் தான் இருந்து, உண்டு உண்விக்கிறான். அப்படி இல்லை என்றால், வெறும் பரமாணு ஸ்வரூபனான ஜீவன் அற்புதமான உணவை உண்பது சாத்தியமா? வெறும் அஞ்ஞானிகளான, சிறுவர்களைப் போல இருப்பவர்களே இப்படி சொல்வார்களே தவிர, ஞானிகளானவர்கள் இதனை எப்போதும் ஒப்புக் கொள்ள மாட்டார்கள்.

**அபசயக³ளில் லுண்டு³து³த³ரி**
**ந்துபசயக³ளில்ல மரக³ணதொ³ள**
**கு³பம ரெனிஸுவரில்ல ஜனுமாதி³க³ளு மொத³லில்ல ।**

**அபரிமித ஸன்மஹிம நரஹரி**
**அபுனராவர்த்தரனு மாடு3வ**
**க்ருபணவத்ஸல ஸ்வப்ரத3 ஸௌக்2யவனித்து ஷரணரிகெ3 ||52**

அபசயகளில்ல = உண்ணாமல் இருப்பதால், பரமாத்மன், சோர்வுடன் இருக்கிறான் என்று அர்த்தமல்ல
உண்டுதுதரிந்த = உண்டதால்
உபசயகளில்ல = உணவை உண்டதால் சக்தி பெற்று வளர்கிறான் என்றும் அர்த்தமல்ல
அமரகணதொளகெ = தேவதா கணத்தில்
உபமரெனிஸுவரில்ல = இவனுக்கு சமம் என்று ஒப்பிட்டுச் சொல்வதற்கு யாரும் இல்லை
ஜனுமாதிகளு மொதலில்ல = பிறப்பு, வளர்தல், குறைதல், மரணம் ஆகியவை இவனுக்கு இல்லை
அபரிமித சன்மஹிம = எல்லைகள் இல்லாத மகாமகிமைகளைக் கொண்ட
க்ருபணவத்ஸல = பக்தனாக இருந்து ஜிதேந்திரியனாக இல்லாதவன் - க்ருபணன். அத்தகையவர்களிடம் வாத்ஸல்யம் காட்டுவதால், க்ருபணவத்ஸல என்று பெயர். அத்தகைய ஸ்ரீஹரி,
ஷரணரிகெ = தன்னை சரணடைந்தவர்களுக்கு
ஸ்வபத ஸௌக்யவனித்து = தன் உலகத்தில் ஸ்வரூபானந்தத்தைக் கொடுத்து (முக்தியைக் கொடுத்து)
ஆபுனராவர்த்தனெ = அவர்களுக்கு மறுபடி பூமியில் பிறப்பு இல்லாதவாறு
மாடுவ = செய்கிறான்.

ஸ்ரீஹரி, அனைவரிலும் இருந்து, தான் உண்டு, அவர்களையும் உண்ண வைக்கிறான் என்று முந்தைய பத்யத்தில் பார்த்தோம். அப்படி அவன் (ஸ்ரீஹரி) உண்ணவில்லையெனில், சோர்வு அடைந்து, எழ, உட்கார முடியாதவன் ஆகிவிடுவான் என்று சந்தேகப்படக்கூடாது என்கிறார். அத்தகைய சந்தேகம் வருபவர்களுக்கு இந்த பத்யத்தில் பதில் அளிக்கிறார் தாசார்யர்.

ஸ்ரீஹரிக்கு போஜனம் செய்யாததால் சோர்வோ, உடல் குன்றிவிடுகிறதோ, பலத்தை இழக்கிறான் என்பதோ இல்லை. உண்பதால், வளர்கிறானா என்றால் அதுவும் இல்லை. சக்தி பெறுகிறான் என்றும் இல்லை. எப்போதும் ஒரே மாதிரியாகவே இருக்கிறான். தேவதாகணத்தில் இவனுக்கு சமம் என்று சொல்லி, ஒப்புமை கொடுக்க வேறு யாரும் இல்லை. இவனுக்கு பிறப்பு, இறப்பு என்பது இல்லை. இப்படி, எல்லைகள் அற்ற மகாமகிமைகளைக் கொண்டவன். க்ருபணவத்ஸலனான ஸ்ரீஹரி, தன்னை நம்பியவர்களுக்கு முக்தியைக் கொடுத்து, அவர்கள் மறுபடி பிறந்து வராமல் இருக்கச் செய்கிறான்.

**பி3த்திபீ4ஜவ பூ4மியொளு நீ**
**ரெத்தி பெ3ளெஸித3 பெ3ளஸு ப்ராந்தகெ3**
**கித்தி மெலுவந்த3த3லி லகுமீரமண லோகக3ள |**

**மத்தெ ஜீவர கர்ம காலோ**
**த்பத்தி ஸ்தி2தி லய மாடு3தலி ஸம**
**வர்த்தி எனிஸுவ கே2த மோத3க3ளில்ல த3னவரத ||53**

பூமியொளு = பூமியில்
பீஜவபித்தி = விதையை விதைத்து
நீரெத்தி = நீர் ஊற்றி
பௌஸித பௌஸு = வளர்த்த தானியங்கள்
ப்ராந்தகெ = விளைந்த பிறகு
கித்து = இறுதியில் அவற்றை அவனே அறுவடை செய்து
மெலுவந்ததலி = தானே அவற்றை அன்னம் ஆகியவற்றை செய்து உண்பதைப் போல
லகுமிரமண = ஸ்ரீபரமாத்மன்
லோககள = 14 உலகங்களையும்
மத்தெ ஜீவர = மற்றும் ஜீவர்களையும்
கர்மகால = அவர்களின் கர்மங்கள், காலம் இவற்றை அனுசரித்து
உத்பத்தி = ஸ்ருஷ்டியை
ஸ்திதி = காத்தலையும்
லய = சம்ஹாரத்தையும் (ப்ரளயத்தையும்)
அனவரத = அனைத்து கல்பங்களிலும்
கேத = துக்கமோ
மோதகளில்ல = மகிழ்ச்சியோ, இந்த இரண்டும் இல்லாமல்
சமவர்த்தி = ஜீவர்களில் இருந்து அவர்களின் யோக்யதைக்கேற்ப பலன்களை சமமாகக் கொடுப்பவன்
எனிஸுவ = என்று சொல்லிக் கொள்கிறான்.

விவசாயம் செய்பவர்கள் பூமியில் விதையை விதைத்து, அவற்றிற்கு சரியான நேரத்திற்கு நீர் ஊற்றி, வளர்த்த தானியங்களைப் பறித்து, அவற்றை தாமே உண்பர். அவர்களுக்கு விதை விதைக்கையில் மகிழ்ச்சியோ, அவற்றை பறிக்கையில் துக்கமோ இருப்பதில்லை. அதுபோலவே, பரமாத்மன் உலகத்தில் அனைத்து ஜீவர்களையும் படைத்து, காப்பாற்றி, இறுதியில் அழிப்பான். இந்த செயல்களால் அவனுக்கு மகிழ்ச்சியும் இல்லை. துக்கமும் இல்லை. எப்போதும் சமநிலையிலேயே இருக்கிறான் என்று அர்த்தம்.

**ஷ்வஸன ருத்3ரேந்த்ர ப்ரமுக ஸும**
**நஸரொளித்3த3ரு க்ஷுத்பிபாஸவு**
**வஷதொ3ளிப்புவு ஸகலபோக3கெ ஸாத3னக3ளாகி3 |**
**அஸுர ப்ரேத பிஷாசிக3ள பா3**
**தி3ஸுதலிப்புவு தி3னதி3னதி3 மா**
**நிஸரொளகெ3 ம்ருக3 பக்ஷிஜீவரொளித்து3 போகு3வுவு ||54**

ஷ்வஸன = வாயுதேவர்

ருத்ர = ருத்ரதேவர்
இந்திர = இந்திரதேவர்
ப்ரமுக = முதலான
சுமனஸரொளு = தேவதைகளில்
க்ஷுத்பிபாஸவு = பசி, தாகம் ஆகியவை
சகலபோககெ = அவர்களுக்குத் தகுதியான போகங்களுக்கு
சாதனகளாகி = அவற்றைப் பெற்றுத் தருபவர்களாக
ஒஷதொளிப்பவு = அவர்களின் அதினத்தில் இருக்கிறது
அசுர = தைத்யர்கள், தானவர்கள், ராட்சசர்கள் முதலானவர்கள்
ப்ரேத பிஷாசிகள = பேய், பிசாசு இவர்களை
பாதிசுதலிப்புவு = அனைத்து காலங்களிலும் பாதிக்கின்றன
மானிஸரொளகெ = மனிதர்களிலும்
ம்ருக பக்ஷி ஜீவரொளு = மிருகம், பறவை ஆகிய ஜீவர்களிலும்
இத்து போகுவுவு = பசி, தாகம் ஆகியவை ஆகின்றன. அன்னம் உண்டு, நீர் குடித்தால், அவை போய்விடுகின்றன.

வாயுதேவர், ருத்ரதேவர், இந்திரதேவரே முதலான அனைத்து தேவதைகளுக்கும் பசி, தாகம் ஆகியவை இருக்கின்றன. ஆனாலும், அவற்றால் அவர்களுக்கு பிரச்னை எதுவும் ஏற்படுவதில்லை. அவர்களின் இஷ்டத்திற்கேற்ப அவர்களின் கட்டுப்பாட்டிலேயே அவை இருக்கின்றன. அதாவது, ஏதாவது உத்தமமான பலனோ, உண்ணக்கூடிய பதார்த்தமோ அவற்றை உண்ண வேண்டும் என்று நினைக்கும்போது, பசிக்கவில்லை எனில், அவற்றை எப்படி உண்பது? அந்த சமயத்தில், தமக்கு வேண்டிய அளவிற்கு மட்டும் பசி உண்டாகிறது. இதைப்போலவே, தமக்கு பானம் செய்யவேண்டும் என்னும் விருப்பம் வந்தால், தாகம் ஏற்படும். வேண்டியதை உண்டு, குடித்து திருப்தி அடைவார்கள். இத்தகைய சுக போகத்திற்கு மட்டுமே அவர்களுக்கு பசி, தாகம் ஆகியவை ஆகின்றன என்பது கருத்து.

தைத்யர்கள், தானவர்கள், ராட்சசர்கள், பிரேதங்கள், பிஷாசிகள் இவைகளுக்கு எப்போதும் பாதித்துக் கொண்டே இருக்கும்.

மனிதர்கள், மிருகங்கள், பறவைகள் இவற்றிற்கு பசி, தாகம் ஆகிறது. உடனடியாக உணவு உண்டு, தண்ணீர் குடித்தால் அவை பரிகாரம் ஆகிறது.

**வாஸுதே3வனு ஸ்வப்ன ஸுப்தி பி**
**பாஸெ க்ஷுத்ப4ய ஷோக மோஹா**
**யாஸ விஸ்ம்ருதி மாத்ஸர்ய மத3 புண்ய பாபாதி3 |**
**தோ3ஷ வர்ஜிதனெந்து3 பி3ரம்ம ஸ**
**தா3ஷிவாதி3 ஸமஸ்த தி3விஜரு**
**பாஸனெய கை3தெல்லகாலதி3 முக்தராகி3ஹரு ||55**

வாசுதேவனு

ஸ்வப்ன ஸுப்தி = கனவு, தூக்கம்
பிபாஸெ = தாகம்
க்ஷுத் = பசி
பய = பயம்
ஷோக, மோஹ, ஆயாஸ,
விஸ்ம்ருதி = மறதி
மாத்ஸர்ய = வயிற்றெரிச்சல்
மத புண்ய பாப,
ஆதி = ஆகியவை
தோஷவர்ஜிதனெந்து = தோஷங்கள் அற்றவன் என்று
பிரம்ம = பிரம்மதேவர்
சதாஷிவாதி = ருத்ரதேவர் முதலான
சமஸ்த திவிஜரு = அனைத்து தேவதைகளும்
எல்லகாலதி = அனைத்து காலங்களிலும்
உபாஸனெயகெய்து = உபாசனையை செய்து
முக்தராகிஹரு = முக்தர்கள் ஆகின்றனர்.

கனவு நிலை, தூக்க நிலை, பசி, தாகம், பயம், சோகம், மோகம், சோர்வு, மறதி, வயிற்றெரிச்சல், கர்வம், புண்யம், பாவம் - ஆகிய எந்த தோஷங்களும் அற்றவன் வாசுதேவன் என்று அறிந்து, பிரம்ம ருத்ராதி தேவதைகள், அனைத்து காலங்களிலும் உபாசனையை செய்து, முக்தியை அடைகின்றனர்.

**பரமஸூக்ஷ்ம க்ஷண அயிது$^3$ த்ருடி**
**கரெஸுவுது$^3$ ஐவத்து த்ருடி லவ**
**எரடு$^3$ லவக$^3$ளு நிமேஷ நிமிஷக$^3$ளெண்டு மாத்ர யுக$^3$ ।**
**கு$^3$ருத$^3$ஷ ப்ராணாரு ப$^3$ள ஹ**
**ந்னெரடு$^3$ பா$^3$ணவு க$^4$ளிகெ$^3$ த்ரிம்ஷதி$^3$**
**இருளு ஹக$^3$லரவத்து க$^4$ளிகெ$^3$க$^3$ளு அஹோராத்ரிக$^3$ளு ।।56**

பரமசூக்ஷ்ம க்ஷண = க்ஷண என்பது மிகவும் சிறிய அளவைக் கொண்ட காலமாகும்
ஐது த்ருடி கரெசுவுது = 5 க்ஷண காலம் ஆனால், 1 த்ருடி எனப்படுகிறது
ஐவத்து த்ருடி லவ = 50 த்ருடிகள் ஆனால், அது 1 லவ எனப்படுகிறது
எரடு லவ நிமேஷ = 2 லவ காலம் ஆனால், அது 1 நிமேஷ எனப்படுகிறது
நிமேஷகளெண்டு மாத்ர = 8 நிமேஷங்கள் ஆனால் அது 1 மாத்ர எனப்படுகிறது
மாத்ர யுககுரு = 2 மாத்ரங்கள் ஆனால் அது 1 குருகாலம் எனப்படுகிறது
குருதஷ ப்ராண = 10 குருகாலங்கள் ஆனால் அது 1 ப்ராண காலம் எனப்படுகிறது
ப்ராணாரு பளவு = 6 ப்ராண காலங்கள் ஆனால் அது 1 பள காலம் எனப்படுகிறது
பள ஹன்னெரடு பாணவுகளிகெ = 12*5 = 60 பளங்கள், 1 கடிகை (நாழிகை) எனப்படுகிறது.
களிகெ த்ரிம்ஷதி இருளு ஹகலு = 30 நாழிகைகள் என்பது 1 இரவு அல்லது 1 பகல்

அரவத்து களிகெகளு அஹோராத்ரிகளு = 60 நாழிகைகள் என்பது ஒரு நாள் (இரவும் பகலும் சேர்ந்த ஒரு நாள்).

**ஈ தி$^3$வாராத்ரிக$^3$ ளெரடு$^3$ ஹதி$^3$**
**நைது$^3$ பக்ஷக$^3$ளெரடு$^3$ மாஸக$^3$**
**ளாத$^3$பவு மாஸத்$^4$வய ருது ருதுத்ரயக$^3$ளயன ।**
**ஐது$^3$வவு அயனத்$^3$வயாப்த$^4$ க்ரு**
**தாதி$^3$ யுக$^3$க$^3$ளு தே$^3$வமானதி$^3$**
**த்$^3$வாத$^3$ஷ ஸஹஸ்ர வருஷக$^3$ளஹவத$^3$னு பேளுவேனு ||57**

ஈ திவாராத்ரிகளெரடு = மேற்கூறியவாறு பகல், இரவுகள் இரண்டும்
ஹதினைது பக்ஷ = 15 நாட்கள் ஆனால் அது ஒரு பட்சம் எனப்படுகிறது
பக்ஷகளெரடு மாசகளாதபவு = 2 பட்சங்கள் சேர்ந்தது ஒரு மாதம் எனப்படுகிறது
மாசத்வய ருது = இரு மாதங்கள் சேர்ந்தது 1 ருது எனப்படுகிறது
ருதுத்ரயகளயன = மூன்று ருதுக்கள் சேர்ந்தது 1 அயனம் எனப்படுகிறது
அயனத்வயவு = 2 அயனங்கள்
அப்த ஐதுவரு = 1 ஆண்டு எனப்படுகிறது
க்ருதாதியுககளு = க்ருத, த்ரேதா, த்வாபர, கலி முதலான 4 யுகங்கள் ஆகவேண்டுமெனில்
தேவமானதி = தேவமான காலத்தின்படி
த்வாதஷ சஹஸ்ர வருஷகளஹவு = 12,000 ஆண்டுகள் ஆகின்றன
அதனு பேளுவேனு = தேவமான ஆண்டுகளின் லட்சணத்தையும், ஒவ்வொரு யுகத்தின் காலத்தையும் விவரமாக சொல்கிறேன்.

**சதுர ஸாவிரதெ$^3$ண்டு நூரிவு**
**க்ருதயுக$^3$கெ$^3$ த்ரிஸஹஸ்ர ஸலே ஷட்**
**ஷத$^3$வு த்ரேதெகெ$^3$ த்$^3$வாபரகெ த்$^3$விஸஹஸ்ரனானூரு ।**
**தி$^3$திஜபதி கலியுக$^3$க்கெ ஸாவிர**
**ஷதக$^3$ளத்$^3$வய கூடி$^3$ ஈ தே$^3$**
**வதெக$^3$ளிகெ$^3$ ஹன்னெரடு ஸாவிரவஹவு வருஷக$^3$ளு ||58**

சதுர சாவிரதெண்டு நூரு = 4,800 தேவ ஆண்டுகள்
அவு க்ருதயுகக்கெ = க்ருதயுகத்திற்கு இந்த எண்ணிக்கையுள்ள ஆண்டுகள் ஆகின்றன என்று அர்த்தம்
த்ரேதெகெ = த்ரேதா யுகத்திற்கு
த்ரிஸஹஸ்ர சலெஷட் = 3600 தேவ ஆண்டுகள்
த்வாபரக்கெ = த்வாபர யுகத்திற்கு
த்விசஹஸ்ரனானூரு = 2400 தேவ ஆண்டுகள்
திதிஜபதி கலியுககெ = தைத்யராஜனான கலியுகத்திற்கு
ஸாவிர ஷதகளத்வய = 1200 தேவ ஆண்டுகள்
கூடி = இந்த அனைத்து ஆண்டுகளையும் ஒன்று கூட்டினால்
தேவதெகளிகெ = தேவமானத்தினால்

ஹன்னெரடு சாவிரவஹவு வருஷகளு = 12000 தேவ ஆண்டுகள் ஆகின்றன.

**ப்ரத²மயுக³ கேளதிக³ அரெ விம்**
**ஷதி ஸூலக்ஷாஷ் டோத்தரத³ விம்**
**ஷதி ஸஹஸ்ர மனுஷ்யமானாப்³த³க³ளு ஷண்ணவதி**
**மிதஸஹஸ்ரத³ லக்ஷத்³வாத³ஷ**
**த்³விதிய த்ருதியகெ³ எண்டுலக்ஷத³**
**சது: ஸஷ்டிஸஹஸ்ர கலிகி³த³ரர்த்த சிந்திபுது³ ||59**

ப்ரதம யுககெ = க்ருத யுகத்திற்கு
ஏளதிகவரெவிம்ஷதி லக்ஷ = 7+ 20ல் பாதி=10 = 17 லட்சம் என்று அர்த்தம்
அஷ்டோத்தர மேலே விம்ஷதி சஹஸ்ர = 8 + 20,000 = 28,000.
மனுஷ்யமானாப்தகளு = மனுஷ்யமானத்தின்படி ஆண்டுகள் 17,28,000 என்று அர்த்தம்.
த்விதிய = இரண்டாம் த்ரேதாயுகத்திற்கு
லக்ஷத்வாதஷ = 12 லட்சத்து
ஷண்ணவதி மித சஹஸ்ர = 96,000; மொத்தம் 12,96,000 ஆண்டுகள்
த்ருதியகெ = மூன்றாவது த்வாபர யுகத்திற்கு
எண்டு லட்சத சது: சஷ்டிசஹஸ்ர = 8,64,000
கலிகெ = கலியுகத்திற்கு
இததர்த்த = 4,32,000
சிந்திபுது = என்று சிந்திக்க வேண்டும்.

மேற்கண்ட 56ம் பத்யத்திலிருந்து துவங்கி இந்த பத்யம் வரைக்குமான அர்த்தத்தை மறுபடி இங்கு துவக்கி விளக்கினால், கிரந்தம் பெரிதாகிவிடும் என்பதால், அதை செய்யவில்லை. ஆனால், க்ஷண காலம் துவங்கி, தின காலம் வரைக்கும் சொல்லப்பட்ட துடி, லவ முதலான காலங்களை, ஒவ்வொரு புராணங்களில் ஒவ்வொரு விதமாக சொல்லியிருக்கின்றனர். ஒரு நாளுக்கு 60 நாழிகைகள் என்று சொல்லும்போது, அனைத்து எண்ணிக்கைகளும் சரியாகப் பொருந்தி விடுகின்றன.

தாசார்யர் இங்கு சொல்லியிருக்கும் எண்ணிக்கைகள், விஷ்ணு ரஹஸ்ய கிரந்தத்தின்படி சொல்லியிருக்கிறார். அந்த மூலத்தை அனுசரித்து, இந்த பத்ய அர்த்தங்கள் எழுதப்பட்டிருக்கின்றன. விஷ்ணு ரஹஸ்ய ஸ்லோகங்கள்:

அதிஸூக்ஷ்மஸ்துய: கால: ஸக்ஷண: பரிகீர்த்தித: ||
க்ஷணா: பஞ்சத்ருடி: ப்ரோக்தா பஞ்சாஷத்தாலவ: ஸ்ம்ருத: ||
லவத்வயம் நிமேஷ: ஸ்யான்மாத்ராஸ்யாத் அஷ்டபிஸ்சதை: ||
யஞ்ஞாயம் வததே ஜாஷோ மாத்ரயேர் த்விதயம் குரு: ||
குருணாம் தஷகம் ப்ராண: ப்ராணஷட்கம்பளம் பவேத் ||
பளஷஷ்டிர் கடீ ப்ரோக்தா தா:ஷஷ்டிர் தினமுச்யதே ||

இத்யாதி வாக்கியங்கள் மேற்சொன்ன பத்யங்களுக்கு ஆதாரமாகும்.

தேவமான கணக்கின்படி, 12,000 ஆண்டுகள் ஆனால் அதுவே ஒரு மஹாயுகம் எனப்படும். மஹாயுகம் என்றால் க்ருத, த்ரேதா, த்வாபர, கலி ஆகிய நான்கும் சேர்ந்ததாகும்.

க்ருதம் த்ரேதா த்வாபரஸ்ச கலிஸ்சேதி சதுர்யுகம் |
திவ்யை:த்வாதஷ ஸாஹஸ்ரைஸ் ஸாவதானம் நிரூபிதம் ||

என்னும் பாகவத 3ம் ஸ்கந்தம் வாக்கியம் இருக்கிறது. ஒவ்வொரு யுகத்திற்கும் எவ்வளவு ஆண்டுகள் என்று பத்யார்த்தத்தில் எழுதப்பட்டிருக்கிறது. 4,800 + 3,600 + 2,400 + 1,200 என மொத்தம் 12,000 ஆண்டுகள் ஆகின்றன. இவை தேவமானத்தின்படி என்று அறியவேண்டும்.

தேவமான என்றால் என்ன? மனுஷ்யமானத்தின்படி ஒரு ஆண்டு என்றால், அது தேவமானத்தின்படி ஒரு நாள் ஆகிறது. உத்தராயணம் பகல்; தக்ஷிணாயனம் இரவு என்று அறியவேண்டும். அதாவது மனுஷ்ய மானத்தின்படி 360 ஆண்டுகள் ஆனால், தேவமானத்தின்படி அதுவே 1 ஆண்டு. இதற்கு தேவமான ஆண்டு என்று பெயர்.

மேற்கூறிய தேவமான எண்ணிக்கையை 360ஆல் பெருக்கினால், மனுஷ்யமான ஆண்டுகள் வரும். க்ருத யுகத்தின் ஆண்டுகள் தேவமானத்தின்படி 4,800 ஆண்டுகள். இதை 360ல் பெருக்கினால், 4,800 * 360 = 17,28,000 ஆண்டுகள் என வருகின்றது. இதைப்போலவே அனைத்து யுகங்களின் மனுஷ்யமான ஆண்டுகளையும் பார்த்துக் கொள்ளலாம்.

**மூரதி$^{4}$க நால்வத்து லக்ஷத$^{3}$**
**ஆருமூரெரட$^{3}$தி$^{4}$க ஸாவிர**
**ஈரெரடு$^{3}$யுக$^{3}$ வருஷ ஸங்க்$^{2}$யெய கை$^{3}$யலினிதிஹுது$^{3}$ |**
**ஸாரி பெச்சிஸெ ஸாவிரத$^{3}$ நா**
**ந்னூரு மூவத்தெரடு$^{3}$ கோடி ஸ**
**ரோருஹாஸனகிது$^{3}$ தி$^{3}$வஸவெம்ப$^{3}$ரு விபஸ்சிதரு ||60**

மூரதிக நால்வத்து லக்ஷதி = 3+40 = 43 லட்சம்
ஆருமூரெரடதிக சாவிர = ((6*3)+2)*1000 = 20,000 மொத்தம் 43,20,000
ஈரெரடுயுக = 4 யுகங்கள் ஆகின்றன
வர்ஷ சங்க்யெய கெயெ = இதுவே நான்கு யுகங்களின் எண்ணிக்கை ஆகும் (43,20,000)
சாவிரத பெச்சிஸெ = 1,000த்தால் பெருக்கினால் (4320000 * 1000 = 4320000000
நானூரு மூவத்தெரடு கோடி = அதுவே 432 கோடி ஆகின்றன
விபஸ்சிதரு = ஞானிகள்
இது = இந்த எண்ணிக்கை
ஸரோருஹாஸனகெ = பிரம்ம தேவருக்கு
திவஸவெம்பரு = பகல் என்பார்கள்

நான்கு யுகங்களின் ஆண்டு எண்ணிக்கை மொத்தம் 43,20,000 ஆண்டுகள். ‘சதுர்யுக சஹஸ்ராணி பிரம்மணோ தினமுச்யதே’ என்னும் பிரமாணத்தினால், 4 யுகங்கள் ஓராயிரம் வரை தொடர்ந்து வந்தால், அதுவே பிரம்மதேவருக்கு ஒரு பகல் எனப்படுகிறது. மறுபடி அவ்வளவு ஆனால், ஒரு இரவு ஆகிறது.

ஆக 4 யுகங்களும் 1,000 முறை திரும்பத் திரும்ப வந்தால், பிரம்மதேவருக்கு அது ஒரு பகல் என்றாகிறது. பிரம்மதேவரின் நாள் ஒன்றிற்கு மனுஷ்யமான ஆண்டுகள் எவ்வளவு என்றால்: 43,20,000 * 1,000 = 4320000000. இது 432 கோடி ஆண்டுகள் ஆகின்றன. இந்த ஆண்டுகளே பிரம்மதேவருக்கு ஒரு பகல் என்று அர்த்தம்.

**ஷதத்[3]ருதிய ஈ தி[3]வஸக[3]ள த்ரிம்**
**ஷதியு மாஸ த்[3]வாத[3]ஷாப்த[3]வு**
**ஷதவெரட[3]ரொளு ஸர்வஜீவோத்பத்தி ஸ்தி[2]தி லயவு |**
**ஸ்ருதியுஸ்ம்ருதியு பேளுதி[3]ஹவ**
**ச்யுதகெ[3] நிமேஷவிதெந்து[3] ஸுக[2]ஷா**
**ஷ்வதகெ பாஸடி எம்ப[3]ரெ பி[3]ரம்மாதி[3] தி[3]விஜரன ||61**

ஷதத்ருதிகெ = பிரம்மதேவருக்கு
ஈ திவஸகள = மேற்கூறிய 432 கோடி ஆண்டுகள் கொண்ட ஒரு நாளின்
த்ரிம்ஷதியு மாஸ = 30ல் பெருக்கினால் அதுவே ஒரு மாதம்
த்வாதஷாப்தவு = அதை 12ல் பெருக்கினால் அதுவே ஒரு ஆண்டு
ஷதவெரடரொளு = 200 ஆண்டுகளில்
சர்வஜீவோத்பத்தி = அனைத்து ஜீவர்களின் உற்பத்தி
ஸ்திதி = காத்தல்
லயவு = அழித்தல், ப்ரளயம் ஆகியவை ஆகின்றன.
அச்யுதகெ = நாசம் இல்லாதவனான ஸ்ரீஹரிக்கு
இது = பிரம்மதேவரின் ஆயுளான ஆண்டுகள், ஒரு நிமிடத்திற்கு சமானம் என்று
ஸ்ருதியுஸ்ம்ருதியு பேளுதிஹவு = ஸ்ருதி, ஸ்ம்ருதிகள் சொல்கின்றன
ஸுகஷாஷ்வதகெ = சுகஸ்வரூபமான பரமாத்மனுக்கு
பிரம்மாதிதிவிஜரனு = பிரம்ம முதலான தேவதைகளை
பாசடி எம்பரெ = சோர்வுற்றிருக்கிறான் என்று சொல்ல முடியுமா? (இல்லை என்று அர்த்தம்)

பிரம்மதேவருக்கு மேற்கூறிய எண்ணிக்கையிலான நாட்கள் 30 ஆனால் ஒரு மாதம். 12 மாதங்களுக்கு 1 ஆண்டு. இத்தகைய ஆண்டுகள் 100, பிரம்மதேவருக்கு ஆயுட்காலம் என்று அர்த்தம். இந்த பிரம்ம ஆயுளில், அதாவது பிரம்மதேவரின் 100 ஆண்டுகளில், ஸ்ருஷ்டி, ஸ்திதி, லய ஆகின்றன.

பிரம்மமான ஆண்டுகள் 100. அதன்பிறகு, பிரம்மகல்பம் முடிந்து மஹாபிரளயம் ஆகின்றது. அதன் காலம் 100 ஆண்டுகள். மொத்தம் 200 ஆண்டுகளுக்கு ஸ்ருஷ்டி, ஸ்திதி, ப்ரளயம் ஆகிறது. பரமாத்மனுக்கு பிரம்ம கல்பம் ஒரு ஆண்டு என்று

ஸ்ருதி, ஸ்ம்ருதிகள் சொல்கின்றன. இத்தகைய மஹா மகிமையுள்ள பரமாத்மனுக்கு சமமானவர் என்று பிரம்மாதிகளையும் சொல்லமுடியாது என்பது கருத்து.

**ஆதி$^3$மத்$^4$யாந்தக$^3$ளு இல்லத$^3$**
**மாத$^4$வகி$^3$ து$^3$பசாரவெந்து$^3$ ரு**
**கா$^3$தி$^3$ வேத$^3$புராணக$^3$ளு பேளுவுவு நித்யத$^3$லி |**
**மோத$^3$மயன அனுக்$^3$ரஹவ ஸ**
**ம்பாதி$^4$ஸி ரமா பி$^3$ரம்ம ருத்$^3$ரே**
**ந்த்$^3$ராதி$^3$க$^3$ளு தமதம்ம பத$^3$வியனைதி$^3$ ஸுகி$^2$ஸுவரு ||62**

ஆதிமத்யாந்தகளு = ஆதி, மத்ய, அந்த்யங்கள் (+பிறப்பு, வளர்ச்சி, இறப்பு ஆகியவை)
இல்லத மாதவகெ = இல்லாத லட்சுமிபதியான ஸ்ரீபரமாத்மனுக்கு
இது = பிரம்ம கல்பத்தை 1 நிமிடம் என்று சொல்வது
உபசாரவெந்து = வெறும் உபசாரம் என்று
ருகாதி வேதபுராணகளு = ருகாதி வேதங்கள், பாகவதாதி புராணங்கள்
நித்யதலி = எல்லா காலங்களிலும்
பேளுவுவு = சொல்கின்றன
மோதமயன = ஆனந்த ஸ்வரூபனான ஸ்ரீஹரியின்
அனுக்ரஹவ = அருளை
சம்பாதிஸி = பெற்று
ரமா பிரம்ம ருத்ரேந்திராதிகளு = ரமா, பிரம்ம, ருத்ர, இந்திர முதலான தேவதைகள்
தமதம்ம = தத்தம்
பதவியனைதி = பதவிகளைப் பெற்று
சுகிசுவரு = சுகப்படுவார்கள்.

ஸ்ரீபரமாத்மன் சில காலங்களுக்கு முன்னர் இருக்கவில்லை. அதன் பிறகு அவன் பிறந்தான், இத்தகைய ஆதி இல்லை. பிறந்து, தினம்தினம் வளர்ந்து பெரியவனானான் என்னும் வளர்ச்சியும் இல்லை. அவனுக்கு வயதாகிவிட்டது. மரணத்தை அடைந்தான் என்பதும் இல்லை. அனாதி காலத்திலிருந்தும் அவன் இருந்தே இருக்கிறான். ஜீவர்களும் அனாதியாக இருந்தே இருக்கின்றனர்.

ஜீவனுக்கு, சரீரம் கிடைத்தால் பிறந்தான் என்றும், அது வளர்ந்தது என்றும், சரீரத்தை விட்டதால் இறந்தான் என்றும் சொல்வது உண்டு. ஆனால், பரமாத்மனுக்கு இந்த மாதிரியான சரீர சம்பந்தம் இல்லை.

இத்தகைய பரமாத்மனுக்கு நிமிஷ காலம் என்று கூறுகிறார். 'நிமேஷ உபசர்யதெ' நிமிடம் என்று பிரம்மகல்பத்தை ஒரு குறியீடாக ஆக்கிக் கொண்டானே தவிர, 30 நிமிடமானால், 2.5 நாழிகை என்னும்படியான கணக்குகள், பரமாத்மனுக்கு பிரளயத்தை செய்வதற்கும், ஸ்ருஷ்டி செய்வதற்குமான ஒரு கால நிர்ணயம் ஆக வேண்டியிருப்பதால், நிமிஷ காலத்தை, பிரம்ம கல்பத்திற்குக் குறியீடாக வைத்துக் கொண்டான்.

ஆகையால், இந்த ஆயுள்மானங்கள் சொன்னார் என்பது கருத்து. இப்படியாக ரிக்வேத முதலான வேதங்களிலும், பாகவதாதி புராணங்களிலும் சொல்லப்பட்டிருக்கின்றன. நித்யானந்த ஸ்வரூபனான ஸ்ரீபரமாத்மனின் அருளைப் பெற்று, ரமா பிரம்மாதி தேவதைகள், தத்தம் பதவியைப் பெற்று, சுகப்படுகின்றனர்.

**ஈ கதா[2]ம்ருத பானஸுக[2] ஸுவி**
**வேகிக[3]ளிக[3]ல்லத[3]லெ விஷயிக[3]**
**வ்யாகுல குசித்தரிகெ[3] தொ[3]ரெவுதெ[3] ஆவகாலத[3]லி |**
**லோகவார்த்தெய பி[3]ட்டு இத[3]னவ**
**லோகிஸுத மோதி[3]பரிகொ[3]லிது[3] க்ரு**
**பாகர ஜக[3]ன்னாத[2]விட்ட[2]ல காய்வ கருணத[3]லி ||63**

ஈ கதாம்ருதபான சுக = இந்த பகவத்கதை என்னும் அமிர்தத்தைக் குடிக்கும் சுகமானது
சுவிவேகிகளிகல்லதலெ = உத்தமரான விவேகிகளுக்கு அல்ல
விஷயிக = விஷய சுகங்களை விரும்புபவர்களாக
வியாகுல குசித்தரிகெ = துக்கப்படும் நீச புத்தி உள்ளவர்களுக்கு
தொரெவுதெ = கிடைக்குமா?
ஆவகாலதலி = எந்த காலத்திலும்?
லோகவார்த்தெய பிட்டு = லௌகிக அரட்டையை விட்டு
இதனு = இந்த கிரந்தத்தை
அவலோகிஸுத = பார்த்து
மோதிபரிகெ = மகிழ்ச்சி அடைபவர்களுக்கு
க்ருபாகர = கருணாளுவான
ஜகன்னாதவிட்டல = ஜகன்னாதவிட்டலன்
ஒலிது = தரிசனம் அளித்து
கருணதலி = கருணையுடன்
காய்வ = காப்பான்

இந்த கதாம்ருதத்தின் பானத்தின் சுவையை மஹா விவேகிகளும், ஞானிகளுமான, பகவத் பக்தர்களுக்கு மட்டும் தெரியுமே தவிர, வெறும் விஷய சுகங்களில் ஈடுபட்டு, அனைத்து காலங்களிலும் துக்கப்பட்டு காலத்தைக் கழித்து வரும் நீச புத்தி உள்ளவர்களுக்கு, இந்த சுவை தெரியுமா? தெரியாது. வீண் அரட்டையை விட்டு, இந்த கிரந்தத்தைப் படித்து, மகிழ்ச்சி அடைபவர்களுக்கு, க்ருபாளுவான ஸ்ரீஜகன்னாதவிட்டலன், தரிசனம் அளித்து, எப்போதும் அவர்களைக் காப்பான்.

கல்பசாதன சந்தி என்னும் 23ம் சந்தியின் தாத்பர்யம் இத்துடன் முடிந்தது.
ஸ்ரீகிருஷ்ணார்ப்பணமஸ்து

***

## பாவபிரகாசிகை : சந்தி 24 : பிம்ப பிரதிம்ப சந்தி

**/ பிம்ப அபரோக்ஷ சந்தி**

**ஹரிகதா2ம்ருதசார கு3ருக3ள**
**கருணதிந்தா3பநிது பே1ளுவே**
**பரம ப4கவத்3ப4க்தரித3னாத3ரதி கேளுவுது3**

மமைவாம்ஷோ ஜீவஷோகே ஜீவபூத: ஸனாதன: || என்னும் கீதை வாக்கியத்திற்கேற்ப, பரமாத்மனின் அம்சமே ஜீவரூபமாக இருக்கிறது. அம்சர்களில், ஸ்வ-அம்சர் என்றும் ப்ரதிபிம்பாம்சர் என்றும் இரு விதங்கள் உண்டு. பரமாத்மனின் ராமகிருஷ்ணாதி அவதாரங்களே ஸ்வாம்ஷ ரூபங்கள். ஜீவர்கள் பிரதிபிம்பாம்ஷர்கள் என்று அறியவேண்டும். இந்த சந்தியில் எந்த பிரதிபிம்ப ஜீவர்களுக்கு எந்த ரூபத்தினால் பிம்பரூபியாக இருக்கிறான் என்பதை சொல்கிறார்.

**முக்தபி3ம்ப3னு துரிய ஜீவ**
**ந்முக்தபி3ம்ப3னு விஷ்வ ப4வஸம்**
**ஸக்தபி3ம்ப3னு தைஜஸனு அஸ்ருஜ்யரிகெ3 ப்ராக்3ஞ |**
**ஷக்தனாத3ரு ஸரியே ஸர்வோ**
**த்ரிக்த மஹிமனு து3க்க2 ஸுக2க3ள**
**வ்யக்த மாடு3தலிப்ப கல்பாந்த்யத3லி ப3ப்பரிகெ3 ||1**

முக்த = முக்த ஜீவர்களுக்கு
துர்ய = துர்ய மூர்த்தி
பிம்பனு = பிம்ப மூர்த்தி
ஜீவன்முக்த = பிம்ப அபரோக்ஷம் ஆனவர்களுக்கு
விஷ்வ = விஷ்வமூர்த்தியே பிம்பன்
பவஸம்ஸக்த பிம்பனு = சம்சாரத்தில் இருப்பவர்களுக்கு பிம்பன், தைஜஸன்
அஸ்ருஜ்யரிகெ = ஸ்ருஷ்டிக்கு இன்னும் வராதவர்களுக்கு
ப்ராக்ஞ = ப்ராக்ஞ மூர்த்தி பிம்பன்
ஷக்தனாதரு சரியே = ஸ்ருஷ்டி ஆகியவற்றை செய்யாமலேயே ஜீவர்களுக்கு சுகதுக்காதிகளைக் கொடுக்கும் சக்தி இருந்தாலும், அவன் சத்யசங்கல்பன் ஆகையால்,
சர்வோத்ரிக்த மஹிமனு = அனைவரைவிடவும் அதிகமான மகிமைகளை உடையவன் பரமாத்மன்
கல்பாந்ததலி = பிரம்ம கல்பத்தின் இறுதியில்
பப்பரிகெ = அவரவர்களின் யோக்யதைக்கேற்ப சாதனையை செய்து வருபவர்களுக்கு
துக்கசுககள = அவரவர யோக்யதைக்கேற்ப சுக துக்கங்களை

வ்யக்திமாடுதலிப்ப = சாத்விகர்களுக்கு ஸ்வரூபானந்தத்தையும், ராஜசர்களுக்கு சுகதுக்க மிஸ்ரமான சம்சாரத்தையும், தாமசர்களுக்கு அந்தம்தமஸில் துக்கத்தையும் கொடுக்கிறான்

முக்தர் ஆனவர்களுக்கு துர்ய நாமக பரமாத்மனே பிம்ப மூர்த்தி. லிங்க பங்கம் ஆகாமல், பிம்பாபரோக்ஷம் ஆனவர்களுக்கு விஷ்வ நாமக பரமாத்மன் பிம்பன். இந்த கல்பத்தில் ஸ்ருஷ்டிக்கு வராமலேயே இருப்பவர்களுக்கு ப்ராக்ஞ நாமக பரமாத்மன் பிம்பன். ப்ரம்மாதி சகல தேவதைகளைவிட உத்தமனான, மகா மகிமைகளைக் கொண்ட ஸ்ரீஹரி, ஸ்ருஷ்ட்யாதிகளை செய்யாமலேயே அவரவர்களுக்கு ஸ்வரூபபூதமான சுக துக்கங்களைக் கொடுக்கும் தகுதி கொண்டவனாக இருந்தாலும், சத்யசங்கல்பன் அவரவரின் யோக்யதைக்கேற்ப அவரவர்களிடமிருந்து செயல்களை செய்வித்து, கல்பத்தின் முடிவில் அவரவர்களின் செயல்களுக்கேற்ப சுக துக்க மிஸ்ர என்னும் மூன்று வித பலன்களை மூன்று வித ஜீவர்களுக்கு கொடுக்கிறான்.

முக்தானாம் பிம்ப ரூபஸ்து துர்யோ விஷ்வோபரோக்ஷிணாம் ||
ஸம்ஸாரிணாம் தைஜஸ ஸ்த்வ ஸ்ருஜ்யானாம் ப்ராக்ஞ உச்யதே ||

என்னும் சார சங்க்ரஹ வாக்கியம், இந்த பத்ய அர்த்தத்தையே சொல்கிறது.

**அன்னனாமக ப்ரக்ருதியொளக$^{3}$**
**ச்சி$^{2}$ன்ன வாகி$^{3}$ஹ ப்ராக்$^{3}$ஞனாமதி$^{3}$**
**ஸொன்னொட$^{3}$ல மொத$^{3}$லாத$^{3}$வரொளன்னாத$^{3}$ தைஜஸனு |**
**அன்னத$^{3}$ம்பு$^{3}$ஜனாப$^{4}$ விஷ்வனு**
**பி$^{3}$ன்னனாம க்ரியெக$^{3}$ளிந்த$^{3}$லி**
**தன்னொளகெ$^{3}$ தா ரமிப பூர்ணானந்த$^{3}$ ஞானக$^{4}$ன ||2**

அன்னனாமக = அன்ன நாமகனான ஸ்ரீபரமாத்மன்
ப்ராக்ஞ நாமதி = ப்ராக்ஞ என்னும் பெயரால்
ப்ரக்ருதியொளகெ = ப்ரக்ருதி என்னும் பெயர் கொண்ட ஸ்ரீதேவியரிடம்
அச்சின்னவாகிஹ = தன்னை வெளிப்படுத்திக் கொள்ளாமல் வசிக்கிறான்
ஸொன்னொடல = பிரம்மதேவர்
மொதலாதவரொள = முதலான தேவதைகளில்
அன்னாத = அன்னாத நாமக பரமாத்மன்
தைஜஸனு = தைஜஸ நாமகனாக இருந்து
அன்னத = அன்னத என்னும் பெயர் உள்ள
அம்புஜனாப = பத்மனாபன்
விஷ்வ = விஷ்வ நாமகனாகவும்
பின்ன நாம க்ரியெகளிந்தலி = வெவ்வேறு பெயர்களாலும், வெவ்வேறு செயல்களாலும்
பூர்ணானந்த ஞானகன = பூர்ணானந்த ஸ்வரூபனான ஹரி
தன்னொளகெ தாரமிப = தனக்குள் தானே மகிழ்ச்சியாக இருக்கிறான்

அன்ன நாமகனான ஸ்ரீஹரி, ப்ரக்ருதியில் ப்ராக்ஞ என்னும் பெயரால், மற்றவர்களின் கண்களுக்குத் தெரியாமல் மறைந்திருக்கிறான். அன்னாத என்னும் ஸ்ரீஹரி, தைஜஸ நாமத்தினால், பிரம்மாதிகளில் இருந்து, அன்னத்தை உண்கிறான். அன்னத என்னும் ஸ்ரீஹரி, விஷ்வ நாமகனாகி அனேகமான நாம ரூபங்களால், வெவ்வேறு ஜீவர்களில் இருந்து, அன்னப்ரதனாக, தனக்குள் தானே மகிழ்ச்சியாக இருக்கிறான்.

**பூ4தி3யொள க3டகி3ப்பனலனோ**
**பாதி3 சேதன ப்ரக்ருதியொளு அ**
**ந்னாத3 அன்னாஹ்வயதி3 கரெஸுவ பி3ரம்ம ஷிவ ரூபி ।**
**ஓத3னப்ரத3 விஷ்ணு பரமா**
**ஹ்லாத3 நீவுத3 த்ருப்திப3டி3ஸுவ**
**கா3த4 மஹிமன சித்ரகர்மவனாவ ப3ண்ணிஸுவ ||3**

பூதியொள கடகிப்பனலனோபாதி = சாம்பல் மூடிய கங்கினைப் (கங்கு) போல
சேதன = அனைத்து ஜீவர்களில்
ப்ரக்ருதியொளகெ = ஜட ப்ரக்ருதியில்
அன்னாஹ்வயதி = அன்ன என்னும் பெயரில் இருக்கிறான்
பிரம்மஷிவரூபி = பிரம்ம ரூபத்தினாலும், ருத்ர ரூபத்தினாலும் அவர்கள் இருவரில்
அன்னாதனு = அன்னாத என்னும் பெயரில் இருந்து, அன்னத்தை ஏற்றுக் கொள்கிறான்.
விஷ்ணு = விஷ்ணு ரூபத்தினால்
ஓதனப்ரத = அன்னத என்னும் பெயரால்
பரமாஹ்லாத நீவுத = அனைத்து பிராணிகளுக்கும் அன்னத்தைக் கொடுத்தவாறு, அதன் மூலம் அவர்களுக்கு மிக்க மகிழ்ச்சியைக் கொடுத்து
த்ருப்திபடிசுவ = த்ருப்தியைக் கொடுக்கிறான்
அகாத மஹிமன = இத்தகைய எல்லைகளற்ற மகிமைகளைக் கொண்ட பரமாத்மனின்
சித்ரகர்மவ = விசித்ர வியாபாரங்களை
ஆவபண்ணிஸுவ = வர்ணிப்பதற்கு யாரால் சாத்தியம்?

சாம்பல் மூடிய கங்கினைப் போல, ஸ்ரீஹரி அன்ன நாமகனாக ஸ்ரீதேவியில் அடங்கியிருக்கிறான். அன்னாத என்னும் பெயரில், பிரம்ம தேவரிலும், ருத்ர தேவரிலும், பிரம்மரூப ருத்ரரூபத்தினால் அன்னத்தை உண்கிறான். விஷ்ணு ரூபத்தினால் அன்னத என்னும் ஸ்ரீஹரி, அனைவருக்கும் அன்னத்தைக் கொடுத்து, அவர்களுக்கு பரம மகிழ்ச்சியைக் கொடுத்து, த்ருப்திப்படுத்துகிறான். இத்தகைய அபாரமான மகிமை உள்ள பரமாத்மனின் விசித்ரமான கர்மங்களை வர்ணிப்பதற்கு யாரால்தான் சாத்தியம்? ரமா பிரம்ம ருத்ராதிகளாலேயே அது முடியாது. அப்படி இருக்கையில், மற்றவர்களின் பாடுதான் என்ன? என்பது கருத்து.

**நாத3 போ4ஜன ஷப்3த3தொ3ளு பி3ன்**

**தோ3த3னோத3கதொளகெ3 கோ4ஷ2னு**
**வாத3தொ3ளு ஷாந்தாக்2ய ஜட2ராக்3னியொளு இருதிப்ப |**
**வைதி3க ஸுஷப்த3தொ3ளு புத்ர ஸ**
**ஹோத3ரானுக3 ரொளதிஷாந்தன**
**பாத3க1மலனவரத சிந்திஸு ஈ பரியலிந்த3 ||4**

போஜன ஷப்ததொளு = உணவு உண்ணும்போது வரும் சத்தத்தில்
நாத = நாத ரூபத்தினாலும்
ஓதனோதகதொளகெ = அன்ன மற்றும் தண்ணீர் இவற்றில்
பிந்து = பிந்து ரூபத்தினாலும்
வாததொளு = பகவத்குணங்களை விளக்கும்போது வரும் சத்தத்தில்
கோஷனு = கோஷ ரூபத்தினாலும்
ஜடராக்னியொளு = பிராணிகளின் வயிற்றில் இருந்து அன்னாதிகளை ஜீரணம் செய்யும் ஜடராக்னியில்
ஷாந்தாக்ய = ஷாந்த நாமகன்
இருதிப்ப = வசிக்கிறான்
வைதிக சுஷப்ததொளு = வேத அத்யயனம் செய்யும்போது வெளிவரும் சத்தத்திலும்
புத்ர, சஹோதர = அண்ணன் தம்பியர்
அனுக = உற்றார் உறவினர் ஆகியோர்
அதிஷாந்தன = அதிஷாந்த நாமகனான ஸ்ரீஹரி
பாதகமல = பாத கமலங்களை
ஈ பரியலிந்த = மேலே கூறிய விதமாக
அனவரத = அனைத்து காலங்களிலும் சிந்திக்க வேண்டும்

பரமாத்மன் ப்ரணவத்தில் அதாவது 'ஓம்' என்னும் எழுத்தில் இருக்கும் அகார, உகார, மகாரங்களில், நாத, பிந்து, கோஷ நாமகனாக இருப்பது மட்டுமல்லாமல், போஜனாதி சப்தங்களில் இருக்கிறான் என்று சிந்திக்க வேண்டும்.

* போஜன சப்தத்தில் நாத ரூபியான பரமாத்மனை,
* அன்ன உதகங்களில் பிந்து நாமகனை
* சாஸ்திரங்களின் வாதத்தில் கோஷ நாமகனை,
* ஜடராக்னியில் ஷாந்த ரூபியை
* வேத அத்யயனம் செய்யும்போது வரும் சத்தத்தில், மக்கள், அண்ணன் தம்பியர், உற்றார் உறவினர் ஆகியோரில் அதிஷாந்த நாமகனை அறிந்து, அனைத்து காலங்களிலும், இவ்விதமாக பாத கமலங்களை சிந்திக்க வேண்டும் என்பது கருத்து.

நாதாபிமானி க்ரோடஸ்து போஜன ஸ்தரவேஷுச |
பிந்துமானி விஷ்ணுதேவோ ஜலான்ன ஸ்தோத்ரிவ்ருத் ப்ரபு: ||
கோஷா நாவாதஷப்தேஷு ஷாந்தாக்யோ ஜடரேஸ்தித: ||
புத்ரமித்ர களத்ராதௌ வேத சாஸ்திரேஷு சர்வதா ||

அதிஷாந்தாக்ய கிருஷ்ணஸ்ய பாதபத்மம் நிபோதய ||

என்னும் ப்ரமேய ரத்னாகர வாக்கியம், மேற்சொன்ன வாக்கியங்களுக்கு ஆதாரமாக இருக்கிறது.

**வேத$^3$மானி ரமானுபாஸ்ய கு$^3$**
**ணோத$^3$தி$^4$ கு$^3$ணத்ரய விவர்ஜித**
**ஸ்வோத$^3$ரஸ்தி$^2$த நிகி$^2$ல பிரம்மாண்டா$^3$த் விலக்ஷணனு |**
**ஸாது$^4$ஸம்மத வெனிஸுதிஹ நிஷு**
**ஸீத$^3$ க$^3$ணபதெ எம்ப$^3$ ஸ்ருதி ப்ரதி**
**பாதி$^3$ஸுவுத$^3$ன வரத$^1$வன கு$^3$ண ப்ராந்தகா$^3$ணத$^3$லெ ||5**

வேதமானி = வேதாபிமானியான
ரமா = ரமாதேவியராலும்
அனுபாஸ்ய = உபாசனை செய்வதற்கு
அஸாத்யவாத = சாத்தியமில்லாத
குணோததி = குணசமுத்திரன்
குணத்ரயவிவர்ஜித = ப்ராக்ருத குணங்கள் இல்லாதவன்
ஸ்வோதரஸ்தித = தனது உதரத்தில் இருக்கும்
நிகில = அனைத்து
பிரம்மாண்டாத் விலக்ஷணனு = பிரம்மாண்டத்திலிருந்து வேறுபட்டவன்
ஸாதுசம்மதவெனிஸுதிஹ = சாதுகள் அனைவரும் ப்ரமாணத்தின் ஆதாரத்தில் அங்கீகரிக்கும்
நிஷுஸீத கணபதி எம்ப = நிஷுஸீத கணபதி என்னும்
ஸ்ருதி = ஸ்ருதி
அனவரத = அனைத்து காலங்களிலும்
அவனகுண = பரமாத்மனின் குணங்களை
ப்ராந்தகாணதலெ = எல்லையைக் காணமுடியாமல்
ப்ரதிபாதிசுவரு = சர்வோத்தமன்; அனைத்தையும் செய்பவன்.

வேதாபிமானியான ரமாதேவியாலும்கூட, பரமாத்மனின் குணங்களின் எல்லைகளைக் கண்டு, அவற்றை உபாசனை செய்வதற்கு அசாத்தியமாக இருக்கிறது. பரமாத்மன் சத்வாதி ப்ராக்ருத குணங்களால் கட்டுப்படாதவன். தன் வயிற்றில் இருக்கும் பிரம்மாண்டத்திலிருந்து வேறுபட்டவன். அனைத்து சஜ்ஜனர்களும், ஆதாரம் என்று ஒப்புதல் அளிக்கும் 'நிஷுஸீத கணபதி' என்னும் ஸ்ருதி, பரமாத்மனின் அனந்த குணங்களை ஸ்துதித்து, அவன் அனந்தகுண பரிபூர்ணன் என்பதை எப்போதும் தெளிவாக வலியுறுத்துகிறது.

தாசார்யர் இந்த பத்யத்தில் உதாரணம் சொல்லியிருக்கும் ஸ்ருதி:

நிஷுஸீத கணபதே கணேஷுத்வாமஹுர் விப்ரதமம் கவீனாம் |
நருதே த்வத்க்ரீயதே கிஞ்சனாரே மஹாமர்க்கம் மகவன் சித்ரமர்ச்ச ||

இதன் பொருள்:
ஹே கணபதி: இந்திரியாபிமானி தேவதைகளின் கணத்திற்கு அதிபதியே! உன்னை ஞானிகள் இந்திரியாபிமானிகளில் உத்தமன் என்று சொல்கிறார்கள். உன்னை (வணங்காமல்) விட்டால், எந்த வேலையும் யாராலும் செய்வதற்கு சாத்தியமில்லை. நீ ரமா பிரம்மாதி தேவதைகளில் இருந்து உன் பூஜையை நீயே செய்து கொள்கிறாய். அயோக்யர்களில் இருந்து அவர்களின் த்வேஷாதிகளை நீயே செய்விக்கிறாய். அது அவர்களுக்கு தமஸ் சாதனையாகிறது. முக்கியமாக, அனைத்து கர்த்ருத்வமும் உனதாகவே இருக்கிறது.

இதுவே அந்த ஸ்ருதியின் கருத்து. ஸ்ருதி அர்த்தத்திற்கும், இந்த பத்யத்தின் அர்த்தத்திற்கும் என்ன சம்பந்தம் என்றால், ஸ்ருதியின் முக்கியக் கருத்து, பாகவத ஸ்ருதிகீதையின் தாத்பர்யத்தில்:

ஸ்ரீபிரம்ம ருத்ர பூர்வேஷு க்ரமாத் ஸ்தித்வா ஜனார்த்தன: ||
ஸ்வாத்மான மர்சயத்யத்தா பஹிரந்தர ஸத்ஸுச ||

ரமா பிரம்மாதிகளில் இருந்து முறையே தன்னை பூஜித்துக் கொள்கிறான். உள்ளேயும் வெளியேயும் வியாப்தனாக இருந்து, யோக்யர்களிடமிருந்து பூஜையையும், அயோக்யர்களிடமிருந்து த்வேஷத்தையும் தானே செய்து, செய்விக்கிறான் என்பது இந்த ஸ்லோகத்தின் பொருள்.

ஸ்ருதியின் பொருளும் இதுவே ஆகிறது. சர்வகர்த்ருத்வம் பரமாத்மனுடையது என்று சொன்னதால், ரமா பிரம்மாதிகளைவிட உத்தமன் என்று சொன்னதாக ஆயிற்று. இந்த அபிப்பிராயத்தை மனதில் வைத்துக்கொண்டே தாசார்யர், இந்த ஸ்ருதியை உதாரணம் கொடுத்திருக்கிறார் என்று அறியவேண்டும்.

**கரெஸுவனு மாயாரமண தா**
**புருஷரூபதி$^{3}$ த்ரிஸ்த$^{2}$லக$^{3}$ளொளு**
**பரம ஸத்புருஷார்த்த$^{2}$த$^{3}$ மஹத் தத்வதொ$^{3}$ளகி$^{3}$த்து$^{3}$ |**
**ஸரஸிஜ ப$^{4}$வாண்ட$^{3}$ஸ்தி$^{2}$த ஸ்த்ரீ**
**புருஷ தன்மாத்ரக$^{3}$ள ஏகோ**
**த்தர த$^{3}$ஷேந்த்$^{3}$ரியக$^{3}$ள மஹாபூ$^{4}$தக$^{3}$ள நிர்மிஸித$^{3}$ ||6**

மாயாரமண = மாயாபதியான ஸ்ரீவாசுதேவ மூர்த்தி
த்ரிஸ்தலகளொளு = ஸ்வேதத்வீப முதலான மூன்று இடங்களிலும்
தா = தான்
புருஷரூபதி = புருஷ ரூபத்தில் இருந்து
பரம ஸத்புருஷார்த்தத எந்து கரெசுவனு = முக்தர்கள் ஆனவர்களுக்கு, ஸ்வரூப ஆனந்தத்தைக் கொடுப்பவன் என்று அழைத்துக் கொள்கிறான்
மஹத்தத்வதொளித்து = மஹத் தத்வத்தில் இருந்து
ஸரஸிஜ பவாண்டஸ்தித = பிரம்மாண்டத்தின் உள் இருக்கும்
ஸ்த்ரி புருஷ,
தன்மாத்ர = ஷப்த ஸ்பர்ஷாதி தன்மாத்ரா குணங்களை

ஏகோத்தர தஷேந்திரியகள = 11 இந்திரியங்களை (கர்மேந்திரியங்கள் 5

ஞானேந்திரியங்கள் 5 மனஸ் 1)
மஹாபூதகள = பஞ்சமஹாபூதங்களை
நிர்மிஸித = படைத்தான்.

மாயாபதியான லட்சுமிபதியான ஸ்ரீவாசுதேவன், ஸ்வேதத்வீப, அனந்தாஸன, வைகுண்ட என்னும் மூன்று இடங்களில் இருந்துகொண்டு, முக்த ஜனர்களுக்கு அனைத்து புருஷார்த்தங்களையும் கொடுக்கிறான். ஸ்ருஷ்டி காலத்தில் புருஷ ரூபத்தை ஏற்று, மஹத் தத்வத்தில் இருந்து, பிரம்மாண்டத்தில் இருக்கும் ஸ்த்ரி, புருஷ, ஆகியோரை, மனஸ், ஞானேந்திரியங்கள் 5, கர்மேந்திரியங்கள் 5, பஞ்ச மஹாபூதங்கள் தன்மாத்ர குணங்கள் ஆகியவற்றை படைத்தான்.

பரமாத்மன் மூன்று முறை, மூன்று புருஷ ரூபங்களை ஏற்றுக்கொண்டு இருக்கிறான். முதலில் மாயா நாமகனான லட்சுமிதேவியில், புருஷ நாமகனாக வீர்யாதானம் செய்தான் என்று பாகவத வாக்கியம் உள்ளது.

இரண்டாவது முறை, பிரம்மதேவருக்கு சரீரபூதமான மஹத் தத்வத்திலும், பிரம்மாண்டத்திலும் இருக்கும் ரூபம். அந்த ரூபத்தினாலேயே இந்திரியங்களின் ஸ்ருஷ்டி ஆகியிருக்கிறது என்பது கருத்து.

மூன்றாவது அடுத்த பத்யத்தில் வருகிறது.

**ஈ ஷரீரக$^{3}$ புருஷ த்ரிகு$^{3}$ணதி$^{3}$**
**ஸ்ரீஸஹித தானித்து$^{3}$ ஜீவரி**
**கா$^{3}$ஸெ லோபா$^{4}$க்ஞான மத$^{3}$ மத்ஸர குமோஹ க்ஷுத |**
**ஹாஸ ஹருஷ ஸுஷுப்தி ஸ்வப்ன பி$^{1}$**
**பா$^{1}$ஸ ஜாக்$^{3}$ருதி ஜன்ம ஸ்தி$^{2}$தி ம்ருதி**
**தோ$^{3}$ஷ புண்ய ஜயாபஜய த்$^{3}$வந்த்$^{3}$வக$^{3}$ள கல்பிஸித$^{3}$ ||7**

ஈ ஷரீரக = அனைத்து பிராணிகளின் தேகத்தில் நிலைத்திருக்கும்
புருஷ = புருஷ நாமகன்
த்ரிகுணதி = சத்வ ரஜஸ் தமோ குணங்களில்
ஸ்ரீஸஹித = ஸ்ரீ, பூ, துர்கா சமேதனாக இருந்து
ஜீவரிகெ = ஜீவர்களுக்கு
ஆஷெ = ஆசை
லோப = கஞ்சத்தனம்
அக்ஞான = அஞ்ஞானம்
மத = கர்வம்
மத்ஸர = பொறாமை
குமோஹ = பேராசை
க்ஷுத = பசி
ஹாஸ = சிரிப்பு

ஹருஷ = மகிழ்ச்சி
சுஷுப்தி = தூக்கம்
ஸ்வப்ன = கனவு
பிபாஸ = தாகம்
ஜாக்ரதெ = முழிப்பு
ஜன்ம = பிறப்பு
ஸ்திதி = காத்தல்
ம்ருதி = மரணம்
தோஷ, பாப, புண்ய,
ஜய அபஜய = வெற்றி தோல்வி
த்வந்த்வகள = இது போன்ற த்வந்த்வங்களையும்
கல்பிஸித = கற்றுத் தந்தான்

அனைத்து பிராணிகளின் தேகத்திலும் புருஷ ரூபத்தினால் பரமாத்மன், த்ரிகுணாத்மகரான ஸ்ரீதேவி, பூதேவி, துர்காதேவி ஆகியோருடன் கூடி, தான் இருந்து, ஜீவர்களுக்கு ஆசை, கஞ்சத்தனம், சுக துக்க முதலான த்வந்தவங்களையும் கற்றுத் தந்தான்.

**த்ரிவித[4] கு[3]ணமயதே[3]ஹ ஜீவகே[1]**
**கவசத[3]ந்த[3]தி[3] தொடி[3]ஸி கர்ம**
**ப்ரவஹதொ[3]ளு ஸஞ்சார மாடி[3]ஸுதிப்ப ஜீவரன ।**
**கவிஸி மாயாரமண மோஹவ**
**ப[4]வக்கெ காரணனாகு[3]வனு ஸம்**
**ஸ்ரவண மனனவ மாள்பரிகெ[3] மோசகனெனிஸுதிப்ப ||8**

த்ரிவித குணமய = சாத்விக, ராஜஸ, தாமஸ எனும் மூன்று விதமான
ஜீவகெ = ஜீவர்களுக்கு
தேஹ = தேகங்களை
கவசதந்ததி = கவசத்தைப் போல
தோடிஸி = இணைத்து
கர்ம ப்ரவஹதொளு = கர்ம பிரவாகத்தில்
ஜீவரனு = ஜீவர்களை
சஞ்சார மாடிசுதிப்ப = சஞ்சாரம் செய்ய வைக்கிறான்
மாயாரமண = மாயாபதியான வாசுதேவன்
மோஹவ கவிஸி = மோகத்தினால் அவர்களை சுற்றி
பவகெ = சம்சாரத்திற்கு
காரணனாகுவனு = காரணன் ஆகிறான்
ஸ்ரவண மனனவ மாள்பரிகெ = (பகவன் மகிமைகளைப் பற்றி) கேட்டு, மனனம் செய்பவர்களுக்கு
மோசகனெனிஸுதிப்ப = மோட்சத்தைக் கொடுப்பவன் என்று அழைத்துக் கொள்கிறான்.

லிங்கதேகத்திலிருந்து முக்தரான த்ரிவித ஜீவர்களின் மேல் ஒரு கவசத்தைப் போட்டதைப் போல, ஸ்தூல தேகத்தைக் கொடுத்து, அவர்களை கர்ம பிரவாகத்தில் சஞ்சாரம் செய்விக்கிறான். மாயாரமணனான ஸ்ரீவாசுதேவன், ஆசையால் அவர்களை மயக்கி, அவர்களை சம்சாரத்தில் மூழ்க வைக்கிறான். பகவத் கதா ஸ்ரவண, மனன ஆகியவற்றை செய்பவர்களால், பகவந்தன் மகிழ்ந்து, அவர்களை சம்சாரத்திலிருந்து முக்தர்களாக ஆக்குகிறான்.

**ஸாஷனாஹ்வய ஸ்த்ரி புருஷரொளு**
**வாஸவாகி³ஹனெந்த³ரிது³ வி**
**ஷ்வாஸபூர்வக ப⁴ஜிஸி தோஷி²ஸி ஸ்வாவரோத்தமர ।**
**க்லேஷனாஷன அசலக³ளொளு ப்ர**
**காஷிஸுதலிஹனஷன ரூபோ**
**பாஸனவ மாள்பரிகெ³ தோர்ப்பனு தன்ன நிஜரூப ।।9**

சாஷனாஹ்வய = போஜனாதிகளை செய்யும் ஸ்வபாவம் கொண்டவர்கள் ஆகையால், சல (நடமாடும் உயிருள்ள) பிராணிகளுக்கு ஸாஷனர் என்று பெயர்.
ஸ்த்ரி புருஷரொளு = பரமாத்மன், ஸ்த்ரியர்களிலும், புருஷர்களிலும்
வாசவாகிஹனெந்தரிது = வசிக்கிறான் என்பதை அறிந்து
விஷ்வாஸ பூர்வக பஜிஸி = நம்பிக்கையுடன் அவனை வணங்கி
ஸ்வாவர = உங்களைவிட குறைவானவரை, உங்களைவிட உத்தமமானவர்களையும்
தோஷிஸி = மகிழ்ச்சிப்படுத்துங்கள்
க்லேஷனாஷகனு = கஷ்ட பரிகாரகனான ஸ்ரீஹரி
அசலகளொளு = மலை, சாலிகிராமம் முதலானவற்றில்
அனஷனரூப = ஆகாரம் இல்லாததால் அஷன என்னும் பெயர் கொண்டவனாக
ப்ரகாஷிஸுதலிஹ = ஒளி பொருந்தியிருக்கிறான்
உபாஸனா மாள்பரிகெ = மேற்கூறியவாறு, சலாசல பிராணிகளில் சாஷன என்றும், அனஷன என்றும் ரூபங்களால் பகவந்தன் இருக்கிறான் என்று உபாசனை செய்பவர்களுக்கு
தன்ன நிஜரூப = தன் நிஜ ரூபத்தை
தோர்ப்பனு = காட்டுகிறான்.

போஜன, பானாதிகளை செய்பவர்கள், சாஷனர் என்றும், அது இல்லாதவர்கள் அனஷன என்றும் அழைத்துக் கொள்வர். சல பிராணிகள் சாஷனர். அசல பிராணிகள் அனஷனர் என்று அறியவேண்டும். சல பிராணிகளில் மனுஷ்யர் உத்தமர். உலகத்தில் இருக்கும் சாமான்ய ஸ்த்ரி, புருஷர்களில், சாஷன நாமகனாக பரமாத்மன் வசிக்கிறான் என்று அறிந்து, நம்பிக்கையுடன் வாழ்ந்து, தன்னைவிட கல்வி, ஞானம் முதலான விஷயங்களில் குறைவானவர்கள், தன்னைவிட உத்தமர்களில்கூட அவர்களில் சாஷன நாமக பரமாத்மனை சிந்தித்து, அனைவரையும் மகிழ்ச்சிப்படுத்த வேண்டும்.

கஷ்டங்களைப் போக்குபவனான ஸ்வாமி, அசலமான பர்வதம், சாலிகிராமம் ஆகியவற்றில் அனஷன நாமகனாக இருக்கிறான் என்று சிந்தித்து உபாசனை செய்ய வேண்டும். இப்படியாக உபாசனை செய்பவர்களுக்கு, ஸ்ரீஹரி, தன் நிஜ ஸ்வரூபத்தைக் காட்டுகிறான்.

**ப்ரகர த³ந்தர சிந்திஸுவுதீ³**
**ப்ரக்ருதியொளு விஸ்வாதி³ ரூபவ**
**ப்ரகடமாள்பெனு யதா²மதியொளு கு³ருக்ருபாப³லதி³ |**
**முகுரனிர்மித ஸத³னதொ³ளு பொகெ³**
**ஸ்வகியரூபவ காம்ப³ தெரத³லி**
**அகுடிலாத்ம சராசரதி³ ஸர்வத்ர தோருவனு ||10**

ப்ரகாராந்தர = இன்னொரு விதமாக
சிந்திஸுவுது = சராசராத்மக பிரபஞ்சத்தில் பரமாத்மனின் வியாப்தியை சிந்திக்க வேண்டும்.
ஈ ப்ரக்ருதியொளு = இந்த ப்ரக்ருதியில்
விஸ்வாதி = விஸ்வ, தைஜஸ, முதலான ரூபங்களை உபாசனை செய்யும் விதத்தை
க்ருக்ருபாபலதி = நம் குருகளின் க்ருபாபலத்தினால்
யதாமதியொளு = நம் புத்திக்கு எட்டும் வரைக்கும்
ப்ரகடமாள்பெ = சொல்கிறேன்
முகுர நிர்மித சதனதொளு = கண்ணாடியால் இழைக்கப்பட்ட வீட்டில்
போகெ = யாராவது ஒருவர் சென்றால்
ஸ்வகியரூப காம்ப தெரதலி = தன் பிரதிபிம்ப ரூபத்தையே தான் காண்பதைப் போல
ஆகுடிலாத்மக = வக்ர ஸ்வபாவம் உள்ள, ருஜு ஸ்வபாவாத்மகனான ஸ்ரீஹரி
சராசரதி = சரமான மனுஷ்யாதிகள், அசரமான பர்வதாதிகள் இவற்றில்
சர்வத்ர தோருவனு = என அனைத்து இடங்களிலும் காட்டிக் கொள்கிறான்.

பரமாத்மனின் ரூபங்களை அனைத்து இடங்களிலும் சிந்திக்க வேண்டும். ப்ரக்ருதியில் விஷ்வாதி ரூபங்களால், பரமாத்மன் இருக்கிறான். நம் குருகளின் க்ருபா கடாக்ஷத்தினால், ப்ரக்ருதியில் விஷ்வாதி ரூபத்தை சிந்திக்கும் விதங்களை, எனக்கு தெரிந்தவரை விளக்குகிறேன்.

கண்ணாடியால் வீடு கட்டி, அந்த வீட்டில் ஒருவன் நுழைந்தால், நான்கு திசைகளிலும் கண்ணாடி இருப்பதால், ஒரு கண்ணாடிக்கு இன்னொரு கண்ணாடி பிரதிபிம்பமாகி, 4 திசைகளிலும் அவன் ரூபமே அனந்தமாக தெரியும். சென்றவன் ஒருவனே ஆனாலும், எதிரெதிரே கண்ணாடிகள் இருப்பதால், அனந்த ரூபங்கள் தெரிவதைப்போல, பரமாத்மன் சரசராத்மக ப்ரபஞ்சத்தில் ஸ்வரூப பூதமான சரீரோபாதியினால் அனந்தானந்த ரூபியாக தெரிகிறான்.

**பரிச்சேதத்ரய ப்ரக்ருதிக³ளொள**

**கி$^{3}$ருதிஹனு விஷ்வாதி$^{3}$ ரூபவ**
**த$^{4}$ரிஸி ஆத்மாதி$^{3}$ த்ரிரூபதி$^{3}$ ஈஷணத்ரயதி$^{3}$ ।**
**ஸுருசி ஞானாத்ம ஸ்வரூபதி$^{3}$**
**துரிய நாமக வாஸுதே$^{3}$வன**
**ஸ்மரிஸு முக்திஸுக$^{2}$ப்ரதா$^{3}$யக$^{3}$ நீதனஹுதெந்து$^{3}$ ।।11**

பரிச்சேத த்ரய ப்ரக்ருதிகளொளகெ = சத்வ பரிச்சேத, ரஜஸ் பரிச்சேத, தமோ பரிச்சேத என்னும் மூன்று பரிச்சேதங்கள் உள்ள ப்ரக்ருதியில்
விஷ்வாதி ரூபவ = விஷ்வ, தைஜஸ, ப்ராக்ஞ என்னும் மூன்று ரூபங்களை
தரிஸி = தரித்து
இருதிஹனு = இருக்கிறான்
ஈஷணத்ரயதி = தாரேஷண, புத்ரெஷண, வித்தேஷண என்னும் ஈஷண த்ரயத்தில்
ஆத்மாதி த்ரிரூபவ = ஆத்ம, அந்தராத்ம, பரமாத்ம என்னும் மூன்று ரூபங்களை தரித்து இருக்கிறான்
ஸுருசி = விசேஷமான ஒளி பொருந்தியவனான ஸ்ரீஹரி
ஞானாத்ம ஸ்வரூபதி = ஞானாத்ம ஸ்வரூபனாக
துர்ய நாமக = துரிய நாமகனான
வாசுதேவன = வாசுதேவ மூர்த்தியை
ஈதனு = இவனே
முக்திசுக ப்ரதாயக = முக்தி சுகத்தைக் கொடுப்பவன் என்று
அஹுதெந்து = அந்தந்த ரூபங்களை
ஸ்மரிஸு = நினை

ப்ரக்ருதி, மூன்று பரிச்சேதங்களால் ஆனவள். சத்வ பரிச்சேத, ரஜஸ் பரிச்சேத, தமோ பரிச்சேத என்னும் இந்த மூன்றில், விஷ்வ, தைஜஸ, ப்ராக்ஞ என்னும் மூன்று ரூபங்களால், ஸ்ரீபரமாத்மன் வசிக்கிறான். தாரேஷண, புத்ரேஷண, வித்தேஷண என்னும் ஈஷண த்ரயர்களில் ஆத்ம, அந்தராத்ம, பரமாத்ம என்னும் மூன்று ரூபங்களால் வசிக்கிறான். ஞானாத்ம ஸ்வரூபனாக, துர்ய, வாசுதேவ என்னும் ரூபங்களால் முக்தியைக் கொடுத்து சுகத்தைக் கொடுக்கிறான் என்று நினைக்க வேண்டும்.

**க$^{1}$மலஸம்ப$^{4}$வ ஜனக ஜட$^{3}$ ஜ**
**ங்க$^{3}$மரொளகெ$^{3}$ நெலெஸித்து$^{3}$ க்ரம வ்யு**
**த்க்ரமதி கர்மவ மாடி$^{3}$ மாடி$^{3}$ஸுதிப்ப பே$^{3}$ஸரதெ$^{3}$ ।**
**க்ஷம க்ஷாம ஸமீஹனாஹ்வய**
**ஸுமனஸாஸுரர ஔகெ$^{3}$ நமம**
**மம அஹம் எந்தி$^{3}$ உபாஸனெகெ$^{3}$ய்வ ப்ராந்தத$^{3}$லி ।।12**

கமலசம்பவ ஜனக = பிரம்மதேவரின் தந்தையான ஸ்ரீவாசுதேவன்
ஜட ஜங்கமரொளகெ = ஜட சேதனர்களிலும், த்ரிவிதரான சேதனர்களிலும்
நெலஸித்து = நிலைத்திருந்து
க்ரம = செய்ய வேண்டிய செயல், புண்யங்களை

வ்யுத்ரகமதி = அதன் எதிரான பாவங்களை
கர்மவ = இத்தகைய கர்மங்களை
பேசரதெ = சோர்வில்லாமல்
மாடி மாடிசுதிப்ப = செய்து, செய்விக்கிறான்
க்ஷம = மன்னிப்பவன் ஆகையால் க்ஷம என்றும்
க்ஷாம = ப்ரளய காலத்தில் அனைத்து பிராணிகளையும் சூக்ஷ்மரூப உள்ளவர்களாக மாற்றி, தன் வயிற்றில் வைத்துக் கொள்கிறான் ஆகையால், க்ஷாம என்றும்
ஸமீஹன = ஸ்ருஷ்ட்யாதி கர்மங்களை செய்வதில் விருப்பம் கொண்டிருப்பவன் ஆகையால், ஸமீஹன என்று பெயர்
இந்தப் பெயர்களால்,
ஸுமனஸாசுரரொளகெ = தேவதைகள், அசுரர்கள், நித்ய சம்சாரிகள் இந்த மூவரில் வசித்தவாறு
அஹம் = நானே பரமாத்மன் என்று தைத்யரிலும்
மம = என் மனைவி, மக்கள், என்னுடையவர்கள் என்னும் கர்வத்தினால் செயல்களை செய்யும் நித்ய சம்சாரிகளிலும்
நமம = அனைத்தும் பரமாத்மனுடையதே, எனது என்று ஒன்றும் இல்லை என்று சாத்விகரான தேவதைகளிலும்
ப்ராந்ததலி = இறுதிக் காலத்தில்
ஈ உபாசனெகெய்வ = செய்து செய்விக்கிறான்

ஸ்ரீவாசுதேவன், த்ரிவித ஜீவராசிகளிலும் இருந்து, புண்ய பாவங்களை செய்து செய்விக்கிறான். தேவதைகளில், க்ஷம என்னும் பெயரிலும், தைத்யர்களில் க்ஷாம என்னும் பெயரிலும் இருந்து, தைத்யரில் நானே ஈஸ்வரன், நானே போகி என்று அவர்களின் சாதனை முடியும் காலத்தில், தவறான உபாசனையை செய்து, செய்விக்கிறான்.

ராஜஸ ஜீவர்களில் இருந்து, தன் மனைவி, மக்கள் என்னும் கர்வத்தைக் கொடுத்து, அவர்களின் நலனுக்காக, பலன்களை எதிர்பார்த்து, உபாசனை செய்து செய்விக்கிறான்.

ஸாத்விகரான தேவதைகளில் இருந்து, அனைத்தும் பரமாத்மனுடையதே, அவன் ஸ்வதந்த்ரன், நான் பரதந்த்ரன் என்று உபாசனை செய்து செய்விக்கிறான். இறுதியில் அந்த உபாசனைகளை அனுசரித்து பலன்களைக் கொடுக்கிறான் என்பது கருத்து.

இதனால் ஜீவர்களுக்கு தங்களுடைய ஸ்வதந்த்ரத்தினால் ஒரு தூசியை நகர்த்தக் கூடியதான சக்தியையும், பரமாத்மன் கொடுத்தாலே ஒழிய கிடைக்காது என்று, உறுதியாக சொல்கிறார்.

**ஈ ஸமஸ்த ஜக³த்து ஈஷா**
**வாஸ்யவெனிபுது³ கார்யரூபனு**

**நாஷவாத3ரு நித்யவெ ஸரி காரண ப்ரக்ருதி**
**ஸ்ரீஷகெ3 ஜட3ப்ரதிமெயெனிபுது3**
**மாஸதொ3ம்மெகு3 ஸன்னிதா4னவு**
**வாஸவாகி3ஹ நித்ய ஷாலக்3ராமதோ3பாதி3 ||13**

ஈ ஸமஸ்த ஜகத்து = இந்த உலகம் முழுக்கவும்
ஈஷாவாஸ்யவெனிபுது = பரமாத்மனின் இருப்பிடமாக இருக்கிறது.
கார்யரூபவு = கார்ய ரூபமான இந்த ஜகத்
நாஷவாதரு = ப்ரளய காலத்தில் நாசம் அடைந்தாலும்
காரணப்ரக்ருதி = ப்ரபஞ்சத்தின் ஸ்ருஷ்டிக்கு காரணபூதளான ப்ரக்ருதி
நித்யவே ஸரி = நித்யமானவள்
கார்ய ரூபமான ப்ரபஞ்சமானது,
ஸ்ரீஷகெ = ஸ்ரீலட்சுமிபதிக்கு
ஜடப்ரதிமெயெனிபுது = ஜட ப்ரதிமை என்று சொல்லப்படுகிறது
ஸன்னிதானவு = அவரின் சன்னிதானம்
மாசதொம்மெகு = என்றும் குறையாது (அழியாது)
ஷாலக்ராமதோபாதி = சாலிகிராமத்தில் பகவந்தனின் சன்னிதானம் எப்போதும் இருப்பதைப் போல
நித்ய வாசவாகிஹ = எப்போதும் வசிக்கிறான்.

ஈஷாவாஸ்யமிதம் சர்வம் -- என்னும் ஈஷாவாஸ்ய உபநிஷத்தின் வாக்கியத்தைப் போல, இந்த ஜகத் அனைத்தும் ஸ்ரீபரமாத்மனின் இருப்பிடமே ஆகியிருக்கிறது. பானைக்கு காரணம் மண். காரிய ரூபம் பானை. பானை உடைந்தாலும், காரண ரூபமான மண், நித்யமாகவே இருப்பதால், அதிலிருந்து மறுபடி பானை செய்யமுடியும்.

அதைப்போலவே, ப்ரக்ருதியில் சேதன ப்ரக்ருதி, சேதன ஸ்ருஷ்டிக்கு காரணள். ஜடப்ரக்ருதி, ஜட ஸ்ருஷ்டிக்கு காரணரூபம். கார்யரூபமான ஜகத் நாசமடைந்தாலும், காரணரூப ப்ரக்ருதி நித்யமானதால் மறுபடி ஸ்ருஷ்டிக்க முடியும். ப்ரபஞ்சமானது ஜடசேதனங்களால் ஆனது. இதில், ஜடரூபமான ப்ரபஞ்சங்கள் அனைத்தும் பரமாத்மனுக்கு ஜடப்ரதிமை எனப்படுகின்றன. சேதனர்கள் அனைவரும் பரமாத்மனின் சேதனப்ரதிமை என்று முந்தைய பத்யத்தில் பார்த்தோம்.

கார்யரூப ப்ரபஞ்சம் இருக்கும் வரைக்கும், பரமாத்மனின் சன்னிதானம் இருந்தே இருக்கிறது. ப்ரளய காலத்திலும்கூட காரணத்தில் வசிக்கிறான். சாலிகிராமத்தில் எப்படி எப்போதும் அவனின் சன்னிதானம் இருந்தே இருக்கிறதோ, அப்படியே ப்ரபஞ்சத்திலும் அவனின் நித்ய சன்னிதானம் இருந்தே இருக்கிறது.

**ஏகமேவாத்2விதிய ரூப அ**
**நேக ஜீவரொளித்து3 தா ப்ர**
**த்யேக கர்மவ மாடி3 மோஹிஸூதிப்ப திளிஸத3லெ |**

**மூக வதி4ராந்தா4தி3 நாமதி3**
**ஈ களேவரதொ3ளகெ3 கரெஸுவ**
**மாகலத்ரன லௌகிக மஹாமஹிமெ கே3னெம்பெ3 ||14**

ஏகமேவ = சர்வ ஸ்வதந்த்ரமானதும், பரபிரம்ம நாமகமானதுமான வஸ்து ஒன்றே. அதாவது, பிரபிரம்ம நாமகனான பரமாத்மன் ஒருவனே ஸ்வதந்த்ரன்.
அத்விதீயரூப = சமம் (ஒப்புமை) இல்லாதவன். அவனை விட்டால், இன்னொரு ஸ்வதந்த்ரன் இந்த உலகத்தில் இல்லை.
அனேக ஜீவரொளித்து = இத்தகைய பரமாத்மன், அனேக ஜீவர்களில் இருந்து
திளிஸதலெ = தன் இருப்பை மற்றவர்களுக்குக் காட்டாமலே
ப்ரத்யேக கர்மவ = ஒவ்வொருவரிலும் இருந்து, ஒவ்வொரு விதமான செயல்களை செய்து
மோஹிஸுதிப்ப = அந்த ஜீவர்களே அதை செய்கிறான் என்று நினைக்க வைக்கிறான்
ஈ களெவரதொளகெ = இந்த மனுஷ்யனின் தேகத்தில்
மூகபதிராந்தாதி நாமதி = ஊமைகளில் இருந்து ஊமை என்றும், செவிடர்களில் இருந்து செவிடன் என்றும், குருடர்களில் இருந்து குருடன் என்றும்
கரெசுவ = அழைத்துக் கொள்கிறான்
மாகளத்ரன = லட்சுமிதேவியே பத்னியாக உள்ள ஸ்ரீபரமாத்மனின்
லௌகிக மஹா மஹிமெகெ ஏனெம்பெ = மஹா மகிமைகளை என்னவென்று சொல்லி வர்ணிப்பேன்?

ஏகமேவாத்விதீய என்னும் ஸ்ருதி ப்ரதிபாத்யனான ஸ்ரீஹரிக்கு சமானர் இந்த உலகத்தில் வேறு யாரும் இல்லை. இத்தகைய ஸ்ரீஹரி ஒருவனே ஆனாலும், அனேக வித பிராணிகளில் இருந்து அவர்களுக்குத் தெரியாமலேயே அனேக விதமான கர்மங்களை செய்து செய்விக்கிறான். ஊமைகளில் இருந்து ஊமை என்றும், செவிடர்களில் இருந்து செவிடன் என்றும், குருடர்களில் இருந்து குருடன் என்றும் அழைத்துக் கொள்கிறான். இத்தகைய ஸ்ரீஹரியின் மஹாமகிமைகளை என்னவென்று வர்ணிப்பேன்?

**லோகப3ந்து4ர் லோகநாத2 வி**
**ஷோக ப4க்தர ஷோக நாஷன**
**ஸ்ரீகரார்ச்சித ஸோகத3ந்த3த3லிப்ப ஸர்வரொளு |**
**ஸாகு1வனு ஸஜ்ஜனர பரம க்ரு**
**பாகரேஷ பினாகி ஸன்னுத**
**ஸ்வீகரிப ஆனதரு கொட்ட ஸமஸ்த கர்மக3ள ||15**

லோகபந்து = அனைத்து பிராணிகளுக்கும் உறவினன்
லோகநாத = அனைத்து உலகங்களுக்கும் தலைவன்
விஷோக = சோகம் இல்லாதவன்
பக்தர ஷோக நாஷன = பக்தர்களின் சோகத்தை பரிகரிப்பவன்
ஸ்ரீகரார்ச்சித = லட்சுமிதேவியரின் கைகளால் பூஜிக்கப்படுபவன்

சர்வரொளு = அனைவரிலும்
சோகதந்ததலி = அவர்களுக்கு சம்பந்தப்படாமல்
இப்ப = இருக்கிறான்
பரமக்ருபாகர = பரம கருணாளுவான
ஈஷ = சர்வ ஸ்வதந்த்ரனான பரமாத்மன்
சஜ்ஜனர சாகுவனு = சஜ்ஜனர்களை காக்கிறான்
பினாகிசன்னுத = ருத்ர தேவரால் வணங்கப்படுபவன்
அனதருகொட்ட = தன்னை வணங்கும் பக்தர்கள் சமர்ப்பித்த
சமஸ்தகர்மகள = அனைத்து கர்மங்களையும் ஏற்றுக் கொள்பவன்

அனைத்து உலகங்களுக்கும் தலைவனான, லோகபந்துவான ஸ்ரீஹரி, பக்தர்களின் சோகங்களை பரிகரித்தவாறு, அவர்களுக்கு சம்பந்தப்படாமல் அனைவரிலும் இருந்து, சஜ்ஜனர்களைக் காக்கிறான். பக்தர்கள் கொடுத்த கர்மங்களை ஏற்றுக்கொண்டு, அவர்களுக்கு உத்தமமான பலன்களைக் கொடுக்கிறான்.

**ஆஹித ப்ரதிமெக3ளெனிஸுவவு**
**தே3ஹ கே3ஹாபத்ய ஸதி த4ன**
**லோஹ காஷ்ட ஷிலா ம்ருதாத்3மகவாத3 த்4ரவ்யக3ளு ।**
**ஸ்நேஹத3லி பரமாத்ம எனகி3**
**த்தீஹ நெந்த3ரித3னுதி3னதி3 ஸ**
**ம்மோஹ கொளகா3க3த3லெ பூஜிஸு ஸர்வ நாமகன ||16**

ஆஹித ப்ரதிமெகளெனிஸுவவு = அடுத்து சொல்லப்போகும் பொருட்கள் அனைத்தும் பரமாத்மனுக்கு ஆஹித ப்ரதிமெகள் எனப்படுகின்றன.
தேஹ = தேகம்
கேஹ = வீடு
அபத்ய = மக்கள்
ஸதி = மனைவி
தன = செல்வம்
லோஹ, காஷ்ட, ம்ருதாத்மகவாத = பஞ்சலோகம், இரும்பு, மிருத்திகை ஸ்வரூபமான
த்ரவ்யகளு = த்ரவ்யங்கள்
ஸ்னேஹதலி = நல்ல நோக்கத்துடன்
பரமாத்மனு = பரமாத்மன்
எனகித்திஹ னெந்தரித = எனக்கான சாதனைக்காக கொடுத்திருக்கிறான் என்று அறிந்து
அனுதினதி = தினந்தோறும்
சம்மோஹக்கெ = அதன்மேல் எவ்வித பிடிப்பும் இன்றி
ஔகாகதலெ = ஆசைப்படாமல்
சர்வ நாமகன = அந்தந்த பெயர்களைக் கொண்டவனை
பூஜிஸு = பூஜித்து வா.

தேகம், வீடு, மக்கள், மனைவி, செல்வம், இரும்பு, பஞ்சலோகம், சிலை, மிருத்திகையிலான பொருட்கள் என அனைத்தும் பரமாத்மனின் ஆஹித ப்ரதிமைகள் என்று அழைக்கப்படுகின்றன. அவற்றில் அந்தர்கதனான, சர்வ நாமகனான பரமாத்மனை பூஜித்து வா.

**ஸ்ரீதருணி வல்லப$^{4}$கெ$^{3}$ ஜீவரு**
**சேதன ப்ரதிமெக$^{3}$ளு ஓத**
**ப்ரோத நாகி$^{3}$த்தெ$^{3}$ல்லரொளு வ்யாபார மாடு$^{3}$திஹ ।**
**ஹோத ஸர்வேந்த்$^{3}$ரியக$^{3}$ளொளு ஸ**
**ம்ப்ரீதியிந் து$^{3}$ண்டு$^{3}$ணிஸி விஷய நி**
**ர்வாத தே$^{3}$ஷக$^{3}$ தீ$^{3}$பத$^{3}$ந்த$^{3}$த$^{3}$லிப்ப நிர்ப$^{4}$யதி$^{3}$ ||17**

ஸ்ரீதருணிவல்லபகெ = லட்சுமிபதியான ஸ்ரீஹரிக்கு
ஜீவரு = ஜீவர்கள்
சேதன ப்ரதிமெகளு = சேதன ப்ரதிமைகள்
எல்லரொளு = இவர்கள் அனைவரிலும்
ஓதப்ரோதனாகித்து = குறுக்கும் நெடுக்குமாக பரமாத்மன் இருந்து
வியாபார மாடுதிஹ = கர்மங்களை செய்கிறான்
ஸர்வேந்த்ரியகளொளு = அனைத்து இந்திரியங்களிலும்
ஹோத = ஹோத என்னும் பெயரில் இருந்து
சம்ப்ரீதியிந்த = மிகவும் அன்புடன்
விஷய = விஷய போகங்களை
உண்டுணிஸி = தானும் உண்டு, அவர்களையும் உண்ண வைத்து
நிர்வாததேஷக = காற்று இல்லாத இடத்தில் இருக்கும்
தீபதந்ததலி = தீபத்தைப் போல
நிர்பயதி = பயம் இல்லாமல்
இப்ப = இருக்கிறான்

ஜீவர்கள் அனைவரும் பரமாத்மனின் பிரதிமைகள் எனப்படுகின்றனர். ஆடையில் எப்படி நூல் குறுக்கும் நெடுக்குமாக ஓடி நூல் இருப்பதே தெரியாமல் அது ஆடையாகவே இருக்கிறதோ, அதைப்போலவே, பரமாத்மனும் பிராணிகளில் குறுக்கும் நெடுக்குமாக இருந்து, பிராணிகளைப் போல காட்டிக்கொண்டு கர்மங்களை செய்து வருகிறான்.

சர்வேந்திரியங்களிலும் ஹோத நாமகனாக இருந்து, விஷய சுகத்தை தான் உண்டு, அவர்களையும் அன்புடன் உண்வித்து, அதிகமான காற்று இல்லாத இடத்தில் இருக்கும் தீபம் எப்படி அணைந்து போகும் என்ற பயம் இல்லாமல் இருக்கிறதோ, அதைப் போலவே அனைத்து இடங்களிலும் பயம் இல்லாமல் வசிக்கிறான்.

**பூ$^{4}$தஸோகித$^{3}$ மானவனு ப$^{3}$ஹு**
**மாதனாடு$^{3}$வ தெரதி$^{3}$ மஹத**
**த்$^{3}$பூ$^{4}$த விஷ்ண்வாவேஷதி$^{3}$ந்த$^{3}$லி வர்திபுது$^{3}$ ஜக$^{3}$வு ।**

**கைத வோக்திக$^{3}$ளல்ல சேஷ ப$^{2}$**
**ணாதபத்ரகெ$^{3}$ ஜீவபஞ்சக**
**வ்ராதவெந்தி$^{3}$கு$^{3}$ பி$^{4}$ன்னபாதா$^{3}$ஹ்வயதி$^{3}$ கரெஸுவுது$^{3}$ ||18**

பூதசோகித மானவனு = பேய், பிசாசுகளால் பீடிக்கப்பட்ட மனிதன்
பஹு மாதனாடுவ தெரதி = அதிகமாக (அர்த்தமில்லாமல்) பேசுவதைப் போல
மஹதத்பூத விஷ்ண்வாவேஷதிந்தலி = மஹா பூதனான விஷ்ணுவின் ஆவேசத்தினால்
ஜகவு = இந்த உலகம்
பர்த்திபுது = நடக்கிறது
கைதவோக்திகளல்ல = இந்த பேச்சுகள் கபடமான பேச்சுகளல்ல (பொய் பேச்சுகளல்ல)
சேஷபணாதபத்ரகெ = சேஷதேவரின் தலைகளையே குடைகளாக வைத்திருப்பவன்
இத்தகைய பரமாத்மனுக்கு
ஜீவபஞ்சகவ்ராத = தேவதைகள், கந்தர்வர், பித்ருகள், மனுஷ்யர், அசுரர் என்னும் ஐந்துவித வெவ்வேறு சமூகங்கள்
எந்திகு = என்றைக்கும்
பின்னபாதாஹ்வயதி = பின்னாம்சர்கள் என்று
கரெசுவுது = அழைக்கப்படுகின்றனர்.

பேய் பிடித்தவர்கள் தொடர்ச்சியாக ஏதோ பேசிக் கொண்டிருப்பார்கள். அதைப்போல, பரமாத்மன் என்னும் மஹாபூதம் பிடித்த இந்த ஜகத்; அதாவது இந்த ஜகத்தில் இருக்கும் பிராணிகள், அனேக விதமான அற்புதமான காரியங்களை செய்கின்றனர். இது பொய் அல்ல. சேஷதேவரின் தலைகளையே குடையாகக் கொண்டிருக்கும் பரமாத்மனுக்கு ஜீவபஞ்சகவ்ராத என்பவர்கள் எப்போதும் வேறுபட்டு இருக்கின்றனர்.

ஜீவபஞ்சக என்றால் என்ன?. பாகவத 10ம் ஸ்கந்தம் 1ம் அத்தியாயம் 42ம் ஸ்லோகத்தில் 'ஆத்மபஞ்சஸு' என்னும் பதத்திற்கு வியாக்யானம் செய்யும் சந்தர்ப்பத்தில், ஆத்ம பஞ்சஸு = 'தேவ, கந்தர்வ, பித்ரு, மனுஷ்ய, அசுர பேதேன பஞ்சானாம் ஆத்மனாம் மத்யே' என்று அர்த்தம் சொல்லியிருப்பார்கள். அதே அபிப்பிராயத்தையே இங்கும் எடுத்துக் கொள்ளவேண்டும்.

பின்னபாத என்றால், 'பாதோஸ்ய விஷ்வபூதானி' என்னும் ஸ்ருதியும், பாகவத 2ம் ஸ்கந்தம் 6ம் அத்தியாயத்தில், 'பாதோஸ்ய ஸர்வபூதானி பும்ஸ: ஸ்திதி விதோவிது:' என்னும் ஸ்லோகத்தின் வியாக்யானத்தில், சர்வபூதானி = 'சர்வ ஜீவா: அஸ்ய புருஷஸ்ய பாத: பின்னாம்ஷ: இதிஸ்திதிவித: விது:' என்று சொல்லியிருக்கிறார்கள். இதிலிருந்து சர்வ ஜீவர்களும் பரமாத்மனின் பின்னாம்ஷர்கள் என்று அர்த்தம் வருகிறது. அதே அர்த்தத்தையே தாசார்யரும் இங்கு சொல்லியிருக்கிறார்.

**தி3வியொளிப்பவு மூரு பாத3க3**
**ளவனியொளகி3குதொ3ந்து3 ஈ வித4**
**கவிபி4ரீடித கரெஸுவ சதுஷ்பாது தானெந்து3 |**
**இவன பாத3சதுஷ்டயக3ளனு**
**ப4வகெ தந்து3 நிரந்தரதி3 உ**
**த்த4வன ஸக2 ஸர்வாந்தராத்மகனெந்து3 ஸ்மரிஸுதிரு ||19**

மூரு பாதகளு = அனந்தாஸன, வைகுண்ட, நாராயண என்னும் மூன்று ஸ்வரூபாம்சங்கள்
திவியொளிப்பவு = பிரம்மாண்டத்திற்கு வெளிப்புறத்தில் இருக்கின்றன
அவனியொளகிஹதொந்து = (முந்தைய பத்யத்தில் கூறியதைப் போல) இந்த பூமியில் அனைத்து பிராணிகளும் பின்னாம்சர்கள் என்பது ஒரு பாதம்.
ஈ வித கவிபிரீடித = ஞானிகளால் வணங்கப்படும் ஸ்ரீஹரி
சதுஷ்பாது தானெந்து = 4 விதமான அம்ஷங்கள் உள்ளவன் என்று அழைக்கப்படுகிறான்
இவன பாதசதுஷ்டயகள = இந்த பரமாத்மனின் 4 அம்சங்களையும்
அனுபவகெ தந்து = அனுபவத்திற்குக் கொண்டு வந்து
நிரந்தரதி = எப்போதும்
உத்தவன சக = ஸ்ரீகிருஷ்ணன்
சர்வாந்தராத்மகனெந்து = அனைவரின் உள்ளும் இருக்கிறான் என்று
ஸ்மரிஸுதிரு = நினைத்திரு.

முந்தைய பத்யத்திலும், இந்த பத்யத்திலும் சொன்ன பாத என்னும் சொல்லிற்கு அம்ஷ என்று அர்த்தம். பரமாத்மனுக்கு 4 பாதங்கள் என்றால், 4 அம்சங்கள் என்று அர்த்தம். பூமியில் இருப்பது ஒரு அம்சம். அதையே பின்னாம்சம் என்று முந்தைய பத்யத்தில் பார்த்தோம். மிச்சமிருக்கும் மூன்று பாதங்களும் 'த்ரிபாதஸ்யா ம்ருதம்திவி' என்ற ஸ்ருதி விளக்குகிறது.

இதே அர்த்தத்தையே பாகவத 2ம் ஸ்கந்தம் 6ம் அத்தியாயத்தில் 96ம் ஸ்லோகம் : 'பாதாஸ்த்ரயோ பஹிஸ்த்வாஸன்ன ப்ரஜானாம் ய ஆஸ்ரயா:'. பிரம்மாண்டத்திற்கு வெளியே மூன்று பாதங்கள் உள்ளன. அந்த பாதங்களே பிரம்மாதி தேவதைகள் வசிப்பவையாகும். அந்த பாதங்கள் எவை என்றால், அந்த ஸ்லோகத்தின் வியாக்யானத்தில்:

அனந்தாஸன வைகுண்ட நாராயணா: ஏஷுலோகேஷு வஸந்தீதி பாவ: || மற்றும் தாத்பர்ய வாக்கியம்:
'அனந்தாஸன வைகுண்ட நாராயண புராணிது'

என்னும் வாக்கியங்களால், அனந்தாசனத்தில் இருக்கும், சேஷசாயியான பத்மனாப ரூபம் ஒன்று. வைகுண்ட லோகத்தில் இருக்கும் வாசுதேவ ரூபம் ஒன்று. ஸ்ருஷ்டியின் ஆரம்பத்தில், பிரம்மாண்டத்தை ஸ்ருஷ்டித்து தண்ணீரில் படுத்திருந்த நாராயண ரூபம் ஒன்று.

ஆபோனாரா இதிப்ரோக்த: ஆபோவை நரஸூனவ: ||
அயனந்தஸ்ய தா: பூர்வந்தேன நாராயண: ஸ்ம்ருத: ||

என்னும் பாகவத வாக்கியத்திற்கேற்ப தண்ணீருக்கு நார என்று பெயர். அவற்றிற்கு ஆதரவு அளிப்பவன் ஆகையால், நாராயணன் என்று பெயர் என்று சொல்லியிருக்கின்றனர்.

இந்த ஆதாரத்தின் பேரில் உதகத்திற்கு ஆஸ்ரயனான நாராயண ரூபம் ஒன்று. ஆக மொத்தம், இவை மூன்று பாதங்கள். அதாவது மூன்று ஸ்வரூபாம்சங்கள் என்று அர்த்தம்.

இத்தகைய 4 அம்சங்கள் உள்ளவன் பரமாத்மன் என்று அறிந்து, அதை உங்களின் அனுபவத்திற்குக் கொண்டு வந்து, தினந்தோறும் சர்வாந்தராத்மகனான பரமாத்மனை நினைக்க வேண்டும் என்பது கருத்து.

**வம்ஷபா3க3லு பெ3லெய கண்டு3 ந**
**ரம்ஸத3லி ஷோபி3புது3 பா3க3த3**
**வம்ஷ பாஷதி3 கட்டி ஏருவ டொ3ம்ப3 மஸ்தககெ3 |**
**கம்ஸ மர்த4ன தா3ஸரிகெ3 நி**
**ஸ்ஸம்ஷயதி3 வந்தி3ஸதெ3 நா வி**
**த்3வம்ஸனெந்து3 அஹங்கரிஸெ ப4வகு3ணதி3 ப3ந்தி4ஸுவ ||20**

வம்ஷ = தடிமனான மூங்கில்
பாகலு = வளைந்திருக்க
பெளெயுவது கண்டு = அதனை பல்லக்கிற்கு பயன்படுத்தலாம் என்று
நரம்சதலி = பல்லக்கைத் தூக்கும் மனிதனின் தோளில் வைத்தால்
ஷோபிபுது = நன்றாக இருக்கும்
பாகதவம்ஷ = வளையாத மூங்கிலை
பாஷதி கட்டி = கயிற்றால் கட்டி
ஏருவ டொம்ப மஸ்தககெ = கழைக்கூத்தாடி அதன் மேல் ஏறி வித்தை காட்டுவான்
கம்ஸமர்த்தன = ஸ்ரீகிருஷ்ணனின்
தாசரிகெ = அவனின் பக்தர்களுக்கு
நிஸ்ஸம்ஷயதி = சந்தேகமே இல்லாமல்
எரகதெ = வணங்காமல்
நானு வித்வம்ஸனெந்து = அஹங்ககரிஸெ = நான் கற்றறிந்தவன் என்ற கர்வத்தினால்
பவகுணதி = சம்சாரம் என்னும் கயிற்றால்
பந்திஸுவ = கட்டுவான்

தடியான மூங்கிலை அது வளரும்போது, வளைத்துக் கட்டினால், அது நன்றாக வளர்ந்தபிறகு, அதனை மனிதர்கள் பல்லக்கிற்காக கட்டி தங்கள் தோள்களில் வைத்து தூக்கிச் செல்வர். ஆனால், அப்படி வளையாமல் நேராக நின்றிருக்கும்

மூங்கிலை, கூத்தாடிகள் கொண்டு வந்து, நடுவில் நிற்கவைத்து, 4 பக்கங்களிலும் கயிற்றால் அதனைக் கட்டி, அதன் மேல் ஏறுவார்கள்.

அதைப்போலவே, ஸ்ரீபரமாத்மன் தன் பக்தர்களுக்கு, தலை குனிந்து வணங்காதவர்களை, சந்தேகமே இல்லாமல், சம்சாரம் என்னும் கயிற்றில் கட்டுவான். தலை வணங்கியவர்களை காப்பான் என்று அர்த்தம்.

**ஜ்யோதிரூபகெ3 ப்ரதிமெக3ளு ஸா**
**ங்கேதிகாரோபித ஸுபௌருஷ**
**தா4துஸப்தக தை4ர்ய ஷௌர்யௌதா3ர்ய சாதுர்ய ।**
**மாது மான மஹத்வ ஸஹன ஸு**
**நீதி நிர்மல தே3ஷ பி3ராஹ்மண**
**பூ4தபஞ்சக பு3த்தி3 மொத3லாதி3 இந்தி3ரியஸ்தா2ன ।।21**

ஜ்யோதிரூபகெ = தானே ஒளிபொருந்தியவனான பரமாத்மனுக்கு
ப்ரதிமெகளு = ஜடரூபமான ஷிலா பிரதிமைகள், பஞ்சலோக பிரதிமைகள் இவை
சாங்கேதிக = குறியீடுகள்
ஆரோபித = பரமாத்மனின் ஸ்மரணையின் நினைவுக்காக என்று இருக்கின்றன.

ஆனால், பரமாத்மன் அனேக இடங்களில் எப்போதும் இருக்கிறான். அவை அனைத்தையும் ப்ரதிமைகள் என்று அறியவேண்டும். அவை எவை என்றால்:
ஸுபௌருஷ = புருஷ சம்பந்தமான
தாதுஸப்தக = த்வக், சர்ம முதலான 7 தாதுகள்
தைர்ய = வீரம்
ஷௌர்ய = வலிமை
ஔதார்ய = ஈகை
சாதுர்ய = அறிவாளி
மாது = பகவத் சம்பந்தமான ஸத்வமான பேச்சுக்கள்
மான = கௌரவம்
மஹத்வ = ஆளுமை
ஸஹன = சகிப்புத்தன்மை
சுநீதி = உத்தமமான நீதி
நிர்மல தேஷ = சுத்தமான இடம்
பிராமண = பிராமணர்கள்
பூதபஞ்சக = ப்ருத்வியாதி ஐந்து பூதங்கள்
புத்தி மொதலாதி = புத்தி முதலான
இந்திரிய = இந்திரியங்கள்
இவை அனைத்தும்
ஸ்தான = பரமாத்மனின் வசிப்பிடங்கள் ஆகும்.

உலகத்தில் தாமிரம், பித்தளை, வெள்ளி, தங்கம் ஆகியவற்றில் சிலைகளை செய்து, அதற்கு ராம கிருஷ்ணன் என்று பெயர் வைத்து பூஜை செய்கின்றனர்.

தேஜோமயனான பரமாத்மனே இந்த பிரதிமைகள் அல்ல. பரமாத்மன் ஜடம் அல்ல. நமக்கு தியானம் செய்வதற்காக ஏதாவது ஒரு ரூபத்தை மனதில் நினைத்து அதனை தியானம் செய்ய வேண்டியிருக்கிறது. அதற்காகவே, பிரதிமைகளில் குறியீடாக ராம, கிருஷ்ணாதி நாமங்களை வைத்திருப்பார்கள். ஆகையால், அவற்றில் பரமாத்மனின் சன்னிதானத்தை அறியவேண்டும். ஆனால், பிரதிமையே தேவர் என்று அறிந்து, பிற இடங்களில் இருக்கும் பகவத் ரூபங்களை அறியாமல், அவை அனைத்தையும் புறக்கணித்து, பிரதிமைகளின் பூஜையை செய்தால், பகவந்தன் அந்த பூஜையை ஏற்றுக் கொள்வதில்லை.

ஆகையால், இந்த பத்யத்தில் சொல்லியிருக்கும் 7 தாதுக்களிலும், தைர்ய முதலானவகளிலும், பகவத் ரூபங்களை சிந்திக்க வேண்டும். தைர்யாதிகள் கண்ணிற்கு தெரிவதில்லை. அவற்றில் பகவத் ரூபங்களை எப்படி சிந்திப்பது என்றால்:

தைர்யாதிகள் உள்ள மனிதர்களில் தைர்யரூபியாக இருந்து, இவன் தைர்யசாலி, இவன் பலசாலி என்னும் பெயர், பரமாத்மனே பெறுகிறான் என்று அறிந்து, உபாசனை செய்யவேண்டும் என்பது கருத்து.

**ஜீவராஷியொளம்ருத ஷாஷ்வத**
**ஸ்தா$^{2}$வரக$^{3}$ளொளு ஸ்தா$^{2}$ணு நாமக**
**ஆவகாலத$^{3}$லிப்ப அஜித அனந்தனெந்தெ$^{3}$னிஸி |**
**கோவிதா$^{3}$ம்பதி கா$^{3}$யனப்ரிய**
**ஸாவயவ ஸாஹஸ்ர நாம ப**
**ராவரேஷ பவித்ரகர்ம விபஸ்சித ஸுதா$^{4}$ம ||22**

கோவிதாம்பதி = வேத வேதாந்தங்களில் சந்தேகங்கள் அற்ற, அர்த்த ஞானமுள்ள ஞானிகளுக்கு ஸ்வாமியான
காயனப்ரிய = சாமகான மற்றும் தோடி, பைரவி முதலான ராக ஞானத்தினால், சுஸ்வரத்துடன் தன் மகிமைகளைப் பாடினால், மிகவும் மகிழும்
ஸாவயவ = ஆனந்தமயனான கரசரணாதி அங்கங்களைக் கொண்ட
சஹஸ்ர நாம = சஹஸ்ர நாமங்களால் அழைத்துக் கொள்ளும்
பராவரேஷ = உத்தமமான பிரம்மாதிகள் முதல் த்ருண ஜீவர்கள் வரையிலான அனைவருக்கும் ஈஸ்வரனான
பவித்ரகர்ம = மங்களகரமான கர்மங்களைக் கொண்ட
விபஸ்சித = ஞானிகளுக்கு
சுதாம = உத்தமமான இருப்பிடமான ஸ்ரீபரமாத்மன்
ஜீவராசிகளில்
அம்ருத = மரணம் இல்லாததால் அம்ருத நாமகன்
ஷாஷ்வத = நிரந்தரமானவன்
ஸ்தாவரகளொளு = ஸ்தாவரங்களில்
ஸ்தாணு நாமகனு = ஸ்தாணு நாமக பெயரால்
அஜிதானந்தனெந்தெனிஸி = அஜித, ஆனந்த என்று அழைத்துக்கொண்டு

ஆவகாலதலி = அனைத்து காலங்களிலும் இருக்கிறான்.

எப்போதும், யாராலும் வெல்லப்பட முடியாதவன் ஆகையால், அஜித என்று பெயர்.

ஜீவராசிகளில் அம்ருத என்னும் பெயரால் நிரந்தரமாக இருக்கிறான். ஸ்தாவரங்களில் ஸ்தாணு நாமகனாக அனைத்து காலங்களிலும் இருக்கிறான்.

மற்ற பதங்களுக்கு பத்ய அர்த்தங்களே தெளிவாக இருக்கின்றன.

**மாத$^4$வன பூஜார்த$^2$வாகி$^3$ நி**
**ஷே$^2$த$^4$ கர்மவ மாடி$^3$ த$^4$னஸ**
**ம்பாதி$^3$ஸலு ஸத்புண்ய கர்மக$^3$ளெனிஸி கொளுதிஹவு |**
**ஸ்வோத$^3$ரம்ப$^4$ரணார்த்த நித்யதி$^3$**
**ஸாது$^3$கர்மவ மாடி$^3$த$^3$ரு ஸரி**
**ஐது$^3$வனு தே$^3$ஹாந்தரவ ஸந்தே$^3$ஹ வினிதில்ல ||23**

மாதவன பூஜார்த்தவாகி = பரமாத்மனின் பூஜைக்காக
நிஷேத கர்மவ மாடி = செய்யக்கூடாத செயல்களை செய்து
தன சம்பாதிஸலு = செல்வத்தை சம்பாதித்தால்
சத்புண்யகர்மகளு = சத்புண்ணிய கர்மங்கள்
எனிஸி கொளுதிஹவு = என்று சொல்லிக் கொள்கின்றன
ஸ்வோதரம்பரணார்த்த = தன் மனைவி, மக்கள், குடும்பம் ஆகியோருக்கு உணவு அளிப்பதற்காக
நித்யதி = தினந்தோறும்
சாதுகர்மவ மாடிதரு சரி = சத்கர்மங்களை செய்வதுபோல நடித்தால்
தேஹாந்தரவ = மறுபடி பூமியில் பல பிறவிகளை
ஐதுவனு = அடைகிறான்
சந்தேஹ வினிதில்ல = இந்த விஷயத்தில் சிறிதும் சந்தேகம் இல்லை

பகவத்ப்ரீதிக்காக தேவாலயம், தோட்டம் ஆகியவற்றைக் கட்டுவதற்காக யாசனைகளை செய்து, மிக அதிகமாக செல்வங்களை சேர்த்து, பகவத்ப்ரீதிக்காக அந்த சத்காரியங்களை செய்தால், அவை சத்காரியங்கள் என்று அழைத்துக் கொள்கின்றன.

மனதில் தன் தேக போஷணைக்காக என்று நினைத்து, பிராமண போஜனாதி நிமித்தங்களை வெளியே காட்டி, பணத்தை சம்பாதித்து, பிராமண சந்தர்ப்பணை முதலானவற்றை செய்தாலும், பாவ கர்மத்தின் பலனாக, மறு பிறவிகளை அடைகின்றனர். ஆகையால், எந்த கர்மத்தை செய்தாலும், பகவத் ப்ரீதிக்காகவே செய்யவேண்டும் என்பது கருத்து.

**அபக$^3$தாஸ்ரய எல்லரொளகி$^3$**
**த்து$^3$பமனெனிப அனுபமரூபனு**
**ஷபரகேதனஜனக மோஹிப மோஹகன தெரதி$^3$ |**

**தபனகோடி ஸமப்ரபா4ஸித**
**வபுவெனிப க்ருஷ்ணாதி3 ரூபக**
**விபக3ளந்துண்டு3ணிப ஸர்வத்ரத3லி நெலெஸித்து3 ||24**

அபகதாஸ்ரய = யாரையும் சார்ந்திருக்காத
அனுபமரூபனு = ஒப்புமை இல்லாத ஸ்வரூபம் கொண்டவன்
எல்லரொளகித்து = அனைவரின் உள்ளும் இருந்து
உபமனெனிப = மனிதனைப் போல, மிருகத்தைப் போல என்று ஒப்புமை கொண்டவன் என்று அழைத்துக் கொள்கிறான்
ஷபரிகேஷன ஜனக = மன்மதனின் தந்தையான ஸ்ரீஹரி
தபனகோடி ஸமப்ரபா = கோடி சூரியர்களின் ஒளியைக் கொண்டவனானாலும்
கிருஷ்ணாதி ரூபக = கிருஷ்ணாதி அவதாரங்களில்
த்விபதனந்தெ = சாதாரண மனிதனைப் போல
அஸித = கருப்பு
வபுவெனிப = வண்ணம் கொண்ட சரீரம் கொண்டவன் என்று அர்த்தம்
மோஹகன தெரதி = நல்லாடைகளை அணிந்து மக்களை மயக்குபவனைப் போல
மோஹிப = ஜீவர்களை கவர்கிறான்
சர்வத்ரதலி நெலெசித்து = அனைத்து இடங்களிலும் நிலைத்திருந்து
உண்டுணிப = தான் உண்டு, ஜீவர்களுக்கும் உண்ண வைத்தான்.

தானே அனைவருக்கும் ஆதரவு அளிப்பவன். தனக்கு என்று யாருடைய ஆதரவும் தேவையில்லை. தான் ஒப்புமை இல்லாதவனானாலும், மனுஷ்யாதிகளில் இருந்து, மனிதனைப் போல என்று சொல்லிக் கொள்கிறான். கோடி சூரியர்களின் ஒளியைப் பெற்றவன், கிருஷ்ணாவதாரத்தில் மனித உருவத்தைப் பெற்று, கருப்பு, வெள்ளை, முதலான சாதாரண வர்ணம் கொண்டவனாக மக்களை மயக்கினான். அனைத்து இடங்களிலும் வசித்திருந்து, விஷய போகாதிகளையும், அன்னாதிகளையும் தான் உண்டு, ஜீவர்களுக்கும் உண்வித்தான்.

**அட3வியொளு பி3த்தத3லெ பெ3ளெதி3ஹ**
**கி3ட3த3 மூலிகெ ஸகலஜீவர**
**ஒடலொளிப்பாமயவ பரிஹர கை3ஸுவந்த3த3லி |**
**ஜடஜஸம்ப4வ ஜனக த்ரிஜக**
**த்3தொ3டெ3ய ஸந்தெயிஸெனலு அவரி**
**த்தெ3டெ3கெ3 பந்தொ3த3கு3வனு ப4க்தர பி3டெ3ய மீரதெ3லெ ||25**

அடவியொளு = காடுகளில்
பித்ததலெ பெளதிருவ = தானாகவே விதை விழுந்து, வளர்ந்திருக்கும்
கிடத மூலிகெ = மூலிகைகள்
சகலஜீவர = அனைத்து ஜீவர்களின்
ஒடலொளிப்ப = சரீர சம்பந்தமான
ஆமயவ = நோயினை
பரிஹர் கைசுவந்ததலி = பரிகாரம் செய்வதைப் போல

த்ரிஜத்தொடெய = மூன்று உலகங்களின் தலைவனே
சந்தெயிஸெனலு = என்னை காப்பாற்று என்றால்
ஜடஜசம்பவ ஜனக = ஜடஜ என்னும் சொல்லில் இருக்கும் ட என்னும் எழுத்து ல என்றும் படிக்கலாம். ஜ-ட-ல இவற்றிற்கு பரஸ்பரம் பேதம் இல்லை. ஆகையால், ஜடஜ = ஜலஜ. ஜலஜ சம்பவர், பிரம்மதேவர் . அவரின் ஜனக = தந்தையான ஸ்ரீபரமாத்மன்
பக்தர பிடிய மீரதலெ = பக்தர்களை தர்மசங்கடத்தில் ஆழ்த்தாமல்
அவரித்தெடெகெ = அவர்கள் இருக்கும் இடத்திற்கு
பந்தொதகுவனு = வந்து நிற்பான்.

நம் முயற்சி இல்லாமலேயே, நாம் விதையை விதைக்காமல், காட்டில் தானாகவே வளர்ந்திருக்கும் மரத்தின் மூலிகையானது, நோயாளியின் நோய்களை பரிகாரம் செய்கிறது. அதைப் போலவே, ஸ்ரீபரமாத்மன், நாம் அவனின் மகனோ, நண்பனோ இல்லாவிட்டாலும், மூன்று உலகங்களின் தலைவனே, என்னை காப்பாற்று என்று வேண்ட, பக்தர்களின் வேண்டுதல்களுக்கு செவிசாய்த்து, அவர்கள் இருக்கும் இடத்திற்கே வந்து அவர்களின் கஷ்டங்களை போக்குகிறான்.

**ஸ்ரீநிகேதன தன்னவர தே3**
**ஹானு பந்தி4க3ளந்தெ அவ்யவ**
**தா4னத3லி நெலெஸிப்ப ஸர்வத3 ஸகலகாமத3னு ।**
**ஏனு கொட்டுத3 பு4ஞ்சிஸுத ம**
**த்தானெயந்த3தி3 ஸஞ்சரிஸு ம**
**த்தேனு பே3ட3தெ3 ப4ஜிஸுதிரு அவனங்க்4ரி க1மலக3ள ||26**

ஸ்ரீநிகேதன = லட்சுமிதேவியை தன் மார்பில் தரித்திருப்பவனான ஸ்ரீஹரி
தன்னவர = தன் பக்தர்களை
தேஹானு பந்திகளந்தெ = அவரது உறவினர்களைப் போலவே
சர்வத = எப்போதும்
சகலகாமதனு = அனைத்து மனோபீஷ்டங்களை நிறைவேற்றுவதற்காக
அவ்யவதானதலி = அவர்களை விட்டுப் பிரியாமல்
நெலஸிப்ப = நிலைத்திருப்பான்
ஏனு கொட்டுத = சுகம் துக்கம் என எதைக் கொடுத்தாலும்
புஞ்சிஸுத = அதை அனுபவித்தவாறு
மத்தானெயந்ததி = பயமில்லா யானையைப் போல
சஞ்சரிஸு = சஞ்சரித்திரு
மத்தேனு பேடதெ = வேறு எதையும் அவனிடம் வேண்டாமல்
அவனங்க்ரி கமலகள = அவன் பாதாரவிந்தங்களை
பஜிஸுதிரு = வணங்கிக் கொண்டிரு.

ஸ்ரீபரமாத்மன், தன் பக்தர்களை, தன் உறவினர்கள் போலவே நினைத்து, அவர்களின் அருகிலேயே இருந்து, அவரவர்களின் மனோபீஷ்டங்களை நிறைவேற்றுகிறான். ஈஸ்வர சங்கல்பத்தால் எது வந்தாலும், அதற்கே மகிழ்ந்தவாறு, காம்ய பலன்களை

வேண்டாமல், அவனின் பாத கமலங்களை வணங்கியவாறு, வேறு யாருடைய தயவு தாட்சிண்யத்தையும் எதிர்பார்க்காமல், மதம் பிடித்த யானையைப் போல சஞ்சரித்திரு.

**பே3ட3த3லெ கொடு3திப்ப ஸுரரிகெ3**
**பேடி3த3ரெ கொடு3திஹனு நரரிகெ3**
**பேடி3பளலுவ தை3த்யரிகெ3 கொட3னொம்மெ புருஷார்த்த2 |**
**மூட3ரனுதின த4ர்ம கர்மவ**
**மாடி3த3ரு ஸரி அஹிக ப2லக3ள**
**நீடி3 உன்மத்தரனு மாடி3 மஹானிரயவீவ ||27**

சுரரிகெ = தேவதைகளுக்கு
பேடதலெ கொடுதிப்ப = அவர்கள் எதையும் வேண்டாமலேயே, அவர்களுக்குக் கொடுப்பான்
நரரிகெ = மனுஷ்யர்களுக்கு
பேடிதரெ கொடுதிஹனு = அவர்கள் எதையாவது வேண்டினால், அதை அவர்களுக்குக் கொடுக்கிறான்
பேடி பளலுவ தைத்யரிகெ = வேண்டித் துதிக்கும் (மன்றாடும்) தைத்யர்களுக்கு
கொடனொம்மெ புருஷார்த்த = புருஷார்த்தங்களை ஒரு முறைகூட கொடுக்க மாட்டான்
மூடரு = மூடர்கள் (நித்ய சம்சாரிகள்)
அனுதின தர்ம கர்மவ மாடிதரு சரி = தினந்தோறும் புண்ணியத்தைப் பெற்றுத் தரும் தர்ம கர்மங்களை செய்தாலும்கூட
அஹிக பலகள நீடி = ஐஹிக பலன்களைக் கொடுத்து
உன்மத்தரனு = அவர்களை அதிலேயே ஆசைப்பட வைத்து
மஹானிரயவீவ = மஹா கோரமான நரகத்தை (அந்தம்தமஸ்ஸை) அவர்களுக்குக் கொடுப்பான்

உத்தம, மத்யம, அதம, அதமாதம பக்தர்களின் சாதனையின் பலன்களை சொல்லியவாறு, உத்தம பக்தர்களுக்கு அவர்கள் கேட்காமல் இருந்தாலும், அவர்களுக்கு உத்தம கதியைக் கொடுக்கிறான். மத்யம பக்தர்கள் வேண்டிக் கொண்டால், அவர்களுக்கு அவற்றைக் கொடுக்கிறான். அதம பக்தர்கள், வேண்டிக் கொண்டாலும் அதை அவர்களுக்குக் கொடுப்பதில்லை. அதமாதமர்கள் புண்ய கர்மங்களை செய்தாலும், அவற்றின் பல ரூபமான உத்தம கதியைக் கொடுக்காமல், தற்காலிகமான அஹிக பலன்களைக் கொடுத்து, அவர்களை கர்வம் கொள்ளச் செய்து, அதன் மூலம் நரகத்திற்கு அனுப்பி வைக்கிறான்.

**தரணி ஸர்வத்ரத3லி கிரணவ**
**ஹரஹி தத்த1த்வஸ்துக3ளனனு**
**ஸரிஸி அத3ரத3ரந்தெ சா2யவ கங்கொ3ளிப தெரதி3 |**
**அரித3ரேஜானேஜ ஜக3தொ3ள**
**கி3ருவ சா2யாதபனெனிஸி ஸ**

**ங்கருஷணாஹ்வய அவரவர யோக்[3]யதெக[3]ளந்திப்ப ||28**

தரணி = சூரியன்
சர்வத்ரதலி = அனைத்து இடங்களிலும்
கிரணவஹரஹி = தன் கிரணங்களை பரப்பி
தத்தத் வஸ்துகளனு அனுசரிஸி = அந்தந்த பொருட்களுகேற்ப
அதரந்தெ = அதைப் போலவே
சாயவ கங்கொளிப தெரதி = அதன் நிழலும் இருக்குமாறு செய்வதைப் போலவே
அரிதர = சக்ரபாணியான
சங்கருஷணாஹ்வய = சங்கர்ஷண நாமகன்
ஏஜ = சேதனர்
ஆனேஜ = ஜடர்கள்
ஜகதொளகெ = இப்படி சேதன, ஜடாத்மகமாக இருக்கும் உலகத்தில்
இருவ = இருக்கும்
சாயாதபனெனிஸி = சிலருக்கு வெயிலாகவும், சிலருக்கு நிழலாகவும்
அவரவர யோக்யதெகளந்திப்ப = அவர்வர்களின் யோக்யதைக்கேற்ப, அவர்களில் இருந்து, பலன்களைக் கொடுக்கிறான்.

சூரியனின் கிரணங்கள், பூமியில் இருக்கும் மனிதன், பசு, மரங்களில் மீது விழும்போது, அந்த நிழலும் அவர்களைப் போலவே இருக்கின்றன. மரத்தின் நிழல் மரத்தைப் போலவும், மனுஷ்யாதிகளின் நிழல் அவர்களைப் போலவும் இருக்கின்றன. அதைப்போலவே, சக்ரபாணியான ஸ்ரீசங்கர்ஷணன், ஸ்தாவர ஜங்கமாத்மக ப்ரபஞ்சத்தில், அந்தந்த ஆகாரனாக அங்கங்கு இருந்து பூமியில் எப்படி சில இடங்களில் வெயில், சில இடங்களில் நிழல் இருக்கிறதோ, அதைப் போல தானும் பக்தர்களுக்கு நிழலைப் போல, தைத்யர்களுக்கு வெயிலைப் போல, அவரவர்களின் யோக்யதைக்கேற்ப இருக்கிறான்.

**ஈ வித[3]தி[3] ஸர்வத்ர லகுமி**
**பூ[4] வனிதெயர கூடி[3] தன்ன க**
**லா விஸேஷக[3]ளெல்ல கடெ[3]யலி தும்பி[3] ஸேவ்யதம |**
**ஸேவகனு தானெனிஸி மாயா**
**தே[3]வி ரமண ப்ரவிஷ்டரூபக**
**ஸேவெமாள்ப ஷரண்ய ஷாஷ்வத கருணி கமலாக்ஷ ||29**

ஈ விததி = இந்த விதமாக
சர்வத்ர = அனைத்து இடங்களிலும்
லகுமி பூ வனிதெயர கூடி = ஸ்ரீதேவி பூதேவி என்னும் மனைவியருடன் கூடி
தன்ன கலாவிசேஷகள = தன் அம்சரூபங்களை
எல்ல கடெயலி தும்பி = பிரம்மாண்டத்தின் அனைத்து இடங்களிலும் பரப்பி
ஷரண்ய = வணங்கப்படுவதற்கு தகுதியானவனான
ஷாஷ்வதகருணி = பக்தர்களிடம் எப்போதும் கருணை உள்ளவனான
கமலாக்ஷ = தாமரைக் கண்ணனான

மாயாதேவி ரமண = ஸ்ரீவாசுதேவன்
ஸேவ்யதம = அனைவரிடமிருந்தும் சேவை பெற்றுக் கொள்பவன் ஆனாலும்
ப்ரவிஷ்டரூபதலி = உலகத்தில் தன் சிறந்த ரூபங்களால்
ஸேவகனு தானெனிஸி = சேவை செய்பவர்களில் தானே அந்தர்யாமியாக இருந்து
ஸேவெமாள்பனு = சேவைகளை செய்கிறான் (செய்விக்கிறான்).

மாயாரமணனான வாசுதேவன், ஸ்ரீ பூ சமேதராகி அனைத்து இடங்களிலும் வியாப்தனாக இருந்து, தான் வாசுதேவாதி ரூபங்களால் சேவையை ஏற்றுக் கொள்கிறான். பிரம்மாதிகளில் தன் அம்ச ரூபங்களால் இருந்து, தன் சேவைகளை தானே சேவகனாக செய்து கொள்கிறான்.

**ப்ரணவ காரண கார்ய ப்ரதிபா**
**த்[3]யனு பராத்பர சேதனா சே**
**தன விலக்ஷணனந்த ஸத்கல்யாண கு[3]ணபூர்ண |**
**அனுபமனுபாஸித கு[3]ணோத[3]தி[4]**
**அனக[4]னஜிதனனந்த நிஷ்கி**
**ஞ்சன ஜனப்ரிய நிர்விகார நிராஸ்ரயாவ்யக்த ||30**

ப்ரணவ காரண = கார்ய ரூபம் தேகம். காரணம் ப்ரணவம். பரமாத்மன் ப்ரணவ ரூபனாக காரணனாக இருந்து கார்யரூபமான வேத ப்ரதிபாத்யனாக இருக்கிறான்.
பராத்பர =
பராத் = உத்தமரான லட்சுமி பிரம்மாதிகளைவிட
பரன் = உத்தமன்
சேதனாசேதன விலக்ஷண = பரமாத்மன் ஜடாத்மகனும் அல்ல. பிரம்மாதி சேதனனும் அல்ல. இந்த இரண்டைவிடவும் வேறுபட்டவன் என்று அர்த்தம்.
அனந்த சத்கல்யாண குணபூர்ண = அனந்தமான மங்களகரமான நற்குணங்களைக் கொண்டவன்
அனக = பாபங்கள் இல்லாதவன்
அஜித = யாராலும் வெல்லப்பட முடியாதவன்
அனந்த = அனந்த ரூபன்
நிஷ்கிஞ்சன ஜனப்ரிய = லௌகிகமான பொருட்களின் அபிமானத்தை விட்டு பரமாத்மனே செல்வம் என்று நம்பும் பக்தர்களிடம் அன்பு கொண்டவன்
நிர்விகார = உருவ வளர்ச்சி / க்ஷீணம் இல்லாதவன்
நிராஸ்ரய = யாரையும் ஆதரவு கேட்காதவன் (யாருடைய உதவியும் தேவைப்படாதவன்)
அவ்யக்த = சாமன்யரான மக்களுக்கு புலப்படாதவன்.

**கோ[3]பபீ[4]ய ப[4]வாந்த[4] காரகெ**
**தீ[3]ப ஒத[3]க[3]லு ஸகலஸுக[2]ஸத[3]**
**நோபரிக்[3]ருஹ வெனிஸுதலிப்பது[3] ஹரிகதா[2]ம்ருதவு |**
**கோ[3]பதி ஜக[3]ன்னாத[2]விட்ட[2]ல ஸ**
**மீபத[3]லி நெலெஸித்து[3] ப[4]க்தர**

**நாபவர்க[3]ர மாடு[3]வனு மஹது[3]க்க ப[4]வதி[3]ந்த[3] ||31**

கோபபீய பவாந்தகாரகெ =
கோ = வேத ஸ்வரூபரான துர்காதேவி. அவரின் கணவனாக இருந்து காப்பதால், பரமாத்மனுக்கு கோப என்று பெயர்.
பீய = பரமாத்மனை காண விடாமல், அவரை சேரவிடாமல் செய்வது சம்சாரம் (வாழ்க்கை).
பவாந்தகாரகெ = இத்தகைய பரமாத்மனிடம் பயத்தைக் கொடுக்கும் சம்சாரம் என்னும் கும்மிருட்டுக்கு
தீப ஒதகலு = தீபத்தைப் போல இருக்கும்
சகலசுக சதனஓபரிக்ருஹவு = சமஸ்தமான சுகம் என்னும் வீட்டிற்கு மேல் உப்பரிகை
எனிஸிதலிப்புது = என்று இருப்பது
ஹரிகதாம்ருதவு = ஹரிகதாம்ருதம்
இதனைக் குடிக்கும் பக்தர்களின்
சமீபதலி நெலெஸித்து = அருகில் இருந்து
கோபதி = வேதாபிமானியான ரமாபதியான
ஸ்ரீஜகன்னாதவிட்டலன், அவர்களை
மஹதுக்க பவதிந்த = மிகவும் துக்ககரமான சம்சாரத்திலிருந்து
அபவர்கர = முக்தர்களாக
மாடுவனு = செய்வான்.

சம்சார வாழ்க்கையில், நான், எனது, குடும்பம், என்னும் அபிமானத்தினால் பரமாத்மனை மறந்துவிடுவர். ஆகையால், பரமாத்மன் நம்மை நரகத்தில் தள்ளி கஷ்டப்படுத்துவான் என்னும் பயம் உண்டாகும். ஆகையால், தாசார்யர், சம்சார வாழ்க்கையை கோபபீய என்றார்.

வேதாபிமானியான ரமாதேவி, அவளுக்கு பதியானதால் 'காம்பாதீதி கோப:' என்ற இலக்கணத்தால், பரமாத்மனுக்கு கோப என்று பெயர். சம்சாரத்தில் அவன் பயம் இருந்தே இருக்கிறது. இத்தகைய சம்சாரம் என்னும் கோரமான இருட்டிற்கு ஹரிகதை என்பது தீவட்டி போல இருக்கிறது. அதாவது, அஞ்ஞான இருட்டினை பரிகரித்து, ஞானோதயத்தைக் கொடுக்கிறது என்று அர்த்தம்.

அனைத்து சுகங்களைக் கொண்ட, வசிப்பதற்கு யோக்யமான வீட்டின், மேல் உப்பரிகையைப் போல இருக்கிறது இந்த ஹரிகதாம்ருதம். ஸ்வரூபானந்தத்தைக் கொடுக்கும் தகுதியைக் கொண்டது என்று அர்த்தம். இத்தகைய ஹரிகதாம்ருதத்தை பானம் செய்யும் பக்தர்களின் சமீபத்தில், ஸ்ரீஜகன்னாதவிட்டலாத்மக ஸ்ரீஹரி நிலைத்திருந்து, மஹா துக்கத்தை தரக்கூடிய சம்சாரத்திலிருந்து அவர்களை விடுவித்து, முக்தர்களாக மாற்றுவான்.

பிம்பாபரோக்ஷ சந்தி என்னும் 24ம் சந்தியின் தாத்பர்யம் இத்துடன் முடிந்தது.
ஸ்ரீகிருஷ்ணார்ப்பணமஸ்து

***

## பாவபிரகாசிகை : சந்தி 25 : ஆரோஹண தாரதம்ய சந்தி

**/ ஆரோஹண அனுக்ரமணிகா சந்தி**

**ஹரிகதா2ம்ருதசார கு3ருக3ள**
**கருணதிந்தா3பநிது பே1ளுவே**
**பரம ப4கவத்3ப4க்தரித3னாத3ரதி கேளுவுது3**

முன்னர் தாரதம்யத்தை விளக்கியிருந்தாலும், அது மிகவும் நீண்டதாக (விளக்கமாக) இருந்ததால், மனனம் செய்வதற்கு முடியாததால், அதை இங்கு மறுபடி, த்ருண ஜீவர்களில் துவங்கி ஸ்ரீஹரி வரைக்குமான ஆரோகண தாரதம்யதை சொல்கிறார்.

சந்தியின் சுருக்கம்:

**ப4க்தரெனிஸுவ தி3வ்யபுருஷர**
**உக்திலாலிஸி பேள்த3முக்தா**
**முக்தஜீவர தாரதம்யவ முனிப ஷாண்டி3ல்ய ||**

பொருள்:
பக்தரெனிஸுவ = பக்தர்கள் எனப்படும்
திவ்ய புருஷர = திவ்ய புருஷர்களின் ;
உக்தலாலிஸி = கேள்விகளைக் கேட்டு,
ஷாண்டில்ய முனிப = ஷாண்டில்ய ரிஷிகள்;
முக்தாமுக்தஜீவர = முக்தர்கள், அமுக்தர்கள் ஆகியோரின்
தாரதம்யவ = தாரதம்யத்தை
பேள்த = சொல்லியிருக்கிறார்.

விளக்கம்:
இது வாயுபுராணத்தில் சொல்லப்பட்ட கதை. செய்த பாவத்தினால் பிசாசாக மாறி, பின் முக்தர்களான சில பக்தர்களுக்கும், சாண்டில்யருக்கும் நடந்த பேச்சுவார்த்தையில், அவரால் சொல்லப்பட்ட, முக்தாமுக்தர்களின் தாரதம்யத்தை இங்கு சொல்கிறேன் என்று தாசராயர் சொல்கிறார்.

**ஸ்தா2வரர நோட3ல்கெ த்ருண க்ரிமி**
**ஜீவருத்தம க்ரிமிக3ளிந்த3 அ**
**ஜாவி கோ3 க3ஜ வ்யாக்4ர ஸிம்ஹக3ளிந்த3 ஷூத்3ராதி3 |**
**மூவருத்தம கர்மிகரு பூ4**
**தே3வருத்தம கர்மி நோட3லு**
**கோவிதோ3த்தம கவிக3ளிந்த3லி க்ஷிதிப ருத்தமரு ||1**

விளக்கம்:

ஸ்தாவரர நோடல்கெ = ஸ்தாவரர்களைவிட
த்ருண் கிரிமி ஜீவருத்தம = கிருமிகள் உத்தமர்கள்.
கிருமிகளிந்த = க்ருமி ஜீவர்களைவிட;
அஜ = ஆடு.
ஆவி = பன்றி,
கோவு = பசு,
கஜ = யானை,
வ்யாக்ர = புலி,
சிம்ஹகளு = சிங்கங்கள் இந்த ஜீவர்கள் உத்தமர்கள். இவர்களைவிட
சுத்ராதி கர்மிகரு = நற்செயல்களை செய்யும் சூத்ரர்கள் உத்தமர்கள். அவர்களைவிட வைஸ்யர்கள் உத்தமர்கள். அவர்களைவிட க்ஷத்ரியர்கள் உத்தமர்கள். இந்த மூவர்களைவிட,
பூதேவரு = பிராமணர்கள் உத்தமர்கள். சத்கர்மங்களை செய்யும் பிராமணர்களைவிட கோவிதோத்தமரு = ஞானிகளான பிராமணர்கள் உத்தமர்கள்.
கவிகளிந்தலி = அவர்களைவிட
க்ஷிதிபருத்தமரு = பூபதிகள் உத்தமர்கள்.

**த$^{4}$ரணிபர நோட$^{3}$ல்கெ நர க$^{3}$**
**ந்த$^{3}$ருவருத்தம தே$^{3}$வக$^{3}$ந்த$^{3}$**
**ர்வர க$^{3}$ணோத்தம ரிவரிகி$^{3}$ந்த ஷதோன ஷதகோடி ।**
**பரமரிஷிக$^{3}$ளு அப்ரஸ்த்ரி**
**யரு ஸமானரு இவரிகி$^{3}$ந்தலி**
**சிரபித்ருக$^{3}$ளுத்தமரு சிர நாமக பித்ருக$^{3}$ளிந்த$^{3}$** ||2

தரணிபர நோடல்கெ = பூபாலர்களான சக்ரவர்த்திகளைவிட, நரகந்தர்வர்கள் உத்தமர்கள்.
தேவகந்தர்வர = இவர்களைவிட தேவகந்தர்வர்கள் உத்தமர்கள்.
இவரிகிந்த = இவர்களைவிட
ஷதோனஷதகோடி = 100 கோடிக்கு 100 பேர் குறைவாக இருக்கும் ரிஷிகள் உத்தமர்கள்.
அப்ஸர ஸ்த்ரியரு = கோபியர்களாக கோகுலத்தில் பிறந்து கிருஷ்ணனின் அன்பிறகு பாத்திரராகி வளர்ந்த அப்ஸர ஸ்த்ரீயர்கள், 100 கோடிக்கு 100 பேர் குறைவாக இருக்கும் ரிஷிகளுக்கு
சமானரு = சமமானவர்கள்.
இவரிகிந்தலி = இவர்களைவிட,
சிரபித்ருகளுத்தமரு = சிரபித்ருகள் உத்தமர்கள்,

**எரடை$^{3}$து$^{3}$ எம்ப$^{3}$த்து ரிஷி தும்**
**பு$^{3}$ர ஷதோர்வரப்ஸரஸ்த்ரி**
**யரு ஷதாஜானஜரு உத்தம சிரபித்ருக$^{3}$ளிந்த$^{3}$ ।**
**வரரு ஊர்வஷிகி$^{3}$ந்த வைஷ்வா**
**நரன ஸுதரீரெண்டு ஸாவிர**

**ஹரதெ[3]யரொளுத்தம க[3]ஷெர்யெப்பத்து நால்கு ஜன ||3**

எரடயிது எம்பத்து ரிஷிகள் = 90 ரிஷிகள்;
தும்புருஷத = தும்புரு முதலான கந்தர்வர்கள் 100 பேர்;
ஊர்வஷியப்ஸர ஸ்த்ரீயரு ஷத = ஊர்வசி முதலான அப்ஸர ஸ்த்ரீயர் 100 பேர்;
அஜானஜரு = இவர்கள் சிரபித்ருகளைவிட உத்தமர்கள்.
வைஷ்வானரரு = அக்னியு
சுதரு = முக்தளான
ஈரெண்டு சாவிர = 16,000 ரிஷிகள் தவம் செய்து பெண்மை பெற்று ஸ்ரீகிருஷ்ணனின் மனைவிகளானவர்கள்;
சிரபித்ருகளிந்த, அவரரு = சிறிது குறைவானவர்கள்.
ஊர்வஷிகிந்த = ஊர்வசி முதலானவர்களைவிட சிறிது உத்தமர்கள் என்று அறியவேண்டும்.
அஜானஜ தேவதைகளில் சேர்ந்த 84 பேர் அவர்களுக்கு சமம் என்று அறியவேண்டும்.

**ஸரியெனிபரு வ்ரஜெளகஸ ஸ்த்ரி**
**யரு ஸூராஸ்யாத்மஜரிகி[3]ம் பு**
**ஷ்கரனு கர்மப புஷ்கரனிகெ[3] ஷனைஸ்சருத்தமனு |**
**த[1]ரணிஜனி கு[3]த்தமளுஷா ஸ்வினி**
**ஸூரரரசிகு[3]த்தம ஜலப பு[3]த[4]**
**ஷரதி[4]ஜாத்மஜ கு[3]த்தம ஸ்வஹதே[3]வி எனிஸுவளு ||4**

வ்ரஜெளகஸ்த்ரீயரு = கோபிகா ஸ்த்ரீகள்,
சுராஸ்யாத்மஜரிகெ = அக்னியின் மக்களான 16,000 பெண்களுக்கு சமமானவர்கள். இவர்களைவிட
கர்மப புஷ்கரனிகெ = கர்மாபிமானியான புஷ்கரன் உத்தமன்.
ஷனைஸ்சருத்தமனு = புஷ்கரனுக்கு சனீஸ்வரன் உத்தமன்.
தரணிஜனிகெ = சூர்ய புத்திரனான சனீஸ்வரனுக்கு,
அஸ்வினிசுரர = அஸ்வினி தேவதைகளின்;
அரசி உஷா = மனைவியான உஷா உத்தமள். அவளைவிட
ஜலப = ஜலாபிமானியான புதன் உத்தமன்.
ஷரதிஜ = சமுத்திரத்தில் பிறந்த சந்திரன்.
ஆத்மஜகெ = மகனான புதனுக்கு,
ஸ்வாஹா தேவி உத்தமள் ஆகின்றாள்.

**அனலபா[4]ர்யளி கி[3]ந்தனாக்[2]யா**
**தனிமிஷோத்தம ரிவரிகி[3]ந்தலி**
**க[4]னப பர்ஜன்யானிருத்[3]த[4]ன ஸ்த்ரி உஷாதே[3]வி |**
**த்[3]யுனதி[3] ஸஞ்ஞா ஷ்யாமலா ரோ**
**ஹிணிக[3]ளார்வரு ஸமரனாக்[2]யா**
**த[3]னிமிஷோத்த மரிவரிகி[3]ந்தலி நூரு கர்மஜரு ||5**

அனல பார்யளிகிந்த = அக்னிதேவரின் மனைவியான ஸ்வாஹா தேவியைவிட,
அனாக்யாதானிமிஷரு = தேவதைகளில் பிரபலமாகாதவர்கள் அனாக்யாதர், இவர்கள் உத்தமர்கள்.
அனாக்யாதரிந்தலி = அனாக்யாதர்களைவிட
கனப = மேகத்துக்கு அபிமானியான பர்ஜன்யன் உத்தமன்.
அனிருத்தன ஸ்த்ரி உஷாதேவி = இவனுக்கு அனிருத்தனின் மனைவி உஷாதேவி,
த்யுனதி = கங்கா,
சங்ஞா = சூர்யனின் மனைவி,
ஷாமளா = யமனின் மனைவி,
ரோஹிணி = சந்திரனின் மனைவி, இவர்கள் அனைவரும் சமம். அனாக்யாத தேவதைகளைவிட உத்தமர்கள். இவர்களைவிட,
100 கர்மஜர்கள் = கர்மங்களை சரியாக செய்து பதவியைப் பெற்ற தேவதைகள் கர்மதேவதைகள் - அவர்கள் மொத்தம் 100 பேர், இவர்கள் உத்தமர்கள்.

**ப்ருது2 நஹுஷ ஷஷபி3ந்து3 ப்ரீய**
**வ்ரத பரீக்ஷித ந்ருபரு பா4கீ3**
**ரதி2ய நோட3ல்கதி4க ப3லியாதி3ந்த்3ர ஸப்தகரு ।**
**பித்ருக3ளெண் டெண்டதி4க வப்ஸர**
**ஸதியரீரைதொ3ந்து3 மனுக3ளு**
**தி3திஜகு3ரு ச்யாவன உசத்யரு கர்மஜரு ஸமரு ||6**

ப்ருது, நஹுஷ, ஷஷபிந்து, ப்ரியவ்ரத, பரீக்ஷித ந்ருபரு = இந்த ராஜர்கள்,
பாகீரதிய நோடல்கதிக = தாரதம்யத்தின்படி கங்கை முதலானவரகளைவிட உத்தமர்கள்;
பல்யாதிந்த்ர சப்தகரு = பலிசக்ரவர்த்தி முதலான ஏழு இந்திரர்கள்,
பித்ருகளெண்டு = எட்டு பித்ருகள்,
எண்டதிக அப்ஸர சதியரு = எட்டு அப்ஸர ஸ்த்ரியர்கள், இந்த எட்டு பித்ருகளைவிட உத்தமர்கள்
ஈரைதொந்து மனுகளு = (2*5)+1 = 11 மனுகள்,
திதிஜகுரு = சுக்ராசார்யர்;
ச்யாவன உசித்யரு கர்மஜரு சமரு = ச்யாவன ரிஷி, உசித்ய ரிஷி, கர்மஜ தேவதைகள் - இவர்கள் அனைவரும் சமமானவர்கள்.

**த4னப விஷ்வக்ஸேன க3ணபா**
**ஷ்வினிக3 ளெம்பத்தைது3 ஸேஷரி**
**கெ3ணெ எனிஸுவரு மித்ர தாரா நிர்ருதி ப்ராவாஹி ।**
**கு3ணக3ளிந்தை3த3தி4க எம்ப**
**த்தெனிப ஸேஷரிகு3த்தமரு ஸ**
**ந்முனி மரீசி புலஸ்த்ய புலஹ க்ரது வஸிஷ்டமுக2 ||7**

தனப = குபேரன்;
விஷ்வக்சேன = பிரதான வாயுதேவரின் புத்ரன்; கணபதி,
அஸ்வினி தேவதைகள், ஆகியோர்
எம்பத்தைது சேஷரிகெணெ எனிஸுவரு = 85 சேஷ சதஸ்தர்களுக்கு சமம் எனப்படுகிறார்கள். (சேஷ சதஸ்தர்கள் ஆகியோரை ப்ருஹத் தாரதம்ய சந்தியில் விளக்கமாக சொல்லியிருக்கிறார் ஆகையால் இங்கு மறுபடி விளக்கவில்லை).
மித்ர = சூர்ய;
தாரா = ப்ருஹஸ்பத்யாசார்யரின் மனைவி;
நிருருதி = திக்பாலகர்;
ப்ரவஹி = ப்ரவஹ வாயுவின் மனைவி; இவர்கள் குணங்களால் ஐதெனிப எம்பத்தெனிப சேஷரிகெ = 85 சேஷசதஸ்தர்களைவிட உத்தமர்கள்.
சன்முனி = உத்தம ரிஷிகளான பிரம்ம தேவரின் மக்களான மரீசி, புலஸ்த்ய, புலஹ, க்ருது;
வசிஷ்டமுக = இவர்களே முதலானவர்கள்.

**அத்ரி அங்கி3ரரேளு பி3ரம்மன**
**புத்ரரிவரிகெ3 ஸமரு விஷ்வா**
**மித்ர வைவஸ்வதரு ஈஷாவேஷ ப3லதி3ந்த3 |**
**மித்ரகி3ந்துத்தமரு ஸ்வாஹா**
**ப4ர்த்ரு ப்4ருகு3வு ப்ரஸூதி விஷ்வா**
**மித்ர மொத3லாத3வரிகி3ந்த3லி மூவருத்தமரு ||8**

அத்ரி, அங்கிரரு = முந்தைய பத்யத்தில் கூறிய மரீசியிலிருந்து அங்கிரரு வரையிலான ஏழு பேர்,
பிரம்மன புத்ரரு = பிரம்மனின் மக்களாவர்.
இவரிகெ ஈஷாவேஷ பலதிந்த = பரமாத்மனின் ஆவேச பலத்தினால்;
விஸ்வாமித்ரர், வைவஸ்வத மனு இவர்கள் சமமானவர்கள். மொத்தம் 9 பேர். மித்ரரிம்துத்தமரு = மித்ர முதலானவர்களைவிட, உத்தமர்கள். விஸ்வாமித்ர முதலானவர்களைவிட
ஸ்வாஹாபர்த்ரு = அக்னிதேவன், ப்ருகு ரிஷிகள், தக்ஷப்ரஜேஷ்வரனின் மனைவி ப்ரசூதி, இவர்கள் மூவர் உத்தமர்கள்.

மரீசி, புலஸ்த்ய, புலஹ, க்ரது, வசிஷ்ட, அத்ரி, அங்கிரர் என்னும் ஏழு பேர் பிரம்ம தேவரின் மக்கள். விஸ்வாமித்ரர், வைவஸ்வதமனு இவர்களுடன் இந்த ஒன்பது பேரும் சமமானவர்கள். மித்ரர் முதலானவர்களைவிட உத்தமர்கள். இவர்களைவிட அக்னி, ப்ருகு, ப்ரசூதி இந்த மூவரும் உத்தமர்கள்.

**நாரதோ3த்தம நக்3னிகி3ந்தலி**
**வாரிநி3தி4 பாதோ3த்தமனு யம**
**தாரகேஷ தி3வாகரரு ஷதரூபருத்தமரு |**
**வாரிஜாப்தனிகி3ந்த3லி ப்ரவஹ**
**மாருதோத்தம ப்ரவஹகி3ந்தலி**

**மாரபுத்ர அனிருத்த[3] கு[3]ரு மனு த[3]க்ஷ சசி ரதியு ||9**

அக்னிகிந்தலி = அக்னியைவிட,
நாரதோத்தம = நாரதர் உத்தமர்.
வாரிநிதி பாதோத்தமனு = அவரைவிட கால்பாகம் மட்டும் வருணன் உத்தமன்.
இவரைவிட் யம,
தாரகேஷ = சந்திரன்,
திவாகரன் = சூர்ய,
ஷதகூப = ஸ்வாயம்புவ மனுவின் மனைவி, இவர்கள் உத்தமர்கள்.
வாரிஜாப்தனிகிந்த = சூர்யர்களைவிட
ப்ரவஹ மாருதோத்தம = ப்ரவஹ மாருதன் உத்தமன்.
ப்ரவஹகனைவிட,
மாரபுத்ர = மன்மதன்,
பிரத்யும்னனின் மகன் அனிருத்தன்,
குரு = பிருகஸ்பதி,
ஸ்வாயம்புவ மனு,
தக்ஷ,
சசிதேவி = இந்திரனின் மனைவி ரதிதேவி;
இவர்கள் ஆறு பேரும் உத்தமர்கள்.

**ஆருஜனக[3]ளி கி[3]ந்தலி அஹ**
**ங்காரிக ப்ராணோத்த மகி[2]ல ஷ**
**ரீரமானி ப்ராணகி[3]ந்தலி காம இந்த்[3]ரரிகெ[3] |**
**கௌரி வாருணி க[2]க[3]பராணிகெ[3]**
**ஷௌரி மஹிஷியரொளகெ[3] ஜாம்பவ**
**தி ரமாயுதளாத[3] காரண அதி[4]களெனிஸுவளு ||10**

ஆருஜனகளிகிந்தலி = முந்தைய பத்யத்தில் கூறிய அனிருத்தாதி ஆறு பேர்களைவிட;
அஹங்காரிக பிராணன் உத்தமன்.
அகில சரீரமானியான அஹங்காரிக பிராணனைவிட,
காம = மன்மதன், இந்திரன் உத்தமன்.
காம, இந்திரனைவிட
கௌரி,
வாருணி = சேஷதேவரின் மனைவி,
ககபராணி = கருடனின் மனைவி,
சௌபர்ணி - ஆகிய மூவர் உத்தமர்கள்.
கௌரி வாருணி ககபராணிகளைவிட
சௌரி மஹிஷியரு = கிருஷ்ணனின் ஷண் மஹிஷியர்கள், ஜாம்பவதி மித்ரவிந்தா முதலான ஆறு பேர்கள் உத்தமர்கள்.
இவர்களில் ஜாம்பவதி,

ரமாயுதளாத காரண = லட்சுமிதேவியின் ஆவேசத்தின் விசேஷ பலத்தினால் அதிகள் (சிறந்தவள்) என்று கூறப்படுகிறாள்.

**ஹர ப2ணிப விஹகே3ந்த்3ர மூவரு**
**ஹரிமட3தி3யரி கு3த்தமரு ஸௌ**
**பரணிபதி கு3த்தமரு பா4ரதி வாணி ஈர்வரிகெ3 |**
**மருத பி3ரம்மரு உத்தமரு இந்தி3ரெயு**
**பரமோத்தமளு லக்ஷ்மிகெ3**
**ஸரியெனிஸுவ வரில்லவெந்தி3கு3 தே3ஷகாலதொ3ளு ||11**

ஹர, பணிப = சேஷதேவர்,
விஹகேந்த்ர = கருடன், இவர்கள் மூவரும்
ஹரிமடதியரிகெ = கிருஷ்ணனின் மனைவியரைவிட உத்தமர்கள்.
சௌபர்ணிபதிகெ = கருடன் முதலானவர்களைவிட
பாரதி தேவியர்,
வாணி = சரஸ்வதி தேவியர் உத்தமர்கள்.
ஈர்வரிகெ = இவர்கள் இருவரைவிட,
மருத பிரம்மரு = வாயு தேவரு, பிரம்ம தேவர் உத்தமர்கள்.
இவர்களைவிட
இந்திரெயு = ரமா தேவி, பரம உத்தமள்.
லட்சுமி தேவியைவிட
தேசகாலதொளு = எந்த தேசத்திலாகட்டும் எந்த காலத்திலாகட்டும் என்றைக்கும் சமம் என்போர் யாரும் இல்லை.

**ஸ்ரீமுகுந்த3ன மஹிளெ லகுமி ம**
**ஹாமஹிமெ கே3னெம்பெ3 பி3ரம்மே**
**ஷாமரேந்த்ரர ஸ்ருஷ்டி ஸ்தி2தி லயகை3ஸி அவரவர |**
**தா4மக3ள கல்பிஸி கொடு3வள ஜ**
**ரா மரணளாகி3த்து ஸர்வ**
**ஸ்வாமி மம கு3ருவெந்து3பாஸனெ மாள்பள ச்யுதன ||12**

ஸ்ரீமுகுந்தன,
மஹிஷி = மனைவியான லட்சுமிதேவி,
பிரம்மேஷாமரேந்திர = பிரம்ம, சிவ, இந்திர ஆகியோரின் ஸ்ருஷ்டி, ஸ்திதி, லயங்களை செய்து அவரவர்களுக்கு அவரவர் இடங்களைக் கொடுப்பது. அஜராமரணளாகித்து = முதுமை, மரணம் ஆகிய நிலைகள் இல்லாமல்;
சர்வஸ்வாமி,
மம = என் குருவான அச்யுதனின் உபாசனையை செய்வர். இத்தகைய மகாலட்சுமியின்
மஹாமஹிமெ கேனெம்பெ = மகாமகிமைகளை என்னவென்று வர்ணிப்பது?

லட்சுமிதேவியானவர், சத்வ ரஜோ தமோ குணங்களாலான ப்ரக்ருதி ஸ்வரூபமானவர். மூன்று குணாத்மகராகி, ஸ்ரீ பூ துர்கா ரூபமாக இருப்பவர். பரமாத்மனின் ப்ரக்ருதி சம்பந்தமான ரஜோ குணத்தினால் ஸ்ருஷ்டி, சத்வகுணத்தினால் காத்தல், தமோ குணத்தினால் அழித்தல் ஆகியவற்றை செய்கிறார். அவரவரின் பதவியை பெறவேண்டுமானாலும் லட்சுமிதேவியின் அருளாலேயே அது ஆகவேண்டும்.

முக்தி ஸ்தானத்திற்கு போகவேண்டியவர்கள் 'ஸ்ரீமன் ப்ராப்யானுமோதிதா:' என்னும் பாகவத தாத்பர்ய வாக்கியத்திற்கேற்ப லட்சுமிதேவியரின் அனுமதியுடனேயே முக்தியை பெறவேண்டும். பிறப்பு இறப்பு ஆகியவை இல்லாமல், பிரளய காலத்திலும் கூட, பரமாத்மனின் சேவையை செய்து கொண்டிருப்பார். எப்போதும் எந்நேரமும், சர்வஸ்வாமி, என் குருவென்று பரமாத்மனின் உபாசனையை செய்து கொண்டிருப்பார். இத்தகைய மகாலட்சுமியின் மகா மகிமைகளை என்னவென்று சொல்லி வர்ணிப்பேன்?

**ஈஸு மஹிமெக$^{3}$ளுள்ள லகுமி ப**
**ரேஷனானந்தா$^{3}$ம்ஷ கு$^{3}$ணதொ$^{3}$ளு**
**லேஷலேஷக்கெ ஸரியெனிஸளாவாவ காலத$^{3}$லி |**
**தே$^{3}$ஷகாலாதீ$^{3}$த லகுமிகெ$^{3}$**
**கேஷவன வக்ஷஸ்த$^{2}$லவெ அவ**
**காஷவாயிது இவன மஹிமெகெ$^{3}$ வ்யாப்திகெ$^{3}$ணெயுண்டெ ||13**

ஈசுமஹிமெகளுள்ள = இவ்வளவு மகிமைகளைக் கொண்ட ரமாதேவி,
பரேஷன = சர்வோத்தமனான பரமாத்மனின் குணங்களுக்கு,
அனந்தாம்ஷதொளு = எந்தவொரு காலத்திலும் சரியானவளாக மாட்டாள். பரமாத்மனின் அனந்த குணங்களின் அம்சங்களில் ஒரு சிறிய அம்சத்திற்கும்கூட சமமாக மாட்டாள் என்று பொருள்.
தேஷகாலாதீத லகுமிகெ = ஏதாவதொரு காலத்தில் சமமில்லை என்று பொருளில்லை. அனைத்து இடங்களிலும், காலங்களிலும் சமமில்லை என்று பொருள். இத்தகைய லட்சுமிதேவிக்கு,
கேஷவன வக்ஷஸ்தலவே = கேசவனின் மார்பே
அவகாஷவாயிது = இருப்பிடமாயிற்று.
இப்படி விளக்கியபிறகு,
இவன = இந்த பரமாத்மனின்
மஹிமெகெ = மகிமைகளுக்கும்,
வியாப்திகெணெயுண்டெ = வியாப்திக்கும் இணையுண்டா?

**ஒந்து$^{3}$ ரூபதொ$^{3}$ ளொந்த$^{3}$வயவதொ$^{3}$**
**ளொந்து$^{3}$ ரோமதொ$^{3}$ளொந்து$^{3}$ தே$^{3}$ஷதி$^{3}$**
**பொந்தி$^{3}$ கொண்டி$^{3}$ஹவஜ ப$^{4}$வாதி$^{3}$ ஸமஸ்த ஜீவக$^{3}$ண |**
**ஸிந்து$^{4}$ ஸப்தத்$^{3}$வீப மேரு ஸு**
**மந்த$^{3}$ராத்$^{3}$யத்ரிக$^{3}$ளு பி$^{3}$ரம்ம பு**

**ரந்தராதி3 ஸமஸ்த லோக பராலயக3 ளெல்ல ||14**

ஒரு ரூபத்தில், ஒரு தேக உறுப்பில், ஒரு முடியில்,
ஒரு தேஷதி = அந்த முடியின் ஒரு பாகத்தில்,
அஜபவாதி = பிரம்ம ருத்ராதி அனைத்து ஜீவகணங்கள்,
சிந்து = ஏழு கடல்கள்,
சப்தத்வீப = ஏழு தீவுகள்,
மேரு = மேரு பர்வதம்,
சுமந்தராத்யத்ரிகளு = மந்தர முதலான மலைகள்,
பிரம்மபுரந்தராதி = பிரம்ம இந்திர முதலான,
சமஸ்தலோகபர = உலகத்தை காப்பவர்களின்,
ஆலயகளெல்ல = வீடுகள் அனைத்தும்
பொந்திகொண்டிஹவு = சேர்ந்திருக்கிறது.

**ஸர்வதே3வோத்தமனு ஸர்வக3**
**ஸர்வகு3ண ஸம்பூர்ண ஸர்வத3**
**ஸர்வதந்த்ர ஸ்வதந்த்ர ஸர்வாதா4ர ஸர்வாத்ம |**
**ஸர்வதோமுக2 ஸர்வ நாமக**
**ஸர்வஜனஸம்பூஜ்ய ஷாஸ்வத**
**ஸர்வகாமத3 ஸர்வஸாக்ஷிக3 ஸர்வஜித்ஸர்வ ||15**

சர்வதேவோத்தமன் = பரமாத்மன் சர்வதேவோத்தமன்,
சர்வக = எல்லா இடங்களிலும் வியாபித்திருப்பவன்,
சர்வகுண சம்பூர்ணன் = அனைத்து நற்குணங்களும் நிரம்பப் பெற்றவன்
எப்போதும் சர்வதந்த்ர ஸ்வதந்திரன்.
சர்வாதார = அனைவருக்கும் ஆதாரமானவன்.
சர்வாத்மகன்.
சர்வதோமுக = அனைத்து இடங்களிலும் உள்ளவன்.
அனைத்து பெயர்களையும் கொண்டவன்.
அனைவராலும் பூஜிக்கப்படுபவன்.
ஷாஸ்வத = நிரந்தரமானவன்.
சர்வகாமத = அனைவரின் மனதின் ஆசைகளையும் நிறைவேற்றுபவன்.
சர்வசாக்ஷிக = அனைவரையும் தேர்ச்சியடைய வைப்பவன்.
ஆகையாலேயே, சர்வ என்று பெயர் பெற்றவன் ஆகிறான்.

**தாரதம்யா ரோஹணவ பரெ**
**தா3ரு படிஸுவரவர லக்ஷ்மி**
**நாரசிம்ஹ ஸமஸ்த தே3வக3ணாந்தராத்மகனு |**
**பூரயிஸுவ மனோரத2ங்க3ள**
**காருணிக கை1வல்யதா3யக**
**தூரகை3வ ஸமஸ்தது3ரிதவ வீதப4ய ஷோக ||16**

இந்த ஆரோகண தாரதம்யத்தை
பரெதாரு படிசுவர = யார் எழுதுவரோ, யார் படிப்பரோ,
அவர = அவரின்
மனோரதங்கள = மனோபீஷ்டங்களை,
சமஸ்த தேவகணாந்தராத்மகனு = அனைத்து தேவதைகளுக்குள்ளும் அந்தர்யாமியாக இருப்பவனும்,
காருணிக = கருணா சமுத்திரனும்,
கைவல்ய தாயக = முக்தியைக் கொடுப்பவனும்,
வீதபய ஷோக = பயம் / சோகங்கள் இல்லாதவனுமான ஸ்ரீலட்சுமி நரசிம்மன் நிறைவேற்றுவான். அவர்களுக்கு ஏற்படக்கூடிய அனைத்து பாவங்களையும், அனைத்து கஷ்டங்களையும் பரிகரிப்பான்.

**ப்ரணத காமத3னங்க்4ரி ஸந்த3ரு**
**ஷன தபேக்ஷெக3 ளுள்ளவகெ3 நி**
**ச்சணிகெ யெனிபுது3 ஜட3மொத3லு பி3ரம்மாந்த1 த1ரத1மவு |**
**மன வசனதி3ம் ஸ்மரிஸுவர ப4வ**
**வனதி4 ஷோஷிஸி போ1கு3வுது3 கா**
**ரணவெனிஸுவுது3 ஞான ப4க்தி விரக்தி ஸம்பத3கெ ||17**

ப்ரணத காமதன = தன்னை வணங்குபவர்களின் மனோபீஷ்டங்களை நிறைவேற்றும் ஸ்ரீஹரி,
அங்க்ரி = ஸ்ரீஹரியின் பாதங்களை
சந்தர்ஷனத அபேக்ஷெகளுள்ளவகெ = தரிசிக்க விரும்புபவர்கள்
தரதமவு = இந்த சந்தியில் சொல்லப்பட்டுள்ள,
ஜடமொதலு பிரம்மாந்த = ஜட முதல் பிரம்மதேவர் வரைக்குமான தாரதம்ய ஞானம்;
நிச்சணிகெ யெனிபுது = (இந்த ஞானம்) ஒரு ஏணியாக கருதப்படுகிறது
மனவசனதிம் = மனதினாலும் வாக்கினாலும் நினைப்பவர்களின் ;
பவவனதி = சம்சார சாகரம்
ஷோஷிஸி போகுவுது = வறண்டு போகும், மற்றும் அவர்களின்
ஞான பக்தி விரக்தி செல்வத்திற்கு (இந்த ஞானமே) காரணமாகும்.

**அனலனொளு ஹோமிஸுவ ஹரிச**
**ந்தனவெ மொத3லாது3த3ர ஸுவா**
**ஸனெயு ப்ரத்ப்ரத்யேக தோர்புது3 எல்லகாலத3லி |**
**த3னுஜ மானவ தி3விஜ ரவரவ**
**ர னுசிதோசித கர்ம வ்ருஜினா**
**ர்த்த4னனு வ்யக்திய மாள்ப த்ரிகு3ணாதீத விக்2யாத ||18**

அனலனொளு = அக்னியில்
ஹோமிஸுவ = ஹோமம் செய்யப்படும்
சந்தனவே மொதலாதுதர = சந்தனம் முதலான சுகந்த திரவ்யங்களின்

சுவாசனெயு = நறுமணமானது
எல்லகாலதலி = அனைத்து காலங்களிலும்
ப்ரத்ப்ரத்யேக தோர்புது = தனித்தனியாக தெரியும்.
தனுஜ = தைத்யர்கள்,
மானவ = மனிதர்கள்,
திவிஜரு = தேவதைகள்
அவரவர = அவரவர்களின்
அனுசிதோசிதகர்ம = புண்ய பாவம் முதலான கர்மங்கள்,
த்ரிகுணாதீஷ = ப்ராக்ருத குணங்களுக்கும் அப்பாற்பட்ட (அவற்றை தன் கட்டுப்பாட்டில் வைத்துக் கொண்டிருப்பவன்),
விக்யாத = உலகப் புகழ்பெற்ற, கஷ்டங்களை பரிகரிப்பவனான ஸ்ரீஹரி, பிரித்துக் கொடுப்பான்.

சந்தனக்கட்டை முதலான வாசனைத் திரவியங்களை, நெருப்பில் (ஹோமத்தில்) இட்டால், எப்படி அதற்கான வாசனைகள் தனித்தனியாக தெரியுமோ, அதுபோலவே, தைத்யர், மனுஷ்யர், தேவதைகள் ஆகியோர் செய்யும் பாப புண்ணியங்களை தனித்தனியாக பிரித்துக் காட்டுவான், ஸ்ரீஹரி.

**ப$^{4}$க்தவத்ஸல பா$^{4}$க்யபுருஷ வி**
**விக்த விஷ்வாதா$^{4}$ர ஸர்வோ**
**த்ரிக்த த்ருஷ்டாத்ருஷ்ட து$^{3}$ர்க$^{3}$ம து$^{3}$ர்விபா$^{4}$க்ய ஸ்வஹி ।**
**ஷக்த ஷாஷ்வத ஸகலவேதை$^{3}$**
**கோக்த மானத$^{3}$ மான்ய மாத$^{4}$வ**
**ஸூக்த ஸூக்ஷ்ம ஸ்தூ$^{2}$ல த்ரிஜக$^{3}$ன்னாத$^{2}$விட்ட$^{2}$லனு ॥19**

பக்தவத்ஸலன்;
பாக்யபுருஷன்;
விவிக்த = ஏகாந்தவாசி;
விஷ்வாதார = உலகத்திற்கே ஆதாரமானவன்;
சர்வோத்ரிக்த = சர்வோத்தமன்,
தோஷவிதூர = தோஷங்கள் இல்லாதவன்,
துர்கம = கட்டுப்படுத்த முடியாதவன்;
துர்விபாவ்ய = புரிந்து கொள்ள முடியாதவன்;
ஸ்வஹி = தன்னால் தானே புகழ்பெற்றவன் அல்லது ஸ்வதந்திரன்;
ஷக்த = சாமர்த்தியம் கொண்டவன்;
சாஸ்வத = நித்யன்;
சகலவேதைகோக்த = அனைத்து வேதங்களால், முக்கியமாக சர்வோத்தமன் என்று புகழப்பட்டவன்;
மானத = பக்தர்களுக்கு வரங்களைக் கொடுப்பவன்;
மான்ய = அனைவராலும் போற்றப்படுபவன்;
மாதவ = லட்சுமிபதி;
சூக்த = நன்றாக புகழப்படுபவன்;

சூக்ஷ்ம = அணுவைப் போன்ற உருவம் கொண்டவன்;
ஸ்தூல = பிரம்மாண்டத்தைப் போன்ற ரூபம் கொண்டவன்; பெரியதை விட பெரியதானவன்; இத்தகைய மகாமகிமைகளைக் கொண்டவன் ஸ்ரீஜகன்னாதவிட்டலன்.

ஆரோஹண தாரதம்ய சந்தி என்னும் 25ம் சந்தியின் தாத்பர்யம் இங்கு முடிந்தது.
ஸ்ரீகிருஷ்ணார்ப்பணமஸ்து.
***

## பாவபிரகாசிகை : சந்தி 26 : அவரோஹண தாரதம்ய சந்தி

**/ அவரோஹண அனுக்ரமணிகா சந்தி**

**ஹரிகதா2ம்ருதசார கு3ருக3ள**
**கருணதிந்தா3பநிது பே1ளுவே**
**பரம ப4கவத்3ப4க்தரித3னாத3ரதி கேளுவுது3**

**குறிப்பு:**

தாரதம்ய விஷயத்தை முன்னர் ப்ருஹத் தாரதம்ய சந்தியிலும், குண தாரதம்ய சந்தியிலும் விவரமாக விளக்கியிருப்பதால், இந்த சந்தியில் பதத்திற்கான பொருள் மட்டும் விளக்கப்பட்டிருக்கிறது.

**ஸந்தி ஸூசனை:**

ஸ்ரீரமண நிஜப4க்தரெனிஸுவ
வாரிஜாஸன முக்2யனிர்ஜர
தாரதம்யவபேள்வ சம்க்ஷேபத3லி கு3ருப4லதி3 ||

**பொருள்:**

லட்சுமிபதியான ஸ்ரீபத்பனாபனின் நிஜ பக்தனான பிரம்மதேவரே முதலான தேவதைகளின் தாரதம்யத்தை, குருகிருபா கடாக்ஷத்தினால் சுருக்கமாக சொல்கிறேன் என்று இந்த சந்தியின் அபிப்பிராயத்தை தெரிவிக்கிறார்.

**கேஷவகெ3 நாராயணிகெ3 கம**
**லாஸன ஸமீரணகெ3 வாணி**
**வீஷ ப2ணிப மஹேஷரிகெ3 ஷண்மஹிஷியர பத3கெ |**
**ஸேஷ ருத்3ரர பத்னியரிகெ3 ஸு**
**வாஸவ ப்ரத்4யும்னரிகெ3 ஸ**
**ந்தோஷத3லி வந்திஸுவெ ப4க்திஞான கொட3லெந்து3 ||1**

ஸ்ரீமன் நாராயணனுக்கும், அவனின் மனைவியான லட்சுமிதேவிக்கும், பிரம்ம வாயுகளுக்கும், சரஸ்வதி பாரதியருக்கும், கருட, சேஷ, ருத்ர, கிருஷ்ணனின் ஷண்மஹிஷியருக்கும், இவர்கள் அனைவரின் பாத கமலங்களுக்கும், சௌபர்ணி,

வாருணி பார்வதியருக்கும், இந்திர காமனுக்கும், பக்தி ஞானத்தை வழங்குமாறு மகிழ்ச்சியுடன் வணங்குவேன்.

**ப்ராணதே$^3$வகெ$^3$ நமிபெ காமன**
**ஸூனு மனு கு$^3$ரு த$^3$க்ஷ ஷசி ரதி**
**மானினியரிகெ$^3$ ப்ரவஹதேவகெ$^3$ ஸூர்ய ஸோம யம ।**
**மானவிகெ$^3$ வருணனிகெ$^3$ வீணா**
**பாணி நாரத$^3$முனிகெ$^3$ நமிஸுவெ**
**ஞான ப$^4$க்தி விரக்தி மார்க$^3$வ திளிஸலெனகெ$^3$ந்து$^3$ ।।2**

அஹங்காரிக பிராணரை வணங்குவேன். மன்மதனின் புதல்வன் அனிருத்த, மனு, குரு, தக்ஷ, சசி, ரதி - இவர்கள் ஆறு பேருக்கும், ப்ரவஹ வாயுவிற்கு, சூர்ய, சந்திர, யம, ஷதரூபா - இவர்கள் நால்வருக்கும், வருணனுக்கு, நாரதருக்கும், ஞான பக்தி விரக்தி ஆகியவற்றை பெறும் வழியினை எனக்கு தெரிவிக்குமாறு வணங்குவேன்.

**அனல ப்$^4$ருகு$^3$ தா$^3$க்ஷாயணியரிகெ$^3$**
**கனகக$^3$ர்ப$^4$ஜ ஸப்தருஷிக$^3$ளு**
**கெ$^3$ணெயெனிப வைவஸ்தனு மனு கா$^3$தி$^4$ஸம்ப$^4$வகெ$^3$ ।**
**த$^3$னுஜ நிர்ருதி தார ப்ராவஹி**
**வனஜமித்ரகெ$^3$ அஸ்வினி க$^3$ணப**
**த$^4$னப விஷ்வக்ஸேனரிகெ$^3$ வந்திஸுவெ நனவரத ।।3**

அக்னி தேவனுக்கு, ப்ருகு ரிஷிகளுக்கு, தாக்ஷாயிணியான ப்ரசூதி தேவிக்கு, பிரம்ம தேவரின் மக்களான ஏழு முனிவர்களுக்கு, இவர்களுக்கு சமமான வைவஸ்வத மனுவிற்கு, விஸ்வாமித்ரருக்கும், அரக்கனான நிரருதி, தாரா, ப்ராவஹி, மித்ர என்னும் சூரியன் ஆகியோருக்கு, அஸ்வினி, கணபதி, குபேர, விஷ்வக்சேன இவர் அனைவரையும் நான் எப்போதும் வணங்குவேன்.

**உக்த தே$^3$வர்க்க$^3$ளனுளிது எ**
**ம்பத்தயிது$^3$ ஜனருக$^3$ளு மனுக$^3$ளு**
**சத்$^2$ய ச்யாவன யமளரிகெ$^3$ கர்மஜரெனிஸுதிப்ப ।**
**கார்தவீர்யார்ஜுனனெ ப்ரமுக$^2$ ஷ**
**தஸ்த$^2$ரிகெ$^3$ பர்ஜன்ய க$^3$ங்கா$^3$**
**தி$^3$த்ய யம ஸோமானிருத்$^3$த$^4$ன பத்னியர பத$^3$கெ ।।4**

உக்த சேஷசதஸ்தர்கள் - உத்தம வகுப்பில் சேர்ந்தவர்கள் 15 தவிர மீதம் 85 பேர். மனுகள், உசித்யர், ச்யாவன யமளர், கர்மதேவதை என்று அழைக்கப்படும் கார்த்தவீர்யார்ஜுன் முதலான முக்கிய 100 பேருக்கு, பர்ஜன்ய என்னும் சூரியன், கங்கா, சஞ்ஞா, ரோஹிணி, ஷாமளே, அனிருத்தனின் மனைவி உஷா - இவர்களின் பாத கமலங்களை நான் வணங்குவேன்.

**ஹுதவ ஹர்த்தா$^4$ங்கி$^3$னிகெ$^3$ சந்த்$^3$ரன**
**ஸுதபு$^3$த$^4$கெ$^3$ நாமாத்மிக உஷா**

**ஸதிகெ³ சா²யாத்மஜ ஷனைஸ்சரகா³னமிபெ ஸதத ।**
**ப்ரதிதி³வஸத³லி பி³ட³தெ³ ஜீவ**
**ப்ரததி மாடு³வ கர்மக³ளிக³தி⁴**
**பதி எனிப புஷ்கரன பாதா³ம்பு⁴ஜக³ளிகெ³ நமிபெ ।।5**

ஹுதவஹன = அக்னிபுருஷன்,
அர்த்தாங்கி = அவரின் மனைவி ஸ்வாஹாதேவி,
புத, அஸ்வினியின் மனைவி உஷா, சனீஸ்வர - இவர்களை எப்போதும் வணங்குவேன். அனைத்து ஜீவர்களும் செய்யும் கர்மங்களுக்கு அபிமானியான புஷ்கரனின் பாத கமலங்களை நான் வணங்குவேன்.

**ஆனமிபெ ஆஜானஜரிகெ³ க்ரு**
**ஷானுஸுதரிகெ³ கோ³வ்ரஜதொ³ளிஹ**
**மானினியரிகெ³ மௌனிஜன ஷதன்யூன ஷதகோடி ।**
**மானிபிதரிகெ³ தே³வ மானவ**
**கா³னப்ரௌட³ரிக³வனி பரிகெ³ ர**
**மானிவாஸன தா³சவர்க்க³கெ நமிபெனனவரத ।।6**

அஜானஜ தேவதைகளுக்கு, அக்னியின் புதல்வர்களான 16,100 பேருக்கு, கிருஷ்ணருடன் இருக்கும் கோபிகா ஸ்த்ரீயருக்கு, சிரபித்ருகளுக்கு, 100 கோடிக்கு 100 குறைவான முனிவர்களுக்கு, தேவகந்தர்வ, மனுஷ்ய கந்தர்வர்களுக்கு, சக்ரவர்த்திகளுக்கு, ரமாபதியான ஸ்ரீபரமாத்மனின் தாசர்களான மனுஷ்யோத்தமர்களுக்கு என இவர்கள் அனைவரையும் நான் எப்போதும் நமஸ்காரம் செய்வேன்.

**அனுதினவ னுக்ரமதொ³ளவரோ**
**ஹணதரதமவ ப⁴க்திபூர்வக**
**நெனெவரிகெ³ த⁴ர்மார்த்த² காமாதி³க³ளு ப²லிஸுவுவு ।**
**வனஜஸம்ப⁴வ முக்²யரவயவ**
**ரெனிஸுவ ஜக³ன்னாதவிட்ட²லகெ³**
**வினயதி³ந்த³லி நமிஸி கொண்டா³டு³தி³ரு மரெயத³லெ ।।7**

அனுக்ரமணிகா தாரதம்யத்தை தினமும் படிப்பவர்களுக்கு, தர்மார்த்த காம மோட்சம் என்னும் புருஷார்த்தங்கள் கிடைக்கும். பிரம்மாதி தேவதைகள் அனைவரும் ஸ்ரீஜகன்னாதவிட்டலனுடன் இருப்பவர்கள். ஆகையால், அவர்கள் அனைவருக்கும் என் மரியாதைபூர்வமான நமஸ்காரத்தை செலுத்தி, மறக்காமல் அவர்களை தினந்தோறும் வணங்குவேன்.

அவரோகண தாரதம்ய சந்தி என்னும் 26வது சந்தியின் தாத்பர்யம் இத்துடன் முடிந்தது.
ஸ்ரீகிருஷ்ணார்ப்பணமஸ்து.

***

## பாவபிரகாசிகை : சந்தி 27 : அனுக்ரமணிகா தாரதம்ய சந்தி

**ஹரிகதா[2]ம்ருதசார கு[3]ருக[3]ள**
**கருணதிந்தா[3]பநிது பே[1]ளுவே**
**பரம ப[4]கவத்[3]ப[4]க்தரித[3]னாத[3]ரதி கேளுவுது[3]**

முன்னர், குணதாரதம்ய சந்தி, ப்ருஹத் தாரதம்ய சந்தி, ஆரோகண தாரதம்ய சந்தி என்று மூன்று தாரதம்ய சந்திகளையும் மற்றும் அவரோகண, அனுக்ரமணிகா தாரதம்ய சந்திகளையும் இயற்றியிருக்கிறார். மேலும் பின்னர் அணுதாரதம்ய சந்தி என்றும் 19ம் சந்தி வருகிறது. இப்படியாக ஒரே தாரதம்ய விஷயத்தை 6 சந்திகளில் சொல்லியிருப்பதால், புனருக்தி தோஷம் (சொன்னதையே திரும்பத் திரும்ப சொல்லுதல்) இருப்பதாக நினைக்கக்கூடாது.

'புன:புன: கதாம்ப்ருயு: அப்யாஸா துத்தமம் பலம்' என்ற பாகவத வாக்கியத்திற்கேற்ப ஒன்றுக்கு நான்கு முறை சொன்னால் மனதில் நிலைத்திருக்கும், நன்றாக புரியும் என்பதே பொருள். மறுபடி மறுபடி சொல்வதால், நற்பலன்களும் அதிகம் கிடைக்கும் என்பது நோக்கம். குண தாரதம்யத்தில் யாரைவிட யார் எவ்வளவு குணங்கள் குறைவு என்று அவரோகணமாக கூறியிருக்கிறார். ஆரோகணம் என்றால் கீழிருந்து மேல் போவது. அவரோகணம் என்றால் மேலிருந்து கீழ் இறங்குவது.

பிறகு, ப்ருஹத் தாரதம்யத்தில், தாரதம்யத்தை மிகவும் விளக்கமாக அவரோகண முறையிலேயே சொல்லியிருக்கிறார். இந்த இரண்டும் அவரோகணமாக இருப்பதால், ஆரோகண வழியை தெரிவிப்பதற்காக இன்னொரு சந்தியை செய்தார். இவை அனைத்தையும் படித்து, தாரதம்ய ஞானத்தை பெற்றாலும், தினந்தோறும் இவர்கள் அனைவரையும் தாரதம்யத்தின்படி வணங்கினால், கிரந்தமும் மனப்பாடமாகி நித்ய பாராயணம் செய்வதற்கும், ப்ருஹத் தாரதம்ய என்பது மிகப்பெரிய சந்தியாக இருப்பதால், லௌகிக வாழ்க்கையில் இருப்பவர்களுக்கு அதை தினமும் படிப்பதென்பது கஷ்டம் என்று நினைத்து, நித்ய பாராயணத்திற்காக, அவரோகண வழியில் சுருக்கமாக 7 பத்யங்களில் தாரதம்யத்தை சொல்லியிருக்கிறார்.

**சந்தியின் நோக்கம்:**

மானுஷோத்தம பிடி[3]து[3] ஸங்கரு
ஷணன பரியந்தரதி[3] பேளிரு
வனுக்ரமணிகெய பத்[3]யவனு கேளுவரு சஜ்ஜனரு ||

**ஸ்ரீமதா[3]சார்யர மதா[2]னுக[3]**

**தீ4மதாம் வரரங்க்4ரி க1மலகெ**
**ஸோமபானார் ஹரிகெ3 தாத்விக தே3வதாக3ணகெ ।**
**ஹைமவதி ஷ2ண்மஹிஷியர பத3**
**வ்யோம கேஷகெ3 வாணி வாயு**
**தா1ம ரஸ ப4வ லகுமி நாராயணரி கா3னமிபெ ।।1**

ஸ்ரீமன் மத்வாசார்யரின் மதத்தை பின்பற்றுபவரான,
தீமதாம்வரராங்க்ரி கமலகெ = ஞானிகளான மானுஷோத்தமரிலிருந்து கர்மதேவதை வரை இருக்கும் அனைவரின் பாத கமலங்களுக்கு,
சோமபானார்ஹரிகெ = சோமபானம் குடிக்கத் தகுதியானவர்கள் 100 பேர். இதில் மேல் வகுப்பை சேர்ந்த இந்திராதி 15 பேர்களை விட்டு; உக்தசேஷ சதஸ்தர் என்று 85 பேர் உள்ளனர். அவர்களின் பாதங்களுக்கும்
தாத்விக தேவதாகணக்கெ = தத்வாபிமானி தேவதைகளுக்கு
பார்வதி முதலான மூவருக்கு, கிருஷ்ணனின் மஹிஷியர் ஜாம்பவதி முதலான 6 பேருக்கு,
வ்யோமகேஷகெ = ருத்ரதேவருக்கு
வாணி = சரஸ்வதி பாரதியருக்கு
வாயுதேவருக்கு,
தாமரசபவ = தாமரையில் பிறந்தவரான பிரம்ம தேவருக்கு
லட்சுமிதேவியருக்கு, நாராயண இவர்கள் அனைவரையும், மனதால், உடலால், செயலால் வணங்குவேன்.

**ஸ்ரீமதாம்வர ஸ்ரீபதே1 ஸ**
**த்காமித ப்ரத3 ஸௌம்ய த்ரிககு**
**த்தா4ம த்ரிசதுஷ்பாத3 பாவனசரித சார்வங்க3 ।**
**கோ3மதீ ப்ரிய கௌ3ண கு3ருதம**
**ஸாமகா3யன லோல ஸர்வ**
**ஸ்வாமி மமகுல தெ3ய்வ ஸந்தெயிஸுவுது3 சஜ்ஜனர ।।2**

ஸ்ரீமதாம்வர = செல்வந்தரான, சத்யலோகாதிபதியான பிரம்மதேவர் முதலானவர் களைவிட சிறந்த செல்வந்தரான,
சத்காமிதப்ரத = சஜ்ஜனர்களின் மனோபீஷ்டங்களை நிறைவேற்றுபவரான
சௌம்ய = நல்ல பழக்கமுள்ள
த்ரிகக்குத்தாம = ஸ்வேதத்வீப, அனந்தாசன, வைகுண்ட என்னும் சிறந்த மூன்று இடங்களைக் கொண்ட

த்ரி = அக்னி அந்தர்யாமியாகி அக்னி ரூபத்தினால், ப்ராதஸ்ஸவன, மாத்யஸ்ஸவன, சாயம்சவன என்ற மூன்று ரூபங்களைக் கொண்ட, ‘சத்வாரி ஸ்ருங்காஸ் த்ரயோஸ்ய பாதா:’ என்னும் வேத மந்திரத்திலிருந்து, மூன்று பாதங்களைக் கொண்டவன் என்றும் பொருள் கொள்ளலாம்.

சதுஷ்பாத = இங்கு பாதம் என்றால் அம்சம் என்று பொருள். ‘பாதோஸ்ய விஸ்வாபூதானி த்ரிபாதஸ்யா ம்ருதம்திவி’ என்று சொல்வதைப்போல, இந்த உலகத்தில் உள்ள அனைத்து பிராணிகளும் ஒரு பாதம் அதாவது பரமாத்மனின் பின்னாம்சம் என்று பொருள். மற்ற 3 பாதங்கள் ‘பாதாஸ்த்ரயோ பஹிஸ்வார்ஸ’ என்னும் பாகவத வசனத்தைப் போல, அனந்தாசன, வைகுண்ட, நாராயண என்னும் மூன்று பாதங்கள் பிரம்மாண்டத்திற்கு வெளியே இருக்கிறது. இங்கு பாதம் என்றால் ஸ்வரூப- அம்சம் என்று பொருள். ஆகையால், பரமாத்மனுக்கு சதுஷ்பாதம் என்று பொருள்.

பாவனசரித = பவித்ரமான கதைகளை உள்ளவன். அவனின் மகிமைகள், கேட்பவர்கள், படிப்பவர்களை பவித்ரராக மாற்றும் என்று பொருள்.
சார்வங்க = அழகான உடற்பாகங்களைக் கொண்டவர்.
கோமதிப்ரிய = கோமதி ஆற்றங்கரையில் ஸ்ரீகிருஷ்ணனின் கோயில் ஒன்று உள்ளது. அங்கு ஸ்ரீகிருஷ்ணனின் விசேஷ சன்னிதானம் இருந்து, அந்த ஆற்றில் குளிப்பவர்களுக்கு முக்தியை கொடுக்கிறது என்று புராணத்தில் சொல்லப்பட்டிருக்கிறது. பாகவத 1ம் ஸ்கந்தம், 1ம் அத்தியாயம், 4ம் ஸ்லோகம் இப்படி சொல்கிறது.

பிரம்மஞானேன வா முக்தி: ப்ரயாகமரணேனவா ||
அதவா ஸ்னான மாத்ரேண கோமத்யாம் கிருஷ்ண சன்னிதௌ ||

முக்தி வேண்டுமெனில் பிரம்மஞானம் பெற்றால் கிடைக்கும் அல்லது பிரயாகையில் கங்கா யமுனையின் சங்கமத்தில் தேகதியாகம் செய்தாலும் கிடைக்கும். அல்லது கிருஷ்னனின் சன்னிதானத்தில் கோமதி ஆற்றங்கரையில் குளித்தால் மட்டும் போதும் என்று, பிரயாக மரணத்திற்கு சமமாக கோமதி ஆற்றுக் குளியலின் நற்பலனை குறிப்பிடுகின்றார்.

அதற்கு ‘கோமத்யாம் கிருஷ்ண சன்னிதௌ’ என்று கிருஷ்ண சன்னிதானத்தின் மகிமையே காரணம் என்கிறார். இதிலிருந்து, கிருஷ்ணனுக்கு கோமதி ஆற்றின் மேல் அதிக அன்பு இருப்பது தெளிவாகத் தெரிகிறது. ஆகவே தாசார்யர், கோமதிப்ரிய என்று கூறியிருக்கிறார்.

அகௌண = மூன்று குணங்களாலும் கட்டுப்படாதவன் என்று பொருள். சத்வ, ரஜஸ், தமஸ் ஆகிய ப்ராக்ருத குணங்கள் இல்லாதவன் என்று பொருள்.
ஜகத்குரு பிரம்மதேவர்,
குருதம = பிரம்மாதிகளுக்கும் குரு என்று பொருள். அல்லது த்ரிகுணாதீதரான முக்தர்களுக்கு அகௌணர் என்று பெயர். முக்தர் அனைவரைவிட குருதம என்றால் உத்தமன் என்று பொருள்.

சாமகாயனலோல = முக்தனானவர்கள் ‘ஏகத்ஸாமகாயன்னாஸ்தே | ஹாஉஹா உஹா’ போன்ற சாம வேத மந்திரங்களை உச்சரித்தவாறே, முக்தியில் ஸ்வரூப சுகத்தை அனுபவித்திருப்பர் என்று சொல்லும் தைத்திரிய உபநிஷத் வாக்கியத்திற்கேற்ப, சாமகாயன முக்தர் என்று தெரியவருகிறது. அவர்கள் பாடும்

பாடல்களில் மகிழ்ந்திருப்பவன் என்று பொருள். அல்லது சாமகாயனர்கள் முக்தர்கள்.

அவர்களிடம் அன்பு கொண்டிருப்பவன் அல்லது 'வேதானாம் சாமவேதோஸ்மி' என்னும் கீதை வாக்கியத்திற்கேற்ப வேதங்களில் சாமவேதத்தை பகவத் சன்னிதானமாக அறியவேண்டும் என்று சொல்லியிருப்பதால் சாமகானலோல என்று சொல்லலாம்.

சர்வஸ்வாமி = ரமா பிரம்மாதி அனைவருக்கும் தலைவனானவன்.
மமகுலதெய்வ = நம் குலதெய்வமான
ஸ்ரீபதே = லட்சுமிபதியான ஸ்ரீ நரசிம்மனே
சஜ்ஜனர சந்தெயிசுவனு = சஜ்ஜனர்களை காப்பாற்ற வேண்டுமென்று வேண்டுகிறேன்.

**ராம ராக்ஷஸகுல ப4யங்கர**
**ஸாமஜேந்த்3ர ப்ரிய மனோவா**
**சாமகோ3சர சித்ஸுக2ப்ரத சாருதரசரித ।**
**பூ4ம பூ4 ஸ்வர்கா3பவர்க3த3**
**காமதே3னு ஸுக2ல்பதரு சி**
**ந்தாமணியு எந்தெ3னிப நிஜப4க்தரிகெ3 ஸர்வத்ர ।।3**

ராம = லோகரமணன் ஆன காரணத்தால் ராமன் என்று பெயர்.
ராக்ஷஸகுல பயங்கர = ராக்ஷசர்கள், தைத்யர்கள் ஆகியோரின் குலத்திற்கு பயங்கரமானவன்.
சாமஜேந்திரப்ரிய = சாமஜ என்றால் யானைகள். அவற்றின் இந்திரன் என்றால் கஜேந்திரன். கஜேந்திரன் செய்த ஸ்தோத்திரத்திற்கு மெச்சி, அவனை முதலையிடமிருந்து காப்பாற்றி, திவ்யகதியை கொடுத்தவன் என்று பொருள்.

மனோவாசாமகோசர = மனதினால், வாக்கினால் அவனின் குணாதிசயங்களை, ஸ்தோத்திரங்களை செய்வதற்கு சாத்தியமில்லாதவன்.
அல்லது
* மனோபிமானி ருத்ரதேவர் மற்றும்
* வாக் அபிமானி சரஸ்வதி பாரதியர்.
* சித்தத்திற்கு அபிமானி பிரம்ம வாயுதேவர்.
மேலும், வாக் என்றால் வேதம் என்று பொருள். வேதாபிமானியும், வேத ஸ்வரூபமாகவும், ரமாதேவி துர்கா ரூபத்தில் இருக்கிறார். மனோவாசாமகோசர என்றால், ருத்ரர், பிரம்ம வாயு சரஸ்வதி பாரதி மற்றும் லட்சுமி தேவியர்களாலும் அறியப்பட முடியாதவன் என்று பொருள்.

சித்சுகப்ரத = முக்த ஜீவர்களுக்கு ஸ்வரூபானந்தத்தை வழங்குபவன்.
சாருதரசரித = எவ்வளவு கேட்டாலும் போதாது; மேலும் கேட்கவேண்டும் என்று நினைக்கக்கூடிய அருமையான சரிதத்தைக் கொண்டவன். பாகவத 1ம் ஸ்கந்தம் 18வது அத்தியாயத்தில் சௌனகாதிகளின் கேள்வி இது.

கோனாம த்ருப்யேத்ர சவித்கதாயாம் மஹத்தமைகாந்த பராயணஸ்ய ||

ரமா பிரம்மாதிகளைவிட உத்தமமான மகிமைகளை கொண்டவனான பரமாத்மனின் சரித்திரத்தைக் கேட்டு அதன் சாரத்தைக் கேட்டு யார்தான் திருப்தி அடைவார்கள்? நமக்கேனும் ஸ்ரீஹரியின் கதையைக் கேட்டது போதும் என்ற திருப்தி இதுவரை வரவில்லை என்றனர். ஆகையால், சாருதர சரிதன் என்றார் தாசார்யர்.

பூம = நிரந்தரமான செல்வங்களைக் கொண்டவன்.
பூ ஸ்வர்காபவர்கத = அவரவர்களின் தகுதிக்கேற்ப பூமியில் பிறப்பது. சாதனைகளுக்குப் பிறகு, காம்ய கர்மங்களில் பலனுக்கேற்ப ஸ்வர்க்கத்தை, கல்பத்தின் முடிவில் முக்தி யோக்யர்களுக்கு முக்தியையும், ராஜஸருக்கு சம்சாரத்தையும், தாமசர்களுக்கு தமஸ்ஸையும் கொடுப்பவன் என்று பொருள்.

சர்வத்ர = பக்தர்கள் எந்த உலகத்தில் இருந்தாலும் அவர்களுக்கு காமதேனு, கல்பவ்ருக்ஷ, சிந்தாமணி,
எந்தெனிப = இவை எப்படி மனோபீஷ்டங்களை நிறைவேற்றுகின்றனவோ அப்படியே அவர்களின் (பக்தர்களின்) மனோபீஷ்டங்களையும் நிறைவேற்றுகிறான் என்று பொருள்.

**ஸ்வர்ணவர்ண ஸ்வதந்த்ர ஸர்வக³**
**கர்ணஹீன ஸுஷய்ய ஷாஷ்வத**
**வர்ண சதுராஸ்ரம விவர்ஜித சாருதர ஸ்வரத |**
**அர்ணஸம்ப்ரதிபாத்³ய வாயு ஸு**
**பர்ண வரவஹனப்ரதிம வட**
**பர்ணஷயனாஸ் சர்ய த¹ம ஸச்சரித கு³ணப⁴ரித ||4**

ஸ்வர்ணவர்ண = 'சுவர்ண வர்ணோ ஹேமாங்க:' என்று விஷ்ணு சஹஸ்ரநாமத்தில் வருகிறது. 'யதாபஷ்ய: பஷ்யதே ருக்மவர்ணம்' என்னும் வேத மந்திரமே இதற்கு ஆதாரம். 'சுவர்ணமிவ வர்ணோ யஸ்யஸ: சுவர்ணவர்ண:' என்று சஹஸ்ரநாம வியாக்யான வாக்கியங்களின் ஆதாரத்தால், அபரோக்ஷத்தில், மக்கள் பார்க்கும் சமயத்தில், தங்கத்தைப் போன்ற நிறத்தில் காட்டிக் கொள்பவன் ஆகையால், ஸ்ரீஹரிக்கு சுவர்ணவர்ண என்று பெயர்.

ஸ்வதந்த்ரன்.
சர்வக = எல்லா இடங்களிலும் வியாபித்திருப்பவன்.

கர்ணஹீன சுஷய்ய = காது இல்லாதவனே படுக்கையாக இருக்கிறான். அதாவது, பாம்புகளுக்கு சக்ஷுஸ்ரவ என்று பெயர். காதுகள் இல்லாமல், கண்களே காதுகளாக இருந்து, அந்த கண்களினாலேயே கேட்பதால், சக்ஷுஸ்ரவ என்று பெயர். ஆகையால், கர்ணஹீன என்றால் சேஷதேவர் என்று பொருள். அவரே படுக்கையாக இருக்கிறார்.

சாஸ்வத = நிரந்தரமாக இருப்பவர்.

வர்ணசதுராஸ்ரம விவர்ஜித = இங்கிருக்கும் விவர்ஜித என்னும் சொல்லை இருமுறை சொல்ல வேண்டும். அதாவது,
வர்ண விவர்ஜித = அதாவது பிராமணன் முதலான எந்த வர்ணத்திலும் சேராதவன்.
சதுராஸ்ரம விவர்ஜித = பிரம்மசாரி முதலான நான்கு ஆசிரமத்திலும் இல்லாதவன்.
சாருதர = லட்சுமிதேவியின் மனதை கவர்ந்திழுக்கும் சுந்தர வடிவம் உள்ளவன்.
ஸ்வரத = ஸ்வரமணன்.
அர்ணசம்ப்ரதிபாத்ய = அர்ண என்றால் மந்திராக்ஷரங்கள். அவற்றின் பிரதிபாத்யன்.
வாயுசுபர்ண வரவாஹன = வாயுவாகனன், சுபர்ண வாகனன் என்று வாஹன் என்னும் சொல்லை இரு முறை பயன்படுத்த வேண்டும்.
வாயுவாஹன: = 'வரதோ வாயுவாஹன:' என்று சஹஸ்ரநாமத்தில் இருக்கும் வாயுவாஹன சொல்லுக்கு அதன் வியாக்யானத்தில் 'வாயும் முக்யப்ராணம் வஹதி = ப்ரேரயதீதி வாயு வாஹன:' வாயுதேவரே முக்யபிராண தேவர். அவருக்கு ஆணையிடுபவனாகையால் (அவர் மேல் பயணிப்பதால்) வாயுவாகனன் என்று பொருள் கொள்ள வேண்டும்.

சுபர்ண வரவாஹன = கருடன் போன்ற மிகச்சிறந்த வாகனத்தை உடையவன்.
அப்ரதிம வடபர்ணசயன = ஈடு இணையற்ற வடபத்ர (ஆல) இலையில், பிரளய காலத்தில் படுத்திருந்தவன். அல்லது; அப்ரதிம - வடபத்ரசயனன் என்று சொல்லை பிரித்தும் படிக்கலாம்.

அப்ரதிம = ஈடு இணையற்றவன். வடபத்ரசயன = பிரளயகாலத்தில் மார்க்கண்டேயருக்கு ஆலையிலையில் படுத்திருக்கும் காட்சியை காட்டியவன். இதையே இங்கு குறிப்பால் உணர்த்துகிறார் தாசார்யர்.

ஆஸ்சர்யதமனு = உலகத்தில் உன்னைவிட பெரிய பொருள் வேறொன்றும் இல்லை. நீயே ஆச்சரிய புருஷன். நீயே தன்யன் என்று ராஜசபையில் நாரதர், ஸ்ரீகிருஷ்னனைப் பார்த்து கூறினார். அதற்கு ஸ்ரீகிருஷ்ணன் 'தக்ஷிணாபி: சாகம்' என்று பதிலளித்தான். தக்ஷிணே என்பது லட்சுமிதேவிக்கு இருக்கும் இன்னொரு பெயர். அவருடன் சேர்ந்தே நான் ஆச்சரியன் என்று கூறினான் என்னும் ஹரிவம்ச கதையை நிர்ணயத்தில் காணலாம். அந்த கதை, ஸ்லோகத்துடன் இங்கு ஏற்கனவே சொல்லப்பட்டிருக்கிறது. ஆகையால் மறுபடி சொல்லவில்லை. ஆகையால், அவன் ஆஸ்சர்யதம.

குணபரித = ஆனந்தாதி குணங்களால் பூர்ணனான
ஸ்வசரித = உத்தமனான சரித்திரம் உள்ளவன் அல்லது 'ஆஸ்சர்யதமசரித' என்று ஒரே சொல்லாகவும் இதை படிக்கலாம். மிகவும் ஆச்சரியமான சரிதத்தை கொண்டவன் என்று பொருள்.

**அக3ணித ஸுகு3ணதா4ம நிஸ்சல**
**ஸ்வக3தபே4த3 விஷூன்ய ஷாஸ்வத**
**ஜக3த ஜீவாத்1யந்த பி4ன்னாபன்ன பரிபால |**
**த்ரிகு3ணவர்ஜித த்ரிபு4வனேஸ்வர**
**ஹக3லிருளு ஸ்மரிஸுதலிஹர பி3**
**ட்டக3ல த்ரிஜக3ன்னாத2விட்ட2ல விஷ்வவ்யாபகனு ||5**

அகணித சுகுணதாம = எண்ணுவதற்கு சாத்தியமில்லாத குணங்களைக் கொண்டவன்
நிஸ்சல = இத்தகைய குணங்கள் சலனமின்றி இருக்கின்றன. அதாவது, எண்ணிக்கையற்ற குணங்களை எக்காலமும் கொண்டிருப்பவன் என்று பொருள்.

ஸ்வகதபேத விஷூன்ய = தனக்கு சம்பந்தப்பட்ட பேதங்கள். அதாவது மூலரூபம், அவதார ரூபங்கள், அந்தர்யாமி ரூபங்கள், இப்படிப்பட்ட பகவத் ரூபங்களுக்கு பரஸ்பரம் பேதம் இல்லை என்று பொருள்.
சாஸ்வத = அனாதியிலிருந்து அனந்த காலம் வரைக்கும்
ஜகத = ஜடமான இந்த உலகத்திலிருந்தும்
ஜீவ = ஜீவர்களிலிருந்தும்
அத்யந்த பின்ன = மிகவும் வேறுபட்டு இருப்பவன்
ஆபன்ன பரிபால = சரணாகதி அடைந்தவர்களை காப்பாற்றுபவன்
த்ரிகுணவர்ஜித = சத்வரஜதமோ குணங்கள் இல்லாதவன்

த்ரிபுவனேஷ்வர = மூன்று உலகங்களுக்கும் தலைவனானவன். மூன்று உலகங்கள் என்றால், பூலோக, புவல்லோக ஸ்வர்க லோக என்று பொருள் அல்ல. இந்திரனுக்குக் கூட இவற்றை ஆளும் திறன் உண்டு. அப்படியெனில் வேறென்ன? பாகவத 2ம் ஸ்கந்தம் 5ஆம் அத்தியாயம் 39வது ஸ்லோகத்திலிருந்து 42வது ஸ்லோகம் வரை, பிரம்மாண்டத்தில் 14 உலகங்களை சொல்லி ‘இதிலோகமய: புர்மா’. இப்படி ஸ்ரீஹரி லோகமயனாக இருப்பான் என்று விளக்கி மேலும்

பூர்லோக: கல்பித: பத்ப்யாம் புவர்லோகஸ்து நாபித: |
ஸ்வர்லோக: கல்பிதோமார்த்னி இதிவா. இதி வா லோககல்பனா ||

பாதத்திலிருந்து பூலோகம் என்றும், நாபியில் புவல்லோகம் என்றும், தலை வரை ஸ்வர்க்க லோகம் என்றும் - இப்படியும் மூன்று உலகங்களைப் பற்றி நினைக்கலாம் என்றும் கூறினர்.

இதன் வியாக்யானத்தில், பூலோகம் என்றால் அதல முதல் பாதாளத்தின் வரை உள்ள 7 லோகங்களும் பூமியுடன் சேர்ந்தவை (பூமிக்குள் இருப்பவை) என்றும்; ஜனலோகம் முதல் சத்ய லோகம் வரை, ஸ்வர்க்கத்துடன் சேர்ந்தவை என்றும் இந்த 14 லோகங்களுக்கும் இவற்றில் சேர்ந்தவை என்றும் கூறினர்.

அப்படி செய்தால் 'பாதாளமேதஸ்யஹி பாதமூலம்' என்னும் விராடரூப சிந்தனையை சொல்லும்போது, பாதத்திலிருந்து இடுப்பு வரை அதலம் முதலான 7 உலகங்களை சொல்லி, 'மஹீதலந்தஜ்ஜகனம் மஹீபதே' என்று பூலோகமானது நாபிக்கு கீழ் இருக்கும் கீழ் வயிற்றில் இருக்கிறது என்றும் கூறியிருக்கின்றனர்.

இங்கு பாதம் முதல் என்று கூறியிருப்பதால், பாதாளாதிகள் அதில் சேர்ந்தவை என்று தெளிவாக சொன்னதாக எடுத்துக் கொள்ளலாம்.

'சத்யந்து சீர்ஷாணி சஹஸ்ர சீர்ஷ்ண:' சத்யலோகமானது பரமாத்மனின் தலையில் இருக்கிறது என்று அங்கு சொல்லியிருக்கின்றனர். இங்கு தலை வரைக்கும் ஸ்வர்க்க லோகம் என்று சொல்லியிருக்கின்றனர். ஆகையால், ஸ்வர்க்கத்தில், சத்யலோகம் வரையிலான அனைத்து லோகங்களும் சேர்ந்தே இருக்கின்றன என்று பொருள்.

இங்கு சொல்லியிருக்கும் த்ரிபுவனேஸ்வர்ய என்பதற்கு 14 லோகங்களுக்கும் ஈஸ்வரன் (தலைவன்) என்று பொருள். அல்லது, ஸ்வேதத்வீப, அனந்தாசன, வைகுண்ட என்னும் மூன்று லோகங்களின் தலைவன் என்று பொருள். அனைத்து இடங்களிலும் வியாபித்திருப்பவனான இத்தகைய ஜகன்னாதவிட்டலனை

ஹகலிரளு = இரவும் பகலும்
ஸ்மரிசுதலிஹர = நினைப்பவர்களை
பிட்டகல = ஒரு கணமும் விடாமல் எப்போதும் கூடவே இருந்து காப்பாற்றுவான் என்று பொருள்.

அனுக்ரமணிகா தாரதம்ய சந்தி என்னும் 27ம் சந்தியின் தாத்பர்யம் இத்துடன் முடிவுற்றது.
ஸ்ரீகிருஷ்ணார்பணமஸ்து.

***

## பாவபிரகாசிகை : சந்தி 28 : விக்னேஸ்வர ஸ்தோத்திர சந்தி

**ஹரிகதா2ம்ருதசார கு3ருக3ள**
**கருணதிந்தா3பநிது பே1ளுவே**
**பரம ப4கவத்3ப4க்தரித3னாத3ரதி கேளுவுது3**

முக்தி சாதனைகளுக்காக செய்ய வேண்டிய சத்கர்மங்களுக்கு வரும் விக்னங்கள் மிகவும் அதிகமானதால், அவை அனைத்தும் நிர்விக்னமாக நடக்க வேண்டி, விக்னேஷ்வரனின் பிரார்த்தனை அவசியம் என்று கணபதி ஸ்தோத்திர சந்தியை இயற்றியிருக்கிறார் தாசராயர்.

**ஸ்ரீஷனங்க்4ரி ஸரோஜப்3ருங்க3 ம**
**ஹேஷ ஸம்ப4வ மன்மனதொ3ளு ப்ர**

**காஷிஸனுதி[3]ன ப்ரார்த்தி[2]ஸுவெ ப்ரேமாதிஷயதி[3]ந்த[3] |**
**நீ ஸலஹு ஸஜ்ஜனர வேத[3]**
**வியாஸ கருணாபாத்ர மஹதா[3]**
**காஷபதி[1] கருணாளு கைபிடி[3]தெ[3]ம்மனுத்த[4]ரிஸு ||1**

ஸ்ரீஷனங்க்ரி சரோஜப்ருங்க = லட்சுமிபதியான ஸ்ரீபரமாத்மனின்
அங்க்ரி = பாதங்கள் என்னும்
ஸரோஜ = கமலங்களில்
ப்ரேமாதிஷயதிந்த = மிகவும் பக்தி, மரியாதையுடன்
ப்ரார்த்திஸுவெ = வேண்டுகிறேன்
(அனுதினதி என்னும் சொல்லை இரு முறை சொல்லிக் கொள்ள வேண்டும்)
மன்மதனொளு = என் மனதில்
ப்ரகாஷிஸு = ஒளிர்ந்து கொண்டிரு
வேதவியாஸ கருணாபாத்ர = வேதவியாஸ தேவரின் கருணைக்குப் பாத்திரமான
மஹதாகாஷபதி = பஞ்சபூதங்களில் ஒன்றான ஆகாசத்திற்கு அபிமானியான
கருணாளு = கருணாளுவான ஹே கணபதியே
நீ,
சஜ்ஜனர ஸலஹு = சஜ்ஜனர்களை காப்பாயாக
என்ன = என்னை
கைபிடிது = கை பிடித்து
உத்தரிஸு = காப்பாற்று

ஸ்ரீகணபதியை வேண்டுகிறார். ஹே கணபதியே. நீ சாட்சாத் லட்சுமிபதியான ஸ்ரீபரமாத்மனின் பாதங்கள் என்னும் கமலங்களில் ஒரு தேனியைப் போல சுற்றிக் கொண்டிருக்கிறாய். அதாவது, தேனீக்கள் மகரந்தத்திற்காக எப்படி பூக்களையே சுற்றிக் கொண்டிருக்குமோ அப்படியே, உன் மனமும் திடமாக பரமாத்மனின் பாதங்களில் நிலைத்திருக்கிறது என்பது கருத்து.

ஹே ருத்ர தேவரிடம் பிறந்தவனே. பார்வதிதேவி தம் தேகத்தின் அழுக்கிலிருந்து கணபதியை ஸ்ருஷ்டித்தார் என்று கணபதியின் வரலாற்றிலிருந்து அறிகிறோம். ஆகவே, பார்வதி தேவியின் மகனானதால், ருத்ரரின் மகன் என்றும் அறிகிறோம். ஆனால் 'மஹேஷஸம்பவ' என்று தாசார்யர் கூறுகிறார். ஸம்பவ என்றால் பிறந்தவன் என்று அர்த்தம். ருத்ரதேவர் மூலமாக கணபதி பிறக்கவில்லை. இப்படி இருக்கையில் ருத்ரஸம்பவ என்று ஏன் கூறினார் என்றால்:

அதே கணேசனின் கதையில் வரும் சம்பவம் ஒன்று. பார்வதி தேவியர் கணேசனை ஸ்ருஷ்டித்து, தம் வீட்டு வாயிலில் த்வாரபாலகனாக வைத்து, தாம் ஸ்னானம் செய்யப் போகிறேன் என்றும், யாரையும் உள்ளே விடவேண்டாம் என்றும் கணேசனிடம் சொல்லிவிட்டுப் போகிறார். அந்த சமயம் வெளியே சென்றிருந்த ருத்ரதேவர், உள்ளே போக முயல, உள்ளே போகக்கூடாது என்று கணேசன் அவரைத் தடுத்தான்.

கடும் கோபம் கொண்ட ருத்ரர், அவனின் தலையை கத்தரித்துக் கொன்றார். தன் மகன் இறந்தான் என்ற செய்தியை அறிந்த பார்வதி, கதறி அழ, ருத்ரர் அவரை சமாதானம் செய்து, தன் சேவகர்களை அழைத்து, அருகில் யார் வடக்கு திசை நோக்கி தலை வைத்து படுத்திருக்கிறானோ, அவன் தலையை அறுத்து எடுத்து வாருங்கள் என்று ஆணையிட்டார்.

ருத்ரரின் சேவகர்களும் அப்படியே தேட, அங்கு ஒரு யானையைத் தவிர அப்படி யாரும் படுத்திருக்கவில்லை. ஆகையால், அதே யானையின் தலையை வெட்டிக் கொண்டு வந்தனர். ருத்ரரும் அந்த தலையை, மரணமடைந்த தன் மகனின் உடலில் வைத்துப் பொருத்தி உயிர்பித்து, அவனை தன் பூதகணத்தின் தலைவனாக ஆக்கி, வரம் அளித்தார். ஆகையால், கணபதி பூஜையை செய்ய வேண்டும் என்று கூறினார்.

இந்த கதையின்படி பார்த்தால், ஸ்ருஷ்டியை பார்வதிதேவி செய்திருந்தாலும், அவன் இறந்தபிறகு, மறுபடி ருத்ரதேவரே உயிர்ப்பித்ததால், மஹேஷஸம்பவ என்று சொல்வது சரியாகவே இருக்கிறது. உன்னை தினந்தோறும் பிரார்த்திக்கிறேன். என் மனதில் நீ ஒளிர்ந்தவாறு, நான் செய்யும் காரியங்கள் நிர்விக்னமாக நடக்குமாறு செய். சஜ்ஜனர்களுக்கு அருள்வாயாக.

ஹே வேதவியாஸ கருணாபாத்ரனே என்றார்:
பகவந்தனின் அவதாரங்கள் அனேகம் இருக்கையில், மூலரூபம் இருக்கையில், வேதவியாஸ க்ருபாபாத்ர என்று ஏன் சொல்ல வேண்டும் என்றால், வேதவியாசதேவர் மகாபாரதத்தை இயற்றுகையில், இந்தப் பெரிய கிரந்தத்தை எழுதுபவர் யார் என்று சிந்தித்து, கணபதியை ஸ்மரணை செய்ய, கணபதி அங்கு வந்து வேதவியாசரின் ஆணையின்படி அந்த கிரந்தத்தை எழுதி முடித்தான். இதுவே இவனுக்கு பரமானுக்கிரம் கிடைக்க காரணமாயிற்று. அதை மனதில் வைத்தே, தாசார்யர் வேதவியாச கருணாபாத்ரா என்றார்.

மஹதாகாஷபதி என்றார்:
24 தத்வங்களில், 5 பஞ்சமஹாபூதங்களில் ஒன்றான ஆகாஷ தத்வத்திற்கு கணபதியே அதிபதி என்று தத்வன்யாச மந்திரத்தில் ‘ஓம்பராய ஆகாஷாத்மனே மஹா கணபதயே நம:’ என்று சொல்லியிருக்கிறார். இதற்கு ஆதாரம், ஸ்ரீமன் மத்வாசார்யர் இயற்றிய தந்திரசார என்னும் கிரந்தம்.

ஹே கருணாளு, என்னை கைபிடித்து காப்பாற்று என்று பிரார்த்தனை செய்கிறார் தாசார்யர்.

**ஏகத$^{3}$ந்த இபே$^{4}$ந்த்$^{3}$ரமுக$^{2}$ சா**
**மீகரக்ருத பூ$^{4}$ஷணாங்க$^{3}$ க்ரு**
**பாகடாக்ஷதி$^{3}$ நோடு$^{3}$ விக்$^{3}$ஞாபிஸுவெ நினிதெந்து$^{3}$ ।**

**நோகணீயன துதிஸுதிப்ப வி**
**வேகிக[3]ள ஸஹவாஸ ஸுக[2]க[3]ள**
**நீ கருணிஸுவுதெ[3]மகெ[3] ஸந்தத பரமகருணாளு ||2**

ஏகதந்த = ஒரு தந்தம் கொண்டவனே
இபேந்த்ரமுக = கஜ முகம் கொண்டவனே
சாமீகரக்ருத = தங்கத்தால் செய்யப்பட்ட
பூஷணாங்க = ஆபரணங்களால் அலங்கரிக்கப்பட்ட சரீரம் கொண்டவன்
இத்தகைய விக்னராஜனே,
க்ருபாகடாக்ஷதி நோடு = உன் கருணைப் பார்வையால் என்னைப் பார்
இனிதெந்து விக்ஞாபிஸுவெ = இப்படியாக வேண்டிக் கொள்கிறேன்
நோகணீயன = பிரம்மாதிகளைவிட உத்தமன் ஆகையால்; இவனைவிட எப்போதும் யாரும் உத்தமர்கள் இல்லை என்பதால், பரமாத்மனுக்கு நோகணீயன என்று பெயர்.
துதிஸுதிப்ப = வணங்கிக் கொண்டிருக்கும்
விவேகிகள = அறிஞர்களின்
சஹவாஸ சுககள = நட்பினை
நீ,
கருணிசுவுதெமகெ = எனக்கு அருள்வாயாக
சந்தத = எப்போதும்
பரமகருணாளு = கருணைக் கடலாக இருப்பவனே

ஹே ஏகதந்தனே. இபேந்திரமுக என்றால் யானை முகத்தைக் கொண்டவன் என்று அர்த்தம். விக்னராஜனுக்கு யானை முகம் வந்ததற்கான காரணத்தை நாம் முந்தைய பத்யத்தில் பார்த்தோம். ஹே கஜமுகனே, தங்க ஆபரணங்களால் அலங்கரிக்கப்பட்ட அங்கங்களைக் கொண்டவனே. என்னை உன் கருணைப் பார்வையால் பார்.

கனீய என்றால் சிறியவன் என்று அர்த்தம். நோகனீய என்றால், அதற்கு எதிர்ப்பதம் - பெரியவன் என்று அர்த்தம். பிரம்மதேவருக்கும் தந்தையானதால், தாரதம்யத்தில் ஆகட்டும் எந்த விஷயங்களிலும் ஆகட்டும் பரமாத்மனைவிட உத்தமர் யார்? (யாரும் இல்லை). ஆகையால் 'நகர்மணாவர்த்ததே நோகனீயான்' என்னும் ஸ்ருதியால், கர்மாதிகளால் வளர்ச்சி அடைபவன் அல்ல, எப்போதுமே பெரியவனாகவே இருக்கிறவன் என்று சொல்லப்பட்டிருக்கிறது. அதே அபிப்பிராயத்தையே தாசார்யர் இங்கு சொல்கிறார்.

இத்தகைய பரமாத்மனை எப்போதும் வணங்கிக் கொண்டிருக்கும் அறிஞர்களின் நட்பே பேரானந்தம். அத்தகைய ஆனந்தத்தை எனக்கு எப்போதும் கிடைக்குமாறு நீ கருணையுடன் அருள்வாயாக என்று உன்னிடம் விண்ணப்பித்துக் கொள்கிறேன் என்று தாசார்யர் பிரார்த்திக்கிறார்.

**விக்[4]னராஜனெ து[3]ர்விஷயதொ[3]ளு**

**மக்4னவாகி3ஹ மனவு மஹதோ3**
**ஷக்4னனங்க்4ரி ஸரோஜயுக3ளதி3 ப4க்திபூர்கவதி3**
**லக்3னவாக3லி நித்ய, நரக ப4**
**யக்3னிக3ளிகானஞ்சே கு3ருவர**
**ப4க்3னகை3ஸென்ன அவகு3ணக3ளனு ப்ரதிதி3வஸத3ல்லி ||3**

விக்னராஜனே,
துர்விஷயதொளு = விஷய சுகங்கள் தற்காலிகமாக சுகங்களைக் கொடுத்தாலும், பிறகு அவற்றின் மூலம் துக்கங்களே வருகின்றன. ஆகையால், அவை துர்விஷயங்கள் என்று அழைக்கப்படுகின்றன. இத்தகைய துர்விஷயங்களில்,
மக்னவாகிஹ = மூழ்கியிருக்கும்
மனவு = மனஸ்
மஹதோஷக்னன = ஸ்மரணை செய்வதாலேயே தோஷங்களைப் பரிகரிப்பவனான ஸ்ரீபரமாத்மனின்
அங்க்ரி சரோஜ யுகளதி = பாத கமலங்களில் (இரு பாத கமலங்களில்)
பக்திபூர்வகதி = பக்தியுடன்
லக்னவாகலி = சேரட்டும்
அனு = நான்
நித்ய = எப்போதும்
நரகபய = நரகம் வரும் என்னும் பயத்தால் ஆகட்டும்
அக்னிகளிகெ = அக்னி என்னை சுடும் என்றோ, இத்தகைய நரகம் என்னும் பயத்தாலோ
அஞ்செ = பயப்பட மாட்டேன்.
ஹே குருவரனே,
ப்ரதி திவஸதல்லி = தினந்தோறும்
என்னவகுணகளனு = என் துர்குணங்களை
பக்னகெய்ஸு = பரிகரிப்பாயாக (நாசம் செய்)

விஷய சுககளு என்றால் பத்து இந்திரியங்களுக்கு, மனஸ் சம்பந்தத்தினால் அனுபவிக்கும் சுக துக்கங்கள். அதாவது, கண்களால் பார்ப்பது, காதால் கேட்பது ஆகியவை ஞானேந்திரிய செயல்கள். கைகளால் செயல்களை செய்வது. கால்களால் நடப்பது. குஹ்யேந்திரியங்களால் ஸ்த்ரீயாதி போகங்களை அனுபவிப்பது ஆகியவை கர்மேந்திரியங்களின் செயல்கள். இந்த இந்திரியங்களை, பகவந்தனின் ப்ரீதிக்காகவே பயன்படுத்தினால் சத்விஷய என்றும், தன் தேகத்தின் சௌக்கியங்களுக்காக பயன்படுத்தினால் துர்விஷய என்றும், பெயர் வருகிறது.

பாகவதம் 7ம் ஸ்கந்தம் 9ம் அத்தியாயம் பிரகலாத ஸ்துதியில்:
யஸ்ம்யைதுனாதி க்ருஹமேதி சுகம்ஹி துச்சம்
கண்டுயனேகரயோரிவ துக்க துக்கம் |
த்ருப்யந்தி தேஹக்ருபணா பஹுதுக்க பாஜ:
கண்டூதிவன்மனஸிஜம் விஷஹேததீர: ||45

கிருஹஸ்தாஸ்ரமத்தில் இருந்து ஸ்த்ரீயாதி போகங்களால் வரும் சுகத்தை கிருஹஸ்தர்கள் சுகம் என்று அனுபவிப்பர். ஆனால், அது நிஜமான சுகம் அல்ல. துக்கத்திலும் பரம துக்கம் என்று சொல்ல வேண்டியதாகிறது. ஏனெனில், கைகளில் புண் வந்து, பின் அதில் அரிப்பு ஏற்பட்டால், எந்தப் பொருள் கிடைத்தாலும், கையானது அதை வைத்து சொறிந்து கொள்ளத் துவங்கிவிடுகிறது. அதனால், சிறிது காலத்திற்கு சுகம் உண்டாகிறது. பிறகு, அதிலிருந்து கெட்ட நீர் (சீழ்) வடியத் துவங்குகிறது. பரம துக்கம் உண்டாகிறது.

இதைப்போலவே, விஷய போகங்களும் தற்காலிக ஆனந்தத்தைக் கொடுப்பவை. அதன்பிறகு, துக்க பிராப்தியே ஆகிறது. புண் வந்தவன், சிறிது காலம் அதைப் பொறுத்துக்கொண்டு, அதில் கை வைக்காமல் இருந்தால், சொறிந்து கொள்ளும் காலத்தில் கிடைக்கும் அல்ப சுகம் அவனுக்குக் கிடைக்காது. அதன்பிறகு அவனுக்குக் கிடைக்கும் பெரிய துக்கமும் அவனுக்குக் கிடைக்காது.

அதைப்போலவே, காமத்தில் விழுந்து, ஸ்த்ரீயாதி போகங்களில் இருக்கும் அல்ப சுகத்திற்காக ஆசைப்பட்டு, பிறகு அதனால் விளையும் அபார துக்கத்தை அனுபவிப்பதைவிட, அந்த காமத்தை தடுத்து அதில் ஈடுபடாதிருந்தால், அதில் கிடைக்கும் அல்ப சுகமும், பின்னால் வரும் அபாரமான துக்கமும் வராது. தீரனானவன், இந்திரிய நிக்ரஹங்களை செய்யவேண்டும் என்று பிரகலாதர் கூறுகிறார்.

ஆகையால், தாசார்யர் துர்விஷயங்களில் என் மனஸ் மூழ்காமல், அதனை பரமாத்மனின் பாதாரவிந்தங்களில் நிலைத்திருக்குமாறு செய் என்று பிரார்த்திக்கிறார். இந்த இந்திரிய நிக்ரஹம் என்பது சாதாரண விஷயமல்ல. மிகவும் கஷ்டமானது. ஆகையால், அது தேவதா பிரசாதத்தினாலேயே ஆகவேண்டும் என்று விக்னேஷ்வரனை வேண்டிக் கொள்கிறார் என்பது கருத்து.

இது மட்டுமல்லாமல், ஞானிகள் சம்சாரத்தைக் கண்டு பயப்படுவதைப் போல நரகமோ, அக்னி முதலான எந்த விதமான துன்பங்கள் வந்தாலும்கூட அவைகளுக்கு அவர்கள் பயப்படுவதில்லை. தங்களுக்கு கஷ்டங்களே வரட்டும் என்று வேண்டுவர். சுகம் வந்தால், அந்த சமயத்தில் பரமாத்மனை மறந்து விடுவர். கஷ்டம் வந்தபோது, யோக்யர்கள் பகவந்தனை விடாமல் நினைத்துக் கொண்டிருப்பர்.

பாகவத 1ம் ஸ்கந்தத்தில், குந்திதேவி ஸ்ரீகிருஷ்ணனை ஸ்தோத்திரம் செய்யும் சந்தர்ப்பத்தில்:
விபதஸ்ஸந்துன: ஷஷ்வத்தத்ர பவதோ தர்ஷனம் யத்ஸ்யாதபுனர் பவதர்ஷனம் ||

ஹே ஜகத்பதியே, நமக்கு இப்போதைப் போலவே, எப்போதும் துன்பங்களே வந்து கொண்டிருக்கட்டும். இதுவே என் கோரிக்கை. ஏனெனில், துன்பம் வந்தால் உன்

ஸ்மரணை வருகிறது. உன் ஸ்மரணையால் உன் தரிசனம் கிடைக்கிறது. உன் தரிசனத்தால், எந்த உலகத்திற்குச் சென்றால் மறுபிறவி இல்லையோ, அத்தகைய முக்தி கிடைக்கிறது -- என்று கஷ்டத்தையே வேண்டுகிறாள்.

சம்சாரத்தில் விழுந்து கஷ்டப்படும் விஷயத்தில் பகவத் பக்தர்கள் எவ்வளவு பயப்படுகிறார்களோ, அவ்வளவு பயம் வேறு எந்த விஷயத்திலும் அவர்களுக்கு ஏற்படுவதில்லை. பிரகலாதனின் ஸ்தோத்திரத்தில், பயங்கரமான உக்ர நரசிம்மன் ரூபம், இந்திராதி தேவதைகள் அனைவரும் பயப்படுமாறு பயங்கரமாக இருந்தபோது, பிரகலாதன் கூறிய விஷயம் என்னவெனில்:

நாஹம் பிபேம்யஜிததேsதி பயானகஸ்ய
ஜிஹ்வாக்னி நேத்ர ப்ருகுடீர பஸோக்ரதம்ஷ்ட்ராத் ||
அந்த்ரஸ்ரஜ: க்ஷதஜகேஸர ஷங்கு கர்ணான்
னிர்ஹ்ராத பீததிகிபாதரிபின்ன காக்ராத் ||
த்ரஸ்தோஸ்த்யஹம் க்ருபணவத்ஸல துஸ்ஸத்ரோக
ஸம்சார சக்ரகதனாத்க்ருஷதாம் ப்ரணீத: ||15
(6ம் அத்தியாயம்)

ஹே அஜிதா! உன் பயங்கரமான இந்த ரூபத்தின் இந்த நாக்கு, நெருப்பைப் போல ஒளிரும் உன் கண்கள், புருவங்கள், உக்ரமான கோரப் பற்கள், இந்த குடல் மாலை, நம் தந்தையைக் கிழித்து அதிலிருந்து வந்த ரத்தத்தில் தோய்ந்த தாடி, தலைமேல் வளர்ந்த காதுகள், யானைகளை பயப்பட வைக்கும் உன் சிம்ஹத்வனி, எதிரியை கிழித்த உன் நகங்கள் - இவற்றைப் பார்த்து நான் பயப்படுவதில்லை.

நான் எதற்கு பயப்படுகிறேன் என்றால், துக்ககரமான, ருத்ரதேவரைக் கூட முழுங்கி விடுமாறு இருக்கும் உக்ரமான சம்சார சக்கரத்தில் எங்கு விழவேண்டியிருக்குமோ எனும் பயம் என்னை நடுங்க வைக்கிறது -- என்று பிரகலாதன் நரசிம்மரிடம் வேண்டுகிறான்.

அதைப்போலவே, தாசார்யரும், நரகம், அக்னி முதலானவைகளுக்கு நான் பயப்படுவதில்லை. துர்விஷயத்தில் மனம் எங்கு விழுந்துவிடுமோ என்று பயப்படுகிறேன். அதன் பரிகாரத்தையே வேண்டுகிறேன் என்பது கருத்து. துர்விஷயத்தின் ரூபமே சம்சாரம் என்று சொல்கிறார்.

ஹே விக்னேஷ்வரனே, என்னிடம் என்ன அவகுணங்கள் இருந்தாலும், அவற்றைப் பரிகரித்து எனக்கு அருள்வாயாக. ‘குருவர’ என்று கணபதியை அழைக்கிறார். பிரம்மதேவரில் தொடங்கி மனுஷ்யோத்தமர் வரை, தாரதம்யத்தின்படி அனைவரும் குருகளே ஆனதால், கணபதியும் அதே தாரதம்யத்தின்படி குருஸ்ரேஷ்டன் என்பது கருத்து.

**க⁴னப விஷ்வக்ஸேன வைத்³யா**

**ஸ்விநிக3ளிகெ3 ஸரி எனிப ஷண்முக2**
**நனுஜ ஸேஷஷதஸ்த2 தே3வோத்தம வியத்க3ங்கா3**
**வினுத விஷ்வோபாஸகனெ ஸ**
**ந்மனதி3 விக்3ஞாபிஸுவெ லகுமி**
**வனிதெயரஸன ப4க்தி ஞானவ கொட்டு ஸலஹுவது3 ||4**

தனப = குபேரன்
விஷ்வக்சேனன் = பிரதான வாயுபுத்ரன்
வைத்ய = தேவதா வைத்யனான
அஸ்விநிகளிகெ = அஸ்வினி தேவதைகள், இவர்களுக்கு
ஸரிஎனிப = தாரதம்யத்தில் சமானர் என்று அழைக்கப்படுகிறார்
ஷண்முகனனுஜ = ஷண்முகனுக்கு தம்பியானவன்
சேஷஷதஸ்த தேவோத்தம = உக்த சேஷஷதர் என்னும் 85 பேரில் உத்தமன்
வியத்கங்கா வினுத = ஆகாய கங்கையால் வணங்கப்பட்டவன்
விஷ்வோபாஸகனெ = பிம்பமூர்த்தியான விஷ்வம்பரனை உபாசனை செய்து கொண்டிருக்கும் ஹே விக்னராஜனே
லகுமீ வனிதெயரஸன = லட்சுமி தேவி என்னும் வனிதைக்கு பதியான ஸ்ரீபராமத்மனிடம்
பக்தி ஞானவ கொட்டு = பக்தி ஞானத்தைக் கொடுத்து
ஸலஹுவுது = எனக்கு அருள்வாயாக
சன்மனதி = உத்தமமான மனதால்
விக்ஞாபிஸுவெ = வேண்டுகோள் வைக்கிறேன்.

ஸ்ரீவிக்னேஷ்வரன், குபேரன், விஷ்வக்சேனன், வைத்யர்களான அஸ்வினி தேவதைகள் இவர்கள் தாரதம்யத்தில் சமம் என்று சொல்லப்படுகின்றனர். உக்த சேஷ ஷதர் என்னும் 85 தேவதைகளைவிட உத்தமர்கள் இவர்கள். கங்கா தேவியால் வணங்கப்பட்டவன் என்றபின் அவளைவிட பரமோத்தமன் என்று சொல்வதாயிற்று. விக்னேஷ்வரன் தன் அந்தர்யாமியான விஷ்வம்பர மூர்த்தியை உபாசனை செய்கிறான். இத்தகைய குணங்களைக் கொண்ட ஹே கஜபதியே, லட்சுமிபதியான பரமாத்மனிடம் த்ருடமான பக்தி, ஞானத்தைக் கொடுத்து என்னைக் காப்பாற்று என்று ஒருமனதுடன் உன்னிடம் வேண்டிக் கொள்கிறேன்.

**சாருதே3ஷ்ணாஹ்வய னெனிஸி அவ**
**தார மாடி3தெ3 ருக்மிணீயலி**
**கௌ3ரியரஸனவரதி3 உத்3த4டராத3 ராக்ஷஸர |**
**ஷௌரியாக்3ஞதி3 ஸம்ஹரிஸி பூ4**
**பா4ர இளுஹித3 கருணி த்வத்பா**
**தா3ரவிந்த3கெ3 நமிபெ கருணிபுதெ3மகெ3 ஸன்மதிய ||5**

ருக்மிணீயலி = கிருஷ்ணன் மூலமாக ருக்மிணி தேவியிடம்

சாருதேஷ்ணாஹ்வயனெனிஸி = சாருதேஷ்ண என்னும் பெயரால் புகழ்பெற்று, அவதாரம் செய்தாய். அந்த அவதாரத்தினால்
கௌரியரஸன = ருத்ர தேவரின்
வரதி = வரத்தினால்
உத்தடராத = கர்வத்தினால் மதம் பிடித்த
ராக்ஷஸர = அசுரர்களை
ஷௌரியாக்ஞதி = ஸ்ரீகிருஷ்ணனின் ஆணைப்படி
சம்ஹரிஸி = கொன்று
பூபார இளுஹித = பூமியின் பாரத்தைக் குறைத்த
கருணி = கருணாளுவான ஹே விக்னராஜனே
தத்பாதாரவிந்தகெ = உன் பாதாரவிந்தங்களை
நமிபெ = வணங்குகிறேன்
எமகெ = எங்களுக்கு
ஸன்மதிய = உத்தமமான பகவத் சம்பந்தமான புத்தியை
கருணிபுது = கொடுப்பாயாக.

ருக்மிணியிடம் சாருதேஷ்ணா என்னும் பெயரில் கணபதி அவதரித்த விஷயமானது, ப்ருஹத் தாரதம்ய சந்தியில் 21ம் பத்யம் அல்லது அம்ஷாவதரண சந்தியில் 24ம் பத்யத்தின் தாரதம்யத்தில் நிர்ணயாதிகளுடன், ஆதாரங்களுடன் விவரிக்கப்பட்டுள்ளது.

சாருதேஷ்ணா கிருஷ்ண ஸுதோ ஸது பூர்வம் வினாயக: ||

என்னும் அம்ஷாவதரணத்தின் வாக்கியமும் இதற்கு ஆதாரமாகும். சாருதேஷ்ணனாக இருந்த காலத்தில் ருத்ரதேவரின் வரத்தினால் சாகாவரம் பெற்று, கிருஷ்ணனின் எதிரிகளான ராஜர்களை, கிருஷ்ணனின் ஆணையைப் பெற்று, அவர்களைக் கொன்று, பூபாரத்தைக் குறைத்தாய். ஹே கருணைக்கடலே. உன் பாதாரவிந்தங்களுக்கு நான் நமஸ்காரம் செய்கிறேன். நமக்கு பகவத் விஷயத்தில் மனம் நிலைக்கட்டும் என்று வேண்டிக் கொள்கிறேன்.

**ஸூர்ப்பகர்ண விராஜிதேந்து³வ**
**ந்த³ர்ப்பஹர உதி³தார்க்க ஸன்னிப⁴**
**ஸர்ப்பவரகடிஸூத்ர வைக்ருதகா³த்ர ஸுசரித்ர |**
**ஸ்வர்ப்பிதாங்குஷ பாஷகர க²ள**
**த³ர்ப்பப⁴ஞ்ஜன கர்மஸாக்ஷிக³**
**தர்ப்பகனு நீனாகி³ த்ருப்திய ப³டி³ஸு சஜ்ஜனர ||6**

ஷூர்ப்பகர்ண = முறம் போன்ற காதுகள்
விராஜித = இருக்கும்
இந்துவ தர்ப்பஹர = சந்திரனின் கர்வத்தைப் போக்கிய
உதிதார்க்க ஸன்னிப = உதயசூரியனைப் போல ஒளி பொருந்திய

ஸர்ப்பவர கடிஸூத்ர = பாம்புகளில் சிறந்தவனை தன் இடுப்பில் கட்டிக் கொண்டவனே
வைக்ருதகாத்ர = உடல் மனிதனைப் போலவும், தலை மட்டும் யானையின் தலையாக இருப்பதால், வைக்ருத ஷரீரம் என்றார்.
சுசரித்ர = இப்படி வைக்ருத சரீரமாக இருப்பதால், பார்ப்பவர்களை பயமுறுத்தும்படியாக இருக்கிறானோ என்னும் சந்தேகத்தைப் போக்குவதற்காக, சுசரித்ர என்றார். அனைவராலும் வணங்கப்படும் சரித்திரம் உள்ளவன் என்பது கருத்து.
ஸ்வர்ப்பித = நன்றாக பிடிக்கப்பட்ட
அங்குஷ பாஷகர = அங்குசம், பாஷம் இந்த இரு ஆயுதங்களைக் கொண்ட கைகளைக் கொண்டவன்
களதர்ப்ப பஞ்சன = பாண்டவ த்வேஷ, யாதவ த்வேஷ, பகவத் த்வேஷ இவற்றை செய்யும் அயோக்யர்களான ராஜர்களின் கர்வத்தை அடக்கி மஹாஷூரன் என்று அழைத்துக் கொள்கிறான்
கர்மஸாக்ஷிக = அனைத்து கர்மங்களையும் ஒரு சாட்சியாக பார்த்துக் கொண்டிருக்கும்
ஹே மஹா கணபதியே!
தர்ப்பகனு நீனாகி = சாதுகளின் மனோபீஷ்டங்களை நிறைவேற்றுபவனே
சஜ்ஜனர த்ருப்தி படுஸு = சஜ்ஜனர்களை திருப்திப்படுத்து.

முறத்தைப் போன்ற காதுகளை உடையவன். அப்படியெனில், பார்ப்பவர்களுக்கு விகாரமாக தெரிகிறானோ என்றால் ‘விராஜித’ என்னும் சொல்லினால், யானையின் முகம் ஆனதால், அதற்கேற்ப காதுகள் இல்லையெனில் சரியாக இருக்காது. ஆகையால், அந்த முகத்திற்கேற்ப, முறங்களே இரு காதுகளாக இருந்து, அழகாகவும் இருக்கின்றன என்பது கருத்து.

பாத்ரபத சுத்த சதுர்த்தியன்று, ருத்ரதேவரின் வரத்தினால் அனைத்து வீடுகளிலும் பூஜையை ஏற்றுக்கொண்டு, மோதகங்களை உண்டு, அவற்றை கைகளிலும் ஏந்தி, மாலையில் வரும்போது வாகனமான மூஞ்சுறு, அங்கிருந்த பாம்பினைக் கண்டு பயந்து தள்ளாட, அதன் மேல் அமர்ந்திருந்த கணபதி கீழே விழ, அதைக் கண்ட சந்திரன் சிரித்து கேலி செய்தான்.

அதனால் கோபம் கொண்ட கணபதி, தன் ஒரு தந்தத்தைப் பிய்த்து, அவன் மேல் எறிந்தார். இந்த நாளில் இனி யாரும் சந்திர தரிசனத்தை செய்யக்கூடாது. அப்படி செய்துவிட்டால், அவர்கள் மேல் திருட்டுப் பட்டமோ, பெண்களை மயக்குபவன் என்னும் ஜார பட்டமோ வரும் என்று சாபத்தைக் கொடுத்தார். இந்த கதையை கணேசனின் வரலாறில் பார்த்திருப்போம். அதை மனதில் வைத்துக்கொண்டு சந்திர தர்ப்பஹர என்றார்.

இந்தக் கதையை, கணேச பூஜையன்று, பூஜைக்கான கதை படிக்கும்போது பலரும் கேட்டிருக்கலாம். ஆனால் இந்த கதையானது, தற்போது வரும் புதிய புத்தகப்

பதிப்புகளில் வருவதில்லை. ஆகவே, அனைவரும் அறியவேண்டும் என்பதற்காக சிறிது விளக்கினோம்.

ஒரு காலத்தில், அகஸ்த்ய ரிஷிகள், பரமாத்மனைக் குறித்து தவம் செய்து, தினந்தோறும் தான் வசித்து வந்த விந்த்யா பர்வதத்தின் தெற்கு பாகத்திலிருந்து, காசிக்குச் சென்று, கங்கையில் குளித்து, கங்கோதகத்தை எடுத்து, ராமேஸ்வரத்திற்குச் சென்று, ராமலிங்கத்திற்கு அபிஷேகம் செய்து, மறுபடி விரைவில் தம் இடத்திற்கு வரவேண்டும். இப்படி தினமும் செய்ய வேண்டும் என்னும் ஆசை தமக்கு இருக்கிறது. இதற்கான வரம் வேண்டும் என்று வேண்டினார்.

பரமாத்மன் அவரின் தவத்திற்கு மெச்சி, ஒரு குடத்தைக் கொடுத்து, 'நீ விரும்பியதைப் போலவே தினமும் காசிக்கு, பின் ராமேஸ்வரத்திற்குச் செல்லும் சக்தியை உனக்கு கொடுத்துள்ளேன். ஆனால், எந்தவொரு நாளும் நீ இந்த குடத்தை நடுவில் கீழே வைக்கக்கூடாது. அப்படி வைத்துவிட்டால், குடம் உடைந்து விடும். அன்றிலிருந்து இந்த சக்தி உனக்கு இருக்காது' என்று வரம் கொடுத்து மறைந்தார்.

அகஸ்த்யரும் பகவந்தனின் வரத்தின்படி, தன் விருப்பத்தை நிறைவேற்றிக் கொண்டிருந்தார். ஒரு நாள், தெய்வ சங்கல்பத்தின்படி, காசியிலிருந்து ராமேஸ்வரத்திற்கு சென்று கொண்டிருந்தபோது, மலமூத்திர விசர்ஜனம் செய்ய வேண்டிவந்தது. இந்த நிலையில், குடத்தைக் கொண்டு சென்று அபிஷேகம் செய்தால், அது சரியல்ல. ஆனால் குடத்தை கீழே வைத்தால், அது உடைந்துவிடும். ஆக, என்ன செய்வது என்று யோசித்தார்.

அன்று பாத்ரபத சுத்த சதுர்த்தி. வீடுவீடுகளுக்குச் சென்று பூஜையை ஏற்றுக்கொண்டு, மூஷிக வாகனனாக கணபதி வருவதைக் கண்டு, அவரிடம் 'ஹே விக்னேஸ்வரனே, இந்தக் குடத்தை சிறிது நேரம் கையில் பிடித்துக்கொள். இதை கீழே வைத்தால், குடம் உடைந்துவிடும். அடுத்து நான் செய்யவிருக்கும் மஹாகாரியம் நின்று போய்விடும். நான் ஓரிரு நிமிடங்களில் வந்துவிடுகிறேன். அதுவரை இதனை வைத்துக்கொள்' என்றார்.

அதற்கு கணபதி 'அகஸ்தியரே, எனக்கு அவசரமான வேலை இருக்கிறது. ஆனாலும், உங்களுக்காக இந்தக் குடத்தை சிறிது நேரம் வைத்துக் கொள்கிறேன். ஆனால், நான் உங்களை மூன்று முறை கூப்பிடுவேன். அதற்குள் நீங்கள் வரவில்லையெனில், இதனை கீழே வைத்துவிட்டுப் போய்விடுவேன்' என்றான்.

அகஸ்தியரோ, இவன் சும்மா நகைச்சுவைக்காக சொல்கிறான், குடத்தை கீழே வைக்க மாட்டான் என்று நம்பி, சரி என்று சொல்லிவிட்டு, குடத்தைக் கொடுத்துவிட்டுச் சென்றார். அகஸ்தியர் நான்கு அடிகளை வைத்துச் சென்றதுமே, 'அகஸ்தியரே வாரும்' என்றான். இன்னொரு நான்கு அடிகளை வைத்ததுமே

மறுபடி கூப்பிட்டான். அகஸ்தியர், கழிப்பிடத்தை சேர்வதற்குள்ளேயே, அகஸ்தியரே வாரும் என்று மூன்றாம் முறையும் சொல்லிவிட்டு, குடத்தை கீழே வைத்துவிட்டான். குடம் உடைந்து போனது. கணபதியும் பயந்து, அங்கிருந்து புறப்பட்டு விட்டான்.

அகஸ்தியர் தம் வேலையை முடித்து, ஆசமனம் செய்து, வந்து, குடம் உடைந்து கிடப்பதை பார்த்தார். தம் வேலை விக்னமானதால் மிகவும் சோகம் கொண்டு, அபாரமான கோபமும் வந்தது. இந்தக் குடம் எப்படி உடைந்ததோ, அதுபோலவே, இன்று உன் வயிறும் உடைந்து போகும் என்று கணபதிக்கு சாபம் கொடுத்தார். அதனாலேயே, அன்று கணபதி, மூஷிக வாகனத்திலிருந்து விழுந்து வயிறு உடைந்தது. அதற்கு சந்திரன் சிரித்ததற்காக, கணபதி சந்திரனுக்கு சாபம் கொடுத்து, அவன் கர்வத்தை அடக்கினார் என்று கதையில் படிக்கிறோம்.

உதயசூரியனைப் போல அழகாக ஒளிர்பவன். பாம்பினை தன் இடுப்பில் கட்டியிருப்பவன். கணபதியின் வயிறு உடைந்தபோது, பாம்பினால் அதனை இறுக்கக் கட்டினார் என்பது காரணம். யானைத் தலை, மனித சரீரம், வயிற்றில் கட்டப்பட்ட பாம்பு, இவற்றைக் கேட்டால், அவன் விகாரன் என்று நினைக்கலாம். ஆகையால், வைக்ருத காத்ரன் என்றார்.

ஆனால், அவன் விகாரனல்ல. பார்ப்பவர்கள் புகழும்படியான ரூபத்தையே காண்கின்றனர். இவனின் கதை அனைவரும் கொண்டாடும் விதமாக உலகப் புகழ் பெற்றதாக இருக்கிறது. பாஷ, அங்குஷங்களை இரு கைகளில் பிடித்திருக்கிறான். அயோக்யர்களான பகவத் த்வேஷிகளின் கர்வத்தை அடக்கினான். அனைத்து ஜீவர்களும் செய்யும் கர்மங்களுக்கு, ஆகாஷ அபிமானியாக இருந்து, சாக்ஷியாக இருக்கிறான். மக்களால் பூஜிக்கப்பட்டு அவரவர்களின் மனோபீஷ்டங்களை சீக்கிரத்தில் நிறைவேற்றும் ஸ்வபாவம் உள்ளவன். ஆகையால், சஜ்ஜனர்களின் இஷ்டார்த்தங்களை நிறைவேற்றி, த்ருப்திப்படுத்துகிறான்.

**கே$^{2}$ஷ பரம ஸுப$^{4}$க்தி பூர்வக**
**வ்யாஸக்ருத க்$^{3}$ரந்தக$^{3}$ளனரிது ப்ர**
**யாஸவில்லதெ$^{3}$ ப$^{3}$ரெது$^{3}$ விஸ்தரிஸிதெ$^{3}$யோ லோகதொ$^{3}$ளு |**
**பாஷபாணியெ ப்ரார்த்திஸுவெ உப**
**தே$^{3}$ஷிஸெனகெ$^{3}$ அத$^{3}$ரர்த்த$^{2}$க$^{3}$ள கரு**
**ணாஸமுத்$^{3}$ர க்ருபாகடாக்ஷதி$^{3}$ நோடு$^{3}$ ப்ரதிதி$^{3}$னதி$^{3}$ ||7**

கேஷ = ஆகாஷாதிபதியான விக்னேஷ்வரனே
பரமசுபக்தி பூர்வக = மிகுந்த பக்தியுடன்
வியாசக்ருத கிரந்தகளனு = வேதவியாஸ தேவர் இயற்றிய பாரதத்தின் 1.25 லட்ச ஸ்லோகங்களின் அர்த்தங்களை
அரிது = அறிந்து
ப்ரயாஸவில்லதெ பரெது = எவ்வித சோர்வுமின்று எழுதி

லோகதொளு = இந்த உலகத்தில்
விஸ்தரிஸிதெயோ = பரப்பினாய்
பாஷபாணியே = பாஷத்தை கையில் பிடித்த கணாத்யக்ஷனே
பிரார்த்திஸுவே = உன்னை வணங்குவேன்
அதரர்த்தகள = பாரதத்தின் முழுமையான அர்த்தங்களை
உபதேஷிசெனகெ = எனக்கு உபதேசிப்பாயாக
கருணாசமுத்ர = கருணைக்கடலே
பிரதிதினதி = தினந்தோறும்
க்ருபாகடாக்ஷதி நோடு = என்னை உன் கருணைக் கண்களால் பார்.

கம் என்றால் ஆகாயம். அதற்கு ஈஷ என்றால் ஆகாஷாத்ம என்று அர்த்தம். வேதவியாஸ தேவர், பாரதத்தை இயற்றி, இந்த கிரந்தத்தை எழுதவேண்டும் என்று கணபதிக்கு சொல்ல, அவரும் அதற்கு ஒப்புக்கொண்டு, தன் எழுத்தாணி நடுவில் நிற்காதவாறு, தொடர்ந்து சொல்லிக் கொண்டே வரவேண்டும் என்று கூறினார். அப்படி நடுவில் என் எழுத்தாணி நின்றுவிட்டால், நான் தொடர்ந்து எழுதமாட்டேன் என்றார்.

அதற்கு வேதவியாசதேவரும், அப்படியே ஆகட்டும், ஆனால், நான் சொல்லும் ஸ்லோகங்களை, நீ அர்த்தம் புரிந்துகொண்டே எழுதவேண்டும். அப்படியே இருவரும் ஒப்புக்கொண்டு, கிரந்தத்தை எழுதத் துவங்க, வேதவியாசதேவர் தாம் எழுதிய வரை கணபதிக்கு சொல்லிவிட்டார். அடுத்து, கிரந்தம் இயற்றப்பட வேண்டும். எழுத்தாணி நின்றுவிட்டால், கணபதி மேற்கொண்டு எழுதுவதில்லை.

இதற்கு என்ன உபாயம் என்று சிந்தித்து, சில ஸ்லோகங்களை அடுத்து மிகவும் கடினமான சொற்களால் இயற்றிக் கொடுத்தார். அதன் அர்த்தத்தை கணபதி யோசிக்கும் நேரத்தில், இவர் வேகமாக கிரந்தத்தை முன்னெடுத்துச் சென்றார். இப்படியே நடுநடுவே கடின ஸ்லோகங்களைக் கொடுக்க, கணபதியும், சர்வக்ஞனானாலும், அதன் அர்த்தத்தை யோசித்தே எழுதவேண்டியிருந்தது. இப்படியே முழு கிரந்தத்தையும் எழுதி முடித்தார்.

இப்படியாக 90 லட்ச ஸ்லோகங்களால் வேதவியாசதேவர் பாரதத்தை இயற்றினார். அவற்றில் 30 லட்ச ஸ்லோகங்கள், தேவ லோகத்தையும், 15 லட்சம் ரிஷி லோகத்தையும், 14 லட்ச ஸ்லோகங்கள் பித்ரு லோகத்தையும் சேர்ந்தன. ஒரு லட்ச ஸ்லோகங்கள் மட்டுமே பூமியைச் சேர்ந்தன. இது மட்டுமல்லாமல், ராமோபாக்யான முதலான உபாக்யானங்கள் 25,000 ஸ்லோகங்கள் என, ஹரிவம்சமும் பாரதமும் சேர்ந்து 1.25 லட்ச ஸ்லோகங்கள் என பூமியில் இருந்தன.

கணபதியை யோசிக்க வைக்க வேதவியாச தேவர் நடுநடுவே கூறிய கடின சொற்களைக் கொண்ட ஸ்லோகங்கள் மொத்தம் 8,800.

அஷ்டௌ ஸ்லோக சஹஸ்ராணி அஷ்டௌஸ்லோக ஷதானிச ।
அஹம் வேத்தி ஷுகோ வேத்தி சஞ்சயோ வேத்தி வானவா ॥

8,800 ஸ்லோகங்களை கடினமானதாக இயற்றி, வேதவியாசதேவர் கூறிய வாக்கியம் என்னவென்றால்: இந்த 8,800 ஸ்லோகங்களின் அர்த்தங்களை நான் அறிவேன். இந்த ஸ்லோகங்களின் அர்த்தங்கள் கணபதியின் மனதிற்கு வந்தனவோ இல்லையோ என்கிற சந்தேகத்திற்கு இடமே இல்லை. ஏனெனில், முதலிலேயே இருவரும் ஒப்புக் கொண்டபடி, அர்த்தம் புரியாமல் எழுதக்கூடாது என்று சொல்லியிருந்ததால், இந்த கிரந்தத்தை கணபதி எழுதியிருப்பதாலேயே, அவன் இதன் அர்த்தத்தை அறிந்திருக்கிறான் என்று தெரிகிறது.

இதையே தாசார்யர் இங்கு சொல்லியிருக்கிறார். வேதவியாஸ தேவர் செய்த கிரந்தங்களின் அர்த்தங்களை அறிந்து, சோர்வில்லாமல் எழுதி, உலகத்தில் பரப்பினாய். பாரத, ஆதிபர்வத்தின் துவக்கத்தில் இந்த கதையை விவரமாக எழுதியிருப்பார். தாசார்யர் இவ்வாறு பிரார்த்திக்கிறார்.

ஹே பாஷபாணியே, பாரத அர்த்தத்தை நீ நன்றாக அறிந்திருக்கும்படியால், அதன் அர்த்தத்தை எனக்கு புரியவை. நீ உன் க்ருபா கடாக்ஷத்தினால் என்னைப் பார். கிருபாகடாக்ஷத்தினால் என்னைப் பார்த்தால், பாரதாதி கிரந்தங்களுக்கு அர்த்தம் சுலபமாகப் புரியும் என்பது கருத்து.

**ஸ்ரீஷனதி[1] நிர்மலஸுனாபி[4]**
**தே[3]ஷ வஸ்தி[2]த ரக்த க[3]ந்தா[4]**
**திஸுஷோபி[4]தகா[3]த்ர லோகபவித்ர ஸுரமித்ர ।**
**மூஷி[2]கா வரவஹன ப்ராணா**
**வேஷயுத ப்ரக்[2]யாத ப்ரபு[4] பூ**
**ரயிஸு ப[4]க்தரு பே[3]டி[3]த[3] இஷ்டார்த்த[2]க[3]ள ப்ரதிதி[3]னதி[3] ||8**

ஸ்ரீஷன = ஸ்ரீலட்சுமிபதியான பரமாத்மனின்
அதி நிர்மல = மிகவும் தூய்மையான
நாபிதேஷ வஸ்தித = நாபி பிரதேசத்தில் வசிக்கிறாய்
ரக்தகந்தா சுஷோபீதகாத்ர = சிகப்பு வர்ண சந்தனத்தை பூசிக்கொண்டு, அதனால் அழகாக ஒளிர்ந்து கொண்டிருக்கும் தேகத்தைக் கொண்டவனே
லோகபவித்ர = சஜ்ஜனர்களின் தடைகளைப் போக்கி, அவர்களை உலகத்தில் பவித்ர கர்மங்களை செய்ய வைக்கிறாய்
சுரமித்ர = தேவதைகளின் நண்பன்
மூஷிக சுவரவஹன = உத்தமமான மூஷிக வாகனனாக இருப்பவனே
ப்ராணாவேஷயுத ப்ரக்யாத ப்ரபு = பிராண தேவரின் ஆவேசத்தைக் கொண்டு, உலகப் புகழ்பெற்று பிரபு என்று அழைக்கப்படுபவனே
இத்தகைய நற்குணங்களைக் கொண்டவனே, ஹே விக்னேஷ்வரனே,
ப்ரதிதினதி = தினந்தோறும்

பக்தரு பேடித = பக்தர்கள் வேண்டும்
இஷ்டார்த்தகள = இஷ்டார்த்தங்களை
பூரயிஸு = நீ நிறைவேற்று.

ஸ்ரீபரமாத்மனின் நாபி பிரதேசத்தில் இருக்கும் ஆகாஷத்தில் வசிப்பவனே. ஹே கணபதியே. 'ரக்தாம்பகோ ரக்ததனு: ரக்தமால்யானு லேபன:' என்று தந்த்ரசார சங்க்ரஹத்தில், கணபதி மந்திரத்தின் தியான ஸ்லோகத்தில் ஸ்ரீமன் மத்வாசார்யர் சொல்லியிருக்கும் வாக்கியம் இது. அப்படியே, சிகப்பு வர்ண மிகவும் அழகான சரீரம் உள்ளவனே. உலகத்தையே பவித்ரமாக மாற்றுபவனே. நீ தேவதைகளின் நண்பன். மூஷிகனை வாகனனாகக் கொண்டவன். பிராணதேவரின் ஆவேசத்தைப் பெற்று உலகப் புகழ் பெற்றவன். ஹே பிரபோ, தினந்தோறும் பக்தர்கள் வேண்டும் இஷ்டார்த்தங்களை நிறைவேற்று.

**ஷங்கராத்மஜ தை$^{3}$த்யரிக$^{3}$தி ப$^{4}$**
**யங்கர க$^{3}$திக$^{3}$ளீயலோஸுக$^{3}$**
**ஸங்கடசதுர்த்தி$^{2}$ க$^{3}$னெனிஸி அஹிதார்த்த$^{2}$க$^{3}$ள கொட்டு |**
**மங்குக$^{3}$ள மோஹிஸுவெ சக்ரத$^{3}$**
**ரங்கி$^{3}$தனெ தி$^{3}$னதி$^{3}$னதி$^{3}$ த்வத்பத$^{3}$**
**பங்கஜகெரகி$^{3}$ பி$^{3}$ன்னயிஸுவெனு பாலிபுது$^{3}$ எம்ம ||9**

ஷங்கராத்மஜ = ஹே ருத்ர குமாரனே
தைத்யர்களுக்கு அதி பயங்கர கதிகள = தைத்யர்களுக்கு அவர்களுக்கு தக்க கதிகளை
ஈயலோசுக = கொடுப்பதற்காக
சங்கடசதுர்த்திகனெனிஸி = ஒவ்வொரு மாதமும் கிருஷ்ண பட்ச சதுர்த்தியன்று, சங்கஷ்ட சதுர்த்தி கணபதி விரத என்று பஞ்சாங்களில் போட்டிருப்பர். அந்த நாளில், அந்த விரதத்தில் நிலைத்திருந்து,
அஹிதார்த்தகள கொட்டு = அவர்களுக்கு ஹிதமாகாத. அதாவது, நரகத்திற்கு சாதனையாகும் விஷய சுகத்தைக் கொடுத்து
மங்குகள = மூர்க்க ஜனர்களை மயக்குவாய்
சக்ரதராங்கிதன = சக்ர, சங்கு இவற்றை தரித்திருக்கும் ஸ்ரீபரமாத்மனின்
தோரு = காட்டு
த்வத்பத பங்கஜகெரகி = உன் பாத கமலங்களுக்கு
அனுதினதி = தினந்தோறும்
எரகி = நமஸ்கரித்து
பின்னயிஸுவேனு = வணங்குவேன்
எம்ம = எங்களுக்கு
பாலிபுது = அருள்வாயாக

ஹே ருத்ரதேவரின் குமாரனே. உன்னை வேண்டி, பலர் ஒவ்வொரு மாதமும் கிருஷ்ண பக்ஷ சதுர்த்தியன்று சங்கடஹர சதுர்த்தி விரதத்தை

மேற்கொள்கின்றனர். அங்கு, அந்த இடத்தில் நீ நிலைத்திருந்து, அவர்களின் இஷ்டார்த்தங்களை நிறைவேற்றியதாக காட்டி, அந்த மூர்க்க மக்களை மயக்கி, இறுதியில் அவர்களுக்கு அனர்த்தமான கதியையே கொடுக்கிறாய். தைத்யர்கள் மற்றும் அவரின் ஆவேசம் உள்ளவர்களே இந்த விரதத்தை செய்வார்கள். அவர்களுக்கு, அதோகதியைக் கொடுக்க வேண்டும் என்ற நோக்கத்திலேயே, அந்த நாளில் அவர்கள் செய்யும் பூஜையை ஏற்றுக் கொள்கிறாய்.

இப்படியாக தாசார்யர், சங்கடஹர சதுர்த்தியை தூஷிக்கிறார். இதன் காரணம் என்னவென்றால், சங்கடஹர சதுர்த்தி விரதத்தை செய்பவர்கள், மாலை வரை உபவாசம் இருந்து அந்த விரதத்தை செய்கின்றனர். அந்த விரதத்தில், கணபதியே சர்வோத்தமன் என்றும், ஸ்ருஷ்ட்யாதி கர்தன் என்றும் சொல்லி, கணபதி உபநிஷத் மற்றும், நிஷுஸீத கணபதி முதலான ரிக்குகளில் இருக்கும் உண்மையான அர்த்தத்தை அறியாமல், ஹரி ஹராதிகளைவிட கணபதியே உத்தமன் என்று அறிந்து பூஜிப்பார்கள்.

கணபதி உபநிஷத்தின் வாக்கியங்கள், தத்வாபிமானி தேவதைகளின் பதி ஆனதால், பரமாத்மனுக்கு கணபதி என்று பெயர். அதில் பரமாத்மனின் மகிமையையே சொல்கின்றனர். ஆனால், அதனை விக்னேஸ்வரைக் குறித்து சொல்வதாக நினைத்து கணபதி சர்வோத்தமன் என்று சொல்லி பூஜிக்கின்றனர். ஆகையாலேயே, அதன் பலனாக அவர்களுக்கு நரகமே கிடைக்கின்றது.

அவர்களுக்கு அனர்த்தத்தைக் கொடுக்கும் உத்தேசத்தினாலேயே, அந்த நாளில் கணபதி, அவர்களிடமிருந்து அந்த பூஜையை ஏற்றுக் கொள்கிறான் என்பது கருத்து

தினந்தோறும் உன் பாதாரவிந்தங்களில் விழுந்து வணங்குகிறேன். சக்ர மற்றும் சங்கு தாரியான பரமாத்மனை காட்டி நம்மை அருள்வாயாக.

**சித்$^3$த$^4$வித்$^3$யா த$^4$ரக$^3$ணஸமா**
**ராத்$^4$ய சரணஸரோஜ ஸர்வஸு**
**ஸித்தி$^3$தா$^3$யக ஷீக்$^4$ரதி$^3$ம் பாலிபுது$^3$ பி$^3$ன்னபவ |**
**பு$^3$த்தி வித்$^3$யா ஞான ப$^3$ல பரி**
**ஶுத்தப$^4$க்தி விரக்தி நிருதன**
**வத்$^3$யன ஸ்ம்ருதிலீலெக$^3$ள ஶுஸ்தவன வத$^3$னத$^3$லி ||10**

ஸித்த = ஸித்தர்கள்
வித்யாதரகண = வித்யாதரர்கள், இவர்களிடமிருந்து
ஸமாராத்ய சரணசரோஜ= நன்றாக ஆராதிக்கப்பட்டுள்ள பாத கமலங்களைக் கொண்டவனே
சர்வ சுசித்தி தாயக = பக்தர்களுக்கு அனைத்து சித்திகளையும் கொடுப்பவனே
புத்தி = நிஸ்சய ஞானம்

வித்யா = பகவத் சம்பந்தமான மீமாம்ஸ முதலான சாஸ்திரங்களில் ஈடுபட்டிருப்பது
ஞான பல = ஹரிசர்வோத்தமாதி ஞானம். இத்தகைய ஞானமே பல.
பரிசுத்தபக்தி = த்வேஷம் ஆகியவற்றின் சம்பந்தமில்லாத பக்தி
விரக்தி = சம்சாரத்தில் விரக்தி
ஆகியவற்றை
நிரத = தினந்தோறும்
அனவத்யன = தோஷங்கள் அற்ற ஸ்ரீ பரமாத்மனின்
ஸ்ம்ருதி = மனதில் எப்போதும் அவனின் ஸ்மரணை இருக்குமாறும்
வதனதலி = வாயில்
லீலெகள = பரமாத்மனின் அவதாராதி லீலைகள்
ஸுஸ்தவன = நன்றாக ஸ்தோத்திரம் செய்து கொண்டிருக்கும்படியும்
இந்த,
பின்னபவ = வேண்டுகோளை
ஷீக்ரதிம் பாலிபுது = சீக்கிரமாக நினைவேற்றுவாயாக.

ஸித்தர்கள், வித்யாதரர்கள் இவர்களால் நன்றாக வணங்கப்படும் பாத கமலங்களைக் கொண்டவன். பக்தர்களின் அனைத்து அபீஷ்டங்களையும் நிறைவேற்றுபவன். ஹே விக்னராஜனே. நான் உன்னிடம் வேண்டுவது என்னவென்றால், எனக்கு எப்போதும், புத்தி, வித்யை, ஞான பல, பரிசுத்தபக்தி, விரக்தி - என இந்த அனைத்திலும் எனக்கு ஈடுபாடு வருமாறு செய்து, மற்றும் தோஷங்கள் அற்றவனான ஸ்ரீபரமாத்மனின் ஸ்மரணை இருக்குமாறும், அவனின் லீலைகள் என் வாயிலிருந்து எப்போதும் வெளிவருமாறும் செய்து செய்யவேண்டும் என்பதே என் வேண்டுகோள்.

**ரக்தவாஸத்$^{3}$வய விபூ$^{4}$ஷண**
**உக்தி லாலிஸு பரம ப$^{4}$க$^{3}$வ**
**த் ப$^{4}$க்தவர ப$^{4}$வ்யாத்ம பா$^{4}$க$^{3}$வதாதி ஷாஸ்த்ரத$^{3}$லி**
**ஸக்தவாக$^{3}$லி மனவு விஷய வி**
**ரக்தி பாலிஸு வித்$^{3}$வதா$^{3}$த்$^{3}$ய வி**
**முக்தனெந் தெ$^{3}$னிஸென்ன ப$^{4}$வப$^{4}$யதி$^{3}$ந்த$^{3}$ அனுதி$^{3}$னதி$^{3}$ ||11**

ரக்தவாஸத்வய விபூஷண = சிவப்பு வண்ண இரு ஆடைகள். ஒன்றை உடுத்தி இன்னொன்றை மேல் வஸ்திரமாக போர்த்தி, அதனால் அலங்கரிக்கப்பட்டவனே
பரம பகவத் பக்தவர = பரம பாகவதோத்தமனே
பவ்யாத்ம = பரம மங்களகரமான சரீரம் உள்ளவனே
உக்தி லாலிஸு = என் பேச்சை தயவு செய்து கேள். அல்லது, மக்களின் பேச்சை தந்தை தாய்கள் கேட்பதைப் போல கேள்
பாகவதாதி சாஸ்திரதலி = பாகவதாதி புராண சாஸ்திரங்களில்
மனவு = என் மனம் நிலைத்திருக்கட்டும்

விஷய விரக்தி பாலிஸு = விஷய போகாதிகளில் விரக்தி பிறக்குமாறு அருள்வாயாக
வித்வதாத்ய = வித்யாவந்தர்களில் உத்தமமானவனே
அனுதினதி = எப்போதும்
பவபயதிந்த = சம்சாரத்தைப் பற்றிய பயத்தால்
என்ன = என்னை
விமுக்தனெந்தெனிஸு = முக்தர்களின் நடுவே முக்தனாக இருக்கும்படி செய்

கணபதி உடுத்தியிருக்கும் ஆடையின் நிறம் சிகப்பு என்று தந்த்ரசாரத்தில் கணபதி மந்திரத்தின் தியான ஸ்லோகத்தில் 'ரக்தாம்பரோ ரக்ததனூ ரக்தமால்யானுலேபன:' என்று சொல்லப்பட்டிருக்கிறது. அதே அர்த்தத்தையே இங்கு தாசார்யர் சொல்கிறார். பரம பகவத்பக்தர்களில் உத்தமன். அதாவது, பிரம்மாதிகள் பரம பாகவதர்கள். அவர்களைவிட கணபதி உத்தமன் என்று அர்த்தமல்ல. தாரதம்யத்தின்படி இவரைவிட உத்தமர்களான பிரம்மதேவர் முதல் நிரருதி, ப்ராவஹி வரைக்கும் சொல்லப்பட்டிருக்கும் உத்தம பகவத் பக்தர்களை விட்டு, மற்ற உக்த சேஷஷதஸ்தர் எனப்படும் 85 தேவதைகள், கங்கை, பர்ஜன்ய ஆகியோர்களைவிட பக்தியில் சிறந்தவன் என்று அர்த்தம். இதைவிட்டு, பிரம்மாதிகளைவிட என்று அனைவரையும் சேர்த்து சொல்லக்கூடாது.

என் மனம், எப்போதும் பாகவதாதி நற்சாஸ்திரங்களில் நிலைத்திருக்குமாறு செய் என்று வேண்டுகிறார். இந்த என் பேச்சினை, குழந்தையின் பேச்சினை தாய் தந்தையர் எப்படி நிறைவேற்றுவரோ அப்படியே நிறைவேற்று. விஷய போகங்களில் எனக்கு எப்போதும் விரக்தி இருக்கட்டும். ஹே வித்வதார்யனே, என்னை சம்சார முக்தன் என்று பெயர் வருமாறு செய்.

**ஸுக்ரசிஷ்யர ஸம்ஹரிபுத$^{3}$கெ**
**ஷக்ர நின்னனு பூஜிஸித$^{3}$னு உ**
**ருக்ரம ஶ்ரீராமசந்த்ரனு ஸேதுமுக$^{2}$த$^{3}$ல்லி |**
**சக்ரவர்த்தி த$^{4}$ர்மராஜனு**
**சக்ரபாணிய நுடி$^{3}$கெ$^{3}$ ப$^{4}$ஜிஸித$^{3}$**
**வக்ரதுண்ட$^{3}$னெ நின்னொளெந்து$^{3}$டோ ஈஷனுக்$^{3}$ரஹவு ||12**

சுக்ரசிஷ்யர = சுக்ராசார்யரின் சிஷ்யரான தைத்யர்களை
சம்ஹரிபுதகெ = கொல்வதற்காக
ஷக்ர = தேவேந்திரன்
நின்னனு பூஜிஸிதனு = உன்னை வணங்கினான்
உருக்ரம = பஹு பராக்ரமசாலியான
ஶ்ரீராமசந்திரன்
சேதுமுகதல்லி = சேது பந்தனத்தை துவக்கும்போது உன்னை பூஜித்தான்
சக்ரபாணிய நுடிகெ = சக்ரபாணியான ஶ்ரீகிருஷ்ணனின் உபதேசத்தைக் கேட்டு
சக்ரவர்த்தி தர்மராஜன்,

பஜிஸித = உன்னை வணங்கினான்
வக்ரதுண்டனெ = தும்பிக்கை உள்ள முகத்தைக் கொண்டவனே
ஈஷனுக்ரஹவு = பகவத் அருள்
நின்னல்லி = உன்னிடம்
எந்துடோ = எவ்வளவு இருக்கிறதோ? (பகவத் அனுக்கிரகம் அதிகமாக இருக்கிறது என்று அர்த்தம்).

தேவேந்திரன் வ்ருத்ராசுரனைக் கொல்வதற்காக போகும்போது கணபதியின் பூஜையை செய்து, பின் சென்று போரிட்டு, வ்ருத்ராசுரன் மற்றும் அவனின் சேனைகளை தோற்கடித்து, வென்றான். ஸ்ரீராமசந்திரன், சீதையை மீட்கும் நோக்கத்தில், சேதுவைக் கட்டும்போது, விக்னராஜனின் பூஜையை செய்து, நிர்விக்னமாக சேதுபந்தனத்தைக் கட்டினான். என்னும் கதைகளை ஸ்ரீகிருஷ்ணன், தர்மராஜனுக்கு சொல்லி, தர்மராஜன் மூலமாக கணபதி பூஜையை செய்வித்தான்.

ஸ்காந்த புராணத்தில் கணேசனின் கதையில்:
ஸன்னத்தயோ: புரவிப்ரா: குருபாண்டவ ஸேனயோ: |
ப்ருஷ்டவான் தேவகீபுத்ரம் தர்மபுத்ரோயுதீஷ்டர: |
நிர்விக்னேன ஜயோஒ மஹம் வத தேவகி நந்தன ||
காம் தேவதாம் நமஸ்க்ருத்ய ஸம்யக்ராஜ்யம் லபேமஹி ||

ஸ்ரீகிருஷ்ண உவாச ||
பூஜயஸ்வ கணாத்யக்ஷம் ஸமுத்பவம் |
தஸ்மின் ஸம்பூஜிதேவீரே ஸம்யக்ராஜ்ய மவாப்யஸி ||
ஷக்ரேணபூஜித: பூர்வம் ததாவ்ருத்ரவதே ந்ருப ||
ராமசந்த்ரேண மஹதா ஞானக்யான்வேஷணே ததா ||
தஸ்மாத் ஸர்வப்ரயத்னேன பூஜனீயோ கணாதிப: ||
ஏவமுக்தஸ்து க்ருணேன ஸானுஜ: பாண்டுனந்தன: ||
பூஜயாமாஸ தேவேஷம் புத்ரம் த்ரிபுர காதின: ||
தத்ப்ரஸாதான் னிஹத்யாஷு ஷத்ரு ஸங்கானசேஷத: ||
ஸஸ்யைனிகான் மஹா பாக: ப்ராப்தவான் ராஜ்யமோஜனா: ||

குரு பாண்டவர்கள் அரசிற்காக போருக்குத் தயாராக நின்றபோது, தர்மராஜன், தேவகி புத்ரனான ஸ்ரீகிருஷ்ணனைப் பார்த்து, 'ஹே கிருஷ்ணா, போரில் நமக்கு நிர்விக்னமாக எப்படி வெற்றி கிடைக்கும்? எந்த தேவதையை பூஜித்தால், சந்தேகமின்றி நமக்கு ராஜ்யப்ராப்தி ஆகும்? அதனை எனக்குச் சொல்' என்று கேட்க, ஸ்ரீகிருஷ்ணன்:

'பார்வதி தேவியின் சரீர சம்பந்தமான அழுக்கினால் உருவான கணாத்யக்ஷனை பூஜிப்பாயாக. அதனால் உனக்கு போரில் வெற்றி கிடைத்து, ராஜ்யமும் கிடைக்கும். முன்னர் தேவேந்திரன் வ்ருத்ராசுரனையும் அவன் சைன்யத்தையும் வெல்வதற்காக கணபதியை பூஜித்து, எதிரிகளை வென்று இந்திராதிபத்யத்தை

மறுபடி பெற்றான். ஶ்ரீராமசந்திரன் தன் மனைவியான சீதாதேவி லங்கையில் இருக்கிறாள் என்று தெரிந்தபிறகு, கடலில் சேது பந்தனம் செய்து, லங்கைக்கு செல்லும் நோக்கத்தில், கணபதியை பூஜித்து சேது பந்தனத்தை செய்து, லங்கையில் ராவணாதி அசுரர்களை சம்ஹரித்து, சீதையுடன் சேர்ந்து, மறுபடி ராஜ்யத்தை அடைந்தான்' என்றான்.

ஶ்ரீகிருஷ்ணனின் வாக்கியத்திற்கேற்ப, தர்மராஜனும் கணபதி பூஜையை செய்து, கௌரவர்களை வென்று அரசைப் பெற்றான் என்று கணேஷ கல்பகதையில் வருகிறது. இங்கு ‘உமா மல ஸமுத்பவம்’ என்று பார்வதி தேவியின் உடம்பின் அழுக்கிலிருந்து கணபதியை ஸ்ருஷ்டித்தாள் என்றால், தேவோத்தமளான பார்வதி தேவி தேகத்தில் அழுக்கு இருக்குமா? சாமான்ய தேவதைகளுக்கே, தேகத்தில் வியர்வை, அழுக்கு இருப்பதில்லை. அவர்கள் அணிந்த புஷ்பங்கள் வாடுவதில்லை என்றெல்லாம் சொல்லியிருக்கிறார்கள்.

இப்படி இருக்கையில், பார்வதி தேவியின் தேகத்தில் அழுக்கு இருந்ததா என்று சந்தேகப்படக்கூடாது. பார்வதி தேவியை, கணபதியை ஸ்ருஷ்டிப்பதற்காக, தம் விருப்பத்தில் தம் தேகத்தில் அழுக்கினை ஸ்ருஷ்டித்து, அதிலிருந்து கணபதியை ஸ்ருஷ்டித்தார் என்று அறியவேண்டும்.

ஶ்ரீராமதேவர், இந்திராதி தேவதைகள் அனைவரும் கணபதியை பூஜித்தனர் என்றால், இந்திரனைவிட தாரதம்யத்தில் குறைவானவன். அதாவது 10 கக்ஷைகள் கீழ் இருக்கும் கணபதியை. மேல் கக்ஷையினர் பூஜிக்கலாமா? ஶ்ரீபரமாத்மனே ராம ரூபத்தினால் கணபதியை பூஜித்ததாக கதையில் படிக்கிறோம். இதன் உண்மையான அர்த்தம் என்ன என்று கேட்டால்:

பார்வதிதேவி ஸ்னானம் செய்வதற்காக, கணபதியை ஸ்ருஷ்டித்து, பின் ருத்ரர் அவரை சம்ஹரித்து, பிறகு ஒரு யானையின் தலையை வைத்து கணபதியை பிழைக்க வைத்தார் என்பதை முன்பு பார்த்தோம். அந்த சந்தர்ப்பத்தில், பார்வதி தேவியை மகிழ்விப்பதற்காக, இன்று முதல் யார் எந்த வேலையைத் துவக்கினாலும், முதலில் கணபதி பூஜையை செய்துவிட்டு, பின் தங்களின் இஷ்டமான செயல்களை செய்ய வேண்டும். அப்படி செய்வதால், அந்த காரியமானது நிர்விக்னமாக நடைபெறும். அப்படி செய்யாமல், தங்கள் வேலையை செய்தால், அந்த வேலை விக்னமாகி, தடை பெறும் என்று கணபதிக்கு வரம் அளித்தார் ருத்ரர்.

அந்த வரத்தை சத்யமாக்குவதற்காக ‘த்ரிபுரம் ஹந்துகாமேன ஷிவேனாராதித: புரா’ - த்ரிபுராசுரர்களின் சம்ஹார காலத்தில் ருத்ரதேவர் தாமே கணபதி பூஜையை செய்தார். இந்திராதிகள், ருத்ரதேவரின் வர கௌரவத்தினாலேயே பூஜித்தனர். ஶ்ரீராமதேவர், அசுர மக்களை மயக்குவதற்காக, ருத்ரதேவரின் வரத்திற்கு கௌரவத்தைக் கொடுப்பதற்காக, தாமும் கணபதியை பூஜித்தார் என்பது கருத்து.

ஆனாலும், இவர்கள் அனைவரும் கணபதியின் அந்தர்யாமியான பகவந்தனின் பூஜையென்றே நினைத்து பூஜித்தனர். விஸ்வம்பர நாமக பரமாத்மனே கணபதிக்குள் இருந்து பூஜையை ஏற்றுக் கொள்கிறான். ஆகையால், தாசார்யர் 'ஈஷனுக்ரஹவு நின்னல்லி எஷ்டுண்டோ' என்று பாடுகிறார்.

**கௌரவேந்த்3ரனு நின்ன ப4ஜிஸத3**
**காரணதி3 நிஜகுலஸஹித ஸம்**
**ஹாரவைதி3த3 கு3ருவர வ்ருகோத3ரன க3தெ3யிந்த3 |**
**தாரகாந்தகனனுஜ என்ன ஷ**
**ரீரதொ3ளு நீனிந்து த4ர்ம**
**ப்ரேரகனு நீனாகி3 ஸந்தெயிஸென்ன கருணத3லி ||13**

கௌரவேந்த்ரனு = துரியோதனன்
நின்ன பஜிஸத காரணதி = உன்னை வணங்காததால்
நிஜகுலஸஹித = தன் தம்பியர் 99 பேர்; தன் உறவினர் அனைவரும் இறந்தது மட்டுமல்லாமல், தானும்கூட
குருவர = ஜகத்குருகளான வாயுதேவரின் அவதாரபூதரான
வ்ருகோதரன = பீமசேனதேவரின்
கதையிந்த = கதா ஆயுதத்தால்
சம்ஹாரவைதித = கொல்லப்பட்டான்
தாரகாந்தனனுஜ = தாரக என்னும் தைத்யனை கொன்றவன் ஷண்முகன். அவனின் தம்பி என்று அர்த்தம். ஹே தாரகாந்தனனுஜனே,
என்ன ஷரீரதொளு நீனிந்து = என் சரீரத்தில் நீ நிலைத்திருந்து
கருணதலி = கருணையுடன்
தர்ம ப்ரேரகனு நீனாகி = என்னை தர்மத்தின் வழியில் நடக்கச் செய்பவனாக
என்ன = என்னை
ஸந்தெயிஸு = காப்பாயாக

மேலே பார்த்தவாறு, அனைவரும் தங்கள் வேலையை செய்வதற்கு முன்னர், கணபதி பூஜையை செய்து, தங்கள் வேலையை நிர்விக்னமாக நிறைவேற்றிக் கொண்டனர். பாவியான துரியோதனன், போரின் துவக்கத்தில், கணபதி பூஜையை செய்யாததால், தன் உற்றார் உறவினர்களுடன், தானும் பீமசேனதேவரின் கதா பிரயோகத்தால் அடிபட்டு இறந்தான்.

இதே விஷயத்தை பாகவத 8ம் ஸ்கந்தத்தில், தேவதைகள் பாற்கடலைக் கடையும் வேளையில், விநாயகனின் பூஜையை செய்யாமல் துவக்கியதால், மலையானது நீரில் மூழ்கிப் போனது என்றும், பரமாத்மன் கூர்ம அவதாரம் எடுத்து, அதை மறுபடி மேலே எடுத்து வந்தான் என்று, 'விலோக்ய விக்னேஷகதிம் ததீஷ்வரோ துரந்தவீர்யோ விததாபிஸந்தி:' என்னும் ஸ்லோகத்தில் சொல்கின்றனர்.

அதன்பிறகு, தேவ தைத்யர்கள் அனைவரும் கூடி, ‘அம்ருதோத் பாதனார்த்தாய ததா தேவாஸுரைரபி’ என்னும் கணேஷ கதையின் வாக்கியத்தின்படி, கணபதி பூஜையை செய்து அமிர்தத்தை அடைந்தனர் என்னும் அர்த்தம் தெரிகிறது. ஆகையால், செயல்களின் துவக்கத்தில் கணபதியை பூஜித்தே ஆகவேண்டும் என்பது தாத்பர்யம்.

ஹே ஷண்முக அனுஜனே, நீ எனக்குள் நின்று கருணையுடன் என் மனதை தர்ம விஷயத்தில் நடக்குமாறு அருள் புரிவாயாக.

**ஏகவிம்ஷதி மோத[3]கப்ரிய**
**மூகரனு வாங்க்மிக[3]ள மாள்பெ க்ரு**
**பாகரேஷ க்ருதக்ஞ காமத[3] காயோ கைபிடி[3]து[3] |**
**லேக[2]காக்[3]ரணி மன்மத[3] து[3]**
**ர்வ்யாகுலவ பரிஹரிஸு த[3]யதி[3] பி**
**நாகி பா[4]ர்யாதனுஜ ம்ருத்ப[4]வ ப்ரார்த்திஸுவெ நின்ன ||14**

ஏகவிம்ஷதி மோதகப்ரிய = 21 மோதகங்களை செய்ய வேண்டும் என்று கல்பத்தில் சொல்லப்பட்டிருப்பதால், 21 மோதக ப்ரியனே என்று தாசார்யர் சொல்கிறார்.
மூகரனு வாக்மிகள மாள்பெ = ஊமைகளை பேசுபவர்களாக ஆக்குகிறாய்
க்ருபாகரனே,
ஈஷ,
க்ருதக்ஞ = சேவை செய்தவர்களை மறக்காமல் காப்பவர்கள் க்ருதக்ஞர்கள் எனப்படுகிறார்கள்.
காமத = இஷ்டார்த்தங்களை நிறைவேற்றுபவன்
கைபிடிது = என்னை கை பிடித்து காப்பாயாக
லேககாக்ரணி = எழுதுபவர்களில் முதல்வனே
தயதி = தயவு செய்து
மன்மத = என் மனதில் இருப்பதை
துர்வ்யாகுலவ = துக்ககரமான விஷய சம்பந்தங்களை
பரிஹரிஸு = பரிகரிப்பாயாக
பினாகி = பினாகி என்னும் தனுஸ்ஸினை தரிப்பதால், ருத்ரதேவருக்கு பினாகி என்று பெயர்.
பார்யா = மனைவியான பார்வதி தேவியின்
ம்ருத்பவ தனுஜ = தேக அழுக்கில் பிறந்தவனே
நினகெ = உன்னை
பிரார்த்திசுவெ = வணங்குகிறேன்.

அதைகவிம்ஷதிம் க்ருஹ்யமோதகான் க்ருதபாசிதான் |
ஸ்தாபியித்வா கணாத்யக்ஷ ஸமீபே குருனந்தன ||

என்று சொல்கிறார்.

அதே அபிப்பிராயத்தை மனதில் வைத்துக்கொண்டு 'ஏகவிம்ஷதி மோதகப்ரிய' என்றார். கணேசனின் மகிழ்ச்சிக்காக 21 மோதகங்களை செய்யவேண்டும் என்று சொல்லப்பட்டிருப்பதே இதற்கு காரணம். ஊமைகளை பேசுபவர்களாகச் செய்யும் சக்தி கொண்டவனே. கருணாமூர்த்தியே, ஹே பிரபோ, க்ருதக்ஞனே, உன்னை ஒரு முறை பூஜித்தால், அவர்களை என்றும் மறக்காதவனே. பக்தர்களின் மனோபீஷ்டங்களை நிறைவேற்றுபவனே. என் கைபிடித்து என்னை காப்பாற்று. எழுதுகோல் பிடித்து எழுதுபவர்களில் முதன்மையானவனே. என் மனதில் இருக்கும் விஷய சம்பந்தமான துக்கங்களை பரிகரிப்பாயாக. பார்வதி தேவியின் தேக அழுக்கிலிருந்து பிறந்து, பார்வதியின் மகன் என்று அழைக்கப்பட்டாய். உன்னை வணங்குகிறேன்.

**நித்யமங்கலசரித ஜக$^3$து$^3$**
**த்பத்தி ஸ்தி$^2$தி லய நியமன ஞா**
**னத்ரயப்ரத$^3$ ப$^3$ந்த$^4$மோசக ஸுமனஸாஸுரர**
**சித்தவ்ருத்திக$^3$ளந்தெ நடெ$^3$வ ப்ர**
**மத்தனல்ல ஸுஹ்ருஜ்ஜனாப்த$^3$ன**
**நித்யத$^3$லி நெனெனெனெது$^3$ ஸுகி$^2$ஸுவ பா$^4$க்$^3$ய கருணிபுது$^3$** ||15

நித்யமங்கலசரித = நித்யமான வேதங்களால் புகழப்படும் மங்களகரமான சரித்திரத்தைக் கொண்ட
ஜகத் = உலகத்தின்
உத்பத்தி ஸ்திதி லய = படைத்தல், காத்தல், அழித்தல்
நியமன = வழிநடத்துதல்
ஞானத்ரய = ஞான, அஞ்ஞான, சுக்ஞான என்ற மூன்றினையும்
ப்ரத = கொடுப்பவனான
பந்த = சம்சாரத்தில் மூழ்கடிப்பவன்
மோசக = விடுதலை அளிப்பவன் (முக்தியைக் கொடுப்பவன்)
ஆன,
சுமனஸாஸுரர = தேவதைகள், தைத்யர்கள் இவர்களின்
சித்தவ்ருத்திகளந்தெ = அவரவர்களின் தகுதிக்கேற்ப அவரவர்களின் சித்தம் இருக்கிறது. அதைப்போல நடப்பவனான
ப்ரமத்தனல்ல = என்றென்றும் விவேகமில்லா காரியத்தை செய்பவனான
ஸுஹ்ருக்ஞன = அவனின் பக்தர்களே அவனின் ஸுஹ்ருத்து எனப்படுகிறார்கள். அத்தகைய பக்தர்களுக்கு
ஆப்தன = ஆப்தனான ஸ்ரீபரமாத்மனின்
நித்யதலி = தினந்தோறும்
நெனெனெனெது சுகிசுவ = நினைத்து ஆனந்தப்படும்
பாக்ய கருணிஸு = பாக்கியத்தை எனக்குக் கொடுப்பாயாக.

ஸ்ரீபரமாத்மனை எப்போதும் நினைத்து நினைத்து மகிழ்ச்சி அடைவதே மஹா பாக்கியம். அத்தகைய பாக்கியம் எனக்கு எப்போதும் இருக்குமாறு அருள் செய்வாயாக என்று இந்த பதத்தில் வேண்டுகிறார். அந்த பரமாத்மன் எத்தகையவன் என்றால், வேதங்களால் புகழப்படுபவன், மங்களகரமான சரித்திரத்தைக் கொண்டவன் மற்றும்:

உத்பத்தி ஸ்திதி ஸம்ஹாரானியதிர் ஞானமாம்ருதி: |
பந்தமோக்ஷௌச புருஷாத்யஸ்மாத் ஸஹரிரேகராட் ||

என்னும் பிரம்மசூத்ர பாஷ்யத்தின் வாக்கியத்தைப் போல, ஸ்ருஷ்ட்யாதி அஷ்ட கர்த்ருத்வம் கொண்டவன். தேவ தைத்யர்களின் யோக்யதையை அறிந்து 'புத்தி: கர்மாணி ஸாரிணீ' என்றபடி, அவரவர்களின் யோக்யதைக்கேற்ப, பகவந்தனால் கொடுக்கப்பட்ட ஸ்வாதந்த்ர்ய அஸ்வாதந்த்ர்யத்தினால், அந்தந்த காலங்களில் வரும் பகவத் ப்ரேரணையால், அவரவர்களின் சித்த வ்ருத்திகள் மாறிக் கொண்டே இருப்பதைப் போல, பரமாத்மனும் அவரவர்களின் உள்ளே இருந்து, அந்த சித்த வ்ருத்திகளை அனுசரித்தே காரியங்களை செய்து செய்வித்து, தேவதைகளுக்கு முக்தி, தைத்யர்களுக்கு தமஸ் கொடுக்கிறான் என்று கருத்து.

* கர்மங்களுக்கேற்ப புத்தியைக் கொடுக்கும் விஷயங்கள் ஆகட்டும்,
* அவரவர்களின் யோக்யதைக்கேற்ப கர்மங்களை செய்விக்கும் விஷயங்களாகட்டும்,
* பலன்களைக் கொடுக்கும் விஷயத்தில் ஆகட்டும்,

அவன் ப்ரமத்தன் அல்ல; அதாவது, மிகவும் கவனமாக இருக்கிறான் என்பது கருத்து. பக்தர்களுக்கு பரமாத்மன் என்று அழைக்கப்படுகிறான். இத்தகைய பரமாத்மனின் ஸ்மரணையால், மகிழ்ச்சி அடையுமாறு செய் என்று அர்த்தம்.

**பஞ்சபே$^{4}$த$^{3}$ ஞானவருபு வி**
**ரிஞ்சிஜனகன தோரு மனத$^{3}$லி**
**வாஞ்சிதப்ரத$^{3}$ ஒலுமெயிந்த$^{3}$லி தா$^{3}$ஸனெந்த$^{3}$ரிது$^{3}$ ।**
**பஞ்சவக்த்ரன தனய ப$^{4}$வதொ$^{3}$ளு**
**வஞ்சிஸதெ$^{3}$ ஸந்தெயிஸு விஷயதி$^{3}$**
**ஸஞ்சரிஸத$^{3}$ந்த$^{3}$த$^{3}$லி மாடு$^{3}$ மனாதி$^{3}$ கரணக$^{3}$ள ||16**

பஞ்சபேத ஞானவருபு = ஜீவ ஜீவ பேத, ஜீவ ஜட பேத, ஜீவ பரமாத்ம பேத, ஜட ஜட பேத, ஜட பரமாத்ம பேத - இதுவே பஞ்சபேதம் ஆகும். இந்த ஞானத்தை எனக்கு எப்போதும் கொடு.
விரிஞ்சிஜனகன = பிரம்மதேவரின் தந்தையான ஸ்ரீஹரியை
மனதலி தோரு = என் மனதில் பார்க்குமாறு செய்
வாஞ்சிதப்ரதனே = இஷ்டார்த்தங்களை நிறைவேற்றுபவனே
வலிமெயிந்தலி = அபிமானத்துடன்

தாசனெந்தரிது = இவன் ஹரிதாசன் என்று அறிந்து, உனக்கும் தாசன் என்று அறிந்து
பவதொளு = சம்சாரத்தில்
வஞ்சிஸதெ சந்தெயிஸு = என்னை ஈடுபடுத்தாமல், காப்பாற்று
பஞ்சவக்த்ரன தனய = ஐந்து தலைகள் உள்ள ருத்ரதேவரின் மகனே
மன ஆதிகரணகள = மனம் முதலான இந்திரியங்களை
விஷயதி = விஷய போகாதிகளில் சஞ்சரிக்காமல் இருக்குமாறு செய்.

பத்ய அர்த்தத்தில் சொல்லியவாறு பஞ்சபேத ஞானத்தை நமக்கு நினைவில் இருக்குமாறு செய். ஶ்ரீபரமாத்மனை அபரோக்ஷத்தில் பார்க்குமாறு செய். ஹே வாஞ்சிதப்ரதனே, இவன் ஹரிதாசன் என்றும், உனக்கும் தாசன் என்றும் அறிந்து, அபிமான பூர்வகமாக சம்சாரத்தில் மூழ்கடித்து என்னை ஏமாற்றாமல் காப்பாற்று. ஹே ருத்ர குமாரனே, மனஸ் முதலான இந்திரியங்கள், விஷய போகங்களில் பிரவேசிக்காதவாறு இருக்கச் செய்.

**ஏனுபே$^{3}$டு$^{3}$வுதி$^{3}$ல்ல நின்ன கு**
**யோனிக$^{3}$ளு ப$^{3}$ரலஞ்செ லகுமீ**
**ப்ராணபதி தத்வேஷரிந் தொ$^{3}$ட$^{3}$கூடி$^{3}$ கு$^{3}$ணகார்ய |**
**தானெ மாடு$^{3}$வனெம்ப ஈ ஸு**
**க்$^{3}$ஞானவனெ கருணிஸுவுதெ$^{3}$னகெ$^{3}$ ம**
**ஹானுபா$^{4}$வ முஹுர்முஹு: ப்ரார்த்திஸுவெனினிதெந்து$^{3}$ ||17**

நின்ன = உன்னை
ஏனுபேடுவுதில்ல = ஐஹிகமான விஷய சம்பந்தமான சுகமாகட்டும், ஸ்வர்க்காதி போகங்களாகட்டும் கொடு என்று நான் வேண்டுவதில்லை
குயோனிகளு = நாய், நரி முதலான பிறவிகள்
பரலஞ்செ = எனக்கு வந்தாலும், அதனால் நான் பயப்படுவதில்லை
மஹானுபாவ = ஹே மஹானுபவனே
லகுமீப்ராணபதி = லட்சுமிதேவியருக்கும், ஶ்ரீமுக்யபிராணதேவருக்கும் தலைவன் என்று அழைக்கப்படும் ஶ்ரீபரமத்மன்
தத்வேஷரிந்தொடகூடி = 24 தத்வாபிமானி தேவதைகளுடன் சேர்ந்து
குணகார்ய = சத்வ ரஜஸ் தமோ குண சம்பந்தமான அனைத்து காரியங்களையும்
தானே மாடுவனு = நமக்குள் இருந்து தானே செய்கிறான் என்று
ஈ சுக்ஞானவெ = இந்த உத்தமமான ஞானமே
எமகெ = நமக்கு
கருணிஸுவது = தயவு செய்து கொடுக்கவும்
இனிதெந்து = இப்படியாக
முஹுர்முஹு = திரும்பத் திரும்ப வேண்டுகிறேன்.

சம்சார விஷய போகங்களில் சுகங்களைக் கொடு என்றோ, ஸ்வர்க்க போகங்களை கொடு என்றோ - நான் உன்னிடம் வேண்டுவதில்லை. ‘தஷாவராணாம்

தேஹானாம் காரணானி கரோத்யஸௌ' இத்யாதி ஆதாரங்களால், தினந்தோறும் 10 நீச பிறவிகளை அடைவதற்குத் தேவையான கர்மங்களை ஒவ்வொரு ஜீவனும் செய்கிறான் என்னும் விதியால், எனக்கு அவ்வளவு நீச பிறவிகள் வந்தாலும் நான் பயப்படுவதில்லை.

ஆனால், நாம் செய்யும் புண்ய பாபாதி அனைத்து கர்மங்களையும், பரமாத்மனே தத்வாபிமானி தேவதைகளுடன் சேர்ந்து நமக்குள் இருந்து செய்கிறான். என்னும் இந்த உத்தம ஞானத்தை மட்டும் நமக்குக் கொடுக்க வேண்டும் என்று திரும்பத் திரும்ப கேட்டுக் கொள்கிறேன். இதிலிருந்து, காம்யத்தை என்றும் விரும்பக்கூடாது என்று விதி இருந்தாலும், 'காமந்துதாஸ்யே நது காமகாம்யயா' என்னும் பாகவத வாக்கியத்திற்கேற்ப, பகவந்தனின் தாசன் ஆகவேண்டும் என்று வேண்டுவது தவறு அல்ல. காம்யமான விஷய போகாதிகளை மட்டும் வேண்டக்கூடாது என்று அறியவேண்டும்.

**நமோ நமோ கு3ருவர்ய விபு3தோ4**
**த்தம விவர்ஜிதனித்ர கல்ப**
**த்3ருமனெனிபெ ப4ஜகரிகெ3 ப3ஹுகு3ணப4ரித ஷுபசரித ।**
**உமேயனந்த3ன பரிஹரிஸஹ**
**ம்மமதெ பு3த்யாதி3ந்த்3ரியக3ளா**
**க்ரமிஸி த3ணிஸுதலிஹவு ப4வதொ3ளகா3வ காலத3லி ||18**

குருவர்ய = குருகளில் உத்தமனே
விவர்ஜிதனித்ர = தூக்கம் இல்லாதவனே
பஜகரிகெ = தன்னை வணங்குபவர்களுக்கு
கல்பத்ருமனெனிபெ = கல்பவ்ருக்ஷத்தைப் போல இருக்கிறாய்
விபுதோத்தம = தேவதைகளில் சிறந்தவனே
பஹுகுணபரித = வெகு குணங்களில் பூர்ணனே
ஷுபசரித = மங்களகரமான சரித்திரத்தைக் கொண்டவனே
நமோ நமோ = உனக்கு என் நமஸ்காரங்கள்
உமெயனந்தன = ஹே பார்வதி புத்திரனே
பவதொளகெ = சம்சாரத்தில்
ஆவகாலதல்லி = அனைத்து காலங்களிலும்
அஹம்மமதெ = நான், எனது என்னும் கர்வம்
புத்யாதிந்திரியகள = புத்தி முதலான இந்திரியங்களை
ஆக்ரமிஸி = ஆக்ரமித்து
தணிஸுதலிஹவு = சோர்வு அடையச் செய்கின்றன
பரிஹரிஸு = அத்தகைய கர்வத்தை பரிகரிப்பாயாக.

பக்தர்களுக்கு கல்பவ்ருக்ஷத்தைப் போல, அவரவர்களின் மனோபீஷ்டங்களை நிறைவேற்றும், ஹே தேவோத்தமனே, உனக்கு வணக்கம். நீ எப்போதும் தூக்கமே இல்லாமல், பக்தர்களுக்கு அருள்வாய். கங்கா, பர்ஜன்ய, உக்த சேஷ ஷதஸ்தர்

இவர்களைவிட உத்தமனான குரு எனப்படுகிறாய். பஹுகுணங்கள் நிரம்பியவன். மங்களகரமான சரித்திரத்தைக் கொண்டவன்.

ஹே பார்வதி புத்திரனே, இந்த சம்சாரத்தில் நான் எனது என்னும் கர்வம், மனது, ஞானேந்திரிய, கர்மேந்திரியங்களை ஆக்ரமித்து, சோர்வினைக் கொடுக்கின்றன. ஆகையால், நான் எனது என்னும் இந்த கர்வத்தை பரிகரிப்பாயாக.

**ஜயஜயது விக்$^4$னேஷ தாப**
**த்ரய வினாஷன விஷ்வமங்க$^3$ல**
**ஜயஜயது வித்$^4$யப்ரதா$^3$யக வீதப$^4$யஷோக ।**
**ஜயஜயது சார்வங்க$^3$ கருணா**
**நயனதி$^3$ந்த$^3$லி நோடி$^3$ ஜனுமா**
**மய ம்ருதிக$^3$ளனு பரிஹரிஸு ப$^4$க்தரிகெ$^3$ ப$^4$வதொ$^3$ளகெ$^3$ ||19**

ஹே விக்னேஷனே,
தாபத்ரய வினாஷன = ஆத்யாத்மிக, ஆதிதெய்விக, ஆதிபௌதிக என்னும் மூன்றுவித கஷ்டங்களை போக்குபவனே
ஜய = உனக்கு வெற்றி
ஜயது = கிடைக்கட்டும்
விஷ்வமங்கள = உலகத்திற்கு மங்களத்தைக் கொடுப்பவனே
ஜயஜயது = உன் வெற்றி உலகத்தில் புகழ் பெறட்டும்
வித்யப்ரதாயக = பக்தர்களுக்கு கல்வியைக் கொடுப்பவனே
வீதபயஷோக = என்றும் பயம், சோகம் இல்லாதவன்
ஜயஜயது சார்வாங்க = ஹே மனோஹரமான அங்கங்கள் கொண்டவனே
கருணா நயனதிந்தலி = கருணைப் பார்வையால் பார்த்து
பவதொளகெ = சம்சாரத்தில்
பக்தரிகெ ஜனும = பக்தர்களுக்கு பிறவி
ஆமய = நோய்களை
ம்ருதிகளனு = மரணம் ஆகியவற்றை பரிகரிப்பாயாக.

ஹே விக்னேஸ்வரனே, உன் வெற்றியை உலகத்தில் பரவச் செய். ஜயஷீலனான விக்னேஸ்வரனே, உனக்கு மங்களம் உண்டாகட்டும், மங்களம் உண்டாகட்டும் என்று நாம் சொல்வதால் என்ன ஆகும்?

பாகவத ஸ்ருதிகீதை முதல் ஸ்லோகத்தில் 'ஜயஜய ஜஹ்யஜாம்' என்பதில் நித்ய ஜயஷீலனான பரமாத்மனை, 'உனக்கு மங்களம் உண்டாகட்டும்' என்று தேவதைகள் 'ஆசிர்வாதம்' செய்யவில்லை. மாறாக, உன் மங்களத்தை உலகத்தில் பரவச் செய் என்று பிரார்த்தித்தனர் என்று வியாக்யானத்தில் சொல்லியிருப்பார்கள். அதே அர்த்தத்தையே இங்கும் சொல்லவேண்டும். ஆகையால், ஜய = உன் வெற்றி, ஜயது = கிடைக்கட்டும் என்றால், உலகத்தில் பரவட்டும் என்று எழுதப்பட்டிருக்கிறது.

தாபத்ரய என்றால்,
1. மனோவியாதி
2. தெய்வ சம்பந்தமான தாபங்கள். காலா காலங்களில் மழை இல்லாமல் வறட்சி உண்டாதல். இவை போன்ற தெய்வ சங்கல்பத்தினால் உண்டாகும் துக்கங்கள்.
3. பாஞ்சபௌதிகமான இந்த சரீரத்தில் கண் தெரியாமல் போவது, காது கேட்காமல் இருப்பது - போன்ற தேக சம்பந்தமான துக்கங்கள்

இந்த மூன்று விதமான துக்கங்களுக்கு தாபத்ரய என்று பெயர். இவற்றை பரிகரிப்பவன். பிரபஞ்சத்திற்கு மங்களத்தை உண்டு பண்ணுபவன். அனைவருக்கும் கல்வியைக் கொடுப்பவன். அதாவது, வித்யாரம்பத்தில், கணபதி பூஜையை செய்து, வித்யா பிராரம்ப செய்தால், அந்த கல்விக்கு, நடுவில் எவ்வித இடர்களும் வராமல், முழுமை அடைகிறது என்பது கருத்து.

வீதபய என்றால், எந்த காலத்திலும் தன்னைவிட உத்தமர் ஆனவர்களை விட்டு, மற்றவர்களிடம் கணபதிக்கு எவ்வித பயமும் இல்லை என்று அர்த்தம். பரமாத்மனின் பயம் பிரம்மாதிகளுக்கும் இருக்கும்போது, கணபதிக்கு இல்லாமல் போவதில்லை. பயம் இல்லை என்றால், நாம் நம்மைவிட குறைவான புலி, பாம்பு ஆகியவற்றிடம் எப்படி பயப்படுகிறோமோ அப்படி கணபதியைவிட குறைந்தவர்களிடம் அவருக்கு எவ்வித பயமும் இல்லை என்று பொருள்.

விஷய சம்பந்தமான எவ்வித சோகமும் இல்லாதவன். லம்போதரன் என்றும், கஜமுகன் என்றும், அவனின் அங்கங்கள் சார்வாங்க என்றும், மனோஹரமாகவே காணப்படுபவன். ஆகையால், சார்வாங்க என்றார். இத்தகைய உன் வெற்றி, உலகப்புகழ் பெற்று எப்போதும் இருக்கட்டும். அதாவது, உலகிற்கு வெற்றியைக் கொடு என்று பிரார்த்தனை செய்கிறார் என்று பொருள்.

நீ கருணைப்பார்வையால் பார்த்து, உன் பக்தர்களுக்கு சம்சாரத்தில் உண்டாகும், பிறப்பு, இறப்பு, நோய்களை அனுபவிப்பது ஆகியவற்றை பரிகரிப்பாயாக. அதாவது, முக்தியைக் கொடுக்கும் யோக்யதை கணபதிக்கு இல்லை என்றாலும், பரமாத்மனிடம் பக்தியைக் கொடுத்து, முக்தி சாதனத்தை செய்து, அருள்வாயாக என்பது கருத்து.

**கடு3கருணி நீனெந்த3ரிது ஹே**
**ரொட3ல நமிஸுவெ நின்னடி3கெ3 பெ3**
**ம்பி3ட3தெ3 பாலிஸு பரமகருணாஸிந்து3 எந்தெ3ந்து3 ।**
**நடுனடுவெ ப3ருதிப்ப விக்4னவ**
**தடெது3 ப4க3வன்னாம கீர்த்தனெ**
**நுடி3து3 நுடி3ஸென்னிந்த3 ப்ரதிதி3வஸத3லி மரெயத3லெ ||20**

ஹேரொடல = ஹே லம்போதரனே

கடுகருணி = அத்யந்த தயாளு
நீனெந்தரிது = நீயே என்று அறிந்து
நின்னடிகெ = உன் பாதங்களில்
நமிஸுவெ = நான் வணங்குவேன்
பரமகருணாசிந்து = ஹே பரம கருணைக்கடலே
எந்தெந்து = என்றென்றும்
பெம்பிடதெ பாலிஸு = என்னை கைவிட்டுவிடாமல், என்னுடனே இருந்து காப்பாற்று
நடுனடுவெ = சத்காரியங்களை செய்யும்போது நடுநடுவே வரும்
விக்னவ தடெது = விக்னங்களை தடுத்து
மரெயதலெ = மறக்காமல்
பகவன்னாம கீர்த்தனெ = பகவன் நாம கீர்த்தனங்களை
நுடிது நுடிசென்னிந்த = என்னிடமிருந்து சொல்லி, சொல்ல வை.

ஹே லம்போதரனே, நீ பரம தயாளு என்று அறிந்து, உன் பாத கமலங்களை நான் வணங்குகிறேன். பரம கருணாசமுத்திரனான நீ, என்னை ஒரு கணமும் விடாமல் இருந்து காப்பாற்று. நான் செய்யும் சத்கர்மங்களுக்கு வரும் விக்னங்களை பரிகரிப்பாயாக. தினந்தோறும் மறக்காமல், எனக்குள் இருந்து பகவன் நாம சங்கீர்த்தனங்களை நான் செய்யுமாறு செய்.

**ஏகவிம்ஷதி பத$^{3}$க$^{3}$ளெனிஸுவ**
**கோகனத$^{3}$ நவமாலிகெய மை**
**நாகி தனயாந்தர்க$^{3}$த ஶ்ரீப்ராணபதி எனிப ।**
**ஶ்ரீகர ஜகன்னாத$^{2}$விட்ட$^{2}$ல**
**ஸ்வீகரிஸி ஸ்வர்கா$^{3}$பவர்க$^{3}$தி$^{3}$**
**தா கொடு$^{3}$வ ஸௌக்$^{2}$யக$^{3}$ள ப$^{4}$க்தரிகா$^{3}$வ காலத$^{3}$லி ||21**

ஏகவிம்ஷதி பதகளெனிஸுவ = 21 பத்யங்கள் என்னும்
கோகனத நவமாலிகெய = சிவப்பு வர்ண புது மாலையை
மைனாகி தனயாந்தர்கத = மேனகியின் மகளான பார்வதிக்கு மைனாகி என்று பெயர். அவளின் மகனான கணபதியின் அந்தர்கதனான
ஶ்ரீப்ராணபதி எனிப = ஶ்ரீலட்சுமிதேவி, முக்யபிராணதேவர் இவர்களுக்கு ஸ்வாமி எனப்படும்
ஶ்ரீஜகன்னாதவிட்டல,
ஸ்வீகரிஸி = இதனை ஏற்றுக்கொண்டு
பக்தரிகெ = பக்தர்களுக்கு
ஆவகாலதலி = எல்லா காலங்களிலும்
ஸ்வர்க்காபவர்கதி = ஸ்வர்க்கத்திலும் முக்தியிலும்
தா = தான்
ஸௌக்யகள = நலன்களை
கொடுவனு = கொடுக்கிறான்.

கணபதி ஸ்தோத்திர சந்தி என்னும் 28ம் சந்தியின் தாத்பர்யம் இத்துடன் முடிந்தது. ஸ்ரீகிருஷ்ணார்ப்பணமஸ்து.

***

## பாவபிரகாசிகை : சந்தி 29 : தேவ தைத்யர தாரதம்ய சந்தி

**/ அணு தாரதம்ய சந்தி**

**ஹரிகதா[2]ம்ருதசார கு[3]ருக[3]ள**
**கருணதிந்தா[3]பநிது பே[1]ளுவே**
**பரம ப[4]கவத்[3]ப[4]க்தரித[3]னாத[3]ரதி கேளுவுது[3]**

இதற்கு முன்னர் 3-4 சந்திகளில் தாரதம்யத்தை மிகவும் விளக்கமாக கூறியிருந்தாலும், தாரதம்ய ஞானமானது முக்திக்கு மிகவும் முக்கியமான சாதனையான காரணத்தால், தினமும் சுலபமாக வாயில் சொல்லி, அதன்படி அனைவரையும் வணங்கவேண்டும் என்ற காரணத்தால், பரமாத்மனை முதலில் சொல்லி, பரம நீசனான கலி வரைக்குமான இருக்கும் தாரதம்யத்தை சொல்வதற்காக, அணுதாரதம்யம் என்னும் இந்த சந்தியை இயற்றியிருக்கிறார் ஸ்ரீதாசராயர்.

**விஷ்ணு ஸர்வோத்தமனு ப்ரக்ருதி க**
**நிஷ்டளெனிபள நந்தகு[3]ண பர**
**மேஷ்டி பவனரு கடி[3]மெ வாணி பா[4]ரதிக[3]ளத[4]ம |**
**விஷ்ணு வஹன ப[2]ணீந்த்[3]ர ம்ருட[3]ரிகெ[3]**
**க்ருஷ்ண மஹிஷி யரத[4]ம ரிவரொளு**
**ஸ்ரேஷ்டளெனிபளு ஜாம்ப[3]வதி யாவேஷ ப[3]லதி[3]ந்த[3] ||1**

விஷ்ணு சர்வோத்தமன்,
ப்ரக்ருதி = லட்சுமிதேவியர்,
பரமாத்மனைவிட அனந்த குணங்கள்;
கனிஷ்டளெனிபளு = குறைவானவள்;
பரமேஷ்டிபவனரு = பிரம்ம வாயுகள்;
கடிமெ = லட்சுமிதேவியைவிட குறைவானவர்கள்; அவர்களைவிட;
வாணி= சரஸ்வதி; பாரதியர் குறைவானவர்கள்; அவர்களைவிட,
விஷ்ணுவாஹ = கருட, பணீந்த்ர = சேஷதேவர்;
ம்ருடரு = ருத்ரதேவர் குறைவானவர்.
இவரிகெ = இவர்களைவிட,
கிருஷ்ணமஹிஷியரு = ஜாம்பவதி முதலான ஆறு பேர் கிருஷ்ணனின் மனைவியர் குறைவானவர்கள்.
இவரொளு = இந்த 6 பேரில், ஜாம்பவதி,

ஆவேஷபலதிந்த = ரமாதேவியின் ஆவேச பலத்தினால், சிறந்தவள்.

**ப்லவக$^3$ பன்னக$^3$ப அஹிபூ$^4$ஷண**
**யுவதியரு ஸம தம்மொளகெ$^3$ ஜா**
**ம்ப$^3$வதி$^3$கி$^3$ந்தலி கடி$^3$மெ இவரிந்தி$^3$ந்த்$^3$ர காமரிகெ$^3$**
**அவர ப்ராணனு கடி$^3$மெ காமன**
**குவர ஷசி ரதி த$^3$க்ஷ கு$^3$ரு மனு**
**ப்ரவஹமாருத கொரதெ எனிஸுவனாரு ஜனரிந்த$^3$ ||2**

ப்லவக = பறந்து போவதால் கருடனுக்கு ப்லவக என்று பெயர்.
பன்னகனு = சர்வஸ்ரேஷ்டரான சேஷதேவர்;
அஹிபூஷண = சர்ப்பத்தை தரித்தவரான ருத்ரதேவர்; இந்த மூவரின் மனைவியர், சௌபர்ணி, வாருணி, பார்வதியர் ஒருவருக்கொருவர் சமம். ஜாம்பவதி முதலான ஷண்மஹிஷியரைவிட குறைவானவர்கள்.
இவரிந்த = இவர்களைவிட
இந்த்ரகாமனு = இந்திர மன்மத இவர்கள் இருவரும் குறைவானவர்கள். இவர்களைவிட
ப்ராண = அஹங்காரிக பிராணன்,
அவர = குறைவானவன்.
இவனிகிந்தலு = இவரைவிட,
காமனகுவர = மன்மதனின் மகன் அனிருத்தன்,
ஷசி = இந்திரனின் மனைவி,
ரதி = மன்மதனின் மனைவி;
தக்ஷ = தக்ஷ பிரஜாபதி;
குரு = ப்ருஹஸ்பத்யாசார்யர்;
மனு = ஸ்வாயம்புவ மனு; இவர்கள் ஆறு பேரும் அதமர்கள். இந்த ஆறு பேரைவிட,
ப்ரவஹமாருத = ப்ரவஹ வாயு,
கொரதெ எனிசுவனு = குறைந்தவன் ஆகிறான்.

ஜாம்பவதி முதலான கிருஷ்ணனின் ஆறு மனைவியரைவிட, கருட, சேஷ, ருத்ரர்களின் மனைவியரான சௌபர்ணி, வாருணி, பார்வதி இவர்கள் மூவரும் குறைவானவர்கள். இவர்களைவிட, இந்திர மன்மதன் குறைவு. இவர்கள் இருவரைவிட அஹங்காரிக பிராணன் அதமன். இவனைவிட, ப்ரத்யும்னனின் மகனான அனிருத்தன், ரதி, சசி, ஸ்வாயம்புவமனு, ப்ருஹஸ்பத்யாசார்யர், தக்ஷ பிரஜாபதி ஆகியோர் குறைவானவர்கள். இந்த ஆறு பேரை விட ப்ரவஹ வாயு அதமன்.

**யம தி$^3$வாகர சந்த்$^3$ர மானவி**
**ஸமரு கோ$^3$ணப ப்ரவஹக$^3$த$^4$மரு**
**த்$^3$யுமணிகி$^3$ந்தலி வருணனீசனு நாரதா$^3$த$^4$மனு |**

**ஸுமனஸாஸ்ய ப்ரஸூதி ப்[4]ருகு[3]முனி**
**ஸமரு நாரத[3]க[3]த[4]மரத்ரி**
**ப்ரமுக[2] விஷ்வாமித்ர வைவஸ்தரனல க[3]த[3]ம ||3**

யமன்,
திவாகர = சூரியன்,
சந்திரன்.
மானவீ = ஸ்வாயம்புவ மனுவின் மனைவியான ஷதரூபாதேவி இவர்கள் நால்வரும் சமமானவர்கள்.
கோணப்ரவஹகெ = வாயு திசைக்கு அபிமானியான ப்ரவஹ வாயுவைவிட,
அதமரு = குறைவானவர்கள்.
த்யுமணிகிந்தலி = சூரியன் முதலான நால்வரைவிட வருணன் குறைவானவன். அவரைவிட, நாரதர் அதமர்.
சுமனசாஸ்ய = தேவதைகளுக்கு முகத்தைப் போன்று இருந்து ஆஹுதியை பெறும் அக்னி.
ப்ரசூதி = தக்ஷ பிரஜாபதியின் மனைவி. ப்ருகுமுனி, இவர்கள் மூவரும் சமமானவர்கள்.
நாரதகெ அதம = இவர்கள் நாரதரைவிட அதமர்கள்.
அத்ரிப்ரமுக = அத்ரி, அங்கிர, புலஸ்த்ய, புலஹ, மரீசி, க்ரது, வசிஷ்ட இவர்கள் ஏழு பேரும் பிரம்மனின் மக்கள்.
விஸ்வாமித்ரர்,
வைவஸ்வதர் = வைவஸ்வத மனு - இவர்கள்
அனலகெ = அக்னி முதலானவர்களைவிட
அதம = குறைவானவர்கள்.

* ப்ரவஹ வாயுவிட யம, சூர்ய, சந்திர, ஷதரூபா தேவி (ஸ்வாயம்புவ மனுவின் மனைவி) இவர்கள் நால்வரும் அதமர்கள். அவர்களுக்குள் சமர்.
* இவர்களைவிட வருணன் அதமன்.
* வருணனைவிட நாரதர் அதமர்.
* அக்னி, ப்ரஸூதி (தக்ஷ பிரஜாபதியின் மனைவி), ப்ருகு ரிஷிகள் - இவர்கள் மூவரும் சமர். நாரதரைவிட அதமர்.
* பிரம்மதேவரின் மக்களான மரீசி, அத்ரி, அங்கிர, புலஸ்த்ய, புலஹ, க்ரது, வசிஷ்ட என்னும் ஏழு பேரும் ரிஷிகள்.
* விஸ்வாமித்ர, வைவஸ்வத மனு, இவர்கள் அனைவரும் சமர். அக்னி முதலானவர்களைவிட அதமர்.

அணுதாரதம்ய வாக்கியம் -
ஸௌபர்ணி வாருணீச பர்வதபதிதனயா சேந்த்ரகாமா
வதார்ஸ்மா ப்ராணோதோ யோனிருத்தோ
ரதி மமகுரவோ தக்ஷஷச்யௌச பாந்து |
த்ராயந்தான்ன: சத்வைதே ப்ரவஹ உதயமௌமானவீ

சந்த்ர சூர்யெள சாபோதோ நாரதோதோ ப்ருகுரனல
குலேந்த்ர ப்ரசூதிஸ்ச நித்யம் ||
விஸ்வாமித்ரோ மரீசி ப்ரமுக விதி சுதா: சப்த வைவஸ்வதாக்ய:

-- இந்த ஸ்லோகத்தில் சொல்லப்பட்டிருக்கும் விஷயத்தையே தாசார்யர் மேலே மூன்று பத்யங்களில் சொல்லியிருக்கிறார்.

**மித்ர தாரா நிர்ருதி ப்ரவஹ**
**பத்னிப்ராவஹி ஸமரு விஷ்வா**
**மித்ரகி$^{3}$ந்தலி கொரதெ விஷ்வக்ஸேன க$^{3}$ணநாத$^{2}$**
**வித்தபதி அஸ்வினிக$^{3}$ளத$^{4}$மரு**
**மித்ரமொத$^{3}$லாத$^{3}$வரி கி$^{3}$ந்தலி**
**வித்தரிபெனு ஷதஸ்த$^{2}$ தி$^{3}$விஜர வ்யூஹ நாமக$^{3}$ள ||4**

மித்ர = மித்ரன் என்னும் சூரியன்
தாரா = பிருஹஸ்பத்யாசார்யரின் மனைவி
நிரருதி
ப்ரவஹபத்னி ப்ராவஹி = ப்ரவஹ வாயுவின் மனைவி ப்ராவஹி
இவர்கள் நால்வரும் சமம்.
விஷ்வாமித்ரகிந்தலி = விஷ்வாமித்ர முதலானவர்களைவிட
கொரதெ = அதமர்
விஷ்வக்சேன = ப்ரதான வாயு குமாரன்
கணநாத,
வித்தபதி = குபேரன்
அஷ்வினிகளு = அஸ்வினி தேவதைகள்
இவர்கள் சமமானவர்கள்.
மித்ர மொதலாதவரிகிந்தலி = மித்ர நாமக சூரியனுடன் இருப்பவர்களைவிட
அதமர்
ஷதஸ்த திவிஜர = ஒன்பது கோடி தேவதைகளில் 100 தேவதைகள் சோமபானத்தைக் குடிக்கத் தகுதியானவர்கள். அவர்களில், மேற்கூறிய தேவதைகளை விட்டு, மற்ற சேஷ ஷதஸ்தர்களை சொல்வதற்காக, அந்த 100 தேவதைகளின் வ்யூஹ நாமங்களை
வித்தரிபேனு = அடுத்த பத்யத்தில் விளக்குவேன்.

சைவம் வைமித்ர தாரேவர நிரருதி நாமப்ராவஹீச ப்ரஸன்னா: |
விஷ்வக்ஸேனோஸ்வினெள தெள கணபதிதனபா உக்தசேஷா: ஷதஸ்தா: ||
(அணுதாரதம்ய ஸ்தோத்திரம்)

இது வரைக்கும் சொன்ன தாரதம்யத்தை இந்த பத்யத்தில் சொல்கிறார்.

* மித்ர என்னும் சூரியன், ப்ருஹஸ்பதியின் மனைவி தாரை, திக்பாலகனான நிரருதி, ப்ரவஹ வாயுவின் மனைவி ப்ராவஹி, இந்த நால்வரும் சமம். விஷ்வமித்ராதிகளை விட குறைந்தவர்கள்.
* விஷ்வக்சேன, விக்னேஷ, குபேரன், அஸ்வினி தேவதைகள் இவர்கள் சமம். மித்ர முதலானவர்களைவிட அதமர்.
* இன்னும் அடுத்த பத்யத்தில் உக்த சேஷ ஷதஸ்தர்களை சொல்வதற்காக 100 தேவதைகளின் சமூகத்தின் பெயர்களை சொல்வேன்.

**மருத ரொம்ப$^{3}$த்ததி$^{4}$க நால்வ**
**த்தெரடு$^{3}$ அஸ்வினி விஸ்வேதே$^{3}$வரு**
**எரட$^{3}$யிது$^{3}$ ஹன்னொந்து$^{3}$ ருத்$^{3}$ரரு த்$^{3}$வாத$^{3}$ஷாதி$^{3}$த்ய |**
**கு$^{3}$ரு பித்ருத்ரயரஷ்ட வஸுக$^{3}$ளு**
**ப$^{4}$ரத த்$^{3}$யாவா ப்ருத்$^{2}$வி ருபு$^{3}$வெ**
**ந்த$^{3}$ரிவுதி$^{3}$வரனு ஸோமரஸ பானார்ஹ ரஹுதெ$^{3}$ந்து$^{3}$ ||5**

மாருதரு = மருத் கணத்தை சேர்ந்தவர்
ஒம்பத்ததிக நால்வத்து = 49 பேர்
அஸ்வினி எரடு = அஸ்வினி தேவதைகள் இருவர்
குரு = ப்ருஹஸ்பத்யாசார்யர் 1
பித்ருத்ரய = பித்ரு கணத்தவர் மூவர்
அஷ்ட வசுகளு = வசுக்கள் 8 பேர்
பரத = ப்ரதான வாயுதேவர்
பாரதி = த்யுலோக அபிமானியான பாரதி தேவி 1
ப்ருத்வி 1
ருஜுகண 1
எந்து = இப்படியாக 100 தேவதைகள்
இவரன்னு = இந்த 100 தேவதைகளை
ஸோமரச பானார்ஹ ரஹுதெந்து = யாகங்களில் சோமபானம் செய்யும் யோக்யர்கள் என்று (அதாவது, யாகங்களில், இந்திராய ஸ்வாஹா, ஸூர்யாய ஸ்வாஹா என்னும் மந்திரங்களால் அஹுதிகளை ஸ்வீகரிக்கும் யோக்யதை உள்ளவர்கள் என்று அர்த்தம்)
அரிவது = அறிய வேண்டும்.

| | |
|---|---|
| மருத் கணர்கள் | 49 |
| அஸ்வினி தேவதைகள் | 2 |
| விஸ்வே தேவதைகள் | 10 |
| ருத்ரர்கள் | 11 |
| சூரியர்கள் | 12 |
| ப்ருஹஸ்பதி | 1 |
| பித்ருகண | 3 |
| வசுகள் | 8 |

| | |
|---|---|
| முக்ய ப்ராணதேவர் | 1 |
| த்யுலோக அபிமானி, வாயுதேவரின் மனைவி, பாரதிதேவி | 1 |
| பூமி | 1 |
| ருபுகண | 1 |
| மொத்தம்: | 100 |

இந்த 100 பேர் சோமபானத்தைக் குடிப்பதற்கு தகுதியானவர்கள் என்று அறியவேண்டும். தாரதம்ய சங்க்ரஹத்தில்:

ப்ரதான வாயுர்வஸூவோ ருத்ராதித்ய மருத்கணா: ||
ப்ருஹஸ்பதி ருபுர்த்யாவா ப்ருதிவ்யாவஸ்வினௌ ததா ||
விஷ்வேதேவாஸ்ச பிதர: ஷதஸ்தா தேவதா மதா: ||

என்னும் வாக்கியம் இந்த பத்யார்த்தத்திற்கு ஆதாரம் ஆகும்.

11 ருத்ரர், 12 சூரியர்கள் ஆகியோரின் பெயர்கள், ப்ருஹத் தாரதம்ய சந்தியில் கொடுக்கப்பட்டுள்ளதால், இங்கு மறுபடி கொடுக்கப்படவில்லை.

**ஈ தி[3]வௌகஸ ரொளகெ[3] உக்தரு**
**ஐத[3]தி[4]கத[3]ஷ உளித[3] எம்ப[4]**
**த்தைது[3] ஸேஷரிகெ[3] ணெயனிஸுவரு த[4]னப விக்[4]னேஷ |**
**ஸாது[3]வைவஸ்வத ஸ்வயம்பு[4]வ**
**ஶ்ரீத[4]தாபஸருளித[3] மனு ஏ**
**காத[3]ஷரு விக்[4]னேஷகி[3]ந்தலி நீசரெனிஸுவரு ||6**

ஈ திவௌகஸரொளகெ = இந்த 100 தேவதைகளில்
ஐததிகதஷ = 15 தேவதைகள்
உக்தரு = முந்தைய கக்ஷ தாரதம்யத்தில் உத்தமர்கள் என்று சொல்லப்பட்டவர்கள்
உளித எம்பத்தைது = 100ல் 15 தவிர மற்ற 85 பேர்
உக்த சேஷ ஷதர் எனப்படுகிறார்கள்
சேஷரிகெ = இந்த 85 தேவதைகளுக்கு
தனப = குபேரன்
விக்னேஷ,
எணெயெனிஸுவரு = சமம் எனப்படுகின்றனர்
ஸாது = புகழப்படும் குணங்களைக் கொண்ட
வைவஸ்வத = வைவஸ்வத மனு 1
ஸ்வாயம்புவ = பிரம்மதேவரின் மகனான ஸ்வாயம்புவ மனு 1
ஶ்ரீத = ஐஸ்வர்யத்தைக் கொடுக்கக்கூடிய

தாபஸ = பரமாத்மனின் அவதாரமான தாபஸ மனு 1
உளிது = இந்த மூவரைத் தவிர
மனுவேகாதஷரு = மற்ற 11 மனுகள்
விக்னேஷகிந்தலி = விக்னேஸ்வரனைக் காட்டிலும்
நீசரெனிஸுவரு = நீசர்கள் எனப்படுகிறார்கள்.

தேவாஸ்சோக்தேதராயே ததவரமனவ: -- என்னும் அணு தாரதம்ய வாக்கிய அர்த்தத்தை இந்த பத்யத்தில் சொல்கிறார். முந்தைய பத்யத்தில் கூறிய 100 தேவதைகளில், 15 தேவதைகளை, முந்தைய கக்ஷத்தில் சேர்த்திருக்கிறார். அவர்கள் யார் என்றால்:

| | |
|---|---|
| பிரதான வாயுதேவர் | 1 |
| அஷ்ட வசுக்களில் பிரதானாக்னி | 1 |
| 11 ருத்ரர்களில், பவ நாமகரான பார்வதிபதி ருத்ர தேவர் | 1 |
| 12 சூர்யர்களில் உருக்ரம நாமகனான பகவத் அவதார சூரியன் | 1 |
| விவஸ்வான் என்னும் சூரியன் | 1 |
| மித்ர என்னும் சூரியன் | 1 |
| வருண | 1 |
| இந்திர | 1 |
| கங்கைக்கு சமமான பர்ஜன்ய | 1 |
| 49 மருத்கணர்களில் அஹங்காரிக ப்ராண | 1 |
| ப்ரவஹ வாயு | 1 |
| ப்ருஹஸ்பதி | 1 |
| த்யுலோக அபிமானியான பாரதிதேவி | 1 |
| பித்ருகளில் யம, சந்திர | 2 |
| மொத்தம் | 15 |

இந்த 15 பேரை மேற்சொன்ன தாரதம்யத்தில் சேர்த்திருக்கிறார். மற்றவர்கள் 85 பேர் உக்த சேஷ ஷதஸ்தர்கள் எனப்படுகிறார்கள். இவர்கள் குபேர, கணபதி முதலானவர்களுக்கு சமம் எனப்படுகிறார்கள். 14 மனுகளில் மேற்கூறிய ஸ்வாயம்புவ மனு 1, வைவஸ்வத மனு 1, பகவத் அவதாரமான தாபஸ மனு 1. இந்த மூவரைத் தவிர மற்ற 11 மனுகள் சமம் மற்றும் விக்னேஷ்வர முதலானவர்களைவிட நீசர்கள் எனப்படுகிறார்கள்.

**ச்யவன னந்த$^{3}$ன கவி ப்$^{3}$ருஹஸ்ப**
**த்யவரஜ உசத்யமுனி பாவக**
**த்$^{3}$ருவ நஹுஷ ஷஷபி$^{3}$ந்து$^{3}$ ப்ரீயவ்ரதனு ப்ரஹ்லாத$^{3}$ |**
**குவலயபருக்தேதரிந்த$^{3}$லி**
**அவர ரோஹிணி ஷாமலா ஜா**
**ந்ஹவி விராட்பர்ஜன்ய சஞ்ஞாதே$^{3}$வியரு அத$^{4}$ம ||7**

சவனனந்தன = சவனர மக்களான
கவி = சுக்ராசார்யர்
ப்ருஹஸ்பதி = ப்ருஹஸ்பத்யாசார்யர்
அவரஜனு = தம்பியான
உசித்யமுனி,
பாவக = ப்ரதானாக்னியின் மகனான பாவகன்
த்ருவ, நஹுஷ, ஷஷிபிந்து, ப்ரியவ்ரதனு, ப்ரஹ்லாத, குவலயபரு = இந்த அரசர்கள் அனைவரும்
உக்தேதரிந்தலி = உக்தசேஷ ஷதர்களைவிட
அவரரு = குறைவு எனப்படுகிறார்கள்
ரோஹிணி = சந்திரனின் மனைவி
ஷாமலா = யமதேவரின் மனைவி
ஜான்ஹவி = கங்கை
விராட் = அனிருத்தனின் மனைவி உஷாதேவி
பர்ஜன்ய = இந்த பெயருள்ள சூரியன்
சஞ்ஞாதேவியரு = விவஸ்வான் என்னும் சூரியனின் மனைவி
இவர்கள் அனைவரும் தமக்குள் சமம்.
முன்பு சொன்ன அரசர்களைவிட அதமர்கள்.

* உசித்யமுனி, பாவக, த்ருவ, நஹுஷ முதலான அரசர்கள் இவர்கள் அனைவரும் சமமானவர்கள். முந்தைய பத்யத்தில் கூறிய உக்தர் என்னும் 85 தேவதைகளைவிட இவர்கள் குறைவானவர்கள்.
* ரோஹிணி, ஷாமளா, கங்கை, உஷை, பர்ஜன்ய என்னும் சூரியன், சஞ்ஞா என்னும் இவர்கள் அனைவரும் சமம். மேற்கூறிய பூபாலர்களைவிட அதமர் எனப்படுகிறார்கள்.

**த்$^3$யுனதி$^3$கி$^3$ந்தலி நீசரெனிபரு**
**அனபி$^4$மானி திவெளகஸரு கே**
**சன முனிக$^3$ளிகெ$^3$ கடி$^3$மெ ஸ்வாஹாதே$^3$வி க$^3$த$^3$ம பு$^3$த$^4$ |**
**எனிஸுவளுஷாதே$^3$வி நீசளு**
**ஷனி கடி$^3$மெ கர்மாதி$^4$பதி ஸ**
**த் வினுத புஷ்கர நீசனெனிஸுவ ஸூர்னந்த$^3$னகெ$^3$ ||8**

அனபிமானி திவெளகஸரு = தத்வாபிமானிகள் இல்லாமல் மேற்கூறிய 100 தேவதைகளைத் தவிர, புகழ் பெறாத தேவதைகள் சிலர். இவர்கள்,
த்யுனதிகிந்தலி நீசரெனிபரு = கங்கை முதலானவர்களைவிட நீசர்கள்
அவர்களைவிட, நாரதர் முதல் உசித்யரின் வரை மேற்கூறிய ரிஷிகளைத் தவிர, மற்ற ரிஷிகளில் சில ரிஷிகள் குறைவானவர்கள்.
கேசன முனிகளிகெ = அந்த சில ரிஷிகளுக்கு
ஸ்வாஹாதேவி = அக்னிதேவரின் மனைவியான ஸ்வாஹாதேவி குறைவு எனப்படுகிறாள்.

ஸ்வாஹாதேவிகெ = ஸ்வாஹாதேவிக்கு
புத = புதன் அதமன்
அவனிகிந்தலு = அவனைவிட
உஷாதேவி = அஸ்வினி மனைவியான உஷாதேவி
நீசரெனிஸுவளு = அதமள் எனப்படுகிறாள்
அவளைவிட
ஷனி = சனீஸ்வரன்
கடிமெ எனிஸுவனு = குறைவானவன்
சூர்யனந்தனகெ = விவஸ்வான் என்னும் சூரியனின் மகனான சனீஸ்வரனுக்கு
சத்வினுத = சஜ்ஜனர்களால் வணங்கப்படுபவனான
கர்மாதிபதியாத புஷ்கர = புஷ்கரன்
நீசனெனிசுவ = நீசன் எனப்படுகிறான்.

கங்கை முதலானவர்களைவிட, எந்தவிதமான அதிகாரங்களும் இல்லாத, புகழ் பெறாத தேவதைகளில் சிலர் நீசர் எனப்படுகிறார்கள். அவர்களைவிட விஸ்வாமித்ரன், பிரம்மதேவரின் மக்களான மரீரி முதலானவர்கள் உசித்யர் வரைக்கும் சொல்லப்பட்டிருக்கும் ரிஷிகளைவிட்டு, மற்ற ரிஷிகளில் சிலர் மட்டும் இந்த கக்ஷையில் சேர்ந்தவர்கள். மற்றவர்களை இன்னும் குறைவான கக்ஷையில் சேர்த்து அடுத்த பத்யத்தில் சொல்லியிருக்கிறார்.

ஆகையால், இந்த பத்யத்தில் கேசன ரிஷிகள் என்றிருக்கிறார்.
* அவர்களைவிட அக்னி மனைவியான ஸ்வாஹாதேவி நீசள்.
* அவளைவிட, ஜலாபிமானியான புதன் நீசன்.
* புதனைவிட, அஸ்வினி தேவதைகளின் மனைவியான உஷாதேவி நீசள்.
* அவளைவிட, சனீஸ்வரன் நீசன்
* சனியைவிட, கர்மாபியான புஷ்கரன் நீசன்

தாசார்யர், இந்த புஷ்கரனுக்கு சத்வினுத அதாவது, சஜ்ஜனர்களால் வணங்கப்படுபவன் என்று சொல்லியிருக்கிறார். அதன் காரணம் என்னவெனில், குரு சிம்ம ராசியில் இருந்தால், இவன் கோதாவரியில் பிரவேசம் செய்கிறான். அதாவது, இவனின் சன்னிதானம் கோதாவரியில் இருக்கிறது. அப்போது, அங்கு, ஸ்னானாதிகளை செய்தால், சிறந்த பலன்கள் கிடைக்கின்றன.

இதைப்போல, இன்னும் சில காலங்களில் மற்றும் சில நதிகளில் புஷ்கர பிரவேசம் இருக்கிறது என்று தர்ம சாஸ்திரங்களில் சொல்லப்பட்டு, பஞ்சாங்கங்களில் எழுதியிருக்கிறார்கள். இப்படி நதிகளில் இருந்து மஹா பலன்களைக் கொடுப்பதால், சத்வினுத என்று கூறுகிறார். தாரதம்ய ஸ்தோத்திர வாக்கியம்:

வித்யோன்யே ஜாக்னிஜாயா சஜலமய புதஸ்சாபி
நாமாத்மிகோஷா சைவம் பூமோததாத்மா

ஷனிரபிகதித: புஷ்கர: கர்மபோபி ||

இதே அர்த்தத்தையே தாசார்யரும் இந்த பத்யத்தில் சொல்லியிருக்கிறார்.

**கொரதெ எனிபரு ஸேஷரிஷி பு**
**ஷ்கரகெ³ ஊர்வஷிமுக்²ய ஷதவ**
**ப்ஸரரு தும்பு³ரமுக²ரு ஆஜானஜரெனிஸுதிஹரு |**
**கரெஸுவது³ அனலக³ண நால்வ**
**த்தரெ சதுரத³ஷ த்வயஷ்ட ஸாவிர**
**ஹரிமட³தி³யரு ஸமரெனிஸுவரு பிந்தெ பேள்த³ரிகெ³ ||9**

புஷ்கரகெ = புஷ்கரனைவிட
அஷீதிரிஷி = 80 ரிஷிகள்
கொரதெ எனிபரு = குறைவு எனப்படுகிறார்கள்
ஊர்வஷிமுக்ய = ஊர்வசியே முதலான
ஷதவப்ஸரரு = 100 அப்ஸர ஸ்த்ரியர்கள்
தும்பரமுகரு = தும்பரு முதலான 100 கந்தர்வர்கள்
அஜானஜரெனிஸுதிஹரு = இவர்கள் அனைவரும் அஜானஜ தேவதைகள் எனப்படுகிறார்கள்.
அனலகண = அக்னி கணத்தில் சேர்ந்த, அக்னிதேவரின் மகனான
நால்வத்தரெ சதுர்தஷ = 40+20+40 = 100
த்வயஷ்ட ஸாவிர = 2*8 = 16,000 ; மொத்தம் 16,100
ஹரிமடதியரு = ஸ்ரீகிருஷ்ணனின் மனைவியர்கள்
பிந்தெ பேள்தரிகெ = முன்னர் சொன்ன அஜானஜர்களுக்கு சமம் எனப்படுகிறார்கள்
கரெஸுவது = இந்த அக்னிகணத்தில் சேர்ந்த 16,100 பேர், முன்னர் புருஷர்களாக இருந்து தவம் செய்து கிருஷ்ண பத்னி ஆகும் நோக்கத்தில் ஸ்த்ரீத்வம் பெற்றனர். இவர்கள் அனைவரும் அஜானஜ தேவதைகள் என்று அழைக்கப்படுகின்றனர் என்று அர்த்தம்.

நாரதரில் துவங்கி, உசித்யர் வரை சொல்லப்பட்டிருக்கும் ரிஷிகளை, 8ம் பத்யத்தில் சொன்ன சில ரிஷிகளைத் தவிர மற்ற 80 ரிஷிகள், ஊர்வசி முதலான 100 அப்சரர்கள், தும்பரு முதலான 100 கந்தர்வர்கள் இவர்கள் அனைவரும் அஜானஜ தேவதைகள் எனப்படுகிறார்கள். அஜானஜர் என்றால்:

ஆனாக்யாதா தேவதாஸ்து ஜாதா தேவகுலேஷசயா: ||
கந்தர்வாஸ்தும்பரமுகா: ஷதமப்ஸரஸாம்ஷதம் ||
நாரதாதீன்ன் உசித்யந்தான் வினோக்தா ருஷயோகிலா: ||
ஆஜானஜா தேவதாஸ்தே அக்னிஜா: பாவகம்வினா ||
ஷதோத்தரா க்ருஷ்ணபார்யாத்வ்யஷ்ட ஸாஹஸ்ர ஸங்க்யகா: ||

என்று தாரதம்ய சங்க்ரஹ என்னும் கிரந்தத்தின் வாக்கியத்தினாலும், தைத்தரீய பாஷ்யத்தின் வாக்கியத்தினாலும், கிடைக்கும் அர்த்தம் என்னவெனில், தேவதைகளின் குலத்தில் பிறந்து, இந்திராதிகளைப் போல புகழ் பெறாத தேவதைகள் சிலர், தும்பர முதலான கந்தர்வர்கள் 100 பேர், ஊர்வசி முதலான அப்ஸர ஸ்த்ரியர் 100 பேர், நாரத முதல் உசித்ய வரை சொல்லப்பட்டிருக்கும் ரிஷிகளைத் தவிர மற்ற ரிஷிகள் இவர்கள் அனைவரும் அஜானஜர் என்று அழைக்கப்படுகின்றனர் என்னும் இந்த அர்த்தம் அதில் வருகிறது.

அக்னியின் மக்களில் பாவக என்னும் ஒருவனைத் தவிர, மற்ற 16,100 பேர் தவம் செய்து, ஸ்த்ரீத்வம் பெற்று ஸ்ரீகிருஷ்ணனின் மனைவியாயினர். அவர்களும்கூட சேஷ ஷதஸ்தர் எனப்படுகிறார்கள்.

**தத3வரரனாக்2யாத அப்ஸர**
**ஸுத3தியரு க்ருஷ்ணாங்க3 ஸங்கி3க3**
**ளத3ர தருவாயத3லி சிரபிதருக3ளு இவரிந்த3 ।**
**த்ரித3ஷ க3ந்த3ர்வக3ண இவரி**
**ந்த3த4ம நரக3ந்த4ர்வரிவரி**
**ந்து3த3தி4 மேக2லபதிக3ளத4மரு நூரு கு3ணதி3ந்த3 ||10**

க்ருஷ்ணாங்க சங்கிகளு = கோபியர்களாகப் பிறந்து, ஸ்ரீகிருஷ்ணனின் அங்க சங்கத்தைப் பெற்று,
அனாக்யாத = அனாக்யாத (புகழ் பெறாத)
அப்ஸர சுததியரு = ஊர்வசி முதலான புகழ் பெறாத அப்ஸர ஸ்த்ரியர்கள்
ததவரரு = மேற்கூறிய கிருஷ்ண மனைவியரான 16,100 பேர், அக்னி புத்ரர்களைவிட குறைவானவர்கள்
அதரதருவாயதலி = அதன் பிறகு
சிரபிதருகளு = கிருஷ்ணாங்க சங்கிகளான கோபிகா ஸ்த்ரியர்களைவிட அதமர்கள்.
இவரிந்த = இவர்களைவிட
நர கந்தர்வரு = மனுஷ்ய கந்தர்வர்கள் அதமர்கள்
இவரிந்த = இவர்களைவிட
உததி மேகலபதிகளு = சமுத்திரமே அரணாக்கயிறாகக் கொண்ட பூமிக்கு பதிகள் என்றால், ராஜர்கள்
நூரு குணதிந்த = 100 குணத்தால் அதமர்கள்.

* 16,100 பேர் கிருஷ்ணனின் மனைவியரைவிட, கோபியராகப் பிறந்து, கிருஷ்ணனின் அங்கசங்கத்தைப் பெற்ற அப்ஸரஸ்கள் அதமர்கள்.
* அவர்களைவிட சிரபித்ருகள் அதமர்.
* அவர்களைவிட தேவகந்தர்வர்கள் நீசர்கள்.
* அவர்களைவிட, மனுஷ்ய கந்தர்வர்கள் அதமர்கள்.

* அவர்களைவிட மேற்கூறிய த்ருவ, நஹுஷ முதலான சக்ரவர்த்திகளைத் தவிர மற்ற , புராணங்களில் சொல்லப்பட்ட ராஜர்கள் 100 குணங்களால் அதமர்கள்.

**ப்ருத்[2]விபதிக[3]ளிகி[3]ந்த[3] ஷத மனு**
**ஜோத்தமரு கடி[3]மெனிபரி வரி**
**ந்து[3]த்தரோத்தர நூரு கு[3]ணதி[3]ந்த[3]தி[4]கராத[3]வர |**
**நித்யத[3]லி சிந்திஸுத நமிஸுத**
**ப்[4]ருத்யனா னஹுதெ[3]ம்ப ப[4]க்தர**
**சித்தத[3]லி நெலெகொண்டு[3] கருணிபரகி[2]ல ஸௌக்[2]யக[3]ள ||11**

ப்ருத்விபதிகளிகிந்த = மேற்கூறிய ராஜர்களைவிட
மனுஜோத்தமரு = மனுஷ்யோத்தமர்கள்
ஷத = நூறு குணங்களால்
கடிமெ எனிபரு = அதமர் எனப்படுகிறார்கள்
இவரிந்த = இந்த மனுஷ்யோத்தமர்களிலிருந்து துவங்கி
உத்தரோத்தர = மேலே மேலே ஆரோஹண கிரமத்தில்
நூரு குணதிந்ததிக ராதவர = 100 குணங்களால் அதமர் ஆனவர்களை
நித்யதலி = தினந்தோறும்
சிந்திஸுத = நினைத்தவாறு
நமிஸுத = வணங்கியவாறு
ப்ருத்யனு நானு = உங்கள் சேவகன் நான்
எம்ப பக்தர = என்று சொல்லும் பக்தர்களின்
சித்ததலி = சித்தத்தில்
நெலெகொண்டு = நிலைத்திருந்து
அகில ஸௌக்யகள = அனைத்து நலன்களையும்
கருணிபரு = அருள்கின்றனர்.

ராஜர்களைவிட மனுஷ்யோத்தமர்கள் 100 குணங்கள் அதமர்கள். இப்படி மனுஷ்யோத்தமர் முதல், ஸ்ரீபரமாத்மனின் வரை இருக்கும் பகவத் பக்தர்கள் ஒருவரைவிட ஒருவர் 100 குணங்களால் உத்தமர் என்று அறிந்து, சிந்திக்க வேண்டும். 100 குணங்களால் உத்தமர் என்று கூறிய குண எண்ணிக்கையானது ஒரு குறியீடு என்று நினைக்க வேண்டும். சிலர் 2 குணங்களால் உத்தமர் எனப்படுகின்றனர். கணவன் மனைவியரில் சிலருக்கு 10 குணங்களால் உத்தமத்வத்தை சொல்லியிருக்கின்றனர். ஆகையால், பொதுவாக 100 குணங்கள் என்று அறியவேண்டும்.

குணதாரதம்ய சந்தியில் சொல்லியிருப்பதைப் போல, குணங்களின் தாரதம்யத்தை அறியவேண்டும். இப்படி ஆரோகண கிரமத்தில் பக்தர்களை உபாசனை செய்து வணங்கியவாறு, நான் அவர்களுக்கு தாசன் என்று அறிந்து வணங்கினால், அவர்கள் கருணையுடன் இந்த பக்தர்களின் மனதில் வசித்திருந்து, இவர்களுக்குத் தேவையான நலன்களைக் கொடுக்கிறார்கள்.

**த்4ரும லதா த்ருண கு3ல்மஜீவரு**
**க்ரமதி3 நீசரு இவரிகி3ந்தா**
**த4 மரெனிஸுவரு நித்யப3த்தரிகி3ந்த அக்ஞானி |**
**தமஸிக்யோக்3யர ப்3ருத்யரத4மரு**
**அமருஷாத் யபி4மானி தை3த்யரு**
**நமுசி மொத3லாத3வரி கி3ந்தலி விப்ரசிதி நீச ||12**

த்ரும = மரம் போன்ற ஜீவர்கள்
மனுஷ்யோத்தமர்களைவிட நீசர்கள்
இவரகிந்தலு லதா = கொடி அதமர்
அவரைவிட
த்ருண = புல் அதமர்
குல்ம = விதை அதமர்
ஹீகெ க்ரமதி = இப்படியே கிரமத்தில்
இவரிகிந்த = இவர்களைவிட
நித்யபத்தராத மனுஷ்ய ஜீவர்கள் அதமர் = மனுஷ்ய ஜீவர்கள் அதமர்கள்
அஞ்ஞானிஜீவரு = இவர்களைவிட அஞ்ஞானிகள் அதமர்
தமோயோக்யர ப்ருத்யரதமரு = இவர்களைவிட தமோயோக்யர்கள் அதமர்
இவரிகிந்தலு அமருஷாத்யபிமானி = கோபம் முதலானவற்றிற்கு அபிமானியான
தைத்யரு = நமுசி முதலான தைத்யர்கள் அதமர்கள்
நமுசி முதலான தைத்யர்களைவிட,
விப்ரசித்தி நீச = விப்ரசித்தி என்னும் தைத்யன், அதமன்.

* மனுஷ்யோத்தமர்களைவிட த்ரும ஜீவர்கள் அதமர்
* அவரைவிட கொடி அதமர்
* அவரைவிட புல் அதமர்
* அவரைவிட விதை அதமர்
* அவர்களைவிட நித்யபத்தரான மனுஷ்யர்கள் அதமர்
* அவர்களைவிட அஞ்ஞானி ஜீவர்கள் அதமர்
* அவர்களைவிட தமோயோக்யர்களின் சேவகர்கள் அதமர்
* அவர்களைவிட கோபம் முதலானவற்றிற்கு அபிமானிகளான நமுசி முதலானவர்கள் அதமர்
* இவர்களைவிட விப்ரசித்தி நீசன்.

**அலகுமியு தா நீசளெனிபளு**
**கலி பரம நீசத1மனிவனி**
**ந்து3ளித3 பாபிக3ளில்ல நோட3லு ஈ ஜக3த்ரயதி3 |**
**மலவிஸர்ஜன காலத3லி க**
**த்தலெ யொளகெ3 கஷ்மல குமார்க்க3**
**ஸ்த2லக3ளலி சிந்தனெய மாள்பரு ப3ல்லவரு நித்ய ||13**

அலகுமியு = பாற்கடல் கடையும்போது, லட்சுமிதேவிக்கு முன்னர் பிறந்து, அலக்ஷ்மி என்று அழைத்துக் கொண்டு, கலிக்கு மனைவியான ஜ்யேஷ்டாதேவி,
தா = தான்
நீசளெனிபளு = விப்ரசித்தியைவிட நீசள்
அவளைவிட
கலியு பரம நீசதமனு = கலி பரம நீசன் எனப்படுகிறான்
அவனிகிந்துளித = அவனைத் தவிர
ஈ ஜகத்ரயதி = இந்த மூன்று உலகத்திலும்
நோடலு பாபிகளில்ல = இத்தகைய பாபி வேறு யாரும் இல்லை
மல விசர்ஜன காலதலி = மல விசர்ஜனம் செய்யும்போது
கத்தலெ யொள்கெ = இருட்டில்
கஷ்மல குமார்க்க ஸ்தலகளலி = நடக்கத் தகுதியற்ற வழிகளில் (சாலைகளில்) நடக்கும்போது
பல்லவரு = ஞானிகள்
நித்ய = எப்போதும்
சிந்தனெய மாள்பரு = இந்த பாபியான கலியை சிந்திப்பார்கள்

விப்ரசித்தியைவிட அலக்ஷ்மி என்னும் கலிபத்னி நீசள். அவளைவிட பரம நீச அதமன் கலி. இவனைப் போன்ற பாபி இந்த மூன்று உலகத்திலும் வேறு யாரும் இல்லை. அதாவது பாதாளாதி சத்யலோகத்தின் வரை இருக்கும் 14 உலகங்களிலும் என்று அர்த்தம். முக்கியமாக உலகத்தில் இல்லவே இல்லை. இவனை நினைக்க வேண்டுமெனில், மல விசர்ஜன காலம், இருட்டில் நடக்கும்போது, மலங்களால் நிறைந்த நடக்கத் தகுதியற்ற மார்க்கத்தில் நடக்கும்போது, இந்த பாபியை நினைக்க வேண்டுமே தவிர, சுகமாக இருக்கும்போது நினைக்கக்கூடாது.

**ஸத்வ ஜீவரமானி பி³ரம்மனு**
**நித்யப³த்த³ ரொளகெ³ புரஞ்சன**
**தை³த்ய ஸமுதா³யாதி³பதி கலி எனிப பவமான**
**நித்யத³லி அவரொளகெ³ கர்மப்ர**
**வர்தகனு தானாகி³ ஸ்ரீபுரு**
**ஷோத்தமன ஸம்ப்ரீதிகோ³ஸுக³ மாடி³ மாடி³ஸுவ ||14**

சத்வ ஜீவரமானி = சாத்விக தேவதைகளான ஜீவர்களுக்கு அபிமானி
பிரம்மனு = பிரம்மதேவர்
நித்ய பத்தரொளகெ = நித்ய சம்சாரிகளான மனுஷ்ய ஜீவர்களுக்கு அபிமானி
புரஞ்சன = புரஞ்சன என்னும் ராஜன்
தைத்ய ஸமுதாயாதிபதி = தைத்யர்களின் ஜீவ சங்கத்திற்கு அதிபதி
கலியெனிப = கலி எனப்படுகிறான்
பவமான = வாயுதேவர்

புருஷோத்தமன சம்ப்ரீதிகோசுக = பரமாத்மனின் ப்ரீதிக்காக
நித்யதலி அவரொளகெ = புரஞ்சன ராஜனுக்குள், கலி முதலான தைத்யர்களுக்குள் இருந்து,
கர்மப்ரவர்த்தகனு தானாகி = அவரவர்கள் செய்யவேண்டிய கர்மங்களுக்கு ப்ரேரகனாக தான் இருந்து
மாடி மாடிசுவ = அவரவர்கள் செய்யவேண்டிய கர்மங்களை செய்து செய்விக்கிறான்.

தேவஜீவாபிமானீது பிரம்மைவது சதுர்முக: ।
மானுஷாணாந்து ஜீவனாம் அபிமானி புரஞ்சன: ।
ஸதுராஜாஹரே: புத்ரஸ்த்வ ஸுராணாம் கலி: ஸ்வயம் ॥

* தேவதா ஜீவர்களுக்கு அபிமானி, சதுர்முக பிரம்மதேவர்.
* மத்யமரான மனுஷ்ய ஜீவர்களுக்கு அபிமானி புரஞ்சனன். இவன், பரமாத்மனின் புத்ரன் மற்றும் அரசன்.
* தைத்ய ஜீவர்களுக்கு அபிமானி கலி. என்று பாகவத 4ம் ஸ்கந்தத்தில் புரஞ்சனோபாக்யான சந்தர்ப்பத்தில் தாத்பர்யத்தில் சொல்லியிருக்கின்றனர்.

அதே அபிப்பிராயத்தையே தாசார்யர் இங்கு சொல்கிறார்.

சத்வஜீவர்கள் என்றால் தேவதைகள் என்று அர்த்தம். அவர்களுக்கு அபிமானி பிரம்மதேவர். நித்யபத்தர் என்றால் நித்ய சம்சாரிகள் மனுஷ்யர்கள் என்று அர்த்தம். இவர்களுக்கு அபிமானி புரஞ்சன என்னும் ராஜன். தைத்ய ஜீவ சமுதாயாதிபதி கலி. பகவந்தனின் ஆணைப்படி, பகவத் ப்ரீதிக்காகவே வாயுதேவர் புரஞ்சன, கலி முதலானவர்களில் இருந்து, அவர்கள், ஜீவர்களிடமிருந்து செய்யவேண்டிய காரியங்களை தான் செய்து அவர்களிடமிருந்தும் செய்விக்கிறார்.

**ப்ராண தே³வனு த்ரிவித³ரொளகெ³ ப்ர**
**வீண தானெந்தெ³னிஸி அதி⁴கா**
**ரானுஸாரதி³ கர்மக³ள தா மாடி³ மாடி³ஸுவ ।**
**ஞான ப⁴க்தி ஸுரரிகெ³ மிஸ்ர**
**ஞான மத்⁴யம ஜீவரிகெ³ அ**
**க்ஞான மோஹ த்⁴வேஷக³ள தை³த்யரிகெ³ கொடு³திப்ப ||15**

ப்ராண தேவனு = முக்யப்ராண தேவர்
த்ரிவிதரொளகெ = தேவ மானவ தானவ என்னும் மூன்று வித ஜீவர்களில்
ப்ரவீண தானெந்தெனிஸி = மஹா சமர்த்தன் என்று சொல்லிக் கொண்டு
அதிகாரானுசாரதி = அவரவர்களின் யோக்யதைக்கேற்ப
கர்மகள தாமாடி = அவர்களில் இருந்து தான் செய்து
மாடிசுவ = அவர்களிடமிருந்தும் செய்வித்து
சுரரிகெ = தேவதா ஜீவர்களுக்கு

ஞானபக்தி = ஞான பக்திகளை
மத்யமஜீவரிகெ = மனுஷ்ய ஜீவர்களுக்கு
மிஸ்ரஞான = புண்ய பாப மிஸ்ரமான கர்மங்களை செய்து, சுகதுக்க மிஸ்ரமான நித்ய சம்சாரத்திற்கு சாதனையான மிஸ்ர ஞானத்தையும்
தைத்யரிகெ = தைத்யர்களுக்கு
அஞ்ஞான, மோஹ, த்வேஷகள = இவற்றை
கொடுதிப்ப = கொடுக்கிறான்.

முக்யபிராணதேவர், தேவ மானவ தானவ என்னும் மூன்று வித ஜீவர்களில் இருந்து, மஹா சாமர்த்தியம் உள்ளவராக அவரவர்களின் யோக்யதைக்கேற்ப கர்மங்களை செய்து, செய்வித்து, தேவதைகளுக்கு ஞான பக்திகளையும், மனுஷ்யருக்கு மிஸ்ர ஞானத்தையும், தைத்யர்களுக்கு அஞ்ஞானம், மோகம், த்வேஷங்களையும் கொடுக்கிறார்.

**தே$^{3}$வ தை$^{3}$த்யர தாரதம்யவ**
**நீவித$^{4}$தி$^{3}$ திளிதெ$^{3}$ல்லரொளு லட்சு**
**மிவரனெ ஸர்வோத்தமனு எந்த$^{3}$ரிது$^{3}$ நித்யத$^{3}$லி ।**
**ஸேவிஸுவ ப$^{4}$க்தரி கொ$^{3}$லிது$^{3}$ ஸுக$^{2}$**
**வீவ ஸர்வத்ரத$^{3}$லி ஸுக$^{2}$மய**
**ஶ்ரீவிரிஞ்ச்யாதி$^{3}$ வினுத ஜக$^{3}$ன்னாத$^{2}$விட்ட$^{2}$லனு ||16**

தேவதைத்யர = தேவ தைத்யர்களின்
தாரதம்யவ = தாரதம்யத்தினை
ஈ விததி திளிது = இங்கு சொல்லிய விதமாக அறிந்து
லக்ஷ்மீவரனெ = லட்சுமிபதியான ஸ்ரீமன் நாராயணனே
சர்வோத்தமனு = சர்வோத்தமன்
எல்லரொளு = அனைத்து பிராணிகளிலும் வியாப்தனாக இருக்கிறான்
எந்தரிது = என்று அறிந்து
நித்யதலி = எப்போதும்
ஸேவிசுவ பக்தரிகெ = வணங்கும் பக்தர்களுக்கு
ஒலிது = மகிழ்ந்து
சுகமய = ஆனந்த ஸ்வரூபனான
ஸ்ரீவிரிஞ்ச்யாத்யமரனுத = ரமாதேவி, பிரம்மாதி தேவதைகளால் வணங்கப்படுபவனான
ஜகன்னாதவிட்டலன்,
ஸர்வத்ரதலி = இஹ பரங்களில்
சுகவீவ = சுகங்களைக் கொடுக்கிறான்.

இந்த சந்தியில் சொல்லிய விதமாக, தேவ தைத்யரின் தாரதம்யத்தை அறிந்து, ஸ்ரீபரமாத்மனே சர்வோத்தமன். அனைத்து இடங்களிலும் வியாப்தன் என்று அறிந்து, தினந்தோறும் பக்தியுடன் அவனை உபாசனை செய்யும் பக்தர்களுக்கு,

ஆனந்த ஸ்வரூபனான, ரமாபிரம்மாதிகளால் வணங்கப்படுபவனான லட்சுமிபதியான ஸ்ரீஜகன்னாத விட்டலன் இஹபரங்களில் மகிழ்ச்சியைக் கொடுக்கிறான்.

அணுதாரதம்ய சந்தி என்னும் 29ம் சந்தியின் தாத்பர்யம் இத்துடன் முடிந்தது.
ஸ்ரீகிருஷ்ணார்ப்பணமஸ்து.

***

## பாவபிரகாசிகை : சந்தி 30 : தைத்ய தாரதம்ய சந்தி

**ஹரிகதா2ம்ருதசார கு3ருக3ள**
**கருணதிந்தா3பநிது பே1ளுவே**
**பரம ப4கவத்3ப4க்தரித3னாத3ரதி கேளுவுது3**

**<u>ஸந்தி ஸூசனை:</u>**
**ஸ்ரீஷமுக்தாமுக்த ஸுரவர**
**வாஸுதே3வகெ3 ப4க்தியலி கம**
**லாஸனனு பேளித3னு தை3த்ய ஸ்வபா3வ கு3ணக3ளனு ||**

ஸ்ரீஷ = லட்சுமிபதியான
முக்தாமுக்தஸுரவர = முக்தர்கள், அமுக்தர்கள் இந்த இரு வித தேவதைகளைவிட
வாஸுதேவகெ = வசுதேவ புத்ரனான ஸ்ரீகிருஷ்ணாவதாரம் செய்த பரமாத்மனுக்கு
பக்தியலி = பரம பக்தியுடன் ஸ்தோத்திரம் செய்த சந்தர்ப்பத்தில்
கமலாஸனனு = பிரம்மதேவரு
தைத்ய ஸ்வபாவ குணக்ளனு = தைத்யர்களின் ஸ்வபாவத்தை, அவர்களின் யோக்யதை, குணங்களை
பேளிதனு = கேட்டார்.

கருட புராண பிரம்ம காண்டத்தில் பிரம்மதேவர் பரமாத்மனை ஸ்தோத்திரம் செய்த சந்தர்ப்பத்தில், தைத்ய தாரதம்யத்தை விளக்கியிருக்கிறார். அதே அர்த்தத்தையே இந்த சந்தியில் சொல்கிறோம்.

**எனகெ3 நின்னலி ப4கு3தி1 ஞானக3**
**ளெனிதிஹவோ ப்ராணனலு திளியதெ3**
**ஹனுமதா3த்3யவதாரக3ள பே4த3க3ள பேளுவவ |**
**த3னுஜ கோ4ராந்த4ந்தமஸிக்3 யோ**
**க்3யனு நஸம்ஷய நின்ன பை3வர**
**கொனெய நாலிகெ3 பிடி3து3 சே2திபேனெந்த3னப்ஜப4வ ||1**

எனகெ = எனக்கு
நின்னல்லி = உன்னிடம்
பக்தி ஞானகளு = பக்தி ஞானம் ஆகியவை
எனிதிஹவோ = எவ்வளவு இருக்கிறதோ, அவ்வளவு பக்தி ஞானங்களை
ப்ராணனலி = முக்ய பிராணதேவரிடம்
திளியதெ = அறியாமல்
ஹனுமதாத்யவதாரகள = ஹனும பீம மத்வ அவதாரங்களை
பேதகள பேளுவவ = ஒன்றுக்கொன்று வேறு என்று பேதம் சொல்பவன்
கோராந்தந்தமஸ்ஸிகெ = கோரமான அந்தம்தமஸ்ஸிற்கு
யோக்யனு = தகுதியானவன்
தனுஜனு = தைத்யன்
நஸம்ஷய = இந்த விஷயத்தில் சந்தேகமே இல்லை
நின்ன = உன்னை
பைவர = த்வேஷத்தினால் தூஷிப்பவர்களை
கொனெய நாலிகெ பிடிது = அவனின் நாக்கினை இழுத்துப் பிடித்து
சேதிபேனு = கத்தரிக்கிறேன்
எந்தனப்ஜபவ = என்று பிரம்மதேவர் கூறுகிறார்.

பரமாத்மனிடம் பிரம்மதேவரின் வேண்டுகோள்:
ஹே ஈசனே, எனக்கு உன்னிடம் எவ்வளவு பக்தி ஞானங்கள் இருக்கிறதோ, அவ்வளவு வாயுதேவரிடமும் இருக்கிறது. அதனை அறியாமல் எனக்கும் வாயுதேவருக்கும் பக்தி ஞானத்தில் தாரதம்யத்தை சொல்பவன் மஹா தைத்யன். மற்றும், பளித்தாதி சூக்தத்தால் புகழப்படுபவரான வாயுதேவரின் மூலரூபத்திற்கும் அவதார ரூபங்களுக்கும் பரஸ்பரம் பேதங்கள் உண்டு என்று சொல்பவர்களும் தைத்யர்களே.

யுகபேதங்களால், சக்தி பேதங்களை சொல்வதற்காக சௌக்ந்திகா ஹரண காலத்தில் ஹனுமந்ததேவரின் வாலை, பீமசேன தேவரால் தூக்க முடியவில்லை என்று பாரதத்தில் சொல்லியிருக்கின்றனர். இது அசுரர்களை மயக்குவதற்காகவும், யுகத்திற்கேற்ப சக்தி பேதம் ஆகிறது என்று சொல்வதற்காகவும் இருக்கிறதே தவிர, உண்மையானது இல்லை என்பது கருத்து.

இதனை அறியாமல் உண்மையாகவே, பீமசேனதேவருக்கும், ஹனுமந்ததேவருக்கும் வேறுபாட்டினை சொல்பவர்கள் மஹா தைத்யர்கள். இத்தகையவர்களுக்கு கோரமான அந்தம்தமஸ்ஸே கிடைக்கிறது. இந்த விஷயத்தில் சந்தேகமே இல்லை. இதற்கு ஆதாரம், கருட புராணத்தின் வாக்கியம்:

வாயோர் மயாந்தரம் நாஸ்தி ஹரிதத்வஸ்ய நிர்ணயே ||
அவதாரேஷு வாயோஸ்து ஹ்யந்தரம் யேவிது: ப்ரபோ ||
தேந்தந்தம: ப்ரவிஷ்யந்தி தைத்யாஸ்து நசதேஸுரா: ||

இந்த ஸ்லோகத்தின் அர்த்தமே பத்யார்த்தம்.

மேலும் பிரம்மதேவர் சொல்வது என்னவெனில்: ‘யார் உன்னை திட்டுகிறார்களோ அவனின் உள் நாக்கினை நான் கத்தரிக்கிறேன்’. இந்த விஷயத்தில் கருட புராணம் சொல்வது:

நிந்தாம் குர்வந்தி யே விஷ்ணோர் ஜிஹ்வா சேதம் கரோம்யஹம் ||

இந்த ஸ்லோக அர்த்தத்தையே தாசார்யர் இந்த பத்யத்தில் சொல்லியிருக்கிறார்.

**ஞானப$^4$ல ஸுக$^2$ பூர்ண வ்யாப்தகெ$^3$**
**ஹீன கு$^3$ணவெம்பு$^3$வனு ஈஷ்வர**
**நானெ எம்பு$^3$வ ஸச்சிதா$^3$னந்தா$^3$த்ம கு$^3$த்பத்தி |**
**ஸ்ரீனிதம்பி$^3$னிகீ$^3$ஷகெ$^3$ வியோ**
**கா$^3$னுசிந்தனெ சே$^2$த$^3$ பே$^4$த$^3$ வி**
**ஹீன தே$^3$ஹகெ ஷஸ்த்ரக$^3$ள ப$^3$ய பேளுவவ தை$^3$த்ய ||2**

ஞானபல சுகபூர்ண வியாப்தகெ = ஞான, பல, சுக இவற்றால் பூர்ணனான, அனைத்து இடங்களிலும் வியாப்தனான பரமாத்மனுக்கு
ஹீன குணவெம்புவனு = குணங்கள் இல்லை (நிர்குணன்) என்பவன்
நானே ஈஷ்வர எம்புவ = நானே ஈஸ்வரன் என்பவன்
சச்சிதானந்தாத்மகெ = ஸ்ரீபரமாத்மனுக்கு
உத்பத்தி = சச்சிதானந்த ஸ்வரூபனான ஸ்ரீபரமாத்மனுக்கு பிறப்பு உண்டு என்று சொல்பவன்
ஸ்ரீனிதம்பினிகெ = லட்சுமிதேவியருக்கும்
ஈஷகெ = பரமாத்மனுக்கும்
வியோகானுசிந்தனெ = பிரிவு இருக்கிறது என்று நினைப்பவன்
சேத பேத விஹீன தேஹகெ = அழிக்க முடியாத தேகம் கொண்டவன். அவனுக்கும் அவனின் உடல் பாகங்களுக்கும் பேதம் இல்லாதவன்; இப்படிப்பட்ட தேகத்தைக் கொண்ட பரமாத்மனுக்கு
ஷஸ்த்ரகள பய பேளுவவ = பரமாத்மனுக்கு ஆயுதங்களால் பயம் உண்டு என்று சொல்பவன்
தைத்ய = தைத்யன் ஆவான்.

* பூர்ண ஞான, பூர்ண பல, பூர்ணானந்த ஸ்வரூபனான ஸ்ரீபரமாத்மன் நிர்குணன் என்று உபாசனை செய்பவன் தைத்யன்.
* நானே ஈஸ்வரன் என்பவனும் தைத்யன்.
* சச்சிதானந்த ஸ்வரூபனான பரமாத்மனுக்கு, பிறப்பு இறப்பு ஆகியவை உண்டு என்று சிந்திப்பவன் தைத்யன்.

* ரமாதேவியருக்கும் பரமாத்மனுக்கும் ராமாவதாரம் முதலான அவதாரங்களிலோ, மூலரூபங்களிலோ பிரிவு இருக்கிறது என்று சொல்பவன் ; அதாவது, ராமாவதாரத்தில்,
*** சீதாதேவி ராவணனின் இடத்தில் இருந்தபோதோ,
*** ராவணனின் சம்ஹாரம் ஆனபிறகு, ஸ்ரீராம பட்டாபிஷேகம் ஆனபிறகு, ஊர் மக்களின் பேச்சுக்கு பயந்து, கர்ப்பிணியான சீதையை, வால்மிகி ஆசிரமத்தில் விட்டு வந்தபிறகோ,
ராமனுக்கும், சீதைக்கும் பிரிவு இருந்தது என்று ராமாயணத்தில் தெளிவாக சொல்லியிருப்பார்கள். ஆனால், அது உண்மையன்று.

அசுர மக்களின் மோகனத்திற்காக அப்படி சொல்லியிருக்கிறார்களே தவிர, நித்ய வியோகினியான சீதா ராமர்களின் வியோகம் என்றைக்கும் ஆவதில்லை. எங்கு ராமனோ, அங்கு சீதை இருக்கிறாள். எங்கு சீதையோ அங்கு ராமன் இருந்தே இருக்கிறான். இவர்கள் இருவருக்கும் இடையே பிரிவினை சிந்திப்பவன் தைத்யன்.

மணிமஞ்சரியில்:
ஸுராணகான்ஸ்தமோனேதும் தத்வாஜீவ ஸஜானகீம் ||
வ்யாப்தத்வான் நிரவத்யத்வாத் தஸ்யாஸ்தாக: கதம்பவேத் ||

பரமாத்மனுக்கும் லட்சுமிதேவியருக்கும் என்றைக்கும் பிரிவு என்பது இல்லை. ஆனாலும், சுராணக என்னும் தைத்யன் பிரம்மதேவரைக் குறித்து தவம் செய்து தான் என்ன பாவத்தை செய்தாலும், அது தன்னுடைய முக்திக்கு எவ்வித தடைகளையும் செய்யக்கூடாது என்று வேண்டினான். அதற்கு பிரம்மதேவர் 'நீங்கள் லட்சுமி நாராயணர்களுக்கு இடையே பரஸ்பரம் பிரிவு இருக்கிறது என்று சிந்திப்பதைத் தவிர வேறு எந்த பாவம் செய்தாலும், அது உங்களின் முக்திக்கு தடையாக இருப்பதில்லை. அது ஒன்று மட்டுமே உங்கள் முக்திக்கு தடையாக இருக்கும்' என்று வரம் அளித்தார்.

அவனும் பிரம்மதேவரின் வர பலத்தால், பற்பல பாவங்களை செய்து, பூமியில் பிறந்து, சீதாராமரே லட்சுமி நாராயணர் என்பதை அறியாமல், ராம சீதையை தூஷித்தான். அதாவது, ராமன் ஒரு ஆண்டு காலம் ராவணனின் வீட்டில் இருந்த சீதையை ஏற்றுக்கொண்டான் என்று தூஷித்தான். இவருக்கு தமஸ் ஆகவேண்டும் எனில், சீதையை ராமன் தியாகம் செய்ய வேண்டும்.

பிரம்மதேவரின் சாபத்தை உண்மை ஆக்குவதைப் போல, ஸ்ரீராமன் சீதையை தியாகம் செய்ததைப் போல நாடகம் ஆடினான். உண்மையில் சீதையும் ராமனும் அப்படி இருக்கவில்லை. எப்படியெனில், ரமாதேவியர் சர்வத்ர வியாப்தர். தோஷங்கள் அற்றவர். பரமாத்மனும் சர்வத்ர வியாப்தனே. தோஷங்கள் அற்றவன். இப்படி இருக்கையில், இவர்களுக்கிடையே பிரிவு எப்படி ஆகும்?

அனைவரும் பார்த்துக் கொண்டிருந்த ரூபமானது மறைந்து, வால்மிகி ஆசிரமத்தில் வசித்து வந்தாள். ராமன் அஸ்வமேத யாகம் செய்யும் காலத்தில், அனைவரின் எதிரிலும் சீதை பூ (பூமி) பிரவேசம் செய்ததும் வேறு ரூபத்தினாலேயே. இன்னொரு ரூபத்தினால், ஸ்ரீராமனுக்கு மட்டும் தெரிந்தவாறு, வேறு யாரின் கண்ணிற்கும் தெரியாதவாறு இருந்தாள்.

மகாபாரத தாத்பர்ய நிர்ணய 9ம் அத்தியாயத்தில்:

ராமஸ்யத்ருஷ்யா த்வன்யேஷாமத்ருஷ்யா ஜனகாத்மஜா ||
பூமிப்ரவேஷாதூர்த்வம் ஸா ரெமே ஸப்தஷதம் ஸமா: ||49

சீதாதேவி பூமி பிரவேசம் செய்த பிறகு, வேறு யாரின் கண்ணிற்கும் தெரியாமல், ஸ்ரீராமனின் கண்ணிற்கு மட்டும் தெரிந்தவாறு 700 ஆண்டுகள் வரை, ஸ்ரீராமனுடன் இருந்து சுகங்களை அனுபவித்திருந்தாள் என்று சொல்கிறார்.

இதைப் போலவே 33ம் ஸ்லோகத்தில்: ‘ நித்யமேவ ஸஹிதோபி ஸீதயா ஸோக்னி ஸாக்ஷிகமபூத் வியுக்தவத்’. ஸ்ரீராமன் எப்போதும் சீதையை பார்த்தவாறு, தன் சமீபத்திலேயே வைத்துக் கொண்டிருந்தாலும், அக்னி சாட்சியாக அவளை இழந்தது போல காட்டிக் கொண்டான் என்று சொல்கிறார்.

மற்றும் 5ம் அத்தியாயம் 40ம் ஸ்லோகத்தில்

ராமோபிதத் து வினிஹத்ய ஸுதுஷ்டதக்ஷ:
ப்ராப்யாஸ்ரமம் ஸ்வதயிதாம் ந ஹி பஷ்யதீவ ||40

தன் அருகில் வைத்து கொண்டிருந்தாலும், அக்னி சாட்சியாக சீதையை இழந்ததுபோல காட்டினான். துஷ்டனான மாயமான் ரூபியான மாரிசன் என்னும் அசுரனைக் கொன்று, தன் ஆசிரமத்திற்கு வந்த ஸ்ரீராமன், தன் மனைவியைக் காணாததுபோல நடித்தான். ‘அன்வேஷமாண இவ’ சீதையை தேடுவதைப் போல செய்தான் என்று சொல்கிறார். இந்த வாக்கியத்தாலும், ஸ்ரீராமன் உண்மையாகவே சீதையை இழக்கவில்லை என்பது புரிகிறது.

மேலும் மணிமஞ்சரியில்:
நித்யம் பஷ்யன்னிஜாம் தேவீம் பூர்ண சந்தோஷ சம்ப்ருத: ||
ராமேன த்ருஷ்யதே ஸீதேத்ய பூத்ஸங்கடவானிவ ||

எப்போதும் தன் அருகிலேயே வசித்து வந்த சீதையை பார்த்தவாறு ஸ்ரீராமன், பூர்ணமான சந்தோஷத்தைக் கொண்டிருந்தாலும், அவளை தொலைத்துவிட்டு கஷ்டப்படுபவனைப் போல தன்னை காட்டிக் கொண்டான். இதன் காரணம் என்னவெனில்: ராவணனின் சம்ஹாரம் சீதையின் காரணமாகவே

ஆகவேண்டியிருக்கிறது என்று பார்ப்பவர்களுக்கு தெரிய வேண்டும் என்பது கருத்து.

ராவணன் அபஹாரம் செய்தது, மாயா சீதையை. அதாவது, சீதையைப் போல உருவம் கொண்ட, அக்னியிலிருந்து வந்த பிரதிமை. சீதையின் ஆவேசம் மட்டுமே அங்கிருந்தது என்பது ராமாயண வாக்கியத்தாலும், நிர்ணய வாக்கியத்தாலும் தெளிவாகிறது.

வேறுபாடு இன்றியும், குறைகள் இன்றியும் இருக்கும் பரமாத்மனின் தேகத்திற்கு, ஆயுதங்களால் சேத பேதங்கள் ஆகின்றன என்பவர்கள் தைத்யர்களே. இந்த பத்யத்தில் சொல்லியவாறு நினைப்பவர்கள் தைத்யர்கள் என்னும் விஷயத்தில் தாத்பர்ய நிர்ணய 1ம் அத்தியாயத்தில்:

அவதாரேஷு யத்கிஞ்சி தர்ஷயேன் நரவத்தரி: |
தஜ்ஜாஸுராணாம் மோஹாய தோஷா விஷ்ணோர் நஹிக்வசித் ||37
அஞ்ஞத்வம் பாரவஷ்யம் வா வேத பேதாதிகம் ததா |
ததா ப்ராக்ருத தேஹத்வம் தேஹத்யாகாதிகம் ததா ||38
அனீஷத்வம் ச துக்கித்வம் ஸாம்ய மன்யைஸ்ச ஹீனதாம் ||
ப்ரதர்ஷயதி மோஹாய தைத்யாதீனாம் ஹரி: ஸ்வயம் ||39

ஸ்ரீபரமாத்மன், தன் அவதார ரூபங்களில் சாமான்ய மனிதனைப் போல சில இடங்களில் காட்டிக் கொண்டிருப்பான். அது அசுர மக்களின் மோகனத்திற்காகவே தவிர, உண்மையாக பரமாத்மனிடம் அத்தகைய தோஷங்கள் எதுவும் இல்லை. ராமகிருஷ்ணாதி ரூபங்களில் சில இடங்களில், தனக்கு தெரியாததால் பிறரிடம் கேட்டுத் தெரிந்து கொண்டான் என்று பாகவதாதிகளில் வருகிறது. தான் அஸ்வதந்த்ரனாக பிறரின் வசத்தில் இருந்தான் என்றும் வருகிறது. ஆயுதங்களால் தேகத்தில் காயங்கள் ஏற்பட்டது போலவும் தோன்றும்.

தான் துக்கப்பட்டதைப் போல காட்டிக் கொண்டான். மற்ற மக்களுக்கு சமமானவனைப் போல காட்டிக் கொண்டான். இவை அனைத்தும், தைத்யர்களை மயக்குவதற்காகவே செய்தான் என்று அறியவேண்டும். பூர்ண குணவந்தனான ஸ்வாமிக்கு இத்தகைய தோஷங்கள் எதுவும் இல்லை என்று சொல்கிறார்.

இந்த அபிப்பிராயத்தையே இந்த பத்யத்தில் சொல்லியிருக்கிறார். இப்படி அறிந்து கொள்ளாமல், இந்த பத்யத்தில் சொல்லிய தோஷங்களை பரமாத்மனிடம் சொல்பவன் தமோயோக்யன் என்கிறார்.

**லேஷப$^{4}$யஷோகா$^{2}$தி$^{3}$ ஷூன்யகெ$^{3}$**
**ல்லஷக$^{3}$ள பேளுவவ ராம**
**வ்யாஸ ரூபங்க$^{3}$ளிகெ$^{3}$ ருஷி விப்ரத்வ பேளுவவ |**
**தா$^{3}$ஷரதி$^{2}$ க்ருஷ்ணாதி$^{3}$ ரூபகெ$^{3}$**

**கேஷக²ண்ட³னெ பேள்வ மக்களி**
**கோ³ஸுக³ ஷிவார்ச்சனெய மாடி³த³னெம்பு³வனெ தை³த்ய ||3**

லேஷபய = சிறிது பயமோ
ஷோகாதி = சோகமோ
ஷூன்யகெ = இவை எதுவும் இல்லாதவனான ஸ்ரீபரமாத்மனுக்கு
க்லேஷகள பேளுவவ = பய துக்காதிகள் இருக்கின்றன என்று சொல்பவன்
ராம வியாஸ ரூபங்களிகெ ருஷி விப்ரத்வ பேளுவவ = பரசுராம ரூபத்தை சாதாரண பிராமண ரூபம் என்றும், வேதவியாஸ ரூபத்தை சாதாரண ரிஷி என்றும் சொல்பவன்
தாஷரதி கிருஷ்னாதி ரூபக்கெ = தசரத ராமன் மற்றும் கிருஷ்ண ரூபங்களுக்கு
கேஷகண்டன பேளுவவ = முடி வெட்டும் பழக்கம் உண்டு என்று சொல்பவன்
மக்களிகோசுக = கிருஷ்ணாவதாரத்தில் வாரிசு வேண்டும் என்னும் விருப்பத்தில்
ஷிவார்ச்சனெய மாடிதனெம்புவனு = ருத்ரதேவரைக் குறித்து தவம் செய்தான் என்று சொல்பவன்
தைத்ய = தைத்யனே ஆவான்.

ராமாவதாரத்தில் வாலியின் எதிரில் நின்று போரிடுவதற்கு பயந்தே, ஸ்ரீராமன் மறைந்திருந்து அவனைக் கொன்றான் என்று சொல்பவன் தைத்யன் என்று அறியவேண்டும். அது ஏனென்றால், ஸ்ரீராமன் பயத்தால் வாலியின் எதிரில் வராமல் இல்லை. மறைந்திருந்து பாணம் விட்டதற்கான காரணத்தை, நிர்ணயத்தில் ஸ்ரீமதாசார்யர் சொல்லியிருக்கிறார்.

ஸ்ரீபரமாத்மனுக்கு சுக்ரீவன் நண்பன் என்றும், வாலி த்வேஷி என்பதும் அல்ல. எல்லா அவதாரங்களிலும், சேவையை சமமாக பெற்றுக் கொள்வதில்லை. சில தேவதைகளிடமிருந்து ராமாவதாரத்திலும், சிலரிடமிருந்து கிருஷ்ணாவதாரத்திலும் சேவையை பெற்றுக் கொள்கிறான். வாயுதேவரின் ஆதரவு யாருக்கு இருக்கிறதோ, அவருக்கே தன் ஆதரவும் என்ற சங்கல்பத்தை செய்தவன் ஸ்ரீபரமாத்மன்.

வாயு அவதாரரான ஹனுமந்தனை சுக்ரீவன் ஆதரித்ததால், ஸ்ரீராமன், சுக்ரீவனுக்கு அபயம் அளித்து வாலியை கொல்ல வேண்டியதாயிற்று. ஆனால் அவனை மறைந்து நின்று கொல்ல வேண்டிய காரணம் என்னவென்றால்:

நிர்ணய 6ம் அத்தியாயம்:
பக்தோ மமைஷயதி மாமபிபஷ்யதீஹ பாதௌ
த்ருவம் மம ஸமேஷ்யதி நிர்விஜார: |
யோக்யோவதோ நஹி ஜனஸ்ய பதானதஸ்ய
ராஜ்யார்த்தினா ரவிசுதேன வதோர்த்திதஸ்ச ||19

கார்யம் ஹ்யபீஷ்டமபி தத்ப்ரணதஸ்ய பூர்வம்
ஷஸ்தோ வதோ ந பதயோ: ப்ரணதஸ்ய சைவ ||

தஸ்மாதத்ருஷ்ய தனுரேவ நிஹன்மி
ஷக்ரபுத்ரந்திதிஸ்ம தமத்ருஷ்யதயா ஜகான ||20

வாலியின் சம்ஹார காலத்தில் ஸ்ரீராமன் சிந்தித்தது என்னவெனில்: இந்திரனின் அவதாரமான வாலி எனக்கு மிகவும் பிடித்தமானவன். இவன் என்னை பார்த்த உடனேயே, என் கால்களை பிடித்துக் கொள்ளப் போகிறான். பாதங்களில் விழுந்தவர்களைக் கொல்வது சரியல்ல. சூரியனின் அவதாரமான சுக்ரீவனுக்கு, இவனைக் கொன்று ராஜ்யத்தை அளிக்கிறேன் என்று வாக்கு கொடுத்திருக்கிறேன். அவனும் காலில் விழுந்து கேட்டுக் கொண்டிருப்பதால், அவன் வேண்டுகோளினை நிறைவேற்ற வேண்டும்.

வாலியின் எதிரில் நின்று அவனிடமிருந்து நமஸ்காரத்தை ஏற்றுக்கொண்டால், அவனைக் கொல்ல முடியாது. ஆகையால், வாலியின் கண்ணில் படாமல் நின்றே, அவன் மேல் பாணம் விடவேண்டும் என்று நிச்சயித்து, அப்படியே நின்று வாலியைக் கொன்றான். என்று சொல்லியிருக்கிறார்.

ஆகையால், வாலியிடம் இருந்த பயத்தால் எதிரில் நின்று அவனைக் கொல்லவில்லை என்று சொல்பவன் தைத்யன் என்பது கருத்து.

அதைப்போலவே, கிருஷ்ணாவதாரத்தில், ஜராசந்தாதி ராஜர்களுக்கு பயந்ததைப் போல நடித்ததும், அசுர மக்களின் மோகனத்திற்காகவும், சில தேவதா கார்ய சாதனைக்காகவுமே தவிர, உண்மையில் பரமாத்மனுக்கு பயம் இருக்கிறது என்று அறியக்கூடாது.

இதைப்போல, சீதையை இழந்து சோகத்தில் இருந்ததைப் போல் நடித்ததற்கான காரணத்தை ஏற்கனவே பார்த்தோம். ஆகையால், பரமாத்மனுக்கு சோகம் இருக்கிறதென்றும் அறியக்கூடாது. அப்படி அறிபவன் தைத்யனே ஆவான்.

பரசுராமதேவரை சாட்சாத் பரமாத்மனின் அவதாரம் என்று அறியாமல், அவர் வெறும் பிராமணர், ஜமதக்னி முனிவரின் மகன் என்று அறிவது; 'வ்யாஸோ கஷ்சன ரிஷி:' வேதவியாசதேவர் வசிஷ்டாதி ரிஷிகளைப் போல ஒரு ரிஷி என்று அறிபவன் தைத்யன். ராமகிருஷ்ணாதி ரூபங்களில் சச்சிதானந்த ஸ்வரூபத்தை அறியாமல், சாதாரண மனிதனைப் போல முடி வெட்டுவது போன்ற செயல்களை அறிபவன் தைத்யன்.

பாகவத 10ம் ஸ்கந்தத்தில், மதுராபுரியில், ஸ்ரீகிருஷ்ணன் தன் தலைமுடியை வெட்டிக் கொண்டான் என்று கதை வருகிறது. ஆனாலும், அதன் காரணத்தை அங்கேயே சொல்லியிருக்கின்றனர். நிர்ணய 13ம் அத்தியாயத்தில்:

க்ராஹ்யாபஹேயரஹிதை கசிதாத்மஸாந்த்ர
ஸ்வானந்தபூர்ண வபுரப்யய சோஷஹீன: ||

லோகான் விடம்ப்ய நரவத்ஸமலக்த காத்யைர்
வப்த்ரா விபூஷித இவாபவதப்ரமேய: ||99

ஏதாவது பூஷணங்களை (அலங்காரங்களை) தரித்து, அதனால் அவன் ஒளிர்ந்தான் என்றோ, தன்னில் இருக்கும் சிலவற்றை விட்டதால், அதாவது நகம், தலைமுடி ஆகியவற்றை வெட்டிக் கொண்டதால் அலங்காரம் செய்துகொண்டான் என்பது பரமாத்மனுக்கு இல்லை. கூந்தல் புதிதாக வளர்பவனும் இல்லை. அது போவதும் இல்லை. அவன் அப்ராக்ருதமான சிதானந்தாத்மக சரீரம் கொண்டவன். பரமாத்மனின் அவயவங்களுக்கும், நக, முடி முதலானவற்றிற்கும் பரஸ்பரம் பேதம் இல்லை. நாம் நம் அனைத்து அவயவங்களால் சேர்ந்து எந்தவொரு வேலையை செய்து முடிக்கிறோமோ, அவற்றை பரமாத்மன், தன் ஒரு நகத்தாலோ, முடியாலோ செய்து முடிக்கத் தக்கவன். முடியும் பரமாத்மனின் ஸ்வரூபமே ஆனபிறகு, அதை வெட்டுவது என்பது எப்படி?

மனித அவதாரம் செய்தபிறகு, மனிதன் என்று காட்டிக் கொள்வதற்காக, அவர்களைப் போல முடி வளர்வதைப் போலவும், முடிவெட்டிக் கொள்வதைப் போலவும் சொல்லிக் கொண்டான். ஆகையால், நம்மைப் போல பரமாத்மனுக்கும் முடிவெட்டிக் கொள்வது உண்டு என்று அறிபவன் தைத்யன் என்பது கருத்து.

ஆராத்ய தேவதேவேஷம் ஷங்கரம் லோக ஷங்கரம் |
தபஸா தோஷயித்வா கைலாஸ கிரிவாஸினம் ||
ருக்மிண்யாம் தனயம்லேபே தக்தகாமம் புனர்ஹரி: ||
வீரம் ப்ரத்யும்ன நாமானம் ரூபௌதார்ய குணான்விதம் ||

தனக்கு வாரிசு வேண்டுமென்ற நோக்கத்தில், ருக்மிணியால் சொல்லப்பட்டு, ஸ்ரீகிருஷ்ணன் ருத்ரதேவரைக் குறித்து தவம் செய்து வரம் பெற்றான் என்று பாகவதம் 10ம் ஸ்கந்தத்தில் சொல்லப்பட்டிருக்கிறது.

தேவதேவேஷனான ருத்ரதேவரைக் குறித்து, ஸ்ரீகிருஷ்ணன் தவம் செய்து, முன்பு ருத்ரரால் எரித்துக் கொல்லப்பட்ட மன்மதனை, மறுபடி பிரத்யும்ன ரூபத்தில் மகனாகப் பெற்றான் என்று சொல்லியிருக்கிறார். இங்கு வாரிசுக்காக ஷிவார்ச்சனை செய்தான் என்பவன் தைத்யன் என்றால், பாகவதத்தில் சொல்லப்பட்டதற்கு என்ன அர்த்தம்?

இதன் சமாதானத்தை நிர்ணய 22ம் அத்தியாயத்தில் சொல்கிறார்.
த்வாமாராத்ய ததா ஷம்போ க்ரஹீஷ்யாமிவரம் ஸதா ||
த்வாபராதௌ யுகே பூத்வா கலயா மானுஷாதிஷு ||153
ஸ்வாகம்யை: கல்பிதைஸ்வஞ்ச ஜனாம் மத்வி முகான்குரு ||

நான் த்வாபராதி யுகங்களில் பூமியில் ஒரு அம்சத்தினால், மனுஷ்யாதி ரூபங்களால் அவதரித்து, உன்னை ஆராதனை செய்து வரம் கேட்பேன். நீ கொடுக்கும் வரத்தை பெறுவேன்.

அஹம் த்வாம் பூஜயிஷ்யாமி லோக ஸம்மோஹனோத்ஸுக: ||
தமோsஸுரா நான்யதாஹி யாந்தேத்யே தன்மதம் மம ||160
இத்யுக்தம் வசனம் பூர்வம் கேஷவேன ஷிவாய யத் ||
தத்ஸத்யம் கர்துமாயாந்தம் கிருஷ்ணம் பதரிகாஸ்ரமம் ||
ஸர்வக்ஞா முனய: ஸர்வே பூஜயாம் சக்ரிரேப்ரபும் ||161

உலகத்தை மயக்குவதற்காக நான் உன்னை பூஜிக்கிறேன். அப்படி செய்யவில்லையெனில், தைத்யர்கள் அந்தம்தமஸ்ஸினை அடைவதற்கு வழி இல்லை. இது என் அபிப்பிராயம், என்று முன்னர் ஸ்ரீபரமாத்மன், ருத்ர தேவரிடம் சொல்லியிருந்தான். அந்த வாக்கியத்தை உண்மையாக்குவதற்காக ஸ்ரீகிருஷ்ணன், தன் வாரிசுக்காக ருத்ரதேவரைக் குறித்து தவம் செய்வதற்காக பதரிகாசிரமத்திற்கு வருகிறான் என்பதை அறிந்த, அங்கிருந்த சர்வக்ஞர்களான ரிஷிகள் அனைவரும் அறிந்து ஸ்ரீகிருஷ்ணனை பூஜித்தனர்.

யயௌ கைலாஸமத்ரீஷம் சகாரேவ தபோsத்ரச ||166
ஸ்வீயானேவகுணான் விஷ்ணுர் புஞ்சன்னித்யேன ஷோசிஷா ||
ஷார்வம் தப: கரோதீவ மோஹயாமாஸ துர்ஜனாம் ||167

அங்கு ரிஷிகளால் பூஜிக்கப்பட்டு, ருத்ரதேவரைக் குறித்து தவம் செய்வதற்காக, கைலாயத்தை நோக்கிப் புறப்பட்டான். அங்கு நித்யமான ஞானத்தினால், ஸ்வ-ஸ்வரூபத்தையே தியானித்தவாறு, ஸ்வரூபானந்தத்தை அனுபவித்திருந்தாலும், ருத்ரரைக் குறித்து தவம் செய்வதாகக் காட்டிக்கொண்டு துர்ஜனர்களை ஏமாற்றினான். என்று இதற்கு சமாதானம் கூறியிருக்கிறார்.

ஆகையால், இதனை அறியாமல், ஸ்ரீகிருஷ்ணன் சிவனைக் குறித்து தவம் செய்து, வாரிசினைப் பெற்றார் என்று அறிபவன் தைத்யன் என்பது கருத்து.

**பாப பரிஹாராத்த2 ராமனு**
**மாபதிய நிர்மிஸித3 ப4க3வ**
**த் ரூபரூபகெ பே4த3சிந்தனெ மாள்ய மானவனு |**
**ஆபக3ளு ஸத்தீர்த்த2 கு3ரு மா**
**தாபித்ரு ப்ரபு3 ப்ரதிமெ பூ4தத3**
**யா பரரகண்ட3வரெ தே3வரு எம்பு3வனெ தை3த்ய ||4**

பாப பரிஹார்த்த = ராவணனைக் கொன்ற பாவம் பரிகாரம் ஆவதற்காக
ராம = ஸ்ரீராமன்
உமாபதிய = ஈஸ்வரனை

நிர்மிஸித = ராமேஸ்வரத்தில் சிவலிங்கத்தை நிறுவி பூஜித்தான் என்று சொல்பவன் தைத்யன்.
பகவத்ரூபரூபகெ = பரமாத்மனின் ராமகிருஷ்ணாதி ரூபங்களுக்கு
பேதசிந்தனெ மாள்ப மானவனு = வேறுபாடு உண்டு என்று சொல்லும் மனிதன் தைத்யன்
ஆபகளு = புண்யதீர்த்தங்கள் என்று புராணங்களில் சொல்லப்பட்ட கங்கை முதலான நதிகளில் இருக்கும் நீரே
சத்தீர்த்த = புண்ய தீர்த்தம், நம்மை பவித்ரமாக மாற்றும் தீர்த்தம் என்று சொல்பவன்
குரு மாதா பித்ரு பிரபு = குரு, தாய், தந்தை, முதலாளி
ப்ரதிமெ = பஞ்சலோக அல்லது ஷிலா பிரதிமைகள்
பூததயாபரரு = பிராணிகளில் தயை உள்ளவன்
கண்டவரெ = மேலே சொன்னவற்றில் நம் கண்ணிற்கு தெரிபவரே கடவுள் என்பவன் தைத்யன்.

ஸ்ரீராமன், ராவணனின் சம்ஹாரம் முடிந்தவுடன், அந்த பாவத்தைப் போக்குவதற்காக, ராமேஸ்வரத்தில் ராமலிங்கத்தை ப்ரதிஷ்டை செய்தார் என்று சொல்பவன் தைத்யன். ஸ்ரீராமதேவர் லிங்கத்தை பிரதிஷ்டை செய்தது தமது பாவத்தைப் போக்குவதற்காக அல்ல. இதை நிர்ணய 22ம் அத்தியாயம் 160ம் ஸ்லோகத்தில் சொல்லப்பட்டிருக்கும் 'அஹம்த்வாம் பூஜயிஷ்யாமி' என்பதிலிருந்து அறியலாம்.

இது லோக மோஹனத்திற்காக செய்ததே தவிர, பாப பரிகாரத்திற்காக அல்ல. ராமகிருஷ்ணாதி ரூபங்களுக்கு வேறுபாட்டினை அறிபவன் தைத்யன். 'ராமகிருஷ்ணாதி ரூபேஷு ததா பேத விசிந்தனம்' என்னும் கருட புராண வாக்கியத்தால் இதை புரிந்து கொள்ளலாம்.

கங்கை முதலான நீரினைப் பார்த்து, அதை மட்டுமே தீர்த்தம் என்று அறியக்கூடாது. 'ஸ ஏவ த்ரவரூபேண கங்காம்போ நாத்ர ஸம்ஷய:' ஸ்ரீபரமாத்மனே கங்கோதகத்தில், உதக ரூபத்தில் இருந்து நம்மை பவித்ரனாக மாற்றுகிறான் என்று அறியவேண்டும். அப்படியில்லாமல், தண்ணீரே நம்மை பவித்ரமாக மாற்றுகிறது என்று அறிபவன் தைத்யன்.

குரு, தாய், தந்தை, கண்ணிற்கு தெரியும் தாமிராதி பிரதிமைகள், தேவாலயங்களில் காணப்படும் சிலைகள், பிராணிகளில் தயை உள்ளவர்கள் - இத்தகையவர்களில் பரமாத்மன் தத்ரூபமாக அந்தந்த பெயர்களில் அங்கங்கு இருப்பதை அறியாமல், நம் கண்ணிற்குத் தெரியும் சராசர பிராணிகளே தேவர்கள் என்று சொல்பவன் தைத்யன்.

மாதா பித்ரும் த்வீஜாதீனாம் ஹரி ரூபத்வ சிந்தனம் ||
பஞ்சதாது யயீமூர்த்தெள ஹரி ரூபத்வ சிந்தனம் ||

இத்யாதி கருட புராண வாக்கியம் மேற்சொன்ன பத்யத்தின் ஆதாரம் ஆகும்.

**ஸுந்த3ர ஸ்வயம் வ்யக்தவெ சிதா3**
**நந்த3 ரூபக3ளெம்பு3வனு நர**
**நிந்த3 நிர்மித ஈஷ்வரகெ3 அபி3னமிஸுதிஹ நரனு ।**
**கந்து3கொ3ரள தி3வாகரனு ஹரி**
**யொந்தெ3 ஸூர்யஸுரோத்தம ஜக3**
**த் வந்த்3யனெம்பு3வ விஷ்ணுதூ3ஷணெ மாடு3வவ தை3த்ய ||5**

ஸுந்தர ஸ்வயம் வ்யக்தவு = அழகான ஸ்வயம் வ்யக்த என்று சொல்லப்படும் பிரதிமைகள்
சிதானந்த ரூபகளெம்புவனு = பரமாத்மனிடமிருந்து வேறுபடாத (அபின்னமான) சிதானந்த பகவத்ரூபமே இவை என்று சொல்பவன்
நரனிந்த நிர்மித = மனிதர்கள் பிரதிஷ்டை செய்த
ஈஷ்வரகெ = சிவலிங்கத்திற்கு
அபினமிஸுதிஹ நரனு = நமஸ்காரம் செய்யும் மனிதன்
கந்துகொரள = நீலகண்டரான ருத்ரதேவர்
திவாகரனு ஹரியொந்தே = சூரியனும், ஹரியும் ஒன்றே, இவர்கள் மூவரும் வெவ்வேறு அல்ல என்று சொல்பவன்
சூர்ய சுரோத்தம = சூரிய சர்வோத்தம
ஜகத்வந்த்யனு = அனைத்து உலகங்களிலும் பிரம்மாதி சர்வ தேவதைகளாலும் வணங்கப்படுபவன்
எம்புவ = என்று சொல்பவன்
விஷ்ணு தூஷணே மாடுவவனு = விஷ்ணுவை நிந்திப்பவன்
தைத்ய = இவர்கள் அனைவரும் தைத்யர்களே.

திருப்பதி முதலான புண்ணிய க்ஷேத்திரங்களில் இருக்கும் ஸ்ரீனிவாசாதி ஸ்வயம் வியக்த பிரதிமைகளிலும், அந்த பிரதிமையே பரமாத்மன் அல்ல. அந்த பிரதிமைகளில் பரமாத்மனின் சன்னிதானத்தை அறியவேண்டுமே தவிர, பிரதிமைகளுக்கும் பரமாத்மனுக்கும் வேறுபாடு இல்லை என்று சொல்லக்கூடாது. அப்படி சொல்பவன் தைத்யன்.

ஸ்வயம் வியக்த இடங்களில் இருக்கும் சிவலிங்கங்களில் இருக்கும் ஈஸ்வரனை மட்டுமே வணங்கவேண்டும். மனிதர்களால் பிரதிஷ்டை செய்யப்பட்ட லிங்கங்களுக்கு நமஸ்காரம் செய்யக்கூடாது. கருட புராணத்தில்:

அஸ்வம்யவ்யக்த லிங்கேஷு நமனம் விப்ரகுர்வதி ।
தே ஸர்வே அசுராக்ஞேயா நாத்ர கார்யா விசாரணா ॥

ஸ்வயம் வியக்தம் அல்லாத லிங்கங்களுக்கு நமஸ்காரம் செய்பவர்கள் அனைவரும் தைத்யர்கள் என்று சொல்ல வேண்டும். இந்த விஷயத்தில் யோசிக்கவே தேவையில்லை என்கிறார். அதே அர்த்தத்தையே இங்கு சொல்கிறார்.

ஈஸ்வரனும், சூரியனும், பரமாத்மனும் ஒன்றே. இவர்களில் பரஸ்பரம் பேதம் இல்லை என்று சொல்பவனும் தைத்யன். இந்த விஷயத்தில் கருட புராண வாக்கியம்.

அஸ்வதந்த்ரேண ருத்ரேண ஹரேரைக்ய விசிந்தனம் ||
விஷ்ணோ: சூர்யேண சாகஞ்ச அபேதாதி விசிந்தனம் ||

அஸ்வதந்த்ரரான ருத்ர தேவருக்கும் பரமாத்மனுக்கும் ஐக்ய சிந்தனை செய்பவர், விஷ்ணுவிற்கும், சூரியனுக்கும், வேறுபாடு இல்லை என்று சொல்பவர், தைத்யர்கள் என்று சொல்கிறார்.

சூரியன் சர்வோத்தமன், பிரம்மாதி வந்த்யன் என்று சொல்பவனும், விஷ்ணு தூஷணை செய்பவனும் தைத்யன். கருட புராணத்தில்:

ஸர்வோத்தம: சூர்ய ஏவ விஷ்வாத்யாஸ் தஸ்ய கிங்கரா: ||
இத்யாதி சிந்தனம் பாபம் ஹரி நிந்தேதி சோச்யதி ||

சூரியனே சர்வோத்தமன், விஷ்ணு முதலானவர்கள் அவனின் சேவகர்கள் என்று உபாசனை செய்பவர்கள் விஷ்ணு நிந்தகர்கள் எனப்படுபவார்கள். ஆகையால், இப்படி உபாசனை செய்பவர்கள் தைத்யர்கள் என்று சொல்கிறார். அதே அபிப்பிராயத்தையே இங்கும் அறியவேண்டும்.

**நேமதி$^{3}$ந்த$^{3}$ஷ்வத்த$^{2}$ துலசீ**
**ஸோமத$^{4}$ரனலி விமலஷால**
**க்$^{3}$ராமக$^{3}$ள நிவ்வபி$^{4}$னமிப நர முக்தியோக்$^{3}$ய ஸதா$^{3}$ |**
**பூ$^{4}$மியொளு த$^{3}$ர்மார்த்த$^{2}$ முக்தி ஸு**
**காமபேக்ஷெக$^{3}$ளிந்த$^{3}$ ஷால**
**க்$^{3}$ராமக$^{3}$ளனிட்டு வ்யதிரிக்த வந்தி$^{3}$ஸெ து$^{3}$க்க$^{2}$வைது$^{3}$வனு ||6**

நேமதிந்த = நியமத்துடன்
அஷ்வத்த துலசி = அரச, துலசி
சோமதர = சிவலிங்க, இவற்றில்
விமலஷால க்ராமகளனிட்டு = உத்தமமான சாலிகிராமத்தை வைத்து
அபினமிப = நமஸ்காரம் செய்யும்
நர = மனிதன்
சதா = அனைத்து காலங்களிலும்
முக்தியோக்யனு = முக்தி யோக்யன் ஆகிறான்

பூமியொளு = பூமியில்
தர்ம அர்த்த, முக்தி,
சுகாம = உத்தம பலன்களைக் கொடுக்கும் காம இவற்றின்
அபேக்ஷெகளிந்த = விருப்பத்தால்
சாலக்ராமகள வியதிரிக்த = சாலிகிராமம் இல்லாமல்
வந்திஸெ = வணங்கினால்
துக்கவைதுவனு = துக்கத்தை அடைகிறான்.

அரச மரத்திற்கும், துளசிக்கும், ஸ்வயம் வ்யக்தமான சிவலிங்கத்திற்கும் நமஸ்காரம் செய்யும்போது, அங்கங்கு சாலிகிராமத்தை வைத்து நமஸ்காரம் செய்பவன் முக்தி யோக்யன். வெறும் தர்மார்த்த காம மோட்ச என்னும் புருஷார்த்தங்களின் விருப்பத்தால் அரச மரத்திற்கோ, துளசிக்கோ, லிங்கங்களுக்கோ அருகில் சாலிகிராமத்தை வைக்காமல், வணங்குபவனுக்கு துக்கமே கிடைக்கும். இந்த விஷயத்தில் கருட புராண வாக்கியம்:

ஸ்வயம்வ்யக்தேஷு லிங்கேஷு அஷ்வத்த துலசீஷுச ||
ஸாலிக்ராமம் விஹாயைவ நமனம்யே ப்ரகுர்வதி ||
தே ஸர்வே ஹரினிந்தாயா மதிகாரிண ஏவஹி ||

ஸ்வயம்வ்யக்த லிங்கத்திற்கும் அஷ்வத்த துளசிக்கும் நமஸ்காரம் செய்யும்போது, சாலிகிராமத்தை வைக்காமல் யார் நமஸ்காரம் செய்கிறார்களோ, அவர்கள் அனைவரும் பரமாத்மனின் நிந்தனை செய்தவர்கள் ஆகிறார்கள். அதாவது தைத்யர்கள் என்றே அறியவேண்டும் என்று சொல்கிறார். அதே அபிப்பிராயத்தையே இங்கும் தாசார்யர் சொல்கிறார்.

**விததமஹிமன பி$^3$ட்டு ஸுரரிகெ$^3$**
**ப்ருதகுவந்த$^3$னெ மாள்ப மானவ**
**தி$^3$திஜனெ ஸரி ஹரியு தா ஸம்ஸ்தி$^2$தனெனிஸனல்லி |**
**சதுரமுக$^2$ மொத$^3$லாத$^3$கி$^2$ல தே$^3$**
**வதெக$^3$ளொள கி$^3$ஹனெந்து$^3$ லக்ஷ்மீ**
**பதிகெ$^3$ வந்தி$^3$ஸெ ஒந்த$^3$ரெக்ஷண பி$^3$ட்டக$^3$லனவர ||7**

விததமஹிமன = அனைத்து இடங்களிலும் வியாப்தியாக இருக்கும் பரமாத்மனை
பிட்டு = விட்டு
சுரரிகெ = பிரம்மாதி தேவதைகளுக்கு
ப்ருதகுவந்தனெ = தனியாக நமஸ்காரத்தை
மாள்ப = செய்யும்
மானவ = மனிதன்
திதிஜனெ சரி = தைத்யனே சரி
அல்லி = பரமாத்மனை விட்டு பிரம்மாதிகளுக்கு தனியான நமஸ்காரம் செய்யும் இடங்களில்,

ஹரியு தா சம்ஸ்திதனெனிஸனு = ஹரி, தான் அங்கு இருக்கிறேன் என்று நினைக்கமாட்டான்.
சதுரமுக மொதலாத = பிரம்மதேவரே முதலான
அகிளதேவதெகளொளு = அனைத்து தேவதைகளிலும்
இஹனெந்து = ஸ்ரீஹரி இருக்கிறான் என்று அறிந்து
லக்ஷ்மிபதிகெ வந்திஸெ = ஸ்ரீமன் நாராயண தேவருக்கு நமஸ்காரம் செய்ய
அவர = அத்தகையவர்களை
ஒந்தரெக்ஷண பிட்டகல = ஒரு நொடிகூட விட்டு விலகாமல் இருப்பான்.

பிரம்மாதி எந்த தேவதைகளுக்கு நமஸ்காரம் செய்ய வேண்டுமென்றாலும், பிரம்ம அந்தர்யாமி ருத்ராந்தர்கத என்று அந்தர்கதனான பரமாத்மனுக்கு நமஸ்காரம் செய்தால் மட்டுமே பரமாத்மன் அந்த தேவதைகளில் இருந்து அந்த பூஜாதிகளை ஏற்றுக்கொண்டு உத்தம பலன்களைக் கொடுக்கிறான். அப்படிப்பட்ட மக்களை ஒரு நொடிகூட விடாமல் கூடவே இருப்பான்.

அப்படி இல்லாமல், வெறும் பிரம்மாதி தேவதைகளுக்கு மட்டும் தனியாக நமஸ்காரங்களை செய்தால், அதை ஸ்ரீஹரி ஏற்றுக் கொள்வதில்லை. அப்படி செய்பவர்கள் தைத்யர்கள் என்று அறியவேண்டும்.

அத: பார்த்திக்யனமனம் யே குர்வந்தி ச ஸர்வதா ||
தே ஸர்வே அசுராக்ஞேயா: ந தத்ர ஹரிஸம்ஸ்தித: ||

என்னும் கருட புராண பிரம்மகாண்டத்தின் வசனம் இதற்கு ஆதாரமாக இருக்கிறது.

**ஶைவ ஷூத்3ர கரார்ச்சித மஹா**
**தே3வ வாயு ஹரிப்ரதிமெ வ்ரு**
**ந்தா3வனதி3 மாஸத்3வயதொ3ளிஹ துலசி அப்ரஸவ**
**கோ விவாஹ விவர்ஜிதாஷ்வ**
**த்தா2விட3பிக3ள ப4க்திபூர்வக**
**ஸேவிஸுவ நர தை3த்ய ஷாஷ்வத து3க்க2வைது3வனு ||8**

ஶைவ = சிவனே சர்வோத்தமன் என்று சொல்பவர்கள்
ஷூத்ர,
கரார்ச்சித = இவர்களால் பூஜை செய்யப்படும்
மஹாதேவ = சிவலிங்கங்கள்
வாயு, ஹரி பிரதிமெ = ஹனுமந்த, ராம கிருஷ்ணாதி பிரதிமைகள் இவற்றை
வ்ருந்தாவனதி = துளசி விருந்தாவனத்தில் இருக்கும்
மாஸத்வயதொளிஹ துளசி = துளசி செடியை நட்டு இரு மாதங்கள் ஆகாதிருக்கும் துளசியை
அப்ரஸவகோ = கன்று இடாத பசு

விவாஹ வர்ஜித = திருமணம் ஆகாத
அஷ்வத்த விடபிகள = அஷ்வத்த கிளைகளை
பக்திபூர்வக சேவிசுவ = பக்தியுடன் வணங்கும்
நர = மனிதன்
தைத்ய = தைத்யன்
ஷாஷ்வத துக்கவைதுவனு = நிரந்தரமான துக்கத்தை அனுபவிப்பான்.

சிவனை வழிபடுவோர், நான்காம் வர்ணத்தவர்கள் இவர்கள் கையால் பூஜிக்கப்படும் லிங்கங்கள், ஹனுமந்த முதலான வாயு ப்ரதிமைகள், ராமகிருஷ்ணாதி ஹரி பிரதிமைகள் இவற்றை வணங்கக்கூடாது.

துளசி விருந்தாவனத்தில் துளசி செடியை வைத்து இரு மாதங்கள் ஆகாத வரைக்கும் அந்த துளசியை பூஜிக்கக்கூடாது. கன்று ஈனாத பசுவை வணங்கக்கூடாது. திருமணம் செய்யாத அஷ்வத்தத்தை பூஜிக்கக்கூடாது. இந்த விதிகளை அறியாமல் இதற்கு எதிராக பூஜையை செய்பவன் தைத்யன். அவன் நிரந்தரமான துக்கத்தை அனுபவிக்கிறான்.

கருட புராண பிரம்ம காண்டத்தில்:
ஷைவஷூத்ரார்ச்சிதம் சேஷம் வாயும் து ஹரிமேவச ||
த்விமாஸஹீனாம் துலஸீம் அப்ரஸூதாஞ்ச காம் ஸதீம் ||
விவாஹஷூன்யமஷ்வத்தம் நமனம் மே ப்ரகுர்வதி ||
தேஸர்வே அசுராஞ்ஞேயா நாத்ர கார்யா விசாரணா ||

என்னும் வாக்கியங்கள் இந்த பத்யத்திற்கு அர்த்தமாகும். பத்யார்த்தமும் ஸ்லோக அர்த்தமும் ஒன்றேயானதால், தனியாக இதனை மறுபடி விளக்கவில்லை.

**க$^{1}$மலஸம்ப$^{4}$வ முக்$^{2}$ய மனுஜோ**
**த்தமர பரியந்தரதி$^{3}$ முக்தர**
**ஸம ஷதாயுஷ்யுள்ளவனு கலி பி$^{3}$ரம்மனோபாதி$^{3}$ ।**
**க்ரமதி$^{3}$ நீசரு தை$^{3}$த்யரு நரா**
**த$^{4}$மர பிடி$^{3}$து$^{3}$ குலக்ஷ்மி கலி அனு**
**பமரெனிஸுவரு அஸுரரொளு த்$^{3}$வேஷாதி$^{3}$ கு$^{3}$ணதி$^{3}$ந்த$^{3}$ ||9**

கமலசம்பவமுக = பிரம்மதேவரில் துவங்கி
மனுஜோத்தமர பர்யந்தரதி = மனுஷ்யோத்தமர் வரைக்கும்
முக்தரு = முக்தி யோக்யர் எனப்படுகிறார்கள்
கலி,
பிரம்மனோபாதி = பிரம்மதேவரைப் போல
ஸம ஷதாயுஷ்யுள்ளவனு = அவருக்கு சமமான என்றால் பிரம்மமானத்தின்படி 100 ஆண்டு ஆயுள் உள்ளவன்
நராதமரவிடிது = மனுஷ்ய அதமரில் துவங்கி

குலக்ஷ்மி = கலியின் மனைவியான அலக்ஷ்மி வரைக்கும்
தைத்யர்,
க்ரமதி = கிரமமாக (வரிசையாக) நீசர்கள்
அசுரரொளு = தைத்யரில்
த்வேஷாதி குணதிந்த = த்வேஷம் முதலான குணங்களால், மேற்கூறிய தைத்யர்கள்
கலியனுபம ரெனிஸுவரு = கலிக்கு சமானர் என்று சொல்லப்படுகிறார்கள்.
கலிக்கு சமானர் என எந்த தைத்யரையும் சொல்லமுடியாது என்று அர்த்தம்.

பிரம்மதேவரில் துவங்கி, மனுஷ்யோத்தமர் வரை, முக்தியோக்யர் என்றும், மனுஷ்யாதமரில் துவங்கி, கலி வரை, தமோயோக்யர் என்றும் அறியவேண்டும். தைத்யர்களில் கலி ஒருவன் மட்டும், பிரம்மதேவருக்கு சமமான 100 ஆண்டு ஆயுள் உள்ளவன். தைத்யரில் அலக்ஷ்மி வரைக்கும், தாரதம்யத்தின்படி கிரமமாக நீசர்கள்.

த்வேஷாதிகளில் கலிக்கு சமமான பாபி வேறு யாரும் இல்லை. கருட புராணத்தில்:

தல்யாத்யா மானுஷாந்தாஸ்சதே ப்யேவம் பிரம்மவத்கணா: ||
ஸம: ஷதாயு: பர்யந்தமேக ஏவகலி: ஸ்ம்ருத: ||
கலி: ஸமானனாமான: கலேரன்யே ச ஸந்திஹி ||
ஸர்வேஷாமுத்தமோக்ஞேய: கலிரேவ ந சம்ஷய: ||
தூஷணே விஷ்ணு பக்தானாம் தத்ஸமோ நாஸ்தி சர்வதா ||

இதன் அர்த்தம்:
கலியில் துவங்கி மனுஷ்யாதமர்கள் வரை, பிரம்மாதி தேவ கணத்தைப் போல, இந்த தைத்ய கணமும் இருக்கிறது. இதில் கலி ஒருவனே பிரம்ம தேவருக்கு சமமான 100 ஆண்டு ஆயுள் உள்ளவன். கலி என்னும் பெயருள்ள தைத்யர்கள் வேறு சிலர் உண்டு.

ஆனால் அவர்கள் மஹாகலிக்கு சமமானவர்கள் அல்ல. கலி ஒருவனே விஷ்ணு த்வேஷத்திலும் அவனின் பக்தர்களின் த்வேஷத்திலும் உத்தமோத்தமன். ஹரி த்வேஷத்தில் அவனுக்கு சமம் வேறு யாரும் இல்லை.

இதே அபிப்பிராயத்தையே தாசார்யரும் இங்கு சொல்கிறார்.

**வனஜஸம்ப$^4$வ நப்தஷத ஒ**
**ப்ப$^3$னெ மஹாகலி ஷப்$^3$தவாச்யனு**
**தி$^3$னதி$^3$னக$^3$ளலி பீ$^3$ள்வரந்த$^3$ந்தமதி$^3$ கலிமார்க்க$^3$**
**த$^3$னுஜரெல்ல ப்ரதீக்ஷிஸுத பி$^3$ர**
**ம்மன ஷதாப்$^3$தாந்தத$^3$லி லிங்க$^3$வு**

**அனிலன க$^{3}$தா$^{3}$ப்ரஹரதி$^{3}$ந்த$^{3}$லி ப$^{4}$ங்க$^{3}$வைது$^{3}$வரு ||10**

வனஜஸம்பவ = பிரம்மதேவரின் காலமானத்தின்படி
அப்தஷத = 100 ஆண்டுகள்
ஒப்பனெ மஹாகலி ஷப்தவாச்யனு = கலி என்னும் பெயருள்ள தைத்யர்கள் வேறு சிலர் இருந்தாலும், மஹாகலி என்னும் பெயருள்ள தைத்யன் ஒருவனே இருக்கிறான்.
தினதினகளலி = பிரம்மதேவரின் ஒவ்வொரு நாளிலும்
அந்தம்தமதி = அந்தம்தமஸ்ஸில் வீழ்கிறான்
ப்ரதீக்ஷிசுத = கலியின் வருகையை எதிர்பார்த்து,
பிரம்ம ஷதாப்தாந்ததலி = பிரம்மதேவரின் 100 ஆண்டுகள் ஆனபிறகு
அனிலன = வாயுதேவரின்
கதாப்ரஹரதிந்தலி = அவரின் கதையால் அடிக்கப்பட்டு
லிங்கவ = லிங்க தேகத்தை
பங்கவைதுவரு = பங்கத்தை அடைகிறார்கள்.

கலி என்னும் பெயருள்ளவர்கள் வேறு சிலரும் இருந்தாலும், பிரம்ம கல்பம் முழுக்கவும் இருப்பவன் மஹாகலி ஒருவனே. மற்ற தைத்யர்கள், பிரம்மதேவரின் ஒவ்வொரு நாளிலும், தத்தம் சாதனைகளை முடித்துக்கொண்டு, அன்றன்றே அந்தந்தமஸ்ஸில் விழுந்து, கலியின் வருகையை எதிர்பார்த்தவாறு, அவன் வந்தபிறகு, அவனுடன் சேர்ந்து வாயுதேவரின் கதையால் அடிக்கப்பட்டு, லிங்க தேகம் பங்கத்தை அடைகின்றனர்.

கருட புராண பிரம்ம காண்டத்தில்:
ஏகஸ்மின் பிரம்மதிவஸே தே கச்சந்தி தமோந்தகம் ||
தத்ரஸ்தித்வா கலிர்மார்க்கம் ப்ரதீக்ஷந்தே ந ஸம்ஷய: ||
ஸாதனை: பரிபூர்ணாஸ்தே வாயுஷஸ்த்ரை: ப்ரபீடிதா: ||
ஷதவர்ஷா நந்தரந்து ஸர்வேஷாம் கலினா ஸஹ ||
வாயோர்கதா ப்ரஹாரேண லிங்கபங்கோ பவிஷ்யதி ||

என்னும் ஸ்லோகங்களின் அர்த்தத்தையே தாசார்யரும் இங்கு சொல்லியிருக்கிறார்.

**மாருதன க$^{3}$தெயிந்த$^{3}$ லிங்க$^{3}$ ஷ**
**ரீர போதா$^{3}$னந்தர தமோ**
**த்$^{3}$வாரவைதி$^{3}$ ஸ்வரூப து$^{3}$க்க$^{2}$க$^{3}$ளனு ப$^{3}$விஸலிஹரு |**
**வைர ஹரிப$^{4}$க்தரலி ஹரியலி**
**தாரதம்யத$^{3}$ லிருதிஹுது$^{3}$ ஸம்**
**ஸாரத$^{3}$ல்லி தமஸ்ஸினல்லய்யதி$^{4}$க கலியல்லி ||11**

மாருதன = வாயுதேவரின்

கதெயிந்த = கதையினால்
லிங்கஷரீர போதானந்தர = லிங்க சரீரம் பங்கம் ஆனபிறகு
தமோத்வாரதி = நிரந்தரமான அந்தந்தமஸ்ஸை அடைந்து
ஸ்வரூப துக்ககளனு பவிஸலிஹரு = ஸ்வரூப துக்கத்தை அனுபவித்துக் கொண்டிருக்கின்றனர்
ஹரிபக்தரலி = ஹரி பக்தர்களிடம்
ஹரியலி = ஹரியிடம்
வைர = த்வேஷம்
தாரதம்யதலி = தாரதம்யத்திற்கேற்ப
ஸம்ஸாரதல்லி = நித்ய சம்சாரத்தில் இருந்து
தமஸ்ஸினலி = அந்தந்தமஸ்ஸில் இருந்து
கலியல்லி = கலியிடம்
அத்யதிக = மிகவும் அதிகமாக
இருதிஹது = ஸ்வரூப துக்க அனுபவம் இருக்கிறது.

வாயுதேவரின் கதா பிரயோகத்தினால் லிங்கதேகம் பங்கமாகிய தைத்யர்கள், ஹரியிடமும், ஹரி பக்தர்களிடமும் செய்யும் த்வேஷங்களை அனுசரித்து, தாரதம்யத்தின்படி அதாவது, அதிக த்வேஷம் செய்தவர்களுக்கு ஸ்வரூப துக்கமும் அதிகமாகின்றன. குறைவான த்வேஷம் செய்தவர்களுக்கு ஸ்வருப துக்கம் குறைவாகிறது.

இப்படியாக,
* மனுஷ்யாதமருக்கு தாரதம்யத்திற்கேற்ப, தமஸ்ஸில் நித்ய சம்சாரத்திலேயே துக்கமும்,
* மற்ற ராஜர்களுக்கு தாரதம்யத்திற்கேற்ப ஸ்வரூப துக்கத்திலேயே துக்க அனுபவமும்
* கலிக்கு மட்டும் அனைவரைவிடவும் மிகவும் அதிகமான துக்க அனுபவம் ஆகிறது.

ததோந்தம் ப்ரவிஷந்த்யேதே தாரதம்யேன ஸர்வஷ: ||
தமஸ்யந்தேபி ஸம்ஸாரே நாத்ர கார்யா விசாரணா ||

என்னும் கருட புராண வாக்கியமே இதற்கு ஆதாரமாகும்.

**ஞானவெம்புது[3] மித்[2]ய அஸமீ**
**சீன து[3]க்க[2]தரங்க[3]வெ ஸமீ**
**சீன பு[3]த்தி[4] நிரந்தரதி[3] கலிகி[3]ஹுது[3] தை[3]த்யரொளு |**
**ஹீனளெனிபளு ஷதகு[3]ணதி[3] கலி**
**மானினிகெ[3] ஷத விப்ரசித்திகெ[3]**
**ஊன ஷதகு[3]ண காலனேமியெ கம்ஸனெனிஸித[3]னு ||12**

ஞானவெம்புது = ஞானம் என்பது
மித்ய = கண்ணிற்கு தெரியும் பதார்த்தங்கள் அனைத்தும் மித்ய என்பதே கலியின் ஞானம்
அஸமீசீன = அது நல்ல ஞானம் அல்ல
துக்கதரங்கவெ = அது துக்கங்களின் அலைகளே
சமீசீன புத்தி = அதுவே நல்ல ஞானம் என்று நினைக்கின்றனர்
தைத்யரொளு = தைத்யர்களில்
இந்தஹ புத்தி = இந்த ஞானமே
கலிகிஹது = கலிக்கு இருக்கிறது
கலி மானினிகெ = கலியின் மனைவி
ஷதகுணதி = கலி செய்யும் த்வேஷங்களைவிட 100 குணங்களால்
ஹீனளெனிபளு = குறைவு எனப்படுகிறாள்.

தேவதா தாரதம்யத்தில் எப்படி பிரம்மதேவரைவிட 100 குணங்களால் பக்தி ஞானாதிகளில் ருத்ர தேவர் குறைவு; அவரைவிட இந்திராதிகள் குறைவு என்று சொல்லியிருக்கின்றனரோ, அதுபோலவே ஹரி த்வேஷர்களிலும் கலியே உத்தமோத்தமன் ஆகையால், அடுத்து பார்க்கப்போகும் தாரதம்யம் அனைத்தும் பரமாத்மனின் த்வேஷாதிகளை செய்வதில், ஒருவருக்கு ஒருவர் அதமர் என்றால், அவரைவிட குறைவான த்வேஷத்தை செய்கிறார்கள் என்று அர்த்தம். இப்படி கலியை விட அவனின் மனைவி, அவளைவிட மற்றொருவர் குறைவு என்னும் அர்த்தத்தை அறியவேண்டும்.

கலிமானினிகெ = கலியின் மனைவியைவிட
விப்ரசித்தியு ஷத = விப்ரசித்தி, 100 குணங்களால் த்வேஷாதிகளை குறைவாக செய்கிறான்.
விப்ரசித்திகெ காலனேமியு ஷதகுண ஊன = 100 குணங்களால் காலநேமி குறைவு. இந்த காலநேமியே
கம்சனெனிஸிதனு = கம்சனாக பிறந்தான்.

மித்யா ஞானே ஞானபுத்திர் துக்கேச சுகபுத்திமான் || என்னும் கருட புராண வாக்கியத்திற்கேற்ப, மித்யா ஞானத்தையே ஞானமாகவும், துக்கத்தையே சுகமாகவும் அறிந்திருக்கும் ஸ்வபாவம் உள்ளவன் கலி. இவனின் மனைவியான அலக்ஷ்மி இவனின் சமளான பாபி அல்ல. ஹரி த்வேஷாதிகளை செய்யும் விஷயத்தில் இவனைவிட 100 அம்சங்கள் குறைவாக இருப்பவள். ஸ்வரூப துக்கங்களிலும் கலிக்கு எவ்வளவு துக்கமோ அவ்வளவு துக்கம் இவளுக்கு இல்லை. அவனைவிட 100 அம்சம் குறைவான துக்கத்தை அனுபவிக்கிறாள்.

இவளைவிட த்வேஷாதிகளில் 100 அம்சங்கள் குறைவு - விப்ரசித்தி. விப்ரசித்தியைவிட 100 குணங்களால் குறைவு காலநேமி. இவனே கம்சன் என்று அறியவேண்டும்.

**காலனேமிகெ$^{3}$ பஞ்சகு$^{3}$ணதி$^{3}$ம்**
**கீ$^{3}$ளு மது$^{4}$கைடபரு ஜன்மவ**
**தாளி இளெயொளு ஹம்ஸ டி$^{3}$பி$^{3}$காஹ்வயதி$^{3}$ கரெஸித$^{3}$ரு |**
**ஜள நாமக விப்ரசித்தி ஸ**
**மாளுவெனிப ஹிரண்யகஷ்யபு**
**ஷூலபாணிய ப$^{4}$க்த நரககெ$^{3}$ ஷத கு$^{3}$ணாத$^{4}$மனு ||13**

காலனேமிகெ = காலநேமியைவிட
மதுகைடபரு = மது கைடப தைத்யர்கள்
பஞ்சகுணதிம் = 5 குணங்களால்
கீளு = நீசர்கள்
இந்த மது கைடபர்களைவிட
இளெயொளு = பூமியில்
ஜன்மவதாளி = பிறவியைப் பெற்று
ஹம்ஸ டிபிகாஹ்வயதி = ஹம்ஸ டிபிகர் என்னும் பெயரால் அழைக்கப்படுபவர்கள்
ஜள நாமக = ஜளியின் (பூமியின்) மகனான நரகாசுரன்
விப்ரசித்தி ஸமாளு எனிப = விப்ரசித்திக்கு சமம் என்று சொல்லப்படுகிறான்.
ஷூலபாணிய = ருத்ரதேவரின்
பக்தனரககெ = நரகாசுரனுக்கு
ஹிரண்யகஷ்யபு = ஹிரண்யகஷ்யபனில் நிலைத்திருக்கும் ஹிரண்ய என்னும் தைத்யன்
ஷதகுணாதமனு = 100 குணங்கள் குறைவானவன்.

காலநேமியைவிட மதுகைடபர்கள் 100 குணங்கள் குறைவானவர்கள். அவர்களே ஹம்ஸ டிபிகர் என்னும் சால்வ தேசாதிபதியாக பிறந்தனர். பூமியின் மகனான நரகாசுரன், விப்ரசித்திக்கு சமம். விப்ரசித்தியே ஜராசந்தன். நரகாசுரனைவிட ஹிரண்யகசிபுவில் இருக்கும் ஆதி ஹிரண்யன் 100 குணங்களால் அதமன்.

தஸ்மாத் பஞ்சகுணைர் ஹீஸௌமதுகைடப ஸம்ஞகௌ ||
தாவேவஹம்ஸடிபிகௌ விப்ரசித்தி ஸமோக்ஞேயே பௌமே வை பூதலே ஸ்ம்ருத: ||
தஸ்மாஸ்மத குணைர்ஹீனோ ஹிரண்ய கஷிபு: ஸ்ம்ருத: ||

என்னும் கருட புராண வாக்கியமே இதற்கு ஆதாரமாகும்.

**கு$^{3}$ணக$^{3}$ளத்ரய நீசனெனிஸுவ**
**கனககஷிபுகெ$^{3}$ ஹாடகாம்ப$^{3}$க**
**கெ$^{3}$ணெ எனிப மணிமந்தகி$^{3}$ந்தலி கிஞ்சித்தூ$^{3}$ன ப$^{4}$க$^{3}$ |**
**த$^{3}$னுஜவரதா$^{3}$ரகனு விம்ஷதி**
**கு$^{3}$ணதி$^{3}$ நீசனு லோககண்ட$^{2}$க**

**நெனிப ஷம்ப³ர தாரகாஸுரக³த⁴ம ஷட்கு³ணதி³ ||14**

கனககஷிபுகெ = ஹிரண்யகசிபுவிற்கு
குணகளத்ரய = 3 குணங்களால்
ஹாடகாம்பக = ஹிரண்யாக்ஷன்
நீசனெனிஸுவ = அதமன் எனப்படுகிறான்
ஹாடகாம்பகெ = ஹிரண்யாக்ஷனுக்கு
மணிமந்தன்,
எணெயெனிப = சமம் எனப்படுகிறான்
மணிமந்தகிந்தலி = மணிமந்தனைவிட
பக = பகாசுரன்
கிஞ்சிதூன = சிறிது அதமன்
பகனகிந்தலு = பகனை விட
தனுஜவர = தைத்ய ஸ்ரேஷ்டனான
தாரகனு = தாரகாசுரன்
விம்ஷதிகுணதி = 20 குணங்களால்
நீசன்.
தாரகாசுரனுக்கு,
லோகண்டகனெனிப = சஜ்ஜனர்களுக்கு பிரச்னை செய்பவன்
ஷம்பர = ஷம்பராசுரன்
ஷட்குணதி = 6 குணங்களால் அதமன்

ஹிரண்யகசிபுவைவிட ஹிரண்யாக்ஷன் 3 குணங்களால் நீசன். மணிமந்தன் அவனுக்கு சமமானவன். அவனே சங்கரன். அவனைவிட சிறிது குறைவு பகாசுரன். அவனைவிட 20 குணங்களால் தாரகாசுரன் நீசன். அவனைவிட சஜ்ஜனர்களுக்கு தொந்தரவு கொடுக்கக்கூடிய ஷம்பராசுரன் 6 குணங்களால் அதமன்.

கருட புராணம்:
தஸ்மாத்துத்ரிகுணைர் ஹினோ ஹிரண்யாக்ஷோ மஹாஸுர: |
மணியான் தத்ஸமோ க்ஞேயோ கிஞ்சிதூனோபக: ஸ்ம்ருத: ||
தஸ்மாத்விம்ஷத் குணைர் ஹீனோ தாரகாக்யோ மஹாஸுர: ||
தஸ்மாத் ஷட்குணிதோ ஹீனோ ஷம்பரோ லோககண்டக: ||

இந்த ஸ்லோகங்களே இந்த பத்யத்தின் ஆதாரமாகும்.

**ஸரியெனிஸுவனு ஸால்வனிகெ³ ஸ**
**ங்கரனு அத⁴மனு த³ஷ கு³ணதி³ ஷ**
**ம்ப³ரகெ³ ஷட்கு³ண நீசரெனிப ஹிடி³ம்ப³கா பா³ணா**
**ஸுரனு த்³வாபர கீசகனு நா**
**ல்வரு ஸமரு த்³வாபரனெ ஷகுனியு**
**கரெஸித³னு கௌரவகெ³ ஸோத³ரமாவ னஹுதெ³ந்து³ ||15**

சால்வனிகெ = சால்வனுக்கு
சரியெனிசுவனு = மேலே சொன்ன ஷம்பராசுரனைத் தவிர த்வாபரயுகத்தின் இன்னொரு ஷம்பராசுரனும் சமம் எனப்படுகிறான்
இந்த ஷம்பரன்
சங்கரகெ = சங்கர என்று பூமியில் அவதரித்த மணிமந்தனுக்கு
தஷகுணதி = 10 குணத்தால் அதமன்
ஷம்பரகெ = இந்த ஷம்பராசுரனுக்கு
ஹிடிம்பிகா = ஹிடிம்பாசுரன்
ஷட்குணதி = 6 குணங்களால் நீசன்
ஹிடிம்பாசுரன், பாணாசுரன், த்வாபர, கீசகன் ,
நால்வரு சமரு = இந்த நால்வரும் சமமானவர்கள்.
த்வாபரனே ஷகுனியு = த்வாபரனே சகுனி
கௌரவகெ = துரியோதனனுக்கு
சோதரமாவனஹுதெந்து = தாய் மாமனாகப் பிறந்தவன்.

ஷம்பராசுரன் சால்வனுக்கு சமம் எனப்படுகிறான். இந்த ஷம்பரன், சங்கர என்று பூமியில் பிறந்த மணிமந்தனுக்கு 10 குணங்களால் அதமன். இந்த ஷம்பரனுக்கு, ஹிடிம்பாசுரன், பாணாசுரன், த்வாபர, கீசகன் என்னும் நால்வரும் 6 குணங்களால் நீசர்கள். தமக்குள் இந்த நால்வரும் சமமானவர்கள். த்வாபரனே ஷகுனி என்று, துரியோதனின் தாய் மாமனாக பிறந்தான். பாணாசுரனே கீசகன்.

முந்தைய பத்யத்தில்:
* மணிமந்தனைவிட பகாசுரன் சிறிது குறைவானவன் என்றும்,
* அவனைவிட தாரகாசுரன் 20 குணங்கள் நீசன் என்றும்
* அவனைவிட ஷம்பராசுரன் 3 குணங்கள் நீசன் என்றும் கூறினர்.

அந்த பத்யத்திலிருந்து, மணிமந்தனைவிட 26 குணங்களால் ஷம்பராசுரன் குறைவானவன் என்பது தெரிகிறது. இந்த பத்யத்தில் சங்கரனுக்கு 10 குணங்களால் ஷம்பரன் அதமன் என்று சொல்கின்றனர். கருட புராணத்திலும்:

ஷம்பரஸ்ய ஸமோ ஞேயோ ஸால்வோ தைத்யேஷு சாதம: |
ஸங்கராஸ்சதஷகுணை: ஷம்பரோ ந்யூன உச்யதே ||
ஷம்பராஸ்ச குணை: ஷட்பிர் ஹிடிம்போ ந்யூன உச்யதே ||
பாணஸ்து தத்ஸமோஞேயோ ஸகீசக இதிஸ்ம்ருத: ||

ஆகிய வாக்கியங்களிலிருந்து மேற்கண்ட அர்த்தமே வருகிறது. இந்த இரு இடங்களிலிருந்தும் ஒரு இடத்தில் 26 குணங்களாலும் என்றும்; இன்னொரு இடத்தில் 10 குணங்கள் குறைவு என்றும் ஷம்பரனின் விஷயத்தில் சொல்லியிருப்பதால், ஒன்றுக்கொன்று வேறுபாடு வருகிறது.

மணிமந்தனே சங்கரன் என்று அனேக கிரந்தங்களால் தெரியவருகிறது. இப்படி இருக்கையில், இந்த வேறுபாட்டினை எப்படி குறைப்பது என்றால், ஷம்பராசுரன் இருவர் என்று சொல்வது. இதற்கு ஆதாரம், த்ரேதா யுகத்தில் தசரத ராஜனுக்கும், ஷம்பரனுக்கும் போர் நடந்த காலத்தில் ஷம்பரனின் மாயையால், தசரதன், மூர்ச்சையாகி விழுந்தபோது, கைகேயி தசரதனை காப்பாற்றி, அதற்காக அவனிடமிருந்து இரு வரங்களைப் பெற்றாள் என்றும், அவள் அந்த வரங்களை அப்போதே கேட்காமல், அடுத்து, ராமனின் பட்டாபிஷேக காலத்தில், ராமனுக்கு வனவாசமும், பரதனுக்கு பட்டாபிஷேகம் என்றும் கேட்டாள். அந்த வாக்கியத்தால், தசரத ராஜனால் கொல்லப்பட்ட ஷம்பராசுரன் ஒருவன் என்று தெரிகிறது.

மற்றும், தாரகாமய யுத்தத்தில் தேவேந்திரனால் கொல்லப்பட்ட ஷம்பரன் ஒருவன் இருக்கிறான். இந்த அர்த்தம் நிர்ணய 11ம் அத்தியாயத்தில்:

அதாத்மஸேனா மவம்ருத்யமானாம் வீக்ஷ்யாஸுர: ஷம்பரனாமதேய: || என்னும் 185ம் ஸ்லோகத்திலிருந்து துவங்கி,

‘வஜ்ரேண வஜ்ரேனி ஜகான ஷம்பரம்’ என்னும் 188ம்
ஸ்லோகத்தின் வரைக்கும் சொல்லப்பட்டிருக்கிறது.

இது மட்டுமல்லாமல், ரதிதேவியை அபகரித்து, ப்ரத்யும்னனால் கொல்லப்பட்ட ஷம்பரன் த்வாபர யுகத்தின் இறுதியில் ஒருவன் இருந்தான். இந்த அர்த்தம் நிர்ணய 18ம் அத்தியாயத்தில்: ‘புரைவ ம்ருத்யவே வதத்தமேவ ஷம்பரஸ்யஹ’ என்னும் 183ம் ஸ்லோகத்திலிருந்து ‘நிஹத்யதம் ஹரே: ஸுத:’ என்னும் 199ம் ஸ்லோகத்தின் வரை, இந்த கதையை சொல்லியிருக்கிறார்.

இதில் தசரத ராஜனால் த்ரேதாயுகத்தில் கொல்லப்பட்ட ஷம்பரனே மறுபடி பிறந்து, தேவேந்திரனால் கொல்லப்பட்டிருக்கலாம். ஆக, இந்திரனால் கொல்லப்பட்ட ஷம்பராசுரன் வேறு. ப்ரத்யும்னனால் கொல்லப்பட்ட ஷம்பராசுரன் வேறு என்பதால், மணிமந்தனைவிட 26 குணங்களால் குறைவான ஷம்பரன், இந்திரனால் கொல்லப்பட்ட ஷம்பராசுரன் என்றும், ப்ரத்யும்னனால் கொல்லப்பட்ட ஷம்பரன், சங்கர அவதாரம் எடுத்த மணிமந்தனே என்றும் தெளிவாக தெரிவதால், மணிமந்தனுக்கும், சங்கரனுக்கும் பேதம் இருக்கிறது என்று சொல்வதற்கு ஆதாரம் இல்லை.

ஒரு வியாக்யானகாரர், மணிமந்தனைவிட ஷம்பரன் 26 குணங்கள் குறைவு என்றும், சங்கரனைவிட ஷம்பரன் 10 குணங்கள் குறைவு என்றும் எழுதியிருக்கிறார். இது யோசிக்க வேண்டிய விஷயம்.

காலநேமியே கம்ஸன் என்னும் விஷயத்தில் ஆதாரம், நிர்ணய 11ம் அத்தியாயம்:

ய உக்ரஸேன: ஸுரகாயக: ஸஜாதோயதுஷ்டேவ ததாபிதேய: ||

தவைவஸேவார்த்தமமுஷ்ய புத்ரோ ஜாதோ ஸுர: காலநேமி: ஸ ஈஷ || 197
கந்தர்வஜீனத்ருமிலேன நாம்னா கம்ஸோ ஜிதோ ஏன வராச்சதீபதி || 201

'முன்னர், உக்ரசேன என்னும் பெயரில் தேவகந்தர்வனாக இருந்தவனே, மறுபடி உக்ரசேன என்னும் பெயரில் யதுகுலத்தில் உனக்கு சேவை செய்யவேண்டி பிறந்தான். அவனுக்கு மகனாக காலநேமி என்னும் தைத்யன் கம்ஸன் என்னும் பெயரில் பிறந்தான். ருத்ரதேவரின் வரபலத்தால் கம்சன் இந்திரனை வென்றான்'.

ஜராசந்தனே விப்ரசித்தி என்னும் விஷயத்தில் ஆதாரம் 'ஸவிப்ரசித்திஸ்ச ஜராஸுதோ பூத்' என்று நிர்ணய 11ம் அத்தியாய ஸ்லோகம்.

மது கைடபர்களே ஹம்ஸ டிபிகர் என்னும் விஷயத்தில் 'ஹதௌபுராயௌ மது கைடபாக்யௌ த்வயைவ ஹம்ஸோ டிபிகஸ்ச ஜாதௌ'. நீ முன்னர் எந்த மது கைடபரை சம்ஹாரம் செய்தாயோ, அவர்களே இப்போது ஹம்ஸ டிபிகர் என்று பூமியில் பிறந்திருக்கின்றனர்.

பாணாசுரனே கீசகன் என்னும் விஷயத்தில் ஆதாரம், நிர்ணய 11ம் அத்தியாயத்தில்
'யோ பாணமாவிஷ்ய மஹாஸுரோபூத் ஸ்தித: ஸனாம்னா ப்ரதிதோபிபாண: ||
ஸகீசகோ நாம பபூவ ருத்ரவராதவத்ய: ஸதம: ப்ரவேஷ்ய ||216

பலிசக்ரவர்த்தியின் மகனான பாணாசுரனிடம், எந்த பாண என்னும் தைத்யன் இருந்தானோ, அவனே இப்போது கீசகன் என்று பிறந்து, ருத்ரதேவரின் வரத்தினால் யாராலும் வெல்லப்பட முடியாதவனாக இருந்தான். அவனை தமஸ்ஸிற்கு அனுப்ப வேண்டியதாகிறது.

பிரகலாதனின் பேரனான பலிசக்ரவர்த்தியிடம் நிலைத்திருந்த பலி என்னும் மஹா தைத்யன், இப்போது சால்வன் என்னும் பெயரில் சால்வ தேசாதிபதியாக பிரம்மதத்தனின் மகனாக பிறந்தான்.

நிர்ணய 11ம் அத்தியாயத்தில்:
ஆவிஷ்ய யோ பலிமஞ்சஸ்சகார ப்ரதீபமஸ்யாஸு ததாத்வயீஷ ||
ஸஜாஸுரோ பலினாமைவபூமௌ ஸால்வோ நாம்னா பிரம்மதத்தஸ்ய ஜாத: ||211

என்னும் வாக்கியத்தால் முந்தைய அர்த்தம் தெளிவாகிறது.

சகுனியே த்வாபர என்னும் விஷயத்தில்: ஷகுனிர் நாம யஸ்த்வாஸீத் ராஜாலோகே மஹாரத: || த்வாபரம் வித்திதம் ராஜன்' என்னும் பாரதத்தின் ஆதிபர்வ வாக்கியம் ஆதாரமாக இருக்கிறது.

**நமுசி இல்வல பாக நாமக**
**ஸமரு பா³ணாத்³யரிகெ³ த³ஷ கு³ண**

**நமுசி நீசனு மூரு கு3ணதி3ந்த3த4ம வாதாபி |**
**குமதிதே4னுக3 நூரு கு3ணதி3**
**ந்த3மரரிபு வாதாபிக3த4மனு**
**வமனதே4னுக3னிந்த3 அர்த்த4 கு3ணாத4மனு கேஷி ||16**

நமுசி, இல்வல, பாக நாமக = இவர்கள் மூவரும் சமம்.
பாணாத்யரிகெ = பாணாசுர முதலானவர்களுக்கு
நமிசி = நமிசி முதலானவர்கள்
தஷகுண = 10 குணங்களால்
நீசனு = நீசர்கள்
நமிசிகிந்தலு = நமிசியைவிட
வாதாபி = வாதாபி என்னும் தைத்யன்
மூரு குணதிந்ததம = 3 குணங்களால் அதமன்
அமரரிபு = தேவஷத்ருவான வாதாபிக்கு
குமதி = கெட்ட புத்தியைக் கொண்ட
தேனுக = தேனும நாமகனு
நூரு குணதிந்த அதமனு = 100 குணங்களால் அதமன்
வமன = பரம நீசனான தேனுகனைவிட
கேஷீ = கேஷி என்னும் தைத்யன்
அர்த்த குணாதமன் = பாதி குணத்தால் நீசன்.

* நமிசி, இல்வல, பாக என்னும் மூவரும் சமர். முன்பு கூறிய பாணாசுரன் முதலானவர்களுக்கு 10 குணங்களால் நமிசி முதலானவர்கள் நீசர்கள்.
* அவர்களைவிட வாதாபி 3 குணங்களால் அதமன்.
* அவனைவிட தேனுகாசுரன் 100 குணங்களால் அதமன். வமனன் என்றால் பரம நீசன் என்று அர்த்தம். வமனம் செய்த (வாந்தி எடுத்த) பதார்த்தங்கள் எவ்வளவு நீசமோ அப்படி, தேனுகாசுரனும் பரம நீசன் எனப்படுகிறான்.

இங்கு வமனன் என்றால் ஒரு அசுரன் என்று சொல்லி, ஒரு வியாக்யானகாரர் அர்த்தம் சொல்லி, தாரதம்யத்தை எழுதியிருக்கிறார். அதற்கு தாரதம்யத்திலோ, கருட புராணத்திலோ எங்கும் ஆதாரம் இல்லை.

கருட புராண வாக்கியம்:
தஸ்மாத்தஷகுணைர் ஹீனோ நமுசிர்தைத்ய ஸத்தம: ||
நமுசீஸ்து ஸம ஞேயௌ பாக இல்வல இத்யுபௌ ||
தஸ்மாச்சத்ரி குணைர் ஹீனோ வாதாபி தானவாதம: ||
தேனுகோ நாம தைத்யஸ்ச தஸ்மாச்சத குணாதம: ||
தஸ்மாத் அர்த்த குணைர்ஹீனோ கேஷீ தைத்யஸ்து விஸ்ருத: ||

இந்த ஆதாரத்தினால்,
* வாதாபியைவிட தேனுகாசுரன் 100 குணங்கள் அதமன் என்றும்,

* அவனைவிட கேஷி அசுரன் அர்த்த குணம் அதமன் என்று தெளிவாகிறது.

பிரம்மதேவர், பரமாத்மனிடம் கூறிய தைத்ய தாரதம்யத்தையே, கருட புராண பிரம்ம காண்டத்தில் சொல்லியிருப்பதால், இது வரை கூறிய வாக்கியங்கள் அனைத்தும் கருட புராண வாக்கியத்திற்கு சரியாக பொருந்துகிறது என்றும், இந்த ஒரு வாக்கியம் மட்டும் கருட புராண வாக்கியத்திற்கு எதிராக சொல்வது என்பது தாசார்யரின் நோக்கம் அல்ல என்பதை அறிந்து, வமன என்றால் பரம நீசன் என்றே அர்த்தம் சொல்லப்பட வேண்டும் என்பது கருத்து.

**மத்தெ கேஷீ நாமக த்ருணா**
**வர்த்த ஸம லவணாஸுரனு ஒ**
**ம்ப3த்து நீசாரிஷ்ட நாமக பஞ்ச கு3ணதி3ந்த3 |**
**தை3த்ய ஸத்தமஹம்ஸ டி3பி3க ப்ர**
**மத்தவேனனு பௌண்ட்3ரகனு ஒ**
**ம்ப4த்து கு3ணதி3ந்த3த4ம மூவரு லவண நாமககெ3 ||17**

மத்தெ = அடுத்து
கேஷி நாமக = கேஷி என்னும் தைத்யன்
த்ருணாவர்த்த = த்ருணாவர்த்த என்னும் தைத்யனும்
சம = சமமானவர்கள்
இவர்களைவிட, லவணாசுரன்,
ஒந்தத்து நீச = 10 குணங்கள் குறைவானவன்
அவனைவிட,
பஞ்சகுணதிந்த = 5 குணங்களால்
அரிஷ்ட நாமக = அரிஷ்ட என்னும் தைத்யன் நீசன்
தைத்யஸத்தம = தைத்யர்களில் ஸ்ரேஷ்டனான
ஹம்ஸ, டிபிக,
ப்ரமத்த = கர்வம் கொண்ட
வேனனு = வேனாத்மகனான
பௌண்ட்ரக வாசுதேவன்
இவரு மூவரு லவண நாமககெ = இவர்கள் மூவரும் லவணாசுரனுக்கு
ஒம்பத்து குணதிந்ததம = 9 குணங்களால் அதமர்கள்.

* கேஷி, த்ருணாவர்த்த இவர்கள் இருவரும் சமம்.
* இவர்களைவிட லவணாசுரன் 10 குணங்களால் அதமன்.
* அவனைவிட அரிஷ்டாசுரன் 5 குணங்களால் அதமன்.
* இவனைவிட ஹம்ஸ, டிபிக, வேனனின் அவதாரமான பௌண்ட்ரக வாசுதேவன்

இவர்கள் மூவரும் 9 குணங்களால் அதமர்கள். இவர்கள் தமக்குள் சமம்.

'பாபோவேன: பௌண்ட்ரகோ வாசுதேவ:' என்னும் நிர்ணய வாக்கியம் வேனாசுரனே பௌண்ட்ரக வாசுதேவன் என்னும் விஷயத்தில் ஆதாரமாக இருக்கிறது. கலி முதலான பெயர்களில் வேறு சில தைத்யர்களும் இருக்கின்றனர் என்று முன்பு பார்த்தோம். அதைப்போலவே இந்த பத்யத்தில் சொல்லியிருக்கும் ஹம்ஸ, டிபிக என்பவர்கள் மது கைடபர்களுடன் சேர்ந்திருந்தவர்கள் அல்லாது, வேறு இருவர் என அறியவேண்டும்.

மது கைடபர்களை 13ம் பத்யத்தில் காலநேமிக்கு 5 குணங்களால் அதமர் என்று பார்த்தோம். அவர்களே ஹம்ஸ டிபிகர் என்று அதே பத்யத்தில் பார்த்ததால், தாரதம்யத்தில் மது கைடபர்களுக்கும் ஹம்ஸ டிபிகர்களுக்கும் வேறுபாடு சொல்வது சாத்தியமில்லை.

இந்த பத்யத்தில் அரிஷ்டாசுரனை விட ஹம்ஸ டிபிகர் நீசர்கள் என்று சொல்லியிருப்பதால், இவர்கள் வேறு அவர்கள் வேறு என்பது நிச்சயமாகிறது.

கேஷீதைத்ய ஸமோஞ்ஞேயோ த்ருணாவர்த்தோ மஹாஸுர: ||
தஸ்மாத்தஷகுணைர்ஹினோ லவணோ தைத்யஸத்தம: ||
தஸ்மாத் பஞ்சகுணைர் ஹினோ஽ரிஷ்டோ நாம மஹாஸுர: ||
தஸ்மான் நவகுணைர் ஹினோ ஹம்ஸோ நாம மஹாஸுர: ||
டிபிகஸ்து ஸமோ ஞ்ஞேயோ தத்ஸம: பௌண்ட்ரகஸ்ம்ருத: ||

என்னும் கருட புராணத்து ஸ்லோக அர்த்தமே இந்த பத்ய அர்த்தமாக இருக்கிறது.

குறிப்பு:
இந்த பத்யத்தில், வேறு சில புத்தகங்களில் பாட பேதம் காணப்படுகிறது. 'லவணாஸுரன ஒம்பத்து' என்றும் 'பௌண்ட்ரகனு எம்பத்து' என்று இருக்கிறது. ஒந்தத்து என்றும் ஒம்பத்து என்றும் கமலாபதி தாசரின் வியாக்யான புத்தகத்தில் பாடம் இருக்கிறது. இந்த பாடம், கருட புராண வாக்கியங்களுக்கு சரியாகப் பொருந்துவதால், இந்த பாடமே சரியென்று தோன்றுகிறது. இந்த கருட புராண ஸ்லோகங்கள் மேலே கொடுக்கப்பட்டுள்ளன. அந்த ஆதாரத்தினாலேயே இதை சொல்லியிருக்கிறோம்.

**ஈஷனெ நானெம்ப$^3$ க$^2$ளது$^3$**
**ஷ்ஷாஸனா வ்ருஷஸேன தை$^3$த்யா**
**க்$^3$ரேஸர ஜராஸந்த$^4$ ஸம பாபிக$^3$ளொளத்$^3$யதி$^4$க |**
**கம்ஸ கூபவிகர்ண ஸரி ரு**
**க்$^3$மி ஷதாத$^4$ம ருக்மிகி$^3$ந்த ம**
**ஹாஸுரனு ஷதத$^4$ன்வகிர்மீரரு ஷதாத$^4$மரு ||18**

ஈஷனெ நானெம்ப = பரமாத்மனே நான் என்று சொல்லும்
கள = பாபியான

துஷ்ஷாசன = துச்சாதனன்
வ்ருஷஸேன,
தைத்யாக்ரேஸர = தைத்யர்களில் சிறந்தவனான
ஜராசந்த சம = இவர்கள் மூவரும் சமம்.
பாபிகளொளத்யதிக = பாபிகளில் மஹா பாபிகள் எனப்படுகிறார்கள்
கம்ஸ, கூபவிகர்ண = இவர்கள்
சரி = சமமானவர்கள்
இவர்களைவிட
ருக்மி ஷதாதம = 100 குணங்களால் ருக்மி அதமன்
ருக்மிகிந்த = ருக்மியைவிட
மஹாஸுரனு = மஹா தைத்யனான
ஷததன்வி, கிர்மீ = இவர்கள்
ஷதாதமரு = 100 குணங்களால் குறைவானவர்கள்.

* பாபியான துச்சாதனன், வ்ருஷஸேனன், ஜராசந்தன், இவர்கள் மூவரும் சமமானவர்கள்.
* கம்சன், கூபகர்ணன் இவர்கள் சமமானவர்கள்.
* இவர்களைவிட ருக்மி, 100 குணங்கள் குறைவானவன்.
* அவனைவிட ஷததன்வி, கிர்மி இருவரும் 100 குணங்களால் குறைவானவர்கள்.

**மதி$^{3}$ரபானீ தை$^{3}$த்யக$^{3}$ணதொ$^{3}$ள**
**க$^{3}$த$^{4}$மரெனிபரு காலிகேயரு**
**அதி$^{4}$கரிகெ$^{3}$ ஸமரஹரு தே$^{3}$வாவேஷ ப$^{3}$லதி$^{3}$ந்த$^{3}$ |**
**வத$^{3}$ன பாணி பாத$^{3}$ ஸ்ரோத்ரிய**
**குத$^{3}$ உபஸ்த$^{2}$ க்$^{3}$ராண த்வக்ரஸ**
**கதி$^{4}$பதை$^{3}$த்யரு நீசரெனிபரு காலிகேயரிகெ$^{3}$ ||19**

மதிரபானி தைத்யகணதொளு = மத்யபானம் செய்யும் தைத்ய கணத்தில்
காலிகேயரு,
அதமரெனிபரு = அதமர் எனப்படுகிறார்கள்.
தேவாவேஷ பலதிந்த = இவர்களில் தேவதா ஆவேசம் அதிகம் இருந்த காரணத்தால்
அதிகரிகெ சமரஹரு = தம்மைவிட உத்தம கக்ஷையில் இருந்தவர்களுக்கு சமம் எனப்படுகின்றனர்.
வதன = வாக்கிற்கு அபிமானி
பாணி = கைகள்,
பாத = கால்கள்
ஸ்ரோத்ரிய = காதுகள்
குத உபஸ்த = மல மூத்ர இந்திரியங்கள்
க்ராண = மூக்கு
த்வக் = சர்மம்

ரஸன = நாக்கு, இவற்றிற்கு
அதிப = அபிமானிகளான தைத்யர்
காலிகேயரிகெ = காலிகேயர் என்னும் தைத்யனுக்கு
நீசரெனிபரு = ஒவ்வொருவரும் 100-100 குணங்களால் அதமர் எனப்படுகின்றனர்.

வதனாபணி என்னும் பத்யத்தால் தாசார்யர் சொல்லியிருக்கும் இந்திரியாபிமானிகளின் தாரதம்யத்தை இந்த பத்யத்தில் சொல்லிய கிரமத்தில் - முகம், கை, பாதம் என எடுத்துக் கொண்டால், கருட புராண வாக்கியத்திற்கும், தாரதம்ய சிந்தாமணி என்னும் கிரந்தத்திற்கும் வேறுபாடு வருகிறது.

தாசார்யரின் பத்யத்தில் சந்தி உட்கார்வதற்காக வதனவாணி என பெயர்களை சொல்லி, முக்ய இந்திரியாபிமானி தைத்யர்கள், காலிகேயனுக்கு நீசன் என்று சொல்கிறார். இதற்கான அர்த்தத்தை கருட புராண வாக்கியத்திற்கேற்ப, இந்த பதங்களை புரிந்து கொள்ளவேண்டும். எப்படியெனில், கருட புராண வாக்கியம்:

தஸ்மாச்சத குணைர்ஹினோ சித்தமான்யஸுரோ மஹான் ||
ஷரீரஸ்யாபிமானீது தஸ்மாச்சத குணாதம: ||
தஸ்மாச்சதகுணைர் ஹினோ ஹஸ்தமான்யஸுரோ மஹான் ||
தஸ்மாச்சதகுணைர்னோ பாதமான்ய ஸுரோமஹான் ||
ஸ்ரோத்ரேந்த்ரியாபிமானீது தஸ்மாச்சத குணாதம: ||
சக்ஷுரிந்திரியமானீது தஸ்மாச்சத குணாதம: ||
தஸ்மாச்சத குணைர்ன்யூனோ ஸ்பர்ஷமான்யஸுரோ மஹான் ||
தஸ்மாச்சத குணைர் ந்யூனோ க்ராணமான்ய ஸுரோ மஹான் ||
தஸ்மாச்சதகுணைர் ந்யூனோ வாங்மனீஹ்யஸுரோ மஹான் ||
தஸ்மாச்சதகுணைர் ந்யூனோ ஷிஷ்னமான்யஸுரோ மஹான் ||

* காலகேயரைவிட சித்தாபிமானியான தைத்யர்கள் 100 குணங்கள் குறைவு.
* அவனைவிட தேஹாபிமானி தைத்யர்கள் 100 குணங்கள் குறைவு
* அவனைவிட ஹஸ்தமானி தைத்யர்கள் 100 குணங்கள் குறைவு
* அவனைவிட பாதமானி தைத்யர்கள் 100 குணங்கள் குறைவு
* அவனைவிட ஸ்ரோத்ரேந்த்ரியாபிமானி தைத்யர்கள் 100 குணங்கள் குறைவு
* அவனைவிட சக்ஷுரபிமானி தைத்யர்கள் 100 குணங்கள் குறைவு
* அவனைவிட ஸ்பர்ஷமானி தைத்யர்கள் 100 குணங்கள் குறைவு
* அவனைவிட க்ராணமானி தைத்யர்கள் 100 குணங்கள் குறைவு
* அவனைவிட வாக்யாபிமானி தைத்யர்கள் 100 குணங்கள் குறைவு
* அவனைவிட ஷிஷ்னாபிமானி தைத்யர்கள் 100 குணங்கள் குறைவு

பத்யத்தில் இருக்கும் சொற்களை இப்படியாக பொருந்திக் கொள்ளவேண்டும் என்பது கருத்து. சில தைத்யர்களின் தாரதம்யத்தை சில இடங்களில் மேலும் கீழுமாக மாற்றி சொல்லியிருக்கலாம். அதன் காரணம் என்னவெனில்:

அதமானாந்து தைத்யானாம் உத்தமேஸ்தாம்யமுச்யதே ||
தத்ராவேஷாச்சவிஞ்ஞேயம் தேவானாம் நாத்ரஸம்ஷய: ||

அதமர்களான தைத்யர்களை சில இடங்களில் உத்தம கணத்தில் சேர்த்திருப்பர். அங்கு தேவதா ஆவேச பலத்தினால் அப்படி சொல்லியிருக்கிறார்கள் என்று அறியவேண்டும், என்னும் கருட புராண வாக்கியத்தால், மேல் கீழ் என சொல்லியிருக்கும் வேறுபாட்டினை பரிகாரம் செய்யவேண்டும்.

**ஞான கர்மேந்தி$^{3}$ரியக$^{3}$ளிகெ$^{3}$ அபி$^{4}$**
**மானி கல்யாத்$^{3}$யகி$^{2}$ல தி$^{3}$திஜரு**
**ஹீனகர்மவ மாடி$^{3}$ மாடி$^{3}$ஸுதிஹரு ஸர்வரொளு |**
**வாணி பா$^{4}$ரதி க$^{1}$மலப$^{4}$வ பவ**
**மானரிவரச்சி$^{2}$ன்ன ப$^{4}$க்தரு**
**ப்ராண அஸுராவேஷரஹிதரு ஆக$^{2}$ணாஷ்மஸம ||20**

ஞான கர்மேந்திரியகளிகெ = கண் முதலான ஞானேந்திரியங்கள், வாக் முதலான கர்மேந்திரியங்கள் இவற்றிற்கு
அபிமானி = அபிமானிகளான
கல்யாதி = கலி முதலான
அகிள திதிஜரு = அனைத்து தைத்யர்களும்
ஹீனகர்மவ மாடி மாடிசுத = பாப கர்மங்களை செய்து, ஜீவர்களிடமிருந்தும் செய்வித்து,
இருதிஹரு சர்வரொளு = அனைவரிலும் இருக்கின்றனர்.
வாணி = சரஸ்வதிதேவி
பாரதி = பாரதிதேவி
கமலபவ = பிரம்மதேவர்
பவமானரு = வாயுதேவர், இவர்கள் அனைவரும்
அச்சின்ன பக்தரு = எப்போதும் ஒரே மாதிரியாக இருக்கும் பக்தர்கள்
ப்ராண = பிராணதேவர் முதலான நால்வரும்
அசுராவேஷரஹிதரு = அசுர ஆவேசம் இல்லாதவர்கள்
ஆகணாஷ்மசம = தங்கத்தின் சிறப்பைக் காட்ட உரைகல் இருப்பதைப்போல, பகவந்தனின் குணங்களை வெளிப்படுத்தும் விஷயத்தில், வாயுதேவர் உரைகல்லைப் போல இருக்கிறார்.

ஞானேந்திரிய, கர்மேந்திரியங்களுக்கு அபிமானிகளான தைத்யர்கள் அனைவரிலும் இருந்து, பாப கர்மங்களை செய்து செய்விக்கின்றனர். தத்வாபிமானி தேவதைகள் தேகத்தில் இருக்கையில், இவர்கள் (தைத்யர்கள்) பாவ கர்மங்களை செய்விக்கின்றனர்.

அது எப்படியெனில், ருத்ரதேவர் முதலான தேவதைகள் அனைவரும் கலி முதலானவர்களால் வழிநடத்தப்பட்டு, அவர்களும் பாப கர்மங்களை அனுமதிக்கின்றனர்.

கருட புராண வாக்கியம்:
கல்யாத்யை: ப்ரேரிதா: ஸர்வே ருத்ராத்யாப் யதிகாரிண: ||
கதாசித்ஸூவிருத்தஞ்ச குர்வந்தி தவஸத்தம ||

கலி முதலானவர்களால் வழிநடத்தப்பட்டு, ருத்ராதிகள் சில காலங்களுக்கு உனக்கு எதிரான செயல்களை செய்வதுண்டு என்று சொல்கின்றனர். சரஸ்வதி, பாரதி, பிரம்மதேவர், வாயுதேவர் இவர்களுக்கு மட்டும் அசுர ஆவேசம் இல்லை.

ப்ராணஸ்ய நாசுராவேஷோ ஆகணாஷ்மஸமோஹிஸ: ||

ப்ராணதேவருக்கு அசுர ஆவேசம் இல்லை. அவர் பகவத் ஸ்வரூபத்தை காட்டுவதில் உரைகல்லாக இருக்கிறார். என்னும் பாகவத 11ம் ஸ்கந்த தாத்பர்ய வாக்கியத்திலிருந்து மேற்கண்ட அர்த்தம் வருகிறது.

**ஹுதவஹாக்ஷாத்[3] யமரரெல்லரு**
**யுதரு கல்யாவேஷ விதி[4] மா**
**ருத ஸரஸ்வதி பா[4]ரதியர வதாரதொ[3]ளகி[3]ல்ல |**
**க்ருத புடாஞ்ஜலியிந்த[3] தன்னய**
**பிதன ஸம்முக[2]த[3]ல்லி நில்லுத**
**நுதிஸி பி[3]ன்னயிஸித[3]னு தன்னொளு க்ருபெய மாடெ[3]ந்து[3] ||21**

ஹுதவஹாக்ஷாதி = அக்னி நேத்ரரான ருத்ரதேவரே முதலான
அமரரெல்லரு = தேவதைகள் அனைவரும்
கல்யாவேஷயுதரு = கலியின் ஆவேசம் உள்ளவர்கள்
விதி = பிரம்மதேவர்
மாருதி = வாயுதேவரின் அவதாரமான ஹனுமத் பீம மத்வாதிகள்
சரஸ்வதி பாரதியர அவதாரதொளகெ = பாரதியரின் அவதாரமான திரௌபதி முதலானவர்களிலும்
இல்லா = கலி பிரவேசம் இல்லை
க்ருதபுடாஞ்சலியிந்த = பிரம்ம தேவர் கை குவித்து
தன்னய பிதன = தன் தந்தையின்
சம்முகதல்லி நில்லுத = எதிரில் நின்று
தன்னொளு = தனக்கு
க்ருபெய மாடெந்து = கருணையைக் காட்டு என்று
நுதிஸி பின்னயிஸிதனு = போற்றி வணங்கி கேட்டுக் கொண்டார்

ருத்ராதி அனைத்து தேவதைகளிலும் கலியின் ஆவேசம் உள்ளது. வாயுதேவர், சரஸ்வதி, பாரதி இவர்களுக்கு மூலரூபத்திலும், அவதாரங்களிலும் கலி பிரவேசம் இல்லை. இந்த விஷயங்கள் அனைத்தையும், பிரம்மதேவர் பரமாத்மனை வணங்கும்போது, தைத்யர்களின் தாரதம்யத்தை சொல்லியவாறு, பின்னர் கைகுவித்து வணங்கி நின்று, 'அச்சின்ன பக்தனான என்னிடம் கருணை காட்டு' என்று வேண்டிக் கொண்டார். இவை அனைத்தும் பின்வரும் கருட புராண வாக்கியத்தால் புரிகிறது.

த்வயிஹ்யச்சின்ன பக்தாய தயாம்குரு மஹாப்ரபோ ||
இதி ஸ்துத்வா ஹரிம் பிரம்மா ப்ராஞ்சலி: ஸ்தித அக்ரத: ||

ருத்ராதி தேவதைகளுக்கு கலி பிரவேசம் உண்டு என்றும், வாயு முதலான நால்வருக்கு மட்டும் அது இல்லை என்னும் விஷயத்தின் ஆதாரத்தைப் பற்றி சொல்ல வேண்டியதாகிறது. நிர்ணய 18ம் அத்தியாயத்தில்:

ஷுத்தே பாகவதே தர்மே நிரதோ யத்வ்ருகோதர: |
என்னும் 4ம் ஸ்லோகத்தில் துவங்கி,

தஸ்மாதேகோ வாயுரேவ தர்மே பாகவதே ஸ்தித: ||
லட்சுமி: சரஸ்வதிச்சேதி பரஷுக்ல த்ரயம் ஸ்ம்ருதம் ||

என்னும் 27ம் ஸ்லோகத்தின் வரைக்கும், இந்த விஷயத்தை சொல்லியிருக்கிறார்.

கிரந்தம் பெரிதாகிவிடும் என்னும் பயத்தால், அந்த ஸ்லோகங்களை எழுதாமல், அவற்றின் அர்த்தத்தை மட்டும் இங்கே கொடுக்கிறோம்.

சுத்தமான பாகவத தர்மத்தை பின்பற்றுபவர் பீமசேனதேவர் மட்டுமே. ஆகையால், அவர் எந்த காலத்திலும் காம்ய கர்மங்களை பின்பற்றியவரில்லை. எந்த விதத்திலும், தேவதைகளிடமோ, மனுஷ்யர்களிடமோ அவர் எதையும் யாசித்ததில்லை. எந்தவொரு பலனை எதிர்பார்த்தும், ஸ்ரீஹரியை அவர் எந்த காலத்திலும் வணங்கியதில்லை.

ஏகசக்ர நகரத்தில் இருந்து யாசகம் செய்த காலத்திலும், வணிகர்களிடமிருந்து அரசர்கள் கப்பம் பெறுவதைப் போல, அவரும் ஹுங்காரம் செய்து பிக்ஷை பெற்றுக் கொண்டிருந்தார். அன்ய தேவதைகளை அவர் என்றைக்கும் நமஸ்காரம் செய்தவரில்லை. கிருஷ்ணனைத் தவிர வேறு யாரையும் அவர் பூஜித்ததில்லை.

பரமாத்மனுக்கு எதிரான செயல்களை அவர் என்றும் செய்தவரில்லை. போர்க்களத்தில், நிராயுதபாணிகள் மேல் யுத்தம் செய்தவரில்லை.அவைஷ்ணவனான துரியோதனன் இறந்த பிறகு, அவனின் குடும்பத்திற்காக என, திருதராஷ்டிரன் சிறிது செல்வத்தைக் கேட்டபோது, ஒரு

காசுகூட பீமசேனதேவர் கொடுக்கவில்லை. இறுதிச் சடங்குகளை செய்வதற்கும் அனுமதி கொடுக்கவில்லை.

துரியோதனாதிகளுக்கு அன்பு காட்டவில்லை. அவைஷ்ணவருடன் என்றும் நட்பு பாராட்டியதில்லை. கிருஷ்ணன் எதிரில் இல்லாதபோதும், யாராவது பரமாத்மனை தூஷித்தால், அவரின் நாக்கினை அறுத்து வந்தார். தர்ம ஞான விஷயத்தில் அவருக்கு என்றும் சந்தேகமே இருந்ததில்லை.

தன் வித்யையை வைத்து அவர் பிழைக்கும் வழியை மேற்கொள்ளவில்லை. ஆகையால், நஹுஷ ராஜன் பாம்பாக வந்து பீமசேனரை விழுங்குவதற்கு வந்தபோதும், யமதர்மன், யக்ஷ ரூபத்தில் வந்தபோதும், தம் உயிரை காப்பாற்றிக் கொள்வதற்காக, அவர்கள் கேட்ட கேள்விகளுக்கு பதில் கூறவில்லை. அஸ்திராபிமானி தேவதைகளின் பிரார்த்தனை ரூபமான அஸ்திர யுத்தத்தை செய்யவில்லை. கிருஷ்ணனின் ஆணைக்கேற்ப, அஸ்வத்தாமாசார்யர் ஏவிய அஸ்திரங்களுக்கு பதில் அஸ்திரங்களை ஏவி, அவரின் அஸ்திரங்களை அமைதிப்படுத்தினார்.

அலம்ப என்னும் அசுரன் மறைந்திருந்து போர் புரிந்தபோது, கிருஷ்ணனின் ஆணைக்கேற்ப அஸ்திர யுத்தத்தில் அவனை வென்றார். இஷ்டம் இல்லாத பீமசேனதேவரின் கையால், கிருஷ்ணன் அஸ்திர யுத்தத்தை ஏன் செய்வித்தான் என்றால், அஸ்வத்தாமாசார்யருக்கு சமமாக அஸ்திர யுத்தத்தை செய்ய வேண்டுமெனில், அர்ஜுனனைத் தவிர வேறு யாரும் இல்லை என்ற சொல் இருந்தது. பீமசேனதேவர் அஸ்திர யுத்தத்தில் தேர்ந்தவர் அல்ல என்றும் பேச்சு இருந்தது. அவர், சர்வக்ஞர் என்று மக்களுக்கு காட்டுவதற்காக, அஸ்வத்தாம மற்றும் அலம்ப இவர்கள் இருவருடன் அஸ்திர யுத்தம் செய்யுமாறு ஸ்ரீகிருஷ்ணன் ஆணையிட்டான்.

அப்போதும், அஸ்திராபிமானி தேவதைகளுக்கு ஆணையைக் கொடுத்து போர் புரிந்தாரே தவிர, அஸ்திராபிமானிகளை அவர் வேண்டவில்லை. தேவதைகள் பிரத்யட்சமாக வந்தபோதும், ஸ்ரீகிருஷ்ணன் அவர்களை வணங்கு என்று சொன்னபோதும், அவர் அந்தர்யாமியான விஷ்ணுவிற்கு நமஸ்காரம் செய்தார்.

இந்த பீமசேனதேவரை அனுசரித்து பாரதிதேவியர் மட்டுமே இருந்தார். தன் நலனுக்காக, திருதராஷ்டிரனிடமிருந்தும் அவர் வரம் பெறவில்லை. மஹா ஆபத்து காலங்களிலும் துரியோதனாதிகளை சபிக்கவில்லை. எந்த காலத்திலும் மனஸா, வாசா, ஸ்ரீபரமாத்மனுக்கு விரோதமான காரியங்களை அவர் செய்யவில்லை.

மற்ற அனைவரும் சின்ன பக்தர்கள் எனப்படுகின்றனர். அதாவது, நடுவில் பக்திக்கு களங்கம் வருமாறு இருந்தனர். அது எப்படியெனில்:

ஸ்யமந்தக மாணிக்கத்தின் விஷயத்தில், கிருஷ்ணன் தன்னிடம் இல்லை என்று பொய் சொன்னதாக நினைத்து, பலராமன் கிருஷணனை எதிர்த்தான். பிராமணனின் குழந்தையை காப்பாற்றிய காலத்தில் அர்ஜுனன், ஸ்ரீகிருஷ்ணனை புறக்கணித்தான்.

பிரத்யும்ன, உத்தவ, ஸாம்ப, அனிருத்த முதலானவர்கள் அனைவரும் சுபத்திரையை அர்ஜுனனுக்கு கொடுக்கும் விஷயத்தில், ஸ்ரீகிருஷ்ணனுக்கு சம்மதம் என்று அறிந்தாலும், அந்த விஷயம் பிடிக்காமல் அர்ஜுனனுடன் போரிட்டு அவனை தடுத்தனர்.

ஒரு சமயம் சாத்யகி, அர்ஜுனன் கிருஷ்ணனுக்கு சமம் என்று அறிந்தான். தர்மராஜன் கிருஷ்ணனை சாதாரண மனிதன் என்று நினைத்து, ஜராசந்தனின் விஷயத்தில் பீமசேனாதிகளை அனுப்ப பயந்தான். கிருஷ்ணன் பாண்டவர்களுக்கு தூதனாக துரியோதனின் சபைக்குப் போகும்போது, துரியோதனன் கிருஷ்ணனை கட்டிப் போடுவான் என்னும் சந்தேகத்துடன் விதுரன், கிருஷ்ணனை அந்த சபைக்குப் போக வேண்டாம் என்றான்.

கப்பத்தைக் கொடு என்று நகுலன் கிருஷ்ணனுக்கு சொல்லி அனுப்பினான். குரு (kuru) குலம் அழிந்ததற்கு கிருஷ்ணனே காரணம் என்று சகதேவன் நினைத்தான். தேவகி வசுதேவர் கிருஷ்ணனை மனிதன் என்று நினைத்தனர். பீஷ்மாசார்யர் பரசுராமதேவரை தூஷித்தார். அவருடன் போர் புரிந்தார். த்ரோணாசார்யர், கர்ண, அஸ்வத்தாமாசார்யர், க்ருபாசார்யர், இவர்கள் அனைவரும் கிருஷ்ணனைக் கொல்ல வேண்டும் என்று நினைத்தனர்.

ருத்ர முதலான தேவதைகளும், சில நேரங்களில், ஸ்ரீபரமாத்மனுடன் விரோதம் செய்தனர். இப்படி இருக்கையில், ரிஷிகள், மனுஷ்யர், கந்தர்வர்களின் விஷயத்தில் இவர்கள் அனைவரும் சின்ன பக்தர்கள் என்று சொல்வதில் என்ன பிரச்னை? ஜென்ம ஜென்மாந்தர அஞ்ஞானத்தால் பரமாத்மனை அவ்வப்போது புறக்கணித்து வந்தனர்.

ஆகையால், வாயுதேவர் ஒருவரே சுத்த பாகவத தர்மத்தை பின்பற்றுபவர் என்று அறியவேண்டும். மற்றும் லட்சுமிதேவியர், சரஸ்வதி தேவியர் இவர்கள் மூவரும் பரசுக்ல த்ரயர்கள் என்று பெயர் பெற்றனர். அதாவது, அசுர ஆவேசம் இல்லாத சுத்த தர்மம் உள்ளவர்கள். அவிச்சின்ன பக்தர்கள் என்று அறியவேண்டும். வாயுதேவரை சொன்ன பிறகு, பிரம்மதேவரையும் சொன்னதாக ஆயிற்று. சரஸ்வதி தேவியரை சொன்னதால், பாரதிதேவியரையும் சொன்னதாக ஆயிற்று. என்னும் நிர்ணய வாக்கியங்களால் பிரம்ம வாயு சரஸ்வதி பாரதி ஆகியோர் அவிச்சின்ன பக்தர்கள் என்றும், இவர்களில் கலி ஆவேசம் இல்லை என்றும், ருத்ராதி மற்ற அனைவரிலும் கலி பிரவேசம் உண்டு என்றும் தெளிவாக புரிகிறது.

**த்³வேஷிதை³த்யர தாரதம்யத³**

**தூ3ஷணெயு பூ4ஷணக3ளென்னதெ3**
**தோ3ஷவெம்பு3வ த்3வேஷி நிஸ்சய இவர நோட3ல்கெ ।**
**க்லேஷக3ளனைது3வனு ப4ஹுவித3**
**ஸம்ஷயவு ப3ட3ஸல்ல வேத3**
**வ்யாஸ க3ருட3புராணத3லி பேளித3ரு ருஷிக3ளிகெ3 ।।22**

த்வேஷி = பகவத் த்வேஷியரான
தைத்யர தாரதம்யத = தைத்யர்களின் தாரதம்யத்தை
தூஷணெயு = தூஷணை என்பது
பூஷணகளென்னதெ = தாரதம்யத்தின்படி தைத்யர்களை தூஷிக்க வேண்டும் என்பதை அறியாமல்
தோஷவெம்புவ = தைத்யர்களை தூஷிப்பது தோஷம் என்று சொல்பவன்
இவர நோடல்கெ = இந்த தைத்யர்களை பார்ப்பதற்கு; அதாவது, அவர்கள் எப்படி பகவத் த்வேஷிகளோ அப்படியே தைத்யர்களை தூஷிப்பது பாவம் என்று சொல்பவனும்கூட பகவத் த்வேஷியே என்பது நிச்சயம்.
கருட புராணதலி = கருட புராணத்தில்
வேதவியாஸ = வேதவியாசதேவர்
ரிஷிகளிகெ = ரிஷிகளுக்கு
பேளிதரு = கூறினார்.

தேவதைகளை ஸ்தோத்திரம் செய்வது எப்படி புண்ய சாதனையோ, அப்படியே பகவத் த்வேஷிகளான தைத்யர்களை தூஷித்தால் பாவம் என்று யார் சொல்கிறானோ அவனும் ஒரு தைத்யனைப் போல, பகவத் த்வேஷியே என்று சந்தேகமில்லாமல் அறியவேண்டும். இவனுக்கும், தைத்யர்களுக்கு கிடைக்கும் கஷ்டங்களே கிடைக்கின்றன.

தைத்யனிந்தா ந குர்வந்தி தேபிதத்பல பாகின: -- என்னும் கருட புராண வாக்கியமே இதற்கு ஆதாரம். இந்த விஷயங்களை கருட புராணத்தில் வேதவியாச தேவர் சொல்லியிருக்கிறார். ஸௌனகாதிகளுக்கு வியாச சிஷ்யரான சுதர் இவற்றை உபதேசித்தார். அதையே தாசார்யர் இங்கு சொல்லியிருக்கிறார் என்பது கருத்து.

**ஜாலி நெக்கி3லு க்ஷுத்3ரஷிலெ ப3ரி**
**கா3லபுருஷன பா3தி4பவு ஸ**
**ம்மோளகெ3ய மெட்டித3வகு3ண்டெ கண்டகக3ள ப4ய ।**
**சேளு ஸர்ப்பவ கொ3ந்த3வார்த்தெய**
**கே1ளி மோதி3பகி3ல்ல அக4யம**
**நாளுக3ள ப4யவில்ல தை3த்யர நிந்தி3ஸுவ நரகெ3 ।।23**

ஜாலி = முட்கள் / புற்கள்
நெக்கிலு = கூரான முட்கள்

க்ஷுத்ரஷிலெ = சிறிய கற்கள் இவைகள்
பரிகால புருஷன = வெறும் காலில் நடப்பவனை
பாதிபவு = பாதிக்கின்றன (குத்துகின்றன)
சம்மோளகெய = காலணிகளை
மெட்டிதவகுண்டே = அணிந்து நடப்பவனுக்கு
கண்டககள பய = மேற்கூறிய கல், முள் ஆகியவற்றைப் பற்றி பயம் உண்டா?
சேளு ஸர்ப்பவ கொந்த வார்த்தெய கேளி = தேள், பாம்பு ஆகியவற்றைக் கொன்ற விஷயத்தை கேள்விப்பட்டு
மோதிபகெ = மகிழ்ச்சி அடைபவனுக்கு
அகவில்ல = பாவம் இல்லை
அதைப்போல
தைத்யர நிந்திஸுவ நரகெ = தைத்யர்களை நிந்திக்கும் மனிதனுக்கு
யமனாளுகள பயவில்ல = யமதூதர் வந்து தன்னை இழுத்துப் போவர் என்னும் பயம் என்றும் இல்லை.

முட்கள், புற்கள், கூரான முட்கள், சிறிய கற்கள் ஆகியவை, வெறும் காலில் நடப்பவனை மிகவும் துன்புறுத்துகின்றன. ஆனால், காலணிகளை அணிந்து நடப்பவனுக்கு இவற்றைப் பற்றிய பயம் எதுவும் இல்லை.

அதைப்போலவே, பரமாத்மனின் மகிழ்ச்சிக்காக அவனின் த்வேஷிகளை தூஷிப்பதும் நம்மை பாதிக்காது. ஒருவரைத் திட்டுவதால் வரும் பாவம், கல், முள்ளுக்கு சமமானது. காலணிகளால் முட்களை மிதிப்பது போல, பகவத் த்வேஷிகளான தைத்யர்களின் தாரதம்ய ஞானம் என்னும் காலணி அணிந்துகொண்டு மிதித்தால், தூஷணை சம்பந்தமான பாவத்தைப் போலிருக்கும் முட்கள் பாதிப்பதில்லை என்று கருத்து.

தைத்யரின் தாரதம்ய ஞானம், காலணிக்கு உதாரணம். அவரின் த்வேஷ ரூபமான பாவம் பிரச்னை போன்றது. தாரதம்யத்தை அறிந்து, அதன்படி அவர்களை தூஷிப்பது பாப கர்மம் அல்ல என்பது கருத்து.

பாம்பு, தேள் ஆகியவற்றைக் கொன்ற விஷயத்தைக் கேட்டால், எத்தகைய சாதுவானாலும், மகிழ்வர். அதனால் பாவம் இல்லை. பாகவத 7ம் ஸ்கந்தத்தில் பிரகலாதனின் ஸ்தோத்திரத்தில்: 'மோதேதஸாதுரபி வ்ருஸ்சிக ஸர்ப்ப ஹத்யா' -- 'நம் தந்தையான ஹிரண்யகசிபுவைக் கொன்ற விஷயத்தில் மக்கள் அனைவரும் மகிழ்ச்சி அடைகின்றனர். ஆகையால், நானும்கூட மகிழ்கிறேன். தந்தை இறந்ததற்கு மகன் மகிழ்வானா என்றால், சாதாரணமான பாம்பு, தேள் ஆகியவற்றைக் கொன்றால், துஷ்ட பிராணி போயிற்று என்று மகிழ்வோம். அப்படியிருக்கையில், நம் தந்தையானவர், சாதாரண பாம்பு, தேள் அல்ல. உலகத்தையே அழிப்பவனாக இருந்தார். அவர் மரணமடைந்ததால், மக்கள் மகிழ்வர். ஆகையால், நானும் மகிழ்வேன்' என்கிறார்.

ஆகவே, பாபிகளான தைத்யரின் த்வேஷம் செய்பவனுக்கு நரக பயம் இல்லை என்பது கருத்து.

**புண்யகர்மவ புஷ்கராதி$^{3}$ ஹி**
**ரண்யக$^{3}$ர்பாந்தர்க$^{3}$த பி$^{3}$ர**
**மண்ய தே$^{3}$வனிக$^{3}$ர்ப்பிஸுதலிரு பாபகர்மக$^{3}$ள |**
**ஜன்யது$^{3}$க்க$^{2}$வ கலிமுகா$^{2}$த்$^{3}$யரி**
**கு$^{3}$ண்ணலீவனு ஸகலலோக ஷ**
**ரண்ய ஷாஷ்வத மிஸ்ரஜனரிகெ$^{3}$ மிஸ்ரப$^{2}$லவீவ ||24**

புண்ய = புண்ய கர்மங்களை
கர்மவ = பாவ கர்மங்களை
புஷ்கராதி = புஷ்கரனில் துவங்கி
ஹிரண்யகர்ப்பாந்தர்கத = பிரம்மதேவரின் வரை தாரதம்யத்தின்படி, தேவதைகளை ஸ்மரணை செய்து இவர்களின் அந்தர்யாமியான
பிரம்மண்ய தேவனிகெ = பிராமணரில் விஸ்வாசம் உள்ளவர் பிரம்மண்யர். இவர்களுக்கு தலைவனான ஸ்ரீஹரிக்கு
அர்ப்பிசுதலிரு = அர்ப்பித்துக் கொண்டிரு
புண்ய பலன்களை இரு மடங்காக்கி உனக்கு சுகத்தைத் தருவான்.
பாபகர்மகள = பாப கர்மங்களிலிருந்து
ஜன்ய = வந்த துக்கங்களை
கலிமுக்யாத்யரிகெ = கலி முதலானவர்களுக்கு
உண்ணலு = அனுபவிக்க
ஈவனு = கொடுக்கிறான்
ஸகலலோக ஷரண்ய = அனைத்து பிராணிகளாலும் வணங்கப்படுபவனான
ஷாஷ்வத = நிரந்தரமானவனான ஸ்ரீஹரி
மிச்ரஜனரிகெ = மத்யம மனுஷ்ய ஜீவர்களுக்கு
மிஸ்ரபலவீவ = சுக துக்க மிஸ்ரமான பலன்களைக் கொடுக்கிறான்.

மக்கள் செய்த புண்ய பாப கர்மங்களை தினந்தோறும் புஷ்கர முதல் பிரம்மதேவர் வரைக்கும் தாரதம்யத்தின்படி தேவதைகளை சிந்தித்து, அவர்களின் அந்தர்யாமியான ஸ்ரீ பரமாத்மனை ஐக்ய சிந்தனை செய்து, அவனுக்கு சமர்ப்பணம் செய்யவேண்டும்.

புண்யங்களை பரமாத்மன் ஏற்றுக்கொண்டு, தத்வாபிமானிகளுக்குக் கொடுத்து, ஜீவர்களுக்கும் இரு மடங்காக்கி பலன்களைக் கொடுக்கிறான். பாபங்களின் பலன்களை, கலி முதலானவர்கள் அனுபவிப்பதற்காக கொடுக்கிறான். மத்யமர்களுக்கு சுக துக்க மிஸ்ரமான பலன்களைக் கொடுக்கிறான்.

**த்ரிவித$^{4}$ கு$^{3}$ணக$^{3}$ளமானி ஸ்ரீபா$^{4}$**
**ர்க்க$^{3}$விரமண கு$^{3}$ணி கு$^{3}$ணக$^{3}$ளொளக$^{3}$வ**

**ரவர யோக்³யதெ கர்மக³ளனனுஸரிஸி கர்மப²ல |**
**ஸ்வவஷராத³ மராஸுரர க³ண**
**கவதி⁴ இல்லதெ³ கொடு³வ தே³வ**
**ப்ரவர த்ரிஜக3ன்னாத²விட்ட²ல விஷ்வவ்யாபகனு ||25**

த்ரிவித குணகளமானி = ஸத்வ ரஜஸ் தமோ குணங்களின் அபிமானியான ஸ்ரீ பூ துர்காத்மகனான
ஸ்ரீபார்க்கவிரமண = ப்ருகு ரிஷிகளில் புத்ரியாக அவதரித்தால் பார்க்கவி என்ற பெயருள்ள ஸ்ரீ லட்சுமிதேவியருக்கு பதியான ஸ்ரீபரமாத்மன்
குணி = சத்வரஜஸ் தமோ குணாத்மகரான; அதாவது, சாத்விகர், ராஜஸர், தாமஸர் என்னும் மூன்று வித பிராணிகளிலும்
குணகளொளு = மூன்று குணங்களிலும் இருந்து
அவரவர யோக்யதெ கர்மகளனனுசரிஸி = அவரவர்களின் யோக்யதை, கர்மங்களை அனுசரித்து
ஸ்வவஷராத = தன் அதீனத்தில் இருக்கும்
அமராசுர கணகெ = தேவ மனுஷ்ய தைத்ய கணங்களுக்கு
அவதி இல்லதெ = தாமதமாக இல்லாமல் (அதாவது உடனடியாக)
கர்மபல = கர்ம பலன்களை
விஷ்வ வியாபகனு = பிரபஞ்சத்தில் அனைத்து இடங்களிலும் வியாப்தனான
தேவப்ரவர = தேவஸ்ரேஷ்டரான பிரம்மாதிகளுக்கு
வர = ஸ்ரேஷ்டனான
ஜகன்னாதவிட்டலன்,
கொடுவனு = கொடுக்கிறான்.

சத்வ ரஜஸ் தமோ குணங்களுக்கு அபிமானியான ஸ்ரீபூ துர்காத்மிகரான ஸ்ரீ பார்க்கவி தேவி என்று லட்சுமிதேவிக்குப் பெயர். இந்தப் பெயர் ரமாதேவியருக்கு வந்ததற்கு காரணம் என்னவெனில்: பாகவத 4ம் ஸ்கந்த 3ம் அத்தியாயம் 43ம் ஸ்லோகம் :

ப்ருகு: க்யாத்யாம் மஹாபாக: பத்ன்யாம் புத்ரானஜீ ஜனத் ||
தாதாரம் சவிதாதாரம் ஸ்ரீயஞ்ச பகவஸ்ப்ரியாம் ||

ப்ருகு ரிஷிகள், க்யாதி என்னும் மனைவியில் தாத, விதாத என்னும் இரு ஆண் வாரிசுகளையும், பரமாத்மனின் மனைவியான சாட்சாத் லட்சுமிதேவியையே மூன்றாவது மகளாகவும், இப்படி மூன்று மக்களைப் பெற்றார் என்று சொல்லப்பட்டிருக்கிறது. ப்ருகு ரிஷிகளின் மகள் ஆனதால், அவருக்கு பார்க்கவி என்று பெயர்.

இத்தகைய பார்க்கவி தேவிக்கு பதியான ஸ்ரீஹரி, த்ரிவித ஜீவராசிகளிலும் மூன்று குணங்களிலும் இருந்து அவரவர்களின் யோக்யதைக்கேற்ப கர்மங்களை செய்வித்து கர்ம பலன்களைக் கொடுக்கிறான்.

தைத்ய தாரதம்ய சந்தி என்னும் 30ம் சந்தியின் தாத்பர்யம் இத்துடன் நிறைவுற்றது.
ஸ்ரீகிருஷ்ணார்ப்பணமஸ்து

***

## பாவபிரகாசிகை : சந்தி 31 : நைவேத்திய சமர்ப்பண சந்தி

**ஹரிகதா2ம்ருதசார கு3ருக3ள**
**கருணதிந்தா3பநிது பே1ளுவே**
**பரம ப4கவத்3ப4க்தரித3னாத3ரதி கேளுவுது3**

இந்த சந்தியில் ப்ரதிமை, சாலிகிராமம் முதலானவற்றில் நைவேத்தியம் செய்யும் கிரமத்தையும், எந்தெந்த பதார்த்தங்களில் எந்தெந்த தேவதைகளையும், பகவத் ரூபங்களையும் சிந்திக்க வேண்டும் என்பதையும் சொல்கிறார். முதலாம் பத்யத்திலிருந்து, 13ம் பத்யம் வரைக்கும் பரமாத்மனின் மகிமைகளை சொல்கிறார்.

**லெக்கிஸதெ3 லகுமியனு பொ3ம்மன**
**பொக்குளிந்த3லி படெ3த3 பொஸபொ**
**ம்ப3க்கிதே3ரனு படெ3த3வயவக3ளிந்த3 தி3விஜரன ।**
**மக்களந்த3தி3 பொரெவ ஸர்வத3**
**ரக்கஸாந்தக ரணதொளகெ3 நி**
**ர்து3க்க2 ஸுக2மய காய்த3 பார்த்த2ன ஸூதனெந்தெ3னிஸி ।।1**

லகுமியனு = லட்சுமிதேவியரை
லெக்கிஸதெ = லட்சியம் செய்யாமல் (அவரது உதவி இல்லாமல்)
பொக்களிந்தலி = தன் நாபி கமலத்திலிருந்து
பொம்மன = பிரம்மதேவரை
படெத = ஸ்ருஷ்டித்தான்
பொம்பக்கிதேரனு = கருட வாகனனான ஸ்ரீஹரி
திவிஜரன = தேவதைகளை
அவயவகளிந்த = தன் அவயவங்களிலிருந்து
படெத = ஸ்ருஷ்டித்தான்
சர்வதா = எப்போதும்
மக்களந்ததி = தன் மக்களைப் போலவே
பொரெவ = காப்பாற்றுவான்
நிர்துக்க = துக்கம் இல்லாதவனான
சுகமய = ஆனந்த ஸ்வரூபனான
ரக்கஸாந்தக = அசுரர்களின் எதிரியான ஸ்ரீஹரி
ரணதொளகெ = போர்க்களத்தில்

ஸூதனெந்தெனிஸி = சாரதி என்று
பார்த்தன = அர்ஜுனனை
காய்த = காப்பாற்றினான்.

லட்சுமிதேவியரை லட்சியம் செய்யாமல், தன் நாபியிலிருந்து பிரம்மதேவரை படைத்தான். 'சக்ஷோ ஸூர்யோ அஜாயத: முகாதிந்த்ராஸ் சாக்னிஸ்ச' என்னும் புருஷ சூக்தத்தின்படி, கண்களால் சூரியனையும், முகத்தினால் இந்திர, அக்னிகளையும் என தன் அவயவங்களால் தேவதைகளையும் படைத்தான். அவர்கள் அனைவரையும் காப்பாற்றுகிறான். துக்க தோஷங்கள் இல்லாதவனான, ஆனந்த ஸ்வரூபனான, அசுரர்களைக் கொல்பவனான ஸ்ரீஹரி, கிருஷ்ணாவதாரத்தில் பார்த்தசாரதியாகி போர்க்களத்தில் அர்ஜுனனை காத்தான்.

**தோ³ஷக³ந்த⁴விதூ³ர நானா**
**வேஷதா⁴ரி விசித்ரகர்ம ம**
**நீஷி மாயாரமண மத்⁴வாந்த: கரணரூட³ |**
**ஸேஷஸாயி ஷரண்ய கௌஸ்துப⁴**
**பூ⁴ஷணஸுக²ந்த⁴ர ஸதா³ ஸ**
**ந்தோஷ ப³ல ஸௌந்த³ர்யஸாரன மஹிமெகே³னெம்பே³ ||2**

தோஷகந்தவிதூர = தோஷம் என்னும் வாசனையே இல்லாதவன்
நானவேஷதாரி = அனேக விதமான வேஷதாரி; அதாவது, மத்ஸ்ய, கூர்ம முதலான ரூபங்களை தரித்தவன்
விசித்ரகர்ம = வியக்கத்தக்க கர்மங்களை செய்தவன்
விசித்ர மனீஷி = விசித்திரமான புத்தி உள்ளவன்
மாயாரமண = வாசுதேவ ரூபத்தினால் மாயா நாமகளான லட்சுமிதேவியை திருமணம் செய்தவன்
மத்வாந்த: கரணரூட = மத்வாசார்யரின் அந்தர்யாமியான; அதாவது அவரது மனதில் த்ருடமாக நின்றவன்.
சேஷசாயி = சேஷனே படுக்கையாகக் கொண்டவன்
ஷரண்ய = வணங்கத்தக்கவன்
கௌஸ்துப பூஷண = கௌஸ்துப மாணிக்கத்தால் அலங்கரிக்கப்பட்டவன்
சுகந்தர = அழகான கழுத்து உள்ளவன்
ஸதா சந்தோஷ பல = எப்போதும் மகிழ்ச்சி, பல இவற்றைக் கொண்டவன்
சௌந்தர்யஸாரன = இத்தகைய அழகானவனான ஸ்ரீஹரி
மஹிமெகேனெம்பே = மகிமையை என்னவென்று சொல்வேன்? (சொல்வதற்கு சாத்தியமில்லை என்று அர்த்தம்).

கொஞ்சம்கூட தோஷத்தின் சம்பந்தம் அற்றவன். அனேக அவதாரங்களை செய்தவன். வியக்கத்தக்க கர்ம, விசித்ர புத்திகளைக் கொண்டவன். மாயா நாமக லட்சுமிதேவியருக்கு கணவன் ஆனவன். மத்வாசார்யரின் மனதில் எப்போதும் நிலைத்திருப்பவன். சேஷனே படுக்கையாகக் கொண்டவன். முறையிடுவதற்கு /

வணங்குவதற்கு ஏற்றவன். கௌஸ்துப மாணிக்கத்தால் அலங்கரிக்கப்பட்ட கழுத்து கொண்டவன். எப்போதும் ஆனந்த ஸ்வரூபன். பல (bala) பூர்ணன். இத்தகைய பகவந்தனின் மகிமைகளை என்னவென்று வர்ணிப்பேன்?

**ஸாஷனானஷனெ அபி4 எ**
**ம்பீ3 ஸ்ருதிப்ரதிபாத்3ய னெனிஸுவ**
**கேஷவன ரூபத்3வயவ சித்தே3ஹதொ3ளஹொரகெ3 |**
**பே3ஸரதெ3 ஸத்ப4க்தியிந்த3 உ**
**பாஸனெய கை3யுத்த பு3த3ரு ஹு**
**தாஷனன வோலிப்பனெந்த3னவரத துதிஸுவரு ||3**

ஸாஷன = ஆகாரம் செய்வதற்கு யோக்யமான ரூபம்
அனஷன = ஆகாரத்தை ஏற்றுக் கொள்ளாத ரூபம்
அபீயெம்ப = இந்த இரு ரூபங்களும் பரமாத்மனுடையது என்று சொல்லும்
ஈ ஸ்ருதி ப்ரதிபாத்ய நெனிஸுவ கேஷவன ரூபத்வயவ = இந்த வேத மந்திரத்தால் புகழப்படுபவனான கேசவனின் இரு ரூபங்களே
சித்தேஹதொளகெ = ஸ்வரூப தேகத்தில்
ஹொரகெ = ஸ்தூல தேகத்தில் இருக்கிறது என்று அறிந்து
பேசரதெ = சத் பக்தியினால்
உபாசனெய கையுத்த = உபாசனையை செய்தவாறு
புதரு = ஞானிகள்
ஹுதாஷனனவோல் = அக்னியைப் போல தேஜஸ் கொண்டு, பாபங்களின் சம்பந்தமே இல்லாமல்
இப்பரெந்து = இருக்கிறார் என்று
அனவரத = எப்போதும்
துதிஸுதிரு = ஞானிகளை கொண்டாடிக் கொண்டிரு.

பகவந்தனுக்கு ஸாஷன ரூபம் என்றும், அனஷன ரூபம் என்றும் இரு ரூபங்கள் உண்டு. ஸாஷன என்றால், தினமும் உணவு உண்ணும் மனிதர்களைப் போலவும், அனஷன என்றால், தேவதைகளைப் போலவும், இந்த இரண்டின் அந்தர்யாமி ரூபங்கள் உண்டு என்று அர்த்தம்.

ஸ்வரூப தேகத்தில் இருந்து கொண்டு, அங்கு அஷனாதிகள் இல்லாததால் அனஷன என்றும், ஸ்தூல தேகத்தில் இருந்து கொண்டு, போஜனாதிகளை செய்வதால் சாஷன என்றும், ஒரு பரமாத்மன் இரு ரூபங்களைக் கொண்டு ஸ்வரூப தேகத்திலும், ஸ்தூல தேகத்திலும் இருக்கிறான் என்று ஞானிகள் உபாசனை செய்தவாறு, தாம் செய்யும் போஜன, பானாதிகள் அனைத்தும் பகவத் வியாபாரங்களே என்று அறிந்து, அக்னியைப் போல இருப்பர். அதாவது,

தேஜஸ்வீ தபஸாதீப்தோ துர்தர்ஷோ தூரபாவன: ||
ஸர்வபக்ஷோபி யுக்தாத்மா நாதத்தே பாபமக்னிவத் ||

என்று பாகவத 11ம் ஸ்கந்தத்தில் சொல்லியதைப் போல, தவம் செய்து ஜொலித்தவாறு தேஜஸ்வியாகி ஆசை, த்வேஷங்களை விட்டவன், அக்னி எப்படி அனைத்தையும் உண்பவன் ஆனாலும், அவனுக்கு பாவம் இல்லையோ, அப்படியே இந்த தேஜஸ்வியும் எதை உண்டாலும் அவனுக்கு பாப சம்பந்தம் இல்லை என்பது கருத்து. இத்தகைய மகிமை பகவத் பக்தரில் இருக்க, பகவந்தனின் மகிமைகளைப் பற்றி சொல்வதற்கு என்ன உள்ளது என்று கூறுகிறார்.

**ஸகல ஸத்கு³ணபூர்ண ஜன்மா**
**த்³யகி²ல தோ³ஷவிதூ³ர ப்ரகடா**
**ப்ரகட ஸத்³வ்யாபாரி க³தஸம்ஸாரி கம்ஸாரி |**
**நகுல நானாரூப நிய்யா**
**மக நியம்ய நிராமய ரவி**
**ப்ரகரஸன்னிப³ ப்ரபு³ ஸதா³ மாம்பாஹி பரமாப்த ||4**

சகல சத்குணபூர்ண = அனைத்து நற்குணங்களாலும் நிரம்பியவன்
ஜன்மாத்யகில தோஷவிதூர = பிறப்பு முதலான எவ்வித தோஷங்களும் இல்லாதவன்
ப்ரகட = பிரம்மாதிகளுக்கு வியக்தனாக தரிசனம் அளிப்பவன்
அப்ரகட = சாதாரண மனுஷ்யாதிகளுக்கு
அவ்யக்தனு = தரிசனம் அளிக்காதவன்
இதனால், வ்யக்தாவ்யக்த ஸ்வரூபன் என்று சொல்லியாயிற்று
ஸத்வியாபாரி = உத்தமமான கர்மங்கள் உள்ளவன்;
அல்லது, சிலருக்கு தரிசனம் அளித்தும் சிலருக்கு தரிசனம் அளிக்காமலும் இருக்கும் உத்தமமான வியாபாரங்களைக் கொண்டவன்; அதாவது, அவன் மகிமைகளை பக்தாக்ரேசர்கள் (பக்தியில் சிறந்தவர்கள்) மட்டும் அவனின் அருளால் அறிவார்கள். மற்றவர்கள் அறியார் என்பது கருத்து.
கதஸம்ஸாரி = சம்சார சம்பந்தமான துக்கங்கள் இல்லாதவன்
கம்சாரி = கம்சனைக் கொன்றவன்
நகுல = குலம் இல்லாதவன்
நானாரூப = நானா ரூபங்களை தரித்தவன்
நியாமக = அனைத்து பிராணிகளையும் நிர்வகிப்பவன்
நியம்ய = அதைப் போலவே நடப்பவன்; ஒருவனில் இருந்து ஆணையிட்டு, இன்னொருவனில் இருந்து அதை பின்பற்றுபவன்; அரசனில் இருந்து அதிகாரம் செய்கிறான். சேவகனில் இருந்து அந்த ஆணையின்படி நடக்கிறான்.
நிராமய = எந்த விதமான வியாதியும் இல்லாதவன்
ரவிப்ரகார சன்னிப = சூர்ய சமூகங்களின் காந்தி உள்ளவன்
இத்தகைய ஹே ப்ரபோ,
பரமாப்த = ஆப்தனானவனே,
மாம்பாஹி = என்னை காப்பாற்று

பத்ய அர்த்தங்களே தெளிவாக உள்ளன.

**சேதனாசேதன ஜக$^{3}$த்தினொ**
**ளாததனு தானாகி$^{3}$ லகுமி**
**நாத$^{2}$ ஸர்வரொளிப்ப தத்தத்ரூபக$^{3}$ள த$^{4}$ரிஸி ।**
**ஜாதிகா$^{3}$ரன தெரதி$^{3}$ எல்லர**
**மாதினொளகி$^{3}$த்தகி$^{2}$ல கர்மவ**
**தா திளிஸிகொள்ளத$^{3}$லெ மாடி$^{3}$ஸி நோடி$^{3}$ நகு$^{3}$திப்ப ।।5**

சேதனாசேதன ஜகத்தினொளு = ஸ்தாவர ஜங்கமங்கள் நிறைந்த இந்த பிரபஞ்சத்தில்
ஆததனு தானாகி = அனைத்து இடங்களிலும் தான் வியாப்தனாகி
லகுமி நாத = லட்சுமிபதி
தத்தத்ரூபகள தரிஸி = அந்தந்த பிராணிகளைப் போல ரூபங்களை தரித்து
ஸர்வரொளிப்ப = அனைத்து பிராணிகளிலும் இருக்கிறான்
ஜாதிகாரன தெரதி = நாடகத்தில் ராம கிருஷ்ணாதி வேடங்களை தரிக்கும் மனுஷ்யனைப் போல
எல்லர மாதிகொளகித்து = அனைவருடன் தான் இருந்து
அகிள கர்மவ தா திளிஸிகொள்ளதெ = தான் அந்த கர்மங்களை செய்ததாக சொல்லிக் கொள்ளாமல்
மாடிஸி = மக்கள் மூலமாக செய்வித்து
நோடி நகுதிப்ப = பார்த்து சிரித்துக் கொண்டிருக்கிறான்.

ஜட சேதனாத்மகமான இந்த பிரபஞ்சத்தில் அனைத்து இடங்களிலும் வியாப்தனாக இருந்து, அந்தந்த பிராணிகளின் ரூபங்களால் அவரவர்களில் இருந்து, நாடக அரங்கத்தில் ராமகிருஷ்ணாதிகளைப் போல வேடங்களை தரித்து, தன் ஸ்வரூபத்தைக் காட்டிக் கொள்ளாமல் வேடத்திற்குத் தக்கவாறு எப்படி தானே ராமகிருஷ்ணன் என்று நடிக்கின்றனரோ, அதைப் போலவே பரமாத்மனும், அந்தந்த பிராணிகளைப் போலவே தான் அவர்களில் இருந்து, செயல்களை செய்வித்து தானே அவற்றை செய்ததாக சொல்லிக் கொள்ளாமல் அவரவர்களின் யோக்யதைக்கேற்ப செயல்களை செய்வித்து, அவரவர்களே அந்த செயல்களை செய்ததைப் போல காட்டி, தான் அதற்கு சம்பந்தப்படாமல் இருந்து, அவர்களைப் பார்த்து சிரித்துக் கொண்டிருக்கிறான்.

**வீதப$^{4}$ய விக்ஞானதா$^{3}$யக**
**பூ$^{4}$த ப$^{4}$வ்ய ப$^{4}$வத்ப்ரபு$^{3}$ க$^{3}$ளா**
**ராதி$^{3}$ க$^{2}$க$^{3}$வரவஹன கமலாகாந்த நிஸ்சிந்த ।**
**மாதரிஷ்வப்ரிய புராதன**
**பூதனா ப்ராணாபஹாரி வி**
**தாத்$^{3}$ருஜனக விபஸ்சித ஜனப்ரீய கவிகே$^{3}$ய ।।6**

வீதபய = எந்த காலத்திலும் எவ்விதமான பயமும் இல்லாதவன்
விக்ஞானதாயக = விசேஷமான ஞானத்தைக் கொண்டவன்
பூத பவ்ய பவத்ப்ரபு = கடந்த, நிகழ், எதிர்காலங்களுக்கு தலைவன்
களாராதி = துஷ்டர்களுக்கு / அயோக்யர்களுக்கு எதிரி எனப்படுபவன்
ககவரவஹன = பக்ஷி ஸ்ரேஷ்டனான கருட வாகனன்
கமலாகாந்த = லட்சுமிபதி
நிஸ்சிந்த = கவலை இல்லாதவன்
மாதரிஷ்வப்ரிய = முக்ய பிராணதேவருக்கு அன்பானவன்
புராதன = அனாதி காலத்திலிருந்து இருப்பவன்
பூதனா ப்ராணாபஹாரி = பூதனியின் உயிரை பறித்தவன்
விதாத்ரு ஜனக = பிரம்மதேவரின் தந்தை
விபஸ்சிதப்ரிய = ஞானிகளிடம் அன்பு கொண்டவன்
இத்தகைய நீ எம்மை காப்பாற்று.

பத்ய அர்த்தங்களே தெளிவாக உள்ளன.

**துஷ்டஜன ஸம்ஹாரி ஸர்வோ**
**த்க்ருஷ்ட மஹிம ஸமீரனுத ஸக**
**லேஷ்டதா$^3$யக ஸ்வரத ஸுக$^2$மய மமகுலஸ்வாமி |**
**ஹ்ருஷ்ட புஷ்ட கனிஷ்ட ஸ்ருஷ்ட்யா**
**த்தஷ்டகர்த்ரு கரீந்த்$^3$ரவரத$^3$ ய**
**தேஷ்டத$^3$னு உன்னதஸுக$^2$ர்மா நமிபெனனவரத$^3$ ||7**

துஷ்டஜன ஸம்ஹாரி = துஷ்டர்களைக் கொல்பவன்
சர்வோத்க்ருஷ்ட மஹிம = அபாரமான மகிமைகளைக் கொண்டவன்
ஸமீரனுத = வாயுதேவரால் வணங்கப்படுபவன்
சகலேஷ்டதாயக = பக்தர்களின் விருப்பங்களை நிறைவேற்றுபவன்
ஸ்வரத = ஸ்வ ரமணன்
சுகமய = ஆனந்த ஸ்வரூபன்
மமகுலஸ்வாமி = என் குல தெய்வம்
ஹ்ருஷ்ட = திருப்தி அடைந்தவன்
புஷ்ட = வலிமையானவன்
கனிஷ்ட = க்ருஷரான பிராணிகளில் இருந்து க்ருஷ எனப்படுகிறான். ‘அணுர்ப்ருஹத் க்ருஷஸ்தூல:’ என்று விஷ்ணு சஹஸ்ர நாமத்தில் வரும் அபிப்பிராயத்தையே இங்கும் அறியவேண்டும்.
ஸ்ருஷ்ட்யாத் அஷ்டகர்த்ரு = ஸ்ருஷ்டி, ஸ்திதி, லய, நியமன, ஞான, அஞ்ஞான, பந்த, மோக்ஷ என்னும் 8 விதமான கர்த்ருத்வ உள்ளவன்
கரீந்த்ரவரத = கஜேந்திரனுக்கு வரம் அளித்தவன்
யதெஷ்டதனு = யார் யாருக்கு எதெது இஷ்டமோ அதனைக் கொடுப்பவன்
உன்னத ஸுகர்மா = யாராலும் செய்யமுடியாத கஷ்டமான, சிறந்த செயல்களை செய்பவன்

இத்தகைய உனக்கு
அனவரத = அனைத்து காலங்களிலும்
நமிபெ = நமஸ்காரம் செய்வேன்.

பத்ய அர்த்தங்களே தெளிவாக உள்ளன.

**பாகஷாஸன பூஜ்யசரண பி**
**நாகிஸன்னுத மஹிம ஸீதா**
**ஷோகனாஷன ஸுலப$^{4}$ ஸுமுக$^{2}$ ஸுவர்ண வர்ணநிப$^{3}$ |**
**மாகலத்ர மனீஷி மது$^{4}$ரிபு**
**ஏகமேவா த்விதி$^{4}$யரூப ப்ர**
**தீக தே$^{3}$வக$^{3}$ணாந்தராத்மக பாலிஸுவுதெ$^{3}$ம்ம ||8**

பாகஷாஸன பூஜ்ய சரண = தேவேந்திரனால் வணங்கப்படும் பாத கமலங்களைக் கொண்டவன்
பினாகி ஸன்னுத மஹிம = ருத்ர தேவரால் வணங்கப்படும் மகிமை உள்ளவன்
ஸீதா ஷோக நாஷன = ராமாவதாரத்தில் சீதாதேவியின் சோகத்தைப் போக்கியவன்
சுலப = பக்தர்களுக்கு சுலபமானவன். அவர்களுக்கு எப்போதும் அருகிலேயே இருப்பவன்
சுவர்ண வர்ண நிப = தங்கத்தைப் போல ஒளிர்பவன்
மாகளத்ர மனீஷி = லட்சுமி தேவியர் என்னும் மனைவிக்கு புத்தி ஸ்தானீயன். அவளின் சித்தம் எப்போதும் பரமாத்மனிடமே இருக்கிறது என்பது கருத்து
மதுரிபு = மது என்னும் தைத்யனைக் கொன்றவர்
ஏகமேவா த்விதியரூப ப்ரதீக = யாரையும் ஒப்பிட முடியாதவன் என்பது கருத்து
தேவகணாதராத்மகனு = தேவ கணர்களில் அந்தர்யாமியாக இருப்பவன்
இத்தகைய நீ,
எம்ம = எங்களை
பாலிஸுவுது = காப்பாற்றுவாயாக.

பத்ய அர்த்தங்களே தெளிவாக உள்ளன.

**அப்ரமேயானந்தரூப ஸ**
**தாப்ரஸன்னமுகா$^{2}$ப்ஜ முக்தி ஸு**
**க$^{3}$ப்ரதா$^{3}$யக ஸுமனஸாராதி$^{4}$த பதா$^{3}$ம்போ$^{4}$ஜ |**
**ஸ்வப்ரகாஷ ஸ்வதந்த்ர ஸர்வக$^{3}$**
**க்ஷிப்ர ப$^{2}$லதா$^{3}$யக க்ஷிதீஷ ய**
**து$^{3}$ப்ரவீர விதர்க்$^{4}$ய விஷ்வ ஸுதைஜஸ ப்ராக்$^{3}$ஞ ||9**

அப்ரமேய = குண, கர்ம, பிறவிகளால் யாரோடும் ஒப்பிட முடியாத உத்தமமானவன்

அனந்தரூப = அனந்த ரூபங்களைக் கொண்டவன்
சதாப்ரசன்ன முகாப்ஜ = எப்போதும் மகிழ்ச்சியான / புன்னகையுடன் இருக்கும் முகத்தைக் கொண்டவன்
முக்தி சுகப்ரதாயக = முக்தியில் ஸ்வரூபானந்தத்தைக் கொடுப்பவன்
சுமனஸாராதித பதாம்போஜ = தேவதைகளால் பூஜிக்கப்படும் பாத கமலங்களைக் கொண்டவன்
ஸ்வப்ரகாஷ = ஸ்வயம் பிரகாஷன்
ஸ்வதந்த்ரன்,
ஸர்வக = அனைத்து இடங்களிலும் இருப்பவன்
க்ஷிப்ர பலதாயக = ஜீவர்களுக்கு மிக விரைவாக கர்ம பலன்களைக் கொடுப்பவன்
க்ஷிதீஷ = பூமிதேவியின் பதி
யதுப்ரவீர = யதுகுல ஸ்ரேஷ்டன் என்று கிருஷ்ணாவதாரத்தில் புகழ் பெற்றவன்
விதர்க்ய = தர்க்கத்தினால் அறியப்பட முடியாதவன்
விஷ்வ, தைஜஸ, ப்ராக்ஞ = இந்த மூன்று ரூபங்களையும் கொண்டவன்.

பத்ய அர்த்தங்களே தெளிவாக உள்ளன.

**கா$^{3}$ளினடெ$^{3}$வந்த$^{3}$த$^{3}$லி நீலக$^{4}$**
**நாளி வர்த்திஸுவந்தெ பி$^{3}$ரம்ம த்ரி**
**ஷூலத$^{4}$ர ஷக்ரார்க மொத$^{3}$லாத$^{3}$கி$^{2}$ல தே$^{3}$வக$^{3}$ண |**
**கால கர்ம கு$^{3}$ணாபி$^{4}$மானி ம**
**ஹாலகுமி யனுஸரிஸி நடெ$^{3}$வளு**
**மூல காரணமுக்தி தா$^{3}$யக ஹரியெனிஸிகொம்ப$^{3}$ ||10**

காளி நடெவந்ததலி = காற்று அடிக்கும் திசையில்
நீலகனாளி = கார்மேகம்
வர்த்திசுவந்தெ = செல்வதைப் போல
பிரம்ம த்ரிஷூலதர = பிரம்ம, ருத்ர
ஷக்ர = இந்திரன்
அர்க்க = சூரியன்
மொதலாதகில தேவகண = இவர்களே முதலான தேவ கணத்தவர்களும்,
பரமாத்மனை அனுசரித்தே நடக்கின்றனர்.
கால, கர்ம, குணாபிமானி = இவற்றின் அபிமானி
மஹாலகுமி = ரமாதேவி
அனுசரிஸி = அனுசரித்து
நடெவளு = நடக்கிறார்
மூலகாரண = இவர்கள் அனைவருக்கும் மூல காரணன்
முக்திதாயக = முக்தியைக் கொடுப்பவன்
ஹரி எனிஸி கொம்ப = ஹரி, தானே இவற்றைக் கொடுக்கிறேன் என்கிறான்.

காற்று வீசும் திசையிலேயே மேகங்கள் செல்வதைப் போல, ரமா பிரம்மாதி அனைத்து தேவதைகளும், பரமாத்மன் செய்வதைப் போலவே செய்கிறார்களே தவிர, ஸ்வதந்த்ரத்துடன் செயல்களை செய்யும் சக்தி யாருக்கும் இல்லை. இங்கு மேகம் எப்படி காற்றுக்கு அதீனமோ, அப்படியே பிரம்மாதி சகலரும் பகவந்தனுக்கு அதீனர்கள் என்பது கருத்து.

**மோட[3] கைபீ[3]ஸணிகெயிந்த[3]லி**
**ஓடி[2]ஸுவெனெம்பு[3]வன யத்னவு**
**கூடு[3]வதெ[3] கல்பாந்தகாத[3]ரு லகுமிவல்லப[4]னு**
**ஜோடு[3]கர்மவ ஜீவரொளு தா**
**மாடி[3] மாடி[3]ஸி ப[2]லக[3]ளுணிஸுவ**
**ப்ரௌட[3]ராத[3]வரிவன ப[4]ஜிஸி ப[4]வாப்தி[3] தா[3]டுவரு ||11**

மோட = சூரிய ஒளியே கீழே வராதவாறு இருக்கும் மேகக் கூட்டம்
கைபீஸணிகெயிந்தலி = கையில் இருக்கும் விசிறியின் உதவியால்
ஓடிசுவெனெம்புவன யத்னவு = ஓட்டிவிடுவேன் என்று சொல்பவனின் முயற்சி
கல்பாந்தகாதரு = இந்த கல்பத்தின் முடிவே வந்துவிட்டாலும்
கூடுவதே? = கைகூடுமா?
லட்சுமி வல்லபனு = ஸ்ரீஹரி
ஜோடுகர்மவ = புண்ய பாவ என்னும் த்வந்த்வ கர்மங்களையும்
ஜீவரொளு = ஜீவர்களில் தான் இருந்து
தா மாடி மாடிஸி = தான் செய்து, அவர்களால் செய்வித்து
பலகள உணிசுவனு = பலன்களை அவர்களுக்குக் கொடுக்கிறான்.
ப்ரௌடராதவரு = ஞானிகள்
இவன பஜிஸி = இவனை வணங்கி
பவாப்தி = சம்சார சாகரத்தை
தாடுவரு = தாண்டுவார்கள்.

வானத்தில், சூரியனையே மூடியது போல இருக்கும் மேகக் கூட்டத்தை, தன் கையில் இருக்கும் விசிறியால் வீசி, ஓட்டிவிடுவேன் என்று சொல்பவனின் முயற்சி என்றாவது சாத்தியமாகுமா? என்றும் சாத்தியம் ஆகாது. அப்படியே அனைத்து பிரபஞ்சத்திலும் வியாபித்திருக்கும் பரமாத்மன் செய்யும் காரியங்களை பிறர் செய்ய முடியுமா? முடியாது.

இங்கு மேகத்தை போல அனைத்து ஜகத்தையும் வியாபித்துக் கொண்டிருப்பவை த்ரிவித ஜீவர்களின் ப்ராரப்த, ஆகாமி, சஞ்சித என்னும் கர்மங்கள். இவற்றை போக்கிக் கொள்ளும் சக்தி அஸ்வதந்த்ரனான ஜீவர்களுக்கு உண்டா? மஹா சமர்த்தனான பரமாத்மனிடமிருந்தே ஆகவேண்டும் என்பது கருத்து.

* மேகத்தைப் போல ஜீவனின் பிராரப்தாதி கர்மங்கள்.
* காற்றைப் போல பரமாத்மன்.

* கை விசிறியால் மேகத்தை ஓட்டுவேன் என்னும் முயற்சியைப் போல ஜீவனின் கர்த்ருத்வம்
-- என்று அறியவேண்டும்.

ஸ்ரீஹரி, ஜீவர்களில் இருந்து புண்ய பாபாதி கர்மங்களை செய்து செய்வித்து அவரவர்களின் யோக்யதைக்கேற்ப அவர்களுக்கு பலன்களைக் கொடுக்கிறான். இத்தகைய மஹானுபாவனை, ஞானிகள் வணங்கி, சம்சார சாகரத்திலிருந்து தப்பித்து, முக்தர்கள் ஆகின்றனர் என்பது கருத்து.

**க்லேஷ மோஹாஞான தோ$^3$ஷ வி**
**நாஷக விரிஞ்ச்யாண்ட$^3$தொ$^3$ளகா$^3$**
**காஷதோ$^3$பாதி$^3$யலி தும்பி$^3$ஹனெல்ல காலத$^3$லி ।**
**கா$^4$ஸிகொ$^3$ளிஸதெ$^3$ தன்னவரனா**
**யாஸ ஸம்ரக்ஷிஸுவ மஹ கரு**
**ணாஸமுத்$^3$ர ப்ரஸன்ன வத$^3$னாம்போ$^4$ஜ வைராஜ ।।12**

க்லேஷ = துக்கம்
மோஹ = பேராசை
அஞ்ஞான,
இவை போன்ற
தோஷ வினாஷக = தோஷங்களை போக்குபவன்
விரிஞ்ச்யாண்டதொளு = பிரம்மாண்டத்தில்
ஆகாஷதோபாதியலி = ஆகாயம் எல்லா இடத்திலும் வியாபித்திருப்பதைப் போல
எல்ல காலதலி = அனைத்து காலங்களிலும் / இடங்களிலும்
தும்பிஹனு = நிலைத்திருக்கிறான்
மஹா கருணா சமுத்ரனு = கருணைக் கடலானவன்
ப்ரசன்ன வதனாம்போஜ = ப்ரசன்னனான முக கமலத்தைக் கொண்டவன்
வைராஜ = விராட் என்னும் பிரம்மாண்டமானது, பரமாத்மனுக்கு ப்ரதிமை போன்று இருப்பதால், வைராஜ என்று பெயர் பெற்றான்
இத்தகைய ஸ்ரீஹரி
தன்னவர = தன் பக்தர்களை
ஆயாசவில்லதெ = தாமதம் செய்யாமல் (உடனடியாக)
சம்ரக்ஷிசுவ = நன்றாக காக்கிறான்.

பத்ய அர்த்தங்களே தெளிவாக உள்ளன.

**கன்னடி$^3$ய கைபிடி$^3$து நோள்பன**
**கண்ணுக$^3$ளு கண்ட$^3$ல்லி எரக$^3$தெ$^3$**
**தன்ன ப்ரதிபி$^3$ம்ப$^3$வனெ காம்பு$^3$வ த$^3$ர்ப்பணவ பி$^3$ட்டு ।**
**த$^4$ன்யரிளெயொளகெ$^3$ல்ல கடெ$^3$யலி**
**நின்ன ரூபவ நோடி$^3$ ஸுகி$^2$ஸுத**

**ஸன்னுதிஸுதானந்த$^{3}$ வாரிதி$^{4}$யொளகெ$^{3}$ முளுகி$^{3}$ஹரு ||13**

கன்னடிய = கண்ணாடியை
கைபிடிது = கையில் பிடித்து
நோள்பன = பார்ப்பவனின்
கண்ணுகளு = கண்கள்
கண்டல்லி எரகதெ = வேறு எங்கும் பார்க்காமல்
தன்ன பிரதிபிம்பவனெ = தன் உருவத்தையே
காம்புவ = காண்கிறான்
தன்யர் = புண்யாத்மர்
இளெயொளகெ = பூமியில்
தர்ப்பணவ பிட்டு = கண்ணாடியை விட்டு
எல்ல கடெயலி = அனைத்து இடங்களிலும்
நின்ன ரூபவ நோடி = உன் ரூபத்தையே பார்த்து
சுகிசுத = சுகப்பட்டு
சன்னுதிசுத = நன்றாக ஸ்தோத்திரம் செய்தவாறு
ஆனந்த வாரிதியொளகெ = மகிழ்ச்சிக் கடலில்
முளுகிஹரு = மூழ்குவார்கள்.

கையில் கண்ணாடியைப் பிடித்து பார்த்தால், நம் கண்கள் கண்ட இடத்தில் பாயாமல், அதில் தெரியும் நம் பிரதிபிம்பத்தை மட்டுமே பார்க்கும். இப்படி சாதாரண மக்களான நாம், கண்ணாடியில் தெரியும் நம் பிரதிபிம்பத்தை பார்த்து மகிழ்கிறோம்.

ஆனால், உன் ஏகாந்த பக்தர்கள், கண்ணாடி இல்லாமலேயே, அனைத்து இடங்களிலும் வியாப்தனான, பிம்ப ரூபியான உன் ரூபத்தை, எங்கு வேண்டுமோ அங்கு பார்த்து, மகிழ்ச்சி அடைந்தவாறு, ஸ்தோத்திரம் செய்தவாறு, மகிழ்ச்சிக் கடலில் மூழ்குகின்றனர். ஆஹா, அவர்கள் எத்தகைய தன்யர்கள்!!.

**அன்னமானி ஷஷாங்கனொளு கா**
**ருண்யஸாக$^{3}$ர கேஷவனு பர**
**மன்னதொ$^{3}$ளு பா$^{4}$ரதியு நாராயணனு ப$^{3}$க்ஷ்யதொ$^{3}$ளு**
**ஸொன்னக$^{3}$தி$^{3}$ரனு மாத$^{4}$வனு ஸ்ருதி**
**ஸன்னுதளு ஸ்ரீலக்ஷ்மி க்$^{4}$ருததொ$^{3}$ளு**
**மன்ய கோ$^{3}$விந்தா$^{3}$பி$^{3}$த$^{3}$னு இருதிப்பரெந்தெ$^{3}$ந்து$^{3}$ ||14**

அன்னமானி = அன்னத்திற்கு அபிமானி
ஷஷாங்க = சந்திரன்
ஷஷாங்கனொளு = சந்திரனில்
காருண்யசாகர = கருணா சமுத்திரனான
கேஷவனு = கேசவ மூர்த்தியை சிந்திக்க வேண்டும்.

பரமான்னதொளு = பாயசத்தில்
பாரதியு = பாரதி தேவியும் அவரில்
நாராயணனு = நாராயணனை சிந்திக்க வேண்டும்
பக்ஷ்யதொளு = பக்ஷ்யத்தில்
சொன்னகதிரனு = ஹிரண்ய ரஷ்மி என்னும் சூரியனையும் அவனில்
மாதவனு = மாதவனை சிந்திக்க வேண்டும்
ஸ்ருதிசன்னுத = அம்ப்ரிணி சூக்த, ஸ்ரீசூக்த முதலான ஸ்ருதிகளால் புகழப்படும் ரமாதேவி
க்ருததொளு = நெய்யில்
அவரில், லோகமான்யரான
கோவிந்தாபிதனு = கோவிந்த நாமக ஸ்ரீபரமாத்மன்
இருதிப்பரெந்தெந்து = இருக்கிறான் என்று சிந்திக்க வேண்டும்.

* அன்னாபிமானி சந்திரன். அவனில் கேசவ மூர்த்தியை சிந்திக்க வேண்டும்.
* பாயசத்திற்கு அபிமானி பாரதிதேவி. அவரில் நாராயண மூர்த்தியை சிந்திக்க வேண்டும்.
* பக்ஷ்யாபிமானி சூரியன். அவனில் மாதவ மூர்த்தியை சிந்திக்க வேண்டும்.
* நெய்க்கு அபிமானி லட்சுமிதேவி. அவரில் கோவிந்த மூர்த்தியை சிந்திக்க வேண்டும்.

'அன்னாபிமானி சந்த்ரஸ்து விசிந்த்யஸ்தத்ர கேஷவ:' இத்யாதி சத்தத்வ ரத்ன மாலா என்னும் கிரந்தத்தின் ஆதாரம் இவற்றிற்கு மூலம் என்று அறியவேண்டும்.

**க்ஷீரமானி ஸரஸ்வதி ஜக**
**த்ஸாரவிஷ்ணுவ சிந்திஸுவது$^{3}$ ஸ**
**ரோருஹாஸன மண்டிகெ$^{3}$யொளிருதிப்ப மது$^{4}$வைரி |**
**மாருதனு நவனீததொ$^{3}$ளு ஸ**
**ம்ப்ரேரக த்ரிவிக்ரமனு த$^{3}$தி$^{4}$யொளு**
**வாரினிதி$^{4}$ சந்த்$^{3}$ரமரொளகெ$^{3}$ இருதிப்ப வாமனனு ||15**

* பால்க்கு அபிமானி சரஸ்வதி. அவரில் விஷ்ணு மூர்த்தியை சிந்திக்க வேண்டும்.
* மண்டிகைக்கு அபிமானி பிரம்மதேவர். அவரில் மதுசூதனனை சிந்திக்க வேண்டும்.
* வெண்ணைக்கு அபிமானி வாயுதேவர். அவரில் த்ரிவிக்ரமனை சிந்திக்க வேண்டும்.
* தயிருக்கு அபிமானி வருண, சந்திரன். அவர்களில் வாமனமூர்த்தியை சிந்திக்க வேண்டும்.

**க$^{3}$ருட ஸூபகெமானி ஸ்ரீஹ்ரீ**
**த$^{4}$ரனு தே$^{3}$வனு பத்ரஷாக$^{2}$கெ**
**வரவெனிப மித்ராக்$^{2}$யஸூர்ய ஹ்ருஷீகபனமூர்த்தி |**

**உரக3ராஜனு ப2லஸுஷாககெ**
**வரவெனிஸுவனு பது3மனாப4ன**
**ஸ்மரிஸி பு4ஞ்சிஸுதிஹரு ப3ல்லவரெல்ல காலத3லி ||16**

சூபகெ = பருப்பிற்கு
மானி = அபிமானி
கருடன், அவனில் ஸ்ரீ ஸ்ரீதரனை சிந்திக்க வேண்டும்.
பத்ரஷாககெ = இலைகளைக் கொண்ட கீரை வகைகளுக்கு
மித்ராக்யசூர்ய = அபிமானி மித்ர நாமக சூரியன்
அவனில்,
ஹ்ருஷீகபனமூர்த்தி = ஹ்ருஷிகேச மூர்த்தியை சிந்திக்க வேண்டும்
பலசுஷாககெ = இலையில்லா காய்கறிகளுக்கு (வாழை)
உரகராஜனு = சேஷதேவர்
வரனெனிஸுவனு = அபிமானி என்கிறார்கள்
அவனில், பத்மனாப மூர்த்தியை சிந்திக்க வேண்டும்
ஸ்மரிஸி = சிந்தித்து
பல்லவரு = அனைத்தும் அறிந்த ஞானிகள்
எல்ல காலதலி = அனைத்து காலங்களிலும்
புஞ்சிஸுதிஹரு = உண்பார்கள்

* பருப்பிற்கு அபிமானி கருடன். அவனில் ஸ்ரீதர மூர்த்தியை சிந்திக்க வேண்டும்.
* கீரை வகைகளுக்கு அபிமானி மித்ர நாமக சூரியன். அவனில் ஹ்ருஷிகேசனை சிந்திக்க வேண்டும்.
* வாழைக்காய் முதலான காய்கறிக்கு சேஷதேவரே அபிமானி. அவனில் பத்மனாப மூர்த்தியை சிந்திக்க வேண்டும்.

இப்படியாக சிந்தித்தவாறு உண்ண வேண்டும் என்பது கருத்து.

**கௌரி ஸர்வாம்லஸ்த2ளெனிபளு**
**ஷௌரி தா3மோத3ரன திளிவுது3**
**கௌரிப அனாம்லஸ்த ஸங்கருஷணன சிந்திபுது3 |**
**ஸார ஷர்க்கர கு3ட3தொ3ளகெ3 வ்ரு**
**த்ராரி இருதிஹ வாஸுதே3வன**
**ஸூரிக3ளு தே4னிபரு பரமாத3ரதி3 ஸர்வத்ர ||17**

கௌரி = பார்வதி தேவி
ஸர்வாம்யஸ்தளெனிபளு = புளிப்பு பதார்த்தங்களுக்கு அபிமானி எனப்படுகிறாள்
அவரில் ஷூர வம்சத்தில் பிறந்து, கிருஷ்ணன் என்னும் பெயரில், தாயான யசோதையால் இடுப்பில் கயிறால் கட்டப்பட்டதால், தாமோதரன் என்ற பெயர் பெற்ற மூர்த்தியை சிந்திக்க வேண்டும்.
கௌரிப = கௌரிபதியான ருத்ரதேவர்.

அன்னாம்லஸ்த = புளி இல்லாத பதார்த்தங்களுக்கு அபிமானி
அவரில் சங்கர்ஷணனை சிந்திக்க வேண்டும்.
ஸார ஷர்க்கர குடதொளகெ = சர்க்கரை முதலான இனிப்பு பதார்த்தங்களில்
வ்ருத்ராரி இருதிஹ = தேவேந்திரன் இருக்கிறான்
அவனில், வாசுதேவ மூர்த்தியை
ஸூரிகளு = ஞானிகள்
பரமாதரதி = மிகவும் பக்தியுடன்
சர்வத்ர = அனைத்து இடங்களிலும்
தேனிபரு = தியானம் செய்வார்கள்.

* பார்வதி தேவியர், புளிப்பு பதார்த்தங்களுக்கு அபிமானி எனப்படுகிறார். அவரில் தாமோதர மூர்த்தியை சிந்திக்க வேண்டும்.
* புளி இல்லாத பதார்த்தங்களுக்கு அபிமானி ருத்ரதேவர். அவரில் சங்கர்ஷண மூர்த்தியை சிந்திக்க வேண்டும்.
* சர்க்கரை, வெல்லம் முதலான இனிப்பு பதார்த்தங்களுக்கு அபிமானி தேவேந்திரன். அவனில் வாசுதேவ மூர்த்தியை சிந்திக்க வேண்டும்.

**ஸ்மரிஸு வாசஸ்பதிய ஸோப**
**ஸ்கரதொ3ளகெ3 ப்ரத்4யும்னனிப்பனு**
**நிரயபதி யமத4ர்ம கடுத்3ரவ்யதொ3ள க3னிருத்த4 ।**
**ஸரஷபதி ஶ்ரீராமடேலதி3**
**ஸ்மரன ஶ்ரீபுருஷோத்தமன க**
**ர்புரதி3 சிந்திஸி பூஜிஸுதலிரு பரமப4கு3தி1யலி ।।18**

வாசஸ்பதிய = பிருஹஸ்பத்யாசார்யரை
ஸோபஸ்கரதொளகெ = சமையலுக்குத் தேவையான பதார்த்தங்களில் சிந்திக்க வேண்டும்.
அவரில், பிரத்யும்னனை சிந்திக்க வேண்டும்.
கடுத்ரவ்யதொளகெ = கசப்புப் பொருட்களில்
நிரயபதி யமதர்ம = நரகத்திற்கு அதிபதியான யமதர்மனும், அவனில் அனிருத்த மூர்த்தியை சிந்திக்க வேண்டும்.
நரஷப = கடுகு
ஶ்ரீராமட = பெருங்காயம்
ஏளதி = ஏலக்காய்
கர்புரதி = கற்பூரம் இந்த நான்கிலும்
ஸ்மரன = மன்மதனையும், அவனில் புருஷோத்தமனையும் சிந்திக்க வேண்டும்.
பரமபகுதியலி = இவ்வாறு சிந்தனை செய்தவர்களை பரம பக்தியுடன்
பூஜிஸுதலிரு = பூஜித்துக் கொண்டிரு.

* சமையலுக்குத் தேவையான பதார்த்தங்களில் ப்ருஹஸ்பதியையும், அவரில் பிரத்யும்ன மூர்த்தியை சிந்திக்க வேண்டும்.

* கசப்புப் பொருட்களில் யமதர்மனையும் அவனில் அனிருத்த மூர்த்தியையும் சிந்திக்க வேண்டும்.
* கடுகு, பெருங்காயம், ஏலக்காய், கற்பூரம் இந்த நான்கிலும் மன்மதனையும், அவனில் புருஷோத்தம ரூபியையும் பரம பக்தியுடன் சிந்தித்து பூஜிக்க வேண்டும்.

**நாலிகி$^3$ந்தலி ஸ்வீகரிப ரஸ**
**பாலு மொத$^3$லாது$^3$ த$^3$ரொளகெ$^3$ க்$^4$ருத**
**தைலபக்வ பதார்த்த$^2$தொ$^3$ளகி$^3$ஹ சந்த்ரனந்த$^3$னன |**
**பாலிஸுவ தோ$^3$க்ஷஜன சிந்திஸு**
**ஸ்தூ$^2$ல கூஷ்மாண்ட தில மாஷஜ**
**ஈ லலிதப$^4$க்ஷ்யதொ$^3$ளு த$^3$க்ஷனு லக்ஷ்மி நரசிம்ஹ ||19**

நாலிகிந்தலி = நாக்கினால்
ஸ்வீகரிப = ஏற்றுக் கொள்ளும்
ரஸ பாலு மொதலாதுதரொளகெ = திரவங்கள், பால் முதலானவற்றில்
க்ருத = நெய்
தைல = எண்ணெய் இவற்றால்
பக்வ பதார்த்ததொளகெ = சமையல் செய்த பக்ஷங்களில்
இஹ = இருக்கிறான்
சந்திர நந்தனன = புதன். அவனை
பாலிஸுவ = அவனில் இருந்து காப்பாற்றுபவர் அதோக்ஷன்
சிந்திஸு = சிந்தித்திரு
ஸ்தூல கூஷ்மாண்ட = பூசணி
தில = எள்
மாஷஜ = உளுந்து இவற்றால் செய்யப்பட்ட
லலித பக்ஷதொளு = பதார்த்தங்களில்
தக்ஷனு = தக்ஷப்ரஜேஸ்வரனையும்
அவனில்
லட்சுமி நரசிம்ம ரூபத்தையும் சிந்திக்க வேண்டும்.

பற்களால் கடிக்காமல், நாக்கினால் சுவைத்து உட்கொள்ளும் / குடிக்கும் சாறு, பால் முதலானவற்றிற்கும், நெய், எண்ணெயினால் சமைத்த பதார்த்தங்களுக்கும் அபிமானி புதன். அவனில் அதோக்ஷஜ ரூபத்தை சிந்திக்க வேண்டும்.

பூசணி, எள், உப்பு, இவற்றால் சமைக்கப்பட்ட அப்பளம் முதலானவற்றிற்கு அபிமானி தக்ஷ ப்ரஜேஸ்வரன். இவனில் ஸ்ரீலட்சுமி நரசிம்ம மூர்த்தியை சிந்திக்க வேண்டும்.

**மனுவ மாஷஸுப$^4$க்ஷ்யதொ$^3$ளு சி**
**ந்தனெய மாட$^3$ச்யுதன நிர்ருதி**
**மனெ எனிப லவணதொ$^3$ளு மரெயதெ$^3$ ஸ்ரீஜனார்த்த$^3$னன |**

**நெனெயுதிரு ப2லரஸக3ளொளு ப்ரா**
**ணன உபேந்த்3ரன வீள்யதெ3லெயொளு**
**த்3யுனதி3 ஹரிரூபவனெ கொண்டா3டு3தலி ஸுகி2ஸுதிரு ||20**

மாஷசுபக்ஷதொளு = உளுத்தம் பருப்பினால் செய்யப்பட்ட பதார்த்தங்களில்
மனுவு = ஸ்வாயம்புவ மனுவையும்,
அவனில், அச்யுதனையும் சிந்திக்க வேண்டும்.
நிரருதி = நிரருதியின்
மனெயெனிப = வசிப்பிடமாக இருக்கும்
லவணதொளு = உப்பில்
ஸ்ரீஜனார்த்தன = ஜனார்தன மூர்த்தியை
மரெயரெ நெனெயுதிரு = மறக்காமல் நினைக்க வேண்டும்.
பலரஸகளொளு = பழச்சாறுகளில்
ப்ராணன = ப்ராணனை
அவனில், உபேந்திரனையும் சிந்திக்க வேண்டும்.
வீள்யதெலெயொளு = வெற்றிலையில்
த்யுனதி = கங்கையையும்
அவளில், ஹரிரூபத்தையும்
கொண்டாடுதலி = கொண்டாடி
சுகிசுதிரு = மகிழ்ந்திரு.

* வடை முதலான உளுந்து பக்ஷங்களில் ஸ்வாயம்புவ மனுவையும் அவனில் அச்யுத மூர்த்தியையும் சிந்திக்க வேண்டும்.
* உப்பில் நிரருதியையும் அவனில் ஜனார்த்தன மூர்த்தியையும் சிந்திக்க வேண்டும்.
* பழச்சாறுகளில் பஞ்சபிராணர்களில் ஒருவரான ப்ராணனையும் அவரில் உபேந்திரனையும் சிந்திக்க வேண்டும்.
* வெற்றிலையில் கங்கையையும் அவளில் ஹரியையும் சிந்திக்க வேண்டும்.

இப்படியாக சிந்தித்து, இவர்களை கொண்டாடி மகிழ்ந்திருக்க வேண்டும்.

**வேத3வினுதகெ3 பு3த3னு ஸுஸ்வா**
**தோ3த3காதி4பனெனிஸி கொம்ப3னு**
**ஸ்ரீத4 க்ருஷ்ணன திளிது3 பூஜிஸுதிரு நிரந்தரதி3 |**
**ஸாது3கர்மவ புஷ்கரனு ஸுனி**
**வேதி3த பதா3ர்த்த2க3ள ஷுத்தி3ய**
**கை3து3கெ3ய்ஸுத ஹம்ஸ நாமகக3ர்ப்பிஸுதலிப்ப ||21**

வேதவினுதகெ = வேதங்களால் புகழப்படும் ஸ்ரீஹரிக்கு
புதன்

சுஸ்வாதோதகா திபனெனிஸி = உத்தமமான சுவையான நீருக்கு அபிமானி எனப்படுகிறான். அவனில்,
ஶ்ரீத = ஐஸ்வர்யபிரதனான ஶ்ரீகிருஷ்ணனை சிந்தித்து
நிரந்தரதி பூஜிசுதிரு = நிரந்தரமாக பூஜிக்க வேண்டும்.
ஸாதுகர்மவ = புண்ய கர்மங்களுக்கு அபிமானியான
புஷ்கரனு,
சுனிவேதித பதார்த்தகள = நைவேத்தியத்திற்கு வைக்கப்பட்டிருக்கும் பதார்த்தங்களை
ஷுத்திய கெய்து = பரிசுத்தம் ஆக்கி
கைஸூத = மேலும் அதிக சுத்திக்காக
ஹம்ஸ நாமககர்ப்பிசுதலிப்ப = ஹம்ஸ நாமக பரமாத்மனுக்கு சமர்ப்பணம் செய்கிறான்.

தூய்மையான சுவையான நீருக்கு அபிமானி புதன். அங்கு ஶ்ரீகிருஷ்ணனை சிந்திக்க வேண்டும். கர்மாபிமானியான புஷ்கரன், நைவேத்தியத்திற்கு வைக்கப்பட்டிருக்கும் பதார்த்தங்களை பரமாத்மனுக்காக, சுத்தி செய்து, மேலும் அதிக சுத்திக்காக அவற்றை ஹம்ஸ நாமக பரமாத்மனுக்கு அர்ப்பிக்கிறான். அதாவது, மற்றவர்கள் சமைத்த சமையலை சுத்தம் செய்யும் செயல் புஷ்கரனுடையது. அங்கு ஹம்ஸ நாமக பரமாத்மன் இருக்கிறான் என்று கருத்து.

**ரதி ஸகலஸூஸ்வாது[3] ரஸக[3]ள**
**பதியெனிஸுவளு அல்லி விஷ்வனு**
**ஹூதவஹன சுல்லிக[3]ளொளகெ[3] பா[4]ர்க்க[3]வன சிந்திபுது[3] ।**
**க்ஷிதிஜ கோ[3]மய ஜாதி[4]யொளு ஸம்**
**ஸ்தி[2]த வஸந்தன ருஷப[4]தே[3]வன**
**துதிஸுதிரு ஸந்தத ஸதா[3] ஸத்ப[4]க்தி[3]பூர்வகதி[3] ।।22**

ரதி = ரதி தேவி
சகல ஸூஸ்வாது ரசகள = அனைத்து சுவையான சாறுகளுக்கு
பதி எனிஸுவளு = அபிமானி எனப்படுகிறாள்
அல்லி = அங்கு
விஷ்வனு = விஷ்வமூர்த்தியை சிந்திக்க வேண்டும்
ஹூதவஹன = அக்னி
சூலியொளகெ = அடுப்புகளில்
அவனில்
பார்க்கவன = பரசுராமதேவரை சிந்திக்க வேண்டும்
க்ஷிதிஜ = பூமியில் பிறக்கும் மரங்கள் / செடிகள்
மற்றும்
கோமயஜாதியொளு = சாணத்திலிருந்து ஆகும் வறட்டிகள், இவையே முதலானவற்றில்
சம்ஸ்தித = இருக்கும்

வஸந்தன = வசந்தனை
அவனில்
ருஷபதேவன = ரிஷப தேவனை
சந்தத = இடைவிடாமல்
சதா = எப்போதும்
சத்பக்திபூர்வகதி = பக்தியுடன்
துதிஸுதிரு = ஸ்தோத்திரம் செய்து கொண்டிரு.

அனைத்து சுவையான சாறுகளுக்கு அபிமானி ரதிதேவி. அங்கு விஷ்வமூர்த்தியை சிந்திக்க வேண்டும். சமையல் செய்யும் அடுப்புகளின் அபிமானி அக்னி. அங்கு பரசுராம மூர்த்தியை சிந்திக்க வேண்டும். கட்டை, வறட்டி ஆகியவற்றின் அபிமானி வசந்தன். அங்கு ரிஷப தேவரை சிந்திக்க வேண்டும்.

**பாககர்த்ருக[3]ளொளு சதுர்த[3]ஷ**
**லோகமாதெ மஹாலகுமி க[3]த**
**ஷோக[2] விஷ்வம்ப[4]ரன திளிவது[3] எல்லகாலத[3]லி |**
**சௌக[3]ஸுத்த[4] ஸுமண்ட[3]லதி[3] பூ[4]**
**ஸூகராஹ்வய உபரிசைலப**
**ஏக[3]த[3]ந்த ஸனத்குமாரன தே[3]னிபரு பு[4]த[3]ரு ||23**

பாக கர்த்ருகளொளு = சமையல் செய்பவர்களில்
சதுர்தஷ லோகமாதெ = 14 உலகங்களுக்கு தாயான
மஹாலகுமி = மஹாலட்சுமி தேவியை
அவரில்
கதஷோக = சோகம் இல்லாதவனான
விஷ்வம்பரன = விஷ்வம்பர மூர்த்தியை
எல்லகாலதலி = அனைத்து காலங்களிலும்
சிந்திக்க வேண்டும்.
சௌகஷுத்தி சுமண்டலதி = (நைவேத்தியத்திற்காக பொருட்கள் வைக்கப்படும்) சதுர மண்டலத்தில்
பூ = பூமி தேவியை
அங்கு
ஸூகராஹ்வய = வராஹ தேவரையும் சிந்திக்க வேண்டும்
உபரிசைலப = நைவேத்தியத்திற்கு மேல் போர்த்தப்படும் வஸ்திரத்தில்
ஏகதந்த = விநாயகன்
அவனில்
ஸனத்குமாரன = பிரம்மதேவரின் மக்களான சனகாதிகள் அல்லாத, பரமாத்மனின் அவதாரமான சனத்குமார மூர்த்தியை
புதரு = ஞானிகள்
தேனிபுது = தியானம் செய்யவேண்டும்.

சமையல் செய்பவரில் ரமாதேவியையும், அவரில் விஷ்வம்பர மூர்த்தியையும் சிந்திக்க வேண்டும். நைவேத்தியத்தை வைப்பதற்காக போட்டிருக்கும் சதுர மண்டலத்தில் பூமிதேவியையும் அவளில் வராஹ மூர்த்தியையும் சிந்திக்க வேண்டும். நைவேத்திய பதார்த்தங்களின் மேல் மூடியிருக்கும் வஸ்திரத்தில் கணபதியையும், அவனில் சனத்குமார மூர்த்தியையும் அறியவேண்டும்.

சனத்குமாரர் பிரம்மதேவரின் மக்களான நால்வரில் சனத்குமாரர் வேறு, பாகவத 1ம் ஸ்கந்த 3ம் அத்தியாயத்தில்:

ஸ ஏவ ப்ரதமம் தேவ: கௌமாரம் ஸர்க்கமாஸ்தித: ||
சசார துஷ்சரம் பிரம்மா பிரம்மசர்ய மகண்டிதம் ||6

அதுவே பத்பனாப ரூபியான ஸ்ரீநாராயணனின் முதலாம் அவதாரம். சனத்குமாரர் என்று பிராமணனாக இருந்து அகண்டமான பிரம்மசர்யத்தை ஏற்றார் என்று சொல்லியிருக்கும் பகவத் அவதாரமான சனத்குமாரனை சிந்திக்க வேண்டும் என்பது கருத்து.

**ஸ்ரீனிவாஸன போ[4]க்யவஸ்து[2]வ**
**காணகொட[3]த[3]ந்த[3]த[3]லி விஷ்வ**
**க்ஸேன பரிகாரூபனாகி[3]ஹனல்லி புருஷாக்[2]ய |**
**தானெ பூஜக பூஜ்யனெனிஸி நி**
**ஜானுக[3]ர ஸந்தெயிப கு[3]ரு பவ**
**மானவந்தி[3]த ஸர்வகாலக[3]ளல்லி ஸர்வேஷ ||24**

ஸ்ரீனிவாசன = ஸ்ரீனிவாசன்
போக்யவஸ்துவ = உண்பதற்குத் தகுதியான பதார்த்தங்களை
காணகொடதந்ததலி = இன்னொருவருக்கு தெரியாதவாறு
விஷ்வக்சேன = வாயு புத்ரனான விஷ்வக்சேனன்
பரிகா ரூபனாகிஹனு = சுற்றிலும் பிரகாரமாக இருக்கிறான்
அல்லி = அவனிடம்
புருஷாக்யா = புருஷ நாமகனை சிந்திக்க வேண்டும்
குருபவமான வந்தித = நம் முக்கிய குருகளான வாயுதேவரால் நமஸ்காரம் பெற்றுக்கொண்ட
ஸர்வேஷ = அனைவருக்கும் ஈஸ்வரனான ஸ்ரீஹரி
ஸர்வ காலகளல்லி = அனைத்து காலங்களிலும்
தானே பூஜகனாகி = பூஜிப்பவனாகவும்
பூஜ்யனெனிஸி = பூஜிக்கப்படுபவனாகவும் இருக்கிறான் என்று சிந்தித்து வணங்கும்
நிஜானுகர = உண்மையான பக்தர்களை
ஸந்தெயிப = காக்கிறான்.

பரமாத்மனுக்கு நைவேத்தியத்திற்கு வைத்திருக்கும் பதார்த்தங்களை, வேறு யாரும் பார்க்காதவாறு, விஷ்வக்ஸேனர், நைவேத்தியத்தை சுற்றியும் பிராகாரத்தைப் போல இருக்கிறார். அவரில் புருஷ ரூபியை சிந்திக்க வேண்டும். இப்படியாக பரமாத்மன், ஒருவரில் இருந்து பூஜிப்பவராகவும், இன்னொருவரில் பூஜையை ஏற்றுக் கொள்பவராகவும் இருந்து, அனைத்து காலங்களிலும், தன் பக்தர்களை காக்கிறான்.

**நூதன ஸமீசீன ஸூரஸோ**
**பேத ஹ்ருத்$^{3}$ய பதார்த்த$^{2}$தொ$^{3}$ளு விதி$^{4}$**
**மாதெ தத்தத் ரஸக$^{3}$ளொளு ரஸரூப தானாகி$^{3}$ |**
**ப்ரீதிப$^{3}$டி$^{3}$ஸுத நித்யதி$^{3}$ ஜக$^{3}$**
**ந்னாத$^{2}$விட$^{2}$லன கூடி$^{3}$ தா நி**
**ர்பீ$^{4}$தளாகி$^{3}$ஹளெந்த$^{3}$ரிது$^{3}$ நீ ப$^{4}$ஜிஸி ஸுகி$^{2}$ஸுதிரு ||25**

நூதன = புதிதாகவும்
சமீசீன = யோக்யமானதாகவும்
ஸூரஸோபேத = உத்தமமான சுவையுடன் கூடிய
பதார்த்ததொளு = பதார்த்தங்களில்
விதிமாதெ = பிரம்மதேவரின் தாயான ரமாதேவி
தத்தத் ரஸகளொளு = அந்தந்த சுவைகளில், சுவையின் ரூபமாக
நித்யதி = தினந்தோறும்
ப்ரீதி படிசுத = தன் கணவனான பரமாத்மனை திருப்திப்படுத்துகிறாள்
ஸ்ரீஜகன்னாதவிட்டலன
கூடி = அவனுடனே இருந்து
தா = தான்
நிர்பீதளாகிஹளெந்து = பயப்படாமல் இருக்கிறாள் என்பதை
அரிது = அறிந்து
நீ பஜிஸி = வணங்கி
சுகிசுதிரு = மகிழ்ச்சி கொள்.

புதியதாகவும், உத்தமமாகவும், மிகச்சிறந்த சுவைகளால் நிரம்பியும் இருக்கும் பதார்த்தங்களில் ரமாதேவியர் அந்தந்த சுவைகளில் தானே சுவையின் ரூபமாக இருந்து, ஸ்ரீஹரியை திருப்திப்படுத்தியவாறு, பரமாத்மனுடன் பிரியாமல் சேர்ந்திருந்து, பயப்படாமல் இருக்கிறாள் என்று அறிந்து, ஸ்ரீஜகன்னாதவிட்டலனை வணங்கியவாறு மகிழ்ச்சியோடு இரு.

நைவேத்திய சமர்ப்பண சந்தி என்னும் 31ம் சந்தியின் தாத்பர்யம் இத்துடன் நிறைவுற்றது.

ஸ்ரீகிருஷ்ணார்ப்பணமஸ்து.

***

## பாவபிரகாசிகை : சந்தி 32 : கக்ஷ தாரதம்ய சந்தி

**/ தேவதா தாரதம்ய் சந்தி**

**ஹரிகதா[2]ம்ருதசார கு[3]ருக[3]ள**
**கருணதிந்தா[3]பநிது பே[1]ளுவே**
**பரம ப[4]கவத்[3]ப[4]க்தரித[3]னாத[3]ரதி கேளுவுது[3]**

**ஸ்ரீரமண ஸர்வேஷ ஸர்வக[3]**
**ஸாரபோ[4]க்த ஸ்வதந்த்ர தோ[3]ஷவி**
**தூ[3]ர ஞானானந்த[3] ப[3]லவைஷ்வர்ய கு[3]ணபூர்ண |**
**மூரு கு[3]ணவர்ஜித ஸகு[3]ண ஸா**
**கார விஷ்வ ஸ்தி[2]தி லயோத[3]ய**
**காரண க்ருபாஸாந்த்[3]ர நரஹரி ஸலஹோ சஜ்ஜனர ||1**

ஸ்ரீரமண = லட்சுமிபதி
சர்வேஷ = அனைவருக்கும் தலைவன்
சர்வக = அனைத்து இடங்களிலும் நிலைத்திருப்பவன்
சாரபோக்த = அனைத்து சாரங்களையும் (ரசங்களையும்) உண்பவன்
ஸ்வதந்த்ரன் = எதற்கும் யாரையும் எதிர்பார்க்காதவன்
தோஷவிதூர = தோஷங்கள் அற்றவன்
ஞானானந்த பலவைஷ்வர்ய குணபூர்ண = ஞான, ஆனந்த, பல, ஐஸ்வர்ய முதலான குணங்களால் நிரம்பியவன்
மூரு குணவர்ஜித = ப்ராக்ருதமான சத்வ, ரஜஸ், தமோ குணங்கள் இல்லாதவன்
சகுண = ஆனந்தகுணபூர்ணன்
ஸாகார = அப்ராக்ருதமான ஸ்வரூபம் கொண்டவன்
விஷ்வ = பிரபஞ்சத்தின்
ஸ்திதி லயோதய காரண = படைத்தல், காத்தல், அழித்தலுக்குக் காரணமானவன்
க்ருபாஸாந்த்ர = கருணாபூர்ணன்
இத்தகைய குணங்களைக் கொண்ட,
நரஹரி = ஸ்ரீ நரஹரியே
ஸலஹோ சஜ்ஜனர = சஜ்ஜனர்களை காப்பாற்று.

லட்சுமிபதியும், சர்வோத்தமனும், அனைத்து இடங்களில் வியாப்தனும், அனைத்து சாரங்களையும் உண்பவனும், ஸ்வதந்த்ரனும், தோஷங்கள் அற்றவனும், ஞானானந்த பல ஐஸ்வர்ய குணங்களைக் கொண்டவனும், மூன்று குணங்களின் சம்பந்தம் இல்லாதவனும், ஆனந்தாதி குண பூர்ணனும், அப்ராக்ருதமான சரீரம் கொண்டவனும், உலகத்தின் ஸ்ருஷ்டி, ஸ்திதி, லய ஆகியவற்றிற்கு காரணனும், கருணா பூர்ணனுமான ஸ்ரீநரசிம்மனே, சஜ்ஜனர்களை காப்பாற்று.

**நித்யமுக்தளெ நிர்விகாரளெ**
**நித்யஸுக2ஸம்பூர்ணே நித்யா**
**நித்ய ஜக3தா3தா3ரெ முக்தாமுக்த க3ணவினுதெ ।**
**சித்தயிஸு பி3ன்னபவ ஶ்ரீபுரு**
**ஷோத்தமன வக்ஷோனிவாஸினி**
**ப்4ருத்யவத்ஸலே காயெ த்ரிஜக3ன்மாதெ விக்2யாதெ ||2**

நித்யமுக்தளே
நிர்விகாரளே = விகாரம் இல்லாதவளே
நித்யசுக சம்பூர்ணே = நித்யானந்த பூர்ணளே
நித்யானித்ய ஜகதாதாரே = நித்யர்களான ஜீவர்கள், அனித்யர்களான சரீரங்களைக் கொண்டவர்களான ஜீவர்கள் இவர்கள் இருக்கும் ஜகத்திற்கு ஆதாரமாக இருப்பவளே
முக்தாமுக்தகணவினுதே = முக்த ஜீவர்களாலும், அமுக்த ஜீவர்களாலும் வணங்கப்படுபவளே.
பின்னபவ சித்தயிஸு = என் விருப்பங்களை கேள்
ஶ்ரீபுருஷோத்தமன = ஶ்ரீபுருஷோத்தமனின்
வக்ஷோனிவாசினி = வக்ஷ ஸ்தலத்தில் வசிப்பவளே
ப்ருத்யவத்ஸலே = பகவந்தனின் தாசர்களிடம் அன்பாக இருப்பவளே
த்ரிஜகன்மாதே = மூன்று உலகங்களுக்கும் தாயே
விக்யாதே = உலகத்தில் புகழ் பெற்றவளே
காயே = நம்மை காப்பாற்று.

பத அர்த்தத்திலேயே விளக்கம் தெளிவாக உள்ளது.

**ரோமகூபக3ளொளு ப்ருதக்ப்ருத**
**கா மஹாபுருஷன ஸ்வமூர்த்திய**
**தாமரஸஜாண்ட3க3ளு தத்க3த விஷ்வரூபக3ளு ।**
**ஶ்ரீமஹிளெ ஈ ரூப கு3ணக3ள**
**ஸீமெகா3ணதெ3 யோசிஸுத மம**
**ஸ்வாமி மஹிமெயதெந்து டெ3ந்தடி3க3டி3கெ3 பெ3ரகா3த3 ||3**

ரோமகூபகளொளு = பரமாத்மனின் தேகத்தில் இருக்கும் ரோமக் கால்களில்
ப்ருதக் ப்ருதக் = ஒவ்வொரு ரோமக் கால்களிலும், தனித்தனியாக
ஆ மஹாபுருஷன = அந்த மஹாபுருஷனின்
ஸ்வமூர்த்திய = திவ்ய மூர்த்திகளின்
தாமரஸ ஜாண்டகள = பிரம்மாண்டங்களையும்
தத்கத = அவற்றில் இருக்கும்
விஷ்வரூபகளு = அந்த பரமாத்மனுக்கு இருக்கும் மிகச்சிறந்த ரூப குணங்களையும்
யோசிஸுத = பார்த்து சிந்தித்தவாறு

ஶ்ரீமஹிளெ = ஸ்ரீரமாதேவி
ஸீமெகாணதெ = அதற்கான எல்லைகளையே காணாமல்
மம = என் ஸ்வாமியின் மகிமை
அதெந்துடெந்து = அது எவ்வளவு இருக்குமோ என்று
அடிகடிகெ = ஒவ்வொரு நொடியும்
பெரகாத = எந்த லட்சுமியர் வியப்படைகிறாரோ
அத்தகைய ஜகன்மாதையான ரமாதேவி, நம்மை காக்கட்டும்.

ஸ்ரீரமாதேவியர் தம் பதியான ஸ்ரீபரமாத்மனின் தேகத்தில் இருக்கும் ரோமக் கால்களில் ஒவ்வொரு ரோமக் கால்களிலும் பகவன் மூர்த்தியையும், அதில் அனேக பிரம்மாண்டங்களையும், அந்த பிரம்மாண்டங்களில் விஷ்வரூபத்தையும், அவனின் ரூபங்களையும், குணங்களையும் பார்த்து சிந்தித்தவாறு, அவற்றின் எல்லைகளைக் காணாமல், ஆஹா, என் ஸ்வாமியின் மகிமை எவ்வளவு இருக்குமோ என்று ஒவ்வொரு நொடியும் வியப்படைந்து கொண்டிருக்கிறார்.

அத்தகைய ரமாதேவி நம்மை காக்கட்டும்.

**ஒந்த$^{3}$ஜாண்ட$^{3}$தொ$^{3}$ளொந்து$^{3}$ ரூபதொ$^{3}$**
**ளொந்த$^{3}$வயவ தொ$^{3}$ளொந்து$^{3}$ நக$^{2}$தொ$^{3}$ள**
**கொ$^{3}$ந்து$^{3}$ கு$^{3}$ணக$^{3}$ள பாருகா$^{3}$ணதெ$^{3}$ க்ருதபுடாஞ்ஜலியிம் ।**
**மந்த$^{3}$ஜாஸன புலக புலகா**
**நந்த$^{3}$பா$^{3}$ஷ்ப தொத$^{3}$லுனுடி$^{3}$க$^{3}$ளி**
**ந்தி$^{3}$ந்தி$^{3}$ரா வல்லப$^{4}$ன மஹிமெ க$^{3}$பீ$^{4}$ரதமவெந்த ।।4**

அனேக பிரம்மாண்டங்களில்
ஒந்தஜாண்டதொளு = ஒரு பிரம்மாண்டத்தில் இருக்கும்
ஒந்து ரூபதொளு = அனேக ரூபங்களில் ஒரு ரூபத்தில்
ஒந்து அவயவதொளு = அனேக அவயவங்களில் ஒரு அவயவத்தில்
ஒந்து நகதொளு = அனேக நகங்களில் ஒரு நகத்தில் இருக்கும்
ஒரு குணகள = ஒரு பாகத்தில் இருக்கும் குணங்களைப் பார்த்து, சிந்தித்து, அதன் எல்லைகளைக் காணாமல்
மந்தஜாஸன = கமலாஸனனான பிரம்மதேவர்
க்ருதபுடாஞ்சலியிம் = கை கூப்பியவாறு
புலக புலகானந்தபாஷ்ப = புளகாங்கிதம் அடைந்து மெய்சிலிர்த்து ஆனந்தக்கண்ணீர் சொரிந்தவாறு தொண்டை கமறி வார்த்தை வெளிவராதவாறு
இந்திரா வல்லபன = லட்சுமிபதியான ஸ்ரீபரமாத்மனின்
மஹிமெ கபீரதமவெந்த = மகிமைகளின் ஆழத்தைக் காண்பதற்கு சாத்தியமில்லை என்றான்.

அனேக பிரம்மாண்டங்களில் ஒரு பிரம்மாண்டத்தில் இருக்கும், அனேக பகவத் ரூபங்களில் ஒரு பகவத் ரூபத்தில், அனேக அங்கங்களில் ஒரு அங்கமான

பாதத்தில் இருக்கும் பல நகங்களில் ஒரு நகத்தில் இருக்கும் அனேக பாகங்களில் ஒரு பாகத்தில் இருக்கும் பகவந்தனின் குணங்களை சிந்தித்து, அதன் எல்லைகளைக் காணாமல் பிரம்மதேவர், தன் கைகளை குவித்து வணங்கியவாறு, புளகாங்கிதம் அடைந்து மெய்சிலிர்த்து ஆனந்தக்கண்ணீர் சொரிந்தவாறு தொண்டை கமறி வார்த்தை வெளிவராதவாறு:

'ஆஹா, அந்த லட்சுமிவல்லபனின் குணங்களின் மூலம் எங்கு இருக்கிறது என்று எவ்வளவு தேடினாலும் அதன் ஆழம் தெரிவதேயில்லை. இத்தகைய மகா மகிமையுள்ளவன் பரமாத்மன்' என்றார்.

இந்த 4 ஸ்லோகங்களினாலும், ஸ்ரீஹரி, லட்சுமி, பிரம்ம இவர்களின் தாரதம்யத்தையும் சொல்லியிருந்தாலும், பகவத் மகிமையையே விஷயமாக காட்டியிருக்கிறார்.

**ஏனு த4ன்யரோ பி3ரம்ம கு3ரு பவ**
**மானரீர்வரு ஈ பரியலி ர**
**மானிவாஸன விமல லாவண்யாதிஷயக3ளனு |**
**ஸானுராக3தி நோடி3 ஸுகி2ப ம**
**ஹானுபா3வர பா4க்யவெந்தோ ப4**
**வானித4வனிக3 ஸாத்3யவெனிஸலு நரரபாடே3னு ||5**

பிரம்ம = பிரம்மதேவர்
குரு = குருகளான
பவமான = வாயுதேவர்
இவரீர்வரு = இந்த இருவரும்
ஏனு தன்யரோ = எவ்வளவு பாக்யசாலிகளோ?
ஈ பரியலி = மேற்கூறிய விதமாக
ரமா நிவாஸன = ஸ்ரீநிவாசனின்
விமல = நிர்மலமான
லாவண்யாதிஷயகளனு = சௌந்தர்ய விசேஷங்களை
ஸானுராகதி = மிகவும் அன்புடன் பார்த்து
சுகிப = சுகத்தை அனுபவிக்கும்
மஹானுபாவர = மஹானுபாவரான பிரம்ம வாயுகளுக்கு
பாக்யவெந்தோ = எத்தகைய பாக்கியமோ?
பவானிதவனிகெ = பார்வதி பதியான ருத்ரதேவருக்கு
அசாத்யவெனிஸலு = அவருக்கே அசாத்தியம் என்கிறபோது
நரர பாடேனு? = சாதாரண மக்களின் கதி என்ன?

முந்தைய பத்யத்தில், பிரம்மதேவர் பகவந்தனைப் பார்த்து மகிழ்ச்சியடைவதை சொல்லி, தற்போது பிரம்மதேவருக்கு சமம் வாயுதேவர் என்பதால், அவரும்

பிரம்மதேவரைப் போலவே பகவத் ரூபங்களைக் கண்டு மகிழ்ச்சி அடைகிறார் என்று சொல்வதற்காக, ஒரே பத்யத்தில் இருவரையும் துதிக்கிறார்.

இந்த பிரம்ம வாயுகள் எத்தகைய பாக்யசாலிகளோ? பரமாத்மனின் ரூப சௌந்தர்ய விசேஷத்தை முந்தைய பத்யத்தில் சொன்னதைப் போலவே பார்த்து மகிழ்ந்திருக்கிறார்கள். இந்த மஹானுபாவர்களின் பாக்கியத்தை என்னவென்று வர்ணிப்பேன்? இத்தகைய பாக்கியம் ருத்ரதேவருக்கும் இல்லை. அப்படி இருக்கையில் மற்ற சாதாரண மனிதரின் கதிதான் என்ன?

**ஆ பிதாமஹ நூரு கல்ப ர**
**மாபதிய கு3ண ஜபிஸி ஒலிஸி ம**
**ஹாபராக்ரம ஹனும பீ4மானந்த3 முனியெனிஸி |**
**ஆ பரப்3ரம்மன ஸுனாபி4**
**கூபஸம்ப4வ நாமத3லி மெரெ**
**வாபயோஜாஸன ஸமீரரிக3பி4னமிபெ நித்ய ||6**

ஆ பிதாமஹ = அந்த பிரம்மதேவர்
பிரம்ம பதவியைப் பெறுவதற்கு முன்னர்
நூருகல்ப = பிரம்மனின் 100 கல்பங்களில்
ரமாபதிய = ரமாபதியின்
குணஜபிஸி = குணங்களை உபாசனை செய்து
ஒலிஸி = பரமாத்மனின் அன்பைப் பெற்று
மஹா பராக்ரம = மஹா பராக்ரமசாலியான
ஹனும பீமானந்த முனியெனிஸி = 99ம் கல்பத்தில் வாயு பதவியைப் பெற்று ஹனும, பீம, மத்வ என்னும் மூன்று அவதாரங்களை எடுத்து, அந்த மூன்று அவதாரங்களிலும் பகவத் சேவையை செய்து, 100ம் கல்பத்தில் அந்த பரபிரம்மனின்,
ஸுனாபிகூப சம்பவ நாமதலி மெரெவ = நாபிக் கமலத்திலிருந்து பிறந்து கமலசம்பவ என்ற பெயரைப் பெற்றிருக்கும்
ஆபயோஜாஸன ஸமீரரிகெ = பிரம்ம வாயுகளை
ஸதத = அனைத்து காலங்களிலும்
அபினமிபெ நான் வணங்குவேன்.

ருஜு கணஸ்தராக இருந்தபோது (பிரம்ம பதவியைப் பெறுவதற்கு முன்னர்) 100 பிரம்ம கல்பங்களின் சாதனை செய்து, 99ம் கல்பத்தில் வாயு பதவியைப் பெற்று ஹனும, பீம, மத்வ என்னும் மூன்று அவதாரங்களால் ராம, கிருஷ்ண, வேதவியாஸர்களின் சேவையை செய்து, 100ம் கல்பத்தில் பிரம்ம பதவியைப் பெறுவதற்காக பரமாத்மனின் நாபி கமலத்திலிருந்து பிறந்து, கமலசம்பவ என்னும் பெயரைப் பெற்ற, பிரம்ம வாயுகளை அனைத்து காலங்களிலும் நான் நமஸ்காரம் செய்கிறேன்.

**வாஸுதே3வனமூர்த்தி ஹ்ருத3யா**
**காஷமண்ட3ல மத்4யத3லி தா**
**ரேஷனந்த3தி3 காணுத அதிஸந்தோஷத3லி துதிப ।**
**ஆ ஸரஸ்வதி பா4ரதியரிகெ3**
**நா ஸதத வந்தி3ஸுவெ பரமோ**
**ல்லாஸத3லி ஸுக்3ஞான ப4கு3தியு ஸலிஸலெனகெ3ந்து3 ।।7**

வாசுதேவனமூர்த்தி,
ஹ்ருதயாகாஷமண்டல மத்யதலி = இதயக் கமலத்தில் இருக்கும் மண்டலத்தின் நடுவில்
தாரேஷனந்ததி = சந்திரனைப் போல
காணுத = தெரிந்தவாறு
அதி சந்தோஷதலி = மிகவும் மகிழ்ச்சியுடன்
துதிப = ஸ்தோத்திரம் செய்து கொண்டிருக்கும்
ஆ சரஸ்வதி பாரதியரிகெ = சரஸ்வதி, பாரதி தேவியர்களை
எமகெ = நமக்கு
சுக்ஞான = தூய்மையான ஞானத்தையும்
பகுதியு = பக்தியையும்
ஸலிஸலி = கொடுக்கட்டும்
எந்து = என்று
நா = நான்
பரமோல்லாஸதலி = மிகவும் மகிழ்ச்சியுடன்
ஸதத = எப்போதும்
வந்திஸுவெ = நமஸ்கரிக்கிறேன்.

எந்த சரஸ்வதி பாரதியர், தம் ஹ்ருதயாகாஷத்தில் இருக்கும் மண்டலத்தின் நடுவில் சந்திரனைப் போல ஒளிர்ந்து கொண்டிருக்கும் ஸ்ரீவாசுதேவ மூர்த்தியைப் பார்த்து மகிழ்ச்சியுடன் ஸ்தோத்திரம் செய்து கொண்டிருக்கிறார்களோ, அத்தகைய சரஸ்வதி பாரதியர்களை, நமக்கு சுக்ஞானத்தையும், திடமான பக்தியையும் கொடுக்குமாறு, மிகவும் மகிழ்ச்சியுடன் (ஆர்வத்துடன்) வணங்கிக் கேட்கிறேன்.

**ஜக3து3த3ரன ஸுரோத்தமன நிஜ**
**பெக3லொளாந்து3 கராப்ஜதொ3ளு பத3**
**யுக3த4ரிஸி ந2க2பங்க்தியொளு ரமணீயதரவாத3 ।**
**நக3த3ரன ப்ரதிபி3ம்ப3 காணுத**
**மிகெ3ஹருஷதி3ம் பொக3ளி ஹிக்கு3வ**
**க2க3குலாதி3ப கொட3லி மங்க3ல ஸகலஸுஜனரிகெ3 ।।8**

ஜகதுதரன = ஜகத்தை தன் உதரத்தில் தரித்த
சுரோத்தமன = தேவோத்தமனான ஸ்ரீபரமாத்மனை
நிஜ = தன்

பெகலொளு = முதுகில்
ஆந்து = தாங்கிக் கொண்டு
கராப்ஜதொளு = தன் கரகமலங்களில்
பதயுகதரிஸி = பரமாத்மனின் இரு பாதங்களையும் தரித்து
நகபங்க்தியொளு = பாதங்களின் நகங்களின் ஒளியில்
ரமணீயதரவாத = மிகவும் அற்புதமான (அழகான)
நகதரன = கோவர்த்தனோத்தாரியான ஸ்ரீஹரியின்
ப்ரதிபிம்ப = பிரதிபிம்பத்தைப் பார்த்தவாறு
மிகெஹருஷதிம் = மிகவும் மகிழ்ச்சியுடன்
பொகளி ஹிக்குவ = அவனைப் புகழ்ந்தவாறு, மகிழும்
கககுலாதிப = பக்ஷி குலத்தின் அதிபதியான கருடன்
சகலசுஜனரிகெ = அனைத்து சஜ்ஜனர்களுக்கும்
கொடலி மங்கலவ = மங்கலத்தைக் கொடுக்கட்டும்.

**யோகி$^{3}$க$^{3}$ள ஹ்ருதயகெ நிலுக நிக$^{3}$**
**மாக$^{3}$மைக வினுதன பரமனு**
**ராக$^{3}$தலி த்$^{3}$விஸஹஸ்ர ஜிஹ்வெக$^{3}$ளிந்த$^{3}$ வர்ணிஸுவ }**
**பூ$^{4}$ க$^{3}$க$^{3}$ன பாதாளவ்யாப்தன**
**யோக$^{3}$ நித்$^{3}$ராஸ்பத$^{3}$னெனிப கு$^{3}$ரு**
**நாக$^{3}$ராஜன பத$^{3}$கெ நமிஸுவெ மனதொ$^{3}$ளனவரத ||9**

யோகிகள ஹ்ருதயகெ = சமாதி நிலையில் இருந்து, ஹ்ருதயாகாஷத்தில் பகவத் ஸ்வரூபத்தைக் காணும் யோகிகளின் மனதிற்கும் கூட
நிலக = முழுவதுமாக காணக் கிடைக்காத
நிகமாக மைகவினுதன = வேதங்கள், பாஞ்சராத்ர ஆகமங்கள் முதலானவற்றால் புகழப்படுபவனான ஸ்ரீபரமாத்மனை
பரமானுராகதலி = மிகுந்த பக்தியுடன்
த்விஸஹஸ்ர ஜிஹ்வெகளிந்த = 2000 நாக்கினால்
வர்ணிஸுவ = வர்ணிக்கும்
பூ ககன பாதாள வியாப்தன = பூமி, அந்தரிக்ஷ, பாதாள முதலான அனைத்து இடங்களிலும் வியாப்தனான ஸ்ரீஹரிக்கு
யோக நித்ராஸ்பதனெனிப = யோக நித்திரைக்கு உதவுபவன் என்று
குரு = தாரதம்யத்தின்படி குரு பரம்பரையில் வந்த
நாகராஜன = சேஷதேவரின்
பதக்கெ = பாத கமலங்களில்
அனவரத = எப்போதும் திடமாக
மனதொளகெ நமிசுவெ = மனப்பூர்வகமாக நமஸ்கரிக்கிறேன்.

எந்த பரமாத்மன், யோகிகளின் மனதிற்கும், முழுவதுமாக புலப்படாதவனாக இருக்கிறானோ, அத்தகைய வேதங்களால் புகழப்படுபவனான பரமாத்மனை, 2,000 நாக்குகளால் வர்ணித்தவாறு, அனைத்து இடங்களிலும் வியாப்தனான

பரமாத்மனுக்கு, யோக நித்திரைக்கு உதவுபவன் என்றால், யோக நித்திரையில் செல்லும் காலத்தில், சேஷன் என்னும் படுக்கையில் படுத்திருக்கிறான் என்று அர்த்தம். பரமாத்மனுக்கு படுக்கையாக இருந்து ஒளிரும் இத்தகைய சர்ப்ப ராஜனான சேஷனின் பாத கமலங்களை நான் எப்போதும் மனப்பூர்வகமாக நமஸ்காரம் செய்கிறேன்.

**நந்தி3வாஹன நலினித4ர மௌ**
**ளிந்து3ஷேக2ர ஷிவ த்ரியம்ப3க**
**அந்த4காஸுரமத2ன க3ஜ ஷார்த்தூ3ல சர்மத4ர ।**
**மந்த3ஜாஸனதனய த்ரிஜக3**
**த்வந்த்4ய ஷுத்த4 ஸ்படிக ஸன்னிப4**
**வந்தி3ஸுவெனனவரத பாலிஸோ பார்வதி ரமண ||10**

நந்திவாஹன = நந்தியை வாகனமாகக் கொண்டவன்
நளினிதர மௌளி = கங்கையை தலையில் தரித்தவன்
இந்துஷேகர = சந்திரசேகரன்
ஷிவ = மங்களத்தைக் கொடுப்பவன்
த்ரியம்பக = முக்கண்ணன்
அந்தகாசுர மதன = அந்தகாசுரனைக் கொன்றவன்
கஜஷார்தூல சர்மதர = யானை மற்றும் புலியின் தோலை உடுத்தியவன்
மந்தஜாசனதனய = பிரம்மதேவரின் மகன்
த்ரிஜகத்வந்த்ய = வாயுதேவருக்கு அடுத்து, மூன்று உலகத்தவர்களாலும் வணங்கப்படுபவன்
ஷுத்தஸ்படிக சன்னிப = வெண்மையான ஸ்படிக சிலையைப் போல ஒளியுள்ள
இத்தகைய நற்குணங்களைக் கொண்ட ஹே,
பார்வதிரமணா,
அனவரத = எப்போதும் இடைவிடாமல்
வந்திசுவேனு = உன்னை வணங்குவேன்
பாலிஸு = என்னைக் காத்தருள்வாயாக.

பத்ய அர்த்தம் தெளிவாக உள்ளது.

**ப4ணிப4ணாஞ்சித முகுடரஞ்சித**
**க்கணிதடமரு த்ரிஷூல ஷிகி2 தி3ன**
**மணி நிஷாகரநேத்ர பரமபவித்ர ஸுசரித்ர ।**
**ப்ரணதகாமத3 ப்ரமத2 ஸுரமுனி**
**க3ணஸுபூஜித சரணயுக3 ரா**
**வணமத3 விப4ஞ்ஜன ஸதத மாம்பாஹி மஹதே3வ ||11**

பணி = பாம்பின்
பணாஞ்சித = பாம்பினால் அலங்கரிக்கப்பட்ட

முகுட = கிரீடம்
ரஞ்சித = ஒளிர்ந்து கொண்டிருக்கும்
க்வணிதடமரு = சப்தத்தைக் கொடுக்கும் டமரு என்னும் வாத்தியத்தைக் கொண்டவன்
த்ரிஷூல = த்ரிஷூலத்தை தரித்தவன்
ஷிகி = அக்னி
தினமணி = சூரியன்
நிஷாகர = சந்திரன்
நேத்ர = இவர்கள் மூவரையும் மூன்று கண்களாகக் கொண்டவன்
பரமபவித்ர = பரம பவித்ரன்
சுசரித்ர = உத்தமமான மகிமைகளைக் கொண்டவன்
ப்ரணதகாமத = தன்னை வணங்குபவர்களின் மனோபீஷ்டங்களை நிறைவேற்றுபவன்
ப்ரமத = பூதகணம்
சுர = தேவதைகள்
முனி = ரிஷிகள்
கணஸூபூஜித = இந்த கணங்களால் வணங்கப்படுபவன்
சரணயுக = இத்தகைய கணங்களால் நன்றாக வணங்கப்படுவதான பாதங்களைக் கொண்டவன்
ராவண மதவிபஞ்சன = ராவணனின் கர்வத்தை முறித்தவன்
இத்தகைய நற்குணங்களைக் கொண்ட
மகாதேவா,
ஸதத = எப்போதும்
மாம்பாஹி = என்னை காத்தருள்வாயாக.

பத்ய அர்த்தம் தெளிவாக உள்ளது.

**த்[3]க்ஷயக்[3]ஞ விப[4]ஞ்சன விரூ**
**பாக்ஷ வைராக்[4]யாதி[4]பதி ஸம்**
**ரக்ஷிஸெம்மனு ஸர்வகாலதி[3] ஸன்முத[3]வனித்து |**
**யக்ஷபதிஸக[2] யஜபரிகெ[3] ஸுர**
**வ்ருக்ஷ வ்ருகத[4]னுஜாரி லோகா**
**த்[4]யக்ஷ ஷுக து[3]ர்வாஸ ஜைகீஷவ்ய ஸந்தெயிஸு ||12**

தக்ஷயக்ஞ விபஞ்சன = தக்ஷப்ரஜேஷ்வரனின் யாகத்தை அழித்தவன்
விருபாக்ஷ = மூன்றாவது கண் உள்ளவன்
வைராக்யாதிபதி = வைராக்யத்திற்கு அபிமானி
ஸர்வகாலதி = அனைத்து காலங்களிலும்
ஸன்முதவனித்து = உத்தம ஆனந்தத்தை அளித்து
எம்மனு = எங்களை
சம்ரக்ஷிஸு = அருள்வாயாக

யக்ஷபதிசக = குபேரனின் நண்பன்
யஜபரிகெ = வணங்குபவர்களுக்கு
சுரவ்ருக்ஷ = கல்பவ்ருக்ஷத்தைப் போல இருக்கும்
வ்ருகதனுஜாரி = வ்ருகாசுரன் என்னும் தைத்யனின் எதிரி
லோகாத்யக்ஷ = மனோ நியாமகன்
ஷுக, துர்வாஸ ஜைகீஷவ்ய = ஷுக, துர்வாஸ, ஜைகீஷவ்ய என்னும் மூன்று அவதாரங்களைக் கொண்ட
இத்தகைய நற்குணங்களைக் கொண்டவனான ஹே மகாதேவனே,
சந்தெயிஸு = எங்களைக் காப்பாற்று.

ருத்ரதேவரின் மாமனாரான தக்ஷப்ரஜேஸ்வரன், தான் செய்து கொண்டிருந்த யாகத்திற்கு வருகையில், அங்கு முன்னராக வந்து அமர்ந்திருந்த தன் மாப்பிள்ளையான ருத்ரர் தனக்கு மரியாதை தரவில்லை என்னும் கோபத்தினால், அவரை பலவிதங்களில் தூஷித்தான். அவரை அவமானம் செய்வதற்காக, தான் ஒரு யாகம் செய்யத் துவங்கி, தன் மகள் மற்றும் மாப்பிள்ளையை அந்த யாகத்திற்கு அழைக்கவே இல்லை.

ஆனாலும், அவரின் மகளான சதிதேவி, தன் தந்தை என்னும் அபிமானத்தால் யாகசாலைக்கு வர, அவளை வரவேற்காமல், ஆஹுதி கொடுக்கும் காலத்தில், ருத்ர தேவருக்கு ஆஹுதியைக் கொடுக்காமல் அவமானம் செய்தான். இதனால் கோபம் கொண்ட சதிதேவி, தன் தந்தையை பலமாகத் திட்டி, உன்னைப் போன்ற பாவியின் மூலம் பிறந்த இந்த தேகத்தை விடுகிறேன் என்று சொல்லி உயிர்த் தியாகம் செய்தாள்.

இந்த தகவலை அறிந்த ருத்ரதேவர், கோபத்துடன் அங்கு வந்து, யாகத்தை த்வம்சம் செய்து தக்ஷனைக் கொன்று, பின் பிரம்மதேவரின் ஆணைப்படி, ஒரு ஆட்டின் தலையை வைத்து அவனை மறுபடி பிழைக்க வைத்தார் என்று பாகவத 4ம் ஸ்கந்தத்தின் கதை இருக்கிறது. 'தக்ஷயக்ஞ விபஞ்சன' என்னும் பதம் இதையே குறிக்கிறது.

'வ்ருகதனுஜாரி' - வ்ருகாசுரனையே உலகத்தில் பஸ்மாசுரன் என்கிறார்கள். அவன் 'நான் யார் தலை மேல் கை வைக்கிறேனோ, அவன் மரணமடைய வேண்டும்' என்று ருத்ரரிடமிருந்து வரத்தைப் பெற்று, அதனை சோதனை செய்ய, ருத்ரதேவரின் தலை மேலேயே கை வைக்கப் பாய்ந்தான். அப்போது, ஸ்ரீஹரி தந்திரத்துடன் வ்ருகாசுரனை அவன் கையை அவன் தலையிலேயே வைக்குமாறு செய்து, அவனைக் கொன்றார். ருத்ர தேவர் கொடுத்த வரமே, அவனின் சம்ஹாரத்திற்கு காரணம் ஆனதால், வ்ருகதனுஜாரி என்றார்.

ருத்ர தேவரின் அவதார த்ரயத்தின் பிரமாணங்களை 21ம் பிருஹத் தாரதம்ய சந்தியின் வியாக்யானத்தில் கொடுத்திருக்கிறோம்.

**ஹத்து கல்பதி3 லவணஜலதி4யொ**
**ளுத்தமஸ்லோகன ஒலிஸி க்ருத**
**க்ருத்யனாகி3 ஜக3த்பதிய நேமதி3 குஷாஸ்த்ரக3ள |**
**பி3த்தரிஸி மோஹிஸி து3ராத்மர**
**நித்யநிரய நிவாஸரெனிஸித3**
**க்ருத்திவாஸகெ3 நமிபெ ஸேஷபதா3ர்ஹனஹுதெ3ந்து3 ||13**

ஹத்து கல்பதி = பிரம்ம கல்பத்தில் 10 கல்பங்களில்
லவணஜலதியொளு = உப்பு நிறைந்த கடலில் தவம் செய்து
உத்தம ஸ்லோகன = புண்ய கீர்த்தியுள்ள ஸ்ரீபரமாத்மனை
ஒலிஸி = வணங்கி
க்ருதக்ருத்யனாகி = தவம் செய்து, அந்த தவத்தினால் தக்க பலன்களைப் பெற்று
ஜகத்பதிய = ஸ்ரீபரமாத்மனின்
நேமதி = ஆணையின் பேரில்
குஷாஸ்திரகள = சைவ, பாஸுபதாதி மோக சாஸ்திரங்களை
பித்தரிஸி = விளக்கி
துராத்மர = தமோ யோக்யர்களான தைத்யர்களை மயக்கி
நித்ய நிரயனிவாஸரு = நித்யமான தமஸ்ஸிற்கு யோக்யர் என்று சொல்லும்படியாக செய்த
க்ருத்திவாஸனெ = சர்மத்தை வஸ்திரமாகக் கொண்ட ருத்ரதேவருக்கு
சேஷபதார்ஹனஹுதெந்து = இவரே சேஷ பதவியைப் பெறுவதற்கு தகுதி உள்ளவர் என்று
நமிபெ = வணங்குவேன்.

பிரம்ம கல்பத்தின்படி 10 கல்பங்களில் உப்புக் கடலில் உக்ரமான தவத்தினை செய்து பரமாத்மனின் அருளுக்கு பாத்திரராகி, பகவந்தனின் ஆணையின்படி 'த்வஞ்ச ருத்ர மஹாபாஹோ மோஹ ஷாஸ்திராணி காரய' -- நீ உன் மகிமையை வெளிப்படுத்தும் மோக சாஸ்திரங்களை உருவாக்கு - என்ற பகவந்தனின் சொல்லின்படி, மோக சாஸ்திரங்களை செய்து, தைத்யர்களை மயக்கி, அவரை அந்தம் தமஸ்ஸிற்கு யோக்யர்களாக செய்து, அடுத்த கல்பத்தில் சேஷ பதவியைப் பெறப்போகும் ருத்ரதேவருக்கு நான் நமஸ்காரம் செய்வேன்.

**கம்பு3பாணிய பரமப்ரேமனி**
**தம்பி3னியரெந்தெ3னிப லக்ஷணெ**
**ஜாம்ப3வதி காளிந்தி3 நீலா ப4த்ர ஸக2விந்த3 |**
**எம்ப3 ஷண்மஹிஷியர திவ்யப**
**த3ம்பு4ஜக3ளிகெ3 நமிபெ மமஹ்ருத3**
**யம்ப3ரதி3 நெலெஸலி பி3ட3தெ3 தம்மரஸனொட3கூ3டி3 ||14**

கம்புபாணிய = சங்கினை தரித்திருக்கும் ஸ்ரீகிருஷ்ணனின்
பரமப்ரேம நிதம்பினியரெனிப = அன்புடைய மனைவிகள் எனப்படும்

லக்ஷணெ, ஜாம்பவதி, காளிந்தி, நீலா, பத்ரா, சகவிந்தா (மித்ரவிந்தா),
எம்ப = ஆகிய
ஷண்மஹிஷியர = 6 மஹிஷியர்களின்
திவ்யபதாம்புஜகளிகெ = திவ்ய பாத கமலங்களை
நமிபெ = வணங்குவேன்
மம = என்
ஹ்ருதயம்பரதி = இதயாகாஷத்தில்
தம்மரஸனொடகூடி = தம் பதியுடன் சேர்ந்து
பிடதெ = எப்போதும்
நெலெஸலி = நிலைத்திருக்கட்டும்.

ஸ்ரீகிருஷ்ணனின் ஷண்மஹிஷியரான லக்ஷணா, ஜாம்பவதி, காளிந்தி, நீலா, பத்ரா, மித்ரவிந்தா என்னும் ஷண்மஹிஷியரின் பாத கமலங்களுக்கு நான் வணங்குகிறேன். தம் பதியுடன் சேர்ந்து அவர்கள் நம் ஹ்ருதயாகாஷத்தில் எப்போதும் வசித்திருக்கட்டும்.

**ஆ பரந்தரப நொலுமெயிந்த$^3$ ஸ**
**தாபரோக்ஷிக$^3$ளெனிஸி ப$^4$க$^3$வ**
**த்$^3$ரூப கு$^3$ணக$^3$ள மஹிமெ ஸ்வபதிக$^3$ளானனதி$^3$ திளிவ |**
**ஸௌபரணி வாருணி நகா$^3$த்மஜெ**
**ராபனிது ப$^3$ண்ணிஸுவெ என்ன ம**
**ஹாபராத$^4$க$^3$ளெணி ஸதீ$^3$யலி பரமமங்க$^3$லவ ||15**

ஆ பரந்தபன = முன்னர் கூறிய, பரஞ்சோதி ஸ்வரூபனான ஸ்ரீபரமாத்மனின்
ஒலிமெயிந்த = பிரசாதத்தினால்
ஸதா அபரோக்ஷிகளெனிஸி = எப்போதும் அபரோக்ஷ ஞானிகள் என்று சொல்லி
பகவத்ரூப குணகள மஹிமெ = பகவந்தனின் ரூப, குண, மகிமைகளை
ஸ்வபதிகள = தத்தம் பதிகளான கருட, சேஷ, ருத்ராதிகளின்
ஆனனதி = முகத்தினால்
திளித = அறிந்துகொண்ட
ஸௌபர்ணி = கருடனின் மனைவி
வாருணி = சேஷனின் மனைவி
நகாத்மஜர = பார்வதி தேவியர்; இவர்கள் மூவரையும்
ஆபனிது = பக்தியுடன்
பண்ணிஸுவெ = வணங்குவேன்
என்ன மஹாபராதகளெனிஸதெ = என் தவறுகளை எண்ணாமல்
பரம மங்களவ = மங்களங்களை
ஈயலி = கொடுக்கட்டும்.

பகவந்தனின் அருளால் எப்போதும் அபரோக்ஷிகள் என்று அழைக்கப்பட்டு, பரமாத்மனின் ரூப, குண, இவற்றின் மகிமைகளை தத்தம் பதிகளின்

முகத்திலிருந்து அவரவர்கள் கேட்டு, நன்றாக அறிந்து மனனம் செய்து கொண்டிருக்கும் சௌபர்ணி, வாருணி, பார்வதி என்னும் இந்த மூவரையும், என் புத்திற்கு தெரிந்த மட்டில் வணங்குவேன். என் அபராதங்களை கவனத்தில் கொள்ளாமல், அவர்கள் எனக்கு மங்களத்தைக் கொடுக்கட்டும்.

**த்ரிதி$^3$வதரு மணி தே$^3$னுக$^3$ளிகா$^3$**
**ஸ்பத$^3$வெனிப த்ரித$^3$ஷாலயாப்$^4$தி$^3$கெ$^3$**
**பதரனந்த$^3$த$^3$லொப்புதிப்ப உபேந்த்$^3$ர சந்த்$^3$ரமன ।**
**ம்ருது$^3$மது$^3$ர ஸுஸ்தவனதி$^3$ந்த$^3$லி**
**மதுஸமய பிகனந்தெ பாடு$^3$வ**
**முதி$^3$ரவாஹனனங்க்$^3$ரியுக்$^3$மங்க$^3$ளிகெ$^3$ நமிஸுவெனு ।।16**

த்ரிதிவதரு = கல்பவ்ருக்ஷ
மணி = சிந்தாமணி
தேனுகளிகெ = காமதேனு இவற்றிற்கு
ஆஸ்பதவெனிப = இருப்பிடமான
த்ரிதஷாலய = தேவதைகள் வசிப்பதற்கு தகுதியான ஸ்வர்க்கம் என்னும்
அப்திகெ = கடலுக்கு
பதரனந்ததலி = சந்திரனைப் போல
ஒப்புதிப்ப = இருக்கும்
உபேந்திர சந்திரமன = உபேந்திர என்னும் வாமன ரூபியான ஸ்ரீபரமாத்மன் என்னும் சந்திரன்
மதுசமய பிகனந்தெ = வசந்த காலத்தின் குயிலைப் போல, அழகாக
பாடுவ = பாடும்
மதுரவாஹனன = மேக வாகன எனப்படும் தேவேந்திரனின்
அங்க்ரியுக்மங்களிகெ = பாத கமலங்களை
நமிஸுவெனு = வணங்குவேன்.

கல்பவ்ருக்ஷ, காமதேனு, சிந்தாமணி என்னும் மூன்று உத்தம வஸ்துகளின் இருப்பிடமான ஸ்வர்க்க என்னும் கடலுக்கு, சந்திரனைப் போல ஒளிர்ந்து கொண்டிருக்கும் உபேந்திரன் என்னும் சந்திரனை, வசந்த காலத்தின் குயிலைப் போல மிகவும் அழகான குரலில், ஸ்தோத்திரம் செய்து கொண்டிருக்கும் தேவேந்திரனின் பாதகமலங்களுக்கு நான் நமஸ்காரம் செய்கிறேன். அதாவது, தேவேந்திரனின் தலைமையில் உபாஸ்ய மூர்த்தி உபேந்திரன் என்னும் வாமன ரூபியான பரமாத்மன் என்பது கருத்து.

**க்ருதிரமண ப்ரத்$^3$யும்ன தே$^3$வன**
**அதுல ப$^3$ல லாவண்யகு$^3$ண ஸ**
**ந்தத உபாஸன கேதுமாலாக$^2$ண்டத$^3$லி ரசிப ।**
**ரதிமனோஹரனங்க்$^4$ரி கமலகெ$^3$**
**நுதிஸுவெனு ப$^4$கு$^3$தியலி மம து$^3$**

**ர்மதி களெது$^3$ ஸன்மதியனீவு த$^3$ஜஸ்ரவெமகொ$^3$லிது$^3$ ||17**

க்ருதிரமண = க்ருதி ஸ்வரூபரான ரமாதேவியின் பதியான
ப்ரத்யும்னதேவன = பிரத்யும்ன மூர்த்தியின்
அதுல = ஒப்புமை இல்லாதவனான
பல = வலிமை
லாவண்ய = சௌந்தர்ய
குண = குணங்கள், இவற்றை
ஸந்தத = எப்போதும்
கேது மாலாகண்டனொளு = கேது மாலா என்னும் பெயருள்ள பூகண்டத்தில்
உபாசனெ = உபாசனையை
ரசிப = செய்து கொண்டிருக்கும்
ரதிமனோஹரன = ரதி பதியான மன்மதனின்
அங்க்ரி கமலகெ = பாத கமலங்களை
பகுதியலி = மிகுந்த பக்தியுடன்
நுதிசுவெனு = வணங்குவேன்
அஜஸ்ர = அனைத்து காலங்களிலும்
எமகெ = எமக்கு
ஒலிது = மகிழ்ந்து
மம = என்
துர்மதி களெது = துர்மதியைக் களைந்து
சன்மதியனீவு = நற்புத்தியைக் கொடு

கேதுமாலா கண்டத்தில் வசித்தவாறு, க்ருதிபதியான பிரத்யும்ன நாமக பரமாத்மனின் அபாரமான பல, லாவண்ய குணங்களை எப்போதும் உபாசனை செய்து கொண்டிருக்கும் மன்மதனின் பாத கமலங்களை பக்தியுடன் வணங்குவேன். எப்போதும் நமக்கு அருளி, நம் துர்மதியைப் போக்கி, நற்புத்தியைக் கொடு என்று வேண்டுவேன்.

**சாருதர நவவித$^3$ப$^4$கு$^3$தி க$^3$**
**ம்பீ$^4$ர வாராஷியொளு பரமோ**
**தா$^3$ரமஹிமன ஹ்ருதயப$^2$ணிபதி பீட$^2$த$^3$லி ப$^3$ஜிப |**
**பூ$^3$ரிகர்மாகரரெனிஸுவ ஷ**
**ரீரமானி ப்ராணபதிபத$^3$**
**வாரிருஹகானமிபெ மத்கு$^3$ருராயரஹுதெ$^3$ந்து$^3$ ||18**

சாருதர = மனோகரமான
நவவிதபகுதி = 9 விதமான பக்தி என்னும்
கம்பீர = மிகவும் ஆழமான
வாராஷியொளு = கடலில்

பரமோதாரமஹிமன = வணங்குபவர்களுக்கு சர்வாபீஷ்டங்களையும் கொடுப்பவன் ஆகையால் பகவந்தனுக்கு, பரமோதார என்று பெயர். இத்தகைய மகிமைகளைக் கொண்ட ஸ்ரீஹரியை
ஹ்ருதயபணிபதி பீடதலி = ஹ்ருதயாகாஷத்தில், சர்வ ஸ்ரேஷ்டனான சேஷ தேவனையே பீடமாகக் கொண்டு அவர் மேல் அமர்ந்திருக்கும் பகவத் ரூபத்தை வணங்கிக் கொண்டிருக்கும்,
பூரிகர்மாகரரெனிஸுவ = தேகத்தில் இருந்து அனேக வித கர்மங்களை செய்வதால் பூரிகர்மாகர என்று பெயர் பெற்ற
ஷரீரமானி = தேஹாபிமானியான
ப்ராணபதி = 49 மருத்கணர்களில் சிறந்தவனான
ப்ராணன = அஹங்காரிக பிராணனின்
பதவாரிருஹகெ = பாத கமலங்களுக்கு
மத்குருராய நஹுதெந்து = நம் குரு ஸ்ரேஷ்டர் இவர் என்று
ஆனமிபெ = வணங்குவேன்.

9 விதமான பக்தி என்பதே கடல். அந்த கடலின் வசிப்பிடம் இதயம். அந்த இதயத்தின் நடுவில் சேஷ பீடத்தின் மேல் இருக்கும் பரமாத்மனை எப்போதும் சிந்தித்தவாறு, தேஹாபிமானி என்று அழைக்கப்பட்டு, பிராணிகளின் தேகத்தில் இருந்து, அனைத்து வித கர்மங்களை செய்து கொண்டிருக்கும் மருத்களில் சிறந்தவனான பிராண நாமகனின் பாத கமலங்களை வணங்குகிறேன். இவன் 9ம் கக்ஷையைச் சேர்ந்த குரு என்று அறியவேண்டும்.

**விததமஹிமன விஷ்வதோமுக$^{2}$**
**நதுல பு$^{3}$ஜப$^{4}$ல கல்பதருவா**
**ஸ்ரீத$^{4}$ரெனிஸி ஸகலேஷ்ட படெ$^{3}$த$^{3}$னுதி$^{3}$னதி$^{3}$ மோதி$^{3}$ஸுவ |**
**ரதி ஸ்வயம்பு$^{4}$வ த$^{3}$க்ஷ வாச**
**ஸ்பதி பி$^{3}$டௌ$^{3}$ஜன மடதி$^{3}$ஷசி ம**
**ந்மத$^{2}$ குமார அனிருத்$^{3}$த$^{4}$ரமகீ$^{3}$யலி ஸுமங்க$^{3}$லவ ||19**

விதத = விசேஷமாக அனைத்து இடங்களிலும் வியாபித்திருக்கும்
மஹிமன = மகிமையுள்ள
விஷ்வதோமுகன = பிரபஞ்சமே முகமாக உள்ள; அல்லது, பிரபஞ்சத்தின் அனைத்து இடங்களிலும் முகம் உள்ள
அதுள புஜ பல கல்பதருவ = ஒப்புமை இல்லாத புஜபலம் உள்ள ஸ்ரீபரமாத்மனின்
ஆஸ்ரீதரெனிஸி = ஆதரவைப் பெற்றவர்கள் என்று சொல்லி
ஸகலேஷ்ட படெது = விரும்பியதைப் பெற்று
அனுதினதி = தினந்தோறும்
மோதிஸுவ = மகிழ்ச்சியடையும்
ரதி = மன்மதனின் மனைவி
ஸ்வயம்புவ = ஸ்வாயம்புவ மனு
தக்ஷ = தக்ஷ ப்ரஜேஷ்வர

வாசஸ்பதி = ப்ருஹஸ்பத்யாசார்யர்
பிடௌஜன மடதி = தேவேந்திரனின் மனைவியான சசிதேவி
மன்மத குமார = மன்மதனின் மகன் அனிருத்தன்
இந்த ஆறு பேரும்
எமகெ = நமக்கு
சுமங்களவ = நலன்களை
ஈயலி = கொடுக்கட்டும்

அனைத்து இடங்களிலும் வியாப்தமான மகிமைகளைக் கொண்ட விஷ்வதோமுகனான, அபாரமான பலசாலியான, பக்தர்களுக்கு கல்பவ்ருக்ஷத்தைப் போல அவர்களின் இஷ்டார்த்தங்களை நிறைவேற்றும் ஸ்ரீஹரியின் ஆதரவுடன் அனைத்து இஷ்டார்த்தங்களையும் பெற்று எப்போதும் மகிழ்ந்திருக்கும் ரதி, மனு, குரு, தக்ஷ, சசி, அனிருத்த என்னும் 6 பேர் நமக்கு மங்களத்தைக் கொடுக்கட்டும்.

**ப[4]வவனதி[2] நவபோத புண்ய**
**ஸ்ரவண கீர்த்தன பாத[3]வனருஹ**
**பு[4]வனனாவிக[3]னாகி[3] ப[3]ஜகர தாரிஸுவ பி[3]ட[3]தெ[3] |**
**ப்ரவஹ மாருததே[3]வ பரமோ**
**த்ஸவ விஸேஷ நிரந்தர மஹா**
**ப்ரவஹத[3]ந்த[3]தி[3] கொட[3]லி ப[4]க[3]வத்[3]ப[4]க்த ஸந்ததிகெ[3] ||20**

பவவனதி = சம்சாரம் என்னும் கடலில்
நவ = புதியதான
போத = படகு போலிருக்கும் ஸ்ரீபரமாத்மனின்
புண்ய ஸ்ரவண கீர்த்தன = மகிமைகளை கேட்பதாலும், பாடுவதாலும் மஹா பலன்களைக் கொடுக்கும்
பாதவனருஹ = பாத கமலத்தையே
பவன = வீடாக ஆக்கிக் கொண்டு,
நாவிகனாகி = ஸ்ரீஹரியின் பாத கமல என்னும் படகிற்கு படகோட்டியாக (மக்களை ஒரு கரையிலிருந்து இன்னொரு கரைக்கு படகின் மூலமாக தாண்ட வைப்பவன்)
பஜகர = பரமாத்மனை வணங்கும் பக்தர்களை விடாமல்
தாரிசுவ = சம்சாரம் என்னும் கடலிலிருந்து கரையேற்றும்
ப்ரவஹ மாருததேவ = ப்ரவஹ என்னும் வாயுதேவர்
நிரந்தர = நித்யமான
மஹாப்ரவஹதந்ததி = மஹா பிரவஹத்தைப் போல
பகவத் பக்தஸ்ந்ததிகெ = பகவத் பக்தரின் வம்சத்தவர்க்கு
பரமோத்ஸவ விசேஷ = பகவத் தரிசன ரூபமான விசேஷத்தைக் கொடுக்கட்டும்.

படகினை ஒரு கரையிலிருந்து மறு கரைக்குக் கொண்டு செல்ல வேண்டுமெனில், அதை ஓட்டுபவன் ஒருவன் இருந்தாலும், காற்றின் உதவியும் வேண்டும். அப்படியே, சம்சாரம் என்னும் கடலைத் தாண்டுவதற்கு பரமாத்மனின் பாத கமலங்களே படகாக இருக்கின்றன. அதற்கு பகவன் மகிமையை உபதேசம் செய்பவரான குருவே உதவி செய்யவேண்டும்.

ப்ரவஹ மாருதன் 11ம் கக்ஷையை சேர்ந்த குருவாக இருப்பதால், ஸ்வயம் காற்றாக இருப்பதால், தானே காற்று & தானே படகோட்டியாக இருப்பதால், கடலைத் தாண்டுவது கஷ்டமான செயலா? (இல்லை). ஆகையால், ஹரியின் பாத கமலத்தையே வீடாக ஆக்கிக்கொண்டு, அங்கேயே வசிக்கும் பகவத் பக்தர்களை, சம்சாரக் கடலிலிருந்து கரையேற்றும், ப்ரவஹ வாயுதேவன், மஹா ப்ரவஹத்தைப் போல நித்யமான, பகவத் தர்ஷன ரூபமான பரமோத்ஸவ விசேஷத்தை அவருக்குக் கொடுக்கட்டும்.

**ஜனரனுத்த4ரிஸுவேனெனுத நிஜ**
**ஜனகனனுமதத3லி ஸ்வயம்பு4வ**
**மனுவினிந்த3லி படெ3தெ3 ஸுகுமாரரனு ஒலுமெயலி |**
**ஜனனிஷதரூபா நிதம்பி3னி**
**மன வசன காயத3லி பி3ட3த3னு**
**தி3ன நமிஸுவேனு கொடு3 எமகெ3 ஸன்மங்க3லவனொலிது3 ||21**

நிஜஜனகன = தன் தந்தையான பிரம்மதேவரின்
அனுமததல்லி = அனுமதியுடன் (ஆணையினால்) மக்களை
உத்தரிசுவெனெனுத = சந்தானத்தை வளர்ப்பேன் என்று சபதம் செய்து
ஸ்வயம்புவ மனுவினிந்தலி = ஸ்வாயம்புவ மனுவின்
ஒலுமெயலி = அவன் அன்பினால்
குமாரகர = ப்ரியவ்ரத, உத்தனபாதர் என்னும் மக்களைப் பெற்ற
ஷதரூபா நிதம்பினி = மனு பத்னியான ஷதரூபா என்னும்
ஜனனி = தாயே!
மன வசன காயதலி = மனதாலும் வாக்கினாலும் உடலாலும்
பிடதெ = விடாமல்
அனுதின = தினந்தோறும்
நமிஸுவெனு = நமஸ்காரம் செய்கிறேன்
எமகெ = நமக்கு
ஒலிது = தரிசனம் அளித்து
சன்மங்கலவ கொடு = மங்களத்தைக் கொடுப்பாயாக.

பிரம்மதேவர் முதலில் சனகாதிகள், ருத்ர தேவர், வசிஷ்டாதி ரிஷி முதலானவர்களை படைத்து, அவர்களால் வம்சம் வளரவில்லை என்பதை சிந்தித்து, தம் இடது பாகத்திலிருந்து ஒரு ஸ்த்ரீயையும், வலது பாகத்திலிருந்து

ஒரு புருஷனையும் படைத்தார். அந்த புருஷனே ஸ்வாயம்புவ மனு. அந்த ஸ்த்ரி ஷதரூபா தேவி.

பிரம்மர் மனுவிடம் 'நீ இந்த ஷதரூபையை மணம் புரிந்து வாரிசு உருவாக்க வேண்டும்' என்று சொல்லி, அதையே ஷதரூபாதேவியிடமும் கூறினார். இந்த கதை பாகவத 3ம் ஸ்கந்தம், 13ம் அத்தியாயம் 51-54ம் ஸ்லோகங்களில் வருகிறது.

அந்த அபிப்பிராயத்தினாலேயே தாசார்யர் 'ஜனரனுத்தரிஸுவேனெனுத நிஜ ஜனகனனுமததி' என்றார். இப்படி ஷதரூபாதேவி தன் தந்தையான பிரம்மனின் ஆணையைப்போல, வாரிசு உருவாக்குவதற்காக ஸ்வாயம்புவ மனுவிற்கு சதியாகி, ப்ரியதம, உத்தானபாத என்னும் இரு ஆண் மக்களையும், அகூதி, தேவஹூதி, ப்ரஸூதி என்னும் மூன்று பெண் மக்களையும் பெற்றாள். இத்தகைய ஹே தாயே! மனதாலும் உடலாலும் வாக்கினாலும் நான் உன்னை வணங்குகிறேன். எங்களுக்கு சன் மங்களங்களைக் கொடு.

**நரன நாராயணன ஹரி க்ரு**
**ஷ்ணர படெ³தெ³ புருஷார்த்த தெரத³லி**
**தரணி ஷஷி ஷதரூபரிகெ சமனெனிஸி பாபிக³ள**
**நிரயதொ³ளு நெலெகொ³ளிஸி சஜ்ஜன**
**நெரவியனு பாலிஸுவ ஔது³**
**ம்ப³ர ஸலஹு ஸலஹெம்ம பி³ட³த³லெ பரமகருணத³லி ||22**

ஔதும்பர = ஹே யமதேவனே,
புருஷார்த்த தெரதலி = தர்ம, அர்த்த, காம, மோட்ச என்னும் 4 புருஷார்த்தங்களைப் போல
நரன = பரமாத்மனின் அம்சத்தினால் ஆன சேஷதேவரின் ரூபமானது, இத்தகைய நர நாமகனையும்
நாராயணன = நாராயண என்னும் பகவந்த அவதாரம் கொண்டவரையும்
இவர்கள் இருவரும் நர நாராயண ரிஷிகள் என்று புகழ்பெற்றவர்கள்.
மற்றும் ஹரி என்னும் ரூபம் 1
கிருஷ்ண = தேவகி மகன் இல்லாத இந்த ரூபம் வேறு
இத்தகைய 4 பகவந்த அவதாரங்களான மக்களைப் (நர, நாராயணன், ஹரி, கிருஷ்ண) பெற்றாய். நீ
தரணி = சூரியன்
சஷி = சந்திரன்
ஷதரூபெ = ஷதரூபா, இவர்களுக்கு சமம் என்று சொல்லி
பாபிகள = பாபிகளை
நிரயதொளு = நரகத்தில்
நெலெகொளிஸி = வசிக்கச் செய்து
சஜ்ஜன நெரவியனு = சஜ்ஜனர்களின் சகவாசத்தை
பாலிஸுவவனு = கொடுக்கிறாய்

இத்தகைய நீ,
எம்ம = நம்மை
பிடதலெ = விடாமல்
சலஹு = அருள்வாயாக.

ஹே யமதர்மனே. நீ சாட்சாத் பரமாத்மனின் அவதார ரூபங்களான நர, நாராயண, ஹரி, கிருஷ்ண என்னும் இந்த நான்கு மக்களைப் பெற்றாய். இவர்களின் நர அவதாரம் மட்டும் பகவந்தனின் பின்னாம்சத்தைக் கொண்ட சேஷ அம்சம். மற்ற மூன்றும் பரமாத்மனின் சாட்சாத் அவதாரங்கள் என்று அறியவேண்டும்.

பாகவத 2ம் ஸ்கந்தம் 7ம் அத்தியாயம் 6ம் ஸ்லோகத்தில் : 'தர்மஸ்ய தக்ஷ துஹிதுர்யஜனி ஸ்வமூர்த்யா நாராயணோ நர இதி ஸ்வதப: ப்ரபாவ:' தர்மனிடம் தக்ஷ ப்ரஜேஷ்வரனின் மகளான மூர்த்தியில் நர நாராயண என்று அவதரித்தான் -- என்னும் வாக்கியத்திலிருந்து யமதர்மனுக்கு நர நாராயணர் மக்கள் என்று தெரிகிறது.

உதபாதி தர்மதனயோ ஹ்யயம்ஹரி: ஸ்வயமேவ யஸ்ய ஸஹஜோ வ்யஜாயத || இதே பரமாத்மன் யமதர்மனிடம் ஹரி என்னும் பெயரில் அவதரித்தான். மறுபடி தானே தனது சகோதரனாக அவதரித்தான் என்று மத்வ விஜய 8ம் சர்க்க வாக்கியத்தால் ஹரி, கிருஷ்ண என்னும் 2 அவதாரங்கள் யமதர்மனிடம் அவதரித்தன என்பதும் புரிகிறது.

கிருஷ்ணாவதாரம் என்றால் வசுதேவ தேவகியரிடம் அவதரித்த கிருஷ்ணன் இல்லை. தர்மனின் மகன் கிருஷ்ணன் என்று அறியவேண்டும். கிருஷ்ணன் என்னும் பெயருள்ள அவதாரங்கள் இரண்டு என்னும் விஷயத்தில், நிர்ணய 2ம் அத்தியாயத்தில்:

மத்ஸ்ய கூர்ம வராஹஸ்ச ஸிம்ஹ வாமன பார்க்கவா: ||
ராகவ: கிருஷ்ண புத்தௌச கிருஷ்ணத்வைபாயன ஸ்ததா ||26
நாராயணோ ஹரி: கிருஷ்ண ஸ்தாபஸோ மனுரேவச ||

பரமாத்மனின் சாட்சாத் அவதாரங்கள் எவை என்றால்: மத்ஸ்ய, கூர்ம, வராஹ, நரசிம்ஹ, வாமன, பரசுராம, ராகவ, கிருஷ்ண, புத்த, வேதவியாஸ, நாராயண, ஹரி, கிருஷ்ண, தாபஸ என்கிற மனு இத்யாதி அவதாரங்கள் சாட்சாத் அவதாரங்கள் என்று சொல்லியிருக்கிறார்கள்.

இதில் ராம, கிருஷ்ண, புத்த ஆகிய தசாவதாரங்களில் ஒரு கிருஷ்ணாவதாரத்தை சொல்லி, மறுபடி நாராயண, ஹரி, கிருஷ்ண என்று இரண்டாவது முறை கிருஷ்ண ரூபத்தை சொல்கிறார். இப்படி கிருஷ்ண அவதாரத்தை இரு முறை சொன்னதால், கிருஷ்ண அவதாரம் இரண்டு என்று அறியவேண்டும்.

இப்படியாக, ஹே யமதர்மனே, தர்ம, அர்த்த, காம, மோட்ச என்னும் 4 புருஷார்த்தங்களைப் போல 4 மக்களைப் பெற்றிருக்கிறாய். சூரிய, சந்திர, ஷதரூபா இந்த மூவருக்கும் நீ சமமானவன் எனப்படுகிறாய். பாபிகளை நரகத்தில் தள்ளி, சஜ்ஜனர்களின் சகவாசத்தைப் பெற்றவர்களை காக்கிறாய். ஹே ஔதும்பர நாமகனே. கருணையுடன் நம்மையும் காத்தருள்வாயாக.

**மது$^{4}$விரோதி$^{4}$மனோஜ க்ஷீரோ**
**த$^{3}$தி$^{4}$ மத$^{2}$னஸமயதி$^{3}$ உதி$^{3}$ஸி நெரெ**
**குத$^{4}$ரஜா வல்லப$^{4}$ன மஸ்தகமந்தி$^{3}$ரதி$^{3}$ மெரெவ ।**
**விது$^{4}$ தவாங்க்$^{4}$ரி பயோஜ யுக$^{3}$ளகெ**
**மது$^{4}$பனந்த$^{3}$தி$^{4}$ எரகி$^{3}$ என்மன**
**த$^{3}$தி$^{4}$ப வந்திபெனனு தினந்தஸ்தாப பரிஹரிஸு ।।23**

மதுவிரோதி = மது என்னும் தைத்யனைக் கொன்ற மதுசூதனனின்
மனோஜ = மனதில் உதித்த
விது = ஹே சந்திரனே
க்ஷீரோததி மதன சமயதி = அமிர்தத்திற்காக பாற்கடலைக் கடைந்த சமயத்தில்
உதிஸி = பிறந்து
குதரஜா வல்லபன =
கு = பூமியை
தர = தரித்திருப்பதால், பர்வதங்களுக்கு பூதர என்று பெயர்.
குதரஜா = ஹிமபர்வதனின் மகளான பார்வதியின்
வல்லபன = பதியான ருத்ரதேவரின்
மஸ்தக மந்திரதி = தலை என்னும் வீட்டில்
நெரெ = வசித்தவாறு
மெரெவ = இருக்கும்
தவ = உன்
அங்க்ரி பயோஜ யுககளிகெ = பாத கமலங்களுக்கு
மதுபவந்ததி = தேனீயைப் போல
என்மன = என் மனமானது
எரகலி = உன்னிடம் சேரட்டும்
மனததிப = ஹே மனோபிமானியான சந்திரனே
அனுதின = தினந்தோறும்
வந்திபெ = நமஸ்காரம் செய்வேன்
அந்தஸ்தாபவ பரிஹரிஸு = மன தாபத்தை பரிகரிப்பாயாக.

பரமாத்மனின் மனதிலிருந்து சூக்ஷ்ம ரூபியாக பிறந்து, பின் பாற்கடல் கடையும் நேரத்தில் மறுபடி பிறந்த ஹே சந்திரனே, 'சந்த்ரமா மனஸோ ஜாத:' என்று புருஷ சூக்தத்தில் இருக்கிறது. ருத்ர தேவர் விஷத்தைக் குடித்து, அதன் கடுமையைத் தாங்க முடியாமல் தவித்து, உன்னை தலையில் தரித்து, அந்த தாபத்தைக் குறைத்தார். இப்படி ருத்ர தேவரின் தலையில் நிலைத்திருக்கிறாய். உன் பாத

கமலங்களை நான் வணங்குகிறேன். மனோபிமானியான சந்திரனே. பரம கருணையுடன் நம் மன தாபத்தை (கஷ்டங்களை) பரிகரிப்பாயாக. நம் மனம் எப்போதும் உன் பாத கமலங்களில் ஒரு தேனீயைப் போல வசிக்குமாறு செய்.

**ஶ்ரீவனருஹாம்ப$^3$கன நேத்ரக$^3$**
**ளேவெ மனெயெனிஸி ஸுஜனரிகெ$^3$ க**
**ராவலம்ப$^3$னவீவ தெரதி$^3$ மயூக$^2$ விஸ்தரிப |**
**ஆ விவஸ்வான் னெனிசிகொம்ப$^3$ வி**
**பா$^4$வஸு அக$^3$ர்னிஷிக$^3$ளலி கொட$^3$**
**லீ வஸுந்த$^4$ரெயொளு விபஸ்சிதரொட$^3$னெ ஸுக்$^3$ஞான ||24**

ஶ்ரீவனருஹாம்பகன = தாமரைக் கண்ணனான ஶ்ரீபரமாத்மனின்
நேத்ரகளே = கண்களையே
மனெயெனிஸி = இருப்பிடமாகக் கொண்டு
சுஜனரிகெ = சஜ்ஜனர்களின்
கராவலம்பனவீவ தெரதி = கைகளைப் பிடித்து, அவர்களை சம்சார சாகரத்தைக் கடக்க உதவுவதைப் போல
மயூக = கிரணங்களை
விஸ்தரிப = உலகில் பரவச் செய்யும்
ஆ விவஸ்வான் = விவஸ்வான் என்னும்
எனிஸுவ = பெயரால் அழைக்கப்படும்
விபாவசுவு = சூரியன்
அஹர்னிஷிகளலி = இரவும் பகலுமாக
ஈ வசுந்தரெயொளு = பூமியில்
விபஸ்சிதரொடனெ = ஞானிகளுடன் நம்மைச் சேர்த்து
சுக்ஞான = உத்தம ஞானத்தைக் கொடுக்கட்டும்.

தாமரைக் கண்ணனான ஶ்ரீஹரியின் கண்ணிலிருந்து பிறந்து, அந்த கண்களையே இருப்பிடமாகக் கொண்டிருக்கும் சஜ்ஜனர்களின் கை பிடித்து அவர்களை கஷ்டங்களிலிருந்து விடுவிப்பதைப் போல, தன் கிரணங்களை பூமியில் அனைத்து இடங்களிலும் பரவச் செய்யும் விவஸ்வான் என்னும் சூரியன், இந்த பூமியில் நம்மை ஞானிகளின் சகவாசத்தில் இருத்தி, பகல் இரவுகளில் திவ்ய ஞானத்தைக் கொடுக்கட்டும்.

**லோகமாதெயபடெ$^3$து$^3$ நீ ஜக$^3$**
**தே$^3$க பாத்ரனிகி$^3$த்த காரண**
**ஶ்ரீகுமாரிஸமேத நெலெஸித$^3$ நின்ன மந்தி$^3$ரதி$^3$ |**
**ஆ கமலப$^4$வமுகரு பி$^3$ட$^3$தெ$^3$ ப**
**ராகெ$^3$னுத நிந்தி$^3$ஹரோ கு$^3$ணர**
**த்னாகரனெ ப$^3$ண்ணிஸலளவெ கொடு$^3$ எமகெ$^3$ ஸன்மனவ ||25**

குணரத்னாகரனே = குணங்கள் என்னும் ரத்னங்களை கொண்டிருப்பவனே
ஹே சமுத்ர ராஜனே (வருணனே)
நீ = நீ
லோகமாதெயபடெது = உலகத்திற்கே தாயான ஸ்ரீ லட்சுமி தேவியரைப் பெற்று
ஜகதேவ பாத்ரனிகெ = உலகத்திற்கு முக்கிய பாத்திரன் எனப்படும் ஸ்ரீபரமாத்மனுக்கு
இத்த காரண = (திருமணம் செய்து) கொடுத்த காரணத்தால்
ஸ்ரீகுமார ஸமேத = ஸ்ரீஹரி, லட்சுமி சமேதராக
நின்னமந்திரதி = உன் வீட்டில்
நெலஸித = வசிக்கிறான்
ஆ கமலபவ முகரு = பிரம்மதேவரே முதலான
பிடதெ = விடாமல் (தொடர்ந்து)
பராகெனுத நிந்திஹரோ = போற்றியவாறு நின்றிருக்கிறார்களோ?
பண்ணிஸலளவெ = உன்னை வர்ணிப்பது சாத்தியமா?
எமகெ சன்மனவ = எங்களுக்கு நற்புத்தியை
கொடு = கொடு.

பத்ய அர்த்தங்களே தெளிவாக உள்ளன.

**பணெயலொப்புவதிலக துலசி**
**மணிக$^3$ணாஞ்சித கண்ட$^2$ கரத$^3$லி**
**க்க$^3$ணிதவீணா ஸுஸ்வரதி$^3$ ப$^3$ஹுதாள க$^3$திக$^3$ளலி |**
**ப்ரணவ ப்ரதி$^3$பாத்$^4$யன கு$^3$ணங்க$^3$ள**
**குணிகுணிது அதிஸம்ப்$^4$ரமதி$^3$ கா$^3$**
**யனவ மாடு$^3$வ தே$^3$வரிஷி நாரத$^3$ரிக$^3$பி$^4$மனமிபெ ||26**

பணெயலி = நெற்றியில்
ஒப்புவ திலக = திலகத்தால் ஒளிர்ந்தவாறு
துளசி மணிகணாஞ்சித கண்ட = துளசி மணிகளால் கட்டப்பட்ட மாலையை அணிந்து ஒளிரும் கழுத்து உள்ள
கரதலி = கையில்
க்வணித = நற்சப்தத்தைக் கொண்ட
வீணாஸுஸ்வரதி = வீணையின் நற் ஸ்வ்ரத்தினால்
பஹுதாள கதிகளலி = லயத்துடன் கூடிய தாள கதிகளுடன்
ப்ரணவ ப்ரதிபாத்யன = ஓம்கார பிரதிபாத்யனான ஸ்ரீஹரியின்
குணங்கள = நற்குணங்களை
குணிகுணிது = நர்த்தனம் செய்தவாறு
அதிசம்ப்ரமதி = மிகவும் விமரிசையுடன்
காயனவ மாடுவ = பாடும்
தேவரிஷி நாரதரிகெ = நாரதரை
அபிமனிபெ = வணங்குகிறேன்.

நெற்றியில் திலகம், கழுத்தில் துளசிமாலை, இவற்றால் அலங்கரிக்கப்பட்டு கையில் வீணையைப் பிடித்து, பரமாத்மனின் குணங்களை வீணையால் நுடித்தவாறு, நற்ஸ்வரத்துடன் கானம் செய்தவாறு, நடனம் ஆடியவாறு ஆனந்த சமுத்திரத்தில் மூழ்கியிருக்கும் நாரதரை நான் வணங்குகிறேன்.

**ஆ ஸரஸ்வதி தீரத$^3$லி பி$^3$**
**ந்னைஸலாமுனிக$^3$ள நுடிகெ$^3$ ஜட$^3$**
**ஜாஸன மஹேஷாச்யுதர லோகங்க$^3$ளிகெ$^3$ போகி$^3$ ।**
**தா ஸகலகு$^3$ணக$^3$ள விசாரிஸி**
**கேஷவனெ பரதெ$^3$ய்வவெந்து$^3$ப**
**தே$^3$ஷிஸித$^3$ ப்$^4$ருகு$^3$முனிப கொட$^3$லெமக$^3$கி$^2$ல புருஷார்த்த$^2$ ||27**

ஆ சரஸ்வத தீரதலி = சரஸ்வதி நதிக்கரையில்
பின்னயிஸலு = நிகழ்ச்சியைக் கொண்டாடிக் கொண்டிருந்த
முனிகள = ரிஷிகளின்
நுடிகெ = பிரம்மா, விஷ்ணு, மஹேஸ்வரரில் யார் உத்தமர் என்று அறிந்து வரவேண்டும் என்று கேட்டதற்கு
ஜடஜாஸன = பிரம்மதேவர்
மஹேஷ = ருத்ரதேவர்
அச்யுதர = பரமாத்மன் இவர்களின்
லோகங்களிகெ போகி = உலகங்களுக்குச் சென்று
தா = தான்
சகலகுணகள = அனைத்து நற்குணங்களை
விசாரிஸெ = இந்த மூவரில் இருக்கும் குணங்களை சோதித்துப் பார்க்க
கேஷவனே பரதெய்வவெந்து = ஸ்ரீ ஹரியே சர்வோத்தமன் என்று
உபதேஷிஸித = உபதேசம் செய்த
ப்ருகுமுனிப = ப்ருகு ரிஷிகள்
எமகெ = எமக்கு
அகிள புருஷார்த்த = அனைத்து புருஷார்த்தங்களையும்
கொடலி = கொடுக்கட்டும்.

ரிஷிகள் அனைவரும் ஒரு யாகத்தை செய்து கொண்டிருக்க, பிரம்மா ருத்ர விஷ்ணு இவர்களில் யார் உத்தமர் என்ற அவர்களுக்குள் ஒரு விவாதம் வந்து, இந்த விஷயத்தை சோதித்துப் பார்க்க வேண்டும் என்று ப்ருகு முனிவரை வேண்ட, அவரும் அதற்கேற்ப, பிரம்ம லோகத்திற்கு வந்து பிரம்மதேவரை சோதிப்பதற்காக அவரை வணங்காதிருக்க, பிரம்மனுக்கு அபாரமான கோபம் வந்தது. ஆனாலும், தன் ஞானபலத்தினால் அதை கட்டுப்படுத்திக் கொண்டார்.
இவரில் சிறிது அபிமானம் இருக்கிறது என்று ப்ருகு ரிஷிகள் அறிந்தார்.

அடுத்து ருத்ரதேவரை பரிசோதிப்பதற்காக கைலாயம் வந்தார். ருத்ரரும் இவரைப் பார்த்து, அபிமானத்துடன் இவருக்கு ஆசனம் அளித்து, ஆலிங்கனம் செய்வதற்கு வர, உன் அமங்களமான ஸ்வரூபம் கொண்டவன். என்னைத் தொடாதே என்று ரிஷி கூற, ருத்ரர் கோபம் கொண்டு, சூலாயுதத்துடன் ப்ருகு ரிஷிகளைக் கொல்வதற்கு வந்தார். அந்த சமயத்தில், பார்வதி தேவி ருத்ரரை வணங்கி, பிராமணர்களை கொல்லக்கூடாது என்று வேண்டிக் கொண்டதால், ப்ருகு ரிஷிகள் உயிர் பிழைத்தார்.

அங்கிருந்து வைகுண்டத்திற்கு வந்து, லட்சுமி சமேதராக சயனித்திருந்த பரமாத்மனை காலால் எட்டி உதைக்க, பரமாத்மன் எழுந்து ரிஷிகளை வணங்கி மன்னிப்பு கேட்டுக் கொண்டான். அப்போது ப்ருகு ரிஷிகள் நினைத்தது என்னவென்றால்:

பிரம்ம தேவருக்கு தன்னை வணங்கவில்லை என்னும் கோபம் வந்தாலும், அதை அடக்கிக் கொண்டார். ருத்ர தேவரை ஆலிங்கனம் செய்ய வேண்டாம் என்று சொன்னதற்கு அவருக்கு வந்த கோபத்தை பார்வதி தேவி குறைத்தாள். பரமாத்மனை காலில் எட்டி உதைத்தாலும் அவர் கோபம் கொள்ளாமல், என்னிடமே மன்னிப்பு கேட்டார். ஆகையால், பரமாத்மனே சர்வோத்தமன். பிரம்மதேவர் மத்யமர். ருத்ரர் இவர்கள் இருவரைவிட குறைவானவர் என்று நிர்ணயித்து, அந்த ரிஷிகளிடம் சொல்லி, உலகத்தில் இந்த விஷயத்தை பரவச் செய்தார்.

இதற்கு மூலம், பாகவத 10ம் ஸ்கந்த 93ம் அத்தியாயத்தில்:
ஸரஸ்வத் யாஸ்தடே ராஜன் ருஷய: ஸத்ரமாஸத ||
விதர்க்கஸ்ஸம பூத்தேஷாம் த்ரிஷ்டதீஷேஷு கோ மஹான் ||1

என்னும் ஸ்லோகத்திலிருந்து,

முனிர்ஜகாம வைகுண்டம் யத்ரதேவோ ஜனார்த்தன: |
ஷயானம் ஸ்ரிய உத்ஸங்க பதா வக்ஷஸ்யதாடயத் ||8
தத உத்தாய பகவான் ஸஹ லக்ஷ்ம்ய ஸதாங்கதி: ||
ஸ்வதல்பாதவருஹ்யாஷு நனாமஷிரஸா முனிம் ||9

என்னும் 9ம் ஸ்லோகத்து வரை, இந்த மேலே கூறிய அர்த்தத்தை சொல்லியிருக்கிறார். மேலும் இந்த அத்தியாயம் முழுவதுமே இதே விஷயத்தையே சொல்லியிருக்கிறார். கிரந்தம் பெரிதாகிவிடும் என்கிற பயத்தால் அந்த ஸ்லோகங்களை இங்கு கொடுக்கவில்லை. இத்தகைய குணங்கள் நிரம்பிய ப்ருகு ரிஷிகள், நமக்கு அனைத்து புருஷார்த்தங்களையும் கொடுக்கட்டும்.

**பி³ஸருஹாம்ப³க நாக்³யேயலி ஸும**
**நஸமுக²னு தானெனிஸி நானா**

**ரஸக3ளுள்ள ஹவிஸ்ஸுக3ள நவரவரிகொ3ய்தீ3வ |**
**வஸுகுலாதி4ப யக்ஞபுருஷன**
**அஸம ப3ல ரூபங்க3ளிகெ3 வ**
**ந்தி3ஸுவெ ஞான யஷஸ்ஸு வித்3யெ ஸுபு3த்தி4 கொட3லெமகெ3 ||28**

பிஸருஹாம்பக = தாமரைக் கண்ணனான ஸ்ரீஹரியின்
ஆக்யெயலி = ஆணைப்படி
சுமனஸ முகனு தானெனிஸி = தேவதைகளுக்கு முகம் என்று தன்னை நினைத்துக் கொண்டு
நானா ரசகளுள்ள = பற்பல சுவைகளைக் கொண்ட
ஹவிஸ்ஸுகள = அக்னியில் ஆஹுதி கொடுக்கத் தகுதியான வஸ்துகளை
அவரவரிகொய்தீவ = இந்திராய ஸ்வாஹா என்னும் மந்திரங்களால் எந்தெந்த தேவதைகளின் பெயர்களால் அக்னியில் ஆஹுதி கொடுக்கின்றனரோ, அந்த ஹவிஸ்ஸினை
அவரவரிகொய்தீவ = அவரவர்களிடம் சென்று சேர்க்கிறான்
வசுகுலாதிப = 8 வசுக்களில் சிறந்தவனான
யக்ஞ புருஷன = அக்னி தேவனின்
அஸம பல ரூபங்களிகெ = இவனைவிட தாரதம்யத்தில் உத்தமர்களை விட்டு, மற்ற தேவதைகளில் இவனுக்கு சமமான பலரூப குணங்களைக் கொண்டவர்கள் இல்லை என்று அர்த்தம்.
இத்தகைய அக்னி தேவனை,
வந்திஸுவெ = நான் வணங்குவேன்
எமகெ = எங்களுக்கு
ஞான யஷஸ் = ஞானம், புகழ்
வித்யா சுபுத்தி = கல்வி, நல்லறிவு ஆகியவற்றை
கொடலி = கொடுக்கட்டும்.

ஸ்ரீபகவந்தனின் ஆணைப்படி, தேவதைகளுக்கு முக ஸ்தானீயராக இருந்து என்றால், எந்த தேவதைகளுக்கு ஆஹுதி கொடுக்க வேண்டுமென்றாலும், 'விஷ்ணவே ஸ்வாஹா, ப்ரம்மணே ஸ்வாஹா' என்று அக்னி முகத்தினாலேயே ஆஹுதி கொடுப்பதால், தேவமுக என்று அழைக்கப்படுகிறார். இவனின் மூலமே அனைத்து தேவதைகளுக்கும் ஆஹுதி சென்று சேர்கிறது.

வசு குலத்தில் சிறந்தவனான இத்தகைய அக்னிதேவரை நான் வணங்குகிறேன். இவர் எங்களுக்கு புகழ், கல்வி, நற்புத்தி, ஞானம் ஆகியவற்றைக் கொடுக்கட்டும்.

ஸ்வஸ்தி ஸ்ரத்தாம் மேதாம் யஷ: ப்ரக்ஞாம் வித்யாம் புத்திம் ஸ்ரியம் பலம்
ஆயுஷ்யம் தேஜ ஆரோக்யம் தேஹிமே ஹவ்யவாஹன ||
என்னும் அக்னிதேவரின் பிரார்த்தனை மந்திரத்தால், மேற்கூறிய வரத்தைக் கொடுக்கும் அதிகாரம் அக்னிதேவருக்கு இருக்கிறது என்று தெரிகிறது.

அந்த மந்திர அர்த்தத்தையே தாசார்யர் இங்கு சொல்லியிருக்கிறார் என்று அறியவேண்டும்.

**தாதனப்பணெயிந்த$^{3}$ நீ ப்ர**
**க்$^{2}$யாதியுள்ளரவத்து மக்கள**
**ப்ரீதியிந்த$^{3}$லி படெத$^{3}$வரவரிகி$^{3}$த்து மன்னிஸிதெ$^{3}$ ।**
**வீதிஹோத்ரன ஸமளெனிஸுவ ப்ர**
**ஸூதிஜனனி த்வத$^{3}$ங்க்$^{4}$ரி கமலகெ**
**நா துதிஸி தலெபாக்$^{3}$வெனெம்ம குடும்ப$^{3}$ ஸலஹுவுது$^{3}$ ||29**

தாதனப்பணெயிந்த = தாத்தாவான பிரம்மதேவரின் ஆணைப்படி
நீ = நீ
ப்ரக்யாதியுள்ள = பெயர் பெற்ற
அரவத்து மக்கள = 60 பெண் மக்களை
ப்ரீதியிந்தலி படெது = அன்புடன் நீ பெற்று
அவரவரிகித்து = தர்ம, கஷ்யப முதலானவர்களுக்குக் கொடுத்து
மன்னிஸிதெ = மரியாதையை செய்தாய்
வீதிஹோத்ரன = அக்னிதேவருக்கு
ஸமளெனிஸுவ = சமம் எனப்படும்
ப்ரஸூதிஜனனி = ப்ரஸூதி என்னும் தாயே!
த்வதங்க்ரி கமலகெ = உன் பாத கமலங்களை
நா = நான்
துதிஸி = உன்னை வணங்கி
தலெ பாகுவெ = நமஸ்காரம் செய்கிறேன்
எம்ம = எங்கள்
குடும்ப ஸலஹுவுது = குடும்பத்தை அருள்வாயாக.

ப்ரஸூதி தேவியின் தாத்தாவின் ஆணைப்படி, 60 மக்களைப் பெற்றாள் என்று தாசார்யரின் வாக்கியம் இருக்கிறது.

ப்ரஸூதிம் மானவீம் தக்ஷ உப யேமேஹ்யஜாத்மஜ: ||
தஸ்யாம்ஸ ஸர்ஜதுஹித்யை: ஷோடஷாமல லோசனா: ||47
த்ரயோதஷாத்தர்மாய ததை காமக்ன யே விபு: ||
பித்ருப்ய ஏகாம் யுக்தேப்யோ பவாயைகாம் பவச்சிதே ||48

என்னும் பாகவத 4ம் ஸ்கந்தம் 1ம் அத்தியாயத்தால், தக்ஷன், ஸ்வாயம்புவ மனுவின் மகளான ப்ரஸூதியை திருமணம் செய்து 16 பெண் குழந்தைகளைப் பெற்றாள். அதில் 13 பெண் மக்களை யமதர்மனுக்கும், ஒருத்தியை பித்ருகளுக்கும், ஒருத்தியை அக்னிக்கும், ஒருத்தியை ருத்ரதேவருக்கும் கொடுத்தாள் என்று தெரிகிறது.

ஆனால் இதிலிருந்து பரஸ்பர விரோதம் வருகிறது.

ப்ராசீன பர்ஹிஸ் என்னும் ராஜனின் மக்கள் 10 பேர் ப்ரசேஸர் எனப்படுகின்றனர். தவம் செய்து பரமாத்மனிடம் வரம் பெற்று வார்க்ஷி என்னும் கன்னிகையை திருமணம் செய்து கொண்டனர் என்றும், அவளிடமிருந்து தக்ஷன், முன்னர் ருத்ரதேவருக்கு அவமானம் செய்த பாவத்திற்காக, இந்த ப்ரசீதஸனுக்கு மகனாகப் பிறந்து, பரமாத்மனைக் குறித்து தவம் செய்து, பகவந்தனின் ஆணைப்படியே பஞ்சஜன என்னும் ப்ரசேஷ்வரனின் மகளான பாஞ்ச ஜனி அல்லது அஸ்வினி என்பவளை திருமணம் செய்து, அவளில் முதலில் ஹர்யஸ்சர் என்னும் 10,000 மக்களைப் பெற்று, மேலும் வாரிசு வேண்டுமென்று தவம் செய்ய அனுப்ப, அவர்கள் அனைவரும் நாரதரின் உபதேசத்தைப் பெற்று சன்யாசிகள் ஆயினர்.

இந்த செய்தியைக் கேட்ட தக்ஷன் மிகவும் வருத்தமடைந்து, பிரம்மதேவரிடம் வேண்டி, அவர் செய்த சமாதானத்தால் திருப்தி அடைந்து, மறுபடி 1000 மக்களைப் பெற்றார். அவர்களும் நாரதரின் பேச்சைக் கேட்டு சன்யாசிகள் ஆகிவிட, தக்ஷன் நாரதரின் மேல் வெகு கோபம் கொண்டு, 'உனக்கு ஒரு இருப்பிடம் என இல்லாமல், எப்போதும் அலைந்து கொண்டே இருக்கவேண்டும்' என்று நாரதருக்கு சாபம் கொடுத்தார். பின் தக்ஷன் மறுபடி பிரம்மனிடம் வந்து நடந்த விஷயங்களை சொல்லி வருத்தப்பட்டார்.

பிரம்மன் தக்ஷனை சமாதானப்படுத்தி, இனி பெண் குழந்தைகளைப் பெறு என்றார். அதைப் போலவே, தக்ஷன்:

தத: ப்ராஜேதஸோஸிக்ன்யா மனுனீத: ஸ்வயம்புவா ||
ஷஷ்டிம் ஸஞ்சனயாமாஸ துஹித்ரு: பித்ருவத்ஸலா: ||1
ததௌஸ தஷதர்மாய கஷ்யபாய த்ரயோதஷ ||
காலஸ்ய நயனே யுக்தா: ஸப்த விம்ஷதி மிந்தவே ||2
பூதாங்கிர: க்ருஷாஷ்வேப்யோ த்வேத்வேதார்க்ஷ்யார்ய சாபரா: ||

என்னும் பாகவத 6ம் ஸ்கந்தம் 6ம் அத்தியாயத்தின் வாக்கியங்களால், அந்த ப்ரசேதஸரின் மகனான தக்ஷன், பிரம்மதேவரின் அனுமதியைப் பெற்று, தன் மனைவியான அஸிக்னியில் 60 பெண் குழந்தைகளைப் பெற்றான். அதில்

* 10 பேரை யமதர்மனுக்கும்,
* 13 பேரை கஷ்யபருக்கும்,
* சந்திரனுக்கு காலத்தைக் குறிப்பதான அஸ்வின்யாதி 27 பேரையும்,
* பூத, அங்கிர, க்ருஷாஸ்வ என்னும் மூவருக்கு இரண்டிரண்டு பேரையும்,
* மற்ற நால்வரை மறுபடி கஷ்யபருக்கே கொடுத்தான் என்று அறிகிறோம்.

ப்ராசேதஸனே தக்ஷன் என்னும் விஷயத்தில், 4ம் அத்தியாயம் 17ம் ஸ்லோகம்: தேப்யஸ் தஸ்யா மபூத்ராஜன் தக்ஷ: ப்ராசேதஸ: கில' என்னும் வாக்கியமே

ஆதாரம். ஆனால், இங்கு அஸிக்னீ என்பவள் 60 பெண் குழந்தைகளை பெற்றாள் என்றிருக்கிறார். ப்ரஸூதி என்பதற்கு ஆதாரம் என்னவெனில்: தேவதைகள் அனைவரும் சாம்ஷர்கள், மற்றும் நியத பதிபத்னி ஆனவர்கள் ஆகையால், இந்த தேவதைகள் அனைவரும் மூலரூபத்தினால் தமக்கு யார் சதியரோ, அவதாரங்களிலும் அவரையே அடைவதற்காக பிறக்கின்றனர் என்று சொல்லியிருப்பதால், தக்ஷனின் மனைவியான ப்ரஸூதியே, பஞ்சஜனனின் மகளாக அஸிக்னி என்னும் பெயரில் பிறந்தாள் என்று அறிய வேண்டும்.

இந்திரன் வாலியாக இருந்தபோது, சசி தாரையாக பிறந்தாள் என்னும் இது போன்ற ஆதாரங்களே இதற்கும் ஆதாரம் என்று அறியவேண்டும். பிரம்மதேவரின் ஆணையினாலேயே 60 பெண் குழந்தைகளை பெற்றதால், தாதனப்பணெயிந்த என்று தாசார்யர் கூறுகிறார். தாரதம்யத்தில் ப்ரஸூதி, ப்ருகுரிஷி, அக்னி, இவர்களுக்கு சமமானவள். இத்தகைய ப்ரஸூதி தேவியை வணங்குகிறேன், நம் குடும்பங்களை ரக்ஷிக்கட்டும் என்கிறார்.

**ஷதத்$^{3}$ருதிய ஸுதரீர்வருளித$^{3}$**
**ப்ரதிம ஸுதபோனிதி$^{4}$க$^{3}$ளபரா**
**ஜிதன ஸுஸமாதி$^{4}$யொளொலிஸி மூர்லோகதொ$^{3}$ளு மெரெவ |**
**வ்ரதிவரமரீசி அத்ரி புலஹா**
**க்ரது வஸிஷ்ட புலஸ்த்ய வைவ**
**ஸ்வதனு விஷ்வாமித்ர ரங்க்$^{3}$ரிரங்க்$^{3}$ரிகெ$^{3}$ரகு$^{3}$வெனு ||30**

ஷதத்ருதிய = பிரம்மதேவரின் மக்களான 9 பேரில்
ஈர்வருளிது = நாரதர், ப்ருகு ரிஷிகள் இவர்கள் இருவரையும் முந்தைய கக்ஷையில் சேர்த்து விட்டதால், இவர்களைத் தவிர
மிக்க அப்ரதிம = ஒப்புமையில்லாத
ஸுதபோநிதிகள = உத்தமமான தவமே நிதியாக உள்ள
அபராஜிதன = என்றும் யாராலும் வெல்ல முடியாதவனான ஸ்ரீபரமாத்மனை
ஸுஸமாதியொளு ஒலிஸி = சமாதி நிலையில் இருந்து தவம் செய்து, அவனை மகிழ்வித்து
மூர்லோகதொளு மெரெவ = 3 லோகங்களிலும் வீற்றிருக்கிறான்.
ப்ரதிவர = விஷ்ணு தீக்ஷை என்னும் வ்ரத உள்ளவர்களில் சிறந்தவர்களான, மரீசி, அத்ரி, புலஹ, க்ரது, வசிஷ்ட, புலஸ்த, வைவஸ்தமனு, விஷ்வாமித்ர, அங்கீரஸ ஆகியோரின்
அங்க்ரிகெரகுவேனு = பாதங்களை நான் வணங்குகிறேன்.

பிரம்மதேவரின் மக்களில் நாரதர் 14ம் கக்ஷையிலும், ப்ருகு ரிஷிகள் 15ம் கக்ஷையிலும் சேர்ந்தவர்கள். மற்ற மரீசி, அத்ரி, அங்கிர, புலஸ்த, புலஹ, க்ரது, வசிஷ்ட என இவர்கள் ஏழு பேர்களும், விஷ்வாமித்ரர், வைவஸ்வத மனு இவர்களின் பாத பத்மங்களுக்கு நமஸ்காரம் செய்கிறேன். மரீச்யாதிகள் 16ம் கக்ஷயை சேர்ந்தவர் ஆவார்.

**த்வாத3ஷாதி3த்யரொளு மொத3லிக**
**நாத3 மித்ர ப்ரவஹமானினி**
**யாத3 ப்ராவஹி நிர்ருதி நிர்ஜர கு3ருமஹிளெதாரா ।**
**ஈ தி3வௌகஸரனுதி3னாதி4**
**வ்யாதி4 உபடளவளிது3 விபு3த3ரி**
**காத3ரதி3 பாலிஸலி மங்கலவாவகாலத3லி ||31**

த்வாதஷாதியரொளு = 12 ஆதித்யர்களில்
மொதலிகனாத = உருக்ரம என்னும் சாட்சாத் பரமாத்மனின் அவதாரனான சூர்யன் ஒருவன், 12ம் கக்ஷைக்கு சேர்ந்த விவஸ்வான் என்னும் சூரியன் ஒருவன் என இவர்கள் இருவரைத் தவிர மற்ற சூரியர்களைவிட சிறந்தவனான
மித்ர = மித்ர நாமக சூரியன்
ப்ரவஹமானினியாத = ப்ரவஹ வாயுவின் மனைவியான ப்ராவஹி
நிரருதி,
நிர்ஜரகுரு மஹிளெ = தேவ குருவான ப்ருஹஸ்பத்யாசார்யரின் மனைவியான தாரா,
ஈதிவௌகஸரு = இந்த தேவதைகள்
அனுதின = தினந்தோறும்
ஆதி = மனோவியாதி
வ்யாதி = சரீர சம்பந்தமான நோய்கள்
ருபடள = ஆபத்துகள்
இவுகளன்னுளிது = பரிகரித்து
விபுதரிகெ = ஞானிகளுக்கு
ஆவகாலதலி = அனைத்து காலங்களிலும்
ஆதரதி = மரியாதை பக்தியுடன்
அகிள மங்களவ = அனைத்து மங்களங்களையும்
கொடலி = கொடுக்கட்டும்.

மித்ர என்னும் சூரியன், ப்ரவஹனின் மனைவி ப்ராவஹி, நிரருதி, குரு பத்னி தாரை -- இந்த தேவதைகள், ஞானிகளுக்கு ஆதியையும், வியாதியையும் மற்றும் அவ்வப்போது வரும் ஆபத்துகளையும் பரிகரித்து, எப்போதும் மங்களங்களையும் கொடுக்கட்டும்.

**மானனிதி4க3ளெனிஸுவ விஷ்வ**
**க்ஸேன த4னப க3ஜானனரிகெ3 ஸ**
**மானரெம்ப4த்தைது3 ஸேஷஷதஸ்த2 தே3வக3ண**
**கானமிஸுவேனு பி3ட3தெ3 மித்2யா**
**ஞான களெது3 ஸுபோ3தவித்து ஸ**
**தா3னுராக3தி3 எமகெ3 பரிபாலிஸலி ஸம்பத3வ ||32**

மானனிதிகளெனிஸுவ = மான என்றால், மரியாதை கொடுக்கத் தகுதியான நற்சாஸ்திரங்கள். அல்லது, பகவத் விஷயமான ஞானம், உலகப் புகழ் பெற்றது. இவையே நிதியாகக் கொண்டவர். இத்தகைய
விஷ்வக்சேன = ப்ராதன வாயு குமாரன்,
தனபா = குபேரன்
ஆத்யரிகெ = ஆதி என்னும் சொல்லால், அஸ்வினி தேவதைகளையும், கணபதியையும் சேர்த்துக் கொள்ள வேண்டும்.
அனிமிஷரிகெ = தேவதைகளுக்கு
ஸமானரு = சமமானவர்கள்
ஷதஸ்த தேவகண = ஸோமபானத்தைக் குடிக்கத் தகுதியானவர்களான 100 தேவதைகளில், மேற்கூறிய 15 பேர்களை விட்டு
சேஷ = மற்ற
எம்பத்தைது = 85 தேவதைகள், இவர்களை
பிடதெ ஆநமிஸுவேனு = விடாமல் வணங்குவேன்
மித்யாஞானவ களெது = ஏதேனும் தெய்வ சங்கல்பத்தினால் மித்யா ஞானம் வந்தால், அதனை பரிகரித்து
ஸுபோதவித்து = உத்தம ஞானத்தைக் கொடுத்து
ஸதானுராகதலி = எப்போதும்
எம்ம = எம்மை
ஸம்பதவ = பகவத்பக்தி ரூபமான சம்பத்துகளை
பரிபாலிஸலி = அருளட்டும்.

விக்வக்ஸேன, குபேர, கணபதி, அஸ்வினி தேவதைகள், இவர்களுக்கு சமானமான, ஸோமபானத்தை குடிப்பதற்கு தகுதியான 100 தேவதைகளில், மேற்கூறிய உத்தம தேவதைகளை விட்டு 85 பேர் இவர்கள் அனைவரும், எனக்கு என் வினைப்பயனால் மித்யா ஞானம் வந்தாலும், அதனை பரிகரித்து, உத்தம ஞானத்தைக் கொடுத்து அருளட்டும்.

**பூ$^4$தமாருத வாந்தரபி$^4$மா**
**நி தபஸ்வி மரீசிமுனி புரு**
**ஹூதனந்த$^3$ன பாத$^3$மானி ஜயந்தரெமகொ$^3$லிது$^3$ ।**
**காதரவ புட்டிஸதெ$^3$ விஷயதி$^3$**
**வீதப$^4$யன பதாப்$^3$ஜத$^3$லி விப**
**ரீத பு$^3$த்தி$^4$யனீயதெ$^3$ ஸதா$^3$ பாலிஸலி எம்ம ||33**

பூதமாருத வாந்தரபிமானி = பூத வாயுவின் அந்தராபிமானியான
தபஸ்வி மரீசிமுனி = பிரதான வாயுபுத்ரனான மரீசி
புருஹூதனந்தன = இந்திர குமாரனான
பாதமானி = பாதத்திற்கு அபிமானியான
ஜயந்தரு = ஜயந்த ; இவர்கள் இருவரும்
எமகொலிது = எமக்கு தரிசனம் அளித்து

விஷயதி = அல்ப சுகங்களில்
காதரபுட்டிஸதெ = அபிமானம் வராமல்
வீதபயன = என்றும் பயம் இல்லாதவனான பரமாத்மனின்
பதாப்ஜதலி = பாத கமலங்களில்
விபரீத புத்தியன்னீயதெ = அன்யதா ஞானத்தைக் கொடுக்காமல் (நானே அவன் என்னும் ஞானத்தைக் கொடுக்காமல்)
எம்ம = நம்மை
ஸதா = எப்போதும்
பாலிஸலி = அருள் பாலிக்கட்டும்.

பூத வாயு என்னும் பஞ்ச பூதத்திற்கு சேர்ந்த ஜடமான காற்றுக்கு அபிமானி ப்ரவஹ வாயு. அவர் அந்தர்யாமி மரீசி. மரீசி என்றால் பிரம்மதேவரின் மக்களான மரீசி, அத்ரி முதலான 7 பேரில் ஒருவரான மரீசி அல்ல. அவர் 17ம் கக்ஷையில் வருபவர். இவர் யாரென்றால்:

மரீசி ஷப்தேன ப்ரதான வாயுபுத்ரோவிவக்ஷித: ||
ப்ரதானவாயு ஜோ பூத வாயுர் நாம்னா மரீசக: ||
இதிகீதா தாத்பர்யோக்தே: மரீசிர்மருதாமஸ்மீதி கீதாயாஞ்ச ||

என்னும் தாரதம்ய சங்க்ரஹ வாக்கியத்தாலும் கீதா, தாத்பர்ய, வாக்கியங்களாலும், மரீசி என்றால் இங்கு பிரதான வாயுவின் மகனை எடுத்துக்கொள்ள வேண்டும். இதற்கு ஆதாரம், கீதா தாத்பர்யத்தில் பிரதான வாயுவின் மகன் மரீசி என்னும் பூத வாயுவின் அபிமானி என்று சொன்ன வாக்கியத்தாலும், கீதையின் விபூதி அத்தியாயத்தில் 'மரீசிர் மருதாமஸ்மி' வாயுகளில் என்னை மரீசியாக அறி என்று சொல்லியிருக்கும் வாக்கியத்தாலும், இந்த மரீசி வாயு மகனான மரீசி என்று அறிய வேண்டும். இந்த மரீசி, ஜயந்தன் இருவரும் நமக்கு, விஷய சுகங்களில் ஆசையை உண்டாக்காமல், பரமாத்மனில் அன்யதா ஞானத்தைக் கொடுக்காமல், நம்மை எப்போதும் காக்கட்டும்.

**ப$^{3}$லிமொத$^{3}$லு ஸப்தேந்த்ரரிவரிகெ$^{3}$**
**கலிதகர்மஜ தி$^{3}$விஜரெம்ப$^{3}$ரு**
**உளித$^{3}$ ஏகாத$^{3}$ஷ மனுக$^{3}$ளு உசத்ய ச்யவனமுக$^{2}$ |**
**குலரிஷிக$^{3}$ளெம்ப$^{3}$த்து யதி ஹைஹய**
**இளெய கம்பனகெ$^{3}$ய்த$^{3}$ ப்ருது ம**
**ங்க$^{3}$ல பரீக்ஷித நஹுஷ நாபி$^{4}$ யயாதி ஷஷபிந்து$^{3}$ ||34**

பலிமொதலு சப்தேந்த்ரரிவரிகெ = 8ம் மன்வந்திரத்திற்கு இந்திரனான பலி முதற்கொண்டு, அதற்கு அடுத்து வரும் இந்திரர்கள் மொத்தம் 7 பேர்.
இவரிகெ = இவர், மற்றும் அடுத்த 3 பத்யங்களால் விளக்கப்படும் சக்ரவர்த்தி ஆகியோர்

கலித கர்மஜ திவிஜ ரெம்பரு = ஞானபூர்வகமாக கர்மங்களை செய்து, தேவத்வம் பெற்றனர் ஆகையால், கர்ம தேவதைகள் எனப்பட்டனர். அவர்கள் யார்யார் என்றால்:
உளித ஏகாதஷ மனுகளு = 14 மனுகளில் மேற்கூறிய பரமாத்மனின் அவதாரமான தாபஸ மனு, ஸ்வாயம்புவ மனு, வைவஸ்வத மனு இந்த மூவரையும் விட்டு, மற்ற 11 மனுகள்
உசத்ய ச்யவனமுக = சுக்ராசார்யர் முதலான,
குலரிஷிகளெம்பத்து = ரிஷி குலத்தவர்கள் 80 பேர் என்று தாசார்யர் சொல்லியிருக்கிறார். 'ரிஷீணாம் ஷதமேவச' 100 ரிஷிகள் என்று பிரமாணம் இருக்கிறது. மற்றும் இதே சந்தியில் 49ம் பத்யத்தில், 100 கோடியில் 100 பேர் குறைவு என்று தாசார்யரே சொல்லியிருக்கிறார். இந்த வாக்கியங்களுக்கு பரஸ்பரம் விரோதம் வருகிறது. இதன் பொருள்:

மொத்தம் ரிஷிகள் 100 கோடி பேர். இதில் 100 ரிஷிகள் ப்ரதான தேவதைகளில் சேர்ந்தவர்கள். 100 கோடிக்கு 100 பேர் தாரதம்யத்தில் குறைவானவர்கள் என்று கருத்து. தாசார்யர் இங்கு, குலரிஷிகள் 80 பேர் என்று சொல்லியிருப்பதால், ப்ருகு குல, காஷ்யப, கௌஷிக என்னும் புகழ் பெற்ற குலத்தவர்கள் 80 ரிஷிகள் என்றும், குல பிரஸித்தி இல்லாத கோத்ரங்களை துவக்காத ரிஷிகள் 20 பேர், ஆக மொத்தம் 100 ரிஷிகள், கர்ம தேவதைகள் என ஆகிறது. குல ரிஷிகளை மட்டும் சொல்லி, சாதாரணமான 20 ரிஷிகளை மட்டும் அங்கு சொல்லவில்லை என்று அறியவேண்டும்.

49ம் பத்யத்தில், 100 என்று சொல்லியிருப்பதால், அங்கு 20ம் சேர்த்து சொல்லியிருக்கிறார் என்று அறியவேண்டும்.

ஹைஹய = ஹைஹய தேசத்து அரசனான கார்த்தவீர்யார்ஜுன
இளெயகம்பனகெய்த = பூமியை வதம் செய்வதற்காக அவளை பயத்தில் நடுநடுங்கச் செய்த
ப்ருது = ப்ருது சக்ரவர்த்தி
மங்கள = பூ புத்ரனான அங்காரகன்
பரீக்ஷித், நஹுஷ, நாபிராஜன், யயாதி, ஷஷிபிந்து.

**ஓதி³ஸுவ கு³ருக³ளனெ ஜரிது³ ஸ**
**ஹோத³ரரிகு³ப தே³ஷிஸிதி³ மஹ**
**தா³தி³காரண ஸர்வகு³ண ஸம்பூர்ண ஹரியெந்து³**
**வாதி³ஸுவி த்வத்பதிய தோரெ**
**ந்தா³த³னுஜ பெஸகொளலு ஸ்த²ம்பதி³**
**ஶ்ரீத³னாக்ஷண தோரிஸித³ ப்ரஹ்லாத³ ஸலஹெம்ம ||35**

ஓதிஸுவ குருகளனு = தனக்கு வித்யா குருகளான ஷண்டாமர்கரரை
ஜரிது = புறக்கணித்து

ஸஹோதரரிகெ = தன் நண்பர்களுக்கு
மஹதாதிகாரண = மஹத் தத்வாபிமானியான பிரம்மாதி தேவதைகளுக்கு மூல காரணன்
ஸர்வகுண ஸம்பூர்ணன் = அனைத்து நற்குணங்களையும் முழுமையாகப் பெற்றவன்
ஹரியெந்து = ஸ்ரீஹரி என்று
உபதேஷிஸி = உபதேசம் செய்தான்
வாதிஸுவ = ஹரியே சர்வோத்தமன் என்று தன் தந்தையிடம் வாதிட்ட பிரகலாதனைக் குறித்து
தத்பதிய தோரெந்து = ஹரியே சர்வோத்தமன் என்று சொல்கிறாயே? உன் ஸ்வாமி எங்கு இருக்கிறான்? காட்டு என்று,
ஆ தனுஜ = ஹிரண்யகசிபு
பெஸகொளலு = கோபப்பட்டு கேட்க
ஸ்தம்பதி = கம்பத்தில்
ஸ்ரீதன = மோட்சம் என்னும் ஐஸ்வர்யத்தைக் கொடுக்க வல்ல ஸ்ரீ நரசிம்ம ரூபியான ஸ்ரீஹரியை
ஆக்ஷண தோரிஸித = அதே நொடியில் காண்பித்த
பிரஹ்லாத = பிரகலாதனே
ஸலஹெம்ம = எம்மைக் காப்பாற்று

தைத்ய குருபுத்ரரான ஷண்டாமர்கர், ஜீவ பிரம்மருக்கு ஐக்ய லட்சணங்கள் இருக்கின்றன என்று உபதேசம் செய்ய, அதனை நிராகரித்து,

* ஹரியே சர்வோத்தமன்,
* பிரம்மாதிகள் அனைவரும் அவன் அதீனத்தில் இருப்பவர்கள்,
* நாம் அனைவரும் அவனின் தாசர்கள் என்று அறிந்து அவனை வணங்கினால் முக்தி ஆகிறது

என்றும், பிரகலாதன் தன் நண்பர்களுக்கு உபதேசம் செய்தான்.

பிரகலாதனின் தந்தையான ஹிரண்யகசிபு 'என்னை விட தெய்வம் வேறு யாரும் இல்லை. அப்படியிருந்தால், உன்னை காப்பாற்றட்டும். நான் உன்னை இப்போது கொல்கிறேன்' என்று ஆயுதபாணியாக வர, அந்த பிரகலாதனின் வாக்கியத்தை உண்மையாக்குவதற்காக ஸ்ரீஹரி, நரசிம்ம ரூபத்தால், கம்பத்திலிருந்து வந்து, ஹிரண்யகசிபுவைக் கொன்றான். இப்படி தன் தந்தைக்கு பரமாத்மனைக் காட்டிய பிரகலாதன், நம்மை காப்பாற்றட்டும்.

**ஷதகெ ஸங்கேதுள்ள ப்ரீய**
**வ்ரத ப$^4$ரத மாந்தா$^4$த புண்யா**
**ஸ்ரிதரு ஜய விஜயாதி$^3$க$^3$ளு க$^3$ந்த$^4$ர்வரெண்டு ஜன ।**
**ஹுதவஹஜ பாவக ஸனாதன**

**பித்ருக$^3$ளேள்வரு சித்ரகு$^3$ப்தரு**
**ப்ரதிதி$^3$வஸ பாலிஸலி தம்மவனெந்து$^3$ எனகொ$^3$லிது$^3$ ||36**

ஷதகெ சங்கேதுள்ள = 100 எண்ணிக்கையில் சேர்ந்த
ப்ரியவ்ரத,
பரத = துஷ்யந்த பரத
மாந்தாத = இவர்களே முதலான
புண்யாஸ்ரிதரு = புண்யத்தையே பெற்றிருக்கும் சக்ரவர்த்திகள்
ஜயவிஜயாதிகளு = ஜயவிஜயர்கள்
கந்தர்வரெண்டு ஜன = 8 கந்தர்வர்கள்
ஹுதவஹஜ = ப்ரதான அக்னியின் மகனான பாவக
ஸனாதன = எப்போதும் குமாரனாக இருக்கும் பிரம்மதேவரின் மக்களான ஸனகாதி நால்வரில் காமனின் அம்சத்தைக் கொண்ட சனத்குமாரரைத் தவிர மற்ற சனக, சனந்தன, சனாதன என்னும் மூவர்
பித்ருகளு ஏள்வரு = 7 பேர் பித்ருகள்
சித்ரகுப்தரு,
இவர்கள் அனைவரும் தேவ குலத்தில் பிறந்து எந்த விதமான அதிபத்யமும் இல்லாமல், கர்மத்தையே முக்கியம் என்று அறிந்து செய்து கொண்டிருக்கும் கர்ம தேவதைகள். இவர்கள்
எமகொலிது = நமக்கு தரிசனம் அளித்து
தம்மவனெந்து = தம்மை சேர்ந்தவர்கள் என்று அறிந்து
ப்ரதிதிவச பாலிசலி = தினந்தோறும் நம்மை காப்பாற்றட்டும்.

**வாஸவாலய ஷில்பி விமலஜ**
**லாஷயக$^3$ளொளு ரமிப ஔஷதி$^4$**
**பே$^4$ஷ ரவிக$^3$ள ரிபுக$^3$ளெனிஸுவ ராஹுகேதுக$^3$ளு |**
**ஶ்ரீஷபத$^3$பந்தா$^2$ன தூ$^3$மா**
**ர்ச்சீர தி$^3$விஜரு கர்மஜரிகெ$^3$ ஸ**
**தா$^3$ ஸமான தி$^3$வௌகஸரு கொட$^3$லெமகெ$^3$ மங்க$^3$லவ ||37**

வாஸவாலய = இந்திர லோகத்தின்
ஷில்பி = சிற்பியான விஷ்வகர்ம
விமல ஜலாஷயகளொளு = மந்தாகினி (ஆகாஷகங்கை) முதலான தூய்மையான நீரில்
ரமிப = ஜலக்ரீடைகளை செய்து கொண்டிருக்கும் ஊர்வசி முதலான அப்ஸர ஸ்த்ரீயர்கள்
பேஷரவிகள = சந்திர சூரியர்களின்
ரிபுகளெனிஸுவ = எதிரிகள் எனப்படும்
ராஹு கேதுகளு = ராகு கேது ஆகியோர்
ஸ்ரேஷ = லட்சுமிபதி
பத = வசிப்பிடமான வைகுண்டத்திற்கு

பந்தான = மார்க்கங்களான
தூமார்ச்சீர = தூம (புகை) மார்க்கம், அர்ச்சிர மார்க்கம் என்னும் இரு மார்க்கங்கங்களுக்கு அபிமானிகளான
திவிஜரு = தேவதைகள்
கர்மஜரிகெ = கர்ம தேவதைகளுக்கு
ஸதா = எப்போதும்
ஸமானரு = சமம் எனப்படுகிறார்கள்
திவௌக்ஸரு = இத்தகைய தேவதைகள்
எமகெ மங்களவ கொடலி = எமக்கு மங்களத்தைக் கொடுக்கட்டும்.

**த்3யுனதி3 ஷாமல ஸங்க்யெ ரோஹிணி**
**க4னப பர்ஜன்ய நனிருத்த4ன**
**வனிதெ பிரஹ்மாண்டா3பி4மானி விராடதே3வியர ।**
**நெனெவெனானலவிந்த3 தே3வா**
**நன மஹிளெ ஸ்வாஹாக்2யராலோ**
**சனெ கொட3லி நிர்விக்4னதி3ம் ப4கவத்3 கு3ணங்க3ளலி ।।38**

த்யுனதி = கங்கை
ஷாமல = யமதேவரின் மனைவி
சஞ்ஞா = சூரியனின் மனைவி
ரோஹிணி = சந்திரனின் மனைவி
கனப = மேகாபிமானியான
பர்ஜன்ய = பர்ஜன்ய என்னும் சூரியன்
அனிருத்தன வனிதெ = அனிருத்தனின் மனைவியான
பிரம்மாண்டாபிமானி = பிரம்மாண்டாபிமானியான
விராட் தேவியர = விராட் என்னும் பெயருள்ள தேவி
இவர்களை, இவர்களைவிட குறைவான கக்ஷையை சேர்ந்த
தேவனன மஹிளெ = தேவதைகளுக்கு முகமான அக்னியின் மனைவியான
ஸ்வாஹாக்யரு = ஸ்வாஹா தேவியர். இவரை நான்
நலவிந்த = மிகவும் மகிழ்ச்சியுடன்
நெனெவெ = நினைக்கிறேன்
பகவத் குணங்களலி = பகவத் குணங்களில்
நிர்விக்னதிம் = நிர்விக்னத்தால் (எவ்வித தடைகளும் இன்றி)
ஆலோசனெ = சிந்திக்கும் சக்தியை எனக்குக் கொடுக்கட்டும்.

**விதி2பிதன பாதா3ம்பு3ஜக3ளிகெ3**
**மது2பனந்தெ விராஜிப அமல**
**உத3கக3ளிகெ3 ஸதா3பி4மானியு எந்தெ3னிஸிகொம்ப3 ।**
**பு3த4கெ நா வந்திஸுவெ ஸன்மோ**
**த3தி3 நிரந்தர ஒலிது3 எமக3**
**ப்4யுத3ய பாலிஸலெந்து3 பரமோத்ஸஹதி3 அனுதி3னதி3 ।।39**

விதிபிதன = பிரம்மதேவரின் தந்தையான பரமாத்மனின்
பாதாம்புஜகளிகெ = பாத கமலங்களில்
மதுபனந்தெ = தேனீயைப் போல
விராஜிப = வீற்றிருக்கும்
அமல = நிர்மலமான
உதககளிகெ = தண்ணீருக்கு
ஸதா = எப்போதும்
அபிமானி எந்தெனிஸிகொம்ப = அபிமானி என்று சொல்லிக் கொள்ளும்
புதகெ = புதனுக்கு
எமகெ = நமக்கு
நிந்தர ஒலிது = நித்யத்திலும் ப்ரீதனாகி
அப்யுதய = பக்தி வ்ருத்தி ஆகியவற்றை
பாலிஸலெந்து = கொடுக்கட்டும் என்று
அனுதினதி = தினந்தோறும்
பரமோத்ஸஹதி = மிகவும் உற்சாகத்துடன்
ஸம்மோததி = மகிழ்ச்சியுடன்
நா வந்திஸுவெ = நான் வணங்குகிறேன்.

தேனீக்கள் எப்படி மலர்களிலேயே இருக்கின்றனவோ, அப்படி, பரமாத்மனின் பாத கமலங்களில் நிலைத்திருந்து ஒளிர்ந்து கொண்டிருக்கும், புதனுக்கு நமஸ்காரம் செய்கிறேன். அவன் தினந்தோறும் நமக்கு தரிசனம் அளித்து, ஞான பக்தி ஆகியவை வளருமாறு செய்யட்டும்.

**ஸ்ரீவிரிஞ்சாத்யமர மனகெ$^3$ நிலு**
**காவகாலகு ஜனனரஹிதன**
**தா ஒலிஸி மக$^3$னெந்து$^3$ முத்தி$^3$ஸி லீலெக$^3$ள நோள்ப |**
**தே$^3$வகிகெ$^3$ வந்தி$^3$பெ யஷோதா$^3$**
**தே$^3$விகா$^3$னமிஸுவெனு பி$^3$ட$^3$தெ$^3$ க்ரு**
**பாவலோகனதி$^3$ந்த$^3$ ஸலஹுவுதெ$^3$ம்ம ஸந்ததிய ||40**

ஸ்ரீ = ரமாதேவி
விரிஞ்சாத்யமர = பிரம்மதேவர் முதலான தேவதைகளின்
மனகெ = மனதிற்கு
நிலுக = புரியாதவாறு வெகு தூரத்தில் உள்ள
ஆவகாலகெ = எந்த காலத்திலும்
ஜனனரஹித = பிறப்பு இல்லாதவனான ஸ்ரீஹரியை
தாவலிஸி = தன்னை மெச்சுமாறு ஆக்கிக்கொண்டு
மகனெந்து முத்திஸி = மகன் என்று உச்சி மோந்து
லேலெகள = பால லீலைகளை
நோள்ப = பார்க்கும்

தேவகிகெ = தேவகியை
வந்திபெ = வணங்குகிறேன்
யஷோதா தேவிகெ = யசோதா தேவிக்கு
ஆனமிஸுவேனு = நன்றாக வணங்குவேன்
எம்ம சந்ததிய = நம் வம்சத்தை
க்ருபாவலோகனதிந்த = கருணைப் பார்வையால் பார்த்து
பிடதெ சலஹுவுது = கைவிட்டு விடாமல் காப்பாற்றட்டும்.

ஸ்ரீபரமாத்மன், ரமா பிரம்மாதிகளின் மனதிற்கும்கூட புலப்படாதவன். என்றைக்கும் பிறப்பு இல்லாதவன். அப்படிப்பட்டவனை, தன் மகனாகப் பெற்று, அவனைக் கொஞ்சி, அவன் பால லீலைகளைக் கண்டு மகிழ்ச்சியடையும் தேவகியையும், யசோதையையும், நான் வணங்குகிறேன். அவர்கள் நம் சந்ததியை எப்போதும் கருணைக் கண்களால் பார்த்து எம்மை காப்பாற்றட்டும்.

**பாமரரனு பவித்ரகெ3ய்ஸுவ**
**ஸ்ரீமுகுந்த3ன விமலமங்க3ல**
**நாமக3ளிக3பி4 மானியாத3 உஷாக்2யதே3வியரு ।**
**பூ4மியொளகு3ள்ளகி2ல சஜ்ஜன**
**ராமயாதி3க3ளிது3 ஸலஹலி**
**ஆ மருத்தன மனெய வைத்3யர ரமணி ப்ரதிதி3னதி3 ||41**

பாமரர பவித்ரகெய்ஸுவ = பாமர மக்களை பவித்ரமாக ஆக்கும்
ஸ்ரீமுகுந்தன = ஸ்ரீமுகுந்தனின்
விமல மங்கள நாமகளிகெ அபிமானியாத = பவித்ரமான மங்களகரமான பெயருக்கு அபிமானியான
ஆ மருத்தனமனெய = தேவேந்திரனின் இருப்பிடமான ஸ்வர்க்கத்தின்
வைத்யர = வைத்தியரான அஸ்வினி தேவதைகளின்
ரமணி = மனைவியான
உஷாக்யதேவியரு = உஷாதேவி
பூமியொளகுள்ள = பூமியில் உள்ள
அகிள சஜ்ஜனர = அனைத்து சஜ்ஜனர்களையும்
ஆமயாதிகள = அனைத்து விதமான நோய்களையும்
அளிது = பரிகரித்து
ஸலஹலி = அருளட்டும்.

குதர்க்கமாக சிந்திப்பவர்களையும் பவித்ரராக மாற்றும் பரம மங்களகரமான ராம கிருஷ்ணாதி பகவத் நாமங்களுக்கு அபிமானியான, தேவ வைத்தியரான அஸ்வினி தேவதைகளின் மனைவியான உஷாதேவியர், அனைத்து சஜ்ஜனர்களின் நோய்களை பரிகரித்து எமக்கு அருளட்டும்.

**புருடலோசன நின்ன கத்தோ3யி**

**தி3ரலு ப்ரார்த்திஸெ தே3வதெக3ளு**
**த்தரவலாலிஸி தந்த3 வரஹாரூப தானாகி3 |**
**த4ரணி ஜனனியெ த்வத்பதா3ப்3ஜகெ**
**எரகி3 பி3ன்னயிஸுவெனு பாத3**
**ஸ்பருஷ மொத3லாத3கி2ல தோ3ஷக3ளெணிஸதி3ரு எந்து3 ||42**

தரணி ஜனனி = ஹே பூமிதேவியே,
புருடலோசன = ஹிரண்யாக்ஷன்
நின்ன = உன்னை
கத்தோயிதிரலு = திருடிக் கொண்டு கடலுக்குள் போக
தேவதெகளு பிரார்த்திஸெ = தேவதைகள் வேண்ட
உத்தரவலாலிஸி = அவர்களின் பிரார்த்தனைக்கு செவி சாய்த்து
தானு = ஸ்ரீஹரி
வராஹ ரூபதானாகி = வராக ரூபம் எடுத்து
தந்த = பூமியை மறுபடி மேலெடுத்து வந்தான்
த்வத்பதாப்ஜகெ = இத்தகைய உன் பாத கமலங்களுக்கு
எரகி = வணங்கி
பாதஸ்பர்ஷ = பாத ஸ்பரிசம் முதலான
அகிள தோஷகள = அனைத்து தோஷங்களையும்
எணிஸதிரு = எண்ணாமல், என்னை மன்னித்து விடுமாறு
பின்னயிஸுவேனு = வணங்கி கேட்டுக் கொள்கிறேன்.

ஹே பூமிதாயே, ஹிரண்யாக்ஷன் உன்னை அபகரித்து கடலில் எடுத்துப் போக, பிரம்மாதிகளால் வணங்கப்பட்டு ஸ்ரீஹரி, வராக ரூபத்தினால் ஹிரண்யாக்ஷகனை சம்ஹரித்து, உன்னை மறுபடி மேலெடுத்து நிறுத்தினான். இத்தகைய உன் பாத கமலங்களை நான் வணங்குவேன். என் பாத ஸ்பர்ஷாதி தோஷங்களை மன்னித்து அருள்வாயாக என்று வேண்டிக் கொள்கிறேன்.

ஸமுத்ரவஸனேதேவி பர்வதஸ்தன மண்டிதெ |
விஷ்ணுபத்னி நமஸ்துப்யம் பாதஸ்பர்ஷம் க்ஷமஸ்வமே ||

என்னும் ஸ்லோக அர்த்தத்தையே தாசார்யர் இங்கு சொல்லியிருக்கிறார்.

**வனதி3வஸனெ வராத்3ரி நிசய**
**ஸ்த2ன விராஜிதெ சேதனா சே**
**தனவிதா4ரகெ3 க3ந்த3 ரஸ ரூபாதி3 கு3ணவபுஷெ |**
**முனிகுலோத்தம கஷ்யபன நிஜ**
**தனுஜெ நினகா3னமிபெ என்னவ**
**கு3ணக3ளெணிஸதெ3 பாலிபுது3 பரமாத்மனர்த்4தாங்கி3 ||43**

வனதிவஸனெ = சமுத்திரமே வஸ்திரமாக உள்ள

வராத்ரி நிசயஸ்தன விராஜிதெ = சிறந்த பர்வதங்களின் சமூகத்தையே ஸ்தனமாகக் கொண்டிருக்கும்
சேதனாசேதன விதாரகெ = ஜட சேதனங்களை தரித்திருப்பவளே
கந்த ரஸ ரூபாதி = வாசனை, சுவை, ரூபாதி
குணவபுஷெ = குண ஸ்வரூபளே
முனிகுலோத்தம = ரிஷிகுல ஸ்ரேஷ்டரான
கஷ்யபன = கஷ்ய ரிஷிகளின்
நிஜதனுஜெ = மகளே
பரமாத்மன = வராக ரூபியான ஸ்ரீபரமாத்மனின்
அர்த்தாங்கி = மனைவியே
நினகானமிபெ = உன்னை நான் வணங்குகிறேன்
என்னவகுணகளெணிஸதெ = என் துர்குணங்களை எண்ணாமல் (மன்னித்து)
பாலிபுது = என்னை காப்பாற்று.

கடலையே வஸ்திரமாகக் கொண்ட, மலைகளை ஸ்தனமாகக் கொண்டு ஒளிர்பவள். ஜட சேதனாத்மக அனைத்து பிராணிகளையும் தரித்திருப்பவள். ப்ருத்வியின் குணம் கந்த. இதைத்தவிர உள்ள மற்ற ரஸ ரூபாதி குணங்கள் முக்கியமில்லாதவை. இத்தகைய குணத்தைக் கொண்டவள். கஷ்யபரின் குமாரி.

க்ஷோணிர்ஜ்யா காஷ்யபீக்ஷிதி: -- என்னும் அமர வாக்கியத்தால் கஷ்யபரின் மகள் பூதேவி என்று அறிகிறோம். ஸ்ரீதேவி, பூதேவி, துர்கா தேவியர் சாட்சாத் ரமாரூபமே. இவளே காஷ்யபி என்று கஷ்யபரின் மகளாகப் பிறந்து, தரா, தரித்ரி இத்யாதி பெயர்களால் இந்த பாஞ்சபௌதிக சம்பந்தமான, ஜடமான இந்த பூமிக்கு அபிமானி.

அவாந்தரத்திற்கு அபிமானி சனீஸ்வரன். ஆகையால், தத்வ நியாஸத்தில் 'பராய ப்ருதிவயாத்மனே ஷனைஸ்சர தராயை நம:' என்று சொல்லியிருக்கிறார். இந்த தராதேவியே அங்காரகனுக்கும், நரகாசுரனுக்கும் தாயான வராஹ தேவரின் மனைவி. லட்சுமி ஸ்வரூபமான பூதேவியரின் சன்னிதானம் மட்டும் இவளில் உண்டு என்பது கருத்து.

ஹே பூமித்தாயே, உன்னை நான் வணங்குகிறேன். என் துர்குணங்களை எண்ணாமல் என்னை மன்னித்து காப்பாற்று.

**ஹரி கு³ருக³ளர்ச்சிஸத³ பாபா**
**த்மரனு ஸிக்ஷிஸலோஸுக³ ஷனை**
**ஸ்சரனெனிஸி து³ஷ்ப²லக³ளீவெ நிரந்தரதி³ பி³டதெ³ |**
**தரணினந்த³ன நின்ன பாதா³**
**ம்பு³ருஹக³ளிகா³னமிபெ பஹுது³**
**ஸ்தர ப⁴வார்ணதி³ மக்⁴னனாதெ³ன்னு⁴த்தரிஸபே³கு ||44**

ஹரிகுருகள = ஹரி குருகளை (தாரதம்யத்தின்படி)
அர்ச்சிஸத = பூஜிக்காத
பாபாத்மரன = பாப ஜீவிகளை
ஷிக்ஷிஸலோஸுக = தண்டிப்பதற்காக
ஷனைஸ்சரனெனிஸி = சனீஸ்வரனாக
துஷ்பலகளீவே = பாப கர்மத்தின் பலனான கஷ்டங்களை கொடுக்கும்
தரணி நந்தன = ஹே சூர்ய புத்திரனே
நிரந்தரதி = எப்போதும்
பிடதே = விடாமல்
நின்ன = உன்
பாதாம்புருஹகளிகெ = உன் பாத கமலங்களை
ஆனமிபெ = நான் வணங்குவேன்
பஹுதுஸ்தர = தாண்டுவதற்கு சாத்தியம் இல்லாத
பவார்ணவ = சம்சார சாகரத்தில்
மன்கனாத = மூழ்கியிருக்கும்
என்ன = என்னை
உத்தரிஸபேகு = காப்பாற்ற வேண்டும்.

ஹரி குருகளை பூஜிக்காத பாபிகளை தண்டிப்பதற்காக சனீஸ்வரன் என்னும் பெயரால், சூர்ய புத்ரனாக பிறந்து பாபிகளை பீடித்திருக்கும் ஹே சூர்ய நந்தனனே! உன் பாத கமலங்களை நான் வணங்குகிறேன். தாண்டுவதற்கு சாத்தியமில்லாத இந்த சம்சார சாகரத்தில் மூழ்கியிருக்கும் என்னை காப்பாற்ற வேண்டும்.

**நிரதிஷய ஸுக்[3]ஞானபூர்வக**
**விரசிஸுவ நிஷ்காம கர்மக[3]**
**ளரிது தத்தத்காலத[3]லி தஜ்ஜன்ய ப[2]லரஸவ |**
**ஹரிய நேமதி[3] உணிஸி ப[3]ஹு ஜீ**
**வரிகெ[3] கர்மபனெனிப கு[3]ருபு**
**ஷ்கரனு ஸத்கர்மங்க[3]ளலி நிர்விக்[4]னதெய கொட[3]லி ||45**

நிரதிஷய = சாதாரண ஜீவர்களுக்கு மிகவும் அதிசயமான
சுக்ஞானபூர்வக = உத்தமமான ஞானத்துடன்
விரசிஸுவ = செய்யும்
நிஷ்காம கர்மகள = பலன்களின் விருப்பம் இல்லாமல் செய்யும் காரியங்களை
அரிது = அறிந்து
தத்தத்காலதலி = அந்தந்த காலங்களில்
தஜ்ஜன்ய பலரஸவ = அந்த நிஷ்காம கர்மங்களின் பலன்களின் சுவை முதலான சுகங்களை
பஹுஜீவரிகெ = ஜீவர்களுக்கு
ஹரிய நேமதலி = ஸ்ரீஹரியின் சங்கல்பத்தினால் அவனின் ஆணையின்படி
உணிஸி = அனுபவத்திற்குக் கொடுத்து

கர்மபனெனிப = கர்மாபிமானி எனப்படும்
குரு = தாரதம்யத்தின்படி குரு எனப்படும்
புஷ்கரனு,
ஸத்க்ரியங்களலி = பகவத் விஷயமான கர்மங்களை செய்யும் சந்தர்ப்பங்களில்
நிர்விக்னதெய கொடலி = நிர்விக்னத்தைக் கொடுக்கட்டும்.

ஞானத்துடன் செய்யப்படும் கர்மங்கள் அனைத்தும் பகவத் ப்ரீதிக்காகவே செய்கிறோம் என்று அறிந்து, அவற்றை செய்து, அவற்றிலிருந்து தான் எந்த விதமான பலன்களையும் விரும்பாமல் இருந்தால், அத்தகைய கர்மங்கள் நிஷ்காம கர்மங்கள் எனப்படுகின்றன.

அப்படி செய்யும் ஜீவர்களின் கர்மங்களுக்கு சாட்சியாக இருந்து எந்தெந்த காலங்களில் எந்த கர்மங்களை செய்கிறார்களோ, அதற்குத் தக்கவாறு, ரஸ ரூபமான சுகத்தை பகவந்தனின் ஆணைப்படி, அனேக ஜீவர்களுக்குக் கொடுக்கும் கர்மப எனப்படும் புஷ்கரன், நாம் செய்யும் நற்காரியங்களுக்கு நிர்விக்னத்தைக் கொடுக்கட்டும்.

**ஶ்ரீனிவாஸன பரம காரு**
**ண்யானிவாஸ ஸ்தா$^{2}$னரெனிப க்ரு**
**ஷானுஜரு ஸாஹஸ்ர ஷோடஷஷதரு ஶ்ரீகிருஷ்ண**
**மானினியரெப்பத்து யக்ஷரு**
**தா$^{3}$னவரு மூவத்து சாரண**
**ஜானஜாமரரப்ஸரரு க$^{3}$ந்த$^{3}$ர்வர்வரிகெ$^{3}$ நமிபெ ||46**

ஶ்ரீனிவாசன = ஶ்ரீனிவாசனின்
பரமகாருண்யானிவாச ஸ்தானரெனிப = பரம காருண்யத்திற்கு பாத்திரரான
க்ருஷானுஜரு = அக்னிதேவரின் மக்களான
சஹஸ்ர ஷோடஷஷதரு = 16,000 பேர்
ஶ்ரீகிருஷ்ண மானினியரு = ஶ்ரீகிருஷ்ணனின் மனைவியர்
எப்பத்து யக்ஷரு = 80 பேர் யக்ஷர்கள்
தானவரு மூவத்து = 30 பேர் தானவர்கள்
சாரணரு = 30 பேர் சாரணர்கள்
அப்ஸரரு = அப்ஸர ஸ்த்ரீயர்கள்
கந்தர்கரு = கந்தர்வர்கள்
இவரிகெ = இவர்கள் அனைவரையும்
நமிபெ = வணங்குகிறேன்

இவர்கள் அனைவரும் அஜானஜருக்கு சமம் எனப்படுகின்றனர்.

அஜானஜர் என்றால்:

'அனாக்யாதா தேவதாஸ்து ஜாதா தேவ குலேசயா:' என்னும் தைத்திரிய பாஷ்யத்தின் வாக்கியத்தின்படி, தேவதா குலத்தில் பிறந்து, புகழ் பெறாதவர்களாக இருக்கிறவர்கள் என்று அர்த்தம்.

**ஆ யமுனெயொளு ஸாத[3]ரதி[3] கா**
**த்யாயினீவ்ரத த[4]ரிஸி கெலரு த[3]**
**ராயுத[4]னெ பதியெனிஸி கெலவரு ஜாரதனத[3]ல்லி |**
**வாயுபிதனொலிஸித[3]ரு ஈர்ப[3]கெ[3]**
**தோயஸரஸர பாத[3]கமலகெ**
**நாயெரகு[3]வெ மனோரத[2]ங்க[3]ள பாலிஸலி நித்ய ||47**

யமுனெயொளு = யமுனா நதியில்
சாதரதி = பக்தி மரியாதையுடன்
காத்யாயினீவ்ரத தரிஸி = காத்யாயனி விரத்தை அனுசரித்து
கெலரு = சில கோபிகா ஸ்த்ரியர்கள் (திருமணம் ஆகாதவர்கள்)
தராயுதனெ = ஷங்கபாணியான
பதியெனிஸி = ஸ்ரீகிருஷ்ணனையே பதியாக ஆக்கிக் கொண்டனர்
கெலவரு = சிலர்
ஜாரதனதல்லி = (தங்களுக்கு திருமணம் ஆகியிருந்தாலும்) அவனையே அடைய வேண்டும் என்று விரும்பி,
வாயுபிதன = வாயுதேவரின் தந்தையான ஸ்ரீபரமாத்மனை
ஒலிஸிதரு = அடைந்தனர்
ஈர்பகெ = இந்த இரு வகையான ஸ்த்ரியர்களையும்
தோயஸரஸர = அவனின் மனைவிகளின்
பாதகமலகெ = பாத கமலங்களை
அனுதினவு = தினந்தோறும்
நாயெரகுவெ = நான் வணங்குவேன்
மனோரதங்கள = நம் இஷ்டார்த்தங்களை
ஸலிஸலி = நிறைவேற்றட்டும்.

**கின்னரரு கு[3]ஹ்யகரு ராக்ஷஸ**
**பன்னக[3]ரு பித்ருக[3]ளு சித்தரு**
**ஸன்னுதா[3]ஜானஜரு ஸமரிவர மரயோனிஜரு |**
**இன்னிவர க[3]ணவெந்து[3] ப[3]ண்ணிஸ**
**லென்னளவெ கருணத[3]லி பரமா**
**பன்னஜனரிகெ[3] கொட[3]லி ஸன்முத[3] ஸுப்ரதாபவனு ||48**

கின்னரரு, குஹ்யகரு, ராக்ஷஸரு, பன்னகரு, பித்ருகள், சித்தர்கள் = இவர்கள் அனைவரும்
ஸன்னுத = நன்றாக
அஜானஜரு = அஜானஜ என்னும் அமரயோனிஜர்கள்

இவர ஸமரு = இவர்கள் அனைவரும் சமம் எனப்படுகிறார்கள்
அதாவது, இவர்களும் அஜானஜரை சேர்ந்தவர்கள் என்று அர்த்தம்.
இன்னிவர = இவர்களின்
கணவெந்து = கணத்தை
எந்து பண்ணிஸலி = நான் என்னவென்று வர்ணிப்பேன்?
என்னளவெ = அப்படி வர்ணிப்பது என்னால் சாத்தியமா? (அஸாத்தியம் என்பது கருத்து)
இவர்கள் அனைவரும்,
பரமாபன்னஜனரிகெ = சிறந்த பக்தர்களுக்கு
ஸம்முத = உத்தம ஆனந்தத்தை
ஸுப்ரதாபவனு = நல்ல புகழைக் கொடுக்கட்டும்

**நூரு முனிக$^3$ளனுளிது$^3$ மேலண**
**நூருகோடி தபோத$^4$னர பா**
**தா$^3$ரவிந்த$^3$கெ முகி$^3$வெ கரக$^3$ளனுத்த$^4$ரிசலெந்து$^3$ ।**
**ஈ ரிஷிக$^3$ளானந்தரதலிஹ**
**மூரு ஸப்தாஹ்வர தொரெத$^3$ ஷத**
**பூ$^3$ரிபிதரரு கொட$^3$லி நமகெ$^3$ ஸதா$^3$ ஸுமங்க$^3$லவ ।।49**

மேலண = கர்ம தேவதைகளின் கக்ஷையை சேர்ந்த
நூறு முனிகளனுளிது = 100 ரிஷிகளைத் தவிர
நூறு கோடி தபோதனர = 100 கோடிக்கு 100 குறைவான, தவம் செய்வதையே செல்வமாகக் கொண்ட ரிஷிகளின்
பாதாரவிந்தகெ = பாதாரவிந்தங்களில்
உத்தரிஸலெந்து = நம்மை காக்கவேண்டும் என்று
கரகளனு முகிவெ = கைகூப்பி வணங்குவேன்
மூரு ஸப்தாஹ்வயர = 3+7=10
தொரெது = 100 ரிஷிகளில் 10பேரைத் விட்டு (மிச்ச 90 பேர்களை மட்டும் இங்கு வணங்குகிறார்).

*100 கோடி ரிஷிகள் தவத்தையே செல்வமாகக் கொண்டவர்கள்
* இவற்றில் 100 பேர் உத்தம கக்ஷையை சேர்ந்தவர்கள்
* இந்த 100ல், 10 பேர் வெவ்வேறு கக்ஷியை சேர்ந்தவர்கள்
*** பிரம்மதேவரின் மக்களான மரீசி முதலான 7 ரிஷிகள்
*** ப்ருகு, நாரதர், விஸ்வாமித்ரர் என 3 பேர்
*** ஆக இந்த 10 பேர்.
* 100 ரிஷிகளில் இந்த 10 பேரை விட்டு, மற்ற 90 பேர்.

இந்த ரிஷிகள் அஜானஜர்களைவிட குறைவானவர்கள். அவர்களைவிட பூரி பித்ருகணத்தவர்கள் குறைவு எனப்படுகிறார்கள் என்பது கருத்து. இவர்களை நான் வணங்குகிறேன். அவர்கள் எங்களுக்கு மங்களத்தைக் கொடுக்கட்டும்.

**பாவனகெ பாவனனெனிஸுவ ர**
**மா வினோத3ன கு3ணக3ணங்க3ள**
**ஸாவதா4னதி3 ஏகமானஸராகி3 ஸுஸ்வரதி3 ।**
**ஆ விபுத4பதி ஸபெ3யொளகெ3 நா**
**நா விலாஸதி3 பாடி3 ஸுகி2ஸுவ**
**தே3வக3ந்தர்வரு கொட3லி எமக3கி2ல புருஷார்த்த2 ||50**

பாவனகெ பாவனனெனிஸுவ = பவித்ர வஸ்துகளை பவித்ரமாக மாற்றுபவன்
ரமா வினோதன = ரமாபதியான
குணகணங்கள = நற்குணங்களை
ஸாவதானதி = அர்த்தானுசந்தான பூர்வகமாக
ஏகமானஸராகி = ஏகாக்ர சித்தத்தால்
ஸுஸ்வ்ரதி = ராக, தாள, ஸ்ருதியுடன்
ஆ = அந்த
விபுதபதி = தேவேந்திரனின் சபையில்
நானா விலாஸதி = நானா விதமான பாவங்களுடன்
பாடி ஸுகிஸுவ = பாடி மகிழும்
தேவகந்தர்வரு = தேவ கந்தர்வர்கள்
எமகெ = எமக்கு
அகிள புருஷார்த்த கொடலு = எமக்கு அனைத்து புருஷார்த்தங்களையும் கொடுக்கட்டும்.

இந்திர சபையில், பரமாத்மனின் குண கணங்களை, அர்த்த ஞானத்துடன், ஒரு மனத்துடன், ராக தாள ஸ்வரத்துடன், நானா விதமான பாவங்களுடன் பாடி மகிழும் தேவ கந்தர்வர்கள் நமக்கு அனைத்து புருஷார்த்தங்களையும் கொடுக்கட்டும்.

**பு4வனபாவனனெனிப லகுமி**
**த4வன மங்க3லதி3வ்ய நாம**
**ஸ்தவனகெ3ய்வ மனுஷ்யக3ந்த4ர்வரிகெ3 வந்தி3ஸுவெ ।**
**ப்ரவரபூ4பு4ஜருளிது3 மத்யம**
**குவலயபரெந்தெ3னிஸி கொம்ப3ர**
**திவஸதி3வஸங்க3ளலி நெனெவெனு கரணஷுத்தி4யலி ||51**

புவனபாவனனெனிப = உலகத்தை பவித்ரமாக்குபவன் என்று புகழ்பெற்ற
லகுமிதவன = லட்சுமி பதியின்
மங்கள = மங்களகரமான
திவ்யநாம = தேவதைகள் நினைப்பதற்கு தகுதியான பகவன் நாமங்களை நினைத்தவாறு
ஸ்தவனகெய்வ = ஸ்தோத்திரம் செய்யும்

மனுஷ்யகந்தர்வரிகெ = மனுஷ்ய கந்தர்வர்களை
வந்திஸுவெ = வணங்குகிறேன்
ப்ரவர பூபுஜருளிது = ப்ருது பகீரத முதலான முன்னர் கூறிய பிரதான ராஜர்களை விட்டு, மற்ற
மத்யம = மத்யமரான
குவலயபரெந்தெனிஸி கொம்பர = பூமி பாலகர்கள் என்று சொல்லப்படும் அரசர்களை
திவஸ திவஸங்களல்லி = தினந்தோறும்
கரண ஷுத்தியலி = அந்த:கரண சுத்தியுடன்
நெனெவேனு = நினைக்கிறேன்.

உலகத்திற்கு மங்களத்தைக் கொடுப்பவனான ஸ்ரீரமாபதியின் மங்களகரமான திவ்ய நாமஸ்மரணை, அவனின் ஸ்தோத்திரம் இவற்றை எப்போதும் செய்து கொண்டிருக்கும் மனுஷ்ய கந்தர்வர்களை நான் வணங்குகிறேன். முன்னர் கூறிய கர்ம தேவதைகளின் கக்ஷையைச் சேர்ந்த ப்ருது, பகீரத முதலான பிரதான ராஜர்களை விட்டு மற்ற மத்யம ராஜர்களை எப்போதும் நினைக்கிறேன்.

**ஸ்ரீமுகுந்த$^{3}$ன மூர்த்திஸலெ ஸௌ**
**தா$^{3}$மினியவோல் ஹ்ருத$^{3}$யவாரிஜ**
**வ்யோம மண்ட$^{3}$லமத்$^{4}$யத$^{3}$லி காணுதலி மோதி$^{3}$ஸுவ |**
**ஆ மனுஷ்யோத்தமர பத$^{3}$யுக$^{3}$**
**தாமரஸக$^{3}$ளிகெ$^{3}$ரகு$^{3}$வெ ஸதா$^{3}$**
**காமிதார்த்த$^{2}$க$^{3}$ளித்து ஸலஹலி ப்ரணதஜனததிய ||52**

ஸ்ரீமுகுந்தன = மோட்சத்தைக் கொடுப்பவனான, ஸ்ரீஹரி
மூர்த்திகள = ராமகிருஷ்ணாதி மூர்த்திகளை
ஸௌதாமினியவோல் = மின்னலைப் போல
ஹ்ருதய வாரிஜ வ்யோம மண்டல மத்யதலி = இதயக் கமலத்தின் ஆகாஷ மண்டலத்தின் நடுவில்
காணுதலி = பார்த்து
மோதிஸுவ = மகிழ்ந்திருக்கும்
ஆமனுஷ்யோத்தமர = அந்த மனுஷ்யோத்தமர்களின்
பதயுக தாமரஸகளிகெ = பாத கமலங்களுக்கு
ஸதா = எப்போதும்
எரகுவெ = வணங்குவேன்
ப்ரணதஜனததிய = வணங்கும் மக்களின் காமிதார்த்தங்களை
சலஹலி = கொடுத்து அருளட்டும்.

ஹ்ருதயாகாஷத்தின் மண்டலத்தின் நடுவில், மின்னலைப் போல ஒளிரும் பகவந்தனின் மூர்த்தியை பார்த்தவாறு மகிழ்ந்து கொண்டிருக்கும்

மனுஷ்யோத்தமரின் பாத கமலங்களை நான் வணங்குகிறேன். அவர் எப்போதும் காமிதார்த்தங்களை கொடுத்து அருளட்டும்.

**ஈ மஹிமண்ட3லதொ3ளிஹ கு3ரு**
**ஸ்ரீமதா3சார்யர மதானுக3**
**ராமஹா வைஷ்ணவர விஷ்ணுபதா3ப்ஜ மது2கரர |**
**ஸ்தோமகா நமிஸுவெனவரவர**
**நாமக3ளனேன் பேள்வெ ப3ஹுவித4**
**யாமயாமங்க3ளலி போ3திஸலெனகெ3 ஸன்மதிய ||53**

ஈ மஹிமண்டலதொளு = இந்த பூமண்டலத்தில்
இஹ = இருக்கும்
குரு = ஜகத்குருகளான
ஸ்ரீமதாசார்யர = ஸ்ரீமன் மத்வாசார்யரின்
மதானுக = மதத்தைப் பின்பற்றுபவரான
விஷ்ணுபதாப்ஜ மதுகரர = பரமாத்மனின் பாத கமலங்களில் தேனீயைப் போல இருக்கும்
ஆ மஹா வைஷ்ணவர = அந்த வைஷ்ணவரின்
ஸ்தோமகெ = சமூகத்தை
ஆனமிஸுவெனு = நான் வணங்குவேன்
அவரவர = அவரவர்களின்
நாமகளனு = நாமங்களை
பேளலளவெ = சொல்வதற்கு சாத்தியமா?
பஹுவித = அனேக விதமாக இருக்கிறாரகள்
யாமயாமங்களலி = எல்லா காலங்களிலும் என்று அர்த்தம்
எனகெ = எனக்கு
சன்மதிய் = நற்புத்தியை
போதிஸலி = கொடுக்கட்டும்.

இந்த பூமியில் இருக்கும் ஸ்ரீமன் மத்வ மதத்தைப் பின்பற்றுபவர்களான, பரமாத்மனின் பாத கமலங்களில் தேனீயைப் போல இருக்கும், மஹா வைஷ்ணவர்கள் பலபேர் இருக்கிறார்கள். அவரவர்களின் பெயர்களை சொல்வது யாருக்கும் சாத்தியமா? அனைத்து சத்வைஷ்ணவர்களையும் வணங்குகிறேன். அவர் ஒவ்வொரு யாமத்திலும் (எல்லா காலங்களிலும்) எனக்கு நற்புத்தியைக் கொடுக்கட்டும்.

**மாரனய்யன கருணபாரா**
**வாரமுக்2ய ஸுபாத்ரரெனிப ஸ**
**ரோருஹாஸன வாணி ருத்ரேந்தா3தி3 ஸுரனிகர |**
**தாரதம்யாத்மக ஸுபத்3யக3**
**ளாரு படி2ஸுவராஜனரிகெ3 ர**

**மாரமண பூரயிஸலீப்சித ஸர்வகாலத$^{3}$லி ||54**

மாரனய்யன = மன்மதனின் தந்தையான ஸ்ரீஹரியின்
கருண = தயை என்னும்
பாராவார = கடலுக்கு
முக்யஸுபாத்ரரெனிப = முக்கியமான உத்தம பாத்ரர் எனப்படும்
ஸரோருஹாஸன = பிரம்மதேவரின்
வாணி = சரஸ்வதி தேவியர்
ருத்ர,
இந்திராதி = இந்திரனே முதலான
ஸுரனிகர = தேவதா சமூகங்களின்
தாரதம்யாத்மக = தாரதம்ய ஸ்வரூபமான
ஸுபத்யகள = இந்த உத்தம பத்யங்களை
ஆரு படிஸுவர = யார் படிக்கிறார்களோ
அ ஜனரிகெ = அந்த ஜனர்களுக்கு
ரமாரமண = ரமாபதியான ஸ்ரீஹரி
ஸர்வகாலதலி = அனைத்து காலங்களிலும்
ஈப்ஸித = மனோபீஷ்டங்களை
பூரயிஸலி = நிறைவேற்றட்டும்

இந்த சந்தியில், பரமாத்மனின் கருணைப் பார்வையில் முக்கிய பாத்திரர்களான பிரம்ம ருத்ராதி தேவதைகளின் தாரதம்யத்தை சொல்கிறார்கள். இத்தகைய சந்தியை யார் கேட்பது, படிப்பது ஆகியவற்றை செய்கிறார்களோ அவர்களின் மனோரதங்களை ஸ்ரீஹரி எப்போதும் நிறைவேற்றுகிறான்.

**மூரு காலக$^{3}$ளலி துதிஸெ ஷ**
**ரீர வாங்மன ஷுத்திமாள்புது$^{3}$**
**தூர$^{3}$கெ$^{3}$ய்ஸுவுத$^{3}$கி$^{2}$ல பாபஸமூஹ ப்ரதிதி$^{3}$னவு |**
**சோரப$^{4}$ய ராஜப$^{4}$ய நக்ர ச**
**மூர ஷஸ்த்ர ஜலாக்$^{3}$னி பூ$^{4}$த ம**
**ஹோரக$^{3}$ ஜ்வர நரகப$^{4}$ய ஸம்ப$^{4}$விஸதெ$^{3}$ந்தெ$^{3}$ந்து$^{3}$ ||55**

மூரு காலகளல்லி = காலை, மதியம், மாலை ஆகிய மூன்று வேளைகளில்
ஸ்துதிஸெ = ஸ்தோத்திரம் செய்வதற்கு
ஷரீரவாங்மன ஷுத்தி மாள்புது = தேகத்தையும், மனதையும் சுத்தி செய்கிறார்கள்
அகிள பாப ஸமூஹ = அனைத்து பாவ சமூகங்களையும்
ப்ரதிதினவு = தினந்தோறும்
தூரகெய்ஸுவுது = தூர விலக்குவர்
சோரபய = திருடர்களால் வரும் பயம்
ராஜபய = அரசர்களால் வரும் பயம்
நக்ர = முதலை முதலானவற்றால் வரும் பயம்

சமூ என்றால், பொதுவாக சைன்யங்களுக்கு பெயர். இங்கு சமூ என்பதற்கு முதலை மற்றும் அதைப் போல நீரில் வசிக்கும் மீன், திமிங்கிலம் ஆகியவற்றின் சமூகம் என்பது கருத்து. அவற்றின் பயமோ,
ஜலாக்னி பூத = ஜல, அக்னி, பூத - இவற்றினால் வரும் பயமோ
மஹோரக = பெரிய பாம்புகள்
ஜ்வரபய = ஜுரம், நோய்களால் வரும் பயம்
நரகபய = நரகத்தை நினைத்து வரும் பயம் - என எந்தவிதமான பயங்களும்
சம்பவிசதெந்தெந்து = என்றைக்கும் சம்பவிக்காது.

**ஜயஜயது த்ரிஜக$^3$த் விலக்ஷண**
**ஜயஜயது ஜகதே$^3$ககாரண**
**ஜயஜயது ஜானகிரமண நிர்க$^3$த ஜராமரண ।**
**ஜயஜயது ஜான்ஹவிஜனக ஜய**
**ஜயது தை$^3$த்யகுலாந்தக ப$^4$வா**
**மயஹர ஜக3ன்னாத$^2$விட்ட$^2$ல பாஹிமாம் ஸதத ।।56**

த்ரிஜகத் விலக்ஷண = மூன்று உலகங்களில் இருக்கும் பிராணிகளிலிருந்து வேறுபட்டவன். பேத உள்ளவன் என்று அர்த்தம். இத்தகைய ஸ்வாமி,

ஜயஜயது = ஜயஷீலன் ஆகட்டும். அதாவது, தன் ஜயத்தை (மங்களத்தை) உலகத்தில் வெளிப்படுத்தட்டும் என்று அர்த்தம். அப்படியில்லை எனில், நித்யஜயஷீலனான பரமாத்மனுக்கு மங்களம் உண்டாகட்டும் என்று ஆசி வழங்குவதைப் போல இல்லை. ஜயத்தை வெளிப்படுத்து என்று பிரார்த்தனை செய்வது போல என்று அறிய வேண்டும்.

ஜகதேககாரண = உலகிற்கு முக்கிய காரணன்
ஜானகிரமண = சீதா காந்தனே, ஜய ஜய
நிர்கத ஜராமரண = பிறப்பு இறப்பு இல்லாதவன்
ஜான்ஹவி ஜனக = கங்கையின் தந்தைக்கு மங்களம் உண்டாகட்டும்.

தைத்யகுலாந்தக = தைத்ய குலத்திற்கு ம்ருத்யுவாக இருப்பவனே, உனக்கு ஜயம் உண்டாகட்டும்.

பவாமயஹர = சம்சாரம் என்னும் நோயை பரிகரிப்பவனே
ஹே ஜகன்னாதவிட்டலனே,
ஸதத = அனைத்து காலங்களிலும்
மாம்பாஹி = எனக்கு அருள்வாயாக.

தேவதா தாரதம்ய ஸ்தோத்திர சந்தி என்னும் 32ம் ஸந்தியின் தாத்பர்யம் இத்துடன் நிறைவுற்றது.

**ஸ்ரீஜகன்னாததாசராயர் இயற்றிய ஹரிகதாம்ருதசாரம் முடிவுற்றது.**

யஸ்ஸர்வ குணஸம்பூர்ண ஸர்வதோஷ விவர்ஜித: ।
ப்ரியதாம் ப்ரீத ஏவாலம் விஷ்ணுர் மே பரம: ஸுஹ்ருத் ।

ப்ரமோதாப்தே மாககிருஷ்ண: மாதவஸ்ய தினே ஷுபே ।
பாவப்ரகாஷிகாசீயம் லிகிதா பூர்ணதாமகாத் ॥
பத்மனாபேன தாஸேன ரசிதாஹர்யனுக்ரஹாத் ॥
குரோரனுக்ரஹாச்சைவ ப்ரீயதாம் கமலாபதி: ॥

இதி ஸ்ரீ ஜகன்னாததாசார்ய க்ருத ஹரிகதாம்ருதசாரஸ்ய
ஸ்ரீ சுப்பராயதாசார்ய சிஷ்யேண பத்மனாபதாஸேன
ரசிதா பாவப்ரகாஷிகா ஸமாப்தா

**ஸ்ரீகிருஷ்ணார்ப்பணமஸ்து**

***

## பாவபிரகாசிகை : சந்தி 33 : ஸ்ரீத விட்டலரின் பல ஸ்ருதி

ஸ்ரீமத் ஹரிகதாம்ருதசாரம் என்பது அனைத்து நற்சாஸ்திரங்களின் சாரமாகும். இத்தகைய கிரந்தத்தைக் கேட்கும் படிக்கும் புண்ய புருஷர்களுக்கு ஸ்ரீபரமாத்மன் தன் அபரோக்ஷத்தைக் கொடுத்து, மோட்சாதி புருஷார்த்தங்களை கொடுக்கிறான் என்று குறிப்பிடும் 'பல ஸ்ருதி சந்தி' என்னும் இந்த சந்தியை, ஸ்ரீஜகன்னாததாசரின் நேரடி சிஷ்யரான கர்ஜிகி தாசப்ப என்பவர் இயற்றியிருக்கிறார்.

**ஹரிகதா2ம்ருதஸார ஸ்ரீம**
**த் கு3ருவர ஜக3ன்னாத2தா3ஸரு**
**கரதலாமலக வெனெபேளித3 ஸகலஸந்தி4க3ள ।**
**பரம பண்டி3தமானிக3ளு ம**
**த்ஸரிஸலெ தெ3கி3ச்சாகி3 தோருவ**
**த3ரஸிகரிகிது3 தோரி பேளுவுத3ல்ல த4ரெயொளகெ3 ।।1**

பொருள்:
ஸ்ரீமத் குருவர ஜகன்னாததாசர்;
கரதளாமலகவெனெ = உள்ளங்கை நெல்லிக்கனியைப் போல;
பேளித = பகவந்தனின் மகிமைகளை விவரமாக தெரிவித்த;
சகலசந்திகள = 32 சந்திகளை;
பரமபண்டிதமானிகளு = பண்டிதர் என்று அழைத்துக் கொள்பவர்கள்;
மத்ஸரிஸலு = பொறாமைப்படுவதற்கு;
எதெகிச்சாகி = இதயத்தில் தீ வைத்தாற்போல தோன்றும்;
அரசிகரிகெ,
தரெயொளகெ,
இது = இந்த கிரந்தத்தை;
தோரிபேளுவவல்ல = விளக்கத்தக்கது அல்ல.

விளக்கம்:
உள்ளங்கை நெல்லிக்கனியைப் போல, ஜகன்னாததாசர், பகவத் தத்வத்தை இந்த கிரந்தத்தில் தெளிவாக விளக்கிக் காட்டியிருக்கிறார். ஆனால், நாமே சிறந்த பண்டிதர் என்று கர்வத்தில் இருக்கும் மக்களுக்கு இது இதயத்தில் வைக்கப்பட்ட தீ போல தெரியும். ஆகையால், இந்த கிரந்தத்தை அத்தகையவர்களுக்கு விளக்கத் தேவையில்லை.

**பா4மினி ஷட்பதிய ரூபத3**
**லீ மஹாத்பு4த காவ்யதா3தி3யொ**
**ளா மனோஹர தரதமாத்மக நாந்தி3பத்4யக3ள ।**
**யாமயாமகெ படிஸுவவர ஸு**
**தா4மசக2 கைபிடி3யலோஸுக2**

**ப்ரேமதிந்தலி பேள்த கு3ருகாருண்யகேனெம்பே3 ||2**

பொருள்:
பாமினிய ஷட்பதிய ரூபதல்லி,
ஈ மகாத்புத காவ்யத = ஹரிகதாம்ருதசார என்னும் இந்த காவியத்தின்;
ஆதியொளு = முதலாம் பாகத்தில்;
ஆ மனோஹர = அற்புதமான;
தரதமாத்மக = தாரதம்ய ஸ்வரூபமான;
நாந்தி பத்யங்களை;
யாமயாமக்கெ = எந்நேரமும்;
படிசுவவரன்னு = படிப்பவர்களை;
சுதாமசக = ஸ்ரீகிருஷ்ணன்;
கைபிடியலோசுக = கையைப் பிடித்து காப்பாற்றுவதற்காக;
ப்ரேமதிந்தலி பேள்த = மிகவும் அன்புடன் இயற்றப்பட்ட ;
குரு = குருகளின்;
காருண்யகேனெம்பெ = கருணையை என்னவென்று சொல்வேன்.

விளக்கம்:
ஸ்ரீஜகன்னாததாசர், இந்த கிரந்தத்தை பாமினி ஷட்பதி என்னும் நுடியில் இயற்றி, இதன் முதலாம் சந்தியில் தாரதம்யத்தின்படி பரமாத்மனில் துவங்கி மனுஷ்யோத்தமர் வரைக்குமான அனைவரையும் வணங்கி பத்யங்களை இயற்றியிருக்கிறார். இது வெறும் அவரது நலனுக்காக அவர் இயற்றவில்லை. அந்த சந்தி பத்யங்களை படிப்பவர்களுக்கு, பரமாத்மன் அவர்களின் கைகளைப் பிடித்து காப்பாற்றுவான் என்னும் நோக்கத்துடனேயே இயற்றியிருக்கிறார். இப்படி அனைவரின் நலனுக்காக இதை இயற்றிய குருகளின் கருணையை என்னவென்று வர்ணிப்பேன்?

**ஸாரவெந்த3ரெ ஹரிகதா2ம்ருத**
**ஸாரவெம்பு3வுதெ3ம்ம கு3ருவர**
**ஸாரித3ல்லதெ3 திளியதெ3னுத மஹேந்த்3ர நந்த3னன**
**ஸாரதி2ய ப2லகொண்டு3 ஸாரா**
**ஸாரக3ள நிர்ணயிஸி பேள்த3னு**
**ஸார நடெ3வ மஹாத்மரிகெ3 ஸம்ஸாரவெல்லிஹுதோ3 ||3**

சாரவெந்தரெ ஹரிகதாம்ருதசாரவெம்ப = சாரம் என்றாலே அது ஹரிகதாம்ருதசாரம் என்னும்
இது = இந்த கிரந்தமே என்று
திளியோது = அறிய வேண்டும்
மஹேந்த்ர நந்தனன = இந்திர குமாரனான அர்ஜுனனின்
ஸாராதிய = சாரதியான ஸ்ரீகிருஷ்ணனின்
பலகொண்டு = அனுக்கிரக பலத்தினால்

எம்ம குருவர = நம் குரு ஸ்ரேஷ்டர்
இது = இந்த கிரந்தத்தை
ஸாரிதல்லதெ = இயற்றியிருக்கிறாரே தவிர, வெறும் தன் புத்தியினால் இயற்றவில்லை
ஸாரகள நிர்ணயிஸி பேள்த = இது சாரம்; இது அசாரம் என்று நிர்ணயம் செய்து சொல்லியிருக்கும் இந்த கிரந்தத்தில் இருக்கும் சாரத்தை
அனுசார நடெவ = அனுசரித்து நடக்கும்
மஹாத்மரிகெ = மஹாத்மருக்கு, பக்தர்களுக்கு
சம்சாரவெல்லிஹதோ = சம்சார பயம் எங்கு இருக்கிறது?

உலகத்தில் சாரம் என்றால் ஹரிகதை என்னும் அமிர்தத்தின் சாரமே சாரம் என்று அறிந்து, அதே பெயரில் நம் குருவர்யர் இந்த கிரந்தத்தை ஶ்ரீகிருஷ்ணனின் அனுக்கிரக பலத்தினால் இயற்றியிருக்கிறாரே தவிர, இது வேறு யாருக்கும் சாத்தியமா? என்றைக்கும் சாத்தியமில்லை. இதில் சொல்லப்பட்டிருக்கும் சாராசாரத்தை அறிந்து, சாரத்தை அனுசரித்து நடக்கும் மஹாத்மருக்கு சம்சார பயம் எங்கு இருக்கிறது? இல்லை என்று அர்த்தம்.

**தாஸவர்யர முக$^{2}$தி$^{3}$ நிந்து$^{3}$ ர**
**மேஷனனு கீர்த்திஸுவ மனத$^{3}$பி$^{4}$**
**லாஷெயலி வர்ணாபி$^{4}$மானி க$^{3}$ளொளித்$^{3}$து$^{3}$ பேளிஸித$^{3}$ ।**
**ஈ ஸுலக்ஷண காவ்யதொ$^{3}$ளு யதி**
**ப்ராஸக$^{3}$ளிகெ$^{3}$ ப்ரயத்னவில்லதெ$^{3}$**
**லேஸுலேஸெனெ ஸ்ராவ்ய மாதுதெ$^{3}$ கு$^{3}$ருஹு கவிக$^{3}$ளிகெ$^{3}$ ।।4**

தாசவர்யர முகதி நிந்து = ஶ்ரீபரமாத்மன், தாசார்யரின் முகத்தில் நின்று
ரமேஷனனு = ரமா பதியான தன்னை
கீர்த்திஸுவ = தன் மகிமையை வெளிப்படுத்த வேண்டும் என்னும்
மனதபிலாஷெயலி = ஆசையில்
வர்ணாபிமானி களொளித்து = அகார முதல் க்ஷகார வரையில் இருக்கும் வர்ணாபிமானி தேவதைகளில் தான் இருந்து
பேளிஸித = கூறினான்
இதனை அறிவது எப்படியெனில்,
ஈ சுலக்ஷண காவ்யதொளு = அனைத்து நல்ல லட்சணங்களையும் கொண்ட இந்த காவியத்தில்
யதி ப்ராசகளிகெ = எதுகை, மோனைகளான சந்தங்களுக்கு
ப்ரயத்னவில்லதெ = எவ்வித சிறப்பு முயற்சிகளும் இல்லாமல்
லேஸுலேஸெனெ = மிகவும் அற்புதமாக
குருஹு = பரமாத்மனே சர்வோத்தமன் என்று அறிந்தவர்களுக்கு
கவிகளிகெ = பரமாத்மனின் த்வேஷிகளுக்க
ஸ்ராவ்ய மாதுதெ = காதுகளுக்கு இனிமையாக இருக்குமா?

ஸ்ரீஹரி, தாசார்யரின் முகத்திலிருந்து தன் மகிமையை வெளிப்படுத்த வேண்டும் என்னும் விருப்பத்தால், தானே வர்ணாபிமானி தேவதைகளில் இருந்து இந்த கிரந்தத்தை இயற்றியிருக்கிறார். இதனை எப்படி அறியலாம் என்றால், எதுகை மோனை ஆகியவற்றைக் கொண்டு கவிதை எழுதவேண்டுமெனில் எவ்வளவோ கஷ்டப்பட வேண்டியிருக்கும். ஆனால், கொஞ்சம் கூட முயற்சியில்லாமல், இந்த கிரந்தத்தை இயற்றும்போது, எதுகை மோனை சந்தங்கள் தாமாகவே வந்ததே இதற்கு சாட்சியாகும். வர்ணாபிமானிகள் இந்த கிரந்தத்தை தாசார்யர் இயற்றும்போது, நான் முன்னால், நீ முன்னால் என்று வந்து காத்திருந்தனர் என்று சொல்வதுண்டு. அந்த அர்த்தத்தையே இந்த பத்யம் குறிக்கிறது என்று அறியவேண்டும்.

**ப்ராக்ருதோக்திக[3]ளெந்து ப[3]ரிதெ[3] ம**
**ஹா க்ருதக்[4]னரு ஜரிவரல்லதெ[3]**
**ஸ்வீக்ருதவெ மாட[3]த[3]லெ பி[3]டு[3]வரெ ஸுஜனராத[3]வரு ।**
**ஸ்ரீக்ருதீபதியமல கு[3]ணக[3]ளு**
**ஈ க்ருதியொளுண்டாத[3] ப[3]ளிகிது[3]**
**ப்ராக்ருதவெ ஸம்ஸ்க்ருதத[3] ஸட[3]க[3]ரவேனு ஸுகு[3]ணரிகெ[3] ||5**

ப்ராக்ருதோக்திகளெந்து = இந்த கிரந்தமானது, ப்ராக்ருத மொழியில் (பேசுமொழியில்) எழுதப்பட்டுள்ளது என்று
பரிதெ = எழுதாமல் (அல்லது இந்த கிரந்தத்தை படிக்காமல்)
மஹா க்ருதக்னரு = இந்த கிரந்தத்தால் பயன் பெறுபவர்கள்
ஜரிவரல்லதெ = இதனை திட்டுவார்கள்
சுஜனராதவரு ஸ்வீக்ருதவ = ஏற்றுக்கொள்ளாமல் விடுவார்களா?
ஸ்ரீக்ருதீபதிய = க்ருதி நாமக லட்சுமியின் பதியான ப்ரத்யும்ன நாமக ஸ்ரீஹரி
அமலகுணகளு = தூய்மையான (தோஷங்கள் அற்ற) குணங்கள்
ஈ க்ருதியொளுண்டாத பளிக = இந்த கிரந்தத்தில் இருந்தபிறகு,
இது = இந்த கிரந்தமானது
ப்ராக்ருதவே? = ப்ராக்ருதமா? (பேசு மொழி என்று சொல்லலாமா?)
சம்ஸ்கிருதத ஸடகரவேனு = சம்ஸ்கிருதமே சிறந்தது என்பது ஏன்?

இந்த கிரந்தமானது, ப்ராக்ருத கிரந்தம் என்று திட்டும், மஹா க்ருதக்னர்கள் (இந்த கிரந்தத்தால் பயன் பெற்றவர்கள்) சிலர் இருந்தாலும், சுஜனர்கள் இதனை ஏற்றுக் கொள்ளாமல் விடமாட்டார்கள். அப்ராக்ருதமான பரமாத்மனை வர்ணிக்கும் இந்த கிரந்தத்தை ப்ராக்ருதம் என்று சொல்லமுடியுமா? இதுவே சம்ஸ்கிருதம். பகவத் குணங்களை வர்ணிக்கும் கிரந்தம் சம்ஸ்கிருதமானாலும் அதுவே ப்ராக்ருதம். எவ்வித பிரச்னைகளும் இல்லாத சஜ்ஜனர்களுக்கு சம்ஸ்கிருதத்தினால் கிடைப்பது என்ன?

**ஸ்ருதிகெ[3] ஷோப[4]னவாக[3]தொ[3]டெ[3] ஜட[3]**
**மதிகெ[3] மங்கலவீயதொ[3]டெ[3] ஸ்ருதி**

